3. சந்தியு மாரி தெற்கில் சார்ந்திடு மிதுவல் லாமல்
சிந்தையா யக்கினி மாரி சிறப்பிலா மாயோ னுண்டு
முந்திய சமவூர் தன்னில் முயன்றவ னிவனே யென்றோம்
கந்தனைப் பெற்ற மாதே கழறுவோங் கேளு மம்மா.

3. தெற்குத்திக்கில் மாரியம்மன் கோயில் ஒன்று உளது. இது வன்னியில் மற்றொரு மாரியம்மன் கோவிலும், திருமாலின் ஆலயம் ஒன்று சிதைந்தும் உள்ளன. இங்ஙனமுள்ள ஒரு சாதாரண ஊரில் பிறந்தவன் இந்த ஜாதகன் என்று கூறினோம். முருகப்பிரானைப் பெற்ற தாயே! சொல்லுகின்றோம். கேளுங்கள்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெறுந் தந்தை யோகம்
மன்னிய வன்னை யோகம் வரும்புத்திர களத்திர யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மம் சாற்றுவோம் நவக்கோ ளாய்ந்து
அன்னையே யாங்கள் சொல்லும் அருள்மொழி குன்று தென்றோம்.

4. ஜாதகனுடைய பிறப்பு யோகங்கள் அவனுடைய தந்தை தாய் பிறக்கும் புத்திரர்கள், மனைவி இவர்களுடைய யோகங்கள், ஜாதகனது முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும், நவக்கிரகங்களின் நிலையை நன்கு பார்த்துக் கூறுகின்றோம். தாயே! நாங்கள் சொல்லும் அருள்வாக்கு தவறாது என்று உரைத்தோம்.

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோ மால்நி றத்தன்
சிந்தையே கபடு மில்லான் சிரமுகம் வடிவு முள்ளான்
பந்தமாய் ஒடிச்சல் தேகி பந்துவுக் கினிய னாகும்
சந்ததம் ஈகை யுள்ளான் சன்மார்க்கன் கிருஷி செய்வன்.

5. ஜாதகனின் தந்தையின் குணத்தை நாங்கள் கூறுகின்றோம். திருமாலைப் போன்ற கரிய நிறமுள்ளவன். மனத்தில் சூதுகளில்லாதவன். அழகான தலை, முகம் இவைகளுடையவன். மெல்லிய சரீர முள்ளவன். உறவினர்களுக்குப் பிரியமானவன். சதா கொடையுள்ளவன். நல்லொழுக்க முடையவன். விவசாயம் செய்துவருவான்.

6. சித்திர கிருகஞ் செய்வன் செப்புநன் னடக்கை யுள்ளான்
பத்தினி நேய னாகும் பஞ்சுபோல் இரக்க முள்ளான்
குத்திர வசனம் பேசான் குணமது விரண்டு முள்ளான்
பித்தசூ டுடைய னாகும் பேசுவோ மேலுங் கேளே.

6. அழகான வீடு கட்டுவான். பிறர் கொண்டாடும்படியான நன்னடத்தை யுள்ளவன். மனைவிக்குப் பிரியமானவன். இரக்கமுள்ள மனத்தன். குதர்க்கமான பேச்சுக்களைப் பேசாதவன். இருவிதமான குணங்களையுடையவன். பித்தச்சூடுள்ள தேகத்தன். மேலும் கூறுகின்றோம். கேளுங்கள், தாயே!

7. சகோதர ரொருமை இல்லான் தன்தாயால் யோக முள்ளான்
தகைமையாய்த் தாயார் ரண்டு சாற்றினோ மிவனுக் கேதான்
வகையுடன் முனிவர் கூற மங்கையும் கேட்க லுற்றாள்
சகமதில் மாதுரு ரண்டு செப்பினீர் எந்தத் தாய்க்கு ;

7. சகோதர ஒற்றுமை இல்லாதவன். தன்னுடைய தாயினால் அதிர்ஷ்டங்கள் உள்ளவன். ஜாதகனின் தந்தைக்கு இரு தாய்மார்கள் உள்ளனர் என்று கூறினோம். இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பார்வதி கேட்கலானாள். உலகில் ஜாதகனின் தந்தைக்கு இரு தாய்மார்கள் உளர் என்று சொன்னீர்களே எந்தத் தாய்க்கு ;

8. இவனுமே உதிப்பா னாகும் இயம்புவோங் கேளு மம்மா
அவனியில் முதல்மா துக்கு ஆணது இல்லை யம்மா
பவமுள கன்னி ரண்டு பருகியே தாய்ம ரித்து
நவனியில் இரண்டாம் தாய்க்கு நாயக னுதிப்பா னென்றோம்.

8. ஜாதகனின் தந்தை பிறப்பான். சொல்லுகின்றேன். கேளுங்கள், தாயே ! தந்தையின் மூத்த தாய்க்கு ஆண் குழந்தைகள் இல்லை. இரு பெண்களே உதிப்பர். பின்பு மூத்த தாய் மரித்து விடுவாள். இரண்டாவது தாய்க்கு ஜாதகனின் தந்தை பிறப்பான், என்று கூறினோம், தாயே !

9. துணைவர்கள் ஆண்பால் ரண்டு சொல்லுவோம் கன்னி மூன்று
கனமுட னைந்தும் தீர்க்கம் கழறுவோ மைந்து சேதம்
அனையவிக் குணத்தா னுக்கு அவனுமே ஏழாம் ஜன்மம்
இணையிலா வுதிப்பா னாகும் ஈச்வரி கேட்டி டாயே.

9. ஜாதகனுடைய தந்தைக்கு உடன் பிறந்தவர்களில் இருவர் ஆண் மக்கள்; மூவர் பெண் மக்கள். இவர்களனைவரும் நீண்ட ஆயுளுடன் இருப்பர். இங்ஙனமுள்ள குணங்களுடையவனுக்கு ஜாதகன் ஏழாவது பிறப்பாகப் பிறப்பான். பார்வதியே ! கேளுங்கள்.

10. ஜாதகன் நிறம் குணத்தைச் சாற்றுவோம் கருநி றத்தான்
மேதினில் ஒடிச்சல் தேகி வித்தையு முடைய னாகும்
பாதக மில்லா நெஞ்சம் பஞ்சைபோல் ரூப முள்ளான்
தீதிலா குணத்தா னாகுங் கோபமுங் கொஞ்ச முள்ளாள்.

10. ஜாதகனின் நிறம் குணம் இவைகளைப் பற்றிச் சொல்லுவோம். கரிய நிறமுள்ளவன். மெல்லிய தேகமுடையவன். கல்வியறி வுள்ளவன். கெடுதலில்லாத மனத்தன். ஏழைபோன்ற தோற்ற முள்ளவன். தீய குணங்க ளில்லாதவன். சிறிது கோப முள்ளவன்.

11. பயிர்த்தொழில் செய்வா னாகும் பலருக்கு நல்லோ னவன்
நயமாகப் பேச வல்லன் நாற்காலி விருத்தி யுள்ளான்
அயலார்பொன் இச்சை இல்லான் அவன்சூட்டு தேக முள்ளான்
ஜயம்செய்வன் உபாய புத்தி சித்தினி சாதி யாவன்.

11. விவசாயம் செய்து வருவான். பல பேர்களுக்கு நல்லவனாக விருப்பான். இனிமையாகப் பேச வல்லவன். கால்நடைகள் மிகுதியாக உள்ளவன். பிறர் செல்வத்தில் இச்சை யில்லாதவன். பித்தசூட்டுத் தேகமுடையவன். எடுத்த காரியத்தை ஜயிக்கவல்ல திறமை யுள்ளவன். உபாயங்கள் தெரிந்தவன். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன்.

12. போஜனம் கொஞ்ச முண்பான் புத்திர விருத்தி உள்ளான்
காசுமே லாசை உள்ளான் கரமதில் ருத்திர ரேகை
பேச்சினில் சோர னாகும் புண்ணியம் கொஞ்சம் செய்வன்
ஆசையாம் பந்து பேரில் அல்பவஸ் துகளு மிஷ்டன்.

12. சிறிதே புசிப்பான். புத்திர பாக்கியம் உள்ளவன். பொருளில் ஆசையுடையவன். கையில் உருத்திரரேகை யுள்ளவன். பேச்சு வன்மை யுள்ளவன். சிறிதே புண்ணியங்கள் செய்வான். உறவினர்மேல் அன்புள்ளவன். அல்ப வஸ்துக்களின்மீது பிரியமுள்ளவன்.

13. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோம் தசம தாகும்
கன்னிகை ஒருத்தி தீர்க்கம் காளையு மவ்வா றாகும்
பின்னமாம் மற்ற வெல்லாம் பலக்காவே நசிக்கு மென்றோம்
மன்னிய துணைவி மூத்தோர் வருமாண்பால் இளையோ னாகும்.

13. ஜாதகனுடைய உடன்பிறந்தவர்களைப்பற்றிச் சொல்லுவோம். அவர்கள் பதின்மர். ஆண் மகன் ஒருவனும், பெண் ஒருத்தியும் நீண்ட ஆயுளுடனிருப்பர். மற்றவர் மரித்து விடுவர்; நிலையார் என்று உரைத்தோம். உடன்பிறந்த சகோதரி மூத்தவளாவாள். சகோதரன் இளையவனாவன்.

14. துணைவியின் சேதி சொல்வோம் தெய்வங்கள் பக்தி உள்ளாள்
இணையிலாப் பலிதம் வாக்கு இவளுமே சுகமாய் வாழ்வள்
அணையவே வறுமை இல்லாள் அவளுமாங் கல்ய முள்ளாள்
கனமுள புத்திர பாவம் கழறுவோம் கேளு மம்மா.

14. சகோதரியின் செய்திகள் யாவற்றையும் கூறுவோம். தெய்வ பக்தியுள்ளவள். சொன்ன வார்த்தைகள் பலிதமாகும். இவள் சௌக்கியமாக வாழ்ந்து வருவாள். தரித்திரமே இல்லாதவள். மாங்கல்யத்துடன் வாழ்ந்து வருவாள். அவளுடைய புத்திரபாக்கியத்தைப் பற்றிச்சொல்லுவோம். கேளுங்கள், தாயே!

15. ஆணது இரண்டு மாகும் அவ்வாறும் கன்னி என்றோம்
காணவே இளையோன் சேதி கழறுவோம் கோப வானும்
தோணவே கல்வி மானும் துருசான நடையு முள்ளான்
வாணிபம் கொஞ்சம் செய்வன் மர்மமு முடைய னாமே.

15. ஆண்குழந்தைகள் இருவரும் பெண்மக்கள் இருவரும் உண்டு என்று உரைத்தோம். ஜாதகனின் இளைய சகோதரனின் செய்திகளைக் கூறுகின்றோம். கோப முள்ளவன். கல்விமான். வேகமாக நடக்க வல்லன். சிறிது வியாபாரம் செய்து வருவான். இரகசியம் உடையவன்.

16. ஆதியில் கண்ட முண்டு அறுமுகன் தம்மால் நீங்கும்
நீதியாய் நடக்கை உள்ளான் நிகழ்த்துவான் கட்டு வார்த்தை
கோதிலா புத்திர பாவம் குறித்தன மாண்பா லொன்று
மேதினில் பெண்பால் ரண்டு விருத்தியாம் வயது தீர்க்கம்.

16. ஆரம்ப காலத்தில் கண்ட முண்டு. ஆனால் அது சுப்பிரமணியக் கடவுளின் அருளால் விலகும். நெறியுடன் நடப்பவன். வார்த்தைகளைப் புனைந்து பேசுவதில் வல்லவன். குறையில்லாத புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். ஆண் மகன் ஒருவனும் பெண் மக்கள் இருவரும் பிறந்து நீண்ட ஆயுளுடன் இருப்பர்.

17. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருபான் ஒன்றில்
மேதினில் வடகீழ் தன்னில் வித்தகன் தந்தை வர்க்கம்
கோதிலா வருவா ளாகும் கூறுவோம் தாரம் ஒன்றே
ஆதியாய்ப் புத்திர பாவம் அரைகிறோம் மேலும் கேளே.

17. ஜாதகனின் திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய இருபத்தோரும் வயதில் அவனிருப்பிடத்திற்கு வடகிழக்குத் திசையிலிருந்து ஜாதகனுடைய தகப்பனார் வர்க்கத்திலிருந்து மனைவி வருவாள். இவனுக்கு மனைவி ஒருத்தியே. முதலில் புத்திரபாவத்தைச் சொல்லுகின்றோம். மேலும் கேளுங்கள்.

18. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோமிரு நான் காகும்
சித்தமாய் ஆண்பால் ரண்டு செப்பினோம் பெண்பால் மூன்று
பத்திய வைந்தும் தீர்க்கம் பருகாவே மற்ற வெல்லாம்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் மேலுங் கேளே.

18. ஜாதகனுக்குப் புத்திரபாவத்தை நோக்கின், எட்டுப் பேர் உண்டு. ஆனால் அவர்களில் இரு ஆணும் மூன்று பெண்ணும் ஆக ஐவர் நிச்சயமாக நீண்ட ஆயுளுடன் இருப்பர். மற்றவர் நிலையார். யானை முகத்தை யுடையோனைப் பெற்ற பார்வதியே! மேலுங் கேளுங்கள்.

19. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறோ மொடிச்சல் தேகி
மாதவன் கறுப்பு முள்ளாள் மனமது தளர்ச்சி உள்ளாள்
சூதிலாள் பொறுமை உண்டு துணைவர்கள் இல்லா ளாகும்
மேதினில் பாட்டாளி யாகும் வீண்வார்த்தை சொல்லா ளாகும்.

19. ஜாதகனின் அன்னையின் குண விசேஷங்களைச் சொல்லுகின்றோம். மெல்லிய சரீர முள்ளவள். மகாவிஷ்ணுவின் உடலைப் போன்ற கரியமேனியள். மனதில் சஞ்சல முள்ளவள். கபட மில்லாதவள். பொறுமைசாலி. சகோதர சகோதரிகள் இல்லாதவள். உலகில் பாடுபடுபவள். வீண் வார்த்தை பேசாத இயல்பினள்.

20. வசீகர மில்லா ளாகும் வரனுக்கு அன்பு முள்ளாள்
உரன்முறைக் கினிய ளாகும் உரைக்கிறோம் துணைவர் தம்மைப்
பெருமையு முள்ள தாகும் பலக்காது ஆண்பா லுந்தான்
அறைகிறோ மொருவ னுண்டு அன்னிய தேசம் செல்வன்.

20. வசீகரமான முக மில்லாதவள். தன் கணவனிடம் அன்பாக இருப்பவள். பந்துக்களுக்கு நல்லவளாக இருப்பள். ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். பெருமை கொள்ளத்தக்கதாக இருக்கும். சகோதரர் மிகுதியாக இரார். ஒரே சகோதரன். அவனும் அன்னிய தேசத்தில் சென்று வாழ்வான்.

21. பின்புறு பாவை யென்றோம் பேசுவோ மிகவே நேராய்
இன்னவன் சிறிய தந்தை இவனு மவ்வாறுய்ச் சென்று
தன்னிலே வருவா னுகும் சாற்றினோ மிதுபோல் தானே
என்னகோள் நிலைகளாலே இருவர்க்கும் அவ்வாறு சொன்னீர்.

21. அவனும் ஜாதகனுக்குப்பின் பிறந்தவன். ஜாதகனுடைய சகோதரனுடன் அவன் சிறிய தந்தையும் அதேபோல் (அன்னிய தேசம்) சென்று திரும்பி வருவான் என்று கூறினோம். எந்த கிரக நிலையைக் கொண்டு அவ்வாறு சொன்னீர்கள்?

22. உன்னித நாலோன் அஞ்சோன் இருவரும் ஒன்றுய்ச் சேர
சொன்னனே னதனு லேதான் சுகமுடன் தந்தைக் கேதான்

. . . . . . . . . . .

முன்னிய ஜன்மம் தன்னை மொழிகிறோம் கேளு மம்மா.

22. நான்காம் வீட்டுக்குரிய புதனும் ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரனும் ஆகிய இருவரும் ஒன்று கூடி இருப்பதால் சொன்னோம். அதனுல் சுகமாகத் தந்தைக்கு . . . . . . .

. . . . . . . . . . .

முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேளுங்கள், தாயே.

23. இவன்பிதா முன்ஜன் மத்தை இசைக்கிறோம் சிறுபாக் கத்தில்
அவனியில் வேட னுக அவனுமே உதித்துப் பின்பு
நவமதில் வேட்டை யாடி நாயகன் ஜீவித் தானும்
பவமுள பெருமை பூண்டு பத்தினி மதலை உண்டாய்;

23. ஜாதகனுடைய தந்தையின் முற் பிறவியைச் சொல்லுகின்றோம். சிறுபாக்கம் என்ற ஊரில் வேட ஜாதியில் பிறந்து, உலகில் வேட்டையாடி ஜீவித்து வந்தான். மிக்க பெருமையடைந்து, மனைவி மக்களைப் பெற்று ;

24. மரணமே யாகி யேதான் வந்தவ னிவனே என்றோம்
அருமறை முனிவர் கூற அம்பிகை கேட்க லுற்றுள்
திருமகன் முன்ஜன் மத்தில் சிறப்பிலா வேடர் வம்சம்
உறமுடன் உதித்தா னென்றீர் உறைந்தகா ரணங்கள் என்ன.

24. இறந்தபின் மறுபிறப்பாக இப்பிறவியில் ஜாதகனின் தந்தையாகப் பிறந்தான் என்றோம். இங்ஙனம் வேதங் கற்றறிந்த முனிவர் சொல்லும் போது, பார்வதி வினவலானாள். ஜாதகனின் தந்தை முற் பிறவியில் சிறப் பில்லாத வேடர் மரபில் தோன்றினான் என்றீர். அப்படிச் சொல்லக் காரணங்கள் என்ன ?

25. முன்ஜன்ம மதுகொ ணர்ந்து முக்கணர்க் களித்து மேலும்
கன்னிகை தெய்வம் தம்மைக் கருதினன் மனதி லேதான்
பண்ணிய சம்பு கோத்திரம் வந்தன னிவனே என்றோம்
பின்னவன் ஜன்மம் தன்னைப் பேசுவோம் விபர மாக.

25. முற்பிறவியில் மது முதலியன கொண்டுவந்து, முக்கண்ணனாகிய சிவபெருமானுக்கு அளித்துவந்து, கன்னிகை தெய்வமாகிய மாரி யம்மனை மனத்தில் நினைத்துப் பூசித்துவந்ததால், அங்ஙனம் பிறந்தான் என்று கூறினோம். (ஜாதகனின் தந்தையின் மறுபிறவி யைப்பற்றிச் சொல்லு கிறோம்.

26. அவ்வூரில் கங்கை வம்சம் அவனுமே உதிப்பா னாகும்
ஒவ்விய மாதுரு ஜன்மம் உரைக்கிறோம் கடையூர் கீழ்ப்பால்
நவ்விய சிற்றூர் தன்னில் நாயகி செக்கான் வம்சம்
பவ்வமாய் உதித்து மேலும் பாலர்க ளுள்ளா ளாகி ;

26. அதே ஊரில் வேளாளர் வமிசத்தில் பிறப்பான். அன்னையின் பிறப்பு வரலாற்றைக் கூறுகின்றோம். திருக் கடையூருக்குக் கிழக்கில் உள்ள ஒரு சிறிய ஊரில் வாணிய வமிசத்தில் பிறந்தாள். குழந்தைகள் உள்ள வளாகி ;

**பட்சிக் கூட்டைக் கலைத்தல்.**

27. சுகமாக வாழும் போது சொல்லுவோ மூழி தானும்
அகமதில் பக்ஷி தானும் அணுகியே கூடு கட்டி
வகையுடன் குஞ்சு வைத்து வாழ்கின்ற காலம் தன்னில்
பகைஎன்று எண்ணு மல்தான் அழித்தனள் கூட்டைத் தானும்.

27. சௌக்கியமாக வாழ்ந்துவரும்போது ஏற்பட்ட தீவினையைச் சொல்லு வோம். தான் குடியிருக்கும் வீட்டில் பட்சி ஒன்று கூடுகட்டிக் குஞ்சு பொரித்து வாழ்ந்துவரும்போது, அது பாவம் என்று நினைக்காமல் கூட்டைக் கலைத்தாள்.

28. கூடுகள் கலையும் போது குஞ்சுகள் மாண்ட வென்றோம்
தேடிய தாயும் பார்த்துச் செப்பிற்றுச் சாபம் தானும்
நாடிய துணைவ ரற்று நற்சுதர் தமக்குத் தோஷம்
பாடிற்று அடைக்க லானும் பற்றிற்று அந்தத் தோடம்.

28. கூட்டைக் கலைக்கும்போது குஞ்சுகள் எல்லாம் இறந்தன. (வெளியில் சென்றிருந்த) தாய்ப்பறவை வந்து பார்த்துக் குஞ்சுகளைக் காணுமல் சாப மிட்டது. உடன் பிறந்த சகோதரர்களில்லாமல் குழந்தைகளுக்கும் தோஷ மேற்படும், என்று பட்சி சாபமிட்டது. அந்தச் சாபம் இவளை வந்தடைந்தது.

29. அந்தியக் காலம் தன்னில் அவளுக்குப் பித்த பாண்டு
வந்துமே மரண மாகி மறையவன் வரையப் பட்டு
இந்ததோர் ஜன்மம் தன்னில் இலகினு ளிவளே அம்மா
முந்திய பக்ஷி சாபம் முயன்றது இவளுக் கேதான்.

29. கடைசிக்காலத்தில் தாய்க்குப் பித்தபாண்டு ரோகம் ஏற்பட்டு, பிறகு இறந்து, பிரம்மாவினுல் மீண்டும் படைக்கப்பட்டு, இந்தப் பிறவியில் பிறந்தாள், தாயே! முற்பிறவியில் ஏற்பட்ட பட்சி சாபம் இவளைப் பற்றியது.

30. சகோதர தோஷ முண்டாம் சந்ததி குற்ற மாகும்
வகையுடன் பின்ஜன் மத்தை வரைகிறோம் காஞ்சி மேல்பால்
பகையிலாச் சைவ வம்சம் பத்தினி உதிப்பா ளாகும்
இகபரன் தன்னைப் போற்றும் ஏந்தலே கேட்டி டாயே.

30. உடன் பிறந்தவர்களுக்குத் தோஷம் உண்டாகும். குழந்தை களுக்கும் தோஷ மேற்படும். (ஜாதகனின் தாயினுடைய) மறு பிறப்பைப் பற்றிச் சொல்லுகிறோம். காஞ்சிபுரத்துக் மேற்கில் சைவ மறபில் பிறப் பாள். பரமசிவனைத் தோத்தரிக்கும் தாயே! கேளுங்கள்.

31. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் காஞ்சி தன்னில்
மாதவர் வமிசந் தன்னில் வந்துமே கல்வி இன்றி
மேதினில் பரிச்சால் மேவி வித்தகன் வாழு நாளில்
ஓதுவோம் வந்த ஊழை உரைக்கிறோம் கேளு மம்மா.

31. ஜாதகனின் முற்பிறவியைப்பற்றிச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத் தில் தவங்கள் புரியும் (அந்தணர்) குலத்தில் பிறந்து, கல்வி இல்லாமல் ஜாதகன் வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின் றோம். கேளுங்கள், தாயே!

**பிணிவரக் காரணங்கள்**

32. விரதகா லங்கள் தன்னில் வித்தகன் சமையல் செய்து
துரிதமாய்ப் புசித்தா னென்றோம் தோன்றிற்று அந்தத் தோடம்
அரைகிறோ மந்தி யத்தில் அவன்தேகப் பிணியும் கண்டு
மரலியின் பதிக்குச் சென்று வந்தவ னிவனே என்றோம்.

32. விரதங்கள் செய்யும் காலங்களில், ஜாதகன் சமையல் செய்தபின் (பகவானுக்குப் பூசை முதலியன செய்யாமல்) சீக்கிரமாகவே சாப்பிட்டு வந்தான். அதனுல் தோஷம் ஏற்பட்டது. கடைசிக்காலத்தில் அவனுக்குச் சரீரத்தில் நோய் ஏற்பட்டுப் பிறகு இறந்தான். மீண்டும் பிரம்மனுல் படைக் கப்பட்டுப் பிறந்தான் என்று கூறினேம்.

33. முன்ஜன்மம் பிரம்ம சேயாய் முயன்றவ னிச் சென்மத்தில்
கன்மியாய்த் தீயின் வம்சம் காதல னுதித்த தென்ன
அன்னவன் பிரம்ம சேயாய் அணுகியும் முறைமை இன்றித்
தன்னிலே விரத காலம் சமைத்ததை புசித்த தாலும் ;

**33.** முற்பிறவியில் அந்தண குலத்தவனாகப் பிறந்தவன் இப்பிறவியில் வன்னிய குலத்தில் பிறந்த காரணங்கள் என்ன? ஜாதகன் பிராமண குலத்தவனாகப் பிறந்தும் அவர்கள் குலாசார முறைப்படி பூசை முதலியன செய்யாமல் சமைத்தவுடன் உணவு அருந்தியதால்;

**34.** உதிப்பனு மிக்கு லத்தில் [1]ஊமையே கேள்பின் ஜன்மம்
விதிக்கிறோம் விரிஞ்சி கீழ்ப்பால் மேவிய சிற்றூர் தன்னில்
சதிசெய்யும் வைசிய சோயாய்த் தானுமே வுதிப்பா னாகும்
நதிபிறை அணிந்தோன் தேவி நங்கையே மேலும் கேளே.

**34.** இந்தக் குலத்தில் பிறந்தான். பார்வதியே! மறுபிறப்பைப்பற்றிக் கூறுகின்றோம். விரிஞ்சி நாட்டுக்குக் கிழக்கில் உள்ள ஒரு சிற்றூரில் வைசிய மரபினனாகப் பிறப்பான். கங்கை, சந்திரன் இவைகளைத் தலையில் அணிந்த சிவபெருமானின் தேவியே ! பார்வதியே ! மேலுங் கேளுங்கள்.

**35.** தந்தையின் மரண காலம் சாற்றுவோம் இருபா னெட்டில்
முந்திய தேளின் மாதம் எய்திடும் மாரகந் தானும்
பிந்திய அன்னைக் கேதான் பேசுவோம் முப்பா னாறில்
பந்தமாய் மகர மாதம் பகருவோம் கண்டம் தானே.

**35.** ஜாதகனின் தகப்பனின் இறுதிக்காலத்தைச் சொல்லுகின்றோம். ஜாதகனின் இருபத்தெட்டாம் வயதில் கார்த்திகை மாதத்தில் தந்தைக்கு மாரகம் நேரும். தாய்க்கு, ஜாதகனின் முப்பத்தாறும் வயதில் தை மாதத்தில் கண்டம் ஏற்படும்.

**36.** அத்திரி சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்றாள்
பத்தினி மாது விற்குச் செப்பினீர் துணைவர் ஒன்று
அத்திசை கொங்கின் மேலே அவனுமே செல்வா னென்றீர்
வித்தகன் எந்தக் காலம் விளம்புவான் இத்தே சத்தில்.

**36.** இங்ஙனம் அத்திரிமுனிவர் கூறும்போது, பார்வதி தேவி கேட்க லானாள். ஜாதகனின் தாய்க்கு ஒரு சகோதரன் உண்டு என்று சொன்னீர் களே. அவனும் கப்பல் ஏறி அயல் நாட்டுக்குச் செல்வான் என்று கூறினீர் களே ! அஃது எப்போது போவான்?

**37.** சொல்லுவேன் கேளு மம்மா சுதனுக்குப் பத்தாண் டின்மேல்
இல்லறம் வந்து சேர்வன் இன்பங்க ளுடைய னாகி
நல்லதோர் பொருளு முண்டாய் நாயகன் வாழ்வா னாகும்
அல்லலை அகற்று மாதே அம்பிகை யாளே கேளாய்.

**37.** சொல்லுகிறேன். கேளுங்கள், தாயே ! ஜாதகன், பத்தாம் வயதுக்கு மேல் தன் வீடுவந்து சேர்வன். சௌக்கியங்கள் மிகுதியாக ஏற்பட்டுச் செல் வங்களும் அதிகமாக உடையவனாக வாழ்ந்து வருவான். துன்பங்களைத் தவிர்க்கும் தாயே ! பார்வதியே ! கேளுங்கள்.

---

[1] உமையே என்பது விருத்தத்தால் ஊமையே என நீண்டது.

38. ஜாதகன் மரண காலம் சாற்றுவோம் அறுப தாண்டில்
கோதிலா தனுசு மாதம் குறைபக்கம் துதியை தன்னில்
மேதினில் காசத் தாலே வித்தகன் மரண மாவன்
மாதவர் போற்று கின்ற மங்கையே மேலும் கேளே.

38. ஜாதகனின் மரணகாலம் கூறுகின்றோம். அறுபதாம் வயதில் மார்கழி மாதம் கிருஷ்ண பட்சம் துவிதியை திதியில் காசரோகத்தால் ஜாதகன் மரணமடைவான். மிகுந்த தவங்களியற்றும் பெரியோர்கள் தோத்தரிக்கும் தாயே! மேலுங் கேளும்.

39. மறுஜன்மம் காஞ்சி தன்னில் வளமுள இக்கு லத்தில்
திறமையாய் உதிப்பா னாகும் செப்புவோம் பொதுயோ கத்தைப்
பெருமையாய்க் குடும்பி யாவன் பூமியும் விருத்தி செய்வன்
உரன்முறை மெச்ச வாழ்வன் உத்தமி மேலும் கேளே.

39. ஜாதகன், மறுபிறப்பு காஞ்சிபுரத்தில் செழிப்புள்ள இதே குலத்தில் பிறப்பான். அவனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். கண்ணியமுள்ள குடும்பியாக இருப்பான். விளை நிலங்கள், வீடு இவைகளைப் பெருக்குவான். பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்க்கை நடத்துவான். உயர் வானவளே! மேலுங் கேளுங்கள்.

40. இருபது ஆண்டின் மேலே [1]இளம்பிறை போலே யோகம்
பெரும்பொருள் சேர்ப்பா னாகும் பிரபல கீர்த்தி யுண்டாம்
திருமகள் வாச முண்டு சித்திர வீடு செய்வன்
தரணியில் சல்லிய மில்லான் சந்தோஷ மனத்த னாமே.

40. ஜாதகனின் இருபதாம் வயதுக்குமேல் வளர்பிறைச் சந்திரன்போல் யோகங்கள் பெருகும். மிகுதியாகச் செல்வங்கள் சேர்ப்பான். பிரபலமான கீர்த்தி (புகழ்) உண்டாகும். இலட்சுமி வாசம் புரிவாள். அழகான வீடு கட்டுவான். பூமியில் கடன் உபத்திரவமுள்ளமில்லாதவன். சந்தோஷமான மனமுடையவன்.

41. இவனுக்கு மேலா கத்தான் இவன்புத்திரர் வாழ்வா ராகும்
அவனியில் ஜனன காலம் [2]அலவன்தன் தசையி லேதான்
குலவிய ஆண்டு நான்கும் குறித்தனம் திங்க ளாறும்
பவமுள நாட்கள் பத்தும் பகருவோம் பலனை யாங்கள்.

41. இவனுக்கு மேன்மையாகவே இவனுடைய புத்திரர் வாழ்ந்து வருவார். ஜாதகன் பிறப்புக்காலத்தில் செவ்வாய் மகாதசையில் நான்கு வருஷங்களும் ஆறு மாதமும் பத்துநாட்களும் மீதமாகும். மற்றபடி பொதுப் பலன்களைச் சொல்லுவோம்.

42. சித்திர வீடு செய்வன் செலவுகள் அதிக முண்டு
வித்தகன் தனக்கு ரோகம் மேவியே நிவிர்த்தி யாகும்
பத்திய பாரு மோங்கும் பந்துவில் சுபமு முண்டு
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் சித்தி ரங்கள்.

---

[1] சந்திரன் [2] செவ்வாய்.

42. அழகிய வீடு கட்டுவான். ஆனால் செலவுகள் மிகுதியாக ஏற்படும். ஜாதகனுக்கு வியாதி ஏற்பட்டு நீங்கும். அடைந்த பூமிகள் செழிப்பான பலன் களைத் தரும். உறவினர்களுக்கும் சுப மேற்படும். யானை முகத்தோனைப் பெற்ற பார்வதியே! சொல்லுகின்றோம்.

43. சேய்த்தசை தன்னி லேதான் சிறுவர்கள் விருத்தி யாகும்
தீயதாய் ரோகம் வாய்க்கும் சிறுதந்தை மணமு முண்டாம்
ஆயவே சமப லன்கள் அறைந்திட்டோம் இவனுக் கேதான்
மாயவன் தங்கை யாளே வறைகிறே மினிமே லாக.

43. செவ்வாய் மகாதசையில் சகோதர விருத்தி ஏற்படும். கெட்டபிணி ஒன்று அணுகும். சிறிய தந்தைக்குக் கல்யாணம் ஆகும். ஆக, இந்தத் தசையில் சமமான பலன்கள் உண்டாகும் என்று சொன்னோம். கண்ணபிரானின் தங்கையே! மற்றவற்றை இனிமேல் சொல்லுகின்றோம்.

## ஜாதகம் 2

1. புந்திசெய் ரவியுந் தூக்கம் புகர்கயர் தேள தாகச்
சந்திரன் சாடி யாகச் சனிகேது நந்தி யாக
மந்திரி வீணை யாக வருஞ்ஜன்மம் மகளி ராக
இந்தவாறு கிரகம் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. புதன் செவ்வாய் சூரியன் துலாத்திலும், சுக்கரன் ராகு விருச்சிகத்திலும், சந்திரன் கும்பத்திலும், சனி கேது விருஷபத்திலும், குரு மிதுனத்திலுமாக நின்று, ஜன்ம லக்கினம் மிதுனமாக இருந்தால், இக் கிரக நிலையைக் கொண்ட ஜாதகத்தின் பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி கேது | லக்கினம் குரு |
| சந்திரன் | **இராசி சக்கரம்** | | |
| | | | |
| | சுக்கிரன் ராகு | புதன் சூரியன் செவ்வாய் | |

2. வந்தவன் கீழ்மேல் வீதி வாசலும் எமனின் பார்வை
தந்தையின் இல்லம் தன்னில் தானவன் உதிப்பா னென்றேம்
சந்தியும் ஈசன் காளி தந்தியும் மேற்கில் நிற்கும்
பந்தமாய்ச் சோலை சூழி பகருவோ மருகில் நிற்கும்.

2. இந்த ஜாதகத்தையுடையவன் கிழக்கு மேற்கு வீதியில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடைய வீட்டில் பிறந்தவன். அஃது அவனுடைய தந்தையின் வீடு. மேற்குப் பக்கத்தில் ஒரு நாற்சந்தியும், சிவபெருமான் ஆலயம், காளி கோயில், விநாயகர் ஆலயம் இவைகளும் உண்டு. அருகில் ஒரு தோட்டம், துரவு இவைகளும் உள்ளன.

3. மாரியும் மாயோன் தென்மேல் வாசமும் கிழக்கில் தந்தி
கூறெதி ரில்ல மில்லை குறித்தனம் சமவூர் தன்னில்
வீரிய னுதிப்பா னென்றேம் மிக்கதாய் தந்தை யோகம்
தேரிய களத்திரர் புத்திரர் செப்புவோம் முன்பின் ஜன்மம்.

3. அந்த வீட்டுக்குத் தென் மேற்குப் பக்கத்தில் மாரியம்மன் கோயிலும் விஷ்ணு ஆலயம் ஒன்றும் இருக்கும். கிழக்கில் மற்றொரு விநாயகர் ஆலயம் உள்ளது. எதிரில் வீடில்லை. இங்ஙனமுள்ள ஒரு சிற்றூரில் இந்த ஆண் மகன் பிறப்பானாகும். இவனுடைய தந்தை, தாய், ஏற்படும் மனைவி, புத்திரர் இவர்களின் யோக வரலாற்றையும், பூர்வஜன்ம வரலாற்றையும் கூறுவோம்.

4. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மாண்பால் ஒன்று
வந்திடும் கன்னி அவ்வாறு வரைகிறோம் தீர்க்க மாக
முந்திய துணைவன் சேதி மொழிகிறோம் மால்நி றத்தான்
சந்ததம் ஒடிச்சல் தேகி சபைதனில் கூறு னென்றோம்.

4. தந்தையின் உடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுங்கால், சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுளுடன் இருப்பர். மூத்த சகோதரனின் (தந்தைக்கு) விவரங்களாவன. திருமாலைப் போன்ற கரிய நிறமுடையவன். மெல்லிய தேகத்தன். சபையில் பேசத் தெரியாதவன்.

5. அடக்கவான் பொறுமை சாலி அன்புள மனத்த னாகும்
துடுக்கென வார்த்தை கூறான் சோம்பிடான் காரி யத்தில்
நடக்கையும் நல்ல தாகும் நாதனுர் பக்தி பூண்பன
மடக்கொடி யாளால் யோகம் வந்திடு மென்று சொன்னோம்.

5. அடக்க முள்ளவன். பொறுமை யுடையவன். பிறரிடம் அன்பு நிரம்பிய மனத்தன். துடுக்காகப் பேசாதவன். காரியங்களில் சோம்பல் கொள்ளாதவன். நன்னடக்கை யுடையவன். சிவபெருமான்மீது பக்தியுள்ளவன். தன் மனைவியால் அதிருஷ்டங்கள் வந்து சேரும் என்று கூறுவோம்.

6. மனைவியு மொன்றே யாகும் வரைகிறோம் புத்திர பாவம்
அனையவே ஆண்பால் நான்கு அதுவன்றிப் பெண்பா லில்லை
கனமுடன் ஒருவன் தானும் கனத்ததோர் தந்தை வர்க்கம்
சினமுடன் செல்வா னாகும் சேயர்க ளில்லா தாலே.

6. அவனுக்கு மனைவி ஒருத்தியேயாவள். புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். ஆண் மக்கள் நால்வரேயாவர். பெண் குழந்தைகள் இரார். ஓர் ஆண் மகன் தந்தை வர்க்கத்தில் ஒருவருக்குக் குழந்தைகள் இல்லாததால் அவரிடம் சென்றுவிடுவான்.

7. கருமங்கள் செய்ய வேண்டி உத்தம னுறைவா னாகும்
பெருவழக் குண்டு பின்பு பெற்றிடு வானு மாஸ்தி
திருமக ளிவர்க ளோடே செல்வனும் யோக சாலி
அருமையாய்த் தந்தை சேதி அறைகிறோம் கேளுந் தாயே.

7. இறுதிக் கடன்கள் செய்யவேண்டியகாரணத்தால் அவர் பக்கம் சென்று வாழ்வன். அதனால் பெரியதொரு வழக்கு நேரும். பின்பு ஆஸ்திகளை யடைவான். லட்சுமி விலாசம் பெற்றவன். அதிருஷ்டசாலி. ஜாதகனின் தந்தையின் விவரங்களைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

8. புத்திமான் பொறுமை சாலி புண்ணிய மனத்த னாகும்
பத்திமான் கருநி றத்தன் பாரினில் ஊக முள்ளான்
வித்தகன் ஒடிச்சல் தேகி வீணப வாத முள்ளான்
நித்தியஞ் சீல னுவன் நிமலியே மேலுங் கேளே.

8. புத்திசாலி. பொறுமை யுள்ளவன். நல்ல மன முடையவன். பக்தி யுள்ளவன். கரிய நிறமுள்ளவன். ஊக முடையவன். மெல்லிய சரீர முள்ளவன், அனுவசியமான நிந்தையை ஏற்பான். நல்லொழுக்க முடையவன். தாயே! மேலுங் கேள்.

9. அன்னங்கள் போட வல்லான் அண்டினோர்க் குதவி செய்வன்
மன்னவர் நேசம் கொள்வன் மர்மமில் லாத நெஞ்சம்
உன்னத வார்த்தை சொல்வன் உண்மையா மனத்த னாகும்
பன்னியே உரைக்க வல்லன் பகைவரை ஜயிப்பா னாமே.

9. அன்னம் அளிக்க விருப்பமும், சக்தியு முடையவன். தன்னை வந்தடைந்தவர்களை ஆதரித்து உபகாரம் செய்பவன். (அரசர்கள்) ராஜாங்க உத்தியோகஸ்தர்கள் நட்புள்ளவன். இரகசிய மில்லாதவன். உயர்வான வார்த்தைகளைப் பேசுபவன். உண்மையே பேசும் தன்மையன். பன்னிப் பன்னி வார்த்தை யாடுவான். விரோதிகளை ஜயிப்பான்.

10. இனத்துக்குப் பகையு முள்ளான் ஈசன்போல் வேடங் கொள்வன்
கனத்தவர் நேச மாவன் காலாள்க ளுடைய னாகும்
சினமது கொஞ்ச முள்ளான் சீக்கிர நடையு மாவன்
தனமது வதிக மில்லான் தாட்சிண்யன் தீர நெஞ்சன்.

10. தன் பந்துக்களிடம் விரோதம் கொள்ளுவான். பரமசிவனைப்போல் தோற்றமளிக்கும்படி வேடம் கொள்ளுவான். பெரியோர்களின் நட்புள்ளவன். ஏவலாட்க ளுடையவன். சிறிது முன் கோப முடையவன். வேகமாக நடப்பான். செல்வங்கள் மிகுதியாக இல்லாதவன். தாட்சிண்யம் கொள்ளும் இயல்பினன். தைரியமான மனத்தன்.

**விஷ்ணுரேகை.**

11. பூமியும் பரிபா லிப்பன் புகழுளான் சூடாந் தேகம்
காமனை அதிகங் கொள்ளான் கரமதில் விஷ்ணு ரேகை
தீமையை விரும்பா னாகும் செப்புமிக் குணத்தா னுக்கு
நேமியி லிவனு திப்பான் நிகழ்த்துவோ மிவன்கு ணத்தை.

11. பூமியை ஆளும் தன்மையன். செல்வாக் குடையவன். சூடான சரீர முள்ளவன். சிற்றின்ப இச்சை அதிகமாக இல்லாதவன். கையில் விஷ்ணுரேகை யுடையவன். தீச் செயல்களைச் செய்ய விரும்பாதவன். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுடையவனுக்குப் புத்திரனாகப் பிறப்பான் இந்த ஜாதகன். இவனுடைய குணங்களைப் பற்றிச் சொல்லுவோம்.

12. மாநிறம் ஒடிச்ச லுள்ளான் மர்மவான் கல்வி பூண்பன்
ஈனரைச் சேரா னாகும் யாரையு முறவு கொள்வன்
தானமுந் தர்மஞ் செய்வன் சகலர்க்கு நல்லோ னவன்
தேன்மொழி வார்த்தை யுள்ளான் செம்பொன்னு முடைய
னாமே.

12. மாநிற முள்ளவன். மெல்லிய தேகத்தன். இரகசிய முடையவன். கல்வி கற்பான். கீழ்த்தரமானவர் நட்பு இல்லாதவன். எல்லோரையும் வசீகரித்து உறவு கொள்ளுந் தன்மையுடையவன். தான தருமங்கள் செய்பவன். எல்லோரிடமும் நல்லவன் என்ற பெயரெடுப்பான். இனிமை யாகப் பேசுபவன். செம்பொன் (முதலிய) செல்வங்கள் உடையவன்.

13. போசனம் புளிப்பி லிச்சை பூமியு மதிகஞ் சேர்ப்பான்
மாசிலாக் குணத்தா னாகும் மாடுகள் விருத்தி யுள்ளான்
வேசியர் மோக வானும் வீண்வார்த்தை பேசா னாகும்
பாசமா மனைவி நேயன் பந்துபூ சிதனாஞ் சொல்லே.

13. புளிப்புள்ள பதார்த்தங்களைப் புசிப்பதில் இஷ்டன். விளைநிலங்களை விருத்தியாக்குவான். தீமைகளில்லாத குண முடையவன். கால்நடைகள் மிகுதியாக உடையவன். விலைமாதர்மீது விருப்பம் உள்ளவன். வீண் வார்த்தை பேசாதவன். மனைவிக்குப் பிரியமானவன். பந்துக்களால் விரும்பப்படு பவன்.

14. இவனுக்குத் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பா லொன்று
அவனியில் கன்னி மூன்று அறைகின்றோ மிவனுக் கேதான்
நவனியில் இளையோ னாக நாட்டுவோந் துணைவர் தம்மைக்
கவனமாய் அவன்தன் சேதி கழறுவோங் கேளு மம்மா.

14. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுங்கால், சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவருமாவர் என்று சொல்லு கின்றோம். சகோதரன் ஜாதகனுக்கு இளையவன். அவனுடைய (ஜாதகனின்) தம்பி விவரங்களைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

15. யோகவான் குணவா னாகும் உறுதியா மனத்த னென்றோம்
பாகமாய்ப் பேச வல்லன் பலருக்குஞ் சகாயஞ் செய்வன்
நாகரி கங்க ளுள்ளான் நற்றந்தை தாயின் கர்மம்
ஆகவே செய்யா னாகும் அவனுக்கு மனைவி மைந்தர்;

15. நல்ல அதிர்ஷ்டங்களுள்ளவன். குணவான். திடமான மன முள்ளவன். கண்டிதமாகப் பேசுபவன். வெகு பேர்களுக்கு உபகாரம் செய்யும் இயல்பினன். நாகரிகமாக இருப்பவன். தன் தாய் தந்தையரின் கர்மாக்களைச் செய்பவன். அவனுடைய மனைவி மக்கள் இவர்களைப் பற்றி;

16. பின்பாகம் சொல்வோம் யாங்கள் பெண்துணை பலனைக் கேளாய்
அன்புள மூத்தா ளுக்கு அறைகின்றோம் பலனை யாங்கள்
துன்பமில் லாமல் வாழ்வள் சுதர்களு மல்ப மாகும்
கன்னென மொழியு முள்ளாள் கணவனுக் கினிய ளாகும்.

16. பின்பாகத்தில் விவரமாய்க் கூறுகின்றோம். சகோதரியின் பல பாகங்களைக் கேளுங்கள். பிரிய முள்ள முதல்வளுக்குரிய பலனைச் சொல்லு கின்றோம். துன்பங்கள் இல்லாமல் வாழ்ந்து வருவாள். மிகக் குறைவான மக்கட் செல்வ முள்ளவள். கரும்பைப் போன்ற இனிய வார்த்தை யுள்ளவள். கணவனுக்குப் பிரியமானவள்.

17. தேவதா விரதம் கொள்வள் சிறுத்தவர்க் குதவி செய்வள்
மேவிய கோபம் கொஞ்சம் வரனுக்குத் துணைவர் இல்லாள்
பாவங்கள் செய்யா ளாகும் பத்தினி கேட்க லுள்ருள்
தாவிய மதலைத் தோடம் சாற்றினீர் சங்கை சொல்வீர்.

17. தெய்வ பக்தியுடன் விரதம் ஏற்பள். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. சிறிது கோபம் கொள்ளுவாள். தன் கணவனுடன் பிறந்தவர் களில்லாதவள். பாவங்கள் செய்யாதவள். (என்று முனிவர்கள் கூறும் போது), பார்வதி கேட்கலானுள். அவளுக்குப் புத்திர தோஷம் ஏற்படக் காரணங்களைக் கூறும், என்று வினவிளுள்.

**புத்ர தோஷம் தீர சாந்தி.**

18. முன்ஜன்ம வினையி ஞலே முயலாவே மதலை தாமும்
உன்னத கிருஷி செய்வன் உயர்நவ மணியின் சாந்தி
இன்னவள் தனக்குச் செய்தால் இலகிடு மாண்பா லொன்று
தன்னிலே பெண்பால் ரண்டு தரித்திடுந் தீர்க்க மாக.

18. முற் பிறவியில் செய்த தீவினையால் குழந்தைகள் பிறவா. நவக்கிரக சாந்தி செய்து இவளுக்கு ரட்சை கட்டிஞல் ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவைளாக இருக்கும்.

**சாந்தி செய்யும் கிரமம்.**

19. சாந்தியு மெவ்வாறு செய்யச் சாற்றுவீர் முனியே என்ருள்
ஈன்றதோர் கிரக பூஜை இசைந்துமே ஓமம் செய்து
ஆனதோர் சக்தி தியானம் அன்புடன் பூஜை செய்து
பான்மையாய் ரசித ஏட்டில் பராசக்தி பீசந் தன்னே ;

19. சாந்தி எப்படிச்செய்வது என்று கூறுங்கள்; என்று பார்வதிதேவி கேட்டாள். அந்தப் பெண் பிறந்த வீட்டில் பூஜை செய்து, (நவக்கிரக) ஓமமும் செய்து, சக்திக்கும் பூஜை முதலியன செய்து, தியானித்து, வெள்ளித்தகட்டில் பராசக்தி தேவியின் பீஜாக்ஷரம் தன்னே ;

20. வரைந்துபின் வாலை தியானம் மகிழ்வுடன் சேமித் தின்னேள்
உரமதி லணிவா ளாகில் ஊழ்யாவும் நீங்கி யேதான்
பிறந்திடும் மதலை என்ரேம் பேசுவோ மிவளுக்கே தான்
நிரந்தர மாக வாழ்வள் நிமலியே கேட்டி டாயே.

20. எழுதி, பிறகு மீதி அட்சரங்களைத் தியானம் செய்து ஜபித்துத் தான் அதை அணிந்து வந்தால், முன் செய்த பாவங்கள் எல்லாம் விலகி, குழந்தை கள் பிறக்கும் என்ரேம். அவளும் சிரஞ்சீவியாக நெடுங்காலம் வாழ்ந்து வருவாள். பார்வதி தேவியே ! கேளுங்கள்.

21. அதற்குப்பின் வந்தோள் சேதி அறைகிரேம் கபடு மில்லாள்
பதியினில் வாழ்வா ளாகும் பதநடை துருசு முள்ளாள்
நிதியது உள்ளா ளாகும் நிமலியும் வேருய்ச் செல்வள்
சதியிலா மனத்தா ளாகும் தன்வர ஞுடனே வாழ்வள்.

21. இரண்டாவது சகோதரியின் செய்திகளைக் கூறுகின்றோம். சூதில்லாதவள். பிறந்த வீட்டில் சுகமுடன் வாழ்ந்து வருவாள். வேகமாக நடப்பவள். செல்வங்கள் மிகுதியாகவிருக்கும். கபடில்லாத மனமுடையவள். மணமானதும் தன்கணவனுடன் வேருகச்சென்று வாழ்ந்துவருவாள்.

22. அவளுக்குப் புத்திர பாவம் ஆணது இரண்டு என்றேம்
பவமுள கன்னி ரண்டு பகருவோம் தீர்க்க மாகத்
தவசியே வயது தீர்க்கம் சாற்றினேம் அவளுக் கேதான்.
[1]. . . . . . . . .

22. அவளுக்குப் புத்திரபாக்கியத்தை ஆராய்ந்து நோக்கின் இரு புத்திரர்களும் நன்மையுள்ள இரு புத்திரிகளும் தோன்றி, தீர்க்கமாக வாழ்வார்கள். அவளுக்கு நீண்ட ஆயுள் உண்டு என்று சொல்லுவோம். தவங்கள் இயற்றும் பார்வதியே!

23. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருபா னென்றில்
மேதினில் உத்தி ரத்தில் வித்தகி வருவா ளென்றேம்
ஓதுவேன் அவள்கு ணத்தை உண்மையா மனத்த ளாகும்
நீதியாய் நடக்கை உள்ளாள் நிமலியும் யோக சாலி.

23. ஜாதகனின் திருமணக்காலம் இருபத்தோராம் வயதில் என்று கூறுகின்றேம். அவன் வீட்டுக்கு வடக்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குண விசேஷத்தைச் சொல்லுகின்றேம். உண்மையுள்ள மனத்தினள். நெறியுடன் நடப்பவள். அவள் அதிருஷ்டம் உள்ளவள்.

24. அன்னங்கள் போட வல்லாள் யாவருக்கும் நல்லோ ளாகும்
பண்ணிய வரனுக் கேதான் பாவையு மிஷ்ட முள்ளாள்
தன்னிலே சீல முள்ளாள் சகலபாக் கியமு முள்ளாள்
இன்னவள் வந்த பின்பு இணையிலாச் செல்வம் உள்ளாள்.

24. ஏழைகளுக்கு அன்னம் அளிக்கும் குணமுடையவள். எல்லோரிடமும் நல்லவளாகவே நடந்து வருவாள். தன் கணவனுக்குப் பிரியமானவள், ஒழுக்க முள்ளவள். எல்லா விதமான பாக்கியங்களும் உடையவள். இவளுக்கு மணமாகி ஜாதகனை வந்து சேர்ந்த பிறகு, நிகரில்லாத செல்வங்கள் வந்தடையும்.

25. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் ஆண்பால் ரண்டு
சக்தியு மவ்வா ருகும் சாற்றுவோம் தீர்க்க மாகச்
சித்தமாய் மூன்று நஷ்டம் செப்புவோ மிவனுக்கே தான்
அத்தியைப் பெற்ற மாதே அம்பிகை யாளே கேளாய்.

25. ஜாதகனின் புத்திர பாக்கியத்தைக் கூறுவோம். ஆண்மக்கள் இருவரும், பெண்மக்களிருவரும் நீண்ட ஆயுளுடனிருப்பர். மற்றும் மூன்று பிறந்து நிலையா என்று சொன்னேம். யானைமுகக் கடவுளைப் பெற்ற தாயே! ஈசுவரியே! கேளுங்கள்.




26. மாதுரு மாஞ்சி வப்பள் மர்மமில் லாதா ளாகும்
கோதிலாப் பித்த தேகி குற்றமில் லாதா ளாகும்
போதவே வரனுக் கேதான் பொருந்துநன் நடக்கை உள்ளாள்.
[1]. . . . . . . .

[1] 4-ஆம் அடி காணபடவில்லை,

26. அன்னை மாநிற முள்ளவள். இரகசிய மில்லாதவள். பித்த சரீரி. குற்ற மில்லாதவள். தன் கணவன் மனமறிந்து நடக்கும் நற்குணமுடையுவள்.

27. அவளுடைத் தாய்க்கு டும்பம் அலைச்சலாம் என்று சொன்னோம்
நவமிதில் ஆண்பால் மூன்று நவிலுவோ மிரண்டு சேதம்
கவனமா யொருவன் தானும் கிளம்புவான் சோங்கின் மேலே
பவமுள இவள்முன் ஜன்மம் பகருவோம் கேளும் தாயே.

27. தாயினுடைய குடும்பம் அலைச்சலுள்ளது என்று கூறுகின்றோம். (உடன் பிறந்தவர்) மூவர்களில் இருவர் மரிப்பர். ஒருவன் நிலையாக விருப்பான். அவன் கப்பலேறி வேறு தேசம் செல்வான். இவளுடைய முற்பிறப்பைப்பற்றிச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

28. கச்சிக்கு மேல்பா லாகக் கனமுள பேரூர் தன்னில்
உச்சித குலால வம்சம் உறைந்துமே மதலை உண்டாய்
நச்சணி கண்டத் தானை நாயகி பூஜை செய்து
லச்சையில் லாமல் வாழ்ந்து நாயகன் முன்னே மாண்டு ;

28. காஞ்சீபுரத்துக்கு மேற்கில் ஒரு பெரிய ஊரில், குயவர் மரபில் தோன்றி, குழந்தைகள் பிறந்து, ஆலகால விஷத்தை ஆபரணமாகக் கொண்ட சிவபெருமானைப் பூஜைசெய்து, துன்பங்களின்றி வாழ்ந்து, நாயகனுக்கு முன்பு மரணமடைந்து ;

29. மறையவன் வரையப் பட்டு வந்தவ ளிவளே என்றோம்
அரன்மனை கேட்க லுற்றாள் அவளுக்கு இச்சென் மத்தில்
வருந்துணை நாச மென்றீர் மாளிகை அலைச்ச லென்றீர்
உரைகுவீர் பலனை நீங்கள் உத்தமி கேட்டி டாயே.

29. பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவளென்று கூறுகின்றோம். சிவபெருமானின் மனைவியாகிய பார்வதி வினவலானாள். அவளுக்கு இப் பிறவியில் உடன் பிறந்தவர் நாசம் என்று கூறினீர்கள். அலைச்சலும் உண்டு என்று சொன்னீர்கள். காரணம் என்ன ? பார்வதியே ! கேளுங்கள் (என முனிவர்கள் சொல்லுகின்றனர்).

### சகோதர தோஷம் நேரக் காரணம்

30. முன்ஜன்மம் வாழு நாளில் முனிவரும் ஒருவர் வந்து
அன்னங்கள் சமைக்க வேண்டி அவள்பாலே பாண்டம் கேட்க
இன்னவள் பாண்டம் தந்தாள் இதைவாங்கிப் பாகம் செய்தான்
உன்னித காலம் தன்னில் உடைந்தது அந்தப் பாண்டம்.

30. முற்பிறவியில் இவள் சுகமாக வாழ்ந்துவரும் நாளில், ஒரு நாள் ஒரு முனிவர் வந்து, அன்னம் சமைக்கப் பாத்திரம் ஒன்று யாசிக்க, இவளும் ஒரு மண் பாத்திரம் கொடுத்தாள். முனிவரும் அதில் சமைத்தார். அன்னம் கொதிக்கும் சரியான சமயத்தில் அந்த மண்பாண்டம் உடைந்தது.

31. சாதங்கள் பூமி தன்னில் சார்ந்தது அதனைப் பார்த்து
ஓதுவான் முனிவன் தாமும் உன்வீடு நாச மாகும்
மேதினில் வம்சம் தானும் விளங்காது என்று சொன்னன்
ஆதலால் அந்தத் தோஷம் அறைந்தது இச்சென் மத்தில்.

31. அதிலுள்ள அன்னம் எல்லாம் பூமியில் கொட்டியது. அதை நோக்கி முனிவர், உன் வீடு நாசமாகும்; உன் வம்சம் விளங்காது என்றார். அந்தத் தீவினையின் தோஷம் இப் பிறவியில் இவளை வந்தடைந்தது.

32. பின்ஜன்மம் [1] பட்சி தென்பால் பேரூரில் இக்கு லத்தில்
அன்னவ ளுதிப்பா ளாகும் அதிகமாய்ச் செல்வம் பெற்றுத்
தன்னிலே வாழ்வா ளாகும் சாற்றுவோம் தந்தை ஜன்மம்
பன்னியே சொல்லு கின்றேன் பார்வதி கேட்டி டாயே.

32. மறுபிறப்பில் திருக்கழுக்குன்றத்துக்குத் தெற்கில் உள்ள ஒரு பெரிய ஊரில் இதே குலத்தில் பிறப்பாள். செல்வங்கள் அதிகமாக அடைந்து வாழ்ந்து வருவாள். தந்தையின் முன் பிறப்பு வரலாற்றைச் சொல்லு கின்றேன். பார்வதியே ! கேளும்.

33. புதுவைமா நகரி லேதான் பிறந்தன னிக்கு லத்தில்
பதியது மேலாய் ஓங்கிப் பாரினில் செட்டுச் செய்து
நிதிமிக உள்ளா னாகி நேமியோர் மெச்ச வாழ்ந்து
சதமான மனைவி மைந்தர் தன்னுடன் வாழ்ந்த நாளில்;

33. முற்பிறவியில் புதுவைமா நகரில் குயவர் மரபில் தோன்றினன். பெரிய வீடு கட்டி, உலகில் பெரிய வியாபாரம் செய்து, செல்வங்கள் அதிகமாக உள்ளவனாக, உலகத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்து, மனைவி மக்களுடன் வாழ்ந்து வரும்போது;

34. வந்தஊழ் தன்னைச் சொல்வேன் வணிகனு மொருவன் தானும்
தன்தனம் வாங்கி யேதான் தரணியில் செட்டுச் செய்தான்
பிந்தியும் நஷ்டம் நேர்ந்து பொருளதை ஈயா னுகிச்
சிந்தையில் கலக்க முற்றுத் தேசமே சென்று னென்றேம்.

34. ஏற்பட்ட தீவினையைக் கூறுகின்றேம். ஒரு வியாபாரி, இவனிடம் (ஜாதகனின் தந்தை) பொருள் வாங்கி, வியாபாரம் செய்து வந்தான். வியாபாரத்தில் நஷ்டமடைந்து வாங்கிய கடனைத் திருப்பித்தர இயலாமல் மனத்தில் கிலேசம் அடைந்து வேற்றூருக்குச் சென்றான்.

### வீடு நிலங்களைப் பறித்தல்

35. அவனுடை வீடு பூமி யாவையும் பறித்துக் கொண்டு
தவசிகள் வாசம் செய்யச் சத்திரம் செய்தா னென்றேம்
பவமுள வணிகன் பெண்டு பதியது இல்லா ளாகி
நவனிபால் சாபம் சொல்வாள் நாயகி மேலுங் கேளே.

[1] திருக்கழுக்குன்றம்.

35. அவனுடைய வீடு, நிலங்கள் யாவற்றையும் இவன் எடுத்துக்கொண்டு, தவம் செய்பவர் (பரதேசிகள்) வசிக்க ஒரு சத்திரம் கட்டினன். வியாபாரியின் மனைவி வீடில்லாமல் மனம் வருந்திச் சாபமிட்டாள். தாயே! மேலுங்கேள்.

36. மறுஜன்மம் உன்வம் சத்தில் மதலையா யுதித்து யானும்
விரைவினில் பகையே யாகி வேண்டிய பொருளைக் கேடு
திறமுடன் செலவே செய்வேன் செப்பியே அவளும் போனாள்
அரைகிறோம் அந்தி யத்தில் அநாயாச மரண மாகி ;

36. மறு பிறப்பில், உன் வம்சத்தில் குழந்தையாகப் பிறந்து, நான் சீக்கிரத்தில் விரோதமுற்று, மிகுதியாகப் பொருளுக்குக் கேடும் செலவும் செய்வேன் என்று சொல்லிவிட்டுச் சென்றாள். அவளும், கடைசிக் காலத்தில் அநாயாச மரணமடைந்து ;

37. பிறந்தவ ளிவளே என்றோம் பேதையும் இக்கா லத்தில்
உறைந்துமன் விரோத முற்று உத்தமி பிறந்தா ளென்றோம்
அறைகிறோ மவளிச் சென்மம் அநேகமாய்ப் பகையும் நேர்வள்
விரைவினில் வந்த போதும் வெற்றியா மிவனுக் கேதான்.

37. பிறந்தவள், என்று கூறினோம். அப்பெண்ணும் இக்குலத்தில் பிறந்து, பின் விரோதமுள்ளவளாவள். என்ன மனஸ்தாபமும், பகையும் ஏற்பட்டாலும் ஜாதகனின் தந்தைக்கே முடிவில் வெற்றி ஏற்படும்.

38. செப்பிய தந்தை தானும் செழிப்புள விவேகி யாவன்
ஒப்பிய கடவுள் நேயன் உயருளான் ஞான முள்ளான்
கப்பிய தருமச் சிந்தை காவல னடக்க முள்ளான்
விற்பன குணவா னாகும் வித்தகி மேலுங் கேளே.

38. நாம் சொன்னபடி, தந்தை நல்ல விவேகியாக இருப்பான். தெய்வ பக்தியுள்ளவன். தெளிந்த ஞானியாக இருப்பான். தருமம் செய்வதில் விருப்ப முடையவன். அடக்கமான குணங்க ளுள்ளவன். தாயே! மேலுங்கேள்.

39. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் முப்பா னென்றில்
வந்திடும் கண்ட மென்றோம் மாதுரு தனக்கு மேதான்
சந்ததம் முப்பா னெட்டில் சாற்றுவோம் கர்மம் தானும்
தந்திமா முகனைப் பெற்ற தயாபரி கேட்டி டாயே.

39. ஜாதகனின் தந்தையின் மரணக் காலம் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் அது நேரும். தாய்க்கு முப்பத்தெட்டாம்வயதில் மரண மேற்படும். யானைமுகத்தோனை உலகத்துக்களித்த தயையுடையவளே! கேட்டருளுவாய்.

40. ஜாதகன் மாண காலம் சாற்றுவோம் அறுப தாண்டில்
நீதியாய்க் கன்னி மாதம் நிகரமா வாசை தன்னில்
தீதான பித்த நோயால் தேகமே வாடு மென்றேம்
மாதவர் தமைத் துதிக்கும் மங்கையே மேலுங் கேளே.

40. ஜாதகனின் மரண காலத்தைச் சொல்லுகின்றேம். அவனுடைய அறுபதாம் வயதில் புரட்டாசி மாதம் அமாவாசையில் பித்தநோய் ஏற்பட்டு இறப்பான். பெருந்தவம் செய்பவரைத் தோத்திரம் செய்யும் பார்வதியே! கேட்டிடுவாய்.

41. இன்னவன் முன்ஜன் மத்தை இயம்புவோம் ஆலங் காட்டில்
வன்னிய மரபில் தோன்றி மாநில முள்ளா னுகிப்
பொன்னெடு பணிதி பெற்றுப் புகழுடன் வாழு நாளில்
அன்னவன் மறையோ ரிஷ்டன் அறுமுகர்க் கடிமை உள்ளான்.

41. ஜாதகனின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். திருவாலங்காட்டில் வன்னிய குலத்தவனுகப் பிறந்து, நிலங்கள் மிகுதியாக உள்ளவனுகவும், செல்வங்கள் ஆபரணங்கள் முதலியன அடைந்தும் வாழ்ந்து வந்தான். அவன் அந்தணர்களுக்குப் பிரியமானவனுகவும் சுப்பிரமணியக் கடவுளுக்குத் தொண்டுகள் செய்தும் வந்தான்.

42. சாலேமார்க் கத்திலே தான் தாகப்பந் தலும மைத்துக்
கோலமாய் வருவோ ருக்குக் குறைகளைத் தீர்த்துத் தந்து
ஆலங்கா டுடையா னுக்கு ஊழியே அவன் நடத்தி
ஞாலமேல் மரண மாகி நாற்றலேக் கஞ்சன் தன்னுல்;

42. சாலை ஓரங்களில் தண்ணீர்ப்பந்தல் ஏற்படுத்தி, களைப்புடன் வருவோருக்குள்ள குறைகளை நீக்கி, அங்கு எழுந்தருளியிருக்கும் கடவுளுக்குத் தொண்டு செய்து, மரணமடைந்து, மீண்டும் பிரமனுல்;

43. வரையவே கங்கை வம்சம் வந்தவ னிவனே என்றேம்
அரைகிறே மிவன்பின் ஜன்மம் அக்காஞ்சி நகரி லேதான்
தெரியவே பிரம சேயாய்ச் செல்வனு முதிப்பா னென்றேம்
குறைவிலா வாழ்வா னுகுங் கூறுவோம் யோகச் செய்கை;

43. படைக்கப்பட்டு வேளாள மரபினில் பிறந்தவன் இவனே என்று கூறினேம். இவனுடைய மறு பிறப்பைப்பற்றிக் கூறுவோம். காஞ்சிபுரத்தில் வேதங்களறிந்த அந்தணர் குலத்தவனுகப் பிறப்பான். பிறந்து குறைகளில்லாமல் வாழ்ந்து வருவான் என்றுரைப்போம். அதிருஷ்டங்களும்;

44. பாக்கிய முடைய னுகும் பந்துபூ சிதமு முள்ளான்
யோக்கிய னுகி வாழ்வன் உலகுளோர்க் குதவி செய்வன்
வாக்குகள் தப்பா னுகும் வல்வாயன் தானிய விருத்தி
ஏற்கவே கிருஷி செய்வன் இவன்தந்தை ஆஸ்தி விருத்தி.

44. ஸௌபாக்கியங்களும் உடையவனுகவும், உறவினர்களால் கொண்டாடப்படுபவனுகவும், நன்னடக்கை யுடையவனுகவும், உலகத்தவர்களுக்கு உபகாரியாகவும் வாழ்ந்து வருவான். சொன்ன சொற்கள் தவறுதவன். வாக்கு வன்மையுடையவன். தானியவிருத்தி யுள்ளவன். விவசாயம் செய்பவன். இவனுடைய தந்தையின் ஆஸ்தியைப் பெருக்குவான்.

45. செய்குவன் தீர நெஞ்சன் சிறப்பான குடும்பி யாவன்
ஐயங்கள் செய்ய இச்சை அவன்திருப் பணியும் செய்வன்
வையமேல் புகழு முள்ளன் மங்கையர் மோக வானும்
பொய்யது அதிகம் சொல்லான் பூஷணம் சேர்ப்பா னுமே.

45. தைரியமான மனத்தினன். புகழுள்ள குடும்பியாவன். தருமங்கள் செய்ய ஆசையுள்ளவன். கோயில் திருப்பணியும் செய்வான். உலகத்தில் கீர்த்தி யடைவான். பெண்கள்மீது மையலுள்ளவன். அதிகமாகப் பொய் சொல்லாதவன். ஆபரணங்களைச் சேர்ப்பான்.

46. காளையும் ஜனிக்குங் காலம் கரும்பாம்பு தசை இருப்புக்
கோலமாய் ஆண்டு ஆறு கூறுவோம் திங்க ளொன்பான்
பாலகன் தனக்கு ரோகம் பருகிடும் பின்பு நீங்கும்
ஞாலமேல் கலக முண்டு நாற்காலி சேத மாமே.

46. ஜாதகன் ஜனன காலத்தில் ராகுமகாதசையில் ஆறு வருஷங்களும் ஒன்பது மாதங்களுமாம். அக் காலத்தில் சிறிது நோய் ஏற்பட்டுப் பிறகு நீங்கும். உலகத்தில் கலக மேற்படும். கால் நடைகட்குச் சேதமேற்படும்.

47. சூதகம் விரோத மாகும் சுரர்குரு தசையி லேதான்
நீதியாய் வழக்கு நேரும் நிகர்ஞாதி ஆஸ்தி யாலே
மேதினில் தனங்கள் சேதம் வெற்றியாம் நினைத்த தெல்லாம்
சூதினல் ஜயமே உண்டு துணைவிக்குச் சுபமும் நேரும்.

47. குருமகாதசையில் வீட்டில் அசுபங்கள் ஏற்படும். வழக்குகள் ஏற்படும். பங்காளியின் சொத்து விஷயத்தால் மிகுதியாகப் பொருள் நஷ்டம் ஏற்படும். ஆனல் நினைத்த காரியம் ஜயிக்க வல்லவன். வழக்கில் ஜயம் ஏற்படும். சகோதரிக்கு மங்களங்கள் உண்டாகும்.

48. தன்னுடத் துணைவன் சேதம் தனக்குமே சுபமு முண்டு
முந்திய தந்தை பாரி எய்திடும் மார கங்கள்
சிந்தைகள் கலக்க மாகும் தன்பந்து பகையு முண்டாம்
சந்ததம் அரச ராலே சந்தோஷ மாகும் தானே.

48. உடன் பிறந்தவன் இறப்பான். தனக்கு மங்களங்கள் ஏற்படும். பெரிய தந்தையின் மனைவிக்கு மரணம் உண்டாகும். மனக்கலக்கம் ஏற்படும். உறவினர்கள் மனஸ்தாபம் ஏற்படும். நிச்சயமாக அரசாங்கத்தாரால் சந்தோஷம் உண்டாகும்.

49. நட்டமாம் பொருளுங் கூடும் ஞாதியின் பூமி சேரும்
மட்டிலாக் குடும்பம் தன்னில் வந்திடும் சுபமு மாகும்
துட்டரு முறவே யாகும் சொல்லுவோம் விபரம் ரண்டில்
திட்டமாய்த் தவங்கள் செய்யும் தேவியே கேட்டி டாயே.

49. நஷ்டமடைந்த பொருள்களைத் திரும்பப் பெறுவான். பங்காளியின் பூமியும் நிலங்களும் சேரும். குறையில்லாக் குடும்பத்தில் மங்களங்கள் ஏற்படும். தீயவர் உறவும் உண்டு. அந்த விபரங்களை இரண்டாம் பாகத்தில் நிச்சயமாகச் சொல்லுவோம். தவங்களை இயற்றும் பார்வதியே! கேளுங்கள்.

## ஜாதகம் 3

1. மந்திரி வீணை யாக மதிசுரு கருங்கோள் கெண்டைப்
புந்திபான் சனியும் வெள்ளி புக்கிடக் கோல தாகச்
செந்தீயும் வருடை யாகச் சிகிகன்னி மிதுனம் ஜன்மம்
இந்தவாறு கோள்கள் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. குரு மிதுனத்திலும், சந்திரன் மகரத்திலும், ராகு மீனத்திலும், புதன் சூரியன், சனி சுக்கிரன் துலாத்திலும், செவ்வாய் மேஷத்திலும், கேது கன்னியிலு மாகவிருந்து, மிதுனம் ஜன்ம லக்கினமாகவுள்ள ஜாதகத்தின் பலனைக் கூறுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ராகு | செவ்வாய் | | லக்கினம் குரு |
| | இராசி சக்கரம் | | |
| சந்திரன் | | | |
| | | புதன் சூரியன் சனி சுக்கரன் | கேது |

2. அம்பிகை கேட்கும் போது அத்திரி முனிவர் சொல்வார்
செம்மையாய் ஆண்பால் ஜன்மம் செப்புமில் கீழ்மேல் வீதி
தென்திசை வாச லாகும் தீர்த்தமும் மேற்கில் தங்கும்
கொம்மையே வடக்கில் ஓடை கூறுவோம் கிழக்கில் மாரி.

2. என பார்வதி கேட்கும் போது, அத்திரி முனிவர் சொல்லுகிறார். இது நிச்சயமாக ஆண் பிறப்பு. அவன் பிறந்தவீடு கிழக்குமேற்காக உள்ள தெருவில், தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையதாக விருக்கும் என்று கூறுவோம். மேற்குத் திக்கில் ஒரு நீர்நிலையும், வடக்கில் ஓர் ஓடையும், கிழக்குத் திக்கில் மாரியம்மன் கோயிலும் உள்ளன.

3. அதன்கீழ்ப்பால் கணேசன் தங்கும் அக்கினி காளி வாசம்
எதிரில்ல மில்லை யாகும் இலகிய சிற்றூர் தன்னில்
சதிருடன் கூரை வீட்டில் ஜாதகன் ஜனிப்பா னாகும்
நதிகுல வம்ச மென்றேம் நாயகி மேலும் கேளே.

3. அதற்குக்கிழக்கில் ஒரு விநாயகர் கோவிலும் வடகிழக்குத்திக்கில் காளீ கோவிலும் இருக்கும். எதிர்ப்பக்கத்தில் வீடுகள் இல்லை. இங்ஙனமுள்ள ஒரு சிற்றூரில், கூரை வீட்டில் ஜாதகன் பிறப்பான். வேளாள மரபில் தோன்றுவான். பார்வதியே ! மேலுங் கேளுங்கள்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெரும் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்புத்திர களத்திர யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மம் சகோதர யோக மெல்லாம்
அன்னையே இந்நூல் தன்னில் அறைகிறோம் விபரமாக.

4. ஜாதகனின் பிறப்பு, யோகங்கள், அழகுள்ள தந்தையின் யோகம், தாயின் யோகம், ஏற்படும் மனைவி மக்களின் யோகங்கள், முன் பிறப்பு, மறு பிறப்பு இவைகளையும், சகோதர பாவத்தையும் பற்றி, இந்த ஜாதகநூலில் கூறுகின்றோம். தாயே!

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த மேனி
பந்தமாய்ச் சமதே கத்தன் பாரினில் ஊக சாலி
வந்தவர்க் கன்ன மீவன் வாக்குகள் சுத்த முள்ளான்
சந்ததம் தியாகி யாவன் சன்மார்க்கன் நெறியுள் ளோனும்.

5. தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். சிவந்த நிறமுடையவன். சமமான உடலமைப்புள்ளவன். ஊகமுள்ளவன். யாசித்து வந்தவர்களுக்கு அன்னமளிப்பான். சொன்ன சொற்படி நடப்பவன். தியாகம் செய்யும் மனப்பான்மையுள்ளவன். நல்லவழியும் நல்லொழுக்கமும் உடையவன்.

6. கல்விமான் அரச ரிஷ்டன் கதித்ததோர் புத்தி உள்ளான்
இல்லையென் றுரைக்க மாட்டான் எதிரியை வசியம் கொள்வன்
தொல்புவி அதிகம் சேர்ப்பன் துறவிகள் நேசம் கொள்வன்
நல்லவ னாகி வாழ்வன் நாயகி மேலுங் கேளே.

6. நல்ல கல்வி யறியுள்ளவன். இராசருக்குப் (இராஜாங்க உத்யோகஸ்தர்களுக்கு) பிரியமானவன். தேர்ந்த புத்திசாலி. யாசித்தவர்கட்கு இல்லை என்று கூருதவன். விரோதிகளை வசீகரிக்க வல்லவன். பூமிகள் அதிகமாச் சேர்ப்பான். துறவிகளுக்குப் பிரியமானவன். உலகில் நல்லவன் என்ற பெயருடன் வாழ்ந்து வருவான். தாயே! மேலுங்கேள்.

7. வண்டிவா கனமு முள்ளான் வணிபங்கள் செய்வா னுகும்
குண்டைகோ விருத்தி உள்ளான் குலத்துளோர் மெச்ச வாழ்வன்
அண்டினேர் தம்மைக் காப்பன் ஆள்கார ருடைய னுவன்
எண்டிசைக் கீர்த்தி கொள்வன் இவன்பித்த தேக வானும்.

7. வண்டி முதலிய வாகனவசதிகள் உடையவன். வியாபாரம் செய்து வருவான். காளைகள், பசுக்கள் பெருக்கமாகவிருக்கும். தன் குலத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். தன்னை அடைந்தவர்களை ஆதரிப்பான். ஏவலாட்களுடையவன். எட்டுத்திக்குகளிலும் புகழ் உள்ளவன். பித்த தேகத்தன்.

8. அரசரால் வணிபம் செய்வன் ஆசாரன் அடியார் நேயன்
கரங்காலும் வடிவு முள்ளான் காரிழை இஷ்ட னுவன்
விரைவினில் நடக்க வல்லன் விளம்புவோம் சூடு உள்ளான்
நிரைஉப தேச முள்ளான் நிமலியே மேலுங் கேளே.

8. இராஜாங்க சம்பந்தமான வியாபாரம் செய்து வருவான். சீல முள்ளவன். சிவனடியார்களுக்கு இஷ்டன். கால் கைகளில் மச்ச முள்ளவன். மனைவிமீது பிரியமுள்ளவன். வேகமாக நடப்பவன். சரீரச் சூடுடையவன். உபதேசங்கள் உள்ளவன். பார்வதியே ! மேலுங் கேள்.

9. இவனுடைத் துணைவர் தம்மை இசைக்கிறோ மாண்பால் மூன்று
நவனியில் தீர்க்க மாகும் நசித்திடும் மற்ற வெல்லாம்
அவனியில் துணைவர் சேதி அறைகிறோம் இரண்டி லேதான்
கவனமிக் குணத்தா ருகும் காளை யுங் மூன்றுஞ் ஜன்மம் ;

9. இவனுடைய (ஜாதகனின் தகப்பனின்) உடன் பிறந்தவர்களைப்பற்றிக் கூறுகின்றோம். ஆண் மக்கள் மூவர் நீண்ட ஆயுளுடனிருப்பர். மற்றவை யெல்லாம் நிலையா. உடன் பிறந்தவரின் பலன்களை யெல்லாம் இரண்டாம் பாகத்தில் கூறுவோம். இங்ஙனமுள்ள தன் தந்தைக்கு ஜாதகன் மூன்றும வனுக ;

10. உதிப்பனு மிவனே என்றோம் உரைக்கிறோ மவன்கு ணத்தைத்
ததிநெய்பால் இஷ்டம் கொள்வன் ஸத்தான ருறவு கொள்வன்
அதிபனும் மிகுநி றத்தன் வாயுவாம் தேக முள்ளான்
நதிபல தீர்த்தம் தோய்வன் நற்சித்திர வீடு செய்வன்.

10. பிறப்பான் என்றுரைத்தோம். அவனுடைய (ஜாதகனுடைய) குணத்தைச் சொல்லுகின்றோம். தயிர் நெய் பால் இவைகளில் விருப்ப முள்ளவன். நல்லவர்கள் உறவுடையவன். அழகிய நிறமுடையவன். வாயு சரீரமுடையவன். பல வித புண்ணிய நதிகளில் நீராடுவான். அழகிய வீடு ஒன்று கட்டுவான்.

11. பால்பாக்ய முடைய னுகும் பகைவரை நேசங் கொள்ளான்
சீலமா சார னுவன் சிறுத்தவர் தம்மை காப்பன்
வேல்விழி மனையாள் பட்சன் விரும்புவான் சுக புசிப்பு
ஆலமாம் பகைவ ருக்கு அரியாவ னிவனே என்றோம்.

11. பால் பசு பாக்கியங்களுடையவன். விரோதிகளை நெருங்கவிடாதவன். நல்லொழுக்கமும் ஆசாரமும் உள்ளவன். துன்பமடைந்தவர்களை ஆதரிப் பான். வேலைப் போன்ற வழிகளையுடைய மனைவிமீது விருப்பமுள்ளவன். சௌக்கியமாகச் சாப்பிடுவதில் விருப்பமுடையவன். விரோதிகளுக்குக் கொடிய விஷம் போன்றவன். சிங்கம் போன்றிருப்பான்.

12. மூலநோ யுடைய னுவன் முன்கோபி பின்பு சாந்தன்
ஞாலமேல் கீர்த்தி ஏற்பன் நற் கல்வி கடவுள் பக்தி
மாலமக னொப்ப தாகும் வசீகர முடைய னென்றோம்
காலனை உதைத்தோன் தேவி கழறின மொழிகுன் றுவே

12. மூலச்சூட்டு வியாதி உள்ளவன். முன் கோபமும் உள்ளவன். பிறகு சாந்தமடைவான். உலகில் புகழடைவான். நல்ல கல்வியறி வுள்ளவன். தெய்வபக்தி யுள்ளவன். மன்மதன் போன்ற வடிவழகுள்ளவன். வசீகர முடையவன். எமனை உதைத்தவன் தேவியாகிய பார்வதியே! சொன்ன சொற்கள் தவரு.

13. சகலர்க்கு நண்ப னுவன் தானிய விருத்தி உள்ளான்
தகைமையாய்க் குடும்ப முள்ளான் தரளமாம் தந்த முள்ளான்
இகபர னன்பு கூர்வன் ஈகைவான் வணிபம் செய்வன்
உகமையாய்ப் பேச வல்லான் உறுதியா மனத்த னென்றோம்.

13. எல்லோருக்கும் அன்பனுகவிருப்பான். தானியங்கள் மிகுதியுள்ள வன். நல்ல குடும்ப முள்ளவன். பவழத்தையொத்த பற்களையுடையவன். கடவுளிடத்தில் பிரியமுள்ளவன். கொடையாளி. வியாபாரம் செய்து வருவான். உபமானங்களுடன் பேச வல்லவன். திடசித்தன்.

14. உரோமங்கள் நீட்சி இல்லான் நுவலுப தேச முள்ளான்
தீமையை ஒருவர்க் கெண்ணுன் சங்கீதம் பாட வல்லன்
காமியன் கனத்த புத்தி காவலர் நேசம் கொள்வன்
பூமியும் விருத்தி செய்வன் புயபல னிவனே என்றோம்.

14. குட்டையான உரோமங்களுள்ளவன் உபதேசங்கள் செய்யக் கூடியவன். ஒருவருக்கும் கெடுதியெண்ணுதவன். சங்கீதம் நன்றாக அறிந்து பாடுவான். சிற்றின்ப இச்சையுள்ளவன். தாராள புத்தி யுள்ளவன். அரசர் (அரசாங்க உத்தியோகஸ்தர்) நேசமுள்ளவன். பூமியைப் பெருக்குவான். புயபல முள்ளவன்.

15. இன்னவன் செங்கை தன்னில் நல்கிடும் கமல ரேகை
மன்னிய சுழியு முள்ளான் மர்மவான் விசால மார்பன்
உன்னித ஆல யங்கள் உத்தமன் செய்வா னுகும்
கன்னென மொழியு முள்ளான் காதலி கேட்டி டாயே.

15. இவனுடைய கையில் கமலரேகை உள்ளது. ஒரு சுழியுமுண்டு. இரகசியமுள்ளவன். விசாலமான மார்புடையவன். உயர்ந்த ஆலயங்களின் திருப்பணி செய்வான். கரும்பைப் போன்ற இனிய வார்த்தைகள் பேசுபவன். தாயே ! கேட்டிடுவாய்.

16. இன்னவன் துணைவர் தம்மை இசைக்கிறோ மாண்ப லொன்று
கன்னியும் மூன்று தீர்க்கம் கனக்காது மற்ற தெல்லாம்
தன்னிலே ரண்டு நஷ்டம் சாற்றினோ மிவனுக் கேதான்
அன்னமே யாங்கள் சொல்லும் அருள்மொழி குன்று தென்றோம்.

16. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைப்பற்றிக் கூறுவோம். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூவரும் உளர். மற்றவர் நிலையார். இருவர் பிறந்து மரிப்பர் என்று கூறினோம். அன்னம் போன்ற நடையுள்ளவளே ! நாங்கள் கூறுபவை தவரு.

17. சாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மொருபா னெட்டில்
கோதிலா உள்ளூர் தன்னில் குணமுடன் மாதுரு வர்க்கம்
மாதிவள் வருவா ளென்றோ மவளுமா நிறத்தா ளாவள்
தீதிலா குணத்தா ளாகும் தீங்கான வார்த்தை கூறுள்.

17. ஜாதகன் மணம் புரியும் காலம் சொல்லுகின்றோம். பதினெட்டாம் வயதில் உள்ளூரிலேயே தாயின் வர்க்கத்தில் நற்குணசாலியான பெண் வருவாள் என்று உரைப்போம். அவள் மாநிற முடையவள். கெடுதலில்லாக் குணங்களுள்ளவள். தீயவார்த்தைகளைப் பேசாதவள்.

18. அன்னங்கள் போட வல்லாள் ஆசார முடைய ளாகும்
கன்னென மொழியு முள்ளாள் கற்புளாள் ஊக சாலி
பின்னமில் லாத தேகி பெரியோர்க ளுறவு கொள்வள்
மன்னிய வானுக் கேதான் மனதுபோல் நடப்பா ளாகும்.

18. பசித்தவர்கட்கு அன்னமளிப்பதில் விருப்ப முள்ளவள். ஆசாரமும் ஒழுக்கமும் உடையவள். இனிய வார்த்தைகள் பேசுபவள். கற்புள்ளவள். ஊகமுடையவள். குற்றமில்லாத சரீர வனப்புள்ளவள். பெரியோர்களிடம் உறவு கொள்ளுவாள். தன் கணவன் மனத்துக்கேற்ப நடப்பவள்.

19. மனைவிகள் இருவராகும் மைந்தனு மில்லா னாகும்
சினமிலா முனிவர் சொல்லச் சயமுனி கேட்க லுற்றார்
கனமுள சாத கர்க்குக் கழறினீர் தாரம் ரண்டு
அனையவே அந்தச் சேதி அறைகுவீர் என்று கேட்டார்.

19. ஜாதகனுக்கு இரு மனைவிகள் உளர். ஆனால் புத்திரர்களில்லாதவன் என, கோபமில்லாத முனிவர்கள் சொல்லும்போது, ஜயமுனி கேட்கலானார். ஜாதகனுக்குத் தாரம் இரண்டு என்று உரைத்தீர்களே. அதற்குக் காரணம் என்ன என்று சொல்லுங்கள், என்றார்.

**இரு மனைவிகள் ஏற்பட கிரக நிலை**

20. சொல்லுவே னிரண்டோ னெட்டில் சுகமதில் கேது நிற்கச்
சல்லிய னுடனே மைந்தன் சார்ந்திட தாரம் ரண்டு
வில்லோனும் ஜன்மந் தங்கி மேவிய ஏழை பார்த்தும்
சல்லியன் ஆட்சி யாகச் சனியுமே உச்ச மாக;

20. குடும்பஸ்தான (இரண்டாமிட) த்துக்குரிய சந்திரன் எட்டாமிடமாகிய மகரத்திலும், சுகஸ்தானம் (நான்காமிடம்) ஆகிய கன்னியில் கேது இருப்பதாலும், சுக்கிரனுடனே சனி சேர்ந்திருப்பதாலும் மனைவிகள் இருவரே. குரு ஜன்மலக்கினத்தில் இருந்து ஏழாமிடத்தை (களத்திரஸ்தானத்தை)ப் பார்த்ததாலும், சுக்கிரன் ஆட்சியாக இருப்பதாலும், சனி உச்சமாக துலாத்தில் இருப்பதாலும்;

**மறுப்பும் புத்திர தோஷமும்**

21. இருப்பதால் தாரம் ஒன்றே இயம்பினோம் தீர்க்க மாகச்
சிறப்பான சுதர்கள் தோஷம் செப்பினீ ரந்தச் சங்கை
குறிப்பிடு மென்று கேட்கக் கூறுவார் அத்திரி தாமும்
பிருகுமே அஞ்சில் நிற்கப் பரிதியும் நீச னாகி;

21. மனைவி ஒருத்தியே நிலையாக இருப்பாள். புத்திரதோஷம் ஏற்படக் காரணங்களைச் சொல்லுங்கள் என்று வினவ, அத்திரிமுனிவர் கூறுகின்றார். சுக்கிரன் ஐந்தாமிட (புத்திரஸ்தான) மாகிய துலாத்தில் இருக்க, சூரியன் நீசனாகி ;

### புத்திர தோஷம் தீரும் கிரக நிலை

22. அஷ்டமத் தோனுங் கூடி அரசனும் பார்த்த தாலே
நஷ்டங்கள் சுதர்க்கு என்றோம் நாயகி கேட்க லுற்றாள்
துஷ்டர்க ளிருந்த போதும் சுரர்குரு ஐந்தைப் பார்க்கச்
சட்டமாய்ப் புத்திர ருண்டு தசமத்தில் ராகு நிற்க;

22. எட்டாம் வீடாகிய மகரத்துக்குரிய சனியுடன் கூடியிருந்து செவ்வாயால் பார்க்கப்படுவதால் புத்திர தோஷம் ஏற்படும் என்று கூறினோம். பார்வதி மறுபடி கேட்கிறாள். பாபக்கிரகங்கள் புத்திர ஸ்தானத்தில் இருந்தபோதிலும் குரு ஐந்தைப் பார்ப்பதால் நிச்சயமாகப் புத்திரர் உண்டு. பத்தாமிடத்தில் ராகு இருப்பதால்;

23. தனத்துளோ னெட்டில் நிற்க ஜாதகன் முன்னூழ் தன்னால்
கனக்காது மதலை என்றோம் கௌசிகர் கேட்க லுற்றார்
சினமுள முன்னூழ் தன்னைச் செப்புவீர் என்று கேட்க
அனையவே சொல்லு கின்றார் அத்திரி முனிவர் தாமும்.

23. இரண்டாம் வீட்டுக்குரிய சந்திரன் எட்டாம் இடத்தில் இருப்பதால் ஜாதகனுடைய முற்பிறப்பில் செய்த தீவினையால் குழந்தைகள் நிலையா என்று கூறினோம். கௌசிக முனிவர் கேட்கலானார். பாபந்தரும் முற்பிறப்புத் தீவினையைக் கூறுங்கள் என்று வினவ, அத்திரி முனிவர் கூறுகின்றார்.

24. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் தவளீ தென்பால்
நீதியாய் அருகில் பேரூர் நிமலனும் கௌரி வம்சம்
மேதினி லுதித்து மேலும் வினைபல முள்ளா னாகிக்
கோதிலாச் செட்டு செய்து குலத்துக்குத் தலைவ னாகி;

24. ஜாதகனுடைய முற்பிறப்பைச் சொல்லுகின்றோம். தவளேச்வரத்துக்குத் தெற்கில் உள்ள ஒரு பெரிய ஊரில் கௌரீக மரபில் ஜாதகன் தோன்றி, பாபங்கள் பலமுள்ளவனாகி, வியாபாரம் செய்து வந்து, தன் குலத்துக்கே தலைவனாகி;

### கணக்கில் மோசம்

25. மனைவிமைந் தருமுண் டாகி வாழ்கின்ற நாளி லேதான்
அணையவே வந்த ஊழி அறைகிறோம் கேளு மம்மா
இணையிலா ஏழை கட்கு இவன்சில பொருளும் தந்து
வினையிலாக் கணக்கில் மோசம் வித்தகன் செய்தா னென்றோம்.

25. மனைவி மக்களையடைந்து வாழ்ந்து வருகின்ற நாளில், ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம், கேளுங்கள், தாயே! ஏழை எளியவர்க்கு இவன் பொருள் கொஞ்சம் கொடுத்து, கணக்கில் சில மோசங்கள் செய்துவிட்டான்.

26. தனமதைக் கேட்கும் போது தந்தனர் பேதை தானும்
சினமுடன் கணக்கைப் போலச் செல்வத்தைக் கேட்க லுற்றான்
கனமுடன் ஏழை தானும் கழறுவார் சாபந் தானும்
மனமுடன் மறுஜன் மத்தில் குழவிகள் தோட மாகும்.

26. பணத்தைத் திருப்பிக் கேட்கும்போது அவர்கள் இவன் செய்த மோசத்தை அறியாமல் கொடுத்தனர். ஆனால் கோபமுற்று, கணக்கிலுள்ளதைப்போல பொருளைக் கேட்கலானான். வருந்திய ஏழைகள் பின்வருமாறு சாபமிட்டனர். மறு பிறவியில் உனக்குப் புத்திரதோஷம் ஏற்படும்.

27. பலஏழை சொல்ல லுற்றார் பெருகிற்று வந்தத் தோஷம்
குலவியே இதுவல் லாமல் கூறுவோ மின்னும் வேறு
நலமுட நதியின் பக்கல் நற்சிலை நாகம் ஒன்று
பலமான அரசு ஒன்று புக்கிற்றுக் கேளு மம்மா.

27. எனப் பல ஏழைகள் சொல்லலானார்கள். அந்தத் தோஷம் இந்த ஜாதகனை வந்தடைந்தது. இதுவு மின்றி மற்றொன்றும் கூறுகின்றோம். நன்மை மிக்க ஒரு புண்ணிய நதியின் பக்கமாக ஒரு நாகத்தின் சிலையும் அதன் பக்கமாக மிகப்பெரிய அரசமரமும் இருந்தன. கேளுங்கள், தாயே !

### புத்திர தோஷம்

28. மரத்தினில் பிசாசு ஒன்று வாசமாம் வெகு நாளாகத்
திரமுட னம்ம ரத்தைச் செல்வனும் வெட்டி விட்டான்
உரிமையாய்ப் பிசாசு தானும் உறைதற்கு இடமே இன்றி
உரைந்தது அந்தச் சாபம் அம்மணி சொல்லு கின்றேன்.

28. அந்த மரத்தில் ஒரு பிசாசு வெகுகாலமாக வசித்து வந்தது. அந்த மரத்தை இந்த ஜாதகன் தைரியமாக வெட்டி விட்டான். சொந்தம் போல் வாழ்ந்துவந்த பிசாசு தங்க இடமில்லாமல் சாபமிட்டது. அந்தச் சாபத்தைச் சொல்லுகின்றேன், தாயே ! கேளுங்கள்.

29. இல்லங்கள் பாழ தாகும் இனிஜன்மம் மில்லம் பாழாம்
சொல்லியே வேறு விருக்ஷம் சென்றது பிசாசு தானும்
வல்லியே அந்தச் சாபம் வரனுக்கு நேர்ந்ததம்மா
அல்லலு மதிக முண்டாய் அவனுமே வறுமை பூண்டு,

29. வீடுகள் பாழடையும்; வரும் பிறவியிலும் வசிக்கும் வீடு நாசமாகும்; என்று சபித்துவிட்டு வேறு மரத்துக்குச் சென்றது, பிசாசு. தாயே ! அந்தச் சாபம் இந்த ஜாதகனுக்கு ஏற்பட்டது. துன்பங்கள் மிகுதியாக உண்டாகி, தரித்திரமும் ஏற்பட்டு;

30. சொந்ததோ ரில்லம் தன்னை தோற்றனன் பொருளுக் கேதான்
வல்லியும் தானுங் கூட வளமுள தக்ஷி ணத்தில்
முந்திய தீர்த்தம் தோய முயன்றுநன் சேதுக் கேதான்
வந்தனம் ஸ்நானம் செய்து மால்பூசை செய்யு வானும்.

30. சொந்த வீடில்லாமல் தன் வீட்டைக் கடனுக்காகத் தோற்று (விற்று) விட்டான். பிறகு தானும் தன் மனைவியுடன் கூட தெற்குத் திசையில் உள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, பிறகு சேதுவுக்குச் சென்று, ஸ்நாநம் செய்து, திருமாலுக்குப் பூசை முதலியன செய்தான்.

31. லிங்கத்தைப் போற்றி செய்து நிர்மல மனம தாகப்
பொங்கிய மதுரை புக்கிப் புண்ணிய ஸ்நானம் செய்து
இங்கிவன் ரங்கம் சென்று இவனுந்தன் உள்ளூர் மீண்டு
திங்களும் பத்துச் சென்று சேர்ந்தனன் எமப திக்கே.

31. பிறகு லிங்கத்தைப் பூசை முதலியன செய்து தோத்தரித்து சுத்த மான மனத்துடன் செழிப்புள்ள மதுரைக்குச்சென்று அங்குள்ள புண்ணிய நதியில் நீராடிய பிறகு ஸ்ரீரங்கம் சென்று திரும்பிவந்து பத்து மாதங்களுக் பின் மரணமடைந்தான்.

32. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னிவனே என்றோம்
அருமறை முனிவர் சொல்ல அம்பிகை கேட்க லுற்றாள்
கருமியாய் முன்ஜன் மத்தில் கௌரியின் குலமு தித்துப்
பெருமையாய் ஏழை சாபம் பெற்றதால் இச்சென் மத்தில்;

32. பிறகு பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகன் என்று உரைத்தோம். இங்ஙனம் வேதங்களறிந்த முனிவர் சொலலும் போது, பார்வதி கேட்கலானாள். மிகக் கருமியாக முற்பிறவியில் கௌரி குலத்தில் பிறந்தவன் ஏழைகளின் சாபத்தை யடைந்தும் இந்தப் பிறப்பில;

**நதி முதலிய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்த பலன்**

33. கங்கைதன் குலமு தித்த காரணம் சொல்லு மென்னப்
பொங்கிய சேது தீர்த்தம் புரிந்ததால் இச்சென் மத்தில்
இங்கிவ னுதித்தா னென்றோம் இயம்புவோம் பிசாசு சாபம்
பங்கமாம் ஜனித்த இல்லம் பருகாது சேத மென்றோம்.

33. வேளாள குலத்தில் பிறந்த காரணம் என்ன என்று கூறுங்கள். பொங்கும் அலைகளையுடைய சேதுவில் ஸ்நாநம் செய்ததால் இப்பிறப்பில் இக்குலத்தில் பிறந்தான் என்று கூறினோம். பிசாசின் சாபம் ஏற்பட்டதால் தான் பிறந்த வீடு கிடைக்காமல் பங்கம் நேரும் என்று உரைத்தோம்.

34. வேறொரு கிருகம் வாய்க்கும் வித்தகி இவனுக் கேதான்
கூறுவோம் மதலைத் தோடம் குணமுடன் விருத்தி நஷ்டம்
தீரமாய்ச் சாபம் நீங்கச் செப்புவோம் சாந்தி தானும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

34. வேறொரு வீடு இவனுக்குக் கிடைக்கும். தாயே! புத்திர தோஷம் ஏற்பட்டதால் குழந்தைகள் விருத்தியாகா. சாபம் தீரச் சாந்தி ஒன்று கூறுகின்றோம். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற பார்வதியே! கேட்டருளுவாய்.

**புத்திர தோஷம் தீர சாந்தி**

35. பாரியும் தானு மாகப் பக்ஷிதன் மலைக்கு சென்று
நாரியின் பாகத் தோர்க்கு நலமுட னர்ச்சித் தேத்திச்
சீருடன் கிரியை சுற்றிச் சேயின்தன் வாரம் தன்னில்
தேரிய மறையோ ருக்குச் சிறப்புட னன்ன மீந்து;

35. இந்த ஜாதகன் தன் மனைவியுடன் திருக்கழுக்குன்றத்துக்குச் சென்று பக்தியுடன் மலையை வலம் (கிரிப்பிரதட்சிணம்) வந்து செவ்வாய்க் கிழமை தோறும் அர்த்தநாரீச்வரருக்கு அருச்சனை முதலியன செய்து தோத்தரித்து எல்லாம் அறிந்த (வேதமுணர்ந்த) அந்தணர்கட்குச் சிறப்பாக அன்னம் அளித்து;

36. விடங் கந்தம் சொர்ணத் தோடு மேதினில் மறையோர்க் கீந்து
அடவுடன் உள்ளூர் சென்று அவனுமே ஷஷ்டி நோன்பு
திடமுட னோராண்டுந் தான் செய்திடத் தோடம் நீங்கி
உடனேதான் மதலை தோன்றி உரைந்திடும் தீர்க்க மாக.

36. புஷ்பம், சந்தனம் முதலியன ஸ்வர்ணத்துடன் (தட்சிணையோடு) ஷி வெற்றிலை பாக்கு முதலியன அந்தணர்கட்குக் கொடுத்து, பிறகு, உள்ளூருக்குத் திரும்பி, ஷஷ்டி திதி விரதம் இருந்துவரவேண்டும். இங்ஙனம் ஒரு வருஷம் செய்திடுவானாகில் தோஷம் நீங்கி, குழந்தை பிறந்து நீண்ட ஆயுளுடன் இருக்கும்.

37. சொற்படி செய்யா னாகில் துலங்காது மதலை தானும்
சொற்படி செய்வா னாகில் தோன்றிடு மாண்பா லொன்று
மைப்படி பெண்கள் ரண்டு வந்திடுந் தீர்க்க மாக
மெய்ப்புடன் முதலில் ரண்டு விளங்காது சேத மாமே.

37. நாங்கள் கூறியபடி செய்யாவிடில் குழந்தைகள் விளங்கா. சொல்லியபடி செய்தால் ஆண் குழந்தை யொன்று பிறக்கும். இரு பெண்களும் தோன்றித் தீர்க்க ஆயுளுடனிருப்பர். ஆனால் முதலில் இரு குழந்தைகட்குத் தோஷம் உண்டு. நிலையா.

38. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறோ மிரு நிறத்தாள்
மேதினில் வாயு தேகி வித்தகி கபடு கொஞ்சம்
தீதிலா குணத்தா ளாகுஞ் செப்புநன் நடக்கை உள்ளாள்
மாதவர் தமைத் துதிப்பாள் வரனுக்கு நேய முள்ளாள்.

38. ஜாதகனின் தாயின் குணத்தை நாங்கள் கூறுகின்றோம். கருமை கலந்த செம்மை நிறமுடையவள். வாயு நோயுள்ள சரீரி. சிறிது சூது உண்டு. ஆனால் கெட்ட குண மில்லாதவள். நன்னடக்கை யுள்ளவள். திருமாலைப் போற்றி வாழ்வாள். தன் கணவனுக்குப் பிரியமானவள்.

39. அன்புட னன்ன மீவள் அவளுமே பித்த தேகி
இன்பமாய் வார்த்தை சொல்வள் இவளுமுன் கோபி கொஞ்சம்
துன்பமில் லாதா ளாகுஞ் சுகமுளாள் தெய்வ பக்தி
மன்னிய இடுப்பில் காலில் வாயுவால் அல்ப ரோகி.

39. பசித்தவர்கட்குப் பிரியத்துடன் அன்னமளிப்பாள். பித்த சரீர முடையவள். இனிமையாகப் பேசுபவள். ஆனால் சிறிது முன் கோப முடையவள். துன்பமடையாதவள். சௌக்கியத்துடனிருப்பாள். தெய்வ பக்தியுள்ளவள். வாயு ரோகத்தால் இடுப்பிலும் காலிலும் சிறிது நோயுள்ளவள்.

40. மாதுரு துணைவர் தம்மை வரைகிறோ மாண்பா லொன்று
கோதிலாப் பெண்பா லவ்வாறு கூறுவோந் தீர்க்க மாகத்
தீதாகு மற்ற வெல்லாஞ் செல்விதன் இல்லம் பாழாம்
மேதினில் மாமன் தானும் மேவுவன் இவன்தன் பக்கல்.

40. தாயின் உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுளுடனிருப்பர். மற்றவை யெல்லாம் நிலையா. தாயின் வீடும் பாழடையும். மாமனும் ஜாதகனுடன் வந்து சேருவான்.

41. இவளுடை முன்ஜன் மத்தை இசைக்கிறேஞ் காஞ்சி கீழ்ப்பால்
நவனியில் பேரூர் தன்னில் நாயகி செங்குந்த வம்சம்
அவனியி லுதித்து மேலும் அவளுக்குச் சுதர்க ளுண்டாய்த்
தவசிகட் கன்பு பூண்டு தானவள் அன்ன மீந்து;

41. தாயின் முன்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சீபுரத்துக்குக் கிழக்கில் உள்ள ஒரு பெரிய ஊரில், செங்குந்த வமிசத்தில் பிறந்து, அவள் குழந்தைகளைப் பெற்று, பரதேசிகளுக்குப் பக்தியுடன் அன்னமளித்து;

42. மார்க்கத்தில் தாகப் பந்தல் வன்மையாய் வைத்து மேலும்
ஏற்கவே வரனின் கூட இவள்பல தீர்த்தம் தோய்ந்து
தீர்க்கமாங் கல்யம் பெற்றுச் செல்வியும் பேதி யாலே
மூர்க்கமாய் மரண மாகி முயன்றவ ளிவளே என்றோம்.

42. சாலையோரங்களில் தண்ணீர்ப் பந்தல் முதலியன மிகுதியாக வைத்து, தன் கணவனுடன் பல புண்ணிய நதிகளில் நீராடி, வெகு நாட்கள் மாங்கல்யத்துடன் வாழ்ந்து, பேதியால் திடீரென்று மரணமடைந்து, பிறகு இப்பிறவியில் பிறந்தவள் என்று கூறினோம்.

43. பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிராமண குல முதித்து
அன்னவள் வாழ்வா ளாகும் அறைகிறேந் தந்தை ஜன்மம்
மன்னிய வேலங் காட்டில் வணிகர்தங் குல முதித்து
உன்னித செட்டுச் செய்து உத்தமன் வாழ்ந்தா னென்றோம்.

43. மறு பிறப்பு, காஞ்சீபுரத்தில் அந்தணர் குலத்தில் பிறந்து வாழ்ந்து வருவாள். தந்தையின் முற்பிறவி வரலாற்றைக் கூறுகின்றோம். வேலங் காட்டில், வணிகர் குலத்தில் பிறந்து உயர்வான வியாபாரம் செய்து உயர்ந்தவனாக வாழ்ந்து வந்தான்.

44. சிவபணி விடையும் செய்து தீபங்க ளனந்தம் வைத்துப்
பவமுள புத்திர ரின்றிப் பலதல தீர்த்தம் தோய்ந்து
தவவடி வேல ருக்குத் தான்பணி விடையுஞ் செய்து
நவனியில் மரண மாகி நாற்றலைக் கஞ்சன் தன்னால்;

44. சிவபெருமானுக்குத் தொண்டுகள் செய்து, எண்ணற்ற தீபங்கள் ஏற்றி வைத்து, சற்புத்திரர் இல்லாமல், பற்பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, தவசியைப் போன்ற வடிவு கொண்ட வேல் முருகக் கடவுளுக்குத் தொண்டாற்றிய பிறகு, இறுதியில் மரண மடைந்து, நான்கு தலைகளையுடைய பிரமனால்;

45. வரையவே விக்கு லத்தில் வந்தவன் பெருமை பூண்டு
அறைகிறோம் பின்ஜன் மத்தை அருணைமா நகரில் தான்
தெரியவே சைவச் சேயாய் ஜனித்துமே உபதேசி யாக
உரன்முறை யாரு மெச்ச உத்தமன் வாழ்வா னென்றோம்.

45. படைக்கப்பட்டு, இந்தக் குலத்தில் பிறந்தான். இங்கும் பெருமையுடன் இருப்பான். மறுபிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணாமலையில், சைவ குலத்தவனாய்ப் பிறந்து, பிறருக்கு உபதேசங்கள் புரியும்படி தக்கவனாக ஆகி, உறவினர்களும் மற்றவர்களும் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான் என்றோம்.

### சகடயோகம்

46. ஜாதகன் பொதுயோ கத்தைச் சாற்றுவோஞ் சகடு முள்ளான்
மேதினில் சல்லிய மில்லான் விளைநிலம் விருத்தி செய்வன்
கோதிலாச் செட்டுச் செய்வன் கோவல ரிஷ்ட மாவன்
பாதக மெண்ணு நெஞ்சம் பாரினில் கீர்த்தி ஏற்பன்.

46. ஜாதகனுடைய பொதுயோகத்தைச் சொல்லுகின்றோம். சகடயோகம் உள்ளவன். உலகில் கடன் உபத்திரவ மில்லாதவன். விளைநிலங்களைப் பெருக்குவான். வியாபாரம் செய்து வருவான். அரசர்களுக்கு இஷ்டனாக விருப்பான். பிறருக்குக் கெடுதல் எண்ணாதவன். புகழுடைவான்.

47. ரத்தின நகைள் சேர்ப்பன் நாதனார் பக்தி பூண்பன்
உத்தம னாகி வாழ்வன் உயரச்வ முடைய னவன்
சுற்றத்தார்க் குதவி செய்வன் சொன்னசொல் தவரு னென்றோம்
அத்திமா முகனைப் பெற்ற அம்பிகை மேலுங் கேளே.

47. ரத்தின நகைகள் சேர்ப்பான். சிவபெருமான்மீது பக்தி கொள்ளுவான். நல்லவன் என்ற பெயருடன் வாழ்ந்து வருவான். மேன்மையான குதிரையையுடையவன். பந்துஜனங்களுக்கு உபகாரி. வாக்குத் தவருதவன். யானை முகத்தோனைப் பெற்ற தாயே ! கேள்.

48. உதித்தவன் ஜனன காலம் உயர்மதி தசை இருப்பு
மதித்திட ஆண்டு ஒன்று வருந்திங்கள் நான்க தாகும்
சதியுண்டு ஜாத கர்க்குத் தவறியே வீழ்வா னாகும்
விதவித நோய்க ளுண்டு மெல்லியே மேலுங் கேளே.

48. ஜாதகன் பிறந்த காலத்தில் சந்திர மகாதசை செல்லும்போக மீதியிருப்பு ஒரு வருடமும் நான்கு மாதங்களுமாம். ஜாதகனுக்குச் சில கண்டங்கள் உண்டு. தவறி விழுவான். விதவிதமான நோய்கள் ஏற்படும். தாயே !

49. ஆரல்தன் தசைகா லத்தில் அப்புறஞ் செல்வா னாகுங்
கூறிய கிருஷி நஷ்டங் குணமது பேத முண்டாம்
தேரிய செலவ னேகம் துணைவர்கள் விருத்தி யாகும்
மாரியால் பாதை உண்டு அவன்வீடு சித்திரம் செய்வன்.

49. செவ்வாய் மகாதசையில் வேற்றிடம் செல்வான். பயிர்த் தொழிலில் நஷ்டம் ஏற்படும். குணத்திலும் சிறிய மாறுதல் உண்டாகும். செலவினங்கள் மிகுதியாக ஏற்படும். சகோதர விருத்தி ஏற்படும். அம்மையால் உபத்திரவம் உண்டு. வீட்டை அலங்கரிப்பான் (வீடு கட்டுவான்).

50. ஜயமுனி இதனைக் கேட்டுத் திடுக்கென வுரைக்க லுற்றார்
நயமுடன் சித்திர வீடு நாட்டுவான் என்று சொன்னீர்
தயையுடன் எவ்வி டத்தில் சாதிப்பான் விபரம் நன்றாய்ப்
பயமிலாச் சொல்வீ ரென்ன பகருவார் முனிவர் தாமே.

50. இதை ஜய முனிவர் கேட்டுத் திடீரென்று கூறலானார். அழகிய வீடு ஒன்று கட்டுவான் என்று சொன்னீர். எந்த இடத்தில் வீடு கட்டுவான், என விபரம் தெளிவாகவும் பயமில்லாமலும் சொல்லுங்கள், என்று கேட்டார்.

51. முன்ஜன்ம முனியின் சாபம் முயன்றதா லிக்கா லத்தில்
இன்னவன் ஜனித்த இல்லம் இவனுமே அடையா னாகித்
தென்திசை அருகி லேதான் செய்குவ னில்லம் தானும்
பன்னிய பலன்க ளின்மை பகருவோங் கேளு மம்மா.

51. முற்பிறப்பில் பிசாசின் சாபம் ஏற்பட்டதால், இப்பிறப்பில் ஜாதகன் தன் பிறந்த வீட்டை அடையாதவனாகி, அந்த வீட்டுக்குத் தெற்குத் திசையில் வேறு வீடு கட்டுவான். இன்னும் ஏற்படும் பலன்களைக் கூறுகின்றோம். கேளுங்கள், தாயே !

52. சேய்த்தசை முன்பா கத்தில் செலவுகள் அனந்த மாகும்
ஆயவே பிற்பா கத்தில் ஆதிகமாம் பலனே உண்டு
தாய்தந்தை துணைவ ருக்குத் சாற்றுவோஞ் சுபங்க ளுண்டு
வாய்பூமி பலித மோங்கும் மனக்கவலை களுந் தீரும்.

52. செவ்வாய் மகாதசை முதற் பாதியில் செலவுகள் அநேக மாகும். அதனால் பிற்பாதியில் பலன் அதிகமாக உண்டு. தாய் தந்தைகளுக்கும் சகோதரர்களுக்கும் சுப காரியங்கள் நடைபெறும். விளை நிலங்களில் வரும்படி அதிகமாகும். மனக்கவலைகள் நீங்கும்.

53. ஆலயஞ் செய்வா னாகும் அதிகமாம் பொருளும் சேரும்
சாலவே தானியச் செட்டு தரித்திடும் பூமி தானும்
கோலமாய் விபரம் ரண்டில் கூறுவோம் விபர மாக
வேலனை யீன்ற மாதே விமலியே கேட்டி டாயே.

53. ஆலயத்திருபணி செய்வான். பொருள் மிகுதியாகச் சேரும். தானிய வியாபாரம் செய்வான். பூமிகளும் இவனிடம் தரித்து இருக்கும். விபர மாக இரண்டாம் பாகத்தில் கூறுகின்றோம். முருகக் கடவுளை உலகத்துக் களித்த தாயே ! பார்வதியே ! கேட்டிடுவாய்.

## ஜாதகம் 4

1. புந்தியு முச்ச மாகப் பூமக னிரவி கோலின்
சந்திரன் சாடி யாகச் சனிகேது [1]மாட தாக
மந்திரி வீணை யாக வெள்ளியும் ராகு தேளில்
வந்தவன் மிதுனஞ் ஜன்மம் வரைகுவீர் பலனைத் தானே.

1. புதன் தன் உச்சஸ்தானமாகிய கன்னியிலும், செவ்வாய் சூரியன் துலாத்திலும், சந்திரன் கும்பத்திலும், சனி கேது விருஷபத்திலும், குரு மிதுனத்திலும், சுக்கிரன் ராகு விருச்சிகத்திலுமாக நவக்கிரகங்கள் நின்று, ஜன்ம லக்கினம் மிதுனமாகவுள்ளவரின் பலனைச் சொல்லுவீர்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி கேது | லக்கினம் குரு |
| சந்திரன் | இராசி சக்கரம் | | |
| | | | |
| | சுக்கிரன் ராகு | செவ்வாய் சூரியன் | புதன் |

2. வதிட்டரும் சொல்லு கின்றார் ஆணது ஜனன மாகும்
பதியது கீழ்மேல் வீதி பகர்வாசல் தெற்கே யாகுஞ்
சதிசெய்யும் மாயோன் மாரி தங்கிடும் தென்மேல் திக்கில்
நதிசடை ஈசன் காளி நற்றந்தி சந்தி யப்பன் ;

2. வஸிஷ்ட முனிவர் கூறுகின்றார். இஃது ஓர் ஆண்பிள்ளையின் ஜாதகமாகும். அவனுடைய வீடு கிழக்கு மேற்கு வீதியில், தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. தென்மேற்குத் திக்கில் திருமாலின் ஆலயமும், மாரியம்மன் கோயிலும் உள்ளன. கங்கையைச் சடை முடியிலணிந்த சிவபெருமான் கோவிலும், நன்மை பயக்கும் விநாயகர் ஆலயமும் சந்தியப்பன் கோயிலும் ;

3. சோலையுஞ் சூழி மேற்கில் சூழ்ந்திடுங் கிழக்கில் தந்திச்
சாலவே எதிர்வீ டில்லை சமவூரில் தந்தை இல்லம்
பாலக னுதிப்பா னென்றோம் பலசாதி அவ்வூர் வாசஞ்
சீலமாய்க் கங்கை வம்சஞ் செப்வோம் மிந்தப் பாலன்.

3. ஒரு தோட்டமும், துறவும் மேற்குத் திக்கில் இருக்கும். கிழக்குத் திக்கில் மற்றொரு விநாயகர் ஆலயம் உள்ளது. எதிர்ப்புறம் வீடுகளில்லை. இங்ஙனமுள்ள ஒரு சமமான ஊரில், தன் தந்தையின் வீட்டில், இந்த ஜாதகன் பிறப்பான் என்று கூறுவோம். அவ்வூரில் பல ஜாதிப்பேர்கள் வசிப்பார்கள். ஒழுக்கமுள்ள வேளாளர் மரபில் இந்த ஜாதகன் பிறப்பான்.

[1] விருஷபம்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெருந் துணைவர் யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்புத்திர களத்திர யோகந
தந்தையின் யோகந் தானுஞ் சாற்றுவோம் முன்பின் ஜன்மம்
அன்னையே யாங்கள் சொல்லும் அருள்மொழி குன்று வென்றேம்.

4. இந்த ஜாதகனின் பிறப்பின் யோகங்கள், அழகுமிக்க சகோதரர் யோகங்கள், தாயின் யோகம், புத்திரர் மனைவி இவர்களின் யோகங்கள், தந்தையின் யோகம் இவைகளைக் கூறுவோம். முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளைப் பற்றியும் நாங்கள் சொல்லும் வார்த்தைகள் தவரு.

5. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சற்சனன் பொறுமை உள்ளான்]
சிந்தையில் கபடு மில்லான் சீலவான் அன்ன மீவன்
பந்தமால் நிறத்த னுகும் பலகலை படிக்க வல்லான்
எந்தையே கிருஷி உள்ளான் ஈகைவான் ஒடிச்சல் தேகி.

5. ஜாதகனின் தந்தையின் வரலாற்றைக் கூறுவோம். நல்லொழுக்கமுடையவன். பொறுமை உடையவன். மனத்தில் சூது இல்லாதவன். சீலவான். பசித்தவருக்கு அன்ன மளிப்பவன். திருமாலைப் போன்ற கரிய நிறமுடையவன். பலவித நூற்களை ஆராய்ந்து படிக்க வல்லவன். விவசாயமும் செய்வான். கொடையாளி. மெல்லிய தேகமுள்ளவன்.

6. இனத்துக்குப் பகையு மாவன் எதிரியை நசிக்கச் செய்வன்
கனத்தவர் நேசங் கொள்வன் காலாள்க ளுடைய னுகுஞ்
சினமது கொஞ்ச முள்ளான் சீக்கிர நடைய னுவான்
தனமது வதிக முள்ளான் தாட்சிண்யன் தீர நெஞ்சன்.

6. தன் பந்து ஜனங்களுக்கு விரோதி. எதிரிகளை அழிக்கவல்லவன். பெரியோர்கள் உறவு கொள்வான். ஏவலாட்கள் உடையவன். சிறிது கோபமுள்ளவன். வேகமாக நடக்கவல்லவன். செல்வம் மிகுதியாக உடையவன். தாட்சிணியமுள்ளவன். தைரியமான மனத்தன்.

7. பூமியும் பரிபா லிப்பன் புகழுளன் அன்ன மீவன்
தீமையை விரும்பா நெஞ்சன் ஜனவுப கார னுவன்
தாமத மன்னர் நேயர் சுவாமிகள் பத்தி பூண்பன்
நேமியோர் மெச்ச வாழ்வன் நிதமுமே சீல னுவன்.

7. பூமியை ஆண்டுவருவான். கீர்த்தியுள்ளவன். பசித்தவருக்கு அன்னமளிப்பான். கெடுதல்கள் செய்ய எண்ணுத மனத்தன். ஜனங்களுக்கு உபகாரி. அரசர்கள் (அரசாங்க உத்தியோகஸ்தர்கள்) நண்பன். தெய்வ பக்தி யுள்ளவன். உலகத்தவர் புகழும்படி வாழ்ந்துவருவான். தினந்தோறும் ஒழுக்கத்துடனிருப்பான்.

8. இவனுடைத் துணைவர் தம்மை இயம்பவே யாண்பால் காணும்
அவனியில் பெண்பா லொன்று அறைகிறேந் தீர்க்க மாக
நவனியில் குணத்தா னுக்கு நாயகன் மூன்றுஞ் ஜன்மம்
கவனமா யுதிப்பா னென்றேம் காதலி மேலுங் கேளே.

8. இவனுக்கு உடன்பிறந்தவர்களை நோக்கும்போது சகோதரர் இல்லை. ஒரு சகோதரி நீண்ட ஆயுளுடனிருப்பாள் என்று கூறுகின்றோம். இக்குணங்களுடையவனுக்கு இந்த ஜாதகன் மூன்றாவது மகனாகப் பிறப்பான். பார்வதியே ! கேள்.

9. சாதகன் சேதி சொல்வேன் தயாளவா னிருசி வப்பன்
சீதளக் குணத்தா னாகுந் தீரமா நெஞ்சு முள்ளான்
மேதினில் கீர்த்தி கொள்வன் வித்தையு முடைய னாகும்
பாதக மெண்ணா நெஞ்சன் பஞ்சைகட் குதவி செய்வன்.

9. ஜாதகனின் செய்திகளைக் கூறுகின்றேன். தயாள மனமுள்ளவன். கருமைகலந்த சிவப்பு நிற முடையவன். குளிர்ந்த (இரக்கமுடைய) குணமுள்ளவன். அஞ்சா நெஞ்சம் படைத்தவன். உலகில் கீர்த்தியடைவான். கல்வி யறிவு உள்ளவன். பிறருக்குக் கெடுதிசெய்ய எண்ணாதவன். ஏழைகளுக்கு உபகாரம் செய்துவருவான்.

10. போசனம் புளிப்பி லிச்சை பூமியு மதிகஞ் சேர்ப்பன்
மாசிலாக் குணத்தா னாகும் மாடுகள் விருத்தி யுள்ளான்
வேசிமார் மோக வானும் வீண்வார்த்தை பேசா னாகும்
பாசமா மனைவி நேயன் பந்துபூ சிதனுஞ் சொல்லே.

10. சாப்பாட்டில் புளிப்பான பதார்த்தங்களில் பிரியமுள்ளவன். விளைநிலங்களை யதிகம் சேர்ப்பான். குறறமற்ற குணமுள்ளவன். கால்நடைகள் மிகுதியாக உள்ளவன். விலைமாதர்மீது மோகமுடையவன். வீண்வார்த்தை பேசாதவன். மனைவியிடம் பிரியமானவன். பந்துக்களால் கொண்டாடப் படுபவன்.

### கமல ரேகை

11. தேவதாப் பத்தி கொள்வன் சீலனும் ஊக முள்ளான்
நாவுமே தப்பா னவன் நன்மொழி கமல ரேகை
ஆவுகள் சேர்ப்பா னாகும் யாரையும் வசியஞ் செய்வன்
கோவலர் நேசங் கொள்வன் குருவுப தேசங் கேட்பன்.

11. தெய்வபக்தி யுடையவன். ஒழுக்கமுள்ளவன். ஊகசாலி. சொல் தவறாதவன். நன்றாகப் பேசுபவன். கையில் கமலரேகை யுள்ளவன். பசுக்கள் சேர்ப்பான். எல்லோரையும் வசியப்படுத்தும் இயல்பினன். அரசர்களிடம் நட்புக் கொள்ளுவான். குருவிடத்தில் உபதேசம் கேட்பான்.

12. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பா லொன்று
அவனியில் கன்னி ரண்டு அறைகின்றோ மிவனுக் கேதான்
நவனியில் இளையோ னாக நாட்டுவோந் துணைவர் தம்மைக்
கவனமா யவன்தன் சேதி கழறுவோங் கேளு மம்மா.

12. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவனும், சகோதரிகள் இருவரும் உண்டு என்று கூறுகின்றோம். சகோதரன் இவனுக்குப் பின் பிறந்தவன். அவனுடைய செய்திகள் யாவும் சொல்லுகின்றோம். கேளுங்கள். தாயே !

13. யோகவான் குணவா னாகும் உறுதியா மனத்த னென்றேம்
பாகமாய்ப் பேச வல்லன் பலருக்கும் நல்லோ னுவான்
நாகரி கங்க ளுள்ளான் நற்றந்தை தாயின் கர்மம்
ஆகமுஞ் செய்யா னுகும் அவன்பலன் இரண்டில் சொல்வேன்.

13. யோகமுள்ளவன். நல்ல குணசாலி. திடமான மனமுள்ளவன். கண்டிதமாகப் பேசுவான். எல்லோருக்கும் நல்லவன். நாகரிகங்களறிந்தவன். தன் தாய் தந்தையின் கருமம் முதலியன வேதங்களில் சொல்லியபடி செய்யாதவன். அவனுடைய பலனை இரண்டாம் பாகத்தில் விவரமாக கூறுவோம்.

14. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மொருபா னெட்டுள்
மேதினில் வடகீழ்த் திக்கில் வித்தகி வருவா ளென்றேம்
கோதிலா வவள்கு ணத்தைக் கூறுவோ மிருசி வப்பள்
பாதக மில்லா ளாகும் பரிவுடன் வார்த்தை கூர்வள்.

14. ஜாதகனுடைய திருமணத்தின் காலம் உரைக்கின்றேம். அவனுடைய பதினெட்டாம் வயதுக்குள், வடகிழக்குத் திக்கிலிருந்து அவனுக்கு மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். சிவந்தமேனியள். கெடுதல்கள் எண்ணுத மனமுடையவள். அன்புடன் பேசுபவள்.

15. புத்திமான் பொறுமை சாலி புண்ணிய மனத்த ளாகும்
சித்தமே கறப்பு மில்லாள் செல்வியும் யோக சாலி
சுத்தமு முடைய ளாகும் சுதர்களும் விருத்தி யென்றேம்
அத்தியைப் பெற்ற மாதே அறைகின்றே மேலுங் கேளே.

15. புத்திசாலி. பொறுமையுள்ளவள். புண்ணியமான மனமுடையவள். மனத்தில் சூது முதலிய கெட்ட எண்ணங்களில்லாதவள். அவளும் யோகசாலி. சுத்தமுள்ளவள். புத்திர விருத்தி உண்டு என்று கூறுனேம். யானைமுகத்தோனைப்பெற்ற தாயே ! சொல்லுகின்றேம். மேலும் கேள்.

16. மதலைகள் விருத்தி தம்மை வரைகின்றே மாண்பால் ரெண்டு
சதியிலாப் பெண்பால் ரெண்டு சாற்றுவோம் தீர்க்க மாக
முதல்சென்மம் நட்ட மாகும் முடிவினில் இரண்டு சேதம்
நதிதனை யணிந்தோன் தேவி நங்கையே மேலுங் கேளே.

16. புத்திர விருத்தியைச் சொல்லுகின்றேம். ஆண்மக்கள் இருவர். பெண் மக்கள் இருவர். அவர்நீண்ட ஆயுளுடனிருப்பர். முதலில் பிறந்த குழந்தை நிலையாது. இறுதியில் இரண்டு மரணமடையும். கங்கையைச் சிரசில்அணிந்த சிவபெருமானின் தேவியே ! கேளும்.

17. மாதுரு மாநி றத்தாள் மர்மமில் லாதா ளாகுங்
கோதிலாப் பித்த தேகி குற்றமில் லாதா ளாகும்
போதவே வனுக் கேதான் பொருந்துநன் னடக்கை யுள்ளாள்
மேதினி லன்ன மீவள் வித்தகி கேட்டி டாயே.

17. தாய் மாநிறமுள்ளவள். இரகசியமில்லாதவள். பித்ததேகமுள்ளவள். குற்றமில்லாதவள். தன் கணவன் மனமறிந்து நடப்பாள். நல்ல நடத்தையுள்ளவள். பசித்தவருக்கு அன்னம் அளிப்பாள். தாயே ! மேலுங்கேள்.

18. அவளுடைத் தாய்க் குடும்ப மலைச்சலாம் என்று சொன்னோம்
நவனியில் துணைவர் தம்மை நாட்டுவோ மாண்பால் மூன்று
பவமுள இரண்டு சேதம் பகருவோ மொருவன் தீர்க்கம்
அவனுமே சோங்கின் மேலே அக்கரை செல்வா னாமே.

18. அவளுடைய தாய்க் குடும்பம் கஷ்டப்படும் என்று கூறுகின்றோம். அவளுக்கு (ஜாதகனின் தாய்க்கு) உடன்பிறந்தவர் மூவரில் இருவர் நஷ்டமாவர். ஒருவன் நீண்ட ஆயுளுடனிருப்பர். அவனும் கப்பல் ஏறி அக்கரை செல்வான்.

19. சிலகாலம் அங்கு நின்று செல்லுவான் தந்தை யில்லம்
நலமுள குடும்பி யாவன் நற்பூமி சேர்ப்பா னாகும்
பலமான கிருகம் செய்வன் பந்துமே லாக வாழ்வன்
மலையிறை மகளாய் வந்த மங்கையே மேலுங் கேளே.

19. சிலகாலம் அங்கிருந்து தன் தந்தையின் வீட்டுக்குச் செல்லுவான். நன்மைமிக்க குடும்பமுள்ளவன். பூமிகள் சேர்ப்பான். உறுதியான பெரிய வீடு கட்டுவான். பந்துக்களுக்கு மேலாக வாழ்வான். இமவானின் புத்திரி யாக வந்த தாயே ! மேலுங்கேள்.

20. தந்தையின் முன்சென் மத்தைச் சாற்றுவோம் புதுவை தன்னில்
சந்ததம் வடுகர் வம்சந் தானவ னுதித்து மேலும்
முந்திய தனங்கள் பெற்று முயற்சியாய்ச் செட்டுச் செய்து
பந்தமாய் மனைவி மைந்தர் பரிவுடன் வாழு நாளில் ;

20. ஜாதகனின் தந்தையின் முன் பிறப்பைப் பற்றிச் சொல்லுகின்றோம். புதுவைமாநகரில் வடுகர் குலத்தில் பிறந்து, செல்வங்கள் மிகுதியாகப்பெற்று, தன் சொந்த உழைப்பால் வியாபாரம் செய்து, மனைவி மக்களுடன் வாழ்ந்து வரும் நாளில் ;

21. வந்தவூழ் தன்னைச் சொல்வேன் வணிகனு மொருவன் தானுந்
தன்தனம் வாங்கி யேதான் தரணியில் செட்டுச் செய்தான்
பிந்தியும் நட்டம் நேர்ந்து பொருளதை யீயா னாகிச்
சிந்தையில் கலக்க முற்றுத் தேசமேல் சென்றா னென்றோம்.

21. ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். வேறொரு வியாபாரி, இவனிடம் பொருள்வாங்கி வியாபாரம் செய்தான். ஆனால் அதில் நஷ்டம் ஏற்பட்டு பொருளைக் கொடுக்க முடியாமல் மனத்தில் கலக்க மடைந்து வேற்றூரை அடைந்தான்.

### பிறர் பொருளைப் பறித்துக்கொள்ளல்

22. அவன்வீட்டைப் பொருளுக் காக அண்ணலும் பறித்துக் கொண்டு
தவசிகள் வாசஞ் செய்யச் சத்திரஞ் செய்தா னென்றோம்
நவனியில் வருவோ ருக்கு நன்றாகப் பந்தல் வைத்து
இவனுமே சேது சென்று இராமலிங் கத்தைப் போற்றி ;

22. தன் பொருளுக்காக அவனுடைய வீட்டைப் பறித்துக் கொண்டான். அவ்விடத்தில் பரதேசிகள் இருக்க ஒரு சத்திரம் கட்டினான். ஒரு தண்ணீர்ப் பந்தலும் அமைத்தான். பிறகு சேதுவுக்குச் சென்று அங்குள்ள இராமலிங் கத்தைப் பூசை முதலியன செய்து ;

23. பலவிதத் தலங்கள் சென்று பாலக னுள்ளூர் மீண்டு
கல்வியும் நாச மாகக் கொண்டனன் மரணந் தானும்
நலமுள விக்கு லத்தில் நாயக னுதித்தா னென்றோம்
தலைவியுங் கேட்க லுற்றாள் தானவன் முன்செ ன் மத்தில் ;

23. பல வித புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று திரும்பி, உள்ளூருக்கு வந்து மரண மடைந்தான். மீண்டும் நன்மைமிக்க இந்தக் குலத்தில் (ஜாதகனின் தந்தையாகப்) பிறந்தான் என்றுரைத்தோம். பார்வதி ! கேட்கலானாள். அவன் முற்பிறவியில் ;

### சேதுவில் நீராடிய பலன்

24. வடுகர்தங் குலமு தித்து வரன்திருக் குலத்தி லேதான்
அடைவுட னுதித்த தென்ன அறைகுவீர் முனியே யென்றாள்
திடமதாய் முன்செ ன் மத்தில் சேதுக்குச் சென்ற தாலே
உடனேதா னிக்கு லத்தில் உதித்தன னிவனே யம்மா.

24. வடுகர் மரபில் தோன்றியவன் இக்குலத்தில் பிறந்த காரணம் என்ன என்று கூறுங்கள், முனிவரே ! என்றாள். நிச்சயமான புத்தியுடன் முற்பிறவியில் சேதுவிற்குச் சென்று நீராடியதால் இக் குலத்தில் பிறந்தான் இவன்.

### மறுபிறவி யில்லாத காரணம்

25. மறுசென்ம மிவனுக் கில்லை மங்கையுங் கேட்க லுற்றாள்
திருமக னிச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்ன
வறைகின்றோ மிச்சென் மத்தில் மறைமுதற் றலைவன் றன்னை
அருமையாய்த் தியானஞ் செய்தான் அதனாலே சென்ம மில்லை.

25. இவனுக்கு மறு பிறவி இல்லை. பார்வதி கேட்கலானாள். இவன் இப் பிறவியில் செய்த நற்காரியங்க ளென்ன ? (முனிவர்கள் கூறுகின்றனர்.) இப் பிறவியில் வேதங்கள் கூறும் முதன்மையான கடவுளைச் சதா தியானம் செய்து வந்ததால் மறுபிறவி யில்லை.

26. பாதக னிச்சென் மத்தில் பலபல விரோத முற்றுக்
காதக மனத்த னாகிக் கனபொரு ளிச்சை வைத்தும்
மேதினில் வாழ் வானுக்கு விளம்பினீர் தேவ ராக
ஏது கார்யம் செய்தாலுந் ஈசன்மேல் பக்தி பூண்பன்.

26. இப்பிறவியில் பாதக நெஞ்சத்துடன் பற்பல விரோதங்களுடன் கெட்ட மனதுடையவனாகப் பொருள்கள்மீது பிரியம் வைத்து வாழ்ந்து வந்தவனுக்கு முக்தி கிட்டும் (என்று என்று கூறக் காரணம் என்ன, என பார்வதி கேட்கலானாள். முனிவர்கள் பதில் உரைக்கின்றனர்). எந்தக் காரியம் செய்தாலும் சிவபெருமான்மீது பக்திகொண்டே செய்வான். (அதனால் சொன்னோம்.)

27. பக்தியால் தேவ ராகப் பகர்ந்தனம் மாதா விற்குச்
சித்தமாய் முன்ஜன் மத்தைச் செப்புவோஞ் காஞ்சி மேல்பால்
சுத்தமாய்ப் பேரூர் தன்னில் சூத்திர ஜாதி யாக
வித்தகி உதித்தா ளென்ருேம் மெல்லியே மேலும் கேளே.

27. அந்தப் பக்தியால் முக்தியடைவான் என்று கூறினோம். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்ருேம். காஞ்சிபுரத்துக்கு மேற்கில் உள்ள ஒரு பெரிய ஊரில், சூத்திர வருணத்தவளாகப் பிறந்தாள் என்ருேம். மெல்லிய இடையையுடைய பார்வதியே ! மேலுங் கேள்.

28. மதலேக ளுள்ளா ளாகி மனமது ஈகை யாளாய்
அதிதிகட் கன்பு பூண்டு யாவர்க்கும் நல்லோ ளாகிச்
சதியிலா வரனுக் கேமுன் சத்தியும் மாண்டா ளென்ருேம்
விதியினுல் இச்சென் மமதில் விளங்கினு ளிவளே என்ருேம்.

28. மக்களைப் பெற்று, கொடுக்கும் மனத்தையுடையவளாகி, அதிதிக ளிடம் அன்பு கொண்டு, எல்லோருக்கும் நல்லவளாக வாழ்ந்து, தன் கண வனுக்கு முன் மாண்டாள் என்ருேம். பிறகு பிரமனுல் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தாள் என்று கூறினோம்.

29. பின்ஜன்மம் பக்ஷி தன்னில் பிறப்பளே இக்கு லத்தில்
தன்னிலே குடும்பி யாகிச் சஞ்சல மில்லா ளாகி
இன்னவள் வாழ்வா ளாகும் இயம்பின மொழி குன்ருவே
கன்னென மொழியி ளுளே காதலி கேளு மம்மா.

29. மறுபிறப்பு, திருக்கழுக்குன்றத்தில், இதே குலத்தில் பிறப்பாள். நல்ல குடும்பியாகி, சஞ்சலங்கள் இல்லாதவளாக இவள் வாழ்ந்து வருவாள். நாங்கள் கூறிய வார்த்தைகள் பொய்யாகா. கரும்பைப் போன்ற இனிய வார்த்தைகளைப் பேசுபவளே ! தாயே ! கேளுங்கள்.

30. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மாலங் காட்டில்
மேதினில் வன்னிய வம்ச மிதனிலி லுதித்து மேலும்
போதவே தனங்கள் பெற்றுப் பூஷண முள்ளா ளுகித்
தீதிலா கிருஷி யாலே சீவனஞ் செய்தா னென்ருேம்.

30. ஜாதகன் முற் பிறவியைக் கூறுவோம். திருவலாங்காட்டில் வன்னிய குலத்தவனுகப் பிறந்து, செல்வங்களை மிகுதியாக அடைந்து, ஆபரணங்களும் உடையவனுகி, நன்மை மிக்க விவசாயத் தொழிலால் ஜீவனம் நடத்தி வந்தான், என்று கூறினோம்.

31. சாலமார்க் கத்தி லேதான் தாகப்பந் தனு மமைத்துச்
சீலமாய் முருகன் பேரில் சதாவுமே தியானஞ் செய்து
ஆலங்காட் டானுக் கூழி அவனுமே நடத்தி வந்து
ஞாலமேல் மரண மாகி நாற்றலேக் கஞ்சன் தன்னுல் ;

31. சாலை யோரங்களில தண்ணீர்ப் பந்தல் ஏற்படுத்தி, பக்தியுடன் சுப்பிரமணியக் கடவுளைச் சதா தியானம் செய்து வந்து, திருவாலங்காட்டில் எழுந்தருளியிருக்கும் கடவுளுக்குத் தொண்டுகள் பல செய்து, கடைசியில் மரணமடைந்து, நான்கு தலைகளையுடைய பிரம்மாவினால் ;

### மேம்பட்ட வருணத்தில் பிறக்கக் காரணங்கள்

32. வரையவே கங்கை வம்சம் வந்தவ னிவனே என்றோம்
அறைகிறோ மிவன்பின் ஜன்மம் அக்காஞ்சி தன்னிலே தான்
தெரியவே பிரம்ம சேயாய்ச் செல்வனு முதிப்பா னென்றோம்
குறைவிலா வாழ்வா னுகுங் கூறுவோங் கேளுந் தாயே.

32. மீண்டும் படைக்கப்பட்டு வேளாளர் மரபில் பிறந்தவன் என்று கூறுகின்றோம். இவன் மறு பிறப்பு அந்தக் காஞ்சிபுரத்தில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான். குறைகளில்லாமல் வாழ்ந்து வருவான் என்று கூறுவோம். கேளுங்கள், தாயே !

33. தந்தையின் மரணக் காலஞ் சாற்றுவோ நாற்பா னென்றில்
பிந்திய அன்னை காலம் பேசுவோம் நாற்பா நான்கில்
எந்தையே இவனின் காலம் இயம்புவோம் அறுப தாண்டில்
சந்ததங் கன்னி மாதஞ் சார்ந்திடு வம்மா வாசை.

33. ஜாதகனின் தந்தையின் மரணக் காலம் நாற்பத்தோராம் வயதில் உண்டாகும் என்று கூறுகின்றோம். நாற்பத்துநான்காம் வயதில் தாய்க்கு மரணம் ஏற்படும். ஜாதகனின் மரண காலம் அவனுடைய அறுப தாம் வயதில், புரட்டாசி மாதம் அமாவாசை திதியில் (ஏற்படும்).

34. சுரத்தினால் மரண மாவான் சொல்லுவோம் யோகச் செய்கை
தரைமிகத் தேட வல்லன் சகலர்க்கும் நல்லோ னவன்
மறையவர் நேசங் கொள்வன் வண்டிவா கனமு முள்ளான்
குறைவிலாச் செல்வ முள்ளான் கோவுகள் விருத்தி என்றோம்.

34. ஜ்வரத்தினால் இறப்பான். இவனுடைய பொது யோக பலாற்றைக் கூறுகின்றோம். விளை நிலங்களைச் சேர்ப்பான். எல்லோருக்கும் நல்லவனாக விருப்பான். வேதங்களுணர்ந்த அந்தணர் உறவுள்ளவன். வண்டி முதலிய வாகன வசதிகளுடையவன். நிறைந்த பொருட் செல்வமும், பசுக் களும் உள்ளவன்.

35. பலருக்கும் உதவி செய்வன் பத்தினிக் கன்ப னவன்
நலமிகு வார்த்தை கூறுவன் நலமுள குடும்பி யாவன்
விலைமாதர் விருப்பங் கொள்வன் மேலான புத்தி யுள்ளான்
மலைமுரு கருக்கு அன்பு வைத்திடு வானுஞ் சொன்னோம்.

35. பல பேர்களுக்கு உபகாரி. தன் மனைவியிடம் அன்புடனிருப்பான். நன்மை மிக்கப் பேச்சுகள் பேசுபவன். நன்மையுள்ள குடும்பமுடன் வாழ் வான். வேசையர்மீது மையல் கொள்ளுபவன். உயர்ந்த நோக்கங்க ளுள்ள புத்திசாலி. மலைமீது வீற்றிருக்கும் சுப்பிரமணியக் கடவுளிடம் மிகுந்த பக்தியுள்ளவன் என்று கூறுவோம்.

36. அத்திரி முனிவர் சொல்வார் அவன்துணை விகள்தம் சேதி
சுத்தமாய்ச் சொல்லு மென்னச் செப்புவார் வசிஷ்டர் தாமும்
வித்தகி மூத்தோ ளுக்கு விளங்காது புத்திர ரென்றோங்
குற்றதைச் சொல்லு மென்ன கூறுவார் முநிவர் தாமே.

36. அத்திரி மாமுனிவர் சொல்லுகின்றார். அவனுடைய சகோதரிகளது செய்திகளைக் கூறுங்கள் என்று வினவ, வசிஷ்டர் உரைக்கின்றார். மூத்த சகோதரிக்கு குழந்தைகள் பிறவா. என்ன குற்றத்தால் குழந்தைகள் பிறவா ? அதைச் சொல்லுங்கள். என்று கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார்.

### புத்திரதோஷம் நீங்கச் சாந்தி

37. முன்ஜன்ம வினையி னாலே மொழிந்திட்டோம் மதலைத் தோடம்
அன்புட னதற்குச் சாந்தி அறைகின்றோம் விவர மாகத்
தன்னிலே கிரக சாந்தி செய்துபின் தணிகைக் கேகி
மன்னிய வேழு கார்த்தி விடாமலே சென்று மேதான் ;

37. முற்பிறவியில் செய்த தீச்செயல்களால் புத்திர தோஷம் ஏற்பட்டது என்றோம். அதற்குச் சாந்தி ஒன்று கூறுகின்றோம். விவரமாக. தன் வீட்டில் நவக்கிரக சாந்தி செய்து, பிறகு, திருத்தணிக்கு ஏழு கார்த்திகை விடாமல் சென்று ;

### சாந்தி

38. அறுமுகர்க் கர்ச்சித் தேத்தி அடைவுடன் மாதந் தோறும்
வருங்கார்த்தி தன்னில் தானே அடியவ ரொருவர்க் கன்னந்
திடமுடன் பத்தி யோடு அவளுமே ஈவா ளாகில்
உடனேதான் மதலை தோன்றும் உரைக்கின்றோ மாண்பா
[லொன்று.

38. ஆறுமுகத்தோனுக்கு அருச்சனை முதலியன செய்து, துதித்து, விடாமல் மாதா மாதம் வரும் கார்த்திகையில் சிவனடியார் ஒருவருக்கு அன்னம் பக்தியுடன் அளித்தால், அவளுக்கு உடனே புத்திர பாக்யம் ஏற்பட்டு, ஆண் குழந்தை யொன்று பிறக்கும்.

39. கன்னிகை யிரண்டு தீர்க்கங் கழறுவோ மவள்கு ணத்தை
நன்னய புத்தி யாவள் நாயகன் பட்ச முள்ளாள்
அன்னியர் தமக்கு நல்லோள் அவளுமே யீகை யுள்ளாள்
உன்னதக் குடும்பந் தன்னில் உறைகுவா ளிவளே யென்றோம்.

39. இரு பெண் குழந்தைகளும் பிறந்து, நீண்ட ஆயுளுடன் இருக்கும். அவளுடைய குணத்தைச் சொல்லுங்கால், நயமான நன்மையுள்ள புத்தியுடையவள். கணவன்மீது பிரியமுள்ளவள். பிறருக்கும் நல்லவளாக இருப்பாள். அவளும் கொடையாளி. உயர்ந்த குடும்பத்தில் வாழ்ந்து வருவாள்.

40. இவளுக்கு இளையோள் சேதி இயம்புவோங் கோபங் கொஞ்சம்
அவசர மனத்தா ளாகும் அன்புள குணத்தா ளாகும்
நவனியில் புத்திர பாவம் நாட்டுவோ மாண்பால் ரண்டு
பவமுள கன்னி ரண்டு பகருவோந் தீர்க்க மாக.

40. இவளுக்கு இளையவளி(ஜாதகனின் சகோதரியி)ன் செய்திகளைச் சொல்லுகின்றோம். சிறிது கோபமுடையவள். அவசரமுள்ள புத்தியுள்ளவள். அன்பான குணமுடையவள். அவளுக்குப் புத்திர பாக்கியம் உண்டு. இரு ஆண் குழந்தைகளும் இரு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளுடனிருப்பர்.

41. தன்வரன் தன்னு லேதான் தனக்கவ மான முண்டு
அன்னவள் சுகமே வாழ்வள் அறைந்தனம் விவர மாகப்
பன்னிய சாத கர்க்குப் பகர்ந்தனஞ் ஜனன காலம்
உன்னித ராகு தன்னில் உறைந்திடு மாண்டு நான்கும் ;

41. தன் கணவனால் அவளுக்கு அவமானம் ஏற்படும். இருந்தும் அவள் சுகமாக வாழ்ந்து வருவாள் என்று விவரமாகக் கூறினோம். ஜாதகனுக்கு ஜனன காலத்தில் ராகுமகாதசையில் நான்கு வருஷங்களும் ;

42. திங்களு மீரஞ் சாகும் செப்புவோம் பலனை யாங்கள்
தங்கிடும் ரோகந் தானுஞ் ஜனநிந்தை விரோத முண்டு
பொங்கின காலி சேதம் புராதனங் கலகம் நேருஞ்
சங்கைகள் இரண்டி லேதான் சாற்றுவோங் கேளு மம்மா.

42. பத்து மாதங்களும் பாக்கியிருக்கும். அக் காலத்திய பலனைக் கூறுகின்றோம். வியாதி எற்படும். ஜனங்களால் அவமானமும் விரோதமும் ஏற்படும். விருத்தியான கால்நடைகளுக்குச் சேதமுண்டு. பிதுரார்ஜித விஷயமாகக் கலகம் உண்டாகும். மற்ற சந்தேகங்களை இரண்டாம் பாகத்தில் கூறுகிறோம். தாயே ! கேளும்.

43. மந்திரி தசையி லேதான் வந்திடுங் வழக்குத் தானுஞ்
சந்தத மிளையோன் சேதந் தன்துணை சுபமு முண்டு
முந்தின தந்தை ஞாதி வர்க்கத்தில் மனைவி தோடம்
பந்தமாய்க் குடும்ப சூதம் பகைவெல்லும் பூமி சேரும்.

43. குருமகாதசையில் வழக்குகள் நேரும். உடன் பிறந்த இளைய சகோதரனுக்கு மரணம் ஏற்படும். தன் சகோதரருக்கு மங்களங்கள் உண்டாகும். பெரிய தந்தையின் பங்காளி வகையில் ஸ்திரீக்கு தோஷமாகும். குடும்பத்தில் சுபமும் எற்படும். விரோதிகளை வெல்லுவான். நிலங்கள் சேரும்.

44. நட்டமாம் பொருளுங் கூடும் ஞாதியின் பூமி சேரும்
மட்டிலாச் சாத கர்க்கு மனையவள் சேரு மென்றேந்
துட்டரு முறவே யாகுஞ் சொல்லுவோம் விவரம் ரண்டில்
திட்டமாய்த் தவங்கள் செய்யுந் தேவியே கேட்டி டாயே.

44. நஷ்டமான பொருள்கள் திரும்பி வரும். பங்காளிகளின் பூமி வந்து சேரும். குறைவில்லா ஜாதகனுக்கு விவாஹம் ஏற்படும். தீயவர் உறவும் உண்டாகும். மற்ற விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். திடமான மனத்துடன் தவங்கள் இயற்றும் பார்வதியே ! கேளுங்கள்.

## ஜாதகம் 5

1. சந்திரன் சிய மாகச் சனிமீன மிரவி நந்தி
புந்தியு மாட தாகப் புகர்வீணை கேது வண்டி
மந்திரி சேயுஞ் சாடி மானதில் ராகு புக்க
இந்தவாறு கோள்கள் நின்று இலக்கின மிதுனமாக ;

1. சந்திரன் சிம்மத்திலும், சனி மீனத்திலும், சூரியன் புதன் விருஷபத்திலும், சுக்கிரன் மிதுனத்திலும், கேது கடகத்திலும், குரு செவ்வாய் கும்பத்திலும், ராகு மகரத்திலும் தங்கி, நவக்கிரகங்கள் இருந்தால், லக்கினம் மிதுனமாக இருக்க ;

| | | | |
|---|---|---|---|
| சனி | | புதன் சூரியன் | லக்கினம் சுக்கிரன் |
| குரு செய்வாய் | இராசி சக்கரம் | | கேது |
| ராகு | | | சந்திரன் |
| | | | |

2. சொல்லுவீர் என்றுள் தேவி ஜயமுநி கூறு கின்றார்
வல்லியே ஆண்பால் ஜன்மம் வரைகிறோம் இல்லம் தன்னைப்
புல்வீடு கீழ்மேல் வாடை போற்றுவோம் மேற்கில் சந்து
நல்லதோர் சோலை சூழி நமன்திக்கில் மாரி உண்டே.

2. ஏற்படும் பலன்களைப் புகலுவீர் என்று பார்வதி கேட்கலானாள். ஜய முனிவர் பதில் கூறுகின்றார். தாயே! ஜாதகம் ஆண் மகனுடையது. அவனுடைய வீட்டைப் பற்றிக் கூறுகின்றோம். அவன் வீடு கிழக்கு மேற்காக வுள்ள தெருவிலுள்ளகூறைவீடு. மேற்குப் பக்கத்தில் சந்தொன்று உளது. செழிப்புள்ள ஒரு தோட்டம், துரவு முதலியன இருக்கும். தெற்குத் திக்கில் மாரியம்மன் கோயிலுளது.

3. உத்திர மீசன் காளி உருவிலா மாலோன் கோஷ்டம்
பத்தினி மாரி தென்கீழ் பாரளந் தோனும் நிற்பான்
சித்தமாய்க் கிழக்கில் சந்தும்......புமதன் கீழ்த் தங்கும்
சத்தியே சமவூர் தன்னில் சாற்றுவோ முத்திர வாசல்.

3. வடக்கில் சிவபெருமான் ஆலயமும், காளி கோயிலும் உள்ளன இடிந்த திருமாலின் ஆலயமும் (மற்றொரு) மாரியம்மன் கோவில் தென் கிழக்கில் இருக்கும். உலகளந்த பெருமான் (திருமால்) ஆலயமும் ஒன்றுளது. கிழக்கில் சந்து ........................அதன் கிழக்கிலும் உள்ளது. இங்ஙனமுள்ள சமமான நிலைமையுள்ள ஓர் ஊரில் வடக்கு நோக்கியுள்ள வீட்டில் பிறப்பான்.

4. இவ்வித அடையா ளத்துள் இலங்கிய இந்தப் பாலன்
பவ்யமாய்த் தீயின் வம்சம் பகருவா னிவனின் யோகம்
நவ்விய தந்தை தாயர் நற்றுணை களத்திர புத்திரர்
ஒவ்விய முன்பின் ஜன்மம் உரைக்கிறோம் கேளும் தாயே.

4. இவ்வித அடையாளங்களுடன் பிறந்த இந்த ஜாதகன், வன்னிய குலத்தில் பிறப்பான். இவனுடைய யோகங்கள், தந்தை தாய் உடன் பிறந்தவர் மனைவி மக்கள் யோகங்கள், முற் பிறப்பு மறு பிறப்பு ஆகிய இவைகளைப்பற்றியும் கூறுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் கருநி றத்தன்
பந்தமாய் ஒடிச்சல் தேகி பத்தினி நேய னாகும்
சந்ததம் சீல மில்லான் தைரியன் மனவ மூத்தன்
தன்தன முடைய னவன் தைர்யவான் அல்ப உண்டி.

5. ஜாதகனின் தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். கருமை கலந்த சிவந்த நிறமுள்ள மெல்லிய சரீர முள்ளவன். மனைவிக்குப் பிரியனவன். ஒழுக்கம் இல்லாதவன். தைரியசாலி. நெஞ்சமுழுத்தக்காரன். சொந்த உழைப்பால் தேடிய பொருளுடையவன். தைரியமுள்ளவன். சிறிதாகவே புசிப்பான்.

6. யோசனை பலவும் செய்வன் உறுதியா மனத்த னவன்
காசுமேல் ஆசை உள்ளான் கல்விமான் கிருஷி செய்வன்
பாசமாய்ப் பேச மாட்டான் பாருகள் அதிகஞ் சேர்ப்பன்
தாசிதா சர்களு முள்ளான் சந்தேக மனத்த னாமே.

6. பலவிதமான யோசனைகள் செய்பவன். திடமான மனமுள்ளவன். பொருளின்மேல் ஆசையுள்ளவன். கல்வியறிவுடையவன். விவசாயமும் செய்து வருவான். பட்சமாகப் பேசாதவன். விளைநிலங்கள் மிகுதியாகச் சேர்ப்பான். ஏவலாட்களில் இருபாலரும் உள்ளவன். சந்தேகமுள்ள மனத்தன்.

7. காலிகள் விருத்தி உள்ளான் காவலன் டம்ப மில்லான்
சாலவே சபையில் செல்லான் தக்கதோர் பூமி சேர்ப்பன்
காலத்தை அறிந்து வாழ்வன் கனமனஞ் செட்டுச் செய்வன்
ஞாலமேல் அடக்க முள்ளான் நாயகி கேட்டி டாயே.

7. கால் நடைகள் விருத்தியுள்ளவன். இவன் வீண் ஆடம்பரம் இல்லாதவன். சபை முதலிய கூட்டங்களுக்குச் செல்லாதவன். நிலங்கள் சேர்ப்பான். காலத்தையறிந்து அதற்குத் தக்கபடி வாழ்ந்து வருவான். திடமான மனத்தன். வியாபாரம் செய்து வருவான். அடக்கமுள்ளவன். தாயே ! கேளுங்கள்.

8. அடக்கமு மொடுக்க முள்ளான் அண்டினோர்க் குதவி செய்வன்
துடுக்கான வார்த்தை கூறுன் துறவிகள் நேசங் கொள்ளான்
மடக்கொடி வார்த்தை கேட்பன் வண்டிவா கனமு முள்ளான்
நடக்கையும் நல்ல தாகும் நாயகி மேலுங் கேளே.

8. அடக்கமுமொடுக்க முடையவன். தன்னை யடைந்தவர்களுக்கு உபகாரி. துடுக்காகப் பேசாதவன். துறவிகள் நட்பு இல்லாதவன். தன் மனைவியின் பேச்சைக் கேட்பவன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். நன்னடக்கை யுள்ளவன். தாயே ! மேலுங் கேளுங்கள்.

9. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பா லொன்று
நவனியின் தீர்க்க மாகும் நாயகி மூன்று சேதம்
அவனியில் துணைவன் சேதி அறைகிறோம் வெகுளி யாவன்
பவமுள கோபங் கொஞ்சம் பத்தினி இரண்டு என்றோம்.

9. இவனுடைய உடன் பிறந்தவர்களைப்பற்றிக் கூறுகின்றோம். சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுடனிருப்பான். மூன்று சகோதரிகள் பிறந்து மரிப்பர். உடன் பிறந்தவனின் யோகத்தைச் சொல்லுகின்றோம். வெகுளி, துன்பம் தரும் கோபம் கொஞ்சமுள்ளவன். இரு மனைவியர் உண்டு என்று கூறுகின்றோம்.

10. செலவு களதிக முள்ளான் சித்தினி ஜாதி யாவன்
பலபல செட்டுச் செய்வன் பாரினில் எவர்க்கும் நண்பன்
குலவிய சுகி புசிப்பன் குழவிகள் விருத்தி உள்ளான்
தலமது வேறாய்ச் செல்வன் சித்திர வீடு செய்வன்.

10. செலவுகள் அதிகமாகச் செய்பவன். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன். பற்பல வியாபாரம் செய்து வருவான். உலகில் எவர்க்கும் நண்பனாக விருப்பான். சாப்பாட்டில் பிரியன். குழந்தைகள் விருத்தியாகும். வேறு வீட்டுக்குச் செல்வான். புதிய அழகிய வீடு கட்டுவான்.

11. அண்டினோர்க் குதவி செய்வன் அல்பவஸ் துக்க ளிஷ்டன்
தண்டமிழ்க் கல்வி கொஞ்சந் தயாளமாங் குணத்த னாகும்
குண்டைகோ விருத்தி உள்ளான் குணமது இரண்டு மாகும்
எண்டிசைக் கீர்த்தி கொள்வன் இவன்பித்த டாந் தேகம்.

11. தன்னை யடைந்தவர்களுக்கு உபகாரம் செய்பவன். அற்பமான பொருள்களின்மீது விருப்பமுள்ளவன். நன்மையுள்ள தமிழ் கொஞ்சம் கற்பான். தயாளமான மனதுள்ளவன். பசு, காளைகள் விருத்தியுள்ளவன். இருவித குணங்களுள்ளவன். எட்டுத் திக்குகளிலும் புகழுடைவான். இவனுக்குப் பித்தச்சூடுள்ள தேகம்.

12. வயதுமே தீர்க்க மாகும் மைந்தர்கள் ஆண்பால் ரண்டு
நயமுடன் பெண்பால் நான்கு நாட்டினோம் தீர்க்க மாக
வியமாகும் மற்ற வெல்லாம் விளம்புமிக் குணத்தா னுக்குப்
பயமிலா இந்தப் பாலன் பாரினில் உதிப்பா னாமே.

12. நீண்ட ஆயுளுடனிருப்பான். இரு புத்திரர்களும், நான்கு புத்திரிகளும் தீர்க்காயுசுடன் வாழ்வர் என்று கூறுகின்றோம். மற்றவை நிலையா. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு (முதலில் கூறிய குணங்களுள்ளவனுக்கு) இந்த ஜாதகன் பிறப்பான்.

13. ஜாதகன் நிறங் குணத்தைச் சாற்றுவோங் கருநி றத்தான்
மேதினில் ஒடிச்சல் தேகி வித்தையு முடைய னாகும்
சூதிலான் நோஞ்சை யாவன் சுகமுள்ளான் கிருஷி செய்வன்
தீதுகள் ஒருவர்க் கெண்ணான் சற்றினில் கோபி யாவன்.

13. ஜாதகனின் நிறம் குணம் இவைகளைக் கூறுகின்றோம். கரிய நிறமுடையவன். மெல்லிய தேகமுடையவன். கல்விமான். கபடில்லாதவன். சுகமுள்ளவன். விவசாயம் செய்து வருபவன். பிறருக்குத் தீங்குகள் எண்ணாதவன். விரைவாகக் கோபிப்பவன். (முன் கோபி.)

14. கைமுத லுடைய னவன் கனத்தநற் பலன்க ளாலே
உய்வகைப் பூமி என்றோம் ஓங்கிடுஞ் செல்வ மெல்லாம்
பொய்சொல்லான் பிதாவின் மேலாய்ப் புகழ்படக் கீர்த்தி ஏற்பன்
அல்லது மில்லா னாகும் அதிகமாய்த் தன்னின் மேலாய்.

14. தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருளுடையவன். முற் பிறப்பில் செய்த நற் செயல்களால், பூமியால் ஜீவனம் செய்து வருவான் என்றோம். செல்வங்கள் பெருகும். பொய் சொல்லாதவன். தன் தந்தைக்கு மேலான கீர்த்தியுடன் வாழ்வான். துன்பங்கள் இல்லாதவன்.

15. நல்லவன் குணவா னவன் நயமுட னுரைக்க வல்லன்
சொல்லிலே கபடு முண்டு சுற்றத்தார் ஜாதி உண்டு
நல்லவெண் கலங்கள் செம்பொன் நற்பணி நற்று சுண்டு
இல்லமும் புதிதாய்ச் செய்வன் இவன்பந்து மெச்ச வாழ்வன்.

15. நல்லவன். குணசாலி. நயமாகப் பேசுபவன். ஆனால் வார்த்தைகளில் சூது இருக்கும். பந்துஜனங்கள் மிகுதியாக இருப்பர். நல்ல வெண்கலங்கள் (பாத்திரங்கள்), ஆபரணங்கள், செம்பொன், நல்ல ஆடைகள் முதலியன உண்டு. புதிய வீடு கட்டுவான். பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான்.

16. தந்தையின் ஜாதி மேலாய்த் தானவன் வாழ்வா னாகுந்
தன்துணை தனைக்காப் பானுந் தந்தைக்கு மேலாய் வாழ்வன்
சிந்தையில் மர்மங் கொஞ்சஞ் சிலசிலச் செட்டுச் செய்வன்
மந்திரம் வைத்யம் செய்வன் மங்கையே மேலுங் கேளே.

16. தந்தையின் பங்காளிக்கு மேன்மையாக வாழ்ந்து வருவான். தன் உடன் பிறந்தவனைக் காப்பாற்றுவான். தன் தந்தைக்கு மேலாக வாழ்க்கை நடத்துவான். மனத்தில் சிறிது இரகசியமுள்ளவன். சிற்சில வியாபாரம் செய்வன். மந்திரம், வைத்தியம் முதலியன செய்து வருவான். தாயே! மேலுங் கேள்.

17. இந்தவன் துணைவர் தம்மை இயம்புவோம் ஆண்பால் ரண்டு
வந்திடுங் கன்னி நான்கு வரைகிறேந் தீர்க்க மாக
நொந்திடு மாறு தாமும் நுவலுவோம் மணத்தின் காலம்
எந்தையே மூவே ழாண்டில் இவனுக்குப் பாரி வாய்க்கும்.

**17.** ஜாதகனின் உடன் பிறந்தவர் தம்மைக் கூறுகின்றோம். இரு சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் உளர். அவர்கள் நீண்ட ஆயுளுடனிருப்பர். ஆறு குழந்தைகள் பிறந்து இறந்து விடுவார். ஜாதகனின் திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். தன்னுடைய இருபத்தோராம் வயதில் இவனுக்கு மனைவி வாய்ப்பாள்.

**18.** பாரியை சேதி தன்னைப் பகருவோ மிருநி றத்தாள்
சீரிலாக் குணத்தா ளாகுந் திருமக ளொப்ப தாகும்
மாறியே பேசா ளென்றோம் மர்மமா மனத்த ளென்றோங்
காரிய சமர்த்த ளென்றோங் கணவனுக் கினிய ளாகும்.

**18.** மனைவியின் செய்தியைப்பற்றிக் கூறுவோம். கருமை கலந்த சிவந்த நிறத்தவள். நேர்மையில்லாத குணத்தவள். இலக்குமி போன்றவள். சொல் மாற்றிப் பேசாதவள். மனத்தில் இரகசியமுள்ளவள். காரியங்களில் கெட்டிக்காரி. தன் கணவனுக்குப் பிரியமானவள்.

**19.** புத்திர விருத்தி தன்னைப் புகலவே ஆண்பால் ரண்டு
சித்தமாய்ப் பெண்பால் மூன்று தீர்க்கமா மென்று சொன்னோம்
சுத்தமாய் மூன்று நஷ்டஞ் சொல்லவோ மிவளுக் கேதான்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் மேலுங் கேளே.

**19.** புத்திரபாவத்தைச் சொல்லுங்கால், ஆண் மக்கள் இருவரும் பெண் குழந்தைகள் மூவரும் நீண்ட ஆயுளுடனிருப்பர் என்று கூறினோம். மூன்று குழந்தைகள் மரித்துவிடும் என்று சொன்னோம். விநாயகனைப் பெற்ற பார்வதி தேவியே ! மேலும் சொல்லக் கேள்.

**20.** மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறேஞ் சிவந்த மேனி
மேதினில் சமதே கத்தாள் வித்தகி ஈகை கொஞ்சம்
போதவே கோபங் கொஞ்சம் புண்ணிய மனங்க ளில்லாள்
சாதனை மனத்த ளாகுஞ் சந்தேக மனத்த ளென்றோம்.

**20.** தாயின் குணத்தை நாங்கள் உரைக்கின்றோம். சிவந்த தேகி. சமமான உடலமைப்புக்கள் உள்ளவள். சிறிது கொடையாளி. சற்றுக் கோப மடைவாள். புண்ணியமான மனமில்லாதவள். நினைத்த காரியத்தைச் சாதிக்கக்கூடிய மனத்தள். சந்தேகமுள்ள மனமுடையவள்.

**21.** சீலவாள் வாத தேகி சிந்தையில் கபடு கொஞ்சங்
கோலமாய்த் துணைவர் தம்மைக் கூறுவோம் ஆண்பால் ரண்டு
ஞாலமேல் கன்னி நான்கு நாட்டுவோ மிவளுக் கேதான்
ஆலத்தை உண்டோன் தேவி அறைகிறோம் ஆண்பால் சேதி.

**21.** ஒழுக்கமுடையவள். வாயு நோயுள்ளவள். மனத்தில் கபடுள்ளவள். இவளுடைய உடன்பிறந்தவர்களைக் கூறுகின்றோம். இரு சகோதரர்களும், நான்கு சகோதரிகளும் உளர் என்று கூறுகின்றோம். கொடிய விஷத்தையுண்ட சிவபெருமானின் தேவியே ! சகோதரனின் (ஜாதகனின் தாய் மாமனின்) சேதிகளைச் சொல்லுகின்றோம்.

22. மூத்தவன் மதலை இல்லான் மொழிந்தனம் பித்த தேகி
நாத்திசை கீர்த்தி கொள்வன் நல்லவ னாகி வாழ்வன்
வேத்தொரு குணத்தா னாகும் வீணப வாத மாவன்
காத்திர மில்லா னாகுங் காதலி மேலுங் கேளே.

22. ஜாதகனின் மூத்த மாமன் குழந்தைகளில்லாதவன். பித்த தேக முடையவன். நான்கு திக்குகளிலும் புகழுடைவான். நல்லவனாகவிருப்பான். வேற்று குணங்களு முள்ளவன். வீண் பழிகள் ஏற்பான். வயதுக்குத்தக்க உடலமைப்பில்லாதவன். தாயே! மேலுங் கேள்.

23. அவனுடை இளையோன் சேதி அறைகிறேன் கிருஷி ஏற்பன்
நவனியில் குடும்பந் தன்னை நாயகன் காப்பா னென்றேம்
பவமுள புத்திர ருண்டாம் பாருகள் விருத்தி செய்வன்
இவனுக்குத் துணைவி யாலே இடுக்கண்க ளதிக முண்டு.

23. இரண்டாவது மாமன் செய்திகளைக் கூறுகின்றேம் விவசாயம் செய்துவருவான். தன் குடும்பத்தை நன்கு ஆதரிப்பான். நன்மையுள்ள புத்திரர்களும் ஏற்படும். பூமிகள் விருத்தியாகும். இவனுக்குத் தன் மனைவி யால் பெருங் கஷ்டங்கள் அதிகமாகும்.

24. துணைவியால் அவமா னங்கள் சொல்லுவோ மிவனுக் கேதான்
கனமுடன் வாழ்வா னாகுங் கழருவோம் மாதுரு பூர்வம்
இணையிலாத் தில்லை தென்பால் இயலாழி தன்னி லேதான்
அணையவே வைச்ய வம்சம் அவளுமே உதித்தா ளென்றேம்.

24. தன் மனைவியால் பழிகள் இவனுக்கு ஏற்படும். கௌரவத்துடன் வாழ்ந்து வருவான். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். ஈடில்லாத தில்லைமாநகரத்துக்குத் தெற்கில் உள்ள (திருவாழி) என்னும் க்ஷேத்திரத்தில், வைசியகுலத்தில் பிறந்தாள் என்றுரைத்தோம்.

25. மதலைக ளில்லா ளாகி வரனுடன் தலங்கள் சென்று
கதிகொளுஞ் சேது சென்று கனத்ததோர் தீர்த்தந் தோய்ந்து
விதவித தான மீந்து இராமலிங் கத்தைப் போற்றிப்
பதியினில் சென்று மேதான் பலவித விரதங் கொண்டு;

25. மக்கட் செல்வம் இல்லாதவளாகி, தன் கணவனுடன் புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று, பாபத்தை விலக்கும் சேதுவுக்குச் சென்று, அங்குள்ள புண்ணிய தீர்த்தத்தில் நீராடி, பற்பல தான தருமங்கள் செய்து, இராமலிங்க ஸ்வாமியைத் தொழுது, தன் வீட்டுக்குச் சென்று, பலவிதமான விரதங்கள் ஏற்று;

26. மனமது தெய்வ பக்தி வந்துபின் மதலை உண்டாய்க்
கனமுடன் வாழ்ந்து பின்பு காலன்தன் பதிக்குச் சென்று
சினமிலா பிரமன் லக்கஞ் செய்துபின் வந்தா ளென்றேம்
அணையவே இவள்பின் ஜன்மம் அறைகிறேன் கேளும் தாயே.

26. தெய்வபக்தி ஏற்பட்டு, பிறகு குழந்தைகளை அடைந்து, சௌக்யமாக வாழ்ந்து வந்து, பிறகு எமபுரம் அடைந்து, கோபமேயில்லாத பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்றோம். இவனுடைய மறுபிறப்பைக் கூறு கின்றோம். தாயே ! கேளும்.

27. பின்ஜன்மங் காஞ்சி கீழ்ப்பால் பேரூரில் கங்கை வம்சம்
இன்னவ னுதிப்பா னாகும் இணையிலாச் செல்வம் பெற்று
அன்னவள் வாழ்வா னாகும் அறைகிறோந் தந்தை பூர்வம்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

27. மறுபிறப்பில் காஞ்சிபுரத்துக்குக் கிழக்கில் உள்ள ஒரு பெரிய ஊரில் வேளாள மரபினனாகத் தோன்றுவான். எல்லையற்ற செல்வங்களை யடைந்து வாழ்ந்துவருவான். தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம். உயர்ந்த கணவனைப்பெற்ற புண்ணியவதியே ! கேட்டிடுவாய்.

28. இவன்பிதா முன்ஜன் மத்தை இயம்புவோ மருணை நாட்டில்
அவனியில் மறையோன் வம்சம் அவனுமே உதித்தா னென்றோம்
நவனியில் வணிபஞ் செய்து நன்மனை சுதர்க ளுண்டாய்ச்
சிவனருள் தனங்கள் பூமி செல்வங்க ளதிகம் பெற்று ;

28. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம். திருவண்ணாமலையில், அந்தண குலத்தவனாகப் பிறந்தான். உலகில் வியாபாரம் செய்து, நன்மையுள்ள மனைவி மக்களையடைந்து, சிவபெருமானின் அருள் பெற்று, செல்வங்கள் பூமி முதலியன மிகுதியாகப் பெற்று ;

29. பந்துவின் மேலாய் வாழ்ந்து பாரினில் கீர்த்தி பெற்று
அந்தகன் பக்கல் சேர்ந்து அங்குச்சின் னாட்கள் தங்கிப்
பந்தமாய்ப் பிரமன் லக்கம் பாரினில் வரையப் பட்டு
வந்தவ னிவனே என்றோம் மங்கையுங் கேட்க லுற்றாள்.

29. உறவினருக்கு மேன்மையாக வாழ்ந்துவந்து, உலகில் புகழ் அடைந்து இறந்தான். சின்னாட்களுக்குப் பிறகு மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, உலகில் வந்து பிறந்தான் என்று கூறினோம். பார்வதி கேட்கலானாள்.

### தாழ்ந்த குலத்தில் பிறக்கக் காரணம்.

30. முன்ஜன்மம் மறையோ னாக வந்தவ னிச்சென் மத்தில்
அன்புள தீயின் வம்சம் அணுகின காரணஞ் சொல்
முன்ஜன்மம் வேதந் தன்னை முயலாமல் வந்த தாலே
பின்ஜன்மம் சம்பு வம்சம் பிறந்தன னிவனே என்றோம்.

30. முற்பிறவியில் அந்தணனாகப் பிறந்தவன் இப்பிறவியில் வன்னிய குலத்தவனாகப் பிறந்த காரணங்கள் என்ன ? என்று சொல்லுங்கள். முற்பிறவியில் வேதத்தைக் கற்றுணராமல் வாழ்ந்துவந்ததால் பின் பிறப்பில் சம்பு குலத்தில் பிறந்தான் என்று கூறினோம் (என ரிஷிகள் மறுமொழி அளித்தனர்.)

31. பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிறப்பனே சைவ னாகிப்
பொன்பணி அதிக முண்டாய்ப் பூமியில் கீர்த்தி யாகி
அன்னவன் வாழ்வா னாகும் அம்பிகை யாளே கேளாய்
இன்னவன் முன்ஜன் மத்தை இயம்புவோங் கேளுந் தாயே.

31. மறுபிறப்பு, காஞ்சிபுரத்தில், சைவ குலத்தவனாகப் பிறந்து, பொன் ஆபரணங்கள் முதலிய செல்வங்களை யடைந்து, உலகில் புகழுடையவனாகி, வாழ்ந்து வருவான். தாயே! கேளுங்கள். ஜாதகன் முற் பிறவியைக் கூறுகின்றோம். தாயே! கேட்டிடுவாய்.

32. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் வள்ளூர் மேல்பால்
போதவே சிற்றூர் தன்னில் பிறந்தனன் குலால வம்சம்
பாதகத் தொழிலில் லாமல் பாண்டங்கள் வேலை செய்து
மேதினில் அடியார் பேரில் விருப்பங்கள் மிகவே கொண்டு;

32. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவள்ளூருக்கு மேற்கில் உள்ள ஒரு சிற்றூரில், குயவர் மரபில் தோன்றினன். கெட்ட செயல் களில்லாமல் மண்பாத்திரங்கள் வேலை செய்து வந்தான. சிவனடியவர்மீது பக்தி மிகக் கொண்டவனாக விருந்து;

33. வருவோர்க்கு அன்ன மீந்து மஹாதேவர் தியானஞ் செய்து
மரலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டுப்
பெருமையாய் இச்சென் மத்தில் பிறந்தவ னிவனே என்றோம்
திருமகள் விலாசம் பூண்டு செல்வனும் வாழ்வா னாமே.

33. பசி யென்று வந்தவர்கட்கு அன்னமளித்து, தேவர்கட்கு எல்லாம் உயர்ந்தவரான சிவபெருமானைத் தியானித்து வந்து, கடைசியில் இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பெருமையுடன் இப் பிறப்பில் பிறந்தவன் இந்த ஜாதகன என்று கூறினோம். லட்சுமீ கடாக்ஷம் பெற்று, செல்வவானாக வாழ்ந்து வருவான்.

34. தந்தையின் மரண காலஞ் சாற்றுவோ முப்பா னேழில்
சந்ததம் ஆனி மாதஞ் சாற்றுவோங் கண்டந் தானும்
பிந்திய அன்னைக் கேதான் பேசினோம் அதன்மேல் மூன்றும்
எந்தையே கூனி மாதம் இயம்பினோங் கண்டம் தானே.

34. தந்தையின் மரணக் காலத்தைச் சொல்லுகின்றோம். ஜாதகனின் முப்பத்தேழாம் வயதில், ஆனி மாதத்தில் இறப்பான். அதற்கு மேல் மூன்று வருஷத்திற்குள் தாய் மரண மடைவாள். அவள் பங்குனி மாதத்தில் இறப்பாள்.

35. இன்னவன் மரண காலம் இயம்புவோம் நாற்பா னெட்டில்
அன்னவன் தனக்குக் கண்ட மணுகிடும் நிவிர்த்தி யாகும்
பின்னையு மன்பா னேழில் பங்குனி மாதம் உத்திரம்
சொன்னனே கண்டந் தானும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்.

35. ஜாதகனுடைய மரணகாலத்தைச் சொல்லுவோம். நாற்பத்தெட்டாம் வயதில் கண்டம் ஒன்று ஏற்படும். ஆனால் அது நீங்கிவிடும். பிறகு ஐம்பத்தேழாம் வயதில், பங்குனி மாதத்தில், உத்திர நட்சத்திரத்தில் மரண மடைவான். ஜாதகனுடைய மறு பிறவியைக் கூறுகின்றோம்.

36. அவ்வூரில் கங்கை சேயாய் அவனுமே உதிப்பா னாகும்
பவ்வமாய்ச் சுகமு முண்டாகிப் பாலகன் வாழ்வா னாகும்
நவ்விய யோகச் செய்கை நாட்டுவோஞ் ஜனனந் தொட்டுத்
திவ்விய மரண மட்டுந் தீங்கிலா வாழ்வா னாகும்.

36. அவ்வூரிலேயே வேளாள மரபில் தோன்றுவான். சுகங்கள் மிக்க வடைந்து வாழ்ந்து வருவான். அவனுடைய யோகங்களைப் பற்றிக் கூறு கின்றோம். பிறந்தது முதல் இறப்புவரையில் கெடுதல்களில்லாமல் வாழ்ந்து வருவான்.

37. கோவுகள் விருத்தி உண்டு குலவிடுந் தனங்கள் தாமும்
நாவுசொல் மேன்பா டாகும் நற்பூமி சேர்ப்பா னென்றேங்
காவுக ளுண்டு செய்வன் கனத்ததோர் வீடுண் டாகும்
பூவல யத்தோர் போற்றும் புகழ்ச்சியாய் வாழ்வா னாகும்.

37. பசுக்கள் விருத்தியுண்டு. செல்வங்கள் பெருகும். இவனுடைய சொற்கள் மேன்மையாக விருக்கும். நல்ல விளைநிலங்களைச் சேர்ப்பான்........? ..............பெரிய வீடு ஒன்று உள்ளது. உலகத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான்.

38. எந்தக்கா லத்தி லேதான் இவன்சித்திர வீடு செய்வன்
அந்ததோர் சேதி தன்னை அறிவிப்பீர் முனியே என்றாள்
இந்தவாறு ஜாத கர்க்கு ஈரேழு ஆண்டின் மேலே
முந்திய கிருக வேலை யத்தனம் செய்வா னென்றோம்.

38. ஜாதகன் எந்தக் காலத்தில் நல்ல வீடு கட்டுவான் ? அந்தச் செய்தி களைத் தெரிவியுங்கள், முனிவரே ! என்று (பார்வதி) கேட்டாள். இங்ஙனம் ஜாதகன், பதினான்கு வயதுக்கு மேல் உயர்ந்த வீட்டு வேலையை ஆரம்பிப்பான்.

39. இருபத்து மூன்றாண் டின்மேல் இசைந்திடுங் கிருகந் தானும்
வரவரச் செலவு மோங்கும் மாநிலம் விருத்தி உண்டு
குறைவுறாக் குடும்பந் தானுங் கூறுவோஞ் சிலது சங்கை
பெருமையாய் நாற்பாண் டின்மேல் பிழைவருங் குடும்பம் வேறு.

39. இருபத்துமூன்றும் வயதுக்கு மேல் வீடு கட்டி முடியும். வரவர செலவும் அதிகமாகும். விளைநிலங்கள் விருத்தியாகும். குறைவில்லாக் குடும்பம் ஏற்படும். சில சங்கடங்கள் ஜாதகனுக்கு நாற்பதாம் வயதுக்கு மேல் ஏற்பட்டு வேறு குடும்பமாக மாறும்.

40. எப்போதுஞ் சல்லிய மில்லான் இவன்பந்து மேலாய் வாழ்வன்
செப்பும்பால் பாக்ய முண்டு திருமகள் வாச மாகும்
தப்பித மில்லா வாழ்வன் சகலபாக் கியங்க ளுள்ளான்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

40. எப்போதும் கடன் உபத்திரவம் இல்லாதவன். இவன் தன் சுற்றத்தாருக்கு மேலாக வாழ்ந்து வருவான். பால்பாக்கிய முள்ளவன். லட்சுமீ விலாசம் உடையவன். குறைவு இல்லாமல் வாழ்வான். எல்லாவித பாக்கியங்களு முள்ளவன். கங்கையைச் சடைமுடியில் அணிந்துள்ள சிவ பெருமானின் தேவியே ! நாங்கள் கூறிய மொழிகள் தவறு.

41. சுந்தரன் ஜனிக்குங் காலஞ் சுக்கிரன் தசை இருப்புச்
சந்தத மீரஞ் சாண்டுஞ் சதிருடன் திங்க ளாறும்
வந்திடுந் துணைவர் தாமும் வண்மையாய்ப் பூமி ஓங்குந்
தந்தையின் குடும்பம் வேறு தனக்குமே ரோக முண்டாம்.

41. ஜாதகன் பிறக்கும்போது சுக்கிர மகாதசையில் இருப்பு பத்து வருடங்களும், ஆறு மாதங்களுமாம். அந்தத் தசையில் உடன் பிறந்தவர் ஏற்படுவர். பூமிகள் செழிப்புள்ள பலன்களைத் தரும். தந்தையின் குடும்பம் பெருகும். ஜாதகனுக்கும் பிணி உண்டாகும்.

42. இதுவல்ல தாய்தந் தைக்கே இலகிடும் பிணியுந் தானும்
நிதியது செலவு முண்டு நாற்காலி குற்ற மாகும்
சதியாகும் மனிதர் தாமுஞ் சஞ்சல மனங்க ளுண்டு
அதிபன்தன் வர்க்கஞ் சூதம் வரைகிரேம் விபரம் ரண்டில்.

42. இதுவுமின்றி தன் தந்தைக்கும் நோய் ஏற்படும். செல்வங்கள் செலவு செய்ய நேரிடும். கால்நடைகட்கும் நஷ்டம் ஏற்படும். மனிதர்கள் விரோதமுறுவர். சஞ்சலங்கள் உண்டாகும். ஜாதகனுடைய வர்க்கத்தாரில் அசுபம் நேரிடும். மற்ற விபரங்கள் இரண்டாம் பாகத்தில் கூறுவோம்.

# ஜாதகம் 6

1. பரிதிசேய் கோல தாகப் பங்குமே தேள தாக
மதிஅரி ராகு மானில் மால்குரு புகரும் பெண்ணில்
சதிசெய்யும் கேது வண்டி ஜன்மமும் வீணை யாக
இதுநவக் கோள்கள் நின்முல் இயம்புவீர் பலனைத் தானே.

1. சூரியன் செவ்வாய் துலாத்திலும், சனி விருச்சிகத்திலும், சந்திரன் சிம்மத்திலும், ராகு மகரத்திலும், புதன் குரு சுக்கிரன் கன்னியிலும், கெடுதி செய்யும் கேது கடகத்திலுமாக, நவக்கிரகங்கள் இருந்து, மிதுனம் ஜன்ம லக்கின மாகவுள்ள ஜாதகத்தின் பலனைக் கூறுவீர்.

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் |
| | இராசி சக்கரம். | | கேது |
| ராகு | | | சந்திரன் |
| | சனி | சூரியன் செவ்வாய் | புதன் குரு சுக்கிரன் |

2. குருமுனி சொல்லு கின்முர் கோதையே ஆண்பால் ஜன்மம்
வருமில்லம் கீழ்மேல் வீதி வாசலு மெமனின் பார்வை
பெருவயி றப்பன் கீழ்ப்பால் பேசினேந் தடாக மூண்டு
உரைக்கிறேந் தக்ஷி ணத்தில் ஓடையும் வயல்க ளுண்டே.

2. அகத்திய முனிவர் கூறுகின்முர். அழகியே! இஃது ஆண் பிறப்பு. பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது. கிழக்கில் பெரிய வயிற்றையுடைய விநாயகர் ஆலயமும், ஒரு குளமும் உள்ளன. தெற்கில் ஒரு நீரோடையும் வயல்களும் உள்ளன, என்று சொல்லுகின்றோம்.

3. தந்தியுஞ் சந்தி ஈசன் சாமுண்டி மேற்கில் தங்கும்
முந்திய தடாகஞ் சோலை மொழிகிறேஞ் சமவூர் தன்னில்
எந்தையே மாது ரில்லம் எய்துவா னிவனே என்றேங்
கந்தனைப் பெற்ற மாதே கழறினேம் மேலுங் கேளே.

3. மேற்குப் பக்கத்தில் மற்றொரு விநாயகர் ஆலயமும், ஒரு நாற் சந்தியும், சிவபெருமான் ஆலயமும், சாமுண்டீச்வரி கோயிலும் உள்ளன. பெரியகுளம், தோட்டம் முதலியன உள்ள · ஒரு சமமாகவிருக்கும் ஊரில் தன் தாயின் வீட்டில் ஜாதகன் பிறப்பான். முருகப்பிரானைப் பெற்றளித்த தாயே! சொல்லுகின்றோம். மேலுங் கேள்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெருந் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்புத்திர களத்திர யோகந்
தன்னிலே முன்பின் ஜன்மஞ் சாந்தியும் இந்நூல் தன்னில்
அன்னையே சொல்லு கின்றேம் அம்பிகை யாளே கேளாய்.

4. ஜாதகனுடைய பிறப்பின் யோகங்கள், தந்தையின் யோகம், தாயின் யோகம், பிறக்கும் குழந்தைகளின் யோகங்கள், வாய்க்கும் மனைவியின் யோகம், முற்பிறவி, மறுபிறவி, சாந்திகள் முதலியவற்றை இந்நூலில் கூறுகின்றேம். தாயே ! கேட்பாயாக.

5. இன்னவன் ஜனன இருப்பிடம் அதற்கு இருநாழி கடிகை [தூரத்தில்
மன்னிய தந்தை ஊரென மொழிவர் வடகீழ்ப்பால் தங்கிடு [மென்றேம்
அன்னவன் தந்தை குணங்களைச் சொல்வேன் அழகுளான் [சிவந்திடு மெய்யன்
உன்னத முகத்தில் வடிவுள ளுவன் உரைக்கிறேங் காமனை [யொத்தன்.

5. ஜாதகன் பிறந்து வளர்ந்த இடத்துக்கு இரு நாழிகை தூரத்தில் தன் தந்தையின் ஊராம். அதுவும் கிழக்குப் பக்கத்தில் இருக்கும். ஜாதகனுடைய தந்தையின் குணங்களைக் கூறுகின்றேம். அழகுள்ளவன். சிவந்த உடலுடையவன். உயர்வான முகத்தில் ஓர் அடையாளமுள்ளவன். மன்மதனை யொத்த அழகுடையவன்.

6. கல்விமான் ஊக வானுங் கனத்தவர் நேச மாவன்
இல்லையென் றுரைக்க மாட்டான் எதிரியை வசியஞ் செய்வன்
சொல்லுமே நேர்மை யுள்ளோன் சுகமுள்ளான் மர்ம முள்ளான்
நல்லவ னுகி வாழ்வன் நாற்காலி விருத்தி உள்ளான்.

6. கல்வியறிவுள்ளவன். ஊகசாலி. பெரியோர்கள் நட்புள்ளவன். யாசித்தவருக்கு இல்லை என்று கூருதவன். விரோதிகளை வசியம் செய்து வருவான். சொல்லில் நேர்மையுள்ளவன். சுகமுள்ளவன். இரகசிய முள்ளவன். நல்லவனுக வாழ்ந்து வருவான். கால்நடைகள் விருத்தி யுடையவன்.

**கமலரேகை**

7. கிருஷிகள் செய்வா னுவன் கண்ணிய முடைய னுவன்
திருமகள் வாச முள்ளான் செய்நிலஞ் சேர்ப்பா னுகும்
விரைவினில் நடக்க வல்லன் விரும்புவான் சுகிபு சிப்புக்
கரமதில் கமல ரேகை காலாள்க ளுடைய னுமே.

7. விவசாயம் செய்து வருவான். கண்ணியமுள்ளவன். லட்சுமி இவன் வீட்டில் வசித்து வருவாள். விளைநிலங்களைப் பெருக்குவான். வேகமாக நடக்கக்கூடியவன். சுகமான போஜனத்தில விருப்பமுள்ளவன், கையில் கமலரேகை யுடையவன், வேலையாட்கள் உள்ளவன்,

8. உண்டியில் உறைப்பி லிச்சை உறுதியா மனத்த னவன்
அண்டினோர்க் குதவி செய்வன் அதிகமாய்ச் செலவு முள்ளான்
குண்டுணி மனத்த னவன் குலத்துளோர் மெச்ச வாழ்வன்
பண்டிபண் டார முள்ளான் பாவையர் மோக வானும்.

8. சாப்பாட்டில் உறைப்புள்ள பதார்த்தங்களில் விருப்பமுள்ளவன். திடமான மனத்தன். வந்நடைந்தவர்கட்கு உபகாரி. செலவுகள் அதிகமாக உள்ளவன். கபடமுள்ள மனத்தன். தன் குலத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். பெட்டிகள் முதலியனவும் எவலாட்களு முள்ளவன். ஸ்திரீகள் மோகன்.

9. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோம் ஆண்பால் காணேம்
அவனியில் கன்னி பண்டு அறைகிறேந் தீர்க்க மாகப்
பவமுள குணத்தா னுக்குப் பாலனுஞ் ஜேஷ்ட னகக்
கவனமாய் உதிப்பா னகுங் காதலி மேலுங் கேளே.

9. இவனுடைய உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றேம். சகோதரர் இல்லை. இரு சகோதரிகள் நீண்ட ஆயுளுடன் இருப்பர். இந்தக் குணங்களை யுடையவனுக்கு இந்த ஜாதகன் மூத்த புதல்வனகப் பிறப்பான். தாயே! மேலுங் கேள்.

10. ஜாதகன் நிறங் குணத்தைச் சாற்றுவோஞ் சிவந்த மேனி
கோதிலாச் சமதே கத்தன் கூறுவான் கட்டு வார்த்தை
மேதினில் புகழு முள்ளான் வித்தைக ளதிகங் கூர்வன்
ஓதுவான் சுபங்கள் தாமும் உறுதிவான் வறுமை இல்லான்.

10. ஜாதகனுடைய நிறம், குணம் ஆகியவற்றைக் கூறுவோம். சிவந்த உடலும், சமமான உடலமைப்புமுள்ளவன். வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன். உலகில் செல்வாக்குடையவன். அதிகப் படிப்பாளி. சுபமான வற்றைக் கூறுவான். உறுதியான மனத்தினன். தரித்திரமில்லாதவன்.

11. பதமான நடையு முள்ளான் பால்பாக்ய விருத்தி செய்வன்
மதிநுதல் ஸ்திரீகள் மோகன் வாக்குகள் பலித முள்ளான்
நிதமுமே சீல னவன் நிமலன்மேல் பக்தி பூண்பன்
நதிபல தீர்த்தந் தோய்வன் நவதானிய விருத்தி செய்வன்.

11. நிதானமான நடையுள்ளவன். பால் பாக்கியமுள்ளவன். அழகிய மாதர்களின்மீது மையல் கொள்ளுவான். செல்வாக்குடையவன். நல் லொழுக்க முள்ளவன். பகவான்மீது பக்திகொள்ளுவான். பற்பல நதிகள் முதலிய புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். நவதானியங்களைப் பெருக்கி விளைவிப்பான்.

### தனரேகை

12. சோலைகள் துறவு செய்வன் துன்மார்க்கங் கொஞ்சம் உள்ளான்
ஆலமாம் பகைவ ருக்கு அனேகபாக் கியமுஞ் சேர்ப்பன்
ஞாலமேல் தாதை போல நாயகன் வாழ்வா னகுஞ்
சாலவே தரள தந்தந் தனரேகை கரத்தி லுள்ளான்,

12. தோட்டம், துறவுகள் நிர்மாணிப்பான். சிறிது கெட்ட நடத்தை யுள்ளவன். விரோதிகளுக்கு விஷம்போல் கொடியவன். மிகுந்த பாக்கியங்களை அடைவான். தன் தந்தையைப்போல் கண்ணியமாக வாழ்ந்து வருவான். பற்கள் முத்துக்களைப்போன்றிருக்கும். கையில் தனரேகை உள்ளவன்.

13. எருகள் விருத்தி செய்வன் இவன்பந்து மேலாய் வாழ்வன்
சீரியோர்க் குதவி செய்வன் தேகமும் அதிக உஷ்ணம்
தேரினோர் வழியைச் சொல்வன் சில்லரைப் புத்தி உள்ளான்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

13. எர்கள் விருத்தியுள்ளவன். தன் உறவினர்கட்கு மேலாக வாழ்ந்து வருவான். கஷ்டமடைந்தவர்கட்கு உபகாரி. சரீரத்தில் உஷ்ணம் அதிகமாகவிருக்கும். முதிர்ந்த அனுபவசாலிகளைப் போலப் பேசுபவன். ஆனால் கொஞ்சம் அற்பப் புத்தியுடையவன். ஆறுமுகனைப் பெற்ற பார்வதி தேவியே! கேளுங்கள்.

14. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோம் ஆண்பா லொன்று
அவனியில் கன்னி ரண்டு அறைகிறேந் தீர்க்க மாக
நவனியில் மற்ற வெல்லாம் நசித்திடு மென்று சொன்னேஞ்
சிவனிட பாகத் தாளே செப்புவோம் மேலுங் கேளே.

14. ஜாதகனுடைய உடன்பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவரும் சகோதரிகள் இருவரும் நீண்ட ஆயுளுடனிருப்பர். மற்றவரெல்லாம் நிலையாமல் மரித்து விடுவர் என்று கூறுகின்றோம். சிவபெருமானின் இடப்பக்கத்தில் வீற்றிருப்பவளே! சொல்லுகின்றோம். மேலும் கேள்.

15. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோம் பதினே ழாண்டில்
மேதினில் தென்மேல் திக்கில் வித்தகி மாதுரு வர்க்கம்
கோதிலா வருவா ளாகுங் கூறுவோ மவள்தன் சேதி
சோதியு மிருநி றத்தாள் சுகமுளாள் அன்ன மீவாள்.

15. ஜாதகனுடைய திருமணக்காலத்தை உரைக்கின்றோம். அவனுடைய பதினேழாம் வயதில், இவனுக்குத் தாய் வர்க்கத்தில், தென்மேற்குப் பக்கத்தி லிருந்து, மனைவி வருவாள். அவளுடைய வரலாற்றைக் கூறுகின்றோம். அவள் கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவள். சுகமாயிருப்பவள். ஏழைகட்கு அன்னமளிப்பவள்.

16. சினமது உடைய ளாகும் தேவியுந் யோக சாலி
கனமுடன் வாழ்வா ளாகுங் கழறுவோம் புத்திர பாவம்
அனையவே ஆண்பா லொன்று அம்மணி இரண்டு மாகும்
பிணையிலா மூன்றுந் தீர்க்கம் பேசுவோம் நான்கு சேதம்.

16. கோபமுடையவள். ஆனால் அதிர்ருஷ்டமுள்ளவள். கண்ணியமாக வாழ்ந்து வருவாள். புத்திரபாவத்தைக் கூறுகின்றோம். ஆண் குழந்தையொன்றும், பெண் மக்கள் இரண்டும் ஆக மூவரும் நீண்ட ஆயுளுடன் இருப்பர். நான்கு குழந்தைகள் பிறந்து மரிக்கும்.

17. முநிவரிவ் விதமாய்க் கூற மொழிகுவார் புயண்டர் தாமும்
சினமுட னைந்தோன் நீசஞ் சேய்பானு ஐந்தில் நிற்க
வினையினால் ஜாத கர்க்கு விளங்காது ஆண்பா லுந்தான்
கனமுடன் கர்மத் தோனுங் கன்னியி லிருக்கவே தான்;

17. இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, புயண்டர் கூறுகின்றார். ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரன் கன்னியில் நீசமாக இருப்பதாலும், (புத்திர ஸ்தானமாகிய) ஐந்தாம் வீட்டில் சூரியன் செவ்வாய் இருவரும் இருப்பதாலும், முற்பிறவியில் செய்த தீவினையினாலும், ஜாதகனுக்குப் புத்திர பாக்கியம் இல்லை. கர்மாதிபதியான (பத்தாம் வீட்டிற்குரிய) குரு கன்னியில் இருப்பதால்;

புத்ரதோஷக்ரக நிலை

18. மதலையும் விருத்தி என்றோம் அத்திரி சொல்லு கின்றார்
பதியினுக் கிரண்டி லேதான் பாபிக ளிருப்ப தாலே
சுதர்களும் விருத்தி யாகிச் சுறுக்கினில் மரண மெய்தும்
எதுவித காரணத் தால் இலகாது என்று சொன்னீர்.

18. புத்திர விருத்தி உண்டாகும் என்று கூறினோம். அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்கு இரண்டாம் வீட்டில் பாபியாகிய (கேது) இருப்பதால், குழந்தைகள் பிறந்து உடனே மரிக்கும். என்ன காரணத்தால் குழந்தைகள் நிலையா என்று கூறுகின்றீர்.

19. முன்செய்த வினையி னாலே மொழிந்திட்டோஞ் சுதர்கள் தோஷம்
என்னஊழ் அதனை நீங்க ளியம்புவீர் என்று கேட்க
அன்னையே சொல்லு கின்றேன் அவனுமே முன்ஜன் மத்தில்
தன்னுடை ஊருக்கு உத்திரஞ் சாற்றிய பேரூர் தன்னில்;

19. முற்பிறப்பில் செய்த தீவினைகளால் புத்திர தோஷம் ஏற்பட்டது. அத்தோடம் என்ன? அதை நீங்கள் சொல்லுங்கள் என்று கேட்கும்போது, ரிஷிகள் பதில் உரைக்கின்றனர், தாயே! கூறுகின்றோம். ஜாதகன் முற்பிறவியில் தன்னுடைய ஊருக்கு வடக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில்;

20. மறைக்குலந் தனிலு தித்து மனைவிமைந் தருமு ண்டாகித்
திருமகள் விலாசம் பூண்டு செய்நில மதிக மாகிப்
பெருமவர் நேசங் கொண்டு பலமான குடும்பி யாகி
உறைகிற காலந் தன்னில் உரைக்கிறோம் ஊழி தானே.

20. அந்தணர் குலத்தில் பிறந்து, மனைவி மக்களை யடைந்து, லட்சுமீ கடாட்சம் பெற்று, விளைநிலங்கள் அதிகமுள்ளவனாகி, பெரியோர்கள் நட்புக் கொண்டு, பெரிய குடும்பத்தை யடைந்து வாழ்ந்து வரும்போது, ஏற்பட்ட தீவினையைக் கூறுகின்றோம்.

தீவினை

21. படியாட்கள் சிலரை வைத்துப் பயிர்த்தொழில் செய்து வந்தான்
அடவுடன் அதிலோர் சங்கை அரன்சூலம் போட்ட நந்தி
திடமுடன் இருந்த தென்றோஞ் ஐயனுயே யதனை வாங்கித்
தடபுடல் உழவு செய்தான் சார்ந்தது அந்தத் தோஷம்.

21. பணியாட்கள் சிலரை வைத்துப் பயிர்த்தொழில் வேலைசெய்துவந்தான். அவர்களில் ஒருவனிடம் சிவபெருமானின் சூலம் போட்டிருந்த எருது இருந்து வந்தது. அதை இவன் வாங்கி உழவு வேலைக்கு வைத்துக் கொண்டான். அந்தத் தீவினை இவனைச் சார்ந்தது.

22. இதுவன்றி இன்னும் ஒன்று இயம்புவோம் வேலைக் காரி
விதவையா யிருந்தா ளென்றோம் வித்தகன் அவள்மேல் மோகம்
நிதமுமே வைத்துப் போகம் நேர்ந்திடப் பொருளு மீந்து
பதியினில் ஒருநாள் தன்னில் பகலிலே போகம் துய்த்தான்.

22. இதுவுமல்லாமல் இன்னுமொன்று கூறுகின்றோம். வேலைக்காரியொருத்தி விதவையாயிருந்தாள். இந்த ஜாதகன் அவளிடம் மையல் கொண்டு தினந்தோறும் அவளிடம் போகம் துய்த்தான். அவளுக்குப் பொருள்கொடுத்துத் தன் வீட்டில் ஒரு நாளில் பகலில் இன்பம் அனுபவித்தான்.

23. இப்படிச் சிலநாள் சென்று இருவரும் வாழும் போது
செப்புவோ மிவன்ம னையாள் சேதியைப் புரிந்து பின்பு
தப்பிதம் நேர்ந்த தென்று சலிப்புடன் கோப முற்றாள்
ஒப்புடன் விதவைக் கேதான் உறைந்தது கருவு தானும்.

23. இப்படிச் சில நாட்கள் இருவரும் இருந்து வரும்போது, இவனுடைய மனைவி இதனை யறிந்து, இந்தத் தவறை உணர்ந்து, மனங்கலங்கி, கோப முற்றாள். அப்போது விதவைக்குக் கருவு ஏற்பட்டிருந்தது.

24. அதற்குப்பின் அவளை நீக்கி அவள்பந்து பகையு மாகிக்
குதர்க்கங்கள் சிலவே சொல்லக் கோதையு மிவன்பால் சென்று
இதற்கென்ன செய்வே னென்று இவளுமே புலம்பும் போது
வித்தைபண் டிதங்கள் எல்லாம் வித்தகன் செய்ய லுற்றான்.

24. அதற்குப் பின் அந்த விதவையை இவன் விலக்கி விட்டான். அவளுடைய பந்துக்கள் அவளைச் சேர்க்காமல் பகையாகி நீக்கிவிட்டனர். அவளும் இவனிடம் மறுபடியும் வந்து (கருவு ஏற்பட்டு விட்டதே) இதற்கு என்ன செய்வேனென்று புலம்பி அழும்போது, வித விதமான வைத்தியங்கள் இந்த ஜாதகன் செய்தான்.

### கருவழித்த தோஷம்.

25. கருவுமே அழிந்த தென்றோம் காதலி தீர்க்க மானாள்
அறைகிறோ மந்தத் தோஷம் அணுகிற்று இவனுக் கேதான்
பெரும்பிணி அந்தி யத்தில் பற்றிற்று இவனுக் கேதான்
மரலியின் பதிக்குச் சென்றான் மங்கையே மேலுங் கேளே.

25. அதனால் கருவு அழிந்தது. விதவை உடல் நலனடைந்தாள். அந்தக் கருவழிந்த தோஷம் இவனுக்கு ஏற்பட்டது. அதனால் பெரிய நோய் இவனுடைய கடைசிக் காலத்தில் உண்டாயிற்று. அதனால் இறந்தான். தாயே! மேலுங் கேளுங்கள்.

26. கஞ்சனுல் வரையப் பட்டுக் காவல னிச்சென் மத்தில்
தஞ்சமாய்க் கங்கை வம்சந் தானவென் உதித்தா னென்றேம்
வஞ்சியே முன்னூழ்ச் சாபம் விளைந்தது இச்சென் மத்தில்
மிஞ்சின மதலை ஆண்பால் மேவினும் தோஷந் தானே.

26. மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு, இப்பிறவியில் வேளாள மரபில் பிறந்தான் என்று கூறினேம். தாயே! முற்பிறவியில் செய்த தீவினை யின் பயன் இப்பிறவியில் ஏற்பட்டு, புத்திரர்களுக்குத் தோஷம் உண்டா யிற்று. பிறந்தாலும் நிலையா.

27. அந்ததோர் தோஷந் தீர அறைகிறேங் கிரியை ஒன்று
மைந்தனும் மனைவி யோடு மால்மலை உத்திரஞ் சென்று
சந்ததம் மாலுக் கேதான் சகஸ்ரஅர்ச் சனையுஞ் செய்து
பிந்திய மறையோர் பத்துப் பேருக்கு அன்னம் ஈந்து ;

27. அந்தத் தோஷம் நீங்கச் சாந்தியொன்று கூறுகின்றேம். ஜாதகன் தன் மனைவியோடு வடக்கில் உள்ள திருப்பதிக்குச் சென்று, திருமாலுக்குச் ஸகஸ்ரநாம அர்ச்சனை தினந்தோறும் செய்து, பின்பு பத்து அந்தணர் களுக்குச் சமாராதனை செய்து ;

சாந்தி

28. மறுபடி உள்ளூர் மீண்டு அரனுக்கு அபிஷே கித்து
உரமுடன் மரண மட்டும் உத்தமன் தீபம் வைக்க
வருமூழும் நீங்கு மென்றேம் மைந்தரு முதிக்கில் தீர்க்கஞ்
சிறுமையாய்ச் செய்யா னுகில் ஜனிக்கினுந் தீதே யாகும்.

28. மறுபடி தன் சொந்த ஊருக்குத் திரும்பி, சிவபெருமானுக்கு அபி ஷேகம் செய்து, தன் மரணகாலம் வரையில் தீப கைங்கர்யம் செய்தால், ஏற்பட்ட தீவினைகள் நீங்கும். புத்திரர்கள் பிறந்தால் நீண்ட ஆயுளுட னிருப்பர். அல்பமாக வெண்ணி செய்யாமலிருந்தானேயாகில் புத்திரர் பிறவார் பிறந்தாலும் நிலையார்.

29. மாதுரு குணத்தைச் சொல்வேன் மர்மமும் கொஞ்ச முண்டு
மேதினில் வாத தேகி விளங்கிய சாயல் நேத்திரம்
சூதுக ளில்லா ளாகுஞ் சோம்பலுங் கொஞ்ச முள்ளாள்
வேதனை ஒருவர்க் கெண்ணுள் வெஞ்சினங் கொஞ்ச முண்டு.

29. ஜாதகனின் தாயின் குணத்தைச் சொல்லுகின்றேன். சிறிது ரகசியம் உள்ளவள். வாயுரோக முடையவள். பார்வை கோணலாக இருக் கும். (சாய்ந்த பார்வையுள்ளவள்.) கபடில்லாதவள். சிறிது சோம்பலுடைய வள். பிறருக்குத் தீங்கு நினையாதவள். சிறிது முன்கோபமுள்ளவள்.

30. சீலமு முடையா ளாகுஞ் சிவந்திடு மேனி யாவள்
ஞாலமேல் துணைவர் தம்மை நாட்டுவோ மாண்பா லொன்று
வேல்விழி பெண்பா லொன்று விருத்தியா மிரண்டு தாமும்
கோலமாய் நான்கு நஷ்டங் கூறின மொழிதப் பாவே.

30. நல்லொழுக்கமுடையவள். சிவந்த உடலுள்ளவள். இவளுக்கு உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றோம். ஆண் மகன் ஒருவனும், அழகிய சகோதரி ஒருத்தியும் உளர். இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றும் நால்வர் பிறப்பர். ஆனால், நால்வரும் மரிப்பர். சொன்ன சொற்கள் தவறா.

31. அவ்வளுடைத் தாய்க்கு டும்பம் அதிகமாய்ப் பொருளு முண்டு
நவமதில் பூமி ஓங்கும் நாட்டுவோம் பெருமை உண்டு
இவளுடை முன்ஜன் மத்தை இயம்புவோ மவ்வூர் தன்னில்
தவசியே தீயின் வம்சஞ் சார்ந்தன ளிவளே என்றோம்.

31. ஜாதகனின் தாயின் தாய்க் குடும்பம் மிக்க பொருள் உள்ளது. வீடு நிலங்கள் விருத்தியாயிருக்கும். பெருமையுடையதாக விருக்கும். தாயின் முற் பிறவியைக் கூறுகின்றோம். அவ்வூரில் வன்னிய குலத்தவளாகப் பிறந்தவள் என்று உரைக்கின்றோம்.

32. மதலைக ளில்லா ளாகி வரனுடன் தணிகைக் கேகிச்
சதமான விரதங் கொண்டு ஷண்முகர்க் கர்ச்சித் தேத்தி
விதியினால் சிலநாள் சென்றாள் இலங்கிற்று அசரீரி யாக
இதுஜன்மம் மதலை இல்லை இனிச்சென்மம் உண்டு என்று ;

32. குழந்தைகள் இல்லாதவளாயிருந்து, தன் கணவனுடன் திருத் தணிகைக்குச் சென்று, நலமிக்க நோன்பு கொண்டு, ஆறுமுகக் கடவுளுக்கு அருச்சனை முதலியன செய்து, தோத்தரித்து, அங்குச் செல்லும்போது, ஒருநாள் அசரீரியாக "இந்தப் பிறவியில் புத்திரபாக்கியமில்லை. மறு பிறவியில் உண்டு" என்று ;

33. பெரியவர் சொல்லும் போது பேதையும் மனவெ றுப்பால்
உறைந்தனள் இல்லந் தன்னில் உத்தமி சுதர்கள் சோகம்
நிரையவே கொண்டா ளென்றோம் நிமலியும் மரண மாகிக்
குறைதலை கஞ்சன் தம்மால் குணமுடன் வரையப் பட்டு ;

33. ஒரு பெரியவர் சொல்லியதைக் கேட்டு, இவளும் மனம் வெறுப் படைந்து, தன் ஊர் சென்றாள். அவளுக்குப் புத்திரசோகம் மிகுதியாக ஏற்பட்டு மரணமடைந்தாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு ;

34. இக்குல முதித்தா ளென்றோம் ஈச்வரி கேட்க லுற்றாள்.
தொக்கவே முன்ஜன் மத்தில் தோகையும் தீயின் வம்சம்
பிக்கவே உதித்தா ளென்றீர் விளம்புவீ ரந்தச் சங்கை
பக்குவ முருகன் பக்தி புரிந்ததால் உதித்தா ளென்றோம்.

34. இக் குலத்தில் பிறந்தாள் என்று கூறுகின்றோம். ஈச்வரி கேட்கலானாள். முற்பிறவியில் ஜாதகனின் தாய் வன்னிய குலத்தில் பிறந்தாள் என்றுரைத்தீர். அதன் காரணத்தைச் சொல்லுங்கள், என, முருகப் பெருமானைத் தோத்தரித்து வந்ததால் பிறந்தாள் என்று கூறினோம்.

35. மறுஜன்மம் அவ்வூர் உத்திரம் மறைக்குலம் தனிலு திப்பாள்
சிறுமைக ளில்லா ளாகிச் செல்வதி வாழ்வா ளாகும்
அறைகிறோந் தந்தை ஜன்மம் அக்காஞ்சி கீழ்ப்பா லாகப்
பெருமையாய்ப் பேரூர் தன்னில் பிறந்தனன் வைசிய வம்சம்.

35. மறு பிறவியில் அவ்வூருக்கு வடக்கில் அந்தணர் குலத்தில் பிறந்து தரித்திரம் துன்பம் இவைகளில்லாமல் செல்வ வதியாக வாழ்ந்து வருவாள். தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம். அந்தக் காஞ்சிபுரத்துக்குக கிழக்கில் உள்ள பெரிய ஓர் ஊரில் வைசிய குலத்தவனாகப் பிறந்தான்.

36. ஜனித்துமே செட்டுச் செய்து ஜகமதில் புகழு முண்டாய்த்
தனமது அதிக மாகித் தன்மனை மதலை உண்டாய்க்
கனமுடன் வாழ்ந்து மேலுங் காலையும் மரண மாகி
அனையவே இச்சென் மத்தில் அறைந்தன மிவனே என்றோம்.

36. பிறந்து, வியாபாரம் செய்து, உலகில் கீர்த்தி பெற்று, செல்வங்கள மிகுதியாக அடைந்து, மனைவி மக்களுடன் செழிப்புள்ள குடும்பமாக வாழ்ந்து, அவன் மரணமடைந்தான். மறுபடி இப்பிறவியில் பிறந்தான் என்று கூறுகின்றோம்.

37. பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிறப்பனே இக்கு லத்தில்
தன்னிலே செட்டு ஓங்கித் தரணிகள் அதிக மூண்டாய்
இன்னவன் வாழ்வா னாகும் இயம்புவோ மிவர்கள் காலம்
அன்னையே யாங்கள் சொல்லு மருள்மொழி குன்று வென்றோம்.

37. மறு பிறப்பு, காஞ்சிபுரத்தில் இதே குலத்தில் பிறப்பான். வியாபாரங்கள் விரிவாகச் செய்து, விளை நிலங்கள் அதிகமாக அடைந்து, இவன் வாழ்ந்து வருவான். இவர்களுடைய இறுதிக் காலங்களைப்பற்றிக் கூறுகின்றோம். தாயே! நாங்கள் சொல்லும் அருள்வாக்குகள் தவறு என்று உரைக்கின்றோம்.

38. தந்தையின் மரண காலம் சாற்றுவோ முப்பா னேழில்
வந்திடு துலாமா தத்தில் வரைகிறோங் கண்டந் தானும்
பிந்திய அன்னைக் கேதான் பேசுவோ மதன்மேல் மூன்றும்
பந்தமாய்க் கூனி மாதம் பகருவோம் மார கங்கள்.

38. தந்தையின் மரணகாலம், ஜாதகனுக்கு முப்பத்தேழாம் வயதில் ஐப்பசி மாதத்தில் வரும் என்று கூறுகின்றோம். ஜாதகனின் தாய்க்கு அதற்குமேல் மூன்று வருஷங்களில் பங்குனி மாதத்தில் மரணம் ஏற்படும்.

39. இன்னவன் மரண காலம் இயம்புவோம் நாற்ப தாண்டில்
தன்னிலே கண்டம் நேரும் ஷண்முகர்க் கர்ச்சித் தேத்தி
அன்னவன் பிணியும் நீங்கும் அறுபத்து ஏழா மாண்டில்
மன்னிய சிம்ம மாதம் வளர்பிறைத் தசமி தன்னில்;

39. ஜாதகனின் மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். நாற்பதாவது வயதில் ஒரு கண்டம் உண்டாகும். அப்போது ஆறுமுகக்கடவுளுக்கு அருச்சனை முதலியன செய்து தொழுது வந்தால், வந்த நோய் விலகும். இவன், அறுபத்தேழாம் வயதில் ஆவணி மாதத்தில் சுக்கிலபட்சம் தசமி திதியன்று ;

40. மாரகம் நேரு மென்றோம் மறுத்துமே அத்திரி சொல்வார்
நீரமாய் இரண்டு ஆண்டில் செப்பினேங் கண்ட மென்றோம்
கூறுவோம் கேளு மையா குருவுமே நாலில் நிற்கப்
பாரிய ரோகம் நோந்தும் பருகாது வயது தீர்க்கம்.

40. இறந்துவிடுவான். இதை மறுத்து அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்கு இரண்டாம் வயதில் கண்டமுண்டு என்றார். "சொல்லுகின் றோம். கேளும். முனிவரே ! குரு நாலாமிடமாகிய கன்னியில் இருப்பதால் ரோகம் வந்தாலும் உயிரை மாய்க்காது. நீண்ட வயது உண்டு" என்றார்.

41. தானவன் யோகச் செய்கை சாற்றுவோம் சுகமு முள்ளான்
ஈனமாங் குணங்க ளில்லான் எய்திடும் பணிதி பாக்யம்
ஆனதோர் பூமி சேர்ப்பன் யாரையும் வசியஞ் செய்வன்
மானமாய் ஜீவிப் பாளும் வாக்குகள் சொல்லு மென்றோம்.

41. ஜாதகனுடைய யோகங்களைப்பற்றிக் கூறுகின்றோம். சுகமுள்ளவன். கெட்ட குணங்களில்லாதவன். ஆபரணங்கள் முதலிய பாக்கியங்களை அடைவான். விளை நிலங்களை விருத்தி செய்வான். எல்லோரையும் வசீகரிக்க வல்லன். கண்ணியத்துடன் வாழ்ந்து வருவான். இவனுடைய வார்த்தை கட்கு மதிப்புள்ளவன்.

42. தசமத்தோன் நாலில் நிற்கத் தனமது நேரு மென்றோம்
திசைஎல்லாம் கீர்த்தி ஏற்பன் ஜனஉப காரம் செய்வன்
வசையிலான் அன்னிய கிராமம் வந்திடும் பூமி தானும்
கஜமிலான் அச்வ முண்டு கண்ணிய மாக வாழ்வான்.

42. பத்தாம் விட்டுக்குரிய குரு நான்காம் இடமாகிய கன்னியில் இருப்ப தால் பொருள்கள் சேரும். எல்லாத் திக்குகளிலும் புகழடைவான். ஜனங்களுக்கு உபகாரம் செய்வான். பிறரால் தூற்றப்படாதவன். வேறொரு கிராமத்தில் நிலங்கள் சேரும். யானை இல்லாதவன். குதிரை களுண்டு. கண்ணியமாக வாழ்ந்து வருவான்.

புதையல்

43. எந்தக்கா லத்தி லேதான் இவனுக்குத் தனமும் நேரும்
அந்ததோர் சேதி சொல்வாய் அலவன்தன் தசைக்கா லத்தில்
இந்தவாறு மன்ன னுக்கு ஈரஞ்சு ஆண்டி லேதான்
சொந்தமாய்க் கிருகம் தன்னில் சேருமே நிதி நிக்ஷேபம்.

43. எந்தக் காலத்தில் ஜாதகனுக்குச் செல்வங்கள் பெருகும். அந்தச் செய்தியை விவரமாய்க் கூறுங்கள். சந்திரமகாதசையில் நேரும். ஜாதகனின் பத்தாம் வயதில் (சொந்தமாக வீடு வாங்குவான். செல்வங்கள் பெருகும்). தனக்குச் சொந்தமான வீட்டில் புதையல் கிடைக்கும்.

**44.** வருமவர் உறவு கொள்வன் பிரபல குடும்பி யாவன்
திருமகள் வாச முள்ளான் ஜயம்செய்வ னெடுத்த வேலே
அருமறை யவர்கள் நேசன் அரசர்கள் உறவு கொள்வன்
அறுமுகன் தன்னைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

**44.** பெரியோர்கள் நட்புக் கொள்ளுவான். புகழுள்ள குடும்பியாக விருப்பான். லட்சுமீ இவன் வீட்டில் வசித்து வருவாள். எடுத்த காரியத்தை வெற்றியுடன் முடிப்பான். அந்தணர்களிடம் உறவு கொள்ளுவான். அரசர்களிடம் நட்புடையவன். சுப்பிரமணியக் கடவுளைப் பெற்ற பார்வதி தேவியே! கேளுங்கள்.

**45.** பிறந்தசேய் ஜனன காலம் புகர்தசை இருப்புத் தானுஞ்
சிறந்திடு மாண்டு ரண்டு திங்களும் ஆற தாகும்
விரைந்திடும் நாட்கள் பத்தும் விளம்புவோம் பலனே யாங்கள்
நிறைந்த தோர் ஜாதகர்க்கு நேர்ந்திடும் ரோகந் தானே.

**45.** ஜாதகனின் பிறப்புக் காலத்தில் சுக்கிரமகாதசை இருப்பு இரு வருடங்களும் ஆறு மாதங்களும் பத்து நாட்களும் ஆம். அக்காலத்திய பலனைச் சொல்லுகின்றோம். எல்லா விஷயங்களிலும் நிறைவுள்ள ஜாதகருக்குப் பிணி ஏற்படும்.

**46.** மாதுரு வர்க்கஞ் சூதம் வந்திடும் செலவ நேகம்
மேதினில் காலி சேதம் விசனமாம் தந்தைக் கேதான்
போதவே வர்க்கஞ் சூதம் பகையது வந்து நீங்கும்
நீதியாக் கிருஷி நஷ்டம் நிமலியே மேலுங் கேளே.

**46.** தாயின் வர்க்கத்தினருக்கு அசுபம் நேரிடும். செலவுகள் அதிகமாகும். கால்நடைகளுக்குச் சேத முண்டாகும். தன் தந்தைக்கு மனக் கலக்கம் ஏற்படும். தன் பந்துக்களுக்கும் அசுபம் நேரும். விரோதங்கள் ஏற்பட்டு, விலகும். விவசாயத்தில் நஷ்டம் உண்டாகும். தாயே! மேலுங் கேள்.

**47.** சல்லியங் கொஞ்சம் நேருந் தாயாதி வர்க்கஞ் சூதஞ்
சொல்லுவோந் தாய்தந் தைக்கே சுகமின்றிப் பிணியு முண்டு
அல்லல்கள் களவு கொஞ்சம் அறைந்தன மிவைக ளெல்லாம்
நல்லதோ ரீரைந்தான் டின்மேல் நாட்டுவோம் விவர மாக.

**47.** சிறிது கடன் உபத்ரவம் உண்டு. தன் பங்காளி வர்க்கத்தில் அசுபம் நேரிடும். தாய்தந்தையருக்கு நோயால் உபத்திரவ முண்டாகும். தொல்லைகள், திருடர்பயம் இவைகளெல்லாம் பத்து வயதுக்குள் சொல்லுவோம். (மற்றவை யெல்லாம் இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம்.)

## ஜாதகம் 7.

1. மதியுங் குசனுஞ் சீயமுற மால்வண் டியினியில் பணி கோலாம்
விதியிணையும் குருவும் மேருவுற வெள்ளி பரிதி வினை தன்னில்
புதிரு மேடம் உயிர் மிதுனம் அறைகுவீர் பலனைத் தவமுநியே
துதிசெய் பராசர் தான் சொல்வார் ஜனிக்கு மாண்பால் ஜனன
[முமாம்.

1. சந்திரன் செவ்வாய் சிம்மத்திலும், புதன் கடகத்திலும், ராகு துலாத்திலும், குரு சனி தனுசிலும், சுக்கிரன் சூரியன் மிதுனத்திலும், கேது மேஷத்திலும், நின்று மிதுனம் லக்கினமாகவும் இருக்க, உற்ற பலனைக் கூறுங்கள், தவமுனிவரே ! (என்று பார்வதி வினவும்போது) தோத்தரிக்கப்படும் பராசர முனிவர் சொல்கின்றார். பிறப்பு ஆண் ஜன்மம்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | | சுக்கிரன் / சூரியன் |
| | இராசி சக்கரம் | | புதன் |
| | | | சந்திரன் செவ்வாய் |
| குரு சனி | | ராகு | |

2. ஜனனம் வடபால் வாசலது செப்பும் கீழ்மேல் வீதி யது
கனமால் தந்தி மேல் பாலில் கந்தன் மாரி கீழ்ப் பாலில்
சுனையும் அருகில் தென் முனியும் சிறுஊர் வடுகர் குலமாகுந்
தனயன் நான்காம் ஜனனமு மாய்ச் சாறு மென்றேம் சங்கரியே.

2. ஜனிப்பவன் வீடு கிழக்கு மேற்கு வீதியில் வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடைது. மேற்குப் பக்கத்தில் திருமாலின் ஆலயமும் விநயகர் ஆலயமும் உள்ளன. சுப்பிரமணிய ஸ்வாமி கோவிலும் மாரியம்மன் கோயிலும் கிழக்குப் பக்கத்திலுள்ளன. அருகில் ஒரு நீரோடை உண்டு. தென் திக்கில் முனியும் கோயில் ஒன்றுளது. இங்ஙனமுள்ள விடத்தில் ஒரு சிற்றூரில் வடுகர் குலத்தில் ஜாதகன் தன் தந்தைக்கு நான்காம்மகனாகப் பிறப்பான். சங்கரியே !

3. அரியே தனுசு உயிர் கேட்டை அருளுங் தந்தை குணங் கேளாய்க்
கரி மால் நிறத்தான் கல்வி சமம் கசட ருறவு கொள்ளா தான்
பெரிதாய்ச் செட்டுப் பூவிருத்தி புகழ்ந் தோர்க் குதவி தான்
செய்வன்
வரிவேல் விழிமார் மோக முளன் அதிதி நேசம் கொள்ளா தான்.

3. தனுஸ் லக்கிலத்திலும் கேட்டை நட்சத்திரத்திலும் பிறந்த ஜாதகனின் தந்தையின் குணத்தைக் கேளுங்கள். திருமாலைப் போன்ற கரியநிறமுள்ளவன். சுமாரான கல்வியறிவுடைவன். அறிவிலார் உறவுகொள்ளாதவன். பெரிய வியாபாரி. பூமியை அதிகரிப்பான். துதி செய்பவருக்கு உபகாரி. அழகுள்ள பெண்கள் மோகன். அந்தணர் உறவு இல்லாதவன்.

## வேறு

4. கொள்ளவும் விற்கவல்லன் சமர்த்தன்
கொடியிடை மனைமேல் பிரியனுவன்
பள்ளுக ளுடையன் பலரையும் வசியம்
பண்ணுவான் புதுஇல்லம் செய்வன்
கள்ளமுங் கொஞ்சங் முடையகு மென்றேங்
கண்ணன்தன் ரேகையு முடையான்
விள்ளவே வுரைப்பன் சல்லியங் கொள்ளான்
விகடமும் பேசிடா னுமே.

4. வாங்கவும் விற்கவும் சாமர்த்தியமுள்ளவன். மெல்லிய இடையை யுடைய மனைவிமேல் விருப்பமுள்ளவன். பணியாட்கள் உள்ளவன். எல்லோரையும் வசீகரிக்க வல்லவன். புது வீடு கட்டுவான். மனத்தில் கபடமும் சிறிது குரோதமும் (வஞ்சகம்) உடையவன். கண்ணனுடைய ரேகை உள்ளவன். கண்டித்துப் பேசுபவன். கடன் உபத்திரவ மில்லாதவன். அகடவிகடமாகப் பேசாதவன்.

5. பேசிடான் வீணுய் இருமொழி யாளன்
பிறப்பனு மிரட்டையாய் ஜன்மங்
காசுவீண் செலவு செய்திடான் பொறுமை
கணக்கினில் வல்லவ னுகும்
பாசமாய் வார்த்தை பால்தயிர்ப் பிரியன்
பணைவர்கள் விருத்தியே செய்வன்
போசன சுகியன் பிறந்தவில் லடையான்
பூவையே கேட்டி டாயே.

5. அனுவசியமாகப் பேசான். இருவிதமாகவும் பேசுபவன். இவன் இரட்டையாகப் பிறப்பான். பணத்தை வீணில் செலவிடாதவன். பொறுமை யுள்ளவன். கணக்கில் நிபுணன். பிரியமாகப் பேசுபவன். பால் தயிரில் விருப்பமுள்ளவன். ஏர்கள் முதலியன பெருக்குவான். சாப்பாட்டில் சௌக் கியமுடையவன். தான் பிறந்த வீட்டைப் பெறாதவன். தாயே ! கேளுங்கள்.

6. தன்துணை யாண்பா லைந்து சக்திமார் மூவர் தீர்க்கம்
பின்னமாம் மற்ற வெல்லாம் பிருகுமே புகலு கின்றார்
அன்னவ னிரட்டை ஜன்மம் அறைந்திட்டீர் விவரம் சொல்வீர்
முன்துணை யாண்பா லாகும் மேதினில் தீர்க்க சீவி.

6. தன்னுடன் பிறந்தவர்களில் சகோதரர்கள் ஐவர், சகோதரிகள் மூவர் தீர்க்காயுளுடனிருப்பர். மற்றவையெல்லாம் மரித்துவிடும் என்று சொல்லும் போது, பிருகு முனிவர் கேட்கின்றார். அவன் (ஜாதகனின் தந்தை) இரட்டைப் பிறவி என்று கூறிய விபரம் உரையுங்கள். இவனுக்கு மூத்தவன் நீண்ட ஆயுளுடனிருப்பான்.

7. இருமனை யாக வாழ்வன் இதுவன்றி முன்னோ னுக்கு
வருமனை யிரண்டே யாகும் மடிந்துபின் நேரு மென்றோம்
அருபாக மாக வாழ்வர் அவர்பலன் பின்பால் சொல்வோங்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

7. ஜாதகனின் தந்தை இரு மனைவியருடன் வாழ்வன். இவனுடைய மூத்த சகோதரனுக்கும் இரு மனைவியர் ஏற்படுவர். முதல்மனைவி இறந்தபின் இரண்டாமவள் வருவாள். அவர்களுடைய பலனைப் பின் பாகத்தில் சொல்லுகின்றோம். யானை முகத்தோனைப் பெற்ற பார்வதியே! கேட்டிடுவாய்.

8. இன்னெறி உடையா னுக்கு இப்பால னுதிப்பா னவன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் ஆதிமால் நிறத்தனவன்
பன்னியே பேச வல்லன் பலபாவை மோக னவன்
தன்பந்து பாரிப் பானும் தைர்யமா மனத்த னவன்.

8. இங்ஙனமுள்ள குணங்களையுடைவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணங்களைச் சொல்லுகின்றோம். திருமாலைப் போன்ற கரிய நிறமுள்ளவன். பன்னிப்பன்னிப் பேசுபவன். பலபெண்கள்மீது மையல் கொள்ளுவான். தன் உறவினர்களைக் காப்பாற்றுவான். தைரியமுள்ள மனத்தினன்.

9. பலகலை உணர்வா னுகும் பரஉப காரஞ் செய்வன்
நிலையதைக் காப்பா னுகும் நினைத்ததை முடிக்க வல்லன்
அலைகடல் துயின்றோன் பக்தி அவனுமே கொள்வ னுகும்
கலகத்தைக் கூறா னுகுங் கனத்ததோர் நேசஞ் செய்வன்.

9. பல நூல்களை யறிவான். பிறருக்கு உபகாரி. தன் நிலைமைக் காப்பவன். எண்ணியதை முடிக்க வல்லவன். பெரிய அலைகளையுடைய திருப்பாற் கடலில் துயில்கொள்ளும் மகாவிஷ்ணுவிடம் பக்திகொள்ளுவான். கலகஞ் செய்யாதவன். பெரியோர்கள் நட்புக் கொள்ளுவான்.

10. தந்தையின் தந்தை போலத் தானவன் வாழ்வா னவன்
சிந்தையும் நல்ல தாகும் சேய்நிலம் விருத்தி செய்வன்
பந்தினர் மதிக்க வாழ்வன் பஞ்சைமே லிரக்க மாவன்
நிந்தைகள் ஏற்கா னவன் நிமிஷத்தில் கோபி யாவன்.

10. தன் தந்தையின் தகப்பனைப்போல் வாழ்ந்து வருவான். நல்ல மனமுள்ளவன். விளை நிலங்களைப் பெருக்குவான். உறவினர் கொண்டாடும் படி வாழ்ந்து வருவான். ஏழைகளின்மீது இரக்கமுடைவன். அவதூறுகள் அடையாதவன். சீக்கிரத்தில் கோபமடைவான்.

11. தேவதா தலங்கள் செல்வன் தேரினோர்க் கன்ன மீவன்
தாவினோர் தம்மைக் காப்பன் சத்ருவை நசிக்க வைப்பன்
பாவத்தில் மனது வையான் பார்மன்னன் மெச்ச வாழ்வன்
நாவது சுத்த முண்டு நற்சக டுகளு மேற்பன்.

11. புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று அங்குள்ள தெய்வத்தை வழிபடுவான். எல்லாம் அறிந்த பெரியோர்களுக்கு அன்னமளிப்பான். தன்னை வந்தடைந்தவரை ஆதரிப்பான். விரோதிகளை ஒழிக்கும் குண முள்ளவன். தீச் செயல்கள் செய்ய எண்ணாதவன். உலகாளும் அரசர் கொண்டாடும்படி வாழ்வான். பொய் சொல்லாதவன் (வாக்குச் சுத்த முள்ளவன்). நல்ல வாகன வசதிகள் உள்ளவன்.

12. தன்துணை பெண் ஒன்று தங்கிடுந் தீர்க்க மாக
அன்னவள் குணத்தைச் சொல்வேன் அவளிரு நிறத்த ளாகும்
பன்னியே பேசு வாளாம் பாரினில் வறுமை காணாள்
பொன்பணி தந்தை யாலே பெறுவளாம் கபடு மில்லாள்.

12. உடன் பிறந்த சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளுடன் விளங்குவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம் கருமை கலந்த சிவந்த நிற முள்ளவள். பன்னிப் பன்னிப் பேசுபவள். உலகில் தரித்திரமில்லாதவள். தன் தந்தையால் பொன் ஆபரணங்களை அடைவாள். கபடில்லாதவள்.

13. வரனுமே தென்பால் தன்னில் வருகுவான் இல்லம் வாசம்
வருஞ்சுதர் ஆண்பால் மூன்று பெண்ணது இரண்டு மாகுந்
திருகிலா ஐந்துந் தீர்க்கஞ் செல்வியும் யோக சாலி
அரிவைக்கு வயது தீர்க்கம் அம்பிகை யாளே கேளாய்.

13. இவளுக்குக் கணவன் தெற்குத் திக்கிலிருந்து வருவான். அவன் வீட்டில் வசிப்பாள். ஆண்மக்கள் மூவரும் பெண்கள் இருவரும் ஆக ஐவரையும் பெற்று, நீண்ட ஆயுளுடனிருப்பாள். அவளும் அதிருஷ்ட முள்ளவள். தீர்க்காயுளுடன் இருப்பாள். தாயே ! கேளுங்கள்.

14. பின்துணை பெண்பா லொன்று பேசுவோந் தீர்க்க மாகக்
கன்னிகை யோக சாலி கஞ்சமாம் நிறத்த ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் யாவர்க்கும் நல்லோ ளாவள்
உன்னத சீல மேற்பள் உயர்வான புத்தி ஏற்பள்.

14. இளைய சகோதரி ஒருத்தியுண்டு என்று கூறுகின்றோம். அவள் நீண்ட ஆயுளுள்ளவள். யோகசாலி. கரிய நிறமுள்ளவள். பிறர்மெச்சும்படி வாழ்க்கை நடத்துவாள். எல்லோரிடமும் நல்லவள் என்ற பெயரெடுப்பாள். உயர்ந்த ஒழுக்கங்களுள்ளவள். உயர்வான புத்தியுடையவள்.

15. அறமதி லிச்சை உண்டு அதிதிகட் கன்ன மீவள்
பெரிதான குடும்ப மேற்பள் பூவைக்கு வடகீழ் மாரன்
வருஞ்சுதர் ஆண்பால் நான்கு மங்கைமார் மூவ ராகும்
வறுமைஎப் போதுங் காணாள் வருவோரை ஆத ரிப்பாள்.

15. தருமம் செய்வதில் விருப்பமுடையவள். ஏழைகட்கு அன்ன மளிப்பாள். பெரிய குடும்பத்தை யடைவாள். அவளுக்கு வட கிழக்குத் திசையிலிருந்து மணாளன் வருவான். நான்கு புத்திரர்களையும் மூன்று புத்திரிகளையும் பெறுவாள். எப்போதும் தரித்திரமில்லாதவள். அண்டிவந்த வர்களை ஆதரிப்பாள்.

16. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பத்தொன் பாண்டில்
பாலிகை மேல்பால் நேரும் பகருவோ மவள்கு ணத்தைச்
சீலியாம் புத்தி சாலி ஜனசகா யங்கள் செய்வள்
மால்மனை ஒப்ப தாகும் வருவோரை ஆத ரிப்பள்.

16. ஜாதகனின் மணத்தின் காலத்தை கூறுவோம். பத்தொன்பதாம் வயதில் மேற்குப் பக்கத்திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். ஒழுக்கமுடையவள். புத்திசாலி. ஜனங்களுக்கு உபகாரி. இலக்குமிபோன்ற அழகுள்ளவள். வந்தவர்களை ஆதரிப்பாள்.

17. அன்னம்போல் சாய லொக்கும் அன்புட மனத்த ளாகுங்
கன்னிகை யோக சாலி கருதிடாள் கட்டு வார்த்தை
தன்வரன் மனதுக் கேத்தோள் சாதமும் அன்பாய் ஈவள்
சொன்னசொல் சுகமே யாகுஞ் சுந்தரி தீர்க்க ஜீவி.

17. அன்னம் போன்ற நடையுள்ளவள். அன்புள்ள மனத்தினள். அவளும் அதிருஷ்ட முள்ளவள். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவள். தன் கணவன் மனத்துக்கேற்ப நடப்பவள். பிறருக்கு அன்புடன் அன்னமளிப்பாள். சொன்னசொல் தவறாதவள். அழகுள்ளவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

### புத்திர தோஷம்

18. சுதர்களுங் காணு ளாகுந் தோன்றினுஞ் சேத மாகும்
அதுகுற்றம் புகல்வீ ரையா அரவுமே அஞ்சில் தங்கப்
புதல்வகா ரகனு மேழில் புரயோனின் மகனுங் கூட
சதியுண்டு புதல்வ ருக்கு ஜயமுனி புகலு கின்றார்.

18. புத்திர பாக்கியமில்லாதவள். அப்படிப் பிறந்தாலும் நிலையா. அஃது ஏற்படக் காரண மென்ன ? சொல்லுங்கள். **ஐந்தாமிடமாகிய துலாத்தில் ராகு இருப்பதாலும் புத்திரகாரனாகிய குரு ஏழாமிடத்தில் (சூரியன் மகனாகிய) சனியுடன் கூடி யிருப்பதாலும் புத்திரருக்குத் தோஷமுண்டு.** ஜயமுனிவர் கூறுகின்றார்.

19. இருநான்குக் குடையோ னேழில் இருப்பதால் பூர்வந் தன்னில்
மருவிற்று வினை அநேகம் மைந்தர்கள் தோஷ மெய்தும்
உரைகுவீர் வினையை நீங்கள் உத்தமன் பூர்வம் கேளாய்த்
திருகணு மலையி லேதான் ஜனித்தனன் ரெட்டி வம்சம்.

19. **எட்டாமிடத்துக்குரிய சனி ஏழில் இருப்பதால் முற்பிறவியில் செய்த தீவினைகள் அநேகம் ஏற்பட்டு அதனால் புத்திரதோஷம் உண்டாயிற்று.** தோஷம் என்ன வென்று சொல்லுங்கள். ஜாதகனுடைய முற்பிறவியைக் கேள். **திருவண்ணுமலையில்** ரெட்டியார் மரபில் பிறந்தான்.

### ஸர்ப்பத்தை கொன்ற தோஷம் : பசுக் கறந்த தோஷம்

20. பாலகன் மனைவி உண்டாய்ப் பாரினில் சீவித் தேதான்
சாலவே வாழு நாளில் தங்கின வினையைக் கேண்மோ
ஆலமு மில்லம் வாசம் அதனையும் குடங்கள் கொண்டு
சாலவே முத்தந் தன்னில் தயங்கியே கிடக்கும் போது ;

20. ஜாதகன் மனைவியை அடைந்து வாழ்ந்து வரும்போது ஏற்பட்ட தீவினையைக் கேள். ஒரு சர்ப்பம் வீட்டில் வெகு நாட்களாக வசித்து வந்தது. ஒரு நாள் அது வீட்டு முற்றத்தில் மகுடம் எடுத்து மயங்கி ஆடும்போது ;

21. அரங்குமே செய்து இன்னோன் அடித்தனன் கழியி னாலே
மரலியின் பதிக்குச் செல்ல மருவிற்று அந்தத் தோஷம்
உரைக்கிறோம் வேறு ஒன்று உத்தமன் கன்றுக் கேதான்
குறைபட பாலைத் தந்தான் குலவிற்று அதுஒர் தோஷம்.

21. அதை வாட்டி இவன் தடியினால் அடித்தான். பாம்பு இறந்தது. அந்தத் தோஷம் ஏற்பட்டது. மற்றொன்று கூறுகிறோம். இவன் ஒரு பசுங் கன்றுக்குப் பால் குறைவாகவிட்டு மிகுதியைக் கறந்தான். அந்தத் தோஷமும் இவனை வந்தடைந்தது.

22. வறுமையோர் சாபந் தானும் மருவிற்று என்று சொல்வோம்
இருகண்ணும் ஊன மாகி ஏகினன் கால னூடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனு மென்று சொல்வோம்
மருவிடும் நாக சாபம் ஆவின்பால் கறந்த தோஷம்.

22. ஏழையோர்கள் சாபமொன்றும் ஏற்பட்டது. அதனால் இரு கண் களும் குருடாகி இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்று சொல்லுவோம். சர்ப்பதோஷமும் பசுக்கறந்த தோஷமும் ஏற் பட்டன.

சாந்தி

23. புத்திர தோஷ மெய்தும் புகலுவோங் கிரியை தானும்
வித்தகன் சிலையால் நாகம் வருவியே அரசின் கீழே
சுத்தமாய்ப் பிரதிஷ்டை செய்யச் சேயர்கள் விருத்தி யாகும்
குத்தமாய்ச் செய்யா னாகில் குழவிகள் தோஷ மெய்தும்.

23. அதனால் புத்திரதோஷம் உண்டாயிற்று. அது தீரச் சாந்தியொன்று கூறுகின்றோம். இந்த ஜாதகன் கல்லால் நாகம் ஒன்று செய்து, அரசமரத் தின்கீழ் வைத்து பிரதிட்டைசெய்தால், புத்திரவிருத்தி ஏற்படும். மனத்தில் கெட்ட எண்ணத்துடன் செய்யாமலிருந்தால் புத்திரர்கள் விருத்தியாகார்.

24. சொற்படி செய்வா னாகில் தோன்றிடும் ஆண்பா லொன்று
மெய்ப்படி பெண்பால் ரண்டு வரைகிறேந் தீர்க்க மாகச்
செப்புவோ மன்னை சேதி சீலியாம் மாநி றத்தாள்
தப்பித குணமில் லாதாள் சரசமாய் வார்த்தை உண்டு.

24. நாங்கள் சொல்லியபடி சாந்தி செய்தால் ஆண்குழந்தையொன்று பிறக்கும். பெண் குழந்தைகள் இருவரும் நீண்ட ஆயுளுடனிருப்பார். ஜாதகனின் தாயின் குணத்தைக் கூறுகின்றோம். மாநிறமுள்ளவள், கெட்ட குணங்க ளில்லாதவள், சரசமாகப் பேசுபவள்,

25. இளமன முடைய ளாகும் இடுக்கணென் றோரைக் காப்பள்
நளபாக முடைய ளாகும் நல்கிடும் பித்த பாதை
களைத்தோர்க்குத் தாக மீவள் கண்முகம் வசிய முண்டு
குளவிபோல் கோபங் கொஞ்சங் குணமது நல்ல தாகும்.

25. இளகிய மனமுடையவள். துன்பமடைந்தவர்களை ஆதரிப்பாள். நளனைப்போல் ருசியாக சமையல் செய்வதில் கை தேர்ந்தவள். பித்த ரோகம் உண்டு. தாகமடைந்து களைத்தவர்களுக்குத் தண்ணீர் அளிப்பாள். கண், முகம் முதலியன வசீகரமானவை. குள்விபோல் விரைவில் கோப மடைவாள். நல்ல குணமுள்ளவள்.

26. தன்துணை மூன்று தோன்றுந் தங்காது ஆண்பா லுந்தான்
கன்னிமா ரிருவ ராகுங் காதலி மார்கள் ரண்டும்
அன்னையின் உதவி யாலே அவர்களுஞ் சீவிப் பார்கள்
பின்பாகம் அவர்கள் சேதி பேசுவோம் முனியே கேளும்.

26. உடன்பிறந்தவர்கள் மூவர். சகோதரன் நிலையாக இருக்கமாட்டான். இரு சகோதரிகள் இருப்பர். அவர்களிருவரும் (ஜாதகனுடைய) தாயின் உதவியால் ஜீவித்திருப்பார்கள். அவர்களுடைய செய்தி விபரங்களைப் பின் பாகத்தில் சொல்லுகின்றோம். முனிவரே! கேளும்.

27. அன்னையின் பூர்வஞ் சொல்வேன் அருணைக்குக் கீழ்ப்பா லாகச்
சின்னஊர் தனிலு தித்தாள் சேடர்தன் குலமே என்றோம்
பொன்பணி உடைய ளாகிப் பூமியில் வறுமை இன்றிக்
கன்னிகை வாழு நாளில் கலந்ததோர் வினையைக் கேண்மோ.

27. ஜாதகனின் தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணா மலைக்குக் கிழக்கிலுள்ள ஒரு சிற்றூரில் சேடர் குலத்தில் பிறந்தாள். பொன் ஆபரணங்கள் உள்ளவளாக, தரித்திரமில்லாமல் வாழ்ந்து வந்தபோது, ஏற் பட்ட தீவினையைக் கேளுங்கள்.

28. அருமறை மதலைக் காக ஆவின்பால் இவளைக் கேட்கத்
திருகாக வார்த்தை கூறச் சேர்ந்தது அந்தத் தோஷம்
இரவினில் அதிதி அன்னம் ஈகுவாய் என்று கேட்க
அரிபோலக் கோப முற்று அளிக்காது அன்ன மென்ன ;

28. அந்தணர் குலத்தில் பிறந்த ஒருவர் குழந்தைக்குப் பால்வேண்டி இவளைக் கேட்கும்போது, இடக்காக வார்த்தை சொல்ல, அந்தத் தோஷம் இவளைச் சேர்ந்தது. ராத்திரியில் ஓர் ஏழை அன்னம் யாசிக்க, இவள் சிங்கம் போல் கோபமடைந்து அன்னம் கிடையாது என்று சொல்ல;

29. சிவவேடம் கொண்டோர் தானுஞ் செப்புவார் மனவெ றுப்பால்
பவமுள பின்ஜன் மத்தில் பாலர்கள் முதலில் தோஷம்
நவனியில் துணைஆண் தோஷம் நல்கிடு மென்று சொல்லித்
தவசிவே றில்லஞ் சென்றான் சார்ந்தது அந்தத் தோஷம்.

29. பரதேசியாக வந்தவர் மனத்தில் வருத்தமடைந்து, மறுபிறவியில் முதலில் புத்திரதோஷ முண்டாகும்; சகோதரதோஷம் ஏற்படும் என்று சொல்லிவிட்டுப் வேறு வீட்டுக்குச் சென்றான். அந்தத் தோஷம் இவளை யடைந்தது.

30. அந்திய காலந் தன்னில் அவளுக்குக் குன்மங் கண்டு
அந்தகன் பக்கல் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ ளிவளே என்றோம் மருவிடும் இரண்டு தோஷம்
தன்சுதர் முதலில் பீடை தன்துணை ஆண்பால் தோஷம்.

30. கடைசிக் காலத்தில் அவளுக்கு வயிற்றுவலி ஏற்பட்டு இறந்தாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவள் என்றோம். இரு விதத் தோஷங்கள் ஏற்பட்டு முதல் புத்திரனுக்குத் தோஷமும், சகோதர தோஷமும் உண்டாகும்.

31. அத்திரி புகலு கின்றார் அவள்துணை தோஷஞ் சொன்னீர்
சத்திக்குக் கர்மம் செய்வோர் சாற்றுவீர் முனியே நீர்தாம்
வித்தகன் தந்தை செய்வன் மேவிடும் அவர்கள் ஆஸ்தி
சத்திக்குச் சேரு மென்றோங் சங்கரி கேட்டி டாயே.

31. அத்திரி முனிவர் கூறுகின்றார். அவளுக்குச் சகோதரதோஷம் ஏற்படும் என்றீரே. அவளுடைய தாய் தந்தையருக்குக் கருமம் செய்பவர் யார்? என்று கூறுங்கள். முனிவரே! ஜாதகனுடைய தந்தை செய்வான். அவர்களுடைய ஆஸ்தியும் இவளுக்குக் கிட்டும். சங்கரியே! கேளும்.

32. மங்கையின் அன்னை தானும் மருவுவாள் தன்பால் தன்னில்
சங்கைஇல் லாமல் வாழ்வாள் ஜாதகர்க் கீரே ழாண்டில்
துங்கமாங் கால னுடு செல்லுவாள் என்று சொல்வோம்
சங்கரன் தனைவ ளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

32. தாயின் அன்னையும் இவளை வந்து அடைவாள். கஷ்டமில்லாமல் வாழ்ந்து வருவாள். ஜாதகனுக்குப் பதினான்காம் வயதில் இறப்பாள் என்று கூறுவோம். சிவபெருமானைத் துதித்த அம்பிகையே! கேளும்.

33. முப்பது மூன்று ஆண்டில் விளம்புவோம் அன்னை கண்டஞ்
செப்புவோ மிவளின் ஜன்மம் திருமுக்கூடல் தன்னி லேதான்
ஒப்புடன் வைச்யச் சேயாய் உதிப்பளா மென்று சொல்லுவோம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

33. ஜாதகனின் மூப்பத்துமூன்றும் வயதில் தாய்க்குக் கண்டம் நேரும். இவளுடைய மறுபிறவி முக்கூடலில், வைசிய மரபினளாகத் தோன்றுவாள் என்றோம். கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவபெருமானின் தேவியே! கேளுங்கள். நாங்கள் கூறிய மொழிகள் தவறா.

**பாகப் பிரிவினையில் மோசம்**

34. பிறந்தசேய் தந்தை பூர்வம் பேசுவோங் காஞ்சி தன்னில்
பொருளுமே அதிக முண்டாய்ப் பிறந்தனன் சௌராஷ்டிர வம்சம்
பெருமையாய்ச் செட்டுச் செய்து புனிதனும் வாழு நாளில்
வருந்துணை பாக மீயா வாதாடி விலக்க லுற்றான்.

**34.** ஜாதகனின் தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்ருேம். காஞ்சீ புரத்தில் பிறந்து, பொருள் மிகுதியாகப்பெற்று, சௌராஷ்டிர வமிசத்தில் பெருமையாக வியாபாரம் செய்து, நல்லவனுக வாழ்ந்துவரும் நாளில், உடன் பிறந்தவனுக்குரிய பாகத்தைத் தராமல் வாதாடி ஒதுக்கிவிட்டான்.

35. மனமது வருத்த முற்று வரைகிருன் துணைவன் சாபங்
கனமுள பொருளீ யாமல் கடனது தந்த பாவி
இனிவரும் ஜன்மம் தன்னில் இருவரும் ஒருகர்ப் பத்தில்
சினமிலா உதித்து யானுந் தாய்முலைப் பாலும் பாதி ;

**35.** சகோதரன் மனவருத்தமடைந்து சாபமிடுகின்ருன். எனக்குரிய செல்வத்தைத் தராமல் கடனைமாத்திரம் கொடுத்த பாவியே ! இனி வரும் பிறவியில் ஒரு தாய் வயிற்றில் பிறந்து, உன்னுடன் நானும் தாயின் பாலை ;

36. பங்கிட்டு உண்பேன் யானும் பக்கமில் தன்னில் வாழ்வேன்
சங்கையாய்ச் சொல்லிச் சென்ருன் ததாஸ்துஎன்ருர் முனிவர் [தாமும்
அங்கவ னந்தி யத்தில் அவன்பொருள் குறைவு நேர்ந்து
மங்கினுன் கால னுடு கஞ்சனுல் வரையப் பட்டு;

**36.** சமமாகப் பங்கிட்டுச் சாப்பிடுவேன். பக்கத்து வீட்டில் வாழ்ந்து வருவேன் என்று மனசஞ்சலத்துடன் சொல்லிவிட்டுச் சென்ருன். அப்படியே என்று பக்கச்சொல் ஏற்பட்டது. அதனுல் அவனுக்கு இறுதியில் பொருள் குறைந்து இறந்தான். மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு;

37 வந்தவ னென்று சொல்வோம் மருவுவா னிரட்டைச் யாகச்
சந்தத மிருபா னுறில் தந்தையுங் கண்ட மெய்தும்
பின்ஜன்மங் காஞ்சி தன்னில் பிறப்பனுங் கங்கை சேயாய்
விந்தையாய்ச் செட்டுச் செய்து வித்தகன் வாழ்வா னுமே.

**37.** பிறந்தவன் என்று சொல்லுகின்ருேம். இவன் இரட்டையாகப் பிறந்தவன். ஜாதனுக்கு இருபத்தாரும் வயதில் தந்தை மரணமடைவான். மறுபிறவி காஞ்சீபுரத்தில், வேளாள மரபினனுகப் பிறப்பான். அதிசயமாக வியாபாரம் செய்து வாழ்ந்து வருவான்.

38. பாலகன் மரண காலம் பகருவோ மறுபா னெட்டில்
சாலவே கூனி மாதம் ஜாதக னுடலம் ஏகும்
ஏலவே இவன்பின் ஜன்மம் இயம்புவோம் வேலங் காட்டில்
சீலமாம் மறைக்கு லத்தில் ஜனிப்பனு மென்று சொல்வோம்.

**38.** ஜாதகனின் மரணக்காலம் அறுபத்தெட்டாம் வயதில், பங்குனி மாதத்தில் ஏற்படும். இவனுடைய மறு பிறவியில், திருவாலங்காட்டில் அந்தணர் குலத்தில் பிறப்பான் என்று கூறுவோம்.

39. பிறந்திடு காலந் தன்னில் பூரத்தின் ரண்டாம் பாதம்
சிறந்தசுக் கிரனி ருப்பு செப்புவோ மீரே ழாண்டும்
மருவிடுந் திங்கள் மூன்றும் வரைந்தனம் பூர்வ பாகம்
அறைந்தனம் பூர்வ பாகம் அம்பிகை யாளே கேளாய்.

**39.** ஜாதகன் பிறப்புக் காலத்தில் பூரநக்ஷத்திரம் இரண்டாம் பாதம். சுக்கிரமகாதசையில் இருப்பு பதினுன்கு வருடங்களும் மூன்று மாதங்களுமாம் என்று இவ்வாறு முதல் பாகம் கூறினேம். தாயே ! கேளுங்கள்.

# ஜாதகம் 8

1. பிறைகுரு நந்தி யாகப் புதன்புகர் பணியுஞ் சீயம்
பரிதியுங் கன்னி யாகப் பார்மகன் தேள தாகக்
கரியவன் கேது சாடி கழருவோம் வீணை ஜன்மம்
உரைகுவீர் பலனை என்று உத்தமி கேட்க லுற்றாள்.

**1.** சந்திரன் குரு விருஷபத்திலும் சுக்கிரன் ராகு புதன் சிம்மத்திலும், சூரியன் கன்னியிலும், செவ்வாய் விருச்சித்திலும், சனி கேது கும்பத்திலும், மிதுனம் ஜன்ம லக்கினமாகவு மிருக்க, ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று உத்தமியான பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| | | சந்திரன் குரு | லக்கினம் |
| சனி கேது | இரர்சி சக்கரம் | | |
| | | | புதன் சுக்கிரன் ராகு |
| | செவ்வாய் | | சூரியன் |

2. பிருகுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
வருமில்லாம் வடக்குப் பார்வை மாரியும் காளி கீழ்ப்பால்
திருமாலின் கோஷ்டம் தென்பால் சிறுஊராம் வடுகர் வர்க்கம்
உரைக்கிறோம் குடும்பச் சேதி உத்தமி கேட்டி டாயே.

**2.** பிருகு முனிவர் கூறுகின்றார். பிறப்பது ஆண் ஜன்மம். பிறந்த வீடு வடக்கு நோக்கியுள்ளது. கிழக்கில் மாரியம்மன் கோயிலும் காளி கோயிலும் உள்ளன. தெற்கில் திருமாலின் ஆலயம் ஒன்று உள்ள ஒரு சிற்றூர். ஜாதகன் பிறந்தது வடுகர் மரபு. அவனுடைய குடும்பச் செய்திகளைச் சொல்லுகின்றோம். உத்தமியே ! கேளுங்கள்.

3. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மாண்பால் நஷ்டம்
முந்தின கன்னி ஒன்று மொழிகிறோம் தீர்க்க மாக
அந்தவள் சேதி சொல்வேன் அழகுண்டு மாநி றத்தாள்
நிந்தைகள் ஏற்கா ளாகும் நிதானமாம் குணத்தா ளாகும்.

**3.** தந்தையின் உடன் பிறந்தவர்களில் சகோதர்கள் இல்லை. இவனுக்கு முன் பிறந்த சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளுடன் இருப்பாள். அவளுடைய செய்திகளைக் கூறுகின்றோம். அழகுடையவள். மாநிற முள்ளவள். பழிகள் அடையாதவள். நிதானமான குணமுள்ளவள்.

4. வருவோரை ஆத ரிப்பள் மாதுரு இல்லம் வாசம்
அரிவைக்குச் சுதராண் ஒன்று அவ்வாறே கன்னி யாகும்
திருகிலாள் ஒன்றுய் வாழ்வள் தீரமில் லாத நெஞ்சம்
பெருதன முடைய ளாகும் போஜன வறுமை காணுள்.

4. தன்னை வந்து அடைந்தவர்களை ஆதரிப்பாள். தன் தாயின் வீட்டில் வசிப்பாள். அவளுக்கு ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் இருப்பர். எல்லோரும் சண்டையில்லாமல் ஒன்ருகவே வாழ்ந்து வருவார்கள். தைரியமில்லாத மனத்தினள். பெரிய செல்வியாக வாழ்வாள். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவள்.

5. வயதுமே தீர்க்க மெய்தும் வரைகிறேந் தந்தை சேதி
நயமுள வார்த்தை கூர்வன் நாற்காலி விருத்தி உண்டு
பயமுள மனத்த ஞகும் பாரது விருத்தி செய்வன்
அயலான்பொன் இச்சை இல்லான் அவசர மனத்த ஞகும்.

5. அவளுக்குத் தீர்க்கமான வயதுண்டு. ஜாதகனின் தந்தையின் விபரங்களைச் சொல்லுகின்ரேம். நயமாகப் பேசுபவன். கால்நடைகள் மிகுதியாக உள்ளவன். பயந்த மனமுள்ளவன். விளைநிலங்களைப் பெருக்குவான். பிறர் பொருளின்மீது விருப்பமில்லாதவன். அவசரமான மனத்தினன்.

6. மால்நிறம் உளைச்சல் தேகி மருமமில் லாதா ஞகும்
பால்தயிர் பிரிய முண்டு பஞ்சைமே லிரக்க மாவன்
காலத்தை அறிந்து வாழ்வன் கஞ்சமாம் ரேகை உண்டு
சீலம்போல் வெளிம யக்கன் சீக்கிர நடையு மாவன்.

6. கரிய நிற முடையவன். ஒல்லியான சரீர அமைப்புள்ளவன். ரகசியமில்லாதவன். பால் தயிர் இவைகளில் விருப்பமுடையவன். ஏழைகளின் மீது இரக்க முள்ளவன். காலத்துக்குத் தக்கபடி வாழ்க்கை நடத்துவான். கையில் தாமரைரேகை யுள்ளவன். ஒழுக்கமாக நடப்பவன் போல் பிறர் நினைக்கும்படி நடந்து கொள்ளுவான். வேகமாக நடப்பவன்.

7. உத்திரம் கடக ராசி உதிப்பனும் வறுமை காணுன்
குத்தத்தை மனதில் வையான் குழவிபோல் வார்த்தை உண்டு
சத்தினில் கோபி யாவன் சாற்றிடான் கட்டு வார்த்தை
பத்தினிக் கிஷ்ட ஞகும் பார்கூவல் செய்வா ஞம்.

7. உத்திர நட்சத்திரத்தில் கடக லக்கினத்தில் பிறப்பான். தரித்திரமில்லாதவன். பிறர் செய்யும் குற்றங்களைப் பாராட்டாதவன். குழந்தையைப்போல் பேசுபவன். முன் கோபி. வார்த்தைகளைப் புனைந்து பேசாதவன். தன் மனைவிக்குப் பிரியமானவன். நிலங்கள், நீர் நிலையங்கள் இவற்றை ஏற்படுத்துவான்.

8. சல்லிய மென்ரு லச்சம் தரணியில் வறுமை காணுன்
சொல்லது இரண்டு முண்டு சூக்ஷும புத்தி யாவன்
மல்லினில் செல்லா ஞகும் பெருமைகள் சேர்ப்பா ஞகும்
புல்லிய புத்தி கொஞ்சம் புகலுவோ மிவன்முன் ஜன்மம்,

8. கடன் வாங்கப் பயப்படுவான். உலகில் தரித்திரமில்லாதவன். இரு விதமாகவும் பேசுபவன். சூக்ஷ்ம (நுண்ணிய) புத்தியறிவுள்ளவன். வலுச் சண்டைக்குச் செல்லாதவன். பெருமைகளை அடைவான். அற்பபுத்தி கொஞ்சமுண்டு. இவனுடைய மறுபிறப்பைச் சொல்லுகின்றோம்.

**அந்தணர் நிந்தை**

9. சொக்கர்வாழ் பாண்டி நாட்டில் ஜனித்தனன் மறவ னாகத்
தக்கன குடும்பி யாகிச் சந்ததி மனைவி உண்டாய்
மிக்கவே வாழு நாளில் வேதியன் தனக்கு இன்னோன்
புக்கினன் கட்டு வார்த்தை புகன்றதால் மறையோ னுக்கு ;

9. சொக்கநாதர் எழுந்தருளியிருக்கும் மதுரையில், மறவனாகப் பிறந்தான் நல்ல குடும்பத்தை யடைந்து, மனைவி மக்களுடன் தகுதியாக வாழ்ந்து வரும்போது, அந்தணன் ஒருவன்மீது தகாத வார்த்தைகளைச் சொன்னான். அதனால் அந்தணனுக்கு;

10. அவமானம் நேர்ந்த தாலே அறைகிறான் சாபந் தானும்
நவனியில் பின்ஜன் மத்தில் நற்றுணை ஆண்பால் தோஷம்
தவசிபோல் தனியாய் வாழ்வாய் சாற்றினான் மறையோன் தானும்
பவமது இச்சென் மத்தில் பருகாது துணைஆணுந் தான்.

10. அவமானம் ஏற்பட்டது. அந்தணன் சாபமிட்டான். இனி வரும் பிறவியில் உடன் பிறந்த சகோதரனுக்குத் தோஷம் ஏற்பட்டுச் சன்னியாசி போல் தனித்து வாழ்வாய் என்று அந்தணன் கூறினான். அந்தத் தோஷத்தால் ஜாதகனின் தந்தைக்கு இப்பிறவியில் சகோதரன் இல்லை.

11. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிரண்டாம் ஜன்மம்
அன்னவன் குணத்தைச சொல்வேன் அரிமக னொப்ப தாகும்
தன்சொலு மடக்க முண்டு தரணிகள் சேர்ப்பா னாகும்
பன்னியே பேசு வானும் பலகலை உணர்வா னாகும்.

11. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு இரண்டாம் பிறவியாக இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மன்மதனை யொத்த அழகன். அடக்கமாகப் பேசுபவன். பூமிகளைச் சேர்ப்பான். பன்னிப் பன்னிப் பேசுபவன். பல நூல்களைப் படித்தறிவான்.

12. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தனம்பணி அதிகம் சேர்ப்பன்
விந்தையாய் இல்லம் செய்வன் வேந்தர்க்கு இவன்சொல் [மேன்மை
பந்தினர் மதிக்க வாழ்வன் பாரப க்ஷங்க ளில்லான்
முந்துமால் பக்தி கொள்வன் உயர்வான குடும்ப மேற்பன்.

12. தன் தந்தைக்கு மேலாக வாழ்வான். பொருள், ஆபரணங்கள் முதலியவற்றை அதிகமாகச் சேர்ப்பான். அழகான வீடு கட்டுவான். அரசாங்கத்தாருக்கு இவன் வார்த்தை மேன்மையாகும். உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்க்கை நடத்துவான். பக்ஷபாதமில்லாதவன். திருமாலின் மீது பக்தி யுள்ளவன். உயர்ந்த குடும்பத்தை யடைவான்.

கேதாரயோகம்

13. எப்படி யோகஞ் சொன்னீர் இயம்புவீர் அந்தச் சங்கை
ஒப்புடன் சனிசேய் ஆட்சி உடுபதி உச்ச மாக
மெய்ப்புடன் புதனும் வெள்ளி மூன்றினில் பானு நாலில்
இப்படி கிரகம் நிற்க எய்துங்கே தார யோகம்.

13. ஜாதகனுக்கு யோகம் ஏற்படக் காரணம் என்ன வென்று புகலுவீர். ராஜ்யாதிபதியாகிய சனியும் லாபாதிபதியாகிய செவ்வாயும் ஆட்சியாக வும் சந்திரன் உச்சமாகவும் இருப்பதாலும், புதனும் சுக்கிரனும் மூன்றில் இருப்பதாலும், சூரியன் நாலில் இருப்பதாலும் ஜாதகனுக்குக் கேதார யோகம் ஏற்படும்.

14. வேசியோ கங்க ளொன்று விளம்புவோ மிரண்டு யோகம்
காசுகள் அதிகஞ் சேர்ப்பன் காலான்க ளுடைய னாகும்
போஜன சுகிய னாகும் பொய்யது புகலா னாகும்
ஆசையாய்த் தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

14. வேசியோகம் ஒன்றும் ஆக இருயோகங்கள் உண்டாகும். பொருள் களை அதிகமாகச் சேர்ப்பான். காலாட்களை அதிகமாகச் உடையவன். சாப்பாட்டுச் சௌக்கியம் உள்ளவன். பொய் பேசாதவன். அன்புடன் தவங்களை இயற் றும் பார்வதியே! கேளுங்கள்.

15. தனதுணை முன்பெண் ணென்று சாற்றுவோ நீர்க்க மாகக்
கன்னிகை குணத்தைச் சொல்வேன் கணவனுக் கினிய ளாகும்
உன்னத வார்த்தை கூறுவள் உயர்வான புத்தி ஏற்பள்
பொன்பணி சேர்ப்ப ளாகும் பூமியில் வறுமை காணாள்.

15. ஜாதனுக்கு உடன்பிறந்த மூத்த சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளுட னிருப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்வோம். தன் கணவனுக்குப் பிரியமானவள். உயர்வாகப் பேசுபவள். மேன்மையான புத்தியுள்ளவள். பொன் ஆபரணங்களைச் சேர்ப்பாள். தரித்திர மில்லாதவள்.

16. பித்தசூ டுடைய ளாகும் புகலுமுன் கோபி யாவள்
சித்தமே கறப்பு மில்லாள் தீங்கதை யெவர்க்கு மெண்ணாள்
புத்திரர் ஆண்பால் ரண்டு பெண்ணது ஒன்று என்றேம்
பத்தினி வரனு முள்ளூர் பாவையுந் தீர்க்க ஜீவி.

16. பித்தச்சூடுடையவள். சொல்வதற்குமுன் கோபமடைவாள். மனத் தில் கெட்ட எண்ணமில்லாதவள். ஒருவருக்கும் தீங்கு எண்ணாதவள். இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் உண்டு என்றேம். அவளுக்குக் கணவன் உள்ளூரிலிருந்து வாய்ப்பான். நீண்ட ஆயுளுடனிருப்பாள்.

17. பாலன்பின் கன்னி ஒன்று பகருவோம் தீர்க்க மாகச்
சாலஆண் தோஷ மாகுஞ் சாற்றுவீர் அந்தச் சங்கை
மால்பணி புகரு மூன்றில் வந்ததால் துணை ஆண் தோஷம்
சீலமாந் தவங்கள் செய்யுஞ் செல்வதி கேட்டி டாயே.

17. ஜாதகனுக்குப் பின் பிறந்த சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளுடனிருப்பாள். ஆனால் சகோதரனுக்குத் தோஷமுண்டு. அதைச் சொல்லுகிறேன். புதன் ராகு சுக்கிரன் மூன்றுமிடத்தில் (சகோதர ஸ்தானத்தில்) இருப்பதால சகோதர தோஷம் உண்டு. ஒழுக்கத்துடன் நலங்களை இயற்றும் பார்வதியே! கேட்டிடுவாய்.

18. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அற்பமாய்க் கோபி யாவள்
நன்மையு மிருது சொல்லள் நாயகன் மனதுக் கேற்றவள்
கன்னிகை யோக சாலி கவின்முகம் வசிய முண்டு
பின்னமில் லாத தேகி பூஷண ஆசை உண்டு.

18. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்வேன். சிறிய காரியத்துக்கும் கோபித்துக் கொள்வாள். நன்மையாகவும் மெதுவாகவும் பேசுபவள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். அதிருஷ்டசாலி. கண் முகம் வசிகரமானவை. பின்னங்களில்லாச சரீர அமைப்புள்ளவள். ஆபரணங்களின்மீது இச்சை யுள்ளவள்.

19. பால்பாக்ய முடைய ளாகும் பசித்தோர்க்கு அன்ன மீவள்
சீலியாம் இளம னத்தள் சோம்பிடாள் காரி யத்தில்
ஞாலமேல் நல்லோ ளாவள் நற்றுணை ஆண்பால் நான்கு
வேல்விழி மார்கள் ரண்டு விளம்புவோம் தீர்க்க மாக.

19. பால்பாக்ய முள்ளவள். பசித்து வந்தவர்களுக்கு அன்னமளிப்பாள். ஒழுக்க முடையவள். இளகிய மன முடையவள். காரியங்களில் சோம்பலில்லாதவள். உலகில் நல்லவளாக விருப்பள். உடன் பிறந்தவர்களில் நான்கு சகோதரர்களும், இரு சகோதரிகளும், தீர்க்கமாயிருப்பர்.

20. இல்லமும் உள்ளூ ராகும் இவள்துணை ஆண்பால் தன்னில்
செல்லுமே ஒன்று என்றேஞ் செப்புவோம் பின்பால் சேதி
தல்லியின் பூர்வஞ் சொல்வேன் தாம்பர பரணி தன்னில்
புல்கினுள் வன்னிய சேயாய்ப் புகழான குடும்பி யாகி;

20. வீடு உள்ளூரில் இருக்கும். உடன் பிறந்தவர்களில் ஒருவர் மரணமடைவார். மற்ற விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுவோம். ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றேம். தாமிரபரணிக் கருகிலுள்ள ஊரில் வன்னிய குலத்தவளாகப் பிறந்து, புகழுள்ள குடும்பத்தை யடைந்து ;

21. மங்கையுஞ் சுகமாய் வாழ்ந்து வருவோர்க்குத் தாக தமீந்து
சங்கையாய்க் கால ஞடு சென்றனள் வரன் முன்ஞகப்
பங்கயன் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்
நங்கையும் வறுமை காணுள் நவிலுவோ மிவள்பின் ஜன்மம்.

21. சௌக்கியமாக வாழ்ந்து வந்து, தாகமுடன் வந்தவர்கட்குத் தண்ணீர் முதலியன அளித்து, பிறகு தன் கணவனுக்கு முன்பாக மரணமடைந்தாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று சொல்லுவோம். தரித்திரம் இல்லாதவள். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம்.

22. கோங்குநா டதனி லேதான் குதிப்பளாம் சைவச் சேயாய்
ஓங்கின குடும்பி யாகி உத்தமி வாழ்வா ளாகும்
நீங்குவாள் கால னோடு நிமலற்கு நாற்பான் மூன்றில்
தீங்கிலாத் தவங்கள் செய்யுஞ் செல்வதி கேட்டி டாயே.

22. கொங்கு நாட்டில் சைவ குலத்தவளாகப் பிறப்பாள். பெரிய குடும்பியாகி நல்லவளாக வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய நாற்பத்து மூன்றும் வயதில் இறப்பாள். தீங்குகளின்றித் தவங்கள் இயற்றும் பார்வதியே! கேளும்.

23. ஆறஞ்சு மூன்று ஆண்டில் அணுகிடுந் தந்தை கண்டம்
வேறொரு ஜன்மஞ் சொல்வேன் வடதிசை வேங்க டத்தில்
பாரிய தனவா னுக்குப் பிறப்பனும் ரெட்டி வம்சம்
மாறியே அத்திரி சொல்வார் வரைந்தினீர் முன்பின் மூன்று.

23. ஜாதகனின் முப்பத்துமூன்றும் வயதில் தந்தைக்குக் கண்டம் ஏற்படும். அவனுடைய மறு பிறவியைக் கூறுகின்றோம். வடக்குத் திசையில் திருவேங்கடத்தில் ரெட்டியார் மரபில் பெரிய தனவந்தனுக்குப் பிறப்பான். அத்திரி முனிவர் மறுத்துக் கூறுகின்றார் .ஜாதகனுடைய தந்தைக்கு முப்பத்து மூன்றும் வயதில் மரணம் என்று சொன்னீரே.

24. * இது மத்தில் தந்தைக் கேதான் எய்தாதோ மார கங்கள்
விதவித பிணிகள் நேரும் . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . .

24. இதற்கு மத்தியில் ஜாதகன் தந்தைக்குக் கண்டங்கள் ஏற்படாவோ? விதவிதமான ரோகங்கள் ஏற்படும்.

(இதற்கு மேல் காணப்படவில்லை).

* இப்பாடலின் மற்றப் பகுதிகள் ஏட்டில் இல்லை. ஜாதகமும் குறையாக காண்கின்றது.

## ஜாதகம் 9

1. மதிகுசன் பானு வீணை மால்புகர் கடக மாகத்
தநிகயர் கன்னி யாகச் சனிமானில் குருவு மேடம்
அதிதியும் கெண்டை யாக அனுகிய மிதுனம் ஜன்மம்
இதுடலன் பகலு மென்று ஈச்வரி கேட்க லுற்ருள்.

1. சந்திரன் செவ்வாய் சூரியன் மிதுனத்திலும், புதன் சுக்கிரன் கடகத்திலும், ராகு கன்னியிலும், சனி மகரத்திலும், குரு மேஷத்திலும், கேது மீனத்திலுமாக விருந்து, லக்கினம் மிதுனமாவிருந்தால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கலானுள்.

| | | | |
|---|---|---|---|
| கேது | குரு | | லக்கினம் சந்திரன் செவ்வாய் சூரியன் |
| | இராசி சக்கரம் | | புதன் சுக்கிரன் |
| சனி | | | |
| | | | ராகு |

2. அத்திரி புகலு கின்ருர் ஆணது ஜனன மாகும்
வித்தக னுதித்த இல்லம் விளம்புவோம் மேற்கு வாசல்
உத்திரம் தென்பால் வீதி உதித்தஇல் வாடை யாகும்
குத்தமாம் சிலது கோஷ்டம் குண்டமும் மேல்பால் தங்கும்.

2. அத்திரி முனிவர் சொல்லுகின்ருர். இஃது ஆண்மகனின் ஜாதகம். ஜாதகன் பிறந்த வீட்டின் வாசல் மேற்கு நோக்கியுள்ளது. அது வடக்குத் தெற்கு வீதியில் கிழக்கு வாடையில் இருக்கும். சில பாழடைந்த கோவில்களும் குளமும் மேற்குப் பக்கத்தில் உள்ளன.

3. அருகினில் அம்மன் மாயோன் ஆளிவா கனத்தாள் உத்திரம்
பெருகிய ஊரே யாகும் பேசிய அடையா ளத்துள்
திருமகன் ஜேஷ்ட னுகும் செப்புவோம் வடுகர் வம்சம்
கரிமத வானே பெற்ற காதலி கேட்டி டாயே.

3. பக்கத்தில் அம்மன் கோயிலும், திருமாலின் ஆயமும், யாளியை வாகனமாகவுடைய துர்க்கையம்மன் கோயிலும் வடக்கில் உள்ள பெரிய ஓர் ஊர். இவ்விதங் கூறப்பட்ட அடையாளங்களுள்ள இடத்தில் இந்த ஜாதகன் வடுகர் மரபில் தன் தந்தைக்கு மூத்த புதல்வனுகப் பிறப்பான். யானை முகத்தோனைப்பெற்ற பார்வதியே! கேட்டிடுவாய்.

**வேறு**

4. தந்தைகுணம் கூறுகின்றோம் மால்நி றத்தான்
சகராசர் பேட்டிமிகும் தைரி யத்தன்
விந்தையாய் வார்த்தை யுளன் அரிபோல் கோபம்
வித்தகிமார் மோகமுளன் விதேச வாசன்
முந்துமால் பத்திகொஞ்சம் மொழியைக் காப்பன்
உயர்வான தொழிலேற்பன் உண்மை யாளன்
நொந்தவரை யாதரிப்பன் தரள தந்தம்
நிதஞ்சுகி போசனத்தன் நிமலன் றுனே.

4. தந்தையின் குண வரலாற்றைக் கூறுகின்றோம். கரிய நிறமுள்ளவன். அரசரால் நன்கு மதிக்கப்பெற்றவன். தைரியசாலி. அதிசயமாகப் பேச வல்லவன். சிங்கம்போல் கோபமுள்ளவன். பெண்கள்மீது மையலுள்ளவன். வேற்றூரில் சென்று வாழ்ந்து வருவான். திருமாலின்மீது பக்தியுள்ளவன். சொன்ன சொல் தவறுதவன். உயர்ந்த தொழிலை ஏற்று நடத்துவான். உண்மை பேசுபவன். கஷ்டப்படுபவர்களை ஆதரிப்பவன். பவழத்தை யொக்கும் பற்களை யுடையவன். தினமும் சுகமான போஜன சௌக்கிய முள்ளவன்.

5. மான்ராசி [1] மான்றலைநாள் உதிப்பா னுகும்
மால்ரேகை கரத்திலுறும் மர்மங் கொஞ்சம்
தேன்மொழியாம் சிலருக்கா பத்தைக் காப்பன்
செய்ந்நன்றி மறவாதான் சேரும் பித்தம்
தானென்ற மனங்கொஞ்சம் டம்ப னுவன்
சதுஷ்பாதம் விருத்தியுளன் சகடு மேற்பான்
ஈனரையே வுறவுகொள்ளான் எதிரிக் கஞ்சான்
ஈகைவான் இராசராலே சிவங்கள் ஏறபன்.

5. மகர ராசியில் மிருக சீர்ஷ நக்ஷத்திரத்தில் பிறப்பான். கையில் விஷ்ணுரேகை யுள்ளவன். உள்ளத்தில் சிறிது இரகசிய முள்ளவன். இனிய வார்த்தை களைப் பேசுபவன். சிலருக்கு ஆபத்தைக் காப்பான். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவன். பித்த சரீரமுள்ளவன். தானென்ற அகம்பாவமும் சிறிதுள்ளவன். ஆடம்பரமாக விருப்பான். கால் நடைகள் விருத்தி யுண்டு. வண்டி முதலிய வாகன ங்களுள்ளவன். கீழோரிடம் நட்புக் கொள்ளாதவன். விரோதிகட்குப் பயப்படாதவன். கொடையாளி. இராசரால் மங்களங்கள் ஏற்படும்.

**வேறு.**

6. இந்நெறி யுடையா னுக்கு இருதாரம் இளையா ளுக்கு
அன்னவ னுதிப்பா னுகும் அறைகிறே மவன்கு ணத்தை
முன்கோபி மாநி றத்தான் மொழியது சுத்த மாகும்
தன்னையே புகழ்வா னுகும் தந்தைக்கு மேலாய் வாழ்வன்.

---

[1] மிருக சீர்ஷம்.

6. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இரு மனைவியர். அவர்களில் இளைய யவளுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைக் கூறுகின் றோம். முன் கோபி. கரியநிற முடையவன். வாக்குச் சுத்தமுள்ளவன். தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளுவான். தன் தகப்பனுக்கும் மேன்மை யாக வாழ்வான்.

7. இருவிதக் கல்வி மேன்மை இராசபூ சிதனு மாவன்
பெருமையாய்த் தொழிலு மேற்பன் பிறர்குற்றம் புகல்வா னுவன்
அரிபக்தி பூண்பா னுவன் அடைந்தோரை ஆத ரிப்பன்
விரைவினில் நடக்க வல்லன் வெஞ்சமர் தன்னில் செல்வன்.

7. இருவிதமான கல்விகளைக் கற்பான். அரசரால் நன்கு மதிக்கப்பெற்ற வன். பெருமையான தொழிலை ஏற்று நடத்துவான். பிறர்புரியும் குற்றங் களை எடுத்துச் சொல்லுவான். திருமாலின்மீது பக்தியுள்ளவன். தன்னை வந்து அடைந்தவர்களைக் காப்பாற்றுவான். வேகமாக நடப்பவன். கடும் போரில் போய் ஈடுபடுவான்.

8. வண்டிவா கனமு மேற்பன் அடிமைக ளுடையா னுவன்
தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் சங்கீதம் பிரிய னுவன்
துண்டமாங் குணமும் கொஞ்சம் தொடுத்ததை வெல்வா னுவன்
எண்டிசைப் புகழு மேற்பன் ஈகைவான் என்று சொல்வோம்.

8. வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். பணியாட்களுள்ளவன். தெள்ளிய தமிழ் நூல்களில் தேர்ச்சி பெறுவான். சங்கீதப் பிரியன். கண்டித்துப் பேசும் குணமுள்ளவன். எடுத்ததை வெல்லும் குணமுள்ள வன். எட்டுத்திசையும் கீர்த்தி பெருவான். கொடையாளி என்று சொல் வோம்.

9. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பா லொன்று
நவனியில் கன்னி ரண்டு நாட்டுவோம் தீர்க்க மாகத்
தவசியும் மறுத்துச் சொல்வார் சாற்றினீர் முதல்தா யொன்று
அவளுக்குச் சுதர்க ளுண்டோ அறிவிப்பீர் முனியே நீர்தாம்.

9. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றோம். சகோ தரன் ஒருவரும் சகோதரிகள் இருவரும் நீண்ட ஆயுளுடனிருப்பார். முனிவர் இடையில் தடுத்துச் சொல்லுகிறார். ஜாதகனுக்கு மூத்த தாய் ஒருத்தி யுண்டென்று கூறினீர்களே. அவளுக்குக் குழந்தைகள் உண்டோ ? சொல்லுங்கள், முனிவரே! நீங்கள்.

10. ஒருவனே தீர்க்க ஜீவி உரைக்கிறே மவன் குணத்தைப்
பெருமையும் புகழு மெய்தும் புண்ணிய மனத்த னுவன்
இருவிதக் கல்வி உண்டு இராசரால் தொழிலு மேற்பன்
பொருளது பெருக்கம் செய்வன் போசன வறுமை காணன்.

10. ஒரு மகனே யுண்டு. அவனும் நீண்ட ஆயுளுடனிருப்பான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். கீர்த்தியும் பெருமையும் உள்ளவன். நல்ல மனமுள்ளவன். இருவிதமான கல்வி கற்பான். அரசாங்க உத்தியோகமுள்ளவன். செல்வத்தைப் பெருக்குவான். சாப்பாட்டுக்குத் தரித்திரமில்லாதவன்.

11. பாரியை யொன்றே யாவன் பாலர்கள் ஆண்பால் மூன்று
நாரிகள் அவ்வாறு தீர்க்கம் நாட்டினில் நல்லோ னவன்
வேறதாய் வாழ்வா னகும் வெஞ்சின மில்லா னகித்
தீரமாய் ரண்டு இல்லம் செய்குவான் பாக்கிய வானும்.

11. மனைவியும் ஒருத்தியே யாவள். மூன்று புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் உளராவர். எல்லோரும் நீண்ட ஆயுளிடனிருப்பர். உலகத்தில் நல்லவனுக விருப்பான். அவனும் தனியாகச் சென்று வாழ்ந்திருப்பான். கடும் கோபமில்லா தவனுக, திடமாக இரு வீடுகள் கட்டி, பாக்கியவானுக விருப்பான்.

12. ஆதியில் வறுமை உண்டு அன்னையின் சுகமில் லாதான்
சூதிலான் என்று சொல்வோம் துரகமும் வண்டி எற்பன்
வேதியர் தொண்டு பூண்பன் வெற்றிச்சொல் லுடைய னகும்
போதக வானே பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

12. ஆரம்பத்தில் தரித்திர முள்ளவன். தன் தாயினுல் சுகமில்லாதவன். கபடில்லா மனத்தினன். குதிரை வண்டி யுள்ளவன். அந்தணருக்குத் தொண்டு செய்பவன். பலிதமாகும் வார்த்தைகளை யுடையவன். விநாயகக் கடவுளைப் பெற்ற பார்வதியே ! கேட்டிடுவாய்.

13. அன்னையு மிரண்டு என்றீர் அறிவிப்பீர் அந்தச் சங்கை
கன்னியில் ராகு தங்கக் கவிமக னிரண்டி லேற
இன்னவாறு கிரகத் தாலே இயம்பினே மன்னே ரண்டு
முன்தாயின் தங்கை யாகும் மொழிகிறோம் தாயின் சேதி.

13. ஜாதகனுக்குத் தாய் இருவர் என்று கூறிய காரணம் என்னவென்று கூறுங்கள். கன்னியில் ராகு இருந்து சுக்கிரன் இரண்டில் இருப்பதால் (கிரக நிலை இவ்வாறு இருப்பதால்) மாதுருஸ்தானத்தில் ராகுவும், குடும்பஸ்தானத்தில் விரயாதிபதியான சுக்கிரன் இருப்பதால், தாய் இருவர் என்று சொன்னோம். இளைய தாய் முதல் தாயின் சகோதரி. தாயின் செய்திகளைக் கூறுகின்றோம்.

14. மாந்தளிர் மேனி யாகும் மர்மமும் கொஞ்ச முண்டு
ஏந்திழை முன்கோ பத்தாள் இடர்செய்யாள் யாவ ருக்கும்
காந்தம்போல் புத்தி ஏற்பள் கல்வியு முடைய ளாகும்
கூர்ந்துமே வார்த்தை சொல்வள் குணமது நல்ல தாகும்.

14. மாந்தளிர் போன்ற மென்மையான தேகமுள்ளவள். சிறிது ரகசிய முள்ளவள். முன் கோபி. ஒருவருக்கும் தீங்கிழையாதவள். காந்தம் போல் வித்தையைக் கிரகிக்க வல்லவள். கல்வி அறிவுள்ளவள். நன்ருயறிந்துணர்ந்து பேசுபவள். நற்குணமுடையவள்.

15. அடிசிலுக் கினிய ளாகும் ஆளன்தன் மனதுக் கேத்தோள்
நடைநன்மை உளேச்சல் தேகி நாயகி யோக சாலி
விடவாக்கு பலவீ னத்நாள் மேவிடும் பித்த சூடு
துடிஇடை விரத சாலி துறவோருக்கு அன்ன மீவள்.

15. சமையல் செய்வதில் கை தேர்ந்தவள். தன் கணவன் மனத்துக் கேற்றவள். நன்னடத்தை யுள்ளவள். மெல்லிய தேக முடையவள். அவளும் அதிருஷ்டசாலி. வாக்கில் கொடுமை யுள்ளவள். பலஹீன மானவள். பித்தசூடு உடையவள். மெல்லிய இடை யுள்ளவள். விரதம் அனுஷ்டிப்பவள். துறவிகளுக்கு அன்னமளிப்பவள்.

16. மங்கைக்குத் துணைஆண் தோஷம் வல்லியு மொன்றே தீர்க்கம்
தங்காது மற்ற வெல்லாம் சாகையும் வடகீழ் ஆகும்
நங்கையின் தாய்தந் தைக்கு நல்கிடும் மேக ரோகம்
சங்கைகள் இவளேச் சாரா சாற்றுவோ மிவள்முன் ஜன்மம்.

16. அவளுக்கு உடன் பிறந்தோரில் சகோதரருக்குத் தோஷமுண்டு. சகோதரி யொருத்தி நீண்ட ஆயுளுள்ளவள். மற்றவ ரெல்லாம் நிலேயார். அவள் பிறந்த வீடு வடகிழக்குத் திசையிலுள்ளது. அவளுடைய தாய் தந்தையருக்கு மேகரோகம் உண்டு. இவளுக்குத் தோஷ மில்லே. இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம்.

**பெண்ணுக்கு இடைஞ்சல் செய்தல்**

17. கோங்குநா டதனி லேதான் குதித்தனள் கர்ண சேயாய்த்
தீங்கிலாக் குடும்பி யாகித் தேவியும் வாழு நாளில்
ஏங்கின மாதுக் கேதான் இடைஞ்சல்கள் செய்தா ளென்றோம்
ஆங்கவள் மனவெ றுப்பால் அறைகுவாள் சாபம் தானும்.

17. கொங்கு நாட்டில் கருணீகர்மரபில் இவள் பிறந்தாள். தீமை களின்றி இவள் வாழ்ந்துவரும் நாட்களில், துன்பமடைந்த பெண் ணெருத்திக்கு இவள் இடைஞ்சல்கள் பல செய்தாள். அப்பெண்ணும் மனம் வருந்திச் சாபமிட்டாள்.

18. என்னேப்போல் மாதே நீயும் இடைஞ்சல்கள் எனக்குச் செய்தாய்
பின்வரும் ஜன்மம் தன்னில் பின்மனே யாக வாழ்வாய்த்
தன்துணே ஆண்பா லின்றிச் சங்கையா மனத்த ளாகி
மண்ணின்மேல் வாழ்வா யென்று மண்வாரி தூற்றிச் சென்றுள்.

18. எனக்குப் பல துன்பங்கள் செய்தாய், பெண்ணே! அதனுல் என்னேப் போல, நீ இனி வரும் மறுபிறவியில் இளேயாளாக வாழ்க்கைப்பட்டு, உடன் பிற்ந்தசகோதரர்களின்றிக் கஷ்டப்படும் மனத்துடன் வாழ்ந்து வருவாய் என்று சொல்லி, தெரு மண்ணே வாரியிறைத்தாள்.

19. ஏழையின் சாபம் தானும் எய்திற்றுப் பாவைக் கேதான்
தோழியும் மரண மாகிச் சிரநான்கோன் வரையப் பட்டுத்
தாழ்வான கௌரி வர்க்கம் ஜனித்தனள் என்று சொல்வோம்
ஆழியில் துணேஆண் தோஷம் அணுகிடும் இரண்டாம் பாரி,

19. அந்த ஏழைப் பெண்ணின் சாபம் இவளை வந்தடைந்தது. அவளும் அப்பிறவியில் மாண்டு மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, தாழ்வான கௌரீக குலத்தில் பிறந்தாள் என்று சொல்லுவோம். ஆரம்பத்தில் சகோதர தோஷமும் ஏற்பட்டு இரண்டாம் மனைவியாக வாழ்வாள்.

20. மறுஜன்மம் வான்மி யூரில் வருகுவாள் சைவச் சேயாய்ப்
பெருமையும் புகழும் பெற்றுப புத்திர ரதிக முண்டாய்த்
திருமகள் வாழ்வா ளாகும் செப்பின மொழி குன்றுவே
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

20. அவள் மறுபடியும் திருவான்மியூரில், சைவ குலத்தில் பிறந்து, பெருமையுடன் கீர்த்தி பெற்று, புத்திரபாக்கியம் அடைந்து, செல்வியாக வாழ்ந்து வருவாள். சொன்ன சொற்கள் தவறு. வேதங்களின் முடிவில் கூறப்படும் தாயே ! கேளுங்கள்.

21. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் கடையூர் கீழ்ப்பால்
பிந்திஊர் மதுரை தன்னில் பிந்தின குல முதித்து
விந்தையாய்ச் செட்டுச் செய்து பேதையும் மதலே உண்டாய்
..................வித்தகன் வாழு நாளில் ;

21. ஜாதகனின் தந்தையின் முற் பிறவியைக் கூறுகின்றோம். திருக்கடையூருக்குக் கிழக்கில்மதுரையில், நான்காம் வருணத்தவனகப் பிறந்து, வியாபாரம் செய்து, பெண் பிள்ளைகளை யடைந்து, வாழ்ந்து வரும் நாளில் ;

22. வந்ததோர் வினையைக் கேண்மோ வளமிலா ஏழை யோர்கள்
தன்சுதர் மணங்கள் வேண்டித் தருமமா முத்திரை யீவாய்ப்
பின்குல மன்னு என்று போற்றினர் ஏழை யோர்கள்
இன்னவன் தயிரி * ......................

22. ஏற்பட்ட தோஷத்தைக் கேளுங்கள். செழிப்பில்லாத............ ஏழைகள் தங்களுடைய குழந்தைகட்கு மணம் செய்யக்கருதி திருமங்கல்யம் யாசித்தனர்...................ஏழைகள்....................

---

* இதற்கு மேல் ஏட்டில் இல்லை.

## ஜாதகம் 10

1. சந்திரன் மீன மாகிச் சனிபுக ரதற்கு ஏழில்
புந்தியு மஞ்சில் நிற்கப் பூமக னிரவி ஆறில்
மந்திரியு மூன்றில் நிற்க வருடையில் கருங்கோள் நிற்கப்
பிந்தியும் கோளு மெட்டில் பிறந்தது ஜன்மம் வீணை.

1. சந்திரன் மீனத்திலும், சனி சுக்கிரன் சந்திரனுக்கு ஏழாமிடமாகிய கன்னியிலும், புதன் ஐந்தாமிடமாகிய கடகத்திலும், செவ்வாய் சூரியன் ஆருமிடமாகிய சிம்மத்திலும், குரு மூன்ருமிடமாகிய விருஷபத்திலும், ராகு மேஷத்திலும், கேது எட்டாமிடமாகிய துலாத்திலுமாக கிரகங்கள் நின்று மிதுனம் லக்கினமாக விருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | ராகு | குரு | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | புதன் |
| | | | செவ்வாய் சூரியன் |
| | | கேது | சனி சுக்கிரன் |

2. இப்படிக் கோள்கள் நின்ருல் இயம்புவீர் பலனை என்ருள்
செப்புவார் புயண்டர் தாமும் ஜனித்தது ஆணும் ஜன்மம்
ஒப்புடன் வடதென் வீதி உயரிந்திரன் வாடை யாகும்
மெய்ப்புடன் ஈசன் கீழ்ப்பால் விநாயகன் காளி மாரி ;

2. இங்ஙனம் கிரகநிலை யிருந்தால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதி கேட்டாள். புயண்ட முனிவர் பதில் கூறுகின்ருர். பிறப்பு ஆண் ஜன்மம். வடக்குத் தெற்கு வீதியில் கிழக்கு வாடையுள்ள வீட்டில் பிறந்தான். கிழக்கில் சிவ பெருமான் ஆலயம் உளது. விநாயகர் ஆலயமும், காளி கோயிலும், மாரியம்மன் கோவிலும் ;

3. மாலவன் தென்கீழ்த் தங்கும் மாமுனி அம்மன் தெறகில்
சீலமாநதியு முண்டு சிலசில தலங்கள் காணும்
கோலமாய்ச் சமவூர் தன்னில் கூறுமிவ் வடையா ளத்துள்
பாலனும் பிறப்பா னென்ரேம் பார்வதி கேட்டி டாயே.

3. திருமாலின் ஆலயமும் தென் கிழக்கில் உள்ளன. தெற்கில் முனீச்வரன் கோவிலும் அம்மன் கோவிலும் உண்டு. ஓர் புண்ணிய ஆறுமுண்டு ......................சிற்சிலஸ்தலங்களுமுள்ளன. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள சம நிலையுள்ள ஓர் ஊரில் ஜாதகன் பிறப்பான் என்று கூறுகின்ரேம். பார்வதியே ! கேளுங்கள்.

4. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மறுவ ராகும்
நொந்திடும் யாவும் தானும் நுவலுவோம் பிதாகு ணத்தை
எந்தையே இருசி வப்பன் இவன்நித்தம் பித்த தேகி
தன்தன மதிக மில்லான் தாக்ஷிண்யன் கோபம் கொஞ்சம்.

4. ஜாதகனின் தகப்பனின் உடன் பிறந்தவரைப்பற்றிச் சொல்லுங்கால், ஆறுபேர் என்றும், அவர்கள் எல்லோரும் மரித்து விடுவர் என்றும் கூறுவோம். தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். கருமை கலந்த சிவந்த மேனியன். பித்த தேகமுள்ளவன். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிக மில்லாதவன். தாட்சிணிய முள்ளவன். கோபமுடையவன்.

5. பயிர்த்தொழில் செய்வா னாகும் பகையிலான் எவர்க்கும் நேயன்
நயம்பட உரைப்பா னாகும் நன்முக வடிவு முள்ளான்
பயமான மனத்த னாகும் பாலர்மேல் பிரிய னவன்
நயமொன்று முள்ளே உள்ளான் நாயகி கேட்டி டாயே.

5. விவசாயம் செய்து வருவான். விரோதிகளற்றவன். எல்லோருக்கும் நண்பன். நயமாகப் பேசுபவன். லட்சணமாக விருக்கும் உருவமுள்ளவன். பயந்த மனத்தன். குழந்தைகள்மீது பிரியமானவன். பார்வதியே! கேட்டிடுவாய்.

6. தேகமே வலிவு முள்ளான் செய்ந்நன்றி மறவா னாகும்
ஈகையுங் கொஞ்ச முள்ளான் இருவித வார்த்தை சொல்வன்
தோகையர் மோக னவன் வாஹனும் துருசான நடையு முள்ளான்
நாகரீ கங்க ளில்லான் நற்கல்வி கொஞ்ச முள்ளான்.

6. சரீரத்தில் வலியுள்ளவன். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவன். சிறிது கொடைக்குணமுள்ளவன். இருவிதமாகப் பேசுபவன். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். வேகமாக நடப்பவன். நாகரிகங்க ளில்லாதவன். நல்லகல்வி யறிவு சிறிதுடையவன்.

### தன்-சுத்திரி-ரேகைகள்.

7. சுகபுசிப் பிச்சை உள்ளான் தொல்புவி அதிகம் சேர்க்கான்
இகபர னன்பு கொள்ளான் இடுக்கண்க ளில்லா னவன்
தகைமையாய்க் கரங்கள் தன்னில் தனரேகை சுத்திரி ரேகை
வகையான சுழியு முள்ளான் மங்கையே மேலும் கேளே.

7. சாப்பாட்டில் பிரியன். விளை நிலங்கள் அதிகமில்லாதவன். துறவிகள்மீது அன்பில்லாதவன். துன்பங்களில்லாதவன். கையில் தனரேகை, சுத்திரிரேகை, நல்லசுழி இவைகளுள்ளவன். தாயே! மேலுங் கேள்.

8. இக்குண முடையோ னுக்கு இவனுமே நாலாம் ஜன்மம்
மிக்கவே உதிப்பா னாகும் விளம்புவோ மவன் குணத்தைத்
தக்கவே இருசி வப்பன் தன்தேகம் பித்த சூடு
பக்குவ மாகக் கல்வி பகருவான் ஊக வானும்.

8. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுடையவனுக்கு ஜாதகன் நான்காம் பிறப்பாகப் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். கருமை கலந்த சிவப்புநிறமுள்ளவன். பித்தச் சூடுள்ள சரீரமுடையவன். பழுத்தகல்வியறி வுள்ளவன். ஊகசாலி.

9. வித்தையில் புராண வேதம் மிகுதியாய்க் கற்பா னாகும்
புத்தியால் ஞானம் தன்னைப் புகலுவார் பின்னால் யோகம்
சுற்றத்தார் ஏற்கை உள்ளான் சுகமிக உடையனாகும்
உற்றத்தின் துணைவர் மூன்று முறங்கிடு மென்று சொல்வோம்.

9. வித்தையில் வேதம், புராணம் இவைகளை விசேஷமாகக் கற்றறிவான். தேர்ந்த ஞானியாவன். யோகம் பின்னால் ஏற்படும். பந்து ஜனங்களால் கொண்டாடப்படுவான். மிகுதியான சௌக்கியங்களுள்ளவன். உடன் பிறந்தவர் மூவர் மரித்துவிடுவர் என்று கூறினோம்.

10. கைமுதல் பின்னா லுண்டாம் கனத்தநற் பலன்க ளாலே
உய்வகை பூமி எல்லாம் உபாத்தியாயர் தொழிலும் செய்வன்
பொய்சொலான் பிதாவின் மேலாய்ப் புகழ்படக் கீர்த்தி உண்டாம்
தையலரள் மோக வானும் தருமமும் கொஞ்சம் செய்வன்.

10. தன்னால் சம்பாதிக்கப்பட்ட செல்வங்கள் பிற்காலத்தில் ஏற்படும். அவனுடைய நற்செயல்களால் பூமி முழுவதும் சென்று வாழ்வான். உபாத்தியாயர் தொழில் செய்வான். பொய் சொல்லாதவன். தன் தகப்பனுக்கு மேன்மையாகக் கீர்த்தியடைநது வாழ்வான். மனைவிமீது பிரியமுள்ளவன். சிறிது தருமமும் செய்வான்.

11. நல்லவன் குணவா னவான் நயமுரைந் துரைக்க வல்லன்
சொல்லிலே கவடு கொஞ்சம் சுற்றத்தார் மேலாய் வாழ்வன்
இல்லமும் புதிதாய்ச் செய்வன் இன்பமும் மிகுதி உண்டே
நல்லவெண் கலமும் செம்பொன் நாயகன் சேர்ப்பா னவன்.

11. நல்லவன். நற்குண முள்ளவன். நயமாகப் பேச வல்லவன். வார்த்தையில் கொஞ்சம் கபடுள்ளவன். தன் பந்து ஜனங்களுக்கு மேன்மையாக வாழ்வான். புதிய வீடு கட்டுவான். மிகுதியாக இன்பம் அடைவான். நல்ல வெண்கலமும் செம்பொன்னும் விருத்தியாக்குவான்.

12. தந்தையின் ஆஸ்தி மேலாய்த் தானவன் விருத்தி செய்வன்
மந்திரம் வைத்ய வாதம் மகிழ்வுடன் கற்பா னவன்
[1] ..........................................
கந்தன்தன் குலதெய் வங்கள் கருத்தினில் வையா னென்றோம்.

12. தன் தந்தையின் ஆஸ்தியை அதிகமாக விருத்தியாக்குவான். மந்திரங்கள் வைத்தியம் முதலியவற்றை உவகையுடன் கற்பான். ஷண்முகக் கடவுள் முதலிய குலதெய்வங்களை மனத்தில் நினையாதவன்.

13. இவனுடைத் துணைவர் தம்மை இயம்பவே மூத்தோர் காணோம்
அவனியில் இளையோ ரண்டு ஆணது ஒருவன் தீர்க்கம்
பவமுள பெண்பால் ரண்டு பகருவோம் மூன்றும் தீர்க்கம்
தவசியே இளையோன் சேதிசாற்றுவோம் கேளும் தாயே.

13. இவனுடைய உடன் பிறந்தவர்களில் மூத்தவர்கள் உண்டென்று கூறப் பலமில்லை. இளைய சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுடனிருப்பான். சௌகரியங்களுள்ள சகோதரிகள் இருவர் தீர்க்கமாயிருப்பர். முனிவரே! இளைய சகோதரன் செய்தியைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

---
[1] 3-ஆம் வரி ஏட்டிலில்லை.

14. வஞ்சக நெஞ்ச னுவன் வசனிப்பான் சபையில் பொய்யும்
நெஞ்சினி லிரக்க முள்ளான் நெறிமுறை நடத்த வல்லன்
செஞ்சொளில் நுணுக்கம் தேர்வன் சிநேகிதப் பெரியோர் நேயன்
அஞ்சுக மொழியே சொல்வன் அம்பிகை யாளே கேளாய்.

14. வஞ்சக நெஞ்சமுள்ளவன். சபையில் பொய் பேசுவான். மனத்தில் இரக்கமுள்ளவன். நல்லநெறிமுறைப்படி நடக்கவல்லவன். வித்தையின் நுட்பங்களை யறிவான். பெரியோர்களுடன் நட்புக்கொள்ளுவான். கிளியைப் போல் பேசுபவன். தாயே! கேளாய்.

15. ஆதியில் கோப வானும் அடவிலே பின்பால் தாழ்வன்
தீதிலா டம்ப னுவன் சிறப்பான செட்டுச் செய்வன்
சோதிலான் பகையை வெல்வன் தான்சிறு தீனி இஷ்டன்
வேதனை கூறு வானும் வேறொரு கிருகம் செய்வன்.

15. முதலில் கோபமுறுவான். கடைசியில் சாந்தமடைவான். கெடுதல் இல்லாத ஆடம்பரமுள்ளவன். சிறப்புள்ள வியாபாரம் செய்வன். கபடில்லாதவன். விரோதிகளை ஜயிப்பான். சிற்றுண்டிகளின் விருப்பமுள்ளவன். (மனவேதனைக்குள்ளாவான்.) வேறொரு வீடு கட்டுவான்.

16. தன்மன மழுத்தம் கொள்ளான் ஜனங்களும் நல்லோ ரென்பர்
கன்மன முடையோன் போலக் கழறுவான் பலத்தி ராது
பின்னையும் குழவி போலப் பேசியே எதிரி உன்னை
நன்னய மாக வாங்க நன்மன முடைய னுமே.

16. மனத்தில் அழுத்த மில்லாதவன். ஜனங்களெல்லோராலும் நல்லவன் என்று கூறப்படுவான். கல் நெஞ்சமுடையவன் போலப் பேசுபவன். அப்படியே இராமல் மறுபடி குழந்தைபோலப் பேசி, எதிரியை வயப்படுத்தும் நல்ல மனதுள்ளவன்.

17. இந்நல முடையா னுக்கு இயம்புவோம் மனைவி ஒன்று
சொன்னதோர் ஆண்பால் ஒன்று துலங்கிடும் பெண்பால் ரண்டு
தன்னிலே மூன்று தீர்க்கம் சாற்றுவோம் மூன்று நஷ்டம்
அன்னமே வயது தீர்க்கம் அரைந்தஇம் மொழிகுன் றுவே.

17. இக் குணங்களுடையவனுக்கு மனைவி ஒருத்தியே. அவளுக்குப் புத்திரன் ஒருவனும் புத்திரி இருவரும் ஆக மூவரும் நீண்ட ஆயுளுடனிருப்பர். மூன்று குழந்தைகள் பிறந்து மரிப்பார். தாயே அவளுக்கு வயது தீர்க்கம். சொன்ன சொற்கள் தவறு.

18. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோம் இருப தாண்டில்
மேதினில் தக்ஷி ணத்தில் வித்தகி மாதுரு வர்க்கம்
கோதிலா மணமே கொள்வன் கூறுவோ மவள்கு ணத்தைச்
சூதிலாள் சிவந்த மேனி துருசான கோப முள்ளாள்.

18. ஜாதகனுடைய திருமணத்தின் காலத்தைச் சொல்லுவோம். இருபதாம் வயதில் தெற்குத் திக்கிலிருந்து மனைவி தன் தாயின் வமிசத்தவளாக வாய்ப்பாள். தீமையில்லாத மனமுள்ளவள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். கபடில்லாதவள். சிவந்த உடலுள்ளவள். விரைவில் கோபம் அடைவாள்.

19. அன்னைபோல் ஆத ரிப்பள் அடவுடன் புத்தி உள்ளாள்
கன்னென மொழியே சொல்வள் கருத்தது தெய்வ பக்தி
அன்னவள் குடும்பம் தன்னை ஆதரிப் பாளா மென்றோம்
பொன்நகை அதிக முள்ளாள் புகன்றிட்ட மொழிகுன் றுவே.

19. தாயைப்போல் ஆதரவாக இருப்பாள். நல்ல புத்தி யுள்ளவள். இனிய பேச்சுக்களையே பேசுபவள். தெய்வ பக்தியுடைய மனமுள்ளவள். அவளுடைய குடும்பத்துக்கே ஆதரவாகவிருப்பாள். தங்க நகைகள் அதிக முள்ளவள். சொன்ன சொற்கள் தவரு.

20. கொண்டிடு மம்மா துக்குக் குழவிகள் விருத்தி யாகா
துண்டமாய்ப் பராசர் சொல்ல ஜயமுநி கூறு கின்றுர்
விண்டதோர் சுதர்கள் தோஷம் மேவின கார ணத்தைக்
கண்டிதம் சொல்லு மென்னக் கழருவார் பராசர் தாமே.

20. அப் பெண்ணுக்குப் புத்திரவிருத்தி ஏற்படாது என்று கண்டித்துப் பராசர முனிவர் சொல்லும்போது, ஜயமுனிவர் மறுத்துக் கூறுகின்றுர். இவளுக்குப் புத்திர தோஷம் ஏற்பட்ட காரணத்தை நிச்சயமாகச் சொல்லுங்கள் என்று வினவ, பராசர் கூறுகின்றுர்.

### புத்திரதோஷம் ஏற்படுதற் குரியகிரகநிலை

21. அஞ்சினில் கேது நிற்க அஞ்சவன் நீச்ச மாகி
அஞ்சுக்கு விரயம் தன்னில் அஷ்டமத் தோனும் கூடி
மிஞ்சியே இருப்ப தாலே விளம்பினேம் மதலைத் தோடம்
வஞ்சியே விரயம் தன்னில் வான்குரு விருப்ப தாலே ;

21. ஐந்தாமிடத்தில் கேது இருக்க, அவ்வீட்டுக்குரிய சுக்கிரன் கன்னியில் நீச்சமாகவிருந்து புத்திர ஸ்தானத்திலிருந்து விரயஸ்தானம் (12-ஆம் இடம்) ஆகிய கன்னியில் எட்டாம் வீட்டுக்குரிய சனி இருப்பதால் புத்திர தோஷம் சொன்னேம். தவிரவும், குரு விரயஸ்தானத்தில் இருப்பதால் ;

22. முன்ஜன்ம வினையி னலே முயலாது புத்திர தோஷம்
அன்னவன் முன்னூழ்த் தோஷம் அணுகுங்கா ரணங் களென்ன
கன்னென மொழியே சொல்லும் கனசய முநியே கேளாய்ப்
பெண்ணையாறு வடக்கா யேகும் பனைப்பட்டி தன்னி லேதான் ;

22. பூர்வ ஜன்மத் தீவினையால் புத்திரர் பிறவார் (என்றுர்). அவனுக்குப் புத்திரதோஷம் ஏற்படக் காரணங்களென்ன ? இனிய வார்த்தைகளையே பேசும் ஜயமுனிவரே ! கேளுங்கள். பெண்ணையாற்றுக்கு வடக்கில் உள்ள பனைப்பட்டி என்ற ஊரில் ;

23. உதித்தவன் சைவச் சேயாய் உயர்பூமி உள்ளா ளுகிச்
சதியிலா மனைவி மைந்தர் தான்வாழும் காலம் தன்னில்
விதியினுல் வந்த ஊழை விளம்புவோம் கேளு மையா
பதியினில் உரகன் ஒன்று பார்த்தனன் அதனை இன்னேன்.

23. இந்த ஜாதகன் சைவகுலத்தவனுகப் பிறந்து, உயர்ந்த பூமிகள் உள்ளவனுக விருந்து, குற்றமில்லா மனைவி மக்களை யடைந்து, வாழ்ந்து வரும் நாட்களில், விதியினுல் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்ருேம் கேளுங்கள். வீட்டில் ஒரு நல்லபாம்பு வந்தது. அதை இவன் பார்த்தான்.

**தீவினை : கருவழித்தது**

24. அடித்தனன் மரலி பக்கல் அடைந்தது அந்த நாகம்
அது வொரு தோஷ மாச்சு அதுவின்றி இன்னும் சொல்வேன்
நதிகுல விதவை மாதை நாயகன் போகம் துய்த்துச்
சதியினுல் கருவு தங்கித் தான்பல அவிழ்த மீய
விதியினுல் கருவு நீங்கி வித்தகி வாழ்ந்தா ளென்ருேம்.

24. அப்பாம்பை இவன் அடித்ததால் அஃது இறந்துவிட்டது. அஃது ஒரு தோஷமாயிற்று. அது தவிர, வேருென்று சொல்லுகின்றேன். வேளாள மரபில் தோன்றிய ஒரு விதவையோடு இவன் இன்பம் அனுபவித்து, அதனுல் கருவேற்பட்டு, அதை நீக்கப் பலவித மருந்துகள் கொடுக்க, கருநீங்கி அவள் சுகமடைந்தாள்.

25. அந்ததோர் தோஷம் தானும் அணுகிற்று அச்சென் மத்தில்
மைந்தர்க்குத் தோஷ மென்ருேம் அந்திய காலம் தன்னில்
சந்ததம் வாயு நோயால் சண்டன்தன் பதிக்குச் சென்று
பிந்தியும் பிரமன் தன்னுல் பூமியில் வரையப் பட்டு:

25. அந்தத் தோஷம் இந்த ஜாதகனை முற் பிறவியிலேயே அணுகிற்று. புத்திர தோஷம் ஏற்பட்டது. அவனுடைய கடைசிக்காலத்தில் வாயு நோயால் இறந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு, பூ மியில் ;

**சாந்தி**

26. ஜனித்தவ னிவனே என்ருேம் செப்புவோ மதலைத் தோஷம்
கனமுள தோஷம் தீரக் கழறுவோம் சாந்தி தானும்
தனயனும் அருணைக் கேதன் மனையாளுங் கூட வேதான்
வினையிலாச் சென்று மேதான் இந்திர தீர்த்தம் தோய்ந்து;

26. பிறந்தவன் இவன் என்ருேம். புத்திர தோஷமும் ஏற்பட்டது. அந்தத் தோஷம் தீரச் சாந்தியொன்று கூறுகின்ருேம். இவன் தன் மனைவியுடன் திருவண்ணுமலைக்குச் சென்று அங்குள்ள இந்திர தீர்த்தத் தில் நீராடி ;

27. அண்ணுலுக் கர்ச்சித் தேத்தி அகதிகட் கன்ன மீந்து
திண்ணமாய் உள்ளூர் சென்று சிறப்புடன் வெள்ளி யாலே
நண்ணிய நாக மொன்று நாயகன் செய்து மேதான்
கண்ணன்போல் மறையோ ருக்குக் கந்தங்கள் விடங்க ளோடு;

27. சிவ பெருமானுக்கு அருச்சனை முதலியன செய்து, தோத்தரித்து, ஏழைகளுக்கு அன்னமளித்து, மீண்டும் உள்ளூர் சென்று, வெள்ளியால் அழகான நாக உரு ஒன்று செய்து, கண்ணபிரானைப் போன்ற அழகிய அந்தணர் ஒருவருக்குச் சந்தனம், புஷ்பம் இவைகளுடன் ;

28. ஊதியம் தன்னைச் சேர்த்து அவருக்குத் தான மீந்து
கோதிலா முன்னும் தன்னைக் கூறவும் பெற்றே னென்று
நீதியாய் அவர்கள் சொல்ல நிருபனும் ஷஷ்டி நோன்பு
தீதிலா ஓராண் டுந்தான் செய்யவும் தோஷம் போக்கி ;

28. தட்சிணை முதலியவைகளுடன் சேர்த்துத் தானமளித்து, ஒளிவில்லாமல் செய்த தீவினையைச் சொல்லவும், அவர்களும் தானம் பெற்றேனென்று கூற, இவன் ஒரு வருஷம் ஒவ்வொரு ஷஷ்டியும் விரதம் இருந்தால், தோஷம் நீங்கி ;

29. சுதர்களும் விருத்தி என்றோம் சுந்தரன் தனக்கு புத்திரர்
சதமுட னாண்பால் காணன் சக்தியு மிருவ ரென்றோம்
அதுதோஷம் செய்யா னாகில் அவைகளும் விருத்தி யாகா
விதியினால் பெண்பால் ரெண்டு விளம்புவோம் தீர்க்க மாக.

29. புத்திர விருத்தி ஏற்படும் என்றோம். இவனுக்கு ஆண் சந்ததிகள் இல்லை. பெண் குழந்தைகள் இருவர் விருத்தி என்றோம். அந்தச் சாந்தி செய்யா விட்டால் பெண் குழந்தையும் விருத்தியாகாது. சாந்தி செய்யின் இரு புத்திரிகள் நீண்ட ஆயுளுடன் விளங்குவார்.

30. இப்படி முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
தப்பித மாண்பா லென்றீர் ஜாதகன் தனக்குக் கர்மம்
ஒப்புடன் யார்செய் வார்கள் உரைப்பீர்கள் முனியே என்றாள்
மெய்ப்புடன் துணைவன் புத்திரன் வித்தகன் கருமம் செய்வன்.

30. இங்ஙனம் முனிவர் கூறும்போது, பார்வதி கேட்கலானாள். இந்த ஜாதகனுக்குப் புத்திரர்கள் பிறவார் என்றீர்கள். இவனுக்கு ஈமக்கடன்களை யார் செய்வார்கள் ? என்று கூறுங்கள், என்று கேட்டாள். ஜாதகனுடைய சகோதரனின் புத்திரன் கருமங்கள் செய்வான்.

31. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மினிமே லாகக்
பன்னுதக் கோலம் தன்னில் பாலன்செங் குந்த வம்சம்
அன்னவ னுதித்து மேலும் அல்பஜீ வனமே செய்து
தன்னிலே வாழு நாளில் சாற்றுவோ மூழி தானே.

31. ஜாதகனின் தந்தையுடைய முற்பிறவியை இனிக் கூறுவோம். தக்கோலத்தில், செங்குந்த மரபினில் பிறந்து, சாதாரணமாக ஜீவித்து வந்த காலத்தில், ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

**கோவிலில் திருடிய தோஷம்**

32. மாரியின் தலங்கள் தன்னில் மலர்வெள்ளி எடுத்துக் கொண்டு
வீரியன் வந்து விட்டான் உரியவ ரதனைக் கண்டு
பாரவர் திருடர் வந்து அவள்கண்ணைப் பரித்துச் சென்றார்
தீரமாய்ச் செய்தோ ருக்குத் திருஷ்டிகள் ஊன மாயும் ;

32. மாரியம்மன் கோவிலுக்குச் சென்று, ஆங்குள்ள தெய்வத்தின் வெள்ளிக்கண்மலரை எடுத்துவந்து விட்டான். அதற்குச் சொந்தக்காரர் வந்து, திருடன் எடுத்துப் போய்விட்டதாக நினைத்துச் சாபமிட்டனர். தைரியமாக அம்மன் கண்மலரைப்பறித்துச் சென்றவனுக்குக் கண் குருடாகி ;

33. தனியனு யுதித்து மேலும் தன்துணை நாச மாயும்
முதலினில் புத்திர தோஷ மெய்திடும் என்று சொல்லித்
தனிகனும் சொன்ன னம்மா சார்ந்தது அந்தத் தோஷம்
வினையினால் அந்தி யத்தில் வித்தகன் விழிக்கு ஊனம் ;

33. தனியனாகப் பிறந்து, உடன் பிறந்தவர்களும் நாசமாகி, புத்திரர்களுக்கும் முதலில் தோஷம் ஏற்படக்கடவது என்று சொல்லிச் சென்றான் அந்தத் தோஷம் இவனைச் சார்ந்தது. தன் தீவினையால் தன் கடைசிக் காலத்தில் தன் பார்வையை இழந்து ;

34. துணைவர்கள் யாவும் போக்கிச் சுதனுமே மரண மாகி
அனையவே காலன் பக்கல் அடைந்துபின் நரகம் புக்கி
விதியவன் வரையப் பட்டு விளங்கின னிவனே என்றோம்
நதிசடை பிறைஅ ணிந்தோன் நாயகி கேட்க லுற்றாள்.

34. தன் சகோதரர்களும் மகனும் மாண்டு, தானும் இறந்து, நரகத்தையடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டவனாகிப் பிறந்தவன் ஜாதகனுடைய தந்தை என்று கூறினோம். கங்கை, பிறைச்சந்திரன் இவைகளைச் சடை முடியில் தரித்த சிவபெருமானின் தேவி, கேட்கலானாள்.

35. மாரியின் அடிமைச் சாபம் வந்ததால் இச்சென் மத்தில்
கூறுவீர் குற்ற மென்ன கோமளி சொல்லு கின்றேன்
வீரியன் துணைவர் நாசம் விழியது ஒன்று ஊனம்
தீரமாய் முதலில் புத்திரர் ஜனிக்கினும் தீதே யாகும்.

35. மாரியம்மனின் பக்தனின் சாபம் ஏற்பட்டதால் இப்பிறவியில் அவன் அடைந்த துன்பங்கள் என்ன வென்று வினவ, அழகியே ! சொல்லுகின்றேன். அவனுடைய உடன் பிறந்தவருக்குத் தோஷமும், ஒரு கண் ஊனமும், முதலில் பிறக்கும் குழந்தைகட்குத் தீதும் உண்டாகும்.

36. பொருளது குறைச்ச லாகும் புகலுவோம் பின்ஜன் மத்தைத்
திருவள்ளூர் தன்னி லேதான் செழிப்புள சைவ னுக்குக்
கருவினி லுதிப்பா னாகும் காவலன் மூலத் தாலே
பெருநிதி அதிக முண்டாய்ப் பூமியில் வாழ்வா னென்றோம்.

36. பொருளும் மிகவும் குறைவாயிருக்கும். மறு பிறப்பைப்பற்றிச் சொல்லுகின்றோம். திருவள்ளூரில் செல்வவானாகவுள்ள சைவனுக்குப் பிறப்பான். அவன் அரசாங்க உத்தியோகத்தால் (அரசனால்) பெருத்த செல்வங்கள் அடைந்து இப்புவியில் வாழ்ந்து வருவான்.

37. அன்னையும் சிவந்த மேனி அளவிலா சமதே கத்தாள்
கன்னென மொழியே சொல்வள் கண்முகம் வசிய மில்லாள்
இன்னவள் வாயு ரோகி இவள்துணை ஆண்பால் மூன்று
தன்னிலே பெண்பா லொன்று சாற்றுவோம் இல்லம் தெற்கு.

37. ஜாதகனின் தாய் சிவந்த நிறமுடையவள். சமமான சரீர அமைப்புள்ளவள். இனிய வார்த்தைகளைப் பேசுபவள். முகம், கண் இவை வசீகரமில்லாதவை. இவளுக்கு வாயு ரோகமுண்டு. இவளுக்கு மூன்று சகோதரர்களும் ஒரு சகோதரியும் இருப்பர். பிறந்த வீடு தெற்குத் திசையிலுள்ளது.

38. அவளுடைப் பூர்வம் சொல்வேன் அச்சிறு பாக்க முத்திரம்
நவனியில் பேரூர் தன்னில் நாயகி புலைய ளாகிப்
பவமுள மதலை இன்றி பலவித தலங்கள் சென்று
தவமது அதிகம் செய்து தன்மனச் சஞ்ச லத்தால்;

38. ஜாதகனின் தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அவள், அச்சிறு பாக்கத்துக்குக் வடக்கிலுள்ள பெரிய ஓர் ஊரில், புலையர் மறபில் தோன்றி, நன்மை யுள்ள புத்திர பாக்கிய மின்றி, பற்பல ஸ்தலங்களுக்குச் சென்று, நோன்பு நோற்று, தன் மனத்தில் கலக்கமுற்று ;

39. யாவர்க்கும் நல்லோ ளாகி அறத்தின்மே லிச்சை கொண்டு
பாவத்தில் மனம்வை யாமல் பாவையும் மரண மாகி
நேமியில் இக்கு லத்தில் நேர்ந்தன ளென்று சொன்னோம்
சேவலன் கொடியோன் தன்னைச் சேயனுப் பெற்ற தாயே.

39. எல்லோருக்கும் நல்லவளாகி, தருமத்தில் பிரியம் கொண்டு, பாவச் செயல்களில் மனமில்லாமல் மரண மடைந்தாள். மீண்டும் இக் குலத்தில் வந்து பிறந்தாள் என்று கூறினோம். சேவலைக் கொடியில் தாங்கிய சுப்பிரமணியக் கடவுளைப் பெற்ற தாயே !

40. மறுத்துமே கேட்க லுற்றாள் மாதையும் முன்ஜன் மத்தில்
பறைக்குல முதித்தா ளென்றீர் பாவையு மிச்சென் மத்தில்
வரநதி கங்கை வம்சம் வந்தகா ரணங்க ளென்னத்
திறமையாய் முன்ஜன் மத்தில் சிலசில தலங்கள் சென்று ;

40. பார்வதி இடை மறித்துக் கேட்கலானாள். அப்பெண் முற்பிறவியில் பறையர் குலத்தில் தோன்றினாள் என்றீர். இப் பிறவியில் வேளாள மரபினளாகத் தோன்றிய காரணங்கள் என்ன ? திட மனத்துடன் முற்பிறவியில் சிற்சில புண்ணியத் தலங்களுக்குச் சென்று ;

41. நல்லவ ளாகி யேதான் நாயகி வாழ்ந்த தாலே
புல்லினு ளிக்கு லத்தில் புகலுவோ மிவள்பின் ஜன்மம்
அல்லலை அகற்று கின்ற அறுமுகன் தணிகை தன்னில்
சொல்லுவேன் க்ஷத்திரிய சேயாய்த் தோன்றுவா ளிவளே
என்றோம்.

41. நல்லவளாகி வாழ்ந்து வந்ததால், இக் குலத்தில் பிறந்தாள் என்று கூறினேம். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றேம். துன்பங்களைத் தவிர்க்கும் சுப்பிரமணியக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திருத்தணியில் க்ஷத்திரியப் பெண்ணைப் பிறப்பாள் என்று கூறுகின்றேம்.

42. இவன்பிதா மரண காலம் இயம்புவோம் இருபா னென்பான்
அவனியில் மேட மாதம் அறைகிறேம் கண்டம் தானே
நவனியில் மாதுரு விற்கு நாட்டுவோம் அதன்மே லாறும்
கவனமாய்த் தேளின் மாதம் கழருவோம் கண்டம் தானே.

42. ஜாதகனுடைய தந்தையின் மரணகாலம் சொல்லுகின்றேம். இவனுடைய இருபத்தொன்பதாம் வயதில், சித்திரை மாதத்தில், மரணம் கிட்டும். அதற்கு மேல் ஆறு வருடங்களில் அவனுடைய தாய்க்கு மரணம் ஏற்படும். அதுவும் கார்த்திகை மாதத்தில் நேரும் என்றேம்.

43. ஜாதகன் மரண காலம் சாற்றுவோம் அறுபா னேழில்
போதவே துலாமா தத்தில் பூராட நாளி லேதான்
மாதவர் பதத்தைச் சேர்வன் மறுஜன்மம் வேங்க டத்துள்
கோதிலா இக்கு லத்தில் உதிப்பவ னிவனே என்றேம்.

43. ஜாதகனின் மரணகாலத்தைச் சொல்லுகின்றேம். அவனுடைய அறுபத்தேழாம் வயதில், ஐப்பசி மாதத்தில், பூராட நட்சத்திரத்தில் விஷ்ணு பதம் அடைவான். மறு பிறவி திருப்பதியில் தீமையில்லாத இதே குலத்தில் பிறப்பான் இவன் என்றேம்.

44. மனைவியும் பின்னல் கண்டம் வரைந்தனம் இதுவல் லாமல்
கனமுடன் பொதுயோ கத்தைக் கழருவோம் கேளும் தாயே
வினையிலான் கிருஷி செய்வன் வீணப வாத மில்லான்
தனமுளான் காலி விருத்தி தரித்திர மில்லா னுமே.

44. இவனுடைய மனைவிக்கு இவனுக்குப் பிறகு மரணமேற்படும். இவை யல்லாமல் இவனுடைய பொதுயோகத்தைச் சொல்லுகின்றேம். கேளும். தாயே! தீவினையில்லாதவன். விவசாயம் செய்துவருவான். வீண் அபவாத மில்லாதவன். செல்வம் மிகுதியாக உள்ளவன். கால் நடைகள் விருத்தி உள்ளவன். தரித்திர மில்லாதவன்.

45. ஈரஞ்சு ஆண்டு மேலே இயம்புவோம் யோகம் தானும்
கூறுவோம் சல்லிய மில்லான் குடும்பமும் அதிர்ஷ்ட முள்ளான்
நாரியாள் வந்த பின்பு நவிலுவோம் விசேஷ யோகம்
தீரமாம் பூமி யாலே செம்பொன்னும் சேர்க்கை யாமே.

45. ஜாதகனுக்குப் பத்து வயதுக்குமேல் அதிருஷ்டம் விருத்தியாகும். துன்பங்(கடன்)கள் இல்லாதவன். நல்ல குடும்ப முள்ளவன். மனைவி வந்த பின்பு விசேஷமான அதிருஷ்டம் ஏற்படும். பூமியின் விளைவு மிகுதியால் (புதையலால்) செம்பொன் சேரும்.

46. இந்தநற் பலன் களெல்லாம் இசைந்தனம் நவக்கோ ளாலே
முந்திய ஊழ்வினைச சொனனோம் முறைப்படி சாந்தி சொன்னோம்
சுந்தரன் தனக்குச் சொன்ன சுகமெல்லாம் அனுப விப்பான்
இந்திர னிரைஞ்சு மாதே எழில்சுதன் பலனி தாமே.

46. இந்த நற்பலன்களை நவகிரக நிலையை ஆராய்ந்து கூறினோம். முற்பிறவியில் செய்த தீவினையால் வந்த பலனைச் சொன்னோம். அவை தீரச் சாந்தி சொன்னோம். இந்த அழகனுக்குச் சொல்லிய சுகங்களையெல்லாம் அவசியம் அனுபவிப்பான். இந்திரனால் போற்றப்படும் தாயே! இவனுடைய பலன்கள் இவைதாம்.

47. பிறந்தசேய் ஜனன காலம் பொன்திசை தனி லிருப்புச்
சிறந்திடு ஆண்டு ரண்டும் திங்களும் நான்க தாகும்
குறைந்திடும் பலன்க ளெல்லாம் குழப்பமா மனது முண்டு
தாமுடன் காலி பீடை தன்பந்து சூதம் காணும்.

47. ஜாதகனுடைய ஜனன காலத்தில் குருமகாதசையில் செல்லுப் போக, பாக்கி இரண்டு வருடங்களும் நான்கு மாதங்களுமாம். அப்போது பலன்கள் குறையும். சஞ்சலமான மனமு முண்டு. கால்நடைகட்குப் பீடையும் உறவினர்களுக்கு அசுபங்களும் உண்டாகும்.

48. சனிதசை காலம் தன்னில் சந்தேக ரோகம் வாய்க்கும்
கனிவுளர் பகையு முண்டு காலிகள் சேத மாகும்
இனிமையாய் மாதுரு வர்க்க மெய்திடும் சூத கங்கள்
வனிதையும் வருவா ளாகும் வரும்துணை விருத்தி என்றோம்.

48. சனிமகாதசையில் சந்தேகமான நோய் ஒன்று ஏற்படும். இரக்க முள்ளவர் (சிநேகிதர்கள்) விரோதமும் உண்டாகும். கால்நடைகட்குச் சேத முண்டாகும். தாயின் வர்க்கத்தினருக்கு அசுபங்கள் ஏற்படும். மனைவி வருவாள். உடன் பிறந்தவர் விருத்தியும் உண்டாகும்.

49. மாதுரு மார்க ளுக்கு வந்திடும் பீடை தானும்
ஓதுவேன் சுபங்க ளுண்டு உலகினில் செட்டுச் செய்வன்
மேதினில் சிலது சேதி விளம்புவோம் விபரம் ரண்டில்
போதக வரனை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

49. தாய்க்கு ரோகம் வந்திடும். நற்காரியங்களும் நடைபெறும். உலகில் வியாபாரம் செய்துவருவான். மற்ற விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். யானை முகத்தோனைப் பெற்ற புண்ணியவதியே! கேளாய்.

# ஜாதகம் 11

1. புதனும் சனியும் தூக்கம் பூமகன் மேட மாக
மதிகுரு வீணை யாக மாதையில் கேது தங்கக்
கதிர்பரப் பினிலே தங்கக் கரும்பாம்பு மீன மாகச்
துதிஜன்மம் மிதுன மாகத் சொல்லுவீர் பலனைத் தானே.

1. புதன் சுக்கிரன் சனி துலாத்திலும், செவ்வாய் மேஷத்திலும், சந்திரன் குரு மிதுனத்திலும், கேது கன்னியிலும், சூரியன் விருச்சிகத்திலும், ராகு மீனத்திலும் நின்று, ஜன்ம லக்கினம் மிதுனமாக விருந்தால், ஏற்படும் பலனை சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ராகு | செவ் வாய் | | லக்கினம் சந்திரன் குரு |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| | சூரி யன் | புதன் சுக்கிரன் சனி | கேது |

2. அத்திரி சொல்லு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தகன் கீழ்ப்பால் வாசல் விளம்புவோம் வடதென் வீதி
அத்தினி மாரி தெற்கில் பகருவோ மக்கினி தந்தி
சுத்தநன் நதியும் கீழ்ப்பால் தோன்றிடும் உத்தி ரத்தில் ;

2. அத்திரி மாமுனிவர் பதில் சொல்லுகின்றார். இஃது ஆண் பிறப்பு. அவனுடைய பிறந்த வீடு வடக்குத் தெற்கு வீதியில் கிழக்கு நோக்கி யுள்ள வாயிலையுடையது. தெற்கில் மாரியம்மன் கோயிலும், வடகிழக்கில் விநயகர் ஆலயமும், கிழக்கில் சுத்தஜலத்தையுடைய ஒரு நதியும் உள்ளன. வடக்கில் ;

3. மாரியும் கணேசன் மாயோன் அரிவாக னத்தாள் ஈசன்
கூறினேம் சோலை உண்டு குலவிய சமவூர் தன்னில்
வீரிய மாதுரு இல்லம் வித்தகன் ஜேஷ்ட னாகத்
தேரியே வருவா னென்றேம் தேவியே கங்கை வம்சம்.

3. மற்றொரு மாரியம்மன் கோயிலும், மற்றொரு விநயகர் கோயிலும், திருமாலின் ஆலயமும், காளி(துர்க்கையம்மன்) கோயிலும், சிவபெருமான் ஆலயமும்; அருகில் ஒரு சோலையுமுள்ள ஒரு சமநிலைமையுடைய ஊரில், தன் தாயின் வீட்டில் மூத்த புதல்வனாகப் பிறப்பான் என்றேம். அவன் வேளாள வமிசத்தினன்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெரும் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்புத்திர களத்திர யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மம் சாற்றுவோ மிந்நூல் தன்னில்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

4. ஜாதகன் பிறப்பு, யோகங்கள், தந்தையின் யோகம், தாயின் யோகம், புத்திரர்கள் களத்திரம் இவர்களின் யோகம், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளைப் பற்றியும், இந்தநூலில் சொல்லுகின்றோம். உயர்ந்த மணாளனை அடைந்த பார்வதி தேவியே ! கேளுங்கள்.

5. தந்தையின் நிறம்கு ணத்தைச் சாற்றுவோம் சிவந்த மேனி
பந்தமாய் ஒடிச்சல் தேகி பாரினில் ஊக சாலி
நொந்திடும் பேரைக் காப்பன் நேமியில் செட்டுச் செய்வன்
சந்ததம் தியாகி யாவன் சன்மார்க்கன் பொறுமை உள்ளான்.

5. தந்தையின் நிறம் குணம், இவைகளைக் கூறுகின்றோம். சிவந்த உடலுள்ளவன். மெல்லிய சரீரமுள்ளவன். ஊகமுள்ளவன். கஷ்டப்பட்டவர்களை ஆதரிப்பான். உலகில் வியாபாரம் செய்துவருவான். தியாகம் செய்யும் மனத்தினன். நல்லொழுக்கம் உள்ளவன். பொறுமை யுடையவன்.

6. சித்திர வீடு செய்வன் தீரமா நெஞ்சு முள்ளான்
உத்தமர்க் கினிய னாகும் உரைத்திட்டோ மிரண்டு மேதான்
பத்தினி நேய னவன் பாருகள் விருத்தி செய்வன்
நித்தியம் திரிச்ச லுள்ளான் நிதானமாய் வார்த்தை சொல்வன்.

6. அழகிய வீடு கட்டுவான். தைரியமுள்ள மனத்தினன். நல்லவர்கட்கு நல்லவனாக விருப்பான். இவனுக்கு இரு மனைவியர் உண்டென்றோம். மனைவிக்குப் பிரியனவன். விளை நிலங்களைப் பெருக்குவான். அலைச்சலுள்ளவன். மெதுவாகப் பேசுவான்.

7. தனமதி லிச்சை உள்ளான் சகலர்க்கு நல்லோ னவன்
இனமனதில் பெருமை பூண்பன் இன்பமாய் வார்த்தை சொல்வன்
கனமுள குடும்பி யாவன் காலாள்க ளுடைய னவன்
சினமிலான் சகடு முள்ளான் தேவதா பக்தி கொள்வன்.

7. பொருட் செல்வத்தின்மீது விருப்பமுள்ளவன். எல்லோருக்கும் நல்லவன். தன் பந்து வர்க்கத்தில் பெருமை யடைவான். இன்பமடையும்படி பேசுவான். பெருத்த குடும்பி. பணியாட்கள் உடையவன். கோப மில்லாதவன். வாகன வசதி (வண்டி) உடையவன். தெய்வபக்தி யுள்ளவன்.

8. இவனுடைத் துணைவர் தம்மை இயம்பவே முதலோர் காணும்
அவனியில் இளையோ ருண்டு ஆணது ஒன்றே யாகும்
நவனியில் பெண்பா லவ்வாறு நாட்டுவோ மிவனுக் கேதான்
கவனமாய் இளையோன் சேதி கழறுவோம் கேளும் தாயே.

8. தந்தையின் உடன் பிறந்தவர்களை நோக்கின், மூத்தோர் எவரும் இல்லை. இளையவர்கள் உண்டு. ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் இவனுக்கு இருப்பார். ஜாதகனுடைய சிற்றப்பனின் செய்தியைச் சொல்லு கின்றோம். கவனமாகக் கேளும். தாயே!

9. சென்னிறம் வாத தேகி தீரமில் லாத நெஞ்சன்
பின்புத்தி உடைய னாகும் பிரியமாய் வார்த்தை சொல்வன்
பன்னியே உரைப்பா னாகும் பாருகள் விருத்தி செய்வன்
தன்னிலே சொகுச னவன் தன்மனம் கபடு கொஞ்சம்.

9. சிவந்த நிற முள்ளவன். வாயு சரீர முடையவன். தைரிய மில்லாத மனத்தினன். பின் புத்தி யுடையவன். பிரியத்துடன் பேசுபவன். பன்னிப் பன்னிப் பேசுபவன். விளை நிலங்களை விருத்தி செய்வன். ஆடம்பரத்தில் பிரியன். சிறிது கபடமான மனத்தினன்.

10. குடும்பத்தை ஆத ரிப்பன் கோபமும் கொஞ்ச முள்ளான்
அடவுடன் சுகிபு சிப்பன் ஆள்கார ருடைய னவன்
தடபுடல் செய்கை உள்ளான் தருமமாம் புத்தி யாவன்
விடம்போல மனத்த னாகும் வித்தகி கேட்டி டாயே.

10. தன் குடும்பத்தை ஆதரிப்பான். சிறிது கோபமுடையவன். நன்றாகச் சாப்பிடுவதில் இஷ்டன். பணியாட்கள் உடையவன். ஆடம்பரமான செயல்கள் உள்ளவன். தர்மபுத்தி யுடையவன். மனத்தில் கெட்ட எண்ணங்கள் உள்ளவன். தாயே! கேளுங்கள்.

11. தந்தைதாய்க் கர்மம் செய்வன் தானிய விருத்தி செய்வன்
பிந்திய யோக முள்ளான் பலமான குடும்பி யாவன்
வந்தவருக் கன்ன மீவன் வாக்குகள் சுத்த முள்ளான்
கந்தனைப் பெற்ற மாதே கழருவோம் மேலும் கேளே.

11. தன் தந்தை தாயின் இறுதிக் கடன்களைச் செய்பவன். தானிய விருத்தியுள்ளவன். பின்னால் அதிர்ஷ்டங்கள் உடையவன். பலத்த குடும்ப முள்ளவன். பசியென்று வந்தவர்கட்கு அன்ன மளிப்பான். பொய் சொல்லாதவன். (வாக்குச் சுத்த முள்ளவன்.) முருகப் பிரானைப் பெற்ற பார்வதியே! சொல்லுகின்றோம். மேலும் கேள்.

12. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணோம்
சித்தமாய் உதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொன்னோம்
பத்தினி ஒன்றே யாகும் பராசரும் கேட்க லுற்றார்
வித்தகன் தனக்குப் புத்திரர் விளங்காது என்று சொன்னீர்.

12. புத்திர விருத்தியைச் சொல்ல பலமில்லை. நிச்சயமாகப் பிறந்தாலும் நிலையாரென்று கூறுகின்றோம். மனைவி ஒருத்தியே. பராசர முனிவர் கேட்கலானார். இவனுக்குப் புத்திரர் விளங்க மாட்டார் என்று சொன் னீர்களே.

13. ஏது காரணத்தி னாலே இலகாது மதலை தானும்
ஓதுவீர் முனியே என்றாள் உத்தமன் முன்ஜன் மத்தில்
பாதக மனந்தம் செய்தான் பாவத்தான் மதலை ஈனம்
நீதியாய் அந்தத் தோஷம் நிகழ்த்துவீர் முனியே என்றாள்.

13. என்ன காரணத்தால் புத்திர விருத்தி ஏற்படாது ? சொல்லுங்கள், முனிவரே ! என்றாள். இவன் முற்பிறவியில் அநேக தீச் செயல்கள் செய்தான். அந்தப் பாவத்தால் புத்திர தோஷம் ஏற்பட்டது. அந்தத் தோஷம் என்ன வென்று சொல்லுங்கள், தவமுனியே ! என்று பார்வதி கேட்கலானாள்.

14. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் காஞ்சி கீழ்ப்பால்
தன்னிலே வைச்ய வம்சம் தானவ னுதித்தா னென்றோம்
பொன்னொடு பணிதி பெற்றுப் பூமியில் செட்டுச் செய்து
இன்னவன் மனைவி யோடு இவனுமே வாழு நாளில் ;

14. இவன் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்துக்குக் கிழக்கில், வைசிய குலத்தில் பிறந்தான். பொன், ஆபரணங்கள் முதலிய வற்றை யடைந்து, வியாபாரம் செய்து, இவன் தன் மனைவியுடன் வாழ்ந்து வரும் நாளில் ;

15. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தானவர் வாசம் செய்வர்
மந்திரம் ஓதும் வேத மறையவர் பூசை செய்வார்
இந்தவாறு இடத்திலே தான் இரவினி லேது செய்தான் ?

15. அவ்வூரில், நதியின் பக்கத்தில் இருந்த அரச மரத்தின் கீழே விநயகரும், நாகமும் வாசம் செய்து வந்தனர். இன்னும் பல தெய்வங் களும் இருந்தனர். மந்திரங்கள் ஓதும் அந்தணர் பூசை முதலியன செய்து வருவார்கள். இங்ஙன முள்ள இடத்தில் இவன் இரவில் என்ன செய்தான் ! தெரியுமா ?

**கருவழித்த தோஷம்**

16. விதவைஅம் மரத்தின் கீழே வித்தகன் போகம் துய்த்தான்
அதனாலே கருவு தங்கி அநேகமாய் ஔஷத மீயச்
சதியினால் கருவு நீங்கிச் சத்தியும் தீர்க்க மானாள்
அதுவொரு தோஷ மாச்சு அறைகிறோ மிதுவு மல்லால்.

16. அந்த அரச மரத்தின் கீழே ஒரு விதவையுடன் இன்பம் அனுப வித்தான். அதனால் அவளுக்குக் கருத் தங்கியது. அதை நீக்கப் பல விதமான ஔடதங்கள் கொடுத்தான். அதனால் கரு நீங்கியது. அவ் விதவையும் சுகமானாள். அந்த ஒரு தோஷம் ஏற்பட்டது. மற்றொன்றும் கூறுகின்றோம்.

17. மற்றொரு நாளி லேதான் மறைக்குலம் விதவை மாது
உற்றனள் இவன்பால் தன்னில் உண்மையாய்ச் சரக்கு வாங்க
வித்தகன் அவள்மேல் மோகம் விரும்பியே சிலேடை சொல்லக்
குற்றமாம் மனத்தி லெண்ணிக் கூறுவா ளந்த மாது.

17. வேறொரு நாளில் அந்தணர் குலத்தில் தோன்றிய ஒரு கைம்பெண் இவனிடம் சாமான்கள் வாங்குவதற்காக வந்தாள். இவன் அவள்மீது மோக மடைந்து, அவளையடைய நினைத்து, அவளிடம் இரு பொருள்படும்படி பேசினான். அதை அம்மாது அறிந்து மனவருத்தமடைந்து கூறுகிறாள்.

அந்தணப்பெண் சாபம்

18. மோகங்கள் கொண்ட பாவி மொழிந்திட்டாய்க் குற்ற மாகப்
பாகமாய் இச்சென் மத்தில் பருகாது மதலை தானும்
ஆகவே குலங்கள் நாசம் அணுகிய ஜனனம் தோறும்
தாகவே மதலை இன்றிச் சஞ்சலப் படுவாய் என்று ;

18. என்மீது மோகம் கொண்ட பாவியே ! நீ அடாத வார்த்தைகளைச் சொன்னாய். அதனால் இப்பிறவியில் உனக்குப் புத்திரர்கள் தோன்றார். குலம் நாசமாகும். இனி வரும் ஜன்மம் தோறும் குழந்தைகளின்றி மனச் சஞ்சலம் அடைவாய் என்று ;

19. சொல்லியே மாது தானும் சொந்தஇல் சென்றா ளென்றோம்
வல்லியின் சாபம் தானும் வந்திற்று அச்சென் மத்தில்
நல்லதோர் மதலை இன்றி நாயகன் மரண மாகிப்
புல்கினா னிக்கு லத்தில் புக்கிற்று முன்னூழ்த் தோஷம்.

19. சொல்லி விட்டு அந்தப் பெண் தன் சொந்த வீட்டுக்குச் சென்றாள் என்றோம். பெண்ணின் சாபம் அவனை அப்பிறவியில் வந்தடைந்தது. நல்ல புத்திரர் இன்றி இவன் மரண மடைந்தான். மீண்டும் இப் பிறவியில் இக் குலத்தில் பிறந்ததும் முன் ஜன்மத் தீவினை இவனைப் பற்றியது.

20. சுதர்களும் பிறக்கில் தீதாம் சொல்லுவோம் கிரியை ஒன்று
பதியினில் கர்ம சாந்தி பாலகன் செய்வா னாகில்
விதவைகள் சாபம் நீங்கி விருத்தியாம் மதலை தாமும்
விதியதைச் செய்யா னாகில் விளங்கினும் சுதர்கள் தோஷம்.

20. புத்திரர்கள் பிறந்தாலும் நிலையார். அந்தத் தோஷம் தீரச் சாந்தி யொன்று கூறுகின்றோம். அவன் தன் வீட்டில் சாந்தி செய்தால் விதவைக ளிட்டசாபம் நீங்கிப் புத்திரர்கள் விருத்தியாவர். சாந்தியைச் செய்யாவிடில் புத்திரர்களுக்குத் தோஷமுண்டாகும்.

21. சொற்படி செய்வா னாகில் தோன்றிடு மாண்பால் ஒன்று
மெய்ப்புடன் கன்னி அவ்வாறு விருத்தியா மிவனுக் கேதான்
மெய்ப்படி துணைவி சேதி வரைகிறோ மிரண்டி லேதான்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றாவே.

21. நாங்கள் சொல்லியபடி சாந்தி செய்தால் ஆண் குழந்தை ஒன்றும் பெண் ஒருத்தியும் விருத்தியாவர். மற்றபடி உடன் பிறந்தவள் செய்திகளை இரண்டாம் பாகத்தில் விவரமாகச் சொல்லுவோம். கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமானின் தேவியே ! நாங்கள் கூறியவை தவறா.

22. இக்குண முடைய னுரும் இவனுக்குத் தாரம் ரண்டில்
தொக்கவே இளையா ளுக்குத் தோன்றினு னிவனே என்றேம்
மிக்கவே இவன்கு ணத்தைச் சொல்லுவோம் கருநி றத்தான்
தக்கவே கல்வி உள்ளான் தாக்ஷிண்யன் பித்த தேகன்.

22. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுடைய இவனுக்கு ஏற்பட்ட இரு மனைவியரில் இளையவளுக்குப் பிறந்தவன் இந்த ஜாதகன் என்றேம். இவனுடைய குணத்தைக் கூறுகின்றேம். கருமை கலந்த சிவப்பு நிற முள்ளவன். கல்வியறிவுடையவன். தாட்சிணிய முடையவன். பித்த தேக முள்ளவன்.

23. புத்திமான் பொறுமை சாலி புண்ணிய மனத்த னுரும்
பத்தினி நேய னுரும் பாருகள் விருத்தி செய்வன்
நித்தியம் சீல முள்ளான் நிகர்க்காத வடிவு முள்ளான்
சித்தமாய்க் கழுத்தி லேதான் சிறந்திடும் வடுவும் காணும்.

23. புத்திமான். பொறுமைசாலி. புண்ணியமுள்ள மனமுடையவன். மனைவிக்குப் பிரியனுக விருப்பான். விளை நிலங்களைப் பெருக்குவான். நல்லொழுக்க முள்ளவன். ஒப்பற்ற அழகிய உடலுள்ளவன். காதிலும், கழுத்திலும் ஒரு மருவுள்ளவன்.

24. யோசனை பலவும் செய்வன் உண்மையா மனத்த னுரும்
காசுமேல் ஆசை உள்ளான் கரமதில் கமல ரேகை
பாசமாய் எவர்க்கும் நல்லன் பந்துவுக் கினிய னுரும்
போசன சுகிய னென்றேம் பூமியும் விருத்தி செய்வன்.

24. பலவிதமான யோசனைகள் செய்வான். உண்மையுள்ள மனத்தினன். காசின் மேல் ஆசையுள்ளவன். கையில் கமலரேகை உள்ளவன். எல்லோருக்கும் அன்புடையவனுகவும் நல்லவனுகவு மிருப்பான். உறவினருக்குப் பிரியனுக விருப்பான். சாப்பாட்டில் பிரியன். விளை நிலங்களை விருத்தி செய்வான்.

25. பலவிதச் செட்டுச் செய்வன் பஞ்சைமேல் இரக்க முள்ளான்
நலமுள வார்த்தை கூர்வன் நாதனுர் பத்தி பூண்பன்
விலைமாதர் விருப்பம் கொள்ளான் வீணப வாத மில்லான்
கலகங்கள் கூரு னுரும் காதலி கேட்டி டாயே.

25. பலவிதமான வியாபாரங்கள் செய்வான். ஏழைகளின்மீது இரக்க முள்ளவன். நன்மையுள்ள வார்த்தைகளைப் பேசுபவன். சிவபெருமான் மீது பக்திகொள்ளுவான். வேசையர்மீது விருப்பமில்லாதவன். அபவாதங் களில்லாதவன். கலகஞ் செய்யாதவன். தாயே! கேட்டிடுவாய்.

26. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோம் மூத்தோர் காணேம்
அவனியில் பெண்பா லொன்று அறைந்தன மிவனுக் கேதான்
நவனியில் மணத்தின் காலம் நாட்டுவோம் பதினு ருண்டில்
கவனமாய் மாதுரு வர்க்கம் காதலி வருவா ளாமே.

26. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைக் கூற, மூத்தவர் இல்லை. இவனுக்குச்சகோதரி யொருத்தியுண்டு. இவனுடைய திருமணக் காலத்தைக் கூறுவோம். இவனது பதினாறும் வயதில், தன் தாயின் வர்க்கத்திலிருந்து மனைவி வருவாள்.

27. தாரமு மொன்று என்றேம் சத்தியின் குணத்தைக் கேளாய்
கூறுவாள் சுகமாய் வார்த்தை குலத்துக்கு நல்லோ ளாவள்
டாரிய புத்தி உள்ளாள் பஞ்சையைக் காக்க வல்லாள்
தீரமா மனத்த ளாவள் தேவதா பக்தி கொள்வள்.

27. மனைவி ஒருத்தியே. அவளுடைய குணத்தைக் கேட்டருள்வாய். இன்பமாகப் பேசுபவள். தன் குலத்துக்கு நல்லவளாக விருப்பாள். தாராள புத்தி யுள்ளவள். ஏழைகளை ஆதரிக்கும் குணமுள்ளவள். தைரிய மனத்தினள். தெய்வபக்தி யுடையவள்.

28. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பா லொன்று
சித்தமாய்ப் பெண்பால் ரண்டு செப்புவோம் தீர்க்க மாகப்
பத்திய மூன்று நஷ்டம் பகருவோ மிவனுக் கேதான்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறேம் மேலும் கேளே.

28. ஜாதகனுடைய புத்திரவிருத்தியைப் பற்றிச் சொல்லுகின்றேம். ஆண் மகன் ஒருவனும் பெண்கள் இருவரும் பிறந்து நீண்ட ஆயுளுட னிருப்பர். ஆனால் மூன்று குழந்தைகள் பிறந்து மரிக்கும். யானை முகத் தோனைப் பெற்ற தாயே! சொல்லுகின்றேம். மேலும் கேள்.

29. மாதுரு நிறம் குணத்தை வரைகிறேம் மால்நி றத்தாள்
மேதினில் சமதே கத்தாள் வித்தகி பொறுமை சாலி
தீதுகள் எண்ணு ளாகும் சொல்லுமுன் கோபம் கொஞ்சம்
வேதனை எண்ணு நெஞ்சம் வரன்சுகம் குறைச்ச லுள்ளாள்.

29. தாயின் நிறம் குணங்களைச் சொல்லுகின்றேம். கரிய நிறமுள்ள வள். சமமான சரீர அமைப்புள்ளவள். பொறுமை யுள்ளவள். கெட்ட எண்ணங்கள் நினையாதவள். சொல்லுவதற்கு முன் கோபமடைவாள். துன்பங்களை எண்ணாத மனத்தினள். மணவாழ்க்கைச் சுகம் (கணவனால் சுகம்) குறைவாகவுள்ளவள்.

30. அன்னங்கள் போட வல்லாள் அவள்மனச் சஞ்ச லத்தாள்
பின்னமில் லாத தேகி பித்ததே கத்தா ளென்றேம்
பன்னியே உரைக்க வல்லாள் பாலர்மேல் பிரிய முள்ளாள்
இன்னவள் குடும்பி யாவள் ஈச்வரி கேட்டி டாயே.

30. ஏழைகட்கு அன்னமளிக்கும் தன்மையள். மனத்தில் சஞ்சல முள்ளவள். குறைவில்லாத தேகக் கட்டுள்ளவள். பித்த தேகி. பன்னிப் பன்னிப் பேசுபவள். குழந்தைகளின்மீது பிரியமுள்ளவள். நல்ல குடும்ப முள்ளவள். தாயே! கேட்டிடுவாய்.

31. துணைவர்கள் ஆண்பால் காணுள் சோதரி இரண்டு மாகும்
அணையவே விருத்தி என்றோம் அவர்களும் சுகமாய் வாழ்வர்
கனமுடன் மூத்தோ ரில்லாள் கமுருவோ மிளையோ ராக
இணையிலா இவள்முன் ஜன்மம் இயம்புவோம் கேளும் தாயே.

31. உடன் பிறந்தவர்களில் சகோதரரில்லை. இரு சகோதரிகள் உண்டு என்றும், அவர்கள் சுகமாக இருப்பார்கள் என்றும் கூறுகின்றோம். அவளுக்கு மூத்த சகோதரிகளில்லை. இருவரும் இவளுக்கு இளையவர். இவளுடைய முற்பிறவியைப்பற்றிச் சொல்லுகின்றோம். கேளும், தாயே!

32. கச்சிக்கு உத்தி ரத்தில் கனமிலாச் சிற்றூர் தன்னில்
இச்சையாய் வன்னிய வம்சம் இவளுமே உதித்தா ளென்றோம்
துச்சமாம் குணங்க ளின்றிச் சுதர்களும் வரனு முண்டாய்
அச்சமில் லாமல் வாழ்ந்தாள் அறைகிறோ மூழி தானே.

32. காஞ்சிபுரத்துக்கு வடக்கில் ஒரு சிற்றூரில் வன்னிய குலத்தவளாகப் பிறந்தாள் என்று கூறுகின்றோம். கெட்ட குணங்களில்லாமல், மக்கள் கணவன் இவர்களைப் பெற்று, பயமில்லாமல் வாழ்ந்து வந்தாள். அப்போது ஏற்பட்ட தீவினையைக் கூறுகின்றோம்.

**கடையில் திருடுதல்.**

33. திருவிழாப் பார்க்க வேண்டிச் செல்வியும் கச்சி சென்று
வரனுடன் வந்தா ளாகும் மஞ்சள்கள் சிவப்புச் சீப்புப்
பெருமையாய் வாங்கிக் கொண்டு பணமதை ஈயா ளாகி
விரைவினில் நடந்தா ளென்றோம் விளம்புவான் வணிகன் [தானும்.

33. திருவிழாப் பார்க்கக் காஞ்சிபுரத்துக்குச் சென்று, தன் கணவனுடன் கடைத் தெருவுக்குப் போய், மஞ்சள் சீப்பு குங்குமம் இவைகளைப் பெருமையுடன் வாங்கிக்கொண்டு, பணம் தராமல் வேகமாகச் சென்றுவிட்டாள். வியாபாரியும் அதையறிந்து கூறுகின்றான்.

34. காசுக ளீயா ளாகிக் கபடமாய்ப் போன பாவி
பாசமாய் வரனும் மாண்டு பாலிய விதலை யாகி
நாசமாய்ப் போவாய் என்று நவின்றனன் வணிகன் தானும்
பேசுபோல் அச்சென் மத்தில் புருடனும் மரண மாகி;

34. காசு கொடுக்காமல் கெட்ட எண்ணத்துடன் சென்ற பாவியே! உன் கணவன் மாண்டு, நீ பால்ய விதவையாகி, நாசமாய்ப்போவாய் என்று கூறினான், வியாபாரி. அதேபோல் அவள் கணவன் அப் பிறவியில் மாண்டு;

35. மத்திய வயதி லேதான் மங்கையும் விதவை யாகிப்
பத்தியாய் முருகன் பாதம் பாவையும் மரண முண்டாய்
வித்தகி மரண மாகி வேதனல் வரையப் பட்டுச்
சத்தியு மிக்கு லத்தில் சார்ந்தன ளென்று சொன்னோம்.

35. இடையிலேயே இவள் பால்ய விதவையாகி, பக்தியுடன் முருகப் பெருமான்மீது பக்தி பூண்டு, கடைசியில் இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு அவள் இக் குலத்தில் பிறந்தாள் என்று சொன்னோம்.

36. இச்சென்மம் தன்னி லேதான் இலகிடும் முன்னூழ்ச் சாபம்
கச்சணி மாதுரு விற்குக் காலத்தில் கணவ னுய்வன்
நிச்சயம் தப்பா தாகும் நிமலியும் கேட்க லுற்ருள்
துச்சனம் எதனு லேதான் தோன்றிடும் அத்திரி என்ருள்.

36. இப் பிறவியில் அவளுக்கு முற் பிறவியின் தீவினையால் ஏற்பட்ட சாபம் இவளைப் பற்றியது. இப் பெண்ணுக்குக் காலத்தில் கணவன் வருவான். நிச்சயமாகத் தப்பாது என்ருர். பார்வதியும் கேட்கலானுள். அத்திரி முனிவரே! இவளுக்குச் சுகவாழ்வுக் குறைவு எதனுல் ஏற்பட்டது, என்ருள்.

37. கேதுவும் நாலில் நிற்கக் கெட்டிடும் சுகமே தானும்
ஓதுவேன் இவள்பின் ஜன்மம் உற்றதோர் காஞ்சி தன்னில்
மேதினில் சௌராஷ்டிர வம்சம் வித்தகி உதிப்பா ளாகும்
போதவே தனங்க ளுண்டாம் புகழ்ச்சியாய் வாழ்வா ளாமே.

37. கேது நாலா மிட மாகிய கன்னியில் இருப்பதால் இவளுக்குச் சௌக்கியம் கெட்டுவிடும். இவளுடைய மறு பிறப்பைச் சொல்லு கின்றோம். இப் பிறவியில் பிறந்த அதே காஞ்சியில் சௌராஷ்டிர மரபில் இவள் பிறப்பாள். மிகுதியாகச் செல்வங்களை அடைந்து புகழுடன் வாழ்ந்து வருவாள்.

38. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் அவ்வூர் மேற்கில்
சந்ததம் சமண வம்சம் தானவ னுதித்தா னென்ருேம்
முந்திய தனங்கள் பெற்று முயற்சியாய்க் குடும்பி யாகிப்
பந்தமாய் வாழு நாளில் பகருவோ மூழி தானே.

38. ஜாதகனின் தந்தையின் முற் பிறவியைச் சொல்லுகின்ருேம். அவ்வூருக்கு மேற்கில், சமண வம்சத்தில் பிறந்தான். உயர்வான செல்வங் களைடைந்து, உயர்ந்த குடும்பத்தைப் பெற்று, வாழ்ந்து வரும் நாளில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்ருேம்.

**மாங்கல்யம் தருவதாக உறுதிகூறி ஏமாற்றியது.**

39. ஏழையன் மணத்துக் காக இவனைமாங் கலியம் கேட்கத்
தாழ்வின்றித் தாரே னென்று தைரியம் சொன்ன போது
ஆழியில் மணங்கள் தன்னை அவனுமே சேக ரித்துச்
சூழவே கேட்கும் போது சுந்தர னில்லை என்ருன்.

**39. ஏழையொருவன் கல்யாணத்துக்காக இவனை மாங்கல்யப் பிச்சை கேட்கும்போது (ஜாதகனின் தந்தை) அவசியம் தருகிறேன் என்று சொல்லி, அவ்வேழை மற்ற தேவைகளைச் சேகரித்து வைத்து இவனைக் கேட்கும் போது, இவன் இல்லை யென்று சொல்லிவிட்டான்.**

40. வேறுமாங் கல்யம் தன்னை வாங்கியே மணம் முடித்துக்
கூறுவான் ஏழை தானும் கொண்டவள் மரண மாகித்
தீரமாம் இரண்டாம் மாது செய்துமே சீக்கி ரத்தில்
மரலியால் மரண மாவாய் வரைந்தனன் ஏழை தானும்.

40. வேறொரு மாங்கல்யம் வாங்கித் திருமணத்தை முடித்துவிட்டுச் சாபமிட்டான். உன் மனைவி மாண்டு, இரண்டாம் மனைவியை மறுபடியும் அடைந்து, சீக்கிரத்தில் மரணமடைவாய் என்று ஏழை சொன்னான்.

41. பஞ்சையின் சாபம் தானும் பற்றிற்று அச்சென் மத்தில்
வஞ்சியும் மரண மாகி மரலியின் பதிக்குச் சென்றான்
கஞ்சனால் வரையப் பட்டுக் கங்கைதன் குலத்தி லேதான்
மிசஞ்சியே உதித்தா னென்றோம் மேவிடும் முன்னூழ்ச் சாபம்.

41. ஏழையின் சாபம் அப் பிறவியிலேயே இந்த ஜாதகனின் தந்தையைப் பற்றியது. மனைவியும் மாண்டு, இவனும் இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, வேளாளர் மரபினில் பிறந்தான். முற்பிறவி யில் செய்த வினை இப் பிறவியிலும் தொடர்ந்தது.

42. சொல்லது போலே இங்குத் தோன்றிடு மிச்சென் மத்தில்
வல்லவன் பின்ஜன் மத்தை வரைகிறோம் அருணை தன்னில்
நல்லதோர் பிரம்ம சேயாய் நாயக னுதிப்பா னென்றோம்
அல்லலு மில்லா னாகி அவனுமே வாழ்வா னாகும்.

42. சொன்னது போல் இப் பிறவியிலும் ஏற்படும். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணாமலையில், சிறந்த அந்தண குலத்தவனாகப் பிறப்பான் என்று கூறுகின்றோம். அவன் துன்பங்களின்றி வாழ்ந்து வருவான்.

43. சாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் பக்ஷி தன்னில்
மேதினில் செங்குந்த வம்சம் இதனிலே யுதித்தா னம்மா
போதவே தனங்கள் பூமி பிரபல முள்ளா னாகிக்
கோதிலா மார்க்கம் தன்னில் குறைகளைத் தீர்க்க வேண்டி ;

43. ஜாதகனுடைய முற்பிறவியைக் கூறுகின்றோம். திருக்கழுகுக்குன்றத் தில் செங்குந்த மரபில் பிறந்தான், தாயே ! மிகுந்த செல்வங்கள் பூமி முதலியவைகள் உள்ளவனாகி, சாலையோரங்களில் செல்பவர்களின் ஆயா சத்தைத் தீர்ப்பதற்காக ;

44. தாகப்பந் தலும மைத்துச் சகலர்க்கு நல்லோ னாகிப்
பாகமாய் மரண மாகிப் பாலகன் இக்கு லத்தில்
வேகமா யுதித்தா னென்றோம் விளம்புவோ மிவன்பின் ஜன்மம்
மோகமாய்க் காஞ்சி தன்னில் எய்துவா னிக்கு லத்தில்.

44. தண்ணீர்ப்பந்தல் அமைத்து, எல்லோருக்கும் நல்லவனாகி, காலத் தில் மரணமடைந்து, ஜாதகன் இப்பிறவியில் இக் குலத்தில் பிறந்தான் என்றோம். இவனுடைய மறுபிறவியைக் கூறுகின்றோம். காஞ்சிபுரத்தில் இதே குலத்தில் பிறப்பான்,

45. வணிபங்கள் மிகவே செய்து வாழ்வனு மவனே என்றோம்
அணையவே தந்தை காலம் அறைகிறோம் நாலு ஆண்டில்
பிணையான கும்ப மாதம் பேசுவோம் மார கங்கள்
பனிவறை மகளாய் வந்த பார்வதி கேட்டி டாயே.

45. வியாபாரங்களை மிகுதியாகச்செய்து வாழ்ந்து வருவான் என்று கூறுகின்றோம். ஜாதகனின் தந்தைக்கு மரணகாலம் அவனுடைய நான்காம் வயதில், மாசி மாதத்தில் ஏற்படும். இமவானின் புத்திரியாக அவதரித்த பார்வதியே ! கேட்டிடுவாய்.

46. மாதுரு மரண காலம் வரைகிறோம் முப்பா றுறில்
கோதிலாக் கூனி மாதம் கூறுவோ மிவனுக் கேதான்
ஓதுவோ மறுபா றுறில் உயரானி மாதம் தன்னில்
தீதிலாப் பருவம் தன்னில் செப்புவோம் கண்டம் தானே.

46. ஜாதகனின் தாய்க்கு அவனுடைய முப்பத்தாறும் வயதில் மரணம் உண்டாகும். அவள் குறைவில்லாத பங்குனி மாதத்தில் இறப்பாள். ஜாதகன், தன்னுடைய அறுபத்தாறும் வயதில் ஆனிமாதம் பௌர்ணமியில் மரணமடைவான் என்று கூறுகின்றோம்.

47. இன்னவன் பொதுயோ கத்தை இயம்புவோம் சுகமு முள்ளான்
அன்னையி னுர்ச்சி தங்கள் அணுகிடும் பாதி தானும்
தன்னிலே கீர்த்தி மானும் தராதர மறிய வல்லன்
சொன்னசொல் தப்பா னுகும் சுத்தநன் மனத்த னென்றோம்.

47. இவனுடைய பொது யோகங்களைச் சொல்லுவோம். சுகமுள்ளவன். தன் தாயினுடைய சொத்துக்களில் பாதி இவனை வந்தடையும். உலகில் கீர்த்தி பெறுவான். நன்மை தீமைகளின் தராதரத்தை அறியவல்லவன். சொன்ன சொல் தவருதவன். சுத்தமுள்ள மனத்தினன் என்று கூறுகின்றோம்.

48. தந்தையி னுர்ச்சி தத்தைத் தானவன் விருத்தி செய்வன்
சொந்தமாய்ப் பூமி சேர்ப்பன் துறவிகள் நேசம் கொள்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மன்னர்கள் பேட்டி பூண்பன்
சந்ததம் செட்டுச் செய்வன் தந்தைக்கு மேலாய் வாழ்வன்.

48. தன் தந்தையால் சம்பாதிக்கப்பட்ட பொருளைப் பெருக்குவான். தான் சொந்தமாகவும் நிலங்களை வாங்குவான். பரதேசிகளிடத்தில் பிரியமானவன். அடைந்தவர்கட்கு அன்புடன் அன்னம் அளிப்பான். அரசர்களைப் பேட்டி காண்பான். வியாபாரம் செய்து வருவான். தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான்.

49. பால்தயிர் இஷ்டம் கொள்வன் பருத்ததோர் குடும்பி யாவன்
சீலமா சார னுவன் சேயிழை ஒருத்தி யாவள்
ஞாலமேல் கோவின் விருத்தி நற்றிருப் பணியும் செய்வன்
ஆலத்தை உண்டோன் தேவி அறைந்தன மொழிகுன் றுவே.

49. பால் தயிர் இவைகளில் விருப்பமுள்ளவன். பெரிய குடும்பி. நல்லொழுக்கமும் ஆசாரமும் உள்ளவன். மனைவி ஒருத்தியே. அவனுக்குப் பசுக்கள் பெருக்கமுண்டு. நல்ல ஆலயப்பணிகளும் செய்வான். ஆலகால விஷத்தை அருந்திய சிவபெருமானின் தேவியே! சொன்ன சொற்கள் தவறு.

50. பிறந்தசேய் ஜனன காலம் பொன்திசை ஆண்டு ஆறும்
சிறந்திடும் திங்கள் மூன்றும் செப்புவோம் பலனை யாங்கள்
குறைந்திடும் குடும்பம் தானும் கூறுவோம் தந்தை கண்டம்
பறந்திடும் பொருள்க ளெல்லாம் பாட்டன்பாட் டிகளும் கண்டம்.

50. இவனுடைய ஜனனகாலத்தில் குருமகாதசையிருப்பு ஆறு வருடங்களும் மூன்று மாதங்களுமாம். அக்காலத்திய பலன்களைச் சொல்லுவோம். குடும்பம் குறையும். தந்தைக்கு மரணம் ஏற்படும். செல்வங்கள் அழியும். பாட்டன் பாட்டிகளும் மரிப்பர்.

51. ஜாதகன் தனக்கு ரோகம் தங்கிடும் கழுத்தில் கட்டி
போதவே துணைவர் விருத்தி போகிடும் கன்று காலி
மேதினில் விவர மாக விளம்புவோ மிரண்டி லேதான்
மாதவர் துதிக்கா நின்ற மங்கையே மேலும் கேளே.

51. ஜாதகனுடைய கழுத்தில் கட்டி ஏற்படும். நோய் உண்டாகும். உடன் பிறந்தவர் விருத்தியுண்டு. கால்நடைகள் நஷ்டமாகும். மற்ற விபரங்களை இரண்டாம் பாகத்தில் கூறுகின்றோம். பெருந்தவமுனிவர் தோத்தரிக்கும் பார்வதியே! கேளும்.

## ஜாதகம் 12

1. மால்புகர் கோல தாக மங்கலன் மறையோன் சீயம்
நீலனும் மேரு வாக நிலவுமீ னிரவி பெண்ணில்
ஆலமு மிடப மாக அற்றசெம் பாம் பரப்பில்
ஏலவே வீணே ஜன்மம் இருப்பதால் பலன்சொல் வீரே.

1. புதன் சுக்கிரன் துலாத்திலும், செவ்வாய் குரு சிம்மத்திலும், சனி தனுசிலும், சந்திரன் மீனத்திலும், சூரியன் கன்னியிலும், ராகு விருஷபத்திலும், கேது விருச்சிகத்திலும், லக்கினம் மிதுனமாகவுமிருக்கும் நிலையில் ஏற்படும் பலனேச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | | ராகு | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | |
| | | | செவ் வாய் குரு |
| சனி | கேது | புதன் சுக்கிரன் | சூரியன் |

2. அம்பிகை கேட்கும் போது அத்திரி சொல்லு கின்றார்
செம்மையாய் ஆண்பால் ஜன்மம் செனித்தஇல் கீழ்மேல் வீதி
சம்புசேய் வாடை யாகும் வடக்கினில் வயல்க ளோடை
இம்மையில் மாரி மேற்கில் இயல்நதி தக்ஷி ணத்தில்.

2. என்று பார்வதி கேட்கும்போது, அத்திரி முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் குறிப்பு. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில், தெற்கு வாடையில் உள்ளது. வடக்கில் வயல்களும் ஒரு நீரோடையும் உள்ளன. தெற்கில் மாரியம்மன் கோயிலும் ஒரு நதியும் உண்டு.

3. வடகீழ்ப்பால் கணேசன் காளி மருவுவர் சிற்றூர் தன்னில்
அடவுடன் தந்தை இல்லம் அவனுமே உதிப்பா னுவன்
உடன்பிறந் தோர்கள் தந்தை உதித்திடும் மதலே பாரி
திடமுள மாதுரு யோகம் ஜாதகன் முன்பின் ஜன்மம்.

3. வடகிழக்கில் விநயகர் ஆலயமும், காளி கோயிலும் உள்ள ஒரு சிற்றூரில் ஜாதகன் தன் தந்தையின் வீட்டில் பிறப்பான். ஜாதகனுடைய உடன் பிறந்தவர்கள் தந்தை புத்திரர்கள் மனைவி தாய் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறு பிறப்பு ;

4. ஈதுகள் இந்நூல் சொல்வேன் தந்தையின் குணத்தைக் கேளாய்ச்
சதியுள மனத்த னுகும் சமதேகன் கருத்த மேனி
அதிசய வார்த்தை சொல்வன் அடாநிந்தை சொல்வா னுவன்
மதிநிகர் மனையாள் மோகன் மறுமொழி அதிகம் கூறுவன்.

4. இவைகளைப்பற்றி இந்தச்சோதிட நூலில் சொல்லுகின்றேன். ஜாதகனின் தந்தையின் குணத்தைக் கேளுங்கள். சதி செய்யும் மனத்தினன். சமமான சரீர அமைப்புள்ளவன். கருமை நிறமுள்ளவன். அதிசயிக்கும்படி பேசுவான். அடாத நிந்தை வார்த்தைகளைப் பேசுவான். சந்திரனையொத்த அழகிய மனைவிமீது மையலுள்ளவன். மறுமொழி அதிகமாகப் பேசுவான்.

5. கல்வியும் உடைய னுவன் கனத்தவர் நேசம் கொள்வன்
தொல்லையு மதிக முள்ளான் சுகமுளான் பித்த தேகன்
இல்லையென் றுரைக்க மாட்டான் எதிரியை வசியம் செய்வன்
சொல்லுமே இரண்டு முள்ளான் துராசையும் கொஞ்ச முள்ளான்.

5. கல்வியறிவுள்ளவன். பெரியோர் நட்புக்கொள்ளுவான். அதிகமான உபத்திரவங்களுடையவன். சுகமுள்ளவன். பித்த சரீரி. யாசித்தவர்களுக்கு இல்லை என்று சொல்லாதவன். எதிரியை வசியப்படுத்துவான். இருவிதமாகப் பேசுவான். சிறிது கெட்ட ஆசையும் உள்ளவன்.

6. சிலசில தேசம் செல்வன் சீலமு மில்லா னுவன்
நலமுள குடும்ப முள்ளான் நற்பூமி சேர்ப்பா னுவன்
பலகலை கற்பா னுவன் பாரினில் கிருஷி செய்வன்
குலவுநற் கோவு விருத்தி கோமளி மேலும் கேளே.

6. சிற்சில தேசங்களுக்குச் செல்லுவான். நல்லொழுக்கமுமில்லாதவன். நன்மையுள்ள குடும்பமுள்ளவன். விளைநிலங்கள் சேர்ப்பவன். பலவிதமான கலைகளைக் கற்றுணர்வான். உலகில் விவசாயம் செய்து வருவான். பசு முதலியன பெருகும். அழகியே! மேலுங் கேள்.

7. தந்தையின் துணைவர் தம்மைப் பேசுவோ மிருநான் காகும்
அவனியில் ஆண்பால் நான்கு அறைகிறோம் பெண்பா லவ்வாறு
இவைகளும் விருத்தி என்றோம் இவர்பல னிரண்டில் சொல்வேன்
சதியுள தந்தைக் கேதான் தாயது துதிய மென்றோம்.

7. ஜாதகனின் தந்தையின் உடன் பிறந்தவர்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். அவர்கள் எட்டுபேர்கள் உளர். அவர்களில் நான்கு சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் தீர்க்கமாயிருப்பர். இவர்களுடைய பலனை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனின் தந்தைக்குத் தாய்மார் இருவராவர் என்று கூறுவோம்.

8. துதியதாய் என்று சொன்னீர் சுதனெந்தத் தாய்க்கு விருத்தி
மதிநிகர் முதல்தா யுக்கு மைந்தன்உற் பத்தி யாவன்
சதியான இரண்டாம் மாதா சேதியையே கேளு மம்மா
அதிவிரத வான் ஒருத்தன் அவனண்டை வாழா ளாகி;

8. ஜாதகனின் தந்தைக்கு இரு தாய்மார்கள் என்று கூறினீர்களே. எந்தத் தாய்க்குப் புத்திரவிருத்தி. முதல் தாய்க்குத்தான் புத்திரவிருத்தியுண்டாகும். இரண்டாம் தாயின் விஷயத்தைக் கேளுங்கள். அதிகமான நல்லொழுக்கத்தையும் விரதத்தையும் மேற்கொண்டவன் ஒருவன் இருந்தான். அப்பெண் அவனிடம் வாழாதவளாகி;

9. இவன் தந்தை மோசம் செய்து இவள்புத்தி சபலம் கொண்டு
பவமுள சுதன் ஒருத்தன் பத்தினிக் குண்டு சொன்னேம்
அவர்கள்தன் சேதி எல்லாம் அறைகிறே மிரண்டி லேதான்
நவனியி லுடையா னுக்கு நாயகன் ஜன்ம மாவன்.

9. ஜாதகனின் தந்தை (ஆசை வார்த்தைகளால்) மோசம்செய்து, அதனல் அப்பெண் சபலம் கொண்டு வந்தாள். அவளுக்கு ஒரு மகன் உண்டு என்று கூறினேம். அவர்களுடைய செய்திகளையெல்லாம் இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றேம். இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான்.

10. இன்னவன் குணத்தை யாங்கள் இயம்புவோம் மால்நி றத்தான்
கன்னியர் மோக னவன் கல்விமான் பொறுமை உள்ளான்
உன்னத வார்த்தை கூறுவான் உயர்ந்ததோர் செட்டுச் செய்வன்
அன்னிய மனையாள் மோகன் அவனுமே சுசீல னவன்.

10. ஜாதகனுடைய குணத்தை நாங்கள் கூறுகின்றேம். திருமாலைப் போன்ற கரிய நிறமுள்ளவன். கன்னிகள்மீது மையல்கொள்ளுவான். கல்வியறிவுடையவன். பொறுமைசாலி. உயர்வான வார்த்தைகளைப் பேசுபவன். உயர்ந்த வியாபாரம்செய்து வருவான். வேற்றுப்பெண்மீது மோகம் கொள்ளுவான். அவனும் நல்லொழுக்க முடையவன்.

11. உண்டியில் உணவின் மீது உறைப்பொடு புளிப்பி லிச்சை
அண்டினேர் தம்மைக் காப்பன் அல்பவா ணிபங்கள் செய்வன்
எண்டிசைக் கீர்த்தி கொள்வன் இவன்சுகி புசிப்ப னவன்
துண்டமாய் வார்த்தை சொல்வன் சுந்தரி மேலும் கேளே.

11. சாப்பாட்டில் உறைப்புப் பதார்த்தங்களிலும் புளிப்புப் பதார்த்தங்களிலும் பிரியன். அவனை வந்து அடைந்தவர்களை ஆதரிப்பான். சிறிய வியாபாரங்களும் செய்வான். எட்டுத்திசைகளிலும் புகழடைவான். இவன் சாப்பாட்டில் பிரியன். கண்டித்துப் பேசும் தன்மையன். அழகியே! மேலுங் கேள்.

12. உபகாரம் செய்வா னுகும் உத்தமர் நேசம் கொள்வன்
சுபமனை யாள் விரும்பான் திகழ்தந்தை விரோத மாவன்
தபசிக ளுறவு கொள்வன் தாயின்மேல் பிரிய னவன்
கபடுக ளில்லா னவன் கனத்ததோர் பணிகள் சேர்ப்பன்.

12. உபகாரம் செய்வான். நல்லவர் நட்புக்கொள்ளுவான். சொந்த மனையாட்டியை விரும்பாதவன். தன் தந்தைக்கு விரோதமாவான். தவசிகள் நட்புக்கொள்ளுவான். தன் தாயின்மீது பிரியனுவன். சூதில்லா மனத்தினன். விலையுயர்ந்த ஆபரணங்களைச் சேர்ப்பான்.

13. ஞாதிகள் மெச்ச வாழ்வன் நயம்பட வார்த்தை கூர்வன்
பாதிதன் வயதின் மேலே பாக்கிய மதிகம் சேர்ப்பன்
நீதியாய்ச் சொந்த இல்லம் நிகழ்த்துவான் சகடு முள்ளான்
வேதனை எண்ணு நெஞ்சம் விளம்புவோம் தாரம் ரண்டே.

13. உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். நயமாகப் பேசுவான். அவனுடைய பாதி வயதுக்குமேல் அதிகமான பாக்கியங்கள் அடைவான். சொந்தத்தில் வீடு கட்டுவான். வண்டி முதலிய வாகன வசதியுள்ளவன். பிறருக்குத் தீங்கு எண்ணாத மனத்தினன். இவனுக்கு இரு மனைவியராவர் என்று கூறினோம்.

### இருகளத்ர க்ரக நிலை

14. அத்திரி சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்றாள்
வித்தகன் தனக்குத் தாரம் விளம்பினீர் இரண்டு மாகப்
பத்தினித் தானம் தன்னில் பங்குமே இருப்ப தாலே
சித்தமாய்த் தாரம் ரண்டு செப்பினோ மிவனுக் கேதான்.

14. என்று அத்திரி மாமுனிவர் சொல்லும் போது, பார்வதி, இவனுக்கு என்ன காரணத்தால் இரு மனைவிகள் வருவார்கள் என்று வினவினாள். களத்திரஸ்தானத்தில் சனி இருப்பதால் இவனுக்கு இரண்டு தாரமுண்டு என்று கூறினோம்.

15. புயண்டரு மிதனைக் கேட்டுப் புகலுவா ரந்தச் சங்கை
தயையுள குரு ஏழாகிச் சத்தமம் தன்னைப் பார்க்க
வியமது இல்லை தாரம் வேறொரு தாரம் உண்டாய்
நயமுள அந்தச் சங்கை நாட்டுவீ ரென்று கேட்டார்.

15. புயண்டமுனிவர் அதைக் கேட்டுப் பதில் சொல்லுகின்றார். ஏழாமிடத்துக்குரிய குருவானவர் ஏழாமிடத்தைப் பார்ப்பதால் தாரத்துக்கு விரயம் இல்லை. ஆனால் இரண்டாம் மனைவி ஒருத்தி யுண்டு. அந்த விஷயங்களை விபரமாகச் சொல்லுங்கள் என்று கேட்டாள்.

16. களத்திர தானத் தோடே கந்தனும் கூடி நிற்க
வளத்தியாய் இரண்டோன் தன்னை மங்கலன் பார்த்த தாலே
கிளத்தியாய் மணமில் லாமல் கிட்டிடு மன்னிய மாது
சளைத்திடும் குடும்பம் தானும் சடைமுனி இவ்வாறு சொல்ல ;

16. ஏழாமிடத்துக் குரிய குருவுடன் செவ்வாய் கூடியிருப்பதாலும், குடும்பஸ்தானத்துக்குரிய சந்திரனைச் செவ்வாய் பார்ப்பதாலும், ஜாதகனுக்கு இரண்டாவது விவாஹ மில்லாமல் வேற்றுப் பெண் ஒருத்தி சக்களத்தியாக வருவாள். குடும்பம் சளைத்திடும் என்று அகத்திய முனிவர் சொல்லும் போது ;

17. மனைவியு மிருக்க வேறு மறுமனை வருவ தென்ன
அனையவே அந்தச் சேதி அறிவிப்பாய் என்று கேட்கத்
தனயனும் முன்னூழ் தன்னால் தங்குவாள் வேறு மாது
இணையிலா முன்னூழ் தன்னை இயம்புவீ ரென்று கேட்டாள்.

17. மனைவி ஒருத்தியிருக்க வேற்றுமனைவி வருவது எப்படி? அந்த விபரங்களைச் சொல்லுங்கள், என்று கேட்கும் போது, ஜாதகனுடைய முற்பிறவியில் ஏற்பட்ட தீவினையால் வேற்று மாது ஒருத்தி வருவாள் என்றார். பார்வதி, முற்பிறவியில் செய்த தீவினையைச் சொல்லுங்கள், என்று கேட்டாள்.

18. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் பதிக்கு உத்திரம்
போதவே ரெட்டி யாகிப் புகழுமே அதிகம் பெற்றுப்
பூதலம் தன்னில் செட்டுப் பூமியு முள்ளா ளுகி
மேதினில் மனைவி மைந்தர் வித்தகன் வாழு நாளில் ;

18. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருப்பதிக்கு வடக்கில் ரெட்டியார் மரபில் பிறந்து, அதிகக் கீர்த்தியடைந்து, உலகில் வியாபாரம் செய்து வந்து, விளைநிலங்கள் உடையவனுகி, மனைவி மைந்தர்களுடன் ஜாதகன் வாழ்ந்து வரும்போது ;

19. அந்நகர் மடத்தி லேதான் ஆளனும் மனைவி யோடு
வந்தனன் சைவன் தானும் வளமுள தீர்த்தம் தோய
இந்தவாறு மன்னன் கண்டு இவர்களுக் குபச ரித்துச்
சொந்தமாய் விடுதி விட்டுச் சுந்தரன் ஏது செய்தான் ?

19. அவ்வூர் மடத்தில் ஒரு யாத்திரிகன் தன் மனைவியுடன் அங்குள்ள புண்ணிய நதியில் நீராட வந்தான். அவன் சைவன். இதை ஜாதகன் பார்த்து இவர்களுக்கு உபசரித்துச் சொந்தமாக இருக்க இடம் விட்டு, என்ன செய்தான் ! தெரியுமா ?

20. மாதுமேல் மோகம் கொண்டான் மாரனும் சைகை கண்டான்
ஓதுவான் யாத்திரை செல்வன் உன்செல்வம் நீங்கியே தான்
பாதக மோகத் தாலே பாவையால் நிந்தை உண்டாய்
மேதினில் வாழ்வா யென்று வித்தகன் சொல்லியே தான் ;

20. அப்பெண்ணின்மீது மையல் கொண்டான். அந்தச் சைகையை யாத்திரிகனுகிய பெண்ணின் கணவன் அறிந்து, உன் செல்வங்கள் நீங்கி, கெட்ட மோகத்தால் உனக்கு ஒரு பெண்ணுல் அவமானங்கள் ஏற்பட்டு, உலகில் வாழ்வாய் என்று சொல்லிவிட்டு ;

21. மடந்தனே விட்டு நீங்கி வடதிசை செல்ல லுற்றுன்
குடந்தன மாது தானும் குறைமன தாக வேதான்
இடந்தனே விட்டுப் போக இவள்மன மில்லா ளாகி
நடந்தனள் அந்த மாது நன்மனத் தினிலே சொல்வாள்.

21. அம்மடத்தை விட்டு வடக்குத் திசையில் செல்லலானுன். ஆனுல், அந்தப் பெண், மனத்தில் குறையுள்ளவளாக அவ்விடத்தை விட்டுப் போக மனமில்லாதவளாக மெதுவாகச் சென்றுள். தன் மனத்தினுள் சொல்லிக் கொண்டாள் (கீழ்க்கண்டவாறு).

**பெண் நினைவு**

22. ஆதரித் தோனை யானும் அணையவே கருத்து கொண்டேன்
பாதக வரனும் செல்லப் பலிப்பில்லை கொண்ட எண்ணம்
ஏதுகா ரணத்தி னுலும் இனிஒரு ஜன்மத் தில்தான்
நீதியாய்ச் சேர்வே னென்று நிமலியு மெண்ணிக் கொண்டு ;

22. எங்களை ஆதரித்தவனை அணைய நான் மனத்தில் எண்ணினேன். கொடுமையாக என் கணவன் போய்விட்டதால் எங்கள் எண்ணம் நிறைவேற வில்லை. எந்தக் காரணத்தாலும் இனி ஏற்படும் மறுபிறவியிலாவது உன்னை வந்து அடைவேன் என்று மனத்தில் எண்ணிக் கொண்டு ;

23. தன்னுடைத் தெய்வம் தன்னைச் சதாவுமே எண்ணிக் கொண்டு
உன்னத காசிக் கேகி உத்தமன் தனை நினைத்தே
இன்னவள் மரண மானாள் இவளுமே இச்சென் மத்தில்
சொன்னனேன் அன்னிய மாது சுந்தரி இவளே என்றோம்.

23. தன்னுடைய குல தெய்வத்தைச் சதா மனத்தில் தியானம் செய்து கொண்டு, உயர்ந்த காசி க்ஷேத்திரத்துக்குச் சென்றாள். தன் மனத்தில் கொண்டவனை (ஜாதகனை) நினைத்தே மரணமானாள். அதே போல் இப்பிற வியில் வேற்று மாதாக வருபவள் இந்தப் பெண்தான்.

24. எந்தக்கா லத்தி லேதான் இவனுக்கு நேரு மென்றீர்
இந்தவாறு மன்ன னுக்குப் பத்தெட்டு ஆண்டி லேதான்
வந்திடும் அபிமா னத்தாள் வரனுக்கு மணத்தைச் சொல்வாய்
முந்திய இருப்பான் நாலில் மொழிந்திட்டோம் மனைவி தானும்.

24. ஜாதகனுக்கு எந்தக் காலத்தில் இது நேரும் என்று சொல்லுங்கள். ஜாதகனுடைய பதினெட்டாம் வயதிலேயே அபிமான மனைவி வந்து சேரு வாள். அவனுடைய மணக்காலம் எப்போது என்று சொல்லுங்கள். ஜாத கனுக்கு இருபத்தி நான்காம் வயதில் மணம் ஏற்படும்.

25. அம்மாது உத்தி ரத்தில் அம்மான்தன் வர்க்கம் தன்னில்
இன்மனை வருவா ளாகும் இவள்நிறம் சிவந்த மேனி
செம்மையாய் ஒடிச்சல் தேகி செல்வியும் கற்பு முள்ளாள்
துன்பமா நடக்கை இல்லாள் சுந்தரி கபடு மில்லாள்.

25. அந்தப் பெண் இவனுடைய அம்மான் வர்க்கத்திலிருந்து வடக்குத் திசையிலிருந்து இவனுக்கு இன்பத்தைத் தரும் மனைவியாக வருவாள். அவளுடைய நிறம் சிவப்பு. மெல்லிய சரீர முடையவள். நல்ல கற்புடைய வள். கெட்ட நடத்தை யில்லாதவள். மனத்தில் கபடில்லாதவள்.

26. வரனுக்குப் பக்ஷ முள்ளாள் மங்கைக்குப் புத்திர பாவம்
திறமையாய் ஆண்பா லொன்று செவ்வியு மவ்வா றுகும்
இருவரும் தீர்க்க மாகும் குறைவரும்...............
......புருஷனாலே கோதை சஞ்சல மெய்வள்.

26. தன் கணவன்மீது பிரியமுள்ளவள். அவளுடைய புத்திர பாவத் தைச் சொல்லுகிறோம். ஆண் மகன் ஒருவனும் பெண் ஒருத்தியும் உண்டு. இருவரும் நீண்ட ஆயுளுடனிருப்பர். ஆனால் அவளுக்குக் குறையேற்படும். . . . . . . . தன் புருஷனால் மனச் சஞ்சல மடைவாள்.

27. சஞ்சலம் வந்த சேதி சாற்றுவா யென்று கேட்க
வஞ்சியும் முன்ஜன் மத்தில் வேலங்காட் டதனில் மேல்பால்
தஞ்சமாய்ச் சிற்றூர் தன்னில் சத்குல முதித்து மேதான்
கொஞ்சிய மதலை உண்டாய் குறைவய தினிலே தானும் ;

27. மனக் கலக்கம் வரும் காரணங்களைச் சொல்லுங்கள் என்று கேட்கும் போது (பதில் கூறுகிறார்). இப்பெண் முற் பிறவியில் திருவாலங்காட்டுக்கு மேற்கில் உள்ள சிற்றூரில் நல்ல குலத்தில் தோன்றி, கொஞ்சும் குழந்தைகளைப் பெற்று, குறையான வயதிலேயே ;

28. நாயகன் மரண மாகி நாயகி பெருமை உண்டாய்
மாயன்தன் மலைக்குச் செல்ல மடத்தினி லிருந்தாள் மாது
சேயனும் ரெட்டி தானும் சென்றனன் அந்த ஊரில்
ஆயவே இவளைக் கண்டு அநேகமாய் வார்த்தை கூற ;

28. கணவன் மரணமடைந்த பின்பு அப்பெண் பெருமையுடன் திருப்பதி மலைக்குச் சென்று, அங்குள்ள ஒரு மடத்தில் இருந்தாள். அங்கு ஒரு ரெட்டி, அவ்வூருக்கு வந்திருந்தான். அவனும் இவளைக் கண்டு மயங்கி ஆசை வார்த்தைகள் சொல்ல ;

### காமத்திற்கு இசையாத பெண்ணைச் சபித்தல்

29. அதற்கிவள் சரியாய்க் கூற அவன்மனம் விரகம் கொண்டு
குதர்க்கமாய் வார்த்தை சொல்லக் கூறுவாள் விதவை தானும்
சதியான வார்த்தை சொன்னாய்ச் சண்டாளா இசையே னென்றாள்
விதவைமேல் கோபம் கொண்டு வித்தகன் ஏது சொல்வான்.

29. அதற்கு இவள் (இசையாத வளாகி) பதில் சொன்னாள். அவன் மனத்தில் காம இச்சையால் குற்றமுள்ள வார்த்தைகளைப் பேசினான். இவள், பாபியே ! நான் இதற்கு உடன்படேன், என்றாள். அந்த விதவை மீது கோப முற்று, ரெட்டி பதில் சொல்லுகின்றான்.

30. மறுஜன்மம் மாலை இட்டு மனதுசஞ் சலமுண் டாகக்
குறைவறச் செய்வே னென்று கூறினான் முன்ஜன் மத்தில்
அறையவே அச்சென் மத்தில் அவளுள்ளூர் சென்று வாயுவால்
மரலிதன் பதியை நாடி வந்தவ ளிவளே என்றோம்.

30. மறு பிறப்பில் உன்னை மணந்து மனது சஞ்சலங்களும் குறையுள்ள மனமும் உண்டாகச் செய்வேன் என்று கூறினான். முற் பிறவியில் அவள் திரும்பி உள்ளூர் சென்று, வாயு ரோகத்தால் மரண மடைந்து, மீண்டும் இப் பிறவியில் பிறந்தவள் என்று கூறினோம்.

31. பின்ஜன்மம் பழனி கீழ்ப்பால் பேரூரில் இக்கு லத்தில்
இன்னவ ளுதிப்பா ளாகும் ஈச்வரி கேட்க லுற்றாள்
மன்னிய தாயின் சேதி வரைகுவீ ரென்று கேட்கச்
சென்னிறம் ஒடிச்சல் தேகி திருத்தமாய் வார்த்தை உள்ளாள்.

31. மறு பிறப்பு **பழனிக்குக்** கிழக்கில் பெரிய ஓர் ஊரில் இதே குலத்தில் பிறப்பாள். பார்வதி கேட்கலரனுள். ஜாதகனின் தாயின் செய்தியைக் கூறுங்கள் என்று வினவ (பதில் சொல்லுகிருர்). சிவந்த நிற முள்ளவள். மெல்லிய தேகமுள்ளவள். திருத்தமாக (சுத்தமாக)ப் பேசுபவள்.

32. பொறுமையும் பெருமை உண்டு புகலுமுன் கோபம் கொஞ்சம்
திருமகள் வாச மாகும் தீரமில் லாத நெஞ்சம்
இருவினை நெஞ்ச முண்டு ஈகையு முடைய ளாகும்
தரும்குல தெய்வ பக்தி தன்தேகம் வாயு பாதை.

32. பொறுமையும் பெருமையும் உள்ளவள். சொல்லுவதற்கு முன் கோபமடைவாள். லட்சுமி இவள் வீட்டில் வசிப்பாள். தைரியமில்லாத மனத்தினள். இருவிதமாக எண்ணும் மனத்தினள். கொடையாளியாவள். தெய்வ பக்தியுள்ளவள். வாயு ரோகமுள்ள சரீரமுடையவள்.

33. அவளுடைத் துணைவர் தம்மை அறைகிறோம் எழுவ ராகும்
நவமதில் ஆண்பால் நான்கு நாயகி இரண்டு தீர்க்கம்
தவசியே இவள்முன் ஜன்மம் சாற்றுவோம் காஞ்சி தன்னில்
பவமுள செளராஷ்டிர வம்சம் பத்தினி பிறந்தா ளென்றோம்.

33. அவளுடைய உடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். எழுவர். அவர்களில் நான்கு ஆண்களும் இரு பெண்களும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். தவமியற்றுபவளே! இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். **காஞ்சிபுரத்தில்** செளராஷ்டிர வம்சத்தில் பிறந்தாள் என்று கூறுகின்றோம்.

34. சுதர்களு முள்ளா ளாகிச் சுந்தரி சுகமாய் வாழ்ந்து
நிதம்பக்தி யுள்ளா ளாகி நிமிலியும் இருந்து மாண்டு
சத்தன கஞ்சன் தன்னால் சத்தியே வரையப் பட்டுக்
கதியுள இக்கு லத்தில் காதலி வந்தா ளென்றோம்.

34. புத்திரர்கள் உள்ளவளாகி, அவள் சுகமாக வாழ்ந்து வந்து, தெய்வ பக்தியுடன் இருந்து, பிறகு இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இக் குலத்தில் பிறந்தாள் என்றோம்.

35. மறுஜன்மம் மயிலை தன்னில் மாதுவும் கர்ண வம்சம்
பெருமையாய் உதிப்பா ளாகும் பேசுவோம் தந்தை ஜன்மம்
திருவள்ளூர் மலைக்குக் கீழ்ப்பால் சிற்றூரில் நந்த வம்சம்
உருவுமே எடுத்துப் பின்பு உரைக்கிறோ மொழி தானே.

35. மறு பிறப்பு மயிலாப்பூரில், கருணீகர் மரபில் பெருமையுடன் தோன்றுவாள். ஜாதகனின் தந்தையின் முற் பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றோம். **திருவள்ளூருக்குக்** கிழக்கில் உள்ள சிற்றூரில் இடையர் மரபில் தோன்றினான். அப்போது ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

**பசுஹிம்ஸை**

36. கோவுகள் மேய்த்து வந்தான் குறைதன மதிலே சங்கை
ஆவுவைக் காலா லெத்தி அறைந்தனன் அதுவல் லாமல்
மேவியே பொருங் காலை வீழ்பத்தால் பாதம் தன்னைக்
தாவியே ஒடித்தா னம்மா சார்ந்தது தோஷம் தானே.

36. பசுக்கள் மேய்த்து வந்தான். அப்போது ஏற்பட்டது தோஷம். ஒரு பசுவைக் காலால் எட்டி உதைத்தான். அதுவும் தவிர, அப் பசு நொண்டி நடக்கும்போது அதன் காலை ஓடி ஒடித்தான். அந்தத் தோஷமும் இவனைச் சார்ந்தது.

37. இருவித தோஷம் தானும் இலகிற்று அச்சென் மத்தில்
மரணமாம் காலம் தன்னில் வாயுவால் கைகால் வீழ்ந்து
பெருமையாய் மரண மாகி வந்தவ னவனே என்றேம்
அருமையாய்த் தோஷம் தானும் அணுகிற்று இச்சென் மத்தில்.

37. அப்பிறவியில் இருவிதத் தோஷங்கள் ஏற்பட்டன. கடைசிக் காலத்தில், வாயு ரோகத்தால் கை, கால் நோய் ஏற்பட்டு, தரித்திரனுக மரணமடைந்தான். இரு விதத் தீவினைகளும் இப் பிறவியில் வந்து சேர்ந்தன.

38. அந்திய காலம் தன்னில் அவன்காலில் ரோகம் வாய்க்கும்
முந்திய ரோகம் தீர மொழிகுவீர் கிரியை ஒன்று
* எந்தசாந் திகள் செய்தாலும் விலகாது ரோகம் தானும்
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

38. கடைசி காலத்தில், காலில் ரோகம் ஏற்பட்டுவிடும். அந்த ரோகம் தீரச் சாந்தியொன்று கூறுங்கள் என்று வினவ, எந்தச் சாந்தி செய்தாலும் ரோகம் தீராது. கந்தவேளைப் பெற்ற தாயே! சொன்ன சொற்கள் தவரு.

39. இனிஜன்மம் சேது தன்னில் இக்குல முதிப்பா னுகும்
தனிமையாய்ப் பிறந்து மேதான் பலபலச் செட்டுச் செய்வான்
இனிமையாய் இவர்கள் காலம் எப்போது சொல்லு மென்னக்
கனமுடன் முனிவர் சொல்வார் காதலி மேலும் கேளே.

39. மறு பிறப்பு, சேதுவில், இதே குலத்தில் பிறப்பான். மிகச் செல்வாக்குடன் பிறந்து, பற்பல வியாபாரங்கள் செய்து வருவான். இவர்களுடைய மரண காலம் எப்போது என்று கூறுங்கள், என்று வினவ, முனிவர் பதில் உரைக்கின்றுர். தாயே! கேளும்.

40. முப்பத்து மைந்தா மாண்டில் முருகரு மாதம் தன்னில்
செப்புவேன் தந்தை காலம் சிகிதசை சுயபு சிப்பில்
ஒப்புடன் நாற்பா னென்றில் உயராடி மாதம் தன்னில்
மெய்ப்புதன் புசிப்பில் மாதா ஈவளென் றுரைப்போ மம்மா.

---

* சாந்தி இல்லை.

40. ஜாதகனுடைய முப்பத்தைந்தாம் வயதுக் கடைசியில் தை மாதத்தில் தந்தைக்கும் மரணம் கிட்டும். கேது மகாதசை கேதுபுக்தியில் நடை பெறும். ஜாதகனின் தாய் நாற்பத்தொன்ரும் வயதில் ஆடிமாதத்தில் புதபுக்தியில்தான் மரண மடைவாள் என்று கூறுகின்ரேம்.

41. இவனுடை மரண காலம் இசைக்கிரே அறுபா னென்பான்
அவனியில் துலாமா தத்தில் அஷ்டமி குறைபக் கத்தில்
பவமுள மார்பு நோயால் பாலகன் மரண மாவான்
சிவனிட பாகத் தாளே செல்வியே மேலும் கேளே.

41. ஜாதகனுடைய மரணகாலம் கூறுகின்ரேம். அறுபத்தொன்பதாம் வயதில், ஐப்பசி மாதத்தில், கிருஷ்ணபட்சம் அஷ்டமி திதியில், மார்பு நோயால் ஜாதகன் இறப்பான். சிவபெருமானின் உடலில் பாதி பாகத்தையுடையவளே ! செல்வியே ! மேலும் கேள்.

42. வரும்ஜன்மம் காசி தன்னில் வணிகர்தன் குலமு திப்பான்
பெருமையாய்ச் செட்டுச் செய்வன் பேசுவோ மிவனின் யோகம்
திருமகள் வாச முள்ளான் ஜனஉப காரி யாவன்
அருமையாய்ப் பொருளும் சேர்ப்பான் அதிகமாய்க் கீர்த்தி எற்பன்.

42. ஜாதகன் மறுபிறவி, காசி க்ஷேத்திரத்தில், வணிகர் குலத்தவனுக உதிப்பான். பெருமையுடன் வியாபாரம் செய்வான். இவனுடைய யோக வரலாற்றைக் கூறுகின்ரேம். லட்சுமீ கடாட்சம் உள்ளவன். ஜனங்களுக்கு உபகாரி. மிகுதியாகச் செல்வங்கள் சேர்ப்பான். பெரிய புகழடைவான்.

43. இருபத்து எட்டாண் டின்மேல் இசைந்திடும் யோகம் தானும்
வரவரச் செட்டு ஓங்கும் மாநிலம் சேர்ப்பா னுகும்
பொருமையாய்ச் சகடு வாய்க்கும் பிரபல கிருகம் செய்வன்
உரிமையாய்த் தந்தை ஆஸ்தி உத்தமன் விரும்பா னென்ரேம்.

43. ஜாதகனின் இருபத்தெட்டாம் வயதுக்கு மேல் யோகம் ஏற்படும். வர வர வியாபாரம் விருத்தியாகும். விளை நிலங்களைப் பெருக்குவான். பெருமையான வாகன வசதி ஏற்படும். பெரிய வீடு கட்டுவான். தனக்கு உரிமையுடன் வரக்கூடிய தந்தையின் ஆஸ்தியை விரும்பாதவன்.

44. ஜனித்திடும் காலம் தன்னில் சனிதசை பதினே ழாண்டும்
இனித்திடும் திங்கள் ரண்டும் கூறுவோம் பலனை யாங்கள்
கனமுள தேக பாதை கண்டங்கள் வந்து நீங்கும்
அனையவே துணைவர் விருத்தி அணுகிடும் பூமி தானே.

44. ஜாதகன் பிறக்குங்கால், சனிமகாதசை பதினேழு வருடங்களும் இரு மாதங்களும் என்று கூறுகின்றோம். அப்போது சரீர உபத்திரவம் உண்டு. கண்டங்கள் வந்து, தீரும். சகோதர விருத்தியுண்டாகும். பூமிகள் வந்து சேரும்.

45. காலிகள் விருத்தி யாகும் கலகமாம் குடும்பம் வேறும்
ஏலவே பந்து சூதம் இடருக ளனந்த முண்டு
கோலமாய்ப் பகையும் காணும் குறைந்திடும் தனங்கள் தானும்
சீலமும் குறைவ தாகும் திருத்தமாய் இரண்டில் சொல்வோம்.

45. கால்நடை விருத்தியாகும். குடும்பத்தில் கலகம் ஏற்பட்டு வேறுகும். பந்துக்களுக்கு அசுபமும் துன்பங்களும் மிகுதியும் உண்டு. விரோதிகள் ஏற்படுவர். செல்வங்கள் குறையும். நல்லொழுக்கமும் குறையும். நிச்சயமாக இரண்டாம் பாகத்தில் கூறுகின்றோம்.

## ஜாதகம் 13

1. சந்திரன் மேட மாகச் சனியது இடபம் தங்கப்
பந்தமாய் குருவும் சிம்மம் பனிப்பகை புந்தி சேயும்
அந்தமாய்க் கும்ப மாயும் அரைபுகர் மகர மாக
வந்ததோர் ராகு கன்னி வரும்கேது மீனம் தங்க ;

1. சந்திரன் மேஷத்திலும், சனி ரிஷபத்திலும், குரு சிம்மத்திலும், சூரியன் புதன் செவ்வாய் கும்பத்திலும், சுக்கிரன் மகரத்திலும், ராகு கன்னியிலும், கேது மீனத்திலும் தங்கியிருந்து ;

| | | | |
|---|---|---|---|
| கேது | சந்திரன் | சனி | லக்கினம் |
| சூரியன் புதன் செவ்வாய் | இராசி சக்கரம் | | |
| சுக்கிரன் | | | குரு |
| | | | ராகு |

2. மிதுனமே ஜன்ம மாக விளங்குவ தாண்பா லாகும்
பதியது கீழ்மேல் வீதி புகும்வாசல் தெற்கே யாகும்
நதிகங்கை முடித்தோன் கோஷ்டம் நவிலுவோம் வடமேல் திக்கில்
துதிமாலின் கோஷ்ட முண்டு தூக்கிய கீழில் தங்கும்.

2. மிதுனம் ஜன்ம விலக்கினமாக இருந்தால் பிறப்பது ஆண் மகன். அவனுடைய பிறந்த விடு கிழக்கு-மேற்கு வீதியில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. கங்கையைச் சடைமுடியில் தரித்த ஈசுவரனின் ஆலயம் வட மேற்குத் திசையிலும், எல்லோராலும் தோத்தரிக்கப்படும் திருமாலின் ஆலயம் ஒன்று கிழக்கிலும் உள்ளது.

3. யானையும் வடக்கில் நிற்கும் அடுத்தகீழ்ச் சந்து முண்டு
மானமாம் கூரை வீட்டில் மைந்தனும் ஜனிப்பா னாகும்
ஈனமாம் சோதர யோகம் இவன்தந்தை மாதுரு யோகம்
ஆனபுத் திரரின் யோகம் அறைகிறோம் முன்பின் ஜன்மம்.

3. விநாயகர் ஆலயம் வடக்குத் திசையிலும், அதற்கடுத்தாற்போல் சந்தும் உள்ளது. இங்ஙனமுள்ள ஒரு கூரை வீட்டில் இந்த ஜாதகன் பிறப்பான். குறையுள்ள சகோதரபாவம், தந்தையின் யோகம், தாயின் யோகம், அடையும் புத்திரர்களின் யோகம், முற்பிறப்பு, மறுபிறப்பு இவைகளைப் பற்றியும் கூறுகின்றோம்.

4. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோ மிருசி வப்பன்
பந்தமாய்ச் சமதே கத்தான் பாரினில் ஊக முள்ளான்
வந்தவர்க் கன்ன மீவன் மாலின்மேல் பத்தி உள்ளான்
சிந்தையில் கலக்க முள்ளான் சிறுத்தவர் தம்மைக் காப்பன்.

4. ஜாதகனுடைய தகப்பனின் குணத்தை நாங்கள் கூறுகின்றோம். கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவன். சமமான உடலமைப்புள்ளவன். ஊகமுடையவன். பசியென்று வந்தவர்களுக்கு அன்னமளிப்பான். திருமாலின்மீது பக்தியுள்ளவன். மனத்தில் சஞ்சலமுள்ளவன். ஏழைகளை ஆதரிப்பான்.

5. தராதர மறிய வல்லான் சன்மார்க்கன் கல்வி இல்லான்
புராதன ஆஸ்தி இல்லான் புண்ணிய மனத்த னாகும்
துராசையு மில்லா னவன் சோம்பிடான் காரி யத்தில்
பிராமணர் சைவர் தம்மால் பெருமையும் புகழு முண்டாம்.

5. நன்மை தீமை இவைகளின் தராதரத்தை யறிந்து நடப்பவன. நல்லொழுக்கமுடையவன். கல்வியறிவில்லாதவன். பிதுரார்ஜித ஆஸ்தியில்லாதவன். புண்ணியமான எண்ணங்களுள்ள மனத்தினன். கெட்ட ஆசையில்லாதவன். காரியங்களில் சோம்பலில்லாதவன். அந்தணர்கள், சைவர்கள் இவர்களால் புகழும் பெருமையும் அடைவான்.

6. அன்னிய கிராமம் தன்னில் அதிகபூ மிகளும் சேரும்
மன்னும்வே ளாண்மை செய்வன் பலித்திடும் ஆடும் மாடும்
இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பா லொன்று
கன்னியு மறுவ ராகும் கனத்திடும் தீர்க்க மாகும்.

6. வேற்று கிராமத்தில் அதிக விளை நிலங்கள் சேரும். விவசாயம் செய்து ஜீவித்து வருவான். கால்நடைகள் விருத்தியாகும். இவனுடைய உடன் பிறந்தோரைச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் அறுவருமாவர். அவர்கள் தீர்க்கமாயிருப்பர்.

7. தந்தையின் மூத்தோன் சேதி சாற்றுவேன் சிவந்த மேனி
இன்னவன் கல்வி இல்லான் இவனூகி கபடு மில்லான்
தன்னலம் வாயு தேகன் தாதையின் ஆஸ்தி காணான்
உன்னத சைவன் தன்னால் ஓங்கிடும் பூமி தானே.

7. தந்தையின் மூத்த சகோதரனின் செய்தியைச் சொல்லுகின்றோம். சிவந்த உடலுள்ளவன். கல்வியறிவில்லாதவன். ஊகசாலி. கபடமில்லாதவன். வாயுதேக முள்ளவன். தந்தையின் சொத்தில்லாதவன். ஓர் உயர்ந்த சைவனால் பூமிகள் பெருகும்.

8. அன்னவன் தனக்குப் புத்திரபாவம் அறைகுவோம் ஆணது [இரண்டாம்
கன்னியு மொன்று தீர்க்கம தாகும்கழருவோம் மூவரும் விருத்தி
தன்னிலே பலன்கள் சாற்றுவேன் பின்னால் ஜாதகன் [குணத்தையே கேளாய்
மன்னவன் தனைப்போல தேகமேஉண்டாம் வாயுவும் [கொஞ்சமென் றுரைத்தோம்.

8. அவனுக்குப் புத்திரபாவத்தைச் சொல்லுகின்றோம். இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் நீண்ட ஆயுளுடனிருப்பர் என்று சொல்லுகின்றோம். அவர்களுடைய குணங்களைப் பற்றிப் பின்னால் கூறுகின்றோம். ஜாதகன் குணத்தைக் கேளுங்கள். அரசனைப்போல் (தன் தந்தையைப்போல்) சரீர முள்ளவன். வாயு ரோகம் சிறிதுள்ளவன்.

9. கல்வியு கொஞ்ச முள்ளான் கனத்திடும் மேன்மேல் பூமி
நல்லவர் பலபேராலே நாட்டினில் பெருமை உள்ளான்
இல்லையென் றுரைக்க மாட்டான் யாரையும் நேசம் செய்வன்
அல்லலென் றடைந்தோர் தம்மை ஆதரிப் பானும் மேலும்.

9. சிறிதே கல்வியறிவுள்ளவன். பூமிகள் மேன்மேலும் விருத்தியாகும். பல நல்லோரால் இவன் உலகில் கீர்த்தியடைவான். ஒருவருக்கும் இல்லை என்று சொல்லாதவன். எல்லோரிடமும் நட்புக்கொள்ளுவான். துன்பங்கள் அடைந்து வந்தவர்களை ஆதரித்து வருவான்.

10. பந்துவை ஆத ரிப்பன் பாவைமேல் பிரிய னுவன்
முந்தியத் துணைவர் துன்பம் முன்கோபம் கொஞ்ச முள்ளான்
பந்தமாய்க் காலி விருத்தி பலித்திடும் பூமி தானும்
சந்ததம் பாக்கிய வானும் சக்தியே மேலும் கேளே.

10. உறவினர்களை ஆதரிப்பான். மனைவிமீது பிரியமுள்ளவன். மூத்த சகோதரனால் துன்பமடைவான். முன்கோபம் சிறிது உள்ளவன். கால் நடைகளும் பெருகும். விளை நிலங்கள் அதிகமான பலன்களைக் கொடுக்கும். எப்போதும் பாக்கியவானாக இருப்பான். பார்வதியே! மேலும் கேள்.

**சகோதரதோஷ க்ரகநிலை**

11. இங்ஙனம் பராசர் கூற இயல்முனி உரைக்க லுற்றார்
திங்களும் லாப மேறச் சேயர்தன் ஒன்ப தாகப்
பொங்கமாய்த் துணைவ ரில்லை என்றுமே புகன்றீ ரையா
சங்கையை விபர மாகச் சாற்றுவீ ரென்று கேட்டார்.

11. இங்ஙனம் பராசர முனிவர் சொல்லும்போது, அகத்திய முனிவர் கூறலானார். சந்திரன் லாபஸ்தானமாகிய மேஷத்திலும், செவ்வாய் 9-ஆம் இடமாகிய கும்பத்திலும் இருப்பதால் உடன் பிறந்தவரில்லை என்று சொன்னீரே, ஐயா! அதன் விபரத்தை முழுவதும் சொல்லுங்கள் என்றார்.

12. இன்னவன் முன்ஜன் மத்தில் இயம்புவோம் அருணை கீழ்ப்பால்
வன்னிய மரபில் தோன்றி மனைவிமைந் தருமுண் டாகித்
தன்னிலே சிகர ரியாடி சீவிக்கும் நாளி லேதான்
பின்னமாய் வந்த ஊழி பேசுவோம் கேளு மம்மா.

12. ஜாதகன் முற்பிறவியில் திருவண்ணாமலைக்குக் கிழக்கில் வன்னிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களையடைந்து பட்சிகளை வேட்டையாடி ஜீவித்து வரும்போது ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தாயே!

### அரசமரத்தை வெட்டிய தோஷம்

13. அந்தவூர் நதியின் பக்கல் அணுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தானவன் மரத்தைக் கண்டு
பின்னங்கள் செய்து விட்டான் பலத்தது தோஷம் தானும்
இன்னமோர் ஊழி தன்னை இயம்புவேன் கேளு மம்மா.

13. அந்த ஊர் நதிக்கரையில் ஓர் அரசமரம் இருந்தது. அங்கு நாகச் சிலையும், விநாயகர் சிலையும் இருந்தன. அவன் இந்த மரத்தைப் பார்த்து வெட்டிவிட்டான். இதனால் தோஷமேற்பட்டது. இன்னுமொரு தோஷம் கூறுகின்றோம்.

### பக்ஷிகளைப் புசித்த தோஷம்

14. கண்ணிகள் குத்தி யேதான் கண்டபட் சிகள் பிடித்து
இன்னவன் புசித்த தாலே இணையிலாத் தோஷம் உண்டாய்
மன்னவன் அந்திய காலம் மனைவிமைந் தருமே அற்றுத்
தன்னமே தனிய னாகித் தானவன் அரங்கம் சென்றான்.

14. இவன் அநேக கண்ணிகள் வைத்துப் பலவிதமான பக்ஷிகளைப் பிடித்துப் புசித்துவந்தான். அதனால் எல்லையில்லாத தோஷம் ஏற்பட்டது. இவனுடைய கடைசிக் காலத்தில் மனைவி மக்களை இழந்து, தன்னந்தனியனாகி, அவன் ஸ்ரீரங்கம் சென்றான்.

15. ரங்கன்தன் பாதம் போற்றி நாட்களைக் கழித்து வந்து
பொங்கிய அரங்கம் தன்னில் புண்யமாய் மரண மானான்
மங்கள க்ஷேத்தி ரத்தில் மைந்தனும் பிறந்த புண்யம்
இங்கிவன் விஷ்ணு வம்சம் இவனுமே உதித்தா னம்மா.

15. ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் ரங்கனாதப்பிரானின் பாதங்களைப் போற்றி, நாட்களைக் கழித்துவந்தான். ஸ்ரீரங்கத்திலேயே புண்ணியமாக மரணமடைந்தான். மங்களமான புண்ய க்ஷேத்திரத்தில் இவன் இறந்ததால் இப்பிறப்பில் விஷ்ணுமதத்தில் இவன் பிறந்தான். தாயே!

16. முன்ஜன்ம தோஷம் தானும் முயன்றது இச்சென் மத்தில்
தன்னமே தனிய னாகி ஜாதகன் இருப்பா னம்மா
முன்னமே தோஷம் தீர முயலுவாய் சாந்தி ஒன்று
என்னசாந் திகள்செய் தாலும் இலகாரே துணைவர் தாமே.

16. இவனுடைய முற்பிறவியின் தோஷமும் இப்பிறவியில் இவனைச் சார்ந்தது. ஜாதகன் தனியனாக இருப்பான். முற்பிறவியின் தோஷம் தீரச் சாந்தியொன்று கூறுங்கள். எவ்விதச் சாந்தி செய்தாலும் சகோதரர்கள் ஏற்படார்.

17. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவேன் தவளை தென்பால்
பந்தமாய்ப் பேரூர் தன்னில் பாலகன் மிலேச்ச னாகி
முந்திய மனைவி மைந்தர் முயற்சியால் தனங்கள் பெற்றுச்
சந்ததம் வாழு நாளில் சாற்றுவோம் ஊழி தானே.

**17.** ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைப் பற்றிக் கூறுகின்றோம். **தவளேச்வர**த்துக்குத் தெற்கில் உள்ள பெரிய ஓர் ஊரில் இவன் துலுக்கர் மரபில் தோன்றி, மனைவி மக்களையடைந்து, தன் முயற்சியால் செல்வங்களை யடைந்து, வாழ்ந்துவரும்போது, ஏற்பட்ட வினையைச் சொல்லுகின்றோம்.

**நற்செயல்**

18. சாலையின் மார்க்கம் தன்னில் சத்திரம் தன்னி லேதான்
சீலமாய் விஷ்ணு பக்தன் சனமிலா இறந்து விட்டான்
கோலமாய் அவனை இன்னோன் குணமுடன் அடக்கம் செய்தான்
ஞாலமேல் அந்தப் புண்ணியம் நாயகன் இச்சென் மத்தில் ;

**18.** சாலைவழியின் பக்கத்தில் உள்ள ஒரு சத்திரத்தில் ஒரு விஷ்ணு பக்தன் அனாதையாக இறந்து கிடந்தான். அவனைத் தக்க சடங்குகளுடன் இவன் அடக்கம் செய்தான். அந்த நற்செயல் இவனையடைந்ததால் இப்பிறவியில் இந்த ஜாதகனின் தந்தை ;

19. கோகுலம் தனிலு தித்துக் கூறுவோம் முன்ஜன் மத்தில்
பாகங்கள் ஞாதி கட்குத் தாராமல் தன்கைக் கொண்டான்
வாகையாய் நாதி தானும் மனமது வெறுப்புண் டாகித்
தேகமாய் மறுஜன் மத்தில் விளைபுலம் இல்லா னாகி ;

**19.** இடையர் மறபில் தோன்றினான். முற் பிறவியில் பங்காளிகட் குரிய பாகத்தைத் தராமல் தானே எடுத்துக்கொண்டான். பங்காளிகளும் மன வெறுப்புற்று "உனக்கு ஏற்படும் மறு பிறவியில் நீ விளை நிலங்கள் இல்லாதவனாகி ;

20. புத்திரன் நட்ட மாகிப் பூமியில் இருப்பாய் என்றார்
வித்தகன் ஞாதி சாபம் விளைந்தது இச்சென் மத்தில்
வித்தகன் தனக்கு மேதான் ஜனித்திடும் புத்திரர் நட்டம்
சத்திசூடி ஆதிலே தான் காளையும் தரித்திர னவன்.

**20.** புத்திரன் இறந்து பூமியில் வாழ்ந்துவருவாய்" என்றார்கள். ஜாதகனுடைய தந்தைக்குப் பங்காளிகளின் சாபம் இப்பிறவியிலும் தொடர்ந்தது. இப்பிறவியில் இவனுக்குப் பிறக்கும் புத்திரர்களுக்கு நஷ்டமுண்டு. இவனும் தரித்திரனாகி வாழ்வான்.

21. ஆதியில் வறுமை என்றீர் அதன்பின்பு சகமு மென்றீர்
நீதியாய்ப் பலன்கள் தன்னை நிகழ்த்துவீ ரென்று கேட்கக்
கோதிலா மறையோன் மூன்றில் குசன்புதன் பார்வை யாலே
மாதவன் சைவ னாலே வரும்பூமி தெற்கி லேதான்.

**21.** ஆரம்பத்தில் தரித்திரம் என்றீர். பிறகு சௌக்கியமுண்டு என்று கூறுகின்றீர். நியாயமாக ஏற்படும் பலன்களைச் சொல்லுங்கள், என்று கேட்கும்போது, (ரிஷிகள் பதில் உரைக்கின்றனர்). குரு மூன்றாமிடத்தில் இருப்பதாலும், செவ்வாய் புதன் இவர்களால் பார்க்கப்படுவதாலும், தவங்கள் புரியும் சைவனால் தெற்குத் திசையிலிருந்து பூமி வந்து சேரும்.

22. இவனுடைப் பிற்செனன் மம்தான் இயம்புவோம் காஞ்சி தன்னில்
தவகரு ணீக ஞக ஜனித்துமே ஆல யத்தில்
உவமுள கணக்கு வேலே உத்தமன் பார்ப்பா ணுவன்
பவமிக விஷ்ணு கோஷ்டம் மகன்தந்தை வாசம் செய்வன்.

22. ஜாதகனுடைய தந்தையின் மறு பிறப்பைப் பற்றிக் கூறுகின்ருேம். காஞ்சிபுரத்தில், கருணீகர் மரபில் தோன்றி, ஆலயத்தில் கணக்கன் வேலேயைப் பார்த்து வருவான். நன்மை மிக்க விஷ்ணுவின் கோவிலில் ஜாதகனுடைய தந்தை வசித்து வருவான்.

23. ஜாதகன் மணத்தின காலம் சாற்றுவோம் பதினே ழாண்டுள்
கோதிலா வடபால் திக்கில் குணமுடன் மாதுரு வம்சம்
நீதியாய் உதித்த மாதை நிமலனும் கொள்வா னம்மா
பாதியாய் வடி வெடுத்த பத்தினி கேட்டி டாயே.

23. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்ருேம். ஜாதகன் தனது பதினேழாம் வயதிற்குள் வடக்குத் திசையிலிருந்து அவனுடைய தாயின் வர்க்கத்தில் பிறந்த பெண்ணே இவன் மணம் செய்து கொள்ளு வான். சிவபெருமானின் பாதி உருவத்திலிருப்பவளே! பத்தினியே! கேட்டிடுவாய்.

24. மாதுவின் குணத்தை யாங்கள் வரைகிருேம் சமதே கத்தாள்
நீதியாய் நிற மிரண்டாம் நிகர்தந்தம் பெரிதாய் காட்டும்
ஆதியாய் வந்த பின்பு அதற்குமேல் யோகம் வாய்க்கும்
பாதக மொருவர்க் கெண்ணுள் பத்தினி கோப முள்ளாள்.

24. ஜாதகனின் மனேவியின் குணத்தை நாங்கள் சொல்லுகின்ருேம். சமமான உடலமைப்புள்ளவள். கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவள். பற்கள் பெரிதாகக் காட்டும். அவள் கணவனே யடைந்த பின்பு யோகங்கள் மிகுதியாகப் பெருகும். ஒருவருக்கும் தீங்கெண்ணுதவள். கோபமுடையவள்.

25. இன்னவள் துணேவர் தம்மை இயம்புவோ மாண்பால் நான்கு
கன்னியு மொருத்தி யாகும் கனத்திடும் தீர்க்க மாகும்
பின்னமாம் இதன்மேல் தோன்றில் பலக்காது அரிட்ட மாகும்
அன்னவன் வடக்குத் திக்கில் அறைகிருேம் கேளு மம்மா.

25. ஜாதகனுடைய மனேவியின் உடன் பிறந்தவர்களேச் சொல்லு கின்ருேம். சகோதரர் நால்வரும் சகோதரி ஒருத்தியும் தீர்க்கமாவர். இதற்குமேல் பிறந்தாலும் நிலேயார். அவன் வடக்குத் திக்கில் வாழ்ந் திருப்பான். கேளும், தாயே!

26. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் இருபா னேழில்
பிந்தியும் அன்னே காலம் பேசுவோம் அதன்மேல் நாலும்
எந்தையே இவனின் காலம் இயம்புவோம் எழுபான் மூன்றில்
பந்தமாய்த் தேளின் மாதம் பஞ்சமி பூர்வ பக்கம்.

26. ஜாதகனுடைய தந்தையின் மரணக் காலத்தைச் சொல்லுகின்ருேம். அஃது அவனுடைய இருபத்தேழாம் வயதில் ஏற்படும். ஜாதகனுடைய தாயின் மரணக் காலம் அதற்கு மேல் நான்கு ஆண்டுகளில் ஏற்படும். இவனு டைய மரணக் காலம் இவனுடைய எழுபத்தி மூன்ரும் வயதில், கார்த்திகை மாதம் சுக்லபட்சம் பஞ்சமி திதியன்று ஏற்படும்.

27. மைந்தனும் மரண மாகி மறு ஜன்மம் வள்ளூர் கீழ்ப்பால்
பந்தமாய்ச் சைவச் சேயாய் பாலக னுதிப்பா னம்மா
எந்தையே புதல்வர் தாமும் இயம்புவோம் ஆண்பால் ரண்டு
சந்ததம் கன்னி அவ்வாறு சாத்தினோம் தீர்க்க மாவர்.

27. இவன் மரணமடைந்து திருவள்ளூருக்குக் கிழக்கில், சைவனாக மறு பிறப்பில் பிறப்பான். அப்போது இரு புதல்வர்களும் இரு புதல்விகளும் பிறந்து, தீர்க்கமாயிருப்பர் என்று கூறினோம்.

28. மற்றவை மூன்று நஷ்டம் மங்கையே குடும்பச் செய்கை
உள்ளதைச் சொல்வோம் யாங்கள் உதித்தநாள் முதலா மாகச்
சித்தமாய்ச் செழிப் புண்டாகும் தேவியே பதினோ ராண்டுள்
வித்தகன் தந்தை மாதா மேவுவாள் எமப திக்கு.

28. மூன்று குழந்தைகள் பிறந்து மரணமடையும். ஜாதகனின் குடும்பச் செயல்களை (இப் பிறவியில்) சொல்லுகின்றோம். ஜாதகன் பிறந்த நாள் முதல் செல்வங்கள் விருத்தியாகும். அவனுடைய பதினோராம் வயதுக்குள் ஜாதகனின் தந்தையின் தாய் (பாட்டி) இறந்து விடுவாள்.

29. முப்பது ஆண்டு மட்டும் முயற்சியாம் குடும்பம் தானும்
செப்பமாய் அதன்மேல் தானும் சேயன்தன் குடும்பம் வேறும்
அப்போது யோகம் மேன்மை ஆள்கார ரதிக முண்டாய்
விற்பனும் வாழ்வான் சொன்னோம் மெல்லியே மேலும் கேளே.

29. முப்பது வயது வரையில் தன் முயற்சியால் குடும்பம் நடக்கும். அதற்குப் பிறகு இவனுடைய குடும்பம் வேறாகிவிடும். அப்போது யோகங்கள் பலிக்கும். பணியாட்கள் அதிகம் ஏற்படுவர். விற்பன்னனாக வாழ்வான் என்று சொன்னோம். மெல்லிய இடையுடையவளே ! மேலும் கேள்.

30. இப்படி எழுவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
செப்பமாய்த் தந்தை மூத்தோன் சேயர்கள் பலத்தைச் சொல்வாய்
அப்பணி சடையோன் தேவி அருளுவோம் கேளு மம்மா
மெய்ப்புடன் புத்திரன் சேதி விளம்புவோம் மூத்தோ னுக்கே.

30. இங்ஙனம் ஸப்தரிஷிகள் சொல்லும்போது, பார்வதி கேட்கலானாள் ஜாதகனுடைய தந்தையின் மூத்த சகோதரனின் குழந்தைகளைப்பற்றிச் சொல்லுங்கள். கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவபெருமானின் தேவியே! கூறுகின்றோம் கேளுங்கள். ஜாதகனின் பெரியதகப்பனின் புத்திரர்களைப் பற்றிச் சொல்லுவோம்.

31. சிவந்திடு மேனி யாவன் செல்வனும் கல்வி உள்ளான்
அறந்தனில் யசமான் வேலை அவனுமே பார்ப்பான் மேலும்
தீரமான மனத்த னுவன் தகமையாய்..........
......சித்திர வீடு தானவன் செய்வா னம்மா.

31. சிவந்த உடலுள்ளவன். செல்வவானாக விருப்பான். கல்வி யறிவு யுடையவன். தருமத்துடன் எஜமானனாக வேலை பார்ப்பான். தைரிய மனத்தன்..............................அழகிய வீடு கட்டுவான்........

32. பூமியில் பொருள் எடுப்பான் புத்திர விருத்தி உள்ளான்
நேமியோர் மெச்ச வாழ்வன் நிதானமாய் வார்த்தை கூறுவன
காமனை ஒத்த தேகன் கனபண முடைய னுவன்
தீமையு மொருவர்க் கெண்ணுன் சேயனும் குள்ள னுவன்.

32. பூமியிலிருந்து புதையல் எடுப்பான். புத்திர விருத்தியுள்ளவன். உலகத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். மெதுவாகப் பேசுபவன். மன்மதனைப் போன்ற அழகுடையவன். பணம் அதிகமாக உள்ளவன். கெடுதல் ஒருவருக்கும் எண்ணுதவன். குள்ளமானவன்.

33. முன்கோபம் கொஞ்சம் உள்ளான் மூர்க்கரோ டிணக்க மில்லான்
தன்பந்து மெச்ச வாழ்வன் சற்சன ருறவு கொள்வன்
பின்னமாம் பொய்கள் சொல்வான் இவன்பித்த தேக னுவன்
அம்புவி அதிகம் சேர்ப்பன் ஆள்கார ருடைய னுவன்.

33. சிறிது முன்கோபமுள்ளவன். கெட்டவர்கள் சகவாசமில்லாதவன். தன் பந்து ஜனங்கள் புகழும்படி வாழ்வான். நல்லவர்கள் உறவு கொள்ளுவான். பொய்கள் சொல்லுவான். பித்த சரீரமுள்ளவன். விளை நிலங்களை மிகுதியாகச் சேர்ப்பான். ஏவலாட்கள் உடையவன்.

34. நாபிநோய் கொஞ்ச முள்ளான் நவிலுவோம் ஊக முள்ளான்
தீமைகள் செய்த பேரை ஜயிப்பானும் தந்தி ரத்தால்
மாமிக ளிருவ ராவர் மன்னுமூத் தாட்க்கு விரக்தி
தீமையும் அடைவா ளாகும் சின்னவ ளென்று சொன்னோம்.

34. வயிற்றுவலி கொஞ்சம் உள்ளவன். ஊகமுள்ளவன். தீமைகள் செய்தவர்களைத் தந்திரமாக வெல்லுவான். இரு மனைவியர்கள் உள்ளனர். மூத்தவளுக்கு விரக்தியுண்டு. தீமையை அடைவாள். சின்னவளென்று சொல்லுகின்றோம்.

## ஜாதகம் 14

1. ரவிபுதன் சனியும் மேடம் நற்குரு துலேயி லாகப்
புவிமகன் வண்டி யாகப் புகர்நந்தி சிங்யும் வில்லில்
திவிகயர் மதியும் வீணை ஜன்மமும் மிதுன மாக
இவைநவக் கோளு மிவ்வா றிருப்பதால் பலன்சொல் வீரே.

1. சூரியன் புதன் சனி மேஷத்திலும், குரு துலாத்திலும், செவ்வாய் கடகத்திலும், சுக்கிரன் விருஷபத்திலும், கேது தனுசிலும், ராகு சந்திரன் மிதுனத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | சூரியன் புதன் சனி | சுக்கிரன் | லக்கினம் சந்திரன் ராகு |
| | இராசி சக்கரம் | | செவ் வாய் |
| | | | |
| கேது | | குரு | |

2. பார்வதி கேட்கும் போது பராசரும் சொல்லு கின்றார்
சீர்புகழ் ஆண்பால் ஜன்மம் சிறப்புள ஊரே யாகும்
தாரணி அரசர் வாசம் சாலைக ளநேக முண்டாம்
பேர்புகழ் குடியு முண்டாம் புத்திரன் உதித்த ஊரே.

2. என்று பார்வதிதேவி கேட்கும்போது, பராசர முனிவர் கூறுகின்றார். இது புகழ் பெற்ற ஆண் மகனின் ஜாதகம். அவனுடைய பிறந்த ஊரும் சிறப்புள்ளதாக விருக்கும். அவ்வூரில் அரசர் வாழ்ந்து வருவர். பெரிய சாலைகள் அநேகம் இருக்கும். புகழுள்ள கோயிலும் உள்ளது. இங்ஙனமுள்ள ஊரில் ஜாதகன் பிறந்தான்.

3. வந்தவன் வடதென் வீதி வாசலும் மேற்கே யாகும்
தந்தியு மெதிரில் நிற்கும் சாம்புவும் மாயோன் உத்திரம்
அந்தமா மாதும் கீழ்ப்பால் அதன்தெற்கில் வயல்கள் ஓடை
சந்ததம் கூறை வீட்டில் ஜாதகன் ஜனிப்பா னமே.

3. ஜாதகனுடைய பிறந்த வீடு வடக்குத் தெற்கான வீதியில் மேற்கு நோக்கியுள்ள வாயிலேயுடையது. எதிரில் விநாயகர் ஆலயமும், சிவபெருமான் திருமால் இவர்கள் ஆலயங்கள் வடக்கிலும், கிழக்கில் அம்மன் கோயிலும், அதற்குத் தெற்கில் வயல்களும் நீரோடையும் உள்ள ஒரு கூரை வீட்டில் ஜாதகன் பிறப்பான்.

4. ஜாதகன் குணத்தை யாங்கள் சாற்றுவோ மால்நி றத்தான்
நீதியாய் வாயு தேகன் நிகர்பித்த சூடு முள்ளான்
வேதனை ஒருவர்க் கெண்ணன் வித்தையு முடைய னுவன்
சீதள குணத்தா னுவன் செப்புமுன் கோபம் கொஞ்சம்.

4. ஜாதகனுடைய குணத்தை நாங்கள் கூறுகின்றோம். திருமாலைப் போன்ற கரியநிற முள்ளவன். வாதரோகமுள்ள சரீர முடையவன். பித்த சூடும் உள்ளவன். பிறருக்குத் தீங்கு செய்ய நினையாதவன். வித்தைகளைக் கற்றுணர்வான். இளகிய மனமுள்ளவன். சொல்வதற்குமுன் கோபம் கொள்ளுவான்.

5. பூமியும் சேர்ப்பா னுகும் புண்ணிய மனத்த னுகும்
தீமையு மெண்ணுச் சித்தன் திருமகள் வாச முள்ளான்
காமிய முடைய னுவன் கனத்தவர் நேசம் கொள்வன்
சாமிமேல் பக்தி உள்ளான் சஞ்சல மனத்த னுமே.

5. விளை நிலங்களைச் சேர்ப்பான். புண்ணிய மனத்தினன். பிறருக்குத் துன்பம் செய்யாத மனத்தினன். லட்சுமீ கடாட்சம் உள்ளவன். காமி. பெரியோர்கள் நேசம் கொள்ளுவான். தெய்வபக்தி கொள்ளுவான். சஞ்சலமுள்ள மனத்தன்.

6. அடக்கமு மொடுக்க முள்ளான் அண்டின பேரைக் காப்பன்
மடக்கொடி இரண்டு முள்ளான் வணிபங்கள் அநேகம் செய்வன்
திடமான வார்த்தை உள்ளான் சித்திர வீடு செய்வன்
உடன்பிறந் தோர்க ளில்லான் உத்தமி மேலுங் கேளே.

6. அடக்க மொடுக்க முடையவன். தன்னை அடைந்தவர்களை ஆதரிப்பான். இரு மனைவியர் உளர். அநேகவிதமான வியாபாரங்கள் செய்வான். திடமாகப் பேசுபவன். அழகிய வீடு கட்டுவான். சகோதரர்கள் இல்லாதவன். தாயே ! மேலுங் கேள்.

7. இன்னவன் செங்கை தன்னில் இலகிடும் பத்ம ரேகை
தன்னிலே சுழியு முண்டு தாக்ஷிண்யன் கனவா னுகும்
அன்னியர் தம்மைக் காப்பன் ஆள்கார ருடைய னுவன்
பின்ன மில்லாத தேகன் பேசுவோ மிவனுக் கம்மா.

7. இவனுடைய கையில் பத்மரேகை உள்ளது. ஒரு சுழியும் இருக்கும். தாட்சிணிய முள்ளவன். கனவான். பிறரை ஆதரிப்பான். ஏவலாட்களுள்ளவன். பின்னங்கள் இல்லாத சரீரமுடையவன் என்று கூறுவோம், தாயே! இவனுக்கு.

8. மரமாட்டுந் தொழிலு முள்ளான் வண்டிவா கனமு முள்ளான்
குறைவுள தந்த முள்ளான் குஞ்சர நடையு முள்ளான்
மடையரை நேசம் செய்யான் மாமிசப் பிரிய னுவன்
குறைவிலாச் செல்வ முள்ளான் கொள்ளுவன் தீர்த்த யாத்திரை.

8. மரம்வெட்டும் தொழில் நடத்துவான். வண்டி முதலிய வாகன வசதியுள்ளவன். பற்களில் சிறிது குறை இருக்கும். யானைபோல் கம்பீர மாக நடப்பவன். அறிவில்லாதவர்கள் சிநேகம் இல்லாதவன். மாமிசம் புசித்தலில் இஷ்டன். குறைவில்லாத செல்வமுள்ளவன். இவன் தீர்த்த யாத்திரை செய்வான்.

9. இன்னவன் துணைவர் தம்மை இயம்பவே பலத்தைக் காணேம்
தன்னமே தனிய னுவன் சாற்றுவோம் மணத்தின் காலம்
அன்னமே ஈரா றுண்டில் அவன்மனை யாளும் வாய்ப்பள்
கன்னிகை உத்திர திக்கில் கனமுடன் வருவா ளம்மா.

9. இவனுக்கு உடன் பிறந்தவர்களைப்பற்றிச் சொல்ல, பலமில்லை. தனிய னுக விருப்பான். இவனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றேம். ஜாதகனுடைய பன்னிரண்டாம் வயதில் அவனுக்கு மணமுண்டாகும். அப் பெண் இவனிருக்கும் இடத்துக்கு வடக்குத் திசையிவிருந்து வருவாள்.

10. அவள்குணம் சிவந்த மேனி ஆளனுக் கினிய ளாவள்
நவமதில் பொறுமை உள்ளாள் நாட்டுமுன் கோபம் கொஞ்சம்
இவளுமே வாயு ரோக மெப்போது முடையா ளாவள்
கவலையின் மனது முள்ளாள் கபடில்லாள் தந்த ரோகி.

10. அவள் குணத்தைச் சொல்லுகின்றேம். சிவந்த உடலுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். பொறுமையுள்ளவள். சொல்வதற்கு முன் கோபம் கொள்ளுவாள். இவளுக்கு வாயு ரோகம் எப்போதும் உண்டு. கவலைப்படும் மனத்தினள். கபடமில்லாதவள். பல் வலி உள்ளவள்.

11. அன்னங்கள் போட வல்லாள் ஆசார முடைய ளாவள்
துன்னிய தாய்ம ரித்துத் தோன்றிடு மிரண்டாம் தாயும்
மன்னிய எவர்க்கும் நண்பள் பாலர்கள் தோஷ முள்ளாள்
இன்னவள் வந்த பின்பு இணையிலாச் செல்வ மோங்கும்.

11. ஏழைகட்கு அன்னமளிப்பாள். ஆசாரமுள்ளவள். இவளுக்கு முதல் தாய் இரந்து இறண்டாம்தாய் வருவாள். அவள் எல்லோரிடத்திலும் பிரியமாக இருப்பாள். புத்திர தோஷமுள்ளவள். இவள் வந்த பிறகு, கணவனுக்கு, அளவற்ற செல்வம் பெருகும்.

12. இன்னவள் தனக்குப் புத்திரர் இரண்டுதான் உதிக்கு மம்மா
அன்னமே அதுவும் தீதாம் அதற்குமேல் விருத்தி யாகா
மன்னவன் தனக்குப் புத்திரர் மறுமனை யாளுக் குண்டாம்
சொன்னசொல் குன்றி டாது சுந்தரி கேளு மம்மா.

12. இவளுக்கு இரு புத்திரர்கள் பிறப்பார்கள். ஆனல் அவர்கள் இருவரும் இறந்துவிடுவர். அதற்குமேல் விருத்தியாகாது. ஜாதகனுக்கு இரண்டாம் மனைவிக்குப் புத்திரர்கள் தோன்றுவர். நாங்கள் சொன்ன சொற்கள் தவறு. அழகியே! தாயே! கேளுங்கள்.

13. மறுமணே எந்தக் காலம் வருகுவாள் அவட்குப் புத்திரர்
உருமையாய்ச் சொல்லு மென்று உத்தமி கேட்கும் போது
பெருமுனி பராசர் சொல்வார் புனிதன்தன் நாற்பா நாலில்
வருகுவாள் மனையாள் தானும் அவள்பலன் சொல்லக் கேளாய்.

13. ஜாதகனுக்கு இடண்டாம் மனைவி எந்தக் காலத்தில் வருவாள்? அவளுக்குப் புத்திரர் எப்போது? என்று உத்தமியாகிய பார்வதிதேவி கேட்கும்போது, பராசர முனிவர் சொல்லுகின்ருர். இந்த ஜாதகனுடைய நாற்பத்து நான்காம் வயதில் இரண்டாம் மனைவி வருவாள். அவளுடைய பலனைச் சொல்லுகின்ருேம், கேளுங்கள்.

14. மால்நிறம் முகத்தில் முள்ளி வஞ்சனை இல்லா நெஞ்சம்
சீலமு முடைய ளாகும் சிறுத்தவர்க் குதவி செய்வாள்
பாலர்க ளுடைய ளாகும் பணிதியு மதிக முள்ளாள்
ஞாலமேல் பொறுமை உள்ளாள் நாட்டுமுன் கோபி யாவள்.

14. திருமாலைப்போன்ற கரிய நிறமுள்ளவள். முகத்தில் வடிவு இருக்கும். வஞ்சனை இல்லாத மனத்தினள். நல்லொழுக்க முள்ளவள். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. குழந்தைகள் உள்ளவளாவள். ஆபரணங்கள் அதிக முள்ளவள். பொறுமை யுடையவள். சொல்வதற்குமுன் கோபமடைவாள்.

15. திருமகள் வாச முள்ளாள் தெய்வமேல் பக்தி யாவள்
வருவோர்க்கு அன்ன மீவள் வரனுக்கு நேய முள்ளாள்
பொறுமையு முடைய ளாவள் புண்ணிய மனத்த ளாகும்
மருமமும் கொஞ்ச முள்ளாள் வமிசமும் விருத்தி உள்ளாள்.

15. லட்சுமீ கடாட்சம் உள்ளவள். தெய்வபக்தியுடையவள். பசித்து வந்தவர்கட்கு அன்னமளிப்பாள். தன் கணவன்மீது பிரியமுள்ளவள். பொறுமைசாலி. புண்ணியமான மனத்தினள். இரகசியம் சிறிதுள்ளவள். வம்சவிருத்தியுள்ளவள்.

16. இன்னவள் தனக்குப் புத்திரர் இயம்புவோ மிருமூன் ருகும்
கன்னியு மிரண்டு தீர்க்கம் காளையு மொன்று தீர்க்கம்
அன்னமே மூன்று தீர்க்கம் அதற்குமேல் தோஷ முண்டாம்
சொன்னசொல் குன்றி டாது சுந்தரி மேலுங் கேளே.

16. இவளுக்கு ஆறு புத்திரர்கள் தோன்றுவர். இரு பெண்களும் ஒரு புதல்வனும் நீண்ட ஆயுளுடனிருப்பர். மற்ற மூவரும் இறந்து விடுவார். அதற்கு மேலும் தோஷம் உண்டு. சொன்ன சொற்கள் தவரு. தேவியே! மேலுங் கேள்.

17. எந்தெந்த ஜனனம் விருத்தி எந்தெந்த ஜனனம் நஷ்டம்
பந்தமாய் உரைப்பீ ரென்று பார்வதி கேட்கும் போது
முந்தவே பராசர் தாமும் மொழிகுவார் அந்தச் சங்கை
சுந்தரி தனக்குப் புத்திரர் தோன்றிடும் முதலில் நஷ்டம்.

17. எந்த எந்த ஜனனம் விருத்தியாகும். எந்த எந்த ஜனனம் இறந்துவிடும். நிச்சயமாகச் சொல்லுங்கள், என்று பார்வதிதேவி கேட்கும் போது, பராசர முனிவர் கூறுகின்றார். இவளுக்கு முதலில் தோன்றிடும் புத்திரருக்குத் தீங்குண்டாகும்.

### பிசாசால் புத்திர தோஷம்

18. சேதமா மென்றி ருந்த சேதியைச் சொல்லு மென்னப்
பாதகன் ராக்ஷ தன்தான் பாவையைப் பற்றி னத்தால்
வேதனை அதனால் நேர்ந்து வீருது புத்திர நஷ்டம்
போதக வானைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

18. என்ன காரணத்தால் புத்திர சேதமுண்டாகும், என்று சொல்லுங்கள், என்று வினவ, கெட்ட பிசாசு ஒன்று இவளைப் பற்றியது. அதனால் இவளுக்குத் துன்பம் ஏற்பட்டுப் புத்திரருக்கு தோஷமுண்டாகும். புண்ணியமான கணவனைப்பெற்ற புண்ணியவதியே ! கேளாய்.

### சாந்தி

19. இதற்குமே சாந்தி ஒன்று இசைக்கிறோம் கேளு மம்மா
பதிதனில் கர்ம சாந்தி பாலரைக் குறித்துச் செய்யச்
சதிசெய்யும் ராக்ஷ தன்தான் தன்னாலே விலகி மேலும்
அதிபதி யான புத்திர ரனுகிடு மிவளுக் கம்மா.

19. இந்தத் தோஷம் நீங்கச் சாந்தி யொன்று கூறுகின்றோம். தாயே ! கேளுங்கள். இவளுடைய வீட்டில், குழந்தை தோஷங்கள் நீங்குவதற்காகக் கர்ம சாந்தி செய்தால், துன்பம்செய்யும் பிசாசு தானாகவே நீங்கி, இவளுடைய சொத்துக்களை ஆளப் புத்திரர் பிறப்பர். தாயே !

20. இன்னவன் முன்ஜன் மத்தை இசைக்கிறோ மவ்வூர் தன்னில்
பன்னிய மிலேச்ச னாகிப் பாலர்கள் மனைவி யோடு
தன்னிலே வணிபம் செய்து தனம்பூமி உள்ளா னாகி
அன்னவன் வாழு நாளில் அறைகிறோம் ஊழி தானே.

20. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அவ் வூரிலேயே துலுக்கர் மரபில் தோன்றி, குழந்தைகள் மனைவி இவர்களைப் பெற்று, தானாக வியாபாரம் செய்து, செல்வங்கள் பூமி இவைகளையடைந்து, வாழ்ந்து வரும்போது, ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

### கருவழித்ததால் பெண் இறந்த தோஷம்

21. அந்நகர் கோரி தன்னில் ஆளனில் லாத பெண்ணை
இன்னவன் போகம் துய்த்தான் இதனாலே கருவு தங்கிக்
கன்னிகை கர்ப்ப முற்றுக் காளையும் அவிழ்த மீய
நன்னிய கர்ப்பம் நீங்கி நங்கையும் மரண மானாள்.

21. அவ்வூரில் இருந்த மசூதியில் கணவனில்லாத ஒரு (கன்னிப்) பெண்ணுடன் இவன் இன்பம் அனுபவித்தான். அதனால் கருத் தங்கியது. அப்பெண் கர்ப்ப முற்றாள். இவன் அதை நீக்க மருந்துகள் கொடுத்ததால் கர்ப்பம் நீங்கியது. அவளும் மரண மடைந்தாள்.

22. ஆகையால் அந்தத் தோஷம் அணுகிற்று இவனுக் கம்மா
யோகமும் நீங்கிப் பின்பு உலகினில் தரித்திர ஞகி
வேகமாம் நதியின் பக்கல் விளங்கிய காஞ்சி தன்னில்
ஏகமாம் தீர்த்தம் கீழ்ப்பால் இக்குல ஆல யத்தில் ;

22. ஆதலால் அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. அதிர்ஷ்டங்கள் குறைந்த பிறகு தரித்திரனுக இருந்து வேகவதிநதிக்கருகில் உள்ள காஞ்சிபுரத்தில் ஏகாம்ரேச்வர் தீர்த்தக் கரையின் கிழக்கில் உள்ள ஆலயத்தில் ;

23. தீபங்கள் பார்த்து வந்தும் திரிகாலம் சலம்கொ ணர்ந்தும்
கோபமில் லாத யோகம் கூறுவோர்க் களித்து வந்தான்
[1] சூபமாய் தர்மம் வேலை அவனுமே நடத்தி வந்து
பாபங்கள் சிலவு நீங்கிப் பாரினில் மரண மாகி ;

23. தீபங்கள் ஏற்றும் வேலையைப் பார்த்துவந்தும், மூன்று வேளைகளிலும் ஜலம் கொண்டுவந்தும் அங்குள்ளவர்கட்குக் கொடுத்து வந்தான். சுபமான தர்மவேலையை அவன் செய்து வந்ததால், பாவங்கள் சில நீங்கின. உலகத்திலிருந்து மரண மடைந்து ;

24. கஞ்சனுல் வரையப் பட்டுக் காளையும் ஜனன மாகித்
தஞ்சமாய் வைச்யச் சேயாய் ஜாதகன் ஜனிப்பா னம்மா
முன்ஜன்ம தோஷம் தானும் மேவிற்று இச்சென் மத்தில்
சஞ்சல மனத்த ஞகிச் சகோதர னில்லா ஞகி ;

24. பிரமனுல் படைக்கப்பட்டு வைசிய குலத்தில் இந்த ஜாதகன் பிறப்பான், தாயே ! முற்பிறப்பில் செய்த தீவினை இவனை வந்தடைந்தது. அதனுல் இப்பிறவியில் சஞ்சலங்களுள்ள மனமுடையவனுகி, சகோதரர்களில்லாதவனுகி ;

### சாந்தி

25. மதலேயும் தோஷ முண்டாய் வந்தது இவனுக் கம்மா
அதுதீரச் சாந்தி ஒன்று அறைகிறேம் விபர மாக
அதிபனும் ரசிதம் தன்னுல் மதலேபோல் செய்து பின்பு
பதியினில் கிரக சாந்தி பண்ணியே தான மீந்து ;

25. புத்திர தோஷம் ஏற்பட்டது, இந்த ஜாதகனுக்கு. அந்தத் தோஷம் தீரச் சாந்தி யொன்று விபரமாகச் சொல்லுகின்றேம். ஜாதகன் வெள்ளியால் குழந்தைபோல் உருச்செய்து, இவனுடைய வீட்டில் கிரகசாந்தி யொன்று செய்து, அதைத் தானம் செய்து ;

26. அகதிகட் கன்ன மீந்து அவன்மனை யாளும் தானும்
வகையுட னேராண் டுந்தான் மாதமோர் ஷஷ்டி தன்னில்
வெகுபய பக்தி யோடு விரதமும் கொள்வா னுகில்
சகமதில் தோஷம் நீங்கிச் சேயர்கள் விருத்தி யாகும்.

26. கதியற்றவர்கட்கு அன்ன மளித்து, அவன் தன் மனைவியுடன் ஒரு வருஷம் ஒவ்வொரு ஷஷ்டியன்றும் வெகுபயபக்தியுடன் விரதம் அநுஷ்டித்து, வந்தால், உலகத்தில் தோஷம் நீங்கிப் புத்திர விருத்தி ஏற்படும்.

---

[1] சுபம் என்பது விருத்தம் நோக்கி சூபம் என ஆயிற்று.

27. இப்படிச் செய்யா ஞகில் இலகாது புத்திரர் தாமும்
ஒப்புடன் உதித்தா லுந்தான் உடனேயே மரித்துப் போகும்
சொற்படி செய்வா ஞகில் தோன்றிடும் மதலே தானும்
மெய்ப்புடன் ஆண்பா லொன்று விளங்கிடும் கன்னி ரண்டே.

27. இப்படிச் செய்யாவிட்டால், புத்திரர் பிறவார். அப்படிப் பிறந்தாலும் நிலேக்காமல் உடனே மரிப்பர். நாங்கள் கூறியபடி செய்துவந்தால், குழந்தை தோன்றும். ஓர் ஆண் குழந்தையும், பெண் குழந்தைகள் இருவரும் தோன்றுவார்கள்.

28. முனிவரிவ் வார் கூற மொழிகுவாள் உமையாள் தாமும்
இணையிலாச் சாந்தி தானும் எந்தக் காலங்கள் செய்தால்
வினைகளும் நீங்கு மென்று மெல்லியாள் கேட்கும் போது
சினமிலா முனிவர் தாமும் செப்புவார் கேளு மம்மா.

28. இங்ஙனம் முனிவர்கள் கூறும்போது, உமா தேவி கூறுகின்ருள். சாந்திகள் எந்தக்காலத்தில் செய்தால் தீவினைகள் நீங்கும் என்று, மெல்லிய இடையுள்ள பார்வதி கேட்கும்போது, கோபத்தை வென்ற முனிவர் சொல்லுகின்ருர். கேளும், தாயே!

29. புந்தியின் தசையி லேதான் புகர்புசிப் பதனி லுந்தான்
விந்தையாய் ராகு புத்தி விளங்கிய காலம் தன்னில்
மைந்தனும் கிரக சாந்தி முறைப்படி செய்வா ஞகில்
சந்ததி விருத்தி யாகும் சஞ்சலம் நீங்கும் தானே.

29. புதமகாதசையில் சுக்கிரபுக்தி நடக்கும்போதும் ராகுபுக்தி நடக்கும்போதும் நவகிரகசாந்தி கிரமப்படி செய்துவந்தால், சந்ததி விருத்தி யாகும். சஞ்சலங்கள் நீங்கும்.

30. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் முப்பா ஞண்டில்
பிந்திய அன்னே காலம் பேசுவோம் நாற்பா ஞண்டில்
எந்தையே இவனின் காலம் இயம்புவோம் எழுபான் மூன்று
பந்தமாய் மகர மாதம் பருவநாள் தனிலே தானே;

30. ஜாதகனுடைய தந்தையின் மரணகாலத்தைச் சொல்லுகின்ருேம். அவனுடைய முப்பதாம் வயதில் தந்தை மரண மடைவான். ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் அன்னே இறப்பாள். ஜாதகனுடைய மரண காலம் அவனுடைய எழுபத்துமூன்ரும் வயதில், தைமாதத்தில், பூர்ணிமையன்று;

31. வயற்றில்வே தனேயே கண்டு மரணமே யாகிப் பின்பு
நயப்புடன் விரிஞ்சி நாட்டில் நாயகன் க்ஷத்ரிய சேயாய்ச்
செயப்புடன் கிராமம் பூமி செல்வங்க ளதிக முண்டாய்
வியப்பிலா வாழ்வா னம்மா மெல்லியே மேலுங் கேளே.

31. வயிற்று நோயால் மரண மடைவான். பின்பு விரிஞ்சி நாட்டில், க்ஷத்திரிய மரபில் தோன்றுவான். கிராமங்கள், பூமி, செல்வங்கள் முதலியன அதிகமுண்டாகி, எல்லோரும் அதிசயிக்கும்படி வாழ்வான். தாயே! மேலும் கேள்,

32. பாரியின் முன்ஜன் மத்தைப் பகருவோம் காஞ்சி கீழ்ப்பால்
பேரூரில் வன்னிய வம்சம் பிறந்துமே செல்வ முண்டாய்ச்
சீருடன் பால ரோடு செழித்துமே வாழு நாளில்
நாரிக்கு வந்த ஊழை நவிலுவோம் கேளு மம்மா.

32. மனைவியின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்துக்குக் கிழக்கில் உள்ள பேரூரில், வன்னிய குலத்தில் பிறந்து, செல்வங்கள் அதிகமுண்டாகி, சீரும் சிறப்புமாகப் புத்திரர்களுடன் சேர்ந்து வாழ்ந்து வரும்போது, அப்பெண்ணுக்கு ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். கேளும், தாயே !

### குழந்தைக்கு அன்னமில்லை யென்ற தோஷம்

33. பஞ்சையாய் ஸ்திரீயும் ஓர்நாள் பாலகன் தனக்கு அன்னம்
கெஞ்சினாள் இவள்பால் சென்று கேட்டிவ ளில்லை என்றாள்
வஞ்சியும் பாலர்க் கன்னம் வகுக்காத பாவிக் கேதான்
துஞ்சிடும் மதலை என்று சொல்லினாள் சாபம் தானே.

33. ஏழையான பெண் ஒருத்தி தன் குழந்தைக்கு அன்னம் வேண்டி இவளிடம்சென்று கேட்டதும், இவள் இல்லை யென்றாள். குழந்தைக்கு அன்னமளிக்க மறுத்த பாவிக்குக் குழந்தை பிறந்தாலும் மறிக்கும் என்று ஏழை சாபமிட்டாள்.

34. ஆகையால் அச்சென் மத்தில் அவளுமே மரண மாகிப்
பாகமாய்க் காஞ்சி மேற்கில் பாலைதன் நதியின் பக்கல்
தோகையு முதித்தா ளம்மா தோல்வியை மணமே கொள்வள்
யோகமு முடைய ளாகிப் புத்திர தோஷ மாமே.

34. ஆகையால் அப்பிறவியில் அவள் இறந்து, பிறகு காஞ்சிபுரத்துக்கு மேற்கில் பாலாற்றின் பக்கத்தில் இவள் பிறந்தாள். ஜாதகனை மணம் புரிந்தாள் யோகங்கள் உடையவளாகியிருந்து, புத்திரதோஷ மடைந்தாள்.

### சாந்தி இல்லை

35. புத்திர தோஷம் தீரப் புகலுவாய் கிரியை ஒன்று
வித்தகி கேட்கும் போது விளம்புவார் முனிவர் தாமும்
உத்தமி தனக்குப் புத்திரர் உரைக்கவே மாட்டோ மம்மா
எத்தகைக் கிரியை செய்யில் இலகாது புத்திரர் தாமும்.

35. புத்திரதோஷம் நீங்கச் சாந்தி யொன்று சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும்போது, முனிவர்கள் கூறுகின்றனர். இவளுக்குக் குழந்தைகள் உண்டு என்று சொல்லவே மாட்டோம், தாயே ! எவ்விதமான சாந்தி செய்தாலும் புத்திரர் பிறவார்.

36. மறுமனை வருவா ளென்று வரைந்திட்ட முனிவ ரேநீர்
திறமையாய் அவள்முன் ஜன்மம் செப்பு வீரென்று கேட்கத்
திருமலை அருகி லேதான் செல்வியும் கங்கை சேயாய்
உரிமையாய் உதித்தா ளம்மா உத்தமி மேலுங் கேளே.

36. ஜாதகனுக்கு இரண்டாம் மனைவி வருவாள் என்று கூறினீர்களே, அவளுடைய முற்பிறவியைச் சொல்லுங்கள், முனிவரே! என்று கேட்க, (முனிவர்கள் கூறுகின்றனர்). திருப்பதிமலைக்கு அருகில், வேளாளர் வமிசத்தில் பிறந்தாள். தாயே! மேலுங் கேள்.

**நிந்தை : துர்மரணத்தால் பிசாசு ரூபம்**

37. வரனுடைத் துணைவன் மேலே மங்கையும் குற்றம் சொல்லத்
திரமுடன் மனம்தா ளாமல் செல்வன்துன் மரண முற்று
உரிமையாய்ப் பிசாசு வாகி உறைந்தன னவனே அம்மா
அறுமுகன் தன்னைப் பெற்ற அம்மையே மேலும் கேளே.

37. தன் கணவனுடைய சகோதரன்மீது இவள் குற்றம் சொன்னாள். குற்றமில்லாத அவன், மனம் தாளாமல் துர்மரண மடைந்தான். பின்பு பிசாசு ரூபமாகி வாழ்ந்தான். தாயே! ஆறுமுகனைப் பெற்றதாயே! மேலும் கேள்.

38. இன்னவள் கர்ப்பத் தாலே இவளுமே மரண மாகி
நன்னிய காஞ்சி மேல்பால் நதிபக்கல் ஜனித்த மாதை
மன்னவன் கொள்வா னம்மா வல்லிக்குப் பிசாசு தோஷம்
முன்னமே அணுகு மம்மா முயலாது புத்திரர் தாமும்.

38. இவளும் (ஜாதகனின்) மனவி கர்ப்பத்தால் மரண மடைந்தாள். மீண்டும் காஞ்சிக்கு மேற்கில் உள்ள நதிக்கருகில் பிறந்தாள். அவளை இந்த ஜாதகன் மணம் புரிவான். இவளுக்குப் பிசாசு தோஷம் முதலில் ஏற்படும். புத்திரர்கள் பிறவார்.

39. இவ்விதத் தோஷம் தீர இசைகுவோம் கிரியை ஒன்று
நவ்விய கர்ம சாந்தி நலமுடன் செய்வா னாகில்
திவ்விய சேயுந் தானும் ஜனிக்கினும் தீர்க்க மாகும்
பவ்வமாய்ச் சேய் ஆணாகில் பருகாது துன்ப மாமே.

39. இந்தத் தோஷம் தீரச் சாந்தியொன்று கூறுகின்றோம். நலமுள்ள கரும சாந்தி யொன்று செய்வானானால் அழகிய குழந்தை யொன்று தோன்றும். அதுவும் தீர்க்கமாயிருக்கும். அஃது ஆண் குழந்தையாகப் பிறந்தால் நிலையாமல் மரிக்கும்.

40. இன்னவன் ஜனனம் தொட்டு இவனுடை ஆயுள் மட்டும்
பொங்கிடும் தனதான் யங்கள் புகல்செல்வம் விருத்தி யாகும்
திங்களைப் போல யோகம் சிறந்திடு மிவனுக் கம்மா
துங்கமா முனிவர் தாமும் சொல்மொழி குன்றி டாவே.

40. ஜாதகனுடைய பிறப்பு முதல் இறப்பு வரையில் தனதான்யங்கள் பெருகும். செல்வங்கள் விருத்தியாகும். வளர்பிறைச் சந்திரனைப்போல் இவனுக்கு யோகம் பெரும். துங்கமாமுனிவராகிய யாங்கள் சொன்ன சொற்கள் தவறா.

41. மனையாளின் மரண கால மறைகின்றோ அறுபா னறில்
அனையவே வாயுவே நோயால் அவளுமே மரண மாவாள்
இணையிலா இரண்டாம் மாது இவன்பின்னால் மரண மாகும்
சினமிலா வாழ்வா னகும் செல்வியே மேலும் கேளே.

41. ஜாதகனின் மனைவியின் மரண காலம் சொல்லுகின்றோம். அவள் ஜாதகனுடைய அறுபத்தாறும் வயதில் வாயு நோயால் இறப்பாள். இரண்டாம் மனைவி இவனுக்குப் பிறகு மரணமாவாள். துன்பங்களின்றி வாழ்ந்து வருவான். செல்வியே! மேலும் கேள்.

42. இன்னமும் சிலவே யோகம் இசைக்கிறோம் பூமி தன்னில்
மன்னவன் நிதி நிக்ஷேபம் வகையுமே யெடுப்பா னம்மா
முன்னமே பராசர் சொல்ல மொழிகுவார் உமையாள் தாமும்
எந்தக்கா லங்கள் தன்னில் எவ்விடம் தன்னில் நேரும்.

42. இன்னமும் சில யோகங்கள் சொல்லுகின்றோம். பூமியிலிருந்து இவன் புதையல் எடுப்பானம்மா, என்று முதலில் பராசரமுனிவர் கூற, உமாதேவி கேட்கிறார். எந்தக் காலத்தில் எந்த இடத்திலிருந்து புதையல் கிடைக்கும்,

43. சொல்லுவோங் கேளு மம்மா சொந்தமே இல்லம் தன்னில்
சொல்லிய பொருள்கள் நேரும் ஜாதகன் நாற்பா னேழில்
வல்லவ னெடுப்பா னம்மா வளர்பிறை போலே யோகம்
மெல்லிய திருவும் சேரும் வித்தகி மேலும் கேளே.

43. சொல்லுகின்றேன், கேளும், தாயே! தன்னுடைய வீட்டிலிருந்து நாங்கள் சொல்லிய பொருள்கள் கிடைக்கும். அப்போது ஜாதகனுக்கு நாற்பத்தேழாம் வயதாகும். அவனே புதையல் எடுப்பான். பின்பு வளர்பிறைச் சந்திரன்போல் யோகம் விருத்தியாகும். லட்சுமீகடாட்சம் உண்டு. தாயே! மேலும் கேள்.

## ஜாதகம் 15.

1. மிதுனமே ஜன்ம மாக மதில் குரு சேயும் தங்க
நிதிபுகர் விரய மாக நிகர்கதிர் புந்தி மேடம்
மதிசிகி சிம்ம மாக மைந்தனும் துலேயி லேற
அதிகயர் கும்ப மாக அறைகிறேு மாண் பாலாகும்.

1. மிதுனம் ஜன்ம லக்கினமாகவும், அதில் குருவும் செவ்வாயும், விரயஸ்தானமாகிற விருஷபத்தில் சுக்கிரனும், சூரியன் புதன் மேஷத்திலும், சந்திரன் கேது சிம்மத்திலும், சனி துலாத்திலும், ராகு கும்பத்திலுமாக இருந்தால், பிறப்பது ஆண்பால் என்றேும்.

| | | | |
|---|---|---|---|
| | சூரியன் புதன் | சுக்கிரன் | லக்கினம் குரு செவ்வாய் |
| ராகு | இராசி சக்கரம் | | |
| | | | சந்திரன் கேது |
| | | சனி | |

2. ஜாதகன் ஜனன வீடு சாற்றுவேன் கீழ்மேல் வீதி
போதவே எமன்தன் பார்வை போற்றுவோம் கிழக்கில் காளி
வேதியன் திசையில் மாரி வித்தகன் யானே கோவில்
நீதியாய் வடமேல் திக்கில் நிமலியும் அரனின் கோஷ்டம் ;

2. ஜாதகனுடைய ஜனன வீடு கிழக்கு-மேற்குத் தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலுள்ளது. கிழக்கில் காளி கோயிலும்,....திக்கில் மாரியம்மன் கோயிலும், விஞயகர் ஆலயமும் உள்ளன. வடமேற்குத் திசையில் அம்மன் கோயிலும் சிவபெருமான் ஆலயமும் ;

3. அருகினில் சூழி உண்டு ஆதிமால் அதற்குத் தெற்குக்
குறுகிய ஊரே தன்னில் கூறையில் ஜனன மாவன்
மருவிய தந்தை யோகம் வளமுள தாயின் யோகம்
பெருவிய துணேவர் யோகம் பேசுவோம் முன்பின் ஜன்மம்.

3. பக்கத்தில் குளமும் உள்ளன. அதற்குத் தெற்கில் திருமாலின் ஆலயம் உள்ளது. இங்ஙனமுள்ள ஒரு சிற்றூரில் கூறைவீட்டில் ஜாதகன் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை, செழிப்புள்ள தாய், பெருகிய உடன் பிறந்தவர் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறு பிறப்பு இவைகளேயும் சொல்லுகிறேம்.

4. தந்தையின் சகோத ரங்கள் சாற்றுவோ மூவ ராகும்
அந்ததோர் கன்னி காணேம் வளமுள மூவர் தீர்க்கம்
தொந்தமாய் இருவர் மூத்தோர் சொல்லுவேனிளையோ னென்று
பந்தமாய் மூவர் தீர்க்கம் பத்தினி மேலும் கேளே.

4. தந்தையின் உடன் பிறந்தவர்கள் மூவர் என்றுரைப்போம். சகோதரிகள் ஒருவரும் இல்லை. பிறந்த மூவரும் நீண்ட ஆயுளுள்ளவர். இவனுக்கு மூத்தவர் இருவர். இளையவன் ஒருவன் என்றும் கூறுகின்றோம். மூவரும் தீர்க்கமானவ்ழ். தாயே! மேலும் கேளுங்கள்.

5. இவன்பிதா குணத்தைக் கேளும் இருவிதச் சொல்லு முள்ளான்
அவனியில் ஊக யுள்ளான் அல்பமாம் கல்வி என்றோம்
நவமதில் பூமி சேர்ப்பன் நாடெல்லா முறவு கொள்வான்
தவநிறம் கறுப்பே யாகும் தாட்சிண்யன் தைர்ய வானும்.

5. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். இருவிதமாகப் பேசுபவன். ஊகமுடையவன். சிறிதே கல்வியறிவுள்ளவன். உலகில் விளை நிலங்களைப் பெருக்குவான். தேசமெல்லாம் நட்புக் கொள்ளுவான். கருமையான நிறமுள்ளவன். தாட்சிண்ய குணமுடையவன். தைரியசாலி.

6. தெய்வங்கள் பக்தி யுள்ளான் சேர்ந்தவர் சொல்லைக் கேட்பன்
இல்லையென் றுரைக்க மாட்டான் ஈகையாங் குணமு முள்ளான்
நல்லவர் நேசஞ் செய்வன் நன்மார்பு விசால முள்ளான்
தொல்லையுங் கொஞ்ச முள்ளான் சூடுளான் பித்த தேகி.

6. தெய்வபக்தி யுடையவன். தன்னுடனிருப்பவர் சொல்லைக் கேட்பான். யாசித்தவருக்கு இல்லை என்று கூறாதவன். ஈகைக் குணமுள்ளவன். நல்லவர் நட்புக் கொள்ளுவான். விசாலமான மார்பை உடையவன். சிறிதே துன்பங்கள் உள்ளவன். பித்த சூடான சரீர முடையவன்.

7. இன்னவன் முன்ஜன் மத்தை இயம்புவோம் பாண்டி நாட்டில் ]
தன்னிலே மறவர் வம்சம் தானவன் உதித்து மேலும்
முன்னிய மனைவி மைந்தர் முயற்சியாய்ப் பொருளும் பெற்றுப்
பன்னிய பயிருண் டாகிப் பாலனும் வாழு நாளில் ;

7. ஜாதகனின் தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பாண்டிய தேசத்தில், மறவர் வம்சத்தில் பிறந்து, மனைவி மக்களைப்பெற்று, தன் முயற்சியால் செல்வங்கள் பெற்று, விளை நிலங்களில் பயிர்களும் ஓங்கி வாழ்ந்து வரும் காலத்தில் ;

8. காட்டினில் வாசஞ் செய்யுங் கள்ளழ கர்க்குத் தீபம்
போட்டுமே ஊழி யங்கள் புண்ணியன் செய்யு நாளில்
நாட்டமா யபிடே கங்கள் நாயகர் தமக்குச் செய்யக்
கூட்டமாய்ச் சோரர் வந்து கூடினு ரங்குத் தானே.

8. காட்டின் மத்தியில் வாழ்ந்துவரும் கள்ளழகருக்குத் தீபக் கைங்கர்யம் செய்து, இன்னும் பல தொண்டுகள் செய்துவந்த நாளில், அங்கு எழுந்தருளியிருக்கும் சுவாமிக்கு அபிஷேகம் செய்யப் பல பக்தர்கள் கூட்டமாய் வந்து கூடினார்கள்.

**எருமைப் பால் தயிர்கொண்டு சுவாமிக்கு அபிஷேகம் செய்த தோஷம்**

9. அபிடேக சாமான் தன்னை யாவற்றும் இவனே வாங்கிப்
பொருளையும் கையில் வாங்கிப் புனிதனும் சேக ரித்தான்
திறமையா யந்தக் காலம் செப்புவேன் ஊழி தானும்
எருமையின் பாலைத் தன்னை ஈசன்தன் பூசைக் கேதான் ;

9. சுவாமிக்கு அபிஷேக சாமான்கள் எல்லாவற்றையும் இவனே வாங்கி, அவர்கள் கையிலிருந்து அவைகட்குரிய பொருளையும் வாங்கிக்கொண்டு, அபிடேக சாமான்களைச் சேகரித்தான். அந்தக் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். எருமைமாட்டின் தயிர் பால் இவைகளை சுவாமி பூசைக்கு ;

**சுவாமி தீபத்தில் விளக்கெண்ணெயை விட்ட தோஷம்**

10. வாங்கியே வந்து தந்தான் வன்மையாய்க் குருக்கள் வாங்கிச்
சாங்கிய மாக ஈசன் தமக்குமே பூசை செய்தான்
தீங்கான ஊழி தானும் சேர்ந்தது இது வல்லாமல்
பாங்குடன் முத்து நெய்யை பரமர்க்குத் தீப மிட்டான்.

10. வாங்கிக்கொண்டுவந்து கொடுத்தான். அதைக் குருக்கள் வாங்கி சாங்கோபாங்கமாகக் கள்ளழகருக்கு அபிஷேகம் முதலிய பூசைகள் செய்தான். அந்தப் பாவம் தீங்காக இவனை வந்து அடைந்தது. இதுவுமன்றி, விளக்கெண்ணெயை, சுவாமி தீபத்தில் விட்டான்.

11. ஆகையா லிரண்டு தோடம் அணுகிற்று அந்தி யத்தில்
போகமுங் குறைச்ச லாகிப் பார்வையும் நீங்க லாகிச்
சோகைபோல் ரோகங் காண்டு சுந்தரன் மரண மாகி
வாகையா யிச்சென் மத்தில் வந்தவ னிவனின் தந்தை.

11. ஆகையால் இவ்விரண்டு தீச் செயல்களும் இவனை வந்தடைந்தன. இவன் கடைசிக்காலத்தில் அதிர்ஷ்டங்கள் குறைந்து, கண்பார்வை நீங்கி, சோகைபோல் ரோகம் ஏற்பட்டு (ஜாதகன் தந்தை) மரணமடைந்தான். மீண்டும் இப்பிறப்பில் ஜாதகனின் தந்தையாகப் பிறந்தான்.

12. இப்படி யிருக்கும் தந்தை இவனுக்கே வுதித்த பாலன்
செப்புவோம் பலன்கள் யாவும் தீரமா மனத்த னவன்
ஒப்புட னிருநி றத்தான் ஊகவான் ஒடிச்சல் தேகன்
சிற்பநூ லறிவ னவன் தேவியே மேலும் கேளே.

12. இங்ஙனமுள்ள தந்தைக்குப் பிறந்த ஜாதகனின் பலன்கள் எல்லாவற்றையும் கூறுகின்றோம். தைரியமான மனத்தன். கருமைகலந்த சிவந்த நிறமுள்ளவன் ஊகமுள்ளவன். மெல்லிய சரீர முடையவன். சிற்பநூல் அறிந்தவன். தாயே! மேலும் கேள்.

13. தைரிய முள்ளோ னுவன் தரணியில் யார்க்கு மஞ்சான்
நயமுள வார்த்தை பேசி நாட்டுவான் பிரதி கூலம்
ஜயமுளான் கல்வி யுள்ளான் தியாகியாம் பாக்ய வானும்
பயமிலான் விசேட பூமி பாலகன் சேர்ப்பா னுவன்.

13. தைரியசாலி. ஒருவருக்கும் பயப்படாதவன். நயவஞ்சகன் (நன்மை செய்பவன்போலப் பேசிப் பிரதிகூலத்தைச் செய்வன்). வெற்றியுள்ளவன். கல்வியறிவுடையவன். தியாகம் செய்யும் மனத்தினன். பாக்கியமுள்ளவன். அஞ்சாத நெஞ்சமுள்ளவன். விசேஷமான பூமிகளைச் சேர்ப்பான்.

14. அன்னிய மனுக்கள் நேயன் அலங்கார முடைய னுவன்
கண்ணிய வார்த்தை கூறுவன் கனத்ததோர் புத்தி யுள்ளான்
விண்ணிலா வாடு மாடு விருத்தியு முடைய னுவன்
தன்னிட மடைந்தோர் தம்மைத் தயையுடன் காக்க வல்லான்.

14. அன்னிய அரசர்கள் நேயன். அலங்காரப் பிரியன். கண்ணியமாக நடந்துகொள்ளும்படி பேசுபவன். பெரும் புத்தியுள்ளவன். குற்றமற்றவன் கால்நடைகள் விருத்தியுடையவன். தன்னை யண்டினவர்களைக் கருணை யுடன் ஆதரிப்பான்.

15. இன்னவன் முன்ஜன் மத்தை இயம்புவோம் திருவா ரூரில்
நன்னிய சூத்திர னுகை நாயகன் ஜனன மாகிப்
பொன்னொடு பூமி யோங்கிப் புகழுடன் பணிதி பெற்று
மண்ணினில் செல்வன் தானும் விளங்கியே அநேக தர்மம்.

15. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவாரூரில், நான்காம் வருணத்தவனுகப் பிறந்து, பொன் பூமி இவைகளை மிகுதியாக அடைந்து, புகழுடன் ஆபரணங்களும் பெற்று, செல்வனுக வாழ்ந்து வந்தான். அநேக விதமான தர்மங்கள் செய்தான்.

16. வந்திடும் பேர்க ளுக்கு வழங்கிடும் தண்ணீர்ப் பந்தல்
எந்தையே குறைவில் லாமல் இலகியே நடத்து நாளில்
வந்ததோ ரூழி தன்னை யறைகின்ருே மாதே யரங்கள்
கொந்தலர் குழலி னுளே கூறுவோ முனிவ ரம்மா.

16. பசி தாகம் என்று வந்தவர்கட்குத் தண்ணீர் அளிக்கத் தண்ணீர்ப் பந்தல் வைத்து, குறையில்லாமல் நடத்திவந்தான். அக்காலத்தில் ஏற்பட்ட தீச்செயலைக் கூறுகின்ருேம், தாயே! நாங்கள். அழகிய தலை மயிரை உடைய பார்வதியே! ரிஷிகளாகிய நாங்கள் கூறுகின்ருேம்.

17. அந்தண னவ்வூ ரில்தான் அணுகிடு மறையோ னென்று
எந்தையே இவன்பன் னுளாய் இலகிய சிநேக மாகி
விந்தையாய் நடக்கும் நாளில் விளங்கிய வோர்நாள் தன்னில்
சிந்தையாய்ச் சிநேகன் பெண்டிர் சிறப்புள மங்கை தன்னை;

17. அவ்வூரில் உள்ள ஓர் அந்தணன் ஒருவன் இவனுடன் சில நாட்களாக சிநேகமாக இருந்து வந்தான். அப்படி இருக்கும்போது ஒரு நாள் தன்னுடைய நண்பனுடைய கற்புடைய மனைவியுடன்;

**அந்தணன் மனைவியைப் பலாத்காரமாய்ப் புணர்ந்த தோஷம்**

18. வின்னமாய்ப் போகும் துய்க்க வீரியன் மனத்தி லெண்ணி
அன்னவள் தன்பால் சென்று அணுகியே பலவாய்ப் பேசி
என்னைநீ சேர்வா யானல் இயலெல்லா முனக்கே தாரேன்
என்றுமே லகுவாய்க் கேட்க எழிலந்த மங்கை தானும் ;

18. எப்படியாவது இன்பம் அனுபவிக்கவேண்டும் என்று மனத்தில் நினைத்து, அவளிடம் சென்று, பலவாருகப் பேசி, என்னை நீ சேர்ந்தால் (என்னுடன் நீ இன்பம் அனுபவித்தால்) என்னல் முடிந்தவைகளை எல்லாம் உனக்கே தருவேன், என்று சொல்லி, அவளைக் கேட்கும்போது அப் பெண்ணும் ;

19. பண்டுள மறையோ னென்று நீயுமே பாரா தென்னை
நன்றிலாக் கேட்டா யிந்த நாட்டமு முனக்கு வேண்டாம்
சென்றிடும் பாவம் மேலாய்க் குடும்பமும் ஜீர்ண மாகும்
விண்டிடு நரக வேதை வந்திடும் வேண்டா மென்ருள்.

19. ஒழுக்கமுள்ள அந்தணர் குலத்துப் பெண் என்று யோசியாமல் நீ என்னைக் கெட்ட எண்ணத்துடன் கேட்கிருயே. இந்த எண்ணம் உனக்கு வேண்டாம். பாவங்கள் அதிகரிக்கும். குடும்பம் நசிக்கும். நரகபாதை உண்டாகும். வேண்டாம், என்ருள்.

20. இன்னவன் கோபங் கொண்டு எழில்மங்கை கரத்தைப் பற்றி
வின்னமா யிழுத்து வின்னேன் விளங்கிய போகந் துய்க்க
அன்னவள் மனமே நொந்து அம்மையும் சொல்லு கின்ருள்
துன்னிய யோக மற்றுத் துன்பங்கள் மிகவே நேர்ந்து ;

20. இவன் கோபமுற்று, அழகிய அவளுடைய கையைப் பிடித்து இழுத்து பலவந்தமாக அவளுடன் இன்பம் அனுபவித்தான். அப்பெண் மனம் வருந்திச் சொல்லுகின்ருள். உனக்கு நல்ல யோகங்கள் அற்று, துன்பங்கள் அதிகமாக ஏற்பட்டு ;

21. பூமியும் பொருளுந் தோற்றுப் புத்திரர் மனைவி யற்றுச்
சேமமு மில்லா னுகிச் சேருவா யெம்ப திக்குப்
பூமலர் யென்னை யேத்திப் போகமே துய்த்த பாவி
ஆவலாய் நரகம் தன்னில் அழுந்துவா யென்று சொன்னுள்.

21. பூமியையும் செல்வங்களையும் இழந்து, புத்திரர் மனைவி இவர்கள் மாண்டு, சுகமில்லாதவனுகி, இறந்துவிடுவாய். இஷ்டமில்லாமலிருந்த என்னைத் தூக்கி இன்பம் அனுபவித்த பாவியே! ஆவலாக நரகத்தில் அழுந்திக் கிடப்பாயென்று கூறினுள்.

22. அம்மாது சாபத் தாலே யாவையும் நீங்கிப் பின்பு
செம்மையில் லாமல் காலன் தேசத்தை யடைந்து மேலும்
எம்பெரு மான்கு லத்தில் இச்சென்மந் தன்னி லேதான்
துன்மையில் லாமால் வந்தான் தோகையே யிவனே யம்மா.

22. அப்பெண்ணின் சாபத்தால் இவனுடைய உடைமை எல்லாம் நீங்கி, பின்பு, தீங்குடனே இறந்து, மீண்டும் இடையர்குலத்தில், இப்பிறவியில் துன்ப மில்லாமல் பிறந்தான் இவன் என்று கூறுகின்றோம். தாயே !

23. இப்படி எழுவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
முன்ஜன்மம் தன்னில் பிரம்மப் பெண்ணையுஞ் சேர்ந்த தாலே
இச்சென்மங் கோகு லத்தில் ஈன்றகா ரணத்தைச் சொல்வீர்
பச்சைமால் தங்கை யாளே பகருவோ மேலுங் கேளே.

23. இங்ஙனம் முனிவர்கள் எழுவர் சொல்லும்போது, பார்வதி கேட்க லானாள். முற்பிறவியில் அந்தண குலப்பெண்ணைச் சேர்ந்தவன் இப்பிற வியில் இடையர் மரபில் தோன்றிய காரணத்தைச் சொல்லுங்கள், என்றாள். பச்சை நிறமுடைய திருமாலின் தங்கையே ! சொல்லுகின்றோம், கேளும்.

### நற்குலத்திலுதித்த காரணம்

24. முன்ஜன்மஞ் சூத்திர னாகி முயன்றுமே தான தர்மம்
இன்னவன் செய்த புண்யம் இக்குல முதித்தா னம்மா
மன்னவன் தனக்கு யோகம் வருக்குறோ மாறாண் டின்மேல்
நன்னிய பிறையைப் போல நடக்குமே யோகம் தானும்.

24. முற்பிறவியில் சூத்திரனாகப் பிறந்தாலும், தான தருமங்கள் செய்து வந்ததால், அந்த நற்செயல்களால் இக்குலத்தில் பிறந்தான். தாயே ! ஜாதகனுக்கு ஆறு வயதுக்கு மேல் யோகம், வளர்பிறையைப் போல் விருத்தியாகும்.

### சகோதரபாவ கிரகநிலை

25. இன்னவன் துணைவர் தம்மை இசைக்கிறோ மூத்தோர் காணோம்
தன்னிலே முனிவர் சொல்லச் சத்தியுங் கேட்க லுற்றாள்
துன்னிய லாபம் தன்னில் சூரியன் புந்தி நிற்க
இன்னவன் மூத்தோர் இல்லை எப்படிச் சொன்னீ ரையா.

25. இவனுடைய சகோதரபாவத்தைச் சொல்லுங்கால், மூத்தவர்கள் இல்லை என்று ரிஷிகள் சொல்லும்போது, பார்வதி தேவி கேட்கலானாள். லாபஸ்தானத்தில் சூரியன் புதன் இருப்பதால் இவனுக்கு மூத்த சகோதர னில்லை என்று எப்படிக் கூறினீர் ?

*26. எட்டினுக் குடையோன் காரி இவர்களைப் பார்ப்ப தாலே
நட்டமா மிரண்டு தாமும் நாயகன் பின்னால் விருத்தி
சட்டென வுண்டாஞ் சொன்னோம் சத்தியே யாண்பால் காணான்
திட்டெனப் பெண்பால் ரண்டு தீர்க்கமென் றுறைத்தோ மம்மா.

26. எட்டாமிட(மகர)த்துக்கு உரிய சனி (ஐந்தாமிடத்திலிருந்து கொண்டு) சூரியன் புதன் இவர்களைப் பார்ப்பதால், இரு சகோதரர்களுக்கு நஷ்டம் ஏற்படும், தாயே ! உடன்பிறந்த சகோதரனில்லை. நிச்சயமாக இரு சகோதரிகள் பிறந்து நீண்ட ஆயுளுடனிருப்பர்.

27. ஆணது தோன்று மாகில் அதுவுமே நட்ட மாகும்
தோன்றவே மணத்தின் காலஞ் சொல்லவே யிருபான் ரண்டில்
மான்விழி மனையாள் தானும் வருகுவாள் தென்மேல் திக்கில்
தேன்மொழி மாதுரு வர்க்கம் தேவியும் வருவா ளம்மா.

27. சகோதரன் பிறந்தால் உடனே இறந்து விடுவான. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றேம். அவனுடைய இருபத்திரண்டாம் வயதில், தென்மேற்குத் திக்கிலிருந்து, மருண்ட விழிகளையுடைய மனைவி வருவாள். அப்பெண் இந்த ஜாதகனுடைய தாயின் வர்க்கத்திலிருந்து வருவாளாகும்.

28. மாதுரு துணைவர் தம்மை யறைகின்றே மாண்பா லொன்று
மேதினில் வேறே யில்லை வீரியன் குடும்பந் தானும்
தீதுக ளதிக முண்டாம் சேயின்தன் ஐந்தாண் டின்மேல்
நீதியாய்க் குடும்ப மோங்கும் நிமலியே மேலுங் கேளே.

28. ஜாதகனின் தாயின் உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றேம். சகோதரன் ஒருவனே உண்டு. வேறு இல்லை. அவனுடைய குடும்பத்தில் கெட்ட செயல்கள் அதிகமுண்டு. ஜாதகனுடைய ஐந்தாம் வயதுக்குமேல் அக்குடும்பம் விருத்தியாகும், தாயே! மேலுங் கேள்.

29. ஆறுண்டு முதலே யோகம் அறைகின்றே மாம னுக்குப்
போரான பூமி விருத்தி போற்றுவோம் கன்று காலி
சீரான வீடு முண்டு சிறப்புடன் வாழ்வா னம்மா
காரானைத் தன்னைப் பெற்ற காதலி மேலுங் கேளே.

29. ஜாதகனுடைய ஆறும் வயதுக்கு மேல், மாமனுக்கு அதிர்ஷ்டங்கள் மிகுதியாகும். நல்ல விளைநிலங்கள் பெருகும். கன்று கால்நடைகள் விருத்தியாகும். அழகிய வீடு உண்டு. பெருமையுடன் வாழ்ந்து வருவான். கரிய யானை முகத்தையுடைய விநாயகனைப் பெற்ற பார்வதி தேவியே! கேள்.

30. இன்னவன் முப்பா னலில் இவன்தந்தை மரண மாகும்
அன்னையும் நாற்பான் ரண்டில் அவளுமே மரண மாகும்
மன்னவன் தனக்குக் கால மறைகின்றேம் மூன்று வைந்தில்
சொன்னமே பத்து ஆண்டில் சுந்தரன் தனக்கு ரோகம்.

30. ஜாதகனின் முப்பத்துநான்காம் வயதில், இவனுடைய தந்தை மரணமாவான். இவனுடைய நாற்பத்திரண்டாம் வயதில் தாய் இறந்து விடுவாள். ஜாதகனுக்குப் பதினைந்தாம் வயதில் பெரிய கண்டமுண்டு. தாயே! இவனுடைய பத்தாம் வயதில் இவனுக்கு வியாதி ஏற்படும்.

## ஆயுர்பாவம்

31. மரணம்போல் ரோகங் காணும் மங்கையே இவனுக் கம்மா
குருவுமே லக்கி னத்தில் குணமுட னிருப்ப தாலே
வருகிற வனந்தம் நோய்கள் வந்தாலும் நீங்கு மம்மா
இரவிமுன் பனிபோல் நீங்கி இருப்பனே யறுபத் தெட்டே.

31. மரணம் ஏற்படும் அளவுக்கு ரோகம் ஏற்படும், தாயே ! குரு லக்கினத்தில் நலமுடன் இருப்பதால் எவ்வளவு நோய்கள் வந்தாலும் நீங்கி விடும். சூரியன்முன் பனி போல் எல்லாம் நீங்கி, தன் அறுபத்தெட்டாம் வயது வரையில் இருப்பான்.

32. அறுபது எட்டு ஆண்டும் அவனியில் இருந்து பின்பு
பெருகும் பங்குனி மாதம் பூரணப் பருவம் தன்னில்
வறுமையி லடைவா னம்மா மறுஜன்மம் அவ்வூர் தன்னில்
உரிமையாய்ச் சைவச் சேயாய் உதிப்பனே இவனே அம்மா.

32. இவன் அறுபத்தெட்டு வயது வரையில் பூமியில் வாழ்ந்து வந்து, பங்குனி மாதம் பௌர்ணமி தியன்று இறப்பான். மறு பிறவி அவ்வூரிலேயே சைவ குலத்தவனுகப் பிறப்பான், தாயே !

33. இங்ஙனம் பராசர் சொல்ல இயல்ஜய முனிவர் சொல்வார்
பங்கமாம் குடும்பச் சேதி புகலுவீ ரென்று கேட்க
மங்கையே மூன்று மாண்டில் மைந்தன்தன் குடும்பம் வேறும்
துங்கமாம் நாலைந் தாண்டில் தந்தையின் மாதா வீவள்.

33. இங்ஙனம் பராசர முனிவர் சொல்லும்போது, ஜய முனிவர் கூறுகின்ருர். குறைவுள்ள இவனுடைய குடும்பச் செய்தியைச் சொல்லுங்கள், என்றுகேட்க (முனிவர்கள் கூறுகின்றனர்). தாயே ! ஜாதகனுடைய மூன்ரும் வயதில், இவனுடைய குடும்பம் வேருகும். இருபதாம் வயதில் தந்தையின் தாய் மரண மடைவாள்.

34. ஐந்தாண்டு வரைக்கு மேதான் அநேகமாய் வறுமை நேரும்
மைந்தனும் ரோக மாவன் மாடாடு பலிதம் கொஞ்சம்
சந்ததம் கடனுண் டாகும் சலிப்போடு வெறுப்பு உண்டாம்
பந்தமாய் அதன்மேல் தானும் பலவித யோகம் வாய்க்கும்.

34. ஜாதகனுக்கு ஐந்தாம் வயது வரையில் தரித்திரம் இருக்கும். இவனுக்கும் நோய் ஏற்படும். மாடு ஆடு முதலியன சிறிதே விருத்தியாகும். சதா கடன் ஏற்படும். வெறுப்பு சலிப்பு முதலியன உண்டாகும். அதற்குப் பிறகு பலவிதமான யோகங்கள் வாய்க்கும்.

35. பூமியும் பொருளும் சேரும் பூஷணம் மிகுதி யாகும்
நேமியோர் மெச்ச வாழ்வன் நிர்மிப்பான் வீடு தானும்
க்ஷேமமாம் குடும்பம் தானும் செழித்திடு மென்று சொன்னேம்
காமனை எதிர்த்தோன் தேவி கழிறிய மொழிகுன் றுவே.

35. பூமியும் பொருளும் விருத்தியாகும். ஆபரணங்கள் அதிகமாகும். உலகத்தார் கொண்டாடும்படி வாழ்வான். ஒரு வீடு கட்டுவான். குடும்பம் க்ஷேமமாக விருக்கும். செழிப்புள்ளதாகவு மிருக்கும். மன்மதனை யெரித்த சிவபெருமானின் தேவியே ! சொல்லிய மொழிகள் தவரு.

36. தந்தையி ளுர்ச்சி தத்தைச் சாதகன் விரும்ப மாட்டான்
எந்தையே வேறி டத்தில் இவன்சித்திர வீடு செய்வன்
பந்தமா யயலூர் தெற்கில் படைப்பனே விசேட பூமி
சொந்தமாய்க் கிணறும் சோலை தோகையே யிவனுக் குண்டே.

36. பிதுரார்ஜிதமான சொத்துக்களை ஜாதகன் விரும்பாதவன். இவன் வேறு இடத்தில் வீடு கட்டுவான். அயலூரில் தெற்குப் பக்கத்தில் விசேஷ மான பூமியைச் சேர்ப்பான். இவனுக்குச் சொந்தமாக தோட்டம் கிணறு முதலியன உண்டு, என்று கூறினோம்.

37. ஆள்கார ரதிக முண்டு அறைகின்றே மிவனுக் கம்மா
நீள்புவி தந்தை வர்க்கம் நீள்நிலம் சீர ணிக்கும்
ஆழிசூழ் புவியின் மேலே அறைகின்றோம் பலன்கள் யாவும்
வாள்விழி மாதே யாங்கள் வறைகின்ற மொழிகுன் றுவே.

37. ஏவலாட்கள் ஆதிக மிருப்பார்கள் இவனுக்கு, என்று கூறு கின்றோம். நீண்ட பூமியையுடைய தந்தையின் வர்க்கத்தின் நிலங்கள் குறைந்துவிடும். சமுத்திரம் சூழ்ந்திருக்கும் பூமியில் பலன்கள் எல்லா வற்றையும் சொன்னோம். வாளைப்போன்ற விழிகளையுடைய தாயே! நாங்கள் கூறும் வார்த்தைகள் தவறா.

## ஜாதகம் 16

1. கலையது குடம தாகக் காரிவில் சிகியும் தேளில்
நிலமகன் பொன்னேன் வண்டி நீர்புகர் இரவி பெண்ணில்
தலைமையாய்ப் புதனும் சிம்மம் தான்கயறு நந்தி யாகப்
பலமதாய் ஜன்மம் வீணை பேசுவீர் பலன்கள் தாமே.

1. சந்திரன் கும்பத்திலும், சனி தனுசிலும், கேது விருச்சிகத்திலும், செவ்வாய் குரு கடகத்திலும், சுக்கிரன் சூரியன் கன்னியிலும், புதன் சிம்மத்திலும், ராகு விருஷபத்திலும் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | லக்கினம் |
| சந்திரன் | இராசி சக்கரம் | | செவ்வாய் குரு |
| | | | புதன் |
| சனி | கேது | | சுக்கிரன் சூரியன் |

2. பிறந்தசேய் இல்லந் தன்னைப் பேசுவோங் கீழ்மேல் வீதி
உறைந்திடுந் தெற்கு வாசல் உத்திரங் காளி வாசம்
சிறந்திடு மாயோன் மேற்கில் தீபாஞ்சாலி மாரி நிற்கும்
நிறைந்திடு மீன திக்கில் நிற்பனே ஈசன் தந்தி.

2. பிறந்தவனின் வீட்டைப் பற்றிக் கூறுகின்றோம். கிழக்கு மேற்குத் தெருவில், தெற்கு நோக்கியுள்ள வாயிலுள்ளது. வடக்கில் காளி கோயில் உண்டு. மேற்கில் திருமாலின் ஆலயமும், திரௌபதி அம்மன் கோயிலும், மாரியம்மன் கோயிலும் உள்ளன........வடகிழக்குத் திக்கில் சிவ பெருமான் ஆலயமும், விநாயகர் கோவிலும் உள்ளன.

3. தும்பியும் துர்க்கையும் தென்மேல் துலங்காத கோஷ்ட முண்டு
இன்பமிவ் வடையா ளத்துள் இலகிய சமவூர் தன்னில்
தன்மையாய்ச் சித்திர வீட்டில் ஜாதகன் பிரம்ம சேயாய்
அம்புவி தனிலு திப்பான் அறைகிறோம் பலனைத் தானே.

3. மற்றொரு விநாயகர் ஆலயமும் துர்க்கையம்மன் கோவிலும் தென் மேற்குத்திக்கில் பாழடைந்த வேறொரு கோவிலும் உள்ளன. இவ்வித வடையாளங்களுள்ள சமநிலையையுடைய ஊரில், அழகிய வீட்டில், ஜாதகன் அந்தண குலத்தவனாக, பூமியில் பிறப்பான். அவனுடைய பலனைக் கேளுங்கள்.

4. இன்னவன் ஜனன யோகம் எழிலுறும் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்புத்திர களத்திர யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மம் சாற்றுவோம் நவக்கோ ளாய்ந்து
அன்னையே யாங்கள் சொல்லு மடைமொழி குன்றி டாவே.

4. ஜாதகனுடைய பிறப்பு, யோகம், தந்தையின் யோகம், தாயின் யோகம், பிறக்கும் புத்திரர்களின் யோகம், மனைவியின் யோகம். முற்பிறப்பு, மறுபிறப்பு இவைகளை நவக்கிரகங்களின் நிலையை ஆராய்ந்து பார்த்துக் கூறுகின்றோம். நாங்கள் சொல்லுபவை தவறா.

5. ஜாதகன் தந்தை சேதி சாற்றுவோம் இருசி வப்பன்
நீதியாய் வாயு தேகம் நிகர்பித்த ரோகி யாவன்
வேதனை ஒருவர்க் கெண்ணான் விளைபுல மதிகம் சேர்ப்பன்
ஆதியாய் நிறைந்த செல்வம் அணுகிடு மென்று சொன்னோம்.

5. ஜாதகனுடைய தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம். கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவன். வாயு ரோகமுள்ளவன். பித்த நோயு முடையவன். துன்பங்கள் பிறருக்குச் செய்ய மனமில்லாதவன். விளை நிலங்கள் அதிகம் சேர்ப்பான். பிதுரார்ஜிதமாகவுள்ள செல்வங்கள் இவனைச் சாரும், என்றோம்.

6. தைரிய மனத்த னுவன் தாட்டியாய்ப் பேச வல்லன்
கயவரை மனத்தி லெண்ணான் கவடில்லான் பெருமை உள்ளான்
நயமாக வார்த்தை கூறுவன் நன்முக வடிவு முள்ளான்
ஜயம்செய்வன் எடுத்த வேலை தேவிமேல் பிரிய முள்ளான்.

6. தைரிய சாலி. அடித்துப் பேசும் இயல்பினன். தீயவரை மனத்திலும் நினையாதவன். கபடில்லாதவன். பெருமையுள்ளவன். நயமாகப் பேசுபவன். முகத்தில் களையுடன் கூடியவன். எடுத்த காரியங்களில் வெற்றி பெறுவான். மனைவிமீது அன்புடையவன்.

7. வணங்கின பேரைக் காப்பன் வாக்குகள் தப்பா னுகும்
குணமுளான் பத்தி மானும் கூறுமுன் கோபம் கொஞ்சம்
மனமது இரண்டு முள்ளான் வண்டிவா கனமு முள்ளான்
பணமிகத் தேட வல்லான் பிராமணர் நேசம் கொள்வன்.

7. தன்னை வந்தடைந்தவரை ஆதரிப்பான். சொன்ன வார்த்தைகள் தவறாதவன். நற்குண முடையவன். பக்திமான். சொல்லுவதற்குமுன் கோபங் கொள்ளுவான். இருவிதமான எண்ணங்களுள்ள மனத்தினன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். செல்வங்களைத் தேடுபவன். அந்தணர்மீது நட்புக்கொள்ளுவான்.

8. அதிகார முடைய னுவன் ஆள்களு முடைய னுவன்
ததிநெய்பால் பிரிய முள்ளான் சற்சனர் நேசம் கொள்வன்
பதியினில் திருவும் வாசம் பந்துபூ சிதனும் மேலும்
சதிசெய்யா மனத்த னுவன் சத்தியே மேலும் கேளே.

8. அதிகார முள்ளவன். பணியாட்க ளுடையவன். தயிர், நெய், பால் இவைகளில் விருப்ப முள்ளவன். நல்லவர்கள் நட்புக் கொள்ளுவான். இவனுடைய வீட்டில் லட்சுமீ வசித்து வருவாள். பந்துக்களால் கொண்டாடப்படுபவன். துன்பங்கள் செய்ய மனமில்லாதவன். தாயே! மேலும் கேள்.

9. இவ்வித குணத்தா னுக்கு இசைக்கிறோம் துணைவர் காணோம்
பவ்வமாய்த் தாரம் ரண்டில் பருகிய முதல்மா துக்கு
ஒவ்விய இந்தப் பாலன் உதிப்பனே ஜேஷ்ட னாகத்
திவ்விய மாதே யாங்கள் சொல்லுமொழி குன்றி டாவே.

9. இவ்விதக் குணங்களையுடையவனுக்கு உடன் பிறந்தவரில்லை. இவனுக்கு மனைவியர் இருவர். அவர்களில் முதல் தாய்க்கு மூத்த புதல்வனாக இந்த ஜாதகன் பிறப்பான். அழகிய தாயே! நாங்கள் கூறும் மொழிகள் தவறா.

10. ஜாதகன் நிறம்கு ணத்தைச் சாற்றுவோம் சிவந்த மேனி
மேதினில் சமதே கத்தன் வித்தகன் ஊக சாலி
நீதியாய் நடக்கை உள்ளான் நிதானமாய் வார்த்தை கூறுவன்
தீதுகள் எண்ணா நெஞ்சம் தினம்சுக புசிப்பா னுவன்.

10. ஜாதகனுடைய நிறம் குணம் இவைகளைக் கூறுகின்றோம். சிவந்த உடலுள்ளவன். சமமான உடலமைப்புள்ளவன். ஊக முள்ளவன். நெறி யுடன் நடப்பவன். மெதுவாகப் பேசுபவன். கெட்ட எண்ணங்களை மனத்தில் நினையாதவன். சாப்பாட்டில் பிரியன்.

11. அடக்கமு முடைய னுவன் ஆசாரன் பலபேர்க் கன்பன்
துடுக்கென வார்த்தை கூறான் சுகமுளான் பந்து நேயன்
நடக்கையில் நல்ல னுவன் நாவுகள் தப்பா னென்றோம்
மடக்கொடி ஒருத்தி யாவள் வள்ளல்மேல் பக்தி உள்ளான்.

11. அடக்க முள்ளவன். ஆசார முடையவன். பல பேருக்குப் பிரியன். துடுக்காகப் பேசாதவன். சுகமுள்ளவன். பந்துஜனங்களிடம் பிரிய முள்ளவன். நன்னடக்கை யுள்ளவன். சொன்ன சொற்கள் தவறாதவன். மனைவி ஒருத்தியே யாவள். தெய்வபக்தி யுள்ளவன்.

12. தேவதா பூசை செய்வன் சிறந்த நன்மேனி உள்ளான்
ஆவலாய் அடுத்தோர் தம்மை அன்புடன் காக்க வல்லான்
கோவுகள் விருத்தி உள்ளான் குறைவிலாச் செல்வ முள்ளான்
புரவலர் நேசம் கொள்வன் பாலர்மேல் பிரிய னுவன்.

12. தெய்வ பூசை செய்து வருவான். சிறந்த நல்ல சரீர முடையவன். தன்னையடைந்தவர்களை அன்புடன் ஆதரிப்பான். பசுக்கள் விருத்தி யுள்ளவன். குறைவில்லாத செல்வங்களுடையவன். அரசர் நேசம் கொள்ளுவான். குழந்தைகள்மீது பிரிய முடையவன்.

13. இன்னவன் செங்கை தன்னில் இலகிடும் பத்ம ரேகை
தன்னிலே கமல ரேகை தங்கிடும் இவனுக் கம்மா
அன்னங்கள் போட வல்லான் ஆள்கார ருடைய னுவன்
பின்ன மில்லாத தேகன் பேசுவோம் மேலும் கேளே.

13. இவனுடைய கையில் பத்மரேகை இருக்கும். இவனுக்குக் கமல ரேகையும் தங்கியிருக்கும். பசித்தவருக்கு அன்னம் அளிப்பான். பணியாட்கள் உடையவன். பின்னங்களில்லாத சரீரம் உள்ளவன். தாயே! மேலும் கேள்.

14. ஆலய பக்தி மானும் அதிகார மில்லா னுவன்
சீலமா சார முள்ளான் திருமக னொப்ப னுவன்
ஞாலமேல் வறுமை இல்லான் நங்கைமார் விருப்பம் கொள்ளான்
கோலமாய்க் கர்ம நான்கு குணமுடன் செய்வா னென்றோம்.

14. தெய்வபக்தியுள்ளவன். அதிகாரமில்லாதவன். நல்லொழுக்கமும் ஆசாரமும் உள்ளவன். லட்சுமியின் குமாரனைப் போன்றவன (மன்மதனைப் போன்ற அழகன்). உலகில் தரித்திர மில்லாதவன். பிற பெண்களின்மீது ஆசையிலலாதவன். நான்கு கருமங்கள் செய்வான், என்று கூறுகின்றோம்.

15. இன்னவன் துணைவர் தம்மை இசைக்கிறோம் மாண்பா லொன்று
கன்னியு மவ்வா ருகும் கனக்காது நஷ்ட மாகும்
மன்னவன் மணத்தின் காலம் வரைகிறோம் ஒருபான் மூன்றில்
அன்னவள் வடமேல் திக்கில் காதலி வருவா ளென்றோம்.

15. ஜாதகனுடைய உடன்பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியுமுண்டு. அதற்குமேல் பிறக்காது. பிறந்தாலும் நிலையா. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். பதிமூன்றும் வயதில், வட மேற்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள், என்று சொல்லுவோம்.

16. அவளுடைக் குணத்தை யாங்கள் அறைகிறோம் ஊக சாலி
நவமதில் பொய்கள் சொல்லாள் நளினமாய் வார்த்தை கூறுவள்
இவளுமுன் கோபி யாவள் இடருக ளனந்த முள்ளாள்
தவமுடை யோருக் கன்பள் சந்ததி விருத்தி உள்ளாள்.

16. ஜாதகனுடைய மனைவியின் குணத்தை நாங்கள் கூறுகின்றோம். ஊக முள்ளவள். பொய் சொல்லமாட்டாள். இனிமையாகப் பேசுபவள். முன் கோபி. பலவிதத் துன்பங்களுடையவள். தவஞ்செய்பவருக்குப் பிரிய மானவள். சந்ததிவிருத்தி யுடையவள்.

17. வந்தவர்க் கன்ன மீவள் வரனுக்கு நேய முள்ளாள்
இந்திர யோக முள்ளாள் இவள்கர்ப்ப முடைய ளாவள்
மைந்தர்மேல் பிரிய முள்ளாள் மறுமொழி கூறு வாளாம்
சிந்தையில் கபடு முள்ளாள் ஜேஷ்டபுத் திரனில் லாதாள்.

17. பசியென்று வந்தவர்கட்கு அன்னமளிப்பாள். தன் கணவனுக்குப் பிரியமானவள். இந்திரயோகம் உள்ளவள். இவளுக்குக் கர்ப்பம் தோன்றும். குழந்தைகளின்மீது பிரியமுடையவள். மறுமொழி சொல்லும் இயல்பினள். மனத்தில் கபடமுள்ளவள். இவளுக்கு மூத்த புதல்வன் நிலையாமல் இறப்பான்.

18. துணைவர்க ளாண்பா லொன்று தோன்றிடு மிவளுக் கம்மா
அணையவே கன்னி ரண்டு அதற்குமேல் விருத்தி தோஷம்
இணையிலாக் குடும்ப முள்ளாள் இவள்தந்தை ஆஸ்தி கொஞ்சம்
பிணையிலாத் துணைவ ருக்குப் பலமான குடும்ப முண்டு.

18. இவளுக்கு உடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் இருப்பார். அதற்கு மேல் தோன்றினால் விருத்தியாகாது. இணையில்லாத குடும்பமுள்ளவள். இவளுடைய தந்தைக்கு சிறிதே ஆஸ்தி யுண்டு. சகோதர சகோதரிக்குக் குடும்பம் பலமாகும்.

19. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் கேளு மம்மா
சித்தமாய் ஆண்பா லொன்று தேவிமா ரிருவர் தீர்க்கம்
பத்தியம் முதலில் ரண்டு மணுகாது நஷ்ட மாகும்
அத்திமா முகனைப் பெற்ற அம்மையே மேலும் கேளே.

19. ஜாதகனுடைய புத்திர விருத்தியைச் சொல்லுகின்றோம். கேளும், தாயே ! நிச்சயமாகப் புத்திரன் ஒருவனும் புத்திரிகள் இருவரும் நீண்ட ஆயுளுடனிருப்பார். முதலில் பிறந்த இரு குழந்தைகள் நிலையா. யானை முகத்தோனைப் பெற்ற பார்வதியே ! மேலும் கேளும்.

20. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் தில்லை மேல்பால்
நிதியாய் இக்கு லத்தில் நேர்ந்துமே மனைவி மைந்தர்
ஓதிய கல்வி தன்னால் உரைக்கிறோம் சீவ னங்கள்
மேதினில் வந்த பூமி விளம்புவோம் கேளும் மாதே.

20. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தில்லைமாநகரத்துக்கு மேற்கில், இக்குலத்திலேயே பிறந்து, மனைவிமக்களைப் பெற்று, வேதங்களை ஓதி வந்து, அதனால் ஜீவனங்களை அடைந்து (தான்படித்த படிப்பால் உத்தியோகத்தை ஏற்று), உலகில் வாழ்ந்து வந்தபோது, சொல்லுகின்றோம். கேளும், தாயே !

### பாகச்சொத்தைக் கொடுக்காத தோஷம்

21. தாயாதி தனக்குப் பாகம் தாராமல் மோசம் செய்தான்
நியாயாதி பதியி டத்தில் நேர்ந்தனன் ஞாதி தானும்
வாயாரக் கவிகள் கட்டி அரசன்பால் சொன்ன னின்னோன்
நேயமாய்க் கவிகள் கேட்டு நீக்கினன் வழக்கைத் தானே.

21. தாயாதிக்குரிய பாகத்தைத் தராமல் மோசம் செய்தான். ஞாதி, நியாயாதிபதியிடம் சென்று முறையிட்டான். இவன் இல்லா வார்த்தைகளை யெல்லாம் சேர்த்துக்கட்டி நியாயாதிபதியிடம் சொன்னான். நியாயாதிபதி இவன் கட்டுவார்த்தைகளை நம்பி வழக்கைத் தள்ளிவிட்டான்.

22. பங்காளி மனம் பதைத்துப் பகருவான் சாபம் தானும்
தங்கிய மறுஜன் மத்தில் தனயர்கள் தோஷ மாகி
இங்கித மன்னை தந்தை இவர்வர்க்கம் நாஸ்தி யாகித்
துங்கமாய் ஆதி லேதான் சோர்வார்க ளென்று சொன்னான்.

22. பங்காளி மனம் நொந்து சாபமிடுகின்றான். உனக்கு ஏற்படும் மறுபிறவியில், புத்திரர்களுக்குத் தோஷ முண்டாகி, தாய் தந்தையர் இருவா வர்க்கமும் முதலிலேயே அழிந்து, நீயும் இறப்பாய், என்று சொன்னான்கள்.

**அந்தணர்கட்கு அன்னமிடுதலாம் சாந்தி**

23. அந்தவோர் தோஷம் தானும் அணுகியே இச்சென மத்தில்
தந்தைதாய்த் தோஷ முண்டாய்த் தநயர்கள் நஷ்ட மாவர்
முந்தின ஊழி தீர மொழிகிறோம் கிரியை ஒன்று
இந்தவாறு மன்னன் தானும் இக்குல மறையோனுக்கு ;

23. அந்தத் தோஷம் இப்பிறவியில் இவனை வந்தடைந்தது. தந்தை தாய் இவர்கட்கும், புத்திரர்களுக்கும் தோஷம் ஏற்பட்டு இறந்து விடுவர். முற்பிறப்பில் செய்த தீவினை தீர, சாந்தியொன்று கூறுகின்றோம். அம் மாதிரி இந்த ஜாதகன் அதே குல **அந்தணர்களுக்கு ;**

24. சந்தர்ப்ப ணைகள் செய்தால் தங்காது தோஷம் தானும்
பந்தமாய்ப் புத்திரர் தாமும் பருகிடும் தீர்க்க மாக
இந்தவாறு சேய்யா னாகில் இலகாதுபுத் திரர் தாமும்
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழிகுன் றாவே.

24. **போஜனம் செய்வித்தால் (சமாராதனை செய்தால்)** தோஷம் தங்காமல் விலகிவிடும். புத்திரர்கள் தோன்றி கட்டாயம் நீண்ட ஆயுளுடனிருப்பர். இம்மாதிரி செய்யாவிடில் புத்திரர்கள் பிறவார். கந்தபிரானைப்பெற்ற தாயே ! சொன்ன சொற்கள் தவறா.

25. இப்படி முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
எப்படிப் புத்திர தோஷம் இவனுக்கு நேர்ந்த தையா
செப்பமாய்க் கருமத் தோனும் திங்கள்தன் வீட்டில் நின்று
மெய்ப்புடன் உச்ச னாகி விளங்கின தாலே நீர்தாம் ;

25. இங்ஙனம் முனிவர்கள் கூறும்போது, பார்வதிதேவி கேட்கலானாள். இவனுக்குப் புத்திர தோஷம் எப்படி வந்தது ? கர்மாதிபதியாகிய (பத்தாம் வீட்டுக்குரிய) குரு, சந்திரனின் வீடாகிய கடகத்தில் உச்சனாகி விருப்பதால், தாங்கள் ;

26. தோஷமென் றுரைத் தீரையா சொல்லுவீ ரென்று கேட்கப்
பாசமாய்ப் பொன்ன னோடு பார்மகன் கூடி நின்றும்
நேசமாய் ஐந்தோன் தானும் நீச்சமாய் நான்கில் நின்று
வாசமாய்ச் சனியும் பார்க்க வரைந்திட்டோம் தோஷம் தானே.

26. தோஷம் உண்டு என்று எப்படிக் கூறினீர்கள் ? முனிவரே ! என்று (பார்வதி) கேட்க, (ரிஷிகள் பதில் கூறுகின்றனர்). குருவுடன் செவ்வாய் கூடியிருப்பதாலும், ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரன் நான்காமிடத்தில் (கன்னியில்) நீசமாக இருப்பதாலும், அத்துடன் சனியும் பார்ப்பதாலும், தோஷம் உண்டென்று சொன்னோம்.

27. அன்னங்கள் விரயம் செய்தால் அணுகிடும் புத்திர ரென்றீர்
எந்திடம் தன்னி லேதான் இயல்சந்தர்ப் பணைகள் செய்ய
முந்தவே கூறு மென்ன மொழிகுவீர் முனிவர் தாமும்
சொந்தநல் ஊரிலே தான் தோன்றிடும் மாலின் கோஷ்டம் ;

27. (அந்தணருக்கு) அன்னமளித்தால் புத்திர பாக்கியம் ஏற்படும் என்று கூறினீர்களே ! எந்த இடத்தில் சந்தர்ப்பணைகள் செய்ய வேண்டும் ? முதலில் கூறுங்கள், என்று கேட்க, முனிவர்கள் கூறுகின்றனர். தான் பிறந்த ஊரில் உள்ள திருமாலின் கோயிலில் ;

28. ஆலயம் தன்னி லேதான் சாந்தியும் செய்வா னாகில்
பாலகன் தீர்க்க மாகும் பருகிடும் செல்வ மெல்லாம்
கோலமாய்ப் பின்ஜன் மத்தைக் கூறுவோம் உத்திர திக்கில்
சீலமாய்க் காசி பக்கல் ஜனிப்பனிக் குலத்தி லேதான்.

28. கோவிலில் (சந்தர்ப்பணைகள்) சாந்திகள் செய்தானாகில், புத்திர விருத்தி ஏற்படும். செல்வங்கள் விருத்தியாகும். ஜாதகனுடைய மறு பிறப்பைக் கூறுகின்றோம். வட இந்தியாவில், இந்தக் குலத்தில், காசிப்பக்கத்தில் பிறப்பான்.

29. தனங்களும் அதிகம் பெற்றுத் தரணியா ளரசர் பக்கல்
கனமுடன் ஜீவிப் பானும் காவல னிவனே அம்மா
இணையிலாத் தந்தை ஜன்மம் இசைகுவீ ரென்று கேட்க
அணையவே சொல்லு மென்று அம்மையும் கேட்க லுற்றாள் .

29. செல்வங்களதிகம் அடைந்து, உலகையாளும் அரசர் பக்கத்தில் இருந்து ஜீவனம் செய்து வருவான் இவன். இவனுடைய தந்தையின் முற் பிறவியைச் சொல்லுங்கள், என்று (மற்றொரு முனிவர்) கேட்க, பார் வதியும் கேட்கலானாள்.

30. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் குடகு நாட்டில்
வந்தோர் க்ஷத்திரிய வம்சம் வன்மையாய் உதித்து மேலும்
சந்ததம் மணங்கள் பெற்றுத் தான்மடம் தண்ணீர்ப் பந்தல்
பந்தமாய்ச் சோலை குண்டம் பாலகன் செய்தா னம்மா.

30. தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். குடகு நாட்டில் க்ஷத்திரிய மரபில் தோன்றி, செழிப்புடன் இருந்து வந்து, மணம் செய்து கொண்டு, மடம் ஏற்படுத்தி, அங்குத் தண்ணீர்ப்பந்தல் அமைத்து, தோட்டம், குளம் இவைகளையும் ஏற்படுத்தினான்.

**அந்தணன் மனைவிமீது மையல் கொண்ட தோஷம்**

31. தானங்கள் பலவும் செய்து சத்கீர்த்தி உடையோ னாகி
மானமாய் வாழு நாளில் வந்தவூழ் தன்னைக் கேளாய்
வானவர் தம்மைப் போல அடியவர் மனைவி யோடு
ஆனவர் மடத்தில் தங்க அவள்பேரில் மோகங் கொண்டான்.

31. தானங்கள் பல செய்து, நல்ல கீர்த்தி யுடையவனாக இருந்து, கௌரவத்தோடு வாழ்ந்து வரும்போது, ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள், தாயே! தேவர்களைப் போன்ற ஒரு சிவனடியார் தன் மனைவியுடன் வந்து இவனுடைய மடத்தில் தங்கினான். அப்பெண்மீது இவன் மையல் கொண்டான்.

32. மோகங்கள் கொண்ட சேதி மூர்த்தியு மறிந்துபின்பு
தோகைமேல் பகைய தாகிச் சுந்தரன் தனக்கு சாபம்
போகங்கள் துய்க்க எண்ணிப் பிறக்கின்ற பின்ஜன் மத்தில்
வாகையாய் மனைவி தானும் மத்திய வயதில் மாண்டு ;

32. மோகம் கொண்ட செய்தியைப் பெண்ணின் கணவன் அறிந்து, அப்பெண்ணை வெறுத்து, இவனுக்கும் சாபமிட்டான். இன்பங்கள் அனுபவிக்க எண்ணிய நீ, எடுக்கும் மறு பிறப்பில், நடு வயதில், மனைவி மாண்டு ;

33. மறுமனை வந்த பின்பும் வளசுக மின்றி யேதான்
பெருங்கயர் ராகு வாலே போய்விடு முடலம் தானும்
அருமறை யாரு மிவ்வாறு அனுகிய சாபம் தந்து
வருமடம் தன்னை விட்டு அவருமே நீங்க லானார்.

33. இரண்டாம் மனைவி வந்த பிறகும் நீ வாழ்க்கைச் சுகமில்லாமல், பெரிய பாம்புகடித்து, உயிர் நீங்குவாய் என்று அந்தணனாகிய அவன் சாபமிட்டு, இந்த மடத்தை விட்டுத் தன் மனைவியுடன் வெளியே சென்றான்.

34. அவர்சாபம் இவனைப் பற்றி அனுகியே இச்சென் மத்தில்
துணைவர்கள் தோஷ முண்டாய்ச் சுந்தரன் மரண மாவான்
இணையிலா முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
தனிகனும் முன்ஜன் மத்தில் க்ஷத்திரிய குலமு தித்து ;

34. அவருடைய சாபம் இவனை இப்பிறவியில் பற்றிவந்தது. புத்திரர்களுக்குத் தீங்கு உண்டாகி, அவனும் மரணமடைவான். இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பார்வதிதேவி கேட்கலானாள். இவன் முற் பிறவியில் தனிகனாக, க்ஷத்திரிய குலத்தில் பிறந்து ;

### உயர்குலப்பிறவியின் காரணம்

35. இக்குலம் தன்னி லேதான் இசைந்தகா ரணத்தைச் சொல்வீர்
முக்கிய முன்ஜன் மத்தில் முயற்சியால் சத்திரம் சோலை
தக்கநீர்ப் பந்த லுந்தான் தானவன் செய்த புண்ணியம்
புக்கினு னிக்கு லத்தில் புண்ணிய சாலி கேளாய்.

35. இப்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்த காரணமென்ன? சொல்லுங்கள்; என்று கேட்டாள். முற்பிறவியில் தன் சொந்த முயற்சியால் சத்திரம், சோலை, தாகத்துக்குத் தண்ணீர்ப் பந்தல் முதலியன அமைத்து வந்த புண்ணியச் செயல்களால் இக்குலத்தில் பிறந்தான். புண்ணியவதியே! கேள்.

36. பின்ஜன்மம் தந்தைக் கேதான் பேசுவோம் தொண்டை நாட்டில்
அன்னவன் இக்கு லத்தில் அணுகியே அரசர் பக்கல்
மன்னவன் போல வாழ்வன் மாதாவின் குணத்தைச் சொல்வேன்
தன்னிகர் கற்பு முள்ளாள் சத்தியம் தப்பா ளாவள்.

36. ஜாதகனுடைய தந்தையின் மறு பிறவி, தொண்டை நாட்டில், இதே குலத்தில் பிறந்து, அரசரின் பக்கத்தில் சென்று அரசன் போல் வாழ்ந்து வருவான். தாயின் குணத்தைச் சொல்லுவேன். கற்புடையவள். சத்தியம் தவருதவள்.

37. அடக்கமு முடைய ளாவள் ஆளனுக் கினிய ளுவள்
இடக்குகள் சொல்லா ளாவள் இவள்தெய்வ பக்தி யுள்ளாள்
மடக்கொடி துணைவர் காணும் வம்சமும் விருத்தி இல்லாள்
திடத்துட னவர்க ளாஸ்தி சேர்ந்திடு மிவளுக் கம்மா.

37. அடக்க முடையவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். குதர்க்கம் பேசாதவள். இவள் தெய்வ பக்தி யுடையவள். இவளுக்கு உடன் பிறந்தவரில்லை. வம்ச விருத்தி யில்லாதவள். அவர்களுடைய ஆஸ்தி இவளுக்குச் சேரும்.

38. மாதுரு மரண காலம் வரைகின்றேம் ஈரெட் டாண்டில்
மேதினில் தந்தை காலம் விளம்புவோ மீரொன் பானில்
கோதிலா இவனின் காலம் கூறுவோ மைம்பா னேழில்
நீதியாய்க் கன்னி மாதம் நிகரமா வாசை தன்னில்.

38. தாயின் மரணகாலம் ஜாதகனுடைய பதினாரும் வயதில் நேரும். தந்தையின் இறுதிக் காலம் பதினெட்டாம் வயதில் ஏற்படும். ஜாதகன், தனது ஐம்பத்தேழாம் யெதில், புரட்டாசி மாதம், அமாவாசை யன்று இறந்து விடுவான்.

39. அனுயாச மரண மாகும் அறைகின்றேம் மரண காலம்
கனமுடன் இவன்பின் ளுலே கன்னியும் மரண மாவள்
துணைவரின் பலத்தை யாங்கள் சொல்லுவோம் பின்பா கத்தில்
வனமலை வாசம் செய்யும் மங்கையே மேலும் கேளே.

39. இவனுக்கு அனுயாச மரணம் ஏற்படும். இவனுடைய மனைவி இவனுக்குப் பிறகு இறப்பாள். இவனுடைய உடன் பிறந்தவர் விபரத்தை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றேம். மலையினில் வாசம் புரியும் தாயே! மேலும் கேள்.

### யோகம்

40 இன்னவன் யோகச் செய்கை இயம்புவோம் ஜனனம் தொட்டு
மன்னவன் மரண மட்டும் மதியது போல ஓங்கும்
அன்னங்கள் குறைவு ருது அதிகபாக்கியங்க ளுள்ளான்
தன்னினத் தோர்க்கு மேலாய் ஜாதகன் வாழ்வா னென்றேம்.

**40.** ஜாதகனுடைய யோகச் செய்திகளைக் கூறுவோம். அது, பிறப்பு முதல் இறப்பு வரையில் வளர் பிறைச் சந்திரன் போல் விருத்தியாகும். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். அதிகமான பாக்கியங்களுள்ளவன். தன் பந்துஜனங்களுக்கு மேலாக இவன் வாழ்ந்து வருவான், என்று கூறினோம்.

**41.** இது........எல் புத்திர யோகம் இசைக்கிறோம் குறைவு றாது
அதிபதி யாக வாழ்வன் அரசர்கள் பேட்டி உள்ளான்
நிதிமிகத் தேட வல்லன் நீணிநிலம் விருத்தி செய்வன்
சதியிலா வாழ்வா னம்மா சத்தியே மேலுங் கேளே.

**41.** இது..........புத்திர யோகம் சொல்லுவோம். அது குறைவில்லாமலிருக்கும். அதிபதி போல் வாழ்ந்திருப்பான். அரசரின் பேட்டி கொள்வான். செல்வங்கள் மிகுதியாகத் தேடுவான். நீண்ட நிலத்தைப் பெருக்குவான். துன்பங்களில்லாமல் வாழ்ந்து வருவான். தாயே ! மேலும் கேள்.

# ஜாதகம் 17

1. குருமதி கோலில் தங்கக் குசன்தேளில் கேது கன்னி
நிதிபுகர் சனிசு ருவில் நீள்புதன் குடும்ப மாக
அதிகய ரிரவி மீனம் அறைகிறேம் பின்னும் ஜன்மம்
வருவது ஆணும்ஜன்மம் வகுக்கிறேம் பலனைக் கேளே.

1. குரு சந்திரன் துலாத்திலும, செவ்வாய் விருச்சிகத்திலும், கேது கன்னியிலும், சுக்கிரன் சனி மகரத்திலும், புதன் கும்பத்திலும், சூரியன் ராகு மீனத்திலும்,மிதுனம் இலக்கினமாகவும் இருந்தால், பலனைக் கூறுகின்றேம். பிறப்பது ஆண் ஜன்மம். கேட்டிடுவாய்.

| | | | |
|---|---|---|---|
| சூரியன் ராகு | | | இலக்கினம் |
| புதன் | இராசி சக்கரம் | | |
| சுக்கிரன் சனி | | | |
| | செவ்வாய் | குரு சந்திரன் | கேது |

2. இன்னவன் பிறந்த இல்லம் இசைக்கிறேம் கீழ்மேல் வீதி
தன்னிலே தெற்குப் பார்வை சாற்றுவேன் சிற்றூ ராகும்
அன்னமே அவ்வூர் தன்னில் ஆலய மொன்றுங் காணேம்
சொன்னமே அற்ப வீட்டில் சுந்தரன் ஜனிப்பா னாகும்.

2. ஜாதகன் பிறந்த வீட்டைச் சொல்லுகின்றேம். அது, கிழக்கு மேற்குத் தெருவில், தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. பிறந்தவூர் ஒரு சிற்றூராகும். தாயே! அவ்வூரில் ஆலயங்கள் ஒன்றும் காணப்படவில்லை. ஓர் அற்பமான வீட்டில் ஜாதகன் பிறப்பான், என்று சொன்னேம்.

3. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் மால்நி றத்தான்
வந்தவர்க் கன்ன மீவன் மாலிவன் மதத்த னாகும்
சிந்தையில் கவடு மில்லான் ஜனங்கள்மேல் பிரிய னவன்
சந்ததம் கிருஷி வேலை தந்தையும் செய்வா னமே.

3. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றேம். கரிய நிறமுள்ளவன். தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்னமளிப்பான். விஷ்ணு மதத்தைச் சேர்ந்தவன். மனத்தில் கபடமில்லாதவன். மக்களிடத்தில் அன்புள்ளவன். சதா விவசாயம் செய்து வருவான், ஜாதகனின் தந்தை.

4. சொன்னசொல் கேட்பான் மேலும் சுத்தநன் மனத்த னாகும்
வன்னிய மரபே யாகும் வாக்குகள் சுத்த முள்ளான்
பின்னங்க ளெண்ணுச் சித்தன் பூமியும் விருத்தி செய்யான்
இன்னவன் பொருளும் சேர்க்கான் ஈகைவான் செலவு முள்ளான.

4. சொன்ன சொல்லைக் கேட்டு நடப்பான். நன்மை யுள்ள மனத்தினன். வன்னிய மரபில் பிறந்தவன். வாக்குச் சுத்தமுள்ளவன். தீய எண்ணங் களில்லாத மனத்தன். பூமியை விருத்தி செய்யாதவன். இவன் பொருளைச் சேர்க்காதவன். கொடையாளி. செலவு அதிக முள்ளவன்.

5. சற்சனர் உறவு கொள்ளான் தாட்சிண்யன் கனத்த புத்தி
இச்சைகள் அதிக முள்ளான் இவன்பந்து பகைவ னாவன்
லஜ்ஜையு முடைய னாவன் நாட்டுவோ முயர்ந்த தேகன்
கச்சைபோல் வடிவு முள்ளான் கழறுவேன் மேலும் கேளே.

5. நல்லோர்கள் உறவில்லாதவன். தாட்சிண்யமுள்ளவன். பெரிய (தாராளமான) புத்தியுடையவன். அதிகமான இச்சைகள் உள்ளவன். பந்து ஜனங்களுக்கு விரோதியாவன். கடன் உபத்திரவம் உள்ளவன் (சங்கோஜம் உள்ளவன்). உயரமான சரீர முடையவன். பெண்ணைப் போன்ற முக முள்ளவன். சொல்லுகின்றோம், கேளுங்கள்.

6. இவனுடைச் சோத ரங்கள் இசைக்கிறே மாண்பா லொன்று
நவமதில் பெண்பால் மூன்று நாட்டுவோம் விருத்தி யாகும்
கவனமாய் இதன்மேல் தோன்றில் கனக்காது நஷ்ட மாகும்
சிவனிடைப் பாகத் தாளே செல்வியே மேலும் கேளே.

6. இவனுடைய சகோதரபாவத்தைச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவனும், சகோதரிகள் மூவரும் விருத்தியாக இருப்பர். இதற்கு மேல் பிறந்தால் மரித்து விடுவர். சிவனுடைய பாதி சரீரத்தை உடைமையாக்கிக் கொண்டவளே ! செல்வியே ! மேலுங் கேள்.

7. இப்படி இருக்கும் தந்தை இவனுக்கே உதித்த பாலன்
செப்புவோம் பலன்கள் யாவும் தீரமு மில்லா நெஞ்சன்
ஒப்புடன் கருநி றத்தான் உயர்வான கல்வி இல்லான்
தப்பிதம் ஒருவர்க் கெண்ணன் சாந்தவான் வலுவு முள்ளான்.

7. இங்ஙனம் கூறப்பட்ட தந்தைக்கு மகனைப் பிறந்தவன், இந்த ஜாதகன். இவனுடைய பலன்களைக் கூறுவோம். தைரியமில்லாத மனத்தினன். கருமை நிறமுள்ளவன். உயர்ந்த கல்வி இல்லாதவன். ஒருவருக்கும் தீங் கெண்ணாதவன். சாந்தமுள்ளவன். சரீரவலுவுள்ளவன்.

8. பயிர்த்தொழில் செய்வா னாகும் பந்துவும் புகழ வாழ்வன்
தயிர்நெய்பா லிஷ்ட முள்ளான் சந்ததி யுடைய னாவன்
பயமுளான் பொய்கள் சொல்லான் பாரினில் சோதர முள்ளான்
வயலுமே சேர்ப்பா னாகும் மங்கையர் மோக வானும்.

8. விவசாயம் செய்வான். உறவினர் கொண்டாடும்படி வாழ்வான். தயிர் நெய் பால் இவைகளின்மீது பிரியமுள்ளவன். சந்ததிகள் உள்ளவன். பயமுடையவன். பொய் யுரைக்காதவன். சகோதரர்களுமுடையவன். விளை நிலங்கள் சேர்ப்பான். பெண்கள்மீது மோகம் கொள்ளுவான்.

9. பாக்கிய முடைய னாகும் பாரினில் கீர்த்தி உள்ளான்
காக்கவே காலி விருத்தி கனத்ததோர் சகடு முள்ளான்
யோக்கியக் குடும்ப முள்ளான் புண்ணிய மனத்த னுவன்
வாக்குமே உதார முள்ளான் வந்திடும் பின்னால் யோகம்.

9. பாக்கியங்க ளுள்ளவன். உலகில் கீர்த்தியுள்ளவன். கால் நடைகள் விருத்தியாகும். பெரிய வண்டி உள்ளவன். யோக்கியமான குடும்பமுள்ளவன். புண்ணியமான மனத்தினன். உதாரமான குணங்களுள்ளவன். பின்னால் யோகம் ஏற்படும்.

10. ஜாதகன் துணைவர் தம்மைச் சாற்றுவே னிருநான் காகும்
போதவே கன்னி நான்கு புகலுவோ மாண்பா லவ்வாறு
மேதினில் ஆண்பால் மூன்று விருத்தியாம் கன்னி அவ்வாறு
சோதித்துப் பார்த்து நன்றாய்ச் சொலுமொழி குன்றி டாவே.

10. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றோம். அவர் எட்டுப்பேராவர். பெண்கள் நால்வரும் ஆண்கள் நால்வருமாம். அவர்களில் மூன்று ஆண்களும் மூன்று பெண்களும் விருத்தியாவர். (மற்றவை நிலையா.) நன்றாக ஆராய்ந்து பார்த்துச்சொல்லும் வார்த்தைகள் தவறா.

11. மாதரு குணத்தை யாங்கள் வரைகிறோம் ஒடிச்சல் தேகி
மேதினில் இருநி றத்தாள் மேல்வர் பக்தி உள்ளாள்
கோதிலா நமை னத்தாள் கூறுமுன் கோபி யாவள்
சூதுக ளெண்ணு நெஞ்சம் சொல்லுவோம் மேலும் கேளே.

11. தாயின் குணத்தைக் கூறுகின்றோம். மெல்லிய தேகமுடையவள். இரு நிற முள்ளவள். தெய்வபக்தி யுள்ளவள். தீமையில்லாத நன்மனத்தள். பேசுவதற்குமுன் கோபமடைவாள். கபடங்களில்லாத எண்ணமுள்ளவள். மேலும் கேள்.

12. அவளுடைச் சகோத ரர்கள் அறைகிறோ மாண்பால் நாலு
நவமதில் கன்னி மூன்று நாட்டுவோம் கேளு மம்மா
இவனுமே உதிக்கா முன்னம் ஏகுவன் ஒருவன் தானும்
சகமதில் உதித்த பின்பு சேருவன் ஒருவன் தானும்.

12. தாயினுடைய சகோதரர்களைப்பற்றிக் கூறுகின்றோம். ஆண் மக்கள் நால்வரும் பெண்கள் மூவரும் ஆகும். ஜாதகன் பிறப்பதற்குமுன்பே ஒரு மாமன் இறந்துவிடுவான். இவன் பிறந்தபின்பு ஒருவன் பிறப்பான்.

13. மற்றவ ரிருவ ராகும் மாதுலர் தீர்க்க மாகும்
பத்தினி ஒருத்தி நஷ்டம் பாவையு மிருவர் தீர்க்கம்
சித்தமாய்ப் பாலன் முன்னோன் ஜனித்தவன் குணத்தைச் [சொல்வோம்
புத்தியு முடையன் கோபி புகலுவோம் சோம்பல் கொஞ்சம்.

13. மற்றவர்களில் இரு மாமன்மார்கள் தீர்க்கமாயிருப்பார். தாயின சகோதரி ஒருத்தி இறந்துவிடுவாள். இரு சகோதரிகள் தீர்க்கமாயிருப்பார்கள். ஜாதகனுக்குமுன் பிறந்தவனின் குணத்தைச் சொல்லுகின்றோம். நல்ல புத்தியுள்ளவன். முன்கோபி. சிறிது சோம்பலுள்ளவன் என்று கூறுவோம்.

14. குடும்பத்தை ஆத ரிக்கான் கோதைமேல் பட்ச முள்ளான்
இடும்புகள் கொஞ்சம் செய்வான் ஈகையான் பித்த தேகி
நடுவது வயதி லேதான் நாயகன் வேறே செல்வன்
விடமனை யாளும் ரண்டு வித்தகன் கொள்ளு வானும்.

14. தன் குடும்பத்தை ஆதரிக்காதவன். மனைவியின்மீது பிரியமுள்ளவன். துன்பங்கள் கொஞ்சம் செய்வான். கொடையாளி. பித்த தேகமுள்ளவன். இடைவயதிலேயே இவன் தனியாகச் சென்றுவிடுவான். வேற்று மனைவியர் இருவரை இவன் கொள்ளுவான்.

15. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவேன மேல்பா லுள்ள
பந்தமாய்ச் சிற்று ரில்தான் பாலகன் சைவச் சேயாய்
வந்தவன் மனைவி பின்னை மாநில மதிக முண்டாய்ச்
சிந்தையில் குறைவில் லாமல் சேயனும் வாழு நாளில் ;

15. ஜாதகனின் தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேன் இவ்வூருக்கு மேற்கில் உள்ள சிற்றூரில், சைவமரபினில் தோன்றுவான். மனைவி மக்களை யடைந்து, வினை நிலங்களை அதிகம் பெற்று, மனத்தில் குறைவில்லாமல் செல்வன் வாழ்ந்துவரும் நாளில்;

**பெரியவர்க்கு அன்னமில்லை யென்ற தோஷம்**

16. அரன்பூசை அதிகம் செய்வன் அகதிகள் பக்தி உள்ளான்
திறமையாய் வாழு நாளில் செய்திடு மூழி சொல்வேன்
பொறுமையாய்ப் பெரியோர் தாமும் புண்ணியன் தன்னைப் [பார்த்துத்
தாகமாய் அன்னம் கேட்கத் தானவன் இல்லை என்றான்.

16. சிவபெருமானுக்குப் பூசைகள் அதிகம் செய்துவருவான். அகதிகளுக்கு உபகாரி. இங்ஙனம் வாழ்ந்துவரும்நாளில், இவன் செய்த தீவினையைச் சொல்லுகின்றேன். ஒரு பெரியவர் இவனைப்பார்த்துப் பசியுடன் அன்னம் கேட்கும்போது, இவன் இல்லை என்று கூறினன்.

17. பசிதாகத் தாலே அந்தப் பரமன்தன் அடியார் தாமும்
வகையது கூற லுற்றார் மனைபூமி மாடும் போகும்
நசியுமே குடும்பம் தானும் நாட்டினல் சாபம் தானும்
உசிதமாய்ச் சாபம் தானும் உறைந்தது அச்சென் மத்தில்.

17. பசி, தாகத்தால் மனம்வாடிய அந்தச் சிவனடியார் கூறலானார். " உன் வீடு, நிலம், கால்நடைகள் தோட்டம் எல்லாம் நசித்துவிடும். குடும்பமும் நாசமாகும் " என்று சாபமிட்டான். அதன்படியே அப்பிறவியின் சாபம் இவனை வந்தடைந்தது.

18. பூமியும் பொருளும் வீடும் புண்ணியன் தோற்று விட்டான்
தீமையாய் மரண மாகிச் சென்றனன் இச்சென் மத்தில்
க்ஷேமமாய்ச் சிலநாள் யோகம் செழித்துமே வறுமை உண்டாய்ப்
பூமியும் வீடும் மாடும் புண்ணியன் தோற்பா னென்றோம்.

18. அதனால் பூமி, பொருள், வீடு இவைகளை இந்த ஜாதகனின் தந்தை இழந்துவிட்டான். கஷ்டத்துடன் மரணமடைந்து, மீண்டும் இப்பிறவியில் சில நாள் க்ஷேமமாக செழித்து இருந்து, தரித்திரம் அடைந்து, பூமி, வீடு, கால் நடைகள் இவைகளைத் தோற்றுவிடுவான்.

19. இப்படிப் பராசர் சொல்ல ஜயமுனி சொல் லுற்றார்
எப்பவும் தரித்திர னாக இருப்பனோ இவனின் தந்தை
செப்பமாய்க் கூறு மென்னச் சொல்லுவார் பராசர் தாமும்
ஒப்புடன் சாத கன்தான் உதித்தநாள் முதலா மாக ;

19. இங்ஙனம் பராசரமுனிவர் கூறும்போது, ஜயமுனிவர் சொல்லுகின்றார். ஜாதகனின் தந்தை எப்போதும் தரித்திரனாகவே இருப்பானா ? நிச்சயமாகக் கூறுங்கள், என்று வினவ, பராசரமுனிவர் உரைக்கின்றார். ஜாதகனுக்கு பிறந்த நாள் முதல் ;

20. இருபத்து நாலாண் டுக்குள் இடறுக ளனேகம் நேரும்
வரவர நஷ்ட மாகும் மாடுகள் சேத மாகும்
திருவுமே நீங்கு வாளாம் சயநில மெல்லாம் போகும்
பெருமையும் குறைவ தாகும் புகன்றனம் மேலும் கேளே.

20. இருபத்துநான்கு வயது வரையில் அநேகவிதத் துன்பங்கள் ஏற்படும். வரவர நஷ்டம் மிகுதியாகும். மாடுகள் சேதமாகும். லட்சுமீ இவனை விட்டு நீங்குவாள். விளைநிலங்களெல்லாம் போய்விடும். பெருமையும் குறைந்து போகும். சொல்லுகின்றோம். மேலும் கேள்.

21. அதற்குமேல் மரண மட்டும் அம்புலி போல யோகம்
நிதநிதம் லாப முண்டாம் கீழ்நிலம் அதிகம் சேரும்
குதர்க்கங்க ளில்லை கண்டாய் கோவுமே விருத்தி உண்டாம்
சதமுடன் க்டன்கள் தீரும் சத்தியே மேலும் கேளே.

21. அதற்குமேல் மரணமடையும்வரையில் வளர்பிறைச் சந்திரன்போல் யோகம் விருத்தியாகும். தினந்தோறும் லாபம் ஏற்படும். விளைநிலங்கள் அதிகம் சேரும். வேறு துன்பங்களில்லை. பசுக்கள் விருத்தியாகும். கடன்கள் தீர்ந்துபோகும். தாயே ! மேலும் கேள்.

22. வண்டிவா கனமு முண்டாம் வம்சங்கள் மெச்ச வாழ்வன்
குண்டைகோ விருத்தி யாகும் குணமுடன் பாக்கியம் சேரும்
தண்டமிழ்த் திருவும் சேரும் சகலரும் உறைவ ராகும்
எண்டிசைப் புகழும் உண்டு எல்லோரும் உதவி யாவர்.

22. வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். குலத்தினர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். பசு, எருதுகள் விருத்தியாகும். நற்குணத்துடன் பாக்கியங்கள் வந்துசேரும். தமிழ்ச்செல்வமும் (இலக்குமியும்) வந்தடையும். எல்லா உறவினரும் வந்துசேர்வார்கள். எட்டுத்திசைகளிலும் கீர்த்தி யடைவான். எல்லோரும் ஜாகதகனுக்கு உதவியாக இருப்பார்.

23. அவனாலே யாகும் நன்மை அநேகமாய்ச் சுகமு முண்டு
ஜகமதில் மன்றல் காலம் செப்புவோம் இருபா னைந்தில்
நவமதில் வடகீழ் தன்னில் நாயகி வருவா ளம்மா
அவளுமே வந்த பின்பு அநேகமாய்ச் செல்வம் சேரும்.

23. ஜாதகனுடைய தந்தையால் ஜாதகனுக்கு நன்மை அதிகமுண்டு, சுகமுமுண்டு. ஜாதகனுடைய திருமணக்காலம் சொல்லுகின்றோம். இருபத்தைந்தாம் வயதில், வடகிழக்குத்திசையிலிருந்து மனைவி வருவாள். அவள் வந்த பிறகு செல்வங்கள் பெருகும்.

24. இன்னவன் தனக்குப் புத்திரர் இயம்புவோம் எழுவ ராகும்
கன்னியும் இரண்ட தாகும் காளையு மவ்வா றாகும்
அன்னமே இதன்மேல் மூன்று அனுகினும் நஷ்ட மாகும
சொன்னசொல் குன்றி டாவே சுந்தரி மேலும் கேளே.

24. ஜாதகனுக்குப் புத்திரர் எழு பேராகும். இரு புத்திரிகளும் இரு புத்திரர்களும் தீர்க்கமாகயிருப்பார். அதற்குமேல் பிறக்கும் மூவரும் இறந்து விடுவார். சொன்ன சொற்கள் தவறா. தாயே ! மேலும் கேள்.

25. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் நாற்ப தாண்டில்
பிந்தியும் மாதுரு காலம் பேசுவோம் அதன்மேல் ரண்டு
எந்தையே இவனின் காலம் இயம்புவோம் அறுபா னொன்றில்
வந்தவை காசி மாதம் வளர்பிறை ஷஷ்டி தன்னில்.

25. தந்தையின் மரண காலத்தைச் சொல்லுகின்றோம். அஃது இவனுடைய நாற்பதாம் வயதில் ஏற்படும். அதற்கு மேல் இரு ஆண்டுகளுக்குள் தாய் மரணமடைவாள். ஜாதகனுடைய மரண காலத்தைச் சொல்லுகின்றோம். அறுபத்தோராம் வயதில், வைகாசி மாதத்தில், வளர் பிறைச் சஷ்டி திதியில் மரணமடைவான்.

26. [1]மாலிவன் பதத்தைச் சேர்ந்து மறுஜன்மம் புதுவை மேல்பால்
சீலமாம் சைவ னாகிச் சிறந்ததோர் மனைவி மக்கள்
கோலமாய்க் குடும்பம் பெற்றுக் குறைவிலா பூமி உண்டாய்
ஞாலமேல் வாழ்வா னென்று நவின்றனர் ரிஷிக ளம்மா.

26. திருமாலின் திருவடிகளைச் சேர்ந்து, மறு பிறவி, புதுவைக்கு மேற்கில், நல்லொழுக்கமுள்ள சைவனாகப் பிறந்து, மனைவிமக்களைப் பெற்று, நல்ல குடும்பத்தை யடைந்து, குறைவில்லாத பூமிகளையும் அடைந்து, உலகத்தில் வாழ்ந்து வருவான் என்று ரிஷிகள் கூறினார்கள்.

27. இப்படி ஒருவர் கூற இயலவே பராசர் சொல்வார்
செப்பமாய் முன்ஜன் மத்தின் சேதியைக் கூறு மெனன
அப்பணி சடையோன் பக்கல் அமர்ந்திடும் மாதே கேளாய்
ஒப்புடன் ஒதூர் பக்கல் உயர்ந்திடும் பேரூர் தன்னில் ;

---

[1] திருமால் திருவடி சேர்வான்.

27. இங்ஙனம் ஒரு முனிவர் கூறும் போது, பராசர முனிவர் சொல்லு கின்றார். முற் பிறப்பின் செய்தியைச் சொல்லுங்கள், என்று கேட்க, கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமான் பக்கத்தில் அமர்ந்திருக்கும் தாயே ! கேளாய். ஒதூருக்குப் பக்கத்தில் உள்ள பெரிய ஓர் ஊரில் ;

28. சேடர்தன் குலமு தித்துச் செல்வனும் பாக்ய வானாய்
நாடெலாம் செட்டுச் செய்து நாயகன் வாழு நாளில்
தேடவும் அரிதாய் வந்த தபசியும் தீர்த்தம் கொண்டு
கூடல்வாய் தன்னில் தங்க மாரனும் கண்டு சென்றான்.

28. சேடர் குலத்தில் பிறந்து, பாக்கியங்களைப் பெற்று, உலகெலாம் வியாபாரம் செய்து வாழ்ந்து வரும்போது, தேடற்கரிய ஒரு தபசி, தீர்த்தம் கொண்டு வந்து தங்கிய தைக் கண்டு, இவனும் அவருடன் சென்றான்.

29. அவனுடன் சேதுக் கேகி அநேகமாய்த் தீர்த்தம் தோய்ந்து
இவனுமே உள்ளூர் மீண்டு இருக்கின்ற காலம் தன்னில்
சிவனடி யாருக் கன்னம் சிறப்புடன் அளித்து வந்தான்
பவமுள ஊழி வந்து பருகிற்று இவனுக் கம்மா.

29. அவருடன் சேதுக்குச் சென்று, அங்குள்ள புண்ணிய தீர்த்தங் களில் நீராடி, இவன் உள்ளூருக்குத் திரும்பி, வாழ்ந்து வந்த காலத்தில், இவன் சிவனடியாருக்கு அன்னம் முதலியன சிறப்புடன் அளித்து வந்தான். அப்போது ஒரு தீவினை இவனை வந்தடைந்தது. தாயே !

30. தன்னிட ஊரிலே தான் சலக்கரை அரசின் கீழே
மந்திரம் ஓதும் பிரம்ம மறையவர் பூசை செய்தார்
தந்தியும் நாக மங்கைத் தானவர் வாச மாகும்
மைந்தனும் அவ்வி டத்தில் மாங்கல்யம் சென்ற பெண்ணை ;

30. தன்னுடைய ஊரில், ஆற்றங் கரையின் பக்கத்திலிருந்த அரச மரத்தின் கீழ், மந்திரங்கள் ஓதும் அந்தணர்கள் பூசை செய்து வந்த விநாயகரும் சர்ப்பமும் மற்ற தேவர்களும் வசித்து வந்தனர். இவன் அவ்விடத்தில் மாங்கல்யம் இழந்து நின்ற பெண்ணை ;

அரசமரத்தின் கீழ் விதவையைப் புணர்ந்த தோஷம்.

31. [1]விதவையை மரத்தின் கீழே வித்தகன் போகம் துய்த்தான்
அதனாலே பாபம் வந்து அணுகிற்று இவனுக் கம்மா
பதியினில் திருவும் நீங்கிப் பாலகன் தரித்ர னானான்
விதியினால் மரண மாகி விளங்கினா னிவனே அம்மா.

31. விதவையை அம் மரத்தின் கீழே இருத்தி, இன்பம் அனுபவித்தான். அதனால் இவனுக்குத் தோஷம் ஏற்பட்டது. இந்த ஜாதகனுக்கு, இவனுடைய வீட்டில் இருந்த செல்வங்கள் யாவும் நீங்கி, இவன் தரித் திரனானான். விதியினால் மரணமடைந்து, மீண்டும் இப் பிறவியில் பிறந்தான் இவன். தாயே !

[1] நற்குலப் பிறவியின் காரணம்.

வேறு.

32. [1]சேதுவின் தீர்த்தபல னிச்சென் மத்தில்
திறமையாய் வன்னியகுல மரபி லேதான்
மீதுவந்தான் முன்ஜன்ம போடத் தாலே
முயலுவோங் காலிபொருள் நட்ட மாகும்.

32. சேதுவில் நீராடிய பலத்தால், ஜாதகன் இப் பிறவியில் வன்னியகுல மரபில் தோன்றினன். முற் பிறவியில் செய்த தீவினையால் கால்நடைகள், பொருள்கள் நஷ்டமாகும்.

33. ஆதியிலே குடும்பமும் வறுமை யாகும்
அதன்மேலே பின்வயதில் யோக வாளும்
சோதித்து நவக்கோளை யாய்ந்து நன்றுய்ச்
சொல்லுமொழி குன்றுவே தோகை யேகேள்.

33. ஆதியில் குடும்பம் தரித்திரமாக விருக்கும். அதற்கு மேல் பின் வயதில் யோகங்கள் ஏற்படும். நவக்கிரகத்தை நன்றுக ஆராய்ந்து பார்த்துச் சொல்லும் வார்த்தைகள் தவரு. தாயே ! கேள்.

## ஜாதகம் 18.

1. பிறைவண்டி ராகு சீயம் பொன்மீனம் கேது சாடி
தரைமகன் மேட மாகச் சனிதேளில் புகரும் வீணை
பரியும் புந்தி நந்தி பகருவோம் ஜன்மம் வீணை
உரைகுவீர் பலனை என்று உத்தமி கேட்க லுற்றாள்.

1. சந்திரன் கடகத்திலும், ராகு சிம்மத்திலும், குரு மீனத்திலும், கேது கும்பத்திலும், செவ்வாய் மேஷத்திலும், சனி விருச்சிகத்திலும், சுக்கிரன் மிதுனத்திலும், சூரியன் புதன் ரிஷபத்திலுமாக நின்று, லக்கினம் மிதுனமாக இருந்தால், உள்ள பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| குரு | செவ்வாய் | சூரியன் புதன் | லக்கினம் சுக்கிரன் |
| கேது | இராசிச் சக்கரம் | | சந்திரன் |
| | | | ராகு |
| | சனி | | |

2. காதலீ கேட்கும் போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினி லாண்பால் ஜன்மம் வந்தஇல் கீழ்மேல் வீதி
பாதக மெமனின் வாசல் பாரளந் தோனும் மேற்கில்
மாதங்கி தென்பால் நேரும் மாரியும் வடமே லாகும்.

2. பார்வதி தேவி கேட்கும் போது, கௌசிக முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் பிறப்பு. பிறந்த வீடு கிழக்கு மேற்கு வீதியில் தெற்கு நோக்கியுள்ளவாயிலுள்ளது. உலகமளந்த மாயோனின் கோயில் மேற்கிலும், தெற்கில் காளிகோயிலும், வட மேற்கில் மாரியம்மன் கோயிலும் உள்ளன.

3. தந்தியும் அருகில் தங்கும் சங்கரன் கோஷ்ட முத்திரம்
இந்தநல் லடையா ளத்துள் இறங்குவான் வைச்யச் சேயாய்த்
தந்தைதாய் துணைவர் யோகம் தன்மனை புத்திர யோகம்
வந்தவன் முன்பின் ஜன்மம் வரைகிறோ மிந்நூல் தன்னில்.

3. அருகில் விநாயகர் ஆலயமும், வடக்கில் சிவபெருமானின் ஆலயமும் ஆகிய இவ்வடையாளங்களுள்ள ஊரில், வைசிய குலத்தவனாகப் பிறப்பான். இவனுடைய தந்தை தாய் உடன்பிறந்தவர் மனைவி மக்கள் இவர்களின் யோக வரலாற்றையும், இவர்களின் முற்பிறப்பு மறுபிறப்பு ஆகியவற்றையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மாண்பால் மூன்று
வந்திடும் கன்னி ரண்டு வரைகிறோ மிவனுக் கேதான்
அந்தவர் வேருய்ச் செல்வர் அலைச்சலாம் வனவா சங்கள்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோ மவர்கள் சேதி.

4. ஜாதகனுடைய தகப்பனுரின் உடன் பிறந்தவர்களைக் கூறுகின்றோம். சகோதரர் மூவரும் சகோதரிகள் இருவரும் உண்டு. அவர்கள் தனித்துச் சென்று விடுவார்கள். துன்பங்களும் வனவாசத்தைப் போன்ற வாழ்க்கையும் ஏற்படும். அவர்களைப்பற்றிப் பின் பாகத்தில் கூறுவோம்.

5. மாநிறம் சமதே கத்தன் மர்மமில் லாதா னுகும்
ஊனமில் லாத தேகி உறன்முறைக் கினிய னுவன்
தானமும் தர்ம மிச்சை தந்தையின் சரிதம் காணன்
தேன்மொழி கூறு வானும் செட்டுக்கள் செய்வா னுமே.

5. மாநிறமுள்ளவன். சமமான உடலமைப்புள்ளவன். இரகசியமில்லாதவன். ஊனங்களில்லாத சரீர முடையவன். பந்துகளுக்குப் பிரியமானவன். தான தருமத்தில் இச்சையுள்ளவன். தந்தையின் விஷயங்களை அறியாதவன். இனிய பேச்சுக்கள் பேசுபவன். வியாபாரம் செய்வான்.

### வேறு

6. மரமாட்டுந் தொழிலுடையான் வஞ்சியர்கள் மோகமுளன் [மறுத்துக் கூருன்
வறுமைகளு மாதியிலே மாதுருமே விாண்டாகும் மனைவி தன்னுல்
பெருமையுண்டு பின்புத்தி பிறந்தவிடந் தனில்வாழான் பந்து [நேயன்
துருசான கோபமுண்டு சொல்தவருன் பூர்வஜன்மஞ் செப்பக் [கேண்மோ.

6. இவன் தன் இறுதிக் காலம் வரையில் (மரமாட்டும்) தொழில் செய்வான். விலை மாதர்கள்மீது மையல் கொள்ளுவான். மறுத்துப் பேசும் இயல்பில்லாதவன். ஆதியில் தரித்திரமுள்ளவன். இரு தாய் மார்கள் உள்ளவன். மனைவியால் பெருமையடைவான். பின்புத்தி யுள்ளவன். தான் பிறந்த ஊரில் வாழாதவன். உறவினர்களுக்கு இஷ்டன். விரைவினில் கோபமடைவான். சொன்ன சொற்படி நடப்பவன். அவனுடைய முற்பிறப் பைச் சொல்லுகின்றோம். கேளும்.

### வேறு

7. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் தோகை தன்னில்
அன்னவன் ரெட்டி வம்சம் அணுகியே மனைவி மைந்தர்
பொன்பூமி உடைய னுகிப் புகழான குடும்பி யாகி
இன்னவன் வாழு நாளில் இயம்புவோ மூழி தானே.

7. ஜாதகனுடைய தந்தையின் முற் பிறவியைக் கூறுகின்றோம். தோகை நாட்டில், ரெட்டியார் மரபில் பிறந்து, மனைவி மக்களைப் பெற்று, செல்வங்கள் பூமி இவைகளையும் புகழுள்ள குடும்பத்தையும் அடைந்து, இவன் வாழ்ந்த காலத்தில் ஏற்பட்ட சாபத்தைக் கேளுங்கள்.

கருப்பன் முனி இருந்த மரத்தை வெட்டியதால் ஏற்பட்ட சாபம்.

8. தன்னுடைக் கொல்லை தன்னில் தங்கிற்றுக் கருப்பன் சாமி
முன்னோர்கள் தோத்த ரிப்பார் முனிவரும் விருக்ஷம் தன்னைக்
தன்வேலைக் குரிய வேண்டித் தரித்தன னிவனே என்றோம்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

8. ஜாதகனுடைய தந்தையின் வீட்டுப் பின் புறத்தில், ஒரு கருப்பன் சாமி, வெகு காலமாக வாழ்ந்து வந்தது. அதை இவனுடைய முன்னோர்கள் பூசை முதலியன செய்து வந்தனர். அந்த முனி வாழ்ந்து வந்த மரத்தை தந்தை தன் வீட்டுவேலை நிமித்தமாக வெட்டி விட்டான். உயர்ந்த கணவனை யடைந்த தேவியே ! கேளுங்கள்.

9. மரமது போன பின்பு மாமுனி கருப்பன் தானும்
உரைதற்கு இடமே இன்றி ஒதுங்கிற்று வேறூர் தானும்
மருவிப்பின் புகலு கின்ற வார்த்தையைச் சொல்லக் கேண்மோ
குறைவிலா இருந்த இல்லம் குறைசெய்த பாவிக் கேதான் ;

9. மரத்தை வெட்டிய பிறகு, அந்த முனி இருப்பதற்கு இடமில்லாமல் வேறூருக்குச் சென்றுவிட்டது. சென்றபின் அம்முனி இட்ட சாபத்தைச் சொல்லுகின்றேன். கேளுங்கள். குறைவில்லாமல் நான் வாழ்ந்து வந்த என்னுடைய இருப்பிடத்தை வெட்டிய பாவிக்கு ;

10. மற்றொரு ஜன்மம் தன்னில் வருமில்லம் காணு தாகிக்
குற்றமாய் வறுமை யாகிக் குலவுவாய் வேறூர் தானும்
பற்றிற்று வந்தத் தோஷம் பாலக னந்தி யத்தில்
சுத்தமாய்த் தலங்கள் சென்று சண்டன்தன் பதிக்குப் புக்கி ;

10. மறு பிறவியில் தான் பிறந்த வீடு இல்லாதவனுகி, தரித்திரமடைந்து, வேற்றூரில் சென்று வாழ்வாய் என்றது. அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. இவனும் (ஜாதகனின் தந்தையும்) கடைசிக் காலத்தில் நல்ல க்ஷேத்திரங்கள் பல சென்று, பிறகு இறந்து ;

11. பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தனன் வைச்யச் சேயாய்
உறைந்திடும் முனியின் சாபம் உதித்தஇல் காணு னுகும்
மருவுவான் வேறூர் தன்னில் வடமேல்பால் செல்வா னுகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே நேளாய்.

11. மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தான், வைசிய குலத்தவனுக. முனி சாபம் இப் பிறவியிலும் தொடர்ந்தது. இவனுக்குப் பிறந்த வீடு கிடைக்காமல், வேற்றோர் ஊரில் வடமேற்குத் திசையில் சென்று வாழ்ந்து வருவான். வேதங்களின் முடிவில் நடனமாடும் அம்பிகையே ! கேளுங்கள்.

12. சொன்னஇக் குணத்தா னுக்குச் சுதனுமே உதிப்பா னுகும்
அன்னவன் துணைஆண் முன்னுல் அணுகிடும் ஒருவன் தீர்க்கம்
பின்துணை காணு னுகும் பேசுவோம் முன்னோன் சேதி
அன்னிய ருறவு கொள்வன் அவன்குலத் தொழிலும் செய்வன்,

12. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். இவனுக்கு மூத்த சகோதரன் ஒருவன் உண்டு. அவன் நீண்ட ஆயுளுடனிருப்பான். தம்பி இல்லாதவன். இவனுடைய மூத்த சகோதரனைப் பற்றிச் சொல்லுவோம். பிறருடைய உறவைக் கொள்ளுவான். தன் குலத் தொழிலைச் செய்துவருவான்.

13. சுக துக்க முடைய னாகும் சுந்தரி ஒன்றே யாகும்
பகையான கால னூடு பரவுவாள் மத்தி யத்தில்
தகமையாய்ச் சுதரான் ரண்டு தங்கிடும் பால னுக்கு
நகைமாது வேறு காணுன் நஞ்சாகும் இவனுக் கேதான்.

13. சுக துக்கங்கள் கலந்து உள்ளவன். மனைவி ஒருத்தியே. அவள் இடையிலேயே இறந்து விடுவாள். இரு புத்திரர்கள் தோன்றிடுவர். வேறு மணம் செய்துகொள்ளான். மறு மணத்தை விஷம்போல் வெறுப்பவன்.

14. வேறாகச் செல்வ னாகும் வனவாசம் அந்தி யந்தில்
கூறுவோம் பின்பால் சேதி குமரன்தன் குணத்தைக் கேளாய்
போரினில் செல்லா னாகும் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்
தீரமா மனத்த னாகும் சீக்கிர நடையு மாவன்.

14. தனியாகச் சென்று விடுவான். கடைசியில் வனவாசம் போன்று தனித்து வாழ்வான். மற்ற விபரங்களைப் பிறகு கூறுகின்றோம். ஜாதகனுடைய குணத்தைக் கேளுங்கள். சண்டைக்குச் செல்லாதவன். தோத்திரம் செய்தவரை ஆதரிப்பான். தைரிய மனத்தினன். வேகமாக நடப்பவன்.

15. கல்வியும் சமம தாகும் கனத்திடும் பணைஎர் விருத்தி
இல்லையென் றுரைக்க மாட்டான் இன்பச்சொல் மாநி றத்தான்
நல்லவன் நல்லோ ருக்கு நாதனுர் பக்தி பூண்பன்
வெல்லும்சொல் ஈகை கொஞ்சம் வியாபாரம் செய்வ னாமே.

15. சமமான கல்வியறிவுள்ளவன். பண்ணை ஏர் முதலியன விருத்தியாகும். யாசித்தவருக்கு இல்லை என்று கூறுதவன். இனிமையாகப் பேசுபவன். மாநிற முடையவன். நல்லவர்கட்கு நல்லவனுக விருப்பான். சிவபெருமான்மீது பக்தி கொள்ளுவான். இவன் வார்த்தைக்கு மதிப்புண்டு. சிறிது கொடையாளி. வியாபாரம் செய்துவருவான்.

16. குலத்தொழில் புரிவா னாகும் குணமது ரண்டு முண்டு
கலகமா மனத்த னாகும் கழருமுன் கோபி யாவன்
சலம்தோய்வன் சல்லியம் கொள்வன் தானவன் நிவிர்த்தி [செய்வன்
விலைமாதர் மோகம் கொள்ளான் விருந்தினர்ப் பிரிய னவன்.

16. தன் குலத் தொழிலைச் செய்துவருவான். இருவிதக் குணங்களுடையவன். கலகம் செய்யும் மனத்தினன். சொல்வதற்குமுன் கோபமேற்படும். புண்ணிய நதிகளில் நீராடுவான். கடன் படுவான். பின்பு நிவிர்த்தி செய்வான். வேசையர்மீது மையல் கொள்ளாதவன். விருந்தினர்களிடத்தில் பிரியனுக விருப்பான்.

17. கைமுதல் பின்னு ளுள்ளான் கரமதில் கமல ரேகை
வையமேல் நல்லோ னுவன் மணமது இருபான் மூன்று
னதையலும் தென்கீழ் தன்னில் சாற்றுவேன் குணத்தைச்
[சொல்வேன்
நய்யவே வெகுநா ளாகும் நலிந்தமெய் இருசி கப்பள்.

17. தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் பின்னால் ஏற்படும். கையில் கமலரேகை இருக்கும். உலகத்துக்கு நல்லவன். இவனுடைய இருபத்து மூன்றும் வயதில் மணமேற்படும். அப்பெண் இவன் ஊருக்குத் தென் கிழக்கிலிருந்து வருவாள். அப்பெண்ணின் குணத்தைக் கூறுகின்றோம். அவள் இவனை யடைய வெகுநாட்களாகும். மெலிந்த சரீரி. கருமை கலந்த சிவந்த மேனியள்.

18. அன்னம்போல் சாய லொக்கும் அவசர மனத்த ளாகும்
கன்னிகை யோக சாலி கணவனுக் கினிய ளாகும்
பின்னமில் லாத தேகி பொருந்திடும் அற்ப ரோகம்
தன்சுதர் காணு ளாகும் தரிக்கினும் தீதே யாகும்.

18. அன்னம் போன்ற (நடையுள்ள)வள். அவசரமான மனத்தை யுடையவள். அப் பெண் யோகசாலி. கணவனுக்குப் பிரியமானவள். பின்னங்கள் (ஊனங்கள்) இல்லாத தேகமுடையவள். சிறிது நோயுடையவள். புத்திர பாக்கியமில்லாதவள். பிறந்தாலும் நிலையா.

19. காரணம் யாது என்னக் காதலி பூர்வம் தன்னில்
பாரிய வினைகள் செய்தாள் பரவிற்று அந்தத் தோஷம்
கூறுவீர் அந்தச் சங்கை குமரிமுன் ஜன்மம் கேளாய்
ஆருறில் கங்கை சேயாய் அனுகியே மதலை உண்டாய் ;

19. காரணம் என்ன? என்று கேட்க, இவள் முற் பிறவியில் அநேக தீ வினைகள்செய்தாள். அதனால் தோஷங்கள் வற்பட்டன. அதனைச் சொல்லுங் கள், என, இப் பெண்ணின் முற் பிறவியைக் கேளுங்கள். வேளாள மரபில் பிறந்து, குழந்தைகளைப் பெற்று, வாழ்ந்துவரும் சமயத்தில், இவளுடைய முப்பத்தாறும் வயதில் ;

குழந்தைக்கு அன்னம் இல்லை என்றதால் ஏற்பட்ட சாபம் : சாந்தி இல்லை.

20. மங்கையும் வாழு நாளில் மருவின வினையைச் சொல்வேன்
நங்கையா மேழை மாது நல்கின சுதருக் கன்னம்
இங்கிவள் தன்பால் கேட்க இடரான வார்த்தை சொல்லிச்
சங்கையாய் ஓட்டி விட்டாள் சாற்றுவாள் ஏழை மாது.

20. ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். ஓர் ஏழைப் பெண், தன் குழந்தைக்கு அன்னம் கேட்கும்போது, இவள் அடாத வார்த்தைகளைக் கூறி, கெட்ட மனத்துடன் விரட்டிவிட்டாள். அந்த ஏழைப் பெண் கூறுகின்றாள்.

21. மகவுக்கு ஈயாய் பாவி மறுஜன்மம் கவலை தோன்றித்
தகைமையாய்ச் சுதர்க ளின்றித் தரணியில் வாழ்வா யென்றாள்
பகையாக அந்தச் சாபம் பற்றிற்று பாவைக் கேதான்
வகையுடன் கால னூடு மருவிப் பின் பிரமன் லக்கம் ;

21. குழந்தைக்குச் சோறு தராத பாவியே ! நீ, மறு பிறப்பில், கவலைப் பட்டு, குழந்தைகளின்றி, உலகில் வாழ்ந்து வருவாய், என்றாள். தீமையாக அந்தத் தோஷம் இப் பெண்ணுக்கு ஏற்பட்டது. பிறகு தக்க காலத்தில் இறந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு ;

22. வந்தவ ளிவளே என்றோம் மருவிற்று ஏழைச் சாபம்
தன்சுதர் காணு ளாகும் தரிக்கினும் தீதே யாகும்
அந்ததோர் தோஷம் தீர அருளுவீர் சாந்தி தானும்
எந்தசாந் திகள்செய் தாலும் எய்தாது சுதர்கள் தாமே.

22. பிறந்தவள் இவள், என்றோம். ஏழையின் சாபமும் வந்தடைந்தது. தனக்குப் புத்திரர் இல்லாதவள். பிறந்தாலும் நிலைக்கார். அந்தத் தோஷம் நீங்கச் சாந்தியொன்று கூறுங்கள். எந்தச் சாந்திகள் செய்தாலும் புத்திரர்கள் பிறவா.

23. கருமங்கள் எவர் செய்வார்கள் உரைப்பீர்கள் முனியே நீர்தாம்
மறுமண மொன்று தோன்றி அவளுக்குச் சுதராண் ரண்டு
அரிவையர் ஒன்றுண் டாகும் அவர்களால் கருமம் நேரும்
இருமனை எந்தக் காலம் எய்திடும் விபரம் சொல்வீர்.

23. இவர்களுக்குக் கருமக் காரியங்கள் (ஈமக் கிரியைகள்) யார் செய்வார் கள் ? என்று சொல்லுங்கள், முனிவரே ! தாங்கள். இவள் கணவன் மறு மணம் செய்துகொண்டு, அவளுக்கு இரு புத்திரர்களும் ஒரு பெண்ணும் பிறப்பார்கள். அவர்களால் கருமங்கள் செய்யப்படும். ஜாதகனுக்கு இரண் டாம் கலியாணம் எப்போது ஏற்படும் ? என்று சொல்லுங்கள்.

24. முப்பது ஆறுண் டுக்குள் மேவிடும் அந்த மாது
செப்பின சுதர்கள் தாமும் ஜனித்தவன் பூர்வம் சொல்வேன்
அப்பணி சடையோன் வாழும் அருணையில் தீயின் வம்சம்
மெய்ப்புடன் உதித்தா னென்றோம் விளைபுல மதிக முண்டாய் ;

24. ஜாதகனுக்கு முப்பத்தாறும் வயதுக்குள் அந்தப் பெண் வருவாள். நாம் கூறிய புத்திரர்கள் பிறப்பார்கள். ஜாதகனுடைய முற் பிறவியைக் கூறுகின்றோம். கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவபெருமான் வாழும் திருவண்ணாமலையில், வன்னிய குலத்தில் பிறந்து, விளை நிலங்கள் அதிக மாகப் பெற்று ;

25. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரன் வாழ்ந்து மேதான்
பகையான கால னூடு பரவியே பிரமன் லக்கம்
தகைமையாய் இக்கு லத்தில் ஜனித்தவ னிவனே என்றோம்
மிகுதவம் செய்யு மெங்கள் வித்தகி கேட்டி டாயே.

25. சுகமுள்ள குடும்பத்தை யடைந்து, இவன் வாழ்ந்துவந்து, இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இக்குலத்தில் பிறந்தவன், இந்த ஜாதகன். மிகுந்த தவங்கள் புரியும் எங்கள் தேவியே ! கேளுங்கள்.

26. அன்னைமா நிறத்த ளாகும் ஆளனுக் கினிய ளாகும்
பன்னியே பேச வல்லாள் பதரிலாள் பாட்டாளி யாகும்
தன்துணை ஆண்பா லொன்று தங்கிப்பின் மத்தி யத்தில்
துன்னிய கால் ஞடு சென்றிடு மென்று சொல்வோம்.

26. ஜாதகனுடைய தாய் மாநிறமுடையவள். கணவனுக்குப் பிரியமானவள். பன்னிப் பன்னிப் பேசுபவள். குற்ற மற்றவள். உழைப்பவள். உடன் பிறந்தவளுக்கு ஒரு சகோதரன் பிறந்து, இடையில் இறந்துவிடுவான், என்று கூறுகின்றோம்.

27. துணையின்றி வாழ்வா ளாகும் செப்புவோ மவள்முன் ஜன்மம்
கனமுள விரிஞ்சி தன்னில் கங்கையின் குலமு தித்துத்
தனயர்க ளதிக முண்டாய்த் தரணியில் வறுமை இன்றிச்
சினமிலா வாழு நாளில் செப்புவோ மூழி தானே.

27. இவள் உடன்பிறந்தவர்களின்றி வாழ்ந்துவருவாள். அவளுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றோம். செழிப்புள்ள விரிஞ்சி நகரத்தில், வேளாள குலத்தில் பிறந்து, புத்திரர்களை அதிகமடைந்து, தரித்திரமில்லாமலும் தீங்குகளில்லாமலும் வாழ்ந்து வரும்போது, ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

28. மாலையில் அதிதி தானும் மங்கையின் வீடு சென்று
சாலவே அன்னம் கேட்கத் தந்......சாகை தந்தாள்
கோலமாய்ப் பாலன் வந்து குறையின்றி வார்த்தை பேசக்
காலன்போல் கடிந்து சொல்லக் கனத்ததோ ரகதி தானும்.

28. ஒரு நாள் மாலையில், ஒரு பரதேசி, இப் பெண்ணின் வீட்டை யடைந்து அன்னமளிக்க வேண்டினார். இப் பெண்ணும்.. .. ..........வீட்டைக் காண்பித்தாள். அந்த வீட்டுக்காரன் பரதேசியைப் பார்த்து அடாத வார்த்தைகள் பேச, அகதியானவர் மனம் வருந்திக் கூறுகின்றார்.

அன்னம் இடைக்காத பரதேசிச் சாபம்.

29. மாதுவும் அகதி பேரில் வருத்தமாய் வார்த்தை சொல்லத்
தீதான வார்த்தை கேட்டுச் செப்புவார் மனவெ றுப்பால்
காதலி பின்ஜன் மத்தில் கனக்காது துணைவர் தாமும்!
நீதியாய் இருந்த இல்லம் நிலைக்காது வேறூர் செல்வாய்.

29. அந்தப் பெண்ணும் அகதியின்மீது வருத்தமாகக்கூற, அவ்வார்த்தைகளைக் கேட்ட பரதேசி மனவெறுப்புற்றுக் கூறுகின்றார். தாயே! உனக்கு மறு பிறவியில், உடன் பிறந்தவர் பிறந்தாலும் நிலையார். உனக்கு இருந்த வீடும் நிலைக்காமல் வேற்றூர் செல்வாய், என்றார்.

30. சுதர்களும் பகையு மாகித் தேவிநீ வாழ்வா யென்று
அதிதியும் சொல்லி யேதான் அண்டையில் சென்றா ரென்றோம்
சதியாக அந்தத் தோஷம் தங்கிற்று பாவைக் கேதான்
அதிபதி மரண மாகி மால்மகன் வரையப் பட்டு ;

30. புத்திரர்களும் மரித்து (விரோதிகளாகி) நீ வாழ்ந்து வருவாய், என்று அதிதியானவர் சொல்லிவிட்டு, வேறுவீட்டுக்குச் சென்றார் அந்தத தோஷம் ஜாதகனின் தாய்க்கு ஏற்பட்டு, கடைசியில் மரணமடைந்து, திரு மாலின் மகனுகிய பிரமனுல் படைக்கப்பட்டு ;

31. வந்தவ ளிவளே என்றேம் அதிதியின் சாபம் போலத்
தன்துணைத் தோஷ மெய்தும் தரிக்காது வரனில் லம்தான்
சந்ததம் முப்பான் ரண்டில் சண்டன்தன் பதிக்குச் செல்வள்
பிந்திய ஜன்மம் தன்னை அறைகுவோம் தாயே கேளும்.

31. பிறந்தவள் இவள், என்று கூறுகின்றேம். பரதேசியின் சாபத் தைப் போல் உடன் பிறந்தவர்கட்குத் தோஷமேற்படும். கணவனில்லம் இவளுக்கு நிலைக்காது. இவள் தனது முப்பத்திரண்டாம் வயதில் இறந்து விடுவாள். மறு பிறப்பைச் சொல்லுகின்றேம். தாயே ! கேளும்.

32. சொக்கர்வாழ் பாண்டி நாட்டில் ஜனிப்பளா மிக்கு லத்தில்
மிக்கவே தனங்க ளுண்டாய் மெல்லியும் வாழ்வா ளாகும்
தக்கவே ஐயைந் தாண்டில் தந்தையின் கண்டம் நேரும்
தொக்கவே பின்ஜன் மத்தைச் செப்புவோம் தாயே கேளும்.

32. சொக்கநாதர் வாழும் மதுரையில், இதே குலத்தில் பிறப்பாள். மிகுந்த தனங்களைப் பெற்று வாழ்ந்து வருவாள். ஜாதகனின் இருபத் தைந்தாம் வயதில் தகப்பனுக்குக் கண்டம் நேரும். தகப்பனின் மறு பிறவியைக் கேளுங்கள். தாயே !

33. அன்னகர் தன்னி லேதான் அனுகுவான் தீயின் வம்சம்
பொன்பூமி உடைய னுகிப் புகழ்ச்சியாய் வாழ்வா னுகும்
உன்னத சாத கர்க்கு உரைக்கிறே மெழுபான் ஏழில்
கன்னியா மாதம் தன்னில் கழருவோம் கண்டம் தானே.

33. அவ் வூரிலேயே வன்னிய குலத்தில் பிறப்பான். பொன், பூமிகள் இவைகளைப் பெற்று, புகழுடன் வாழ்ந்து வருவான். ஜாதகனுக்கு எழுபத்தேழாம் வயதில், புரட்டாசி மாதத்தில், மரணம் ஏற்படும்.

34. மறுஜன்மம் காளத்தி தன்னில் வருகுவான் சைவச் சேயாய்த்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா னுகும்
உரைக்கிறே மிவனின் யோகம் உதித்தநாள் முதலா மாக
ஆருறு ஆண்டு மட்டும் அற்பமாம் சமயோ கங்கள்.

34. மறு பிறவி, காளத்தி க்ஷேத்திரத்தில், சைவ குலத்தில் பிறந்து, லட்சுமீ கடாட்சம் பெற்று, செல்வவானுக வாழ்வான். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றேம். பிறந்த நாள் முதல் முப்பத்தாறு வயது வரையில் சமமான சுவல்ப யோகங்கள் இருக்கும்.

35. பகலிரவு போலே யோகம் பருகிடும் பால னுக்குத்
தகமையாய் அதன்மே லாகச் சந்திரன் பிறைபோல் யோகம்
மிகுலாபம் சல்லியம் காணன் விளைபுலம் விருத்தி யாகும்
சகத்துளார் மதிக்க உய்வன் சித்திர இல்லம் நேரும்.

35. பகலும் இரவும் போல் யோகம் மாறி மாறி வரும். அதற்குப் பிறகு, பிறைச் சந்திரன் போல் யோகம் ஏற்பட்டு, மிகுந்த லாபமடைந்து, கடன்கள் இல்லாமல், விளை நிலங்கள் விருத்தியாகி, உலகத்தவர் மதிக்குப்படி வாழ்ந்து வருவான். அழகிய வீடு கட்டுவான்.

36. மனத்திட மில்லா ளாகும் மங்கையால் பெருமை ஏற்பன்
கனதனம் பெருக்க முண்டு காலிகள் அடிமை சேர்க்கை
இனமது மதிக்க வாழ்வன் இடரென்றோர்க் குதவி செய்வன்
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

36. மனத்தில் திடமில்லாதவள். தன் மனைவியால் அதிருஷ்டம் உண்டாகும். செல்வங்கள் பெருகும். கால் நடைகள், பணியாட்கள் விருத்தியாகும். தன் பந்துஜனங்கள் கொண்டாடும்படி வாழ்வான். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. விநாயகரைப் பெற்ற பார்வதியே ! கேட்டிடுவாய்.

37. பிறந்திடு காலம் தன்னில் புதன்தசை தனி லிருப்புச்
சிறந்திடு பதிநா லாண்டும் செப்புவோம் பலனை யாங்கள்
தரணியில் சல்லிய முண்டு தனக்குமே ரோகம் காட்டும்
குறைமனம் அலைச்சல் எய்தும் குணமிலாத் தாய்தந் தைக்கே.

37. ஜாதகன் ஜனன காலத்தில் புதமகாதசை இருப்பு பதினான்கு வருடங்களாம். அக்காலத்துப் பலன்களைக் கூறுகின்றோம். நிலத்தில் கடன் உண்டு. இவனுக்கு நோயுண்டாகும். மனத்தில் சஞ்சலங்கள் ஏற்படும். தாய் தந்தைகட்கும் நோய் உண்டாகும்.

38. இவன்பின்னால் மனைவி மாரக ளியம்புவோம் கண்டம் தானும்
நவனியில் பூமி வீடு நற்பரி யாவும் தானும்
கவனமாய் மூவாயிரம் பொன் கலப்பனும் இந்தப் பாலன்
சிவன்தனைப் பூசை செய்யும் செல்வதி கேட்டி டாயே.

38. இவனுக்குப் பின்னால் இவன் மனைவி மரணமடைவாள். உலகில் பூமி, வீடு, குதிரை முதலிய எல்லாம் சேர்த்து மூவாயிரம் பொன் சேர்ப்பான், இந்த ஜாதகன். சிவனைப் பூசை செய்யும் பார்வதியே ! கேட்டிடுவாயே !

# ஜாதகம் 19.

(ஜாதகம் நெ. 36 பார்க்க.)

1. சந்திரன் சனியும் கோலில் தராமகன் மேட மாகப்
புந்தியும் நந்தி யாகப் புகர்பானு வீணை புக்க
மந்திரி கடக மாக மெய்ஞ்ஞானி அரியில் மேவ
முந்தின கயறு சாடி உதயமும் மிதுன மாக ;

1. சந்திரன் சனி துலாத்திலும், செவ்வாய் மேஷத்திலும், புதன் விருஷபத்திலும், சுக்கிரன் சூரியன் மிதுனத்திலும், குரு கடகத்திலும், கேது சிம்மத்திலும், ராகு கும்பத்திலும் நின்று, ஜன்ம லக்கினம் மிதுனமாக இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| | செவ்வாய் | புதன் | லக்கினம் சுக்கிரன் சூரியன் |
| ராகு | இராசி சக்கரம் | | குரு |
| | | | கேது |
| | | சந்திரன் சனி | |

2. சொல்லுவீர் பலனை என்று சுந்தரி கேட்கும் போது
புல்குவார் பராசர் தாமும் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
இல்லமும் கீழ்மேல் வீதி எமன்வாடை கணேசன் கீழ்ப்பால்
எல்லைமா காளி தென்மேல் ஈசனும் வடகீ ழாகும்.

2. ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும் போது, பராசர முனிவர் கூறுகின்றார். இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. இவனுடைய வீடு கிழக்கு மேற்குத் தெருவில், தெற்கு வாடை (வரிசை)யில் உள்ளது. அவ்வூரில், விநாயகர் ஆலயம் கிழக்கிலும், காளியம்மனும், எல்லையம்மனும் தென்மேற்கிலும், சிவபெருமான் ஆலயம் வட கிழக்கிலும் உள்ளன.

3. மாரியும் மேல்பால் தங்கும் மறுசிறு ஊராம் தன்னில்
கூறிய அடையா ளத்துள் குழவியும் மூன்றும் ஜன்மம்
தீரமாய்க் கங்கை சேயாய் ஜனிப்பனு மென்று சொல்வோம்
வீரியன் குடும்பச் சேதி விளம்புவோம் தாயே கேளும்.

3. மாரியம்மன் மேற்குப் பக்கத்திலுள்ளது. இவ்வடையாளங்களுள்ள அச்சிற்றூரில், இக்குழந்தை, தன் தந்தைக்கு மூன்றாவது மகனாகப் பிறப்பான். அவன் வேளாள மரபில் தோன்றுவான். அவனுடைய குடும்பச் செய்திகளைக் கூறுவோம். தாயே ! கேளுங்கள்.

4. தந்தையின் துணைஆண் மூன்று அரிமார்க ளிருவ ராகும்
அந்தவர் முத்தோன் வேறாய் அனுகுவான் உதிக்கா முன்னம்
பிந்திய மூவ ரொன்றாய்ப் பிரியாமல் வாழ்வா ராகும்
விந்தையாய் ஒருவ னுக்கு விழிகெடும் ஆதி காலம்.

4. ஜாதகனின் தந்தைக்குச் சகோதரர் மூவரும், சகோதரிகள் இருவருமாவர். அவர்களில் மூத்தவனை ஜாதகன், மற்றவர் பிறப்பதற்கு முன்பே தனியாகச் சென்றுவிடுவான். மற்ற மூவரும் ஒரே குடும்பமாகப் பிரியாமல் வாழ்ந்து வருவார்கள். ஆனால் அவர்களில் ஒருவனுக்கு ஆரம்பத்திலேயே கண் கெட்டுவிடும்.

5. அவன்குணம் கூறு மென்ன அரிநிறம் உயர மில்லான்
தவசிபோல் வார்த்தை உண்டு சாந்தவான் கடவுள் பக்தி
சிவநேசம் உயர மில்லான் தேவியு மொன்று நேரும்
கவனமாய்ப் புத்தி உண்டு காளையும் மொருவன் தீர்க்கம்.

5. அவனுடைய குணத்தைக் கூறுங்கள், என்று கேட்க, அவன் திருமாலைப் போன்ற கரிய நிறமுள்ளவன். குட்டையன். தேர்ந்த முனிவர் போல் பேசும் இயல்பினன். சாந்த முள்ளவன். தெய்வ பக்தியுள்ளவன். சிவபெருமானின்மீது பக்தியுள்ளவன். உயரமில்லாதவன். மனைவியும் ஒருத்தியாவள். கவனமான புத்தியுள்ளவன். ஒரு மகன் தீர்க்கமாயிருப்பான்.

6. கன்னிகை நால்வ ராகும் கருதிடான் பொய்கள் தாமும்
இவ்வாறும் குணத் தோனுக்கு இருவிழி குற்ற மெவ்வாறு
துன்மையா மாரி யாலே தொடர்ந்தது அந்தச் சங்கை
முன்ஜன்ம வினையாம் தாயே மொழிகுவீர் பூர்வம் தன்னை.

6. நான்கு பெண்கள் பிறப்பார்கள். பொய் பேசாதவன். இங்ஙனம் கூறப்பட்டவனுக்குக் கண் பார்வை யில்லாதது என்ன குற்றத்தால்? மாரியம்மன் போட்டியதால் அந்தத் தீங்கு ஏற்பட்டது. அது முற்பிறவியில் செய்த தீவினையால் நடந்தது. முற் பிறவியைச் சொல்லுங்கள்.

7. பிருதிவியும் கீழ்ப்பா லாகப் பேரூரில் ஊத்துக் காட்டில்
திருமகன் வன்னிய சேயாய் ஜனித்துமே மாரி கோஷ்டம்
குறைவிலாப் பூசை உண்டு குமரனும் வாழு நாளில்
மருவின வினையைக் கேண்மோ மன்மதன் ஆடல் செய்து ;

7. காஞ்சிபுரத்துக்குக் கிழக்கில் உள்ள பெரிய ஊராகிய ஊத்துக்காட்டில், வன்னிய குலத்தவனாகப் பிறந்து, மாரியம்மனுக்குப் பூசை முதலியன புரிந்து வாழ்ந்துவந்த நாளில், ஏற்பட்ட தோஷத்தைக் கேளுங்கள். சிற்றின்பம் அனுபவித்த பிறகு ;

அம்மனுக்குச் சாத்திய புஷ்பத்தை மிதித்ததும் கோயில் தீபத்திற்குத் தந்த நெய்யை மறைத்ததும்.

8. நீரினில் தோயாச் சென்றான் நேர்ந்தது அதுவோர் தோஷம்
பாரினில் மலரை வாங்கிப் பணிசெய்து காலில் பூண்டான்
வேறொருத் தருமே ஆவின் நெய்யதை விளங்க வைக்க
மாரன்பால் தருகும் போது மறைத்தனன் இந்தப் பாலன்.

8. ஸ்நானம் செய்யாமல் ஆலயத்துக்குச் சென்றான். அஃது ஒரு தோஷ மாயிற்று. புஷ்பத்தை வாங்கி அம்மனுக்குச் சாத்தி, பிறகு அதைக் காலால் மிதித்தான். வேறொருவன் பசுவின் நெய்யைத் தீபத்துக்குக் கொடுக்க, இவன் அதை விளக்கேற்றாமல் மறைத்துவிட்டான்.

9. அந்தியக் காலம் தன்னில் அவன்ஜோதி குறைவ தாகித
தென்திசைக் காலனோடு சென்றுமே பிரமனா லக்கம்
வந்தவ னிவனே என்றோம் மாரியின் குற்றத் தாலே
அந்தக னாகி வாழ்வனா அன்னமும் குறை வுறுதான்.

9. தன் இறுதிக் காலத்தில் அவன் கண்பார்வை மங்கி இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்றோம். அம்மை போட்டியதால் கண்கள் குருடாகி வாழ்ந்திருப்பான். ஆனால் சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன்.

உயர்குலப் பிறவியின்ற காரணம்.

10. மறுஜன்மம் தில்லை தன்னில் மறைக்குல முதிப்பா னாகும்
திருமக னிச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்ன
அரன்தியானம் சதாவும் கொண்டு அவனுமே வாழ்ந்த தாலே
வருகுவான் பிரம்ம சேயாய் மங்கையே கேட்டி டாயே.

10. மறு பிறப்பு, சிதம்பரத்தில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான். இவன் இப் பிறவியில் செய்த நற்செயல்கள் என்ன ? சிவபெருமானை மனத்தில் எப்போதும் நினைத்துக்கொண்டே வாழ்ந்து வந்ததால், அடுத்த பிறவி அந்தணனாகப் பிறப்பான். தாயே ! கேளும்.

11. தந்தையின் குணத்தைச் சொல்வேன் தரணியால் உய்வா னாகும்
தந்தமும் தரள மொக்கும் தானிள மனத்த னாகும்
தன்பந்து மதிக்க வாழ்வன் தரணியில் வறுமை காணான்
தன்தன மதிக மில்லான் சங்கரன் தொண்டு பூண்பன்.

11. ஜாதகனின் தந்தையின் குணத்தைக் கூறுகின்றேன். விவசாயம் செய்து வாழ்ந்து வருவான். முத்தைப்போன்ற வெண்மையான பற்களை யுடையவன். இளகிய மன முள்ளவன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். உலகில் தரித்திரம் இல்லாதவன். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிகமில்லாதவன். சிவபெருமானுக்குத் தொண்டு செய்துவருவான்.

12. உண்டியும் சிறிதே உண்பன் உறைப்போடு இனிப்பி லிச்சை
தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் சல்லியம் கொள்ளா னென்றோம்
பண்டுநாள் பூமி விருத்தி பந்துவும் மதிக்க வாழ்வன்
துண்டமாய்க் கூறா னாகும் தொடுவழக் கதனில் செல்லான்.

12. மிகச் சிறிதே உண்பான். சாப்பாட்டில், உறைப்பிலும் இனிப்பிலும் பிரியமுள்ளவன். நல்ல தமிழில் உள்ள இரகசியங்களை நன்கு அறிவான். கடன் வாங்கமாட்டான். பழையநாள் பூமி விருத்தியாகும். உறவினர் மதிக்கும்படி வாழ்ந்து வருவான். கண்டித்துப் பேசாதவன். வழக்குத் தொடுக்கும இயல்பில்லாதவன்.

13. கணபதி ஒத்த தேகம் காலிகள் பணையோர் விருத்தி
துணிவிலான் உயர மில்லான் சொல்லதைக் காப்பா னுகும்
தணிவுளான் துணையக் காப்பன் சாற்றுவோ மிவனின் பூர்வம்
அணையோரம் நவபா ஷாணம் அந்நகா தன்னி லேதான் ;

13. விநயகரைப் போன்ற பெரிய வயிற்றை உடைய சரீரமுள்ளவன். வர், கால்நடை முதலியவற்றின் விருத்தியுடையவன். தைரியமில்லாதவன். உயர மில்லாதவன். தன்வார்த்தைப்படி நடப்பவன். வணக்க முள்ளவன். உடன் பிறந்தவரை ஆதரிப்பான். இவனுடைய முற்பிறவியைக் கூறுகின்றோம். சேதுவுக்குப் பக்கத்தில் உள்ள நவபாஷாணத்தில் ;

14. யாதவ குலமே தோன்றி யாவர்க்கும் நல்லோ னுயும்
மாதவர்க் கன்ன மீந்தும் வளப்பமாய்க் குடும்பி யாயும்
வேதனை மனமில் லாமல் மேவினுன் கால னுடு
நீதியாய்ப் பிரமன் லக்கம் நேர்ந்தன னென்று சொல்வோம்.

14. இடையர் மரபில் பிறந்து, எல்லோருக்கும் நல்லவனுகவும், தவம் புரியும் பெரியோர்களுக்கு அன்னமளித்தும், வளமுள்ள குடும்பத்தை யடைந்தும், துன்பமெண்ணு மனத்தின்னுக வாழ்ந்து இறந்தான். மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்று கூறுவோம்.

15. சொல்லிய குணத்தா னுக்குச் சுதனுமே தோன்று வானும்
வல்லவன் குணத்தைச் சொல்வோம் மாநிறம் கல்வி மானும்
இல்லையென் றுரைக்க மாட்டான் இன்பச்சொல் ஊக உண்டு
வெல்லும்சொல் கவனம் செய்வன் மேதினி விருத்தி உண்டு.

15. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களை யுடையவனுக்கு, ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணங்களைக் கூறுவோம். மாநிறமுள்ளவன். கல்வி யறிவுடையவன். யாசித்தவருக்கு இல்லை என்று கூறுதவன். இனிமை யாகப் பேசுபவன். ஊகமுள்ளவன். இவன் வார்த்தைக்கு மதிப்புண்டு. கவனம் செய்யக்கூடியவன். பூமி விருத்தியுள்ளவன்.

16. நடனங்கள் சங்கீ தங்கள் நாயகன் சிலர்க்குச் சொல்வன்
விடவாக்குப் புகலா னுகும் மேலவர் பக்தி பூண்பன்
உடன்படான் பிழைக ளுக்கு உலகுக்கு நல்லோ னுவன்
மடமயில் மாதர் மோகன் மாநிலம் புகழு மேற்பன்.

16. நடனம், சங்கீதம் முதலியன சிலருக்குக் கற்றுக்கொடுப்பான். கெட்ட வார்த்தை பேசாதவன். தெய்வபக்தி யுள்ளவன். பிழைகள் செய்வதற்கு உடன்படாதவன். உலகத்துக்கு நல்லவனுக விருப்பான். பெண்கள்மீது மோகம் கொள்ளுவான். உலகத்தில் கீர்த்தி அடைவான்.

17. அன்னிய தேசம் தன்னில் அவன்கல்வி யாலே மேன்மை
மன்னர்கள் இஷ்டம் கொள்வன் மாநிலம் சேர்ப்பா னுகும்
பொன்னேடு பணிதி யுண்டு பஞ்சணை மெத்தை உண்டு
தன்கரம் விஷ்ணு ரேகை தனரேகை உடைய னுமே.

17. வேறு ஊரில் இவன் கல்வியால் மேன்மை அடைவான். அரசர்களிடம் விருப்பமுடையவன் (அரசாங்கத்தாரால் கௌரவிக்கப்படுவான்). விளை நிலங்கள் அதிகம் சேர்ப்பான். பொன் ஆபரணங்களும் உடையவன். சுகமான படுக்கை முதலியன உள்ளவன். கையில் விஷ்ணுரேகையுள்ளவன். தனரேகையும் உடையவன்.

18. மாதுரு மாஞ்சி வப்பள் வாததே கத்தா ளாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உயர்வான புத்தி உண்டு
பாதக மனமில் லாதாள் பண்போர்க்கு அன்ன மீவள்
காதலி இல்ல முத்திரம் காணுது துணைஆணுந் தான்.

18. தாய் சிவந்த நிறமுள்ளவள். வாயுரோக முடையவள். இன்பமாகப் பேசுபவள். உயர்ந்த புத்திசாலி. கெட்ட மனமில்லாதவள். தூயவர்க்கு அன்னமளிப்பாள். இவளுடைய வீடு வடக்குத் திசையிலுள்ளது. சகோதரன் இல்லாதவள்.

19. கன்னிகை மூவ ராகும் காதலி யோக சாலி
தன்வரன் மனதுக் கேத்தோள் சஞ்சல புத்தி கொஞ்சம்
பின்னமில் லாத தேகி பொருந்திடும் பித்த வாயு
அன்னியர் குற்றம் சொல்லாள் அறைகிறோம் அவள்தன் பூர்வம்.

19. ஜாதகனின தாய்க்கு மூன்று சகோதரிகள் உளர். அவள் யோக சாலி. தன் கணவன் மனதுக்கேற்றவள். சஞ்சல புத்தி உள்ளவள். ஊனமில்லாத சரீரமுடையவள். பித்தவாயு உள்ள சரீரத்தையுடையவள். பிறர்மீது குற்றம் சொல்லாதவள். அவளுடைய முற்பிறவியைக் கூறுகின்றோம்.

20. ஓதுரு தலத்தி லேதான் உதித்தனள் செங்குந்த வம்சம்
காதலி சுகமாய் வாழ்ந்து கடந்தோர்க்கு அன்ன மீந்து
மேதினி மதலை உண்டாய் வித்தகி வாழு நாளில்
தீதான வந்த ஊழைச் செப்புவோம் தாயே கேளும்.

20. ஓதூர் என்ற க்ஷேத்திரத்தில், செங்குந்த மரபில் பிறந்தாள். சுகமாய் வாழ்ந்துவந்து, துறவிகளுக்கு அன்னமளித்து, குழந்தைகளைப் பெற்று, வசித்து வரும்போது எற்பட்ட தீவினையைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

**வீட்டில் கூடுகட்டின பக்ஷியைக் கொன்றதால் குஞ்சுகளும் இறந்தன : அதனால் ஏற்பட்ட தோஷம்.**

21. இறப்பினில் கூடு கட்டி இருக்கிற பக்ஷி தானும்
சிறகுக ளில்லாக் குஞ்சு க்ஷேத்திரம் தன்னில் வைத்துத்
தெருவினில் மேயக் கண்டு தேவியு மதை அடித்தாள்
மரலியின் பதிக்குச் செல்ல மைந்தர்கள் கூண்டில் சாக.

21. தன் வீட்டுக்கூறையில் கூடுகட்டி வசித்துவந்த பக்ஷி, சிறகுகளில்லாத சிறு குஞ்சுகளைக் கூட்டில்வைத்து இரைதேடத் தெருவில் வந்தபோது, அதை இவள் அடித்தாள். அப்பறவை இறந்தது. கூட்டில் சிறுகுஞ்சுகளும் இரை இல்லாமல் இறந்தன.

22. பெரிதான தோஷ மாச்சு பூவையு மந்தி யத்தில்
கரம்காலும் சோர்ந்து மேதான் காலன்தன் பதிக்குப் புக்கி
மறையவன் எழுதப் பட்டு வந்தவ ளிவளே என்றேம்
உறைந்திடும் பக்ஷி தோஷம் உதித்தசேய் முதலில் ரண்டு ;

22. அஃது ஒரு பெரிய தோஷமாயிற்று. அப் பெண்ணும் தன் கடைசிக் காலத்தில் கைகால்கள் சோர்வுற்று இறந்தாள். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவள் என்று கூறுகின்றேம். பக்ஷியினுடைய சாபத்தால் முதலில் பிறக்கும் இரு குழந்தைகள் ;

23. நட்டமாம் நாலும் சேதம் நற்றுணை ஆண்பால் தோஷம்
குட்டாக இவள்பின் ஜன்மம் குற்றுல நாட்டி லேதான்
திட்டமாய்க் கர்ண சேயாய் ஜனிப்பளா மென்று சொல்வோம்
துட்டரைச் சம்ம ரிக்கும் துறவியே கேட்டி டாயே.

23. இறந்துவிடும். நான்கு குழந்தைகள் சேதமாகும். உடன் பிறந்த ஆடவருக்குத் தீங்காகும். இவள் மறு பிறப்பில், குற்றுலத்தில், கருணீகர் மரபில தோன்றுவாள் என்று சொல்லுகின்றேம். துஷ்டர்களைத் தண்டிக்கும் தேவியே ! கேளுங்கள்.

24. பாலகன் துணைமுன் தோஷம் பருகிடும் பின்ஆண் ஒன்று
சாலவே தீர்க்க மெய்தும் சாற்றுவோம் பின்பால் சேதி
பாலிகை வருகும் காலம் புகலுவோம் பதினு ருண்டில்
ஏலவே வடபால் நேரும் இயம்புவோ மவள்கு ணத்தை.

24. ஜாதகனுக்கு முன் பிறந்தவன் இறந்துவிடுவான். பின்னுல் ஒரு ஆண் குழந்தை பிறந்து நீண்ட ஆயுளுடனிருக்கும். மற்றச் செய்திகளைப் பின் பாகத்தில் கூறுகின்றேம். ஜாதகனுக்கு மண மேற்படும் காலம் பதினுரும் வயதாம். அவளும் வடக்குத் திசையிலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றேம்.

25. தோகைபோல் வடிவு முண்டு தோழன்தன் மனதுக் கேத்தோள்
பாகமாய்ப் பேசு வாளாம் பால்பாக்ய முடைய ளாகும்
நாகரி கங்க ளுண்டு நற்சீவி யோக சாலி
போகபாக் கியங்க ளேற்பள் புண்ணிய மனத்த ளாமே.

25. மயிலைப் போன்ற அழகுடையவள். கணவன் மனத்துக் கேற்றவள். கண்டித்துப் பேசும் இயல்பினள். பால் பாக்கிய முள்ளவள். நாகரிகமாக இருப்பாள். நீண்ட ஆயுளுள்ளவள். யோகசாலி. போக பாக்கியங்களுடையவள். புண்ணியமான மனத்தினள்.

26. வயதுமே தீர்க்க மெய்தும் அபிமானம் ஒன்று நேரும்
நயமுடன் எந்தத் திக்கு நவிலுவீர் காலம் தன்னைப்
பயமிலா முப்பான் மூன்றில் பானவயும் வடபால் நேரும்
அயல்குலம் வன்னிய சேயாய் அணுகுவாள் என்று சொல்வோம்.

26. ஜாதகன் நீண்ட ஆயுளுள்ளவன். அபிமான மனைவி ஒருத்தி இடையில் வருவாள். அவள் எந்தத் திக்கிலிருந்து வருவாள்? எக்காலத்தில் வருவாள்? என்று சொல்லுங்கள். ஜாதகனுடைய முப்பத்து மூன்றும் வயதில் வடக்குத் திசையிலிருந்து வன்னிய குலத்தில் பிறந்த அப்பெண் வந்து சேருவாள், என்று கூறுவோம்.

27. சுதர்களும் ஆண்பால் ஒன்று தோகையும் மூன்று மாகும்
இதுநான்கும் தீர்க்க மெய்தும் இடருண்டு ரண்டு என்றேம்
அதிபன்தன் பூர்வம் சொல்வேன் மதுரைமா நகரி லேதான்
இதுகுலம் தனி லுதித்து இயல்பான குடும்பி யாகி;

27. ஜாதகனுக்கு ஒரு புத்திரனும் மூன்று புத்திரிகளும் பிறப்பார்கள். இவர்கள் நால்வரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். இரு குழந்தைகட்குத் தீங்குண்டாகும். அவனுடைய முற்பிறவியைக் கூறுகின்றேம். மதுரை நகரில், இதே குலத்தில் பிறந்து, செயலுள்ள குடும்பியாகி;

28. மைந்தனும் வாழு நாளில் மருவின வினையைக் கேண்மோ
விந்தையாய் வேறு மாது வேலைகள் செய்வே னென்று
அந்தவ னுடனே சொல்ல அதற்கவன் இசைந்து மேதான்
சுந்தரி சிலநாள் தங்கித் துணையப்போல் இருந்து வந்தாள்.

28. வாழ்ந்துவரும் நாளில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். வேற்றுப் பெண் ஒருத்தி, வேலைகள் செய்கிறேன் என்று ஜாதகனிடம் சொல்ல, அதற்கு அவன் இசைந்தான். அப் பெண் சில நாட்கள் அவனேடு உடன் பிறந்தவள்போல் தங்கியிருந்தாள்.

**பொருளைத் திருடியவள் அபிமான மனைவியாக வந்தாள்.**

29. மற்றொரு நாளி லேதான் மாரனு மில்லா வேளை
சுத்தினள் பணிகள் தம்மை ஏகினள் என்று சொல்வோம்
வித்தகன் பின்னுள் வந்து விளம் பினன் அந்தச் சங்கை
குற்றமா மனத்த னுகிக் குஞ்சர முகத்தோன் கோவில்;

29. மற்றொரு நாளில், ஜாதகன் வீட்டில் இல்லாத வேளையில் ஆபரணங்கள் முதலியவற்றை எடுத்துச் சென்றுவிட்டாள். இவன் பிறகு வந்து பார்த்து ஆபரணங்கள் முதலியவற்றைக் காணுமல் மனம் வருந்தி விநாயகர் ஆலயத்துக்குச் சென்று;

30. முன்பாகப் புகலு கின்றுன் முன்கடன் பின்கட னேடே
கன்னிகை சிலது பொன்னைக் கவர்ந்தனள் கடவுள் பாரும்
இன்னவாறு சொல்லி யேதான் இறைத்தனன் தெருத் தூள்
மன்னனும் அந்தி யத்தில் அறுமுகன் தனைத்து தித்து; [தானும்

30. அதற்கு முன்பாகக் கூறுகின்றுன். "முன் ஏற்பட்ட கடனே! இனி ஏற்படும் கடனே! என்னுடைய நகை முதலியவற்றை இப் பெண் எடுத்துச் சென்றுவிட்டாள். தெய்வமே! நீர் பாரும்" என்று சொல்லி, தெரு மண்ணை வாரி இறைத்தான். ஜாதகனும் தன் கடைசிக் காலத்தில் ஆறுமுகக் கடவுளைத் தோத்திரம் செய்து;

31. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமில் லாத கங்கைக் குலமதி லுதிப்பா ஞகும்
நீலிமுன் பொருள்க வர்ந்தோள் நேர்ந்திடு மபிமா னம்தான்
சாலவே கடனைத் தீர்க்கத் தங்குவாள் என்று சொல்வோம்.

31. எமபுரம் அடைந்து மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு, ஒழுக்கமில்லாத வேளாள குலத்தில் பிறப்பான். முற் பிறப்பில் பொன்னைக் கவர்ந்த பெண், இப் பிறப்பில் அபிமான மனைவியாக இடையில் வந்து சேருவாள். அவளுடைய முற்பிறப்புக் கடனைத் தீர்க்க, இவனுடன் வந்து தங்குவாள், என்று சொன்னோம்.

32. முப்பது ஒன்று ஆண்டில் விளம்புவோம் தந்தை கண்டம்
செப்புவோம் முப்பா னேழில் செல்வதி அன்னை கண்டம்
மெய்ப்புடன் அறுப தாண்டில் வைகாசி மாதம் தன்னில்
தப்பிதம் பிளவி தன்னுல் ஜாதகன் பெருவா ஞகும்.

32. ஜாதகனுடைய முப்பத்தோராம் வயதில் தந்தைக்குக் கண்டம் நேரும். முப்பத்தேழாம் வயதில் அன்னை மரணமடைவாள். ஜாதகன் தன் அறுபதாம் வயதில், வைகாசி மாதத்தில் பிளவி நோயால் இறப்பான்.

33. மறுஜன்மம் காஞ்சி தன்னில் வருகுவாள் பிரம்ம சேயாய்த்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா ஞகும்
ஈரேழு ஆண்டு தன்னில் இல்லமும் பாக மாகித்
திருதிய மாக நேரும் செப்பின மொழிகுன் ருவே.

33. மறு பிறவி, காஞ்சீபுரத்தில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான். லட்சுமீ கடாட்சம் பெற்றுச் செல்வவானுக வாழ்வான். ஜாதகனுடைய பதினுன்காம் வயதில், வீடு, மூன்று பாகமாகப் பிரியும். சொன்ன சொற்கள் தவரு.

34. மாரனும் வேறு இல்லம் மருவிடும் ஈரெட் டாண்டில்
தீரனும் ஜனன காலம் செம்பொன்னின் திசைஎட் டாண்டும்
கூறுவோம் திங்கள் ரண்டும் குறித்தனம் பூர்வ பாகம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

34. ஜாதகன் பதினுரும் வயதில், வேறு வீட்டுக்குச் சென்று விடுவான். (வேறு வீடு கட்டுவான்.) அவன் ஜனன காலத்தில் குருமகாதசை எட்டு வருஷங்களும் இரு மாதங்களுமாம். இதுவரை முதல் பாகத்தைச் சொன்னோம். ஆறுமுகனைப் பெற்ற தாயே! கேளாய்.

## ஜாதகம் 20.

1. திங்களும் கடக மாகச் செங்கதிர் புதன்பொன் கன்னி
சுங்கனும் காரி தேளில் சேய்கேது வீணை யாக
இங்கிவை கிரகம் நின்று லக்கினம் மிதுன மாக
அங்கது பலனெவ் வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்.

1. சந்திரன் கடகத்திலும், சூரியன் புதன் குரு கன்னியிலும், சுக்கிரன் சனி விருச்சிகத்திலும், செவ்வாய் கேது மிதுனத்திலும், ராகு தனுசிலுமாக நின்று, லக்கினம் மிதுனமாக இருந்தால், உரிய பலனைச் சொல்லுங்கள், முனிவரே !

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் செவ்வாய் கேது |
| | இராசி சக்கரம். | | சந்திரன் |
| | | | |
| ராகு | சுக்கிரன் சனி | | சூரியன் புதன் குரு |

2. அத்திரி புகலு கின்றார் அதுஜன்மம் ஆண்பா லாகும்
வித்தக னில்லம் சொல்வேன் வடவாடை கீழ்மேல் வீதி
உத்திரம் மார்க்க முண்டு ஓங்காரி வடகீ ழாகும்
சித்தசன் தனைஎ ரித்த தேவனும் கீழ்பா லாகும் ;

2. அத்திரிமா முனிவர் கூறுகின்றார். அஃது ஆண் மகனின் ஜாதகம். அவனுடைய விட்டு விபரங்களைச் சொல்லுகின்றேன். அது கிழக்கு மேற்குத் தெருவில் வடக்குச் சாரியிலுள்ளது. வீட்டுக்கு வடக்கில் ஒரு சாலை யுண்டு. வடகிழக்கில் காளி தேவியின் கோவிலும், மன்மதனை யெரித்த சிவபெருமானின் கோயில் கிழக்குத் திசையிலும் ;

3. தென்திசை நதியு முண்டு செப்பின அடையா ளத்துள்
அன்னவன் ஜேஷ்ட னாகி அருளுவான் கங்கை சேயாய்
இன்னவன் குடும்பச் சேதி இயம்புவோ மினிமே லாக
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

3. தெற்குப் பக்கத்தில் ஒரு நதியும் உள்ளது. இங்ஙனம் சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள வீட்டில், இந்த ஜாதகன், வேளாள மரபில், தன் தந்தைக்கு மூத்தவனாகப் பிறப்பான். இவனுடைய குடும்பச் செய்திகளை இனிக் கூறுகின்றோம். உயர்ந்த கணவனையடைந்த பார்வதி தேவியே ! கேளுங்கள்.

4. தந்தையின் துணைஆண் நஷ்டம் சத்தியும் ஒன்றே தீர்க்கம்
இன்னவ னுதிக்கும் காலே இயம்புவோம் பிதாகு ணத்தை
உன்னத செட்டுச் செய்வன் உறுதிஇல் லாத நெஞ்சம்
அன்னிய ருறவு கொள்வான் யாவர்க்கும் நல்லோ னுவன்.

4. தந்தையின் உடன் பிறந்தவர்களில் சகோதரர்களில்லை. சகோதரி ஒருத்தியே. அவள் நீண்ட ஆயுளுடனிருப்பாள். ஜாதகன் பிறப்புக் காலத்தில் தந்தையைப்பற்றிச் சொல்லுகின்றோம். உயர்ந்த வியாபாரம் செய்வான். திடமில்லாத மனமுள்ளவன். அன்னியருடன் நேசம் கொள்ளுவான். எல்லாருக்கும் நல்லவன்.

5. குதிரைநாள் தேளின் ராசி உதிப்பனும் ஊக சாலி
பதியது சித்திரம் பின்னால் படைப்பனும் கிருஷி செய்வன்
ததிநெய்பால் பிரிய முண்டு சகடுவா கனமு மேற்பன்
துதிசெய்தோர்க் குதவு வானும் துன்பங்க ளெவர்க்கு
[மெண்ணான்.

5. அச்வினி நட்சத்திரத்தில் விருச்சிக லக்கினத்தில் பிறந்தவன். ஊகமுள்ளவன். அழகிய வீடு பிற்காலத்தில் கட்டுவான். விவசாயம் செய்து வருவான். தயிர் பால் நெய் இவைகளில் விருப்பமுடையவன். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். தோத்திரம் செய்தவர்கட்கு உதவு வான். ஒருவருக்கும் தீங்குகள் எண்ணாதவன்.

6. முகமதில் வடுவு முண்டு முனிவுண்டு வெளிக்காட் டாதான்
இகபரன் பணியும் செய்வன் ஏவலா ளுடைய னுகும்
மிகுதனம் பின்னு ளுள்ளான் வீண்பழி ஏற்கா னுகும்
பகையோரை நசிக்க வைப்பன் பார்வதி கேட்டி டாயே.

6. முகத்தில் வடு உள்ளவன். கோபம் உள்ளவன். ஆனால் வெளிக் காட்டாதவன். சிவபெருமானுக்குத் தொண்டு புரிவான். பணியாட்க ளுடையவன். பிற்காலத்தில் நிரம்பச் செல்வங்களை அடைவான். வீண் அபவாதங்களை ஏற்காதவன். எதிரிகளை ஒழிக்கக் கூடியவன். பார்வதி தேவியே! கேளுங்கள்.

7. என்னகா ரணத்தி னுலே இவன்துணை ஆண்பால் தோஷம்
துன்சனி புகரு ஆறும் தோன்றிய தாலே சொன்னோம்
முன்ஜன்ம வினையும் கொஞ்சம் மேவின பலத்தி னுலே
தன்துணை ஆண்பால் நஷ்டம் சாற்றுவீர் பூர்வம் தன்னை.

7. என்ன காரணத்தால் இந்த ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது? துன்பம் தரும் சனியும் சுக்கிரனும் ஆறுமிடத்தில் இருப்பதால் அங்ஙனம் கூறினோம். முற்பிறவியில் செய்த தீவினையும் சிறிது ஏற்பட்டதால் உடன் பிறந்தவருக்குத் தோஷம் ஏற்பட்டது. முன் பிறவியில் செய்த தீவினை என்ன? சொல்லுங்கள்.

சகோதரனை ஏமாற்றியது.

8. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகின்றோம் புலியூர் தன்னில்
துன்மதி வைச்யச் சேயாய் வணிபமும் செய்து வந்து
அன்னவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
தன்துணை பாகம் தன்னைத் தாராமல் மோசம் செய்தான்.

8. ஜாதகனின் தந்தையின் முற்பிறவியைப்பற்றிச் சொல்லுகின்றோம். புலியூரில், கெட்ட புத்தியுடையவனாய், வைசிய குலத்தனாகப் பிறந்து, வியாபாரம் செய்து வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன்னுடைய உடன் பிறந்தவனுக்குரிய பாகத்தைத் தாராமல் ஏமாற்றி விடட்டான்.

9. பின்துணை வருத்த முற்றுப் புகன்றசா பத்தைக் கேண்மோ
என்கடன் தராத பாவி பிறக்கும்பின் ஜன்மம் தன்னில்
என்னைப்போல் துணைஆ ணின்றி இப்புவி தன்னில் வாழ்வாய்
இன்னமும் பலவாறு சொன்னான் எய்திற்று அந்தச் சாபம்.

9. சகோதரன் வருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். எனக்குரிய பாகத்தைத் தாராமல் மோசம் செய்த பாவியே! நீ அடுத்த பிறவியில் என்னைப் போல் உடன் பிறந்தவன் இல்லாதவனாக வாழ்வாய் என்றும், இன்னும் பலவாறும் உரைத்தான். அந்தச் சாபம் இவனைச் சார்ந்தது.

10. ஆகையா லிச்சன மத்தில் அவன்துணைத் தோஷ மெய்தும்
ஏகனாய் வாழ்வா னாகும் இயம்பின குணத் தானுக்குப்
பாகமாய் இந்தப் பாலன் பிறப்பனு மென்று சொல்வோம்
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

10. ஆகையால் இப் பிறவியில் ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் ஏற்படும். அவனும் தனித்து வாழ்வான். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களை யுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான், என்று சொல்லுவோம். போக சமுத்திரத்தைப் போன்றவரை யடைந்த புண்ணியவதியே! கேளுங்கள்.

11. பாலகன் நிறம்கு ணத்தைப் பகருவோம் பசளைத் தேகம்
சீலவான் பொறுமை சாலி சிந்தையும் நல்ல தாகும்
ஞாலங்கள் விருத்தி செய்வன் அரசர்க்கு இவன்சொல் மேன்மை
வேலன்மேல் பக்தி பூண்பன் வீண்வம்பில் செல்லா னாகும்.

11. ஜாதகனுடைய நிறம் குணம் இவைகளைச் சொல்லுகின்றோம். மெல்லிய சரீர முள்ளவன். ஒழுக்கமுள்ளவன். பொறுமைசாலி. நல்ல மனமுடையவன். பூமி விருத்தியுள்ளவன். அரசாங்கத்தாருக்கு இவன் வார்த்தை மேன்மையாக இருக்கும். வேலையுடைய முருகப் பிரான்மீது பக்தியுள்ளவன். வீண் சண்டைக்குப் போகாதவன்.

12. வித்தையும் ரண்டு கற்பன் விவேகியாம் பொறுமை சாலி
புத்தியில் பெரியோ னவன் புண்ணிய மனத்த னாகும்
சுத்தத்தார் மதிக்க வாழ்வன் செட்டுக்கள் பலவாயச் செய்வன்
சத்தியம் கூறு னாகும் தைரிய குணத்த னாகும்.

12. இருவிதக் கல்வி கற்பான். விவேகி. பொறுமை யுள்ளவன். புத்தியில் பெரியவனாக இருப்பான். புண்ணியமான மனமுள்ளவன். உறவினர் கொண்டாடும்படி வாழ்வான். பலமான வியாபாரம் செய்வான். சத்தியம் செய்யாதவன் (உண்மை பேசாதவன்). தைரியமான மனமுள்ளவன்.

13. கரமதில் மாலின் ரேகை கஞ்சமாம் ரேகை உண்டு
பறைபள்ளு முடைய னாகும் பணிந்தோரை ஆத ரிப்பன்
குறைஎன்றோர்க் குதவி செய்வன் கொடுமையை எவர்க்கு [மெண்ணான்
தரைசேர்ப்பன் தந்தை மேலாய்ச் சதுஷ்பாதம் விருத்தி உண்டு.

13. கையில் விஷ்ணுரேகையும் பத்மரேகையும் உள்ளன. பள்ளுட்பறை (முதலிய பணியாட்கள்) உள்ளவன். வந்து அடைந்தவர்களை ஆதரிப்பான். எளியவர்களைக் காப்பாற்றுவான். ஒருவருக்கும் தீங்கை மனத்தில் நினையாதவன். பூமி சேர்ப்பான். தன் தந்தைக்கு மேலாக வாழ்வான். கால்நடைகள் பெருகும்.

14. அரன்தொண்டு தந்தை செய்வன் அத்தொழில் செய்வா னாகும்
பொருளது பெருக்க முண்டு புண்ணிய மனத்த னாகும்
குறைவுறும் ஜாதி வர்க்கம் குலத்துளோர் மதிப்புக் கொள்ளான்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

14. ஜாதகன் தந்தை சிவபெருமானுக்குத் தொண்டு புரிவான். அதையே ஜாதகனும் செய்து வருவான். செல்வங்கள் பெருகும். புண்ணியமான மனத்தினன். பங்காளிகட்குக் குறைவு நேரும். தன் பந்துஜனங்களின் மதிப்பு இல்லாதவன். விநாயகனைப் பெற்று வளர்த்த தாயே! கேளாய்.

15. தன்துணை ஆண்பா லொன்று சத்திமார் மூவர் தீர்க்கம்
பின்னமாம் மற்ற வெல்லாம் பேசுவோம் பின்பால் சேதி
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோம் இருபா னொன்றில்
கன்னிகை மாமன் புத்ரி கலப்பளாம் குணத்தைச் சொல்வேன்.

15. ஜாதகனுக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூவரும் நீண்ட ஆயுளுடனிருப்பார். மற்றவர் நிலையார். அவற்றைப்பற்றிப் பிற்பாகத்தில் கூறுகின்றோம். ஜாதகன் திருமண காலத்தைச் சொல்லுகின்றோம். இருபத்தோராம் வயதில் அவனுடைய மாமனின் பெண் மனைவியாக வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம்.

16. பால்பாக்ய முடைய ளாகும் பசித்தோர்க்குத் தாக மீவள்
சீலியாம் புத்தி சாலி சிவந்தமேனி பித்த தேகி
காலத்தை அறிந்து ரைப்பள் கணவன்தன் மனதுக் கேத்தோள்
மால்மனை ஒப்ப தாகும் வருவோரை ஆத ரிப்பள்.

16. பால் பாக்கிய முடையவள். பசியென்று வந்தவர்கட்கு அன்னமளிப்பாள். நல்லொழுக்க முடையவள். புத்திசாலி. சிவந்த மேனியள். பித்த சரீர முள்ளவள். காலத்தை அறிந்து முன் கூட்டிச் சொல்லக் கூடியவள். தன் கணவன் மனத்துக்கேற்றபடி நடப்பவள். லட்சுமியைப் போன்றவள். அடைந்தவர்களை ஆதரிப்பாள்.

17. அடிசிலுக் கினிய ளாகும் அயல்குற்றம் புகலா ளாகும்
துடுக்கென வார்த்தை சொல்லாள் சோம்பிடாள் காரி யத்தில்
விடவுரை பகரா ளாகும் வயதுமே தீர்க்க மெய்தும்
சடைமுனி மறுத்துச் சொல்வார் சத்திமா ரிருவ ராகும்.

17. ருசியாகச் சமைப்பவள். பிறர்மீது குற்றம் சொல்லாதவள். துடுக்காகப் பேசாதவள். காரியத்தில் சோம்பலில்லாதவள். கெட்ட வார்த்தை பேசாதவள். தீர்க்கசீவி. சடை முனிவர் இடைமறித்துக் கூறுகின்றார். இவனுக்கு இரு மனைவியர் ஏற்படுவார்.

இரு களத்ர க்ரக நிலை.

18. காரணம் யாது என்னக் கரும்பாம்பு எழில் தங்க
ஆரலும் ஜன்மம் தங்க அணுகிடும் தாரம் ரண்டு
கூறுவார் பாராசர் தாமும் குறைமதி இரண்டில் தங்கத்
தீரமாய் நாலில் புந்தி செம்பொன்னு மிருப்ப தாலே ;

18. காரணம் என்ன ? என்று கேட்க, ராகு ஏழாமிடமாகிய தனுசில் இருப்பதாலும், செவ்வாய் ஜன்மத்தில இருப்பதாலும், ஜாதகனுக்கு இரு மனைவிகள் உண்டு. பராசர முனிவர் கூறுகின்றார். சந்திரன் இரண்டாமிடத்தில் இருப்பதாலும், புதன் குரு நான்காமிடத்தில் இருப்பதாலும் ;

19. மறுமனை காணு ளாகும் மங்கைக்கு இரண்டு முத்திரை
திருமக ளணிவா ளாகும் செப்புவீர் அந்தச் சங்கை
ஆறுாறு ஆண்டு தன்னில் அறுபடும் கள்ள ராலே
குறிஇது தப்பா தாகும் கோதையும் ஒன்றே தீர்க்கம்.

19. இரண்டாம் மனைவி ஏற்படாள். ஆனால் இந்த ஜாதகன் தன் மனைவிக்கு இரு மாங்கல்யங்களைக் கட்டுவான். அந்தக் காரணத்தைக் கூறுங்கள். ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் திருடர்களால் மாங்கல்யம் அறுபட்டுப் போகும். இது தவறாது. மனைவி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள்.

20. அரவுமே எழில் தங்க அதன்பலன் பாரி முன்னே
உறைகுவாள் கால னூடு உரைப்பீர்கள் அந்தக் காலம்
அரவுவின் தசைகா லத்தில் ஐம்பது ஏழு ஆண்டில்
திருமகள் கண்ட மெய்தும் செப்பின மொழிகுன் றுவே.

20. ஏழாமிடமாகிய தனுசில் ராகு தங்கியிருப்பதால், அதன் பலனாகத் தன் மனைவி முன்னால் இறந்து விடுவாள். அந்தக் காலத்தைச் சொல்லுங்கள். ராகுமகாதசையில், ஜாதகனுடைய ஐம்பத்தேழாம் வயதில் மனைவிக்கு மரணம் உண்டாகும். சொன்ன சொற்கள் தவறா.

21. சுதர்சளும் ஆண்பால் ரண்டு தோகையர் நால்வர் தீர்க்கம்
அதிபன்தன் முன்ஜன் மத்தை வரைகிறே மினி மேலாக
அதிதிவாழ் பெருமுக் கூடல் அணுகினன் ரெட்டி வம்சம்
நிதிமிக உடையா னுக்கு நேர்ந்துமே கிருஷி செய்து ;

21. இரு புதல்வர்களும் நான்கு பெண்களும் தீர்க்கமாயிருப்பர். ஜாதக னுடைய முற்பிறவியை இனிக் கூறுகின்றேம். பெரியோர்கள் வாழும் முக் கூடலில், ரெட்டியார் மரபில், செல்வங்கள் மிகுதியாக உடையவனுக்குப் பிறந்து, விவசாயம் செய்து வந்து ;

22. அறமதி லிச்சை உண்டாய் அருமறைக் குதவி செய்து
வருமார்க்கம் தாகம் வைத்து மாலியின் பதிக்குச் சென்று
பிரமனல் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
உரைக்கிறே மிவனின் யோகம் உத்தமி கேட்டி டாயே.

22. தருமத்தில் ஆசையுள்ளவனுகி, அந்தணர்கட்கு உதவி செய்து, சாலேயோரங்களில் தண்ணீர்ப் பந்தல்கள் அமைத்து, இறந்தான். மீண்டும் பிரமனல் படைக்கப்பட்டு இந்தப் பிறப்பில் பிறந்தான். இவனுடைய யோக வரலாற்றைக் கூறுகின்றேம். தாயே ! கேட்டிடுவாய்.

23. பலவிதச் செட்டுச் செய்வன் பாருகள் சேர்ப்பா னுகும்
நலமுளோர் நேசம் கொள்வன் நாட்டினில் சல்லியம் காணுன்
தலம்திருப் பணியும் செய்வன் சாராட்கள் சகடு மேற்பன்
விலேமாதர் மோகம் கொள்ளான் விகடங்கள் கூரு னுகும்.

23. பல விதமான வியாபாரங்கள் செய்து வருவான். விளே நிலங்களேச் சேர்ப்பான். நல்லவர்கள் நட்பு உள்ளவன். உலகில் கடன் உபத்திரவம் இல் லாதவன். புண்ணிய க்ஷேத்திரங்களில் திருப்பணிகளை செய்வான். காலாட் கள் வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். வேசையர் மோகம் இல்லாதவன். விகடமாகப் பேசாதவன்.

24. எந்தக்கா லத்தில் இல்லம் எய்துவான் விபரம் சொல்வாய்
சந்ததம் ஈரா றுண்டின் மேலேதான் இல்லம் செய்வன்
இந்திரன் தசையில் செய்வான் இரணியம் அதிகம் சேர்ப்பன்
நந்தியா விருத்தி உண்டு நாட்டினில் புகழு மேற்பன்.

24. எந்தகாலத்தில் வீடு கட்டுவான் ? அந்த விபரங்கள் சொல்லுங்கள். ஜாதகன் தன் பன்னிரண்டாம் வயதில் வீடு கட்டுவான். சுக்கிர மகாதசை யில் செய்வான். பொன் அதிகம் சேர்ப்பான். பசு, எருது முதலியன விருத்தியாகும். உலகில் புகழ் அடைவான்.

25. புகர்தசை முதலா மாகப் பிறைபோல யோகம் வாய்க்கும்
பகையுளோர் வசிய மாகும் பொருள்களும் நாட்கு நாளாய்
உகமையாய்ச் சேர்ப்பா னுகும் உயர்வோர்க்கு அன்ன மீவன்
அகமது சேர்த லுண்டு அரன்தொண்டு புரிவா னுகும்.

25. சுக்கிரமகாதசை முதலாக பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தியாகும். எதிரிகள் தன் வயப்படுவர். பொருள்கள் நாளுக்கு நாள் அதிகம் விருத்தியாகும். உயர்ந்தவர்கட்கு (அந்தணர்கட்கு) அன்னமளிப்பான். வீடுசேரும். சிவபெருமானுக்குத் தொண்டு செய்வான்.

26. அதுமுதல் மரண மட்டும் அம்புலி போலே யோகம்
எதுநினைத் தாலு மோங்கும் இடருக ளணுகா தாகும்
புத........வெய்யா ளுகும் பிரபலச் செட்டு ஓங்கும்
துதிசெய்தோர் தம்மைக் காக்கும் துறவியே கேட்டி டாயே.

26. அதுமுதல் சாகும் வரையில் பிறைச்சந்திரன் போல் அதிருஷ்டம் பெருகும். நினைத்த காரியங்கள் நடக்கும். துன்பங்கள் வாரா........ பிரபலமான வியாபாரம் நடக்கும். தோத்திரம் செய்பவர்களைக் காப்பாற்றும் தேவியே! கேளுங்கள்.

27. மாதுரு குணத்தைச் சொல்வோம் மாந்தளிர் மேனி யாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனம் கபடு மில்லாள்
பாதக மனமில் லாதாள் பணிந்தோரை ஆத ரிப்பள்
சூதிலாள் ஈகை கொஞ்சம் துருசான கோப மேற்பள்.

27. தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். மாந்தளிர் போல் மென்மையான சரீரமுடையவள். அழகாகப் பேசுவாள். கபடமில்லாத மனத்தாள். கெட்டமனம் இல்லாதவள். வந்து அடைக்கலம் புகுந்தவர்களைக் காப்பாற்றுவாள். சூது இல்லாதவள். கொடையாளி. விரைவில் கோபம் அடைவாள்.

28. பித்ததே கத்தா ளாகும் பிறர்குற்றம் புகலா ளாகும்
சுத்தமு முடைய ளாகும் சொல்லது சுகமே எய்தும்
வித்தகன் மனம்போல் வாழ்வள் வீண்பழி ஏற்கா ளாகும்
வெத்துச்சொல் லுடைய ளாகும் வயதுமே தீர்க்க மெய்தும்.

28. பித்த தேகமுடையவள். பிறர்மீது குற்றம் கூறுதவள். சுத்தமாக இருப்பாள். பேசுவது இனிமையாக இருக்கும். தன் கணவன் மனம் போல் வாழ்ந்து வருவாள். வீண் பழிகள் அடையாதவள். அகாரணமாகப் பேசுபவள். தீர்க்க வயதுடையவள்.

29. தன்துணை ஆண்பா லொன்று சத்திமார் நால்வர் தீர்க்கம்
அன்னையில் நாஸ்தி யாகும் அலைமீது துரும்பு போலத்
[1] . . . . . . .
தென்திசை இல்ல மாகும் செப்புவீர் மாமன் சேதி.

29. ஜதகனுடைய தாய்க்கு ஒரு சகோதரனும் நான்கு சகோதரிகளும் உள்ளனர். தாயின் வீடில்லாதவள். அலையின்மீது உள்ள துரும்பைப் போல் அலைச்சலுள்ளவன். தெற்குத்திசையில் வீடு உள்ளவன். மாமனின் செய்தியைக் கூறுங்கள்.

---

[1] இப்பாட்டின் மூன்றுமடி காணப்படவில்லை.

30. ஊகவான் நுணுக்கம் தேர்வன் உறுதியா மனத்த னாகும்
பாகமாய்ப் பேசு வானும் பதர்குண மில்லா னாகும்
ஏகுவான் சமமாம் போரில் இடரிலா உள்ளூர் வாழ்வன்
ஆகம மறியா னாகும் அணுகாது இல்லம் பூமி.

30. ஊகமுள்ளவன். இரகசியங்களை யறிந்தவன். திடமான மனமுள்ளவன். கண்டித்துப் பேசுபவன். அற்ப குண மில்லாதவன். சமமான சண்டைக்குச் செல்லுவான். துன்பங்களில்லாமல் உள்ளூரிலிருப்பான். வேதங்களை அறியாதவன். பூமி, வீடு இவைகளில்லாதவன்.

31. தந்தையி னாஸ்தி தன்னைத் தானவன் அடையா னாகும்
பந்தமாய்த் துணைவி பக்கல் பதிந்துமே வணிபம் செய்வன்
விந்தையாய் வாசஞ் செய்வன் மேவுவான் சிலது நாட்கள்
சொந்தமாய் இல்லம் செய்வன் துறவியே கேட்டி டாயே.

31. ஜாதகனின் மாமன் தன் தந்தையின் ஆஸ்தியைப் பெறாதவன். தன் மனைவியுடன் சென்று, அவளைச் சேர்ந்தவர்கள் பக்கமாக இருந்து, வர்த்தகம் செய்வான். பிறர் ஆச்சரியப்படும்படி இருப்பான். அது சொற்பநாட்களே. சொந்தத்தில் வீடு கட்டுவான். தாயே! கேளுங்கள்.

32. பனிரண்டு ஆண்டு மேலாய்ப் பகருவோம் மாமன் யோகம்
இனமதிப் புடனே வாழ்வன் ஏவலாள் இல்லம் நேரல்
கனமானத் தொழிலு மேற்பன் காதலி ஒன்றே தீர்க்கம்
சினமிலாச் சுதராண் ரண்டு செல்விமார் அவ்வாறு தீர்க்கம்.

32. ஜாதகனுடைய பன்னிரண்டாம் வயதுக்கு மேல் அவனுடைய மாமனுக்கு யோகம் பலக்கும். பந்துக்களால் மதிக்கப்படுவான். பணியாட்கள் வீடு இவை கிட்டும். பெரிய வர்த்தகம் செய்வான். மனைவி ஒருத்தியே தீர்க்கமானவள். தீங்கில்லாத இரு புதல்வர்களும் இரு புதல்விகளும் தீர்க்கமுள்ளவர்கள்.

33. இன்னமும் விபர மாக இயம்புவோம் பின்பா கத்தில்
அன்னையின் பூர்வம் சொல்வேன் அறுமுகன் தோகை தன்னில்
முன்குலம் தனி லுதித்து உயர்வான குடும்பி யாகித்
துன்மையாய்க் கால னாடு சென்றுமே பிரமன் லக்கம் ;

33. இன்னமும் விபரமாகப் பின் பாகத்தில் கூறுகின்றோம். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சுப்பிரமணிய ஸ்வாமி எழுந்தருளியிருக்கும் தோகை மாநகரில், அந்தணர் குலத்தில் பிறந்து, உயர்ந்த குடும்பத்தை யடைந்து, பிறகு இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு ;

### தாழ்ந்த குலப் பிறவியின் காரணம்.

34. வந்தவ ளென்று சொல்வோம் மாமுனி தடுத்துச் சொல்வார்
முன்குலம் தனிலு தித்தாள் மேவுமிச் சென்மம் தன்னில்
தன்குலம் தாழ்வ தென்னச் சாற்றுவீர் அந்தச் சங்கை
முன்ஜன்மம் விரத முற்றும் செய்யாததால் உதித்தா ளென்றோம்.

34. பிறந்தவள் என்று கூறுகின்றோம், முனிவர் இடைமறித்துக் கூறு கின்ருர். முற்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்தவள், இப்பிறவியில் தாழ்ந்த குலத்தில் பிறக்கும் காரணங்களைக் கூறுங்கள் என்ருர். முற்பிறவி யில் விரதங்கள் செய்யாததால் இப்பிறவியில் இப்படிப் பிறந்தாள் என்றோம்.

35. பின்ஜன்மம் தக்கோ லத்தில் பிறப்பளாம் க்ஷத்ரிய சேயாய்க
கன்மகா லங்கள் தம்மைக் கழருவீர் முனியே நீர்தாம்
சந்திரன் தசையி லேதான் செப்புவோம் மாா கங்கள்
மன்னிய நாற்ப தாண்டில் மடிவுண்டு அன்னைக் கேதான்.

35. மறுபிறவி தக்கோலத்தில் க்ஷத்திரிய மரபினளாகப் பிறப்பாள். ஜாதகனுடைய கரும காலங்களைக் கூறுங்கள். முனிவரே! சந்திரமகா தசையில் தன் தாய்க்கு மரணம் ஏற்படும். அப்போது ஜாதகனுக்கு வயது நாற்பது.

36. ஆருறு ஆண்டு தனனில் அணுகிடும் தந்தை கண்டம்
வேறுஜன் மங்கள் சொல்வேன் விரிஞ்சியில் இக்கு லத்தில்
பாரிய தனவா னுக்குப் பிறப்பனு மென்று சொல்வோம்
தீரமாய்த் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

36. ஜதாகனுடைய முப்பத்தாறும் வயதில் தந்தை மரணம் அடைவான். மறுபிறவியைச் சொல்லுகிறோம். விரிஞ்சி நாட்டில், இதே குலத்தில், பெரிய தனவானுக்குப் பிறப்பான். தைரியமாகத் தவங்கள் இயற்றும் பார் வதியே! கேட்டருள்வாய்.

37. அறுபது ஏழு ஆண்டில் ஆடிமா தத்தி லேதான்
குறைபக்கம் ஷஷ்டி தன்னில் குழவியி னுடலம் ஏகும்
மறுஜன்மம் காளாத்தி தன்னில் மறைக்குலம் உதிப்பா னுகும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

37. ஜாதகனுடைய அறுபத்தேழாம் வயதில், ஆடி மாசத்தில், கிருஷ்ண பட்சம் ஷஷ்டி திதியில் ஜாதகன் இறப்பான். மறுபிறவி, காளாத்தி க்ஷேத்ரத் தில் அந்தண குலத்தில் பிறப்பான். யானை முகத்தோனைப் பெற்ற பார்வதியே! கேளுங்கள்.

38. அன்னவன் ஜனன காலம் ஆயில்யம் கடைப்பா தத்தில்
மன்னிய புதனி ருப்பு வருடமோ மூன்று மாகும்
தன்னிலே திங்கள் ரண்டும் சாற்றினேம் பூர்வ பாகம்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

38. ஜாதகனின் ஜனனகாலத்தில் ஆயில்ய நட்சத்திரம் கடைசி பாகம், புதமாகதசை யிருப்பு மூன்று வருடங்கள் இரு மாதங்களாம். இவை முதல் பாகம் சொன்னேம். உயர்ந்த கணவனைப் பெற்ற தாயே! கேட்டிடுவாய்.

## ஜாதகம் 21.

1. மதிமேடம் சேயும் நந்தி மால்ரவி மிதுன மாக
வதிபனும் புகர்நண்டு விடச சீயம் குருவும் ஜன்மம
உதயனும் வீணை யாக உரைப்பீர்கள் முனியே நீர்தாம்
துதிசெய்து பராசர் சொல்வார் தோனறிடும் ஆண்பா லாக.

1. சந்திரன் மேஷத்திலும், செவ்வாய் விருஷபத்திலும், புதன் சூரியன் மிதுனத்திலும், சுக்கிரன் சனி கடகத்திலும், ராகு சிம்மத்தி லும், குரு ஜன்மலக்கினமாகிய மிதுனத்திலும் (கேது கும்பத் திலும்) லக்கினம் மிதுனமு மாக இருந்தால், பலனைச் சொல் லுங்கள், என்று வினவ, பராசர முனிவர் கூறுகின்றார். பிறப்பது ஆண் மகன்.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | செவ்வாய் | புதன் குரு சூரியன் லக்கினம் |
| கேது | இராசி சக்கரம். | | சனி சுக்கிரன் |
| | | | ராகு |
| | | | |

2. வந்தவன் வடதென் வீதி வாசலும் கீழ்ப்பா லாகும்
இந்திர ஞக ஒக்கும் இடிந்ததோர் கோயி லுண்டு
சந்ததம் செட்டு ஓங்கும் சகராசர் வாச மாகும்
முந்திய பேரூ ராகும் விசேஷஆ லயங்க ளுண்டு.

2. பிறந்தவனின் வீடு வடக்குத்தெற்கான வீதியில், கிழக்கு நோக்கிய வாயிலையுடையது. பெரிய கோயில் ஒன்று இடிந்து இருக்கும். அது, வியா பார ஸ்தலமாகவும் அரசர் வாழும் ஊராகவும் உள்ள பெரிய ஓர் ஊராகும். விசேஷமான கோயில்களும் உள்ளன.

3. பலஜாதி அவ்வூர் வாசம் பகர்ந்தஇவ் வடையா ளத்துள்
குலமது வைச்ய ஞகக் குதிப்பனும் நான்காம் ஜன்மம்
தலைவிமார் மூன்று என்றேம் தந்தையின் தந்தைக் கேதான்
உலவுவான் கடைமா துக்கு உதித்தவன் தந்தை என்றேம்.

3. அவ்வூரில் பல ஜாதிப்பேர் வசித்துவருவார். இங்ஙனம் சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள ஊரில், வைசிய குலத்தவஞக இந்த ஜாதகன் பிறப் பான். இவன் தன் தந்தைக்கு நான்காமவஞகத் தோன்றுவான். ஜாதகனு டைய தந்தையின் தந்தைக்கு மூன்று மனைவியராவர். அவர்களில் கடைசியில் வந்தவளுக்குப் பிறந்தவன் ஜாதகனுடைய தந்தை, என்று கூறுகின்றேம்.

4. மாநிறம் உஷ்ண தேகி மாநிலம் செட்டுச் செய்வன்
தேன்மொழி கூறு வானும் தனமது கொடுக்கல் வாங்கல்
ஈனமாம் குணங்கள் கொஞ்சம் எதிரியை வசியம் கொள்வன்
ஊனமில் லாத தேகி உறவினர்க் கினிய னுவன்.

4. மாநிற முள்ளவன். சூட்டுத்தேக முடையவன். நிலத்தில் வியாபாரம் செய்து வருவான். இனிமையாகப் பேசுவான். பணம் கொடுக்கலும் வாங்கலும் செய்து வருவான். சிறிது அற்ப குணங்களுடையவன். எதிரியை வயப் படுத்துவான். பின்னங்கள் இல்லாத தேகத்தன். பந்துக்களுக்குப் பிரியன்.

5. தோத்திரப் பிரிய னுகும் துறவோர்கள் நேசம் கொள்வான
சூத்திரம் சிலர்க்குச் செய்வன் தொடுவழக் கதனில் சேரான்
காத்திர மில்லா னுகும் கன்னியும் துணைஒன் றேயாம்
கூத்தன்தன் பதிக்கு மத்தில் குலவுவாள் என்று சொல்வோம்.

5. தோத்திரம் செய்யப்படுவதில் பிரியமுள்ளவன். பரதேசிகள் (பெரியோர்கள்) நட்புக் கொள்ளுவான். சிலருக்கும் நன்மைகள் செய்வான். வழக்குகளுக்குப் போகாதவன். காத்திர மில்லாத தேகமுள்ளவன். ஒரே சகோதரியை யுடையவன். அவள் இடையிலேயே மரணமடைவாள், என்று கூறுகின்றேம்.

6. சொன்னஇக் குணத் தானுக்குச் சுதனுமே உதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அவனிரு நிறத்த னுகும்
தன்னுடல் மெலிவு நீட்சி தக்கதோர் கல்வி கற்பன்
அன்னையின் துணைவர் தம்மால் அவனுமே உய்வா னுகும்.

6. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்குப் புத்திரனுக இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணங்களைச் சொல்லுகின்றேன். கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவன். மெலிந்து நீண்ட சரீர முடையவன். தகுந்த கல்வி கற்பான். ஜாதகனுடைய தாய் மாமனுல் (இவன் உதவியை யடைந்து) வாழ்ந்துவருவான்.

7. காரியச் சமர்த்த னுகும் கணக்கினில் ஊக வானும்
தேரின புத்தி ஏற்பன் சிலசிலச் செட்டுச் செய்வன்
பாரது பின்னுல் சேர்ப்பன் பத்தினி தன்னுல் யோகம்
போர்செல்லான் வறுமை காணுன் புகழான குடும்ப மேற்பன்.

7. காரியங்களில் சமர்த்தன். கணக்கில் புத்திசாலி (ஊகமுள்ளவன்). முதிர்ந்த புத்திசாலி. சிற்சில வர்த்தகம் செய்வான். பிற்காலத்தில் பூமிகளைப் பெருக்குவான். தன் மனைவியால் யோகமடைவான். சண்டைக்குச் செல்லாதவன். தரித்திரமில்லாதவன். கீர்த்தியுள்ள குடும்பத்தை அடைவான்.

8. தந்தையால் சுகமும் காணுன் தனிகனுய் வாழ்வா னுகும்
விந்தையாய்க் கன்னி ஒன்று மேவிடும் தீர்க்க மாக
அந்தவள் குணத்தைச் சொல்வேன் அன்புள மனத்த ளாகும்
தென்திசை வரனும் நேரும் சிறப்புள குடும்பி யாவள்.

8. தன் தந்தையால் சுகமில்லாதவன். செல்வவானுக வாழ்ந்து வருவான். ஒரு சகோதரி நீண்ட ஆயுளுடன் தீர்க்கமாக இருப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றேன். அன்புள்ள மனமுடையவள். அவளுக்குக் கணவன் தென் திசையிலிருந்து வருவான். சிறப்புள்ள குடும்பத்தை அடைவாள்.

9. மனமது கபடு மில்லாள் மறுத்துரை அதிகம் கூருள்
தனம்பணி யதிகம் ஏற்பள் தன்சுதர் ஆண்பால் ரண்டு
கனமுள பெண்பால் மூன்று கழருவோம் தீர்க்க மாகச்
சினமிலாள் விரத மேற்பள் சிறுத்தோருக் குதவி செய்வாள்.

9. மனத்தில் கபடில்லாதவள். மறுத்துப் பேசாதவள். செல்வம் ஆபரணங்கள் முதலியவற்றை அடைவாள். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் உண்டு. அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். கோபமில்லாதவள். நோன்பு நோற்பாள். ஏழைகட்கு உபகாரி.

10. வயதுமே தீர்க்க மெய்தும் வருவோரை ஆத ரிப்பள்
தையுள மனத்த ளாகும் சான்றோருக் கன்ன மீவள்
அயலார்தம் குற்றம் சொல்லாள் ஆண்மையாய்க் குடும்ப மேற்பள்
நயமுடன் தவங்கள் செய்யும் நாயகி கேட்டி டாயே.

10. நீண்ட வயதுள்ளவள். வந்து அடைந்தவர்களை ஆதரிப்பாள். தயை நிரம்பிய மனமுடையவள். பெரியோருக்கு அன்ன மளிப்பாள். பிறர்மீது குற்றம் கூருதவள். குடும்பத்தின் தலைமையை ஏற்று நடத்துவாள். தவங்களை இயற்றும் பார்வதியே! கேட்டிடுவாய்.

11. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோம் பத்தொன் பாண்டில்
காதலி உள்ளூர் தன்னில் கலப்பளாம் மாமன் புத்திரி
ஓதுவென் அவள் குணத்தை உயர்வான புத்தி ஏற்பள்
தீதுகள் ஒருவர்க் கெண்ணுள் சீலியாம் யோக சாலி.

11. ஜாதகனுடைய திருமணக்காலத்தைக் கூறுகின்றோம். பத்தொன்பதாம் வயதில் உள்ளூரிலேயே உள்ள தன் மாமனின் புத்திரி மனைவியாக வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். உயர்ந்த புத்தி உடையவள். ஒருவருக்கும் தீங்கெண்ணுதவள். ஒழுக்க முள்ளவள். யோக சாலி.

12. அன்னம்போல் சாய லொக்கும் அவள்காலில் வாயு பீடை
முன்னோர்போல் வார்த்தை சொல்வள் உலகுக்கு நல்லோ ளாவள்
தன்சொலு மடக்க முண்டு சத்தான வஸ்து இஷ்டம்
அன்னையால் பெருமை ஏற்பள் அன்னமும் அன்பாய் ஈவள்.

12. அன்னம் போன்ற (மேனி) நடை யுள்ளவள். அவளுடைய காலில் வாயுவினுல் ரோகமுடையவள். பெரியோர்களைப் போலப் பேசுபவள். உலகத்தவருக்கு நல்லவளாக இருப்பாள். அடக்கமாகப் பேசுபவள். புஷ்டியுள்ள பதார்த்தங்களில் பிரிய முள்ளவள். தன் தாயினுல் பெருமை அடைவாள். அன்புடன் அன்ன மளிப்பாள்.

13. வறுமை எப்போதும் காணுள் வயதுமே தீர்க்க மெய்தும்
பெரும்சுதர் ஆண்பால் ரண்டு பெண்ணது அவ்வாறு தீர்க்கம்
திருகான வார்த்தை சொல்லாள் சேயிழை நடக்கை நன்மை
அறிவுளாள் விரத மேற்பள் அம்பிகை யாளே கேளாய்

13. எப்போதும் வறுமை யில்லாதவள். நீண்ட ஆயுளுள்ளவள். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து தீர்க்கமாவார். கெட்ட வார்த்தைகள் பேசாதவள். நன்னடத்தையுள்ளவள். சிறந்த அறிவாளி. நோன்பு நோற்பாள். தாயே ! கேளுங்கள்.

14. அன்னைமா நிறதத ளாகும் அன்புள மனத்த ளாகும்
தன்சொலு மடக்க முண்டு சத்புத்திரி பொறுமை சாலி
முன்கோபம் கொஞ்ச முண்டு மூலச்சூ டுடைய ளாகும்
பின்னமில் லாத தேகி பிறர்குற்றம் சொல்லா ளாகும்.

14. தாய் மாநிறமுள்ளவள். அன்புள்ள மனமுடையவள். அடக்கமாகப் பேசுபவள். நல்லவள். பொறுமைசாலி. முன் கோபம் சிறிதுடையவள். மூலச்சூடுடையவள். ஊனமில்லாத சரீரத்தாள். பிறர்மீது குற்றம் கூறுதவள்.

15. சுகமுள வார்த்தை சொல்வள் துறவிக்கு அன்ன மீவள்
பகைஎன்று மனத்தில் வையாள் பரிந்துப சாரம் செய்வள்
சகமதில் நல்லோ ளாவள் செய்ந்நன்றி மறவா ளாகும்
உகமையாய் வார்த்தை சொல்வள் உத்தமி கேட்டி டாயே.

15. இனிமையாகப் பேசுபவள். துறவிகட்கு அன்புடன் அன்னமளிப்பாள். ஒருவரிடத்திலும் விரோதம் கொள்ளாதவள். பரிந்து உபசாரம் செய்பவள். உலகத்தில் நல்லவளாக இருப்பாள். செய்த உபகாரத்தை மறவாதவள். உபமானத்துடன் பேசுபவள். தாயே ! கேட்டிடுவாய்.

16. தன்துணை ஆண்பா லொன்று சத்தியு மவ்வா றென்றேம்
பின்னமா மிரண்டு என்றேம் பேசுவோ மாண்பால் சேதி
அன்னியர் மதிக்க வாழ்வன் அறுமுகன் பக்தி கொள்வன்
கன்னென மொழியே சொல்வன் கலைத்தொழில் செட்டுச்
[செய்வன்.

16. உடன் பிறந்த சகோதரன் ஒருவனும். சகோதரி ஒருத்தியாவள். இரு குழந்தைகள் பிறந்து நஷ்டமாகும். சகோதரனின் செய்தியைக் கூறுகின்றேம். பிறர் கொண்டாடும்படி வாழ்வான். சுப்பிரமணியக் கடவுள் மீது பக்தியுடையவன். இனிப்பாக பேசுபவன். கலைத்தொழில் செய்து வியாபாரம் செய்வான்.

17. மால்நிறம் வாத தேகி மர்மமில் லாதா னாகும்
தானமும் தரும மிச்சை சகலர்க்கு நல்லோ னவன்
சீலவான் பொறுமை சாலி சிறுத்தோர்க்கு அன்ன மீவன்
பால்தயிர்ப் பிரிய னாகும் பணிசெய்வன் முருக ருக்கு.

**17.** கரிய நிறமுள்ளவன். வாதரோகமுள்ள சரீரமுள்ளவன். ரகசிய மில்லாதவன். தானதருமம் செய்வதில் பிரிய முள்ளவன். எல்லோருக்கும் நல்லவனுவன். நல்லொழுக்கமுள்ளவன். பொறுமையுள்ளவன். எழை கட்கு அன்னமளிப்பான். பால் தயிர் இவைகளின்மீது விருப்பமுள்ளவன். முருகப்பிரானுக்குத் திருப்பணிகள் செய்வான்.

**18.** சுதர்களு மாண்பால் ஒன்று தோகையு மவ்வாறு தீர்க்கம்
அதிபனபால் இந்தப் பாலன் மருவுவான் சிலது காலம்
இதுநிற்கப் பெண்பால் சேதி இயம்புவோம் நற்கு ணத்தாள்
சதியான ரோகி யாவள் சந்ததி தோஷ மெய்தும்.

**18.** ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் உள்ளவன். இவனுடன இந்த ஜாதகன் சில காலம் வசித்துவருவான். இவை நிற்க ஜாதகனுடைய தாயின் உடன் பிறந்தவளைப் பற்றிச் சொல்லுகின்றோம். நற்குணமுடையவள். வியாதி யுடையவள். குழந்தைகளுக்குத் தோஷமுண்டாகும்.

**19.** முனிபகை யாலே புத்திரர் முயலாது என்று சொல்வோம்
வினையது நிவிர்த்தி யாகில் விளங்கும் ஆண்பா லொன்று
கனமுள அன்னை பூர்வம் கழருவோ மினிமே லாகச்
சினமிலாப் பாண்டி நாட்டில் ஜனித்தனள் கங்கை சேயாய்.

**19.** பிசாசு தோஷத்தால் குழந்தைகள் பிறவா என்று கூறுகின்றோம். அந்தத் தோஷம் தீர்ந்தால், ஆண் குழந்தையொன்று பிறக்கும், என்று சொல்லுகின்றோம். இனி, தாயின் முற்பிறவியைக் கூறுகின்றோம். மதுரைமாநகரில், வேளாள மரபினளாகப் பிறந்தாள்.

**20.** சுகமுள குடும்பி யாகிச் சுந்தரி வாழு நாளில்
பகையது புகலக் கேண்மோ பரமர்க்கு விசேஷ நாளில்
மிகுஜனக் கூட்ட மாகும் வித்தகி வரனும் சென்று
தகமையாய்க் கடவுள் பாதம் தர்சித்துக் கடை வீதிக்கு ;

**20.** சுகமுள்ள குடும்பத்தைப் பெற்று வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். சிவபெருமானுக்கு உத்ஸவம் நடக்கும் காலத்தில், ஜனக்கூட்டம் அதிகமாக இருந்தது. அப்போது இவளும் தன் கணவனுடன் கடவுளைத் தரிசித்துவிட்டுத் திரும்புங்கால், கடைத் தெருவிற்குச் சென்று ;

**கடையில் திருடியதால் ஏற்பட்ட சாபத்திற்குச் சாந்தி இல்லை.**

**21.** மாதுவுஞ் சென்று மேதான் மஞ்சள்குங் குமங்கள் சீப்புக்
காதலி வாங்கிக் கொண்டு காசுக ளீயா ளாகிச்
சூதாகச் சென்று ளென்றோம் செட்டியும் பின்பால் பார்த்துப்
பேதையைக் காணு ளுகிப் புகலுவான் மனவெ றுப்பால்.

**21.** இப்பெண் ஒரு கடைக்குச் சென்று, மஞ்சள் சீப்பு குங்குமம் இவைகளை வாங்கிக் கொண்டு, அதற்குரிய பணத்தைத் தராமல், கெட்ட எண்ணத்துடன் சென்று விட்டாள். செட்டியும் இவள் போன பிறகு கவனித்துப் பெண்ணைக் காணமல் மனவருத்த மடைந்து சொல்லுகின்றான்.

22. குங்கும மாகா முன்னம் கொழுநனு மரண மாவன்
மங்கையும் பின்ஜன் மத்தில் மத்தியில் மாரன் மாண்டு
சங்கையா மனத்த ளாகித் தாயில்லஞ் சிலநாள் வாசம்
இங்ஙனம் சொல்லி யேதான் இறைத்தனன் தெருத்தூள் தானும்.

22. நீ வாங்கிப் போன குங்குமம் தீருவதற்கு முன்பாகவே உன் கணவன் மரண மடைவான். உன் மறுபிறப்பிலும் இடையிலேயே உன் கணவன் இறந்து, மனம் வருந்தி, தாயின் வீட்டில் சில காலம் வசித்து வருவாய், என்று கடைக்காரன் சொல்லி, தெருமண்ணை வாரி இறைத்தான்.

**குழந்தைக்கு அன்னம் இல்லை என்றதால் சாபம்.**

23. அந்ததோர் சாபந் தானும் அணுகிற்றுப் பாவைக் கேதான்
விந்தையாய் வேறு சொல்வேன் மெல்லியு மேழை மாது
தன்சுதர்க் கன்னம் வேண்டிச் சத்திபா லணுகிக் கேட்க
முந்திய கோப முற்று உதவாது அன்ன மென்ன.

23. அந்தச் சாபம் ஜாதகனின் தாய்க்கு ஏற்பட்டது. இதைத் தவிர, வேறு ஒன்றும் சொல்லுகின்றேன். ஏழைப் பெண் ஒருத்தி, தன் குழந்தையின் பசிக்கு அன்னம் இவளைக் கேட்டாள். இப் பெண் கோப மடைந்து அன்ன மில்லை என்றாள்.

24. மாதுவு மனங்க லங்கி அறைகுவாள் சாபந் தானும்
பாதகி மதலை சாதம் பகராத பாவிக் கேதான்
நீதியாய்ப் பின்ஜன் மத்தில் நிலையார்கள் சுதர்கள் தாமும்
தீதாக வரனு மாண்டு செல்லுவாய்த் தாயில் லத்தில்.

24. அவ்வேழைப் பெண் மனம் கலங்கிக் கூறுகின்றாள். பாதகியே! குழந்தைக்கு அன்னம் தராத பாவியே! உனக்கு மறு பிறப்பில், புத்திரர்கள் நிலையாமல், இடையில் கணவனும் மாண்டு, தாய் வீட்டுக்குச் செல்வாய்.

25. ஒண்டியே வாழ்வா ளாகும் உரைத்துமே சென்று ளென்றேம்
துண்டமாய் அந்தச் சாபம் சேர்ந்தது பாவைக் கேதான்
கண்டித மந்த ஆண்டில் காலன்தன் பதிக்குப் பர்த்தா
அண்டினுள் விதவை யாகி அவள்மனச் சஞ்ச லத்தால் ;

25. சென்று (அடைக்கலம் புகுந்து) வாழ்ந்து வருவாய்; என்று சொல்லிவிட்டுச் சென்றாள். நிச்சயமாக அந்தச் சாபம் இப் பெண்ணுக்கு வந்து சேர்ந்தது. அவள் அந்த வருஷத்திலேயே கணவனை யிழந்து, மனத்தில் கலக்கமுற்று ;

26. மரலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டு
நிறைசெய்யும் வைச்யச் சேயாய் நேர்ந்துமே வணிபன் சாபம்
திருமகள் மத்தி யத்தில் செல்லுவான் வரனும் தானும்
அரிவையும் சஞ்ச லத்தால் அன்னையில் அடைவா ளாமே.

26. தானும், இறந்து மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, குறைகளைப் பூர்த்தி செய்து வரும் வேளாள மரபினளாகப் பிறந்து, கடைக்காரன் சாபத்தைப்போல் இடையில் கணவனை இழந்து, மனத்தில் துன்பம் அடைந்து, தன் தாய் வீட்டிற்குச் சென்று வாழ்வாள்.

27. சஞ்சல மனத்த ளாவள் சாற்றுவீர் அதற்குச் சாந்தி
மஞ்சளின் தோஷத் திற்கு வரையவே மாட்டோம் யாங்கள்
தஞ்சமாய் இவள்பின் ஜன்மம் சாற்றுவோம் அவ்வூர் தன்னில்
மிஞ்சிய குலமு திப்பாள் வித்தகி கேட்டி டாயே.

27. மனத்தில் துன்பமடைவாள் என்றீர்களே, அதற்குச் சாந்தியொன்று கூறுங்கள். **மஞ்சள் திருடிய தோஷத்துக்குச் சாந்தி கூறமாட்டோம்.** இவளுடைய மறு பிறப்பைச் சொல்லுகின்றோம். அவ்வூரிலேயே அந்தண குலத்தவளாக பிறப்பாள். தாயே ! கேளுங்கள்.

**தப்புக்கணக்கு எழுதி அதிகப்பணம் வாங்கியதால் நேர்ந்த சாபம்.**

28. தந்தைமுன் ஜன்மம் சொல்வேன் சடகோபர் வாழூ மூரில்
இந்ததோர் குலமு தித்து இயல்பான குடும்பி யாகி
அந்தவன் வாழு நாளில் அருமறை வாசம் கொண்டு
தன்தன மவனுக் கீந்து செய்தனன் கணக்கில் மோசம்.

28. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். ஆழ்வார் திருநகரியில், இதே குலத்தில் பிறந்து, செயலுள்ள குடும்பத்தைப் பெற்று, வாழ்ந்து வரும் நாளில், அந்தணர் நட்புக்கொண்டு, கொஞ்சம் பொருள் அவனுக்குக் கொடுத்து, கணக்கில் தப்புச்செய்து, மோசம் செய்தான்.

29. வேதியன் திகில டைந்து விளம்புவான் சாபந் தானும்
சூதுகள் செய்த பாவி தோன்றிடும் பின்ஜன் மத்தில்
கோதிலாத் துணைவ ரின்றிக் குழவியும் தோட மாயும்
மேதினில் சமமாம் யோகம் விளங்கியே வாழ்வா னுகும்.

29. அந்தணன் மனத்தில் சஞ்சல மடைந்து கூறுகின்றுன். சூது செய்த பாவிக்கு, ஏற்படும் மறு பிறவியில், உடன் பிறந்த சகோதரர்கள் இல்லாமல், புத்திர தோஷம் அடைந்து, சாதாரண யோகவானுக பூமியில் வாழ்ந்து இருப்பான்.

30. இன்னமும் பலவாறு சொல்லி ஈந்தனன் பொருளைத் தானும்
பின்னமா யந்தச் சாபம் புக்கிற்று வந்தி யத்தில்
தன்தனம் குறைவு நேர்ந்து சண்டன்தன் பதிக்குச் சென்று
முன்னவன் வரையப் பட்டு உதித்தன னென்று சொல்வோம்.

30. இன்னும் பலவிதங்கள் சொல்லிவிட்டு அவன் கேட்ட பணத்தைக் கொடுத்து விட்டான். தீமையாக அந்தச் சாபம் இவனை வந்தடைந்தது. இவன் கடைசிக் காலத்தில், செல்வங்கள் குறைவுற்று, இறந்தான். மீண்டும் பிரம்மாவினுல் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்று கூறுகின்றோம்.

31. மறையவர் சாபத் தாலே மாரனும் தனியாய் வாழ்வன்
நெறியதாய் ஐந்தாம் ஆண்டில் நேருவான் கால னுடு
மறுஜன்மம் காஞ்சி தன்னில் மருவுவா னிக்கு லத்தில்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா னுகும்.

31. அந்தணர் சாபத்தால் ஜாதகனுடைய தந்தை தனித்து வாழ்ந்திருப்பான். ஜாதகனுடைய ஐந்தாம் வயதில் இறப்பான். மறு பிறப்பில் காஞ்சீபுரத்தில் இதே குலத்தில் பிறப்பான். லட்சுமீகடாட்சம் பெற்றுச் செல்வவானாக வாழ்ந்து வருவான்.

32. உதித்தவன் பூர்வம் சொல்வேன் உமையாள்வாழ் அருணை நாட்டில்
விதியவன் குலமுதித்து மேதினில் கிருஷி செய்து
அதிபனும் வாழ்ந்து மேதான் மரலியின் பதிக்குச் சென்று
முதுமகன் வரையப் பட்டு உதிப்பனு மிவனே என்றேம்.

32. ஜாதகனுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றேன். பார்வதி தேவி வாழ்ந்து வரும் திருவண்ணமலையில், அந்தணர் குலத்தில் தோன்றி (விவசாயம் செய்து) ஜீவித்து வந்து, பிறகு இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறப்பான் என்று கூறுகினறோம்.

### தாழ்குலப் பிறவிக் காரணம்.

33. முன்ஜன்மம் மறைக்கு லத்தில் உதித்தவ னிச்சென் மத்தில்
தன்குலம் தாழ்வ தாக ஜனித்தகா ரணங்க ளென்ன
உன்னத மறைகள் தம்மை உரைக்காமல் இருந்த தோடம்
துன்மதி வணிகர் வர்க்கம் தோன்றின னிவனே யென்றேம்.

33. முற் பிறவியில் அந்தணர் குலத்தில் பிறந்தவன், இப் பிறவியில் குலம் தாழ்வாகப் பிறக்கக் காரணம் என்ன ? வேதங்களைப் படித்துச் சொல்லாமல் இருந்து வந்ததால், வைசியர் குலத்தில் பிறந்தான் இவன், என்று கூறுகின்றோம்

### சகோதரதோஷ க்ரகநிலை.

34. துணையாண்பால் காணு வண்ணம் செப்புவீர் முனியே நீர்தாம்
பிணையாக மூன்றில் ராகு பெருஞானி ஒன்பா னிற்க
வினையுண்டு துணையா னுந்தான் விளம்புசேய் விரயம் புக்கச்
சினமுடன் பூமி காணன் செல்வதி கேட்டி டாயே.

34. ஜாதகனுக்குச் சகோதர தோஷம் ஏற்படக் காரணம் என்ன என்று சொல்லுங்கள், முனிவரே ! மூன்றுமிடத்தில் (சகோதர ஸ்தானத்தில்) ராகுவும், ஒன்பதாமிடத்தில் கேதுவும் இருப்பதால், சகோதரனுக்குத் தோஷம் ஏற்படும். செவ்வாய் (பூமிகாரகன்) விரயஸ்தானத்தில் இருப்பதால் பூமி கிடைக்காது. தாயே ! கேளும்.

35. பாலகன் யோகச் சேதி பகருவோ மினிமே லாகச்
சீலவான் ஊக வானும் செட்டுக்கள் செய்வா னாகும்
நீலியால் பெருமை பூண்பன் நீத்தோர்க ளுறவு கொள்வன்
சாலவே வாதி காலம் தாய்த்துணை தன்னா லுய்வன்.

35. ஜாதகன் யோகச் செய்தியைச் சொல்லுகின்றேம். நல்லொழுக்க முடையவன். ஊகசாலி. வர்த்தகம் செய்து வருவான். தன் மனைவியால் அதிர்ஷ்டங்கள் அடைவான். பெரியோர்கள் (துறவிகள்) நட்புக் கொள்ளுவான். ஆரம்ப காலத்தில் மாமனால் வாழ்ந்து வருவான்.

36. ஐயைந்து வாண்டு மேலாய் அவன்தனிச் செட்டுச் செய்வன்
வையமேல் நல்லோ னுவன் வாக்கதைக் காப்பா னுகும்
பொய்யதை வழுத்தா நெஞ்சம் பூமிகள் பின்னுல் சேர்ப்பன்
உய்வகை செட்டா லென்றேும் உயர்மாமன் தன்ஞ லுந்தான்.

36. ஜாதகன், இருபத்தைந்தாம் வயதுக்கு மேல் வியாபாரம் செய்து வருவான். உலகத்துக்கு நல்லவன். சொல்லும் வார்த்தைகளைக் காப்பாற்றுவான். பொய் கூருதவன். பிற்காலத்தில் பூமி சேர்ப்பான். வர்த்தகத்தால் ஜீவனம் நடைபெறும். தன்னுடைய மாமன் உதவியாலே தான் நடக்கும்.

37. தந்தையி னுஸ்தி கொஞ்சம் தானதை விருத்தி செய்வன்
விந்தையாய்ச் செட்டி னுலும் மேதினி தன்ஞ லுந்தான்
இந்தவன் தேடுஞ் செம்பொன் இயம்புமூ வாயி ரம்தான்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

37. தந்தையின் ஆஸ்தியைச் சிறிது பெருக்குவான். வர்த்தகத்தாலும் பூமியாலும் ஜாதகன் மூவாயிரம் பொற்காசுகள் சேர்ப்பான். கந்த பிரானைப் பெற்ற தாயே! சொன்ன சொற்கள் தவறு.

38. இருபது வொன்ப தாண்டில் ஏகுவா ளன்னை தாமும்
அறுபது வாண்டு தன்னில் ஆடிமா தத்தி லேதான்
திருமக னுடலம் ஏகும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
உறையூரில் பிரம்ம சேயாய் உதிப்பனு மென்று சொல்வோம்.

38. ஜாதகனது இருபத்தொன்பதாம் வயதில் தாய் இறந்து விடுவாள். அறுபதாம் வயதில் ஆடி மாதத்தில் ஜாதகன் இறந்து விடுவான். இவன் மறு பிறவியில், உறையூரில், அந்தண குலத்தவனுக ஜனிப்பான்.

39. குழவியுஞ் ஜனிக்குங் காலம் [1]குதிரைநாள் கடையாம் பாதம்
தழுவிய ஞானி தன்னில் தங்கிடுந் திங்க ளொன்பான்
வி(ழு)[ட] நோயும் பால னுக்கு விளையுமாம் மனமுந் துக்கம்
தொழுமவர் தம்மைக் காக்கும் தோகையே கேட்டி டாயே.

39. ஜாதகன் பிறக்கும் போது அசுவினி நட்சத்திரம் கடைசிப்பாத மாம். கேது மகாதசையில் ஒன்பது மாதங்கள் பாக்கி இருப்பாகும். அப்போது விஷத்தால் நோயும் மனத்துக்குக் கஷ்டமும் நேரும். தோத்திரம் செய்பவர் களைக் காக்கும் தேவியே! கேளுங்கள்.

---

[1] அசுவினி.

# ஜாதகம் 22.

1. மதிகுசன் வீணை யாக மன்னனும் ராகு மானில்
புதனுமே பானு மேடம் புகாசனி மீன மாகச்
சதிசெயுங் கேது நண்டில் ஜன்மமு மிதுன மாக
இதுவிதங் கோள்கள் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் செவ்வாய் மிதுனத்திலும், குரு ராகு மகரத்திலும், புதன் சூரியன் மேஷத்திலும், சனி சுக்கிரன் மீனத்திலும், (கேது கடகத்திலும்) இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், பலன்களைச் சொல்லுங்கள், என்று கேட்டாள்.

| | | | |
|---|---|---|---|
| சனி சுக்கிரன் | புதன் சூரியன் | | லக்கினம் சந்திரன் செவ்வாய் |
| | இராசி சக்கரம் | | கேது. |
| குரு ராகு | | | |
| | | | |

2. இந்தசே யாணுஞ் ஜன்மம் இல்லமும் வடக்கு வாசல்
இந்திரன் குடகு வாசல் ஈசனு மதன்கீ ழாகும்
முந்துமா லதற்கு மேற்கில் முருகர்தங் கோட்ட முண்டு
விந்தையாய் மலைதா னுண்டு வடதிசை யாழி காளி.

2. இஃது ஆண் மகனின் ஜாதகம். அவனுடைய வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு நோக்கிய வாயிலுள்ளது. அதற்குக் கிழக்கில் சிவபெருமான் ஆலயம் இருக்கும். மேற்குப் பக்கத்தில் திருமாலின் ஆலயம் ஒன்ண்டு. சுப்பிரமணியப் பெருமான் கோயிலும் உள்ளது. பக்கத்தில் ஒரு குன்றுண்டு. வடக்கில் சமுத்திரமும் காளி கோயிலும் உள்ளன.

3. அரசர்வாழ் பேரூ ராகும் அழிந்ததோர் கெடியு முண்டு
பெருகிடுஞ் செட்டுத் தானும் பேசுமிவ் வடையா ளத்துள்
வருகுவான் கோகு லத்தில் அவனுமே மூன்றுஞ் ஜன்மம்
திருகிலாக் குடும்பச் சேதி செப்புவோ மினிமே லாக.

3. அஃது, அரசர் வாழ்ந்து வரும் பெரிய ஓர் ஊர். அங்கு அழிந்த கோட்டை ஒன்று உள்ளது. அங்கே வர்த்தகம் நிறைந்து இருக்கும். இவ்வித அடையாளங்களுள்ள ஊரில் இடையர் மரபில் தன் தந்தைக்கு மூன்றுவது மகனாக இவன் பிறப்பான். அவனுடைய குற்றமற்ற குடும்பச் செய்தியைக் கூறுகின்றோம்.

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றவே பலத்தைக் காணோம்
எந்தையே உதிக்கின் தீதாம் இவனுமே தனியாய் வாழ்வன்
அந்தவன் சேதி சொல்வேன் ஆனையின் நிறத்தா னாகும்
தன்னுடல் மெலிவு நீட்சி சங்கையா மனத்த னாகும்.

4. தந்தையினுடைய வர்க்கத்தாரைப் பற்றிச் சொல்ல பலமில்லை. பிறந்தாலும் நிலையாமல் அழிந்து விடும். இவன் தனித்து வாழ்ந்திருப்பான். அவனுடைய குணங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். யானையைப் போன்ற கரிய நிறமுள்ளவன். மெலிந்து உயர்ந்த சரீரமுள்ளவன். சந்தேக மனமுடையவன் ! தேவியே.

5. வண்டிவா கனமு முண்டு வள முள குடும்ப மேற்பன்
எண்டிசைப் புகழு மேற்பன் யாவர்க்கு முதவி செய்வன்
தண்டமிழ்ச் சமர்த்த னாகும் தானிள மனத்த னாகும்
பண்டுநாள் வறுமை இல்லான் பாக்கிய முடைய னாமே.

5. வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். செழிப்புள்ள குடும்பத்தை அடைவான். எட்டுத் திக்குகளிலும் புகழடைவான். எல்லோருக்கும் உதவி செய்வான். தமிழ்ப் பாஷையில் சமர்த்தன். இளகிய மனத்தன். ஆதிகாலம் முதல் தரித்திரம் இல்லாதவன். பாக்கிய முள்ளவன்.

6. பலஊரில் பூமி சேர்ப்பன் பணிந்தோரை ஆத ரிப்பன்
கலகத்தைக் கூறா னாகும் காலிகள் விருத்தி உண்டு
குலவிடு மநேக இல்லம் குணமது இரண்டு மாகும்
புலவனபோல் மொழிவா னாகும் பொய்யது வழுத்தா நெஞ்சம்.

6. பல ஊர்களில் நிலங்கள் வாங்குவான். அடைக்கலம் புகுந்தவர்களை ஆதரிப்பான். கலகம் செய்யாதவன். கால் நடைகளின் பெருக்கம் உள்ளது. அநேக வீடுகள் சேரும். இருவிதக் குணங்களுள்ளவன். புலவன போலப் பேசுவான். பொய் பேசாதவன்.

7. இன்னவன் செங்கை தன்னில் இலகிடும் கமல ரேகை
உன்னதக் கலைகள் செட்டு உத்தமன செய்வா னாகும்
அன்னியர் மதிக்க உய்வன் அடாவடி தன்னில் செல்லான்
கன்னென மொழியே சொல்வன் கடுநடை முன்கோ பத்தன்.

7. ஜாதகனுடைய தந்தையின் கையில் கமலரேகை இருக்கும். உயர்ந்த கலைகள் வர்த்தகம் முதலியன செய்து வருவான். அயலார் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். அடாவடிக்குப் போகாதவன். இனிய வார்த்தைகளையே பேசுபவன். வேகமாக நடக்க வல்லவன். முன் கோபி.

8. மாமிக ளிரண்டே யாகும் வருவோரை ஆத ரிப்பன்
தீமையாய்க் குணமும் கொஞ்சம் செய்நன்றி மறவா னாகும்
ஆமது அனேக முண்டு அணுகிடும் நாபிச் சூடு
காமனை விருப்பம் கொள்வன் காதலி கேட்டி டாயே.

8. மனைவிகள் இருவர் உண்டு. தன்னை அண்டி வந்தவர்களைக் காப்பாற்று வான். சிறிது தீங்கான குணமும் இருக்கும். செய்த உபகாரத்தை மறவாத வன். அனேக வீடுகள் உள்ளன. நாபிச் சூட்டு நோய் உண்டாகும். சிற்றின் பத்தல் விருப்பம் கொள்ளுவான். தாயே ! மேலும் கேளுங்கள்.

9. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவான் மூன்றும் [ஜனமம்
அன்னவன் துணைபெண் ணொன்று அனுகிடும் தீர்க்க மேதான்
பின்தூணை காணு னுகும் பேசுவீர் அந்தச் சங்கை
அன்னைக்கு ரோக முண்டாய் அனுகாது துணைவர் தாமே.

9. இங்ஙனம் சொல்லப்பட்ட குணங்களையுடைய தந்தைக்கு, இந்த ஜாதகன் மூன்ருவது மகளுகப் பிறப்பான். அவனுக்குச் சகோதரி ஒருத்தி பிறந்து தீர்க்கமாயிருப்பாள். இவனுக்குப் பின் சகோதரர்கள் விருத்தி யில்லை. அந்தச் சந்தேகத்தைச் சொல்லுங்கள். இவனுடைய தாய்க்கு ரோகம் ஏற்பட்டதால் சகோதரர்கள் பிறவார்.

10. மறுமாது மொன்று தோன்றும் மறுவிடும் சுதாரண் ரண்டு
அறிவையும் நான்கு மாகும் அவர்பலன் பின்பால் சொல்வேன்
திருமகன் பலத்தை யாங்கள் செப்புவோ மினிமே லாகக்
கருநிறம் உளைச்சல் நீட்சி இன்பமாய் வார்த்தை சொல்வன்.

10. ஜாதகனுக்கு இளைய தாயார் ஒருத்தி வருவாள். அவளுக்கு இரு புத்திரர்களும் நான்கு புத்திரிகளும் பிறப்பார்கள். அவர்களுடைய பலன் களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றேன். ஜாதகனுடைய பலத்தை நாங்கள் இனிக் கூறுகின்ருேம். கரிய நிறமுள்ளவன். மெல்லியதும் நீண்டதுமான சரீரமுள்ளவன். இனிமையாகப் பேசுவான்.

11. பலசகா யங்கள் செய்வன் பலவித வணிப மோங்கும்
கலகத்தைக் கூரு னுகும் கல்வியு மிரண்டு கற்பன்
சொல்மொழி காப்பா னுகும் சுத்தமா மனத்த னுகும்
கலைத்தொழில் செட்டுச் செய்வன் கட்டிலான் பொறுமை சாலி.

11. பல சகாயங்கள் செய்வான். பலவிதமான வர்த்தகம் விருத்தியாகும். கலகம் செய்யாதவன். இருவிதமான கல்வி கற்பான். சொன்ன வார்த்தை களைக் காப்பாற்றுவான். சுத்தமான மனத்தன். கலைத் தொழில் வியா பாரம் செய்து வருவான். அடக்கமில்லாதவன். பொறுமையுள்ளவன்.

12. ஞாதியை நசிக்க வைப்பன் நயம்படக் கூறு நெஞ்சம்
நீதிமான் ரோமம் நீட்சி நீணிலம் அதிக முண்டு
காதியு மதிக மேற்பன் கருதிடான் கட்டு வார்த்தை
வேதனை ஒருவர்க் கெண்ணுன் விசனமே காணு னுகும்.

12. விரோதி (தாயாதி)களை ஒழிக்கவல்லவன். நயமாகப் பேசுபவன். நீதி தவருதவன். நீண்ட மயிர்களை உடையவன். விளை நிலங்கள் அதிகம் பெறுவான். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவன். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவன். துன்பத்தையே காணுதவன்.

13. காலிகள் விருத்தி உண்டு கொடுமையை வெளிக்காட் டாதான்
சீலவான் மாலின் தொண்டு செய்வனே பெரியோர் நேயன்
ஆலம்போல் பகைவ ருக்கு அவனுமே கருட னவன்
காலத்தை அறிந்து ரைப்பன் கனதலவாசம் செய்வன்.

13. கால்நடைகள் பெருகும். கொடுமையை வெளியிடாதவன். நல்லொழுக்க முள்ளவன். திருமாலின் தொண்டு செய்வான். பெரியவர்களுக்குப் பிரியமானவன். விஷம் போல் கொடிய விரோதிகட்கு, கருடன் போன்றவன். வரும் காலத்தை முன் கூட்டி அறிந்து சொல்லுவான். புண்ணிய தலங்களில் வசித்துவருவான.

14. நல்லவன் நல்லோ ருக்கு நற்கரம் விஷ்ணு ரேகை
வெல்லும்சொல் லுடைய னுகும் வீண்பழி எற்கா னுகும்
மல்லினில் சொல்லா னுகும் மர்மமில் லாதா னென்றேம்
அல்லலை யகற்று மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

14. நல்லவர்கட்கு நல்லவனுக இருப்பான். கையில் விஷ்ணுரேகை உள்ளது. தன் சொல்லுக்கு மேன்மை உடையவன். அபவாதங்கள் அடையாதவன். சண்டைக்குச் செல்லாதவன். இரகசிய மில்லாதவன் என்று கூறுகின்றேம். துன்பத்தைத் தவிர்க்கும் எங்கள் உயிருக் குயிரான தேவியே ! கேளுங்கள்.

15. மணமது பதினே ழாண்டில் மங்கையும் கீழ்ப்பால் நேரும்
குணமது நல்ல தாகும் அடக்கமும் சாந்த முண்டு
தணிவான புத்தி எற்பள் சான்றோர்போல் வார்த்தை கூறுவள்
அணைவானின் மனம்போல் வாழ்வள் யாவர்க்கும் நல்லோ
[ளாவள்.

15. ஜாதகனுக்குப் பதினேழாம் வயதில் மணம் ஏற்படும். பெண்ணும் கிழக்குத் திசையிலிருந்து வருவாள். நற்குண முள்ளவள். அடக்கமும் சாந்தமும் உடையவள். தணிவான குணமுடையவள். பெரியோர்கள் போலப் பேசுவள். கட்டிய புருடன் மனம் போல் வாழ்வாள். எல்லாருக்கும் நல்லவளாக இருப்பள்.

16. இல்லமும் அலைச்ச லாகும் இன்பச்சொல் ஊக சாலி
வல்லிக்கு வயது தீர்க்கம் மாமுனி தடுத்துச் சொல்வார்
சல்லியன் தசமம் தங்கச் சத்தமத் தோனு மெட்டில்
அல்லலாய் ராகு கூட அறைந்தனம் தாரம் ரண்டு.

16. வீட்டினுல் உபத்திரவங்கள் நேரும். இனிமையாகப் பேசுபவள். ஊகமுள்ளவள். நீண்ட ஆயுளுடையவள். முனிவர்கள் தடுத்துக் கூறுகின்றார். சுக்கிரன் பத்தாமிடத்தில் இருப்பதாலும், ஏழாமிடத்துக்குரிய குரு எட்டில் இருப்பதாலும், ராகுவுடன் கூடி இருப்பதாலும், இரு மனைவிகள் உண்டென்று சொன்னேம்.

17. தென்முனி புகலு கின்றார் செப்பினேம் அந்த வார்த்தை
கன்னியோன் பரிதி லாபம் காரியும் புக்கும் பத்தில்
சந்திரன் ஜன்மம் தங்கச் சத்தியு மொன்றே தீர்க்கம்
அன்னவள் குடும்ப லைச்சல் அவள்மாமி உடனே சேதம்.

17. அகஸ்திய முனிவர் கூறுகின்றார். கன்னிக்குரிய புதன் சூரியனுடன கூடி லாபஸ்தானமாகிய மேஷத்தில் இருப்பதாலும், சனி பசதாமிடமாகிய மீனத்தில் சுக்கிரனுடன் இருப்பதாலும், சந்திரன் ஜன்மலக்கினமாகிய மிதுனத்தில் இருப்பதாலும், மனைவி உருத்தியே நீண்ட ஆயுளுள்ளவளாக இருப்பாள். அவள் குடும்பத்தில் துன்பமேற்படும். அவளுடைய மாமி உடனே இறந்துவிடுவாள்.

18 இதுவின்றித் தீர்க்க சீவி இயம்புவோம் புத்திர பாவம்
சதமுடன் ஆண்பால் மூன்று சத்திமார் இரண்டு என்றேம்
அதுவைந்தும் தீர்க்க மெய்தும் அச்சுதர் யோக வான்கள்
நதிசடை அணிந்தோன் தேவி நவிலுவோம் உத்தர பாகம்.

18. இதுவல்லாமல், நீண்ட ஆயுளுள்ளவளாக இருப்பாள். புத்திர பாவத்தைச் சொல்லுகிறேம். மூன்று புதல்வர்களும் இரு புதல்விகளும் உண்டு. இந்த ஐவரும் தீர்க்க ஜீவிகள். புத்திரர்கள் யோகவான்கள். கங்கையைச் சடைமுடியில் தரித்தவனின் தேவியே! மற்றவற்றை அடுத்த பாகத்தில் கூறுகின்றேம்.

19. பாலகன் அன்னை சேதி பகருவோ மினி மேலாகச்
சீலியாம் பொறுமை சாலி திகைத்தோர்க்கு அன்ன மீவள்
ஞாலமேல் நல்லோ ளாவள் நாதனுர் பக்தி பூண்பள்
ஆலம்போல் க்ஷயரோ கங்கள் அணுகிடும் என்று சொல்வோம்.

19. ஜாதகனுடைய தாயின் செய்திகளை இனிக் கூறுகின்றேம். நல்லொழுக்கமுள்ளவள். பொறுமைசாலி. கஷ்டப்படும் ஏழைகட்கு அன்னமளிப்பாள். உலகுக்கு நல்லவள். சிவபெருமான்மீது பக்தி கொள்ளுவாள். கொடிய விஷம் போல் க்ஷயரோகங்கள் ஏற்படும் என்று சொல்லுவோம்.

20. தன்துணை ஆண்பால் மூன்று சத்தியு மொன்று என்றேம்
பின்னமா மற்ற வெல்லாம் பேசுமாண் வேறுய்ச் செல்வர்
தென்திசை இல்ல மாகும் செப்புவோ மன்னை பூர்வம்
கன்னியா குமரி தன்னில் கலந்தனள் ரெட்டி வம்சம்.

20. அவளுக்கு உடன் பிறந்தவர்களில் மூன்று சகோதரர்களும் ஒரு சகோதரியும் உண்டு என்றேம். மற்றவர்கள் இறந்துவிடுவார். சகோதரன் தனித்துச் சென்றுவிடுவான். தெற்குத் திசையில் வீடு உள்ளது. தாயின் முற்பிறவியைக் கூறுகின்றேம். கன்னியாகுமரியில் ரெட்டியார் மரபில் தோன்றினள்.

21. சுகமுள குடும்பி யாகித் துறவோர்க்கு அன்ன மீந்து
இகபரன் பக்தி யாகி எகினள் கால னூடு
சகபதி வரையப் பட்டு ஜனித்தன ளிவளே என்றேம்
மிகுதவம் புரிய மெங்கள் வித்தகி கேட்டி டாயே.

21. சுகமுள்ள குடும்பியாகி, துறவிகளுக்கு அன்னமளித்து, சிவபெருமான்மீது பக்தி பூண்டு இறந்தாள். உலகத்துக்கு அதிபதியாகிய பிரம்மாவினுல் மீண்டும் படைக்கப்பட்டுப் பிறந்தவள், ஜாதகனின் தாய், என்று கூறியுள்ளோம். மிகுந்த தவங்கள் இயற்றும் தாயே ! கேட்டிடுவாய்.

22. மறுஜன்மம் கலிங்க நாட்டில் மாதுவும் வைச்யச் சேயாய்
உறைகுவா ளென்று சொல்வோம் ஒருபது ஏழு ஆண்டில்
மரலியின் பதிக்குச் செல்வள் வரைந்தது தப்பா தாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

22. மறு பிறவி கலிங்க நாட்டில், வைசிய குலத்தவளாகப் பிறப்பாள், என்று சொல்லுவோம். பதினேழாம் வயதில் இறந்துவிடுவாள். நாங்கள் கூறியவை தவரு. வேதங்களின் முடிவில் நடனமாடும் அம்பிகையே ! கேளுங்கள்.

23. தந்தையின் பூர்வம் தன்னைத் தான்பலன் பகரக் கேண்மோ
முந்துமால் பலியி லேதான் உதித்தனன் இக்கு லத்தில்
தன்மனே மதலே உண்டாய்த் தரணியில் ஜீவித தேதான
அன்னவன் வாழு நாளில் அறைகிறோ மூழி தானும்.

23. ஜாதகனுடைய தந்தையின் முற் பிறவியின் பலனைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். மஹாபலிபுரத்தில் இதே குலத்தில் பிறந்து, மனைவி மக்களைப் பெற்று, உலகில் ஜீவித்துவரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

**ஏழைகட்குக் கடன் கொடுத்து விளைநிலங்களை அபஹரித்தது : சாபம்.**

24. பஞ்சையர் ஏழை யோர்க்குப் பலநாளாய்ப் பொருளை ஈந்து
தஞ்சமாய் முரியும் வாங்கிச் சகராசர் தன்பால் சென்று
மிஞ்சிய முரியும் காட்டி விளைபுலம் யாவும் கொண்டான்
நஞ்சுபோல் மனத்த ளுகி நவிலுவார் சாபம் தானும்.

24. கஷ்டப்படும் ஏழைகளுக்குப் பலநாட்களாகப் பொருள்களைக் கொடுத்து, அதற்கு ஈடாக பத்திரத்தை வாங்கிக்கொண்டு, நியாயாதிபதியிடம் சென்று, பத்திரத்தைக் காட்டி, ஏழைகளுடைய விளை நிலங்கள் முழுவதையும் கட்டிக்கொண்டான். ஏழைகள் மனம் வருந்திச் சாபமிடுகின்றனர்.

25. உயிரதைப் பறித்த பாவி உடன்ஜன்மம் துணைவ ரின்றி
வியமுடன் தாரம் ரண்டு மேவிடும் சுதர லேச்சல்
பயமுடன் சொல்லிச் சென்ருர் பற்றிற்று அந்தச் சாபம்
நயமுடன் மறையோ ருக்கு நற்றெண்டு புரிந்து இன்னேன் ;

25. எங்களுடைய உயிராகிய நிலங்களைப் பரித்துக்கொண்ட பாவியே ! உனக்கு மறு பிறவியில் சகோதரர்களில்லாமல், இரு மனைவிகளை யடைந்து, புத்திரர்களுக்கும் தோஷமுண்டாகி வாழ்வாய், என்று சொல்லிவிட்டுச் சென்றனர். அநதச் சாபம் ஜாதகனின் தந்தைக்கு ஏற்பட்டது. பிறகு அந்தணர்களுக்குத் தொண்டு செய்து, இவன் ;

26. தேவதாப் பணியும் செய்து தேறினோர்க் கனன மீந்து
பாவத்தை விலக்கும் சேது பதிக்குமே சென்று இன்னோன்
நாவினன் கால னோடு சதுர்முகன் வரையப் பட்டு
ஆவலா யிக்கு லத்தில் அனுகினு னிவனே என்றோம்.

26. தெய்வத்துக்குத் தொண்டுகள் செய்து, பெரியோர்களுக்கு அன்ன மளித்து, பாவத்தை நீக்கும் சேதுவுக்குச் சென்று, இவன் இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இக் குலத்தில் பிறந்தான் என்று சொல்லுகின்றோம்.

27. கனமிலா ஏழைச் சாபம் கலந்திடு மிச்சென் மத்தில்
வனிதைய ிருவ ராகும் அவன்துணை தோஷ மெய்தும்
கனமுள குடும்ப மெவ்வாறு கலந்தகா ரணங்கள் சொல்வாய்
வினை நீக்கும் சேதுச் சென்று மேலோர்க்கு அன்ன மீந்து ;

27. ஏழைகளின் சாபம் இப் பிறவியில் ஏற்பட்டது. இரு மனைவி மார்கள் வருவார்கள். அவனுக்குச் சகோதர தோஷமேற்படும். பெரிய குடும்பம் எப்படி வந்தது என்று சொல்லுங்கள். பாபங்களைப் போக்கும் சேதுவுக்குச் சென்று நீராடியதாலும், பெரியோருக்கு அன்னமளித்து வந்த தாலும் ;

28. திருப்பணி செய்த புண்ணியம் திருமகள் வாச மெய்தும்
ஆறஞ்சு மூன்று ஆண்டில் அந்தகன் பக்கல் சேர்வன்
மறுஜன்மம் கோகர் ணத்தில் வருகுவான் ரெட்டி வம்சம்
பெருமையும் புகழு மேற்பன் புண்ணிய சாலி கேளாய்.

28. ஆலயத்திருப்பணி செய்து வந்ததாலும், இவனுக்கு லட்சுமீ கடாட்சம் ஏற்படும். ஜாதகனுடைய முப்பத்துமூன்றும் வயதில் இறந்து விடுவான். மறு பிறப்பு, திருக்கோகர்ணத்தில், ரெட்டியார் மரபில் தோன்று வான். பெருமையும் கீர்த்தியும் அடைந்து புண்ணியவானாக இருப்பான்.

29. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் தக்கோ லத்தில்
மேதினில் சிறுஊர் மேல்பால் விளங்கினன் வன்னியச் சேயாய்ப்
போதன முடைய னாகிப் புகழான குடும்பம் பெற்றுக்
காதலன் வாழு நாளில் கழருவோ மூழி தானும்.

29. ஜாதகனுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றோம். தக்கோலத்திற் கருகில் உள்ள ஒரு சிற்றூரில், வன்னிய குலத்தவனாகப் பிறந்து, பெரிய தனவானாகவும் கீர்த்தியுள்ள குடும்பமுள்ளவனாகவும் இருந்துவந்த நாட்களில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

**பலவந்தமாய்ப் புணர்ந்த அந்தப்பெண்ணின் சாபம்.**

30. வேதத்தோன் மாது போகம் வேண்டியே பலவந் தத்தால்
தீதான போகம் துய்த்தான் செப்புவா ளந்த மாது
மேதினில் பின்ஜன் மத்தில் மேவிடும் அன்னை ரண்டு
காதலன் துணைஆ ணின்றிக் காசினில் தன்னில் வாழ்வாய்.

30. அந்தண குலப் பெண்மீது மையல் கொண்டு, அவளுடன் பலவந்தமாக இன்பம் அநுபவித்தான். அந்தப் பெண் சாபமிடுகின்றாள். உனக்கு ஏற்படும் மறு பிறவியில், நீ இரு தாய்மார்களை உடையவனாகி, சகோதரனில்லாமல் தனித்து வாழ்ந்திருப்பாய்.

31. இன்னமும் பலவாறு சொன்னுள் இவனுமே அந்தி யத்தில்
அன்னங்கள் மறையோர்க் கீந்து அவன்திருப பணியும் செய்து
தென்திசை கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
மன்னவ னுதிப்பா னுகும் வறைகிறேம் இவனின் யோகம்.

31. என்றும், இன்னும் பலவிதமாகக் கூறினுள். இவன் தன் கடைசிக் காலத்தில் அந்தணர்களுக்கு அன்னமளித்து, தெய்வத்திருப்பணியும் செய்து, பிறகு இறந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு, இப்பிறவியில் பிறந்தான் என்று சொல்லுகின்றேம். இவனுடைய யோகத்தைக் கூறுவோம்.

32. ஜனித்தநாள் முதலா மாகச் செல்வங்கள் குறைவு ருதான்
கனதனம் பெருக்க முண்டு காவலன் மரண மட்டும்
சினமிலா வாழ்வா னுகும் செட்டுக்கள் செய்வா னுகும்
அனையவே காலம் சொல்வாய் ஐந்துஒன் றுண்டின் மேலே ;

32. ஜாதகன், பிறந்த நாள் முதல் செல்வங்கள் குறைவில்லாதவன். பெரும் தனம் உண்டாகும். ஜாதகன் இறக்கும் வரையில் துன்ப மில்லாமல் வாழ்ந்து வருவான். வர்த்தகம் செய்வான். ஜாதகன் வர்த்தகம் செய்யும் காலம் சொல்லுவோம். ஜாதகனுடைய ஆறும் வயதுக்குமேல் ;

33. ஒருவனே உறவு செய்து உத்தமன் வணிபம் செய்வன்
பொருளது இவனுல் தந்து பிரபலச் செட்டுச் செய்வன்
ஆறுறு ஆண்டு மட்டும் அறைந்தனம் வணிப லாபம்
தரையது பெருகக் மெய்தித் தானவன் ஜீவிப் பானும்.

33. வேறெருவனுடன் கூட்டு வியாபாரம் செய்து வருவான். பொருள் கடனுகக் கொடுத்து, பிரபலமான வர்த்தகம் செய்வான். முப்பத் தாறும் வயது வரையில் வர்த்தகத்தில் லாபம் ஏற்படும். விளை நிலம் பெருகும். அதனுலும் ஜீவித்து வருவான்.

34. அன்பது எழு ஆண்டில் அணுகிடும் மகர மாதம்
இன்னவ னுடலம் ஏகும் இயம்புவோ மிவன்பின் ஜன்மம்
உன்னத விதர்ப்ப நாட்டில் உயர்மறைக் குலமு திப்பான்
அன்னையே யாங்கள் சொல்லு மருள்மொழி குன்று தென்றேம்.

34. ஜாதகன், தன் ஐம்பத்தேழாம் வயதில் தை மாதத்தில் இறந்து விடுவான். இவனுடைய மறு பிறவியில் விதர்ப்பதேசத்தில், உயர்ந்த அந்தண குலத்தவனுகப் பிறப்பான். தாயே! நாங்கள் கூறும் வார்த்தைகள் தவரு.

35. அன்னவன் உதிக்கும் காலம் ஆதிரை கடையாம் பாதம்
துன்ராகு தசை இருப்புச் செப்புவோம் திங்கள் ரண்டும்
பொன்தசை அதன் மேலாகப் போற்றுவோம் பலனே யாங்கள்
முன்பாகம் விபரம் சொன்னேம் முதல்வியே கேட்டி டாயே.

35. ஜாதகனின் ஜனன காலத்தில் திருவாதிரை நட்சத்திரம் கடைசி பாதம். ராகு மகாதசையில் இருப்பு இரண்டு மாதங்களாம். அதற்குப் பிறகு குரு மகாதசை. முதல் பாகத்தில் விபரத்தைச் சொல்லியுள்ளோம். தேவியே! கேட்டிடுவாய்.

## ஜாதகம் 23

1. சந்திரன் கன்னி யாகச் சனிசீயம் கேது தேளில்
புந்திசேய்க் கடக மாகப் புகர்ரவி மீனை யாக
மந்திரி சாடி யாக அரவுமே நந்தி யாக
இந்தவாறு கிரகம் நின்று இலக்கினம் மிதுன மாக ;

1. சந்திரன் கன்னியிலும், சனி சிம்மத்திலும், கேது விருச்சிகத்திலும், புதன் செவ்வாய் கடகத்திலும், சுக்கிரன் சூரியன் மிதுனத்திலும், குரு கும்பத்திலும், ராகு விருஷபத்திலுமாக கிரகங்கள் இருந்து, மிதுனம் ஜன்ம லக்கினமாகவும் இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | இலக்கினம் சுக்கிரன் சூரியன் |
| குரு | இராசி சக்கரம் | | புதன் செவ்வாய் |
| | | | சனி |
| | கேது | | சந்திரன் |

2. பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
குலவிய பிருகு சொல்வார் குறித்தது ஆண்பா லாகும்
தலமது வடதென் வீதி சாற்றுவோம் கிழக்கு வாசல்
அலைகடல் துயின்றோன் உத்தரம் அரன்கோஷ்டம் கீழ்ப்பா லாகும்.

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும்போது, பிருகு முனிவர் கூறுகின்றார். இஃது ஆண்மகனின் ஜாதகம். அவன் பிறந்த வீடு வடக்குத் தெற்கு வீதியில், கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. பாற் கடலில் துயில் கொண்டுள்ள திருமால் வடக்கிலும், சிவபெருமான் கிழக்கிலும் கோயில் கொண்டுள்ளனர்.

3. அருகினில் அம்மன் தங்கும் அதுவலால் தெற்கில் காளி
பெருகிய நதியு முண்டு பேசுவோ மடமு முண்டு
தருவுண்டு சிற்றூர் தன்னில் ஜாதகன் வாச மாகும்
அரிமதம் பறவை கோத்திரம் அருளுவோ மிந்தப் பாலன்.

3. பக்கத்தில் அம்மன் கோயிலும், அதற்குத் தெற்கில் காளி கோயிலும், ஓர் ஆறும் உள்ளன. ஒரு மடமும் இருக்கும். சோலைகள் உள்ள சிற்றூரில் ஜாதகன் வசித்து வருவான். விஷ்ணு மதம். செங்குந்த வமிசத்தில் பிறந்தவன், இந்த ஜாதகன்.

4. பாலகன் ஜனனம் யோகம் பருகிய அன்னை யோகம்
சாலவே தந்தை யோகம் சகோதர களத்திர புத்திரர்
ஞாலமே லவர்கள் யோகம் நவிலுவோம் முன்பின் ஜன்மம்
ஏலவே நவக்கோ ளாய்ந்து இயம்புவோ மிந்நூல் தன்னில்.

4. ஜாதகனுடைய பிறப்பு, யோகம், தாயினுடைய யோகம், தந்தை சகோதரர்கள் மனைவி மக்கள் முதலியவர்களுடைய யோகம், முற்பிறவி, மறுபிறவி ஆகிய இவைகளையும், நவக்கிரக நிலையை ஆராய்ந்து பார்த்து, இந்த நூலில் கூறுகின்றோம்.

5. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றஆண் பலத்தைக் காணோம்
எந்தையே கன்னி ஒன்று இயம்புவோம் தீர்க்க மாகச்
சந்ததம் பிதாகு ணத்தைச் சாற்றுவோம் இருநி றத்தான்
முந்திய சமதே கத்தான் முயற்சியால் குடும்பி யாவன்.

5. ஜாதகனுடைய தந்தையின் வர்க்கத்தாரைப்பற்றிச் சொல்லுங்கால், சகோதரபல மில்லை. தாயே! சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளுடன் இருப்பாள். தந்தையின் குணங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவன். சமமான சரீர அமைபபுள்ளவன். சுய முயற்சியால் ஜீவித்து வருவான்.

6. வாண்டிவா கனமு முள்ளான் அடிமைக ளுடைய னாகும்
குண்டைகோ விருத்தி உள்ளான் குலமதில் குற்ற முள்ளான்
எண்டிசைக் கீர்த்தி கொள்வன் ஈகையும் கொஞ்ச முள்ளான்
தண்டமிழ் உடைய னாகும் சரசமாய்ப் பேசு வானும்.

6. வண்டி முதலிய வாகன வசதியுள்ளவன். ஏவலாட்கள் உடையவன். பசு, எருது முதலியவற்றின் விருத்தியுள்ளவன். குலத்தில் தோஷமுடையவன். எட்டுத்திக்குகளிலும் புகழ் அடைவான். சிறிது கொடையாளி (கொடுக்கும் குணம் உள்ளவன்). தமிழ்ப் பாஷையை நன்கறிந்தவன். சரஸமாகப் பேசுவான்.

7. பூமியும் விசேஷ முள்ளான் போசன சுகிய னாகும்
தீமைக ளெண்ணாச் சித்தன் சிறுத்தவர்க் குதவி செய்வன்
மாமன்னர் மெச்ச வாழ்வன் மாற்றலர் தமை ஜயிப்பன்
நேமமாய்க் கிராமச் செட்டு நிகழ்த்துவான் என்று சொன்னோம்.

7. விசேஷ பூமிகளை யடைந்து, சாப்பாட்டுச் சௌக்கியங்களைப் பெற்று வாழ்வான். தீங்குகள் நினையாத மனத்தன். கஷ்டப்படுபவர்களுக்கு உபகாரி. பெரிய அரசர் (அரசாங்கத்தார்) கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். விரோதிகளை வெல்லுவான். நியாயமான கிராம வியாபாரம் செய்து வருவான் என்று கூறுகின்றோம்.

8. இன்னவன் செங்கை தன்னில் இலகிடும் விஷ்ணு ரேகை
தன்னிலே கமல ரேகை தங்கிடும் இவனுக் கேதான்
அன்னவன் வறுமை யில்லான் அதிகார முடைய னாகும்
மன்னிய நான்கு கர்மம் மைந்தனும் செய்வா னென்றோம்.

8. ஜாதகனுடைய தந்தையின் கையில் விஷ்ணுரேகையும் கமலரேகை யும் இருக்கும். தரித்திரம் இல்லாதவன். அதிகாரங்களுடையவன். நான்கு பேருக்கு இறுதிக் கடன் செய்வான் என்று சொல்லுகின்றோம்.

9. முனிவரிவ் விதமாய்க் கூற மொழிகுவா ளம்மன் தாமும்
தநயனும் நாலு கர்மம் செய்வனு மென்று சொன்னீர்
அனையவே விபரம் சொல்வாய் அறிவிப்போம் தந்தை தாயர்
வினையிலாச் சிறிய தந்தை மெல்லியாள் நான்கு என்றோம்.

9. இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பார்வதி வினவலானாள். இவன் நான்கு கருமங்கள் செய்வான் என்று கூறினீர்களே. அதற்கு விபரம் சொல்லுங்கள், என, முனிவர்கள் கூறுகின்றனர். தந்தை, தாய், சிறிய தந்தை, சிறிய தாய் இவர்கள் நால்வருக்கும் இவன் கர்மம் செய்வான் என்றோம்.

10. அந்ததோர் சிறிய தந்தை அவன்பலன் கூறக் கேளாய்
சிந்தையில் மர்ம மில்லான் தீரனும் இருநி றத்தான்
வந்தவர்க் கன்ன மீவன் மாநிலம் அதிகம் சேர்ப்பன்
தன்தன முடைய னாகும் சரசமாய்ப் பேச வல்லான்.

10. (ஜாதகனுடைய தந்தையின்) சிறிய தந்தையினுடைய பலன்களைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். மனத்தில் இரகசிய மில்லாதவன். தைரிய முள்ளவன். கருமை கலந்த சிவந்த மேனியன். தன்னை வந்து அன்னம் யாசிப்பவர்கட்கு அன்னமளிப்பவன். அதிகமான விளை நிலங்களைச் சேர்ப்பான். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருளுடையவன். சரஸமாகப் பேசுபவன்.

11. அதிகார முடைய னாகும் அவனியில் கீர்த்தி ஏற்பன்
நதிபல தீர்த்தம் தோய்வன் நராதிபர் மெச்ச வாழ்வன்
துதிசெய்தோர் தம்மைக் காப்பான் தோகைய ரிரண்டு மாகும்
ததிநெய்பா லிஷ்டம் கொள்வன் சந்ததி இல்லா னாகும்.

11. அதிகாரமுடையவன். உலகத்தில் புகழுடைவான். பற்பல புண் ணிய நதிகளிலும் தீர்த்தங்களிலும் நீராடுவான். அரசர் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். தன்னைத் தோத்திரம் செய்தவரை ஆதரிப்பான். இரு மனைவியராவர். தயிர் நெய் பால் இவைகளில் பிரியமுள்ளவன். புத்திர பாக்கிய மில்லாதவன்.

12. துணைவியா லவமா னத்தான் செய்குவான் சித்திர இல்லம்
அணையவே முதல்மா துக்கு அணுகாது மதலை தானும்
வினையாக அபிமா னப்பெண் மேதினில் கொள்வா னாகும்
சினமிலா அவட்குப் பெண்பால் செப்புவோ மிரண்டு மாக.

12. தன் மனைவியால் அவமானங்கள் அடைவான். அழகிய வீடு கட்டு வான். முதல் மனைவிக்குக் குழந்தைகள் பிறவா. வேறு ஒருத்தியை அபிமான மனைவியாகக் கொள்ளுவான். அந்தப் பெண்ணுக்கு இரு புத்திரி கள் தோன்றுவர்.

13. ஆண்மகன் காணு னாகும் அவர்களும் ஒன்றாய் வாழ்வர்
காணஅம் மூவ ராகும் கர்மங்கள் இவனே செய்வன்
பூணுவோ மைந்து கர்மம் புண்ணியன் செய்வா னாகும்
வேணுகோ பாலன் தங்கை வித்தகி மேலும் கேளே.

13. அவளுக்குப் புத்திரர்கள் பிறவார். ஆனால் இரு மனைவியரும் ஒன்றாகவே வாழ்ந்து வருவார்கள். அந்த மூவருக்கும் இறுதிச் சடங்குகள் ஜாதகனின் தந்தையே செய்வான். ஆக ஐந்து சடங்குகள் இவன் செய்வான். கிருஷ்ணபரமாத்மாவின் தங்கையே! மேலும் கேளுங்கள்.

14. சொன்னஇக் குணத்தா னுக்குச் சுந்தரன் சேஷ்ட னாகத்
தன்னிலே உதிப்பா னாகும் சாற்றுவோ மவன்கு ணத்தைக்
கன்னல்போல் மொழியு முள்ளான் காமனை ஒத்த தேகன்
அன்னிய னுறவு கொள்வன் அசிங்கிய வார்த்தை சொல்வன.

14. இங்ஙனம் கூறப்பட்ட தந்தைக்கு, ஜாதகன் மூத்த புதல்வனாகப் பிறப்பான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். இனிமையாகப் பேசுபவன். மன்மதனைப்போல் அழகிய சரீரமுள்ளவன். அன்னியருடன் நட்புக் கொள்ளுவான். அசிங்கமான வார்த்தைகள் சொல்லுவான்.

15. உயரமும் சமம தாகும் உண்டியும் சிறிதே உண்பன்
பயமுள மனத்த னாகும் பாவையர் மோக வானும்
வயமுள உஷ்ண தேகி மாநிலம் விருத்தி செய்வன்
தயையுள மனத்த னாகும் தன்கரம் கோதுமை ரேகை.

15. சமமான உயரமும், சிறிதே சாப்பிடும் இயல்பும் உள்ளவன். பயந்த மனமுள்ளவன். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். சூட்டுத் தேகமுடையவன். விளை நிலங்களைப் பெருக்குவான். தயையுள்ள மனமுள்ளவன். கையில் கோதுமைரேகை உள்ளவன்.

16. தீரமா மனத்த னாகும் தேகமே உளைச்ச லுள்ளான்
கூறின மொழிதப் பாதான் குஞ்சர நடையு மாவன்
பாரியை நேசம் கொள்வன் பணிகளு மதிகம் சேர்ப்பன்
கோரின காரி யத்தைக் குணமுடன் முடிக்க வல்லன்.

16. தைரியமுள்ள மனத்தன். மெல்லிய சரீரமுடையவன். சொன்ன சொல் தவறாதவன். யானை போல் கம்பீரமாக நடப்பவன். மனைவிமீது விருப்பங்கொள்ளுவான். ஆபரணங்களை அதிகமாகச் சேர்ப்பான். எடுத்தக் காரியத்தை வெற்றியுடன் முடிக்கக் கூடியவன்.

17. வித்தையும் கொஞ்ச முள்ளான் வீணப வாதம் கொள்ளான்
உத்தம னாகி வாழ்வன் உயர்வான குடும்பி யாவன்
சுத்தத்தார் மெச்ச வாழ்வன் சுகமுளான் வறுமை யில்லான்
நத்தின பேரைக் காப்பன் நாயகி மேலும் கேளே.

17. சிறிதே கல்வியறிவுடையவன். வீண் பழிகள் இல்லாதவன். நல்லவனுக வாழ்ந்திருப்பான். உயர்ந்த குடும்பமுள்ளவன். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். சுகமுள்ளவன். தரித்திரம் இல்லாதவன். தன்னை வந்தடைந்தவர்களைக் காப்பாற்றுவான். தாயே! மேலும் கேளுங்கள்.

18. பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்
குண்டுணி கலகம் கூருன் குவலயம் சல்லியம் கொள்ளான்
தன்பொருள் விருத்தி செய்வன் தானியச் செட்டு முள்ளான்
அண்டர்கள் பூசை செய்வன் ஆவுகள் விருத்தி உள்ளான்.

18. ஆதிகால நிலங்களை (பிதுரார்ஜிதமான நிலங்களை)ப் பெருக்குவான். கோள்மூட்டுதல், கலகம் முதலியன செய்யாதவன். உலகத்தில் கடன் தொல்லை இல்லாதவன். தன் ஆஸ்தியை விருத்தி செய்வான். தானிய வர்த்தகம் செய்து வருவான். தெய்வ பூசை செய்வான். பசுக்கள் விருத்தியுண்டு.

19. ரோமங்கள் நீட்சி உள்ளான் நவிலுப தேசம் கொள்வன்
பூமியில் கிருஷி உள்ளான் பிதாவிற்கு மேலாய் வாழ்வன்
தாமத குணத்தா னுகும் சத்துரு வணக்கம் செய்வன்
தீமையாய்ப் பித்த சூடு செறிந்திடு மிவனுக்கே தான்.

19. நீண்ட ரோமங்களுள்ளவன். பெரியோர்களிடமிருந்து உபதேசம் பெறுவான். விவசாயம் செய்து வருவான். தன் தந்தைக்குமேல் மேன்மையாக வாழ்ந்து வருவான். தாமதமாகக் காரியங்கள் செய்யும் இயல்பினன். சத்துருவை வணங்கும்படி செய்வான். பித்தச்சூட்டு நோயுள்ளவன்.

20. வாகன முடைய னுவன் மன்னர்கள் நேசம் கொள்வன்
ஈகையு முடைய னுவன் இனபந்து மேலாய் வாழ்வன்
பாகமாய்த் துணைவர் தம்மைப் பகருவோம் ஐவ ராகும்
தோகையே பெண்பா லொன்று தீர்க்கமா மிவனுக் கேதான்.

20. வாகன வசதிகள் உள்ளவன். அரசர்களிடம் நட்புக்கொள்ளுவான். கொடையாளி. தன் பந்துஜனங்களுக்கு மேலாக வாழ்ந்திருப்பான். இவனுடைய சகோதரர்கள் ஐவர் என்று கூறுகிறோம். ஒரு சகோதரி நீண்ட ஆயுளுடனிருப்பாள் என்று சொல்லுவோம்.

சகோதரதோஷ க்ரக நிலை.

21. அந்ததோர் துணைவி தானும் அந்திய மாதே யாகும்
வந்தவர் பின்னல் நான்கும் வளமிலா நஷ்ட மெய்தும்
இந்தவாறு துணைவர் சேத மிசைந்தகா ரணங்க ளென்ன
மைந்தனும் மூன்றில் நிற்க மார்த்தாண்டன் ஜன்மம் புக்க;

21. அத்தச் சகோதரி கடைசிப் பெண்ணுவாள். ஜாதகனுக்குப் பின் பிறந்த சகோதரர்கள் நால்வர் மரித்துவிடுவார். இப்படிச் சகோதர தோஷம் ஏற்படக் காரணங்களென்ன? சனி மூன்றுமிடத்தில் இருப்பதாலும், சூரியன் ஜன்மத்தில் இருப்பதாலும்;

22. மங்கலன் நீச்ச மாக வரைந்தனம் துணேவர் தோஷம்
இங்கிவன் முனசெய் பாவ மிசைந்ததால் துணேவர் தோஷம்
சங்கையைச் சொல்லு மென்ன ஜாதகன் முன்ஜன் மத்தில்
துங்கமாம் காஞ்சி தன்னில் சுருதியன் குலமு தித்து ;

22. செவ்வாய் கடகத்தில் நீசமாக இருப்பதாலும் உடன் பிறந்தவர்கட்குத் தோஷமேற்படும் என்று சொன்னேம். இது தவிர, முற்பிறப்புத் தீவினையாலும் தோஷம் ஏற்பட்டது. அத்தோஷம் என்ன ? இந்த ஜாதகன் முற்பிறவியில் உயர்ந்த காஞ்சிபுரத்தில், வேதமோதும் அந்தணர் குலத்தில் பிறந்து ;

23. மனேவிமைந் தரு முண்டாகி வளமுள குடும்பி யாகிக்
கனமுள அரசர் பக்கல் காவலன் சீவித் தேதான்
தனயனும் வாழு நாளில் செய்தவூழ் தலையே கேளாய்
வனிதையும் கங்கை மாது வரனின்றித் தாயில் லத்தில்.

23. மனேவி மக்களே யடைந்து, செழிப்புள்ள குடும்பமேற்பட்டு, அரசாங்க உத்தியோகம் ஏற்று, ஜீவித்து வந்த காலத்தில் செய்த தீச்செயலேக் கேளுங்கள். ஒரு வேளாள குலப்பெண் மணமாகாமல் தன் தாயின் வீட்டில் வசித்து வந்தாள்.

**லஞ்சம் பெற்றுத் தீர்ப்புச் சொன்ன தோஷம்.**

24. இருந்துமே வாழு நாளில் இவன்பந்து அவள்மேல் குற்றம்
பொருத்தியே இவன்பால் சொல்லப் பொருளது அவரால் பெற்று
விரைவினில் மாது பேரில் வித்தகன் தோஷம் சொன்னுன்
திருமக ளொத்த மாது செப்புவாள் மனவெ றுப்பால்.

24. வசித்து வந்தபொழுது, அவளுடைய உறவினர் அப்பெண்ணின் மீது குற்றம் சொல்ல, அவள் ஜாதகனிடம் வந்து முறையிட்டாள். ஜாதகன் மற்றவரிடமிருந்து பொருளேப் பெற்றுக்கொண்டு, இந்தப் பெண் மீதே தோஷம் சொன்னுன். இலக்குமியை ஒத்த அந்தப் பெண், மன வெறுப்படைந்து கூறுகின்ருள்.

25. பெண்பழி சொன்ன பாவி பிறந்திடும் மறுஜன் மத்தில்
அண்ணன்தம் பிகளு மின்றி அம்புவி தன்னில் வாழ்வாய்
திண்ணமாய்ச் சொல்லி யேதான் சலத்தினில் மாண்டா ளென்
கண்ணன்தன் தங்கை யாளே காதலி சொன்ன சாபம் ; [ரேம்

25. பெண்மீது வீண் அபவாதம் சொன்ன பாவியே ! உனக்கு ஏற்படும் அடுத்த பிறவியில், நீ அண்ணன் தம்பிகள் இல்லாமல், உலகில் வாழ்ந்திருப்பாய், என்று நிச்சயத்துடன் சொல்லி, ஜலத்தில் வீழ்ந்து உயிர் துறந்தாள். கிருஷ்ண பரமாத்மாவின் தங்கையே ! அந்தப் பெண் இட்ட சாபம் ;

26. இவனேயே பற்றி யேதான் இலகிற்று அந்தி யத்தில்
பவமுள துணேவ ரின்றிப் பாலகன் மரண மெய்தி
நவனியில் இக்கு லத்தில் நாயகன் ஜனிப்பா னுகும்
தவசியே மங்கை சாபம் சார்ந்ததால் துணேவர் தோஷம்.

**26.** இவனைப் பற்றியது. இவனும் தன் கடைசிக் காலத்தில் உடன் பிறந்தவர்களற்று மரணமடைந்தான். மீண்டும் இக் குலத்தில் வந்து பிறந்தான். தாயே ! பெண்ணின் சாபத்தால் இவனுக்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது.

27. துணைவர்கள் விருத்தி யாகிச் சோர்ந்திடும் பெண்ணொ ருத்தி
அணையவே விருத்தி யாகும் அவனுக்கு மணத்தைச் சொல்வேன்
பிணையிலா ஒருபான் ரண்டில் பிருதிவி தலத்தி லேதான்
வனிதையும் வருவா ளாகும் வரைகிறோம் குணத்தை யாங்கள்.

27. உடன் பிறந்தவர்கள் பிறந்து வளர்ந்து இறப்பார்கள். சகோதரி ஒருத்தியே நிலைத்து இருப்பாள். அவனுக்கு (ஜாதகனுக்கு) மணமேற்படும் காலத்தைச் சொல்லுகின்றேன். அவனுடைய பன்னிரண்டாம் வயதில், காஞ்சிபுரத்திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம்.

28. மாநிறஞ் சமதே கத்தாள் மருமமில் லாதா ளாகும்
கூறுவா ளினிய வார்த்தை குலபந்து வாத ரிப்பள்
தானதர் மங்கள் செய்வள் தேகியென் றோர்க்கு அன்னம்
ஊனமில் லாத தேகி உண்மையா மனத்த ளென்றோம்.

28. மாநிறமுள்ளவள். சமமான உடலமைப்புள்ளவள். இரகசியமில்லாதவள். இனிய வார்த்தைகளையே பேசுபவள். தன் உறவினர்களை ஆதரிப்பாள். தான தருமங்கள் செய்வாள். அன்னங்கள் போடும் இயல்பினள். பின்னங்களில்லாத சரீரமுடையவள். உண்மையான மனத்தினள்.

29. சீலமும் யோக சாலி சிறுத்தவர்க் குதவி செய்வள்
ஞாலமேல் பெருமை உள்ளாள் நாயகன் மனம்போல் வாழ்வள்
பாலபாக்ய முடைய ளாகும் பஞ்சையை ஆத ரிப்பள்
ஆலத்தை உண்டோன் தேவி அறைகிறோம் மேலும் கேளே.

29. நல்லொழுக்கமுள்ளவள். யோகசாலி. துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. பூமியில் பெருமை உள்ளவள். தன் கணவன் மனம்போல வாழ்ந்து வருவாள். பால் பாக்கியமுள்ளவள். ஏழைகளைக் காப்பாற்றுவாள். விஷத்தை உண்டவனின் தேவியே ! நாங்கள் கூறுகிறோம். மேலுங் கேளுங்கள்.

30. சுதர்களும் ஆண்பால் ரண்டு தோகையு மவ்வா றுகும்
சதமாகும் நான்கும் தீர்க்கம் சீரணம் மூன்று என்றோம்
புதல்வர்கள் இவன்மே லாகப் பிரபல யோக மென்றோம்
நதிசடை அணிந்தோன் தேவி நங்கையே மேலும் கேளே.

30. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து, நீண்ட ஆயுளுடனிருப்பர். மூன்று குழந்தைகள் நஷ்டமாவர். புத்திரர்கள் இவனுக்கு மேலாக வாழ்ந்து, பிரபலமான யோகமுள்ளவர்களாக இருப்பார்கள். கங்கையைச் சடைமுடியில் தரித்தவனின் தேவியே ! மேலும் கேளுங்கள்.

31. அன்னையு மிருநி றத்தாள் அழகுளாள் பொறுமை சாலி
தன்வரன் மனம்போல் வாழ்வள் சகலசம் பத்து முள்ளாள்
இன்னவள் பொறுமை சாலி இடரான புத்தி இல்லாள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அன்புள மனத்த ளாமே.

31. ஜாதகனுடைய தாய் இருநிறமுடையவள். அழகுள்ளவள். பொறுமையுள்ளவள். தன் கணவன் மனம்போல வாழ்ந்து வருவாள். சகலவித சம்பத்துமுடையவள். பொறுமைசாலி. கெட்ட புத்தி இல்லாதவள். பிறர்மீது குற்றம் கூறுதவள். அன்புள்ள மனத்தினள்.

32. எப்போதும் பித்தச் சூடு இலகிடும் என்று சொன்னேம்
செப்புவோம் துணைவர் தம்மைத் தேவிமா ரிரண்டு என்றேம்
ஒப்புடன் ஆண்பா லொன்று உரைக்கிறேம் தீர்க்க மாக
மெய்ப்புடன் கீழ்பால் இல்லம் வறுமையாம் குடும்பி என்றேம்.

32. எப்பொழுதும் பித்தச்சூட்டு நோய் இருக்கும் என்று சொல்லுகின்றேம். இரு சகோதரிகள் உள்ளனர். ஒரு சகோதரனும் உண்டு என்று சொல்லுகின்றேம். அவளுடைய வீடு கிழக்குத் திசையில் உள்ளது. தரித்திரமான குடும்பமுள்ளவள் என்று கூறுகின்றேம்.

33. அவளுடைப் பூர்வம் தன்னை அறைகிறேம் காஞ்சி உத்தரம்
நவனியில் அருகில் சிற்றூர் நாயகி தீயின் வம்சம்
இவளுமே உதித்து மேலும் ஈன்றதோர் மதலை உண்டாய்
பவமுள குடும்பி யாகிப் பாவையும் சுகமாய் வாழ்ந்து ;

33. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். காஞ்சிபுரத்திற்கு வடக்கில் உள்ள சிற்றூரில், வன்னிய குலத்தவளாகப் பிறந்து, குழந்தைகளைப் பெற்று, செழிப்புள்ள குடும்பத்தவளாக இருந்து, சௌக்கியமுடன் வாழ்ந்து வந்து ;

34. அந்நகர் கணேசன் கோட்டம் அதற்கவள் தீபம் வைத்துத்
தண்மன முடைய ளாகித் தாகங்கள் வருவோர்க் கீந்து
தன்வரன் முன்னே மாண்டு தலைநான்கோன் வரையப் பட்டு
நன்மைசெங் குந்த வம்சம் நாயகி உதித்தா ளென்றேம்.

34. அவ்வூரிலுள்ள விநயகர் ஆலயத்தில் தீபம் வைத்து, குளிர்ந்த மனமுள்ளவளாக, தாகமுடன் வருபவர்களுக்குத் தண்ணீர் கொடுத்து, தன் கணவனுக்கு முன்பாகவே மாண்டு, நான்கு தலைகளையுடைய பிரம்மனால் படைக்கப்பட்டு, செங்குந்த வம்சத்தில் பிறந்தாள் என்றேம்.

35. முன்ஜன்ம தீப புண்யம் மொழிகின்றேம் சுகமே வுள்ளாள்
தன்சுத ராண்பா லொன்று தீர்க்கமாம் வறுமை யில்லாள்
பன்னிய பெண்பா லொன்று பகருவோந் தீர்க்க மென்று
இன்னவாறு முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்.

35. முற்பிறவியில் செய்த தீப கைங்கர்யத்தால் சௌக்கியமுள்ளவள். ஒரு புத்திரன் நீண்ட ஆயுளுடன் இருப்பான். தரித்திரமில்லாதவள். ஒரு பெண் பிறந்து, அவளும் தீர்க்கமாயிருப்பாள். இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பார்வதி கேட்கலானாள்.

36. எந்ததோர் ஜன்மந் தீர்க்கம் இயம்புவீர் முனியே நீர்தாம்
பின்வரும் பாகந் தன்னில் பேசுவோ மந்தச் சங்கை
அன்னையின் மறுஜன் மத்தை அறைகின்றேங் காஞ்சி தன்னில்
உன்னத சைவச் சேயாய் உதிப்பளா மென்று சொல்வோம்.

36. எந்தப் பிறவி தீர்க்கமாயிருக்கும். அதனைச் சொல்லுங்கள், முனிவரே! என்றான். பின்னால் வரும் பாகத்தில் விவரங்கள் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய தாயின் மறு பிறப்பைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்தில், சைவ குலத்தவளாகப் பிறப்பாள் என்று கூறுவோம்.

37. தந்தையின் பூர்வந் தன்னைச் சாற்றுவோம் ஒதூர் மேல்பால்
முந்திய பேரூர் தன்னில் உதித்தனன் தீயின் வம்சம்
தன்தன மதிக முண்டாய்த் தரணியில் கிருஷி செய்து
வந்தவர்க் கன்ன மீந்து மனைவிமைந் தருமுண் டாகி ;

37. தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். ஒதூருக்கு மேற்கிலுள்ள பெரிய ஊரில், வன்னிய குலத்தில் பிறந்தான். உலகில் விவசாயம் செய்து வந்து, தன்னால் ஈட்டப்பட்ட பொருளடைந்து, அண்டிவந்தவர்களுக்கு அன்னமளித்து, மனைவி மக்களைப்பெற்று ;

38. தேவதா பக்தி கொண்டுச் சேயனும் வாழு நாளில்
தாவியே வந்த வூழைச் சாற்றுவோங் கேளுந் தாயே
மேவிய வயலில் ஆடு மேய்ந்ததை யடித்தா னம்மா
பூவினில் இனத்துக் கெல்லாம் பெருதன முடைய னாகி ;

38. தெய்வபக்தியுடன் வாழ்ந்து வருங்கால், வந்தடைந்த தீவினையைச் சொல்லுகின்றோம். கேளுங்கள், தாயே ! தன்னுடைய வயலில் ஆடுகள் மேய்ந்ததைக் கண்டு அவைகளை அடித்தான். தன்னுடைய பந்துக்களுக்கெல்லாம் பெருதனமுடையவனாக இருந்து ;

39. இருந்துமே வொருபெண் பேரில் இயம்பினான் சிலவே குற்றம்
திருமக னதனைக் கேட்டுச் செல்விமேல் குற்றஞ் சாட்டி
மறுதேச மோட்டி விட்டார் மாதுவு மனவெ றுப்பால்
உரைத்தனள் மறுஜன் மத்தில் உன்குலங் குற்ற மாயும் ;

39. வந்த காலத்தில் ஒரு பெண்ணின் மீது சில குற்றங்களை (பழிகளை)க் கூறினான். ஜாதகனின் தந்தை அவைகளைக் கேட்டு இப்பெண்ணின்மீது அபவாதம் கூறி, வேறு தேசத்துக்கு அனுப்பிவிட்டான். அப் பெண்ணும் மனவருத்த மடைந்து கூறுகின்றாள் " இனி ஏற்படும் பிறவியில் உன் குலத்துக்கு இழுக்கு வந்தும் ;

40. ஆண்துணை யில்லா தாகி ஆறுகர் மங்கள் செய்து
காணவே வாழ்வா யென்று காதலி சொல்லிச் சென்றாள்
பூணுவோ மந்தத் தோடம் புக்கிற்று இவனுக் கேதான்
வேணுகோ பாலன் பத்தி வித்தகன் கொண்டு மேதான் ;

40. உடன்பிறந்தவர்களின்றியும் அறுவருக்கு ஈமக்கடன்கள் செய்தும் வாழ்ந்து வருவாயாக'' என்று சொல்லிவிட்டுச் சென்றாள். அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. கண்ணபிரானின்மீது இவன் பக்தி பூண்டு ;

41. மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டு
உறைந்தன னிக்கு லத்தில் உரைக்கின்றோ மிவன்பின் ஜன்மம்
விரைவினில் காஞ்சி தன்னில் வீரசெங் குந்த வம்சம்
உறைகுவன் தனமுண் டாகி வணிபமாஞ் செட்டுச் செய்வன் ;

41. இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இப்பிறவியில் வந்து பிறந்தான். அவனுடைய மறு பிறவியைக் கூறுகின்றோம். காஞ்சீபுரத்தில், செங்குந்த வமிசத்தவனாகப் பிறந்து, செல்வங்களை அடைந்து, வெகுகாலம் வர்த்தகம் செய்வான்.

42. முன்னமே வைந்து கர்மம் மொழிந்திட்டீர் முனியே நீர்தாம்
பின்னையும் வேறு கர்மம் பேசினீர் விபரஞ் சொல்வீர்
தந்தையின் துணைவிக் கேதான் சார்ந்திடு மென்று சொன்னோம்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

42. முதலில் ஐந்து கருமங்கள் செய்வான் என்றீர்களே, முனிவரே ! பின்னால் ஆறு கருமங்கள் என்று கூறுகிறீரே. அதன் விபரத்தைச் சொல்லுங்கள். தந்தையின் உடன் பிறந்தவளுக்கு ஏற்படும் என்று சொன்னோம். முருகப்பிரானைப் பெற்ற பார்வதியே ! சொன்ன சொற்கள் தவறா.

43. ஜாதகன் பொதுயோ கத்தைச் சாற்றுவோஞ் ஜனனந் தொட்டு
மேதினில் மரண மட்டும் வளர்பிறை போலே வோங்கும்
கோதிலாப் பாக்ய விருத்தி கோதையால் லாப மெய்தும்
தாதையால் சுகங்க ளெய்தும் சங்கரி மேலுங் கேளே.

43. ஜாதகனுடைய பொது யோக வரலாற்றைச் சொல்லுவோம். அவன் பிறந்தது முதல் இறப்பு வரையில் வளர்பிறைச் சந்திரன்போல் யோகம் விருத்தியாகும். தீமைகளில்லாப் பாக்கியங்கள் பெருகும். மனைவியால் லாபம் ஏற்படும். தன் தகப்பனாலும் சுகமேற்படும். சங்கரனின் தேவியே ! கேளுங்கள்.

44. அன்னிய ரார்ஜி தங்கள் அணுகிடு மதுவல் லாமல்
மன்னர்பால் செட்டுச் செய்வன் வருமபந்து வாத ரிப்பன்
பொன்னொடு பணிதி யுள்ளான் புகழ்ச்சியாய் வாழ்வா னாகும்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

44. பிறர் சம்பாதித்த பொருள்கள் வந்து சேர்ந்திடும். அதுவுமன்றி, அரசாங்கத்தார் உத்தரவுபெற்று வர்த்தகம் நடத்துவான். தன்னிடம் வரும் உறவினர்களை ஆதரிப்பான். பொன் ஆபரணங்கள் உள்ளவன். புகழுள்ள குடும்பத்தை யுடையவன். உயர்ந்த வரனை யடைந்த தேவியே ! கேளுங்கள்.

45. இருகமும் நான்கு மெய்தும் கேவல மாக வாழ்வன்
திருமகள் வாச மெய்தும் ஜனமெலாம் வசியங் கொள்வன்
திருப்பணி வேலை செய்வன் செட்டுக்க ளதிக மோங்கும்
அரனடி யார்க்கு நேயன் அம்பிகை யாளே கேளாய்.

45. நான்கு வீடுகள் கிடைக்கும். கேவலமாக (தனியாக) வாழ்ந்து வருவான். லட்சுமீகடாட்சம் உள்ளவன். ஜனங்களை வசீகரிக்க வல்லவன். ஆலயத்திருப்பணிகள் செய்வான். வர்த்தகங்கள் பெருகும். சிவனடியாருக்கு நண்பன். தாயே! கேளுங்கள்.

46. பதின்மூன்று வாண்டு மேலாய்ப் பார்மகன் தசையே தோன்றும்
நிதியது பூமி யாலே நேர்ந்திடு மிவனுக் கேதான்
அதுவிடஞ் சொல்லு மென்ன ஆவனில்லந் தெற்கி லேதான
புதிதான பூமி யாலே பொருந்திடு மென்று சொன்னோம்.

46. ஜாதகனுடைய பதின்மூன்றும் வயதுக்குமேல், செவ்வாய் மகா தசை வரும். அக்காலத்தில் பூமியிலிருந்து புதையல் இவனுக்குக் கிடைக்கும். புதையல் எவ்விடம் உள்ளது என்று வினவ, அவன் வீட்டுக்குத் தெற்கில் புதிய இடம் தோண்டும்போது கிடைக்கும்.

47. ஆறஞ்சு வாண்டு தன்னில் ஆவணி மாதந் தன்னில்
கூறுவோந் தந்தை கண்டம் குறிக்கின்றோம் பணிக்கா லத்தில்
தீரமாய்ப் புந்தி புக்தி சேர்ந்திடு நாளி லேதான்
மாரனுங் கருமஞ் செய்வன் மங்கையே மேலுங் கேளே.

47. ஜாதகனுடைய முப்பதாம் வயதில் ஆவணி மாதத்தில் ராகுமகா தசையில் புதபுக்தியில் ஜாதகனுடைய தந்தை மரண மடைவான். அக்காலத்தில் ஜாதகன் தன் தந்தைக்கு இறுதிக்கடன்கள் செய்வான். தாயே! மேலுங் கேளுங்கள்.

48. அதற்குமேல் ஏழாம் ஆண்டில் ஐப்பசி மாதந் தன்னில்
மதிமுக மாது கண்டம் அந்தநாள் ராகு காலம்
மதிபுத்தி யாகு மேதான் வறைந்தன மொழிகுன் றுவே
நதிசடை யணிந்தோன் தேவி நங்கையே மேலுங் கேளே.

48. அதற்குமேல் ஏழாம் வருடத்தில் ஐப்பசி மாதத்தில் சந்திரனை யொத்த முகத்தையுடைய தாய்க்கு மரண மேற்படும். அப்போது ராகு மகாதசையில் சந்திரபுக்தி நடக்கும். நாங்கள் கூறிய மொழிகள் தவறா. கங்கையைச் சடையில் அணிந்த சங்கரன் தேவியே! கேளுங்கள்.

49. உதித்தவன் மரண காலம் உரைக்கின்றோ மறுபா னறில்
மதிநுதல் கன்னி மாதம் வளர்பிறை துதியை தன்னில்
சதிசெயும் பித்த வாயுவால் சண்டன்தன் பதிக்குச் சேர்வான்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை கேட்க லுற்றாள்.

49. ஜாதகனுடைய மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். அறுபத்தாறும் வயதில் புரட்டாசி மாதம் வளர்பிறை துவிதீயையன்று பித்த வாத நோயால் ஜாதகன் இறப்பான். அதிதியை ஆதரிக்கும் பார்வதி கேட்கலானாள்.

50. எப்படி வயது தீர்க்கம் இவனுக்குச் [1]சகடை பங்கம்
மெய்ப்புடன் சேர்ந்த தாலே விளம்புவீ ரந்தச் சங்கை
செப்புவேன் விவர மாகச் சுக்கிரன் ஜன்மந் தங்க
ஒப்புடன் நவத்தில் பொன்னேன் உறைந்ததால் வயது தீர்க்கம்.

50. ஜாதகனுக்கு நீண்ட வயது என்று எங்ஙனம் கூறினீர்கள் ? சகடை யோக பங்கம் வந்ததற்குக் காரணம் சொல்லுங்கள். விவாமாகக் கூறுகின்றோம். சுக்கிரன் ஜன்ம லக்கினமாகிய மிதுனத்திலும், குரு ஒன்பதாமிடமாகிய கும்பத்திலும் இருப்பதால் தீர்க்க ஆயுள் என்றோம்.

51. இதுமத்தில் பிணிய னந்தம் எய்தினும் நிவிர்த்தி யாகும்
அதிபன்றன் மறுஜன் மத்தை அறைகின்றோ மரங்கந் தன்னில்
முதிதான மறைக் குலத்தி லுதிப்பனு மிவனே யென்றோம்
அதிபதி கேட்க லுற்றாள் மாரனிச் சென்மந் தன்னில்;

51. இதற்கு மத்தியில் எண்ணற்ற நோய் ஏற்பட்டாலும் அவைகள் நீங்கிப்போகும். ஜாதகனுடைய மறுபிறப்பைச் சொல்லுகின்றோம். ஸ்ரீரங்கத்தில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான் என்று கூறினோம். பார்வதி கேட்கலானுள். ஜாதகன் இப்பிறவியில்;

52. செய்தபுண் ணியங்க ளென்ன செப்புவீர் முனியே நீர்தாம்
ஐயமில் லாமற் சொல்வேன் யாவர்க்கு நல்லோ னுயும்
தையல்தன் ஆல யத்தில் தான்திருப் பணியுஞ் செய்து
வையமே லறத்தி லிச்சை வைத்ததா லுதிப்பா னென்றோம்.

52. செய்த நற்காரியங்கள் என்ன வென்று சொல்லுங்கள், முனிவரே ! சந்தேகமில்லாமல் கூறுகின்றேன். எல்லோருக்கும் நல்லவனுகவும் அம்பிகையின் கோயிலில் திருப்பணிகள் செய்துவந்ததாலும் உலகில் தருமத்தில் ஆசை வைத்து வந்ததாலும் ஏற்பட்டது, என்று கூறினோம்.

53. ஜயமுனி இதனைக் கேட்டுச் செப்புவார் பிருகு வுக்கு
நயமுடன் தந்தைக் கேதான் நாட்டினீ ராறு கர்மம்
தயையுட னெந்தக் காலம் சாற்றுவீர் முனியே நீர்தாம்
வியமிலா ரண்டி லேதான் விளம்புவோம் விவர மாக.

53. ஜயமுனிவர் இதனைக் கேட்டு பிருகு முனிவருக்குச் சொல்லுகின்றார். ஜாதகனுடைய தந்தைக்கு ஆறு கருமங்கள் செய்வான் என்று கூறினீர்களே ! அஃது எந்தக் காலத்தில் என்று தயையுடன் சொல்லுங்கள். அந்த விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம்.

54. பாலகன் ஜனிக்குங் காலைப் பரிதியின் தசையி லேதான்
சீலமா யிரண்டு வாண்டு திங்களு மீறஞ் சாகும்
கோலமாய் நாள்மூ வேழும் குறித்தனம் பலனை யாங்கள்
சாலவே துணைவர் விருத்தி சடுதியில் நட்ட மெய்தும்.

---

[1] சகட யோக பங்கம்.

54. ஜாதகன் பிறப்புக்காலத்தில் சூரிய மகாதசையில் இரண்டு வருடங்களும் பத்து மாதங்களும் இருபத்தொரு நாட்களும் பாக்கியிருக்கும். இங்ஙனம் பலனைச் சொல்லுகின்றோம். உடன் பிறந்தவர்களுக்கு விருத்தி ஏற்பட்டு உடனே மரிப்பார்.

55. ஜாதகன் தனக்கு ரோகம் சார்ந்துபின் நிவிர்த்தி யாகும்
மேதினில் தானிய லாபம் விருத்தியாங் கன்று காலி
தீதான செல்வ முண்டு சுபமுண்டு வாச ரிட்டம்
போதவே விவர மெல்லாம் புகலுவோ மிரண்டி லேதான்.

55. ஜாதகனுக்கு நோய்கள் ஏற்பட்டு, பிறகு நீங்கிப் போகும். உலகில் தானிய லாபம் ஏற்பட்டு, கால் நடைகளும் விருத்தியாகும். செல்வங்கள் அதிகம் ஏற்படும். நற்காரியங்கள் ஏற்படும். அரசருக்கு இஷ்டமானவன். மற்ற விபரங்களை இரண்டாம் பாகத்தில் கூறுகின்றோம்.

# ஜாதகம் 24.

1. அம்புலி முடவன் ராகு ஆரலும் சாடி யாக
உம்பர்கோன் தனுசு வாக உதயனும் புகரும் புந்தி
தனமையாய் வீணை தங்கச் சிகிசியம் ஜன்மம் வீணை
பன்மையாய் நவக்கோ ளிவ்வாறு பரவினால் பலன்சொல் வீரே.

1. சந்திரன் சனி ராகு செவ்வாய் கும்பத்திலும், குரு தனுசிலும், சூரியன் சுக்கிரன் புதன் இவர்கள் ஜன்ம லக்கினமான மிதுனத்திலும், கேது சிம்மத்திலும், மிதுனம் ஜன்மமாகவும் இருந்தால், நவக் கிரகங்களின் நிலையை ஆராய்ந்து பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் சூரியன் சுக்கிரன் புதன் |
| சந்திரன் சனி ராகு செவ்வாய் | இராசி | | |
| | சக்கரம் | | கேது |
| குரு | | | |

2. உமையவள் கேட்கும் போது உரைக்கிறா ரத்திரி தாமும்
அமைந்திடும் பெண்பால் ஜன்மம் அறைகிறோ மில்லம் தன்னை
எமன்வாசல் கீழ்மேல் வீதி இயல்கூறை வீட தாகும்
சமதக்னி ஈசன் தெற்கில் தீர்த்தமும் அருகில் தங்கும்.

2. என்று பார்வதி தேவி கேட்கும் போது, அத்திரி முனிவர் கூறுகின்றார். இஃது ஒரு பெண்ணின் ஜாதகம். அவள் பிறந்த வீட்டைச் சொல்லுகின்றோம். கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. அது வேயப்பட்ட கூறை வீடு. தெற்கில் சிவபெருமான் ஆலயமும் பக்கத்தில் ஒரு நீர் நிலையும் உள்ளது.

3. தந்தியும் காளி கீழ்ப்பால் சார்ந்திடும் சிற்றூர் தன்னில்
இந்ததோ ரடையா ளத்துள் இளவலும் ஜனன மாகும்
தந்தைதாய்த் துணைவர் யோகம் சாதகி வரனின் யோகம்
முந்திய வரனின் சாந்தி உரைக்கிறோ மிந்நூல் தன்னில்.

3. வினாயகர் ஆலயமும் காளி கோயிலும் கிழக்கில் உள்ளது. ஒரு சிற்றூரில் இவ்வித அடையாளங்களுள்ள வீட்டில் இப்பெண் பிறப்பாள். அவளுடைய தாய், தந்தையர், கணவன் இவர்களின் யோகம் இவர்களுடைய முன்பின் பிறப்புக்கள், குழந்தைகள் இவர்களைப்பற்றியும் சாந்திவிபரத்தையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் துணை ஈரஞ்சில் ஆணிரண்டு கன்னி அவ்வாறு
எந்தையே விருத்தி யாகும் இவைகளில் சிலவே தாழும்
நொந்திடும் சிலநாள் தன்னில் நுவலுவேன் பிதாகு ணத்தைச்
சந்ததம் சிவந்த மெய்யன் சமர்த்தாக வார்த்தை சொல்வன்.

4. தந்தையின் உடன் பிறந்த பதின்மரில் இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவை மரிக்கும். ஜாதகியின் பிதாவின் குணத்தைச் சொல்லுகின்றோம். சிவந்த உடலுள்ளவன். சாமர்த்தியமாகப் பேசுபவன்.

5. பலவிதக் கல்வி கற்பன் பலர்க்குப தேசம் செய்வன்
நலமுளோர் நேசம் கொள்வன் நாடெல்லாம் புகழு மேற்பன்
விலைமாதர் விருப்பங் கொள்வன் விண்ணவர் பூசை செய்வன்
கலகத்தில் மனம்வை யாதான் கட்டுவார்த் தைகளும் சொல்வன்.

5. பலவிதமான கல்வி கற்பான். பலருக்கு உபதேசம் செய்வான். நல்லவர்கள் நட்புக் கொள்ளுவான். ஊரெல்லாம் கீர்த்தியடைவான். வேசையர்மீது மோகம் கொள்ளுவான். தெய்வ பூசை செய்து வருவான். கலகம் செய்ய மனமில்லாதவன். வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன்.

6. மூலச்சூ டுடைய னாகும் முன்கோபம் நீட்சி உள்ளான்
சீலமா சார னவன் சிறுத்தவர்க் குதவி செய்வன்
நீலிமா காளி பக்தி நிமலனும் கொள்வா னாகும்
சாலவே கிராமச் செட்டுத் தானவன் செய்வா னென்றோம்.

6. மூலச்சூட்டுத் தேகமுள்ளவன். முன் கோபம் அதிகமாக உள்ளவன். நல்லொழுக்கமும், ஆசாரநியமமும் உடையவன். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. காளிதேவியின்மீது பக்தியுள்ளவன். நன்றாக கிராம வியாபாரம் செய்து வருவான்.

7. ஈகையு முடைய னாகும் இன்பமாய்ப் பேச வல்லன்
ஆகம மறிவா னாகும் அதிகமாய்க் கவிகள் சொல்வன்
நாகரி கங்க ளுள்ளான் நற்சித்திர வீடு செய்வன்
ஊகவான் பூமி உள்ளான் உறுதிவான் சல்லிய முள்ளான்.

7. கொடையாளி. அன்புடன் பிரியமாகப் பேசுபவன். வேதங்கள் அறிவான். கவிகளைப் புனைந்து பாடுவதில் தேர்ந்தவன். நாகரிகமாக வாழ்ந்து வருவான். அழகிய வீடு கட்டுவான். ஊகமுள்ளவன். விளைநிலங்கள் உடையவன். திடமான மனமுடையவன். கடன் உபத்திரவமுள்ளவன்.

8. துணைவியால் நிந்தை உள்ளான் துணைவர்சொல் தட்டா னாகும்
வினைகளை நிவிர்த்தி செய்வன் விளம்புமிக் குணத்தா னுக்குக்
கனமுள நாலாம் ஜன்மம் காதலி உதிப்பா ளாகும்
சினமிலா அவள்கு ணத்தைச் செப்புவோம் கேளும் தாயே.

8. தன்மனைவியால் பழிகள் அடைவான். உடன் பிறந்தவர் வார்த்தையை மீறுதவன். பாபங்களைப் போக்குவான். இங்ஙனம் கூறப் பட்டவனுக்கு நான்காம் பிறவியாக இந்த ஜாதகி பிறப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள், தாயே !

9. செந்நிறம் உளைச்சல் தேகி தேகமும் நீட்சி உள்ளாள்
கன்னென மொழியே சொல்வள் கரமதில் சித்திர ரேகை
பன்னியே பேச வல்லாள் பஞ்சைமே லிரக்க மாவாள்
தன்வரன் மனம்போல் வாழ்வள் தங்கிடும் பித்த சூடு.

9. சிவந்த உடலும் மெல்லிய சரீரமும் உள்ளவள். நீண்ட (உயரமான) தேகத்தள். இனிய வார்த்தைகளையே பேசுபவள். கையில் சித்திரரேகை உள்ளவள். பன்னிப் பன்னிப் பேசுபவள். ஏழைகளின் மீது இரக்கமுள்ள வள். தன் கணவன் மனம் போல் வாழ்ந்து வருவாள். பித்தச்சூட்டுத் தேகமுள்ளவள்.

10. வரனில்லம் வாழா ளாகும் மங்கைநன் னடக்கை உள்ளாள்
குறையான மனத்த ளாகும் குலத்துளோர் மெச்ச வாழ்வள்
வருவோர்க்கு அன்ன மீவள் மனமது கபடு கொஞ்சம்
துருசான குணத்தா ளாகும் துருசுமுன் கோபி யாவள்.

10. தன் கணவன் வீட்டில் வாழாதவள். நன்னடத்தை யுள்ளவள். மனத்தில் குறைகளுள்ளவள். தன்பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். தன்னை யாசிப்பவர்களுக்கு அன்னமளிப்பவள். மனத்தில் சிறிது கபடமுள்ளவள். சுறு சுறுப்பான குணமுள்ளவள். சொல்வதற்கு முன் கோபமடைவாள்.

11. முகமது வசிய மில்லாள் முயற்சியாய்க் குடும்பி யாவள்
பகையிலாள் யோக சாலி பால்பாக்கிய விருத்தி இல்லாள்
உகமைகள் சொல்ல வல்லாள் உரைக்கிறோம் துணைவர் தம்மைச்
சகமதி லைந்து தோன்றும் சிதறிடும் மூன்று தாமே.

11. வசீகரமான முகமில்லாதவள். தன்முயற்சியால் குடும்பம் நடத்து வாள். விரோதிகள் இல்லாதவள். அதிர்ஷ்டசாலி. பால்பாக்யமில்லாதவள். உபமானங்களுடன் பேசுவாள். சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஐந்து சகோதரர்கள் தோன்றுவர். மூன்றுபேர் மரித்துவிடுவார்.

12. பின்துணை ஆண்பா லொன்று பேசுவோம் தீர்க்க மாகும்
முன்துணை பெண்பா லொன்று மொழிகிறோம் விருத்தி யாகும்
தன்துணை நேர்மூத் தோளில்லாள் சாற்றினே மிவளுக்கே தான்
அன்னவள் துணைவன் சேதி அறைகிறோம் கேளும் தாயே.

12. அவளுக்குப் பின் பிறந்த சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுடனிருப் பான். முன் பிறந்த சகோதரி ஒருத்தி தீர்க்கமாயிருப்பாள். தனக்கு முன் பிறந்தவர்களில் நேர் மூத்தவளில்லாதவள். அவளுடன் பிறந்தவனின் செய்தியைக் கூறுகின்றோம்.

13. வித்தையும் மூன்று கற்பன் விவேகியாம் எவர்க்கும் நண்பன்
புததிமான் பொறுமை சாலி புண்ணிய மனத்த னாகும்
சுத்தமும் சீல னுவன் சுபங்களும் செய்ய வல்லன்
சித்தச னெப்ப தாகும சிவந்திடு மேனி யாவன்.

13. மூன்று விதக் கல்வி கற்பான். அறிவாளி. எல்லோருக்கும் நண்ப னுக விருப்பான். புத்திசாலி. பொறுமையுள்ளவன். புண்ணியமான மன முள்ளவன். சுத்தமுடையவன. நல்லொழுக்கமுள்ளவன. நற்காரியங்கள் செய்யக் கூடியவன். மன்மதனைப்போன்ற அழகுள்ளவன். சிவந்த நிற முள்ளவன்.

14. அதிகாரம் சிலநாள் செய்வன் யாரையும் உறவு கொள்வன்
துதிசெய்தோர் தம்மைக் காப்பன் தொல்புவி கிருஷி செய்வன்
நதிபல தீர்த்தம் தோய்வன் நாதனர் பூசை பூண்பன்
சதியிலா மனத்த னாகும் சம்பத்துப் பின்னு னுள்ளான்.

14. சில காலம் அதிகாரத்தில் இருப்பவன். எல்லோரையும் உறவு கொள்ளுவான். தோத்திரம் செய்தவர்களை ஆதரிப்பான். உலகில் விவசாயம் செய்துவருவான். பல புண்ணிய நதிகளில் நீராடுவான். சிவபெருமானைப் பூசை செய்வான். தீங்குகளெண்ணு மனத்தன். பிற்காலத்தில் சம்பத்து ஏற்படும்.

15. மந்திர மறைகள் கற்பன் எதிர்மொழி அதிகம் கூறுவன்
நிந்தையு முடைய னுகும் நீர்தனில் தோய வல்லன்
வந்தவர்க் கன்ன மீவன் மாநிலம் சல்லியம் கொள்ளான்
பிந்திநாள் யோக முள்ளான் பூஷணம் சேர்ப்பா னென்றேம்.

15. மந்திரங்களையும், வேதங்களையும் படிப்பான். எதிர்த்துப் பேசும் குணமுடையவன். பழிகள் அடைவான். பல புண்ணிய நீரில் நீராடுவான் பசியென்று வந்தவர்களுக்கு அன்னமளிப்பான். உலகில் கடன் படாதவன். பிற் காலத்தில் யோகங்களதிகம் உள்ளவன். ஆபரணங்கள் சேர்ப்பான்.

16. புத்திர ராண்பா லொன்று பெண்ணது இரண்டு என்றேம்
வித்தகன் வயது தீர்க்கம் மெல்லியாள் ஒன்றே யாகும்
பத்திய துணைவி செய்தி பகருவோம் இரண்டி லேதான்
அத்தியைப் பெற்ற மாதே அறைந்தன மொழிகுன் றுவே.

16. ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் பிறப்பார்கள். அவனும் நீண்ட வயதுள்ளவன். அவனுக்கு மனைவி யொருத்தியே. உடன் பிறந்த சகோதரியின் செய்தியை இரண்டாம் பாகத்தில் கூறுகின்றேம். விநாய கனைப்பெற்ற பார்வதியே! சொன்ன வார்த்தைகள் தவறு.

17. ஜாதகி மணத்தின் காலம் சாற்றுவோம் ஒருபான் மூன்றுள்
மேதினில் குடகு திக்கில் வரனுமே வருவா னுகும்
ஓதுவே னவன்கு ணத்தை ஊகவான் இருநி றத்தான்
சூதிலான் கபடு கொஞ்சம் துருசான நடையு மாவன்.

17. ஜாதகியினுடைய திருமணக்காலம் பதின்மூன்றும் வயதுக்குள் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். அவன் மேற்குத் திக்கிலிருந்து வருவான் என்று கூறுகின்றோம். அவனது குணத்தைச் சொல்லுகின்றோம். ஊகமுள்ளவன். கருமை கலந்த செம்மைநிற முள்ளவன். கெட்ட குணங்களில்லாதவன். சிறிது கபடமுள்ளவன். வேகமாக நடக்கவல்லவன்.

18. அதிகாரம் சிலநாள் செய்வன் அன்புள மனத்த ஞகும்
சதிசெய்வோ ருறவு கொள்ளான் தன்கரம் ருத்ர ரேகை
நிதியதைச் செலவு செய்வன் நேமியில் சல்லிய முள்ளான்
அதிபதி இல்லம் தன்னில் வாசமும் சிலநாள் என்றோம்.

18. சின்னுட்கள் அதிகாரியாக இருப்பான். அன்புள்ள மனத்தன். கெட்ட எண்ணங்களுள்ளவர்களிடம் நட்புக்கொள்ளாதவன். தன்கையில் ருத்ரரேகை யுடையவன். செல்வங்களைச் செலவு செய்வான். உலகில் கடன் உபத்திரவமுள்ளவன். ஜாதகியின் வீட்டில் சில காலம் வசித்து வருவான் என்றோம்.

19. கத்திரி யோக முள்ளான் கல்வியு முடைய ஞகும்
பத்தினிக் கிஷ்ட ஞகும் பலவித தீர்த்தம் தோய்வன்
நத்தினோர் தமக்கு நண்பன் நளினமாய்ப் பேச வல்லான்
சுத்தமும் மன அலேச்சல் தோழியால் பெருமை ஏற்பன்.

19. கத்திரியோகம் உள்ளவன். கல்வியறிவுடையவன். தன் மனைவியிடம் பிரியமாக இருப்பான். பலவித புண்ணிய ஜலத்தில் நீராடுவான். தன்னை வந்தடைந்தவர்களுக்கு உபகாரி. நயம்படப் பேசுபவன். சுத்தன். மனத்தில் சஞ்சலங்கள் உள்ளவன். தன் மனைவியால் பெருமை யடைவான்.

20. துணைவர்கள் ஆண்பால் மூன்று தீர்க்கமாம் பெற்ற வெல்லாம்
பிணையாகும் குடும்ப லேச்சல் பெற்றதாய் தீர்க்க மென்றோம்
கணவனின் துணைவர் தம்மைக் கழருவோம் விபரம் ரண்டில்
அணையஇக் குணத்தா னுக்கு அவளுமே மாலே பூண்பள்.

20. ஜாதகியின் கணவனுடைய உடன் பிறந்த மூன்று ஆண் மக்கள் தீர்க்கமாவர். மற்றவையெல்லாம் நிலையா. குடும்பத்தில் சஞ்சலங்கள் ஏற்படும். கணவனைப் பெற்ற தாய் நீண்ட ஆயுளுள்ளவள். கணவனின் உடன் பிறந்தவர்களின் செய்தியை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். இக் குணங்கள் உள்ளவனுக்கு ஜாதகி மாலையிடுவாள்.

21. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மினிமே லாகப்
பத்தினி தனக்குப் பாலர் பருகாது பருகில் தீதாம்
அத்திரி சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்றாள்
வித்தகி தனக்குப் பாலர் விளங்காத காரணம் சொல்.

21. இனி, ஜாதகியின் புத்திர பாக்கியத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவளுக்குக் குழந்தைகள் பிறவா. பிறந்தாலும் நிலையா. இங்ஙனம் அத்திரி முனிவர் சொல்லும்போது, பார்வதிக் கேட்கலானாள். ஜாதகிக்குக் குழந்தைகள் பிறக்காத காரணங்கள் என்ன ? கூறுங்கள்.

புத்திர தோஷ க்ரகநிலே.

22. காரியும் ராகு மொன்பான் கலந்ததால் அதற்குத் தோஷம
மாறியே புயண்டர் சொல்வார் மறையவன் ஏழில் நிற்கத
தீரமாய் மதலே யுண்டு சயமுனி புகலு கின்றார்
ஆறலு மாரே ருஷி அறவுமே சேர்ந்த தாலே ;

22. சனியும் ராகுவும் ஒன்பதாமிடத்தில் சேர்ந்து இருப்பதால் புத்திரருக்கு தோஷம் ஏற்பட்டது. புயண்ட முனிவர் மறுத்து கூறுகின்றார். குரு ஏழாமிடத்தில் இருப்பதால் நிச்சயமாகப் புத்திரர்கள் தோன்றுவார்கள். ஜயமுனி சொல்லுகின்றார். செவ்வாய் ஆறுமிடத்துக்குரியவனுகி, ராகுவும் சேர்ந்து இருப்பதால் ;

23. மதலேகள் உதிக்கில் தீதாம் மங்கையும் முன்ஜன் மத்தில்
விதவிதக் குற்றம் செய்தாள் மேவிய தோஷத் தாலே
சுதருக்குப் பீடை யாகும் சொல்லுவீர் பூர்வம் தன்னே
விதங்களேச் சொல்லு கின்றேன் வித்தகி கேட்டி டாயே.

23. குழந்தைகள் பிறந்தாலும் நிலேயா. ஜாதகியும் முற்பிறவியில் விதவிதமான தீங்குகள் செய்தாள். அவைகளால் ஏற்பட்ட தோஷத்தால் உதிக்கும் புத்திரர்களுக்குத் தோஷமுண்டாகும். முற்பிறவியைப் பற்றிச் சொல்லுங்கள். (எனப் பார்வதி கேட்க, முனிவர்கள் பதில் கூறுகின்றனர்.) விபரங்களேக் கூறுகின்றேன். தாயே ! கேளுங்கள்.

24. மங்கையின் பூர்வம் சொல்வேன் மாபலி நகர்க்கு மேல்பால்
பொங்கிய பேரூர் தன்னில் பிறந்தனள் கர்ண வம்சம்
நங்கைக்குக் காஞ்சி தன்னில் நாயகன் பதி உண்டாகி
இங்கிவள் சுதரு முண்டாய் இன்பமாய் வாழ்ந்தா ளென்றோம்.

24. ஜாதகியினுடைய முற் பிறவியைச் சொல்லுகிறேன். மஹாபலி புரத்துக்கு மேற்கில் உள்ள பெரிய ஊரில், கருணீகர் மரபில் தோன்றினுள். அப் பெண்ணுக்கு, காஞ்சீபுரத்தில் கணவன் வீடு முதலியன ஏற்பட்டு, குழந்தைகளே யடைந்து, சுகமாய் வாழ்ந்து வந்தாள் என்றோம்.

குழந்தைக்கு அன்னம் இல்லே என்ற தோஷம்.

25. மாதுவு மேழை தானும் மைந்தர்க்கு அன்னம் வேண்டி
ஓதினுள் இவள்பா லுந்தான் உத்தமி கோப முற்றுத்
தீதான வார்த்தை சொல்லித் தேவியை விலக்க லுற்றாள்
கோதிலா ஏழை தானும் கூறுவாள் மனவெ றுப்பால்.

25. ஏழைப் பெண் ணொருத்தி, தன் குழந்தைக்கு அன்னமளிக்க இவளே வேண்டினுள். இப் பெண் கோபமடைந்து கொடிய வார்த்தைகளேக் கூறி, ஏழைப் பெண்ணே விரட்டி விட்டாள். குற்றமற்ற ஏழைப்பெண் மன வெறுப்படைந்து சொல்லுகின்றாள்.

26. மகவன்ன மீயாப் பாவி மறுஜன்மம் மதலே இன்றி
சகமதில் வாழ்வா யென்று தேவியும் சொல்லிச் சென்றாள்
பகையான ஏழை சாபம் பருகிற்று இதுவு மன்றி
வகையான மறையோ னுக்கு மதலேயு மொன்றுண் டாகி ;

26. என் குழந்தைக்கு அன்னமளிக்காத பாவியே! நீ, மறு பிறப்பில, குழந்தைகளில்லாமல் உலகத்தில் வாழ்ந்து வருவாய் என்று அந்த ஏழை சொல்லிவிட்டுச் சென்றுவிட்டாள். தீதான ஏழையின் தீசொல்லின் பலன் இவளை வந்தடைந்தது. நல்லொழுக்கமுடைய அந்தணனொருவனுக்குக் குழந்தையொன்று பிறந்து;

**அந்தணர் குழந்தைக்குப் பால் இல்லை என்ற தோஷம்.**

27. பாலது குறைவு முண்டாய்ப் பாவைபா லனுகி யேதான்
சாலவே மகவு பாலும் தருகுவா யென்று கேட்க
ஆலம்போல் வார்த்தை சொல்லி ஆவின்பா லீயா ளாகி
நீலியும் மர்ம மாக நின்றதை மறையோர் கண்டு;

27. குழந்தைக்குப் பால் இல்லாமல் இந்த ஜாதகியிடம் வந்து குழந்தைக்குப் பால் தருவாய் என்று வேண்டி நிற்கும் போது, கொடிய விஷத்தைப் போன்ற கொடிய வார்த்தைகளைச் சொல்லி, பசுவின் பால் தராமல், இப் பெண் மர்மமாக நின்றிருந்ததைக் கண்டு அந்தணர்;

28. மகவுபால் தாராப் பாவி பருகாது சுதர்கள் தாமும்
பகையான மறையோர் சாபம் சொல்லியே சென்று ரென்றும்
தகமையாய் அந்தத் தோஷம் சார்ந்தது இவளுக் கேதான்
சகமதி லந்தி யத்தில் செல்விக்கு மாரன் மாண்டு;

28. குழந்தைக்குப் பால் தராத பாவியே! உனக்குப் புத்திரர்கள் தோன்றார் என்று மனத் தாங்கலுடன் கூறிச் சென்றுவிட்டார். அந்தத் தோஷம் இவளை வந்தடைந்தது. உலகில் அவள், கடைசிக் காலத்தில் கணவனும் இறந்து;

29. சுதர்களும் பகைவ ராகித் தோகையும் தனிய ளாகி
நிதியதைத் தன்கைக் கொண்டே நேர்ந்தனள் தக்ஷி ணத்தில்
நதிபலத் தீர்த்தம் தோய்ந்து நற்சேது பதிக்குச் சென்று
சதியிலா நகரம சார்ந்து ஷண்முகர் தொண்டு செய்து;

29. புத்திரர்களும் இறந்து, இவள் தனித்தவளாகி, பணத்தை எடுத்துக் கொண்டு தெற்குப் பக்கத்திற்கு வந்து, அங்குள்ள புண்ணிய நதிகளில் நீராடி, சேதுவுக்குச் சென்று, மீண்டும் உள்ளூருக்குத் திரும்பி, முருகப் பெருமானை அருச்சித்துத் தொண்டு செய்து;

30. காலன்தன் பக்கல் சென்று கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமாம் பிரம்ம சேயாய் ஜனித்த ளிவளே என்றோம்
ஞாலமேல் இரண்டு தோஷம் நாயகி தன்னைப் பற்றிக்
கோலமாய் இருந்த தாலே குழவிகள் தோஷ மெய்தும்.

30. இறந்து, மீண்டும் பிரம்மனுல் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமுடைய அந்தண குலத்தவளாகப் பிறந்தவள் இந்த ஜாதகி என்று கூறினோம். ஜாதகிக்கு இருவிதத் தீவினைகள் ஏற்பட்டுவிட்டதால் புத்திர தோஷம் உண்டாகும்.

31. முனிவரிவ் விதமாய்க் கூற மொழிகிருர் அம்மன் தாமும்
கனமுள முன்ஜன் மத்தில் காதலி கர்ண வம்சம்
பின்னமாய் இச்சென் மத்தில் ஜனித்தவள் பிரம்ம சேயாய்
அனேயவே பலத்தைச் சொல்வாய் அத்திரி புகலு கின்ருர்.

31. முனிவர் இங்ஙனம் கூறும்போது, பார்வதி அம்மன் கேட்கின்ருள். செம்மையான முற்பிறவியில் ஜாதகி கருணீகர் வம்சத்துல் பிறந்து இப் பிறவியில் உயர்ந்த அந்தண குலத்தவளாகப் பிறந்த காரணங்கள் என்ன ? அத்திரி முனிவர் பதில் உரைக்கின்ருர்.

உயர்வான பிரப்புக்குக் காரணங்கள்.

32. சேதுவின் புண்ணி யத்தால் ஜனனமே உயர்வ தாச்சு
பாதகம் நீங்கா தென்ருேம் பஞ்சையாய்ப பெண்ணின் சாபம்
மேதினில் மகப்பால் தோஷம் விலகாது இவளுக் கேதான்
தீதுகள் தீர வேண்டிச் செப்புவோம் கிரியை தானே.

32. சேதுவில் நீராடிய புண்ணியத்தால் உயர்ந்த பிறவி ஏற்பட்டது. ஆனுல் முற் பிறவியில் செய்த பாவம் நீங்காது. ஏழைப் பெண்ணின் சாபமும் குழந்தைக்குப் பால் தராத தோஷமும் இவளைவிட்டு விலகா. இவைகள் நீங்குவதற்கான சாந்திகள் கூறுகின்ருேம்

சாந்தி.

33. மாதுவும் வரனும் கூட மறையவன் பூசை செய்யும்
நீதியாய்ப் பக்ஷிக் கேதான் நிருபனும் தீர்த்தம் தோய்ந்து
வேதம்போல் கிரியை சுற்றி வில்வத்தால் விமல ருக்குத்
திதில்லா அர்ச்சித் தேத்தித் தேர்ந்ததோர் மறையோ ருக்கு ;

33. இப் பெண் தன் கணவனுடன் அந்தணர்கள் பூசை செய்து வரும் திருக்கழுக்குன்றத்துக்குச் சென்று, அங்குள்ள புண்ணிய நீரில் ஸ்நானம் செய்து, வேதத்தில் சொல்லியபடி குன்றை வலம் வந்து, வில்வ தளங்களால் சிவபெருமானுக்கு அருச்சித்து, துதி செய்து, வேதங்க ளுணர்ந்த அந்தணர்களுக்கு ;

34. இருபத்தோர் பேருக்கு அன்ன மன்புடன் அளித்துப் பின்பு
திருமாளி தன்னில் சென்று சேயின்தன் வார நோன்பு
பெருமையாய்க் கொள்வா ளாகில் புதல்வருந் தோன்று [மென்ருேம்
சிறுமையாய்ச் செய்யா ளாகில் ஜனிக்காது மதலே தாமே.

34. இருபத்தொரு (அந்தணர்களுக்குப்) பிரியத்துடன் அன்னமளித்து, தன் ஊருக்குத் திரும்பி, செவ்வாய்க் கிழமை தோறும் விரதம் இருந்து வந்தார்களானுல், புத்திரர்கள் தோன்றுவார்கள். அலட்சியத்தால் செய்து வராவிட்டால் புத்திரர்கள் பிறவார்.

35. சொல்லிய படியே செய்யில் துலங்கிடும் ஆண்பா லொன்று
வல்லியு மிரண்டு மாகும் வரைகிருேம் மூன்று தீர்க்கம்
அல்லலே அகற்று மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்
வல்லியின் வரன்முன் ஜன்மம் வரைகிருே மினி மேலாக.

35. சொல்லியபடி செய்து வந்தால் ஆண் குழந்தையொன்றும் பெண் குழந்தை இரண்டும் பிறந்து, மூவரும் நீண்ட ஆயுளுடனிருப்பார்கள். துன்பங்களைத் தீர்க்கும் எங்களுடைய உயிருக்குயிரான தாயே! கேளுங்கள். ஜாதகியின் கணவனுடைய முற் பிறவியை, இனிச் சொல்லுகின்றோம்.

36. அருணைக்கு உத்தி ரத்தில் அணுகிய பேரூர் தன்னில்
மறைக்குலம் தனி லுதித்து மனைவிமைந் தரு முண்டாகித்
திருமகள் விலாசம் பூண்டு செல்வனும் வாழு நாளில்
உரைக்கிறோ மூழி தானும் உத்தமி கேட்டி டாயே.

36. திருவண்ணாமலைக்கு வடக்கில் உள்ள பெரிய ஊரில் அந்தண குலத்தில் பிறந்து, மனைவி மக்களை யடைந்து, லட்சுமீகடாட்சம் பெற்று, அவன் வாழ்ந்து வரும் காலத்தில், ஏற்பட்ட தீச் செயலை சொல்லுகின்றோம். உயர்ந்தவளே! கேளுங்கள்.

கருப்பன்சாமியுள்ள மரத்தை வெட்டுதல்.

37. ஈமத்தில் விருக்ஷம் ஒன்று இருந்தது அதில்க றுப்பன்
க்ஷேமமாய் வாச மாகித் தீரன்தன் வேலைக் காக
மாமரம் தன்னை வெட்ட மாமுனி இல்லம் நீங்கி
நேமியில் தங்கு தற்கு நிலையது இல்லாத் தாலே.

37. தன் வீட்டுக்கருகில் மரம் ஒன்று இருநதது. அதில் கறுப்பன்சாமி சுகமாக வசித்துவந்தது. இந்த அந்தணன் தன் வேலைக்காக அந்தப் பெரிய மரத்தை (அந்த முனி தங்க இடமில்லாமல்) வெட்டிவிட்டான். அவ்விடத்தில் தங்க இடம் இல்லாததால் அஃது அதை விட்டு அகன்றது.

38. இருப்பிட மழித்த பாவி இனிவரும் ஜன்மம் தன்னில்
பிறக்குமில் நீங்கி யேதான் பேணுவாய் வேறு இல்லம்
பிறக்கிற மதலை இன்றிப் பூமியில் சல்லிய முண்டாய்த்
திருகுகள் துணைவர் தாமும் தேசமேல் வாழ்வா யென்றும்;

38. என் இருப்பிடத்தை அழித்த பாவியே! உனக்கு இனி ஏற்படும் பிறவியில், பிறந்த வீட்டை அடையாமல், வேறு வீடு வாங்கி, பிறக்கும் குழந்தைகள் நிலையாமல், உலகில் கடன் உபத்ரவமடைந்து, தன் மனைவியின் சகோதரனின் ஊரில் சென்று வாழ்வாய் என்று;

39. இப்படிக் கறுப்பன் சொல்லி ஏகிற்று வேறு இல்லம்
செப்புவேன் மரத்தை வெட்டித் தேவர்தம் ஆல யத்தில்
ஒப்புடன் கபாடம் செய்தான் உத்தம னந்தி யத்தில்
தப்பித ரோகம் கண்டு செய்தவம் யாவும் நீங்கி;

39. கருப்பன்சாமி சொல்லிவிட்டு, வேற்றிடம் சென்று விட்டது. இந்த அந்தணன் அம்மரத்தை வெட்டிச் சிவபெருமான் கோயிலுக்குக் கதவாகச் செய்தான். அவன் தன் கடைசிக் காலத்தில் தவறான ரோகம் அடைந்து, செய்திருந்த நற்காரியங்களின் பலன்யாவும் நீங்கி;

40. சிலதுநாள் வாதை யாகிச் சென்றனன் காலன் பக்கல்
மலரயன் வரையப் பட்டு வந்தனன் பிரம்ம சேயாய்
நிலமையாய் இச்சென் மத்தில் நேர்ந்திடும் முனிசா பம்போல்
குலவிடும் தோஷம் தானும் கூறுவோம் சாந்தி தானே.

40. சின்னாட்கள் உபத்திரவப்பட்டு இறந்தான். மீண்டும் பிரம்மாவினால் படைக்கப்பட்டு, அந்தண குலத்தவனாகப் பிறந்தான். கருப்பன்சாமியின் சாபத்தைப்போல் எல்லாத் தோஷங்களும் ஏற்படும். அவைகள் நீங்கச் சாந்தி யொன்று சொல்லுகின்றோம்.

சாந்தி : பிடாரிக்குத் தீபம், திருப்பணி.

41. அன்னகர் பிடாரிக் கேதான் அவன் திருப் பணியும் செய்து
உன்னதத் தாழ்ப்பா ளிட்டுத் தூங்காத தீபம் வைக்க
முன்முநி சாபம் நீங்கி உதித்திடும் மதலை தானும்
இன்னமும் செல்வ மோங்கும் இடருகள் விலகு மென்றோம்.

41. அவ்வூரிலுள்ள பிடாரி கோயிலுக்கு அவன் ஆலயத் திருப்பணி செய்து, உயர்ந்த கதவு முதலியன வைத்து, நீண்ட தூங்கா விளக்கு ஏற்றி வைக்க, கருப்பனின் சாபம் நீங்கி, குழந்தையொன்று பிறக்கும். செல்வங்கள் பெருகும். துன்பங்கள் விலகும் என்று கூறுகின்றோம்.

42. சொற்படி செய்யா னாகில் சுதர்களும் விருத்தி யாகார்
தப்பிதம் குடும்பம் தன்னில் சல்லியம் மிகவே உண்டு
எப்பவும் சல்லிய ங்கள் இவன்மனச் சஞ்ச லங்கள்
மெய்ப்புடன் நேரும் என்றோம் வித்தகி கேட்டி டாயே.

42. நாங்கள் சொல்லியபடி செய்யாவிடில் புத்திரர்கள் பிறவார். குடும்பத்தில் கஷ்டம் ஏற்படும். கடன்கள் விருத்தியாகும். கடன் உபத்திரவத்தால் இவனுக்கு மனக்கலக்கம் ஏற்படும் என்றோம். தாயே ! கேளுங்கள்.

43. அத்திரி சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்றாள்
வித்தகன் முன்ஜன் மத்தில் விளங்கினான் மறையோன் என்றீர்
குத்தமில் லாமல் வாழ்ந்து குலவுமிக் குலமிச் சென்மம்
பெத்தகா ரணங்கள் என்ன பேசுவீர் மூனியே நீர்தாம்.

43. இங்ஙனம் அத்திரி முனிவர் சொல்லும் போது, பார்வதிதேவி கேட்கலானார். ஜாதகனின் கணவன் முற்பிறவியில் அந்தண குலத்தவனாகப் பிறந்தான், என்றீர்களே. குற்றங்கள் செய்யாமல் வாழ்ந்து, இப்பிறவியில் இக் குலத்தில் பிறந்த காரணங்கள் என்ன வென்று சொல்லுங்கள், முனிவரே !

44. அன்னவன் முன்ஜன் மத்தில் அந்திய காலம் தன்னில்
உன்னத வேதம் தன்னை உள்ளத்தில் கொள்ளா தாலும்
இன்னவ னிக்கு லத்தில் வகினா னென்று சொன்னோம்
பின்வரும் ஜன்மம் தன்னைப் பேசுவோம் விபர மாக.

44. அவன் முற்பிறவியில் தன் கடைசிக் காலத்தில் உயர்ந்த வேதத்தைத் தன் மனத்தில் நினையாததால் இக்குலத்தில் பிறந்தான் என்று கூறினேம். மறுபிறவியை விவரமாகச் சொல்லுகின்ருேம்.

45. இக்குலம் தன்னி லேதான் வருவான் காளாத்தி தன்னில்
மிக்கவே அரசர் பக்கல் மேவியே ஜீவிப்பானும்
தக்கசெஞ் சடையே கொண்ட சயமுனி கேட்க லுற்ரு
தொக்கவே சாத கிக்குச் சொல்வீர் நிரியா ணத்தை.

45. காளாத்தி க்ஷேத்திரத்தில் இதே குலத்தில் பிறப்பான். அரசாங்க உத்தியோகம் ஏற்று ஜீவித்து வருவான். சிவந்த ஜடை முடியையுடைய ஜய முனிவர் கேட்கலானுர். ஜாதகிக்கு ஏற்படும் மரணகாலத்தைக் கூறுங்கள், என்ருர்.

46. வயதுமே ஏழி லேதான் லாவண்ய மதனி லேதான
நயமுள மாதுரு கண்டம் நாட்டுவோ மிருபா னென்பான்
வியமுள தேளின் மாதம் மேவிடும் தந்தைக் கேதான
பயமிலா அன்ப தாண்டில் பங்குனி மாதம் தன்னில் ;

46. ஜாதகிக்கு ஏழாம் வயதில் தாய்க்குக் கண்டம் ஏற்படும். ஜாதகியின் இருபத்தொன்பதாம் வயதில் கார்த்திகை மாதத்தில் அவளுடைய தந்தை இறந்து விடுவான். அவளுடைய ஐம்பதாம் வயதில் பங்குனி மாதத்தில் ;

47. [1] வரனுமே மரண மெய்தும் மங்கையு மன்ப தாண்டில்
திறமையாய்க் கன்னி மாதம் சேருவாள் காலன் பக்கல்
மருமமாய் இவள்பின் ஜன்மம் வரைகிருேம் அக்கு லத்தில்
பெரும்புதல் வருக்குப் புத்திரி பேணுவா ளிவளே என்ருேம்.

47. ஜாதகியின் கணவன் இறந்து விடுவான். இவளுடைய ஐம்பதாம் வயதில் புரட்டாசி மாதத்தில் அவள் மரணமடைவாள். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்ருேம். அதேகுலத்தில் தன்புத்திரனுக்கே புதல்வி யாகப் பிறப்பாள் என்ருேம்.

48. இன்னவள் யோகச் சேதி இயம்புவோம் ஜனனம் தொட்டு
அன்னவள் மரண மட்டும் அணுகாது தரித்தி ரங்கள்
பின்னையும் மூவெட் டாண்டின் மேலேதான் பிரபல யோகம்
தன்தந்தை ஆஸ்தி யாலும் தானவள் சீவிப் பாளாம்.

48. இவளுடைய யோகச் செய்திகளைச் சொல்லுகின்ருேம். இவள் பிறந்தது முதல் இறப்பு வரையில் தரித்திரங்கள் அடையாதவள். அவளு டைய இருபத்துநான்காம் வயதுக்கு மேல் பிரபலமான யோகம் கிட்டும். தன் தந்தையினுடைய ஆஸ்தியால் இவள் ஜீவித்து வருவாள்.

49. உதித்திடு காலம் தன்னில் உயர்குரு தசையி லேதான்
மதித்திடு ஆண்டு ஆறும் வரைகிருேம் பலனை யாங்கள்
சதியிலாத் துணைவர் விருத்தி சகோதரி சுபமு முண்டு
அதிதியே தந்தை வர்க்கம் அணுகிடும் சுபங்கள் தாமே.

[1] பௌத்ரியாகப் பிறவி.

49. இவளது ஜனனகாலத்தில் குருமகா தசையில் ஆறு வருடங்கள் மீதி யுள்ளன. அக்காலத்தின் பலனைச் சொல்லுகின்றோம். சகோதரா விருத்தி யுண்டு. சகோதரிக்கு மங்களங்களும் எற்படும். தன் தந்தை வர்க்கத் தாருக்குச் சுபகாரியங்கள் நிகழும். தேவியே!

50. குடும்பத்தில் சூத முண்டு கூடிடும் நினைத்த வெல்லாம்
அடவுடன் சல்லியம் நேரும் அதிககீர்த் திகளு மோங்கும்
சடலத்துக் கதிகத் துன்பம் சார்ந்தபின் நிவிர்த்தி யாகும்
வடவரை மகளே பின்பால் வரைகிறோம் விபா மாக.

50. தன்குடும்பத்தில் அசுபங்கள் நேரும். ஆனால் எண்ணிய காரியங்கள் நடக்கும். கடன் உபத்திரவம் எற்படும். கீர்த்திகள் அதிகமாகப் பெருகும். இவளுக்கு நோய் எற்பட்டுப் பிறகு தீர்ந்து போகும். வடக்கிலுள்ள மலை யரசின் புதல்வியே! விபரமாகப் பின் பாகத்தில் சொல்லுகின்றோம்.

51. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறோம் சிவந்த மேனி
தீதிலர்க் குணத்தா ளாகும் திருமக ளொப்ப தாகும்
சூதிலாள் பொறுமை சாலி சூட்சுமக் கருத்து முள்ளாள்
வேதனை எண்ணு ளாகும் வரன்மனம் போல வாழ்வள்.

51. ஜாதகியின் தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். சிவந்த மேனியள். கெட்ட குணங்களில்லாதவள். இலக்குமியைப் போன்றவள். கபடமில்லாதவள். பொறுமைசாலி. நுண்ணிய கருத்துள்ளவள். பிறருக் குத் தீங்குகளெண்ணாதவள். தன் கணவன் மனம் போல் வாழ்வாள்.

52. அவள்துணை தசம தாகும் அவைகளில் சிலவே சேதம்
நவனியில் ஆண்பால் காணாள் நாயகி பூர்வம் சொல்வேன்
பவமுள ஓதூர் தன்னில் பாவையும் கங்கை வம்சம்
இவளுமே சுகமாய் வாழ்ந்து ஏழைமேல் கிருபை கூர்ந்து ;

52. அவளுக்கு உடன் பிறந்தவர் பதின்மர். அவர்களில் சிலர் இறந்து விடுவார். சகோதரன் இல்லாதவள். அவளுடைய (ஜாதகியின் தாய்) முற்பிறவியைச் சொல்லுகின்றேன். செழிப்புள்ள ஓதூரில் வேளாள மரபில் தோன்றி, சுகமாக வாழ்ந்து வந்து, ஏழைகளின்மீது அன்பு கொண்டு ;

53. அறமன முடைய ளாகி அந்தகன் பக்கல் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தனள் இக்கு லத்தில்
மறுஜன்மம் காஞ்சி தன்னில் மாதுவு மிக்கு லத்தில்
உறைகுவா ளென்று சொன்னோம் உரைக்கிறோம் தந்தை பூர்வம்.

53. தருமம் செய்வதில் விருப்ப முள்ளவளாயிருந்து, இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இக்குலத்தில் பிறந்தாள். மறு பிறவி காஞ்சிபுரத்தில் இதே குலத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகியின் தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம்.

**54.** பிருதிவி மேல்பா லாகப் பிறந்தனன் புத்தர் வம்சம்
திருமகள் விலாசம் பூண்டு செய்நில மிதிக முண்டாய்
உறன்முறை மெச்ச வாழ்ந்து உதித்திடு மதலை உண்டாய்
மர்மமாய்த் தெய்வ பக்தி மனத்தினிலே கொண்டு மேதான் ;

54. காஞ்சிக்கு மேற்கில் புத்தர் மரபில் தோன்றினன். லட்சுமீகடாக்ஷம் பெற்று, விளைநிலங்களை அதிகமடைந்து, பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வந்து, புத்திரபாக்யம் பெற்று, தெய்வபக்தி பூண்டு ;

55. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனல் வரையப் பட்டு
ஞாலமேல் இக்கு லத்தில் நல்கினன் என்று சொன்னோம்
பாலகன் பின்ஜன் மத்தைப் பகருவோம் காசி தன்னில்
சீலமாய் இக்கு லத்தில் ஜனிப்பனு மென்று சொன்னோம்.

55. எமபுரம் அடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இதே குலத்தில் பிறந்தான் எனறு கூறுகின்றோம். அவனுடைய மறுபிறவி காசி க்ஷேத்திரத்தில், இதே குலத்தில் பிறப்பான் என்று கூறுகின்றோம்.

56. உதித்தவள் யோகச் சேதி உரைக்கின்றோம் விவரம் ரண்டில்
சதியிலாப் பூமி வீடு சதுஷ்பாதம் பணிகள் யாவும்
அதிதியே ஏழாயி ரம்பொன் அரைந்தன மிவளுக்கே தான்
அதிபதி பலன்க ளெல்லா மறைகின்றோம் விவரம் ரெண்டில்.

56. ஜாதகியுடைய மற்ற யோகச் செய்திகளை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். துன்பங்களில்லா பூமி, வீடு, கால்நடைகள் (ஆபரணங்கள்) இவைகளெல்லாம் சேர்ந்து ஏழாயிரம் பொன் அடைவாள் என்று கூறுகின்றோம். தாயே! கணவனுடைய பலன்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம்.

# ஜாதகம் 25.

1. பிறைநந்தி ராகு கன்னி புகர்தேளில் பரிதி மேரு
தரைமகன் காரி புந்தி தங்கிட மான தாகக்
குருசாடி கேது கெண்டை கூடிய கோளு நின்று
வ நவது ஜன்மம் வீணை வரைகுவீர் பலனைத் தானே.

1. சந்திரன் விருஷபத்திலும், ராகு கன்னியிலும், சுக்கிரன் விருச்சிகத்திலும், சூரியன் தனுசிலும், செவ்வாய் சனி புதன் மகரத்திலும், குரு கும்பத்திலும், கேது மீனத்திலும் இவ்விதம் நவக்கிரங்களிலிருந்து லக்கினம் மிதுனமாக இருந்தால் உரிய பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| கேது | | சந்திரன் | லக்கினம் |
| குரு | இராசி சக்கரம் | | |
| செவ்வாய் புதன் சனி | | | |
| சூரியன் | சுக்கிரன் | | ராகு |

2. சங்கரி கேட்கும் போது ஜயமுனி புகலு கின்ருர்
இங்கிவை ஆண்பால் ஜன்மம் இல்லமும் கீழ்மேல் வீதி
தங்கிடும் தென்பால் வாசல் ஷண்முகன் காளி கீழ்ப்பால்
சங்கரன் மேல்பால் தங்கும் அருகினில் சுனையு முண்டு.

2. என்று பார்வதிதேவி கேட்கும்போது, ஜயமுனிவர் கூறுகின்ருர். இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. சுப்பிரமண்யர் ஆலயமும் காளி கோயிலும் கிழக்கிலும், சிவபெருமான் ஆலயம் மேற்கிலும் பக்கத்தில் ஒரு சிறு ஊற்றும் இருக்கும்.

3. தென்திசை நந்தி யுண்டு செப்பிய அடையா ளத்துள்
அன்னவன் நவமாம் ஜன்மம் அருளுவான் செங்குந்த வம்சம்
இன்னவன் குடும்பச் சேதி இயம்புவோ மினி மேலாக
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

3. தெற்குத்திசையில் நந்திகேச்வரர் ஆலயமுள்ளது. இவ்வித அடையாளங்களுள்ள இடத்தில் ஜாதகன் செங்குந்த மரபில் தன் தந்தைக்கு ஒன்பதாம் பிறப்பாகப் பிறப்பான். அவனுடைய குடும்பச்செய்திகளை இனிக் கூறுவோம். உயர்ந்த கணவனை யடைந்த உத்தமியே! கேளுங்கள்.

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றுவோம் ஆண்பால் மூன்று
விந்தையாய்க் கன்னி ஒன்று விருத்தியாம் மறரோர் தீதாம்
அந்தவர் வேருய்ச் செல்வர் அவர்பலன் பின்பால் சொல்வேன்
இந்தவன் தந்தை சேதி இயம்புவோ மினி மேலாக.

4. ஜாதகனுடைய தகப்பனின் வர்க்கத்தாரைப்பற்றிச் சொல்லுவோம். சகோதரர்கள் மூவரும் சகோதரி ஒருத்தியும் தீர்க்காயுளுடனிருப்பர். ஒருவர் மரணமடைவார். சகோதரர்கள் வேருகச் சென்றுவிடுவார்கள். அவர்களுடைய பலனைப் பின்பாகத்தில் சொல்லுகின்ரேம். ஜாதகனுடைய தந்தையின் செய்திகளைக் கூறுகின்ரேம்.

5. மாந்தளிர் மேனி யாகும் வணிபங்கள் செய்வா னுகும்
ஏந்திழை மார்கள் மோகம் ஈகையும் கொஞ்ச முண்டு
கூர்ந்துமே வார்த்தை சொல்வன் குலமதிப் புடனே வாழ்வன்
தேர்ந்தோர்கள் உறவு கொள்ளான் கோபமும் சிறிது ஏற்பன்.

5. மாந்தளிர்போன்ற பளபளப்பான உடல். வர்த்தகம் செய்துவருவான். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். சிறிது கொடுக்கும் குணமும் உள்ளவன். ஆராய்ந்து நோக்கிப்பேசுபவன். தன பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். பெரியோர்கள் நட்பு இல்லாதவன். சிறிது கோபமடைவான்.

6. தரணிகள் சேர்ப்பா னுகும் பந்துவிற் குதவி செய்வன்
கரமதில் கோதுமை ரேகை கமலரே கையுமே உண்டு
திருமகள் விலாச மெய்தும் தீரமா மனத்த னுகும்
பெருமையும் புகழு மேற்பன் புகழ்ந்தோருக் குதவி செய்வான்.

6. பூமிகளை வாங்குவான். தன் சுற்றத்தாருக்கு உபகாரம் செய்வான். கையில் கோதுமைரேகையும் கமலரேகையும் இருக்கும். லக்ஷ்மீகடாட்சம் உள்ளவன். தைரியசாலி. கீர்த்தியும் புகழும் அடைவான். தன்னைத் தோத்திரம் செய்தவர்களுக்கு உபகாரி.

7. வித்தையும் அல்ப மாகும் விவேகியாம் வெளிம யக்கன்
சுத்தமு முடைய னுகும் சோம்பிடான் காரி யத்தில்
பத்தினிக் கிஷ்ட னுகும் பதரினில் செல்லா னுகும்
வெத்திவேல் பக்தி யைத்தான் விரும்புவான் வறுமை காணுன்.

7. சிறிதே கல்வியறிவுள்ளவன். விவேகி. வெளியோர்கள் மயங்கும்படி வாழ்க்கை நடத்துவான். சுத்தமானவன். காரியங்கள் செய்வதில் சோம்பலில்லாதவன். தன் மனைவிக்குப் பிரியனுவான். அல்ப காரியங்களுக்குச் செல்லாதவன். சுப்பிரமணியக் கடவுள்மீது பக்தியுள்ளவன். தரித்திரமில்லாதவன்.

8. இன்னவன் முன்ஜன் மத்தை இயம்புவோ மினி மேலாகத்
தென்திசை ஆழி தன்னில் ஜனித்தனன் மறை யோனுகப்
பொன்பொரு ளுடைய னுகிப் பேதையும் மதலை உண்டாய்த்
தன்னினத் தவரைக் காத்துச் சார்ந்தனன் கால னுடு.

8. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தென்சமுத்திரத்துக்கு அருகில் உள்ள ஊரில் அந்தண குலத்தவனாகப் பிறந்தான். செல்வங்களைப்பெற்று, மனைவி மக்களையடைந்து, தன் பந்துக்களை ஆதரித்து கடைசியில் இறந்தான.

குலம் தாழ்வாக ஆக.

9. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தன னென்று சொல்வோம்
பிருகுமே புகலு கின்றார் பூர்வத்தில் மறையோ னாக
உறைந்தவன் குலம்தாழ் வாக உதித்தகா ரணங்கள் சொல்வாய்
மறைகளை விரும்பா னாகி வந்தனன் குலம்தாழ் வாக.

9. மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகனின் தந்தை என்றோம். பிருகு முனிவர் சொல்லுகின்றார். இவன் முற்பிறவியில் அந்தணனாகப் பிறந்து, இப்பிறவியில் தாழ்ந்த குலத்தில் பிறந்த காரணங்களென்ன ? சொல்லுங்கள். வேதங்களைப் படிக்காமல் இருந்து வந்ததால் குலம் தாழ்வாக ஆகிவிட்டது.

10. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் மாஞ்சி வப்பன்
பன்னியே பேசு வானும் பாருகள் விருத்தி செய்வன்
பின்னமில் லாத தேகி பொய்மெய்யாய்ப் புகல்வா னாகும்.

10. இங்ஙனம் சொல்லப்பட்ட குணங்களையுடைய தந்தைக்கு ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவன். சிவந்த மேனியுள்ளவன். பன்னிப் பன்னிப் பேசுவான். பூமிகளைப் பெருக்குவான். ஊனமில்லாத தேகமுடையவன். பொய்யை உண்மைபோல் பேச வல்லவன்.

11. கல்விமான் கணக்கில் ஊகம் கசடர்க ளுறவு கொள்ளான்
இல்லைஎன் றுரைக்க மாட்டான் எதிரியை நாசம் செய்வான்
சொல்லிலே கபடு முண்டு சுற்றத்தார் மதிக்க வாழ்வன்
சல்லியம் கொள்ளா னாகும் தந்தைக்குச் சமமாய் வாழ்வன்.

11. கல்விமான். கணக்கில் தேர்ந்தவன். தீயவரோடு (முட்டாள்களுடன்) உறவு கொள்ளாதவன். யாசித்தவருக்கு இல்லை என்று சொல்லாதவன். விரோதிகளை நசிக்கச்செய்ய வல்லவன். பேச்சில் கபடன். பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்வான். கடன்கள் வாங்காதவன். தன் தந்தைக்குச் சமமான அந்தஸ்து உடையவன்.

12. கரமதில் சங்கு சக்கரம் கஞ்சமாம் ரேகை உண்டு
பறைபள்ளு உடைய னாகும் பணிந்தோரை ஆத ரிப்பன்
முருகர்தன் பக்தி கொள்வன் மூலச்சூ டுடைய னாகும்
தரித்தொழில் வணிபம் செய்வன் சங்கரி கேட்டி டாயே.

12. கையில் சங்கரேகை, சக்கரரேகை, பத்மரேகை முதலியன உள்ளவன். பள்ளுப்பறைகள் உடையவன். தன்னை வணங்கியவர்களைக் காப்பான். சுப்பிரமணியக் கடவுள்மீது பக்திகொள்ளுவான். மூலச்சூட்டுத் தேகமுடையவன். தரித்தொழில் செய்து வர்த்தகம் செய்வான். பார்வதிதேவியே ! கேளுங்கள்.

13. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோம் ஆண்பால் மூன்று
நவனியில் கன்னியவ் வாறு நாட்டுவோம் தீர்க்க மாகத்
தவசியே முன்னோன் சேதி சாற்றுவோம் பித்த மேனி
பவமன மில்லா னாகும் பலகலை உணர்வா னாகும்.

13. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைச் சொல்லுவோம். சகோதரர்கள் மூவரும் சகோதரிகள் மூவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். தவம் செய்பவரே! முன் பிறந்த சகோதரனைப் பற்றிச் சொல்லுகின்றோம். பித்த தேகமுள்ளவன். பாவச் செயல்கள் செய்ய மனமில்லாதவன். பல கலைகளைப் படித்து உணர்வான்.

14. ஊகவான் நுணுக்கம் தேர்வன் உண்மையை வெளிக்காட் டாதான்
பாகமாய்ப் பேச வல்லன் பதரினில் செல்லா னாகும்
ஆகம நுணுக்கம் தேர்வன் அரிவைகள் நேசம் கொள்வன
போகபாக் கியங்க ளேற்பன் பிதாமேலாய் வாழ்வா னாகும்.

14. ஊகமுள்ளவன். நுண்ணிய அறிவுள்ளவன். உண்மையை வெளியிடாதவன். கண்டித்துப் பேசுபவன். அல்பகாரியங்களுக்குப் போகாதவன். வேதாந்த ரகசியங்கள் அறிவான். பெண்களிடம் நட்புக்கொள்ளுவான். போகபாக்கியங்கள் உடையவன். தன் தகப்பனுக்கு மேன்மையாகவே வாழ்ந்து வருவான்.

15. பலவணி பங்கள் செய்வன பலஊரில் பூமி சேர்ப்பன்
சொலுமொழி இரண்டு முண்டு சுத்தம்போல் வேளிம யக்கம்
புலவன்போல் மொழிவா னாகும் புயபல முடைய னாகும்
கலகத்தைக் கூறு னாகும் கரமதில் பிரம்ம ரேகை.

15. பல வர்த்தகங்கள் செய்துவருவான். பல ஊர்களில் நிலம் வாங்குவான். இருவிதமாகப் பேசுபவன். சுத்தமாக இருப்பவன்போல ஊரார் மயங்கும்படி இருப்பான். புலவன் போல் பேசுபவன். பராக்கிரமசாலி. கலகங்கள் செய்யாதவன். கையில் பிரம்ம ரேகையுள்ளவன்.

16. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உறைப்போடு புளிப்பி லிச்சை
வண்டிவா கனமு மேற்பன் மாற்றானைச் சுகமே வெல்வன்
துண்டமாய்க் கூறு னாகும் தொடுவழக் கதனில் செல்லான்
பண்டுநாள் தனமும் பூமி பாலகன் விருத்தி செய்வன்.

16. சௌக்கியமாகச் சாப்பிடுவதில் பிரியமுள்ளவன். சாப்பாட்டில் புளிப்பு காரங்களில் இச்சையுடையவன். வண்டி முதலிய வாகன சௌக்கியங்கள் அடைவான். எதிரிகளை வெல்லுவான். வேறுபடும்படி பேசாதவன். வீண் வழக்குகளுக்குப் போகாதவன். வெகு நாட்களாகவுள்ள பிதுரார்ஜித சொத்துக்களைப் பெருக்குவான்.

17. பாரியும் ஒன்றே யாகும் பாவையும் மேல்பால் நேரும்
தீரமாய்ச் சுதராண் ரண்டு செல்விமார் மூவ ராவர்
கூறின ஐந்தும் தீர்க்கம் கூடாது மூன்று என்றோம்
மாறனோ டொத்து வாழ்வள் வயதுமே தீர்க்க மெய்தும்.

17. மனைவியும் ஒருத்தியே என்றோம். அவளும் மேற்குத்திசையிலிருந்து வருவாள். இரு புத்திரர்கள் தோன்றுவார். பெண்கள் மூவர் பிறப்பார்கள். இவர்கள் ஐவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மூன்று குழந்தைகள் பிறந்து இறக்கும். தன் கணவனுடன் ஒத்து வாழ்ந்திருப்பாள். தீர்க்கமான வயதுள்ளவள்.

18. இன்னமும் விபர மாக இயம்புவோம் பின்பா கத்தில
பின்பாகம் மற்றோர் சேதி பேசுவோம் தாயே யாங்கள்
மன்னவன மணத்தின் காலம் வரைகிறோம் பத்தோன் பாண்டில்
கன்னிகை உள்ளூர் கீழ்ப்பால் கலப்பளாம் குணத்தைச் சொல்
[வேன்.

18. இன்னமும் விபரமாகப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம். தாயே! ஜாதகன் திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய பத்தொன்பதாம் வயதில் உள்ளூரிலேயே கிழக்குப் பக்கத்திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம்.

19. அன்னம்போல் வடிவு மொக்கும் அரிமனே ஒப்ப தாகும்
அனனியர் குற்றம் சொல்லாள் அடாவடி கூறு ளாகும்
அன்னமும் அன்பாய் ஈவள் ஆளன்தன் மனதுக் கேத்தோள்
அன்னவள் யோக சாலி அதிதிபோல் வார்த்தை உண்டு.

19. அன்னம் போல் அழகுள்ளவள். இலக்குமி போன்றவள். பிறர் மீது குற்றம் சொல்லாதவள். அடாவடியாகப் பேசாதவள். அன்புடன் அன்னமளிப்பாள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றபடி நடப்பவள். யோகசாலி. பெரியோர்களைப்போலப் பேசுபவள்.

20. பால்பாக்கிய முடைய ளாகும் பணிகளு மதிகம் சேர்ப்பள்
சீலியாம் விரத மேற்பள் சனபந்து வாத ரிப்பள்
காலத்தை அறிந்து ரைப்பள் காதலி நடக்கை நன்மை
ஆலத்தை உண்டோன் தேவி அவளுக்கு வயது தீர்க்கம்.

20. பால் பாக்கிய முள்ளவள். ஆபரணங்களை அதிகமாக அடைவாள். நல்லொழுக்க முடையவள். நோன்புகள் ஏற்று நடப்பாள். பந்துஜனங்களை ஆதரித்து நடப்பாள். வருங்காலத்தை அறிந்து சொல்லுபவள். நன்னடத்தை யுள்ளவள். விஷத்தையுண்ட நீலகண்டனின் தேவியே! அவள் தீர்க்கமான வயதுள்ளவள்.

21. சுதர்களும் இருநான் காகத் தோன்றிடும் சிலவே சேதம்
சதமுடன் ஆண்பால் ரண்டு சத்தியும் அவ்வாறு தீர்க்கம்
முதல்ரண்டு ஐந்து எட்டு மேவாது என்று சொல்வோம்
எதுவிதக் குற்றத் தாலே இயம்பினீர் அந்தச் சங்கை.

21. எட்டுக் குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் சிலர் நிலையாமல் அழிந்துவிடுவர். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். முதலில் பிறக்கும் இரு குழந்தைகளும் ஐந்தாம் குழந்தையும் எட்டாவது குழந்தையும் நிலையார். எந்தக் குற்றத்தால் அந்தத்தோஷம் ஏற்பட்டது? சொல்லுங்கள்.

### புத்திர தோஷத்துக்குரிய க்ரக நிலே.

22. அஞ்சவன் ஆறில் சேர அஞ்சிடம் காரி பார்க்கத்
துஞ்சினுர் முதலில் ரண்டு சுதர்களு மென்று சொல்வோம்
தஞ்சமா யவன்முன் ஜன்மம் சாற்றுவோம் தவளை தென்பால்
மிஞ்சின வூரி லேதான் விளங்கினுன் வைச்ய சேயாய்.

22. ஐந்தாமிடத்துக்குரிய சுக்கிரன் ஆருமிடத்தில் இருப்பதாலும், ஐந்தாமிடத்தைச் சனி பார்ப்பதாலும், முதல் குழந்தையிரண்டும் இறந்து விடும் என்று கூறுவோம். அவனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்ருேம். தவளேச்வரத்துக்குத் தெற்கில் பெரிய ஊரில் வசிய குலத்தில் பிறந்தான்.

### அந்தண நண்பன் மனேவியுடன் சேர்ந்தது.

23. பாரியும் மதலே யுண்டாய்ப் பலவித வணிபம் செய்து
தீரனும் வாழு நாளில் செய்ததோர் வினையைக் கேண்மோ
ஆரியர் நேசங் கொண்டு அவன்மனை தன்மேல் மோகம்
மாரனும் போகந் துய்த்தான் மருவிற்று அதுவோர் தோடம்.

23. மனேவி மக்களே யடைந்து, பலவிதமான வர்த்தகம் செய்து வந்து, வாழ்ந்துவரும்போது ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். அந்தணர்களிடம் நட்புக்கொண்டு அவருடைய மனேவிமீது மையல் கொண்டு அவளுடன் இன்பம் அனுபவித்தான். அஃது ஒரு தோஷமாயிற்று.

### கோவிலில் கைம்பெண்ணுடன் சேர்ந்தது.

24. விதவையை யால யத்தில் வித்தகன் போகந் துய்த்தான்
அதுவொரு தோட மாச்சு அந்திய காலந் தன்னில்
சுதர்களாண் மரித்து மேதான் துன்பமா மனமே யாகி
மதிபிறை யணிந்தோன் தொண்டு மறைமனம் வைத்து மேதான் ;

24. கோவிலில் ஒரு கைம்பெண்ணுடன் இன்பம் அனுபவித்தான். அஃது ஒரு தோஷமாயிற்று. அவன் தன் கடைசிக்காலத்தில் புத்ரர்கள் இறந்து கஷ்டமடைந்த மனத்துடன் பிறைச்சந்திரனே முடியில் தரித்த சிவபெருமான் தொண்டுகள் செய்து அவர் மீது பக்தி கொண்டு ;

25. மறலியின் பதிக்குப் புக்கு மறையவன் வரையப் பட்டு
அறுமுகன் அடிமை வர்க்கம் அருளுவா னிந்தப் பாலன்
உறைந்திடும் முன்னூழ்த் தோடம் உதித்தசேய் முதலில் நட்டம்
கரிமத வானேப் பெற்ற காதலி கேட்டி டாயே.

25. எமபுரம் அடைந்து மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு ஆறுமுகக் கடவுளின் அடிமை வர்க்கத்தினராகிய (செங்குந்தமரபில்) இந்த ஜாதகன் பிறந்தான். முற்பிறவியில் செய்த தோஷத்தால் முதலில் பிறந்த குழந்தை இறந்து விடும். கரிய யானேயின் முகத்தையுடைய விநயகரைப் பெற்ற தேவியே ! கேளும்.

26. வந்தவன் யோகச் சேதி யறைகின்றோ மினிமே லாகச்
சந்திரன் பிறை போல் யோகம் தங்கிடு மாறு ருண்டும்
விந்தையாய்ச் செட்டு வோங்கல் மேன்மையாய்ப் புகழு முண்டு
பந்துவை யாத ரித்தல் பலவித லாபம் நேசம்.

26. ஜாதகனுடைய யோகச் செய்தியை இனிக் கூறுகின்றோம். முப்பத்தாறு வருஷங்கள் பிறைச் சந்திரன்போல் யோகம் விருத்தியாகும். வர்த்தகம் பெருகும். மேன்மையான புகழுடைவான். தன் சுற்றத்தாரைக் காப்பாற்றுவான். பலவிதங்களில் நட்பும் லாபமும் விருத்தியாகும்.

27. ஆறஞ்சு ஆண்டு தன்னில் அவனில்லம் வேற தாகும்
பார்முதல் பிரித லாகும் பாகமும் மூன்றே யாகும்
கூறுவோம் பின்பா கத்தில் குருதசை பலன்கள் அற்பம்
மாறிடுஞ் செல்வ மென்றோம் வரவுக்குச் செலவ னேகம்.

27. ஜாதகனுடைய முப்பதாம் வயதில் அவனுடைய வீடு வேறாகும். பூமிகளும் பிரிக்கப்படும். மூன்று பாகங்களாகப் பிரிக்கப்படும். பிற்பாகத்தில் விபரமாகக் கூறுவோம். குருமகாதசையில் பலன்கள் குறையும். செல்வங்கள் குறையும். வரவிற்குமேல் செலவு அதிகமாகும்.

28. பலவித வழக்கு நேரும் பாக்கியஞ் செலவு முண்டு
குலமதிப் பில்லா வாழ்வன் கூடாது நினைத்த வெல்லாம்
நிலமது விரய மாகும் நிதமன சஞ்ச லங்கள்
மலையிறை மகளே பின்பால் வழுத்துவோம் விவர மாக.

28. பலவிதங்களில் வழக்குகள் ஏற்படும். செல்வச் செலவும் உண்டு. தன் பந்துஜனங்களால் மதிப்பு இல்லாமல் வாழ்ந்துவருவான். நினைத்த காரியங்கள் நடவா. நிலங்கள் விரயமாகும் மனத்தில் சஞ்சலங்கள் உண்டாகும். மலையரசனின் மகளே ! பிற்பாகத்தில் விபரம் கூறுவோம்.

29. தென்முனி புகலு கின்றார் செப்பினீர் சேட்டன் சேதி
அன்னவன் தனக்கெவ் வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்
மன்னவன் வறுமை காணான் வளர்பிறை போலே யோகம்
கன்னியா ராசி யாகும் கருதாடி நாளே யாகும்.

29. அகத்திய முனிவர் கூறுகின்றார். முதல் குழந்தையின் செய்தியைக் கூறுங்கள். அவனுக்கு எவ்வாறு யோகங்கள் இருக்கும் என்று சொல்லுங்கள். அவன் தரித்திர மில்லாதவன். வளர் பிறைச்சந்திரன்போல் யோகம். கன்னியாராசியில் . . . . . நட்சத்திரத்தில் பிறந்தவன்.

30. வறுமையெப் போதுங் காணான் மாதுரு குணத்தைச் சொல்வோம்
திருகிலாக் குணத்தா னாகும் தீங்கதை யெவர்க்கு மெண்ணான்
அரிவையும் வந்த பின்பு அம்புலி போலே யோகம்
பெருமையும் புகழு மெய்தும் புண்ணிய மனத்த னாகும்.

30. தரித்திரம் எப்போதும் இல்லாதவன். தாயின் குணத்தைச் சொல்லு வோம். கெட்ட குணங்களில்லாதவள். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவள். இவனை மணந்த பின்பு இவளுடைய கணவனுக்குச் சந்திரன்போல் யோகம் விருத்தியாகும். பெருமையும் புகழும் உண்டாகும். புண்ணிய மன முள்ளவள்.

31. இல்லமு முள்ளூ ராகும் இவள்துணை யாண்பா லொன்று
வல்லிமா ரிருவர் தீர்க்கம் மடிவுண்டு மற்ற வெல்லாம்
அல்லலெப் போதுங் காணுள் அடாவடி கூறு ளாகும்
நல்லவ ளாகி வாழ்வள் நல்கிடும் பித்த வாயு.

31. அவள் உள்ளூரிலிருந்தே வருவாள். அவளுடைய உடன் பிறந்த வர்களில் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவரும் நீண்ட ஆயுளுள்ள வர்கள். மற்றவையெல்லாம் தரிக்கா. எப்பொழுதும் துன்பங்களில்லாத வள். அடாவடியாகப் பேசாதவள். நல்லவள் என்ற பெயருடன் வாழ்ந்து வருவாள். பித்தவாயு உள்ள சரீர முடையவள்.

32. முகமது வசிய முண்டு மொழிகின்றே மிவள்முன் ஜன்மம்
பகைநீக்கும் பரங்குன் றத்தில் பிறந்தனள் கங்கை சேயாய்
அகமதில் வருவோ ருக்கு அன்னமுந் தாக மீந்து
சகமதில் நல்லோ ளாகிச் சென்றனள் கால னூடு.

32. வசீகரமான முகமுள்ளவள். இவளுடைய முற்பிறவியைச் சொல்லு கின்றோம். தீங்குகளை விலக்குகின்ற திருப்பரங்குன்றத்தில் வேளாள குலத் தவளாகப் பிறந்து, தன் வீடு தேடி வந்தவர்களுக்கு அன்னமும் நீரும் அளித்து, உலகில் நல்லவளாக வாழ்ந்து பிறகு இறந்தாள்.

33. கஞ்சனுல் வரையப் பட்டுக் கலந்தன ளிக்கு லத்தில்
வஞ்சியும் வறுமை காணு ளறைகின்றே மிவள்பின் ஜன்மம்
தஞ்சையில் சேடர் வம்சம் ஜனித்துமே சுகமுண் டாகி
மிஞ்சிய செல்வம் பெற்று வித்தகி வாழ்வா ளாகும்.

33. மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு இக்குலத்தில் பிறந்தாள். தரித் திரம் இல்லாதவள். இவளுடைய மறு பிறவியைக் கூறுகின்றோம் தஞ்சா வூரில் செம்படவர் குலத்தில் (பாம்பாட்டி) பிறந்து, சுகமுள்ளவளாகி, மிகுதி யான பொருளைப் பெற்று வாழ்ந்து வருவாள்.

34. இருபது வொன்ப தாண்டில் எய்திடு மன்னை கண்டம்
அரவுதன் தசையி லேதான் அதிதிதன் புக்தி கேது
திருகிலா விருபான் மூன்றில் செப்வோந் தந்தை கண்டம்
கரியவன் புக்தி யாகும் கார்க்கோடன் தசையாந் தாயே.

34. ஜாதகனின் இருபத்தொன்பதாம் வயதில் அவனுடைய தாய்க்குக் கண்டம் நேரும். அக்காலத்தில் ராகுமகாதசையில் கேதுவின் புக்தி நடைபெறும். ஜாதகனின் இருபத்துமூன்றும் வயதில் தந்தை மரண மடைவான். அப்போது ராகுமகாதசையில் சனி புக்தி நடைபெறும்.

35. மறுஜன்மம் வான்மி யூரில் வடுகர்தங் குலமு தித்து
அரசரால் தொழிலும் பெற்று அவனுமே வாழ்வா னாகும்
திருமகன் றனக்குச் சொல்வோம் சட்டியாம் பூர்த்தி யாகும்
அறுபது வாண்டு தன்னில் அனுஷிய விடப மாதம் ;

35. தந்தையின் மறுபிறவி திருவான்மியூரில் வன்னிய குலத்தில் பிறந்து, அரசாங்க உத்தியோகம் ஏற்று, அவன் வாழ்ந்து வருவான். ஜாதகனுக்கு அறுபதாம் வயதில் வைகாசி மாதத்தில் ;

36. குறைபக்கஞ் சட்டி தன்னில் குழவியி னுடலம் வாடும்
பிருகுமே தடுத்துச் சொல்வார் பிறைதிசைப் பூர்வ காலம்
உறையாதோ மார கங்கள் ஒன்பதில் பொன்னோன் தங்கத்
திருமகன் வயது தீர்க்கம் செப்பின மொழிகுன் றுவே.

36. கிருஷ்ண பட்சம் சஷ்டி திதியில் ஜாதகனின் மரணம் ஏற்படும். பிருகு முனிவர் தடுத்துக் சொல்லுகிறார். சந்திரதசை முதல் பாகத்தில் மாரகங்கள் ஏற்படாவோ என்றார். ஒன்பதாம் இடத்தில் குரு இருப்பதால் அவனுக்கு நீண்ட ஆயுள் உண்டு. சொன்ன சொற்கள் தவறு.

37. பின்ஜன்மம் விரிஞ்சி தன்னில் பிறப்பனுஞ் சைவச் சேயாய்ப்
பொன்பூமி யுடைய னாகிப் புகழ்ச்சியாய் வாழ்வா னாகும்
மன்னனுஞ் ஜன்ன காலம் ....நாள் முதல்பா தத்தில்
உன்னத மதியின் சக்ரம் உறைந்திடும் நவம தாண்டும் ;

37. மறு பிறவி விரிஞ்சி நாட்டில் சைவ குலத்தவனாகப் பிறப்பான். பொன், பூமி முதலியன உடையவனாகிப் புகழுடன் வாழ்ந்து வருவான். அவனுடைய ஜனன காலத்தில் ரோகிணி நட்சத்திரம் முதல் பாதம். சந்திர மகா தசையில் ஒன்பது ஆண்டுகளும் ;

38. திங்களுந் தசமே யாகும் செப்புவோம் பலனை யாங்கள்
பொங்குமாங் குடும்ப மாகும் பூமிபொன் சேர்த லுண்டு
அங்கவன் துணைசு பங்கள் அதிகமாய்ச் செட்டு வோங்கல்
தங்கிடுந் தாயே நோயுஞ் சாற்றுவோம் பின்பால் சேதி.

38. பத்து மாதங்களுமாம். அக்காலத்திய பலனைச் சொல்லுகின்றோம். செழிப்புள்ள குடும்பம் ஏற்படும். பூமி பொன் முதலியன பெருகும். உடன் பிறந்தவர்களுக்கு நன்மையும் வர்த்தகப் பெருக்கமும் இருக்கும். தாய்க்கு ரோகம் ஏற்படும். மற்றவை பின் பாகத்தில்.

## ஜாதகம் 26.

(ஜாதகம் நெ. 30 பார்க்க)

1. மதிசனி மான தாக மறைசாடி கேது மீனம்
புதன்ராகு கன்னி யாகப் புகர்சீயம் பரிதி கோலாம்
பதியது வீணை யாகப் பார்மகன் மேரு வாக
அதுபலன் புகலு மென்று அம்பிகை கேட்க லுற்றாள்.

1. சந்திரன் சனி மகரத்திலும், குரு கும்பத்திலும், கேது மீனத்திலும், புதன் ராகு கன்னியிலும், சுக்கிரன் சிம்மத்திலும், சூரியன் துலாத்திலும், செவ்வாய் தனுசிலும் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால் ஏற்படும் பலன் எவ்வாறு, என்று பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| கேது | | | லக்கினம் |
| குரு | இராசி சக்கரம் | | |
| சந்திரன் சனி | | | சுக்கிரன் |
| செவ்வாய் | | சூரியன் | புதன் ராகு |

2. பிருகுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
வருமில்லம் கீழ்மேல் வீதி வாசலும் வடக்குப் பார்வை
திருமாலின் கோஷ்டம் கீழ்ப்பால் தேவியும் அதற்குக் கீழ்ப்பால்
பெருநதி உத்திர மாகும் பூதவா கனத்தாள் மேற்கில் ;

2. பிருகு முனிவர் கூறுகின்றார். பிறப்பது ஆண் ஜன்மம். பிறக்கும் வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. கிழக்கில் திருமாலின் ஆலயமும் அதற்குக் கிழக்கில் அம்மன் கோயிலும் வடக்கில் பெரிய ஓர் ஆறும் பூதத்தை வாகனமாகக் கொண்ட காளி கோயில் மேற்கிலும் ;

3. இத்தகை அடையா ளத்துள் இலகிய சிறுவூர் தன்னில்
வித்தக ஊைந்தாம் ஜன்மம் விளங்குவான் சூத்திர னாகப்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மன் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள ஒரு சிற்றூரில் ஜாதகன் சூத்திரவமிசத்தில் தன் தந்தைக்கு ஐந்தாம் பிறப்பாகப் பிறப்பான். அவனைப் பெற்ற தாய் தந்தை மனைவி புத்திரர் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சரசமாய் வார்த்தை உண்டு
தன்மனம் கபடு மில்லான் சந்தேக மனத்த னாகும்
தந்தமும் தரள மொக்கும் தரணிகள் பலவூர் சேர்ப்பன்
தந்தைக்கு மேலாய் வாழ்வன் சல்லியம் கொள்ளா னாகும்.

4. ஜாதகனின் தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றேன். சரசமாகப் பேசுபவன். கபடமில்லாத மனத்தன். சந்தேகமுள்ள மனத்தினன். முத்துக்களைப்போன்ற பற்களை யுடையவன். பல ஊர்களில் நிலங்கள் வாங்குவான். தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான். கடன்கள் படாதவன்.

5. மால்நிறம் தனுசு ராசி மாந்தலை நாளும் தோன்றும்
காலத்தை அறிந்து ரைப்பன் காலாட்க ளுடைய னாகும்
வேல்விழி மார்கள் மோகன் மேதினில் புகழு மேற்பன்
ஆலம்போல் பகைவ ருக்கு அவனுமே கருட னவன்.

5. கரிய நிறமுள்ளவன். தனுராசியில் மிருகசிரோ நட்சத்திரத்தில் பிறந்தவன். வருங்காலத்தை யறிந்து சொல்லக் கூடியவன். ஏவலாட்கள் உள்ளவன். வேலைப் போன்ற விழிகளையுடைய பெண்கள்மீது மையலுள்ளவன். கீர்த்தியுள்ளவன். பகைவராகிய சர்ப்பத்துக்கு இவன் கருடன் போன்றவன்.

6. கரமதில் சங்கு சக்கரம் கமலரே கையுமே உண்டு
உறன்முறை மதிக்க வாழ்வன் உள்மனம் கபடு கொஞ்சம்
பெருமையாய்ச் செட்டுச் செய்வன் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்
மருவிடும் பித்த வாயு வதிட்டரும் தடுத்துச் சொல்வார்.

6. கையில் சங்கரேகை, சக்கரரேகை, கமலரேகை உள்ளன. பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். சிறிது கபடமான மனத்தன். பெருமை யடையும்படியான வர்த்தகம் செய்து வருவான். தன்னைத் தோத்திரம் செய்தவரைக் காப்பான். பித்தவாயு உள்ள சரீரமுடையவன். வசிஷ்ட முனிவர் தடுத்துக் கூறுகின்றார்.

7. எப்படித் தந்தை என்றீர் இரவியும் அஞ்சில் நிற்கச்
செப்புவீர் முனியே நீர்தாம் திருமணம் செய்யாத் தந்தை
மெய்ப்புடன் வடுக னென்றோம் வேசிமார் தமக்குக் கல்வி
கற்பிக்கும் குலமாம் என்றோம் கழறுவோம் அன்னை சேதி.

7. ஜாதகனுக்குத் தகப்பன் என்று எப்படிக் கூறினீர்கள் ? சூரியன் ஐந்தாமிடத்தில் இருப்பதால் எப்படி ஏற்படும் என்று சொல்லுங்கள், முனிவரே ! திருமணம் ஆகாத தந்தை வன்னிய குலத்தவன் என்றோம். தாசிகளுக்கு நாட்டியம் கற்றுக் கொடுக்கும் நட்டுவனார் குடும்பம் என்றோம். தாயினுடைய செய்தியைச் சொல்லுகின்றோம்.

8. மாந்தளிர் மேனி யாகும் மர்மமில் லாதா ளென்றோம்
கூர்ந்துமே வார்த்தை சொல்வள் கொடுமையை யெவர்க்கு [மெண்ணாள்
காந்தம்போல் புத்தி யுண்டு கருதிடாள் கட்டு வார்த்தை
சோர்ந்தோர்க்கு அன்ன மீவள் சீலம்போல் குணத்தா ளாகும்.

8. மாந்தளிர் போன்ற மென்மையான சரீரமுள்ளவள். இரகசியம் இல்லாதவள். நன்ருகக் கவனித்து அறிந்து பேசுபவள். பிறருக்குத் தீங்கு செய்ய நினையாதவள். வசீகரிக்கும் புத்தியுள்ளவள். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவள். பசித்து வந்தவர்கட்கு அன்னமளிப்பாள். நல்லொழுக்கமுள்ள குணத்தள்.

9. அன்னம்போல் வடிவு மொக்கும் அல்பபுத் திகளு மில்லாள்
அன்னியர் குற்றம் சொல்லாள் ஆளனுக் கினிய ளாகும்
அன்னவள் மணங்க ளில்லாள் அவனியில் நிந்தை ஏற்பள்
அன்னமு மன்பாய் ஈவள் அறமதி லிச்சை உண்டு.

9. அன்னத்தைப் போன்ற வடிவழகி. அற்பபுத்திகள் இல்லாதவள். பிறர்மீது குற்றம் சொல்லாதவள். கணவனுக்குப் பிரியமானவள். மணம் ஆகாதவள். உலகில் அபவாதம் அடைவாள். அன்புடன் அன்னமளிப்பாள். தருமஞ் செய்வதில் பிரியமுள்ளவள்.

10. பந்துவு மதிக்க வாழ்வள் பால்தொழில் புரிவா ளாகும்
தன்துணை ஆண்பால் மூன்று தையலர் இருவ ராகும்
அந்தஆண் அலைச்ச லுள்ளான் அலைகடல் துரும்பு போலே
பிந்திய காலம் தன்னில் பேசுவோம் விபர மாக.

10. தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பாள். பால் தொழில் செய்து வருவாள். உடன் பிறந்தவர்களில் சகோதரர் மூவரும் சகோதரிகள் இருவருமாவர். சகோதரன் சமுத்திரத்தின் அலையின்மேல் உள்ள துரும்பைப் போல் துன்பமுடையவன். அந்த விபரங்களைப் பின்பாகத்தில் சொல்லுகின்ருேம்.

11. பாலகன் நிறங்கு ணத்தைப் பகருவோ மினி மேலாகச்
சீலம்போல் வெளிம யக்கன் சிலேடையாய் வார்த்தை உண்டு
ஞாலங்கள் விருத்தி செய்வன் நாற்காலி பலித முண்டு
சோலைகள் துறவு செய்வன் சோம்பிடான் காரி யத்தில்.

11. இனி, ஜாதகனுடைய நிறம், குணம் இவைகளை இனிக் கூறுவோம். நல்லொழுக்கமுள்ளவன்போல் பிறர் நினைக்கும்படி இருப்பான். இரு பொருள் படும்படி பேசுவான். பூமிகளைப் பெருக்குவான். கால்நடைகள் விருத்தியாகும். தோட்டம், துறவுகள் ஏற்படுத்துவான். காரியங்கள் செய்வதில் சோம்ப லில்லாதவன்.

12. கீதமேல் காரிய ளுகும் கௌவ குடும்பர மேற்பன்
சாதிப்பான் சிலது சங்கை சந்தேக மனத்த ளுகும்
சூதுகள் சிலர்க்குச் செய்வன் சோர்வோரை ஆத ரிப்பன்
பத்தினிக் கிட்ட ளுகும் பலசெட்டுச் செய்வா ளுகும்.

12. சங்கீதத்தில் பிரியமுள்ளவன். கௌரவமான குடும்பமுள்ளவன். சந்தேகத்தைத் தீர்த்து வைப்பான். சந்தேகமனமுள்ளவன். சிலருக்குச் சூதான காரியங்கள் செய்வான். எடுத்த காரியத்தை முடிக்கவல்லவன். நல்வினை உள்ளவன். கணக்கில் நிபுணனுக விருப்பான்.

13. வித்தையு மிரண்டு கற்பன் வேந்தர்க ளிட்டங் கொள்வன்
புத்தியில் பெரியோ ளுகும் பொய்யது வழுத்தா நெஞ்சம்
சுத்தத்தார் மெச்ச வாழ்வான் சோர்வோரை யாத ரிப்பன்
பத்தினிக் கிட்ட ளுகும் பலசெட்டுச் செய்வா ளுகும்.

13. இருவிதமான கல்வி கற்பான். அரசர்களின் பிரியம் உள்ளவன். பெரியோரைப்போன்ற (புத்தி) அறிவுள்ளவன். பொய் பேசாதவன். தன் பந்துஜனங்கள் போற்றும்படி வாழ்ந்து வருவான். துன்பமடைந்தவர்களை ஆதரிப்பான். மனைவியிடம் பிரியமுள்ளவன். பல வர்த்தகங்கள் செய்து வருவான்.

14. இன்னவன் செங்கை தன்னில் இலகிடும் கமல ரேகை
மன்னர்பால் செட்டுச் செய்வன் மாற்றானை லகுவில் வெல்வன்
சொன்னசொல் சுருக்க மாகும் துணைவரை ஆத ரிப்பன்
பின்னமில் லாத தேகி புகலுமுன் கோபம் கொஞ்சம்.

14. இவனுடைய கையில் கமலரேகை இருக்கும். அரசரிடம் உத்தியோகம் பார்த்து வருவான். எதிரியைச் சுலமாக ஜயிப்பான். சுருக்கமாகப் பேசுபவன். தன் சகோதரர்களை ஆதரிப்பான். ஊனமில்லாத சரீர முள்ளவன். சொல்லுவதற்குமுன் கோபம் கொள்ளுவான்.

15. தன்துணை ஆண்பால் தோடம் சத்திமார் நால்வர் தீர்க்கம்
என்னகா ரணத்தி ளுலே இவன்துணை ஆண்பால் தோடம்
துன்மையாய்ப் புகரு மூன்றில் தோன்றின பலத்தால் சொன்ளுேம்
கன்னியில் கடையோள் தானும் கணவனை விட்டு நீங்கி ;

15. ஜாதகனுக்குச் சகோதரர் இல்லை. சகோதரிகள் நால்வர் தீர்க்கமாயிருப்பார்கள். எக் காரணத்திளுல் ஜாதனுக்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது ? சுக்கிரன் மூன்ருமிடமாகிய சிம்மத்தில் இருப்பதால் அப்படிக் கூறிளுேம். சகோதரிகளில் கடைசியில் பிறந்தவள் தன் கணவனை விட்டுப் பிரிந்து ;

16. ..................... .....................
பரவச முடைய ளாகும் பாவையும் யோக சாலி
திருமக ளொப்ப தாகும் செப்புவோம் பின்பால் சேதி
பெருவயி ற்ேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

16. ............................................ பரவசமுடையவள். அவளும் யோகசாலி. இலக்குமி போன்றவள். பிற்பாதியில் விவரங்கள் சொல்லுகின்ற்ேம். விளுயகனைப் பெற்ற புண்ணியவதியே ! கேளுங்கள்.

17. மைந்தனின் மணத்தின் காலம் வறைகிற்ேம் ஈரெட் டாண்டில்
கன்னிகை வடமேல் திக்கில் கலப்பளாம் குணத்தைச் சொல்வேன்
செந்திரு மகளை ஒப்பாள் சிறுத்தவர்க் குதவி செய்வள்
தந்திர வார்த்தை சொல்வள் சதிசெய்யா மனத்த ளாகும்.

17. ஜாதகனின் திருமணக் காலத்தைக் சொல்லுகின்ளேம். பதினாறும் வயதில் வடமேற்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்ளேம். இலக்குமி போல் அழகுள்ளவள். துன்பமடைந்தவர்கட்கு உபகாரம் செய்வாள். தந்திரமாகப் பேசுவாள். தீங்குகள் செய்ய எண்ணாதவள்.

18. பால்பாக்ய முடைய ளாகும் பர்த்தாவுக் கினிய ளாகும்
சீலியும் வந்த பின்பு செல்வங்கள் பெருக்க முண்டு
ஞாலமேல் நல்லோ ளாவள் நற்புத்தி யூக சாலி
காலத்தை அறிந்து ரைப்பள் காதலி கேட்டி டாயே.

18. புத்திரபாக்கிய முள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். நல்லொழுக்கத்தையுடைய அம்மனைவி வந்த பிறகு செல்வங்கள் அதிகரிக்கும். உலகத்தில் நல்லவளாக இருப்பாள். நல்ல அறிவுள்ளவள். யூகசாலி. வருங் காலத்தை அறிந்து சொல்லக் கூடியவள். தாயே ! கேளுங்கள்.

புத்திர தோஷ கிரக நிலை.

19. புத்திரர் விருத்தி தன்னைப் புகலுவோம் எழுவர் தோன்றும்
சுத்தமாய் ஆண்பால் ரண்டு தோகையர் மூன்று தீர்க்கம்
செத்திடும் முதலில் ரண்டு செப்புவீர் அந்தச் சங்கை
குத்தமாய்ப் பானு அஞ்சில் குலவியே நீச்ச மாக ;

19. இவனுடைய புத்திர பாக்கியத்தைக் கூறுகின்ளேம். எழு குழந்தைகள் தோன்றும். இரு புத்திரர்களும், மூன்று புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். முதலில் தோன்றும் இரு குழந்தைகள் இறந்துவிடும். அந்தச் சந்தேகத்தைச் சொல்லுங்கள். சூரியன் ஐந்தாம் இடத்தில் நீசனாக ;

20. இருப்பதால் தோட மெய்தும் இவனுடைப் பூர்வம் கேளாய்த்
திருப்பரங் குன்றம் தன்னில் ஜனித்தனன் வன்னிய சேயாய்
மறையவர் தொண்டு செய்து மனைவிமைந் தருமுண் டாகித்
தரையினால் சீவித் தேதான் சென்றனன் கால னாடு.

20. இருப்பதால் தோஷமேற்படும். இவனுடைய முற்பிறவியைக் கேளுங்கள். திருப்பரங்குன்றத்தில் வன்னிய குலத்தில் பிறந்து, அந்தணர்கட்குத் தொண்டு செய்து, மனைவி மக்களையடைந்து, பயிர்த்தொழில் செய்து, ஜீவித்து வந்து இறந்தான்.

21. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனிப்பனு மிந்தப் பாலன்
திருமகன் யோகம் தன்னைச் செப்புவோ மினி மேலாகத்
தரையது விருத்தி செய்வன் தனமது பெருக்க முண்டு
பறைபள்ளு முடைய னாகும் பலருக்கு நல்லோ னவன்.

21. மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய யோகங்களைப்பற்றி இனிக் கூறுகின்ளேம். நிலங்களைப் பெருக்குவான். செல்வங்கள் அதிகரிக்கும். பள்ளுப்பறையர்கள் உடையவன். பல பேருக்கு நல்லவனாக இருப்பான்.

22. ஈரஞ்சு ஆண்டு மேலாய் இல்லமும் செய்வா னுகும்
பார்கிண றுண்டு செய்வன் பலரையும் வசியம் கொள்வன்
போர்செல்லான் இந்தப் பாலன் பூஷணம் பூமி வீடும்
கூறுவோ மாருயிரம் பொன் கொள்ளுவா னென்று சொல்வோம.

22. ஜாதகன் பத்து வயதுக்குமேல் வீடு கட்டுவான். நிலம், கிணறு முதலியன ஏற்படும். எல்லோரையும் வசீகரிக்க வல்லன். சண்டைக்குச் செல்லாதவன். ஆபரணங்களும், பூமி வீடு இவைகளும் ஆருயிரம் பொன் மதிப்புள்ளன என்று கூறுவோம்.

23. ஐந்தாண்டு மேலா மாக அம்புலி பிறைபோல் யோகம்
தன் தனஞ் சேர்த லுண்டு சல்லியங் கொள்ளா னுகும்
விந்தையாய்ச் சோலை செய்வன் வேந்தர்க்கு இவன்சொல் [மேன்மை
நந்தியுஞ் சகட முண்டு நாதனர் பத்தி யேற்பன.

23. ஜாதகனுக்கு ஐந்து வருடங்களுக்குமேல் வளர்பிறைபோல யோகம் விருத்தியாகும். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள்கள் சேரும். கடன் படாதவன். அழகிய தோட்டம் வளர்ப்பான். அரசருக்கு இவனுடைய வார்த்தையில் மதிப்பு உண்டு. காளையும் வண்டியும் உள்ளவன். சிவ பெருமான்மீது பக்தி கொள்ளுவான்.

ஸ்திரீ நிந்தை.

24. மாதுரு முன்ஜன் மத்தை வரைகிறேம் விரிஞ்சி தன்னில்
சூதுசெய் வைச்யச் சேயாய்த் தோன்றியே மதலை உண்டாய்
மேதினில் வாழு நாளில் மேவின வினையைக் கேண்மோ
நீதிஇல் லாத வார்த்தை பகர்ந்தனன் ஒருபெண் பேரில்.

24. தாயின் முற் பிறவியைக் கூறுகின்றேம். விரிஞ்சி நாட்டில், சூதுகள் செய்யும் இயல்பினரான வைசிய குலத்தவளாகப் பிறந்து, குழந்தைகளைப் பெற்று, உலகில் வாழ்ந்துவரும் நாட்களில் ஏற்பட்ட தீவினை யைக் கேளுங்கள். ஒரு பெண்மீது நேர்மையில்லாத வார்த்தைகளைச் சொன்னுள்.

25. மங்கையும் திகில டைந்து வரைந்திட்ட சாபம் கேண்மோ
நங்கையை வார்த்தை சொன்னுய் நல்கும்பின் ஜன்மம் தன்னில்
சங்கையாய் மணங்க ளின்றித் தன்பந்து பங்கம் சொல்ல
அங்கமே எடுப்பாய் நீயும் அறைந்துமே தெருத்தூள் விட்டாள்.

25. அப் பெண்ணும் பயந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். என்னைப் பார்த்து அடாத வார்த்தைகளைச் சொன்னுய். உனக்கு ஏற்படும் மறுபிறவி யில் மணம் ஏற்படாமல், பந்துக்ள் அபவாதம் சொல்லும்படியான ஜன் மத்தை நீ எடுப்பாய் என்று சொல்லித் தெரு மண்ணை இறைத்தாள்.

26. மாதுவின் சாபம் தானும் மருவிற்றுப் பாவைக் கேதான்
தீதாக அந்தி யத்தில் சிலபிணி வாயில் கண்டு
சூதான கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
பூதவா கனத்தாள் பூசை பொருந்திய குலமு தித்தாள்.

26. அப் பெண்ணின் சாபம் இவளுக்கு ஏற்பட்டது. கடைசியில் வாயில் சில நோய் ஏற்பட்டு இறந்தாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு காளியைப் பூசை செய்யும் பூசாரி வமிசத்தில் பிறந்தாள்.

27. ஆகையால் மாது சாபம் அணுகிற்று இச்சென் மத்தில்
தோகையும் மணமில் லாமல் தொல்புவி தன்னில் வாழ்வள்
பாகமாய் வறுமை காணுள் பகருவோ மிவள்பின் ஜன்மம்
நாகத்தை அணிந்த மாரி நல்கிய ஊத்துக் காட்டில் ;

27. ஆகையால் அப் பெண்ணின் சாபம் இப் பிறவியிலும் தொடர்ந்தது. இவளும் கல்யாணம் இன்றி உலகில் வாழ்ந்து வருவாள். தரித்திர மில்லாதவள். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். பாம்பை மாலையாக அணிந்த மாரியம்மன் இருக்கும் ஊத்துக் காட்டில் ;

28. செங்குந்த மரபில் தோன்றும் செல்வங்கள் பெருக்க மாகி
மங்கையும் வாழ்வா ளாகும் வறைகிறோம் கரும காலம்
சங்கையாய் முப்ப தாண்டில் தனுர்மாதம் கண்ட மென்றோம்
ஐங்கரன் தனை வளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

28. செங்குந்த வமிசத்தில் பிறந்து, செல்வங்கள் விருத்தியாகி வாழ்ந்து வருவாள். அவளுடைய கருமகாலத்தைச் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய முப்பதாம் வயதில் மார்கழி மாதத்தில் தாய்க்குக் கருமம் நடைபெறும். விநாயகனை வளர்த்த அம்பிகையே ! கேளுங்கள்.

29. பிறந்தசேய் தந்தை பூர்வம் புகலுவோ மினிமே லாகச்
சிறந்ததக் கோலம் தென்பால் சிறுவூரில் வைச்யச் சேயாய்
அரைந்துமே அறத்தி லிச்சை ஒண்டொடி மதலை உண்டாய்
இருவினை இல்லா னுகி ஏகினன் கால னூடு.

29. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியை இனிக் கூறுகின்றோம். சிறந்த தக்கோலத்திற்குத் தெற்கில் உள்ள சிற்றூரில் வைசிய குலத்தில் பிறந்து, தருமத்தில் விருப்பங்கொண்டு, மனைவி மக்களையடைந்து, தீவினை இல்லாதவனாகி இறந்தான்.

30. கஞ்சனால் வரையப் பட்டுக் கௌரியின் குலமு தித்தான்
தஞ்சமா யிவன்பின் ஜன்மஞ் சாற்றுவோந் துவாரை தன்னில்
மிஞ்சின குலமு திப்பான் விளம்புவோங் கரும காலம்
வஞ்சியே விருபான் மூன்றில் மறலியின் பதிக்குச் சேர்வன்.

30. மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு நான்காம் வருணத்தில் பிறந்தான். அவனுடைய மறு பிறவியைக் கூறுகின்றோம். துவாரகையில் அந்தண குலத்தில் பிறப்பான். அவனுடைய மரண காலத்தைச் சொல்வோம். ஜாதகனுடைய இருபத்துமூன்றும் வயதில் (தந்தை) இறந்து விடுவான்.

31. ஜாதகன் மரண காலஞ் சாற்றுவோ மன்பா னுறில்
கோதிலா மகர மாதம் குறைபக்க மேகா தசியில்
தீதான சூலை நோயால் தேகமே யேகு மென்றோம்
போதக வானைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

**31.** ஜாதகனுடைய மரண காலத்தைக் கூறுவோம். ஐம்பத்தாரும் வயதில் தை மாதம் தேய்பிறையில் ஏகாதசியன்று வயிற்றுவலியால் இறப்பான். உயர்ந்த கணவனை யடைந்த புண்ணியவதியே! கேளுங்கள்.

32. பின்ஜன்மம் புதுவை தன்னில் பிறப்பனுஞ் சைவச் சேயாய்
பொன்பொரு ளுடைய னாகிப் புகழான குடும்பம் பெற்று
அன்னவன் வாழ்வா னாகும் அறைந்தது தப்பா தாகும்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

**32.** மறு பிறவி புதுவையில் சைவ குலத்தவனுகப் பிறப்பான். பொன் செல்வங்கள் இவற்றையடைந்து, கீர்த்தியுடைய குடும்பத்தைப் பெற்று, அவன் வாழ்ந்துவருவான். நாங்கள் சொல்லியன தவறு. உயர்ந்த வரனைப் பெற்ற உத்தமியே! கேட்டிடுவாய்.

33. மந்திரி யொன்பா னிற்க மதிசனி யெட்டி லேற
அந்தநேர் பலன்க ளெவ்வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்
முந்திநாள் பொன்னும் நேரும் மூவைந்து ஆண்டு தன்னில்
சந்ததம் பூமி யாலே சார்ந்திடு மென்று சொல்வோம்.

**33.** குரு ஒன்பதாமிடத்திலும் சனி எட்டாமிடத்திலும் இருக்கும் பலன்களைச் சொல்லுங்கள், முனிவரே! பிதுரார்ஜிதமான பொருள்கள் சேரும். பதினைந்தாம் வயதில் பூமியாலும் பொருள் கிடைக்கும் என்று சொல்லுகின்றோம்.

34. அன்னவன் ஜனன காலம் அவிட்டநா ளிரண்டாம் பாதம்
மன்னுசேய் ஆண்டு வைந்து மறைந்தனம் பலனைக் கேளாய்த்
துன்மையாய்ப் பிணியு முண்டு துணைசுபம் செட்டு வோங்கல்
பின்பாகம் விவரஞ் சொல்வோம் பேதையே கேட்டி டாயே.

**34.** ஜாதகன் பிறந்த காலத்தில் அவிட்ட நட்சத்திரம், இரண்டாம் பாதம், செவ்வாய் மகாதசை யிருப்பு ஐந்து வருடங்களாம் என்று சொன்னோம். அக்காலத்திய பலனைக் கேளுங்கள். ரோகம் துன்பமளிக்கும். உடன் பிறந்தவர்கட்கு மங்கலங்கள், வர்த்தகவிருத்தி முதலியன உண்டாம். பின் பாதியில் விவரங்களைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

## ஜாதகம் 27.

1 மதிமீனம் பொன்னேன் வண்டி மங்கலன் பானு கன்னி
விதியவன் புதனும் கோலில் வெள்ளியும் கேது சீயம்
ததிகயர் சாடி யாக ஜன்மமும் மிதுன மாக
அதுபலன் புகலு மென்று அம்பிகை கேட்க லுற்றாள்.

1. சந்திரன் மீனத்திலும், குரு கடகத்திலும், செவ்வாய் சூரியன் கன்னியிலும், சனி புதன் துலாத்திலும், சுக்கிரன் கேது சிம்மத்திலும், ராகு கும்பத்திலுமாக, கிரகங்கள் நின்று லக்கினம் மிதுனமானால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | | | லக்கினம் |
| ராகு | இராசி சக்கரம் | | குரு |
| | | | சுக்கிரன் கேது |
| | | சனி புதன் | செவ்வாய் சூரியன் |

2. பிருகுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
பெரும்தந்தை இல்லம் சொல்வேன் பலமிலாச் சிறு ஊராகும்
தெருவாசல் வடபால் நோக்கம் தந்தியும் மாரி மேற்கில்
நரிவாக னத்தாள் கீழ்ப்பால் நவிலுவோம் தாயே கேளும்.

2. பிறகு முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் பிறப்பு. தந்தையின் வீட்டைச் சொல்லுகின்றோம். பலமில்லாத ஒரு சிற்றூர். பிறக்கும் வீடு வடக்கு நோக்கியுள்ளது. விநாயகர் கோயிலும் மாரியம்மன் கோயிலும் மேற்குத் திசையிலும், காளிகோயில் கிழக்கிலும் உள்ளது. தாயே! கேளுங்கள்.

3. ஜனித்தனன் அன்னை இல்லம் செப்புவோம் உத்தி ரத்தில்
புனித்தனம் நான்காம் ஜன்மம் இனமது வடுக ராகும்
புனிதன்தன் குடும்பச் சேதி புகலுவோம் தாயே யாங்கள்
சினமிலாத் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

3. பிறந்த ஜாதகனின் தாய்வீட்டைச் சொல்லுகின்றோம். அது வடக்குத் திசையில் உள்ளது. வடுகர் குலத்தில் தன் தந்தைக்கு நான்காம் பிறவியாகப் பிறப்பான். ஜாதகனுடைய குடும்பச் செய்தியைக் கூறுகின்றோம். கோபமில்லாமல் தவங்கள் இயற்றும் செல்வியே! கேளுங்கள்.

4. கோல்ராசி சோதி நாளில் உதிப்பனும் தந்தை எனரேும்
சாலவே அவன்குணத்தைச் சாற்றுவோ மிருசி வப்பன
சீலனபோல் வெளிம யக்கன் தந்தைஆர்ச் சிதத்தில் வாழாவ
மால்பக்தி கொஞ்ச முண்டு மலர்க்கரம் பத்ம ரேகை.

4. துலா லக்கினத்தில் சுவாதி நட்சத்திரத்தில் தந்தை பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுவோம். கருமை கலந்த சிவப்பு நிறம். நல்லொழுக்கம் உள்ளவன் போல நடந்து கொள்ளுவன். தன் தந்தையால் சம்பாதிக்கப்பட்ட பொருளில் வாழாதவன். திருமாலின்மீது சிறிது பக்தியுள்ளவன். கையில் பத்மரேகை யுள்ளவன்.

5. தந்தையி னார்ச்சி தத்தைத் தானவன் நாஸ்தி செய்வன
விந்தையாய் வேறூர் வாசம் விரயங்கள் செய்வா னாகும்
அந்திடம் இல்லம் செய்வன் அறிவுளான் பலர்க்கு நேயன்
பிந்திநாள் சிறையாய் வாழ்வன் பித்ததே கத்தா னென்றேும்.

5. பிதுரார்ஜிதமான சொத்துக்களை அழித்துவிடுவான். வேற்றூரில் வாசம் செய்து வருவான. அதிகமாகச் செலவு செய்வான். அவ்வூரில் வீடு கட்டுவான். அறிவுள்ளவன். பலபேருக்கு நண்பன். கடைசி நாட்களில் சிறையில் வாழ்வதுபோல் தனித்து வாழ்வான். பித்த சரீர முள்ளவன்.

6. சல்லியப் பாதை ஏற்பன் தரணிகள் கொஞ்சம் சேர்ப்பன்
இல்லையென் றுரைக்க மாட்டான் இருவிதக் குணமு முண்டு
தல்லியைக் காப்பா னாகும் சஞ்சல மனதத னாகும்
மல்லில்முன் செல்லா னாகும் மன வர்மம் கொஞ்ச முண்டு.

6. துன்பமுள்ள வழியைப் பின் பற்றுவான். சிறிது பூமி சேர்ப்பான். யாசித்தவருக்கு இல்லை என்று உரைக்காதவன். இரு விதமான குணங்களுண்டு. தன் தாயைக் காப்பாற்றுவான். சஞ்சலமுள்ள மனத்தன். சண்டைக்கு முன் செல்லாதவன். மனத்தில் வஞ்சக முள்ளவன்.

7. மனைவியின் துணைவி பக்கல் மருவுவான் சிலநாள் தானும்
கனமிலாக் குடும்பி யாவன் கசடரை உறவு கொள்ளான்
சினமுண்டு உடனே தாழ்வு செய்ந்நன்றி மறவா னாகும்
நினைப்பதை முடிப்பா னாகும் நிமலியே கேட்டி டாயே.

7. தன் மனைவியின் சகோதரியிடம் சென்று சில காலம் வசித்து வருவான். செழிப்பில்லாத குடும்பமுள்ளவன். முட்டாள்கள் உறவு இல்லாதவன். கோபமுள்ளவன். ஆனால் சீக்கிரத்திலேயே தணிந்துவிடும். செய்த உபகாரத்தை மறவாதவன். எடுத்த காரியத்தை முடிக்கும் ஆற்றல் உள்ளவன். தாயே ! கேளுங்கள்.

8. தன்துணை ஆண்பால் ரண்டு தையலர் ஒருத்தி தீர்க்கம்
சொன்னஆண் ஒருவன் தானும் செல்லுவான் வேறோர் பக்கல்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அவனிரு நிறத்த னாகும்
உன்னருள் நல்ல வார்த்தை உவமையாய்ப் பேச வல்லன்.

8. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர்களில் சகோதரர் இருவரும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். நாம் கூறிய சகோதரர்களில் ஒருவன் வேறோர் ஊரில் சென்று வாழ்ந்து வருவான். அவனுடைய குணத்தைச் சொல்லுகிறேன். அவன் கருமை கலந்த சிவந்த நிற முள்ளவன். உயர்ந்ததும் நல்லதுமான பேச்சையே பேசுபவன். உபமானங்களுடன் பேசுபவன்.

9. சிந்தயும் நல்ல தாகும் சிலசில வணிபம் செய்வன்
பந்துவால் பெருமை ஏற்பன் பதரினில் செல்லா னுகும்
பிந்திநாள் யோக முண்டு பேதையு மொன்றே தீர்க்கம்
சந்ததி ஆண்பால் ரண்டு சத்தியு மொன்றே தீர்க்கம்.

9. நல்ல மனமுள்ளவன். சிற்சில வியாபாரம் செய்துவருவான. தன் உறவினர்களால் பெருமை அடைவான். அற்பகாரியங்களில் செல்லாதவன். பிற்காலத்தில் நல்ல யோக முள்ளவன். மனைவி ஒருத்தியே. நீண்ட ஆயுளுள்ளவள். இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் தீர்க்கமாக உள்ளவர்கள்.

10. மதுதொழில் புரிவா னுகும் வயதுமே தீர்க்க மென்றோம்
பதிபின்னுல் செய்வா னுகும் பாரினில் வறுமை காணுன்
அதற்குப்பின் சேதி சொல்வேன் அழகுளான் சிவந்த மேனி
பதிவீட்டு உத்தரம் செய்வன் பாலக னுடனே வாழ்வன்.

10. தேன் (கள்) எடுக்கும் தொழில் செய்து வருவான். நீண்ட வயது உள்ளவன். பிற்காலத்தில் வீடு கட்டுவான். உலகில் தரித்திரம் இல்லாதவன். அவனுக்குப் பின் பிறந்தவன் (மற்றோர் சகோதரன்) செய்தியைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவன். சிவந்த உடல். தன் வீட்டைவிட்டு வடக்குத்திசையில் செல்லுவான். தன் மகனுடன் (ஜாதகனுடன் ?) வாழ்ந்து வருவான்.

11. முந்திநாள் வறுமை ஏற்பன் மேவிடும் பின்பால் யோகம்
விந்தையாய்ச் செட்டுச் செய்வன் மேன்மையாங் குடும்ப மேற்பன்
வந்தவர்க் கன்ன மீவன் மருமத்தை வெளிக்காட் டாதான்
சுந்தர முடைய னுகும் துணைவர்சொல் தடுக்கா னுகும்.

11. ஆதி காலத்தில் தரித்திரனுக இருப்பான். பிற்காலத்தில் யோகம் ஏறபடும். அதிசயமான வர்த்தகம் செய்து வருவான். மேன்மையுள்ள குடும்பத்தை யடைவான். தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்னமளிப்பான். இரகசியத்தை வெளி யிடாதவன். அழகன். தன் உடன்பிறந்தவர் சொல்லைத் தட்டாதவன்.

12. பாரியும் மொன்றே யாகும் பாலர்கள் ஆண்பா லொன்று
நாரியும் மூவ ராகும் நாயகன் வறுமை காணுன்
சீரிய குணமில் லாதான் தீரமா மனத்தா னுகும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

12. மனைவி யொருத்தியே யாகும். ஒரு புத்திரனும் மூன்று புத்திரிகளும் தோன்றுவார். தரித்திர மில்லாதவன். கோப மில்லாத குணத்தன். தைரியமுள்ள மனமுள்ளவன். ஆறுமுகக்கடவுளைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

13. பாலகன் நிறம்கு ணத்தைப் பகருவோம் தாயே கேளும்
மால்மக னொப்ப தாகும் மாநிறம் உணச்சல் தேகி
சீலம் போல் வெளிம யக்கன் செட்டுக்கள் செய்வா னாகும்
காலத்தை அறிந்து ரைப்பன் கல்வியும் சமம தாகும்.

13. ஜாதகனுடைய நிறம் குணம் இவைகளைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள். மன்மதனைப்போன்ற அழகுள்ளவன். மாநிறமுள்ளவன். மெல்லிய தேகமுள்ளவன். நல்லொழுக்க முள்ளவன்போல் பிறர் நினைக்கும்படி நடப்பான். வர்த்தகம் செய்து வருவான். வருங்காலத்தை அறிந்து சொல்லக்கூடியவன். சமமான கல்வி யறிவுள்ளவன்.

14. பித்தச்சூ டுடைய னாகும் பிறர்பொரு ளிச்சை உண்டு
பத்தினி நேய னாகும் பாருகள் விருத்தி செய்வன்
சித்தினி சாதி யாவன் சிலேடையாய் வார்த்தை சொல்வன்
சுத்தத்தார் மதிக்க வாழ்வன் சோம்பிடான் காரி யத்தில்.

14. பித்தச்சூடுடையவன். அன்னியர் பொருளின்மீது விருப்பமுள்ளவன். மனைவிமீது பிரியமுள்ளவன். நிலங்களைப் பெருக்குவான். சித்தனி ஜாதியைச் சேர்ந்தவன். இரு பொருள்படும்படி பேசுவான். தன்பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்வான். காரியங்களில் சோம்பலில்லாதவன்.

15. தந்திர மொழியு முண்டு தாதைநாள் பூமி காணான்
முந்துமால் பக்தி கொள்வன் உவமையாய் வார்த்தை சொல்வன்
வந்தவர்க் கன்ன மீவன் அடிமையும் குடிக ளுண்டு
பிந்திநாள் யோக முண்டு பெரிதான தலங்கள் செய்வன்.

15. தந்திரமாகப் பேசுபவன். பிதுரார்ஜிதமான பூமிகள் இல்லாதவன். திருமாலின்மீது பக்தி கொள்ளுவான். உவமானத்துடன் பேசுபவன். தேடி வந்தவர்களுக்கு அன்னமளிப்பான். பணியாட்களும் குடிகளும் உள்ளவன். பிற்காலத்தில் யோகமுள்ளவன். பெரிய வீடு கட்டுவான்.

16. தன்துணை முன்னோன் ஒன்று தங்கிடும் தீர்க்க மாக
அன்னவன் ரிடப ராசி அணுகுவான் ஓண நாளில்
பின்னமில் லாத தேகி பொய்யது புகலா னாகும்
சொன்னசொல் காப் பானாகும் துறவோர்கள் நேசம் கொள்வன்.

16. ஜாதகனுக்கு முன் பிறந்த சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். அவன் ரிடப லக்கினத்தில் திருவோண நட்சத்திரத்தில் பிறப்பான். ஊனமில்லாத சரீரமுடையவன். பொய் பேசாதவன். சொன்ன சொல் தவறாதவன். பெரியோர்கள், பரதேசிகளின்மீது நட்புக்கொள்ளுவான்.

17. நல்லவ னாகி வாழ்வன் நயம்படக் கூறு வானும்
அல்லல்க ளடையா னாகும் ஆவுகள் விருத்தி உண்டு
சல்லியம் கொள்ளா னாகும் சத்தான வேலை செய்வன்
எல்லைகள் சேர்ப்பா னாகும் ஏவலா ளுடைய னாமே.

17. நல்லவனுகி வாழ்ந்து வருவான். நயமாகப் பேசுவான். துன்பங்களுடையவன். பசுக்கள் விருத்தியடையும். கடன் படாதவன். நல்ல பலனுள்ள வேலைகளையே செய்து வருவான். பூமிகளைப் பெருக்குவான். வேலையாட்கள் உள்ளவன்.

18. தொழில்பல வுடைய னுகும் தோகையும் ஒன்றே தீர்க்கம்
அழிவிலாப் பெண்பால் ரண்டு ஆணென்று தீர்க்க மெய்தும்
பழியது ஏற்கா னுகும் பிறவுப கார னுவன்
வழிதெரிந் தோர்கள் நேசன் வயதுமே தீர்க்க மென்றோம்.

18. பலவிதத் தொழில் செய்து வருவான். மனைவி ஒருத்தியே. நீண்ட ஆயுளுள்ளவள். இரு பெண் குழந்தைகளும், ஆண் குழந்தையொன்றும் தீர்க்கமாயுள்ளன. அபவாதம் அடையாதவன். பிறருக்கு உபகாரி. பெரியோருக்குப் பிரியமானவன். நீண்ட ஆயுளுள்ளவன் என்று கூறுகின்றோம்.

19. மைந்தனின் மணத்தின் காலம் வரைகிறே மிருபான் ரண்டில்
பந்தணி மாது தானும் பரவுவாள் வடபால் தன்னில்
அந்தவள் குணத்தைச் சொல்வேன் அரிமனை ஒப்ப தாகும்
நிந்தனை ஏற்கா ளாகும் நிமிஷத்தில கோபி யாவாள்.

19. ஜாதகனின் திருமணக் காலத்தைக் கூறுகின்றோம். இருபத்திரண்டாம் வயதில் வடக்குத் திசையிலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். இலக்ஷ்மியைப் போன்றவள். பழிகள் அடையாதவள். சீக்கிரத்தில் கோபமடைவாள்.

20. அன்னம்போல் வடிவு மொக்கும் ஆளனுக் னிய ளாகும்
அன்னமும் அன்பா யீவள் அயல்குற்றம் புகலா ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் அடைந்தோரை ஆத ரிப்பள்
அன்னவள் தீர்க்க சீவி அம்பிகை யாளே கேளாய்.

20. அன்னத்தைப்போன்ற சரீரமுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். பிரியமாக அன்னம் அளிப்பாள். பிறர்மீது குற்றம் கூறாதவள். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். தன்னை வந்து அடைந்தவர்களை ஆதரித்து வருவாள். தீர்க்காயுளுள்ளவள். தாயே ! கேளுங்கள்.

21. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் நவமே தோன்றும்
சித்தமாய் ஆண்பால் ரண்டு செல்விமார் நால்வர் தீர்க்கம்
குத்தமா முதலும் மூன்று ஏழுமே என்று சொல்வோம்
எத்தகைப் பலத்தி னுலே இயம்பினீர் அந்தச் சங்கை.

21. ஜாதகனுடைய புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். ஒன்பதின்மர். இரு புத்திரர்களும், நான்கு புத்திரிகளும் தீர்க்கமாயிருப்பார். முதலில் பிறக்கும் குழந்தையும், மூன்றுவதும், ஏழாவதும் மரித்துவிடும் என்று சொல்லுவோம். எந்தப் பலத்தினுல் அந்த தோஷம் என்று சொன்னீர்கள்.

### புத்திர பாவம்

22. அஞ்சினில் காரி தங்க அஞரவன் மூன்றி லேற
நஞ்சான கேது கூட நவின்றனம் அந்தச் சங்கைத்
தஞ்சமா யிவன்முன் ஜன்மம் சாற்றுவோம் சோழ நாட்டில்
வஞ்சனை செய்கு லத்தில் மருவினுன் வைச்யச் சேயாய்.

22. ஐந்தாமிடத்தில் சனி இருப்பதாலும், அந்த வீட்டுக்குரியவனுகிய சுக்கிரன் மூன்றுமிடத்தில் கேதுவுடன் கூடி இருப்பதாலும் கூறுகிறோம். இவனுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றோம். சோழ தேசத்தில் வஞ்சனைகள் செய்யும் வைசிய குலத்தில் பிறந்தான்.

23. பலவித வணிபம் செய்து பாவையும் மதலை உண்டாய்
நலமுளோர் நேசம் கொண்டு நலிந்தோரை ஆதரித்துத்
தலைவனும் வாழு நாளில் சார்ந்தநோர் வினையைக் கேண்மோ
நிலையிலா ஏழை யோர்க்கு நிமிலனும் இடைஞ்சல் செய்தான்.

23. பலவிதமான வர்த்தகம் செய்து வந்து, மனைவி மக்களை யடைந்து, நல்லவர்கள் நட்புக்கொண்டு, துன்பமடைந்தவர்களை ஆதரித்து வந்து, இவன் வாழ்ந்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். இருக்க இடமில்லாத ஏழைகளுக்கு இவன் இடையூறுகள் செய்தான்.

### ஏழைகளின் சாபம்

24. மனமது வருத்த முற்று வரைந்தசா பத்தைக் கேண்மோ
வினைசெய்த பாவிக் கேதான் மேவும்பின் ஜன்மம் தன்னில்
துணைப்பெண்ணு மில்லா தாகித் தாய்ச்சுக மில்லா தாகிக்
கனமுள இல்லம் நீங்கும் கழறியே தெருத்தூள் விட்டார்.

24. மனவருத்தமடைந்து சொன்ன சாபத்தைக் கேளுங்கள். துன்பம் செய்த பாவிக்கு ஏற்படும், மறு பிறவியில், உடன் பிறந்தவள் இல்லாதவனுகி, தாயினுடைய சுகமும் இல்லாதவனுகி, பெரிய வீடும் நீங்கி விடும் என்று தெரு மண்ணை வாரி இறைத்தனர்.

### கைம்பெண்ணின் சாபம்

25. அதுவொரு தோட மாச்சு அதுவின்றி வேறு சொல்வேன்
விதவையின் சாபம் தானும் மேவிற்று என்று சொல்வோம்
அதிபனு மந்தி யத்தில் வளமிலாக் குடும்பி யாகிச்
சதியாகக் கால னூடு சேர்ந்துமே பிரமன் லக்கம் ;

25. அஃது ஒரு தோஷமாயிற்று. அதுவுமின்றி வேறு ஒன்று கூறுகின்றோம். கைம்பெண்ணின் சாபம் ஏற்பட்டது என்று சொல்வோம். அவனும் கடைசிக் காலத்தில் செழிப்பில்லாத குடும்பத்தையடைந்து, எமபுரம் அடைந்து, மீண்டும் பிரம்மதேவனுல் படைக்கப்பட்டு ;

26. பிறப்பனு மிந்தப் பாலன் புக்கிடும் ஏழைச் சாபம்
திருகாகும் தந்தை இல்லம் திகம்பர குடும்பம் பூர்வம்
பெருமனை மத்தில் மாள்வன் பேசுவோ மிவனின் யோகம்
தரைசேர்ப்பன் செட்டுச் செய்வன் சனபந்து மதிக்க வாழ்வன்.

26. இந்தக் குலத்தில் பிறப்பான் என்று கூறுகிறோம். ஏழைகளின் சாபம் இவனைத் தொடர்ந்தது. தந்தையின் வீடு இவனுக்குக் கிடைக்காது. தாய் இடையிலேயே இறந்து விடுவாள். அவனுடைய யோகத்தைக் கூறு கின்றோம். பூமிகள் வாங்குவான். வர்த்தகம் செய்வான். பந்துஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான்.

27. ஈரஞ்சு ஆண்டு தன்னில் இல்லமும் செய்வா னாகும்
தீரமாய் நாலைந் தாண்டில் சிறப்பா ன இல்லம் செய்தல்
பாரினில் சல்லியம் காணான் பதரினில் செல்லா னாகும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

27. பத்து வயதில் வீடு சட்டப்படும். இருபதாம் வயதில் திடமாக அழ குள்ள வீடு கட்டுவான். உலகில் கடன் உபத்திரவம் இல்லாதவன். அற்ப காரியங்களில் செல்லாதவன். ஆறுமுகக் கடவுளைப்பெற்ற அம்பிகையே! கேளுங்கள்.

28. ஈரேழு ஆண்டு மேலாய் இளம்பிறை போலே யோகம்
கூறுவோம் பால னுக்குக் குலமதிப் புடனே வாழ்வன்
பார்பணி இல்லம் யாவும் படைப்பனே மூாயிரம் பொன்
மாறிடா திந்த வார்த்தை மங்கையே கேட்டி டாயே.

28. ஜாதகனின் பதினான்கு வயதுக்குமேல் வளர்பிறைபோல் யோகம் பெருகும். தன் குலத்தவர் மதிப்புள்ளவன். பூமி, ஆபரணங்கள், வீடு இவைகளெல்லாம் ஏழாயிரம் பொன் மதிப்புள்ளவையாக இருக்கும். இந்த வார்த்தைகள் தவறா. பெண்ணே! கேள்.

29. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி யாகும்
பாதக மனமில் லாளாம் பதரினில் செல்லா ளாகும்
சூதிடாள் முன்கோ பத்தாள் சொல்லது சுகமே யாகும்
வேதனை நாபிச் சூடு வீண்பழி ஏற்கா ளாகும்.

29. தாயினுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மாந்தளிர்போன்ற மெல்லிய சரீரமுள்ளவள். கெட்ட எண்ண மில்லாதவள். கபட மில்லாத வள். முன் கோபி. இனிமையாகப் பேசுபவள். வயிற்றில் சூடு உள்ளவள். வீண் அபவாதம் அடையாதவள்.

30. இல்லமும் வடபா லாகும் இவள்துணை ஆண்பால் ரண்டு
வல்லிமார் மூவ ராகும் வரைகிறோம் தீர்க்க மாகச்
சொல்லிய ஆண்பா லொன்று சேருவன் துணைவி பக்கல்
நல்லவ னாகி வாழ்வன் நங்கையே கேட்டி டாயே.

30. வடக்குத் திசையில் வீடு உள்ளவள். இவளுக்கு இரு சகோதரர் களும் மூன்று சகோதரிகளும் உள்ளனர். அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர் கள். மேற்சொல்லப்பட்ட சகோதரியிடமே போய் நல்லவன் என்ற பெயருடன் வாழ்ந்து வருவான். தாயே! கேளுங்கள்.

31. அன்னையின் பூர்வம சொல்வேன் அழகர்வாழ் பாண்டி தன்னில்
உன்னத சௌராஷ்டிர வம்சம் உதித்ததுமே வறுமை இன்றிப்
பொன்பணி உடைய ளாகிப் பெரியோர்கள் தொண்டு பூண்டு
முன்பவ மில்லா ளாகி ஒதுங்கி னாள் கால னூடு.

31. தாயினுடைய முற் பிறவியைக் கூறுகின்றோம். அழகர் பெருமான் வாழ்ந்து வரும் மதுரை மாநகரில், சௌராஷ்டிர வம்சத்தில் பிறந்து, தரித்திரம் இல்லாதவளாகி, பொன் ஆபரணங்கள் இவைகளை யடைந்து, பெரியோர்களுக்குத் தொண்டு செய்து, முற் பிறவியில் செய்த தீவினைகளில்லாதவளாக இறந்தாள்.

32. பங்கயன் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்
மங்கையின் ஜன்மம் சொல்வேன் வடதிசை வேங்க டத்தில்
பொங்கினக் குடும்பம் தன்னில் பிறப்பளாம் ரெட்டி வம்சம்
ஐங்கரன் தனை வளர்த்த அம்பிகை யானே கேளாய்.

32. மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்று கூறுகின்றோம். அவளுடைய மறுபிறவியைச் சொல்லு கின்றோம். வடக்கில் உள்ள திருவேங்கடத்தில் செல்வம் மிகுந்த குடும்பத்தில் ரெட்டியார் மரபில் பிறப்பாள். விநாயகப்பெருமானை வளர்த்துவரும் தேவியே! கேளுங்கள்.

### பெண் நிந்தை

33. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் ஓதூர் தன்னில்
அந்தவன் சேடர் வம்சம் அணுகியே வாழு நாளில்
விந்தைகள் ஒருபெண் பேரில் நிருமித்து நிற்கும் போது
அந்தவள் மனது வாடி அறைந்திட்ட சாபம் கேண்மோ.

33. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம். ஓதூரில், சேடர் மரபில் தோன்றி, வாழ்ந்து வந்த நாட்களில், ஒரு பெண்மீது, அடாத பழி யொன்று கட்டிச்சொல்லும்போது, அந்தப் பெண் மனம் வருந்தி உரைத்த சாபத்தைக் கேளுங்கள்.

34. பெண்பழி சொன்ன பாவி பிறக்கும்பின் ஜன்மம் தன்னில்
வண்மையா யில்லம் விட்டு வடதிசை வனவா சங்கள்
திண்ணமாய்ச் செல்வாய் நீயும் தேவியும் மத்தில் மாண்டு
புண்ணிய மனத்த னாகிக் கூடாது தந்தை ஆஸ்தி.

34. பெண்மீது பழிசொன்ன பாவியே! நீ பிறக்கும் மறு பிறவியில், நிச்சயமாகச் சொந்த வீட்டை விட்டு வடக்குத் திசையில் காட்டில் வசிப்பதுபோல் வசித்துவருவாய். மனைவியும் இடைக்காலத்தில் இறந்து துன்பமடைந்த மனமுள்ளவனாகவும் தந்தையின் ஆஸ்தி இல்லாதவனாகவும் ஆவாய்.

35. இன்னமும் பலவே சொன்னாள் எய்திற்று அந்தச் சாபம்
இன்னவ னந்தி யத்தில் அதிகமாய் வறுமை உண்டாய்த்
துன்மையாய்க் கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
நன்னிய னுதித்தா னென்றோம் நல்கிடும் மாது சாபம்,

35. இன்னமும் பல விதம் கூறினாள். அந்தச் சாபம் வந்தடைந்தது. அவன் கடைசிக காலத்தில், அதிக தரித்திரம் உள்ளவனாகி, தீமையாகிய எமபுரம் அடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்றும். பெண்ணின் சாபம் தொடர்ந்தது.

36. இல்லம்விட் டேகு வானும் இவன்பாரி மத்தில் நஷ்டம்
சல்லிய முடைய னாகும் சாற்றுவோ மிவன்பின் ஜன்மம்
அல்லலைத் தவிர்க்கு கின்ற அப்புவின் தலத்திலே தான்
புல்குவான் க்ஷத்திரிய சேயாய்ப் புண்ணிய வதியே கேளாய்.

36. தன் வீட்டை விட்டுச் செல்லுவான். மனைவி இடைக்காலத்தில் இறப்பாள். கடன் உபத்திரவம் உள்ளவன். இவனுடைய (ஜாதகனுடைய தந்தையின்) மறுபிறவியைச் சொல்லுவோம். துன்பங்களைத் தவிர்க்கும் காஞ்சிபுரத்தில் க்ஷத்திரிய மரபில் தோன்றுவான். தாயே ! கேளுங்கள்.

37. பத்தாண்டில் அன்னை கண்டம் பகருவோம் பால னுக்குச்
சித்தமாய் இருபா னெட்டில் செப்புவோம் தந்தை கண்டம்
வெத்தியாம் அறுபான் நாலு ஆண்டினில் துலாமா தத்தில்
சித்தசன் சாத கர்க்குச் செப்புவோம் மாணம் தானே.

37. ஜாதகனின் பத்தாம் வயதில் தாய்க்குக் கண்டம் ஏற்படும். இருபத்தெட்டாம் வயதில் தந்தை மரணமடைவான். ஜாதகனின் அறுபத்து நான்காம் வயதில் ஐப்பசி மாதத்தில் ஜாதகன் இறப்பான் என்று சொல்லுவோம்.

38. மறுஜன்மம் கொங்கு நாட்டில் வருகுவான் சைவச் சேயாய்த்
திருமகன் ஜனன காலம் சனிதசை ஆண்டு ஆறும்
மருவிடும் திங்க ளைந்து வரைந்தனம் பூர்வ பாகம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

38. மறுபிறவி கொங்கு நாட்டில் சைவ குலத்தவனாகப் பிறப்பான். ஜாதகனின் ஜனன காலத்தில் சனி மகாதசை ஆறு வருடங்களும் ஐந்து மாதங்களும் மீதமாம். இவ்விதம் முதல் பாகம் கூறினோம். வேதங்களின் முடிவில் ஆடுகின்ற தேவியே ! கேளுங்கள்.

## ஜாதகம் 28

1. சந்திரன் மீன மாகச் சனிவீணை சேயும் சீயம்
புந்தியும் சிகியும் கோலில் புகர்கன்னி பானு தேளில்
மந்திரி சாடி யாக மிதுனமும் ஜன்ம மாக
இந்தவாறு கோளு நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் மீனத்திலும், சனி மிதுனத்திலும், செவ்வாய் சிம்மத்திலும், புதன் கேதுது லாத்திலும், சுக்கிரன் கன்னியிலும், சூரியன் விருச்சிகத்திலும், குரு கும்பத்திலும் ராகு மேஷத்திலும், லக்கினம், மிதுனமுமாக நவக் கிரகங்கள் இருந்தால், பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | ராகு | | இலக்கினம் சனி |
| குரு | இராசி சக்கரம் | | |
| | | | செவ்வாய் |
| | சூரியன் | கேது புதன் | சுக்கிரன் |

2. சங்கரி கேட்கும் போது ஜயமுனி கூறு கின்றார்
இங்கிவை ஆண்பால் ஜன்மம் இல்லமும் கீழ்மேல் வீதி
தங்கிடும் வடபால் வாசல் சக்திமா காளி மேற்கில்
சங்கரன் உத்தி ரத்தில் அருகினில் தடாகம் சோலை.

2. என்று பார்வதி கேட்கும்போது, ஜயமுனி சொல்லுகின்றார். இஃது ஆண்மகனின் ஜாதகம். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது. காளி தேவி மேற்கில் கோயில் கொண்டுள்ளாள். சிவபெருமான் வடக்கிலும், பக்கத்தில் குளமும், தோட்டமும் இருக்கும்.

3. இத்தகைய அடையா ளத்துள் இறங்குவா னிந்தப் பாலன்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
வித்தகன் முன்பின் ஜன்மம் விளம்புவோ மிந்நூல் தன்னில்
அத்தியை வளர்த்த எங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள வீட்டில் இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய தாய் தந்தையர் மனைவி புத்திரர் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவற்றையும் இந்த நூலில் கூறுகின்றோம். விநாயகனை வளர்த்த எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளும்.

4. தந்தையின் துணைஆண் ரண்டு சக்திமார் அவ்வா ருகும்
முன்ஜன்மம் வேருய்ச் செல்வன் உடன்கூடிப் பின்னேன்
[வாழ்வன்
அந்தவன் குணத்தைச் சொல்வேன் ஆண்மையாய்க் குடும்ப
[மேற்பன்
சுந்தர முடைய ளுகும் தொல்புவி கீர்த்தி ஏற்பன்.

4. தந்தைக்கு உடன் பிறந்தவர்களில் இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் உண்டு. தந்தைக்கு முன் பிறந்தவன் வேருகச் சென்று விடுவான். மற்றவன் ஜாதகனுடைய தந்தையுடன் சேர்ந்து வாழ்வான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். குடும்பத் தலைவனுக இருப்பான். அழகுள்ளவன். உலகில் கியாதி பெறுவான்.

5. வடதிசை அரசன் போல வாழ்வனே பாரி ரண்டு
திடமுடன் பொருளும் சேர்ப்பன் காளைகள் ஆண்பால் ரண்டு
துடியிடைப் பெண்பா லொன்று செப்புவோம் தீர்க்க மாக
மடையரை உறவு கொள்ளான் மாநிலம் பலவூர் சேர்ப்பன்.

5 குபேரன் போல வாழ்ந்துவருவான். இரு மனைவிமார் உண்டு. பொருளைச் சேர்ப்பான். இரு புதல்வர்களும் ஒரு பெண்ணும் உடையவன். அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர். முட்டாள்களுடன் சேராதவன். பல ஊர்களில் நிலம் வாங்குவான்.

6. எந்தமா துக்குப் புத்திரர் இயம்புவீர் முனியே நீர்தாம்
முந்தின மாதுக் கேதான் மொழிகுவீர் கன்னி ஒன்று
அந்தவள் மரண மெய்தி அடைகுவாள் வேறு மாது
சந்ததி ஆண்பால் ரண்டு சாற்றுவோம் தீர்க்க மாக.

6. எந்த மனைவிக்குப் புத்திரர் பிறப்பார்கள் என்று சொல்லுங்கள், முனிவரே! நீர்தாம். முதல் மனைவிக்கு ஒரு பெண்பிறந்ததும் அவள் இறந்து விடுவாள். மறு மனைவி வாய்ப்பாள். அவளுக்கு இரு புத்திரர்கள் உண்டு என்று நிச்சயமாகச் சொல்லுவோம்.

7. தந்தையின் சேதி சொல்வேன் தானிரு நிறத்த ளுகும்
நிந்தைகள் ஏற்கா ளுகும் நேமிகள் விருத்தி செய்வன்
தன்தன முடைய ளுகும் சாராள்கள் அதிக முள்ளான்
சிந்தையும் நல்ல தாகும் சிலர்களா பத்தைக் காப்பன்.

7. ஜாதகனுடைய தந்தையின் செய்திகளைக் கூறுவோம். அவன் கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவன். அவமானங்கள் அடையாதவன். பூமியைப் பெருக்குவான். தன்னுல் சம்பாதிக்கப்பட்ட பொருள் உடையவன். ஏவலாட்கள் அதிகம் உள்ளவன். நல்ல மனமுள்ளவன். சிலருடைய துன்பத்தைத் தீர்த்து வைப்பான்.

8. வறுமைஎப் போதும் காணுன் வலிவுமே செய்யா ளுகும்
பெருமையாய்க் குடும்ப மேற்பன் பிதாவுக்கு மேலாய் வாழ்வான்
திருகுகள் ஒருவர்க் கெண்ணுன் தேரின புத்தி உண்டு
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

8. எப்போதும் தரித்திரமில்லாதவன். முரட்டுத்தனமான காரியம் செய்யான். பெருமையான குடும்பத்தை யடைவான். தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான். ஒருவருக்கும் கெடுதல் எண்ணுதவன். முதிர்ந்த அறிவுள்ளவன். விநாயகனைப்பெற்ற பார்வதியே! கேளுங்கள்.

9. சொன்னஇக் குணத் தானுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் சிவந்த [மெய்யன்
பன்னுவான் ஞான நூலைப் பரதேசம் இடையில் செல்வன்
தன்மனம் கபடு மில்லான் சமகல்வி இரண்டு என்றேம்.

9. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேன். அழகுள்ளவன். சிவந்த உடலுடையவன். வேதத்தை ஓதுவான். இடையில் வேறு தேசத்துக்குச் செல்லுவான். மனத்தில் கபட மில்லாதவன். சமமான இரு விதக் கல்வி யறிவுள்ளவன்.

10. வாததே கத்தா னுகும் மனமது கபடு மில்லான்
வேதனை ஒருவர்க கெண்ணுன் வெஞ்சினம் வெளிக்காட் டாதான்
தீதென்றோர்க் குதவி செய்வன் தேவதா பக்தி பூண்பன்
காதியு முடைய னுகும் கஞ்சமாம் ரேகை உண்டு.

10. வாயு தேகமுள்ளவன். கபட மில்லாதவன். பிறருக்குத் துன்பம் செய்ய எண்ணுதவன். கோபத்தைத் வெளியில் காட்டாதவன். துன்பம் அடைந்தவர்களுக்கு உபகாரி. தெய்வபக்தி யுள்ளவன். நல்ல கொடுக்கும் குணமுள்ளவன். பத்மரேகை யுள்ளவன்.

11. சோங்கின்மேல் செல்வா னுகும் செப்புவீர் காலம் தன்னை
எங்கியே விரோத முற்று ஈரொன்ப தாண்டில் செல்வன்
ஆங்கவன் சுகமில் லாமல் (முப்பா னென்றில்) அணு தவான் [தன்னூர் தன்னில்]
பாங்கியும் பின்னல் நேரும் பார்வதி கேட்டி டாயே.

11. கப்பல் மீது செல்லுவான். எந்தக்காலம் என்று சொல்லுங்கள். மனத்தில் ஏககம் (மனஸ்தாபம்) அடைந்து பதினெட்டாம் வயதில் (வேறு இடம்) செல்லுவான். அங்கும் அவன் சுகமின்றி முப்பத்தோராம் வயதில் தன்னூருக்குத் திரும்புவான். மனைவி பிற்காலத்தில் ஏற்படுவாள். பார்வதியே! கேளுங்கள்.

12. தன்துணை முன்ஆண் ஒன்று சக்தியின் ஒன்றே தீர்க்கம்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அயல்குற்றம் புகலா னுகும்
பொன்பொரு ளுடைய னுகும் பூமியில் சீவிப் பானும்
பன்னியே பேசு வானும் பங்கய முகத்தா னுவான்.

12. ஜாதகனுக்கு உடன் பிறந்தவர்களில் முன்பிறந்த சகோதரன் ஒருவனும் பின்பிறக்கும் பெண் ஒருத்தியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மூத்தவனின் குணத்தைச் சொல்லுவேன். பிறர்மீது குற்றம் குறை சொல்லாதவன். பொருள்கள் பொன் இவைகளுள்ளவனாய், பூமியில் ஜீவித்து வருவான். பன்னிப் பன்னிப் பேசுபவன். தாமரையை யொத்த முகமுள்ளவன்.

13. மணமுண்டாய் மதலை இன்றி மத்தியில் மரிப்பா னாகும்
தணிவான குணத்தா னாகும் சாந்தவான் தைரி யத்தன்
குணமது நல்ல தாகும் குறிப்பினில் கொடுமை தோன்றும்
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

13. மணமானபிறகு குழந்தைகள் இல்லாமல் இடையிலேயே இறந்து விடுவான். பணியும் குணமுள்ளவன். சாந்த முடையவன். தைரியசாலி. நற்குணமுள்ளவன். முகத்தில் கடுமை தோன்றும். மிகுந்த தவங்களை இயற்றும் தேவியே ! கேளுங்கள்.

14. கன்னியின் சேதி சொல்வேன் கபடிலாள் பொறுமை சாலி
மன்னவன் மனத்துக் கேத்தோள் வருவோரை ஆத ரிப்பள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அடாவடி கூறு ளாகும்
தன் சுதர் காணு ளாகும் தரிபடும் மத்தில் முத்திரை.

14. ஜாதகனுடைய தங்கையைப்பற்றிச் சொல்லுகின்றேன். கபடில்லாதவள். பொறுமையுள்ளவள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். வந்து அடைந்தவர்களைக் காப்பாள். பிறர்மீது குற்றம் கூறுதவள். அடாவடியாகப் பேசாதவள். புத்திரபாக்கியம் இல்லாதவள். மத்தியிலேயே மாங்கல்யம் அறுந்துபோகும். (கணவன் இறந்துவிடுவான்.)

15. காரணம் யாது வெனனக் காதலி பூர்வம் தன்னில்
தீரமாய் வினைகள் செய்தாள் சேர்ந்தது அந்தத் தோடம்
கூறுவீர் வினையை நீங்கள் கோதையின் பூர்வம் கேளாய்
வாரியி னோரம் தன்னில் மாபலி நகரி லேதான் ;

15. அதற்குக் காரணம் என்னவென்று பார்வதிதேவி கேட்க (முனிவர்கள் கூறுகின்றனர்). இவள் முற்பிறவியில் தைரியமாய்ப் பல தீவினைகளைச் செய்தாள். அந்தத் தோஷம் இவளைச் சேர்ந்தது. அவள் செய்த கெட்ட செயலைக் கூறுங்கள். பெண்ணின் முன்பிறவியைக் கேளுங்கள். சமுத்திரக் கரையிலுள்ள மகாபலி புரத்தில் ;

**ஏழைகளுக்குக் கொடுமை : குழந்தைகளுக்குப் பால் இல்லை என்றது**

16. பிறந்தனள் கங்கை சேயாய்ப் பெரிதான குடும்பம் தன்னில்
வரனுண்டாய் மதலை உண்டாய் வாழ்நாளில் வினையைக் கேண்மோ
திருகிலா ஏழை யோர்க்குச் சிலசில கொடுமை செய்தாள்
மருவிற்று அதுஓர் சாபம் மகவுபால் தராத தொன்று.

16. வேளாள குலத்தில் பிறந்தாள். பெரிய குடும்பத்தில் கணவனை யடைந்து, குழந்தைகளைப் பெற்று வாழ்ந்துவந்த நாட்களில் ஏற்பட்ட தீச் செயலைக் கேளுங்கள். தீமை செய்யாத ஏழைகளுக்குச் சிற்சில கொடுமைகள் செய்தாள். அஃது ஒரு தோஷமாயிற்று. குழந்தைக்குப்பால் தராததும் ஒன்று.

**வணிகனை மோசம் செய்தல்**

17. ஏழையோன் வணிப னுக்கு இவள்கொஞ்சம் மோசம் செய்தாள்
ஆழியில் வணிகன் சாபம் அடாதகா ரியங்கள் செய்தாய்ச்
சூழும்பின் ஜன்மம் தன்னில் சுதரின்றிச் சுகமு மின்றிப்
பாழாகும் உனது பொன்கள் பகர்ந்தனன் வணிபன் தானும்.

17. ஏழையான ஒரு வணிகனுக்கு இவள் சில மோசம் செய்தாள். அதையறிந்த வணிகன் சாபமிட்டான். சமுத்திரக்கரையில் நீ அடாத காரியங்களைச் செய்தாய். உனக்கு ஏற்படும் மறுபிறவியில் புத்திரர்களின்றி, சுகமு மில்லாமல், உனது செல்வங்கள் அழியும், என்று வணிகன் சொன்னான்.

18. ஆகையா லிச்சென் மத்தில் அணுகிடும் முன்னூழ்த் தோடம்
பாழாகும் முத்திரை தானும் பாலர்கள் காணு ளாகும்
தேவிபின் ஜன்மம் சொல்வேன் தேவியும் பிரம்ம சேயாய்ப்
பாகமாய் உதிப்பா ளாகும் பாராசரும் மறுத்துச் சொல்வார்.

18. ஆகையால் இப்பிறவியில் முன்பிறவியின் தோஷம் வந்து அடையும். தன்னுடைய மாங்கல்யம் அழியும். புத்திரர்கள் பிறவார். அவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். அந்தணர் குலத்தவளாகப் பிறநது வாழ்வாள். பராசரமுனிவர் மறுத்துக் கூறுகின்றார்.

**உயர்குலப் பிறவியின் காரணங்கள்**

19. இந்ததோர் ஜனனம் தன்னில் இவள்செய்த புண்ணிய மென்ன
முந்தவே கூறு மென்ன மொழியதைக் காத்த லாலும்
விந்தையாய்த் தலங்கள் சென்றும் விரதங்கள் பூண்ப தாலும்
அந்தவ ளுதிப்பா ளாகும் அம்பிகை யாளே கேளாய்.

19. இப்பிறவியில் இவள் என்ன நற்காரியங்கள் செய்தாள் ? முதலில் கூறுங்கள், என்று கேட்க. சொன்ன சொல் தவறாமல் நடந்து வந்ததாலும், புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று வந்ததாலும், நோன்புகள் இயற்றி வந்ததாலும், அவள் (அந்தண குலத்தில்) பிறந்தாள். தாயே ! கேளுங்கள்.

20. ஆறஞ்சு மூன்று ஆண்டில் அணுகிடும் பாரி தானும்
தீரமாய் வடபால் நேரும் செப்புவோ மவள் குணத்தை
மாரன்தன் மனதுக் கேத்தோள் மாநிறம் பித்த தேகி
தேரின புத்தி உண்டு தீரமில் லாத நெஞ்சம்.

20. ஜாதகனுக்கு முப்பத்து மூன்றும் வயதில் மனைவி வருவாள். அவளும் வடக்குத் திசையிலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். மாநிறமுள்ளவள். பித்த சரீர முடையவள். முதிர்ந்த அறிவுள்ளவள். தைரியமில்லாத மன முள்ளவள்.

21. மங்கையும் யோக சாலி வறுமைஎப் போதும் காணுள்
பொங்கிய குடும்ப மேற்பள் பேதைக்குத் துணைஆண் ஆறு
நங்கைமா ரிருவ ராகும் நவிலுவோம் புத்திர பாவம்
திங்கள்போல் வதன மாகும் செல்விமார் இருவர் தீர்க்கம்.

21. அவள் அதிருஷ்டசாலி. தரித்திரம் எப்போதும் இல்லாதவள். செழிப்புள்ள குடும்பத்தை யடைவாள். அவளுக்குச் சகோதரர்கள் அறு வரும், சகோதரிகள் இருவரும் என்று சொல்வோம். புத்திரர்களைப்பற்றிக் கூறுவோம். சந்திரனைப்போன்ற அழகிய முகத்தையுடைய பெண்கள் இரு வர் நீண்ட ஆயுளுள்ளவர்கள்.

### புத்திரதோஷ கிரக நிலை

22. சுதராண்பால் காணு ளாகும் செப்புவீர் அந்தச் சங்கை
அதிதியும் ஐந்தில் தங்க ஆரலும் மூன்றி லேற
இருவித கிரகத் தாலே எய்தாது சுதரா ணுந்தான்
அதிபன்தன் பூர்வம் தன்னில் மருவிற்றுச் சிலவே தோடம்.

22 புத்திரர்கள் தோன்ருர். அதற்குக் காரணம் சொல்லுங்கள். கேதுவும் ஐந்தாமிடமாகிய துலாத்தில் இருப்பதாலும், செவ்வாய் மூன்ருமிடத்தில் இருப்பதாலும் ஆண் குழந்தைகள் பிறவா. ஜாதகனுடைய முற்பிறவியில் சில தோஷங்கள் ஏற்பட்டன.

23. என்னஊழ் செய்தா னத்தை இயம்புவீர் முனியே நீர்தாம்
முன்ஜன்மம் பழனி நாட்டில் உதித்தனன் கங்கை சேயாய்ப்
பொன்னெடு பணிதி பெற்றுப் புதல்வனும் வாழு நாளில்
துன்மையாய் வந்த சேதி செப்புவோம் முனியே கேளும்.

23. என்ன தீச்செயல்கள் செய்தான்? அதைச் சொல்லுங்கள், முனிவரே! நீர்! முற்பிறவியில் பழனி க்ஷேத்திரத்தில் வேளாள மரபினனுகப் பிறந் தான். பொன்னுபரணங்கள் பெற்று வாழ்ந்துவரும் நாளில் தீமையாக ஏற்பட்ட செய்தியைச் சொல்லுகின்ருேம், முனிவரே! கேளுங்கள்.

### ஸர்ப்பத்தைக் கொன்ற தோஷம்

24. இல்லத்தில் வெகுநா ளாக இருந்தது நாக மொன்று
அல்லலாய் மகுடம் பூண்டு அதுமுற்ற மியங்கும் போது
வல்லவன் கழியால் வாட்ட மடிந்தது நாக மேதான்
புல்கிற்று அதுஒர் தோடம் புகலுவோம் வேறு ஒன்று.

24. வெகு நாட்களாக வீட்டில் ஸர்ப்பம் ஒன்று இருந்து வந்தது. அது வீட்டு முற்றத்தில் படமெடுத்து ஆடும்போது, ஜாதகன் கழியினுல் அடித்தான். சர்ப்பம் இறந்தது. அஃது ஒரு தோஷமாயிற்று. வேறு ஒன்றும் சொல்லு கின்ருேம்.

### புத்திரதோஷம் ஏற்படக் காரணம்: ஸ்திரீநிந்தை

25. மறைமாது கற்பு முள்ளாள் மங்கைமேல் நிந்தை வார்த்தை
உரைத்தனன் இவனே என்ருேம் உத்தமி திகில டைந்து
வருவித்த சாபம் கேண்மோ மற்ருெரு ஜன்மம் தன்னில்
கருமங்கள் தாய்தந் தைக்குக் கலக்காமல் சுதரு மின்றி;

25. கற்புடைய அந்தணகுலப் பெண்ணின்மீது அடாத பழிகளைச் சொன் ஞன். அவள் மனத்தில் திகில் அடைந்து உரைத்த சாபத்தைக் கேளுங்கள். உனக்கு ஏற்படும் மறுபிறவியில், நீ உன் தாய்தந்தையருக்கு ஈமக்கடன்கள் செய்யாமல் புத்திரர்களு மில்லாமல்;

26. உன்னுடை வம்சம் நாஸ்தி உரைத்துமே தெருத்தூள் விட்டாள்
துன்மைகள் சேர்ந்த தென்றேும சேயனு மந்தி யததில்
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு முயர்வான தலங்கள் சென்று
அன்னமும் அதிதிக் கீந்து அந்தகன் நாட்டைச் சேர்ந்தான்.

26. உன்னுடைய வம்சம் பாழாகிவிடும் என்று கூறி தெருமண்ணை வாரி இறைத்தாள். அதனால் தீமைகள் ஏற்பட்டன வென்றேும். அவனும் தன் கடைசிக்காலத்தில், பெரியோருக்குத் தொண்டுகள் பல செய்து, உயர்ந்த புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று, பரதேசிகளுக்கு அன்னம் அளித்து இறந்தான்.

27. பிரமனுல் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
மருவிடும் முன்னூழ்ச் சாபம் மாதுரு தந்தைக் கேதான்
கருமங்கள் செய்யா னுகும் காளையும் தோட மேய்தும்
பெருமையால் குடும்ப மெவ்வாறு பேசுவீர் முனியே நீர்தாம்.

27. மீண்டும் பிரம்மதேவனுல் படைக்கப்பட்டுப் பிறப்பான் இந்த ஜாதகன். முற்பிறவியின் தோஷம் தொடரும். தன் தாய்தந்தையர்களுக்கு ஈமக்கடன்கள் செய்யாதவனுக ஆவான். புத்திரதோஷம் ஏற்பட்டது. பெருமையுடைய குலத்தில் எவ்வாறு பிறந்தான ? என்று கூறுங்கள், முனிவரே !

**உயர்குலப் பிறப்புக் காரணம்**

28. முன்ஜன்மம் தன்னி லேதான் உயர்வான தலங்கள் சென்றும்
அன்னமும் அதிதிக் கீந்து அருமறைத் தொண்டு பூண்டு
இன்னவன் வாழ்வ தாலே இச்சென்மம் வறுமை காணுன்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

28. முற்பிறவில் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றும், பரதேசிகட்கு அன்னம் அளித்து வந்தாலும், அந்தணர்களுக்குத் தொண்டு செய்துவந்ததாலும், இப்பிறவியில் தரித்திரம் இல்லாதவன். உயர்வான கணவனையடைந்த உத்தமியே ! கேளுங்கள்.

29. பாரியின் பூர்வம் தன்னைப் பகருவோ மினி மேலாக
ஆறுமா முகத்தோன் வாழும் அம்புவித் தணிகை தன்னில்
நாரியும் மிலேச்ச வம்சம் நல்கியே பெருமை இன்றித்
தேறினோர்க் கன்ன மீந்து சீலர்களா பத்தைக் காத்தும் ;

29. மனைவியின் முற்பிறவியைக் கூறுகின்றேும் இனிமேல். ஆறுமுகக் கடவுள் வாழும் திருத்தணியில், இப் பெண் துலுக்கர் வம்சத்தில் பிறந்து, தரித்திர மில்லாமல், முற்றுமுணர்ந்தவர்கட்கு அன்னமளித்து, நல்லொழுக்க முள்ளவர்களின் ஆபத்தை நீக்கியும் ;

30. வினையது இல்லா ளாகி மேவினுள் கால னுடு
கனமுள பிரமன் லக்கம் கலப்பளா மிக்கு லத்தில்
வனிதையின் ஜன்மம் சொல்வேன் மலைநாட்டில்க்ஷத்திரிய சேயாய்ச்
சினமிலா உதிப்ப ளாகும் தேவியே கேட்டி டாயே.

30. தீவினைகள் இல்லாமல் இறந்தாள். பிரமதேவனுல் படைக்கப்பட்டு இக்குலத்தில் பிறந்தாள். இனி இவன் தாயின் பிறவியைப்பற்றிக் கூறுவேன். மறுபிறவி மலையாளத்தில் க்ஷத்திரிய குலத்தவளாகப் பிறப்பாள். தேவியே ! கேளுங்கள்.

31. மாதுரு குணத்தைச் சொல்வேன் மால்மனே ஒப்ப தாகும்
சூதிலாள் பொறுமை சாலி துறவோர்க்கு அன்ன மீவள்
தீதென்றோர்க் குதவி செய்வள் சிறப்பான குடும்ப மேற்பள்
வேதனை ஒருவர்க் கெண்ணுள் வீண்பழி ஏற்கா ளாகும்.

31. தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். இலக்குமியைப் போன்றவள். கபடமில்லாதவள். பொறுமைசாலி. துறவிகட்கு அன்னமளிப்பாள். கஷ்டப்பட்டவர்களுக்கு உபகாரம் செய்வாள். சிறப்புள்ள குடும்பத்தை யடைவாள். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவள். அடாத நிந்தைகளை அடையாதவள்.

32. அவளுடைப் பூர்வம் சொல்வேன் அப்புவின் தலத்தி லேதான்
இவளுமே செக்கான் வம்சம் எய்தியே சுகமாய் வாழ்ந்து
பவமன மில்லா ளாகிப் பாலர்க ளதிக முண்டாய்த்
தவசிகட் கன்ன மீந்து சார்ந்தனள் கால னூடு.

32. அவளுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றேன். (திருவானைக் காவில்) ஊரில் வாணிய மரபில் பிறந்து சுகமாக வாழ்ந்து வந்து, கெட்ட மனமில்லாதவளாக, புத்திரர்களை அதிகமாகப் பெற்று, தவம் செய்தவர்சட்கு அன்னமளித்து இறந்தாள்.

33. கஞ்சனால் வகையப் பட்டுக் கலந்தன ளென்று சொல்வோம்
மிஞ்சியு மிருபத் தேழா மாண்டினில் மரிப்பா ளாகும்
மிஞ்சிய ஜன்மம் சொல்வேன் விதர்ப்பதே சத்தி லேதான்
கொஞ்சுவா ளிக்கு லத்தில் கோதையே கேட்டி டாயே.

33. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தனள் என்று கூறுகின்றோம். அவள் ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் இறப்பாள். மறுபிறவியைச் சொல்லுகின்றேன். விதர்ப்ப நாட்டில் இதே குலத்தில் பிறப்பாள். ஈசுவரியே ! கேளுங்கள்.

34. இருபது இரண்டு ஆண்டில் இயம்புவோம் தந்தை கண்டம்
மறுஜன்மம் வேங்க டத்தில் வருகுவாள் க்ஷத்திரிய சேயாய்ப்
பொருளது பெருக்க மாகிப் புண்ணியள் வாழ்வா ளாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

34. ஜாதகனின் இருபத்திரண்டாம் வயதில் தந்தை மரணமடைவான். அவன், மறுபிறவி திருவேங்கடத்தில் க்ஷத்திரிய மரபில் பிறந்து, செல்வங்களதிகம் பெற்று, புண்ணியசாலியாக வாழ்வான். அரிய வேதங்களின் முடிவில் ஆடும் அம்பிகையே ! கேளும்.

35. அன்பது வாறு ஆண்டில் அற்புத கண்டம் நேரும்
துன்பங்கள் விலகி யேதான் தசஆண்டு அதன் மேலாகக்
கன்னியின் மாதம் தன்னில் காலையில் பருவ நாளில்
இன்னவ னுடலம் ஏகும் இயம்புவோ மிவன்பின் ஜன்மம்.

35. ஜாதகனின் ஐம்பத்தாறும் வயதில் அதிசயமான கண்டம் நேரிடும். ஆனால், அந்த கண்டம் நீங்கி அதற்கு மேல் பத்து வருடங்கள் இருந்து, புரட்டாசி மாதத்தில் பூர்ணிமை யன்று இறப்பான். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

36. உத்திரம் துவாரை தன்னில் உதிப்பனும் மறைக் குலத்தில்
அத்திரி மறுத்துச் சொல்வார் அவனுமிச் சென்மம் தன்னில்
குத்தமாய் அற்ப வஸ்து கொள்ளவும் தாய்தந் தைக்கு
வித்தகன் கரும மின்றி மேதினில் வாழ்ந்து வந்தான்.

36. வடக்கில், துவாரகையில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான். அத்திரி முனிவர் மறுத்துச் சொல்லுகின்றுர். ஜாதகன் இப் பிறவியில் அற்ப வஸ்துக்களை வாங்கிக்கொண்டும் தன் தாய் தந்தைகளுக்குக் கருமங் கள் செய்யாமலும் வாழ்ந்து வந்தான்.

**உயர்குலப் பிறப்பிற்குரிய நற்செயல்கள்**

37. உதிக்கும் காரணங்க ளெவ்வாறு உரைக்கிறோம் முனியே கேளும்
சதியிலா மனத்த னும் சகலர்க்கு நல்லோ னும்
விதவித தலங்கள் சென்றும் மெய்ஞ்ஞான உட்க ருத்தாய்
அதிபனும் கொள்வ தாலே மறைக்குல முதிப்பா னுகும்.

37. அந்தண குலத்தில் பிறக்கும் காரணங்க ளென்ன வென்று சொல் லுங்கள், முனிவரே! தாங்கள். கெட்ட மனமில்லாமலும், எல்லோருக்கும் நல்லவனுகவும், பலவிதமான புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று வந்த தாலும், தூய எண்ணங்கள் தெய்வபக்தி இவைகளை மனத்தில் கொள்ளுவ தாலும் அந்தணகுலத்தில் பிறப்பான்.

38. கருமங்கள் எவர்செய் வார்கள் கழறுவீர் முனியே நீர்தாம்
சிறுதந்தை சுத னே செய்வான் செப்புவோம் பின்பால் சேதி
வரும்மனை இவன்பின் னுலே மடிவளா மென்று சொல்வோம்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

38. ஜாதகனின் தந்தைக்கு ஈமக்கடன்கள் யார் செய்வார்கள்? சொல்லுங் கள், முனிவரே! நீர்தாம். ஜாதகனுடைய சிறிய தகப்பனின் மகனே செய் வான். அவற்றைப் பின் பாகத்தில் சொல்லுகின்றேம். இவனுடைய மனைவி இவனுக்குப் பிறகு இறப்பாள் என்றுரைப்போம். விநயகப்பெருமானைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

39. காவலன் ஜனிக்கும் காலை கடைநாளில் மூன்றும் பாதம்
மேவிய புதனி ருப்பு விளம்புவோம் ஆண்டு ஐந்தும்
தாவிய திங்கள் பத்தும் சாற்றினேம் பூர்வ பாகம்
ஆவலாய்ப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

39. ஜாதகன் பிறக்கும் காலத்தில் ரேவதி மூன்றும் பாதம் புதமகா தசை இருப்பு ஐந்து வருடங்களும் பத்து மாதங்களுமாம். இவை முதல் பாகம் கூறினேம். அன்புடன் பூசைகள் செய்யும் தேவியே! கேளுங்கள்.

40. ஜாதகன் யோகச் சேதி சாற்றுவோ மினிமே லாக
மாதவர் போல்வ சிப்பன் மன்னன்போல் வாழ்வா னுகும்
பூதலம் பலவூர் உண்டு புகழ்பெற வாழ்வா னுகும்
சீதள குணத்தா னுகும் தீங்கதை யெவர்க்கு மெண்ணன்.

40. ஜாதகனின் யோகச் செய்தியை இனிக் கூறுவோம். தவசிபோல் வாழ்வான். அரசன்போல் வசித்து வருவான். பல ஊர்களில் பூமி வாங்குவான். புகழுடன் வாழ்ந்து வருவான். இளகிய (குளிர்ந்த) மன முள்ளவன். ஒருவருக்கும் தீங்குசெய்ய நினையாதவன்.

41. பருவத யோக மொன்று பகருவோம் பால னுக்குக்
குறையிலா வாழ்வா னுகும் குருடன்தன் தசையி லேதான்
திருசுக ளனந்த மாகும் செல்லுவான் வேறு நாடு
சரியிலாத் தசையே யாகும் சங்கரி கேட்டி டாயே.

41. இவனுக்குப் பருவதயோகம் என்ற ஒரு யோகம் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். ஜாதகன் குறைகளில்லாமல் வாழ்ந்து வருவான். சுக்கிர மகாதசையில் பலவிதமான துன்பங்கள் ஏற்படும். வேற்றூருக்குச் சென்று விடுவான். அது நன்மையில்லாத தசையாகும். பார்வதியே! கேளுங்கள்.

## ஜாதகம் 29

1. கலைஅரி கேது கன்னி கனகனும் கோல தாக
நிலமகன் மேரு வாக நீலனும் மான தாகப்
புலவனும் வீணை யாகப் புகர்மேடம் பானு நந்தி
தலமது இரட்டை யாகச் சாற்றுவீர் பலனைத் தானே.

1. சந்திரன் சிம்மத்திலும், கேது கன்னியிலும், குரு துலாத்திலும், செவ்வாய் தனுசிலும், சனி மகரத்திலும், புதன் மிதுனத்திலும், சுக்கிரன் மேஷத்திலும், சூரியன் விருஷபத்திலும் ராகு மீனத்திலுமாக, ஜன்மம் மிதுனமாகவும் உள்ள ஜாதக பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ராகு | சுக்கிரன் | சூரியன் | லக்னம் புதன் |
| | இராசி சக்கரம் | | |
| சனி | | | சந்திரன் |
| செவ்வாய் | | குரு | கேது |

2. மங்கையும் கேட்கும் போது வதிட்டரும் கூறு கின்றார்
இங்கிவை ஆண்பால் ஜன்மம் இல்லமும் கிழ்ப்பால் நோக்கம்
அங்கது வாடை யாகும் அரசர்கள் கெடியு முண்டு
துன்பமாம் வாரி கீழ்ப்பால் சுரநக ரொப்ப தாகும்.

2. என்று பார்வதிதேவி கேட்கும்போது, வசிஷ்ட முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் குறிப்பு. பிறந்த வீடு கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. மேற்குப் பக்கத்து வரிசை. அங்கே அரசர்களுடைய கோட்டையொன்று உள்ளது. சுத்தமான நீர்நிலை கிழக்கிலுள்ளது. அது தேவலோகம்போன்ற ஊர் என்று கூறுகின்றோம்.

3. இத்தகை அடையா ளத்துள் எய்துவா னிந்தப் பாலன்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
வித்தகன் துணைவர் யோகம் விளம்புவோம் முன்பின் ஜன்மம்
சுத்தமாய்ச் சொல்லு கின்றோம் துறவியே கேட்டி டாயே.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள ஊரில் இப்பாலன் பிறப்பான். இவனுடைய தாய் தந்தையர் மனைவி புத்திரர் இவர்களின் யோகத்தையும், சகோதரர்களின் முற்பிறவி மறுபிறவி இவைகளையும் சுத்தமாக இந்த நூலிற் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சற்சன ருறவு கொள்வன்
வந்தவர் பிணியும் தீர்ப்பன் அரசர்க ளுறவு கொள்வன்
நொந்தபேர்க் குதவி செய்வன் நேமியில் புகழு மேற்பன்
விந்தையாய்ப் பேச வல்லன் மேலோர்க ளுறவு கொள்வன்.

4. தந்தையினுடைய குணத்தைச் சொல்லுகின்றேன். நல்லவர்கள் உறவு கொள்ளுவான். தன்னை வந்து அடைந்தவர்களின் நோயைத் தீர்த்து வைப்பான். அரசர்களுடைய உறவு கொள்ளுவான். கஷ்டமடைந்தவர்கட்கு உபகாரம் செய்வான். உலகில் கீர்த்தி அடைவான். அதிசயமாகப் பேசுபவன். பெரியோர்கள் உறவு கொள்ளுவான்.

5. பண்டிதம் செய்வா னாதும் பலரையும் வசியம் கொள்வன்
அண்டின பேரைக் காப்பன் அதிதிக ளுறவு முண்டு
கண்டித முரையா னாகும் கௌரவ குடும்ப மேற்பன்
பண்டிபண் டாரம் சேர்ப்பன் பலகலை உணர்வா னாகும்.

5. வைத்தியம் செய்து வருவான். பல பேரை வசீகரிக்க வல்லவன். தன்னை வந்தடைந்தவர்களை ஆதரிப்பான். பரதேசிகளிடம் பிரியமாக இருப்பான். கண்டித்துப் பேசும் குணமில்லாதவன். கௌரவமான குடும்பமுள்ளவன். பணியாட்கள் அதிகமாக உள்ளவன். பல நூல்களைக் கற்றறிவான்.

6. மன்மத னொப்ப தாகும் மாரனை எரித்தோன் பூசை
அன்னவன் செய்வா னாகும் அபிராமி தியானம் செய்வன்
பொன்பணி சேர்ப்பா னாகும் புயபலம் பித்த சூடு
துன்மையாய் நாபிச் சூடு தோன்றிடும் மாமி ரண்டு.

6. மன்மதனை யொத்த அழகன். சிவபெருமான் பூசை செய்து வருவான். அம்மனை மனத்தில் தியானம் செய்வான். பொன்னாபரணங்கள் சேர்ப்பான். புஜபலமுள்ளவன். பித்தச் சூடுள்ளவன். வயிற்று வலியும் உள்ளவன். மனைவியர் இருவராகும்.

7. இருவித குணமு முண்டு ஏவலா ளுடைய னாகும்
வரும்கதி நினைவில் காண்பன் வளவில்லா வாழ்வா னாகும்
திருகிலான் சுகிபு சிப்பன் தேரின புத்தி உண்டு
அருமறை முடிவி லாடும் அம்பிகை யானே கேளாய்.

7. இருவிதமான குணங்களுள்ளவன். பணியாட்கள் உள்ளவன். வரக்கூடிய விஷயங்களை முன் கூட்டி அறியும் திறமை உள்ளவன். செழிப்பில்லாமல் வாழ்ந்து வருவான். துன்பமில்லாதவன். சாப்பாட்டில் பிரியன். முதிர்ந்த அறிவாளி. வேதங்களின் முடிவில் நடனமாடும் தேவியே! கேளுங்கள்.

8. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் கல்வி மானும்
தன்சொலு மடக்க முண்டு தந்திர வார்த்தைக் கூறுவன்
தென்முனித் தொழிலும் செய்வன் தேரின புத்தி உண்டு.

8. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். அழகுள்ளவன். கல்விமான். அடக்கமாகப் பேசுபவன். தந்திரமாகப் பேசுபவன். அகத்தியர் பேசும் தமிழால் தொழில் நடத்துவான். முதிர்ந்த அறிவாளி.

9. பலருக்கு நல்லோ னுவன் பலர்வினைத் தீர்ப்பா னுகும்
தலவாசம் செய்வா னுகும் தரியலர் வெற்றி கொள்வன்
விலைமாதர் மோகங் கொள்ளான் வெஞ்சினம் வெளிக்காட்டாதான்
புலவனும் ஊக்க சாலி புகழது வற்பா னுகும்.

9. பல பேருக்கு நல்லவனுக இருப்பான். பலருடைய துன்பங்களைத் தீர்த்து வைப்பான். புண்ணிய ஸ்தலத்தில் வாசம்செய்து வருவான். பகைவர்களை அடக்கி ஆளுவான். வேசையர்மீது மோகமில்லாதவன். கோபததை வெளியிடாதவன். புலவன். ஊக்கமுள்ளவன். கீர்த்தி அடைவான்.

10. அன்னையால் சுகமில் லாதான் அற்பரை உறவு கொள்ளான்
பொன்பணி சேர்ப்பா னுகும் புண்ணிய மனத்த னுகும்
கன்னிமார் தம்மால் நஷ்டம் கஞ்சமா நிறத்த னுகும்
பின்னமில் லாத தேகி எம்மானைப் பூசை பூண்பான்.

10. தன் தாயால் சுகமில்லாதவன். அல்பருடன் நட்புக் கொளளாத வன். பொன் ஆபரணங்கள் வாங்குவான். புண்ணியமான மனமுள்ள வன். பெண்களால் (தன் மனைவியால்) நஷ்டம் அடைவான். தாமரையைப் போன்ற நிறமுள்ளவன். ஊனமில்லாத தேகமுள்ளவன். சிவபெரு மானைப் பூசை செய்து வருவான்.

11. தன்துணை ஆண்பா லொன்று தையலர் இருவ ராகும்
கன்னிமார் மத்தில் எகும் காளையும் விருத்தி என்றேம்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் யாவர்க்கும் நல்லோ னுவன்
சொன்னதைக் காப்பா னுகும் துறவோர்கள் பக்தி பூண்பன்.

11. ஜாதகனுக்கு உடன் பிறந்தவாகளில் ஒரு சகோதரனும் இரு சகோதரிகளும் தோன்றுவார். இடைக்காலத்தில் சகோதரிகள் இறந்து விடுவார்கள். சகோதரன் நீண்ட ஆயுளுடையவன். சகோதரனுடைய குணங் களைக் கூறுகின்றேம். எல்லோருக்கும் நல்லவனுகி இருப்பான். சொன்ன சொற்களைக் காப்பான். துறவிகள் பக்தி கொள்வான்.

12. மந்திரம் வைத்தி யங்கள் மருமநூ லறிவா னுகும்
இந்திர னெப்பாய் வாழ்வன் இருவிதக் கல்வி உண்டு
எந்திடம் பெருமை எற்பன் இடரென்றேர்க் குதவி செய்வான்
செந்திரு விலாச முண்டு சீலனும் பெருமை யோனும்.

12. மந்திர சாஸ்திரம் வைத்திய சாஸ்திரம் இரகசிய நூல்கள் இவை களை அறிவான். இந்திரனைப் போன்ற யோக சாலியாக வாழ்ந்திருப்பான். இருவிதமான கல்வி கற்பான். எல்லாவிடத்திலும் பெருமை அடைவான். துன்பமடைந்தவர்களுக்கு உபகாரி. லட்சுமி நோக்குள்ளவன். நல்லொழுக் மும் உள்ளவன். பெருமை யுள்ளவன்.

13. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் ஆண்பால் மூன்று
தீரமாய்ப் பெண்பா லொன்று செப்புவோம் தீர்க்க மாக
வீரிய னென்றும் வாழ்வன் விகடங்கள் கூறா னாகும்
மாரனும் வறுமை காணான் வயதுமே தீர்க்க மென்றோம்.

13. மனைவி யொருத்தியே. மூன்று புத்திரர்களும் பெண் ஒருத்தியும் உண்டு. அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். எல்லோரும் ஒன்றாகவே வாழ்ந்து வருவார்கள். அகட விகடமாகப் பேசாதவன். தரித்திரமில்லாதவன். தீர்க்கமான வயதுள்ளவன் என்றோம்.

14. மைந்தனின் மணத்தின் காலம் வரைகிறோம் பதினேழாண்டுள்
அந்தவள் தென்பால் நேரும் அறிவிப்போம் அவள்குணத்தைச்
செந்திரு மகள்போ லொப்பாம் சிறிதான புத்தி இல்லாள்
பந்துவிற் கினிய ளாகும் பாவையும் தீர்க்க சீவி.

14. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய பதினேழாம் வயதுக்குள் அது நேரும். அவள் தெற்குத் திசையிலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். இலக்குமியைப் போன்றவள். சின்ன புத்தி யில்லாதவள். தன் உறவினர்களுக்குப் பிரியமானவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

### இரு மனைவியர் ஏற்படுதற்குரிய கிரக நிலை

15. அத்திரி தடுத்துச் சொல்வார் அவனுக்குத் தாரம் ரண்டு
சித்தமாய் நேரு மென்றோம் செப்புவீர் அந்தச் சங்கை
சத்தமத் தோன்ச ரத்தில் சார்ந்ததால் தாரம் ரண்டு
குத்தமாய்ச் சொன்னோம் யாங்கள் குறுமுனி தடுத்துச் சொல்வார்.

15. அத்திரி முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். அவனுக்கு இரு மனைவியர் உண்டு. நிச்சயமாக நடக்கும் என்றார். அந்தச் சந்தேகத்தைத் தீருங்கள் என்றார். ஏழாம் வீட்டுக்குரிய குரு சரராசியாகிய துலாத்தில் இருப்பதால் இரு மனைவியர் உண்டு என்று சொன்னோம். அகத்திய முனிவர் தடுத்துக் கூறுகின்றார்.

16. காரியும் புகரே மோனைக் கண்ணுறத் தாரம் மூன்று
தீரமாய் நடக்கு மென்றோம் செப்பினீர் சரியே ஐயா
பாரிமார் தீர்க்க முண்டோ பதருண்டோ விபரம் சொல்வாய்
கூறின கன்னி மார்கள் குமரன்முன் மரிப்பா ரென்றோம்.

16. சனியும் சுக்கிரனும் ஏழாம் வீட்டுக்குரிய குருவைப் பார்ப்பதால் மூன்று மனைவிகள் நிச்சயமாக ஏற்படுவர் என்று கூறுகின்றோம். சொன்னது சரியே, ஐயா! மனைவிகள் தீர்க்க ஜீவிகளா? இடையில் இறந்துவிடுவார்களா ? சொல்லுங்கள். நாங்கள் சொல்லிய மனைவிமார்கள் ஜாதகனுக்கு முன்பே இறந்துவிடுவார்கள் என்று கூறினோம்.

17. எந்தக் காலத்தில் செல்வார் இயம்புவீர் அந்தச் சங்கை
முந்தின மாது தானும் மேவுவாள் இருபா றறில்
பிந்திவேறு குடகில் நேரும் போகுவாள் முப்பான் மூன்றில்
இந்திர வதனம் போன்ற எழில்மாது முப்பான் ரண்டில் ;

17. எந்தக் காலத்தில் இறந்துவிடுவார்கள் ? அதைச் சொல்லுங்கள். முதல் மனைவி ஜாதகனுடைய இருபத்தாறும் வயதில் இறப்பாள். மறு மனைவி மேற்குத் திக்கிலிருந்து வாய்ப்பாள். அவள் முப்பத்து மூன் றும் வயதில் இறப்பாள். அழகிய முகத்தையுடைய எழிலுள்ள பெண் ஜாதகனுடைய முப்பத்திரண்டாம் வயதில் ;

18. நேருவாள் குடகி லேதான் நிமிலியும் தீர்க்க சீவி
பாரிய புத்தி ஏற்பள் பார்மகள் குணத்தா ளாகும்
வேறொரு நிந்தை காணள் வெஞ்சினம் வெளிக்காட் டாதாள்
தீரமில் லாத நெஞ்சள் சீலியாம் பெருமை ஏற்பள்.

18. மேற்குத் திக்கிலிருந்து வருவாள். அவள் நீண்ட ஆயுளுள்ளவள். பெரிய (தாராள) புத்தியுள்ளவள். பூமிதேவியைப் போல் பொறுமை யுள்ளவள். வேறு பழிகள் இல்லாதவள். கோபத்தை வெளியிடாதவள். தைரிய மில்லாத மனமுள்ளவள். நல்லொழுக்க முள்ளவள். பெருமை யுடையவள்.

19. புத்திரர் கடைமா துக்குப் பொருந்திடும் ஆண்பால் ரண்டு
சத்திமார் ஒன்றே தீர்க்கம் சடைமுனி புகலு கின்றார்
பத்தினி மார்கள் மூன்று படைத்தகா ரணங்க ளென்ன
குத்தத்தைச் சொல்லு மென்ன குமரன்முன் வினையா மென்றோம்.

19. மூன்றுவது மனைவிக்குப் புத்திரர்கள் இருவரும் புத்திரி ஒருத்தி யும் பிறந்து நீண்ட ஆயுளுள்வர்களாயிருப்பார். ஜடா முனிவர் கூறுகின்றார். மூன்று மனைவியார் ஏற்பட்ட காரணங்கள் என்ன ? என்ன தீவினை செய் தான் ? என்று வினவ, ஜாதகன் செய்த வினையைச் சொல்லுகின்றோம்.

20. என்னஊழ் செய்தா னத்தை இயம்புவீர் முனியே நீர்தாம்
முன்ஜன்மம் கோகர் ணத்தில் உதித்தனன் கங்கை சேயாய்ப்
பொன்பொரு ளுடைய னாகிப் புகழான குடும்பம் பெற்று
அன்னவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ.

20 என்ன தீங்கு செய்தான் என்பதைச் சொல்லுங்கள், முனிவரே ! ஜாதகன் முற்பிறவியில் திருக்கோகர்ணத்தில் வேளாள குலத்தவனாகப் பிறந்து, பொன் பொருள் முதலியன உடையவனாகி, கீர்த்திப் பெற்ற குடும் பத்தை யடைந்து, வாழ்ந்துவரும்நாளில் ஏற்பட்ட சாபத்தை கேளுங்கள்.

21 அந்நகர் நதியின் பக்கல் அணுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தானவர் வாச மாகும்
மந்திரம் ஓதும் வேதம் மறையவர் பூசை பூண்பர்
இந்தவா றிடத்தி லேதான் இரவினில் என்ன செய்தான்.

21. அவ்வூரின் நதிக்கரையிலுள்ள அரச மரத்தின் கீழ் விநாயகரும் ஸர்ப்பமும் இருக்கின்றனர். தெய்வங்கள் வசித்து வந்தனர். மந்திரம் ஓதும் அந்தணர்கள் பூசைகள் செய்து வந்தனர். இங்ஙனமுள்ள இடத்தில் இரவில் இந்த ஜாதகன் என்ன செய்தான். தெரியுமா ?

### கருவழித்த தோஷம்

22. விதவையைப் போகம் துய்க்க மேவிற்றுக் கருவு தானும்
அதம்செய்தான் பண்டி தத்தால் அம்மாது மரண மானாள்
இதுவின்றி வேறு சொல்வேன் ஏவலாள் மனைவி தன்னை
நிதிதந்து போகம் துய்த்து நிமலனும் வருங் காலத்தில் ;

22. ஒரு கைம்பெண்ணுடன் இன்பம் அனுபவிக்க, அதனால் கரு ஏற்பட்டது. மருந்தைக் கொடுத்துக் கருவை அழித்தான். அதனால் அப்பெண் மரணமடைந்தாள். இதுவல்லாமல் வேறு ஒன்று சொல்லுகின்றேன். தன் வேலைக்காரனின் மனைவியுடன், பணத்தைக் கொடுத்து, இன்பம் அனுபவித்து வருங்காலத்தில் ;

23. மங்கையின் வரனும் கண்டு மாதுவை விலக்கும் போது
சங்கையா மனத்த ளாகித் தன்பக்கல் புகலும் சேதி
பங்கமே செய்தான் பர்த்தா பதியினில் வேண்டா மென்றான்
இங்கிதற் கென்ன செய்வேன் என்னைநீ காப்பா யென்ன.

23. பெண்ணின் கணவன் (பணியாள்) பார்த்து, அவளை நீக்கினான். மனத்தில் துன்பமடைந்து ஜாதகனிடம் சொல்லுகிறாள்—என்னுடைய கணவன் எனக்குக் குறை செய்துவிட்டான். தன் வீட்டுக்கு வரக் கூடாது, வேண்டாம் என்று சொன்னான். இனி நான் என்ன செய்வேன் ? என்னை நீ ஆதரிப்பாய் என்றாள்.

24. கன்னியே என்பால் வேண்டாம் காதலி பொல்லாள் செல்வாய்
மன்னவ னிவ்வாறு சொல்லி மங்கையும் திகில டைந்து
சொன்னசா பத்தைக் கேண்மோ தோன்றும்பின் ஜன்மம் தன்னில்
என்னைப்போல் துணைப்பெண் ணின்றி ஈன்றதாய்ச் சுகமு மின்றி ;

24. பெண்ணே ! என்னிடம் வரவேண்டாம். என் மனைவி பொல்லாதவள். நீ சென்று விடு என்று கூறியதைக் கேட்டு, பயப்பட்டுச் சொன்ன சொற்களைக் கேளுங்கள். உனக்கு ஏற்படும் மறு பிறவியில், என்னைப் போல் சகோதரியில்லாமல், பெற்ற தாயினுடைய சுகமுமில்லாமல் ;

### இன்பம் தந்த அநாதையின் சாபத்தோஷம்

25. வரும்மனை அநேக முண்டாய் மரிப்பரே உன்முன் னாகத்
திருகாக அனந்தம் சொல்லச் சேர்ந்தது அந்தத் தோஷம்
பெரியோர்க ளுறவு அந்தம் பேணியே அன்ன மீந்து
மரலியின் பதிக்குப் புக்கி மால்மகன் வரையப் பட்டு ;

25. மனைவிகள் பல ஏற்பட்டு, உனக்கு முன்னாலேயே இறந்து விடுவார்கள் என்று பல சாபங்கள் இட்டாள். அந்தத் தோஷம் ஏற்பட்டது. கடைசிக் காலத்தில் பெரியோர்களின் நட்புக் கொண்டு, அவர்கட்கு அன்னமளித்து வந்து, இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு ;

26. பிறப்பனு மிந்தப் பாலன் புக்கிடும் மாதர் சாபம்
அரிவையர் மூவ ராகும் அம்மாதர் இவன்முன் மாள்வார்
திருமனை அனுகா வண்ணம் செப்புவீர் கிரியை ஒன்று
வருவது வந்தே தீரும் வரையவே மாட்டோம் சாந்தி.

26. இந்த ஜாதகன் பிறப்பான். பெண்ணின் சாபம் ஏற்பட்டு அதனால் மூன்று மனைவிகள் ஏற்படுவர். அப் பெண்களும் ஜாதகனுக்கு முன்னால் இறந்துவிடுவார்கள். மூன்று மனைவியர் வராமலிருக்க ஏதாவது சாந்தி சொல்லுங்கள். வருவது வந்தே தீரும். சாந்திகள் கூறவேமாட்டோம்.

### உயர்குலப் பிறவிக்குக் காரணம்

27. முன்ஜன்மம் அநேக துன்பம் விரும்பினேன் இச்சென் மத்தில்
தன்வீர சைவ னாகத் தோன்றும்கா ரணங்க ளென்ன
அன்னவன் முன்ஜன் மத்தில் அதிதிகள் நேசம் கொண்டும்
அன்னமும் அளித்துப் புண்ணியம் அவன்குல மேன்மை யாச்சு.

27. முற் பிறவியில் ஏற்பட்ட அனேக தீவிரமான பாபங்கள் செய்தும் இப் பிறவியில் வீரசைவனாகப் பிறந்த காரணங்கள் என்ன ? ஜாதகன் முற பிறவியில் பரதேசிகளிடம் நட்புக்கொண்டு, அன்னமும் அளித்து வந்ததால் குலம் மேன்மையாக வந்தது.

28. ஜாதகன் யோகச சேதி சாற்றுவோ மினி மோகச்
சூதிலான் புகழு மேற்பன் சொல்லது சுருக்க மாகும்
வேதனை நிவிர்த்தி செய்வன் வெகுபேருக் கிஷ்ட னவன்
வாதங்கள் வேலை செய்வன் ஆறாறு ஆண்டு மேலாய்.

28. ஜாதகனின் யோகச் செய்திகளைச் சொல்லுகின்றோம். சூதில்லாதவன். புகழடைவான். சுருக்கமாகப் பேசுபவன். துன்பமடைந்தவர்கட்குத் தஞ்சம் அளிப்பான். அநேகருக்கு நண்பனாக இருப்பான். ஜாதகனுடைய முப்பத்தாறு வயதுக்குமேல் வாதங்கள் புரியும் வேலை செய்வான்.

29. தென்திசைப் பெரியோ ராலே செய்குவான் அகார மேதான்
சந்திரன் தசையின் பாகம் சார்ந்திடும் நினைத்த வெல்லாம்
பிந்தியு மில்லம் நேரல் பெரிதான அறங்கள் செய்தல்
இந்திர யோக மேற்பன் ஈச்வரி கேட்டி டாயே.

29. அகத்திய முனிவரின் அருளால் பல நூல்கள் இயற்றுவான். சந்திர மகாதசையில் நினைத்த காரியங்களை முடிப்பான். பிற்காலத்தில் வீடு கட்டுவான். பெரிய தருமங்கள் செய்வான். இந்திரயோகம் அடைவான். ஈசுவரியே ! கேளுங்கள்.

30. சிகிதசைக் குள்ளே யன்னை சேருவா ளெமப திக்குப்
புகர்தசைக் குள்ளே தந்தை யேகுவான் கால னூடு
தகைமையாய்ப் பிதாமுன் ஜன்மஞ் சாற்றுவீர் முனியே நீர்தாம்
சகமதி லுயர்வ தான் திருப்பரங் குன்றந் தன்னில் ;

30. கேது மகாதசைக்குள் அன்னை இறந்து விடுவாள். சுக்கிர மகா தசைக்குள் தந்தை இறந்து விடுவான். தந்தையின் முற்பிறவியைச் சொல்லுங்கள், முனிவரே ! உலகத்தில் உயர்ந்ததாகிய திருப்பரங்குன்றத்தில் ;

31. உதித்தனன் சைவச் சேயாய் உயர்வான குடும்பி யாகி
அதிதிக ளூறவு கொண்டு அநேகவா லயங்கள் சென்று
விதியது முடிந்து பின்பு வேதியன் வரையப் பட்டு
நதிசடை யணிந்தோன் வர்க்கம் நல்கினு னிவனே யென்றோம்.

31. சைவ குலத்தில் பிறந்தான். உயர்ந்த குடும்பத்தை யடைந்து, பரதேசிகளிடம் பக்திகொண்டு, அநேக ஆலயங்களுக்குச் சென்று, இறந்து, பிரமனால் படைக்கப்பட்டு, கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமான் குலத்தில் பிறந்தவன், இவன் என்றோம்.

32. மறுஜன்மம் புதுவை பக்கல் வருகுவா னிக்கு லத்தில்
வருமன்னை பூர்வஞ் சொல்வோம் பிருதிவி தன்னி லேதான்
தரித்தொழில் செயுங்கு லத்தில் ஜனித்துமே வறுமை யின்றி
முருகர்தம் பக்தி பூண்டு உயர்வோர்க்கு அன்ன மீந்து ;

32. மறுபிறவி புதுவை நகரத்துக்குப் பக்கத்தில், இதே குலத்தில் பிறப்பான். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேன். காஞ்சிபுரத்தில் நெசவாளர் குலத்தில் பிறந்து, தரித்திர மில்லாமல், சுப்பிரமணிய சுவாமியிடம் பக்திகொண்டு, பெரியோர்களுக்கு அன்னமளித்து ;

33. வினையது யில்லா ளாகி மேவினுள் கால னூடு
சினமிலாப் பிரமன் லக்கம் ஜனித்தன ளென்று சொல்வோம்
வனிதைபின் ஜன்மஞ் சொல்வோம் வடதிசை துவாரை தன்னில்
கனமுள பிரம சேயாய்க் கலப்பளா மென்று சொல்வோம்.

33. தீவினைகளில்லாமல் இறந்தாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தாள், இவள் என்று சொன்னோம். தாயினுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். வடக்கில் உள்ள துவாரகையில், அந்தண குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

34. அன்பது வொன்ப தாண்டில் அவன்மூன்றும் பாரி கண்டம்
மன்னனுக் கறுபத் தைந்தில் மீன்மாதந் தன்னி லேதான்
பின்பக்கஞ் சட்டி தன்னில் பிரிதலா முடலந் தானே
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

34. ஐம்பத்தொன்பதாம் வயதில் ஜாதகனுடைய மூன்றாவது மனைவி இறப்பாள். ஜாதகன் பங்குனி மாதத்தில் தேய்பிறைச் சஷ்டியன்று இறந்து விடுவான். உயர்ந்த கணவனை யடைந்த உத்தமியே ! கேளுங்கள்.

35. பின்ஜன்ம மவ்வூர் தன்னில் பிறப்பனுஞ் சௌராஷ்ட்ர வம்சம்
மன்னர்பா லரசு செய்து மாநிதி யதிக முண்டாய்
இன்னவன் வாழ்வா னுகும் இயம்பின மொழிகுன் றுவே
கன்னென மொழியை யொக்குங் காதலி கேட்டி டாயே.

35. மறு பிறவி அவ்வூரிலேயே சௌராஷ்டிர வமிசத்தில் பிறந்து, அரசாங்க உத்தியோகம் எற்று, மிகுந்த செல்வம் பெற்று, ஜாதகன் வாழ்வான். சொன்ன சொற்கள் தவரு. இனிய வார்த்தைகளைப் பேசும் தேவியே! கேளுங்கள்.

36. ஜனித்திடுங் காலந் தன்னில் சிகிதசை யாண்டு வாறும்
குனித்திடுந் திங்க ளொன்றும் குலவுநாள் பதினு றுகும்
சினமிலாப் பூர்வம் சொன்னேம் செப்புவோம் பின்பால் சேதி
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

36. ஜாதகன் பிறக்கும் காலத்தில் கேதுமகாதசை ஆறு வருடங்களும் ஒரு மாதமும் பதினுறு நாட்களும் பாக்கி நிற்கும். இதுவரைப் பூர்வபாகம் சொன்னேம். பிற் பாகத்தில் மற்றைய விஷயங்களைக் கூறுவோம். விநாயகனைப் பெற்ற பார்வதியே! கேளுங்கள்.

### வேசியோகம்

37. புரவியோன் தனக்கீ ராறில் புகர்நிற்க பலனெவ் வாறு
அரிவையர் வேசி யோகம் அதன்பலன் புகலு மென்ன
இருவில்லம் பெரியோ ரிட்டம் இறக்குங்கா லேழாயிரம் பொன்
திருமகன் மரண காலம் செப்புவோ மிருப்புத் தானே.

37. சூரியனுக்குப் பன்னிரண்டில் சுக்கிரன் இருப்பதால் எற்படும் பலன் என்ன? வேசியோகம் கிட்டும். அதன் பலன் என்ன? இருவீடுகளுண்டு. பெரியோர்களுக்குப் பிரியமானவன். இறக்கும் போது எழாயிரம் பொன் இருக்கும், என்று சொல்லுவோம்.

## ஜாதகம் 30.

(26-ஆம் நெ. ஜாதகம் பார்க்க)

1. கலைசனி கலை யிலாகக் கனகனும் சாடி புக்க
நிலமகன் மேரு வாக நீத்தோனும் மீன மாகப்
புலவனும் பணியும் கன்னி புகர்சீயம் பரிதி கோலில்
தலமது வீணை யாகச் சாற்றுவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| கேது | | | லக்கினம் |
| குரு | இராசி சக்கரம் | | |
| சந்திரன் சனி | | | சுக்கிரன் |
| செவ்வாய் | | சூரியன் | ராகு புதன் |

1. சந்திரன் சனி மகரத்திலும், குரு கும்பத்திலும், செவ்வாய் தனுசிலும், கேது மீனத்திலும், ராகு புதன் கன்னியிலும், சுக்கிரன் சிம்மத்திலும், சூரியன் துலாத்திலும் இருந்து, ஜன்மம் மிதுன லக்கினமாக இருந்தால், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள்.

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது ஆண்பால் ஜன்மம்
வருமில்லம் கீழ்மேல் வீதி வாசலும் வடபால் நோக்கம்
அறுமுகன் தந்தி மேற்கில் சுந்தரி கீழ்ப்பா லாகும்
வரநதி தென்பா லாகும் மருவிய சிறுவூ ராகும்.

2. அகத்திய முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு, கிழக்கு மேற்கு வீதியில், வடக்கு நோக்கிய வாயிலையுடையது. அது, சுப்பிரமணியர் ஆலயமும் விநாயகர் ஆலயமும் மேற்கிலும், அம்மன் கோயில் கிழக்கிலும், ஓர் புண்ணிய ஆறு தெற்கிலும் உள்ள சிற்றூராகும்.

3. இத்தகை அடையா ளத்துள் இன்னவன் சேஷ்ட னுவன்
வித்தகன் கங்கை சேயாய் விளம்புவா னிந்தப் பாலன்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள இடத்தில் வேளாள குலத்தில் இந்த ஜாதகன் தன் தந்தைக்கு மூத்த புத்திரனுகப் பிறப்பான். தாய் தந்தையர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றுவோ மாண்பால் மூன்று
வந்திடு கன்னி ரண்டு வரைந்தனம் மற்றோர் தீதாம்
அந்தவர் வேறுய்ச் செல்வர் அவர்பலன் பின்பால் சொல்வேன
இந்தவன் தந்தை சேதி இயம்வோ மினிமே லாக.

4. தந்தையின் வர்க்கத்தாரைப் பற்றிச் சொல்லுகின்றோம். சகோதரர் மூவரும் சகோதரிகள் இருவரும் ஆவர். மேலும் பிறப்பவர் இறப்பர். ஒருவர் மனத்தாங்கலுடன் வேருகச் சென்று விடுவார். அவருடைய பலன்களைப் பிற் பாகத்தில் சொல்லுகின்றோம். இனி, இந்த ஜாதகனுடைய தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம்.

5. மாநிறம் உளச்சல் நீட்சி மருமமில் லாதா னுவன்
ஊனமில் லாத தேகி உயர்வான புத்தி எற்பன்
தேன்மொழி கூறு வானும் செய்நன்றி மறவா னுவன்
ஆனவர் நேசம் கொள்வன் ஆவுகள் விருத்தி யில்லான்.

5. மாநிற முள்ளவன். குறையில்லாத மெல்லிய உயரமான தேகமுள் ளவன். இரகசிய மில்லாதவன். உயர்ந்த புத்திசாலி. இனிய வார்த்தை களையே பேசுபவன். செய்த உதவியை மறவாதவன். தேரியவர் நட்புக் கொள்ளுவான். பசுக்கள் விருத்தியில்லாதவன்.

6. தந்தையின் ஆஸ்தி காணன் தானவன் வாசம் சின்னுள்
கந்தன்மேல் பக்தி பூண்பன் கரமதில் மாலின் ரேகை
சொந்தமா யில்லம் பின்னல் சேர்ப்பானும் ஊக வானும்
தந்தமும் தரள மொக்கும் சஞ்சல மனத்த னுவன்.

6. தந்தையினுடைய ஆஸ்தி யில்லாதவன். அவன் சின்னுட்களே வசித்து வருவான். முருகப்பெருமான்மீது பக்தி யுள்ளவன். கையில் விஷ்ணுரேகை உடையவன். பிற் காலத்தில் சொந்தமாக வீடு கட்டுவான். ஊக முள்ளவன். முத்துக்களைப் போன்ற வெண்மையான பற்களுள்ளவன். சஞ்சலமுள்ள மனத்தன்.

7. குலமதில் குற்ற மேற்பன் குமரர்க்கு கல்வி ஓதல்
விலைமாதர் மோகம் கொள்ளான் வெஞ்சினம் வெளிக்காட் டாதான்
புலவனும் கடந்தோர் நேயன் புராதனம் அடையா னுவன்
நிலையதைக் காப்பா னுவன் நெஞ்சினி லிரக்க மாவன்.

7. தன குலத்தில் அபவாததலை அடைவான். பிள்ளைகட்குக் கல்வி சொல்லிக் கொடுப்பவன். வேசையர் மோகம் கொள்ளாதவன். கோபத்தை வெளியிடாதவன். புலவன். பெரியோர்களுக்கு நண்பன். பிதுரார்ஜி தத்தை அடையாதவன். தன் நிலையைக் காத்துக் கொள்ளுவான். இரக்க முள்ள மனத்தன்.

8. கல்வியால் ஜீவிப் பானும் கட்டுரை பகரா னுவன்
சொல்லது சுருக்க மாவன் துர்வழக் கதனில் செல்லான்
அல்லல்கள் மத்தில் நேரும் அறிவுளோர் நேசம் கொள்வன்
சல்லிய மென்று லச்சம் தைரிய மில்லா னென்றோம்,

8. கல்வி பயில்விப்பதால் ஜீவித்து வருவான். வார்த்தைகள் கட்டிப் பேசாதவன். சுருக்கமாகப் பேசுபவன். கெட்ட வழக்குகளில் செல்லாதவன். இடையில் துன்பங்கள் நேரும். அறிவாளிகளுடன் நட்புக்கொள்ளுவான். கடன் என்றாலேயே பயப்படுவான். தைரிய மில்லாதவனென்றோம்.

9. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் இருநி றத்தான்
உன்னதக் கல்வி ரண்டு உணருவான் ஊக வானும்
பன்னியே பேசு வானும் பஞ்சைமே லிரக்க மாவன்.

9. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேன். அழகுள்ளவன். இருநிற முள்ளவன். உயர்ந்த கல்வி இரண்டு கற்பான். ஊகமுள்ளவன். பன்னிப் பன்னிப் பேசுவான். ஏழைகள்மீது இரக்க முள்ளவன்.

10. அரசர்பூ சிதமு மாவன் ஆசாரன் வெகுபேர் நேசன்
உறன்முறை மதிக்க வாழ்வன் உவமையாய் வார்த்தை கூறுவன்
தரையது சேர்ப்பா னுவன் சகடுவா கனமு மேற்பன்
குறைஎன்றோர்க் குதவி செய்வன் கோவலர் தன்னு லுய்வன்.

10. அரசரால் கொண்டாடப்படுவான். ஆசாரமுள்ளவன். பல பேர்களுக்கு நண்பன். தன் பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். உவமையுடன் பேசுபவன். பூமிகள் வாங்குவான். வண்டி முதலிய வாகன வசதி யுள்ளவன். குறைப்பட்டவர்களுக்கு உபகாரம் செய்வன். அரசரால் (அரசாங்க உத்தியோகம் ஏற்று) வாழ்ந்து வருவான்.

11. தந்தைமேல் புகழு மேற்பன் தனமது பெருக்கச் செய்வன்
பந்துவை ஆத ரிப்பன் பால்தயிர் பிரிய னுவன்
கந்தனும் குலதெய் வங்கள் கருத்தினில் வைப்பா னுவன்
இந்திர யோகம் பின்னுல் எய்திடு மென்று சொல்வோம்.

11. தந்தைக்கு மேல் கீர்த்தியுடையவன். பொருள்களை விருத்தி செய்வான். உறவினர்களை ஆதரிப்பான். பால் தயிர் இவைகளில் பிரிய முள்ளவன். சுப்பிரமணியக் கடவுளைக் குலதெய்வமாகக் கருதி மனத்தில் தியானம் செய்து வருவான். இவனுக்கு **இந்திரயோகம்** பிற்காலத்தில் ஏற்படும், என்று சொல்லுவோம்.

12. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்கள் அந்தச் சங்கை
பாகனு முச்ச மாகப் பார்மகன் ஏழில் தங்க
ஆகமன் நவத்தி லேற அலறிக்கு நாலில் திங்கள்
தோகையில் ராகு தங்கச் செப்பினேம் யோகம் தானே.

12. என்ன காரணத்தால் யோகம் ஏற்படும் என்று சொன்னீர்கள்? அதைச் சொல்லுங்கள். **புதன் உச்சமாகவும், செவ்வாய் ஏழாமிடத்தில் தங்கியிருப்பதாலும்**, குரு ஒன்பதாமிடத்திலும், சூரியனிருக்கு மிடத்துக்கு நான்காமிடத்தில் சந்திரன் இருப்பதாலும், கன்னியில் ராகு இருப்பதாலும் யோகம் ஏற்படும் என்றோம்.

13. மதிதசை முதலா மாக மாரனுக் கதிக யோகம்
சதுராண்டு மேலா யாகச் செப்புவோம் பால னுக்கு
அதுவிப ரங்கள் சொல்வாய் அரசரால் தொழிலும் மேன்மை
பதிநேரல் எழாண் டின்மேல் பலகலை அதிக முண்டு.

13. ஜாதகனுக்கு, சந்திர மகாதசையிலிருந்து அதிக யோகம் ஏற்படும். அது நான்கு வருஷத்துக்கு மேலாக அஃது ஏற்படும், என்று சொல்லுவோம். அந்த விபரங்களைச் சொல்லுங்கள். அரசரால் தொழில் மேன்மை ஏற்படும். வீடு கட்டுவான். ஏழு வயதுக்கு மேல் பல கலைகளைக் கற்று உணர்வான்.

14. அன்னிய பாஷை மேன்மை அதிகாரத் தொழிலு மேற்பன்
தன்துணை கன்னி ரண்டு சோர்ந்திடு ஆண்பா லொன்று
இன்னவர் தீர்க்க மென்றோம் எய்தாது இரண்டு என்றோம்
பின்பாகம் விபர மாகப் பேசுவோம முனிமிய கேளாய்.

14. அன்னிய பாஷையில் மேன்மை யடைவான். அதிகாரமுடைய தொழிலை ஏற்று நடத்துவான். உடன் பிறந்தவர்களில் சகோதரிகள் இருவரும் சகோதரன் ஒருவனும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றோம். இரு குழந்தைகள் நிலையா. பின் பாகத்தில் விபரமாகச் சொல்லுகின்றோம். முனிவரே! கேளுங்கள்.

15. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் ஈரொன் பாண்டில்
நீலியும் வடகீழ் நேரும் நுவலுவோ மவள் குணத்தைச்
சீலியாம் சிவந்த மேனி சனஉப காரி யாவள்
காலத்தை அறிந்து ரைப்பள் கணவனுக் கினிய ளாமே.

15. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். பதினெட்டாம் வயதில் வட கிழக்குத் திசையிலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். நல்லொழுக்கமுள்ளவள். சிவந்த உடலுள்ளவள். ஜனங்களுக்கு உபகாரி. வருங்காலத்தை யறிந்து சொல்லும் ஆற்றலுள்ளவள். கணவனுக்குப் பிரியமானவள்.

16. அன்னம்போல் வடிவு மொக்கும் அடாவடி தன்னில் செல்லாள்
அன்னமும் அன்பாய் ஈவள் அடிசிலுக் கினிய ளாவள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அதிகமாம் கோபம் உண்டு
அன்னியர் மதிக்க வாழ்வள் அவளுக்கு வயது தீர்க்கம்.

16. அன்னத்தைப் போன்ற அழகிய உருவமுள்ளவள். அடாவடியில் செல்லாதவள். அன்பாய் அன்னம் அளிப்பாள். நன்கு சமையல் செய்வதில் வல்லவள். பிறர்மீது குற்றம் கூருதவள். அதிகமாகக் கோபம் கொள்ளுவாள். பிறர் மதிக்கும்படி வாழ்ந்து வருவாள். நீண்ட வயதுள்ளவள்.

17. சுதர்களு மிருநான் காகத் தோன்றிடும் சிலவே சேதம்
சதமுடன் ஆண்பால் மூன்று சக்திமார் இருவர் தீர்க்கம்
புதல்வர்கள் இவன்மே லாகப் பொருந்தியே வாழ்வா ராகும்
அதிதியே இவன்முன் ஜன்மம் அறிவிப்போ மினிமே லாக,

17. எட்டுக் குழந்தைகள் பிறக்கும். அவைகளில் சில சேதமடையும். மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுள்ளவர்கவள். புத்திரர்கள் இவனுக்கு மேன்மையாக இருந்து வாழ்ந்து வருவார்கள். இவனுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றோம், இனிமேல்.

18. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் புலியூர் தன்னில்
வன்னிய குலமு தித்து மனைவிமைந் தருமுண் டாகிப்
பொன்னோடு பணிதி பெற்றுப் புகழான குடும்பி யாகி
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு உயர்வான தலங்கள் சென்று ;

18. ஜாதகனுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றோம். புலியூரில், வன்னிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களைப் பெற்று, பொன்னுடன் ஆபரணங்களை யடைந்து, கீர்த்தியுள்ள குடும்பமேற்பட்டு, பெரியோர்களுக்குத் தொண்டு செய்து, புண்ணிய தலங்களுக்குச் சென்று ;

19. காலன்தன் நாட டைந்து கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமில் லாத கங்கைக் குலமதி லுதிப்பா னவன்
ஏலவே இவனின் யோகம் இயம்புவோ மினிமே லாக
ஆலம்போல் பகை வருக்கு அவனுமே கருட னவன்.

19. எமபுரம் அடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு நல்லொழுக்கமில்லாத வேளாள குலத்தில் பிறப்பான், என்று கூறுகின்றோம். இவனுடைய யோகச் செய்திகளை இனிச் சொல்லுகின்றோம். விரோதிகளாகிற சர்ப்பங்களுக்குக் கருடனைப் போன்றவன்.

20. மன்னனால் சீவ னங்கள் மருவிடும் பால னுக்குப்
பொன்பொருள் பூமி சேர்ப்பன் புகழான குடும்ப மேற்பன்
அன்னியர் மதிக்க வாழ்வன் அந் தணர் நேசம் கொள்வன்
தன்மனை தன்னால் யோகம் தரணியில் வறுமை காணன்.

20. அரசனால் ஜீவனம் நடக்கும் (அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்க்கையை நடத்துவான்). பொன், பொருள், பூமி இவைகளைச் சேர்ப்பான். புகழுள்ள குடும்பத்தை யடைவான். பிறர் மதிக்கும்படி வாழ்ந்து வருவான். அந்தணர் சிநேகம் கொள்ளுவான். தன் மனைவியால் யோக மடைவான். உலகில் தரித்திரம் இல்லாதவன்.

21. எந்தக்கா லத்தில் ராஜ யோகமு மெய்தும் சொல்வாய்
இந்தவன் மூவே ழாண்டு மேலேதான் யோகம் சொன்னோம்
அந்தநாள் பணியின் காலம் அறைந்தனம் அரசு ஓங்கும்
செந்திரு விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா னாமே.

21. எந்தக்காலத்தில் ராஜயோகம் ஏற்படும், என்று சொல்லுங்கள் ? ஜாதகனுடைய இருபத்தோராம் வயதுக்கு மேல் ராஜயோகம் என்று சொல்லுவோம். அந்தக் காலம் ராகு மகாதசை நடக்கும். அதிகாரம் பெருகும். லட்சுமிகடாட்சம் அடைந்து, ஜாதகன் வாழ்ந்து வருவான்.

22. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அன்புள மனத்தா ளாவள்
சிந்தையும் நல்ல ளாவள் சீக்கிர கோபி யாவள்
பந்துவும் மதிக்க வாழ்வள் பதரினில் செல்லா ளாவள்
வந்தவர்க் கன்ன மீவள் வரன்மனம் போல வாழ்வள்.

22. ஜாதகனின் தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அன்புள்ள மனத்தினள். நல்ல எண்ணமுள்ளவள். சீக்கிரத்தில் கோப மடைவாள். உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். அற்ப காரியங்களுக்குச் செல்லாதவள். தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்ன மளிப்பாள். கணவன் மனம்போல் வாழ்ந்து வருவாள்.

23. மாநிறம் பித்த தேகி மருமத்தை வெளிக்காட் டாதாள்
தேன்மொழி கூறு வாளாம் தேரின புத்தி யுண்டு
ஈனரை உறவு கொள்ளாள் இடர்செய்யாள் யாவ ருக்கும்
வானவர் பக்தி பூண்பள் மங்கையே கேட்டி டாயே.

23. மாநிறமுள்ளவள். பித்த சரீர முடையவள். இரகசியத்தை வெளியிடாதவள். இனிய வார்த்தைகளைப் பேசுபவள். முதிர்ந்த அறிவாளி. கெட்டவர்களுடன் உறவு கொள்ளாதவள். ஒருவருக்கும் தீங்கு செய்யாதவள். தெய்வ பக்தியுள்ளவள். தாயே! கேட்டிடுவாய்.

24. இல்லமும் வடகீ ழாகும் இவள்துணை ஆண்பா லொன்று
செல்லுவான் சமமாம் போரில் சென்றுபின் வருவா னுவன்
தல்லியும் இவன்தன் னோடு சாருவாள் என்று சொல்வோம்
அல்லலாய்க் குடும்ப மென்றோம் அம்பிகை யாளே கேளாய்.

24. இவளுடைய வீடு வட கிழக்கிலுள்ளது. இவளுக்குச் சகோதரன் ஒருவன் உள்ளான். அவன் போருக்குச் சென்று திரும்பிவருவான். ஜாதகனின் தாய், தன் சகோதரனுடன் சேர்ந்து வாழ்வாள் என்றோம். துன்பமுடையவளான குடும்பி யாவாள். தாயே! கேளுங்கள்.

25. மாதுரு பூர்வம் சொல்வேன் மாயூரம் கீழ்ப்பா லாக
மேதினில் சிறுவூர் தன்னில் விளங்கினள் சேடர் வம்சம்
காதலி மதலை உண்டாய்க் கனத்ததோர் குடும்பி யாகித்
தீதுகள் வந்த சேதி செப்புவோ மினி மேலாக.

25. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மாயவரத்துக்குக் கிழக்கில் உள்ள ஒரு சிற்றூரில், சேடர் வமிசத்தில் பிறந்து, கணவன் மக்களைப் பெற்று, பெரிய குடும்பமேற்பட்டு வாழ்ந்து வந்தபோது, தீங்குகள் வந்து சேர்ந்த விபரத்தைச் சொல்லுகின்றோம்.

### குருவிக் கூட்டைக் கலைத்த தோஷம்

26. இரப்பினில் கூடு கட்டி இருக்கிற பக்ஷி தன்னைக்
குறிப்பாக அதைப் பிடித்துக் கூட்டையே கலைத்தா ளென்றோம்
மருவிற்று அந்தத் தோஷம் வரைகிறோம் வேறு ஒன்று
அரிவைமேல் நிந்தை வார்த்தை அறைந்தனள் மாது வெக்கி ;

26. தன்வீட்டுக் கூரையில் கூடுகட்டி வாழ்ந்துவந்த குருவியின் கூட்டைக் கலைத்தாள். அந்தப் பட்சிகளையும் பிடித்தாள். அந்தத் தோஷம் ஏற்பட்டது. வேறு ஒன்றும் கூறுகின்றோம். வேற்றுப் பெண்மீது அடாத வார்த்தைகளை உரைத்தாள். அப்பெண்ணும் மனதில் துயரமுற்று ;

### ஸ்திரீ நிந்தை

27. பெண்பழி சொன்ன பாவி பிறக்கும்பின் ஜன்மம் தன்னில்
அண்ணன்தம் பிகளு மின்றி அனுகின இல்ல மின்றிக்
கண்ணிய குடும்ப மின்றிக் கோதையும் வாழ்வா ளாவள்
வண்ணமாய்ச் சொல்லிச் சென்றாள் மருவிற்று அந்தச் சாபம்.

27. "பெண்மீது வீண்பழியைச் சொன்ன பாவியே! உனக்கு ஏற்படும் அடுத்த பிறவியில், நீ உடன்பிறந்தவர்களில்லாமல், புகுந்த வீடும் கிடைக்காமல், கண்ணியமுள்ள குடும்பமில்லாமல், வாழ்ந்து வருவாய்" என்று தீமையாகச் சொல்லிவிட்டுச் சென்றாள். அத்தோஷம் இவளை அனுகிற்று.

28. மாதுக்கு அந்தி யத்தில் வாயினில் ரணமும் கண்டு
தீதான கால னுடு சென்றுமே பிரமன் லக்கம்
மேதினி லுதித்தா ளென்றோம் மேவிடும் மாது சாபம்
காதலி துணைகள் தோஷம் கட்டட மின்றி வாழ்வள்.

28. பெண்ணுக்கு இறுதியில் வாயில் புண் ஏற்பட்டு, அதனுல் இறந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு, இப்பிறவியில் பிறந்தாள் என்றோம். பெண்ணின் சாபம் வந்தடையும். இவளுக்கு உடன் பிறந்தவருக்குத் தோஷம் எய்தி, வீடும் இல்லாமல் வாழ்ந்து வருவாள்.

29. மறுஜன்மம் காஞ்சி தன்னில் வருகுவாள் வைச்யச் சேயாய்ப்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பூவையும் வாழ்வா ளாவள்
திருமகன் தந்தை பூர்வம் செப்புவோ மினி மேலாக
அருணைமேல் சிறுவூர் தன்னில் அனுகினன் கௌரி வர்க்கம்.

29. மறுபிறவி **காஞ்சிபுர**த்தில் வைசிய குலத்தவளாகப் பிறந்து, பெருமையுள்ள குடும்பத்தை யடைந்து, இவள் வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய தந்தையின் மூற்பிறவியைச் சொல்லுகின்றோம், இனிமேல். **திருவண்ணுமலை**க்கு மேற்கில் உள்ள சிற்றூரில், கருணீகர் வமிசத்தில் பிறந்தான்.

30. அன்னம்போல் வடிவு மொக்கும் அடாவடி தன்னில் செல்லாள்
அன்னமு மன்பாய் ஈவள் அடிசிலுக் கினிய ளாகும்
அன்னவள் யோக சாலி அவளுக்கு வயது தீர்க்கம்
தென்முனி புகலு கின்றார் தேவியு மிரண்டு மாகும்.

30. அன்னம் போன்ற அழகுள்ளவள். அடாவடிக்குச் சொல்லாதவள். அன்புடன் அன்ன மளிப்பாள். இனிய சமையல் செய்வதில் திறமைசாலி. அதிருஷ்ட முள்ளவள். நீண்ட வயதுள்ளவள். அகத்திய முனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் உண்டு.

31. பின்வரும் ஜன்மம் தன்னில் பிறந்தஇல் லடையா னுகி
உன்குலம் குற்ற மாயும் உறைகுவாய் வனவா சங்கள்
பொன்பணி அதிக மின்றிப் பூமியில் வாழ்வா யென்றூர்
துன்மையாய் அந்தச் சாபம் சேர்ந்தது என்று சொல்வோம்.

31. உனக்கு ஏற்படும் மறுபிறவியில், பிறந்த வீடு இல்லாமலும், குலத்திலுள்ளவர்கள் மதிக்காமலும், வனவாசம் போல் வாழ்ந்து வருவாய். பொன் (ஆபரணங்கள், பணியாட்கள்) இல்லாதவனுகி, பூமியில் வாழ்ந்து வருவாய் என்றனர். தீமையாக அந்தச் சாபம் இவனைப் பற்றியது என்று கூறுவோம்.

32. அந்திய காலம் தன்னில் அறிவோர்கள் நேசம் கொண்டு
உன்னதத் தலங்கள் சென்று ஒதுங்கினுன் கால னுடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று சொல்வோம்
பிந்தினேர் ஏழை சாபம் புக்கிடு மிச்சென் மத்தில் ;

32. கடைசிகாலத்தில் அறிவாளிகள் சிநேகம் கொண்டு, உயர்ந்த க்ஷேத்திரங்களுக்குச் சென்று, மரணம் அடைந்தான். மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று சொன்னேம். ஏழைகளின் சாபம் பற்றி, இப்பிறவியில் ;

33. இல்லமில் லாமல் வாழ்வன் இவன்குலக் குற்றம் பூர்வம்
அல்லலாய்த் தனமில் லாமல் அவனுமே வாழ்வா னுவன்
கல்விகள் சிலர்க்குச் சொல்லிக் காசினி உய்வா னுவன்
சொல்லுவோ மிவன்பின் ஜன்மம் சுந்தரி கேட்டி டாயே.

33. தன் வீடு இல்லாமல் வாழ்ந்து வருவான். இவன் முற்பிறவியில் செய்த பாபத்தின் பலனுகத் துன்பமுற்று, செல்வங்கள் இன்றி வாழ்ந்து வருவான். சிலருக்குக் கல்வி கற்பிக்கும் ஆசிரியனுகி, அதனுல் ஜீவித்து வருவான். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். அழகியே ! கேளுங்கள்.

### குலம் உயரக் காரணம்

34. உத்தரம் துவாரை தன்னில் உதிப்பனும் பிரம்ம சேயாய்ச்
சித்தசன் இச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்னச்
சத்திய மென்று லச்சம் ஷண்முகன் பக்தி யாயும்
குத்தத்தை எண்ணுத தாலும் குவலயம் நல்லோ னுயும் ;

34. வடக்கிலுள்ள துவாரகையில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான். ஜாதகன் இப்பிறவியில் என்ன நற்காரியங்கள் செய்தான் ? சத்தியத்திற்குப் பயந்து, ஆறுமுகக் கடவுளிடம் பக்திபூண்டு, தீச்செயல்களை மனத்தாலும் நினையாமல், உலகத்தில் நல்லவனுக வாழ்ந்து ;

35. பஞ்சமும் பழிக்கு அஞ்சிப் பாரினில் வாழ்வ தாலே
மிஞ்சின குலமு திப்பான் விளம்புவோம் முப்பா னேழில்
தஞ்சமாய்ப் பணியின் காலம் சந்திரன் புத்தி தன்னில்
துஞ்சிடும் தந்தை கண்டம் செப்பின மொழிகுன் றுவே.

35. பாவச் செயலுக்கும் பழிக்கும் பயப்பட்டு, உலகில் வாழ்ந்து வந்ததால், உயர்ந்த அந்தண குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய முப்பத்தேழாம் வயதில், ராகுமகாதசையில், சந்திர புக்தியில் தகப்பன் இறந்து விடுவான். சொன்ன வார்த்தைகள் தவறு.

36. நாற்பது இரண்டு ஆண்டில் நற்றுலா மாதம் தன்னில்
கூப்பிடு வானும் காலன் குறித்ததோர் அன்னை தன்னை
ஏற்கவே சாத கர்க்கு எழுபது ஆண்டு (தன்னில் இடப மாதத்திலே தான்)
தீர்ப்பாகச் சாத கர்க்குச் செப்புவோம் மார கங்கள்.

36. ஜாதகனுடைய நாற்பத்திரண்டாம் வயதில் ஐப்பசி மாதத்தில் தாய்க்குக் கண்டம் ஏற்படும். ஜாதகனுக்கு எழுபதாம் வயதில் வைகாசி மாதத்தில் மரணம் ஏற்படும் என்று சொல்லுகின்றோம்.

### ஆயுர்பாவம்

37. அத்திரி தடுத்துச் சொல்வார் அந்தணன் தனக்கீ ராறில்
குத்தமாய் மதியும் தங்கக் குறித்தனம் சகடை தோஷம்
வித்தகன் தனக்குக் கண்டம் விளிம்புவோ மதியின் காலம்
இத்தகை அத்திரி சொல்ல இயம்புவார் பராசர் தாமே.

37. அத்திரி மாமுனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். குருவுக்குப் பன்னிரண்டாம் இடத்தில் சந்திரன் இருப்பதால், சகடை தோஷம் ஏற்படும் என்றோம். ஜாதகனுக்கு சந்திர மகாதசையில் கண்டம் உண்டாகும், என்று அத்திரி முனிவர் கூறும்போது, பராசர முனிவர் சொல்லுகின்றார்.

38. பொன்னவன் நவத்தி லேறப் புதல்வனுக் கனேக நோய்கள்
துன்மையாய் வந்த போதும் சூர்யன்முன் பனிபோல் போகும்
மன்னன்தன் பிணியும் நீங்கி வயதுமே தீர்க்க மென்றோம்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

38. குரு ஒன்பதாம் இடத்தில் இருப்பதால் ஜாதகனுக்குப் பலவித ரோகங்கள் ஏற்பட்டபோதிலும் சூரியன்முன் பனிபோல் பிணிகள் யாவும் நீங்கி, நீண்ட ஆயுள் உண்டாகும். உயர்ந்த கணவனையடைந்த பார்வதியே! கேளுங்கள்.

39. பின்ஜன்மம் காளாத்தி தன்னில் பிறப்பனும் சைவச் சேயாய்ப்
பொன்னொடு பணிதி பெற்றுப் புதல்வனும் வாழ்வா னவன்
அன்னவன் ஜனன காலம் அலரியின் தசைமூன் றாண்டும்
உன்னதத் திங்கள் நாலும் உரைக்கிறோம் பலனை யாங்கள்.

39. மறுபிறவி காளாத்தி க்ஷேத்திரத்தில், சைவ குலத்தவனாகப் பிறப்பான். செல்வங்கள் பணியாட்கள் இவர்களையடைந்து வாழ்ந்து வருவான். ஜாதகனின் ஜனனகாலத்தில் சூரியமகாதசையில் மூன்று வருடங்களும் நான்கு மாதங்களும் பாக்கி என்று சொல்லுகின்றோம்.

40. வந்தவன் பிணியு மெய்தும் அவன்வாசம் செலவ னேகம்
பந்துவும் பகையு மெய்தும் பலவித மனது துக்கம்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபர மாக
இந்திர னிரைஞ்சு மாதே இதுபூர்வ பாக மாமே.

40. ஜாதகனுக்கு நோய் உண்டாகும். அவன் வீட்டில் அதிகமாகச் செலவு ஏற்படும். உறவினர்களின் விரோதமுண்டாகும். பலவிதத்தில் மனத்திற்குத் துக்க முண்டாகும். அதைப் பிற்பாகத்தில் விபரமாகச் சொல்லுகின்றோம். இந்திரன் தோத்திரம் செய்யும் தேவியே ! இது முதல் பாகம் என்றோம்.

## ஜாதகம் 31.

1. மதிசனி தனுசு வாக மறைமானில் கேது மேடம்
புதன்குசன் வீணை யாகப் புகர்நந்தி பரிதி நண்டில்
[1]ததிகயர் கோல தாக ஜன்மமும் வீணை யாக
இதுவிதங் கோள்கள் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் சனி தனுசிலும், குரு மகரத்திலும், கேது மேஷத்திலும், புதன் செவ்வாய் மிதுனத்திலும், சுக்கிரன் விருஷபத்திலும், சூரியன் கடகத்திலும், ராகு துலாத்திலும், லக்கினம் மிதுனமாகவுமிருந்து, இம்மாதிரி நவக்கிரகங்கள் இருப்பின், பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | சுக்கிரன் | லக்கினம் புதன் செவ்வாய் |
| | இராசி சக்கரம் | | சூரியன் |
| குரு | | | |
| சந்திரன் சனி | | ராகு | |

2. சுந்தரி கேட்கும் போது ஜயமுனி கூறு கின்றார்
இந்தசேய் ஆணுஞ் ஜன்மம் இல்லமும் மேல்பால் நோக்கம்
தென்வட வீதி யாகும் சிவன்கன்னி தென்பா லாகும்
சுந்தரி கீழ்ப்பா லாகும் அருகினில் நதியு முண்டே.

2. என்று பார்வதி தேவி கேட்கும்போது, ஜயமுனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். இவன் பிறந்த வீடு மேற்கு நோக்கி யுள்ளது. அது வடக்குத் தெற்கான வீதியில் உள்ளது. சிவபெருமான் ஆலயமும் அம்மன்கோயிலும் தெற்குப்பக்கத்திலும், காளிகோயில் கிழக்கிலும், பக்கத்தில் ஓர் ஆறும் உள்ளன.

3. இன்னமும் பலதே வாசம் இலகிய சமவூர் தன்னில்
அன்னவன் மூன்றுஞ் ஜன்மம் அருளுவோங் கஙகை சேயாய்த்
தன்தந்தை தாயின் யோகம் சகோதரர் களத்திர புத்திரர்
முன்பின்ஜன் மங்கள் யாவு முரைக்கின்றே மிந்நூல் தன்னில்.

3. இன்னும் பல தெய்வங்கள் வசித்துவரும் சமநிலையுள்ள ஊரில், ஜாதகன், வேளாளர் குலத்தில், தன் தந்தைக்கு மூன்றும் பிறப்பாகப் பிறந்தான். ஜாதகனுடைய தந்தை, தாய், சகோதரர், மனைவி, புத்திரர் இவர்களின் யோகத்தையும் இவர்களுடைய முற்பிறவி மறுபிறவி இவைகளையும் இந்த நூலில் கூறுகின்றோம்.

---

[1]. இராகு.

4. தந்தையின் வர்க்கந் தனிலேச் சாற்றவே பலத்தைக் காணும்
தந்தையுந் தனியாய் வாழ்வன் சாற்றுவோ மவன்கு ணத்தை
தந்தமுந் தாள மொக்கும் தரணியை விருத்தி செய்வன்
தந்தைசொல் கடவா னாகும் சதுஷ்பாதம் விருத்தி யற்பம்.

4. தந்தையின் வர்க்கத்தினரைப்பற்றிச் சொல்ல பலமில்லை. அவன் தனித்து வாழ்வான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். முத்துக்களைப்போன்ற பற்களையுடையவன். பூமியைப் பெருக்குவான். தன் தந்தையின் வார்த்தையை மீறாதவன். கால் நடைகள் விருத்தியுரு.

5. அன்னையு மிரண்டு மாகும் அற்பரை யுறவு கொள்ளான்
அன்னமு மன்பாய் ஈவன் யாரையு முறவு கொள்வன்
அன்னியர் மதிக்க வாழ்வன் ஆனையின் நிறத்த னாகும்
அன்னவன் கரத்தி லேதான் அனுகிடு மாலின் ரேகை.

5. தந்தைக்கு இரு தாய்மார்கள் உளர். அவன் அற்பர்களுடன் சகவாசம் கொள்ளாதவன். அன்புடன் அன்னமளிப்பான். எல்லோரிடமும் நட்புக்கொள்ளுவான். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். யானையைப்போல் கரிய நிற முள்ளவ்ன். அவனுடைய கையில் விஷ்ணு ரேகை இருக்கும்.

6. பலவித வணிபஞ் செய்வன் பஞ்சைமே லிரக்க மாவன்
விலைமாதர் மோகங் கொள்ளான் வெஞ்சினம் வெளிக்காட் டாதான்
சலந்தோய்வன் சஞ்ச லத்தன் ஷண்முகன் பக்தி பூண்பன்
கலகத்தைக் கூறு னுவன் கடனது ஏற்பா னாமே.

6. பலவிதமான வர்த்தகங்கள் புரிவான். ஏழைகளின்மீது இரக்கமுள்ளவன். வேசையர் மோகம் கொள்ளாதவன். கோபத்தை வெளியிடாதவன். புண்ணிய நதிகளில் நீராடுவான். சஞ்சலமன முடையவன். ஆறுமுகக் கடவுள்மீது பக்தி கொள்ளுவான். கலகஞ் செய்யாதவன். கடன் வாங்குவான்.

7. ஆதியில் சுகமு முள்ளான் அன்னையால் சுகமில் லாதான்
பாதியின் வயது தன்னில் பலபல சஞ்ச லங்கள்
சூதிலான் பொறுமை சாலி சொல்லதைக் காப்பா னாகும்
வேதனை யொருவர்க் கெண்ணான் விதவிதச் செட்டும் செய்வன்.

7. ஆதிகாலத்தில் சுகமுள்ளவனாயிருப்பான். தன்னுடைய தாயால் சுகமில்லாதவன். அவனுடைய மத்திய வயதில் பற்பல சஞ்சலங்கள் ஏற்படும். கபட மில்லாதவன். பொறுமைசாலி. தான் சொன்ன வார்த்தைகளைக் காப்பாற்றுவான். பிறருக்குத் துன்பமிழைக்க எண்ணாதவன். பலபல வர்த்தகம் செய்து வருவான்.

8. சிரமுகம் வடிவு முள்ளான் செய்ந்நன்றி மறவா னாகும்
தரைமுன்னால் விரயஞ் செய்வன் சார்ந்திடு மாமி ரண்டு
மருவரை வசித்தே வெல்வன் மாமிய ரிருவ ராவர்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

8. முகத்தில் அழகுள்ளவன். பிறர் செய்த உபகாரத்தை மறவாத வன். முதலில் பூமியை விற்று விடுவான். இரு மனைவிகளை அடை வான். விரோதிகளைக் கூட இருந்தே வெல்லுவான். இரு மாமிகள் உண்டு என்றோம். வேதங்களின் முடிவில் சொல்லப்படும் தேவியே ! கேளுங்கள்.

9. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோகைய ரிருவர் தம்மில்
பின்மனை யாளுக் கின்றேன் பிறப்பனு மிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் மாநி றத்தான்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பான் முன்கோ பத்தான்.

9. இங்ஙனம் கூறப்பட்ட தந்தையின் இரு மனைவியரில் இளையவளுக் குப் பிறந்தவன் இந்த ஜாதகன் என்று கூறினோம். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவன். மாநிற முடையவன். தன் வார்த்தைகளே மேன்மை யுள்ளன என்று சாதிப்பான். முன் கோப முடையவன்.

10. தந்தைநாள் பூமி யற்பம் தான்சில பூமி சேர்ப்பன்
கந்தன்மேல் பக்தி பூண்பன் கரமதில் பத்ம ரேகை
வந்தவர்க் கன்ன மீவன் அடிமைக ளுடைய னாகும்
நிந்தைக ளேற்கா னாகும் நேமியோர் மதிக்க வுய்வன்.

10. பிதுரார்ஜிதமான பூமிகள் மிகக் குறைவாகவுள்ளன. தான் சில நிலங்களை வாங்குவான். முருகப்பிரான்மீது பக்தியுள்ளவன். கையில் பத்மரேகை யுள்ளவன். தன்னைத் தேடி வந்தவர்கட்கு அன்னமளிப்பான். ஏவலாட்கள் உடையவன். பழிகள் அடையாதவன். உலகத்தவர் கொண் டாடும்படி வாழ்க்கை நடத்துவான்.

11. வண்டிவா கனமு மேற்பன் மாநிலம் நல்லோ னவன்
குண்டைகோ விருத்தி யுண்டு குலமதிப் போடு வாழ்வன்
தண்டமிழ் நுணுக்கந் தேர்வன் தானியச் செட்டுச் செய்வன்
துண்டமாய்க் கூறா னவன் சோம்பிடான் காரி யத்தில்.

11. வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். உலகத்தில் நல்லவன் என்ற பெயரடைவான். பசு, எருது முதலியன விருத்தியாகும். தன் குலத்தில் மதிப்புடன் வாழ்வான். தெள்ளிய தமிழிலுள்ள நுட் பங்களை யறிவான். தானிய வியாபாரம் செய்துவருவான். கண்டித்துப் பேசாதவன். காரியங்கள் செய்வதில் சோம்பலில்லாதவன்.

12. ஆதியி லுணவு கொஞ்சம் அலைச்சலும் வறுமை யுள்ளன்
சூதிலான் பின்னல் யோகம் சொல்லது சுருக்க மாவன்
தீதென்றோர்க் குதவி செய்வன்[1] சேத்திரஞ் சித்திரஞ் செய்வன்
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

12. ஆதிகாலத்தில் உணவுக்கு சிறிதே உள்ளவன். அலைச்சலும் தரித்திரமும் உடையவன். கபடமில்லாதவன். பிற்காலத்தில் யோகமுள்ள வன். சுருக்கமாய்ப் பேசுபவன். துன்பமென்று வந்தவர்களுக்கு உபகாரி. வீட்டை அலங்காரப்படுத்துவான். உயர்ந்த விநாயகனைப்பெற்ற புண்ணியவ தியே ! கேளுங்கள்.

[1] வீடு.

13. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோம் ஆண்பால் காணும்
கன்னிமார் இருவர் தீர்க்கம் கழறுவோம் பாலனுக்குப்
பின்துணை யாண்பா லொன்று பேதையு மவ்வாறு தீர்க்கம்
துன்மையா மற்ற வெல்லாம் துணைவியே கேட்டி டாயே.

13. ஜாதகனுடைய உடன்பிறந்தவர்களில் முன் பிறந்த சகோதர னில்லை. இரு சகோதரிகள் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்று கூறுகின்ருேம். ஜாதகனுக்குப் பின் பிறந்த சகோதரன் ஒருவனும், சகோதரி ஒருத்தியும் ஆக இருவரும் தீர்க்கமுறுவர். மற்றவர்ரெல்லாம் நிலையார். தேவியே! கேளுங்கள்.

14. பிருகுமே புகலு கின்ருர் புகன்றினீர் முன்தா யொன்று
அரிவைக்குச் சுதர்க ளுண்டோ அறிவிப்பீர் முனியே நீர்தாம்
மருவாது சுதர்க ளென்ருேம் மாதுவும் மரிப்பா ளாகும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

14. பிருகு முனிவர் கூறுகின்ருர். முன்தாய் ஒருத்தி உண்டென்றீர்களே! அப்பெண்ணுக்குப் புத்திரர்கள் உண்டா? என்று தெரிவியுங்கள், முனிவரே! நீர்தாம். புத்திர பாக்கியம் ஏற்படாது என்ருேம். பெண்ணும் இறந்துவிடுவாள். கரிய யானையின் முகத்தையுடைய விநயகனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

15. மாதுரு குணத்தைச் சொல்வோம் மாநிறஞ் சமதே கத்தாள்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உறுதியா மனத்த ளாகும்
சாதிப்பாள் சிலவே சங்கை சந்தேக மனத்த ளாகும்
வேதனை யொருவர்க் கெண்ணுள் வித்தகி கேட்டி டாயே.

15. தாயினுடைய குணத்தைச் சொல்லுகின்ருேம். மாநிறமுள்ளவள். சமமான சரீர அமைப்புள்ளவள். சுகமாகப் பேசுபவள். திடமான மனத்தினள். சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வாள். சந்தேக மனமுள்ளவள். ஒருவருக்கும் தீங்கு செய்ய நினையாதவள். தேவியே! கேட்டிடுவாய்.

### மாமன் இல்லாத கிரகநிலை

16. முன்கோப முடைய ளாகும் உயர்வான புத்தி எற்பள்
தன்துணை காணு ளாகும் சாற்றுவீ ரந்தச் சங்கை
துன்மையாய்க் காரி திங்கள் சத்தமந் தன்னில் தங்கப்
பொன்னவன் நீச்ச மாகப் பூமகன் ஜன்மம் தங்க ;

16. முன் கோபமுடையவள். உயர்ந்த புத்திசாலி. உடன் பிறந்தவர்கள் இல்லாதவள். அதற்குரிய காரணங்களைச் சொல்லுங்கள். சனியும் சந்திரனும் தீமையாக ஏழாமிடத்தில் இருப்பதாலும், குரு நீசமாக மகரத்தில் இருப்பதாலும், செவ்வாய் ஜன்மத்தில் தங்கி யிருப்பதாலும் ;

## இருதாய் ஏற்பட கிரகநிலை

17. ஆகையால் அன்னைக் கேதான் அனுகார்கள் துணைவ ரென்றோம்
பாகமாய் அன்னை ரண்டு பகர்ந்தா ரணங்க ளென்ன
எகனு யிரவி ரண்டில் இருப்பதால் சொன்னோம் யாங்கள்
தோகையின் பூர்வந் தன்னைச் செப்புவோ மினிமே லாக.

17. ஆகையால் தாயாருக்குச் சகோதரர் இல்லை என்றோம். இரண்டு தாயார்கள் ஏற்படக் காரணம் என்ன? சூரியன் இரண்டில் (குடும்ப ஸ்தானத்தில்) தனியாக இருப்பதால் நாங்கள் சொன்னோம். தாயினுடைய முற்பிறவியை இனிக் கூறுகின்றோம்.

18. முன்னவ ளிருந்த ஜன்ம மொழிகிறோம் சோழ நாட்டில்
வன்னிய குலமு தித்து வளமுள குடும்பி யாகி
அன்னவள் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
கன்னிகை யொருத்தி பேரில் கழறினாள் நிந்தை வார்த்தை.

18. இவள் முற்பிறவியில் சோழநாட்டில் வன்னிய குலத்தில் பிறந்தாள் என்றோம். செழிப்புள்ள குடும்பத்தையடைந்து வாழ்ந்து வரும் நாளில், ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். பெண் ஒருத்திமீது அடாத நிந்தை வார்த்தைகளைப் பேசினாள்.

## ஸ்திரீ நிந்தை

19. பந்துவு மதைய றிந்து பாவையை விலக்க லுற்றார்
சிந்தையுங் கலக்க மாகிச் செப்புவாள் சாபந் தானும்
நிந்தைகள் சொன்ன பாவி நேரும்பின் ஜன்மம் தன்னில்
எந்தன்போல் துணைவ ரின்றி ஈன்றதாய்ச் சுகமு மின்றி;

19. அவளுடைய உறவினர்களும் அதை யறிந்து அப்பெண்ணை விலக்கி விட்டனர். அந்தப் பெண் மனச்சஞ்சல மடைந்து சொல்லிய சாபத்தைக் கேளுங்கள். "எனக்குப் பழி ஏற்படும் வார்த்தைகளைச் சொன்ன பாவியே! நீ, எடுக்கும் மறு பிறவியில், உடன் பிறந்தவர்களில்லாமல், பெற்றதாய்ச் சுகமுமில்லாமல்;

20. உலகினில் வாழ்வா யென்றாள் உறைந்தது வந்தச் சாபம்
தலைவிக்கு அந்தி யத்தில் தன்துணை காணு ளாகிக்
குலவினாள் கால னுடு குறைதலை வரையப் பட்டுத்
தலைவியு முதித்தா ளென்றோம் சார்ந்திடு மாது சாபம்.

20. வாழ்ந்து வருவாய்" என்றாள். அந்தச் சாபம் இவளை வந்தடைந்தது. அவளுக்குக் கடைசியில் உடன் பிறந்தவரில்லாமல் இறந்தாள். நான்முகக் கடவுளாகிய பிரமனால் மீண்டும் படைக்கப்பட்டு, ஜாதகனின் தாயாகப் பிறந்தாள். பெண்ணின் சாபம் தொடர்ந்தது.

21. துணைவர்கள் தோட மெய்தும் தீமையாய் மறுதாய் நேரும்
கனமிலாக் குடும்ப மேற்பள் கழறுவோ மிவள்பின் ஜன்மம்
சினமிலாக் காஞ்சி தன்னில் ஜனிப்பளாம் வைசியச் சேயாய்
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

21. உடன் பிறந்தவர்கட்குத் தோஷ மேற்படும். தீமையாய் இரண்டாம் மனைவியாக வாழ்க்கைப்படுவாள். செழிப்பில்லாத குடும்பத்தை யடைவாள். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தீமையில்லாத காஞ்சியில், வைசியர் குலத்தில் பிறப்பாள் என்றோம். மிகுந்த தவங்கள் இயற்றும் தேவியே ! கேளுங்கள்.

22. தந்தையின் பூர்வஞ் சொல்வோம் சம்புகேச் சுரத்தி லேதான்
நிந்தைசெய் வைச்யச் சேயாய் நேர்ந்துமே செட்டுச் செய்து
வந்திடு மனைவி மைந்தர் வளமுள குடும்பி யாகி
இந்தவன் வாழு நாளில் எய்தின வினையைக் கேண்மோ.

22. ஜாதகனின் தந்தையினுடைய முற் பிறவியைக் கூறுகின்றோம். ஜம்புகேச்வரத்தில் (திருவானைக்காவில்) நிந்தை ஏற்கும் வைசிய குலத்தவனாகப் பிறந்து, வர்த்தகம் செய்து, மனைவி மக்களை யடைந்து, செழிப்புள்ள குடும்பியாகி, இவன் வாழ்ந்துவரும் நாளில் ஏற்பட்ட தீவினையைக் கேளும்.

உடன்பிறந்தவனுக்குரிய பாகத்தைத் தராத தோஷம்

23. தன்துணை பாகந் தன்னைத் தராமலே மோசஞ் செய்தான்
அன்னவன் மனவெ றுப்பால் அறைந்திட்ட சாபங் கேண்மோ
பொன்கடன் தந்த பாவி பிறக்கும்பின் ஜன்மந் தன்னில்
உன்துணை இல்லா தாயும் உறைந்திடும் பாரி ரண்டு ;

23. தன் உடன் பிறந்தவனுக்கு உரிய பாகத்தைத் தராமல் மோசம் செய்தான். அவன் மன வெறுப்படைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். "எனக்கு(ப் பொருளைத் தராமல்)க் கடனை மாத்திரம் கொடுத்த பாவியே ! நீ பிறக்கும் அடுத்த ஜன்மத்தில் உடன் பிறந்தவரில்லாமல், இருமனைவியர் ஏற்பட்டு ;

24. அன்னையு மிரண்டு மாகி அலைச்சலாங் குடும்ப மாவாய்
இன்னமும் பலவாறு சொல்லி இறைத்தனன் தெருத்தூள் தானும்]
துன்மையாய் அந்தச் சாபம் சேர்ந்தது வென்று சொல்வோம்
பின்னோர்க்குக் கணக்கி லேதான் பிழைகளுஞ் செய்தா னென்றோம்.]

24. இரு தாய்மார்களையும் அடைந்து, அலைச்சலுள்ள குடும்பமாகியிருப்பாய்" என்றும், இன்னும் பல விதங்கள் சொல்லியும் தெரு மண்ணை வாரி இறைத்தான். அந்தச் சாபமும் சேர்ந்தது என்று கூறுவோம். ஏழைகளுக்குக் கணக்கில் தவறுகளும் மோசங்களும் செய்தான், என்றோம்.

25. அந்திய காலந் தன்னில் அவன்சுகங் குறைவு நேர்ந்து
பிந்திய குடும்பி யாகிப் புக்கினன் கால னூடு
விந்தையாய்ப் பிரமன் லச்கம் மேதினி லுதித்தா னென்றோம்
நிந்தையாய்த் துணைவன் சாபம் நேர்ந்திடு மிச்சென் மத்தில்.

**25.** ஜாதகன் தந்தை தன் கடைசிக் காலத்தில் சுகங்கள் குறைவுண்டாகி, ஏழையான குடும்பமாகி, இறந்தான். மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தான் என்று கூறினோம். உடன் பிறந்தவனின் சாபம் தீமையாக இப்பிறவியில் சார்ந்தது.

**26.** மாதுரு விரண்டு மாகும் மனைவியு மிருவ ராகும்
தீதாகுந் துணைவ ரென்றோம் சல்லியப் பாதை யேற்பன்
ஓதுவேன் இவன்பின் ஜன்மம் உத்திரம் கோகர் ணத்தில்
போதன முடையா னுக்குப் பிறப்பனும் பிரம்ம சேயாய்.

**26.** தாய்மார்களும் இருவராவர். மனைவியரும் இருவராவர். உடன் பிறந்தவர்கட்குத் தீங்காகும். துன்பமுள்ள வழிப்படி நடப்பான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். திருக்கோகர்ணம் என்ற ஊரில், பெரிய பொருளுடைய அந்தணனுக்குக் குழந்தையாகப் பிறப்பான்.

### உயர்குலத்தில் பிறக்கக் காரணங்கள்

**27.** இந்ததோர் ஜன்மம் தன்னில் இவன்செய்த புண்ணிய மென்ன
முந்தவே கூறு மென்ன மொழியதைக் காத்த லாலும்
சிந்தையும் நல்ல தாயும் தேவதா பக்தி யாயும்
வந்தவர்க் கன்ன மீந்தும் மாரனும் வாழ்வ தாலே ;

**27.** ஜாதகனின் தந்தை இப்பிறவியில் செய்த நற்காரியங்களென்ன ? முதலில் அவற்றைக் கூறுங்கள், என்று வினவ, சொன்ன சொற்களைக் காப்பாற்றியதாலும், நல்ல மன முள்ளவனாக இருந்ததாலும், தெய்வ பக்தியுள்ளவனாயும், பசியென்று வந்தவர்கட்கு அன்னமளித்து வாழ்ந்து வந்ததாலும் ;

**28.** உதிப்பனும் பிரம்ம சேயாய் உரைப்பீர்கள் கரும காலம்
சதியிலா இருபா னேழில் தனுர்மாதம் தந்தை கண்டம்
அதற்குப்பின் பத்தா மாண்டில் ஆனிமா தத்திலே தான்
அதிபதி அன்னை கண்டம் அறைந்தன மொழி குன்றுவே.

**28.** அந்தண குலத்தவனாகப் பிறப்பான் என்று சொன்னோம். ஜாதகனுடைய கரும காலங்களைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில், மார்கழி மாதத்தில், தந்தை மரணமடைவான். அதற்குப்பின் பத்தாம் வருஷத்தில் ஆனி மாதத்தில் தாயார் இறந்துவிடுவாள். சொன்ன சொற்கள் தவறு.

**29.** பாலகன் மணத்தின் காலம் பகருவோம் இருப தாண்டில்
நீலியும் மேல்பால் தன்னில் நேருவாள் குணத்தைச் சொல்வேன்
சீலியாம் சிவந்த மேனி சனஉப காரி யாகும்
காலத்தை அறிந்து ரைப்பள் கணவனுக் கினிய ளாகும்.

29. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய இருபதாம் வயதில், மேற்குத் திசையிலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். நல்லொழுக்க முடையவள். சிவந்த உடலுள்ளவள். ஜனங்களுக்கு உபகாரி. வருங்காலத்தை அறிந்து சொல்லும் திறமையுள்ளவள். கணவனுக்குப் பிரியமானவள்.

30. பலவிதச் செட்டு செய்து பாலகன் வாழு நாளில்
குலவின வினையைக் கேண்மோ குறித்தனன் கணக்கில் மோசம்
சிலர்க்குமே செய்தா னென்றோம் செப்புவார் ஏழை யோர்கள்
நிலையதைச் செப்பா தாகி நிகர்மோசம் செய்த பாவி.

30. பலவிதமான வர்த்தகம் செய்துவந்து ஜாதகன் தந்தை வாழ்ந்து வந்தபோது ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். சில பேருக்குக் கணக்கில் மோசம் செய்தான். ஏழைகள் சாபமிட்டனர். உண்மை நிலையைச் சொல்லாமல் மோசம் செய்த பாவியே !

31. காரணம் புகலு மென்னக் கனகனும் ஏழோ னாகித்
தீரமாய் எட்டில் தங்கச் செப்பினோம் தாரம் ரண்டு
மாறியே பராசர் சொல்வார் மதியுமே ஏழில் தங்கக்
கூறியோன் ஜன்மம் தங்கக் கூறினோம் தாரம் ரண்டு.

31. காரணங்கள் சொல்லுங்கள் என்று வினவ, குரு ஏழாம் வீட்டுக் குரியவனாகி எட்டாம் வீட்டில் இருப்பதால் இரு மனைவியர் உண்டு என்றோம். பராசர முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். ஏழாமிடத்தில் சந்திரன் இருப்பதாலும், புதன் லக்கினத்தில் இருப்பதாலும் இரு மனைவியர் ஏற்படுவர் என்று சொன்னோம்.

32. [1]இதற்குநே ரிடையாய்ச் சாதக சுருதியி லேழாம் பாவத்தில் பாரு
அதில்சொலும் விபரம் ரண்டேழோன் கேந்திர மாகிலும் [கோணத்தி லிருக்கச்
சதியிலாத் தாரம் ஒன்றென மொழிந்தோம் சங்கையை விபரமாய்ச் [சொல்வேன்
இதுநிற்க வர்க்கில் பரலுமே ஒன்று இருப்பதால் தாரமு மொன்றே.

32. இதற்கு நேரிடையாக ஜோதிஷ சாஸ்திரத்தில் ஏழாம்பாகத்தில் சொல்லும் விபரத்தைச் சொல்லுகின்றோம். இரண்டாம் இடத்துக் குரியவனும் ஏழாமிடத்துக்குரியவனும் கேந்திர ஸ்தானத்திலிருந்தாலும், கோணத்தில் இருந்தாலும், சந்தேகமில்லாமல் மனைவி ஒருத்தியே என்று கூறுகின்றோம். இது நிற்க, அஷ்ட வர்க்கத்தில் பரல் ஒன்று இருப்பதால் மனைவி ஒருத்தியே.

33. [2]புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தை காணும்
சித்தமாய் உதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொல்வோம்
குத்தத்தைச் சொல்லு மென்னக் குழவியின் தானம் தன்னில்
வித்தகர் ராகு தங்க வெள்ளியும் விரயம் புக்க ;

[1] ஜோதிஷ சாஸ்திர 7-ஆம் பாவம்.
[2] 5-ஆம் பாவ கிரகநிலை.

33. புத்திர விருத்தியைச் சொல்ல பலமில்லை. அப்படிப் பிறந்தாலும் தீங்காகும், நிலையாது, என்று சொல்லுகின்றேம். ஏற்பட்ட குற்றத்தைச் சொல்லுங்கள், என, **புத்திர ஸ்தானத்தில் ராகு இருப்பதாலும், அவ்விட்டுக் குரிய சுக்கிரன் பன்னிரண்டாம் இடத்தில் இருப்பதாலும் ;**

34. மைந்தர்கள் தோஷ மெய்தும் மருவிடும் பூர்வ தோஷம்
வந்ததோர் வினையைச் சொல்ல மாரன்முன் ஜன்மம் சொல்வேன்
செந்திமா மலையி லேதான் ஜனித்தனன் வடுகர் வர்க்கம்
பைந்தொடி மதலை உண்டாய்ப் பாலகன் வாழு நாளில் ;

34. புத்திர தோஷம் ஏற்படும். முற்பிறவியின் தீவினையும் சேரும். ஏற்பட்ட தீச்செயலைச் சொல்லுங்கள். ஜதகனுடைய முற்பிறவியைச் சொல்லு கின்றேன். செந்தில் மலையில் (திருச்செந்தூரில்) வடுகர் குலத்தில் பிறந்தான். மனைவி மக்களை யடைந்து ஜாதகன் வாழ்ந்துவரும் நாளில் ;

**புத்திரதோஷம் : ஸர்ப்பத்தைக் கொன்றது**

35. இல்லத்தில் வெகுநா ளாக இருந்தது நாக மொன்று
அல்லலாய் மகுடத் தாலே அதுமுத்தத் தியங்கும் போது
வல்லவன் அரங்கம் செய்து வாட்டினன் கழியி னாலே
புல்கிற்று கால னோடு புக்கிற்று அந்தத் தோஷம்.

35. தன் வீட்டில் வெகு காலமாக வசித்துவந்த நல்ல பாம்பு ஒன்று, அவ்வீட்டு முற்றத்தில் படம் எடுத்து ஆடும்போது, ஜாதகன் ஒரு கழியினால் அதை அடித்தான். பாம்பு இறந்தது. அத்தோஷம் இவனைப் பற்றியது.

**கருவழித்த தோஷம்**

36. விதவையை ஆல யத்தில் வித்தகன் போகம் துய்த்து
அதனாலே கருவு தங்கி அழித்தனன் பண்டி தத்தால்
சதியான கருவு நீங்கிச் சக்தியும் மாண்டா ளென்றேம்
இதுவொரு தோஷ மாச்சு ஈச்வரி கேட்டி டாயே.

36. ஒரு கைம்பெண்ணுடன் தேவாலயத்தில் ஜாதகன் இன்பம் அனுப வித்தான். அதனால் கருவேற்பட்டது. மருந்தைக் கொடுத்துக் கருவை அழித்தான். கருவும் நீங்கிய பிறகு கைம்பெண் இறந்தாள். இஃது ஒரு தோஷ மாயிற்று. ஈசுவரியே ! கேளுங்கள்.

37. அரவத்தைக் கொன்ற தோஷம் அந்தத்தில் சுதர்கள் மாண்டு
மறலியின் பதிக்குப புக்கி மறைவன் வரையப் பட்டு
வரநதி குலமு திப்பான் மருவிடும் முன்னூழ்த் தோடம்
பெருஞ்சுதர் தோஷ மெய்தும் புண்ணிய வதியே கேளாய்.

37. சர்ப்பத்தைக் கொன்ற தோஷத்தால் கடைசிக்காலத்தில் ஜாதக னுடைய குழந்தைகள் இறந்து, இவனும் மாண்டு, மீண்டும் பிரமனால் மீண்டும் படைக்கப்பட்டு, வேளாள குலத்தில் பிறப்பான். முற்பிறவியில் செய்த தோஷம் தொடரும். அடையும் புத்திரர்களுக்கும் தோஷமுண் டாகும். புண்ணியவதியே ! கேளுங்கள்.

**கருவழித்த தோஷம் விலகச் சாந்தி.**

38. அதற்கொரு கிரியை சொல்வோம் அரசின்கீழ் சிலையில் நாகம்
துதித்துமே பிரதிட்டை செய்யப் பாலர்கள் விருத்தி யென்றோம்
குதர்க்கமாய்ச் செய்யா ஆகில் குழவிகள் விருத்தி யாகா
விதிபோலச் செய்வா ஆகில் விளங்கிடு மாண்பா லொன்று.

38. அந்தத் தோஷம் நீங்கச் சாந்தி ஒன்று சொல்லுகின்றேன். ஓர் அரச மரத்தின் கீழ் கற்சிலையில் நாகம் செய்து, அதைப் பிரதிட்டை செய்து, துதித்து வந்தால், புத்திரர்கள் தோன்றுவார்கள். கெட்ட எண்ணத்தால் அவ்விதம் செய்யாவிடில், குழந்தைகள் பிறவார். நாங்கள் சொல்லியபடி செய்துவந்தால் ஒரு புத்திரன் தோன்றுவான்.

39. கன்னிகை யிரண்டு என்றோம் கழருவோம் அறுப தாண்டில்
மன்னிய ஆடி மாதம் வளர்பிறை துதியை தன்னில்
இன்னவ னுடல மேகும் இயம்புவோ மிவன்பின் ஜன்மம்
தென்திசை தில்லை தன்னில் ஜனிப்பனும் சைவச் சேயாய்.

39. இரு புத்திரிகள் தோன்றுவார்கள் என்றோம். ஜாதகன், அறுபதாம் வயதில் ஆடி மாதம் சுக்கிலபட்ச துவிதீயையன்று மரணமடைவான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தென் திசையிலுள்ள சிதம்பரத்தில் சைவகுலத்தவனாகப் பிறப்பான்.

40. பாலகன் தனக்குத் தீர்க்கம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வீர்
ஆலனுக் கிரண்டில் பொன்னோன் அணுகினல் சகடை தோஷம்
ஏலவே ஆரு மாண்டுள் இவனுக்குக் கண்ட மெய்தும்
சாலவே பராசர் சொல்வார் தனுர்மதி சகடை பங்கம்.

40. ஜாதகன் நீண்ட ஆயுளுடன் இருப்பதற்குக் காரணங்கள் என்னவென்று கூறுங்கள். சந்திரனுக்கு இரண்டில் குரு இருந்தால் சகடை தோஷம் ஏற்படும். ஆதலால் இவனுக்கு ஆறும் வயதுக்குள் கண்டம் ஏற்படும். பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகிறார். தனுவில் சந்திரன் இருப்பதால் சகடை தோஷபங்கம் உண்டாம் என்றார்.

41. காரியும் மதியும் ஏழில் கலந்தால் வயது தீர்க்கம்
பார்மகன் புதனுஞ் ஜன்மம் பரவின பலத்தால் தீர்க்கம்
மாறிடா தென்று சொல்வோ மாரனும் யோக மெவ்வாறு
கூறினீர் விபரஞ் சொல்வீர் குறிக்கின்றோந் தாயே கேளும்.

41. சனியும் சந்திரனும் ஏழில் இருப்பதால் ஜாதகனுக்கு நீண்ட வயது உண்டு என்றோம். செவ்வாயும் புதனும் லக்கினத்தில் இருப்பதாலும் தீர்க்காயுளுள்ளதே. மாறிவிடாது என்றோம். ஜாதகனுக்கு யோகம் எவ்வாறு கூறினீர்கள்? விபரம் சொல்லுங்கள். தாயே! சொல்லுகின்றோம்; கேளுங்கள்.

42. புகர்புதன் ஆட்சி யாகப் புரவியோ னிரண்டில் தங்கச்
சகபதி யோக மொன்று சாமரை யோக மொன்று
பகையிலா விரண்டு யோகம் பகர்ந்தன மாரு ருண்டில்
தகைமையாய்ச் சல்யங் காணன் தனமது பெருக்கஞ் செய்வன்.

42. சுக்கிரனும் புதனும் ஆட்சியாக இருப்பதாலும் சூரியன் இரண்டாமிடத்தில் இருப்பதாலும் ஜகபதி யோகம் ஒன்றும் சாமரை யோகம் ஒன்றும் ஆக இரண்டுயோகங்கள் ஜாதகனுக்கு ஏற்படும் என்று சொன்னோம். முப்பத்தாறும் வயது முதல் செம்மையாகவும் கடன் உபத்ரவ மில்லாமலும் செல்வங்கள் பெருக்கியும் வாழ்வான்.

43. தரணிகள் சேர்ப்பா ருகும் தன்பந்து மதிக்க வுய்வன்
பிறைபோலச் செல்வ மோங்கும் பலவித லாப மெய்தும்
திருமகள் வாச மாகும் சயமாகும் நினைத்த வெல்லாம்
பொருள்பூமி தன்னுல் நேரும் பகன்றன மெட்டாண் டின்மேல்.

43. பூமிகள் வாங்குவான். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்வான். வளர் பிறைச் சந்திரன்போல் செல்வம் பெருகும். பலவிதலாபம் ஏற்படும். லட்சுமீகடாட்சம் உண்டாகும். எண்ணியகாரியங்களெல்லாம் ஜயமாகும். ஜாதகனுக்கு எட்டாம் வயதுக்குமேல் பூமியிலிருந்து செல்வம் கிடைக்கும்.

44. இன்னமும் விவர மாக இயம்புவோம் பின்பா கத்தில்
அன்னவன் ஜனன காலம் அதிதியின் தசையா றுண்டும்
உன்னதத் திங்கள் நாலும் உரைக்கின்ருேம் பலனை யாங்கள்
பொன்கடன் செலவு முண்டு புதல்வற்குப் பிணிய நேகம்.

44. இன்னும் விபரமாக இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்ருேம். ஜாதகனுடைய ஜனன காலத்தில் கேது மகாதசை ஆறு வருடங்களும் நான்கு மாதங்களுமாம். அக்காலத்திய பலனைச் சொல்லுகின்ருேம். பொருட் கடன் ஏற்படும். செலவு அதிகமாகும். ஜாதகனுக்குப் பலவித ரோகங்கள் ஏற்படும்.

45. பந்துவுஞ் சூத மெய்தும் பலமனச் சஞ்ச லங்கள்
சிந்தையுங் கலக்க மெய்தும் திருகாகும் நினைத்த வெல்லாம்
பிந்திய துணைவி ருத்திப் பலமிலாக் குடும்ப மெய்தும்
இந்திர னிறைஞ்சு மாதே இயம்பினேம் பூர்வ பாகம்.

45. பந்துக்களுக்கு அசுபம் ஏற்படும். பலவிதமான மனச் சஞ்சலங்கள் உண்டாகும். மனக்கலக்கம் ஏற்பட்டு நினைத்த காரியங்கள் நடவா. சகோதர விருத்தியாகும். நன்மையில்லா குடும்பமாகும். இந்திரன் தோத்தரிக்கும் தேவியே! முதல் பாகம் கூறினேம்.

---

1 கேது.

## ஜாதகம் 32.

(29-ஆம் நீ ஜாதகம் பார்க்க.)

1. சந்திர னரியில் தங்கச் சனிமானில் சேயு மேரு
புந்தியும் வீணை யாகப் புரவியோன் நந்தி புக்க
மந்திரி கோல தாக மலைப்பாம்பு மீன மாகப்
பிந்திய கேது கன்னி புகர்மேடம் மிதுனஞ் ஜன்மம் ;

1. சந்திரன் சிம்மத்திலும், சனி மகரத்திலும், செவ்வாய் தனுசிலும், புதன் மிதுனத்திலும், சூரியன் விருஷபத்திலும், குரு துலாத்திலும், ராகு மீனத்திலும், கேது கன்னியிலும், சுக்கிரன் மேஷத்திலும் நின்று, மிதுனம் இலக்கினமாக இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| ராகு | சுக்கிரன் | சூரியன் | லக்கினம் புதன் |
| | இராசி சக்கரம் | | |
| சனி | | | சந்திரன் |
| செவ் வாய் | | குரு | கேது |

2. சொல்லுவீர் பலனை என்று சுந்தரி கேட்கும் போது
புல்குவார் பராசர் தாமும் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
இல்லமும் கீழ்மேல் வீதி யமன்வாடை மடம தாகும்
நல்லதோர் தீர்த்தம் கீழ்ப்பால் கிரிஎன்று சொல்லு வோமே.

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும்போது, பராசர முனிவர் கூறுகின்றார். ஜாதகம் ஆண் மகனுடையது. இவன் பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில், தெற்கு வரிசையில் உள்ளது. தெற்கில் ஒரு மடமும் புண்ணிய நீர்நிலையும் உண்டு. கிழக்கில் ஒரு குன்று இருக்கும் என்று சொல்லுவோம்.

3. அறுமுகன் குடகில் தங்கும் அநேகமா மடங்க ளுண்டு
பெருமையும் புகழு முண்டு பேசிய அடையா ளத்துள்
திருமகன் தோன்று வானும் செப்புவோ மிவனின் யோகம்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

3. மேற்குத்திக்கில் சுப்பிரமணிய ஸ்வாமியும், அநேக பெரிய மடங்களும் உள்ளன. பெருமையும் கீர்த்தியுமுடைய இவ்வித ஊரில், இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். கரிய யானை முகத்தோனைப்பெற்ற பார்வதிதேவியே ! கேளுங்கள்.

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றவே பலமு றுது
தந்தையி னில்லம் காணுன் சாற்றுவோ மவன்கு ணத்தைத
தந்தமும் தரள மொக்கும் சங்கரன் பூசை பூண்பன்
தந்தன மில்லா னுகும் தடமில்லா வாழ்வா னுகும்.

4. ஜாதகனுடைய தந்தையினுடைய வர்க்கத்தினைப் பற்றிச் சொல்லுங்கால், பல மில்லை என்றோம். தந்தையின் வீட்டை அடையாதவன். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். முத்துக்களைப் போன்ற வெண்மையான பற்களுள்ளன. சிவபெருமானுக்குப் பூசை புரிவான். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் இல்லாதவன். நில மில்லாமல் வாழ்ந்து வருவான்.

5. வித்தையு மற்ப மாகும் வியாதியைச் சிலர்க்கு தீர்ப்பன்
சத்துவ குணத்தா னுகும் உரைந்திடும் மாமி ரண்டு
நித்தியம் சீல னுகும் நிதானமாய் வார்த்தை கூறுவன்
அத்திபோல் நடையு மாகும் யாவர்க்கு நல்லோ னுவன்.

5. சிறிதே கல்வியறி யுள்ளவன். சிலருக்கு வந்த நோயைத் தீர்த்து வைப்பான். சத்வகுண முள்ளவன். இரு மனைவியர் உண்டு என்றோம். நல்லொழுக்க முள்ளவன். மெதுவாகப் பேசுபவன். யானையின் நடை போன்ற கம்பீரமான நடையுள்ளவன். எல்லொருக்கும் நல்லவனுவன்.

6. ஆதியில் வறுமை உள்ளான் அற்பமாய் உணவு உண்பான்
பாதியின் வயது மேலாய்ப் பலரது நேசம் செய்து
வாதிபோல் திரிவா னுவன் மருத்துவத் தொழிலு மேற்பன்
சூதிலான் பெருமை ஏற்பன் துறவோர்கள் நேசம் கொள்வன்.

6. ஆதியில் தரித்திர முள்ளவன். அற்ப ஆகாரம் சாப்பிடுவான். பாதிவயதுக்கு மேல் பலபேர்களின் நட்பு ஏற்பட்டு, வாதி போல் திரிவான். வைத்தியத் தொழில் செய்து வருவான். சூதுகளில்லாதவன். பெருமையடைவான். துறவிகள் (பரதேசிகள்) சிநேகம் கொள்ளுவான்.

7. அந்திய வயதி லேதான் அவன்சிறை யாக வாழ்வன்
எந்தக்கா ரணத்தி னுலே இயம்பினீர் அந்தச் சங்கை
சந்திரன் மூன்றி லேறச் சனியுமே எட்டில் தங்க
முந்திய வினையாம் என்றோம் மொழிகுவீ ரந்தச் சங்கை.

7. தந்தை தன் கடைசி வயதில் சிறையில் வசிப்பதுபோல் வாழ்ந்து வருவான். என்ன காரணத்தினுல் அப்படிக் கூறினீர்கள்? சந்திரன் மூன்று மிடத்தில் இருப்பதாலும், சனி எட்டாமிடத்தில் இருப்பதாலும், முற்பிறவியில் செய்த வினை ஏற்பட்டது என்று கூறினோம். அந்த வினையைச் சொல்லுங்கள்.

**துன்பமுற்றோருக்கு இடையூறு செய்த தோஷம்**

8. கோங்குநா டதனி லேதான் குதித்தனன் சேடர் வம்சம்
பாங்கியும் மதலே உண்டாய்ப் பாதமாய்க் குடும்பி யாகித்
தீங்கிலா வாழு நாளில் செய்ததோர் விஜோயைக் கேண்மோ
ஏங்கினோர்க் கிடைஞ்சல் செய்தான் எய்திற்று அவர்கள் சாபம்.

8. ஜாதகனுடைய தந்தை, கொங்குநாட்டில், சேடர் வம்சத்தில் பிறந்து, பாக்கியங்களைப் பெற்று, குழந்தைகளையடைந்து, பெரிய குடும்பியாகி, தீவினை யில்லாமல் வாழ்ந்துவரும் நாளில், ஏற்பட்ட தீவினையைக்கேளுங்கள். துன்ப மடைந்தவர்கட்கு மீண்டும் இடையூறுகள் செய்தான். அவர்களுடைய சாபம் இவனுக்கு நேர்ந்தது.

**வேசி சாபம்**

9. ஆசையாய் வார்த்தை சொல்லி அரும்பொருள் தாரே னென்று
தாசியைப் போகம் துய்த்துத் தனமதை யீயாச் சென்றான்
வேசியும் மனது வெட்கி விளம்புவாள் சாபம் தானும்
நாசமாம் குடும்பம் யாவும் நல்கும்பின் ஜன்மம் தன்னில் ;

9. அரிய பொருள்கள் தருகிறேன் என்று ஆசை வார்த்தைகள் பேசி, ஒரு வேசியுடன் இன்ப மனுபவித்தான். ஆனால் பணம் கொடுக்காமல் சென்று விட்டான். தாஸியும் மனம் நொந்து உரைத்த சாபத்தைக் கேளுங்கள். உன் குடும்பம் நாசமடையும். மறு பிறவியில் ;

10. துணைவர்கள் தோஷ மாயும் தோகையர் இருவ ராயும்
அணையும்பா ரியையந் தந்தில் அணுகாமல் இல்ல மின்றி
வினைமன மாகச் சொல்ல மேவிற்று அந்தச் சாபம்
தனயனு மந்தி யத்தில் தபசிக ளுறவு கொண்டு ;

10. உடன் பிறந்தவர்கட்குத் தோஷமேற்பட்டு, இரு மனைவிகளையடைந்து, மனைவியும் இறந்து, கடைசியில் தன் வீட்டையும் இழந்து விடுவாய், என்று வருந்திய மனத்துடன் சொல்லிச் சென்றாள். அந்தச் சாபம் தொடர்ந்தது. ஜாதகனுடைய தந்தை தன் கடைசிக்காலத்தில் தவசிக ளுடன் நட்புக்கொண்டு ;

**சந்திரயோகம்**

11. பலதல வாசம் சென்று பகவான்போல் வேடம் கொண்டு
குலவினன் கால னூடு குறைதலே வரையப் பட்டுத்
தலைவனு முதித்தா னென்றோம் சார்ந்திடு முன்னூழ்ச் சாபம்
நிலையிலா வாச மாவன் நேர்ந்திடும் பாரி ரண்டு.

11. பல புண்ணிய தலங்களுக்குச் சென்று, பகவானைப்போல் வேடம் போட்டுக்கொண்டு, இறந்துவிட்டான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு இப் பிறப்பில் பிறந்தான் என்றோம். முற்பிறவியின் சாபம் இப்பிறவியிலும் தொடர்ந்தது. நிச்சயமான இடம் ஒன்று இல்லாமல் அலைச்சலுடன் வாழ் வான். இரு மனைவியர் ஏற்படுவர்.

12. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
பின்மனை யாளுக் கின்னேன் பிறப்பனும் குணத்தைச் சொல்வேன்
தன்சொலு மடக்க முள்ளான் சரசமாய் வார்த்தை கூறுவன்
அன்னியர் மதிக்க வாழ்வன் அழகுளான் கல்வி மானும்.

12. இங்ஙனம் கூறப்பட்டகுணமுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனும் இரண்டாம் மனைவிக்குத் தோன்றுவான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அடக்கமுள்ளவன். சல்லாபமாகப் பேசுவான். பிறர் கொண்டாடும்படி வாழ்வான். அழகுள்ளவன். கல்விமான்.

13. பலருக்கு நல்லோ னுவன் பலர்வினை தீர்ப்பா னுவன்
தலவாசம் செல்வா னுவன் தந்தையி னுஸ்தி காணுன்
விலைமாதர் மோகம் கொள்ளான் வெஞ்சினம் வெளிகாட் டாதான்
புலவனும் ஊக சாலி புகழது எற்பா னுவன்.

13. பலபேருக்கு நல்லவனுக இருப்போன். பலருடைய துன்பங்களைத் தீர்த்துவைப்பான். புண்ணிய தலங்களுக்குச் செல்லுவான். தன் தந்தையின் ஆஸ்தியில்லாதவன். வேசிகளின்மீது மையல் கொள்ளாதவன். கோபத்தை வெளிக் காட்டாதவன். புலவன். ஊகமுள்ளவன். புகழுடைவான்.

14. அன்னையால் சுகமில் லாதான் அற்பரை உறவு கொள்ளான்
பொன்பணி சேர்ப்பா னுவன் புண்ணிய மனத்த னுவன்
கன்னிமார் தன்னுல் நஷ்டம் கஞ்சமா நிறத்த னுவன்
பின்னமில் லாத தேகி எம்மானைப் பூசை பூண்பன்.

14. தன்னுடைய தாயால் சுகமில்லாதவன். அற்பர்களுடன் நட்புக் கொள்ளாதவன். பொன் ஆபரணங்களைச் சேர்ப்பான். புண்ணியமான மனத்தன். மனைவியால் பொருள் நஷ்டம் அடைவான். தாமரையின் நிறம் போன்ற நிறமுள்ளவன். ஊனமில்லாத சரீரமுள்ளவன். சிவபெருமானைப் பூசை செய்வான்.

15. தன்துணை ஆண்பால் தோஷம் சத்திமா ரிருவ ருண்டு
அன்னவர் மத்தில் எகும் அவன்தனி யாக வாழ்வன்
முன்மாதா ஒன்று என்றீர் மொழிகுவீர் அவர்க்குப் புத்திரர்
மன்மதன் போலா ணென்று மருவிடும் தீர்க்க மாக.

15. உடன் பிறந்தவர்களில் சகோதரரில்லை. இரு சகோதரிகள் உண்டு. அவர்களும் இடையில் சென்று விடுவார். அவன் தனித்தே வாழ்ந்து வருவான். ஜாதகனுக்கு மூத்த தாய் ஒருத்தி யுண்டு என்று கூறினீர்களே! அவர்களுக்குப் புத்திரர் உண்டா ? சொல்லுங்கள். மன்மதன் போன்ற அழகிய புத்திரன் பிறந்து தீர்க்கமாக இருப்பான்.

16. மாரனின் குணத்தைச் சொல்வேன் மறுவரை வசித்தே வெல்வன்
காரிய சமர்த்த னுவன் காசுகள் சேர்ப்பா னுவன்
பாரிய புத்தி உண்டு பலர்வினை தீர்ப்பா னுவன்
ஆறுமா முகத்தோன் பக்தி யாவர்க்கும் நல்லோ னுவன்.

16. ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுவேன். விரோதிகளைச் சிநேகமாக இருந்தே ஜயிப்பான். காரியங்களில் சமர்த்தன். செல்வங்களை விருத்தி செய்வான். தாராள புத்தியுள்ளவன். பலருடைய துன்பங்களை நிவிர்த்தி செய்வான். சுப்பிரமணியக் கடவுளிடம் பக்தி கொள்ளுவான். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான்.

17. [1]மந்திரம் வைத்தி யர்கள் மருமநூ லறிவா னவன்
இந்திர னைப்பாய் வாழ்வன் இருவிதக் கல்வி உள்ளான்
எந்திடம் பெருமை ஏற்பன் இடரென்றோர்க் குதவி செய்வன்
செந்திரு விலாச முள்ளான் சீலனும் பெருமை யோனும்.

17. [1]மந்திர சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம், இரகசிய சாஸ்திரம் இவைகளை யறிவான். இந்திரனைப் போல வாழ்ந்துவருவான். இருவிதமான கல்வி கற்பான். எவ்விடத்துக்குச் சென்றாலும் பெருமை கொள்ளுவான். துன்பமடைத்தவர்கட்கு உபகாரம் செய்வன். லட்சுமீகடாட்சம் உள்ளவன். நல்லொழுக்கமுள்ள பெரியோன்.

18. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் ஆண்பால் நான்கு
தீரமாய்ப் பெண்பா லொன்று செப்புவோம் தீர்க்க மாக
வீரிய னென்றாய் வாழ்வன் விகடங்கள் கூறா னவன்
மாரனும் வறுமை காணன் மருவுவான் சிவன்தன் பூசை.

18. மனைவியும் ஒருத்தியே. நான்கு புத்திரர்களும் ஒரு புத்திரியும் நீண்ட ஆயுளுடனிருப்பார்கள். ஜாதகன் அவர்களோடுகூடி வாழ்வான். விகடமாகப் பேசாதவன். தரித்திரம் இல்லாதவன். சிவபெருமானுக்குப் பூசை செய்துவருவான்.

19. மைந்தனின் மணத்தின் காலம் வரைகிறோம் பதினே ழாண்டுள்
அந்தவன் மேல்பால் நேரும் அறிவிப்போம் அவள்கு ணத்தைச்
செந்திரு மகள்போ லொப்பாம் சிறிதான புத்தி இல்லாள்
பந்துவுக் கினிய ளாவள் பாவையும் தீர்க்க சீவி.

19. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய பதினேழாம் வயதுக்குள் மேற்குப் பக்கத்திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். இலக்குமியைப் போன்றவள். அற்பபுத்தி யில்லாதவள். உறவினருக்குப் பிரியமானவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

20. [2]அத்திரி தடுத்துச் சொல்வார் அம்மாது எவ்வாறு தீர்க்கம்
சத்தமத் தோன்ச ரத்தில் சார்ந்ததால் நஷ்ட மெய்தும்
குத்தங்கள் இருபா னறில் கூறுவோ மிருபா னேழில்
பத்தினி தென்பால் நேரும் பாவையும் முப்பா னென்றில் ;

---

[1] "இரகசிய" சாஸ்திரம்.
[2] 7-ஆம் பாவதோஷ ஸிரகநிலே.

20. அத்திரி முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். அப் பெண்ணுக்கு எப்படி நீண்ட வயதுண்டு? ஏழாம் வீட்டுக்குரிய குரு சரராசியில் இருப்பதால் ஜாதகனுடைய மனைவிக்குத் தோஷம உண்டாகும். ஜாதகனுக்கு இருபத்தாறும் வயதில் மனைவிக்குக்கண்டம் ஏற்படும். அவனுடைய இருபத்தேழாம்வயதில் மறுமனைவி தெற்குத் திசையிலிருந்து வருவாள். அவளும் ஜாதகனுடைய முப்பத்தோராம் வயதில்;

21. மரிப்பளா முப்பான் ரண்டில் மாதுவும் குடகில் நேரும்
குறிப்பதைப் புகலக் கேண்மோ குணமது நல்ல தாகும்
இருநிற மெலிந்த தேகி இன்பமாய் வார்த்தை சொல்வாள்
அன்னியர் மதிக்க வாழ்வள் ஆளன்தன் மனதுக் கேத்தோள்.

21. இறந்து விடுவாள். அவனுக்கு முப்பத்திரண்டாம் வயதில் (மூன்றாவது) மனைவி மேற்குத் திசையிலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைக் கேளுங்கள். நல்ல குணமுள்ளவள். இருநிறமுள்ளவள். மெலிந்த தேகமுள்ளவள். இனிமையாகப் பேசுபவள். பிறர் மதிக்கும்படி வாழ்வாள். கணவனது மனத்துக்குப் பிடித்தவள்.

22. அன்னம் போல் வடிவு மொக்கும் அயல்குற்றம் புகலா ளாவள்
அன்னமு மன்பா யீவள் ஆசார முடைய ளாவள்
அன்னவள் வந்த பின்பு அம்புலி போல யோகம்
அன்னியர் மதிக்க வாழ்வள் ஆளன்றன் மனத்துக் கேற்றாள்.

22. அன்னத்தைப் போன்றவடிவுள்ளவள். பிறர்மீது குற்றம்கூறாதவள். அன்புடன் அன்னமளிப்பாள். ஆசாரமுள்ளவள். அவள் வந்த பிறகு வளர் பிறைச் சந்திரன்போல் யோகம் பெருகும். பிறர் கொண்டாடும்படி வாழ்வாள். கணவனது மனத்திற்குப் பிரியமானவள்.

23. புத்திரர் கடைமா துக்குப் பொருந்திடு மாண்பால் ரண்டு
சத்திமார் ஒன்றே தீர்க்கம் சடைமுனி புகலு கின்றார்
பத்தினி மார்கள் மூன்று படைத்தகா ரணங்க ளென்னக்
குற்றத்தைச் சொல்லு மென்னக் குமரன்முன் வினையா மென்றாம்.

23. மூன்றும் மனைவிக்கு இரு புத்திரர்கள் தோன்றுவார். பெண் ஒருத்தியே. ஜடாமுனிவர் கூறுகின்றார். மூன்று மனைவியர்கள் ஏற்படக் காரணமென்ன? செய்த குற்றங்கள் என்ன? என்று கேட்க, ஜாதகன் முற்பிறவியில் செய்த தீவினையால் என்றாம்.

24. என்னவூழ் செய்தா னத்தை இயம்புவீர் முனியே நீர்தாம்
முன்ஜன்மம் கோகர் ணத்தில் குதித்தனன் கங்கை சேயாய்ப்
பொன்பொரு ளுடைய னாகிப் புகழான குடும்பம் பெற்று
அன்னவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ.

24. என்ன தீங்கு செய்தான்? அதைச் சொல்லுங்கள், முனிவரே! நீர். முற்பிறவியில் திருக்கோகர்ணத்தில் வேளாள குலத்தில் பிறந்தான். பொன் பொருள்கள் இவைகளுடையவனாகி, புகழுள்ள குடும்பத்தை யடைந்து, ஜாதகன் வாழ்ந்துவரும்போது ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

### அரசமரத்தின் கீழ் கைம்பெண்ணுடன் இன்பம் அனுபவித்துப் பிறகு கருவழித்த தோஷம்

25. அந்நகர் நதியின் பக்கல் அனுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தானவர் வாச மாகும்
மந்திரம் ஓதும் வேத மறையவர் பூசை பூண்பர்
இந்தவா றிடத்தி லேதான் இரவினில் எது செய்தான் ?

25. அவ்வூரில் உள்ள ஆற்றங்கரையிலுள்ள அரசமரத்தின் கீழே நாகமும் விநயகரும் மற்றும் பல தெய்வங்களும் இருந்து வந்தனர். மந்திரங்கள் வேதம் இவைகளை ஓதும் அந்தணர்கள் பூசை செய்து வந்தனர். இங்ஙனமுள்ள இடத்தில் இரவில் இவன் என்ன செய்தான் தெரியுமா ?

### பணியாளின் மனைவியுடன் இன்பமனுபவித்தல்

26. விதவையைப் போகம் துய்த்தான் மேவிற்றுக் கருவு தானும்
அதஞ்செய்தான் பண்டி தத்தால் அம்மாது மரண மானாள்
இதுவன்றி வேறு சொல்வோம் ஏவலாள் மனைவி தன்னை
நிதிதந்து போகந் துய்த்து நிமலனும் வாழு நாளில் ;

26. ஒரு கைம்பெண்ணுடன் இன்பம் அனுபவித்தான். அதனால் கருவேற்பட்டது. அக்கருவை மருந்துகள் கொடுத்து அழித்துவிட்டான். அப் பெண் மரணமடைந்தாள். இது தவிர வேறு ஒன்றும் கூறுகின்றேன். தன் பணியாளின் மனைவியோடு பணம் கொடுத்து இன்பம் அனுபவித்துவரும் நாளில் ;

27. மங்கையின் வரனுங் கண்டு மாதினை விலக்கும் போது
சங்கையா மனத்த ளாகித் தன்பக்கல் புகலுஞ் சேதி
பங்கமே செய்தான் பர்த்தா பதியினில் வேண்டா மென்றான்
இங்கிதற் கென்ன செய்வேன் என்னைநீ காப்பா யென்றாள்.

27. பெண்ணின் கணவன் இதையறிந்து, அவளை விலக்கிவிடும்போது, துன்பமடைந்த வேலைக்காரனின் மனைவி இவனிடம் சொன்ன செய்தியைக் கேளுங்கள். என் கணவன் என்னை விலக்கிவிட்டான். வீட்டிற்கு வர வேண்டாம் என்று சொல்லிவிட்டான். இதற்கு என்ன செய்வேன்? என்னை நீ ஆதரிக்கவேண்டும், என்றாள்.

28. கன்னியென் பால்வேண் டாமென் காதலி பொல்லாள் செல்வாய்
மன்னவ னிவ்வாறு சொல்ல மங்கையுந் திகில டைந்து
சொன்னசா பத்தைக் கேண்மோ தோன்றும்பின் ஜன்மந் [தன்னில்
என்னைப்போல் துணைவ ரின்றி ஈன்றதாய்ச் சுகமு மின்றி ;

28. பெண்ணே ! நீ என்னிடம் வரவேண்டாம். என் மனைவி பொல்லாதவள். அதனால் நீ சென்று விடு, என்று ஜாதகன் சொல்ல, அப்பெண் பயந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். உனக்குத் தோன்றும் மறு பிறவியில், என்னைப் போன்ற மனைவியில்லாமல், பெற்ற தாயின் சுகமுமில்லாமல் ;

29. வருமனை யநேக முண்டாய் மரிப்பளே உன்முன் னாகத்
திருகாக வனந்தம் சொல்லச் சேர்ந்தது வந்தத் தோடம்
பெரியோர்க ளுறவு அந்தம் பேணியே வன்ன மீந்து
மறலியின் பதிக்குப் புக்கு மால்மகன் வரையப் பட்டு ;

29. அநேக மனைவியரை அடைந்து, அவர்களும் உனக்குமுன் இறந்து போவார்கள் என்றும், இன்னும் பலவும் வருத்தத்துடன் சொன்னாள். அந்தத் தோஷம் இவனைச் சார்ந்தது. இவன் கடைசிக் காலத்தில் பெரியோர்களின் நட்புக் கொண்டு, பசித்தவருக்கு அன்னமளித்து வந்து மரணமடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு ;

**சாந்தி இல்லை**

30. பிறப்பனு மிந்தப் பாலன் புக்கிடு மாதர் சாபம்
அரிவையர் மூவ ராவர் அம் மாத ரிவன்முன் மாள்வர்
தீவினை யணுகா வண்ணஞ் செப்புவீர் கிரியை யொன்று
வருவது வந்தே தீரு மறைகிலோ மதற்குச் சாந்தி.

30. இந்த ஜாதகன் பிறப்பான். பெண்ணின் சாபம் வந்தடையும். மூன்று மனைவியர் வாய்ப்பர். அவர் மூவரும் இவனுக்கு முன்பு மரணமடைவர். இந்தத் தீவினை அணுகாமல் இருக்க, சாந்தி யொன்று கூறுங்கள். வருவது வந்தே தீரும். சாந்திகள் கூறவே மாட்டோம்.

**உயர்குலபிறவிக் காரணம்**

31. முன்ஜன்ம மநேக துன்பம் விரும்பினே னிச்சென் மத்தில்
துன்வீர சைவ னாகத் தோன்றுங்கா ரணங்க ளென்ன
அன்னவன் முன்ஜன் மத்தில் அதிதிகள் நேசங் கொண்டு
அன்னமு மளித்த புண்யம் அவன்குல மேன்மை யாச்சு.

31. முற் பிறவியில் அநேக துன்பங்கள் செய்தவன் இப்பிறவியில் வீர சைவனாகப் பிறந்த காரணங்களென்ன ? ஜாதகன் முற் பிறவியில் பெரியோர்களிடம் பக்தி பூண்டு, பசித்தவர்களுக்கு அன்னமளித்துவந்ததால் குலத்தின் மேன்மை ஏற்பட்டது.

32. அன்னஞ்செய் புண்ணி யத்தால் அம்மாது சாபந் தானும்
பின்னங்க ளாகா தோசொல் பேதையும் வருத்த முற்றுச்
சொன்ன சொல் விலகா தாகும் சுடர்தீபம் தூண்டு போலப்
பின்னமில் லாமல் நேரும் பேதையே கேட்டி டாயே.

32. ஏழைகட்கு அன்னமளித்ததால் பெண்ணின் சாபம் விலகாதோ, சொல்லுங்கள். பெண் வருந்திச் சொன்ன சொல் விலகாது. தூண்டப் படும் தீபம் சுடர்விட்டெரிவதுபோல் குறையாமல் விருத்தியாகும். தேவியே ! கேளுங்கள்.

33. ஜாதகன் யோகச் சேதி சாற்றுவோ மினிமே லாகச்
சூதிலான் புகழு மேற்பன் சொல்லது சுருக்க மாவன்
வேதனை நிவிர்த்தி செய்வன் வெகுபேருக் கிஷ்ட னாவன்
வாதங்க வேலை செய்வன் ஆறுறு வாண்டு மேலாய்.

33. ஜாதகனுடைய யோகச் செய்தியை இனிக் கூறுவோம். சூதில்லாதவன். கீர்த்தி அடைவான். சுருக்கமாகப் பேசுபவன். துன்பங்களை அகற்றுவான். பல பேர்களுக்கு இஷ்டனாக இருப்பான். ஜாதகன் முப்பத்தாறு வயதுக்குமேல் வாதங்கள் புரியும் வேலை செய்துவருவான்.

### இந்திரயோகம்

34. தென்திசைப் பெரியோ ராலே செய்குவான் வகார மேதான்
சந்திரன் தசைபின் பாதி சார்ந்திடும் நினைத்த வெல்லாம்
பிந்திய மில்லம் நேரல் பெரிதான வறங்கள் செய்தல்
இந்திர யோக மேற்பன் ஏவலா ளதிகஞ் சேர்ப்பன்.

34. அகத்திய மாமுனிவரின் அருளால் வகாரம் செய்வான். சந்திர மகா தசையின் பின் பாதியில் எண்ணியவெல்லாம் நடக்கும். பிற்காலத்தில் வீடு இடைக்கும். பெரிய தருமங்கள் செய்வான். இந்திரயோகம் ஏற்படும். பணியாட்கள் அதிகமாக உள்ளனர்.

35. தந்தையி னில்லம் காணன் தான்சித்திர வில்ல வாசம்
எந்த நாள் வாசம் சொல்வீர் இருபது வாண்டின் மேலாய்ச்
சொந்தமாய் நேரு மென்றோம் அதன்முன்னால் சிலநாள் வாசம்
அந்திடம் நேரு மென்றோம் அறைகின்றோம் பின்பால் சேதி.

35. தந்தையின் வீடு கிடைக்காது. ஆனால், அவன் அழகிய வீடு கட்டி வசிப்பான். எந்தக் காலத்திற் புது வீட்டில் வசிப்பான்? சொல்லுங்கள். ஜாதகன் தனது இருபதாம் வயதுக்கு மேல் சொந்தமாக வீடு கட்டுவான். தன் மகனுடன் சின்னாட்கள் வசித்து வருவான். அந்த இடம் நிலைக்கும் என்றோம். மற்றவற்றைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம்.

36. சிகிதசைக் குள்ளே அன்னை சேருவாள் எமப திக்குப்
புகர்தசை மத்தி லேதான் ஏகுவான் தந்தை என்றோம்
தகைமையாய்ப் பிதாமுன் ஜன்மம் சாற்றுவோம் புதுவை தன்னில்
இதுகுலம் தனிலு தித்து ஈசனைப் பூசை பூண்பன்.

36. கேதுமகாதசைக்குள்ளாகவே தாய் இறந்து விடுவாள். சுக்கிரமகா தசையில் தந்தை மரணமடைவான் என்றோம். தந்தையின் மறு பிறவி புதுவைமாநகரில் இதே குலத்தில் பிறந்து, சிவபெருமானைப் பூசை செய்வான்.

### பெண் நிந்தை

37. அன்னையின் பூர்வம் சொல்வேன் அக்காஞ்சி கீழ்ப்பா லாக
சின்னவூர் தனிலு தித்துச் சேயர்க ளுள்ளா ளாகிப்
பன்னுவோர்க் கன்ன மீந்து பாவையும் வாழு நாளில்
துன்மைகள புகலக் கேண்மோ துணைவிமேல் நிந்தை சொன்னாள்.

37. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்துக்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில் பிறந்து, குழந்தைகளை யடைந்து, ஏழைகளுக்கு அன்னமளித்து வாழ்ந்துவந்த காலத்தில் ஏற்பட்ட தீமையைச் சொல்லக் கேளுங்கள். உடன்பிறந்தவள் மேல் அடாத பழியைச் சொன்னாள்.

38. மாதுவும் மனது வெட்கி வரைநதசா பத்தை கேண்மோ
ஒதிஞய்ப் பெண்மேல் நிந்தை உதிக்கும்பின் ஜன்மம் தன்னில்
தீதாகும் துணைவர் தாமும் சுதர்களும் தீதே யாவர்
மேதினில் மறுமனைதான் விளங்கியே மத்தில் வாழ்வாய்.

38. அப் பெண் மனவருத்தமுற்றுக் கூறிய சாபத்தைக் கேளுங்கள். பெண்மீது நிந்தை கூறியவளே! நீ, உனக்கு ஏற்படும் மறு பிறவியில், உடன் பிறந்தவர்களில்லாதவளாயும், புத்திரர்களுக்குத் தீங்கு ஏற்பட்டும், இரண்டாவது மனைவியாக வாழ்க்கைப்பட்டு இடையில் வாழ்ந்து வருவாய்.

39. இன்னமும் பலவாறு சொன்னுள் எய்திற்று அந்தச் சாபம்
கன்னிகை அந்தி யத்தில் கணவன்முன் மரண மாகி
வந்தவ ளென்று சொல்வோம் மறுஜன்மம்
........மாமுனி தடுத்துச் சொல்வார்.

39. இன்னமும் பலவாறு சொன்னுள். அந்தச் சாபம் வந்தடைந்தது. ஜாதகன் தாயும், கடைசிக் காலத்தில், தன் கணவனுக்கு முன்பு மரணமடைந்து, பிறந்தவள் என்று சொன்னோம். மறு பிறவி................ ........................மாமுனிவர் தடுத்துச் சொல்லுகிருர்.

**உயர்குலப் பிறவிக் காரணம்.**

40. முன்ஜன்மம் செங்குந்த வம்சம் உதித்தவ ளிச்சென் மத்தில்
நன்மையாய் வீர சைவ நற்குல முதிப்ப தென்ன
அன்னவள் முன்ஜன் மத்தில் அறுமுகன் பக்தி யாயும்
கன்னிகை வாழ்வ தாலே கலந்தனள் என்று சொல்வோம்.

40. முற் பிறவியில் செங்குந்த வமிசத்தில் பிறந்தவள், இப் பிறவியில் நற்குலமாகிய சைவ குலத்தில் பிறந்த காரணங்களென்ன ? அவள் முற் பிறவியில் ஷண்முகப்பெருமான்மீது பக்தி கொண்டு வாழ்ந்து வந்ததால் இப் பிறவியில் இங்ஙனம் பிறந்தாள் என்று சொன்னோம்.

41. பின்ஜன்மம் துவாரை தன்னில் பிறப்பாளாம் பிரம்ம சேயாய்
முன்னமே குடும்பி யாகி முதல்வியும் வாழ்வா ளாவள்
இன்னவன் மூன்றும் பாரி ஏகுவாள் அன்பான் ஒன்பான்
துன்மையாய்ச் சுரத்தி ஞலே தோகையே கேட்டி டாயே.

41. மறு பிறவி துவாரகையில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள். உயர்ந்த குடும்பியாகி வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய மூன்றும் மனைவி, அவனுடைய ஐம்பத்தொன்பதாம் வயதில் சுரத்திஞல் மரணமடைவாள். தேவியே ! கேளுங்கள்.

42. மாரனின் மரண காலம் வரைகிறே மறுபா ஞறில்
தீரமாய் மீன மாதம் செப்புவோம் மார கங்கள்
கூறுவோ மிவன்பின் ஜன்மம் குற்ருலம் கீழ்ப்பா லாகப்
பாரிய ஊரி லேதான் பிறப்பனும் ஸௌராஷ்டிர வம்சம்.

42. ஜாதகனுடைய மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். அறுபத்தாரும் வயதில் பங்குனி மாதத்தில் இறந்து விடுவான். மறுபிறவி குற்றாலத்துக்குக் கிழக்கில் உள்ள பெரிய ஊரில் சௌராஷ்டிர வமிசத்தில் பிறப்பான்.

43. ஜனித்திடு காலம் தன்னில் சிகிதசை ஆண்டு ஆறும்
குனித்திடும் திங்க ளொன்றும் நுலவுநாள் பதினு றுகும்
சினமிலாப் பூர்வம் சொன்னோம் செப்புவோம் பின்பால் சேதி
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

43. ஜனிக்கும் காலத்தில் கேதுமகாதசையில் ஆறு வருடங்களும், ஒரு மாதமும், பதினாறு நாட்களும் பாக்கியாகும். தீமையில்லாத பூர்வ பாகத்தைச் சொன்னோம். பிற்பாகத்தில் மற்றவைகளைச் சொல்லுவோம். விநாயகனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

### அரி-வேசி-யோகங்கள்

44. புரவியோன் தனக்கீ ருறில் புகர்நிற்கில் பலனெவ் வாறு
அரியோகம் வேசி யோகம் அதுபலன் புகலக் கேண்மோ
இருஇல்லம் சொந்த மாகும் இந்தவன் பெரியோர் நேயன்
திருமகன் மரண காலம் செப்புவோ மேழாயிரம் பொன்.

44. சூரியனுக்குப் பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன் இருக்கும் பலன் எப்படி ? அரியோகம், வேசியோகம் இரண்டும் ஏற்படும். அதன் பலனைச் சொல்லுங்கள். இரு வீடுகள் சொந்தமாக வாங்குவான். அவன் பெரியோர்களுக்கு நண்பன். ஜாதகன் தன் மரணகாலத்தில் ஏழாயிரம் பொன் சேர்த்திருப்பான்.

45. வாதங்கள் வைத்தி யத்தால் வளருமே தனமு மென்றோம்
மேதினில் சோலை கூவல் மேவிடும் பூமி தானும்
சேதியை விபர மாகச் செப்புவோம் முனியே யாங்கள்
போதக வானைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

45. வாதங்கள் புரிவதாலும், வைத்தியங்கள் செய்து வருவதாலும் பொருள்கள் விருத்தியாகும். உலகில் தோட்டம் துறவுகள் ஏற்படும். பூமியும் விருத்தியாகும். மற்ற செய்திகளை விபரமாகச் சொல்லுகின்றோம். உயர்ந்த கணவனைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

**இந்த ஜாதகத்தில் வரும் பல பாட்டுக்கள் 29-ஆவது ஜாதகத்தில் வரும் பாட்டுக்களாகவே இருக்கின்றன. அவைகளாவன:—**

**ஜாதகம் 29-இல் 19-ஆவது பாட்டு முதல் 97-ஆவது பாட்டு வரையிலும்**
**ஜாதகம் 32-இல் 23-ஆவது பாட்டு முதல் 31-ஆவது பாட்டு வரையிலும்**
**ஜாதகம் 29-இல் 28-ஆவது பாட்டு முதல் 29, 30-ஆவது பாட்டுக்களும்**
**ஜாதகம் 32-இல் 32, 34, 36-ஆம் பாட்டுக்களும் ஒரேவிதமாக உள்ளன**

## ஜாதகம் 33.

1. கலைதனு கேது மானில் கரியவன் பணிசேய் நண்டில்
புலவனும் பானு வெள்ளி பெண்ணினில் பொன்னோன் கோலாம்
தலமது மிதுன மாகச் சாற்றுவீர் பலனை என்று
மலையிறை மகளும் கேட்க வதிஷ்டரும் கூறு கின்றார்.

1. சந்திரன் தனுசிலும், கேது மகரத்திலும், சனி ராகு செவ்வாய் கடகத்திலும், புதன் சூரியன் சுக்கிரன் கன்னியிலும், குரு துலாத்திலும் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், பலனைச் சொல்லுங்கள், என்று மலையரசனின் புத்திரியாகிய பார்வதி கேட்கும் போது, வசிஷ்ட முனிவர் கூறுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | சனி ராகு செவ்வாய் |
| கேது | | | |
| சந்திரன் | | குரு | புதன் சூரியன் சுக்கிரன் |

2. இந்தசேய் ஆணும் ஜன்மம் இல்லமும் கீழ்மேல் வீதி
தென்வாசல் வாடை யாகும் சிவகுரு நாதன் கீழ்ப்பால்
சுந்தரி அதன்கீழ்த் தங்கும் ஆனையின் கோஷ்டம் மேல்பால்
நன்னதி தென்பா லாகும் நாட்டிய சிறுவூர் தன்னில் ;

2. இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு, கிழக்கு மேற்கான தெருவில், தெற்குப் பார்த்த வாயிலுடைய வடசாரியில் உள்ளது. சிவபெருமான் ஆலயம் கிழக்கிலும், காளி கோயில் அதற்குக் கிழக்கிலும், வினாயகர் ஆலயம் மேற்குப் பக்கத்திலும், தெற்குத்திசையில் ஒரு புண்ணிய நதியும் உள்ள ஒரு சிற்றூரில் ;

3. உதிப்பனா மிரண்டாம் ஜன்மம் உரைக்கிறோ மிவனின் யோகம்
மதிநுத லன்னை தந்தை அவன்துணை களத்திர புத்திரர்
சதியிலா இவர்கள் யோகம் சாற்றுவோம் முன்பின் ஜன்மம்
அதிதியே நவக்கோ ளாய்ந்து அறிவிப்போம் விபர மாக.

3. தன் தந்தைக்கு இரண்டாம் பிறவியாகப் பிறப்பான். இவனுடைய யோகத்தையும், சந்திரனை யொத்த முகத்தையுடைய தாய் தந்தை உடன் பிறந்தவர் மனைவி புத்திரர் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும், நவக்கிரகங்களின் நிலையை ஆராய்ந்து, விபரமாய்க் கூறுகின்றோம்.

4. தந்தையின் துணைந வத்துள் ஆண்மூன்று கன்னி ஒன்று
இந்தவாறு விருத்தி என்றோம் இவர்பின்னால் வேறாய்ச் செல்வர்
அந்தவர் சேதி யாவும் அறிவிப்போம் பின்பா கத்தில்
கந்தனை யீன்ற மாதே கழறுவோம் பிதாகு ணத்தை.

4. தந்தையின் உடன் பிறந்தவர்கள் ஒன்பதின்மரில் மூன்று சகோதரர்களும், ஒரு சகோதரியும் விருத்தியாவார்கள். இவர்கள் பிற்காலத்தில் தனியாகச் சென்று விடுவார்கள். அவர்களுடைய செய்திகள் எல்லாவற்றையும் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். முருகப்பிரானைப் பெற்றளித்த தாயே! தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம்.

5. மாநிறம் சமதே கத்தான் மருமமில் லாதா னுவன்
ஊனமில் லாத தேசி உறுதியில் லாத நெஞ்சன்
ஈனமாம் குணங்க ளில்லான் இடர்செய்யான் யாவ ருக்கும்
பான்மையாய்ப் பேசு வானும் பதரினில் செல்லா னுகும்.

5. மாநிறமுள்ளவன். சமமான உடலமைப்புள்ளவன். இரகசியமில்லாதவன். பின்னமில்லாத சரீரமுள்ளவன். திடமில்லாத மனத்தினன். கெட்ட குணங்க ளில்லாதவன். ஒருவருக்கும் தீங்கு செய்யாதவன். பாந்தமாகப் பேசுபவன். அற்பகாரியங்களில் செல்லாதவன்.

6. ஜனித்தஇல் லடையா னுவன் செல்லுவான் வடபால் தன்னில்
இனத்துக்கு நல்லோ னுவன் தன்துணை தனைகாப் பானும்
நினைப்பதை முடிப்பா னுவன் நெசவுகள் வேலை செய்வன்
கனமிலாக் குடும்ப மேற்பன் கந்தன்மேல் பக்தி பூண்பன்.

6. பிறந்த வீட்டை அடையாதவன். வடக்குத் திக்கில் செல்லுவான். தன் சுற்றத்தாருக்கு நல்லவனுவன். தன் உடன் பிறந்தவர்களை ஆதரிப்பான். எண்ணிய காரியங்களை முடிப்பான். நெசவுத் தொழில்செய்து வருவான். செழிப்பில்லாத குடும்பமுள்ளவன். முருகப்பிரான்மீது பக்தியுடையவன்.

7. முன்துணை காணு னுவன் மொழியதைக் காப்பா னுவன்
பின்னில்லம் சொந்தம் செய்வன் பிறர்பொரு ளிச்சை வையான்
அன்னமு மதிக மீவன் ஆவுகள் விருத்தி அற்பம்
துன்மையும் வறுமை மத்தில் செப்புவோம் வனவா சங்கள்.

7. ஜாதகனுடைய தந்தைக்கு முன்பிறந்த சகோதரன் இல்லை. சொன்ன வார்த்தைகளைக காப்பான். பிற்காலத்தில் சொந்த வீடு கட்டுவான். பிறர் பொருளின்மீது இச்சை யில்லாதவன். ஏழைகளுக்கு அதிகம் அன்ன மளிப்பான். பசுக்கள் விருத்தியில்லாதவன். இடைக்காலத்தில் துன்பமும், வறுமையும் ஏற்படும். காட்டில் வாழ்வதுபோல் வசித்து வருவான்.

### வனவாசத்திற்குரிய கிரக நிலை

8. என்னகா ரணத்தி னுலே இவன்வன வாசம் சொன்னீர்
ஒன்பதுக் குடையோன் ரண்டில் உரகன்சேய் கூடி நிற்க
இன்னவ னுதிக்கா முன்னம் எய்திடும் வனவா சங்கள்
பின்கால துக்க மாகப் பூமியில் வாழ்வா னுவன்.

8. எக்காரணத்தினால் இவன வனவாசம் போன்று வாழ்வான் என்று சொன்னீர்கள். ஜாதகனுக்கு, பிதிருஸ்நானமாகிய ஒன்பதாமிடத்துக்குரிய சனி செவ்வாயுடனும் ராகுவுடனும் கூடி இருப்பதால், ஜாதகன் பிறப்பதற்கு முன்பே வனவாசம் ஏற்படும். பிற்காலத்தில் துக்கத்துடனேயே வாழ்ந்து வருவான்.

9. சல்லிய மென்று லச்சம் சம்பத்து மில்லா வாழ்வன்
எல்லேகள் சேர்க்கா னுவன் எய்திடும் நாபிச் சூடு
மல்லுக்குச் செல்லா னுவன் மலர்க்கரம் ருத்திர ரேகை
அல்லல்கள் அந்தம் காணுன் அறிவிப்போ மிவன்முன் ஜன்மம்.

9. கடன் வாங்குவதற்கே பயப்படுவான். சம்பத்து இல்லாதவனுக வாழ்ந்து வருவான். பூமிகள் வாங்காதவன். ந பிச்சூடு வந்திடும். வீண் சண்டைக்குச் செல்லாதவன். கையில் உருத்திரரேகை யுள்ளவன். துன் பத்திற்கு முடிவே இல்லாதவன். இவனுடைய முற்பிறவியைச் சொல்லு வோம்.

பெண் நிந்தை

10. கோங்குநா டதனி லேதான் குலவினுன் வன்னிய சேயாய்த்
தீங்கிலாக் குடும்பி யாகித் தேவியும் மதலே உண்டாய்
ஆங்கவன் வாழு நாளில் அணுகின விணையைக் கேண்மோ
பாங்கியு மொருத்தி பேரில் பதர்வார்த்தை சொல்லும் போது ;

10. கொங்கு நாட்டில் வன்னிய குலத்தவனுகப் பிறந்தான். தீமை யில்லாத குடும்பியாகி, மனைவியும் மக்களும் பெற்று வாழ்ந்துவரும் நாளில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஒரு வேலேக்காரப்பெண் மீது அற்ப வார்த்தைகளைப் பேசும்போது ;

11. மாதுவும் திகில டைந்து வரைந்தசா பத்தைக் கேண்மோ
தீதான வார்த்தை என்மேல செப்பின பாவி யேநீ
மேதினில் மறுஜன மத்தில் விளங்காது தந்தை ஆஸ்தி
போதன மில்லா னுகிப் பூமியில் அலேவா யென்றும் ;

11. பெண்ணும் மனத்தில் பயமடைந்து கூறிய வார்த்தையைக் கேளுங்கள். தீயவார்த்தைகளை என்மீது கூறிய பாவியே ! உனக்கு ஏற்படும் மறுபிறவியில், தந்தை ஆஸ்தி கிடைக்காது. பெரிய தனம் இல்லாதவனுகிப் பூமியில் அலேவாய், என்றும் ;

பட்சியின் கூட்டைக் கலேத்த தோஷம்

12. இன்னமும் பலவாறு சொன்னுள் எய்திற்று அந்தச் சாபம்
பின்னேயும் வேறு ஒன்று புகலுவோம் தாயே கேளும்
தன்னில்லம் அடைக்க லானும் சார்ந்தது அதைகக் லேத்,
துன்மைகள் நேர்ந்த வென்றேம் தேவியே கேட்டி டாயே.

12. இன்னும் பல விதம் சொன்னாள். அந்தச் சாபம் வந்தடைந்தது. மற்றொன்று கூறிகின்றோம். தாயே! கேளுங்கள். தன்வீட்டில ஒரு பட்சி இருந்து வந்தது. அதனுடைய கூட்டைக் கலைத்தான். அதனால் துன்பங்கள் ஏற்பட்டன. தேவியே! கேளுங்கள்.

13. அந்திய காலம் தன்னில் அவன்வாயில் ரணமும் கண்டு
அந்தக நாட டைந்து அயனாலே வரையப் பட்டு
வந்தவ னென்று சொல்வோம் மாதுவின் சாபம் நேரும்
தந்தையி னில்லம் வாழான் தன்துணை பிரித லாவன்.

13. ஜாதகனின் தந்தை, கடைசிக்காலத்தில் வாயில் புண் ஏற்பட்டு மரண மடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன், ...ன்று சொல்லுவோம். பெண்ணின் சாபம் ஏற்படும். தந்தையின் வீட்டில் ... சிக்காதவன். தன் உடன்பிறந்தவர்களிடமிருந்து பிரிந்து வாழ்வான்.

14. சுகதுக்கம் கலந்து வாழ்வன் சஞ்சல மனம்ச தாவும்
இகபரன் தியானத் தாலே இடருகள் சிலவே நீங்கும்
தகைமையா யிக்குணத் தானுக்குச் சாதக னுதிப்பா னுவன்
மிகுதவம் புரியு மெங்கள் வித்தகி கேட்டி டாயே.

14. சுகதுக்கம் கலந்து வாழ்ந்து வருவான். எப்போதும் மனக்கலக்க முண்டு. சிவபெருமான்மீது பக்தி கொண்டிருப்பதால் சில துன்பங்கள் நீங்கும். இக்குணங்களுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். மிகுந்த தவங்கள் இயற்றும் தேவியே! கேளுங்கள்.

15. பாலகன் குணத்தைச் சொல்வேன் நற்கலை அற்ப மாகும்
சீலமில் லாதா னாகும் செப்புமுன் கோபி யாவன்
வேலன்மேல் பக்தி பூண்பன் விகடங்கள் கூறு வானும்
நீலிமார் மோக னுவன் நெசவுகள் செய்வா னுவன்.

15. ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். நற்கல்வி இல்லாதவன். நல்லொழுக்க மில்லாதவன். சொல்லுவதற்குமுன் கோபமடைவான். முருகப்பிரான்மீது பக்தி கொள்ளுவான். அகட விகடங்கள் பேசுபவன். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். நெசவுத்தொழில் செய்து வருவான்.

16. சிலவேநாள் பகைதந் தைக்குச் சேயிழை சொல் தடுக்கான்
பலரையும் நேசம் செய்வன் பஞ்சைமே லிரக்க மாவன்
குலமதிப் புடனே வாழ்வன் குலவிடும் பித்த சூடு
கலகத்தைக் கூறு னுவன் கஞ்சமாம் ரேகை உண்டு.

16. தந்தையுடன் சில நாட்கள் பகையாக இருப்பான். தன் மனைவி சொல் தடுக்காதவன். பலபேர்களுடன் நட்புக்கொள்ளுவான். ஏழைகளின் மீது இரக்கமுள்ளவன். தன் குலத்தவரின் மதிப்புடன் வாழ்ந்து வருவான். பித்தச் சூடு உடையவன். கலகம் செய்யாத மனத்தினன். கையில் தாமரை ரேகை யுள்ளவன்.

17. இருநிறம் சமதே கத்தன் இசைக்கேள்விப் பிரிய னவன்
தரைபின்னால் சேர்ப்பா னவன் தாதையி னஸ்தி காணான
இருபது ஆண்டு மேலாய் இளம்பிறை போலே செல்வம்
பெருகிடும் வறுமை காணான் பிதாவின்சொல் தடுக்கா னவன்.

17. இருவித நிறமுள்ளவன். சமமான சரீர அமைப்புள்ளவன். சங்கீதம் கேட்பதில் பிரியமுள்ளவன். பிற்காலத்தில் பூமிகள் வாங்குவான். தன் தந்தையின் ஆஸ்தி கிடைக்காதவன். ஜாதகனுக்கு இருபது வயதுக்குமேல் வளர்பிறைச்சந்திரன் போல் செல்வங்கள் ஓங்கும். தரித்திரம் இல்லாதவன். தன் தந்தைசொல் தடுக்காதவன்.

18. அதுமுதல் மரண மட்டும் அணுகாது வறுமை தானும்
நிதியது பெருக்க மாவன் நினைத்தகா ரியங்கள் வெற்றி
பதியது வேறு நேரல் பனிமதி தசை விசேஷம்
ததிபாக்கியம் குறைவு றுது தனமது புதையல் நேரும்.

18. ஜாதகனுக்கு அது முதல் மரணம் வரையில், வறுமை கிட்டாது. செல்வங்கள் பெருகும். எண்ணிய காரியங்களில் ஜயம் அடைவான். வேறு வீடு கிடைக்கும். சந்திரமகாதசை விசேஷமாயுள்ளது. தயிர் பால் இந்த பாக்யங்கள் குறைவில்லாதவன். புதையல் கிடைத்து, செல்வம் விருத்தியாகும்.

19. எந்தக்கா லத்தில் நேரும் இயம்புவீர் முனியே நீர்தாம்
சந்திரன் தசையில் காணும் சாதகர்க் கிருபா னெட்டில்
விந்தையாய் நேரு மென்றேம் விளம்புவோ மாயிரம் பொன்
கந்தன்தன் அருளி னலே கனமுடன் வாழ்வா னவன்.

19. எந்தக் காலத்தில் புதையல் கிட்டும்? முனிவரே கூறுங்கள் ! நீர் தாம். சந்திரமகாதசையில், ஜாதகனுக்கு, இருபத்தெட்டாம் வயதில், ஆச்சரியமாக வீட்டில் புதையல் கிடைக்கும். ஆயிரம் பொற்காசுகள் கிடைக்கும் என்று சொல்வோம். முருகக் கடவுளின் அருளினல் செழிப்புடன் வாழ்ந்து வருவவான்.

20. தன்துணை ஆண்பால் மூன்று சத்திமா ரிருவர் தீர்க்கம்
பின்னமா மற்ற வெல்லாம் பேசுவோம் பின்பால் சேதி
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோம் இருபா னென்றுள்
கன்னிகை தென்பால் நேரும் கழருவோ மவள்கு ணத்தை.

20. உடன் பிறந்தவர்களில் மூன்று சகோதரர்களும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவையெல்லாம் நிலையா. அவற்றைப் பிற்பாதியில் சொல்கின்றேம். ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றேம். இருபத்தோராம் வயதுக்குள் தெற்குத் திசையிலிருந்து அவனுக்கு மனைவி வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றேம்.

21. மாநிறம் சமதே கத்தன் மாரன்தன் மனதுக் கேத்தோள
ஈனமாம் புத்தி இல்லாள ஈகையும் உடைய ளாவள
ஊனமில் லாத தேகி உரைக்குமுன் கோபி யாவள்
வானவர் பக்தி பூண்பள் வந்தபின் யோக மெய்தும்.

21. மாநிற முள்ளவள். சமமான உடலமைப்புள்ளவள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். அற்ப புத்தி யில்லாதவள். ஈகைக்குண முடையவள். பின்னமில்லாத சரீரமுடையவள். சொல்லுவதற்குமுன் கோபமடைவாள். தெய்வபக்தி கொள்ளுவாள். ஜாதகனுக்கு மணமான பின்பு யோகம் வரும்.

22. அடிசிலுக் கினிய ளாவள் அவளுக்கு வயது தீர்க்கம்
சடைமுனி தடுத்துச் சொல்வார் சத்தமத் தோன்ச ரத்தில்
முடவன்சேய் ராகு ரண்டில் உயர்விலா திருப்ப தாலே
விடவிழி பாரி ரண்டு விளம்புவோம் பால னுக்கு.

22. உருசியாகச் சமைப்பதில் வல்லவள். அவளுக்கு நீண்ட வயதுண்டு. சடைமுனிவர் தடுத்துக் கூறுகின்றார். ஏழாமிடத்துக்குரிய குரு சரராசி யாகிய துலாத்தில் இருப்பதாலும், சனி செவ்வாய் ராகு இரண்டில் உயர் வில்லாதபடி இருப்பதாலும், இரு மனைவியார் உண்டு என்று சொல்லு கின்றோம்.

23. அத்திரி தடுத்துச் சொல்வார் அம்புலி ஏழில் தங்கச்
சத்தமத் தோனும் நட்பாய்ச் சரமனு முச்ச மாகப்
பத்தினி ஒன்றே தீர்க்கம் பகரோம்நாம் தாரம் ரண்டு
சுத்தமாய் இதற்கு நேராய்ச் சுருதியைச் சொல்லு வோங்கேள்.

23. அத்திரி முனிவர் தடுத்துக் கூறுகின்றார். சந்திரன் ஏழில் இருப்ப தாலும், அவன் ஏழாம் வீட்டுக்குரிய குருவுடன் நட்பாக இருப்பதாலும், புதன் உச்சமாக இருப்பதாலும், மனைவி ஒருத்தியே தீர்க்கமாவாள். இருதாரம் சொல்லக் காரணமில்லை. சுத்தமாக இதை யொத்த ஜோதிட சாஸ்திரத் திலுள்ள சுருதியைக் கேளுங்கள்.

வேறு

24. இதற்குநே ரிடையாய்ச் சாதகச் சுருதி
யிதிலேழாம் பாகத்தில் பாரும்
அதில்சொல்லும் விபரம் ரண்டேழோன் கேந்திர
மாகிலும் கோணத்தி லிருக்கச்
சதியிலாத் தாரம் ஒன்றென மொழிந்தோம்
சங்கையை விவரமாய் காண்பீர்
இதுநிற்க வர்க்கில் பரலுமே ஒன்று
இருப்பதால் தாரமு மொன்றே.

24. இதற்கு அத்தாட்சியாக, ஜாதக நூலின் ஏழாம் பாகத்தைப் பாருங்கள். அதில் சொல்லும் விபரம் :—இரண்டு ஏழாமிடங்களுக்குரியவன் கேந்திரஸ்தானத்திலும் கோணஸ்தானத்திலுமிருக்க, மனைவி யொருத்தியே என்றோம். சந்தேகத்தை விபரமாகக் காணுங்கள். இது நிற்க. அஷ்டவர்க்கத்தில் ஒரு பரல் இருப்பதால் மனைவி யொருத்தியே.

**வேறு**

25. புத்திரர் எழுவர் தோன்றும் புகலுவோம் ஆண்பால் மூன்று
சித்தமாய்ப் பெண்பால் ரண்டு செப்புவோம் தீர்க்கா மாக
மத்தது சேத மெய்தும் வரைந்தன மொழி குன்றுவே
அத்தியை வளர்த்த எங்கள் ஆத்துமத் தாயே! கேளும்.

25. ஏழு குழந்தைகள் தோன்றுவார்கள். அவர்களில் மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுடனிருப்பர் என்றோம். மற்றவர்கள் நிலையார். நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறா. யானைமுகத்தோனை யீன்ற எங்கள் உயிருக்குயிரான தாயே ! கேளுங்கள்.

26. ஜாதகன் பூர்வம் தன்னைச் சாற்றுவோந் தோகை மேல்பால்
மேதினில் சிறுவூர் தன்னில் விளங்கினன் ரெட்டி வம்சம்
போதன முடைய னாகிப் பூமியில் கிருஷி செய்து
நீதென்றோர்க் குதவி செய்து தேவதா பக்தி பூண்டு ;

26. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தோகைக்கு மேற்கில் உள்ள சிற்றூரில், ரெட்டியார் மரபில் பிறந்து, பெரிய செல்வங்கள் உடையவனாகி, பூமியில் விவசாயம் செய்து வந்து, துன்ப மடைந்தவர்கட்கு உதவி செய்து, தெய்வபக்தியுடன் ;

27. வினையது இல்லா னாகி மேவினன் கால னாடு
கனமுள பிரமன் லக்கம் கஞ்சன்தன் அடிமை வர்க்கம்
சினமிலா உதிப்பா னவன் செப்புவோ மிவனின் யோகம்
துணைவரைப் பிரிதல் செய்வன் சுகமுள குடும்ப மேற்பன்.

27. தீவினைகள் இல்லாதவனாகி இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, செங்குந்த மரபில் பிறப்பான். இவனுடைய யோகத்தைச் சொல்லுவோம். உடன் பிறந்தவர்களிடமிருந்து பிரிந்து விடுவான். சுகமுள்ள குடும்பத்தை யடைவான்.

28. தரித்தொழி லதிக மேற்பன் சாராள்கள் சேர்ப்பா னவன்
இருபது ஆண்டு மேலாய் இடருகள் காணா னவன்
பொருளது சேர்ப்பா னவன் பூமியில் வறுமை காணான்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

28. தரித்தொழில் அதிகமாகச் செய்வான். பணியாட்கள் சேர்ப்பான். ஜாதகன், தனது இருபதாம் வயதுக்குமேல் துன்பங்களில்லாதவன். பொருளை விருத்தியாக்குவான். தரித்திரம் இல்லாதவன். அரிய வேதத்தின் முடிவில் ஆடும் தேவியே ! கேளுங்கள்.

29. சஞ்சல மில்லா வாழ்வன் ஷண் முகன் அருளு மோங்கும
கொஞ்சிடு மாது நாளும் குலத்துக்கு மேலாய் வாழ்வன்
வஞ்சனை யெண்ணு நெஞ்சம் மாநிலம் சேர்த லுண்டு
அஞ்சினோர் தம்மைக் காக்கும அம்பிகை யாளே கேளாய்.

29. மனச்சஞ்சலங்கள் இல்லாமல் வாழ்ந்து வருவான். சுப்பிரமணியக் கடவுளின் அருள் விருத்தியாகும். இவன் சுகமுள்ள மனைவியோடு, தன் குலத்துக்கு மேன்மையாக வாழ்ந்து வருவான். வஞ்சனை எண்ணாத நெஞ்சம் உள்ளவன். விளைநிலங்கள் சேரும். கஷ்டப்பட்டவர்களை ஆதரிப்பான். தாயே ! கேளுங்கள்.

### சற்பாத்திரியோகம்

30. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் இருசிவப்பள்
தன்சொலு மடக்க முள்ளாள் சற்பாத்திரி சமயோ கத்தாள்
பொன்பணி அதிகம காணுள் புகழ்ந்தோரை ஆத ரிப்பள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அரிபோலக் கோபம் கொஞ்சம்.

30. தாயினுடைய குணத்தைக் கூறுகின்றேன். அழகுள்ளவள். இருநிற முள்ளவள். அடக்கமாகப் பேசுபவள். சற்பாத்திரி யோகம் உள்ளவள். பொன் ஆபரணங்கள் அதிகம் இல்லாதவள். புகழ்ந்தவர்களை ஆதரிப்பாள் பிறர்மீது குற்றங் கூறாதவள். சிங்கம்போல் கோபம் அடைவாள்.

31. தன்துணை ஆண்பா லொன்று சத்திமார் ஐவ ராவர்
பின்னங்கள் சிலவே என்றோம் பேசுவோ மிவளின் பூர்வம்
கண்ணமா புரியி லேதான் கலந்தனள் கர்ண சேயாய்
உன்னத குடும்பி யாகி உலகினில் நல்லோ ளாகி ;

31. உடன் பிறந்த சகோதரன் ஒருவனும் சகோதரிகள் ஐவரும் இருப்பர். சிலர் மரித்து விடுவர் என்றோம். இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கண்ணமாபுரியில் கருணீகர் வம்சத்தில் பிறந்து, உயர் வான குடும்பியாகி, உலகில் நல்லவளாகி ;

32. முன்பவ மில்லா ளாகி ஒதுங்கினள் கால னூடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்
துன்மையாய்ப் பித்த வாயு தோகைக்கு அற்பம் நேரும்
கன்னென மொழியே ஒக்கும் காதலி கேட்டி டாயே.

32. முற்பிறவியில் செய்த தீவினை இல்லாதவளாகி, இறந்தாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்றோம். இப் பெண்ணுக்கு துன்பம் தரும் பித்தவாயு சிறிது நேரும். இனிய மொழிகளைப் பேசும் தேவியே ! கேளுங்கள்.

33. ஆறாறு மூன்று ஆண்டில் அன்னைக்குக் கண்ட மெய்தும்
வேறொரு ஜன்மம் சொல்வேன் வேங்கடம் தன்னி லேதான்
பாரிய தனவா னுக்குப் பிறப்பாளாம் வைச்யச் சேயாய்த்
தீரமாய்த் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

33. ஜாதகனின் முப்பத்தொன்பதாம் வயதில், தாய்க்குக் கண்டம் நேரும். மறு பிறவியைச் சொல்லுகின்றோம். திருவேங்கடத்தில், பெரிய செல்வமுள்ள வைசிய குலத்தில் பிறப்பாள். தவங்கள் பல இயற்றும் தேவியே ! கேட்டிடுவாய்.

34. பரிதியின் தசையி லேதான் பகருவோம் தந்தை கண்டம்
மரலியைக் காணு வன் மதிதசை காலம் தன்னில்
திருமகன் முப்ப தாண்டில் செப்புவோம் தந்தை கண்டம்
மறுஜன்மம் ஆலங் காட்டில் வருகுவான் கங்கை சேயாய்.

34. சூரியமகாதசையில் தந்தைக்குக் கண்டம் உண்டாகும், என்றோம். ஆனல் இறக்க மாட்டான். சந்திரமகாதசையில் ஜாதகனுடைய முப்பதாம் வயதில், தந்தை மரண மடைவான். மறு பிறவி திருவாலங்காட்டில், வேளாள குலத்தில் பிறப்பான்.

### நற்குலப் பிறவிக் காரணம்

35. இந்ததோர் ஜன்மம் தன்னில் இவன் செய்த புண்யமென்ன
கந்தன்மேல் பக்தி யாயும் கடந்தோருக் கன்ன மீந்தும்
சிந்தையும் நல்ல தாயும் சனஉப காரி யாயும்
அந்தவன் வாழ்வ தாலே அருளுவான் கங்கை சேயாய்.

35. ஜாதகன் இப்பிறவியில் செய்த புண்ணியங்கள் என்ன ? முருகப்பெருமான்மீது பக்தியுடன், துறவிகட்கு அன்னமளித்து, நல்லமன முடையவனும், ஜனங்களுக்கு உபகாரியாயும் ஜாதகன் வாழ்ந்து வருவதால், வேளாள குலத்தில் பிறப்பான்.

36. அறுபது எழு ஆண்டில் ஆடிமா தத்தி லேதான்
குறைபக்கம் ஏகா தேசி குழவியி னுடல மேகும்
வருஞ்ஜன்மம் தில்லை தன்னில் வருகுவா னிக்கு லத்தில்
குறைவிலாக் குடும்பி யாவன் கோதையே கேட்டி டாயே.

36. ஜாதகன் தனது அறுபத்தேழாம் வயதில் ஆடி மாதத்தில் கிருஷ்ண பட்சம் ஏகாதசியன்று மரண மடைவான். வரும்பிறவி சிதம்பரத்தில் இதே குலத்தில் பிறப்பான். குறைகளில்லாத குடும்பியாவான். தேவியே ! கேளுங்கள்.

37. இன்னவன் ஜனிக்கும் காலே எழில்மூலம் கடைப்பா தத்தில்
துன்கேது தசையி ருப்புச் செப்புவோம் திங்கள் நாலும்
அன்னியில் நாள்கள் பத்தும் அறைந்தனம் பூர்வ பாகம்
கன்னென மொழியே ஒக்கும் காதலி கேட்டி டாயே.

37. ஜாதகனது ஜனன காலத்தில் மூல நட்சத்திரம் கடைசிப் பாதம், துன்மை தரும் கேதுமகாதசை யிருப்பு நான்கு மாதங்களும் பத்து நாட்களுமாம். இங்ஙனம் முதல் பாகம் சொன்னோம். இனிய வார்த்தைகளைப் பேசுபவளே ! தேவியே ! கேளுங்கள்.

38. புகர்தசை பலனைச் சொல்வேன் பிறந்திடும் துணைவர் தாமும்
அகமது நேரல் தன்னி லுறுமிடும் சுபங்கள் தாமும்
வெகுதனம் சேரல் நீங்கும் மெல்லிக்கு சுபங்கள் எய்தல்
பகையோர்க ளுறவு மெய்தும் பலபல மனது துன்பம்.

38. சுக்கிரமகாதசை பலனைச் சொல்லுகின்றோம். உடன் பிறந்தவர்கள் விருத்தியாவர். வீடு கிடைக்கும். நற்காரியங்கள் நடைபெறும் வெகுவாகத் தனங்கள் பெருகும். மனைவிக்கு மங்களங்கள் ஏற்படும். பகையோருடன் நட்பு உண்டாகும். பற்பல மனத்துன்பங்க ளுண்டாம்.

39. தந்தைதாய்ப் பிணியு மெய்தும் தந்தையின் துணைவர் வேறும
பந்துவால் சுபமும் சூதம் பருகாது கன்று காலி
கந்தனின் அருளு முண்டு கழருவோம் பின்பால் சேதி
இந்திர னிறைஞ்சு மாதே இயம்பினோம் பூர்வ பாகம்.

39. தாய் தந்தையருக்கு நோய் ஏற்படும். தந்தையின் உடன்பிறந்தவர்கள் வேறுகச் செல்வர். பந்துக்களால் சுபமும் தீங்கும் ஏற்படும். கால் நடைகட்குச் சேதமுண்டாம். முருகக்கடவுளின் அருள் கிட்டும். மற்றதைப் பிற்பாகத்தில் சொல்லுவோம். இந்திரன் தோத்தரிக்கும் தேவியே! இவ்விதம் முதல்பாகத்தைச் சொன்னோம்.

# ஜாதகம் 34

1. பிறைதேளில் பணிசேய் கோலில் பொன்சனி தனுசு வாகப்
பரிதியும் புதனும் சீயம் பார்க்கவன் கன்னி யாக
வருவது ஜன்மம் வீணை வரைகுவீர் பலனை என்று
அரன்மனை யாளும் கேட்க அத்திரி புகலு கின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | |
| | | | சூரியன் புதன் |
| குரு சனி | சந்திரன் | ராகு செவ் வாய் | சுக்கிரன் |

1. சந்திரன் விருச்சிகத்திலும், ராகு செவ்வாய் துலாத்திலும், குரு சனி தனுசிலும், சூரியன் புதன் சிம்மத்திலும், சுக்கிரன் கன்னியிலும், கேது மேஷத்திலுமாக நின்று, ஜன்ம லக்கினம் மிதுனமாக இருந்தால், பலனைச் சொல்லுங்கள், என்று சிவபெருமானின் தேவியாகிய பார்வதி கேட்கும் போது, அத்திரி முனிவர் கூறுகின்றார்.

2. இந்தசேய் ஆணுஞ் ஜன்மம் இல்லமும் கீழ்ப்பால் நோக்கம்
தென்வட வீதி யாகும் சிம்மவா கனத்தாள் தென்பால்
சுந்தரி மாரி யுத்ரம் அரன்மாலின் கோட்டம் பாழாம்
சந்ததம் கூரை யில்லம் தீயின்தன் குலமே யாகும்.

2. இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு, தெற்கு வடக்கான வீதியில், கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. காளி கோயில் தெற்குத் திசையிலும், மாரியம்மன் கோயில் வடக்கிலும் சிவபெருமானின் ஆலயமும், திருமாலின் ஆலயமும் பாழடைந்து உள்ளன. கூரைவீட்டில் வன்னிய குலத்தில் ஜாதகன் பிறந்தான்.

3. இன்னவன் ஜனன யோகம் எழில்பெறுந் தந்தை யோகம்
அன்பான துணைவர் யோகம் அவன்மனை புத்திர யோகம்
முன்பின்சென் மங்கள் யாவு முரைக்கின்றே மிந்நூல் தன்னில்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

3. ஜாதகனுடைய பிறப்பு, யோகம், தந்தை, உடன்பிறந்தவர், மனைவி, புத்திரர்கள் இவர்களுடைய யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்த நாடி (ஜோதிஷ) நூலில் கூறுகின்றோம்: இனிய வார்த்தைகளைப் பேசும் தேவியே! கேளுங்கள்.

4. தந்தையின் துணையாண் பண்டு சாற்றுவோந் தீர்க்க மாக
முந்திய துணைவன் சேதி மொழிகின்றோ மால்நி றத்தான்
சிந்தையில் நல்ல னாகும் செய்ந்நன்றி மறவா னாகும்
பந்துவு மதிக்க வாழ்வன் பாரினால் சீவிப் பானும்.

4. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர்களில் இரு சகோதரர்கள் நீண்ட ஆயுளுடனிருப்பர். ஜாதகனின் தந்தையின் முன் பிறந்த சகோதரனின் செய்தியைச் சொல்லுகின்றோம். திருமாலைப் போன்ற கரிய நிறமுள்ளவன். நல்ல மன முள்ளவன். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவன். பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். விவசாயம் செய்து, அதனால் ஜீவனம் செய்து வருவான்.

5. உண்டியில் வறுமை காணான் உள்மனங் கபடில் லாதான்
குண்டுணி கூறா னவன் கோதையு மொன்றே வுள்ளூர்
பண்டுநாள் விருத்தி செய்வான் பாலர்கள் ஆண்பால் நான்கு
வண்டணி மாதர் ரொன்று வழுத்துவோந் தீர்க்க மாக.

5. சாப்பாட்டுக்குக் குறைவில்லாதான். கபடமில்லா மனத்தினன். கோள் சொல்லாதவன். மனைவி ஒருத்தியேயாவள். அவளும் உள்ளூரிலிருந்து வருவாள். பிதுரார்ஜிதமான ஆஸ்தியைப் பெருக்குவான். நான்கு புத்திரர்களும் ஒரு பெண்ணும் பிறந்து தீர்க்க முறுவர் என்று உரைக்கிறோம்.

6. சல்லியப் பாதை யேற்கான் தன்துணை காப்பா னவன்
நல்லவ னாகி வாழ்வன் நாற்காலி விருத்தி யுண்டு
வல்லவன் தீர்க்க சீவி மைந்தர்கள் யோக வான்கள்
சில்லறைப் புத்தி யில்லான் சீக்கிரங் கோபஞ் சாந்தம்.

6. துன்பங்கள் ஏற்படும் வழியில் செல்லாதவன். உடன் பிறந்தவர்களை ஆதரிப்பான். நல்லவனாகி வாழ்ந்து வருவான். கால்நடைகள் விருத்தியாகும். நீண்ட ஆயுளுள்ளவன். அதிருஷ்டமுள்ள புத்திரர்களையுடையவன். கீழ்த்தரமான புத்தி யில்லாதவன். சீக்கிரத்தில் கோபமடைந்து உடனே சாந்தமு முறுவான்.

7. தந்தையின் துணைவன் சேதி சர்ப்பம்போல் கோப மேற்பன்
முந்துமால் நிறத்தா னாகும் மூலச்சூ டுடைய னாகும்
நந்தியா விருத்தி யுண்டு நல்லோர்க்கு நல்ல னவன்
சிந்தையு மிரண்டு மாகும் சேயிழை யொன்றே கீழ்ப்பால்.

7. ஜாதகனுடைய தந்தையின் மற்ற சகோதரனின் குணத்தைச் சொல்லுகின்றோம். சர்ப்பம் போலக் கோபமடைவான். திருமாலைப் போன்ற கரிய நிறத்தன். மூலச்சூட்டு ரோகமுள்ளவன். பசு எருதுகள் பெருகும். நல்லவர்களுக்கு நல்லவனாயிருப்பான். இருவிதமான மனமுள்ளவன். மனைவி ஒருத்தியே. அவளும் கிழக்குத் திக்கிலிருந்து வாய்ப்பாள்.

8. ஈகையுங் கொஞ்ச முண்டு இதிகாச மறியா னுகும்
தோகைசொல் கடவா னுகும் சுதர்களுங் கன்னி ரண்டு
பாகமா யாண்பா லொன்று பகருவோந் தீர்க்க மாக
வேகமாய் நடப்பா னுகும் மேவிடும் வாயு ரோகம்.

8. சிறிது கொடுக்கும் குணமுள்ளவன். இதிகாஸங்கள் அறியாதவன். மனைவியின் சொல்லை மீருதவன். இரு புத்திரிகளும் ஒரு புத்திரனும் தோன்றி, தீர்க்கமாயிருப்பர் வேகமாக நடப்பவன். வாயுரோகமுள்ளவன்.

9. பாலகன் தந்தை சேதி பாரபட் சங்க ளில்லான்
சீலம்போல் வெளிம யக்கன் சனசகா யங்கள் செய்வன்
வேலன்மேல் பத்தி பூண்பன் வெஞ்சினம் வெளிக்காட் டாதான்
நீலமால் நிறத்தா னுகும் நினைத்தகா ரியமு டிப்பான்.

9. ஜாதகனுடைய தந்தை பக்ஷபாத மில்லாதவன். ஒழுக்கம் உடையவன் போல் பிறர் நினைக்கும்படி வாழ்வான். ஜனங்களுக்கு உபகாரி. முருகப்பிரான்மீது பக்தியுள்ளவன். கோபத்தை வெளியிடாதவன். திருமாலைப்போல் கரிய நிறமுள்ளவன். எண்ணிய காரியத்தை முடிப்பன்.

10. பயிர்த்தொழில் புரிவா னுகும் பார்கிணறு பண்ட முள்ளான்
நயம்படக் கூறு வானும் நாட்டினில் வறுமை காணுன்
அயலார்பொ னிச்சை யில்லான் ஆபத்துக் குதவி செய்வன்
தயையுள மனத்த னுகும் சஞ்கையாங் குணத்த னென்றேும்.

10. விவசாயம் செய்து வருவான். பூமி, கிணறுகள், பண்டகசாலைகள் முதலியன உள்ளவன். இனிமையாகப் பேசுபவன். தரித்திரம் இல்லாதவன். பிறர் பொருளின்மீது விருப்பமில்லாதவன். பிறருக்கு ஆபத்துக்களில் உதவிசெய்வான். தயையுள்ள மனத்தன். சந்தேகமான குணங்களுள்ளவன் என்றேும்.

11. கரமதில் மாலின் ரேகை கஞ்சமா நிறத்த னுகும்
திருகிலான் வறுமை காணுன் தேரினேர் நேசங் கொள்வன்
தறிபடக் கூறு னுகும் சேத்திரஞ் செய்வா னுகும்
அறமதற் குதவி செய்வன் அணுகிடும் பித்தச் சூடு.

11. கையில் விஷ்ணுரேகை யுள்ளவன். தாமரை போன்ற நிறத்தன். சூதுகளில்லாதவன். தரித்திரமில்லாதவன். பெரியோர்கள் நட்புக் கொள்ளுவான். கண்டித்துப் பேசாதவன். வீடுகள் கட்டுவான். தருமத்திற்கு உதவிசெய்வான். பித்தச் சூட்டுடைய தேகத்தன்.

12. சொன்னவிக் குணத்தா னுக்குச் சுதனுமே விரண்டாஞ் ஜன்மம்
அன்னவ னுதிப்பா னுகும் அறைகின்றே மவன்கு ணத்தைப்
பன்னியே பேசு வானும் பல்கலை யுணர்வா னுகும்
பொன்பணி சேர்ப்பா னுகும் பூவையர் மோக னுவன்.

12. இங்ஙனம் கூறப்பட்ட குணத்தையுடையவனுக்கு இந்த ஜாதகன் இரண்டாம் பிறவியாகத் தோன்றுவான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். பன்னிப் பன்னிப் பேசுபவன். பலநூல்களை அறிந்து தெரிந்து கொள்ளுவான். பொன்னாபரணங்கள் வாங்குவான். மாதர்கள்மீது மையலுள்ளவன்.

13. தந்தையின் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
பிந்தியும் பூமி சேர்ப்பன புகழ்ந்தோரை யாத ரிப்பன
நிந்தைக ளேற்கா னாகும் நிருபர்கள் உறவு கொள்வன்
எந்திடம் பெருமை யேற்பன் ஏவலா ளுடைய னாகும்.

13. தன் பிதுரார்ஜிதமான பூமியை விருத்தி செய்வான். இன்னும் பல பூமிகளும் வாங்குவான். தன்னைத் தோத்திரம் செய்பவர்களை ஆதரிப்பான். பழிகள் அடையாதவன். மன்னர்கள் நட்புக் கொள்ளுவான். சென்ற விடங்களிலெல்லாம் புகழ் பெறுவான். பணியாட்கள் உடையவன்.

14. நல்லவன் நல்ல வர்க்கு மிண்டர்க்கு மிண்ட னாவன்
அல்லலெப் போதுங் காணான் ஆவுக ளேர்பெ ருக்கன்
புல்லிய ருறவு கொள்ளான் புண்ணிய மனத்த னாவன்
சல்லிய மென்று லச்சம் தவசிக ளுறவு கொள்வன்.

14. நல்லவர்கட்கு நல்லவன். தீயவர்க்குத் தீயன். துன்பங்கள் ஒரு போதுமில்லாதவன். அதிக பசுக்களும் எரும் உடையவன். கெட்டவர் உறவு கொள்ளாதவன். புண்ணியமான மனமுடையவன். கடன் என்றால் பயப்படுவான். தவம் செய்வோர் நட்புக் கொள்ளுவான்.

15. தேவதாத் தலங்கள் செல்வன் சனபந்து வாத ரிப்பன்
நாவுமே தவறு னாகும் நளினமாய் வார்த்தை யுள்ளான்
பாவத்தில் மனம்வை யாதான் பால்தயிர் பிரிய னாதும்
காவல ரிட்டங் கொள்வன் கோதையே கேட்டி டாயே.

15. புண்ணிய தேவாலயங்களுக்குச் செல்லுவான். பந்து ஜனங்களை யாதரிப்பன். சொன்ன சொல் தவறாதவன். நளினமாகப் பேசுபவன். தீச் செயல்களில் மனமில்லாதவன். பால் தயிர்களில் பிரிய முள்ளவன். அரசருடைய இஷ்டம் கொள்ளுவான். தேவியே ! கேளுங்கள்.

16. தன்துணை முன்னால் சேதம் சாற்றும்பின் கன்னி ரண்டு
மன்மதன் போலா ணொன்று மருவிடுந் தீர்க்க மாக
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போ முனியே யாமும்
என்னகா ரணத்தி னாலே இவன்துணை முன்னால் சேதம்.

16. ஜாதகனுக்கு முன் பிறந்த சகோதரன் இறந்துவிடுவான். ஜாதகனுக்குப் பின் பிறக்கும் சகோதரிகள் இருவரும், மன்மதன் போன்ற அழகுள்ள சகோதரனும் தீர்க்கமாயிருப்பார்கள். அவர்களுடைய செய்தியைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம். முனிவரே ! என்ன காரணத்தால் ஜாதகனின் அண்ணன் இறந்து விடுவான் ?

17. [1] பதினொன்றில் கேது தங்கப் பாலன்முன் துணையுந் தோஷம்
பதகனு மூன்றில் தங்கப் பாலன்பின் துணையுஞ் சேதம்
மதிமுக வன்னை சேதி யறிவிப்போம் நற்கு ணத்தாள்
துதிசெய்தோர்க் குதவு வாளாம் தோகைமால் நிறத்தா ளாகும்.

17. பதினொன்றுமிடமாகிய மேஷத்தில் கேது இருப்பதால் ஜாதகனுக்கு முன் பிறந்த சகோதரன் இறப்பான். சூரியன் மூன்றுமிடத்தில் தங்கியிருப்பதால் பின் பிறந்தவர்களுக்கும் தோஷ மேற்படும். சந்திரனின் முகத்தை யொத்த தாயின் குணங்களைக் கூறுகின்றோம். நற்குணமுள்ளவள். தோத்திரம் செய்பவருக்கு உபகாரி. அவளும் கரிய நிறமுள்ளவள்.

18. அவசப மனமுங் கொஞ்சம் அடாவடி கூறு ளாகும்
நவனியில் நல்லோ ளாவள் நாயகன் மனத்துக் கேற்றோள்
பவமன மில்லா ளாகும் பாவைநன் னடக்கை யுண்டு
தவசிகட் கன்ன மீவள் சங்கரி கேட்டி டாயே.

18. சிறிது அவசர மனமுள்ளவள். அடாவடி கூறுதவள். உலகில் நல்லவளாக இருப்பாள். தன் கணவனுடைய மனத்துக்கு ஏற்றபடி நடப்பவள். தீங்குள்ள செய்ய மனமில்லாதவள். நன்னடத்தை யுள்ளவள். தவம் செய்பவர்கட்கு அன்னமளிப்பாள். சங்கரனின் தேவியே ! கேளுங்கள்.

19. தன்துணை யாண்பால் ரண்டு சத்தியு மொன்றே தீர்க்கம்
அன்னவ ராறு மாண்டில் அல்லலாய் வேறுய்ச் செல்வர்
தன்னில்லம் நீங்கு வாராம் மேல்திசை யில்ல மாகும்
பின்பாக மவர்கள் சேதி பேசுவோந் தாயே யாங்கள்.

19. தாய்க்கு உடன் பிறந்தவர்களில் இரு சகோதரர்களும் ஒரு சகோரியும் நீண்ட ஆயுளுடனிருப்பர். அவர்கள் ஜாதகனுடைய ஆறும் வயதில் தனித்துச் செல்லுவார்கள். இருந்த வீட்டை விட்டு மேற்குத் திசையில் உள்ள ஒரு வீட்டில் வசிப்பார்கள். நாங்கள் அவர்களது விபரத்தைப் பிற்பாகத்தில் கூறுகின்றோம். தாயே !

20. அன்னையின் பூர்வஞ் சொல்வோம் அருணைக்குக் கீழ்ப்பா லாகும்
சின்னவூர் தன்னி லேதான் ஜனித்தன ளிக்கு லத்தில்
மன்னவன் மனம்போல் வாழ்ந்து வினையது மில்லா ளாகித்
துன்மையாய்க் கால னுடு சேர்ந்துமே பிரமன் லக்கம் ;

20. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணாமலைக்குக் கிழக்கில் உள்ள ஒரு சிற்றூரில் இதே குலத்தில் பிறந்தாள். தன் கணவனுடைய மனம் போல் வாழ்ந்து வந்து, தீவினைகளில்லாதவளாகி, தீதான மரணமடைந்து, மீண்டும் பிரம்மனால் படைக்கப்பட்டு ;

21. வந்தவ ளென்று சொல்வோம் மறுஜன்மம் தக்கோ லத்தில்
இந்ததோர் குலமு தித்து மேலான் குடும்பி யாகித்
தன்தன மதிக முண்டாய்த் தையலும் வாழ்வ ளாவள்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

---

[1] 3-ஆவது பாவ கிரக நிலை.

21. இக் குலத்தில் பிறந்தாள், என்று சொல்லுகின்றோம். மறு பிறவியில், தக்கோலம் என்ற ஊரில், இதே குலத்தில் பிறப்பாள். மேன்மையுள்ள குடும்பத்தையடைந்து, தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிக முண்டாகி, வாழ்ந்து வருவாள். கந்தபிரானைப்பெற்ற தேவியே! சொன்ன சொற்கள் தவறு.

22. தந்தையின் பூர்வஞ் சொல்வோம் சடகோபன் வாழு நாட்டில்
நந்தகோ பாலன் வம்சம் நல்லிய சுகமுள் ளோனாய்
அந்தவன் வாழு நாளில் அணுகிய வினையைக் கேண்மோ
நிந்தைக ளோர்பெண் பேரில் நிருமித்தா னென்று சொல்வோம்.

22. ஜாதகனுடைய தந்தையின் முற் பிறவியைச் சொல்லுகின்றோம். பாண்டிய நாட்டில் இடையர் மரயில் பிறந்து, நல்ல சௌக்கியங்கள் அடைந்து, வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். ஒரு பெண்ணின்மீது அபாண்டமான பழியைச் சுமத்தினான்.

23. மங்கையுந் திகிலடைந்து வறைந்தசா பத்தைக் கேண்மோ
சங்கைகள் சொன்ன பாவி சாரும்பின் ஜன்மந் தன்னில்
நங்கையர் துணையு மின்றி நசித்திடு முதலில் புத்ரர்
இங்கிவள் சொல்ல லுற்றாள் எய்திற்று வந்தச் சாபம்.

23. அப்பெண்ணும் மனத்தில் துயரமுற்றுக் கூறிய வார்த்தைகளைக் கேளுங்கள். என்மீது பொல்லாத வார்த்தைகளைக் கூறிய பாவியே! இனி ஏற்படும் மறு பிறவியில், உடன் பிறந்த சகோதரிகள் இல்லாமல், முதலில் பிறந்த குழந்தை இறந்துவிடும், என்று சொன்னாள். அந்தச் சாபம் இவனை வந்தடைந்தது.

24. ஆகையா லிச்சென் மத்தில் அவன்துணை கன்னி யின்றி
ஏகிடு முதலில் புத்திரர் இயம்புவோ மிவன்பின் ஜன்மம்
வேகமா நதிக்கு வுத்ரம் விளங்கிய பேரூர் தன்னில்
பாகமாய்ச் செங்குந்த னாகப் பிறப்பனு மென்று சொல்வோம்.

24. ஆகையினால், இப்பிறவியில், ஜாதகனுடைய தந்தை, உடன்பிறந்த சகோதரிகளில்லாமல், முதலில் பிறந்த குழந்தை நிலையாமல் வாழ்ந்து வருவான். இவனது மறுபிறவி வேகவதி நதிக்கு வடக்கில் உள்ள பெரிய ஊரில், செங்குந்த வமிசத்தில் பிறப்பான், என்று சொல்லுகின்றோம்.

25. முப்பது வொன்று மாண்டில் விருச்சிக மாதந் தன்னில்
செப்புவோம் தந்தை கண்டம் சென்றபின் முப்பா னாறில்
தப்பித மவனுக் கென்றோம் சாற்றின மொழிகுன் றாவே
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றாவே.

25. ஜாதகனுடைய முப்பத்தோராம் வயதில் கார்த்திகை மாதத்தில் தந்தைக்குக் கண்டம் ஏற்படும். அவன், தனது முப்பத்தாறும் வயதில் மரண மடைவான். கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமானின் தேவியே! நாங்கள் கூறிய மொழிகள் தவறு.

26. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பத்தொன் பாண்டில்
நீலியு மேல்பால் நேர்வள் நுவலுவோ மவள்கு ணத்தைச்
சீலியாம் புத்தி சாலி தீங்கதைக யொருவர்க் கெண்ணுள்
காலத்தை யறிந்து ரைப்பாள் கணவன்றன் மனத்துக் கேற்றேள்.

26. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றேம். அவனுடைய பத்தொன்பதாம் வயதில் மேற்குத் திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். நல்லொழுக்கமுள்ளவள். புத்திசாலி. பிறருக்குத் துன்பம் செய்ய நினையாதவள். வருங் காலத்தை அறிந்து உரைக்கும் ஆற்றல் உள்ளவள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றபடி நடப்பவள்.

27. பெரிதான குடும்ப மேற்பள் பால்பாக்கிய முடைய ளாகும்
அறிவோர்கள் நேசங் கொள்வள் அடாவடி கூறு ளாகும்
திருமகள் பின்பு தானுஞ் செழிப்பான குடும்ப மேற்பள்
கரைமனம் வயது தீர்க்கம் காதலி கேட்டி டாயே.

27. பெரிய குடும்பத்தை அடைவாள். பால் பாக்கிய முள்ளவள். பெரியோர்கள் (அறிவாளிகள்) நட்புக் கொள்வாள். அடாவடியாகப் பேசாதவள். பிற்காலத்தில் வளமுள்ள ஒரு குடும்பத்தை அடைவாள். இளகிய மன முள்ளவள். நீண்ட ஆயுளுள்ளவள். தேவியே ! கேளுங்கள்.

28. புத்திர விருத்தி காணுள் பிறக்கினுந் தீதே யாகும்
குற்றத்தைச் சொல்லு மென்ன குசன்ராகு வஞ்சில் தங்க
வித்தகன் தனக்குப் புத்திரர் விளங்கிடா ரென்று சொல்வோம்
மருவிற்றுப் பூர்வ தோடம் பகருவீ ரந்தச் சங்கை.

28. புத்திர விருத்தி யில்லாதவள். பிறந்தாலும் நிலேயா. அவளுக்கு ஏற்பட்ட குற்றம் என்ன ? செவ்வாய் இராகு இருவரும் புத்திரஸ்தான மாகிய ஐந்தாமிடத்தில் தங்கியிருப்பதால், ஜாதகனுக்குப் புத்திரர் நிலேயார், என்று கூறுகின்றேம். முற்பிறவியின் தோஷம் வந்தடைந்தது. அதைச் கூறுங்கள்.

29. முன்ஜனமந் தோகை தன்னில் உதித்தனன் ரெட்டி வம்சம்
உன்னதக் குடும்பி யாகி உத்தமன் வாழு நாளில்
கன்னிகை விதவை போகம் கலந்துமே கருவு தங்கப்
பின்னங்கள் செய்தா னென்றேம் புகுந்தது வந்தத் தோடம்.

29. முற் பிறவி தோகை நாட்டில், ரெட்டியார் மரபில் பிறந்தான். உயர்ந்த குடும்பியாகி வாழ்ந்து வருங் காலத்தில், ஒரு கைம்பெண்ணுடன் இன்பமனுபவித்து, அதனுல் கரு தங்கி, அதை மருந்து கொடுத்துக் கலேத்தான். அந்தத் தோஷம் ஏற்பட்டது.

30. அரவுமே வில்லம் வாசம் அடித்தனன் கழியி னலே
மருவிற்று வந்தத் தோட மாரனு மந்தி யத்தில்
இருவித உள்ள மாயும் இகபரன் பக்தி கொண்டு
மறலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டு ;

30. ஒரு நல்ல பாம்பு வீட்டில் வசித்து வந்தது. அதைக் கழியினால் அடித்தான். அந்தத் தோஷம் ஏற்பட்டது. ஜாதகனும் தன் கடைசி காலத்தில், மனத்தில் இருவித எண்ணங்கள் கொண்டவனாய், சிவபெருமான மீது பக்திகொண்டு, பிறகு இறந்து மீண்டும் பிரம்மனால் படைக்கப்பட்டு;

31. பிறப்பனு மிந்தப் பாலன் புக்கிடு மந்தத் தோடம்
பெறுஞ்சுதர் தோட மெய்தும் புகலுவீ ரதற்குச் சாந்தி
அரிவையுந் தானு மாக அருணைமா நகரஞ் சென்று
கிரிவலம் மூன்று நாட்கள் கிருத்தியம் போல வந்து ;

31. இப்பிறவியில் பிறந்தான், இந்த ஜாதகன். முன் பிறவியில் செய்த தீவினை இப்பிறவியில் தொடரும். பிறக்கும் குழந்தைகள் நிலையா. அதற்குச் சாந்தி யொன்று சொல்லுங்கள். ஜாதகன், தன் மனைவியுடன், திருவண்ணாமலைக்குச் சென்று, மூன்று நாட்கள் கிரிப் பிரதட்சிணம் வந்து, வேதத்தில் சொல்லியபடி ;

32. இருபத்தோ பரத்நுக் கன்னம் ஈந்துமே உள்ளூர் மீண்டு
அறச்செயல் செய்து மேதான் அம்மாரி யால யத்தில்
திருமகன் வைப்பா னாகில் செய்வினை நீங்கி யேதான்
பிறந்திடுஞ் சுதராண் ரண்டு பேதையு மொன்றே தீர்க்கம்.

32. இருபத்தொரு ஏழைகளுக்கு அன்னமளித்து, ஊருக்குத் திரும்பி, மாரியம்மன் கோயிலில் சிலையில ஒரு சர்ப்பத்தின் உருவத்தை அடித்து வைத்து வந்தால், செய்த தீவினை நீங்கி, நீண்ட ஆயுளுள்ள இரு புத்திரர்களும் பெண் ஒருத்தியும் பிறப்பார் என்று கூறுகின்றோம்.

33. பாலகன் யோகச் சேதி பகருவோ மினிமே லாக
ஞாலங்கள் விருத்தி செய்வன் நாற்காலி யதிக மேற்பன்
பால்பாக்யஞ் சல்யங் காணன் பரவுப காரி யாவன்
மேலான குடும்ப மேற்பன் விதுரருந் தடுத்துச் சொல்வார்.

33. இனிமேல் ஜாதகனுடைய யோகச் செய்திகளைச் சொல்லுகின்றோம். பூமிகளைப் பெருக்குவான். கால்நடைகள் விருத்திசெய்வான். பால் பாக்கியம் ஏற்படும். கடன் உபத்திரவ மில்லாதவன். பிறருக்கு உபகாரி. மேன்மையுள்ள குடும்பத்தை அடைவான். விதுரர் மறுத்துக் கூறுகின்றார்.

34. எப்படி யோகஞ் சொன்னீர் இயம்புவீ ரந்தச் சங்கை
ஒப்புடன் தர்ம கர்மன் ஒன்றாக வேழில் தங்க
மெய்ப்புடன் யோகஞ் சொன்னோ மிடருமே செய்யா னவன்
எப்போது யோக மேற்பன் ஈரஞ்சு வாண்டில் நேரும்.

34. ஜாதகனுக்கு யோகம் எப்படி கூறினீர்கள் ? அந்த விபரத்தைச் சொல்லுவீர். தர்மகர்மாதிபதிகளாகிய ஒன்பது பத்தாமிடங்களுக் குரிய சனியும் குருவும் ஒன்றாகி, ஏழாமிடத்தில் இருப்பதால் யோகம் கூறினோம். துன்பங்கள் செய்யாதவன். எப்போது யோகம் ஏற்படும் ? ஜாதகனுக்கு பத்தாம் வயதில் யோகம் ஏற்படும்.

35. தரணிகள் இருவூர் சேர்ப்பன் தசவாண்டு மேலா கத்தான்
பிறை போலச் செல்வ மோங்கும் போசன வறுமை காணான்
பொருளது பெருக்க மாகும் புண்ணிய மனத்த னவன்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

35. ஜாதகனுக்கு, பத்தாம் வயதுக்கு மேலாக இரு ஊர்களில் பூமி கிடைக்கும். வளர்பிறைச்சந்திரன்போல் செல்வம் பெருகும். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். பொருள் விருத்தியாகும். புண்ணியமான மனத்தன். கரிய யானைமுகத்தோனைப் பெற்ற பார்வதி தேவியே ! கேளுங்கள்.

36. அறுபது வெட்டு வாண்டில் ஆனிமா தத்தி லேதான்
திருமக னுடல மேகும் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
இருநான்கு வாண்டுக் குள்ளே இருவிதக் கண்ட மெய்தும்
பராசரு மறுத்துச் சொல்வார் பளிங்கனும் நாலில் தங்க ;

36. அறுபத்தெட்டாம் வயதில், ஆடி மாதத்தில் ஜாதகன் மரண மடைவான். ஜயமுனிவர் தடுத்துக் கூறுகின்றார். எட்டு வயதுக் குள்ளாகவே இருவிதமான கண்டம் ஏற்படும். பராசரமுனிவர் மறுத்து சொல்லுகின்றார். நான்காம் இடத்தில் சுக்கிரன் இருப்பதாலும் ;

37. குருவுமே ஏழி லாகக் குழவிக்குப் பிணிய நேகம்
வரினுமே நிவிர்த்தி யாகும் வயதுமே தீர்க்க மெய்தும்
மறு ஜன்மங் கலிங்க நாட்டில் வருவனே சத்திரியச் சேயாய்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

37. ஏழாமிடத்தில் குரு இருப்பதால் ஜாதகனுக்குப் பலவித ரோகங்கள் ஏற்பட்டாலும், தீர்ந்து போம். நீண்ட ஆயுளுள்ளவன். மறு பிறவி, கலிங்க தேசத்தில், க்ஷத்திரிய மரபில் பிறப்பான். வேதங்களின் முடிவில் ஆடும் தேவியே ! கேளுங்கள்.

38. அன்னவன் ஜனன காலம் அனுடத்தின் மூன்றும் பாதம்
துன்சனி யைந்தாண் டுந்தான் திங்களு மாற தாக
மன்னனும் பிணிய நேகம் வரும்துணை நட்ட மெய்தும்
முன்பாகம் விவரஞ் சொன்னோம் முதல்வியே கேட்டி டாயே.

38. ஜாதகனின் ஜனன காலத்தில் அனுஷநட்சத்திரத்தின் மூன்றும் பாகம் நடை பெறும். சனிமகாதசையில் ஐந்து வருடங்களும் ஆறுமாதங் களும் பாக்கி யிருப்பாம். ஜாதகனுக்குத் தோஷங்கள் பலஏற்படும். உடன் பிறந்த சகோதரர்களுக்கு நஷ்டம். முற்பாகத்தில் விபரம் சொன்னோம். முதலானவளே ! கேளுங்கள்.

# ஜாதகம் 35

**1.** மிதுனமுஞ் ஜன்ம மாக வெண்மதி யதிலே தங்கப்
புதன்பானு கேது ரண்டில் புகர்மூன்றில் பணியு மெட்டில்
[1] கதிர்மகன் தசம மாகக் கனகனு மொன்பா னிற்கச்
சதமுடன் சேயும் லாபம் செப்புவீர் பலனைத் தானே.

1. மிதுனம் ஜன்மலக்கினமாகவும், சந்திரன் மிதுனத்திலும், புதன் சூரியன் கேது கடகத்திலும், சுக்கிரன் சிம்மத்திலும், ராகு மகரத்திலும், சனி மீனத்திலும் குரு கும்பத்திலும், செவ்வாய் லாப ஸ்தானமாகிய மேஷத்திலும் இருந்தால் பலனை சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| சனி | செவ்வாய் | | லக்கினம் சந்திரன் |
| குரு | இராசி சக்கரம். | | புதன் சூரியன் கேது |
| ராகு | | | சுக்கிரன் |
| | | | |

**2.** காதலி கேட்கும் போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினி லாண்பால் ஜன்மம் விளம்புவோந் தந்தை யில்லம்
நீதியாய்க் கீழ்மேல் வீதி நேர்ந்திடுந் தென்பால் வாசல்
போதக வானைக் கோட்டம் பொருந்திடு வடமேல் திக்கில்.

2. என்று பார்வதிதேவி கேட்கும்போது, கௌசிக முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். ஜாதகனுடைய தந்தையின் வீட்டைப்பற்றிச் சொல்லுகின்றோம். கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வடமேற்குத்திசையில் விநாயகர் ஆலயமுள்ளது.

**3.** நந்திவா கனத்தோன் காளி நல்கிடும் வடகீழ் தன்னில்
அந்தரி கன்னி கீழ்ப்பால் அணுகிடுஞ் சிறுவூ ராகும்
மைந்தனும் நான்காஞ் ஜன்மம் வருகுவான் பிரம்ம சேயாய்க்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றாவே.

3. நந்தியை வாகனமாகவுடைய சிவபெருமான் ஆலயமும் காளி கோயிலும் வடகிழக்கிலும், மாரியம்மன் கோயில் கிழக்கிலும் உள்ள சிறிய ஊரில், அந்தண குலத்தவனாக, தன் தந்தைக்கு நான்காம் பிறப்பாகப் பிறப்பான். முருகக்கடவுளை உலகத்துக்களித்த தேவியே! கூறிய வார்த்தைகள் தவறா.

---

1. சனி

4. தந்தையின் துணைவ ருறில் ஆணொன்று கன்னி ரண்டு
பிந்தியுஞ் சிலநாள் சென்று ஏகிடு மென்று சொல்வோம்
அந்தவன் தனியாய் வாழ்வன் அறைகிறே மவன்கு ணத்தைத்
தன்னுடல் மெலிவு நீட்சி சந்தேக மனத்த னாமே.

4. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர்கள் அறுவரில் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவரும் தீர்க்கமாவர். அவர்களும் பிற்காலத்தில் தனித்துச்செல்வர் என்று சொல்லுவோம். அவன் தனியனாக வாழ்ந்து வருவான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மெலிந்த உயரமான சரீரமுள்ளவன். சந்தேகமன முள்ளவன்.

5. அஞ்சியே வார்த்தை கூறுவன் அடாவடி தன்னில் செல்லான்
கஞ்சமா நிறத்த னவன் கல்வியு மிரண்டு கற்பன்
[1]பஞ்சாங்கத் தொழிலுஞ் செய்வன் பகையென்று மனத்தில் [வையான்
வஞ்சியர் மோக னவன் மாமிய ரிருவ ராவர்.

5. பயந்து பயந்து பேசுபவன். அடாவடியாகப் பேசாதவன். தாமரையை யொத்த நிறமுடையவன். இருவிதக் கல்வி கற்பான். பஞ்சாங்கத் தொழில் செய்வான். விரோதிகளாக யாரையும் பாவிக்காதவன். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். இரு மனைவியர் ஏற்படுவர்.

6. ஈகையுங் கொஞ்ச முண்டு இன்பச்சொல் லுடைய னாகும்
ஆகம நுணுக்கந் தேர்வன் அநேகவா லயங்கள் செல்வன்
தோகையர் மோக னவன் துராசையு முடைய னவன்
நாகரிக கங்க ளுள்ளான் நாயகி கேட்டி டாயே.

6. சிறிது கொடுக்கும் தன்மையன். இனிய பேச்சுக்கள் பேசுபவன். வேதாந்த ரகசியங்களை அறிந்தவன். பல ஆலயங்களுக்குச் செல்லுவான். பெண்கள்மீது மோகமுள்ளவன். கெட்ட ஆசைகளுமுள்ளவன். நாகரிகமாக உள்ளவன். தாயே! கேளுங்கள்.

7. முன்னவ னிருந்த ஜன்ம மொழிகின்றேந் தாயே கேளும்
கன்னியா குமரி தென்பால் கலந்தனன் சைவச் சேயாய்ப்
பொன்னொடு பணிதி பெற்றுப் புகழ்ச்சியாய் வாழு நாளில்
பின்னமாய் வந்த வூழைப் பேசுவாந் தாயே கேளும்.

7. தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள். கன்னியாகுமரிக்குத் தெற்கில், சைவகுலத்தவனைகப் பிறந்து, பொன் ஆபரணங்கள் இவைகளை அடைந்து, புகழுடன் வாழ்ந்து வரும் நாளில் தீமையாக வந்த சாபத்தைக் கேளுங்கள். தாயே!

---

[1]. நான்காம் வருணத்தவர்கட்குச் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட காரியங்களைச் செய்விக்கும் அந்தணன்.

8. ஏழையோர் மணத்துக் காக இவனிடம் பொருளுங் கேட்கத்
தாழ்விலாத் தரே னென்று தைரிய மவர்க்குச் சொல்லி
ஆழியில் முரியும் நீட்டி அருளினுன் பொருளை யின்னேன்
தாழ்வுளோர் பொருளும் பெற்றுத் தன்சுபம் முடித்தா
[ரென்றேம்.

8. ஏழைகள் திருமணத்துக்கு இவனிடம பொருள் கேட்கும்போது, குறைவில்லாமல் தருவேன், என்று தைரியம் அவர்கட்குச் சொல்லி பத்திரங்களை வாங்கிக்கொண்டு, பணத்தைக் கொடுத்தான். ஏழைகள் பொருளைப்பெற்றுக்கொண்டு திருமணத்தை முடித்தனர்.

### கடன் கொடுத்து ஏழையோர் பொருளை பறித்தல்

9. பின்சில நாட்கள் சென்று பொருளுமே கேட்கும் போது
அன்னவர் காலஞ் சொல்ல அரசர்பால் முறியுங் காட்டிப்
பின்பவ ரில்லம் பூமி பறித்தன னிவனே யென்றேம்
பொன்னிலார் வருத்த முற்றுப் புகலுவார் சாபந் தானே.

9. சில நாட்கள் சென்று, இவன் பொருளை ஏழைகளிடம் திருப்பிக் கேட்கும்போது, அவர்கள் கொஞ்சகாலம் கழித்துத் தருவதாகச் சொன்னுர்கள். இவன் நியாயாதிபதியிடம் பத்திரங்களைக்காட்டி, அவர்களுடைய வீடு நிலம் இவைகளைப் பறித்துக்கொண்டான். செல்வங்களை இழந்த ஏழைகள், வருத்தமுற்றுக் கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

10. கொஞ்சமாம் பொருளை யீந்து குடிபூமி கொண்ட பாவி
தஞ்சமாய்ப் பின்ஜன் மத்தில் சத்திமா ரிருவ ராயும்
துஞ்சுவர் துணைவர் தாமுஞ் சோர்வாகுந் தந்த மென்றேம்
கெஞ்சியே சிலர்பால் வாழ்வாய் கிளைக்காரே புத்திரர் தாமும்.

10. எங்களுக்குச் சிறிய பொருளைக் கொடுத்து, சொத்துக்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்ட பாவியே! நீ, அடுத்த பிறவியில், இரு மனைவியரை அடைந்து, உடன்பிறந்தவர்களை இழந்து, பற்களும் ஊனமாகி, சிலபேர்களிடம் பிச்சை எடுத்து, வாழ்ந்து வருவாய். புத்திர பாக்கியம் ஏற்படாது.

11. இன்னமும் பலவாறு சொல்லி இறைத்தனர் தொருத்துாள்
[தாமும்
பின்னமா யந்தச் சாபம் புக்கிற்று வென்று சொல்வோம்
அன்னவ னந்தி யத்தில் அச்சேது பதிக்குப் புக்கு
முன்னேர்க்கு வன்ன மீந்து மேவினுன் காலன் பக்கல்
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தன னென்று சொல்வோம்.

11. இன்னும் பலவாறு சொல்லி, தெருமண்ணைவாரி இறைத்தனர். நீங்காக அந்தச் சாபம் அவனை வந்தடைந்தது. இவன் தன் கடைசிக் காலத்தில் சேதுவுக்குச் சென்று, பெரியோர்களுக்கு அன்ன மளித்து, பிறகு இறந்தான். மீண்டும் பிரமனல் படைக்கப்பட்டுப் பிறந்தான், ஜாதகனின் தந்தை என்று கூறுகின்றேம்.

12. ஆகையால் ஏழை சாபம் அணுகிடுந் துணைவர் துன்பம்
தோகை ரிருவ ராவர் சுகதுக்கங் கலந்து வாழ்வன்
பாகமா யந்தந் தன்னில் பற்களுங் குறைவ தாகும்
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

12. ஆகையால் ஏழைகளின் சாபம் இவனுக்கு ஏற்பட்டு, உடன் பிறந்தவர்கட்குத் தீதாகவும், இரு மனைவியருள்ளவனாகவும் இருந்து, சுக துக்கம் மாறி மாறி ஏற்பட்டு, வாழ்ந்துவருவான். தன் கடைசிக் காலத்தில் பற்கள் ஊனமாகும். சகல சௌக்கியங்களையும் தரும் கணவனை யடைந்த புண்ணியவதியே ! கேளுங்கள்.

13. இந்நெறி யுடையா னுக்கு இருதார மிளையா ளுக்கு
அன்னவ னுதிப்பா னாகும் அவன்குணங் கூறக் கேண்மோ
கன்னென மொழியே சொல்வன் கவடிலான் மாஞ்சி வப்பன்
பன்னுவா னிரண்டு கல்வி பங்கய முகத்த னாமே.

13. இங்ஙனம் சொல்லப்பட்டவனுக்கு இரு மனைவியர். இவர்களில் இளையவளுக்கு ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணங்களைக் கூறுகின்றோம். கேளுங்கள். இனிய வார்த்தைகளையே பேசுபவன். கபடமில்லாதவன். மாநிறமுள்ளவன். இருவிதக் கல்வி கற்பான். தாமரைபோன்ற மலர்ந்த முகத்தினன்.

14. குலத்தொழில் புரிவா னாகுங் குவலயம் விருத்தி செய்வன்
நலமுள குணத்தா னாகும் நல்லோர்க்கு நல்ல னாவன்
கலகத்தைக் கூறா னாகும் கட்செவி போலக் கோபன்
தலமது பாழ தாகும் ஜனித்த இல் லென்று சொல்வோய்.

14. தன் குலத்தொழிலைச் செய்துவருவான். பூமியைப் பெருக்குவான். நல்ல குணமுள்ளவன். நல்லவருக்கு நல்லவனாக இருப்பான். கலகம் செய்யாதவன். பாம்பு போலக் கோபமுள்ளவன். இவனது பிறந்த வீடு, பாழாகும் என்று சொல்லுகின்றோம்.

15. இல்லமும் புதிதாய்ச் செய்வன் இடரென்றோர்க் குதவி செய்வன்
சொல்லதைக் காப்பா னாகும் சுகதுக்கங் கலந்து வாழ்வன்
தல்லிதாய்க் கருமஞ் செய்வன் சகலர்க்கும் நல்லோ னாவன்
மல்லில்முன் செல்லா னாகு மங்கையே கேட்டி டாயே.

15. புதிய வீடு கட்டுவான். துன்பமடைந்தவர்கட்கு உதவி யளிப்பான். சொன்ன வார்த்தைகளின்படி நடப்பவன். சுகமும் துக்கமும் கலந்து வாழ்வான். தாய் தந்தையரின் இறுதிக் கடன்களைச் செய்பவன். எல்லோருக்கும் நல்லவன். வீண் சண்டைக்குச் செல்லாதவன். தாயே ! கேளுங்கள்.

**சகோதர தோஷம் : கிரகநிலை**

16. தன்துணை நால்வர் தோன்றுந் தங்கர்து ஆண்பா லுந்தான்
கன்னிமா ரிருவ ராகுங் கழறுவோம் பின்பால் சேதி
அன்னவன் துணையாண் தோடம் அணுகுங்கா ரணங்க ளென்ன
மன்னி [illegible] ள்ளி மருவின பலத்தி னாலே;

16. உடன் பிறந்தவர்கள் நால்வர் இருப்பர். சகோதரர்கள் நிலைத்திரார். இரு சகோதரிகள் உளராவர். அவர்களைப்பற்றிப் பின் பாகத்தில் சொல்லு வோம். ஜாதகனுக்குச் சகோதர தோஷம் ஏற்படக் காரணங்கள் என்ன ? மூன்றாமிடமாகிய சிம்மத்தில் சுக்கிரன் இருப்பதால் ;

17. ஆண்துணை தோட மெய்தும் அறைகின்றே மணத்தின் காலம்
பூறுவோ மூவைந் தாண்டில் பூவையு மேல்பால் நேரும்
காணுது வாண்டுக் குள்ளே கன்னிகை மரண மெய்தும்
வேணுகோ பாலன் தங்கை வித்தகி கேட்டி டாயே.

17. சகோதர தோஷம் ஏற்படும், என்றோம். ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய பதினைந்தாம் வயதில் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள். ஆனால் ஒரு வருஷத்துக்குள்ளே இறந்து விடுவாள். கண்ணபிரானின் தங்கையாளே ! தேவியே ! கேளுங்கள்.

18. ஐயைந்து வொன்று வாண்டில் அனுகிடு மறும னைதான்
தையலுந் தென்பால் நேருஞ் சாற்றுவோ மவள்கு ணத்தை
மெய்யது சிவந்த மேனி வீண்பழி யேற்கா ளுவள்
வையமேல் நல்லோ ளாவாள் மாரன்தன் மனத்துக் கேற்றோள்.

18. ஜாதகனின் இருபத்தாறும் வயதில் வேறு மனைவி வருவாள். அவள் தெற்குத் திக்கிலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சிவந்த உடலுள்ளவள். வீண்பழிகளை அடையாதவள். உலகத்தில் நல்லவளாக இருப்பாள். தன் கணவன் மனத்துக்கேற்றவள்.

19. தோகைபோல் சாய லொப்பள் துறவிகட் கன்ன மீவள்
பாகமாய்ப் பேச வல்லள் பாவையும் யோக சாலி
நாகரி கங்க ளுள்ளாள் நாயகி விரத மேற்பாள்
ஆகம முணர்ந்தேோ ருக்கு அன்னமு மன்பா யீவள்.

19. மயிலைப் போன்ற சாயலுடையவள். பரதேசிகட்கு அன்ன மளிப் பாள். பக்குவமாகப் பேசுபவள். அதிருஷ்டமுள்ளவள். நாகரிமாக இருப் பாள். விரதங்கள் ஏற்று நடப்பாள். வேத முணர்ந்த அந்தணர்களுக்கு அன்புடன் அன்ன மளிப்பாள்.

20. கன்னிக்கு வயது தீர்க்கம் கழறுவோஞ் சுதர்ப லத்தை
மன்மதன் போலாண் ரண்டு மங்கையு மவ்வாறு தீர்க்கம்
பின்னமா யிரண்டு வென்றோம் பேசுவோம் பின்பால் சேதி
மன்னவன் தனக்கு ரண்டு மனைவருங் கார ணஞ்சொல்.

20. அவளுக்கு நீண்டவயதுண்டு. புத்திரபலத்தைச் சொல்லுகின்றோம். மன்மதனைப் போல் இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து, நீண்ட ஆயுளுள்ளவர்கள். இரு குழந்தைகள் மரணமடையும். பிற்பாகத்தில் விபரம் சொல்லுகின்றோம். இவனுக்கு இரு மனைவியர் ஏற்படக் காரணம் கூறுங்கள்.

### ஏழாம் பாவம் : கிரகநிலை

21. [1] குடும்பத்தில் புதன்பானு கேது கூடின பலத்தி னாலே
[2] மடமயி லிரண்டு நேரும் மாரன்முன் வினையாந் தாயே
அடைவுட னிவனின் பூர்வம் அறிவிப்பீர் விவரந் தன்னைக்
குடதிசைக் கொங்கு நாட்டில் குதித்தன னிக்கு லத்தில்.

21. குடும்பஸ்தானத்தில் புதன் சூரியன் கேது இவர்கள் கூடியிருக்கும் பலத்தால், இருமனைவியர் ஏற்பட்டு, ஜாதகனுக்கு முன் அவர்கள் மரணமடைவார்கள். இவனுடைய முற்பிறவியைச் சொல்லுங்கள். மேற்குத் திசையிலுள்ள கொங்கு நாட்டில், இதே குலத்தில் பிறந்தான்.

22. அந்நகர் கிராமச் செட்டு அவனுமே செய்து வந்து
பொன்பணி யிச்சை யாயும் பேதையர் மதலை யுண்டாய்
இன்னவன் வாழு நாளில் எய்தின வினையைக் கேண்மோ
கன்னிகை விதவை மாது கலந்தனள் தாயில் லத்தில்.

22. அந்நகரிலுள்ள கிராமத்தில், வியாபாரம் செய்துவந்தான். பொன் ஆபரணங்கள் இவைகளில் விருப்பங்கொண்டு, மனைவி மக்களை யடைந்து, வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஒரு கைம் பெண் தன் தாயின் வீட்டில் வசித்துவந்தாள்.

23. அன்னியன் வேறொ ருத்தன் அவள்பேரில் மோகங் கொண்டு
உன்னத வார்த்தை பேச உத்தமி யிசையா ளாகிப்
பின்னொரு நாளி லேதான் பேதையுந் தனியாய்ச் செல்ல
இன்னவ னவள்பின் சென்று இடர்செய்து போகந் துய்த்தான்.

23. வேறொருவன் அவள்மீது விருப்பங்கொண்டு அன்புடன் பேச, உத்தமியாகிய விதவை அதற்கு உடன் படவில்லை. ஒருநாள் அப் பெண் தனியாகச் செல்லுங்கால், அவளுக்குப் பின்னால் அவன் சென்று அவளை இம்சித்து பலாத்காரமாக இன்பம் அனுபவித்தான்.

24. மங்கையு மனமே வெட்கி வளவினில் துணைவ ரோடு
சங்கையைச் சொல்லும் போது துணைவர்க்குக் கோப முண்டாய்
இங்கவ ரதிகாரி பக்கல் இசைத்தன ரந்தச் சேதி
அந்தவன் தந்திரத் தாலே அரும்பிழை செய்தோன் றன்னை;

24. அப்பெண் வருத்தமுற்று, தன் சகோதரர்களிடம் சொல்லிய போது, அவர்களுக்குக் கோப மேற்பட்டு, அங்குள்ள அதிகாரியினிடம் சென்று இதைக் கூறினார்கள். அதிகாரியும் துன்பம்விளைவித்தவனை;

### ஒருதலைத் தீர்ப்பு

25. வரவழைத் ததனைக் கேட்டு வனைபொரு ளவனால் பெற்று
அரிவைமேல் துன்பஞ் சொல்ல அம்மாது திகில டைந்து
பொருளது வாங்கிக் கொண்ட பெண்பழி சொன்னான் றானும்
வருஞ்ஜன்மந் துணையா னின்று மனைவியு மிரண்டு மாகும்.

---
[1] இரண்டாமிடம். [2] மனைவி.

25. வரவழைத்து, அதனை விசாரித்தான். அதிகாரியாக இருந்த ஜாதகன் மற்றவனிடம் பொருளைப்பெற்றுக் கொண்டு, பெண்மீது குற்றம் கூறினன். அந்தப் பெண்ணும் பயந்து கூறினள்:—பொருளைப் பெற்றுக்கொண்டு அடாத பழியை என்மீது சொன்ன பாவியே ! உனக்கு ஏற்படும் மறுபிறவியில், உடன் பிறந்த சகோதரனின்றி, இருமனைவியர்களை அடைவாய்.

26. யாசகத் தொழிலுஞ் செய்து, அவனியில் வாழ்வாய் நீயும்
வீசியே தெருத்தூள் விட்டாள் மேவிற்று வந்தத் தோடம்
பாசமா யந்தி யத்தில் பற்களுங் குறைவுண் டாகிக்
காசம்போல் ரோகங் கண்டு காலன்தன் பதிக்குச் சென்ருன்.

26. யாசகத்தொழிலும் செய்து, உலகில் வாழ்ந்து வருவாய், என்று சொல்லி, தெருமண்ணை வாரி இறைத்தாள். அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. கடைசிக் காலத்தில், பற்களுக்கு ஊனமேற்பட்டு, காசநோய் உண்டாகி இறந்தான்.

27. கஞ்சனுல் வரையப் பட்டுக் கலந்தன னென்று சொல்வோம்
வஞ்சியின் சாபத் தாலே மருவிடுந் தாரம் ரண்டு
கொஞ்சாது துணையா னுந்தான் கூறுவோ மிவனின் யோகம்
நெஞ்சினி லிரக்க முள்ளன் நிகர்சித்திர வில்லஞ் செய்வன்.

27. மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தான், என்று கூறினேம். பெண்ணின் சாபத்தால் இரு மனைவியர் ஏற்படுவர். உடன் பிறந்த சகோதரர் நிலையார். இவனுடைய யோகத்தைக் கூறுகின்ருேம். இரக்கமுள்ள மனத்தினன். அழகிய வீடு கட்டுவான்.

28. புததசை முதலி லில்லம் பொருந்திடும் பூமி விருத்தி
அதிபதி வந்த பின்பு வளர்பிறை போல யோகம்
நிதம்லாபஞ் செலவு கொஞ்சம் நீணிலம் வறுமை காணன்
சதியிலா மனத்தனுவன் சாதமுங் குறைவு ருதான்.

28. புதமகாதசையில் வீடு கிடைக்கும். நிலங்கள் விருத்தியாகும். மனைவி வந்த பிறகு வளர் பிறைச் சந்திரன் போல யோகம் பெருகும். லாபம் அதிகமாகும். செலவு குறையும். பூமியில் வறுமையில்லாதவன். தீங்கு நினையாத மனத்தினன். உணவுக்குக் குறைவில்லாதவன்.

29. அன்னையின் குணத்தைச் சொல்வோ மாளன்றன் மனத்துக்
[கேற்ருேள்
அன்னம்போல் சாய லொப்பள் அடிசிலுக் கினிய ளாவள்
அன்னமு மன்பா யீவள் அழகுளாள் பொறுமை சாலி
பின்னமில் லாத தேகி பேதையும் பலவீ னத்தாள்.

29. தாயினுடைய குணத்தைச் சொல்லுகின்றேன். தன்கணவன் மனத்துக்கு ஏற்றவள். அன்னம் போன்ற அழகுள்ளவள். சுவையுடன் சமைப்பதில் வல்லவள். பிறருக்கு அன்புடன் அன்னமளிப்பாள். அழகுள்ளவள். பொறுமையுள்ளவள். ஊனமில்லாத சரீரமுடையவள். ஆனுல் பலவீனமுள்ள தேகமுடையவள்.

30. மாந்தளிர் மேனி யாகும் மருமமில் லாதா ளாகும்
கூர்ந்துமே வார்த்தை சொல்வாள் கோபமுங் கொஞ்ச முண்டு
ஏந்திழை யில்லந் தெற்கு இவள்துணை யாண்பால் மூன்று
சேர்ந்தது பெண்பா லொன்று சிலநாளில் பின்பால் சேதம்.

30. மாந்தளிரைப் போன்ற மென்மையான சரீரமுள்ளவள். இரகசிய மில்லாதவள். கூர்ந்து பார்த்துப் பேசுபவள். சிறிது கோபமுள்ளவள். இவளுடைய வீடு தெற்குத் திசையிலுள்ளது. இவளுக்குச் சகோதரர்கள் மூவரும் சகோதரி ஒருத்தியும் உண்டு. அவர்கள் சின்னு களில் இறந்து விடுவார்.

31. தனியளாய் வாழ்வா ளாகுஞ் சாற்றுவோ மிவள்தன் பூர்வம்
கனமுள மலைநாடு தன்னில் கலந்தனள் சைவச் சேயாய்
இனத்துக்கு மேலாய் வாழ்ந்து இவளுமே வாழு நாளில்
வினையதைப் புகலக் கேண்மோ விண்பழி நாத்தி பேரில் ;

31. தனித்து வாழ்ந்திருப்பாள். இவளுடைய (ஜாதகனின் தாயின்) முற் பிறவியைச் சொல்லுகின்றோம். மலைநாட்டில் சைவகுலத்தவளாகப் பிறந் தாள். தன் பந்துக்களுக்கு மேலாக வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தன்னுடைய நாத்தி (கண வனின் சகோதரி) மீது அடாதபழியை ;

32. சொல்லினு ளிந்த மாது தோகையு மனமே வெட்கிப்
பொல்லாத வார்த்தை சொன்னாய் பிறக்கும்பின் ஜன்மந் [தன்னில்]
அல்லலாய்த் தாய்க் குடும்பம் அனுகாது துணைவ ரந்தம்
வல்லிபின் மனைவி யாயும் மாநிலந் தன்னில் வாழ்வாய்.

32. கூறினாள். அந்தப் பெண்ணும் மனது வெட்கிக் கூறினாள். இல்லாத வார்த்தைகளைச் சொல்லிய பாவியே ! நீ பிறக்கும் மறுபிறவியில், துன்பமடைந்து, தாயின் குடும்பத்தில் சகோதரரின்றி, இரண்டாம் மனைவி யாக வாழ்ந்து வருவாய்.

33. இன்னமும் பலவாறு சொல்ல எய்திற்று பாவைக் கேதான்
கன்னிகை யந்தி யத்தில் கனத்தோர்க்குத் தொண்டு பூண்டு
உன்னதத் தலங்கள் சென்று ஒதுங்கினாள் கால னூடு
பொன்னவன் வரையப்பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்.

33. இன்னும் பலவிதங்கள் சொல்ல, அந்தச் சாபம் இவளை வந்தடைந் தது. இவள் தன் கடைசிக் காலத்தில், பெரியவர்களுக்குத் தொண்டுகள் பல செய்து, உயர்ந்த ஸ்தலங்களுக்குச் சென்று, இறந்தாள். மீண்டும் பிரம னால் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்று கூறுகின்றோம்.

34. மங்கையின் சாபம் போல மருவிடு மிச்சென் மத்தில்
நங்கைபின் ஜன்மஞ் சொல்வோம் நற்காசி தன்னி லேதான்
துங்கமா மிக்கு லத்தில் தோன்றுவா ளென்று சொல்வோம்
ஐங்கரன் றனைவ ளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

34. பெண்ணின் சாபத்தால் இப்பிறவியில் பல துன்பங்கள் ஏற்படும். அவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேன். காசிக்ஷேத்திரத்தில், உயர்ந்த இதே குலத்தில் பிறப்பாள், என்று சொல்லுகின்றோம். விநாயகனை வளர்த்த தேவியே! கேளுங்கள்.

35. இருபது வெழு மாண்டில் இவன்றந்தை கண்ட மெய்தும்
மருமமாய் முப்பாண் டுள்ளே மருவிடு மன்னை கண்டம்
உரைக்கின்றோம் பிதாபின் ஜன்ம முயர்கொங்கு நாட்டி லேதான்
வருவனே சத்ரியச் சேயாய் மங்கையே கேட்டி டாயே.

35. ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் தந்தை மரணமடைவான். அவனுடைய முப்பதாம் வயதுக்குள் தாய் இறப்பாள். தந்தை மறுபிறவியில் உயர்ந்த கொங்குநாட்டில் சைவ குலத்தவனாகப் பிறப்பான். தாயே! கேளுங்கள்.

### குலத்தாழ்வுக்குக் காரணம்

36. மறைக்குல முதித்தோன் பின்பு வருகுவான் சைவ னென்றீர்
குறையதைப் புகலு மென்னக் கூறுஞ்சொ லிரண்டு மாயும்
மறைகளைச் சிலவே ளைதான் மருவாது நின்ற தாலும்
குறையாகச் சிலர்க்கு மாத்ரம் கூறின பலத்தி னாலும்;

36. அந்தண குலத்தில் பிறந்து, மறுபடியும் சைவகுலத்தில் மறு பிறப்பு ஏற்படும், என்றீர்களே! என்ன குறைகள் செய்தான்? சொல்லுங்கள். இருவிதமாகப் பேசியும், வேதங்களில் சொல்லிய கருமானுஷ்டானங்களைச் சில வேளைகளில் செய்யாததாலும், சிலர் மனவருத்தம் அடையும் படியான சொற்களைச் சொல்லிவந்ததாலும்;

37. குலந்தாழ்வாய் வருவா னுவன் குழவியின் காலஞ் சொல்வோம்
[1] அலரியின் தசையா மென்றோம் அவர்சுய [2] புக்தி தன்னில்
விலகுவான் கால னூடு விளம்புவோ மறுபா னென்பான்
நலமுள மேட மாதம் நவிலுவோந் தாயே கேளும்.

37. தாழ்வான குலம் ஏற்பட்டது. ஜாதகனுடைய மரணக்காலத்தைச் சொல்லுகின்றோம். சூரிய மகாதசையில், சூரியபுக்தியில், அறுபத்தொன்பதாம் வயதில் சித்திரை மாதத்தில், மரணம் நேரும் என்று கூறுகின்றோம்! தாயே! கேளுங்கள்.

38. பின்ஜன்மம் வேலங் காட்டில் பிறப்பனு மிக்கு லத்தில்
அன்னவன் ஜனன காலம் [3] அந்தணன் தசையைந் தாண்டும்
மன்னிய திங்க ளெட்டு மறைந்தனம் பூர்வ பாகம்
கன்னென மொழியை யொக்குங் காதலி கேட்டி டாயே.

38. மறுபிறவி, திருவாலாங்காட்டில், இதே குலத்தில் பிறப்பான். ஜாதகனின் ஜனனகாலத்தில் குருமகாதசையில் ஐந்து வருடங்களும் எட்டுமாதங்களும் பாக்கி என்று முதல்பாகத்தைச் சொன்னோம். இனிய வார்த்தைகளைப் பேசும் தேவியே! கேளுங்கள்.

---

1 சூரியன். 2 சூரியபுக்தி. 3 குரு.

**கிரகபரிவர்த்தனை**

39. காரியுங் குருவு மாறிக் கலந்துமே யிருப்ப தாலே
கூறுவீர் பலனைத் தானே குழவிக்கு முப்பான் மேலே
சேருமே பொருளும் பூமி சிறப்பான குடும்ப மாகும்
பாரபி விருத்தி யாகும் பாரினில் வறுமை காணுன.

39. சனியும் குருவும் மாறி (பரிவர்த்தனையாக) இருப்பதால் உள்ள பலன்களைச் சொல்லுங்கள். ஜாதகனுக்கு முப்பதாம் வயதுக்கு மேல் பொருள் சேரும். பூமியும் பெருகும். சிறப்புள்ள குடும்பமேற்படும். நிலங்கள் அபிவிருத்தியடையும். உலகில் தரித்திரமில்லாதவன்.

## ஜாதகம் 36

1. மதிசனி கோலில் ராகுவுங் கலசம்[1]
மங்கலன் மேடமே யாகப்
புதன்நந்தி பானு புகருமே வீணை
பொன்னவன் கடகம தாகப்
[2]பதியது மிதுனம் பலனது எவ்வாறு
பகருவீர் முனிவரே யென்ன
வதிட்டரு முரைப்பா ராணது ஜன்மம்
வந்தஇல் வடக்குமே ல் வாடை.

1. சந்திரன் சனி துலாத்திலும், ராகு கும்பத்திலும், செவ்வாய் மேஷத்திலும், புதன் விருஷபத்திலும், சூரியன் சுக்கிரன் மிதுனத்திலும், குரு கடகத்திலும், கேது சிம்மத்திலும் இருந்து, லக்கினம் மிதுனமாக இருக்க, பலன் எங்ஙனம் ? சொல்லுங்கள், முனிவரே ! என்று பார்வதி கேட்க, வசிஷ்ட முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் பிள்ளையின் ஜாதகம். பிறந்த வீடு வடக்குத் தெற்கான வீதியில், மேற்குப் பக்கத்திலுள்ள வரிசையில் இருக்கும்.

| | | | |
|---|---|---|---|
| | செவ்வாய் | புதன் | லக்கினம் சூரியன் சுக்கிரன் |
| ராகு | இராசி சக்கரம் | | குரு |
| | | | கேது |
| | | சந்திரன் சனி | |

2. வீதிக்குக் கீழ்ப்பால் விக்கினேசு வரும்
வெள்விடை நாயகி நிற்கும்
பாதியி னுடலோன் மேற்கில் பரவும்
பஞ்சவர் பாரியுந் தென்பால்
வாதுசெய் காலோ னருகினி லவரும்
மருவிய சிறுவூ ரென்றேம்
ஓதுவேன் கங்கை குலமதாய்ப் பாலன்
உறைகுவான் திருதிய ஜனனம்.

2. வீதிக்குக் கிழக்கில் விநயகர் ஆலயமும், அம்மன் கோயிலும், அர்த்தநாரீச்வரனாகிய சிவபெருமான் மேற்குத் திக்கிலும், திரௌபதியம்மன் கோவில் தெற்கிலும், சூதாக உலகளந்த திருமாலின் கோயில் அருகிலும் உள்ள ஒரு சிற்றூரில், வேளாள குலத்தில், தன் தந்தைக்கு மூன்றுவது பிறப்பாக, ஜாதகன் பிறப்பான், என்றேம்.

---

1. கும்பவிராசி. 2. இலக்கினம்.

3. திருதிய வாண்பால் தந்தையின் துணையாரு
சேயிழை மார்களு மிரண்டு
துரிதமாய் முன்னால் மூத்தவன் வேறு
செல்லுவான் மற்றிரு வருமே
உறவதாய் வாழ்வர் அதிலொரு சங்கை
ஒருவனுக் கிருவிழி கெடுமே
வருமாறு வென்ன [1] மாரியால் நேரு
மறைகின்றோ மவன்குண மதனை.

3. தந்தையின் உடன் பிறந்தவர்களில் சகோதரர் மூவரும் சகோதரிகள் இருவருமாவர். சீக்கிரத்தில் தந்தையின் மூத்த சகோதரன் தனியாகச் சென்று விடுவான். மற்ற இரு சகோதரர்களும் ஒன்றாய் வாழ்ந்து வருவார். அவர்களில் ஒருவனுக்கு இரு கண்களும் குருடாகும். அதற்குக் காரணம் என்ன ? அம்மையால் நேரிடும். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம்.

4. குணமது நன்மை மால்நிறங் குள்ளன்
கொடுமையை வெளிவிடான் பொறுமை
பிணையான வார்த்தை கூறிப்பின் கடவுள்
பத்தியும் பேணுவா னிவனே
அனையவே பாரி யொன்றென மொழிந்தோம்
அனுகிடு மாண்சுத ரொன்று
கன்னிகைமார் நால்வர் கழறுவோ மவர்க்குக்
கருதிடான் கட்டுவார்த் தைகளும்.

4. நற்குண முள்ளவன். கரிய நிறத்தன். குள்ளனாக இருப்பான். கோபத்தை வெளிக்காட்டாதவன். பொறுமைசாலி தீங்கான வார்த்தைகளைப் பேசாதவன். தெய்வ பக்தி யுள்ளவன். மனைவி ஒருத்தியே என்று கூறினோம். ஆண்குழந்தை ஒன்றும் பெண்கள் நால்வரும் அவனுக்குத் தோன்றிடுவர். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவன்.

5. அந்தியக் காலஞ் சிறையதாய் வாழ்வன்
அவ்விதம் நடப்பதேன் முனியே
முந்திய ஜன்ம வினையேதாம் தாமே
மொழிகுவீ ரச்சங்கை தன்னை
இந்தவன் பூர்வ மிசைக்கின்றோங் கேளாய்
எழில்பாலை-நதிக்கரு குத்ரம்
விந்தைமுக் கூட லருகினில் மாரி
மேவுவாள் ஊத்துக்கா டதனில்.

5. தன் கடைசிக்காலத்தில் சிறையிலிருப்பதுபோல் வாழ்ந்து வருவான். அதற்குக் காரணம் கூறுங்கள், முனிவரே ! முற்பிறவியில் செய்த தீவினையால்தான் ஏற்பட்டது. அந்தத் தீவினையைக் கூறுங்கள். ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவனின் முற்பிறவியைக் கூறுகின்றோம். கேளுங்கள். பாலாற்றுக்கு வடக்கில் உள்ள முக்கூடலுக்குப் பக்கத்தில் உள்ள ஊத்துக்காட்டில், மாரியம்மன் கோயில் ஒன்று உளது.

---

1. அம்மை.

### தெய்வக் குற்றம்

6. வன்னிய மரபில் மாரனு முதித்து
மாதினைப் பூசைகள் புரிந்தான்
அன்னவன் வாழ்நாள் பவமதைப் புகல்வோம்
அவள்நேத்ர மலர்களைத் தானும்
இன்னவன் கொண்டு பணியது செய்து
இவள்பாத மதுதனி லணிந்தான்
கன்னிகை போகம் புரிந்துமே பாலன்
கடந்தன மாலய மதனில்.

6. அவன் வன்னிய குலத்தில் பிறந்து, மாரியம்மனைப் பூசைசெய்து வந்தான். அங்ஙனம் வாழ்ந்து வந்தபோது ஏற்பட்ட தீங்கைச் சொல்லுகின்றோம். அம்மனுக்குப்போட்டிருந்த கண்மலரைக் கவர்ந்து வந்து, மனைவியின் காலணியாகச் செய்தான். இதுதவிர ஒரு பெண்ணுடன் இன்பம் அனுபவித்த பிறகு (நீராடாமல்) கோயிலுக்குச் சென்றுவிட்டான்.

### கோயில் தீபத்துக்கு நெய்கொடுத்ததை மறைத்தல்

7. அதுவொரு தோடம் அயலவர் கொஞ்சம்
ஆவின்நெய் தந்தனர் சுடர்க்கு
அதிபனு மறைத்து அளவிற்குத் தந்தான்
மருவிற்று அதுவொரு தோடம்
இருவிதத் தாலே இருவிழி மறைவு
எய்திற்று அந்திய வயதில்
சதியான காலன் நாடதை யடைந்து
சதுர்முகன் வரைபவே வந்தான்.

7. அதுவும் ஒரு தோஷமாயிற்று. வேற்று மனிதர்கள் சிலர் பசுவின் நெய்யைத் தீபமேற்றுவதற்காகக் கொடுத்தார்கள். இவன் அதை மறைத்து, தானே வைத்துக்கொண்டு, சிறிதளவே கொடுத்தான். அதுவும் ஒரு தோஷமாயிற்று. இருவிதக்காரணங்களால் இருநேத்திரங்களும் பாழாயின. அவனுடைய கடைசிக்காலத்தில் தீமையான எமபுரம் அடைந்து, பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தான் (ஜாதகனின் தந்தையின் உடன்பிறந்தவன்).

### சாந்தியில்லாக் குற்றம்

8. வந்தவன் தனக்கு வாதிகா லத்தில்
மாரியால் துன்பமே யடைந்து
விந்தையால் விழிகள் கெடுமென வுரைத்தோம்
மெல்லியாள் மரணமே யாகி
அந்தவ னிவன்பா லணுகியே வாழ்வன்
அருவிதச் சாந்தியைப் புகல்வீர்
எந்தசாந் திகளு மீடல்ல தாயே!
இயம்பின மொழிகளே நடக்கும்.

8. அவனுக்கு ஆதிகாலத்தில் அம்மை நோய் ஏற்பட்டு கண்கள் குரூடாகும் என்று சொல்லுகின்றோம். தன் மனைவியும் கடைசியில் இறந்து ஜாதகனுடைய தந்தையுடன் வாழ்ந்து வருவான். அது தீரச் சாந்திகள் கூறுங்கள். எந்தச் சாந்திகள் செய்தாலும் அந்தத் தீவினைக்கு ஈடில்லை. சொன்னபடியே நடக்கும்.

### உயர்குலத்தில் தோன்றக் காரணம்

9. மறுஜன்மம் விரிஞ்சியில் மறைக்குல முதிப்பான்
அடைந்தபுண் ணியங்களைப் புகல்வீர்
அரன்பத்தி கொண்டு அன்பான வார்த்தை
அனைவர்க்கும் நல்லவ னுயும்
வருவதா லுதிப்பான் தந்தையின் குணத்தை
யறைகின்றே மாநிற முடையான்
தரையினு லுய்வன் சாயல்நேத் திரமும்
சகடுவா கனமு முடையான்.

9. மறுபிறவி, விரிஞ்சி நாட்டில், அந்தண குலத்தில் பிறப்பான். அவன் இப்பிறவியில் செய்த புண்ணியங்களைக் கூறுங்கள். சிவபெருமான்மீது பக்தி பூண்டு அன்புடன் பேசி, எல்லோருக்கும் நல்லவனுகவும் இருந்து வருவதால், அந்தணர் குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம்- மாநிறமுள்ளவன். விவசாயத்தால் ஜீவித்து வருவான். சாய்ந்தபார்வை உடையவன். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன்.

10. வித்தையுஞ் சமமா மனவலைச் சலுமே
விரயமாந் தானியங் கொஞ்சம்
பின்புத்தி யுடையன் வடிவினில் குள்ளன்
பேசுவா னிருவித வார்த்தை
பத்தினி நேயன் பணையோர்க ளுடையன்
பராசரே மனஞ்சல்ய பாதை
நித்திய முடையன தானியச் செட்டு
நீத்தோர்க ளுறவுமே கொள்ளான்.

10. சமமான கல்வியறி வுள்ளவன். மனத்தில் சஞ்சல முடையவன். தானியம் சிறிது விரயமாகும். பின்புத்தி யுள்ளவன். குள்ளமான சரீரமுடையவன். இருவிதமாகப் பேசுபவன். மனைவிக்கு பிரியமானவன். பண்ணையர் முதலியன உள்ளவன். பராசர முனிவரே! கடன் தொந்தரவுடையவன். தானிய வியாபாரம் செய்து வருவான். பெரியோர்களிடம் பக்தியில்லாதவன்.

11. கொள்ளவும் விற்கவும் வல்லவன் கொடியோன்
கூறுவான் சுகமுள வார்த்தை
கள்ளமுங் கொஞ்சங் கடனது தீர்ப்பன்
கட்டுவா னில்லமு மிவனே

வெள்விடைப் பத்தி மேல்பூசை யெனலாம்
விளம்பின குணத்தவற் கிவனும்
நள்ளிருள் தீபம் போலவே யுதிப்பான்
நாயகி கேட்டிடு வாயே.

11. வாங்கவும், விற்கவும் சாமர்த்தியசாலி. கொடியவன். இனிமையாகப் பேசுபவன். கபடமும் உள்ளவன். கடன்களைத் தீர்த்துவிடுவான். சொந்த வீடு கட்டுவான். சிவபெருமான்மீது பக்தி கொள்ளுவான். பூசையும் புரிவான். இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன், நல்ல இருட்டில் ஒளி உண்டாவது போல, பிறப்பான். தேவியே! கேளுங்கள்.

12. பாலகன் குணத்தைப் பகருவோந் தாயே
பண்போருக் கன்னமே யளிப்பன்
சீலவான் கல்விமான் மாநிற முடையோன்
சிறுத்தோர்க் கன்னமே தருவான்
வேலன்மேல் பத்தி வாணிபஞ் செய்வன்
மேதினில் கிருஷியு முடையன்
[1] ஆலம்போல் பகைக்குக் கருடனு மாவன்
அறிவுளோர் நேயமே கொள்வன்.

12. ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். தாயே! பெரியோர்களுக்கு அன்னமளிப்பான். நல்லொழுக்கமுள்ளவன். மாநிறமுடையவன். ஏழைகளுக்கு அன்னமளிப்பான். சுப்பிரமணியக்கடவுள்மீது பக்தி கொள்ளுவான். வர்த்தகம் செய்துவருவான். பூமியில் விவசாயமும் செய்துவருவான். கொடிய விஷம்போன்ற பகைவர்கட்குக் கருடனைப் போன்றவன். அறிவாளிகளின் நட்புக் கொள்ளுவான்.

13. ஈரஞ்சு வாண்டுள் பலவிதஞ் சேதம்
ஏகிடுந் தரணிகள் கொஞ்சம்
தீரமில் லாத மனமது வாகும்
செலவுக ளதிகமே யெய்தும்
கூறுவோ மதன்மேல் தீரமா மனமும்
கோவுகள் பலிதமே யாகும்
ஆறுமா முகத்தோன் அருளுமே வோங்கும்
அவனியில் வறுமைகள் காணன்.

13. ஜாதகனுக்குப் பத்தாம் வயதுக்குள் பலவித சேதங்கள் ஏற்படும். பூமிகள் கொஞ்சம் குறையும். தைரியம் குறையும். அதிகமான செலவுகள் ஏற்படும். அதற்குப் பிறகு தைரியமுள்ள மனம் ஏற்பட்டு, பசுக்கள் விருத்தியாகி, சுப்பிரமணியக்கடவுளின் அருள் பெருகும். உலகில் தரித்திரம் இல்லாதவன்.

[1] விஷத்தையுடைய பாம்பு.

14. நினைத்தது முடிப்பன் நிலம்பின்னால் சேர்ப்பன்
நிருபர்க ளிட்டமே கொள்வன்
அனைத்துளோர்க் கிட்டன் அடாவடி சொல்லான்
அழகிய குடும்பமே யாவன்
தனமது சேர்ப்பன் சௌந்தர்ய முடையன்
தாட்சிண்யன் கனத்தபுத் திகளும்
இனமது மதிக்க வாழ்ந்திடு வானும்
இடுக்கணி லாமலே வாழ்வன்.

14. எண்ணிய காரியங்களை முடிக்க வல்லவன். பிற்காலத்தில் நிலத்தை விருத்தி யாக்குவான். அரசர்களுக்குப் பிரியமானவன். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். அடாவடி சொல்லாதவன். அழகிய குடும்ப முள்ளவன். பணம் சேர்ப்பான். சௌந்தரிய முள்ளவன். தாட்சிண்ய முள்ளவன். பெரிய (தாராள) புத்தி ஏற்பட்டு, சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்க்கை நடத்துவான். துன்பங்க ளில்லாமல் வாழ்வான்.

15. துணைவர்கள் முன்னால் தோடமே யாகும்
தோன்றும்பின் நேர்துணைத் தோடம்
வினையதைப் புகல்வீர் கேதுவு மூன்றில்
மேவின பலத்தினால் புகன்றோம்
கனமுட னதன்பின் காளையுந் தீர்க்கம்
கன்னிமார் தோன்றுவர் தீதாம்
சினமிலாத் தவங்கள் செய்திடுந் தாயே
செப்பின மொழிகள்குன் றுவே.

15. முன் பிறந்த சகோதரர்களுக்கும் பின்பிறக்கும் அடுத்த சகோதரனுக்கும் தோஷமுண்டு. அதற்குரிய தீவினையைச் சொல்லுங்கள். சகோதரஸ்தானமாகிய மூன்றுமிடத்தில் கேது இருப்பதால், கூறினோம். அதற்குப் பிறகு பிறக்கும் சகோதரன் தீர்க்கமாவான். சகோதரிகள் பிறந்து நிலையார். கோபமில்லாமல் தவங்களை இயற்றும் தேவியே! சொல்லிய வார்த்தைகள் தவறு.

16. மங்கள மிருப தாண்டினில் பாரி
மருவிடும் வடதிசை தன்னில்
அங்கவள் குணத்தை அறிவிப்போ மினிமேல்
அரிமனை யொப்பளா மென்றோம்
துங்கமா மனத்தாள் சொல்லது சுகமாஞ்
சோர்வோருக் கன்னமே யீவள்
நங்கைக்கு வயது தீர்க்கமா மென்றோம்
நாரதர் தடுத்துமே புகல்வார்.

16. ஜாதகனுடைய இருபதாம் வயதில் மணமேற்படும். மனைவி வடக்குத் திசையிலிருந்து வாய்ப்பாள். அவளுடைய குணத்தை இனிக் கூறுகின்றோம். இலக்குமியை யொத்தவள். தூய்மையான மனத்தினள். இனிமையாகப் பேசுபவள். கஷ்டமடைந்தவர்கட்கு அன்னமளிப்பாள். அவள் நீண்ட ஆயுளுள்ளவளென்றோம். நாரதமுனிவர் தடுத்துச் சொல்லுகின்றார்.

## ஏழாம்பாவ கிரகநிலை

17. சத்தமத் தோனுஞ் சரமதா யிரண்டில்
சனிகுசன் பார்த்துமே யிருக்க
வித்தகன் தனக்கு மனைவிய ரிருவர்
மேவிடு மென்கருத் தையா
பத்தினுக் குடையோன் பொன்னவ னாகிப்
பதியினுக் கிரண்டினில் தங்கக்
குற்றமில் லாத தாரமே யொன்று
கூறுவோந் தீர்க்கமாய்க் குறித்தே.

17. ஏழாம் வீட்டுக்குரிய குரு சரத்தில் (கடகத்தில்) இருந்து சனி செவ்வாயைப் பார்ப்பதால், இருமனைவியர் ஜாதகனுக்கு ஏற்படுவர் என்பது எனது எண்ணம். பத்தாம் வீட்டுகுரிய குரு, ஜாதகனுக்கு இரண்டாமிடத்தில் இருப்பதால், குற்றமில்லாத மனைவி யொருத்தியே என்று நிச்சயமாகக் கூறுகின்றோம்.

## ஐந்தாம்பாவ கிரகநிலை

18. குறித்தவம் மனைக்குக் குழவிகள் புகல்வோம்
கோதைமா ரிருவரு மாவர்
திருகிலா வாண்பால் ஒன்றெனத் தீர்க்கம்
சிதைந்திடு மிரண்டுமே யென்றோம்
வருமாறு சொல்வீர் காரியு மைந்தில்
மாலவன் விரயத்தி லிருக்கத்
திருமகன் தனக்கு முதல்சுதர் தோடஞ்
செப்பின மொழிகள்குன் றுவே.

18. சொன்ன அப் பெண்ணுக்குப் புத்திரபாவத்தைச் சொல்லுவோம். பெண் குழந்தைகள் இருவரும் துன்பமில்லாத புத்திரன் ஒருவனும் பிறந்து, தீர்க்கமாவார்கள். இரு குழந்தைகள் இறந்துவிடும். அதற்குக் காரணம் சொல்லுங்கள். சனி ஐந்தாமிடத்திலும் புதன் விரய ஸ்தானத்திலும் இருப்பதால், முதலில் பிறக்கும் குழந்தைக்குத் தோஷமாகும். சொன்ன வார்த்தைகள் தவறா.

19. அன்னையின் குணத்தை யறிவிப்போந் தாயே
அழகுளாள் சிவந்திடு மேனி
பின்னமில் லாத தேகியாங் கோபி
பொருத்தமா யுரைத்திடு வாளாம்
சொன்னசொல் சுகமா மீகையுங் கொஞ்சம்
துணைவரி லாணது காணுள்
கன்னிமார் மூன்று கழறுவோந் தீர்க்கம்
காதலி யவளுமே தீர்க்கம்.

19. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவள். சிவந்த உடலுள்ளவள். குற்றமில்லாத தேகத்தவள். கோபமுடையவள். பொருத்தமாய்ப் பேசுபவள். இனிமையாகவும் பேசுபவள். சிறிது கொடையுள்ளவள். உடன் பிறந்த சகோதரனில்லாதவள். மூன்று சகோதரிகள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். அவளும் தீர்க்காயுளுடையவள்.

### பறவையைக் கொன்ற தோஷம்

20. முன்ஜன்மம் புகல்வோ மோதூரு தலத்தி
லுதித்தனள் செங்குந்தக் குலத்தில்
அன்னையுந் தந்தை வரனுமே யுண்டாய்
அவள்செய்த கொடுமையைக் கேண்மோ
தன்னில்லம் பட்சி வாசமே யாகும்
தன்சுத ரிறகிலா விருத்தி
மன்னிய தெருவி லுணவுக்குச் செல்ல
மங்கையு மடித்தன ளென்றோம்.

20. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். ஓதூர் என்ற ஊரில் செங்குந்த வமிசத்தில் பிறந்தாள். அவளும் தாய் தந்தையர் கணவன் இவர்களையடைந்து வாழ்ந்த காலத்தில் செய்த தீவினையைக் கேளுங்கள். தன் வீட்டில் ஒரு பட்சி வசித்து வந்தது. அது தன் குஞ்சுகளை கூட்டில் வைத்து, தெருவில் உணவுதேடச் சென்றபொழுது, அதை அவள் அடித்தாள்.

21. மறலியின் பதிக்கு வடைக்கலான் செல்ல
மைந்தர்கள் கூடதில் மாள
பெரிதான தோடஞ் சேர்ந்தது வென்றோம்
பேதைக்குச் சுதரின்றி மாண்டு
பிரமனுல் வரைய வரநதி குலத்தில்
புகுந்தனள் பிருதிவி தலத்தில்
உறைந்திடு பட்சி தோடமிச் சென்மம்
உறுந்துணை யாணது காணுள்.

21. பட்சி இறந்தது. கூட்டில் குஞ்சுகள் இறந்தன. அதனுல் பெரிய தோஷம் ஏற்பட்டது. அவளும் குழந்தைகளில்லாமல் இறந்து, பிரமனுல் படைக்கப்பட்டு, காஞ்சீபுரத்தில் வேளாள குலத்தில் தோன்றினுள். பக்ஷி தோஷம் இவளைச் சார்ந்தது. உடன் பிறந்த சகோதரர்கள் இல்லாதவள்.

22. சுதர்களுங் கெடுதி முதலிலே தோன்றுஞ்
செப்புவோ மிவள்பின்ஜன் மத்தைப்
பதியினில் உயர்வாம் பாண்டிநா டதனில்
பாவையு மிக்குல முதித்துத்
தனமாய்க் குடும்பி யாவளே யென்றோம்
ஆருறு வாண்டுக ளதனில்
சதிசெய்யுங் காலன் நாடதை யடைவாள்
சங்கரி கேட்டிடு வாயே.

22. முதலில் பிறக்கும் குழந்தைகட்குத் தோஷ மேற்படும். அவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். உலகத்தில் உயர்ந்த மதுரை நகரில், இதே குலத்தில் பிறந்து, பெரிய குடும்பியாவாள் என்றோம். ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் அவள் இறந்து விடுவாள். சங்கரியே! கேளுங்கள்.

23. தந்தையின் பூர்வஞ் சாற்றிடக் கேண்மோ
தவளையின் கிரிக்குத்தென் பாலில்
துன்மையாய் வைச்யக் குலமதி லுதித்துச்
செட்டுக்கள் பலவதாய்ச் செய்து
நன்மையோர் நேசங் கொண்டுமே வின்னேன்
நமன்பதி சென்றுமே வந்தான்
அன்னவன் உணவில் குறைபடான் தாயே
அறைகின்றோ மிவன்பின்ஜன் மத்தை.

23. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். தவளைமலைக்குத் தெற்கில் கெட்ட வைசிய குலத்தில் பிறந்து, பலமான வர்த்தகம் செய்துவந்து, நல்லவர்கள் நட்புக்கொண்டு இறந்தான். மீண்டும் இக்குலத்தில் பிறந்தான். அவன் ச ப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். தாயே! இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

24. உத்தரந் தணிகை மேல்சிறு வூரில்
உதிப்பனும் ரெட்டியின் குலத்தில்
மெத்தெனக் குடும்பி யாகியே வாழ்வன்
விளம்புவோ மாரகந் தன்னை
வித்தகன் றனக்கு விருபத்தே ழாண்டில்
விளம்புவோந் தந்தைகண் டமுமாய்
அத்திமா முகனை யாதரித் தவளே
அறைகின்றோம் பாலகன் பூர்வம்.

24. வடக்கில் உள்ள திருத்தணிக்கு மேற்கில் சிற்றூரில், ரெட்டியார் மரபில் தோன்றுவான். பெரிய குடும்பியாகி வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் தந்தை மரண மடைவான். யானை முகத்தையுடைய விநயகரைப் பெற்று வளர்த்தவளே! ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம்.

25. பாலகன் பூர்வம் பாண்டிநா டதனில்
பிறந்தனன் வன்னியச் சேயாய்
ஞாலத்தில் கிருஷி நடத்தியே வாழ்ந்து
நன்மறைத் தொண்டுமே புரிந்து
வேல்விழி மனைவி மைந்தர்க ளுண்டாய்
வினையது வின்றியே வாழ்ந்து
காலன்றன் பதிக்குக் கடந்துமே வின்னோன்
கஞ்சனூர் வரையவே வந்தான்.

25. ஜாதகன், முற்பிறவியில், பாண்டிய நாட்டில், வன்னிய குலத்தில் பிறந்தான். விவசாயம்செய்து வாழ்ந்து, அந்தணர்கட்குத் தொண்டுகள் பல செய்து வந்து, மனைவி மக்களைப் பெற்று, தீச்செய்கைகளில்லாமல் வாழ்ந்து வந்து இறந்து, பிரம்மனால் படைக்கப்பட்டுப் பிறந்தான்.

26. வந்தவன் யோக மறைகின்றோ மினிமேல்
மாநிலம் விருத்தியே செய்வன்
எந்திடம் பெருமை ஏற்பனும் நல்லோன்
ஈரஞ்சு வாண்டுமேல் நேரும்
முந்தினுள் கடனுஞ் சஞ்சல மனமு
மேவிடுஞ் செலவநே கங்கள்
தந்தனங் காணுன் பணியுமே விரயஞ்
சாற்றின மொழிகள்குன் றுவே.

26. ஜாதகனுடைய யோகத்தை இனிக் கூறுகின்றோம். நிலங்களைப் பெருக்குவான். எல்லாவிடத்திலும் பெருமை யடைவான். நல்லவனாக இருப்பான். பத்தாம் வயதுக்கு மேல் பழையநாள் கடன்களால் மனத்தில் சஞ்சலங்கள் ஏற்படும். செலவு அதிகமாகும். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் இல்லாதவன். ஆபரணங்களும் விரயமாகும். நாங்கள் கூறியவை தவறு.

### வேறு

27. சொல்லிய வாண்டின் மேலாய்ச் சுதனுக்கு யோகம் வாய்க்கும்
நல்லதோர் பணிகள் பூமி நந்தியா வுடைய னுவன்
இல்லமு மருகில் தென்பால் எய்திடும் வறுமை காணுன்
சல்லியங் காணு னுவன் சயமுனி தடுத்துச் சொல்வார்.

27. சொல்லிய வருஷத்துக்கு மேல் ஜாதகனுக்கு யோகம் ஏற்படும். நல்ல நிலங்கள் ஆபரணங்கள் பூமி இவைகள் சேரும். பசு காளைகள் விருத்தியாகும். சமீபத்திலேயே தென்திக்கில் வீடு கிடைக்கும். கடனில்லாதவன். ஜய முனிவர் தடுத்துக் கூறுகின்றார்.

### யோகமேற்படக் கிரகநிலை

28. யோகமெவ் விதமாய்ச் சொன்னீ ருரைப்பீ களந்தச் சங்கை
[1] ஆகமன் காரி யுச்சம் [2] ஆரனு மாட்சி யாகப்
பாகமாய் யோகஞ் சொன்னோம் பாரினில் தந்தைமேலாய்ப்
போகபாக் கியங்க ளேற்பன் புண்ணிய சாலி கேளாய்.

---

[1] குரு. [2] செவ்வாய்.

28. யோகம் ஏற்படும் என்று எப்படி கூறினீர்கள் ? அதைச் சொல்லுங்கள். குருவும் சனியும் உச்சமாகவும், செவ்வாய் ஆட்சியாகவும் இருப்பதால், யோகமேற்படும், என்று சொன்னோம். உலகில் தன் தந்தைக்கு மேலாக போக போக்கியங்களைப் பெற்று வாழ்வான். புண்ணியவதியே ! கேளுங்கள்.

29. ஈரேழு வாண்டு தன்னில் இல்லமும் பாக மூன்றுயக்
கூறுவோ மிவனுக் கம்மா குறிக்கின்றோ மரண காலம்
தீரமா யறுபான் மூன்று யாண்டினில் துலாமா தத்தில்
சேருவான் கால னூடு செப்புவோ மிவன்பின் ஜன்மம்.

29. ஜாதகனுடைய பதினான்காம் வயதில் வீடு மூன்று பாகங்களாகப் பிரிக்கப்படும். ஜாதகனின் மரண காலத்தைச் சொல்லுகின்றோம். அவன் தனது அறுபத்துமூன்றாம் வயதில் ஐப்பசி மாதத்தில் இறந்துவிடுவான். அவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

30. [1] பிருதிவி தலத்தி லேதான் பிறப்பனும் பிரம்ம சேயாய்
அரசரால் தொழிலும் பெற்று அவனுமே வாழ்வா னவன்
திருமகன் ஜனன காலஞ் செம்பொன்னின் தசையி ருப்பு
இருநான்கு வாண்டு ரண்டு திங்களு மியம்பி னோமே.

30. காஞ்சீபுரத்தில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான். அரசாங்கத் தொழிலை யுடைந்து அவன் வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய ஜனன காலத்தில் குருமகாதசை இருப்பு எட்டு வருடங்களும் இரு மாதங்களுமாம், என்று கூறினோம்.

31. பலனது விரயம் பூமி பாலகன் பிணியு முண்டு
குலவும்பின் துணைவர் தாமுங் குடும்பத்தில் சுபமுஞ் சூதம்
நலமிலாக் காலி தாமும் நலிவுண்டு வன்னைக் கேதான்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தினோம் பூர்வ பாகம்.

31. அக்காலத்திய பலன்களாவன:—பூமிகள் விரயமாகும். ரோகம் ஏற்படும். இளையசகோதரர்கள் ஏற்படுவார். குடும்பத்தில் நன்மையும் தீமையும் கலந்து உண்டாகும். கால்நடைகட்குச் சேதமுண்டாம். தாய்க்கு ரோகம் ஏற்படும். மலையரசனின் புதல்வியே ! நாங்கள் கூறிய மொழிகள் தவறா. இங்ஙனம் முதல் பாகம் கூறினோம்.

---

[1] காஞ்சீவரம்.—இங்கு ப்ருதிவிலிங்க வடிவமாகச் சிவ பெருமான் எழுந்தருளியிருப்பதால் இப் பெயர் பெற்றது. இது பஞ்சபூதத்தலங்களில் ஒன்று.

## ஜாதகம் 37.

1. மதிமேடம் புகரும் வீணை மங்கலன் கேது நந்தி
புதன்ரவி கடக மாகப் பொன்ராகு தெருக்கா லேற
விதிதனு மிதுனஞ் ஜன்மம் விளம்புவீர் பலனை யென்று
அதிபதி கேட்கும் போது அத்திரி புகலு கின்றார்.

1. சந்திரன் மேஷத்திலும், சுக்கிரன் மிதுனத்திலும், கேது செய்வாய் விருஷபத்திலும், புதன் சூரியன் கடகத்திலும், குரு ராகு விருச்சிகத்திலும், சனி தனுசிலும் இருந்து, மிதுனம் ஜன்ம லக்கினமாக இருந்தால், பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கும் போது, அத்திரிமுனிவர் கூறுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | கேது செவ்வாய் | லக்கினம் சுக்கிரன் |
| | இராசி சக்கரம் | | புதன் சூரியன் |
| | | | |
| சனி | குரு ராகு | | |

2. இந்தசே யாணுஞ் ஜன்மம் இல்லமுங் கீழ்மேல் வீதி
தென்வாயில் கீழ்ப்பால் தந்தி சிம்மவா கனத்தாள் தென்கீழ்
பிந்தின வூரே யாகும் பலமுள வோடை யுத்தரம்
சந்ததங் கங்கை சேயாய் ஜனிப்பனு மேழாஞ் ஜன்மம்.

2. இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. பிறந்த வீடு, கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. கிழக்கில் விநயகர் ஆலயமும் சிங்க வாகனத்தையுடைய காளி தேவி தென் கிழக்கிலும் உள்ள ஒரு சிற்றூர். வடக்கில் ஓர் ஓடை இருக்கும். ஜாதகன் வேளாள குலத்தில் தன் தந்தைக்கு ஏழாம் பிறப்பாகப் பிறப்பான்.

3. இன்னவன் ஜனன யோகம் எழில்பெறுந் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வருந்துணை களத்திர யோகம்
தன்சுதர் முன்பின் ஜன்மஞ் சாற்றுவோ மிந்நூல் தன்னில்
அன்னையே யாங்கள் சொன்ன அருள்மொழி குன்றா வென்றோம்.

3. ஜாதகனுடைய பிறப்பு யோகங்கள், தந்தையின்யோகம், தாயின் யோகம், உடன்பிறந்தவர் களத்திரங்களின் யோகங்கள், பிறக்கும் குழந்தைகளின் யோகம், முற்பிறவி மறுபிறவி ஆகிய இவைகளை, இந்த நூலில் கூறுகின்றோம். தாயே ! நாங்கள் சொல்லியவை தவறா.

வேறு.

தந்தைதுணை நவமதனில் ஆண்பால் மூன்று
சாற்றுகின்றேந் தீர்க்கமதா யொன்ருய் வாழ்நது
பிந்தியவர் வேருவர் பின்பால் சேதி
புகலுகின்றேந் தந்தைகுணம் பேதை நெஞ்சம்
வந்தவருக் கன்னமீவன் மறுத்துக் கூறுன்
மாநிலங்கள் விருத்திசெய்வன் வறுமை காணுன்
நொந்தவரை யாதரிப்பன் கபடு மில்லான்
நீத்தோரை யுறவுகொள்வன் நிதமுஞ் சீலன்.

**4.** தந்தையின் உடன்பிறந்தவர்கள் ஒன்பதின்மரில் மூன்று சகோதர்கள் நீண்ட ஆயுளுடன் ஒரே குடும்பமாக வாழ்ந்து வந்த பிறகு, இவனுக்குப் பின் பிறந்தவர்கள் தனித்துச் செல்லுவார். மற்ற விபரங்களைப் பின்பாகத்தில் சொல்லுகின்றேம். தந்தையின் குணங்களாவன:— வெகுளியான மனம் படைத்தவன். தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்னமளிப்பான். மறுத்துக் கூறும் இயல்பில்லாதவன். நிலங்களைப் பெருக்குவான். தரித்திர மில்லாதவன். கஷ்டம் அடைந்தவர்களைக் காப்பான். கபடமில்லாதவன். துறவிகளுக்கு நண்பன். நல்லொழுக்க முடையவன்.

5. சீலமன மறத்திலிச்சை சனச காயன்
சனபந்து மதிக்க வுய்வன் தீரமில்லான்
காலத்தை யறிந்துரைப்பன் மாஞ்சி வப்பன்
கந்தன்மேல் பத்தியுளான் கடூர மில்லான்
வேல்விழிமார் மோகமுளன் விருந்தோர் நேயன்
வீண்வம்பு புகலாதான் சல்யங் கொள்ளான்
பால்பாக்யன் கூவல்செய்வன் புகழு மேற்பன்
பந்துவையா தரிப்பனெனப் பகர லாகும்.

**5.** நல்ல மனமுள்ளவன். தருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். ஜனங்களுக்கு உபகாரி. பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். தைரிய மில்லாதவன். காலத்தை யறிந்து சொல்லக்கூடியவன். சிவந்த நிறமுள்ளவன். முருகப்பிரான்மீது பக்தியுடையவன். கொடுமையில்லாதவன். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். விருந்தினர்களை உபசரிப்பான். வீண்வம்பு பேசாதவன். கடன் படாதவன். பால்பாக்கிய முள்ளவன். கிணறுகள் தோண்டுவிப்பான். கீர்த்தி அடைவான். சுற்றத்தாரை ஆதரிப்பான் என்று கூறுகின்றேம்.

6. ஆகாத வார்த்தைசொல்லான் இளம னத்தன்
அவன்கரத்தில் கமலவரி அன்புள் ளோனும்
ஏகுவான் தலவாசம் பித்தச் சூடு
இசையுமென்றேம் பலர்வசியம் இடர்நோய் தீர்ப்பன்
வேகநடை குணத்தானு மிந்தப் பாலன்
மேவுவா னிவன்குணத்தை விளம்பக் கேண்மோ
போகபாக் கியமுடையன் பொருந்தி யுரைப்பன்
புத்திமான் கல்வியுளன் பூமி விருத்தி.

6. ஆகாத வார்த்தைகளைக் கூறுதவன். இளகிய மனத்தன். அவனுடைய கையில் கமலரேகை இருக்கும். அன்புள்ள மனத்தினன். புண்ணிய தலங்களுக்குச் செல்லுவான். பித்தச் சூட்டுத் தேகமுள்ளவன். பலரை வசீகரிக்கும் தன்மையன். பலரது துன்பங்களையும் வியாதிகளையும் தீர்த்து வைப்பான். வேகமாக நடப்பவன். இக்குணங்களுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். போகபாக்கியங்களுள்ளவன். பொருத்தமாகப் பேசுபவன். புத்திமான். கல்வி யறிவுடையவன். பூமி விருத்தி யாகும்.

7. விருத்திசெய்வன் பிதுராஸ்தி மேலோர் நேயன்
மெல்லியர்கள் மோகமுளன் வீர னில்லம்
திருத்தமதா யமைத்திடுவன் தீர னெஞ்சம்
சகடுவா கனமுடையன் கிராமச் செட்டு
பொருத்தமதாய்ச் செய்திடுவன் பகழ்ந்தோர்க் கன்பன்
பிதுர்மேலாய் வாழ்ந்திடுவன் கோக்கள் விருத்தி
பெருத்தவரை யுறவுகொள்வன் அரச ரிட்டன்
புதிதான விலஞ்செய்வன் பந்து நேயன்.

7. பிதுரார்ஜிதமான சொத்துக்களைப் பெருக்குவான். பெரியவர்களுக்கு நண்பன். பெண்களின்மீது மையல் கொள்ளுவான். அவனுடைய வீட்டைச் செம்மையாகக் கட்டுவிப்பான். தைரிய மனத்தன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். கிராம வியாபாரம் பொருத்தமாகச் செய்வான். தோத்திரம் செய்தவர்களை ஆதரிப்பான். தன் தகப்பனுக்கு மேன்மையாக வாழ்ந்து வருவான். பசுக்கள் விருத்தியாகும். பெரியவர்களுடன் நட்புக்கொள்ளுவான். அரசருக்குப் பிரியமானவன். புதிய வீடு கட்டுவான். பந்துக்களுக்கு நண்பன்.

வேறு.

8. தன்துணை முன்னு ஞென்று சாற்றுவோங் கன்னி மூன்று
அன்னவர் தீர்க்க மெய்தும் ஆண்துணை நான்காஞ் ஜன்மம்
கன்னியே யவன்கு ணத்தைக் கழறுவோ மாஞ்சி வப்பன்
பன்னியே பேச வல்லன் பரவுப கார னுவன்.

8. ஜாதகனுக்கு முன்பிறந்த சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். நான்காவதாகப் பிறந்த சகோதரனின் குணத்தைச் சொல்லுகின்றோம். தாயே! சிவந்த மேனியுள்ளவன். பன்னிப் பன்னிப் பேசுபவன். பிறருக்கு உபகாரி.

9. மிதுனமுந் திருவோ ணத்தில் மேவுவான் சமமாங் கல்வி
ததிநெய்பா லிட்ட முண்டு சற்பாத்திரன் முருகர் பத்தி
துதிசெய்தோர்க் கன்ன மீவன் சொல்லது சுகமே யாகும்
பதியது சித்திரஞ் செய்வன் பால்பசு விருத்தி யுண்டு.

9. மிதுன லக்கினத்தில் சிரவண நட்சத்திரத்தில் பிறப்பான். சமமான கல்வியறி வுள்ளவன். நெய் தயிர் பால் இவைகளில் விருப்பமுள்ளவன். நல்லவன். முருகப்பிரான்மீது பக்தியுள்ளவன். தோத்திரம் செய்தவர் கட்கு அன்னமளிப்பான். இனிமையாய் பேசுபவன். அழகிய வீடு கட்டு வான். பசுக்கள் விருத்தியடையும்.

10. தன்னுடன் கூடி வாழ்வன் சகலபாக் கியமுஞ் சேர்ப்பன்
அன்னவன தனக்குப் பாரி அனுகிடு மொன்றே யாகக்
கன்னிகை வடபால் நேரும் காளையு மாண்பால் ரண்டு
மன்னிய பெண்பால் மூன்று வறைகின்றேந் தீர்க்க மாக.

10. அவன் ஜாதகனுடன் கூடியிருந்து வாழ்வான். எல்லா பாக்கியங் களையும் அடைவான். அவனுக்கு மனைவி ஒருத்தியே. அவளும் வடக்குத் திசையிலிருந்து வாய்ப்பாள். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் தோன்றுவார். அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள்.

11. பின்துணை பெண்பா லொன்று போசுவோந் தீர்க்க மாகக்
கன்னிமார் சேதி யாவும் கழறுவோ முத்திர பாகம்
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோ மீரே ழாண்டில்
தன்துணைப் புத்திரி தன்னை ஜாதகன் மணமே கொள்வன்.

11. ஜாதகனுக்குப் பின் பிறந்த சகோதரி ஒருத்தி தீர்க்காயுளுள்ளவள். அவளுடைய செய்திகள் யாவற்றையும் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய மணத்தின் காலத்தைக் கூறுகின்றோம். பதினான்காம் வயதில் தன்னுடன் பிறந்த சகோதரியின் பெண்ணை மணம் புரிவான்.

12. மாதுவின் குணத்தைச் சொல்வோ மாஞ்சிவப் புடைய ளாகுந்
தீதிலாக் குணத்தா ளாகுஞ் சொல்லது சுகமே யாகும்
பாதக மனமில் லாதாள் பதரினில் செல்லா ளாகும்
மேதினில் நல்லோ ளாவள் மெல்லிக்கு வயது தீர்க்கம்.

12. ஜாதகனுடைய மனைவியின் குணத்தைச் சொல்லுகின்றோம். மாநிறமுள்ளவள். தீமையில்லாத குணத்தினள். அழகாகப் பேசுபவள். கெட்ட மனமில்லாதவள். அற்ப காரியங்களில் செல்லாதவள். உலகில் நல்லவளாக இருப்பாள். நீண்ட ஆயுளுள்ளவள்.

### ஏழாம்பாவ கிரகநிலை

13. அத்திரி தடுத்துச் சொல்வார் அந்தண னேழோ னுகிக்
குற்றமா யாறில் தங்கக் [1] குருதியின் விரயம் புக்க
வித்தகன் தனக்குத் தாரம் விளம்புவோந் தாரம் ரண்டு
அத்திரி யிவ்வாறு சொல்ல அதைமறுத் தோது கின்றார்.

13. அத்திரி முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். குரு ஏழாம் வீட்டுக் குரியவனாக ஆறாமிடத்தில் (மறைவுஸ்தானம்) இருப்பதாலும், செவ்வாய் விரயஸ்தானத்தில் இருப்பதாலும், ஜாதகனுக்கு இரு மனைவியர் ஏற்படுவார். அத்திரி முனிவர் இங்ஙனம் கூறும்போது அதை மறுத்துச் சொல்லுகின்றார்.

1 செவ்வாய்.

14. குடும்பத்தோன் லாபம் நிற்கக் [1]கூரிய னிரண்டில் தங்க
அடைவுடன் தாரம் ஒன்றே அணுகிடும் பால னுக்கு
விடம்போல வேழில் காரி மேவின பலத்தி னாலே
கடல்விழி யபிமா னப்பெண் கலந்திடு மென்று சொல்வோம்.

14. இரண்டாம் வீட்டுக்குரிய சந்திரன் லாபஸ்தானத்தில் இருப்பதாலும், புதன் இரண்டாமிடத்தில் இருப்பதாலும், ஜாதகனுக்கு மனைவி ஒருத்தியே வாய்ப்பள். சனி ஏழாமிடத்தில் கொடுமையாக இருப்பதால் ஜாதகனுக்கு அபிமானஸ்திரீ யொருத்தி வாய்ப்பாள் என்று கூறுகின்றோம்.

15. அந்ததோர் மாது தானும் ஆறஞ்சு வாண்டில் நேரும்
விந்தையாய் வேறு வொன்று விளம்புவோந் தார மொன்றே
வந்திடு மாதுக் கேதான் மாங்கல்ய மிரண்டு நேரும்
எந்தக்கா லத்தில் சங்கை இயம்புவீர் விவரஞ் சொல்வோம்.

15. அந்தப்பெண் ஜாதகனுடைய முப்பதாம் வயதில் வருவாள். தவிர, வேறு ஒன்றும் கூறுகின்றோம். ஜாதகனுக்குத் தாரம் ஒருத்தியே. ஆனால் அப்பெண்ணுக்கு இரு மாங்கல்யங்கள் அணிவிக்க நேரிடும். எந்தக் காலத்தில் ஏற்படும் என்று கூறுங்கள்.

16. எண்ணஞ்சு மூன்று வாண்டில் எகிடுங் கள்ள ராலே
திண்ணமாய் வேறு முத்திரை செய்குவன் பாவைக் கேதான்
வண்ணமாய்ப் புத்திர பாவ மறைகின்றோ மினிமே லாக
அண்ணலைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

16. ஜாதகனுக்கு நாற்பத்துமூன்றும் வயதில் திருடரால் அபகரிக்கப்படும். தன் மனைவிக்கு வேறு திருமங்கல்யம் செய்து அணிவிப்பான். இனி புத்திர பாவத்தைப்பற்றிக் கூறுகின்றோம். சிவபெருமானைப் பூசை செய்யும் தேவியே ! கேளுங்கள்.

17. சுதர்களும் நவமே தோன்றுஞ் சோர்வுறுஞ் சிலவே யென்றோஞ்
சதமுட னுண்பால் மூன்று தையல ரிருவர் தீர்க்கம்
பதராகும் நான்கு தானும் பகர்ந்தது தப்பா தாகும்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

17. புத்திரர்கள்ஒன்பதுபேர் பிறப்பார்கள். சிலர் இறந்து விடுவார்கள். நிச்சயமாக மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் தீர்க்க முறுவர். நான்கு குழந்தைகள் இறந்துவிடும். நாங்கள் கூறியவை தவறா. வினயகனை ஆதரித்துவரும் தாயே ! கேளுங்கள்.

18. அன்னமா நிறத்த ளாகும் ஆளனுக் கினியளாகுந்
தன்சொலு மடக்க முண்டு சாந்தமு முடைய ளாகும்
பின்னமில் லாத தேகி பிறர்குற்றஞ் சொல்லா ளாகும்
அன்னமு மன்பா யீவள் அறமதி லிச்சை யுண்டு.

---

1 புதன்.

18. ஜாதகனுடைய தாய் மாநிறமுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். அடக்கமாகப் பேசுபவள். சாந்தமுள்ளவள். ஊனமில்லாத சரீரமுடையவள். பிறர்மீது குற்றம் கூறாதவள். அன்புடன் அன்னமளிப்பாள். தருமம் செய்வதில் பிரியமுள்ளவள்.

19. மங்கைக்குத் துணையா னொரு மாதுல மவ்வா றாகும்
அங்கவன் சேதி சொல்வோ மானையி நிறத்த னாகுந்
துங்கமா மனத்த னாகுந் துணைவிபா லணுகி வாழ்வன்
நங்கையர் மோக வானும் நயமுடன் வார்த்தை சொல்வன்.

19. தாய்க்கு உடன் பிறந்த சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் உண்டு. அவனுடைய செய்திகளைக் கூறுகின்றோம். யானையைப்போன்ற கரிய நிறமுள்ளவன். தூய்மையான மனமுள்ளவன். உடன் பிறந்தவளை அனுகி வாழ்ந்து வருவான். பெண்களமீது மோகமுள்ளவன். நயமாகப் பேசுபவன்.

20. இல்லமுங் காணா னாகும் இயம்புவோம் பாரி யொன்று
வல்லவன் துணைமுன் னோளை மருவுவான் சுதராண் ரண்டு
வில்நுதல் பெண்பால் மூன்று விளம்புவோந் தீர்க்க மாக
அல்லலில் லாம லொன்றாய் அனுகிப்பின் வேறாய்ச் செல்வர்.

20. சொந்தவீடு இல்லாதவன். மனைவி பொருத்தியே. தன்னுடைய மூத்த சகோதரியை அணுகி வாழ்வான். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் தோன்றித் தீர்க்கமாவார். துன்பங்களில்லாமல் ஒன்றாக வாழ்ந்து, பிறகு தனித்துச் சென்று விடுவார்கள்.

21. பாரிபால் ஜீவிப் பானும் பதரினில் செல்லா னாகுங்
கூறுவோம் பின்பால் சேதி கோதையின் பூர்வங் கேளாய்
வாரியி னோரந் தன்னில் மாதேவி நகரந் தன்னில்
ஆரியர் குலமு தித்து அதிதிகட் கன்ன மீந்து ;

21. மனைவியின் உதவியால் ஜீவித்து வருவான். அற்ப காரியங்களில் செல்லாதவன். மற்ற விஷயங்களைப் பின்பாகத்தில் கூறுகின்றோம். ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைக் கேளுங்கள். சமுத்திரக்கரையில் மாதேவி என்னும் ஊரில் அந்தண குலத்தில் பிறந்து ஏழைகளுக்கு அன்னமளித்து ;

22. சுதர்களு மதலை யுண்டாய்ச் சுகமுள குடும்பி யாகி
அதுஜன்மம் பவமில் லாமல் அந்தகன் நாட்டைச் சேர்ந்து
விதியவன் வரையப் பட்டு விளங்கினான் கங்கை சேயாய்ச்
சதியினில் திருவு முண்டாய்ப் பாவையும் வாழ்வா ளாமே.

22. புத்திரர்களைப் பெற்று, சுகமுள்ள குடும்பத்தை யடைந்து, அப்பிறவியில் தீச்செயல்களில்லாமல் மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப் பட்டு, வேளாள குலத்தவளாகப்பிறந்து, லக்ஷ்மீகடாட்சம் பெற்று வாழ்ந்து வருவாள்.

23. மங்கையின் ஜன்மஞ் சொல்வோ மலைநாட்டி லிக்கு லத்தில்
பொங்கிய குடும்பந் தன்னில் பிறப்பளா மென்று சொல்வோந்
தங்கமு மதிக முண்டாய்த் தரணியில் பெருமை யின்றி
நங்கையும் வாழ்வா ளாகும் நாயகி கேட்டி டாயே.

23. தாயின் மறுபிறவியைச் சொல்லுகிறோம். மலையாள நாட்டில் வளம்பெற்ற குடும்பமொன்றில் பிறப்பாள் என்று சொல்லுவோம். பொன் செல்வம் அதிகமடைந்து, உலகில் வறுமையின்றி வாழ்ந்துவருவாள். தாயே ! கேளுங்கள்.

24. தந்தையுன் ஜன்மந் தன்னைச் சாற்றுவோங் கொங்கு நாட்டில்
வந்தனன் வைசியச் சேயாய் வளமுள செட்டுச் செய்து
பிந்தினோர்க் கன்ன மீந்து பூமியில் பவமில் லாமல்
அந்தகன் நாட்டைச் சேர்ந்து அயனாலே வரையப் பட்டு ;

24. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கொங்கு நாட்டில், வைசிய குலத்தவனாகப் பிறந்து, செழிப்புள்ள வர்த்தகஞ் செய்து, ஏழைகளுக்கு அன்னமளித்து, உலகில் பாவச் செயல்களில்லாமல் மரணமடைந்து மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு ;

25. தொண்டைநா டதனி லேதான் ஜனித்தன னென்று சொல்
[வோம்
துண்டமாம் வார்த்தை யில்லான் தொல்புவி வறுமை காணன்
குண்டுணி கூறா னாகும் குலத்துளோர் தம்மைக் காப்பன்
உண்டியுங் கோவும் பொன்னும் அடிமையு முடைய னாமே.

25. தொண்டை நாட்டில் பிறந்தான் என்று கூறுவோம். கண்டித்துப் பேசாதவன். உலகில் தரித்திரமில்லாதவன். கோள் சொல்லாதவன். தன் பந்துஜனங்களைக் காப்பான். நல்ல சாப்பாடும், பசுக்களும், செல்வமும் பணியாட்களும் உடையவன் என்று கூறுகின்றோம்.

26. பின்ஜன்மங் காளத்தி தன்னில் பிறப்பனும் பிரம்ம சேயாய்
அன்னவ னிச்சென் மத்தில் அடைந்தபுண் ணியங்க ளென்ன
தன்பந்து வாத ரித்துந் தருமமாங் குணத் தனாயும்
அன்னியர்க் குதவி செய்தும் ஆபத்தைக் காத்த லாலும் ;

26. மறுபிறவி திருக்காளத்தியில், அந்தண குலத்தவனாகப் பிறப்பான். அவன் இப்பிறவியில் செய்த நற்காரியங்க ளென்ன ? தன் பந்துக்களை ஆதரித்து வந்ததாலும், தருமம் செய்யும் குணமுள்ளவனாய்ப் பிறருக்கு உபகாரம் செய்து வந்ததாலும், ஆபத்தை அடைந்தவர்கட்கு உதவி செய்ததாலும் ;

27. மனமது கவடு மின்றி யறுமுகன் பத்தி யாயுங்
கனமுள தலங்கள் சென்றுங் காவலன் வாழ்வ தாலே
வினையிலாப் பிரம்ம சேயாய் மேவுவா னிந்தப் பாலன்
சினமிலாத் தவங்கள் செய்யுஞ் செல்வதி கேட்டி டாயே.

27. மனத்தில் கபட மில்லாமல் வாழ்ந்து, சுப்பிரமணியக்கடவுள்மீது பக்தி யுடையவனாகி, புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று, வாழ்ந்து வருவதால் தீமையில்லாத அந்தண குலத்தவனாகப் பிறப்பான் என்று கூறினோம். தவங்களை இயற்றும் செல்வியே! கேளுங்கள்.

28. உதித்தவனை பூர்வந் தன்னை யுரைக்கின்றேஞ் சேர நாட்டில்
முதற்குலந் தனிலு தித்து மேதினி விருத்தி செய்து
அதிபதி மதலை யுண்டாய் மறலி யின் பதிக்குச் சென்று
விதியவன் வரையப் பட்டு விளங்கினா னிவனே யென்றோம்.

28. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சேர நாட்டில் அந்தண குலத்தில் பிறந்து, விளை நிலங்களைப் பெருக்கி, குழந்தைகளைப் பெற்று, மரண மடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்த வன் இந்த ஜாதகன் என்றோம்.

29. அத்திரி புகலு கின்றார் அவனுமே முன்ஜன் மத்தில்
முந்தின குலமு தித்தோன் மேவுமிச் சென்மந் தன்னில்
குத்தமாங் குலந்தாழ் வாகக் குலவுங்கா ரணங்க ளெவ்வாறு
சுத்தமாய்ச் சொல்லு பெண்ண சுதனுமே முன்ஜன் மத்தில்;

29. அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகன் முற்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்து, இப்பிறவியில் தாழ்வான குலத்தில் பிறந்த காரணங்கள் என்னவென்று நிச்சயமாகச் சொல்லுங்கள். ஜாதகன் முற்பிறவியில்;

### தாழ்குலப் பிறப்புக்குக் காரணம்

30. மறைகளை விரும்பா தாலே மருவினன் கங்கை சேயாய்த்
திருமகன் யோகச் சேதி செப்புவோ மினிமே லாகப்
பிறையது போல யோகம் பேசுவோம் வேசி யோகம்
தரையது விருத்தி செய்வன் சதுஷ்பாதம் சகடு மேற்பன்.

30. வேதத்தை விரும்பிப் படிக்காதால் வேளாளகுலத்தில் பிறந்தான். ஜாதகனுடைய யோகச் செய்தியை இனிக் கூறுகின்றோம். வளர்பிறைச் சந்திரன் போல் யோக முண்டாகும். வேசி யோகம் ஏற்படும். தாணிகளைப் பெருக்குவான். கால்நடைகளை விருத்தி செய்வான்; வண்டி வாகன முள்ளவன்.

31. சித்திர வில்லஞ் செய்வன் சதுராண்டின் மேல தாக
எத்திசை யெந்தி டத்தில் எய்திடு மில்லந் தானும்
வித்தக னுதித்த வில்லம் விளம்பினேஞ் சித்திரஞ் செய்வன்
வெற்றியாய் மாம னில்லம் விளம்புவோ மிவனுக் கேதான்.

31. நான்கு வயதுக்குமேல் அழகிய வீடு கிட்டும். எந்தவிடத்தில் வீடு கிடைக்கும்? ஜாதகன் பிறந்த வீட்டை அழகு படுத்துவான். மாமனுடைய வீடு ஒன்றும் கிடைக்கும்.

32. இதுவன்றித் தந்தை முன்னோன் இவனுடை யாஸ்தி தானும்
அதிபனு மடைவா னுகும் மறுத்துமே பராசர் சொல்வார்
அதற்குச்சல் லியங்கள் தாமும் அதிகமா யிருப்ப தாலே
எதுவிதம் நேருஞ் சொல்வீர் இயம்புவோம் பின்பால் சேதி.

32. இதுவல்லாமல் தந்தைக்கு முன் பிறந்த சகோதரனின் ஆஸ்தி களையும் ஜாதகன் பெறுவான். பராசர முனிவர் மறுத்துக் கூறுகின்றார். அவனுக்குக் கடன்கள் அதிகமாக இருப்பதால் எப்படி இவனுக்குக் கிடைக்கும் ? என்று சொல்லுங்கள். பிற்பாகத்தில் சொல்லுகின்றோம்.

33. தந்தைமேல் வாழ்வா னுகுந் தனமது பெருக்கஞ் செய்வன்
முந்தின துணைவன் வேறு மேவுவான் நாற்பான் மூன்றில்
இங்கவன் தேடுஞ் செம்பொன் இருபதா யிரமென் றோது
விந்தையாய் மூன்று ஊரில் மேவிடும் பூமி தானே.

33. தந்தைக்கு மேன்மையாக வாழ்ந்து வருவான். செல்வத்தைப் பெருக்குவான். ஜாதகனுடைய மூத்த சகோதரன் நாற்பத்து மூன்றும் வயதில் தனியாகச் செல்லுவான். ஜாதகன் தேடும் செல்வம் இருப தாயிரம் பொன் என்று கூறுகின்றோம். மூன்று ஊர்களில் நிலங்கள் சேரும்.

34. இருபது வாறு வாண்டில் இடபாமா தத்தி லேதான்
வருங்கண்டந் தந்தைக் கென்றே மாறஞ்சு வாண்டு தன்னில்
பெருகிய மகர மாதம் பேசுவோ மன்னைக் கேதான்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

34. ஜாதகனுடைய இருபத்தாறும் வயதில் வைகாசி மாதத்தில் தந்தைக்குக் கண்டம் ஏற்படும். அவனுடைய முப்பதாம் வயதில் தை மாதத்தில் தாய் மரண மடைவாள் என்று கூறுவோம். வேதங்களின் முடிவில் கூறப்படும் தேவியே ! கேளுங்கள்.

35. பாலகன் தனக்குக் கண்டம் பகருவோ மெழுபான் ரண்டில்
சாலகார்த் திகைமா தத்தில் தன்னுடல் நீங்கு மென்றோம்
ஏலவே யத்திரி சொல்வார் இவனுக்கு ஆறு மாண்டுள்
கோலமாய்ச் சகடை கண்டங் குலவிடு மென்று சொல்வோம்.

35. ஜாதகனுக்கு எழுபத்திரண்டாம் வயதில் கார்த்திகை மாதத்தில் மரணம் ஏற்படும். அத்திரிமுனிவர் உரைக்கின்றார். ஜாதகனுடைய ஆறும் வயதுக்குள் சகடையால் கண்டம் நேரும் என்று சொல்லுகின்றோம்.

### எட்டாம்பாவ கிரகநிலை

36. புகருமே ஜன்மந் தங்கப் புதனுமே யிரண்டி லேறப்
பகையது வனந்தம் நேர்ந்தும் பரிதிமுன் பனிபோல் நீங்கும்
தகைமையாய் வயது தீர்க்கம் ஜாதகன் பின்ஜன் மங்கேள்
சகமதி லுய்வ தான தில்லையில் பிரம்ம சேயாய் ;

**36.** சுக்கிரன் ஜன்மலக்கினமாகிய மிதுனத்தில் தங்கி, புதன் இரண்டா மிடத்தில் இருப்பதால், பலவிதமான நோய்கள் ஏற்பட்டாலும் அவை சூரியன்முன் பனிபோல் நீங்கிவிடும். வயது தீர்க்கமாகும். ஜாதகனுடைய மறுபிறவியைக் கேளுங்கள். உலகத்தில் உயர்வான சிதம்பரத்தில், அந்தண குலத்தவனாக ;

**37.** உதிப்பனு மென்று சொல்வோ முதிக்குங்கா லத்தைக் கேளாய்க்
[1] குதிரைநாள் நாலாம் பாதங் கூறுவோஞ் [2]சிகியி ருப்புச்
சதமுடன் திங்க ளெட்டுஞ் சாற்றுவோம் பலனை யாங்கள்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

**37.** பிறப்பான் என்று சொல்லுவோம். ஜாதகன் அசுவதி நட்சத்திரம் நாலாம் பாதத்தில் பிறப்பான். அப்போது கேதுமகாதசையில் இருப்பு எட்டு மாதங்கள். மற்ற பலன்களைக் கூறுகின்றோம். ஏழைகளைக் காக்கும் தேவியே ! கேளுங்கள்.

---

[1] அசுவதி [2] கேது.

# ஜாதகம் 38

1. கலைசாடி சேய்ராகு மீன மாகக்
கதிர்புதன்பொன் நந்தியினில் கவியு மேடம்
அலரிமகன் கேதுகன்னி மிதுனஞ் ஜன்மம்
அதுபலன்கள் தான்புகல்வீ ரத்ரி சொல்வார்
நிலமதனி லிச்சென்மம் பெண்பா லாகும்
நிகழ்த்துவோ மில்லாமது கீழ்மேல் வீதி
தலைவாசல் வடபாலாந் தந்தி மேற்கில்
சக்கரத்தோன் வடமேல்பால் சாரு மென்றேம்.

1. சந்திரன் கும்பத்திலும், செவ்வாய் ராகு மீனத்திலும், சூரியன் புதன் குரு விருஷபத்திலும், சுக்கிரன் மேஷத்திலும், சனி கேது கன்னியிலும் இருந்து, ஜன்மம் மிதுனமாக இருந்தால், பலனைக்கூறுங்கள், என்று பார்வதி வினவ, அத்திரிமுனிவர் சொல்லுகின்றார். உலகில் இந்த ஜாகதம் பெண்ணுடையது. அவள் பிறந்தவீடு கிழக்கு மேற்கான வீதியில் வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. விநாயகர் ஆலயம் மேற்குத் திசையிலும், வடமேற்கில் சக்கரத்தை ஆயுதமாகவுடைய திருமாலின் கோயிலும் உள்ளன என்று கூறுகின்றேம்.

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் ராகு | சுக்கிரன் | சூரியன் புதன் குரு | லக்கினம் |
| சந்திரன் | இராசி சக்கரம் | | |
| | | | |
| | | | சனி கேது |

2. சாருமென்றே முத்திரத்தில் காளி வாசம்
சங்கரனு மருகில்தங்குஞ் சமவூர் தன்னில்
கூறுவோம் வடுகர்குலம் நான்காஞ் ஜன்மங்
குறிக்கின்றே மன்னைதந்தை துணைவர் யோகங்
காரிழையின் வரன்யோக முன்பின் ஜன்மங்
கழறுவோந் தந்தைதுணை யாண்பால் ரண்டு
பாரினிலே தீர்க்கமுறுங் கன்னி நான்கு
புகருவோ மாண்துணையின் சேதி கேளாய்.

2. வடக்கில் காளி கோயிலும், பக்கத்தில் சிவபெருமான் ஆலயமும் உள்ள சமநிலையான ஓர் ஊரில், வன்னியர் குலத்தில், தன் தந்தைக்கு நான்காம் பிறவியாகப் பிறப்பாள் என்று உரைக்கின்றேம். இவளுடைய தாய் தந்தையர் உடன் பிறந்தவர் இவர்களின் யோகத்தையும், ஜாதகியின்

1. சுக்கிரன். 2. சனி

கணவனின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் சொல்லு கின்றோம். தந்தையின் உடன்பிறந்தவர்களில் சகோதரர்களிருவரும் நான்கு சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். சகோதரனின் செய்தி யைக் கேளுங்கள்.

3. சேதியது வொருவனுமே சமரின் பேரில்
சென்றுள்ளூர் தான்வருவன் தனமுங் கொண்டு
தீதாகும் பொருள்களுமே தந்தை யாலே
செல்லுவான் மறுபடியும் பின்பு சேர்ந்து
பாரினில் விரதமுற்று வேறாய்ச் செல்வன்
பதியுண்டாய்க் கிருஷி செட்டு பண்ணு வானும்
வேதனையில் லாமனத்தன் உலைச்சல் தேகி
மெல்லியொன்று சதமுண்டு வயதுந் தீர்க்கம்.

3. ஒருவன் போருக்குச் சென்று செல்வத்துடன் திரும்பி வருவான். ஜாதகியின் தந்தையால் பொருள்கள் நஷ்டமாம். சகோதரன் வேறாகச் சென்று விடுவான்., மறுபடியும் ஒன்று சேர்ந்து உலகில் நோன்புகள் இயற்றி, தனியாகச் சென்று விடுவான். வீடு கட்டி விவசாயம் செய்து வந்து வர்த்தகமும் செய்துவருவான். துன்பங்களில்லாத மனத்தினன். மெல்லிய தேக முள்ளவன். மனைவி யொருத்தியே யாவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

4. அதன்பின்னோன் துணைவிபக்கல் தென்மேல் திக்கில்
அடைகுவான் தந்தைபொருளடையா னுகும்
நிதிபெருகும் பலவணிபம் நிமலன் செய்வான்
நேரிழையு மதலையுண்டாய் நேமி விருத்தி
அதிபனுமே சிவந்தமெய்யன் வாக்குத் தத்து
மால்பத்தி யுடையவனும் வறுமை காணுன்
துதிசெய்தோர்க் குதவிடுவன் துணைசொல் தட்டான்
சுகமுடனே வாழ்வனென்று செப்பி னோமே.

4. ஜாதகியுடைய தந்தைக்குப் பின்பிறந்தவன் தன் சகோதரியுடன் தென்மேற்குத் திசையில் உள்ள ஊரில் வாழ்ந்து வருவான். தன் தந்தை யினுடைய ஆஸ்தியை அடையாதவன். செல்வங்கள் பெருகும். பலவித வியாபாரம் செய்து வருவான். மனைவி மக்களைப் பெற்று, பூமிகளை அடைந்து வாழ்வான். சிவந்த மேனியன். குளறுவாயுடைவன். திரு மாலின்மீது பக்தி கொள்ளுவான். தரித்திர மில்லாதவன். புகழ்ந்தவர் கட்கு உபகாரம் செய்வான். தன் உடன்பிறந்தவள் வார்த்தையைத் தட்டா தவன். சுகமாக வாழ்ந்து வருவான் என்று கூறுகின்றோம்.

5. செப்புவோந் தந்தைதகுணஞ் சிவந்த மேனி
செட்டுப்பல வாய்ச்செய்வன் தேவி நேயன்
ஒப்பான வார்த்தைசொல்வன் மர்ம னுவன்
ஓடுவான் [1] சோங்கின்மேல் உயர்வோர் நேயன்

1. கப்பல்

தப்பிதமாந் தந்தைபொரு ளாஸ்தி காணுன்
தரணியற்ப [1] முவரிசெல்வன் சகாயஞ் செய்வன்
மெய்ப்பொருளைத் தியானிப்பன் வித்தை யுள்ளான்
வீண்பழியுந் துணைவரா லேற்பா னாகும்.

5. ஜாதகியின் தந்தையினுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சிவந்த உடலுள்ளவன். பலமான வியாபாரம் செய்து வருவான். மனைவிக்குப் பிரிய மானவன். பிறர் ஒப்புக்கொள்ளும்படியான பேச்சுக்களைப் பேசுபவன். மனத்தில் வர்மமுள்ளவன். கப்பல்மீது செல்லுவான். பெரியோர்களுக்கு நண்பன். தந்தையின் ஆஸ்தி, பொருள் இவைகளில்லாதவன். சிறு பூமியே உள்ளவன். கடல் தாண்டிப் பொருளீட்டுவான். சகாயம் செய்பவன். கடவுளைத் தியானம் செய்வான். கல்வி யறிவுள்ளவன். தன் உடன் பிறந்தவ ரால் அவமானம் அடைவான்.

6. இல்லமது செய்திடுவன் நிவிர்த்தி செய்வன்
எய்தாது தந்தைநகர் ஏந்தி ழைபால்
புல்குவோ மாதியினில் வறுமை யுள்ளான்
பொருள்சேர்ப்பன் விரயமுறும் பூச நாளில்
பொல்லாத சிங்கமதி லுதிப்பா னாகும்
புறஞ்சொல்வன் இளமனத்தன் பூவை மோகன்
வல்லவனும் பின்வயதில் சுகமே யெய்தும்
அடைந்தோரை யாதரிப்பன் வாக்குத் தப்பான்
மல்லில்செலான் [2] கூபஞ்செய்வன் மடிவு நேரு
மறைந்ததோர் குணத்தானுக் கிந்தப் பாவை ;

6. வீடு கட்டுவான். பழைய வீட்டைப் புதுப்பிப்பான். தந்தையின் ஊரில் இருக்க மாட்டான். தன் மனைவியின் ஊரில் அவளுடைய வீட்டில் வசித்து வருவான். ஆதிகாலத்தில் வறுமையுள்ளவன். பொருளைச் சேர்ப் பான். அது விரயமாகும். அவன் பூச நட்சத்திரம ஸிம்ம லக்கினத்தில் பிறப்பான். கோள் சொல்லுவான். இளகிய மனத்தினன். பெண்கள் மோகன். பிற்காலத்தில் சுகமடைவான். தன்னை வந்தடைந்தவர்களை ஆதரிப்பான். சொன்ன வாக்குகள் தவறாதவன். வீண் சண்டைக்குச் செல் லாதவன். கிணறு தோண்டுவிப்பான். குறைகள் நேரும். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு இந்த ஜாதகி ;

7. உதித்திடுவள் மாஞ்சிவப்பள் உண்மை தேர்வள்
உறுதியுண்டு பாட்டாளி உவமை வார்த்தை
பதியைவிட் டகலாளாம் பாவை தானும்
பாரினிலே வறுமையிலாள் பாக்கிய சாலி
நிதஞ்சீலி முன்துணைபெண் ஒன்று தீர்க்கம
நிமலிக்குத் தென்மேல்பால் வரனும் நேரும்
சுதராண்பால் ரண்டேயாங் கோதை மூன்று
செப்புவோந் தீர்க்கமதாய்ச் சிறப்பாய் வாழுவள்.

---

1. உப்பு நீரையுடைய கடல்   2. கிணறு.

7. பிறப்பாள். மாநிறமுள்ளவள். உண்மை பேசுபவள். பேச்சில் திடமுள்ளவள். உழைப்பாளி. உபமானத்துடன் பேசுபவள். வீட்டை விட்டு அகலாதவள். இப் பெண்ணும் உலகில் வறுமை யில்லாதவள். பாக்கிய முள்ளவள். நல்லொழுக்க முள்ளவள். இவளுக்கு முன் பிறந்த சகோதரி யொருத்தி நீண்ட ஆயுளுள்ளவள். ஜாதகிக்குத் தென்மேற்குத் திசையி லிருந்து கணவன் வருவான். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் பிறந்து, நீண்ட ஆயுளுடன் சிறப்பாக வாழ்ந்து வருவாள்.

8. காதலியின் நான்குதுணை தோன்று மென்றேங்
காணது விரண்டென்றேங் கன்னி தீர்க்கம்
ஒதுவோங் கடையவனு மாண்பா லாகும்
உரைக்கின்றே மவன்குணத்தைச் சிவந்த மேனி
போதனமுஞ் சேர்த்திடுவன் கல்வி ரண்டு
புவிராசர் பேட்டிமிகும் புலவ னவன்
தீதுசெய்யான் யாவர்க்குந் தீர நெஞ்சன்
சனபந்து மதிக்கவுய்வன் தேவி யொன்றே.

8. ஜாதகிக்குப் பிறகு நான்கு உடன்பிறந்தவர்கள் தோன்றுவர். அவர் களில் இருவர் நிலையார். ஒரு பெண் தீர்க்கமாயிருப்பாள். கடைசியில் ஒரு சகோதரன் தோன்றுவான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். சிவந்த உடலுள்ளவன். மிகுதியாகச் செல்வங்கள் சேர்ப்பான். இருவிதக் கல்வி கற்பான். அரசர் பேட்டி கொள்ளுவான். புலவனுக இருப்பான். பிறருக்குத் தீங்குகள் செய்யாதவன். தைரிய மனத்தன். உறவினர்கள் மதிக்கும்படி வாழ்ந்து வருவான். மனைவி ஒருத்தியே.

9. சுதராண்பா லிரண்டேயாங் கன்னி மூன்று
செப்புகின்றேம் பாலனுக்கு வயது தீர்க்கம்
விதமான செட்டுச்செய்வன் பூமி சேர்ப்பன்
மேன்மக்க ளுறவுகொள்வன் வாத தேகி
அதிதியின் மணஞ்சொல்வோம் பதினே ழாண்டுள்
மாரனுமே கீழ்ப்பாலில் தந்தை வர்க்கம்
அதிபதியாய்த் தான்வருவோன் குணத்தைச் சொல்வோம்
ஆணழக னிருசிவப்பன் அறிவோர் நேயன்.

9. இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் பிறப்பார்கள். அவனுக்கு நீண்ட வயது உண்டு. பலவித வர்த்தகம் செய்து வருவான். பூமியைப் பெருக்குவான். மேன்மக்கள் உறவு கொள்ளுவான். வாத சரீரமுள்ள வன். ஜாதகியுடைய மணக்காலத்தைச் சொல்லுகின்றேம். அவளுடைய பதினேழாம் வயதுக்குள் கணவன் தன் தந்தையினுடைய வர்க்கத்தி லிருந்து வருவான். அவனுடைய குணத்தைச் சொல்லுவோம். அழகுள் ளவன். கருநிற முள்ளவன். அறிவுள்ளவர்களுக்கு நண்பன்.

10. முகவடிவன் தந்தையில்ல முடக்க மாவன்
மொழிகுளறு முயரமிலான் மூலச் சூடன்
மகரமெனும் ராசியது [1] தீயின் நாளாம்
மருவுவா னாதியினில் வறுமை காணன்
இகபரனின் பத்திமிகும் வணிபஞ் செய்வன்
இன்பச்சொலன் இடர்செய்யா னிரக்க நெஞ்சன்
சகமதிப்புக் கொண்டிடவே வாழ்வா னாதஞ்
சித்திரங்கள் செலவுண்டு வுத்ரஞ் சொல்வோம்.

10. அழகான முகமுள்ளவன். தன் தந்தையின் வீட்டில் வசிப்பவன். உயரமில்லாதவன். குளறு வார்த்தையுடையவன். மூலச்சூடுடையவன். மகர லக்கினத்தில், கார்த்திகை நட்சத்திரத்தில் பிறப்பான். ஆதியில் தரித்திரம் இல்லாதவன். சிவபெருமான்மீது பக்தியுள்ளவன். வர்த்தகம் செய்து வருவான். இனிய வார்த்தைகளையே பேசுபவன். துன்பங்கள் இழைக்காதவன். இரக்கமுள்ள மனத்தினன். உலகத்தில் கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். துன்பங்கள் உண்டு. அதைப் பிற்பாகத்தில் கூறுகின்றோம்.

11. சொல்லுகின்றேஞ் சுதரேழு தோன்றுந் தாயே
தோகைரண்டு ஆணிரண்டு தீர்க்க மெய்தும்
அல்லலுண்டு மூன்றென்றே மன்னே சேதி
அறிவிப்போ மினிமேலாய் அம்மை யேகேள்
நல்லகுணஞ் சிவந்தமெய் யுளைச்சல் தேகி
நாயகன்தன் மனம்போல வாழ்வா ளாகும்
வல்லிக்குத் துணையாண்பால் ஒன்றே யாகும்
வனவாசங் குடதிசையில் மருவு வானும்.

11. ஜாதகிக்கு ஏழு குழந்தைகள் தோன்றுவர். தாயே! இரு புத்திரிகளும் இரு புத்திரர்களும் தீர்க்கமாயிருப்பார்கள். மூன்று குழந்தைகட்குத் தீது உண்டு. தாயின் செய்திகளைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள். நல்ல குணமுள்ளவள். சிவந்த மேனியள். மெல்லிய தேகமுடையவள். தன் கணவன் மனம்போல் வாழ்ந்து வருவாள். அவளுக்குச் சகோதரன் ஒருவனேயாம். அவனும் மேற்குத் திக்கில் வனவாசம்போல் செல்லுவான்.

12. மருவுவான் பொருள்சேர்ப்பன் செலவும் நேரும்
மன்னரிட்டஞ் சுதராண்பால் ரண்டே யாகும்
அரிவையுமே யவ்வாறு யறைப லாகும்
அவன்தந்தை யாஸ்தியதை யடையா னாகும்
உரைக்கின்றோம் பின்பாலில் விபரம் யாவும்
உரைக்கின்றே மன்னையின்தன் பூர்வங் கேளாய்
அரிவையுமே வாங்குகின்ற நகர முத்தரம்
அனுகினள் சிறுவூரில் வன்னிய சேயாய்;

[1] கார்த்திகை.

12. சென்று பொருள் சேர்ப்பாள். செல்வம் கொஞ்சம் உண்டு. அரச ருக்குப் பிரியமானவன். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் உண்டாவர் என்று கூறுகின்றோம். அவன் தன் தந்தையின் ஆஸ்திகளை அடையாதவன். பிற்பாகத்தில் விபரங்கள் எல்லாவற்றையும் கூறுகின்றோம். தாயின் முற் பிறவியைக் கேளுங்கள். அவள் வாழ்ந்து வரும் ஊருக்கு வடக்கில் உள்ள ஒரு சிற்றூரில் வன்னிய குலத்தில் ;

வேறு

பெண்பழி

13. மங்கையு முதித்து மாரனுந் தலையாய்
வாழ்நாளில் வினையதைப புகல்வோங்
சங்கையாய் வேறு மாதுமேல் நிந்தை
சாற்றினு ளம்மாது தயங்கிப்
பங்கமாய் வார்த்தை புகன்றிட்ட மாதே
பருகிய பின்ஜன்மந் தன்னில்
நங்கைமார் துணைக ளின்றியே சுதர்கள்
நசித்திடும் பாதியே யென்றாள்.

13. பிறந்து கணவனுடன் வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினை யைச் சொல்லுகின்றோம். வேறு ஒரு பெண்மீது அடாத பழிச்சொற் களைக் கூறினாள். அப் பெண்ணும் தயங்கி, நிந்தையாக என்மீது பழி சொன்ன பெண்ணே ! நீ பிறக்கும் மறுபிறவியில் உடன் பிறந்த சகோதரிக ளில்லாமல் பாதி புத்திரர்களும் இறந்து விடுவார்கள் என்று கூறினாள்.

14. அன்னையில் பாழா யனுகிடு மென்றாள்
அடைந்தது அவ்வினை தானே
கன்னியந் தியததில் காதலன் மாண்டு
காலன்தன் பதிக்குமே சென்று
பொன்னவன் வரையப் பிறந்தன ளென்றோம்
பூவைமுன் சாபம்போல் காணும்
பின்ஜன்மம் புதுவை கங்கையின் குலத்தில்
பிறப்பளா மென்றுமே புகல்வோம்.

14. தாயின் வீடு பாழாகிவிடும் என்றும் சொன்னாள். அந்தச் சாபம் வந்தடைந்தது. அவளும் தன் கடைசீக் காலத்தில் கணவனை இழந்து, மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்று கூறினோம். பெண்ணின் சாபத்தைப் போலவே நடக்கும். மறுபிறவி புதுவைமா நகரில் வேளாளமரபில் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

வேறு

15. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோ மதுரை மேல்பால்
விந்தையாய்ச் சிறுவூர் தன்னில் விளங்கினன் மறவர் வம்சந்
தன்தன மதிக முண்டாய்ச் சான்றோர்கள் பத்தி யாயும்
முந்துமால் தொண்டு பூண்டு மேவினன் கால னூடு.

15. ஜாதகியினுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். மதுரைக்கு மேற்கில் உள்ள சிற்றூரில் மறவர் குலத்தில் பிறந்தான். தன்ஞல் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிகமாக ஏற்பட்டு, பெரியோர்களிடம் பக்தியுடன் திருமாலுக்குத் தொண்டுகள் பல செய்தும் வாழ்ந்து இறந்தான்.

16. தலைநான்கோன் வரையப் பட்டுச் சனித்தன னென்று சொல்வோம்
நிலைமையா யிவன்பின் ஜன்மம் நிகழ்த்துவோம் வள்ளூர் [தன்னில்
குல்வுவான் பிரம சேயாய்க் குறுமுனி தடுத்துச் சொல்வார்
தலைவனு மிச்சென் மத்தில் தன்துணை மோசஞ் செய்தும் ;

16. மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று கூறுகின்றேம். இவனுடைய மறுபிறப்பைச் சொல்லுகின்றேம். திருவள்ளூரில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான். அகத்திய முனிவர் மறுத்துச் சொல்லுகின்ருர். ஜாதகியின் தந்தை இப் பிறவியில் தன் உடன் பிறந்தவர்களை மோசம் செய்து ;

### உயர்குலப் பிறவிக் காரணம்

17. சொல்லது தவறுத லாலுஞ் சுருதியின் குலமெவ் வாறு
புல்குவான் விவரஞ் சொல்வீர் பிறருப காரி யாயும்
அல்லலென் றேரைக் காத்தும் அரிபத்தி மனத்தில் கொண்டும்
வல்லவன் வாழு நாளில் வருகுவான் பிரம சேயாய்.

17. தான் சொல்லும் வார்த்தைகள் தவறுவதாலும், வேதங்கள் ஓதும் அந்தண குலம் எப்படி ஏற்படும் என்று கூறுங்கள். பிறருக்கு உபகாரியாயும், துன்பம் அடைந்தவர்களைக் காப்பாற்றியும், திருமாலின்மீது பக்தி கொண்டும் வாழ்ந்து வந்ததால், அந்தண குலத்தில் பிறந்தான்.

18. ஜாதகி பூர்வஞ் சொல்வோந் தாமிர வருணி தன்னில்
காதலி யிக்கு லத்தில் கலந்துமே வறுமை யின்றித்
தீதென்றேர்க் குதவி செய்து சுதர்களு மதிக முண்டாய்ப்
பாதகக் கால னூடு பரவியே பிரமன் லக்கம் ;

18. ஜாதகியின் முற்பிறவியைக் கூறுகின்றேம். தாமிரபரணிக்கு அருகில் இதே குலத்தில் பிறந்து, தரித்திரம் இல்லாமல் துன்பமடைந்தவர்கட்கு உதவியளித்து, புத்திரர்களை மிகுதியாகப் பெற்று, தீதான எமபுரம் அடைந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு ;

19. வருகுவா ளாருறு வொன்று வாண்டது தன்னி லேதான்
திருமக ளன்னை கண்டஞ் செப்புவோ முப்பா ஊைந்தில்
பெறுந்தந்தை கண்ட மெய்தும் பேசுவோ மன்பான் மூன்றில்
வரனுமே மார கங்கள் மருவிடு மென்று சொல்வோம்.

19. பிறப்பாள். ஜாதகியின் முப்பத்தேழாம் வயதில் தாயினுடைய மரணம் ஏற்படும். முப்பத்தைந்தாம் வயதில் தந்தை இறந்து விடுவான். ஐம்பத்துமூன்றும் வயதில் கணவன் மரணமடைவான் என்று சொல்லு வோம்.

20. அன்பது வொன்ப தாண்டில் அழகிய சாடி மாதம்
இன்னவ ளுடல மேகும் இயம்புவோ மிவள்பின் ஜன்மந்
தென்திசைக் கடையூர் தன்னில் ஜனிப்பளாங் கங்கை சேயாய்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

20. ஜாதகி தன் ஐம்பத்தொன்பதாம் வயதில் மாசி மாதத்தில் இறந்து விடுவாள். இவளுடைய மறுபிறவி தெற்குத் திசையில் திருக்கடையூரில் வேளாள குலத்தில் ஏற்படும். உயர்ந்த கணவனையடைந்த உத்தமியே! கேளுங்கள்.

21. அன்னவள் ஜனன காலம் அவிட்டநாள் கடைப்பா தத்தில்
மன்னுசேய்த் தசையி ருப்பு வரைகின்றோம் பதினோர் திங்கள்
கன்னிக்குப் பிணியு மாகுங் கனதனஞ் செலவு முண்டு
தன்னினஞ் சூத முண்டு சாற்றினோம் பூர்வ பாகம்.

21. ஜாதகியின் ஜனன காலத்தில் அவிட்ட நட்சத்திரம் கடைசீபாதம். அங்காரகமகாதசை இருப்பு பதினோரு மாதங்கள். அக் காலத்தில் ஜாதகிக்கு நோய் ஏற்படும். செலவுகள் அதிகமாக ஆகும். தன் பந்துக் களுக்கு அசுபம் நேரிடும். இதுவரை முதல் பாகம் சொன்னோம்.

## ஜாதகம் 39.

1. மிதுனமுஞ் ஜன்ம மாக வெண்மதி யதிலே தங்கப்
புதன்புகர் பானு கன்னி பூமகன் காரி கோலாம்
நிதிகுரு கேது சாடி நீள்பணி சீய மாக
அதுபலன் புகலு மென்ன அத்திரி புகலு கின்றார்.

1. மிதுனம் ஜன்ம லக்கினமாகவும், சந்திரன் மிதுனத்திலும், புதன் சுக்கிரன் சூரியன் கன்னியிலும், செவ்வாய் சனி துலாத்திலும், குரு கேது கும்பத்திலும், ராகு சிம்மத்திலும் இருந்தால், அதனுடைய பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்க, அத்திரி முனிவர் கூறுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் சந்திரன் |
| குரு கேது | இராசி சக்கரம் | | |
| | | | ராகு |
| | | செவ்வாய் சனி | புதன் சுக்கிரன் சூரியன் |

2. இந்தசேய் ஆணாஞ் ஜன்மம் இல்லமுங் கீழ்ப்பால் நோக்கந்
தென்வட வீதி யாகுந் தந்தியுந் தென்பால் தங்கும்
அந்தரி காளி நீலி அணுகிடு மதற்குக் கீழ்ப்பால்
சந்ததஞ் சிற்றூ ராகுந் தன்குல வடுக னாகும்.

2. இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. பிறந்த வீடு கிழக்கு நோக்கியுள்ளது. அது தெற்கு வடக்கான வீதியில் உள்ளது. தெற்குத் திக்கில் விநாயகர் ஆலயமும், மாரியம்மன் காளி இவர்களின் கோயில்களும் உள்ளன. அவற்றிற்குக் கிழக்கில் உள்ள ஒரு சிற்றூராம். ஜாதகன் வன்னிய குலத்தவன்.

3. உதிப்பனாஞ் சேட்ட னாக உரைக்கின்றோந் தந்தை யோகம்
மதிநுத லன்னை யோகம் அவன்துணை களத்ர புத்ரர்
சதியிலா முன்பின் ஜன்மஞ் சாற்றுவோ மிந்நூல் தன்னில்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

3. ஜாதகன் தன் தந்தைக்கு மூத்த புதல்வனாகப் பிறப்பான். அவனுடைய தந்தையின் யோகம், தாயின் யோகம், உடன் பிறந்தவர் மனைவி மக்கள் தீமையில்லாத முன் பின் பிறப்புகள் முதலியவற்றை இந்த நூலில் சொல்லுகின்றோம். ஏழைகளை ஆதரிக்கும் தேவியே! கேளுங்கள்.

4. தந்தையின் துணைஆண் மூன்று சத்தியு மவ்வா றுகும்
அந்தவர் சின்னாள் சென்று அவர்களும் வேறுய்ச் செல்வர்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோ மவர்கள் சேதி
சந்ததம் பிதாகு ணத்தைச் சாற்றுவோ மினிமே லாக.

4. தந்தைக்குச் சகோதரர்கள் மூவர். சகோதரிகளும் அங்ஙனமே. அவர்களும் சில நாட்கள் சென்ற பின் தனித்துச் சென்றுவிடுவர். பிற பாகத்தில் அவர்களுடைய செய்திகளைச் சொல்லுகின்ருேம். தந்தையின குணத்தைக் கூறுகின்ருேம்.

5. ஊகவான் பலபேர் நேயன் உறுதிமான் மாஞ்சி வபபன்
பாகமாய்ப் பேச வல்லன் பயிர்த்தொழி லுடைய னுகும்
நாகரி கங்க ளுள்ளான் நாட்டினிற் புகழு மேற்பன்
ஆகம நுணுக்கந் தேரான் ஆளகார ருடைய னுமே.

5. ஊக முள்ளவன். பல பேர்களுக்கு நண்பன். உறுதியுடையவன். மாநிறமுள்ளவன். பொருத்தமாகப் பேசுபவன். விவசாயம் செய்து வருவான். நாகரிகங்கள் உள்ளவன். நாட்டில் கீர்த்தி அடைவான். வேதங்களின் ரகசியங்கள் அறியாதவன். பணியாட்கள் உள்ளவன்.

6. தானியச் செட்டுச் செய்வன் சமர்த்தாக வார்த்தை கூறுவன்
ஈனரை யுறவு கொள்ளான் இடரென்ருேர்க் குதவி செய்வன்
மாநிலம் விருததி செய்வன் வளமையாய்க் குடும்ப மேற்பன்
ஊனமில் லாத தேகி உறைந்திடு மாமி மூன்று.

6. தானிய வியாபாரம் செய்து வருவான். திறமையாகப் பேசுபவன். கீழோரை நட்புக் கொள்ளாதவன். துன்பமடைந்தவர்கட்கு உபகாரம் செய் செய்பவன். விளைநிலங்களைப் பெருக்குவான். செழிப்புள்ள குடும்பத்தை யடைவான். ஊனமில்லாத சரீர முள்ளவன். மூன்று மனைவிகள் வாய்ப்பர்.

7. சுதர்கர்மம் புரிவா னுகுஞ் சல்லியங் கொள்ளா னென்ருேம்
விதவிதத் தலங்கள் செல்வன் மெல்லியர் மோக னுவான்
துதிசெய்தோர் தம்மைக் காப்பன் தோத்திரப் பிரிய னுகும்
கதிதருங் கடவுள் பத்தி காலிகள் காலா ளுள்ளான்.

7. தன் பிள்ளைகட்கு ஈமக்கடன்கள் செய்வான். கடன் படாதவன் என்று கூறுகின்ருேம். விதவிதமான ஸ்தலங்களுக்குச் செல்லுவான். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். தோத்திரம் செய்தவரைக் காப்பான். துதிசெய்யப்படுவதில் பிரியன். முக்தியை யளிக்கும் கடவுள் பக்தி உடையவன். கால்நடைகளும் ஏவலாட்களும் உடையவன்.

8. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே வுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அறிவுளான் சிவந்த மேனி
பன்னுவா னிரண்டு கல்வி பார்மன்னர் தம்மா லுய்வான்
சொன்னசொல் சுகமே எய்துந் தொல்புவி யளவு செய்வன்.

8. இங்ஙனம் கூறப்பட்ட தந்தைக்கு ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அறிவுள்ளவன். சிவந்த மேனியன். இருவிதக் கல்வி கற்பான். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்க்கை நடத்துவான். சுகமாகப் பேசுபவன். பூமியை அளக்கும் பணியைச் செய்து வருவான்.

9. சிலவேநாள் வெளிதே சத்தில் செல்லுவான் வறுமை காணான்
நலமுளோர் நேசங் கொள்வன் நல்லோர்க்கு நல்ல னாவான்
புலவன்போல் மொழிவா னாகும் பொய்யது வழுத்தா நெஞ்சங்
கலகத்தைக் கூறு னாகுங் காசுகள் சேர்ப்பா னாமே.

9. சின்னாட்கள் வெளிதேசத்துக்குச் செல்லுவான். வறுமை இல்லாதவன். நல்லவர்கள் நட்புக்கொள்ளுவான். நல்லவர்கட்கு நல்லவனாக இருப்பான். புலவன்போல் பேசுபவன். பொய் பேசாதவன். கலகம் செய்யாதவன். காசு பணம் சேர்ப்பவன்.

10. தந்தைக்குத் தாழ்வு றுதான் தரணியை விருத்தி செய்வான்
தந்தமும் பெரிதாய்க் காட்டுஞ் சத்தான வஸ்து விட்டந்
தன்மனம் வெகுளி யாவன் சற்றினிற் கோபி யாவன்
தன்பந்துக் கிணக்கங் கூறுன் தரியலர் வெற்றி கொள்வன்.

10. தன் தந்தைக்குக் குறைவில்லாதவன். விளை நிலங்களைப் பெருக்குவான். பெரிய பற்களை உடையவன். புஷ்டியான வஸ்துக்களின்மீது பிரியமுள்ளவன். வெகுளியான மனத்தன். சடுதியில் கோபமடைவான். தன் உறவினர்களுக்கு இணங்காதவன். பகைவரை வெல்லுவான்.

11. உண்டியுஞ் சுகமாய்க் கொள்வன் உறைப்பொடு புளிப்பி லிச்சை
தண்டமிழ் நுணுக்கந் தேர்வன் சத்திமார் மோக னவன்
பண்டுநாள் பூமி விருத்தி பால்தயிர் பிரிய னாகும்
துண்டமாய் வார்த்தை கூறுன் சொல்லதைக் காப்ப னாமே.

11. சுகமாகப் புசிப்பவன். சாப்பாட்டில் உறைப்பிலும் புளிப்பிலும் பிரியமுள்ளவன். தமிழ் மொழியின் ரகசியங்களை நன்கு ஆராய்ந்தறிவான். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். பிதுரார்ஜிதமான நிலங்கள் விருத்தியாகும். பால் தயிர் இவைகளில் பிரியமுள்ளவன். கண்டித்துப் பேசாதவன். சொன்னசொல்லைக் காப்பான்.

12. கரமதில் சங்கு சக்ரங் கமலரே கையுமே உண்டு
மருவிடும் நாபிச் சூடு வண்டிவா கனமு மேற்பன்
அரசருக் கிவன்சொல் மேன்மை அரிபத்தி பூண்பா னாகுங்
கரைமன முடைய னாகுங் காதலி கேட்டி டாயே.

12. கையில் சங்கரேகை, கமலரேகை இருக்கும். நாபிச் சூடுடையவன். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். அரசாங்கத்தாருக்கு இவன் வார்த்தை மேலாகும். திருமாலின்மீது பக்திகொள்ளுவான். இளகிய மனமுள்ளவன். தேவியே! கேளுங்கள்.

13. தன்துணை யாண்பா லொன்று சத்திய மூவ ராகும்
அந்தாண்டு விளையோன் மூன்றுய் அறிவிப்போ மவன்கு ணத்தைத்
தந்திர மொழியே கூர்வன் தனமது செலவு செய்யான்
இந்திர சாலஞ் சொல்வன் ஈகையுங் கொஞ்ச முண்டு.

13. ஜாதகனுக்கு உடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவனும், சகோதரிகள் மூவருமாவர். மூன்றும் சகோதரனது குணத்தைக் கூறுகின்றோம். தந்திரமாகப் பேசுபவன். தனத்தைச் செலவு செய்யாதவன். இந்திரஜாலத்தைப்போல் பேசுபவன். சிறிது கொடுக்கும் குணமுமுள்ளவன்.

14. தந்தைசொல் தடுத்து வாழ்வன் தரணியால் சீவிப் பானும்
முந்துமால் பத்தி கொஞ்ச முனிவுண்டு மூர்க்க னுவன்
சிந்தையில் மருமங் கொஞ்சந் தேவிமேல் பிரிய னுவன்
[1] நந்தியும் பணையோர் விருத்தி நாட்டினில் வறுமை காணன்.

14. தன் தந்தையின் சொல்லைத் தடுத்து வாழ்ந்துவருவான். விவசாயத்தால் ஜீவனம் செய்துவருவான். திருமாலின்மீது சிறிது பக்தியுள்ளவன். கோபமுடையவன். கொடுமையுள்ளவன். மனத்தில் சிறிது ரகசியமுள்ளவன். மனைவியின்மீது பிரியமுடையவன். காளைகள் பண்ணை ஏர் முதலியன விருத்தியாகும். உலகில் வறுமை யில்லாதவன்.

15. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பால் ரண்டு
தீரமாய்ப் பெண்பால் ரண்டு செப்புவோந் தீர்க்க மாக
வீறுது மூன்று தாமும் விளம்புவோம் வேருய்ச் செல்வன்
கூறுவோம் பின்பால் சேதி கோமளி கேட்டி டாயே.

15. மனைவி யொருத்தியே. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் தீர்க்கமாயிருப்பர். மூன்று குழந்தைகள் பிறந்து நிலையார். அவனும் தனித்துச் சென்றுவிடுவான். பிற்பாகத்தில் விபரம் கூறுகின்றோம். அழகியே! கேளுங்கள்.

16. மங்கள மிருபான் ரண்டில் மருவிடுந் தென்பால் பாரி
அங்கவள் குணத்தைச் சொல்வோம் அழகுளாள் மாஞ்சி வப்பள்
சங்கையா மனத்த ளாகிச் சாதமு மன்பா யீவள்
எங்கள்போ லதிதிக் கிட்டம் இடரான புத்தி யில்லாள்.

16. ஜாதகனுக்கு இருபத்திரண்டாம் வயதில் மணமேற்படும். மனைவி தெற்குத்திசையிலிருந்து வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவள். மாநிறமுடையவள். சந்தேகமனமுள்ளவள். அன்புடன் அன்னம் அளிப்பாள். எங்களைப்போன்ற தவம் செய்தவரிடம் பிரியமுள்ளவள். தீங்கான புத்தியில்லாதவள்.

17. அடிசிலுக் கினிய ளாகும் ஆளன்தன் மனம்போல் வாழ்வள்
நடைநன்மை முன்கோ பத்தாள் நளினமாய் வார்த்தை சொல்வள்
படையில்முன் செல்லா ளாகும் பாவையும் விரத மேற்பள்
மடையவரை யுறவு கொள்ளாள் மங்கைக்கு வயது தீர்க்கம்.

---

[1] காளைமாடு.

17. சமையல் செய்வதில் சமர்த்தியசாலி. தன் கணவனுடைய மனம்போல வாழ்ந்துவருவாள். நன்னடத்தையுள்ளவள். முன்கோபமுடையவள். அழகாகப் பேசுபவள். சண்டைக்கு முன் செல்லாதவள். நோன்பு இயற்றுவாள். முட்டாள்களுடன் நட்புக்கொள்ளாதவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

### ஏழாம்பாவ கிரகநிலே

18. ஜயமுனி யிதனைக் கேட்டுத் திடுக்கென வுரைக்க லுற்றார்
பயமிலா வயது தீர்க்கம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வீர்
நயமுடன் பொன்னே னேழாய் நவத்தினி லிருப்ப தாலே
வியமிலாத் தார மொன்று விளம்பினே முனியே யாங்கள்.

18. இதை ஜயமுனிவர் கேட்டுத் திடீரெனக் கூறுகின்றார். பயமில்லாமல் நீண்ட ஆயுளுள்ளவள் என்று கூறிய காரணங்கள் என்னவென்று சொல்லுங்கள். குரு ஏழாமிடத்தில் இருப்பதால் ஜாதகனுக்கு மனைவி யொருத்தியே. நஷ்டமில்லை என்று கூறுகின்றோம். முனிவரே ! நாங்கள்.

19. அத்திரி தடுத்துச் சொல்வார் அந்தண னுடனே கேது
குத்தமா யிருப்ப தாலுங் குளிர்புகர் நீச்ச மெய்திச்
சத்தமஞ் சனியும் பார்க்கத் தாரமு மிரண்டே யாகும்
வித்தகி மாரி ரண்டும் விளம்புவோந் தீர்க்க சீவி.

19. அத்திரி முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். குருவுடன் கேது சேர்ந்திருப்பதாலும், சுக்கிரன் நீச்சமாக இருப்பதாலும், ஏழாம் வீட்டைச் சனி பார்ப்பதாலும், இரு மனைவியர் ஏற்படுவர் என்று கூறுகின்றேன். இரண்டு மனைவிகளும் தீர்க்கமாயிருப்பர்.

20. முதல்மனை யிருக்க வேறு மாதுவு மணுகுஞ் சேதி
விதங்களைச் சொல்லு மென்ன மெல்லிக்குச் சுதர்கள் தோடம்
அதுவினால் மறும னைதான் அணுகிடு மென்று சொல்வோம்
எதுகாலம் புகலு மென்ன வேழஞ்சு வாண்டு நாலில் ;

20. மூத்த மனைவி இருக்கும்போது மறுமனைவி ஏற்படக் காரணம் என்ன ? சொல்லுங்கள். மூத்த மனைவிக்குப் புத்திரதோஷம் உண்டு. அதனால் இரண்டாம் மனைவி வாய்ப்பாள் என்று சொன்னோம். எந்தக்காலத்தில் ஏற்படும் ? என்று கேட்க, ஜாதகனுக்கு முப்பத்தொன்பதாம் வயதில் ;

### புத்திரபாவம்

21. மருவிடு மென்று சொல்வோம் வதிட்டருந் தடுத்துச் சொல்வார்
கரியவன் சேயு மைந்தில் கலந்ததால் முதல்ம னைக்கு
உறைந்திடுஞ் சுதர்க ளென்றேம் உயரஞ்சேர் நீச்சத் தாலே
திருகாகுஞ் சுதர்க ளென்றேஞ் சேயிழை யொன்று தீர்க்கம்.

21. ஏற்படும் என்று கூறுகின்றோம். வசிஷ்டமுனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். சனியும் செவ்வாயும் ஐந்தாமிடத்தில் கூடியிருப்பதால் முதல் மனைவிக்குக் குழந்தைகள் பிறக்கும். ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரன் நீச்சனாகக் கன்னியில் இருப்பதால் புத்திரர்கள் நிலேயார். பெண் ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள்.

22. பின்சுதர் காண ளாகும் பிழையினால் மறுமனைதான்
அன்னவன் தனக்கு நேரும் அவளுக்குச் சுதராண ரண்டு
கன்னிகை யொன்று தீர்க்கங் கௌசிகர் மறுத்துச் சொல்வார்
முன்மனை தனக்குப் புத்திரர் மேவாத காரணஞ்சொல்.

22. பிறகு குழந்தைகள் பிறக்கா. தோஷத்தால் இரண்டாம் மனைவி ஜாதகனுக்கு ஏற்படுவாள். அவளுக்கு இரு புத்திரர்களும் ஒரு பெண்ணும் தீர்க்கமாயிருப்பர். கௌசிகமுனிவர் தடுத்துக் கூறுகின்றார். முதல் மனைவிக்குக் குழந்தைகள் நிலைக்காத காரணம் சொல்லுங்கள்.

23. கன்னிகை பூர்வந் தன்னில் கலந்தது வினைய நேகம்
என்னவூழ் செய்தா ளதனை விளம்புவீர் முனியே நீர்தாம்
முன்ஜன்மங் கொங்கு நாட்டி லுதித்தனள் வண்ணிய சேயாய்த்
தன்வரன் மதலை யுண்டாய்த் தானுமே வாழு நாளில் ;

23. ஜாதகனின் முதல் மனைவிக்கு முற்பிறவியில் பல தீவினைகள் ஏற்பட்டன. என்ன தீங்குகள் செய்தாள் ? அதைச் சொல்லுங்கள் முனிவரே ! நீர் தாம். முற்பிறவியில் கொங்கு நாட்டில் வைசியகுலத்தவளாகப் பிறந்து, கணவன் குழந்தைகளைப் பெற்று, வாழ்ந்துவந்த நாளில் ஏற்பட்ட தீங்கைக் கேளுங்கள்.

### குழந்தைக்குப் பால் தராத தோஷம்

24. மறைமாது மகவுக் காக வாவின்பா லிவளைக் கேட்க
அரிபோலக் கோப முற்று அணுகாது வென்று சொன்னாள்
குறையான மனத்த ளாகிக் கூறுவாள் சாபந் தானும்
மறுஜன்மஞ் சுதர்க ளின்றி வாழுவா யென்று சொன்னாள்.

24. ஓர் அந்தண குலப்பெண் தன் குழந்தைக்குப் பசுவின் பாலைக் கேட்கும்போது சிங்கம்போல் கோபமடைந்து " இல்லை " என்று சொன்னாள். மனத்தில் வருத்தமடைந்த அந்தணப் பெண் " மறு பிறவியில் குழந்தைகளின்றி வாழ்ந்துவருவாய் " என்று சாபமிட்டாள்.

### முனியை வணங்காத தோஷம்

25. அதுவொரு தோட மாச்சு அறைகின்றோம் வேறு வொன்று
பதியினில் முனியின் வாசம் பாவையும் வணங்கா நின்றாள்
சதியான முனியின் வார்த்தை தையலேயுன் மகவைக் கொல்வேன்
எதுஜன்ம முன்பால் யானு மிடைவிடா வாசங் கொண்டு ;

25. அஃது ஒரு தோஷமாயிற்று. இன்னுமொன்று கூறுகின்றோம். வீட்டில் ஒரு குல தெய்வமாகிய முனி வசித்து வந்தது. அதை வணங்கித் தொழாமலிருந்தாள். முனியும் சாபமிட்டது—" பெண்ணே ! உன் குழந்தைகளைக் கொல்லுவேன். எந்தப் பிறவியிலும் உன்னிடம் நான் இடைவிடாமல் இருந்து கொண்டு ;

## மாரியம்மன் கோயிலில் தீபம்வைத்த புண்ணியம்

26. கருவதை யழிப்பே னென்று கழற்றிற்று முனியுந் தானும்
பெறுஞ்சுதர் ஜன்மம் மாண்டு பேதையுஞ் சஞ்ச லத்தால்
குறைநிலக் கோட்டந் தீபங் கோதையும் வைத்து வந்து
மறலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டு ;

26. உனக்கு ஏற்படும் கருவை அழிப்பேன், என்று முனியும் கூறியது. அப்பிறவியில் ஏற்பட்ட குழந்தைகள் மாண்டு, பெண்ணும் மனக் கலக்க முற்று மாரியம்மன் கோயிலுக்குத் தீபம் ஏற்றி வைத்து வந்து மரண மடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு ;

27. வந்தவ ளிவளே யென்றோ மாமுனி சாப மொன்று
முந்தினோர் சாப மொன்று மேவிடு மிச்சென் மத்தில்
சந்ததி தோட மெய்தும் சத்தியு மொருத்தி தீர்க்கம்
அந்ததோர் சேதி சொல்வீர் அம்மாரி தீப புண்யம் ;

27. பிறந்தவள், இந்த ஜாதகனின் முதல் மனைவி என்றோம். பெரிய முனியின் சாபம் ஒன்றும் அந்தண குலத்துப் பெண்ணின் சாபம் ஒன்றும் இப்பிறவியில் ஏற்படும். பிறக்கும் குழந்தைகட்குத் தோஷ முண்டாகும். ஒரு பெண் குழந்தை பிறந்து நீண்ட ஆயுளுள்ளதாக இருக்கும். அதற்குக் காரணம் சொல்லுங்கள். மாரியம்மனுக்குத் தீபம் ஏற்றி வைத்த புண்ணியத்தால் ;

28. கன்னிகை யொன்று தீர்க்கங் காதலி பின்ஜன் மங்கேள்
முந்தின தலத்தி லேதான் உதிப்பாளாஞ் வைசியச் சேயாய்ச்
சந்தத முதித்தோன் பூர்வஞ் சாற்றுவோம் பாண்டி நாட்டில்
விந்தையாய் வைசியச் சேயாய் மேவின னென்று சொல்வோம்.

28. பெண் ஒருத்தி பிறந்து தீர்க்கமாவாள். அவளுடைய மறுபிறவியைக் கேளுங்கள். புண்ணிய க்ஷேத்திரத்தில் வைசிய குலத்தவளாகப் பிறப்பாள். ஜாதகனுடைய முற்பிறவியைக் கூறுகின்றோம். பாண்டிய நாட்டில், வைசிய குலத்தவனாகப் பிறந்தான் என்று சொல்லுகின்றோம்.

29. அறமதி லிச்சை யுண்டாய் யாவர்க்கும் நல்லோ னாயும்
வருவோர்க்குத் தாக மீந்து மறலியின் பதிக்குச் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனா மிந்தப் பாலன்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

29. தருமத்தில் ஆசை கொண்டு, எல்லோருக்கும் நல்லவனாக வாழ்ந்து, பசித்தவருக்கு அன்னமளித்து, மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இந்த ஜாதகன் பிறப்பான். கரிய யானை முகத்தோனைப் பெற்ற தேவியே ! கேளுங்கள்.

30. அன்னையு நற்கு ணத்தாள் அழகுளாள் யோக சாலி
கன்னிகை வந்த பின்பு காவலன் தனக்கு யோகம்
அன்னியர்க் குதவி செய்வள் ஆளனுக் கினிய ளாகும்
அன்னமு மன்பா யீவள் அவள்துணை யவன்பால் தோடம்.

30. ஜாதகனின் தாய் நற்குணமுள்ளவள். அழகுள்ளவள், அதிருஷ்ட சாலி. இவளை மணந்த பிறகு ஜாதகனுடைய தந்தைக்கு மேலான யோகம் ஏற்படும். பிறருக்கு உபகாரம் செய்பவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். அன்புடன் அன்னமளிப்பாள். தன் உடன் பிறந்தவர்கட்குத தோஷமுண்டாகும்.

31. இல்லமும் வடபா லாகும் இன்பச்சொல் வாயு பாதை
புல்குவோம் வறுமை காணாள் பூவையு மாஞ்சி வப்பள்
அல்லலோர்க் குதவி செய்வள் அன்னையு மூன்று மாகுந்
தல்லியில் நடுமா துக்கு ஜனிப்பளா மென்று சொல்வோம்.

31. அவள் பிறந்த வீடு வடக்குத் திசையிலுள்ளது. இனிமையாகப் பேசுவாள். வாயு ரோகமுள்ளவள். தரித்திரமில்லாதவள். மாநிறமுள்ளவள். துன்பமடைந்தவர்கட்கு உதவி செய்வாள். மூன்று தாய்மார்கள் உள்ளனர். ஜாதகனுடைய தாய் நடுவில் வாய்த்த மனைவிக்குப் பிறந்தவள் என்று கூறுகின்றோம்.

32. முன்ஜன்மஞ் சேர நாட்டி லுதித்தனள் கோகு லத்தில்
தன்சுத ரதிக முண்டாய்ச் சான்றோருக் கன்ன மீந்து
கன்னிக்குப் பவமில் லாமல் காலன்தன் பதிக்குப் புக்குப்
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்.

32. முற்பிறவியில் சேரநாட்டில் இடையர் மரபில் பிறந்தாள். புத்திரர்களை அதிகமாகப் பெற்று, பெரியோர்களுக்கு அன்னமளித்து வந்து, பாவச் செயல்களின்றி, மரணமடைந்து, மீண்டும் பிரம்ம தேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று சொல்லுகின்றோம்.

33. மறுஜன்மந் துவாரை தன்னில் வருகுவாள் சைவச் சேயாய்த்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்
உரைக்கின்றோந் தந்தை பூர்வம் உயர்சேது பதியி லேதான்
திருகான வைசியச் சேயாய் ஜனித்துமே வறுமை யின்றி ;

33. மறு பிறவி துவாரகையில் சைவ குலத்தில் பிறப்பாள். லட்சுமீ கடாட்சம் பெற்று, செல்வவதியாக வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம். சேதுமாநகரில் வைசிய குலத்தவனாகப் பிறந்து, தரித்திரமில்லாமல் ;

34. பலவித வணிபஞ் செய்து பரவுப கார னுயும்
நிலையிலார்க் கன்ன மீந்து நிகர்தாகப் பந்தல் வைத்துக்
குலவினுன் கால னுடு [1] குறைதலை வரையப் பட்டு
நலமுள விக்கு லத்தில் நாயக னுதித்தா னென்றோம்.

[1] பிரமன்

34. பலவித வர்த்தகம் செய்து, பிறருக்கு உபகாரியாகி, ஏழைகளுக்கு அன்னமளித்து தண்ணீர்ப் பந்தல் வைத்து, மரணமடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, நன்மைமிக்க இக்குலத்தில் பிறந்தான் என்று கூறினோம்.

**குலமுயர்வதற்கான, நற்செயல்கள்**

35. பின்ஜன்மங் கோகர் ணத்தில் பிறப்பனும் பிரம்ம சேயாய்
அன்னவ னிச்சென் மத்தில் அடைந்தபுண் ணியங்க ளென்ன
உன்னதத் தலங்கள் சென்றும் உயர்வோர்கள் பத்தி யாயும்
முன்னோரா பத்தைக் காத்து முதல்வனும் வாழ்வ தாலே ;

35. மறுபிறவி, திருக்கோகர்ணத்தில், அந்தணகுலத்தவனாகப் பிறப்பான். ஜாதகன் இப்பிறவியில் செய்த நற்செயல்கள் என்ன வென்று கூறுங்கள். உயர்ந்த க்ஷேத்திரங்களுக்குச் சென்றும், பெரியோர்கள்மீது பக்திக் கொண்டும், கஷ்டப்படுபவர்களின் ஆபத்தை காத்தும், வாழ்ந்து வருவதால் ;

36. பிறப்பனும் பிரம்ம சேயாய்ப் பேசுவோம் நாற்பா னாண்டில்
மறலியின் பதிக்குச் செல்வன் மாதுரு தனக்குக் கேளாய்ப்
பெருமையாய் நாற்பா னலில் பேசுவோம் மார கங்கள்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

36. அந்தண குலத்தில் பிறப்பான் என்று சொல்வோம். ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் தந்தை மரணமடைவான். ஜாதகனுடைய நாற்பத்து நான்காம் வயதில் தாய் இறந்துவிடுவாள். தருமத்தை விருத்தி செய்யும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

37. அறுபது வொன்ப தாண்டில் ஆனிமா தத்தி லேதான்
திருமக னுடல மேகுஞ் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
[1] நரிபரி யாக்கு நாட்டில் நல்குவான் பிரம்ம சேயாய்ப்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

37. ஜாதகனுக்கு அறுபத்தொன்பதாம் வயதில் ஆனி மாதத்தில் மரணம் ஏற்படும். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். பாண்டிய நாட்டில், அந்தண குலத்தவனாகப் பிறப்பான். விநாயகனைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்

38. வந்தவன் பொதுயோ கத்தை யறைகின்றோஞ் ஜனனந் தொட்டு
அந்தவன் மரண மட்டும் அம்புலி போல யோகம்
மன்னரா லுய்வா னவன் ஆறெட்டு வாண்டு மட்டுந்
சந்ததஞ் சீவிப் பானுஞ் சகலபாக் கியமு மேற்பான்.

38. ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். பிறந்தது முதல் இறப்பு வரையில் பிறைச்சந்திரன் போல் யோகம் பெருகும். அரசாங்க உத்தியோகம் பெற்று வாழ்ந்து வருவான். நாற்பத்தெட்டு வயது வரையில் நன்றாக் ஜீவித்து வருவான். எல்லா பாக்கியங்களையும் அடைவான்.

---
[1] பாண்டிநாடு

39. அதற்குமே லரசர் மூலம் அவனுமே செட்டுச் செய்வன்
சதியில மனைவி பின்னால் சண்டன்தன் பதிக்குச் செல்வாள்
அதிபனுஞ் ஜனன கால மாதிரை மூன்றும் பாதஞ்
சதிகய ராண்டு வேழுந் திங்களு மொன்றே யாகும்.

39. அதற்கு மேல் அரசர் மூலம் வர்த்தகம் செய்து வருவான். தீமைகளில்லாமல், மனைவி இவனுக்குப் பிறகு இறந்துவிடுவாள். ஜாதகனின் ஜனனகாலத்தில், திருவாதிரை நட்சத்திரம் மூன்றும் பாதம், ராகுமகாதசையில் ஏழு வருடங்களும் ஒரு மாதமும பாக்கியாகும்.

வேறு

40. சத்தம முனிவர்
சுத்தமாய்ச் சொல்வோம்
குற்றங்கள் யாவும்
வித்தகி பொறுப்பாய்.

40. ஸப்த ரிஷிகளாகிய நாங்கள் சுத்தமாகக் கூறுகின்றோம். குற்றங்கள் எல்லாவற்றையும் பொருத்தருள்வாய், தாயே!

## ஜாதகம் 40.

1. மதியுங் குருவுங் கோலிலுற
   மாலும் புகர்பானு மிதுனமுற
விதியன் மானில் சேய்மேரு
   விடமு மீனம் சிகிகன்னி
இதுவே கிரக மது நின்று
   இயம்பும் வீணை யுயிராக
அதுவே பலன்கள் தான்புகல்வீர்
   அறைவார் வசிட்ட ரம்பிகையே.

1. சந்திரன் குரு துலாத்திலும், புதன் சுக்கிரன் சூரியன் மிதுனத்திலும், சனி மகரத்திலும், செவ்வாய் தனுசிலும், ராகு மீனத்திலும், கேது கன்னியிலுமாக நவக்கிரகங்கள் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், ஏற்படும் பலனைக் கூறுங்கள், (எனப் பார்வதி கேட்க) வசிட்ட முனிவர் கூறுகின்றார். தாயே !

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | லக்கினம் புதன் சுக்கிரன் சூரியன் |
| | இராசி சக்கரம் | | |
| சனி | | | |
| செவ்வாய் | | சந்திரன் குரு | கேது |

2. தானே யாண்பால் ஜனனமுறுந்
   தந்தை யில்லம் வடவாசல்
மானே கீழ்மேல் வீதியது
   மாரி காளி கீழ்ப்பாலில்
வானோர் புகழுஞ் சிவபெருமான்
   மருவுங் கீழ்ப்பா லிடிபடுமே
ஊன மான மால்குடியும்
   உணர்வோங் குடகி லதன்கீழ்ப்பால் ;

2. இந்த ஜாதகம் ஆண்மகனுடையது. இவனுடைய தந்தையின் வீடு, வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. தாயே! அது கிழக்கு மேற்கான வீதியிலுள்ளது. மாரியம்மனும் காளியும் கிழக்குத்திக்கில் கோயில் கொண்டுள்ளனர். தேவர்கள் புகழும் சிவபெருமானது ஆலயம் கிழக்கில் இடிந்துள்ளது. பாழடைந்த திருமாலின் கோயிலும் மேற்குத்திக்கில் இருக்கும். அதற்கு கிழக்கில்;

### வேறு

3\. பெருவயி றப்ப னிற்கும் பேசின சிறுவூ ராகும்
வரநதி குலமே யாகும் வருகுவான் சேட்ட னுகப்
பெறுமன்னை தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
திருமகன் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3\. விநாயகர் ஆலயமும் இருக்கும். இங்ஙனம் சொல்லப்பட்ட சிறிய ஊரில், வேளாளர் குலத்தில், தன் தந்தைக்கு மூத்த புத்திரனுகப் பிறப்பான், இந்த ஜாதகன். அவனுடை தாய் தந்தையர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், ஜாதகனுடைய முற்பிறவி மறுபிறவி இவைகளையும் இந்நூலில் சொல்லுகின்றோம்.

### வேறு

4\. தந்தைகுணங் கூறுகின்றோ மால்நி றத்தான்
சகராசர் பேட்டிகொள்வன் சாந்த னுவன்
தன்தனமு மதிகமில்லான் பூமி சேர்ப்பன்
சதுஷ்பாதம் விருத்தியற்பம் கிருஷி யுண்டு
தன்துணையாண் தோடமுறுங் கன்னி யொன்று
சாற்றுகின்றோங் கிராமச்செட்டு செய்வா னுவன்
தந்தைசொல் கடவானுஞ் சமர்த்தாய் வார்த்தை
சமகல்வி யீகையுளன் தரளத் தந்தம்.

4\. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். திருமாலைப் போன்ற கரியநிறமுள்ளவன். அரசரைப் பேட்டி காண்பான். சாந்த குணமுள்ளவன். தன்னுல் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிகமில்லாதவன். பூமியைப் பெருக்குவான். கால்நடைகள் விருத்தி குறைவு. விவசாயம் செய்துவருவான். தந்தைக்கு உடன் பிறந்தவர்கட்குத் தோஷமுண்டு. சகோதரி ஒருத்தி யுண்டு. கிராமத்தில் வியாபாரம் செய்துவருவான். தன் தந்தையின் வார்த்தையை மீறுதவன். சாமர்த்தியமாகப் பேசுவான். சமமானகல்வி யறிவுள்ளவன். கொடுக்கும் குணமுடையவுன். முத்துக்களைப் போல் வெண்மையான பற்களுள்ளவன்.

5\. முதுகில் வடுவுடையன் மூலச் சூடன்
உயர்வான குடும்முளன் முன்கோ பத்தன்
சதிசெய்யா மனமுடையன் பிதிரு வார்த்தை
தழுவியே வாழ்ந்திடுவான் பந்து நேயன்
அதிகாரன் சோலைகிணறு செய்வா னுவன்
ஆளடிமை சகடுடையன் அற்ப வுண்டி
துதிசெய்தோர் தமைக்காப்பன் கோலாம் ராசி
துன்பமிலா வாயில்யந் தோன்று வானும்.

5\. முதுகில் அடையாளமுள்ளவன். மூலச்சூட்டு நோய் உடையவன். உயர்ந்த குடும்பத்தை யுடையவன். முன்கோபி. பிறருக்குத் தீங்கெண்ணுத மனமுள்ளவன். தன் தந்தையினுடைய வார்த்தையைத் தழுவியே வாழ்ந்து

வருவான். தன் உறவினர்களுக்குப் பிரியமானவன். அதிகாரம் உள்ளவன் சோலைகள் கிணறுகள் இவைகளை அமைப்பான். ஏவலாட்கள் உள்ளவன். வண்டி முதலிய வாகனமும் உடையவன். சிறிதாகவே உண்பவன். தோத்திரம் செய்தவர்களை ஆதரிப்பவன். துலா லக்கினத்தில் பிறந்தவன். கேடுதலில்லாத ஆயில்ய நட்சத்திரத்தில் பிறப்பான்.

6. சொன்னவிக் குணத்தானுக் கிந்தப் பாலன்
தோன்றுவா னிவன்குணத்தைச் செப்பக் கேண்மோ
கன்னல்மொழி சமகல்வி மாநி றத்தான்
கபடிலான் முன்கோபி கருதான் பொய்யும்
அன்னியரை யுறவுகொள்வன் அடக்க வார்த்தை
அறிவுளான் அரிரேகை கரத்தில் தங்கும்
பின்னமிலான் கடுநடையன் கிருஷி செய்வன்
புறஞ்சொல்லான் பூவையர்கள் மோக னுவன.

6. இங்ஙனம் கூறப்பட்ட குணமுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். இனிய வார்த்தைகளைப் பேசுபவன். சமமான கல்வி யறிவுள்ளவன். மாநிறமுடையவன். கபடில்லாதவன். முன்கோபி. பொய்யைச் சொல்ல மனத்திலும் நினையாதவன். பிறருடன் நட்புக் கொள்ளுவான். அடக்கமாகப் பேசுபவன். அறிவுடையவன். கையில் விஷ்ணுரேகை யுள்ளவன். ஊனமில்லாத தேகமுள்ளவன். வேகமாக நடப்பவன். விவசாயம் செய்துவருவான். கோள் சொல்லாதவன். பெண்களின்மீது மையல் கொள்ளுபவன்.

### வேறு

7. தந்தைக்கு மேலாய் வாழ்வன் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
பிந்தியு மரசு செய்வன் பிரபலப் புகழு மேற்பன்
நந்தியா வுடைய னுவன் நாதனுர் பக்தி பூண்பன்
நொந்தவர்க் குதவி செய்வன் நிருபர்க ளிட்ட னுவன்.

7. தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்துவருவன். கால்நடைகள் விருத்தியுள்ளவன். பிற்காலத்தில் அரசன்போல் வாழ்ந்து வருவான். பிரபலமான கீர்த்தியடையவான். எருதுகள் பசுக்கள் இவைகளை யுடையவன். சிவபெருமான்மீது பக்திகொள்ளுவான். ஏழைகட்கு உபகாரம் செய்பவன். அரசர்களுக்குப் பிரியமானவன்.

8. ஆதியில் சுகங்கு றைச்சல் அணுகிடும் பலநோய் தாமும்
பாதிதன் வயது மேலாய்ப் பாக்கிய முடைய னுவன்
நீதிமான் சுகபு சிப்பன் நீத்தோர்க ளிட்டங் கொள்வன்
சாதிப்பான் சிலவே சங்கை சந்தேக மனத்த னுவன்.

8. ஆதிகாலத்தில் சுகம் குறைவாகவே இருக்கும். பலவித வியாதிகள் ஏற்படும். ஜாதகன், பாதிவயதுக்கு மேல் பாக்கியங்களுள்ளவன். நீதியுடையவன். சுகமாகச் சாப்பிடுவான். துறவிகள்மீது அன்புள்ளவன். சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வான். சந்தேக மனமுள்ளவன்.

9. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோ மைவ ராவர்
கன்னிகை தோட மெய்வள் காளேக ளிருவர் தீர்க்கம்
பின்துணை தோட மெய்தும் பேசுவோ மூன்றுஞ் ஜன்மம்
அன்னவன் மேட ராசி அணுகிடுஞ் சோதி[1]நாளாம்.

9. ஜாதனுடைய உடன் பிறந்தவர்களைக் கூறுகின்றோம். அவர் ஐவரா வர். சகோதரிகளுக்குத் தோஷ முண்டாகும். இரு சகோதரர்கள் தீர்க்காயு ளுள்ளவர். மற்ற சகோதரர்களுக்குத் தோஷ முண்டாகும். மூன்றுமவ னுகப் பிறந்தவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். அவன் சுவாதி நட்சத்திரம் மேஷலக்கினத்தில் பிறப்பான்.

10. அதற்குப்பின் தோடஞ் சொல்வோம் அணுகிடு மொருவன் தீர்க்கம்
சதியிலாப் பூச நாளாந் தேள்ராசி யுதிப்பா னுவன்
இதுரண்டுந் தீர்க்க சீவி இயம்புவோம் பின்பால் சேதி
நதிசடை யணிந்தோன் தேவி நங்கையே கேட்டி டாயே.

10. அவனுக்குப் பின் பிறந்தவனுக்குத் தோஷமுண்டு. ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். பூச நட்சத்திரம் விருச்சிக லக்னத்தில் பிறப்பான். இவர்கள் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். பிற்பாகத்தில் மற்ற செய்திகளைச் சொல்லுகின்றோம். கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெரு மானின் தேவியே ! பார்வதியே ! கேளுங்கள்.

11. மங்கள மூவே ழாண்டுகள் மருவிடு முத்திர திக்கில்
துங்கமா மன்னே வர்க்கந் தோகையை மாலே பூண்பன்
அங்கவள் குணத்தைச் சொல்வோம் அன்புள மனத்த ளாவள்
எங்கள்போ லதிதிக் கன்னம் ஈகுவா ளென்று சொல்வோம்.

11. ஜாதனுக்கு இருபத்தோராம் வயதுக்குள் மணமேற்படும். மனைவி, அவனிடத்துக்குக் வடக்குத் திக்கிலிருந்து தூய்மையுள்ள தாயினுடைய வர்க்கத்திலிருந்து வந்து, மாலையிடுவாள். அவளுடைய குணத்தைக் கூறு கின்றோம். அன்புள்ள மனமுடையவள். எங்களைப் போன்ற துறவிகளுக்கு அன்னமளிப்பாள் என்று கூறுவோம்.

12. முன்கோபங் கொஞ்ச முள்ளாள் மொழியது சுகமே யாவள்
கன்னிகை வந்த பின்பு கலைபிறை போல யோகம்
பண்ணியே பேசு வாளாம் பாவைநன் னடக்கை நன்மை
அன்னியர் மதிக்க வாழ்வாள் அணுகிடும் நாபிச் சூடு.

12. சிறிது முன்கோபமுள்ளவள். அன்புடன் பேசுபவள். இவள் வந்த பிறகு ஜாதகனுக்கு பிறைச் சந்திரன்போல் யோகம் விருத்தியாகும். பண்ணிப் பண்ணிப் பேசுபவள். நன்னடத்தை யுள்ளவள். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்துவருவாள். நாபிச்சூடுள்ளவள்.

---

[1]. சுவாதி

13. மாந்தளிர் மேனி யாவள் வடிமுக மழகாய்த் தோன்றும்
ஏந்திழை தனக்குப் புத்திரர் இலகாரே இலகில் தீதாங்
கூர்ந்துமே வதிட்டர் சொல்லக் குறுமுனி கூறு கின்றார்
மைந்தர்கள் தோட மெவ்வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்.

13. மாந்தளிர் போல் மென்மையான சரீரமுள்ளவள். பார்வைக்கு அழகான மேனியுள்ளவள். இவளுக்குப் புத்திர பாக்கியம் இல்லை. புத்திரர் பிறக்கினும் நிலையார் என்று ஆராய்ந்து வசிஷ்ட முனிவர் சொல்ல, அகத்திய முனிவா கூறுகின்றார். புத்திர தோஷ மேற்படக் காரணம் என்னவென்று சொல்லுங்கள், முனிவரே! நீர்தாம்.

**புத்திரதோஷ கிரகநிலை**

14. ஐந்தினில் மதிபொன் தங்க அலரியின் மைந்தன் பார்க்க
ஐந்தவன் ஜன்மந் தங்க ஆரலு மவரைப் பார்க்க
வஞ்சிக்குச் சுதர்கள் தோட மாதுமுன் பூர்வந் தன்னில்
மிஞ்சிய வினைகள் செய்தாள் மேவிற்று வந்தத் தோடம்.

14. ஐந்தா மிடத்தில் சந்திரன் குரு இருப்பதாலும், ஐந்தாமிடத்தை சூரிய புத்திரனுகிய சனி பார்ப்பதாலும், ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரன் லக்கினத்தில் இருப்பதாலும், செவ்வாய் சுக்கிரனைப் பார்ப்பதாலும், ஜாதகனுடைய மனைவிக்குப் புத்திரதோஷம் ஏற்பட்டது. இதுவுமன்றி, ஜாதகனின் மனைவி முற்பிறவியில் அதிகமான தீச்செயல்கள் செய்தாள். அத் தோஷம் தொடர்ந்தது.

**குலதெய்வத்தை வணங்காத தோஷம்.**

15. [1]என்னவூழ் செய்தா ளதனை இயம்புவீர் முனியே நீர்தாம்
முன்ஜன்மம் புகல்வோங் கேளாய் முக்கூடல் தன்னி லேதான்
கர்னன்மாங் குலத்தி லேதான் காதலி யுதித்து மேலும்
பொன்னொடு பணிதி யுண்டாய்ப் புத்திர ரதிக மாகி
இன்னவள் வாழு நாளில் இயம்புவோ மூழி தானே.

15. என்ன பாபச்செயல்கள் செய்தாள்? அவற்றைக் கூறுங்கள். முனிவரே! தாங்கள். அவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேன். கேள். திருமுக்கூடல் க்ஷேத்திரத்தில், கருணீகர் குலத்தில் பிறந்து, பொன் ஆபரணங்களை அடைந்து, புத்திரர்களை அதிகமாகப்பெற்று, ஜாதகனின் மனைவி வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீச்செயலைக் கூறுகின்றோம்.

16. தன்னுடைக் கொல்லை தன்னில் தங்கிற்றுக் கறுப்பன் சாமி
மூன்னோர்கள் தோத்த ரிப்பார் முதல்வியுந் தொழாமல் [நின்றாள்
தொன்முனி புகலுஞ் சாபந் தொழாமலே நின்ற பாவி
உன்சுதர் யாவுஞ் கொல்வே னுதிக்கும்பின் ஜன்மந் தன்னில்;

[1]. இப்பாடலில் ஒரு வரி மிகுந்துளது.

16. தன் வீட்டுக் கொல்லையில் குல தெய்வமாகிய கறுப்பன்சாமி இருந்து வந்தது. அதை அவளுடைய பெரியோர்கள் தொழுது வந்தனர். இவள் அதைத் தொழாமல் இருந்தாள். வெகுகாலத்தியமுனியும் சாபமிட்டது— "என்னைத் தொழாமல் நின்ற பாவியே! உன்னுடைய மக்களைக் கொல்லு வேன். இனி ஏற்படும் உனது மறு பிறவியிலும்;

17. சுதர்களு முதிக்கா வண்ணஞ் செய்குவோந் தோன்றில் தீதாம்
அதஞ்செய்வே னுன்பால் யானும் அணுகியே வாழ்வே னென்று
இதுவித முனியுஞ் சொல்ல எய்திற்று வந்தத் தோடம்
அதுவன்றி வேறு சொல்வேன் அம்பிகை யாளே கேளாய்.

17. குழந்தைகள் பிறக்காமலிருக்கும்படிச் செய்வேன். அப்படித் தோன்றினும் நிலையாமல் கொன்றுவிடுவேன். உன்னிடம் நானும் சேர்ந்து வாழ்ந்து வருவேன்" என்று கூற, அந்தச் சாபம் வந்தடைந்தது. அதுவு மன்றி வேறு ஒன்று சொல்லுகின்றேன். தாயே! கேளுங்கள்.

### ஏழைக்குழந்தைக்கு உணவிடாமை

18. பஞ்சையா யேழை மாது பாலருக் கன்னம் வேண்டி
வஞ்சிபால் கேட்கும் போது வரிபோலக் கோப முற்று
மிஞ்சிய வார்த்தை சொல்லி விரட்டினுள் மாதைத் தானும்
தஞ்சமா யந்த மாது சாற்றுவாள் சாபந் தானும்.

18. ஓர் ஏழைப்பெண் தன் குழந்தைக்கு அன்னம் வேண்டி இந்த பெண்ணிடம் வந்து கேட்கும்போது, சிங்கம்போல் கோபமடைந்து, அதிக மான கொடுமை வார்த்தைகளைக் கூறி, விரட்டிவிட்டாள். அந்தப்பெண் சாப மிடுகின்றாள்.

19. மகவுபால் ஈயாப் பாவி மறுஜன்மஞ் சுதர்க ளின்றி
அகமது சஞ்ச லத்தால் அம்புவி தன்னில் வாழ்வாய்
பகையாகச் சொல்லிச் சென்றாள் பற்றிற்று வந்தத் தோடம்
மகவுக ளந்த மாண்டு மனமது துன்ப முற்று;

19. குழந்தைக்குப் பால் கொடுக்காத பாவியே! நீ, மறு பிறவியில், புத்திரர்களில்லாமல், மனத்தில் கலக்கத்துடன், பூமியில் வாழ்ந்து வருவாய் என்று தீமையாகச் சொல்லிவிட்டுச் சென்றாள். அந்தத் தோஷம் இவளை வந்தடைந்தது. கடைசியில் தன் குழந்தைகள் இறந்து, மனத்தில் வருத்தம் அடைந்து;

20. காலன்தன் பதிக்குப் புக்குக் கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமில் லாத கங்கைக் குலமதி லுதிப்பா ளாகுஞ்
சாலவே முன்னூழ்த் தோடந் தங்கிற்று விச்சென் மத்தில்
பாலர்கள் தோட மெய்தும் பார்வதி கேட்டி டாயே.

20. மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, நல்லொழுக்க மில்லாத வேளாள குலத்தில் பிறப்பாள். முற்பிறவியின் தோஷம் பற்றும். இப்பிறவியிலும் புத்திரதோஷம் ஏற்படும். பார்வதி தேவியே! கேளுங்கள்.

### கறுப்புமுனி சாபம் நீங்கச் சாந்திமுறை

21. அந்ததோர் தோடந் தீர அருளுவீர் சாந்தி தானும்
சந்ததங் கரும சாந்தி செய்துமே சத்தி பீஜம்
முந்திய இரணிய ரேக்கில் முறைபோல வரைந்து மேதான்
கந்தன்தன் மூலந் தன்னைக் கழறுவாய் சகத்திரம் தானும் ;

21. அந்த தோஷம் நீங்கச் சாந்திகள் சொல்லுங்கள் என்று வினவ, வேதத்தில் சொல்லியபடி கரும சாந்தி செய்து, சக்தியின் பீஜாட்சரத்தைத் தங்கத் தகட்டில் நியமப்படி எழுதி, ஷண்முகக்கடவுளின் மூலமந்திரத்தைத் ஆயிரம் தடவை ஜபித்து ;

22. சத்தியின் பூசை வைத்துத் தகடுமே மாத ணிந்து
வெற்றியாய்ச் சுக்கிர வாரம் விரதமே கொள்வா ளாகில்
புத்திர விருத்தி தீர்க்கம் புகன்றது தப்பா தாகும்
அத்தியைப் பெற்ற மாதே அம்பிகை யாளே கேளாய்.

22. சக்தியினிடம் வைத்து, அந்தப்பெண்ணும் தகட்டை அணிந்து வந்து, வெள்ளிக்கிழமைகள் தோறும் விரதம் இருந்து வந்தால், புத்திர விருத்தி யுண்டு. நாங்கள் கூறியவை தவறு. விநாயகனைப் பெற்ற தேவியே! அம்பிகையே! கேளுங்கள்.

23. சொற்படி செய்யா ளாகில் சுதர்தோன்றார் தோன்றில் தீதாம்
சொற்படி செய்வா ளாகில் தோன்றிடு மாண்பால் ரண்டு
மெய்ப்படிப் பெண்பா லொன்று வறைகின்றேந் தீர்க்க மாக
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

23. நாங்கள் கூறியபடி செய்யாளாகில் புத்திரர்கள் பிறவார் ; பிறக்கினும் நிலையார். சொல்லியபடி செய்வாளாகில் இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் தோன்றித் தீர்க்கமாவர். கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவபெருமானின் தேவியே ! கூறிய மொழிகள் தவறு.

24. ஜாதகன் பூர்வந் தன்னைச் சாற்றுவோங் குடகு நாட்டில்
சூதிலாச் செங்குந்த வம்சந் தோன்றியே வறுமை யின்றி
மாதவர் பத்தி பூண்டு வளம்பெறக் குடும்பி யாகி
மேதினில் வாழு நாளில் விளம்புவோ மூழி தானே.

24. ஜாதகனுடைய முற்பிறவியைக் கூறுகின்றோம். குடகு நாட்டில், தீமையில்லாத செங்குந்த மரபில் பிறந்து, தரித்திர மில்லாமல், பெரியோர் களிடம் பக்தி கொண்டு, செழிப்புள்ள குடும்பத்தை யடைந்து, உலகில் வாழ்ந்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கூறுகின்றோம்.

### அரசமரத்தின்கீழ் கைம்பெண்ணைச் சேர்ந்தமை

25. அந்நகர் நதியின் பக்க லணுகிய வரசின் கீழே
தந்தியு நாகம் நிற்குந் தானவர் வாச மாகும்
மந்திர மோதும் வேத மறையவர் பூசை பூண்பார்
இந்தவா றிடத்தி லேதா னிரவிலே யேது செய்தான்.

25. அந்த நகர் ஆற்றின் பக்கத்தில் உள்ள அரச மரத்தின் கீழே விநாயகரும் சர்ப்பமும் மற்ற தெய்வங்களும் இருந்துவந்தனர். அங்கு வேதம் ஓதும் அந்தணர் பூசை புரிந்து வருவார். இங்ஙனமுள்ள இடத்தில் ஜாதகன் இரவில் என்ன செய்தான் ; தெரியுமா ?

### கருவழித்த தோஷம்

26. விதவையை மரத்தின் கீழே வித்தகன் போகந் துய்த்து
அதனாலே கருவும் தங்கி அழித்தனன் பண்டி தத்தால்
சதியாக வந்தத் தோடஞ் சார்ந்தது வென்று சொல்வோம்
இதுவன்றி வேறு காணு னீச்வரி கேட்டி டாயே.

26. ஒரு கைம்பெண்ணுடன் அம்மரத்தின் அடியில் இன்பம் அநுபவித்து, அதனால் கரு ஏற்பட்டு, ஔடதங்களால் அக்கருவை அழித்துவிட்டான். தீங்காக அந்தத் தோஷம் ஏற்பட்டது என்று சொல்லுவோம். இது வல்லாமல் வேறு இல்லை. ஈச்வரியே ! கேளுங்கள்.

27. அந்திய காலந் தன்னி லறுமுகன் பத்தி கொண்டு
அந்தகன் நாட டைந்து அருநர கினிலே புக்கு
முந்திய பிரமன் லக்கம் மேதினில் வரையப் பட்டு
இந்ததோர் குலமு திப்பான் எய்திடு முன்னூழ்த் தோடம் ;

27. தன் கடைசிக் காலத்தில் ஷண்முகக் கடவுள் மீது பக்தியுடன் மரணமடைந்து, நரகமடைந்து, உயர்ந்த பிரமனால் படைக்கப்பட்டு இந்தக் குலத்தில் பிறந்தான். முற்பிறவியில் செய்த தோஷத்தால் ;

### புத்திரதோஷ சாந்தி

28. மதலைகள் தோட மெய்து மறைகின்றோ மதற்குச் சாந்தி
அதிபனு மனைவி யோடு அறுமுகன் தணிகை சென்று
நதிதோய்ந்து கிரியைச் சுற்றி நாயகர்க் கர்ச்சித் தேத்தி
இதுவித மேழு கார்த்தி இடரிலாச் சென்று மேதான் ;

28. புத்திர தோஷம் ஏற்படும். அது நீங்கச் சாந்தி யொன்று கூறுகின்றோம். ஜாதகன், தன் மனைவியுடன், சுப்பிரமணியக்கடவுள் எழுந்தருளியிருக்கும் திருத்தணிக்குச் சென்று, அங்குள்ள புண்ணிய தீர்த்தத்தில் நீராடி, கிரிப்பிரதக்ஷிணம் செய்து, கடவுளுக்கு அருச்சனை செய்து, துதித்து வந்து, இங்ஙனம் தொடர்ந்து ஏழு கார்த்திகைகள் சென்று ;

29. கடைநாளில் மூவேழ் பேர்க்குக் கானேயு மன்ன மீய
விடம்போல வந்தத் தோடம் விலகியே சுதர்கள் தோன்றும்
அடைவுடன் செய்யா னாகில் அணுகார்கள் சுதர்க ளென்றோந்
தடவரை மகளே யாங்கள் சாற்றின மொழிகுன் றாவே.

29. கடைசி நாளில் இருபத்தோரு பேருக்கு ஜாதகன் அன்ன மளித்தால் தீமையாக வந்த தோஷம் நீங்கி, புத்திரர்கள் தோன்றுவார். அசட்டையாகச் செய்யாவிடில் புத்திரபாக்கியம் ஏற்படாது. மலையரசனின் புத்திரியே ! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறா.

30. அன்னையுஞ் சிவந்த மேனி அன்புள மனத்த ளாகும்
பின்னமில் லாத தேகி பற்களும் பின்ன தூனம்
அன்னமு மன்பா யீவள் அடிசிலுக் கினிய ளாகும்
தன்மனங் கவடு மில்லாள் தங்கிடும் பித்தச்சூடு.

30. ஜாதகனுடைய தாய் சிவந்த மேனியள். அன்புள்ள மனத்தினள். ஊனமில்லாத தேகமுடையவள். பிற்காலத்தில் பற்கள் ஊனமடையும். பிறருக்கு அன்னம் அன்புடன் அளிப்பாள். ருசியுடன் சமைப்பதில் வல்லவள். கபடமில்லாத மனத்தினள். பித்தச்சூ டுடையவள்.

31. இல்லமும் வடபா லாகும் இவள்துணை யாண்பால் மூன்று
வல்லிமா ரவ்வா றென்றே மறைகின்றேம் பின்னால் சேதி
தல்லியின் பூர்வஞ் சொல்வோஞ் சிங்களை நாட்டி லேதான்
புல்கினாள் வன்னிய சேயாய்ப் புத்திர ருடைய ளாகி ;

31. அவளுடைய வீடு வடக்குத் திசையிலுள்ளது. மூன்று சகோதரர்களும் மூன்று சகோதரிகளும் உண்டென்றேம். அவர்களைப்பற்றிப் பிற்பாகத்தில் சொல்லுகின்றேம். தாய், முற்பிறவியில் சிங்கள தேசத்தில் வன்னிய குலத்தில் பிறந்து, புத்திரர்களைப் பெற்று ;

**பெண்பழி கூறல்**

32. மங்கையும் வாழு நாளில் வந்ததோர் வினையைக் கேண்மோ
சங்கையாய் நாத்தி பேரில் சாதித்தாள் சிலவே வார்த்தை
அங்கவள் மனவெ றுப்பால் அறைகின்றாள் சாபந் தானும்
பங்கமாய் வார்த்தை தானும் பகர்ந்ததோர் பாவிக் கேதான் ;

32 பெண்ணும் வாழ்ந்து வரும்போது, ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன்னுடைய கணவனின் சகோதரியின்மீது சில அடாத வார்த்தைகளைக் கூறினாள். அவளும் மனவருத்தமுற்றுக் கூறுகின்றாள். என்மீது அடாத வார்த்தைகளைச் சொல்லிய பாவிக்கு ;

33. பின்வருஞ் ஜன்மந் தன்னில் பெண்சுதர் தோட மாயும்
தந்தமுங் குறைவ தாயுந் தரணியில் வாழ்வா ளென்று
அந்ததோர் மாதுஞ் சொன்னாள் அணுகிற்று வந்தத் தோடம்
பிந்தியும் வேறு காணாள் பேதையே கேட்டி டாயே.

33. இனி ஏற்படும் மறு பிறவியில் புத்திரிகள் புத்திரர்கள் இவர்களுக்குத் தோஷமுண்டாகி, பற்களும் குறைந்து, உலகத்தில் வாழ்ந்து வருவாள், என்று அப்பெண் கூறினாள். அந்தத் தோஷம் இவளை வந்தடைந்தது. வேறு தீச்செயல்களில்லை. பெண்ணே ! கேட்டிடுவாய்.

34. மாதுவு மரண மாகி மறையவன் வரையப் பட்டுத்
தீதிலா விக்கு லத்தில் ஜனித்தன ளென்று சொல்வோம்
ஓதுவோ மாதி சாப முயர்தந்தத் தோட மெய்துஞ்
சேதமாஞ் சுதர்பெண் ணுந்தாஞ் செல்வதி கேட்டி டாயே.

34. ஜாதகனின் தாய், மரணமடைந்து, பிரமனால் படைக்கப்பட்டு, தீங்குகளில்லாத இதே குலத்தில் பிறந்தவள் என்று சொல்லுகின்றோம். தன் நாத்தியின் சாபத்தால் பற்கள் குறைவுபடும். புத்திரர்களுக்கும் புத்திரிகளுக்கும் தோஷமுண்டாகும் என்று சொல்வோம். செல்வியே! கேளுங்கள்.

35. மறுஜன்மம் வான்மி யூரில் வருவளாம் சைவச் சேயாய்
உரைக்கின்றேந் தந்தை பூர்வ முறையூருக் கருகில் தென்பால்
சிறுவூரில் வடுகர் வர்க்கஞ் ஜனித்துமே கிருஷி செய்து
வருவோரை யாத ரித்து மறையோர்கள் தொண்டு பூண்டு;

35. மறுபிறவி, திருவான்மியூரில், சைவகுலத்தவளாகப் பிறப்பாள். ஜாதகனின் தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம். உறையூருக்கருகில், தெற்குப்பக்கத்தில் உள்ள சிற்றூரில், வடுகர் குலத்தில் பிறந்து, விவசாயம் செய்துவந்து, அண்டிவந்தவர்களை ஆதரித்து, பிராமணர்கட்குத் தொண்டுகள் பல செய்து;

36. முன்பவ மில்லா னாகி மேவினான் கால னாடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தன னென்று சொல்வோம்
பின்ஜன்ம மருணை[1] தன்னில் பிறப்பனாம் பிரம்ம சேயாய்
அன்னவ னிச்சென் மத்தில் அக்கிராமச் செட்டுச் செய்தும்;

36. முற்பிறவியில் தீவினை இல்லாதவனாகி இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று கூறுகின்றோம். மறுபிறவி, திருவண்ணாமலையில், அந்தணகுலத்தவனாகப் பிறந்து வாழ்வான். அப்படிப்பட்ட இந்த ஜாதகனின் தந்தை இப்பிறவியில் கிராம வியாபாரம் செய்து;

37. பொருளிலே இச்சை யாயும் பிழையது சிலர்க்குச் செய்தும்
வருவதால் மறைக்கு லத்தில் வருங்கா ரணங்க ளெவ்வாறு
திருகுக ளனந்தஞ் செய்துஞ் சிலர்களா பத்தைக் காத்தும்
அறமதி லிச்சை யாயும் அவன்திருப் பணிகள் செய்தும்;

37. பொருளின்மீது விருப்பங்கொண்டு, சிலருக்குத் தீங்குகள் செய்து, வந்தபிறகும், அந்தணர் குலத்தில் மறுபிறவி தோன்றக் காரணங்கள் என்ன? பல தீங்குகள் செய்தபோதிலும், சில ஏழைகளுடைய ஆபத்தைக் காத்து வந்ததாலும், தருமத்தில் விருப்பங்கொண்டு தெய்வத் தொண்டு செய்து வந்ததாலும்:

38. தக்கன தலவா சங்கள் சென்றதால் மறைக்கு லத்தில்
முக்கிய மு.திப்பா னவன் மு.ப்பது மொன்ப தாண்டில்
நக்கன்தன் பகைவ னான நமன்பதி சேர்வா னவன்
மிக்கவே தவங்கள் செய்யும் வித்தகி கேட்டி டாயே.

38. பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று வந்ததாலும், சிறந்த அந்தணகுலத்தில் தோன்றுவான். ஜாதகனுடைய முப்பத்தொன்பதாம் வயதில், சிவபெருமானின் பகைவனாகிய எமனின்புரம் அடைந்து விடுவான். மிகுந்த தவங்களை இயற்றும் தேவியே! கேளுங்கள்.

---

[1] திருவண்ணாமலை.

39. நாற்பது மூன்று வாண்டில் நற்றுலா மாதந் தன்னில்
கூப்பிடு வானுங் காலன் குறித்ததோ ரன்னை தன்னை
ஏற்கவே சாத கர்க்கு இயம்புவோ மெழுப தாண்டில்
ஆர்க்கவே விடப மாத மறைந்தனங் கண்டந் தானே.

39. ஜாதகனுடைய நாற்பத்துமூன்றும் வயதில் துலா (ஐப்பசி) மாதத்தில் அன்னை இறந்து விடுவாள். ஜாதகன், தனது எழுபதாம் வயதில் வைகாசி மாதத்தில் இறந்து விடுவான்.

40. மறுஜன்மந் துவாரை பக்கல் வருகுவான் சத்திரிய சேயாய்த்
திருமகன் பின்னால் பாரி செப்புவோ மார கங்கள்
உரைக்கின்றோ மவள்பின் ஜன்ம முத்திரம் வேங்க டத்தில்
பெருமையாய் வைச்யச் சேயாய்ப் பிறப்பளா மென்று சொல்வோம்.

40. ஜாதகனுடைய மறுபிறவியில், துவாரகைக்குப் பக்கத்தில், க்ஷத்திரிய குலத்தவனகப் பிறப்பான். ஜாதகனுக்குப் பிறகு மனைவி மரண மடைவாள். அவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். திருவேங்கடத்தில், வைச்ய குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுவோம்.

41. இன்னவன் குடும்பச் செய்தி இயம்புவோந் தாயே கேளும்
மன்னிய முப்பா னலில் விலகிடும் பாகம் மூன்றாய்
மன்னனும் நாற்பா னெட்டி லறைந்தன மில்லம் வேறு
பின்பாகம் விவரஞ் சொல்வோம் பேதையே கேட்டி டாயே.

41. ஜாதகனுடைய குடும்பச் செய்திகளைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள். அவனுடைய முப்பத்துநான்காம் வயதில், மூன்று பாகங்களாகப் பிரியும். நாற்பத்தெட்டாம் வயதில் வீடு வேறாகும். பிற்காலத்தில் விபரம் கூறுகின்றோம். பெண்ணே! கேட்டிடுவாய்.

42. ஜனித்திடு காலந் தன்னில் சித்திரை மூன்றாம் பாதந்
தனித்தசேய்த் தசைமூன் றுண்டுந் தங்கிடுந் திங்கள் நாலுந்
தினமது தசமே யாகுஞ் செப்பினோம் பூர்வ பாகம்
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

42. ஜாதகன் ஜனிக்கும்போது சித்திரை நட்சத்திரம் மூன்றாம் பாதம் அங்காரகமகாதசை மூன்று வருடங்களும் நான்கு மாதங்களும் பத்து நாட்களும் பாக்கியாகும். இங்ஙனம் முதல்பாகத்தைச் சொன்னோம். பெரிய விநாயகக்கடவுளைப் பெற்ற தாயே! கேளுங்கள்.

# ஜாதகம் 41

**1.** பொன்புகர் கடக மாகப் புதன்பரி யோனும்[1] வீணை
சந்திரன் கோல தாகச் சனிநந்தி சேயுஞ் சீயம்
துன்ராகு கன்னி யாகச் சிகிமீன மிதுனஞ் ஜன்மம்
இந்தவாறு யோகம் நின்ருல் இயம்புவீர் பலனைத் தானே.

**1.** குரு சுக்கிரன் கடகத்திலும், புதன் சூரியன் மிதுனத்திலும், சந்திரன் துலாத்திலும், சனி விருஷபத்திலும், செவ்வாய் சிம்மத்திலும், ராகு கன்னியிலும், கேது மீனத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்தால், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| கேது | | சனி | லக்கினம் புதன் சூரியன் |
| | இராசி சக்கரம் | | குரு சுக்கிரன் |
| | | | செவ்வாய் |
| | | சந்திரன் | ராகு |

**2.** பிருகுமே புகலு கின்ருர் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
வருமில்லங் கீழ்மேல் வீதி வாசலு மெமனின் பார்வை
குறைதலை மாரி மாயோன் குடகினில் காளி யுத்திரம்
பிறைபணி யணிந்தோன் நிற்பான் பெருவயி றப்பன் கீழ்ப்பால்.

**2.** பிருகு முனிவர் கூறுகின்ருர். இஃது ஆண் பிறப்பு. பிறந்த வீடு, கிழக்கு மேற்கான வீதியில், தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. மாரியம்மன் திருமால் இவர்களது ஆலயங்கள் மேற்கிலும், காளி கோவில் வடக்கிலும், சந்திரனையும் பாம்பினையும் சடை முடியில் அணிந்த சிவபெருமானது ஆலயமும் விநயகர் ஆலயமும் கிழக்கிலும் உள்ளன.

**3.** இத்தகை யடையா ளத்துள் இலகிய சிறுவூர் தன்னில்
முத்திய குலமே தோன்று முதித்தவ னன்னை தந்தை
பத்தினி புத்திர யோகம் பாலகன் முன்பின் ஜன்மம்
சுத்தமாய் நவக்கோ ளாய்ந்து செப்புவோ மினிமே லாக.

**3.** இங்ஙனமுள்ள அடையாளங்களுடைய சிற்றூறில், அந்தண குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய தாய் தந்தை மனைவி புத்திரன் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும், நவக்கிரகங்களின் நிலையை நன்கு ஆராய்ந்து இனிக் கூறுகின்ருேம்.

---

[1] பரியோன் = சூரியன்.

4. இவன்பிதா குணத்தைச் சொல்வோ மின்பச்சொ லுடைய னவன்
தவசிக ளுறவு கொள்ளான் சந்தேக மனத்த னவன்
நவனியி லுய்வா னவன் நாதனுர் பக்தி யற்பம்
உவமையாய் வார்த்தை சொல்வ னுரகன்போல் கோப முண்டு.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றேம். இன்பமாகப் பேசக்கூடியவன். பெரியோர்களின் நட்புக் கொள்ளாதவன். சந்தேகமுள்ள மனத்தையுடையவன். சிவபெருமான்மீது மிகக்குறைவான பக்தியுடன் உலகில் வாழ்ந்து வருவான். உவமானத்துடன் பேசுபவன். சர்ப்பம் போல் கோபமடைவான்.

5. மால்நிற முளைச்சல் தேகி மருவிடும் பித்தச் சூடு
ஈனமாங் குணமுங் கொஞ்ச மிடர்செய்யான் யாவ ருக்கும்
ஊனமில் லாத தேகி உண்மையா மனத்த னவன்
தானமுந் தரும மற்பம் சல்லிய பாதை யேற்பன்.

5. திருமாலைப்போல் கரியநிறமும் மெல்லிய சரீரமுமுள்ளவன். பித்தச் சூட்டு தேகமுள்ளவன். அற்பகுணமும் சிறிதுள்ளவன். ஒருவருக்கும் துன்பங்கள் செய்யாதவன். ஊனமில்லாத தேகமுள்ளவன். உண்மையான மனத்தன். சிறிதே தானதருமம் செய்பவன். துன்பமுள்ள வழிப்படி நடப்பவன்.

6. சஞ்சல மனத்த னவன் சற்றினிற் கோபம் நீங்கும்
மிஞ்சியே வார்த்தை கூறுவன் மனைநிலம் விரய மாகும்
அஞ்சிடான் யாவ ருக்கும் ஆள்கார ருடைய னவன்
நஞ்சுபோல் மனமுங் கொஞ்சம் நாயகி கேட்டி டாயே.

6. சஞ்சலமான மனமுள்ளவன். சடுதியில் கோபம் வந்து நீங்கிவிடும். அதிகமாகவே பேசுபவன். வீடு நிலங்கள் எல்லாம் விரயமாகிவிடும். ஒருவருக்கும் பயப்படாதவன். பணியாட்கள் உள்ளவன். விஷம்போல் கொடுமையான மனமுள்ளவன். தாயே! கேளுங்கள்.

7. தன்துணை யாண்பால் ரண்டு சாற்றுவோந் தீர்க்க மாகத்
துஞ்சிடும் நான்கு வென்றேஞ் சொல்லிய வாண்பா லுந்தான்
வஞ்சனை வேறே செல்வர் மலர்க்கரங் கத்திரி ரேகை
கஞ்சமா முகத்தி னளே! கழறின குணத்தா னுக்கு;

7. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரர் இருவர் நீண்ட ஆயுளுடனிருப்பார். நான்கு பேர் இறந்து விடுவார். நாங்கள் கூறிய சகோதரர்களும் வஞ்சனையால் வேருகச் சென்றுவிடுவார்கள். கையில் கத்திரிரேகை உள்ளவன். தாமரை போன்ற முகத்தையுடையவளே! இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு;

8. இந்ததோர் பாலன் தோன்று மியம்புவோ மிவன்கு ணத்தைச்
சிந்தையில் நல்ல னவன் செய்நிலந் தன்னு லுய்வன்
முந்துமால் பத்தி கொஞ்சம் மூலச்சூ டுடைய னவன்
நிந்தைக ளேற்கா னவன் நிமிடத்தில் கோபி யாவான்,

8. இந்த ஜாதகன் தோன்றுவான். இவனுடைய குணத்தைக் கூறு கின்றோம். நல்ல மனமுள்ளவன். பூமியில் விவசாயம் செய்து ஜீவித்து வருவான். திருமாலின்மீது பக்தியுள்ளவன். மூலச் சூட்டு நோயுள்ளவன். பழிகள் அடையாதவன். விரைவில் கோபமடைவான்.

9. சிந்தையுஞ் சமம தாகும் வீண்வம்பில் செல்லா னாகும்
பத்தினி வந்த பின்பு பகருவோம் யோகந் தானும்
குத்தத்தை மனத்தில் வையான் குறிப்பினில் கொடுமை காணும்
நத்தினோர்க் குதவி செய்வன் நயம்பட வுரைப்பா னாகும்.

9. சமமான கல்வியறிவுள்ளவன். வீண் வம்புக்குச் செல்லாதவன். மனைவி வந்த பிறகு யோகம் பெருகும். பிறர் செய்யும் குற்றங்களை மனத் தில் வையாதவன். முகத்தில் சிறிது கொடுமை தோன்றும். தன்னை வந்தடைந்தவர்களுக்கு உபகாரம் செய்வான். நயமாகப் பேசுபவன்.

10. உண்டியி லுணவின் மீது உறைப்பொடு புளிப்பி லிச்சை
வண்டிவா கனமு மேற்பன் மாநிலந் தன்னு லுய்வன்
பண்டுநாள் சல்லிய முண்டு பண்போர்கள் விருத்தி செய்வன்
குண்டுணி கொஞ்ச முண்டு கோதையே கேட்டி டாயே.

10. சாப்பாட்டில் உறைப்பு, புளிப்பு இவைகளின்மீது பிரியமுள்ளவன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். விவசாயத்தால் சீவித்து வருவான். தந்தையால் ஏற்பட்ட கடனுண்டு. பெரியோர்களிடம் சென்று அறிவைப் பெருக்குவான். சிறிது கோட் சொல்லுபவன். தாயே! கேளுங்கள்.

### நல்ல யோக மேற்படுதற்குரிய கிரகநிலை

11. யோகமெவ் விதமாய்ச் சொன்னீ ருரைப்பீர்க ளந்தச் சங்கை
[1] பாகனு மாட்சி யாகப் பார்ப்பானு முச்ச மாகத்
தோகையில் பணியும் நிற்கச் சுக்கிரன் மதியு மாறிப்
பாகமா யிருப்ப தாலே பகர்ந்தனம் யோக மென்றோம்.

11. ஜாதகனுக்கு எப்படி யோகம் ஏற்படும் என்று சொன்னீர்கள்? அந்தச் சந்தேகத்தைக் கூறுங்கள். புதன் ஆட்சியாகவும், குரு உச்சமாகவும், ராகு கன்னியில் இருப்பதாலும், சந்திரனும் சுக்கிரனும் மாறி (பரிவர்த்தனை) இருப்பதாலும் யோகம் ஏற்படும் என்று கூறுகிறோம்.

12. மூவேழு ஆண்டு மேலாய் விளம்புவோம் வறுமை காணன்
தாவினோர்க் குதவி செய்வன் சாதமுங் குறைவு றாதான்
மேவின சல்யந் தானும் விலகிடு மூவெட் டாண்டில்
ஆவலாய்ப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

12. ஜாதகனுக்கு இருபத்தொரு வயதுக்கு மேல் சொல்லுகின்றோம். தரித்திரம் இல்லாதவன். தன்னை வந்தடைந்தவர்கட்கு உதவி செய்வான். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். இருபத்துநான்கு வயதுக்குள், ஏற்பட்ட கடனும் நீங்கி விடும். ஆவலாகப் பூசை புரியும் அம்பிகையாளே! கேளுங்கள்.

---

[1] புதன்

13. தன்துணை யாண்பால் மூன்று தையலு மிரண்டு வென்றோம்
பின்பாக மாண்பால் சேதி பேசுவோந் தாயே யாங்கள்
கன்னிமார் சேதி சொல்வோம் கார்நிற முளைச்சல் தேகி
பொன்பணி சேர்ப்பா ளாகும் புகழான குடும்ப மேற்பள்.

13. உடன் பிறந்தவர்களில் சகோதரர் மூவரும் சகோதரிகள் இருவரும் உண்டு. பிற்பாகத்தில் சகோதரனின் செய்தியை நாங்கள் சொல்லுவோம். தாயே! சகோதரியின் விபரம் கூறுகின்றோம். கரிய நிறமுள்ளவள். மெல்லிய சரீரமுள்ளவள். பொன் ஆபரணங்களைச் சேர்ப்பாள். கீர்த்தியுள்ள குடும்பமுள்ளவள்.

14. வறுமைக ளடையா ளாகும் மாரனும் வடபால் நேரும்
அரிபோலக் கோபங் கொஞ்சம் அவசர வார்த்தை கொஞ்சம்
மருமமில் லாதா ளாகும் மைந்தர்க ளாண்பால் மூன்று
திருவொத்த பெண்பால் ரண்டு செப்புவோந் தீர்க்க மாக.

14. தரித்திரமில்லாதவள். கணவன் வடக்குத் திசையிலிருந்து வருவான். சிங்கம் போல் கோபம் சிறிதுடையவள். கொஞ்சம் அவசரமாகப் பேசுபவள். இரகசியமில்லாத மனத்தினள். மூன்று புத்திரர்களும் இலக்குமியை யொத்த பெண்கள் இருவரும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றோம்.

15. மங்கையுந் தீர்க்க ஜீவி யறைகின்றேன் கடையோள் சேதி
சங்கையா மனத்த ளாகும் சரசமாய் வார்த்தை சொல்வள்
எங்களுக் கன்ன மீவள் இவளுமே புத்தி சாலி
பொங்கிய குடும்ப மேற்பள் பேதையு மாநி றத்தாள்.

15. அவளும் நீண்ட ஆயுள்ளவள். ஜாதகனின் கடைசிச் சகோதரியின் செய்தியைக் கூறுகின்றோம். சந்தேகமுள்ள மனத்தினள். சல்லாபமாகப் பேசுபவள். எங்களைப்போன்ற துறவிகட்கு அன்னமளிப்பாள். புத்திசாலி. வளம் பெற்ற குடும்பமுள்ளவள். மாநிறமுடையவள்.

16. கல்வியு முடைய ளாவள் கணவனு முள்ளூ ராவன்
தல்லியின் வர்க்க மாவன் தரணியில் வறுமை காணாள்
வல்லிக்குப் பூர்வந் தன்னில் மாதுரு சுகமி ராதாள்
நல்லவ ளாகி வாழ்வள் நன்னடை ஊக சாலி.

16. சிறிது கல்வியறிவுள்ளவள். கணவனும் உள்ளூரிலிருந்தே வாய்ப்பான். அவனும் தன் தாயின் வர்க்கத்திலிருந்தே வருவான். உலகில் வறுமையில்லாதவள். ஜாதகனின் சகோதரி, ஆதி காலத்தில் தன் தாயின் சுகமில்லாதவள். நல்லவளாக வாழ்ந்து வருவாள். நன்னடத்தையுள்ளவள். ஊகமுள்ளவள்.

17. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மொன்று தீர்க்கம்
ததிபாக்கிய முடைய ளாவள் சம்பத்தாய் வாழ்வா ளாகும்
நிதியது பெருக்க முள்ளாள் நிகழ்த்தின மொழிகுன் றுவே
அதிதியே ஜாத கற்கு அறைகின்றே மணத்தின் காலம்.

17. இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் உள்ளவள். அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். தயிர் பால் பாக்கியமுள்ளவள். சம்பத்துடன் வாழ்ந்து வருவாள். செல்வம் பெருகியிருக்கும். சொன்ன வார்த்தைகள் தவரு. தாயே! ஜாதகனுக்கு திருமணக் காலத்தைச் சொல்லுகின்ருேம்.

18. இருபது விரண்டாண் டுள்ளே இவனுக்குப் பாரி வாய்க்கும்
அரிவையும் வடபால் நேர்வள் அறைகின்ரே மவள்கு ணத்தைத்
திருமக ளொப்ப தாவள் தேரின புத்தி யுண்டு
பிறைபோல யோக மெய்தும் புண்ணிய மனத்த ளாமே.

18. இருபத்திரண்டாம் வயதுக்குள்ளே இவனுக்கு மணமாகும். மனைவி வடக்குத் திக்கிலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்ருேம். இலக்குமியை யொத்தவள். முதிர்ந்த அறிவாளி. வளர்பிறைச் சந்திரனைப்போல் யோகம் விருத்தியாகும். நல்ல எண்ணங்களுள்ளவள்.

19. நன்னடை வறுமை காணுள் நாயகன் மனத்துக் கேற்ருேள்
பண்ணியே பேசு வாளாம் பாவைக்கு வயது தீர்க்கம்
தன்சுத ராண்பா லொன்று தையல்மார் மூவ ராவர்
சொன்னது நான்குந் தீர்க்கஞ் சோர்வுறும் நான்கு மென்ருேம்.

19. நன்னடத்தையுள்ளவள். வறுமையில்லாதவள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். பன்னிப் பன்னிப் பேசுபவள். தீர்க்கமான வயதுள்ளவள். ஜாதகனின் மனைவிக்கு ஆண் மகன் ஒருவனும் பெண் குழந்தைகள் மூவருமாவர். கூறிய நால்வரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். நான்கு குழந்தைகள் இறந்து போம்.

20. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மிலங்கை தன்னில்
சூதிலாக் கங்கை சேயாய் ஜனித்துமே வரசர் மூலம்
மேதினில் சீவித் தேதான் வித்தகி மதலை யுண்டாய்ச்
சேதுவின் பதிக்குச் சென்று தேரிஞேர்க் குதவி செய்து ;

20. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்ருேம். இலங்கையில் வேளாள குலத்தவனுகப் பிறந்து, அரசாங்க உத்தியோகம் பெற்று, உலகில் ஜீவித்துவந்து, மனைவி மக்களையடைந்து, சேதுவுக்குச் சென்று, நீராடி, துறவிகளுக்கு உபகாரம் செய்து

21. பேதியால் மரண மாகிப் பிறந்தன னிக்கு லத்தில்
நீதியாய்க் கங்கை சேயாய் நேர்ந்தவ னிச்சென் மத்தில்
மாதவர் குலமெவ் வாறு வருங்கா ரணங்கள் சொல்வீர்
தீதிலாச் சேது புண்ணியஞ் ஜனித்தன னென்று சொல்வோம்.

21. பேதியால் மரணமடைந்து, இக்குலத்தில் பிறந்தான். முற்பிறவியில் வேளாள குலத்தவனுகப் பிறந்து, இப்பிறவியில் அந்தணகுலத்தில் தோன்றிய காரணம் என்னவென்று கூறுங்கள். தீமையில்லாத சேதுவுக்குச் சென்ற புண்ணியத்தால் உயர்ந்த குலத்தில் பிறந்தான் என்று சொன்ஞேம்.

22. மாதுரு மாஞ்சி வப்பள் வருவோரை யாத ரிப்பள்
சூதிலாள் பொறுமை சாலி தேவதா விரத மேற்பள்
காதலி யோக சாலி கணவனுக் கினிய ளாவள்
ஓதுவோ மன்னை யில்லம் உள்ளூரா மென்று சொல்வோம்.

22. ஜாதகனுடைய தாய் சிவந்த நிறமுள்ளவள். வருபவர்களை ஆத ரித்து வருவாள். சூதில்லாதவள். பொறுமையுள்ளவள். தெய்வ பக்தி யுடன் விரதம் நோற்பாள். யோகசாலி. தன் கணவனுக்குப் பிரியமானவள். தாயின் வீடு உள்ளூர் என்றே சொல்லுவோம்.

23. தன்துணை யாண்பா லைந்து தையலு மொன்று தீர்க்கம்
முன்ஜன்ம மன்னைக் கேதான் விளம்புவோஞ் சேது தன்னில்
பின்குலந் தனிலு தித்துப் பெரிதான குடும்பம் பெற்றுக்
கன்னிக்குப் பவமில் லாமல் கலந்தனள் கால னூடு.

23. தாய்க்கு ஐந்து சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளுள் ளவர்கள் என்று சொல்லுகின்றோம். தாய் முற்பிறவியில் சேதுவில் பிறந் தாள் என்று கூறுகின்றோம். நான்காம் வருணத்தில் பிறந்து, பெரிய குடும்பத்தை யடைந்து, பாவச் செயல்களில்லாமல் மரண மடைந்தாள்.

24. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தன ளென்று சொல்வோம்
அரிவையு மூவைந் தாண்டுள் அந்தகன் பக்கல் சேர்வள்
மறுஜன்ம மரங்கந் தன்னில் வருகுவா ளிக்கு லத்தில்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

24. மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று கூறுகின் றோம். அவளும் ஜாதகனுடைய பதினைந்தாம் வயதுக்குள் இறந்துவிடு வாள். மறுபிறவி ஸ்ரீரங்கத்தில் இதே குலத்தில் பிறப்பாள். விநாயகனைப் பெற்று வளர்த்த புண்ணியவதியே ! கேளுங்கள்.

25. தந்தையின் பூர்வஞ் சொல்வோஞ் சடகோபர் வாழு நாட்டில்
நிந்தையாய் வைசியச் சேயாய் நேர்ந்துமே செட்டுச் செய்து
அந்தவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
தன்னுடை நேசன் பெண்டைத் தானவன் போகந் துய்த்தான்.

25. ஜாதகனின் தந்தையினுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சடகோபர் வாழும் பாண்டிய நாட்டில், வைச்ய குலத்தவனாகப் பிறந்து, வியாபாரம் செய்து வாழ்ந்து வந்த காலத்தில், ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன்னுடைய நண்பனின் மனைவியுடன் ஜாதகனின் தந்தை இன்பமனுபவித்தான்.

**நண்பன்மனைவியைச் சேர்தல்**

26. மாரனு மதைய றிந்து மனைவியை விலக்க லுற்றான்
காரிழை வருந்த முற்றுக் கழறினாள் வணிப னோடு
போர்வரு மென்பால் வந்தால் பிறநகர் செல்வாய் மாதே
கூறின மொழியைக் கேட்டுக் கோதையும் புகலு கின்றாள்.

26. நம்பனும் அதைத் தெரிந்து கொண்டு தன் மனைவியை விலக்கி விட்டான். பெண்ணும் வருத்த மடைந்து வர்த்தகனிடம் சொன்னாள். வணிபனும், என்னிடம் வந்தால் சண்டை வற்படும். வேறு ஊருக்குச் செல்லுவாய், பெண்ணே ! என்று கூறிய வார்த்தையைக் கேட்டு, பெண்ணும் சொல்லுகின்றாள்.

27. உன்னுடை மதியால் கெட்டே னுலகினில் வசையு மானேன்
என்னைநீ வேண்டா மென்றாய் என்வதை யுனக்கே சாரும்
பின்வருஞ் ஜன்மந் தன்னில் பேதையு மந்தில் மாண்டு
தன்சிறை யாக வாழ்வாய் சஞ்சல மனத்த னாவாய்.

27. உன்னுடைய கெட்ட வார்த்தைகளால் நான் அழிந்தேன். உலகில் அவமான மடைந்தேன். என்னை வேண்டாம் என்று விலக்கலுற்றாய். என்னுடைய வதை உன்னைச் சாரும். இனி ஏற்படும் மறுபிறவியில் இடையில் மனைவியை இழந்து, சிறையில் வாழ்வது போல, சஞ்சலமுள்ள மனத்தினனாக வாழ்ந்து வருவாய்.

28. இன்னமும் பலவாறு சொன்னாள் எய்திற்று வந்தச் சாபம்
மன்னனு மந்தி யத்தில் வளமுள தலங்கள் சென்று
முன்னோர்க்கு வன்ன மீந்து மேவினன் கால னாடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தன னென்று சொல்வோம்.

28. இன்னும் பலவிதமாகக் கூறினாள். அந்தச்சாபம் வந்தடைந்தது. ஜாதகனின் தந்தையும் தன் கடைசிக் காலத்தில் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று, அந்தணர்கட்கு அன்னமளித்து, மரண மடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று சொல்லுகின்றோம்.

29. துன்மதி வணிப னாக ஜனித்தன னிச்சென் மத்தில்
முன்குல முதிக்கு வண்ண முரைப்பீர்கள் விவர மாக
உன்னதத் தலங்கள் சென்று முயர்வோர்க்கு வன்ன மீந்தும்
பண்ணிய பலத்தி னாலே பிறந்தன னென்று சொல்வோம்.

29. முற்பிறவியில் கெட்ட எண்ணமுள்ள வணிபனாகப் பிறந்தவன் இப்பிறவியில் உயர்ந்த அந்தண குலத்தில் பிறக்கக் காரணங்களை விவரமாகச் சொல்லுவீர். உயர்ந்த புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று, அந்தணர்கட்கு அன்ன மளித்து வந்த அந்தப் புண்ணியத்தால் பிறந்தான் என்று கூறுகின்றோம்.

30. நல்லதோர் தலங்கள் புண்யந் தான்மறைக் குலமு தித்தான்
வல்லியின் சாபந் தானும் விலகாதோ முனியே சொல்வீர்
அல்லலாய்த் திகிலாய்ச் சொற்கள் அவைவில காவே யென்றும்
புல்குவோ மிருபா னொன்ப தாண்டினில் தந்தை கண்டம்.

30. புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றதால் அந்தண குலத்தில் பிறப்பான். பெண்ணின் சாபம் நீங்காதோ ? சொல்லுங்கள், முனிவரே ! துன்பமடைந்து பயத்தினால் கூறிய கடுஞ் சொற்கள் விலகா என்று கூறினோம். ஜாதகனுடைய இருபத்தொன்பதாம் வயதில் தந்தை மரண மடைவான்.

**குலந்தாழ்வாகக் காரணம்**

31. மறுஜன்மம் [1]வள்ளூர் கீழ்ப்பால் வளமுள பேரூர் தன்னில்
உறைகுவான் சைவச் சேயாய் உயர்குல முதித்தோன் பின்பால்
குறைவான குலமே தோன்றக் கொடுமைகள் செய்த தென்ன
அறமதி லிச்சை யின்றி அருமறை விருப்ப மின்றி ;

31. ஜாதகனின் தந்தை, மறு பிறவியில், திருவள்ளூருக்குக் கிழக்கில், செழிப்புள்ள பெரிய ஊரில், சைவ குலத்தவனாகப் பிறப்பான். இப்பிறவியில், உயர்ந்த குலத்தில் பிறந்தவனுக்கு, மறு பிறவியில் தாழ்குலம் ஏற்பட என்ன தீங்குகள் செய்தான்? அதைக் கூறுங்கள். தருமம் செய்வதில் பிரியமின்றியும், வேதமோதுவதில் விருப்பமில்லாமலும் ;

32. வந்ததா லுதிப்பா னுவன் அறைகின்றோம் யோகச் சேதி
முந்திநாள் தனமும் நேரும் மூவொன்ப தாண்டு தன்னில்
தன்னில்லம் வடபா லாகச் சார்ந்திடும் [2]நிதிநிட் சேபம்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

32. வாழ்ந்து வந்ததால், பிறந்தான். அவனுடைய யோகச் செய்தியைக் கூறுகின்றோம். பிதுரார்ச்சிதமான செல்வம் கிடைக்கும். ஜாதகனுக்கு, தனது இருபத்தேழாம் வயதில் தன் வீட்டுக்கு வடக்கில் ஒரு புதையல் கிடைக்கும். கந்தபிரானைப் பெற்ற பார்வதி தேவியே! கூறிய வார்த்தைகள் தவறு.

33. அதற்குமேல் வறுமை காணான் அவன்பந்து மேலாய் வாழ்வன்
அதிபனு முப்பா னுலில் வருந்துணை வேறாய்ச் செல்வர்
உதித்திடு காலந் தன்னில் உயர்சேயின் திங்கள் ரண்டு
சதமுடன் பூர்வஞ் சொன்னோம் சங்கரி கேட்டி டாயே.

33. அதற்கு மேல் வறுமை யில்லாதவன். தன் சுற்றத்தாருக்கு மேலாக வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய முப்பத்து நான்காம் வயதில் உடன் பிறந்தவர் வேறாகச் சென்று விடுவர். ஜாதகன் பிறப்புக் காலத்தில் செவ்வாய் மகாதசையில் இரு மாதங்கள் பாக்கி, என்று இவ்விதம் முதல் பாகத்தைச் சொன்னோம். பார்வதியே! கேளுங்கள்.

**வேறு**

34. அத்திரியே ஜனனமுதல் ஐந்து வீட்டில்
அன்புடனே கிரகம்நின்றால் பலனெவ் வாறு
வித்தகனுக் கிருபத்து ரண்டாண் டின்மேல்
விளம்புவோம் மாலிகா யோகஞ் சொல்வோம்
குத்தமிலா பூமிவிருத்தி சல்லியம் வாங்கான்
குலமதிப்புக் கொண்டிடுவன் குண்டை விருத்தி
பத்தினியும் வந்தபின்பு பிறைபோல் யோகம்
தானியச் செட்டுமிகும் பணியோர் விருத்தி.

---

1. திருவள்ளூர் 2. புதையல்.

34. அத்திரி முனிவரே ! ஜன்ம லக்கினம் முதல் ஐந்து வீடுகளில் தொடர்ச்சியாக கிரகங்கள் இருந்தால் ஏற்படும் பலன் என்ன ? அன்புடன் கூறுங்கள். ஜாதகனுக்கு இருபத்திரண்டாம் வயதுக்கு மேல் **மாலிகா யோகம்** ஏற்படும் என்று சொல்லுவோம். நல்ல விளை நிலங்கள் விருத்தியாகும். கடன் வாங்காதவன். தன் பந்துஜனங்கள் கொண்டாடும்படி வாழ்வான். காளைகள் விருத்தியாகும். மனைவி வந்தபிறகு சந்திரன் போல் யோகம் வளரும். தானிய வியாபாரம் அதிகமாகும். பண்ணை ஏர் விருத்தியாகும்.

---

## ஜாதகம் 42

1. பொன்சனி மீன மாகப் புகர்குசன் பானு சீயம்
சந்திரன் சாடி யாகச் சதிகயர் மேரு வாகப்
புந்தியு மலவன் புக்கப் பின்சிகி மிதுன மாக
இந்தவாறு கோள்கள் நின்று இலக்கினம் வீணை யாக ;

1. குரு சனி மீனத்திலும், சுக்கிரன் செவ்வாய் சூரியன் சிம்மத்திலும், சந்திரன் கும்பத்திலும், ராகு தனுசிலும், புதன் கடகத்திலும், கேது மிதுனத்திலுமாக நவக்கிரகங்கள் நின்று, லக்கினம் மிதுனமாக இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| குரு சனி | | | லக்கினம் கேது |
| சந்திரன் | இராசி சக்கரம் | | புதன் |
| | | | சுக்கிரன் செவ்வாய் சூரியன் |
| ராகு | | | |

2. பலன்தனைப் புகலு மென்று பார்வதி கேட்கும் போது
நலமுள புயண்டர் சொல்வார் நாயகன் ஜனன மாகும்
குலவுமில் கீழ்மேல் வீதி [1]குபேரன்தன் வாடை யாகும்
பலமிலா வீசன் கீழ்ப்பால் பூதவா கனத்தா ளூத்ரம்.

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும் போது, நன்மை மிக்க புயண்ட முனிவர் கூறுகின்றார். பிறப்பது ஆண் ஜன்மம். அவன் வீடு, கிழக்கு மேற்கான வீதியில் வடக்கு வரிசையிலுள்ளது. சிவ பெருமானின் ஆலயம் ஒன்று, பாழடைந்து, கிழக்கில் உள்ளது. வடக்கில் பூதத்தை வாகனமாயுடைய காளி கோயிலுண்டு.

3. அருகினில் மாரி தங்கும் ஆதிமால் மேல்பால் பாழாம்
வருகுவான் ஜேஷ்ட னாக வயன்குல மென்று சொல்வோம்
பெருந்தந்தை யில்ல மாகும் பேசுவோங் குடும்பச் சேதி
திருகிலாத் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

3. அருகில் மாரியம்மன் கோயில் ஒன்றுள்ளது. திருமாலின் ஆலயம், மேற்குத் திக்கில், பாழடைந்து உள்ளது. ஜாதகன் தன் தந்தைக்கு மூத்தவனாக, குயவர் குலத்தில் பிறப்பான் என்று சொல்லுவோம். பிறப்பது தந்தை வீடாகும். அவனுடைய குடும்பச் செய்திகளைக் கூறுகின்றோம். தீமையில்லாத தவங்களை இயற்றும் தேவியே ! கேளுங்கள்.

1. வடக்கு

4. தந்தையின் துணையா ளென்று சத்திமா ரிருவ ரென்றோரும்
நொந்திடு மற்ற வெல்லாம் நுவன்றவா ணிலையோ னவன்
அந்தவன் சேதி சொல்வோம் அதிகமாய் வார்த்தை கூறான்
கந்தன்மேல் பத்தி பூண்பன் காதலிக் கிட்ட னவன்.

4. ஜாதகனின் தந்தைக்கு உடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவரும் சகோதரிகள் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர்களெல்லாம் நிலையார். கூறிய சகோதரன் தந்தைக்கு இளையவன். அவனுடைய செய்திகளைக் கூறுவோம். அதிகமாகப் பேசாதவன். முருகப்பிரான்மீது பக்தியுள்ளவன். மனைவிக் கன்பன்.

5. மனமது கவடு மில்லான் மங்கள வார்த்தை சொல்வன்
தனயன்சொல் தட்டா னவன் தன்குலத் தொழிலுஞ் செய்வன்
வனிதையால் வேறுய்ச் செல்வன் வாக்குச்சொல் லிரண்டு [முள்ளான்
நினைப்பதை முடிக்க வல்லன் நேர்ந்திடும் பித்தச் சூடு.

5. மனத்தில் கபட மில்லாதவன். எப்போதும் சுபமான வார்த்தைகளையே பேசுபவன். தன் சகோதரனுடைய வார்த்தையை மீறாதவன். தன் குலத் தொழிலையே செய்துவருவான். ஆனால் மனைவியால் தனியாகச் சென்று விடுவான். இருவிதமாகப் பேசுவான். எண்ணிய காரியத்தை முடிக்க வல்லவன். பித்தச் சூட்டு நோயுள்ளவன்.

6. சுகதுக்கங் கலந்து வாழ்வன் தோகையுந் தென்பால் நேர்வள்
தகைமையாய்ச் சுதர்பெண் மூவர் தங்கிடு மாண்பா லொன்று
பகையென்று மனத்தில் வையான் பணிந்தோருக் குதவி செய்வன்
அகமது சிலர்க்குச் செய்வன் அற்பமாங் கோபங் கொள்வன்.

6. சுகதுக்கம் கலந்து வாழ்ந்து வருவான். மனைவி தெற்குப் பக்கத்திலிருந்து வாய்ப்பாள். ஒரு புத்திரனும் மூன்று புத்திரிகளும் தோன்றுவர். எவரையும் விரோதியென்று மனத்தில் எண்ணாதவன். தன்னை வந்தடைந்தவர்களை ஆதரிப்பான். சிலருக்கு வீடு கட்டிக் கொடுப்பான். சிறிது கோபமுள்ளவன்.

7. செலவுகள் செய்வா னவன் தீர்க்கமாய் வயது முள்ளான்
தலைவியே தந்தை சேதி சாற்றுவோ மினிமே லாக
நிலையிலார்க் குதவி செய்வன் நேமியில் நல்லோ னவன்
பலபேரை வசியங் கொள்வன் பந்துவிற் கினிய னவன்.

7. செலவுகள் அதிகம் செய்வான். நீண்ட ஆயுளுள்ளவன். தாயே! ஜாதகனின் தந்தையின் செய்தியைக் கூறுவோம், இனி. ஏழைகட்கு உபகாரம் செய்வான். உலகில் நல்லவனாக இருப்பான். பல பேர்களை வசீகரிக்கும் தன்மையன். தன் சுற்றத்தாருக்குப் பிரியமானவன்.

8. மாநிறம் பித்த தேகி [1]வளைவுகள் சிலர்க்குச் செய்வன்
ஊனமில் லாதாத தேகி உறுதியில் லாத நெஞ்சன்
பான்மையாய்ப் பேசு வானும் பற்களிற் பிணி யனந்தம்
ஈனமாம் புத்தி யில்லான் எய்திடும் நாபிச் சூடு.

---

[1] இருப்பிடம்=வீடு

8. மாநிற முள்ளவன். பித்த சரீர முள்ளவன். சிலருக்கு இருப்பிடம் அமைப்பான். ஊனமில்லாத தேகத்தையுடையவன். திடமில்லாத மனத் தன். பொருத்தமாகப் பேசுபவன். பற்கள் நோய் மிகுதியாக உள்ளவன். அற்ப புத்திகள் இல்லாதவன். நாபிச்சூடுள்ளவன்.

9. பொன்பணி யதிகஞ் சேர்க்கான் தலைவியால் மனமுந் துன்பம்
தன்கரங் கமல ரேகை சங்குசக் கரமு முண்டு
சொன்னவிக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் ஆனையி னிறத்த னவன்.

9. பொன் ஆபரணங்கள் அதிகம் சேர்க்காதவன். தன் மனைவியால் மனக் கஷ்டம் அடைவான். தன் கையில் கமலரேகை யுள்ளவன். சங்க ரேகையும் சக்கர ரேகையும் உள்ளவன். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். யானையின் நிறம் போல் கரு நிறமுள்ளவன்.

10. தன்னுடல் மெலிவு நீட்சி சமகல்வி ஊக வானும்
அன்னியர்க் குதவி செய்வன் அடாவடி தன்னில் செல்லான்
முன்கோபம் வெளிக்காட் டாதான் மூலச்சூ டுடைய னவன்
துன்மைய யெவர்க்கு மெண்ணான் சோம்பலுங் கொஞ்ச
[முள்ளான்.

10. மெல்லிய சரீரமுள்ளவன். உயரமாக இருப்பான். சமமான கல்வி யறிவுள்ளவன். ஊகமுள்ளவன். பிறருக்கு உபகாரி. அடாவடியாகப் பேசாதவன். முன் கோப முள்ளவன். ஆனால் அதை வெளிக்காட் டாதவன். மூலச்சூட்டு நோயுள்ளவன். ஒருவருக்கும் தீங்கு எண்ணாதவன். சிறிது சோம்பலுள்ளவன்.

11. வறுமைக ளில்லா னாகும் வரவுக்குச் செலவ நேகம்
பெரியோர்சொல் கடவா னாகும் புன்புத்தி யுடைய னாகும்
திருகிலான் நற்கு ணத்தான் சொல்லதைக் காப்பா னாதம்
பரம்பரைத் தொழிலைச் செய்வன் பாரது சேர்க்கா னாகும்.

11. வறுமை யில்லாதவன். ஆனால் வரவுக்கு மேல் செலவுள்ளவன். பெரியோர்கள் வார்த்தையை மீறாதவன். பின்புத்தி யுள்ளவன். சூதுகளில் லாதவன். நற்குண முள்ளவன். சொன்னபடி நடப்பவன். தன் பரம்பரைத் தொழிலைச் செய்து வருவான். விளை நிலங்களைப் பெருக்காதவன்.

12. தன்துணை கன்னி ரண்டு தங்கிடும் மற்றோர் சேதம்
சொன்னதில் முன்னோள் தானுஞ் சுகமிலா வாழ்வ ராளவள்
தென்திசை வரனும் நேருஞ் சுதன்தோன்றிச் செல்வா னவன்
கன்னிகை கயிறி ழந்து கலப்பளாந் தாயில் லத்தில்

12. உடன் பிறந்த சகோதரர்களில் இரு பெண்கள் உண்டு. மற்றவர்கள் நிலையார். கூறியவர்களில் மூத்தவள் சுகமில்லாமல் வாழ்ந்து வருவாள். அவளுக்கு, தெற்குத் திசையிலிருந்து, கணவன் வாய்ப்பான். ஒரு புத்திரன் பிறந்த பிறகு கணவன் இறந்து விடுவான். கன்னிகையும் மங்களத்தை இழந்து தாயில்லத்தில் வாழ்ந்து வருவாள்.

13. மாதுவும் நாணி மூந்து மாதுரு வில்லஞ் சேர
ஓதுவீ ரந்தச் சங்கை உறைந்தது பூர்வத் தோடம்
ஏதுதான் செய்தா ளத்தை இயம்புவீர் முனியே நீர்தாம்
காதலி பூர்வங் கேளாய் கடையூர்க்குக் கீழ்ப்பா லாக ;

13. ஜாதகனின் சகோதரி, கணவனை இழந்து, தன் தாய் வீட்டில் வசிக்கும் படியான காரணத்தைச் சொல்லுங்கள். முற்பிறவியில் என்ன தீச்செயல்கள் புரிந்தாள்? அதைக் கூறுங்கள். முனிவரே! பெண்ணின் முற்பிறவியைக் கேளுங்கள். திருக்கடையூருக்குக் கிழக்கில் ;

14. சின்னவூர் தன்னி லேதான் ஜனித்தனள் கங்கை சேயாய்ப்
பொன்பணி யுடைய ளாகிப் பூவையும் வாழு நாளில்
தன்வரன் தன்னோ டொத்துச் சங்கரன் விழாக்குச் சென்று
அன்னவ ரடிப ணிந்து அணுகினள் கடைவீ திக்கு.

14. உள்ள சிறு ஊரில், வேளாள குலத்தவளாகப் பிறந்தாள். பொன் ஆபரணங்கள் உடையவளாகி வாழ்ந்து வருங்காலத்தில், தன் கணவனுடன் சிவபெருமானின் திருவிழாவுக்குச் சென்று, அவரது அடிகளைப் பணிந்து, கடைத்தெருவுக்குச் சென்றாள்.

**கடையில் பொருள்பெற்றுப் பணம் தராமல் சென்ற தோஷம்**

15. குங்கும மஞ்சள் சீப்புக் கோதையும் வாங்கிக் கொண்டு
தங்கமு மீயா ளாகிச் சர்வமான் போல்ப றந்தாள்
அங்கவன் பின்பால் பார்த்து அம்மாதைக் காணா னாகிச்
சிங்கம்போல் கோப முற்றுச் செப்புவான் சாபந் தானே.

15. குங்குமம் மஞ்சள் சீப்பு இவைகளை வாங்கிக் கொண்டு, அதற்குரிய பொருளைக் கொடுக்காமல், மானைப் போல் வேகமாகச் சென்று விட்டாள். கடைக்காரன் பின்னால் அதை யறிந்து பெண்ணைத் தேடியும் காணாமல், சிங்கத்தைப் போல் கோபமடைந்து சாபமிட்டான்.

16. மஞ்சளு மாகா முன்ன மாரனு மரண மாகி
மிஞ்சிய ஜன்மந் தன்னில் வினையாகுங் காலந் தன்னில்
நஞ்சாகுஞ் சிவப்பு மஞ்சள் நாணது இழந்து மாது
பஞ்சுபோல் மனத்த ளாகிப் பாவையும் வாழ்வா யென்று ;

16. நீ எடுத்துச் சென்ற மஞ்சள் தீரா முன்னமேயே உன் மணாளன் மாண்டு, மறு பிறவியிலும் நல்ல சமயத்தில் உனக்கு மங்கல்யம் எடுபட்டு, மஞ்சள் சீப்பு இவைகளில்லாமல் துன்பமடையும் மனத்தினளாகி வாழ்ந்து வருவாய், என்று ;

17. தெருத்தூளைத் தூற்றிச் சென்றான் சேர்ந்தது வந்தத் தோடம்
அரிவைக்கு வந்த வாண்டில் அவள்வரன் மரண மாகிக்
குறைவுள மனத்த ளாகிக் கந்தன்தன் பதிக்குச் சென்று
உறைகுவா ளிக்கு லத்தில் உறைந்திடும் வணிபன் சாபம்.

**17.** தெருத்தூளே வாரி இறைத்தான். அந்தத் தோஷம் வந்து அடைந்தது. பெண்ணும் அதே வருடத்தில் கணவனை இழந்து, மனச் சஞ்சலம் ஏற்பட்டு, முருகப் பெருமாள் ஆலயத்துக்குச் சென்று............ (இறந்த பிறகு) மீண்டும் இக்குலத்தில் பிறப்பாள். வியாபாரியின் சாபம் தொடரும்.

### சாந்தியில்லாத தோஷம்

18. மங்கையும் விதவை யாவள் வறைகுவீ ரதற்குச் சாந்தி
குங்கும மஞ்சள் தோடம் கூறவே மாட்டோம் யாங்கள்
பங்கமே படுவா ளாவள் பகருவோ மிவள்பின் ஜன்மம்
சிங்கமால் வாழு கின்ற சோளங்கி புரத்தி லேதான் ;

18. பெண்ணும் இடையில் கைம் பெண்ணுவாள். அதற்குச் சாந்திகள் கூறுங்கள். **குங்குமம் மஞ்சள் திருடியதற்குச் சாந்தி கூறவே** மாட்டோம். அவசியம் குறைப் படுவாள். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். நரசிம்மப் பெருமான் வாழ்ந்து வரும் **சோழங்கி** புரத்தில் ;

19. உதிப்பளா மிக்கு லத்தில் உயர்வான குடும்பி யாவள்
அதிபதிக் கிளையாள் சேதி மறுவிடும் பித்த சோகை
சதியிலா மனத்த ளாவள் தந்திர மொழியு முள்ளாள்
மதிமுகம் மதியீ னத்தாள் மாரனும் மேல்பால் நேர்வன்.

19. இதே குலத்தில் பிறப்பாள். உயர் வுள்ள குடும்பத்தை அடைவாள். ஜாதகனுக்கு இளைய சகோதரியின் செய்தியைச் சொல்லுகின்றோம். பித்தச் சோகை நோயுள்ளவள். தீதான மன முள்ளவள். தந்திரமாகப் பேசு பவள். அழகிய முகமுள்ளவள். புத்திக் குறைவுள்ளவள். மேற்குத்திசை யிலிருந்து கணவன் வாய்ப்பான்.

### சகோதரபாவ கிரகநிலை

20. சுதர்களு மில்லா ளாகித் தோகையு மரிப்ப ளாவள்
எதுவிதக் குற்றத் தாலே இவன்துணை யிவ்வா றுரும்
உதயனும் புகர்சேய் மூன்றில் உறைந்ததால் துணைகள் துன்பம்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

20. புத்திர பாக்கியம் இல்லாமல் இறந்து விடுவாள். என்ன காரணத் தால் ஜாதகனுடைய சகோதரிக்கு இப்படி நேரும் ? சூரியனும் சுக்கிரனும் செவ்வாயும் மூன்றாமிடமாகிய சகோதர ஸ்தானத்தில் இருப்பதால், உடன் பிறந்தவர்கட்குத் துன்பமுண்டாகும். கதியில்லாதவர்களை ஆதரிக்கும் தேவியே ! கேளுங்கள்.

21. பாலகன் மணத்தின் காலம் பகருவோ மிருபா னறில்
நீலியு மேல்பால் நேரும் நுவலுவோ மவள்கு ணத்தைச்
சீலியா முன்கோ பத்தாள் சனசகா யங்கள் செய்வாள்
ஞாலமேல் வறுமை காணுள் நவின்றிடா ளயலார் குற்றம்.

21. ஜாதகனுடைய திருமணக்காலத்தைக் கூறுகின்றேம். அவனுடைய இருபத்தாறும் வயதில் மேற்குத் திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். நல்லொழுக்க முள்ளவள். முன் கோபமுடையவள். ஜனங்களுக்கு உபகாரி. உலகில் தரித்திர மில்லாதவள். பிறர்மீது குற்றம் கூருதவள்.

22. பதிபாக்ய முடைய ளாவள் தாய்போல வாத ரிப்பள்
பதியினில் திருவு மோங்கும் பாவையுந் தீர்க்க ஜீவி
வதிட்டருந் தடுத்துச் சொல்வார் மாரனுக் கிரண்டு தாரம்
விதியினல் நேரு மென்றேம் விளம்புவீ ரந்தச் சங்கை.

22. கணவனுல் பாக்கிய முள்ளவள். தாயைப் போல் எல்லோரையும் ஆதரித்து வருவாள். வீட்டில் லட்சுமீ வசித்து வருவாள். நீண்ட அயுளுள்ளவள். வசிஷ்டமுனிவர் இடை மறித்துச் சொல்லுகின்ருர். முற்பிறவியின் விதியினுல் ஜாதகனுக்கு இரு மனைவியர் ஏற்படுவர் என்கிறேம். அந்தச் சந்தேகத்தைத் தெளிவாக்குங்கள்.

### இரு மனைவியர் ஏற்படுதற்குரிய கிரகநிலை

23. சத்தமந் தன்னில் ராகு சார்ந்துமே சத்த மத்தோன்
குற்றமா யெட்டோ னேடு கூடியே தசமந் தங்கப்
பத்தினி யிரண்டு வென்றேம் பராசரும் தடுத்துச் சொல்வார்
வித்தகன் தனக்குத் தாரம் மேவிடு மொன்றே யாக.

23. ஏழாம் வீட்டில் ராகு இருப்பதாலும், ஏழாம் வீட்டுக்குரிய குரு எட்டாம் வீட்டுக்குரிய சனியுடன் பத்தாம் வீட்டில் இருப்பதாலும், இருமனைவியர் ஏற்படுவர் என்று சொல்லுகின்றேம். பராசர முனிவர் மறித்துச் சொல்லுகின்ருர். ஜாதகனுக்கு ஒரே மனைவி வாய்ப்பாள்.

### ஏழாம்பாவம் : கிரகநிலை

24. காரணம் புகல்வீ ரையா கலையுமே நவம தாகித்
திரமா யிரண்டில் புந்தி சேர்ந்திடப் பொன்னேன் பார்க்கப்
பாரியு மொன்றே தீர்க்கம் பாவையு மிவன்முன் னுலே
சேருவாள் கால னுடு செல்வதி கேட்டி டாயே.

24. காரண மென்ன வென்று கூறுங்கள். முனிவரே! சந்திரன் ஒன்பதாமிடத்தில் இருந்து புதன் இரண்டாமிடத்தில் இருந்து அவனைக் குரு பார்ப்பதால் மனைவியொருத்தியே யாவள். அவள் ஜாதகனுக்கு முன்பாகவே இறந்து விடுவாள். செல்வியே ! கேளுங்கள்.

25. சுதர்களு மைந்து தோன்றும் சோர்வுறு மூன்றுஞ் ஜன்மம்
சதமுட னுண்பால் ரண்டு சத்திமா ரவ்வாறு தீர்க்கம்
புதல்வர்க ளிவன்மே லாகப் புகழ்ச்சியாய் வாழ்வா ராவர்
அதிதியே யிவனின் பூர்வம் அறைகின்றேங் கேட்டி டாயே.

25. ஐந்து புத்திரர்கள் தோன்றுவார்கள். மூன்றும் குழந்தை இறந்து விடும். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் தீர்க்கமாயிருப்பர். இவனுடைய புதல்வர்கள் இவனுக்குமேல் புகழோடு வாழ்ந்து வருவார்கள். தேவியே ! இவனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம், கேளுங்கள்.

26. சிங்கள நாட்டி லேதான் ஜனித்தனன் வேளா ளுக
மங்கையு மதலை யுண்டா யரசர்பால் கூலி வேலை
அங்கவன் செய்து வந்து மனைவியுந் தானு மாகத்
துங்கமாஞ் சேது வந்து தீர்த்தமுந் தோய்ந்து மேதான் ;

26. சிங்களநாட்டில் வேளாள குலத்தனுகப் பிறந்தான். மனைவி மக்களையடைந்து, அரசாங்கத்தில் கூலி வேலை ஏற்று, வாழ்ந்துவந்து, தன் மனைவியுடன் தூய்மையான சேதுவிற்குச் சென்று நீராடிவந்து ;

27. பேதியால் மரண மாகிப் பிரமனுல் வரையப் பட்டுச்
சூதிலா விக்கு லத்தில் தோன்றுவா னென்று சொல்வோம்
காதலன் யோகச் சேதி கழறுவோ மினிமே லாக
நீதிமான் பொறுமை சாலி நிதானமாய் வார்த்தை யுண்டு.

27. பேதியால் மரணமடைந்து, மீண்டும் பிரமனுல் பரைக்கப்பட்டு, சூதுகளில்லாத இக்குலத்தில் தோன்றினுன் என்று சொல்லுகின்றேம். ஜாதகனுடைய யோகச் செய்திகளைக் கூறுகின்றேம். நீதியுள்ளவன். பொறுமைசாலி. நிதானமாகப் பேசுவபன்.

28. தனஞ்சேருஞ் செலவு முண்டு தரணியில் வறுமை காணுன்
இனமதிப் போடு வாழ்வான் இருபத்தெட் டாண்டின் மேலாய்
மனமது தீர முண்டு மாநிலஞ் சல்லியங் காணுன்
அனையோர்க்கு மிவன்சொல் மேன்மை அடாவடி கூரு னுவன்.

28. செல்வங்கள் பெருகும். செலவும் அதிகமாகும். உலகில் வறுமை யில்லாதவன். தன் பந்துக்களால் நன்கு மதிக்கப்படுவான். ஜாதகனுடைய இருபத்தெட்டாம் வயதுககு மேல் மனத்தில் தைரியம் அதிகமாகும். கடன் உபத்ரவம் இல்லாதவன். எல்லோருக்கும் இவனுடைய வார்த்தை மேன்மை யாகும். அடாவடியாகப் பேசாதவன்.

29. அறுமுக னருளு மோங்கும் அற்பபுத் திகளுங் கொஞ்சம்
பெருமையாய்க் குடும்பி யாவன் பேச்சதைக் காப்பா னுவன்
வருவோரை யாத ரிப்பன் மனத்தினில் கவடு மில்லான்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

29. ஆறுமுகக்கடவுளின் அருள் பெருகும். சிறிது அற்பமான புத்தி களும் உள்ளவன். பெருமையுள்ள குடும்பமடைவான். தன்வார்த்தைகளைக் காப்பாற்றுவான். தன்னிடம் வருபவர்களை ஆதரிப்பான். மனத்தில் கபட மில்லாதவன். கரிய யானை முகத்தோனைப் பெற்ற தேவியே ! கேளுங்கள்.

30. இல்லமு முப்பாண் டின்மே லெய்திடும் பால னுக்குத்
தல்லியின் குணத்தைச் சொல்வேன் சாந்தமாம் பலவீ னத்தாள்
அல்லலெப் போதுங் காணுள் அன்னம்போல் சாய லொக்கும்
நல்லவ ளாகி வாழ்வள் நாயகன் மனத்துக் கேற்றேள்.

30. ஜாதகனுக்கு முப்பதாம் வயதுக்குமேல் வீடு கிடைக்கும். தாயினுடைய குணத்தைக் கூறுகின்றேம். சாந்த முடையவள். பலவீன முள்ளவள். எப்போதும் உபத்திரவ மில்லாதவள். அன்னம் போன்ற நடையுள்ளவள். நல்லவளாக வாழ்ந்து வருவாள். தன் கணவன் மனத்துக் கேற்றவள்.

31. அறமதி லிச்சை யுண்டு அன்புள மனத்த ளாகும்
திருகுக ளெவர்க்கு மெண்ணுள் செறிந்திடும் பித்த வாயு
வருந்துணை யாண்பா லொன்று மங்கைமா ரிருவ ரென்றேம்
குறைவுண்டு மற்ற வல்லாம் கோதைதா யில்லம் வாழ்வள்.

31. தருமஞ் செய்வதில் விருப்பமுள்ளவள். அன்புள்ள மனத்தினள். ஒருவருக்கும் தீங்குகள் எண்ணுதவள். பித்தவாயு உள்ள சரீரமுள்ளவள். உடன் பிறந்தவர்களில் சகோதரர் ஒருவரும் சகோதரிகள் இருவரும் உண்டு. மற்றவை நிலையா. தன் தாயில்லத்தில் வாழ்வாள்.

32. மங்கையின் பூர்வஞ் சொல்வோ மாயூர மேல்பா லாக
அங்கவள் சிறுவூர் தன்னில் அனுகினுள் குலால வம்சம்
எங்கள்போ லதிதிக் கன்னம் ஈந்துமே பவமில் லாமல்
சங்கையாய்க் கால னுடு சார்ந்துமே பிரமன் லக்கம் ;

32. தாயினுடைய முற்பிறவியைச் சொல்கின்றேம். மாயவரத்துக்கு மேற்கில் உள்ள சிற்றூரில், குயவர் மரபில் பிறந்தாள். எங்களைப் போன்ற துறவிகளுக்கு அன்னமளித்தும் பாவச்செயல்களில்லாமலும் இறந்தாள். மீண்டும பிரமனுல் படைக்கப்பட்டு ;

33. வந்தவ ளென்று சொல்வோ மறைகின்றே மவள்பின் ஜன்மம்
கந்தன்வாழ் போரூர் தன்னில் கலடபளாம் பிரம்ம சேயாய்
இந்ததோர் ஜன்மந் தன்னி லெய்தின புண்ய மென்ன
சிந்தையும் நல்ல தாயும் தேவதாப் பத்தி யாயும் ;

33. பிறந்தவள் என்று சொல்லுகின்றேம். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். முருகப்பிரான் வாழ்ந்துவரும் திருப்போரூரில் அந்தணகுலத்தவளாகப் பிறப்பாள். இப்பிறவியில் செய்த புண்ணியங்களென்ன ? நல்ல மனமுள்ளவளாயும் தெய்வபக்தி உடையவளாயும் ;

34. மாரன்தன் மனம்போல் வாழ்ந்தும் வருவோரை யாத ரித்தும்
நாரியும் வாழ்ந்த தாலே நல்குவாள் மறைக்கு லத்தில்
கூறுவோந் தந்தை பூர்வம் கோகர்ணந் தன்னி லேதான்
தீரமாய் வைசியச் சேயாய் ஜனித்துமே செட்டுச் செய்து ;

34. தன் கணவன் மனமறிந்து வாழ்ந்துவந்து, தன்னை வந்தடைந்தவர்களை ஆதரித்து வந்ததால், அந்தணகுலத்தில் பிறந்தாள். தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருக்கோகர்ணத்தில் வைசியகுலத்தில் பிறந்து, வர்த்தகம் செய்துவந்து;

35. பாரியு மதலை யுண்டாய்ப் பகவானின் பத்தி யாகித்
தேரினோர்க் கன்ன மீந்து சென்றனன் கால னூடு
[1]ஆரியன வரையப் பட்டு அணுகினு னிக்கு லத்தில்
வேறொரு ஜன்மஞ் சொல்வோம் வேலங்கா டதனி லேதான் ;

35. மனைவி மக்கள் ஏற்பட்டு, தெய்வ பக்தியுடன் பெரியோர்களுக்கு அன்னமளித்துவந்து, மரணமடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தான். மறுபிறவியைச் சொல்லுகிறேன். திருவாலங்காட்டில் ;

36. மனுகுலம் தனிலு திப்பா னறைகுவீர் கர்ம காலம்
கனமுள முப்பா னேழில் கழறுவோந் தந்தை கண்டம்
சினமிலா முப்பான் ரண்டு ஆண்டினி லன்னை செல்வாள்
கனமுள தவங்கள் செய்யுங் காதலி கேட்டி டாயே.

36. க்ஷத்திரிய குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய கர்மகாலத்தைச் சொல்லுங்கள். அவனுடைய முப்பத்தேழாம் வயதில், தந்தைக்கு மரணமேற்படும் என்போம். முப்பத்திரண்டாம் வயதில் தாய் இறப்பாள். புண்ணியமான தவங்களை இயற்றும் தேவியே ! கேளுங்கள்.

37. அன்பது மூன்று வாண்டில் அவள்பாரி கண்ட மெய்வள்
இன்னவன் தனக்குச் சொல்வோம் எழுபது வாண்டு தன்னில்
கன்னியா மாதம் தன்னில் கழறுவோ மார கங்கள்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

37. ஜாதகனது ஐம்பத்து மூன்றும் வயதில் அவனுடைய மனைவி இறப்பாள். ஜாதகன் தன் எழுபதாம் வயதில் புரட்டாசி மாதத்தில் மரணமடைவான். உயர்ந்த கணவனை யடைந்த தேவியே ! கேளுங்கள்.

38. பின்ஜன்மம் கொங்கு நாட்டில் பிறப்பனு மிக்கு லத்தில்
பொன்பொரு ளுடைய னுகிப் புகழ்ச்சியாய் வாழ்வா னுவன்
அன்னவன் ஜனன காலம் அரவுதன் தசையி லேதான்
சொன்னது வாண்டு எட்டும் திங்களு மவ்வா ருகும்.

38. மறுபிறவி, கொங்குநாட்டில், இதே குலத்தில் பிறப்பான். பொன் செலவம் மிகுதியாக உள்ளவனுகி, கீர்த்தியுடன் வாழ்ந்துவருவான். ஜாதகனின் ஜனனகாலத்தில் ராகுமகாதசையில் பாக்கி எட்டு வருடங்களும் எட்டு மாதங்களுமாம்.

---

[1]. பிரமன்

## ஜாதகம் 43.

1. மதியும் குசனுந் தனுசிலுற
   மாலும் புகரும் வீணையுற
உதயன் வண்டி சிகிகன்னி
   உரகன் மீனம் குருகோலில்
விதியன் மானில் உயிர்வீணை
   விளம்பும் பலன்கள் தவமுனியே
துதிசெய் பராசர் தாஞ்சொல்வார்
   உதிக்கும் ஆண்பால் ஜனனமுமே.

1. சந்திரன் செவ்வாய் தனுசிலும், புதன் சுக்கிரன் மிதுனத்திலும், சூரியன் கடகத்திலும், கேது கன்னியிலும், ராகு மீனத்திலும், குரு துலாத்திலும், சனி மகரத்திலும் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருந்தால், ஏற்படும் பலனைக் கூறுங்கள், முனிவரே! என்று பார்வதி கேட்க, பராசரமுனிவர் சொல்லுகின்றார். பிறப்பது ஆண் மகன்.

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | லக்கினம் புதன் சுக்கிரன் |
| | இராசி சக்கரம் | | சூரியன் |
| சனி | | | |
| சந்திரன் செவ்வாய் | | குரு | கேது |

2. வந்தோ னில்லம் வடபார்வை
   மால்கோட் டங்கள் பெரிதாகும்
முந்தி ஊராம் மார்க்கமுறும்
   வேந்தர் வாசம் கங்கைகுலம்
அந்தரஞ் ஜனன மென்றுரைப்போம்
   அறைவோம் குடும்பச் சேதிதனை
தந்தை சேதி தான்புகல்வோஞ்
   சமர்த்தாய் வார்த்தை யுளனவன்.

2. பிறந்த வீடு வடக்குநோக்கியுள்ள வாயிலுள்ளது. அங்குத் திருமாலின் ஆலயம் பெரிதாயுள்ளது. அது பெரிய ஊராகும். பக்கத்தில் சாலையொன்றுண்டு. அங்கு அரசர் வசிப்பார். வேளாள குலத்தில் ஜாதகன் பிறப்பான் என்று சொல்லுகின்றோம். தன் தந்தைக்குக் கடைப்புதல்வனவான். குடும்பச் செய்திகளைக் கூறுகின்றோம். ஜாதகனின் தந்தையின் விஷயங்களைச் சொல்லுகின்றோம். சாமர்த்தியமாகப் பேசுபவன்,

3. உள்ள துரைப்பன் பலர்நேயன்
உவமை யாகத் தான்புகல்வன்
பள்ளுப் பறைகள் தானுடையான்
பணிந்தோர் நேயன் பார்விருத்தி
கள்ள மில்லான் காலிவிருத்தி
கடந்தோர்க் கன்னம் கட்டுரையான்
சள்ளை யுடையன் நிவிர்த்திசெய்வன்
சாரும் பித்த வாயுவென்றோம்.

3. உள்ளதை உள்ளபடி சொல்லுடவன். பலருக்குப் பிரியமானவன். உவமானங்களோடு பேசுபவன். பள்ளுப் பறையர்கள் உள்ளவன். தன்னைத் துதிசெய்து வந்தவர்களை ஆதரிப்பான். விளை நிலம் விருத்தியாகும். கபட மில்லாதவன். கால்நடைகள் பெருகும். துறவிகட் கன்ன மளிப்பான். பொய் பேசாதவன். கடனுள்ளவன். அதைத் தீர்த்துவிடுவான். பித்த வாயு ரோகமுள்ளவன் என்றோம்.

4. துணைகள் இருநான் காகும்மே
தோன்று மதிலே சிலசேதம்
கனமாம் ஆண்பால் மூன்றுமிகும்
கன்னி காணன் காதலியே
தணிவா மனத்தன் அரசரிட்டன்
தரணி தனிலே செட்டுச்செய்வன்
சினமே யுண்டு வெளிக்காட்டான்
சொல்வோம் பூர்வ ஜன்மத்தை.

4. உடன் பிறந்தவர்கள் எட்டுப்பேர் ஆவர். அவர்களில் சிலர் நிலையார். மூன்று சகோதரர்கள் தீர்க்கமாயிருப்பர். சகோதரிகள் இல்லாதவன். தேவியே! அடக்கமுள்ள மனத்தினன். அரசருக்குப் பிரியமானவன். உலகில் வர்த்தகம் செய்து வருவான். கோபம் உள்ளவன். ஆனல் அதை வெளி விடாதவன். முற்பிறவியைச் சொல்லுகின்றோம்.

5. சென்னி மலையில் வடுகர்குலம்
ஜனித்துக் கிருஷி தானுண்டாய்
மன்னர் தம்மால் செட்டுச்செய்து
மனைவி மைந்த ருடையவனுய்ப்
பொன்னு மிகுதி தான்பெற்றுப்
பெரிதாய்த் தலங்கள் தான்சென்று
துன்னும் காலன் பதியடைந்து
சிரநான் கோனும் வரையவந்தான்.

5. சென்னிமலையில் வடுகர் குலத்தில் பிறப்பான். விவசாயம் செய்து வந்து, அரசாங்க வியாபாரம் செய்து, மனைவி மக்களைப் பெற்று, செல்வங்களை மிகுதியாக அடைந்து, புண்ணிய தலங்களுக்குச் சென்று, துன்பந்தரும் எமபுரம் அடைந்து, நான்கு தலைகளையுடைய பிரமன் படைக்க, பிறந்தான்.

6. வந்தோன் தனக்கு இப்பாலன்
வருவா னிவனின் குணங்கேளாய்
சிந்தை வெகுளி மாஞ்சிவப்பன்
சிரரோ மங்கள் நீட்சியுளன்
கந்தன் பக்தி கொண்டிடுவன்
கணக்கில் ஊகி கல்விமிகும்
தந்தை யில்லந் தனைவிட்டுச்
சார்வான் வெளியூர் சங்கரியே.

6. இங்ஙனம் பிறந்த தந்தைக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். இவனுடைய குணத்தைக் கேளுங்கள். வெகுளியான மனத்தினன். சிவந்த நிறமுள்ளவன். தலைமயிர்கள் நீண்டு இருக்கும். ஆறுமுகன்மீது பக்தி கொள்ளுவான். கணக்கில் ஊகமுள்ளவன். கல்விமான். தன் தந்தையின் வீட்டைவிட்டு வேற்றூர் செல்வான். சங்கரியே!

7. அறிவோர் நேயன் அரசரிட்டன்
அணுகிடும் கிராம கணக்குத்தொழில்
மருவாய் கிராமச் செட்டுமிகும்
அரசர் தம்மால் செட்டுச்செய்வன்
பொரையே சொல்லான் இளமனத்தான்
புகழ்ந்தோர்க் கன்பன் புண்ணியவான்
அறுமா முகத்தைத் தான்போற்றும்
அனைவோர் களையும் வசியங்கொள்வன்.

7. அறிந்தவர்கட்குப் பிரியன். அரசருக்கு இஷ்டன். கிராமக் கணக்கன் வேலை பார்த்து வருவான். கிராமத்தில் வர்த்தகம் பெருகும். அரசருடைய உதவியால் வர்த்தகம் செய்வான். பொய் பேசாதவன். இளகிய மனமுள்ளவன். தோத்திரம் செய்பவரை ஆதரிப்பான். புண்ணியசாலி. ஆறுமுகக் கடவுள்மேல் பக்தியுள்ளவன். எல்லோரையும் வசீகரிக்கும் தன்மையன்.

8. சீலம் போல வெளிமயக்கன்
சிவன்ரே கையுமே கரத்திலுறும்
ஞாலம் சேர்ப்பன் செலவுசெய்வன்
நாற்கா லிகள்முன் விருத்தியற்பம்
சால முதுகில் ரோமமுறும்
சமர்த்தாய் வார்த்தை தைரியத்தன்
ஆலம் போலப் பகைவர்க்கு
அணுகும் பின்னால் பூமியுமே.

8. நல்லொழுக்கமுள்ளவன்போல் பிறர் நினைக்கும்படி வாழ்வான். கையில் ருத்திரரேகையுள்ளவன். பூமியைப் பெருக்குவான். செலவாளி. முதலில் கால்நடைகள் விருத்தியுறா. முதுகில் உரோமம் அதிகமாக இருக்கும். சாமர்த்தியமாய்ப் பேசுபவன். தைரியசாலி. பகைவருக்குக் கொடிய விஷம்போன்றவன். பிற்காலத்தில் பூமி சேரும்.

9. ஆமே துணைமுன் ஆணிரண்டு
அனுகும் தீர்க்க மெனவுரைத்தோம்
போமே மற்றோர் பெண்காணுன்
பின்னால் தோடம் போற்றுகின்றோம்
காமன் தனக்கு வையைந்தில்
கன்னி நேர்வாள் தென்பாலில்
நேமியில் அவள்தன் குணங்கேளாய்
நீண்ட தேகி மால்நிறத்தாள்.

9. ஜாதகனுக்கு மூன்பிறந்த சகோதரரிருவர் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்று சொல்லுகின்றோம். ஒரு பெண் பிறந்து இறந்துவிடும். பிற்காலத்தில் தோஷம் என்று கூறுகின்றோம். ஜாதகனுக்கு இருபத்தைந்தாம் வயதில், தெற்குத்திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள். உலகில் அவளுடைய குணத்தைக் கேளுங்கள். நீண்ட தேகமுள்ளவள். கரிய நிறமுள்ளவள்.

10. நிறுத்தி வார்த்தை நடைநன்மை
நேரும் பித்தச் சூடென்றோம்
பொறுத்த குணமு மணம்போலப்
புகழ்ந்தோர்க் கீவள் பலவீனம்
மறுதா யிரண்டு மறுவிடுமே
மாது தனியா மழகுசமம்
வறியோர்க் கன்னம் தானீவள்
மெலிந்த தேகி வித்தகியே.

10. நிறுத்திப் பேசுபவள். நன்னடத்தையுள்ளவள். பித்தச்சூடுள்ளவள். (கணவன் மனம்போல்) பொறுமையான குணமுடையவள். தோத்திரம் செய்தவரை ஆதரிப்பாள். பலவீனமுள்ளவள். இரு தாய்மார்கள் உண்டு. இவள் தனியாக இருப்பாள். சமமான அழகுள்ளவள். வந்து யாசிக்கும் எளியவர்களுக்கு அன்னமளிப்பாள். மெலிந்த தேகமுள்ளவள்.

வேறு

11. வித்தகி வயது தீர்க்கம் விதுரருந் தடுத்துச் சொல்வார்
பத்தினி யிரண்டே யென்று பகருவோ முனியே யாமும்
குத்தத்தைச் சொல்லு மென்னக் குருவுமே ஏழோ னாகிச்
சுத்தமாய்ச் சரத்தி லேறச் சூரிய னிரண்டில் தங்க ;

11. இவள் நீண்ட வயதுள்ளவள். விதுரர் மறுத்துக் கூறுகின்றார். ஜாதகனுக்குஇருமனைவியர் ஏற்படுவர் என்று சொல்லுகின்றோம். முனிவரே! அதற்குரிய தோஷத்தைக் கூறுகின்றோம். குரு ஏழாம் வீட்டுக்குரியவனாகிச் சரத்தில் இருப்பதாலும், சூரியன் இரண்டாமிடத்தில் இருப்பதாலும் ;

12. இருமனை யென்று சொல்வோம் இயம்புவா ரத்திரி தாமும்
பிறைசுக னேழில் தங்கிப் புதன்புகர் பாாப்ப தாலே
ஒருமனை யென்று சொல்வோம் உதித்தவன் தனக்கு மேதான்
பெறுவழி ரேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

**12.** இரு மனைவியர் ஏற்படுவர் என்று சொல்லுகின்றோம். அத்திரி முனிவர் கூறுகின்றார். சந்திரனும் செவ்வாயும் ஏழாமிடத்தில் இருந்து, புதன் சுக்கிரன் பார்ப்பதால், ஜாதகனுக்கு மனைவி ஒருத்தியே, ஏற்படுவாள், என்று சொல்லுகின்றோம். விநாயகனைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

**வேறு**

13. இதற்குநே ரிடையாய்ச் சாதகச் சுருதி
இதிலேழாம் பாவத்தில் பாரும்
அதில்சொல்லும் விவர மிரண்டேழோன் கேந்திர
மாகிலுங் கோணத்தி லிருக்கச்
சதியிலாத் தார மொன்றென மொழிந்தோம்
சங்கைநீ விவரமாய்க் காண்பாய்
அதுநிற்க வர்க்கில் பரலுமே யொன்று
அணுகின பலத்தினால் சொன்னோம்.

**13.** இதற்கு ஆதாரமாக ஜோதிட சாஸ்திரத்தில் ஏழாம் பாவத்தைப் பாருங்கள். அதில் கூறும் விபரத்தைச் சொல்லுகின்றோம். இரண்டாம் வீடு ஏழாம் வீட்டுக்குரியவன் கேந்திரஸ்தானத்திலாவது கோணத்திலாவது இருந்தால், மனைவி யொருத்தியே என்று கூறுகின்றோம். சந்தேகத்தை நீ விபரமாகப் பார்ப்பாய். அது நிற்க, அஷ்டவர்க்கத்தில் ஒரு பரல் இருப்பதாலும் இவ்விதம் கூறினோம்.

**வேறு**

14. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
முதல்சுதர் தோட மெய்தும் விளம்புவோம் பின்பால் சேதி
அதிபன்தன் பூர்வந் தன்னை அறைகின்றோ மினிமே லாக
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

**14.** இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். முதலில் பிறக்கும் குழந்தை நிலையாது. பிற்பாகத்தில் மற்ற விபரங்களைச் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய முற்பிறவியைக் கூறுகின்றோம், இனி. கதியற்றவர்களைக் காக்கும் தேவியே! கேளுங்கள்.

15. தென்திசைப் பழனி நாட்டில் ஜனித்தனன் முதற்கு லத்தில்
தன்சுதர் மனைவி யுண்டாய்த் தரணியால் ஜீவித் தேதான்
அன்னவன் வாழு நாளில் அணுகிய வினையைக் கேண்மோ
கன்னிகை யொருத்தி பேரில் காணாத வார்த்தை சொன்னான்.

**15.** தெற்குத்திசையிலுள்ள பழனியில் அந்தண குலத்தில் பிறந்தான். மனைவி மக்களையடைந்து, உலகில் விவசாயம்செய்து ஜீவித்துவந்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஒரு பெண்ணின்மீது அபாண்டமான வார்த்தையை (பாராத வார்த்தைகளை)க் கூறினான்.

16. மாதுவும் வருத்த முற்று வறைந்தசா பத்தைக் கேண்மோ
தீதான வார்த்தை யென்மேல் செப்பின பாவிக் கேதான்
மேதினில் மறுஜன் மத்தில் விளங்காது துணைபெண் ணுந்தான்
காதலன் தந்தை யாஸ்தி காணுதான் வனவா சங்கள்.

16. பெண்ணும் மனவருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். தீயசொற்களை என்மீது சொன்ன பாவியே! உலகில் நீ மறுபிறவியில் உடன் பிறந்த சகோதரியில்லாமல் பிறந்து, தந்தையின் ஆஸ்திகளை அடையாமல், வனவாசத்தைப்போல் வாழ்ந்து வருவாய்.

17. இன்னமும் பலவாறு சொன்னாள் எய்திற்று அந்தத் தோடம்
துன்னிய கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
அன்னவ னுதிப்பா னுவன் அணுகிடு மாது சாபம்
தன்துணை பெண்பால் தோடந் தந்தையில் வாழா னுவன்.

17. என்றும், இன்னும் பலவிதமாகவும் கூறினாள். அந்தத்தோஷம் வந்தடைந்தது. துன்பம் தரும் எமபுரம் அடைந்து, மீண்டும பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தான். பெண்ணின் சாபம் தொடர்ந்து வரும். உடன் பிறந்த சகோதரிக்குத் தோஷமாகும். தன் தந்தையின் வீட்டில் வாழாதவன்.

18. சிலவேநாள் வனவா சங்கள் சிலசில வூரில் வாழ்வன்
நலமுள வதிட்டர் சொல்வார் நாயகன் முன்ஜன் மத்தில்
பலர்போற்றும் பிரம்ம சேயாய்ப் பிறந்தவ னிச்சென் மத்தில்
குலந்தாழ்வா யுதிக்கும் வண்ணம் கூறுவீர் விவரந் தன்னை.

18. சிற்சில ஊர்களில் சின்னாட்கள் வனவாசத்தைப் போல் வாழ்ந்து வருவான். நன்மையுள்ள வசிஷ்டமுனிவர் கூறுகின்றார். ஜாதகன் முற் பிறவியில் பலர் கொண்டாடும் அந்தண குலத்தவனாகப்பிறந்து, இப்பிறவியில் தாழ்வான குலத்தில் பிறக்கும் காரணமென்ன? விபரமாகக் கூறுங்கள்.

19. மறைகளை முன்ஜன் மத்தில் மறந்தனன் விரத மின்றிக்
குறைவான குலமு தித்தான் கூறுவோ மிவனின் யோகம்
அரசரால் தொழிலு மேற்பன் அறுமூன்று விரண்டாண் டின்மேல்
பிறைபோல யோகம் வாய்க்கும் பேசுவோ முப்பாண் டின்மேல்;

19. வேதங்களை முற்பிறவியில் மறந்து, நியமங்களில்லாமல் வாழ்ந்து வந்ததால், இப்பிறவியில் குறைவான குலத்தில் பிறந்தான். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். அரசாங்க உத்தியோகம் ஏற்பான். இருபது வயதுக்குமேல் சந்திரனைப்போல் யோகம் விருத்தியாகும். முப்பது வயதுக்குமேல்;

### புதையல் கிடைத்தற்குரிய கிரகநிலை

20. அரசரால் செட்டுச் செய்வன் அவன்பந்து வுதவி யாலே
பொருளது மேன்மை யோங்கும் பூமியும் அதன்பின் சேர்ப்பன்
தரையினால் நிதிநிட் சேபம் சார்ந்திடு முப்பா னுறில்
வருமாறு சொல்லு மென்ன மதிகுச னேழில் தங்க;

20. ஆசாரால் வர்த்தகம் செய்வான். அவன் பந்துக்களின் உதவியால் செல்வம் மேல்மேலும் விருத்தியாகும். அதற்குப் பின் பூமி வாங்குவான். முப்பத்தாறும் வயதில் பூமியிலிருந்து புதையல் கிடைக்கும். அதற்குக் காரணங்களென்ன ? சந்திரனும் செவ்வாயும் ஏழாமிடத்தில இருப்பதால் ;

21. கரும்பாம்பு தசையி லேதான் கேதுவின் புக்தி யாகும்
திருகிலாச் சேரு மென்றேரும் ஐயமுனி தடுத்துச் சொல்வார்
பொருளது எந்தி டத்தில் பொருந்திடும் விவரஞ் சொல்வாய்
மருமமாய்த் தந்தை யில்லம் மருவிடு முண்மை யாக.

21. ராகுமகாதசையில் கேதுவின் புக்தியில் துன்பமில்லாமல் கிட்டும் என்று கூறுகின்றேம். ஐயமுனிவர் மறுத்துச் சொல்லுகின்றுர். பொருள் எவ்விடத்தில் இருக்கும்? விபரம் கூறுங்கள். தந்தையின் வீட்டில் ரகசியமாக நிச்சயம் அது வைக்கப்பட்டிருக்கும்.

22. ஏருகள் பூமி விருத்தி எழில்நவ தானி யங்கள்
சேருமே புகழு மெய்தும் திருப்பணி செய்வா னுகும்
பார்பொருள் பணிகள் வீடு படைப்பனே ழாயி ரம்பொன்
கூறுவோம் நாலெட் டின்மேல் கோதையே கேட்டி டாயே.

22. ஏர்கள் விளைநிலங்கள் விருத்தியாகும். நவதானியங்கள் பெருகும். புகழ் அடைவான். திருப்பணிகள் செய்வான். பூமி பொருள் ஆபரணங்கள் வீடு இவைகள் ஏழாயிரம் பொன் சேர்ப்பான். அது முப்பத்திரண்டாம் வயதுக்கு மேல்தான். தேவியே ! கேளுங்கள்.

23. மாதுரு நற்கு ணத்தாள் வருவோரை யாத ரிப்பள்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனம் கவடு மில்லாள்
பாதக மனமில் லாதாள் பற்றிடுஞ் சொற்ப வாயு
தீதுண்டு துணையாண் பாலுந் தேவிமா ரிருவர் தீர்க்கம்.

23. ஜாதகனுடைய தாய் நற்குண முள்ளவள். தேடிவந்தவர்களை ஆதரிப்பாள். அழகாகப் பேசுபவள். மனத்தில் கபடமில்லாதவள். கெட்ட எண்ண மில்லாதவள். சிறிது வாயு உள்ள சரீரமுள்ளவள். சகோதரனுக்குத் தோஷமுண்டு. இரு சகோதரிகள் நீண்ட ஆயுளுள்ளவர்கள்.

### மாமனுக்குத் தோஷமேற்படுதற்குரிய கிரகநிலை

24. பலருக்கும் பந்தி னர்க்கும் பரிந்துப சாரஞ் செய்வள்
கலகத்தைக் கூரு ளாகும் கடந்தோருக் கன்ன மீவள்
தலைவிக்குத் துணையாண் தோடஞ் சாற்றுவீ ரந்தச் சங்கை
நிலமக னேழில் தங்க [1] நீத்தோனும் நாலி லேற ;

24. தன் சுற்றத்தாருக்கும் மற்றவர்களுக்கும் அன்புடன் உபசாரம் செய்வாள். கலகம் கூருதவள். துறவிகளுக்கு அன்ன மளிப்பாள். ஜாதகனுடைய தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்படக் காரணம் என்ன? செவ்வாய் ஏழாம் வீட்டில் இருந்து கேதுவும் நான்காம் வீட்டில் இருப்பதால் ;

[1] கேது

25. அன்னைக்குத் துணையாண் தோட மறைகின்றே மிவளின் பூர்வம்
கன்னமா புரியி லேதான் கலந்தனள் ரெட்டி வம்சம்
பொன்பணி யதிக முண்டாய்ப் பூவையும் வாழு நாளில்
பின்னமாய் வந்த வூழைப் பேசுவோ மினி மேலாக.

25. தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது. அவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கன்னமாபுரியில், ரெட்டியார் மரபில் பிறந்தாள். பொன் ஆபரணங்களை அதிகமாக அடைந்து வாழ்ந்துவரும் நாளில் தீங்காக வந்த வினையைச் சொல்லுகின்றோம்.

### மைத்துனர் நிந்தை

26. வரனுடைத் தம்பி பேரி லறைந்தனள் சிலேடை வார்த்தை
குறைளவு மனத் தணுகிக் கூறுவான் சாபந் தானும்
புரையது வென்மேல் சொன்ன பூவைக்கு மறுஜன் மத்தில்
உறையாது துணைவர் தாமும் உன்வரன் மத்தில் மாண்டு ;

26. கணவனுடைய தம்பியின்மீது இருபொருள் படும்படியான வார்த்தைகளைக் கூறினாள் அவன் மனம் வருந்திச் சாபமிட்டான். என் மீது அபாண்டம் கூறியவளே ! உனக்கு மறுபிறவியில் உடன் பிறந்தவர் இல்லாமல், கணவனும் இடையில் மாண்டு ;

27. சஞ்சல மனத்த ளாகித் தரணியில் வாழ்வா யென்று
நஞ்சுபோல் சொல்லும் போது நல்கிற்று வந்தச் சாபம்
வஞ்சனை வேறு காணாள் வாயுவால் மரண மாகிக்
கஞ்சனால் வரையப் பட்டுக் கலந்தன ளென்று சொல்வோம்.

27. கலக்க முள்ள மனத்தினளாகி, உலகில் வாழ்வாய், என்று கொடிய விஷம் போல் கூறியதால், அச்சாபம் ஏற்பட்டது. வேறு தீவினைகள் இல்லாதவள். அவள் வாயுவினால் மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப் பட்டுப் பிறந்தவள் என்று சொல்லுகின்றோம்.

28. முன்சாபஞ் சேர்ந்த தாலே முயலாது துணையா னுந்தான்
கன்னிக்கு மத்தி யத்தில் கணவனு மரண மாகும்
பின்ஜன்மம் விரிஞ்சி தன்னில் பிறப்பளாம் சைவச் சேயாய்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

28. முற்பிறவியின் சாபம் வந்தடைந்ததால் சகோதரர் நிலைத்திரார். இவளுக்கு இடைக்காலத்தில் கணவன் இறந்துவிடுவான். மறுபிறவி, விரிஞ்சி நாட்டில் சைவகுலத்தவளாகப் பிறப்பாள். உயர்ந்த கணவனை யடைந்த தேவியே ! கேளுங்கள்.

29. முப்பத்து நாலு வாண்டில் விளம்புவோ மன்னை கண்டம்
செப்புவோ மிரண்டா மாண்டில் செல்லுவான் தந்தை தானும்
ஒப்புட னிவன்பின் ஜன்மம் உரைக்கின்றோங் காளாத்தி தன்னில்
மெய்ப்புடன் சைவச் சேயாய் விளம்புவா னென்று சொல்வோம்.

29. ஜாதகனுடைய முப்பத்துநான்காம் வயதில் தாய்க்குக் கண்ட மேற்படும். அவனுடைய இரண்டாம் வயதில் தந்தை இறந்து விடுவான். தந்தையின் மறு பிறவி திருக்காளத்தியில் சைவ குலத்தவனுகப் பிறப்பான் என்று கூறுகின்ருேம்.

30. அறுபது மூன்ருண் டில்தான் ஆடிமா தத்தி லேதான்
திருமக னுடல மேகும் செப்புவே மிவன்பின் ஜன்மம்
பெருமையாய்த் தில்லை தன்னில் பிறப்பனும் பிரம்ம சேயாய்ப்
பிருகுமே தடுத்துச் சொல்வார் புனிதனிச் சென்மந் தன்னில் ;

30. ஜாதகன், தனது அறுபத்து மூன்ரும் வயதில் ஆடிமாதத்தில் காலகதி அடைவான். இவனுக்கு மறுபிறவி பெருமையுள்ள சிதம்பரத்தில், அந்தண குலத்தில் ஏற்படும். பிருகு முனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர். ஜாதகன் இப்பிறவியில் ;

31. செய்தபுண் ணியங்க ளென்ன செப்புவீர் முனியே நீர்தாம்
ஐயமே லிச்சை யாயும் அடாவடி சொல்லா தாலும்
துய்யநன் மனத்த னாயும் திருப்பணி செய்த தாலும்
வையமேல் முருகன் பத்தி வைத்ததா லதுவு மன்றி ;

31. செய்த நற்காரியங்கள் என்ன? கூறுங்கள், முனிவரே! தான தருமம் செய்வதில் விருப்பமுள்ளவனுகியும், அடாவடியாகப் பேசாததாலும், தூய்மையான நல்ல மனமுள்ளவனுயும், ஆலயத்திருப்பணிகள் செய்து வருவதாலும், உலகில் முருகப்பிரான்மீது பக்தி கொண்டிருப்பதாலும், அதுவுமல்லாமல்;

32. சிலருக்கா பத்தைக் காத்தும் தீரனும் வாழ்வ தாலே
குலவுவான் பிரம்ம சேயாய்க் கோதையு மிவன்பின் கண்டம்
தலைவனுஞ் ஜனிக்குங் காலைச் சல்லியன் தசையி ருப்பு
நலமுள வாண்டு வொன்றும் நவிலுவோந் திங்க ளெட்டும்.

32. சிலருக்கு ஆபத்தைக் காப்பாற்றி வாழ்ந்து வருதலாலும், அந்தண குலத்தவனுகப் பிறப்பான். இவனுக்குப் பிறகு மனைவி மரண மடைவாள். ஜாதகன் பிறக்கும்போது சுக்கிரமகாதசை யிருப்பு ஒரு வருஷமும் எட்டு மாதங்களுமாம் என்று கூறுகின்ருேம்.

33. ஜாதகன் தனக்கு ரோகம் சார்ந்துபின் நிவிர்த்தி யாகும்
மாதுரு கயிறு நீங்கும் வந்தவில் விட்டு நீங்கல்
பேர்தனஞ் செலவு முண்டு பந்துவால் சூத மெய்தும்
சூதுண்டு பூர்வஞ் சொன்னேம் சுந்தரி கேட்டி டாயே.

33. ஜாதகனுக்கு வியாதி ஏற்பட்டுப் பிறகு நீங்கும். தாய்க்கு மாங்கல்யம் விலகும். பிறந்த வீடு கிடைக்காது. பொருள் அதிகமாகச் செலவாகும். பந்துக்களால் கெடுதலுண்டாகும். சூதுண்டு. முதல் பாகம் சொன்னேம். தேவியே ! கேளுங்கள்.

# ஜாதகம் 44

1. மதியுஞ் சாடி குசன்மானில்
மறைரா குவுமே வருடையினில்
விதியின் கன்னி சிகிகோலாம்
வெய்யோன் வெள்ளி மிதுனமுறும்
புதனும் நண்டு உயிர் மிதுனம்
புகல்வீர் முனியே பலனெவ்வாறு
இதுவே யாண்பால் ஜனனமுறும்
இல்லங் கீழ்மேல் வீதியதே.

1. சந்திரன் கும்பத்திலும், செவ்வாய் மகரத்திலும், குரு ராகு மேஷத்திலும், புதன் கடகத்திலும், சனி கன்னியிலும், கேது துலாத்திலும், சூரியன் சுக்கிரன் மிதுனத்திலும் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், ஏற்படும் பலனைச்சொல்லுங்கள், முனிவரே! இஃது ஆண் பிறப்பு. பிறந்த வீடு கிழக்கு மேற்கானத் தெருவிலுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| | குரு ராகு | | லக்கினம் சூரியன் சுக்கிரன் |
| சந்திரன் | இராசி சக்கரம் | | புதன் |
| செவ் வாய் | | | |
| | | கேது | சனி |

2. அதுவே தென்பால் வாசலது
அருகர் தென்கீழ் வட மேல்பால்
சதிராய் மாயோன் குடிபாழாம்
சாரும் வடபால் ஈசனுமே
பதிக்குக் கீழ்ப்பால் காளியுறும்
பகர்வோம் சமவூர் ஜினகுலத்தில்
மதிபோல் தோன்றும் ஜேஷ்டனுமா
யறைவோந் தாயே யினிமேலே.

2. அது தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. அருகதேவனின் கோயில் தென்கிழக்கிலும், வடமேற்குத்திசையில் பாழடைந்த திருமாலின் ஆலயமும், வடக்கில் சிவபெருமான் ஆலயமும், கிழக்கில் காளியின் ஆலயமும் உள்ள சமநிலையான ஓர் ஊரில் சமண குலத்தில், சந்திரனைப்போல் அழகுள்ளவனாக, தன் தந்தைக்கு மூத்த புதல்வனாகப் பிறப்பான், என்றோம். தாயே! கேளுங்கள்.

3. அன்னை தந்தை துணையோகம்
அணையும் பாரி புத்திரர்கள்
முன்பின் ஜன்ம மிவையெல்லா
முரைக்கக் கேண்மோ இந்நூலில்
வந்தோன் யோகம் நவ நூலால்
வரையக் கேண்மோ தந்தைக்குப்
பிந்தி மனையா ளுக்கிவனே
பிறப்பான் தந்தை பேதையரே.

**3.** தாய் தந்தையர் உடன்பிறந்தவர் மாலையிடும்மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்நூலில் சொல்லுகின்றேன். கேளுங்கள். நான்காமவனாகப் பிறந்த இவனது யோகத்தை நவக்கிரகங்களின் நூலால் (ஜோதிட சாஸ்திரத்தால்) கூறுகின்றோம். கேளுங்கள். ஜாதகனுடைய தந்தை அவனுடைய தந்தையின் இரண்டாம் மனைவிக்குப் பிறப்பான்.

**4.** அறவே தந்தை துணைகாணான்
அவன்முன் தாய்க்குச் சுதருண்டோ
உரமா யாண்பா லொன்றுமே
உரைப்பேன் பாரி யிரண்டாவர்
நெறியா யாண்பா லிரண்டென்றோம்
நீலி யொன்று நேமித்தோம்
இருமா துருவின் சுதர்விவரம்
இயம்பு முனியே விவரமதாய்.

**4.** தந்தைக்கு உடன்பிறந்தவரில்லை. அவனுடைய முதல் தாய்க்குப் புத்திரர் உண்டோ ? திடமுடன் ஓர் ஆண் மகன் தோன்றுவான். அவனுக்கு மனைவி இருவராவர். இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் தோன்றுவார்கள் என்று கூறுகின்றோம். இரண்டாம் தாயின் குழந்தைகளின் விபரத்தைச் சொல்லுங்கள், விபரமாக.

**5.** முன்மா துருக்குப் பெண்ணொன்று
மேவும் பின்னோன் தனக்காண்பால்
சொன்னேன் தீர்க்கம் வேறுவன்
செப்புந் தந்தை குணமதனை
பன்னி யுரைப்பன் பலர்நேயன்
பகவான் பத்தி பலசெட்டு
பின்னமி லாதான் நற்குணத்தான்
பெரியோர் நேயன் புகழேற்பன்.

5. ஜாதகனுடைய தந்தையின் முதல் தாய்க்குச் பெண் ஒருத்தி தோன்றுவாள். அவளுக்குப் பிறகு சகோதரன் ஒருவன் தோன்றி தீர்க்காமா யிருப்பான். அவன் வேறாகச் சென்றுவிடுவான். ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுங்கள். பன்னிப் பன்னிப் பேசும் இயல்பினன். பலருக்குப்

பிரியனுவன். திருமாலின்மீது பத்தியுள்ளவன். பல வர்த்தகம் செய்து வருவான். ஊனமில்லாதவன். நற்குணமுள்ளவன். பெரியோர்களிடம் பிரிய முள்ளவன். கீர்த்தியுள்ளவன்.

6. புகழ்ந்தோர்க் கன்பன் முன்கோபி
புகல்வான் கட்டு வார்த்தைகளை
அகமு மிரண்டு தான்செய்வன்
அயலூர் வாசம் மிகவணிபம்
பகையோர் வணங்கச் செய்திடுவன்
பந்து நேயன்......ர்ப்பன்
தகையாய்க் கரத்தில் சாமரையுந்
தங்கும் வாயுப் பிணியுமுளன்.

6. தன்னைக் கொண்டாடுபவர்களிடம் பிரியமாக இருப்பான். முன்கோபி. வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன். இரு வீடுகள் உள்ளவன். வேற்றூரில் வசித்துவருவான். வர்த்தகம் பெரிதாக இருக்கும். விரோதிகளை அடக்கிப் பணியச் செய்பவன். பந்துக்களுக்குப் பிரியமானவன்...........கையில் சாமரைரேகை இருக்கும். வாயு நோயுள்ளவன்.

வேறு

7. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே யுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோ மழகுளான் மாஞ்சி வப்பன்
மன்னவர் நேசங் கொள்வன் வார்த்தையுஞ் சுகமு முண்டு
உன்னதக் கல்வி ரண்டு உரைப்பனும் வறுமை காணான்.

7. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றேன். அழகுள்ளவன். சிவந்த மேனியன். அரசனிடம் நட்புக் கொள்ளுவான். இன்பமாகப் பேசுபவன். உயர்ந்த கல்வியை இரு பாஷைகளில் கற்பான். தரித்திரம் இல்லாதவன் என்றோம்.

8. கல்வியில் பெருமை யேற்பன் காலாட்க ளுடைய னாகும்
இல்லையென் னுரைக்க மாட்டான் யாவர்க்கும் நல்லோ னவன்
மல்லினிற் செல்லா னாகும் வருணித்தோர்க் குதவி செய்வன்
புல்லியர் நேசங் கொள்வன் பரிவண்டி யுடைய னாகும்.

8. கல்வியால் பெருமை அடைவான். ஏவலாட்கள் உள்ளவன். யாசிப்பவர்களுக்கு இல்லை என்று கூறாதவன். எல்லோருக்கும் நல்லவன். வீண் வம்புக்குச் செல்லாதவன். தன்னைத் தோத்திரம் செய்தவர்கட்கு உபகாரம் செய்வான். அற்பர்களிடம் உறவு கொள்ளுவன். குதிரைவண்டி உள்ளவன்.

9. அரசரால் தொழிலு மேற்பன் அநேகதே சங்கள் செல்வன்
குறையென் றோர்க் குதவி செய்வன் குலத்துளோர் மதிக்க [வாழ்வன்
பறைபள்ளு முடைய னவன் பகைத்தோரை நசிக்க வைப்பன்
திருமக ளெனப்ப னவன் சென்றிடம் பெருமை யேற்பன்.

9. அரசாங்க உத்தியோகம் ஏற்பான். அநேக தலங்களுக்குச் செல்வான். துன்பமடைந்தவர்கட்கு உபகாரம் செய்பவன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். பல்லூப்பறை உள்ளவன். விரோதிகளை ஒழிக்க வல்லவன். மன்மதனைப் போன்றவன். சென்றவிடங்களில் பெருமை யடைவான்.

10. பொன்பணி யதிகஞ் சேர்ப்பன் புதியதாஞ் செயலே நாட்டம்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பான் ஊக சாலி
கன்னியர் மோக ருைன் கடவுளர் பத்தி பூண்பன்
அன்னியர்க் குதவி செய்வன் அநேககீர்த் திகளு மேற்பன்.

10. பொன் ஆபரணங்களைச் சேர்ப்பான். புதிய செயல்களைச் செய்வதில் விருப்பமுள்ளவன். தன்வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று கூறுவான். ஊகமுள்ளவன். பெண்களின்மீது மையல் கொள்ளுவான். கடவுள் மீது பக்தியுடையவன். பிறருக்கு உபகாரம் செய்வான். அநேக புகழ்களை அடைவான்.

### மூன்றும்பாவ கிரகநிலை

11. துணைவர்களில்லா ருைகுஞ் செப்புவீர் சங்கை தன்னை
வினையாக மூன்றைச் செய்வாய் வியர்த்தமாய்ப் பார்த்த தாலும்
கனமுள மூன்றோன் தன்னைப் காரியும் பார்த்த தாலும்
வினையாகுந் துணைகா ருைம் புதனுக்கு வெட்டில் திங்கள் ;

11. உடன் பிறந்தவர்களில்லாதவன். அதற்குக் காரணம் கூறுங்கள். மூன்றும் வீட்டுக்காரனுகிய சூரியனைச் செவ்வாய் பார்த்தாலும் (மூன்றும் வீட்டைச் செவ்வாய் பார்த்தாலும்), சூரியனைச் சனி பார்த்ததாலும், உடன் பிறந்தவர்கட்குத் தோஷம் ஏற்படும். புதனிருக்கும் இடத்துக்கு எட்டாமிடத்தில் சந்திரன் இருப்பதால் ;

12. முதலாவ தாண்டுக் குள்ளே ஏகுவா ளன்னை தாமும்
மறுதாயு மொன்று நேரும் மருவாது அதன்முன் மூன்று
திறமாகு மதன்பின் ருைண்பால் செப்புவோ மொன்றே யாக
அரிவைய ரொன்று தீர்க்கம் அம்பிகை யானே கேளாய்.

12. (ஜாதகன் பிறந்த) ஒருவருடத்துக்குள்ளாகவே தாய் மரணமடைவாள். மறுதாய் ஒருத்தி வருவாள். அவளுக்குப் பிறக்கும் முதல் மூன்று குழந்தைகள் நிலையா. அதற்குப்பின் சகோதரன் ஒருவனே நீண்ட ஆயுளுள்ளவனுக இருப்பான். சகோதரி ஒருத்தியும் தீர்க்கமாவள். தாயே! கேளுங்கள்.

13. மாதுரு குணமெவ் வாறு வறிவிப்பீர் முனியே நீர்தாம்
சூதிலாள் நற்கு ணத்தாள் சுந்தர முடைய ளாவள்
பாதக மனமில் லாதாள் பரிந்துப சாரஞ் செய்வள்
மேதினில் நல்லோ ளாவள் வீண்வம்பில் செல்லா ளாமே.

13. தாயின் குணத்தைக் கூறுங்கள். முனிவரே! நீர்தாம். சூதில்லா தவள். நற்குணமுள்ளவள். அழகுள்ளவள். கெட்டமன மில்லாதவள். அன்புடன் உபசரிப்பாள். உலகில் நல்லவளாக இருப்பாள். வீண் வார்த்தை பேசாதவள்.

14. இல்லமு முள்ளூ ராகும் இவள்துணை காணு ளாகும்
வல்லிக்கு வன்னை மூன்று மருவிடு மென்று சொல்வோம்
புல்குவோ முதல்தா யீன்ற புத்திரி யிவளே யம்மா
சொல்லுவோ மிவள்முன் ஜன்மம்......கு தென்பால் ;

14. இவளுக்கு, பிறந்த வீடு உள்ளூரிலேயே உள்ளது. உடன் பிறந்தவர் களில்லாதவள். தாய்க்கு மூன்று தாய்மார்கள் ஏற்படுவர் என்று சொல்லுகின்றோம். அவர்களில் மூத்த தாயின் மகள் இந்த ஜாதகனின் தாய் என்று கூறுகின்றோம். இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின் றோம். ........தெற்கில் ;

15. சிறுவூரில் பிரம சேயாய் ஜனித்துமே வறுமை யின்றி
வரனுண்டாய் மதலை யுண்டாய் வாழ்நாளில் வினையைக் கேண்மோ
அரனடி யேழை மாது அன்னமு மிவளைக் கேட்க
அரிபோலக் கோப முற்று வார்த்தைக ளதிகம் பேசி ;

15. சிற்றூரில், அந்தணகுலத்தவளாகப் பிறப்பாள். வறுமையில்லாமல், கணவன் மக்கள் இவர்களை அடைந்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். சிவனடியாளாகிய ஏழைப்பெண் ஒருத்தி இவளை அன்னம் கேட்கும்போது, சிங்கம்போல் கோபமடைந்து, அதிகமாகத் திட்டி ;

16. வேறில்லஞ் செல்லு மென்ன வேழையோள் மனங்க லங்கிக்
கூறுவாள் சாபந் தானுங் குறித்திடும் பின்ஜன் மத்தில்
தீரமாய்த் துணைகளின்றி ஜனித்ததாய் மரண மாவள்
பாரினில் வேறு மாது பக்கமே வாழ்வா யென்று ;

16. வேறு வீட்டுக்குச் சொல்லுங்களென்று கூற, ஏழைப்பெண் மனம் வருந்திக் கூறுகின்ற சாபத்தைக் கேளுங்கள். இனி, ஏற்படும் மறுபிறவியில், உடன்பிறந்தவர்கள் இல்லாமல் பெற்ற தாயும் இறந்து, வேற்றுத் தாயி னிடம் வாழ்ந்து வருவாய் என்று ;

17. இன்னமும் பலவாய்ச் சொல்லி ஏகினள் வேறு வில்லம்
பின்னமா யந்தத் தோடம் புக்கிற்று இவளுக் கேதான்
தன்வரன் மாண்டு பின்பு தரணியில சின்னாள் சென்று
துஞ்சியே கால னூடு சென்றன ளிவளே யென்றோம்.

17. இன்னும் பலவிதமாகச் சொல்லி வேற்று வீட்டுக்குச் சென்றாள், அந்தத் தோஷம் இவளை வந்தடைந்தது. தன்கணவனும் இடையில் மாண்டு, பூமியில், சிலகாலம் வசித்து, துன்பந்தரும் காலகதி யடைந்தாள் என்று கூறுகின்றோம்.

18. தலைநான் கோன் வரையப் பட்டு ஜனித்தன ளிவளே யென்றேம்
குலவுமுன் ஜன்ம சாபங் கோதையுந் துணைகள் காணுள்
தலைவிதாய் துன்ப மெய்வள் சஞ்சல மாதி யில்நான்
பலர்நிந்தை யேற்பா ளாவள் பரவிடுந் துணைபின் ரண்டு.

18. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப்பிறந்தவள் இவள் என்றேம். முற்பிறவியின் தோஷத்தால் உடன் பிறந்த சகோதரர்களில்லாதவள். தாய்க்கும் துன்பம் உண்டாகும். ஆதிகாலத்தில் சஞ்சலம் ஏற்படும். பலரால் நிந்தை செய்யப்படுவாள். பின்பிறந்த உடன்பிறந்தவர் இருவர் என்றேம்.

19. ஏகபுத் திரனுந் தோன்றி ஏகுவாள் கால னூடு
தோகையின் ஜன்மஞ் சொல்வோஞ் சோழநா டதனி லேதான்
பாகமா யிக்கு லத்தில் பாவையுந் தோன்று வாளாம்
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

19. ஒரு புத்திரன் பிறந்த பிறகு இறந்துவிடுவாள். தாயின் மறுபிறவியைச் சொல்லுகின்றேம். சோழநாட்டில் இதே குலத்தில் பிறப்பாள் என்று கூறுகின்றேம். போக சமுத்திரத்தை யடைந்த புண்ணியவதியே! கேளுங்கள்.

20. தந்தையின் பூர்வஞ் சொல்வோஞ் சட்ட நாதேசர் வாழும்
முந்தின [1] வூரி லேதான் வைசியச் சேயாய் வந்து
விந்தையாய்ச் செட்டுச் செய்து விளங்கிய மதலை யுண்டாய்ச்
சந்ததம் வாழு நாளில் சாற்றுவோ மூழியைத் தான்.

20. தந்தையினுடைய முற்பிறவியைக் கூறுகின்றேம். சட்டநாதேச்வரர் வாழும் புண்ணிய க்ஷேத்திரத்தில், வைசிய குலத்தவனாகப் பிறந்து, வர்த்தகம் செய்துவந்து, புத்திரபாக்கியம் பெற்றுவாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றேம்.

21. கற்புடைய மாது போகம் கலந்தனன் பலவந் தத்தால்
தப்பிதம் நேர்ந்த தென்றேந் தங்கையின் சாப மொன்று
அற்பமாய் நேர்ந்த தென்றேம் அதுவின்றி மறையோ ருக்குச்
சொற்பிழை தோட மொன்றும் சேர்ந்தது விவனுக் கேதான்.

21. கற்புள்ள ஒரு பெண்ணுடன் ஜாதகனுடைய தந்தை பலவந்தமாக இன்பம் அனுபவித்தான். அதனால் தோஷமேற்பட்டது. இது தவிர, உடன்பிறந்தவளின் சாபம் ஒன்றும் நேரிட்டது. அதுவுல்லாமல், அந்தணர்களின் தீச்சொல் ஒன்று அவனுக்கு ஏற்பட்டது என்றேம்.

## பொய்ச்சாட்சி கூறிய தோஷம்

22. அரசர்பால் கட்டு வார்த்தை அறைந்தன னேழைக் காகக்
குறைவுண்டாய் மனவெ றுப்பால் கூறுவார் சாபந் தானும்
மறுஜன்ம மனைவி ரண்டாய் வருந்துணை காண னைப்
பெறுந்தந்தை யில்லம் நீங்கிப் புக்குவாய் வடகீழ் தன்னில்.

[1] சீகாழி

22. அரசரிடம் ஓர் ஏழைக்காக இல்லாத வார்த்தைகளைப் புனைந்து பேசினான் (பொய்ச் சாட்சி சொன்னான்). ஏழையும் மனவருத்தமடைந்து சாபமிட்டான் நீ,மறுபிறவியில் இருமனைவிகளையடைந்து உடன்பிறந்தவர்களின்றி, பெற்ற தந்தையின் வீடில்லாமல், வடகிழக்குத் திசையில் செல்லுவாய்.

23. இன்னமும் பலவாறு சொல்லி இறைத்தனர் தெருத்தூள் தாமும்
தன்னிலே யந்தச் சாபஞ் சார்ந்தது விவனுக் கேதான்
இன்னவ னந்தி யத்தில் இருடிகட் கன்ன மீந்தும்
அன்னியர் சொல்லு டார்க்கம் அவன்தாகப் பந்தல் வைத்தும் ;

23. இன்னும் பலவிதம் சொல்லி, தெருமண்ணை வாரி இறைத்தான். அந்தச் சாபமும் இவனை வந்தடைந்தது. ஜாதகனின் தந்தையும் தன் கடைசிக்காலத்தில் முனிவர்கட்கு அன்னமளித்தும், வேற்று மனிதர் செல்லும் சாலையோரங்களில் தண்ணீர்ப் பந்தலமைத்தும் ;

24. கடவுளர் தொண்டு பூண்டும் காலன்தன் நாட டைந்து
அடைவுடன் பிரமன் லக்கம் அவன்சின குலமு தித்தான்
திடமதாய் முன்னூழ்ச் சாபஞ் சேர்ந்தது விச்சென் மத்தில்
விடம்போல வனுகிற் றென்றோம் மேவிடும் பாரி ரண்டு.

24. தெய்வபக்திகொண்டும் இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, சமண குலத்தில் பிறந்தான். முற்பிறவியின் சாபம் நிச்சயமாகக் கொடிய விஷம்போல் இவனைப் பற்றியது. இவனுக்கு இரு மனைவியர் தோன்றுவர்.

25. துணைகளுங் காணு னுவன் தந்தையார் ஜிதத்தில் வாழான்
வினையாக வேறு நாடு மேவியே செட்டுச் செய்வன்
கனமுடன் பராசர் சொல்லக் கௌசிகர் மறுத்துச் சொல்வார்
சினமுடன் வைசியச் சேயாய் ஜனித்தவ னிச்சென் மத்தில் ;

25. உடன் பிறந்தவர்கள் இல்லாதவன். தன் தந்தையால் சம்பாதிக்கப்பட்ட பொருளில் வாழ்ந்து வராதவன். வினைப் பயனால் வேறு தேசத்தில் சென்று வியாபாரம் செய்து வருவான். இங்ஙனம் பராசர முனிவர் கூற, கௌசிக முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். முற்பிறவியில் வைசிய குலத்தில் பிறந்தவன் இப்பிறவியில் ;

26. வதைசெய்யாக் குலத்தி லேதான் வருகுங்கா ரணங்க ளென்னச்
சுதனுதமுன் ஜன்மஞ் தன்னில் தேவதா பத்தி கொண்டும்
அதிதிகட் கன்ன மீந்தும் ஆபத்தில் தாக மீந்தும்
இதுவிதப் புண்ணி யத்தால் எய்தினு னிவனே யென்றோம்.

26. வதை செய்யா ஜைன குலத்தில் பிறக்கும் காரணங்க ளென்ன ? ஜாதகன் தந்தை முற்பிறவியில் தெய்வபக்தி கொண்டதாலும், துறவிகட்கன்னமளித்து வந்ததாலும், ஆபத்துக்காலத்தில் (கோடையில்) தாகத்துக்குத் தண்ணீர் கொடுத்து வந்ததாலும் ஏற்பட்ட புண்ணியங்களால் இங்ஙனம் பிறந்தான் என்றோம்.

27. முன்வினை நீங்கா தோசொல் ஏழையோன் சாபம் நீங்கா
வந்தது வந்தே தீரும் மருவிடும் சொற்ப ரோகம்
துன்மையாய்க் கால ணுடு சேருவான் இருபா னொன்பான்
பின்ஜன்மம் புகலக் கேண்மோ [1]பிருதிவி தலத்தி லேதான் ;

27. முற்பிறவியில் செய்த தீவினை விலகாதோ? சொல்லுங்கள். ஏழையின் சாபம் நீங்காது. வருவது வந்தே தீரும். சிறிது ரோகம் ஏற்படும். ஜாதகன் இருபத்தொன்பதாம் வயதிலேயே துன்பந்தரும் காலத்தை அடைவான். அவனுடைய மறுபிறவி காஞ்சீபுரத்தில் ;

28. உதிப்பனும் வைச்யர் சேயாய் உலகெலாஞ் செட்டுச் செய்வன்
இதுகுலந் தனிலு தித்தோன் இனிவைச்ய குலத்தில் தோன்ற
அதுபலன் சொல்லு மென்ன அருகர்தம் பத்தி கொஞ்சம்
சதியான வார்த்தை யாயும் பொருள்மூல மசாத்தி யங்கள் ;

28. வைசிய குலத்தவனுகப் பிறந்து, உலகத்தில் பல விடங்களில் வர்த்தகம் செய்து வருவான். இந்தக் குலத்தில் தோன்றியவன் இனி வைசிய குலத்தில் பிறக்கும் காரணங்களென்ன? அருகதேவன் மீது பக்தி கொண்டும், தீய வார்த்தைகளைப் பேசிவந்ததாலும், பொருளுக்காக இல்லாத வார்த்தைகளையும் ;

29. செப்பினன் சிலரை மோசஞ் செய்ததா லுதிப்பா னவன்
ஒப்புடன் ஜாத கர்க்குச் செப்புவோ மணத்தின் காலம்
மெய்ப்புட னீரொன் பானில் மெல்லியும் வருவா ளாவள்
மெய்ப்படி யன்னை வர்க்கம் வருகுவா ளென்று சொல்வோம்.

29. சொன்னன். சிலரை மோசம் செய்தான். இவைகளால் இவ்விதம் பிறந்தான். ஜாதகனுக்குத் திருமண மேற்படும் காலத்தைச் சொல்லுகின்றேம். அவனுடைய பதினெட்டாம் வயதில் மனைவி வருவாள். அவள் இவனுடைய தாயின் வர்க்கத்திலிருந்து வாய்ப்பாள் என்று சொல்லுகின்றேம்.

30. குணமது நல்லோ ளாவள் குறிப்பிலே கொடுமை தோன்றும்
விண்டு செய்யாள் யாவர்க்கு விவேகியாம் யோக சாலி
கனமுள குடும்பி யாவள் கஞ்சமா நிறத்த ளாவள்
தன் ரன் மனம்போல் வாழ்வள் அருகர்தம் பத்தி பூண்பள்.

30. நல்ல மனமுள்ளவள். முகத்தில் கொடுமை காட்டும். பிறருக்குத் துன்பங்கள் இழைக்காதவள். விவேகி. யோகசாலி. நல்ல குடும்ப முள்ளவள். தாமரையைப்போன்ற நிறமுள்ளவள். தன் கணவன் மனம்போல வாழந்துவருவாள். அருகதேவன்மீது பக்தியுள்ளவள்.

31. வயதுமே தீர்க்க மெய்தும் மாமுனி மறுத்துச் சொல்வார்
வியமாகும் முதல்ம னைதான் மேவிடு மிரண்டாம் பாரி
பயமேகுஞ் சேதி சொல்வாய் பணிகுரு சாத்தி லேறத்
திரமுடன் தாரம் ரண்டு நேரிடு மிவனுக் கேதான்.

[1] காஞ்சீபுரம்

**31.** அவள் நீண்ட வயதுள்ளவள். முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகனுக்கு முதல் மனைவி இறந்துவிடுவாள். இரண்டாம் மனைவி யொருத்தி வாய்ப்பாள். அவளுக்குத் தீங்கு ஏற்படும் காரணத்தைக் கூறுங்கள். ராகு குரு சரத்தில் இருப்பதால் இவனுக்கு இரு மனைவியர் ஏற்படுவர் என்று கூறுகின்றோம்.

**32.** அத்திரி மறுத்துச் சொல்வார் அம்புலி வொன்பா னிற்கச்
சித்தமாய்ச் சேயோ னுச்சம் செழும்புக ரேழைப் பார்க்கப்
பத்தினி யொன்றே நேரும் பாவையு மிரண்டு முன்னல்
குத்தமாய்க் கால னூடு கொள்ளைக விடுவா ளென்றோம்.

**32.** அத்திரி முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். சந்திரன் ஒன்பதாம் இடத்தில் இருப்பதாலும், செவ்வாய் உச்சமாக இருப்பதாலும், சுக்கிரன் ஏழாமிடத்தைப் பார்ப்பதாலும், மனைவி ஒருத்தியே. ஜாதகனது மரணத் துக்கு இரு ஆண்டுகள் முன்னாலேயே மனைவி இறந்துவிடுவாள் என்று சொல்லுகின்றோம்.

**33.** எந்தக்கா லத்தில் செல்வாள் இயம்புவீர் முனியே நீர்தாம்
வந்தவ னைம்பா னாறில் மனைவியுஞ் செல்வா ளாகும்
பிந்தியு மனைவி காணன் பேசுவோம் புத்திர பாவம்
நொந்திடுங் காண தாகுஞ் நுவலுவீ ரந்தச் சங்கை.

**33.** எந்தக் காலத்தில் இறப்பாள், சொல்லுங்கள், முனிவரே! ஜாதகனின் ஐம்பத்தாறும் வயதில் அவள் இறந்து விடுவாள். மறுபடியும் மனைவி இல்லாதவன். புத்திரபாவத்தைச் சொல்லுகின்றோம். இறந்துவிடும். நிலையா என்றோம். அதற்குக் காரணங்கள் சொல்லுங்கள்.

### ஐந்தாம்பாவ கிரகநிலை

**34.** அஞ்சினில் கேது தங்க அஞ்சவன் தன்னைக் காரி
தஞ்சமாய்ப் பார்ப்ப தாலும் சந்ததி தோட மெய்தும்
மிஞ்சிய ஜன்மந் தன்னில் மேவிற்று வினைய நேகம்
வஞ்சனை சொல்லு மென்ன வறைகின்றோங் கேளுந் தாயே.

**34.** ஐந்தாமிடத்தில் கேது இருப்பதாலும், ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரனைச் சனி பார்ப்பதாலும், புத்திர தோஷம் ஏற்படும். முற்பிறவியிலும் தீவினைகள் அதிகமாகச் செய்துள்ளான். தீச் செயல்களைக் கூறுங்கள். சொல்லுகின்றோம். கேளுங்கள். தாயே!

**35.** பொங்கிய சேர நாட்டில் புகழ்பெரு பழனி தன்னில்
இங்கவன் சத்ரியச் சேயாய் எய்தியே மனைவி மைந்தர்
மங்களக் குடும்பி யாகி வாழ்நாளில் வினையைச் சொல்வோம்
நங்கையாம் விதவை போகம் நாயகன் துய்த்து வந்தான்.

**35.** வளம்பெற்ற சேரநாட்டில், கீர்த்தியுள்ள பழனியில், சத்திரிய மரபி னனாகப் பிறந்து, மனைவி மக்களை அடைந்து, சுபமுள்ள குடும்பியாகி, வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். ஒரு விதவையை அழைத்துவந்து அவளுடன் இன்பம் அனுபவித்து வந்தான்.

### கருவழித்த தோஷம்

36. சிலவேநாள் சென்ற பின்பு செல்விக்குக் கருவும் தங்க
விலகவே யெண்ணங் கொண்டு விரைவில்பண் டிதங்கள் செய்யக்
குலவின கருவு நீங்கிக் கோதையு மாண்டா ளென்றேம்
உலவிற்று வந்தத் தோடம் உரைக்கின்றேம் வேறு வொன்றும்.

**36.** சிலகாலம் சென்றபின், அவளுக்குக் கரு ஏற்பட்டது. அதை நீக்க நினைத்துப் பலவிதமான மருந்துகள் கொடுக்க, அந்தக் கரு நீங்கி, அந்தக் கைம்பெண் மாண்டாள். அந்தத் தோஷம் ஏற்பட்டது. மற்றென்றும் சொல்லுகின்றேம்.

**37.** இல்லத்தில் புயங்கன் வாசம் இருந்தது வெகுநா ளாக
அல்லலாய் மகுடத் தாலே அணுகிற்று வெளியில் ஓர்நாள்
வல்லவன் கழியால் வாட்ட மறலியின் பதிக்குச் செல்லப்
புல்கிற்று வந்தத் தோடம் புத்திர ரந்தி யத்தில் ;

**37.** இவனுடைய வீட்டில் வெகு நாட்களாக ஸர்ப்பமொன்று வாழ்ந்து வந்தது. அஃது ஒரு நாள் படத்தை எடுத்து ஆடியது. அதை ஜாதகன் கழியினலடித்தான். சர்ப்பம் இறந்தது. அதுவும் ஒரு தோஷமாயிற்று. புத்திரர்கள் கடைசிக்காலத்தில் ;

**38.** சென்றனர் கால னூடு தீரனு மனவெ றுப்பால்
தென்திசைத் தலங்கள் சென்று தேரினோர்க் கன்ன மீந்து
அன்றயன் மாலுங் காணு அண்ணலைப் பூசித் தேதான்
முன்னமே கால னூடு மேவினு னிவனே யென்றேம்.

**38.** மாண்டனர். ஜாதகனும் மனவருத்த முற்று, தெற்குத் திசையிலுள்ள புண்ணிய தலங்களுக்குச் சென்று, முதியோருக்கு அன்னமளித்து, சிவபெருமானைப் பூசைசெய்து, முதல் பிறவியில் இறந்து, மீண்டும் ;

**39.** சிரநான்கோன் வரையப் பட்டு ஜனிப்பனு மிந்தப் பாலன்
உறைந்திடு முன்னூழ்ச் சாபம் உறுந்துணை காணு னுவன்
பிறந்ததோ ராண்டி லேதான் பேதையு மேகு வாளாம்
வருஞ்சுதர் தோட மெய்வன் மறைகின்றேங் கிரியை யொன்று.

**39.** பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகன். முற்பிறவியின் சாபத்தால் சகோதர தோஷம் ஏற்படும். பிறந்த ஒரு வருடத்தில் தாயும் இறந்து விடுவாள். பிறக்கும் குழந்தைகட்கும் தோஷமுண்டாகும். இதற்குச் சாந்தி யொன்று கூறுகின்றேம்.

**40.** அந்நகர் கீழ்ப்பா லாயும்......று வடபா லாயும்
மன்னுமார் பாக்கந் தன்னில் அவன்குல தெய்வத் திற்கு
இன்னவ னபிடே கித்து எழில்பட முடியுஞ் செய்து
மன்னுபஞ் சமியின் வாரம் பாலகன் விரதங் கொள்ள;

அவ்வூருக்குக் கிழக்கில்................வடக்கில் உள்ள மன்னு மார் பாக்கம் தன்னில் உள்ள அவனுடைய குலதெய்வத்துக்கு இவன் அபிஷேகம் செய்து, சிறந்த முடியும் ஒன்று செய்து, பஞ்சமி தினத்தன்று விரதம் மேற்கொண்டால் ;

41. பூருவம் வினையு நீங்கிப் பொருந்திடுஞ் சுதரா ணொன்று
ஏர்பெருங் கன்னி யவ்வா றிதுரண்டுந் தீர்க்க மெய்தும்
கூறின செய்யா ணுகில் குழவிகள் தோட மெய்தும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

41. முற்பிறப்பில் செய்த தீவினைகள் நீங்கி, புத்திரன் ஒருவனும் ஒரு புத்திரியும் தோன்றுவார்கள். இவர்கள் இருவரும் தீர்க்காயுளுள்ளவர் கள். நாங்கள் கூறியபடி செய்யாவிடில் புத்திர தோஷம் உண்டாகும். ஆறு முகக்கடவுளைப் பெற்ற அம்பிகையே ! கேளுங்கள்.

42. வந்தவன் பொதுயோ கத்தை வறைகின்றேந் தாயே கேளும்
இந்திர யோக மொன்று இயல்வாசி யோக மொன்று
அந்ததோர் பலனைச் சொல்வோம் அரசர்பூ சிதமு மாவன்
எந்திடம் பெருமை யேற்பன் இராசரால் சீவிப் பானும்.

42. ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றேம். தாயே ! கேளுங்கள். இந்திரயோகம் வாசியோகம் இரண்டும் ஏற்படும். அதன் பலனைச் சொல்லுகின்றேம். அரசரால் பூசிக்கப்படுவான். எல்லாவிடத்திலும் பெருமை அடைவான். அரசாங்க உத்தியோகம் ஏற்று ஜீவித்து வருவான்.

43. இருபது மூன்றுண் டின்மேல் எய்திடு மதிகா ரங்கள்
பிறைபோல வோங்கு மென்றேம் புகழது மதிக முண்டு
பொருளது வதிகஞ் சேர்ப்பன் பந்துவும் புகழ வுய்வன்
பரிவண்டி யோங்கு மென்றேம் பார்வதி கேட்டி டாயே.

43. ஜாதகன், தனது இருபத்து மூன்றும் வயதுக்குமேல் அதிகாரங்களை ஏற்பான். வளர்பிறைச் சந்திரன்போல் யோகம் விருத்தியாகும். கீர்த்தியும் பெருகும். பொருளை அதிகமாகச் சேர்ப்பான். உறவினர்கள் புகழும்படி வாழ்வான். குதிரைவண்டி வைத்திருப்பான். பார்வதியே ! கேளுங்கள்.

44. எண்ணஞ்சு வேழு வாண்டும் எய்திடும் ராஜ யோகம்
வண்மையு மதன்மேலாக விலகிடு மென்று சொல்வோம்
திண்ணமாய் மரண மட்டும் சகராசர் தன்னுல் கிட்டும்
அண்ணலைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

44. ஜாதகனுக்கு நாற்பத்தேழாம் வயதில் ராஜயோகம் ஏற்படும். தீமைகள் அதற்குமேல் விலகிவிடும் என்று சொல்லுகின்றேம். நிச்சய மாக அவனுடைய மரணகாலம் வரையில் அரசரால் யோகம் பெருகும். சிவபெருமானைப் பூசைசெய்யும் தேவியே ! கேளுங்கள்.

45. இதுமத்தில் தொழில்க ளுக்கு இடருக ளுண்டோ சொல்வீர்
சதியாகச் சிலவே நேருந் தபனன்முன் பனிபோல் நீங்கும்
அதுபல விரண்டில் சொல்வோம் அன்பது எட்டு ஆண்டில்
பொதுகன்னி மாதந் தன்னில் புனிதனி னுடல மேகும்.

45. இதற்கிடையில் தொழிலில் துன்பங்கள் ஏற்படுமோ? தீமையாகச் சில நேரும். ஆனால் அவை சூரியன்முன் பனிபோல் நீங்கும். அவ் விஷயத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஐம்பத்தெட்டாம் வயதில் புரட்டாசி மாதத்தில் ஜாதகன் இறப்பான்.

46. மறு ஜன்மம் பாண்டி தன்னில் மறைக்குல முதிப்பா னுவன்
திருமகன் ஜனன காலம் சதயநாள் கடைப்பா தத்தில்
உரகன்தன் தசையி லேதான் அணுகிடுந் திங்கள் முப்பான்
பெறுமன்னை கண்ட மெய்தும் பலபிணி சாத கர்க்கு.

46. மறுபிறவி பாண்டிய நாட்டில் அந்தண குலத்தில் பிறப்பான். ஜாதகனின் ஜனன காலத்தில் சதய நட்சத்திரம் ராகுமகாதசையில் இரண்டு வருடங்களும் ஆறு மாதங்களுமாம். பெற்றதாய் மரணமடைவாள். ஜாதகனுக்குப் பல வியாதிகள் உண்டாகும்.

47. தந்தைக்குச் செலவ நேகஞ் சஞ்சல மனங்க ளெய்தும்
பந்துவில் சுபமுஞ் சூதம் பகருவோம் முனியே யாங்கள்
பிந்திய பாகந் தன்னில் பகருவோம் விபர மாக
இந்திர னிறைஞ்சு மாதே இயம்பின மொழிகுன் றுவே.

47. தந்தைக்குச் செலவு அதிகமாகும். சஞ்சலமான மனமுள்ளவனுவன். உறவினர்களால் சுபமும் அசுபமும் நேரும். பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம். இந்திரன் தோத்தரிக்கும் தேவியே! கூறிய சொற்கள் தவறு.

## ஜாதகம் 45.

1. திங்களுஞ் சனியு மேரு செம்பொன்னு மான தாகப்
பங்கயன் சேயுங் கன்னி பார்க்கவன் சீய மாகப்
பொங்கிய புதனு முச்சம் பணிகோலில் வீணை ஜன்மம்
இங்கிவைக் கிரகம் நின்றால் இயம்புவீர் பலனைதத் தானே;

1. சந்திரன் சனி தனுசிலும், குரு மகரத்திலும், சூரியன் செவ்வாய் கன்னியிலும், சுக்கிரன் சிம்மத்திலும், புதன் தனது உச்சஸ்தான மாகிய கன்னியிலும், ராகு துலாத்திலும், கேது மேஷத்திலும் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், உள்ள பலனைச் சொல்லுங்கள்;

| | | | |
|---|---|---|---|
| | கேது | | லக்கினம் |
| குரு | இராசி சக்கரம் | | சுக்கிரன் |
| சந்திரன் சனி | | ராகு | சூரியன் புதன் செவ்வாய் |

2. காதலி கேட்கும் போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினி லாண்பால் ஜன்மம் விளங்குமில் கீழ்மேல் வீதி
தீதான எமனின் வாடை தீயினில் தந்தி மேற்கில்
ஆதிமால் மாரி வாயு அரன்கோட்டங் காளி யுத்ரம்.

2. என்று பார்வதி தேவி கேட்கும்போது, கௌசிக முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் பிறப்பு. பிறந்தவீடு, கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு வரிசையில் உள்ளது. திரௌபதியம்மன் கோயிலும் விநயகர் ஆலயமும் மேற்கிலும், திருமாலின் ஆலயமும் மாரியம்மன் கோயிலும் வடமேற்குத் திக்கிலும், சிவன் கோயிலும் காளி கோயிலும் வடக்கிலும் உள்ளன.

3. இத்தகை யடையா ளத்துள் இறங்குவான் சேட்ட னாக
வித்தகன் சைவச் சேயாய் மேவுவா னிவனின் யோகம்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மஞ் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இங்ஙனம் அடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் தன் தந்தைக்கு மூத்த புதல்வனாகப் பிறப்பான். சைவகுலத்தில் தோன்றுவான். இவனுடைய யோகத்தையும், பெற்ற தாய் தந்தையர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வோஞ் சமகல்வி மாநி றத்தன்
நிந்தைக ளேற்கா ஞகுந் நிதானமாய் வார்த்தை கூறுவன்
சிந்தையும் நல்ல தாகுந் தேவதாப் பக்தி பூண்பன்
பிந்திய புத்தி யுண்டு பிழையதை யொருவர்க் கெண்ணன்.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். சமமான கல்வி யறிவுள்ளவன். மாநிற முடையவன். பழிகள் அடையாதவன். நிதானமாகப் பேசுபவன். நல்ல மனமுள்ளவன். தெய்வபக்தி யுள்ளவன். பின் புத்தி யுடையவன். பிறருக்குத் தீங்குசெய்ய நினையாதவன்.

5. ஆதியில் வறுமை யுண்டு அவனியின் சேர்ப்பா ஞகும்
காதியு மில்லா ஞகுங் கணக்கினில் மந்த முண்டு
சூதிலா னுயர மில்லான் தொடுவழக் கதனில் செல்வன்
வேதனை யொருவர்க் கெண்ணுன் வீடுகள் சிலர்க்குச் செய்வன்.

5. ஆதிகாலத்தில் வறுமை யுள்ளவன். பிற்காலத்தில் பூமியைச் சேர்ப்பான். நல்லொழுக்க மில்லாதவன். கணக்கில் சாமார்த்திய மில்லாதவன். சூதுகளில்லாதவன். குட்டையன். வீண் வழக்குகளில் செல்லுவான். பிறருக்குத் துன்பம் செய்ய நினையாதவன். சிலருக்கு வீடுகள் செய்வான்.

6. அறுமுகன் பக்தி பூண்பன் அவசர மனத்த ஞகும்
தரையினுல் ஜீவிப் பானும் தன்துணை சொல்தப் பாதான்
குறுதந்த முடைய ஞகுங் கோபமுங் கொஞ்ச முண்டு
மரம்வெட்டுந் தொழிலும் செய்வன் மங்கையே கேட்டி டாயே.

6. ஆறுமுகக் கடவுள்மீது பக்தி கொள்ளுவான். அவசரமுள்ள மனத்தினன். பூமியில் விவசாயம் செய்து வாழ்ந்து வருவான். தன் உடன்பிறந்தவனின் வார்த்தையை மீருதவன். சிறிய பற்களை யுடையவன். சிறிது கோபமுள்ளவன். மரம் வெட்டும் தொழில் செய்துவருவான். தேவியே! கேளுங்கள்.

7. தன்துணை யாண்பால் ரண்டு தங்கிடுந் தீர்க்க மாகப்
பின்னமா மற்ற வெல்லாம் பேசின வாண்பா லுந்தான்
முன்பின்னுய் மொழிய லாகும் மொழிகின்றே முன்னேன் சேதி
கன்னலென மொழியு முண்டு கவடிலான் சொற்காப் பானும்.

7. ஜாதகனின் தந்தைக்கு இரு சகோதரர்கள் தீர்க்கமாயிருப்பார். மற்றவர்கள் நிலையாமல் இறப்பர். கூறிய சகோதரர்கள் முன்பின்னுக இருப்பர். ஜாதகனின் மூத்த சகோதரனின் செய்தியைக் கூறுகின்றோம். கரும்பையொத்த இனிய வார்த்தைகளைப் பேசுபவன். கபட மில்லாதவன். சொன்ன வார்த்தைகளைக் காப்பான்.

8. பலருக்கும் நல்லோ ஞவன் பரிந்துப சாரஞ் செய்வன்
நிலையதைக் காப்பா ஞகும் நினைத்ததை முடிக்க வல்லன்
தலமது புதிதாய்ச் செய்வன் சண்முகன் பக்தி கொள்வன்
விலைமாதர் மோகங் கொள்ளான் விளைபுலம் விருத்தி செய்வான்.

8. பல பேருக்கு நல்லவனாக இருப்பான். அன்புடன் உபசாரம் செய்வான். தன் வீட்டைக் காத்துக் கொள்ளுவான். (தன் நிலையை உணர்ந்து நடப்பான்.) எண்ணிய காரியத்தை முடிக்கக்கூடியவன். புதிய வீடு கட்டுவான். முருகப்பிரான்மீது பக்தி கொள்ளுவான். வேசையர்மீது மையல் கொள்ளாதவன். விளை நிலங்களைப் பெருக்குவான்.

9. பாரியும் வடகீழ் நேரும் பாலவயு மொன்றே தீர்க்கம்
கூறுவோஞ் சுதராண் ரண்டு கோதையு மூன்று வென்றேம்
மாரனு மொன்றாய் வாழ்வன் மறுத்துரை யதிகங் கூறான்
வீரியன் வயது தீர்க்கம் மேதினில் சல்லியங் காணான்.

9. மனைவி வட கிழக்குத் திசையிலிருந்து வாய்ப்பாள். அவளும் ஒருத்தியே. இரு புதல்வர்களும் மூன்று புதல்விகளும் தோன்றுவர் என்றேம். அவனும் தன் சகோதரனுடன் ஒன்றாக வாழ்ந்துவருவான். அதிகமாக மறுத்துப் பேசாதவன். நீண்ட வயதுள்ளவன். உலகில் கடனுபத்ரவமில்லாதவன்.

10. பின்துணை சேதி சொல்வோம் பேச்சினில் சோரா னுவன்
உன்னத வேலை செய்வன் உயர்வான புத்தி யேற்பன்
முன்னோன்சொல் தட்டா னுகு முறுதிமா னுயர மாவன்
கன்னியர் மோக னுவன் கட்செவி போலக் கோபம்.

10. ஜாதகனுடைய தந்தைக்குப் பின் பிறந்த சகோதரனைப் பற்றிச்சொல்லுவோம். பேச்சில் சோர்வு அடையாதவன். உயர்ந்த வேலைகளைச் செய்வான். உயர்ந்த புத்திசாலி. மூத்த சகோதரன் பேச்சைக் கடவாதவன். திடமுள்ளவன். உயரமானவன். பெண்கள்மீது விருப்பங்கொள்ளுவான். ஸர்ப்பம் போல் கோபம் கொள்ளுவான்.

11. தந்திர மொழியு முண்டு சமர்த்துள னாக முண்டு
சிந்தையில் கவடு முண்டு செம்பொனும் பணியுஞ் சேர்ப்பன்
கந்தன்மேல் பக்தி பூண்பன் கடன்கொளா னிடுக்க மில்லான்
சுந்தர முடைய னுவன் சோம்பிடான் காரி யத்தில்.

11. தந்திரமாகப் பேசுபவன். சாமர்த்தியசாலி. ஊக்கமுள்ளவன். மனத்தில் சிறிது கபடமுள்ளவன். செம்பொன் ஆபரணங்களைச் சேர்ப்பான். ஷண்முகக் கடவுள்மீது பக்தியுள்ளவன். கடன் படாதவன். துன்பங்களில்லாதவன். அழகுள்ளவன். காரியங்களில் சோம்பலில்லாதவன்.

12. மனைவியு மொன்று வென்றேம் மருவிடும் வடகீழ் பாரி
கனமுள சுதராண் ரண்டு கன்னிக ளவ்வாறு தீர்க்கம்
துணிவுள மனத்த னுவன் துறவோர்கள் பக்தி பூண்பான்
வினைசெய்யான் யாவ ருக்கும் வித்தகன் வயது தீர்க்கம்.

12. மனைவி யொருத்தியேயாவள். அவள் வட கிழக்குத் திசையிலிருந்து வாய்ப்பாள். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். துணிவுள்ள மனத்தினன். துறவிகளிடம் பக்தி கொள்ளுவான். ஒருவருக்கும் தீங்குகள் செய்யாதவன். நீண்ட ஆயுளுள்ளவன்.

13. பாலகன் நிறங்கு ணத்தைப் பகருவோ மினிமே லாகச்
சீலவான் சிவந்த மேனி சிலேடையாய் வார்த்தை சொல்வன்
சாலவித் தைகளுஞ் செய்வன் சமர்த்தாக வார்த்தை சொல்வன்
வேலனைப் பூசை பூண்பன் விளைபுலம் விருத்தி செய்வன்.

13. ஜாதகனுடைய நிறம் குணம் இவைகளை இனிக் கூறுகின்றோம். நல்லொழுக்க முள்ளவன். சிவந்த நிற முள்ளவன். இரு பொருள் படும்படி பேசுபவன். ஜால வேடிக்கைகள் செய்வான். சாமர்த்தியமாகப் பேசுபவன். ஷண்முகனைப் பூசை செய்பவன். விளை நிலங்களை விருத்தி செய்வான்.

14. மந்திர வைத்தி யங்கள் வாதமு மறிவா னாகும்
இந்திர சாலஞ் செய்வன் இனிதாக வார்த்தை சொல்வன்
சுந்தர முடையா னாகுந் தொடுத்ததை முடிப்பா னாகும்
எந்திடம் இவன்சொல் மேன்மை ஈகைவா னென்று சொல்வோம்.

14. மந்திரமும் வைத்தியங்களும் வாதமும் தெரிந்தவன். இந்திர ஜால வேடிக்கை செய்வான். இனிய வார்த்தைகளைப் பேசுபவன். அழகுள்ளவன். எடுத்த காரியத்தை முடிக்க வல்லவன். எவ்விடத்திலும் இவன் வார்த்தைக்கு மதிப்புண்டு. கொடையாளி என்று சொல்லுவோம்.

15. பொய்யுரை வழுத்தான் மிஞ்சிப் புத்திநல் லறிவு முண்டு
ஐயமே லிச்சை யுண்டு ரகசிய ஞான வித்தை
தையல்மார்க் கினிய னாகுஞ் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
நையவே கூறு னாகுந் நாட்டினில் வறுமை காணன்.

15. பொய் பேசாதவன். பின்புத்தி யுடையவன். நல்ல அறிவாளி. தருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். ரகசியமான வித்தைகளை அறிவான். பெண்களுக்குப் பிரியமானவன். கால் நடைகள் பெருக்க முள்ளவன். பிறர் துன்புறும்படிப் பேசாதவன். உலகில் வறுமை யில்லாதவன்.

16. மனமது கவடு மில்லான் மலர்க்கரங் கோதுமை ரேகை
இனமதிப் புடைய னவன் இயந்திர வேலை செய்வன்
கனமான புகழு மேற்பன் கனத்ததோர் தலங்கள் செல்வன்
சினமதை வெளிக்காட் டாதான் சிறப்புடன் வாழ்வா னாமே.

16. கபட மில்லாத மனத்தினன். கையில் கோதுமை ரேகை யுள்ளவன். தன் பந்துக்களிடத்தில் மதிப்புள்ளவன். இயந்திர வேலைகள் செய்வான். பெரிய கீர்த்தி அடைவான். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்லுவான். கோபத்தை வெளியிடாதவன். சிறப்பாக வாழ்ந்துவருவான்.

17. தன்துணை யைவர் தோன்றுந் தங்காது சிலவே யென்றோம்
கன்னிய ரிருவர் தீர்க்கம் காணேயு மொன்று தீர்க்கம்
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோ மீரெட் டாண்டில்
கன்னிகை மேல்பால் நேர்வள் கழறுவோ மவள்கு ணத்தை.

17. உடன் பிறந்தவர்கள் ஐவராவர். சிலர் நிலையார் என்று சொன்னோம். இரு சகோதரிகள் தீர்க்கமாயிருப்பார்கள். ஒரு சகோதரன் நீண்ட ஆயுளுள்ளவன். ஜாதகனுடைய திருமணக் காலத்தைக் கூறுகின்றோம். பதினாறும் வயதில் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம்.

18. மாந்தளிர் மேனி யாவள் மருமமில் லாதா ளென்றோம்
கூர்ந்துமே வார்த்தை சொல்வள் குலத்துளோர் மதிக்க வாழ்வள்
ஏந்திழை யோக சாலி இவளுக்கு வயது தீர்க்கம்
சாந்தமாய் முனிவர் கூற ஜயமுனி கூறு கின்றார்.

18. மாந்தளிர் போன்ற மென்மையான சரீர முள்ளவள். இரகசிய மில்லாதவள். ஆழ்ந்து பார்த்துப் பேசுபவள். தன் பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். யோகசாலி. நீண்ட ஆயுளுள்ளவள், என்று சாந்தத்துடன் முனிவர் கூற, ஜயமுனி சொல்லுகின்றார்.

19. எப்படி வயது தீர்க்கம் இயம்பின காரணஞ் சொல்
மெய்ப்புடன் நாலோ னுச்சம் வெண்மதி யேழில் தங்கச்
செப்பினோந் தீர்க்க மென்றேஞ் செம்பொன்னே னேழோ னுகித்
தப்பித மெட்டில் தங்கச் சனியேழு குசனும் பானு ;

19. ஜாதகனுடைய மனைவிக்கு வயது எப்படி தீர்க்கம் என்று சொல்லுங்கள். நான்காம் வீட்டுக்குரிய புதன் உச்சமாகவும், சந்திரன் ஏழாமிடத்தில் இருப்பதாலும், மனைவி நீண்ட ஆயுளுள்ளவள் என்றோம். குரு ஏழாம் வீட்டுக்குரியவனுகி எட்டாமிடத்தில் குற்றமாக இருப்பதாலும், சனி ஏழாமிடத்தில் இருப்பதாலும், செவ்வாய் சூரியன் ;

20. தனத்தினி லிருப்ப தாலே சாற்றுவோந் தாரம் ரண்டு
வனிதைமா ரிருவ ரென்றீர் வயதுமே தீர்க்க மோசொல்
வினையுண்டு முதன்ம னைக்கு மேவின கர்ப்பத் தாலே
சினமுண்டு மறும னைதான் சேர்ந்திடு மென்று சொல்வோம்.

20. தன (குடும்ப) ஸ்தானத்தில் இருப்பதால் இரு மனைவியர் ஏற்படுவர். இரு மனைவிகள் என்று சொன்னீர்களே ! அவர்களுக்கு நீண்ட ஆயுள் உண்டோ ? சொல்லுங்கள். முதல் மனைவிக்குக் கர்ப்பத்தால் மரணம் உண்டாகும். ஆதனுல் வேறு மனைவி வருவாள் என்று கூறினோம்.

21. முதல்மனை யெந்தக் காலம் முடிவுறும் விவரஞ் சொல்வீர்
அதிபதிக் கிருபான் ஏழில் மரித்திடு மென்று சொல்வோம்
பதியினுக் கிரண்டா மாது பரவிடு மந்த வாண்டில்
அதுவுத்ர திசையில் நேரும் அம்பிகை யாளே கேளாய்.

21. முதல் மனைவி எந்தக் காலத்தில் இறப்பாள் ? விபரம் சொல்லுங்கள். ஜாதகனுக்கு இருபத்தேழாம் வயதில் இறந்துவிடுவாள் என்று சொல்லுகின்றோம். அந்த வயதிலேயே இரண்டாம் மனைவி ஏற்படுவாள். அவளும் வடக்குத் திசையிலிருந்து வருவாள். தாயே ! கேளுங்கள்.

22. புத்திர விருத்தி தானும் பொருந்தாது முதல்மனைக்குச்
சித்தமாய் மறுமனைக்குச் செப்புவோ மாண்பாலொன்று
வித்தகி மார்கள் மூன்று மேவிடுந் தீர்க்க மாகச்
செத்திடு முதலில் ரண்டு செல்வதி கேட்டி டாயே.

22. ஜாதகனுடைய முதல் மனைவிக்குப் புத்திரபாக்கியம் இல்லை. நிச்சயமாக இரண்டாம் மனைவிக்கு ஆண் மகன் ஒருவனும், பெண் மக்கள் மூவரும் தோன்றித் தீர்க்கமாயிருப்பர். முதலில் பிறக்கும் குழந்தைகள் இரண்டு மரணமடையும்.

23. காரணம் யாது வென்னக் [1]கரும்பாம்பு ஐந்தில் தங்க
ஜீரணம் முதலில் ரண்டு செப்புவோ மதன்பின் விருத்தி
மாரனின் பூர்வந் தன்னில் மருவிற்று வினைய நேகம்
கூறுவோ மந்தச் சங்கை குறிக்கின்றோ முனியே கேளும்.

23. காரணம் என்ன என்று கேட்கும்போது, ராகு ஐந்தாம் இடத்தில் இருப்பதால், முதலில் பிறக்கும் இரு குழந்தைகளுக்குச் சேதமுண்டாகும். அதற்குப்பின் விருத்தியாகும். ஜாதகனும் முற்பிறவியில் அநேக பிழைகள் செய்தான். அவை அவனைப் பின்பற்றின. அந்தத் தீச்செயல்களைக்கூறு கின்றோம். முனியே ! கேளுங்கள்.

24. முன்ஜன்மங் கலிங்க நாட்டி லுதித்தனன் வைச்ய சேயாய்த்
தன்மனை மதலை யுண்டாய்த் தரணியில் செட்டுச் செய்து
அன்னவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
கன்னிகை விதவை போகங் கலந்துமே கருவு தங்க ;

24. ஜாதகன் முற்பிறவியில், கலிங்க நாட்டில், வைசிய குலத்தவனுகப் பிறந்து, மனைவி மக்களையடைந்து, உலகில் வர்த்தகம் செய்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஒரு கைம்பெண்ணுடன் இன்பம் அனுப வித்து, அதனுல் அவளுக்குக் கரு தங்கி ;

25. பலவித பண்டி தங்கள் பாவைக்குச் செய்யும் போது
குலவின கருவி னாலே கோதையும் மரண மானுள்
உலவிற்று அந்தத் தோட முரைக்கின்றோம் வேறு ஒன்று
மலைநாகம் வெகுநா ளாக மருவிற்று இல்லந் தன்னில்.

25. அதை நீக்க, பலவித மருந்துகளை அப்பெண்ணுக்குக் கொடுக்கும் போது, ஏற்பட்ட கரு கலைந்து, அதனுல் அவள் மரண மடைந்தாள். அந்தத் தோஷம் வந்தடைந்தது. வேறு ஒன்றும் கூறுகின்றோம். ஒரு மலை நாகம் வெகு நாட்களாக வீட்டில் வசித்து வந்தது.

26. மகுடத்தால் ஓர்நாள் தன்னில் மருவிற்று முற்றந் தன்னில்
பகையாகக் கழியால் வாட்டப் பறந்தது கால னூடு
தகைமையாய் அந்தத் தோடஞ் சார்ந்தது என்று சொல்வோம்
மிகுதவம் புரியு மெங்கள் வித்தகி கேட்டி டாயே.

[1] இராகு.

26. வீட்டு முற்றத்தில் ஒரு நாள் படமெடுத்து ஆடியது. அதை ஜாதகன் கழியினல் அடிக்க, அந்நாகம் இறந்தது. அந்தத் தோஷம் தீமையாக வந்தடைந்தது என்று சொல்லுகின்றோம். மிகுந்த தவங்கள் புரியும் எங்கள் தேவியே ! கேளுங்கள்.

27. அந்திய காலந் தன்னில் அவன்மனை மரண மாகி
அந்தகன் பக்கல் சென்று அரிமகன் வரையப் பட்டு
இந்ததோர் குலமு திப்பான் எய்திடுங் கருவின் தோடம்
முந்திய மனைவி கர்ப்பம் மேவியே மரண மாவள்.

27. ஜாதகனுடைய மனைவி அவனது கடைசிக் காலத்தில் மாண்டாள். மீண்டும் பிரமனல் படைக்கப்பட்டு, இந்தக் குலத்தில் பிறந்தான். கருவழித்த தோஷம் ஏற்பட்டதால் முதல் மனைவி கர்ப்பம் தரித்து அதனல் மரண மடைவாள்.

### சாந்தியே இல்லாத தோஷம்

28. அரவதைக் கொன்ற தோடம் அவன்சுதர் முதலில் பீடை
இருமனை யணுகா வண்ணம் இயம்புவீர் கிரியை யொன்று
வருவது வந்தே தீரும் வரையவே மாட்டோம் சாந்தி
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

28. சர்ப்பத்தைக் கொன்ற தோஷத்தால் முதலில் பிறக்கும் குழந்தைகளுக்குப் பீடை ஏற்படும். இரு மனைவிகள் ஏற்படாமலிருக்கச் சாந்தியொன்று சொல்லுங்கள். வருவது வந்தே தீரும். நாங்கள் சாந்திகள் கூறவேமாட்டோம். பெரிய வயிற்றையுடைய விநாயகனைப் பெற்ற புண்ணியவதியே ! கேளுங்கள்.

29. மாதுரு குணத்தைச் சொல்வேன் மால்நிறம் உளைச்சல் தேகி
ஓதுமுன் கோபங் கொஞ்சம் உள்மனம் கவடு மில்லாள்
சாதிப்பாள் சிலவே சங்கை தன்தேக வலிவு மில்லாள்
காதலி யோக மில்லாள் கணவனும் வெறுப்பாய் வாழ்வன்.

29. தாயினுடைய குணத்தைச் சொல்லுகின்றேன். கரிய நிறமுள்ளவள். மெல்லிய தேகமுடையவள். சொல்லுவதற்கு முன் கோபமடைவாள். மனத்தில் கபடமில்லாதவள். சில தீங்குகள் செய்வாள். சரீர வலிவு இல்லாதவள். அதிருஷ்ட மில்லாதவள். கணவனும் வெறுப்புடன் வாழ்ந்து வருவான்.

30. இல்லமும் மேல்பா லாகும் இவள்துணை யாண்பால் ரண்டு
வல்லியும் மூவ ராவர் மத்தியில் சிலவே துன்பம்
புல்குவோம் பூர்வந் தன்னைப் பிருதிவி கீழ்ப்பா லாக
நல்லசெங் குந்த வம்சம் நாயகி யுதித்து மேலும் ;

30. மேற்குத் திசையில் வீடு உள்ளவள். இவளுக்கு உடன் பிறந்தவர்களில் சகோதரர் நால்வரும் சகோதரிகள் மூவரு மாவர். இடையில் சிலர் மரித்து விடுவர். முற்பிறவியைப் பற்றிச் சொல்லுவோம். காஞ்சிக்குக் கிழக்கில், செங்குந்த மரபில் பிறந்து, மேலும் ;

31. அறமதி லிச்சை யுண்டாய் அதிதிகட் கன்ன மீந்து
மறலியின் பதிக்குச் சென்று மலரயன் வரையப் பட்டுப்
பெருமையாய் இக்கு லத்தில் பிறந்தன ளென்று சொல்வோம்
வருஞ் ஜன்மஞ் சேரநாட்டில் வருகுவாள் சைவச் சேயாய்.

31. தருமம் செய்வதில் விருப்பமுள்ளவளாகி, துறவிகட்கு அன்ன மளித்து வந்து, இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, பெருமையுடன் இக்குலத்தில் பிறந்தாள் என்று சொல்லுகின்றோம். மறுபிறவி சேரநாட்டில் சைவகுலத்தவளாகப் பிறப்பாள்.

32. தந்தையின் பூர்வஞ் சொல்வேன் தாம்பிர பரணி தன்னில்
இந்ததோர் குலமு தித்து இரணியத் தொழிலுஞ் செய்து
வந்தவர்க் கன்ன மீந்து வறுமைக ளில்லா னாகி
அந்தகன் பக்கல் புக்கி அயனுமே வரையப் பட்டு;

32. தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தாதம்பிரபரநதிக்கரையில், இதே குலத்தில் பிறந்து, விறகுவெட்டித் தொழிலும் செய்து வந்து, யாசிப்பவர்களுக்கு அன்னமளித்து, தரித்திரமில்லாமல் வாழ்ந்து, இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு;

33. உதித்தவ னிவனே யென்றோம் உரைக்கிறோ மிவன்பின் ஜன்மம்
சதிருடன் விரிஞ்சி தன்னில் ஜனிப்பனு மென்று சொல்வோம்
எதுகாலங் கருமஞ் சொல்லுவாய் ஏழைந்து நாலு ஆண்டுள்
விதியது முடியு மென்றோம் விளம்பின மொழின் றுவே.

33. பிறந்தவன் என்றோம். இவனுடைய பின்ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். விரிஞ்சி நாட்டில் பிறப்பான் என்றோம். எந்தக் காலத்தில் ஜாதகன் கருமங்கள் செய்வான்? சொல்லுங்கள். ஜாதகனுடைய முப்பத்தொன்பதாம் வயதுக்குள் தந்தை மரணமடைவான். நாங்கள் கூறியவை தவறு.

34. ஆறாறு ஆண்டு தன்னில் அன்னைக்குக் கண்ட மெய்தும்
மாரனுக் கறுபா னாறில் மார்கழி மாதந் தன்னில்
சேருவான் கால னோடு ஜயமுனி தடுத்துச் சொல்வார்
ஈராறு வாண்டுக் குள்ளே இவனுக்குக் கண்ட மெய்தும்.

34. ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் தாய் மரணமடைவாள். ஜாதகன் தனது அறுபத்தாறும் வயதில் மார்கழி மாதத்தில் இறந்து விடுவான். ஜயமுனிவர் மறுத்துக் கூறுகின்றார். ஜாதகன் பன்னிரண்டாம் வயதுக்குள்ளாகவே மரண மடைவான்.

## சகடைதோஷ பங்கம்

35. எப்படிச் சொல்லு மென்ன இரணியன் தனக்கீ ராறில்
தப்பித மதியும் நிற்கச் சகடைகள் தோட மென்றோம்
அப்படிச் சொல்லொ ணாது அம்புலி தனுசில் தங்க
மெய்ப்புடன் சகடை பங்கம் விளம்புவோம் முனியே யாங்கள்.

35. எப்படியென்று கூறுங்கள், என்று வினவ, குருவுக்குப் பன்னிரண்டாமிடத்தில் சந்திரன் இருப்பதால் கடைதோஷம் ஏற்படும் என்றோம். அப்படிக் கூறலாகாது. சந்திரன் தனுசில் இருப்பதால் சகடைதோஷம் பங்கமாகி விட்டது என்று முனிவர்களாகிய நாங்கள் கூறுகின்றோம்.

**ஈமக்கடன் செய்தற்குரிய கிரகநிலை**

36. கருமத்தோன் குருவே யாகிக் கலைதனி லிருப்ப தாலே
கருமங்கள் தாய்தந் தைக்குக் காதலன் செய்வா னவன்
மருமமில் லாமல் சொன்னோம் வயதுமே தீர்க்க மெய்தும்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

36. கருமாதிபதி குருவாகி மகரத்தில் இருப்பதால், தன் தாய் தந்தையருக்கு ஈமக்கடன்கள் ஜாதகனே செய்வான. ரகசிய மில்லாமல் கூறினோம். தீர்க்கமான வயதுண்டு. தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

37. பின்ஜன்ம மவ்வூர் தன்னில் பிறப்பனும் பௌத்ர னுக்
அன்னவன் ஜனன காலம் அசுரர்மந் திரி யிருப்புச்
சொன்னே னுண்டு எழும் திங்களு மேழ தாகும்
அன்னையே பூர்வஞ் சென்னோம் அம்பிகை யாளே கேளாய்.

37. மறுபிறவி அவ்வூரில் பௌத்திரனுகப் பிறப்பான். ஜாதகனுடைய ஜனன காலத்தில் சுக்கிரமகாதசை மீதி இருப்பு ஏழுவருடங்களும் ஏழு மாதங்களுமாம். தாயே! பூர்வ பாகத்தைச் சொன்னோம். பார்வதியே! கேளுங்கள்.

---

1. மகரவிராசி

## ஜாதகம் 46.

1. கலைநந்தி சேயும் வண்டி கவிசியம் பானு கன்னிப
புலவனும் பணியுங் கோயில் பொன்மானில் காரி மேரு
தலமது மிதுன மாகச் சிகிமேடம் பலனெவ் வாறு
நிலையதைப் புகலு மென்று நிமலியுங் கேட்க லுற்றாள்.

1. சந்திரன் விருஷபத்திலும், செய்வ்வாய் கடகத்திலும், சுக்கிரன் சிம்மத்திலும், சூரியன் கன்னியிலும், ராகு புதன் துலாத்திலும், குரு மகரத்திலும், சனி தனுசிலும், கேது மேடத்திலும் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், பலன் எவ்வாறு என்பதைக் கூறுங்கள், என்று பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | சந்திரன் | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | செவ்வாய் |
| குரு | | | சுக்கிரன் |
| சனி | | ராகு புதன் | சூரியன் |

2. அத்திரி புகலு கின்ற ரதுஜன்மம் ஆண்பா லாகும்
வித்தக னில்லஞ் சொல்வேன் வடவாசல் கீழ்மேல் வீதி
உத்தரந் தந்தி யீசன் ஓங்காளி நதியும் மார்க்கம்
சித்தசன் தந்தை மேல்பால் சிதைந்திடு மென்று சொல்வோம்.

2. அத்திரி முனிவர் கூறுகின்றார். இஃது ஆண்மகனின் ஜாதகம். ஜாதகன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வடக்குத் திசையில் விநாயகர் ஆலயமும் சிருவபெருமானின் ஆலயமும் காளிகோயிலும் நதியும் ஒரு சாலையும் உள்ளன. திருமாலின் பாழடைந்த கோயில் ஒன்று மேற்குத் திசையில் இருக்கும் என்று கூறுகின்றோம்.

3. சொன்னஇவ் வடையா ளத்துள் சிறுவூராம் கங்கை சேயாய்
அன்னவ னிந்த ஜன்மம் அருளுவான் மூன்றும் ஜன்மம
தன்தந்தை தாயின் யோகம் சகோதர களத்ர புத்ரர்
முன்பின்ஜன் மங்கள் யாவும் உரைக்கிறோ மிந்நூல் தன்னில்.

3. இங்ஙனம் அடையாளம் சொல்லப்பட்ட சிற்றூரில் வேளாளகுலத்தவனாக ஜாதகன் தன் தந்தைக்கு மூன்றும் பிறவியாகப் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை தாய் சகோதரர்கள் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்த ஜோதிட நூலில் கூறுகின்றோம்.

**வேறு**

4. தந்தைதுணை இருநான்கில் ஆண்பா லொன்று
சாற்றுகிறோம் பெண்மூன்று தீர்க்க மாக
அந்தவாண் தென்பக்கல் பாரி இல்லம்
அடைந்துமே அவ்வழியில் சிகர மாக
இந்தவனும் செல்வானும் எழிலாய் வாழ்வன்
தந்தைசேதி இயம்புவோம் மால்நிறம் வாததேகி
கந்தன்மேல் பத்தியுளன் கருதான் பொய்யும்
கனத்தஇல்லம் பூர்வமென்றோம் காசுள் ளானும்.

**4.** ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர்கள் எட்டுப் பேர்கள். அவர்களில் ஒரு சகோதரனும் மூன்று சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். அந்தச் சகோதரன் தெற்குப் பக்கத்தில் தன் மனைவியின் வீட்டுக்குச் சென்று அவளுடன் சிறப்புடன் வாழ்ந்து வருவான். மேன்மையான ஜாதகனுடைய தந்தையின் செய்திகளைக் கூறுகின்றோம். திருமாலைப் போன்ற கரிய நிறமுள்ளவன். வாயுசரீர முடையவன். முருகப்பிரான்மீது பக்தியுள்ளவன். பொய் பேசாதவன். முன்பாகவே பெரிய வீடு ஒன்று உளது. செல்வங்கள் உடையவனும்.

5. நயமுள வார்த்தையுளன் அவனி தன்னுல்
நாயகனும் உய்வானும் நட்போர் நேயன்
தாய்போல ஆதரிப்பன் தந்தை இல்லம்
தான்விடுவான் ஞாதிகட் கீகை யாவன்
மாயமாய் வேறுஇல்லம் அற்ப மாக
மருவுவான் மாமிரண்டு வரைய லாகும்
தீயமிலா உத்திரநாள் மிதுன ராசி
ஜனிப்பனுங் கல்வியுளன் சீலனு வன்.

**5.** நயமாகப் பேசுபவன். விவசாயம் செய்து வந்து வாழ்ந்து வருவான். நல்லவர்கட்குப் பிரியமானவன். தாயைப்போல ஆதரிப்பான். தன் தந்தையின் வீட்டில் வாழாதவன். பங்காளிகளுக்குக் கொடுக்கும் குணமுள்ளவன். வேறு சிறு வீட்டில் சென்று வாழ்ந்து வருவான். இரு மனைவியர் உண்டு என்று சொல்லுகின்றோம். உத்தர நட்சத்திரத்தில் மிதுன லக்கினத்தில் பிறப்பான். கல்வியறிவுள்ளவன். நல்லொழுக்க முள்ளவன்.

6. செலவுசெய்வன் மத்தியத்தில் சல்யப் பாதை
செறிந்துபின்பு நிவிர்த்தி செய்வன் தீரனுவன்
தலவாசஞ் சென்றிடுவன் சான்றோர் புத்தி
தடஞ்செய்வன் சித்திரமாய் பனையோர் விருத்தி
நிலைகாப்பன் அறமிச்சை நீத்தோர்க் கன்னம்
நிமிடத்தில் கோபமுறு முடனே சாந்தம்
புலவன்போல் மொழியுண்டு சுகபு சிப்பன்
பெரிதான கருமத்தில் புத்தி செல்லும்.

6. செலவாளி. இடைக் காலத்தில் கடன்படுவான். பிறகு அதைத் தீர்த்து விடுவான். தைரியசாலி. புண்ணிய தலங்களுக்குச் செல்வான். பெரியோர் களிடம் நட்புக்கொள்ளுவான். அழகான வீடு கட்டுவான். பண்ணை வர் முதலியன பெருகும். தன் நிலைமையைக் காத்துக் கொள்ளுவான். தருமம் செய்வதில் பிரியமுள்ளவன். துறவிகட்கு அன்னமளிப்பான். விரைவில் கோபமடைவான். உடனே சாந்தமுறுவான். புலவன் போலப் பேசுபவன். சாப்பிடுவதில் பிரியமுள்ளவன். பெரிய காரியங்களிலேயே புத்தி செல்லும்.

7. சொல்லியவிக் குணத்தானுக் கிரண்டு பாரி
தோன்றிடுவ ரிளையாளுக் கிவனு திப்பான்
அல்லலாய் முதல்பாரி சேத மெய்தும்
அதற்குச்சுதர் கன்னிரண்டு அழிவு நேரும்
நல்லதொரு ஜாதகன்றன் குணத்தைச் சொல்வோம்
நற்கல்வி ஊகமுண்டு நல்லோர் நேயன்
மல்லினில்முன் செல்லாதான் சரச வார்த்தை
மாடுவிருத்தி மாநிலங்கள் மேல்மேல் சேர்ப்பன்.

7. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு இரு மனைவியர் ஏற் படுவர். அவர்களில் இளையவளுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். முதல் மனைவி இறந்து விடுவாள். அவளுடைய புத்திரன் புத்திரி இருவரும் அழிந்துவிடுவர். ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். நல்ல கல்வி யறிவுள்ளவன். ஊகமுடையவன். நல்லவர்கட்குப் பிரியன். வீண் சண்டைக்குச் செல்லாதவன். சரசமாகப் பேசுபவன். கால்நடைகள் விருத்தியுண்டு. விளை நிலங்களை மிகுதியாகப் பெருக்குவான்.

8. சேர்ந்தவரை யாதரிப்பன் தீர நெஞ்சன்
ஜனபந்து மதிக்கவுய்வன் சிறப்பாய் வாழ்வன்
மாந்தளிர்போல் மேனியுறும் மரும மில்லான்
மறுகல்வி தான்புகல்வன் மாதர் நேயன்
வேந்தர்களு மிட்டமுறும் விநோத வார்த்தை
விண்டுவரி கரமதனில் வேலன் பக்தி
சாந்தகுணந் தாதையைப்போல் காமன் வாழ்வன்
கௌசிகரும் மறுத்துரைப்பர் யோக மெவ்வாறு.

8. தன்னையடைந்து யாசிப்பவர்களைக் காப்பாற்றுவான். தைரியசாலி. பந்து ஜனங்கள் கொண்டாடும்படி சிறப்புடன் வாழ்ந்து வருவான். மாந்தளிர்போல் மென்மையான சரீரமுள்ளவன். ரகசிய மில்லாதவன். வேறு கல்வி பயிலுவான். பெண்கள்மீது பிரியமுள்ளவன். அரசர்களுக்குப் பிரியனாக இருப்பான். அதிசயமாகப் பேசுவான். கையில் ருத்திர ரேகையும் விஷ்ணுரேகையும் உள்ளன. முருகப்பிரான்மீது பக்திகொள்ளு வான். கௌசிக முனிவர் மறுத்துக் கூறுகின்றார். இவனுக்கு எங்ஙனம் யோகம் ஏற்படும்?

**வேறு**

9. குருசனி யிருவ ரொருவரோ டொருவர்
கூடின பலனது வொன்று
திருமதி யுச்ச மிரவிக்கீ ருறில்
செழிப்புள புகருமே தங்கப்
பருவத யோகம் பரத்தையர் யோகம்
பகர்ந்தனம் பலனது கேளாய்த்
துரைகளால் பெருமை திருப்பணி செய்தல்
துறவுபூஞ் சோலைகள் செய்தல்.

9. குருவும் சனியும் இடம் மாறி (பரிவர்த்தனையாக) இருப்பதாலும், சந்திரன் விருஷபத்தில் உச்சமாக இருப்பதாலும், சூரியனுக்குப் பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன் இருப்பதாலும், பர்வத யோகம் பரத்தையர் யோகம் இரண்டும் கூறினோம். அதனுடைய பலனைக் கேளுங்கள். துரைகளால் பெருமை அடைவான். ஆலயத்திருப்பணிகள் செய்வான். கிணறு, பூஞ்சோலைகள் இவைகளை செய்விப்பான்.

10. செய்குவான் சித்திர வில்லமு மென்றோம்
சிறப்புளக் குடும்பமு மேற்பன்
ஐயமே லிச்சை தன்துணை முன்னால்
ஆணது நட்டமே யாகும்
தையலு மொன்று தீர்க்கமா மென்றோம்
ஜாதகன் பின்துணை யாண்பால்
வையமேல் தீர்க்கங் கன்னியு மொன்றே
வறைகின்றோ முனிவராம் யாங்கள்.

10. அழகிய வீடு கட்டுவான். சிறப்புள்ள குடும்பத்தை அடைவான். தருமம் செய்வதில் பிரியமுள்ளவன். தன்னுடன்பிறந்தவர்களில் மூத்த சகோதரனுக்குத் தீதாகும். பெண் ஒருத்தி நீண்ட ஆயுளுள்ளவளென்று கூறுகின்றோம். ஜாதகனுடைய பின் சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். சகோதரி ஒருத்தியேன்று கூறுகின்றோம் முனிவராகிய நாங்கள்.

11. முனிவரே யன்னை சேதியைப் புகல்வோம்
முனிவுண்டு உடனே சாந்தம்
இனமதிப் புடையாள் இடுக்கமென் றோர்க்கு
ஈகுவாள் பித்ததே கத்தாள்
வினைமன மில்லாள் மேலவர் பக்தி
வீண்பழி யில்லாதவ ளென்றோம்
வனிதையில் தென்பால் துணைகன்னி மூன்று
மருவிடு மாணது வொன்று;

11. முனிவரே ! தாயின் செய்தியைக் கூறுகின்றோம். கோபம் உண்டு. உடனே அது தாழ்வுறும். தன் பந்துக்களால் நன்கு மதிக்கப்படுவாள். துன்பமடைந்தவர்கட்கு உதவுவாள். பித்த தேகமுள்ளவள். கெட்ட மனமில்லா

தவள். பெரியோர்களிடம் பக்தியுள்ளவள். வீண்பழிகள் இல்லாதவள் என்றோம். அவளுடைய வீடு தெற்குப்பக்கில் உள்ளது. உடன் பிறந்தவர்களில் சகோதரிகள் மூவரும் சகோதரன் ஒருவனும் பிறந்து ;

12. தீர்க்கமா மற்றோர் சேதமாந் தாயே
செப்புவோ மன்னேயின் பூர்வம்
ஏற்கவே பழனி நாட்டினில் சேடர்
இக்குல மாதுவு முதித்து
மார்க்கமாய்க் குடும்பி வரன்சுத ருண்டாய்
மாநிலம் நல்லவ ளாகி
ஆர்க்கவே யடியார்க் கன்னமு மீந்து
அச்சென்மம் பவமது மின்றி;

**12.** நீண்ட ஆயுளுள்ளவர்களாக இருப்பார்கள். ஒரு குழந்தைக்குச் சேதமுண்டு. தாயே ! தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மேலான **பழனி** க்ஷேத்திரத்தில் சேடர் குலத்தில் இப் பெண் பிறந்து, வளமுள்ள குடும்பத்தையடைந்து, கணவன் குழந்தைகளை யடைந்து, உலகில் நல்லவளாகி, சிவனடியாருக்கு அன்னமளித்து, அப் பிறவியில் பாவச் செயல்களில்லாமல் ;

13. மங்கையு மாண்டு மாதவன் வரைய
வந்தவள் சீலமாங் குலத்தில்
சங்கையில் லாமல் பின்ஜன்மம் புகல்வோம்
[1]சட்டநா தீசர்வாழ் நகரில்
துங்கமாம் வேத குலமதி லுதிப்பாள்
ஜயமுனி தடுத்துமே புகல்வார்
நங்கையிச் சென்ம முன்கோபி யாயும்
நலிந்தோரை விரோதமே செய்தும் ;

**13.** பெண்ணும் இறந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமுள்ள இக்குலத்தில் பிறந்தாள் என்றோம். மறு பிறவியில் சந்தேகமில்லாமல் சட்டநாதேச்வரர் வாழும் **சீகாழி**யில் தூய்மையான அந்தண குலத்தில் பிறப்பாள். ஜய முனிவர் தடுத்துக் கூறுகின்றார். இப் பெண் இப் பிறவியில் முன்கோபத்துடனும் கஷ்டப்பட்டவர்களுக்கு உதவி செய்யாமலும் வாழ்ந்து வந்தபோதிலும் ;

**வேறு**

14. மாதுவும் வாழ்வ தாலே மறைக்குல முதிக்கும் வண்ணம்
ஓதுவீர் விவரம் தன்னை உள்மனங் கவடு மின்றி
மேதினில் விரத மேற்றும் வீண்வம்பிற் செல்லாத தாலும்
காதலி யுதிப்பா ளாவள் கழறின மொழிகுன் றுவே.

**14.** இப்பெண்ணும் வாழ்ந்து வருவதால், அந்தணகுலத்தில் பிறக்கும் காரணங்களைச் சொல்லுங்கள். மனத்தில் கபடமில்லாமல் உலகில் விரதங்கள் ஏற்று, வீண் வம்புகளுக்குச் செல்லாமல் வசித்து வந்ததால், அந்தண குலத்தில் பிறப்பாள். கூறிய வார்த்தைகள் தவறு.

---

[1] சீகாழி.

15. இவன்பிதா பூர்வந் தன்னை எடுத்துநா முரைக்கக் கேண்மோ
தவசிவாழ் வுடுக்கை தன்னில் ஜனித்தனன் வன்னியச் சேயாய்
நவனியில் ஜீவித் தேதான் நாயகன் வாழு நாளில்
பவமதைப் புகலக் கேண்மோ பஞ்சையா மேழை மாது ;

15. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். தவம் செய்பவர் வாழ்ந்துவரும் உடுக்கையில், வன்னிய குலத்தில் பிறந்து, விவசாயம் செய்து ஜீவித்து வந்த காலத்தில் ஏற்பட்ட பாவச்செயலைக் கேளுங்கள். ஏழைப்பெண் ஒருத்தி ;

16. தன்னில்ல மடைந்து மேதான் சத்தியும் வேலை செய்து
அன்னமும் வாங்கி யுண்டு அம்மாது வாழு நாளில்
மன்னவன் மோக முற்று மாரன்தன் ஞடல் செய்து
பின்சில நாட்கள் சென்று பேதைக்குக் கருவு தங்க ;

16. ஜாதகனுடைய தந்தையின் வீட்டை யடைந்து, வீட்டில் வேலைகள் செய்து, அன்னம் வாங்கிச் சாப்பிட்டு வாழ்ந்து வருங்காலத்தில், இவன் அவளிடம் மையல்கொண்டு, மன்மத லீலைகள் செய்து (போகம் செய்து) வந்தான். சின்னாட்கள் சென்ற பிறகு அப் பெண்ணுக்குக் கரு தங்க ;

17. வினைசெய்தான் கருவ ழிக்க வித்தகி மாண்டா ளென்றோம்.
பிணையாக வந்தத் தோடம் புக்கிற்றுப் பாலக னுக்குக்
கனமுடன் வேறு காணுன் காலன்தன் பதிக்குச் சென்று
சினமிலா இக்கு லத்தில் ஜனித்தன னென்று சொல்வோம்.

17. கருவை அழிக்க மருந்துகள் கொடுத்தான். அப் பெண்ணும் இறந்தாள். தீவினையாக அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. வேறு தீவினைகளில்லாதவன். ஜாதகனின் தந்தை மரணமடைந்து இக்குலத்தில் பிறந்தான் என்று சொல்லுகின்றோம்.

18. முன்ஜன்மக் கருவின் தோடம் முதல்மனை நட்ட மெய்தும்
தன்சுதர் தோட மாகுஞ் சாற்றுவோ மிவன்பின் ஜன்மம்
கன்னியா குமரி தன்னில் கலப்பனும் பிரம சேயாய்
மன்னர்பால் அரசு செய்து வாழ்வனு மென்று சொல்வோம்.

18. முற்பிறவியில் கருவழித்த தோஷத்தால் முதல் மனைவி இறந்து விடுவாள். புத்திரர்களுக்கும் தோஷம் ஏற்படும். ஜாதகனுடைய தந்தையின் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். கன்னியாகுமரியில் அந்தண குலத்தவனைப் பிறந்து, அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்ந்து வருவான் என்று சொல்லுகின்றோம்.

19. இந்ததோர் ஜன்மந் தன்னில் இவன்செய்த புண்ய மென்ன
முந்தவே கூறு மென்ன மொழியதைக் காத்த தாலும்
அன்னியர்க் குதவி யாயும் அறுமுகன் பத்தி யாயும்
உன்னத தலங்கள் சென்றும் உயர்வோர்க்கு அன்ன மீந்தும் ;

19. இப் பிறவியில் இவன் செய்த நற்காரியங்க ளென்ன ? முதலில் கூறுங்கள், என்று வினவ, சொன்ன வார்த்தைகளைக் காப்பாற்றியதாலும், பிறருக்கு உபகாரம் செய்துவந்ததாலும், சுப்பிரமணியக்கடவுளிடம் பக்தி கொண்டும், உயர்ந்த புண்ணியத்தலங்களுக்குச் சென்றும், பெரியோர் களுக்கு அன்னமளித்தும் ;

20. அறமதி லிச்சை யாயும் அவனுமே வாழ்ந்த தாலே
பெரிதான மறைக் குலத்தில் பிறப்பனு மென்று சொல்வோம்
கருமகா லங்கள் தம்மைக் கழறுவோ மிருபா னெட்டில்
அரவுதன் தசையி லேதான் அக்கேது புத்தி யாகும்.

20. தருமம் செய்வதில் விருப்பமுள்ளவனுகவும் வாழ்ந்து வந்ததால், உயர்ந்த அந்தணகுலத்தில் பிறப்பான் என்று கூறுவோம். ஜாதகனுடைய கரும காலங்களைச் சொல்லுகின்றேம். ஜாதகனுடைய இருபத்தெட்டாம் வயதில் ராகுமகாதசையில் கேதுபுக்தியில் தந்தை மரணமடைவான்.

21. அன்னைக்கு முப்பா னென்பான் அணுகிடும் மார கங்கள்
பொன்தசை புந்தி புத்தி பொருந்திடு மென்று சொல்வோம்
மன்னவன் மணத்தின் காலம் வரைகிறேம் பதினே ழாண்டில்
தென்திசை அன்னை வர்க்கந் தேவியும் வருவா ளாவள்.

21. ஜாதகனுடைய தாய்க்கு முப்பத்தொன்பதாம் வயதில் மரணம் ஏற்படும். அப்பொழுது குருமகாதசை புதபுக்தி நடைபெறும் என்று சொல்லுகின்றேம். ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின் றேம். அவனுடைய பதினேழாம் வயதில் தெற்குத் திசையில் தன் தாயின் வர்க்கத்திலிருந்து மனைவி வருவாள்.

22. மாதுவின் குணத்தைச் சொல்வோ மாந்தளிர் மேனி யாவள்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உயர்வான புத்தி யுள்ளாள்
தீதுகள் எண்ணு நெஞ்சம் சிறப்புள குடும்ப மேற்பள்
காதலி வயது தீர்க்கம் கௌசிகர் மறுத்துச் சொல்வார்.

22. அப் பெண்ணின் குணத்தைச் சொல்லுகின்றேம். மாந்தளிர் போல் மென்மையான சரீரமுடையவள். சுகமாகப் பேசுபவள். உயர்ந்த புத்தி யுள்ளவள். கெட்ட எண்ணங்களில்லாத மனத்தினள். செழிப்புள்ள குடும்பத்தை யடைவாள். நீண்ட ஆயுளுள்ளவள். கௌசிக முனிவர் இடை மறித்துச் சொல்லுகின்றுர்.

### இருதாரம் ஏற்படுதற்குரிய கிரகநிலை

23. இருமனை யென்று சொல்வோம் எப்படிச் சொல்லு மென்ன
குருவுமே யேழோ னுகிக் கொடுமையா யெட்டில் தங்க
வருமனை யிரண்டு வென்றேம் மங்கலன் இரண்டில் தங்க
அருணனும் நாலில் தங்க அணுகாது தாரம் ரண்டு.

23. ஜாதகனுக்கு இரு மனைவிகள் உண்டு என்றோம். எப்படி என்று சொல்லுங்கள். குரு ஏழாம் வீட்டுக் குரியவனாகி எட்டாம் வீட்டில் தங்கியிருப்பதால் இரு தாரம் உண்டு என்று கூறினோம். செவ்வாய் குடும்பஸ்தானத்தில் இருப்பதாலும், சூரியன் நாலில் இருப்பதாலும், இருமனைவியர் ஏற்படார் என்றோம்.

### அதற்கு மறுப்பு

24. கன்னிகை யொன்றே தீர்க்கங் காணைகள் பலத்தைக் கேண்மோ
பின்னமாந் தோன்றி னாலும் பலமுரு என்று சொல்வோம்
என்னகா ரணத்தி னாலே இயம்பினீ ரந்தச் சங்கை
துன்மையாய் ராகு புந்தி சுதர்தானந் தன்னில் தங்க ;

24. மனைவி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். புத்திர பாவத்தைக் கேளுங்கள். ஒரு சமயம் புத்திரர் தோன்றினும்நிலையார் என்று கூறுகின்றோம். என்ன காரணத்தினால் அங்ஙனம் சொல்லுகின்றீர்கள் ? ராகு புதன் இவர்கள் புத்திரஸ்தானமாகிய ஐந்தாமிடத்தில் இருப்பதாலும் ;

25. கருமத்தோன் எட்டில் தங்கக் காணைகள் தோடஞ் சொன்னோம்
திருமகன் பூர்வந் தன்னில் தீவினை யதிகஞ் செய்தான்
மருவிற்று அந்தத் தோட மறைகுவீர் விவரந் தன்னைப்
பெருமையாய்ப் பழனி நாட்டில் பிறந்தனன் சேடர் வம்சம்.

25. கருமாதிபதியாகிய குரு எட்டாமிடத்தில் தங்கியிருப்பதாலும் புத்திரர்கட்குத் தோஷம் சொன்னோம். ஜாதகன் முற்பிறவியில் அநேக தீவினைகளைச் செய்தான். அந்தத் தோஷங்கள் ஏற்பட்டன. விபரத்தைக் கூறுங்கள் பெருமையுள்ள பழனி க்ஷேத்திரத்தில் சேடர் வமிசத்தில் பிறந்தான்.

### நல்லபாம்பை அடித்த தோஷம்

26. பாரியும் மதலை யுண்டாய்ப் பெரிதான குடும்பி யாகி
மாரனும் வாழு நாளில் மருவின வினையைக் கேண்மோ
கார்கோடன் மகுடத் தாலே கலந்தது முற்றந் தன்னில்
மாரனு மரங்கஞ் செய்து வாட்டினான் கழியி னாலே.

26. மனைவி மக்களைப் பெற்று, பெரிய குடும்பத்தை அடைந்து, ஜாதகன் வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஒரு சர்ப்பம் வீட்டு முற்றத்தில் படமெடுத்து ஆடியது. ஜாதகனும் அதைக் கலவரப் படுத்தித் தடியால் அடித்தான்.

### கைம்பெண்போகம் ; கருவழித்தல்

27. மறலியின் பதிக்கு நாக மருவிற்று அதுவோர் தோடம்
வரனில்லா மாது போகம் மருவியே கருவ ழித்தான்
பொருளது சிலர்க்குத் தந்து பூமியில் சிலகைக் கொண்டான்
உறைந்தது ஏழை சாபம் உத்தமி கேட்டி டாயே.

27. நாகமும் இறந்தது. அஃது ஒரு தோஷமாயிற்று. கணவனில்லாத பெண்ணை (விதவையை) இவன் பலவந்தமாகப் புணர்ந்தான். ஏற்பட்ட கருவினை அழித்தான். சிலபேருக்குப் பொருளைக் கொடுத்து அவர்களுடைய நில புலன்களை அபகரித்துக்கொண்டான். ஏழையின் சாபம் வந்தது. உத்தமியே! கேட்டிடுவாய்.

28. அந்திய காலந் தன்னில் அறுமுகன் தொண்டு பூண்டு
முந்தினோர்க் கன்ன மீந்து மேவினன் கால னூடு
சந்ததம் பிரமன் லக்கஞ் ஜனிப்பனு மிந்தப் பாலன்
விந்தையாய்ப் பூர்வ தோடம் மேவிடு மிச்சென் மத்தில்.

28. ஜாதகன் தன் கடைசிக்காலத்தில் ஆறுமுகக் கடவுள்மீது பக்தி கொண்டு, பெரியோர்களுக்கு அன்னமளித்து மரணமடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தான். முற்பிறவியின் தீவினை இப்பிறவியிலும் தொடர்ந்தது.

**ஸர்ப்பதோஷ சாந்தி**

29. சுதர்களுந் தோட மெய்துஞ் செப்புவோஞ் சாந்தி தானும்
நதியோர மரத்தின் கீழே நாகமுஞ் சிலையில் செய்து
பதித்துமே மனைவி யோடு பாலனுந் தில்லை சென்று
நதிசடை யணிந்தோன் பாதம் நாயகன் அர்ச்சித் தேத்தி ;

29. புத்திரர்கட்குத் தோஷமேற்படும். அதற்குச் சாந்தி கூறுகின்றோம். ஓர் ஆற்றங்கரையின் அருகில், நாகச்சிலை ஒன்று செய்துவைத்து, அதற்குப் பூசைகள் செய்து, தன் மனைவியுடன் தில்லைநாட்டுக்குச் சென்று, கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவபெருமானுக்கு அருச்சனை செய்து, துதித்து;

30. அங்குள மறையோ ருக்கு ஆதித்யந் தான மீந்து
சங்கர னடியார்க் கன்னந் தடையிலா மூவேழ்க் கீந்து
அங்கவ னுள்ளூர் சென்று ஆனையின் கோட்டத் திற்கு
இங்கவன் மரண மட்டும் இலுப்பைநெய் தீப மொன்று ;

30. அங்குள்ள அந்தணர்களுக்கு (ஆதித்யம்) சமாராதனை செய்து, தானமளித்து, சிவனடியார் இருபத்தோருபேருக்குத் தடையில்லாமல் அன்னமளித்து, மீண்டும் உள்ளூருக்குத் திரும்பிவந்து, விநாயகரின் ஆலயத்தில் மரணக்காலம்வரை ஜாதகன் இலுப்பை நெய்யால் ஒரு தீபத்தை ;

31. வைத்திட வினைகள் நீங்கி மைந்தராண் ஒன்று தீர்க்கம்
வித்தகி பெண்பால் மூன்று விருத்தியாம் பால னுகும்
குத்தமாய்ச் செய்யா னுகில் குழவிகள் தோட மெய்தும்
அத்தியை வளர்த்த மாதே அறைகிறோம் யோகச் செய்தி.

31. ஏற்றிவைக்க, தீவினைகள் நீங்கி, ஒரு புத்திரன் தோன்றுவான். அவன் நீண்ட ஆயுளுள்ளவன். மூன்று பெண்களும் விருத்தியாகும். நாங்கள் கூறியபடி செய்யாவிடில் புத்திரர்களுக்குத் தோஷமேயாகும். விநாயகனைவளர்க்கும் தேவியே! யோகச்செய்திகளை (பின்பாகத்தில்) கூறுகின்றோம்.

## ஜாதகம்—47

1. சந்திரன் சீய மாகச் சனிராகு வண்டி யாகப்
புந்தியு மிரவி நந்திப் பூமகன் கன்னி யாக
மந்திரி தேள தாக மழைக்கோளு மேடம் புக்க
பந்தமாய்க் கேது மானில் பகர் ஜன்மம் வீணையாக.

1. சந்திரன் சிம்மத்திலும், சனி ராகு கடகத்திலும், புதன் சூரியன் விருஷபத்திலும், செவ்வாய் கன்னியிலும், குரு விருச்சிகத்திலும், சுக்கிரன் மேஷத்திலும், கேது மகரத்திலும் இருந்து, லக்கினமும் மிதுனமாக இருக்க (பலனைச் சொல்லுங்கள்).

| | | | |
|---|---|---|---|
| | சுக்கிரன் | புதன் சூரியன் | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | சனி ராகு |
| கேது | | | சந்திரன் |
| | குரு | | செவ் வாய் |

2. வீதியும் வடதெற் காகும் மேற்கது வாச லாகும்
ஓதுவோம் வடமேல் திக்கில் உறைகு வாள் மாரிதாமும்
நீதியாய்க் கிழக்கில் காளி நிகர்சூழி மாரி தங்கும்
போதவே யாடு தின்னும் பெருமுனி யப்பன் நிற்பான்.

2. தெற்கு வடக்காவுள்ள வீதியில், மேற்கு நோக்கியுள்ள வாயிலையுடைய (வீட்டில் ஜாதகன் பிறந்தான்.) வடமேற்குத் திக்கில் காளி கோயிலும், பெரிய குளமும், மாரியம்மன் கோவிலும் உள்ளன. முனீச்வரன் கோயிலும் ஒன்று உண்டு.

3. தென்திசைக் கணேசன் கோட்டம் செப்புமிவ் வடையா ளத்துள்
அன்புடன் சிற்றூர் தன்னில் அவன்கங்கை குலத்தி லேதான்
இன்பமா யுதிப்பா னுவன் இவன்தந்தை தாயின் யோகம்
முன்துணை களத்ர புத்ரர் முன்பின்ஜன் மங்கள் சொல்வோம்.

3. தெற்குத்திசையில் விநாயகர் ஆலயம் ஒன்றுண்டு. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள சிற்றூரில் ஜாதகன் வேளாள குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை தாய் முன்பிறந்த சகோதரர்கள் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும் சொல்லுகின்றோம்.

### வேறு

4. தந்தைதுணை இருமூன்றில் ஆண்பால் ரண்டு
சதிருடன் பெண்ணொன்று தீர்க்க மென்றோம்
நொந்திடும் மற்றவெல்லாம் பிதா குணத்தை
நுவலுவோ மிருசிவப்பன் கல்வி கொஞ்சம்
வந்தவர்க் கன்னமிடும் மாமி ரண்டாம்
மாடுகன்று விருத்தியுளன் பலர்க்கு நேயன்
தந்தன முடையவனும் பூமி சேர்ப்பன்
தைரியத்தன் சுகிபுசிப்பன் சாற்றக் கேளே.

4. தந்தையின் உடன்பிறந்தவர் ஆறுபேர்களில் இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர்களெல்லாம் நிலையாமல் இறந்து விடுவார்கள். ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். கருமைகலந்த சிவந்த மேனியன். சிறிதே கல்வியறிவுள்ளவன. தன்னைத் தேடிவந்தவர்கட்கு உணவளிப்பான். மனைவிகள் இருவராவர். கால்நடைகள் விருத்தியுள்ளவன். பலருக்குப் பிரியமானவன. தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் மிகுதியாக உள்ளவன். பூமியைச் சேர்ப்பான். தைரியமுள்ளவன். சாப்பிடுவதில் பிரியன். இன்னும் கேளுங்கள்.

5. சாற்றுகின்றோம் ஊகமுளன் முருகன் பத்தி
சோதரர்க் கொருமையுளன் சத்ரு நேயன்
நீற்றோரை யுறவு கொளான் பித்ததேகன்
நீடசியுளன் பலருக்கும் நல்லோனவன்
பாத்திரங்க ளாயவல்லன் பூமி சேர்ப்பன்
பாரினில் வறுமையிலான் கிருகஞ் செய்வன்
சூத்திரங்க ளில்லாதான் மூலச் சூடு
தோன்றிடுமே யிவனூர்க்குத் தோகையே கேள்.

5. சொல்லுகின்றேன். ஊகமுள்ளவன். முருகப்பிரான்மீது பக்தியுள்ளவன். சகோதரருடன் ஒன்றி வாழ்வான். சத்துருக்களையும் நட்புக்கொள்ளுவான். துறவிகளிடம் பிரியமில்லாதவன். பித்த சரீரமுள்ளவன். உயரமுடையவன். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். பாத்திரங்கள் செய்யவல்லவன். விளைநிலங்களைப் பெருக்குவான். உலகில் வறுமையில்லாதவன். வீடு கட்டுவான். ரகசியங்க ளில்லாதவன். மூலச்சூடுடையவன். தேவியே! கேளுங்கள்.

### வேறு

6. இக்குண முடையோ னுக்கு இவனுமே தாரம் ரண்டில்
தொக்கவே யிளையா ளுக்குத் தோன்றின னிவனே யம்மா
மிக்கவே யிவன் குணத்தை இயம்புவோஞ் சிவந்த மேனி
பக்குவ மாக வார்த்தை பகருவான் கல்வி மானும்.

6. இங்ஙனம் கூறப்பட்ட தந்தைக்கு மனைவிகளிருவரில் இளையவளுக்குப் பிறந்தவன் இந்த ஜாதகன். இவனுடைய குணத்தைச் சொல்லுவோம். சிவந்த மேனியுள்ளவன். பக்குவமாகப் பேசுபவன். கல்வியறிவுள்ளவன்.

7. ரோமங்கள் நிட்சி யுள்ளான் நுண்ணிய புத்தி யுள்ளான்
தீமையை யொருவர்க் கெண்ணன் ஜனவுப காரி யாவன்
தாமத குணத்த னுவன் சந்தேக மனத்த னுவன்
பூமியும் விருத்தி செய்வான் புகலுவான் சிலேடை வார்த்தை.

7. உரோமங்கள் நீண்டிருக்கும். கூர்மையான அறிவுள்ளவன். பிறருக்குத் தீங்குகள் எண்ணுதவன். ஜனங்களுக்கு உபகாரம் செய்பவன். தாமதமான குணங்களுள்ளவன். சந்தேகமான மனத்தன். பூமியைப் பெருக்குவான். இருவிதமாகப் பேசுபவன்.

8. வஞ்சக நெஞ்ச னுவன் அரசர்க் கிட்டங் கொள்வன்
நெஞ்சமு மிரக்க முள்ளான் நெறிமுறை நடத்த வல்லான்
அஞ்சிடான் யாவ ருக்கும் அறமதி லிச்சை கொஞ்சம்
செஞ்சொலில் நுணுக்கந் தேர்வன் சிறப்பான குடும்பி யாவன்.

8. வஞ்சகமான மனமுடையவன். அரசர்களுக்குப் பிரியனுயிருப்பான். இளகிய மனமுள்ளவன். நெறி முறைப்படி நடப்பான். ஒருவருக்கும் அஞ்சாதவன். தருமம் செய்வதில் பிரியமுள்ளவன். நல்ல (தமிழ்ப்) பாஷையினுடைய உள் ரகசியங்களை நன்குக் கற்றுணர்வான். சிறப்புள்ள குடும்பியாக விருப்பான்.

9. கடன்படான் பாக்யஞ் சேர்ப்பன் கலகமுங் கொஞ்ச முள்ளான்
விடவாக்கு வுடைய னுவன் வீணப வாத முள்ளான்
நடமிடு காலி விருத்தி நற்புத்தி வறுமை யில்லான்
நடையது துருசு முள்ளான் நற்கரம் பத்ம ரேகை.

9. கடன் வாங்காதவன். பாக்கியங்களை விருத்தியாக்குவான். சிறிது கலகம் உள்ளவன் (செய்பவன்). தீச்சொல் உள்ளவன். வீண் அபவாதங்களை அடைவான். கால்நடைகள் விருத்தியுள்ளவன். நல்ல அறிவுள்ளவன். தரித்திரம் இல்லாதவன். வேகமாக நடப்பவன். கையில் பத்மரேகையுள்ளவன்.

10. இவனுடைத் துணைவர் தம்மை இசைக்கிறோ மைவ ராவர்
அவனியில் பெண்பா லொன்று அறைகிறேந் தீர்க்க மாக
நவனியில் மற்ற வெல்லாம் நசித்திடு மென்று சொல்வோம்
சிவன்தனைப் பூசை செய்யுஞ் செல்வியே மேலுங் கேளே.

10. ஜாதகனுக்கு உடன் பிறந்தவர்கள் ஐவர். அவர்களில் பெண் ஒருத்தி. அவள் நீண்ட ஆயுளுள்ளவள். மற்றவரெல்லாம் நிலையில்லாமல் இறந்து விடுவார். சிவபெருமானைத் தோத்திரம் செய்யும் செல்வியே! கேளுங்கள்.

11. இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மிருபா னேழில்
கன்னிகை யுத்தி ரத்தில் கனத்ததோர் நகரந் தன்னில்
மன்னிய மாது வுந்தான் வருகு வாள் அவள்கு ணத்தைத்
தன்னையே சொல்லு கின்றேன் சங்கரி மேலுங் கேளே.

11. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுவோம். பதினேழாம் வயதில், வடக்குத்திக்கிலிருந்து மனைவி வருவாள். அவள் பெரிய நகரத்திலிருந்து தன்னுடைய தாயின் வர்க்கத்திலிருந்து வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சங்கரியே! மேலும் கேளுங்கள்.

12. சிவந்திடு மேனி யாவள் சிறுத்தவர்க் குதவி செய்வள்
அவனியில் பொய்கள் சொல்லாள் யாவர்க்கும் நல்லோ ளாவள்
இவளுமே யோக சாலி இடரான புத்தி யில்லாள்
தவத்துளோர்க் கன்ன மீவள் வரன்மனம் போல வாழ்வள்.

12. சிவந்த உடலுள்ளவள். துன்பமடைந்தவர்கட்கு உபகாரம் செய்பவள். பொய் புகலாதவள். எல்லோருக்கும் நல்லவளாக இருப்பாள். அதிருஷ்டசாலியாக இருப்பாள். தீய எண்ணங்களில்லாதவள். தவம் செய்பவர்களுக்கு அன்னமளிப்பாள். தன் கணவனுடைய மனம்போல் வாழ்ந்துவருவாள்.

13. மனைவியு மொன்றே யாகும் வயதுமே தீர்க்க மென்றோம்
அனையவே முனிவர் கூற அத்திரி சொல்லுகி ன்றார்
கனமுள குடும்பந் தன்னில் காரியும் ராகு தங்கப்
பிணையான ஏழோ னாறில் பொருந்தியே இருப்ப தாலே ;

13. ஜாதகனுக்கு மனைவியொருத்தியேயாவள். அவளுக்கு நீண்ட ஆயுள் உள்ளது. என்று முனிவர் கூறும்போது, அத்திரி முனிவர் சொல்லுகின்றார். குடும்பஸ்தானத்தில் சனியும் ராகுவும் இருப்பதாலும், ஏழாம் வீட்டுக்குரிய குரு ஆறும்வீட்டில் (மறைவுஸ்தானம்) இருப்பதாலும் ;

14. இருமனை நேரு மையா என்றுமே அத்ரி சொல்லக்
குறுமுனி சொல்லு கின்றார் குடும்பத்தோன் மூன்றில் நிற்க
வருமனை யொன்றே யாகும் அன்னிய மாதொ ருத்தி
உறுகுவா ளென்று சொன்னோம் உத்தமி புகலு கின்றாள்.

14. இரு மனைவியர் ஏற்படுவர், ஐயா! என்று அத்திரி முனிவர் கூறும்போது, அகத்திய முனிவர் சொல்லுகின்றார். குடும்பஸ்தானாதிபதியாகிய சந்திரன் மூன்றுமிடத்தில் இருப்பதால், ஜாதகனுக்கு மனைவி யொருத்தியே. வேற்று மாது ஒருத்தி இருப்பாள், என்று சொன்னோம். பார்வதி சொல்லுகின்றாள்.

15. இருவர்க்கு வார்த்தை தானும் இசைந்திட்டீர் சரியே ஐயா
வருமவன் தனக்குத் தாரம் வரைகின்றே மொன்றே யாகும்
திரமாகு மந்த மாது சேயிரு வர்க்கு மேதான்
இருமுத்திரை செய்வா ளாகும் எப்படிச் சொல்லு மம்மா.

15. ஜாதகனுக்கு இரு மனைவியர் என்று கூறிவிட்டீர்களே, ஐயா! அது சரி. அவனுக்கு மனைவியொருத்தியே என்று சொல்லுகின்றோம். அப்பெண்ணும் நிலையாக இருப்பாள். அவளுக்கு ஜாதகன் இரு மாங்கல்யங்கள் அணிவிப்பான். எப்படி? என்று சொல்லுங்கள், தாயே!

**மனைவி மாங்கலிய மிழக்க கிரகநிலை**

16. பனிரண்டில் புந்தி நின்று பணியுமே லாப மேறப்
பிணையாகும் முதல்மாங் கல்யம் பின்புமாங் கல்யஞ் செய்வன்
சினமாகு மெவ்வி தத்தால் செய்......சொல்லு மென்ன
அனையவே கள்ள ராலே அறுபடும் அந்த முத்ரை.

16. ஜாதகனுக்கு, பன்னிரண்டாமிடத்தில் புதன் இருந்து, ராகு விருக்குமிடத்துக்கு லாபஸ்தானத்தில் இருப்பதால், முதல் மாங்கலியம் தொலைந்து போகும். வேறு மாங்கல்யத்தை அணிவிப்பான். என்ன காரணத்தினால்?.........என்று சொல்லுங்கள், என, திருடர்களால் அபகரிக்கப்படும், அந்த மாங்கலியம்.

17. எந்தக்கா லத்திலே தான் இவ்விதம் நடக்குஞ் சொல்வாய்
முந்தியே சொல்லு கின்றேம் முப்பத்து நாலா மாண்டில்
இந்தமாங் கல்யஞ் செல்லு மிவ்வூருக் குத்த ரத்தில்
சந்ததம் காஞ்சிக கேகிச சண்டாளக் கள்ள ராலே;

17. எந்தக் காலத்தில் இரு மாங்கலியம் ஏற்படு மென்று கூறுங்கள். முதலில் சொல்லுகின்றோம். ஜாதகனுக்கு முப்பத்துநான்காம் வயதில், இந்த மாங்கலியம் அபகரிக்கப்படும். இவ்வூருக்கு வடக்கில் காஞ்சிக்குப் போனபோது சண்டாளர்களாகிய திருடர்களால்;

18. நீங்கியே வேறு முத்ரை நிமனனுஞ் செய்வா னுரும்
தீங்கிலாத் தார மொன்றே செப்புவோந் தீர்க்க மாக
ஆங்கதற கிசைவ தாக அரைகின்றே மிவளின் காலம்
பாங்கியால் களவு போகி வந்திடு மென்று சொன்னேம்.

18. அபகரிக்கப்பட்டு வேறு மாங்கல்யம் ஜாதகன் செய்வான். தீங்குகளில்லாத மனைவி யொருத்தியே யென்றும், அவள் தீர்க்கமாயிருப்பாள என்றும் கூறுகின்றோம். தன்னுடைய தோழியால களவுபோய்த் திரும்பும் என்று சொல்லுகின்றோம்.

19. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பால் ரண்டு
சித்தமாய்ப் பெண்பா லொன்று செப்புவோ மிவனுக் கேதான்
மத்திய மூன்று நட்டம் புகலுவோ மிவனுக் கேதான்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் மேலும் கேளே.

19. ஜாதகனுடைய புத்திரவிருத்தியைச் சொல்லுகின்றோம். இருபுத்திரர்களும் ஒரு புத்திரியும் இவனுக்குத் தோன்றுவர் என்றோம். பிறந்த மூவரும் இறந்துவிடுவர் என்று சொல்லுகிறோம். மேலுங் கேளுங்கள்.

20. சுதர்களு முதலி லேதான் சோர்ந்திடு மிவனுக் கேதான்
அதிபர்க்கு முன் ழுத் தோடம் வருவதால் மதலே ஈனம்
... ..ஊத சொல்லு மென்ன விளம்புவே ங் கேளுந் தாயே
சதியிலா இவன் முன ஜன்மஞ் சாற்றுவோம் விபர மாக.

20. இ னுக்கு முதலில் புத்திரர்களும் இறந்துவிடுவர். ஜாதகனுக்கு முற்பிறப்புத் தீவினையிருப்பதால் புத்திர தோஷமும் உண்டு. எப்படியென்று கூறுங்கள்? என, சொல்லுகின்றோம். கேளுங்கள், தாயே! தீங்கிலா முற்பிறவியை விவரமாகச் சொல்லுகின்றோம்.

21. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் புதுவை தன்னில்
அன்னவன வடுக வம்சம் அவனுமே உதித்து மேலும்
பொன்னோடு பணிதி பெற்றுப் புத்திர ருள்ள ளாகி
இன்னமுஞ் செட்டுச செய்து இவனுமே வாழு நாளில்;

21. ஜாதகனுடைய முற்பிறவியைக் கூறுகின்றோம். புதுவை நாட்டில் ஜாதகன் வன்னிய குலததில் பிறந்து, பொன் ஆபரணங்கள் இவைகளை யடைந்து, புத்திரர்களைப்பெற்று, வர்த்தகம் செய்து வாழ்ந்துவநத காலத்தில்;

22. வந்தவூழ் தன்னைச் சொல்வேன் மாங்கல்ய மில்லாப் பெண்ணை
இன்னவன் போகந் துய்த்து இருக்கிற ந ளி லேதான்
இன்னவள் பெற்றார் கண்டு அவளையே விலக்கும் போது
பிந்தியு மிவன்பால் வந்து பிழைகளைச் சொல்லும் போது;

22. ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். ஒரு கைம்பெண்ணுடன் ஜாதகன் இன்பம் அனுபவித்துவரும் நாளில், இவளுடைய பெற்றோர்கள் அதை யறிந்து, அப்பெண்ணை விலக்கும்போது, ஜாதகனிடம் அப்பெண் வந்து கூறும்போது;

23. அவளுக்குத் தைரியஞ் சொல்லி அவனுமே யாத ரித்துத்
தரணியில் சிலநாள் சென்று நாயகி மனைவி யாலே
இவளுக்கு விரோதம் நேர்ந்து இனிஎன்பால் வேண்டா மென்று
அவளையே விலக்க லுற்றான அம்மாது வருத்த முற்று;

23. அப்பெண்ணுக்குத் தைரியம் சொல்லி, அவளை ஆதரித்து வந்து, உலகில் சின்னாட்கள் வாழ்ந்து வருது, ஜாதகனுடைய மனைவியால் இவளுக்கு விரோதம் ஏற்பட்டுவிட்டது. ஜாதகன் இனி என்னிடம் நீ வரவேண்டாம் என்று சொல்லி, விதவையை விலக்கி விட்டான். அபபெண் வருத்தமடைந்து;

24. மறுஜன்மந் தோன்றி யேதான் மாங்கல்ய மிரண்டு மாயும்
வருந்துணை ஆணில் லாமல் ஆதியில் அலேச்ச லாயும்
உறைந்துபின் சென்று ளென்றேம் ஒண்டொடி தோடந் தானும்
பரவிற்று இவனுக் கேதான் பார்வதி கேட்டி டாயே.

24. உனக்கு ஏற்படும் மறு பிறவியில், மாங்கலியம் இரண்டு ஏற்பட்டு, உடன் பிறந்த சகோதரரில்லாமல், ஆதிகாலத்தில் அதிகத் துன்பங்களை யடைந்து வாழ்வாய், என்று கூறிவிட்டுச் சென்றாள். பெண்ணுடைய சாபம் இவனுக்கு ஏற்பட்டது. பார்வதி தேவியே ! கேளுங்கள்.

25. அந்திய காலந் தன்னில் அவன்செல்வம் குறைச்ச லாகிக்
கந்தன்வாழ் தோகை புக்கிக் கனத்ததோர் தொண்டு செய்து
பிந்தியும் காலன் பக்கல் புக்கியே மறையோ னாலே
முந்தியே வரையப் பட்டு உதித்தவ னிவனே யென்றோம்.

25. ஜாதகன் (முற்பிறவியில்), தன்னுடைய இறுதிக்காலத்தில், செல்வங்கள் குறைந்து, முருகப்பிரான் வாழ்ந்துவரும் தோகை மலைக்குச் சென்று, தொண்டுகள் பல செய்து, மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப் பட்டுப் பிறந்தவன், இந்த ஜாதகன் என்று சொல்லுகிறோம்.

26. இச்சென்மந் தன்னி லேதான் இலகிற்று முன்னூழ்த் தோடம்
நஞ்சுபோல் சேர்ந்த தென்றோம் நற்றுணை இல்லா னாகும்
கச்சணி மாது வுக்குக் கலந்திடும் முத்ரை ரண்டு
துச்சமாய்ப் புத்ர தோடந் தோன்றிடு மென்று சொன்னோம்.

26. இப்பிறவியில் முற்பிறவியின் தோஷம் விஷம்போல் தொடர்ந்து வந்தடைந்தது. நல்ல உடன் பிறந்தவர்களில்லாதவனாவான். மனைவிக்கு இரு திருமாங்கல்யம் அணிவிக்க நேரும். துன்பமாகப் புத்திர தோஷமும் ஏற்படும் என்று கூறுகின்றோம்.

27. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் சிவந்த மேனி
பின்னமில் லாத தேகி பேச்சது தவறா ளாகும்
இன்னவள் நிந்தை உள்ளாள் இலகிடுஞ் சாயல் நேத்ரம்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பா ளென்று சொன்னோம்.

27. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவள். சிவந்த உடலுடையவள். பின்னமில்லாத சரீரமுள்ளவள். சொன்ன சொல் தவறாதவள். பழியை ஏற்பாள். சாய்ந்த பார்வையுடையவள். தன் வார்த்தைகளே மேன்மை என ஸ்திரப்படுத்துவாள்.

28. அவசர மனத்த ளாகும் அதிர்ஷ்டவாள் ஊக முண்டு
இவளுமுன் கோபி யாவள் எப்போதுஞ் சஞ்ச லத்தாள்
நவனியில் துணையா ளொன்று நாயகி அவ்வா றாகும்
அதுவுமே விருத்தி யாகும் அம்பிகை யாளே கேளாய்.

28. அவசர புத்தியுடையவள். அதிருஷ்டமுள்ளவள். ஊகசாலி. முன் கோபமுடையவள். எப்போதும் சஞ்சலயான மனத்தினள். உலகில் சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் இருப்பார்கள். அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். தாயே ! கேளுங்கள்.

29. மாதரு பூர்வஞ் சொல்வேன் மங்கையவ் வூர்க்கு மேற்கில்
போதவே பேரூர் தன்னில் பிறந்தனள் கர்ண வம்சம்
மேதினில் பத்தி யுண்டாய் மேலவர் பத்தி கொண்டு
பாதக மில்லா ளாகிப் பாரினில் சிலநாள் வாழ்ந்து ;

29. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அவள் அவ்வூருக்கு மேற்கிலுள்ள பெரிய ஓர் ஊரில் கருணீகர் வமிசத்தில் பிறந்து, புத்திரர் களையடைந்து, பெரியோர்களிடம் பக்தியுடன், தீய மன மில்லாதவளாகி, உலகில் சில காலம் வாழ்ந்துவந்து ;

30. பந்துவுக் கினிய ளாகிப் பித்தநோ யதனால் மாண்டு
முந்திய பிரம னாலே மேதினில் வரையப் பட்டு
வந்தவ ளிவளே யென்றோம் வரைகிறோ மிவளின் ஜன்மம்
சந்ததம் காஞ்சி தன்னில் ஜனிப்பளாஞ் சைவச் சேயாய்.

30. தன் உறவினர்களுக்குப் பிரியமுள்ளவளாகி, பித்த நோயால் இற ந்து, முதல்வனாகிய பிரமனால் உலகில் மீண்டும் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இந்த ஜாதகனுடைய தாய் என்று சொன்னோம். இவளுடைய மறு பிறவி யைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்தில் வைச்ய குலத்தில் பிறப்பாள்.

31. பிதிருமுன் ஜன்மந் தன்னைப் பேசுவோம் பிருதிவி தன்னில்
முதல்குல முதித்து மேலும் முயற்சியாய்க் குடும்பி யாகி
ஆதிகார முடைய னாகி யரசர்பா லணுகி யேதான்
பதியினில் மனைவி மைந்தர் பாக்கிய முடைய னாகி ;

31. தந்தையினுடைய முற்பிறவியைச் சொல்லுவோம். காஞ்சிபுரத்தில் அந்தணர் குலத்தில் பிறந்து, செல்வாக்குள்ள குடும்பத்தில் வாழ்ந்து, அதிகாரங்களடைந்து, (அரசரிடம் சென்று) அரசாங்க உத்தியோகம் பெற்று, மனைவி மக்கள் வீடு இவைகளை யடைந்து ;

32. அன்னிய விதவை மாதை அனுசரித் தவள்தன் போகம்
இன்னவன் சிலநாள் துய்த்தான் இவளுக்குக் கருவு தங்கித்
தன்தந்தை துணைவர் கேட்டுச் சத்தியை விலக்கி னார்கள்
பின்னையு மந்த மாது பிராமணன் பக்கல் சேர்ந்தாள்.

32. வேற்றுக் கைம்பெண் ஒருத்தியை வசப்படுத்தி, அவளுடன் சிற்றின்பம் அனுபவித்து, சில நாட்கள் வாழ்ந்து வந்தான். அவளுக்குக் கரு ஏற்பட்டது. அதை அவளுடைய தந்தையின் சகோதர் அறிந்து, பெண்ணை விலக்கி விட்டார்கள். பிறகு, அந்த விதவை மாதும் அந்தண னிடம் வந்தாள்.

**கைம்பெண்ணுடன் இன்பமனுபவித்துக் கைவிட்ட தோஷம்**

33. உன்னுடை மதியால் கெட்டேன் உலகினில் வசையு மானேன்
என்னயான் செய்யப் போரே னென்றவள் சொல்லும் போது
என்னிடம் வேண்டா மென்று இவனுமே சொல்லும் போது
அன்னவள் மனவெ றுப்பால் அறைகுவாள் சாபந் தானும்,

33. உன்னுடைய ஆசை வார்த்தைகளால் நான் கெட்டுப்போனேன். உலகில் அபவாதம் அடைந்தேன். இனி நான் என்ன செய்வேன ? என்று முறையிடும் போது, நீ என்னிடம் வர வேண்டாம் என்று இவன் கூறி விட்டான். அக்கைப்பெண்ணும் மனத்தில் துயரமுடன் சாபமிட்டாள்.

34. பெண்பழி யுனக்கே நேரும் பின்ஜன்மம் மனைவி ரண்டாய்
உன்னுடைக் குலத்தில் குற்றம் உரைந்திடு மென்று சொல்லி
அனைவள் நீங்கி யேதான் அப்புறஞ் செல்ல லுற்றாள்
பின்னேயும் மறையோ னுக்குப் பலமான வாயு கண்டு ;

34. உனக்குப் பெண்பழி ஏற்படும். நீ, மறு பிறவியில் இருமனைவியர்களை யடைந்து, உன் குலத்திற்குப் பழி யேற்பட்டு வாழ்வாய், என்று கூறிவிட்டு, வேற்றிடம் செல்லலானாள். பிற்காலத்தில் அப்பிராமணனுக்குப் பலமான வாயு ரோகம் ஏற்பட்டு ;

35. மறலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டுப்
பெருமையாய்க் கங்கை யோய் பிறந்தவ னிவனே யென்றோம்
அறைகிறோ முன்னூழ்ச் சாபம் அடைந்ததால் மனைவி ரண்டு
வருஞ்சுதர் முதலில் பீடை வந்திடு மிவனுக் கேதான்

35. மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, பெருமையுள்ள வேளாள குலத்தில் தோன்றியவன் என்று கூறுகின்றோம். முற்பிறவியில் செய்த தோஷம் ஏற்பட்டதால் இரு மனைவியர்களை யடைந்து, தோன்றும் புத்திரர்களுக்குத் தீங்காகிவிடும், இவனுக்கு என்றோம்.

36. மறைக்குல முன்ஜன மங்கள் வந்தவ னிச்ஜென் மத்தில்
வரநந்தி குலத்தி லேதான் வந்தகா ரணங்க ளென்ன
மறைகளை முன்ஜன் மத்தில் மைந்தனு மோதா னாகிக்
குரவர்பா லிருந்த த லே குறித்தனங் கங்கை வம்சம்.

36. முற்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்த அவன் இப்பிறவியில் வேளாள குலத்தில் பிறக்கும் காரணங்களென்ன ? முற்பிறவியில் வேதங்களைப் படித்துணராதவனாய், தாய் தந்தையருடன் இருந்து வந்ததால் வேளாளனாகப் பிறந்தான்.

37. அத்திரி முனிவர் கூற அம்பிகை கேட்க லுற்றாள்
பத்தினி முதல்மனைக்குப் பாலர்க ளுண்டோ சொல்வாய்
வித்தகி தனக்குப் புத்திர் விளங்கிடு மொன்று தானும்
அதையும் சிலநாள் சென்று அந்தகன பதிக்கே ஏகும்.

37. என்று அத்திரி முனிவர் கூறும்போது, பார்வதி கேட்கலானாள். ஜாதகனுடைய தந்தையின் மூத்த மனைவிக்குப் புத்திரர்கள் உண்டா ? சொல்லுங்கள். அவளுக்குப் பெண் ஒருத்தி தோன்றுவாள். அவளும் சின்னாட்களுக்குப் பிறகு மரண மடைவாள்.

38. முதல்மனை நட்ட மாகி எய்திடு மிரண்டாந் தாரம்
சதமுடன் பிரம காலஞ் சாற்றுவோ மினிமே லாகப்
பிதிருவுக் கொன்பா னாண்டில் பேசுவோம் தனுசு மாதம்
அதிகமாய்க் கர்மஞ் செய்வன் அம்பிகை யாளே கேளாய்.

38 ஜாதகனுடைய தந்தைக்கு முதல்மனைவி இறந்து, இரண்டாம் மனைவி ஏற்பாவாள். இனி, இவர்களுடைய இறுதிக் காலத்தைப் பற்றிச் சொல்லுவோம். ஜாதகனுடைய ஒன்பதாம் வயதில், அவனுடைய தந்தை மார்கழி மாதத்தில மரண மடைவான். ஜாதகன் அக்காலத்தில் தந்தைக்கு இறுதிச் சடங்குகள் செய்வான். அம்பிகையே ! கேட்பாயாக.

39. அன்னைக்கு முப்பா னாறில் ஆவணி மாதந் தன்னில்
இன்னவன் கருமஞ் செய்வான் இவனுக்கு அன்பா னைன்பால்
தன்னிலே கூனி மாதம் சதுர்தசி குறைபக் கத்தில்
சொன்னேன் சாத கர்க்குத் தோகையே கேட்டி டாயே.

39. ஜாதகனுடைய முப்பத்தாரும் வயதில் ஆவணி மாதத்தில் தாய்க்கு இறுதிக் கடன்கள் செய்வான். ஜாதகன் ஐம்பத்தொன்பதாம் வயதில் பங்குனி மாதம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி திதியில் மரண மடைவான். தாயே ! கேளுங்கள்.

40. மறுஜன்மம் வேங்க டத்துள் வைசிய குலமு தித்துப்
பெருமையாய்ச் செட்டுச் செய்து பிரபல கீர்ததி யாகித்
திருமகள்வி லாசம் பூண்டு செல்வனும் வாழ்வா னாகும்
அறுமுகன் தன்னைப பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

40. ஜாதகன், மறுபிறவி, திருவேங்கடத்தில் (திருப்பதியில்) வைச்ய குலத்தில் பிறந்து, பெருமையுடன் வர்த்தகம் செய்து வந்து, பிரபலமான புகழைபடைந்து, லட்சுமீகடாட்சம் பெற்று, வாழ்ந்து வருவான். ஆறுமுகப் பெருமானை உலகத்துக் களித்த அம்பிகையே ! கேளுங்கள்.

41. சாதகன் குடும்பச் செய்கை சாற்றுவோம் வறுமை இல்லான்
போதவே தனங்கள் சேர்ப்பன் பூமியை விருத்தி செய்வன்
சீதள குணத்த னாகுஞ் சனவுப கார னாகும்
மேதினில் கீர்த்தி ஏறபன் மெல்லியே மேலுங் கேளே.

41. ஜாதகனுடைய குடும்பச் செய்திகளைக் கூறுகின்றோம். தரித்தாம் இல்லாதவன். பெரிதான பொருள்கள் சேர்ப்பான். விளை நிலங்களைப் பெருக்குவான். குளிர்ந்த குணமுடையவன். ஜனங்களுக்கு உபகாரம் செய்வான். உலகில் புகழ் அடைவான். தாயே ! மேலும் கேளுங்கள்.

42. தந்தையி னார்ஜி தத்தைத் தானவன் விருத்தி செய்வன்
பிந்தியும் பூமி சேர்ப்பன் புகழ்திருப் பணியுஞ் செய்வன்
வந்தவர் தம்மைக் காப்பன மாநிலம் நல்லோ னாவன்
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

42. தன் தந்தையால் சம்பாதிக்கப்பட்ட பொருளைப் பெருக்குவான். மேலும் பூமியைச் சேர்ப்பான். திருப்பணியும் செய்வான். தன்னை வந்தடைந்தவர்களைக் காப்பான். உலகில் புகழக்கூடிய நல்லவனாக இருப்பான். கந்தனைப் பெற்ற தேவியே ! கூறிய வார்த்தைகள் தவறா.

43. ஜனித்திடு காலந் தன்னில் செம்பாம்பு தசை இருப்புக்
குனித்திடு ஆண்டு ஒன்றில் கூர் திங்க ளைந்தே யாகும்
தினமது இருப தாகும் செப்புவோம் பலனை யாங்கள்
கனமான ரோகந் தானும் கண்டிடும் சாத கர்க்கு.

43. ஜாதகனுடைய ஜனன காலத்தில் (மகாநட்சத்திரம்) கேதுமகாதசை இருப்பு ஒரு வருஷமும் ஐந்து மாதங்களும் இருபது நாட்களுமாம். அக்காலத்தின் பலன்களைக் கூறுவோம். பெரிய வியாதி ஒன்று ஜாதகனுக்கு ஏற்படும்.

44. குடும்பமும் விரோத மாகும் குறித்ததோர் பலன்கள் நட்டம்
அடவுடன் காலி பீடை அவன்பந்து சூத முண்டு
உடன்பிறந் தோர்கள் சேதம் உரைக்கிறோம் விபரம் ரண்டில்
தடவரை மகளே யாங்கள் சாற்றிய மொழிகுன் றாவே.

44. குடும்பத்தில் விரோத மேற்படும். செய்த காரியங்கள் பலனற்றவையாக இருக்கும். கால்நடைகட்குச் சேதமுண்டாகும். தன் பந்துக்களுக்கு அசுபம் நிகழும். உடன் பிறந்தவர்களுக்குச் சேதமுண்டாகும். மற்ற விபரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுவோம். மலையரசனின் புதல்வியே ! கூறிய வார்த்தைகள் தவறா.

## ஜாதகம் 48.

1. சந்திரன் கோல தாகச் சனிராகு சேயு நந்தி
புந்திபான் புகரு வீணை பொன்கேது தேள தாக
இந்தவாறு கிரகம் நின்றால் இலக்கின மிதுன மாகச்
சந்ததம் பலனெவ் வாறு புகலுவீர் முனியே நீர்தாம்.

1. சந்திரன் துலாத்திலும், சனி ராகு செவ்வாய் விருஷபத்திலும், புதன் சுக்கிரன் சூரியன் மிதுனத்திலும், குரு கேது விருச்சிகத்திலும், இவ்விதம்...... நவக்கிரங்கள் இருந்து, லக்கினம் மிதுனமாக இருந்தால், பலன் எப்படி, என்று கூறுங்கள், முனிவரே! நீர் தாம்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி ராகு செவ் வாய் | லக்கினம் புதன் சுக்கிரன் சூரியன் |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| | குரு கேது | சந்திரன் | |

2. அத்திரி புகலு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லஞ் சொல்வோம் வடவாடை கீழ்மேல் வீதி
சத்திமா காளி உத்ரம் சங்கர னருகில் தங்கும்
சுத்தமாய்க் குடகில் தந்தி சிரமற்றோ ளதன்கீழ்த் தங்கும்.

2. அத்திரி முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். ஜாதகனுடைய பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு வரிசையில் உள்ளது. காளிகோயில் வடக்குத்திசையிலும் அருகில் சிவபெருமானின் ஆலயமும் இருக்கும். மேற்குத் திக்கில் விநயகர் ஆலயமும், மாரியம்மன் கோவில் அதற்குக் கிழக்கிலும் இருக்கும்.

3. இன்னமும் பலதே வாசம் இலகிய சோலை யுண்டு
சொன்னவிவ் வடையா ளத்துள் சுதனுமே தோன்று வானும்
அன்னையின் தந்தை யோகம் அவன்துணை களத்ர புத்ரர்
உன்னதச் சாந்தி தானும் உரைக்கிறேந் தாயே கேளும்.

3. இன்னும் பல தெய்வங்கள் வசித்து வரும் இவ்வூரில், சோலைகள் பல உள்ளன. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை தாய் உடன்பிறந்தவர்கள் மனைவி மக்கள் சாந்திகள் முதலியவற்றைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வோஞ் சகலர்க்கும் நல்லோ னுவன்
விந்தையாய் வார்த்தை கூர்வன் மேலவர் பத்தி பூண்பன்
சிந்தையும் நலை தாழும் சகராசர் பேட்டி பூணபன
வந்தவர்க் கன்ன மீவன் மருமநூ லறிவா னுரும்.

4. ஜாதகனுடைய தந்தையின் குணங்களைக் கூறுகின்றோம். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். வேடிக்கையாகப் பேசுபவன். தெய்வபக்தியுள்ளவன். நல்ல மனமுடையவன். அரசனைப் பேட்டி காண்டான். தேடி வந்தவர்கட்கு உணவளிப்பான். இரகசியநூலை நன்கு அறிவான்.

5. ஊகவான் சிவந்த மேனி உறுதியில் லாத நெஞ்சம்
நாகரி கங்க ளுள்ளான் நல்லோர்க்கு நல்லோ னுவன்
போகபாக் கியங்க ளுள்ளான் போஜனச் சுகிய னுரும்
ஆகம நுணுக்கந் தேர்வன் அற்பரை யுறவு கொள்ளான்.

5. ஊகமுள்ளவன். சிவந்த உடலுடையவன். திடமில்லாத மனமுள்ளவன். நாகரிகங்களுள்ளவன். நல்லவர்கட்கு நல்லவன். போகபாக்கியங்களுள்ளவன். சாப்பாட்டுச் சுகமுள்ளவன். வேதங்களின் இரகசியங்களை நன்கறிவான். அல்பர்களுடன் சகவாசம் கொள்ளாதவன்.

6. ஆதியில் வறுமை யுள்ளான் அணுகிடும் நாபிச் சூடு
காதலி மார்கள் நேயன் சனத்ததோர் தலங்கள் செல்வன்
சூதிலா னிளம னத்தான் சுந்தர முடைய னுரும்
வேதனை யொருவர்க் கெண்ணன் வெளிச்சங்கள் குறைவு நேரும்.

6. ஆதிகாலத்தில் வறுமையுள்ளவன். நாபிச் சூடுடையவன். மனைவிகளுக்குப் பிரியன். (பெண்களிடம் விருப்பங் கொள்ளுபவன்.) புண்ணிய தலங்களுக்குச் செல்லுவான். சூதில்லாதவன். இளகிய மனத்தன். அழகுள்ளவன். பிறருக்குத் தீங்கெண்ணுதவன். கண் பார்வையில் குறையுள்ளவன்.

7. தன்துணை காணு தாகுஞ் ஜனிக்கினுந் தீதே யாகும்
இந்நெறி யுடையா னுக்கு இவனுமே தோன்று வானும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அன்புள மனத்த னுரும்
தன்மனங் கவடு மில்லான் சிவந்தமெய் யூக சாலி.

7. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரரில்லை. பிறந்தாலும் நிலைத்திரார். இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேன். அன்புள்ள மனத்தினன். மனத்தில் கபடமில்லாதவன் சிவந்த மேனியன். ஊக முள்ளவன்.

8. பலகலை யுணர்வா னுரும் பரிந்துப சாரஞ் செய்வன்
நலமுளோர் நேசங் கொள்வ னரச பா லணுகி வாழ்வன்
விலைமாதர் மோகங் கொள்ளான் விதேசமேல் சிலநாள் வாழ்வன்
கலகத்தைக் கூறு னுதுங் கல்வியு முபதே சிப்பன்.

8. பலநூல்களை அறிந்து கொள்ளுவான். அன்புடன் உபசரிப்பான். நல்லவர்களிடம் நட்புக் கள்ளுவான். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்ந்துவருவான். வேசையர்மீது விருப்பமில்லாதவன். வேற்றூரில் சில காலம் வசித்துவருவான். கலகம் செய்யாதவன். கல்வியைப் பிறருக்குப் பயில்விப்பான்.

9. சுகதுக்கஞ் சேதி சொல்லுந் தொழிலதைச் செய்வா னாகும்
பகையென்று மனத்தில் வையா பாருகள் பின்னால் சேர்ப்பன்
இபரன் பத்தி பூண் ன் இல்நதி தீர்த்தந் தோய்வன
உகமையாய்க் கதைகள் சொல்வன உலகினில் சீல னவன்.

9. சுகம் துக்கம் இவைகள் ஏற்படுவதைச் சொல்லும் (ஜோதிடம் சொல்லும்) தொழிலை ஏற்பான். விரோதம் என்று மனத்தில் நினையாதவன். பிற்காலத்தில் வீடு நிலங்களைப் பெருக்குவான். சிவபெருமான் மீது பக்தியுள்ளவன். இமயமலைக்கருகில் உள்ள கங்கைநதியில் நீராடுவான். உவமானத்துடன் கதைகள் சொல்லுபவன். உலகில் நல்லொழுக்கத்துடன் வாழ்ந்து வருவான்.

10. பித்தவா யுடைய னாகும் பிறர்பொரு ளிச்சை வையான்
உத்தம குணத்த னாகும் உலகோரை வசியஞ் செய்வன்
நத்தினோர்க் குதவி செய்வன் நாயகி தன்னால் யோகம்
புத்தியில் பெரியோ னவன் புண்ணிய மனத்த னாமே.

10. பித்தவாயு உள்ள சரீரத்தன் பிறருடைய பொருளின்மீது ஆசையில்லாதவன் உயர்வான குணமுள்ளவன் உலகத்தவரை வசீகரிப்பான். தன்னை வந்தடைந்தவர்கட்கு உதவி செய்வான். மனைவியால் யோகம் அடைவான். அறிவில் சிறந்தவன். புண்ணியமான மனத்தினன்.

11. தன்துணை யாண்பால் மூன்று தையல் இரட்டை யாகும்
முனதுணை யாண்பா லொன்று தன்னுள் தி யனடவா னாகும்
அன்னையின் வர்க்கந் தன்னில் அவனுமே சேர்வா னாகும்
கனனிகை யிருவர் துக்கம் கழறுவோம் பின்பால் சேதி.

11. ஜாதகனுக்கு இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் உண்டு. முன் பிறந்த சகோதரன் ஒருவன் உண்டு. அவனுடைய ஆஸ்திகளை ஜாதகன் அடைவான். அன்னையுடையவர்க்கத்தில் ஜாதகனின் மூத்த சகோதரன் சேர்ந்து விடுவான் (தத்துப்புத்திரனாவான்). கன்னிகைகளிருவரும் துக்கமடைவார்கள். அவர்களுடைய செய்திகளைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம்.

12. மாதுரு குணத்தைச் சொல்வோம் மருமமில் லாதா ளாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உயர்வான பத்தி யுண்டு
தீதுக ளொருவர்க் கெண்ணாள் சேயர்மேல் பிரிய மாகும்
காதலி விரத மேற்பள் கணவனுக் கினிய ளாகும்.

12. ஜாதகனுடைய தாயின்வர்க்கத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இரகசிய மில்லாதவள். இன்பமாகப் பேசுபவள். உயர்ந்த புத்தி யுடையவள். ஒருவருக்கும் தீங்கிழைக்க எண்ணுதவள். குழந்தைகளின்மீது விருப்பமுள்ளவள். நோன்புகள் நோற்பாள். கணவனுக்குப் பிரியமானவள்.

### மாமனுக்குத் தோஷம் : கிரகநிலை

13. அன்னம்போல் சாய லொக்கும் அவள்துணை காணு ளாகும்
என்னகா ரணத்தி னுலே இவள்துணை தோடஞ் சொன்னீர்
[1] பொன்னனுங் கேது மாறில் பொருந்தியே இருப்ப தாலே
தன்துணை தோட மெய்துஞ் சங்கரி கேட்டி டாயே.

13. அன்னத்தைப் போன்ற அழகி. அவள் உடன் பிறந்தவரில்லாதவள். என்ன காரணத்தினுல் ஜாதகனுக்குத் தாயின் சகோதரரில்லை ? என்று சொல்லுங்கள். குருவும் கேதுவும் ஆரும் வீட்டில் இருப்பதால் ஜாதகனுடைய மாமனுக்குத் தோஷம் ஏற்படும். பார்வதியே ! கேளுங்கள்.

14. அவளுடைத் தாய்தந் தைக்கு ஆதரிப் பவர்கள் சொல்வீர்
இவள்துணை முன்னேன் சேர்ந்து இடருகள் தீர்ப்பா னுகும்
நவனியில் கருமஞ் செய்வன் நாட்டினில் வறுமை காணுன்
தவசியே வன்னே பூர்வஞ் சாற்றுவோந் தாயே கேளும்.

14. ஜாதகனுடைய தாயின் தாய்தந்தையர்களை ஆதரிப்பவர்கள் யார் ? என்று சொல்லுங்கள். ஜாதகனின் மூத்த சகோதரன் அவர்களை யடைந்து துன்பங்களைத் தீர்த்துவைப்பான். அவர்களுக்கு மூத்த சகோதரனே இறுதிக் கடன்கள் செய்வான். உலகில் வறுமை யில்லாதவன். தாயின் முன் பிறவியைக் கூறுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

15. கொங்குநா டதனி லேதான் குதித்தனள் சௌராஷ்டிர வம்சம்
தீங்கிலாத் தொழிலுஞ் செய்து தேவியு வாழு நாளில்
பாங்கியா மொருத்தி பேரில் பதர்வார்த்தை சொல்ல லுற்றுள்
ஆங்கவள் பந்து கேட்டு அம்மாதை விலக்க லுற்றூர்.

15. கொங்குநாட்டில் சௌராஷ்டிர மரபில் பிறந்தாள். தீங்குகளில்லாமல் தன்காரியங்களைச் செய்துவரும்போது, தன் தோழியின்மீது அற்பமான வார்த்தைகளைக் கூறலானுள். அவளுடைய பேச்சைத் தோழியின் உறவினர்கள் கேட்டு, அப்பெண்ணை நீக்கிவிட்டனர்.

16. மாதுவு மனங்க லங்கி வறைகுவாள் சாபந் தானும்
பாதகி யென்மேல் நிந்தை பதராகச் சொன்ன பாவி
மேதினில் மறுஜன் மத்தில் விளங்கார்கள் துணைவர் தாமும்
[2] பூதியைத் தூற்றி யேதான் போயினு ளந்த மாது.

16. அப்பெண்ணும் மனங்கலங்கிக் கூறிய சாபத்தைக் கேளுங்கள். பாவியே ! என்மீது அபாண்டமாக இல்லாத வார்த்தைகளைக் கூறிய பாதகியே ! உனக்கு ஏற்படும் மறுபிறவியில் உடன் பிறந்தவர்கள் இரார், என்று சொல்லிவிட்டு, தெருமண்ணை வாரித் தூற்றி விட்டுச் சென்றுள்.

---

[1] குரு. [2] தெருப்புழுதி.

17. அந்ததோர் தோடந் தானும் அனுகிற்று மாதுக் கேதான்
நிந்தைகள் வேறு காணுள் நீத்தோருக் கன்ன மீந்து
தென்திசைத் தலங்கள் சென்று சண்டன்றன் பதிக்குப் புக்கு
முந்திய பிரமன் லக்கம் மேதினில் வரையப் பட்டு ;

17. அந்தத் தோஷம் ஜாதகனுடைய தாய்க்கு ஏற்பட்டது. வேறு தீச் செயல்களின்றி, துறவிகளுக்கு அன்னமளித்துவந்து, தெற்குத் திசையிலுள்ள புண்ணியத்தலங்களுக்குச் சென்று, மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப், பூமியில் ;

18. வந்தவ ளிவளே யென்றேம் மாதுவின் சாபம் போலத்
தன்துணை காண ளாகும் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
முன்ஜன்மஞ் சௌராஷ்டிர வம்ச முதித்தவ ளிச்சென் மத்தில்
பொன்மறைக் குலமு திக்கும் புண்ணிய மென்ன செய்தாள்.

18. பிறந்தவள் இவள், என்று சொன்னேம். தோழிப்பெண்ணின் சாபத்தால் உடன் பிறந்தவர்களில்லாதவள். ஜயமுனிவர் இடைமறித்துச் சொல்லுகின்றார். முற்பிறவியில் சௌராட்டிரமரபில் பிறந்து இப்பிறவியில் அந்தணகுலத்தில் பிறக்க என்ன நற்காரியங்கள் செய்தாள் ?

19. நல்லதோர் தலங்கள் சென்றும் நலிந்தோருக் கன்ன மீந்தும்
வல்லியும் வாழ்ந்த தாலே மறைக்குல முதிப்பா ளாகும்
சொல்லுவோ மிவள்பின் ஜன்மந் துவாரைபி லிக்கு லத்தில்
அல்லலில் லாமல் வாழ்வாள் அம்பிகை யாளே கேளாய்.

19. புண்ணியத் தலங்களுக்குச் சென்று வந்ததாலும், துயரடைந்த ஏழைகட்கு அன்னமளித்து வாழ்ந்துவந்ததாலும் அந்தணர் குலத்தில் பிறந்தாள். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். துவாரகையில் இதே குலத்தில் துன்பங்களில்லாமல் பிறந்து வாழ்ந்து வருவாரள். தாயே ! கேளுங்கள்.

20. உதித்தவன் மணத்தின் காலம் உரைக்கின்றே மிருபா னுண்டுள்
மதிமுக மனைவி வாய்க்கும் வறைகின்றே மவள்கு ணத்தைச்
சதியிலா மனத்த ளாகுஞ் சற்பாத்ரி பொறுமை சாலி
விதவித விரதம் பூண்பள் மெல்லிநன் னடக்கை யுண்டு.

20. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றேம். இருபதாம் வயதுக்குள் மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். சதிசெய்யாத மனத்தினள். சற்பாத்திரி யோகமுள்ளவள். பொறுமை சாலி. விதவிதமான நோன்புகள் நோற்பாள். நன்னடத்தை யுள்ளவள்.

21. கஞ்சமா நிறத்த ளாகுங் கருதிடாள் கட்டு வார்த்தை
அஞ்சலென் றேரைக் காப்பள் அன்னம்போல் சாய லொக்கும்
வஞ்சியுங் குழவி காணுள் வருகினுந் தீதே யாகும்
கொஞ்சிய குழவி தோடங் கூறுவீர் முனியே நீர்தாம்.

21. தாமரையைப் போன்ற நிறத்தினள். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவள். தன்னைத் தஞ்சமடைந்தவர்களை ஆதரிப்பாள். அன்னம் போல் அழகி. புத்திரவிருத்தி யில்லாதவள். பிறந்தாலும் நிலைத்திரார். புத்திர தோஷம் ஏற்படக் காரணமென்ன ? கூறுங்கள்.

### முற்பிறவித் தோஷக் கிரக நிலை

22. சனிகுஜன் பணியீ ரா றில் சார்ந்ததால் சுதர்கள் தோடம்
கனமுள மதியு மைந்தில் கலந்ததல் சுதர்கள் தோன்றும்
வினையாக வாறில் பொன்னோன் மெய்ஞ்ஞானி கூடி நிற்கத்
தனபன்முன் ஜன்மந் தன்னில் செய்தனன் வினைய நேகம்.

22. ஜாதகனுக்குப் பன்னிரண்டாமிடத்தில் சனி செவ்வாய் ராகு இவர்களிருப்பதால் புத்திரதோஷம் ஏற்பட்டது. புத்திரஸ்தானத்தில் சந்திரன் இருப்பதால் புத்திரர்கள் பிறக்கும். அருமித்தில் தீங்காக, குருவும் கேதுவும் கூடியிருப்பதால் முற்பிறவியில் செய்த தீவினைகள் அதிகம் என்றோம்.

23. ஆகையால் புத்ர தோடம் அறைந்தனம் பாலனுக்குப்
பாகமாய் வினையைச் சொல்வீர் பாலன்முன் ஜனமங் கேளும்
தோகையின் மலைக்குத் தெற்கில் சிறுவூரில் செட்டி வம்சம்
போகபாக் கியங்கள் பெற்றுப் புத்திரர் மனைவி யுண்டாய் ;

23. ஆகையால் ஜாதகனுக்குப் புத்திரதோஷம் உண்டு என்றோம். முன் பிறப்புத்தீவினையைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய முற்பிறவியைப்பற்றிக் கேளுங்கள். தோகைமலைக்குத் தெற்குப் பக்கத்திலுள்ள சிற்றூரில் செட்டியார் மரபில் தோன்றி, போகபாக்கியங்களை யடைந்து, மனைவி மக்களை யடைந்து ;

24. வந்தவூழ் தம்மைக் கேண்மோ மாதரு சாப மொன்று
சந்ததம் நேர்ந்த தென்றோம் சதுமறைக் குலத்தோனுக்கு
இந்தவன் பொருளு மீந்து இல்லெலாந் தன்னைக் கொண்டான்
முந்தின மறையோர் சாபம் மேவிற்று வேறு சொல்வோம்.

24. வந்தகாலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். பெண்ணின் சாபம் ஒன்று ஏற்பட்டது. வேதங்களறிந்த அந்தணனுக்குச் சிறிது பொருள் கொடுத்து, அவனுடைய உடைமைகளையெல்லாம் பறித்துக்கொண்டான். உயர்ந்த அந்தணனின் சாபம் ஒன்று நேரிட்டது. வேறு ஒன்றும் சொல்லுகின்றோம்.

### கன்றுக்குப் பால்விடாத தோஷம்

25. ஆவின்பா லறக்க றந்தான் அனுசிற்று வதுவோர் தோடம்
நாவது தவறு செய்தான் நற்குரு தமக்கு மேதான்
தீவினை யிவ்வா றாகச் சேர்ந்தன பால னுக்குச்
சேவலங் கொடியோன் பக்தி செய்துமே சேது சென்று ;

25. பசுவின் பாலை கன்றுக்குவிடாமல் முழுவதும் கறந்துவிட்டான். அதுவுமொரு தோஷமாயிற்று. தன்னுடைய குரு சொன்னபடி செய்யாமல் தவறுகள் செய்தான். இப்படியாக ஜாதகனுக்குத் தீவினைகள் சேர்ந்தன. சேவலைக் கொடியாகக்கொண்ட முருகக் கடவுள்மீது பக்தியுடன் சேதுவுக்குச் சென்று ;

26. அங்குள தீர்த்தந் தோய்ந்து அரனுக்கு வருச்சித் தேத்தித்
துங்கமாந் தலங்கள் சென்று சென்றனன் கால னோடு
புங்கவன் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
சங்கையாய் முன்னூழ்த் தோடஞ் சார்ந்தது புத்திர வீனம்.

26. அங்குள்ள புண்ணிய தீர்த்தத்தில் நீராடி, சிவபெருமானுக்கு அருச்சனை முதலியன செய்து, துதித்து, தூய்மையான புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று, மரணமடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகன். முற் பிறவியின் தோஷங்கள் ஏற்பட்டு, புத்திர தோஷம் பெற்றான்.

27. இதுவின்றிப் பாரி யாலே எய்திற்றுச் சிலவே துன்பம்
அதுபலன் புகலக் கேண்மோ அருணைக்கு மேல்பா லாகச்
சதியிலாப் பேரூர் தன்னில் ஜனித்தனள் சைவச் சேயாய்ப்
பதியினில் திருவு முண்டாய்ப் பாவையும் வாழ்ந்தா ளென்றோம்.

27. இவைகளல்லாமல், தன் மனைவியால் சில தீங்குகள் ஏற்பட்டன. அதன் பலனைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். திருவண்ணாமலைக்கு மேற்கில் உள்ள பெரிய ஓர் ஊரில், சைவகுலத்தவளாகப் பிறந்தாள். வீட்டில் லட்சுமீகடாட்சம் பெற்று வாழ்ந்து வந்தாள்.

28. பஞ்சையா யேழை மாது பாலருக் கன்னம் வேண்டிக்
கெஞ்சினாள் பாவை பக்கல் கர்வத்தால் கோப முற்று
மிஞ்சிய வார்த்தை சொல்லி விரட்டினு ளேழை தன்னை
வஞ்சிய மனவெ றுப்பா லறைகின்றாள் சாபந் தானும்.

28. கதியில்லாத ஏழைப் பெண்ணொருத்தி தன் குழந்தைக்குச் சாதம் வேண்டிக் (ஜாதகனுடைய மனைவியை முற்பிறவியில்) கெஞ்சிக் கேட்டாள். இவளும் செருக்கால் கோபங்கொண்டு, அடாத வார்த்தைகளைக் கூறி, ஏழையை விரட்டி விட்டாள். ஏழைப் பெண்ணும் மனக் கஷ்டத்துடன் சாபமிட்டாள்.

29. மைந்தர்சே ரீயாப் பாவி மருவிடும் பின்ஜன் மத்தில்
கொஞ்சிய மதலை யின்றிக் குலவுவா யென்று சொல்லித்
தஞ்சமாய் வேறு வில்லஞ் சார்ந்தன ளந்தத் தோடம்
இந்ததோர் ஜன்மந் தன்னில் எய்திற்றுச் சுதர்கள் காணாள்.

29. குழந்தைக்கு அன்னமளிக்காத பாவியே ! உனக்கு ஏற்படும் அடுத்த பிறவியில், கொஞ்சும் குழந்தைகளின்றி வாழ்வாய், என்று கூறி வேறு வீட்டுக்குச் சென்றாள். அந்தத் தோஷம் இப் பிறப்பில் தொடர்ந்தது. அதனால் புத்திர பாக்கிய மில்லாதவளானாள்.

**புத்திரதோஷம் விலகச் சாந்தி**

30. முன்வினை நிவிர்த்தி செய்ய மொழிகின்றேஞ் சாந்தி தானும்
மைந்தனு மனைவி யோடு மரங்கமா நகரஞ் சென்று
விந்தையாய்த் தீர்த்தந் தோய்ந்து விமலர்க்குத் தூபம் பண்ணச்
சந்ததஞ் சகத்திரங் கொண்டு தான்மலர்க் கர்ச்சித் தேத்தி ;

30. முற் பிறவியில் செய்த தீவினைகள் நீங்கச் சாந்தியொன்று கூறுகின்றேம். ஜாதகன் தன் மனைவியுடன் திருவரங்கம் சென்று, அங்குள்ள புண்ணிய (காவிரி) நதியில் நீராடி, திருமாலுக்குப் பூசைகள் முதலியன செய்து, தினந்தோறும் புஷ்பங்களால் சகஸ்ரநாம அர்ச்சனைகள் செய்து, துதித்து ;

31. நூறுபேர் ஏழைக் கன்ன மளித்துமே நிமலன் பின்பு
தீரமாய்ச் சதுர்தசி நோன்பு திருமகன் கொள்ள மேலும்
பாரியுஞ் சுக்கிர நோன்பு பகையின்றிக் கொள்வா ளாகில்
கூறின முன்னூழ்ச் சாபங் குலவாது வென்று சொல்வோம்.

31. நூறுபேருக்கு அன்னமளித்து, பிறகு ஒவ்வொரு சதுர்த்தசியன்றும் ஜாதகன் விரதம் இருந்து, மனைவியும் வெள்ளிக்கிழமைகள் தோறும் விரதம் இருந்தால், முற்பிறவியில் செய்த தீவினைகள் நீங்கிவிடும், என்று சொல்லுகின்றேம்.

32. சொற்படி செய்யா னாகில் சுதர்களுந் தோட மெய்தும்
சொற்படி செய்வா னாகில் தோன்றிடு மாண்பா லொன்று
மெய்ப்படிப் பெண்பா லொன்று வரைகின்றேந் தீர்க்க மாக
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன றுவே.

32. நாங்கள் கூறியபடி செய்துவராவிட்டால் புத்திர தோஷம் ஏற்படும். கூறியபடி செய்துவந்தால், ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் பிறந்து, நீண்ட ஆயுளுள்ளவர்களாக ஆவார்கள். கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவ பெருமானின் தேவியே ! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறா.

33. அந்திய காலந் தன்னில் அணுகிடுஞ் சுதர்கள் தாமும்
முந்தின ஜன்மந் தன்னில் மேவினன் ரெட்டி வம்சம்
இந்ததோர் ஜன்மந் தன்னில் இக்குல முதிப்ப தென்ன
இந்தபுண் ணியத்தை நீங்க ளறிவிப்பீர் முனியே நீர்தாம்.

33. ஜாதகனுடைய கடைசிக்காலத்தில் புத்திரர்கள் தோன்றுவார்கள். ஜாதகன் முற் பிறவியில் ரெட்டி வம்சத்தில் பிறந்து, இப் பிறவியில் உயர்ந்த குலத்தில் பிறக்கும் காரணங்க ளென்ன ? செய்த புண்ணியங்களை நீங்கள் தெரிவியுங்கள், முனிவரே ! நீர்தாம்.

34. சேதுபின் சென்ற புண்யஞ் சேவலின் கொடியோன் பத்தி
மாதவர்க் கன்ன மீந்த வளப்பத்தா லுதித்தா னென்றேம்
காதலக் கடைந்த புண்யங் கழறுவீர் விவரந் தன்னைப்
பாதகம் விலக்கும் தேவன் பரன்பக்தி கொண்ட புண்ணியம் ;

**34.** (முற் பிறவியில்) சேதுவுக்குச் சென்று நீராடியதாலும், சேவற் கொடியோனுகிய முருகக்கடவுள்மீது பக்திகொண்டிருந்ததாலும், மிகுந்த தவம் புரிந்த பெரியோருக்கு அன்னமளித்துவந்ததாலும், உயர்ந்த குலத்தில் பிறந்தான் என்றோம். ஜாதகனின் மனைவி செய்த புண்ணியச் செயல்களென்ன ? என்பதை விபரமாகக் கூறுங்கள். பாவங்களைத் தீர்க்கும் சிவபெருமானிடம் பக்திகொண்ட புண்ணியத்தால் ;

35. பிறப்பளாம் பிரம்ம சேயாய்ப் பேசுவோ மிவள்பின் ஜன்மம்
அரிகர தீர்த்தந் தன்னில் அனுகுவா ளிக்கு லத்தில்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

**35.** அந்தணகுலத்தில் பிறப்பாள். ஜாதகனுடைய மனைவியின் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். ஹரிஹரதீர்த்தம் என்ற ஊரில் இதே குலத்தில் பிறப்பாள். லட்சுமீகடாட்சம் பெற்று, செல்வியாக வாழ்ந்து வருவாள். வேதங்களின் முடிவில் நடனமாடும் தேவியே ! கேளுங்கள்.

36. தந்தையின் பூர்வந் தன்னைச் சாற்றுவோங் கலிங்கு நாட்டில்
விந்தையாய் வணிபஞ் செய்யும் வைசிய குலமு தித்து
முந்திய தனங்கள் பெற்று மேதினில் செட்டுச் செய்து
இந்தவன் வாழு நாளில் இயம்புவோ மூழி தானே.

**36.** ஜாதகனுடைய தந்தையின் முற் பிறவியைச் சொல்லுகின்றோம். கலிங்கநாட்டில், அற்புதமாக வர்த்தகம் செய்துவரும் வைசிய குலத்தில் பிறந்து, அதிகமாகச் செல்வங்களையடைந்து, உலகில் வர்த்தகம்செய்து வாழ்ந்து வருங்காலத்தில், ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

**வேறு**

37. அன்னிய ரிருவர் பாகங்கள் வேண்டி
....பாகமாய் விரோதமே யுற்று
மன்னரை யணுகி வகைதனைச் சொல்ல
வைசிய னொருவனுங் கேட்டு
உன்னத வார்த்தை உரைத்தன னென்றோம்
ஓதுவான் மற்றொரு வனுமே
கண்ணினில் காணு வார்த்தையே வுரைத்தாய்
கனதன வானுமே நீயும் ;

**37.** வேறு மனிதர்கள் இருவர், பாகப் பிரிவினையில் விரோதங்கொண்டு, நியாயாதிபதியிடம் சென்று, தன் வழக்குகளைக் கூறினார்கள். ஜாதகனுடைய தந்தை ஒருவனுக்குப் பொய்ச் சாட்சியம் கூறினான். மற்றவன் சொல்லுகின்றான். கண்ணால் பாராத வார்த்தைகளைக் கூறிய பெரிய மனிதனே ! நீயும் ;

**வேறு**

38. மற்றொரு ஜன்மந் தன்னில் வருந்துணை காணு தாகிப்
பத்தினிக் கவ்வா ருரும் பதியினி லலேச்ச லாகும்
குற்றமாய்த் தெருத்தூள் விட்டுக் குலவினு னில்லம் விட்டுப்
பற்றிற்று வந்தத் தோடம் பார்வதி கேட்டி டாயே.

38. பிறக்கும் அடுத்த பிறவியில், உடன் பிறந்தவரின்றி, மனைவிக்கும் அம்மாதிரியேயாகி, வீட்டில் துன்பங்களடைந்து வாழ்வாய், என்று தெரு மண்ணை வாரித் தூற்றிவிட்டுத் தன் வீடு சென்றான். அந்தத் தோஷம் இவனைப் பற்றியது. பார்வதியே! கேளுங்கள்.

39. அந்திய காலந் தன்னில் அநேகவா லயங்கள் சென்று
முந்திஞேர்க் கன்ன மீந்து மேவினன் கால ஞடு
பிந்தியும் பிரமன் லக்கம் பூமியில் வரையப் பட்டு
வந்தவ னிவனே யென்றேம் மருவிடு முன்னூழ்த் தோடம்.

39. (ஜாதகனுடைய தந்தை தன்) கடைசிக்காலத்தில், பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று, பெரியோருக்கு அன்னமளித்து, மரண மடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இப் பூமியில் பிறந்தான், இந்த ஜாதகன், என்று கூறினோம். முற்பிறவி தோஷம் தொடரும்.

40. துணைவர்கள் தோட மாகுஞ் சோதியுங் குறைவு நேரும்
கனமுள பின்ஜன் மத்தைக் கூறுவோந் துவாரை தன்னில்
வினையிலா விக்கு லத்தில் மேவியே வறுமை யின்றி
மனையிலா வாழ்வா ஞகும் புண்ணிய வதியே கேளாய்.

40. உடன் பிறந்தவர்கட்குத் தோஷம் ஏற்படும். கண் பார்வை குறையும. மறுபிறவியைச் சொல்லுகின்றோம். துவாரகையில், தீங்குகளில்லாத இதே குலத்தில் பிறந்து, வறுமையில்லாமல், மனைவியில்லாமல், வாழ்ந்து வருவான். பார்வதியே! கேளுங்கள்.

41. சாதகன் பொதுயோ கத்தைச் சாற்றுவோம் பதினெட் டின்மேல்
மேதினில் மரண மட்டும் வறுமைகள் காணு ஞகும்
நீதியா யரசர் மூலம் நிமலனுஞ் ஜீவிப் பானும்
சூதிலான் பெரியோர் நேயன் சுகதுக்க முடைய ஞமே.

41. ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய பதினெட்டாம் வயதிற்குமேல், தன் இறுதிக்காலம்வரையில் வறுமை யில்லாதவன். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்ந்து வருவான். சூதுகளில்லாதவன். பெரியோர்கள் நட்புக்கொண்டிடுவான். சுகதுக்கம் கலந்து வாழ்வான்.

42. அன்ப்து வாண்டு மேலாய் அணுகிடும் பிறைபோல் யோகம்
துன்பங்கள் காணு ஞகுந் துர்வழக் கினிலே செல்லான்
பொன்பூமி பின்னுல் சேர்ப்பன் புவிராசர் நேசங் கொள்வன்
ஊன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

42. ஜாதகனுக்கு ஐம்பது வயதுக்குமேல் பிறைச் சந்திரன்போல் யோகம் பெருகும். துன்பங்கள் அடையாதவன். கெட்ட வழக்குகளில் செல்லாதவன். பிற்காலத்தில் பொன் பூமி இவைகளைப் பெருக்குவான். உலகத்தையாளும் அரசரிடம் நட்புக் கொள்ளுவான். உயர்ந்த கணவனையடைந்த உத்தமியே! கேளுங்கள்.

43. எழுபது மூன்று வாண்டில் இடபமா தத்தி லேதான்
அழிவுண்டு சாதகர்க்கு அறைகின்றோ மிவன்பின் ஜன்மம்
பழிவெல்லுங் காளாத்தி தன்னில் பிறப்பனு மிக்கு லத்தில்
தழிவுண்ட மாதே யாங்கள் சாற்றின மொழிகுன் றுவே.

43. ஜாதகன், தனது எழுபத்துமூன்றும் வயதில் வைகாசி மாதத்தில் இறந்து விடுவான். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். வினைகளைத் தீர்க்கும் திருக்காளத்தி க்ஷேத்திரத்தில் இதே குலத்தில் பிறப்பான். பார்வதியே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறு.

44. பிறந்திடு காலந் தன்னில் பொன்தசை பதின்மூன் றுண்டும்
சிறந்திடு திங்கள் நாலும் செப்புவோம் பலனை யாங்கள்
உறைந்திடுந் துணைவர்கள் தாமும் உதித்தவன் தனக்கு ரோகம்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

44. ஜாதகன் பிறக்கும் காலத்தில் குருமகாதசையில் பாக்கி பதிமூன்று வருடங்களும் நான்கு மாதங்களுமாம். அக் காலத்திய பலன் களைச் சொல்லுவோம். உடன் பிறந்தவர்கள் விருத்தியுண்டு. ஜாதகனுக்கு ரோகமேற்படும். தருமத்தை விருத்திசெய்யும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

## ஜாதகம் 49.

1. மதிகுசன் கேது பானு மாலுமே மான தாக
விதிதனு புகருஞ் சாடி வேந்தனும் மேட மாகத்
ததிகயர் வண்டி யாக ஜன்மமும் வீணை புக்க
இதுவிதங் கோளும் நின்று லியம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் செவ்வாய் கேது சூரியன் புதன் இவர்கள் மகரத்திலும், சனி தனுசிலும், சுக்கிரன் கும்பத்திலும், குரு மேஷத்திலும், ராகு கடகத்திலும் நின்று, லக்கினம் மிதுனமாக இருந்தால், ஏற்படும்பலனைச் சொல்லுங்கள், முனிவரே!

| | | | |
|---|---|---|---|
| | குரு | | லக்கினம் |
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | ராகு |
| சந்திரன் செவ்வாய் கேது சூரியன் புதன் | | | |
| சனி | | | |

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது வாண்பால் ஜன்மம்
பெறுந்தந்தை யில்லஞ் சொல்வோம் பலமிலாச் சிறுவூ ராகும்
மறலியின் வடக்கு வீதி வாசலுங் குடகு நோக்கம்
அரிவாக னத்தாள் திசை ஆற்றலே மாறி வாயு.

2. அகத்திய முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். ஜாதகனுடைய தந்தையின் வீட்டைச் சொல்லுகின்றோம். பாழில்லாச் சிற்றூராகும். தெற்கு வடக்கான தெருவில் மேற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. காளிதேவியின் கோயிலும் மாரியம்மன் கோயிலும் வடமேற்குத் திசையிலுள்ளன.

3. இவ்வித வடையா ளத்துள் இயம்பினேந் தந்தை யில்லம்
ஒவ்விய வன்னை யில்லம் உத்திர முதிப்பா னுமே
பவ்வமாய்த் தந்தை யன்னை பாலர்கள் மனைவி யோகம்
நவ்விய முன்பின் ஜன்மம் நாட்டுவோங் கேளுந் தாயே.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ளது தந்தையின் வீடாகும். இதற்கு வடக்காகவுள்ள தாயின் வீட்டில் ஜாதகன் பிறப்பான். தந்தை தாய் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் கூறுகின்றோம். கேளுங்கள், தாயே!

### வேறு

4. தந்தைகுணங் கூறுகின்றே மால்நி றத்தன்
சகராசர் பேட்டிகொள்வன் சமர்த்தாய் வார்த்தை
வந்தவருக் கன்னமீவன் பூமி விருத்தி
வாக்குத்தவ றுன்காலி யாட்கள் சேர்க்கை
நொந்தவரை யாதரிப்பன் சீல னுவன்
நேமியோர்க் குதவிடுவன் கிருஷி யுள்ளான்
முந்துமால் பத்தியுளன் கூவல் செய்வன்
மு.......... கட்டான் முதல்வன் தானே.

4. தந்தையினுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மாநிறமுடையவன். அரசரிடம் நட்புக்கொள்ளுவான். சாமர்த்தியமாகப் பேசுபவன். தன்னைத் தேடி வந்தவர்கட்கு அன்னமளிப்பான். பூமியைப் பெருக்குவான். சொன்ன சொல் தவருதவன். கால்நடைகளும் பணியாட்களும் பெற்றிடுவான். கஷ்டம் அடைந்தவர்களை ஆதரிப்பான். நல்லொழுக்க முள்ளவன். பூமியிலுள்ள மக்களுக்கு உதவி செய்வான். பயிர்த்தொழில் செய்து வருவான். திருமாலின்மீது பக்தி கொள்ளுவான். கிணறுகள் வெட்டி வைப்பான். கருணீகர் குலத்தில் பிறப்பான்.

5. தந்தைமொழிக் கிடருரையா னுள்ளன் போடும்
சற்சன வுறவுகொள்வன் தனவா னுவன்
தந்தைக்கு மேலாக வாழ்வா னுகும்
சல்லியங்கள் கொள்ளானு மில்லஞ் செய்வன்
தன்பந்து புகழ்ந்திடவே வாழ்வா னுகும்
தன்கரத்தில் சிவன் ரேகை............
தந்தமது தரள மொக்கும் நாபிச் சுூடன்
தாயாதி வர்க்கமது நசிக்கு மென்றோம்.

5. தன் தந்தையின் வார்த்தைக்கு மறுமொழி கூருதவன். உள்ளன்புடன் நல்லவர்கள் நேசம் கொள்ளுவான். தனவானுக இருப்பான். தன் தந்தைக்கு மேன்மையாக வாழ்ந்திடுவான். கடனுபத்திரவ மில்லாதவன். வீடு கட்டுவான். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். தன் கையில் ருத்ரரேகையுள்ளவன். பற்கள் முத்து வரிசைப்போல் வெண்மையாக இருக்கும். நாபிச்சூடுள்ளவன். அவனுடைய பங்காளி வர்க்கத்தார்கள் நசித்துவிடுவார்.

### வேறு

6. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னுவன்
புல்லிய புத்தி யில்லான் புகழ்ந்தோரை யாத ரிப்பன்
வல்லியர் மோக வானும் மா நிலங் கணக்கு வேலை
சொல்லதைக் காப்பா னுகும் தொடுத்ததை வெல்வா னுமே.

6. நல்லவர்கட்கு நல்லவனுகவும் தீயவருக்குத் தீயவனுகவுமிருப்பான். அற்ப எண்ணங்க ளில்லாதவன். தன்னைத் துதி செய்தவரை ஆதரிப்பான். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். உலகில் கணக்கன் வேலை செய்து வருவான். சொன்ன வார்த்தைகளைக் காப்பாற்றுவான். எடுத்த காரியங்களை வெல்லுவான்,

### தந்தைக்குச் சகோதர தோஷம் : கிரகநிலை

7. தன்துணை தோன்றுந் தீதாம் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
என்னகா ரணத்தி னாலே இயம்பினு ரந்தச் சங்கை
ஒன்பதுக் குடையோ னேழில் உத்திர பானு வெட்டில்
துன்னிய கேது கூட திருதியந் தோன்றுந் தீதாம்.

7. உடன் பிறந்தவர்கள் பிறப்பார்கள். ஆனால் அவர்கள் நிலையா யில்லாதவர்கள். ஜயமுனிவர் தடுத்துக் கூறுகின்றார். என்ன காரணத்தினால் அங்ஙனம் கூறினீர்கள்? (பிதிரு பாக்யஸ்தானமாகிய) ஒன்பதாமிடத்துக்குரிய சனி ஏழாம் வீட்டிலும், பிதிருகாரகனாகிய சூரியன் எட்டில் இருப்பதாலும், கேது மூன்றாமிடத்தில் இருப்பதாலும் தந்தைக்குச் சகோதர தோஷம் சொன்னோம்.

8. இதுவன்றிப் பூர்வந் தன்னில் எய்திற்றுச் சிலவே தோடம்
அதுபலன் சொல்லு மென்ன அவனுடைப் பூர்வங் கேளாய்
நதியிரு புறங்கள் சூழும் மறவர்வாழ் நாட்டி லேதான்
முதற்குலந் தனிலு தித்து முயர்வான குடும்பி யாகி ;

8. இதுவுமல்லாமல், முற்பிறவியில் செய்த தீவினையும் சில வுண்டு. அதன் விபரம் சொல்லுங்களென்ன, அவனுடைய முற்பிறவியைக் கேளுங்கள். இருபுறங்களிலும் நதியோடும் ........................ ஊரில் (திருவரங்கத்தில்) அந்தணகுலத்தில் பிறந்து, உயர்ந்த குடும்பத்தைப் பெற்று ;

### கடன் கொடுத்து உடைமையைப் பறித்தது

9. மைந்தரு மனைவி யுண்டாய் வாழ்நாளில் வினையைச் சொல்வோம்
நொந்தபே ருக்குப் பொன்னை நிமலனு மளித்துப் பின்பு
அந்தவ ரியல்பை யாவும் அரசரால் பறித்துக் கொண்டான்
பந்தமாய்க் குடும்பி யாகிப் பகருவார் சாபந் தானும்.

9. மனைவி மக்களைப்பெற்று வாழ்ந்து வரும் நாட்களில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஏழைகளுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து, பிறகு அரசரிடம் முறையிட்டு, அவர்களுடைய உடைமை எல்லாவற்றையும் பறித்துக் கொண்டான். நொந்த மனமுள்ளவர்களாகிய ஏழைகள் சாபமிட்டனர்.

10. மற்றொரு ஜன்மந் தன்னில் வருந்துணை தோட முண்டாய்
வித்தக னந்தி யத்தில் மனைவியு மாண்டு பின்பு
குற்றமாய்ச் சிறையாய் வாழ்வாய் கூறியே தெருத்தூள் விட்டார்
பற்றிற்று வந்தத் தோடம் பகருவோம் வேறு வொன்று.

10. நீ, மறு பிறவியில், உடன்பிறந்தவர்களை இழந்து, கடைசிக் காலத்தில் மனைவியையும் இழந்து, இறுதியில் சிறையில் வாழுவது போல் வாழ்ந்து வருவாய், என்று கூறித் தெருமண்ணை வாரித் தூற்றினார்கள். அந்தத் தோஷம் ஏற்பட்டது. வேறு ஒன்றும் சொல்லுகின்றோம்,

## வேறு

**ஆசிரியன் மகளின்மீது மையல் கொண்டு பலவந்தமாக இன்பமனுபவித்தல்**

11. கல்விதனைப் போதித்தோன் புத்திரி தன்மேல்
காதலனு மோகமுற்றுக் கலவை பேச
வல்லியுமே விசையாமல் பேசு கின்றாள்
வாத்திமகள் வுன் தங்கை கருத வேண்டும்
புல்கினுள் மறுஜன்மந் துணைக ளின்றிப்
பேதையுமே வந்தியத்தில் மரண மாகி
அல்லலாய் வனவாச மாக வாழ்வாய்
அந்ததனை யிவன்செவிக்கு வடையா தாகி ;

11. கல்வி போதிக்கும் ஆசிரியனாக இருந்தவனின் பெண் மீது மையல் கொண்டு, அவளுடன் இன்பமனுபவவிக்க எண்ணி, பேசும்போது, அப் பெண்ணும் உடன்படாமல் கூறுகின்றாள்: நீ உன்னுடைய ஆசிரியனின் பெண்ணை என்னைத் தங்கையாக எண்ணவேண்டும். மறுபிறவியில் உடன்பிறந்த சகோதரர்களின்றி, மனைவியும் இடையில் மாண்டு, துன்பத் துடன் வனத்தில் வசிப்பதுபோல் வாழ்வாய், என்றாள். அவ்வார்த்தை களை, இவன் செவி சாய்க்காமல் ;

## வேறு

12. பலவந்த போகஞ் செய்தான் பற்றிற்று வந்தத் தோடம்
தலைவனு மந்தி யத்தில் சேதுவின் பதிக்குச் சென்று
நலமுள தலங்கள் சென்று நாதனுர் பத்தி கொண்டு
சலமீந்து பெரியோ ருக்குச் சண்டன்தன் பதிக்குச் சென்று ;

12. பலவந்தமாகப் புணர்ந்தான். அந்தத் தோஷம் பற்றியது. ஜாதக னுடைய தந்தையும், இறுதிக் காலத்தில் சேதுவுக்குச் சென்று, பல புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று, சிவபெருமான்மீது பக்தியுடன், பெரியோர்கட்கு அன்னமும் நீருமளித்து மரணமடைந்து ;

13. வந்தனன் கர்ண சேயாய் வறைகின்றே முன்னூழ்த் தோடம்
தன்துணை காணு னுகும் தன்மனை மத்தில் மாண்டு
விந்தையாய் வனவா சங்கள் நிமலனும் வாழ்வா னுகும்
இந்தவாறு முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்.

13. கருணீகர் குலத்தில் பிறந்தான். முற்பிறவியின் தோஷம் ஏற் பட்டது. உடன் பிறந்தவர்களில்லாதவன். தன் மனைவியும் இடைக் காலத் தில் இறந்து, வனங்களில் வாழ்வதுபோல் வாழ்ந்து வருவான். இங்ஙனம் முனிவர்கள் சொல்லும்போது, பார்வதிதேவி கேட்கலானாள்.

14. முன்ஜன்மஞ் சேது நீர்த்தம் முயன்றதோர் பலத்தி னாலே
அந்தவூழ் நீங்கா தோசொல் அருமையாய்க் கல்வி சொன்ன
சந்ததம் வாத்தி புத்ரி சாபமும் நீங்கா தாகும்
வந்தது வந்தே தீரும் அனுடமும் வீணை ராசி ;

14. முற்பிறவியில் சேதுவில் நீராடிய புண்ணியத்தால் பிழைகள் நீங்காவோ ? என்று வினவ, அதிசயமாகக் கல்வி கற்றுக்கொடுத்த ஆசிரியனின் பெண்ணின் சாபம் நீங்காது. வருவது அவசியம் வந்தே தீரும். அவன், அனுட நட்சத்திரத்தில், மீன லக்கினத்தில் ;

15. உதிப்பனு மென்று சொல்வோம் உரைத்தவிக் குணத்தா னுக்கு
அதிபனு மிடண்டாஞ் ஜன்மம் வருகுவா னிந்தப் பாலன்
அதுபலன் கூறக் கேண்மோ ஆதிமால் நிறத்த னுவன்
ததிநெய்பா லிட்ட முள்ளான் சாந்தவான் கல்வி யுள்ளான்.

15. பிறப்பான் என்று சொல்லுகின்றோம். இங்ஙனம் கூறப்பட்ட தந்தைக்கு ஜாதகன் இரண்டாம் பிறப்பாகத் தோன்றுவான். அவனுடைய பலனைக் கூறுகின்றோம், கேளுங்கள். திருமாலைப் போன்ற கரிய நிறத்தனன். தயிர் நெய் பால் இவைகளில் விருப்பமுள்ளவன். சாந்த முடையவன். கல்வியறி வுள்ளவன்.

16. வருவோரை யாத ரிப்பன் வாக்கதைக் காப்பா னுகும்
பெருமையாய்க் குடும்பி யாவன் பூமியை விருத்தி செய்வன்
குறையென்றோர்க் குதவி செய்வன் கூறுஞ்சொல் சுகமே யாகும்
நறைமலர்க் கந்த மிட்டன் நன்முக வ(டி)டுவு காணும்.

16. தன்னை அண்டி வந்தவர்களை ஆதரிப்பான். தன் வார்த்தைகளைக் காத்துக்கொள்ளுவான். பெருமையான குடும்பியாக இருப்பான். விளை நிலங்களைப் பெருக்குவான். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. இன்பமாகவே பேசுபவன். புஷ்பம் சந்தணம் இவைகளில் விருப்பமுள்ளவன். முகத்தில் வடு (அழகு) உள்ளவன்.

17. கிருஷியுஞ் செய்வா னுகுங் கெடுதிகள் ளொருவர்க் கெண்ணுன்
அரிபத்தி பூண்பா னுகும் ஆளடி ஆவு விருத்தி
திருமகள் வாச முள்ளான் சேயிழைப் பிரிய னுகும்
மருமமில் லாதா னுகும் மறுத்துரை யதிகங் கூறுன்.

17. விவசாயம் செய்து வருவான். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவன். திருமாலின்மீது பக்தி கொள்ளுவான். பசுக்களும் ஏவலாட்களும் உடையவன். லட்சுமீகடாட்சம் உள்ளவன். பெண்களின்மீது விருப்பமுள்ளவன். இரகசிய மில்லாதவன். மறுத்துப் பேசும் குணமில்லாதவன்.

18. சல்லியங் கொள்ளா னுகும் தனமது பெருக்கஞ் செய்வன்
எல்லையை விருத்தி செய்வன் இடருக ளொருவர்க் கெண்ணுன்
நல்லதோர் தலங்கள் செல்வன் நாயகி யிட்ட னுவன்
புல்லிய ருறவு கொள்ளான் புண்ணிய மனத்த னுமே.

18. கடன் படாதவன். செல்வத்தைப் பெருக்குவான். விளை நிலங்களை விருத்தியாக்குவான். ஒருவருக்கும் தீங்கெண்ணுதவன். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்லுவான். மனைவிமீது விருப்பமுள்ளவன். அற்பர்களிடம் நட்புக் கொள்ளாதவன். புண்ணியமான மனத்தினன்,

19. இவனுடைத் துணைவர் தம்மை இயம்பவே மூன்று ஞென்று
அவன்குணங் கல்வி மானும் அரசர்பூ சிதமு மெய்தும்
நவனியில் மணமு முள்ளான் நற்சுதர் காணு ருகும்
பவமுள வந்தி யத்தில் பேதியால் மரண மாவன்.

19. ஜாதகனுடைய உடன்பிறந்தவர்களில் மூத்த சகோதரன் ஒருவனே உண்டு. அவனுடைய குணத்தைக் கேளுங்கள். கல்விமான். அரசரால் கொண்டாடப்படுவான். மணமாகியும் புத்திரபாக்கிய மில்லாதவன். இடைக் காலத்தில் பேதி கண்டு இறந்துவிடுவான்.

20. தந்தைதாய்க் கருமந் செய்யான் சாற்றுவோம் பின்பால் சேதி
பிந்தின துணைகள் விருத்தி பலமிலா நசிக்கு மென்றேம்
வந்திடுந் துணைக்ள் சேதம் வரைகுவீ ரந்தச் சங்கை
சந்தத மெட்டில் பானு சிகிசேயும் கூடி நிற்க ;

20. தன் தாய் தந்தையருக்கு இறுதிக்கடன்கள் செய்யாதவன். பிற்பாகத்தில் மற்ற செய்திகளைக் கூறுகின்றேம். ஜாதகனுக்குப் பின் பிறந்தவர்களும் நீண்ட ஆயுளில்லாமல் இறந்துவிடுவர். சகோதரதோஷம் ஏற்படக் காரணமென்ன ? கூறுங்கள். எட்டாம் வீட்டில் சூரியனும் செவ்வாயும் இருப்பதால் ;

21. துணைதோட மிருபாண் டுள்ளே சுதனுக்கு மணமும் நேரும்
அணையவே பாரி தானும்....னி தசையில் நேரும்
சினமிலாள் சிவந்த மேனி ஜனபந்து வாத ரிப்பள்
வினையிலா மனத்த ளாகும் வீண்பழி ஏற்கா ளாகும்.

21. சகோதர தோஷம் ஏற்படும். ஜாதகனுக்கு இருபது வயதுக்குள்ளாகவே திருமணம் ஏற்படும். மனைவியும் தென்கிழக்குத் திக்கிலிருந்து வாய்ப்பாள். கோபமில்லாதவள். சிவந்த உடலுடையவள். பந்துஜனங்களை ஆதரிப்பாள். தீங்குகளில்லாத மனத்தள். வீண் அபவாதத்தை அடையாதவள்.

22. பால்பாக்ய முடைய ளாகும் பகையென்று மனத்தில் வையாள்
சீலமு மறத்தி லிச்சை சினமுண்டு வெளிக்காட் டாதாள்
மால்மனை வாச முண்டு மருவிடும் பித்த தேகி
காலத்தை யறிந்து ரைப்பள் காதலி யோக சாலி.

22. பால்பாக்கிய முள்ளவள். விரோதம் பாராட்டாதவள். நல்லொழுக்கமும் தருமம் செய்வதில் விருப்பம் உடையவள். கோபம் கொள்ளுவாள். அதை வெளியிடாதவள். இலக்குமி இவள் வீட்டில் வசித்துவருவாள். பித்த தேகமுள்ளவள். வருங்காலத்தை முன் கூட்டியே அறிந்துசொல்லுபவள். அவளும் யோகசாலி.

23. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணேம்
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொல்வோம்
இத்தகை வதிட்டர் சொல்ல இயம்புவார் பராசர் தாமும்
புத்திர தோட மெவ்வாறு புகலுவீர் முனியே நீர்தாம்.

23. புத்திரவிருத்தியைச் சொல்ல பலமில்லை. அப்படிப் பிறந்தாலும் தீமையாகும் என்று சொல்லுகின்றோம். இங்ஙனம் வசிஷ்ட முனிவர் கூறும் போது, பராசர முனிவர், எங்ஙனம் புத்திர தோஷம் என்று சொன்னீர்கள்; முனிவரே! தாங்கள், என்று கேட்டார்.

### புத்திரதோஷம் : கிரகநிலை

24. அஞ்சவ னென்பா நிற்க [1] அலரியின் மைந்தன் பார்த்தும்
நஞ்சுமே விரண்டில் நிற்க நல்கினேம் புத்ர தோடம்
தஞ்சமாய்ப் பூர்வந் தன்னில் சார்ந்தது வந்தத் தோடம்
வஞ்சனை யென்ன செய்தான் வரைகுவீர் முனியே நீர்தாம்

24. ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரன் ஒன்பதாமிடமாகிய கும்பத்தில் இருப்பதாலும், அவனைச் சனி பார்ப்பதாலும், ராகு இரண்டாம் வீடாகிய கடகத்தில் இருப்பதாலும். புத்திரதோஷம் ஏற்படும் என்று சொல்லுவோம். முற்பிறவியில் செய்த தீவினையும் சேர்ந்தது. என்ன தீங்குகள் செய்தான்? என்று கூறுங்கள், முனிவரே! தாங்கள்.

25. முன்னவ னிருந்த ஜன்ம மொழிகுவோம் பெண்ணை யோரம்
தென்பாலில் பேரூர் தன்னில் ஜனித்தனன் ரெட்டி வம்சம்
தன்சுதர் மனைவி யுண்டாய்த் தரணியால் ஜீவித் தேதான்
அன்னவன் வாழு நாளில் வரைகின்றே மூழி தானே.

25. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பெண்ணை யாற்றுக்கருகில், தெற்குப்பக்கத்திலுள்ள பெரிய ஓர் ஊரில், ரெட்டியார் மரபில் பிறந்து, மனைவி மக்களை யடைந்து, விவசாயம்செய்து, ஜீவித்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

26. மாதுரு சாப மொன்று மருவிற்றுப் பால னுக்கு
ஓதுவா ரற்பம் பொன்னை உதவியே முறியுந் தீட்டிச்
சாதனை யரசர் பக்கல் சாத்தியே பூமி யாவும்
நீதியாய்ப் பூமி யாவும் நிமலன்கைக் கொண்டா னென்றோம்.

26. பெண்ணின் சாபம் ஒன்று ஏற்பட்டது. தவிரவும், அந்தணருக்குச் சிறிது பொருள்கொடுத்து, பத்திரத்தை எழுதி வாங்கிக்கொண்டு. அரசரிடம் பத்திரத்தைக்காட்டி, அவனுடைய பூமிகள் யாவற்றையும் ஜாதகன் அபகரித்துக் கொண்டான்.

27. வேதத்தோன் மனவெ றுப்பால் விளம்புவார் சாபந் தானும்
பாதகா அற்பப் பொன்னைப் பகர்ந்துமே பூமி யாவும்
சூதாகத் தன்கைக் கொண்டாய் ஜனித்திடும் பின்ஜன் மத்தில்
தீதாகுந் துணைவர் தாமுஞ் ஜனித்திடுஞ் சுதர்களின்றி ;

27. அந்தணன் மனம் வெதும்பிச் சாபமிட்டான். கெட்டவனே! எனக்குச் சிறிது பொருளை கொடுத்து, அதற்காக என் பூமி எல்லாவற்றையும் சூதாக எடுத்துக்கொண்டாயே! உன் மறுபிறவியில் உடன் பிறந்தவர்களில்லாமல், புத்திரர்கள் பிறந்தாலும் நிலையாமல் ;

[1] சூரியன்.

28. உலகினில் வாழ்வா யென்று உரைத்துமே தெருத்தூள் விட்டார்
குலவிற்று வந்தத் தோடங் கூறுவோம் வேறு வொன்று
நலமுள வாவின் பாலே நயமுள வாக்க ரந்தான்
பலமிலா வேழைச் சாபம் புக்கிற்றுப் பால னுக்கு.

28. உலகில் வாழ்ந்து வருவாய் என்று கூறித் தெரு மண்ணை வாரி இறைத்தார். அந்தத் தோஷம் ஏற்பட்டது. வேறு ஒன்றும் கூறுகின்றோம். கன்றுக்கு விடாமல் பசுவின்பாலைக் கறந்தான். ஏழைகளின் சாபமும் ஏற்பட்டது.

29. இவ்விதத் தோடந் தாமும் குலவின பால னுக்கு
ஒவ்விய வந்தி யத்தில் உயர்சேது பதிக்குச் சென்று
பவ்வமாய் [1] ரங்கஞ் சென்று பஞ்சைகட் கன்ன மீந்து
நவ்விய கால னூடு நல்கியே நரகம் புக்கு ;

29. இவ்விதமான பல தோஷங்கள் ஜாதகனுக்கு ஏற்பட்டன. ஜாதகன் தன் கடைசி நாட்களில் சேதுவிற்குச் சென்று, நீராடி. திருவரங்கம் சென்று, அங்கு ஏழைகளுக்கு அன்னமளித்துவந்து, பிறகு மரணமடைந்து, நரகத்துக்குச் சென்று ;

30. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனிப்பனு மிவனே யென்றோம்
மறுவிடு முன்னுழ்த் தோடம் வருந்துணை தோட மெய்தும்
உறையாது புத்திரர் தாமும் உதிக்கினுந் தீதே யாகும்
வருமனை தன்னால் துன்ப மேவின சிலவே யென்றோம்.

30. பிரமனால் படைக்கப்பட்டுப் பிறப்பான் என்று சொல்லுகின்றோம். முற்பிறவியின் தோஷங்கள் ஏற்பட்டு, சகோதரர்கட்குத் தோஷமுண்டாகும். புத்திரர்கள் பிறவார். பிறந்தாலும் நிலையார். வரும் மனைவியால் பல துன்பங்களும் நேர்ந்தன என்றோம்.

31. பாரியின் வினையை நன்றாய்ப் பகருவீர் முனியே நீர்தாம்
வாரியி னோரந் தன்னில் மாபலி நகரி லேதான்
காரிழை கங்கை சேயாய்க் கலந்தனள் வறுமை யின்றித்
தேரின குடும்பி யாகிச் செல்வதி வாழு நாளில் ;

31. மனைவிசெய்த தீவினைகளைக் கூறுங்கள் ; முனிவரே ! தாங்கள். சமுத்திரத்தின் அருகில் உள்ள மஹாபலிபுரத்தில் வேளாள குலத்தவளாகப் பிறந்து, தரித்திரமில்லாமல் முதிர்ந்த குடும்பியாகி, செல்வியாக வாழ்ந்து வரும் நாளில் ;

32. பஞ்சையா யேழை மாது பாலர்க்கு வன்னம் வேண்டிக்
கெஞ்சியே யிவள்பால் கேட்கக் கர்வத்தால் கோப முற்று
மிஞ்சிய வார்த்தை சொல்லி விரட்டினு ளேழை தன்னை
வஞ்சியு மனைவெ றுப்பால் வரைகின்றாள் சாபந் தானும்.

---

[1] ஸ்ரீரங்கம்.

32. ஏழைப்பெண் ஒருத்தி தன் குழந்தைக்கு அன்னம்வேண்டிக் கெஞ்சி இவளைக் கேட்கும்போது, இவள் கர்வத்தால் கோபங்கொண்டு, அடாத வார்த்தைகளைக் கூறி, ஏழைப் பெண்ணைத் துரத்திவிட்டாள். ஏழையும் மனம் வருந்திக் கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

33. பாலர்சோ றீயாப் பாவி பிறக்கின்ற மறுஜன் மத்தில்
கோலமாய்ச் சுதர்க ளின்றிக் கோதையாய் வாழ்வா ளாகும்
சாலவே சொல்லி யேதான் சார்ந்தனள் வேறு வில்லம்
ஏலவே இந்தத் தோடம் எய்திற்றுப் பாவைக் கேதான்.

33. குழந்தைக்கு அன்னமளிக்காத பாவியே! உனக்கு ஏற்படும் மறு பிறவியில், புத்திரர்களின்றி வாழ்ந்து வருவாய், என்று சொல்லிவிட்டு, வேறுவிட்டுக்குச் சென்றாள். இந்தத் தோஷம் ஜாதகனுடைய மனைவிக்கு ஏற்பட்டது.

### வீட்டுக்கொல்லையில் கறுப்பன்சாமியைத் தொழாத குற்றம்

34. தன்னுடைக் கொல்லை தன்னில் சார்ந்தது கறுப்ப னென்று
முன்னோர்கள் தோத்த ரிப்பார் முதல்குலத் தெய்வ மென்று
இன்னவள் வணங்கா நின்றாள் இயம்பிற்றுக் கறுப்பன் தானும்
உன்சுதர் யாவுங் கொல்வேன் உதிக்கினு மறுஜன் மத்தில் ;

34. தன்னுடைய வீட்டின் கொல்லைப்பக்கத்தில் கறுப்பன்சாமி ஒன்று இருந்தது. இவளுடைய முன்னோர்கள் அதைத் தன் குலதெய்வமாக எண்ணித் துதி செய்துவந்தனர். இவள் அத்தெய்வத்தைத் தொழாமல் இருந்துவந்தாள். கறுப்பன்சாமியும் கூறியது—உன்னுடைய புத்திரர்கள் எல்லாவற்றையும் கொன்றுவிடுவேன். மறுபிறவி எடுத்தாலும் ;

35. சுதர்களு முதிக்கா வண்ணம் செய்குவே னென்று சொல்லிச்
சதிசெயுங் கறுப்பன் சொல்லச் சார்ந்தது வந்தத் தோடம்
அதிபதி யந்தி யத்தில் மைந்தர்கள் மரண மாகி
அதிகமாய் விசனங் கொண்டு அந்தகன் பக்கல் சென்று ;

35. புத்திரர்கள் தோன்றாவண்ணம் செய்துவிடுவேன், என்று துன்பங் கள் செய்யும் கறுப்பன்சாமி கூறியது. அந்தத் தோஷமும் ஏற்பட்டது. இவளும் தன் கடைசி நாட்களில், புத்திரர்களை இழந்து, அதிக மனவருத்த மடைந்து, மரணமடைந்து ;

36. தலைநான்கோன் வரையப் பட்டு ஜனித்தன ளீந்த மாது
குலவிடு மேழை சாபங் குலமுனி சாபந் தானும்
நிலையார்கள் சுதர்கள் தாமும் நுவலுவோஞ் சாந்தி தானும்
நலமுள கரும சாந்தி நாயகி தனக்குச் செய்து ;

36. மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் ஜாதகனின் மனைவி என்றோம். ஏழைப் பெண்ணின் சாபமும் குலதெய்வத்தின் சாபமும் ஏற்பட்டுப் புத்திரர்கள் நிலைத்திரார். அது நீங்கச் சாந்தி ஒன்று சொல்லு கின்றோம். கருமசாந்தியொன்று ஜாதகனின் மனைவிக்குச் செய்து ;

### சாந்தி செய்யும் விவரம்

37. சத்தியின் பீஜந் தன்னைத் தங்கரேக் கதனில் மிறிப்
பத்தியாய்ச் சத்தி மூலம் பகருவாய்ச் சகத்தி ரந்தான்
சுத்தவத் தகட்டைத் தானும் சுந்தரி யணிவா ளாகில்
வித்தகி தோடம் நீங்கி விளங்கிடுஞ் சுதர்கள் தாமே.

37. அம்மனின் பீஜாட்சதரத்தைத் தங்கத் தகட்டில் எழுதி, சக்தியின் பீஜாட்சரத்தால் தேவிக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து, சுத்தமான அந்தத் தங்கத் தகட்டை இவள் அணிந்து வந்தால், அவளுக்குத் தோஷம் நீங்கிப் புத்திரர் தோன்றுவர்.

38. சொற்படி செய்யா ளாகில் துலங்காரே சுதர்கள் தாமும்
சொற்படி செய்வா ளாகில் துலங்கிடும் பெண்பா லொன்று
மெய்ப்படி பெண்பா லொன்று வறைகின்றே தீர்க்க மாக
ஒப்புடன் சுதர்தோ டத்திற் குரைக்கின்றேஞ் சாந்தி தானே.

38. நாங்கள் கூறியபடி செய்து வராவிடில் புத்திரர் பிறவார். சொல்லிய வாறு செய்தால் ஒரு பெண் குழந்தையும் ஓர் ஆண் குழந்தையும் தோன்றி, தீர்க்காயுளுடனிருப்பார். ஜாதகனுடைய புத்திரதோஷம் நீங்கச் சாந்தி யொன்று கூறுகின்றேம்.

39. இன்னவன் மனைவி யோடு எழில்மிகக் கூடல் சென்று
அண்ணலுக் கபிடே கித்துக் கறுந்துழாய் நூறு கொண்டு
அண்ணலுக் கர்ச்சித் தேத்தி அன்பது மறையோர்க் கன்னம்
தன்னக ரடைந்து மேதான் சதுர்த்தசி விரதங் கொள்ள ;

39. ஜாதகன் தன் மனைவியுடன் செழிப்புள்ள முக்கூடலுக்குச் சென்று, அங்குள்ள தெய்வத்துக்கு (கிருஷ்ணனுக்கு) அபிஷேகம் முதலியன செய்து, கறுப்புத் துளஸிதளத்தால் நூறு அருச்சனைகள் செய்து, தோத்திரம் செய்து, ஐம்பது அந்தணர்கட்கு அன்னமளித்துத் தன் உள்ளூருக்குத் திரும்பி, சதுர்த்தசி விரதம் இருந்தால் ;

40. வந்தவூழ் நிவிர்த்தி யாகி வம்சமும் விருத்தி யாகும்
இந்தவாறு செய்யா ளுகில் இலகார்கள் சுதர்கள் தாமும்
அன்னையின் குணத்தைச் சொல்வோம் அன்புள மனத்த ளாகும்
தன்பந்து மெச்ச வாழ்வள் தன்வரன் மனம்போல் வாழ்வள்.

40. ஏற்பட்ட தீவினைகள் நீங்கி, வம்ச விருத்தி ஏற்படும். இப்படிச் செய்யா விடில் புத்திரர் தோன்றுர். தாயினுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். அன்புள்ள மனத்தினள் தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்வாள். தன் கணவனுடைய மன மறிந்து நடப்பாள்.

41. வறுமைக ளடையா ளாகும் வந்தபின் வரன்போ கந்தான்
திருமக ளொப்ப தாகும் தன்துணை யாண்பால் ரண்டு
அரிவைய ரவ்வா ருகும் அவர்களில் சிலரே துன்பம்
உறையில்ல முத்திர மாகும் உண்மையா மனத்த ளாமே.

41. தரித்திர மடையாதவள். அவள் வந்த பிறகு கணவனுக்கு யோகம் பெருகும். இலக்குமியைப் போன்ற செல்வமுண்டு. உடன் பிறந்தவர்களில் இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் உண்டு. அவர்களில் சிலர் நஷ்டமாவர். பிறந்த வீடு வடக்குத் திசையிலுள்ளது. உண்மையுள்ள மனத்தினள்.

42. அன்னையின் பூர்வஞ் சொல்வோம் அருணைக்குத் தென்பா லாக
உன்னதப் பேரூர் தன்னில் உதித்தனள் சைவச் சேயாய்த்
தன்சுதர் வரனு முண்டாய்த் தரணியில் வறுமை யின்றிக்
கன்னிகை வாழ்ந்து மேதான் காலன்தன் நாட டைந்தாள்.

42. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணாமலைக்குத் தெற்கில் உள்ள பெரிய ஊரில், சைவ குலத்தவளாகப் பிறந்தாள். கணவன் மக்கள் இவர்களை யடைந்து, வறுமையின்றி, வாழ்ந்து வந்து, மரணமடைந்தாள்.

43. வேதனால் வரையப் பட்டு விளங்கின ளிந்த மாது
காதலி பின்ஜன் மத்தைக் கழறுவோந் தாயே கேளும்
மேதினி லுயர்வ தான வள்ளூரில் பிரம சேயாய்
நீதியா வுதிப்பா ளாகுந் நிமலியே கேட்டி டாயே.

43. மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் ஜாதகனின் தாய். அவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தாயே ! கேளுங்கள். உலகில் உயர்ந்த திருவள்ளூரில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள். தேவியே ! கேளுங்கள்.

44. ஐயைந்து வாண்டுக் குள்ளே அன்னையுங் கண்ட மெய்தும்
பையவே முப்பா னொண்டில் பாலகன் தந்தை கண்டம்
வையமே லிவன்பின் ஜன்மம் வரைகின்றோந் துவாரை தன்னில்
துய்யவே மறைக்கு லத்தில் தோன்றுவா னிவனே யென்றோம்.

44. ஜாதகனுடைய ஐந்தாம் வயதிற்குள்ளாகவே தாய் மரணமடைவாள். அவனுடைய முப்பத்தொன்பதாம் வயதில் தந்தை மரணமடைவான். ஜாதகனுடைய தந்தையின் மறு பிறவியைக் கூறுகின்றோம். அவன் துவாரகையில், மேன்மையான அந்தண குலத்தில் பிறப்பான் என்று கூறுகின்றோம்.

45. அத்திரி சொல்லு கின்றார் அவனுமிச் சென்மந் தன்னில்
குத்தமாய்ப் பொருள்மே லாசை கூறதை மோசஞ் செய்தும்
வித்தகன் வாழ்வ தாலே வேதியர் குலமு திக்கும்
பெத்தபுண் ணியங்க ளென்ன பேசுவீர் முனியே நீர்தாம்.

45. அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுடைய தந்தை இப்பிறவியில் பொருள்கள்மீது ஆசைகொண்டு,ஜனங்களை மோசம் செய்தும் வாழ்ந்து வந்தபோதினும், உயர்ந்த அந்தண குலத்தில் தோன்றக் காரணம் என்ன? என்ன நற்செயல்கள் செய்தான் ? கூறுங்கள், முனிவரே ! நீர்தாம்.

46. மால்பத்தி கொண்ட தாலும் வருவோரை யாத ரித்தும்
சாலவா பத்தைக் காத்துந் தலவாசஞ் சென்ற புண்யம்
ஏலவே மறைக்கு லத்தில் எய்துவான் பிரம சேயாய்
ஆலத்தை யுண்டோன் றேவி அறைந்தது தப்பா தாமே.

46. திருமாலின்மீது பக்தி கொண்டிருந்ததாலும், வந்தவர்களை உப சரித்துக் காத்ததாலும், பிறருடைய ஆபத்தை நீக்கி ஆதரித்ததாலும், புண்ணிய தலங்களுக்குச் சென்று வந்ததாலும், அந்தண குலத்தில் பிறப் பான். கொடிய விஷத்தை அருந்திய சிவபெருமான் தேவியே! கூறியவை தவறு.

47. இன்னவன் மரண காலம் இயம்புவோ மிருபா னலில்
கன்னியா மாதந் தன்னில் கழறுவோ மார கங்கள்
பின்ஜன்மங் காஞ்சி தன்னில் பிறப்பனும் பிரம சேயாய்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

47. ஜாதகனுக்கு மரணக்காலம் அறுபத்துநான்காம் வயதில் புரட்டாசி மாதத்தில் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். மறு பிறவி, காஞ்சீபுரத்தில், அந்தண குலத்தவனாகத் தோன்றுவான். உயர்ந்த கணவனை யடைந்த உத்தமியே! கேளுங்கள்.

48. ஜாதகன் பொதுயோ கத்தைச் சாற்றுவோஞ் ஜனனந் தொட்டு
மேதினில் மரண மட்டும் வளர்பிறை போல யோகம்
ஓதுவோஞ் சல்யங் கொள்ளான் உலகுக்கு நல்லோ னவன்
பாதக மனம்வை யாதான் பரிந்துப சாரஞ் செய்வன்.

48. ஜாதகனுடைய பொது யோகத்தைக் கூறுகின்றோம். ஜனனம் முதல் இறப்பு வரையில் வளர்பிறைச் சந்திரன்போல் யோகம் வளரும். கடன்படா தவன். உலகத்தினருக்கு நல்லவனுவான். கெட்ட காரியங்களில் மனம் செலுத்தாதவன். அன்புடன் உபசாரம் செய்வான்.

49. தந்தைமேல் வாழ்வா னுகுஞ் சலித்தோருக் குதவி செய்வன்
விந்தையா யிரண்டு வில்லம் வித்தகன் செய்வா னுகும்
முந்துமால் பத்தி கொள்வன் முனிவதைக் காட்டா னுகும்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

49. தன் தந்தைக்குமேலாக வாழ்ந்து வருவான். துன்பமடைந்தவர் களுக்கு உபகாரி. அழகிய இரு வீடுகள் கட்டுவான். திருமாலின் மீது பக்தி கொள்ளுவான். கோபத்தை வெளியிடாதவன். முருகப் பெருமானைப் பெற்ற தேவியே! கூறிய வார்த்தைகள் தவறு.

50. பாலகன் ஜனிக்குங் காலம் பரிதியின் தசையி ருப்புச்
சாலவே வாண்டு ரண்டுஞ் சுதிருடன் திங்க ளொன்பான்
ஏலவே பிணியு மெய்தும் இடருடன் செலவ நேகம்
வேலனை யீன்ற மாதே விளம்பினோம் பூர்வ பாகம்.

50. ஜாதகனது ஜனன காலத்தில் சூரியமகாதசை யிருப்பு இரு வருடங் களும் ஒன்பது மாதங்களுமாம். அக்காலத்தில் நோயுண்டாகும். துன்பத் துடன் செலவுகள் அதிகமாகும். வேல்முருகனைப் பெற்ற தேவியே! மூதல பாகத்தைக் கூறினோம்.

## ஜாதகம் 50.

1. மிதுனமுஞ் ஜன்ம மாக வெண்மதி ராகு நாலில்
விதியவ னெட்டி லாக வேந்தனுங் கேது பத்தில்
புதன்புகர் லாப மாகப் புரவியோன் சேயீ ராறில்
அதுபல னெவ்வா றென்று அம்பிகை கேட்கும் போது ;

1. மிதுனம் ஜன்ம லக்கினமாகவும், சந்திரன் ராகு நான்காமிடமாகிய கன்னியிலும், சனி எட்டாமிடமாகிய மகரத்திலும், குரு கேது பத்தாமிடமாகிய மீனத்திலும், புதன் சுக்கிரன் லாபஸ்தானமாகிய மேஷத்திலும், சூரியன் செவ்வாய் பன்னிரண்டாமிடமாகிய விருஷபத்திலும் இருந்தால், பலன் எப்படியென்று பார்வதி கேட்கும்போது ;

| | | | |
|---|---|---|---|
| குரு கேது | புதன் சுக்கிரன் | சூரியன் செவ்வாய் | லக்கினம் |
| | இராசி | | |
| சனி | சக்கரம் | | |
| | | | சந்திரன் ராகு |

2. அத்திரி முனிவர் சொல்வார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லஞ் சொல்வோம் வடவாடை கீழ்மேல் வீதி
முத்தின வூரே யாகும் வாடையா மில்ல மாகும்
சித்தசன் தந்தை தென்பால் சகராசர் வாச மெய்தும்.

2. அத்திரி முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். ஜாதகனுடைய வீட்டைச் சொல்லுகின்றேன். கிழக்கு மேற்கான தெருவில் வடக்குவாடையிலுள்ளது. அஃது ஓர் உயர்ந்த ஊராகும் ................ வீடாகும். மன்மதனுடைய தந்தையின் கோயிலும் அரசர் வசிக்கும் அரண்மனையும் தென்பக்கத்தில் உண்டு.

3. வாரியுங் கீழ்ப்பா லாகும் வளமுள [1]கெடியு முண்டு.
கூறின வடையா ளத்துள் குழவியுஞ் ஜனன மாகும்
வீரியன் வடுகச் சேயாய் மேவுவா னென்று சொல்வோம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

3. கிழக்கில் ஒரு நீர்நிலையும் (சமுத்திரமும்), செழிப்புள்ள கோட்டையொன்றுமுண்டு. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள இடத்தில், தன் தந்தைக்கு மூன்றுமவனாக வன்னிய குலத்தில் பிறப்பான் என்று சொல்லுகின்றோம். ஆறுமுகக் கடவுளையீன்ற தேவியே! கேளுங்கள்.

---

[1] கோட்டை

4. நந்தையின் துணையா னென்று சத்தியு மவ்வாறு தீர்க்கம்
அந்தவ னிளையோ னாகும் அவனுமே வேருய்ச் செல்வன்
பிந்திய பாகந் தன்னல் பேசுவோ மவன்தன் சேதி
எந்தையே பிதாகு ணத்தை இயம்புவோ மினிமே லாக.

4. ஜாதகனுடைய தந்தைக்கு ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். சகோதரனும் ஜாதகனுக்கு இளையவன். அவனும் வேருகச் சென்றுவிடுவான். பிற்பாகத்தில் விபரமாக அவனுடைய செய்தியைக் கூறுகின்ருேம். தாயே! ஜாதகனின் தந்தையின் குணத்தைச் சொல்லுகின்ருேம், இனிமேல்.

5. இருவிதக் கல்வி கற்பன் ஈகைவான் சிவந்த மேனி
அரசரால் தொழிலு மேற்பன் அடாவடி கூரு னாகும்
பெருமையும் புகழு மேற்பன் பெரியோர்க ளுறவு கொள்வன்
அரிநாம முடைய னாகும் அடாவடி கூரு னாகும்.

5. உயர்ந்த இருவிதமான கல்வியறிவுள்ளவன். கொடுக்கும் குணமுள்ளவன். சிவந்த உடலுள்ளவன். அரசாங்கத்தொழில் ஏற்று வாழ்வான். அடாவடியாகப் பேசாதவன். பெருமையும் கீர்த்தியும் அடைவான். பெரியோர்களிடம் நட்புக்கொள்ளுவான். திருமாலின் பெயரை உடையவன். அடாவடியாகப் பேசாதவன்.

6. காரக தேகி யாவன் கடவுளர் பத்தி பூண்பன்
தீரமில் லாத நெஞ்சன் செட்டுக்கள் செய்வா னாகும்
நாரியர் மோக னுவன் நயம்பெற வார்த்தை கூர்வன்
போர்செலான் புகழ்ந்தோர்க் கிட்டன் புண்ணியத் தலங்கள்
[செல்வன்.

6. மேகரோக தேகமுள்ளவன். கடவுள் பக்தி யுடையவன். தைரியமில்லாத மனமுள்ளவன். வர்த்தகம் செய்துவருவான். பெண்களின்மீது மையல் கொள்ளுவான். நயம்படப் பேசுபவன். சண்டைக்குச் செல்லாதவன். புகழ்ந்தோருக்குப் பிரியமானவன். புண்ணிய தலங்களுக்குச் சென்று வருவான்.

7. கத்திரி யோக மூள்ளான் கடன்கொள்வன் நிவிர்த்தி செய்வன்
சுத்தம்போல் வெளிம யக்கன் சொல்லதைக் காப்பா னாகும்
சத்தியங் கூரு னாகுஞ் சாப்பாட்டுச் சுகிய னென்ருேம்
முத்திஞேர் தொண்டு பூண்பன் வெளிதேசஞ் சிலநாள் வாசம்.

7. கத்தரியோகம் உடையவன். கடன் படுவான். அதைத் தீர்த்துவிடுவான். சுத்தம்போல பிறர் நினைக்கும்படி நடப்பான். தன்னுடைய வார்த்தைகளைக் காப்பாற்றுவான். சத்தியம் செய்யாதவன். சாப்பிடுவதில் பிரியமுள்ளவன். பெரியோர்களுக்குத் தொண்டுகள் செய்வான். வெளிதேசத்தில் சிலகாலம் வாழ்ந்துவருவான்.

8. இந்நெறி யுடையா னுக்கு இப்பால னுதிப்பா ளுரும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அழகுளான் சிவந்த மேனி
மன்னர்க ளிட்டங் கொள்வன் வஞ்சனை மனமில் லாதான்
பின்னமில் லாத தேகி பொருட்கடன் கொள்ளா ளுரும்.

8. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றேன். அழகுள்ளவன். சிவந்த உடலுடையவன். அரசர்கட்குப் பிரியமானவன். வஞ்சனையில்லாத மனத்தன். ஊனமில்லாத தேகமுள்ளவன். கடன் படாதவன்.

9. அன்னிய பாடை மேன்மை அரசரால் தொழிலு மேற்பன்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பான் தைரி யத்தன்
கன்னென மொழியு முண்டு கசடரை யுறவு கொள்ளான்
உன்னத வில்லஞ் செய்வன் உறுதியா மனத்த னுமே.

9. அன்னிய பாஷையில் தேர்வுபெற்று மேன்மையாக இருப்பான். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்வான். தன் வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பான். தைரியமுள்ளவன். கரும்புபோல் இனிய வார்த்தைகளையே பேசுபவன். முட்டாள்களுடன் உறவு கொள்ளாதவன். உயர்ந்த வீடுகட்டுவான். திடமான மனத்தினன்.

10. கரமதில் கோதுமை ரேகை கஞ்சமாம் ரேகை யுண்டு
உறன்முறை மதிக்க வாழ்வன் உண்டியுஞ் சுகமாய்க் கொள்வன்
பெரிதான தலங்கள் செல்வன் பேதைய ருறவு கொள்வன்
விரைவினில் நடக்க வல்லான் விநோதவார்த் தைகளுஞ் சொல்வன்.

10. கையில் கோதுமைரேகை தாமரைரேகை இவை உள்ளவன். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்துவருவான். இன்பத்துடன் உணவருந்துவான். பெரிய ஸ்தலங்களுக்குச் செல்வான். பெண்களிடம் நட்புக்கொள்ளுவான். வேகமாக நடக்க வல்லவன். விநோதமான வார்த்தைகளையும் பேசுவான்.

1. பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வீர்
[1] ஆலோனும் ராகு கன்னி அந்தணன் காரி யாட்சி
மால்புகர் லாபந் தங்க வளகேச யோக மொன்று
சாலவே வேசி யோகஞ் செப்பினேம் பால னுக்கு.

11. ஜாதகனுக்கு யோகம் கூறிய காரணங்களென்ன? சொல்லுங்கள். சந்திரனும் ராகுவும் கன்னியிலிருப்பதாலும், குரு சனி இவர்கள் ஆட்சியாக இருப்பதாலும், புதன் சுக்கிரன் லாபஸ்தானத்தில் இருப்பதாலும், கஜ யோகம் ஒன்றும் வேசியோகம் ஒன்றுமாகிய இரண்டும் இவனுக்குண்டு எனக் கூறினேம்.

12. இருவித யோகத் தாலே இராசரால் தொழிலும் வாய்க்கும்
வருங்காலம் புகல்வீ ரையா மாரனுக் கிருபான் ரண்டில்
அரசரால் தொழிலும் நேரும் அன்பது வாண்டு மட்டும்
பிறைபோலத் தொழிலு மோங்கும் பெரும்பொருள் தேடு வானும்.

---

[1] சந்திரன்.

12. இந்த இரு யோகங்களால் அரசாங்க உத்தியோகம் கிட்டும். அது வருங்காலத்தைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய இருபத்திரண்டாம் வயதில் அரசாங்க உத்தியோகம் கிடைக்கும். வளர்பிறைச் சந்திரன்போல் தொழில் விருத்தியாகும். மிகுதியாகச் செல்வம் சேர்த்திடுவான்.

13. பலருக்கு இவன்சொல் மேன்மை பரிவண்டி யுடைய னாகும்
நிலையதைக் காப்பா னாகும் நினைத்தகா ரியமு டிப்பன்
புலவனு மூன்று கல்வி புகலுவான் வறுமை காணன்
திலதமாம் பந்துக் கட்டு செல்வநி கேட்டி டாயே.

13. பலபேர்கட்கு இவனது வார்த்தை மேன்மையாக இருக்கும். குதிரை வண்டி உடையவன். தன் நிலையைக் காப்பாற்றிக்கொள்ளுவான். எண்ணிய காரியத்தை முடிக்கவல்லவன். மூன்று விதமான கல்விகள் கற்பான். வறுமையில்லாதவன். தன் பந்துஜனங்கட்குப் பிரியமானவன். தேவியே! கேளுங்கள்.

14. தன்துணை முன்பெண் ணொன்று தங்கிடுந் தீர்க்க மாகப்
பின்துணை யாண்பா லொன்று பேதையு மவ்வாறு தீர்க்கம்
அன்னவர் சேதி யாவும் அறிவிப்போம் பின்பா கத்தில்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

14. ஜாதகனுக்கு மூத்த சகோதரியொருத்தி நீண்ட ஆயுளுள்ளவளாக இருப்பாள். பின் பிறந்த சகோதரன் ஒருவரும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். அவர்களுடைய சேதிகளை எல்லாம் பிற்பாகத்தில் கூறுகின்றோம். உயர்ந்த கணவனையடைந்த தேவியே! கேளும்.

15. உதித்தசேய் மணத்தின் கால முறைக்கின்றோம் பதினெட் டாண்டில்
மதிமுக மனைவி வாய்க்கும் மாதுரு கிளையி லேதான்
அதிபதி குணத்தைச் சொல்வோ மாந்தளிர் மேனி யாகும்
துதிசெய்தோர்க் குதவு வாளாந் தோழன்தன் மனம்போல் [வாழ்வள்

15. ஜாதகனுடைய திருமணக் காலத்தைக் கூறுகின்றோம். பதினெட்டாம் வயதில், தன் தாய்வர்க்கத்திலிருந்து அழகிய மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மாந்தளிர் போல் மென்மையான சரீரமுடையவள். தோத்திரம் செய்பவர்களை ஆதரிப்பாள். தன் கணவன் மனமறிந்து வாழ்ந்து வருவாள்.

16. கல்விமான் ஊக சாலி கனத்தபுத் திகளு மேற்பள்
நல்லவள் நல்லோ ருக்கு நாயகி யோக சாலி
வல்லியும் வந்த பின்பு வரனுக்கு யோகம் வாய்க்கும்
அல்லலில் லாமல் வாழ்வள் அம்பிகை யாளே கேளாய்.

16. கல்வியறிவுள்ளவள். ஊகமுள்ளவள். பெரும்புத்தி யுள்ளவள். நல்லவர்கட்கு நல்லவள். யோகமுடையவள். இவளை மணந்தபிறகு ஜாதகனுக்கு யோகம் விருத்தியாகும். துன்பங்களில்லாமல் வாழ்ந்து வருவாள். தாயே! கேளுங்கள்.

17. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையர் மூவர் தீர்க்கம்
பதராகு மிரண்டு வென்றேம் பகருவோ மிவன்முன் ஜன்மம்
அதிதிவா ழருணை தன்னில் அணுசினன் வைச்யச் சேயாய்
விதமான செட்டுச் செய்து மேன்மையாங் குடும்பி யாகி ;

**17.** இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். இரு குழந்தைகள் நிலையாமல் இறந்துவிடும். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். துறவிகள் வாழும் திருவண்ணமலையில் வைசிய குலத்தில் பிறந்து, பலவிதமான வர்த்தகம் செய்துவந்து, மேன்மையுள்ள குடும்பத்தைப் பெற்று ;

18. அரனடி தொண்டு பூண்டு அதிதிக்கு வன்ன மீந்து
மறலியின் நாடு சென்று மலரயன் வரையப் பட்டுத்
திருமக னுதிப்பா னுகுஞ் செப்புவோ மிவனின் யோகம்
பெருமையும் புகழு மேற்பன் சகராசர் பேட்டி கொள்வன்.

18. சிவபெருமானின் பாதங்களைப் பூசைசெய்து, துறவிகளுக்கு அன்னமளித்துவந்து, மரணமடைந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு, இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றேம். கீர்த்தியும் பெருமையும் அடைவான். அரசருடன் நட்புக்கொள்ளுவான்.

19. தந்தைக்கு மேலாய் வாழ்வன் சாகையுஞ் சேர்ப்பா னுகும்
எந்தக்கா லத்தில் நேரும் இயம்புவீர் முனியே நீர்தாம்
சந்தத மீரே ழாண்டில் சேத்திரஞ் சேர்த லுண்டு
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

**19.** தன் தந்தைக்கு மேன்மையாக வாழ்ந்து வருவான். வீடு கட்டுவான். எந்தக் காலத்தில் வீடு கட்டுவான் ? முனிவரே ! கூறுங்கள். ஜாதகனுடைய பதினன்காம் வயதில் வீடு சேரும். முருகப்பிரானை யீன்ற பார்வதிதேவியே ! கூறிய வார்த்தைகள் தவரு.

20. மாதுரு குணத்தைச் சொல்வோ மாஞ்சிவப் புடைய ளாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உரகன்போல் கோபஞ் சாந்தம்
தீதான குணமில் லாதாள் தீங்கதை யெவர்க்கு மெண்ணுள்
சூதிலாள் பித்த தேகி சொல்லது சுகமே யெய்தும்.

**20.** ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றேம். சிவந்த நிறமுள்ளவள். இன்பமாகப் பேசுவாள். ஸர்ப்பம்போல் கோபமடைந்து உடனே சாந்த மடைவாள். தீய குணங்க ளில்லாதவள். ஒருவருக்கும் கேடு எண்ணுதவள். சூதுக ளில்லாதவள். பித்ததேக முடையவள். பேசுவது இன்பமாக இருக்கும்.

21. தோகைபோல் சாய லொக்குஞ் சொல்லது சுருக்க மாகும்
ஆகம முணர்ந்தோ ருக்கு வன்னமு மன்பா யீவள்
நாகரி கங்க ளுண்டு நன்னடை யுடைய ளாகும்
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

21. மயிலைப் போன்ற அழகுள்ளவள். சுருக்கமாகப் பேசுபவள். வேத முணர்ந்த அந்தணர்கட்கு அன்புடன் அன்ன மளிப்பாள். நாகரிகங்களுள்ள வள். நன்னடத்தை யுள்ளவள். போக சமுத்திரத்தைப் பெற்ற புண்ணிய வதியே! கேளுங்கள்.

22. தன்றுணை யாண்பா லொன்று சாற்றுவோந் தீர்க்க மாகக்
கன்னிகை நட்ட மெய்துங் கழறுவோ மன்னை பூர்வந்
தென்றிசைப் பெண்ணை யோரஞ் செழிப்புள பேரூர் தன்னில்
வன்னிய குலமு தித்து வளமான குடும்பி யாகி ;

22. தாய்க்குச் சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். பிறக்கும் சகோதரிகள் நிலையார். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தெற்குத் திசையில் பெண்ணையாற்றுக்குச் சமீபத்தில் செழிப்புள்ள பெரிய ஓர் ஊரில், வன்னிய குலத்தில் பிறந்து, வளமையுள்ள குடும்பியாகி ;

23. அறமதி லிச்சை யுண்டாய் அடைந்தோருக் கன்ன மீந்து
பெரிதான தலங்கள் சென்று புக்கினளுள் கால னூடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

23. தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்னமளித்து, பெரிய புண்ணிய தலங்களுக்குச் சென்று, மரண மடைந் தாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்று சொல்லுகின் றோம். கரிய யானையின் முகத்தையுடைய விநாயகனின் தாயே! கேளும்.

24. தந்தையின் முன்ஜன் மத்தைச் செப்புவோம் பட்சி தென்பால்
பிந்தைய வூரி லேதான் பிறந்தன னென்று சொல்வோம்
அந்தவ னவ் வூருக்கு அரசன்போல் கணக்கு வேலை
இந்தவன் பார்த்து வந்து எய்தின வினையைக் கேண்மோ.

24. ஜாதகனின் தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருக் கழுக்குன்றத்துக்குத் தெற்கில், சிறிய ஓர் ஊரில் கருணீகர் மரபில் பிறந் தான். அவன் அவ்வூருக்கு அரசன் போல கணக்கன் வேலையைப் பார்த்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

25. சிலருக்கு வாசை சொல்லிச் செம்பொன்னும் பெற்றுக் கொண்டு
கலகத்தைக் கூறி யின்னோன் கனபூமி மோசஞ் செய்தான்
நிலையிலா வேழை யோர்கள் புகலுவார் சாபந் தானும்
பலரையு மோசஞ் செய்தாய் பிறக்கும்பின் ஜன்மந் தன்னில் ;

25. சில பேருக்கு ஆசை வார்த்தைகளைச் சொல்லி, அவர்களுக்குச் சிறிது பணம் கொடுத்துவிட்டு, வஞ்சக எண்ணத்துடன் வார்த்தையைக் கூறி அவர்களுடைய பூமியை அபகரித்துக் கொண்டான். வீடுகளை இழந்த ஏழைகள் சாபமிட்டனர். பல பேரை மோசம் செய்தாய். நீ பிறக்கும் மறு பிறவியில் ;

26. மேகரோ கங்க ளுண்டாய் மேதினி தன்னில் வாழ்வாய்
சாகையு மில்லா தாகித் தன்துணைப் பகையு மாகிப்
பாகமாய்க் குடும்ப மின்றிப் பலபேர்கள் நகைக்க வாழ்வாய்
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

26. மேகரோகங்கள் ஏற்பட்டு, உலகில் வாழ்வாய். குடியிருக்க வீடில்லாமல், உடன் பிறந்தவர்கள் விரோதமுற்று, நல்ல குடும்பமில்லாமல், பலபேர் நகைக்கும்படி வாழ்ந்து வருவாய். இன்ப சமுத்திரத்தையடைந்த புண்ணியவதியே ! கேளுங்கள்.

27. இன்னமும் பலவாறு சொன்னார் எய்திற்று வந்தச் சாபம்
மன்னனு மந்தி யத்தில் வறுமையு முடைய னாகித்
தென்கால னூடு சென்று சிரநான்கோன் வரையப் பட்டு
அன்னவ னுதித்தா னென்றோம் அணுகிடு மேழை சாபம்.

27. இன்னும் பலவாறு கூறினார்கள். அந்தச் சாபம் வந்தடைந்தது. ஜாதகனுடைய தந்தை தன் அந்தியக்காலத்தில் தரித்திர முள்ளவனாகி, மரணமடைந்து, பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்று சொன்னோம். ஏழைகளின் சாபம் தொடரும்.

28. காரக ரோக மெய்துங் கத்திரி யோக மெய்தும்
பாரிலான் சேத்ர மில்லான் பராசரர் மறுத்துச் சொல்வார்
கூறினீர் ரோக மென்றீர் குடியாமோ விலகுமோ சொல்
மாறிடும் ரோக மென்றோம் வறைகின்றோங் கிரியை யொன்று.

28. மேக நோய் ஏற்படும். கத்தரியோகமும் உண்டாகும். வீடு நிலங்களில்லாதவன். குடியிருக்க வீடில்லாமல் வாழ்வான். பராசர முனிவர் இடையில் தடுத்துச் சொல்லுகின்றார். ரோகம் ஏற்படும் என்று கூறினீர்களே ! அது நிலையாயிருக்குமா ? நீங்குமா ? சொல்லுங்கள். ரோகம் நீங்குமென்றோம். ரோகம் நீங்கச் சாந்தியொன்று சொல்லுகின்றோம்.

**மேகரோகம் நீங்கச் சாந்தி விவரம்**

29. மாரனும் பட்சிக் கேகி [1]மங்கள வாரந் தோறும்
தீரமாய்க் கிரியை சுத்திச் சிவவேடம் பூண்டோ ருக்குப்
பூரண மனம தாகப் போசனம் பன்னாள் தந்து
கூறின வேழு வாரம் குன்றையும் வலமாய் வந்து ;

29. ஜாதகனுடைய தந்தை, திருக்கழுக்குன்றத்துக்குச் சென்று, செவ்வாய்க் கிழமைகள் தோறும் அந்த மலையை வலம் வந்து, சிவபக்தர்கட்கு நிறைந்த மனத்துடன் பலநாள் அன்னமளித்து, ஏழுவாரங்கள் மலையை வலம் வந்த பிறகு ;

30. தன்னக ரடைந்து யின்னோன் [2]சேய்வாரம் விரதங் கொண்டு
உன்னத வங்க பற்பம் ஓரைந்து நாளும் கொண்டு
துன்மையாய் ரோகம் நீங்குஞ் சொற்படி செய்யா னாகில்
மேன்மேலாய் விருத்தி ரோகம் மேவிடு மென்று சொல்வோம்.

---

1&2. செவ்வாய்க்கிழமை.

30. உள்ளூருக்குச் சென்று, செவ்வாய்க்கிழமைகள் தோறும் விரதம் இருந்து, உயர்ந்த வங்கபஸ்மத்தை ஐந்து நாட்கள் சாப்பிட்டுவந்தால், ரோகம் நீங்கிவிடும். நாங்கள் கூறியபடி செய்யாவிடில் ரோகம் மேலும் மேலும் விருத்தியாகும் என்று சொன்னோம்.

31. வங்கபற் பங்கள் செய்யும் விதங்களைப் புகல்வீ ரையா
அங்கமா மிலுப்பை நெய்யில் சுத்தியுஞ் செய்து பின்பு
அங்கதைக் காயச் செய்து அருவியில் மூலி செய்து
சங்கையாய்க் கசபு டங்கள் செய்யவும் பற்ப மென்றோம்.

31. வங்கபஸ்மத்தைச் செய்யும் விதத்தைக் கூறுங்கள், முனிவரே! தூய்மையான இலுப்பை யெண்ணெயில் சுத்தி செய்து, அதைக்காயவைத்து, அருவி மூலிகையில் கஜஸ்புடங்கள் செய்தால், பஸ்மமாகும் என்று சொல்லுகின்றோம்.

32. ஆவின்நெய் தேனில் கொள்ள அவ்வினை நிவிர்த்தி யாகும்
பாவஙங்ள் விலகு மேன்றோம் பலர்நேசந் தொழிலு மேன்மை
நாவுசொல் மேம்பா டாகும் நாயகன் மரண மட்டும்
[1] சேவலங் கொடியோன் வாரம் விரதமுங் கொள்ளல் நன்று.

32. அதை, பசுவின் நெய் அல்லது தேனில் உட்கொண்டால், ரோகம் நிவிர்த்தியாகும். பாவங்களும் நீங்கி, பலர் சிநேகம் ஏற்பட்டு, தொழிலும் மேன்மையடையும். இவன் வார்த்தைக்கு மதிப்புண்டாகும். அவனுடைய மரணக்காலம் வரையில் சேவற் கொடியோனாகிய சுப்பிரமணியனுடைய பிரீதிக்காகச் செவ்வாய்க்கிழமைதோறும் விரதம் நோற்றல் நலம் என்றோம்.

33. பின்ஜன்மம் வள்ளூர் தன்னில் பிறப்பனுஞ் சைவச் சேயாய்க்
கன்மகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
பொன்தசை முற்பா கத்தில் புகலுவோந் தந்தை கண்டம்
மன்னற்கு முப்பான் ரண்டில் மடிவுண்டு வென்று சொல்வோம்.

33. மறு பிறவி, திருவள்ளூரில், சைவகுலத்தவனாகப் பிறப்பான். ஜாதகனுடைய கரும காலங்களைக் கூறுங்கள். குருமகாதசை முதல் பாதியில் ஜாதகனின் தந்தை மரணமடைவான். ஜாதகனுக்கு முப்பதாம் வயதில் அது நேரும் என்றோம்.

34. ஆறுமூன்று வாண்டில் அன்னைக்குக் கண்ட மெய்தும்
வேறுஜன் மங்கள் சொல்வோம் வேங்கட மலையி லேதான்
சேருவாள் சத்ரியச் சேயாய்ச் செழிப்பான குடும்பி யாவள்
பாரினில் தவங்கள் செய்யுங் பார்வதி கேட்டி டாயே.

34. ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் தாய்க்கு மரணமேற்படும். அவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேன் திருவேங்கடமலையில் க்ஷத்திரிய குலத்தில் தோன்றி, செம்மையான குடும்பியாகி, வாழ்வாள். உலகில் தவங்களை யியற்றும் பார்வதி தேவியே! கேளுங்கள்.

---

[1] காஞ்சீபுரம் முருகப் பிரானுக்குகந்த செவ்வாய்க்கிழமை.

35. அறுபது வெட்டு வாண்டில் அணுகிய கன்னி மாதம்
திருமக னுடல மேகுஞ் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
[1] பிருதிவி தலத்தி லேதான் பிறப்பனும் பிரம சேயாய்க்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

35. அறுபத்தெட்டாம் வயதில் புரட்டாசி மாதத்தில் ஜாதகன் மரண மடைவான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றேம். காஞ்சி புரத்தில் அந்தணகுலத்தவனுகப் பிறப்பான். கரியயானை முகத்தோனைப் பெற்ற பார்வதிதேவியே! கேளுங்கள்.

36. மறுஜன்ம மன்னவன் கால மத்தநா விரண்டாம் பாதம்
வெண்மதி தசையைந் தாண்டும் மேவிடுத் திங்க ளாறும்
முன்பாகம் விவரஞ் சொன்னே மொழிகின்றேம் பின்பால் சேதி
கன்னென மொழியை யொக்குங் காதலி கேட்டி டாயே.

36. மறுபிறவியில் (ஜாதகனுடைய ஜனனகாலத்தில்) ஹஸ்த நட்சத்திரம் இரண்டாம் பாதம். சந்திரமகாதசையில் பாக்கி ஐந்து வருடங்களும் ஆறு மாதங்களுமாம். இங்ஙனம் முதல் பாகத்தை விவரமாகக் கூறுகின்றேம். பிற்பாகத்தில் மற்ற விபரங்களைச் சொல்லுவோம். இனிய வார்த்தைகளைப் பேசும் தேவியே! கேளுங்கள்.

---

[1] காஞ்சிபுரம்

## ஜாதகம் 51.

1. குருபுத னிரவி நந்தி குசன்சாடி[1] புகரு மேடம்
திருமதி ராகு மீனஞ் சனிகேது கன்னி யாக
வருவது ஜன்மம் லினை வறைகுவீர் பலனை யென்று
அரன்மனை யாளுங் கேட்க அத்திரி சொல்லு கின்றார்.

1. குரு புதன் சூரியன் விருபஷத்திலும், செவ்வாய் கும்பத்திலும், சுக்கிரன் மேஷத்திலும், ராகு சந்திரன் மீனத்திலும், சனி கேது கன்னியிலும் இருந்து, லக்கினம் மிதுனமாக இருப்பின், பலனைக் கூறுங்கள், என்று சிவபெருமானின் மனைவியாகிய பார்வதி கேட்க, அத்திரி முனிவர் கூறுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| ராகு சந்திரன் | சுக்கிரன் | குரு புதன் சூரியன் | லக்கினம் |
| செவ் வாய் | இராசி சக்கரம் | | |
| | | | |
| | | | சனி கேது |

2. பிறந்தசே யாணுஞ் ஜன்மம் பேசுவோம் வடதென் வீதி
உறைந்திடு மேற்கு வாடை உத்தமி மாரி மேற்கில்
அரிவாக னத்தாள் கீழ்ப்பால் அருகினில் பச்சை நிற்கும்
பெருவயி றப்பன் தெற்கில் பேசுவோஞ் சிற்றூர் தன்னில் ;

2. பிறந்தகுழவி ஆண்மகன். அந்த வீடு தெற்கு வடக்கான வீதியில் மேற்கு வரிசையிலுள்ளது. மாரியம்மன் கோவில் மேற்குத் திக்கிலும், சிங்கவாகனமுடைய காளிகோயில் கிழக்கிலும், பக்கத்தில் திருமாலின் ஆலயமும், விநாயகர் ஆலயம் தெற்குத் திக்கிலும் உள்ள சிற்றூரில் ;

3. உதிப்பனு மிவனே யென்றேம் உறையில்லந் திண்ணை சென்று
பதியது பாழ தாகும் பகருமிவ் வடையா ளத்துள்
நதிகுல முதிப்பா னுகும் நாயகன் ஜனன யோகம்
மதிநுதல் மனைவி புத்ரர் அவன்தந்தை தாயின் யோகம் ;

3. ஜாதகன் பிறப்பான் என்று கூறுகின்றேம். பிறந்த வீடு திண்ணைகளில் பாழடைந்து போகும். இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள வீட்டில், வேளாளர் குலத்தில், தோன்றுவான். ஜாதகனுடைய யோகம் மனைவி மக்கள் தாய் தந்தையர் இவர்களுடைய யோகத்தையும் ;

---

[1] கும்பவிராசி.

4. துணைவர்கள் யோகந் தானுஞ் சொல்லுவோ முன்பின் ஜன்மம்
கனமுடன் தந்தை வர்க்கங் கழறுவோ மிருநான் காகும்
சினமிலா வாண்பா லொன்று செல்வதி யவ்வா றாகும்
பிணையிலா விரண்டுந் தீர்க்கம் பிழையாகு மற்ற வெல்லாம்.

4. உடன்பிறந்தவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவை களையும் சொல்லுகின்றோம். தந்தையின் உடன் பிறந்தவர்கள் எண்மர். ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர் களெல்லாம் நிலையாதவர்.

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் மால்நி றத்தன்
எந்தையே சமதே கத்தன் இவன்முக வடிவு முள்ளான்
தன்தன மதிக மில்லான் சன்மார்க்கன் கிருஷி செயவான்
முந்திய கல்வி கொஞ்சம் மூலச்சூ டுடைய னாமே.

5. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். திரு மாலைப் போன்ற கரிய நிறமுள்ளவன். சமமான உடலமைப்புள்ளவன். அழகான முகமுள்ளவன். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருளதிக மில்லா தவன். நல்லவழியில் செல்வான். விவசாயம் செய்து வருவான். உயர்ந்த கல்வியறி வுள்ளவன். மூலச்சூட்டு ரோக முடையவன்.

6. சித்திர வீடு செய்வன் சிறப்பான குடும்பி யாவன்
குத்தமு மில்லா னாகுங் கூறுவான் சுகமாய் வார்த்தை
அத்திபோல் நடையு முள்ளான் அவனுமே சீல னவன்
சுத்தத்தார் மெச்ச வாழ்வன் சுகதுக்க முடைய னென்றோம்.

6. அழகிய வீடு கட்டுவான். சிறப்புள்ள குடும்பத்தையடைவான். குற்றஞ் செய்யாதவன். இன்பமுறும்படி பேசுபவன். யானையைப் போல் கம்பீர மாக நடப்பவன். நல்லொழுக்க முள்ளவன். தன் உறவினர் கொண்டாடும் படி வாழ்ந்திருப்பான். சுகதுக்கங்கள் கலந்து வாழ்வான்.

7. தேவதாப் பத்தி கொள்வன் செய்ந்நன்றி மறவா னாமே
தாவிய பேரைக் காப்பன் தந்திர வாதி யாமே
ஆவுகள் விருத்தி யுள்ளான் அவசர மனத்த னாமே
நாவுகள் தவறா னாகும் நாயகி மேலுங் கேளே.

7. தெய்வ பக்தி யுள்ளவன். பிறர் செய்த உதவியை மறவாதவன். தன்னைச் சரணமடைந்தவர்களைக் காப்பான். தந்திரவாதியாக இருப்பன். பசுக்கள் விருத்தியுள்ளவன். அவசரமான மனத்தினன். சொன்ன வார்த் தைகள் தவறாதவன். தாயே ! மேலுங் கேளுங்கள்.

8. பால்தயி ரிட்டங் கொள்வன் பரவுப கார னவன்
ஞாலங்கள் சேர்ப்பா னாகும் நற்பண்ணை யாட்க ளுண்டு
கோலமாம் பித்த தேகி கூறுஞ்சொல் லிரண்டு முண்டு
காலத்தை யறிந்து வாழ்வன் காதலி கேட்டி டாயே,

8. பால் தயிர் இவைகளில் விருப்பமுள்ளவன். பலபேர்களுக்கு உபகாரி. விளைநிலங்களைப் பெருக்குவான். பண்ணையாட்கள் உள்ளவன். பித்த சரீர முடையவன். இருவிதமாகப் பேசுபவன். வருங்காலத்தை அறிந்து அதன்படி நடப்பான். தேவியே ! கேளுங்கள்.

9. இக்குண முடையோ னுக்கு இவனுமே மூன்றுஞ் ஜன்மம்
மிக்கவே வுதிப்பா னாகும் விளம்புவோ மிவனது குணத்தைச்
சிக்கன மில்லா னாகுந் தேகமும் மால்நி றத்தான்
சக்கரை போல வார்த்தை சாதிப்பான் ஊக வானும்.

9. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு ஜாதகன் மூன்றும் பிறவியாகத் தோன்றுவான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சிக்கன மில்லாதவன். திருமாலைப் போன்ற கரிய நிறமுள்ளவன். அக்கா ரம் போல் இனிய வார்த்தைகளைப் பேசுபவன். ஊகமுள்ளவன்.

10. பல கலை படிக்க வல்லான் பந்துவும் புகழ வாழ்வன்
குலவுநன் னடக்கை யுள்ளான் குஞ்சர நடையு மாவன்
நலமான காரி யத்தை நாயகன் செய்வா னாகும்
சலமதில் தோய வல்லன் சகலர்க்கும் நல்லோ னவன்.

10. பல கலைகளைக் கற்றுணர்வான். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். நன்னடத்தை யுள்ளவன். யானையைப் போல் கம்பீரமான நடையுடையவன். நன்மையான காரியத்தையே செய்பவன். புண்ணிய நதிகளில் நீராடுவான். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான்.

11. இன்னவன் செங்கை தன்னில் இலகிடுங் கோதுமை ரேகை
பின்னமில் லாத தேகன் பெருதன முடைய னாமே
தன்தந்தை பூமி மேலோய்த் தானவன் சேர்ப்பா னாகும்
மன்னுமா சார னவன் வாக்குகள் தவறா னாகும்.

11. இவனுடைய கையில் கோதுமைரேகை இருக்கும். ஊனமில்லாத தேகமுடையவன். பெருஞ் செல்வம் பெற்றவன். தன் தந்தையுடைய பூமியைவிட அதிகபூமியை ஜாதகன் சேர்ப்பான். நல்லொழுக்க முடையவன். சொன்ன வார்த்தைகள் தவறாதவன்.

12. பயிர்த்தொழில் வணிபஞ் செய்வன் பாரெலாங் கீர்த்தி யேற்பன்
அயலார்பொ னிச்சை யில்லான் ஆவுகள் ஏர்பெ ருக்கம்
வியமிலா னன்ன மீவன் மேலவர் பத்தி கொள்வன்
நயவுப தேசங் கேட்பன் நற்றிருப் பணியுஞ் செய்வன்.

12. விவசாயம் செய்து வந்து வர்த்தகமும் செய்வான். உலகில் கீர்த்தி அடைவான். பிறர் பொருள்களின்மீது விருப்பமில்லாதவன். பசுக்கள் ஏர் முதலியன விருத்தியுள்ளவன். செலவுகள் செய்யாதவன். அன்ன மளிப்பான். பெரியோர்களிடம் பக்தி கொள்ளுவான். நன்மையுள்ள உபதேசங்களைக் கேட்பான். நல்ல ஆலயத் திருப்பணிகள் செய்வான்.

13. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ முன்னோ னில்லான
அவனியில் பெண்பா லொன்று அறைகின்றோ மதுவல் லாமல்
நவுனியி லிவன்பின் னாலே நாட்டுவோ மாண்பா லொன்று
பவமுள பெண்பா லொன்று பருகிடு மிவனுக் கேநான்.

13. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களில் மூத்த சகோதரனில்லாதவன். மூத்த சகோதரி யொருத்தியுண்டு. இதுவின்றி இவனுக்குப் பின் பிறந்த சகோதரன் ஒருவனும் சகோதரி யொருத்தியுமுண்டு என்று சொல்லு கின்றோம்.

14. மற்றது விரண்டு சேத மறைகின்றோந் துணைவர் தாமும்
வெற்றியாய் நாலாஞ் ஜன்மம் விளங்குவான் மகர லக்னம்
சுத்தமா யவன்தன் சேதி சொல்லுவோந் துண்ட முள்ளான்
உற்றோர்கள் மெச்ச வாழ்வன் உறுதியா மனத்த னாமே.

14. மற்ற இருவர்கள் நிலையாமல் மரித்து விடுவர். உடன் பிறந்த சகோதரன் நான்காவது பிறப்பாக மகரலக்கினத்தில் பிறப்பான். அவனு டைய செய்தியைச் சொல்லுகின்றோம். கண்டிப்புள்ளவன். உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். திடமுள்ள மனத்தினன்.

15. அதிகமாய்ப் பேச வல்லன் அதிகபாக் கியமுஞ் சேர்ப்பன்
நதிபல தீர்த்தந் தோய்வன் நற்கல்வி யுடைய னாமே
துதிசெய்தோர் தம்மைக் காப்பன் தோகையர் மோக வானும்
விதவிதம் பேச வல்லான் வீண்பவ வாதங் கொள்வன்.

15. அதிகமாகப் பேசுபவன். மிகுதியான பாக்கியங்க ளுள்ளவன். பற்பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். நல்ல கல்வியறிவுள்ள வன். தோத்திரம் செய்தவர்களை ஆதரிப்பான். பெண்கள்மீது மோக முள்ளவன். விதவிதமாகப் பேசுபவன். வீண் அபவாதம் அடைவான்.

16. வறுமைக ளில்லா னாகும் மன்னர்கள் நேசங் கொள்வன்
பெருமையும் புகழு முள்ளான் புயபலன் தந்திர வாதி
அறுமுகன் தனைத்து திப்பன் அண்டினோர்க் குதவி செய்வன்
நறுமலர்க் கந்த மிட்டன் நாட்டினில் வம்ப னவன்.

16. தரித்திர மில்லாதவன். மன்னர்களது உறவு கொள்ளுவான். கீர்த் தியும் பெருமையு முடையவன். திடமான புஜங்களை யுடையவன். தந்திர மாகப் பேசுபவன். ஆறுமுகக்கடவுளைத் துதிப்பான். தன்னிடம் வந்தவர் கட்கு உதவி செய்வான். வாசனையுள்ள புஷ்பம் சந்தனம் இவைகளின்மீது விருப்பமுள்ளவன். வம்பனாகி இருப்பான்.

17. உதவிகள் பலர்க்குச் செய்வன் ஒண்டொடி வர்க்கம் நாசம்
நிதியது வதிக முள்ளான் நிர்மிப்பான் கட்டு வார்த்தை
சுதன்சுக புசிப்பு முண்டு தொடுத்திடு வழக்கு மேற்பன்
பதியது செய்வா னாகும் பங்கய ரேகை யுள்ளான்.

17. பல பேர்களுக்கு உதவி செய்வான். மனைவி வர்க்கத்தார் நாசமடைவார். அதிகமான செல்வங்கள் உள்ளவன். இல்லாத வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன். சுகமாகச் சாப்பிடுவதில் பிரியமுள்ளவன். தொடுக்கும் வழக்குகளில் வெற்றியடைவான். வீடு கட்டுவான். தாமரைரேகையுள்ளவன்.

18. பாரியை யொன்றே யாகும் பாலர்க ளாண்பா லொன்று
தீரமாய்ப் பெண்பால் ரண்டு செப்புவோ மூன்றுந் தீர்க்கம்
சாரியாய் மூன்று சேதந் தனக்குமே வயது தீர்க்கம்
வீரியன் துணைவ னோடு வாழ்வானு மென்று சொன்னோம்.

18. மனைவி யொருத்தியே யாகும். ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் தோன்றி மூவரும் தீர்க்கஜீவிகளாவர். மூன்று குழந்தைகள் நிலையார். ஜாதகனுக்கு வயது தீர்க்கம். ஜாதகன் தன் உடன்பிறந்தவனோடு வாழ்ந்து வருவான் என்று சொன்னோம்.

19. அன்னையு மிருநி றத்தாள் அதிகமாய் வார்த்தை சொல்வாள்
இன்னவள் சூடாந் தேகம் இவள்கொஞ்சங் கவடு முண்டு
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பாள் சொற்ப ரோகி
பன்னுநன் னடக்கை யுள்ளாள் பகருமுன் கோபங் கொஞ்சம்.

19. ஜாதகனுடைய தாய் கருமைகலந்த சிவந்த நிறமுள்ளவள். அதிகமாகப் பேசுவாள். சூடான சரீரமுள்ளவள். மனத்தில் கபடமுள்ளவள். தன் வார்த்தையே மேன்மையானது என்று கூறிச் சாதிப்பாள். சிறிது ரோகமுள்ளவள். நன்னடத்தை யுடையவள். சொல்லுவதற்குமுன் கோபம் கொள்ளுவாள்.

20. அவள்துணை யாண்பா லொன்று அக்கன்னி யிரண்டு மாகும்
நவனியில் மூன்றுந் தீர்க்கம் நாயகி யுத்திர மாகும்
இவளுடை முன்ஜன் மத்தை இயம்புவோம் போரூர் மேல்பால்
பவமுள வருகில் சிற்றூர் பிறந்தன ளரசகு லத்தில்.

20. ஜாதகனுடைய தாய்க்குச் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவருமாவர். மூவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். அவள் வடக்குத் திக்கிலிருந்து வருவாள். இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருப்போரூருக்கு மேற்கில் உள்ள சிற்றூரில், சத்திரிய குலத்தில் பிறந்தாள்.

21. வரனுமே பட்சி தன்னில் வந்தனன் மதலை யுண்டாய்
அரனுடைச் சிலையா லேதான் அழுக்குகள் விலக்கு வாளாம்
திருமகள் சுகமு முண்டாய்த் தெய்வமேல் பத்தி பூண்டு
வரன்முன்னே மரண மாகி மலரயன் வரையப் பட்டு;

21. கணவன் திருக்கழுகுக்குன்றத்திலிருந்து வாய்ப்பான். குழந்தைகளை யடைந்து, சிவபெருமானுக்கு அபிடேகம் முதலியன செய்ததால் தன் தீவினை நீங்கப்பெற்று, நன்மையடைந்து, தெய்வபக்தியுடன் தன் கணவனுக்கு முன்பாகவே மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு;

22. வந்தவ ளிவளே யென்றேம் மங்கையுங் கேட்க லுற்றுள்
சங்கைகள் முன்ஜன் மத்தில் ஜனித்தவ ளிக்கு லத்தில்
இங்கிவள் கங்கை சேயாய்ப் பிறந்தகா ரணங்க ளென்னப்
பொங்கமாய்ப் புகலு மென்னப் புகலுவா ரத்திரி தாமும்.

22. இவள் பிறந்தாள் என்று கூறுகின்றேம். பார்வதி தேவியும் கேட்க லானுள். முற்பிறவியில் சத்திரிய குலத்தில் பிறந்தவள், இப்பிறவியில் வேளாள குலத்தவளாகப் பிறந்த காரணம் என்ன ? பொருத்தமாகக் கூறுங்கள், என்று கேட்க, அத்திரி முனிவர் சொல்லுகின்றுர்.

23. பரமன்தன் சிலையை யேதான் பரிசுத்தஞ் செய்த லாலும்
அறுமுகன் தெய்வ பத்தி அதிகமாய்க் கொண்ட தாலும்
பெருமையாய்க் காஞ்சி தன்னில் பிறந்தவ ளிவளே யம்மா
மறுஜன்மம் வேங்க டத்துள் வருகுவா ளிக்கு லத்தில்.

23. சிவபெருமானுடைய சிலையைப் பரிசுத்தம் (அபிஷேகம் முதலியன) செய்துவந்ததாலும், ஆறுமுகக்கடவுளிடம் பக்தி அதிகமாகக் கொண்டிருந் ததாலும், பெருமையுள்ள காஞ்சிபுரத்தில் பிறந்தாள். இவள் மறுபிறவி திருவேங்கடத்தில் இதே குலத்தில் பிறப்பாள்.

24. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மூற்றுக் காட்டில்
தன்தன முடையா னுக்குத் தானவன் மகவாய்த் தோன்றிச்
சந்ததம் நெசவு செய்துஞ் செங்குந்த மரபில் தோன்றி
வந்தவர்க் கன்ன மீந்து மாநிலம் நல்லோ னுகி ;

24. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். ஊற்றுக்காட்டில், சுயார்ச்சிதமான பொருள் அதிகமுள்ளவனும் சதா நெசவுத்தொழில் செய்துவரும் செங்குந்தமரபினனுமான ஒருவனுக்குப் புத்திரனுகப் பிறப்பான். தன்னைத்தேடி வந்தவர்கட்கு அன்னமளித்து உலகில் நல்லவனுக இருந்து ;

25. அறுமுகன் பத்தி கொண்டு அந்தகன் பக்கல் சென்று
பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தவ னிவனே யென்றேம்
மறுஜன்மங் காஞ்சி தன்னில் வைசியக் குலமு தித்துப்
பெருமையாய்ச் செட்டுச் செய்து புண்ணியன் வாழ்வா னுமே.

25. ஆறுமுகக் கடவுள்மீது பக்தி கொண்டு மரணமடைந்தான். மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் ஜாதகனின் தந்தை என்றேம். மறுபிறவி, காஞ்சிபுரத்தில், வைசிய குலத்தில் பிறந்து, பெரு மையுடன் வர்த்தகம் செய்து, புண்ணியனுக வாழ்ந்து வருவான்.

26. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மிருபா னுறில்
மேதினி லுத்தி ரத்தில் விளங்குவாள் மாதுரு வர்க்கம்
சூதிலா ளிருநி றத்தாள் சுகமாக வார்த்தை சொல்வள்
மாதவர்க் கன்ன மீவள் அதிட்டவா ளென்று சொன்னேம்.

26. ஜாதகனுடைய திருமணக்காலத்தைக் கூறுகின்றோம். இருபத்தாறும் வயதில் வடக்குத்திக்கிலிருந்து தன் தாயின் வர்க்கத்தில் மனைவி வாய்ப்பாள். அவள் சூதில்லாதவள். கரிய நிறமுள்ளவள். சுகமாகப் பேசுபவள். தவம்புரியும் துறவிகட்கு அன்புடன் அன்னமளிப்பாள். அதிருஷ்ட முள்ளவள் என்று சொல்லுகின்றோம்.

### ஏழாம்பாவம்: கிரகநிலை

27. தீர்க்கமாம் வயது வென்றேஞ் ஜயமுனி புகலு கின்றார்
ஏற்கவே மனைவி ரண்டு இயம்புவோ மிவனுக் கேதான்
மூர்க்கமா யெவ்வி தத்தால் மொழிந்திட்ட ரந்தச் சங்கை
ஆர்க்கவே சொல்லு கின்றேன் [1]அந்தண னேழோ னுகி;

27. நீண்ட வயதுள்ளவள் என்றோம். ஜயமுனிவர் இடைமறித்துச் சொல்லுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் உண்டு என்று கூறுகின்றோம். திடமாக, எக்காரணத்தால் நீங்கள் சொன்னீர்கள்? அந்தச் சந்தேகத்தைத் தெளியச் சொல்லுகின்றேன். குரு ஏழாம் வீட்டுக்குரியவனுகி;

### இருதாரம் : கிரகநிலை : மறுப்பு

28. ஈராறி லிருப்ப தாலு மிதுவன்றி நாலி லேதான்
[2]காரியுங் கேது தங்கக் கழறினே மந்தச் சங்கை
கூறின மொழியைக் கேட்டுக் [3]குறுமுனி புகலு கின்றார்
தீரமா யிரண்டோன் பத்தில் சந்திர னிருப்ப தாலே;

28. பன்னிரண்டாமிட (விரயஸ்தான) த்தில் இருப்பதாலும், நான்காமிடத்தில் சனியும், கேதுவும், தங்கியிருப்பதாலும் சொன்னோம், என்று சொல்வதைக்கேட்டு, அகத்திய முனிவர் உரைக்கின்றார். குடும்பஸ்தானத்துக்குரிய சந்திரன் பத்தாம் வீடாகிய மீனத்தில் இருப்பதாலும்;

29. சத்தமத் தோன்தி ரத்தில் சார்ந்திடத் தார மொன்றே
பத்தினி யதனைக் கேட்டுப் பகருவாள் முனிவ ருக்குச்
சுத்தமாய் லாபந் தன்னில் சுக்கிர னிருப்ப தாலே
சித்தசன் தனக்குத் தாரஞ் செப்பலா மொன்றே தீர்க்கம்.

29. ஏழாம் வீட்டுக்குரிய குரு ஸ்திரத்தில் இருப்பதாலும், மனைவியொருத்தியே என்றோம். பார்வதி அதைக் கேட்டுச் சொல்லுகின்றாள். முனிவரே! லாப ஸ்தானத்தில் சுக்கிரன் தனியாகவே இருப்பதால் ஜாதகனுக்கு மனைவி யொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவ ளென்றோம்.

30. மதலைகள் விருத்தி தம்மை வறைகின்றே மாண்பால் ரண்டு
மதிநுதல் பெண்பா லவ்வாறு வறைகின்றேந் தீர்க்க மாக
அதமாகு மிரண்டு தாமு மதுமொழி தப்பா தாகும்
நதிசடை யணிந்தோன் தேவி நங்கையே மேலுங் கேளே.

---

[1] குரு. [2] சனி. [3] அகத்தியர்.

30. புத்திர விருத்தியைச் சொல்லுகின்றோம். இரு ஆண் குழந்தைகளும், இரு பெண் குழந்தைகளும் பிறந்து, நீண்ட ஆயுளுடனிருப்பர். இரு குழந்தைகள் இறநதுவிடுவர். கூறியவை தவறு. கங்கையைச் சடை முடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியே! கேளுங்கள்.

31. உதித்தவன் முன்ஜன் மத்தை உரைக்கின்றேங் காஞ்சி மேல்பால்
சதியிலாப் [1]பனங்காட் டூரில் ஜனித்தவன் வடுகர் வம்சம்
விதவிதச் செட்டுச் செய்து மேதினில் கிருஷியு முண்டாய்
மதலைகள் மனைவி யுண்டாய் வறுமைக லில்லா னாகி ;

31. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்துக்கு மேற்கில், தீங்குகளில்லாத பனங்காட்டூரில், வன்னிய குலத்தில் பிறந்தான். பற்பல வியாபாரம் செய்து வந்து, விவசாயம் செய்து, குழந்தைகள் மனைவி இவர்களையடைந்து, தரித்திரமில்லாதவனாகி ;

32. தென்திசைத் தலங்கள் சென்று சேதுவில் தீர்த்தந் தோய்ந்து
அன்புடன் உள்ளூர் சென்று அந்தகன் பக்கல் சேர்ந்து
சந்ததம் பிரம னாலே தானவன் வரையப் பட்டு
வந்தவ னிவனே யென்றோ மங்கையே கேட்டி டாயே.

32. தெற்குத் திக்கில் உள்ள புண்ணிய க்ஷேத்திரங்கட்குச் சென்று, சேதுவில் நீராடி, மீண்டும் உள்ளூருக்குத் திரும்பி, மரணமடைந்து, பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இவன் என்று கூறினோம். தேவியே! கேளுங்கள்.

33. முனிவரிவ் விதமாய்க் கூற மொழிகுவா ளம்மன் தாமும்
தனயனு முன்ஜன் மத்தில் ஜனித்தன னருக னென்றீர்
கனமனே கங்கைசேயாய்ப் பிறந்தகா ரணங்க ளென்னச்
சினமிலாச் சொல்லு மென்னச் செப்புவா ரத்திரி தாமே.

33. இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பார்வதி தேவி பகருகின்றாள். ஜாதகன் முற்பிறவியில் வன்னிய குலத்தில் பிறந்தான், என்றீர். இப் பிறவியில் வேளாள குலத்தில் பிறந்த காரணம் என்ன? கோபப்படாமல் கூறுங்கள், என்று கேட்க, அத்திரி முனிவர் சொல்லுகின்றார்.

34. முன்ஜன்மஞ் சேது தீர்த்தம் மூடீன்றதா லிச்சென் மத்தில்
அன்னவன் கங்கை சேயாய் அனுகினா னென்று சொன்னோம்
இன்னவன் யோகந் தன்னை இயம்புவோம் வறுமை யில்லான்
உன்னதப் பூமி யாலே உதித்திடும் [2]நிதிநிட் சேபம்.

34. முற்பிறவியில் சேதுவில் நீராடியதால் இப்பிறவியில் வேளாள குலத்தில் பிறந்தான் என்று சொன்னோம். ஜாதகனுடைய யோகத்தைக் கூறுகின்றோம். வறுமையில்லாதவன். உயர்ந்த பூமியால் செல்வம் கிடைக்கும் (புதையல் கிட்டும்).

---

[1] திருப்பனங்காட்டூர். [2] புதையல்.

35. எந்தக்கா லத்தி லேதான் எந்திடம் பொருள்கி டைக்கும்
முந்தவே கூறு மென்ன வுதித்தவன் பனிரண் டாண்டில்
அன்னவன் ஜனித்த வில்ல மதுதனில் பொருள்கி டைக்கும்
தன்தன மதிக முண்டு தரணியில் கீர்த்தி யேற்பன்.

35. எந்தக்காலத்தில் எவ்விடத்திலிருந்து பொருள் கிடைக்கும்? முதலில் சொல்லுங்கள், என்று வினவ, ஜாதகனுடைய பன்னிரண்டாம் வயதில் ஜாதகன் பிறந்த வீட்டிலிருந்து பொருள் கிடைக்கும். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருளும் உண்டு. உலகில் கீர்த்தி அடைவான்.

36. ஜனித்தவில் விட்டு நீங்கிச் செல்வானவ் வீதி கீழ்ப்பால்
கனமான கிருகஞ் செய்து காவலன் வாழ்வா னாகும்
அனையவே யெந்தக் காலம் அப்பலன் சொல்லு மென்ன
இணையிலா மூன்று வாண்டுள் எய்துவான் கிருகந் தானே.

36. ஜாதகன் பிறந்த வீட்டை விட்டுக் கிழக்குப் புறத்தில் (அவ்வீதியிலேயே) செல்வான். அங்குப் பெரியதான வீடுகட்டி அதில் வாழ்ந்து வருவான். ஜாதகனுக்கு எந்தக் காலத்தில் அந்தப்பலன் ஏற்படும் என்று சொல்லுங்கள். ஜாதகன் பிறந்த மூன்று வருடங்களிலேயே வீடு கிடைக்கும்.

37. பதின்மூன்று வாண்டு மேலாய்ப் பகருவோம் விசேட யோகம்
சதிசெய்தோ ருறவே யாகுஞ் சகடுவா கனமு முண்டு
பதியினில் திருவு மோங்கும் பலவணி சேர்க்கை யாகும்
விதவிதச் செட்டு வோங்கும் வித்தகி மேலுங் கேளே.

37. ஜாதகனுடைய பதின்மூன்றும் வயதுக்கு மேல் விசேஷமான யோகம் விருத்தியாகும். துன்பமிழைத்தவர் நண்பராவர். வண்டி முதலிய வாகனங்களுள்ளவன். வீட்டில் லட்சுமீகடாட்சம் மிகும். பலவிதமான ஆபரணங்கள் சேரும். விதவிதமான வர்த்தகம் பெருகும். தேவியே! கேளுங்கள்.

38. இந்திர யோக மெய்தும் எவருமே வசிய மாவர்
மந்திர வைத்ய நேரு மறுமுகன் பூசை செய்வன்
பந்தினர் மெச்ச வாழ்வன் பால்பாக்கிய மதிக முண்டு
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

38. இந்திரயோகம் ஏற்படும். யாரும் வசியமாவார். மந்திரம் வைத்தியம் இவைகளை யறிவான். சுப்பிரமணியக்கடவுளுக்குப் பூசை புரிவான். தன் உறவினர் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். புத்திர பாக்கியம் அதிகமாக உள்ளவன். முருகக் கடவுளைப் பெற்ற தேவியே! கூறிய வார்த்தைகள் தவறா.

39. தந்தையின் மரண காலஞ் சாற்றுவோ முப்பா னேழில்
எந்தையே [1]கன்னி மாதம் இயம்புவோங் கண்டந் தானே
பிந்திய வன்னைக் கேதான் பேசுவோம் நாற்ப தாண்டில்
சந்தத மானி மாதஞ் சாற்றுவோங் கண்டந் தானே.

---

[1] புரட்டாசி.

39. ஜாதகனுடைய தந்தையின் மரணக்காலம் சொல்லுகின்றோம். அவனுடைய முப்பத்தேழாம் வயதில் புரட்டாசி மாதத்தில் தந்தை மரண மடைவான். தாய்க்கு, அவனது நாற்பதாம் வயதில ஆனி மாதத்தில் கண்டம் ஏற்படும்.

40. இன்னவன் மரண காலம் இயம்புவோ மறுபான் மூன்றில்
முந்திய துலாமா தத்தில் முதல்திதி குறைபக் கத்தில்
இந்தவ னுடலம் வாடும் இனிஜன்மஞ் சொல்லக் கேளாய்க்
கன்னென மொழியை யொக்குங் காதலி கேட்டி டாயே.

40. ஜாதகனுடைய மரணக்காலம் அறுபத்து மூன்றும் வயது என் றோம். அஃது, ஐப்பசி மாதத்தில் கிருஷ்ண பட்சம் பிரதமை திதியில் நேரும். மறுபிறவியைச் சொல்லுகின்றோம். இனிய வார்த்தைகளைப் பேசும் தேவியே! கேளுங்கள்.

41. உத்தரங் காளாத்தி தன்னில் உதிப்பனும் பிரம சேயாய்
வெற்றியா யரசர் பக்கல் மேவியே ஜீவிப் பானும்
உத்தமன் பூமி வீடு உயர்பணி பொருள்கள் யாவும்
சுத்தமாய்ப் பதினு யிரம்பொன் சேர்ப்பனு மென்று சொல்வோம்.

41. வடக்குத் திக்கில் உள்ள திருகாளாத்தியில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான். அரசாங்க உத்தியோகம் பெற்று ஜீவித்து வருவான். ஜாதகன், வீடு, ஆபரணங்கள் பொருள்கள் யாவும் சேர்ந்து பதினுயிரம் பொன்னுக்குக் குறையாமல் சேர்ப்பான் என்று கூறுகின்றோம்.

42. பிறந்தசேய் ஜனன காலம் பொன்தசை தனிலி ருப்புச்
சிறந்திடு மாண்டு வொன்றுந் திங்களு மெட்டே யாகும்
குறைந்தநா ளாறு தாகுங் கூறுவோம் பலனை யாங்கள்
நிரந்தரங் குடும்ப மோங்கும் நேர்ந்திடும் பணிதி பாத்ரம்.

42. ஜாதகனுடைய ஜனன காலத்தில் குருமாதசையில் இருப்பு ஒரு வருடமும் எட்டு மாதங்களும் ஆறு நாட்களுமாம். அக் காலத்திய பலனைச் சொல்லுகின்றோம். நிரந்தரமாகக் குடும்பம் பெருகும். ஆபரணங்கள் முதலி யன சேரும்.

43. சித்திர வீடு நேருஞ் ஜாதகன் தனக்கு ரோகம்
குத்தமாந் செலவ நேகங் குலத்தினில் சூத முண்டு
சுத்தமாய்ப் பின்பா கத்தில் சொல்லுவோம் விவர மாக
அத்தியை யீன்ற மாதே அறைந்தன மொழிகுன் றுவே.

43. அழகிய வீடு கிட்டும். ஜாதகனுக்கு நோய் உண்டாகும். செலவுகள் பெருகும். குலத்தவருக்குச் அசுபம் நிகழும். பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம். யானைமுகத்தோனைப் பெற்ற தேவியே! கூறிய வார்த்தை கள் தவறு.

## ஜாதகம் 52.

1. மந்திரி புகர்சேய் வீணை மால்ரவி நந்தி யாகச்
சந்திரன் மான தாகச் சனிதுலாங் கேது சீயம்
[1] மந்தரக் கயிறு சாடி வீணையுஞ் ஜன்ம மாக
இந்தவாறு கிரகம் நின்ரு லியம்புவீர் பலனைத் தானே.

1. குரு சுக்கிரன் செவ்வாய் மிதுனத்திலும், புதன் சூரியன் விருஷபத்திலும், சந்திரன் மகரத்திலும், சனி துலாத்திலும், கேது சிம்மத்திலும், ராகு கும்பத்திலும் நின்று, மிதுனம் ஜன்ம லக்கினமாக இருந்தால், பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | | புதன் சூரியன் | லக்கினம் குரு சுக்கிரன் செவ்வாய் |
| ராகு | இராசி சக்கரம் | | |
| சந்திரன் | | | கேது |
| | | சனி | |

2. அத்திரி சொல்லு கின்ருர் ஆணது ஜனன மாகும்
வித்தக னுதித்த வில்லம் விளம்புவோங் கீழ்மேல் வீதி
உத்தர வாடை யாகும் உரைக்கின்ரேங் கிழக்கி லேதான்
பத்தினி காளி மாரி பெருவயி றப்பன் தோன்றும்.

2. அத்திரி முனிவர் கூறுகின்ருர். பிறப்பது ஆண் மகனுகும். ஜாதகன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான வீதியில் வடக்கு வரிசையில் உள்ளது. கிழக்குத் திசையில் காளிதேவியின் கோயிலும் மாரியம்மன் கோயில் விஞயகர் கோயில் முதலியனவும் உள்ளன.

3. ஈசனு மனுமான் கோட்டம் இணங்கிய துருவ மோடும்
பாசமாய்க் கணேச னுத்ரம் பருகிய மடமுங் காணும்
பேசுமிவ் வடையா ளத்துள் பிருதிவி தலத்தி லேதான்
மாசிலாக் கங்கை சேயாய் வருகுவா னிவனே யென்ரேம்.

3. சிவபெருமான் ஆலயமும் அனுமானின் கோயிலும் வடக்குத் திசையில் உள்ளன. வடக்குத்திக்கில் மற்றெரு விஞயகர் கோயிலும் ஒரு மடமும் இருக்தும். இவ்வித அடையாளங்களுடைய ஊரில் காஞ்சிபுரத்தில், அழுக்கற்ற வேளாள குலத்தவனுகப் பிறப்பான் என்று சொல்லுகின்ரேம்.

---

[1] இராகு.

4. தந்தையின் வர்க்கந் தன்னைச் சாற்றுவோ மூவ ராகும்
எம்மையே பெண்பால் மூன்று இசைந்தனந் தீர்க்க மாக
நொந்திடு மற்ற வெல்லாம் நுவலுவோம் பிதாகு ணத்தைச்
சந்ததஞ் சிவந்த மேனி சமதேகங் கல்வி மானும்.

4. ஜாதகனுடைய தந்தையின் வர்த்தகத்தாரைப் பற்றிச் சொல்லுவோம். மூன்று சகோதரர்கள் உளர். மூன்று சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர்களெல்லாம் நிலேத்து இரார். ஜாதகனின் தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். சிவந்தமேனியன். சமமான உடலமைப்புள்ளவன். கல்விமான்.

5. ஈகையு முடைய னுகும் இன்பமாய் வார்த்தை சொல்வன்
நாகரி கங்க ளுள்ளான் நற்புத்தி பலர்க்கு நேயன்
தோகையர் மோக வானுஞ் சுதந்திர மில்லா னுகும்
பாகமாய்ச் செட்டுச் செய்வன் பரவுப கார னுவன்.

5. கொடுக்கும் குணமுள்ளவன். இன்பமாகப் பேசுபவன். நாகரிகங்களுடன் வாழ்ந்து வருவான். நல்ல புத்திசாலி. பலபேர்கட்கு நண்பன். பெண்கள்மீது மோகம் கொள்ளுவான். சுதந்திரம் இல்லாதவன். பொருத்தமாக வர்த்தகம் செய்து வருவான். பிறருக்கு உபகாரி.

6. இல்லமு மில்லா னுகும் இடரானெ புத்தி யில்லான்
நல்லவ னுகி வாழ்வன் நாட்டினில் சுகமு மேற்பன்
அல்லல்க ளுடைய னுகும் அறஞ்செய்வான் சுகபு சிப்பன்
புல்லிய புத்தி யில்லான் பிதிர்நாளைப் பூமி யில்லான்.

6. சொந்த வீடில்லாதவன். தீங்கான புத்தியில்லாதவன். நல்லவனுக வாழ்ந்து வருவான். உலகில் சுகமாக வாழ்ந்திருப்பான். துன்பங்களுடையவன். தருமம் செய்பவன். சுகமாகச் சாப்பிடுவதில் பிரியமுள்ளவன். அற்பப் புத்தியில்லாதவன். பிதிரார்ஜித சொத்து இல்லாதவன்.

7. பண்டுநாள் வணிபஞ் செய்வன் பந்துவும் புகழ வாழ்வன்
குண்டைகோ விருத்தி யில்லான் குணமது விரண்டு முள்ளான்
அண்டின பேரைக் காப்பன் அவன்சித்ர வீடு செய்வன்
எண்டிசைத் தூசச் செட்டு இவனுமே செய்வா னென்றோம்.

7. பழைய நாட்களிலிருந்த வியாபாரம் செய்து வருவான். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்வான். பசு எருதுகள் விருத்தியில்லாதவன். இருவிதமான குணங்களுள்ளவன். தன்னை வந்து யாசிப்பவர்களுக்கு உதவி செய்வான். அழகிய வீடு கட்டுவான். எட்டுத்திக்குகளிலும் துணி வியாபாரம் செய்து வருவான் இவன்.

8. செலவுக ளதிக முள்ளான் சிந்தையுங் கலக்க முள்ளான்
நலமுளோர் நேயங் கொள்வன் நாதனுர் பத்தி பூண்பன்
தலமது தோய வல்லன் சம்பத்துப் பின்னு லுள்ளன்
குலவிடும் பித்தச் சூடு கோதையே மேலுங் கேளே.

8. அதிகமான செலவு உள்ளவன். மனக்கலக்கம் உள்ளவன். நல்லவர்கள் நட்புக் கொள்ளுவான். சிவபெருமான்மீது பக்தி கொள்ளுவான். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். பிற்காலத்தில் ஐச்வர்யம் உள்ளவன். பித்தச்சூடுமுள்ளவன். தேவியே ! கேளுங்கள்.

9. கரமதில் விட்ணு ரேகை காலாட்க ளுடைய னாகும்
பெருமையாய்க் குணமு மேற்பன் பொருளின்மே லிச்சை
[கொள்வன்
விரைவினில் நடக்க வல்லான் வீணப வாத முள்ளான்
திருமக ளொப்ப தாகுந் தேவியே ! மேலுங் கேளே.

9. கையில் விஷ்ணுரேகை உள்ளவன். ஏவலாட்களை யுடையவன். பெருமையான குண முள்ளவன். பொருள்களின்மீது விருப்பமுடையவன். வேகமாக நடக்கும் இயல்பினன். வீண்பழிகளை அடைவான். லட்சுமீ கடாட்ச முள்ளவன். தாயே ! மேலும் கேளுங்கள்.

10. இக்குண முடையா னுக்கு இவனுமே யிரண்டாஞ் ஜன்மம்
மிக்கவே யுதிப்பா னாகும் விளம்புவோ மிவன்கு ணத்தை
நக்கன்மேல் பத்தி யுள்ளான் நாயகன் சிவந்த மேனி
சிக்கன மில்லா னாகுந் தீரமா நெஞ்ச முள்ளோன்.

10. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ள தந்தைக்கு ஜாதகன் இரண்டாமவனாகப் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுவோம். சிவபெருமான்மீது பக்தியுள்ளவன். சிவந்த உடலுடையவன். சிக்கனமாக இராதவன். தைரியசாலி.

11. வித்தையு மிரண்டுண் டாகும் விளங்குவான் கணக்கில் ஊகி
சத்துரு வோடு நாளுஞ் சமதையா யடுத்து வெல்வன்
சுற்றத்தார் புகழ வாழ்வன் துறவிகள் பத்தி கொள்வன்
சித்திர வீடு செய்வன் ஜனவுப காரி யாவன்.

11. இருவிதக் கல்விகளைக் கற்றுணர்வான். கணக்கில் ஊகமுள்ளவன். சத்துருக்களாயினும் அவர்களுடன் நேசமாகவே இருந்து அவர்களை வெற்றி கொள்ளுவான். தன் பந்துஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான். துறவிகளின்மீது பக்தியுள்ளவன். அழகிய வீடு கட்டுவான். ஜனங்களுக்கு உபகாரி.

12. பண்டுநாள் பூமி யில்லான் பெருகிடும் விசேட பூமி
வண்டிவா கனமு முள்ளான் அரசரால் ஜீவிப் பானும்
எண்டிசைக் கீர்த்தி யேற்பன் ஈகைவான் சல்யங் கொள்ளான்
[1] முண்டக ரேகை யுள்ளான் மூலச்சூ டுடைய னாமே.

12. பிதுரார்ஜிதமான பூமி யில்லாதவன். இவன் அதிகமான பூமிகளைச் சேர்ப்பான். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்வான். எட்டுத்திக்குகளிலும் கீர்த்தி யடைவான். கொடையாளி. கடன் படாதவன். தாமரைரேகை யுள்ளவன். மூலச்சூட்டு நோயுடையவன்.

[1] தாமரை.

13. முனிவரிவ் விதமாய்ச் சொல்ல மொழிகுவா ளம்மன் தாமும்
அனையவே கிருகந் தானும் அமைப்பனு மென்று சொன்னீர்
தினமதைச் சொல்லு மென்ன ஜனித்தவ னாறுண் டில்தான்
தனயனுங் கிருகஞ் செய்வான் சங்கரி கேட்டி டாயே.

13. இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பார்வதிதேவி கேட்கின்றார். ஜாதகன் புதிய வீடு கட்டுவான் என்று சொன்னீர்களே. எந்த வருடத்தில் ? என்று கூறுங்கள், என வினவ, ஜாதகனுடைய ஆறும் வயதில் ஜாதகனுக்குப் புதுவீடு கிடைக்கும் ( கட்டுவான்). தேவியே ! கேளுங்கள்.

14. எவ்விடஞ் செய்வான் சொல்வீர் இருப்பிடம் வீ தி யில்தான்
சொந்தமாய்க் கிருகஞ் செய்வன் தொல்புவி கீர்த்தி யேற்பன்
தன்தன மதனு லுண்டு ஷண்முகன் பக்தி கொள்வன்
பிந்திநா ளன்னிய தேசம் பேணுவான் தொழிலி னாலே.

14. எந்த இடத்தில் வீடுகட்டுவான் ? சொல்லுங்கள். இருப்பிடத்திலேயே தான் சொந்தத்தில் வீடுகட்டுவான். உலகில் பிரக்யாதி அடைவான். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் உடையவன். ஆறுமுகக் கடவுள்மீது பக்தி கொள்ளுவான். பிற்காலத்தில் தன்னுடைய தொழில் காரணமாக வெளி நாட்டுக்குச் செல்லுவான்.

15. அறமதி லிச்சை யுள்ளான் அழகுளான் கோபம் முன்னே
விரைவினில் சாந்த முள்ளான் விகடகல் விகளுங் கற்பன்
நிறையவே குடும்பி யாவன் நேமியில் பெண்கள் மோகன்
புரவல ரிட்டங் கொள்வன் பலபல தீர்த்தந் தோய்வன்.

15. தருமம் செய்வதில் பிரியமுள்ளவன். அழகுள்ளவன். முன்கோபம் கொள்ளுவான். சீக்கிரத்தில் சாந்தமடைவான். விகடமாகப் பேசும் கல்வியையும் கற்றுக்கொள்வான். பெருங் குடும்பியாவன். பெண்கள்மீது மையல் கொள்ளுவான். அரசருடைய நட்புக் கொள்ளுவான். பற்பல புண்ணிய நதிகளில் நீராடுவான்.

16. அன்னைமேல் பிரிய னுவன் அன்னமும் பரிவா யீவன்
பொன்னொடு முதலுண் டாகும் புதையலும் பூமி வைப்பான்
தன்னினத் தவர்க்கு மேலாய்த் தனிகனய் வாழ்வா னுகும்
உன்னதக் கல்வி சொல்வன் உத்தம னுகி வாழ்வன்.

16. தன்னுடைய தாயின்மீது அன்புள்ளவன். அன்புடன் அன்னம் அளிப்பான். செல்வங்கள் பெருகி முதல் ஏற்படும். பூமியில் புதையல் வைப்பான். தன் பந்துகளுக்குமேல் பணக்காரனுக வாழ்ந்துவருவான். உயர்ந்த கல்வி கற்பான். உத்தமனுக வாழ்ந்துவருவான்.

17. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பா லொன்று
நவனியில் பெண்பால் ரண்டு நாட்டுவோந் தீர்க்க மாகத்
தவசியே மூத்தோ ரில்லான் தனக்குநே ரிளையோ னில்லான்
புவமுள துணைவன் சேதி பகருவோங் கேட்டி டாயே,

17. ஜாதகனுடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுவோம். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். தேவியே! மூத்த சகோதரனும் தனக்கு அடுத்த சகோதரனும் இல்லாதவன். ஜாதகனுடைய இளைய சகோதரனைப்பற்றிச் சொல்லுகின்றேம். கேளுங்கள்.

18. கல்விமான் ஊக வானும் கன்னியில் ஜனிப்பா னாகும்
இல்லறந் தன்னில் வாழ்வன் இருவித வார்த்தை சொல்வன்
புல்லிய புத்தி யில்லான் பூமியில் செட்டுச் செய்வன்
நல்லவர் நேசங் கொள்வன் நயமாகக் கூறு வானும்.

18. கல்வியறி வுள்ளவன். ஊகமுடையவன். கன்னியா லக்னத்தில் பிறப்பான். தன் வீட்டில் வாழ்ந்து வருவான். இருவிதமாகப் பேசுபவன். அற்பப் புத்திக ளில்லாதவன். உலகில் வியாபாரம் செய்துவருவான். நல்லவருடைய நட்புக்கொள்ளுவான். நயமாகப் பேசுபவன்.

19. தந்தைபோல் செட்டுச் செய்வன் தமையன்சொல் தட்டா னாகும்
விந்தையாய்ப் பேச வல்லன் விளைபுலம் விருத்தி செய்வன்
கந்தன்மேல் பத்தி கொள்வன் கரமதி லுருத்திர ரேகை
தன்தன முடைய னாகும் சங்கரி மேலுங் கேளே.

19. தன் தந்தையைப்போல் வியாபாரம் செய்துவருவான். தன் மூத்த சகோதரன் பேச்சைத் தட்டாதவன். விந்தையாகப் பேசுபவன். விளைநிலங் களைப் பெருக்குவான. சுப்பிரமணியக்கடவுள்மீது பக்தியுடையவன். கையில் ருத்திரரேகை யுடையவன். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் உடையவன். பார்வதியே! மேலுங் கேளுங்கள்.

20. பாரியை யொன்றே யாகும் பாலர்க ளாண்பால் ரண்டு
தீரமாய்ப் பெண்பா லவ்வாறு செப்புவோந் தீர்க்க மாக
வீரியன் வறுமை யில்லான் வித்தகன் சுகமாய் வாழ்வன்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

20. மனைவி யொருத்தியே. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் உண்டு என்று கூறுகின்றேம். அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். தரித்திர மில்லாதவன். சுகமாக வாழ்ந்திடுவான். ஆறுமுகக் கடவுளைப்பெற்ற அம்பிகையே! கேளுங்கள்.

21. இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோ மீரொன் பாண்டில்
கன்னிகை யுள்ளூர் தன்னில் காதலி மாதுர் வர்க்கம்
அன்னவள் வருவா ளாகும் அவளுமே சிவந்த மேனி
பன்னியே பேச வல்லாள் பஞ்சைமே லிரக்க முள்ளாள்.

21. ஜாதகனுடைய திருமணக்காலத்தைக் கூறுகின்றேம். மனைவி பதினெட்டாம் வயதில் உள்ளூரிலிலேயே தாயின் வர்க்கத்திலிருந்து வருவாள் என்றேம். அவள் சிவந்த உடலுடையவள். பன்னிப்பன்னிப் பேசுபவள். ஏழைகளின்மீது இரக்கமுடையவள்.

22. முன்கோபம் பின்பு சாந்தம் முயற்சியாய்க் குடும்பி யாவள்
தன்வரன் மனம்போல் வாழ்வள் சகலர்க்கு நல்லோ ளாவள்
இன்னவள் யோக சாலி இவளுக்கு வயது தீர்க்கம்
தன்னிலே யத்திரி சொல்ல ஜயமுனி கூறு கின்றார்.

22. முன்கோபமுடையவள். பிறகு சாந்தமடைவாள். உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவள். தன் கணவன் மனமறிந்து வாழ்வாள். எல்லோருக்கும் நல்லவளா யிருப்பாள். யோகசாலி. நீண்ட வயதுள்ளவள். இங்ஙனம் அத்திரி முனிவர் சொல்லும்போது, ஜயமுனிவர் சொல்லுகின்றார்.

23. எப்படி மனைவி தீர்க்கம் இரண்டவ னெட்டில் நிற்கச்
செப்புவோந் தோட முண்டு ...........கூடி நிற்க
ஒப்புடன் மனைவி ரண்டு உரைக்கின்றோ மிவனுக் கேதான்
இப்படி முனிவர் கூற இயம்புவார் பிருகு தாமும்.

23. ஜாதகனுக்கு எப்படித் தீர்க்கமான வயதுள்ள மனைவி வருவாள்? குடும்பஸ்தானத்துக்குரிய சந்திரன் எட்டா மிடமாகிய மகரத்தில் இருப்பதால் தோஷமுண்டு.......................கூடியிருப்பதால், இரு மனைவியர் உண்டு, என்று சொல்லுகின்றோம். இப்படி முனிவர் கூறும்போது, பிருகு முனிவர் சொல்லுகின்றார்.

24. முதல்மனை பலனெவ் வாறு வுரைப்பீர்கள் விவர மாக
அதமாகு முதல்ம னைதான் அதுகாலஞ் சொல்லு மென்ன
அதிபன்தன் முப்பா னென்றில் மத்தியில் மனைவி கண்டம்
பதியினில் வேறு மாது பரவுவா ளென்று சொன்னோம்.

24. முதல் மனைவியின் பலன் எப்படியென்று கூறுங்கள், விவரமாகவே. முதல் மனைவி இறந்துபோவாள். எந்தக்காலத்தில் நேரும் ? என்று கூறுங்கள், என்ன, ஜாதகனுடைய முப்பத்தோராம் வயதில் இடையில் மனைவி இறந்து விடுவாள். வீட்டுக்கு வேறு பெண்ணொருத்தி வருவாள் என்று சொன்னோம்.

25. முந்திய மனைவிக் கேதா முதித்திடும் பெண்பா லொன்று
பிந்திய மனைவிக் கேதான் புத்திர னொருவ னுண்டு
வந்திடுங் கன்னி ரண்டு வரைந்தன மிவனுக் கேதான்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழுகுன் றுவே.

25. மூத்த மனைவிக்குப் பெண் ஒருத்தி தோன்றுவாள். இளைய மனைவிக்குப் புதல்வன் ஒருவன் உண்டு. இரு பெண்பிள்ளைகளும் பிறப்பார்கள். முருகப்பெருமானைப் பெற்ற தேவியே ! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறா.

### புத்திரனால் ஈமக்கிரியை நடைபெறுதற்குரிய கிரகநிலை

26. எப்படி யாண்பால் விருத்தி இயம்பினீர் முனியே நீர்தாம்
ஒப்புடன் காரி யஞ்சில் உறைந்ததால் சுதர்கள் தோடம்
ஒப்புடன் பத்தோன் ஜன்மம் உறைந்ததால் சுதரா லேதான்
மெய்ப்புடன் கருமம் நேரும் வித்தகி கேட்டி டாயே.

26. ஜாதகனுக்குப் புத்திரவிருத்தி எப்படி உண்டாகும் ? என்று கூறுங்கள் முனிவரே ! தாங்கள். சனி ஐந்தாம் வீட்டில் இருப்பதால் புத்திரர்களுக்குத் தோஷம் உண்டு என்று சொல்லுகின்றோம். பத்தாம் வீட்டுக்குரிய (கர்மஸ்தாநாதிபதியாகிய) குரு லக்கினத்தில் இருப்பதால் தன் புத்திரனால் இறுதிக்கடன்கள் செய்யப்படுவான். தேவியே ! கேளுங்கள்.

27. புதல்வனுந் தவத்தி னாலே பிறந்திடு மென்று சொன்னோம்
விதங்களைச் சொல்லு மென்ன வித்தகன் முன்ஜன் மத்தில்
சதிகளு மதிகஞ் செய்தான் சார்ந்தது வந்தத் தோடம்
அதிபன்செய் யூழி தன்னை அறைகின் றோம் விவர மாக.

27. முற்பிறவியில் செய்த நற்காரியங்களால் புத்திரன் தோன்றுவான் என்று கூறுகின்றோம். என்ன செய்தான் என்பதைச் சொல்லுங்கள். ஜாதகன் முற்பிறவியில் பல தீச்செயல்களைச் செய்தான். அந்தத் தோஷம் இவனைத் தொடர்ந்தது. ஜாதகன் செய்த தீச்செயலை விபரமாகக் கூறுகின்றோம்.

28. முன்னவ னிருந்த ஜன்ம மொழிகின்றோம் விவர மாகப்
பெண்ணையின் நதிவ டக்காய்ப் பூம்பொழில் திருவா மூரில்
நன்னயக் கணக்கன் சேயாய் நாயக னுதித்து மேதான்
அன்னையுந் தந்தை யொக்க அன்புடன் வாழு நாளில் ;

28. ஜாதகனுடைய முற்பிறவியை விபாமாகச் செல்லுகின்றோம். பெண்ணை யாற்றுக்கு வடக்கில் உள்ள செழிப்புள்ள திருவாமூரில் கருணீகர் குலத்தில் ஜாதகன் பிறந்து, தாய் தந்தையர் மெச்ச, அன்புடன் வாழ்ந்து வருங்காலத்தில் ;

**கைப்பொருள் பெற்றுக் கணக்கில் மோசஞ் செய்தல்**

29. அந்தண னொருவ னுக்கு அருஞ்சுத ரிரண்டு பேர்கள்
சிந்தையும் வேற தாகிச் செய்மனை பாகஞ் செய்யச்
சுந்தரக் கணக்குச் சொல்ல......... மிளையோன் கையில்
விந்தையாய்ப் பொருளும் வாங்கி விகாதமு மதிக மாக்கி ;

29. ஓர் அந்தணனுடைய இரு புத்திரர்கள் மனம் மாறுபட்டு, தம்முடைய சொத்துக்களைப் பாகம் செய்ய இவனைக் கணக்குக் கேட்கும் போது, ஜாதகன் இளைய சகோதரனிடமிருந்து பொருளைப் பெற்றுக்கொண்டு, விரோதத்தைப் பெருக்கி ;

30. முந்திய மறையோன் பேரால் [1]முறியொன்று தீட்டி விட்டான்
அன்னவ ரிருவ ருக்கும் அதிகமாய் விரோதஞ் செய்தான்
உன்னதக் கணக்கி னாலே உறைந்தது யிவ்வா றுகப்
பின்னையு மறையு மொன்று புகலுவான் சாபந் தானே.

30. அந்தணன் எழுதியதுபோல் வேறு பத்திரம் ஒன்று எழுதி விட்டான். இளையவன் இதை யறிந்து எங்களிருவருக்கும் அதிகமான விரோதத்தை ஏற்படுத்திவிட்டாய். கணக்கினால் இப்படித் தவறு நேர்ந்தது என்று கூறினான். மற்றப் பிராமணனும் சாப மிட்டான்.

---

[1] பத்திரம்.

31. மறுஜன்மந் தோன்றி யேதான் மனைவியர் தோட மாயும்
வருஞ்சுத ராணில் லாமல் வமிசமுந் தோட மாயும்
உறைகுவா யென்று சொல்லி உரைத்தனன் மறையோன் தானும்
மருமமா யந்தத் தோட முறைந்தது விவனுக் கேதரன்.

31. நீ எடுக்கும் மறுபிறவியில், உன் மனைவிக்கு தோஷமாயும், ஆண் குழந்தையில்லாமல் வம்சத்துக்கு விருத்தியில்லாமலும், இருப்பாய் என்று சொல்லிச் சென்ருன், அந்தணன். தீங்காக அந்தத் தோஷம் இவனைச் சார்ந்தது என்றேம்.

32. இன்னமுஞ் சிலபேர் சாபம் இலகிற்று விவனுக் கேதான்
அந்திய காலந் தன்னில் அவன்மனை சுதர்க ளின்றி
அந்தகன் பக்கல் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ னிவனே யென்றேம் மங்கையே மேலுங் கேளே.

32. இன்னும் சில பேர்களுடைய சாபம் இவனுக்கு ஏற்பட்டது. தன் கடைசிக்காலத்தில், தன் மனைவி மக்களை யிழந்து, மரணமடைந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகன் என்று கூறுகின்றேம். தாயே! மேலும் கேளுங்கள்.

33. மறையவர் சாபத் தாலே வந்திடுஞ் சுதர்கள் தோடம்
குறையது தீர வேண்டிக் கூறுவோஞ் சாந்தி தானும்
அருணையாம் பதிக்குச் சென்று அக்கினி தீர்த்தந் தோய்ந்து
கிரியினை வலமாய் வந்து கூற்றனை யுதைத்தோ னுக்கு ;

33. அந்தணர்களுடைய சாபத்தினுல் புத்திர தோஷம் ஏற்படும். இந்தத் தீங்குகள் தீரச் சாந்தியொன்று சொல்லுகின்றேம். திருவண்ணுமலைக்குச் சென்று, அங்குள்ள அக்னி தீர்த்தத்தில் நீராடி, மலையை வலம்வந்து, எமனை உதைத்த சிவபெருமானுக்கு ;

34. சகஸ்ரவர்ச் சனையுஞ் செய்து சதுர்மறை மூவேழ் பேர்க்கு
அகமகி ழன்ன மீந்து அழகிய நகரஞ் சார்ந்து
தகைமையாச் சட்டி நோன்பு ஜாதகன் கொள்வா னுகில்
பகையது விலகி யேதான் பாலரா னுதிக்குந் தீர்க்கம்.

34. ஆயிரம் தடவை அருச்சனைகள் செய்து, நான்கு வேதங்களறிந்த இருபத்தோர் அந்தணர்கட்கு மனம் குளிர அன்னமளித்து, தன் ஊருக்குத் திரும்பி, ஒவ்வொரு சஷ்டி தினமும் ஜாதகன் நோன்பு நோற்பானுகில், பாபம் நீங்கி, புத்திரன் ஒருவன் தோன்றுவான். அவன் நீண்ட ஆயுளுள்ளவன்.

35. சொற்படி செய்யா னுகில் துலங்கார்கள் புத்திர ராண்பால்
சொற்படி செய்வா னுகில் தோன்றிடு மதலை தானும்
மெய்ப்படி மாதிரு சேதி யறைகின்றே மிருசி வப்பள்
தப்பிதக் குணமில் லாதாள் சாந்தமுங் கோப முள்ளாள்,

**35.** நாங்கள் கூறியபடி செய்துவராவிட்டால் ஆண் குழந்தை பிறவாது. சொல்லியபடி செய்தால் புத்திரன் தோன்றுவான். ஜாதகனுடைய தாயின் செய்திகளைக் கூறுகின்றோம். இரு நிறமுடையவள். தீய குணங்களில்லாத வள். கோபம் சாந்தம் இரண்டு முள்ளவள்.

**36.** புத்தியும் பெருமை யுண்டு புண்ணிய மனத்த ளாகும்
நித்தியஞ் சீல மாவள் நிதானமாய் வார்த்தை சொல்வாள்
வித்தகி யோக சாலி மிருதுவாம் ரோம முள்ளாள்
பித்தச்சூ டுடைய ளாகும் புண்ணிய வதியே கேளாய்.

**36.** தாராள புத்தி யுள்ளவள். புண்ணியமான மனத்தினள். நல் லொழுக்க முடையவள். மெதுவாகப் பேசுபவள். அதிருஷ்ட முடையவள். மிருதுவான தலை மயிர்களை உடையவள். பித்தச்சூட்டு நோயுள்ளவள். புண்ணியவதியே! கேளுங்கள்.

**37.** துணைவர்க ளாண்பால் ரண்டு தோகையு மொன்று மாகும்
கனமுடன் மூன்றுந் தீர்க்கம் கனக்காது மற்ற வெல்லாம்
அனையவே வவள்த னில்லம் அவ்வூரி லந்த வீதி
சினமிலா விவள்தன் பூர்வஞ் செப்புவோ மேலுங் கேளே.

**37.** இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் உள்ளனர். இவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்ற குழந்தைகள் நிலையா. ஜாதகனுடைய தாயின் வீடு உள்ளூரில் அதே தெருவில் உள்ளது. ஜாதகனின் தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மேலுங் கேளுங்கள்.

**38.** அவ்வூரில் தீயின் வம்சம் அணுகியே வரனுண் டாகி
ஒவ்விய மதலை யுண்டாய் ஓராறு முகத்தோன் பத்தி
செவ்வையாய்த் தியானஞ் செய்து சென்றனள் காலன் பக்கல்
பவ்வமாய்ப் பிரம னாலே பாரினில் வரையப் பட்டு ;

**38.** அவ்வூரில், வன்னிய குலத்தில் பிறந்து, கணவனையடைந்து, புத்திரர் களையும் பெற்று, ஆறுமுகக் கடவுளிடம் பக்திகொண்டு, கடைசியில் மரண மடைந்தாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு ;

**39.** உதித்தவ ளிவளே யென்றோ முரைக்கின்றோ மிவள்பின் ஜன்மம்
சதியிலாத் தணிகை தன்னில் சைவமாங் குலமு தித்து
அதிகமாய்ப் பணிகள் பெற்று அவளுமே வாழ்வா ளாகும்
நதிசடை யணிந்தோன் தேவி நங்கையே கேட்டி டாயே.

**39.** பிறந்தவள் ஜாதகனின் தாய் என்று கூறுகின்றோம். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். திருத்தணியில், சைவகுலத்தில் பிறந்து, அதிகமான ஆபரணங்களை யடைந்து வாழ்ந்து வருவாள். கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமானின் தேவியே! கேளுங்கள்.

40. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மினிமே லாக
எந்தையே வள்ளூர்[1] மேற்கில் எழிலுள வைச்ய னுக்கு
வந்தனன் மகவாய்த் தோன்றி வளமுள செட்டுச் செய்து
தன்தன மதிக முண்டாய் ஜனவுப கார னுயும் ;

40. ஜாதகனுடைய முற்பிறப்பைச் சொல்லுகின்றேம் இனிமேல், தாயே ! திருவள்ளூருக்கு மேற்கில் உள்ள செழிப்புள்ள ஒரு வைசியனுக்குப் புத்திரனுகப் பிறந்து, வளமுள்ள வர்த்தகம் செய்துவந்து, தன்னுல் ஈட்டப்பட்ட பொருளும் அதிகமாக உடையவனுயும், ஜனங்களுக்கு உபகாரியாயும் ;

41. புத்திரர் மனைவி யுண்டாய்ப் புகழ்ச்சியாய் வாழு நாளில்
பெற்றவூழ் வினையை யாங்கள் பேசுவோங் கேளுந் தாயே
சித்தமாய்க் கொல்லை தன்னில் சிலநாளாய்க் கறுப்பன் வாசம்
பத்தியே விருட்சம் தன்னைப் பாலகன் வெட்டி விட்டான்.

41. மனைவி மக்களைப்பெற்று, கீர்த்தியுடன் வாழ்ந்துவரும் நாட்களில் ஏற்பட்ட தீவினையை நாங்கள் கூறுகின்றேம். தாயே ! கேளுங்கள். தன் வீட்டுக்கொல்லையில் சில காலமாக வசித்துவந்த கறுப்பன்சாமி யிருந்த மரத்தை வெட்டிவிட்டான்.

42. மரமது போன பின்பு மாமுனிக் கறுப்பன் தானும்
உறைதற்கு விடமே யின்றி உரைத்தது சாபந் தானும்
பரம்பரை யிருந்த வில்லம் பாழாகச் செய்தோ னுக்கு
வருஞ்ஜன்ம மில்ல மின்றி வாழ்வனு மென்று சொல்லி ;

42. மரத்தைவெட்டிய பிறகு கறுப்பன்சாமியும் தங்க இடமின்றிச் சாபமிட்டது. நான் பரம்பரையாக (வெகுகாலமாக) குடியிருந்த மரத்தை வெட்டிவிட்டன், வரும் பிறவியில், குடியிருக்கவீடில்லாமல் வாழ்ந்து வருவான் என்று கூறிவிட்டு ;

43. முனியும்வே றிடமே செல்ல முயன்றது வந்தத் தோடம்
தனயனு மந்தி யத்தில் சல்லியப் பாதை யாலே
கனமுட னில்லம் நீங்கிக் காலன்றன் பதிக்குச் சென்று
சினிமிலாப் பிரம னுலே தீவினில் வரையப் பட்டு ;

43. முனியும் வேற்றிடம் சென்றது. அந்தத் தோஷம் ஏற்பட்டது. ஜாதகனுடைய தந்தையும் கடைசிக் காலத்தில் கடன் உபத்திரவத்தால், உள்ள வீட்டையும் இழந்து, மரணமடைந்து, பிரமதேவனுல் மீண்டும் படைக்கப்பட்டு ;

44. வந்தவ னிவனே யென்றே மாமுனி சாபத் தாலே
சொந்தநல் லில்லங் காணுன் சொல்லுவோ மிவன்பின் ஜன்மம்
முந்துகா ளாத்தி தன்னி லுதிப்பனுஞ் சத்ரியச் சேயாய்த்
தன்தன மதிக முண்டாய்ச் செட்டுக்கள் செய்வா னென்றேம்.

[1] திருவள்ளூர்.

44. ஜாதகனுடைய தந்தையாகத் தோன்றினன். முனியின் சாபத்தால் சொந்த பூமிகள் இல்லாதவனுவான். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். உயர்ந்த திருக் காளாத்தியில், சத்திரிய குலத்தவனுகப் பிறப்பான். தன்னல் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிகமுண்டாகி, வியாபாரம் செய்துவருவான் என்றேம்.

45. தந்தையின் மரண காலஞ் சாற்றுவோ முப்பா னலில்
முந்திய மகர மாதம் மொழிகின்றேங் கண்டந் தானே
பிந்திய முப்பா னைந்தில் புரட்டாசி மாதந் தன்னில்
வந்திடு மாத்ரு கண்ட மம்பிகை யாளே கேளாய்.

45. ஜாதகனுடைய தந்தையின் மரணக்காலம் சொல்லுகின்றேம். அவனுடைய முப்பத்துநான்காம் வயதில் தை மாதத்தில் தந்தை மரண மடைவான். முப்பத்தைந்தாம் வயதில் புரட்டாசி மாதததில் தாய் மரண மடைவாள். தாயே ! கேளுங்கள்.

46. உதித்தவன் மரணக் காலம் உரைக்கின்றே மன்பா னறில்
சதியிலாச் சிம்ம மாதம் சட்டியாம் வளர்பக் கத்தில்
விதியது முடியு மென்றேம் விளம்புவோ மிவன்பின் ஜன்மம்
கதிதரும் வேலங் காட்டில் கனமுள சைவச் சேயாய் ;

46. ஜாதகனுடைய மரணக் காலம் சொல்லுகின்றேம். அவனுடைய ஐம்பத்தாறும் வயதில் ஆவணி மாதத்தில் சுக்லபட்சம் சஷ்டி திதியில் மரணமடைவான் என்று கூறுகின்றேம். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றேம். வேலங்காட்டில் தனமுள்ள சைவ குலத்தவனுக ;

47. பிறப்பனு மிவனே யென்றேம் பூமியு மதிக முண்டாய்ச்
சிறப்பான குடும்பி யாகிச் செல்வனும் வாழ்வா னுகும்
திருமகன் வயது தீர்க்கஞ் செப்பினீ ரிதுமுன் னுகக்
குறையுண்டோ சொல்லு மென்னக் கூறுவார் முனிவர் தாமே.

47. பிறப்பன் என்று சொல்லுகின்றேம். பூமிகள் அதிகமுடையவனுகி, சிறப்புள்ள குடும்பியாகி, செல்வவானுக வாழ்ந்துவருவான். நீண்ட வயதுள்ளவன். இதற்கு முன்பு ஏதாவது குறைகள் (கண்டம்) ஏற்படாதோ ? சொல்லுங்கள், என முனிவர் சொல்லுகின்றுர்.

## இலக்கினத்தில் குரு இருப்பதன் சிறப்பு

48. ஏதுநோய் வந்த போதும் இலக்கினங் குருவே நிற்கத்
தீதுக ளணுகா தாகுஞ் செப்புவோம் யோகச் சேதி
மேதினி ரசர் மூலம் வித்தகன் ஜீவிப் பானும்
போதவே பூமி சேர்ப்பான் போகபாக் கியங்க ளுள்ளான்.

48. எந்தவிதமான வியாதி ஏற்பட்டாலும், இலக்கினத்தில் குரு இருப்பதால் தீங்குகள் அணுகா. அவனுடைய யோகச் செய்திகளைக் கூறுகின்றேம். உலகில் அரசர் மூலம் ஜீவித்துவருவான். மிகுந்த பூமி சேர்ப்பான். போக பாக்கியங்கள் உள்ளவன்.

### இராஜயோகம்

49. எந்தக்கா லத்தி லேதான் இவுனுக்கு ராஜ யோகம்
வந்திடும் விவரஞ் சொல்வீ ரறுநான்கு வாண்டு கொண்டு
சந்திரன் பிறைபோல் யோகந் தங்கிடு மதிகா ரங்கள்
பிந்தியு மன்பா னுண்டும் பேசுவோம் யோகந் தானே.

49. எந்தக் காலத்தில் ஜாதகனுக்கு ராஜயோகம் ஏற்படும் ? என்று சொல்லுங்கள். ஜாதகனுடைய இருபத்துநான்காம் வயது முதல் பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தியாகும். அதிகாரமுடைய உத்தியோக மேற்பான். ஐம்பதாம் வயது வரையில் யோகம் பெருகும்.

50. ஜனித்திடு காலந் தன்னில் சேய்த்தசை தனிலி ருப்புக்
குனித்திடு மாண்டு மைந்துங் கூறிய திங்க ளைந்தும்
தினமது பதினைந் தாகும் செப்புவோம் பலனை யாங்கள்
வினையது சாத கர்க்கு மேவிடுந் துணைவர் தோடம்.

50. ஜாதகன் ஜனன காலத்தில் அங்காரகமகாதசையிலிருப்பு ஐந்து வருடங்களும் ஐந்து மாதங்களும் பதினைந்து நாட்களுமாம். அக்காலத்திய பலனைச் சொல்லுகின்றோம். ஜாதகனுக்குப் பல நோய்கள் ஏற்படும். உடன் பிறந்தவருக்குத் தோஷமுண்டாகும்.

51. நினைத்தகா ரியங்க ளாகா நிகர்பந்து விரோத மாகும்
பிணையுண்டு பூமி மூலம் பொருளது சேத மாகும்
கனமுள துணைவர் விருத்தி களவுகள் கொஞ்சம் நேரும்
அனையவே விவரம் ரண்டில் அறிவிப்போந் தாயே கேளும்.

51. எடுத்தக் காரியங்கள் நடைபெறா. பந்துக்களுக்குப் பகையுண்டாகும். நில விஷயமாக விரோத மேற்படும். பொருள் சேத முண்டாகும். சகோதர விருந்தி யுண்டு. கொஞ்சம் திருட்டுப் போகும். மற்ற விபரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

## ஜாதகம் 53

1. மதிவிடை ராகு மேரு மங்கலன் கன்னி யாகப்
புதன்சீய மிரவி வெள்ளி புக்கிட நண்டு தன்னில்
நிதிகுரு கோல தாக நீலன்தேள் கேது வீணை
இதுவிதங் கோளும் நின்று இலக்கின மிதுன மாக ;

1. சந்திரன் விருஷபத்திலும், ராகு தனுசிலும், செவ்வாய் கன்னியிலும், புதன் சிம்மத்திலும், சூரியன் சுக்கிரன் கடகத்திலும், குரு துலாத்திலும், சனி விருச்சிகத்திலும், கேது மிதுனத்திலுமாக நவக்கிரகங்களிலிருந்து, லக்கினம் மிதுனமாக இருப்பின்;

| | | | |
|---|---|---|---|
| | | சந்திரன் | லக்கினம் கேது |
| | இராசி சக்கரம் | | சூரியன் சுக்கிரன் |
| | | | புதன் |
| ராகு | சனி | குரு | செவ்வாய் |

2. பலனதைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
குலகுரு வதிட்டர் சொல்வார் குறித்தது வாண்பால் ஜன்மம்
தலைவனு முதித்த வில்லஞ் சாற்றுவோங் கீழ்மேல் வீதி
நிலைமையா யுத்திர வாடை நிகழ்த்துவோ மேற்கில் மாரி.

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதிதேவி கேட்கும்போது, குலகுருவாகிய வசிஷ்ட முனிவர் கூறுகின்றார். இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. ஜாதகன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு வரிசையில் உள்ளது என்று கூறுவோம். மேற்குத் திசையில் மாரியம்மன் கோயிலிருக்கும்.

3. தந்தியுங் கீழ்ப்பா லாகும் சங்கரன் வடகீழ்த் தங்கும்
தென் திசைக் காளி யுண்டு(........)பாஞ்சாலி கோட்ட முண்டு
இந்தநல் லடையா ளத்துள் இளவலு மாதிரு வில்லம்
சந்ததஞ் சிற்றூர் தன்னில் ஜனிப்பனும் வேளாள னாக.

3. கிழக்குத் திசையில் விநாயகர் கோவிலும், வடகிழக்கில் சிவபெருமான் ஆலயமும், தென்திசையில் காளி கோயிலும் திரௌபதி அம்மன் கோயிலும் உள்ளன. இவ்வித அடையாளங்களையுடைய ஒரு சிற்றூரில், தாயின் வீட்டில் வேளாள குலத்தவனாகப் பிறப்பான்.

4. இன்னவன் ஜனனத் துக்கு எழில்பெருங் குடக்கி லேதான
மன்னிய வருகில் சிற்றூ ரறைந்தனந் தந்தை யில்லம்
உன்னதக் கீழ்மேல் வீதி உத்திரம் வாடை யாகும்
தந்தியுங் கீழ்ப்பால் தங்குஞ் சாற்றுவோ மேற்கி லேதான் ;

4. ஜாதகன் பிறந்த வீட்டுக்கு மேற்குத் திசையில் உள்ள சிற்றூரில் தந்தையின் வீடுள்ளது. அது கிழக்கு மேற்கான வீதியில் வடக்கு வரிசையில் உள்ளது. கிழக்குத் திக்கில் இடிந்த விநாயகர் ஆலயம் ஒன்று இருக்கும். மேற்குத் திசையில் ;

5. ஆனையின் கோட்ட நிற்கும் அநுகினி லனுமா னுண்டு
தேன்மொழி மாரி யுண்டு ¹ சிங்கவா கனத்தாள் நிற்பள்
ஈசத்தா ளருகில் நிற்கும் இதுவலா லுத்தரத் திக்கில்
மான்மழு தரித்த ஈசன் மருவிடு மென்று சொன்னோம்.

5. மற்றொரு விநாயகர் கோயில் இருக்கும். பக்கத்தில் அனுமானின் கோயிலும் உண்டு. மாரியம்மன் கோயிலும், காளிதேவியின் கோயிலும், அருகில் அம்மன் கோயிலும், வடக்குத்திக்கில் மான் மழு தரித்த சிவ பெருமானின் ஆலயமும் உள்ளன என்று கூறுவோம்.

6. இத்தகை யடையா ளத்துள் இவன்தந்தை யில்லஞ் சொன்னேன்
பெற்றதாய் தந்தை யோகம் புத்திரர் மனைவி யோகம்
சுத்தமாய்த் துணைவர் யோகம் ஜனித்தவன் முன்பின் ஜன்மம்
பத்திய முன்னூ மெல்லாம் பகருவோ மிந்நூல் தன்னில்.

6. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்கள் உள்ளது தந்தையின் வீடு என்றோம். தாய் தந்தையர் புத்திரர் மனைவி உடன்பிறந்தவர் இவர்களுடைய யோகத்தையும், ஜாதகனுடைய முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும், முற்பிறப்பில் செய்த தீவினைகள் எல்லாவற்றையும், இந்த ஜோதிட நூலில் கூறுகின்றோம்.

7. தந்தையின் வர்க்கந் தன்னைச் சாற்றவே பலத்தைக் காணோம்
எந்தையே தந்தை சேதி இயம்புவோ மினிமே லாகச்
சந்ததங் கருநி றத்தன் சன்மார்க்கன் ஊக வானும்
நொந்தபேர் தம்மைக் காப்பன் நேமியில் கிருஷி செய்வன்.

7. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைச் சொல்ல, பலமில்லை. தாயே ! ஜாதகனின் தந்தையின் விஷயங்களைப்பற்றிக் கூறுவோம், இனிமேல். கருநிற நிறமுள்ளவன். நல்லொழுக்க முடையவன். ஊகமுடையவன். துன்பமடைந்தவர்களை ஆதரிப்பான். உலகில் விவசாயம் செய்து வருவான்.

8. சொல்லிடு வசன மெல்லாஞ் சுத்தமாஞ் சொகுசா யுண்பன்
வெல்லுவா னெதிரி தன்னை வீண்வழக் கதனில் சாரான்
அல்ல........லேதான் அவன்தந்தை கண்ட முண்டாம்
சொல்லது தவறு ளுகும் சுந்தரி மேலுங் கேளே.

1. துர்க்கை    2. அம்பிகை

8. பேசும் பேச்சுக்களெல்லாம் சுத்தமாயிருக்கும். நன்றுய்ச் சாப்பிடு வதில் பிரியமுள்ளவன். பகைவர்களை ஜயிப்பான். வீண்வழக்குகளுக்குச் செல்லாதவன். அவனுடைய தந்தை துன்பங்களுக்கிடையே இறந்து போவான். சொல் தவருதவன். தாயே ! மேலும் கேள்.

9. கைமுத லுடைய ளுகும் கனதனப் பணிசே யுண்டாம்
பொய்சொலான் பிதாவின் மேலாய்ப் புகழ்பெருங் கீர்த்தி [யுண்டாம்
ஐயமா மறத்தி லிச்சை அதிகக்கல் விகளுங் கற்பன்
தெய்வமேல் பக்தி பூண்பன் சிந்தையும் வெகுளி யாவன்.

9. மிகுந்த செல்வமுள்ளவன். பெருஞ் செல்வமும் ஆபரணங்களும் முடையவன். பொய் பேசாதவன். தன்தந்தைக்கு மேலாகப் புகழ் ஏற்பட்டு, தருமம் செய்வதில் பிரியமுண்டாகி, அதிகமான கல்விகளைக் கற்றுணர்வான். தெய்வபக்தி யுள்ளவன். வெகுளியான மனமுடையவன்.

10. தந்தையால் சுகமில் லாதான் தன்வாயால் பெருமை பூண்பன்
வந்தவர்க் கன்ன மீவன் வளமுள வில்லஞ் செய்வன்
நந்தியும் பனேயோர் விருத்தி நயம்படக் கூறு வானும்
செந்திருக் கடாட்ச முண்டு சேமநீள் நிதியு முண்டாம்.

10. தன் தந்தையால் சுக மில்லாதவன். தன் முயற்சியால் பெருமை அடைவான். தன்னை யண்டினவர்கட்கு அன்னமளிப்பான். அழகிய பெரிய வீடு கட்டுவான். கால் நடைகள் பண்ணை ஏர் முதலியவை பெருகும். நய மாகப் பேசுபவன். இலக்குமி நோக்குள்ளவன். பாதுகாப்பு நிதியும் உள்ள வன்.

11. தன்னினத் தவர்க்கு மேலாய்த் தனிகளுய் வாழ்வா ளுகும்
பன்னியே பேச வல்லன் பித்தரோ கத்தா ளுகும்
இன்னவாறு வதிட்டர் கூற ஈச்வரி கேட்க லுற்ருள்
மன்னவன் தனக்குப் பித்தம் வந்திடு மென்று சொன்னீர்.

11. தன் பந்துக்களுக்குமேல் தனிகளுக வாழ்ந்து வருவான். பன்னிப் பன்னிப் பேசுபவன். பித்த ரோக முடையவன். இங்ஙனம் வசிஷ்ட முனிவர் கூற, ஈசுவரி கேட்கலாளுள். ஜாதகனுடைய தந்தைக்குப் பித்தரோகம் வந்திடும் என்று சொன்னீர்களே.

12. ஏதுகா ரணத் தினுலே இயம்பினீ ரந்தச் சங்கை
ஓதுவீ ரென்று கேட்க உரைக்கின்ருர் வதிட்டர் தாமும்
நீதியா யிரவிக் கஞ்சில் நிலமக னிருப்ப தாலே
ஜாதகன் நோயுந் தோன்றித் தங்கிடு முரோகந் தானும்.

12. என்ன காரணத்தால் அப்படிக் கூறினீர்கள் ? சொல்லுங்கள். என்று வினவ, வசிஷ்டர் சொல்லுகின்ருர். சூரியனிருக்குமிடத்துக்கு ஐந்தாமிடத் தில் செவ்வாய் இருப்பதால் ஜாதகனுக்கு நோய் ஏற்பட்டு ரோகம் தங்கிவிடும் என்ருேம்.

13. இதுவலால் பூர்வந் தன்னில் இவன்செய்த கொடுமை யாலே
சதியினால் ரோகம் வந்து சார்ந்தது வென்று சொன்னோம்
அதுஎவ்வாறு சொல்லு மென்ன அறைகின்றோ மந்தி யத்தில்
இதுகுண முடையா னுக்கு இவனுமே யிரண்டாஞ் ஜன்மம் ;

13. இதுவுமல்லாமல், ஜாதகனுடைய தந்தை முற்பிறவியில் செய்த கொடுமைகளால் ரோகம் வந்தது என்று சொன்னோம். அஃது எப்படி ? என்று கேட்க, அதைக் கடைசியில் கூறுகின்றோம். இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன் இரண்டாவது புத்திரனாக ;

14. உதிப்பனு மென்று சொன்னோம் உரைக்கின்றோ மிவன்கு ணத்தை
நிதியது வுடைய னாகும் நீரினில் தோய வல்லன்
அதிகமாய் வார்த்தை சொல்வன் அற்பரை யுறவு கொள்ளான்
நதிபல தீர்த்தந் தோய்வன் நற்கல்வி யுடைய னாமே.

14. பிறப்பான் என்று சொல்லுகின்றோம். இவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். செல்வங்கள் உடையவன். புண்ணிய நதிகளில் நீராடுவான். அதிகமாகப் பேசுபவன். அற்பர்களுடன் உறவாடாதவன். பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். நல்ல கல்வியறி வுடையவன்.

15. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னவன்
புல்லிய புத்தி யில்லான் பூமியை விருத்தி செய்வன்
சொல்லிலே கவடு முண்டு சுற்றத்தார் மெச்ச வாழ்வன்
மல்லுக்கு வச்சங் கொள்வன் மங்கையே மேலுங் கேளே.

15. நல்லவர்கட்கு நல்லவன். தீயவருக்குத் தீயவன். அற்பபுத்திகளில்லாதவன். விளைநிலங்களைப் பெருக்குவான். கபடமாகப் பேசுபவன். உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். சண்டை செய்வதற்குப் பயப்படுவான். தாயே ! மேலுங் கேளுங்கள்.

16. ரோமங்கள் நீட்சி யில்லான் நுவலுப தேசங் கொள்வன்
சேமமாங் குடும்பி யாவன் சல்லியங் கொள்ளா னாகும்
நேமியோர்க் குதவி செய்வன் நிதானமாய் வார்த்தை சொல்வன்
சாமிமேல் பத்தி பூண்பன் சங்கரி மேலுங் கேளே.

16. நீண்ட தலைமயிர்களில்லாதவன். பெரியோர் உபதேசங்களை ஏற்பான். சுகமுள்ள குடும்பியாக விருப்பான். கடன் படாதவன். உலகத்தவருக்கு உபகாரி. நிதானமாகப் பேசுபவன். தெய்வபக்தி யுள்ளவன். தாயே ! மேலுங் கேள்.

17. இன்னவன் துணைவர் தம்மை இயம்பவே பலத்தைக் காணோம்
தன்னிலே ஜனித்தா லுந்தான் சடுதியில் நட்ட மெய்தும்
இன்னவாறு முனிவர் கூற ஈசுவரி கேட்க லுற்றாள்
அன்னவன் தனக்குத் தோடம் அணுகாது வென்று சொன்னீர்.

17. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைக் கூற பலமில்லை. அப்படிப் பிறந்தாலும் நிலையாமல் நஷ்டமடைவர். இங்ஙனம் முனிவர் சொல்ல, பார்வதி கேட்கலானாள். ஜாதகனுக்குச் சகோதரர் பிறக்கமாட்டார் என்று எப்படிக் கூறினீர்கள் ?

18. சங்கையைச் சொல்லு மென்ன திவாகரன் மூன்றோ[1] னுகி
பொங்கமா யிரண்டில் நிற்கப் புதனுமே மூன்றில் சோச்
சங்கையாய்ச் சனியு மூன்றைச் சதிருடன் பார்த்த தாலே
இங்கிவன் றனக்குத் தோடம் இலகாது வென்று சொன்னேம்.

18. சந்தேகத்தைச் சொல்லுங்கள், என, சூரியன் மூன்றும் வீட்டுக் குரியவனுகி இரண்டாம் வீட்டில் இருப்பதாலும், புதன் மூன்றும் வீட்டில் இருப்பதாலும், சனி மூன்று மிடத்தைப் பார்ப்பதாலும், ஜாதகனுககுச் சகோதரர் இல்லை என்று சொன்னேம்.

### சகோதரதோஷம்: மறுப்பு: கிரகநிலை

19. ஜயமுனி யிதனைக் கேட்டுத் திடுக்கென வுரைக்க லுற்றுர்
பயமிலா எவ்வி தத்தால் பகர்ந்திட்டீர் துணைவர் தோடம்
நயமான குருவு மைந்தில் நல்கியே புதனு மூன்றில்
தயையுட னிருப்ப தாலே ஜனித்திடுந் துணைவர் தாமே.

19. இதை ஜய முனிவர் கேட்டுத் திடீரென்று சொல்லுகின்றுர். சகோதர தோஷம் எப்படிச் சொன்னீர்கள் ? ஐயா ! குரு ஐந்தாம் இடத்தில் இருப்பதாலும், சகோதர ஸ்தானத்தில் புதன் இருப்பதாலும் கட்டாயம் சகோதரருண்டு.

20. எத்தனைத் துணைவ ரென்று இயம்பினீர் முனியே நீர்தாம்
சித்தமாய்ச் சொல்லு மென்ன ஜனித்திடுந் துணைவர் நால்வர்
குற்றமா மிரண்டு வென்றேம் குறித்தனம் பெண்பால் ரண்டு
பத்தியாய்த் தீர்க்க மென்றேம் பார்வதி மேலுங் கேளே.

20. ஜாதகனுக்கு உடன் பிறந்தவர் எத்தனை பேர் ? என்று சொல்லுங்கள். நான்கு சகோதரர் நிச்சயம் தோன்றுவார். இரு சகோதரருக்குத் தோஷமுண்டு. சகோதரிகள் இருவர் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றேம் பார்வதியே ! கேளுங்கள்.

21. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மீரே ழாண்டில்
மேதினில் கீழ்ப்பால் தன்னில் விளங்கிடு மந்த மாது
மாதவள் குணத்தைச் சொல்வோ மங்கையுங் கருநி றத்தாள்
சூதிலா ளன்ன மீவள் சுகமுடன் வார்த்தை சொல்வள்.

21. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றேம். பதினன்காம் வயதில் கிழக்குத்திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். கரிய நிறமுடையவள். சூது இல்லாதவள். பசித்தவர்கட்கு அன்னமளிப்பாள். சுகமாகப் பேசுபவள்.

22. பால்பாக்கிய முடைய ளாவள் பந்துவும் புகழ வாழ்வள்
சீலமுங் கொஞ்ச முண்டு செப்புமுன் கோபங் கொஞ்சம்
சாலவே புத்திர பாவஞ் சாற்றுவோ மினிமே லாக
வேலனை யீன்ற மாதே வித்தகி கேட்டி டாயே.

[1]. ஸகோதர ஸ்தானம்.

22. புத்திர பாக்கிய முள்ளவள் சுற்றத்தார் மெச்சும்படி வாழ்ந்திருப்பாள். சிறிது நல்லொழுக்க முடையவள். சொல்லுவதற்கு முன் கோபமடைவாள். இனி ஜாதகனுடைய புத்திரபாவத்தைச் சொல்லுவோம். வேல் முருகனைப் பெற்ற தேவியே ! கேளுங்கள்.

23. புத்திர ரெழுவர் தோன்றும் பகருவோ மாண்பால் ரண்டு
சித்தமாய்ப் பெண்பா லவ்வாறு தீர்க்கமா மென்று சொன்னோம்
மற்றது மூன்று நட்ட மறைந்தன மொழிகுன் றுவே
பத்தியாய்த் தாயின் சேதி பகருவோ மினிமே லாக.

23. ஏழு புத்திரர்கள் தோன்றுவர். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்ற மூவரும் நிலேயார். கூறிய வார்த்தைகள் தவறு. தாயினுடைய செய்தியைக் கூறுகின்றோம், இனிமேல்.

24. கருநிற முடைய ளாகும் இளமனம் ஈகை யுள்ளாள்
பெரும்புத்தி யுடைய ளாகும் புருடனுக் கினிய ளாவள்
திருமக ளொப்ப தாகுஞ் செல்வியு மதிர்ஷ்ட சாலி
வருஞ்சுதர் முதலில் பீடை யறைகின்றோ மிவளுக் கேதான்.

24. கரியநிற முடையவள். இளகிய மனமுள்ளவள். கொடுக்கும் குணமுள்ளவள். தாராளபுத்தி யுடையவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். இலக்குமியை யொத்தவள். அதிருஷ்டசாலி. முதலில் தோன்றும் புத்திரர்களுக்குத் தீதாகும்.

25. துணைவர்க ளாண்பா லொன்று சொல்லுவோங் கன்னி யவ்வாறு
கனமுடன் தீர்க்க மாகும் காதலி யில்ல மேற்கு
பிணையாகி மாம னில்லம் பேணுவா ளிவளே யென்றோம்
கனமுள குடும்பந் தன்னில் காதலி வாசஞ் செய்வள்.

25. ஜாதகனுக்குத் தாயின் சகோதரன் ஒருவனும், சகோதரி ஒருத்தியும் தீர்க்காயுளுள்ளவர்கள். அவளுடைய வீடு மேற்குத் திக்கில் உள்ளது. துன்பமடைந்து இவள் தன் மாமனில்லம் சென்று வாழுவாள் என்று கூறுகின்றோம்.

26. சொந்தமா மில்ல மில்லாள் சேர்ந்திடும் பின்னு லேதான்
முந்திய ஜன்மந் தன்னை மொழிகின்றோங் கேளுந் தாயே
தென்திசைத் தவளே யுத்ரஞ் சிறையிலாச் சிற்றூர் தன்னில்
நந்த கோபாலன் வீட்டில் நாயகி ஜனித்தா ளென்றோம்.

26. ஜாதகனுடைய தாய் சொந்தத்தில் வீடில்லாதவள். பிற்காலத்தில் ஒரு வீடு கிட்டும். தாயின் முன்பிறவியைச் சொல்லுகின்றோம். அம்பிகையே ! கேளுங்கள். தெற்குத் திசையிலுள்ள தவளேசுவரத்துக்கு வடக்கில் உள்ள சிற்றூரில் இடையர் மரபில் பிறந்தாள் என்று கூறுகின்றோம்.

27. ஜனித்துமே பெருமை பூண்டு சேயர்க ளுள்ளா ளாகி
வனிதையும் வாழு நாளில் வறைகின்றோ மூழி தானும்
ஆனையும் நிற்கு மீசன் அபிடேகஞ் செய்ய வேண்டித்
தானவர் பாலுங் கேட்கச் சத்தியு மேதிப்[1]பாலே ;

---

[1] எருமை

27. பிறந்து, பெருமையுடன் புத்திரர்களை யுடையவளாகி வாழ்ந்து வரும காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கூறுகின்றோம். விநாயகப் பெருமானுக்கும் சிவபெருமானுக்கும் அபிஷேகம் செய்வதற்காக அர்ச்சகர் பால் கேட்கும் போது எருமையின் பாலை ;

**கோயிலில் அபிஷேகத்திற்கு எருமைப்பாலைப் பசுவின்பால் என்று கொடுத்த தோஷம்**

28. ஆவின்பா லென்று சொல்லி அவர்களுக் கீந்தா ளென்றோம்
மான்மழு தரித்தோ னுக்கு மகிழுட னபிடே கித்தார்
தேன்மொழி தனக்குத் தோடஞ் செறிந்தது வென்று [சொன்னோம்
ஆனதி ரில்லவே யில்லை அவள்வரன் முன்னே மாண்டு ;

28. பசுவின் பாலெனறு கூறி அவர்க்குக் கொடுத்து விட்டாள். அதை அவர் மான் மழு தரித்த சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்தார். அதனால் ஜாதகனுடைய தாய்க்குத் தோஷம் ஏற்பட்டது என்று சொன்னோம். அவளும் தன் கணவனுக்கு முன்பாகவே இறந்து ;

29. தலைநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ ளிவளே யம்மா
குலவிடு முன்னூழ்த் தோடம் கோதையைப் பற்றி யேதான்
நிலைமையாய்த் தந்தை யில்லம் நீங்குமே மாதிரு வில்லம்
தலமது வலைச்ச லாகுந் தன்சுதர் முதலில் பீடை.

29. பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று சொன்னோம். முற்பிறப்புத் தோஷம் இப் பெண்ணைத் தொடர்ந்தது. தன் தந்தையின் வீடு நீங்கி விடும். தாய்க்கு ரோகம் ஏற்படும். வீட்டில் துன்பங்கள் உண்டாகும். முதலில் பிறக்கும் குழந்தைகட்குத் தீங்குண்டாகும்.

30. இவ்விதக் கார ணங்கள் எய்திடும் பாலின் தோடம்
நவ்விய விவள்பின் ஜன்மம் நவில்கின்றோங் காஞ்சி தன்னில்
பவ்வமா யிக்கு லத்தில் பகருவோஞ் சுகமு ண்டாகி
ஒவ்வியே வாழ்வா ளாகும் உத்தமி மேலுங் கேளே.

30. எருமைப்பால் கொடுத்த தோஷத்தால் இவ்விதத்துன்பங்கள் நேரும். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்தில் இதே குலத்தில் பிறந்து, சுகமுள்ளவளாகி வாழ்ந்து வருவாள். தாயே ! மேலுங் கேளுங்கள்.

31. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மோதூர் தன்னில்
விந்தையாய்த் தீயின் வம்ச மெய்தியே பெருமை பூண்டு
முந்திய பூமி யுண்டாய் முயற்சியாய்க் குடும்பி யாகிச்
சந்ததம் வாழு நாளில் சாற்றுவோ மூழி தானும்.

31. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். ஓதூரில் வன்னிய குலத்தில் பிறந்து, பெருமையடைந்து, உயர்வான பூமியைப் பெற்று, நல்ல குடும்பத்தை யடைந்து, வாழ்ந்து வரும் நாளில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

32. தன்னுடைக் குருவின் புத்திரி தன்மேலே மோகங் கொண்டு
பொன்பணி யவளுக் கீந்து புகன்றனன் சிலேடை வார்த்தை
அன்னைபோல் கற்பின் மிக்காள் அதற்குமே விசையா ளாகி
உன்னத வார்த்தை சொல்வாள் உத்தமி கேட்டி டாயே.

32. தன்னுடைய ஆசிரியனின் பெண்ணின்மீது மோகம் கொண்டு, அவளுக்குப் பொன் ஆபரணங்களைக் கொடுத்து, இரு பொருள் படும்படி வார்த்தையைச் சொன்னான். தாய்க்கொப்பான அப்பெண்ணும் கற்புடைய மங்கையானபடியால், அதற்கு உடன் படாதவளாகி, உயர்வான புத்திமதிகளைக் கூறினாள். உத்தமியே! கேளுங்கள்

**குருவின் புதல்வியைக் கற்பழித்த தோஷம்**

33. குருவின்தன் புத்திரி தன்னைக் கூடினால் தோட மெய்தும்
வருஞ்ஜன்மந் துணைவ ரின்றி யாதியில் குடும்ப லைச்சல்
வரும்பிணி யதிகம் நேர்ந்து புக்குவாய்க் காலன் பக்கல்
திருமக ளிவ்வாறு சொல்லத் தீரன்றன் செவிக்கே ருமல் ;

33. குருவின் பெண்ணுடன் கூடி இன்பமனுபவித்தால் தோஷமேற்படும். வரும் பிறவியில், உடன்பிறந்தவரில்லாமல், குடும்பத்தில் துன்பமேற்பட்டு, பெரிய நோயையும் அடைந்து, இறப்பாய் என்று குருவின் மகள் சொல்ல, ஜாதகனுடைய தந்தை அதைக் கேளாமல் ;

34. பாழான காமத் தாலே பலாத்கார மாகச் சேர்ந்தான்
ஆழியி லந்தத் தோடம் அணுகிய திவனுக் கேதான்
தாழ்வான குடும்ப மாகிச் சல்லிய முடைய னாகிச்
சூழ்ந்தது வென்று சொன்னேஞ் செப்புவோ மின்னு மொன்று.

34. கொடிய காமதாபத்தால் பலவந்தமாகப் புணர்ந்தான். அந்தத் தோஷம் ஏற்பட்டது. அதனால் ஜாதகனுக்குக் குடும்பத்தில் தாழ்வும், கடன் உபத்திரவமும் ஏற்பட்டன என்று சொல்லுகின்றோம். மற்று மொன்று சொல்லுகின்றோம்.

35. தன்னுடைக் கொல்லை தன்னில் தங்கிற்று விருட்ச மொன்று
அந்ததோர் விருட்சந் தன்னில் அணுகிற்றுக் கறுப்பன் றானும்
இந்தவாறு மன்னன் றானும் இவன்வேலைக் குதவ வேண்டிச்
சொந்தநன் மரத்தை வெட்டித் தொழிலுக்கு வைத்தா
[னென்றோம்.

35. ஜாதகனுடைய தந்தையின் வீட்டுக்கொல்லையில் மரம் ஒன்றிருந்தது. அதில் ஒரு கறுப்பன் சாமி வசித்து வந்தது. இப்பேர்ப்பட்ட மரத்தை ஜாதகனுடைய தந்தை, தன் வேலைக்காக வெட்டி, தன்காரியத்தை முடித்துக் கொண்டான்.

36. மரமது போன பின்பு மாமுனிக் கறுப்பன் றானும்
உறைவதற் கிடமே யின்றி உரைத்தது சாபந் தானும்
வருஞ்ஜன்மந் தந்தை யில்ல மதுதனை விட்டு நீங்கித்
திறமையாய் வேறு வில்லஞ் செல்லுவா யென்று சொல்லும்,

36. மரம் வெட்டப்பட்ட பிறகு, கறுப்பன்சாமிக்கு இருக்க இடமில்லாமல் சாபமிட்டது. உனக்கு எற்படும் அடுத்த பிறவியில், நீ உன் தந்தையின் வீட்டை விட்டு நீங்கி, வேறு வீட்டில் போய் வாழ்ந்து வருவாய் என்று கூறிற்று.

37. உரைத்துமே பின்னு லில்லம் உறைந்தது கறுப்புத் தானும்
குறித்தன மந்தி யத்தில் [1] குமரக்கோட் டங்கள் சென்று
திருவிளக் கதிகம் பார்த்துச் செல்வனுஞ் ஜீவித் தேதான்
மறலியின் பக்கல் சென்று மலரவன் வரையப் பட்டு ;

37. கூறிவிட்டு, முனி வேறிடத்துக்குச் சென்றது. ஜாதகனுடைய தந்தை, தன் கடைசிக் காலத்தில், குமரக் கடவுளின் கோயில்களுக்குச் சென்று, திருவிளக்குக் கைங்கர்யம் செய்து, ஜீவித்து வந்தான். பிறகு மரண மடைந்து, பிரமனுல் படைக்கப்பட்டு ;

38. வந்தனன் கங்கை சேயாய் மங்கையுங் கேட்க லுற்றுள்
இங்கிவன் முன்ஜன் மத்தில் எய்தினுன் தீயின் வம்சம்
சங்கையா மதிகத் தோடஞ் சார்ந்தது விச்சென் மத்தில்
துங்கமாங் கங்கை சேயாய்த் திறமுடன் வந்த தென்ன.

38. வேளாள குலத்தில் பிறந்தவன். பார்வதி தேவியும் கேட்க லானுள். ஜாதகனுடைய தந்தை முற்பிறவியில் வன்னிய குலத்தில் பிறந் தான். அதிகமான தோஷங்களே யடைந்து, இப் பிறவியில் தூய்மையான வேளாள குலத்தில் பிறக்கும் காரணங்க ளென்ன ?

**தீபமேற்றிய புண்ணியத்தால் குலம் உயர்தல்**

39. அப்பலன் சொல்லு மென்ன அந்திய காலந் தன்னில்
மெய்ப்புடன் குமரக் கோட்ட மேவிய தீபம் பார்த்து
அப்பனும் வாழ்ந்த தாலே அறுமுகன் கிருபை யாலே
இப்பிறப் பினிலே கங்கை எய்தினு னிவ்னே யம்மா.

39. அந்தப் பலன்களேக் கூறுங்கள். ஜாதகனுடைய தந்தை, தன் இறுதிக் காலத்தில், குமரப்பெருமானின் கோயிலில் தீபம் வைத்து வந்த தால் ஆறுமுகக் கடவுளின் கிருபையினுல் இப்பிறவியில் வேளாள குலத்தில் பிறந்தான் என்று கூறுகின்றோம்.

40. இச்சென்மந் தன்னி லேதான் எய்திடு முன்னூழ் தானும்
கச்சணி மாது சாபங் கலந்ததால் பிணியும் வாய்க்கும்
துச்சமாம் பாண்டு தானுஞ் சேர்ந்திடு மாதி யில்தான்
மிச்சமாய் முனியின் சாபம் விலகிடு மில்லந் தானும்.

40. இப்பிறவியில் முற்பிறவியில் செய்த தீவினைகள் சேரும். பெண் ணுடைய சாபத்தால் நோயுண்டாகும். ஆதிகாலத்தில் பித்தபாண்டு நோய் எற்படும்......................முனீச்வரனின் சாபத்தால் வீடு நீங்கும்.

[1] முருகர் எழுந்தருளியுள்ள ஸ்தலங்கள்.

41. அத்திரி சொல்லு கின்றார் அவனுக்குப் பித்த பாண்டு
உற்றிடு மென்று சொன்னீர் உரைப்பீர்கள் கிரியை தானும்
சித்தமாய்ச் சொல்லு கின்றேன் தேவியின் தோடந் தீர
உத்தமன் கர்ம சாந்தி உண்மையாய்ச் செய்து மேதான் ;

41. அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுடைய தந்தைக்குப் பித்த பாண்டு ரோகம் ஏற்படும் என்று சொன்னீர்களே. அது நீங்கச் சாந்தி யொன்று கூறுங்கள். தயாராகச் சொல்லுகின்றேன். பெண்ணின் தோஷம் நீங்க, ஜாதகனுடைய தந்தை, கரும சாந்திகளை உண்மையுள்ள மனத்துடன் செய்து ;

42. மண்டூகப் பற்பந் தன்னை மண்டலங் கொள்வா னாகில்
கண்டதோர் பித்த ரோகங் காணாது வென்று சொன்னோம்
தண்டமாய்ச் செய்யா னாகில் சிலநாளி லதிக முண்டாய்
முண்டங்கள் போல நேரு மொழிகுவா ரத்திரி தாமும்.

42. மண்டூக பஸ்மத்தை ஒரு மண்டலம் (நாற்பத்தைந்து) நாட்கள் உட் கொண்டால், பித்த ரோகம் ஏற்படாது என்று சொன்னோம். அசிரத்தை யுடன் செய்துவராவிட்டால், சின்னாட்களில் ரோகம் அதிகமாகப் பரவிவிடும் என்றோம். அத்திரி முனிவர் கூறுகின்றார்.

### கர்மசாந்தி : ஸ்புடஞ்செய்யும் வகை

43. எவ்விதக் கர்ம சாந்தி இயம்பினீர் முனியே நீர்தாம்
பவ்வமாய் விவரஞ் சொல்வீர் பகருவோங் கேளு மம்மா
ஒவ்விய கலசந் தானும் உற்றதோர் சமித்தை தானும்
திவ்விய நவம தாகுஞ் சிறப்புட னுடை சாத்தி ;

43. கரும சாந்திகள் செய்யும் விதம் எப்படி ? முனிவரே ! கூறுங்கள், விபரமாக. சொல்லுகின்றோம். கேளுங்கள். ஒன்பது கலசங்களை ஸ்தாபித்து, உற்ற சமித்துக்கள் ஒன்பது எடுத்து, கலசத்துக்குப் புத்தாடைகள் சாத்தி ;

44. சதிபதி பிம்பம் ரண்டு சமித்தினு லோமஞ் செய்து
அதற்குமேல் மூலஞ் சொல்வோம் அந்தலைக் காண்டந் தன்னில்
விதம்போலச் சகத்திரஞ் சொல்லி வீரியன் தானஞ் செய்து
பதியினில் சத்தி பூசை பண்ணின பின்பு மேதான் ;

44. சதி பதி பிம்பம் (ஆண் பெண் உரு) இரண்டு செய்து, சமித்தால் ஓமம் செய்து, அதற்கு மூல மந்திரத்தைச் சொல்லி......... ......முதல் காண்டத்தில் கூறியதுபோல் ஆயிரம்தரம் சொல்லி, ஜபித்து, தானம்செய்து தன் வீட்டில் சக்தியின் பூசை செய்து, பின்பு ;

45. நூறுண்டு சட்டங் கொண்டு நொறுக்கியே யறைத்துக் கொண்டு
கூறிய பழச்சாறு விட்டுக் கசபுடந் தன்னில் வைத்துத்
தீரமா யிவ்வாறு மூவேழ் சேய்வாரம் புடத்தில் சேர்த்து
ஆறுமா முகனைப் போற்றி ஆவின்நெய் தனிலே கொள்ள ;

45. நூறு வருடமான பழைய சட்டம் எடுத்து, அதை நொறுக்கி அரைத்துக் கொண்டு, சொல்லிய பழச்சாற்றைவிட்டு, கஜபுடம் வைத்து, இங்ஙனம் இருபத்தொரு செவ்வாய்க்கிழமைகள் ஸ்புடம் வைத்து, சுப்பிரமணியக் கடவுளைத் துதித்து, பசுவின் நெய்யில் கலந்து உட்கொண்டால்;

46. வினையது விலகு மென்றோம் விளம்பின படிசெய் யானேல்
கனமுடன் வியாதி விருத்தி கண்டிடுஞ் சீக்கி ரத்தில்
அனையவே யிவன்பின் ஜன்மம் அறைகின்றோந் [1]தில்லை தன்னில்
கனமுள பிரம்ம சேயாய்க் கலப்பனு மென்று சொன்னோம்.

46. நோய் விலகும் என்றோம். கூறியபடி செய்துவராவிடில் வியாதி சீக்கிரத்திலேயே விருத்தியாகும். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். புண்ணிய க்ஷேத்திரமாகிய சிதம்பரத்தில் அந்தண குலத்தில் பிறப்பான் என்று சொன்னோம்.

47. இந்ததோர் ஜன்மந் தன்னி லிவன்கங்கைக் குலமு தித்து
என்னபுண் ணியங்கள் செய்தான் இயம்புவீர் விவர மாக
அன்னவ னிச்சென் மத்தில் அரன்பத்தி யதிகங் கொண்டு
பின்னையும் வேதந் தன்னைப் பிரியாம லுச்ச ரித்து;

47. இந்தப் பிறவியில் இவன் வேளாள குலத்தில் பிறந்து, என்ன நற்செயல்களைச் செய்தான்? இவன் இப் பிறவியில் சிவபெருமான்மீது அதிகம் பக்தி கொண்டு, வேதத்தை விடாமல் உச்சரித்து வந்து;

48. மனமது கவடு மின்றி வருவதால் மறுபி றப்பில்
கனமுள பிரம சேயாய்க் காவல னுதிப்பா னென்றோம்
அனையவே யிவன்முன் ஜன்மம் அறைகின்றோங் காஞ்சி தன்னில்
தனயனு மிக்கு லத்தில் ஜனித்தன னிவனே யம்மா.

48. மனத்தில் கபடமில்லாமல் வாழ்ந்து வருவதால், இவனுக்கு ஏற்படும் மறு பிறவியில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான் என்று சொன்னோம். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்தில் இதே குலத்தில் பிறந்தவன் ஜாதகன் என்றோம்.

49. பலவிதச் செட்டுச் செய்து பாரினில் வறுமை யின்றி
நலமுள வறத்தி லிச்சை நாயகன் மனமே யின்றிக்
குலவிய காலன் பக்கல் குதித்தன னிவனே யென்றோம்
தலைநான்கோன் வரையப் பட்டு ஜனித்தனன் கங்கை சேயாய்.

49. பலவிதமான வர்த்தகம் செய்துவந்து, உலகில் வறுமையின்றி, தருமம் செய்வதில் விருப்பமில்லாமல் வாழ்ந்து, மரணமடைந்துவிட்டான் இவன், என்றோம். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு வேளாள குலத்தில் தோன்றினுன்.

[1] சிதம்பரம்.

50. இவனுடைப் பொதுயோ கத்தை இயம்புவோம் வறுமை யில்லான்
இவன்தந்தை யாஸ்தி தன்னே இவனுமே விருத்தி செய்வன்
இவன்தந்தை மேலாய் வாழ்வன் இடருக ளில்லா னுகும்
சிவன்தனைப் பூசை செய்து சேர்ப்பனும் பூமி தன்னே.

50. ஜாதகனுடைய பொதுயோகத்தைச் சொல்லுகின்றேம். வறுமை யில்லாதவன். தன் தந்தையின் ஆஸ்தியைப் பெருக்குவான். தன் தந்தைக்கு மேலாக வாழ்வான். துன்பங்க ளில்லாதவன். சிவபெருமானுக்குப் பூசை முதலியன செய்து பூமியைச் சேர்ப்பான்.

51. உலகுளோர்க் குதவி செய்வன் உத்தம ஞகி வாழ்வன்
நிலைமையா யிருப தாண்டில் நிகர்கன்னி மாதந் தன்னில்
தலைவனுந் தந்தைக் கேதான் சாற்றினேங் கருமந் தானும்
குலவிய முன்னுழ்ச் சாந்தி குறிப்புடன் செய்வா னுகில் ;

51. உலகத்தவர்கட்கு உதவி புரிவான். உத்தமனுக வாழ்ந்து வருவான். தன்னுடைய இருபதாம் வயதில் புரட்டாசி மாதத்தில் தன் தந்தைக்குக் கருமங்கள் செய்வான். முன்பு கூறிய சாந்திகளை ஜாக்கிரதையுடன் செய்து வந்தால் ;

52. சொன்னதோர் காலந் தன்னில் செப்பினேங் கண்டந் தானும்
இன்னவன் செய்யா னுகில் ஈராண்டில் கண்ட மென்றேம்
அன்னைக்கு முப்பா னென்பா னழகிய தேளின் மாதம்
தன்னிலே கண்ட மென்றேஞ் சாற்றின மொழகுன் றுவே.

52. சொன்ன காலத்தில் ஒரு கண்டம் ஏற்படும். செய்யாவிடில் இரண்டாம் வயதில் கருமம் செய்ய நேரிடும். ஜாதகனுடைய முப்பத்தொன்பதாம் வயதில் தாய்க்குக் கண்டம் நேரும். அது கார்த்திகை மாதத்தில் நேரும். கூறிய வார்த்தைகள் தவறு.

53. உதித்தவன் தனக்குக் காலம் உரைகின்றே மன்பா னுறில்
சதியிலாத் தனுசு மாதந் தசமியாம் வளர்பக் கத்தில்
விதியது முடியு மென்றேம் விளம்புவோ மிவன்பின் ஜன்மம்
கதிதருங் காஞ்சி தன்னில் கனமுள பிரம சேயாய்.

53. ஜாதகனது மரணக் காலத்தைச் சொல்லுகின்றேம். ஐம்பத்தாறும் வயதில் மார்கழி மாதம் சுக்கில பட்சம் தசமி திதியில் மரணமடைவான். இவன், மறுபிறவி காஞ்சிபுரத்தில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான்.

54. வந்துமே வரசர் பக்கல் மன்னனுஞ் ஜீவித் தேதான்
முந்திய கீர்த்தி யாகி முயற்சியாய்க் குடும்ப மாகத்
தன்தன மதிக மாகச் சகத்தினில் வாழ்வா னுகும்
இந்திர னிறைஞ்சு மாதே இப்பலன் சிதறி டாதே.

54. பிறந்து, அரசாங்க உத்தியோகம் ஏற்று, ஜீவித்து வருவான். புகழுடையவனுகி, முயற்சியுள்ள குடும்பத்தையடைந்து, தன்னுல் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிகமாகி, உலகில் வாழ்வான். இந்திரனுல் தோத்தரிக்கப்படும் தேவியே! இத்தப் பலன் தவருது.

55. சாதகன் ஜனிக்குங் காலஞ் சந்திரன் தசையி ருப்புக்
கோலமா யாண்டு வெட்டுங் குறித்திடுந் திங்க ளாறும்
நீதியாய் ஜாத கர்க்கு நிகழ்த்துவோங் கண்டந் தானும்
போதவே நிகழு நாளில் புக்கிடுந் துணைவர் தாமே.

55. ஜாதகன் பிறக்கும் காலத்தில் சந்திரமகாதசையில் இருப்பு எட்டு வருடங்களும் ஆறு மாதங்களுமாம். ஜாதகனுக்கு கண்டம் ஏற்படும். உடன் பிறந்தவர்கள் தோன்றுவர்.

56. தந்தைக்கு வதிக ரோகஞ் சார்ந்திடு மிதுவல் லாமல்
முந்திய பூமி விருத்தி எய்திடு மிவனுக் கேதான்
சொந்தமா துலன்த னக்கு ஜயமுண்டு கிருக மெய்தும்
பிந்திய பாகந் தன்னில் பேசுவோம் விவர மாக.

56. தந்தைக்கு ரோகம் அதிகமாகும். இதுவன்றி, பழைய பூமி விருத்தியாகும். இவனுடைய சொந்த மாமனுக்கு வெற்றியுண்டாகும். வீடு கிடைக்கும். பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்ருேம்.

# ஜாதகம் 54.

1. பொன்சனி சீய மாகப் புதன்துலாம் புகருங் கன்னி
சந்திரன் ராகு மானில் தபனனுந் தேள தாக
மன்னிய குசனுஞ் சாடி வருஞ்சிகி வண்டி யாக
இந்தவாறு கிரகம் நின்று இலக்கினம் வீணை யாக ;

1. குரு சனி சிம்மத்திலும், புதன் துலாத்திலும், சுக்கிரன் கன்னியிலும், சூரியன் விருச்சிகத்திலும், செவ்வாய் கும்பத்திலும், சந்திரன் ராகு மகரத்திலும், கேது கடகத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, லக்கினம் மிதுனமாக; இருந்தால்;

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் |
| செவ்வாய் | ஸ்ரீராசி சக்கரம் | | கேது |
| சந்திரன் ராகு | | | குரு சனி |
| | சூரியன் | புதன் | சுக்கிரன் |

2. பலனதைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
குலவிய பராசர் சொல்வார் குறித்தது வாணுஞ் ஜன்மம்
தலமது கீழ்மேல் வீதி தென்வாசல் குணக்கில் தந்தி
நலமுள வடகீ ழீசன் நல்கிடு மென்று சொன்னோம்.

2. பயனைச் சொல்லுங்கள், என்று பார்வதிதேவி கேட்கும்போது, பராசர முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் குழந்தையின் ஜாதகம். பிறந்த வீடு கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு வாடையிலுள்ளது. மேற்குத் திக்கில் விநாயகர் ஆலயமும், வட கிழக்கில் சிவபெருமான் கோயிலும் உள்ளன என்று சொன்னோம்.

3. குடகினில் மாரி யுண்டு கூறுவோ மோடை காணும்
அடைவுடன் தெற்கில்........அருகில்பாஞ் சாலி நிற்கும்
திடமுடன் சிற்றூர் தன்னில் செப்புமிவ் வடையா ளத்துள்
உடன்கங்கை சேயா விங்கு உதிப்பனு மூன்றாஞ் ஜன்மம்.

3. மேற்குத் திக்கில் மாரியம்மன் கோயிலும், ஒரு நீரோடையும் உள்ளன. சமீபத்தில் தெற்குத் திக்கில் திரௌபதியம்மன் கோயிலும் உள்ள, ஒரு சிற்றூரில், இவ்வித அடையாளங்களுடன் கூடிய வீட்டில், வேளாள குலத்தில் ஜாதகன் தன் தந்தைக்கு மூன்றாவது குழந்தையாகப் பிறப்பான்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெறுந் தந்தை யோகம்
மன்னிய வன்னை யோகம் வரும்புத்ர களத்திர யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மம் சாந்தியுங் கூறு கின்றோம்
அன்னமே யாங்கள் சொல்லும் அருள்மொழி குன்று வென்றோம்.

4. ஜாதகனுடைய பிறப்பு யோகம் அழகியதந்தையின் யோகம் தாயின் யோகம் வரும் மனைவி மக்களின் யோகம் முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும், சாந்தியையும் கூறுகின்றோம். எங்களுடைய அருள் வார்த்தைகள் தவரு.

5. தந்தையின் வர்க்கந் தன்னைச் சாற்றுவோ மறுவ ராகும்
எம்மையே வாண்பா லொன்று எழிலுள கன்னி ரண்டு
சந்ததம் விருத்தி யாகிச் சீரணஞ் சிலநாள் தன்னில்
முந்திய பிதாகு ணத்தைப் புகலுவோங் கேளுந் தாயே.

5. தந்தையின் வர்க்கத்தாரைச் சொல்லுகின்றோம். அவர் அறுவர் என்றோம். சகோதரன் ஒருவனும் சகோதரி இருவரும் விருத்தியாவார்கள். மற்றவர்கள் பிறந்து, சின்னாட்களில் இறந்து விடுவர். தந்தையினுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அம்பிகையே ! கேளும்.

6. இருநிறஞ் சமதே கத்தன் இடரான புத்தி யில்லான்
உரைசெய்வான் சுகமாய் வார்த்தை ஒண்டொடி யார்க்கு நேயன்
கிருஷியுஞ் செய்வா னுகும் கெடுதலாம் புத்தி யில்லான்
விரைவினில் நடக்க வல்லான் விளைபுலம் விருத்தி செய்வான்.

6. இரு நிற முடையவன். சமமான உடலமைப் புள்ளவன். தீய எண்ணங்களில்லாதவன். சுகமாகப் பேசுபவன். மனைவிக்குப் பிரியனுக இருப்பான். விவசாயம் செய்து வருவான். கெட்ட புத்தி இல்லாதவன். வேகமாக நடப்பவன். விளை நிலங்களைப் பெருக்குவான் என்று கூறுகின்றோம்.

7. பித்தச்சூ டுடைய னுகும் பிஞ்ஞகன் தனைத்து திப்பன்
உத்தம னுகி வாழ்வான் உள்மனங் கவடு மில்லான்
நத்தினோர்க் குதவி செய்வன் நன்முக வடிவு காணும்
நித்தியஞ் சீல னுவன் நீர்தனில் தோய வல்லன்.

7. பித்தச் சூடுள்ளவன். சிவபெருமானைத் துதிசெய்பவன். உத்தமனுக வாழ்ந்து வருவான். மனத்தில் கபடமில்லாதவன். தன்னை வந்து அடைந்தவர்கட்கு உபகாரம் செய்பவன். அழகிய முகம் உள்ளவன். நல்லொழுக்கமுடையவன். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான்.

8. தந்தையின் பாகம் ரண்டாய்ச் சாற்றுவோம் வாயு ரோகி
தன்தன மதிக மில்லான் சதுஷ்பாதம் விருத்தி செய்வன்
விந்தையாய்ப் பேச வல்லான் வித்தையுங் கொஞ்ச முள்ளான்
கந்தனை யீன்ற மாதே கழறுவோங் கேட்டி டாயே.

8. தந்தையின் சொத்துக்கள் இரு பங்காகும். வாயு ரோக முள்ளவன். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிக மில்லாதவன். கால் நடைகளைப் பெருக்குவான். வேடிக்கையாகப் பேசுபவன். சிறிது கல்வியறிவுள்ளவன். கந்தபிரானைப் பெற்ற பார்வதி தேவியே ! கூறுகின்றோம். கேளுங்கள்.

9. இக்குண முடையோ னுக்கு இவனுமே வுதிப்பா னாகும்
மிக்கவே யிவன்குணத்தை விளம்புவோஞ் சிவந்த மெய்யன்
சிக்கன மில்லா னாகுந் தேய்ந்திடுந் தந்த மாகும்
திக்கெலாம் நல்லோ னவன் சிரமுக மொருபால் தாழ்வு.

9. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சிவந்த மேனியன். சிக்கன மில்லாதவன். பற்கள் தேய்ந்து போம். நான்கு திக்குகளிலும் நல்லவன் என்று பேசப் படுவான். தலையும் முகமும் ஒரு பக்கமாகத் தாழ்ந்திருக்கும்.

10. கல்வியுங் கொஞ்ச முண்டு கரமதில் கோதுமை ரேகை
இல்லையென் றுரைக்க மாட்டான் இடரான புத்தி யில்லான்
சொல்லுமே நெறியுள் ளோனும் சுகமுளான் சஞ்ச லத்தான்
இல்லமும் புதிதாய்ச் செய்வான் ஈச்வரி கேட்டி டாயே.

10. சிறிது கல்வியறி வுள்ளவன். கையில் கோதுமைரேகை யுள்ளவன். யாசித்தவருக்கு இல்லை யென்று சொல்லாதவன். தீய எண்ணங்களில்லாத வன். நேர்மையாகப் பேசுபவன். சுகமுள்ளவன். நிலையான மன மில்லாதவன். புதிய வீடு கட்டுவான். ஈசுவரியே ! கேளுங்கள்.

11. பூமியும் பரிபா லிப்பன் புண்ணிய மனத்த னாகும்
சேமமாங் குடும்ப மாவன் செய்ந்நன்றி மறவா னாகும்
தாமதக் குணத்தா னாகும் கல்லியங் கொள்ளா னென்றோம்
தீமையை யொருவர்க் கெண்ணான் தீரமில் லாத நெஞ்சன்.

11. பூமியை ஆண்டு வருவான். புண்ணியமான மனத்தினன். சுகமுள்ள குடும்ப முள்ளவன். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவன். தாமதமான குணத்தினன். கடன் வாங்காதவன். பிறருக்குத் தீங்கு செய்ய எண்ணாத வன். தைரியமில்லாத மனத்தினன் என்று கூறுகின்றோம்.

12. ஈகையுங் கொஞ்ச முள்ளான் இவன்பித்த தேகி யாவன்
நாகரி கங்க ளில்லான் நாயகி யிட்ட னவன்
ஆகம மறியா னாகும் ஆவுகள் விருத்தி யுள்ளான்
ஊகமு முடைய னாகும் ரோமங்கள் நீட்சி யில்லான்.

12. சிறிது கொடுக்கும் குணமுள்ளவன். பித்த சரீரமுடையவன். நாகரிகங் களில்லாதவன். மனைவிக்குப் பிரியமானவன். வேதங்களை யறியாதவன். பசுக்கள் பெருக்கமாக உடையவன். ஊகமுள்ளவன். தலை மயிர் குட்டை யாக இருக்கும்.

13. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மூவ ராகும்
அவனியி லாண்பால் காணுன் அழகிய பெண்பால் ரண்டு
நவனியில் தீர்க்க மாகும் நாயகன் தனிக ளுவன்
சிவன்தனைப் பூசை செய்யுந் தேவியே கேட்டி டாயே.

13. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைக் கூறுவோம். அவர் மூவ ராவர். சகோதரர்க ளில்லாதவன். இரு சகோதரிகள் உள்ளவன். இவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். செல்வவானுயிருப்பான். சிவபெருமானைப் பூசைபுரியும் தேவியே! கேளுங்கள்.

14. இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோ மிருப தாண்டில்
கன்னிகை யுத்த ரத்தில் கனத்திடு நகரந் தன்னில்
அன்னவள் வருவா ளாகும் அவளுமால் நிறத்தா ளாகும்
தன்மனங் கவடு மில்லாள் சரசமாய்ப் பேச வல்லாள்.

14. ஜாதகனுடைய திருமணக் காலத்தைக் கூறுகின்றேன். இருபதாம் வயதில் வடக்குத் திக்கிலுள்ள பெரிய நகரத்திலிருந்து மனைவி வருவாள் என்று சொன்னேம். அவள் கரிய நிறமுடையவள். கபடமில்லாத மனத்தினள். சரசமாய்ப் பேசுபவள்.

15. வரனுக்கு நேய முள்ளாள் மாதுநன் னடக்கை யுள்ளாள்
திருமக ளொப்ப தாகுஞ் சிறுத்தவர்க் குதவி செய்வள்
பொறுமைய ளிளம னத்தாள் பூமியில் நல்லோ ளாவள்
வறுமைக ளடையா ளாகு மங்கையும் யோக சாலி.

15. தன் கணவனுக்குப் பிரியமுள்ளவள். நன்னடத்தை யுள்ளவள். இலக்குமியைப் போன்றவள். துன்ப மடைந்தவர்கட்கு உபகாரி. பொறுமை யுள்ளவள். இளகிய மனத்தினள். உலகில் நல்லவளாகி இருப் பாள். தரித்திர மடையாதவள். பெண்ணும் அதிர்ஷ்டமுடையவள்.

16. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மீரஞ் சாகும்
சித்தமா யாண்பா லொன்று தீர்க்கமாம் பெண்பால் நான்கு
சுத்தமா மைந்துந் தீர்க்கஞ் ஜீரண மற்ற வெல்லாம்
பத்தியாய்ப் பராசர் சொல்லப் பகருவா ரத்திரி தாமே.

16. ஜாதகனுடைய புத்திரவிருத்தியைச் சொல்லுகின்றோம். அவர் பதின்மராவார். ஒரு புத்திரனும் நான்கு புத்திரிகளும் ஆக ஐவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர்களெல்லாம் இறந்து விடுவர், என்று பராசர முனிவர் கூற, அத்திரி முனிவர் சொல்லுகின்றார்.

17. எப்படிச் சுதராண் விருத்தி இயம்பினீர் முனியே நீர்தாம்
தப்பிதஞ் சுதரா னுக்கு ஜனிக்கினுந் தீதே யாகும்
மெய்ப்புட னந்தச் சங்கை விளம்புவீர் விவர மாகச்
செப்புவார் பராசர் தாமும் சேயுமே வொன்பான் நிற்க;

17. புத்திர விருத்தியுண்டு என்று எங்ஙனம் கூறினீர்கள் ? முனிவரே ! ஆண் குழந்தைக்குத் தோஷமுண்டு. பிறந்தாலும் நிலையா. அந்தத் தோஷத்தைச் சொல்லுங்கள், என, பராசர முனிவர் கூறுகின்றார். செவ்வாய் ஒன்பதாமிடத்தில் இருப்பதாலும் ;

18. புந்தியு [1]மஞ்சில் தங்கப் புகருமே நீச்ச மாக
மந்தனு மைந்தைப் பார்க்க வரைந்தன மந்தச் சங்கை
இந்தவாறு அத்திரி சொல்ல இயல்ஜய முனிவர் சொல்வார்
மந்திரி தனக்கு ரண்டில் [2]வரன்புக்கி யிருப்ப தாலே ;

18. புதன் புத்திர ஸ்தானத்தில் இருந்து சுக்கிரனும் (ஐந்தாம் வீட்டுக் குரியவன்) நீச்சமாக இருப்பதாலும், சனி ஐந்தைப் பார்ப்பதாலும், புத்திர தோஷம் என்று சொன்னோம். இங்ஙனம் அத்திரி முனிவர் கூற, ஜயமுனி சொல்லுகின்றார். கருமஸ்தானாதிபதியாகிய குரு விருக்கு மிடத்துக்கு இரண்டாம் மிடத்தில் சுக்கிரன் இருப்பதால் ;

19. கருமங்கள் செய்ய வேண்டிக் காவல னொருவ னுண்டு
அறைகின்றோ முன்னுண் காணுன் அனுகினுந் தீதே யாகும்
திறமையா யெட்டாஞ் ஜன்மஞ் ஜனித்திடுந் தீர்க்க மாகக்
குறுமுனி யிதனைக் கேட்டுக் கூறுவார் சிலவே சங்கை.

19. ஜாதகனுக்கு இறுதிக் கருமங்கள் செய்ய புத்திரன் ஒருவன் உண்டு. முன் பிறந்த புத்திரனில்லாதவன் என்று சொன்னோம். பிறந்தாலும் இறந்து விடுவான். ஜாதகனுக்கு எட்டாவதாகப் பிறக்கும் புத்திரன் நீண்ட ஆயுளுள்ளவன். அகத்திய முனிவர் இதைக் கேட்டுச் சில சந்தேகங்களைச் சொல்லுகின்றார்.

20. என்னகா ரணத்தி னாலே இலகாது முன்னு னென்றீர்
அந்தவோர் சேதி சொல்வீர் அவனுமுன் ஜன்மந் தன்னில்
கன்மங்க ளதிகஞ் செய்தான் காணுது புத்திரர் தாமும்
தன்னிலே யந்த வூழைச் சாற்றுவீர் விவர மாக.

20. ஜாதகனுக்கு என்ன காரணத்தால் முதலில் பிறந்த புத்திரன் இல்லை என்று கூறினீர்கள் ? அந்த விபரத்தைச் சொல்லுங்கள். ஜாதகனும் முற்பிறவியில் பலவிதமான தீச்செயல்களைச் செய்தான். அதனுல் புத்திரர் தோன்றமாட்டார். அந்தத் தீவினையை விவரமாகச் சொல்லுங்கள்.

21. முன்னவ னிருந்த ஜன்ம மொழிகின்றோங் காஞ்சி யுத்ரம்
உன்னதச் சமவூர் தன்னில் உறைந்தன னிக்கு லத்தில்
பொன்பணி யதிக முண்டாய்ப் பூமியு முடைய னுகித்
தன்மனை புத்திர ருண்டாய்த் தனமதால் செட்டுச் செய்து ;

21. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத் துக்கு வடக்கில் உள்ள சமநிலையான ஊரில் இதே குலத்தில் பிறந்தான். பொன் ஆபரணங்கள் அதிகமாக அடைந்து, பூமியும் உள்ளவனுகி, மனைவி மக்களைப் பெற்று, பணத்தைக் கொடுக்கல் வாங்கல் செய்து வந்து;

---

[1] புத்திர ஸ்தானம். [2] சுக்கிரன்

22. பலருக்கு வுதவி செய்து பாரினில் வாழு நாளில்
குலவியே வந்த வூழைக் கூறுவோம் விவர மாக
நலமுள மறையோ னுக்கு நற்சுத னொருவ னுண்டு
தலமதில் வறுமை யாகிச் சந்தியில் ஜபங்க ளின்றி ;

22. பல பேர்கட்கு உதவிசெய்து உலகில் வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீச்செயலை விபரமாகக் கூறுகின்றோம். நன்மையுள்ள அந்தணன் ஒருவனுக்கு நல்லொழுக்கமுடைய குமாரன் ஒருவன் உண்டு. அவன் வறுமையுடன் சந்தியாவந்தனம் முதலிய ஜபங்களைச் செய்யாமலிருந்ததால் ;

23. உபநய னங்கள் செய்ய உத்தமன் தன்பால் சென்று
நயமுள வார்த்தை பேசி நற்பொரு ளுதவி செய்வாய்
ஜபதப முடிப்பே னென்று செப்பினு னேழை தானும்
வியமிலாத் தாரே னென்ன வேதியன் தைர்யங் கொண்டு ;

23. உபநயனம் செய்ய நினைத்து, ஜாதகனிடம் சென்று, நயமான வார்த்தைகளைக் கூறி, பொருள் உதவி கேட்க, ஜபங்களைச் செய்யவேண்டிய பொருளுதவி செய்கிறேன் என்று சொன்னான். ஏழையும் அந்த வார்த்தையில் நம்பிக்கை வைத்து தைரியத்துடன்;

24. சேகரஞ் செய்து பின்னல் செம்பொனைக் கேட்கும் போது
தாகவே பூமி தந்தால் தருகுவேன் பொருளை யென்ன
[1]ஆகமன் மனம் வருந்தி அவன்மொழி போலச் செய்யப்
பாகமாய்ப் பொருளைத் தந்தான் பற்றியே சென்று னென்றோம்.

24. மற்ற சாமான்களைச் சேர்த்துக்கொண்டு பொருளைக் கேட்கும்போது, உன்னுடைய பூமியைக் கொடுத்தால்தான் பணம் தருவேன் என்று சொல்ல, அவ்வந்தணன் மனம் வருந்தி, அவன் சொல்லியதுபோல் செய்தவுடன், ஜாதகன் பொருளைக் கொடுத்தான். அந்தணனும் அதை வாங்கிக்கொண்டு சென்றான்.

25. மணமது முடித்துப் பின்பு மறையவன் சிலநாள் சென்று
கனமுடன் பொருளை யீயக் கங்கையின் குலத்தோன் றானும்
பிணையாக வதிகம் பொன்னைப் புகலவே மனம்போ லீந்து
அனையவே மறையோன் றானும் அறைகுவான் மனவெ றுப்பால்.

25. உபநயனத்தை முடித்துக்கொண்டு, சில காலம் சென்று, அந்தணன் ஜாதகனிடம் பணத்தைத் திருப்பிக் கொடுத்து, நிலத்தைக் கேட்கும்போது, ஜாதகன் பொய்யாக அதிகமான பொருளைக் கேட்டான். அந்தணனும் அதேபோல் கொடுத்துவிட்டு மனவெறுப்புடன் கூறுகின்றான்.

26. மதலையின் சுபத்துக் காக வாங்கின பொருளே யன்றி
நிதியது வேறே யில்லை நீயதமா யதிகம் பெற்றாய்ச்
சதிசெய்தாய் மறையோர் தம்மைச் சந்ததி தோட மாகும்
விதியினுல் மறுஜன் மத்தில் வீறுது வாண்பா லுந்தான்.

---

[1] அந்தணன்.

26. என்னுடைய மகனின் உபனயனத்துக்காகக் கொடுத்த பொருளைத் தவிர உனக்குத் தரவேண்டியது வேறு இல்லை. நீ அனியாயமாக அதிகமான பொருளை என்னிடமிருந்து வாங்கிக்கொண்டாய். அந்தணனை ஏமாற்றி விட்டாய். அதனால் உன் சந்ததிக்குத் தோஷமாகும். மறு பிறவியில் புத்திரர்கள் தோன்றமாட்டார்.

27. வேதிய னிவ்வாறு சொல்லி விலகினு னிதுவோர் தோடம்
தீதிலாக் கறுப்ப னென்று தீர்க்கமாய் வாசங் கொல்லை
நீதியாய் மரத்தை வெட்டி நிமலன்தன் வேலைக் காகச்
சூதான கறுப்பன் றனுந் தங்குமில் விலகின தாலே ;

27. அந்தணன் இங்ஙனம் கூறிவிட்டுச் சென்றான். இஃது ஒரு தோஷம். இவன் வீட்டுக் கொல்லையில் கறுப்பன் சாமி ஒன்று வசித்து வந்தது. அந்த மரத்தை இந்த ஜாதகன் தன் வேலைக்காக வெட்டிவிட்டான். கறுப்பன் சாமிக் குத் தங்குமிடம் இல்லாமற் போனதால்;

28. வேறொரு விருட்சஞ் சென்று விளம்பிற்றுச் சொல்லக் கேளாய்த்
தீரமாய் ஜனித்த வில்லஞ் செல்லாமல் வேறு வில்லம்
மாறுவாய்ச் சுதராண் தோட மறைந்தது கறுப்பன் தானும்
கூறின விரண்டு சாபங் கூடிற்று விவனுக் கேதான்.

28. வேறொரு மரத்துக்குச் சென்றது. அது கூறிய சாபத்தைக் கேளுங்கள். உனக்கு, பிறந்த வீடு கிடைக்காமல் வேறு வீடு பெற்று வாழ்ந்து வருவாய். ஆண் குழந்தைக்குத் தோஷம் உண்டு என்று கறுப்பன் சாமி சொல்லியது. சொல்லிய இரு சாபங்களும் ஜாதகனுக்கு ஏற்பட்டன.

29. அந்திய காலந் தன்னில் அவன்சுத ராணில் லாமல்
அந்தகன் பக்கல் சென்று அயன்றன்னால் வரையப் பட்டு
வந்தவ னிவனே யென்றோ மறைகின்றோ மிச்சென் மத்தில்
சந்ததி யாண்பால் தோடஞ் ஜனித்தவில் விலகு மென்றோம்.

29. ஜாதகன் (முற்பிறவியில்) தன் கடைசிக் காலத்தில், ஆண் குழந்தை களில்லாமல், மரணமடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்த வன் என்று கூறுகின்றோம். இப்பிறவியிலும் ஆண் சந்ததிக்குத் தோஷமும் பிறந்த வீடு கைவிட்டும் போம் என்றோம்.

30. எந்தக்கா லத்தி லேதான் இவனில்லம் விலகுஞ் சொல்வீர்
இந்தவாறு மன்ன னுக்கு எண்ணான்கு வாண்டு மேலே
சொந்தமாய் மேற்குத் திக்கில் செய்குவான் கிருகந் தானும்
அந்ததோ ரிடத்தி லேதான் அணுகுவா னென்று சொன்னோம்.

30. ஜாதகனுக்கு எந்தக் காலத்தில் வீடு நீங்கும் ? கூறுங்கள். ஜாதக னுடைய முப்பத்திரண்டாம் வயதுக்குமேல், இந்த வீட்டுக்கு மேற்குத் திக்கில், சொந்தமாக வீடு ஒன்று கட்டுவான். அந்த வீட்டிற்குச் சென்று வாழ்ந்து வருவான்.

## மந்திர சாந்தி

31. மறையவர் முனிதம் சாபம் விலகவே கிரியை கேளும்
நிறையவே கரும சாந்தி நிமலனுஞ் செய்து மேதான்
அறுகோணந் தாமி ரத்தில் அடைத்துப்பின் னணிவா ளுகில்
வருஞ்சுதர் விருத்தி யாகு மங்கையுங் கேட்க லுற்றாள்.

31. அந்தணனுடையவும் முனியினுடையவுமாகிய சாபங்கள் நீங்கச் சாந்திகள் கூறுகின்றோம். ஜாதகன், கரும சாந்திகளை அதிகமாகச் செய்து, தாமிரத் தகட்டில் ஆறுகோணச் சக்கரத்தை வரைந்து, அதை அணிந்து வந்தால், புத்திர விருத்தி ஏற்படும். பார்வதியும் கேட்கலானாள்.

## சாந்தி விவரம்.

32. சாந்தியெவ் விதமாய்ச் செய்ய சாற்றுவீர் முனியே நீர்தாம்!
கூர்ந்துமே சொல்லு கின்றோம் கிரியையின் விவரந் தன்னை
ஆன்றதோர் சமித்துத் தான்யம் அழகிய கலச மொன்பான்
ஈன்றதோ ரோமஞ் செய்து இயல்சத்தி பூசை வைத்து;

32. சாந்தி எப்படிச் செய்யவேண்டும் என்று கூறுங்கள், முனிவரே! சாந்தியின் விபரங்களை ஆராய்ந்து சொல்லுகின்றேன். சமித்துக்கள், தானியம், கலசம் இவை ஒவ்வொன்றும் ஒன்பது வைத்து ஓமம் செய்து சக்தி தேவியின் பூசையையும் செய்து;

33. சகத்திரஞ் ஜபங்கள் செய்து ஷடட்சர மூலஞ் சொல்லி
வகையுட னணிவா ராகில் மைந்தர்கள் விருத்தி யாகும்
தகைமையா யைந்தாங் காண்டஞ் சாற்றுவோ மூலந் தன்னை
இகபரன் பூசை செய்யும் ஈச்வரி கேட்டி டாயே.

33. ஆயிரம் தடவை ஜபங்கள் செய்து ஷடட்சர மூல மந்திரத்தை உச்சரித்து, அந்தத் தகட்டை அணிந்து வந்தால், புத்திர விருத்தி ஏற்படும். ஐந்தாம் காண்டத்தின் மூலமந்திரத்தை விவரமாகக் கூறுகின்றோம். இவ்வுலகில் உள்ளவர்கள் பூசை செய்யும் ஈசுவரியே! கேளுங்கள்.

34. மனைவியின் பூர்வந் தன்னை வறைகின்றோங் காஞ்சி தன்னில்
அனையவே வைச்யச் சேயாய் அவளுமே யுதித்து மேலும்
கனமுள குடும்பி யாகிக் காதலி வரனு முள்ளூர்
இனமதில் வறுமை யின்றி இவளுமே வாழு நாளில்;

34. ஜாதகனுடைய மனைவியின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்தில், வைசிய குலத்தவளாகப் பிறந்து, பெரும் குடும்பமுள்ளவளாகி, உள்ளூரிலிருந்தே கணவனையடைந்து, வறுமைகளில்லாமல் வாழ்ந்துவரும் காலத்தில்;

35. பஞ்சையாய்ப் பெண்ணொ ருத்தி பாலகன் தனக்கு வன்னம்
கெஞ்சியே யிவள்பாற் கேட்கக் கர்வத்தால் கோப முற்று
வஞ்சிமேல் விரோதஞ் சொல்லி மதலைசோ றில்லை யென்றாள்
துஞ்சிய மனத்த ளாகிச் சொல்லுவா ளேழை தானும்,

35. ஏழைப் பெண் ஒருத்தி, தன் குழந்தைக்கு அன்னம் வேண்டி இவளைக் கெஞ்சிக் கேட்கும்போது, இவளும் கர்வமடைந்து, கோபத்தால் அப்பெண்மீது அடாத நிந்தனைகளைக் கூறி, குழந்தைக்கு அன்னமில்லை என்றாள். வருத்தமடைந்த மனமுள்ளவளாகிய ஏழை சொல்லுகின்றாள்.

36. மதலைசோ றீயாப் பாவி மறுஜன்ம மகவா ணின்றி
விதியினால் தோன்றி னாலும் வீறுது நசிக்கு மென்று
நிதியிலா வேழை சொல்லி நீங்கினாள் வேறு இல்லம்
அதுதோட மிவளைப் பற்றி அந்தியக் காலந் தன்னில் ;

36. குழந்தைக்குச் சோறு போடாத பாவியே ! உனக்கு ஏற்படும் மறு பிறவியில், ஆண்குழந்தை உதிக்காது. தவறித் தோன்றினாலும், நிலையாமல் இறந்து போய்விடும் என்று கூறிவிட்டு, வேற்று வீட்டுக்குச் சென்றாள். அந்தத் தோஷம் இவளைப் பற்றியது. இவளும் தன் கடைசிக் காலத்தில் ;

37. பித்தமாங் குணங்கள் கண்டு போஜன வெறுப்பு மாகி
வித்தகன் காலன் பக்கல் மேவியே பிரம னாலே
சுத்தமாய் வரையப் பட்டுத் துலங்கினா ளிவளே யென்றோம்
உத்தமிக் கிச்சென் மத்தில் உறங்கிடுஞ் சுதரா ணென்றோம்.

37. பித்த நோய் ஏற்பட்டு, சாப்பாட்டில் வெறுப்புண்டாகி, மரணமடைந்து மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டுப்பிறப்பவள் இவள் என்று கூறு கின்றோம். இவளுக்கு, இப்பிறவியில், புத்திரர்கள் பிறந்து இறந்து விடுவர் என்றோம்.

38. அந்தோர் தோடந் தீர அருளுவோஞ் சாந்தி தானும்
கந்தவேள் தணிகைக் கேதான் காதலி வரனுங் கூட
சந்தத மேகிப் பின்பு ஷண்முகர்க் கர்ச்சித் தேத்தி
முந்திய மூவேழ் பேர்க்கு முயற்சியா யன்ன மீந்தால்;

38. அந்தத் தோஷம் நீங்கச் சாந்தி யொன்று கூறுகின்றோம். முருகக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திருத்தணிக்கு, இவள் தன் கணவனுடன் சென்று, அங்குள்ள ஆறுமுகக் கடவுளுக்கு அருச்சனை செய்து, துதித்து, இரு பத்தொரு பேர்கட்கு அன்புடன் அன்னமளித்தால் ;

39. முன்வினை நீங்கு மென்றே முதித்திடு மாண்பால் தீர்க்கம்
பிந்திய ஜன்மந் தன்னைப் பேசுவோந் தணிகை தன்னில்
முந்திய மறைக்கு லத்தி லுதிப்பளா மிவளே யென்றோம்
இந்ததோர் ஜன்மந் தன்னில் இவள்செய்த புண்ணிய மென்ன.

39. முற் பிறப்பில் செய்த தீவினை நீங்கிவிடும். பிறக்கும் ஆண் குழந்தை தீர்க்கமாயிருக்கும். இவளுடைய மறு பிறவியைச் சொல்லு கின்றோம். திருத்தணியில், அந்தண குலத்தில், பிறப்பாள் என்று கூறு வோம். இப்பிறவியில் ஜாதகனுடைய மனைவி செய்த நற்காரியங்கள் என்ன ?

40. பலருக்கும் நல்லோ ளாகிப் பஞ்சைமே லிரக்க மாகி
நலமுள வறத்தி லிச்சை நாயகி கொண்ட தாலும்
சிலமில மறு ஜன்மத்தில் பிறப்பளாம் பிரம சேயாய்
மலையிறை மகளே யாங்க ளறைந்தது தப்பா தாமே.

40. பல பேர்கட்கு நல்லவளாகவும், ஏழைகளின் மீது இரக்கமுள்ள வளாகவும், தருமம் செய்து வருவதில் பிரியமுள்ளவளாகவும் இருந்து வந்த தால், அடுத்த பிறவியில் அந்தண குலத்தில் தோன்றுவாள். மலையரசனின் புதல்வியே ! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவரு.

41. அன்னையுஞ் சிவந்த மேனி அழகுளாள் வாத தேகி
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பாள் பாட்டாளி யென்றோம்
உன்னதக் குணத்தா ளாகும் உரைக்குமுன் கோபி யாகும்
அன்னவள் வர்க்க நாசம் அவளுமே நிந்தை யுள்ளாள்.

41. ஜாதகனுடைய தாயும் சிவந்த உடலுள்ளவள். அழகுள்ளவள். வாத சரீர முடையவள். தன் வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பாள். உழைப்பாளி. உயர்ந்த குணமுள்ளவள். முன் கோப முள்ளவள். அவளுடைய வர்க்கத்தாருக்கு நாசமுண்டாகும். அவளும் பழியை யடைவாள்.

42. அவளுடைப் பூர்வந் தன்னை அறைகின்றோங் கேளுந் தாயே
பவமுள பட்சி மேல்பால் பருகிய சிற்றூர் தன்னில்
இவளுமே தீயின் வம்சம் எய்தியே சுகமுண் டாகி
நவனியில் மதலை யுண்டாய் நாயகி வாழு நாளில் ;

42. ஜாதகனுடைய தாயின் முன் பிறவியைச் சொல்லுகின்றோம். தேவியே ! கேளுங்கள். திருக்கழுக்குன்றத்துக்கு மேற்கில் உள்ள சிறிய ஊரில், வன்னிய குலத்தில் பிறந்து, சுக முள்ளவளாகி, உலகில் குழந்தை களைப்பெற்று, வாழ்ந்து வருங் காலத்தில்;

43. இறப்பினில் கூடு கட்டி இருக்கின்ற பட்சி தம்மைக்
குறிப்பாக வதைப்பி டித்துக் கொன்றனள் பேடை யைத்தான்
வரன்பட்சி மனங்க லங்கி மாண்டது வென்று சொன்னோம்
உறைந்தது வந்தத் தோடம் உத்தமி கேட்டி டாயே.

43. அந்தப் பெண்தன் வீட்டுக் கூரையில் கூடு கட்டியிருக்கும் பறவை களைப் பிடித்து பட்சியைக் கொன்று விட்டாள். ஆண் பட்சி மனம் வருந்தி இறந்தது என்று சொன்னோம். அந்தத் தோஷம் ஏற்பட்டது. உத்தமியே! கேளுங்கள்.

ஆலயத்தில் விளக்கெண்ணெய்த்தீபம் வைத்த தோஷம்

44. இதுவன்றி யின்னு மொன்று இயம்புவே மால யத்தில்
நிதமுமே தீப மொன்று நேர்ந்தனள் சிலநாள் தன்னில்
சதியினல் முத்து வெண்ணெய் ஏற்றின ளென்று சொன்னேம்
அதிபதி யந்தி யத்தில் வாயுவால் பாதை கண்டு ;

44. இதுவல்லாமல் வேறு ஒன்றும் கூறுகின்றோம். ஆலயத்தில் தினந்தோறும் தீபக் கைங்கர்யம் செய்து வந்தாள். சின்னாட்களில் விளக்கெண்ணெயை வார்த்து தீபத்தை ஏற்றினாள். அதனால் அவளுக்கு, கடைசியில், வாயுரோகம் ஏற்பட்டு;

45. மறலியின் பதிக்குச் சென்று மலரயன் வரையப் பட்டு
உறைந்தன ளிவளே யென்றே முயர்பட்சி தோடந் தன்னால்
வருந்துணை சேத மாகும் வரனுமே மத்தில் மாள்வன்
திருமகள் பின்ஜன் மத்தைச் செப்புவோங் கேளுந் தாயே.

45. மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவள் என்று சொன்னோம். பக்ஷியினுடைய தோஷமும் இவளைச் சார்ந்தது. அதனால் உடன் பிறந்தவர்கட்குத் தோஷமேற்படும். இடையில் கணவன் மரணமடைவான். ஜாதகியினுடைய தாயின் மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

46. மறுஜன்மம் வள்ளூர் தன்னில் மாதுமிக் குலத்தி லேதான்
உறைகுவா ளென்று சொன்னோம் உரைக்கின்றோ நாற்பா னலில்
பெருமையாய்த் தனுசு மாதம் பேசுவோம் மாதிரு கண்டம்
திறமையாய் மூன்று மாண்டில் சித்திரை மாதந் தன்னில் ;

46. மறு பிறவி, திருவள்ளூரில், இதே குலத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் மார்கழி மாதத்தில் தாய்மரணமடைவாள். ஜாதனுடைய மூன்றும் வயதில் சித்திரை மாதத்தில்;

47. தந்தைக்குக் கண்ட மென்றேஞ் ஜாதகன் தனக்கு மேதான்
எந்தையே யறுபான் ஐந்தில் ஆவணி மாதந் தன்னில்
முன்பக்கந் துவாதசி தன்னில் மொழிகின்றேங் கண்டந் தானும்
பிந்திய ஜன்மந் தன்னைப் பேசுவோம் விவர மாக.

47. தந்தை மரண மடைவான். ஜாதகன், தனது அறுபத்தைந்தாம் வயதில் ஆவணி மாதம் வளர்பட்சத்தில் துவாதசி திதியில் இறந்து விடுவான். அவனுடைய மறு பிறவியை விவரமாகச் சொல்லுகின்றோம்.

48. பிருதிவி தலத்தி லேதான் பிராமண குலமு திப்பான்
அரன்தேவி கேட்க லுற்றாள் அவன்செய்த புண்ணிய மென்ன
உரைப்பீர்கள் முனியே நீர்தாம் உலகுக்கு நல்லோ னுயும்
முருகன்மேல் பத்தி யாயு முள்மனங் கவடு மின்றி ;

48. காஞ்சீபுரத்தில், அந்தண குலத்தவனாகப் பிறப்பான். பார்வதி தேவி கேட்கலானாள். அவன் அப்பிறவியில் செய்த நற்காரியங்கள் என்னவென்று கூறுங்கள், முனிவரே ! உலகத்தவருக்கு நல்லவனையும், முருகக் கடவுள்மீது பக்தியுள்ளவனையும், கபடமில்லாதவனையும் ;

49. வருவதால் மறைக்கு லத்தில் வருகுவா னென்று சொன்னோம்
திருமகன் யோகச் சேதி செப்புவோ மினிமே லாக
வறுமைக ளில்லா னுகும் மாநிலம் விருத்தி செய்வன்
அறமதி லிச்சை உள்ளான் அவனுஞ்சல் லியங்கள் கொள்ளான்,

49. வாழ்ந்து வருவதால், அந்தண குலத்தில் பிறப்பான் என்று கூறினேம். இனி, ஜாதகனுடைய மற்ற யோக விபரங்களைக் கூறுவோம். தரித்திரம் இல்லாதவன். விளை நிலங்களைப் பெருக்குவான். தருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். கடன் படாதவன்.

50. மனைவியால் யோகம் வாய்க்கும் மாடுகள் விருத்தி யுள்ளான்
கனமுடன் வாழ்வா னாகுங் காணுது தரித்தி ரங்கள்
அனையவே யிவன்பின் ஞலே அவன்பாரி மரண மெய்தும்
பிணையிலாத் தவங்கள் செய்யும் புண்ணிய வதியே கேளாய்.

50. ஜாதகனுக்கு, தன் மனைவியால் யோகம் ஏற்படும். கால் நடைகள் விருத்தியுண்டு. கனவானுக வாழ்வான். தரித்திர மில்லாதவன். இவனுக்குப் பின்னுல் இவன் மனைவி மரணமடைவாள். தீங்கில்லாத தவங்களை யியற்றும் தேவியே ! கேளுங்கள்.

51. ஜாதகன் ஜனன காலஞ் சந்திரன் தசையி ருப்பு
ஓதுவே ளுண்டு வேழும் உறைந்திடுந் திங்க ளெட்டும்
மேதினில் துணைவி ருத்தி மிக்கதோர் தந்தை கண்டம்
ஜாதகன் தனக்கு ரோகஞ் சார்ந்துபின் நிவிர்த்தி யாகும்.

51. ஜாதகனுடைய ஜனன காலத்தில் சந்திரமகாதசை இருப்பு ஏழு வருடங்களும் எட்டு மாதங்களுமாம். அக் காலத்தில் உடன் பிறந்தவர்களுக்கு விருத்தி ஏற்படும். ஜாதகனுடைய தந்தை மரணமடைவான். ஜாதகனுக்கு ரோகம் ஏற்பட்டுப் பிறகு நீங்கும்.

52. குடும்பமு மலைச்ச லாகுங் குறையான மனங்க ளுண்டு
அடைவுடன் [1] காலி பீடை அதிகமாய் நிந்தை யுண்டு
தடமதில் களவு கொஞ்சங் சல்லிய மிகவே சேரும்
திடமதா யிரண்டி லேதான் செப்புவோம் விவர மாக.

52. குடும்பத்தில் அலைச்ச லுள்ளவன். மனத்தில் சஞ்சலங்கள் உள்ளவன். கால்நடைகட்குச் சேதமுண்டாகும். அதிகமான பழிகளை அடைவான். வீட்டில் களவுபோகும். அதிகக் கடன் ஏற்படும். மற்ற விபரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றேம்.

---

[1] மாடு கன்றுகள்.

## ஜாதகம் 55.

1. மதிகன்னி பணியுங் கோலில் மால்புகர் பானு தேளில்
விதிநந்தி பொன்சேய் நண்டு வீணையுஞ் ஜன்ம மாக
இதுவிதங் கோளும் நின்றால் இயம்புவீர் பலனை யென்று
அதிபதி கேட்கும் போது மாமுனி புகலு கின்றார்.

1. சந்திரன் கன்னியிலும், ராகு துலாத்திலும், புதன் சுக்கிரன் சூரியன் விருச்சிகத்திலும், சனி விருஷபத்திலும், குரு செவ்வாய் கடகத்திலும், கேது மேஷத்திலும் இருந்து, ஜன்ம லக்கினம் மிதுனமாக இருப்பின், (இங்ஙனம் நவக்கிரக நிலையிருந்தால்) பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கும்போது, முனிவர் கூறுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | சனி | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | குரு செவ்வாய் |
| | | | |
| | புதன் சுக்கிரன் சூரியன் | ராகு | சந்திரன் |

2. இந்தசே யாணுஞ் ஜன்மம் இல்லமுங் கீழ்மேல் வீதி
தென்வாசல் மாயோன் மேற்கில் சிதைந்திடுங் காளி தென்மேல்
நன்னதி யருகில் தங்கும் நற்றந்தி யீசன் கீழ்ப்பால்
சின்னவூர் கங்கை சேயாய் ஜனிப்பனு மிந்தப் பாலன்.

2. இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. பிறந்த வீடு கிழக்கு மேற்காக உள்ள வீதியில் இருக்கும். அது தெற்கு நோக்கிய வாயிலையுடையது. திருமாலின் இடிந்த ஆலயம் ஒன்று மேற்குத் திசையிலிருக்கும். காளி கோயில் தென் மேற்குத் திசையிலும் ஒரு புண்ணிய ஆறு பக்கத்திலும், கிழக்கில் விநாயகர் சிவபெருமான் இவர்களது ஆலயங்களும் உள்ள சிற்றூரில், வேளாள குலத்தவனாக இந்த ஜாதகன் பிறப்பான்.

3. பாலகன் யோகச் சேதி பெற்றதாய் தந்தை யோகம்
சாலவே துணைவர் யோகந் தன்மனை புத்திர யோகம்
ஏலவே முன்பின் ஜன்மம் இயம்புவோ மிந்நூல் தன்னில்
ஆலத்தை யுண்டோன் தேவி அம்பிகை யாளே கேளாய்.

3. ஜாதகனுடைய யோகச் செய்தியையும், தாய் தந்தையர் உடன்பிறந்தவர் மனைவி புத்திரர் இவர்களுடைய யோகங்களையும், இவர்களுடைய முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்நூலில் சொல்லுகின்றோம். ஆலகால விஷயத்தை யருந்திய சிவபெருமானின் தேவியே! கேளுங்கள்,

4. தந்தையுந் துணையாண் காணன் சத்திமா ரிருவர் தீர்க்கம்
பிந்தைய பாகந் தன்னில் பேசுவோ மவர்கள் சேதி
விந்தையாய்ப் பிதாகு ணத்தை யியம்புவோஞ் சிவந்த மேனி
கந்தன்மேல் பத்தி பூண்பன் கரமதில் கமல ரேகை.

4. தந்தைக்கு உடன் பிறந்தவரில்லை. இரு சகோதரிகள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். பிற்பாகத்தில் அவர்களுடைய சேதியைச் சொல்லு கின்றோம். ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். சிவந்த மேனியன். குமாரக் கடவுள்மீது பக்தியுள்ளவன். கையில் தாமரை ரேகை யுள்ளவன்.

5. ஊகவான் பலபேர் நேயன் உண்மையா மனத்த னாகும்
ஆகம நுணுக்கந் தேரான் அடைந்தோரை யாத ரிப்பன்
நாகரி கங்க ளுண்டு நற்சுகி போஜ னத்தன்
வேகமாய் நடக்க வல்லான் விளைபுலம் விருத்தி செய்வன்.

5. ஊக முள்ளவன். பல பேருக்குப் பிரியமானவன். உண்மையான மனத்தினன். வேதாந்த ரகசியங்களை அறியாதவன். தன்னை அண்டி வந்தவர்களை ஆதரிப்பான். நாகரிகங்க ளுள்ளவன். சுகமாகச் சாப்பிடுவான். வேகமாக நடக்கும் இயல்பினன். விளை நிலங்களைப் பெருக்குவான்.

6. நன்னடை மிருது வார்த்தை நாற்காலி விருத்தி யுண்டு
தன்மனை தன்னால் யோகந் தரியலர் வெற்றி கொள்வன்
பொன்பணி சேர்ப்பா னாகும் புகழ்ந்தோரை யாத ரிப்பன்
கன்னென மொழியே சொல்வன் கட்டுரை பகரா னாமே.

6. நன்னடத்தை யுள்ளவன். மெதுவாகப் பேசுபவன். கால்நடைகள் பெருகும். தன் மனைவியால் யோகம் அடைவான். விரோதிகளை வெல் வான். பொன்னாபரணங்களைச் சேர்ப்பான். தன்னைத் துதி செய்தவர்களை ஆதரிப்பான். இனிய வார்த்தைகளையே பேசுபவன். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவன்.

7. வஞ்சக வஞ்ச னவன் மறுத்துரை யதிகங் கூறான்
பஞ்சுபோல் நெஞ்ச முண்டு பால்தயிர் பிரிய னவன்
அஞ்சிடா னெதிரிக் கேதான் அற்பரை யுறவு கொள்ளான்
வெஞ்சினம் வெளிக்காட் டாதான் மேவுவான் தலவா சங்கள்.

7. வஞ்சகமுள்ள மனத்தினன். அதிகமாக மறுத்துப் பேசாதவன். மிருதுவான ரோமங்க ளுள்ளவன். பால் தயிர் இவைகளின்மீது விருப்ப முடையவன். தன் விரோதிகட்குப் பயப்படாதவன். அற்பர்களுடன் நட்புக் கொள்ளாதவன். கோபத்தை வெளிவிடாதவன். புண்ணிய தலங்களுக்குச் செல்லுவான்.

8. வண்டிவா கனமு முண்டு வடிமையுங் குடிபெ ருக்கம்
பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்
அண்டினோர்க் குதவி செய்வன் அவன்பந்து பகையு மாவன்
எண்டிசைப் புகழு மேற்பன் எய்திடும் பித்தச் சூடு.

8. வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். பணியாட்களும், குடி மக்களும் அதிகமாக உள்ளவன். பழைய நாள் பூமியை (பிதுரார்ஜித மான சொத்தை) ஜாதகன் பெருக்குவான். தன்னை வந்து யாசிப்பவர் களுக்கு உபகாரம் செய்வான். தன் சுற்றத்தாருக்கு விரோதியாயிருப்பான். எட்டுத் திக்குகளிலும் கீர்த்தி யடைவான். பித்தச் சூடுள்ளவன்.

9. சொன்னவிக் குணத்தா னுக்குச் சுதனுமே வுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அன்புளான் மாஞ்சி வப்பன்
பொன்பணி சேர்ப்பா னாகும் பொறுமையு மடக்க மாவன்
தன்னினத் தவர்க்கு மேலாய்த் தனிகனாய் வாழ்வா னாகும்.

9. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணங்களைச் சொல்லுவேன். அன்புள்ள மனத்தினன். சிவந்த மேனியன். பொன்னாபரணங்களைச் சேர்ப்பான். பொறுமையும் அடக்கமு முள்ளவன். தன்சுற்றத்தாருக்கு மேலாகச் செல்வவானாக வாழ்ந்து வரு வான்.

10. வித்தையுஞ் சமம தாகும் வீண்வம்பில் செல்லா னாகும்
குத்தத்தை மனத்தில் வையான் கோவலர் மதிக்க வாழ்வன்
சித்தமே கரப்பு மில்லான் செய்ந்நன்றி மறவா னாகும்
பத்தினிக் கன்ப னவன் பஞ்சைபோ லுணவு கொள்வன்.

10. சமமான கல்வியறிவுடையவன். வீண்வம்புக்குச் செல்லாதவன். பிறர் செய்யும் குற்றங்களை மனத்தில் வைக்காதவன். அரசர் கொண் டாடும்படி வாழ்வான். மனத்தில் கெட்ட எண்ணங்கள் (சூது) இல்லாதவன். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவன். தன் மனைவிக்குப் பிரியனாவன். ஏழையைப் போலச் சாப்பிடுவான்.

11. தந்தைநாள் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன் வாக்கதைக் காப்பா னாகும்
கந்தன்மேல் பத்தி பூண்பன் காலாட்க ளுடைய னாகும்
முந்தின தலங்கள் செல்வ னுயர்வான குடும்ப மேற்பன்.

11. தன் பிதுரார்ஜிதமான சொத்தைப் பெருக்குவான். தன்னிடம் வந்த வர்கட்கு அன்னமளிப்பான். சொன்ன வார்த்தைகளை நிறைவேற்றுவான். முருகக்கடவுள்மீது பக்தி யுள்ளவன். பணியாட்க ளுடையவன். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்வான். உயர்வான குடும்பத்தை அடைவான்.

12. ரோமங்க ளதிக மில்லான் நுவலுப தேசங் கொள்வன்
தாமதக் குணத்த னவன் சல்லியங் கொள்ளா னென்றும்
பூமிகள் சேர்ப்பா னவன் பூஞ்சோலை துறவு செய்வன்
வாமனன் தங்கை யாளே அவன்துணை யாண்பா லொன்று.

12. அதிகமான ரோமங்க ளில்லாதவன். பெரியோரிடம் உபதேசம் கொள் வான். தாமதமான குணத்தினன். கடன்படாதவன். விளைநிலங்களைச் சேர்ப்பான். தோட்டம் துறவுகள் செய்வான். திருமாலின் தங்கையான பார்வதியே! அவனுக்கு உடன்பிறந்தவன் ஒருவன் உண்டு.

13. கன்னிகை யிருவர் தீர்க்கங் காணுது மற்ற வெல்லாம்
பின்துணை யாண்பால் சேதி பேசுவான் தந்திர மாக
உன்னதக் கலைகள் கற்பன் உணவுக ளதிகங் கொள்வன்
பின்னமில் லாத தேதி பொருத்தமா யுரைப்பா னாகும்.

13. இரு சகோதரிகள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்ற சகோதரர்கள் நிலையார். உடன்பிறந்த இளைய சகோதரனைப்பற்றிச் சொல்லுகின்றோம். தந்திரமாகப் பேசுபவன். உயர்ந்த கலைகளைக் கற்றுணர்வான். அதிகமாகச் சாப்பிடுவான். ஊனமில்லாத சரீர முடையவன். பொருத்தமாகப் பேசுபவன்.

14. வறுமையெப் போதுங் காணன் மலர்க்கரம் விஷ்ணு ரேகை
அரிவையர் மோக ளுவன் ஆவுகள் பணையேர் விருத்தி
நெறியதைக் காப்பா னாகும் நினைத்தது முடிக்க வல்லன்
அரசர்பூ சிதமு மாவன் அடாவடி கொஞ்ச முள்ளான்.

14. ஒரு போதும் தரித்திர மடையாதவன். கையில் விஷ்ணுரேகை யுள்ளவன். பெண்கள்மீது மோகம் கொள்ளுவான். பசுக்கள் (பண்ணை) ஏர் முதலியன விருத்தியாகும். நல்லொழுக்க முள்ளவன். எண்ணிய காரியங்களை முடிக்கக்கூடியவன். அரசரால் நன்கு மதிக்கப்படுவான். சிறிது அடாவடியாகப் பேசுபவன்.

15. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பால் மூன்று
நாரியு மவ்வாறு தீர்க்கம் நாயகன் ஒன்றாய் வாழ்வன்
காரிழை மார்கள் சேதி கழறுவோம் பின்பா கத்தில்
தீரமாய்த் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

15. மனைவி ஒருத்தியே யாகும். மூன்று புத்திரர்கள் தோன்றுவார். மூன்று புத்திரிகளும் தோன்றுவார்கள். எல்லோரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். எல்லோரும் ஒரே குடும்பமாக வாழ்ந்து வருவார்கள். பெண்களின் செய்திகளைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். திடமனத்துடன் தவங்களை இயற்றும் தேவியே! கேளுங்கள்.

16. இருபது விரண்டு ஆண்டுள் இவனுக்குப் பாரி வாய்க்கும்
வருங்கன்னி யுள்ளூர் கீழ்ப்பால் வருகுவாள் தந்தை வர்க்கம்
உரைக்கின்றே மவள்கு ணத்தை உள்மனங் கவடு மில்லாள்
நெறியதைக் காப்பா ளாகும் நீத்தோருக் கன்ன மீவள்.

16. ஜாதகனுடைய இருபத்திரண்டாம் வயதுக்குள் மனைவி வாய்ப்பாள். தன் தந்தையின் வர்க்கத்தைச் சேர்ந்த அப்பெண் உள்ளூருக்குக் கிழக்குத் திக்கிலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். கபடமில்லாத மனத்தினள். நன்னடத்தை யுள்ளவள். துறவிக்கு அன்னமளிப்பாள்.

17. பால்பாக்ய முடைய ளாகும் பந்துவை யாத ரிப்பள்
சீலமு மடக்க வார்த்தை தேரின புத்தி யேற்பள்
காலத்தை யறிந்து ரைப்பள் கணவன்தன் மனம்போல் வாழ்வள்
ஞாலமேல் நல்லேர ளாவள் நன்னடை யுடைய ளாமே.

17. புத்திர பாக்கிய முள்ளவள். தன் சுற்றத்தாரை ஆதரித்து வருவாள். நல்லொழுக்க முள்ளவள். அடக்கத்தோடு பேசுபவள். முதிர்ந்த அறிவாளி. வருங்காலத்தை அறிந்து சொல்வாள். தன் கணவனுடைய மன மறிந்து வாழ்வாள். உலகில் நல்லவளாக இருப்பாள். நன்னடத்தை யுள்ளவள்.

18. கஞ்சமா நிறத்த ளாகுங் காதலி யோக சாலி
வஞ்சனை யெண்ணு நெஞ்ச மடிசிலுக் கினிய ளாகும்
பஞ்சைகட் கன்ன மீவள் பாவையும் விரத மேற்பள்
தஞ்சமாய்ப் புத்திர பாவஞ் சாற்றுவோ மினிமே லாக.

18. தாமரையைப் போன்ற நிறத்தினள். யோகசாலி. வஞ்சனை யெண்ணாத மனத்தினள். உருசியுடன் சமையல் செய்வாள். ஏழைகட்கு அன்ன மளிப்பாள். நோன்புகளை நோற்பாள். இனி ஜாதகனுடைய புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம்.

19. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலமே யில்லை
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொல்வோம்
அத்திரி முனிவர் சொல்வார் அவனுக்குப் புத்திர தோடம்
பெத்தகா ரணத்தை நீங்கள் பேசுவீர் முனியே நீர்தாம்.

19. புத்திர விருத்தியைக் கூற பலமில்லை. தவறிப் பிறந்தாலும் நீடியார் என்று சொல்லுகின்றோம். அத்திரி முனிவர் கூறுகின்றார். அவனுக்குப் புத்திர தோஷம் வந்த காரணத்தைக் கூறுங்கள். முனிவரே! நீர்தாம்.

20. அஞ்சினில் ராகு தங்க [1] ஆரலு மைந்தைப் பார்க்கத்
துஞ்சிடும் மதலை யென்றேன் ஐயமுனி தடுத்துச் சொல்வார்
தஞ்சமா யஞ்சோ னோடு தபனனும் புதனுங் கூடி
நஞ்சுபோல் சனியும் பார்க்க நல்கிடும் முன்னூழ்த் தோடம்.

20. ஜாதகனுக்கு, புத்திர ஸ்தானத்தில் ராகு இருப்பதாலும், அவ்விடத்தை செவ்வாய் பார்ப்பதாலும், பிறக்கும் குழந்தைகள் இறந்துபோம். ஐயமுனி மறுத்துக் கூறுகின்றார். ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரனோடு சூரியனும் புதனும் கூடியிருந்து சனியும் பார்ப்பதால் முற்பிறவி தோஷம் உண்டு.

21. எவ்விதத் தோட மத்தை இயம்புவீர் முனியே நீர்தாம்
பவ்வமா யிவன்முன் ஜன்மம் பட்சியின் தலத்தி லேதான்
நவ்விய வணிகன் வம்சம் நாயக னுதித்து மேலும்
ஒவ்விய வணிபஞ் செய்து உலகினில் கீர்த்தி மானாய்;

21. எந்த விதமான தோஷத்தைச் சொல்லுவீர். தாங்கள், முனிவரே! ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருக்கழுக்குன்றத்தில், வைசிய குலத்தில் பிறந்து, உலகில் வர்த்தகம் செய்து வந்து, புகழடைந்து.

[1] செவ்வாய்

22. * மதலைகள் மனைவி யுண்டாய் வறுமைக ளில்லா னாகிச்
சதமுடன் வாழு நாளில் சாற்றுவோ மூழி தானே
பதியினில் லுரக மொன்று பருகிற்று மகுடத் தாலே
* * * * * * * *

**22.** மனைவி மக்களைப் பெற்று, தரித்திரமில்லாதவனாகி வாழ்ந்து வரும் நாளில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தன் வீட்டில் சர்ப்பம் ஒன்று வந்து படமெடுத்து ;

* இதற்கு மேல் மூலப் பிரதியில் காணப்படவில்லை.

# ஜாதகம் 56.

1. திங்களும் நந்தி யாகச் சிகிகன்னி பொன்னோன் தேளில்
மங்கலன் ராகு மீனம் மால்சனி யிரவி மானில்
கங்கைகோள் சாடி யாகக் கலந்துமே வீணை ஜன்மம்
இங்கிவை கோளும் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் விருஷபத்திலும், கேது கன்னியிலும், குரு விருச்சிகத்திலும், செவ்வாய் ராகு மீனத்திலும், புதன் சனி சூரியன் மகரத்திலும், சுக்கிரன் கும்பத்திலும் இருந்து, மிதுனம் ஜன்ம லக்கினமாக இருப்பின், பலனைக் கூறுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் ராகு | | சந்திரன் | லக்கினம் |
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | |
| புதன் சனி சூரியன் | | | |
| | குரு | | கேது |

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது வாண்பால் ஜன்மம்
வருமில்லங் கீழ்மேல் வீதி வாசலு மெமனின் பார்வை
பெருவயி றப்பன் மேல்பால் பேதைமா காளி கும்பம்[1]
அறுமுக னருகில் தங்கும் அணுகிய சீறுவூ ராகும்.

2. அகத்திய முனிவர் கூறுகின்றார். இஃது ஆண்மகனின் குறிப்பு. இவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. மேற்குப் பக்கத்தில் விநாயகரின் ஆலயமும், காளி கோயில் வடமேற்குத் திக்கிலும், சுப்பிரமணியசுவாமி கோயில் அருகிலும் உள்ள சமநிலையுள்ள ஊரில் பிறப்பான்.

3. இன்னவன் யோகச் சேதி இவன்தந்தை தாயின் யோகம்
தன்துணை களத்ர புத்ரர் ஜாதகன் முன்பின் ஜன்மம்
பன்னுவோம் நவக்கோ ளாலே பாலகன் தந்தைக் கேதான்
கன்னிமார் மூவ ரென்றோங் காணாது வாண்பா லுந்தான்.

3. ஜாதகனுடைய யோகச் செய்தியையும், இவனுடைய தந்தை தாய் உடன்பிறந்தவர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும், நவக்கிரக நிலையை ஆராய்ந்து கூறுவோம். ஜாதகனுடைய தந்தைக்கு (உடன்பிறந்த சகோதரிகள்) மூவர். ஆண் மகனில்லை என்று சொல்லுவோம்.

---

[1] வடமேற்கு.

4. தந்தையின் குணத்தைச் சொல்வோஞ் சாந்தவா னிருநி றத்தன்
வந்தநோய் விலக்கு வானும் மறுதேசஞ் சமமாய்ச் செல்வன்
எந்திடம் பெருமை யேற்பன் இன்பச்சொல் ஊக சாலி
கந்தன்மேல் பத்தி கொள்வன் கல்வியு முடைய னாமே.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். சாந்த முடையவன். இரு நிறமுள்ளவன். ஏற்பட்ட நோய்களைத் தீர்ப்பான். வேறு தேசத்துக்குச் செல்வான். எவ்விடத்திலும் புகழுடைவான். இன்பமாகப் பேசுபவன். ஊகமுள்ளவன். முருகக்கடவுள்மீது பக்தி கொள்ளுவான் கல்வியறி வுள்ளவன்.

5. பலபேர்க்கும் பந்தி னர்க்கும் பரிந்துப சாரஞ் செய்வன்
கலகத்தைக் கூறு னாகுங் காதலி மார்கள் மோகன்
புலவனு மிளம னத்தன் பொருந்திடும் நாபிச் சூடு
சலந்தீர்த்தஞ் தோய்வா னாகுஞ் சமயோகம் வறுமை காணன்.

5. பல பேர்களுக்கும் தன் உறவினருக்கும் அன்புடன் உபசாரம் செய்வான். கலகம் செய்யாதவன். பெண்கள்மீது மையல் கொள்வான். புலவன். இளகிய மன முடையவன். நாபிச் சூட்டு நோயுள்ளவன். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். சமமான யோக முடையவன். தரித்திர மில்லாதவன்.

6. மந்திர வைத்யஞ் செய்வன் மாமுனி வார்த்தை கூறுவன்
நிந்தையுங் கொஞ்ச மேற்பன் நீர்தோய்வன் வெளிம யக்கன்
சிந்துர மெழுத வல்லான் சித்தினி சாதி யாவன்
நொந்தவர்க் குதவி செய்வன் நிருபர்க ளிட்டங் கொள்வன்.

6. மந்திரம் வைத்தியம் இவைகளைச் செய்து வருவான். பெரிய முனி வரைப் போல் பேசுபவன். பழிகள் சிறிது அடைவான். புண்ணிய தீர்த்தங் களில் நீராடுவான். உலகத்தவரை மயக்குவான். சித்திரங்களை நன்கு எழுதுவான். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன். கஷ்டமடைந்தவர்கட்கு உபகாரம் செய்வான். அரசர்கட்குப் பிரியமானவன்.

7. இக்குண முடையோ னுக்கு இவனுமே வுதிப்பா னாகும்
மிக்கவே யிவன்கு ணத்தை விளம்புவோ முளைச்சல் நீட்சி
தக்கவே சிவந்த மெய்யன் சாந்தவான் கல்வி ரண்டு
அக்கரை செல்வா னாகும் அரசரால் செட்டுச் செய்வன்.

7. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மெல்லிய நீளமான தேகமுள்ளவன். சிவந்த நிறமுடையவன். சாந்த முள்ளவன். இருவிதக் கல்வி கற்பான். அக்கரைக்கு (சமுத்திரம் தாண்டி)ச் செல்வான். அரசருதவியால் வியா பாரம் செய்வான்.

8. சித்திர வேலே செய்வன் சனசகா யங்க ளுள்ளான்
உத்தம ஞகி வாழ்வன் ஓராறு முகத்தோன் பத்தி
குத்தத்தைச் சேர்க்கா ஞகும் கூறுஞ்சொல் சுகமே வெய்தும்
புத்தியில் பெரியோ ஞவன் புதிதான வில்லஞ் செய்வன்.

8. சித்திர வேலேகள் செய்வான். ஜனங்களால் உபகாரம் அடைவான். உயர்ந்தவஞகி வாழ்வான். சுப்ரமணியக் கடவுள்மீது பக்தியுடையவன். குற்றம் புரிபவனேடு சேராதவன். பேசும் வார்த்தைகள் இனிமையாகவே இருக்கும். புத்தியில் பெரியவஞ யிருப்பான். புதிய வீடு கட்டுவான்.

9. புராதனம் விருத்தி செய்வன் புண்ணிய மனத்த ஞகும்
தராதர மறிவா ஞகும் சத்புத்ர னென்று சொல்வார்
குறைநிறை யோக முண்டு கோபத்தை வெளிக்காட் டாதான்
வருந்துணே யாண்பால் ரண்டு அறிவிப்போந் தீர்க்க மாக.

9. பிதுரார்ஜிதமான நிலங்களேப் பெருக்குவான். புண்ணியமான மனத்தினன். நன்மை தீமைகளின் தராதரங்களே அறிவான். நல்ல புத்திரன் என்று உலகத்தவரால் சொல்லப்படுவான். குறைந்தும் பின்பு நிறைந்துமுள்ள யோகமுண்டு. கோபத்தை வெளிவிடாதவன். இரு சகோதரர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்று சொல்லுகின்ருேம்.

10. பின்துணே யாகச் சொல்வோம் பேசுவோ மொருவன் சேதி
கன்னியர் மோகங் கொள்வன் கவடான வார்த்தை சொல்வன்
பன்னியே பேச வல்லன் பயிர்த்தொழில் புரிவா ஞகும்
தன்னிலே வறுமை காணுன் சல்லியங் கொள்ளா ஞகும்.

10. அவர்கள் ஜாதகனுக்குப் பின் பிறந்தவர்கள் என்று சொல்லுகின்ருேம். அவர்களில் ஒருவன் செய்தியைக் கூறுகின்ருேம். பெண்களிடம் மையலுள்ளவன். கபடமாகப் பேசுவான். பன்னிப் பன்னிப் பேசுபவன். விவசாயம் செய்து வருவான். உலகில் வறுமையில்லாதவன். கடனுபத்ரவ மில்லாதவன்.

11. பாரியு மொன்றே யாகும் பாவையு மன்னே வர்க்கம்
கூறுவோஞ் சுதராண் ரண்டு கோதையு மொன்றே தீர்க்கம்
வீரிய னென்ருய் வாழ்வன் வீண்செல வில்லா ஞகும்
ஆறுமா முகனேப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

11. மனேவியும் ஒருத்தியேயாகும். அப்பெண்ணும் தன் தாயின் வர்க்கத்தினரைச் சேர்ந்தவள் என்ருேம். இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் உள்ளனர் என்றும், அவர்கள் தீர்க்காயுளுள்ளவர்கள் என்றும் சொல்லுவோம். இவன் ஜாதகனுடன் ஒரே குடும்பமாக வாழ்ந்துவருவான். வீண் செலவுகளில்லாதவன். ஆறுமுகனேப் பெற்ற அம்பிகையே! கேளுங்கள்.

12. பின்துணே சேதி தன்னைப் பொருத்தமா யுரைப்பா னாகும்
தன்மனந் தந்திர வார்த்தை மறுமொழி யதிகங் கூறுவன்
மன்னவ ருறவே கொள்வன் மாற்றலர் தமைஜ யிப்பன்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பான் நெறியைக் காப்பன்.

12. ஜாதகனுடைய இளேயச் சகோதரனைப்பற்றிச் சொல்லுகின்றோம். பொருத்தமாய் பேசுபவன். மனத்திலுள்ளதைத் தந்திரமாகப் பேசுபவன். அதிகம் எதிர் வார்த்தை சொல்லுபவன். அரசருடன் உறவாடுவான். விரோதிகளை வெல்வான். தன்வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பான். நல்லொழுக்க முள்ளவன்.

13. வேறுநா டதனி லேதான் வித்தகன் சிலநாள் வாசம்
தீரமா யரசர் மூலஞ் செட்டுக்கள் செய்வா னாகும்
பாரதை விருத்தி செய்வன் பணிதிபாத் திரங்கள் சேர்ப்பன்
மாறியே சொல்வா னாகும் அரிபோலச் கோப முண்டு.

13. ஜாதகன் சில நாட்கள் வேறு தேசத்தில் வசிப்பான். அரசாங்க உதவியால் தொழில் செய்து வருவான். பூமியைப் பெருக்குவான். ஆபரணங்களையும் பாத்திரங்களையும் சேர்ப்பான். மாற்றிப் பேசும் இயல்பினன். சிங்கம்போல் கோபங்கொள்ளுவான்.

14. மணமது வொன்றே யாகு மாமியின் வர்க்கம் நேரும்
பிணையிலரச் சுதராண் ரண்டு பெண்ணதவ் வாறு தீர்க்கம்
துணைவரோ டொத்து வாழ்ந்து செல்லுவான் வேரு கத்தான்
கனமுடன் வயது தீர்க்கங் காசினில் வறுமை காணன்.

14. இவனுக்கு மணம் ஒன்றே. அவளும் தன் மாமியின் வர்க்கத்தினரைச் சேர்ந்தவள். இருபுத்திரர்களும் இருபுத்திரிகளும் பிறந்து தீர்க்காயுளுடனிருப்பர். தன் சகோதரனுடன் ஒற்றுமையுடன் வாழ்ந்து வருவான். பிறகு தனியாகச் செல்வான். நீண்ட ஆயுளுள்ளவன். இவ்வுலகில் பணத்துக்குத் தரித்திரமில்லாதவன்.

15. இருபது வொன்ப தாண்டில் இவனுக்குப் பாரி வாய்க்கும்
வருங்கன்னி தந்தை வர்க்க மருவிடுங் குணத்தைக் கோளாய்
கருநிறஞ் சமதே கத்தாள் இடரான புத்தி யில்லாள்
குறையென்றோர்க் குதவி செய்வள் கோதையும் விரதம் பூண்பள்.

15. ஜாதகனுக்கு இருபத்தொன்பதாம் வயதில் மனைவி வாய்ப்பாள். மனைவி தந்தையின் வாக்கத்திலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைக் கேளுங்கள். கரிய நிறமுள்ளவள். சமமான சரீர முடையவள். தீய புத்தி யில்லாதவள். கஷ்டமடைந்தவர்கட்கு உபகாரம் செய்வாள். நோன்புகள் நோற்பாள்.

16. சுகமுள குடும்பி யாவள் சொல்லதைக் காப்பா ளாகும்
பகையென்று மனத்தில் வையாள் பரிந்துப சாரஞ் செய்வள்
அகமதில் வந்த பின்பு அம்புலி போல யோகம்
சகமதில் நல்லோ ளாவள் செப்புவோம் புத்திர பாவம்.

16. சுகமுள்ள குடும்பியாவள். தனது வார்த்தைகளைக் காப்பாற்றுவாள். விரோதம் பாராட்டாதவள். அன்புடன் உபசாரம் செய்வாள். இவள் வீட்டுக்கு வந்த பிறகு பிறைச்சந்திரன்போல் யோகம் வளரும். உலகில் நல்லவளாவாள். இவளது புத்திரபாவத்தைச் சொல்லுகின்றோம்.

### ஐந்தாம் பாவம்

17. சுதர்களு மாண்பா லொன்று தோகையு மவ்வாறு தீர்க்கம்
இதுவுந்தென் முனிவர்[1] கூற இயல்சய முனிவர் சொல்வார்
புதன்சனி யிரவி யைந்தில் பொருந்தியே யிருப்ப தாலே
முதல்ரண்டு சுதர்கள் தோட மேவிடும் பால னுக்கு.

17. ஒரு புதல்வனும் ஒரு புதல்வியும் உள்ளனர். அவர்கள் தீர்க்காயுளுள்ளவர்கள். இங்ஙனம் அகத்திய முனிவர்கள் சொல்லும்போது, ஜயமுனிவர் கூறுகின்றார். புதன் சனி சூரியன் ஐந்தாமிடத்தில் இருப்பதால் முதலில் தோன்றும் புத்திரருக்குத் தோஷமேற்படும்.

### வேறு.

### ஏழாம் பாவம்

18. இதற்குநே ரிடையாய்ச் சாதகச் சுருதி
யிதிலேழாம் பாவத்தைப் பார்க்க
அதுகாலம் பிணிகள் அணுகிடு மென்றோம்
அதுவின்றித் தந்தையுங் கண்டம்
இதற்குமே சாட்சி யியம்பினோ மறிவீர்
ஏழினுக் குடையவ னாறில்
சதியாக விருக்கில் தையலுந் தவறுஞ்
சந்ததி யிரண்டுமே தோடம்.

18. இதற்கு நேராக ஜோதிட நூலில் ஏழாம் பாவத்தைப் பார்க்கவும். அதுவல்லாமல் அக்காலத்தில் நோய்கள் உண்டாகும். தந்தைக்கும் கண்டம் ஏற்படும். இதற்கு அத்தாட்சியாகயும் சொன்னோம். தெரிந்து கொள்ளுங்கள். ஏழாம் வீட்டுக்குரியவன் ஆறும் வீட்டில் இருந்தால் மனைவியும் தவறுவாள். இரு சந்ததிக்கும் தோஷம் உண்டாகும்.

### வேறு

19. பின்சுதர் விருத்தி யென்றோம் பிழைவரா விந்த வார்த்தை
அன்னையின் குணத்தைச் சொல்வோம் அன்புள மனத்த ளாகும்
முன்கோபம் பின்பு சாந்த மாளன்தன் மனம்போல் வாழ்வள்
தன்துணை யாண்பால் மூன்று தையல ரிரண்டே தீர்க்கம்.

19. பின்னால் தோன்றும் புத்திரர்கட்குத் தீங்கு நேராது. இந்த வார்த்தைகள் தவரு. தாயினுடைய குணத்தைக் கூறுகின்றோம். அன்புள்ள மனத்தினள். முன்கோப முடையவள். பிறகு சாந்தமடைவாள். தன் கணவன் மனமறிந்து வாழ்வாள். தாய்க்கு மூன்று சகோதரர்களும் இரு சகோதரிகளும் தீர்க்கமுறுவர்.

---

[1] அகத்தியர்.

20. விரதங்கள் பூண்பா ளாகும் வீண்வார்த்தை புகலா ளாகும்
திருமக் ளொப்ப தாகும் செய்ந்நன்றி மறவா ளாகும்
கரைமன முடைய ளாகும் கலந்திடும் வாயு பீடை
உரைக்கின்றே மிவள்தன் பூர்வம் உத்தமி கேட்டி டாயே.

20. நோன்புகள் நோற்பாள். வீண்வார்த்தைகள் பேசாதவள். இலக்குமியை யொத்தவள். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவள். இளகிய மன முள்ளவள். வாயுநோயுள்ளவள். இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். உத்தமியே! கேளுங்கள்.

21. ஆலங்கா டதனி லேதான் அறுகினுள் கர்ண சேயாய்ப்
பாலர்க ளுடைய ளாகிப் பகவானின் பத்தி பூண்டு
சீலமு மறத்தி லிச்சை சென்றனள் கால னூடு
மால்மகன் வரையப் பட்டு வந்தன ளிந்த மாது.

21 திருவாலங்காட்டில் கருணீகர் குலத்தில் பிறந்து, மக்களைப் பெற்று, தெய்வபக்தி கொண்டு, நல்லொழுக்கம் உடையவளாகி, தருமம் செய்வதில் பிரியங்கொண்டு வாழ்ந்து, எமபுரம் அடைந்தாள். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இந்தப் பெண் (ஜாதகனின் தாய்).

22. தந்தையின் பூர்வந் தன்னைச் சாற்றுவோங் கடையூர் தன்னில்
வந்தனன் வைச்யச் சேயாய் வணிபங்கள் மிகவே செய்து
நிந்தையு மில்லா னாகி நீறணிக் கடவுள் பத்தி
இந்தவன் கொண்டு மேதான் இளைத்தோருக் கன்ன மீந்து ;

22. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருக்கடையூர் க்ஷேத்திரத்தில் வைசியகுலத்தவனாகப் பிறந்து, வர்த்தகங்களை அதிகமாகச்செய்து, அபவாதங்களை அடையாதவனாகி, சிவபெருமானின் பக்திகொண்டு, ஏழைகளுக்கு அன்னமளித்து வந்து ;

23. காலன்தன் நாட டைந்து கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமாங் குலத்தி லேதான் ஜனித்தன னிலங்கைத் தீவில்
மேல்வருஞ் ஜன்மஞ் சொல்வோம் வேலன்வாழ் பழனி நாட்டில்
சாலவே சத்திரியச் சேயாய்த் தானவ னுதிப்பா னென்றேம்.

23. எமபுரம் அடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, நல்லொழுக்க முடைய குலத்தில் இலங்கைத்தீவில் பிறந்தான். அடுத்த பிறவியைச் சொல்லுகின்றேம். குமரக்கடவுள் வாழ்ந்து வரும் பழனியில் க்ஷத்திரிய குலத்தவனாகப் பிறப்பான் என்று சொல்லுவோம்.

24. இன்னவன் முன்ஜன் மத்தை எடுத்துநா முரைக்கக் கேண்மோ
கன்னியா குமரி தன்னில் கலந்தனன் செங்குந்த வம்சம்
தன்மனை மதலை யுண்டாய்த் தரணியில் வறுமை யின்றிப்
பொன்பணி யதிக முண்டாய்ப் பூமியில் நெசவு செய்து ;

24. ஜாதகனுடைய முற்பிறவியை எடுத்துக் சொல்லுகின்றோம். கன்னியாகுமரியில் செங்குந்தமரபில் பிறந்தான். மனைவி மக்களைப் பெற்று, உலகில் வறுமையின்றி, பொன் ஆபரணங்களை அதிகம் பெற்று, பூமியில் நெசவுத் தொழில் செய்து வந்து ;

25. முருகர்தம் பத்தி கொண்டு முதிர்ந்தோருக் கன்ன மீந்து
பெருநதித் தலங்கள் சென்று புக்கனன் கால னூடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனு மிலங்கைத் தீவில்
அறிவிப்போ மிவனின் யோகம் மங்கையே கேட்டி டாயே.

25. முருகப்பிரான்மீது பக்தியுடன் பெரியோர்களுக்கு அன்னமளித்து வந்து, புண்ணிய நதிகளில் நீராடி, க்ஷேத்திரங்கள் சென்று மரணமடைந் தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, இலங்கைத்தீவில் பிறப்பான். இவனுடைய யோகத்தை அறிவிப்போம். தேவியே! கேளுங்கள்.

26. பூமியை விருத்தி செய்வன் புகழ்ந்தோரை யாத ரிப்பன்
தீமையில் செல்லா னாகும் சகராசர் தன்னால் செட்டு
தாமத மாகச் செல்வன் தனமது பெருக்க மில்லான்
நேமியில் முருகர் பத்தி நிதங்கொள்வ னறத்தி லிச்சை.

26. பூமியைப் பெருக்குவான். தன்னைத் துதிசெய்பவரை ஆதரிப்பான். கெட்ட வழிகளில் செல்லாதவன். அரசாங்க உதவியால் தொழில் செய்து வருவான். மெதுவாக நடப்பவன். பெரிய தனவானாக இல்லாதவன். முருகக்கடவுள்மீது பக்திகொள்ளுவான். தருமம் செய்வதில் விருப்ப முடையவன்.

### கத்திரியோகம்

27. பாரியும் வந்த பின்பு பகருவோம் விசேட யோகம்
காரிய சமர்த்த னாகும் கத்திரி யோக மெய்தும்
வீரியன் துணைகாப் பானும் வீண்வம்பில் செல்லா னாகும்
பாரிய குடும்பி யாகிப் பாரினில் வறுமை காணான்.

27. ஜாதகனுக்கு மணமானபின் விசேஷ யோகம் ஏற்படும். காரியங் ளில் சமர்த்தன். கத்திரி யோகமுடையவன். தன் உடன் பிறந்தவர்களை ஆதரிப்பான். வீண்வம்புக்குச் செல்லாதவன். பெருங் குடும்பியாகி, உலகில் வறுமையில்லாதவனாக இருப்பான்.

### புதையல்

28. முப்பது நாலு வாண்டில் மேவிடும் நிதிநிட் சேபம்
அப்போது [1]பணியின் சக்ரம் [2]ஆரல்தன் புத்தி யாகும்
ஒப்புடன் கொல்லை தன்னில் உறைந்திடும் பொருளு மென்றோம்
செப்பின மொழிகுன் றுவே தேவியே மேலுங் கேளே.

---

[1] இராகுதசை. [2] செவ்வாய்.

28. ஜாதகனுக்கு முப்பத்துநான்காம் வயதில் புதையல் கிட்டும். அக்காலத்தில் ராகுமகாதசையில் செவ்வாய் புக்தி நடைபெறும். தன் வீட்டுக் கொல்லைப் புறத்தில் புதையல் கிடைக்கும் என்று கூறினோம். சொல்லப்பட்ட வார்த்தைகள் தவரு. தேவியே ! கேளுங்கள்.

29. திருப்பணி செய்வா னாகும் சித்திர மில்லம் ரண்டு
வருவிப்பான் சோலை யுண்டு மாநிலஞ் சேர்ப்பா னாகும்
பறைபள்ளு வுடைய னாகும் பண்ணையேர்கள் விருத்தி செய்வன்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

29. ஆலயத் திருப்பணி செய்வான். அழகிய வீடு இரண்டு கட்டுவான். தோட்டங்கள் அமைப்பான். விளை நிலங்களைப் பெருக்குவான். பள்ளுப்பறை உள்ளவன். பண்ணை ஏர் முதலியன விருத்தியாகும். வேதங்களில் கூறப் படும் தேவியே ! கேளுங்கள்.

30. இருபது வாறு வாண்டில் இவன்தந்தை கண்டம் நேரும்
பெருமனை மூப்பான் மூன்றில் பேசுவோங் கண்டந் தானும்
அறுபது வாண்டு தன்னில் மார்கழி மாதந் தன்னில்
திருமக னுடல மேகும் செப்புவோம் பின்ஜன் மத்தை.

30. ஜாதகனுடைய இருபத்தாரும் வயதில் தந்தைக்கு மரணமேற்படும். தாய்க்கு, முப்பத்துமூன்றும் வயதில் மரண மேற்படும். அறுபதாம் வயதில் மார்கழி மாதத்தில் ஜாதகன் இறந்து விடுவான். அவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம்.

31. கோங்குநா டதனிலே தான் குதிப்பனுஞ் சத்ரிய னாகப்
பாங்காக வரசு செய்து பரிவண்டி யுடைய னாகி
ஆங்கவன் வாழ்வா னாகும் அறைந்தவை தப்பா வென்றோம்
தீங்கிலாத் தவங்கள் செய்யுந் தேவியே கேட்டி டாயே.

31. கொங்குநாட்டில் க்ஷத்திரியகுலத்தில் பிறப்பான். அரசாங்க உத்தி யோகம் எற்று, குதிரைவண்டி உடையவனுகி வாழ்ந்து வருவான். கூறியவை தவரு. தீமைகளில்லாத தவங்களை யியற்றும் தேவியே ! கேளுங்கள்.

32. ஜனித்திடுங் காலந் தன்னில் சந்திரன் தசையி ருப்புக்
குனித்திடு மாண்டு வொன்பான் கூடிய திங்கள் நாலும்
துணைவிருத்தி கிருஷி யோங்குஞ் செலவுக ளதிக முண்டு
சினமுடன் விரோதம் நேரல் சதுஷ்பரதம் சேத மெய்தும்.

32. ஜாதகனுடைய ஜனன காலத்தில் சந்திரமகாதசையில் இருப்பு ஒன்பது வருடங்களும் நான்கு மாதங்களுமாம். அக்காலத்தில் சகோதர விருத்தியாகும். விளை நிலங்கள் நல்ல பலனைக் கொடுக்கும். அதிகச் செலவுகள் உண்டு. கோபத்துடன் பகை எற்படும். கால்நடைகட்குச் சேத முண்டாகும்.

33. சோரமுங் காலி பீடை சுகதுக்க மிரண்டு முண்டு
வேறுநா டதனில் தந்தை மேவுவான் பொருளுஞ் சேர்ப்பன்
தீரமாய்ப் பந்து சூதம் சேயினல் துன்பம் நேரல்
கூறுவோம் பின்பால் சேதி கோதையே கேட்டி டாயே.

33. திருட்டுப்பயம் உண்டு. கால்நடைகட்கு ரோகம் ஏற்படும். சுகம் துன்பம் இரண்டும் மாறி மாறி யுண்டாகும். தந்தை வேறு நாட்டுக்குச் செல்வான். பொருள் சேர்ப்பான். பந்துக்களுக்கு அசுபம் நிகழும். தன் குழந்தையால் துன்ப முண்டாகும். பிற்பாகத்தில் மற்றவைகளைக் கூறுகின்றேம். தேவியே! கேளுங்கள்.

34. புகருமே யொன்பா னிற்கப் பூமகன்[1] தசமம் பற்ற
மிகுதனங் காணு னுகும் வீடுபொன் பூமி யாவும்
சகமதில் நாலாயி ரம்பொன் செப்பலாம் பால னுக்குப்
பகையிலான் பின்பால் யோகம் பகருவோந் தாயே கேளும்.

34. சுக்கிரன் ஒன்பதாமிடத்தில் இருந்து செவ்வாய் பத்தாம் இடத்தில் இருப்பதால் மிகுந்த செல்வம் அடையாதவன். வீடு, பொன், பூமி இவைகளெல்லாம் சேர்ந்து நாலாயிரம் பொன் பெறுமான முள்ளவை. பகையில்லாதவன். பிற்காலத்தில் யோகம் உண்டென்றேம், தாயே! கேளுங்கள்.

35. ஆருறு வாண்டு மேலாய் அவன்துணை வேருய்ச் செல்வான்
பாரினில் பாகம் மூன்ருய்ப் பகருவோம் பிறைபோல் யோகம்
காரிழை வந்த பின்பு கலப்பளா [2]மாது தானும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

35. ஜாதகனுடைய முப்பத்தாரும் வயதுக்கு மேல் அவனுடைய சகோதரன் வேருகச் செல்வான். இவனுடைய தந்தையின் ஆஸ்தி மூன்று பாகங்களாகப் பிரிக்கப்படும். வளர் பிறைபோல் யோகம் வளரும். மனைவி வந்த பிறகு லட்சுமீகடாட்சம் ஏற்படும். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

---

[1] செவ்வாய். [2] இலக்குமி.

## ஜாதகம் 57.

1. திங்களுங் கன்னி யாகச் சனிகேது மேரு வாக
மங்கலன் சீய மாக மறைராகு வீணை புக்கப்
பங்கயன் புதனும் மேடம் பளிங்குமே[1] நந்தி யாக
இங்கிவை கிரகம் நின்று இலக்கின மிதுன மாக ;

1. சந்திரன் கன்னியிலும், சனி கேது தனுசிலும், செவ்வாய் சிம்மத்திலும், குரு ராகு மிதுனத்திலும், சூரியன் புதன் மேஷத்திலும், சுக்கிரன் விருஷபத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருப்பின் ;

| | | | |
|---|---|---|---|
| | சூரியன் புதன் | சுக்கிரன் | ராகு குரு லக்கினம் |
| | இராசி சக்கரம் | | |
| | | | செவ்வாய் |
| சனி கேது | | | சந்திரன் |

2. பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி சொல்லும் போது
குலகுரு வதிட்டர் சொல்வார் குறித்தது வாண்பால் ஜன்மம்
தலமது வடதென் வீதி சனிவாடை கீழ்ப்பால் கன்னி
நலமுள [2]மீனஞ் சாத்தான் நாட்டினேம் பேரூர் தன்னில்.

2. ஏற்படும் பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதி தேவி கேட்கும் போது, குல குருவாகிய வசிஷ்ட முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் குழந்தையின் ஜாதகம். பிறந்த வீடு வடக்குத் தெற்கான வீதியில் வட (கிழக்கு) வரிசையில் உள்ளது. கிழக்கில் அம்மன் கோயிலும், வட கிழக்கில் ஐயனார் கோயிலும் உள்ள பெரிய ஊர் என்று கூறுவோம்.

3. இத்தகை யடையா ளத்துள் இளையனுஞ் ஜன்ம மாகப்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
வித்தகன் துணைவர் யோகம் விளம்புவோ முன்பின் ஜன்மம்
அத்தியைப் பெற்ற மாதே அறைகின்றோ மிந்நூல் தன்னில்.

3. இங்ஙன மடையாளமுள்ள ஊரில் ஜாதகன் தந்தைக்கு இளைய புத்திரனாகப் பிறப்பான். ஜாதகனின் தந்தை தாய் மனைவி மக்கள் உடன்பிறந்தவர் இவர்களுடைய யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும் கூறுகின்றோம். விநாயகனைப் பெற்ற தேவியே ! கேளுங்கள்.

---

[1] சுக்கிரன். [2] வடகிழக்கு.

4. தந்தையின் வர்க்கந் தன்னைச் சாற்றவாண் பலத்தைக் காணேம்
வந்திடுங் கன்னி யொன்று வரைகிறேந் தீர்க்க மெய்தும்
அந்தகன் பக்கல் மூன்று அணுகிடு மென்று சொல்வோம்
சந்ததம் பிதாகு ணத்தைச் சாற்றுவோங் கேளு மாதே.

4. தந்தையின் வர்க்கத்தினரைப் பற்றிக் கூறப் பலமில்லை. ஒரு சகோதரி பிறந்து நீண்ட ஆயுளுள்ளவளாயிருப்பாள். மூன்று குழந்தைகள் இடையில் இறந்து விடும் என்று சொல்லுகின்றோம். தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

5. புத்திமான் பொறுமை சாலி புண்ணிய மனத்த னாகும்
பத்தினி நேய னாகும் பகையென்று மனத்தில் வையான்
உத்தமக் குணத்தா னாகும் ஓராறு முகத்தோன் பத்தி
நத்தினோர்க் குதவி செய்வன் நல்லோர்க்கு நல்ல னவன்.

5. புத்திசாலி. பொறுமையுடையவன். புண்ணியமான மனத்தினன். மனைவிக்குப் பிரியனாயிருப்பான். விரோதம் பாராட்டாதவன். உயர்ந்த குணமுள்ளவன். அறுமுகப்பெருமான்மீது பக்தி யுள்ளவன். யாசிப்பவர்களுக்கு உதவி புரிவான். நல்லவர்கட்கு நல்லவன்.

6. கிருஷிவணி பங்கள் செய்வான் கீதமேல் விற்பன னாகும்
கரைமனஞ் சுகபு சிப்பன் கசடரை யுறவு கொள்ளான்
தரையதை விருத்தி செய்வான் தனமது பெருக்க மில்லான்
விரைவினில் நடக்க வல்லான் வீண்வம்பில் செல்லா னாமே.

6. விவசாயமும் வியாபாரமும் செய்து வருவான். சங்கீதத்தில் பிரியமுள்ளவன். இளகிய மனத்தன். சுகமாகப் புசிப்பதில் விருப்பமுடையவன். முட்டாள்களுடன் நட்புக்கொள்ளாதவன். பூமியைப் பெருக்குவான். செல்வங்கள் அதிகமாக இல்லாதவன். வேகமாக நடப்பவன். வீண் வம்புக்குச் செல்லாதவன்.

7. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே இரண்டாஞ் ஜன்மம்
அன்னவ னுதிப்பா னாகும் அவன்குணங் கூறக் கேண்மோ
கன்னென மொழியே சொல்வன் கல்வியு மிரண்டு கற்பன்
அன்னிய தேசந் தன்னில் அரசரால் ஜீவிப் பானும்.

7. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன் ஐந்தாவது மகனாகப் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். இனிய வார்த்தைகளைப் பேசுபவன். இருவிதமான கல்வி கற்பான். வேறு தேசத்தில் அரசாங்க உத்தியோகம் ஏற்று ஜீவித்து வருவான்.

8. மாநிற முளைச்சல் தேகி மருமமு மில்லா னாகும்
ஆன்றவனி நேசங் கொள்வான் அற்பரை யுறவு கொள்ளான்
சென்டம் பெருமை யேற்பன் புல்லரை யுறவு கொள்ளான்
ஈனமாங் குணங்க ளில்லான் இடரென்றோர்க் குதவி செய்வன்.

8. மாநிறமுடையவன். மெல்லிய சரீரமுள்ளவன். இரகசியமில்லாதவன். பெரியோர்கள் நட்புக் கொள்வான். அல்பருடன் உறவாடாதவன். சென்ற விடங்களில் பெருமை அடைவான். அற்பர்கள் நட்புக் கொள்ளாதவன். தீய குணங்க ளில்லாதவன். துன்பமடைந்தவர்கட்கு உதவி புரிவான்.

9. துருவசக் கரங்க ளோடும் மறைபக்க லணுகி வாழ்வன்
திருமகள் வாச முண்டு சிறப்பான குடும்பி யாவன்
பொறுமையும் ஊக சாலி புகழ்ந்தோரை யாத ரிப்பன்
கரமதில் கமல ரேகை கந்தன்தன் பத்தி கொள்வன்.

9. துருவசக்கரங்களுடன் கூடிய அந்தணரிடம் சென்று வாழ்ந்து வருவான். இலக்குமி கடாட்சம் உள்ளவன். சிறப்பான குடும்பத்தை யுடையவன். பொறுமையுள்ளவன். ஊகமுடையவன். தன்னைத் தோத்திரம் செய்தவரை ஆதரிப்பான். கையில் கமலரேகை யுள்ளவன். ஷண்முகன் மீது பக்தியுடையவன்.

10. சொல்லிடு வசன மெல்லாஞ் சுத்தமாஞ் சொகுசூ ணுண்பன்
வெல்லுவா னெதிரி தன்னை வீண்வழக் கோரஞ் சொல்லான்
நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னுவன்
தல்லிசெய் தவத்தி னாலே தனக்குமே யோகஞ் சொன்னோம்.

10. கூறும் வார்த்தைகள் எல்லாம் சுத்தமாக விருக்கும். அன்னத்தைச் பிரியமாக உண்பான். பகைவரை ஜயிப்பான். வீண் வழக்குகளில் செல்லாதவன். பொய்ச் சாட்சி கூறாதவன். நல்லவர்கட்கு நல்லவன். தீயருக்குத் தீயனாக இருப்பான். தன் தாய் செய்த புண்ணியத்தால் இவனுக்கு யோகமுண்டாகும் என்றோம்.

11. வித்தையால் பெருமை கொள்வன் விவேகியா மெவர்க்கு நண்பன்
உத்தமக் குணத்தோ னாகும் உயர்வோர்க்கு மன்ன மீவன்
சுத்தவான் வறுமை காணான் துணைவர்சொல் தட்டா னாகும்
வித்தகன் தந்தை யாஸ்தி விரும்பிடா னென்று சொல்வோம்.

11. வித்தையைக் கற்றதால் பெருமை அடைவான். நல்ல விவேகமுள்ள வன். எவருக்கும் நண்பன். உயர்ந்த குணமுடையவன். பெரியோர்கட்கு அன்னமளிப்பான். சுத்தமுள்ளவன். தரித்திரம் அடையாதவன். தன் உடன் பிறந்தவர் வார்த்தையை மீறாதவன். ஜாதகன் தன் தந்தையின் ஆஸ்தியை விரும்பாதவன் என்று சொல்லுகின்றோம்.

12. இவனுடைத் துணைவ ராறில் ஏகுவர் சிலரே யென்றோம்
நவனியி லாண்பா லொன்று நாயகி யைவர் தீர்க்கம்
தவசியே யாண்பால் மூத்தோன் சாற்றுவோ மவன்கு ணத்தைப்
பவமிலான் நற்கு ணத்தான் பரிந்துப சாரஞ் செய்வன்.

12. ஜாதகனுக்கு உடன்பிறந்தவர் ஆறுபேர்களில் சிலர் இறந்து விடுவர். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் ஐவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றோம். தாயே! ஜாதகனுடைய முன் பிறந்த சகோதரனின் குணத்தைச் சொல்லுகின்றோம். பலமில்லாதவன். நற்குணமுடையவன். அன்புடன் உபசாரம் செய்வான்.

13. தந்தையார் ஜிதங்கள் தம்மைத் தானவன் விருத்தி செய்வன
வந்தவர்க் கன்ன மீவன் வாக்கதைக் காப்பா னுகும்
நொந்திடும் பேரைக் காப்பான் நீங்காதா னில்லம் விட்டுக்
கந்தன்மேல் பத்தி பூண்பன் கழறுமுன் கோபி யாவான்.

13. தந்தையின் ஆஸ்தியைப் பெருக்குவான். தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்னமளிப்பான். சொன்ன சொற்களைக் காப்பான். கஷ்டமடைந்தவர்களை ஆதரிப்பான். தன் வீட்டைவிட்டு வெளிச்செல்லாதவன். முருகப்பிரான்மீது பக்தியுடையவன். முன்கோபமுள்ளவன்.

14. பாரியை யொன்றே யாகும் பாலர்க ளாண்பால் ரண்டு
தீரமாய்ப் பெண்பா லவ்வாறு செப்புவோந் தீர்க்க மாக
மாரன்த னுதவி கொண்டு வளருவான் தந்தை யில்லம்
போர்செல்லா னிளம னத்தன் புகழ்ந்தோரை யாத ரிப்பன்.

14. மனைவி யொருத்தியே. இரு புத்திரர்கள் தோன்றுவார். இரு பெண்களும் பிறப்பார் என்றும், தீர்க்காயுளுள்ளவர்கள் என்றும் சொல்லின்ரேம். சகோதரனுடைய உதவியுள்ளவன். தன் தந்தையின் வீட்டிலேயே வளர்வான். சண்டைக்கு முன்னல் செல்லாதவன். இளகிய மனத்தன். தன்னைப் புகழ்ந்தவர்களை ஆதரிப்பான்.

15. வயதுமே தீர்க்க மெய்தும் மங்கையர் சேதி பின்பால்
நயமுட னுரைக்கக் கேண்மோ நாயகன் மணத்தின் காலம்
தயையுட னெண்ணுன் காண்டில் செப்புவோம் பால னுக்குப்
பயமிலா வவள் குணத்தைப் பகருவோந் தாயே கேளும்.

15. நீண்ட வயதுள்ளவன். சகோதரிகளின் செய்தியைப் பிற்பாகத்தில் சொல்லுகின்ரேம். கேளுங்கள். ஜாதகனுடைய திருமணக் காலத்தைக் கூறுகின்ரேம். ஜாதகனுக்கு முப்பத்திரண்டாம் வயதில் மணமாகும். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்ரேம். தாயே ! கேளுங்கள்.

16. வஞ்சனை மனமில் லாதாள் வருவோர்க்கு வன்ன மீவள்
வெஞ்சினம் வெளிக்காட் டாதாள் விருந்தினர்ப் பிரிய மாவள்
கஞ்சம்போல் நிறத்த ளாகுங் கல்விமான் வறுமை காணுள்
அஞ்சுவாள் பாபத் திற்கு அன்னம்போல் சாய லொக்கும்.

16. வஞ்சனையான எண்ணங்களில்லாதவள். தன்னை யடைபவர்களுக்கு அன்னமளிப்பாள். கோபத்தை வெளியிடாதவள். விருந்தினருக்குப் பிரியமானவள். தாமரை போன்ற நிறமுடையவள். கல்வி யறிவுள்ளவள். தரித்திரமில்லாதவள். தீச்செயல்களைச் செய்ய பயப்படுவாள். அன்னம் போன்ற நடையுள்ளவள்.

17. துடிபாடை விரதம் பூண்பள் தோகைநன் னடக்கை யுண்டு
படிமிசை நல்லோ ளாவள் பணிதிக ளிச்சை யுண்டு
விடவுரை பகரா ளாகும் வயதுமே தீர்க்க மெய்தும்
அடைவுடன் வசிட்டர் சொல்ல அத்திரி புகலு கின்ருர்.

17. (துடி பாடை ?)....................விரதம் மேற்கொள்வாள். நன்னடத்தை யுள்ளவள். உலகில் நல்லவளாயிருப்பாள். ஆபரணங்க ளணிவதில் விருப்பமுள்ளவள். கெட்டவார்த்தை கூருதவள். நீண்ட வயதுள்ளவள், என்று வசிஷ்ட முனிவர் சொல்லும்போது, அத்திரி முனிவர்கேட்கின்ருர்.

18. காரியுங் கேது வேழில் கலந்ததால் தாரம் ரண்டு
தீரமாய் நடக்கு மென்ரேந் தென்முனி தடுத்துச் சொல்வார்
பாரிய நாலில் திங்கள் பதிந்திட [1] நல்லோன் லாபம்
சாரியா யேழோன் ஜன்மந் தங்கின பலத்தி ஞலே.

18. சனியும் கேதுவும் ஏழாம் வீட்டில் இருப்பதால் ஜாதகனுக்கு இரு மனைவியர் ஏற்படுவார். இது நிச்சயம் என்ரேம். அகத்திய முனிவர் இடைமறித்துச் சொல்லுகின்ருர். நான்காம் வீட்டில் சந்திரன் இருப்ப தாலும், அவ்வீட்டுக்குரிய புதன் இலாபஸ்தானத்தில் இருப்பதாலும், ஏழாம் வீட்டுக்குரிய குரு ஜன்மத்தில் இருக்கும் பலத்தாலும் ;

19. மறுமனை காணு ருகும் வதிட்டரும் புகலு கின்ருர்
வருமனை மூவொன் பாறு வந்திடில் மடிவு காணும்
குருதசை புகர்பு சிப்பில் கூடிடும் மணமே யென்ரேம்
திருமகள் வயது தீர்க்கஞ் செப்பின மொழிகுன் ருவே.

19. ஜாதகனுக்கு இரண்டாம் மனைவி இல்லை. வசிஷ்ட முனிவர் கூறு கின்ருர். ஜாதகனுடைய மனைவி முப்பத்துமூன்ரும் வயதில் இறந்து விடுவாள். குருமகாதசை சுக்கிரபுக்தியில் வேறு மணம் நடக்கும். அவளுடைய வயது தீர்க்கமாகும். கூறிய வார்த்தைகள் தவரு.

20. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மெழுவர் தோன்றும்
சித்தமா யாண்பால் ரண்டு செல்வதி யவ்வாறு தீர்க்கம்
குற்றமா முதலில் புத்ரர் குறைவுண்டு நாலு மாறும்
இத்தகை முனிவர் கூற இயம்புவார் பராசர் தாமும்.

20. ஜாதகனுக்குப் புத்திர பாவத்தைச் சொல்லுகின்ரேம். எழுவர் பிறப்பார். இரு ஆண் குழந்தைகளும் இரு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். முதலில் தோன்றும் புத்திரனும் நான்காமவனும் ஆரும் குழந்தையும் இறந்துவிடும். இங்ஙனம் முனிவர் கூறும்போது பராசரமுனிவர் சொல்லுகின்ருர்.

21. முதல்சுதர் தோட மெவ்வா றியம்புவீர் முனியே நீர்தாம்
[2] பதியினுக் கைந்தோன் வெள்ளி பனிரண்டி லிருப்ப தாலே
சதியாகு முதலில் புத்திரர் தசமத்தோன் ஜன்மந் தங்க
அதுவும்பின் விருத்தி யாகும் அம்பிகை யாளே கேளாய்.

---

[1] புதன். [2] லக்கினம்.

21. முதல் புத்திரனுக்குத் தோஷம் உண்டாகும் என்று சொன்னீர்களே. முனிவரே! ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரன் பன்னிரண்டாம் இடத்தில் இருப்பதால் ஜாதகனுடைய முதல் குழந்தை இறந்துவிடும். பத்தாம் வீட்டுக்குரிய குரு லக்கினத்தில் இருப்பதால் பிறகு தோன்றும் குழந்தைகள் விருத்தியாகும். தாயே! கேளுங்கள்.

22. மாதுரு மாஞ்சி வப்பள் மைந்தர்மே லாசை யுண்டு
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனங் கவடு மில்லாள்
தீதுக ளொருவர்க் கெண்ணுள் திகைத்தோரை யாத ரிப்பள்
பாதக மனம்வை யாதாள் பரிந்துப சாரஞ் செய்வள்.

22. தாய் மாநிற முடையவள். புத்திரர்மீது விருப்ப முள்ளவள். இன்பமாகப் பேசுபவள். மனத்தில் கபடமில்லாதவள். தீங்குகள் ஒருவருக்கும் நினையாதவள். பயந்தவர்கட்கு உபகாரி. கெட்ட எண்ண மில்லாதவள். பிறரை விரும்பி உபசரிப்பாள்.

23. சமயோகம் வறுமை காணுள் சத்தியும் விரதம் பூண்பள்
இறையவர் பத்தி பூண்பள் எய்திடு மற்ப ரோகம்
அமைந்திடுந் துணையா ணென்று அதுவுமே தீர்க்க மெய்தும்
பிறர்பொருள் மனம்வை யாதாள் பரிந்துப சாரஞ் செய்வள்.

23. சமமான யோக முள்ளவள். தரித்திர மில்லாதவள். நோன்புகள் நோற்பாள். தெய்வ பக்தி யுடையவள். சிறிது நோய் உள்ளவள். உடன் பிறந்த சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். பொய் பேசாதவள். கணவனது மனமறிந்து நடப்பாள். பிறரது பொருளின்மீது இச்சை யில்லாதவள். அன்புடன் உபசரிப்பாள்.

24. அன்னையின் பூர்வஞ் சொல்வோம் அழகிய பாண்டி நாட்டில்
நன்னய சைவச் சேயாய் நாயகி யுதித்து மேலும்
முன்னமே குடும்பி யாகி முதல்வியும் வாழு நாளில்
தன்வரன் துணைவி பேரில் சாற்றினுள் சிலேடை வார்த்தை.

24. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பாண்டிய நாட்டில், சைவ குலத்தவளாகப் பிறந்து, உயர்ந்த குடும்பத்தைப் பெற்று, வாழ்ந்துவரும் காலத்தில், தன் கணவனுடைய உடன் பிறந்தவள் மீது சில வார்த்தைகளை இருபொருள்படும்படி கூறினாள்.

25. மாதுவு மனங்க லங்கி வரைகுவாள் சாபந் தானும்
ஓதினுய் நிந்தை வார்த்தை உதித்திடு மறுஜன் மத்தில்
தீதாகுஞ் சுதர்கள் பாதி தன்துணை பெண்பா லின்றி
மேதினில் வாழ்வா யென்று விளம்பியே துருசு விட்டாள்.

25. அப் பெண்ணும் மனம் வருந்திச் சாபமிட்டாள். என்மீது பழி கூறினுயே. நீ, அடுத்த பிறவியில், சகோதரிகளில்லாமல் தோன்றி, புத்திரர்களில் பாதியை இழந்து, உலகில் வாழ்ந்துவருவாய், என்று சொல்லி, தெரு மண்ணைத் தூற்றினுள்.

26. நாத்தியின் சாபந் தானும் நல்கிற்று விம்மா துக்கு
வேற்றொரு தோடங் காணாள் விமலியு மந்தி யத்தில்
காத்திர மான சேது கலந்துமே தீர்த்தந் தோய்ந்து
நீத்தோருக் கன்ன மீந்து நேர்ந்தனள் கால ளுடு.

26. நாத்தியின் சாபம் இப்பெண்ணுக்கு ஏற்பட்டது. வேறு தீவினைக ளில்லாமல், தன் கடைசிக் காலத்தில் புண்ணியமான சேதுவுக்குச் சென்று, நீராடி, துறவிகட்கு அன்னமளித்து, பிறகு காலமானாள்.

27. கஞ்சனால் வரையப் பட்டுக் காதலி யிச்சென் மத்தில்
மிஞ்சிய யிலங்கைத் தீவில் மேவின ளென்று சொல்வோம்
வஞ்சியர் நாத்தி சாப மருவிடும் பாவைக் கேதான்
தஞ்சமாய்ச் சுதர்கள் பாதி தங்காது துணைப்பெண் தோடம்.

27. பிரமதேவனால் படைக்கப்பட்டு இவள் இப் பிறவியில் இலங்கைத் தீவில் பிறந்தாள் என்று சொல்கின்றோம். நாத்தியின் சாபம் தொடர்ந்தது. அதன்படி பாதி குழந்தைகள் இறந்துபோய், உடன் பிறந்த சகோதரி யில்லாமல் வாழ்வாள்.

28. மறுஜன்மந் தில்லை தன்னில் மறைக்குல முதிப்பா ளாகும்
விருதருங் கேட்க லுற்றார் மெல்லியிச் சென்மந் தன்னில்
உறைந்தபுண் ணியங்க ளென்ன உரைப்பீர்கள் முனியே நீர்தாம்
வரன்மனம் போல வாழ்ந்து மனமது கவடு மின்றி ;

28. மறு பிறவியில் தில்லை க்ஷேத்திரத்தில், அந்தண குலத்தில் தோன்றுவாள். விருதர் கேட்கலானார். ஜாதகனின் தாய் இப்பிறவியில் செய்த புண்ணியங்களென்ன வென்று கூறுங்கள், முனிவரே ! நீர்தாம். தன் கணவனது மனமறிந்து வாழ்ந்து வந்தாலும், கபடமின்றி ;

29. தேவதாப் பத்தி யாயும் தேரினோர்க் கன்ன மீந்தும்
நாவது சுத்த மாயும் நாயகி வாழ்வ தாலே
மேவுவாள் பிரம்ம சேயாய் விளம்பின மொழிகுன் றுவே
ஆவலாய்த் தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

29. தெய்வபக்தியுடனும், பெரியோருக் கன்னமளித்தும், வாக்குச்சுத்த மாயும், வாழ்ந்து வருவதால், அந்தணகுலத்தில் பிறப்பாள். கூறிய வார்த்தைகள் தவறா. சிரத்தையுடன் தவங்கள் செய்யும் தேவியே ! கேளுங்கள்.

30. தந்தையின் பூர்வந் தன்னைச் சாற்றுவோம் பிணங்குத் தீவில்
விந்தையாய் மிலேச்ச னாகி மெல்லியாள் சுதர்க ளுண்டாய்
முந்திய செட்டுச் செய்து வித்தகன் வாழு நாளில்
வந்ததோர் வினையைக் கேண்மோ அதிதிக்குத் துன்பஞ் செய்தான்.

30. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பிணங்குத் தீவில், முகமதிய வமிசத்தில் பிறந்து, மனைவி மக்களைப் பெற்று, வர்த்தகம் செய்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன்னிடம் வந்த விருந்தினருக்குத் துன்பமிழைத்தான்.

31. தொழில்தனில் கணக்கில் துன்பஞ் செய்தன னிவனே யென்றோம்
அழிவாக வேழை சாபம் அணுகிற்று விவனுக் கேதான்
பழியது விச்சென் மத்தில் பாவிடுந் துணைவர் தோடம்
வழியிலாச் சமயோ கத்தான் வரைந்தன மென்று சொன்னோம்.

31. தொழில் நடத்தும்போது கணக்கில் தவறுகள் செய்தான் இவன், என்றோம். தீங்காக ஏழையின் சாபம் இவனுக்கு ஏற்பட்டது. அதனால் இப்பிறவியில் உடன் பிறந்த சகோதரனுக்குத் தோஷம் ஏற்பட்டு, நேர்மையில்லாத சாதாரண யோகமுள்ளவன் என்று சொல்லுகின்றோம்.

32. பின்ஜன்ம மவ்வூர் தன்னில் பிறப்பனு மிக்கு லத்தில்
பொன்பொரு ளுடைய னுகிப் புகழ்ச்சியாய் வாழ்வா னுகும்
மன்னரால் தொழிலு மேற்பன் வரைந்தது தப்பா தாகும்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

32. மறுபிறவி, அவ்வூரிலேயே இந்தக் குலத்தில் தோன்றி, பொன்னும் பொருளும் பெற்று, புகழுள்ள குடும்பத்துடன் வாழ்வான். அரசரால் உத்தியோகம் பெறுவான். கூறியது தவருது. உயர்ந்த கணவனைப்பெற்ற உத்தமியே ! கேளுங்கள்.

33. ஜாதகன் பூர்வந் தன்னைச் சாற்றுவோம் பினுங்கு தன்னில்
ஓதுவோந் தீயின் வம்சம் உயர்வான குடும்பி யாகிக்
காதலி மதலை யுண்டாய்க் கனராசர் தம்பால் சென்று
தீதிலா வதிகா ரங்கள் செய்துமே பொருள்ப டைத்து ;

33. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பினுங்கு தேசத்தில், வன்னிய குலத்தில் தோன்றி, உயர்ந்த குடும்பத்தைப் பெற்று, மனைவி மக்களை யடைந்து, அரசரிடம் சென்று, தீரமாயில்லாத அதிகாரங்களடைந்து, பொருள் சேர்த்து ;

34. அறமதி லிச்சை யுண்டாய் அதிதிகட் கன்ன மீந்து
பெருநதித் தலங்கள் சென்று பிராமணர் பத்தி கொண்டு
மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டு
வருகுவா னிலங்கை நாட்டில் வந்தவன் யோகம் சொல்வோம்.

34. தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, விருந்தினருக்கு அன்னமளித்து, புண்ணிய நதிகளுக்குச் சென்று, அந்தணர்மீது பக்திகொண்டு, மரணமடைந்து, பின்பு பிரமதேவனுல் படைக்கப்பட்டு, இலங்கைத்தீவில் தோன்றுவான். ஜாதகனுடைய யோகத்தைக் கூறுகின்றோம்.

35. தருமகர் மாதி யோகம் கேசரி யோக மொன்றும்
பருவத யோக மொன்றும் பகருவோம் பால னுக்கு
இருபது மூன்றுண் டின்மேல் ஏகுவான் வெளிதே சத்தில்
அரசரால் தொழிலு மேற்பன் அநேகபாக் கியமுஞ் சேர்ப்பன்.

35. தருமகருமாதி யோகம் ஒன்றும், கேசரி யோகம் ஒன்றும், பருவத யோகம் ஒன்றும் ஆக மூன்று யோகங்கள் ஜாதகனுக்கு ஏற்படும். ஜாதகன், தனது இருபத்துமூன்றும் வயதில் வெளிநாட்டுக்குச் செல்லுவான். அரசாங்க உத்தியோகம் பெற்று அதிகமான பாக்கியங்களை யடைவான்.

36. நினைத்ததை முடிக்க வல்லன் நீரின்மேல் செல்வா னாகும்
கனத்தபுத் திகளு மேற்பன் கருதிடான் கட்டு வார்த்தை
அனைவரும் நேச மாகும் அதிகபூ மிகளுஞ் சேர்ப்பன்
சினமுண்டு வெளிக்காட் டாதான் திருப்பணி செய்வா னாகும்.

36. எண்ணிய காரியங்களை முடிப்பான். சமுத்திரத்தின் அக்கரைக்குச் செல்லுவான். முதிர்ந்த அறிவாளி. வார்த்தைகளைப் புனைந்து பேசாதவன். எல்லோருக்கும் நண்பன். அதிகமான பூமியை விருத்தி செய்வான். கோபம் கொள்ளுவான். ஆனால் அதை வெளியில் காட்டாதவன். திருப்பணிகள் செய்வான்.

37. பொங்கியக் குடும்பி யாவன் புகழ்ந்தோரை யாத ரிப்பன்
மங்கையும் வந்த பின்பு வளர்பிறை போல யோகம்
தங்கிடும் பணிகள் சேர்ப்பன் தலவாசஞ் செய்வா னாகும்
பங்கய முகத்தி னாளே படைப்பன்முப் பாயி ரம்பொன்.

37. செழிப்புள்ள குடும்பியாவான். தன்னைத் தோத்திரம் செய்தவரை ஆதரித்து வருவான். மனைவி வந்தபிறகு வளர்பிறைச் சந்திரன் போல் யோகம் பெருகும். நிலையான ஆபரணங்களை வாங்குவான். புண்ணிய தலங்களுக்குச் செல்லுவான். தாமரையைப் போன்ற முகத்தை யுடையவளே ! மூவாயிரம் பொன் சேர்ப்பான்.

38. இருபது மூன்று வாண்டுள் இவன்தந்தை கண்டம் நேரும்
வரைகின்றே முப்பா னாலில் அன்னைக்குக் கண்டம் நேரும்
அறுபது வொன்ப தாண்டில் [1]ஆடுமா தத்தி லேதான்
நிறைபக்கம் சட்டி தன்னில் நீங்கிடு முடலந் தானே.

38. ஜாதகனுடைய இருபத்துமூன்றும் வயதுக்குள் தந்தை மரணமடைவான். முப்பத்துநான்காம் வயதில் தாய் இறந்துவிடுவாள். அறுபத்தொன்பதாம் வயதில் சித்திரை மாதத்தில் சுக்கிலபட்ச சஷ்டி திதியில் ஜாதகன் மரணமடைவான்.

39. மறுஜன்மங் கோகர் ணத்தில் மன்னர்தங் குலமு தித்துக்
கரிபரி யுடைய னாகிக் கனகமு மதிக முண்டாய்ப்
பெருமையாய் வாழ்வா னாகும் பேசின மொழிகுன் றாவே
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

39. ஜாதகன், மறு பிறவியில், திருக்கோகர்ணத்தில் க்ஷத்திரிய குலத்தில் தோன்றி, யானை குதிரைகளை யடைந்து, செல்வங்கள் அதிகமாகப் பெற்று, பெருமையுடன் வாழ்ந்து வருவான். கூறிய வார்த்தைகள் தவறா. வேதங்களின் முடிவில் வாழும் தாயே ! கேளுங்கள்.

[1]. சித்திரை.

40. தென்முனி புகலு கின்றார் சேயனு மிச்சென் மத்தில்
மன்னரால் சீவ னங்கள் மருவிடு மென்று சொன்னீர்
எந்தமட் டுய்வான் சொல்வீர் *இரவியின் மகன்கால் மட்டும்
சந்தத மரசு மோங்குஞ் சாற்றின மொழிகுன் றுவே.

40. அகத்திய முனிவர் கூறுகின்றார். ஜாதகன் இப் பிறவியில் அரசாங்க உத்தியோகம் அடைவான் என்று கூறினீர்களே! எந்தகாலம் வரையில் இருக்கும்? சொல்லுங்கள். சனிமகாதசை வரையில் அரசாங்க உத்தியோகம் மேன்மேலும் விருத்தியாகும். கூறிய வார்த்தைகள் தவறு.

41. அன்பது வெட்டாண் டில்தான் அணுகிடும் ராஜ யோகம்
துன்பங்கள் மத்தி யில்தான் தோற்றுதோ விவரஞ் சொல்வீர்
என்னகோள் கலகம் நேரா எய்தினும் பொன்னேன் ஜன்மம்
நின்றதால் அரிமுன் யானை நீங்குமா போல வாமே.

41. ஜாதகனுக்குத் தனது ஐம்பத்தெட்டாம் வயதில் ராஜயோகம் கிட்டும். இதற்கு இடையில் துன்பங்கள் ஏற்படாவோ? விபரமாகச் சொல்லுங்கள். என்ன தீக்குகள் அனுகினும் குரு லக்கினத்தில் இருப்பதால் சிங்கத்துக்கு முன் யானைபோல் நீங்கிவிடும் என்றோம்.

42. அறுபது வொன்ப தாண்டு அறைந்திட்டீர் சாத கர்க்கு
† ........................................
இருப்பதால் பிணிய நேக மெய்தினு முடன்றி விர்த்தி
பரிதிமுன் னிருள்போல் நீங்கும் பார்வதி கேட்டி டாயே.

42. ஜாதகனுக்கு அறுபத்தொன்பதாம் வயதில் மரணக்காலம் சொன்னீர்களே ........................................ இருப்பதால் நோய் அதிகமாக ஏற்பட்டாலும் உடனே நீங்கும். சூரியன் முன் இருள்போல் விலகிவிடும். பார்வதியே! கேளுங்கள்.

* சனி.

† இப் பாடலின் இரண்டாம் வரி மூலப்பிரதியில் காணப்பெறவில்லை.

# ஜாதகம் 58.

1. மதிபுதன் வெள்ளி பானு மேடத்தில் கேது வண்டி
விதிதேளில் பொன்னேன் கன்னி விடமானில் சேயு மீனம்
இதுவிதக் கோளு நின்று லக்கினம் வீணை யாக
அதுபலன் சொல்லு மென்ன அம்பிகை கேட்க லுற்றாள்.

1. சந்திரன் புதன் சுக்கிரன் சூரியன் மேஷத்திலும், கேது கடகத்திலும், சனி விருச்சிகத்திலும், குரு கன்னியிலும், ராகு மகரத்திலும், செவ்வாய் மீனத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருந்தால், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதிதேவி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் | சந்திரன் புதன் சுக்கிரன் சூரியன் | | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | கேது |
| ராகு | | | |
| | சனி | | குரு |

2. தென்முனி புகலு கின்றார் ஜனிக்குமே யாண்பால் ஜன்மம
தந்தையி னில்லஞ் சொல்வேன் தென்வாசல் கீழ்மேல் வீதி
சந்தத முனியு முத்ரம் சாலையுங் குடகில் தங்கும்
தென்திசை வேறு வூரும் சிறுவூர்போல் முன்னே காட்டும்.

2. அகத்திய முனிவர் சொல்லுகின்றார். பிறப்பது ஆண் குழந்தை. ஜாதகனுடைய தந்தையின் வீட்டைச் சொல்லுகின்றோம். அது கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. முனீச்வரன் கோவில் வடக்கிலும், மேற்கில் ஒரு சாலையும், தெற்குத்திசையில் வேறு ஊரும் உள்ள ஒரு சிற்றூரைப்போலத் தோன்றும்.

3. இத்தகை மாடி சூழ்ந்த இலகிய கூறை இல்லம்
பெத்ததாய் தந்தை யோகம் பின்துணை களத்ர புத்ரர்
வித்தகன் முன்பின் ஜன்மம் விளங்குமிச் சென்மந் தன்னில்
அத்தியைப் பெற்ற மாதே வரைகிறே மிந்நூல் தன்னில்.

3. இங்ஙனமுள்ள ஊரில் மாடிசூழ்ந்த கூரைவீட்டில் பிறப்பான். ஜாதகனுடைய தாய் தந்தையர் சகோதரர் மனைவி மக்கள் முற்பிறவி மறுபிறவி இவைகளை இப்பிறவியில் சொல்லுகின்றோம். விநாயகனைப் பெற்ற தாயே ! இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சாந்தவான் மாஞ்சி வப்பன்
தந்தையி னில்லம் வாழான் வேறூரு தேசஞ் செல்வன்
தன்தன முடைய னுகுஞ் சகராசர் பேட்டி கொள்வன்
தன்பந்து புகழ வாழ்வன் தரணியில் வறுமை காணன்.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். சாந்த முடையவன். சிவந்த நிறமுள்ளவன். தன் தந்தையின் வீட்டில் வாழ்ந்து வராதவன். வேற்றூருக்குச் சென்றுவிடுவான். தன்னால் சம்பாதிக்கப் பட்ட பொருள் உடையவன். அரசர் நட்புக்கொள்ளுவான். தன் உறவினர் மெச்ச வாழ்வான். தரித்திர மில்லாதவன்.

5. கருவியப் யாச முண்டு கடவுளர் பத்தி கொஞ்சம்
குறையென்றோர்க் குதவி செய்வன் கூறுமுன் கோபி யாவன்
மருவரை வசித்தே வெல்வன் வண்டிவா கனமு முண்டு
பொறுமையும் பெருமை யேற்பன் புண்ணிய மனத்த னுகும்.

5. யந்திரங்களில் அப்பியாசம் செய்வான். தெய்வ பக்தி யுள்ளவன். துன்பமடைந்தவர்கட்கு உதவி செய்வான். சொல்லுவதற்குமுன் கோபம் கொள்ளுவான். விரோதிகளைக்கூட இருந்தே ஜயிப்பான். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். பொறுமையும் பெருமையும் அடைவான். புண்ணியமான மனத்தினன்.

6. வந்தவர்க் கன்ன மீவன் அரசரால் தொழிலு மேற்பன்
நிந்தைக ளேற்கா னுவன் நேமியில் புகழு மேற்பன்
சுந்தரன் கட்டில் மெத்தை சுகிபுசிப் புடைய னுகும்
சந்தேக மனத்த னுகுஞ் சத்திமார் பிரிய னுமே.

6. தன்னையண்டி வந்தவர்கட்கு அன்னமளிப்பான். அரசாங்க உத்தி யோகம் பார்ப்பான். பழிகள் அடையாதவன். உலகில் கீர்த்தி பெறுவான். அழகிய கட்டில் மெத்தை இவைகளுடன் சுகமாக வசித்து, சாப்பாட்டில் பிரியமுள்ளவனுயும் சந்தேகமுடைய மனத்தினுயும் பெண்கள்மீது மோகமுடையவனுயு மிருப்பான்.

7. பலவித பாடை கற்பன் பரவுப காரி யாகும்
ஜல தீர்த்தந் தோய்வா னுகு சமமான மேல்செல் வானும்
விலைமாதர் மோகங் கொள்வன் வீண்வம்பில் செல்லா னுகும்
நலமுளோர் நேசங் கொள்வன் நற்கரம் பத்ம ரேகை.

7. பலவிதமான பாஷைகளைக் கற்பான். பிறருக்கு உபகாரியாவான். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். முறையாக மேன்மேலும் நல்ல நிலையை யடைவான். வேசையர்மீது விருப்பங்கொள்ளுவான். வீண் வம்புக்குச் செல்லாதவன். நல்லவர்கள் நட்புக் கொள்வான். கையில் பத்மரேகை உள்ளவன்.

8. பின்வய தினிலே யோகம் பொருந்திடும் பூமி யில்லம்
மன்னவ ருறவே யாவர் மறுத்துறை கூறு வன்
தன்துணை யாண்பா லொன்று சாற்றுவோம் மூத்தோ ராக
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அறுமுகன் பத்தி பூண்பன்.

8. ஜாதகனுடைய தந்தையின் பிற்காலத்தில் யோகம் ஏற்படும். பூமி வீடு இவைகள் கிடைக்கும். அரசருடன் நட்புக் கொள்ளுவான். மறுத்துப் பேசாதவன். உடன் பிறந்தவர்களில் மூத்த சகோதரன் ஒருவன் உண்டு. அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சுப்பிரமணியக் கடவுளிடம் பத்தி கொள்ளுவான்.

9. தனவான்பா லணுகி வாழ்வன் மேதினில் வறுமை காணன்
இனங்களை யாத ரிப்பன் இன்பச்சொல் ஊக சாலி
கனமான புத்தி யுண்டு கஞ்சமாம் ரேகை யுண்டு
துணைவனோ டொத்து வாழ்வன் சுந்தர முடைய னாமே.

9. தனவானிடம் சென்று வாழ்ந்து வருவான். உலகில் தரித்திரம் இல்லாதவன். தன் பந்துக்களை ஆதரிப்பான். இன்பமுறும்படி பேசுபவன். ஊகமுள்ளவன். பெரிய (தாராள) புத்தி உள்ளவன். பத்மரேகை உள்ளவன். தன் சகோதரனுடன் ஒன்றுகூடி வாழ்ந்து வருவான். அழகுள்ளவன்.

10. மனைவியு மிரண்டே யாகும் பாலர்க ளாண்பா லைந்து
தீரமாய்ப் பெண்பா லொன்று செப்புவோந் தீர்க்க மாக
மாறியே பராசர் சொல்வார் மைந்தர்க் ளெம்மா துக்குக்
கூறுவீர் முனியே நீர்தாம் முன்சுத ராண் நான்காகும்.

10. மனைவிகள் இருவராகும். ஐந்து புத்திரர்களும் ஒரு புத்திரியும் நீண்ட ஆயுளுள்ளவர்களாயிருப்பார்கள். பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். எந்த மனைவிக்குப் புத்திரர்கள் தோன்றும் ? முனிவரே ! கூறுங்கள். முதலில் நான்கு புத்திரர்கள் ;

11. தீர்க்கமாம் பெண்மா துக்குச் சேயிழை யொன்றே யாகும்
ஏர்க்கவே யாண்பா லொன்று இயம்புவோந் தீர்க்க மாக
ஆர்க்கவே சிலநாள் ஒன்றாய் .......... அன்னம் வேறாம்
மார்க்கமாய் விபரம் ரண்டில் வரைகிறோந் தாயே கேளும்.

11. பிறந்து தீர்க்க மாயிருக்கும். பின் மனைவிக்குப் பெண் ஒருத்தியே. ஆண் குழந்தை யொன்று நீண்ட ஆயுளுள்ளது. அவர்கள் சின்னாட்கள் ஒன்றாக வாழ்ந்து வந்து ..........சாப்பாடு தனியாக இருக்கும். இரண்டாம் பாகத்தில் விபரமாகச் சொல்லுகின்றோம். தாயே ! கேளுங்கள் !

12. ஜாதகன் குணத்தை யாங்கள் சாற்றுவோஞ் சிவந்த மெய்யன்
கோதிலா மூர்க்க மூண்டு குணமது ..........டு
ஆதியா யுதித்த இல்லம் அடையாமல் வேறூர் செல்வன்
காதியு மதிக மேற்பன் கல்வியு மிரண்டு கற்பன்.

12. ஜாதகனுடைய குணத்தை நாங்கள் சொல்லுகின்றேம். சிவந்த மேனியன். மூர்க்க சுபாவமுள்ளவன். இருவிதமான குணங்களுண்டு. முதலில் பிறந்த வீட்டை அடையாமல் வெறூருக்குச் சென்று வாழ்வான். ......அதிகமாக அடைவான். இருவிதமான கல்விகளைக் கற்றுணர்வான்.

13. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உறைப்போடு புளிப் பிலிச்சை
குண்டைகோ விருத்தி யுண்டு கோவலர் தன்னு லுய்வன்
வண்டிவா கனமு முண்டு மன்னர்கள் உறவே கொள்வன்
எண்டிசைப் புகழு மேற்பன் .......... வன்.

13. சாப்பிடுவதில் சௌக்கியமுள்ளவன். உண்டியில் உறைப்பிலும் புளிப்பிலும் பிரியன். பசு எருதுகள் விருத்தியடையும். அரசாங்க உத்தியோகம் ஏற்று ஜீவிப்பான். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். அரசர்களுடன் நட்புக்கொள்ளுவான். எட்டுத் திக்குகளிலும் கீர்த்தியடைவான்.

14. திருப்பணி செய்வா னுகும் சென்றிடம் பெருமை யேற்பன்
தரைமிகச் சேர்ப்பா னுகும் தனமது பெருக்க முண்டு
விரைவினில் நடக்க வல்லன் ..........
அறுமுகன் தொண்டு பூண்பன் அற்பரை ருறவு கொள்ளான்.

14. ஆலயத்திருப்பணிகள் செய்வான். சென்ற விடங்களில் புகழடைவான். அதிகமான நிலங்களைச் சேர்ப்பான். செல்வங்கள் பெருகும். வேகமாக நடப்பவன். .......................................... ஆறுமுகக் கடவுளுக்குத் தொண்டு புரிவான். அற்பர்களுடன் உறவு கொள்ளாதவன்.

15. சித்திர வில்லஞ் செய்வன் சிறப்பான குடும்பி யாவன்
பத்தினி மார்கள் நேயன் பால்தயிர் பிரிய னுவன்
சுத்தவான் .......... சோம்பிடான் காரி யத்தில்
அத் [illegible]யைப் பெற்ற மாதே வரைந்தவை தப்பா வாமே.

15. அழகிய வீடு கட்டுவான். சிறப்புள்ள குடும்பத்தை அடைவான். மனைவிக்குப் பிரியன். பால் தயிர் முதலியவற்றில் பிரியமுள்ளவன். சுத்தமுள்ளவன்............ காரியங்களில் சோம்பலில்லாதவன். விநாயகனைப் பெற்ற தேவியே ! கூறிய வார்த்தைகள் குன்று.

16. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பால் தோடம்
கன்னிகை யொன்றே தீர்க்கங் கழறுவோ மவள்கு ணத்தைப்
பின்னமில் லாத தேகி பிறர்குற்றஞ் சொல்லா ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் அடிசிலுக் கினிய ளாமே.

16. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றேம். சகோதரனில்லை. சகோதரி யொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். ஊனமில்லாத சரீரமுடையவள். பிறர்மீது குற்றம் கூருதவள். பிறர் மதிக்கும்படி வாழ்வாள். சுவையுடன் சமைப்பதில் வல்லவள்.

17. திருமக ளொப்ப தாகுஞ் சனவுப காரி யாவள்
நறைமலர்க் கந்த மிஷ்டம் தன்வான் மனம்போல் வாழ்வள
அறமதி லிச்சை யுண்டு அவனியில் வறுமை காணுள்
பெருஞ்சுத ராண்பால் ரண்டு பெண்ணதவ் வாறு தீர்க்கம்.

17. இலக்குமியைப் போன்றவள். ஜனங்களுக்கு உபகாரி. புஷ்பம் சந்தனம் இவைகளில் விருப்பமுள்ளவள். தன் கணவனது மனம்போல் வாழ்ந்து வருவாள். தருமம் செய்வதில் விருப்பமுள்ளவள். உலகில் தரித்திரமில்லாதவள். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள்.

18. தன்னுடன் கூடி வாழ்வள் தந்தையால் பெருமை யேற்பள்
அன்னவள் வயது தீர்க்கங் காளையான் காணு வண்ணம்
முன்னமே சொல்லு மென்ன மூன்றையுங் காரி பார்க்க
பின்னமாந் துணையா னென்றோம் பேதையே கேட்டி டாயே.

18. கணவனுடன் கூடி வாழ்ந்து வருவாள். தன்னுடைய தந்தையால் பெருமை அடைவாள். நீண்ட ஆயுளுள்ளவள். ஜாதகனுக்குச் சகோதரன் தோன்ருத காரணமென்ன? கூறுங்கள், என, மூன்ருமிடத்தைச் சனி பார்ப்பதால், உடன் பிறந்த சகோதரனுக்குத் தோஷம், என்றோம். தேவியே! கேளுங்கள்.

19. உதித்தவன் மணத்தின் காலம் வறைகிறோ மீரெட் டாண்டில்
அதிபதி யன்னை வர்க்கம் மாதுவின் மகளைக் கொள்வன்
சதியிலா மனத்த ளாகுஞ் சரசமாய் வார்த்தை சொல்வள்
துதிசெய்தோர்க் கன்ன மீவள் ........ ளாமே.

19. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். பதினாறும் வயதில் தன் தாயினுடைய வர்க்கத்திலிருந்து மாமன் மகளை மணம் புரிவான். அவள் தீய எண்ணங்களில்லாதவள். சரசமாகப் பேசுபவள். தோத்திரம் செய்பவர்கட்கு அன்ன மளிப்பாள்.

20. அன்னம்போல் சாய லொக்கும் ஆளனுக் கினிய ளாகும்
தன்சொலு மடக்க முண்டு சுந்தர நடக்கை யுண்டு
கன்னிகை யோக சாலி கனத்தபுத் திகளு முண்டு
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

20. அன்னம்போல் அழகுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். அடக்கமாகப் பேசுபவள். அழகிய நடையை யுள்ளவள். அதிருஷ்டமுடையவள். பெரிய (தாராள) புத்தி யுள்ளவள். உயர்ந்த கணவனைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

21. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையும் மூன்று என்றோம்
இதுவைந்துந் தீர்க்க மெய்தும் இடருண்டு மூன்று என்றோம்
சதியிலா வுதித்தோன் பூர்வஞ் சாற்றுவோம் பாண்டி கீழ்ப்பால்
பதியது சிறுவூர் தன்னில் பிறந்தனன் வைச்யச் சேயாய்.

21. இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் உள்ளவன் என்று சொன்னோம். இவர்களேவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மூன்று குழந்தைகள் சேதமடையும். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பாண்டிய நாட்டுக்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில் வைசிய குலத்தவனுகப் பிறந்தான்.

22. சுகமுள குடும்பி யாகித் தோல்புவி செட்டுச் செய்து
தகமையாய் மனைவி மைந்தர் சான்றோர்கள் பத்தி பூண்டு
பகையதைத் தவிர்க்குஞ் சேது பதிசென்று தீர்த்தந் தோய்ந்து
சகமதில் நல்லோ னுகிச் சென்றனன் கால னூடு.

22. சுகமுள்ள குடும்பியாகி உலகில் வர்த்தகம் செய்து வந்து, மனைவி மைந்தர்களையடைந்து, பெரியோர்கள் பக்தி கொண்டு வினையைத் தீர்க்கும் சேதுவுக்குச் சென்று, நீராடி, உலகில் நல்லவனுகி வாழ்ந்து மரண மடைந்தான்.

23. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனிப்பனு மிவனே யென்றோம்
வரைகின்றோ மிவனின் யோகம் உதித்தநாள் முதலா மாகத்
திருமகன் மரண மட்டுஞ் சந்திரன் பிறைபோல் யோகம்
பெருகிடுந் தனங்கள் பூமி புவிராசர் பேட்டி யெய்தும்.

23. மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறப்பான் இவன் என்று சொன்னோம். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். பிறந்தநாள் முதல் மரண காலம் வரையில் பிறைச் சந்திரன் போல் யோகம் பெருகும். தனம் பூமி இவைகள் விருத்தியாகும். அரசருடைய பேட்டி கொள்ளுவான்.

24. இருபது வாண்டு மேலாய் இவனுக்கு ராஜ யோகம்
பெருகிடு மன்பா னுண்டும் பிழைவரு மதன்மே லாக
அறுவாண்டுள் செலவ நேகம் அவன்தந்தை தாய்கள் நோயாம்
இருப்பிடங் கீழ்ப்பக் கத்தில் எய்திடு மென்று சொல்வோம்.

24. இந்த ஜாதகனுக்கு இருபதாம் வயதுக்கு மேல் ராஜயோகம் கிட்டும். அஃது ஐம்பதாம் வயது வரையில் இருக்கும். அதற்குமேல் ஆறு வருடங்களுக்குச் செலவு அதிகம். அவனுடைய தாய் தந்தையருக்குப் பீடை ஏற்படும். வீடு கிழக்குப் பக்கத்தில் கிடைக்கும் என்று சொல்லுவோம்.

25. தந்தைக்கு மனது துன்பஞ் சிநேகிதர் பகையு மெய்தும்
இந்தவாறு நேரு மென்றோம் இயம்பின வாண்டு மேலாய்
முந்திய சொல்போல் யோகம் மேவிடு மூலகோ ரிட்டம்
கந்தன்தன் கிருபை யாலே கனத்திடும் மேன்மேல் யோகம்.

25. தந்தைக்கு மனத்துன்பங்களும் நண்பர்கள் விரோதமும் ஏற்படும். நாங்கள் கூறிய வருடங்களுக்கு மேல் இவ்விதம் நடைபெறும். முன்னுல் சொல்லப்பட்டவைபோல் யோகமுண்டாகும். உலகத்தவருக்குப் பிரியனுவன். ஷண்முகக் கடவுளின் அருளால் யோகம் வளரும்.

26. அன்னையு நற்கு ணத்தாள் அழகுளாள் சிவந்த மேனி
தன்சொலு மடக்க முண்டு தன்வரன் மனம்போல் வாழ்வள்
கன்னென மொழியே யுண்டு தன்மனம் போல வாழ்வள்
...................... களைத்தோருக் குதவி செய்வள்.

26. ஜாதகனுடைய தாய் நற்குணமுடையவள். அழகுள்ளவள். சிவந்த மேனி யுடையவள். அடக்கமாகப் பேசுபவள். தன் கணவனுடைய மன மறிந்து நடப்பாள். இனிய வார்த்தைகளைப் பேசுபவள். நல்ல மனமுள்ள வளாகி வாழ்ந்து வருவாள். .........துன்பமடைந்தவர்கட்கு உதவி புரிவாள்.

27. சொல்லதைக் காப்பா ளாகுந் துணையாண்பா லொன்றே யாகும்
வல்லியு மொன்றே தீர்க்க மவர்பலன் பின்பால் சொல்வோம்
தல்லியின் பூர்வஞ் சொல்வோம் தாம்பிர பரணி தன்னில்
புல்கினள் சேடர் வம்சம் புதல்வர்க ளதிக முண்டாய்;

27. தன் வார்த்தையின்படி நடப்பவள். சகோதரன் ஒருவனே யாகும். சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளுள்ளவள். அவளுடைய பலன்களைப் பிற் பாகத்தில் சொல்லுகின்றேன். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேன். தாமிரபரணிக்கருகில் சேடர்மரபில் பிறந்து புத்திரர்களை அதிகமாகப் பெற்று;

28. அறுமுகன் பத்தி கொண்டு அதிதிகட் கன்ன மீந்து
மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டுத்
திருமக ளுதித்தா ளென்றோஞ் செப்புவோ மிவள்பின் ஜன்மம்
திருவண்ணு மலேக்கு வுத்ரஞ் சிறுவூரில் பிரம சேயாய்;

28. ஆறுமுகக் கடவுள்மீது பக்தி கொண்டு, விருந்தினருக்கு அன்ன மளித்து மரணமடைந்து, மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டுப் பிறந் தவள், என்று சொன்னோம். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின் றோம். திருவண்ணாமலைக்கு வடக்கிலுள்ள சிற்றூரில் அந்தண குலத்தவ ளாக;

29. பிறப்பளா மென்று சொல்வோம் பராசருங் கேட்க லுற்றார்
திருமக ளிச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்ன
வருவோரை யாத ரித்தும் மனமது தளர்ச்சி யாயும்
நெறியதைக் காத்த லாலும் நிருபன்தன் மனம்போல்
[வாழ்ந்தும்;

29. பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். பராசரமுனிவர் கேட்க லானார். ஜாதகனின் தாய் இப்பிறவியில் என்ன நற்காரியங்கள் செய் தாள்? விருந்தினர்களை ஆதரித்து வந்தும், இளகிய மனமுள்ளவளாயும், நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்தும் வந்ததாலும், தன் கணவன் மனம் போல் வாழ்ந்து வந்ததாலும்;

30. இருப்பதால் மறுபி றப்பு இறங்குவாள் மறைக்கு லத்தில்
பெருந்தந்தை பூர்வஞ் சொல்வேன் புலியூரில் தீயின் வம்சம்
வருமனை மதலை யுண்டாய் மாநிலம் நல்லோ னாகிச்
சிறுமையோர்க் குதவி செய்து தேவதா பத்தி யாயும் ;

30. மறுபிறவி அந்தணகுலத்தில் பிறப்பாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். புலியூரில் வன்னிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களைப் பெற்று, உலகில் நல்லவனாகி, கஷ்டப்படுபவர்களை ஆதரித்து வந்து, தெய்வ பக்தியுடன் ;

31. மலர்வனம் வைத்து இன்னோன் மறலியின் பதிக்குச் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னிவனே யென்றோம்
வருஞ்ஜன்மந் துவாரை தன்னில் மறைக்குல முதிப்பா னாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

31. பூந்தோட்டம் வைத்து இவன் மரணமடைந்தான். மீண்டும் பிரம்ம தேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று கூறுகின்றோம். மறு பிறவி, துவாரகையில், அந்தண குலத்தில் தோன்றுவான். வேதங்களின் முடிவில் வாழும் தாயே ! கேளுங்கள்.

32. இந்ததோர் ஜன்மந் தன்னில் இவன்பொரு ளிச்சை வைத்தும்
நிந்தையா யற்ப வத்து நுகர்ந்ததால் மறுபி றப்பு
முந்திய குலத்தில் தோன்ற மொழிகுவீர் விபரந் தன்னை
நிந்தைகள் பெற்ற போதும் நிமலனு மிச்சென் மத்தில் ;

32. இப்பிறவியில் ஜாதகனுடைய தந்தை ! பொருளின்மீது இச்சைக் கொண்டும், அற்ப வஸ்துக்களின்மீது விருப்பமுள்ளவனாகவும் இருந்த போதிலும், மறு பிறவியில் அந்தண குலத்தில் பிறக்கக் காரணங்களை விபரமாகச் சொல்லுங்கள். அவமானங்கள் அடைந்த போதிலும், ஜாதகனின் தந்தை, இப்பிறவியில் ;

33. அறமதி லிச்சை யாயும் அடைந்தோரை யாத ரித்தும்
பெருநதி தலங்கள் சென்றும் புறமான வார்த்தை யின்றித்
திருமகன் வாழ்வ தாலே சீர்மறைக் குலமு திப்பான்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

33. தருமம் செய்வதில் விருப்பமுள்ளவனும், தன்னை அண்டி வந்தவர்கட்கு உதவியளித்து வந்தும், புண்ணிய நதிகளில் நீராடியும், தீய வார்த்தைகளில்லாமல் வாழ்ந்து வருவதாலும், உயர்ந்த அந்தண குலத்தில் பிறப்பான். வேதங்களின் முடிவில் நடனமாடும் தேவியே ! கேளுங்கள்.

34. முப்பது வொன்று வாண்டி லுயர்தனுர் மாதந் தன்னில்
செப்புவோந் தந்தை கண்டஞ் சேடன்தன் தசையி லேதான்
ஒப்புடன் குருவின் புத்தி உறைந்திடு மந்தக் காலம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

**34.** ஜாதகனுடைய முப்பத்தோராம் வயதில் உயர்ந்த மார்கழி மாதத்தில் தந்தை மரணமடைவான். ராகுமகாதசையில் குருபுத்தியில் கருமம் செய்ய நேரும். கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமானின் தேவியே! கூறிய வார்த்தைகள் தவறு.

35. நாற்பது நாலு வாண்டில் நற்றுலா மாதந் தன்னில்
கூப்பிடு வானுங் காலன் குறித்ததோ ரன்னை தன்னை
ஏற்கவே பணியின் காலம் இந்துவின் புத்தி யாகும்
தீர்ப்பாக நடக்கு மென்றேனு செப்பிய மொழிகுன் றுவே.

35. ஜாதகனுடைய நாற்பத்து நான்காம் வயதில் ஐப்பசி மாதத்தில் தாய் மரணமடைவாள். அப்போது ராகுமகாதசையில் சந்திரபுத்தி யாகும். அது நிச்சயமாக நடக்கும் என்றேம். கூறிய வார்த்தைகள் தவறு.

36. அறுபத்து வாறு ஆண்டில் ஐப்பசி மாதந் தன்னில்
குறைபக்க மேகா தசி குமரன்தன் னுடல மேகும்
மறுத்துமே கூறு கின்றார் மதிக்காறில் குருவும் நிற்க
உறைக்கின்றேஞ் சகட யோகம் ஓராண்டுள் கண்ட மென்றேம்.

36. ஜாதகனுடைய அறுபத்தாறும் வயதில் ஐப்பசி மாதத்தில் கிருஷ்ண பட்சம் ஏகாதசியன்று ஜாதகன் மரணமடைவான். மறுத்துக் கூறுகின்றார். சந்திரனிருக்குமிடத்துக்கு ஆறுமிடத்தில் குரு இருப்பதால் சகடயோகம் ஏற்படும். ஒரு வருடத்துக்குள் கண்டம் நேரும் என்று சொன்னேம்.

37. நாலினில் குருவும் நிற்க நாடாது சகட யோகம்
பாலகன் வயது தீர்க்கம் பகருவோ மிவன்பின் ஜன்மம்
சாலவே யிலங்கை தன்னில் சத்திரிய குலமு திப்பான்
வேலனை யீன்ற மாதே விளம்பின மொழிகுன் றுவே.

37. நான்காமிடத்தில் குரு இருப்பதால் சகடை தோஷம் எற்படாது. ஜாதகன் நீண்ட ஆயுளுள்ளவன். இவனுடைய மறுபிறவியைச் சொல்லு கின்றேம். இலங்கையில் க்ஷத்திரிய குலத்தில் தோன்றுவான். முருகக் கடவுளைப் பெற்ற தேவியே! கூறிய வார்த்தைகள் தவறு.

38. மதிபுத்ர னிரவி வெள்ளி வருதுலாந் தன்னில் நிற்கப்
பதியது மூன்று செய்வன் பணிபொன் பூமி யாவும்
நிதிகள்மூ வேழாயி ரம்பொன் நிருபனும் சேர்ப்பா னுகும்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

38. சந்திரன் புதன் சூரியன் சுக்கிரன் இவர்கள் மேஷத்தில் இருப் பதால் மூன்று வீடுகள் கட்டுவான். ஆபரணங்கள் பொன் பூமி இவைக ளெல்லாம் சேர்ந்து இருபத்தோராயிரம் பொன் ஜாதகன் சேர்ப்பான். முனிவர்களைக் காக்கும் அம்பிகையே! கேளுங்கள்.

39. பாலகன் ஜனிக்குங் காலேப் பரணியின் மூன்றும் பாதம்
சாலவே வெள்ளி தன்னில் சதுராண்டு திங்கள் ரண்டும்
ஏலவே பலன்கள் சொல்வேன் இவனுக்குப் பிணியு மெய்தும்
கோலமாய்த் தான பேதங் குழப்பமாம் மனங்கள் தாமே.

39. ஜாதகன் பிறக்கும்போது பரணி நட்சத்திரம் மூன்றும் பாதம். சுக்கிரமகாதசையில் நான்கு வருடங்களும் இரு மாதங்களும் பாக்கி நிற்கும். அக்காலத்திய பலன்களைச் சொல்லுகின்றேம். இவனுக்கு நோய் உண்டாகும் இடம் மாறுதல் ஏற்படும். மனக் கலக்கம் உண்டாகும்.

40. அன்னையின் துணைசு பங்கள் அலைச்சலாஞ் செலவ நேகம்
மன்னரால் தொழிலு யர்வா மாநிலஞ் சேரு மென்றேம்
தந்தைமுன் துணைசு பங்கள் சந்ததி சேரு மென்றேம்
இந்திர னிறைஞ்சு மாதே இயம்பின மொழிகுன் றுவே.

40. தாயின் உடன் பிறந்தவர்கட்குச் சுப காரியங்கள் நிகழும். அலைச்சலும் செலவுகளும் நேரும். அரசனுல் உத்தியோகம் உயரும். விளைநிலங்கள் சேரும். தந்தைக்கு முன் பிறந்தவர்களுக்குச் சுபமும் சந்தோஷமும் தோன்றும். இந்திரனுல் பூசிக்கப்படும் தேவியே! கூறியவை தவரு.

41. இருபது நாலாண் டுக்கும் இவன்தந்தை ராஜயோகம்
பெருகிடும் பின்னுல் நீங்கும் பூமியால் யோகம் வாய்க்கும்
திருமக ளிதற்குள் நேர்ந்து சீக்கிரம் நிவிர்த்தி யாகும்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய வதியே கேளாய்.

41. ஜாதகனுடைய இருபத்து நான்காம் வயதில் இவனுடைய தந்தைக்கு ராஜயோகம் எய்தும். செல்வம் பெருகும். பிறகு விலகும். பூமியினுல் யோகம் ஏற்படும். இதற்குள் லட்சுமீகடாட்சம் ஏற்பட்டு, சீக்கிரத்தில் விலகும். விநயகனைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

## ஜாதகம் 59.

1. திங்கள்சேய் கேதுவீணை செம்பொன்னுங் காரி மீனம்
பங்கயன் நந்தி யாகப் பணிதனு புதனும் வெள்ளி
துங்கமாய் மேடந் தங்க ஜன்மமு மிதுன மாக
இங்கிவை கிரகம் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் செவ்வாய் கேது மிதுனத்திலும், குரு சனி மீனத்திலும், சூரியன் விருஷபத்திலும், ராகு தனுசிலும், புதன் சுக்கிரன் மேஷத்திலும், இருந்து இலக்கினம் மிதுனமானால், (நவக்கிரக நிலை இவ்வாறு இருந்தால்) பலனைக் கூறுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| குரு சனி | புதன் சுக்கிரன் | சூரியன் | லக்கினம் சந்திரன் செவ்வாய் கேது |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| ராகு | | | |

2. பலன்றனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
குலவிய பராசர் சொல்வார் குறித்தது வாண்பால் ஜன்மம்
தலமது கீழ்மேல் வீதி தென்வாடை யீசன் மேடம்
பலமுள காளி யுத்ரம் பேசுவோம் பலதே வாசம்.

2. பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதி தேவி கேட்கும்போது, பராசரமுனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். இவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு வரிசையில் உள்ளது. அவ்வூரில் சிவபெருமான்........ வடக்குத்திக்கில் சக்தியுள்ள காளி தேவி கோயிலும் இன்னும் பல தெய்வங்களும் வாழ்ந்திருக்கும்.

3. இத்தகை யடையா ளத்துள் இறங்குவா னைந்தாஞ் ஜன்மம்
வித்தக னன்னை தந்தை விளங்கிடு மனைவி மைந்தர்
சித்தசன் துணைவர் யோகம் செப்புவோ முன்பின் ஜன்மஞ்
சுத்தமாய் நவக்கோ ளாய்ந்து சொல்லுவோங் கேட்டி டாயே.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாள முள்ளவிடத்தில் ஜாதகன் தன் தந்தைக்கு ஐந்தாம் புத்திரனாகப் பிறப்பான். ஜாதகனுடைய தாய் தந்தை மனைவி மக்கள் உடன்பிறந்தவர்கள் இவர்களுடைய யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவற்றையும், நவக்கிரக நிலையை ஆராய்ந்து சொல்லுகின்றோம். கேளுங்கள்.

**வேறு**

4. தந்தைகுணங் கூறுகின்றோ மாநிறத்தன்
சன்மார்க்கன் பலவணிபந் தரணி கொஞ்சம்
தன்தனமுஞ் செட்டுச்செய்வன் ஊக சாலி
சங்கரன்றன் தொண்டுசெய்வன் வறுமை காணான்
தந்தைமொழிக் கிடருரையா னுள்ளன் போடும்
தன்பந்துக் கிணக்கமிலான் சான்றோர் நேயன்
தந்தநோ யுடையவனுந் தீமை காட்டான்
சனமதிப்புக் கொண்டிடுவன் சல்யங் கொள்ளான்.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். மாநிறமுள்ளவன். நல்லொழுக்க முடையவன். பலவிதமான வர்த்தகம் செய்து வருவான். விளை நிலங்கள் குறைவாகவே உள்ளன. தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருளைக் கொண்டு வியாபாரம் செய்வான். ஊகமுள்ளவன். சிவ பெருமானுக்குத் தொண்டுகள் பல செய்வான். தரித்திரமில்லாதவன். தன்னுடைய தந்தையின் வார்த்தைக்கு மாறுபட்டுக் கூறாதவன். உள்ளன்புடன் பெரியோர்களை உபசரிப்பான். தன் சுற்றத்தாருக்குத் தாழ்வில்லாதவன். பல் வியாதி உள்ளவன். கோபத்தை வெளியிடாதவன். ஜனங்களால் மதிப்புக் கொள்ளுவான். கடனுபத்திரவ மில்லாதவன்.

5. கொள்ளவிற்க வல்லவனுங் கோப முன்னால்
கூறும்பின் சாந்தமுண்டு குமரன் பக்தி
தண்டமிழ் நுணுக்கறிவான் இளம னத்தன்
தன்கரத்தில் கோதுமைரே கையுமுள் ளானேன்
சள்ளையது வந்தியத்தில் சிறையாய் வாழ்வன்
தங்கிடுமே பித்தபிணி சாரு மென்றோம்
பள்ளுபறை யெவர்களுமே நல்லோ னென்பர்
பரிந்தகுணம் பதர்வார்த்தை சொல்லா னாகும்.

5. வாங்குவதிலும் விற்பதிலும் சமர்த்தன். முன் கோபி. உடனே சாந்தமடைவான். ஷண்முகக்கடவுள்மீது பக்தியுள்ளவன். இனிய தமிழ்ப் பாஷையின் இரகசியங்களை நன்கறிவான். இளகிய மனமுள்ளவன். கையில் கோதுமைரேகையு முள்ளவன். பிற் காலத்தில் துன்பமடைந்து சிறையில் வாழ்வதுபோல் வாழ்ந்து வருவான். பித்தச்சூடு உள்ளவன். பள்ளுப்பறை எல்லோரும் இவனை நல்லவன் என்று கூறுவார்கள். பரிந்து உபசாரம் செய்யும் குணமும் உள்ளவன். அற்பவார்த்தைகளைப் பேசாதவன்.

6. பலதலங்கள் சென்றிடுவன் துணையீ ராறில்
பகருவோ மாறென்று கன்னி மூன்று
நிலையென்றோ மிரண்டாண்டில் வேறுய்ச் செல்வன்
நிகழ்த்துவோம் பின்பாலில் நிமலி யேகேள்
சொலுமிந்தக் குணத்தானுக் கிந்தப் பாலன்
ஜனிப்பனு மிவன்குணத்தைச் செப்பக் கேண்மோ
புலவன்போல் தான்புகல்வன்.................
புயபலத்தன் சமகல்வி பொருந்து றைப்பன்,

6. பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்லுவான். உடன் பிறந்த பன்னிருவரில் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூவரும் நிலையாயுள்ளனர் என்றோம். இவன் இரண்டு வருடங்களில் தனியாகச் சென்று விடுவான். பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள். இங்ஙனம் கூறப்பட்ட குணமுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சேனுங்கள் புலவன்போலப் பேசுபவன். ..........புயபல முள்ளவன். சமமான கல்வியறிவுள்ளவன். பொருத்த மாகப் பேசுபவன்.

7. உரைத்திடுவன் சுகமாக வார்த்தை செய்வன்
ஓராறு முகன்பத்தி உவமை சொல்வன்
குறையென்றோர்க் குறவிடுவன் பொருள்மேல் விச்சை
குறிமுகத்தில் வைசூரிவடி வுடைய தாகும்
விரைவினில் நடைமூலஞ் சூடு டையன்
வீண்வம்பில் தான்செல்லான் விருந்தோர் நேயன்
நெறிகாப்பான் ஊகமுளன் கணக்கில் தேர்வன்
நீத்தோர்மேல் பிரியமிலான் நிமலி நேயன்.

7. சுகமாகப் பேசுவான். வியாபாரம் செய்வான். ஆறுமுகக்கடவுள் மீது பக்தியுடையவன். உவமையாகப் பேசுபவன். கஷ்டப்படுபவர்களுக்கு உபகாரம் செய்வான். செல்வத்தின்மீது விருப்பமுள்ளவன். முகத்தில் வைசூரியின் வடுக்கள் உள்ளன. வேகமாக நடப்பவன். மூலச்சூட்டு நோயுள் ளவன். வீண்வம்புக்குச் செல்லாதவன். விருந்தினருக்குப் பிரியமானவன். நல்வழியைக் கடைப்பிடிப்பான். ஊகமுள்ளவன். கணக்கில் புத்திசாலி. துறவிகளின்மீது பிரியமில்லாதவன். பெண்கள்மீது மோகமுள்ளவன். (மனைவிக்குப் பிரியனுவான்).

8. வெளிதேசஞ் சோங்கின்மேல் மேவு வானும்
வியாபாரந் தான்செய்வன் வீணன் நல்ல
கிளிமொழியா மனவர்மன் தந்திர வார்த்தை
கெடுதியெண்ணுன் யாவர்க்குந் துணையாணென்று
நளினமுள கன்னியுமே மூன்று தீர்க்கம்
நாயகனு முன்னேனைய் நவில லாகும்
தளிர்நிறமாஞ் சாந்தமுளன் தரித்ர மில்லான்
சோங்கின்மேல் சென்றிடுவன் தனவா னுவன்.

8. வெளிதேசத்துக்குக் கப்பலின்மீது செல்லுவான். ......வியாபாரம் செய்து வருவான். நல்ல கிளியின் மொழி போலப் பேசுபவன். மனத்தில் வர்மம் உள்ளவன். தந்திரமாகப் பேசுபவன். பிறருக்குத் தீங் கெண்ணுதவன். உடன் பிறந்த சகோதரன் ஒருவனுண்டு. அழகுள்ள மூன்று சகோதரிகள் உளர். அவர் தீர்க்கமாயிருப்பர். ஜாதகனும் முதல்வ னெனச் சொல்லக்கூடும். தளிரைப்போன்ற மேன்மையான நிற முள்ளவன். சாந்த குணமுள்ளவன். தரித்திர மில்லாதவன். கப்பலில் செல்வான். தன வானுவன்.

9. ஆகுமே தந்தைக்குத் தாழ்வு ருதான்
அடைந்தோரை ஆதரிப்பன் அறிவோர் நேயன்
ஏகுவான் சிலநாளில் வெளிநா டதனில்
இரணியங்கள் செட்டுச்செய்வன் இரப்போர்க் கன்பன்
தோகையொன்று தீர்க்கமுறுஞ் சுதராண் ரண்டு
சுந்தரிமா றவ்வாருய்ச் செப்ப லாகும்
பாகமது இல்லாமல் ஒன்ருய் வாழ்வன்
பலசெட்டுத் தான்செய்வன் பலர்க்கு நேயன்.

9. தன் தந்தைக்குக் குறைவில்லாதவன். தன்னை வந்து அடைந்தவர்களை ஆதரிப்பவன். அறிவாளிகளுக்கு நண்பன். சின்னுட்களில் வெளி தேசத்துக்குச் செல்லுவான். தங்க வியாபாரம் செய்து வருவான். யாசிப்ப வர்களுக்குப் பிரியமுக இருப்பான். மனைவியும் ஒருத்தியே. நீண்ட ஆயுளுள்ளவள். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் தோன்றுவார் என்று கூறுவோம். பாகமில்லாமல் ஒன்ருகவே வாழ்ந்து வருவான். பலவித வியாபாரம் செய்து வருவான். எல்லோருக்கும் நல்லவன்.

10. கன்னிமார் சேதிபின்பால் கழலு வோம்யாம்
காளைக்கு வீரேழில் கன்னி வாய்க்குங்
அன்னவளும் வடபாலில் அணுகு மென்ருேம்
அவள்குணமாம் ஊகமுண்டு அன்னஞ் சாயல்
பின்னமிலாள் நடைநன்மை யதிக வார்த்தை
ஆளன்மனம் போல்வார்த்தை யதிட்ட சாலி
முன்கோப மூர்க்கங்கொஞ்ச மாஞ்சி வப்பள்
உயர்தலவா சஞ்செய்வள் முதல்வி தானே.

10. சகோதரிகள் செய்தியைப் பின் பாகத்தில் கூறுகின்ருேம். ஜாதகனுக்குப் பதிநான்காம் வயதில் மனைவி வாய்ப்பாள். அவளும் வடக்குப்பக்கத்திலிருந்து வருவாள் எனருேம். அவளுடைய குணத்தைக் கூறுகின்ருேம். ஊகமுள்ளவள். அன்னத்தைப் போன்ற அழகுள்ளவள். ஊனமில்லாதவள். நன்னடத்தையுள்ளவள். அதிகமாகப் பேசுபவள். தன் கணவன் மனம்போல வாழ்ந்து வருவாள். அதிருஷ்டமுள்ளவள். முன் கோபம் உடையவள். சிறிது மூர்க்ககுண முள்ளவள். மாநிற முடையவள். இவள் உயர்ந்த க்ஷேத்திரங்களுக்குச் செல்வாள்.

வேறு

11. வயதுமே தீர்க்க மெய்தும் வதிட்டரு மறுத்துச் சொல்வார்
பயமுட னேழில் ராகு [1] பார்மகன் காரி பார்க்க
வியமாகும் முதல்ம னைதான் மேவிடு மிரண்டாம் பாரி
நயமுடன் வதிட்டர் சொல்ல நாரதர் புகலு கின்ருர்.

11. நீண்ட ஆயுளுள்ளவள். வசிஷ்ட முனிவர் இடை மறித்துச் சொல்லுகின்ருர். ஏழாம் வீட்டில் ராகு இருப்பதாலும், செவ்வாய் சனி இவர்கள் ஏழாம் வீட்டைப் பார்ப்பதாலும், முதல் மனைவிக்குத் தோடமாகும். இரண்டாம் மனைவி வாய்ப்பாள். இங்ஙனம் வசிஷ்டர் சொல்லும்போது நாரத முனிவர் சொல்லுகின்ருர்.

---

[1]. செவ்வாய்.

12. எழினுக் குடையோ னாட்சி ஈரஞ்சில் காரி கூடத்
தாழ்வுறு தாரத் துக்குத் தன்சுப காலந் தன்னில்
வாழ்சுப மிரண்டு முண்டு மங்கையு மொன்றே தீர்க்கம்
ஆழியால் அம்ம னைக்கு அணுகிடு மிரண்டு முத்திரை.

12. எழாம் வீட்டுக்குரிய குரு ஆட்சியாகச் சனியுடன் பத்தாமிடத்தில் இருப்பதால் மனைவிக்குத் தீங்கில்லை. அவனுக்கு இரு மணங்கள் எற்படும். இவனுக்கு மனைவி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். அப்பெண்ணுக்கும் இரு மாங்கல்யம் உண்டு என்று சொன்னோம்.

13. காரணம் யாது என்னக் கள்ளரால் முத்ரை நீங்கும்
வேறொரு முத்திரை சேர்ப்பள் விளையுங் காலத்தைச் சொல்வாய்
ஆறேழு ஆண்டு தன்னில் அருணைக்குச் செல்லுங் காலை
மாறிடு மென்று சொல்வோம் மங்கையே மேலுங் கேளே.

13. அதற்குக் காரணம் என்ன என்று வினவ, திருடரால் ஒரு மங்கல நாண் நீங்கிவிடும். அதற்குப் பதிலாக வேறொரு மாங்கல்யம் அணிந்து கொள்வாள். அஃது எற்படும் காலத்தைக் கூறுங்கள். ஜாதகனுடைய நாற்பத்திரண்டாம் வயதில் திருவண்ணாமலைக்குச் செல்லும்போது திருட்டுப் போகும் என்று சொல்வோம். தாயே! மேலும் கேள்.

14. இன்னமும் சிலவே சங்கை இயம்புவோம் பின்பால் சேதி
தன்சுதர் ஐவர் தோன்றும் சாற்றுவோ மாண்பா லொன்று
கன்னிமார் மூவ ரென்றோம் கழறின நான்கு தீர்க்கம்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

14. இன்னும் சில துன்பங்கள் பிற் பாகத்தில் எற்படுமென்று சொல்லுகின்றோம். ஜாதகனுக்கு ஐந்து குழந்தைகள் தோன்றுவர். ஒரு புத்திரனும் மூன்று புத்திரிகளும் தீர்க்காயுளுள்ளவர்கள். உயர்ந்த கணவனைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

15. அன்னையு மாஞ்சி வப்பள் அன்புள மனத்த ளாகும்
தன்சொலு மடக்க முண்டு தருமமாம் குணத்த ளாகும்
கன்னிகை விரத மேற்பள் கரோத்தை வெளிக்காட் டாதாள்
தன்துணை ஆண்பா லொன்று தங்கிடுந் தீர்க்க மாக.

15. ஜாதகனுடைய தாய் மாநிற முள்ளவள். அன்புள்ள மனத்தினள். அடக்கமாகப் பேசுபவள். தருமம் செய்வதில் விருப்ப முள்ளவள். நோன்புகள் நோற்பாள். கொடுமையை (கோபத்தை) வெளிக்காட்டாதவள். உடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன் என்றோம்.

16. மாதுரு பூர்வந் தன்னை வரைகின்றோந் தாயே கேளும்
ஓதுரு தலத்தி லேதான் உதித்தனன் சேடர் வர்க்கம்
போதவே குடும்பி யாகிப் புத்திர ரதிக முண்டாய்க்
காதலி வாழு நாளில் கழறுவோ மூழி தானும்.

16. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள். ஒதூர் என்ற ஊரில், சேடர் வர்க்கத்தில் பிறந்தாள். பெரும் குடும்பியாகி, புத்திரர்களைப் பெற்று, வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

### பெண் நிந்தை

17. மைத்துனன் மனைவி பேரில் வரைந்தனள் சிலேடை வார்த்தை
சுத்தத்தா ரிதனைக் கேட்டுத் தோகையை விலக்கி விட்டார்
வித்தகி மனங் கலங்கி விளம்புவாள் சாபந் தானும்
குத்தமாய் நிந்தை வார்த்தை கூறின வளுக்கு மேதான் ;

17. ஜாதகனுடைய தாய், தன் மைத்துனனுடைய மனைவியின்மீது இரு பொருள்படும்படி சில வார்த்தைகளைக் கூறினாள். அவளுடைய உறவினர் இவள் கூறும் சொற்களைகேட்டுப் பெண்ணை விலக்கிவிட்டனர். அப்பெண் மனம் நொந்து சாபமிட்டாள். என்மீது இல்லாத பழி வார்த்தைகளைக் கூறிய பாவிக்கு ;

18. மறுஜன்ம மகவாய்த் தோன்றி வருந்துணைப் பெண்ணில் லாமல்
குறையான கர்ப்ப நோயால் கூற்றன்தன் பதிக்குச் செல்வாய்
உரைத்துமே தெருத்தூள் விட்டு ஒதுங்கினா ளந்த மாது
மறுவிற்று அந்தத் தோடம் மாதுவு மந்தி யத்தில் ;

18. மறு பிறவியில், பெண்ணாய்ப் பிறந்து, உடன் பிறந்த சகோதரி யில்லாமல், குறைக் கர்ப்பத்தால் மரண மடைவாய் என்று சொல்லித் தெரு மண்ணைவாரி யிறைத்து விட்டுச் சென்றாள். அந்தத் தோஷம் இவளைப் பற்றியது. இவளும் தன் கடைசிக் காலத்தில் ;

19. பாரிச வாயு வாலே பறந்தனள் கால னூடு
ஆரியன் வரையப் பட்டு அணுகினாள் வைச்ய சேயாய்
நாரியுந் துணைப்பெண் காணாள் நாற்பத்து மூன்றுண் டில்தான்
சேருவாள் கால னூடு தேவியின் சாபம் போல.

19. பாரிச வாயு நோயால் மரண மடைந்தாள். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு வைசிய குலத்தவளாகப் பிறந்தாள். அவளும் உடன் பிறந்த சகோதரியில்லாதவள். நாற்பத்துமூன்றும் வயதில் (முற்பிறவியில்) பெண் சாபம்போல் (ஜாதகனுடைய ஏழாம் வயதில் இறந்துவிடுவாள்).

20. மறுஜன்மம் பழனி தன்னில் மன்னர்தன் குலமு தித்துப்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பொன்பொரு ளதிக முண்டாய்த்
திருமகள் வாழ்வா ளாகுஞ் செப்பின மொழிகுன் றாவே
கரிமத் வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

20. மறுபிறவி, பழனியில், அரசர் குலத்தில் பிறந்து, பெருமையுள்ள குடும்பத்தவளாகி, பொருள் பொன்களை அதிகமாகப் பெற்று வாழ்ந்து வருவாள். கூறிய வார்த்தைகள் தவறா. கரிய யானைமுகத்தோனை யீன்ற தேவியே! கேளுங்கள்.

21. தந்தையின் பூர்வஞ் சொல்வேன் சம்புகேச் வரத்தி லேதான்
வந்தனன் ரெட்டி வம்சம் மாநில மதிக முண்டாய்
முந்திய குடும்பி யாகி மொய்குழல் மதலை யுண்டாய்
இந்தவன் வாழு நாளில் இயம்புவோ மூழி தானும்.

21. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். ஜம்புகேச்வரத்தில், (திருவானைக்காவலில்) ரெட்டி மரபில் தோன்றி, விளை நிலங்களைப் பெற்று, பெரியசம்பத்தைப் பெற்று, மனைவி, குழந்தைகளை யடைந்து, இவன் வாழ்ந்துவருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக்கூறுவோம்.

22. சிறுத்ததோ ரேழைக் கேதான் சிலசில பொருளு மீந்து
பறித்தன னில்லம் யாவும் பகருவா ரேழை சாபர்
குறையான பொருளை யீந்து குடியில்லங் கொண்ட பாவி
வருஞ்ஜன்மம் மகவாய்த் தோன்றி மத்தியில் மனைவி மாண்டு ;

22. துன்பமடைந்த சில ஏழைகளுக்குச் சிற்சில பொருள் கொடுத்து, வீடு முதலிய யாவற்றையும் அபகரித்துக் கொண்டான். ஏழைகள் சாப மிட்டனர். எங்களுக்குக் குறைவான பொருளைக் கொடுத்து, குடியிருக்கும் வீட்டை எடுத்துக்கொண்ட பாவியே ! உனக்கு ஏற்படும் மறுபிறவியில், கடைசிக்காலத்தில் மனைவி மாண்டு ;

23. சஞ்சல மனத்த னாகிச் சிறையாக வாழ்வா யென்று
வெஞ்சின மாகச் சொன்னார் மேவிற்று வந்தச் சாபம்
தஞ்சமா யந்தி யத்தில் தான்சேது பதிக்குச் சென்று
மிஞ்சினோர்க் கன்ன மீந்து மேவினன் கால னூடு.

23. துன்பமடைந்த மனத்தவனாகி, சிறையில் வாழ்வதுபோல் வாழ்ந்து வருவாய், என்று மிகுந்த கோபத்துடன் சொன்னார். அந்தச் சாபம் இவனை வந்தடைந்தது. தன் கடைசிக் காலத்தில் சேதுவுக்குச் சென்று, ஏழைகளுக்கு (துறவிகட்கு) அன்னமளித்து, கடைசியில் மரணமடைந்தான்.

24. தலைநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ னிவனே யென்றோம்
குலவிடும் முன்னூழ்ச் சாபம் உறுமனை மத்தி யத்தில்
குலவுவாள் கால னூடு குமரனுஞ் சிறையாய் வாழ்வன்
நலமுள பராசர் சொல்ல நாயகி கேட்க லுற்றாள்.

24. பிரமனால் மீண்டும் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இவனே என்றோம். முற்பிறவியின் தோஷம் தொடரும். தன் மனைவி இடைக்காலத்தில் இறந்துபோவாள். இவனும் சிறையில் வாழ்வதுபோல வாழ்ந்து வருவான். இங்ஙனம் பராசர முனிவர் கூற, பார்வதி கேட்கலானாள்.

### சேதுவில் நீராடிய பலன்

25. தன்ஜன்மஞ் சேது தீர்த்தம் முயன்றதோர் பலத்தி னாலே
வந்தசா பங்கள் நீங்கா வோவதைச் சொல்லு மென்ன
நொந்திடு மேழை சாபம் நீங்காது என்று சொல்வோம்
சந்ததஞ் சேது சென்ற தன்பலன் சொல்லு மென்ன ;

25. முற்பிறவியில் சேதுவுக்குச் சென்று நீராடிய புண்ணியத்தால் ஏற்பட்ட சாபங்கள் நீங்காவோ? அதனைக் கூறுங்கள், என்று கேட்க, மனம் வருந்திய ஏழைகளின் சாபம் விலகாது என்று சொன்னோம். சேதுவுக்குச் சென்ற புண்ணியங்கள் என்ன வென்று கூறுங்கள்.

26. வறுமைகள் காணு தாகும் வளமுள குடும்பி யாவன்
இருபது வாறு ஆண்டில் ஏகுவன் தந்தை தானும்
குருதசை காரி புத்தி குலவிடு மந்தக் காலம்
வருஞ்ஜன்மஞ் சேது தன்னில் மறைக்குல முதிப்பா னாமே.

26. தரித்திரமில்லாதவன். செழிப்புள்ள குடும்பியாவன். ஜாதகனுடைய இருபத்தாறும் வயதில் தந்தை மரண மடைவான். அக்காலத்தில் குருமகாதசையில் சனி புக்தி நடைபெறும். மறுபிறவி சேதுவில் அந்தண குலத்தவனாகத் தோன்றுவான்.

27. இந்ததோர் ஜன்மந் தன்னில் இவன்செய்த புண்ய மென்ன
முந்தவே கூறு மென்ன முருகர்தம் பத்தி கொண்டும்
விந்தையாய்த் தலங்கள் சென்றும் வித்தகன் வாழ்ந்த தாலே
பிந்திய ஜன்மந் தன்னில் பிறப்பனும் பிரம சேயாய்.

27. ஜாதகனுடைய தந்தை இப்பிறவியில் என்ன நற்காரியங்கள் செய்தான்? அதை முதலில் கூறுங்கள், என்று கேட்க, முருகப்பிரான்மீது பக்தியுடன் புண்ணிய தலங்களுக்குச் சென்று வாழ்ந்து வந்ததால் மறுபிறப்பில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான்.

28. உதித்தவன் பூர்வஞ் சொல்வோம் உறையூர் தன்னித் லேதான்
நதிகுலந் தனிலு தித்து நாயகி மனைவி மைந்தர்
முதன்மையாய்க் குடும்பி யாகி யுயர்வோர்கள் பத்தி கொண்டு
அதிதிகட் கன்ன மீந்து அதுஜன்மம் பவமில் லாமல்;

28. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். உறையூரில், வேளாள குலத்தில் தோன்றி, மனைவி மக்களைப் பெற்று, உயர்வுள்ள குடும்பியாகி, பெரியோர்களிடம் பக்தி கொண்டு, விருந்தாளிக்கு அன்னமளித்து, அப்பிறவியில் பாவச் செயல்களில்லாமல் வாழ்ந்து;

29. காலன்தன் நாட டைந்து கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமில் லாத வைச்ய குலமதி லுதிப்பா னாகும்
பாலகன் யோகச் சேதி பகருவோ மினிமே லாகச்
சாலவே வேசி யோகந் தங்கிடு மதுவு மின்றி;

29. எமபுரம் அடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமில்லா வைசிய குலத்தில் பிறப்பான். இனி ஜாதகனுடைய யோகச் செய்திகளைக் கூறுகின்றோம். வேசியோகம் என்ற ஒரு யோகம் ஏற்படும். அதுவு மல்லாமல்;

30. தர்மகர் மாதி யோகஞ் சாற்றுவோம் பலனைக் கேளாய்
வறுமைக ளடையா னாகும் மாநிலஞ் சல்யங் கொள்ளான்
பரதேச மிடையில் செல்வன் பணமது அதிகஞ் சேர்ப்பன்
குறையென்றோர் தம்மைக் காப்பன் கூவத்தைச் செய்வா னாகும்.

30. **தருமகர்மாதிபதி** யோகம் ஏற்படும். அதன் பலன்களைச் சொல்லுகின்றோம். தரித்திரம் அடையாதவன். நிலத்தில் கடன் படாதவன். மத்திய காலத்தில் வேறு தேசத்துக்குச் செல்லுவான். பணத்தை அதிகமாகச் சேர்ப்பான். துன்பமடைந்தவர்களை ஆதரிப்பான். கிணறுகளைத் தோண்டுவிப்பான்.

31. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தனமதைச் சேர்ப்பா னாகும்
முந்தின தலங்கள் செல்வ னுயர்வான குடும்ப மேற்பன்
கந்தன்மேல் பத்தி கொள்வன் கடவுளர் தொண்டு பூண்பன்
பந்தினர் மதிக்க வாழ்வன் படைப்பனபா னாயிரம் பொன்.

31. தன் தந்தைக்கு மேன்மையாக வாழ்ந்து வருவான். செல்வத்தைப் பெருக்குவான். உயர்ந்த க்ஷேத்திரங்களுக்குச் செல்வான். உயர்வான குடும்பமுள்ளவன். முருகக்கடவுள்மீது பக்தி கொள்ளுவான். தெய்வ (பெரியோர்) பக்தி உள்ளவன். உறவினர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். பதினாயிரம் பொன் சேர்ப்பான்.

32. இருபது ஐந்தாண் டின்மேல் இயம்புவோம் யோகச் சேதி
அரசர்பூ சிதமு மெய்தும் யாவரும் வணங்க வாழ்வன்
தரையினால் பொருளுஞ் சேரும் சேருங்கா லங்கள் சொல்வாய்
இருபது ஒன்பா னாண்டில் எய்திடும் நிதிநிட் சேபம்.

32. ஜாதகனுடைய இருபத்தைந்தாம் வயதுக்குமேல் ஏற்படும் யோகத்தைச் சொல்லுகின்றோம். அரசரால் கௌரவிக்கப்படுவான். எல்லோராலும் வணங்கப்படுவான். நிலங்களால் பொருள் சேரும். அப்படி ஏற்படும் காலத்தைக் கூறுங்கள். இருபத்தொன்பதாம் வயதில் செல்வம் (புதையல்) கிடைக்கும்.

33. மூவெட்டு வாண்டு தன்னில் மேவிடு மில்ல மென்றோம்
தீவினில் பலவாய்ச் செட்டுச் செய்திடுவ னிந்தப் பாலன்
பாவத்தில் செல்லா னாகும் பண்ணுவன் சோலை யாழி
சேவலங் கொடியோன் தொண்டு செய்வனு மிவனே யம்மா.

33. இருபத்துநாலாம் வயதில் வீடு கட்டுவான். பல தீவுகளுக்குச் சென்று பல வியாபாரம் செய்வான். பாவச் செயலைச் செய்யான். தோட்டங்களை வைத்து வளர்ப்பான். கிணறு குளங்களை வெட்டுவிப்பான். முருகக் கடவுள்மீது பக்தி கொள்ளுவான்.

34. அறுபது எட்டு ஆண்டில் ஆனிமா தத்தி லேதான்
நிறைபக்கஞ் சட்டி தன்னில் நீங்கிடு மூடல மென்றோம்
வருஞ்ஜன்மம் பிருதிவி தன்னில் மறைக்குல முதித்த இன்னோன்
அரசர்பூ சிதமு மெய்தும் அம்பிகை யாளே கேளாய்.

34. ஜாதகன் தனது அறுபத்தெட்டாம் வயதில் ஆனிமாதத்தில் சுக்கிலப் பட்சம் ஷஷ்டி திதியில் இறந்து விடுவான். வரும் பிறவி, **காஞ்சிபுரத்தில்,** அந்தண குலத்தில் பிறப்பான். அரசரால் நன்கு மதிக்கப்படுவான். தாயே! கேளுங்கள்.

35. அத்திரி தடுத்துச் சொல்வார் இருபானெட் டாண்டுள் வீடு
சித்தமாய்க்கிடைக்கு மென்றேஞ் செம்பொன்னுஞ் சனியும் பத்தில்
சுத்தமா யிருப்ப தாலே செப்பின வாண்டுக் குள்ளே
குத்தமாய்ப் பிணிய நேகங் குலவிடுங் கண்டங் காணுன்.

35. அத்திரி மறுத்துக் கூறுகிறுர். ஜாதகனுடைய இருபத்தெட்டாம் வயதில் வீடு நிச்சயமாய்க் கிடைக்கும். குருவும், சனியும் பத்தாமிடத்திலிருப்பதால் கூறியவருஷத்துக்குள்ளாகவே பலவித நோய்கள் ஏற்படும். ஆனுல் கண்டம் ஏற்படாது.

### ஆயுர் பாவம்

36. மாரியால் சுரத்தால் பேதி வாகனந் தன்னுல் நேரும்
கூறின மார கங்கள் கூறின வறுபா னெட்டும்
தேரிடும் வயது என்றேஞ் சனிதசை நாலே யாக
வீரியன் தனக்குக் கண்டம் விளம்பலாந் தடுத்துச் சொல்வார்.

36. மாரி (அம்மை), சுரம், பேதி, வாகனம் இவைகளுள் ஒன்றுல் அபாயம் நேரும். ஆனுல் மரண மேற்படாது. நாங்கள் கூறிய அறுபத்தெட்டாம் வயது வரையில் ஆயுள் நிச்சயம் என்றேம். சனிமகாதசை நான்காவதாக இருப்பதால் ஜாதகனுக்குக் கண்டம் நேரும் என்று தடுத்துச் சொல்லுகின்றுர்.

37. கரியின் தசையி லேதான் கனமான பிணிகள் நேரும்
அருணன்தன் தசையி லேதான் அறைந்தன மார கங்கள்
திருமகன் ஜனன காலஞ் சேய்தசை யாண்டு மூன்றும்
மருவிடுந் திங்க ளொன்றும் மன்னவன் பிணியால் வாடும்.

37. சனிமகாதசையில் கனத்த நோய்கள் ஏற்படும். சூரியமகாதசையில் மரணம் ஏற்படும். ஜாதகனுடைய ஜனன காலத்தில் செவ்வாய்த்தசை மூன்று வருடங்களும், மாதம் ஒன்றும் பாக்கியாகும். ஜாதகனுக்கு நோயால் துன்பம் ஏற்படும்.

38. இல்லமும் பிரித லாகும் எய்தும்பின் துணைபெண் விருத்தி
தல்லிக்கு நலித லுண்டு சித்தமா யலேச்சல் தந்தை
அல்லலாய் வர்க்கஞ் சூதம் வரைகிறேம் பின்பால் சேதி
எல்லேயை யளந்தோன் தேவி இதுபூர்வ பாக மாமே.

38. வீடு பிரிந்து விடும். சகோதரி விருத்தியாவாள். தாய்க்கு நோய் ஏற்படும். தந்தைக்கு அலேச்சல் உண்டாகும். தன் வர்க்கத்தினருக்கு அசுபம் நிகழும். பிற்பாகத்தில் மற்ற சேதியைச் சொல்லுகின்றேம். பூமியை அளந்த திருமாலின் சோதரியே! இது முதல் பாகமாகும்.

## ஜாதகம் 60

1. திங்கள்சேய் கேது நந்தி செங்கதிர் மிதுன மாகப
பங்குமே மேரு வாகப் பணிகுரு தேள தாகச்
செங்கண்மால் புகரு நண்டில் ஜன்ம மும் வீணை யாகச்
சங்கையைச் சொல்லு மென்னச் சத்தியுங் கேட்க லுற்றாள்.

1. சந்திரன் செவ்வாய் கேது விருஷபத்திலும், சூரியன் மிதுனத்திலும், சனி தனுசிலும், ராகு குரு விருச்சிகத்திலும், சுக்கிரன் புதன் கடகத்திலும் இருந்து, லக்கினம் மிதுனமானால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| | | சந்திரன் செவ்வாய் கேது | லக்கினம் சூரியன் |
| | இராசி சக்கரம் | | சுக்கிரன் புதன் |
| | | | |
| சனி | ராகு குரு | | |

2. பிருகுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
பெருந்தந்தை யில்லஞ் சொல்வேன் பெருநாமங் கீழ்மேல் வீதி
மறலியின் வாச லாகும் மாகாளி வடகீ ழாகும்
கரிமுகன் மேல்பால் தங்குங் கங்கையு மிருபால் தங்கும்.

2. பிருகு முனிவர் கூறுகின்றார். பிறப்பது ஆண் மகன். பெற்ற தந்தையின் வீட்டைச் சொல்லுகின்றேன். பெரிய பெயருடையது. கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வட கிழக்கில் காளி தேவியின் கோயிலுண்டு. மேற்கில் யானைமுகத்தோன் கோயிலுள்ளது. இருபுறங்களிலும் ஆறு இருக்கும்.

3. சொல்லிய வடையா ளங்கள் செப்பினே மெட்டாஞ் ஜன்மம்
இல்லமு மற்ப மாகும் இவன்தந்தை தாயின் யோகம்
வல்லியின் புத்ர யோகம் வரைகிறோ முன்பின் ஜன்மம்
அல்லலில் லாமல் சொல்வோம் அம்பிகை யாளே கேளாய்.

3. இவ்வித அடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் எட்டாம் பிறவியாகத் தோன்றுவான். வீடு மிகச் சிறியது. இவனுடைய தாய் தந்தையர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் துன்பமில்லாமல் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

4. தாதைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு மிளையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் தந்தை
ஓதுவோந் துணைவர் நான்கு உறங்கிடுஞ் சிலவே யென்றோம்
தீதிலா வாண்பால் ரண்டு செப்புவோ முன்பின் னாக.

4. ஜாதகனுடைய பாட்டனுக்குள்ள இரு மனைவியரில் ஜாதகனுடைய தந்தை இளையவள் பெற்ற புத்திரன் என்றோம். தந்தையின் உடன் பிறந்த நால்வரில் சிலர் இறந்துவிடுவார் என்றோம். இரு ஆண் மக்கள் ஜாதகனுடைய தந்தைக்கு முன்பின்னாக இருப்பார்கள்.

5. பாலக னுதிக்கா முன்னம் பாகங்கள் பிரிதல் நேரும்
ஏலவே பின்பா கத்தில் இயம்புவோ மவர்கள் சேதி
சாலவே மாதுருமுன் ஜன்மஞ் சாற்றுவோ மலைநா டதனில்
சீலமில் லாத வன்யன் ஜனித்துமே கிருஷி செய்து ;

5. ஜாதகன் தோன்றுவதற்கு முன்பாகவே பாகங்கள் பிரிந்துவிடும். பிற்பாகத்தில் அவர்களுடைய செய்திகளைக் கூறுவோம். ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மலை நாட்டில் வன்னிய குலத்தில் தோன்றி, விவசாயம் செய்து வந்து ;

6. மனைவிமைந் தருமுண் டாகி மறையவர் தொண்டு பூண்டு
வினையது இல்லா ளாகி மேவினள் கால னூடு
கனமுள பிரமன் லக்கங் கௌரியின் குலமு தித்தாள்
அனையவே யிவள்கு ணத்தை அறிவிப்போந் தாயே கேளும்.

6. மனைவி மக்களைப் பெற்று, அந்தணர்கட்குத் தொண்டு செய்து, தீவினைகள் இல்லாதவளாக மரணமடைந்தாள். மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு, கௌரி குலத்தில் பிறந்தாள். ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

7. மனதினில் கவடு மில்லான் மாநிறஞ் சமதே கத்தான்
தனமிலான் பொறுமை சாலி தறித்தொழில் புரிவா னாகும்
இனத்துக்கு இணக்கஞ் செய்வன் இடிவிழு மரம்போல் நெஞ்சம்
கனமுள குடும்ப மற்பம் சாந்தம்போல் புத்தி யுண்டு.

7. கபடமில்லாத மனத்தினன். மாநிறமுள்ளவன். சமமான தேகமுள்ளவன். தனமில்லாதவன். பொறுமையுள்ளவன். நெசவுத்தொழில் செய்து வருவான். தன் பந்துக்களுக்கு அடங்கி இருப்பான். திடமான மனமுள்ளவன். பெரிய குடும்பமில்லாதவன். சாந்தியுள்ளவன்போலிருப்பான்.

8. தந்தையி னில்லம் விட்டுச் சாருவான் வேறு சாகை
பிந்திவே றில்லஞ் செய்வன் பொறுமையுங் கொஞ்ச முண்டு
விந்தையாய்க் கல்வி காணன் விகடங்கள் கூறு வாகும்
சுந்தர சீல மில்லான் துணைவர்சொல் தட்டா னாகும்.

8. தன் தந்தையின் வீட்டை விட்டு வேறு வீட்டுக்குச் செல்வான். பின்னால் வேறு வீடு கட்டுவான். சிறிது பொருமையுள்ளவன். அதிகமான கல்வி யறிவில்லாதவன். விகடமாகப் பேசாதவன. நல்லொழுக்கமில்லா தவன். தன் உடன் பிறந்தவர் பேச்சை மீருதவன்.

9. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னெட்டாஞ் ஜன்மம்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அற்பமாங் கல்வி யுண்டு
உன்னத தேகம் பின்னால் உறுதியா மனத்த னாகும்
பன்னியே பேச வல்லன் பாருகள் சேர்ப்பா னாகும்.

9. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு ஜாதகன் எட்டாவது மகனாகப் பிறப்பான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். அல்ப மான கல்வியறிவுள்ளவன். உயர்ந்த தேகமும், திடமான மனமும் உள்ளவன். பன்னிப் பன்னிப் பேசுபவன். விளைநிலங்களைச் சேர்ப்பான்.

10. ஆதியில் வறுமை யுண்டு அற்பமாங் குடும்ப மென்றேமே
சூதுகள் சிலர்க்குச் செய்வன் சொல்மேன்மை யாகச் சொல்வன்
ஞாதியை நசிக்க வைப்பன் நயம்படக் கூறு வானும்
மேதினில் புகழு மேற்பன் வெஞ்சினம் வெளிக்காட் டாதான்.

10. ஆதி காலத்தில் வறுமை யுள்ளவன். அல்பமான குடும்ப முடை யவன். சிலருக்குச் சூதுகள் செய்வான். மேன்மையாகப் பேசுபவன். தன் உறவினர்களை அழிக்கவல்லவன். நயம்படப் பேசுபவன். உலகில் புகழுடை வான். கோபத்தை வெளியிடாதவன்.

11. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தாமரை ரேகை யுண்டு
நொந்தபேர்க் குதவி செய்வன் நினைத்ததை முடிக்க வல்லன்
பந்தினர்க் கிணக்கஞ் செய்யான் பாரினில் சல்யங் கொள்ளான்
கந்தனை யீன்ற மாதே கலைத்தொழில் புரிவா னாகும்.

11. தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான். கையில் தாமரை ரேகை யுள்ளவன். துன்பமடைந்தவர்களுக்கு உபகாரம் செய்வான். எண்ணிய காரியத்தை முடிக்கவல்லவன். தன் பந்துக்களுக்கு அடங்கா தவன். உலகில் கடனுபத்ரவம் இல்லாதவன். முருகக் கடவுளைப் பெற்ற தாயே! தன் குலத்தொழிலை (நெசவுத்தொழிலை)ச் செய்து வருவான்.

12. எப்படி யோகஞ் சொன்னீர் இரணியன் ஆறி லேறத்
தப்பிதந் தீவி பத்தில் தங்கிட யோக மெவ்வாறு
செப்புவீர் புகரும் புந்தி தனத்தினில் கதிரோன் ஜன்மம்
இப்படி கிரகத் தாலே இயம்பினேம் யோகந் தானே.

12. ஜாதகனுக்கு யோகம் எப்படி உண்டாகும் என்று சொன்னீர்கள். குரு ஆறுமிடத்தில் இருப்பதாலும், . . . . . . . . . . . . . தங்கியிருப்பதாலும், யோகம் எப்படி உண்டாகும்? சுக்கிரனும் புதனும் தனஸ்தானத்தில் இருந்து சூரியன் ஜன்மத்தில் இருக்கும் பலத்தால் கூறினேம்.

13. பத்தாண்டு முதலா மாகப் பருவத யோகம் நேரும்
சித்திர இல்லஞ் செய்தல் செழிப்பான தொழிலு மெய்தும்
சுத்தத்தார் மதிக்க உய்வன் தொடுத்கா ரியங்கள வெற்றி
முத்திஞே ருளி ஞலே யுயர்வாக வாழ்வன் மாதே.

13. ஜாதகனுடைய பத்தாம் வயதுக்குமேல் பர்வதயோகம் நேரும். அழகிய வீடு கட்டுவான். பொங்கிய தொழில் பெருகும். உறவினர்கள் கொண்டாட வாழ்வான். எடுத்த காரியங்களை வெல்வான். பெரியோர்களின் அருளால் உயர்வாக வாழ்ந்து வருவான்.

14. பணிதசை பின்பால் கொண்டு பகருவோம் வறுமை காணுன்
பணிவான மனங்க ளெய்துந் தொல்லைகள் நிவிர்த்தி யாகும்
தணிவுளோர் நேச மெய்துஞ் சகோதரன் தன்ஞல் யோகம்
அணையவே தவங்கள செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

14. ராகுமகாதசை பிற்பாகம் முதற்கொண்டு தரித்திரமில்லாதவன் என்று சொல்வோம். பணிவுள்ள மன முண்டாகும். தொந்தரவுகள் நீங்கும். நல்லவர்கள் நட்புக் கிடைக்கும். தன் சகோதரனல் மேன்மை கிட்டும். பல தவங்கள் புரியும் அம்பிகையே! கேளுங்கள்.

15. தன்துணை யாண்பால் மூன்று சத்திமார் நால்வ ராகும்
பின்னங்கள் சிலவே பின்ஞல் பேசுவோ முத்ர பாகம்
அன்னையின் குணத்தைச் சொல்வோ மன்புள மனத்த ளாகும்
சொன்னசொல் சுகமே யாகுந் தோகைபோல் நிறத்த ளாகும்.

15. ஜாதகனுக்கு உடன் பிறந்தவரில் மூன்று சகோதரர்களும் நான்கு சகோதரிகளுமாவர். சிலர் இறந்து விடுவார். அவர்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்ரேம். ஜாதகனுடைய தாயைப்பற்றிச் சொல்லுகின்ரேம். அன்புள்ள மனத்தினள். சுகமாகவே பேசுபவள். மயிலைப்போன்ற அழகுள்ள நிறத்தினள்.

16. சுகதுக்கங் கலந்து வாழ்வாள் தோகைபாட் டாளி யாகும்
பகையென்று மனத்தில் வையாள் பகருமுன் கோபங் கொஞ்சம்
உகமையாய்ப் பேசு வாளாம் உறுதியில் லாத நெஞ்சம்
நகைபணி யதிகங் காணுள் நாயகி தீர்க்க சீவி.

16. சுகதுக்கம் கலந்து வாழ்வாள். உழைப்பாளி என்று சொல்வோம். மனத்தில் விரோதம் பாராட்டாதவள். கூறுவதற்குமுன் கோபங் கொள்வாள். உவமானத்துடன் பேசுபவள். திடமில்லாத மனத்தினள். உயர்ந்த ஆபரணங்கள் அதிக மில்லாதவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

17. இல்லமும் வடபா லாகும் இவள்துணை யாண்பா லொன்று
வல்லிமா ரிருவ ராகு மாண்துணை நட்ட மெய்தும்
சொல்லிய கன்னி யொன்று சாருவாள் வெளியி லேதான்
அல்லலாய் நிந்தை யேற்பள் அம்பிகை யாளே கேளாய்.

**17.** இவளது பிறந்த வீடு வடமேற்குத் திசையிலுள்ளது. உடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவருமாவர். சகோதரன் இறந்து விடுவான். சகோதரி ஒருத்தி வெளியூருக்குச் சென்று விடுவாள். துன்பத்துடன் பழிகளை அடைவாள். தாயே! கேளுங்கள்.

18. மாதுரு பூர்வஞ் சொல்வேன் மைலத்துக் கீழ்ப் பா லாக
மேதினில் சிறுவூர் தன்னில் விளங்கினாள் ரெட்டி வமசம்
பாதக மனங்க ளின்றிப் பசித்தோருக் கன்ன மீந்து
காதலி வாழ்ந்து மேதான் காலன்றன் பதிக்குப புக்கி ;

18. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மைலத்துக்குக் கிழக்குள்ள சிற்றூரில், ரெட்டியார் மரபில தோன்றினாள். தீய எண்ணகளில்லாமல், பசியுடன வந்தவர்கட்கு உணவளித்து வாழ்ந்து வந்து மரணமடைந்து ;

19. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ ளென்று சொல்வோம்
வருஞ்ஜன்மஞ் சைவச் சேயாய் வருகுவாள் வான்மி யூரில்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வந் வாழ்வா ளாகும்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

19. பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று சொல்லுகின்றோம். மறுபிறவி, சைவ குலத்தவளாய், திருவான்மியூரில் பிறப்பாள். லட்சுமீகடாட்சம் பெற்று வாழ்ந்து வருவாள். விநாயகக் கடவுளைப் பெற்ற புண்ணியவதியே கேளுங்கள்.

**20.** பத்தொன்ப தாண்டு தன்னில் பகருவோந் தந்தை கண்டம்
வித்தகன் பின்ஜன் மத்தை விளம்புவோஞ் சேர நாட்டில்
சுந்தமாஞ் சைவச் சேயாய்ச் ஜனிப்பனு மென்று சொல்வோம்
அத்தியை வளர்த்த எங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

**20.** ஜாதகனுடைய பத்தொன்பதாம் வயதில் தந்தை மரணமடைவான். அவனுனடய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். சேரநாட்டில் சுத்த முள்ள சைவ குலத்தவனுகப் பிறப்பான் என்று கூறுகின்றோம். விநாயகக் கடவுளைப் பெற்ற எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

**21.** இருபது நாலு ஆண்டில் இயம்புவோ மன்னை கண்டம்
குருதசை சுயமாம் புத்தி கூடிடுங் காலந் தன்னில்
மருவிடும் பித்த பாண்டால் மாரக மென்று சொல்வோம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

**21.** ஜாதகனுடைய இருபத்துநான்காம் வயதில் தாய் மரணமடைவாள். அக்காலததில் குருமகாதசையில் குருபுக்தி நடைபெறும். பித்த பாண்டு ரோகத்தால் மரண மேற்படும். வேதங்களின் முடிவில் ஆடும் தேவியே! கேளுங்கள்.

22. பாலகன் மணத்தின் காலம் பகருவோ மிருபா ஞென்றில்
நீலியு முள்ளூர் நேரும் நுவலுவோ மவள்கு ணத்தைச்
சீலியாம் விரத சாலி சனசகா யங்கள் செய்வள்
காலத்தை யறிந்து ரைப்பள் கணவனுக் கினிய ளாகும்.

22. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுவோம். இருபத்தோராம் வயதில் உள்ளூரிலிருந்தே மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். நல்லொழுக்க முடையவள். விரத மேற்பாள். ஜனங்களுக்கு உபகாரி. வருங்காலத்தை முன் கூட்டித் தெரிவிக்கும் ஆற்றலுடையவள். தன் கணவனுக்குப் பிரியமானவள்.

23. வருவோரை யாத ரிப்பள் மங்கைபாட் டாளி யாகும்
திருமக ளொப்ப தாகுந் தேவிக்கு வயது தீர்க்கம்
பிருகுமே தடுத்துச் சொல்வார் புரவியோன் மகனு மேழில்
குருவுமே யாறில் தங்கக் கோதைய ிருவ ரென்றோம்.

23. தன்னை அண்டிவந்தவர்களை ஆதரிப்பாள். உழைப்பாளி என்று சொல்லுவோம். இலக்குமியை யொத்தவள். நீண்ட ஆயுளுள்ளவள். பிருகு முனிவர் மறுத்துக் கூறுகின்றார். சனி ஏழிலும் குரு ஆறிலும் இருப்பதால் இரு மனைவியர் உண்டு என்று சொன்னோம்.

24. அத்திரி தடுத்துச் சொல்வார் அணுகாது தாரம் ரண்டு
எத்தசை பலத்தி னாலே இயம்பினீ ரந்தச் சங்கை
வெத்தியாய்ப் புகரும் ரண்டில் வெண்மதி சேயும் நிற்கக்
குத்தமா யிடபந் தங்கத் தேவியு மொன்றே யாகும்.

24. அத்திரி முனிவர் தடுத்துக் கூறுகின்றார். இரு மனைவியர் ஏற்படக் காரணமில்லை. என்ன காரணத்தால் அப்படிச் சொன்னீர். சுக்கிரன் இரண்டாமிடத்திலும் சந்திரன் செவ்வாய் இவர்கள் இடபத்திலும் தங்கியிருப்பதால் மனைவி யொருத்தியே யாவள்.

25. ஆகிலுஞ் சனிஏழ் தங்க அபிமான மாது வொன்று
பாகமாய் நேரு மென்றோம் படருங்கா லங்கள் சொல்வீர்
தோகையும் முப்பா றில் தோன்றுவாள் வடகீழ் தன்னில்
ஏகமாய்ச் சுதர்க ளின்றி எய்திடும் வன்னிய மாது.

25. சனி ஏழாமிடத்தில் இருப்பதால் அபிமான மனைவி ஒருத்தியுண்டு என்று கூறுகின்றோம். அப்பெண் வரும் காலத்தைச் சொல்லுங்கள். ஜாதகனுக்கு முப்பத்தாறும் வயதில் வடகிழக்குத் திசையிலிருந்து அவள் வருவாள். அவள் வன்னிய குலத்துப் பெண். அவள் புத்திரர்களில்லாமல் வாழ்வாள்.

26. அதுமுதல் மரண மட்டும் அவனுடன் கூடி வாழ்வள்
சுதர்பலன் சொல்லக் கேண்மோ செல்விமார் மூவ ராகும்
மதனன்போல் ஆண்பால் ரண்டு வரைகிறோம் பெண்பால் ரண்டு
துதிசெய்தோர் தம்மைக் கார்க்குந் தோகையே கேட்டி டாயே.

26. அந்தக் காலம் முதல் ஜாதகனுடைய மரணக்காலம் வரையில் அப பெண் ஜாதகனுடன் கூடிவாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய புத்திர பாக்கியத்தைச் சொல்லுகிறோம். கேளுங்கள். மன்மதன் போல் இரு புத்திரர்களும் இரு பெண்களும பிறப்பார்கள். தோத்திரம் செய்பவரை ஆதரிக்கும் அம்பிகையே! கேளும்.

27. இன்னவன் முன்ஜன் மத்தை எடுத்துநா முரைக்கக் கேண்மோ
தென்திசை சேது தன்னில் ஜனித்தனன் வன்னிய குகத்
தன்மனை மதலை யுண்டாய்ச் சலமீதி லோடம் விட்டு
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு மேதினி லன்ன மீந்து ;

27. ஜாதகனுடைய முற்பிறப்பை எடுத்துச் சொல்லக் கேளுங்கள். தெற்குத் திசையிலுள்ள சேதுவில், வன்னிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களைப் பெற்று, ஜலத்தின் மீது படகு விட்டு (படகோட்டியாக ஜீவனம் செய்து), பெரியோர்கட்குத் தொண்டுகள் செய்து உலகில், ஏழைகட்கு அன்ன மளித்து ;

28. வினையது மில்லா னாகி மேவினன் கால னூடு
கனமுள பிரமன் லக்கங் கலப்பனு மிக்கு லத்தில்
சினமிலா விவனின் யோகஞ் செப்புவோந் தந்தை மேலாய்த்
தனமது பெருக்கஞ செய்வன் தரணிகள் சேர்ப்பா னாகும்.

28. தீவினைகள் இல்லாதவனாகி இறந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இக்குலத்தில் பிறந்தான். தன் தந்தைக்கு மேலாய் இவனுக்கு யோகம் வாய்க்கும். செல்வங்களை விருத்தி செய்வான். பூமிகளைச் சேர்ப்பான்.

29. ஈரஞ்சு வாண்டு மேலாய் இவனுக்கு யோகம் வாய்க்கும்
தீரமா மணங்க ளுண்டு சல்லியம் நிவிர்த்தி யாகும்
வெறொரு இல்லஞ் செய்தல் வேண்டினோ ரிட்டங் கொள்ளல்
காரியம் நினைத்த தோங்குங் குலத்தொழில் முயற்சி யாகும்.

29. ஜாதகனுக்குப் பத்து வயதுக்கு மேல் யோகம் பெருகும். மணம் ஏற்படும். கடன் உபத்ரவம் நீங்கும். வேறொரு வீடு கட்டுவான். வேண்டியவர்கட்குப் பிரியனவன். எண்ணிய காரியங்கள் நடைபெறும். தன் குலத் தொழில் விருத்தியாகும்.

30. ஜனித்தநாள் முதலா மாகப் பின்தச மாண்டுக் குள்ளே
வினைமனஞ் சபல புத்தி வேலைகள் குறைவு நேரும்
தினந்தினந் துக்க முண்டு செலவுக ளதிக முண்டு
நினைவது தவற லுண்டு நிமலியே கேட்டி டாயே.

30. ஜாதகன் பிறந்தது முதல் பத்து வயது வரையில் கெட்ட காலமாக இருக்கும். மனத்தில் சஞ்சலங்கள் ஏற்படும். எடுத்த காரியங்கள் நடைபெறா. அடிக்கடி துக்க சம்பவங்கள் நேரும். அதிகச் செலவு ஏற்படும். எண்ணிய வேலைகளில் தவறுதல் உண்டாகும். தாயே! கேளுங்கள்.

31. அறுபது வெட்டு ஆண்டுகள் ஆனிமா தத்தி லேதான்
குறைபக்க மேகா தசி குழவியி னுடல மேகும்
வருஞ்ஜன்மந் துவாரை தன்னில் மறைக்குல முதிப்பா னாகும்
பிருகுமே தடுத்துச் சொல்வார் புனிதனிச் சென்மந் தன்னில் ;

31. ஜாதகனுடைய அறுபத்தெட்டாம் வயதில் ஆனி மாதத்தில் கிருஷ்ணபட்சம் ஏகாதசி திதியில் ஜாதகன் மரணமடைவான். மறுபிறவி துவாரகையில் அந்தண குலத்தில் பிறப்பான். பிருகு முனிவர் தடுத்துக் கூறுகின்றார். ஜாதகன் இப்பிறவியில் ;

32. செய்தபுண் ணியங்க ளென்ன செப்புவீர் மூனியே நீர்தாம்
ஐயமென் றோரைக் காத்தும் ஆபத்துச் சிலர்க்குச் செய்தும்
துய்யமாந் தலங்கள் சென்றுஞ் சொல்லதைக் காத்த லாலும்
வையமேல் மறைக்கு லத்தில் வருகுவா னென்று சொல்வோம்.

32. செய்த நற்செயல்கள் என்ன? முனிவரே ! கூறுங்கள். ஏழைகளுக்கு உதவி செய்தும், துன்பமடைந்த சிலர்க்கு உபகாரம் செய்தும், புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றும், சொன்ன வார்த்தைகளின்படி நடந்தும் வந்ததால் அந்தண குலத்தில் பிறப்பான் என்று சொல்லு கின்றோம்.

33. ஜனித்திடு காலந் தன்னில் சேய்த்தசை யாண்டு நாலாம்
குனிக்குறோம் பலனை யாங்கள் குழவிக்குப் பிணிய நேகம்
தனமது செலவு முண்டு சஞ்சல மனமு மெய்தும்
வினையிலாப் பூர்வஞ் சொன்னோம் வித்தகி கேட்டி டாயே.

33. ஜாதகன் பிறக்கும் காலத்தில் அங்காரக மகாதசையில் நான்கு வருடங்கள் மீதியிருக்கும். அக்காலத்திய பலனைச் சொல்லுகின்றோம். ஜாதகனுக்கு நோய் ஏற்படும். செலவு அதிக மேற்படும். மனகலக்கம் உண்டு. துன்பங்களில்லா முதல் பாகத்தைக் கூறினோம். தேவியே ! கேளுங்கள்.

## ஜாதகம் 61.

1. மதிபுக ரிரவி புந்தி வருடையில் குருவும் நண்டில்
விதிசனி சிம்ம மாக விற்கருங் கோளும் வில்லில்
பதிகுசன் கேதும் வீணை பகர்ந்ததோர் மிதுனந் தோன்றும்
துதிஜன்ம மாண்பா லாகுஞ் சொல்லுவோம் பலன்க ளெல்லாம்.

1. சந்திரன் சுக்கிரன் சூரியன் புதன் மேஷத்திலும், குரு கடகத்திலும், சனி சிம்மத்திலும், ராகு தனுசிலும், செவ்வாய் கேது மிதுனத்திலும் இருந்து, லக்கினமும் மிதுனமானல், பிறப்பது ஆண் ஜன்மம். மற்ற பலன்களைக் கூறுகின்றோம்.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் சுக்கிரன் சூரியன் புதன் | | லக்கினம் செவ்வாய் கேது |
| | இராசி சக்கரம் | | குரு |
| | | | சனி |
| ராகு | | | |

2. பாலகன் பிறந்த இல்லம் பகருவோம் வடதென் வீதி
கோலமாங் கிழக்குப் பார்வை கூறுவோந் தெற்கி லேதான்
ஆனையின் கோவி லுண்டு அதன்மேற்கில் சமணன் கோட்டம்
மாலவன் வடகீழ் நிற்கும் மாகாளி யுத்ரம் நோக்கம்.

2. ஜாதகன் பிறந்த வீடு வடக்குத் தெற்கான வீதியில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. தெற்குத் திக்கில் விநாயகர் ஆலயம் ஒன்றுளது. அதற்கு மேற்கில் சமணதேவன் கோயில் ஒன்றுண்டு. வடகிழக்கில் திருமாலின் ஆலயம் ஒன்று இருக்கும். காளி கோயில் வடக்குத் திக்கில் உளது.

3. இன்னமும் பலதே வாசம் இலகிடு மவ்வூர் தன்னில்
பன்னிய பேரூர் தன்னில் பாலகன் சைவச் சேயாய்
மன்னவ னுதிப்பா னாகும் வருந்தந்தை மாதுரு புத்ரர்
தன்னிலே களத்ர யோகஞ் சாற்றுவோ மிந்நூல் தன்னில்.

3. இன்னும் பல தெய்வங்கள் வாழ்ந்துவரும் அப்பெரிய ஊரில் சைவகுலத்தவனாக ஜாதகன் பிறப்பான். அவனுடைய தாய் தந்தை புத்திரர் மனைவி இவர்களின் யோகத்தை இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம்.

4. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோ மிருசி வப்பாம்
பந்தமா யுயர்ந்த தேகன் பரமனூர் பூசை செய்வான்
சந்ததம் பக்தி யுள்ளான் தயையுளான் கல்வி யில்லான்
சிந்தையில் கலக்க மில்லான் தீர்த்தயாத் திரைகள் செய்வான்.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். கருமை கலந்த சிவப்பன். உயரமான சரீர முடையவன். சிவபெருமானைப் பூசை செய்வான். தெய்வ பக்தியுள்ளவன். தயைக் குணமுடையவன். கல்வி யறி வில்லாதவன். மனக்கலக்க மில்லாதவன். தீர்த்தயாத்திரைகள் செய் வான்.

5. பிராமண பக்தி யுள்ளான் பெருத்ததோர் சரீர முள்ளான்
புராதன ஆஸ்தி தன்னைப் புண்ணியன் விருத்தி செய்வன்
தராதர மறிவான் ஞானி தபச்விபோ லிருப்பான் மேலும்
குறைவிலாச் செல்வ முள்ளான் கூறுவோங் கிருஷிக ளம்மா.

5. அந்தணர்மீது பக்தியுடையவன். பருத்த சரீர முடையவன். தன் பிதுரார்ஜிதமான ஆஸ்தியைப் பெருக்குவான். உயர்வுதாழ்வையறியுந் திறனுடையவன். ஞானிபோலவும் தவசிபோலவும் இருப்பான். குறை வில்லாத செல்வமுள்ளவன். விவசாயம் செய்து வருவான்.

6. இப்படி யிருக்குந் தந்தை இவனுடைச் சகோத ரங்கள்
செப்புவோ மாண்பா லொன்று செல்வியு மொருத்தி யாகும்
ஒப்புடன் பெண்பா லுக்கு உறும்புத்திரர் தாமு மில்லை
அப்பவே சிலநா ளில்தான் ஆளனு மழிந்து போகும்.

6. இங்ஙனம் கூறப்பட்ட தந்தையின் சகோதரர்களைச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் உண்டு. பெண்ணுக்குப் புத்தி ரர்கள் தோன்ற. பிறந்து சின்னாட்களில் இறந்துபோம்.

7. தந்தையின் மூத்தோ னுக்குச் சந்ததி யதிக முண்டு
பந்தமாய்க் குடும்ப மாகும் பகரிடுந் தந்தைக் கேதான்
மைந்தனு முதிப்பா னம்மா வள்ளல்தன் குணத்தை யாங்கள்
உந்தன்தன் பாதம் போற்றி உரைக்கின்றோம் ரிஷிக ளம்மா.

7. ஜாதகனுடைய மூத்த சகோதரனுக்குச் சந்ததிகள் அதிகமுண்டு. தந்தைக்குச் சிறிய குடும்பமேயாகும். இங்ஙனம் கூறப்பட்ட தந்தைக்கு ஜாதகன் தோன்றுவான். ஜாதகனுடைய குணத்தை, உன்னுடைய பாதங்களைப் போற்றிச் சொல்லுகின்றோம், ரிஷிகளாகிய நாங்கள்.

8. இன்னவ னிறங்கு ணத்தை இயற்றுவோஞ் சிவந்த மேனி
நண்ணிய சமதே கத்தன் நாட்டுவோங் கல்வி யுள்ளான்
பண்ணிய பயிரு முள்ளான் பந்துவு மெச்ச வாழ்வன்
அன்னங்கள் போட வல்லான் ஆள்கார ருடைய னாமே.

8. ஜாதகனுடைய நிறம் குணம் இவைகளைக் கூறுகின்றோம். சிவந்த உடலுள்ளவன். சமமான சரீர அமைப்புள்ளவன். கல்வியறிவுடையவன். பயிர்த்தொழில் உள்ளவன். உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். அன்னங்கள் அளிப்பதில் பிரியன். பணியாட்கள் உள்ளவன்.

9. பதநடைச் சொகுசு முள்ளான பாவையர் அநேகஞ் சேர்வன
இதமுள எவர்க்கும் நண்பன் ஏழைமேல் பிரிய னுவன்
கதைகளும் கேட்க வல்லன் காரிகை யொருத்தி யாகும்
ததிநெய்பா லிட்ட முள்ளான் சந்ததி கொஞ்ச மாமே.

9. சொகுசாக நடப்பவன். பல பெண்கள் மீது விருப்பமுள்ள வன். எல்லோருக்கும் நண்பன். ஏழைகளின்மீது பிரியமுள்ளவன். கதைகளைக் கேட்பதில் பிரியன். மனைவி யொருத்தியே. தயிர் நெய் பால் இவைகளில் பிரியமுள்ளவன். அற்பமான சந்ததி யுள்ளவன்.

10. வணக்கமு முடைய னுவன் வள்ளல்மேல் பக்தி யுள்ளான்
மனமகிழ் மூத்தோர் தம்மை மருவுவான் சமர்த் தனுகப்
பிணக்குகள் பேசா னுகும் பித்தமாந் தேகி யாவன்
கணக்கினில் ஊக மில்லான் கனமன முடைய னுமே.

10. வணக்க முள்ளவன். சிவபெருமான்மீது பக்தியுள்ளவன். மனம் சந்தோஷப்படும்படி, தன் சகோதரனுடன் ஒத்து வாழ்வான். பொய் பேசா தவன். பித்த சரீரமுள்ளவன். கணக்கில் ஊகமில்லாதவன். தாராள புத்தியுள்ளவன்.

11. ஈகையு மதிக மில்லான் எத்துக்க ளனேகஞ் செய்வன்
துரோகங்க ளொருவர்க் கெண்ணுன் சோம்பலுங் கொஞ்ச [முள்ளான்
யோகவான் பூமி சேர்ப்பன் புண்ணியங் கொஞ்சஞ் செய்வன்
ஆகிய சங்கு சக்ரம் அணுகிய ரேகை உண்டாம்.

11. அதிகக் கொடையில்லாதவன். அநேக தந்திரங்கள் செய்வான். துரோக சிந்தனை இல்லாதவன். சிறிது சோம்பலுள்ளவன். யோக முள்ள வன். பூமியைச் சேர்ப்பான். சிறிது நற்காரியங்களைச் செய்வான். சங்க ரேகை சக்கரரேகை உள்ள கைகளுள்ளவன்.

12. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோ மறுவ ராகும்
பின்னமாய் நஷ்ட மாகும் பலக்காது சகோத ரங்கள்
தன்னமே தனிய னுவன் தைரிய மனத்த னுகும்
சொன்னசொல் குன்றி டாவே சுந்தரி கேட்டி டாயே.

12. ஜாதகனுடைய உடன் பிறந்தவர் அறுவராவர். ஆனல் சகோதரர் கள் நிலையாமல் இறந்து விடுவார். இவன் தனித்து வாழ்வான். தைரிய சாலி. சொன்ன சொற்கள் குறைவுரு. அழகியே! கேளுங்கள்.

13. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மிருபா னெட்டில்
நீதியாய் வடக்குத் திக்கில் நிர்மித்த மாதைக் கொள்வன்
போதவே யவள்கு ணத்தைச் சாற்றுவோ மூளைச்சல் தேகி
தீதான குணத்தா ளாகுஞ் சகோதர மில்லா ளென்றோம்.

13. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். இருபத்தெட்டாம் வயதில் வடக்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மெல்லிய சரீரமுடையவள். தீய குணங்களுள்ளவள். சகோதர மில்லாதவள் என்றோம்.

14. முன்கோபி யடக்க மில்லாள் மூலநோய் கொஞ்ச முள்ளாள்
தன்குல தோட முள்ளாள் தன்னிற மிருசி வப்பாம்
அன்னம்போல் நடையு முள்ளாள் ஆளனுக் கினிய ளாவள்
மன்னுகற் புடைய ளாவள் வயதுமே தீர்க்க மெய்தும்.

14. முன்கோபி. அடக்க மில்லாதவள். சிறிது மூல நோயுள்ளவள். தன் குலத்தில் தோஷமுள்ளவள். கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவள். அன்னத்தைப் போன்ற நடையுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். கற்புள்ளவள். நீண்ட வயதுடையவள்.

15. இப்படி முனிவர் கூற ஈசுவரி சொல்லு கின்றாள்
எப்படித் தார மொன்று இயம்பினீ ரேழில் ராகு
செப்பமா யிருப்ப தாலே செல்வியு மிரண்டே யாகும்
ஒப்புடன் மாது கேட்க உரைக்கிறோ முனிவ ரம்மா.

15. இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பார்வதி கேட்கலானாள். மனைவியொருத்தியே என்று எப்படி சொனனீர்கள்? ஏழாம் வீட்டில் ராகு இருப்பதால் மனைவியர் இருவரே என்று சொல்லுகின்றோம், என்று பார்வதி கேட்கும்போது, ரிஷிகளாகிய நாம் கூறுகின்றோம், அம்மா!

16. ஏழினுக் கிரண்டோன் தானு மிரண்டினி லுச்ச மாக
வாழ்மதி லாப மேற மைந்தனும் பாரா னுகில்
ஆதிசூழ் புவியில் தாரம் அறைந்தன மொன்றே யென்றும்
பாழது வாரா தென்று பகர்ந்தனம் முனிவ ரம்மா.

16. ஏழாம் வீட்டுக்குரிய குரு இரண்டாம் வீட்டில் உச்சமாக இருப்பதாலும், அவ் வீட்டுக்குரிய சந்திரன் லாபஸ்தானத்தில் இருப்பதாலும், சனியால் பார்க்கப்படாததாலும், சமுத்திரம் சூழ்ந்த இப்பூமியில் மனைவி ஒருத்தியே. தீங்கு நேராது. என்று ரிஷிகளாகிய நாங்கள் சொல்லுகின்றோம். தாயே!

17. புத்திரர் கொஞ்ச மென்று புகன்றகா ரணங்க ளென்ன
சுத்திய தோடந் தன்னைச் சொல்லுவீ ரென்று கேட்க
பத்தினி மாதே யிந்தப் பாலகன் முன்ஜன் மத்தில்
உத்தரம் தணிகை மேல்பால் உதித்தனன் ரெட்டி யாகி.

17. புத்திரர் குறைவு என்று கூறிய காரணங்களென்ன? அதற்கு ஏற்பட்ட தோஷத்தைச் சொல்லுங்கள், என்று கேட்க, பத்தினித் தெய்வமாகிய தேவியே! இந்த ஜாதகன் முற்பிறவியில் வடக்கிலுள்ள திருத்தணிகைக்கு மேற்குப் பக்கத்தில் செட்டியார் மரபில் பிறந்தான்.

18. ஏருகள் பூமி பெற்று இணையிலாச் செல்வ மோங்கி
நாரியு மைந்த ரோடு நலமுட னிருக்குங் காலே
பாரிய வயலுக் குள்ளே பண்புடன் மேடு தோன்றி
வாரியே கொட்ட வென்று வேவுகர் தனைய ழைத்தான்.

18. ஏர்கள் பூமி பண்ணை இவைகளையடைந்து, ஒப்பற்ற செல்வம் பெருகி, மனைவி மக்களுடன் வாழ்ந்து வந்த காலத்தில், தன்னுடைய வயலில் மேடு தோன்றியிருப்பதை அகற்ற, பணியாட்களை அழைத்தான். (வயலில் மண்ணிருந்ததை வெட்டிக் கொட்ட வேலையாட்களைக் கூப்பிட்டான்.)

**வேலைக்குத் தக்க கூலி தராமல் ஏமாற்றியது**

19. வேலைக ளதிகம் வாங்கி வித்தகன் கூலியைத் தான்
ஞாலமேல் குறைத்துத் தந்தான் நலிந்த அக் கூலிக் காரர்
தூலம்போல் சுமந்த கூலி கொடுக்காமல் குறைத்துத் தந்தாய்
ஆலம்போல் புத்ர தோடம் அணுகவே வேணு மென்று;

19. அவர்களிடம் அதிக வேலையை வாங்கிக்கொண்டு, குறைவாகச் செய்ததாகக் கூறி, கூலியைக் குறைத்துக் கொடுத்தான். ஏழைகளான கூலிக்காரர்கள் மண்ணைச் சுமந்த கூலியை முழுவதும் தராமல் குறைத்துக் கொடுத்த பாவியே! உனக்குக் கொடிய விஷம்போல் புத்திர தோஷம் ஏற்படும் என்று;

20. வாயிலே யடித்துக் கொண்டு சென்றனர் கூலிக் காரர்
பாவிக்குச் சாபம் வந்து பற்றிற்று வச்சன் மத்தில்
கோலமாய் மைந்தர் மாண்டு கூற்றன்தன் பதியைச் சேர்ந்து
சீலமா யிச்சென் மத்தில் சேயனும் சைவச் சேயாய்;

20. வாயில் அடித்துக்கொண்டு கூலிக்காரர்கள் சென்றனர். அதனால் அந்தச் சாபம் இவனைப் பற்றியது. அப்பிறவியில் அவனுடைய புத்திரர்கள் மாண்டு, அவனும் மரணமடைந்து, இப்பிறவியில் சைவகுலத்தவனாகத் (தோன்றி);

**சாந்தி விபரம்**

21. பிறந்தனன் சாபத் தாலே பலக்காது சகோதர நட்டம்
சிறந்ததோர் புத்திர தோடம் செப்புவேன் சாந்தி யொன்று
நிறைந்தநல் வழியி லேதான் நின்சுமை தாங்கிச் சேத்துப்
பறந்திடு மேடை செய்தால் பாவங்கள் விலகிப் போகும்.

21. தோன்றினன். அந்தச் சாபத்தால் சகோதரர்கள் பலக்காமல் புத்திரதோஷம் ஏற்படும். அது நீங்கச் சாந்தியொன்று சொல்லுகின்றோம். பெரிய சாலையொன்றில், ஒரு நீண்ட சுமைதாங்கி ஏற்படுத்தி, மேடைகளும் ஏற்படுத்தினால் பாவங்கள் விலகும்.

22. சந்தான விருத்தி தீர்க்கஞ் சகலகா ரியங்கள் கூடும்
இந்தவாறு செய்யா ஞகில் இலகாது புத்திரர் தாமும்
முந்தியே பிறந்தா லுந்தான் முயலாது நாச மாகும்
கந்தனைப் பெற்ற மாதே கழறுவேன் கேளு மம்மா.

22. புத்திர விருத்தி ஏற்படும். எல்லாக் காரியங்களும் கைகூடும். இப்படிச் செய்யாவிடில் புத்திரர்கள் தோன்ருர். அப்படிப் பிறந்தாலும் நிலையாமல் மரிப்பர். முருகப்பிரானைப் பெற்ற தேவியே ! கூறுகின்ரேம், கேளுங்கள்.

23. தோடங்கள் நிவிர்த்தி செய்தால் சொல்லுவே ணுண்பா லொன்று
பாசமாய்ப் பெண்பால் ரண்டு பருகிடுந் தீர்க்க மாகும்
மோசங்கள் மூன்று உண்டு முன்தோடஞ் செய்யா ஞகில்
நாசமாய்ப் போகு மென்று நவிலுவோம் ரிஷிக ளம்மா.

23. தோஷங்கள் நீங்கச் சாந்தி செய்தால் புத்திரன் ஒருவனும் அன்புள்ள பெண் இருவரும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்களாவர். மூன்று குழந்தைகள் தரிக்கா. நாங்கள் கூறிய சாந்தி செய்யாவிடில் எல்லாம் நாசமாகிவிடும், என்று ரிஷிகளாகிய நாம் கூறுவோம், தாயே !

24. தந்தையின் மரண காலஞ் சாற்றுவேன் முப்பா னைந்தில்
வந்தவை காசி மாசம் மைந்தனும் கர்மம் செய்வான்
பிந்தியு மாதுரு காலம் பேசுவோம் நாற்பா ஞென்றில்
கந்தனைப் பெற்ற மாதே கழருவோம் மேலுங் கேளே.

24. ஜாதகனுடைய தந்தையின் மரணக்காலத்தைச் சொல்லுகின்ரேம். முப்பத்தைந்தாம் வயதில் வைகாசி மாதத்தில் தன் தந்தைக்குக் கருமங்கள் செய்வான். நாற்பத்தோராம் வயதில் தாய்க்கு மரணமேற்படும். முருகனைப் பெற்ற தேவியே ! சொல்லுகின்ரேம். மேலும் கேட்டிடுவாய்.

25. மாதுரு குணத்தை யாங்கள் வகுக்கின்ரேம் உளைச்சல் தேகி
தீதிலாக் குணத்த ளாகும் சிவந்திடு மேனி யாவள்
ஆதியாய்க் கற்பு முள்ளாள் அவள்பித்த தேகி யாவள்
வேதனை வாயு முள்ளாள் மெல்லியே மேலுங் கேளே.

25. தாயின் குணத்தை நாங்கள் கூறுகின்ரேம். மெல்லிய சரீரமுள்ளவள். தீயகுணங்களில்லாதவள். சிவந்த உடலுள்ளவள். கற்புடையவள். பித்த சரீரமுள்ளவள். வாயுநோயுள்ளவள். தாயே ! மேலும் கேள்.

26. மாதுரு சகோத ரங்கள் வகுக்கின்ரேம் ஆண்பா லில்லை
போதவே கன்னி ரண்டு புகன்றனம் விருத்தி யாகும்
மாதுதன் குடும்பந் தானும் வகையுட னழிந்து போகும்
சோதனைப் பார்த்து யாங்கள் சொலுமொழி குன்றி டாவே.

26. தாயின் உடன்பிறந்தவர்களில் சகோதரர்களில்லை. இரு சகோதரிகள் விருத்தியுள்ளவர்கள். தாயின் குடும்பம் அழிந்துபோய் விடும். நாங்கள் நன்ருக ஆராய்ந்து பார்த்துக் கூறியவைகள் தவரு.

## ஜாதகம் 62.

1. பொன்சனி மீன மாகப் புதன்ரவி நந்தி யாகச்
சந்திரன் தூக்க மாகத் தரைமகன் நீச்ச மாகச்
சல்லியன் மேட மாகச் சிகியுமே மிதுன மாக
முந்திய கயிறு மோர வீணையுஞ் சென்ம மாக
இந்தவாறு கோளு நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. குரு சனி மீனத்திலும், புதன் சூரியன் விருஷபத்திலும், சந்திரன் துலாத்திலும், செவ்வாய் கடகத்திலும், சுக்கிரன் மேடத்திலும், ராகு தனுசிலும், கேது மிதுனத்துமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருந்தால், உள்ள பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| குரு சனி | சுக்கிரன் | புதன் சூரியன் | லக்கினம் கேது |
| | இராசி சக்கரம் | | செவ்வாய் |
| | | | |
| ராகு | | சந்திரன் | |

2. பார்வதி கேட்கும் போது புகலுவா ரத்திரி தாமும்
கூறுவோம் பெண்பால் ஜன்மம் உதித்தவில் வடதென் வீதி
தேரிய கிழக்குப் பார்வை செப்புவோங் மெதிர்வீ டில்லை
நாரியின் பாகன் தந்தி நவிலுவோங் கிழக்கி லேதான்.

2. என்று பார்வதி தேவி கேட்கும்போது, அத்திரி முனிவர் கூறுகின்றார். இது பெண் குழந்தையின் ஜாதகம். இவள் பிறந்த வீடு வடக்குத்தெற்கான வீதியில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. எதிர்ப்பக்கத்தில் வீடில்லை. கிழக்குத்திக்கில் சிவபெருமான் ஆலயமும் விநயகர் ஆலயமும் உள்ளன.

3. உத்தரங் காளி வாசம் உமையவ ளருகில் தங்கும்
வித்தகி சிற்றூர் தன்னில் விளங்குவாள் கங்கை வம்சம்
மெத்தென தந்தை தாயின் விளங்கிய துணைவர் புத்திரர்
பத்தினி வரனின் யோகம் பகருவோ முன்பின் ஜன்மம்.

3. வடக்கில் காளிகோயில் இருக்கும். அருகில் பார்வதிதேவி கோயில் இருக்கும். இங்ஙனமுள்ள ஒரு சிற்றூரில் வேளாள குலத்தவளாகப் பிறப்பாள். இவளுடைய தாய் தந்தையர் உடன்பிறந்தவர் புத்திரர் கணவன் இவர்களுடைய குணத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் கூறுகின்றோம்.

4. இவள்பிதா குணத்தைக் கேளாய் ஈகைவா னிருநி றத்தான்
அவனியில் உயர மில்லான் அவன்முக வடுவு முள்ளான்
நவனியில் கிருஷி செய்வன் நற்புத்தி ஊக சாலி
சிவனுடைத் தியானஞ் செய்வன் சித்திர வீடுஞ் செய்வன்.

4. இவளுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம், கேளுங்கள். கருமைகலந்த சிவந்த நிற முடையவன். உயரமில்லாதவன். முகத்தில் வடு உள்ளவன். விவசாயம் செய்து வருவான். நல்ல புத்திசாலி. ஊக முடையவன். சிவபெருமானிடம் பக்தி யுள்ளவன். அழகிய வீடு கட்டுவான்.

5. பொறுமையும் புகழு முண்டு புண்ணிய மனத்த னாகும்
திருமகள் வாச முள்ளான் சென்றிடம் பெருமை யுள்ளான்
அரனடி யார்க்கு நேயன் அன்னங்கள் போட வல்லான்
பகைவர்கள் தமைஜ யிப்பன் பரிந்திடும் வார்த்தைச் சொல்வான்.

5. பொறுமையுள்ளவன். கீர்த்தியுள்ளவன். புண்ணியமுள்ள மனத்தினன். லட்சுமி இவன் வீட்டில் வாழ்ந்துவருவாள். போகுமிடமெல்லாம் பெருமையடைவான். சிவனடியார்மீது பட்சமுள்ளவன். அன்னமளிப்பதில் பிரியமுள்ளவன். விரோதிகளை வெல்வான். அன்புடன் பேசுபவன்.

6. இனபந்து மெச்ச வாழ்வன் இவன்சீலன் அடக்க முண்டு
கனமுடன் வாழ்வா னாகும் கனத்தவர் நேச மாவன்
வினைமிக ஞாதி வர்க்கம் விளம்புவோம் குற்ற முள்ளான்
சினமது கொஞ்ச முள்ளான் சனவசி யங்கள் செய்வன்.

6. தன் உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். நல்லொழுக்கமும் அடக்கமுமுள்ளவன். கண்ணியமாக வாழ்க்கை நடத்துவான். பெரியோர்களுக்கு நண்பன். தன்பந்து வர்க்கத்தினரில் குற்றம் உள்ளவன். சிறிது கோப முள்ளவன். ஜனங்களை வசீகரிக்கும் இயல்பினன்.

7. இக்குண முடையோ னுக்கு இவளுமே உதிப்பா ளென்றோம்
மிக்கவே இவள்கு ணத்தை விளம்புவோ மிருநி றத்தாள்
தக்கவே வார்த்தை கூறுவள் சற்றினிற் கோபி யாவள்
தொக்கவே உயர மில்லாள் சித்தினி சாதி யாவள்.

7. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு இந்த ஜாதகி பிறப்பாள் என்று சொன்னோம். இவளுடைய குணத்தை இனிக் கூறுகின்றோம். கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவள். தக்கபடி பேசுபவள். விரைவில் கோபம் கொள்ளுவாள். உயரமில்லாதவள். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவள்.

8. பதமான நடையு முள்ளாள் பற்களிற் குறைவு முண்டு
விதவித வார்த்தை சொல்வள் விடமது மிஷ்ட முள்ளாள்
சதியிலா மனத்த ளாகும் சத்திநன் னடக்கை யுள்ளாள்
சூதனமாய் வார்த்தை கூறுவள் ஆளன்மேல் பக்தி யுள்ளாள்.

8. பதமான நடையுள்ளவள். பற்களில் குறைவு இருக்கும். விதவித மாகப் பேசுபவள். வாசனைப் பொருள்களின்மீது இஷ்டமுள்ளவள். தீங்கில் லாத மனத்தினள். நன்னடத்தையுள்ளவள். நல்லதனமாகப் பேசுபவள். தன் கணவன்மீது பக்தியுள்ளவள்.

9. அடிசிலுக் கினிய ளாகும் அன்னங்கள் போட விச்சை
திடமான பணிக ளுள்ளாள் சிரமுக வடிவு முள்ளாள்
அடவுடன் பெருந்த புத்தி அன்னம்போல் நடையு முள்ளாள்
இடையினில் பாதை உள்ளாள் இவள்பித்த தேகி யாவள்.

9. உருசியுடன் சமைப்பதில் வல்லவள். ஏழைகட்கு அன்னமளிப்பதில் விருப்பமுடையவள். திடமான ஆபரணங்கள் உள்ளவள். முகம் தலை இவைகள் லட்சணமுள்ளவைகள். தாராள புத்தியுள்ளவள் (பெருந் தன்மையுடையவள்). அன்னம்போல் நடப்பவள். இடைக்காலத்தில் ரோகம் உள்ளவள். இவள் பித்தசரீர முடையவள்.

10. சகோதர ராணபால் மூன்று சாற்றுவோம் பெண்பால் காணேம்
வகையுடன் மூத்தோ னென்று அவளுக்கு இளையோர் ரண்டு
தகமையாம் மூன்றுந் தீர்க்கம் சாத்தினே மிவளுக் கேதான்
பகையிலா வாழ்வா ளாகும் பலன்களை யிரண்டில் சொல்வோம்.

10. மூன்று சகோதரர்கள் உள்ளவள். சகோதரிகள் இல்லை. ஒரு சகோதரன் இவளுக்கு மூத்தவன். இருவர் இளையவர்கள். இம் மூவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்று சொன்னேம். அவர்கள் விரோதி களில்லாமல் வாழ்ந்து வருவார்கள். அவர்களுடைய மற்ற பலன்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றேம்.

11. இவளுடை மணத்தின் காலம் இயம்புவோ மொருபா னேழில்
கவனமாய் மேற்கி லேதான் காதலி தந்தை வர்க்கம்
அவனியில் மூன்றுந் தாரம் அவளுமே சேர்வா ளென்றேம்
தவமுனி இவ்வாறு கூற சயமுனி கேட்க லுற்றார்.

11. ஜாதகியுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றேம். பதி னேழாம் வயதில் மேற்குத் திக்கிலிருந்து, தன் தகப்பன் வர்க்கத்தைச் சேர்ந்த கணவன் வாய்ப்பான். அவளும் தன் கணவனுக்கு மூன்றும் தார மாக வந்து சேருவாள் என்று முனிவர் கூற, ஜயமுனிவர் கேட்கலானார்.

12. எப்படி மூன்றுந் தார மியம்பினீ ரத்திரி என்றார்
செப்புவோம் வரனுக் கேதான் திருமண மிரண்டு செய்து
தப்பிதஞ் சுதர்க ளுண்டாய்த் தன்மனை யிரண்டும் போக
மெய்ப்புடன் மூன்று மாது மேவுவா ளிவளே என்றேம்.

12. மூன்றும் மனைவியாக வாய்ப்பாள் என்று எப்படிக் கூறினீர்கள்? அத்திரி முனிவரே! என்றார். ஜாதகியினுடைய கணவனுக்கு இரு மணங்கள் செய்தும், புத்திரபாக்கிய மில்லாமல் இரு மனைவியாரும் இறந்து விட்டதால், இவள் மூன்றும் மனைவியாக வாய்ப்பாள், என்று கூறினேம்.

13. எவருடைக் குற்ற மத்தை இயம்புவீர் முனியே என்றார்
அவள்வரன் முன்னூழ் தன்னில் அறைந்தன மிதுவு மன்றி
நவமத்தோன் தசம மேற நவின்றன மிவளுக் குந்தான்
தவசியே வரனின் சேதி சாற்றுவீ ரென்று கேட்டார்.

13. யாருடைய குற்றத்தால் இப்படி நேரும் ? என்று சொல்லுங்கள், முனிவரே ! ஜாதகியுடைய கணவனின் முற்பிறப்புத் தோஷத்தால் ஏற்பட்டது. இதுவல்லாமல், ஒன்பதாம் வீட்டுக்குரிய சனி பத்தாம் வீட்டில் இருப்பதால் இவளுக்கும் இங்ஙனம் ஏற்பட்டது. தவம் செய்பவரே ! ஜாதகியின் கணவனுடைய செய்தியைக் கூறுங்கள் என்று கேட்டார்.

14. வரன்சேதி சிவந்த மெய்யன் மறுமொழி மதிகங் கூறுவன்
பெருமவர் நேசங் கொள்வன் பலவிதக் கல்வி கற்பன்
திறமையாய்ப் பேச வல்லன் செப்புவான் கட்டு வார்த்தை
அறநெறி பூண்பா னுகும் அவன் சொல்லு மிரண்டு முள்ளான்.

14. ஜாதகியின் கணவனுடைய செய்திகளாவன :—சிவந்த உடலுள்ளவன். அதிகம் எதிர்த்துப் பேசுபவன். பெரியோர்கள் நட்புக் கொள்வான். பலவிதக் கல்வி கற்பான். திறமையாகப்பேசும் இயல்பினன். வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன். தரும வழியைக் கடைப்பிடிப்பான். இருவிதமாகப் பேசுபவன்.

15. உண்டியுஞ் சுகமாய்க் கொள்வன் உறுதியா மனத்த னுகும்
குண்டுணி செய்வா னுகுங் கோதையர் விருப்பங் கொள்வன்
எண்டிசைத் தீர்த்தம் தோய்வன் இவனுக்கு மாதுரு ரண்டாம்
அண்டினோர் தம்மைக் காப்பன் ஆள்கார ருடைய னுமே.

15. சுகமாகச் சாப்பிடுவதில் பிரிய முள்ளவன். திடமான மனத்தினன். கோள் சொல்லுபவன். பெண்கள்மீது விருப்பம் கொள்ளுபவன். பல திக்குகளிலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். இவனுக்குத் தாய்மார்கள் இருவராவர். தன்னையடைந்தவர்களை ஆதரிப்பான். வேலையாட்களுள்ளவன்.

16. அவனுடைத் துணைவர் தம்மை வரைகிறோ மாண்பா லொன்று
நவனியில் தீர்க்க மாகும் நாயகன் வேருய்ச் செல்வன்
இவனுமுன் ஜன்மந் தன்னில் எழில்காஞ்சி தன்னி லேதான்
பவமுள வைச்யச் சேயாய்ப் பாலகன் பிறந்தா னென்றோம்.

16. ஜாதகியினுடைய கணவனின் சகோதரரைப் பற்றிச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். அவன் வேருகச் சென்று விடுவான். இவன் தனது முற்பிறவியில், சிறப்புள்ள காஞ்சிபுரத்தில் வைசிய குலத்தவனுகப் பிறந்தான் என்றோம்.

17. பலவிதச் செட்டுச் செய்து பத்தினி மதலை யுண்டாய்க்
குலவியே வாழு நாளில் கூறுவோ மூழி தானும்
நலமுள பெரியோ ரோர்நாள் நாயக னில்லஞ் சென்று
தலமதி லுண்டி கொண்டு சயனித்தான் தபசி தாமும்,

**17.** பலவிதமான வியாபாரம் செய்து வந்து, மனைவி மக்களைப் பெற்று, வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். நன்மை யுள்ள பெரியவர் ஒருவர் ஜாதகியுடைய கணவன் வீட்டுக்குச் சென்று, உணவருந்திவிட்டுப் படுத்திருந்தான்.

### பெரியோரைத் தவறுகச் சிறையிலிட்டது

**18.** இரவினில் கள்ளன் வந்து எகின றிவர் தன் வீட்டில்
பெரியவர் தன்னால் வந்த பிழையென்று மனவெ றுப்பால்
சிறையினி லிட்ட போது செப்புவா ரதிதி தாமும்
குறைந்திடு மனைவி மைந்தர் குனித்திடு ஜன்மந் தோறும் ;

**18.** இவனுடைய வீட்டில் இரவில் திருடர்கள் புகுந்து திருடிச் சென்றனர். இந்தப் பெரியவரால்தான் இஃது ஏற்பட்டது என்ற கெட்ட எண்ணத்தால் இந்தப் பெரியவரைச் சிறையிலடைத்தபொழுது, அந்த விருந்தாளி மனம் வருந்திச் சொல்லுகின்றார். உன்னுடைய மனைவி மக்கள் இறந்து விடுவார். உனக்கு ஏற்படும் ஒவ்வொரு பிறவியிலும் ;

### பலவந்தப் புணர்ச்சி : கருவழித்தது

**19.** புத்திரர் மனைவி தோடம் பொருந்திடு மென்று சொல்வோம்
சித்தமா யிதுவோர் சாபம் சேர்ந்தது இதுவல் லாமல்
பத்தினிப் பெண்ணைத் தானும் பாலகன் போகந் துய்த்துக்
குத்தமாய்க் கருவ ழித்துக் கோதையும் மாண்ட தோடம்.

**19.** புத்திரர்கட்கும் மனைவிக்கும் தோஷம் ஏற்படும் என்று கூறினர். இஃது ஒரு சாபமாயிற்று. இது தவிர, இவன் ஒரு கற்புள்ள மங்கையுடன் பலவந்தமாக இன்பமனுபவித்து அதனால் ஏற்பட்ட கருவை யழித்ததால் அப்பெண்ணும் மரணம் மடைந்ததால் ஒரு தோஷம் ஏற்பட்டது.

**20.** இவ்வித தோடந் தானும் இவனுக்கு நேர்ந்த தென்றோம்
பவ்வமா யிச்சென் மத்தில் பாலகன் மரண மாகி
ஒவ்விய இச்சென் மத்தில் உறைந்தது வந்தத் தோடம்
திவ்விய மாதே யாங்கள் சொல்மொழி குன்றி டாவே.

**20.** இவ்விதமான தோஷங்கள் இந்த ஜாதகியின் கணவனுக்கு ஏற்பட்டன. முற்பிறவியில் ஜாதகியின் கணவன் தக்க காலத்தில் மரணமடைந்து இப்பிறவியில் பிறந்ததும் தோஷங்கள் தொடர்ந்தன. அழகியே ! நாங்கள் கூறியவை தவறு.

**21.** ஜாதகி தனக்குப் புத்திரர் தங்காவே யென்று சொன்னோம்
மாதவர் சொல்லும் போது மங்கையுங் கேட்க லுற்றாள்
தீதாகும் மதலை யென்றீர் சேதியைச் சொல்லு மென்ன
ஓதுவே னேழில் ராகு உறைந்ததால் சுதர்கள் தோடம்.

**21.** ஜாதகிக்குப் புத்திரர்கள் நிலையா என்று சொன்னோம், என்று தவமுனிகள் சொல்லும் போது, பார்வதி கேட்கலானாள். புத்திரர்கட்குத் தோஷமுண்டாகும் என்றீரே ! அதற்குக் காரணம் சொல்லுங்கள், என, ஏழாம் வீட்டில் ராகு இருப்பதால் புத்திரர்கட்குத் தோஷம் என்றோம்.

22. சனியவ னெட்டோ னுகிச் சத்தமந் தன்னைப் பார்க்க
வனிதைக்குத் முன்னூழ் தன்னல் வரைந்தன மந்தத் தோடம்
இனியதைச் சொல்லு மென்ன இயம்புவார் முனிவர் தாமும்
அனையவே திருக்கச் சூருக் கருகினில் மேல்பா லாக ;

22. சனி எட்டாம் வீட்டுக்குரியவனுகி ஏழைப் பார்ப்பதால் பெண்ணுக்கு முற்பிறப்புத் தீவினையும் ஏற்பட்டது என்று சொன்னேம். அதைக் கூறுங்கள், என்று வினவ, முனிவர் கூறுகின்றார். திருக்கச்சூருக்கருகில் மேற்குப் பக்கத்தில் ;

23. கருணிகர் குலமு தித்துக் காதல னுள்ளா ளாகி
வறுமைக ளில்லா ளாகி மதலையு முள்ளா ளாகி
பெருமையாய் வாழு நாளில் பேசுவோ மூழி தானும்
சிறுமைகள் கொண்ட வேழை தேவிபால் சென்று மேதான் ;

23. கருணீகர் குலத்தில் பிறந்து, கணவனை யடைந்து, தரித்திரமில்லாதவளாகி, குழந்தைகளைப் பெற்று, பெருமையுடன் வாழ்ந்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றேம். ஏழைப்பெண் ஒருத்தி இவளிடம் சென்று ;

ஏழைப் பெண் சாபம்

24. அன்னங்கள் கேட்டா ளென்றேம் அவள்பேரில் சினங்கள் கொண்டு
பின்னமாய் வார்த்தை பேசி விரட்டினு ளிவளே யென்றேம்
மன்னிய யேழை தானும் மனமது வெறுப்புக் கொண்டு
உன்னுடைச் செல்வம் நீங்கி உதித்திடு மதலை யற்று ;

24. அன்னமளிக்க வேண்டினுள். இப்பெண் அவளிடம் கோபம் கொண்டு தீய வார்த்தைகளைக் கூறி விரட்டி விட்டாள் என்றேம். அந்த ஏழைப் பெண்ணும் மனம் வருந்திச் சொல்லுகின்றுள். உன்னுடைய செல்வங்கள் நீங்கி, பிறக்கும் குழந்தைகளை யிழந்து ;

25. வறுமைகள் கொள்வா யென்று மங்கையுஞ் செல்லி யேதான்
மறுமனை தன்னில் சென்றுள் வழுத்திய சாபந் தானும்
திருமக ளுக்கு நேர்ந்து செல்வங்கள் குறைவு முண்டாய்
வறுமையில் சென்ற ளென்றேம் மறையனல் வரையப் பட்டு ;

25. தரித்திர மடைவாய், என்று சொல்லிவிட்டு வேறு வீட்டுக்குச் சென்று விட்டாள். கூறிய சாபம் இவளுக்கு ஏற்பட்டு, செல்வங்கள் குறைந்து, வறுமை யடைந்தாள். மீண்டும் பிரம தேவனுல் படைக்கப்பட்டு ;

26. இக்குல முதித்தா ளென்றேம் இச்சென்மந் தன்னி லேதான்
தொக்கிற்று முன்னூழ் தானுஞ் சுதர்களுந் தோட மென்றேம்
மிக்கவே தோடந் தீர விளம்புவோஞ் சாந்தி யொன்று
தக்கநன் மகளாய் வந்த சங்கரி கேட்டி டாயே.

26. இக்குலத்தில் பிறந்தாள் என்றேம். இப்பிறவியில் முற்பிறவியின் தோஷம் தொடர்ந்தது. புத்திரர்கட்கும் தோஷமுண்டாகும். தோஷம் நீங்கச் சாந்தியொன்று கூறுகின்றேம். தக்ஷரின் மகளாய் வந்த தேவியே! கேளுங்கள்.

**சாந்தி**

27. வரனுட னிவளுஞ் சேர்ந்து மன்னுகா ளாத்திக் சேகிப்
பெருநதி தீர்த்தந் தோய்ந்து வெம்மானுக் கர்ச்சித் தேத்தி
உரகனுல் ரசிதந் தன்னுல் உத்தமர் செய்து மேதான்
மறையவர் நமக்கு ஈந்து வடியாருக் கன்ன மீந்து;

27. இவள், தன் கணவனுடன் சேர்ந்து திருக்காளத்திக்குச் சென்று, அங்குள்ள நதியில் நீராடி, சிவபெருமானுக்கு அருச்சனை செய்து, துதித்து, வெள்ளியால் பாம்பு உருவம் ஒன்று செய்து, அந்தணருக்குக் கொடுத்து, சிவனடியார் பலருக்கு அன்னமளித்து வந்து ;

28. கச்சியில் குமர ருக்குக் கனமுட னர்ச்சித் தேத்தி
இச்சையா யுள்ளூர் சென்று இன்பமாய்ச் சேயின் வாரம்
மிச்சமாய் விரதங் கொண்டால் விளங்கிடு மதலை யென்றோம்
அச்சுதன் தங்கை யாளே அம்மொழி தப்பா வென்றோம்.

28. காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருக்கும் குமரக் கடவுளுக்கு பக்தியுடன் அருச்சனை முதலியன செய்து, துதித்து, மீண்டும் உள்ளூருக்குத் திரும்பி, செவ்வாய்க் கிழமைகள் தோறும் விரதம் தோற்றுவந்தால், குழந்தை தோன்றும். கண்ண பிரானின் தங்கையே ! கூறிய மொழிகள் தவறு.

29. சுதர்களு மாண்பா லொன்று தோகையு மிரண்டு தீர்க்கம்
விதிதனைச் செய்யா ளாகில் விளங்காது மதலை யென்றோம்
மதிநுத லிவளுக் கேதான் மங்கல்யம் தீர்க்க மோசொல்
சதிசெய்யு மங்கல் யந்தான் சாற்றுவோங் காலந தன்னே.

29. புத்திரன் ஒருவனும் புத்திரிகள் இருவரும் தோன்றுவர். கெட்ட வினையால் செய்யாமலிருந்தால் புத்திர பாக்கியம் இல்லை. ஜாதகிக்கு மாங்கல்யம் தீர்க்கமாமோ ? சொல்லுங்கள், என்று கேட்கும்போது, மாங்கல்யம் நீங்கும் காலத்தைச் சொல்லுகின்றோம்.

30. எண்ணஞ்சு மூன்று ஆண்டில் ஏகுவான் பர்த்தா தானும்
விண்ணினி லிவன்பின் ஜன்மம் வடதிசை துவாரை தன்னில்
மண்ணினில் வைச்யச் சேயாய் மாரனு முதிப்பா னென்றோம்
அண்ணல்தன் தேவி யாளே அவளுடைக் காலங் கேளாய்.

30. ஜாதகியின் நாற்பத்து மூன்றும் வயதில் கணவன் மரணமடைவான். இவனுடைய மறு பிறவி வடக்கில் உள்ள துவாரகையில் வைசிய குலத்தவனாகப் பிறப்பான் என்றோம். சிவபெருமானின் பாரியையே ! ஜாதகியின் இறுதிக் காலத்தைச் சொல்லுகின்றோம், கேளுங்கள்.

31. அன்பத்து வைந்து வாண்டில் ஐப்பசி மாதந் தன்னில்
[1] குன்றிய பக்கந் தன்னில் குறித்தபஞ் சமியி லேதான்
இன்னவ ளுடலம் வாடும் இவளுடைப் பின்ஜன் மத்தைத்
தன்னிலே காளத்தில் தன்னில் சௌராஷ்ர குலமு திப்பாள் .

---

[1], கிருஷ்ண பக்ஷம்.

31. ஜாதகியின் ஐம்பத்தைந்தாம் வயதில் ஐப்பசி மாதத்தில் கிருஷ்ண பட்சம் பஞ்சமி திதியில் இவளுக்கு மரணம் ஏற்படும் என்றேம். இவள் மறுபிறவி திருக்காளாத்தியில் சௌராஷ்டிர குலத்தில் பிறப்பாள்.

32. மாதரு குடும்பச் சேதி வரைகின்றே மிரண்டி லேதான்
ஓதுவேன் சாத கிக்கு யோகத்தை விபர மாக
மேதினில் ஜனனந் தொட்டு மேவிய மரண மட்டும்
நீதியாய்ப் பிறைபோல் செல்வம் நிலேத்திடு மென்று சொல்வோம்.

32. தாயின் குடும்பச் செய்தியை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றேம். ஜாதகியின் யோகத்தைச் சொல்லுகின்றேம். ஜாதகிக்குப் பிறப்பு முதல் மரணம் வரையில் பிறைச் சந்திரன்போல் யோகம் விருத்தியாகும், என்று சொன்னேம்.

33. பிறந்திடம் புகுந்த வில்லம் பிரபல குடும்ப முண்டு
செறிந்திடுந் தனமுந் தான்யஞ் சிந்தையில் குறைவு றுவே
பொருந்திடுந் திருவுந் தானும் பிறைபோல வளரு மென்றேம்
அறந்தனே வளர்க்கு மாதே அம்பிகை யாளே கேளாய்.

33. ஜாதகி பிறந்தவீடு, புகுந்தவீடு இரண்டும் பிரபலமடையும். செல்வம் பெருகும். தானியம் செழிக்கும். மனத்தில் குறைகள் இரா. இலக்குமி இவள் வீட்டில் வாசம் செய்வாள். வளர் பிறைச் சந்திரன்போல் செல்வம் விருத்தியாகும். தருமத்தை வளர்க்கும் தாயே! பார்வதியே! கேளுங்கள்.

34. பிறந்தசேய் ஜனன காலம் [1] பதகன்தன் தசையி லேதான்
உறைந்திடு மாண்டு மொன்பான் உதித்திடுந் திங்க ளெட்டும்
செறிந்திடும் ரோக மேலாய் ஜாதகி தனக்கு முண்டு
பறந்திடு மந்த ரோகம் பாலகி சுகமே யாகும்.

34. ஜாதகியின் ஜனன காலத்தில் ராகுமகாதசையில் ஒன்பது வருடங்களும் எட்டு மாதங்களும் பாக்கி யிருப்பாம். அப்போது (தாய்க்கு) ரோகம் வாய்க்கும். ஜாதகிக்கும் ரோகமுண்டாம். பிறகு அந்த நோய் விலகி, ஜாதகிக்குச் சுக முண்டாகும்.

---

1. ராகு.

# ஜாதகம் 63.

1. பிறைநந்தி பானு வண்டி புநர்புகர் சேயும் வீணை
குருமானில் சனியு மேரு கோலதில் ராகு நின்று
பெருஞானி மேட மாகப் பேசுவோ மிதுனஞ் ஜன்மம்
வரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்க லுற்ருள்.

1. சந்திரன் விருஷபத்திலும், சூரியன் கடகத்திலும், புதன் சுக்கிரன் செவ்வாய் மிதுனத்திலும், குரு மகரத்திலும், சனி தனுசிலும், ராகு துலாத்திலும், கேது மேடத்திலும் இருந்து, லக்கினம் மிதுனமானல், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கலானுள்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | சந்திரன் | லக்கினம் புதன் சுக்கிரன் செவ்வாய் |
| | இராசி சக்கரம் | | சூரியன் |
| குரு | | | |
| சனி | | ராகு | |

2 அத்திரி சொல்லுகின்ருர் ஆணது ஜன்ம மாகும்
வித்தக னில்லஞ் சொல்வேன் வடக்குத்தென் வீதி யாகும்
சத்தியே கீழ்ப்பால் வாசல் சங்கரன் மாலுங் கீழ்ப்பால்
சுத்தமாய்த் தந்தி தென்பால் துலுக்கர்தன் கோட்ட முத்ரம்.

2. அத்திரி முனிவர் கூறுகின்ருர். இஃது ஆண்மகனின் ஜாதகம். அவன் பிறந்த வீட்டைச் சொல்லுகின்றேன். தெற்கு வடக்கான வீதியில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. கிழக்கில் திருமாலின் ஆலயமும் சிவபெருமான் ஆலயமும் உள்ளன. விநயகர் கோயில் தெற்கிலும் வடக்கில் முகம்மதியர் பள்ளிவாசலும் உள்ளன.

3. பலஜாதி யவ்வூர் வாசம் பெருத்ததோர் மடமுங் காணும்
தலமது பேரூ ராகுஞ் செட்டுக்கள் பலவா யோங்கும்
சொலுமிந்த வடையா ளத்துள் சுதனுமே வைந்தாஞ் ஜன்மம்
உலவுவா னென்று சொல்வோம் வரைகிருேம் யோகச் சேதி.

3. பலஜாதி மனிதர்கள் அவ்வூரில் வசிப்பார்கள். பெரிய மடமொன்று உண்டு. அது பலவிதமான வியாபாரங்களுள்ள பெரிய ஊராகும். இந்த அடையாளங்களுள்ள வீட்டில் தன் தந்தைக்கு ஐந்தாவது புத்திரனுகப் பிறப்பான் என்று சொல்லுகிறேன். அவனுடைய யோகத்தைச் சொல்லுகிருேம்.

வேறு

4. சேதி யுரைப்பேன் தந்தைதுணை
ஜனிப்பின் கால மாண் மூன்று
மேதினில் விருத்தி வேறொருவர்
விளம்பும் பின்பால் சேதிதனை
ஓதக் கொண்டு தந்தைகுணம்
உயர்வாம் புத்தி பலசெட்டுச்
சாதிப் பானுஞ் சிலசங்கை
தரணி விருத்தி செய்திடுவன்.

4. விபரம் சொல்லுகின்றோம். இவனுடைய தந்தைக்குப் பிறக்கும்போது மூன்று சகோதரர்கள் உளர். பிறகு ஒருவர் பிறப்பார். அதன விபரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். கேளுங்கள். தந்தை உயர்வுள்ள குடும்பமுள்ளவன். பலவித வியாபாரம் செய்துவருவான். சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வான். உலகில் பூமியைப் பெருக்குவான்.

5. இடுவன் ஏழை தமக்கன்னம்
இயல்பா யடிமை குடியுண்டு
கடனை கொள்ளா னிடுக்கமுளான்
கன்னி மார்கள் மோகமுளன்
உடன்வந் தோர்க்கு மேலாக
உலகில் வாழ்வன் உவமைசொல்வன்
மடையோ ருறவு கொள்ளாதான்
வாக்குத் தவறான் மாநிறத்தன்.

5. ஏழைகளுக்கு அன்னமளிப்பான். பணியாட்களும் குடிகளும் உள்ளவன். கடனை வாங்காதவன். துன்பமுள்ளவன். பெண்கள்மீது மையலுள்ளவன். தன் உடன் பிறந்தவர்கட்கு மேன்மையாக உலகில் வாழ்ந்து வருவான். உபமானங்களுடன் பேசுபவன். முட்டாள்களுடைய சிநேகமில்லாதவன். சொன்னசொல் தவறாதவன். மாநிறமுள்ளவன்.

6. [1] அலவன் ராசி சக்கரநாள்
அணுகும் பலவாய் மதுசெட்டுத்
தலமேல் செய்வன் சலவணிபம் (?)
தக்கோர் நேயன் ஈகையுளன்
புலவன் போல மொழிபுகல்வன்
பிதாமே லாக வாழ்திடுவன்
பலபேர் புகழ்வர் காலிவிருத்தி
பலமா துகளின் மோகமுளன்.

6. கடகராசியில்..................நட்சத்திரத்தில் பிறந்தவன். பலவித மதுபான வியாபாரம் செய்து வருவான். ..........நல்லவர்கள் நட்புக்கொள்ளுவான். கொடுக்கும் குணமுள்ளவன். புலவன்போல் பேசுபவன். தன் தந்தைக்கு மேலாக வாழ்வான். பலபேர் கொண்டாடும்படி வாழ்வான். கால் நடைகள் விருத்தியுண்டு. பல பெண்களின்மீது விருப்பமுள்ளவன்.

[1]. கடகராசி.

7. மாலோன் பத்தி யரிரேகை
மருவுங் கரத்தில் முகவடிவுஞ்
சீலன் நினைத்த படிமுடிப்பன்
செப்பும் வார்த்தை யிரண்டாகப்
பால்பாக கியமும் விருத்தியுளன்
படரும் வாயு ரோகமுமே
சால இவன்தன் பூர்வமதைச
சொல்லக் கேண்மோ சங்கரியே.

7. திருமாலின்மீது பக்தியுள்ளவன். கைகளில் **விஷ்ணுரேகை** உள்ளவன. முகலட்சணமுள்ளவன். நல்லொழுக்க முள்ளவன். எண்ணிய காரியத்தை முடிக்க வல்லவன். இருவிதமாகப் பேசுபவன். புத்திரவிருத்தியுள்ளவன். வாயு ரோக முள்ளவன். இவனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கேளுங்கள், தேவியே!

8. கடையூ ரருகில் தென்பாலில்
கனத்த த்னவான் வைச்யகுலம்
திடமாய் வணிபம் தான்செய்து
தேவி மதலே தானுண்டாய்
முடையோர்க் கன்னம் வழிமார்க்க
முயர்வாய்த் தாகப் பந்தல்வைத்து
அடைந்தான் காலன் நகர்தன்னை
அயனும் வரையக் கௌரிகுலம்;

8. திருக்கடையூருக்கு அருகில் தெற்குத் திக்கில் பெரிய தனவானாக, வைசிய குலத்தில் பிறந்தான். திடமுள்ள வர்த்தகம் செய்து வந்து, மனைவி மக்களைப் பெற்று, ஏழைகளுக்கு அன்னமளித்து வந்து, சாலையோரங்களில் தண்ணீர்ப் பந்தல்கள் அமைத்து, இறுதியில் மரணமடைந்தான். பிரமனால் படைக்கப்பட்டுக் கௌரி குலத்தில்;

9. பிறந்த னென்றோ மம்பிகையே
பேசு மிந்த குணத்தாற்கு
குறித்தோ மிந்தப் பாலனுமே
கூறு மிவன்தன் குணந்தனை
சிறந்த கல்வி ஊகைமுளன்
சிவந்த மெய்யன் தீரமனம்
நிறைந்த குடும்பி பலவணிபம்
நீத்தோர்க் கன்னம் நிருபனுமாம்.

9. பிறந்தான் என்று சொன்னோம், தாயே! இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறந்தான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சிறந்த கல்வியறிவுள்ளவன். ஊகமுடையவன். சிவந்த உடலுள்ளவன். தைரியமுள்ள மனத்தினன். செழித்த குடும்பமுள்ளவன். பலவிதமான வர்த்தகம் செய்து வருவான். துறவிகட்கு அன்னமளிப்பான்.

10. மானபோல் விழிமார் மோகமுளன்
மாடு பூமி விருத்தியுளன்
தேன்போல் மொழியும் தீரமனம்
சகமேல் வறுமை காணுதான்
சான்றேர் நேயன் ஜனவுதவி
தந்தை சமமாய் வாழ்ந்திடுவன்
பான்மை யாக மொழிபகர்வன்
பந்து வணங்க வாழ்ந்திடுவன்.

10. மருண்ட விழிகளையுடைய பெண்கள்மீது மையல் கொள்ளுவான். கால்நடைகள் பூமிகள் முதலியவற்றின விருத்தியுள்ளவன். இனிய வார்த்தைகளைப் பேசுபவன். தைரியமுள்ள மனத்தினன். உலகில் வறுமையில்லாதவன். பெரியோர்களுக்குப் பிரியன். ஜனங்களுக்கு உதவி செய்வான். தன் தந்தைக்குச் சமமாக வாழ்ந்திடுவான். பொருத்தமாகப் பேசுபவன். உறவினர்கள் வணங்க வாழ்ந்து வருவான்.

வேறு

11. தன்துணை முன்பெண் ரண்டு தீர்க்கமா மாண்பா லொன்று
அன்னவன் தீர்க்க மெய்தும் அவன்குணங் கூறக் கேண்மோ
மன்னர்பூ சிதமு மெய்து மால்நிறங் கல்வி மூன்று
சொன்னசொல் சுகமே யெய்தும் துடுக்குகள் பூர்வ முண்டு.

11. தன் உடன்பிறந்தவரில் இரு சகோதரிகள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். சகோதரன் ஒருவனும் தீர்க்கசீவி. அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். அரசரால் கொண்டாடப்படுவான். கரிய நிறமுள்ளவன். மூன்று விதமான கல்வி கற்பான். சொன்ன வார்த்தைகள் நலமாகும். முற்பிறவியில் செய்த வினையுண்டு.

12. பரிவண்டி யுடைய ஒரும் பாரினில் புகழு மேற்பன்
எரிநாளாந் தேளின் ராசி இறங்குவான் பொருளுஞ் சேர்ப்பன்
தரையது சேர்ப்பா னுகுஞ் சம்பத்தாய் வாழ்வா னுகும்
பெருநதி தலங்கள் செல்வன் பேதையு மொன்றே யாகும்.

12. குதிரைவண்டி யுடையவன். உலகில் கீர்த்தியடைவான். கார்த்திகை நட்சத்திரம் விருச்சிகராசியில் பிறந்தவன். பொருளைச் சேர்ப்பான். நிலங்களைப் பெருக்குவான். மிகுந்த சம்பத்துடன் வாழ்ந்து வருவான். புண்ணிய நதி (தீர்த்தங்)களுக்குச் சென்று நீராடுவான். மனைவியும் ஒருத்தியே.

13. சுதர்களு மாண்பால் மூன்று தோகையு மிரண்டு தீர்க்கம்
பதராகு மிரண்டு என்றேம் பாலக னென்றுய் வாழ்வன்
அதிபதி துணைவி சேதி வரைகிறேம் பின்பா கத்தில்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

13. மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். இரு புத்திரர்கள் இறந்து விடுவார். ஜாதகன் அவனுடன் ஒன்றுகச் சேர்ந்து வாழ்வான். ஜாதகனுடைய உடன் பிறந்தவளின் சேதியைப் பின் பாகத்தில் சொல்லுகின்றேம். விருந்தாளிகளைக் காப்பாற்றும் தேவியே! கேளுங்கள்.

14. உதித்தவன் மணத்தின் காலம் வரைகின்றோ மீரெட் டாண்டில்
அதிபதி வடபால் தன்னில் மருவுவா ளென்று சொல்வோம்
அதுபலன் கூறக் கேண்மோ அழகுளாள் சிவந்த மேனி
சதியிலா மனத்த ளாகும் சற்பாத்ரி யீகை யுள்ளாள்.

14. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். பதினாறும் வயதில் ஜாதகனின் வீட்டுக்கு வடக்குத் திசையிலிருந்து மனைவி வருவாள் என்று சொன்னோம். அவளுடைய குணங்களைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். அழகுள்ளவள். சிவந்த மேனியள். தீதில்லா மனத்தினள். சத்பாத்திரி. கொடுக்கும் குணமுள்ளவள்.

15. திருமக ளொப்ப தாகுந் தேவிக்கு வயது தீர்க்கம்
குறுமுனி தடுத்துச் சொல்வார் குடும்பத்தோன் விரய முற்றுக்
கரியவ னேழில் தங்கக் கனகத்தோ னெட்டில் தங்க
இருமனை யணுகு மென்றோம் இருவருந் தீர்க்க மோசொல்.

15. இலக்குமியை யொத்தவள். நீண்ட வயதுள்ளவள். அகத்திய முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். இரண்டாம் வீட்டுக்குரிய சந்திரன் விரயஸ்தானத்தில் இருப்பதாலும், சனி ஏழாம் வீட்டில் இருப்பதாலும், குரு எட்டாம் இடத்தில் இருப்பதாலும், இரு மனைவிகள் ஏற்படும் என்று சொன்னோம். இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்களோ ? சொல்லுங்கள்.

16. முதல்மனை கர்ப்பத் தாலே மேவுவாள் கால னூடு
பதியினுக் கிரண்டா மாது பரவுவா ளென்று சொல்வோம்
சுதர்கள்தன் பலத்தைக் கேளாய்த் தோன்றுது தோன்றில் தீதாம்
அதுகுற்றஞ் சொல்லு மென்ன அத்திரி புகலு கின்றார்.

16. ஜாதகனுடைய முதல் மனைவி கர்ப்பத்தால் இறந்து விடுவாள். அவனுக்கு மறு மனைவி ஏற்படுவாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகனின் புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். புத்திரர்கள் தோன்றார். பிறந்தாலும் நிலையார். அப்படி ஏற்படக் காரணம் என்னவென்று சொல்லுங்கள், என அத்திரி முனிவர் சொல்லுகின்றார்.

17. அஞ்சினில் ராகு நிற்க அந்தண னெட்டில் நீச்சம்
கஞ்சநன் பாகன் ரண்டில் கலந்ததால் புத்திர ஈனம்
நஞ்சுபோல் முன்ஜன் மத்தில் கலந்தது வந்தத் தோடம்
வஞ்சனை யென்ன செய்தா னறிவிப்பீர் முனியே நீர்தாம்.

17. ஐந்தாம் வீட்டில் ராகு இருப்பதாலும், எட்டாம் வீட்டில் குரு நீசனாக இருப்பதாலும், இரண்டில் சூரியன் இருப்பதாலும், புத்திரர்களுக்குத் தோஷமேற் பட்டது. கொடிய விஷம்போல் முற்பிறப்பில் செய்த தோஷம் விளைந்தது. என்ன தீங்குகள் செய்தான் ? சொல்லுங்கள். முனிவரே ! நீர்தாம்.

18. பெண்ணைந திக்கு வோரம் வரும்பனை பட்டி தன்னில்
திண்ணமாய் வைச்யச் சேயாய் ஜனித்துமே செட்டுச் செய்து
கண்ணிய குடும்பி யாகிக் கிளைத்திடு மனைவி மைந்தர்
அண்ணலும் வாழு நாளில் வரைகிறே மூழி தானே.

18. பெண்ணை நதிக்குப் பக்கத்தில் உள்ள பனைப்பட்டி என்ற ஊரில், வைசிய குலத்தவனாகப் பிறந்து, வியாபாரம் செய்து வந்து, கண்ணியமுள்ள குடும்பமேற்பட்டு, மனைவி மைந்தர்களையடைந்து, வாழ்ந்துவந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

**சர்ப்பத்தைக் கொன்றது**

19. இல்லத்தில் வெகுநா ளாக விருந்தது நாக மொன்று
அல்லலாய் மகுடத் தாலே அதுமுற்றந் தன்னில் செல்ல
வல்லவ னரங்கஞ் செய்து வாட்டினன் கழியி னாலே
புல்கிற்று கால னூடு புக்கிற்று வந்தத் தோடம்.

19. ஜாதகனுடைய வீட்டில் பலகாலமாக சர்ப்பம் ஒன்று வாழ்ந்திருந்தது. அஃது ஒரு நாள் வீட்டு முற்றத்தில் படமெடுத்து ஆடியது. ஜாதகன் அந்தச் சர்ப்பத்தைக் கழியினால் அடித்தான். சர்ப்பம் இறந்துவிட்டது. அந்தத் தோஷம் இவனை யடைந்தது.

20. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய வரசின் கீழே
தங்கிய நாகம் நிற்குந் தானவர் வாசஞ் செய்வார்
மந்திர மோதும் வேத மறையவர் பூசை செய்வார்
இந்தவா றிடத்தி லேதான் இரவினி லேது செய்தான்.

20. அவ்வூரில், நதிக்கரையின் பக்கத்தில் உள்ள அரசமரத்தின் கீழே விநாயகரும் சர்ப்பமும் மற்றும் பல தெய்வங்களும் வாழ்ந்து வந்தனர். வேதங்கள் ஓதும் அந்தணர்கள் பூசை முதலியன செய்து வந்தனர். இவ்வாறுள்ள இடத்தில், இரவில் ஜாதகன் என்ன செய்தான்! தெரியுமா?

**அரசமரத்தின்கீழ் விதைவையுடன் போகம் செய்தது**

21. விதவையை மரத்தின் கீழே வித்தகன் போகந் துய்த்து
அதனாலே கருவு தங்க அநேகபண் டிதங்கள் செய்யச்
சதியினால் கருவு நீங்கிச் சத்தியு மாண்டா ளென்றேம்
இதுவொரு தோட மாச்சு ஈச்வரி கேட்டி டாயே.

21. ஜாதகன் ஒரு கைம்பெண்ணுடன் அம்மரத்தின்கீழ் சிற்றின்பம் அனுபவித்தான். அதனால் கரு ஏற்பட்டு அதை விலக்கப் பல வித மருந்து கொடுத்தான். அதனால் கரு நீங்கிப் பெண்ணும் மரணமடைந்தாள். இதுவும் ஒரு தோஷமாயிற்று. ஈசுவரியே! கேளுங்கள்.

22. மாரனு மந்தி யத்தில் மைந்தர்கள் தோட மெய்தித்
தீரமாய்க் கால னூடு சேர்ந்துமே பிரமன் லக்கம்
பாரினில் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
கூறுவோ முன்னூழ்த் தோடங் குழவிகள் தோட மாமே.

22. ஜாதகனும் தன் கடைசிக்காலத்தில் புத்திர தோஷம் பெற்று இறந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு உலகில் இந்தக் குலத்தில் பிறந்தான். முற்பிறவியின் தோஷம் தொடர்ந்ததால் புத்திரர்கட்குத் தீங்குண்டாகும்.

**சாந்தி யில்லை**

23. வந்ததோர் வினைகள் தீர வரைகுவீர் சாந்தி யொன்று
எந்தசாந் திகள்செய் தாலும் விலகாது நாக சாபம்
முந்தின மாதுக் கேதான் மேவிடும் புத்திர ரென்றீர்
அந்ததோர் பலனெவ் வாறு வரைகுவீர் முனியே நீர்தாம்.

23. ஏற்பட்ட புத்திர தோஷம் நீங்கச் சாந்தியொன்று கூறுங்கள். எந்தச் சாந்தி செய்தாலும் சர்ப்பதோஷம் நீங்காது. முதல் மனைவிக்குப் புத்திரர் தோன்றும் என்று சொன்னீர்களே ! அஃது எப்படி ? சொல்லுங்கள், முனிவரே !

24. கருவதை யழித்த பாபங் காதலி கர்ப்பத் தாலே
மறலியின் பதிக்குச் சேர்வள் மறுமனை சேரு மென்றோம்
உறையார்கள் சுதர்கள் தாமும் உதிக்கினுந் தீதே யாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

24. கருவழித்த பாபத்தால் மனைவி கர்ப்பத்தால் மாண்டுபோவாள். இரண்டாம் மனைவி வாய்ப்பாள் என்று சொன்னோம். புத்திரர்கள் தோன்ருர். பிறந்தாலும் நிலையார். வேதங்களின் முடிவில் ஆடும் தேவியே கேளுங்கள்.

25. இன்னவன் தனக்குக் கருமம் எவர்செய்வார் விபரஞ் சொல்வாய்
இன்னவன் சுதனுஞ் செய்வன் மொழிகிறோம் பின்பால் சேதி
அன்னையின் குணத்தைச் சொல்லுவோம் அன்புள மனத்த ளாகும்
பொன்னிறம் ஊக சாலி பொருந்தவே யுரைப்ப ளாகும்.

25. ஜாதகனுக்குக் கருமங்கள் யார் செய்வார் ? விவரமாகச் சொல்லுங்கள். இவனுடைய புத்திரன் செய்வான். அது விவரம் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அன்புள்ள மனத்தினள். பொன்னைப்போன்ற நிறமுடையவள். ஊகமுள்ளவள். பொருத்தமாகப் பேசுபவள்.

26. அடிசிலுக் கினிய ளாகும் அழகுளாள் நடக்கை நன்ன
துடியிடை யோக சாலி சொல்லது சுகமே யாகும்
படிமீதில் நல்லோ ளாவள் பாவையுந் துணைகள் காணுள்
மடையரை யுறவு கொள்ளாள் வதிட்டருங் கூறு கின்றார்.

26. உருசியுடன் சமைப்பவள். அழகுள்ளவள். நன்னடக்கை யுள்ளவள் மெல்லிய இடையுள்ளவள். யோகசாலி. அன்புடன் பேசுபவள். உலகில் நல்லவளாயிருப்பாள். உடன் பிறந்தவரில்லாதவள். மூடர்களுடன் உறவாடாதவள். வசிஷ்டமுனிவர் கூறுகின்றார்.

27. மங்கைக்குத் துணைகள் தோட மறிவிப்பீ ரந்தச் சங்கை
திங்கட்கு மூன்றில் பானு சேர்ந்துமே யிருப்ப தாலே
நங்கைதன் துணைகள் தோடம் நாயகி பூர்வந் தன்னில்
தங்கிற்று வினைய நேகஞ் சாற்றுவீ ரந்தச் சங்கை.

27. ஜாதகனுடைய தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்படக் காரணம் கூறுங்கள். சந்திரனிருக்குமிடத்துக்கு மூன்றுமிடத்தில் சூரியன் இருப்பதால் தாயின் உடன் பிறந்தவருக்குத் தோஷமுண்டு. தாயும் முற்பிறவியில் பல தீவினைகள் செய்ததால் அஃது ஏற்பட்டது. அவற்றைக் கூறுங்கள்.

## ஸ்திரீ நிந்தை

28. அருணைமா நகரி லேதான் அக்கினி குலமு தித்துத்
திருமகள் வாச மெய்தித் தேவியும் வாழு நாளில்
மருவின வினையைச் சொல்வேன் வரனுடைத் தங்கை பேரில்
உரைத்தனள் சிலேடை வார்த்தை உத்தமி மனங்க லங்கி ;

28. திருவண்ணுமலையில் வன்னிய குலத்தில்பிறந்து, லட்சுமீநோக்குப் பெற்று, வாழ்ந்திருக்கும் போது ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். கணவனுடைய சகோதரியின்மீது இருபொருள் படும்படியான வார்த்தைகளைக் கூறினுள். அந்த நல்ல குணமுள்ள பெண் மனம் வருந்தி ;

29. பெண்பழி சொன்ன பாவி பிறக்கும்பின் ஜன்மந் தன்னில்
அண்ணன்தம் பிகளு மின்றி அதிதிபோல் தனியாய் வாழ்வாய்
திண்ணமாய்ச் சொல்லிச் சென்றுள் சேர்ந்தது வந்தத் தோடம்
வண்ணமா யில்லந் தன்னில் மருவிற்றுப் பட்சி தானும்.

29. பெண்மீது அபாண்டமாகப் பழி சொன்ன பாவியே ! உனக்கு ஏற்படும் மறுபிறவியில், அண்ணன் தம்பி களில்லாமல், விருந்தாளிபோல் தனித்து வாழ்வாய் என்று திடமுடன் கூறிச் சென்றுள். அந்தத் தோஷம் இவளை வந்தடைந்தது. இது தவிர, இவளுடைய வீட்டில் பட்சி ஒன்று வசித்து வந்தது.

## பறவையின் கூட்டைக் கலைத்தல்

30. பறவையின் கூட்டைத் தானும் பாவையுங் கலைத்தா ளென்றோம்
மருவிற்று வந்தத் தோடம் மாதுவு மந்தி யத்தில்
பெருநதி சேது புக்கிப் பலமிலார்க் கன்ன மீந்து
மறலியின் பதிக்குச் சென்று மலரயன் வரையப் பட்டு ;

30. அந்தப் பறவையின கூட்டை இப்பெண் கலைத்து விட்டாள். அந்தத் தோஷமும் இவளை வந்தடைந்தது. இப்பெண்ணும் தன் கடைசிக்காலத்தில் புண்ணியநதிகள் சேது முதலிய இடங்களுக்குச் சென்று, நீராடி, ஏழைகளுக்கு அன்னமளித்து, மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப் பட்டு ;

31. வந்தவ ளிவளே யென்றே மாதுவின் சாபம் போலத்
தன்துணை காணு தாகுஞ் சாற்றுவோ மிவள்பின் ஜன்மம்
விந்தையாய் வாயு திக்கில் மேவுவாள் சத்ரியச் சேயாய்
இந்தவோர் ஜன்மந் தன்னில் இவள்செய்த புண்ய மென்ன.

31. பிறந்தவள் இவள் (ஜாதகனின் தாய்) என்று கூறினேம். பெண்ணின் சாபத்தைப்போல் உடன்பிறந்தவரில்லாதவள். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். வடமேற்குத் திசையில், சத்திரிய குலத்தவளாகத் தோன்றுவாள். இப்பிறவியில் இவள் செய்த நற்காரியங்களென்ன ?

32. அறமதி லிச்சை யாயும் ஆளன்தன் மனம்போல் வாழ்ந்தும்
வருவோரை யாத ரித்து மாதுவும் வாழ்வ தாலே
உறைகுவாள் சத்ரியச் சேயாய் உரைத்தவை தப்பா வாகும்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

32. தருமம் செய்வதில் விருப்பமுள்ளவளாயும், தன் கணவன்மனம்போல் வாழ்ந்து வந்தபடியாலும், தன்னை யண்டி வருவோர்களை ஆதரித்தும் வாழ்ந்து வருவதால், சத்திரிய குலத்தவளாகப் பிறப்பாள். நாங்கள் கூறியவை தவறு. வினாயகனைப் பெற்றதாயே ! கேளுங்கள்.

33. இருபது வேழு ஆண்டில் இசைந்ததை மாதந் தன்னில்
மருவிடுந் தந்தை கண்டம் வருஞ்ஜன்மங் கூறக் கேண்மோ
பெருகிய காளாத்தி தன்னில் பிறப்பனும் பிரம சேயாய்த்
திருமக னிச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்ன.

33. ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் தை மாதத்தில் தந்தைக்கு மரண மேற்படும். இவனுடைய தந்தையின் மறுபிறவியைச் சொல்ல, கேளுங்கள். உயர்ந்த காளாத்திக்ஷேத்திரத்தில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான். இவன் இப்பிறவியில் செய்த நற்செயல்களென்ன ?

34. இனமதை யாத ரித்தும் இளமன முடைய னுயும்
கனமுள தலங்கள் சென்றும் கடந்தோர்க்கு வன்ன மீந்தும்
வினைமன மில்லா னுகி வித்தகன் வாழ்வ தாலே
சினமிலாப் பிரம்ம சேயாய் ஜனிப்பனு மென்று சொல்வோம்.

34. தன்பந்துக்களை ஆதரித்து வந்ததாலும், இளகிய மனமுடையவனுயிருந்ததாலும், பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச்சென்று வந்ததாலும், துறவிகட்கு அன்னமளித்து வந்ததாலும், தீய மனமில்லாமல் வாழ்ந்துவருவதாலும், பாபமில்லாத அந்தண குலத்தில் பிறப்பான் என்று சொன்னேம்.

35. முப்பது மூன்று வாண்டி லுயரானி மாதந் தன்னில்
செப்புவோ மன்னை கண்டஞ் சேடன்தன் தசையி லேதான்
ஒப்புடன் ரவிபு குத்தி உறைந்திடு மந்தக் காலம்
அப்புனி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

35. ஜாதகனுடைய முப்பத்துமூன்றும் வயதில் ஆனி மாதத்தில் தாய் மரணமடைவாள். அப்போது ராகுமகாதசையில் சூரியபுத்தி நடைபெறும். கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமானின் தேவியே! நாங்கள் கூறியவை தவரு.

36. அன்பது வேழு வாண்டில் அழகிய ரிடப மாதம்
முன்பக்கந் துவாதசி தன்னி லுதித்தவ னுடல மேகும்
பின்ஜன்மங் கலிங்க நாட்டில் பிறப்பனுஞ் சத்ரிய சேயாய்
இன்னவாறு முனிவர் கூற இயம்புவார் பராசர் தாமும்.

36. ஜாதகன், தனது ஐம்பத்தேழாம் வயதில் வைகாசி மாதத்தில் சுக்கில பட்சம் துவாதசி திதியில் மரணமடைவான். மறுபிறவி கலிங்க தேசத்தில் சத்திரிய குலத்தில் பிறப்பான். இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பராசரமுனிவர் சொல்லுகின்றுர்.

37. எட்டினுக் குடையோன் காரி ஏழிடந் தன்னில் நின்றும்
அட்டமங் குருவே நின்றும் அருக்கனு மிரண்டில் நிற்கக்
குட்டாக வாண்டுக் குள்ளே குழவிக்குக் கண்டம் நேரும்
திட்டமாய் முனிவர் கூறத் தென்முனி புகலு கின்றுர்.

37. எட்டாம் வீட்டுக்குரிய சனி ஏழாமிடத்தில் இருப்பதாலும், எட்டாம் வீட்டில் குருவும் இரண்டாம் இடத்தில் சூரியனும் இருப்பதாலும் ஒரு வயதுக் குள்ளாகவே ஜாதகனுக்குக் கண்டம் நேரும் என்று திண்ணமாக முனிவர் கூறும்போது, அகத்திய முனிவர் சொல்லுகின்றுர்.

38. ஓராண்டுள் கண்டம் நேரும் (நேராது ?) உயர்பிணி செலவ நேகம்
நேரிடு மென்று சொல்வோம் நேமித்த வன்பா னேழும்
மாரனுந் தீர்க்க மெய்தும் வரைந்தது தப்பா தாகும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

38. ஜாதகனுக்கு ஒரு வயதுக்குள்ளாகவே கண்டம் நேரும் (நேராது ?) வியாதியால் அதிகச் செலவு ஏற்படும். ஜாதகன் நீண்ட ஆயுளுள்ளவன். நாங்கள் சொன்ன ஐம்பத்தேழு வயது தவருது. கூறியதும் தவருது. ஆறுமுகக் கடவுளைப்பெற்ற தாயே ! கேளுங்கள்.

39. வந்தவன் யொகச் சேதி வரைகின்றேம் வணிபஞ் செய்வன்
தந்தைக்குச் சமமாய் வாழ்வன் தரணியில் வறுமை காணுன்
முந்துமால் பத்தி கொள்வன் உயர்வான குடும்ப மேற்பன்
நொந்தவர் தம்மைக் காப்பன் நீங்காத செல்வ முண்டு.

39. ஜாதனுடைய யோகச் செய்திகளைக் கூறுகின்றேம். வர்த்தகம் செய்து வருவான். தன் தந்தைக்குச் சமமாக வாழ்ந்து வருவான். உலகில் வறுமை இல்லாதவன். திருமாலின்மீது பக்தியுள்ளவன். உயர்ந்த குடும் பத்தை அடைவான். கஷ்டப்படுபவர்களை ஆதரிப்பான். நீங்காத செல்வ முள்ளவன்.

**40.** காவலன் ஜனிக்குங் காலங் கார்த்திகை நாலாம் பாதம்
மேவிய பானு தன்னில் விளங்கிய வாண்டு வொன்றும்
தாவிய திங்கள் நாலுஞ் சாற்றுவோம் பலனே யாங்கள்
தீவினில் செலவ னேகஞ் சிலசில நிந்தை யுண்டு.

**40.** ஜாதகனது ஜனனகாலத்தில் கார்த்திகை நட்சத்திரம் நாலாம்பாதம். சூரியமகாதசையில் ஒருவருடமும் நான்கு மாதங்களும் மீதி நிற்கும். அக்காலத்திய பொதுப் பலனைச் சொல்லுகின்றும். செலவு அதிகம் ஏற்படும். சிற்சில அவமானங்கள் நேரும்.

**41.** தந்தைக்குப் பிணிய லைச்சல் சதுஷ்பாதம் சேத மெய்தும்
பந்துவில் சூத மெய்தும் பகைவரு மிடையூ றுண்டு
பின்னதன் பாகந் தன்னில் பேசுவோம் விபர மாக
இந்திர னிறைஞ்சு மாதே இதுபூர்வ பாக மாமே.

**41.** தந்தைக்கு வியாதியும் அலைச்சலுமுண்டாகும். கால்நடைகட்குச் சேதமேற்படும். பந்துக்களுக்குள் அசுபம் நிகழும். விரோதிகளால் பல துன்பங்கள் நேரும். பிற்பாகத்தில் விபரமாகச் சொல்லுகின்றேம். இந்திரனால் தோத்தரிக்கப்படும் தேவியே ! இது முதல் பாகமாகும்.

## ஜாதகம் 64.

திங்களுங் கன்னி யாகச் சேய்புகர் புதனும் வீணை
பங்கயன் கடக மாகப் பணிகுரு தேள தாகப்
[1] பங்குமே தனுசு வாகப் [2] பற்றற்றோன் நந்தி புக்க
இங்கிவை கிரகம் நின்று இலக்கின மிதுன மாக ;

1. சந்திரன் கன்னியிலும், செவ்வாய் சுக்கிரன் புதன் மிதுனத்திலும், சூரியன் கடகத்திலும், ராகு குரு விருச்சிகத்திலும், சனி தனுசிலும், கேது விருஷபத்திலும் இருந்து, மிதுனம் இலக்கினமாக இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| | | கேது | செவ்வாய் சுக்கிரன் புதன் லக்கினம் |
| | இராசி | | சூரியன் |
| | சக்கரம் | | |
| சனி | ராகு குரு | | சந்திரன் |

2. சொல்லுவீர் பலனை யென்று சுந்தரி கேட்கும் போது
புல்குவார் பராசர் தாமும் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
இல்லமு கீழ்மேல் வீதி எமன்பார்வை வடபா லீசன்
எல்லைமா காளி [3] வாயு எம்பிரான் தந்தி மேற்கில் ;

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதிதேவி கேட்கும்போது, பாரசர முனிவர் சொல்லுகின்றார். பிறப்பது ஆண் மகன். பிறந்த வீடு கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வடக்குத் திக்கில் சிவபெருமானின் ஆலயமும், காளிகோவில் வடமேற்குத் திசையிலும், விநாயகர் ஆலயம் மேற்குத் திக்கிலும் உள்ள ;

3. இவ்வித வடையா ளத்துள் இளவலுஞ் சேட்ட னாகப்
பவ்வமாய் வருவா னாகும் பாலக னன்னை தந்தை
ஒவ்விய களத்ர புத்ரர் உறுந்துணை முன்பின் ஜன்மம்
திவ்விய நூலை யாய்ந்து செப்புவோந் தாயே கேளும்.

3. அடையாளங்களுள்ள வீட்டில், ஜாதகன் தன் தந்தைக்கு மூத்த புத்திரனாகத் தோன்றுவான். ஜாதகனுடைய தாய் தந்தையர் மனைவி மக்கள் உடன்பிறந்தவர் இவர்களுடைய யோகங்களையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும்பற்றி ஜாதகநூலை ஆராய்ந்து கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

---

[1] சனி. [2] கேது. [3] வடமேற்கு.

4. இவன்பிதா துணைவர் தமமை இயம்புவோம் நவமே தோன்றும்
அவனியி லாண்பால் மூன்று அழகிய கன்னி நான்கு
நவனியில் தீர்க்க மெய்தும் நசித்திடு மிரண்டு வென்றோம்
அவராண்பால் முன்னோ னாக வரைகின்றேந் தாயே கேளும்.

4. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவரைப்பற்றிச் சொல்லுகின்றோம். ஒன்பதுபேர் தோன்றுவார்கள். அவர்களில் மூன்று சகோதரர்களும், நான்கு சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். இரு குழந்தைகள் இறந்து போவார், என்றோம். அவரும் மூத்தவரென்று சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

5. உதிக்காமுன் வேறுய்ச் செல்வன் வரைகின்றேந் தந்தை சேதி
நிதியிலான் சல்லிய முள்ளான் விளைநிலம் கிருஷி செய்வன்
அதிகவார்த் தைகளு முண்டு அவலமாங் குடும்ப மென்றோம்
சதியுள மனத்த னாகும் தனத்தின்மே லிச்சை யுண்டு.

5. ஜாதகன் பிறப்பதற்குமுன் தனியாகச் சென்றுவிடுவான். ஜாதகனுடைய தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம். செல்வ மில்லாதவன். கடனுபத்ரவ முள்ளவன். விவசாயம் செய்துவருவான். அதிகமாகப் பேசுபவன். அற்பமான குடும்பமுள்ளவன் என்றோம். கெட்ட மன முள்ளவன். பணத்தின்மீது பிரியமுள்ளவன்.

6. வித்தையுங் கொஞ்ச முண்டு விவேகியாம் மாஞ்சி வப்பன்
பத்தினி நேய னாகும் பால்தயிர் பிரிய னாகும்
வெற்றிச்சொல் லுடைய னாகும் விடமமு முடைய னாகும்
சித்தமே கரப்பு முண்டு தீரமா மனத்த னாகும்.

6. சிறிது கல்வியறிவுள்ளவன். விவேகமுள்ளவன். மாநிறமுடையவன். மனைவிக்குப் பிரியனுவன். பால் தயிர் இவைகளின்மீது விருப்பமுள்ளவன். வெற்றிச்சொல்லுடையவன். சிறிது விஷமம் செய்யும் குணமுள்ளவன். மனத்தில் கெட்ட எண்ணமுடையவன். தைரியமுள்ள மனத்தினன்.

7. அந்தமான் செல்வா னாகும் அத்திரி தடுத்துச் சொல்வார்
எந்தக்கா லத்தில் செல்வான் இயம்புவீர் முனியே நீர்தாம்
வந்தவ னுண்டுக் குள்ளே வனவாசஞ் செல்வா னாகும்
அந்தத்தில் விவரஞ் சொல்வோம் அவ்வித மவன்முன் செல்வான்.

7. அந்தமான்தீவுக்குச் செல்லுவான். அத்திரி முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். எந்த காலத்தில் அங்குச்செல்லுவான்? முனிவரே! கூறுங்கள். ஜாதகன் பிறந்த ஒரு வருடத்துக் குள்ளாகவே வனவாசம் போல் தனித்துச் சென்றுவிடுவான். அந்த விபரத்தைக் கடைசியில் சொல்லுகின்றேன். அங்ஙனம் முன்பாகவே செல்லுவான்.

8. சொன்னவிக் குனித்தா னுக்குச் சுதனுமே வுதிப்பா னாகும்
அன்னவன் செயலைச் சொல்வோம் அன்புள மனத்தா னாகும்
முன்கோபி சிவந்த மெய்யன் மூலச்சூ டுடைய னாகும்
பின்னமில் லாத தேகி புகலுவான் கல்வி ரண்டு.

8. இவ்வனம் கூறப்பட்ட குணமுடையவனுக்குச் இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய விஷயங்களைச் சொல்லுகின்றேன். அன்புள்ள மனத்தினன். முன் கோபி. சிவந்த உடலுள்ளவன். மூலச்சூட்டு நோயுள்ளவன். ஊனமில்லாத சரீரமுள்ளவன். இருவிதக் கல்வி கற்பான்.

9. கரமதி லுருத்திர ரேகை கடந்தோர்கள் நேயங் கொள்வன்
உறன்முறை மதிக்க வாழ்வன் உறுதிமான் செட்டுச் செய்வன்
அரிபக்தி பூண்பா னாகும் அனைவர்க்கும் நல்லோ னவன்
விரைவினில் நடக்க வல்லன் விரும்புவான் சுகபு சிப்பு.

9. கையில் ருத்திரரேகை யுள்ளவன். துறவிகட்குப் பிரியனுவன். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். உறுதியுள்ளவன். வர்த்தகம் செய்துவருவான். விஷ்ணுபக்தி கொள்ளுவான். எவருக்கும் நல்லவனுக இருப்பான். வேகமாக நடக்கவல்லவன். சுகமாகப் புசிப்பதில் பிரியமுள்ளவன்.

10. ஆதியில் வறுமை யுண்டு ஐமூன்று வாண்டு மேலாய்
மேதினில் யோக மெய்தும் விளைநில மதிகஞ் சேர்ப்பன்
தாதையால் சல்லிய முண்டு தரிபடுங் கொஞ்ச பூமி
பூதல புகழு மேற்பன் பொய்யது வழுத்தா னுமே.

10. ஆதிகாலத்தில் வறுமையுள்ளவன். ஜாதகனுடைய பதினைந்து வயதுக்குமேல் உலகில் யோகமேற்படும். விளைநிலங்களை அதிகமாகச் சேர்ப்பான். தன் பாட்டனுல் கடனுபத்ரவமுள்ளவன். சிறிது பூமிகள் குறையும். உலகில் கீர்த்தி அடைவான். பொய் பேசாதவன்.

11. சித்திர மெழுத வல்லன் சித்தினி சாதி யாவன்
வெத்திச்சொல் லுடைய னாகும் விகடவார்த் தைகளு முண்டு
பத்தினி மீது மோகன் பந்துவிற் கிணக்கஞ் செய்யான்
அத்தியைப் பெற்ற மாதே வரைந்த இம் மொழிகுன் றுவே.

11. சித்திரம் எழுதுவதில் சிறந்தவன். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன். வெல்லும்படியான வாக்கு வன்மையுடையவன். விகடமாகப் பேசுபவன். மனைவியின்மீது மோகமுள்ளவன். தன் பந்து ஜனங்களுக்கு இணங்காதவன். விநயகனைப்பெற்ற தேவியே! கூறிய வார்த்தைகள் தவரு.

12. தன்துணை காணு னாகுஞ் சாற்றுவீ ரந்தச் சங்கை
பின்னமாய்ப் பானு ரண்டில் வேதிய னுடனே ராகு
மன்னிய வாறில் தங்க வரைந்தன மந்தச் சங்கை
இன்னவன் தந்தை தேசாந் தரத்தினி லெய்த தாலும்;

12. உடன் பிறந்தவரில்லாதவன். அதற்குக் காரணம் சொல்லுங்கள். சூரியன் இரண்டாம் வீட்டில் இருந்து குருவுடன் ராகு ஆறுமிடத்தில் தங்கியிருப்பதால் அங்ஙனம் கூறினேம். இது தவிர, ஜாதகனுடைய தந்தை தேசாந்தரம் சென்றதாலும்;

13. உடன்துணை காணு ளுகும் உரைக்கிறோ மன்னே சேதி
மடமதை யொப்ப தாகும் வளமிலாக் குடும்ப மெய்தும்
உடன்துணை யாண்பால் காணுன் ஒண்டொடி யிரண்டு தீர்க்கம்
தடபுடல் செய்கை யுள்ளான் சாற்றுமுன் கோபி யாவன்.

13. உடன்பிறந்தவர் இல்லாதவன். தாயின் செய்திகளைக் கூறுகின்றோம். இவளது வீடு மடத்தைப்போன்றது. செழிப்பில்லாத குடும்பத்தை யுடையவள். உடன்பிறந்த சகோதரிகள் இருவர். சகோதரரில்லை. தடபுடலான ஆடம்பரச் செய்கையுள்ளவன். கூறுவதற்குமுன் கோபமடைவான்.

14. வந்தபின் வரனுக் கேதான் வறுமைகள் சல்ய பாதை
நொந்திடு மனத்த ளாகும் நிமலிபாட் டாளி யாகும்
சந்தத மற்ப ரோகி தாயில்லந் தென்மே லாகும்
பந்தமாங் குடும்ப மென்றோம் பூருவ வினையாந் தாயே.

14. ஜாதகனுடைய தந்தையை மணம் புரிந்தபிறகு வறுமைகள் அதிகரிக்கும். கடன் உபத்ரவம் உண்டு. கஷ்டப்படும் மனத்தை யுடையவள். உழைப்பாளி என்று சொல்லுகின்றோம். சதா சிறிய நோயுள்ளவள். தன் தாய்வீடு தென் மேற்குத் திசையிலுள்ளது. அற்பமான குடும்பம் என்றோம். அஃது அவளுடைய முற்பிறப்புத் தீவினையால் ஏற்பட்டது. தாயே!

15. மங்கைசெய் வினைக ளென்ன வரைகுவீர் முனியே நீர்தாம்
சங்கையில் லாமல் சொல்வோம் செந்தில்மா நகரி லேதான்
துங்கமா மறைக்கு லத்தில் தோன்றியே வறுமை யின்றி
அங்கவள் வாழு நாளில் வரைகின்றோ மூழி தானே.

15. ஜாதகனுடைய தாய் செய்த தீவினைகளென்ன? முனிவரே! கூறுங்கள், நீர்தாம். சந்தேகமில்லாமல் சொல்கின்றேன். செந்தில்மாநகரத்தில், தூய அந்தணகுலத்தில் பிறந்து, தரித்திரமின்றி வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

16. மைத்துனன் மனைவி பேரில் வரைந்தனள் சிலேடை வார்த்தை
வித்தக னதனைக் கேட்டு மெல்லியை விலக்க லுற்றான்
சத்தியு மனவெ றுப்பால் சாற்றுவாள் சாபந் தானும்
குற்றமில் லாம லென்மேல் குறைகளைச் சொன்ன பாவி.

16. தன்னுடைய மைத்துனனின் மனைவிமீது இருபொருள்படும்படி சில வார்த்தைகள் கூறினாள். அப்பெண்ணின் கணவன் அதைக் கேட்டு அவளை விலக்கிவிட்டான். அவளும் மனவருத்தமடைந்து சாப மிட்டாள். குற்றமற்ற என்மீது அடாத வார்த்தைகளைக் கூறிய பாவியே!

17. மறுஜன்மங் குலந்தாழ் வாக வந்துமே வரனு முண்டாய்ச்
சிறையாக வாழ்வாய் நீயுஞ் சிறுமைகள் பலருஞ் சொல்ல
வறுமைக ளுடைய ளாகி வாழ்குவாய் மாதே நீயுந்
தெருத்தூளைத் தூற்றித் சென்றாள் சேர்ந்தது வந்தச் சாபம்.

17. உனக்கு ஏற்படும் மறு பிறவியில், நீ, தாழ்ந்த குலமடைந்து, தன் கணவனைப்பெற்று, சிறையில் வாழ்வதுபோல் வாழ்ந்து வருவாய். பலபேர் இகழும்படியான தரித்திர நிலையையடைந்து வாழ்ந்து வருவாய். பெண்ணே! நீ, என்று தெருமண்ணைத் தூற்றிவிட்டுச் சென்றாள். அத்தத் தோஷம் இவளுக்கு ஏற்பட்டது.

18. அதுவன்றி வேறு சொல்வோம் அவள்வரன் தன்னோ டுற்று
மதிபிறை யணிந்தோன் கோட்ட மாபெரு நாளில் சென்று
துதிசெய்து கடைவீ திக்குச் சென்றுமே சீப்பு மஞ்சள்
அதிசதி வாங்கிக் கொண்டு வெள்ளியு மீயா ளாகி ;

18. அதுவல்லாமல் வேறு ஒன்று கூறுகின்றோம். அவள், ஓர் உற்சவ நாளில், தன் கணவனுடன் சந்திரனை முடியிலணிந்த சிவபெருமானின் ஆலயத்துக்குச் சென்று, தோத்திரம் செய்து, கடைவீதிக்குச்சென்று, மஞ்சள் சீப்பு முதலியவை வாங்கிக்கொண்டு, அதற்குரிய பணத்தைத் தராமல் ;

19. மானது பறந்தாற் போல மங்கையு மில்லஞ் சென்றாள்
ஆனதோர் வணிகன் பார்த்து அம்மையைக் காணா தாகி
ஊனமா மனத்த னாகி வரைகுவான் சாபந் தானும்
தேன்மொழி வார்த்தைப் பேசிச் சிவப்பு மஞ்சள் சீப்பு ;

19. மானைப்போல் வெகு வேகமாகத் தன் வீட்டுக்குச் சென்று விட்டாள். அதைக் கடைக்காரன் கவனித்து பெண் இல்லாததால் நொந்த மனமுடையவனாகிச் சாபமிட்டான். இனிய வார்த்தைகள் கூறி குங்குமம், மஞ்சள், சீப்பு இவைகளை ;

20. வாங்கியே பொருளீ யாமல் மறைந்ததோர் பாவிக்கே தான்
தேங்கியே யழுவாய் நீயும் சிவப்புக ளாகா முன்னம்
சாங்கமாய் மறுஜன் மத்தில் தன்வர னுண்டாய்ப் பின்பு
ஏங்கியே சிறையாய் வாழ்வாய் இயல்பிலாக் குடும்பி யாகி ;

20. வாங்கிக்கொண்டு பணம் தராமல் ஓடிவிட்ட பாவியே! நீ வாங்கிய குங்குமம் தீருவதற்கு முன்பாகவே கணவனை யிழப்பாய். இனி ஏற்படும் மறுபிறவியில், கணவனை யடைந்தும், சிறையில் வாழ்வது போல் ஏங்கி வாழ்ந்தும், செல்வமில்லாத குடும்பியாகவும் வாழ்வாய் என்றும் ;

21. இன்னமும் பலவாறு சொல்லி இறைத்தனன் தெருமண் வாரி
கன்னிக்கு வந்தச் சாபம் காாக்கோட விஷம்போல் சேர்ந்து
அன்னவள் அந்த ஆண்டில் அவள்வரன் மரண மாகித்
தன்மன சஞ்ச லத்தால் சண்டன்தன் பதிக்குப் புக்கி ;

21. இன்னும் பலவிதமாகக் கூறி, தெருமண்ணை வாரித் தூற்றினான். அந்தச் சாபம், பெண்ணுக்கு, கொடிய விஷம் போல் ஏற்பட்டது. அவள், அதே வருடத்தில், கணவனை இழந்து, மனச் சஞ்சலம் அதிகமாகி மரண மடைந்து ;

22. வேதனால் வரையப் பட்டு விளங்கினள் சலகு லத்தில்
ஒதுவேன் வணிபன் சாபம் ஓரகத்தி சாப மொன்று
தீதாக யிச்சென் மத்தில் சேர்ந்தன மாதுக்கே தான்
மேதினில் சிறையாய் வாழ்வாள் விசனமே குடியாய் நிற்கும்.

22. பிரம தேவனால் படைக்கப்பட்டு வேளாள குலத்தில் பிறப்பாள். வியாபாரியின் சாபமும் ஓரகத்தியின் சாபமும் இப் பிறப்பில் கொடுமையாகத் தொடர்ந்தன. உலகில், சிறையில் வாழ்வதுபோல் வாழ்ந்து வருவாள். துயரமே குடியாக இருக்கும்.

23. வினைதீரச் சாந்தி யொன்று விளம்புவீர் முனியே நீர்தாம்
வணிபன்தன் சாபத் திற்கு வரையவே மாட்டோம் யாங்கள்
கணிகையுந் திகில டைந்து கழறின சாபத் திற்கும்
வினையாக வேறு வொன்று பேசவே மாட்டோம் யாங்கள்.

23. இந்தத் தீவினைகள் நீங்கச் சாந்தியொன்று கூறுங்கள், முனிவரே! கடைக்காரனிட்ட சாபத்துக்கு நாங்கள் சாந்தி கூறவேமாட்டோம். பெண்ணும் மனத்தில் திகிலேற்பட்டுக் கூறிய சாபத்துக்கும் வேறு சாந்திகள் கூறமாட்டோம், நாங்கள் என்றார்.

24. சந்திரன் நாலில் தங்கச் சனிகுசன் பார்த்த தாலே
வந்தது வந்தே தீரும் வரைகிறே மிவள்பின் ஜன்மம்
அந்தவூர் மேல் பாலாக அணுகிய சிறுவூர் தன்னில்
விந்தையாய் செங்குந்த வம்சம் வித்தகி வுதிப்பா ளாமே.

24. சந்திரன் நான்காமிடத்தில் இருந்து சனி செவ்வாய் பார்ப்பதால் வருவது வந்தே தீரும். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். அவ்வூருக்கு மேற்கில் உள்ள சிற்றூரில் செங்குந்த மரபில் ஜாதகனின் தாய் பிறப்பாள் என்று சொன்னோம்.

25. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருப தாண்டில்
காதலி தென்மேல் தன்னில் கலப்பளா மென்று சொல்லுவோம்
ஓதுவே னவள்கு ணத்தை உளைச்சலாம் மாநி றத்தாள்
சூதிலாள் யோக சாலி தீர்க்கமாம் வயது மேற்பள்.

25. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். இருபதாம் வயதில் தென் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மெல்லிய சரீரமுடையவள். மாநிறமுள்ளவள். சூதில்லாதவள். அதிருஷ்டமுள்ளவள். நீண்ட வயதுடையவள்.

26. ஜயமுனி தடுத்துச் சொல்வார் தேவிமா ரிருவ ராகும்
வியமாகும் முதல்ம னைதான் மேவிடு மிரண்டாம் பாரி
பயமிலாச் சொன்ன சங்கை பகருவீர் விவர மாக
நயமிலா எழா னோடு ராகுவுங் கூடி ஆறில்;

26. ஜயமுனி மறுத்துக் கூறுகின்றார். இரு மனைவிகள் உண்டு. முதல் மனைவி இறந்துபோய் மறுமனைவி வாய்ப்பாள் என்றார். சந்தேகமின்றி, கூறிய விஷயத்தை விளக்கமாகக் கூறுங்கள். என, ஏழாம் வீட்டுக் குடைய குருவுடன் ராகு கூடி ஆறும் இடத்தில் இருப்பதாலும்;

27. சத்தமஞ் சனியும் நிற்கத் தபனனு மிரண்டில் தங்கக்
குத்தமா முதல்ம னைதான் கூடிடு மிரண்டா மாது
செத்திடு காலஞ் சொல்வீர் சேயனுக் கிருபா னெட்டில்
புத்திர கர்ப்பத் தாலே போகிடு மந்த மாது.

27. ஏழாம் வீட்டில் சனியுமிருந்து சூரியன் இரண்டாம் வீட்டில் இருப்பதால், முதல் மனைவிக்குத் தோஷ மேற்படும். இரண்டாம் மனைவி வாய்ப்பாள். முதல் மனைவி இறந்துவிடும் காலம் எப்போது என்று சொல்லுங்கள். ஜாதகனுக்கு இருபத்தெட்டாம் வயதில் கர்ப்பநோயால் முதல் மனைவி இறந்துவிடுவாள்.

28. மறுமனை யந்த வாண்டில் வருகுவாள் பால னுக்குப்
பெருஞ்சுத ராண்பால் மூன்று பெண்ணதவ் வாறு தீர்க்கம்
உரையாது முதல்ம னைக்கு உரைத்தது தப்ப தாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

28. மறு மனைவி அதே வருஷத்தில் வருவாள். ஜாதகனுக்கு மூன்று புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் பிறந்து, நீண்ட வயதுள்ளவளாவார்கள். முதல் மனைவிக்குப் புத்திரர் கிடையாது. கூறியது தவறாது. வேதத்தின் முடிவில் ஆடும் தேவியே! கேளுங்கள்.

29. பாலகன் பூர்வந் தன்னைப் பகருவோ மினிமே லாக
வேலன்வாழ் போரூர் தன்னில் விளங்கினன் ரெட்டி வம்சம்
ஞாலத்தை விருத்தி செய்து நன்மனை மதலை யுண்டாய்க்
கோலமாய் வந்த வூழைக் கூறுவோ மினிமே லாக.

29. ஜாதகனுடைய முற்பிறவியை இனிக் கூறுகின்றோம். முருகக் கடவுள் வாழும் திருப்போரூரில் ரெட்டியார் வம்சத்தில் பிறந்து, விளை நிலங்களைப் பெருக்கி, மனைவி மக்களை யடைந்து வாழுங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

30. விதவையைப் போகந் துய்த்து மேவிற்றுக் கருவு தானும்
அதஞ்செய்தான் பண்டி தத்தால் அம்மாது மரண மானாள்
இதுவொரு தோட மாச்சு இயம்புவோம் வேறு வொன்று
நிதிதாரே னென்று சொல்லி நிமிலியைப் போகந் துய்த்து;

30. ஜாதகன் ஒரு விதவையுடன் இன்ப மனுபவித்தான். அதனால் கரு ஏற்பட்டது. மருந்துகளைக் கொடுத்துக் கருவைக் கலைத்தான். விதவை மரணமடைந்தாள். இஃது ஒரு தோஷமாயிற்று. வேறு ஒன்றும் கூறுகின்றோம். பணம் தருவதாகச் சொல்லி ஒரு பெண்ணுடன் சிற்றின்பம் அனுபவித்து;

## இன்பமனுபவித்துப் பின் பொருள் தராதது

31. பொருளீயாச் சென்று னென்றேம் புகலுவா ளந்த மாது
வருஞ்ஜன்மந் துணைக ளின்றி மனைவியு மிருவ ராகும்
பெருந்தந்தை முகங்கா ணுமல் பூமியில் வாழ்வாய் நீயும்
வறுமைக ளுடைய னுகி வாழுவா யென்று சொன்னுள்.

31. சொன்ன பணத்தைத் தராது சென்றுன். அந்தப் பெண்ணும் சொல்லுகின்றுள். உனக்கு ஏற்படும் மறுபிறவியில், உடன் பிறந்தவரில் லாமல், இருமனைவியரை யடைந்து, உன்னைப் பெற்ற தந்தையின் முகத்தைக் காணுமல், தரித்திரமுடையவனுக வாழ்ந்து வருவாய் என்று சொன்னுள்.

32. கன்னிகை சாபந் தானுங் கலந்தது பால னுக்குப்
பொன்பொருள் குறைவு நேர்ந்து புக்கினுன் கால னூடு
முன்னவன் வரையப் பட்டுத் தோன்றுவா னிக்கு லத்தில்
கன்னிகை சாப மொன்றும் கருவதை யழித்த தொன்றும் ;

32. கன்னிகையின் சாபம் இவனுக்கு ஏற்பட்டது. செல்வங்கள் குறைந்து மரணமடைந்தான். மீண்டும் பிரம்ம தேவனுல் படைக்கப்பட்டு இக்குலத்தில் பிறப்பான். பெண்ணின் சாபமொன்றும், கருவழித்த தோஷ மொன்றும் ;

33. கூடிடு மிச்சென் மத்தில் கோதைய ரிருவ ராயும்
பாடுவீ ரதற்குச் சாந்தி பகரவே மாட்டோம் யாங்கள்
தேடியே கருவ ழித்த தீங்கிற்கு வேறென் றில்லை
வாடியே தவங்கள் செய்யு மங்கையே கேட்டி டாயே.

33. இப்பிறவியில் தொடரும். இரு மனைவிகள் ஏற்படுவர். அதற்குச் சாந்தியொன்று கூறுங்கள். நாங்கள் சாந்தி சொல்லவேமாட்டோம். கரு வழித்த தோஷத்துக்குச் சாந்தி வேறு ஒன்றுமேயில்லை. மிகுந்த சிரத் தையுடன் தவங்கள் இயுற்றும் தேவியே ! கேளுங்கள்.

## கணக்கில் மோசம்

34. தந்தையின் பூர்வந் தன்னைச் சாற்றுவோங் கொங்கு நாட்டில்
இந்ததோர் குலமு தித்து எழில்பல செட்டுச் செய்து
பிந்தினேர்க் குதவி செய்து பிழைசெய்தான் கணக்கில் மோசம்
அந்தவர் மனவெ றுப்பால் வரைகுவார் சாபந் தானும்.

34. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். கொங்கு நாட்டில், இதே குலத்தில பிறந்து, பலவிதமான வர்த்தகம் செய்து வந்து, ஏழைகட்கு உதவி யளித்து, பிறகு கணக்கில் மோசம் செய்தான். அந்த ஏழைகள் மனவருத்தமடைந்து சாபமிட்டனர்.

35. பின்ஜன்ம மகவாய்த் தோன்றி பொருளது மில்லா தாகி
அந்தமான் தன்னில் சென்று அந்தகன் பக்கல் சேர்வாய்
பந்துவு மில்லா தாகிப் பாரினில் வாழ்வாய் நீயும்
இந்தவாறு சொல்லிச் சென்றார் எய்திற்று வந்தத் தோடம்.

35. மறுபிறவியில், பிள்ளையாகப் பிறந்து, பொருள் இல்லாதவனாகி, அந்தமானுக்குச் சென்று, அங்கேயே மரணமடைவாய். உறவினர் இல்லாதவனாகி, உலகினில் வாழ்ந்து வருவாய் என்று கூறிவிட்டுச் சென்றனர். அந்தத் தோஷம் இவனைப் பற்றியது.

36. மாரனு மந்தி யத்தில் வாயுவால் மரண மாகி
ஆரியன் வரையப் பட்டு அனுகினு னிக்கு லத்தில்
கூறின வேழை சாபங் குலவிடு மிச்சென் மத்தில்
பாரினில் வறுமை யுண்டாய்ப் பரதேசஞ் செல்வா னாமே.

36. ஜாதகனின் தந்தை, தன் கடைசி காலத்தில், வாயு நோயால் மரணமடைந்தான். மீண்டும் பிரம்மதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தான். ஏழையின் சாபமும் இப்பிறவியில் ஏற்படும். உலகில் வறுமையுடையவனாகி வேறு தேசத்துக்குச் செல்வான்.

37. இருமூன்று வாண்டு தன்னில் ஏகுவான் தந்தை யென்றோம்
வருஞ்ஜன்மம் விதர்ப்ப நாட்டில் வருகுவான் வைச்யச் சேயாய்
ஆறேழு வாண்டு தன்னில் அன்னைக்குக் கண்ட மென்றோம்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

37. ஜாதகனுடைய ஆறாம் வயதில் தந்தை மரணமடைவான். மறுபிறவி, விதர்ப்ப தேசத்தில் வைசிய குலத்தவனாகப் பிறப்பான். ஜாதகனின் நாற்பத்திரண்டாம் வயதில் தாய் மரணமடைவாள். விநாயகனைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

38. அன்பது வெட்டு வாண்டில் ஆடமா தத்தி லேதான்
துன்னிய கால னோடு சேருவான் பாலன் தானும்
பின்ஜன்மம் வேங்க டத்துள் பிறப்பனுஞ் சத்ரியச் சேயாய்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

38. ஜாதகன் தனது அறுபத்தெட்டாம் வயதில் சித்திரை மாதத்தில் இறந்து போவான். மறுபிறவி திருவேங்கடத்தில் க்ஷத்திரியனாகப் பிறப்பான். உயர்ந்த கணவனையடைந்த உத்தமியே! கேளுங்கள்.

39. நாலாண்டில் தந்தைக் கும்மே நவிலுவோ மார கங்கள்
சாலவே யிவனின் யோகஞ் சாற்றுவோ மிருபான் மேலாய்
ஞாலமேல் செட்டுச் செய்வன் நன்னிலங் கிருஷி யோங்கும்
பால்பாக்ய முடைய னாகும் பாரினில் வறுமை காணான்.

39. ஜாதகனது நாலாம் வருடத்தில் தந்தைக்குக் கண்டம் ஏற்படும். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். இருபதாம் வயதுக்கு மேல் வர்த்தகம் செய்து வருவான். விளைநிலங்களில் விவசாயம் பெருகும். புத்திரபாக்கியமுள்ளவன். உலகில் வறுமை யடையாதவன்.

40. அன்னவன் ஜன்ன காலம் அத்தநா ளிரண்டாம் பாதம்
சந்திரன் தசையி ருப்புத் தங்கிடு மாண்டு வைந்தும்
வந்திடுந் திங்கள் ரண்டும் வறுமைகள் வனவா சங்கள்
இந்திரனி றைஞ்சு மாதே இதுபூர்வ பாக மாமே.

40. ஜாதகனது ஜனன காலத்தில் அஸ்த நட்சத்திரம் இரண்டாம் பாதம். சந்திரமகாதசையில் இருப்பு ஐந்து வருடங்களும் இரு மாதங்களுமாம். தரித்திரம் ஏற்படும். வனவாசம் ஏற்படும். இந்திரனால் தோத்திரிக்கப்படும் தேவியே! இது முதல் பாகமாம்.

## ஜாதகம் 65.

1. கலையரி புகரு மீனம் கனகனும் ராகு தேளில்
நிலமகன் மான தாக நீலனு மேரு வாகப்
புலவனும் பானு சாடி பின்சிகி நந்தி யாகத்
தலமது மிதுன மாகச் சாற்றுவீர் பலனைத் தானே.

1. சந்திரன் சிம்மத்திலும், சுக்கிரன் மீனத்திலும், குரு ராகு விருச்சிகத்திலும், செவ்வாய் மகரத்திலும், சனி தனுசிலும், புதன் சூரியன் கும்பத்திலும், கேது விருஷபத்திலும் இருந்து, மிதுனம் இலக்கினமாக இருந்தால், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | | கேது | லக்கினம் |
| புதன் சூரியன் | இராசி | சக்கரம் | |
| செவ்வாய் | | | சந்திரன் |
| சனி | குரு ராகு | | |

### வேறு

2. தானே யாண்பால் ஜனனமுறும்
தந்தை யில்லம் தென்வாடை
மானே கீழ்மேல் வீதிபத்ம
ஸ்தான வாயுவு மால்கீழ்ப்பால்
வானோர் மருகன் மேல்பாரில்
மடிந்த கெடியும் வடபாலாம்
கோணர் வாழும் பேருராம்
குலவு மதிகச் செட்டுகளும்.

2. இந்த ஜாதகம் ஆண் பிள்ளையினுடையது. இவனுடைய தந்தையின் வீடு தெற்கு வரிசையில் கிழக்கு மேற்கான வீதியில் உள்ளது. முகம்மதியர் கோரி வடமேற்குத்திக்கிலும், திருமாலின் ஆலயம் கிழக்குத்திக்கிலும், அருகதேவன் கோயில் மேற்குத்திக்கிலும், இடிந்த கோட்டை வடக்குத் திக்கிலும் உள்ள பெரிய ஊரில் பிறப்பான். அவ்வூரில் வர்த்தகம் பெருகும்.

3. அளக நகராம் கங்கைகுலம்
அருளுஞ் சேட்ட பாலனுமாய்
நளன்போல் தந்தை தாய்யோகம்
நவில்வோம் மனைவி துணையோகம்

குளவா முன்பின் ஜன்மங்கள்
　　கூறு மிந்நூல் குறு முனியும்
இளையோர் மனத்தை யாதரிக்கும்
　　எம்மைக் காக்கு மம்பிகையே.

3. அது குபேரனுடைய அளகாபுரி போலுள்ளது. வேளாள குலத்தில் தன் தந்தைக்கு மூத்த புதல்வனாக ஜாதகன் பிறப்பான். நளனைப் போன்றவன். இவனுடைய தாய் தந்தையர் மனைவி மக்கள் உடன்பிறந்தவர் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவிகளைப் பற்றியும் இந்த நூலில் சொல்லுகின்றோம், என்று அகத்தியர் சொல்லுகின்றார். துன்ப மடைந்தவர்களைக் காக்கும் தேவியே!

4. தந்தை துணையா ணென்றுறுமே
　　தங்கா மற்று முன்னோனாய்
ஐந்தோன் பலனைத் தான்புகல்வேன்
　　அறிவோர் நேயனன்புசொலன்
சிந்தை வெகுளி மாஞ்சிவப்பன்
　　செட்டுப் பலவாய்ச் செய்திடுவன்
கந்தப் பிரியன் கல்வியுளன்
　　கழருன் கட்டு வார்த்தைகளே.

4. ஜாதகனுடைய தந்தையுடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவன் நிலைத்திருப்பான். மற்றவர்கள் நிலையார். ஜாதகனுடைய தந்தை இவனுக்கு மூத்தவன். ஐந்தாவதாகப் பிறந்தவனின் செய்திகளைச் சொல்லுகின்றோம். அறிவாளிகளுக்குப் பிரியன். அன்புடன் பேசுபவன். வெகுளியான மனத்தன். சிவந்த நிறமுடையவன். பலவிதமான வர்த்தகம் செய்து வருவான். வாசனைப் பொருள்களின்மீது விருப்ப முள்ளவன். கல்வியறி வுள்ளவன். வாத்தைகளைப் புனைந்து பேசாதவன்.

5. வார்த்தை பிசகான் வறுமையிலான்
　　மனைவி யொன்று குடகில்வரும்
பூர்த்துமி ராதான் சுதர்களுமே
　　பூர்வ வினையால் புகன்றோம்யாம்
கார்த்த வினையைத் தான்புகல்வீர்
　　கலிங்கு நாட்டில் கர்ணகுலம்
பார்த்தன் போலத் தானுதித்துப்
　　பகையை சிலர்க்குத் தான்செய்தான்.

5. வார்த்தை பிசகாதவன். தரித்திர மில்லாதவன். மனைவி ஒருத்தி மேற்குத் திக்கிலிருந்து வருவாள். புத்திரர்கள் இல்லாதவன். அது முற் பிறப்புத் தீவினையால் ஏற்பட்டது என்று சொன்னோம். ஏற்பட்ட தீச்செயலைக் கூறுங்கள். கலிங்க தேசத்தில் கருணீகர் குலத்தில் பிறந்து, அருச்சுனனைப் போல் இருந்து, சிலருக்குத் தீங்குகள் செய்தான்.

6. சிறியோர் மனது வெறுப்பதனுல்
செப்புஞ் சாபந் தான்கேளாய்க்
குறைவாய்க் குடும்பம் பிணியாகிக்
கூற்றன் பதிக்குத் தான்சென்று
வருஞ்ஜன் மத்தில் சுதரின்றி
வளமில் லாத குடும்பியதாய்
வரிவேல் விழியார் துணையின்றி
வாழ்வா யென்று தான்புகன்ருர்.

6. ஏழைகள் மனம் வருந்தியதால் கூறிய சாபத்தைக் கேளுங்கள். குடும்பத்தில் குறைவு நேர்ந்து, வியாதி யடைந்து, எமனுலகம் சென்று, வரும் மறுபிறவியில் புத்திர பாக்கிய மில்லாமல், செழிப்புள்ள குடும்ப மில்லாதவனுகி, அழகிய சகோதரிகள் இல்லாமல் வாழ்ந்து வருவாய் என்று சொன்னுர்கள்.

7. அந்தச் சாபந் தானணுகி
அச்சென் மத்தில் தொழில்கேடாய்ப்
பிந்திப் பிணியுந் தானணுகிப்
புகன்ருன் கால னுடதனை
முந்திய நாதன் வரையவுமே
முயன்ரு னென்ரே முன்சாபம்
சொந்த மாகச் சேர்ந்ததனுல்
சுதர்கள் தோடஞ் செப்பிடுவோம்.

7. அந்தச் சாபம் இவனை யடைந்தது. அவனும் அப்பிறவியில் தொழில் கெட்டு, பிற்காலத்தில் நோயால் வருந்தி, மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்ரேம். முற்பிறப்புச் சாபம் ஏற்பட்டதால் புத்திரதோஷம் உண்டாகும் என்று சொன்னேம்.

8. செப்புஞ் சாபம் விலகுதற்குச்
சாந்தி யொன்று தான்புகல்வீர்
ஒப்பு மனைவி தன்னுடனே
உயர்வாய் ரங்கந் தான்சென்று
அப்பன் தனக்குத் தூபத்தால்
அர்ச்சித் தேத்தி யருமறைக்கு
மெய்ப்பாய் விடங்கெந் தம்வெள்ளி
விரயஞ் செய்தால் தசம்பேர்க்கு ;

8. நீங்கள் சொல்லிய சாபம் நீங்கச் சாந்தியொன்று கூறுங்கள். இவன் தன் மனைவியுடன் உலகில் உயர்ந்த திருவரங்கத்துக்குச் சென்று, அங்குள்ள திருமாலுக்கு தூபம் முதலியன போட்டு அருச்சனை செய்து துதித்து பத்து அந்தணர்கட்கு உள்ளன்புடன் சந்தணம் புஷ்பம் தாம்பூலம் முதலியவை களைத் தட்சிணையுடன் கொடுத்து ;

9. ..ந்து நகருக் கேகிப்பின்
பிரிதி திங்க ளேகாதசி
திர மாக விரதமுற
சேர்ந்த வினைகள் தான்விலகி
மான் போலச் சுதர்தோன்றும்
மறப்பா ளுகில் சுதரீனம்
கூறு மொழிபோல் தான்செய்யில்
குலவு மொன்ருண் பெண்ணிரண்டு.

9. கொடுத்து, தன் உள்ளூருக்குச் சென்று, ஒவ்வொரு மாதமும் ஏகாதசி யன்று திடமனத்துடன் விரதம் இருந்தால், ஏற்பட்ட தீவினைகள் நீங்கிவிடும். தன்னைப்போன்ற புத்திரர்கள் தோன்றுவர். செய்யாமலிருப் பாளுகில் புத்திரருக்குத் தோடமுண்டாகும். நாங்கள் சொல்லியது போல் செய்தால் ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் தோன்றுவர்.

10. உரைத்தோஞ் சிலது விபரமதை
உத்திர பாகந் தானறிவாய்த்
திருத்த மான தந்தைகுணஞ்
செப்பக் கேண்மோ தேவியரே
நிறுத்தாப் போலத் தான்புகல்வன்
நேச ரதிகஞ் தான்சேர்ப்பன்
கருத்த மனமில் லாதவனுங்
கனவான் பக்க லணுகிவாழ்வன்.

10. சில விபரங்கள் சொன்ேனும். மற்றவிபரத்தை மறுபாதியில் தெரிந்து கொள்ளுவீர்கள். பிசகில்லாத தந்தையின் குணத்தைச் சொல்லுகின்ேறும், கேளுங்கள். தேவியே ! அளந்து பேசுபவன். அதிகமான நண்பர்களை யுடைய வன். தீய எண்ணங்களில்லா மனத்தினன். கனவானை யண்டி வாழ்ந்து வருவான்.

11. வன்னி குணத்தை விலக்கிடுவன்
வார்த்தை பிசகான் மாஞ்சிவப்பன்
முன்ேனேன் வார்த்தை தான்கடவான்
முன்னம் வறுமை யுடையவனும்
பொன்போல் குணத்தான் புகழேற்பன்
பூமியி னுலே பிழைப்பவனும்
கன்ன மொழியுங் கணக்கில்வல்லன்
கஞ்ச ரேகை யுடையவனும்.

11. கெட்ட குணத்தை விலக்கி விடுவான். வார்த்தை தவருதவன். மாஞ்சிவப்பு நிறமுள்ளவன். தன் மூத்தவனுடைய வார்த்தைகளைக் கட வாதவன். முதலில் வறுமை உள்ளவன். பொன் போல் நல்ல குண முள்ளவன். கீர்த்தியையடைவான். விவசாயத்தால் வாழ்ந்து வருவான். இனிய வார்த்தைகள் பேசுபவன். கணக்கில் வல்லவன். தாமரை ரேகை யுள்ளவன்.

12. சீலன் பித்த தேகத்தன்
சிறுத்தே மொழிவன் தீரமிலான்
சால பத்தி கடவுளின்மேல்
சாற்றுங் குணத்தா னுக்குமிவன்
பாலனு திப்பான் குணம்புகல்வோம்
புகல்வா னிரண்டு கல்விகளும்
வேல்போல் விழிமார் மோகமுளன்
விருந்தோர் நேயன் வீண்புகலான்.

12. நல்லொழுக்க முடையவன். பித்த தேகமுள்ளவன். சுருக்கமாகப் பேசுபவன். தைரிய மில்லாதவன். கடவுள் பக்தி அதிக முள்ளவன். இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். ஜாதகனுடைய குணத்தைக் கூறுகின்றோம். இருவிதமான கல்வி கற்பான். வேல் போன்ற விழிகளையுடைய மாதர்மீது மையல் கொள்ளுவான். பெரியோர்களுக்குப் பிரியன். வீண்வார்த்தை பேசாதவன்.

13. புகல்வான் சுவைபோல் அரசரிட்டன்
புண்ணிய தலங்கள் சென்றிடுவன்
உகமையாய்க் கதைகள் சொல்வானும்
அரசரா லுய்வன் பெருமையேற்பன்
அகமது செய்வன் பரிவண்டி
உடைய னடுத்த வரைக்காப்பன்
ஜகத்தோர் வசியங் கொண்டிடுவன்
தந்தைக் குப்புக ழுண்டுசெய்வன்.

13. இனிப்பாகப் பேசுபவன். அரசருக்குப் பிரியன். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்வான். உபமானங்களுடன் கதை சொல்வான். அரசாங்க உத்தியோகம் ஏற்று சீவனம் நடத்துவான். பெருமை அடைவான். வீடு கட்டுவான். குதிரை வண்டி உடையவன். தன்னை யண்டினவர்களை ஆதரிப்பான். உலகத்தவர் மயங்கும்படி நடந்து கொள்ளுவான். தன் தந்தைக்குக் கீர்த்தி உண்டாக்குவான்.

வேறு

14. எப்படி யோக மியம்பினிர் முனியே
ஏழினில் காரியு நின்று
ஒப்புடன் புகரு வுச்சம தாக
உரகனு மாறினி லுச்சம்
மெய்ப்புடன் சேயு மட்டம முச்சம்
மேதையும் பானுமே யொன்பாண்
இப்படிக் கிரக மிருப்பதால் யோகம்
எய்திடு மெனவுரைத் தனமே.

14. ஜாதகனுக்கு யோகம் உண்டாகும் என்று எங்ஙனம் கூறினீர்கள் ? ஏழாமிடத்தில் சனியிருப்பதாலும், சுக்கிரன் மீனத்தில் உச்சமாகவும் ராகு ஆருமிடத்தில் உச்சமாகவும் செவ்வாய் எட்டாமிடத்தில் உச்சமாகவும் புதனும் சூரியனும் ஒன்பதாமிடத்தில் இருப்பதாலும், இங்ஙனம் கிரக நிலையிருப்பதால் யோகம் ஏற்படும் என்று சொன்னோம்.

15. உரைத்திடு யோக மிருபதாண் டின்மேல்
ஓங்கிடும் பிறைபோல் செல்வம்
தரைமன்னர் பேட்டி யதிகார முடையன்
தனமது பெருக்கமே செய்வன்
பெருமையும் புகழும் போஜன சுகியன்
பருவத யோகமே ஒன்று
நிறைவாசி யோகங் கமலயோ கங்கள்
நிகழ்த்தினே மூவித யோகம்.

15. நாங்கள் கூறும் யோகம் ஜாதகனுக்கு இருப்பதாம் வயதுக்கு மேல் பெருகும். வளர் பிறைச்சந்திரன் போல் விருத்தியாகும். உலக மாளும் அரசருடன் சந்திப்பு நேரும். அதிகார முள்ளவன். செல்வம் பெருகும். பெருமையும் கீர்த்தியும் அடைவான். சாப்பாட்டுச் சௌக்கிய முள்ளவன். பருவதயோகம், நிறைவாசியோகம், கமலயோகம் ஆகிய மூன்று யோகங்கள் இவனுக்கு ஏற்படும் என்று சொன்னோம்.

16. தன்துணை யெழுவ ராணது விரண்டு
சத்தியு மவ்விதந் தீர்க்கம்
பின்துணை யாகப் பேசுவோந் தாயே
புகலுவோ முத்தர பாகம்
அன்னவன் மணத்தின் காலத்தை யுரைப்போம்
ஐநான்கு வாண்டினில் நேரும்
கன்னிகை கீழ்ப்பா லன்னையின் கிளையின்
கலப்பளாஞ் சிவந்திடு மேனி.

16. ஜாதகனுக்கு ஏழு உடன் பிறந்தவர்களாவர். அவர்களில் இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். சகோதரர்கள் இளையவர்கள். தாயே ! அவர்கள் சேதியை மறு பாதியில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். அஃது இருபதாம் வயதில் நேரும். மணப் பெண் கிழக்குத்திக்கிலிருந்து தன் தாயின் வர்கத்திலிருந்து வாய்ப்பாள். சிவந்த மேனி யுடையவள்.

17. கல்வியு முடையாள் கனத்தபுத் திகளுங்
கணவனுக் கினியவ ளாகும்
சொல்லது சுகமாம் வெகுளியா மனத்தள்
தோகையும் வந்தபின் யோகம்

அல்லலோர்க் குதவி யன்புள மனத்தள்
அரிமனை யொப்பிட லாகும்
வல்லிக்கு வயது தீர்க்கமே யாகும்
வதிட்டருந் தடுத்துமே சொல்வார்.

17. கல்வி யறிவுள்ளவள். தாராள புத்தியுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். இனிமையாகப் பேசுபவள். வெளுத்த மனமுள்ளவள். மனைவி வந்தபிறகு ஜாதகனுக்கு யோகம் பெருகும். துன்பமடைந்தவர்கட்கு உதவி புரிவாள். அன்புள்ள மனத்தினள். இலக்குமியைப் போன்றவள். அவளுக்கு நீண்ட யெதுண்டு. வசிஷ்ட முனிவர் மறுத்துக் கூறுகின்றார்.

18. மைந்தனு மேழி லேழினுக் குடையோன்
வாறினில் பணியுமே கூட
அந்தவன் தனக்கு இருபாரி யென்றேம்
அதைமறுத் தோதுவார்ப ராசர்
இந்தவன் தனக்குப் பாரியு மொன்று
இசைந்திடு மபிமான மொன்று
வந்திடும் பாரி வடுகர்தங் குலத்தில்
ஆரஞ்சு வாண்டிலே நேரும்.

18. ஏழாம் வீட்டில் சனியும், ஏழாம் வீட்டுக்குரிய குரு ஆறில் ராகுவுடன் கூடியிருப்பதால் ஜாதகனுக்கு இரு மனைவியர் என்றேம். அதை மறுத்துப் பராசரர் கூறுகின்றார். ஜாதகனுக்கு மனைவி யொருத்தியும் அபிமானப்பெண் (வைப்பாட்டி) ஒருத்தியும் உண்டு. ஜாதகனுடைய முப்பதாம் வயதில் வடுகர் குலத்திலிருந்து அம்மனைவி வாய்ப்பாள்.

19. காரணம் யாது கழறுவீர் முனியே
காரியேழ் தங்கின பலத்தால்
மாரன்முன் வினையால் மருவிடு மென்றேம்
வரைகுவீ ரச்சங்கை விவரம்
நாரியின் சுதனும் போர்புரி யூரில்
நல்கினன் வைசியச் சேயாய்ப்
பாரினில் வணிபம் பலமதாய்ச் செய்து
பத்தினி மதலைக ளுண்டாய் ;

19. அதற்குக் காரணம் என்ன ? முனிவரே ! சொல்லுங்கள். சனி ஏழாமிடத்தில் தங்கியிருப்பதால் ஜாதகனுடைய முற்பிறப்பு தோஷத்தால் ஏற்படும் என்றேம். அதன் விபரங்களைச் சொல்லுங்கள். ஜாதகனும் அவன்மனைவியும் போர்புரியூரில் வைசியகுலத்தில் பிறந்தனர். உலகில் பலவித வர்த்தகம் செய்து வந்து, மனைவி மக்களைப் பெற்று வாழ்ந்து வந்தகாலத்தில் ;

20. கங்கையின் குலத்து மாதுமே விதவை
தனங்க ளுடையவ ளாகி
இங்கிவன் தன்பால் சிலதுபொன் வைத்து
ஏகினள் தென்திசைத் தலங்கள்
மங்கையு மீண்டு மாான்பா லணுகி
அருளுவாய் பொருளு மென்னச்
சங்கையாய் மனத்தோன் சாலங்கள் சொல்ல
மங்கையும் பேதியால் மாண்டு ;

20. கணவனிழந்த வேளாள குலப்பெண் ஒருத்தி, பெரும் செல்வ முடையவளாக இருந்தாள். இவனிடம் சென்று கொஞ்சம் பணத்தை வைத்திருக்கச் சொல்லிவிட்டு, தெற்குத்திசையிலுள்ள புண்ணிய தலங் களுக்குச் சென்றாள். பெண்ணும் திரும்பிவந்து கொடுத்த பணத்தைக் கேட்கும்போது, கெட்ட எண்ணங்களுடன் சால்சாப்புக்கள் சொல்லிவந்தான். அப்பெண்ணும் பேதியால் இறந்துவிட்டாள்.

**முன்ஜன்மத்தில் கொடுத்த கடனைத் திருப்பிப் பெறப் பிறந்தவள்**

21. வணிகனப் பொருளை சோலைத டாகம்
வருவியே மரணமே யாகித்
துணிவுள வுதித்தான் முன்கடன் தந்த
தோகையு மப்பொருள் வாங்க
அணுகுவா ளென்றோம் சுதர்களுங் காணாள்
அத்திரி தடுத்துமே புகல்வார்
கனமுள மனைக்குக் காளைக ளுண்டோ
கழறுவீர் விபரமாய் முனியே.

21. வர்த்தகன் அப்பொருளைக்கொண்டு ஒரு தோட்டமும் குளமும் ஏற்படுத்தினான். பிறகு மரணமடைந்து இப்பிறவியில் பிறந்தான். முற் பிறவியில் கடன் கொடுத்த பெண் அந்தப் பொருளைத் திருப்பி வாங்க இவனை அடைவாள் என்றோம். புத்திர பாக்கியமில்லாதவள். அத்திரி முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். மணம் செய்து கொண்ட மனைவிக்குப் புத்திரர்களுண்டோ ? விபரம் சொல்லுங்கள். முனிவரே !

22. புத்திர ரிரண்டு பெண்ணது நான்கு
பொருந்திடும் தீர்க்கமா மென்றோம்
பத்தினி யன்னை சேதியைச் சொல்வேன்
பதரிடாள் அன்னம் போல் சாயல்
சுத்தவாள் ஊக கல்விமா னடக்கம்
துணையது நாசமே யாகும்
குத்தத்தைப் புகல்வீர் ஆறினில் ராகு
குசனுமே அட்டமந் தங்க ;

22. இருபுத்திரர்களும் நான்கு புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ள வர்கள். ஜாதகனுடைய தாயின் செய்தியைச் சொல்லுகின்றோம். பதட்ட மில்லாதவள். அன்னத்தைப் போன்ற அழகுள்ளவள். சுத்தமுடையவள.

ஊகமுள்ளவள். கல்வி யறிவுடையவள். அடக்கமானவள். உடன் பிறந்த வருக்குச் சேதமுண்டு. குற்றத்தைச் சொல்லுங்கள், என்று வினவ, ஆறும் வீட்டில் ராகுவும் எட்டில் செவ்வாயும் இருப்பதால் ;

23. தன்துணை காணுள் ஜனிக்கினுந் தீதாம்
சாருமில் கீழ்த்திசை யாகும்
அன்னவள் பூர்வ மாலவா யதனில்
அருமறைக் குலமதி லுதித்து
உன்னத விரத முட்டுகள் செய்து
ஓரகத் தின்பேரில் நிந்தை
இன்னவள் புகல மனவெறுப் பதனுல்
இயம்புவாள் கற்புடை மாது.

23. தாய்க்கு உடன் பிறந்தவரில்லே. பிறந்தாலும் நிலேயார். அவளுடைய வீடு கிழக்குத் திசையிலுள்ளது. ஜாதகனின் தாயின் முற்பிறவியைச் சொல் கின்றோம். ஆலவாயில் அந்தண குலத்தில் பிறந்து, உயர்ந்த விரதங் கள் இயற்றி, தன்னுடைய ஓரகத்தி (கணவனின் சகோதரனின் மனைவி) யின் மீது பல பழிகளைக் கூறினுள். கற்புடைய பெண்ணுகிய அவள் மனம் புழுங்கிக் கூறுகின்றுள்.

24. பின்வருஞ் ஜன்மந் துணைவர்க ளின்றிப்
பூவைச்ய குலமதி லுதிப்பாய்
பொன்பொருள் குறைவாய்க் குலநிந்தை பெற்றுப்
பூமியில் வாழுவா யென்று
இன்னமும் பலவாறு சொன்னுள் மாது
இசைந்தது அவ்வினை தானே
கன்னிக்கு அந்த வாய்ரணங் கண்டு
காலன்தன் நாடதைச் சேர்ந்து ;

24. உனக்கு ஏற்படும் மறுபிறவியில், உடன் பிறந்தவரில்லாமல், வைசியகுலத்தில் பிறப்பாய். செல்வங்கள் குறைந்து, குலத்தில் பழிகள் ஏற்று, உலகில் வாழ்ந்து வருவாய் என்றும், இன்னும் பலவிதமும் கூறினுள். அந்தச் சாபம் இவளே (ஜாதகனுடைய தாயை) அடைந்தது. அவளும் கடைசிக்காலத்தில் வாயில் புண் ஏற்பட்டு மரணமடைந்து ;

25. வந்தவ ளென்றே மாதுவின் சாபம்
மருவிடுந் துணைகளு மின்றித்
தன்னமே தனியாய் வாழ்வளா மென்றேஞ்
சாற்றுவோம் பின்ஜன்மந் தன்னைக்
கந்தன்வாழ் தணிகை நகரதில் சைவ
கங்கையின் குலமதில் தோன்றும்
உன்னத வரனைப் பெற்றிடு மாதே
வரைகின்றேந் தந்தையின் பூர்வம்.

25. பிறந்தவள் என்று சொன்னோம். பெண்ணின் சாபம் ஏற்பட்டு, உடன்பிறந்தவரில்லாமல், தன்னந்தனியனாய் வாழ்வாள் என்று சொன்னோம். மறுபிறவியைச் சொல்லுகின்றோம். முருகப்பிரான் வாழும் திருத்தணிகையில் சைவ வேளாளகுலத்தில் பிறந்து வாழ்வாள். உயர்ந்த கணவனைப் பெற்ற உத்தமியே! தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம்.

26. வாரியி னோர மாவலி மேல்பால்
வடுகர்தன் குலமதில் தோன்றிப்
பாரியு மதலை பாது விருத்தி
பண்புளோர் தொண்டுமே பூண்டு
தீரனும் வாழ்ந்து வினையது வின்றிச்
சென்றனன் காலன்தன் நகரம்
மாரன்முன் வந்தோன் வரையவே வந்தான்
மறுஜன்மங் கொங்குநா டதனில்.

26. சமுத்திரக்கரையோரத்திலுள்ள மஹாபலிபுரத்தில், வன்னிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களையடைந்து, விளைநிலங்களைப் பெற்று, அந்தணர்கட்குத் தொண்டுகள் பல செய்து வாழ்ந்து, தீவினைகளில்லாமல் மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தான், கொங்கு நாட்டில் என்றோம்.

### வேறு

27. உதிப்பனும் பிரம்ம சேயாய் உமையவள் பூசை செய்து
விதியது . . . . . . . விளம்புவோ முப்பா றில்
மதிதசை ரவியின் புக்தி வந்திடு மென்று சொல்வோம்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

27. அந்தண குலத்தில் பிறப்பான். பார்வதி தேவிக்கும் பூசைகள் செய்து வருவான்........................ முப்பத்தாறும் வயதில் சந்திர மகாதசை சூரிய புத்தி ஏற்படும் என்று சொல்லுகின்றோம். விருந்தாளிகளைக் காப்பாற்றும் தேவியே! கேளுங்கள்.

28. நாற்பது நாலு வாண்டில் நமன்பதி யன்னை சேர்வள்
ஏற்கவே யுதித்தோ னுக்கு இயம்புவோ மறுபா றில்
தீர்ப்பாகச் சிம்ம மாதஞ் செப்புவோ மார கங்கள்
மார்க்கமா யிவன்பின் ஜன்மம் வரைகின்றோ மினிமே லாக.

28. ஜாதகனுடைய நாற்பத்துநான்காம் வயதில் தாய் மரணமடைவாள். ஜாதகன் தனது அறுபத்தாறும் வயதில் ஆவணி மாதத்தில் மரணமடைவான். இனி ஜாதகனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

29. தந்தையி னூரி லேதான் சதுர்மறைக் குலமு தித்து
முந்திய வரசு செய்வன் முயன்றவை தப்பா வாகும்
இந்தவன் யோகச் சேதி இயம்புவோ மினிமே லாகச்
சந்தத மரசர் தம்மால் தானவ னுய்வா னாகும்.

29. தன் தந்தையின் ஊரிலேயே வேதங்கள் ஓதும் அந்தணர் குலத்தில் பிறந்து, அரசனைப்போல் வாழ்வான். கூறியவை தவரு. ஜாதகனுடைய யோகச் செய்திகளை இனிக் கூறுகின்றோம். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்ந்து வருவான்.

30. இருபது வாண்டு கொண்டு எய்திடும் ராஜ யோகம்
பிறைபோல நேரு மென்றோம் பேசுவோ மன்பா னுலும்
அரசுமே வோங்கு மென்றோம் ஆருயி ரம்பொன் சேர்ப்பன்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

30. ஜாதகனுடைய இருபதாம் வயதுக்குமேல் ராஜயோகம் ஏற்படும். அது வளர்பிறைச் சந்திரன்போல் விருத்தியாகும். ஜாதகனுடைய ஐம்பத்து நான்காம் வயது வரையில் யோகம் பெருகும். ஆருயிரம் பொற்காசுகள் சேர்ப்பான். கரிய யானை முகத்தையுடைய விநாயகனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

31. தந்தைமுன் துணைவ னுக்குச் சாற்றுவோ முப்பா னறில்
அந்தகன் பக்கல் சேர்வன் அவனின்முன் ஜன்மங் கேண்மோ
விந்தையாய் வான்மி யூரில் மிகுசைவ குலமே தோன்றும்
இந்திர . . . னத்தாளே இயம்பின மொழிகுன் றுவே.

31. ஜாதகனுடைய தந்தையின் மூத்த சகோதரன் இவனுடைய முப்பதாம் வயதில் மரணமடைவான். அவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். திருவான்மியூரில் சைவ குலத்தவனுகப் பிறப்பான். . . . . . . . கூறியவை தவரு.

32. பிறந்திடு காலந் தன்னில் பூரத்தின் முதல்பா தத்தில்
சிறந்தசுக் கிரனி ருப்புத் திங்களு மொன்றே செல்லாம்
வருந்துணை பெருமை யெய்தல் வளமுள பூமி செய்தல்
திருகிலா தனவான் பக்கல் சென்றுமே வாழ்த லுண்டு.

32. ஜாதகனது ஜனன காலத்தில் பூரநட்சத்திரம் முதல் பாதம். சுக்கிர மகாதசை ஒரு வருடம் செல்லாயிருக்கும். சகோதரனுக்குப் பெருமை ஏற்படும். செழிப்புள்ள பூமி கிடைக்கும். தீங்கில்லாத தனவானை அண்டி வாழ்ந்து வருவான்.

33. மத்தியில் குடும்ப லேச்சல் மைந்தனுக் கதிக நோயும்
குத்தம்போல் காணு மென்றோங் குடும்பத்தில் சிலர்க்கு நோயும்
முத்தின தந்தை கண்ட மொழிகிறோம் பின்பால் சேதி
சுத்தமா னவரைக் காக்குஞ் செல்வதி கேட்டி டாயே

33. இடைக்காலத்தில் குடும்பத்தில் அலைச்ச லேற்படும். ஜாதகனுக்கு வியாதி அதிகமாகும். அது கண்டம்போல் தோன்றும். தன் குடும்பத்தில் சிலருக்கு வியாதி ஏற்படும். பெரிய தந்தை மரணமடைவான். பிற்பாகத்தில் மற்றவற்றைச் சொல்லுகின்றோம். சுத்தமுள்ளவர்களை ஆதரிக்கும் தேவியே! கேளுங்கள்,

# ஜாதகம் 66.

1. திங்களுங் கடக மாகச் சேய்சீயம் புதனும் வெள்ளி
தங்கிடுங் கன்னி யாகச் சனிமேரு குருவு மானில்
பங்கயன் ராகு கோலில் பூசமும் கடைப்பா தத்தில்
இங்கிவை கோளு நின்று லக்கினம் மிதுன மாக ;

1. சந்திரன் கடகத்திலும், செவ்வாய் சிம்மத்திலும், புதன் சுக்கிரன் கன்னியிலும், சனி தனுசிலும, குரு மகரத்திலும், சூரியன் ராகு துலாத்திலும், கேது மேஷத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, பூச நட்சத்திரம் நான்காம் பாதத்தில் பிறந்து, இலக்கினமும் மிதுனமாக இருப்பின், பலனைச் சொல்லுங்கள் ;

| | | | |
|---|---|---|---|
| | கேது | | லக்கினம் |
| | இராசி | | சந்திரன் |
| குரு | சக்கரம் | | செவ்வாய் |
| சனி | | சூரியன் ராகு | புதன் சுக்கிரன் |

2. காதலி கேட்கும் போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினி லாண்பால் ஜன்மம் வந்தஇல் தென்பால் நோக்கம்
போதக வானை மாரி பொருந்திடு மேல் பாலாகச்
சீதள பிறைய ணிந்தோன் காளியு முத்ர மாகும்.

2. என்று பார்வதி தேவி கேட்கும்போது, கௌசிக முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் பிறப்பு. பிறந்த வீடு தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. விநாயகர் ஆலயம், மாரியம்மன் கோயில் இவைகள் மேற்குத் திக்கில் உள்ளன. கங்கையையும் சந்திரனையும் முடியில் தரித்த சிவபெருமான் கோயிலும் காளி கோயிலும் வடக்குத் திக்கில் இருக்கும்.

3. சொல்லிய வடையா ளத்துள் சிறுவூராம் கூறை யில்லம்
வல்லவன் நான்காம் ஜன்மம் வருகுவான் கங்கை சேயாய்த்
தல்லியின் தந்தை யோகம் சகோதர புத்ர யோகம்
வல்லவன் முன்பின் ஜன்மம் வரைகிறோ மிந்நூல் தன்னில்.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள சிற்றூரில் கூறை வீட்டில் ஜாதகன் தன் தந்தைக்கு நான்காம் பிறப்பாக வேளாள குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய தாய் தந்தையர் சகோதரர் புத்திரர் இவர்களுடைய யோகங்களையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்த ஜோதிட நூலில் கூறுகின்றோம்.

4. தாதைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு மிளையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் தந்தை
ஓதுவோம் துணைவர் மூன்று செப்புவோம் கன்னி ரண்டு
நீதிலா நீர்க்க மென்றேம் செப்புவோம் பின்பால் சேதி.

4. ஜாதகனுடைய தந்தைக்கு இரு மனைவியர். அவர்களில் இளையவளுக்குப் பிறந்தவன் ஜாதகன். ஜாதகனுடைய தந்தைக்கு மூன்று சகோதரர்களும் இரு சகோதரிகளும் தீங்கில்லாமல் தீர்க்காயுளுள்ளவர்கள், என்றேம். பிற்பாகத்தில் அவர்களுடைய செய்தியைக் கூறுகின்றேம்.

5. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சேணிய விருத்தி செய்வன்
தந்தைசொல் கடவா னுகும் தானிரு நிறத்த னுகும்
பிந்தியோ சனையு முள்ளான் பிறர்குற்றம் புகலா னுகும்
நிந்தைகள் ஏற்கா னுகும் நேமியோர் மெச்ச வாழ்வன்.

5. ஜாதகனின் தந்தையின் குணத்தைக் கூறுகின்றேம். சேணிய விருத்தி செய்பவன். தந்தையின் வார்த்தைகளைக் கடவாதவன். இரு நிறமுடையவன். பின்புத்தி யுள்ளவன். பிறர்மீது குற்றம் கூருதவன். பழிகள் அடையாதவன். உலகத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான்.

6. பெரிதான குடும்ப மேற்பன் பொய்யது புகலா னுகும்
அரிவையர் வர்க்கம் நாஸ்தி அடாவடி கூரு னுகும்
கிருஷிகள் செய்வா னுகும் கோபமும் கொஞ்ச முண்டு
இருவூரில் சேர்ப்பான் பூமி ஏவலாள் போல வுய்வன்.

6. பெரிய குடும்பத்தை யடைவான். பொய் பேசாதவன். பெண்கள் வர்க்க மில்லாதவன். அடாவடியாகப் பேசாதவன். விவசாயம் செய்து வருவான். சிறிது கோபமுள்ளவன். இரு ஊர்களில் பூமி சேர்ப்பான். வேலைக்காரனைப்போல் ஜீவனம் நடத்துவான்.

7. தருமமாங் குணத்த னுகுஞ் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
திருமாளி பின்னல் சித்ரஞ் செய்வனும் வறுமை காணன்
குறையென்றேர்க் குதவு வானுங் கொடுமையை விரும்பா னுகும்
தரிபடக் கூரு னுகுஞ் சங்கரி கேட்டி டாயே.

7. தருமமான குணமுள்ளவன். கால்நடைகள் பெருகும். பிற்காலத்தில் அழகிய வீடு கட்டுவான். தரித்திரம் இல்லாதவன். கஷ்டப்படுபவர்களுக்கு உதவி செய்பவன். கொடுமையை விரும்பாதவன். கண்டிதமாகப் பேசாதவன். தாயே ! கேளுங்கள்.

8. இப்படி விருக்குந் தந்தை இவனுக்கு வுதித்த பாலன்
செப்புவோ மிவன்கு ணத்தைத் தீரமா மனத்த னுகும்
ஒப்புடன் கல்வி யுள்ளான் உறுதியா மனத்த னுகும்
மெய்ப்புடன் பெண்கள் மோகன் வாக்குகள் சுத்த முண்டு.

8. இப்படியுள்ள தந்தைக்கு ஜாதகன் தோன்றுவான். அவனுடைய குணங்களைக் கூறுகின்றேம். தைரியமுள்ள மனத்தினன். கல்வியறி வுடையவன். திடமுள்ள மனமுள்ளவன்.. பெண்கள்மீது மையலுள்ளவன். சுத்தமாகப் பேசுபவன்.

9. சோலைகள் செய்வா னுகுந் துருசான நடையு மாவன்
ஞாலங்கள் சேர்ப்பா னுகும் நல்லோர்க்கு நல்லோ னுவன்
காலத்தை யறிந்து வாழ்வன் கட்டுரை சொல்வா னுகும்
சீலமுங் கொஞ்ச முண்டு செட்டுக்கள் செய்வா னுகும்.

9. தோட்டங்களை வைத்துவளர்ப்பான. வேகமாக நடப்பவன. பூமிகளைச் சேர்ப்பான். நல்வர்கட்கு நல்லவன். வருங்காலத்தை அறிந்து அதற்குத் தக்கபடி வாழ்ந்து வருவான். வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன். சிறிது ஒழுக்க முள்ளவன். வர்த்தகம் செய்து வருவான்.

10. உண்டிடு முணவின் மீது உறைப்பொடு புளிப்பி விச்சை
வண்டிவா கனமு மேற்பன் மாற்றுனே லகுவாய் வெல்வன்
குண்டுணி கலகங் கொஞ்சங் குலமதிப் பாக வாழ்வன்
பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்.

10. சாப்பிடும் பதார்த்தங்களில் உறைப்பும் புளிப்பும் உள்ளவைகளான சாப்பாட்டில் பிரியமுள்ளவன். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். விரோதிகளைச் சுலபமாக ஜயிப்பான். சிறிது கலகமும் கோட் சொல்லுங் குணமும் உள்ளவன். தன் குலத்தில் மேன்மையாக வாழ்வான். பழைய நாள் பூமியை (பிதுரார்ஜிதமான சொத்தை) ஜாதகன் பெருக்குவான்.

11. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோங் கன்னி மூன்று
அவனியில் ஆண்பா லொன்று வரைகிறேந் தீர்க்க மாகத்
தவசியே யிளைய வாண்பால் சாற்றுவோந் தீர்க்க மாக
அவன்குணம் புகலக் கேண்மோ அடாவடி யுடைய னுகும்.

11. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைக் கூறுகின்றோம். மூன்று சகோதரிகளும் ஒரு சகோதரனும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றோம். தவசியே! சகோதரன் இளையவன். அவனும் தீர்க்காயுளுள்ளவன். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம், கேளுங்கள். அடாவடியாகப் பேசாதவன்.

12. அதிகமாம் வார்த்தை யேற்பன் அஞ்சாத நெஞ்ச னுகும்
ததிபாக்ய முடைய னுகுஞ் சந்தேக மனத்த னுகும்
புதையலு மெடுப்பா னுகும் பொருத்தமாய்ப் பேசு வானும்
சதியுள மனமு முண்டு சர்ப்பம்போல் கோப முண்டு.

12. அதிகமாகப் பேசுபவன். பயப்படாத நெஞ்சமுள்ளவன். தயிர் (பால்) பாக்கிய முள்ளவன். சந்தேகப்படும் இயல்பினன். புதையல் எடுப்பான். பொருத்தமாகப் பேசுபவன். கெட்ட மனமும் உள்ளவன். சர்ப்பம் போல் கோபம் கொள்ளுவான்.

13. வித்தையு முடைய னுகும் விருந்தினர்ப் பிரிய னுகும்
பத்திமா னவர்க்கு அன்னம் படைப்பனும் ஊக வானும்
சத்தியங் கூறு னுகும் சாதமுங் குறைவு றுதான்
நத்தினோர்க் குதவி செய்வான் நாகம்போல் கோப மேற்பன்.

13. வித்தைகளைக் கற்பான். விருந்தாளிகளை உபசரிப்பான். பக்தியுள்ளவன். விருந்தினருக்கு அன்புடன் அன்னமளிப்பான். ஊக்கமுள்ளவன். சத்தியம் செய்யாதவன். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். தன்னையடைந்தவர்களுக்கு உதவி செய்பவன். சர்ப்பம் போல் கோபங் கொள்ளுவான்.

14. பாரியை யொன்றே யாகு மிவர்களுந் தோட மெய்துய்
வீரியன் தனக்குப் புத்ரர் விளங்காத காரணஞ் சொல்
மாரன்முன் ஜன்மந் தன்னில் மருவிற்று சிலவே துன்பம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

14. மனைவி ஒருத்தியே. புத்திரருக்குத் தோஷமுண்டு. ஜாதகனுக்குப் புத்திர விருத்தி ஏற்படாத காரணத்தைச் சொல்லுங்கள். ஜாதகன் தனது முற்பிறவியில் சில துன்பங்கள் செய்தான். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற அம்பிகையே! கேளுங்கள்.

15. முன்ஜன்ம வினைகள் தீர மொழிகிறேன் கிரியை யொன்று
கன்மசாந் திகளுஞ் செய்து கந்தன்வாழ் மைல மேகி
அன்னவ ரடிப ணிந்து அர்ச்சனை மிகவே செய்து
அன்னவ ரடியா ருக்கு ஐமூன்று பாதத்துக் கன்னம்;

15. முற்பிறப்பில் செய்த தீவினைகள் நீங்கச் சாந்தியொன்று கூறுகின்றேம். கர்ம சாந்திகள் செய்து, முருகக்கடவுள் வாழ்ந்து வரும் மைலத்துக்குச் சென்று, அவருடைய அடிகளைப் பணிந்து, அருச்சனைகள் செய்து, அவனடியார்கள் பதினைந்து பேர்களுக்கு அன்னமளித்து;

16. மாரனும் வருவா னுகில் மருவின வினைகள் தீர்ந்து
தீரமாய்ச் சுதரா ணென்று செல்விமா ரிருவர் தீர்க்கம்
வீரியன் குடும்ப மேன்மை மேதினில் சலயங் கொள்ளான்
பாரினில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

16. ஜாதகன், வருவானுயின், ஏற்பட்ட தீவினைகள் நீங்கி, ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்களாக வாழ்வார்கள். ஜாதகனுடைய குடும்பத்தில் மேன்மை ஏற்படும். உலகில் கடன்படாதவன். தவங்கள் பல செய்யும் தேவியே! கேளுங்கள்.

17. மற்றவர் சேதி யாவும் வரைகிறேம் பின்பா கத்தில்
உற்றதோர் சாத கர்க்கு உரைக்கிறே மணத்தின் காலம்
சித்தமா யொருபா ணென்பா னுண்டினில் வடமேல் திக்கில்
பத்திய தந்தை வர்க்கம் பாவையும் வருவா ளென்றேம்.

17. மற்றவர்களுடைய செய்திகள் யாவற்றையும் பிற்பாகத்தில் கூறுகின்றேம். ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றேம். ஜாதகனுடைய பத்தொன்பதாம் வயதில் வடமேற்குத் திக்கில் தந்தையின் வர்க்கத்திலிருந்து மனைவி வாய்ப்பாள்.

18. பாரியை யிருநி றத்தாள் பகருவோஞ் சமதே கத்தாள்
கூறுவாள் சுகமாய் வார்த்தை குணமது நல்ல தாகும்
பாரிய புத்தி யேற்பள் பாவையும் யோக சாலி
சீருடன் வாழ்வா ளென்றேஞ் ஜனவுப காரி யாவள்.

18. மனைவி இரு நிறமுள்ளவள். சமமான சரீர முடையவள். இன்புறு மாறு பேசுபவள். நல்ல குணமுள்ளவள். பெருந்தன்மையான புத்தி யுடையவள். யோகமுள்ளவள். சீரும் சிறப்புமாக வாழ்ந்து வருவாள். ஜனங்களுக்கு உபகாரி.

19. மதலைகள் விருத்தி தன்னை வரைகுவோம் பலமு ருது
சுதர்களு முதித்தா லுந்தான் சுருக்கினில் சேத மெய்தும்
அதுவிதஞ் சொல்லு மென்ன அஞ்சினில் பானு பாம்பு
புதன்புகர் நாலில் தங்கச் சாற்றினே மந்தச் சங்கை.

19. புத்திர விருத்தியைச் சொல்ல பல மில்லை. புத்திரர்கள் தோன்றி னும் விரைவில் சேத மடைவர். அது எப்படி என்று சொல்லுங்கள், என்று வினவ, ஐந்தாமிடத்தில் (புத்திர ஸ்தானத்தில்) சூரியன் ராகு இருப்ப தாலும், நான்காமிடத்தில் புதனும் சுக்கிரனும் இருப்பதாலும் அந்தச் சந்தேகங்களைக் கூறினோம்.

20. பாலகன் முன்ஜன் மத்தைப் பகருவோ வாரி யோரம்
சாலமா பலியி லேதான் ஜனித்தனன் ரெட்டி வம்சம்
மேலான குடும்பி யாகி மேதினில் . . . .
சாலவே வாழு நாளில் உறங்கின வினையைச் சொல்வேன்.

20. ஜாதகனுடைய முற்பிறப்பைப் பற்றிச் சொல்லுகின்றோம். சமுத் திரத்துக்குப் பக்கத்திலுள்ள மகாபலிபுரத்தில் ரெட்டியார் வமிசத்தில் பிறந்தான். மேலான குடும்ப முள்ளவனுகி............உலகில் வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றேன்.

21. இல்லத்தில் வெகுநா ளாக இருந்தது நாக மொன்று
அல்லலால் மகுடத் தாலே அது முற்ற மியங்கும் போது
வல்லவன் அரங்கஞ் செய்து வாட்டினன் கழியி னலே
பொல்லாத கால னுடு புக்கிற்று அது ஓர் தோடம்.

21. வெகு நாட்களாக ஜாதகனுடைய வீட்டில் ஒரு சர்ப்பம் வாழ்ந்து வந்தது. அஃது ஒரு நாள் வீட்டு முற்றத்தில் படமெடுத்து ஆடும்போது, ஜாதகன் அதனை வாட்டித் தடியால் அடித்தான். அதுவும் இறந்து விட்டது. அஃது ஒரு தோஷமாயிற்று.

22. விதவையைப் போகஞ் செய்தான் மேவிற்றுக் கருவு தானும்
அதஞ்செய்தான் பண்டி தத்தால் அதுவொரு தோட மாச்சு
அதிபனு மந்தி யத்தில் மைந்தர்கள் தோட மாகிச்
சதியான கால னுடு சென்றுமே பிரமன் லக்கம்,

22. ஒரு கைம்பெண்ணுடன் இன்பமனுபவித்தான். அதனால் அவளுக்குக் கரு ஏற்பட்டது. அதை மருந்துகளால் கலைத்தான். அஃது ஒரு தோஷமாயிற்று. ஜாதகனும், தன் கடைசிக் காலத்தில், புத்திர தோஷமடைந்து, எமனுலகம் சேர்ந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு ;

23. உதிப்பனு மிந்தப் பாலன் உறைந்திடு முன்னும்த் தோடம்
புதல்வர்கள் தோட மெய்தும் புகலுவீர் கிரியை ஒன்று
அதிபதி மாரிக் கேதான் அரவுமே சிலையில் செய்து
அதனுடன் வைத்துப் பூசை அனுகிட வினைகள் நீங்கும்.

23. இந்த ஜாதகன் தோன்றுவான். முற்பிறப்புத் தீவினை இவனைத் தொடர்ந்தது. அதனால் புத்திர தோஷம் உண்டாகும். அது நீங்கச் சாந்தியொன்று கூறுங்கள். ஜாதகன் மாரியம்மன் கோவிலுக்கு எதிரில், சர்ப்பத்தைப்போல் சிலையில் செய்துவைத்துப் பூசைகள் செய்தால், ஏற்பட்ட தீவினைகள் நீங்கும்.

24. சுதர்களு மாண்பா லொன்று தோகையு மிருவர் தீர்க்கம்
இதுநிற்க இவனின் யோகம் இயம்புவோம் கல்வி ரண்டு
அதிகமாய்ச் செட்டுச் செய்வன் அவனிகள் விருத்தி செய்வன்
பதியது சித்ரஞ் செய்வன் பலர்மெச்ச வாழ்வா னுகும்.

24. ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் தோன்றித் தீர்க்கமாவார். இது நிற்க, ஜாதகனுடைய யோகத்தைக் கூறுகின்றோம். இருவிதக் கல்வி கற்பான். அதிகமான வர்த்தகம் செய்து வருவான். பூமியைப் பெருக்குவான். அழகிய வீடு கட்டுவான். பலர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான்.

25. தந்தைக்கு மேலாய் வாழ்வான் சல்லிய பாதை யேற்கான்
இந்திரன் போல வாழ்வன் அனைவர்க்கு மிவன்சொல் மேன்மை
ஒன்பது பத்தோ னென்றுய் உறைந்ததால் யோகஞ் சொன்னேம்
பொன்பணி யதிகஞ் சேர்ப்பன் புதையலு மெடுப்பா னென்றேம்.

25. தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான். தீய வழிகளில் செல்லாதவன். தேவர்கள் தலைவனுகிய இந்திரனைப்போல் வாழ்ந்து வருவான். எல்லோரிடமும் இவனுடைய வார்த்தைக்கு மதிப்பு உண்டு. ஒன்பது பத்துக்குடைய சனி குரு இவர்கள் பரிவர்த்தனையாகி இருப்பதால் யோகம் ஏற்படும் என்று சொன்னேம்.

26. எந்தக்கா லத்தில் நேரும் இயம்புவீர் முனியே நீர்தாம்
இந்தவ னிருபா னுண்டில் எய்திடு நிதிநிட் சேபம்
முந்துமா லருளு மோங்கு மேன்பாடா யிருவில் லங்கள்
அந்தவன் செய்வா னுகும் அளகேசன் போல வாழ்வன்.

26. எந்தக் காலத்தில் யோகமுண்டாகும் என்று சொல்லுங்கள். முனிவரே! ஜாதகனுடைய இருபதாம் வயதில் புதையல் கிட்டும். தெய்வ (திருமாலின்) அருளும் கிடைக்கும். மேன்மையுள்ள இரு வீடுகள் கட்டுவான். அளகாபுரிக்கு அரசனுகிய குபேரனைப்போல் வாழ்ந்து வருவான்.

27. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிரே மிருநி றத்தாள்
மேதினில் பித்த தேகி வீணப வாத மில்லாள்
சாதிப்பாள் சிலவே சங்கை தன்துணை தோட மெய்தும்
மேதினில் தனியாய் வாழ்வள் விசனமில் லாதா ளென்றேம்.

27. தாயின் குணத்தைக் கூறுகின்றேம். இருநிற முள்ளவள். பித்த சரீரமுடையவள். வீண்பழிகளை அடையாதவள். சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வாள். உடன்பிறப்புத் தோஷமுண்டு. இவள் தனியளாக வாழ்ந்து வருவாள். துன்பங்களில்லாதவ ளென்றேம்.

28. அவளுடைத் தந்தை யில்லம் அணுகாது வென்று சொல்வோம்
இவளுமே சீல மில்லாள் இன்பச்சொல் லுடைய ளாகும்
தவசிகட் கன்ன மீவள் சந்தேக குணத்தா ளாகும்
சிவன்தனைப் பூசை செய்யுஞ் செல்வதி கேட்டி டாயே.

28. ஜாதகனுடைய தாய்க்குத் தன் தந்தையின் வீடு கிடைக்காது என்று சொல்லுகின்றேம். நல்லொழுக்க மில்லாதவள். இனிய வார்த்தைகளையே பேசுபவள். தவசிகட்கு (துறவிகட்கு) அன்னமளிப்பாள். சந்தேக குண முள்ளவள். சிவபெருமானைப் பூசை புரியும் பார்வதி தேவியே! கேளுங்கள்.

29. முன்னவ ளிருந்த ஜன்ம மொழிகிறேங் காஞ்சி தன்னில்
அன்னவள்சே ணியச் சேயாய் அணுகியே வறுமை யின்றிப்
பின்னோர்க்குத் தாக மீந்து பிழையான குணங்க ளின்றிக்
கன்னிகை வரன்பின் னுகக் காலன்தன் பதிக்குச் சென்று ;

29. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். காஞ்சீபுரத்தில் அவள் சேணியர் குலத்தில் பிறந்து, தரித்திரமில்லாமல், தாழ்ந்தவர்கட்கு அன்னம் நீர் முதலியன அளித்து, தீயகுணங்களில்லாமல், தன் கணவனுக்குப் பிறகு எமனுலகமடைந்து ;

30. வந்தவ ளென்று சொல்வோ மறுஜன்ம மருணை தன்னில்
சந்ததம் பிரம சேயாய் ஜனிப்பளா மென்று சொல்வோம்
முந்தின குடும்பி யாகி முதல்வியும் வாழ்வா ளாகும்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

30. இப்பிறவியில் பிறந்தவள் (என்று) சொல்லுகின்றேம். மறுபிறவி, திருவண்ணமலையில், அந்தணகுலத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்றேம். உயர்வான குடும்பத்தைப் பெற்று வாழ்ந்து வருவாள் என்றேம். கந்தபிரானைப் பெற்ற தேவியே ! கூறிய வார்த்தைகள் தவரு.

31. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோந் தவளை தென்பால்
முந்தின பேரூர் தன்னில் உதித்தனன் தீயின் வம்சம்
வந்துமே பெருமை பூண்டு மானில மதிக முண்டாய்
நொந்திடும் பேரைக் காத்து நீங்காத செல்வ னுகி ;

31. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தவளேச்வரத்துக்குத் தெற்குப் பக்கத்தில் உள்ள பெரிய ஊரில் வன்னிய குலத்தில் பிறந்தான் பெருமையுடன் விளைநிலங்களை அதிகமாகப்பெற்று, துன்பமடைந்தவர்களை ஆதரித்து, நீங்காத செல்வவானாகி ;

32. காலன்தன் நாடு சென்று கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமில் லாத கங்கை குலமதி லுதித்தா னென்றோம்
சாலவே இவன்பின் ஜன்மம் செப்புவோம் காளாத்தி தன்னில்
ஏலவே இக்கு லத்தில் இறங்குவா னென்று சொல்வோம்.

32. எமபுரம் அடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமில்லாத வேளாள குலத்தில் பிறந்தான் என்றோம். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். காளாத்தியில் இதே குலத்தில் பிறப்பான் என்று சொல்லுகின்றோம்.

33. இருபது எட்டு ஆண்டில் இயம்புவோந் தந்தை கண்டம்
திருகிலா முப்பா னைந்தில் செப்புவோ மன்னை கண்டம்
அறுபது மூன்று ஆண்டில் ஆடிமா தத்தி லேதான்
திருமக னுடல மேகும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்.

33. ஜாதகனுடைய இருபத்தெட்டாம் வயதில் தந்தை மரணமடைவான். முப்பத்தைந்தாம் வயதில் தாய் மரணமடைவாள். ஜாதகனுக்கு அறுபத்துமூன்றும் வயதில் ஆடி மாதத்தில் மரணம் ஏற்படும். ஜாதகனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

34. வேலங்கா டதற்கு மேல்பால் விளங்கிய பேரூர் தன்னில்
சாலவே வைச்ய வம்சம் ஜனித்துமே செட்டுச் செய்து
மேலான குடும்பி யாகி வித்தகன் வாழ்வா னாகும்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தன மொழிகுன் றுவே.

34. திருவேலங்காட்டுக்கு மேற்கில் உள்ள பெரிய ஊரில், வைசிய குலத்தில் பிறந்து, வர்த்தகம் செய்துவந்து, மேன்மையுள்ள குடும்பமுள்ளவனாகி, ஜாதகன் வாழ்ந்துவருவான். விஷத்தையருந்திய சிவபெருமானின் தேவியே ! கூறிய வார்த்தைகள் தவறா.

35. ஜனித்திடுங் காலந் தன்னில் சனிதசை ஆண்டு வொன்றும்
குனித்திடு திங்க ளொன்றும் குழவிக்குப் பிணியு முண்டு
கனமுள அதன்மேல் புந்தி காலத்தின் பலனைக் கேளாய்
நினைவது ஓங்க லாகும் நிலமது பெருக்க மாகும்.

35. ஜாதகனது ஜனனகாலத்தில் சனிமகாதசையில் ஒரு வருடமும் ஒரு மாதமும் பாக்கியிருக்கும். பிறந்த குழந்தைக்கு நோயுண்டாகும். அதற்குமேல் புதமகாதசையின் பலனைக் கேளுங்கள். எண்ணிய காரியங்கள் விருத்தியாகும். விளை நிலங்கள் பெருகும்.

36. கலங்கள் பூமி யாலே கண்டிடுஞ் ஜயமே யாகும்
தலமது சித்ராஞ் செய்தல் சல்லிய பாதை நீங்கல்
குலமதிப் பாக வாழ்தல் கூறுவோம் பின்னு லாக
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழிகுன் றுவே..

36. பூமியால் கலகம் ஏற்படும். ஆனால் வெற்றி கிட்டும். வீடு கட்டுவான். கடன் உபத்ரவம் விலகும். குலமதிப்புடன் வாழ்ந்து வருவான். பிற்பாகத்தில் மற்ற விபரங்களைக் கூறுகின்றோம். மலையரசனின் புதல்வியே ! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறு.

# ஜாதகம் 67.

1. பிறைமேடஞ் சனியும் வீணை பூமகன் பணியுஞ் சீயம்
குருகன்னி புதன்பானு தேளில் குருடனுந் தனுசு வாக
வருவது மிதுனஞ் ஜன்மம் வரைகுவீர் பலனை யென்று
அரன்மனை யாளுங் கேட்க அத்திரி முனிவர் சொல்வார்.

1. சந்திரன் மேடத்திலும், சனி மிதுனத்திலும், செவ்வாய் ராகு சிம்மத்திலும், குரு கன்னியிலும், புதன் சூரியன் விருச்சிகத்திலும், சுக்கிரன் தனுசிலும், கேது கும்பத்திலும் கிரகங்கள் இருந்து, மிதுனம் ஜன்ம லக்கினமாக இருப்பின், பலனைக் கூறுங்கள், என்று சிவபெருமான் தேவியாகிய பார்வதி கேட்கும்போது, அத்திரிமுனிவர் கூறுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | | இலக்கினம் சனி |
| கேது | இராசி சக்கரம் | | |
| | | | செவ்வாய் ராகு |
| சுக்கிரன் | புதன் சூரியன் | | குரு |

2. இந்தசே யாணுஞ் ஜன்மம் இல்லமுங் கீழ்மேல் வீதி
தென்வாடை கீழ்ப்பால் மாரி தந்திவா கனத்தாள் நிற்பள்
அந்தரி காளி தென்மேல் ஆனையின் கோட்டம் மேற்கில்
சந்தத மாரி வுத்ரந் தங்கிடு மென்று சொல்வோம்.

2. இந்த ஜாதகத்தையுடையவன் ஆண் குழந்தை. பிறந்தவீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு வரிசையிலுள்ளது. கிழக்குத்திக்கில் மாரியம்மனும், விநாயகர் ஆலயமும் உள்ளன. தெற்கில் காளிதேவியின் கோவிலும், மேற்கில் யானைமுகத்தோன் ஆலயமும், வடக்கில் மாரியம்மன் கோயிலும், இருக்கும் என்று கூறுகின்றோம்.

3. இன்னமும் பலதெய் வங்கள் எய்திடும் பேரூ ராகும்
அன்னவன் வைச்யச் சேயாய் அருளுவா னென்று சொல்வோம்
மன்னவன் குடும்பச் சேதி வரைகிறோ மிந்நூல் தன்னில்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி மேலுங் கேளே.

3. இன்னும் பல தெய்வங்கள் வாழ்ந்து இருக்கும் பெரிய ஊராகும். ஜாதகன் வைசிய குலத்தவனாகப் பிறப்பான் என்று சொல்லுகின்றோம். ஜாதகனுடைய குடும்பச்செய்திகளை இந்தச் சோதிடநூலில் கூறுகின்றோம். உயர்ந்த கணவனையடைந்த உத்தமியே ! கேளுங்கள்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன சாந்தவான் மாநி றத்தன்
தந்தியின் நாமங் கொள்வன் சரசமாய் வார்த்தை சொல்வன்
தன்மனங் கவடு மில்லான் தன்துணே சொல்தட் டாதான்
தந்தைசொல் தட்டா னுகும் தரணிகள் கொஞ்ச முண்டு.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தை நாங்கள் கூறுகின்றேம். சாந்த முள்ளவன். மாநிற முடையவன். விநாயகரின் நாமமுடையவன். சல்லாபமாகப் பேசுபவன். மனத்தில் கபட மில்லாதவன். தன் உடன்பிறந் தவரின் வார்த்தையை மீருதவன். தன் தந்தையின் பேச்சுக்குட்பட்டு நடப்பவன். கொஞ்சம் பூஸ்திதி யுள்ளவன்.

5. இரணிய வேலை செய்வன் இடரென்றோர்க் குதவு வானும்
வருவோரை யாத ரிப்பன் வடிவினில் குள்ள னுவன்
பொருளது பெருக்க மில்லான் போசன சுகிய னுகும்
அரன்பூசை புரிவா னுகும் ஆபத்தென் ரேர்க்கு ஈவன்.

5. தங்க வேலைகளைச் செய்வன் (தட்டான்). துன்பமடைந்தவர்கட்கு உதவிபுரிவான். தன்னை வந்தடைந்தவர்களை ஆதரிப்பான். குள்ளமான சரீரமுடையவன். செல்வமதிக மில்லாதவன். சாப்பாட்டில் பிரியன். சிவ பெருமானுக்குப் பூசைகள் செய்துவருவான். ஆபத்து என்று வந்தவர் கட்கு உதவுவான்.

6. துணேவர்க ளாண்பா லொன்று தோகையர் நால்வ ராகும்
பிணேயாக வேருய்ச் செல்வன் பலக்காது நட்ட மெய்தும்
சினமிலாப் பின்பால் சொல்வேன் செப்பின குணத்தா னுக்கு
வனிதையர் நால்வர் தம்மில் வருகுவான் கடைமா துக்கு.

6. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் நால் வருமாவர். சகோதரன் தனியாகச் சென்றுவிடுவான். அவன் விருத்திக்கு வராதவன். பிற்பாகத்தில் விவரம் கூறுகின்றேம். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு மனைவிகள் (நால்வர்). அவர்களில் கடைசி மனைவிக்குப் புத்திரனுக இவன் தோன்றுவான்.

7. பாலகன் நிறங்கு ணத்தைப் பகருவோ மிருசி வப்பன்
சீலவான் சிரமமில் லாதான் செம்பொன்னின் வேலை செய்வன்
ஞாலமேல் நல்லோ னுவன் நயம்படக் கூறு வானும்
ஆலம்போல் கோப மேற்பன் அறிவுளோர் நேயங் கொள்வன்.

7. ஜாதகனுடைய நிறம் குணம் இவைகளைப்பற்றிச் சொல்லுகின்றேம். கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவன். நல்லொழுக்கமுள்ளவன். சிரம மில்லாதவன். பொன் வேலை செய்பவன். உலகத்தில் நல்லவன் என்ற பெயரெடுப்பான். நயமாகப் பேசுவான். கொடிய விஷம்போல் கோபங் கொள்வான். அறிவுடையவர்களது நட்பைக் கொள்ளுவான்.

8. சுகதுக்கங் கலந்து வாழ்வன் சோம்பலுங் கொஞ்ச முண்டு
பகைஎன்று மனத்தில் வையான் பிதாவினல் சுகமில் லாதான்
ஈகைவான் பக்தி பூண்பன் இளக்கமா மனத்த ளுகும்
உகமையாய்ப் பேசு வாஞம் உள்மனம் கபடு முண்டு.

8. சுக துக்கம் கலந்து வாழ்பவன். சிறிது சோம்பல் உடையவன். விரோதம் பாராட்டாதவன். தன் தந்தையினல் சுகமில்லாதவன். கொடுக்கும் குணமுள்ளவன். பக்தியுடையவன். இளகிய மனமுள்ளவன். உவமானங் களுடன் பேசுபவன். உள்மனத்தில் கபடமுள்ளவன்.

9. செய்தொழில் மூலத் தாலே சொல்லது மிரண்டு முண்டு
தையலுக் கினிய ளுகும் தரணியுங் கொஞ்சஞ் சேர்ப்பன்
ஐயமே லிச்சை யுண்டு அடைந்தோரை யாத ரிப்பன்
தூயநன் மனத்த ளுகும் சொல்லது மடக்க முண்டு.

9. தான் செய்யும் தொழிலில் இருவிதமாகப் பேசுபவன். தன் மனைவிக்குப் பிரியன். சிறிது பூமியையும் விருத்தி செய்வான். தருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். தன்னை வந்தடைந்தவர்களை ஆதரிப்பான். நல்ல மனமுள்ளவன். அடக்கமாகப் பேசுபவன்.

10. தன்துணை முன்ன ளொன்று சத்திமா ரவ்வாறு தீர்க்கம்
தன்துணை கன்னி யொன்று பேசுவோந் தீர்க்க மாக
முன்மாதா துணையென் றிரே மொழிகுவீர் அவர்க்குப் புத்திரர்
கன்மபுத் திரரு மில்லார் காதலி யொன்றே தீர்க்கம்.

10. ஜாதகனுக்கு மூத்த சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் தீர்க்காயுளுள்ளவர்கள். மற்றொரு இளைய சகோதரியும் நீண்ட ஆயுளுள்ள வள் என்று சொல்லுகின்றோம். மூத்த தாய் என்று சொன்னீர்களே! அவளுக்குப் புத்திரருண்டோ? கருமம் செய்யப் புத்திரரில்லை. ஆனல் பெண் ஒருத்தி நீண்ட ஆயுளுள்ளவள்.

11. முதல்மாதா தனக்குச் சொன்னேம் மேவாது இருதா யென்றோம்
விதியது முடியு மென்றோம் விளம்பின மிரண்டு தாயும்
சதியிலா நான்கா மாதா தங்குவாள் பால னன்னை
இதுநிற்க முன்னேன் சேதி இயம்புவோ மினி மேலாக.

11. முதல் தாய் என்று சொன்னேம். ஆனல் இரு தாய்மார்கள் ஏற்படார் என்று கூறுகின்றோம். இரு தாய்மார்களுக்கும் ஆயுள் முடிந்துவிடும். நான்காவது தாய், ஜாதகனுடைய தாயைத் தங்குவாள். இது நிற்க, முற்பிறந்த சகோதரனின் செய்தியைக் கூறுகின்றோம்.

12. ஊகவான் நுணுக்கந் தேர்வ னுண்மையை வெளிக்காட் டாதான்
பாகமாய்ப் பேசு வாஞம் பாரினில் நல்லோ னுவன்
தோகைய ரிருவர் நேருந் திரிச்சலாய் வாழ்வா ளுகும்
தாகமென் றோர்க்கு வீவன் தயாளமாம் குணத்த ளுகும்.

12. ஊக முள்ளவன். இரகசிய நூல்களை அறிந்தவன். உண்மையை வெளியிடாதவன். (கண்டிப்பாய்) பொருத்தமாய்ப் பேசுபவன். உலகில் நல்லவனுவன். இரு மனைவியர் ஏற்படுவர். அலைச்சலுள்ளவனாக வாழ்ந்து வருவான். (தாகமுள்ளவர்கட்கு) பசித்தவர்கட்கு அன்னம் முதலியன அளிப்பான். தயாள குணமுள்ளவன்.

13. சுதர்களு மாண்பால் மூன்று தோகைய ரிருவர் தீர்க்கம்
எதுவித மாதுக் கேதான் இயம்பினீ ரந்தச் சங்கை
அதிபதி யிளையா ளுக்கு ஆண்ரண்டு கன்னி யவ்வாறு
சதியிலா முதல்மனைக்குச் சந்ததி ஒன்றே தீர்க்கம்.

13. மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். எந்த மனைவிக்குப் புத்திரர் தோன்றுவார்கள்? ஜாதகனுடைய சகோதரனின் இளைய மனைவிக்கு இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் உண்டு. முதல் மனைவிக்குப் புத்திரன் ஒருவனே. அவன் நீண்ட ஆயுளுள்ளவன் என்றோம்.

14. மற்றவை சேத மெய்தும் மனைவி யூர் சின்னுள் வாசம்
சுத்தவான் பொறுமை உண்டு சொர்ண............வன்
நித்தியம் லாப முண்டு நினைத்தகா ரியம் முடிப்பன்
வித்தகன் வயது தீர்க்கம் விமலியே மேலுங் கேளே.

14. மற்றவை நிலையா என்றோம். சில நாட்கள் தன் மனைவியின் ஊரில் வசிப்பான். சுத்தமுள்ளவன். பொறுமையுடையவன்.... நித்தியம் லாப முள்ளவன். எண்ணிய காரியங்களைச் செய்து முடிப்பான். நீண்ட ஆயுளுள்ளவன். தாயே! மேலும் கேள்.

15. முன்கன்னி சேதி சொல்வேன் மொழியது சுத்த முண்டு
முன்கோப மூர்க்க முண்டு மேவிடும் நாபி நோயும்
தன்வரன் தென்பால் நேரும் சாகைவிட் டகலா ளாகும்
தன்வரன் மடக்க மாவன் சலிப்பாக வாழ்வ ளென்றோம்.

15. ஜாதகனுடைய மூத்த சகோதரியின் செய்தியைக் கூறுகின்றோம். வாக்குச் சுத்தமுள்ளவள். சிறிது முன்கோபமும் மூர்க்ககுணமும் உள்ளவள். வயிற்றுநோய் உள்ளவள். கணவன் தெற்குத் திசையிலிருந்து வருவான். தன்வீட்டை விட்டு வெளிச்செல்லாதவள். கணவன் அடங்கியே வாழ்ந்து வருவான். சலிப்புடன் வாழ்ந்து வருவாள் என்றோம்.

16. சுதர்களு முதிக்கில் நீதாஞ் சொல்லுவீ ரந்தச் சங்கை
சதியான முனிதோ டத்தால் சந்ததி கேடு சொல்வோம்
அதற்குமே சாந்தி செய்து சுந்தரி பீசந் தன்னை
முதல்ரேக்கில் வருவி யேதான் மங்கையு மணிவா ளாகில்;

16. புத்திரர்கள் தோன்றினும் நிலையா. அதற்குக் காரணம் சொல்லுங்கள். முனியின் தோஷத்தால் ஏற்பட்டது என்று கூறுகின்றோம். அதற்குச் சாந்தி செய்து சக்தியின் பீஜாட்சரத்தைத் தங்கத் தகட்டில் எழுதி பெண் அணிந்துவந்தால்;

17. முன்வினை நிவிர்த்தி யாகி யுதித்தசேய் தீர்க்க மெய்தும்
சொன்னவூழ் செய்வா ராகில் தோன்றிடு மாண்பா லொன்று
கன்னிகை யவ்வாறு தீர்க்கங் கலந்ததோர் பிணியு நீங்கும்
சொன்னவூழ் செய்யா ருகில் சுதர்களும் தோன்றில் தீதாம்.

17. முற்பிறப்புத் தீவினை நீங்கிப் பிறக்கும் குழந்தைகள் தீர்க்கமாயிருக்கும். நாங்கள் கூறிய சாந்தியைச் செய்துவந்தால் ஓர் ஆண் குழந்தையும் ஒரு பெண்ணும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவையாகும். ஏற்பட்ட நோயும் விலகும். தாங்கள் கூறிய சாந்தியைச் செய்யாணுல் புத்திரர்கள் பிறவார். பிறக்கினும் நிலையார்.

18. பின்கன்னி சேதி சொல்வேன் போசன வறுமை காணுள்
கன்னிகை யோக சாலி கணவன்தன் மனதுக் கேத்தோள்
மன்னனும் வடபால் நேரு மைந்தர்கள் தவத்தால் தோன்றும்
சொன்னேன் சுதராண் ரண்டு தோகையு மவ்வாறு யென்றேரும்.

18. ஜாதகனுடைய இளைய சகோதரியின் செய்தியைக் கூறுகின்றோம். சாப்பாட்டுக்கு வறுமையில்லாதவள், யோகசாலி. தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். கணவனும் வடக்குத் திசையிலிருந்து வருவான். புத்திரர்களும் முற்பிறப்பு நல்வினையால் தோன்றுவர். இரு புதல்வர்களும் இரு புதல்வியும் பிறப்பர் என்று சொன்னோம்.

19. மாதுவும் வயது தீர்க்கம் மங்கள வார்த்தை சொல்வள்
காதலு விரத சாலி கழறுவோம் பின்பால் சேதி
ஓதுவே னன்னை சேதி உயர்வான புத்தி யேற்பள்
பாதக மனமில் லாதாள் பணிந்தோருக் குதவி செய்வள்.

19. அவளும் நீண்ட ஆயுளுள்ளவள். நல்ல வார்த்தைகளையே பேசுபவள். நோன்புகள் நோற்பவள். பிற்பாகத்தில் மற்ற சேதிகளைக் கூறுகின்றோம். ஜாதகனுடைய தாயின் செய்திகளைக் கூறுகின்றோம். உயர்வுள்ள புத்திசாலி. தீய மன மில்லாதவள். தன்னை வந்தடைந்தவர்கட்கு உதவி புரிவாள்.

20. அரவு போல் கோப முண்டு ஆளன்தன் மனதுக் கேத்தோள்
சிறியபுத் திகளுங் கொஞ்சம் சிலிக்குத் துணை யாணென்று
வரிவிழி மார்கள் ரண்டு வரைகிறேந் தீர்க்க மாக
நெறியதைக் காப்பா ளாகும் நிமலியுந் தீர்க்க சீவி.

20. சர்ப்பம்போல் கோபங்கொள்ளுவாள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். சிறிது அல்ப புத்தியுள்ளவள். சகோதரன் ஒருவன் உண்டு. இரு சகோதரிகளும் உண்டு. அவர்கள் தீர்க்காயுளுள்ளவர்கள் என்று சொல்லுகின்றோம். நல்லவழியிலேயே செல்லுபவள். தீர்க்க ஆயுளுள்ளவள்.

21. அன்னையின் முன்ஜன் மத்தை அறிவிப்போ மருதூர் தன்னில்
வன்னிய குலமு தித்து வளமான குடும்பி யாகி
இன்னவள் வாழு நாளில் எய்தின வினையைக் கேண்மோ
கன்னிகை வேசி பேரில் கழறினுள் கட்டு வார்த்தை.

21. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியை இனிச் சொல்லுகின்ருேம் **மருதூரில்,** வன்னிய குலத்தில் பிறந்து, செல்வமுள்ள குடும்பியாகி வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகிறேன். கேளுங்கள். வேசையர் குலத்தில் பிறந்த ஒரு கன்னிப்பெண்மீது சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொன்னுள்.

22. மாதுவும் மனது வாடி வரைந்தசா பத்தைக் கேண்மோ
தீதான வார்த்தை என்மேல் செப்பின பாவிக் கேதான்
மேதினில் மறுசென் மத்தில் வயதுமே சென்ற மாரன்
காதல னுக்குத் தோன்றிக் கலவர புத்தி ஏற்பாய்.

22. அப்பெண் மனம் வருந்திக் கூறிய சாபத்தைக் கேளுங்கள். என் மீது அடாதவார்த்தைகளைக் கூறிய பாவியே! நீ, மறுபிறவியில், வயது சென்ற கணவனை அடைந்து, கலவரமடைந்த மனமுடன் வாழ்வாய்.

23. நங்கு சொல் ஏற்பாய் நீயும் நவின்றனள் வேசி மாது
தங்கிற்று அந்தச் சாபம் தையலு மந்தி யத்தில்
எங்கள்போல் அதிதிக் கன்ன மீந்துமே தலங்கள் சென்று
சங்கையாய்க் கால னுடு சென்றுமே பிரமன் லக்கம் ;

23. பழிச்சொல்லை அடைவாய், நீ, என்று கூறினுள், வேசிப்பெண். அந்தத் தோஷம் இவளையடைந்தது தனது. மத்திய வயதில், எங்களைப் போன்ற துறவிகட்கு அன்னமளித்து, புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று மரணமடைந்து, மீண்டும் பிரம தேவனுல் படைக்கப்பட்டு ;

24. வந்தவ ளென்று சொல்வோம் வேசியின் சாபம் போல
பந்தணி தனக்கு நேரும் பரவிடும் பித்த வாயு
பிந்திய ஜன்மந் தன்னைப் பேசுவோம் கோகர் ணத்தில்
அந்தவ ளிக்கு லத்தில் அருளுவா ளென்று சொல்வோம்.

24. பிறந்தவள் என்று சொல்லுகின்ருேம். வேசியின் சாபம்போல் ஜாதகனுடைய தாய்க்குப் பித்தவாயுநோய் ஏற்படும். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்ருேம். திருக்கோகர்ணத்தில் இதே குலத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்ருேம்.

25. தந்தையின் முன்ஜன் மத்தைச் செப்புவோ மருணை நாட்டில்
பிந்திய வூரி லேதான் பிறந்தனன் செங்குந்த சேயாய்
முந்திய குடும்பி யாகி மேதினில் வாழு நாளில்
விந்தையாய்க் கல்வி சொன்ன வாத்தியின் மகள்மேல் மோகம் ;

25. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்ருேம். **திருண்ணுமலை** அருகில் ஒரு சிற்றூரில் செங்குந்த வம்சத்தவனுகப்பிறந்தான். உயர்வான குடும்பமுள்ளவனுக உலகில் வாழ்ந்து வந்த காலத்தில், கல்வி கற்பித்து வந்த உபாத்தியாயரின் மகள்மீது மையல் கொண்டு ;

26. தனந்தூ சவட்குத் தந்து தையலை பலவந் தத்தால்
அணைந்தன னதுவோர் சாபம் வரைகிறோம் வேறு வொன்று
வினைசெய்தா னேழை யோர்க்கு விளம்புவார் சாபந் தாமும்
இனிவருஞ் ஜன்மந் தன்னி லெய்திடும் மனைய நேகம்.

26. பொருள், ஆடை முதலியவற்றை அவளுக்குக்கொடுத்து, அவளோடு பலவந்தமாகப் புணர்ந்தான். அஃது ஒரு தோஷமாயிற்று. மற்றொன்றும் சொல்லுகின்றோம். ஏழைகட்குத் துன்பம் செய்தான். அவர்களும் சாப மிட்டனர். இனி ஏற்படும் ஜன்மத்தில் உனக்குப் பல மனைவிகள் ஏற்படுவர்.

27. இன்னமும் பலவாறு சொன்னார் எய்திற்று வந்தச் சாபம்
மன்னவ னந்தி யத்தில் வாயுவால் கரங்கால் சோர்ந்து
துன்மையாய்க் கால னொடு சென்றுமே பிரமன் லக்கம்
அன்னவ னுதித்தா னென்றோம் அணுகிடு முன்னூழ்ச் சாபம்.

27. என்றும், இன்னும் பலவிதமாகக் கூறினார்கள். அந்தச் சாபம் இவனை (ஜாதகனுடைய தந்தையை)ப்பற்றியது. அவனும் தன் கடைசிக் காலத்தில் பாரிச வாயுவால் கைகால்கள் சோர்வுற்று இறந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்று சொன்னோம். முற்பிறவி யின் தோஷம் இவனைப் பற்றியது.

28. பாரியு மநேக மாகும் பகருவோ மிவன்பின் ஜன்மம்
ஆறுமா முகத்தோன் வாழும் அந்நகர் தணிகை தன்னில்
சேருவான் பிரம சேயாய்ச் செப்புவீர் கரும காலம்
கூறுவோ மாறு ருண்டில் குழவியின் தந்தை கண்டம்.

28. அநேகம் மனைவியர் ஏற்படுவார். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். ஆறுமுகக் கடவுள் வாழும் திருத்தணிக்கையில் அந்தண குலத்தவனாகப் பிறந்து வாழ்வான். ஜாதகனுடைய கரும காலங்களைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் ஜாதகனின் தந்தை மரண மடைவான்.

29. எண்ணுன்கு வொன்று வாண்டில் வரைகுவோ மன்னை கண்டம்
திண்ணமாய்ப் பத்தொன் பாண்டில் ஜனித்தசேய் மணங்க [ளென்றோம்
பெண்குண மழகு முள்ளாள் பிறர்குற்றம் புகலா ளாகும்
கண்ணிய மாக வாழ்வள் கிஞ்சித்துக் கோபி யாவள்.

29. ஜாதகனுடைய முப்பத்துமூன்றும் வயதில் தாய் மரண மடைவாள். நிச்சயமாக ஜாதகனுடைய பத்தொன்பதாம் வயதில் மணமேற் படும். மனைவியின் குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவள். பிறர்மீது குற்றம் கூறாதவள். கண்ணியமாக வாழ்ந்து வருவாள். சிறிது கோபமுடையவள்.

30. அடிசிலுக் கினிய ளாகும் அனேவர்க்கு நல்லோ ளாவள்
நடைநன்மை சீல முண்டு நாயகன் மனதுக் கேத்தோள்
மடையரை யுறவு கொள்ளாள் வாக்கதைக் காப்பா ளாகும்
துடியிடை மா நி றந்தாள் சொல்லது சுருக்க மாகும்.

30. ருசியுடன் சமைப்பதில் வல்லவள். எல்லோருக்கும் நல்லவள். அழகான நடையுள்ளவள். நன்னடக்கையுள்ளவள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். மூடர்களின் நட்பிலாதவள். தன் வார்த்தையைக் காப்பாள். மெல்லிய இடையும் மாநிறமும் உள்ளவள். சுருக்கமாகப் பேசுபவள்.

31. புத்திமான் பொறுமை கோபம் புண்ய மனமுங் கொஞ்சம்
பத்திமா னவருக் கன்னம் படைப்பளாம் பித்த தேகி
உத்தம குணத்தா ளாகும் வரைகிரேம் வயது தீர்க்கம்
அத்தியை வளர்த்த எங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

31. புத்திசாலி. பொறுமையுள்ளவள். கோபமும் நல்ல மனமும் சிறிது உள்ளவள். பக்திமான்களுக்கு உணவு அளிப்பவள். பித்த சரீர முடையவள். உயர்ந்த குணசாலி. நீண்ட ஆயுளுள்ளவள். விநாயகனைப் பெற்ற எங்கள் உயிருக்குயிரான தேவியே ! கேளுங்கள்.

32. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
முதல்சுதர் தோட மெய்தும் மொழிகுவீர் அந்தச் சங்கை
புதல்வர்தா னத்தோன் வெள்ளி பொருந்திட மேழ தாக
விதியனும் பார்ப்ப தாலே விளம்பினே மந்தச் சங்கை.

32. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து தீர்க்காயுள்ளவராவர். முதல் புத்திரன் இறந்து விடுவான். அதற்குக் காரணம் சொல்லுங்கள். புத்திரஸ்தானத்துக்குரிய சுக்கிரன் ஏழாமிடத்தில் இருந்து சனி பார்ப்பதால் அந்தத் தோஷம் சொன்னேம்.

33. பாலகன் முன்ஜன் மத்தைப் பகருவோம் பட்சி தன்னில்
சீலமாம் வேளாள னாகி ஜனித்துமே கிருஷி செய்து
ஞாலமேல் நல்லோ னாகி நாதனுர் பக்தி பூண்பன்
காலன்தன் பதிக்குப் புக்கி மலரயன் வரைப்பட்டு ;

33. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். திருக்கழுகுக் குன்றத்தில், வேளாள குலத்தவனாகப் பிறந்து, விவசாயம் செய்து வந்து, உலகில் நல்லவனாகி, சிவபெருமான்மீது பக்தி கொண்டு, மரண மடைந்து மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு.

34. பிறப்பனு மிந்தப் பாலன் பேசுவோ மிவனின் யோகம்
தரைசேர்ப்பன் விரயஞ் செய்வன் செலவுக ளதிக முள்ளான்
வறுமையெப் போதுங் காணுன வறுமுகன் பத்தி பூண்பன்
பொரைசொல்லா னிளம னத்தன் புகன்றிடான் கட்டு வார்த்தை.

34. இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய யோகத்தைச் சொல்லு கின்றோம். பூமியைப் பெருக்குவான். விரயமாக்குவான். அதிகமான செலவுகள் செய்வான். எப்போதும் தரித்திரமில்லாதவன். சுப்பிரமணியக் கடவுள்மீது பக்தி கொள்ளுவான். பொய் சொல்லாதவன். இளகிய மனத் தினன். வார்த்தைகளைப் புனைந்து பேசத் தெரியாதவன்.

35. தனமது பின்னால் சேர்ப்பன் சந்திரன் தசையி லேதான்
கனமுள புகழு மேற்பன் காரிய சமர்த்த னாகும்
துணைவன்சொல் தடுக்கா னாகுந் துறவோருக் கன்ன மீவன்
வினையதை யொருவர்க் கெண்ணான் விமலியே மேலுங் கேளே.

35. பிற்காலத்தில் பொருள் சேர்ப்பான். சந்திரமாகாதசையில் கீர்த்தி அடைவான். காரியங்களில் சமர்த்தன். தன் உடன் பிறந்தவன் வார்த் தையைத் தடுக்காதவன். துறவிகட்கு அன்னமளிப்பான். தீங்குகள் ஒரு வருக்குமெண்ணாதவன். தாயே ! மேலுங் கேளுங்கள்.

36. அறுபது வொன்ப தாண்டில் அணுகிய மேட மாதம்
திருமக னுடல மேகுஞ் செப்புவோம் பின்ஜன் மத்தைக்
குறைதீர்க்கு மருணை தன்னி லுதிப்பனும் பிரம்ம சேயாய்
அரசரால் தொழிலும் பெற்று அவனுமே வாழ்வா னாகும்.

36. அறுபத்தொன்பதாம் வயதில் சித்திரை மாதத்தில் ஜாதகன் மரண மடைவான். மறுபிறவி, குறைகளைந் தீர்க்கும் திருவண்ணா மலையில் அந்தண குலத்தில் பிறப்பான். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்ந்து வருவான்.

37. பாரியை யிவன்பின் னாலே பறப்பளாங் கால னூடு
தீரனின் ஜனன காலஞ் செம்பாம்பு தசையி ருப்புக்
கூறுவோந் திங்க ளொன்றுங் குலவுநாள் தசமே யாகும்
ஆறுமா முகத்தோன் தன்னால் அருளினோம் பூர்வ பாகம்.

37. இவனுடைய மனைவி இவனுக்குப் பின்னால் மரண மடைவாள். ஜாதகனுடைய ஜனன காலத்தில் கேது மகாதசையில் இருப்பு ஒரு மாதமும் பத்து நாட்களுமாம். என்று கூறுவோம். ஆறுமுகக் கடவுளின் அருளால் முதல் பாகம் கூறினோம்.

# ஜாதகம் 68.

1. பிறைமீனங் காரி மேடம் பூமகன் கடக மாகக்
குருபுகர் பானு புந்தி கேதுவு நந்தி யாக
அரவுமே தேள தாக அணுகிய ஜன்மம் வீணை
உரைப்பீர்கள் பலனை யென்று உத்தமி கேட்கும் போது ;

1. சந்திரன் மீனத்திலும், சனி மேடத்திலும், செவ்வாய் கடகத்திலும், குரு சுக்கிரன் சூரியன் புதன் கேது விருஷபத்திலும், ராகு விருச்சிகத்திலும் இருந்து, மிதுனம் இலக்கினமானல், ஏற்படும் பலனைக் கூறுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும் போது ;

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | சனி | குரு சுக்கிரன் சூரியன் புதன் கேது | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | செவ் வாய் |
| | | | |
| | ராகு | | |

2. தென்முனி புகலு கின்ருர் ஜனித்திடு மாண்பால் ஜன்மம்
தந்தையி னில்லஞ் சொல்வோந் தென்வட வீதி யாகும்
இந்திர னேக்கம் வாசல் யானையின் கோட்டந் தென்பால்
சுந்தரி வுத்தர மாகு மணுகிய சிறுவூ ராகும்.

2. அகத்திய முனிவர் கூறுகின்ருர். இஃது ஆண் மகனின் ஜாதகம். ஜாதகனுடைய தந்தையின் வீட்டைச் சொல்லுகின்றேன். அது வடக்குத் தெற்கான வீதில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. தென்கிழக்கில் விநாயகர் ஆலயமும் அம்மன் கோயில் வடக்குத் திக்கிலு முள்ள சிற்றூர்.

3. சொல்லிய வடையா ளத்துள் சுதனுமே சேட்ட னுகப்
புல்குவான் வேளாள னுகப் புதல்வனின் யோகந் தானும்
தல்லியின் தந்தை யோகஞ் சகோதர களத்ர புத்ரர்
வல்லவன் முன்பின் ஜன்மம் வரைகிரே மிந்நூல் தன்னில்

3. இப்படிச் சொல்லப்பட்ட அடயாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் தன் தந்தைக்கு மூத்த புதல்வனுகப் வேளாள குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய யோகத்தையும் தாய் தந்தையர் சகோதரர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறு பிறப்பு ஆகிய இவற்றையும் இந்த நூலில் சொல்லுகின்ருேம்.

4. தந்தையின் துணையாண் ரண்டு சத்திமார் நால்வ ராகும்
நொந்திடு மற்ற வெல்லா நுகலுவோம் பிதாகுணத்தை
வந்தவர்க் கன்ன மீவன் வசனமுஞ் சுகமே யாகும்
சிந்தையு மிரண்டே யாகுஞ் செழிப்பான குடும்ப மேற்பன்.

4. ஜாதகனுடைய தந்தையின் துணைவர் இருவராகும். நான்கு சகோதரிகள் ஆகும். மற்றவைகள் நிலைத்திரா. தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்ன மளிப்பான். சுகமாகப் பேசுபவன். இருவிதமான எண்ணங்க ளுள்ளவன். செழிப்புள்ள குடும்பமுள்ளவன்.

5. கடனில்லா னிடுக்க மில்லான் காரிய சமர்த்த னாகும்
உடன்படான் பிழை களுக்கு உறுதியா மனத்த னாகும்
தடபுடல் செய்கை யுண்டு தாட்சிண்யன் கனத்த புத்தி
விடவாக்கு முன்கோ பத்தன் மேதினி விருத்தி செய்வன்.

5. கடனில்லாதவன். துன்பமில்லாதவன். காரியங்களில் சமர்த்தன். தவறு செய்வதற்கு உடன்படாதவன். திடமுள்ள மனத்தினன். தடபுடலான ஆடம்பரச் செய்கைகளுள்ளவன். தாட்சிணிய முள்ளவன். பெரிய புத்தியுடையவன். விஷவாக்குள்ளவன். முன் கோபி. பூமியைப் பெருக்குவான்.

6. கரமதில் மாலின் ரேகை கஞ்சரே கையு முண்டு
உறன்முறை மதிக்க வாழ்வன் ஓராறு முகத்தோன் பத்தி
பறைபள்ளு முடைய னாகும் பாரினில் வறுமை காணான்
விரைவினில் நடக்க வல்லன் வெற்றியாந் தொடுவழக்கில்

6. கையில் திருமாலின் ரேகையுள்ளவன். பத்மரேகையும் உள்ளவன். தன் பந்துக்கள் மெச்ச வாழ்வான். சுப்பிரமணியக்கடவுள்மீது பக்தியுள்ளவன். பள்ளுப் பறைகள் உள்ளவன். உலகில் வறுமையில்லாதவன். வேகமாக நடப்பவன். எடுத்த காரியங்களை ஜயிப்பான்.

7. முன்ஜன்மம் புதுவை தன்னி லுதித்தனன் வைச்யச் சேயாய்ப்
பொன்னொடு பரிதி யுண்டாய்ப் புகழான வணிபஞ் செய்து
தன்மனை மதலை யுண்டாய்ச் சகலர்க்கு நல்லோ னாகி
முன்வினை யில்லா தாகி மேவினான் கால னூடு.

7. ஜாதகனுடைய தந்தை, முற்பிறவியில் புதுவை மா நகரில் வைசிய குலத்தினனாகப் பிறந்தவன். பொன், குதிரை முதலியன பெற்று, வர்த்தகம் செய்து வந்து, மனைவி மக்களைப் பெற்று, உலகில் நல்லவனாக, வாழ்ந்து வந்து, தீவினைகளில்லாதவனாக இருந்து, மரண மடைந்தான்.

8. வேதனல் வரையப் பட்டு விளங்கினா னென்று சொல்வோம்
ஓதிய குணத்தா னுக்கு உதிப்பனு மிந்தச் சேயும்
ஜாதகன் குணத்தைச் சொல்வோ முய்வனுந் தரணி யாலே
சோதிமார்ச் சால னாகுந் துறவிபோல் வார்த்தை யுண்டு.

8. வேதங்களறிந்த பிரம தேவனுல் படைக்கப்பட்டு பிறந்தவன் என்று சொல்லுகின்ருேம். இப்படிக் கூறப்பட்ட தந்தைக்கு இந்த ஜாதகன் புத்திரனுகப் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்ருேம். பூமியினுல் (விவசாயம் செய்து வருவதால்) வாழ்க்கையை நடத்துவான். பெண்கள்மீது மையலுள்ளவன். ஆனுல் துறவிகளைப்போல் பேசுவான்.

9. வித்தையுஞ் சமம தாகும் விவேகியாம் பொறுமை சாலி
நத்தினோர்க் குதவி செய்வன் நாற்காலி விருத்தி யுண்டு
சித்தமே கரப்பு மில்லான் நிந்தையை யெவர்க்கு மெண்ணுன்
சத்தியங் கூரு னுகுந் தைரிய மில்லா நெஞ்சம்.

9. சமமான வித்தை கற்பான். விவேகமுள்ளவன். பொறுமையுடையவன். தன்னை வந்தடைந்தவர்கட்கு உதவி புரிவான். கால்நடைகள் பெருகும். மனத்தில் தீய எண்ணங்களில்லாதவன். பிறருக்குத் தீங்கு செய்ய எண்ணுதவன். சத்தியம் செய்யாதவன். தைரியமில்லாத மனத்தினன்.

10. வறுமையெப் போதுங் காணுன் நிலங்களில் விளைச்சல் செய்வான்
இருநிற முளைச்சல் தேகி இடரென்ருேர்க் குதவு வானும்
அறுமுகன் பத்தி கொள்வன் ஆபத்தைச் சிலர்க்குக காப்பன்
கரிமத வானை கோட்டங் கட்டுவா னென்று சொல்வோம்.

10. ஒருகாலும் வறுமை அடையாதவன். நிலங்களில் விளைச்சல் செய்து வருவான். இருநிற முள்ளவன். மெல்லிய சரீர முடையவன். துன்பமடைந்தவர்கட்கு உதவி செய்வான். சுப்பிரமணியக் கடவுள் மீது பக்தி கொள்ளுவான். ஆபத்தைச் சிலருக்குக் காப்பான். கரிய யானை முகத்தோன் கோயில் ஒன்று கட்டுவான் என்று சொல்லுகின்ருேம்.

11. சிலசில வணிபஞ் செய்வன் ஜனவுப காரி யாகும்
நிலமதைப் பெருக்கு வானும் நாயகி யிட்ட னுவன்
விலைமாது மோகங் கொள்ளான் வெஞ்சினம் வெளிக்காட் [டாதான்
சொலுமொழி காப்பா னுகும் வித்தகி மேலுங் கேளே.

11. சிற்சில வியாபாரம் செய்து வருவான். ஜனங்களுக்கு உபகாரி. விளைநிலங்களைப் பெருக்குவான். தன் மனைவிக்குப் பிரியனுவன். வேசையர்மீது மையல் கொள்ளாதவன். கடுங்கோபத்தை வெளியிடாதவன். சொல்லும் வார்த்தைகளைக் காப்பான். தாயே! கேளுங்கள்.

12. தன்துணை காணு னுகுஞ் செப்புவீ ரந்தச் சங்கை
துன்மையாய் ராகு காரி சேயுமே நீச்ச னுகச்
சொன்னதோர் குற்றத் தாலே துணைவர்கள் காணு னுகும்
அன்னவன் தனியாய் வாழ்வன் அம்பிகை யாளே கேளாய்.

12. உடன்பிறந்தவர்களில்லாதவன். அதற்குக் காரணம் சொல்லுங்கள். ராகு சனி செவ்வாய் மூவரும் நீசமாக இருப்பதால், உடன் பிறந்தவர்கட்குத் தோஷமுண்டு. ஜாதகன் தனியனுக வாழ்ந்து வருவான். தாயே! கேளுங்கள்.

13. மங்களன் பதினென் பாண்டில் மருவிடுந் தென்மேல் பாரி
அங்கவள் குணத்தைச் சொல்வேன் அரிமனை யொப்ப தாகும்
பங்கய முகத்தா ளாகும் பாரினில் நல்லோ ளாவள்
எங்கள்போ லதிதிக் கன்ன மீவளா மென்று சொல்வோம்.

13. ஜாதகனுக்கு, பதினெண்பதாம் வயதில் தெற்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். இலக்குமியைப் போன்ற முகமுடையவள். உலகில் நல்லவள். எங்களைப் போன்ற துறவிகளுக்கு அன்னமளிப்பாள் என்று சொல்லுகின்றோம்.

14. இருதுணை யாண்பா லாகச் செப்புவோம் பாவைக் கேதான்
அரிவைநன் னடையு முண்டு ஆசாரம் புத்தி சாலி
திருகிலாள் கோபங் கொஞ்சந் தேவியும் யோக சாலி
வருவோரை யாத ரிப்பள் வஞ்சனை யெண்ணு நெஞ்சம்.

14. ஜாதகனுடைய மனைவிக்கு இரு சகோதரர்கள் உண்டு என்று சொல்லுவோம. அவளும் நன்னடத்தையுள்ளவள். ஆசாரமுள்ளவள். புத்திசாலி. சூதில்லாதவள். சிறிது கோபமுடையவள். யோகமுடையவள். தன்னிடம் வருபவர்களை ஆதரிப்பாள். வஞ்சனைக ளெண்ணுதவள்.

15. மாதுவும் யோக சாலி மதிப்பாக வாழ்வா ளாகும்
ஓதுவோம் வயது தீர்க்கம் உறுதியில் லாத நெஞ்சம்
காதலி சுதர்ப லத்தைக் கழறுவோ முனியே கேளும்
ஆதவன் போலா னென்று அணுகிடும் பூர்வந் தீர்க்கம்.

15. அவளும் யோகசாலி. மதிப்பாக வாழ்ந்து வருவாள். நீண்ட வயதுள்ளவள். திடமில்லாத மனத்தினள். ஜாதகியின் புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள். முனிவரே! சூரியன் போல் புத்திரனும் முதலில் தோன்றி தீர்க்கமாவான்.

16. அதற்குப்பின் கன்னி தோன்றும் ஆகிய நவமே யாகும்
சுதர்க்கங்கள் சிலவே யென்றேங் குறையிலா வாண்பால் ரண்டு
மதிமுகப் பெண்பால் மூன்று வரைகிறேந் தீர்க்க மாக
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

16. அதற்குப்பின் பெண் தோன்றுவார்கள். ஆகக்கூடுதல் ஒன்பது குழந்தைகள் உண்டு. சில குழந்தைகளுக்குச் சேதமுண்டு. இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். துறவிகளை யாதரிக்கும் தேவியே! கேளுங்கள்.

17. பாலகன் பூர்வந் தன்னைப் பகருவோம் போரூர் தன்னில்
சீலமில் லாத கங்கைக் குலந்தனி லுதித்து வின்னேன்
ஞாலங்கள் விருத்தி செய்து நாயகி மதலை வுண்டாய்ச்
சாலவே வாழு நாளில் தாங்கின வூழைச் சொல்வோம்.

17. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். **திருப்போரூரில்**, நல்லொழுக்கமில்லாத வேளாள குலத்தில் பிறந்து, விளைநிலங்களைப் பெருக்கி, மனைவி மக்களை யடைந்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீ வினையைச் சொல்லுகின்றோம்.

18. தன்துணை பாகந் தன்னைத் தாராமல் மோசஞ் செய்தான்
பின்துணை வருத்த முற்றுப் புகன்றசா பத்தைக் கேண்மோ
பொன்கடன் தராத பாவி பிறக்குபின் ஜன்மந் தன்னில்
என்னைப்போல் துணைவ ரின்றி இப்பூமி தன்னில் வாழ்வாய்.

18. தன் உடன்பிறந்தவனுடைய பாகத்தைத் தராமல் மோசம் செய்தான். இளைய சகோதரன் வருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். எனக்குக் கடனை மாத்திரம் கொடுத்து (சொத்தை எடுத்துக்கொண்ட) பாவியே! உனக்கு ஏற்படும் மறுபிறவியில் என்னைப் போன்ற உடன் பிறந்தவர்கள் இல்லாதவனாகி, இவ்வுலகில் வாழ்ந்து வருவாய்.

19. இன்னமும் பலவாறு சொன்னான் எய்திற்று அந்தச் சாபம்
கன்னிமேல் நிந்தை வார்த்தை கழறினான் மாது வெட்கித்
துன்மையாய் வார்த்தை என்மேல் செப்பின பாவிக் கேதான்
பின்வருஞ் ஜன்மந் தன்னில் பேதையர் துணைவ ரின்றி ;

19. இன்னும் பலவிதமாகக் கூறினான். அந்தச் சாபம் வந்தடைந்தது. இது தவிர, ஒரு கன்னிப் பெண்மீது பழியேற்படும்படியான வார்த்தைகளைக் கூறினான். அப்பெண்ணும் வெட்கமடைந்து, என்மீது இல்லாத வார்த்தைகளைக் கூறிய பாவியே! மறுபிறவியில் உனக்குச் சகோதரிகளில்லாமல் ;

20. உலகினில் வாழ்வா யென்ன உறைந்தது அந்தச் சாபம்
தலைவனு மந்தி யத்தில் ஷண்முகன் பத்தி யாகிக்
குலவினன் கால னோடு குறைதலை வரையப் பட்டுத்
திலகம்போ லுதிப்பா னாகும் சேர்ந்திடும் முன்னூழ்ச் சாபம்.

20. உலகில் வாழ்ந்து வருவாய் என்றாள். அந்தச் சாபம் இவனைப் பற்றியது. ஜாதகனும் தன் கடைசிக்காலத்தில் சுப்பிரமணியக் கடவுள்மீது பக்தியுடன் வாழ்ந்து மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப் பட்டு, திலகம்போல் பிறப்பான். முற்பிறவியின் சாபம் தொடரும்.

21. தனியனாய் வாழ்வா னாகும் சாற்றுவோ மிவனின் யோகம்
இனியசோல் தைரிய வானும் இடுக்கமே எவர்க்கு மெண்ணான்
கனமுள குடும்பி யாவன் காலாள்கள் காலி விருத்தி
வினைமனங் கொஞ்ச முண்டு வெற்றியாம் தொடு வழக்கு.

21. ஜாதகன் தனியனாக வாழ்ந்து வருவான். இவனுடைய யோகத்தை சொல்லுகின்றோம். தைரியமுள்ளவன். ஒருவருக்கும் தீங்கு செய்யாதவன். பெரிய குடும்பியாவான். வேலையாட்கள் உள்ளவன். கால்நடைகள் விருத்தியாகும். சிறிது கெட்டமனமும் உள்ளவன். எடுத்தகாரியம் ஜய மாகும்.

22. தந்தைநாள் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
பிந்தியும் பூமி சேர்ப்பன் புண்ணிய மனத்த னுகும்
விந்தையா யில்லஞ் செய்வன் மென்மையாய் மொழிவா னுகும்
நிந்தைகள் எற்கா னுகும் நிதானமாம் குடும்பி யாவன்.

22. ஜாதகன் பிதுரார்ஜிதமான பூமிகளைப் பெருக்குவான். பிறகு அதிக மாகவும் பூமி சேர்ப்பான். புண்ணியமான மனத்தினன். அழகிய வீடு கட்டுவான். வார்த்தையை மென்மையாகப் பேசுபவன். பழிகள் அடையாத வன். நிதானமான குடும்பத்தை யடைவான்.

23. எந்தக்கா லத்தில் பாலன் இல்லமு மெய்துஞ் சொல்வீர்
சந்ததம் முப்பாண் டின்மேல் தங்கிடு மில்ல மென்றேம்
பிந்தியும் பூமி கூவல் பெறுவனுஞ் சோலை செய்வன்
கந்தன்தன் அருளு மோங்கும் காதலி கேட்டி டாயே.

23. ஜாதகனுக்கு எந்தக் காலத்தில் வீடு கிட்டும் சொல்லுங்கள். அவ னுடைய முப்பதாம் வயதில் வீடு கிடைக்கும் என்றேம். மற்றும் தோட்டம் துறவு இவைகளைப் பெறுவான். முருகப்பிரான் அருள் விருத்தியாகும். தாயே! கேளுங்கள்.

24. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்க ளந்த சங்கை
பாகன்பொன் பளிங்கு பானு பற்றிடம் நந்தி யாக
நாகமும் ஆறில் தங்கத் திங்களும் தசம மாகத்
தோன்றுமாம் கமல யோகம் துரகாதி யோக மொன்று.

24. ஜாதகனுக்கு யோகம் ஏற்படும் என்று எப்படிச் சொன்னீர்கள்? அந்தச் சந்தேகத்தைச் சொல்லுங்கள். புதன் குரு சுக்கிரன் சூரியன் இவர்கள் விருடபத்தில் இருப்பதாலும், ராகு ஆறில் இருப்பதாலும், சந்திரன் பத்திலிருப்பதாலும், கமலயோகம் ஒன்றும் துரகாதியோகம் ஒன்றும் உண்டு.

25. இருவித யோகத் தாலே இயம்பினேம் வறுமை காணுன்
தரைவிருத்தி சல்யங் காணுன் தந்தைக்கு மேலாய் வாழ்வன்
ஆறஞ்சு வாண்டு மேலாய் அற்புத யோக மெய்தும்
பொருளது பூமி தன்னுல் பெறுவனு மென்று சொல்வோம்.

25. இருவித யோகங்களால் தரித்திரமில்லாதவன். பூமியைப் பெருக்கு வான். கடனுபத்ரவமில்லாதவன். தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய முப்பதாம் வயதுக்குமேல் அற்புதமான யோக முண்டாகும். பூமியால் பொருள் கிட்டும் என்றும் சொல்லுகின்றேம்.

26. அன்னையின் குணத்தைச் சொல்வோ மழகுளாள் பொறுமை [யுள்ளாள்
அன்னமு மன்பா யீவள் அயல்குற்றம் புகலா ளாகும்
அன்னவள் யோக சாலி அடாவடி தன்னில் சொல்லாள்
அன்னையில் மேல்பா லாகும் ஆளன்தன் மனதுக் கேத்தோள்.

26. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவள். பொறுமைசாலி. அன்புடன் அன்னமளிப்பாள். பிறர்மீது குற்றம் கூறுதவள். யோகமுள்ளவள். அடாவடியாகப் பேசாதவள். அவள் தன் தாய் வீடு மேற்குப் பக்கத்திலுள்ளது. தன் கணவன் மனத்துக் கேற்றவள்.

27. பித்தச்சூ டுடைய ளாகும் பேதைக்குத் துணையாண் மூன்று
சத்திமார் களு மிாண்டு சாற்றுவோ மிவளின் பூர்வம்
சித்தர்வாழ் பழனி தன்னில் ஜனித்தனள் தீயின் வம்சம்
முத்தின குடும்பி யாகி முதல்வியும் வாழு நாளில் ;

27. பித்தச் சூட்டு நோயுள்ளவள். இவளுக்கு மூன்று சகோதரர்களும் சகோதரிகள் இருவரும் உண்டு. இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சித்தர்கள் வாழும் பழனியில் வன்னிய குலத்தவளாகப் பிறந்தாள். முதிர்ந்த குடும்பம் உடையவளாகி வாழ்ந்து வரும் காலத்தில் ;

28. பஞ்சையாம் ஏழை மாது பாலருக் கன்னம் வேண்டிக
கெஞ்சினுள் மாதைத் தானும் கிளிமொழி வார்த்தை இன்றி
மிஞ்சிய வார்த்தை சொல்லி விரட்டினுள் ஏழை தன்னை
வஞ்சியும் மனவெ றுப்பால் வரைந்தசா பத்தைக் கேண்மோ.

28. ஏழைப் பெண் ஒருத்தி தன் குழந்தைக்கு அன்னம் வேண்டி இவளைக் கெஞ்சிக் கேட்டாள். இவளும் அன்புடன் ஆதரவான வார்த்தைகளில்லாமல் கடும் வார்த்தைகளைக் கூறி அவளை விரட்டி விட்டாள். ஏழைப் பெண்ணும் மனம் வருந்திக் கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

29. பாலர் சோறீயாப் பாவி பருகாது சுதர் உனக்குச்
சாலவே பின்ஜன் மத்தில் சந்ததி யில்லா தாயும்
நீலியுந் துணைப்பெண் ணின்றி நேமியில் வாழ்வா யென்ன
ஆலம்போல் அந்தச் சாபம் அணுகிற்று என்று சொல்வோம்.

29. குழந்தைக்குச் சாதம் கொடுக்க மறுத்த பாவியே! உனக்கு குழந்தைகள் பிறவார். ஏற்படும் மறு பிறவியிலும் சந்ததியில்லாதவளாயும், சகோதரிகளில்லாதவளாயும் வாழ்ந்து வருவாய் என்றுள். கொடிய விஷம் போல் அந்தச் சாபம் இவளைப் பற்றியது என்று சொல்லுகின்றோம்.

30. மாதுக்கு அந்தி யத்தில் மைந்தர்கள் தோட மாயும்
வேதனை மனத்த ளாகி விநயகன் கோட்டத் திற்குச்
சோதியு மொன்று வைத்துச் சண்டன்தன் பதிக்கு சென்று
வேதனல் வரையப் பட்டு விளங்கினுள் என்று சொல்வோம்.

30. ஜாதகனுடைய தாயும், தன் கடைசிக் காலத்தில், புத்திரர்களுக்குத் தோஷமேற்பட்டு, துன்புற்ற மனமுள்ளவளாகி, விநயகப்பெருமான் கோயிலுக்கு விளக்கு ஒன்று வைத்து, இறுதியில் மரண மடைந்தாள். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்று சொல்லுகின்றோம்.

31. முன்ஜன்ம வினையி னாலே மேவாது சுதர்கள் தாமும்
இந்ததோர் பாலன் தீர்க்கம் எப்படிச் சொல்லு மென்னக்
கன்னியு முன்ஜன் மத்தில கணேசன்தன் னால யத்தில்
உன்னத புண்ணியஞ் செய்து ஒருவனே புத்திர னென்றோம்.

31. முற்பிறவியின் தீவினையால் புத்திரர்கள் நிலையார் என்றோம். இந்த ஜாதகன் எப்படி நீண்ட ஆயுளுள்ளவன் என்று சொல்லுங்கள். இவளும், முற்பிறவியில் விநாயகர் ஆலயத்தில் தீபகைங்கரியமாகிய உயர்ந்த புண்ணியம் செய்து வந்ததால் புத்திரன் ஒருவனே பிறப்பான் என்றோம்.

32. பின்ஜன்ம மலைநா டதனில் பிறப்பளாம் பிரம்ம சேயாய்க்
கன்மகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
துன்மையாய் முப்பா னெட்டில் செப்புவோ மன்னை கண்டம்
மன்னிய முப்பா னாறில் மடிவுண்டு தந்தை தானும்.

32. மறு பிறவியில், மலை நாட்டில், அந்தணகுலத்தவளாகப் பிறப்பாள். ஜாதகனுடைய கரும காலங்களைச் சொல்லுங்கள். முனிவரே! தாங்கள். தீமையாக ஜாதகனுடைய முப்பத்தெட்டாம் வயதில் தாய் மரணமடைவாள். முப்பத்தாறும் வயதில் தந்தை மரணமடைவான்.

33. மறுஜன்மங் கலிங்க நாட்டில் மறைக்குல முதிப்பா னாகும்
அறுபது வொன்ப தாண்டில் ஐப்பசி மாதந் தன்னில்
திருமக னுடல மேகுஞ் செப்பின மொழிகுன் றாவே
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

33. ஜாதகனுடைய தந்தை, மறுபிறவியில், கலிங்க தேசத்தில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான். ஜாதகன் தன் அறுபத்தொன்பதாம் வயதில் ஐப்பசி மாதத்தில் மரணமடைவான். கூறிய வார்த்தைகள் தவறா. கரிய யானை முகத்தையுடைய விநாயகனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

34. பின்ஜன்மங் காஞ்சி தன்னில் பிறப்பனாஞ் சௌராட்டிர வம்சம்
பொன்னொடு பணிதி பெற்றுப் புகழுடன் வாழ்வா னாகும்
தன்மனை யிவன்பின் னாலே சேருவாள் கால னாடு
கன்னென மொழியை யொக்குங் காதலி கேட்டி டாயே.

34. மறு பிறவி, காஞ்சீபுரத்தில், சௌராஷ்டிர குலத்தில் பிறந்து, பொன்னுடன் ஆபரணங்களைப் பெற்று, கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். இவனுக்குப்பின் இவன் மனைவி மரணமடைவாள். இனிய வார்த்தைகளைப் பேசும் தேவியே! கேளுங்கள்.

35. ஜனித்திடு காலந் தன்னில் சனிதசை வாண்டீ ரேழு
குனித்திடுந் திங்க ளொன்பான் கூறினோம் பூர்வ பாகம்
இனியுத்ர பாகந் தன்னில் இயம்புவோம் விபர மாக
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

35. ஜாதகன் ஜனிக்கும் காலத்தில், சனி மகாதசையில், பதினான்கு வருடங்களும் ஒன்பது மாதங்களும் பாக்கியாகும். இது முதல் பாகம். இரண்டாம் பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம். தவங்கள் இயற்றும் அம்பிகையே! கேளுங்கள்.

# ஜாதகம் 69.

1. மந்திரி புதன் சேய் பானு அரியினில் கேது வில்லில்
சந்திரன் வெள்ளி ராகு தங்கிடம் மிதுன மாக
மந்தனும் கெண்டை யாக வீணையுஞ் ஜன்ம மாக
இந்தவாறு கோளு நின்ருல் இயம்புவீர் பலனை என்று;

1. குரு புதன் செவ்வாய் சூரியன் சிம்மத்திலும், கேது தனுசிலும், சந்திரன் சுக்கிரன் ராகு மிதுனத்திலும், சனி மீனத்திலும் இருந்து, மிதுனம் லக்கினமாகவும், இவ்விதம் நவக்கிரக நிலைகளுமிருப்பின், பலனைக் கூறுங்கள் என்று;

| | | | |
|---|---|---|---|
| சனி | | | லக்கினம் சந்திரன் சுக்கிான் ராகு |
| | இராசி சக்கரம் | | |
| | | | குரு புதன் செவ்வாய் சூரியன் |
| கேது | | | |

2. மங்கையும் கேட்கும் போது மாமுனி புகலு கின்ருர்
இங்கிவை ஆண்பால் ஜன்மம் குலவிடும் வடதென் வீதி
தங்கிடு மேல்பால் வாசல் சங்கரன் கோட்ட முத்ரம்
சங்கரன் அருகில் தங்கும் ஆளிவா கனத்தாள் மீனம்.

2. பார்வதி தேவி கேட்கும்போது மாமுனிவர் கூறுகின்ருர். இஃது ஆண் பிள்ளையின் ஜாதகம். இவன் வீடு வடக்குத் தெற்கான தெருவில் மேற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வடக்கில் சிவபெருமான் ஆலயமும் மற்ருெரு சிவன் கோயில் பக்கத்திலும் இருக்கும். சிங்க வாகனத்தையுடைய காளி தேவி (வட கிழக்கு) மீனதிக்கில் உள்ளாள்.

3. மாலவன் மேல்பால் தங்கும் மாரியு மருகில் தங்கும்
சாலஇவ் வடையா ளத்துள் ஜனிப்பனும் சேஷ்ட னுகப்
பாலகன் வடுகச் சேயாய்ப் பிறப்பனு மென்று சொல்வோம்
ஏலவே குடும்பச் சேதி இயம்புவோ மினிமே லாக.

3. மேற்குத் திக்கில் திருமாலின் கோயிலும், அருகில் மாரியம்மன் கோவிலும் உள்ள இவ்வடையாளங்களுடைய ஊரில் தன் தந்தைக்கு மூத்த புதல்வனுக வன்னியகுலத்தில் பிறப்பான் என்று சொல்லுகின்ருேம். இனி இவனுடைய குடும்பச் செய்திகளைக் கூறுகின்ருேம்.

4. தந்தையின் துணையாண் ரண்டு சக்திமார் மூவ ரென்றோம்
இந்தவ னுதிக்குங் காலே இயம்பின ஆண்பா லுந்தான்
முன்பின்னாய் மொழிய லாகும் மூத்தவன் சேதி கேளாய்ப்
பொன்னிற முடைய னாகும் பூமியை பரிபா லிப்பான்.

4. ஜாதகனுடைய தந்தைக்கு இரு சகோதரர்களும், மூன்று சகோதரிகளும் உள்ளனர். இவன் பிறக்கும்போது கூறிய சகோதரர்கள் முன் பின்னாக இருப்பர். மூத்த சகோதரனின் செய்தியைக் கேளுங்கள். பொன் நிற முள்ளவன். பூமியை ஆண்டு வருவான்.

5. வித்தையு மில்லா னாகும் வெகுளியாம் ஈகை யுண்டு
உத்தம குணத்தா னாகும் உண்மையா மனத்த னாகும்
பத்தினி ஒன்றே தீர்க்கம் பாலர்கள் கன்னி மூன்று
சுத்தமாய் ஆண்பா லொன்று தீர்க்கமா மென்று ரைப்போம்.

5. கல்வி யறிவில்லாதவன். வெகுளியாயிருப்பான். கொடுக்கும் குண முள்ளவன். உயர்ந்த குணவான். உண்மையுள்ள மனத்தினன். மனைவி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவளென்றோம். ஒரு புத்திரனும் மூன்று புத்திரிகளும் பிறந்து தீர்க்காயுளுள்ளவர்களாவர்கள் என்றோம்.

6. உடன்கூடி வாழ்வா னாகும் உலகினில் சல்லியங் காணான்
தடபுடல் செய்கை யுண்டு சாதமுங் குறைவு றுதான்
அடவுடன் வயது தீர்க்கம் வரைகிறோம் பிதா குணத்தைக்
கடன்கொள்வன் நிவிர்த்தி செய்வன் கஞ்சமாம் நிறத்த னாகும்.

6. ஜாதகனுடைய தந்தையுடன் அவன் கூடி வாழ்ந்திருப்பான். கடனில்லாதவன். ஆடம்பரச் செய்கைகள் உள்ளவன். அன்னத்துக்குக் குறைவில்லாதவன். நீண்ட ஆயுளுள்ளவன். ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். கடன் வாங்குவான். அதைத் தீர்த்து விடுவான் தாமரையைப் போன்ற நிறமுள்ளவன்.

7. ஆதியில் வறுமை கொஞ்சம் அவனிகள் பின்னால் சேர்ப்பன்
பாதக மனமில் லாதான் தன்தன மில்லா னாகும்
வேதனை ஒருவர்க் கெண்ணான் வித்தையு மில்லா னாகும்
மாதவர் பக்தி பூணான் வளைவுமே புதிதாய்ச் செய்வன்.

7. முதலில் சிறிது வறுமையுள்ளவன். பூமியைப் பிற்காலத்தில் சேர்ப்பான். தீய எண்ணங்க ளில்லாதவன். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருளில்லாதவன். பிறருக்குத் தீங்கு செய்ய நினையாதவன். கல்வியறிவில்லாதவன். புதிய வீட்டைக் கட்டுவான்.

8. தந்திர மொழியு முண்டு சாதமுங் குறைவு றுதான்
பிந்தியோ சனையு முள்ளான் புயபல முடைய னாகும்
சிந்தையு மிரண்டு மாகும் சீக்கிர கோபஞ் சாந்தம்
நந்தியா விருத்தி யுண்டு நடையது துருசு மாகும்.

8. தந்திரமாகப் பேசுபவன். அன்னத்துக்குக் குறைவில்லாதவன். பின்யோசனை யுள்ளவன். பராக்கிரமசாலி. இருவிதமான எண்ணங்களுள்ளவன். முன்கோபி. சீக்கிரத்தில் சாந்தமடைவான். பசு எருதுகள் விருத்தியாகும். வேகமாக நடப்பவன்.

9. ஈகையுங் கொஞ்ச முண்டு எதிரியை வசியங் கொள்வன்
தோகைசொல் கடவா னாகும் தொல்புவி இருவூர் சேர்ப்பன்
ஆகம முணர்ந்தோர் நேசம் அவனுமே கொள்ளா னாகும்
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

9. சிறிது கொடுக்கும் குணமுள்ளவன். தன் விரோதிகளை வசீகரிக்க வல்லவன். தன் மனைவியின் வார்த்தைப்படி நடப்பவன். பூமியை இரு ஊரில் சேர்ப்பான். வேதங்களறிந்த அந்தணர்கள் நட்புக் கொள்ளாதவன். போக சமுத்திரத்தைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

10. இந்நெறி யுடையா னுக்கு இப்பால னுதிப்பா னாதும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் சிவந்த மேனி
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பான் முன்கோ பத்தன்
பொன்பணி சேர்ப்பா னாகும் பூமியை விருத்தி செய்வன்.

10. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவன். சிவந்த உடலுள்ளவன். தன் வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பான். முன் கோபி. பொன்னாபரணங்களைச் சேர்ப்பான். பூமியைப் பெருக்குவான்.

11. உண்டியும் சிறிதே உண்பன் சிற்றுண்டி யதிகங் கொள்வன்
துண்டமாய்க் கூறா னாகும் தொடுவழக் கதனில் செல்லான்
வண்டிவா கனமு மேற்பன் மாற்றானை யுறவு கொள்ளான்
தண்டமி முடைய னாகுஞ் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு.

11. அற்ப உணவே அருந்துவான். சிற்றுண்டி அதிகம் உண்பவன். கண்டித்துப் பேசாதவன். வீண் வம்புக்குச் செல்லாதவன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். விரோதிகளுடன் உறவாடாதவன். குளிர்ந்த தமிழ்ப் பாஷையை யறிந்தவன். கால்நடைகள் விருத்தியுள்ளவன்.

12. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பா லொன்று
அவனியில் கன்னி ரண்டு வரைகிறோந் தீர்க்க மாக
நவனியில் மற்ற வெல்லாம் நசித்திடு மென்று சொல்வோம்
சிவன்தனைப் பூசை செய்யுஞ் செல்வதி கேட்டி டாயே.

12. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர்களெல்லாம் நிலையார் என்று சொல்லுகின்றோம். சிவபெருமானைப் பூசை புரியும் செல்வியே! கேளுங்கள்.

13. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடைய ளாகும்
சூதான மனமுங் கொஞ்சஞ் சொல்லது வதிக முண்டு
பாதக மனமில் லாதாள் பதர்குண மில்லா ளாகும்
சாதிப்பாள் சிலவே சங்கை சந்தேக குணத்தா ளாகும்.

13. ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றேம். சிவந்த நிற முள்ளவள். சிறிது கபடமான மன முள்ளவள். அதிகமாகப் பேசுபவள். தீய மன மில்லாதவள். கெட்ட குணங்க ளில்லாதவள். சில தீரச் செயல்கள் புரிவாள். சந்தேகப்படும் இயல்பினள்.

14. பித்தச்சூ டுடைய ளாகும் பொய்யது புகலா ளாகும்
சுத்தமுங் கொஞ்ச முண்டு தோகைபோல் வடிவு மொக்கும்
பத்தினி துணையாண் ரண்டு பாவையு மூவ ராகும்
பெத்ததா யில்லங் கீழ்ப்பால் பலமிலா நசிக்கு மென்றேம்.

14. பித்தச்சூட்டு நோயுள்ளவள். பொய் பேசாதவள். சிறிது சுத்த மும் உடையவள். மயிலைப்போன்ற அழகுள்ளவள். இரு சகோதரர்களும் மூன்று சகோதரிகளும் உள்ளவள். தாயின் வீடு கிழக்குத் திசையில் உள்ளது. அது பலமில்லாமல் நசித்து விடுமென்றேம்.

15. இல்லமு மலைச்ச லாகும் இவள்துணை வெளிதே சங்கள்
செல்லுவா னென்று சொல்வோம் தென்..........துஞ்சு போல
அல்லலாய் வாழ்வா ளாகும் அவன்சேதி பின்பால் சொல்வோம்
தல்லியின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோந் தாயே கேளும்.

15. அலைச்சலுள்ளவள். இவளுடைய சகோதரன் வெளி தேசங்க ளுக்குச் செல்லுபவன்.......................................... துன்பத்துடன் வாழ்ந்து வருவாள். அவர்களின் சேதியைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றேம். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். தாயே! கேளுங்கள்.

16. கொங்குநா டதனி லேதான் உதித்தனள் கர்ண சேயாய்ப்
பாங்கான குடும்பி யாகிப் பலருக்கு நல்லோ ளாகி
ஓங்கினோர்க் கன்ன மீந்து இடரான புத்தி யின்றி
ஆங்கவள் வினையில் லாமல் அணுகினள் கால னூடு.

16. கொங்கு நாட்டில், கருணீகர் மரபில் தோன்றி, வளமுள்ள குடும்பி யாகி, பலபேருக்கு நல்லவளாகி, ஏழைகளுக்கு அன்னமளித்து வந்து, தீய எண்ணங்களில்லாதவளாகி, தீவினைகளுமில்லாதவளாக இருந்து மரண மடைந்தாள்.

17. பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
கன்னிகை வந்த பின்பு கலைபிறை போல யோகம்
அன்னமுங் குறைவு ருதாள் உரைக்கின்றே மிவள்பின் ஜன்மம்
உன்னத காஞ்சி தன்னில் உதிப்பளாஞ் சௌராஷ்ட்ர வம்சம்.

17. மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று சொல்லுகின்ருேம். இவள் கணவனே யடைந்த பிறகு பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தியாகும். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவள். இவளுடைய மறு பிறப்பைச் சொல்லுகின்ருேம். உயர்ந்த காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிர வம்சத்தில் பிறப்பாள்.

18. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் பெரு முக்கல் தன் [னில்
வந்தனன் வைசியச் சேயாய் வளமுள குடும்பி யாகி
நிந்தையு மில்லா தாகி நேமியுஞ் சீவித் தேதான்
முந்திஞேர்த் தொண்டு பூண்டு வினையது வில்லா தாகி ;

18. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்ருேம். முக்கூடல்தன்னில் வன்னிய குலத்தவனுகப் பிறந்து, செழிப்புள்ள குடும்ப முள்ளவனுகி, பழிகள் அடையாதவனுகி, விவசாயம் செய்து ஜீவித்து வந்து பெரியோர்களுக்குத் தொண்டுகள் பல செய்து, தீவினைகளில்லாதவனுகி;

19. காலன்தன் நாடு சென்று கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமில் லாத முந்திய குமைதி லுதிப்பா னுகும்
ஞாலத்தா லுய்வா னுகும் நல்லோர்க்கு நல்லோ னுவன்
மால்பத்தி கொஞ்ச முண்டு வஞ்சனே மனமுங் கொஞ்சம்.

19. மரண மடைந்து மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு நல்லொழுக்க மில்லாத குலத்தில் பிறப்பான். விவசாயம் செய்து ஜீவித்து வருவான். நல்லவருக்கு நல்லவனுக இருப்பான். திருமாலின்மீது பக்தி யுள்ளவன். வஞ்சனேகள் உள்ள மனமுள்ளவன்.

20. துறவுகள் சோலே செய்வன் தொடுத்ததைச் செய்வா னுகும்
பொருள்கடன் கொள்ளா னுகும் புகலுவோ மிவன்பின் ஜன்மம்
திருவள்ளூர் தன்னி லேதாஞ் ஜனிப்பானும் ரெட்டி வமிசம்
பெரிதான வணிபஞ் செய்வன் பேதையே கேட்டி டாயே.

20. தோட்டம் துறவுகள் ஏற்படுத்துவான். எடுத்த காரியத்தை வெல் வான். பணம் கடன் வாங்காதவன். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்ருேம். திருவள்ளூரில் ரெட்டியார் மரபில் பிறப்பான். வியாபாரம் செய்பவன். தாயே ! கேளுங்கள்.

21. ஆருறு வாண்டி லேதான் அனுகிடுந் தந்தை கண்டம்
கூறுவோ நாற்ப தாண்டில் குழவியி னன்னே கண்டம்
மாரன்தன் மணத்தின் காலம் வரைகிறேம் பதினு ருண்டில்
காரிழை மேல்பால் நேர்வள் கழறுவோ மவள் குணத்தை.

21. ஜாதகனுடைய முப்பத்தாரும் வயதில் தந்தை மரண மடைவான். நாற்பதாம் வயதில் ஜாதகனின் தாய் மரணமடைவாள். ஜாதகனுடைய திருமணக்காலத்தைக் கூறுவோம். அவனுக்குப் பதினுரும் வயதில் மேற்குப் பக்கத்தி லிருந்து மனேவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லு கின்ருேம்.

22. பால்பாக்ய முடைய ளாகும் பசித்தோர்க்குத் தாக மீவள்
சீலம்போல் வெளிம யக்கஞ் சிந்தையு நல்ல தாகும்
காலத்தை யறிந்து வாழ்வள் காதலி தீர்க்க சீவி
ஞாலமேல் நல்லோ ளாவள் நவிலுவோர் பிருகு தாமும்.

22. புத்திரபாக்கிய முடையவள். பசித்தவர்கட்கு அன்னமளிப்பாள். நல்லொழுக்க முள்ளவள்போல் தோற்றமுடையவள். நல்ல மனமுள்ளவள். வருங்காலத்தை அறிந்து அதன்படி வாழ்ந்து வருவாள். நீண்ட ஆயுளுள்ளவள். உலகில் நல்லவளாவள். பிருகு முனிவர் கூறுகின்றார்.

23. ஜாதகன் தனக்குத் தாரஞ் சாற்வோ மிரண்டு மாக
ஓதுவீ ரந்தச் சங்கை ஓரேழில் கேது தங்கக்
காதலி யிரண்டு வென்றேங் கௌசிகர் மறுத்துச் சொல்வார்
சீதள மதியு வெள்ளி ஜன்மத்தி லிருப்ப தாலே ;

23. ஜாதகனுக்கு இரு தாரம் உண்டு என்று சொல்லுகின்றேம். அதற்குக் காரணம் கூறுங்கள். ஏழாம் வீட்டில் கேது தங்கி யிருப்பதால் இரு மனைவியர் என்றேம். கௌசிக முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். மழைக்கோளாகிய சுக்கிரனும் செவ்வாயும் ஜன்மலக்கினமாகிய மிதுனத்தி லிருப்பதால் ;

24. சத்தமத் தோன்ப லத்தல் தங்கின பலத்தி னாலே
வித்தகி யொன்றே தீர்க்கம் விளம்புவோம் புத்திர பாவம்
சுத்தமா யாண்பால் மூன்று தோகைய ரிருவர் தீர்க்கம்
பத்தாது மற்ற வெல்லாம் பார்வதி கேட்டி டாயே.

24. ஏழாம் வீட்டுக்குரிய குரு மூன்றில் தங்கி யிருப்பதால் மனைவி யொருத்தியே நீண்ட ஆயுள் உள்ளவள். புத்திர பாவத்தைச் சொல்லுகின்றேம். திண்ணமாக மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவைகளெல்லாம் நிலையா. பார்வதியே ! கேளுங்கள்.

25. முன்னவ னிருந்த ஜன்ம மொழிகிறேங் காஞ்சி தன்னில்
நன்மைசெய் வேளான் வம்சம் நல்கியே கிருஷி செய்து
அன்னையுந் தந்தை மிக்க அவனுமே வாழ்ந்து மேதான்
பின்னோர்க்குத் தாக மீந்து பவமது மில்லா தாகி ;

25. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். காஞ்சிபுரத்தில், நற்குணமுள்ள வேளாள குலத்தவனாகப் பிறந்து, விவசாயம் செய்துவந்து, தாய் தந்தையர் கொண்டாடும்படி வாழ்ந்துவந்து, ஏழைகளுக்கு நீர் அன்ன மளித்துவந்து, தீச்செயல்களில்லாதவனாகி ;

26. மறலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டுத்
திருமக னுதிப்பா னாகுஞ் செப்புவோ மிவனின் யோகம்
தரையது நாட்கு நாளாய்ச் சேர்ப்பனும் ஊக சாலி
குறையென்றோர்க் குதவி செய்வன் கொடுமையை யெவர்க்கு
[மெண்ணான்.

26. மரணமடைந்து, பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று சொல்லுகின்ருேம். இவனுடைய யோகத்தைக் கூறுகின்ருேம். நாளுக்கு நாள் பூமியைச் சேர்ப்பான். ஊகமுள்ளவன். குறையுள்ளவர்களுக்கு உதவி புரிவான். ஒருவருக்கும் தீங்குசெய்ய எண்ணுதவன்.

27. பந்துவு மதிக்க வாழ்வன் பாரபட் சங்கள் பேசான்
வந்தவர்க் கன்ன மீவன் மாடுகள் பணையோர் விருத்தி
சுந்தர முடைய ளுகுந் தேகமு முளோச்ச னுள்ளான்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் ருவே.

27. தன் உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்ந்துவருவான். ஒரவஞ்சனைகள் பேசாதவன். தன்னை அண்டினவர்கட்கு அன்னமளிப்பான். கால் நடைகள் விருத்தியுள்ளவன். அழகுள்ளவன். மெல்லிய சரீரமுடையவன். முருகக் கடவுளைப்பெற்ற தேவியே! கூறிய வார்த்தைகள் தவரு.

28. மூன்றுண்டுள் மாதந் தோறு மேவிடும் பிணியு மேதான்
சான்றுமே பாரு மேதான் தங்கிடு மைந்துள் கண்டம்
ஏந்திழை மாதே யாங்கள் இயம்புவோ மறுப தாண்டில்
நேர்ந்திடு மகர மாதம் நிருபனி னுடல மேகும்.

28. மூன்று வயதுக்குள் மாதா மாதம் நோய் ஏற்படும். ஐந்து வயதுக்குள் கண்டம் நேரும். தாயே! அறுபதாம் வயதில் தை மாதத்தில் ஜாதகன் மரணமடைவான்.

29. மறுஜன்மந் தோகை தன்னில் வருகுவான் ரெட்டி வம்சம்
தரையது வதிக முண்டாய்த் தானவன் வாழ்வா ளுகும்
திருமகன் ஜனன காலமாதிரை முதல்பா தத்தில்
அரவுதன் தசையி ருப்பு அறைந்தன மீரெட் டாண்டும்.

29. மறுபிறவி தோகை மலையில் ரெட்டியார் மரபில் பிறப்பான். பூஸ்திதிகளை அதிகம்பெற்று வாழ்ந்துவருவான். ஜாதகனது ஜனனகாலத்தில் திருவாதிரை முதல் பாதம். ராகு மகாதசை இருப்பு பதினுறு வருடங்களாகும்.

30. பலனதைப் புகலக் கேண்மோ பாலகன் பிணிய நேகம்
நிலமது விருத்தி யென்ருேம் நேர்ந்திடும் பணையோர் விருத்தி
சிறியதந் தைக்கு மாது சேருவா ளென்று சொல்வோம்
தலைவனுக் கதிக கண்டஞ் சார்ந்திடு மென்று சொல்வோம்.

30. அக்காலத்திய பொதுப்பலனைச் சொல்லுகின்ருேம். கேளுங்கள். பலவித நோய்கள் ஏற்படும். நிலங்கள் விருத்தியாகும். பண்ணை ஏர் முதலியன பெருகும். சிறியதந்தைக்கு மனைவி வாய்ப்பாள் என்று சொல்லுகின்ருேம். ஜாதகனுக்குக் கண்டம் அதிகமுண்டு என்று சொல்லுகின்ருேம்.

31. தந்தையின் துணைவன் சேதி சாற்றுவீர் முனியே நீர்தாம்
சிந்தையு மிரண்டு மாகுஞ் சோம்பலுங் கொஞ்ச முண்டு
நந்தியா விருத்தி யுண்டு நாயகன் வறுமை காணன்
முந்தின கோபி யாவன் மூத்தோன்சொல் தடுத்து வாழ்வன்.

31. ஜாதகனுடைய சிறிய தந்தையின் செய்திகளைக் கூறுங்கள். முனிவரே! இருவிதமான எண்ணங்களுள்ளவன். சிறிது சோம்பலுள்ளவன். பசு, எருது முதலியவற்றின் விருத்தி யுடையவன். தரித்திரமில்லாதவன். முன்கோபமுள்ளவன். சகோதரனுடைய வார்த்தையை மீறி நடப்பவன்.

32. பிறந்தநாள் முதல மாகப் பூமியுஞ் சேர்த லுண்டு
வறுமைகள் நீங்கு மென்றே மனைவியு மொன்றே மேற்கில்
பெறுஞ்சுத ராண்பா லொன்று பேதையு மிருவர் தீர்க்கம்
திருமகன் வயது முள்ளான் செப்புவோம் பின்பால் சேதி.

32. இவன் பிறந்த நாள் முதல் பூமி விருத்தியாகும். தரித்திரம்விலகும். மனைவி யொருத்தியே. அவள் மேற்குத் திக்கிலிருந்து வாய்ப்பாள். புத்திர பாக்கியத்தைச் சொல்லுவோம். ஒரு பிள்ளையும் இரு பெண்களும் பிறந்து தீர்க்க மாவர். இந்த ஜாதகன் நீண்ட வயதுள்ளவன். பிற்பாகத்தில் மற்றவற்றைச் சொல்லுகின்றேம்.

## ஜாதகம் 70.

1. மிதுனமுஞ் ஜன்ம மாக வெள்ளிசேய் மதியுந் தங்க
அதிதியும் நாலி லாக அந்தணன் நாலி லேறத்
ததிகயறு தசத்தி லாகச் செங்கதிர் புதனா றுறில்
விதியவன் நவத்தி லாக வாதிரை மூன்றும் பாதம்.

1. மிதுனம் ஜன்மலக்கினமாகவும் அதே இடத்தில் சுக்கிரன் சந்திரன் செவ்வாய்களும் கேது,நாலாமிடமாகிய கன்னியிலும், குரு ஆருமிடமாகிய விருச்சிகத்திலும், ராகு பத்தாமிடமாகிய மீனத்திலும்,சூரியன் புதன் பன்னிரண்டாமிட மாகிய விருஷபத்திலும், சனி ஒன்பதாமிடமாகிய கும்பத்திலும் இருந்து, திருவாதிரை மூன்றும் பாதத்தில் ;

| | | | |
|---|---|---|---|
| ராகு | | சூரியன் புதன் | லக்னம் சுக்கிரன் சந்திரன் செவ்வாய் |
| சனி | இராசி சக்கரம் | | |
| | | | |
| | குரு | | கேது |

2. பிறந்தசேய் பலனெவ் வாறு பேசுவீர் முனியே நீர்தாம்
பராசரும் சொல்லு கின்றார் பாலகன் ஆணுஞ் ஜன்மம்
பெருமில்லம் வடதென் வீதி வாசலும் மேல்பால் நோக்கம்
அறுமுகன் கோட்டம் மேற்கில் அம்மையும் வடபால் தங்கும்.

2. பிறந்த குழந்தையின் பலன் எப்படி என்று சொல்லுங்கள், முனிவரே! தாங்கள். பராசர முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் குழந்தையின் ஜாதகம். பிறக்கும் வீடு தெற்கு வடக்கான தெருவில் மேற்கு நோக்கிய வாயிலையுடையது. ஆறுமுகக்கடவுள் கோவில் மேற்கிலும் வடக்கில் அம்மன் கோயிலும் உள.

3. தந்தியின் கோட்டந் தென்பால் செப்பிய வடையா ளத்துள்
இந்தவன் வருவா னுகும் இயம்புவோ மிவனின் யோகம்
தந்தைதாய்த் துணைவர் யோகந் தன்மனை புத்ர யோகம்
வந்தவன் முன்பின் ஜன்மம் வரைகிறே மிந் நூல் தன்னில்.

3. தெற்கில் விநாயகர் ஆலயமும் உள்ள இவ்வடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் பிறப்பான். இவனுடைய யோகத்தையும், தாய் தந்தை உடன்பிறந்தவர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், ஜாதகனுடைய முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சரசமாய்ப் பேசு வானும்
தந்தியின் நிறத்தா னுகுந் தரித்தொழில் புரிகு வானும்
தந்தையி னில்லம் வாழான் பின்வேறு வில்லஞ் செய்வன்
தன்மனங் கவடு மில்லான் தரணிகள் சேர்ப்பா னுகும்.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். சரசமாகப் பேசுபவன். யானையைப் போன்ற கரிய நிற முள்ளவன். நெசவுத் தொழில் செய்து வருவான். தன் தந்தையின் வீட்டில் வாழ்ந்து வராதவன். வேறு வீட்டிற்குச்சென்று வசிப்பவன். கபட மில்லாத மனத்தினன். பூமிகளைப் பெருக்குவான்.

5. ஆதியில் வறுமை யுண்டு அல்பமா முண்டி யென்றோம்
பாதியின் வயது மேலாய்ப் பார்சேர்க்கைத் தொழிலு மேன்மை
போதனஞ் சேர்த லுண்டு புண்ணிய மனத்த னுகும்
கியாதியு முடைய னுகுங் கௌரவ குடும்பி யாகும்.

5. முதலில் வறுமையுள்ளவன். அற்பமான ஆகாரமே உண்பவன. ஜாதகனுடைய பாதி வயதுக்குமேல் தொழில் மேன்மையடையும் பூமியும் சேரும். செல்வம் பெருகும். புண்ணியமான மனத்தினன். கீர்த்தி யுடையவன். கௌரவமான குடும்பமுள்ளவன்.

6. அறமதி லிச்சை யுள்ளான் ஆபத்தென் றோர்க்கு ஈவன்
இருகுண முடையா னுகும் ஏவலா ளுடைய னுகும்
அரனடி தொண்டு பூண்பன் அவன்துணை யாண்பா லொன்று
வரிவிழி மார்கள் மூன்று வரைகிறோ மிவனுக் கேதான்.

6. தருமத்தில் விருப்பங் கொள்ளுபவன். ஆபத்து என்று வந்தவர் களுக்குப் பொருளைக் கொடுத்து உதவிபுரிவான். இருவிதமான குண முள் வன். வேலையாட்கள் உள்ளவன். சிவனடியில் தொண்டுகள் செய்துவரு வான். உடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூவரும் உண்டு என்று சொல்லுகின்றோம்.

7. சொல்லிய துணைவன் தானுஞ் சிறியோனு மொழிய லாகும்
புல்குவோ மவன்கு ணத்தைப் புறம்பேசான் செட்டுச் செய்வன்
அல்லலில் லாமல் வாழ்வன் அவனியை விருத்தி செய்வன்
வெல்லுஞ்சொல் லுடைய னுகும் வீண்செல வில்லா னென்றோம்.

7. கூறப்பட்ட சகோதரன் ஜாதகனுடைய தந்தையின் சிறிய சகோதர னுவன். அவன் குணத்தைச் சொல்லுகின்றோம். பொய்ச்சாட்சி சொல்லாத வன். வர்த்தகம் செய்துவருவான். துன்பங்களில்லாமல் வாழ்ந்து வருவான். பூமியைப் பெருக்குவான். சொல்வன்மை யுடையவன். வீண்செல வில்லாதவன்.

8. குலத்தொழில் செய்வா னுகும் குஞ்சர மொத்த தேகன்
பலரையும் வசியங் கொள்வன் பாவையு மொன்றே தீர்க்கம்
நலமுள சுதராண் ரண்டு நல்கிடுங் கன்னி யவ்வாறு
தலைவன்பின் னுளில் வேறு சாருவா னென்று சொல்வோம்.

8. தன் குலத்தொழிலையே செய்துவருபவன். யானையையொத்த சரீரமுடையவன். எல்லோரையும் வசீகரிக்க வல்லவன். மனைவியும் ஒருத்தியே யாவள். நன்மையுள்ள இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் உண்டு என்று சொல்லுகின்றோம். இவன் பின்னாட்களில் வேறாகச் செல்வான் என்று சொல்லுகின்றோம்.

9. ஜாதகன் குணத்தைச் சொல்வேன் தயையுளான் கல்வி யுண்டு
ஓதுவான் சுகமாய் வார்த்தை உள்மனங் கபடில் லாதான்
மேதினி விருத்தி செய்வன் மெல்லியும் பகையுஞ் சின்னாள்
தீதான குணமில் லாதான் திகைத்தோருக் குதவி செய்வன்.

9. ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். தயைக் குணமுள்ளவன். கல்வியறிவுள்ளவன். இன்பமாகப் பேசுபவன். கபடமில்லாத மனத்தினன். பூமியைப் பெருக்குவான். சின்னாட்கள் மனைவியுடன் விரோதம் கொள்ளுபவன். தீய குணங்க ளில்லாதவன். ஆபத்தடைந்தவர்கட்கு உதவி புரிவான்.

10. பிறந்தநாள் முதலா மாகப் பிறைபோலத் தொழிலில் மேன்மை
பொருளினால் பூமி சேர்க்கை புண்ணிய மனத்த னாகும்
தரிபடக் கூறா னாகுஞ் சந்தேக மனத்த னாகும்
அறுமுகன் பத்தி பூண்பன் அண்டின பேரைக் காப்பன்.

10. ஜாதகன் பிறந்த நாள்முதல் தொழில் விருத்தியடையும். பொருளும் பூமியும் அதிகமுண்டாகும். புண்ணியமான மனத்தினன். துண்டமாகப் பேசாதவன். சந்தேகமுள்ள மனத்தினன். முருகக்கடவுள்மீது பக்தி கொள்ளுவான். அண்டினவர்களை ஆதரிப்பான்.

11. தந்தைக்குச் சமமாய் வாழ்வன் சத்தமத் துணைகள் தோன்றும்
வந்ததில் சிலவே சேதமாண்ரண்டு கன்னி வொன்று
இந்தவாறு விருத்தி யென்றே மிவர்பலன் பின்பால் சொல்வோம்
பிந்தியோ சனையு முள்ளா னண்டின பேரைக் காப்பன்.

11. தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்துவருவான். எழு சகோதரர்கள் தோன்றுவார்கள். பிறந்ததில் சிலர் நிலையார். இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் விருத்தியடையும். அவர்களுடைய பலன்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். பிற்புத்தியுடையவன். தன்னையடைந்தவர்களைக்காப்பான்.

12. மங்களம் பதினே ழாண்டுள் மருவிடும் வடபால் பாரி
அங்கவள் குணத்தைச் சொல்வோம் அறிவுளாள் பொறுமை சாலி
நங்கமாய் வார்த்தை யேற்பள் நாயகன் தன்னா லேதான்
சங்கையா மனத்த ளாகுந் தருமமாங் குணமுங் கொஞ்சம்.

12. ஜாதகனுடைய பதினேழாம் வயதுக்குள் திருமணம் நடைபெறும். வடக்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளது குணத்தைச் சொல்வேன். அறிவுள்ளவள். பொறுமையுள்ளவள். தன் கணவனால் பழியான வார்த்தைகளை யடைவாள். சந்தேகமுள்ள மனமுடையவள். தருமகுணமும் சிறிது உள்ளவள்.

13. சிலவேநாள் சிறையாய் வாழ்வள் செல்வியுந் தீர்க்க சீவி
தலைவியும் யோக சாலி சர்ப்பம்போல் கோப முண்டு
நலமதைச் செய்வா ளாகும் நாயகன் பகைசின் னாட்கள்
விலகிப்பின் சுகமாய் வாழ்வள் வித்தகி கேட்டி டாயே.

13. சின்னாட்கள் சிறையில் வசிப்பதுபோல் வாழ்ந்து வருவாள். நீண்ட ஆயுளுள்ளவள். அதிருஷ்டமுள்ளவள். சர்ப்பம்போல் கோபம் கொள்ளுவாள். நல்லதைச் செய்துவருவாள். சிலகாலம் கணவனுடன் மனஸ்தாபம் உண்டு. விலகியிருந்து பிறகு சுகமாக வாழ்ந்து வருவாள். தேவியே! கேளுங்கள்.

14. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
பதராகு மற்ற வெல்லாம் பிருகுமே தடுத்துச் சொல்வார்
மதிமுக மனைவி ரெண்டு மருவிடும் பால னுக்கு
அதுவிதம் புகலு மென்ன அந்தண னேழோ னுகி ;

14. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் தீர்க்காயுளுள்ளவர்கள். அதற்குமேல் பிறக்கும் குழந்தைகள் நிலையா. பிருகு முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகனுக்கு அழகிய மனைவியார் இருவருண்டு என்றால், அஃது எவ்விதம் ? கூறுங்கள். குரு ஏழாம் விட்டுக் குரியவனுகி ;

15. ஆறினி லிருப்ப தாலும் அட்டமத் தோனும் பார்க்கக்
கூறினே மந்தச் சங்கை குறுமுனி புகலு கின்றார்
தீரமாய் மதிசேய் வெள்ளி ஜன்மத்தி லிருப்ப தாலே
மா ன்பின் கடையோ னுக்கு மனைவிய ரிருவ ராவர்.

15. ஆறும் வீட்டில் இருப்பதாலும், எட்டாம் வீட்டுக் குரிய சனியால் பார்க்கப்படுவதாலும், அங்ஙனம் கூறினோம், என்றார். அகத்திய முனிவர் சொல்லுகின்றார். திடமாகச் சந்திரன் செவ்வாய் சுக்கிரன் ஜன்மத்திலிருப்பதால் ஜாதகனுடைய கடைசிச் சகோதரனுக்கு இரு மனைவியர் உண்டு என்றோம்.

16. குருவாறி லிருந்த குற்றம் கோதையு மிவன்முன் னாலே
உறைகுவாள் கால னுடு வரைகின்றே மிவன்முன் ஜன்மம்
பிருதிவி தலத்தி லேதான் பிறந்தன னிக்கு லத்தில்
தரித்தொழில் மிகவே செய்து சம்பத்து முடைய னுகி ;

16. குரு ஆறும் வீட்டில் இருப்பதால் ஜாதகனுக்கு முன்னால் அவன் மனைவி இறந்து விடுவாள். இவனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்தில் இதே குலத்தில் பிறந்தான். நெசவுத் தொழில் மிகுதியாகச் செய்து, செல்வங்கள் உடையவனுகி ;

17. அறுமுகன் தொண்டு பூண்டு அதிதிக்கு வன்ன மீந்து
மறலியின் நாடு சென்று மறையவன் வரையப் பட்டு
முருகன்றன் னடிமை வர்க்க முதிப்பனு மிந்தப் பாலன்
வரைகின்றே மிவனின் யோகம் உத்தமி கேட்டி டாயே.

17. ஆறுமுகக் கடவுளுக்குத் தொண்டுகள் பல செய்து, விருந்தினருக்கு அன்புடன் அன்னமளித்து, மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, முருகப்பிரான் அடிமை வர்க்கமாகிய செங்குந்த மரபில் பிறப் பான் இந்த ஜாதகன். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றேம். தேவியே! கேளுங்கள்.

18. அன்னமுங் குறைவு றுதான் ஆயுள்நாள் வரைக்கு மேதான்
பொன்கடன் கொள்ளா னுகும் பூமியை விரயஞ் செய்யான்
தன்குலத் தொழிலு மேன்மை செட்டுக்கள் செய்வா னுகும்
சிந்நாட்க ளுத்ரம் வேலூர் செட்டுக்கள் செய்து நீங்கும்.

18. தன் ஆயுள் முடிய சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். பணம் கடன் வாங்காதவன். பூமியை விற்கமாட்டான். தன் குலத்தொழிலில் மேன்மை யுறுவான். வியாபாரம் செய்து வருவான். சின்னுட்கள் வடக்கி லுள்ள வேலூரில் சென்று, வியாபாரம் செய்து, அவ்விடத்தை விட்டகலு வான்.

19. மனமது கவடு மில்லான் வருவோரை யாத ரிப்பன்
இனமதிப் போடு வாழ்வான் இடுக்கமென் றேரைக் காப்பன்
துணைவரை யாத ரிப்பன் சொல்லதைக் காப்பா னுகும்
கனமுன குடும்பி யாவன் காதலன் தீர்க்க சீவி.

19. மனத்தில் கபடமில்லாதவன். தன்னை வந்து அண்டினவரைக் காப்பான். தன் இனத்தவரது மதிப்புடையவனுவன். துன்பமடைந்தவர்களை ஆதரிப்பான். தன் சகோதரரை ஆதரிப்பான். தன் வார்த்தைகளைக் காப் பான். கண்ணியமுள்ள குடும்பியாவான். நீண்ட ஆயுளுள்ளவன்.

20. பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வீர்
[1] ஆலமும் பத்தி லாக அம்புலி ஜன்மந் தங்க
[2] நீலனு மாட்சி யாக நின்றதால் பத்ம யோகம்
ஏலவே நாக யோகம் இயம்பினேம் பால னுக்கு.

20. ஜாதகனுக்கு யோகம் ஏற்படக் காரணங்களைச் சொல்லுங்கள். ராகு பத்தாமிடத்திலும் சந்திரன் லக்கினத்திலும் இருப்பதாலும், சனியும் ஆட்சி யாக இருப்பதாலும் பத்மயோகம் ஒன்றும் நாகயோகம் ஒன்றும் ஜாதக னுக்கு உண்டு என்றேம்.

21. இருவகை யோகத் தாலே எப்போதும் வறுமை காணன்
பெருகிடுஞ் செல்வந் தானும் பிதாமேலாய் வாழ்வா னுகும்
வரைகின்றே மன்னை சேதி உள்மனங் கவடு மில்லாள்
வரன்மனம் போல வாழ்வள் வருவோரை யாத ரிப்பள்.

21. இருவித யோகம் ஏற்படுவதால் ஒருகாலும் வறுமை அடையாதவன். செல்வம் பெருகும். தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான். தாயின் செய்தியைச் சொல்லுகின்றேம். மனத்தில் கபடமில்லாதவள். தன் கணவன் மனம்போல் வாழ்ந்து வருவாள். தன்னிடம் வருபவரை ஆதரிப்பாள்.

[1] இராகு. [2] சனி.

22. சுகமுள வார்த்தை சொல்வள் சோர்வோர்க்குத் தாக மீவள்
இகபரன் பத்தி பூண்பள் இடுக்கமென் றோரைக் காப்பள்
சகமதில் நல்லோ ளாவள் சீலியாம் விரத மேற்பள்
பகையென்று மனத்தில் வையாள் பசித்தோர்க்கு மன்ன மீவள்.

22. சுகமுள்ள வார்த்தைகளையே பேசுபவள். துன்பமடைந்தவர்கட்கு அன்னமளிப்பாள். சிவபெருமான்மீது பக்தியுள்ளவள். கஷ்டப்படுபவர்களை ஆதரிப்பாள். உலகில் நல்லவள். நல்லொழுக்கமுள்ளவள். வாத ரோக முடையவள். விரோதம் பாராட்டாதவள். பசியென்று வந்தவர்களுக்கு அன்னமளிப்பாள்.

23. தன்துணை யாண்பால் மூன்று சத்தியு மவ்வா றுகும்
பின்னமாஞ் சிலவே யென்றோம் பேசுவோ மிவள்முன் ஜன்மம்
கந்தன்வாழ் மைலங் கீழ்ப்பால் கனமிலாச் சிறுவூர் தன்னில்
அன்னவள் வேளாள வம்சம் அனுகியே வாழ்ந்தா ளின்னோள்.

23. உடன் பிறந்தவர்களில் சகோதரர் மூவரும் சகோதரிகள் மூவருமாவர். சில குழந்தைகள் நிலையா என்றோம். இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். முருகக் கடவுள் வாழும் மைலம் என்ற ஊருக்குக் கிழக்கில், சாதாரண சிற்றூரில், வேளாள குலத்தவளாகப் பிறந்து வாழ்ந்து வந்தாள்.

24. மாதுவுஞ் சுகமாய் வாழ்ந்து அறமதி லிச்சை யுண்டாய்
ஏகினாள் கால னுடு இறையவன் வரையப் பட்டுக்
கோதக மிலாத விந்தக் குலமதி லுதிப்பா ளாகும்
தோகையும் வந்த பின்பு தூயனுக் கதிக யோகம்.

24. பெண்ணும் சுகமுடன் வாழ்ந்துவந்து, தருமம் செய்வதில் விருப்பமுற்று, மரணமடைந்தாள். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, தீங்கில்லாத இக்குலத்தில் தோன்றுவாள். அவளுக்கு மணமான பின்பு இவள் கணவனுக்கு யோகம் விருத்தியாகும்.

25. மறுஜன்மங் காஞ்சி தன்னில் வருவளாஞ் சௌராட்டிர வர்க்கம்
பொருளது பெருக்க மாகிப் புண்ணிய வதியும் வாழ்வாள்
வரைகின்றோந் தந்தை பூர்வம் உயர்தில்லைக் கீழ்ப்பா லாகச்
சிறுவூரில் வைச்யச் சேயாய் ஜனித்துமே செட்டுச் செய்து;

25. மறுபிறவி, காஞ்சிபுரத்தில், சௌராஷ்டிர மரபினளாகப் பிறந்து, பொருளை அதிகமாக அடைந்து, புண்ணியவதியாக வாழ்வாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். உயர்ந்த தில்லைக்குக் கிழக்கில், சிற்றூரில், வைசிய குலத்தவனாகப் பிறந்து, வர்த்தகம் செய்து வந்து;

26. பெரியோர்க்கு வன்ன மீந்து புக்கனன் கால னுடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று சொல்வோம்
வருஞ்ஜன்மந் [1] தேயு தன்னில் மறைக்குல முதிப்பா னுகும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

[1]. திருவண்ணாமலை.

26. பெரியோருக்கு அன்னமளித்துவந்து மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று சொல்லுகின்ருேம். மறுபிறவி திருவண்ணுமலேயில் அந்தண குலத்தில் பிறப்பான். கரிய யானை முகத்தோனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

27. இந்தவன் மரண காலம் இயம்புவீர் முனியே நீர்தாம்
சந்ததம் நாற்ப தாண்டில் சாருவான் கால ஞடு
முந்தியே முப்பான் மூன்றில் மேவுவா ளன்னை யென்ருேம்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் ருவே.

27. ஜாதகனுடைய தந்தையின் மரண காலத்தைச் சொல்லுங்கள். முனிவரே! ஜாதகனது நாற்பதாம் வயதில் தந்தை இறப்பான். ஜாதகனுடைய முப்பத்துமூன்ரும் வயதில் தாய் மரணமடைவாள். முருகக் கடவுளைப் பெற்ற தேவியே! கூறியவை தவரு.

28. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மறுபா னேழில்
மேதினில் தனுசு மாத மோதுவோ மார கங்கள்
ஓதுவோ மிவன்பின் ஜன்மம் உயர்மலை மைலந் தன்னில்
மாதவர் குலமு தித்து அறுமுகன் தனைத்து திப்பான்.

28. ஜாதகனுக்கு மரணக்காலம் அவனுடைய அறுபத்தேழாம் வயதில் மார்கழி மாதத்தில் ஏற்படும் என்று சொல்லுவோம். இவன், மறுபடி, உயர்ந்த மலையையுடைய மைலத்தில், அந்தணகுலத்தில் பிறந்து ஆறுமுகக் கடவுளைத் துதிசெய்வான்.

29. அறுபது வாண்டு தன்னில் அவன்பாரி கண்ட மெய்தும்
திருமகன் ஜனன கால மாதிரை மூன்ரும் பாதம்
அரவுதன் தசையா ருண்டும் அணுகிடும் நவமாந் திங்கள்
வரைந்தனம் பூர்வ பாகம் உத்தமி கேட்டி டாயே.

29. ஜாதகனுடைய அறுபதாம் வயதில் மனைவி மரணமடைவாள். ஜாதகனின் ஜனன காலத்தில் திருவாதிரை நட்சத்திரம் மூன்ரும் பாதம். ராகுமகாதசை இருப்பு ஆறு வருடங்களும் நான்கு மாதங்களுமாம். இவ்வாறு முதல் பாகம் சொன்னேம். தேவியே! கேளுங்கள்.

## ஜாதகம் 71.

1. சந்திரன் நந்தி யாகச் சனிவீணை குருவுங் கன்னி
புந்தியும் பானு தேளில் புகர்தனு கேது கும்பம்
மந்தனுங் கயறு சேயும் மருவிடுஞ் சீய மாக
இந்ததோர் கோளும் நின்று இலக்கின மிதுன மாக ;

1. சந்திரன் விஷபத்திலும், சனி மிதுனத்திலும், குரு கன்னியிலும், புதன் சூரியன் விருச்சிகத்திலும், சுக்கிரன் தனுசிலும், கேது கும்பத்திலும், ராகு செவ்வாய் சிம்மத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக விருந்தால்;

| | | | |
|---|---|---|---|
| | | சந்திரன் | லக்கினம் சனி |
| கேது | இராசி சக்கரம் | | |
| | | | ராகு செவ்வாய் |
| சுக்கிரன் | புதன் சூரியன் | | குரு |

2. பலன்றனைப் புகரு மென்று பார்வதி கேட்கும் போது
நலமுள பிருகு சொல்வார் நாயகி ஜனன மாகும்
தலமது மேல்பால் நோக்கஞ் சாகையும் வாடை யாகும்
குலவிய சிறுவூ ராகுங் கோதையு மைந்தாஞ் ஜன்மம்.

2. ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும் போது, நன்மை மிக்க பிருகு முனிவர் கூறுகின்றார். இது பெண்ணின் ஜாதகம். பிறந்தவீடு கிழக்கு வாடையில் மேற்கு நோக்கியுள்ளது. ஒரு சிற்றூரில் தன் தந்தைக்கு ஐந்தாம் பிறவியாகப் பிறப்பாள்.

3. கன்னியின் ஜனன யோகங் கனத்ததோர் தந்தை யோகம்
அன்னையின் துணைவர் யோகம் அவளுடை வரனின் யோகம்
முன்பின்ஜன் மங்கள் யாவும் வரைகிறே மிந்நூல் தன்னில்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

3. ஜாதகியின் பிறப்பு யோகம் தந்தையோகம் தாய் உடன் பிறந்தவர்கள் கணவன் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவைகளையும் இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம். உயர்ந்த கணவனை டைந்த உத்தமியே! கேளுங்கள்.

4. மாதுவின் சேதி தன்னை வரைகிறேன் சிவந்த மேனி
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உயர்வான புத்தி யேற்பள்
சீதள பிறைய ணிந்த தேவன்மேல் பத்தி கொள்வள்
மேதினில் நல்லோ ளாவள் விகடங்கள் கூறு ளாகும்.

4. ஜாதகியின் தாயின் செய்தியைச் சொல்லுகின்றோம். சிவந்த உடலுள்ளவள். நயமாகப் பேசுபவள். உயர்ந்த புத்தியுள்ளவள். குளிர்ந்த சந்திரனை முடியில் தரித்த சிவபெருமானின்மீது பக்தியுள்ளவள். உலகில் நல்லவளாக இருப்பாள். விகடமாகப் பேசாதவள்.

5. பரணிமுன் சிம்ம ராசி பிறப்பளா முஷேச்சல் தேகி
பொருள்சேர்க்காள் செலவு செய்வள் பிதுராஸ்தி நாஸ்தி செய்வள்
திருமாளி வில்லா ளாகுந் தேசமேல் திரிவாளாகும்
ஒருவர்பா பாலணுகி யேதான் உத்தமி சிலநா ளுய்வள்.

5. பரணி நட்சத்திரம் சிம்மலக்கினத்தில் பிறந்தவள். மெல்லிய சரீரமுள்ளவள். அதிகமாகப் பொருள் சேர்க்காதவள். செலவு செய்து தந்தையின் பொருளை அழித்துவிடுவாள். சொந்தத்தில் வீடு இல்லாதவள். உலகில் பல இடங்களுக்குச் செல்லுவாள். ஒருவரை அடைந்து, அவரால் சிலகாலம் ஜீவித்து வருவாள்.

6. தென்முனி போல வின்னேள் சிலர்வினை தீர்ப்பா ளாகும்
சொன்னதைக் காப்பா ளாகுஞ் சுத்தமா மனத்தா ளாகும்
தன்னகர் வாழா ளாகுஞ் சஞ்சல மனத்த ளாகும்
அன்னவ ளறத்தி லிச்சை அம்பிகை யாளே கேளாய்.

6. அகத்திய முனிவர்போல் இவள் சில துன்பங்களை நீக்குவாள். தான் கூறிய வார்த்தைகளின்படி நடப்பவள். சுத்தமான மனத்தினள். சொந்த ஊரில் வாழ்ந்து வராதவள். நிலையில்லாத மனத்தினள். தருமம் செய்வதில் பிரியமுள்ளவள். தாயே! கேளுங்கள்.

7. தன்துணை ஆண்பால் ரண்டு சக்தியு மவ்வாறு தீர்க்கம்
பின்னமாம் மற்ற வெல்லாம் பேசின ஆண்பா லுந்தான்
அன்னவர் வேருய்ச் செல்வர் அவர்பலன் பின்பால் சொல்வேன்
கன்னியின் தந்தை பூர்வம் கழருவோந் தாயே கேளும்.

7. ஜாதகிக்குத் தந்தைக்கு இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர்கள் நிலையாமல் மரித்து விடுவர். சொல்லிய சகோதரர்களும் தனித்துச் சென்று விடுவர். அவருடைய பலனைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றேன். ஜாதகியின் தந்தையின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றேன். தாயே! கேளுங்கள்.

8. பிருதிவி தலத்தி லேதான் பிறந்தனன் நெசவு வர்க்கம்
தரிதொழில் செய்து இன்னேன் தன்மனை மதலை யுண்டாய்த்
திருமகன் வாழு நாளில் செய்தோர் வினையைக் கேளாய்
குருவியும் இல்லம் வாசம் கூட்டையும் கலைத்தா னென்றோம்.

8. காஞ்சீபுரத்தில் நெசவாளர் குலத்தில் பிறந்தான். நெசவுத் தொழில் புரிந்து, இவன் மனைவி மக்களைப் பெற்று வாழ்ந்துவருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். குருவி யொன்று இவன் வீட்டில் கூடு கட்டி வசித்து வந்தது. அதை இவன் கலைத்தான் என்றோம்.

9. அதுவொரு தோட மாச்சு அதுவின்றி வேறு சொல்வோம்
குதர்க்கமாய் வார்த்தை ஒன்று கூறினன் நேசன் பேரில்
சதியுள மனத் தனுகிச் சாற்றுவான் சாபந் தானும்
உதவாத வார்த்தை சொன்ன யுதிக்கும்பின் ஜன்மந் தன்னில்;

9. அஃது ஒரு தோஷமாயிற்று. அது தவிர வேறு ஒன்று சொல்லுகின்றோம். தன் நண்பன்மீது இல்லாத வார்த்தை யொன்றைக் கூறினன். நண்பன் மனவருத்த மடைந்து சாபமிட்டான். உபயோக மில்லாத வார்த்தையைச் சொன்னாய். நீ பிறக்கும் அடுத்த பிறவியில் ;

10. இல்லமும் இல்லா தாகி இடுக்கமாம் குடும்பி யாகி
எல்லைமேல் திரிவாய் நீயும் இன்னமும் பலவாறு சொன்னன்
புல்கிற்று அந்தச் சாபம் புனிதனு மந்தி யத்தில்
தொல்லையு முடைய னாகிச் சென்றனன் கால னூடு.

10. சொந்தத்தில் வீடு இல்லாதவனாகி, துன்பமுள்ள குடும்பத்தை யடைந்து, பல ஊர்களில் அலைந்து திரிவாய் என்றும், இன்னும் பலவிதமாக வும் கூறினன். அந்தச் சாபம் இவனைப் பற்றியது. இவனும் தன் கடைசிக் காலத்தில் துன்பங்கள் அதிகமுள்ளவனாகி, பிறகு மரணமடைந்தான்.

11. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று சொல்வோம்
மருவிடும் முன்னூழ்ச் சாபம் வளமிலான் நிதியு மில்லான்
உறைகுவான் வனவா சங்கள் உரைத்தஇக் குணத்தா னுக்குத்
திருமக ளுதிப்பா ளாகும் செப்புவோ மிவள் குணத்தை.

11. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகி யின் தந்தையென்று சொல்லுகின்றோம். முற்பிறவியில் சாபம் ஏற்பட்டதால் செழுமை இல்லாதவன். செல்வங்களில்லாதவன். காட்டில் வசிப்பது போல வசிப்பான். இப்படிப்பட்ட குணமுள்ளவனுக்கு இந்த ஜாதகி பிறப் பாள். ஜாதகியின் குணத்தைச் சொல்லுகின்றோம்.

12. வித்தையு முடைய ளாகும் விவேகியாம் நற்கு ணத்தாள்
புத்தியும் பெரிதாய்க் காட்டும் பொய்யது புகலா ளாகும்
பத்தியுஞ் சீலமு முண்டு பதர்குண மில்லா ளாகும்
அத்தை . . . யறிவா ளாகும் அரன் தொண்டு புரிவா ளென்றோம்.

12. கல்வியறிவுள்ளவள். விவேகம் உள்ளவள். நற்குண முடையவள். தாராள புத்தியுள்ளவள் போல் தோன்றும். பொய் பேசாதவள். நல்லொழுக்கமும் பக்தியும் உள்ளவள். அற்பகுணங்களில்லாதவள்........ (அத்தை) அறிவாள். சிவபெருமானுக்குத் தொண்டு செய்வாள்.

13. மாரன்தன் மனைபோ லொப்பா மனமது துன்ப முள்ளாள்
நாரியும் யோக மில்லாள் நளினமாய் வார்த்தை யுண்டு
சீறிடாள் நடையு நன்மை சிறுத்தோர்க்குத் தாக மீவள்
காதலி பின்யோ கத்தாள் காதலி தீர்க்க சீவி.

13. விஷ்ணுவின் மனைவியாகிய இலக்குமியை யொத்தவள். மனத்தில் சிறிது சஞ்சல முள்ளவள். அதிக யோகம் இல்லாதவள். நயமாகப் பேசுபவள். கோபமில்லாதவள். நன்னடக்கையுள்ளவள். துன்பமடைந்தவர்கட்கு நீர் அன்னம் முதலியன அளிப்பவள். பிற்காலத்தில் யோக மேற்படும். நீண்ட ஆயுளுள்ளவள்.

14. தன்துணை வாண்பா லொன்று சத்திமார் நால்வர் தீர்க்கம்
சொன்னவா ணிளையோ னுகுஞ் செப்புவோ மவன் குணத்தை
உன்னத கல்வி ரண்டு உணருவான் ஊக சாலி
அன்னிய தேசஞ் செல்வன் அரசரால் தொழிலு மேற்பன்.

14. ஜாதகிக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் நால்வரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். கூறப்பட்ட சகோதரன் இவளுக்கு இளையவன். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். இருவிதமான உயர்ந்த கல்விகளைக் கற்பான். ஊகமுள்ளவன். வேறு தேசத்துக்குச் சென்று அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்வான்.

15. சொல்லதைக் காப்பா னுகுஞ் சுந்தர முடைய னுகும்
வல்லியு மொன்றே தீர்க்க மைந்தர்க ளாண்பால் ரண்டு
புல்குவோங் கன்னி மூன்று பேசுவோந் தீர்க்க மாக
வல்லவன் துணைவி யாலே வருத்தமில் லாமல் வாழ்வன்.

15. கூறிய வார்த்தைகளைக் காப்பான். அழகுள்ளவன். மனைவியும் ஒருத்தியேயாகும். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்கள். அவர்கள் ஜாதகியின் சகோதரன் தன் சகோதரியால் வருத்தமில்லாமல் வாழ்ந்து வருவான்.

16. துணைவர்க ளுதவி யாலே சீவனம் புரிவா னுகும்
கனமுடன் வாழ்வா னுகுங் கழறுவோம் பின்பால் சேதி
சினமிலா வன்னை சேதி செப்புவோ மடக்க வார்த்தை
வினைமன மில்லா ளென்றே மேதினில் பாட்டாளி யாகும்.

16. தன் சகோதரிகளின் உதவியால் தொழில் நடத்துவான். பெருமையுடன் வாழ்வான். பிற்பாகத்தில் விவரம் கூறுவோம். ஜாதகியின் அன்னையின் செய்தியைச் சொல்லுகின்றோம். அடக்கமாகப் பேசுபவள். தீய எண்ணங்களில்லாத மனத்தினள். உலகில் உழைப்பாளியாக இருப்பாள் என்றோம்.

17. மாரன்தன் மனத்துக் கேத்தோள் வஞ்சனை மனமில் லாதாள்
தீரமில் லாதா ளாகுஞ் சிறுகான குணமில் லாதாள்
காரிகை யோக மில்லாள் கழறுவோந் துணையா னென்று
நாரியு மவ்வா ருகு நவிலுவோ மிவளின் பூர்வம்.

17. தன் கணவன் மனப்படி நடப்பவள். வஞ்சனையில்லாத மனம் உடையவள். தைரிய மில்லாதவள். அற்பகுணமில்லாதவள். அதிர்ஷ்ட மில்லாதவள். சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் உண்டு என்று சொல்லுகின்றோம். அவளுடைய முற்பிறவியைப் பற்றி கூறுகின்றோம்.

18. புதுவையில் வைச்யச் சேயாய்ப் புகழான குடும்பி யாகி
நிதியது வதிக முண்டாய் நிமலிக்குச் சுதர்க ளுண்டாய்
அதிபதி வினையில் லாமல் மறலியின் நாடு சென்று
விதியவன் வரையப் பட்டு விளங்கினு ளென்று சொல்வோம்.

18. புதுவையில், வன்னிய குலத்தவளாக பிறந்து, புகழுள்ள குடும்ப முள்ளவளாகி, செல்வங்கள் பெருகி, புத்திர பாக்கியம் பெற்று, தீவினைகளில் லாமல் இறந்து, பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று சொல்லு கின்றோம்.

19. மறுஜன்மம் பாண்டி தன்னில் மறைக்குல முதிப்பா ளாகும்
அரிவையு மிச்சென் மத்தில் அடைந்தபுண் ணியங்க ளென்ன
பெரிதான தலங்கள் சென்றும் பிழையான குணங்க ளின்றிக்
குறைஎன்றோருக் குதவி செய்தும் கொழுநன்தன் மனம்போல்
[வாழ்ந்தும்;

19. மறுபிறவி, பாண்டிய நாட்டில், அந்தண குலத்தவளாகத் தோன்று வாள். ஜாதகியின் தாய் இப்பிறவியில் செய்த நற் செயல்கள் என்ன ? பல புண்ணிய தலங்களுக்குச் சென்றும், தீச்செயல்கள் இல்லாமல் கஷ்டம் அடைந் தவர்கட்கு உதவி செய்தும், தன் கணவன் மனம் போல் வாழ்ந்தும் ;

20. இருப்பதால் முதற்கு லத்தில் இறங்குவா ளென்று சொல்வோம்
கருமகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
ஆறுறு வாண்டு தன்னி லனுகிடுந் தந்தை கண்டம்
மறுஜன்மங் கழுக்குன் றத்தில் வருகுவாள் பிரம்ம சேயாய்.

20. வந்ததால், அந்தண குலத்தில் பிறந்தாள் என்று சொல்லு கின்றோம். ஜாதகிக்குக் கருமகாலங்களைச் சொல்லுங்கள் முனிவரே ! நீர் தாம். ஜாதகியின் முப்பத்தாறும் வயதில் தந்தை மரண மடைவான். அவன் மறுபிறவி திருக்கழுக்குன்றத்தில் அந்தணகுலத்தவனாகப் பிறப்பான்.

21. அன்னைக்கு நாற்பான் ரண்டில் அணுகிடு மார கங்கள்
கன்னிக்கு மணத்தின் காலம் கழறுவோ மிருபா னாறுள்
மன்னவன் மேல்பால் நேரும் வரைகிறே மவன்கு ணத்தைச்
சொன்னதைக் காப்பா னுகுஞ் சுந்தர முடைய னுகும்.

21. ஜாதகி நாற்பத்திரண்டாம் வயதில் மரணமடைவாள். ஜாதகி யின் திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவளுக்கு இருபத்தாறும் வயதுக்குள் மேற்குத்திசையிலிருந்து கணவன் வாய்ப்பான். அவனு டைய குணத்தைச் சொல்லுகின்றோம். சொன்ன சொல்படி நடப்பவன். அழகுள்ளவன்.

22. இருசிவப் புடைய னாகும் ஈகைவான் கல்வி மானும்
திருகிலான் வணிபஞ் செய்வன் தேரினோர்க் கன்ன மீவன்
பொருளது வதிக மில்லான் போஜன வறுமை காணான்
வருவோரை யாத ரிப்பன் வயதுமே தீர்க்க மெய்தும்.

22. இருசிவப்புள்ளவன். கொடையாளி. கல்வியறிவுள்ளவன். சூதில்லாதவன். வர்த்தகம் செய்து வருவான். துறவிகளுக்கு அன்னமளிப்பான். அதிகமான பொருள் இல்லாதவன். சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லாதவன். தன்னை அண்டி வந்தவர்களைக் காப்பான். தீர்க்காயுளுள்ளவன்.

23. சுதர்களு மாண்பால் மூன்று தோகையு மொன்றே தீர்க்கம்
அதிபதி முன்ஜன் மத்தை வரைகிறோம் தாயே கேளும்
அதிதிவாழ் அருணை தன்னில் அணுகினாள் ரெட்டி வம்சம்
நிதிமிக உடைய ளாகி நிமலியும் வாழு நாளில் ;

23. மூன்று புத்திரர்களும் ஒரு புத்திரியும் தோன்றி தீர்க்க முள்ளவர்களாவார்கள். ஜாதகியின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம், தாயே! கேளுங்கள். பெரியோர்கள் வாழும் திருவண்ணாமலையில் ரெட்டியார் மரபில் தோன்றினாள். செல்வங்கள் அதிக முடையவளாகி வாழ்ந்து வரும் காலத்தில் ;

24. வரன்பேரில் பகையு முற்று மாதுரு இல்லம் வாழ
வரனுடன் வார்த்தை இன்றி மங்கையும் வாழ்ந்தா ளென்றோம்
வரனுமே புகலுஞ் சாபம் மறுஜன்மம் சிறையாய்ப் பூர்வம்
வரனுமே இல்லா தாகி வாழ்குவா யென்று சொன்னான்.

24. தன் கணவன்மீது விரோதமடைந்து, தன் தாயின் வீட்டில் வசித்து, தன் புருஷனுடன் பேசாமல் வாழ்ந்து வந்தாள். கணவன் இட்ட சாபத்தைக் கேளுங்கள். மறுபிறவியில் வெகு காலம் கணவன் இல்லாமல் சிறையில் வாழ்வது போல் வாழ்வாய் என்று சொன்னான்.

25. அந்தரஞ் ததாஸ்து வென்ன அணுகிற்று அந்தச் சாபம்
பந்தணி யந்தி யத்தில் பலவினை தன்னால் மாண்டு
முந்தினோன் வரையப் பட்டு உதிப்பளா மிந்த மாது
கந்தனை யீன்ற மாதே கழறுவோ மிவளின் யோகம்.

25. உபச் சொல்கள் 'அப்படியே' என்று சொல்லப்பட்டதால், அந்தச் சாபம் இவளைப் பற்றியது. பெண்ணும், தன் கடைசிக் காலத்தில், பல தீவினைகளால் மாண்டு, பிரம்ம தேவனால் மீண்டும் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இந்தப் பெண், என்றோம். முருகக் கடவுளைப் பெற்ற தேவியே ! இவளுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம்.

26. இருபது ஐந்தாண் டின்மேல் இயம்புவோ மிவளின் யோகம்
வரனாலே சுகமு மெய்தும் அன்னமுங் குறைவு றாதாள்
பொருள்பணி அதிகம் காணாள் புண்ணிய மனத்தா ளாகும்
அரன்பக்தி அதிக மேற்பள் அதிதிக்கு அன்ன மீவள்.

26. ஜாதகிக்கு இருபத்தைந்தாம் வயதுக்கு மேல் யோகம் விருத்தியாகும். கணவனால் சுகமேற்படும். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவள். அதிகமாகப் பொருள் ஆபரணங்கள் இல்லாதவள். புண்ணியமுள்ள மனத்தினள். சிவபெருமான் மீது அதிக பக்தியுள்ளவள். விருந்தினருக்கு அன்னமளிப்பவள்.

27. இருபத்து ஏழாண் டின்மேல் இயம்புவோந் தந்தை யோகம்
குறைவிலாள் வறுமை காணுள் கூறுவோம் பின்பால் யோகம்
அறுபதாம் ஆண்டு தன்னில் அணுகிய ரிடப மாதம்
திருமக னுடல மேகும் செப்புவோ மிவள்பின் ஜன்மம்.

27. ஜாதகியின் இருபத்தேழாம் வயதுக்கு மேல் தந்தைக்கு யோகமுண்டாகும். குறைவில்லாதவள். தரித்திரமில்லாதவள். பிற்பாகத்தில் விபரத்தைக் கூறுவோம். ஜாதகி, தனது அறுபதாம் வயதில் வைகாசி மாதத்தில் இறப்பாள். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம்.

28. தென்திசை தில்லை தன்னில் ஜனிப்பாளாம் பிரம்ம சேயாய்ப்
பொன்மிக உடைய ளாகிப் பூவையும் வாழ்வா ளாகும்
அன்னவள் ஜனன காலம் அம்புலி தசையோன் பாண்டும்
சொன்னேன் திங்கள் நாலும் செப்பினேம் பூர்வ பாகம்.

28. தெற்குத் திசையில் உள்ள தில்லையம்பலத்தில், அந்தண குலத்தவளாகப் பிறந்து, செல்வங்களை அதிகம் பெற்று வாழ்ந்து வருவாள். ஜாதகியின் ஜனன காலத்தில் சந்திரமகாதசை ஒன்பது வருடங்களும் நான்கு மாதங்களும் பாக்கி, என்று முதல் பாகம் கூறுகின்றேம்.

# ஜாதகம் 72.

1. மிதுனமுஞ் ஜன்ம மாக விடம்ரண்டில் காரி மூன்றில்
மதிபுதன் பானு பொன்ன ரறினில் புகரு மேழில்
சதிசெயுங் கேது வெட்டில் சார்ந்திட வருடம் ரண்டில்
அதுபல னெவ்வா றென்று அம்பிகை கேட்கும் போது ;

1. மிதுனம் லக்கினமாகவும், ராகு இரண்டாமிடமாகிய கடகத்திலும், சனி மூன்றுமிடமாகிய சிம்மத்திலும், சந்திரன் புதன் சூரியன் குரு ஆறுமிடமாகிய விருச்சிகத்திலும், சுக்கிரன் ஏழாமிடமாகிய தனுசிலும், செவ்வாய் கேது எட்டாமிடமாகிய மகரத்திலும் இருந்து, அநுஷம் இரண்டாம் பாதத்தில் பிறந்தவரின் பலன் எப்படி, என்று பார்வதி கேட்கும் போது ;

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் |
| | | | ராகு |
| கேது செவ்வாய் | | | சனி |
| சுக்கிரன் | சந்திரன் புதன் சூரியன் குரு | | |

2. பிருகுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலுங் கீழ்ப்பால் நோக்கம்
அருகரின் கோட்டந் தென்பால் வரநதி யருகில் தங்கும்
அரசர்கள் வாச மாகும் அணுகிய பேரூ ராகும்.

2. பிருகு முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறக்கும் வீடு தெற்கு வடக்கான தெருவில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது. தெற்கில் அருகதேவர் கோவிலும் புண்ணிய நதி அருகிலும் இருக்கும். அரசர்கள் வசிக்கும் பெரிய ஊராகும் அது.

3. பாலகன் கங்கை சேயாய்ப் பிறப்பானு மிரண்டாஞ் ஜன்மம்
சாலஇில் வாடை யாகும் தாய்தந்தை துணைவர் யோகம்
வேல்விழி மைந்தர் யோகம் வித்தகன் முன்பின் ஜன்மம்
ஞாலமேல் சொல்லு கின்றோம் நாயகி கேட்டி டாயே.

3. ஜாதகன் வேளாள குலத்தவனாகத் தன் தந்தைக்கு இரண்டாம் பிறப்பாகப் பிறப்பான். ..........இவனுடைய தாய் தந்தையர் உடன் பிறந்தவர் மனைவி மக்கள் இவர்கள் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும் இந்த நூலில் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

4. ஒன்பது துணைவ ரென்று வரைகின்றேந் தந்தைக்கேதான
துன்பங்கள் பரவு மென்றேந் தோகையு மொருத்தி தீர்க்கம்
என்னகா ரணத்தி னாலே இவன்றுணை தோடஞ் சொன்னீர்
துன்னமாய்ச் சேயு மெட்டில் தொடர்ந்ததால் சொன்னேந்
[தாயே.

4. ஜாதகனுடைய தந்தைக்கு உடன் பிறந்தவர்கள் ஒன்பது பேர் என்றேம். அவர்களில் பலர் நிலேயார். ஒரு சகோதரியே நீண்ட ஆயு ளுள்ளவள் என்றேம். என்ன காரணத்தால் இவனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் உண்டு என்று சொன்னீர்கள்? தீமையாகச் செவ் வாய் எட்டாமிடத்தில் இருப்பதால் கூறினேம் தாயே!

5. தந்தையின் குணத்தைச் சொல்வோம் சரசமாய் வார்த்தை
[யுண்டு
தந்தையி னுஸ்தி யில்லான் சாகையு மில்லா னுகும்
தன்மனே யில்லஞ் சின்னுள் சாருவா னென்று சொல்வோம்
தன்தனஞ் சேர்ப்பா னுகுஞ் செலவுக ளதிக மென்றேம்.

5. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றேம். சல்லாபமாகப் பேசுபவன். தன்னுடைய பிதாவின் ஆஸ்தி யில்லாதவன். சொந்த வீடு இல்லாதவன். சில காலம் தன் மனேவியின் வீட்டில் வசிப் பான் என்று சொல்லுகின்றேம். தானே சம்பாதித்துப் பொருளேச் சேர்ப்பான். செலவுகளும் அதிகம் செய்பவன்.

6. அரசரால் தொழிலு மேற்பன் யாவர்க்கு நல்லோ னுவன்
இருவிதக் கல்வி கற்பன் குதர்க்கமா மனத்தா னுகும்
சிறுவர்க்குச் சின்னுள் கல்வி செப்புவா னில்ல மில்லான்
பெருங்காற்றுப் பஞ்சு வொப்பாம் பூசநாள் கன்னி ராசி.

6. அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்வான். எல்லோருக்கும் நல்லவனுக இருப்பான். இருவிதமான கல்வி கற்பான். குறும்புள்ள மனத்தினன். சில காலம் சிறுவர்கட்குக் கல்வி போதிப்பான். தன் சொந்த வீடில்லாதவன். பெரிய புயலில் அகப்பட்ட பஞ்சுபோல் அவஸ்த்தைப் படுவான். பூச நட்சத்திரத்தில் கன்னியா லக்கினத்தில் பிறப்பான்.

7. உதிப்பனும் அரங்கன் பேரை உணருவான் இருசி வப்பன்
நதிபல ஊருஞ் செல்வன் நல்லவர் நேசங் கொள்வன்
சதிசெய்தோர்க் குதவு வானும் தொல்புவி அளவு செய்வன்
அதிநடை கத்திரி யோகம் அணுகிடும் பித்தச் சூடு.

7. ஸ்ரீரங்கத்தில் பள்ளிக்கொண்டுள்ள ஸ்ரீ ரங்கநாதப் பெருமானிடம் பக்தியுடையவன். இரு சிவப்பன். பல ஊர்களிலுள்ள புண்ணிய நதிகளில் நீராடுவான். நல்லவர்களுடன் சிநேகம் கொள்ளுவான். தனக்குத் தீங் கிழைத்தவர்கட்கும் உதவி புரிவான். பூமியை அளக்கும் (சர்வே) வேலே யைச் செய்து வருபவன். வேகமாக நடப்பவன். கத்திரியோகம் உள்ளவன். பித்தச் சூட்டுச் சரீரம் உடையவன்.

8. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் விருஞ்சி தன்னில்
பொன்மிக உடையா னுக்குப் பிறந்தனன் வேளாள வம்சம்
உன்னத குடும்பி யாகி உத்தமன் வாழு நாளில்
முன்னேர்க்குப் பொருளை ஈந்து பூமியை தன்கைக் கொண்டான்.

8. அவனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். விரிஞ்சிநாட்டில் வேளாள வம்சத்தில் ஒரு செல்வவானுக்குப பிறந்தான். உயர்வான குடும்ப முள்ளவனுகி, நல்லவனுக வாழ்ந்து வருங்காலத்தில், அந்தணர்கட்குப் பொருளைக் கொடுத்து, அவர்களின் பூமியை அபகரித்துக் கொண்டான்.

9. ஏழையோர் வருத்த முற்று இயம்பின சாபம் கேண்மோ
தாழ்படப் பொருளை ஈந்து தரணியைப் பறித்த பாவி
சூழும்பின் ஜன்மந் தன்னில் துணைஆணு மில்லா தாகி
ஆழியு மில்ல மின்றி அலைமீது துறும்பாம் புத்தி.

9. ஏழைகளாகிய அந்தணர்கள் வருந்திக் கூறிய சாபத்தைக் கேளுங் கள். குறைவாகப் பணத்தைக் கொடுத்து எங்கள் பூமியைக் கைக்கொண்ட பாவியே! உனக்கு ஏற்படும் மறுபிறவியில், உடன் பிறந்த சகோதா னில்லாதவனுகி, சொந்த வீடில்லாமல், அலையின்மீதுள்ள சிறு துறும்பைப் போல் சஞ்சலமான புத்தியுள்ளவனுவாய்.

10. இன்னமும் பலவாறு சொன்னுர் எய்திற்று அந்தச் சாபம்
மன்னவ னந்தி யத்தில் வறுமைக ளுடைய னுகித்
தென்திசை காலனுடு சென்றுமே பிரமன் லக்கம்
அன்னவ னுதித்தா னென்றேம் அணுகிடும் ஏழைச் சாபம்.

10. இன்னும் பலவிதமாகக் கூறினுர்கள். அந்தச் சாபம் இவனை வந்தடைந்தது. அவனும், தன் கடைசிக் காலத்தில் வறுமையுள்ளவனுகி இறந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந் தவன் என்றேம். ஏழைகளின் சாபம் தொடரும்

11. ஆகையால் துணைவர் நட்டம் அவனியு மில்லா னுகும்
எகிடுந் தந்தை யாஸ்தி இயம்பின குணத்தா னுக்குப்
பாகமா யிந்தப் பாலன் பிறப்பனும் குணத்தைச் சொல்வேன்
நாகரி கங்க ளுண்டு நாயக னிருசி வப்பன்.

11. ஆகையால் உடன் பிறந்தவர்கட்குத் தோஷமுண்டாகும். பூமி யில்லாதவனுவா . தந்தையின் ஆஸ்தியும் இவனை விட்டுப்போகும். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். நாகரிக வாழ்க்கையை நடத்துவான். இருசிவப்பான நிறமுள்ளவன்.

12. கல்வியு மூன்று கற்பன் காலாள்கள் பணைவர் விருத்தி
சொல்லது சுருக்க மெய்தும் துன்பங்க ளெவர்க்கு மெண்ணுன்
தல்லிபோல் ஆத ரிப்பன் தந்தையார் ஜிதத்தை வேண்டான்
புல்லிய புத்தி யில்லான் போஜன வறுமை ஏற்கான்.

12. மூன்று விதமான கல்வி கற்பான். ஏவலாட்கள், பண்ணை, எர் முதலியன அதிகம் உள்ளவன். அதிகமாகப் பேசாதவன். ஒருவருக்கும் தீங் கெண்ணுதவன். அன்னையைப் போல் ஆதரவுடன் ஆதரிப்பான். தன் தந்தையினுல் சம்பாதிக்கப்பட்ட சொத்தை வேண்டாதவன். அற்பபுத்தி யில்லாதவன். சாப்பாட்டில் வறுமை யில்லாதவன்.

13. பலவணி பங்கள் செய்வன் பரிந்துப சாரஞ் சொல்வன்
கலகத்தைக் கூறு ருகுங் காலிகள் விருத்தி யுண்டு
நிலையதைக் காப்பா ருகும் நேர்ந்திடும் வேறே ராஸ்தி
அலைகடற் றுயின்றேன் பத்தி ஆதியி லற்ப மேற்பன்.

13. பலவிதமான வர்த்தகங்களைச் செய்துவருவான். அன்புடன் உபசரிப் பான். கலகம் விளைவிக்காதவன். கால்நடைகள் பெருகும். தன் வீட்டைக் காப்பான். வேறு ஆஸ்தியொன்று இவனைச் சேரும். கடலில் துயில் கொண்டருளும் திருமாலிடம் முதலில் சிறிது பக்தி யுள்ளவன்.

14. கரமதில் மாலின் ரேகை கஞ்சமாம் ரேகை யுண்டு
தரைகள்பின் சேர்ப்பா ருகும் தந்தையால் சுகமில் லாதான்
நிறைசெய்யுந் தொழிலுஞ் சின்னுள் நிருபர்க ளிட்டங் கொள்வன்
அரசரால் தொழிலு மேற்பன் அத்திரி மறுத்துச் சொல்வார்.

14. கையில் விஷ்ணுரேகை யுள்ளவன். தாமரைரேகையும் உள்ளவன். பிற்காலத்தில் பூமியைச் சேர்ப்பான். தன் தந்தையால் சுக மில்லாதவன். சிலகாலம் நிறுத்தல் வேலை செய்யும் தொழிலை நடத்துவான். அரசர் களிடம் இஷ்டமுள்ளவன். அரசாங்க உத்தியோகம் பார்ப்பான். அத்திரி முனிவர் இடைமறித்துச் சொல்லுகின்றுர்.

15. பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வீர்
ஆலமுங் கடக மாக அசுரர்மந் திரியு மேழில்
ஞாலத்தோ னுச்ச மாக நற்காரி மூன்றி லாக
வேல்யோகம் வாசி யோக மேவிடும் பால னுக்கு.

15. ஜாதகனுக்கு யோக மேற்படும் என்று சொல்லக் காரணமென்ன ? கூறுங்கள். கடகத்தில் ராகுவும், சுக்கிரன் ஏழாமிடத்திலும், செவ்வாய் உச்சமாகவும், சனி மூன்றுமிடத்திலும் இருப்பதால், வேல்யோகம், வாசி யோகம் என்ற இரண்டு யோகங்களும் ஜாதகனுக்கு உண்டு.

16. இருவகை யோகத் தாலே இப்பாலன் வறுமை யேற்கான்
அறுநான்கு வாண்டு மேலாய் அம்புலி போல யோகம்
பெருமையாய்க் குடும்பி யாவன் போகிய பூமி சேர்க்கை
பெறுமன்னை வர்க்கத் தாரால் புதல்வனு முய்வா னுகும்.

16. இருவிதமான யோகத்தால் இந்த ஜாதகன் வறுமை அடையாதவன். அவனுடைய இருபத்துநான்காம் வயதுக்கு மேலாக வளர்பிறைச் சந்திரன் போல் யோகம் பெருகும். பெருமையுள்ள குடும்பத்தை யடைவான். போன பூமியைத் திரும்பவும் பெறுவான். தன் தாயின் வர்க்கத்தாரால் இவன் வாழ்ந்திருப்பான்.

17. மால்மனே கணேசன் போல மருவியே வாழ்வா னுகும்
ஆலம்போல் பகைவ ருக்கு அவனுமே கருட னுவன்
பாலகன் துணையாண் டிரண்டு பகருவோந் தீர்க்க மாக
வேல்விழி யொன்றே தீர்க்கம் விளம்பின வாண்முன் பின்னுய் ;

17. இலக்குமியின் நோக்குப்பெற்று, கணபதிபோல் வாழ்ந்து வருவான் பகைவர்களாகிய சர்ப்பங்களுக்கு இவன் கருடனைப் போன்றவன். ஜாதக னுக்கு இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றேம். கூறிய சகோதரர்கள் முன் பின்னுய்த் தோன்றுவர் ;

18. சொல்லுவோந் தாயே யாங்கள் செப்புவோ மவர்பின் பாகம்
வல்லியா மன்னை சேதி மாந்தளிர் மேனி யாவள்
நல்லவ ளாகி வாழ்வள் நாதனர் பத்தி பூண்பள்
அல்லலோர்க் குதவி செய்வள் ஆளன்றன் மனத்துக் கேற்றேள்.

18. என்று கூறுகின்றேம். தாயே ! அவர்களுடைய யோகத்தைப் பிற் பாகத்தில் சொல்லுவோம். தாயின செய்தியைப் பற்றிச் சொல்லுகின்றேம். மாந்தளிர் போன்ற மென்மையான சரீரமுள்ளவள். நல்லவளாக வாழ்ந்து வருவாள். சிவபெருமான்மீது பக்தி கொள்வாள். துன்பமடைந்தவர் கட்கு உதவி புரிவாள். கணவன் மனப்படி நடப்பவள்.

19. தன்துணை இல்லா ளாகும் தனியளாய் வாழ்வா ளாகும்
என்னகா ரணத்தி னுலே இவன்தனி என்று சொன்னீர்
சந்திரன் தனக்கு மூன்றில் சிகிநிற்கத் துணைவர் தோடம்
முன்ஜன்ம வினையுங் கொஞ்சம் மேவிற்று என்று சொல்வோம்.

19. ஜாதகனுடைய தாய், உடன்பிறந்தவரில்லாமல் தனித்து வாழ்ந்து வருவாள். என்ன காரணத்தினுல் இவள் தனியளாக வாழ்ந்து வருவாள் என்று கூறினீர் ? சந்திரனுக்கு மூன்ருமிடத்தில் கேது இருப்பதால் தாய்க்குச் சகோதரதோஷம் உண்டு. தவிரவும், முற்பிறப்புத் தீவினையும் சிறிது உண்டு என்று கூறுவோம்.

20. மாதுசெய் வினைக ளென்ன அறிவிப்பீர் முனியே நீர்தாம்
காதலி பூர்வங் கேளாய் கன்னியாய் ரெட்டி வம்சம்
ஜனித்துமே வாழு நாளில் ஓதுவேன் வினையை யாங்கள்
உயர்வோர்கள் ஓர்பெண் பேரில் கூறினுள் கட்டு வார்த்தை.

20. தாய் செய்த தீவினைகள் என்ன ? சொல்லுங்கள், முனிவரே ! தாங்கள் ஜாதகனின் தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம், கேளுங்கள். இவள் ரெட்டியார் மரபில் பிறந்து, கன்னியாக வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றேம். அந்தணகுலத்தில் பிறந்த ஒரு பெண்ணின்மீது இல்லாத பழியைக் கூறினுள்.

21. சொல்லாத வார்த்தை சொல்லித் துருசுகள் செய்யும் போது
வல்லியும் மனமே வாடி வரைந்தசா பத்தைக் கேண்மோ
பொல்லாத வார்த்தை சொன்னுய் பிறக்கும்பின் ஜன்மந் தன்னில்
நில்லாரே துணைவர் தாமும் நிவாசமு மில்லா தாகி ;

21. சொல்லக்கூடாத வார்த்தைகளைச் சொல்லும்போது அப் பெண் மனவருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். அடாத வார்த்தைகளை என்மீது சொன்னாய். உனக்கு ஏற்படும் மறுபிறவியில் உடன் பிறந்தவர் கள் இல்லாதவளாகி, குடியிருக்க வீடில்லாமல் ;

22. உலகினில் வாழ்வா யென்ன உறைந்தது அந்தச் சாபம்
தலமதில் அடைக்க லானும் சார்ந்தது அதைக்க லேத்தாள்
குலவிற்று அதுவோர் தோடம் கோதையு மந்தி யத்தில்
நிலவதை யணிந்தோன் பத்தி நிமலியும் கொண்டு மேதான் ;

22. உலகில் வாழ்ந்து வருவாய் என்று சொன்னாள். அந்தச் சாபம் இவளைப் பற்றியது. இவள் வீட்டில் ஒரு பறவை கூடு கட்டியிருந்தது. அதைக் கலைத்தாள். அஃது ஒரு தோஷமாயிற்று. இவளும் தன் கடைசிக் காலத்தில் சந்திரனை முடியில் அணிந்துள்ள சிவபெருமான் மீது பக்தி கொண்டு ;

23. அறமதி லிச்சை யுண்டாய் அந்தகன் நகரஞ் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
மருவிடும் பூர்வ தோடம் மங்கையுந் துணைவர் காணாள்
பொருமாளி யில்ல மில்லாள் பேதையே கேட்டி டாயே.

23. தருமம் செய்வதில் விருப்பமுள்ளவளாகி, மரணமடைந்து, மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவளென்று சொல்லுகின்றோம். முற் பிறப்புத் தீவினை இப்பிறவியிலும் தொடரும். சகோதரர்கள் இல்லாதவள். பெரிய மாளிகை வீடு முதலியன இல்லாதவள். தாயே ! கேளுங்கள்.

24. பின்ஜன்மம் வள்ளூர் தன்னில் பிறப்பளாம் வேளாள வம்சம்
கன்மகா லங்கள் தன்னைக் கழறுவீர் முனியே நீர்தாம்
மன்னற்கு நாற்பா ணுண்டில் மடிவுண்டு அன்னை யென்றோம்
துன்னைகள் இதற்குள் ளாகத் தொடராதோ மார கங்கள்.

24. மறு பிறவி திருவள்ளூரில் வேளாள குலத்தவளாகப் பிறப்பாள். ஜாதகனுடைய கருமகாலத்தைச் சொல்லுங்கள், முனிவரே ! தாங்கள். ஜாதகனது நாற்பதாம்வயதில் தாய் மரணமாவாள். அதற்குள்ளாகவே துன்பங்கள் ஏற்படாவோ.

25. புந்தியின் தசைபிற் பாகம் பித்தநோய் அதனால் பாதை
வந்திடும் பலவா றுக மரலியைக் காணு ளாகும்
பிந்தியும் புகரின் காலம் பொருந்திடும் மாரக ங்கள்
சந்திர வதனத் தாளே இயம்புவோந் தந்தை கண்டம்.

25. புதமகாதசையின் பிற்பாகத்தில் பித்த நோய் ஏற்பட்டு அதனால் துன்ப மடைவாள். பலவிதமான இன்னல்கள் அடைந்தும் மரணமடைய மாட்டாள். சுக்கிரமகாதசையில் மரண மடைவாள். அழகிய முகத்தை யுடையவளே ! தந்தையின் மரணக்காலத்தைக் கூறுகின்றோம்.

26. ஆருறு வாண்டு தன்னில் அனுகிடுந் தந்தை கண்டம்
வேறுஜன் மத்தைச் சொல்வோம் விருத்தாச லத்தி லேதான்
நீறணி மறையோ னாக நேருவா னிந்தப் பாலன்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

26. ஜாதகனின் முப்பத்தாறும் வயதில் தந்தை மரணமடைவான். அவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். விருத்தாசலத்தில் அந்தண குலத்தில் பிறப்பான் இவன், என்று கூறுவோம். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே ! கேளுங்கள்.

27. பிறந்தசேய் மணத்தின் காலம் புகலுவோ மூவெட் டாண்டுள்
அரிவையும் வடகீழ் நேரும் அவள்குணம் புகலக் கேண்மோ
திருமக ளொப்ப தாகுந் தேரின புத்தி யுண்டு
தரிபடக் கூறு ளாகுஞ் சான்றோர்கள் பத்தி பூண்பள்.

27. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய இருபத்தெட்டாம் வயதுக்குள் வடகிழக்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். இலக்குமியைப் போன்றவள். முதிர்ந்த அறிவாளி. கண்டிப்பாகப் பேசாதவள். பெரியோர்கள்மீது பக்தி கொள்வாள்.

28. மங்கையுந் தீர்க்க சீவி வருவோரை யாத ரிப்பள்
சங்கையென் றோரைச் சாராள் சந்ததி பலத்தைக் கேண்மோ
சிங்கம்போ லாண்பால் ரண்டு செல்விமார் மூவர் தீர்க்கம்
ஐங்கரன் றனைவ ளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

28. அவள் நீண்ட ஆயுளுள்ளவள். தன்னை அண்டினவர்களை ஆதரிப்பாள். சந்தேகப்படக்கூடியவர்களோடு சேராதவள். புத்திரபலத்தைக் கேளுங்கள். சிங்கத்தைப் போல் தைரியமுள்ள இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் தீர்க்காயு ளுள்ளவர்கள். சிவபெருமானின் தேவியே ! கேளுங்கள்.

29. பாலகன் முன்ஜன் மத்தைப் பகருவோம் பசுமாத் தூரில்
சீலமாங் கங்கை சேயாய் ஜனித்துமே கிருஷி செய்து
ஞாலமேல் நல்லோ னாகி நலிந்தோர்க்குத் தாக மீந்து
காலன்றன் நாடு சென்று கஞ்சனால் வரையப் பட்டு ;

29. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பசுமாத்தூரில் நல்லொழுக்கமுடைய வேளாள குலத்தில் பிறந்து, விவசாயம் செய்து வந்து, உலகில் நல்லவனாக வாழ்ந்து, கஷ்டமடைந்தவர்கட்கு உதவியளித்து, இறந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு ;

30. பிறப்பனு மிந்தப் பாலன் புகலுவோ மிவனின் யோகம்
தரையதை விருத்தி செய்வன் தாய்வர்க்கந் தன்பால் சென்று
நிறைதொழில் செய்வா னாகும் நேர்ந்திடுஞ் சகடு வென்றோம்
இருபது நாலாண் டின்மேல் இயம்புவோம் யோகந் தானே.

30. பிறப்பான். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். விளைநிலங்களைப் பெருக்குவான். தன் தாயின் பக்கம் சென்று நிறுக்கும் தொழில் ஒன்றைச் செய்து வருவான். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். இருபத்துநான்காம் வயதுக்குமேல் யோகம் பெருகும்.

31. ஆறஞ்சு வாண்டு மேலாய் அனுவிடு மில்ல மென்றோம்
நேராத சல்லிய மென்றோம் நேர்ந்தசல் லியங்கள் நீங்கும்
பார்கிணறு பணிபொன் இல்லம் படைப்பன்மூ வாயிரம் பொன்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

31. ஜாதகனுடைய முப்பதாம் வயதுக்கு மேல் வீடு கிட்டும் என்று சொல்லுகின்றோம். கடன் இல்லாதவன். ஏற்பட்ட கடன்களும் தீரும். பூமி கிணறு ஆபரணம் செல்வம் வீடு முதலியன சேர்ந்து மூவாயிரம் பொன் உள்ளது. ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே! கேளுங்கள்.

32. சந்திரன் தசைகா லத்தில் ஜாதகன் மரிப்பா னாகும்
அந்தநாள் அறுபா னேழில் ஆனிமா தத்திலே தான்
இந்தவ னுடல மேகும் இயம்புவோ மிவன்பின் ஜன்மம்
கந்தன்வாழ் மைலந் தன்னில் கலப்பனும் வேளாள னாக.

32. சந்திரமகாதசையில் ஜாதகன் இறந்து விடுவான். அந்தக் காலத்தில் அறுபத்தேழாம் வயது நடைபெறும் ஆனி மாதத்தில் இறப்பான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். சுப்பிரமணியக் கடவுள் வாழும் மைலத்தில் வேளாள குலத்தவனாகப் பிறப்பான்.

33. அன்னவன் ஜனன காலம் அனுடத்தில் இரண்டாங் காலில்
துன்சனி தசையி ருப்புச் செப்புவோம் பதின்மூன் றாண்டும்
தன்னுடன் திங்கள் ரண்டும் செப்பினோம் பூர்வ பாகம்
பின்பாகம் விபர மாகப் பேசுவோந் தாயே யாங்கள்.

33. ஜாதகனுடைய ஜனனகாலத்தில் அநுஷம் இரண்டாம் பாதம். சனி மகாதசை யிருப்பு பதின்மூன்று வருடங்களும் இரு மாதங்களும் பாக்கி யென்றோம். இவ்வாறு முதல் பாகம் கூறினோம். பிற்பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம். நாங்கள் தாயே!

## ஜாதகம் 73

1. பிறைதனு குருவும் வெள்ளி பானுபணி மான தாகக்
கரியவன் சாடி யாகக் கனகனும் மேரு வாகத்
தரைமகன் தேள தாகச் சிவெண்டி வீணே ஜன்மம்
உரைகுவீர் பலனே என்று உத்தமி கேட்க லுற்றாள்.

1. சந்திரன் புதன் தனுசிலும், குரு சுக்கிரன் சூரியன் ராகு மகரத்திலும், சனி கும்பத்திலும், செவ்வாய் விருச்சிகத்திலும், கேது கடகத்திலும் இருந்து, மிதுனம் லக்கினமாகவும் இருந்தால், பலனேச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் |
| சனி | இராசி சக்கரம் | | கேது |
| குரு சுக்கிரன் சூரியன் ராகு | | | |
| சந்திரன் புதன் | செவ்வாய் | | |

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது ஆண்பால் ஜன்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலுங் கீழ்ப்பால் நோக்கம்
பெருவயி றப்பன் தெற்கில் புலிவாக னத்தாள் மீனம்
சிறுவூராம் கங்கை சேயாய் ஜனிப்பனும் ஏழாஞ் ஜன்மம்.

2. அகத்திய முனிவர் கூறுகின்றார். எழுதியது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு வடக்குத் தெற்கான தெருவில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலேயுடையது. அது தெற்கில் விநயகர் ஆலயமும், காளி கோயில் மீனதிக்கிலும் உள்ள ஒரு சிற்றூராகும். அதில் வேளாள குலத்தில் தன் தந்தைக்கு ஏழாமவனகப் பிறப்பான்.

3. வந்தவன் ஜனன யோகம் மாதுரு தந்தை யோகம்
தன்மனே களத்திர புத்ரர் சகோதர யோகந் தானும்
முன்பின்ஜன் மங்கள் யாவும் உரைக்கிறோ மிந்நூல் தன்னில்
தந்தையின் துணேஆண் ரண்டு சக்தியு மொன்றே யாகும்.

3. ஜாதகனது யோகம், தாய் தந்தையர் மனைவி புத்திரர் சகோதரர் இவர்களின் யோகம், முற்பிறப்பு மறுபிறப்பு ஆகிய இவைகளே இந்தச் சோதிட நூலில் சொல்லுகின்றோம். தந்தைக்கு இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் உள்ளனர்.

4. மற்றவை சேத மெய்தும் அவர்களும் வேறாய்ச் செல்வர்
வித்தகன் தந்தை சேதி விளம்புவோம் ஊக சாலி
சுற்றுவான் கல்வி மானும் தூர்வழக் கதனில் செல்லான்
பக்திமா னவருக் கன்னம் படைப்பனும் இருசி வப்பன்.

4. மற்றவை நிலையா. அவர்களும் தனியாகச் சென்றுவிடுவர். ஜாதகனுடைய தந்தையின் செய்தியைச் சொல்லுகின்றோம். ஊகமுள்ளவன். தேசங்களில் பலவிடங்களுக்குச் சென்று வருவான். கல்வியறிவுள்ளவன். வீண் வழக்கில் செல்லாதவன். தெய்வ பக்தியுள்ளவர்களுக்கு அன்னமளிப்பான். கருமை கலந்த சிவந்த நிற முள்ளவன்.

5. பலகலை உணர்வா னாகும் பரவுப காரஞ் செய்வன
நிலமது விருத்தி செய்வன் நீத்தோர்போல மொழிவா னாகும்
நலமதை எவர்க்குஞ் செய்வன் நாதனூர் பத்தி பூண்பன
குலவிடும் வாயு பீடை குறிமுக வடுவும் காணும்.

5. பலவிதமான கலைகளைக் கற்றுணர்வான். பிறருக்கு உபகாரி. விளைநிலங்களைப் பெருக்குவான். துறவிகளைப்போல் பேசுபவன். எல்லோருக்கும் நன்மையே செய்வான். சிவபெருமான்மீது பக்தியுள்ளவன். வாயு நோயுள்ளவன். முகத்தில் வடு உள்ளவன.

6. சுதர்களை வேறாய்ச் செய்வன் தொல்புவி கிருஷி ஓங்கும்
பதர்செயான் மாமி ரண்டு பகருவோந் தலங்கள் செல்வன்
இதுவித குணத்தா னுக்கு இவனுமே உதிப்பா னாகும்
அதிபன்தன் சேதி சொல்வேன் மாஞ்சிவப் புடைய னாமே.

6. தன் புத்திரர்களைத் தனித்திருக்கும்படி செய்வான். விவசாயம் செய்து விருத்தியாகும். அற்பகாரியங்களைச் செய்யாதவன். இரு மனைவியார் உள்ளவன். புண்ணிய தலங்களுக்குச் செல்லுவான். இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். ஜாதகனுடைய செய்திகளைக் கூறுகின்றோம். மாநிற முள்ளவன்.

7. வித்தையு மதிகங் கற்பன் விவேகியா மதிக வார்த்தை
உத்தம குணத்தா னாகும் ஒதுக்குவான் தந்தை யாஸ்தி
சித்தமே கரப்பு மில்லான் தந்திர வார்த்தை யுண்டு
சுத்தவான் கிருஷி செய்வான் சகராசர் பேட்டி கொள்வன்.

7. அதிகமான கல்வியைக் கற்பான். விவேகி. அதிகமாகப் பேசுபவன். உயர்ந்த குணங்களுள்ளவன். தந்தையின் ஆஸ்தியை விலக்குவான். மனத்தில் தீய எண்ணங்களில்லாதவன். தந்திரமாகப் பேசுபவன். சுத்தமுள்ளவன். விவசாயம் செய்து வருவான். அரசரைப் பேட்டி காண்பான்.

8. [1] தந்தையி னாஸ்தி தன்னைத் தானவ னடையா னாகும்
பிந்திய தந்தை யாஸ்தி பேணுவா னிந்தப் பாலன்
அந்திடஞ் செல்லுஞ் சேதி அறிவிப்பீர் முனியே நீர்தாம்
மைந்தரா னில்லா தாகி வருகுவா னென்று சொல்வோம்
சந்தத மவர்க்குக் கர்மஞ் ஜாதகன் செய்வா னாமே.

1. இப்பாடலில் ஒருவரி மிகுந்துளது.

8. தன் தந்தையின் ஆஸ்திகளை அடையாதவன். சிறிய தந்தையின் ஆஸ்தியை இவன் அடைவான். அவ்விதம் அந்த ஆஸ்தியை அடையக் காரணம் கூறுங்கள். முனிவரே! தாங்கள். ஆண் சந்ததி இல்லாததால் அவ்விதம் அடையும் என்று கூறுகின்றோம். அவருக்கு ஈமக்கடன்களை இவனே செய்வான் என்று கூறுகின்றோம்.

9. அவர்குண மெவ்வாறு சொல்வாய் அரசர்கள் பேட்டி கொள்வன்
நவனிகள் விருத்தி செய்வன் நற்கிராமச் செட்டுச் செய்வன்
தவசிகட் கன்ன மீவன் சான்றோர்போல் வார்த்தை சொல்வன்
இவன்கரம் பத்ம ரேகை ஈகையு முடைய னாமே.

9. அவருடைய குணம் எப்படி? சொல்லுங்கள். அரசரைப் பேட்டி காண்பான். உலகில் பூமியைப் பெருக்குவான். கிராமத்தில் வியாபாரம் செய்துவருவான். தவம் செய்பவர்கட்கு அன்ன மளிப்பான். பெரியோர் போலப் பேசுபவன். கையில் பத்மரேகையுள்ளவன். கொடையாளி.

10. அன்னிய மாதைத் தானு மபிமானங் கொள்வா னாகும்
தன்சுத ராண்பால் காணன் சத்திமார் நால்வ ராகும்
பின்மனை தனக்குப் புத்ரர் பொருந்திடு மாண்பா லொன்று
கன்னிகை யொன்று வென்றோங் கழறின குணத்தா னுக்கு ;

10. ஜாதகனின் சிறிய தந்தை வேற்றுப் பெண் ஒருத்தியை அபிமான மாக வைத்துக்கொள்ளுவான். புத்திரர்கள் இல்லாதவன். பெண்கள் நான்கு உண்டு என்றோம். இரண்டாம் மனைவிக்கு ஒரு புத்திரன் தோன்று வான். பெண் ஒன்றும் பிறக்கும். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவ னுக்கு ;

11. கருமங்கள் செய்வா னாகும் ஒருவேளை பகையு மாவன்
பெருமையாய்க் கிராமச் செட்டுப் பண்ணுவா னிவனே யென்றோம்
திருவிலா குணத்தா னாகுஞ் ஜயஞ்செய்வ னெடுத்த வேலை
நெறியதைக் காப்பா னாகும் விளைநிலம் விருத்தி செய்வன்.

11. இறுதிக் கடன்கள் செய்வான். ஒரு சமயம் அவர்களுடன் விரோதம் கொள்ளுவான். பெருமையுடன் (சௌரி ?) கிராமத்தில் வியாபாரம் செய் வான் இவன், என்று கூறுகின்றோம். சூதுகளில்லாத குணத்தன். எடுத்த காரியத்தை வெற்றியுடன் முடிப்பான். நெறியைக் காப்பான். விளை நிலங் களைப் பெருக்குவான்.

12. சாதிப்பான் சிலவே சங்கைத் தன்துணை யாண்பா லொன்று
ஓதுவோந் தீர்க்க மாக உறங்கிடுஞ் சட்டந் தானும்
மேதினில் முன்னோ னாகை விளம்புவோ மிவன்கு ணத்தைத்
தீதிலான் நற்கு ணத்தான் செப்புமுன் கோபி யாவன்.

12. சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வான். உடன் பிறந்த சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். ஆறு குழந்தைகள் மரித்துவிடுவர்.

சகோதரன் இவனுக்குமுன் பிறந்தவன் என்றோம். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். தீமையில்லாதவன் நற்குணமுள்ளவன். சொல்லுவதற்குமுன் கோபங்கொள்வான்.

13. பயிர்த்தொழில் புரிவா னுகும் பரவுப காரஞ் செய்வன்
நயமுள வார்த்தை சொல்வன் நாயகி யொன்றே தீர்க்கம்
பயமுள மனத்த னுகும் பாவையுங் கீழ்ப்பால் நேரும்
தயையுளன் சுதராண் ரண்டு சத்தி மூன்று தீர்க்கம்.

13. விவசாயம் செய்து வருவான். பிறருக்கு உபகாரம் செய்பவன். நயமயாகப் பேசுபவன். மனைவி யொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். பயந்த மனத்தினன். கிழக்குப் பக்கத்திலிருந்து மனைவி வாய்ப்பாள். தயையுள்ளவன். இருபுத்திரர்களும் மூன்று புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள்.

14. மறுமாதா வொன்று நேரும் மாதுக்குச் சுதரா னென்று
அரிவையு மவ்வாறு தீர்க்கம் அனுகாவே மற்ற வெல்லாம்
வரனுடன் கூடி வாழ்வள் மாதுமுன் சுதனும் வேறாய்த்
திருகாக வாழ்வா னுகுஞ் செல்வதி கேட்டி டாயே.

14. இரண்டாவது தாய் ஒருத்தியுண்டு. அந்தத் தாய்க்குப் புத்திரர் ஒருவர் உண்டு. புத்திரியும் ஒருத்தி பிறந்து நீண்ட ஆயுளுள்ளவளாயிருப்பாள். மற்றவையெல்லாம் நிலையா. தன் கணவுடன் கூடி வாழ்ந்து வருவாள். மூத்த தாயின் மகனும் வேறாகத் தனித்து வாழ்ந்து வருவான். தாயே! கேளுங்கள்.

15. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மிருபான் ரண்டில்
காதலி தென்மேல் திக்கில் கலப்பளாங் குணத்தைச் சொல்வோம்
மேதினி லுலச்சல் தேகி விவேகியா முன்கோ பத்தாள்
மாதவர் வணக்கஞ் செய்வள் வருவோரை யாத ரிப்பள்.

15. ஜாதகனின் திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். இருபத்திரண்டாம் வயதில் தென் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மெல்லிய சரீர முள்ளவள். விவேகமுள்ளவள். முன்கோப முடையவள். தவஞ் செய்யும் பெரியோர்களிடம் வணக்கமாக நடந்து கொள்ளுவாள். தன்னை அண்டினவரைக் காப்பாள்.

16. பித்தச்சூ டுடைய ளாகும் பேதைநன் னடக்கை யுண்டு
குற்றத்தை வெளிக்காட் டாதாள் குணமது நல்ல தாகும்
வித்தகி வயது தீர்க்கம் விரதங்கள் பூண்பா ளாகும்
நத்தினோர்க் குதவி செய்வள் நலிந்தோரை யாத ரிப்பள்.

16 பித்தச் சூட்டு நோயுள்ளவள். நன்னடத்தை யுள்ளவள். தன் குற்றத்தை வெளியிடாதவள். நற்குண முள்ளவள். நீண்ட வயதுடையவள். நோன்புகள் நோற்பாள். தன்னை அண்டினவர்கட்கு உபகாரி. துன்பமடைந்தவரைக் காப்பாள்.

17. சுதர்களு மிருநான் காகத் தோன்றி ஞ் சிலவே சேதம்
சதமுட ஞண்பால் ரண்டு சத்தியும் நான்கு வென்றோம்
இதுநிற்க வன்னே சேதி இயம்புவோ மினிமே லாகத்
துதிசெய்தோர்க் கன்ன மீவள் தோழன்றன் மனத்துக் கேற்றாள்.

17. எட்டுக் குழந்தைகள் தோன்றுவர். அவர்களில் சில சேதமாவர். இரு புத்திரர்களும் நான்கு புத்திரிகளும் தீர்க்காயுளுள்ளவர்கள். ஜாதகனின் தாயின் செய்தியைக் கூறுகின்றோம். தன்னைத் தோத்திரம் செய்தவருக்கு அன்னமளிப்பாள். தன கணவன் மனத்துக்கேற்றவள்.

18. வந்தபின் வரன்யோ கந்தான் மால்மனே யொப்ப தாகும்
தனதுணே யாண்பால் ரண்டு தையல ரைந்து வென்றோம்
நொந்திடுஞ் சிலவே தாமும் நுவலுவோம் பின்பால் சேதி
கந்தனே யீன்ற மாதே கழறுவோ மன்னே பூர்வம்.

18. தனக்கு மணமானபின் கணவனுக்கு யோகம் பெருகும். இலக்குமியைப் போன்றவள். இரு சகோதரர்களும் ஐந்து சகோதரிகளும் உள்ளனர். அவர்களில் சிலர் நிலேயார். அந்த விபரத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். முருகப்பெருமானைப் பெற்ற தேவியே! தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம்.

19. வேதத்தோன் பூசை செய்யும் மேவிய பட்சி தன்னில்
தீதிலா வன்னிய சேயாய் ஜனித்துமே பெருமை பூண்டு
காதலி வாழு நாளில் கழறுவோ மூழி தானும்
நீதியாய் இல்லந் தன்னில் நேர்ந்தது வடைக்க லானும்.

19. வேதங்களுணர்ந்த அந்தணர்கள் பூசை புரியும் திருக்கழுக்குன்றத்தில், வன்னிய குலத்தில் பிறந்து, பெருமையுடன் வாழ்ந்துவருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். இவளுடைய வீட்டில் ஒரு பட்சி கூடுகட்டி வாழ்ந்து வந்தது.

20. இறகிலாக் குஞ்சு தானும் எய்திற்றுக் கூடு தன்னில்
அரிவையும் அதைக் கலேத்து அக்குஞ்சு தனேயே கொன்றாள்
மருவிற்று அதுவோர் தோடம் மகவுபால் ஈயா நின்றாள்
உறைந்தது அந்தத் தோடம் உத்தமிக் கந்தி யத்தில்;

20. இறகில்லாத குஞ்சுகள் கூட்டில் வசித்துவந்தன. பெண்ணும் அக்கூட்டைக் கலேத்து அக் குஞ்சுகளேக் கொன்றாள். அஃது ஒரு தோஷமாயிற்று. குழந்தைக்குப் பால் கொடுக்காமல் இருந்தாள். அஃது ஒரு தோஷமாயிற்று. இவளுக்கு, கடைசிக்காலத்தில்;

21. மகவுக ளில்லா தாகி மனமது சஞ்ச லத்தால்
இகபரன் பத்தி பூண்டு யானேயின் கோட்ட தீபம்
உகமையாய் வைத்து இன்னேள் ஒதுங்கினாள் கால ளுடு
சகபதி வரையப் பட்டு ஜனித்தன ளென்று சொல்வோம்.

21. குழந்தைகள் இல்லாமல், மனத்தில் சஞ்சலம் ஏற்பட்டு, தெய்வ பக்தி கொண்டு, விநாயகர் ஆலயத்துக்குத் தீபகைங்கரியம் செய்து, மரண மடைந்தாள். மீண்டும் பிரம்மதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்று சொல்லுகின்றோம்.

22. முன் ஜன்மம் பட்சி தோடம் முயன்றது இச்சென் மத்தில்
தன்சுதர் தோட மெய்தும் தானவர் இருவர் தீர்க்கம்
என்னகா ரணங்கள் சொல்வாய் யானையின் தீப புண்ணியம்
அன்னவ ரிரண்டு தீர்க்கம் அம்பிகை யாளே கேளாய்.

22. முற்பிறவியில் நேர்ந்த பட்சியின் தோஷம் இப்பிறவியில் தொடர்ந்தது. புத்திரதோஷம் ஏற்படும். இருவர் நீண்ட ஆயுளுள்ளவர்கள். என்ன காரணத்தால் அப்படி நேரும் என்று கூறுங்கள். விநாயகர் ஆலயத்தில் தீப கைங்கர்யம் செய்த புண்ணியத்தால் அவர்களிருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்று சொன்னோம். தாயே ! கேளுங்கள்.

23. மறுஜன்மம் அவ்வூர் மேற்கில் வளமுள பேரூர் தன்னில்
உறைகுவாள் வைச்யச் சேயாய் உரைக்கிறோந் தந்தை பூர்வம்
வரம்பெற்ற பனையூர் தன்னில் வந்தனன் செங்குந் தனகத்
தரிதொழில் புரிந்து இன்னோன் வாழுநாள் வினையைக்
[கேண்மோ.

23. மறுபிறவி, அவ்வூருக்கு மேற்கில் உள்ள திருப்போரூரில், வைசிய குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொன்னோம். ஜாதகனுடையதந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். வரம் பெற்ற பனையூரில், செங்குந்தவமிசத்தவனாகப் பிறந்து, நெசவுத்தொழில் செய்து வாழ்ந்து வந்தகாலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

24. தன்குல மாது பேரில் சாற்றினான் நிந்தை வார்த்தை
அன்னவள் மனவெ றுப்பால் அறைந்திட்ட சாபஞ் சொல்வேன்
பின்வருஞ் ஜன்மந் தன்னில் பேதைய ரிருவ ராயும்
தன்சுதர் பகையு மாகித் தானவன் வாழ்வா யென்று.

24. தன் குலப்பெண்மீது அடாதவார்த்தைகளைக் கூறினான். அப்பெண் மனவெறுப்படைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். உனக்கு ஏற்படும் மறுபிறவியில், இருமனைவியர் ஏற்பட்டு, புத்திரர்களுடன் விரோதம் ஏற்பட்டு, வாழ்ந்து வருவாய் என்றாள்.

25. சொல்லியே சென்றா ளென்றோஞ் சுற்றிற்று வந்தத் தோடம்
வல்லவ னந்தி யத்தில் வாய்ப்புண்ணால் மரண மாகி
எல்லையை யளந்தோன் மைந்தன் இவனுமே வரையப் பட்டு
அல்லலா யிக்கு லத்தில் அணுகினா னென்று சொல்வோம்.

25. சொல்லிவிட்டுச் சென்றாள். அந்தச் சாபம் தொடர்ந்தது. அவனும் தன் கடைசிக் காலத்தில் வாய்ப்புண் ஏற்பட்டு மரண மடைந்தான். பூமியை அளந்த மகாவிஷ்ணுவின் புத்திரனாகிய பிரம்மதேவனால் மீண்டும் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தான் என்றோம்.

26. மறுஜன்ம மாயூ ரத்தில் வருவான் மறைக்கு லத்தில்
சிறியதோர் தந்தை பூர்வஞ் செப்புவோ மினிமே லாகப்
பிருதிவி தலத்தி லேதான் பிறந்தனன் வைச்யச் சேயாய்
அரிவையு மதலே யுண்டாய் யவன்வாழ்நாள் வினையைக்
[கேண்மோ.

26. மறுபிறவியில், **மாயூரத்தில்** அந்தணகுலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய சிறிய தந்தையின் முற்பிறவியை இனிக் கூறுகின்றோம் **காஞ்சிபுரத்தில்** வைசிய குலத்தவனாகப் பிறந்தான். புத்திரர்கள் மனைவி இவர்களையடைந்து வாழுங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

**தாசியின் நகைகளைப் பெற்று வஞ்சனையாகப் பேசியது**

27. தேவதா மாது பக்கல் சென்றுமே லலிதம் பேசி
ஆவலாய்ப் பணிகள் பெற று அடாவடி செய்ய லுற்றான்
மேவியே பெண்பால் கேட்க வியர்த்தமாய் வார்த்தை சொன்னான்
காவிய கண்ணுள் தானுங் கழறுவாள் சாப வார்த்தை.

27. ஆலயத்தைச் சேர்ந்த தாசியொருத்தியிடம் சென்று, இனிமையாகப் பேசி, அவளிடம் ஆபரணங்கள் சிலவற்றைப் பெற்றுக் கொண்டு, பிறகு அடாவடியாகப் பேசினான். பிறகு, அப்பெண்ணும் ஆபரணங்களைப் கேட்கும் போது, வீண்வார்த்தைகள் பேசினான். மையிட்ட கண்களையுடைய பெண் இட்ட சாபத்தைச் சொல்லுகின்றோம்.

28. மற்றொரு ஜன்மந் தன்னில் மறுமனை யாகத் தோன்றிக்
குற்றமாய் வாழ்வேன் யானுங் கொடுத்ததோர் பணியை வாங்க
இத்தகை சொல்லிச் சென்றாள் இமையவர் ததாஸ்து வென்றார்
குற்றமா யந்தத் தோடங் குலவிற்று வென்று சொல்வோம்.

28. நான் மறுபிறவியில் உனக்கு இரண்டாம் மனைவியாகத் தோன்றி வாழ்ந்து வருவேன், நான் கொடுத்த ஆபரணங்களை வாங்குவதற்காக, என்று சொல்லிவிட்டுச் சென்றாள். தெய்வங்களும் ' அப்படியே ' என்றனர். அந்தத் தோஷம் ஏற்பட்டது என்று சொன்னோம்.

29. காலன்தன் பதிக்குச் சென்றுக் கஞ்சனால் வரையப் பட்டுச்
சாலாவே வுதித்தா னென்றோந் தாசியு மிச்சென் மத்தில்
ஓலவே அபிமா னப்பெண் எய்துவா ளென்று சொல்வோம்
ஞாலமே லிவன்பின் ஜன்ம நாட்டுவோந் தாயே கேளும்.

29. அவன் இறந்து மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்றோம். வேசியும் இப்பிறவியில் அபிமான மனைவியாக வாய்த்தாள் என்று சொல்லுகின்றோம். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். கேளுங்கள், தாயே !

30. அருணையில் சைவச் சேயாய் அருளுவா னிவனே வென்றோம்
திருமக னிச்சென் மத்தில் சீலமில் லாதா னும்
அருந்தின னல்ப வஸ்து அடாவடி யுடைய னும்
வருவதால் சைவச் சேயாய் வருகுங்கா ரணங்க ளென்ன.

30. திருவண்ணுமலையில் சைவகுலத்தவனுகப் பிறப்பான் என்ருேம். இவன் இப்பிறவியில் நல்லொழுக்கமில்லாதவனுயும், அல்பவஸ்துக்களின் மீது விருப்பமுள்ளவனுயும், அடாவடி உள்ளவனுயும், இருப்பதால், சைவ குலத்தவனுகப் பிறக்கும் காரணங்கள் என்ன வென்று கூறுங்கள்.

31. சிலர்க்குஆ பத்தைக் காத்தும் தேவதாத் தலங்கள் சென்றும்
பலருக்கும் நல்லோ ணுயும் பாலகன் வாழ்வ தாலே
குலவுவான் சைவச் சேயாய்க் குறித்தவை தப்பா வாகும்
மலையிறை மகளே யாங்கள் வகுக்கிருே முதித்தோன் பூர்வம்.

31. ஆபத்து அடைந்த சிலரைக் காத்தும், புண்ணிய க்ஷேத்திரங் களுக்குச் சென்றும், பல பேருக்கு நல்லவனுகவும் வாழ்ந்துவருவதால், சைவ குலத்தவனுகப் பிறப்பான். நாங்கள் கூறியவை தவரு. மலையரசனின் புத்திரியே! நாங்கள் ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்ருேம்.

32. உத்தரந் தணிகை மேற்கில் உதித்தனன் ரெட்டி வம்சம்
மெத்தமாம் குடும்பி யாகி வாழ்நாளில் வினையைச் சொல்வேன்
வெற்றிசே ரரசர் பக்கல் விளம்பினுன் கட்டு வார்த்தை
குற்றங்கள் சிலர்க்கு நேரக் கூறுவார் சாபந் தானே.

32. வடக்குத்திசையிலுள்ள திருத்தணிக்கு மேற்கில், ரெட்டியார் மரபில் பிறந்து, பெரிய குடும்பியாகி வாழ்ந்துவருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்ருேம். வெற்றியை யடைந்த அரசரிடம் பொய்ச்சாட்சி கூறினுன். அதனுல் சிலருக்குத் தீங்குகள் ஏற்பட்டன. அவர்கள் சாபமிட்டனர்.

33. மறுஜன்மம் மகவாய்த் தோன்றி மாதுரு சுகமு மின்றிப்
பெருந்தந்தை யாஸ்தி யின்றிப் பெண்துணை காணுகி
உறைகுவாய் வேருேர் பக்கல் உரைத்துமே தெருத்தூள் விட்டார்
மருவிற்று அந்தத் தோடம் மறுவினைக் காணு துகும்.

33. மறுபிறவியில், குழந்தையாகப் பிறந்து, தாயால் சுகமில்லாத வனுகி, பெற்ற தந்தையின் ஆஸ்தியில்லாமல், உடன் பிறந்த சகோதரி யில்லாதவனுகி, வேறூரில் சென்று வாழ்ந்துவருவாய், என்று கூறி தெரு மண்ணை வாரி இறைத்தனர். அந்தத் தீவினை ஏற்பட்டது. வேறு தீமை ஒன்றும் இல்லாதவன்.

34. மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டு
வரநதி குலமு திப்பான் வரைகிருேம் மிவனின் யோகம்
அரசர்பூ சிதமு மாவன் அவன்கிராமச் செட்டுச் செய்வன்
நெறியதைக் காக்க வல்லன் நேமியை விருத்தி செய்வன்.

34. பிறகு இறந்து, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, வேளாள குலத்தில் பிறப்பான். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்ருேம். அரசரால் நன்கு மதிக்கப்படுவான். கிராம வியாபாரம் செய்து வருவான். ஒழுக்கத்தைக் காப்பான். பூமியைப் பெருக்குவான்.

35. தந்தைக்குத் தாழ்வு ருதான் சல்லியங் கொள்ளா னுரும்
இந்திர சாலஞ் செய்வன் எதிரியை நாசஞ் செய்வன்
ஐந்தாண்டுள் அன்னை கண்டம் அறைந்தன மிருபா னெட்டில்
முன்தந்தை கண்ட மென்றோம் முதல்வியே கேட்டி டாயே.

35. தன் தந்தையின் அந்தஸ்துக்குக் குறைவில்லாதாவன் கடன்படான். இந்திர ஜாலம் போல் நடந்துகொள்ளுவான். விரோதிகளை நசிக்கச்செய்வான். தன் ஐந்தாம் வயதுக்குள் இவனுடைய தாய் மரணமடைவாள். இருபத்தெட்டாம் வயதில் முதல்தந்தை இறந்து விடுவான், என்றோம். தாயே! கேளுங்கள்.

36. ஆறஞ்சு நாலு ஆண்டில் அழுகும்பின் தந்தை கண்டம்
கூறுவோ மறுப தாண்டில் கும்பாமா தத்தி லேதான்
மாறன்தன் உடல மேகும் மறு ஜன்மம் புலியூர் தன்னில்
தீரனும் பிரம்ம சேயாய் ஜனிப்பனு மென்று சொல்வோம்.

36. ஜாதகனுடைய முப்பத்துநான்காம் வயதில் சிறிய தந்தை மரணமடைவான். அறுபதாம் வயதில் மாசி மாதத்தில் ஜாதகன் இறந்து போவான். மறுபிறவி புலியூரில் அந்தணர் குலத்தவனுகப் பிறப்பான் என்று சொல்லுகின்றோம்.

37. இருபது வேழாமா ண்டில் இவன் கிராமச் செட்டுச் செய்து
திருமகன் ஜனன காலஞ் சுக்கிரன் தசையி ருப்பு
உரைக்கிறோந் திங்க ளெட்டு உரைத்தனம் பூர்வ பாகம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

37. ஜாதகன் தனது இருபத்தேழாம் வயதில் கிராம வியாபாரம் செய்வான். ஜாதகனது ஜனனகாலத்தில் சுக்கிரமகாதசையின் இருப்பு எட்டு மாதங்கள் மட்டுமே என்று முதல்பாகத்தைக் கூறினோம். வேதங்களின் முடிவில் நடனமாடும் தாயே! கேளுங்கள்.

## ஜாதகம் 74.

1. மிதுனமுஞ் ஜன்ம மாக வெள்ளியுஞ் சேயு நாலில்
புதன்குரு பானு ஆறில் புயங்கனுஞ் சனியு மொன்பான்
மதியுமே ஏழி லாக முலமும் இரண்டாம் பாதம்
அதுபலன் புகலு மென்று அம்பிகை கேட்கும் போது ;

1. மிதுனம் ஜன்ம லக்கினமாகவும், சுக்கிரன் செவ்வாய் நான்காமிடத்திலும், புதன் குரு சூரியன் ஆறுமிடத்திலும், ராகு சனி ஒன்பதா மிடத்திலும், சந்திரன் ஏழாமிடத்திலும், கேது மூன்றிலும் இருந்து, மூலம் இரண்டாம் பாதத்தில் பிறந்தவருடைய பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கும் போது;

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் |
| ராகு சனி | இராசி சக்கரம் | | |
| | | | கேது |
| சந்திரன் | புதன் குரு சூரியன் | | சுக்கிரன் செவ்வாய் |

2. தென்முனி புகலு கின்றார் ஜனித்திடு மாண்பால் ஜன்மப்
வந்தஇல் வடக்கு வாசல் மதயானை கோட்டங் கீழ்ப்பால்
நொந்திடு மருகர் மேற்கு நேமியை யளந்தோன் காளி
விந்தையாய் வடபா லாகும் மேற்றிசை மார்க்க முண்டு.

2. அகத்திய முனிவர் கூறுகின்றார். பிறந்தது ஆண் ஜன்மம். பிறந்த வீடு வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. கிழக்கில் விநாயகர் ஆலயம் உள்ளது. மேற்கில் அருகதேவர் ஆலயம் சிதைந்திருக்கும். மஹாவிஷ்ணு ஆலயமும் காளி கோயிலும் வடக்குத்திக்கிலுள்ளன. மேற்குப்பக்கத்தில் சாலை யொன்றுளது.

3. இன்னமும் பலதே வாசம் இலகிய பேரூராகும்
அன்னவன் கங்கை சேயாய் அருளுவா னிரண்டாஞ் ஜன்மம்
தந்தைதாய் துணைவர் யோகம் தன்மனை புத்ர யோகம்
முன்பின்ஜன் மங்கள் யாவும் உரைக்கிறே மிந்நூல் தன்னில்.

3. இன்னும் பல தெய்வங்கள் வாழ்ந்து வரும் பெரிய ஓர் ஊரில் வேளாள குலத்தவனாக ஜாதகன் தோன்றுவான். அவன் தன் தந்தைக்கு இரண்டாமவனாகப் பிறப்பான். அவனுடைய தந்தை தாய் உடன்பிறந்தவர் மனைவி மக்கள் புத்திரர் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு இவற்றையும் இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம்.

4. தந்தையின் துணையா னொன்று சாற்றுவோந் தீர்க்க மாக
அந்தவா ணிளையோ னாகும் வரைகிறே மவன்கு ணத்தை
நிந்தைக ளேற்கா னாகும் நிதானமாங் குடும்பி யாவன்
சிந்தையு நல்ல தாகும் தீரமில் லாத நெஞ்சம்.

4. தந்தைக்குச் சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். அவனும் ஜாதகனுடைய தந்தைக்கு இளையவனாகும். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். பழிகள் அடையாதவன். நிதானமான குடும்ப முள்ளவன். நல்ல மனமுடையவன். தைரிய மில்லாத மனத்தினன்.

5. வித்தையு மில்லா னாகும் விவேகியா மெவர்க்கு நல்லோன்
ஒத்துமே வாழ்வா னாகும் உறைந்திடும் தார மொன்றே
புத்திர ராண்பால் ரண்டு பெண்ணது நான்கு தீர்க்கம்
சத்தியங் கூறா னாகுஞ் சங்கரி கேட்டி டாயே.

5. கல்வியறிவில்லாதவன். விவேகமுள்ளவன். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். ஒத்து வாழ்ந்து வருவான். மனைவியொருத்தியே. இரு புத்திரர்களும் நான்கு பெண்களும் தீர்க்காயுளுள்ளவர்கள். சத்தியம் செய்யாதவன். தாயே ! கேளுங்கள்.

6. தந்தையின் சேதி சொல்வோ மவனிரு நிறத்த னாகும்
சிந்தையு மிரண்டு மாகுஞ் செய்நிலம் விருத்தி செய்வன்
பந்தணி மார்கள் மோகன் பதர்குண மில்லா னாகும்
தன்தன மதிக மில்லான் சமமான கல்வி யென்றோம்.

6. ஜாதகனின் தந்தையின் செய்தியைச் சொல்லுகின்றோம். கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவன். இருவிதமான எண்ணங்களுடையவன். விளைநிலங்களைப் பெருக்குவான். பெண்கள்மீது மையல் கொள்வான். அற்பகுணங்க ளில்லாதவன். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிக மில்லாதவன். சமமான கல்வியறிவுடையன்.

7. மூலநோ யுடைய னாகு மொழியதைக் காப்பா னாகுஞ்
சீலமுங் கொஞ்ச முண்டு செய்நன்றி மறவா னாகும்
ஞாலங்கள் விருத்தி செய்வன் நற்குல தெய்வஞ் சத்தி
காலத்தை யறிந்து வாழ்வான் கார்க்கோட கன்போல் கோபம்.

7. மூலச்சூட்டு நோயுள்ளவன். தன் வார்த்தையைக் காப்பான். நல்லொழுக்கமும் சிறிதுள்ளவன். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவன். பூமியை விருத்தி செய்வான். தனகுல தெய்வமான காளிதேவியை பூசிப்பான். காலத்தைத் தெரிந்து அதற்குத் தக்கபடி வாழ்ந்து வருவான். சர்ப்பம்போல் கோபம் கொள்வான்.

8. பொய்யது புகலா னாகும் போசன வறுமை காணான்
தையலுக் கினிய னாகுங் கருமமாஞ் சினமுங் கொஞ்சம்
செய்வன்க ரங்கமல ரேகை தேவதா பத்தி பூண்பன்
கைமுத லில்லா னாகுங் கடந்தோர்க ளுறவு கொள்வான்.

8. பொய் பேசாதவன். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதன். தன் மனைவிக்குப் பிரியனுவன். சிறிது கோபமும் உள்ளவன். கையில் தாமரை ரேகை யுள்ளவன். தெய்வபக்தி யுள்ளவன். கைப்பொருள் இல்லாதவன். துறவிகளிடம் உறவு கொள்ளாதவன்.

9. இந்நெறி வுடையா னுக்கு இப்பால னுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அழகுளா னிருநி றத்தன்
தன்சொலு மடக்க முண்டு தைரிய மில்லா நெஞ்சம்
பொன்கள்வீண் செலவு செய்வன் புத்திமா னென்று சொல்வோம்.

9. இங்ஙனம் குணங்கள் உள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைக் சொல்லுகின்றேம். இருவிதமான நிற முள்ளவன். அடக்கமாகப் பேசுபவன். தைரிய மில்லாத மனத்தினன். பொருளை அனுவசியச் செலவுகள் செய்வான். புத்திமான் என்று கூறுகின்றேம்.

10. இருவிதக் கல்வி கற்பன் இடரும்யா வர்க்குஞ் செய்யான்
வருவோரை யாத ரிப்பன் வளைவுமே செய்வா னுகும்
பொறுமையும் பெருமை யேற்பன் போசன வறுமை காணுன்
தறிபடக் கூறு னுகுந் தரணியால் சீவிப் பானும்.

10. இருவிதமான கல்விகளைக் கற்பான். ஒருவருக்கும் தீங்கு செய்யாதவன். தன்னை யண்டிவருபவர்களைக் காப்பான். விவசாயம் செய்து வருவான். பொறுமை யுடையவன். பெருமை அடைவான் சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். துண்டமாகப் பேசாதவன். பூமியில் பயிர்த்தொழில் செய்து ஜீவனம் நடத்துவான்.

11. சொல்லது சுருக்க மாகுந் துணைவரை யாத ரிப்பன்
தல்லிசொல் கடவா னுகுஞ் சாந்தவான் பொறுமை சாலி
அல்லல்க ளடையா னுகும் அணுகிடும் பித்தச் சூடு
மல்லுக்கு முன்செல் லாதான் மாற்றனை யுறவு கொள்வன்.

11. குறைவாகவே பேசுபவன். தன் உடன் பிறந்தவரை ஆதரிப்பான். தன் மனைவியின் சொல்லை மீருதவன். சாந்தமுள்ளவன். பொறுமைசாலி. துன்பங்கள் அடையாதவன். பித்தச்சூட்டு நோயுள்ளவன். சண்டைக்கு முன் செல்லாதவன். விரோதிகளையும் நட்புக் கொள்ளுவான்.

12. தன்துணை யாண்பா லொன்று சத்தியு மவ்வாறு தீர்க்கம்
சொன்னது விளையோ னுகுஞ் செப்புவோ மாண்பால் சேதி
கன்னென மொழியே சொல்வன் கவடிலா னுக சாலி
முன்னேன்சொல் கடவா னுகும் மொழியது சுத்த முண்டு.

12. உடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். சகோதரன் இளையவன் என்றேம். அவனுடைய செய்தியைக் கூறுகின்றேம். இனிய வார்த்தைகளையே பேசுபவன். கபடமில்லாதவன். ஊகமுள்ளவன். தன் சகோதரன் வார்த்தையை மீருதவன். சுத்தமாகப் பேசுபவன்.

13. கல்விமா னூக சாலி கருதிடான் கட்டு வார்த்தை
சொல்லது சிலேடை யாகுந் துர்வழக் கதனில் சொல்லான்
வெல்லுஞ்சொல் லுடைய னாகும் வேண்டினோர்க் குதவி செய்வன்
வல்வாய னஞ்சா நெஞ்ச மாநிலம் விருத்தி செய்வன்.

13. கல்விமான். ஊகமுள்ளவன். வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன். இரு பொருள்படும்படி பேசுபவன். கெட்டவழக்குகளில் செல்லாதவன். வெற்றிச் சொல் உடையவன். தன்னை வேண்டினவர்களுக்கு உபகாரம் செய்வான். வாக்குவலிமையுள்ளவன். தைரியமுள்ள மனத்தினன். நிலத்தைப் பெருக்குவான்.

14. பாரியு மொன்றே தீர்க்கம் பாலர்க ளாண்பா லொன்று
நாரியர் நால்வ ராகு நாயகன் வயது தீர்க்கம்
வீரிய னுடனே வாழ்வன் வயதுமே தீர்க்க மெய்தும்
காரிய சமர்த்த னாகுங் காதலி கேட்டி டாயே.

14. மனைவி யொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். ஒரு புத்திரனும் நான்கு புத்திரிகளும் உண்டாகும். தீர்க்காயுளுள்ளவன். ஜாதகனுடன் சேர்ந்து வாழ்வான். நீண்ட ஆயுளுள்ளவன். காரியங்களைச் செய்வதில் சாமர்த்தியசாலி. தாயே ! கேளும்.

15. கன்னிகை சேதி சொல்வோங் கவடிலாள் பொறுமை சாலி
அன்னமுங் குறைவு றுதாள் அழகான குடும்பி யாவள்
தன்வரன் மேல்பால் நேருஞ் சந்ததி வாண்பா லொன்று
மின்னல்போல் பெண்பால் மூன்று விருத்தியா மற்றோர் சேதம்.

15. சகோதரியின் செய்தியைக் கூறுகின்றோம். கபடில்லாதவள். பொறுமையுடையவள். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவள். அழகுள்ள குடும்பமுடையவள். அவளுக்குக் கணவன் மேற்குத்திக்கிலிருந்து வரு வான். ஒரு புத்திரனும் அழகிய பொற்கொடிபோல் மூன்று பெண்களும் நிலையுள்ளனர். மற்றவர்கள் சேதமாவர்.

16. மங்கையுந் தீர்க்க சீவி வருவோரை யாத ரிப்பள்
சங்கையென் றோரைச் சார்வள் சாதமு மன்பா யீவள்
பங்கய முகத்தா ளாகும் பதர்குண மில்லா ளென்றோம்
ஐங்கரன் தனைவ ளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

16. அவளும் நீண்ட ஆயுளுள்ளவள். தன்னையண்டி வந்தவர்களை ஆதரிப்பாள். சந்தேகப்படக்கூடியவர்களோடு சேராதவள். அன்னமும் அன்புடன் அளிப்பாள். தாமரை போன்ற முகமுள்ளவள். அற்பகுணங் களில்லாதவள். விநாயகனை வளர்த்தெடுத்த தாயே! கேளுங்கள்.

17. இன்னமும் விபர மாக இயம்புவோம் பின்பா கத்தில்
அன்னையின் சேதி கேளாய் அறிவுளாள் பொறுமை சாலி
மன்னவன் தனக்கு எற்றாள் மனமது தளர்ச்சி யுண்டு
பின்னமில் லாத தேகி பித்தநோ யுடைய ளாகும்.

17. இன்னும் விபரமாகப் பிற்பாகத்தில் கூறுகின்றேம். ஜாதகனுடைய தாயின் செய்திகளைக் கேளுங்கள். அறிவுள்ளவள். பொறுமையுடையவள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். சஞ்சலமான மன முள்ளவள். ஊனமில்லாத தேகமுடையவள். பித்த நோய் உள்ளவள்.

18. இல்லமு முள்ளூ ராகும் இவள்துணை யாண்பால் ரண்டு
வல்லிமார் நால்வ ராகு மாதுலன் வேருய்ச் செல்வன்
அல்லலாம் குடும்ப மாகும் அவர்களி லிளையா னுக்குச்
சொல்லுவோந் தாரம் ரண்டு சுதர்களு மொன்றே தீர்க்கம்.

18. வீடு உள்ளூரிலேயே உள்ளது. இவளுக்கு உடன் பிறந்தவர்களில் இரு சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் உள்ளனர். இவளுடைய மாமன் தனியாகச் சென்று விடுவான். துன்பமடைந்த குடும்பமாகும். தாய்மாமனில் இளையவனுக்கு இரு தாரம் உண்டு என்றும், புத்திரன் ஒருவனே நீண்ட ஆயுளுள்ளவன் என்றும் கூறுகின்றேம்.

19. தந்தையி னுஸ்தி தன்னைத் தானடை ணடையா னுகும்
பந்தணி பக்கல் செல்வன் பராசரும் மறுத்துச் சொல்வார்
எந்தமா துக்குப் புத்ரர் இயம்பினீர் விபரஞ் சொல்வீர்
முந்திய மாதுக் கேதான் மொழிந்திட்டோம் புத்ர பாவம்.

19. தன் தந்தையின் ஆஸ்தியை அடையாதவன். தன் மனைவியின் ஊர் சென்று வாழ்ந்து வருவான். பராசர முனிவர் இடைமறித்துச்சொல்லு கின்றார். எந்தப் பெண்ணுக்குப் புத்திரர் தோன்றுவர்? விபரமாகச் சொல்லுங்கள், என, முதல் பெண்ணுக்கே புத்திரர் பிறக்கும் என்று கூறு கின்றேம்.

20. இன்னமும் விபர மாக இயம்புவோம் பின்பா கத்தில்
மன்னவன் மணத்தின் காலம் வரைகிறே மூவே ழாண்டுள்
கன்னிகை உள்ளூர் நேரும் கழறுவோம் மவள்கு ணத்தைப்
பொன்னிற முடையா ளாகும் பிறர்சுக மடைவா ளாகும்.

20. மற்றவைகளை விபரமாக இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றேம். ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றேம். அவனுடைய இருபத்தோராம் வயதில் உள்ளூரிலிருந்தே மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றேம். பொன் போன்ற நிறமுள்ளவள். பிறரால் சுகமடைவாள்.

21. சுதர்களுங் காணு ளாகும் தோகைபோல் வடிவு மொக்கும்
பதர்குண முடைய ளாகும் பழியது பெற்று வாழ்வள்
அதிபதி இரண்டாம் மாது வருகுவாள் தென்மேல் திக்கில்
சதியிலா மனத்த ளாகும் சாதமு மன்பாய் ஈவள்.

21. புத்திர பாக்யமில்லாதவள். மயில் போல் அழகுள்ளவள். அற்ப குணங்களில்லாதவள். அவமானங்கள் ஏற்று வாழ்வாள். ஜாதகனுக்கு இரண்டாம் மனைவி வாய்ப்பாள். அவள் தென்மேற்குத் திக்கிலிருந்து வருவாள். அவள் தீய எண்ணங்களில்லாதவள். அன்புடன் அன்னமளிப்பாள்.

22. அன்னம்போல் வடிவு மொக்கும் அயல்குற்றம் புகலா ளாகும்
பொன்னிற முடைய ளாகும் புருடன்தன் மனதுக் கேத்தோள்
நன்னடை யடக்க வார்த்தை நவின்றிடாள் கட்டு வார்த்தை
கன்னிகை யோக சாலி காதலி தீர்க்க சீவி.

22. அன்னத்தைப் போன்ற அழகான உருவமுள்ளவள். பிறர்மீது குற்றம் கூறுதவள். பொன்னைப் போன்ற நிறமுடையவள். தன் கணவன் மனத்துக் கேற்றவள். நன்னடத்தை யுள்ளவள். அடக்கமாகப் பேசுபவள். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவள். யோகமுள்ளவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

23. இருபது ஒன்ப தாண்டுள் எய்திடு மென்று சொல்வோம்
தரிபடக் கூறு ளாகும் தன்மனம் கபடு மில்லாள்
வருவோரை ஆத ரிப்பள் வஞ்சனை மனமில் லாதாள்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

23. ஜாதகனுக்கு இருபத்தொன்பதாம் வயதுக்குள் மணம் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். துண்டமாகப் பேசாதவள். கபட மில்லாதவள். தன்னை வேண்டி வந்தவர்களை ஆதரிப்பாள். வஞ்சனையில்லாத மனத்தினள். கரிய யானை முகத்தையுடைய விநாயகனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

24. மதலைக ளாண்பா லொன்று மதலையி ருவர் தீர்க்கம்
பதராகு மற்ற வெல்லாம் பகருவோ மிவன்முன் ஜன்மம்
நதியினி லுயர்வ தான நற்சேது பதியி லேதான்
நிதமிக வுடையா னுக்கு நேர்ந்தனன் வன்ய சேயாய்.

24. ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர் நிலையார். இவனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். புண்ணிய தீர்த்தங்களுளுயர்ந்த சேதுவில் ஒரு செல்வவானுக்கு வன்னிய குலத்தில் பிறந்தான்.

25. மாரனு வாழு நாளி லணுகின வினையைக் கேண்மோ
காரிழை வேறு மாதைக் கலந்துமே சுகமுங் கொண்டு
பாரியின் முகம்பா ராமல் பாலகன் வாழ்ந்தா னென்றோம்
நாரியு மனங்க லங்கி நவின்றசா பத்தைக் கேண்மோ.

25. இங்ஙனம் வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். வேறு ஒருத்தியுடன் இன்பமனுபவித்து வாழ்ந்து வந்தான். தன் மனைவியின் முகத்தைப் பாராமல் இருந்து வந்தான். அப் பெண்ணும் மனம் வருந்திக் கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

26. சிறைவைத்து வயல்மா தின்மேல் சென்றதோர் பாவிக் கேதான்
வருஞ்ஜன்ம மனையாய்த் தோன்றி யவமானஞ் செய்து வாழ்வேன்
அரிவையுஞ் சொல்லி நீரால் அடைந்தனள் கால னூடு
உறைந்தது வந்தத் தோடம் உத்தமி கேட்டி டாயே.

26. என்னைச் சிறை வைத்து வேறொரு பெண்மீது மையல் கொண்டுள்ள பாவியே! உனக்கு மறு பிறவியில் மனைவியாகப் பிறந்து, அவமானம் ஏற்படுத்தி வாழ்வேன், என்று சொல்லி, அப்பெண் ஜலத்தில் வீழ்ந்து மாண்டாள். அந்தத் தோஷம் ஏற்பட்டது. தாயே! கேளுங்கள்.

27. பாலக னந்தி யத்தில் பஞ்சைமே லிரக்க மாகிக்
காலன்தன் நாடு சென்று கஞ்சனால் வரையப் பட்டு
ஞாலமே லுதிப்பா னுக்கு நல்கிடுங் கற்பின் சாபம்
வேல்விழி மார்கள் ரண்டு மேவிடு மென்று சொல்வோம்.

27. ஜாதகனும் தன் கடைசிக்காலத்தில் ஏழைகளின்மீது இரக்கங் கொண்டு வாழ்ந்து, பிறகு இறந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப் பட்டு உலகில் பிறந்தான். கற்புடைய பெண்ணின் சாபம் ஏற்பட்டது. மனைவி கள் இருவராவர் என்று கூறுகின்றோம்.

28. வந்தவன் யோகச் சேதி வரைகிறேந் தாயே கேளும்
சிந்தையு நல்ல தாகுஞ் சிறப்பான குடும்ப மேற்பன்
கந்தன்மேல் பத்தி பூண்பன் கட்டுரை பகரா னுகும்
நந்தியா விருத்தி யுண்டு நயப்புறு வார்த்தை யோனே.

28. ஜாதகனுடைய யோகச் செய்திகளை கூறுகின்றோம். தாயே! கேளுங் கள். நல்ல மனமுள்ளவன். சிறப்புள்ள குடும்பத்தை அடைவான். முருகக் கடவுள்மீது பக்தி கொள்வான். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவன். கால்நடைகள் பெருகும். நயமாகப் பேசுபவன்.

29. சல்லிய பாதை யேற்கான் சாதமுங் குறைவு றுதான்
மல்லினில் செல்லா னுகும் மாநிலம் விருத்தி செய்வன்
சொல்லதைக் காப்பா னுகுந் துணைவரை யாத ரிப்பன்
புல்லியோ ருறவு கொள்ளான் புண்ணிய மனத்த னுகும்.

29. கடன் உபத்திரவம் இல்லாதவன். அன்னத்துக்குக் குறைவில்லாத வன். சண்டைக்குச் செல்லாதவன். விளைநிலங்களைப் பெருக்குவான். தன் வார்த்தைகளைக் காப்பாற்றுவான். உடன் பிறந்தவர்களை ஆதரிப்பான். அற்பர்கள் நட்பில்லாதவன். புண்ணியமான மனத்தினன்.

30. மாதுரு முன்ஜன் மத்தை வரைகிறேந் தாயே கேளும்
மேதினில் உயர்வ தான் விரிஞ்சிமா நகரந் தன்னில்
போதன முடையா னுக்குப் பிறந்தனள் வைச்யச் சேயாய்த்
தீதென்றோர்க் குதவி செய்து தேவிமுன் வினையில் லாமல்;

30. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம் தாயே! கேளுங்கள். உலகில் உயர்வான விரிஞ்சி நாட்டில் மிகுந்த செல்வவானுக்கு வைசிய குலத்தவளாகப் பிறந்தாள். தீமையடைந்தவர்கட்கு உபகாரம் செய்து முற்பிறப்புத் தீவினையில்லாமல்;

31. அறமதி லிச்சை உண்டாய் அந்தகன் நகரஞ் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
வருஞ்ஜன்மம் சிறுபாக் கத்தில் வருகுவா ளிக்கு லத்தில்
பொருளது பெருக்க மாகிப் புகழுடன் வாழ்வா ளம்மா.

31. தருமம் செய்வதில் விருப்ப முள்ளவளாய் இருந்து, பிறகு இறந்தாள். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று சொல்லுவோம். மறுபிறவி அச்சிறுபாக்கத்தில் இதே குலத்தில் பிறப்பாள். செல்வம் பெருகி, கீர்த்தியுடன் வாழ்ந்து வருவாள். தாயே!

32. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோந் தணிகை மேற்கில்
பிந்தின வூரிலே தான் பிறந்தனன் ரெட்டி வம்சம்
அந்தவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
நிந்தைகள் ஓர்பெண் பேரில் நுகர்ந்தன னென்று சொல்வோம்.

32. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருத்தணிக்கு மேற்கில் உள்ள ஒரு சிற்றூரில் ரெட்டியார் மரபில் தோன்றி, வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஒரு பெண்மீது வீண் பழிகளைக் கூறினான் என்று சொல்லுகின்றோம்.

33. மாதுவும் மனது வாடி வரைந்தசா பத்தைக் கேண்மோ
பாதக வார்த்தை பெண்மேல் பகர்ந்திட்ட பாவிக் கேதான்
மேதினில் மறுஜன் மத்தில் விளங்காது துணையெ னைப்போல்
வேதனை மூலச் சூடு மேவியே மாள்வா யென்று;

33. அப்பெண்ணும் மனம் வருந்திக் கூறிய சாபத்தைக் கேளுங்கள். கெட்ட வார்த்தைகளைப் பெண்மீது கூறிய பாவியே! உனக்கு ஏற்படும் மறுபிறவியில் என்னைப்போல் உடன்பிறந்தவர் இல்லாமல் வாழ்ந்து, வேதனை தரும் மூலச்சூட்டு நோயால் இறப்பாய், என்று;

34. சொல்லியே தெருத்தூள் விட்டாள் சேர்ந்தது வந்தச் சாபம்
வல்லியே யந்தி யத்தி லறுமுகன் தொண்டு பூண்டு
பொல்லாத கால னாடு சென்றுமே பிரமன் லக்கம்
எல்லையி லுதித்தா னென்றோம் எய்திடு மாது சாபம்.

34. கூறி, தெரு மண்ணை வாரி இறைத்தாள். அந்தச் சாபம் தொடர்ந்தது. தாயே! அவனும் தன் கடைசிக்காலத்தில் சுப்பிரமணியக் கடவுளிடம் பக்தி கொண்டிருந்து, தீய காலனது நாடு சென்று, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இவ்வுலகில் பிறந்தான் என்றோம். பெண்ணின் சாபம் ஏற்பட்டது.

35. தன்துணை கன்னி காணான் தங்கிடு முன்னூழ் நோயும்
பின்ஜன்மம் வேலங் காட்டில் பிறப்பனு மிக்கு லத்தில்
கன்மகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
மன்னனுக் கிருப தாண்டில் மடிவுண்டு தந்தைக் கேதான்.

35. உடன்பிறந்த சகோதரியில்லாதவன். மூலச்சூட்டு நோய் ஏற்படும். மறுபிறவி வேலங்காட்டில் இதே குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய கரும காலங்களைச் சொல்லுங்கள். முனிவரே! நீர்தாம். ஜாதகனுக்கு இருபதாம் வயதில் தந்தை மரணமடைவான்.

36. மதிதசை காலந் தன்னில் மாதுரு கண்ட மெய்தும்
அதுகால மாறு முண்டாம் அணுகிடுங் கண்ட மென்றோம்
சுதனுக்கு வறுபா ஞண்டில் தேள்மாதங் கண்ட மெய்தும்
அதிபன்பின் ஜன்மஞ் சொல்வோ மாயூரந் தன்னி லேதான.

36. சந்திரமகாதசையில் தாய் மரணமடைவாள். அப்போது ஜாதகனுக்கு முப்பத்தாறும் வயது நடைபெறும். ஜாதகனுக்கு அறுபத்தேழாம் வயதில் கார்த்திகை மாதம் மரணம் ஏற்படும். ஜாதகனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். மாயூரத்தில்;

37. பிறப்பனு முதல்கு லத்தில் பேசுவோஞ் ஜனன காலம்
மருவிடுங் கேது தன்னில் வருடமு நாலு மாகும்
உறைந்திடு திங்க ளைந்தும் உரைத்தனம் பூர்வ பாகம்
அறந்தனை வளர்க்கு மெங்க ளாத்துமத் தாயே கேளாய்.

37. அந்தண குலத்தவனுகப் பிறப்பான் என்று கூறுகின்றோம். ஜனன காலத்தில் கேதுமகாதசையில் நான்கு வருடங்களும் ஐந்து மாதங்களும் மீதமாகும். இதுவரை முதல் பாகம் சொன்னோம். தருமத்தை விருத்தி செய்யும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

# ஜாதகம் 75.

1. மதிகுசன் சீய மாக மந்தனுங் கேது வில்லு
உதயனு மேட மாக ஒருகண்ணோன் நந்தி யாக
நிதிகுரு ராகு வீணை நின்றுமே மிதுனஞ் ஜன்மம்
அதுபலன் புகலு மென்று அம்பிகை கேட்கும் போது ;

1. சந்திரன் செவ்வாய் சிம்மத்திலும், சனி கேது தனுசிலும், சூரியன் மேஷத்திலும், சுக்கிரன் புதன் ரிஷபத்திலும், குரு ராகு மிதுனத்திலும், மிதுனம் ஜன்மமாகவும் இருந்தால், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கும்போது ;

| | | | |
|---|---|---|---|
| | சூரியன் | சுக்கிரன் புதன் | லக்னம் குரு ராகு |
| | இராசி சக்கரம் | | |
| | | | சந்திரன் செவ்வாய் |
| சனி கேது | | | |

2. அத்திரி முனிவர் சொல்வார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லஞ் சொல்வேன் வடவாடை கீழ்மேல் வீதி
சித்தஜன் தந்தை கீழ்ப்பால் சிறப்பான கோட்ட முண்டு
அத்தியு மவ்வூர் வாசம் அம்பிகை தவஞ்செய் யூராம்.

2. அத்திரி முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகமாகும். அவனுடைய பிறந்த வீட்டைச் சொல்லுகின்றேன். கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு வரிசையில் உள்ளது. திருமாலின் ஆலயம் கிழக்குத் திக்கில் உள்ளது. அந்தக் கோயில், சிறந்ததாக உள்ளது. வினாயகக் கடவுளும் அவ்வூரில் எழுந்தருளியிருக்கிறார். அது, பார்வதி தவம் செய்த ஊராகும்.

3. அரசர்கள் வாச மாகும் அநேகரால் புகழு முண்டு
பெரிதான செட்டு வோங்கும் பிருதிவி தலமே யாகும்
திருமாலின் வருக்க மாகுந் தேரின குலமே யாகும்
உரைக்கின்றோங் குடும்பச் சேதி உத்தமி கேட்டி டாயே.

3. அஃது அரசர்கள் வாழ்ந்துவரும் ஊராகும். அநேகரால் கீர்த்தி ஏற்பட்டதாகும். தந்தைக்கு வர்த்தகம் செழிப்பாக உள்ளது. அது காஞ்சிபுரம். ஜாதகன விஷ்ணு வம்சத்தினன். முதிர்ந்த குலம் (அந்தண குலம்) ஆகும். குடும்பச் செய்திகளைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

4. தந்தையின் துணையாண் ரண்டு சாற்றுவோந் தீர்க்க மாக
அந்தவர் வேருய்ச் செல்வர் அவர்சேதி பின்பால் சொல்வோம்
இந்தவன் தந்தை சேதி ஈகைவான் ஊக சாலி
சிந்தையு நல்ல தாகுஞ் சிறப்பான வில்லஞ் செய்வன்.

4. ஜாதகனின் தந்தையின் சகோதரர் இருவர் நீண்ட ஆயுளுள்ளவர்கள். அவர்கள் வேருகச் சென்றுவிடுவர். அவர்கள் செய்தியைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனின் தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம். கொடையாளி. ஊகமுள்ளவன். நல்ல மன முள்ளவன். அழகிய வீடு கட்டுவான்.

5. பலருக்கு வுபதே சிப்பன் பகவானின் பத்தி பூண்பன்
தலவாசஞ் செல்வா னுவன் சல்லிய பாதை யேற்கான்
நலமதை யெவர்க்குஞ் செய்வன் நல்கிடும் வேருே ராஸ்தி
கலகத்தைக் கூறு னுகும் காதலி கேட்டி டாயே.

5. பலபேருக்கு உபதேசம் செய்யும் தொழில் செய்பவன். தெய்வபக்தி யுடையவன். நல்ல புண்ணிய தலங்களுக்குச் செல்வான். தீய வழிகளில் செல்லாதவன். எல்லோருக்கும் நன்மையையே செய்து வருவான். வேறொருவருடைய ஆஸ்தி இவனுக்குச் சேரும். கலகம் செய்யாதவன். தாயே ! கேளுங்கள்.

6. சொல்லிய குணத்தா னுக்கு மங்கைய ரிருவர் தம்மில்
வல்லியா மிளையா ளுக்கு வருகுவா னிந்தப் பாலன்
புல்குவோ மிவன்கு ணத்தைப் புயபல முடைய னுகும்
சல்லிய முடைய னுகும் ரோஷமுங் கோப மேற்பன்.

6. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு உள்ள இரு மனைவியரில் இளையவளுக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். இவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். புஜபலமுடையவன். கடன் உபத்திரவம் உள்ளவன். ரோஷமும் கோபமும் கொள்ளுவான்.

7. இருவிதக் கல்வி கற்பன் இடறென்றோர்க் குதவி செய்வன்
நறைமல ரிட்டங் கொள்வன் நாயகி மார்கள் மோகன்
அரபத்தி பூண்பா னுகும் அற்பபுத் திகளுங் கொஞ்சம்
பொருள்வீணுய்ச் செலவு செய்வன் புத்தியுஞ் சபல மாகும்.

7. இருவிதமான கல்வி கற்பான். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. வெண்ணிற மலர்களின்மீது பிரியம் கொள்வான். பெண்கள்மீது மையலுள்ளவன். சிவபெருமான்மீது பக்தி யுடையவன். சிறிது அற்ப புத்தியும் உள்ளவன். வீண் காரியங்களில் பணம் விரயம் செய்வான். சபலபுத்தி யுள்ளவன்.

8. விலைமாதர் மோக வானும் வீண்பழி ஏற்பா னுகும்
தலவாசஞ் செல்வா னுகும் தந்தைக்குத் தாழ்வாய் வாழ்வன்
பலர்கட்குப் போதிப் பானும் பரிந்துப சாரஞ் செய்வன்
புலவன்போல் வார்த்தை உண்டு பிதுராஸ்தி விரயஞ் செய்வன்.

8. வேசையர்மீது விருப்பமுள்ளவன். அபவாதங்கள் அடைவான். புண்ணிய ஸ்தலங்களுங்குச் செல்வான். தன் தந்தையின் அந்தஸ்துக்குத் தாழ்வாகவே வாழ்ந்து வருவான். பல பேர்களுக்குப் போதிப்பான். அன்புடன் உபசாரம் செய்பவன். புலவன் போலப் பேசுபவன். தன் தந்தையின் ஆஸ்தியைச் செலவு செய்துவிடுவான்.

9. எண்ணஞ்சு ஆண்டு மேலாய் இவனுக்கு யோகஞ் சொன்னேம்
வண்ணமா யதன்முன் னாக வரவுக்குச் செலவு அநேகம்
கண்ணிய மில்லா வாழ்வன் சிறிதான புத்தி உண்டு
குண்ணிய மனத்த னாதும் குவலய மதிப்பில் லாதான்.

9. ஜாதகனுக்கு நாற்பதாம் வயதுக்குமேல் யோகம் ஏற்படும். அதற்கு முன்னால் வரவுக்குமேல் செலவாகும். கண்ணியமில்லாமல் வாழ்ந்து வருவான் அற்ப புத்தி யுள்ளவன். குறுகிய மனப் பான்மை யுள்ளவன். உலகில் மதிப்பில்லாமல் வாழ்ந்து வருவான்.

10. சொல்லிய ஆண்டு மேலாய்ச் சுதனுடை மரண மட்டும்
சல்லிய நிவிர்த்தி யாகும் தக்கோர்கள் வசிய மாகும்
எல்லேகள் சேர்த லுண்டு யாவர்க்கு மிவன்சொல் மேன்மை
நல்லவர் நேசத் தாலே நல்கிடும் தனமு மென்றேம்.

10. நாங்கள் கூறிய வயதுக்குமேல் ஜாதகனுடைய மரணம் வரையில் நிர்ப்பந்தங்கள் தீரும். தக்கவர்கள் நேசம் ஏற்படும். பூமிகள் விருத்தியாகும். எல்லோருக்கும் இவன் சொல் மேன்மையாகும். நல்லவருடைய நட்பினால் செல்வம் சேரும், என்றேம்.

11. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்க ளந்த சங்கை
ஆகமன் ஜன்மந் தங்க அலரியும் லாபம் சேரப்
பாகனும் புகரும் நந்தி பங்குமே ஏழி லாகத்
தோகையே பர்வத யோகம் செப்பினேம் பலனைக் கேளாய்.

11. யோகம் ஏற்படும் என்று எவ்விதம் கூறினீர்கள் ? அந்தச் சந்தேகத்தைத் தெரிவியுங்கள். குரு இலக்கினத்தில் இருப்பதாலும், சூரியன் லாபஸ்தானமாகிய மேஷத்திலிருப்பதாலும், புதனும் சுக்கிரனும் விருஷபத்திலும் சனி ஏழாமிடமாகிய தனுசிலும் இருப்பதாலும், தாயே! பர்வத யோகம் ஏற்படும் என்று சொன்னேம். அதன் பலனைக் கேளுங்கள்.

12. நாற்பது ஆண்டு மேலாய் அரசர்பூ சிதமு மெய்தும்
சேர்ப்பனும் நிதிகள் தாமும் சிலர்களால் பெருமை ஏற்பன்
போக்குவான் சல்யந் தானும் பெரிதான தலங்கள் செல்லவன்
நாக்கது மேன்பா டாகும் தனபதி யாக வாழ்வன்.

12. ஜாதகன், தனது நாற்பதாம் வயதுக்கு மேலாக அரசரால் நன்கு மதிக்கப்படுவான். செல்வங்களைச் சேர்ப்பான். சிலரால் பெருமை அடைவான். கடன் உபத்திரவங்களை நீக்குவான். புண்ணிய தலங்களுக்குச் செல்வான். இவன் சொல் மேன்மையாகும். செல்வத்துக்கு அதிபதியாக வாழ்ந்து வருவான்.

13. தன்துணை வாண்பால் ரண்டு சத்திமார் நால்வ ராகும்
சொன்னவா ஞெருவன் தீர்க்கஞ் சோர்வுறு மற்ற வெல்லாம்
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போ முனியே கேளும்
இன்னவன் முன்தா யொன்று இயம்பினீ ரவட்குப் புத்ரர்.

13. உடன் பிறந்தவர்களில் இரு சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் உள்ளனர். அவர்களில் ஒரு சகோதரன் நீண்ட ஆயுளுள்ளவன். மற்றவர்கள் நிலையார். அந்தச் சகோதரனின் செய்தியைப் பின் பாகத்தில் தெரிவிக்கின்றோம். முனிவரே! கேளுங்கள். ஜாதகனுக்கு மூத்த தாய் ஒருத்தி உண்டென்று சொன்னீர்களே! அவளுக்குப் புத்திரர்?

14. காதலி வொன்றே தீர்க்கங் காளையு மவ்வா றென்றோம்
மேதினில் வேறுய்ச் செல்வன் வித்தகன் மணத்தைக் கேண்மோ
தீதிலா வீரெட் டாண்டில் தேவியும் வருவாளாகும்
காதலி சுதரு மின்றிக் காலன்தன் பதிக்குச் செல்வன்.

14. சகோதரி யொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். சகோதரன் ஒருவனும் தீர்க்கமாவான். அவன் தனித்துச் சென்று விடுவான். ஜாதகனுடைய திருமணக்காலத்தைக் கேளுங்கள். ஜாதகனுடைய பதினாறும் வயதில் மனைவி வருவாள். அவளும் புத்திர பாக்கியமில்லாமல் இறந்து போவாள்.

15. எந்தக்கா லத்தில் செல்வான் இயம்புவீர் முனியே நீர்தாம்
அன்னவ னெண்ணுன் காண்டில் அடைகுவான் காலனுடு
பிந்தியு முப்பா ஞறில் பேதையும் வருவா ளாகும்
சுந்தரி குணத்தைச் சொல்வேன் சொல்லது சுகமே யாகும்.

15. எந்தக் காலத்தில் மரண மடைவாள் என்று கூறுங்கள், முனிவரே? தாங்கள். அவள், ஜாதகனுடைய முப்பத்திரண்டாம் வயதில் இறப்பாள். பிறகு முப்பத்தாறும் வயதில் மறுமணம் ஏற்படும். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். இனிமையாகப் பேசுபவள்.

16. அன்னம்போல் நடையு மொக்கும் அழகுளா ளிருநி றத்தாள்
அன்னமு மன்பா யீவள் அயல்குற்றம் புகலா ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் அடிசிலுக் கினிய ளாவள்
அன்னவள் யோக சாலி அரிமனை யொப்ப தாகும்.

16. அன்னத்தைப்போன்ற நடையுள்ளவள். அழகுள்ளவள். இரு நிறமுடையவள். அன்புடன் அன்னமளிப்பாள். பிறர்மீது குற்றம் கூருதவள். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். சுவையுடன் சமைக்க வல்லவள். அதிருஷ்டமுடையவள். இலக்குமியைப் போன்றவள்.

17. சீலியாம் விரத மேற்பள் சிறுத்தோருக் குதவி செய்வள்
பாலிகை வயது தீர்க்கம் பாலர்கள் பலத்தைக் கேண்மோ
சாலவே சுதராண் ரண்டு சத்தியு மொருத்தி யென்றோம்
ஏலவே மூன் றுந் தீர்க்கம் எய்தாது மற்ற வெல்லாம்.

17. நல்லொழுக்கமுள்ளவள். கஷ்டமடைந்தவர்களுக்கு உபகாரம் செய்பவள். நீண்ட ஆயுளுள்ளவள். புத்திர பாக்கியத்தைக் கேளுங்கள். இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் ஆக மூன்று பேர்களும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றவர் நிலையார்.

18. முன்னவ னிருந்த ஜன்ம மொழிகிறேந் திருப்பாச் சூரில்
நன்னய வேளாள னாக நல்கியே கிருஷி செய்து
தன்மனை மதலை யுண்டாய் வாழுநாள் வினையைக் கேண்மோ
பின்னொருக் கற்ப மாகப் பொருளதை யீந்து வின்னேன் ;

18. ஜாதகனுடைய முற் பிறப்பைப் பற்றிச் சொல்லுகின்றோம். திருப்பாச்சூரில், நலமுள்ள வேளாளனாகப் பிறந்து, விவசாயம் செய்துவந்து, மனைவி மக்களைப்பெற்று வாழ்ந்துவரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். இவன், ஏழைகட்குச் சிறிது பொருளைக் கொடுத்து ;

19. தரணியை பறித்துக் கொண்டான் சாற்றுவார் ஏழை யோர்கள்
குறைவுள பொருளைத் தந்து குவலயம் பறித்த பாவி
வருஞ்ஜன்மம் மனைவி ரண்டாய் மாநில மில்லா னாகிப்
பெருநிதி இல்லா னாகிப் பூமியில் சல்ய மேற்பாய்.

19. பூமியை அபகரித்துக் கொண்டான். ஏழைகள் கூறுகின்றனர். குறைவாகப் பொருளைக் கொடுத்து எங்கள் நிலங்களை எடுத்துக்கொண்ட பாவியே! நீ எடுக்கும் அடுத்த ஜன்மத்தில் இரு மனைவிகளை யடைந்து, நிலங்கள் இல்லாதவனாகி, பெரும் பொருளும் இல்லாமல், உலகில் கடன் உபத்திரவம் அடைவாய்.

20. இன்னமும் பலவாறு சொன்னார் எய்திற்று அந்தச் சாபம்
மன்னனு மந்தி யத்தில் மகாதலம் சேது சென்று
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு மேவினான் காலன் பக்கல்
பொன்னவன் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்,

20. என்றும், இன்னும் பலவிதமாகவும் சொல்லிச் சென்றனர். அந்தச் சாபம் இவனுக்கு ஏற்பட்டு, தன் கடைசிக் காலத்தில் புண்ணிய தலமாகிய சேதுவுக்குச் சென்று (நீராடி), துறவிகட்குத் தொண்டுகள் பல செய்து மரணமடைந்தான். பிறகு பிரமனால் படைக்கப்பட்டு இப்பாலன் பிறப்பான்.

21. ஆகையால் முன்னூழ்ச் சாபம் அணுகுமிச் சென்மந் தன்னில்
தோகையு மிருவ ராகும் சல்லிய பாதை ஏற்பன்
பாகமாய்க் குடும்பங் காணான் பராசரும் புகலு கின்றார்
ஆகம குலமிச் சென்மம் அணுகின காரணஞ் சொல்.

21. ஆகையால்முற்பிறவியின் சாபம் ஏற்பட்டு இப்பிறவியில் இரு மனைவியரை அடைவான். கடன் உபத்ரவம் ஏற்படும். நல்ல குடும்பம் இல்லாமல் வாழ்வான். பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். இப்பிறவியில் அந்தண குலம் ஏற்படக் காரணம் கூறுங்கள்.

22. முன்ஜன்மம் சேது தீர்த்தம் முயன்றதோர் பலத்தி னாலே
முன்குல முதிப்பா னென்றோம் உயர்சேது பலத்தி னாலே
முன்வினை நீங்கா தோசொல் உயர்விலா ஏழைச் சாபம்
நன்னிய வரனொப் பாகும் வரைந்தஇம் மொழிகுன் றாவே.

22. முற்பிறவியில் சேதுவில் நீராடிய புண்ணியத்தினால் உயர்ந்த அந்தண குலத்தில் பிறப்பான், என்றோம். உயர்ந்த சேதுவில் நீராடிய பலத்தால் முற்பிறப்புத் தீவினைகள் நீங்காவோ? சொல்லுங்கள். தாழ்மை யுள்ள ஏழைகளின் சாபம் வரனுக்கு ஒப்பாகும். நாங்கள் கூறியவைதவறா.

23. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி யாகும்
சூதிலாள் சுகமாம் வார்த்தை சோர்வோர்க்குத் தாக மீவள்
தீதான குணமில் லாதாள் தேவிக்குத் துணையாண் ரண்டு
காதலி மார்கள் மூன்று கழறுவோம் பாவைக் கதான்.

23. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். மாந்தளிர் போல் மென்மையான சரீரமுடையவள். கபடமில்லாதவள். இனிமை யாகப் பேசுபவள். கஷ்டப்படுபவர்களுக்கு நீர் அன்னமளிப்பாள். தீய குணங்களில்லாதவள். அவளுக்கு இரு சகோதரர்களும் மூன்று சகோதரி களும் உண்டு என்று சொல்லுகின்றோம்.

24. மன்னவன் மனதுக் கேத்தோள் வருவோரை ஆதரிப்பள்
முன்ஜன்மம் விரிஞ்சி தன்னில் உதித்தனள் வைச்யச் சேயாய்
பொன்னோடு பணிதி பெற்றுப் பெரிதான தலங்கள் சென்று
அன்னவள் வினையில் லாமல் அறமதி லிச்சை உண்டாய்;

24. தன் கணவன் மனத்துக் கேற்றவள். தன்னையண்டி வருவோரைக் காப்பாள். முற்பிறவியில் விரிஞ்சி நாட்டில் வைசிய குலத்தவளாகப் பிறந்து, பொன் ஆபரணங்கள் செல்வம் இவைகளை யடைந்து, புண்ணிய தலங்கள் பல சென்று, தீவினைகளில்லாமல் தருமம் செய்வதில் விருப்ப முள்ளவளாக வாழ்ந்து;

25. காலன்தன் னுட டைந்து கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமா முதல்கு லத்தில் ஜனித்தன ளென்று சொல்வோம்
சாலவே யிவள்பின் ஜன்மஞ் சாற்றுவோம் வள்ளூர் தன்னில்
ஏலவே யிக்கு லத்தில் எய்துவா ளென்று சொல்வோம்.

25. மரண மடைந்து, மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமுள்ள அந்தண குலத்தில் பிறந்தாள், என்று சொல்லுகின்றோம். இவளுடைய மறுபிறவியைக் கூறுகின்றோம். திருவள்ளூரில் இதே குலத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்,

### பொய் சொல்லியதால் பிறர் துன்பமடைதல்

26. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் புதுவை தன்னில்
இந்ததோர் குலமு தித்து இருநான்கா மவனு மாகி
அந்தவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
பிந்தினோர்க் கரசர் பக்கம் பிழையான வார்த்தை சொன்னான்.

26. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். புதுவையில் இதே அந்தண குலத்தில் (எட்டாமவனாக) தோன்றி வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஏழைகளுக்கு விரோதமாக அரசனிடம் இல்லாத வார்த்தைகளைக் கூறினான்.

27. சொல்லினால் துன்பம் நேரச் செப்புவா ரேழை யோர்கள்
இல்லாத வார்த்தை சொன்னாய் இனிவருஞ் ஜன்மந் தன்னில்
வல்லிமா ரிருவர் நேரு மத்தியில் வாழா யென்ன
புல்கிற்று வந்தச் சாபம் பூவையே கேட்டி டாயே.

27. அந்த வார்த்தைகளினால் ஏழைகளுக்குத் துன்ப மேற்பட்டது. அவர்களும் இல்லாத வார்த்தைகளை எங்கள்மீது கூறினாய். இனி ஏற்படும் பிறவியில், உனக்கு இரு மனைவிகள் ஏற்பட்டு, நீயும் இடையில் இறந்து போவாய் என்று சொன்னார்கள். அந்தச் சாபம் இவனைப் பற்றியது. தாயே! கேளுங்கள்.

28. ஏழைகள் சாபந் தானும் எய்திற்று விச்சென் மத்தில்
தோழிக ளிருவ ராகுஞ் சுதனுதே மத்தில் மாள்வன்
ஆதியி லிவன்பின் ஜன்மம் அரங்கமா நகரந் தன்னில்
தாழ்விலா விக்கு லத்தில் ஜனிப்பனு மென்று சொல்வோம்.

28. ஏழைகளின் சாபம் இப்பிறவியில் ஏற்பட்டது. அதனால் இரு மனைவியர் ஏற்பட்டனர். இவனும் இடையில் இறந்து விடுவான். இவனுடைய மறு பிறவி திருவரங்கத்தில் தாழ்மையில்லாத இதே குலத்தில் பிறப்பான் என்று சொல்லுகின்றோம்.

29. சந்திரன் தசையின் மத்தில் தந்தையு மரிப்பா னாகும்
விந்தையாய் முன்ஐந் தாண்டில் விளம்புவோ மார கங்கள்
மந்திரி தசைகா லத்தில் மாதுரு கண்ட மெய்தும்
சந்ததம் நாற்பான் ரண்டில் சாற்றுவோ மார கங்கள்.

29. சந்திரமகாதசை இடையில் (ஐந்தாம் வயதில்) தந்தை மரணமடைவான். முதல் ஐந்து வருடங்களில் மாரகங்கள் ஏற்படும். குருமகாதசையில், ஜாதகனுடைய நாற்பத்திரண்டாம் வயதில், நிச்சயம் தாய் மரணமடைவாள்.

30. அறுபது வைந்து வாண்டில் அணுகிய மீன மாதம்
திருமக னுடல மேகுஞ் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
நிறையவே யவ்வூர் தன்னில் நேருவான் சைவச் சேயாய்ப்
பிருகுமே புகலு இன்றூர் பிராமண குருகு லத்தில் ;

**30.** ஜாதகனுடைய அறுபத்தைந்தாம் வயதில் பங்குனி மாதத்தில் ஜாதகன் மரணமடைவான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லு கின்றோம். அதே ஊரில் சைவ குலத்தவனுகப் பிறப்பான், பிருகுமுனிவர் கூறுகின்றார். பிராமண குருகுலத்தில் ;

**பகலில் இன்பம் அனுபவித்த பலன் : வேதம் ஓதாதது**

**31.** வந்தவன் பின்ஜன் மத்தில் அவன்குலந் தாழ்வ தென்ன
அந்ததோர் சேதி சொல்வாய் அவனுமிச் சென்மந் தன்னில்
பந்தணி மாரின் மோகம் பகலிலே செய்த தொன்று
சந்ததம் சூது ஆசை சதுர்வேத முறைகள் தப்பி ;

**31.** பிறந்தவன். மறுபிறவியில் தாழ்வான குலத்தில் பிறக்கும் காரணங் களென்ன ? அதற்குக் காரணம் சொல்லுங்கள். ஜாதகன் இப் பிறவியில் தன் பத்தினியுடன் பகலில் போகம் துய்த்தான். எக்காலமும் சூதாட்டத் தில் ஆசையுடன் வேதங்களை ஓதாமல் தவறி நடந்து ;

**32.** வருவதால் உதிப்பா னுகும் வரைகிறே மிவனின் யோகம்
குருதசை யோகஞ் சொன்னேம் குருவைப்போ லுபதே சித்துப்
பெருநிதி சேர்ப்பா னுகும் பெரிதான புகழு மேற்பன்
துரைராசர் பேட்டி கொள்வன் சொல்லது மேன்பா டாகும்.

**32.** வருவதால், குலம் தாழ்வாக ஏற்பட்டது. இவனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். குருமகாதசையில் யோக மேற்படும் என்றோம். குருவைப்போல் உபதேசங்கள் பல செய்து, பெரும் செல்வங் களைச் சேர்த்து, பெரிய கீர்த்தியைப் பெறுவான். அரசரைப் பேட்டி காண்பான். இவன் வார்த்தை மேன்மையடையும்.

**33.** தந்தையின் தந்தை போல ஜாதகன் தனக்கு யோகம்
விந்தையாய் நேரு மென்றோம் விளம்புவோம் பின்பால் சேதி
அந்தவன் ஜனன காலம் அலரியின் தசையைந் தாண்டும்
பந்தமாய்த் திங்க ளாறும் பகர்ந்தனம் பூர்வ பாகம்.

**33.** ஜாதகனுக்குத் தன் பாட்டனார்போல் யோகம் பெருகும். பிற்பாகத் தில் விபரம் சொல்லுகின்றோம். ஜாதகனது ஜனனகாலத்தில் சூரியமகா தசையில் ஐந்து வருடங்களும் ஆறு மாதங்களும் பாக்கி யென்று இவ்விதம் முதல் பாகம் கூறினேம்.

# ஜாதகம் 76

1. [1]மதியுஞ் தனுசு பணிராடி
மால்மகன் நந்தி சிகிசியம்
விதியுங் கோலில் சேய்வெள்ளி
வேந்தன் வீணை மிதுனமுயிர்
மிதுன முயிரே கிரகநின்ருல்
இயம்பும் பலன்கள் தவமுனியே
அதுவே வாண்பால் ஜனனமுறும்
வரைவோ மில்லை மம்பிகையே.

1. சந்திரன் தனுசிலும், ராகு கும்பத்திலும், புதன் (சூர்யன்) ரிஷபத்திலும், கேது சிம்மத்திலும், சனி துலாதிலும், செவ்வாய் சுக்கிரன் குருமிதுனத்திலும் இருந்து, மிதுனம் இலக்கினமானுல், ஏற்படும் பலனைக் கூறுங்கள், முனிவரே! இஃது ஆண் மகனின் ஜாதகம். வீட்டைப்பற்றிச் சொல்லுகின்ரேம். தாயே!

| | | | |
|---|---|---|---|
| | | புதன் சூர்யன் | லக்கினம் செவ்வாய் சுக்கிரன் குரு |
| ராகு | இராசி சக்கரம் | | |
| | | | கேது |
| சந்திரன் | | சனி | |

2. வடதென் வீதி மேல்பார்வை
மாகா ளியே கீழ்ப்பாலில்
விடவா டான மணந்தவளும்
மேல்பால் தங்கு முத்ரத்தில்
குடியா மதத்தி சிறுவூராம்
குலமே கங்கை மெனவுரைத்தோம்
உடனே இவனின் சேதிதனை
உரைப்போங் கேளா யுத்தமியே.

2. இவன் பிறந்தவீடு தெற்குவடக்கான தெருவில் மேற்குப் பார்வையுள்ளது. காளிகோயில் கிழக்குப் பக்கம் உளது............மேற்குப் பக்கத்தில் இருக்கும். வடக்குத் திக்கில் குளமொன்றுளது. இஃது ஒரு சிற்றூராகும். இதில் வேளாள குலத்தவனுகப் பிறப்பான் இவன் என்ரேம். இவனுடைய செய்திகளைக் கூறுகின்ரேம். உயர்ந்தவளே! கேளுங்கள்.

[1]சூரியனின் நிலை காணப்படவில்லை.

3. ஊத்தம மனத்தன் ஊகமுளன்
உண்மை யாளன் ஊஷசனுளான்
பத்தி மான்க ளிட்டமுளான்
பகரில் செல்லான் பார்த்தொழிலும்
சுத்த முடையன் சொல்காப்பன்
சொற்சோர் வில்லான் சுகபுசிப்பன்
சித்தங் கரப்பு மில்லாதான்
செப்பு வானு மற்புதங்கள்.

3. உயர்வான மனமுள்ளவன். ஊகசாலி. உண்மையே பேசுபவன். மெல்லிய தேகமுடையவன். பக்திமான்கள்மீது பிரியமுள்ளவன். அற்ப காரியங்களில் செல்லாதவன். விவசாயம் செய்து வருவான். சுத்தமானவன். தன் வார்த்தையைக் காப்பான். பேசுவதில் சளைப்பில்லாதவன். சுகமாகச் சாப்பிடுவதில் பிரியன். மனத்தில் வஞ்சகம் இல்லாதவன். அதிசயமாகப் பேசுபவன்.

4. நவநூ லறிவன் பொய்புகலான்
நடப்பான் புண்ணிய தலங்களுக்குச்
சிவன்மேல் பத்தி துணையாண்பால்
மூன்று வென்றேங் கன்னியவ்வாறு
பவமாஞ் சிலவே யாண்பெண்ணும்
பாக மிரண்டாம் பாரில்லம்
அவன்முன் னேன்வே றுமிடுவன்
வரைவோம் பின்னு லவன்சேதி.

4. ஒன்பது (புது) வித நூல்களை அறிந்தவன். பொய் பேசாதவன். புண்ணிய தலங்களுக்கு (நடந்தே) செல்லுவான். சிவபெருமான்மீது பக்தி கொள்ளுவான். சகோதரர்களில் மூன்று ஆண் மக்களும் சகோதரிகள் மூவரும் நிலையாயுள்ளனர். அவர்களில் சில சகோதர சகோதரிகள் இரண்டாகப் பிரிந்து விடுவர். பூமி வீடு இவைகளுடன் இவனுக்கு முன் பிறந்தவன் வேருகச் செல்வான். அவனுடைய செய்தியைப் பிற பாகத்தில் கூறுவோம்.

5. முன்னுல் ஜன்மந் தில்லைதனி
லுதித்தான் வன்னிய குலந்தனிலே
பொன்னு பரண முடையவனுய்ப்
பூமி யதனுல் சீவித்து
அன்னே னுக்குத் துணையின்றி
அடைந்தான் காலன் பதிதன்னைப்
பொன்னேன் வரைய வந்தவனும்
புனிதன் தனக்கு விருபாவை.

5. ஜாதகன் முற்பிறவியில் தில்லையம்பதியில் வன்னிய குலத்தில் பிறந்தான். செல்வம் ஆபரணம் முதலியன அடைந்து, விவசாயம் செய்து ஜீவித்து வந்து, சகோதரரில்லாமல் மரண மடைந்தான். மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்றோம். இவனுக்கு இரு மனைவியர் ஆவர்.

6. பிறப்பாள் குணத்தைத தானபுகல்வோம
புலிபோல் கோபம் புறஞ்சொல்லாள்
வருவோர் தம்மை யாதரிப்பள்
வான்தன் மனம்போல் வாழ்ந்திடுவள்
நெறியைக் காப்பாள் சீலமுளாள்
நீத்தோர்க் கன்னந் தானீவள்
அரிவை யுடனே துணைதசமாம்
அவியுஞ் சிலவே யம்பிகையே.

6. ஜாதகனுடைய (மனைவியின்) குணத்தை நாங்கள் கூறுகின்றோம். புலிபோலக் கோபங் கொள்வாள். கோள் சொல்லாதவள். தன்னிடம் வருபவர்களை ஆதரிப்பாள். தன் கணவன் மனமறிந்து வாழ்வாள். நன்னெறியை மேற்கொள்வாள். நல்லொழுக்கமுள்ளவள். சன்யாசிகளுக்கு அன்னமளிப்பாள். அவளுக்கு உடன் பிறந்தவர் பதின்மர். அவர்களில் சிலர் நிலையார் என்று சொல்லுவோம். தாயே !

7. எய்துங் கன்னி யிரண்டேயாம்
இசையு மாண்பா லவ்வாறும்
உய்யு மொருவன் தீர்க்கமுறும்
உயர்வாங் குடும்பி தானவன்
தையல் மதலை யுடையவனாய்த்
தந்தை யில்லம் வாழாமல்
பைய வடமேல் சென்றிடுவன்
பகர்வோ முன்னோன் சேதிதனை.

7. ஜாதகனுக்கு இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் தோன்றுவார்கள். அவர்களில் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவன். உயர்ந்த குடும்பத்தை யடைந்து, மனைவி மக்களைப் பெற்று, தன் தந்தையின் வீட்டில் வாழ்ந்து வராமல் வடமேற்குத் திக்கில் மெதுவாகச் செல்வான். மற்றவன (முன் பிறந்தவன்) செய்தியை ;

8. சேதி யுரைப்போ மணமுண்டாய்ச்
சுதரு மின்றி மரித்திடுவன்
சூதாய்ப் பானு திசை செல்வன்
தேவி முன்னோன் குணங்கேளாய்
மருவு வானும் தென்பாலில்
மருவிச் சுதரா னென்றுண்டாய்த்
தீதாய் வேறொரு சுகமடைவன்
செப்பு வோமே பின்பாலில்.

8. செய்திகளைக் கூறுகின்றோம். கல்யாணம் செய்து வாழ்ந்து புத்திர பாக்கியமின்றி இறந்து விடுவான். அவன் கிழக்குத் திசையில் சென்று விடுவான். ஜாதகனுடைய மனைவியின் மூத்த சகோதரனின் குணத்தைக் கேளுங்கள். தெற்குப் பக்கத்தில் வாழ்வான். மணம் ஏற்பட்டு ஒரு புத்திரனை யடைந்து வாழ்வான். தீயவழியில் சுகமடைவான். பிற்பாகத்தில் விபரம் கூறுவோம்.

9. மற்றோர் துணைவி சுகமுடையாள்
வயது தீர்க்கம் மங்கைக்கு
உற்ற மணத்தின் காலமதை
உரைப்பேன் ஒன்பா ணுண்டதனில்
சுத்த மாகத் தென்பாலில்
தாயுந் தந்தை வர்க்கமுறும்
பர்த்தா குணமு மிருவகையாம்
பதரு முடையன் பார்விருத்தி.

9. மற்ற சகோதரி சுகமுடையவள். நீண்ட ஆயுளுள்ளவள் அவளுக்குத் திருமணக் காலத்தை சொல்லுகின்றோம். அவளுடைய ஒன்பதாம் வயதில் தெற்குப் பக்கத்திலிருந்து தன் தந்தையின் வர்க்கத்திலிருந்து கணவன் வாய்ப்பான். இருவிதமான குணமு முள்ளவன். அற்ப குணங்கள் உள்ளவன். பூமி பெருகியிருக்கும்.

10. கடனே கொள்வன் நிவிர்த்திசெய்வன்
கஞ்ச நிறத்தன் கட்டுரைப்பன்
உடனே துணைவர் தோடமுறும்
ஒண்டி யாக வாழ்ந்திடுவன்
திடமில் லாத வில்லென்றோம்
தேவிக் கீரெட் டாண்டின்மேல்
கடனில் லாதான் காலிவிருத்தி
கலைபோல் யோகங் கழறுவோமே.

10. கடன் படுவான். உடனே தீர்த்து விடுவான். தாமரை போன்ற நிற முள்ளவன். பொய் பேசுபவன். சகோதர தோஷமுள்ளவன். தனியனாகவே வாழ்ந்திடுவான். திடமில்லாத வீட்டில் வசிப்பான். அவனுக்குப் பதினாறு வயதுக்கு மேல் கடன் உபத்திரவமில்லாமல், கால் நடைகள் விருத்தியாகி, பிறைச் சந்திரன் போல் யோகமேற்படும் என்று கூறுகின்றோம்.

11. ஆமே சுதர்கள் ஆணிரண்டு
அரிவை மூவர் தீர்க்கமுறும்
ஏமே யிரண்டு மால்பத்தி
புகல்வோ மிவள்தன் பூர்வமதைத்
தீமைவி லக்கும் வள்ளூரில்
ஜனித்தாள் வைச்ய குலந்தன்னில்
நேமியில் வறுமை யில்லாளாய்
நீத்தோன் தொண்டு தான்புரிந்து ;

11. ஜாதகனது புத்திர பாக்கியத்தைக் கூறுகின்றோம். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் பிறந்து தீர்க்காயுளுள்ளவர்கள். இரண்டு குழந்தைகள் நிலையா. விஷ்ணு பக்தியுள்ளவன். (ஜாதகனுடைய மனைவியின்) முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தீங்குகளைப் போக்கும் திருவள்ளூரில் வைசிய குலத்தில் பிறந்தாள். உலகில் வறுமையில்லாதவளாகி, துறவிகட்குத் தொண்டுகள் பல செய்து ;

**வேறு**

12. சுதர்களும் பொருளு முண்டாய்த் தொல்வினை யில்லா தாகி
அதிபன்முன் மரண மாகி மறையவன் வரையப் பட்டுச்
சதியிலா மிக்கு லத்தில் ஜனித்தன ளென்று சொல்வோம்
பொதுயோகம் புகலு கின்றோம் பூவையே கேட்டி டாயே.

12. புத்திரர்களையும் செல்வங்களையும் பெற்று, தீவினையில்லாமல் தன் கணவன்முன் மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, தீங்கில்லாத இக்குலத்தில் பிறந்தாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

13. அன்னமுங் குறைவு றுதாள் ஆளன்தன் மனத்துக் கேத்தாள்
பொன்பணி யுடைய ளாகும் பெரிதான குடும்பி யாவள்
சந்திரன் முதல தாகச் சாதகி மரண மட்டும்
பொன்பூமி காலி யேர்கள் சுகமாக வாழ்வா ளம்மா.

13. சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். பொன் ஆபரணங்கள் உடையவள். பெரிய குடும்பத்தை அடைவாள். சந்திரமகாதசை முதல் மரணகாலம் வரையில், ஜாதகி, பொன் பூமி கால்நடைகள் ஏர்கள் முதலியவற்றை அடைந்து சுகமாக வாழ்ந்து வருவாள். தாயே !

14. மாதுரு குணத்தைச் சொல்வோ மாஞ்சிவப் புடைய ளாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனங் கவடு மில்லாள்
வேதனை யொருவர்க் கெண்ணாள் விரதங்கள் பூண்பா ளாகும்
சாதிப்பாள் சிலவே சங்கை தானிள மனத்த ளாகும்.

14. ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றோம். மாநிறமுடையவள். இன்பமடையும்படி பேசுபவள். மனத்தில் கபடமில்லாதவள். பிறருக்குத் தீங்கு செய்ய எண்ணாதவள். நோன்புகள் நோற்பாள். சில சந்தேகங்களை விலக்குவாள். இளகிய மனமுடையவள்.

15. அன்னமு மனபா யீவள் அன்னையு மிரண்டு மாகும்
அன்னியர் குற்றஞ் சொல்லாள் அவள்துணை யாண்பால் ரண்டு
அன்னவள் யோக சாலி அடக்கமாம் வார்த்தை உண்டு
தன்னில்லந் தென்பா லாகும் சாற்றுவோ மிவள்முன் ஜன்மம்.

15. அன்புடன் அன்னமளிப்பாள். இரு தாய்மார்கள் உள்ளவள், பிறர் மீது குற்றம் கூறுதவள். இரு சகோதரர்களை உடையவளை. அதிருஷ்டசாலி. அடக்கமாகப் பேசுபவள். அவளுடைய வீடு தெற்குப் பக்கத்தில் உள்ளது. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம்.

16. தென்திசைப் பழனி நாட்டில் ஜனித்தனள் சேடர் வம்சம்
பொன்பணி உடைய ளாகிப் பெரிதான குடும்பம் பெற்று
அன்னவள் வினையில் லாமல் அந்தகன் நகரஞ் சென்று
முன்னவன் வரையப் பட்டு உதித்தவ ளிவளே என்றேம்.

16. தெற்குத் திசையில் உள்ள பழனியில், சேடர் மரபில் தோன்றினள். பொன் ஆபரணங்களைப் பெற்று, பெரிய குடும்பத்தையடைந்து, தீவினையில்லாமல் மரணமடைந்து, பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவள், என்று சொன்னேம்.

17. மறுஜன்மம் திருவ லத்தில் வருதுவா ள இக்கு லத்தில்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பூமியில் வாழ்வா ளாகும்
கருமகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
உரைக்கிறேம் நாற்பான் ரண்டில் உத்தமி உடலே மேகும்.

17. மறுபிறவி திருவலத்தில் இதே குலத்தில் பிறப்பாள். பெருமையுடைய குடும்பத்தையடைந்து, உலகில் வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய கருமகாலங்களைக் கூறுங்கள், முனிவரே! தாங்கள் ஜாதகயின் நாற்பத்திரண்டாம் வயதில் தாயின் மரணம் ஏற்படும்.

18. எண்ணஞ்சு ஆண்டு தன்னில் இயம்புவோந் தந்தை கண்டம
திண்ணமா யிவன்பின் ஜன்மம் செப்புவோங் காஞ்சி மேற்கில்,
கண்ணன்வாழ் சிறுவூர் தன்னில் கலைப்பனும் பிரம்ம சேயாய்
அண்ணலைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

18. ஜாதகியுடைய நாற்பதாம் வயதில் தந்தை இறந்து விடுவான். தந்தையின் மறு பிறவியைச் சொல்லுகின்றேம். காஞ்சிபுரத்துக்கு மேற்கில் கிருஷ்ணன் வாழும் சிற்றூரில், அந்தண குலத்தவனுகப் பிறப்பான். சிவ பெருமானைப் பூசை செய்யும் புண்ணியவதியே! கேளுங்கள்.

19. அன்பது ஒன்று ஆண்டில் ஆவணி மாதந் தன்னில்
கன்னியி னுடல மேகும் கழறுவோ மிவள்பின் ஜன்மம்
தென்திசை ஆழி தன்னில் ஜனிப்பளாம் ஸௌராஷ்ட்ர வம்சம்
உன்னத குடும்பி யாகி உத்தமி வாழவா ளாகும்.

19. ஐம்பத்தோராம் வயதில் ஆவணி மாதத்தில் ஜாதகிக்கு மரணம் ஏற்படும். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றேம். தெற்குத் திசையிலுள்ள மகாபலிபுரத்தில் சௌராஷ்டிர வமிசத்தில் பிறப்பாள். உயர்ந்த குடும்பத்தையடைந்து உத்தமி வாழ்ந்து வருவாள்,

20. பிறந்திடு காலந் தன்னில் பூராட மிரண்டாம் பாதம்
சிறந்தசுக் கிரனி ருப்புத் தசவாண்டு திங்க ளெட்டும்
உரைத்தனம் பூர்வ பாகம் உரைக்கிறோம் விபரம் ரண்டில்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

**20.** ஜாதகி பிறக்கும் காலத்தில் பூராட நட்சத்திரம் இரண்டாம் பாதம் சுக்கிரமகாதசையிலிருப்பு பத்து வருடங்களும் எட்டு மாதங்களுமாம். இது முதல் பாகம். இரண்டாம் பாகத்தில் விபரம் சொல்லுகின்றோம். வேதங்களின் முடிவில் நடனமாடும் தாயே! கேளுங்கள்.

## ஜாதகம் 77

1. [1] திங்களும் வீணை யாகச் சனிராகு கடக மாக
மங்கலன் கோல தாக; மன்னன்தேள் புகரும் வில்லு
பங்கயன் புதனுங் கேது பற்றிடம் மான தாக
இங்கிவை கோளு நின்று இலக்கின மிதுன மாக ;

1. சந்திரன் மிதுனத்திலும், சனி ராகு கடகத்திலும், செவ்வாய் துலாத்திலும், குரு விருச்சிகத்திலும், சுக்கிரன் தனுசிலும், சூரியன் புதன கேது மகரத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் சந்திரன் |
| | இராசி சக்கரம் | | சனி ராகு |
| சூரியன் புதன் கேது | | | |
| சுக்கிரன் | குரு | செவ்வாய் | |

2. இதுபல னெவ்வா றென்று ஈச்வரி கேட்கும் போது
வதிட்டரும் புகலு கின்றா ராணது ஜனன மாகும்
பதியது கீழ்ப்பால் நோக்கம் பரமனுங் கன்னி யுத்ரம்
நதிசோலை யருகில் தங்கும் நாடிஞேஞ் சிறுவூ ராதும்.

2. ஏற்படும பலன் எப்படி ? என்று பார்வதிதேவி கேட்கும் போது, வசிஷ்ட முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு கிழக்கு நோக்கியுள்ளது. மகாவிஷ்ணுவின் ஆலயமும், அம்மன் கோயிலும் வடக்குத் திக்கிலுள்ளன. ஓர் ஆறும் தோட்டமும் அருகில் இருக்கும். இங்ஙனமுள்ள ஒரு சிற்றூராகும் அது.

3. கங்கையின் குலமு திப்பன் கழறுவோ மிவனின் யோசம்
தஞ்சமா யன்னை தந்தை சகோதர களத்ர புத்ரர்
மிஞ்சின ஜன்மந் தன்னில் வினையுமே பின்ஜன் மங்கள்
வஞ்சனை யின்றிச் சொல்வோம் மங்கையே கேட்டி டாயே.

3. அதில், வேளாள குலத்தவனாக இவன் பிறப்பான். இவனுடைய யோகத்தையும், தாய் தந்தையர் மனைவி மக்கள் உடன்பிறந்தவர்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவிகளையும், ஒளி மறைவில்லாமல் கூறுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

---

[1] குரு விளச்சிகத்தில் *Vide* stanza 24.

4. தந்தையின் துணையா னென்று சாற்றுவோந் தீர்க்க மாக
அந்தவா ணிளையோ னாகும் அவன்குணங் கூறக் கேண்மோ
சிந்தையு நல்ல தாகுஞ் செய்நிலம் விருத்தி செய்வன்
நொந்தபேர் தம்மைக் காப்பன் நேமியில் நல்லோ னவன்.

4. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ள வன் என்றோம். அவனும் இவனுக்கு இளையவன். அவனுடைய குணங்களைக் கூற, கேளுங்கள். நல்ல மனமுடையவன். விளை நிலங்களைப் பெருக்குவான். கஷ்டமடைந்தவர்களை ஆதரிப்பான். உலகில் நல்லவனாகி வாழ்ந்து வருவான்.

5. பாரியு மிரண்டு நேரும் பாலர்க ளாண்பால் ரண்டு
கூறுவோந் தாயே யாங்கள் கோதைமா ரிருவ ரென்றோம்
நாரிய ரெம்மா துக்கு நல்கிடுஞ் சுதர்க ளென்றீர்
காரிகை முன்னோ ளுக்குக் கழறுவோம் புத்ர பாவம்.

5. இரு மனைவியாரை அடைவான். இரு புத்திரர்களைப் பெறுவான். தாயே! நாங்கள் கூறுகின்றோம். இரு மனைவிமார் என்று சொன்னீர்களே! எந்த மனைவிக்குப் புத்திரர்கள் தோன்றுவர்? இளைய மனைவிக்குப் புத்திரர்கள் பிறப்பார்கள் என்றோம்.

6. உடன்கூடி வாழ்வா னாகும் உத்தமன் தீர்க்க சீவி
தடபுடல் செய்கை யுண்டு தானிள மனத்தா னாகும்
துடியிடைக் கிட்ட னவன் சொல்லதைக் காப்பா னாகும்
விடபணி பாகத் தாளே விளம்புவோம் பிதாகு ணத்தை.

6. (ஜாதகனின் இளைய தகப்பன்) சகோதரனுடன் கூடி வசித்து வருவான். நீண்ட ஆயுளுள்ளவன். ஆடம்பரச் செய்கை யுள்ளவன். இளகிய மன முடையவன். தன் மனைவிக்குப் பிரியனவன். தன் வார்த்தைகளைக் காப்பாற்றுவான். சர்ப்பத்தை ஆபரணமாகக் கொண்ட சிவபெருமானின் பாதி சரீரத்தை யுடையவளே! தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம்.

7. கல்விமான் ஈகை யில்லான் கஞ்சமா நிறத்த னாகும்
சொல்லது அதிக முண்டு சொர்ணமும் பூமி சேர்ப்பன்
எல்லைகள் மூவூர் சேர்ப்பன் இருவித வார்த்தை உண்டு
மல்லில்முன் செல்லா னாகும் மாமிக ளிரண்டு மாகும்.

7. கல்வியறி வுள்ளவன். கொடுக்கும் குண மில்லாதவன். தாமரை போன்ற நிறமுடையவன். அதிகமாகப் பேசுபவன். பொன் பூமி இவை களைப் பெருக்குவான். மூன்று ஊர்களில் பூமிகளை வாங்குவான். இருவிதமாகப் பேசுபவன். சண்டைக்கு முன் செல்லாதவன். இரு மனைவி யரை அடைவான்.

8. காமதில் கஞ்ச ரேகை சிவனது நாமங் கொண்டோன்
உறன்முறை மதிக்க வாழ்வன் உவமையாய்ப் பேசு வானும்
அறமதி லிச்சை யில்லான் ஆவுகள் பணியோர் விருத்தி
பறைபள்ளு முடைய னாகும் பணிதிபாத் திரங்கள் சேர்ப்பன்.

8. கையில் பத்மரேகை உள்ளவன். சிவபெருமானின் பெயர் உள்ளவன். தன் பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்க்கையை நடத்துவான். உபமானங்களுடன் பேசுபவன். தருமம் செய்வதில் பிரியமில்லாதவன். பசு பண்ணைகள் முதலியன விருத்தியடையும். பள்ளுப்பறை முதலிய ஏவலாட்கள் உடையவன். ஆபரணங்களையும், பாத்திரங்களையும் சேர்ப்பான்.

9. தனத்தின்மே லிச்சை உண்டு சாதமுங் குறைவு றுதான்
நினைப்பதை முடிக்க வல்லன் நேசங்கள் சித்ரஞ் செய்வன்
துணைவனை யாத ரிப்பன் தொடுத்ததை வெல்வா னுகும்
கனமான குடும்பி யாவன் காசுவீண் செலவு செய்யான்.

9. செல்வத்தின்மீது பிரியமுள்ளவன். சாப்பாட்டுக் குறைவில்லாதவன். எண்ணிய காரியத்தை முடிக்க வல்லவன். வீட்டைச் சித்திரங்களால் அலங்கரிப்பான். உடன்பிறந்தவனை ஆதரிப்பான். எடுத்த காரியத்தை முடிக்க வல்லவன். பெரும்குடும்பத்தை யடைவான். வீண் காரியங்களில் செலவு செய்யாதவன்.

10. இந்நெறி உடையா னுக்கு இப்பாலன் உதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அவனியால் உய்வா னுகும்
தன்மத்தி லிச்சை அற்பம் சமகல்வி காலி விருத்தி
பின்னமில் லாத தேகி பொருத்தமாய்ப் பேசு வானும்.

10. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். விவசாயம் செய்து ஜீவனம் நடத்துவான். தருமம் செய்வதில் பிரியம் இல்லாதவன். சமமான கல்வியறிவுள்ளவன். கால்நடைகள் பெருகும். ஊனமில்லாத தேக முடையவன். பொருத்தமாகப் பேசுவான்.

11. தந்தைபோல் குணமு முண்டு தரணியை விருத்தி செய்வன்
சுந்தர முடைய னுகும் சொல்லதைக் காப்பா னுகும்
நந்தியா விருத்தி உண்டு நாயகன் இருசி கப்பன
பந்தினர் மதிக்க வாழ்வன் பாலபாக்ய முடைய னுகும்.

11. தன் தந்தையைப்போல் குணமுடையவன். பூமியை விருத்தி செய்வான். அழகுள்ளவன். தன் வார்த்தையைக் காப்பான். பசு எருதுகள் விருத்தியாகும். இரு சிகப்பான நிறமுடையவன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படியான வாழ்க்கையுடையவன். புத்திரபாக்கியம் உளளவன்.

12. சல்லியப் பாதை ஏற்கான் சம்பத்து முடைய னுகும்
புல்லிய ருறவு கொள்ளான் பொய்யது புகலா னுகும்
வெல்லுஞ்சொல் லுடைய னுகும் வேண்டினேர்க் குதவி செய்வன்
அல்லலில் லாமல் வாழ்வன் அம்பிகை யாளே கேளாய்.

12. தீய வழிகளில் செல்லாதவன். செல்வங்கள் அதிகம் உள்ளவன். அற்பர் (தீயர்)களுடைய நட்பில்லாதவன். பொய் பேசாதவன். தன் வார்த்தைக்கு மதிப்புள்ளவன். தன்னை யாசித்தவர்களுக்கு உதவி செய்வான். துன்பமில்லாமல் வாழ்ந்து வருவான். தாயே ! கேளுங்கள்.

13. தன்துணை யெழுவர் தோன்றுந் தங்குமுன் கன்னி ரண்டு
பின்துணை யாண்பா லொன்று பேதையு மவ்வாறுதீர்க்கம்
சொன்னவாண் சேதி சொல்வோம் சிம்மமும் புனர்பூச நாளாம்
கன்மன மில்லா னாகுங் காலிகள் பணையேர் விருத்தி.

13. ஜாதகனுக்கு ஏழு உடன்பிறந்தவர்கள் தோன்றுவர். இவனுக்கு முன்பிறந்த சகோதரிகள் இருவரும், இளைய சகோதரன் ஒருவனும், இளைய சகோதரி யொருத்தியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். சகோதரனின் செய்தியைக் கூறுகின்றோம். சிம்மலக்கினத்தில் புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்தவன். இரக்கமில்லாத மனமில்லதாவன். கால்நடைகள் பண்ணை ஏர் முதலியன பெருக்கம் உள்ளவன்.

14. அறமதி விச்சை யுண்டு ஆசாரன் தந்த்ர வார்த்தை
உறன்முறைக் குதவி செய்வன் உண்மையா மனத்த னாகும்
விரைவினில் நடக்க வல்லன் வெஞ்சினம் வெளிக்காட் டாதான்
பொருளது பெருக்கஞ் செய்வன் போசன சுகிய னாமே.

14. தருமம் செய்வதில் பிரியமுள்ளவன். ஆசார முடையவன். தந்திரமாகப் பேசுபவன். தன் சுற்றத்தாருககு உபகாரம் செய்பவன். உண்மையுள்ள மனத்தினன். வேகமாக நடபபவன். கோபத்தை வெளியில் காட்டாதவன். பொருளைப் பெருகச்செய்வான். சாப்பாட்டில் பிரியமுள்ளவன்.

15. பாரியு மொன்றே யுத்ரம் பாலர்க ளாண்பால் ரண்டு
கூறுவோஞ் தாயே யாங்கள் கோதையா ரிருவ ரென்றீர்
வீரிய னுடனே வாழ்வன் வீண்பழி யேற்கா னாகும்
ஆறுமா முகத்தோன் பத்தி அம்பிகை யாளே கேளாய்.

15. மனைவி யொருத்தியே யாகும். அவளும் வடக்குத் திக்கிலிருந்து வாய்ப்பாள். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் தோன்றி, நீண்ட வயதுள்ளவளாவார்கள். இவனும் நீண்ட ஆயுளுள்ளவன். தன் சகோதரனுடன் கூடி வாழ்ந்து வருவான். வீண் அபவாதங்களை அடையாதவன். ஆறுமுகக் கடவுளிடம் பக்தியுடையவன். தாயே ! கேளுங்கள்.

16. கன்னிமார் சேதி யாவுங் கழறுவோம் பின்பா கத்தில்
இன்னவன் மணத்தின் காலம் இருபது மூன்று மாண்டில்
அன்னவள் வடபால் நேரும் அவள்குணங் கூறக் கேண்மோ
தன்சொலு மடக்க முண்டு சாதமு மன்பா யீவள்.

16. ஜாதகனுடைய சகோதரிகளின் செய்திகள் யாவற்றையும் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனின் திருமணக் காலத்தை கூறுகின்றோம். இருபத்து மூன்றும் வயதில் வடக்குத் திசையிலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லக் கேளுங்கள். அடக்கமாகப் பேசுபவள், அன்புடன் அன்னமளிப்பாள்.

17. அடிசிலுக் கினிய ளாகும் ஆசார விரத மேற்பள்
நடைநன்மை யோக சாலி நலிந்தோர்க்குத் தாக மீவள்
மடமயி லொப்ப தாகும் வஞ்சனை யெண்ணு நெஞ்சம்
தடவரை மகளே யாஙகள் சாற்றின மொழிகுன் ருவே.

17. உருசியுடன் சமைக்க வல்லவள். ஆசாரமும் உள்ளவள். நோன்புகள் நோற்பாள். நன்னடக்கை யுள்ளவள். அதிருஷ்டசாலி. துன்ப மடைந்தவர்கட்கு நீர் அன்னமளிப்பாள். அழகிய மயிலுக் கொப்பானவள். வஞ்சனைகளை மனத்தாலும் நினையாதவள். மலையாசனின் புதல்வியே! நாங்கள் கூறியவை தவரு.

18. அத்திரி மறுத்துச் சொல்வார் அத்தார மவ்வூர் தன்னில்
சித்தமாய் நேரு மென்றேஞ் சுக்கிர னேழில் தங்கச்
சுத்தமாய்ப் பராசர் சொல்வார் சுகத்துளோன் மானில் தங்க
வித்தகர் மதியுஞ் ஜன்ம மேவின பலத்தி னலே;

18. அத்திரி முனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர். ஜாதகனுக்கு அவ்வூரிலிருந்தே மனைவி வாய்ப்பாள் என்று கூறுவோம். காரணம், சுக்கிரன் ஏழாமிடத்தில் இருந்து வருவதால் அங்ஙனம் சொன்னேம். பராசர முனிவர் கூறுகின்ருர். சுகாதிபதியாகிய புதன் மகரத்தில் இருப்பதாலும், சந்திரன் ஜன்மலக்கினமாகிய மிதுனத்தில் இருக்கும் பலத்தாலும்;

19. உத்தரம் பிருதிவி தன்னில் வருவளா மந்த மாது
வித்தகி உள்ளூர் நேராள் மேவினல் வறுமை நேரும்
புத்திர பலத்தை யாங்கள் புகலுவோ மினிமே லாகச்
சத்தியே எழுவர் தோன்றும் சிரணஞ் சிலவே என்றேம்.

19. அந்தப் பெண் வடக்குத் திக்கிலுள்ள காஞ்சீபுரத்திலிருந்து வருவாள். மனைவி உள்ளூரிலிருந்து வந்தால் வறுமை ஏற்படும். ஜாதகனுடைய புத்திரபாக்கியத்தைச் சொல்லுகின்றேம். தாயே! ஏழுபேர்கள் தோன்றுவார். அவர்களில் சிலர் நிலையாமல் போவார்கள் என்று சொன்னேம்.

20. சுதராண்பா லிருவர் தீர்க்கம் தோகையர் மூவர் தீர்க்கம்
புதல்வர்கள் இவன்மே லாகப் புகழுடன் வாழ்வா ரம்மா
அதிபன்தன் முன்ஜன் மத்தை வரைகிறேம் பெருமுக்கல் [தன்னில்
நிதிமிக உடையா னுக்கு நேர்ந்தனன் ரெட்டி வம்சம்.

20. இரு புதல்வர்களும் (இரண்டு ஆண்களும்) மூன்று புதல்விகளும் (மூன்று பெண்களும்) நீண்ட ஆயுளுள்ளவர்கள் ஆவார்கள். இவனுடைய புத்திரர்கள் இவனுக்கு மேலான கீர்த்தியுடன் வாழ்ந்து வருவார்கள். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம், பெருமுக்கல் என்ற ஊரில், செல்வம் அதிக முடைய ரெட்டியார் மரபினனுக்குப் பிறப்பான்.

21. பாரியு மதலே யுண்டாய்ப பாரமாங் குடும்பி யாகி
ஆறுமா முகத்தோன் பத்தி அதிதிக்கு வன்ன மீந்து
மாரனும் வினையில் லாமல் மறலியின் பதிக்குச் சென்று
ஆரியன் வரையப் பட்டு அவனியி லுதிப்பா னாகும்.

21. மனைவி மக்களை யடைந்து, பெரும் குடும்பத்தை யடைந்து, சுப்பிரமணியக்கடவுளைமீது பக்தி கொண்டு, விருந்தினருக்கு அன்னமளித்து வந்து, தீவினையில்லாமல் மரணமடைந்து, மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டுப் பூமியில் பிறப்பான்.

22. வந்தவன் பொதுயோ கத்தை வரைகிறேந் தாயே கேளும்
செந்திரு விலாச முள்ளான் தீரமா மனத்த னாகும்
தந்தைநாள் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
தன்தனங் கொடுக்கல் வாங்கல் சகடுவா கனமு மேற்பன்.

22. ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம், தாயே! கேளுங்கள். இலக்குமி நோக்குப் பெற்றவன். தைரிய முள்ள மனத்தினன். தன் பிதுரார்ச்சிதமான சொத்துக்களை விருத்தி செய்வான். தன்பொருளைக் கொடுக்கல் வாங்கல் செய்து, வண்டி முதலிய வாகன வசதிகளைப் பெறுவான்.

23 வடதிசை யரசன் போல வாழுவா னிந்தப் பாலன்
உடன்துணை காப்பா னாகும் உலகமேல் புகழு மேற்பன்
படைசெலான் செல்லில் வெற்றி பலர்பேக்கு மிவன்சொல் மேன்மை
தடவரை மகளே யாங்கள் சாற்றின மொழிகுன் றாவே.

23. குபேரனைப் போல் செல்வவானாக வாழ்ந்து வருவான். தன் உடன் பிறந்தவனை ஆதரிப்பான். உலகத்தில் கீர்த்தி அடைவான். சண்டைக்கு முன் செல்லாதவன். இவன், வார்த்தையில் வெற்றி கொண்டவன். பலபேருக்கு இவனுடைய பேச்சில் மதிப்பு உண்டு. மலையரசனின் புத்திரியே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறா.

24. ஜாதகன் தனக்கு யோகஞ் சார்ந்தகா ரணங்கள் சொல்வீர்
ஆதவன் புதனு மெட்டில் அசுரர்மந் திரியு மேழில்
மாதவ னாறில் தங்க மங்கல னஞ்சி லாகக்
காதலி வேசி யோகங் கேதார யோக மொன்று;

24. ஜாதகனுக்கு யோகம் ஏற்படக் காரணங்கள் என்ன வென்று சொல்லுங்கள். சூரியனும் புதனும் எட்டிலும், சுக்கிரன் ஏழிலும், குரு ஆறுமிடத்திலும், செவ்வாய் ஐந்தாமிடத்திலும் இருப்பதால், தாயே! வேசியோகம் கேதாரயோகம் இரண்டும்;

25. இருவகை யோகத் தாலே இயம்பினோம் ராஜ யோகம்
தரையதை விருத்தி செய்வன் சகலர்க்கு மிவன்சொல் மேன்மை
பொருளதைப் புதையல் வைப்பன் புதுவில்லம் வேறு செய்வன்
நிறையவே குடும்பி யாவன் நிமலியே கேட்டி டாயே.

25. இருவிதமான யோகத்தினுல் ராஜயோகம் ஏற்படும் என்று கூறி ேனும். பூமியைப் பெருக்குவான். எல்லோருக்கும் இவன் பேச்சில் மதிப்பு இருக்கும். பொருளைப் புதைத்து வைப்பான். புதிதாக வீடு கட்டு வான். நிறைந்த குடும்பியாவான். தாயே ! கேளுங்கள்.

26. அன்னையு மாஞ்சி வப்பள் அறிவுளா ளடக்க வார்த்தை
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனத்துக் கேத்தோள்
அன்னியர் குற்றஞ் சொல்லாள் அடிசிலுக் கினிய ளாகும்
அன்னம்போல் நடையு மொக்கும் அதிதிக்குத் தாக மீவள்.

26. ஜாதகனுடைய தாய் மாநிற முள்ளவள். அறிவுள்ளவள். அடக்க மாகப் பேசுபவள். அன்புடன் அன்ன மளிப்பாள். தன் கணவன் மனத்துக் கேற்றவள். பிறர்மீது குற்றம் கூருதவள். உருசியுடன் சமைக்க வல்லவள். அன்னத்தைப் போன்ற நடை (அழகு) யுள்ளவள். விருந்தினரை அன்புடன் உபசரிப்பாள்.

27. இல்லமும் வடமே லாகும் இவள்துணை யாண்பால் மூன்று
வல்லிமா ரிருவ ராகும் வரைகின்ருே மிவள்முன் ஜன்மம்
எல்லேயி லுயர்வ தான எழில்பொழில் சேர நாட்டில்
புல்கினுள் திவ்யச் சேயாய்ப் புகழான குடும்பி யாகி.

27. தாய்க்கு வீடு வடமேற்குத் திசையிலுள்ளது. மூன்று சகோதரர் களும் இரு சகோதரிகளுமாவர். இவளுடைய முற்பிறப்பை சொல்லுகின்ருேம். பூமியில் உயர்ந்ததாகவும் செழிப்புள்ளதாகவும் உள்ள சேரநாட்டில் ஒரு நல்ல கீர்த்தியுள்ள குடும்பத்தில் பிறந்தாள்.

28. பலருக்கு நல்லோ ளாயும் பகவானின் பத்தி பூண்டும்
குலவினுள் கால ளுடு [1]குறைதலை வறையப் பட்டு
உலகினி லுதித்தா ளென்ருேம் உயர்வான குடும்பி யாகி
மருமமாய் மூவைந் தாண்டுகள் வயிறுநோயால் மரிப்பா ளாகும்.

28. பலபேருக்கு நல்லவளாக இருந்து, தெய்வ பக்திகொண்டு இருந்து, பிறகு மரண மடைந்தாள். மீண்டும் பிரம தேவனுல் படைக்கப் பட்டு இப்புவியில் பிறந்தாள் என்று சொன்னேும். உயர்ந்த குடும்பத்தை யடைவாள். ஜாதகனுடைய பதினைந்தாம் வயதுக்குள் அவள் வயிற்று வலியால் மரண மடைவாள்.

29. பின்ஜன்மங் காஞ்சி தன்னில் பிராமணக் குலமு திப்பாள்
முன்னமே குடும்பி யாகி முதல்வியும் வாழ்வா ளாகும்
பின்ஞெரு வன்னை சேர்வள் புத்திர தோட மெய்தும்
கன்மசாந் திகளுஞ் செய்தால் கலந்திடுஞ் சுதர்க ளென்ருேம்.

---

[1] பிரமன். ஐந்து தலைகளையுடைய பிரம தேவனுக்கு, சிவபெருமானுல் ஒரு தலை குறைக்கப்பட்டது குறித்து இங்ஙனம் கூறப்பட்டது.

29. மறுபிறவி காஞ்சிபுரத்தில் அந்தண குலத்தில் பிறப்பாள் என்றோம். பெரும் குடும்பத்தையடைந்து வாழ்ந்து வருவாள் என்றோம். பிறகு (தகப்பனுக்கு மறு மனைவி) இளைய தாய் வருவாள். அவளுக்குப் புத்திர தோஷம் உண்டு. அது நீங்கக் கர்ம சாந்திகள் செய்தால் புத்திரர்கள் தோன்றுவர்.

30. சுதராண்பால் தோட முண்டு தோகைய ரிருவ ராகும்
இதுநிற்கத் தந்தை பூர்வம் இயம்புவோம் புதுவை தன்னில்
நிதியிலா வைச்ய னுக்கு நேர்ந்துமே செட்டுச் செய்து
அதிகமாய்ப் பொருள்ப டைத்து அவன்வாழ்நாள் வினையைக்
[கேண்மோ.

30. ஆண் சந்ததிக்குத் தோஷமுண்டு. இரு புத்திரிகள் தோன்றுவர். இது தவிர, ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். புதுவையில் ஓர் ஏழை வைசியனுக்குப் புத்திரனாகப் பிறந்து, வர்த்தகம் புரிந்துவந்து, அதிகமான செல்வத்தை யடைந்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

31. ஏழையோன் மணத்துக் காக இவனைமாங் கல்யங் கேட்கத்
தாழ்விலாத் தாரே னென்று தைரிய மவர்க்குச் சொல்ல
ஆழியில் சேக ரித்து அடுத்தநாள் முத்ரை கேட்கப்
பாழான தொழிலி னாலே பணிசெய்ய மறந்தே னென்று ;

31. ஓர் ஏழை இவனைத் தன் மணத்துக்காகப் பொருளுதவி கேட்க, இவன் தருகிறேன் என்று சொல்லித் தைரியம் ஊட்டினான். அந்த ஏழையும் பணம் சேகரித்து வந்து அடுத்த நாள் திருமங்கல்யம் கேட்கும் போது பாழாய்ப் போனத் தொழில் தொந்தரவால் மாங்கல்யம் செய்ய மறந்து விட்டேன் என்று கூறினான்.

32. வேறொரு முத்திரை வாங்கி வித்தகர் மணமு டித்துக்
கூறுவார் சாபந் தானும் குலவுமிச் சென்மந் தன்னில்
நாரிக ளிருவர் நேரு நற்றுணை கன்னி யின்றிப்
பாரினில் வாழ்வா யென்னப் பற்றிற்று வந்தச் சாபம்.

32. அந்த ஏழையும் வேறு திருமங்கல்யம் வாங்கி மணத்தை முடித்துக் கொண்டு வந்து சாப மிட்டான். உனக்கு ஏற்பட்ட இப்பிறவியில் இரு மனைவியரை அடைவாய். உடன் பிறந்த சகோதரியில்லாமல் உலகில் வாழ்ந்து வருவாய் என்று சொல்ல, அந்தச் சாபம் இவனுடைய தந்தையைப் பற்றியது.

33. மாரனு மந்தி யத்தில் மார்க்கத்தில் தாகம் வைத்துத்
தேரினோர்க் கன்ன மீந்து சேவலங் கொடியோன் பத்தி
வீரனுங் கொண்டு மேதான் மேவினன் கால னூடு
சூரியன் வரையப் பட்டு அணுகின னிக்கு லத்தில்.

**33.** ஜாதகனுடைய தந்தை தன் கடைசிக் காலத்தில் சாலையோரத்தில் தண்ணீர்ப்பந்தல் வைத்து, துறவிகளுக்கு அன்னமளித்து வந்து, சேவல் கொடியையுடைய முருகக் கடவுள்மீது பக்திகொண்டு வாழ்ந்து வந்து பிறகு மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப் பிறவியில் பிறந்தான்.

**34.** பின்ஜன்மங் காளாத்தி கீழ்ப்பால் பேரூரில் ரெட்டி வம்சம்
அன்னவ னுதிப்பா னாகும் அழகான குடும்பி யாவன்
கன்மகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
துன்சனி தசைபூர் வத்தில் செப்புவோந் தந்தை கண்டம்.

**34.** மறுபிறவியில் திருக்காளத்திக்குக் கிழக்கில் உள்ள பெரிய ஊரில், ரெட்டியார் மரபில் பிறப்பான். அழகான குடும்பத்தையடைந்து வாழ்வான். ஜாதகனுக்குக் கரும காலங்களைச் சொல்லுங்கள், முனிவரே! சனிமகா தசை முதலில் தந்தை மரண மடைவான் என்று சொல்லுகின்றோம்.

**35.** ஜாதகன் மரண காலஞ் சாற்றுவோ மன்பா னைந்தில்
ஓதிய மகர மாதம் ஒருகண்ட நமனைக் காணான்
மேதினி லறுபா னைந்தில் விளம்புவோ மார கங்கள்
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

**35.** ஜாதகனுடைய மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். ஐம்பத்தைந் தாம் வயதில் தை மாதம் ஒரு கண்டம் ஏற்படும். ஆனால் அப்போது இறக்க மாட்டான். அறுபத்தைந்தாம் வயதில் இறந்துவிடுவான். உயர்ந்த கண வனை யடைந்த புண்ணியவதியே! கேளுங்கள்.

**36.** மறுஜன்மந் தக்கோலத்தில் வருகுவான் சைவச் சேயாய்த்
திருமகன் ஜனன காலஞ் சேய்தசை வாண்டு மூன்றும்
உறைந்திடுந் திங்க ளைந்தும் உரைத்தனம் பூர்வ பாகம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

**36.** ஜாதகன் மறு பிறவியில் தக்கோலத்தில் வைசிய குலத்தவனைப் பிறப்பான். ஜாதகனுடைய ஜனன காலத்தில் அங்காரகமகாதசையில் மூன்று வருடங்களும் ஐந்து மாதங்களும் மீதமாகும். இவ்விதம் முதல் பாகம் சொன்னேம். அரிய வேதங்களின் முடிவில் நடனமாடும் தாயே! கேளுங்கள்.

# ஜாதகம் 78

1. கலைசனி கலையி லாகக் கனகனுஞ் சாடி யாக
நிலமகன் வில்லு மாக நீத்தோனும் மீன மாகப்
புலவனும் பானு கோலில் புகர்ராகு கன்னி யாகத்
தலமது மிதுன மாகச் சாற்றுவீர் பலனை யென்று ;

1. சந்திரன் சனி மகரத்திலும், குரு கும்பத்திலும், செவ்வாய் தனுசிலும், கேது மீனத்திலும், புதன் சூரியன் துலாத்திலும், சுக்கிரன் ராகு கன்னிலும் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருந்தால், ஏற்படும் பலனைச் சொல்லுங்கள்; என்று ;

| | | | |
|---|---|---|---|
| கேது | | | லக்கினம் |
| குரு | இராசி சக்கரம் | | |
| சந்திரன் சனி | | | |
| செவ் வாய் | | புதன் சூரியன் | சுக்கிரன் ராகு |

2. பார்வதி கேட்கும் போது பராசரும் புகலு கின்றார்
சீர்புகழ் ஆண்பால் ஜன்மம் செப்புமில் கீழ்ப்பால் வாசல்
பாரளந் தோனும் தென்பால் பார்மன்னர் வாச மாகும்
மாரியு மேல்பா லாகும் மயிலோனுந் தென்மே லாகும்.

2. பார்வதி தேவி கேட்கும்போது, பராசர முனிவர் கூறுகின்றார். இது, சிறந்த புகழ் பெற்ற ஆண் மகனின் ஜாதகம். அவன் பிறந்த வீடு கிழக்கு நோக்கியுள்ள வாயிலுள்ளது. உலகத்தை யளந்தோனாகிய திருமாலின் ஆலயம் தெற்குத் திக்கில் இருக்கும். அஃது உலகத்தையாளும் மன்னர் வசித்துவரும் ஊராகும். மேற்குப் பக்கத்தில் மாரியம்மன் கோயிலும் தென் மேற்குத் திக்கில் மயில்வாகனனாகிய சுப்பிரமணியர் ஆலயமும் உள்ளது.

3. இன்னமும் பலதே வாசம் இலகிய பேரூ ராகும்
அன்னவன் ஜன்மம் சொல்வோம் அருளுவான் வடுகச் சேயாய்த்
தந்தைதாய் துணைவர் யோகம் தன்மனை புத்ர யோகம்
இன்னவன் முன்பின் ஜன்மம் இயம்புவோ மிந்நூல் தன்னில்.

3. இன்னும் பல தெய்வங்களுள்ள பெரிய ஓர் ஊராகும் அது, ஜாதகன் வடுகர் குலத்தில் பிறப்பான் என்றோம். ஜாதகனுடைய தந்தையர் தாய் உடன்பிறந்தவர் மனைவி புத்திரர் இவர்களுடைய யோகத்தையும், இவன் முற்பிறவி மறுபிறவி இவற்றையும் இந்தச் சோதிட நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வோம் சிவந்தமெய் கல்வி மானும்
விந்தையாய்ப் பேசு வானும் வீண்வம்பு புகலா னுகும்
சிந்தையும் நல்ல தாகும் செய்நிலம் விருத்தி செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மர்மத்தை வெளிக்காட் டாதான்.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றேன். சிவந்த உடலுடையவன். கல்விமான். அழகாகப் பேசுபவன. வீண்வம்பு பேசாதவன். நல்லமன முள்ளவன். விளைநிலங்களைப் பெருக்குவான். தன்னையண்டிவந்தவர்கட்கு அன்னமளிப்பான். இரகசியத்தை வெளிவிடாதவன்.

5. அரவுபோல் கோப மேற்பன் யாவர்க்கும் நல்லோ னுவன்
மருவிடும் கார கங்கள் வர்ணித்தோர்க் குதவி செய்வன்
திருமாளி செய்வா னுகும் சலவியா பாரஞ் செய்வன்
ஒருவருக் கஞ்சா நெஞ்சம் உத்தமி கேட்டி டாயே.

5. சர்ப்பம்போல் கோபங்கொள்வான். எல்லோருக்கும் நல்லவனுவன். காரக நோய் ஏற்படும். தன்னைத் தோத்தரித்தவர்கட்கு உபகாரம் செய்வான். அழகிய வீடு கட்டுவான். கடல் கடந்து வியாபாரம் செய்வான். ஒருவருக்கும் பயப்படாத மனத்தினன். உத்தமியே! கேளுங்கள்.

6. செய்தொழில் மூலத் தாலே சல்லிய பாதை யேற்பன்
வையமேல் நிவிர்த்தி செய்வன் வாக்கதைக் காப்பா னுகும்
தையல்சொல் கடவா னுகும் சாப்பாட்டுச் சுகிய னுகும்
ஐயமா மதுவியா பாரம் அவனுமே செய்வா னுகும்.

6. செய்யும் தொழில் மூலமாக கடனுபத்திரவம் ஏற்படும். பிறகு அதைத் தீர்த்துவிடுவான். சொன்ன வார்த்தைகளைக் காப்பான். தன் மனைவியின் வார்த்தையை மீருதவன். சாப்பாட்டில் பிரியமுள்ளவன். மது (கள் சாராயம் முதலிய) வியாபாரம் செய்து வருவான்.

7. தன்துணை தோன்றுந் தீதாம் தனியனுய் வாழ்வா னம்மா
என்னகா ரணத்தி னுலே இவன்தனி யாக வுந்தான்
துன்மையாய்க் கார கங்கள் தோன்றிடு மென்று சொன்னீர்
கன்மத்தைச் சொல்லு மென்னக் காதலன் பூர்வந் தன்னில் ;

7. தனக்கு உடன்பிறந்தவன் ஒருவன் தோன்றுவான். ஆனல் அவன் நிலையாமல், ஜாதகனுடைய தந்தை தனியனுக வாழ்ந்து வருவான். என்ன காரணத்தினுல் இவன் தனியாக வாழ்ந்துவருவான் என்றும், தீமையுள்ள காரக நோய் ஏற்படும் என்று சொன்னீர்கள்? அதைச் சொல்லுங்கள், என்று வினவ, ஜாதகனுடைய தந்தைக்கு முற்பிறவியில் ;

8. நேர்ந்தது வந்தத் தோடம் நுவலுவீர் பூர்வந் தன்னைப்
பாரினி லுயர்வ தான பட்சியின் நகரந் தன்னில்
கார்குலம் தனிலு தித்துக் கௌரவக் குடும்பி யாகி
சரியு மதலை யுண்டாய் நாயகன் வாழு நாளில் ;

8. ஏற்பட்ட தோஷத்தால் ஏற்பட்டது. அந்தத் தோஷத்தைச் சொல்லுங்கள் என்று கேட்க, உலகில் உயர்வதான திருக்கழுக்குன்றத்தில், கார் குலத்தில் பிறந்து, கௌரவமான குடும்பத்தை யடைந்து, மனைவி மக்களைப் பெற்று, வாழ்ந்து வரும் காலத்தில் ;

9. கன்னிகை யொருத்தி பேரில் கழறொணு வார்த்தை சொல்ல
அன்னவள் மனது வாடி அறைந்தசா பத்தைக் கேண்மோ
துன்மையாய் வார்த்தை என்மேல் செப்பின பாவிக் கேதான்
பின்வருஞ் ஜன்மந் தன்னில் பெண்ஆணுந் துணைக ளின்றி ;

9. ஒரு கன்னிப் பெண்மீது சொல்லக்கூடாத அபாண்ட வார்த்தைகளைச் சொன்னான். அப்பெண் மனம் வருந்தி கூறிய சாபத்தைக் கேளுங்கள். தீமையாக என்மீது வார்த்தை சொல்லிய பாவிக்கு, இனி ஏற்படும் மறு பிறவியில், ஆண் பெண் உடன் பிறந்தவர்களில்லாமல் ;

### பெற்றதாயை உதைத்த தோஷம்

10. குலமதில் குற்ற மாயும் குவலயந் தன்னில் வாழ்வாய்
உலவிற்று அந்தச் சாபம் உரைக்கின்றோம் வேறு ஒன்று
விலைமாதர் வார்த்தைக் கேட்டு வித்தகன் தாயை எத்த
கலவர மனத்த ளாகிக் கழருவாள் அன்னை சாபம்.

10. தன் குலத்தில் பழி யேற்பட்டு உலகில் வாழ்ந்துவருவாய், என்று சொன்னாள். அந்தச் சாபம் ஏற்பட்டது. அதுதவிர, வேறொன்றும் கூறுகின்றோம். ஒரு தாஸி(வேசை)யின் வார்த்தையைக் கேட்டு, தன் தாயைக் காலால் உதைத்தான். தாயும் மனத்தில் வருத்தமடைந்துக் கூறுகின்றாள்.

11. கூத்தியின் வார்த்தை கேட்டுக் கொடுமையைச் செய்த பாவி
பாத்திர மறியாச் செய்தாய் பிறக்கும்பின் ஜன்மந் தன்னில்
வேத்தொரு உருவ மாயும் மேவிடும் கரங்கால் குற்றம்
நாற்றம்போல் பிணியு மெய்தும் நவின்றனள் அன்னை தாமும்.

11. வைப்பாட்டியின் பேச்சைக் கேட்டு எனக்குத் தீங்கிழைத்த பாவியே ! நீ என்ன செய்வதென்பதை அறியாமல் செய்துவிட்டாய். உனக்கு ஏற்படும் அடுத்த பிறவியில் கை கால்கள் குற்றம் ஏற்பட்டு, காரக நோயை அடைந்து, வேறொரு உருவம் உள்ளவன்போல் ஆகி, துர்நாற்றம்வீசும் வியாதியையும் அடைந்து வாழ்வாய் என்று, தாய் சாபமிட்டாள்.

12. இருவகைச் சாபத் தாலே இச்சென்மம் கரங்கால் குற்றம்
மருவிடும் கார கங்கள் அவன்துணை யில்லா தாயும்
குறைசொல்வார் குலத்தி லேதான் குறித்தவிக் குணத்தா னுக்குத்
திருமக னுதிப்பா னுகும் செப்புவோ மிவன்கு ணத்தை.

12. இந்த இருவிதச் சாபத்தால் இப்பிறவியில் கை கால்களில் குறைவுகளேற்பட்டு, காரக நோயை அடைந்து, உடன்பிறந்த சகோதரரில்லாமல், குறை சொல்லுபவர் குலத்தில் பிறந்த இக்குணங்களுடையவனுக்கு ஜாதகன் தோன்றுவான். ஜாதகனுடைய குணத்தைக் கூறுகின்றோம்.

13. இருவிதக் கல்வி கற்பன் ஈகைவான் பொறுமை சாலி
மருவலரை வசித்தே வெல்வன் மாஞ்சிவப் புடைய னாகும்
துரைராசர் பேட்டி கொள்வன் தொடுத்ததை வெல்வா னாகும்
தரையதைச் சேர்ப்பா னாகுஞ் சாதிப்பான் சிலவே சங்கை.

13. இருவிதமான கல்வி கற்பான். கொடையாளி. பொறுமை யுடையவன். எதிரிகளை அடுத்தே வெல்லுவான். மாநிற முடையவன். அரசரைப் பேட்டி காண்பான். எடுத்த காரியத்தை ஜயிக்கும் இயல்பினன். பூமியைப் பெருக்குவான். சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வான்.

14. தந்தைநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன நேசரால் செட்டுச் செய்வன்
பந்தணி மார்கள் மோகன் பாரினில் சல்ய மில்லான்
சுந்தர முடைய னாகுஞ் சொல்லது சுருக்க மாகும்.

14. தன் பிதுரார்ச்சிதமான பூமியைப் பெருக்குவான். தன்னை யண்டி வந்தவர்கட்கு அன்னமளிப்பான். நண்பர்கள் உதவியால் வியாபாரம் செய்து வருவான். பெண்கள்மீது மையல் கொள்வான். உலகில் கடன் உபத்திரவம் இல்லாதவன். அழகுள்ளவன். அடக்கமாகப் பேசுபவன்.

15. நல்லவன் நல்ல வர்க்கு லண்டாக்கு மிண்ட னுவன்
வெல்லுவா னெதிரி தன்னை வீண்வழக் கோரம் பேசான்
சொல்லது சுருக்க மெய்துஞ் சனபந்து வாத ரிப்பன்
கல்வெட்டுப் போல வெய்துங் காசினில் புகழு மேற்பன்.

15. நல்லவருக்கு நல்லவனாகவும் தீயர்கட்குக் கெட்டவனாகவும் நடந்து கொள்வான். விரோதிகளை ஜயிப்பான். வீண் வழக்குகளில் பொய்ச் சாட்சி சொல்லாதவன். அடக்கமாகப் பேசுபவன். தன் சுற்றத்தார்களை ஆதரித்துவருவான். கல்வெட்டுப்போல் ஆணித்தரமாகப் பேசுபவன். செல்வத்தில் கீர்த்தியடைவான்.

16. வண்டிவா கனமு முள்ளான் வணிபங்கள் செய்வா னாகும்
பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன
துண்டமாய்க் கூறு னாகுந் தொடுத்தகா ரியமுடிப்பான்
குண்டுணி கூறு னாகுங் கோதையே கேட்டி டாயே.

16. வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். வர்த்தகங்களைச் செய்வான். பழைய நாளிலேற்பட்ட பிதுரார்ச்சிதமான சொத்துக்களைப் பெருக்குவான். கண்டித்துப் பேசாதவன். எடுத்த காரியத்தை வெல்வான். கோள் சொல்லாதவன். தாயே! கேட்டிடுவாய்.

17. தன்துணை முன்பெண் ணென்று சாற்றுவோந் தீர்க்க மாகக்
கன்னியின் சேதி கேளாய்க் கணவன்தன் மனம்போல் வாழ்வள்
பன்னியே பேசு வாளாம் பதர்குண மில்லா ளாகும்
பொன்பணி யுடையா ளாகும் போசன வறுமை காணுள்.

17. ஜாதகனுக்கு முன்பிறந்த சகோதரியொருத்தி நீண்ட ஆயுளுள்ள வள். அவளுடைய செய்தியைச் சொல்லுகின்ருேம். தன் கணவன் மன மறிந்து அதன்போல் வாழ்ந்துவருவாள். பன்னிப் பன்னிப் பேசுபவள். அற்ப குணங்க ளில்லாதவள். செல்வம் ஆபரணம் முதலியன உடையவள். சாப்பாட்டுக்குக் குறையில்லாதவள்.

18. அடிசிலுக் கினிய ளாகும் அரிமனை யொப்ப தாகும்
தடபுடல் செய்கை யுண்டு சற்பாத்ரி யோக சாலி
விடம்போலக் கோபஞ் சாந்த மெல்லிக்குச் சுதராண் ரண்டு
மடமயில் பெண்பா லவ்வாறு வரைகின்ருேந் தீர்க்க சீவி.

18. உருசியுடன் சமைக்க வல்லவள். இலக்குமியைப் போன்றவள். ஆடம் பரச் செய்கையுள்ளவள். சற்பாத்திரியோக முள்ளவள். விடம்போல் கோபம் கொள்வாள். உடனே சாந்தமடைவாள். அவளுக்கு இரு புத்திரர்க ளும் இரு புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்களாயிருப்பர்.

19. வரனுமே வடகீழ் நேரும் மாதுவுந் தீர்க்க சீவி
திருமகன் பின்ஆண் ரண்டு தீர்க்கமாம் மற்ருேர் சேதம்
உரைக்கின்ருேம் பின்பால் சேதி உத்தமர் சேதி யாவும்
பெருவயி ருேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

19. கணவன் வடகிழக்குத் திசையிலிருந்து வருவான். அவளும் நீண்ட ஆயுளுள்ளவள். ஜாதகனுக்குப்பின் இரு சகோதரர்கள் பிறந்து தீர்க்கமா யிருப்பர். மற்றது சேதமாகும். பிற்பாகத்தில் அவர்களுடைய சேதிகள் யாவற்றையும் சொல்லுகின்ருேம். விநயகக் கடவுளைப் பெற்ற புண்ணிய வதியே! கேளுங்கள்.

20. அன்னையின் குணத்தைச் சொல்வோ மழகுளாள் ரதியை [யொப்பாம்
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனத்துக் கேற்ருேள்
அன்னியர் குற்றஞ் சொல்லாள் ஆபத்தென் ருேருக் கீவள்
அன்னவள் கல்வி மானும் அறிவுளா ளென்று சொல்வோம்.

20. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்ருேம். அழகுள் ளவள். ரதியைப்போன்றவள். அன்புடன் அன்னமளிப்பாள். தன் கண வன் மனப்படி நடப்பாள். பிறர்மீது குற்றம் கூருதவள். ஆபத்தையடைந் தவர்கட்கு உதவுவாள். கல்வியறிவுள்ளவள். அறிவாளி என்றும் சொல் லுகின்ருேம்.

21. அவசர மனத்த ளாகும் அரிபோலக் கோபஞ் சாந்தம்
இவளுக்குத் துணையாண் நான்கு எய்திடுங் கன்னி ரண்டு
தவசியே தீர்க்க மெய்தும் சாகையும் உள்ளூ ராகும்
நவனியில் இவள்முன் ஜன்மம் நவிலுவோந் தாயே கேளும்.

21. அவசர மனமுடையவள். சிங்கம்போல் கோபம் கொள்வாள். பிறகு சாந்தமடைவாள். இவளுக்கு நான்கு சகோதரர்களும் இரு சகோதரிகளும் பிறந்து தீர்க்காயுளுள்ளவர்கள் ஆவார்கள். உள்ளூரிலேயே சொந்த வீடுள் ளவள். இவளுடைய முற்பிறவியைப்பற்றிச் சொல்லுகின்ருேம். தாயே! கேளுங்கள்.

22. அறுமுகன் தணிகைக் குத்திரம் அணுகிய பேரூர் தன்னில்
திருமகள் சத்திரியச் சேயாய் ஜனித்துமே சுகமாய் வாழ்ந்து
அறமதி லிச்சை யின்றி அந்தகன் நகரஞ் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்.

22. ஆறுமுகக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திருத்தணிகைக்கு வடக்கில் உள்ள பெரிய ஓர் ஊரில், சத்திரியகுலத்தில் தோன்றி, சுகமாய் வாழ்ந்து வந்து, தருமம் செய்வதில் விருப்பமின்றி, மரணம் அடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று கூறுகின்றோம்.

**தருமஞ் செய்யாத பலம்: தாழ்குலம்.**

23. அத்திரி மறுத்துச் சொல்வார் அவளுமே முன்ஜன் மத்தில்
சத்திரிய குலமு தித்தோள் சங்கையா யிச்சென் மத்தில்
வித்தகி வந்த தென்ன விளம்புவீர் முனியே நீர்தாம்
சத்தியு முன்ஜன் மத்தில் தருமங்க ளில்லாத தாலே ;

23. அத்திரி முனிவர் மறுத்துக் கூறுகின்றார். முற்பிறவில் சத்திரியகுலத்தில் பிறந்த அவள் இப்பிறவியில் தாழ்வான குலத்தில் பிறந்த காரணம் என்ன வென்று சொல்லுங்கள், முனிவரே! நீர்தாம். அப் பெண்ணும் முற்பிறவியில் தருமங்கள் செய்யாததால் ;

24. பிறந்தன ளென்று சொல்வோம் பேசுவோ மிவள்பின் ஜன்மம்
அரங்கமா நகரஞ் தன்னில் அருளுவாள் சைவச் சேயாய்ப்
பொருளது பெருக்க மாகிப் புகழுடன் வாழ்வா ளம்மா
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

24. பிறந்தாள் என்று சொல்லுகின்றோம். இவளுடைய மறு பிறவியைக் கூறுகின்றோம். அரங்கமாநகரில் சைவ குலத்தவளாகப் பிறப்பாள். செல்வம் பெருகி, கீர்த்தியுடன் வாழ்ந்து வருவாளம்மா. விநாயகக் கடவுளைப் பெற்ற புண்ணியவதியே ! கேளுங்கள்.

25. ஆறுறு ஆண்டு தன்னில் அன்னையி னுடல மேகும்
கூறுவோ மீரே ழாண்டுள் குழவியின் தந்தை கண்டம்
வேறுஜன் மங்கள் சொல்வோம் வினைதீர்க்கும் வள்ளூர் தன்னில்
சேருவான் வைச்யச் சேயாய்ச் செழிப்புடன் வாழ்வா னம்மா.

25. ஜாதகனது முப்பத்தாறும் வயதில் தாய் மரணமடைவாள். ஜாதகனுடைய பதினான்காம் வயதில் தந்தை இறந்து போவான். தந்தையின் அடுத்த பிறவியைச் சொல்லுகின்றோம். தீவினையைத் தீர்க்கும் திருவள்ளூரில் வைசியகுலத்தவனாகப் பிறப்பான். செழிப்புடன் வாழ்ந்து வருவான். தாயே !

26. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருப தாண்டில்
காதலி அன்னை வர்க்கம் கலப்பளா மென்று சொல்வோம்
ஓதுவே னவள்கு ணத்தை உறுதியில் லாத நெஞ்சம்
பாதக மனமில் லாதாள் பதர்குண மில்லா ளாகும்.

26. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். இருபதாம் வயதில் தன்தாயின் வர்கத்திலிருந்து மனைவி வருவாள் என்று கூறுகின்றோம். அவளுடைய குணத்தை சொல்லுகின்றோம். திடமில்லாத மனமுள்ளவள். தீய எண்ணங்களில்லாத மனத்தள். அற்பகுணங்களில்லாதவள்.

27. வெஞ்சினம் வெளிக்காட் டாதாள் மெல்லியுஞ் சிவந்த மேனி
வஞ்சியும் யோக சாலி வருவோரை யாத ரிப்பள்
மிஞ்சின வார்த்தை கூறாள் விகடங்க ளில்லா ளாகும்
அஞ்சின பேரைக் காக்கும் அம்பிகை யாளே கேளாய்.

27. கோபத்தை வெளியிடாதவள். சிவந்த உடலுடையவள். அதிருஷ்டமுள்ளவள். தன்னிடம் வருபவர்களை ஆதரிப்பாள். அதிகமாகப் பேசாதவள். விகடமாகப் பேசாதவள். பயந்தவர்களைக் காப்பாற்றும் தேவியே! கேளுங்கள்.

28. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
பதராகும் மற்ற வெல்லாம் பகருவோ மிவன்முன் ஜன்மம்
நதியினி லுயர்வ தான நற்சேது பதியி லேதான்
சதியிலாச் சேடர் வம்சம் ஜனித்துமே செட்டுச் செய்து ;

28. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து தீர்க்காயுளுள்ளவர்கள். மற்றவையெல்லாம் நிலையா. இவனுடைய முற்பிறப்பைச் சொல்லுகின்றோம். புண்ணிய தீர்த்தங்களில் உயர்ந்த சேதுக்ஷேத்திரத்தில் தீங்கில்லாச் சேடர் மரபில் பிறந்து வர்த்தகம் செய்து வந்து ;

29. கடவுளர் தொண்டு பூண்டு காவலன் வினையில் லாமல்
அடவுடன் கால னுடு அடைந்துமே பிரமன் லக்கம்
தடமதி லுதிப்பா னுகும் சாற்றுவோ மிவனின் யோகம்
திடமதாய்க் குடும்ப மேற்பன் செல்வதி கேட்டி டாயே.

29. தெய்வத்துக்குத் தொண்டுகள் பல செய்து தீவினையில்லாமல் மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இவ்வுலகில் பிறப்பான். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். உயர்ந்த குடும்பத்தை யடைவான். செல்வியே! கேளுங்கள்.

30 ஜனித்தநாள் முதலாமாகச் சத்தம ஆண்டு மட்டும்
கனமான செலவு முண்டு கடன்நேரும் தாணி நீங்கல்
வினைமிகுந் தந்தைக் கேதான் வரவுக்குச் செலவ னேகம்
தினம்மனச் சஞ்ச லங்கள் செல்வதி கேட்டி டாயே.

30. ஜாதகன் பிறந்த நாள் முதலாக ஏழுவருடங்கள் வரை செலவுகள் அதிகமாக ஏற்படும். கடன் உபத்திரவம் உண்டு. பூமிகள் கைவிட்டுப் போம். தீவினைகள் அதிகமாகும். தந்தை மரண மடைவான். வரவுக்கு மேல் செலவுநேரும். தினந்தோறும் மனத்தில் சஞ்சலங்கள் ஏற்படும். தாயே! கேளுங்கள்.

31. சொல்லிய ஆண்டின் மேலாய்ச் சுகம்பெறும் நினைத்த வெல்லாம்
எல்லைகள் சேர்த லுண்டு இடறிலா வாழ்வா ருகும்
சல்லியம் நிவிர்த்தி யாகும் செட்டுக்கள் மேன்மே லோங்கும்
அல்லலில் லாமல் வாழ்வன் அம்பிகை யாளே கேளாய்.

31. சொல்லிய ஏழு வருடங்களுக்குப் பிறகு சுகமேற்படும். எண்ணிய காரியங்கள் கூடும். பூமிகள் சேரும். துன்பங்களில்லாமல் வாழ்ந்து வருவான். கடன் உபவத்திரவங்கள் நீங்கும். வர்த்தகம் மேன்மையடையும். தீமைகள் இல்லாமல் வாழ்ந்து வருவான். தாயே! கேளுங்கள்.

32. அறுபது ஏழு ஆண்டில் ஆவணி மாதந் தன்னில்
திருமக ளுடல மேகும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
விரிஞ்சியில் சைவச் சேயாய் மேவுவா னென்று சொல்வோம்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

32. ஜாதகன் அறுபத்தேழாம் வயதில் ஆவணி மாதத்தில் மரண மடைவான். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். விரிஞ்சி நாட்டில் சைவகுலத்தவனுகப் பிறந்து வாழ்வான் என்று சொல்லுகின்றோம். கரிய யானைமுகத்தோனைப் பெற்றெடுத்த தேவியே! கேளுங்கள்.

33. அன்னவன் ஜனன காலம் அவிட்டத்தி னிரண்டாம் பாதம்
துன்சேயின் தசைநா லாண்டும் திங்களும் பத்தே யாகும்
சொர்ணமும் சேத மாகும் தொல்லையும் நேரு மென்றோம்
பின்துணை விருத்தி யாகும் பேசுவோம் பின்பால் சேதி.

33. ஜாதகனுடைய ஜனனகாலத்தில் அவிட்டநட்சத்திரம் இரண்டாம் பாதம். செவ்வாய்மகாதசையில் நான்கு வருடங்களும் பத்து மாதங்களுமீதமாகும். செல்வம் செலவாகும். உபத்திரவங்கள் ஏற்படும். சகோதர விருத்தியுண்டு. பிற்பாகத்தில் விபரம் கூறுகின்றோம்.

34. பொன்பணி பூமி யில்லம் படைப்பனேழாயிரம் பொன்
பின்துணை யிவன்மே லாகப் புகழ்ச்சியால் வாழ்வானம்மா
அன்னையின் குடும்பம் வேறு அடைவளா மென்று சொல்வோம்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

34. பொருள் ஆபரணங்கள் பூமி வீடு இவைகளைச் சேர்த்து ஏழாயிரம் பொன் வைப்பான். இவனுக்குப் பின் பிறந்த சகோதரன் இவனைவிட மேம்பாடுடனும் கீர்த்தியுடனும் வாழ்ந்து வருவான். இது தவிர, தாயின் குடும்பத்தையும் அடைவான் என்று சொல்லுகின்றோம். உயர்ந்த கணவனைப்பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

## ஜாதகம் 79

1. சந்திரன் ராகு கோலில் சனிமேரு குருவு மானில்
புந்தியும் புகருங் கன்னி பூமகள் கடக மாக
இந்தவாறு கோளு நின்று இலக்கின மிதுன மாக
அந்ததோர் பலன்க ளெவ்வாறு அம்பிகை கேட்கும் போது;

1. சந்திரன் ராகு துலாத்திலும், சனி தனுசிலும், குரு மகரத்திலும், புதன் சுக்கிரன் சூர்யன் கன்னியிலும்,செவ்வாய் கடகத்திலும், கேதுமேஷத்திலும், இருந்து, இலக்கினம் மிதுனமாகவும், மற்ற கிரகங்கள் நிலையதுவாகவுமிருந்தால், பலன் எவ்வாறு, என்று பார்வதி கேட்கும் போது;

| | | | |
|---|---|---|---|
| | கேது | | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | செவ்வாய் |
| குரு | | | |
| சனி | | சந்திரன் ராகு | புதன் சுக்கிரன் சூர்யன் |

2. அத்திரி முனிவர் சொல்வார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லஞ் சொல்வேன் வடவாசல் கீழ்மேல் வீதி
உத்தரம் நதியு முண்டு உயர்பிறை யணிந்தோன் கிழ்ப்பால்
பத்திர காளி மாயோன் பிரமனு மேல்பால் தங்கும்.

**2.** அத்திரி முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதக மாகும். அவனுடைய பிறந்த வீட்டைச் சொல்லுகின்றோம். கிழக்கு மேற்கானதெருவில் வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வடக்குத் திக்கில் ஓர் ஆறும் உள்ளது. கிழக்கில் பிறைச் சந்திரனை யணிந்த சிவபெருமானின் ஆலயம் உள்ளது. மேற்குத் திக்கில் காளி கோயிலும் மகாவிஷ்ணுவின் ஆலயமும் பிரமதேவன் கோயிலும் உள்ளன.

3. சொல்லிய வடையா ளத்துள் சுதனுமே ஏழாஞ் ஜன்மம்
புல்குவான் கங்கை சேயாய்ப் புதல்வனின் யோகந் தானும்
தல்லியின் தந்தை யோகம் தன்மனை புத்ர யோகம்
வல்லவன் முன்பின் ஜன்மம் வரைகிறோந் தாயே யாங்கள்.

**3.** இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள ஊரில் ஜாதகன் தன் தந்தைக்கு ஏழாம் பிறவியாகப் பிறப்பான். அவன் வேளாள குலத்தில் தோன்றுவான். ஜாதகனுடைய யோகம், தாய் தந்தையர் மனைவி மக்கள் இவர்களது யோகம், முற்பிறவி மறுபிறவி ஆகிய இவற்றைக் கூறுகின்றோம். தாயே ! நாங்கள்.

4. தந்தையின் துணையாண் தோடம் சத்திமா ரிருவர் தீர்க்கம்
தந்தையின் சேதி சொல்வோம் சரசமாய் வார்த்தை யுண்டு
தந்தமுந் தரள மொக்கும் தரணியை விருத்தி செய்வன்
தந்தையி னாஸ்தி யில்லான் தன்மனை பக்கல் சேர்வன்.

4. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரரில்லை. இரு சகோதரிகள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம். சல்லாபமாகப் பேசுவான். முத்துக்களைப்போன்ற வெண்மையான பற்களை உடையவன். பூமியைப் பெருக்குவான். தன் தந்தையின் ஆஸ்தியில்லாதவன். தன் மனைவியின் பக்கம் சென்று வாழ்வான்.

5. மனைவியால் பெருமை யேற்பன் வளவுமே செய்வா னாகும்
உறன்முறை மதிப்பாய் வாழ்வன் உயர்வான புத்தி யேற்பன்
வினையதை யொருவர்க் கெண்ணன் மேடமா யில்ய நாளில்
தனயனு முதிப்பா னென்றோந் தனமது பெருக்கஞ் செய்வன்.

5. தன் மனைவியால் பெருமையடைவான். விவசாயம் செய்து வருவான். தன் பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். உயர்வான புத்தியுள்ளவன். ஒருவருக்கும் தீங்கு செய்ய எண்ணாதவன். மேஷ லக்கினத்தில் ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவன் என்று சொன்னோம். பொருளைப் பெருக்குவான்.

6. இன்னவன் செங்கை தன்னில் இலகிடு மானின் ரேகை
கன்றுகா லிகளும் விருத்தி கல்விமான் காலா ளுள்ளான்
அன்னியர்க் குதவி செய்வன் அவனுமே ஈகை கொஞ்சம்
துன்மையாம் பித்த தேகி தொடுத்தகா ரியமு டிப்பன்.

6. ஜாதகனுடைய தந்தையின் கையில் விஷ்ணுரேகை இருக்கும். கால்நடைகள் கன்றுகள் விருத்தியடையும். கல்வியறிவுள்ளவன். ஏவலாட்கள் உள்ளவன். பிறருக்குதவி செய்பவன். கொடுக்கும் குணமுடையவன். தீமை தரும் பித்த சரீர முள்ளவன். எடுத்த காரியங்களை முடிப்பான்.

7. முன்னவ னிருந்த ஜன்ம மொழிகிறோம் பெண்ணை யோரம்
சென்...... தன்னி லேதான் ஜனித்தனன் வைச்யச் சேயாய்ப்
பொன்பொரு ளுடைய னாகிப் பெரிதான வணிபஞ் செய்து
அன்னவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ.

7. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பெண்ணை யாற்றுக்கருகில்........ தன்னில் வைசிய குலத்தவனாகப் பிறந்தான். பொன் பொருள் முதலியன உடையவனாகி, பெரிதான வர்த்தகம் செய்து வந்து வாழ்ந்திருக்கும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

### சகோதரனுக்குரிய பாகத்தைத் தராதது

8. தன்துணை பாகந் தன்னைத் தாராமலே மோசஞ் செய்தான்
பின்னவன் வருத்த முற்றுப் புகன்றசா பத்தைக் கேண்மோ
பின்ஜன்மந் துணையா ணின்றிப் பிதுராஸ்தி யில்லா தாயும்
கன்னியின் வேட்ட கத்தில் கலந்துமே வாழவா யென்றான்.

8. உடன் பிறந்தவருக்கு உரிய பாகத்தைத் தராமல் மோசம் செய்து விட்டான். இளைய சகோதரனும் வருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். மறு பிறவியில் உடன் பிறந்தவரின்றி, தந்தையினுடைய ஆஸ்திகள் இல்லாமல், மனைவியினுடைய வீட்டில் இருந்துகொண்டு வாழ் வாய் என்றான்.

9. அந்தரந் ததாஸ்து வென்ன அனுகிற்று வந்தச் சாபம்
அந்திய காலஞ் தன்னில் அரனுக்குத் தொண்டு பூண்டு
அந்தக நகரஞ் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ னென்று சொல்வோ மருவிடு முன்னூழ்ச் சாபம்.

9. உபசொல்லும் ' அப்படியே ' என்று ஏற்பட்டது. அதனால் அந்தச் சாபம் இவனை யடைந்தது. ஜாதகனுடைய தந்தை தன் கடைசிக்காலத்தில் சிவபெருமானுக்குத் தொண்டுகள் பல செய்து இறந்து, பிறகு பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று கூறுகின்றோம். முற்பிறவியின் சாபம் தொடரும்.

10. ஆகையால் துணையாண் தோடம் அவன்தந்தை யாஸ்தி ஏகும்
தோகையின் பக்கல் வாசம் சொல்லிய குணத்தா னுக்குப்
பாகமா யிந்தப் பாலன் பிறப்பனும் குணத்தைச் சொல்வேன்
நாகரி கங்க ளுள்ளான் நல்லோர்க்கு நல்லோ னவன்.

10. ஆகையால் ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது. தன் தந்தையின் ஆஸ்திகளும் போய்விடும். இவனும் தன் மனைவியின் வீட்டில் வாசம் செய்வான். இங்ஙனம் கூறப்பட்ட குணமுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். நாகரிகமாக வாழ்க்கை நடத்துவான். நல்லவருக்கு நல்லவனாக இருப்பான்.

11. கல்விமான் கடவுள் பத்தி கனத்தபுத் திகளு மேற்பன்
இல்லைஎன் றுரைக்கா னாகும் இரணியம் விருத்தி செய்வன்
சொல்லதைக் காப்பா னாகும் துறவிக்கு அன்ன மீவன்
மல்லுக்கு முன்செல் லாதான் வருவோரை ஆத ரிப்பன்.

11. கல்விமான். கடவுள் பக்தி கொள்வான். பெரும் புத்திகள் உள்ள வன். ஒருவருக்கும் இல்லை யென்று கூறாதவன். பொன்னைப் பெருக்கு வான். தன் வார்த்தைகளைக் காப்பாற்றுவான். துறவிகட்கு அன்னமளிப் பான். சண்டைக்கு முன் செல்லாதவன். தன்னை அண்டினவர்களை ஆதரிப்பான்.

12. மன்னர்க ளுறவு கொள்வன் மாநிலம் விருத்தி செய்வன்
அன்னியர் மதிக்க உய்வன் அடாவடி கூறா னாகும்
தன்சொலு மடக்க முண்டு சர்ப்பம்போல் கோபஞ் சாந்தம்
பின்னமில் லாத தேகி புண்ணிய மனத்த னாகும்.

12. அரசர்களுடைய நட்புக் கொள்ளுவான். விளைநிலங்களைப் பெருக்கு வான். பிறர் கொண்டாடும்படி வாழ்க்கை நடத்துவான். அடாவடியாகப் பேசாதவன். அடக்கமாகப் பேசுபவன். சர்ப்பம்போல் கோபங்கொள் வான். பிறகு சாந்தமடைவான். ஊனமில்லாத சரீரமுடையவன். புண்ணிய மான மனத்தினன்.

13. வஞ்சக வஞ்ச னுவன் மாடுகள் பணேவர் விருத்தி
செஞ்சொலின் நுணுக்கந் தேர்வன் தீரமா மனத்த னுகும்
தஞ்சமென் றோரைக் காப்பன் ஷண்முகன் பக்தி பூண்பன்
நஞ்சென மனத்தா ருக்கு நாயகன் கருட னுவன்.

13. வஞ்சகர்கட்கு வஞ்சகன். கால்நடைகள் ஏர் பண்ணே முதலியன பெருக்கமாகும். செஞ்சொல்லின் (தமிழ்ப் பாஷையின்) ரகசியங்களே நன்கு அறிவான். தைரியமுள்ள மனத்தினன். தன்னே அண்டினவர்களேக் காப்பான். முருகக்கடவுள்மீது பக்தியுள்ளவன். விஷம்போல் கொடிய பகைவர்கட்கு, கருடன் போன்றவன்.

14. தன்துணே எழுவர் தோன்றும் தங்காது சிலவே யென்றோம்
முன்கன்னி ஒன்று தீர்க்கம் மொழிகிறோ மவள்கு ணத்தைப்
பன்னியே பேசு வாளாம் பஞ்சைகட் கன்ன மீவள்
பின்னோருக் குதவி செய்வள் பிழையதை ஒருவர்க் கெண்ணுள்.

14. உடன் பிறந்தவர்கள் எழு பேர் ஆகும். அவர்களில் சிலர் நிலே யார். முதலில் பெண் ஒருத்தி நீண்ட ஆயுளுள்ளவள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். பன்னிப் பன்னி பேசுபவள். ஏழைகட்கு அன்ன மளிப்பாள். தாழ்ந்த குலத்தவர்கட்கு உபகாரம் செய்பவள். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவள்.

15. மாநிறம் சமதே கத்தாள் வறுமைஎப் போதுங் காணுள்
வானவர் பத்தி பூண்பள் வரனுமே உள்ளூர் மேல்பால்
ஈனமாம் புத்தி இல்லாள் இவள்சுத ராண்பால் ரண்டு
மான்விழி பெண்பால் ரண்டு வரைகிறோந் தீர்க்க மாக.

15. மாநிற முடையவள். சமமான உடலமைப்புள்ளவள். ஒருகாலத்திலும் வறுமையை யடையாதவள். தெய்வபக்தி யுள்ளவள். கணவன் உள்ளூரில், மேற்குப் பக்கத்திலிருந்து வாய்ப்பான். அற்ப புத்தியில்லாதவள். இவளுக்கு இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுடனிருப்பர்.

16. மங்கையுந் தீர்க்க சீவி மாரன்பின் துணேவி சேதி
சங்கையா மனத்த ளாகும் சலித்தோருக் குதவி செய்வள்
நங்கைமால் நிறத்த ளாகும் நாயகன் மனதுக் கேத்தோள்
பொங்கிய குடும்ப மேற்பள் புருடனு மேல்பால் நேரும்.

16. அவளும் நீண்ட ஆயுளுள்ளவள். ஜாதகனுடைய இளேய சகோதரியின் செய்தியைக் கேளுங்கள். சந்தேக மனமுடையவள். கஷ்டம் அடைந்தவர்கட்கு உபகாரி. கரிய நிறமுள்ளவள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். செழிப்பான குடும்பத்தை அடைவாள். கணவன் மேற்குப் பக்கத்திலிருந்து வருவான்.

17. சுதர்களு ளாண்பா லொன்று தோகையு மவ்வாறு தீர்க்கம்
அதிபதி மத்தில் மாரன் மடிவனே சிறையாய் வாழ்வள்
அதுபலன் பின்பால் சொல்வேன் அவளுடைச் சேதி யாவும்
துதிசெய்தோர் தம்மைக் காப்பன் தோகையே கேட்டி டாயே.

17. ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் பிறந்து தீர்க்காயுள் உள்ளவர்களா வார்கள். கணவன் இடையில் இறந்துவிடுவான். இவளும் சிறையில் வாழ்வதுபோல் வாழ்க்கை நடத்துவாள். அவளுடைய செய்திகள் எல்லா வற்றையும் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். தோத்திரம் செய்பவர்களைக் காக்கும் தேவியே ! கேளுங்கள்.

18. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளான் இருசி கப்பள்
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனத்துக் கேத்தோள்
அன்னியர் மதிக்க வாழ்வள் ஆண்மையாய்க் குடும்ப மேற்பள்
அன்னமுங் குறைவு ருதாள் அல்பபுத் திகளு மில்லாள்.

18. தாயின் குணத்தைக் கூறுகின்றோம். அழகுள்ளவள். இரு சிகப் பான நிறமுடையவள். அன்புடன் அன்னமளிப்பாள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். தைரிய யத்துடன் குடும்பத்தை ஏற்று நடத்துவாள். சாப்பாட்டுக்குக் குறைவில்லாத வள். அற்ப புத்திகளில்லாதவள்.

19. அரவுபோல் கோப மேற்பள் அணுகிடும் பித்தச் சூடு
வருந்துணை காணு ளாகும் மங்கையுந் தனியாய் வாழ்வள்
பிருகுமே புகலு கின்றார் பூவைக்குத் துணைவர் தோடம்
வருமாறு சொல்லு மென்ன மதிக்குமே மூன்றில் காரி ;

19. சர்ப்பம்போல் கோபம் கொள்வாள். பித்தச்சூட்டு நோயுள்ளவள். உடன் பிறந்தவர்களில்லாதவள். இவளும் தனியளாக வாழ்ந்து வருவாள். பிருகு முனிவர் கூறுகின்றார். ஜாதகனுடைய தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்படக் காரணம் என்ன என்று சொல்லுங்கள். சந்திரனிருக்குமிடத்திற்கு மூன்றும் இடத்தில் சனி ;

20. இருப்பதால் புகன்றோந் தாயே இதுவின்றிப் பூர்வந் தன்னில்
மறுவின சிலவே தோடம் வரைகுவீ ரந்தச் சங்கை
திருமகள் பூர்வங் கேளாய்ச் சீகாழி தன்னி லேதான்
தரிகொளுங் குலத்திலேதான் ஜனித்துமே வறுமை யின்றி ;

20. இருப்பதால் என்று சொன்னோம். தாயே ! இதுவல்லாமல் (ஜாதகனுடைய தாய்க்கு) முற்பிறவியில் செய்த தோஷம் சில ஏற்பட்டன. அவற்றைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைக் கேளுங்கள். சீகாழியில் நெசவாளர் குலத்தில் பிறந்து, தரித்திர மில்லாமல் ;

21. மாதுவும் வாழு நாளில் மருவின வினையைக் கேண்மோ
தீதான வார்த்தை யொன்று செப்பினுள் நாத்தி பேரில்
காதலி வருத்த முற்றுக் கட்டுரை சொன்ன பாவி
மேதினில் மறுஜன் மத்தில் விளங்காது துணைவனைப் போல்.

21. வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன்னுடைய கணவனின் சகோதரியின்மீது கெட்ட வார்த்தையொன்று கூறினாள். அப்பெண்ணும் வருத்தமடைந்து இல்லாத வார்த்தைகளைச் சொன்ன பாவியே! நீ மறு பிறவியில் என்னைப் போன்ற சகோதரிகள் இல்லாமல் இருப்பாய்.

22. சுதர்களி லிரண்டு பாகஞ் சோர்வுறு மென்று சொல்லி
அதிபதி தூளைத் தூற்ற மறுவிற்று வென்று சொல்வோம்
அதிதிக்கு இடைஞ்சல் செய்தாள் அதுவொரு தோட மாச்சு
நதிசடை யணிந்தோன் மாதே நாயகி அந்தி யத்தில்;

22. புத்திரர்களில் இரண்டு பங்கு நிலையா என்று கூறிவிட்டுத் தெரு மண்ணை வாரி இறைத்தாள். அதனால் தோஷம் ஏற்பட்டது என்று கூறுகின்றோம். விருந்தினர்கட்குத் துன்பங்கள் செய்தாள். அதுவும் ஒரு தோஷமாயிற்று. கங்கையைச் சடை முடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியே! ஜாதகனுடைய தாய் தன் கடைசிக் காலத்தில்;

23. பலதல வாசஞ் சென்று பரமனத னடியார்க் கன்னம்
தலைவியு மீந்து மேதான் சண்டன்தன் பதிக்குப் புக்கித்
தலைநான்கோன் வரையப் பட்டு ஜனித்தன ளிந்த மாது
குலவிடும் நாத்தி சாபம் கோதைக்குத் துணைவர் காணாள்.

23. பல புண்ணிய தலங்களுக்குச் சென்று, சிவனடியார்கட்கு அன்னம் அளித்து, இறுதியில் எமபுரம் அடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப் பட்டுப் பிறந்தவள் என்று சொல்லுகின்றோம். நாத்தியிட்ட சாபத்தால் இவளுக்குச் சகோதரர் இல்லை.

24. சுதர்களி லிரண்டு பாகம் சோர்வுறு மென்று சொல்வோம்
அதிபதி யின்ஜன் மங்கேள் வாயுவின் தலத்தி லேதான்
நிதிமிக உடையா னுக்கு நேருவாள் இக்கு லத்தில்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

24. புத்திரர்களில் இரு பாகம் இறந்துபோம் என்று சொல்லுகின்றோம். அவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். (வாயுவின் தலத்தில்) திருக்காளத்தியில் மிக்க செல்வவான் ஒருவனுக்கு இதே குலத்தில் பிறப்பாள். துறவிகளைக் காக்கும் தேவியே! கேளுங்கள்.

25. கருமகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
அறேழு ஆண்டு தன்னில் அனுகிடுந் தந்தை கண்டம்
வருஞ்ஜன்மம் புலியூர் தன்னில் வைசிய குலமு தித்துப்
பெருமையாய்ச் செட்டுச் செய்து புனிதனும் வாழ்வா னுமே.

25. ஜாதகனுடைய கரும காலங்களைச்சொல்லுங்கள், முனிவரே! நீர் தாம் ஜாதகனுடைய நாற்பத்திரண்டாம் வயதில் தந்தை மரணமடைவான். மறு பிறவி புலியூரில் வைசியகுலத்தில் பிறந்து பெருமையுடன் வியா பாரம் செய்து வாழ்ந்து வருவான்.

26. இருபது ஒன்ப தாண்டில் இயம்புவோ மன்னை கண்டம்
திருமகன் மணத்தின் காலம் செப்புவோ மீரா றுண்டில்
வருங்கன்னி மேல்பால் நேரும் வரைகிறே மவள்கு ணத்தைக்
குறைஎன்றோர்க் குதவி செய்வள் கொழுநன்தன் மனதுக்
[கேத்தோள்.

26. ஜாதகனுடைய இருபத்தொன்பதாம் வயதில் தாய்க்கு மரணம் ஏற்படும். ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றேம். ஜாதகனின் பன்னிரண்டாம் வயதில் அது நடக்கும். அப்பெண் மேற்குத் திசையிலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றேம். துன்பமடைந்தவர்கட்கு உபகாரம் செய்பவள். தன் கணவன் மனத்துக் கேற்றவள்.

27. சுந்தர முடைய ளாகும் சீலியாம் விரத சாலி
வந்தவர்க் கன்ன மீவள் மாநிலம் நல்லோ ளாவள்
அந்தவள் தீர்க்க சீவி அதைமறுத் தோது கின்றார்
மந்தனு மேழில் தங்க மறையவ னெட்டி லாக ;

27. அழகுள்ளவள். நல்லொழுக்கமுள்ளவள். நோன்புகள் நோற் பாள். தன்னை யண்டி வந்தவர்கட்கு அன்னமளிப்பாள். உலகில் நல்ல வளாக இருப்பாள். அவளும் நீண்ட ஆயுளுள்ளவள். அதை மறுத்துக் கூறுகின்றார். சனி ஏழாமிடத்தில் இருப்பதாலும், குரு எட்டாமிடத்தில் இருப்பதாலும் ;

28. எப்படி மனைவி தீர்க்கம் இருதார மென்று சொல்வோம்
செப்புவார் வதிஷ்டர் தாமும் தேவியு மிருவர் காணன்
மெய்ப்படி மனைவிக் கேதான் மங்கல்ய மிரண்டு செய்வன்
தப்பித மந்தச் சங்கை சாற்றுவீர் முனியே நீர்தாம்.

28. ஜாதகனுக்கு மனைவி எப்படி நீண்ட ஆயுளுள்ளவள் என்று கூறுவீர்? இரு மனைவிகள் ஏற்படுவர் என்று சொல்வோம். வசிஷ்ட முனிவர் உரைக் கின்றார். இரு மனைவிகள் ஏற்படமாட்டார். தன் மனைவிக்கே இரு மாங்கலி யங்கள் செய்வான். அதற்குக் காரணங்களைச் சொல்லுங்கள், முனிவரே! தாங்கள் .

29. ஆருறு ஆண்டு தன்னில் அழிவுண்டு கள்ள ராலே
வேறுமுத் திரையுஞ் செய்வன் மெல்லியு மொன்றே தீர்க்கம்
கூறுவோம் புத்திர பாவம் . . . கும்
மாரன்போல் ஆண்பா லொன்று மருவிடுந் தீர்க்க மாக.

**29.** ஜாதகனுடைய முப்பத்தாரும் வயதில் திருடரால் மங்கலியநாண் அபகரிக்கப்படும். அதனால் வேறு ஒன்று அணிவிப்பான். மனைவி யொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். . . . . . . மன்மதன்போல் அழகுள்ள புத்திரன் ஒருவன் பிறந்து தீர்க்கமாயிருப்பான்.

**30.** இவனுடை முன்ஜன் மத்தை இயம்புவோந் தோகை தன்னில்
பவமிலா அருகர் வர்க்கம் பிறந்துமே கிருஷி செய்து
நவனியில் வறுமை யின்றி நலிந்தோருக் குதவி செய்து
தவசிகட் கன்ன மீந்து சண்டன்தன் பதிக்குச் சென்றான்.

**30.** ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தோகை மலையில், தீமையில்லாத சமண குலத்தில் பிறந்து, விவசாயம் செய்து வந்து, உலகில் தரித்திரம் இன்றி, ஏழைகட்கு உதவி செய்து வந்து, துறவிகட்கு அன்னமளித்து வந்து மரணமடைந்தான்.

**31.** சிரநான்கோன் வரையப் பட்டு ஜனிப்பனு மிந்தப் பாலன்
உரைக்கின்றோ மிவனின் யோகம் உயர்வான குடும்பி யாவன்
தரையதை விருத்தி செய்வன் சல்லியப் பாதை காணான்
அறுமுகன் அருளு மோங்கும் அம்பிகை யாளே கேளாய்.

**31.** மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் ஜாதகன் பிறந்தான். இவனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். உயர்ந்த குடும்பியாவான். பூமியைப் பெருக்கம் செய்வான். துன்பங்கள் அடையாதவன். ஆறுமுகக் கடவுளின் அருள் பெருகும். தாயே ! கேளுங்கள்.

**32.** அறுபது ஆறு வாண்டில் ஐப்பசி மாதந் தன்னில்
திருமக னுடல மேகும் செப்புவோம் பின்ஜன் மத்தைப்
பெருமையாய்க் காஞ்சி தன்னில் பிறப்பனும் ஸௌராஷ்ட்ர வம்சம்
பொருளது பெருக்க மாகிப் புகழுடன் வாழ்வான் மாதே.

**32.** ஜாதகன், தனது அறுபத்தாறும் வயதில் ஐப்பசி மாதத்தில் மரணமடைவான். மறு பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்தில் ஸௌராஷ்டிர மரபில் பிறப்பான். செல்வம் செழித்து, கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். தாயே !

**33.** ஜனித்திடுங் காலந் தன்னில் சுவாதியி னிரண்டாம் பாதம்
வினைராகு தசையி ருப்பு விளம்புவோ மீரா றண்டும்
கனமுள திங்கள் ரண்டும் கழறுவோம் பலனை யாங்கள்
துணைவிருத்தி தந்தை நோயும் செப்புவோந் தாயே யாங்கள்.

**33.** ஜாதகன் பிறக்கும்போது சுவாதி நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் ராகுமகாதசையில் பாக்கி யிருப்பு பன்னிரண்டு வருடங்களும் இரு மாதங்களுமாம். அக்காலத்திய பலனைச் சொல்லுகின்றோம். சகோதர விருத்தி யுண்டாகும். தந்தைக்கு வியாதி ஏற்படும் என்று சொல்லுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

34. பிருகுமே மறுத்துச் சொல்வார் புனிதனுக் கேழா மாண்டில்
பெருந்தந்தை கண்ட மென்றோம் புகர்புத்தி பணியின் காலம்
வரும்வினை நீங்கி யேதான் வயதுமே தீர்க்க மெய்தும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

34. பிருகு முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகனுக்கு ஏழாம் வயதில் பெரிய தந்தை மரணமடைவான். ராகுமகாதசையில் சுக்கிர புக்தியில் ஏற்படும் தீங்குகள் நீங்கி, நீண்ட ஆயுள் ஏற்படும். கரிய மத யானையின் முகம்போன்ற முகத்தையுடைய விநாயகனைப் பெற்ற தாயே! கேளுங்கள்.

## ஜாதகம் 80

1. மதியுங் கேது கடகமுற
மன்னன் கன்னி சனிதேளில்
புதன்சேய் பானு புகர்தனுசு
பணியு மானில் வீணைஜன்மம்
இதுவே கிரகந் தானின்றால்
இயம்பும் பலன்க வெவ்வாறு
அதுவே பெண்பால் ஜனனமுறும்
அணுகு மில்லம் வடவாடை ;

1. சந்திரன் கேது கடகத்திலும், குரு கன்னியிலும், சனி விருச்சிகத்திலும், புதன் செவ்வாய் சூரியன் சுக்கிரன் தனுசிலும், ராகு மகரத்திலும் இருந்து, மிதுனம் லக்கின மாகவும் இருந்தால் ஏற்படும் பலனைக் கூறுங்கள். இது பெண்ணின் ஜாதகம். பிறந்த வீடு வடக்கு வரிசையில் ;

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | சந்திரன் கேது |
| ராகு | | | |
| புதன் செவ்வாய் சூரியன் சுக்கிரன் | சனி | | குரு |

2. மேல்கீழ் வீதி பேரூராம்
விளம்பும் வடகீழ் வாசலுறும்
சீல மான நதிமேற்கில்
தென்கீழ்ப் பள்ளி வாசலுமாம்
ஞாலந் தன்னி லுயர்நகராம்
நல்கிடும் பிரம குலமதிலே
மாலின் மனைபோல் மாதுவுமே
வருவாள் நான்காஞ் ஜனனமுமாய்.

2. கிழக்கு மேற்கான தெருவில் உள்ளது. பெரிய ஊராகும் அவ் வூருக்கு வடகிழக்குத் திசையில் அதன் வாயில் உள்ளது. மேற்குத் திக்கில் ஒரு புண்ணிய நதி ஓடும். தென் கிழக்குத் திக்கில் பள்ளிவாசல் ஒன்று உள்ளது. இப் பூமியில் உயர்ந்ததாகக் கருதப்படும் பட்டணத்தில், அந்தண குலத்தில் பிறந்து, இலக்குமி போல் தன் தந்தைக்கு நான்காமவளாகப் பிறப்பாள்.

3. அன்னை தந்தை துணையோகம்
ஆமே புதல்வர் தம்யோகம்
முன்பின் ஜன்மந் தாமுரைப்போம்
முதல்வி தந்தை குணங்கேளாய்
கனனென மொழியுங் கல்விமிகும்
கனத்த புத்தி கடுநடையன்
சொன்ன சொல்லைக் காத்திடுவன்
தேய்வு தந்த மெனவுரைப்போம்.

3. இவளுடைய தாய் தந்தையர் உடன்பிறந்தவர் புத்திரர்கள் இவர்களுடைய யோகங்களையும், முற்பிறப்பு மறுபிறப்பு ஆகியவற்றையும் கூறுகின்றோம். ஜாதகியினுடைய தந்தையின் குணத்தைக் கேளுங்கள். இனியவார்த்தைகளையே பேசுபவன். கல்விமான். தாராளபுத்தி யுள்ளவன். வேகமாக நடப்பவன். சொன்ன வார்த்தைகளின்படி நடப்பவன். பற்கள் தேய்ந்து உள்ளன என்று கூறுவோம்.

4. அரசர் தம்மால் தானுய்வன்
அடைந்தோர்க் கன்பன் அறிவாளி
தரணி யதிகஞ் சேர்ந்திடுமே
சனவ சியமே கொண்டிடுவன்
மருமம்வி டாதா னிருகுணத்தன்
[1] மானின் ராசி கார்த்திகைநாள்
வருவா னென்றேங் கடனீட்சி
மங்கைக் கிட்டன் மாதரசே.

4. அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்வான். தன்னை யண்டியவர்களுக்கு இனியவன். அறிவுள்ளவன். பூமியை அதிகம் சேர்ப்பான். ஜனங்களை வசீகரிக்கும் தன்மை யுடையவன். ரகசியத்தை வெளி விடாதவன். இருவிதமான குணமுள்ளவன். மகரலக்கினத்தில் கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்தவன் என்று சொல்லுகின்றேம். கடன் உள்ளவன். தன் மனைவிக்குப் பிரியன். தாயே !

5. சொல்லுத் துணையாண் டீதென்றேம்
தீர்க்கங் கன்னி யொன்ருகப்
புல்கு மிவன்றன் பூர்வமதைப்
பெரிதா யருணை மாநகரில்
வல்லோன் வைச்யக் குலமுதித்து
வணிப மதிகந் தான்செய்து
இல்ல மனைவி யுடையவனாய்
எய்துங் காலை வினைசொல்வோம்.

5. சகோதரனில்லாதவன். சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளுள்ளவள் என்று கூறுகின்றேம். இவனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம்.

[1] மகரவிலக்கினம்.

பெரிய நகரமாகிய திருவண்ணுமலையில் வைசிய குலத்தில் பிறந்து, வாத்தகம் பெரிதாகச் செய்து, மனைவியைப் பெற்று வாழ்ந்து வரும்போது ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

6. துணைக்குப் பாகம் தாராமல்
தொடுத்தான் சிலவே கலகமதைப்
பிணையாய்க் கடனே தான்தந்தான்
பின்னோன் மிகவும் வருத்தமுற்றுச்
சினமாய்ச் சொல்வான் மறுஜன்மம்
துணைக ளிருந்து நட்டமுறும்
வினையாய்ச் சிலநாள் வெளியூரில்
வெம்பி வாழ்வா யெனவுரைக்க ;

6. தன் உடன் பிறந்தவனுக்கு உரிய பாகத்தைத் தராமல் வீண் சண்டைகள் இட்டான். தீங்காகக் கடன்களை மட்டும் அவன் பாகத்துக்குக் கொடுத்தான். பின்பிறந்த சகோதரன் வருத்தமடைந்து கோபத்துடன் சொல்லுகிறன். உனக்கு ஏற்படும் மறு பிறவியில் உடன் பிறந்தவர்கள் பிறந்தாலும் தீங்காகும். துன்பத்துடன் சின்னுட்கள் வெளியூருக்குச் சென்று வாழ்ந்து வருவாய் என்று சொல்ல ;

7. அந்தச் சாப மிச்சென்மம்
அணுகு மதனல் துணைநட்டம்
இந்தக் குணத்தா னுக்கிவளே
எய்து வாளா மென்றுரைத்தோம்
விந்தை யாகப் பேசிடுவள்
விரதம் பூண்பள் வித்தையுண்டு
வந்தோர் கன்னம ஈவளன்பாய்
வார்த்தை நல்மா மங்கையுமே.

7. அந்தச் சாபம் இப்பிறவியில் தொடர்ந்தது. அதனல் உடன் பிறந்தவர்கட்குத் தீங்கு நேரும். இங்ஙனம் கூறப்பட்டவனுக்குப் பிறப்பாள் இந்த ஜாதகி என்று சொல்லுகின்றோம். இவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். வேடிக்கையாகப் பேசுபவள். நோன்புகள் நோற்பாள். கல்வியறிவுடையவள். தன்னையண்டி வந்தவர்கட்கு அன்னமளிப்பாள். நன்மை பயக்கும்படியே பேசுபவள். தாயே !

8. மாரன் மனைவி யொப்பாகும்
வார்த்தை யடக்கம் ஊகமுண்டு
தீர மனமு முடையவளாம்
சிறப்பாய் வாழ்வள் சுந்தரியும்
கூறுந் துணைவ ராணிரண்டு
கோதை யொன்று தீர்க்கமுறும்
தீரன் முன்னோன் சேதிசொல்வோம்
சிறப்பாய்க் கல்வி யுணர்வானும்.

8. இலக்குமிக்கு ஒப்பானவள். அடக்கமாகப் பேசுபவள். ஊகமுள்ளவள். தைரியமுள்ள மனத்தள். சிறப்புடன் வாழ்ந்து வருவாள். இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்று சொல்லுகின்றோம். ஐ தசியின் முன்பிறந்த சகோதரனின் செய்திகளைக் கூறுகின்றோம். சிறப்புள்ள கல்வி கற்பான்.

9. மன்னர் தம்மால் சீவனமாம்
வார்த்தை தப்பான் மால்நிறத்தன்
பொன்னு பரணஞ் சேர்த்திடுவன்
பிதாமே லாக வாழ்ந்திடுவன்
கன்னி மனைவி யொன்றுமே
கலக்கு மேல்பால சுதராண்பால்
மன்னு விரண்டு பெண்மூன்று
வரைந்தோந் தீர்க்க மாரனுக்கு.

9. அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்வான். சொன்ன சொல் தவருதவன். மாநிற முடையவன். செல்வம் ஆபரணங்கள் முதலியவற்றைச் சேர்ப்பான். தன் தந்தைக்கு மேலாக வாழ்க்கை நடத்துவான். மனைவி ஒருத்தியே யாகும். அவள் மேற்குப் பக்கத்திலிருந்து வாய்ப்பாள். இரு புதல்வர்களும் மூன்று புதல்விகளும் தோன்றித் தீர்க்காயுளுள்ளவர்கள் என்று சொல்லுகின்றோம்.

10. பாலன் வயது தீர்க்கமுறும்
பதரில் செல்லான் பலரிட்டம்
மேல்பால் செல்வ னவன்பின்னோன்
விளைவாம் புலன்கள் விருத்திசெய்வன்
சீல முடையன் தெய்வபத்தி
சிந்தை யிரண்டு தானுடையன்
கால மறிந்து தான்புகல்வன்
காலி பணையோர் விருத்தியுண்டு.

10. நீண்ட ஆயுளுள்ளவன். அற்பகாரியங்களில் செல்லாதவன். பல பேருக்கு நண்பன். அவனுடைய இளைய சகோதரன் மேற்குத்திக்கில் வாழ்வான். நில புலன்களை விருத்தி செய்வான். நல்லொழுக்க முள்ளவன். தெய்வபக்தி யுடையவன். இருவித மனப்பான்மை யுள்ளவன். காலத்தை யறிந்து சொல்லுவான். கால்நடைகள் பண்ணை எர் முதலியன விருத்தியாகும்.

11. தீர மனத்தன் சுகபுசிப்பன்
தேவி யொன்றே தீர்க்கமுறும்
கூறுஞ் சுதர்க ளாணிரண்டு
கோதை நல்வர் தீர்க்கமுறும்
பாரது சேர்ப்பன் வீண்செலவு
பண்ணுன் வயது தீர்க்கமுறும்
நாரி பலரைச் சேர்ந்திடுவன்
நவில்வோம் பெண்ணின் சேதிதனை.

11. தைரியமுள்ள மனத்தினன். சாப்பாட்டில் பிரியமுள்ளவன். மனைவி யொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். இரு புத்திரர்களும் நான்கு புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்களாவார்கள். விளைநிலங்களைச் சேர்ப்பான். அனாவசியச் செலவு செய்யாதவன். தீர்க்காயளுள்ளவன். பல பெண்களுடன் இன்பம் அனுபவிப்பான். ஜாதகியினுடைய செய்தியைக் கூறுகின்றோம்.

வேறு

12. திருமக ளொப்ப தாகுஞ் சொல்லது சுகமே யெய்தும்
மருமமில் லாதா ளாகு மாந்தளிர் மேனி யாகும்
வரனுமே தென்கீழ் நேரு மைந்தர்க ளான்பால் மூன்று
அரிவையு மிருவ ராகும் அவர்களும் தீர்க்க சீவி.

12. இலக்குமியைப் போன்றவள். சுகமாகவே பேசுபவள். இரகசியமில்லாதவள். மாந்தளிர் போன்ற மென்மையான சரீர முடையவள். கணவன் தென் கிழக்குத் திசையிலிருந்து வருவான். புத்திரர்கள் மூவரும் பெண்கள் இருவரும் தீர்க்காயுளுள்ளவர்களாவார்கள்.

13. மங்கையும் வறுமை காணாள் மறுத்துரை யதிகஞ் சொல்லாள்
சங்கையென் றோரைச் சாராள் சதியிலா மனத்த ளாகும்
எங்கள்போ லதிதிக் கன்னம் ஈகுவாள் நற்கு ணத்தாள்
ஐங்கரன் றனைவ ளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

13. இப்பெண்ணும் வறுமை யடையாதவள். அதிகமாக எதிர்த்துப் பேசாதவள். சந்தேகப்படக்கூடியவர்களிடம் நட்புக் கொள்ளாதவள். வஞ்சனையில்லாத மனதினள். எங்களைப் போன்ற அதிதிகளுக்கு அன்னமளிப்பாள். நற்குண முள்ளவள். விநாயகனைப் பெற்றெடுத்து வளர்த்த தாயே! கேளுங்கள்.

14. பின்பாகம் விபர மாகப் பேசுவோ மவளின் சேதி
இனனவள் மணத்தின் காலம் இயம்புவோ மீரா றுண்டில்
மன்னனு மேல்பால் நேரும் வரைகிறோ மவன்கு ணத்தை
அன்னிய பாஷை யாலே அரசுமே செய்வா னாகும்.

14. பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம். ஜாதகியினுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். இவளுடைய பன்னிரண்டாம்வயதில் மேற்குப் பக்கத்திலிருந்து கணவன் வருவான். கணவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். பிறபாஷையில் தேர்ச்சி பெற்று அரசாங்கத்தில் மேன்மை யடைவான்.

15. தனமது சேர்ப்பா னாகும் சாதிப்பான் சிலவே சங்கை
இனமதிப் புடனே வாழ்வன் இடரென்றோர்க் குதவி செய்வன்
கனமான குடும்பம் பின்னால் காதலி தன்னால் நேரும்
மனத்திற முடைய னாகும் வாக்கதைக் காப்பா னாகும்.

15. செல்வங்களைச் சேர்ப்பான். சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வான். தன் குலத்தவரால் நன்கு மதிக்கப்படுபவன். துன்ப மடைந்தவர்களுக்கு உபகாரம் செய்பவன். பிற்காலத்தில் பெரும் குடும்பத்தை அடைவான். தன் மனைவியால் யோகம் பெருகும். மனத்தில் உறுதியுடையவன். சொன்ன வார்த்தைகளைக் காப்பான்.

16. வயதுமே தீர்க்க மெய்தும் மைந்தர்க ளாண்பா லொன்று
நயமுள கன்னி ரண்டு நவிலுவோர் தீர்க்க மாக
ஐயஞ்செய்வன் எடுத்த வேலை சீக்கிரம கோபி யாவன்
வியமிலாத் தவங்கள் செய்யும் வித்தகி கேட்டி டாயே.

16. நீண்ட ஆயுளுள்ளவன். ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் பிறந்து தீர்க்காயுளுள்ளவர்களாவார்கள். எடுத்த காரியத்தை வெல்லும் இயல்பினன். சீக்கிரத்தில் கோபம் கொள்வான். அழிவில்லாத தவங்களைச் செய்யும் தேவியே ! கேளுங்கள்.

17. ஜாதகி முன்ஜன் மத்தைச் சாற்றுவோஞ் சிறுபாக் கத்தில்
போதன முடையா னுக்குப் பிறந்தனள் சைவச்சேயாய்
மாதவர்க் கன்ன மீந்து வருவோர்க்குத் தாக மீந்து
மேதினில் வினையில் லாமல் மேவினள் கால னூடு.

17. ஜாதகியினுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சிறுபாக்கத்தில், பெரும் செல்வமுடைய சைவனுக்குக் குழந்தையாகப் பிறந்தாள். தவசிகட்கு அன்னமளித்து, தன்னை யாசிப்பவர்கட்கும் அன்னமளித்து வந்து, உலகில் தீவினைகள் இல்லாமல் மரண மடைந்தாள்.

18. கஞ்சனால் வரையப் பட்டுக் கலந்தன ளிக்கு லத்தில்
வஞ்சிக்குப் பதினா றுண்டின் மேலேதான் பிறைபோல் யோகம்
மிஞ்சின பொருளுஞ் சேர்ப்பள் விசித்திர பணிகள் நேரும்
கொஞ்சிடுந் திருவு தானும் குவலயம் வறுமை காணாள்.

18. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இக்குலத்தில் பிறந்தாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகிக்குத் தன் பதினாறும் வயதுக்கு மேல் பிறைச்சந்திரன் போல் யோகம் விருத்தியாகும். அதிகமாகப் பொருள் சேர்ப்பாள். விசித்திரமான (வேலைகள்) ஆபரணங்கள் கிடைக்கும். இலச்சுமி வீட்டில் விளையாடுவாள். உலகில் வறுமை யில்லாதவள்.

19. மாதுரு குணத்தைச் சொல்வேன் வார்த்தையும் நல்ல தாகும்
காதலி ஈகை கொஞ்சம் கணவனுக் கினிய ளாகும்
சூதிலாள் முன்கோ பத்தாள் சுந்தர முடைய ளாகும்
சாதிப்பாள் சிலவே சங்கை தங்கிடும் பித்த வாயு.

19. ஜாதகியின் தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். நன்மையாகவே பேசுபவள். சிறிது கொடுக்கும் குணமுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். கபட மில்லாதவள். முன்கோப முடையவள். அழகுள்ளவள். சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வாள். பித்தவாயுவுள்ள சரீரமுடையவள்.

20. மஙகைக்குத் துணையா னென்று மருவிடுந் தீர்க்க மாக
இங்கிவள் பூர்வஞ் சொல்வேன் இயலான தவளை தென்பால்
அங்கவள் அருகர் வர்க்கம் அணுகியே சுகமாய் வாழ்ந்து
தூங்கமாம் விரதம் பூண்டு சூழ்வினை யில்லா தாகி ;

20. ஜாதகியின் தாய்க்குச் சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுள்ளவள். தாயினுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தவளேச்சுரத்துக்குத் தெற்கில், சமண குலத்தில் பிறந்து, சுகமுடன் வாழ்ந்து வந்து, தூய்மையான விரதமிருந்து, தீவினைகளில்லாதவளாக வாழ்ந்து வந்து ;

21. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமா மறைக்கு லத்தில் ஜனித்தவ ளென்று சொல்வோம்
வேல்விழி வந்த பின்பு வரனுக்கு அதிக யோகம்
ஞாலமேல் வறுமை காணுள் நவிலுவோ மிவள்பின் ஜன்மம்.

21. பிறகு மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமுள்ள, அந்தணகுலத்தில் பிறந்தவள் என்று சொல்லுகின்றோம். இவளை மணந்த பிறகு இவளுடைய கணவனுக்கு யோகம் பெருகும். உலகில் வறுமையடையாதவள். இவளுடைய அடுத்த பிறவியைச் சொல்லுகின்றோம்.

22. உத்தரம் வேங்க டத்தில் உதிப்பளா மிக்கு லத்தில்
மெத்தெனப் பொருள்ப டைத்து வித்தகி வாழ்வா ளாகும்
சித்தமாய் மூப்ப தாண்டில் தேள்மாத மன்னே கண்டம்
அத்தியை வளர்த்த எங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

22. வடக்குத்திசையிலுள்ள திருப்பதியில் இதே குலத்தில் பிறப்பாள். அதிகமான செல்வத்தைப்பெற்று வாழ்ந்து வருவாள். ஜாதகிக்கு முப்பதாம் வயதில் திண்ணமாக கார்த்திகை மாதத்தில் தாய் இறந்துபோவாள். விநாயகனைப்பெற்ற எங்கள் உயிருக்குயிரான தாயே ! கேளுங்கள்.

23. ஈரஞ்சு மூன்று ஆண்டில் அணுகிய தனுசு மாதம்
கூறுவோந் தந்தை கண்டம் குறிக்கிறோ மிவன்பின் ஜன்மம்
தீரமாய் வான்மி யூரில் ஜனிப்பனு மிக்கு லத்தில்
பாரினில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

23. ஜாதகியின் பதின்மூன்றும் வயதில் மார்கழி மாதத்தில் தந்தை மரணமடைவான். தந்தையின் அடுத்த பிறவியைக் கூறுகின்றோம். திருவான்மியூரில் இதே குலத்தில் தோன்றுவான். உலகில் தவங்களை இயற்றும் பார்வதி தேவியே ! கேளுங்கள்.

24. நாற்பது மூன்று வாண்டில் நாயகன் கண்ட மெய்தும்
ஏற்கவே ஐம்பா னுலா மாண்டினில் கும்ப மாதம்
தீர்ப்பாக சாத கிக்குச் செப்புவோ மார கங்கள்
ஆர்க்கவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

24. ஜாதகியின் நாற்பத்துமூன்றும் வயதில் கணவன் மரணமடைவான். ஐம்பத்துநான்காம் வயதில் மாசி மாதத்தில் ஜாதகி திண்ணமாக மரணமடைவாள். தவங்களை இயற்றும் தேவியே ! கேளுங்கள்.

25. மறுஜன்மம் விரிஞ்சி தன்னில் மாதுவும் க்ஷத்திரிய சேயாய்ப்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பேதையும் வாழ்வா ளாகும்
அரிவையின் ஜனன காலம் அந்தண னிரண்டா மாண்டும்
உறைந்திடும் திங்க ளேழும் உரைத்தனம் பூர்வ பாகம்.

25. ஜாதகி, மறுபிறவியில், விரிஞ்சி நாட்டில் சத்திரியகுலத்தில் பிறந்து, பெருமையுள்ள குடும்பத்தையடைந்து வாழ்வாள் என்றேம். ஜாதகியின் ஜனனகாலத்தில் குருமகாதசையில் இருவருடங்களும் ஏழு மாதங்களும் பாக்கியிருக்கும் என்று முதல்பாகத்தைச் சொன்னேம்.

26. பதினாறு ஆண்டு மட்டும் பகருவோந் தந்தை யோகம்
அதற்குமேல் அரசர் மூலம் அரும்பொருள் நேர்ந்து வுண்பன்
விதவிதச் செட்டுச் செய்வன் மேதினி சேர்ப்பா ளாகும்
சதியிலாத் தவங்கள் செய்யும் சங்கரி கேட்டி டாயே.

26. ஜாதகியின் பதினாறும் வயது வரையில் தந்தைக்கு மிகுந்த யோகம் ஏற்படும். அதற்குமேல் அரசருடைய உதவியால் செல்வங்களைச் சேர்ப்பாள. விதவிதமான வியாபாரம் பெருகும். பூமிகள் விருத்தியாகும். தீங்குகளில்லாமல் தவங்களை இயற்றும் பார்வதி தேவியே ! கேளுங்கள்.

## ஜாதகம் 81

1. சந்திரன் குருவும் வீணை சேய்புகர் மீன மாகப்
புந்தியுங் காரி நந்தி புரவியோன் கேது மேடம்
மந்தரக் கயிறு கோலாம் மிதுனமுஞ் ஜன்ம மாக
இந்தவாறு கோள்கள் நின்றால் இயம்புவீர் பலனை யென்று ;

1. சந்திரன் குரு மிதுனத்திலும், செவ்வாய் சுக்கிரன் மீனத்திலும், புதன் சனி விருஷபத்திலும், சூரியன் கேது மேடத்திலும், ராகு துலாத்திலும் இருந்து, மிதுனம் இலக்கினமாகவும் இருந்தால் பலனைச் சொல்லுங்கள் என்று ;

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய் சுக்கிரன் | சூரியன் கேது | புதன் சனி | லக்கினம் சந்திரன் குரு |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| | | ராகு | |

2. மங்கையுங் கேட்கும் போது மாமுனி புகலு கின்றார்
இங்கிவை யாண்பால் ஜன்மம் இல்லமுங் கீழ்மேல் வீதி
தங்கிடுந் தென்பால் வாசல் சத்திமா காளி கீழ்ப்பால்
கங்கையாம் நதியுந் தென்பால் கந்தன்தன் கோட்டம் வாயு ;

2. பார்வதி தேவி கேட்கும்போது முனிவர் கூறுகின்றார். இஃது ஆண்மகனின் ஜாதகம். இவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. கிழக்குத்திக்கில் காளிகோயிலும் அம்மன் கோவிலும் உள்ளது. ஒரு புண்ணிய ஆறு தெற்குத்திக்கில் ஓடும். வாயுதிக்கில் முருகப்பெருமான் ஆலயம் உள்ளது.

3. இத்தகை யடையா ளத்துள் இலகிய சிறுவூர் தன்னில்
வித்தகன் கங்கை சேயாய் விளங்குவான் நவமாஞ் ஜன்மம்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள ஒரு சிறு ஊரில் வேளாள குலத்தவனாக இந்த ஜாதகன் தன் தந்தைக்கு ஒன்பதாம் பிறவியாகப் பிறப்பான். பெற்ற தாய் தந்தையர் மனைவி மக்கள் புத்திரர் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி ஆகிய இவற்றையும் இந்த ஜோதிட நூலில் கூறுகின்றோம்.

4. தந்தையின் துணைஆண் மூன்று சக்திமா ரிருவர் தீர்க்கம்
நொந்திடு மற்ற வெல்லாம் நுவன்றவாண வேறுய்ச் செல்வன்
அந்தவர் சேதி பின்பால அறிவிப்போந் தாயே யாங்கள்
இந்தவன தந்தை சேதி இயம்புவோ மினிமே லாக.

4. ஜாதகனுடைய தந்தையின் உடன்பிறந்தவர்களில் மூன்று சகோதரர்களும் இரு சகோதரிகளும தீர்க்க ஆயுளுள்ளவர்கள. மற்றவர்களெல்லாம் நிலையார். கூறிய சகோதரனும் தனித்துச் செல்வான். அவர்களின் செய்திகளைப பின்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய தந்தையின் செய்திகளைச் சொல்லுகின்றோம், இனிமேலாக.

5. தரணியால் சீவிப் பானும் சல்லியப் பாதை யேற்பன்
தரணியை விரயஞ் செய்வன் சஞ்சல மனத்த னாகும்
விரைவினில் நடக்க வல்லவன் வீண்வம்பில் செல்லா னாகும்
பெரிதான குடும்பம் பூர்வம் பிழைவரு மத்தி யில்தான்.

5. விவசாயம் செய்து ஜீவனம் நடத்துவான். துன்பங்களுள்ள வழிகளில் செல்வான. பூமியை விரயம் செய்வான். சஞ்சலமன முள்ளவன். வேகமாக நடக்க வல்லவன். வீண் சண்டைக்குச் செல்லாதவன். ஆதியில் பெரிய குடும்பம் இருக்கும். இடைக்காலத்தில் துன்பங்கள் நேரும்.

6. சிலவேநாள் வனவா சங்கள் சிலசில வழக்கு நேரும்
தலமது குறைத லுண்டு தங்கிடும் பித்த வாயு
பலவித நட்ட மாகும் பகவானின பத்தி பூண்பன்
அலைமீது துரும்பு போல அடைவனும் தந்தை யென்றோம்.

6. சிலகாலம் வனவாசங்கள்போல் தனிவாழ்வு ஏற்படும். சிற்சில வழக்குகள் ஏற்படும். நிலங்கள் குறையும். பித்தவாயுவுள்ள சரீரமுடையவன். பலவித நஷ்டங்கள் ஏற்படும். தெய்வபக்தி கொள்ளுவான். அலையின்மீதுள்ள துரும்புபோல் சஞ்சலங்கள் அடைவான். இவனுடைய தந்தை யென்றோம்.

7. என்னகா ரணத்தி னாலே இவன்தந்தை வறுமை யென்றீர்
துன்சனி விரயம் புக்கச் செப்பினோ மந்தச் சங்கை
சொன்னவிக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் கருநிற மூளைச்சல் தேகி.

7. என்ன காரணத்தால் ஜாதகனுடைய தந்தை வறுமையடைவான் என்று சொன்னீர்கள்? சனி விரயஸ்தானத்தில் இருப்பதால் அங்ஙனம் கூறினோம். இப்படிச் சொல்லப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகனுதிப்பான் என்றோம். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். கரியநிற முடையவன். மெல்லிய தேகமுள்ளவன்.

8. வித்தையுஞ் சமம தாகும் விவேகியா மெவர்க்கு நல்லோன்
புத்தியில் பெரியோ னாகும் புண்ணிய மனமுங் கொஞ்சம்
பித்தச்சூ டுடைய னாகும் பிதுராஸ்தி நாஸ்தி செய்வன்
வெற்றிச்சொல் லுடைய னாகும் வியாபாரத் தொழிலுஞ் செய்வன்.

8. சமமான கல்வியறிவுள்ளவன். விவேக முடையவன். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். புத்தியில் பெரியோர்களைப் போன்றவன். சிறிது புண்ணிய காரியங்களில் மனமுள்ளவன். பித்தச் சூட்டு நோயுள்ளவன். தன் பிதுரார்ச்சிதமான பொருள்களை நாசம் செய்து விடுவான். தன்னுடைய சொல் மதிப்புள்ளவனாவன். வர்த்தகத்தொழில் செய்து வருவான்.

9. சிலவேநா ளொருவர் பக்கல் சேர்ந்துமே சீவிப் பானும்
பலர்களால் பெருமை யேற்பன் தர்குண மில்லா னாகும்
பலமான வணிபம் பின்னால் பெறுவனுஞ் சொந்த மாக
உலைமீது மெழுகு போல உத்தமன் முன்னால் வாழ்வன்.

9. சிலகாலம் ஒருவரிடம் அண்டி வாழ்ந்து வருவான். பலருடைய உதவியால் பெருமை யடைவான். அற்பகுணங்க ளில்லாதவன். பிற்காலத்தில் சொந்தமாகவே பெரிய வர்த்தகம் செய்பவன். ஆதியில் உலைமீது மெழுகுபோல் சஞ்சலமாகவே வாழ்ந்து வருவான்.

10. ஜனித்தநாள் முதலா மாகச் செப்புவோம் வறுமை யேற்பன்
தனநட்டஞ் சல்ய பாதைத் தாணிகள் சேத மெய்தும்
தினமதை ஞாலங்கள் சதாதிரிச் சலுமே வுண்டு
மனைவியும் வந்த பின்பு வளர்பிறை போல யோகம்.

10. பிறந்தநாள் முதல் வறுமையையே அடைந்து வருவான். செல்வங்கள் நஷ்டமாகும். கடன் உபத்திரவங்கள் ஏற்படும். விளைநிலங்கள் குறைந்து போம். எப்பொழுதும் உலகில் அலைச்சலுள்ளவன். ஜாதகனுக்கு மனைவிவந்த பிறகு பிறைச்சந்திரன்போல் யோகம் விருத்தியாகும்.

11. இருபது வாறுண் டுக்கும் இபம்பினும் வறுமை யுண்டு
உரைத்தவாண் டதன்மே லாக உயர்பிறை போல யோகம்
அரிவையும் வந்த பின்பு அனுகிய தரித்தி ரம்போய்
பொருள்சேரல் வணிப மோங்கல் போகிய பூமி சேரும்.

11. ஜாதகனுடைய இருபத்தாறும் வயது வரையில் வறுமை உண்டு என்றேரும். கூறப்பட்ட வயதுக்கு மேல் பிறைச்சந்திரன் போல் உயர்ந்த யோகம் வளரும். மனைவியும் வந்த பிறகு ஏற்பட்ட தரித்திரம் நீங்கி, பொருள்கள் விருத்தியாகும். வர்த்தகம் பெருகும். நீங்கிய பூமிகள் திரும்பச் சேரும்.

12. நாலேழு வாண்டு மேலாய் நல்கிடுந் தான்யச் செட்டு
பால்பாக்ய விருத்தி யுண்டு பகரமா குடும்ப மெய்தும்
ஞாலங்கள் சேர்த லுண்டு நல்கிடுஞ் சகடந் தானும்
வேலன்தன் னருளு முண்டு நிமலியே கேட்டி டாயே.

12. ஜாதகனுடைய இருபத்தெட்டாம் வயதுக்கு மேல் தனியாக வியாபாரம் ஏற்படும். புத்திரபாக்கியம் விருத்தியாகும். நல்ல குடும்பம் உண்டாகும். பூமிகள் சேரும். வண்டி முதலிய வாகன வசதிகள் ஏற்படும். சுப்பிரமணியக் கடவுள் அருள் ஏற்படும். தாயே! கேளும்.

13. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் வுரைப்பீர்க ளந்தச் சங்கை
ஆகமன் மதியுஞ் ஜன்மம் அசுரர்மந் திரிசேய் பத்தில
யோகாதி பானு முச்சம் பொருந்தின பலத்தி னாலே
தோகையாம் வேசி யோகந் துரகயோ கமுமே யுண்டு.

13. ஜாதகனுக்கு யோகம் ஏற்படும் என்று எங்ஙனம் சொன்னீர்கள்? சொல்லுங்கள், அந்த விபரத்தை, என்று வினவ, குருவும், சந்திரனும ஜன்மலக்னத்தில் இருப்பதாலும், சுக்கிரனும் செவ்வாயும் பத்தாம் வீட்டில் இருப்பதாலும், யோககாரகனாகிய சூரியன் உச்சமாக இருப்பதாலும் வேசியோகம் ஒன்றும் துரகயோகம் ஒன்றும்;

14. பருவத யோக மொன்றும் பகருவோ மூன்று யோகம்
இருபதெட் டாண்டின் மேலாய் இருக்கமுங் காணு ணுகும்
திருமானி செய்த லுண்டு தீரமா மனமு முண்டு
பெருமையாய்ச் செட்டு மோங்கல் பூமியால் பொருளு நேரும்.

14. பருவத்யோகம் ஒன்றும் ஆகிய மூன்று யோகங்கள் ஏற்படும். ஜாதகன் இருபத்தெட்டாம் வயதுக்குமேல் துன்பம் இல்லாதவன். வீடு கட்டுவான். தைரியமுள்ள மனத்தினன். பெருமையுடன் வியாபாரம் பெருகும். பூமியால் பொருள் (புதையல்) கிடைக்கும்.

### புதையல்

15. எந்தக்கா லத்தில் நேரும் இயம்புவீர் முனியே நீர்தாம்
வந்தவன் முப்பான் மூன்றில் மருவிடு நிதிநிட் சேபம்
புந்தியின் தசையி லேதா னவர்சுய புக்தி தன்னில்
முந்திநாள் பொருளு நேரு முதல்வியே கேட்டி டாயே.

15. எந்தக் காலத்தில் புதையல் கிடைக்கும் என்று கூறுங்கள், முனிவரே! நீர்தாம். ஜாதகனுடைய முப்பத்துமூன்றும் வயதில் நிதி கிடைக்கும். அது புதமகாதசையில் புதபுக்தியில் கிடைக்கும். பழைய காலத்திய பொருளும் சேரும். தாயே! கேளுங்கள்.

16. தன்துணை நவமே தோன்றுந் தங்காவே சிலவே யென்றேம்
முன்துணை யாண்பால் மூன்று மொழிகின்றேந் தீர்க்க மாகக்
கன்னிமா ரிருவர் தீர்க்கங் காளையும் வேறுய்ச் செலவர்
துன்சனி மத்தியில் தான் துணைவேறுய்ச் செல்வா ராகும்.

16. ஜாதகனுக்குச் சகோதரர் ஒன்பதின்மர் தோன்றுவர். அவர்களில் சிலர் நிலையார் என்றேம். முதலில் பிறந்த மூன்று சாகோதரர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்று சொல்லுகின்றேம். சகோதரிகள் இருவர் தீர்க்காயுள் உடையவர்கள். சகோதரனும் தனியாகச் சென்றுவிடுவான். சனிமகாதசையில் சகோதரன் வேருகச் சென்றுவிடுவான்.

17. பின்பாக மவர்கள் சேதி பேசுவோந் தாயே யாங்கள்
இன்னவன் மணத்தின் காலம் இருபது வேழு வாண்டில்
கன்னிகை மேல்பால் நேருங் கழறுவோ மவள்கு ணத்தை
நன்னடை மிருதுச் சொல்லு நாயகி சிவந்த மேனி.

17. பிற்பாகத்தில் அவர்களுடைய செய்திகளைச்சொல்லுகின்றோம் ; தாயே! நாங்கள். ஜாதகனுடைய திருமணக் காலத்தைக் கூறுகின்றோம். இருபத்தேழாம் வயதில் மேற்குப்பக்கத்திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். நன்னடக்கை யுள்ளவள். மெதுவாகப் பேசுபவள். சிவந்த உடல் உள்ளவள்.

18. அடிசிலுக் கினிய ளாகும் அரிமனை யொப்ப தாகும்
தடைசொலாள் மானுக் கேதான் சலித்தோருக் குதவி செய்வள்
மடையரை யுறவு கொள்ளாள் வருவோரை யாத ரிப்பள்
துடியிடை யோக சாலி சொல்லது சுருக்க மெய்தும்.

18. உருசியுடன் சமைப்பதில் வல்லவள். இலக்குமியைப் போன்றவள். தன்கணவன் வார்த்தைக்குத் தடை சொல்லாதவள். துன்பமடைந்தவர்கட்கு உபகாரம் செய்பவள். முட்டாள்களுடன் உறவு கொளளாதவள். தன்னை யடைந்தவர்களை ஆதரிப்பாள். மெல்லிய இடையுள்ளவள. அதிருஷ்ட முள்ளவள். அடக்கமாகப் பேசுபவள்.

**புத்திரதோஷம் ஏற்படுதற்குரிய கிரக நிலை**

19. வந்துபின் வரன்யோ கந்தான் வயதுமே தீர்க்க மெய்தும்
பந்தணி மாது வுக்குப் பாலர்கள் முதலில் நட்டம்
எந்தக்கா ரணங்கள் சொல்வீர் இராகுவு மைந்தில் தங்க
முந்தின சுதருந் தோட முதல்வியே கேட்டி டாயே.

19. இவளை மணந்த பிறகு ஜாதகனுக்கு யோகம் அதிகமாகி நீண்ட ஆயுளுடையவனுவான். இப்பெண்ணுக்கு முதலில் தோன்றும் புத்திரர்கள் நிலையார். அதற்குக் காரணங்கள் சொல்லுங்கள். செவ்வாயும் ராகுவும் புத்திரஸ்தானமாகிய ஐந்தாம் மிடத்தில் இருப்பதால் முதலில் பிறக்கும் புத்திரர்கள் நிலையார். தாயே ! கேளுங்கள்.

20. அதற்குப்பின் விருத்தி யென்றோம் ஆணது விரண்டு தீர்க்கம்
மதிமுகப் பெண்பா லொன்று வரைகின்றோந் தீர்க்க மாக
இதுநிற்க வுதித்தோன் பூர்வம் இயம்புவோ மினிமே லாகப்
பதியினி லுயர்வ தான [1] பரங்குன் று நகரி லேதான்.

20. அதற்குப் பிறகு விருத்தியாகும். இரு புதல்வர்களும் ஒரு புதல்வியும் தோன்றித் தீர்க்காயுளுள்ளவர்கள் என்று கூறுகின்றோம். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். புண்ணிய தலங்களில் உயர்ந்ததான திருப்பரங் குன்றத்தில் ;

21. சேடர்தங் குலமு தித்துச் செட்டுக்கள் பலவாய்ச் செய்து
ஆடின பாதத் தோனை அன்புடன் பூசித் தேதான்
வாடினோர்க் குதவி செய்து வளமையாய்க் குடும்பி யாகி
நாடினன் கால னூடு [2] நாற்றலை வரையப் பட்டு ;

1. திருப்பரங்குன்றம். 2. பிரம்மதேவன்.

21. சேடர் குலத்தில் பிறந்து, பலவிதமான வியாபாரம் புரிந்து வந்து, நடனமாடும் சிவபெருமான் பாதங்களைப் பக்தியுடன் பூசித்துவந்து, கஷ்ட மடைந்தவர்கட்கு உபகாரம் செய்து வந்து, செழிப்புடைய குடும்பமுள்ளவனுகி மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு ;

22. பிறப்பனு மிந்தப் பாலன் பேசுவோ மிவனின் யோகம்
குறைமதி போல யோகங் கூறுவோ மிருபா ஞறும்
திரிச்சலாஞ் சல்லியப் பாதை தென்காற்றுப பஞ்சு போல
மருவிடு மென்று சொல்வோம் வரைந்தவாண் டதன்மே லாக ;

22. இக்குலத்தில் பிறப்பான் என்று சொன்னேம். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றேம். ஜாதகனுடைய இருபத்து நான்காம் வயதுவரையில் தேய்பிறைபோல் யோகங்கள் குறையும். அலைச்சலுண்டு. கடன் உபத்திரவம் இருக்கும். தென்றலில் அகப்பட்ட பஞ்சுபோல் துன்பப்படுவான் என்று சொல்லுகின்றேம். கூறப்பட்ட வயதுக்கு மேலாக;

23. பலவணி பத்தால் லாபம் பகருவோம் பின்பால் சேதி
தலைவியி னன்னை சேதி சதியிலா மனத்த ளாகும்
நிலையதைக் காப்பா ளாகு நிமிடத்தில் கோபி யாவள்
நலமதை யெவர்க்குஞ் செய்வள் நல்கிடும் பித்த வாயு.

23. பலவிதமான வியாபாரங்களால் லாபம் ஏற்படும். விபரங்களைப் பின் பாகத்தில் சொல்லுகின்றேம். ஜாதகனுடைய தாயின் செய்தியைச் சொல்லுகின்றேம். கபடமில்லாத மனத்தினள். தன்னுடைய நிலைமையைக் காப்பாற்றிக் கொளுவாள். விரைவில் கோபங்கொள்வாள். எல்லோருக்கும் நன்மையையே செய்வாள். பித்தவாயு நோய் ஏற்படும்.

24. முன்கோபம் பின்பு சாந்த மூலச்சூ டுடைய ளாகும்
தன்துணை நட்ட மெய்துந் தனியளாய் வாழ்வா ளாகும்
என்னகா ரணத்தி னுலே இவள்துணை தோடஞ் சொன்னீர்
புந்தியும் விரயம் புக்கப் புகன்றனந் தனிய ளாக.

24. முன் கோபி. உடனே சாந்தமடைவாள். மூலச்சூட்டு நோய் உள்ளவள். உடன்பிறந்தவர்கட்குத் தோஷமுண்டு. தனியளாக வாழ்ந்து வருவாள். என்னகாரணத்தில் இவருக்குச் சகோதரதோஷம் உண்டு என்று கூறுனீர்கள் ? புதன் விரயஸ்தானத்தில் இருப்பதால் அங்ஙனம் தனியளாக வாழ்வாள். என்று சொன்னேம்.

25. அவளுடைப் பூர்வஞ் சொல்வோம் அருணைக்குத் தென்பா லாக
நவனியில் சிறுவூர் தன்னில் நல்கினுள் வைச்சயசேயாய்
இவளில்ல மடைக்க லானும் எய்திற்றுக் கூடு தன்னில்
தயசியே யதுக லைத்தாள் சார்ந்தது வந்தத் தோடம்.

25. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். திருவண்ணமலைக்குத் தெற்கில் உள்ள சிற்றூரில், வன்னிய குலத்தவளாகப் பிறந்து வாழும்போது, இவளுடைய வீட்டில் ஒரு பறவை கூடுகட்டி வாழ்ந்தது. தாயே ! அந்தக்கூட்டை இவள் கலைத்தாள். அந்தத் தோஷம் ஏற்பட்டது.

26. வரன்தம்பி பேரில் நிந்தை மாதுவுஞ் சொல்லும் போது
உரைவனு மனவெ றுப்பால் உரகன்போல் நிந்தை சொன்னாய்
மறுஜன்மந் துணைவ ரின்றி வளமிலாக் குடும்பி யாகித்
தரையினில் வாழ்வா யென்னச் சார்ந்தது வந்தச் சாபம்.

26. கனவனுடைய தம்பியின்மீது அடாத பழியைக் கூறும்போது, அவன் மனவருத்த மடைந்து (சர்ப்பம் போல் கோபங்கொண்டு) " என்மீது பழியை சுமத்தினாய்; மறுபிறவியில்நீ உடன் பிறந்தவர்களில்லாமல், செழிப்பில்லாத குடும்பத்தையுடையவளாகி, உலகில் வாழ்ந்து வருவாய்" என்றான். அந்தச் சாபம் ஏற்பட்டது.

27. ஆகையா லிச்சென் மத்தில் அனுகுமைத் துனன்சா பம்போல்
தோகைக்குத் துணைவர் நட்டஞ் சுகமிலாக் குடும்பி யாவள்
பாகமா யவள்பின் ஜன்மம் பகருவோஞ் சிறுபாக் கத்தில்
நாகரி கங்க ளுள்ள நற்சைவ குலமு திப்பாள்.

27. ஆகையால் இப்பிறவியில் மைத்துனன் சாபம்போல் சகோதர தோஷம் ஏற்படும். சௌக்கியமில்லாத குடும்பியாவாள். அவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். சிறுபாக்கத்தில் நல்ல அந்தஸ்துள்ள ஒரு சைவ குலத்தில் பிறப்பாள்.

28. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் விரிஞ்சி தன்னில்
அந்தவன் மிலேச்ச னாக அனுகியே கிருஷி செய்து
சிந்தையு நல்ல தாகி மனைவியு மதலை யுண்டாய்
முந்திநாள் வினையில் லாமல் மேவினான் கால னூடு.

28. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். விரிஞ்சி நாட்டில், முகமதிய குலத்தவனாகப் பிறந்து, விவசாயம் செய்து வந்து, நல்ல மனமுள்ளவனாக மனைவி மக்களைப் பெற்று, பூர்வ வினையில்லாமல் மரணமடைந்தான்.

29. மறுஜன்மம் போரூர் தன்னில் வருருவா னிக்கு லத்தில்
பொருளது பெருக்க மாகிப் புகழுடன் வாழ்வா னாகும்
கருமகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
திருமகன் தனக்கு முப்ப தாண்டினில் தந்தை கண்டம்.

29. மறுபிறவியில் திருப்போரூரில் இதே குலத்தில் பிறப்பான். செல்வங்கள் விருத்தியாகி, கீர்த்தியுடன் வாழ்ந்துவருவான். ஜாதகனுடைய கருமகாலங்களைச் சொல்லுங்கள். முனிவரே! தாங்கள். ஜாதகனுடைய முப்பதாம் வயதில் தந்தைக்கு மரணம் நேரும்.

30. அதற்குப்பின் நாலைந் தாண்டில் அன்னைக்குக் கண்ட மெய்தும்
பிரகு தன்தசையி லேதான் புகலுவோஞ் சாத கர்க்கு
அறுபது வாறு ஆண்டில் ஆனிமா தத்தி லேதான்
திருமக னுடல மேகுஞ் செப்புவோ மிவள்பின் ஜன்மம்.

30. அதற்குப் பிறகு இருபது வருடங்கள் கழித்து, தாய் மரணம் அடைவாள். ஜாதகனுக்கு சுக்கிரமகாதசையில், அஃதாவது அறுபத்தாறும் வயதில், ஆனி மாதத்தில் மரணம் ஏற்படும். அவனுடைய மறுபிறவினயச் சொல்லுகின்றேம்.

31. உத்தரந் துவாரை தன்னில் உதிப்பனும் பிரம்ம யோயாய்
அத்திரி புகலு கின்றார் அவனுமிச் சென்மந் தனனில்
சுத்தமு மில்லா னகிச் சொல்லறு தவறுத லாயும்
முத்தின குலமெவ் வாறு உதிக்குங்கா ரணங்கள் சொல்வீர்.

31. வடக்கில் துவாரகையில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான் என்றேம். அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகன் இப்பிறவியில் சுத்தமில்லாதவனுகி, சொல் தவறி நடந்து வந்தும் இருந்தாலும், உயர்ந்த அந்தண குலத்தில் பிறக்கும் காரணங்கள் என்ன ? சொல்லுங்கள்.

32. எத்தனை வினைகள் செய்தும் இடரது சிலர்க்குக் காத்தும்
சித்தசன் றனையெ ரித்த தேவன்றன் பத்தி யாயும்
முத்திஞேர்த் தொண்டு பூண்டு முயர்வான தலங்கள் சென்றும்
வித்தகன் வாழ்ந்த தாலே விளங்குவான் மறைக்கு லத்தில்.

32. பலவிதமான தீங்குகள் செய்தபோதிலும் சில பேருக்கு ஏற்பட்ட ஆபத்தைக் காத்து வந்ததாலும், மன்மதனை யெரித்த சிவபெருமானின் மீது பக்தி கொண்டு துறவிகட்குத் தொண்டுகள் பல செய்ததாலும், பல புண்ணிய தலங்களுக்குச் சென்றும் வாழ்ந்து வந்ததாலும் அந்தண குலத்தில் பிறப்பான் என்று சொல்லுவோம்.

33. பிறந்திடு காலந் தன்னில் புனர்பூசம் முதல்பா தத்தில்
குருதசை பதின்மூன் ருண்டும் குலவிடுந் திங்கள் நாலும்
திருமகன் பிணிய நேகம் சல்லிய பாதை நேரல்
உரைத்தனம் பூர்வ பாகம் உத்தமி கேட்டி டாயே.

33. ஜாதகன் பிறக்கும் காலத்தில் புனர்பூசநட்சத்திரம் முதல் பாகமாகும். குருமகாதசை பதின்மூன்று வருடங்களும் நான்கு மாதங்களும் மீதமாகும். அக்காலத்தில் ஜாதகனுக்கு அதிகமான நோய் ஏற்படும். கடன் உபத்திரம் உண்டாகும். இதுவரை மூதல் பாகம் சொன்னேம். உயர்ந்தவளே ! கேளுங்கள்.

34. புந்தியின் தசைக்கா லத்தில் பிரபல யோக மெய்தும்
முந்திநாள் விட்ட பூமி மேவிடு மில்லஞ் செய்தல்
விந்தையாய்ச் செட்டு வோங்கல் மேவிடும் நிதிநிட் சேபம்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

34. புதமகாதசையில் பிரபலமான யோகம் கிட்டும். பிதுரார்ச்சிதமானதும் கையைவிட்டகன்ற சொத்துக்களுமானபூமிகள் சேரும். வீடு கட்டுவான். வர்த்தகம் பெருகும். புதையல் கிட்டும். முருகக் கடவுளைப் பெற்ற தேவியே ! கூறியவார்த்தைகள் தவறு.

## ஜாதகம் 82

1. கலைதேளில் காரி மானில் கனகனு மேட மாகப்
[1] புலவனும் பானு வெள்ளி பணிசீயஞ் சிகியுஞ் சாடி
நிலம[2] னலவன் புக்க இலக்கினம் வீணை யாகப்
பலனதைப் புகலு மென்று பார்வதி கேட்க லுற்ருள்.

**1.** சந்திரன் விருச்சிகத்திலும், சனி மகரத்திலும், குரு மேஷத்திலும், புதன் சூரியன் சுக்கிரன் ராகு சிம்மத்திலும், கேது கும்பத்திலும், செவ்வாய் கடகத்திலுமிருந்து, இலக்கினம் மிதுனமாக இருந்தால், பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்டாள்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | லக்கினம் |
| கேது | ராசி சக்கரம் | | செவ்வாய் |
| சனி | | | புதன் சூரியன் சுககிரன் ராகு |
| | சந்திரன் | | |

2. அத்திரி புகலு கின்ருர் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லஞ் சொல்வோம் வடவாடை கீழ்மேல் வீதி
சத்திபாஞ் சாலி கன்னி[3] தங்கிடும் பெண்பால் தன்னில்
[4] சித்தசன் றனையெ ரித்த தேவனுங் கீழ்ப்பா லாகும்.

**2.** அத்திரி முனிவர் கூறுகின்ருர். இஃது ஆண் மகனின் ஜாதகம். அவன் பிறந்த வீட்டைச் சொல்லுகின்ருேம். அது, கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு வரிசையில் உள்ளது. சக்திதேவியான திரௌபதியம்மன் கோயிலும் மாரியம்மன் கோயிலும் தென்மேற்குத் திக்கில் இருக்கும். மன்மதனை யெரித்த சிவபெருமானின் ஆலயம் கிழக்குத்திக்கில் இருக்கும்.

3. மாரியு மேல்பா லாகும் மருவிய சிறுவூர் தன்னில்
தீரமாய்க் கங்கை சேயாய் ஜனிப்பனு மேழாஞ் ஜன்மம்
காரிழை யன்னை தந்தை களத்திர புத்ர யோகம்
பாரினில் முன்பின் ஜன்மம் பகருவோ மிந்நூல் தன்னில்.

**3.** மேற்குப் பக்கத்தில் மாரியம்மன் கோயில் உள்ள சிற்றூரில் வேளாள குலத்தவனாக, தன் தந்தைக்கு ஏழாம் பிறவியாகப் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை தாய், மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும் இந்தச் சோதிட நூலில் கூறுகின்ருேம்.

---

[1]. புதன். [2]. கடகனிராசி. [3]. தென் மேற்கு. [4]. சிவபெருமாண்.

4. தந்தையின் துணைவர் மூன்றி லாணொன்று கன்னி ரண்டு
நொந்திடு மாண்பா லுந்தான் நிமலிமார் தீர்க்க மெய்தும்
இந்தவன் தந்தை சேதி இயம்புவோ மால்நி றத்தான்
சந்தத முளைச்சல் நீட்சி தந்தமும் பெரிதாய்க் காட்டும்.

4. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர்கள் மூவரில் ஒரு சகோதரனும் இரு சகோதரிகளுமாவர்கள். சகோதரன் நிலையாக இல்லாதவன். சகோதரிகள் தீர்க்காயுளுள்ளவர்கள். இவனுடைய தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம். கரிய நிறமுள்ளவன். மெல்லிய சரீர முடையவன். பற்கள் பெரிதாக இருக்கும்.

5. மனமது கவடு மில்லான் மாநிலங் கிருஷி செய்வன்
தனமது வதிகங் காணன் சரசமாய் வார்த்தை யுண்டு
இனமதுக் கினிய னொரு மிடர்செய்யான் யாவ ருக்கும்
சினமுண்டு வெளிக்காட் டாதான் தீரமில் லாத நெஞ்சம்.

5. மனத்தில் கபட மில்லாதவன். விவசாயம் செய்து வருவான். அதிகமான செல்வங்க ளில்லாதவன். சல்லாபமாகப் பேசுபவன். தன் சுற்றத்தாருக்கு இனியவன். ஒருவருக்கும் துன்பங்கள் செய்யாதவன். கோபங் கொள்வான். அதை வெளியிடாதவன். தைரியமில்லாத மனத்தினன்.

6. கரமதில் சங்கு சக்ரம் கல்வியுஞ் சமம தாகும்
நெறியதைக் காப்பா னாகும் நிமலன்மேல் பத்தி கொள்வன்
குறையென்றோர்க் குதவி செய்வன் கோதைசொல் கடவா னாகும்
மருவிடும் பித்தச் சூடு மறுத்துரை கூறா னாகும்.

6. கையில் சங்கரேகை சக்கரரேகைகளுள்ளவன். சமமான கல்வியறிவுள்ளவன். தன்நெறியைக் காத்துவருவான். சிவபெருமான்மீது பக்தி கொள்வான். கஷ்டம் அடைந்தவர்கட்கு உபகாரம் செய்வான். மனைவியின் வார்த்தையை மீறுதவன். பித்தச் சூட்டுத் தேகமுள்ளவன். மறுத்துப் பேசாதவன்.

7. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே வுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அழகுளான் மாநி றத்தான்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பான் முன்கோ பத்தான்
அன்னியர் மெச்ச வாழ்வன் அரன்தொண்டு புரிவா னாகும்.

7. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகன்தோன்றுவான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழ குள்ளவன். மாநிற முடையவன். தன் வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பான். முன்கோப முடையவன். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். சிவபெருமானுக்குத் தொண்டுகள் செய்து வருவான்.

8. பலசகா யங்கள் செய்வன் பணிந்தோரை யாத ரிப்பன்
தலவாசஞ் செய்வா னுகும் சாராட்க ளுடைய னுகும்
விலைமாதர் மோகங் கொள்ளான் வெற்றியாந் தொடுவ மூக்குப்
புலவன்போல் மொழிவா னுகும் புதிதாக வில்லஞ் செய்வன.

8. பலருக்குச் சகாயங்கள் செய்வான். தன்னை அண்டினவர்கட்கு உதவி செய்வான். புண்ணிய தலங்களுக்குச் செல்வான். ஏவலாட்கள் உடையவன. வேசையர்மீது மையல் கொள்ளாதவன். எடுத்த காரியங்களில் ஜயமே காண்பவன். புலவனைப்போல் பேசுபவன். புதியதாக வீடு கட்டுவான்.

9. தந்தையின் வர்க்கத் தோரால் தனம்பூமி சேர்ப்பா னுகும்
தந்தையின் பூமி மேலாய்த் தானவன் சேர்ப்பா னுகும்
கந்தன்மேல் பத்தி பூண்பன் கரமதில் கமல ரேகை
நொந்தபேர்க் குதவி செய்வன் நேமியில் புகழு மேற்பன்.

9. தன் தந்தையினுடைய வர்க்கத்தாரால், செல்வம் பூமி முதலியன வைகளை அதிகப்படுத்துவான். தன் தந்தையின் நிலத்திற்கு அதிகமாக இவன் சேர்ப்பான். முருகக்கடவுளின்மீது பக்திகொள்வான். கையில் கமலரேகை உள்ளவன். கஷ்டம் அடைந்தவர்கட்கு உபகாரி. உலகில் கீர்த்தி யடைவான்.

10. தன்துணை முன்னுள் நான்கு சாற்றுவோந் தீர்க்க மாகப்
பிறதியுங் கன்னி யொன்று பேசுவோம் பால னுக்கு
அன்னவர் சேதி யாவும் அறிவிப்போம் பின்பா கத்தில்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

10. ஜாதகனுக்கு முன் பிறந்தவர் நால்வர் என்றும், அவர்கள் தீர்க்காயுளுள்ளவர்கள் என்றும் சொல்லுவோம். பின் பிறந்த சகோதரி யொருத்தியுமுண்டு என்றும், அவர்களுடைய செய்திகளைப் பிற்பாகத்தில் கூறுவோம் என்றும் சொல்லுகின்றோம். உயர்ந்த கணவனை யடைந்த உத்தமியே! கேளுங்கள்.

11. மாதுரு குணத்தைச் சொல்வோ மாநிற முன்கோ பத்தாள்
சூதிலா ளடக்க மாவள் சொற்சுக மிளம னத்தாள்
காதலி குணமி ரண்டு கழறுவோம் பித்த தேகி
வேதனை யொருவர்க் கெண்ணுள் வித்தகி கேட்டி டாயே.

11. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். மாநிற முள்ளவள். முன்கோபமுடையவள். சூதில்லாதவள். அடக்கமுடையவள். இனிமையாகப் பேசுபவள். இளகிய மன முள்ளவள். இருவித மான குணங்களுள்ளவள். பித்த சரீரமுடையவள் என்றோம். ஒருவருக்கும் துன்பம் இழைக்காதவள். தாயே! கேட்டிடுவாய்.

12. தன்துணை யாண்பால் தோடம் சத்திமார் மூவ ராகும்
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போம் முனியே கேளும்
என்னகா ரணத்தி னாலே இவளுக்கு வாண்பால் தோடம்
துன்மையாய் மதியு மாறில் சேயுமே விரண்டில் நீச்சம்;

12. தாய்க்கு உடன் பிறந்தவர்களில் சகோதரருக்குத் தோஷ முண்டு. மூன்று சகோதரிகள் உள்ளனர். அவர்களின் செய்தியைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம். முனிவரே! கேளுங்கள். என்ன காரணத்தால் ஜாதகனுடைய தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது? கெடுதலாகச் சந்திரன் ஆறும் இடத்தில் இருப்பதாலும், செவ்வாய் நீசமாக;

13. இருப்பதால் துணையாண் தோடம் இவளில்லம் வடமே லாகும்
அரிவைமுன் ஜன்மஞ் சொல்வோம் ஆலங்கா டதற்கு வுத்ரம்
சிறுவூரில் ரெட்டி சேயாய்ச் ஜனித்துமே வாழு நாளில்
மருவின வினையை யாங்கள் வரைகின்றோந் தாயே கேளும்.

13. இருப்பதாலும் தாய்க்குச் சகோதரதோஷம் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். இவளுடைய வீடு வடமேற்குத் திக்கில் இருக்கும். ஜாதகனின் தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவாலங்காட்டிற்கு வடக்கில் உள்ள சிற்றூரில் ரெட்டியார் மரபில் பிறந்து வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

14. தன்வரன் தம்பி பேரில் சலிப்பான வார்த்தை சொல்ல
அன்னவன் மனமும் வாடி அறைந்திட்ட சாபங் கேண்மோ
துன்மையாய் வார்த்தை யென்மேல் செப்பின பாவிக் கேதான்
பின்வருஞ் ஜன்மந் தன்னில் புகலொணுத் துணையா னுந்தான்.

14. தன்னுடைய மைத்துனன்மீது வருத்தப்படும்படியான வார்த்தைகளைக் கூறினாள். அவனும் மனம் வருந்தி யுரைத்த சாபத்தைக் கேளுங்கள். தீமையாய் என்மீது பழி சொன்ன பாவி, மறு பிறவியில் உடன் பிறந்த சகோதரனில்லாமல் வாழ்வாள்.

15. மைத்துனன் மூத்தோ ரின்றி வாழுவா யென்று சொல்லக்
குற்றமா யந்தச் சாபம் குலவிற்றுப் பாவைக் கேதான்
வித்தகிக் கந்த ஜன்மம் வாயினில் பிணியு முண்டாய்ப்
பற்றினுள் கால னுடு பிரமனுல் வரையப் பட்டு;

15. மைத்துனனும் மூத்த சகோதரனும் இல்லாமல் வாழ்ந்து வருவாய் என்று சொல்லிச் சென்றான். தீமையாக அந்தச் சாபம் இவளுக்கு ஏற்பட்டது. அவளுக்கும் அப்பிறவியில் வாயில் புண் ஏற்பட்டு மரணமடைந்தாள். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு;

16. வந்தவ ளென்று சொல்வோ மருவிடு முன்னூழ்ச் சாபம்
தன்துணை யாண்பால் தோடம் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
அன்னையி னன்னை யாஸ்தி அடைகுவார் விவரஞ் சொல்வீர்
இந்ததோர் பால னுக்கு எய்திடு மென்று சொல்வோம்.

16. பிறந்தவனென்று சொல்லுகின்றோம். முற்பிறவியின் தோஷம் தொடரும். உடன் பிறந்த சகோதரருக்குத் தோஷம் உண்டாகும். ஜய முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். தாயின் தாயினுடைய ஆஸ்திகளை யார் அடைவார்கள் என்ற விபரம் சொல்லுங்கள். இந்த ஜாதகனுக்கே கிடைக்கும் என்று கூறுவோம்.

17. மாதுரு பின்ஜன் மத்தை வரைகின்றேந் தாயே கேளும்
மேதினி லுயர்வ தான மேல்கொங்கு நாட்டி லேதான்
சூதிலாச் சைவச் சேயாய் ஜனிப்பளா மென்று சொல்வோம்
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

17. தாயின் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள். உலகில் உயர்ந்த கொங்குநாட்டில் தீமைகளில்லாத சைவ குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். உயர்ந்த கணவனைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

18. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் புலியூர் தன்னில்
வன்னிய குலமு தித்து மனைவிமைந் தருமுண் டாகிக்
கந்தன்மேல் பத்தி பூண்டு கடந்தோருக் கன்ன மீந்து
தென்திசைக் கால னூடு சென்றுமே பிரமன் லக்கம் ;

18. ஜாதகனின் தந்தையின் முற்பிறப்பைச் சொல்லுகின்றோம். புலியூரில் வன்னிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களை அடைந்து, முருகக் கடவுள்மீது பக்திகொண்டு, துறவிகட்கு அன்னமளித்து வந்து, இறுதியில் மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு ;

19. அரிராசி கார்த்தி நாளில் அருளினு னென்று சொல்வோம்
தரைபின்னால் சேர்ப்பா னுகுஞ் சமரச யோக மெய்தும்
வருஞ்ஜன்மங் காளாத்தி தன்னில் வருவனும் சத்ரியச் சேயாய்த்
திருமக னிச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்ன.

19. கார்த்திகை நட்சத்திரத்தில் சிம்ம லக்கினத்தில் பிறந்தவன் என்று கூறுகின்றோம். பிற்காலத்தில் பூமியைப் பெருக்குவான். சாதாரண யோகம் (சமரச யோகம்) உள்ளவன். இவன், மறு பிறவியில் காளத்தியில் சத்திரிய குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை இப் பிறவியில் என்ன நற்செயல்கள் செய்தான்?

20. மனமது கவடு மின்றி மாநிலம் நல்லோ னுயும்
சினமதை வெளிக்காட் டாமல் தீரனும் வாழ்வ தாலே
கனமுள சத்ரியச் சேயாய்க் காவல னுதிப்பா னுகும்
சினமிலாத் தவங்கள் செய்யுஞ் செல்வதி கேட்டி டாயே.

20. மனத்தில் சூதில்லாமல் உலகில் நல்லவனுயும் கோபத்தை வெளி விடாமல் வாழ்ந்து வந்து இருப்பதாலும் அடுத்த பிறவியில் பெரும் சத்திரிய குலத்தில் பிறப்பான். கோபத்தை விட்டுத் தவங்களை இயற்றும் செல்வியே! கேளுங்கள்.

21. உதித்தவன் மணத்தின் காலம் உரைக்கின்றே மிருப தாண்டில்
மதிமுக மனைவி யுத்ரம் வருவளாம் தந்தை வர்க்கம்
அதிசதி குணத்தைச் சொல்வோ மாஞ்சிவப புடைய ளாகும்
துதிசெய்தோர்க் குதவு வாளாந் தோழன்றன் மனத்துக்
[கேற்றேள்.

21. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அஃது அவனுடைய இருபதாம் வயதில் நடைபெறும் சந்திரனைப்போல் அழகிய முகத்தை யுடைய மனைவி வடக்குத்திக்கிலிருந்து தன் தந்தையின் வர்க்கத்திலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மாநிற முடையவள். தோத்திரம் செய்தவர்கட்கு உதவி செய்வாள். தன் கணவன் மனத்துக்கேற்றவள்.

22. பால்பாக்ய முடைய ளாகும் பகையென்று மனத்தில் வையாள்
சீலியாம் புத்தி மானுஞ் சிந்தையு நல்ல தாகும்
காலத்தை யறிந்து ரைப்பள் கனமான குடும்ப மேற்பள்
மால்மனை யொப்ப தாகு மங்கைக்கு வயது தீர்க்கம்.

22. புத்திர பாக்கியமுள்ளவள். மனத்தில் விரோதம் பாராட்டாதவள். நல்லொழுக்க முடையவள். புத்திசாலி. நல்ல மன முள்ளவள். வருங் காலத்தை முன் கூட்டியே அறிந்து சொல்ல வல்லவள். செழிப்புள்ள குடும்ப முள்ளவள். இலக்குமியைப் போன்றவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

23. குறுமுனி தடுத்துச் சொல்வார் கோதைய ரிருவ ராகும்
வருமாறு சொல்லு மென்ன [1]மன்னவ னேழோ னுகி
உறையில்லஞ் சரமே யாக உடுபதி நீச்ச மாக
பெறுவனுந் தாரம் ரண்டு பேதைமுன் மரிப்ப ளாகும்.

23. அகத்திய முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் உண்டு என்றேம். அதற்குக் காரணம் கூறுங்கள் என்று வினவ, குரு ஏழாம் வீட்டுக்குடையவனுக, சரத்தில் இருப்பதால் சந்திரன் (உடுபதி) நீச்சமாக இருப்பதாலும், இரு மனைவியர் உண்டு என்று சொல்லுகின்றேம். முதல் மனைவி இறந்து போவாள்.

24. எந்தக்கா லத்தில் செல்வாள் இயம்புவீர் முனியே நீர்தாம்
இந்ததோர் பால னுக்கு இருபத்தொன் பாண்டு தன்னில்
அந்தவள் கோபத் தாலே அடைகுவாள் கால னுடு
பிந்தியு முப்ப தாண்டில் பெறுவனு மறும னைதான்.

24. எந்தக் காலத்தில் இறந்து விடுவாள் என்று கூறுங்கள், முனிவரே! தாங்கள். இந்த ஜாதகனுக்கு இருபத்தொன்பதாம் வயதில் கோபமடைந்து இறந்து விடுவாள். பிறகு முப்பதாம் வயதில் மறு மனைவி வாய்ப்பாள்.

25. பின்மனை தீர்க்க சீவி புத்திர பலத்தைச் சொல்வோம்
மன்மதன் போலாண் ரண்டு மங்கைமார் மூவர் தீர்க்கம்
முன்மனை தனக்குப் புத்ரர் மொழிகுவீர் முனியே நீர்தாம்
ஒன்றுமே தோன்றித் தீதாம் உத்தமி கேட்டி டாயே.

---

[1] குரு.

25. மறு மனைவி நீண்ட ஆயுளுள்ளவள். ஜாதகனுடைய புத்திர பாக்கியத்தைச் சொல்லுகின்றோம். மன்மதனைப் போன்ற அழகிய புத்திரர்கள் இருவரும், மூன்று புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்கள் ஆவார்கள். ஜாதகனுடைய முதல் மனைவிக்குப் புத்திரர்கள் உண்டோ? சொல்லுங்கள், முனிவரே! நீர்தாம். ஒரு பிள்ளை பிறந்து நிலையாமல் மரித்து விடும். தாயே! கேளும்.

26. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் பழனி நாட்டில்
சூதுசெய் வைச்யச் சேயாய் ஜனித்துமே வணிபம் செய்து
போதன முடைய னாகிப் புகழ்ச்சியாய் வாழு நாளில்
தீதாக வந்த வூழைச் செப்புவோ முனியே யாங்கள்.

26. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பழனி நாட்டில் சூதுகள் பல செய்யும் வைசிய குலத்தவனாகப் பிறந்து, வர்த்தகம் செய்து வந்து, பெரும் செல்வவானாகி, கீர்த்தியுடன் வாழ்ந்து வரும் காலத்தில், தீமையாக வந்த தோஷத்தைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

27. சுருதியோர் தமக்குப் பொன்னைத் தந்துமே கணக்கில் மோசம்
வருவித்தான் மறையோர் சாபம் வ நஞ்ஜன்மந் தாரம் ரண்டாய்
உறைந்திடு மென்று சொல்ல உலவிற்று வந்தச் சாபம்
திருகாக வேறு வொன்று செப்புவோ முனியே யாங்கள்.

27. வேதங்களுணர்ந்த அந்தணர்கட்குப் பொருளைக் கொடுத்து, கணக்கில் மோசம் செய்தான். அதைக்கண்டு அந்தணர்கள் சாபமிட்டனர். அடுத்த பிறவியில் நீ இரு மனைவியரையுடையவனாய் வாழ்வாய் என்று சொல்ல, அந்தச்சாபம் இவனையடைந்தது. இது தவிர, தீங்காக வந்த மற்றொன்றைச் சொல்லுகின்றோம். முனிவரே! நாங்கள்.

28. விதவையைப் போகம் செய்ய மெல்லிக்குக் கருவு தங்க
அதஞ்செய்தான் பண்டி தத்தால் அம்மாது மரண மானாள்
சதியாக வந்தத் தோடஞ் சார்ந்தது பால னுக்கு
நிதியது குறைவு நேர்ந்து நிமலியு மரண மாகி;

28. ஒரு விதவையுடன் இன்பம் அனுபவித்து, அதனால் கருவேற்பட்டு, அதைப் பலவித மருந்துகள் கொடுத்துக் கருவைக் கலைத்தான். அதனால் அப்பெண் மரணமடைந்தாள். தீங்காக அந்தத் தோஷம் இவனைப் பற்றியது. செல்வங்கள் குறைவாகி மனைவிகளையும் இழந்து;

29. காலன்தன் னூட டைந்துக் கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமில் லாத கங்கைக் குலமதி லுதிப்பா னாகும்
ஏலவே முன்னூழ்த் தோடம் உலவிடு மிச்சென் மத்தில்
பாரியை யிருவ ராகும் பார்வதி கேட்டி டாயே.

**29.** தானும் மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமில்லாத வேளாள குலத்தில் பிறப்பான் என்றோம். முற்பிறவியின் தோஷம் இப்பிறவியிலும் தொடர்ந்து அதனால் இரு மனைவியரை அடைவான். பார்வதி தேவியே! கேளுங்கள்.

**30.** இருமனை யணுகா வண்ணம் இயம்புவீர் சாந்தி யொன்று
வருவது வந்தே தீரும் வரையவே மாட்டோஞ் சாந்தி
திருமகன் யோகச் சேதி செப்புவோ மினிமே லாகத்
தரையது நாட்கு நாளாய்ச் சேர்ப்பனு மென்று சொல்வோம்.

**30.** இரு மனைவியர் ஏற்படாதிருக்கச் சாந்தியொன்று கூறுங்கள் என்று கேட்க, வருவது அவசியம் வந்தே தீரும்; சாந்திகள் கூறமாட்டோம். ஜாதகனுடைய யோகச் செய்திகளை இனிக் கூறுகின்றோம். நாளுக்கு நாள் பூமியைப் பெருக்குவான், என்று சொல்லுகின்றோம்.

**31.** அன்னையி னன்னை யாஸ்தி அணுகிடுந் துணைவ ருக்குத்
தனதந்தை ஞாதி யாஸ்தி சார்ந்திடு முன்னோ னுக்குப்
பொன்பணி சேர்ப்பா னாகும் புகழது மேற்பா னாகும்
அன்னியர் மதிக்க வுய்வன் அவனியில் சல்யங் காணன்.

**31.** ஜாதகனுக்குத் தன் பாட்டியின் (தாயினுடைய தாய்) ஆஸ்திகள் சேரும். இது தவிர, தந்தையின் பங்காளியின் ஆஸ்திகள் இவனுடைய முன்பிறந்த சகோதரனுக்குக் கிட்டும். பொன் ஆபரணங்களைச் சேர்ப்பான். கீர்த்தி அடைவான். பிறர் கொண்டாடும்படி வாழ்வான். உலகில் கடன் உபத்திரவம் இல்லாதவன்.

**32.** சதுராண்டு மேலா கத்தான் தாய்தந்தை யாஸ்தி சேரும்
இதுவின்றி முன்னோன் தானும் இவன்ஞாதி பக்க லுக்குச்
சதியிலாச் செல்வா னுகுஞ் சாற்றுவோம் பின்பால் சேதி
பதிபூமிப் பணிகள் யாவும் படைப்பன் பதினுயி ரம்பொன்.

**32.** ஜாதகனுக்கு நான்கு வயதுக்கு மேல் தாய் தந்தையருடைய ஆஸ்திகள் விருத்தியாகும். இது தவிர, ஜாதகனுடைய மூத்த சகோதரன் தன் பங்காளியின் பக்கம் சேருவான். அவனுடைய செய்திகளைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். வீடு பூமி ஆபரணம் முதலியவற்றை மூவாயிரம் பொன் மதிப்புள்ளனவாகச் சேர்ப்பான்.

**33.** இருபது வாறு வாண்டில் இவன்தந்தை கரும நேரும்
திருவிலா விருபா னெட்டில் செப்புவோ மன்னை கண்டம்
அறுபது வொன்ப தாண்டில் ஆனிமா தத்தி லேதான்
குறைபக்கஞ் சட்டி தன்னில் குழவியி னுடல மேகும்.

**33.** ஜாதகன் தனது இருபத்தாறும் வயதில் தந்தைக்கு இறுதிக்கடன்களைச்செய்வான். இருபத்தெட்டாம் வயதில் தாயின் கருமம் நேரும். ஜாதகனுடைய அறுபத்தொன்பதாம் வயதில் ஆனி மாதத்தில் தேய்பிறைச் சஷ்டி திதியில் ஜாதகன் இறந்து போவான்.

34\. மறுஜன்மங் காஞ்சி தன்னில் வைசிய குலமு தித்துப்
பொருளது பெருக்க முண்டாய்ப் புகழ்ச்சியாய் வாழ்வா னாகும்
குறுமுனி தடுத்துச் சொல்வார் குருவிற்கு வெட்டில் திங்கள்
இருப்பதா லெட்டாண் டிற்குள் இவனுக்குக் கண்ட மெய்தும்.

34\. ஜாதகன், மறு பிறவியில், காஞ்சிபுரத்தில் வைசியகுலத்தில் பிறந்து, பெருகிய பொருளைப் பெற்று, கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். அகத்திய முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். குருவிருக்குமிடத்துக்கு எட்டாமிடத்தில் சந்திரன் இருப்பதால் ஜாதகனுக்கு எட்டாம் வயதுக்குள் கண்டம் நேரும்.

35\. அத்திரி தடுத்துச் சொல்வார் அந்தணன் பத்தோ னாகிச்
சித்தமாய் லாபம் நிற்கத் தாய்தந்தை தமக்குக் கர்மம்
வித்தகன் செய்வா னாகும் வெள்ளியில் மூன்றுந் தங்கச்
சுத்தமாய் வயது தீர்க்கம் செப்பின மொழிகுன் றுவே.

35\. அத்திரி முனிவர் மறுத்துக் கூறுகின்றார். குரு பத்தாம் வீட்டுக் குரியவனாகி, உறுதியுடன் லாபஸ்தானமாகிய மேஷத்தில் இருப்பதால் தாய் தந்தையருக்கு இவன் திண்ணமாக இறுதிக் கடன்கள் செய்வான். சுக்கிரன் மூன்றுமிடத்தில் இருப்பதால் திண்ணமாக வயது தீர்க்கம். கூறிய மொழிகள் தவறா.

36\. அன்னவன் ஜனன காலம் அனுடத்தி லிரண்டாம் பாதம்
துன்சனி தசையி ருப்புச் செப்புவோ மீரா றுண்டும்
நன்மையாய்த் திங்க ளைந்தும் நவின்றனம் பூர்வ பாகம்
கன்னென மொழியை யொக்குங் காதலி கேட்டி டாயே.

36\. ஜாதகனுடைய ஜனன காலத்தில் அனுஷநட்சத்திரம் இரண்டாம் பாதம். சனிமகாதசையில் இருப்பு பன்னிரண்டு வருடங்களும் ஐந்து மாதங்களுமாகும். இது வரை முதல் பாகம் கூறினோம். இனிய மொழியைப் பேசும் தேவியே! கேளுங்கள்.

## ஜாதகம் 83

1. கலைசனி [1]கலையி லாகக் கனகனு மேடம் புக்க
நிலமகன் கடக மாக நீள்புகர் பானு ராகு
குலவிடஞ் சீய மாகக் கூரியோன் கன்னி யாகத்
[2]தலமது மிதுன மாகச் சாற்றுவீர் பலனைத் தானே ;

1. சந்திரன் சனி மகரத்திலும், குரு மேஷத்திலும், செவ்வாய் கடகத்திலும், சுக்கிரன் சூரியன் ராகு சிம்மத்திலும், கேது கும்பத்திலும், புதன் கன்னியிலுமாக இருந்து, இலக்கினம் மிதுனமாக இருப்பின் பலனைச் சொல்லுங்கள்;

| | | | |
|---|---|---|---|
| | குரு | | லக்கினம் |
| கேது | இராசி சக்கரம் | | செவ்வாய் |
| சந்திரன் சனி | | | சுக்கிரன் சூரியன் ராகு |
| | | | புதன் |

2. மங்கையுங் கேட்கும் போது மாமுனி புகலு கின்றார்
இங்கிவ னாண்பால் ஜன்மம் இல்லமுந் தென்பால் நோக்கம்
சிங்கவா கனத்தா ளுத்ரம் சிரமுளக் கோட்ட முண்டு
இங்கிவன் ரெட்டி வர்க்கம் இறங்குவான் மூன்றுஞ் ஜன்மம்.

2. என்று பார்வதி தேவி கேட்கும் போது மாமுனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு தெற்கு நோக்கியுள்ளது. வடக்கில் காளிதேவி கோயிலும் மாரியம்மன் கோயிலும் உள்ளன. ஜாதகன் ரெட்டியார் மரபில் தன் தந்தைக்கு மூன்றும் பிறவியாகப் பிறப்பான்.

3. பாலகன் யோகச் சேதி பெற்றதாய் தந்தை யோகம்
சாலவே துணைவர் யோகந் தன்மனை புத்ர யோகம்
எலவே முன்பின் ஜன்மம் இயம்புவோ மிந்நூல் தன்னில்
ஆலத்தை யுண்டோன் தேவி அறிவிப்போம் பிதாகு ணத்தை.

3. ஜாதகனுடைய யோகச் செய்திகள் பெற்றதாய் தந்தையர் உடன் பிறந்தவர்கள் புத்திரர்கள் இவர்களையும், இவர்களது யோகத்தையும், முற்பிறவிமறு பிறவி இவைகளையும் இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம், விஷத்தையுண்ட நீலகண்டனின் தேவியே! தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம்.

---

1 மகரவிராசி. 2 இலக்கினம்.

4. மால்நிறஞ் சமதே கத்தோன் மருமமில் லாதா னாகும்
ஊனமில் லாத தேகி உயர்வான குடும்பி யாவன்
பான்மையாய்ப் பேசு வானும் பாருகள் விருத்தி செய்வன்
ஈனரைச் சேரா னாகும் ஏவலா ளதிகஞ் சேர்ப்பன்.

4. கரிய நிற முடையவன். சமமான உடலமைப்புள்ளவன். இரகசிய மில்லாதவன். ஊன மில்லாதவன். உயர்ந்த குடும்பமுடையவன். பொருத்தமாகப் பேசுபவன். பூமிகளைப் பெருக்குவான். தாழ்ந்தவர் களிடம் நட்புக்கொள்ளாதவன். பணியாட்களுள்ளவன்.

5. சில நாட்கள் கிராமச் செட்டுச் செய்வனும் பின்வி ளங்கும்
நலமுளோர் நேசங் கொள்வன் நாற்காலி விருத்தி யுண்டு
புலவன்போல் மொழிவா னாகும் பொருளுமே பிரிப்ப னாகும்
அலைகடல் துயின்றோன் பத்தி அவனுமே கொள்வா னாகும்.

5. சின்னாட்கள் கிராம வியாபாரம் செய்து வருவான். பிறகு விருத்தி யாகும். நல்லவர்கள் நட்புக் கொள்வான். கால்நடைகள் விருத்தி யுள்ளவன். புலவனைப்போல பேசுபவன். பொருளைப் பிரித்து வைப்பான். நீள்கடலில் துயில் கொண்டுள்ள திருமாலின்மீது பக்தி கொள்வான்.

6. தோத்திரப் பிரிய னாகும் துராசையுங் கொஞ்ச முண்டு
பாத்திர மறிவா னாகும் பாரினில் சீவிப் பானும்
ஏற்றவர்க் குதவி செய்வன் இசைகளுங் கொஞ்ச முண்டு
குத்திரஞ் சிலர்க்குச் செய்வன் துணைவரை யாத ரிப்பன்.

6. தோத்திரம் செய்யப்படுவதில் இஷ்டன். சிறிது கெட்ட ஆசையுமுள்ள வன். பாத்திரங்களை நன்கு அறிவான். விவசாயம் செய்து ஜீவனம் செய்து வருவான். தன்னையண்டிவந்தவர்கட்கு உபகாரம் செய்வான். சிறிது சங்கீதமும் தெரிந்தவன். சிலருக்கு தீங்கு செய்வான். சகோதரர்களை ஆதரிப்பன்.

7. கரமதில் மாலின் ரேகை கலந்திடுந் தந்த நோயும்
துரைராசர் நேசங் கொள்வன் துணைவர்க ளாண்பா லைந்து
மருவிடுங் கன்னி ரண்டு வரைகின்றோம் வேறாய்ச் செல்வர்
ஒருவாண்டுள் பாக மானாய் உறைந்திடு மென்று சொல்வோம்.

7. கையில் திருமாலின்ரேகை உள்ளவன். பற்களில் வலியுண்டாம். அரசருக்கு இஷ்டனாக இருப்பான். ஐந்து சகோதரர்களும் இரு சகோதரிகளும் உடையவன். அவர்கள் வேறாகச் சென்று விடுவர். (ஜாதகன் பிறந்த) ஒருவருடங்களுக்குள் பாகம் செய்துவிடுவான் என்று சொல்லுகின்றோம்.

8. இன்னவன் முன்ஜன் மத்தை இயம்புவோங் கேரந் தன்னில்
மன்னர்தங் குலமு தித்து வணிபங்கள் பலவாய்ச் செய்து
தன்மனை மதலை யுண்டாய்த் தருமத்தி லிச்சை யின்றி
உன்னதச் சேது சென்று ஒதுங்கினான் கால னாடு.

8. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கேரள தேசத்தில், சத்திரிய குலத்தில் பிறந்து, பல வழிகளில் வர்த்தகங்கள் செய்துவந்து, மனைவி மக்களையடைந்து, தருமம் செய்வதில் விருப்பமின்றி, உயர்ந்த சேதுவுக்குச் சென்று மரண மடைந்தான்.

9. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ னென்று சொல்வோம்
உரைத்தவிக் குணத்தா னுக்கு உதிப்பனு மிந்தப் பாலன்
திருமகன் நிறங்கு ணத்தைச் செப்புவோ மினிமே லாக
[1] அரிமக னொப்ப தாகும் அரிபத்தி மிகவுங் கொள்வன.

9. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இவன் என்று சொல்வோம். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். ஜாதகனுடைய குணம் நிறம் இவைகளை இனிச் சொல்லுகின்றோம். மன்மதனைப்போன்ற அழகுள்ளவன். மகாவிஷ்ணுவிடம் அதிக பக்தி கொள்வான்.

10. வித்தையு மூன்று கற்பன் விவேகியா முன்கோ பத்தன்
புத்தியில் பெரியோ னாகும் பூமியை விருத்தி செய்வன்
எத்திசைப் புகழு மேற்பன் ஏவலா ளதிகஞ் சேர்ப்பன்
சித்தமே கரப்பு மில்லான் தீரமா மனத்த னாகும்.

10. மூன்று விதமான கல்வி கற்பான். விவேக முள்ளவன். முன்கோப முடையவன். புத்தியில் பெரியவன். விளைநிலங்களை விருத்தி செய்வான். எல்லாத் திக்குகளிலும் கீர்த்தி யடைவான். பணியாட்கள் அதிகமுள்ளவன். மனத்தில் கபட மில்லாதவன். தைரியமுள்ள மனத்தினன்.

11. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தாட்சிண்யன் பெரியோர் நேயன்
விந்தையாய்ப் பேசு வானும் விளைபுல மிருவூர் சேர்ப்பன்
நிந்தைக ளேற்கா னாகும் நினைத்தகா ரியமு டிப்பன்
நந்தியு மாடு விருத்தி நராதிபர் மெச்ச வாழ்வன்.

11. தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்துவருவான். தாட்சிணிய முடையவன். பெரியோர்களுக்குப் பிரியன். வேடிக்கையாகப் பேசுபவன். இரு ஊர்களில் விளைநிலங்களைச் சேர்ப்பான். பழிகளை அடையாதவன். எண்ணிய காரியங்களை முடிக்கும் திறமையுள்ளவன். பசு எருது ஆடு முதலிய கால்நடைகள் அதிக முடையவன். அரசர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான்.

12. துரவுகள் சோலை செய்வன் துறவோருக் கன்ன மீவன்
திருமகள் வாச முண்டு செம்பஞ்சுக் கட்டில் சோபா
மருவிடும் பெண்கள் மோகன் வாக்கதைக் காப்பா னாகும்
பெருமையாய்ச் சகடு மேற்பன் பேதையே கேட்டி டாயே.

[1] மன்மதன்.

12. கிணறுகள் தோட்டம் முதலியன செய்விப்பான். துறவிகட்கு அன்னமளிப்பான். இலட்சுமி இவள் வீட்டில் வசித்து வருவாள். நல்ல இலவம்பஞ்சுக்கட்டில் மெத்தை சோபா முதலியன உள்ளவன். பெண்கள்மீது மோகமுள்ளவன். சொன்ன சொல்லைக் காப்பாற்றுவான். பெருமையுள்ள வண்டி முதலிய வாகனங்கள் உள்ளவன். தாயே ! கேளுங்கள்.

13. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோ முன்பெண் ரண்டு
அன்னவர் தீர்க்க மெய்தும் அவன்பின்னு லாண்பா லொன்று
கன்னியு மவ்வாறு தீர்க்கங் கழறுவோம் பின்பால் சேதி
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

13. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். மூத்த சகோதரிகள் இருவர் நீண்ட ஆயுளுள்ளவர்கள். இவனுக்கு இளைய சகோதரன் ஒருவனும் இளைய சகோதரி ஒருத்தியும் பிறந்து தீர்க்காயுளுள்ள வர்களாவார்கள். பின் பாகத்தில் அவர்களுடைய செய்திகளைக் கூறுகின் றோம். உயர்ந்த கணவனையடைந்த உத்தமியே! கேளுங்கள்.

14. உதித்தவன் மணத்தின் காலம் உரைக்கின்றோ மீரெட் டாண்டில்
அதிசதி வடமேல் திக்கில் மாதுரு வர்க்க நேரும்
அதிபதி குணத்தைச் சொல்வோம் அன்னம்போல் சாய லொக்கும்
சதியிலா மனத்த ளாகும் சற்பாத்திரி யோக சாலி.

14. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். பதினாறும் வயதில் வடமேற்குத் திக்கிலிருந்து தன் தாயினுடைய வர்க்கத் திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அன்னத்தைப்போன்ற அழகுள்ளவள். தீங்கில்லா மனத்தினள். சற் பாத்திரி யோக முள்ளவள்.

15. பந்துவுக் கினிய ளாகும் பர்த்தாவின் மனத்துக் கேற்றோள்
சிந்தையு நல்ல தாகும் சிறுத்தோரை யாத ரிப்பள்
நிந்தைக ளேற்கா ளாகும் நிமலியுஞ் சீலி யாவள்
அந்தவள் யோக சாலி ஆயுசு விருத்தி யென்றோம்.

15. தன் சுற்றத்தாருக்கு இனியவள். தன் கணவன் மனத்துக் இனியவள். நல்ல மன முள்ளவள். துன்பமடைந்தவர்களைக் காப்பாள். பழிகள் அடையாதவள். நல்லொழுக்க முள்ளவள். யோக முள்ளவள். நீண்ட ஆயுளுள்ளவள் என்று கூறுகின்றோம்.

16. அத்திரி முனிவர் சொல்வார் அவனுக்குத் தாரம் ரண்டு
சித்தமாய் நேரு மென்றோம் செப்புவீ ரந்தச் சங்கை
பத்தினித் தானத தோனும் பதினொன்றில் சரத்தி லொன்றில்
குத்தமாய்ச் சேயும் ரண்டில் குறைமதி யெட்டில் தங்க ;

**16.** அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் ஏற்படுவர். இது திண்ணம் என்று சொல்லுகின்றோம். அதற்குக் காரணம் கூறுங்கள் ? ஏழாம் வீட்டுக்குரிய குரு பதினொன்றாம் ஸ்தானத்தில் சர ராசியில் இருப்பதாலும், தீங்காகச் செவ்வாய் குடும்ப ஸ்தானத்தில் (கடகத்தில்) இருப்பதாலும், சந்திரனும் எட்டாமிடத்தில் இருப்பதாலும் ;

17. பாரியு மிரண்டு வென்றோம் பராசரு மறுத்துச் சொல்வார்
காரியு மாட்சி யாகக் கனகனு மேழைப் பார்க்கத்
தீரமாய் நாலோ னுச்சம் செங்கதிர் புகரு மூன்றில்
கூறுவோந் தார மொன்றே கோதையு மிவன்முன் னாலே ;

**17.** இரு மனைவியர் தோன்றுவர் என்று சொன்னோம். பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். சனி ஆட்சியாக இருப்பதாலும், குரு ஏழாம் வீட்டைப் பார்ப்பதாலும், புதன் உச்சமாக (ஆட்சியாக) இருப்பதாலும், சுக்கிரன் மூன்றாமிடத்தில் இருப்பதாலும் மனைவி ஒருத்தியே என்றோம். அவளும் இவனுக்கு முன்பாகவே ;

18. மரிப்பளா மென்று சொல்வோ மறைகின்றோ மந்தந் தன்னில்
பெரும்புதல் வர்கள்ப லத்தைப் பேசுவோ மினிமே லாக
இருநான்கு தோன்று மென்றோம் ஏகிடுஞ் சிலவே தாமும்
திறமிகு வாண்பால் ரண்டு செல்விமார் மூவர் தீர்க்கம்.

**18.** அவனுடைய கடைசிக் காலத்தில் இறந்து விடுவாள் என்று சொல்கின்றோம். புத்திர பலத்தைச் சொல்கின்றோம். எட்டுப் பேர் தோன்றுவார்கள். அவர்களில் சிலர் நிலையார். திறமையுள்ள இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்று சொன்னோம்.

19. முதல்தோன்று மாறுஞ் சேதம் மொழிகின்றோ மிவனின் பூர்வம்
அதிதிவாழ் காளாத்தி தன்னில் அருளினன் சத்ரிய னுகப்
பதியினில் திருவு முண்டாய்ப் பாவையு மதலை யுண்டாய்
நிதிமிக வுடைய னுகி நீத்தோர்க்குத் தாக மீந்து ;

**19.** முதலில் பிறந்த ஆறு குழந்தைகளும் நிலையா. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். துறவிகள் வாழ்ந்து வரும் திருக் காளத்தியில் சத்திரிய குலத்தில் பிறந்தான். வீட்டில் இலக்குமி வசித்து வருவாள். மனைவி மக்களைப் பெற்று மிகுந்த செல்வவானாக வாழ்ந்து, துறவிகட்கு அன்னமளித்து;

20. அரிபத்தி கொண்டு வின்னேன் அந்தகன்நகரஞ் சென்று
பிரமனுல் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
திருமகன் யோகச் சேதி செப்புவோ மினிமே லாகப்
பொருள்விருத்தி சல்யங் காணுன் புண்ணிய மனத்த னுகும்;

**20.** திருமாலிடம் பக்திகொண்டு வாழ்ந்து, பிறகு மாணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறப்பான் என்று சொல்லுகின்றோம். ஜாதகனுடைய யோகச் செய்திகளைக் கூறுகின்றோம். பொருள் அதிகமாகும். கடன் உபத்ரவ மில்லாதவன். புண்ணியமான மன முள்ளவன்.

**21.** வடதிசைக் குபேரன் போல வாழ்வனுவா மிந்தப் பாலன்
திடமதாய்க் குடும்ப மேற்பன் சனவுப காரி யாகும்
உடன்துணை காப்பா னுகும் உண்மையா மனத்த னுகும்
விடவாக்கன் வேறு வில்லம் வித்தகன் செய்வா னுகும்.

**21.** வடக்குத் திசையின் அதிபதியான குபேரன் போல் வாழ்ந்து வருவான். செழிப்புள்ள குடும்பத்தை யடைவான். ஜனங்களுக்கு உபகாரி. உடன் பிறந்த சகோதரனை ஆதரிப்பான். உண்மையுள்ள மனத்தினன். விஷவாக்குள்ளவன். (கொடுமையாகப் பேசுபவன்.) வேறு வீடு கட்டுவான்.

**22.** யோகமெவ் விதமாய்ச் சொன்னீ ருரைப்பீர்க ளந்தச் சங்கை
ஆகம னிலாப மேற [1]அம்புலி மகனும் நாலில்
நாகமு மூன்றில் தங்க நளயோகம் பேரி யோகம்
பாகலட் சுமியோ கங்கள் பகர்ந்தன மூன்று யோகம்.

**22.** ஜாதகனுக்கு யோகம் ஏற்படும் என்று எப்படிச் சொன்னீர்கள்? அதைக் கூறுங்கள். குரு லாப ஸ்தானத்தில் இருப்பதாலும், புதன் நாலில் இருப்பதாலும், ராகு மூன்றுமிடத்தில் இருப்பதாலும், நளயோகம் பேரி யோகம் பாகலட்சுமி யோகம் ஆக மூன்று யோகங்கள் ஏற்படும் என்று சொன்னோம்.

**வெறு**

**23.** சொல்லும் விசால நேந்திரமுந்
துலங்குன் னதனுய்ச் சொரூபனுமாய்க்
கல்வி யுளனு யுதிதத்வனுங்
கீர்த்தி பிரபலனுய்த் தான்வாழ்வன்
நல்ல குணமுந் தருமனுமாய்
நாடுங் கிரய விக்கிரய
வல்ல வனுமாய்ப் பரதாரம்
வஞ்சித் திருப்பான் வஞ்சனுமாய்;

**23.** அழகிய பேச்சுடையவனுகவும், விசாலமான கண்களுடையவனுயும், உயர்ந்ததும் அழகுள்ளதுமான சரீரமுடையவனுயும், கல்வியறிவுள்ளவனு மாகவும், உயர்ந்த புகழுடையவனுயும், பிரபலமான கீர்த்திமானுகவும், நற்குணமும் தருமசிந்தனையுமுள்ளவனுயும், நிலங்களின் மேல் சாமார்த் தியமாக கொடுக்கல் வாங்கல் செய்யும் இயல்பினனுகவும், பிறர் மனைவியை வைத்திருப்பவனுக்கு விரோதியாகவும்;

[1]. புதன்.

24. பாலகன் வாழ்வா ளாகும் பாவைமுன் துணைவி சேதி
மால்மனை யொப்ப தாகும் வசனிப்பாள் சுகமாய் வார்த்தை
காலத்தை யறிந்து ரைப்பாள் கணவனுக் கினிய ளாகும்
சீலியா முன்கோ பத்தாள் சீக்கிர நடையு மாவள்.

24. வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய மூத்த சகோதரியின் செய்தி களைச் சொல்லுகின்றோம். இலக்குமியைப் போன்றவள். இனிமையாகப் பேசுபவள். வருங்காலத்தை யறிந்து சொல்லக்கூடியவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். நல்லொழுக்க முள்ளவள். முன்கோபி. விரைவினில் கோபங்கொள்வாள்.

25. பெரிதான குடும்பந் தன்னில் புகுவளாம் வறுமை காணாள்
குறையென்றோர்க் குதவி செய்வள் குலமதிப் புடனே வாழ்வள்
அரிவைக்குச் சுதாரண் மூன்று அம்பிகை மார்க ளவ்வாறு
திருகிலா தீர்க்க மெய்துஞ் செல்வதி வயது முண்டு.

25. பெரிய குடும்பத்தில் வாழ்க்கைப்படுவாள். தரித்திரம் அடையாதவள். கஷ்டம் அடைந்தவர்கட்கு உபகாரி. தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்வள். அவளுக்கு மூன்று புதல்வர்களும் மூன்று புதல்விகளும் தோன்றித் தீர்க்காயுளுள்ளவர்கள். இவர்களும் நீண்ட ஆயுளுள்ளவர்களாகும்.

26. மாரனும் வடமேல் நேரு மாதுவும் போன பின்பு
பாரிய குடும்ப மேற்பள் பாவையின் துணைவி சேதி
கூறுவோஞ் சிவந்த மேனி குலமதிப் புடனே வாழ்வள்
பாரினில் வறுமை காணாள் பசித்தோர்க்குத் தாக மீவள்.

26. கணவன் வடமேற்குத் திசையிலிருந்து வாய்ப்பான். அவனை யடைந்த பிறகு பெரும் குடும்பத்தையடைவாள். அவளுடைய சகோதரியின் செய்தியைக் கூறுகின்றோம். சிவந்த உடலுள்ளவள். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்வாள். உலகில் வறுமை இல்லாதவள். பசியுடன் வந்தவர்கட்கு நீர் அன்னமளிப்பாள்.

27. மங்கைக்கு வரனுந் தென்கீழ் மைந்தர்க ளாண்பால் ரண்டு
தங்கிடுங் கன்னி யொன்று சாற்றுவோந் தீர்க்க மாக
நங்கையுஞ் சுகமாய் வாழ்வள் நாயகி தீர்க்க சீவி
அங்கவள் துணைவ னரிதாம் அம்பிகை யாளே கேளாய்.

27. அவளுக்குத் தென் கிழக்குத் திக்கிலிருந்து கணவன் வாய்ப்பான். இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் தோன்றித் தீர்க்க ஆயுள்ளவர்கள். இவளும் சௌக்கியமாக வாழ்ந்து நீண்ட ஆயுளுள்ளவள். அவளுக்குத் துணைவர் அரிதாகும். தாயே! கேளுங்கள்.

28. மாதுரு குணத்தைச் சொல்வோ மாயன்தன் மனைபோ லொப்பாம்
சீதள மலர்மு கத்தாள் சனவுப காரி யாவள்
பாதக மனமில் லாதாள் பர்த்தாவுக் கினிய ளாகும்
காதலி துணையாண் ரண்டு கன்னியு மொன்று தீர்க்கம்.

28. ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றோம். இலக்குமியைப் போன்றவள். தாமரையைப்போன்ற முகமுள்ளவள். ஜனங்களுக்கு உதவி செய்பவள். தீய மனமில்லாதவள். தன் கணவனுக்குப் பிரிய மானவள். அவளுக்குச் சகோதரர் இருவரும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுளுள்ளவர்கள்.

29. இல்லமும் வடமே லாகும் இவள்துணை யொருவன் தானும்
செல்லுவான் தன்பக் கத்தில் சிறப்புற்று வாழ்வா னாகும்
அல்லலா யொருவன் தானும் அசையாமல் வாழ்வா னாகும்
சல்லிய முடைய ராவர் சாற்றுவோம் பின்பால் சேதி.

29. வீடு வடமேற்குத் திசையிலுள்ளது. இவளுடைய சகோதரன் ஒருவன் சிறப்புடன் நன்கு வாழ்ந்து வருவான். மற்றவன் துன்பங் களுடன் இருப்பிடத்திலேயே வாழ்ந்து இருப்பான். அவர்களுடைய செய்தி களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம்.

30. அன்னையின் முன் ஜன்மத்தை அறிவிப்போந் தாயே கேளும்
எல்லையி லுயர்வ டதான எழில்கொங்கு நாட்டி லேதான்
புல்கினுள் மறைச்கு லத்தில் புகழான குடும்பி யாகித்
துன்மையாய்க் கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்.

30. தாயினுடைய முற்பிறப்பைப்பற்றிச் சொல்லுகின்றோம் தாயே! கேட்டிடுவாய். பூமியில் உயர்ந்த கொங்கு நாட்டில் அந்தண குலத்தில் பிறந்து, கீர்த்தியுடைய குடும்பத்தை யடைந்து வாழ்ந்து மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு,

31. வந்தவ ளென்று சொல்வோம் வதிட்டரு மறுத்துச் சொல்வார்
முந்திய குலமு தித்தோன் மேவுமிச் சென்மந் தன்னில்
தன்குலந் தாழ்வாய் வந்தச் சங்கையைச் சொல்லு மென்னச்
சந்ததம் விரத முட்டுச் செய்ததோர் பாவத் தாலே;

31. பிறந்தவள் என்று சொல்லுவோம். வசிஷ்ட முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். முற்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்தவள். இப் பிறவியில் குலம் தாழ்வாகப் பிறப்பதற்குக் காரணம் சொல்லுங்கள் என்று வினவ, அவள் விரதங்கள் முதலியவற்றை இயற்றாத பாவத்தால்;

32. பிறந்தனள் குலந்தாழ் வாகப் பூவையின் ஜன்மஞ் சொல்வோம்
திருகணு மலையி லேதாஞ் ஜனிப்பளாம் சைவச் சேயாய்ப்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பேதையும் வாழ்வா ளாகும்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

32. தாழ்வான குலத்தில் பிறந்தான் என்று சொன்னோம். அவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். திருத்தணி மலையில் சத்திரிய குலத்தில் பிறப்பாள் என்று சொல்லுவோம். பெருமையுடைய குடும்பத்தையடைந்து வாழ்ந்து வருவாள். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

33. ஆறுறு விரண்டா மாண்டில் அன்னைக்குக் கண்ட மெய்தும்
ராகுவின் தசையி லேதா நன்மதி புந்தி காலம்
தீரமாய் நடக்கு மென்றேஞ் செப்பின மொழிகுன் றுவே
பாரினில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

33. ஜாதகனுடைய முப்பத்தெட்டாம் வயதில் தாய்க்குக் கண்டம் ஏற்படும். ராகுமகா தசையில் சந்திரபுக்தியில் புதனின் அந்தரத்தில் திண்ணமாகக் கருமம் நடக்கும். கூறிய வார்த்தைகள் தவறு. உலகில் தவங்களை இயற்றும் பார்வதி தேவியே! கேளுங்கள்.

34. முப்பது வொன்று வாண்டில் விருச்சிக மாதந் தன்னில்
செப்புவோந் தந்தை கண்டஞ் சயமுனி தடுத்துச் சொல்வார்
ஒப்புடன் நாலாண் டுக்குள் ஒருகண்ட நேரு மென்றேம்
அப்படி நடவா தாகும் அந்தணன் மூன்றைப் பார்க்க.

34. ஜாதகனுடைய முப்பத்தோராம் வயதில் கார்த்திகை மாதத்தில் தந்தை மரணமடைவான். ஜய முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். ஜாதகனுக்கு நான்கு வயதுக்குள்ளாகவே கண்டம் நேரும். ஆனால் குரு மூன்றுமிடத்தைப் பார்ப்பதால் அப்படி நடக்காது.

35. பின்துணை விருத்தி யென்றேம் பேசுவோ மிவன்பின் ஜன்மம்
உன்னத வரங்கந் தன்னில் உதிப்பனும் பிரம சேயாய்
மன்னனுக் கிச்சென் மத்தில் மருவின புண்ய மென்ன
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு முகுந்தன்மேல் பத்தி யாயும்;

35. சகோதர விருத்தி திண்ணமாக ஏற்படும். தந்தையின் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். உயர்வான திருவரங்கத்தில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை இப்பிறவியில் செய்த நற்காரியங்கள் என்ன? பெரியோர்கட்குத் தொண்டுகள் செய்து வந்த தாலும், கிருஷ்ணபரமாத்மாவின்மீது பக்திகொண்டிருந்ததாலும்;

36. சிலர்க்குவா பத்தைக் காத்துந் தீரனும் வாழ்வ தாலே
குலவுவான் பிரம சேயாய்க் குழவிக்கு வறுபா னெட்டில்
கலைமாதம் வளர்பக்கத்தில் கார்த்திகை நாளி லேதான்
விலகிடு மாவி யென்றேம் விரதருந் தடுத்துச் சொல்வார்.

36. சில பேருக்கு ஏற்பட்ட ஆபத்தைத் தீர்த்து வந்தும் வாழ்ந்திருப்ப தால், அடுத்த பிறவியில் அந்தணகுலத்தில் பிறப்பான். ஜாதகன் தனது அறுபத்தெட்டாம் வயதில் தை மாதம் வளர்பிறைக் கிருத்திகை நட்சத்திரத்தில் மரணமடைவான். விரதர் மறுத்துச் சொல்லுகின்றார்.

37. ஐந்தாண்டுள் பால னுக்கு அற்புத கண்டம் ரண்டு
வந்திடு மென்று சொல்வோம் வசிட்டருந் தடுத்துச் சொல்வார்
மந்தனு மெட்டி லாட்சி யவன்தசை நடக்குங் காலே
இந்தவ னுடல மேகும் ஈச்வரி கேட்டி டாயே.

37. ஜாதகனுக்கு ஐந்து வருடங்களுக்குள் அதிசயமான கண்டம் ஒன்றுண்டு என்று கூறுகின்றோம். வஸிஷ்ட முனிவர் மறுத்துச் சொல்லு கின்றார். சனி எட்டா மிடத்தில் ஆட்சியாக இருப்பதால் அவனுடைய தசை நடக்கும்போது இவன் மரணமடைவான். தாயே ! கேளுங்கள்.

38. பின்ஜன்மஞ் சிறுபாக் கத்தில் பிறப்பனுங் கங்கைச் சேயாய்ப்
பொனபொரு ளுடைய னுகிப் புகழான குடும்ப மேற்பன்
........கன்னென மொழியை யொக்குங் காதலி கேட்டி டாயே.

38. மறு பிறவி சிறுபாக்கத்தில் வேளாள குலத்தவனுகப் பிறப்பான். பொன் பொருள் முதலியன உடையனுகி கீர்த்தியுள்ள குடும்பத்தை யடைந்து வாழ்வான்............... ...................... .... இனிய வார்த்தைகளையே பேசும் தேவியே ! கேளுங்கள்.

39. உதித்திடு காலந் தன்னில் உத்ராட மிரண்டாம் பாதம்
உதயவன் தசைநா லாண்டும் உறைந்திடுந் திங்கள் மூன்றும்
அதிகமாய்ச் செலவு முண்டு அவனில்லம் வேற தாகும்
சதியான பிணியு முண்டு சல்லிய முடைய னுகும்.

39. ஜாதகன் பிறக்கும்போது உத்தராட நட்சத்திரம் இரண்டாம் பாதம். சூரியமகாதசையில் பாக்கி நான்கு வருடங்களும் மூன்று மாதங்களு மாம். அதிகச் செலவு அதிகமாக ஏற்படும். அவனுக்கு வீடு வேருகும். தீங்குள்ள ரோகம் உண்டாகும். கடன் உபத்ரவம் ஏற்படும்.

# ஜாதகம் 84

1. பிறைகுசன் தேள தாகப் பொன்புகர் காரி மேடு
பரிதியும் ராகு புந்தி பத்திடங் கோல தாக
வருவது ஜன்மம் வீணே வரைகுவீர் பலனே யென்று
அரன்மனே யாளுங் கேட்க அத்திரி புகலு கின்றார்.

1. சந்திரன் செவ்வாய் விருச்சிகத்திலும், குரு சுக்கிரன் சனி தனுசிலும், சூரியன் ராகு புதன் துலாத்திலும், (கேது மேஷத்திலுமாக இருந்து) மிதுனம் இலக்கினமாக இருப்பின், பலனைச் சொல்லுங்கள், என்று சிவபெருமானின் தேவியாகிய பார்வதிதேவி கேட்க, அத்திரி முனிவர் உரைக்கின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| குரு சுக்கிரன் சனி | சந்திரன் செவ்வாய் | சூரியன் ராகு புதன் | |

2. இந்தசே யாளுஞ் ஜன்மம் இல்லமுங் கீழ்மேல் வீதி
தென்வாடை மாயோன் தென்கீழ் கிரியுமேல் பால தாகும்
அந்தரி கன்னி யுத்ரம் அரசர்கள் வாச மாகும்
முந்தின வூரே யாகு முயர்வான செட்டு வோங்கும்.

2. இஃது ஆண் மகனின் ஜாதகம். இவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு வரிசையில் உள்ளது. தென்கிழக்கில் ஒரு திருமாலின் ஆலயமும், மேற்குப் பக்கத்தில் ஒரு குன்றும், காளி கோயிலும், மாரியம்மன் கோயிலும், வடக்கில் உள்ளது. அஃது அரசர்கள் வசித்துவரும் ஒரு பெரிய ஊராகும். அங்கு உயர்ந்த வர்த்தகம் நடைபெறும்.

3. இத்தகை யடையா ளத்துள் இலகிய கெட்டி வீட்டில்
வித்தகன் கௌரி வர்க்கம் விளங்கின னிந்தப் பாலன்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையும் புத்ர யோகஞ்
சுத்தமாய் முன்பின் ஜன்மஞ் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இத்தகைய அடையாளங்களுள்ள ஊரில் ஒரு மச்சு வீட்டில் கௌரிகர் மரபில் ஜாதகன் தோன்றினான். அவனுடைய தந்தை தாய் மனைவி மக்கள் இவர்களின் யோகம் முற்பிறவி மறுபிறவி ஆகிய எல்லாவற்றையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் துணையாண் காணன் சத்தியு மொருத்தி தீர்க்கம்
தந்தையின் சேதி சொல்வோந் தனதான்யச் செட்டுச் செய்வன்
தந்தமுந் தரள மொக்குந் தன்மனங் கவடு கொஞ்சம்
தந்தைசொல் கடவா னுகுஞ் சமர்த்தாக வார்த்தை சொல்வன்.

4. ஜாதகனுடைய தந்தைக்கு உடன் பிறந்த சகோதரர்கள் இல்லை. சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளுள்ளவள். தந்தையின் செய்திகளைக் கூறுகின்றோம். கொடுக்கல் வாங்கல், தானிய வியாபாரம் செய்து வருவான். முத்துக்களைப்போன்ற பற்களுள்ளவன். மனத்தில் சிறிது கபடமுள்ளவன். தன் தந்தையின் வார்த்தையை மீருதவன். சாமர்த்திய மாகப் பேசுபவன்.

5. ஆதிரைத் தேளாம் ராசி அணுகுவான் வறுமை காணன்
காதக மனமுங் கொஞ்சங் கடன்கொள்ளா னிடுக்க மில்லான்
சூதினுல் பொருளுஞ் சேர்ப்பன் துறவோர்மேல் பிரிய மில்லான்
போதன முடைய னுகும் புயங்கன்போல் கோப மேற்பன்.

5. திருவாதிரை நட்சத்திரத்தில் விருச்சிக லக்கினத்தில் பிறந்தவன். தரித்திர மில்லாதவன். சிறிது சூதுள்ள மனத்தன். கடன் படாதவன். துன்பங்க ளில்லாதவன். சூதினுல் செல்வங்கள் சேர்ப்பான். துறவிகளின் மீது அன்பு இல்லாதவன். மிகுந்த செல்வங்கள் உள்ளவன் சர்ப்பம்போல் கோபங்கொள்வான்.

6. நல்லவன் நல்ல வர்க்கு லண்டோர்க்கு மிண்ட னுவன்
புல்லிய புத்தி கொஞ்சம் பூமியுஞ் சேர்ப்பா னுகும்
வெல்லுவா னெதிரி தன்னை வேண்டினேர்க் குதவி செய்வன்
அல்லலெப் போதுங் காணன் அடாவடி கொஞ்ச முண்டு.

6. நல்லவருக்கு நல்லவனுகவும் தீயருக்குத் தீயனுகவும் இருப்பான். அற்ப புத்தி சிறிதுடையவன். பூமியைப் பெருக்குவான். எதிரிகளை ஜயிப்பான். தன்னை வேண்டி யாசித்தவர்கட்கு உபகாரம் செய்பவன். துன்பம் ஒருபோதும் அடையாதவன். சிறிது அடாவடியாக இருப்பான்.

7. உண்டியில் வறுமை காணன் உறைப்பொடு புளிப்பி லிச்சை
தண்டமிழ் நுணுக்கந் தேரான் சகடுவா சனமு முண்டு
கண்டித முரையா னுகுங் காசுமே லாசை யுள்ளான்
குண்டைகோ விருத்தி யற்பங் கோதைய ரிட்ட னுவன்.

7. சாப்பாட்டில் வறுமை யில்லாதவன். சாப்பாட்டில் காரத்திலும் புளிப்பிலும் பிரியமுள்ளவன். நல்ல தமிழிலக்கியங்களை நன்கு அறியாதவன். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். கண்டிப்பாகப் பேசாதவன். காசின்மேல் பிரியமுள்ளவன். பசு எருதுகள் விருத்தி யிரா. பெண்கள்மீது மையல் கொள்வான்.

8. பின்துணை யாண்பால் தோடஞ் சாற்றுவீ ரந்தச் சங்கை
தன்மையாய்க் கேது லாபந் தொடர்ந்ததாய்ச் சொன்னோம் யாங்கள்
முன்ஜன்ம வினையுங் கொஞ்ச மேவிற்று வென்று சொல்வோம்
என்னவூழ் செய்தா னத்தை இயம்புவீர் முனியே நீர்தாம்.

8. உடன் பிறந்தவர்களில் சகோதரருக்குத் தோஷமுண்டு. அதற்குக் காரணம் சொல்லுங்கள். கேது லாபஸ்தானமாகிய மேஷத்தில் இருப்பதால் நாங்கள் அவ்விதம் சொன்னோம். முற்பிறவியின் தீவினையும் ஏற்பட்டது என்று சொல்லுகின்றோம். என்ன தீவினை செய்தான் என்பதைக் கூறுங்கள்; முனிவரே! நீர்தாம்.

9. இவனுடை முன்ஜன் மத்தை இயம்புவோம் விரிஞ்சி தன்னில்
பவமுள வைச்ய சேயாய்ப் பிறந்துமே வணிபஞ் செய்து
அவனுமே வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
தவசிகட் கிடைஞ்சல் செய்தான் சார்ந்தது வந்தத் தோடம்.

9. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். விரிஞ்சி நாட்டில், வைசிய குலத்தில் பிறந்து, வர்த்தகம் செய்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். துறவிகட்குச் சில தீங்குகள் விளைவித்தான்.

10. துணைபாகந் தாரா மல்தான் செய்தனன் துணைவன் வெட்கிக்
கனமுள பொருளீ யாமல் கடனதைத் தந்த பாவி
வினையாகப் பின்பா கத்தில் விளங்காது துணையா னுந்தான்
மனைவியின் துணைவர் நாஸ்தி மைந்தரு முதலில் சேதம்.

10. தன் உடன் பிறந்த சகோதரனுக்குரிய பாகத்தைத் தராமல் இருந்தான். சகோதரனும், எனக்குரிய பொருளைத் தராமல் கடனை மாத்திரம் கொடுத்த பாவியே! நீ எடுக்கும் அடுத்த பிறவியில், சகோதரர் இல்லாமலும், மனைவிக்கும் சகோதரர் இல்லாமலும், முதலில் தோன்றும் புத்திரர்கள் இறந்தும்; வாழ்க்கை நடத்துவாய்.

11. இன்னமும் பலவாறு சொன்னான் எய்திற்று வந்தச் சாபம்
மன்னனு மந்தி யத்தில் வறுமைகள் கொஞ்ச முண்டாய்
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு மேலான தலங்கள் சென்று
தென்திசை கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்;

11. இன்னும் பல விதம் கூறினான். அந்தத் தோஷம் ஏற்பட்டது. ஜாதகனும் தன் கடைசிக்காலத்தில் சிறிது வறுமையை யடைந்து, பெரியோர்களுக்குத் தொண்டுகள் பல செய்து, பல புண்ணியத்தலங்களுக்குச் சென்று மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு;

12. வந்தவ னென்று சொல்வோ மருவிடு முன்னூழ்த் தோடம்
தன்சுத ராண்பால் காணான் சத்தியின் வர்க்க நாஸ்தி
துன்மையா முதலில் புத்ரர் சொல்லிய குணத்தா னுக்கு
இன்னவ னுதிப்பா னாகும் இயம்புவோ மிவன்கு ணத்தை.

12. பிறந்தவன் என்று சொல்லுகின்றேம். முற்பிறவியின் தோஷம் ஏற்பட்டு, சகோதரரில்லாதவனுகவும், மனைவியின் வர்க்கத்திலும் உடன் பிறந்தவர்களில்லாதவனுகவுமானுன். முதலில் தோன்றும் புத்திரர்கள் நிலையார். இங்ஙனம் கூறப்பட்ட தந்தைக்கு ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம்.

13. கல்விமான் கடவுள் பத்திக் கண்முகம் வசிய முண்டு
இல்லையென் றுரைக்க மாட்டான் இடர்செய்யான் யாவ ருக்கும்
வல்லியர் மோக ளுவன் வணிபங்கள் பலவாய்ச் செய்வன்
சல்லியங் கொள்ளா ளுகுந் தந்தைக்கு மேலாய் வாழ்வன்.

13. கல்வியறி வுள்ளவன். தெய்வபக்தி யுடையவன். வசீகரமாக கண் முகம் இவைகளுள்ளவன். யாசித்தவருக்கு இல்லையென்று சொல்லாதவன். ஒருவருக்கும் துன்பங்கள் செய்யாதவன். பெண்கள்மீது விருப்பங் கொள்வான். பலவிதமான வியாபாரம் செய்துவருவான். கடன்படாதவன். தன் தந்தைக்கு மேன்மையாக வாழ்க்கை நடத்துவான்.

14. அன்னிய பாடை மேன்மை அரசர்க்கு மிவன்சொல் மேன்மை
பொன்னது வதிகஞ் சேர்ப்பன் புதையலு மமைப்பா ளுகும்
மின்னிடை யார்கள் நேயன் வேண்டிஞேர்க் குதவி செய்வன்
தன்கர மாலின் ரேகைத் தாமரை ரேகை யுண்டு.

14. பிற பாஷையில் தேர்ச்சி பெறுவான். இவனுடைய வார்த்தைகளில் அரசாங்கத்தாருக்கு மதிப்பு உண்டு. பொருளை அதிகமாகச் சேர்ப்பான். புதையல் வைப்பான். மெல்லிய இடையையுடைய பெண்களின்மீது மோக முள்ளவன். தன்னை யாசித்தவர்கட்கு உபகாரி. கைகளில் விஷ்ணுரேகை சாமரைரேகைகளுள்ளவன்.

15. இருமூன்று வில்லஞ் செய்வன் ஏவலா ளுடைய ளுகும்
பெருமையும் புகழு மேற்பன் புண்ணிய தலங்கள் செல்வன்
அறமதி லிச்சை யுண்டு ஆபத்தைச் சிலர்க்குக் காப்பன்
மருவரை வசித்தே வெல்வன் மாந்தளிர் மேனி யாவன்.

15. ஆறு வீடுகள் கட்டுவான். பணியாட்கள் உள்ளவன். பெருமையும கீர்த்தியும் அடைவான். பல புண்ணியதலங்களுக்குச் செல்வான். தருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். சில பேருக்குற்ற ஆபத்தைக் காப்பான். விரோதிகளை உடனிருந்தே ஜயிப்பான். மாந்தளிர்போன்ற மென்மையான சரீர முடையவன்.

16. பலருக்கும் பந்தி னர்க்கும் பரிந்துப சாரஞ் செய்வன்
நலமதை யெவர்க்குஞ் செய்வன் நற்றந்தை பூமி விருத்தி
தலந்திருப் பணியுஞ் செய்வன் சத்துரு சயமே கொள்வன்
மலையிறை மகளே யாங்கள் வழுத்திஞெம் பாலன் தீர்க்கம்.

16. தன்பந்துஜனங்களுக்கும் மற்றவர்கட்கும் அன்புடன் உபசாரம் செய்வான். எல்லோருக்கும் நன்மையையே செய்து வருவான். தந்தையின் பூமியைப் பெருக்குவான். ஆலயத்திருப்பணிகள் செய்வான். விரோதிகளை வெல்வான். மலைபரசனின் புதல்வியே! நாங்கள் கூறிய பாலனுக்கு ஆயுள் நீண்டதாக விருக்கும்.

17. தன்துணை முன்னோர் நட்டந் தங்கிடும் பின்னு ணென்று
கன்னிகை யவ்வாறு தீர்க்கங் கழறுவோம் பின்பால் சேதி
இன்னவன் மணத்தின் காலம் இருபது வாண்டு தன்னில்
கன்னிகை மேல்பால் நேருங் கழறுவோ மவள்கு ணத்தை.

17. ஜாதகனுடைய முன் பிறந்த சகோதரர்கள் நிலையார். பின் பிறந்த சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்கள் ஆவார்கள். அவர்களுடைய செய்திகளைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். இருபதாம் வயதில் மேற்குப் பக்கத்திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம்.

18. அன்னம்போல் நடையு மொக்கும் அடிசிலுக் கினிய ளாகும்
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனத்துக் கேத்தோள்
அன்னியர் குற்றஞ் சொல்லாள் ஆபத்தைச் சிலர்க்குக் காப்பள்
அன்னவள் யோக சாலி அற்புத வார்த்தை சொல்வள்.

18. அன்னத்தைப்போன்ற அழகிய நடையுள்ளவள். சுவையுடன் சமைப்பதில் வல்லவள். அன்புடன் அன்னமளிப்பாள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். பிறர்மீது குற்றம் கூறுதவள். சிலருக்கு ஏற்பட்ட ஆபத்தைக் காப்பாள். யோகமுள்ளவள். அதிசயமாகப் பேசுவாள்.

19. பால்பாக்ய முடைய ளாகும் பதர்குண மில்லா ளாகும்
சீலியாம் விரத மேற்பள் திருமாலின் மனையை யொப்பாள்
வேல்விழி வயது தீர்க்க மேவிடும் பித்த தேகி
காலத்தை யறிந்து ரைப்பள் கணவன்தன் மனத்துக் கேத்தோள்.

19. புத்திர பாக்கிய முள்ளவள். அற்பகுணங்களில்லாதவள். நல்லொழுக்க முள்ளவள். நோன்புகள் நோற்பவள். இலக்குமியைப் போன்றவள். வேலைப்போல் கூரிய விழிகளையுடையவள். நீண்ட ஆயுளுள்ளவள். பித்தச் சூட்டு நோயுள்ளவள். வரும் காலத்தை முன்கூட்டி அறியும் சக்தியுள்ளவள். தன் கணவன் மனத்துக் கேற்றவள்.

20. புத்திர பலத்தைச் சொல்வேன் பொருந்தாது முதலில் நட்டம்
சுத்தமா யாண்பால் ரண்டு செல்விமா ரவ்வாறு தீர்க்கம்
குத்தங்கள் முதலி லென்று கூறினீர் விபரஞ் சொல்வீர்
புத்திர தானந் தன்னில் பணிரவி புதனுந் தங்க;

20. ஜாதகனது புத்திர பலத்தைச் சொல்லுகின்றேம். முதலில் தோன்றும் புத்திரர்கள் நிலையார். இரு புதல்வர்களும், இரு புதல்விகளும் பிறந்து தீர்க்காயுளுள்ளவர்கள். முதலில் பிறக்கும் குழந்தைகட்குத் தீங்கு ஏற்படக் காரணம் சொல்லுங்கள். புத்திரஸ்தான (ஐந்தாமிடமாகிய துலா)த்தில், ராகு சூரியன் புதன் இவர்கள் இருப்பதால் ;

21. சொல்லினே மந்தச் சங்கைச் சுதனுடைப் பூர்வஞ் சொல்வோம்
எல்லையி லுயர்வ தான எழில்கொங்கு நாட்டி லேதான்
நல்லவே ளாள னாக நல்கியே வறுமை யின்றிச்
செல்வங்கள் மிகவுண் டாகிச் சேயனு வாழு நாளில் ;

21. அந்தத் தோஷம் சொன்னேம். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். பூமியில் உயர்ந்த கொங்கு நாட்டில், நலமுள்ள ஒரு வேளாளனுக்குப் புதல்வனாகப் பிறந்து, வறுமையின்றி வாழ்ந்து, செல்வங்கள் பெருகி, வசித்து வரும்போது ;

22. இல்லத்தில் வெகுநா ளாக இருந்தது நாக மொன்று
தொல்லையாய் மகுடங் கொண்டு தோன்றிற்று முற்றந் தன்னில்
வல்லவன் கழியால் வாட்ட மறலியின் பதிக்குச் செல்லப்
புல்கிற்று வந்தத் தோடம் பூவையே கேட்டி டாயே.

22. ஜாதகனுடைய வீட்டில் வெகு நாட்களாக வசித்து வந்த சர்ப்பம் ஒன்று, கோபத்துடன் படமெடுத்து இவனுடைய நடு வீட்டில் ஆட, அதை இவன் கழியினால் அடிக்க, அஃது இறந்தது. அந்தத் தோஷம் ஏற்பட்டது. தாயே ! கேளுங்கள்.

23. மாரனுக் கந்தி யத்தில் மைந்தர்கள் தோட முண்டாய்த்
தீரமா மனங்க ளின்றிச் சேதுவின் பதிக்குச் சென்று
பாரினில் பஞ்சைக் கன்னம் பகர்ந்துமே மரண மாகி
ஆரியன் வரையப் பட்டு அணுகுவா னிந்தப் பாலன்.

23. ஜாதகன் தன் கடைசிக் காலத்தில், புத்திரர்கட்குத் தோஷ மேற்பட்டு, மனச்சாந்தி ஏற்படாமல் சேதுவுக்குச் சென்று, உலகில் ஏழைகட்கு அன்னமளித்து வந்து, பிறகு மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன், என்றேம்.

24. பாலகன் யோகச் சேதி பகருவோந் தாயே யாங்கள்
சீலவான் ஊக வானுஞ் சிறப்புள குடும்பி யாவன்
ஞாலங்கள் விருத்தி செய்வன் ராசபூ சிதமு மாவன்
மால்பத்தி யுடைய னாகு மாற்றரை நசிக்க வைப்பன்.

24. ஜாதகனுடைய யோகச் செய்திகளை இனிக் கூறுகின்றேம், நாங்கள். நல்லொழுக்க முள்ளவன். ஊகமுள்ளவன். சிறப்புள்ள குடும்பத்தை யடைவான். பூமியைப் பெருக்குவான். அரசரால் வெகுமானிக்கப்படுவான். திருமாலின்மீது பக்தி யுள்ளவன். விரோதிகளை நாசம் செய்வான்.

25. பூமியுஞ் சிலவூர் சேர்ப்பன் புண்ணிய மனத்த னாகும்
தாமத குணமுங் கொஞ்சங் காலாள்க ளுடைய னாகும்
நேமங்கள் தவறு னாகு நினைத்தகா ரியமு டிப்பன்
காமனை விருப்பங் கொள்வன் கட்டுரை பகரா னாகும்.

**25.** சில ஊர்களில் பூமியைச் சேர்ப்பான். புண்ணியமான மனத்தினான். தாமதமான குணமுள்ளவன். சில ஏவலாட்கள் உள்ளவன். தன்னுடைய நியமங்கள் தவறுதவன். எண்ணிய காரியத்தை முடிக்க வல்லவன். மன்மதனை விருப்பங்கள் கொள்வன் (சிற்றின்பத்தில் விருப்பமுடையவன்). பொய் போாதவன்.

26. யோகமெவ் விதமாய்ச் சொன்னீ ருரைப்பீர்க ளந்தச் சங்கை
ஆகமன் சனியு மேழில் அலரியும் புதனு மைந்தில்
பாகமா யிருப்ப தாலே பருவத யோக மொன்று
தோகையே தரும கரும யோகமொன் றுரைக்க லாமே.

**26.** ஜாதகனுக்கு யோகம் ஏற்படும் என்று எங்ஙனம் கூறினீர்கள் ? அதற்குக் காரணம் சொல்லுங்கள். குருவும் சனியும் ஏழில் இருப்பதாலும், சூரியனும் புதனும் ஐந்தாம் வீட்டில் இருப்பதாலும், **பருவத யோகம்** ஒன்றும் **தர்மகர்மாதிபதி யோகம்** ஒன்றும் சொல்லுகின்றோம்.

27. அதன்பலன் மனது தீரன் அஞ்சாத நெஞ்ச னாகும்
பதியது மூன்று முள்ளான் பகருமா குடும்ப மேற்பன்
நிதியது வன்னை யாலே நேர்ந்திடு மெட்டாண் டுக்குள்
சதிவழக் கதனால் நேருஞ் சாற்றின் மொழி குன்றுவே.

**27.** அதனுடைய பயனாவன : தைரியமுள்ள மனத்தினன். பயப்படாத நெஞ்சமுள்ளவன். மூன்று வீடுகள் உள்ளவன். நல்ல குடும்பத்தை யடைவான். தன் தாயால் பொருள் சேரும். அதுவும் ஜாதகனுடைய எட்டாம் வயதுக்குள் வழக்கினால் இவனுக்குச் சேரும். கூறிய வார்த்தைகள் தவறு.

28. காரியின் தசையில் பூர்வங் கனத்ததோர் வழக்கு நேரும்
சூர்யன்முன் பனிபோ லத்தான் தொலைந்திடுஞ் சயமே யாகும்
நாரியின் தன்னால் நேரு நசித்திடு மெதிரி தானும்
ஆறில்சே யிருப்ப தாலே வரைகிறோம் பின்பால் சேதி.

**28.** ஜாதகனுக்கு, சனிமகாதசை முதல் பாதத்தில் பெரியதொரு வழக்கு ஏற்படும். அஃது இரவியின் முன் பனிபோல் விலகிவிடும். வழக்கில் ஜயம் ஏற்படும். அதுவும் தன் தாயால் ஏற்படும். ஆறும் வீட்டில் **செவ்வாய்** இருப்பதால் விரோதிகள் நாசமடைவார்கள். பிற்பாகத்தில் விவரம் கூறுகின்றோம்.

29. மாதுரு குணத்தைச் சொல்வோ மாந்தளிர் மேனி யாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உரகன்போல் கோப மேற்பள்
பாதக மனமில் லாதாள் பதர்குண மில்லா ளாகும்
வேதனை யொருவர்க் கெண்ணாள் விரதங்கள் பூண்பா ளாகும்.

29. தாயினுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மாந்தளிர் போல் மென்மையான சரீரமுடையவள். சுகமாகப் பேசுபவள். சர்ப்பம்போல் கோபங்கொள்வாள். தீயமனமில்லாதவள். அற்பகுணங்களில்லாதவள். ஒருவருக்கும் தீங்குகள் செய்ய எண்ணாதவள். நோன்புகள் நோற்பாள்.

30. சொல்லது சுருக்க மெய்துந் துறவோருக் கன்ன மீவள்
இல்லையென் றுரைக்க மாட்டாள் யாவர்க்கு நல்லோ ளாவள்
மல்லுக்கு முன்செல் லாதாள் மாதுவும் யோக சாலி
பொல்லாரோ டிணக்கஞ் செய்யாள் பூஷண மதிக மேற்பள்.

30. அடக்கமாகப் பேசுபவள். துறவிகட்கு அன்னமளிப்பாள். யாசித்தவருக்கு இல்லையென்று கூறாதவள். எல்லோருக்கும் நல்லவளாக இருப்பாள். வீண் சண்டைக்கு முன்னால் செல்லாதவள். அதிருஷ்டமுள்ளவள். பொல்லாதவருடன் சேராதவள். அதிக ஆபரணங்களை அணிவாள்.

31. துணைவாக ளில்லா ளென்றோஞ் செப்புவீ ரந்தச் சங்கை
வினையாக மதிசே யாறில் மேவின பலத்தால் சொல்வோம்
கனமுடன் பூர்வந் தன்னில் கலந்தது வந்தத் தோடம்
வினையென்ன செய்தா ளத்தை விளம்புவீர் முனியே நீர்தாம்.

31. உடன் பிறந்த சகோதரரில்லாதவளென்றோம். அதற்குக் காரணம் சொல்லுங்கள். சந்திரன் செவ்வாய் ஆறும் வீட்டில் இருப்பதால் கூறுகின்றோம். தவிர, முற்பிறவியில் செய்த தீவினையும் ஏற்பட்டதால் தோஷம் சொன்னோம். என்ன தீவினைகள் செய்தாள்? அதைக் கூறுங்கள், முனிவரே! தாங்கள்.

32. முன்ஜன்ம மலாய்தே சத்தி லுத்தனள் கர்ண சேயாய்ப்
பொன்பொரு ளதிக முண்டாய்ப் புதல்வர்க ளதிக முண்டாய்
அன்னவள் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
தன்னில்ல மடைக்க லானுஞ் சார்ந்தது வெகுநா ளாக.

32. முற்பிறவியில் மலாய் நாட்டில் கருணீகர் வமிசத்தில் பிறந்தாள். பொன் பொருள் முதலியன உடையவளாகி, புத்திரர்களை அதிகமாகப் பெற்று வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன் வீட்டில் வெகு காலமாக ஒரு பட்சி வசித்துவந்தது.

33. கூட்டைத்தான் கலைத்தா ளென்றோங் குஞ்சுகள் மாண்ட வென்றோம்
கூடிற்று வந்தத் தோடங் கூறுவோம் வேறு வொன்று
வாடிய மனத்தோ ருக்கு வஞ்சனை யுணவில் செய்தாள்
நாடிற்று வந்தத் தோட நாயகி யந்தி யத்தில்;

33. அந்தக் கூட்டை இவள் கலைத்தாள். அதனால் அதனுடைய குஞ்சுகள் இறந்தன. அந்தத் தோஷம் ஏற்பட்டது. வேறு ஒன்றும் சொல்லுகின்றோம். பசியால் வாடியவர்களுக்குச் சாப்பாட்டில் வஞ்சனை செய்தாள். அந்தத் தோஷமும் இவளுக்கு ஏற்பட்டு, இவளும் தன் கடைசிக்காலத்தில்;

34. சுதர்தோடந் துணையுந் தோடந் தோன்றியே நதிக டந்து
பதிசேது சென்று மாது பறந்தனள் கால னூடு
விதியவன் வரையப் பட்டு விளங்கினு ளிந்த மாது
பதிபட்சி தோடத் தாலே பாவைக்குத் துணைவர் தோடம்.

34. புத்திர தோஷம் ஏற்பட்டது. சகோதர தோஷமும் ஏற்பட்டு, பல புண்ணிய நதிகளில் நீராடி, சேதுவுக்குச் சென்று நீராடி மரண மடைந்தாள். மீண்டும் பிரமதேவனல் படைக்கப்பட்டுப் பிறந்தாள், இவள் என்றேம். வீட்டில் உள்ள பட்சி யிறந்த தோஷத்தால் சகோதரர்களுக்குத் தோஷம் ஏற்பட்டது.

35. வஞ்சனை செய்த தோடம் வருஞ்சுதர் முதலில் நட்டம்
வஞ்சியும் வறுமை காணுள் வரைகிறே மிவள்பின் ஜன்மம்
தஞ்சையின் நகரந் தன்னில் ஜனிப்பளாஞ் சைவச் சேயாய்
மிஞ்சின பொருள்ப டைத்து வித்தகி வாழ்வா ளாகும்.

35. வஞ்சனை செய்த தோஷத்தால் முதலில் பிறக்கும் குழந்தைகட்குத் தோஷம் ஏற்பட்டது. வறுமை யடையாதவள். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். தஞ்சாவூர் நகரில் சைவ குலத்தவளாக பிறப்பாள். மிகுதியாகப் பொருளை யடைந்து வாழ்ந்து வருவாள் என்றேம்.

36. கருமகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
ஆருறு வாண்டு தன்னில் அவன்தந்தை கண்ட மெய்தும்
மறுஜன்மம் விரிஞ்சி தன்னில் வருவனும் வைச்யச் சேயாய்ப்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

36. ஜாதகனுடைய கரும காலங்களைச் சொல்லுங்கள், முனிவரே ! தாங்கள். ஜாதகனின் முப்பத்தாறும் வயதில் தந்தை மரண மடைவான். மறுபிறவியில் அவன் விரிஞ்சிநாட்டில் வைசியகுலத்தில் பிறப்பான் என்றேம். விநயகனைப்பெற்ற புண்ணியவதியே ! கேட்டிடுவாய்.

37. நாற்பது ஆண்டு தன்னில் நவலுவோ மன்னை கண்டம்
ஏற்கவே அறுபான் ரண்டில் எழிலானி மாதந் தன்னில்
தீர்ப்பாக ஜாத கருக்குச் செப்புவோ மார கங்கள்
ஆர்க்கவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

37. ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் தாய் மரண மடைவாள். அவனுக்கு அறுபத்திரண்டாம் வயதில் ஆனி மாதத்தில் மரணம் ஏற்படும். மிகுந்த தவங்களைப் புரியும் தேவியே ! கேளுங்கள்.

38. மறுஜன்மம் வள்ளூர் தன்னில் வருவனும் பிரம்ம சேயாய்
அரசரால் தொழிலும் பெற்று அவனுமே வாழ்வா னுகும்
திருமகன் ஜனன காலம் செம்பொன்னின் தசைநா லாண்டில்
குறைந்திடும் திங்க ளொன்றும் உரைத்தனம் பூர்வ பாகம்.

38. மறுபிறவியில், ஜாதகன், திருவள்ளூரில் அந்தண குலத்தவனுகப் பிறந்து, அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய ஜனனகாலத்தில் குருமகாதசையில் மூன்று வருடங்களும் பதினெரு மாதங்களும் மீதமாகும். இதுவரை முதல் பாகம் கூறினேம்.

# ஜாதகம் 85

1. பிறைவீணை ராகு மானில் புகர்கேது அலவன் புக்கக்
குருபுதன் பானு சேயும் கோதையில் காரி தேளில்
வருவது மிதுனஞ் ஜன்மம் வாதிரை யிரண்டாம் பாதம்
உரைகுவீர் பலனை என்று உத்தமி கேட்கும் போது ;

1. சந்திரன் மிதுனத்திலும், ராகு மகரத்திலும், சுக்கிரன் கேது கடகத்திலும், குரு புதன் சூரியன் செவ்வாய் கன்னியிலும், சனி விருச்சிகத்திலும் இருந்து, மிதுனம் இலக்கினமாகவும் இருக்க, திருவாதிரை இரண்டாம் பாதத்தில் பிறந்தவருடைய பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதி தேவி கேட்கும்போது ;

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் சந்திரன் |
| | இராசி சக்கரம் | | சுக்கிரன் கேது |
| ராகு | | | |
| | சனி | | குரு புதன் சூரியன் செவ்வாய் |

2. அத்திரி புகலு கின்றூர் அதுஜன்ம மாண்பா லாகும்
வித்தக னுதித்த இல்லம் விளம்புவோம் கீழ்மேல் வீதி
உத்தரம் வாச லாகும் உயர்சூழி மேல்பா லாகும்
பத்திர காளி ஈசன் பகருவோம் வடபால் தன்னில்.

2. அத்திரி முனிவர் சொல்லுகின்றூர். இஃது ஆண் மகனின் ஜாதகம் என்றேம். ஜாதகன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. புண்ணியமான சமுத்திரம் மேற்குப் பக்கத்தில் இருக்கும். காளிதேவியின் கோயிலும் சிவபெருமானின் ஆலயமும் வடக்குத் திசையிலுள்ளன.

3. சொல்லிய யடையா ளத்துள் சுதனுமே மூன்றுஞ் ஜன்மம்
புல்குவான் வடுகர் வர்க்கம் பெற்றதாய் தந்தை யோகம்
வல்லியின் புத்ர யோகம் வரைகிறே முன்பின் ஜன்மம்
அல்லலில் லாமல் சொல்வோம் அம்பிகை யாளே கேளாய்.

3. இங்ஙனம் சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள ஊரில் ஜாதகன் வடுகர் குலத்தில் தன் தந்தைக்கு மூன்றுமவனுகப் பிறப்பான். ஜாதகனுடைய யோகம் பெற்ற தாய் தந்தையர் மனைவி மக்கள் இவர்களின் யோகம் முற்பிறப்பு மறுபிறப்பு ஆகிய எல்லாவற்றையும் சிரமப்படாமல் கூறுகின்றேம். தேவியே ! கேளுங்கள்.

4. தந்தையின் துணைஆண் நான்கு சக்திமா ரிருவ ராகும்
அந்தஆண் வேருய்ச் செல்வர் அப்பால னுதிக்கா முன்னம்
பிந்திய பாகந் தன்னில் பேசுவோ மவர்கள் சேதி
கந்தனை ஈன்ற மாதே கழறுவோம் பிதாகு ணத்தை.

1. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரர் நால்வரும் சகோதரிகள் இருவருமாவர். ஜாதகன் பிறப்பதற்கு முன்பாகவே சகோதரர்கள் தனித்துச் செல்வார்கள். அந்த விவரங்களைப் பின் பாகத்தில் கூறுகின்ரேம். முருகப்பிரானைப் பெற்ற தேவியே! தந்தையின் குணத்தைச் சொல்லுகின்ரேம்.

5. மாநிற முளைச்சல் தேகி வாக்குச்சொல் இரண்டு முண்டு
தானென கருவங் கொஞ்சம் தந்தையார்ச் சிதத்தை நாஸ்தி
ஊனமில் லாமல் செய்வன் உத்தமன் போல்ம யக்கு
வானவர் பக்தி பூணுன் அலைச்சலைப் போது முள்ளான்.

5. மாநிற முடையவன். மெல்லிய சரீர முள்ளவன். இருவிதமாகப் பேசுபவன். தான் என்ற அகங்காரம் உடையவன். தன் பிதுரார்ச்சித சொத்துக்களை மீதமில்லாமல் ஒழித்துவிடுவான். உயர்ந்தவன்போல வெளியில் காட்டிக்கொள்வான். தெய்வபக்தி யுள்ளவன். எப்போதும் அலைச்சலுள்ளவன்.

6. தந்தையில் விட்டு நீங்கித் தென்திசை பாரி யில்லம்
இந்தவன் சிலநாள் வாசம் எய்திப்பின் வேறூர் செல்வன்
பந்தணி மனைவி யாலே பாருகள் சேர்ப்பா ளுகும்
முந்திநாள் சல்லியத் தாலே ஒழிந்திடுந் தந்தை யாஸ்தி.

6. தன் தந்தையின் வீட்டைவிட்டுச் சென்று, தன் மனைவியின் வீட்டில், தெற்குத் திசையில் சிலகாலம் வாழ்ந்து வருவான். சில காலம் அங்கிருந்து விட்டு வேறூருக்குச் சென்றுவிடுவான். தன் மனைவியால் பூமிகளைப் பெருக்கு வான். ஆதிகாலத்துக் கடனுல் தந்தையின் ஆஸ்தி கரைந்துவிடும்.

7. மனைவியால் பெருமை ஏற்பன் மாடுகள் பணையேர் விருத்தி
நினைவதை முடிப்பா ளுகும் நேர்ந்திடும் பித்தச் சூடு
கனமுள குடும்பம் பின்னுல் கட்டுரை பகர்வா ளுகும்
வினைமனம் அஞ்சா நெஞ்சன் விளைபுலம் தன்னு லுய்வன்.

7. தன் மனைவியால் பெருமை யடைவான். கால்நடைகள், பண்ணை, ஏர் முதலியன விருத்தியாகும். எண்ணிய காரியத்தை முடிக்க வல்லவன். பித்தச்சூட்டு நோயுள்ளவன். பெரிய குடும்பம் பின்னுல் ஏற்படும். வார்த்தைகளைப் புனைந்து பேசுவான். தியமன முள்ளவன். பயப்படாத மன முள்ளவன். விளைநிலங்களால் விவசாயம் செய்து ஜீவித்து வருவான்.

8. இந்நெறி உடையா னுக்கு இவனுமே உதிப்பா ளுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அரிமக ளெப்ப தாகும்
பன்னியே பேசு வானும் பரவுப கார னுவன்
பின்னமில் லாதா னென்ரேம் பொய்மெய்யும் புகல்வா ளுகும்.

8. இங்ஙனம் கூறப்பட்ட தந்தைக்கு ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தை கூறுகின்றோம். மன்மதனைப்போன்ற அழகுள்ளவன். பன்னிப் பன்னிப் பேசுபவன். பிறருக்கு உபகாரி. ஊனமில்லாத சரீரமுடையவன். பொய், உண்மை இரண்டையும் கலந்து பேசுபவன்.

9. வித்தையும் சமம தாகும் விருந்தினர்ப் பிரிய னாகும்
புத்தியில் பெரியோ னாகும் பூமியில் சீவிப் பானும்
சத்தியங் கூறா னாகும் சாதமுங் குறைவு றாதான்
சுத்தத்தார்க் கிணக்கஞ் செய்யான் சோம்பிடான் காரி யத்தில்.

9. சமமான கல்வியறி வுள்ளவன். விருந்தினரை நன்கு உபசரிப்பான். புத்தியில் பெரியவனாயிருப்பான். விவசாயம் செய்து ஜீவனம் நடத்துவான். சத்தியம் செய்யாதவன். சாப்பாட்டுக்கு வறுமை யில்லாதவன். தன் பந்து ஜனங்களுக்கு அடங்காதவன். காரியத்தில் சோம்பலில்லாதவன்.

10. கடன்படான் இடுக்க மில்லான் காரிய சமர்த்த னாகும்
விடவாக்கன் காலி விருத்தி மேலோர்கள் நேசங் கொள்வன்
தடபுடல் செய்கை உண்டு சந்தேக மனத்த னாகும்
படைதனில் செல்லா னாகும் பஞ்சைபோலு ணவு கொள்வன்.

10. கடன் கொள்ளாதவன். துன்ப மில்லாதவன். காரியங்களைச் சாமர்த்தியமாகச் செய்து முடிப்பவன். மூர்க்கமாகப் பேசுபவன். கால்நடைகள் விருத்தியாகும். பெரியோர்களிடம் நட்புக் கொள்வான். ஆடம்பரச் செய்கை யுள்ளவன். சந்தேகமுள்ள மனத்தினன். சண்டைக்குச் செல்லாதவன். ஏழையைப்போல் அற்ப உணவே உட்கொள்வான்.

11. மாதுலன் உதவி யாலே மாநிலஞ் சேர்த லுண்டு
சாதிப்பான் சிலவே சங்கை க்ஷேத்திரஞ் சித்ரஞ் செய்வன்
கியாதியு முடைய னாகும் கௌரவ மாக வாழ்வன்
சூதினால் பூமி சேரும் தோகையே கேட்டி டாயே.

11. தன் மாமனின் உதவியால் பூமிகள் சேரும். சில சந்தேகங்களை நிவிர்த்தி செய்வான். (ஆலயத் திருப்பணி செய்வான்) வீட்டைச் சித்திரத்தால் அலங்காரம் செய்வான். கீர்த்தி யுள்ளவன். கௌரவமாக வாழ்க்கை நடத்துவான். சூதால் பூமிகள் சேரும். தேவியே! கேளுங்கள்.

12. கரமதில் மாலின் ரேகை கஞ்சமாம் ரேகை உண்டு
அரசர்க்கு இவன்சொல் மேன்மை ஆயுசு விருத்தி களுள்ளான்
குறைவிலா வாழ்வா னாகும் குஞ்சர மொத்த தேகன்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

12. கையில் விஷ்ணுரேகை பத்மரேகை உள்ளவன். அரசாங்கத்தாருக்கு இவன் வார்த்தையில் மதிப்பு உண்டு. தீர்க்காயுசு உள்ளவன். குறைகளில்லாமல் வாழ்ந்துவருவான். யானையை யொத்த பெரிய சரீரமுடையவன். கரிய யானை முகத்தோனைப் பெற்ற தேவியே ! கேளுங்கள்.

13. தன்துணை முன்பெண் ரண்டு சாற்றுவோந் தீர்க்க மாகப்
பின்துணை அளவாய் மூன்று பேசுவோங் கன்னி தானும்
மன்னன்போல் ஒருவன் தீர்க்கம் வரைந்தனம் பால னுக்குப்
பின்பாகம் விபர மாகப் பேசுவோந் தாயே யாங்கள்.

13. ஜாதகனுக்கு முன் பிறந்த சகோதரர் இருவர் நீண்ட ஆயுளுள்ளவர்கள். பின்பிறந்த சகோதரர்கள் மூவராகும். அரசனைப் போன்ற ஒரு சகோதரன் தீர்க்காயுள்ளவனாக இருப்பான். பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம். தாயே! நாங்கள்.

14. பாலகன் மணத்தின் காலம் பகருவோ மிருப தாண்டில்
நீலியுங் கீழ்ப்பால் தன்னில் நேருவாள் அன்னை வர்க்கம்
சீலியின் குணத்தைச் சொல்வேன் சீக்கிர கோபி யாவள்
மால்மனை யொப்ப தாகும் வருவோரை யாத ரிப்பள்.

14. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். இருபதாம் வயதில் கிழக்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவள் இவனுடைய தாய் வர்க்கத்திலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். முன்கோபி. இலக்குமியைப் போன்றவள். தன்னையண்டி வருபவர்களை ஆதரிப்பாள்.

15. மங்கையும் யோக சாலி மருவிடும் நாபிச் சூடு
எங்கள்போல அதிதிக் கன்ன மீவளாம் நற்கு ணத்தாள்
சங்கைஎன் றோரைச் சாராள் ஜாதகன் மனத்துக் கேத்தோள்
தங்கம்பொன் பணிகள் சேர்ப்பள் தையலுந் தீர்க்க சீவி.

15. அதிருஷ்ட முள்ளவள். நாபிச்சூட்டு நோயுள்ளவள். எங்களைப் போன்ற துறவிகட்கு அன்னமளிப்பாள். நற்குணமுள்ளவள். சந்தேகப்படக் கூடியவர்களோடு சேராதவள். தன் கணவன் மனத்துக் கேற்றவள். பொன்னாபரணங்களைச் சேர்ப்பாள். நீண்ட ஆயுள் உள்ளவள்.

16. சுதர்களும் நவமே தோன்றும் சோர்வுறு முதலில் புத்ரர்
சதமுடன் ஆண்பால் மூன்று சத்தியவ் வாறு தீர்க்கம்
அதிபன்தன் பூர்வந் தன்னை வரைகிறோ மினிமே லாக
அதிதிவாழ் முக்கல் தன்னில் அணுகினான் ரெட்டி வம்சம்.

16. ஒன்பது புத்திரர்கள் தோன்றுவர். முதலில் பிறக்கும் குழந்தைகள் நிலையா. மூன்று புதல்வர்களும் மூன்று புதல்விகளும் நிலையாயுள்ளனர். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். துறவிகள் வாழும் முக்கல் என்னும் ஊரில் ரெட்டியார் மரபில் பிறந்தான்.

17. பாரியு மதலை உண்டாய்ப் பாருக ளதிக மாகித்
தேரினோர்க் குதவி செய்து தேவதா பக்தி கொண்டு
வேறொரு வினையில் லாமல் மேவினன் கால னொடு
ஆரியன் வரையப் பட்டு அணுகினா னிவனே என்றோம்.

**17.** மனைவி மக்களையடைந்து, பூமிகள் அதிகம் பெற்று, பெரியோர்கட்கு உபகாரம் பல செய்து, தெய்வபக்தி கொண்டு, வேறு தீவினைகள் இல்லாமல் மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தான் என்றோம்.

**18.** வந்தவன் பொதுயோ கத்தை வரைகிறேந் தாயே கேளும்
இந்திரன் போல வாழ்வன் ஈரேழு ஆண்டு மேலாய்த்
தன்தனம் சல்லியங் காணன் தரணிகள் பலித மேன்மை
சந்திரன் கட்டில் மெத்தை சித்திர இல்ல முள்ளான்.

**18.** ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள். இந்திரனைப்போல் வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய பதினான்காம் வயதுக்குமேல் தன்னுடைய பொருளுக்குத் துன்பமில்லாதவன். பூமிகள் நன்கு பலனளிக்கும். ஜாதகன், கட்டில் மெத்தை அழகிய வீடு முதலியன உள்ளவன்.

**19.** எந்தக்கா லத்தி லில்ல மெய்திடும் விபரஞ் சொல்வாய்
வந்தவன் மூவைந் தின்மேல் வளவுமே செய்வா னாகும்
நந்திஆ பணைவர் மேன்மை நற்பந்து மதிப்புக் கொள்ளல்
எந்திடம் பெருமை ஏற்பன் ஏவலா ளுடைய னாகும்.

**19.** ஜாதகனுக்கு எந்தக் காலத்தில் வீடு கிடைக்கும்? விபரத்தைக் கூறுங்கள். ஜாதகன் பதினைந்தாம் வயதுக்குமேல் வீடு கட்டுவான். பசு எருது பண்ணை வர் முதலியன பெருகும். தன் உறவினர்களால் நன்கு மதிக்கப்படுவான். எல்லாவிடத்திலும் பெருமை யடைவான். பணியாட்கள் உள்ளவன்.

**20.** இருபது இரண்டா மாண்டில் எய்திடும் நிதிநிட் சேபம்
பெரும்பொருள் சேர்த்த லுண்டு புகலுவீ ரந்தச் சங்கை
குருவுமே பததோ னுகிக் குசன்கூடி நாலில் தங்க
அரும்பொருள் நேரு மென்றோம் அம்பிகை யாளே கேளாய்.

**20.** ஜாதகனுக்கு இருபத்திரண்டாம் வயதில் புதையல் கிடைக்கும். பெரும் பொருள் சேரும். அதன் விபரங்களை சொல்லுங்கள். குரு பத்தாம் வீட்டுக் குரியவனுகிச் செவ்வாயுடன் கூடி நான்காம் வீட்டில் இருப்பதால், புதையல் கிடைக்கும் என்றோம். தாயே! கேளுங்கள்.

**21.** எப்படி யோகஞ் சொன்னீர் இயம்புவீர் விபரமாக
அப்பணி மகர மாக அர்க்கனும் புந்தி நாலில்
ஒப்புடன் புகர் இரண்டில் உறைந்ததால் வேசி யோகம்
மெய்ப்புடன் பேரி யோகம் விளங்கிடு மென்று சொல்வோம்.

**21.** ஜாதகனுக்கு யோகம் எப்படிக் கூறினீர்கள்? விவரமாகச் சொல்லுங்கள். ராகு மகரத்திலும், சூரியன் புதன் நாலாம் வீட்டிலும், சுக்கிரன் இரண்டாம் வீட்டிலும் இருப்பதால் வேசியோகம், பேரியோகம் இரண்டும் ஏற்படும் என்று சொல்லுகின்றோம்.

22. இருவித யோகத் தாலே இரணியங் கையி ருப்புப்
பிறைபோல ஈரே ழின்மேல் பலித்திடும் யோக மென்றேம்
குறைவுளோர்க் குதவி செய்தல் கூவலுஞ் சோலை செய்தல்
குருதசை பின்பா லாகக் கூறுவோம் விசேஷ யோகம்.

22. இருவித யோகங்களால் ஜாதகனுடைய பதினான்காம் வயதுக்குமேல் கையிருப்புப் பொன் பிறைச் சந்திரன் போல் அதிகமாகும். யோகம் பலிக்கும் என்றேம். குறையுடையவர்கட்கு உதவி செய்வான். கிணறு தோட்டம் முதலியன அமைப்பான். குருமகாதசை பின் பாகத்தில் விசேஷ யோகம் ஏற்படும்.

23. அன்னையின் தந்தை போல அவனுமே வாழ்வா னாகும்
அன்னியர் மதிக்க வாழ்வன் அவனிகள் இருவூர் சேர்ப்பன்
அன்னவன் சல்யங் காணன் அரசரால் செட்டுச் செய்வன்
அன்னமும் அதிதிக் கீவன் அவன்திருப் பணியுஞ் செய்வன்.

23. ஜாதகனுடைய தாயின் தந்தையைப் போல் வாழ்ந்து வருவான். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். இரு ஊர்களில் பூமி சேர்ப்பான். கடன் உபத்திரவம் இல்லாதவன். அரசாங்கத்தாரின் உதவியால் வியாபாரம் செய்து வருவான். துறவிகட்கு அன்ன மளிப்பான். ஆலயத் திருப்பணியும் செய்வான்.

24. பாலகன் தேடுஞ் செம்பொன் பதினா யிரம்என் றேது
சாலவே யன்னை சேதி சாற்றுவோம் ஊக சாலி
ஆலம்போல் கோபங் கொஞ்சம் அண்டினோர்க் குதவி செய்வன்
சீலம்போல் வெளிம யக்கம் சிலேடையாய்ப் பேசு வாளாம்.

24. ஜாதகன் சம்பாதிக்கும் பொருள் பத்தாயிரம் பொன் என்று கூறுவோம். தாயின் செய்தியைக் கூறுகின்றேம். ஊக முள்ளவள். சர்ப்பம் போல் கோபங் கொள்வாள். தன்னை யண்டி வந்தவர்கட்கு உபகாரி. நல்லொழுக்க முள்ளவள்போல் நடிப்பவள். இரு பொருள் படும்படி பேசுவாள்.

25. மாந்தளிர் மேனி யாகும் வடுக்களு முகத்தில் காணும்
சாந்தமு முடையா ளாகும் தங்கிடும் பித்த வாயு
சூர்ந்துமே வார்த்தை சொல்வள் குலமதிப் புடைய ளாகும்
சாந்தம்போல் புத்தி உண்டு காதலி தன்னால் யோகம்.

25. மாந்தளிரைப் போல் மென்மையான சரீர முள்ளவள். முகத்தில் வடுக்கள் உள்ளவள். சாந்த முடையவள். பித்த வாயு உள்ளவள். நன்றாக ஆராய்ந்து பேசுபவள். தன் பந்து ஜனங்களிடம் மதிப்புள்ளவள். வசீகரிக்கும் புத்தி யுள்ளவள். இவளால் யோகம் ஏற்படும்.

26. தன்துணை ஆண்பா லொன்று சத்திமார் மூவர் தீர்க்கம்
சொன்னஆண் மத்தி லேகும் சுதர்களு மில்லா தாகிப்
பின்பாகம் விபரந் தன்னைப் பேசுவோந் தாயே யாங்கள்
அன்னையின் பூர்வந் தன்னை அறிவிப்போ மினிமே லாக.

26. ஜாதகனுடைய தாய்க்கு ஒரு சகோதரனும் மூன்று சகோதரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்களாவார்கள். சகோதரன் இடையில் இறந்துப்போவான். அவன் புத்திரர்களில்லாதவன். பிற்பாகத்தில் விபரம் கூறுகின்றோம். தாயே! தாயின் முற்பிறவியைப்பற்றி இனிச் சொல்லுகின்றோம்.

27. பெண்ணையி னோரந் தன்னில் பேரூரில் வன்ய சேயாய்க்
கண்ணிய குடும்பி யாகிக் கோதையும் வாழு நாளில்
எண்ணங்கள் வரன்தம் பிபேரில் வர்ணித்தா ளிந்த மாது
குண்ணிய மனத்த னாகிக் கூறுவான் சாபந் தானும்.

27. பெண்ணையாற்றுக்கருகில் உள்ள பெரிய ஓர் ஊரில் வன்னிய குலத்தவளாகப் பிறந்து, கண்ணிய குடும்பத்தையுடையவளாகி வாழ்ந்து வரும்போது தன் கணவனுடைய சகோதரனின்மீது அடாத வார்த்தைகளைச் சொன்னாள். மனம் வருந்திய மைத்துனனும் சாபமிடுகின்றான்.

28. வீண்பழி சொன்ன பாவி விளங்கும்பின் ஜன்மந் தன்னில்
ஆண்துணை நட்ட மாயும் அவலமாம் குடும்ப மத்தில்
நாணிய மனத்த ளாகி நாட்டினில் வாழ்வா யென்ன
தோணிற்று அந்தச் சாபம் துறவியே கேட்டி டாயே.

28. இல்லாத பழியை என்மீது கூறிய பாவியே! உனக்கு ஏற்படும் மறுபிறவியில் சகோதரர் இல்லாமலும் அல்பமான குடும்பத்தில் பிறந்து வெட்கப்படக்கூடிய மனமுள்ளவளாகியும் வாழ்ந்து வருவாய் என்றான். அந்தச் சாபம் ஏற்பட்டது. தாயே! கேளுங்கள்.

29. ஆகையா லிச்சென் மத்தில் அவள்துணை ஆண்பால் நட்டம்
போகிடும் வரன்தன் னாஸ்தி பூமியில் வறுமை காணுள்
பாகமாய் இவன்பின் ஜன்மம் பக்ஷியில் வைச்யச் சேயாய்த்
தோகையு முதிப்பா ளாகும் செல்வதி கேட்டி டாயே.

29. ஆகையால் இப்பிறவியில் சகோதரதோஷம் ஏற்பட்டது. தன் கணவனுடைய ஆஸ்தி அழிந்துவிடும். ஆனால் பூமியில் வறுமை யடையாதவள். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். திருக்கழுக்குன்றத்தில் வைசிய குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்வோம். செல்வியே! கேளுங்கள்.

30. தந்தையின் பூர்வஞ் சொல்வேன் சட்டனு தேசர் நாட்டில்
இந்ததோர் குலமு தித்து எழில்பூமி வுடைய னாகி
அந்தவள் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ
முந்தினோர் பூமி தன்னை மோசத்தால் பரித்தா னென்றோம்.

30. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சட்டனுதேச்வரர் வாழ்ந்து வரும் ஊரில், இதே குலத்தில் பிறந்து பூமி உடையவனாகி, வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். அந்தணர்களுடைய பூமியை வீண் ஆசையால் அபகரித்தான் என்று சொல்லுகின்றோம்.

31. மறையவர் வருத்த முற்று வரைந்தசா பத்தைக் கேண்மோ
குறைசெய்த பாவி யேநீ குலவும்பின் ஜன்மந் தன்னில்
திருகாகும் தந்தை யாஸ்தி சல்லியப் பாதை யாலே
அரிவையால் பெருமை ஏற்பாய் கூறியே சென்று ரென்றேம்.

31. அந்தணரும் வருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். எங்களுக்குத் தீங்கிழைத்தப் பாவியே! உனக்கு ஏற்படும் மறுபிறவியில் தந்தையின் ஆஸ்தி, கடன் உபத்திரவத்தால் தொலைந்துபோகும். ஆனால் மனைவியால் பெருமை அடைவாய் என்று சொல்லிவிட்டுச் சென்றனர்.

32. மாரனு மந்தி யத்தில் வறுமைகள் மிகவே கொண்டு
தீரமாய்க் கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
பாரினி லுதித்தா னென்றேம் பரவிடு மறையோர் சாபம்
நேராது தந்தை யாஸ்தி நிமலியால் பெருமை ஏற்பன்.

32. அவனும் தன் கடைசிக் காலத்தில் அதிகமான வறுமையை யடைந்து, மரணமடைந்து, மீண்டும் பிரம்ம தேவனால் படைக்கப்பட்டு, இவ்வுலகில் பிறந்தானென்றேம். அந்தணர்களின் சாபம் தொடரும். தந்தையின் ஆஸ்தி கிடைக்காது. தன் மனைவியால் பெருமை அடைவான்.

33. எப்போது மலேச்ச லுண்டு ஏழைபோல் திரிவா னுகும்
செப்புவேன் இவன்பின் ஜன்மம் திருவாலங் காடு தன்னில்
ஒப்புடன் வானவே ளாளனுக உயர்வான குடும்பந் தன்னில்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழி குன்றுவே.

33. எப்போதும் அலேச்சல் உள்ளவன். ஏழையைப்போல் திரிவான். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். திருவலாங்காட்டில் ஓர் உயர்வான வேளாள குலத்தில் பிறப்பான். கங்கையைச் சடைமுடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறு.

34. இருபது எட்டு ஆண்டின் ஏகுவான் தந்தை தானும்
திருகிலா நாற்ப தாண்டில் செல்லுவா ளன்னை தானும்
அறுபது இரண்டு ஆண்டில் ஆனிமா தத்தி லேதான்
மறலியி நாட்டைத் தானும் ஏகுவான் ஜாத கன்தான்.

34. ஜாதகனுடைய இருபத்தெட்டாம் வயதில் தந்தை மரணமடைவான். நாற்பதாம் வயதில் தாய் மரணமடைவாள். அறுபத்திரண்டாம் வயதில் ஆனி மாதத்தில் ஜாதகன் இறந்துவிடுவான்.

35. பின்ஜன்மம் வள்ளூர் தன்னில் பிறப்பனும் வைச்ய சேயாய்
அன்னவன் ஜனன காலம் ஆதிரை யிரண்டாம் பாதம்
துன்ராகு தசைஒன் பாண்டும் திங்களு மேழ தாகும்
முன்பாகம் விபரஞ் சொன்னேம் முதல்வியே கேட்டி டாயே.

35. மறுபிறவி திருவள்ளூரில் வைசிய குலத்தில் பிறப்பான். ஜாதகனது ஜனனகாலத்தில் திருவாதிரை நட்சத்திரம் இரண்டாம் பாதம். ராகுமகாதசை ஒன்பதுவருடங்களும் ஏழு மாதங்களு மாகும். இது வரை முதல் பாகம் சொன்னேம். தாயே! கேளுங்கள்.

# ஜாதகம் 86

1. சந்திரன் புகர்சேய் தேளில் சனிகுரு தனுசு வாகப்
புந்தியும் ராகு கோலில் புரவியோன் கன்னி யாகப்
பிந்திய கேது மேடம் பேசுவோஞ் ஜன்மம் வீணை
இந்தவாறு கோளு நின்ருல் இயம்புவீர் பலனை யென்று ;

1. சந்திரன் சுக்கிரன் செவ்வாய் விருச்சிகத்திலும், சனி குரு தனுசிலும், புதன் ராகு துலாத்திலும், சூரியன் கன்னியிலும், கேது மேடத்திலும் இருக்க, இலக்கினம் மிதுனமாகில், ஏற்படக்கூடிய பலனைச் சொல்லுங்கள், முனிவரே ! என்று ;

| | | | |
|---|---|---|---|
| | கேது | | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| சனி குரு | சந்திரன் சுக்கிரன் செவ் வாய் | புதன் ராகு | சூரியன் |

2. சங்கரி கேட்கும் போது சடைமுனி புகலு கின்ருர்
இந்தசே யாணுஞ் ஜன்மம் இல்லமுந் தென்பால் நோக்கம்
தந்தியின் கோட்ட மேற்கில் சத்தியுங் கீழ்ப்பா லாகும்
நன்னதி யுத்ர மாகு நாட்டிய சிறுவூ ராகும்.

2. பார்வதி தேவி கேட்கும்போது ஜடாமுனிவர் கூறுகின்ருர். இஃது ஆண் பிறவி. பிறக்கும் வீடு தெற்கு நோக்கியிருக்கும். விநாயகரின் கோயில் மேற்குத் திசையிலுள்ளது. அம்மன் கோயில் கிழக்கிலுள்ளது. வடக்கில் புண்ணிய ஆறு ஒன்று ஓடும். அஃது இங்ஙனமுள்ள ஒரு சமநிலையான ஓர் ஊராகும்.

3. இத்தகை யடையா ளத்துள் இப்பாலன் மூன்ருஞ் ஜனிமம்
முந்தின கங்கை சேயா யுதிப்பனு மென்று சொல்வோம்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்ர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மஞ் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இந்த அடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் தன் தந்தைக்கு மூன்ரும் மகனுக வேளாளர் குலத்தில் பிறப்பான் என்று சொல்லுகின்ரேம். ஜாதகனைப்பெற்ற தாய் தந்தையர் மனைவி மக்களின் யோகம், இவர்களின் முற்பிறவி மறுபிறவி ஆகிய இவற்றை இந்தச் சோதிட நூலில் சொல்லுகின்ரேம்.

4. தந்தைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு மிளையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானு நிகழ்த்துவோ மிவனின் தந்தை
ஓதுவோந் துணையா ளென்று உத்தமி மார்கள் மூன்று
சாதிப்போம் பிதாகு ணத்தைச் சங்கரி கேட்டி டாயே.

4. ஜாதகனுடைய தந்தைக்கு ஏற்பட்ட இரு மனைவியரில் இளையவளுக்குப் பிறந்தவன் இந்த ஜாதகன் என்றோம். இவனுடைய தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம். ஒரு சகோதரனும் மூன்று சகோதரிகளும் உள்ளவன். ஜாதகனுடைய தந்தையைப்பற்றிச் சொல்லுவோம்.

5. நந்தியுவி சாக நாளில் நல்குவான் சிவந்த மேனி
சிந்தையு மிரண்டு மாகுஞ் ஜனவுப காரி யாவன்
வந்தவர் தம்மைக் காப்பன் வள்ளல்மேல் பத்தி பூண்பன்
சுந்தர முடைய னாகுந் தொல்புவி விருத்தி செய்வன்.

5. விருஷப லக்கினத்தில் விசாக நட்சத்திரத்தில் பிறப்பான். சிவந்த உடலுள்ளவன். இருவிதமான எண்ணங்களுள்ளவன். ஜனங்களுக்கு உபகாரம் செய்பவன். தன்னையடைந்தவர்களை ஆதரிப்பான். தெய்வபக்தியுள்ளவன். அழகுள்ளவன். விளைநிலங்களைப் பெருக்குவான்.

6. சல்லியப்பாதை யுள்ளான் மனமது கவடு கொஞ்சம்
நல்லவ னல்ல வர்க்கு நயப்புறு வார்த்தை சொல்வன்
வெல்லுஞ்சொல் லுடைய னாகும் வேண்டினோர்க் குதவி செய்வன்
வல்லிசொல் கடவா னாகு மாடுகள் விருத்தி யல்பம்.

6. கடனுபத்ரவ முள்ளவன். மனத்தில் சிறிது கபட முள்ளவன். நல்லவர்கட்கு நல்லவனாயும் நயமாகப் பேசுபவனாயும் இருப்பான். வெற்றியடையும்படி பேசுவான். (பேச்சுவன்மையுள்ளவன்.) தன்னை யாசித்தவர்கட்கு உபகாரி. தன்மனைவியின் சொல்லை மீறுதவன். கால்நடைகள் விருத்தியில்லாதவன்.

7. உண்டியுஞ் சிறிது வுண்பன் உவமையாய்ப் பேசு வானும்
தண்டமிழ் நுணுக்கந் தேரான் தன்துணை பிரிதல் செய்வன்
எண்டிசை நல்லோ னாவன் ஏவலா ளுடைய னாகும்
கண்டித முரையா னாகுங் கஞ்சமாம் ரேகை யுள்ளான்.

7. அற்பமாகவே உணவு உட்கொள்வான். உபமானங்களுடன் பேசுபவன. தமிழில் உள்ள இலக்கியங்களை அறியாதவன். தன் சகோதரனைவிட்டு விலகிவிடுவான். எட்டுத்திக்குகளிலும் நல்லவனாக இருப்பான். பணியாட்களுள்ளவன். கண்டிப்பாகப் பேசாதவன். பத்மரேகை யுடையவன்.

8. சொல்லிய குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
புல்குவோ மிவன்கு ணத்தைப் பூமியால் சீவிப் பானும்
எல்லைகள் விருத்தி செய்வன் இடரென்றோர்க் குதவி செய்வன்
கல்லியு முடைய னாகுங் கருதிடான் கட்டு வார்த்தை.

8. இங்ஙனம் சொல்லப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். விவசாயம் செய்து ஜீவனம் செய்துவருவான். பூமியைப் பெருக்குவான். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. கல்வியறிவுடையவன். வார்த்தைகளைப் புனைந்துபேச எண்ணாதவன்.

9. அன்னமுங் குறைவு றாதான் அற்புத வார்த்தை சொல்வன்
சொன்னசொல் காப்பா னாகுஞ் சோம்பிடான் காரி யத்தில்
மன்னர்க ளிட்டங் கொள்வன் மாடுகள் பணையோர் விருத்தி
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பா னென்று சொல்வோம்.

9. சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். அதிசயிக்கும்படி பேசுபவன். சொன்ன வார்த்தைகளின்படி நடப்பவன். காரியங்களைச் செய்வதில் சோம்பலில்லாதவன். அரசாங்கத்தாரால் நன்கு மதிக்கப்படுவான். பண்ணை எர் கால்நடைகள் முதலியவற்றின் விருத்தியுள்ளவன். தன்வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று நிச்சயப்படுத்துவான்.

10. இல்லமுஞ் சித்ரஞ் செய்வன் ஏவலா ளுடைய னாகும்
தல்லிபோ லாத ரிப்பன் சகடுவா கன மு மேற்பன்
எல்லையை விருத்தி செய்வன் ஈகையு முடைய னாகும்
அல்லலில் லாமல் வாழ்வன் அம்பிகை யாளே கேளாய்.

10. அழகிய வீடுகட்டுவான். பணியாட்கள் உள்ளவன். தாயைப்போல் ஆதரிக்கும் குணமுள்ளவன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். பூமியைப் பெருக்குவான். கொடுக்கும் குணமுள்ளவன். துன்பங்களில்லாமல் வாழ்ந்து வருவான். கொடுக்கும் குணமுடையவன். தாயே! கேளுங்கள்.

11. தன்துணை முன்னால் நட்டந் தங்கும்பின் னுண்பா லொன்று
அன்னவன் தீர்க்க சீவி அவன்பலன் பின்பால் சொல்வோம்
என்னகா ரணத்தி னாலே இவன்துணை முன்னால் நட்டம்
துன்மையாய்க் கேது லாபந் தொடர்ந்ததால் துணைமுன் நட்டம்.

11. ஜாதகனுக்கு முன்பிறந்த சகோதரர்கள் இறந்துவிடுவார். இளைய சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுடன் இருப்பான். அவனுடைய செய்திகளைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். என்னகாரணத்தால் ஜாதகனுக்கு மூத்த சகோதரர்கள் இல்லை என்று சொல்லுங்கள். தீமையாகக் கேது லாபஸ்தானத்திலிருப்பதாலும், முற்பிறவியின் தீவினை தொடர்ந்ததாலும் அங்ஙனம் சொன்னோம்.

12. பாலகன் மணத்தின் காலம் பகருவோ மீரொன் பாண்டில்
வேல்விழி கீழ்ப்பால் நேரும் விளம்புவோ மன்னை வர்க்கம்
காதலி குணத்தைச் சொல்வோங் கட்டுரை பகரா ளாகும்
சீதள குணத்தா ளாகுந் தீங்கதை யொருவர்க் கெண்ணாள்.

12. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். பதினெட்டாம் வயதில் கிழக்குத்திக்கிலிருந்து மனைவி தன் தாயின் வர்க்கத்திலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். பொய் பேசாதவள். குளிர்ந்த மனமுள்ளவள். பிறருக்குத் தீங்குசெய்ய நினையாதவள்.

13. மாந்தளிர் மேனி யாகும் வரன்மன மேற்ற மாது
சாந்தமு முடைய ளாகுஞ் சற்பாத்ரி யோக சாலி
ஏந்திய தனத்தா ளாகும் இடரான புத்தி யில்லாள்
காந்தம்போல் ஊக சாலி கழறுவோந் தீர்க்க சீவி.

13. மாந்தளிர்போன்ற மேன்மையான சரீரமுள்ளவள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். சாந்தமுடையவள். சற்பாத்திரியோகமுள்ளவள். செல்வமுடையவளாக இருப்பாள். தீயபுத்திகள் இல்லாதவள். காந்தத்தைப் போன்ற ஊகமுள்ளவள். நீண்ட ஆயுளுள்ளவள்.

14. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பிலமு ருது
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொல்வோம்
எத்தகைப் பலத்தி னாலே இயம்பினீ ரந்தச் சங்கை
புத்திரத்தானந் தன்னில் புயங்கனும் புதனும் கூட ;

14. ஜாதகனுக்குப் புத்திரபாவத்தைச்சொல்ல பலமில்லை. அப்படித் தோன்றினும் நிலையா என்று கூறுகின்றோம். எந்த பலத்தினால் அங்ஙனம் சொன்னீர்கள். புத்திரஸ்தானத்தில் ராகுவும் புதனும் கூடி ;

15. சுதர்களுந் தோடஞ் சொன்னோஞ் சயமுனி மறுத்துச் சொல்வார்
தசமத்தோ னேழி லாட்சி தருமகர் மாதி யாகிப்
புதல்வர்தா னத்தில் தங்கப் புத்திரர் தன்னால் கர்மம்
அதிபர்க்கு நேரு மென்றோ மாரன்தன் பூர்வங் கேளாய்.

15. இருப்பதால் புத்திரதோஷம் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். ஜயமுனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். பத்தாம் வீட்டுக்குரிய குரு ஏழாம் வீட்டில் ஆட்சியாயிருப்பதாலும், அவருடன் தரும கருமாதியாகிய சனியும் இருப்பதாலும், புதன் புத்திரஸ்தானத்தில் இருப்பதாலும், ஜாதகனுககுப் புத்திரனால் இறுதிக்கடன்கள் செய்யப்படும் என்று சொன்னோம். ஜாதகனுடைய முற்பிறவியைக் கேளுங்கள்.

16. படவேடு தன்னி லேதான் பிறந்தனன் வன்யச் சேயாய்த்
திடமதாய்க் குடும்பி யாகித் தேவியு மதலை யுண்டாய்
அடவுடன் பூமி தன்னால் அவனுமே சீவித் தேதான்
விடமது வில்லந் தன்னில் மேவிற்று மகுடங் கொண்டு.

16. படவேடு என்ற ஊரில், வன்னியகுலத்தில் பிறந்து, செழிப்புள்ள குடும்பத்தையடைந்து, பத்தினி புத்திரர்களையடைந்து, விவசாயம் செய்து ஜீவனம் நடத்திவந்து, இருக்குங்கால், இவனுடைய வீட்டில் ஒரு சர்ப்பம் படமெடுத்து ஆடியது.

17. மாரனு மரங்கஞ் செய்து வாட்டினன் கழியி னாலே
நேர்ந்தது வதுவோர் தோட நவிலுவோம் வேறு வொன்று
பாரினில் பசுங்கன் றுக்குப் பால்விடா மல்க றந்தான்
தீரமாய்த் தோடந் தானுஞ் சேர்ந்தது வென்று சொல்வோம்.

17. ஜாதகனும் அதை உபத்ரவித்துத் தடியினால் அடித்தான். அஃது ஒரு தோஷமாயிற்று. இது தவிர, வேறு ஒன்று சொல்லுகின்றோம். உலகில் பசுங்கன்றுக்குப் பால்விடாமல் ஒட்டக் கறந்துவிட்டான். அஃது ஒரு பெரிய தோஷமாயிற்று என்று சொல்லுகின்றோம்.

18. இருவகைத் தோடத் தாலே இச்சென்மஞ் சுதர்கள் தோடம்
மருவிடுங் கிரியை யொன்று வரைகிறேந் தாயே கேளும்
குறைத்தலே வாழு கின்ற கூறிய படவே டன்னில்
அரிவைக்கு வபிடே கித்து ஐந்துபேர் பாத்துக் கன்னம் ;

18. இரண்டுவித தோஷத்தால் இப்பிறவியில் புத்திரதோஷம் ஏற்படும். அது தீரச் சாந்தியொன்று சொல்லுகின்றோம். பிரமதேவன் வசித்துவரும் முன்கூறிய படவேடு என்ற ஊரில் உள்ள அம்மனுக்கு அபிஷேகம் செய்து ஐந்து பரதேசிகட்கு அன்னம் ;

19. தந்துபின் னுள்ளூர் சென்று தந்தியின் கோட்டத் திற்கு
இந்தவன் மூன்று வாண்டு இவனொரு தீபம் வைக்க
முந்தின வினைகள் நீங்கி வுதித்திடுஞ் சுதராண் ஒன்று
பந்தணி மார்கள் மூன்று பகருவோந் தீர்க்க மாக.

19. அளித்து, பிறகு உள்ளூருக்குத் திரும்பி, விநாயகரின் ஆலயத்துக்கு மூன்று வருடங்கள் தீபகைங்கரியம் செய்தால் முற் பிறவியில் செய்த தீவினைகள் நீங்கி, ஒரு புத்திரன் பிறப்பான். மூன்று புத்திரிகள் பிறந்து தீர்க்காயுளுள்ளவர்கள் என்று சொல்லுகின்றோம்.

20. இன்னவன் யோகச் சேதி இயம்புவோ மினிமே லாக
அன்னமுங் குறைவு றுதான் அவனியில் சல்யங் காணுன்
உன்னத செட்டுச் செய்வன் உயர்வான குடும்பி யாவன்
சொன்னதைக் காப்பா னுகுந் தேவதா பத்தி பூண்பன்.

20. ஜாதகனுடைய யோகச் செய்திகளை இனிக் கூறுகின்றோம். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன். உலகில் கடன் உபத்திரவம் இல்லாதவன். உயர்வான வர்த்தகம் செய்து வருவான். உயர்ந்த குடும்பத்தை யடைவான். சொன்ன சொல்லைக் காப்பான். தெய்வ பக்தி யுள்ளவன்.

21. அரசர்க ளிட்டங் கொள்வன் ஆபத்தென் றோரைக் காப்பன்
வறுமையெப் போதுங் காணுன் மாநிலஞ் சிறுவூர் சேர்ப்பன்
பெரியவர் நேசங் கொள்வன் புண்ணிய மனத்த னுகும்
நெறியதைக் காப்பா னுகு நினைத்தகா ரியமு டிப்பன்.

21. அரசர்களிடம் மரியாதை யுள்ளவன். துன்பம் அடைந்தவர்கட்கு உதவி புரிவான். ஒரு போதும் தரித்திர மில்லாதவன். சிறிய ஓர் ஊரில் நிலம் வாங்குவான். பெரியோர்களிடம் நட்புக்கொள்ளுவான். புண்ணியமான மனத்தினன். நெறியுடன் வாழ்ந்து வருவான். எண்ணிய காரியங்களை முடிப்பான்.

22. புந்தியின் தசைக்கா லத்தில் பிரபல வில்லஞ் செய்வன்
முந்திநாள் பொன்னு நேரும் விசேடபூ மிகளு மெய்தும்
பந்தினர் மதிப்புக் கொள்வான் பாரினில் புகழு மேற்பன்
இந்திரன் போல வாழ்வன் ஈச்வரி கேட்டி டாயே.

22. ஜாதகன், புதமகாதசையில் பெரிய வீடு ஒன்று கட்டுவான். பிதுராச்சிதமான செல்வங்கள் கிடைக்கும். விசேஷமான பூமிகளும் சேரும். உறவினர்களால் நன்கு மதிக்கப்படுவான். உலகில் கீர்த்தியடைவான். இந்திரனைப்போல் வாழ்ந்து வருவான். தாயே ! கேளுங்கள்.

23. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் சிவந்த மேனி
அன்னையு மிரண்டு மாகும் அயல்குற்றம் புகலா ளாகும்
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனத்துக் கேத்தோள்
அன்னம்போல் சாய லொக்கும் அடாவடி கூறு ளாகும்.

23. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவள். சிவந்த உடலுள்ளவள். இரு தாய்மார்கள் உள்ளவள். பிறர்மீது குற்றம் கூறுதவள். அன்புடன் அன்னமளிப்பாள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். அன்னத்தைப்போன்ற அழகுள்ளவள். அடாவடியாகப் பேசாதவள்.

24. இல்லமுங் கீழ்ப்பா லாகும் இவள்துணை யாண்பால் மூன்று
சொல்லுவோந் தீர்க்க மாகத் தோகையின் பூர்வங் கேளாய்
வல்லியைப் பூசை செய்யும் வாழைமா நகரி லேதான்
புல்கினுள் கர்ணச் சேயாய்ப் புகழுடன் வாழு நாளில் ;

24. கிழக்குப் பக்கத்தில் வீடுள்ளவள். மூன்று சகோதரர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றோம். தாயின் முற் பிறவியைக் கேளுங்கள். தேவியைப் பூசைகள் செய்யும் வாழைமாநகரில் கருணீகர் மறபில் பிறந்து கீர்த்தியுடன் வாழ்ந்து வருங் காலத்தில் ;

25. கன்னிகை யொருத்தி பேரில் கழறொணு வார்த்தை சொல்ல
அன்னவள் திகில டைந்து அறைந்தசா பத்தைக் கேண்மோ
துன்மையாய் வார்த்தை யென்மேல் செப்பின பாவிக் கேதான்
பின்வருஞ் ஜன்மந் தன்னில் புத்திரி யில்லா மல்தான் ;

25. ஒரு கன்னிப் பெண்மீது அடாத வார்த்தைகளைக் கூற, அப் பெண்ணும் பயந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். தீமையாக என்மீது குறை கூறிய பாவிக்கு ஏற்படும் அடுத்த பிறவியில் புத்திரி இல்லாமல் ;

26. உன் துணைக் கன்னி யின்றி உலகினில் துணையால் நிந்தை
அன்னவள் பெருவா யென்ன அந்தரந் ததாஸ்து வென்னத்
துன்மைகள் நேர்ந்த வென்றோந் தேவிக்கு வந்தி யத்தில்
பன்னுவாய் ரணங்கள் கண்டு பறந்தனள் கால னூடு.

26. உடன் பிறந்த சகோதரியில்லாமல், சகோதரனல் பழியடைந்து வாழ்ந்து வருவாய் என்று கூற, உபச் சொல்லும் “ அப்படியே ” என்று கேட்க, தீமைகள் ஏற்பட்டன என்று கூறுகின்றோம். தாயும், தன் கடைசிக்காலத்தில் வாயில் ரணம் ஏற்பட்டு இறந்தாள்.

27. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்
மருவிடு மாது சாபம் வருந்துணைக் கன்னி தோடம்
பெருஞ்சுத ராண்பால் தோடம் பேசுவோ மிவள்பின் ஜன்மம்
முருகர்வாழ் மைலந் தன்னிலு திப்பளாம் பிரம சேயாய்.

27. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் என்று சொல்லுகின்றோம். பெண்ணின் சாபம் தொடரும். உடன் பிறந்த சகோதரிக்குத் தோஷமுண்டாகும். தோன்றும் புத்திரர்கட்கும் பெண்ணுக்கும் தோஷம் ஏற்படும். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். முருகப்பிரான் வாழும் மைலம் என்ற க்ஷேத்திரத்தில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள்.

28. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் வேலங் காட்டில்
முந்தின குலமு தித்து மேன்மையாய்க் குடும்பி யாகி
அந்தக நகரஞ் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ னென்று சொல்வோ மங்கையுங் கேட்க லுற்றாள்.

28. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அந்தண குலத்தில் பிறந்து, மேன்மையுள்ள குடும்பமுள்ளவனாகி வாழ்ந்து, மரணமடைந்து, மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று சொல்லுகின்றோம். பார்வதி கேட்கலானாள்.

29. முன்ஜன்மம் பிரம சேயா யுதித்தவ னிச்சென் மத்தில்
தன்குலந் தாழ்வ தென்ன சாற்றுவீர் முனியே நீர்தாம்
அன்னவன் முன்ஜன் மத்தில் அருமறையோ தாத தாலே
இன்னவ னுதித்தா னென்றோம் ஈச்வரி கேட்டி டாயே.

29. முற்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்து இப்பிறவியில் தாழ்வான குலத்தில் பிறக்கும் காரணம் என்ன ? சொல்லுங்கள், முனிவரே ! தாங்கள். ஜாதகனுடைய தந்தை முன் பிறவியில் வேதம் ஓதாமல் இருந்து வந்ததால் இப் பிறவியில் இப்படிப் பிறந்தான் என்று சொல்லுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

30. முப்பது நாலு வாண்டில் விளம்புவோந் தந்தை கண்டம்
செப்புவோ மிவன்பின் ஜன்மஞ் சீகாழி தன்னி லேதான்
ஒப்புவான் வைச்யச் சேயாய் உயர்வான செட்டுச் செய்வன்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றாவே.

30. ஜாதகனுடைய முப்பத்துநான்காம் வயதில் தந்தை மரணமடைவான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். சீகாழியில் வைசிய குலத்தவனாகப் பிறந்து, உயர்ந்த வியாபாரம் செய்து வருவான். கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவபெருமானின் தேவியே ! நாங்கள் கூறியவை தவறா.

31. ஆறாறு வாண்டு தன்னில் அன்னைக்குக் கண்டமெய்தும்
மாமனுக் கறுபா னெட்டில் மாசிமா தத்தி லேதான்
தீரமாய்க் கால னூடு செல்லுவா னென்று சொல்வோம்
பாரினில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

31. ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் தாய் மரணமடைவாள். ஜாதகன் தனது அறுபத்தெட்டாம் வயதில் மாசி மாதத்தில் இறந்து விடுவான். உலகில் தவங்கள் செய்யும் பார்வதி தேவியே! கேளுங்கள்.

32. மறுஜன்மங் காஞ்சி தன்னில் வருவனு மிக்கு லத்தில்
திருமகன் ஜனன காலஞ் சனிதசை மூவைந் தாண்டும்
உறைந்திடுஞ் திங்கள் பத்தும் உரைத்தனம் பூர்வ பாகம்
அறந்தனை வளர்க்கு மெங்க ளாத்துமத் தாயே கேளாய்.

32. மறு பிறவியில் காஞ்சிபுரத்தில் இதே குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய ஜனன காலத்தில் சனிமகாதசை பாக்கி பதினைந்து வருடங்களும் பத்து மாதங்களுமாகும். இது முதல் பாகம் என்று சொன்னோம். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

33. தென்முனி புகலு கின்றார் செப்பினீர் பூர்வம் பொன்னும்
மன்னனுக் கிந்த வாண்டில் மருவிடும் பூர்வஞ் சொல்வீர்
புந்தியின் தசைகா லத்தில் புகர்புசிப் பதனில் நேரும்
சந்தத மூவே மூாண்டில் சார்ந்திடு நிதியு மென்றோம்.

33. அகத்திய முனிவர் சொல்லுகின்றார். முதலில் ஜாதகனுக்குப் புதையல் கிட்டும் என்று கூறினீர்களே! எந்த வயதில் கிடைக்கும்? விபரத்தை உரைப்பீர்கள் என்று கேட்க, புதமகாதசையில் சுக்கிரபுக்தியில் கிடைக்கும். அது ஜாதகனுடைய இருபத்தோராம் வயதில் கிட்டும், என்றோம்.

# ஜாதகம் 87

1. மதிமானில் பணியுந் தேளில் மங்களன் சீய மாக
விதிகுரு மேரு வாக வெள்ளியும் புதனும் வீணை
உதயனுங் கேது நந்தி ஓணத்தின் மூன்றும் பாதம்
இதுவிதம் கோளு நின்று லக்கின மிதுன மாக ;

1. சந்திரன் மகரத்திலும், ராகு விருச்சிகத்திலும், செவ்வாய் சிம்மத்திலும், சனி குரு தனுசிலும், சுக்கிரன் புதன் மிதுனத்திலும், சூரியன் கேது விருஷபத்திலும் இருந்து, திருவோண நட்சத்திரம் மூன்றும் பாதத்தில் பிறந்து இலக்கினம் மிதுனமாக இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| | | சூரியன் கேது | லக்கினம் சுக்கிரன் புதன் |
| | இராசி சக்கரம் | | |
| சந்திரன் | | | செவ் வாய் |
| சனி குரு | ராகு | | |

2. பலனதைப் புகலு மென்று பார்வதி கேட்கும் போது
நலமுள பராசர் சொல்வார் நாயகன் ஜனன மாகும்
தவமது வடதென் வீதி சனிவாடை கன்னி உத்ரம்
குலவிடுந் தந்தி தென்பால் குறித்தஇவ் வடையா ளத்துள் ;

2. ஏற்படும் பலனைக் கூறுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும்போது, நன்மை மிக்கப் பராசரர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகன் பிறப்பாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்கான தெருவில் தென் கிழக்கு மூலையில் உள்ளது. அம்மன் கோயில் வடக்குத் திக்கிலும் விநாயகர் ஆலயம் தெற்குத் திலும் உள்ளது. இங்ஙனம் அடையாளங்களுள்ள இடத்தில் ;

3. உதிப்பனும் வேளாள னாக உரைக்கிறே மிவனின் யோகம்
மதிநுத லன்னை யோக மவன்தந்தை துணைவர் யோகம்
அதிபதி மனைவி யோகம் மாரனின் முன்பின் ஜன்மம்
சதியிலா விந்நூல் தன்னில் சாற்றுவோந் தாயே யாங்கள்.

3. ஜாதகன் வேளாள குலத்தில் பிறப்பான் என்று சொன்னோம். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். தாய் தந்தையர் தந்தையின் சகோதரர்கள் மனைவி இவர்களது யோகம், ஜாதகனுடைய முற்பிறவி மறு பிறவி இவைகளை இந்தச் சோதிட நூலில் சொல்லுகின்றோம். தாயே! நாங்கள்.

4. தந்தையின் துணைஆண் ரண்டு சத்திமார் மூவ ராகும்
அந்தஆண் வேறுய்ச் செல்வர் அவர்பலன் பின்பால் சொல்வேன்
இந்தவன் தந்தை சேதி இயம்புவோ மால்நி றத்தன்
சந்தத முளேச்சல் நீட்சி சரசமாய்ப் பேசு வானும்.

4. ஜாதகனுக்கு, தந்தையின் உடன் பிறந்த சகோதரர்கள் இருவரும் சகோதரிகள் மூவரும் உள்ளனர். சகோதரன் தனியாகச் சென்று விடுவான். அவருடைய பலனைப் பிற்பாகத்தில் கூறுகின்றோம். ஜாதகனுடைய தந்தையின் யோகச் செய்தியைச் சொல்லுவோம். கரிய நிற முள்ளவன். மெல்லிய சரீர முடையவன். உயரமானவன். சல்லாபமாகப் பேசுவான்.

5. கலைராசி கடைநாள் முன்நாள் கலப்பனும் ஊக சாலி
நிலம்விருத்தி செய்வா னும் நினைத்தகா ரிய முடிப்பான்
தலவாசஞ் செல்வா னும் சங்கரன் தொண்டு பூண்பன்
சலந்தோய்வன் சீல னுவன் சந்தேக மனத்த னும்.

5. மகர லக்கினத்தில் உத்தரட்டாதி நட்சத்திரத்தில் பிறப்பான். ஊக முள்ளவன். விளை நிலங்களை விருத்தி செய்வான். எண்ணிய காரியங்களை முடிப்பான். புண்ணிய தலங்களுக்குச் செல்வான். சிவபெருமானுக்குத் தொண்டு செய்வான். புண்ணிய நதிகளில் நீராடுவான். நல்லொழுக்க முள்ளவன். சந்தேக மன முடையவன்.

6. மந்திரம் வைத்தி யங்கள் மருமநூ லறிவா னும்
சிந்தையில் மரும மில்லான் சல்லியப் பாதை ஏற்பன்
பிந்தியும் நிவிர்த்தி செய்வன் பெறுவனு மாமி ரண்டு
நந்தியும் பணையும் விருத்தி நவநூலு மறிவா னும்.

6. மந்திர சாஸ்திரம், சஸ்திரநூல் (வைத்தியநூல்), இரகசிய நூல் இவைகளைக் கற்றுணர்வான். மனத்தில் இரகசியமில்லாதவன். கடன் உபத்ரவம் உள்ளவன். பிறகு தீர்த்து விடுவான். இரு மனைவியரை அடைவான். எருதுகள் பண்ணை ஏர் முதலியவற்றின் விருத்தியுள்ளவன். ஒன்பது விதமான நூல்களையும் அறிவான்.

7. துணைவரைப் பிரிதல் செய்வன் செறிந்திடும் பித்தச் சூடு
வினையுண்டு சுதனி னுலே விசனமே குடியாய்த் தங்கும்
தணிவுளோர் நேசங் கொள்வன் தரைவிட்டுப் பறப்பான் போல
நினைவினில் காண்பா னும் நிமலியே கேட்டி டாயே.

7. உடன் பிறந்தவர்களிடமிருந்து பிரிந்து விடுவான். பித்தச் சூடுடையவன். புத்திரனுல் தீங்கு உண்டாகும். விசனமாகவே முழுவதும் இருப்பான். ஏழைகளுடன் உறவாடுவான். பூமியைவிட்டுப் பறப்பவன்போல் மனத்தில் எண்ணமுள்ளவன். தாயே ! கேளுங்கள்.

8. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் புலியூர் தன்னில்
வன்னிய குலமு தித்து மாநிலம் விருத்தி செய்து
அன்னையுந் தந்தை மிக்க அருமறைத் தொண்டு பூண்டு
முன்வினை இல்லா ளுகி ஒதுங்கினன் கால னுடு.

8. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். புலியூரில், வன்னிய குலத்தில் பிறந்து, விளை நிலங்களைப் பெருக்கி, தாய் தந்தையர் மெச்ச அந்தணர்கட்குத் தொண்டுகள் பல செய்து, தீவினையில் லாதவனுக மரண மடைந்தான்.

9. வேதனுல் வரையப் பட்டு விளங்கினு னிவனே என்றேம்
ஓதின குணத்தா னுக்கு உதிப்பனும் எட்டாஞ் ஜன்மம்
ஜாதகன் குணத்தைச் சொல்வோம் தரணியா லுய்வா னுகும்
சூதிலான் சமமாம் கல்வி துறவோர்கள் நேசங் கொள்வன்.

9. மீண்டும் பிரம தேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இவன் என்று சொல்லுகின்றேம். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு ஜாதகன் எட்டாம் புத்திரனுகப் பிறப்பான். ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். விவசாயம் செய்து ஜீவித்து வருவான். கபடமில்லாதவன். சம மான கல்வியறி வுள்ளவன். துறவிகளிடம் பக்தி கொள்வான்

10. தந்தையி னுஸ்தி தன்னைத் தானவன் விரயஞ் செய்து
பிந்தியும் வேறூர் பூமி பெறுவனும் சுகமு மேற்பன
எந்தக்கா லத்தில் செல்வான் இயம்புவீர் முனியே நீர்தாம்
செந்தியின் தசைஅந்தத்தில் செல்வனும் வடமேல் திக்கில்.

10. ஜாதகன் தன் தந்தையினுடைய ஆஸ்தியை விரயம் செய்து விட்டு வேறோர் ஊரில் சென்று சுகமுடன் வாழ்ந்து வருவான். எந்தக் காலத்தில் செல்வான் ? சொல்லுங்கள், முனிவரே நீர்தாம். செவ்வாய் மகாதசையின் அந்தத்தில் வடமேற்குத் திக்கில் செல்வான்.

11. சுகமுள குடும்பி யாவன் சோர்வோர்க்குத் தாக மீவன்
இகபரன் பக்தி பூண்பன் இடுக்கணென் றேரைக் காப்பன்
சகமதில் நல்லோ னுவன் தீரமா மனத்த னுகும்
உகமையாய்ப் பேசு வானும் உண்மையை வெளிக்காட் டதான்.

11. சுகமுள்ள குடும்பத்தை யடைவான். கஷ்டமைந்தவர்கட்கு நீர் உணவு அளிப்பான். சிவபெருமான்மீது பக்தி யுள்ளவன். துன்பமடைந்த வர்களைக்காப்பான். உலகில் நல்லவனுக வாழ்ந்து வருவான். தைரிய முள்ள மனத்தினன் உபமானத்துடன் பேசுபவன். உண்மையை வெளி யிடாதவன்.

12. இனமதிப் புடனே வாழ்வன் ஏவலா ளுடைய னுகும்
கனதன முடைய னுகும் காலிகள் விருத்தி உண்டு
வினையதை எவவர்க்கு மெண்ணுன் விசித்திர இல்லந் செய்வன்
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

12. தன் குலத்தவர் கொண்டும்படி வாழ்ந்து வருவான். பணியாட்கள் உள்ளவன். பெரிய தனவானுவான். கால்நடைகள் விருத்தியுள்ளவன். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவன். அழகிய வீடு கட்டுவான். கரிய யானைமுகத்தோனைப் பெற்ற தேவியே ! கேளுங்கள்.

13. தன்துணை நவமே தோன்றும் தங்கிடு மாண்பா லொன்று
கன்னிமார் மூவ ராகும் கருதின ஆண்பா லுந்தான்
முன்னேனய் மொழிய லாகும் மொழிகிறே மவன்கு ணத்தைப்
பின்னமில் லாத தேகி பிழையதை ஒருவர் கெண்ணுன்.

13. ஜாதகனுக்கு ஒன்பது உடன் பிறந்தவர் உள்ளனர். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூவரும் நிலையாயிருப்பர். கூறிய சகோதரனும் முன்பிறந்தவன். அவனுடைய குணத்தைச் சொல்வோம். ஊனமில்லாத தேக முள்ளவன். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவன்.

14. மணமுண்டாய் மதலை இன்றி மடிவனு மென்று சொல்வோம்
சினமுண்டாய் மாதால் தீங்கு சேர்ந்திடுங் காலஞ் சொல்வாய்
வினைசேயின் தசைமுற் பாகம் மேவிடு மேழாண் டுக்குள்
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

14. மணமேற்பட்டுப் புத்திரபாக்கிய மில்லாமல் இறந்து விடுவான் என்று சொல்லுகின்றேம். கோப மேற்பட்டு மனைவியால் தீங்கு ஏற்படும் என்று சொல்வோம். அந்தக் காலம் எப்போது என்று கூறுங்கள். செவ்வாய்மகாதசை முதல் பாகத்தில் ஏழு வருடத்துக்குள் நேரும். அதிக மதம் பெருகும் யானையின் முகம்போன்ற முகத்தையுடைய விநாயகனைப் பெற்ற தேவியே ! கேளுங்கள்.

15. முன்துணை கன்னி சேதி மொழிகிறேந் தாயே கேளும்
பின்னமாம் வார்த்தை ஏற்பள் புருடனும் தென்கீழ் நேரும்
தன்சுதர் ஆண்பா லொன்று தீர்க்கமா மாதுக் கேதான்
தன்வரன் தன்னை விட்டுச் சேருவாள் வேறோர் பக்கல்.

15. ஜாதகனுக்கு மூன் பிறந்த சகோதரியின் செய்தியைச் சொல்லுகின்றேம். தாயே ! கேளுங்கள். வீண் அபவாதத்தை யடைவாள். அவளுக்கு, தென்கிழக்குத் திக்கிலிருந்து கணவன் வாய்ப்பான். புத்திரன் ஒருவன் மட்டுமே நீண்ட ஆயுளுள்ளவனுவான். தன் கணவனை விட்டு வேறொரு பக்கம் சென்று வாழ்வாள்.

16. உலகமேல் நிந்தை ஏற்பள் ஒதுங்குவா ளினத்தை விட்டுத்
தலைவியுந் தீர்க்க ஜீவி சந்தேக மின்றி மற்றோர்
குலவியே வாழ்வா ளாகும் குருமுனி கேட்க லுற்றார்
நிலையாது துணைஆ ணென்றீர் நிகழ்த்துவீ ரந்தச் சங்கை.

16. உலகத்தில் அபவாதத்தை யடைவாள். தன் இனத்தாரை விட்டுச் செல்வாள். நீண்ட ஆயுளுள்ளவள். சந்தேக மில்லாமல் வேறொரு புருடனுடன் குலவி வாழ்ந்து வருவாள். அகத்திய முனிவர் கேட்கலானார். சகோதரர்கள் நிலையார் என்று கூறினீர்களே ! அதற்குக் காரணம் புகலுங்கள்.

17. அரவுமே ஆறில் தங்க அவன்தனி யாக வாழ்வன்
குருதியும் மூன்றில் தங்கக் கோதையால் நிந்தை ஏற்பன்
கரியவன் குருவு மேழில் கலந்ததால் யோகஞ் சொன்னேம்
பிறைக்காரில் புதனும் வெள்ளி புக்கின யோக மொன்றும்.

17. ராகு ஆறுமிடத்தில் இருப்பதால் ஜாதகன் தனியனுகவே வாழ்ந்து வருவான். செவ்வாய் மூன்றுமிடத்தில் இருப்பதால் மனைவியால் அவமானம் அடைவான். சனியும் குருவும் ஏழாமிடத்தில் இருப்பதால் அங்ஙனம் சொன்னேம். சந்திரன் இருக்குமிடத்துக்கு ஆறுமிடத்தில் புதனும் சுக்கிரனும் இருப்பதால் யோகமுண்டென்று சொன்னேம்.

18. கருமகர் மாதி யோகம் சக்கர யோக மொன்று
இருவகை யோகத் தாலே இடறிலா வாழ்வா னுகும்
தரையது வேறூர் சேர்ப்பன் தந்தைக்கு மேலாய் வாழ்வன்
நிறையவே குடும்பி யாவன் நிருபர்க ளிஷ்டங் கொள்வன்.

18. **தருமகருமதியோகம் சக்கரயோகம்** என இருவகை யோகத்தால் துன்பமில்லாமல் வாழ்ந்து வருவான். வேறூரில் பூமி வாங்குவான். தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான். நிறைந்த குடும்பத்தையுடையவன். அரசர்கட்குப் பிரியமானவன்.

19. பதின்மூன்று வாண்டு மேலாய்ப் பாலகன் தனக்கு யோகம்
மதிபோல வளரு மென்றேம் மானிலம் சல்யங் காணுன்
கதிதரும் கடவுள் தொண்டு காவலன் செய்வா னுகும்
அதிதிகட் கன்ன மீவன் அம்பிகை யாளே கேளாய்.

19. பதின்மூன்று வயதுக்குமேல் ஜாதகனுக்கு யோகம் வளர்பிறைச் சந்திரன் போல் வளரும். உலகில் கடனுபத்ரவம் இல்லாதவன். முக்தியைக் கொடுக்கும் கடவுளுக்குத் தொண்டு புரிவான். விருந்தாளிகளுக்கு அன்னமளிப்பான். தாயே ! கேளுங்கள்.

20. மங்களம் பதினே ழாண்டில் மருவிடும் தென்கீழ் பாரி
அங்கவள் குணத்தைச் சொல்வேன் அரிமனை ஒப்ப தாகும்
பொங்கின குடும்ப மேற்பள் புகழ்ந்தோரை ஆத ரிப்பள்
துங்கமா மனத்த ளாகும் சொல்லது சுருக்க மாகும்.

20. ஜாதகனுடைய பதினேழாம் வயதில் மணமேற்படும். தென் கிழக்குத் திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றேம். இலக்குமியைப் போன்றவள். செழிப்புள்ள குடும்பத்தையடைவாள். தன்னைத் தோத்திரம் செய்தவரை ஆதரித்து வருவாள். தூய்மையான மனத்தினள். அடக்கமாகப் பேசுவாள்.

21. மாதுவும் யோக சாலி மாஞ்சிவப் புடைய ளாகும்
சூதிலாள் அடக்க வார்த்தை சுந்தர முடைய ளாகும்
சீதல குணத்தா ளாகும் சீலியாம் விரத சாலி
காதலி தீர்க்க ஜீவி கௌசிகர் மறுத்துச் சொல்வார்.

21. அவளும் அதிருஷ்டமுள்ளவள். மாநிற முடையவள் கபடமில்லா தவள். அடக்கமாகப் பேசுபவள். அழகுள்ளவள். குளிர்ந்த மன முள்ளவள். நல்லொழுக்கமுடையவள். நோன்புகள் நோற்பாள். நீண்ட ஆயுளுள்ளவள். கௌசிக முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார்.

22. பாரியு மிரண்டு நேரும் பாலகன் தனக்கு மேதான்
கூறுவீ ரந்தச் சங்கை குடும்பத்தோ னெட்டில் தங்கக்
காரியு மேழில் தங்கக் கழறினோ மந்த சங்கை
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யானே கேளாய்.

22. ஜாதகனுக்கு இரு மனைவியர் ஏற்படுவர். அந்த விபரத்தைச் சொல்லுங்கள். குடும்பஸ்தானத்துக்குரிய சந்திரன் எட்டாமிடத்தில் இருப்ப தாலும், சனி ஏழில் இருப்பதாலும் அங்ஙனம் கூறினோம். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே! கேளுங்கள்.

23. ஜயமுனி இதனைக் கேட்டுச் செப்புவார் முனிவ ருக்கு
நயமுடன் புதனு மாட்சி நன்மதி தனத்தைப் பார்க்க
வியமிலா குருவு மேழில் மேவின பலத்தி னாலே
பயமிலாத் தார மொன்றே பகருவோ முனியே யாங்கள்.

23. ஜயமுனிவர் இதனைக் கேட்டு முனிவருக்குச் சொல்லுகின்றார். புதன் ஆட்சியாக இருப்பதாலும், சந்திரன் இரண்டாமிடத்தைப் பார்ப்பதாலும், குரு ஏழாமிடத்தில் இருப்பதாலும், திண்ணமாக மனைவி ஒருத்தியே என்றோம், முனிவரே! நாங்கள்.

24. மதலைகள் எழுவர் தோன்றும் மரித்திடும் சிலவே என்றோம்
சதமுடன் ஆண்பால் ரண்டு தையலர் மூவர் தீர்க்கம்
அதிபன்தன் பூர்வந் தன்னை வரைகிறோம் காரைக் காலில்
சதியிலா ரெட்டி வம்சம் ஜனித்துமே வாழு நாளில்;

24. ஏழு குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் சிலர் நிலையார் என் றோம். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயு ளுள்ளவர்களாவார்கள். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காரைக்காலில் தீங்கில்லாத ரெட்டியார் மரபில் பிறந்து வாழ்ந்து வருங் காலத்தில்;

25. அந்நகர் கிராமச் செட்டு அவன்செய்நாள் வினையைக் கேண்மோ
கன்னிகை விதவை மாது கலந்தனள் தாயில் லத்தில்
அன்னியன் அவள்மேல் மோகம் ஆசையாய் சிலேடை சொல்ல
தன்சொலுக் கிசையா ளாகிச் சர்ப்பம்போல் கோப முற்றாள்.

25. அவ்வூரில் கிராம வியாபாரம் செய்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஒரு விதவைப் பெண் அவளுடைய தாயின் வீட்டில் வசித்து வந்தாள். வேறொருவன் அவள்மீது மோகம் கொண்டு ஆவலாகச் சில வார்த்தைகள் இரு பொருள்படும்படி சொல்ல, அப்பெண்ணும் அவன் சொல்லுக்கு இணங்காமல் சர்ப்பம்போல் கோபங் கொண்டாள்.

26. மாதுவுஞ் சிலநாள் சென்று அவள்தனி போகும் போது
காதல்கொண் டோன்பின் சென்று கன்னியைப் பலவந் தத்தால்
தீதுகள் செய்யும் போது தோகையு மனது வெட்கி
ஓதினுள் துணைவ ரோடு உரகம்போல் கோப முற்று.

26. அப் பெண் சில நாட்கள் கழித்துத் தனியாக வெளியே செல்லும் போது அவளிடம் மையல் கொண்டவன் பின் தொடர்ந்து சென்று அப் பெண்ணுடன் பலவந்தமாகப் போகம் செய்தான். அக்காலத்தில் அப்பெண் மன வருத்தமடைந்து, சர்ப்பம்போல் கோபங்கொண்டு, தன் சகோதரனிடம் கூறினுள்.

27. அதிகாரி யிடமும் கூற அடாவடி செய்தோன் தன்னை
அதீதத்தை வினவும் போது அதுநீசம் பொய்யென் றெண்ணி
அதிபனுல் பொருளும் பெற்று மங்கைமேல் தோடஞ் சொல்லச்
சதியுள மனத்த ளாகிச் சாற்றுவாள் சாபந் தானும்.

27. அதை அவ்வூர் அதிகாரியாக இருந்த (ஜாதகனிடம்) சொன்னுர்கள். கற்பழித்தவனைக் குறுக்கு விசாரணை செய்யும்போது, அவன் சொல்லும் பொய்யையே நிஜம் என்று நினைத்து, அவனிடமிருந்து பொருளையும் பெற்றுக் கொண்டு, பெண்மீதே தோஷத்தைச் சொன்னுன் வருந்திய மனமுள்ள அப்பெண் சாபமிடுகின்ருள்.

28. தனமது வாங்கிக் கொண்டு தையல்மேல் கொடுமை செய்தாய்
இனிவருஞ் ஜன்மந் தன்னில் எய்தாது துணைஆ ணுந்தான்
வனிதையாம் துணைவி யாலே மாநிலம் நிந்தை எற்பாய்க்
கனமுள தந்தை யில்லம் கருதாமல் செல்வா யென்றும் ;

28. பொருளைப் பெற்றுக்கொண்டு பெண்மீது கொடுமை செய்த பாவியே ! உனக்கு ஏற்படும் மறு பிறவியில், சகோதரர் இல்லாதவனுய், சகோதரியால் உலகத்தில் அவமானம் அடைவாய். தந்தையின் பெரிய வீட்டை அடையாமல் செல்வாய் என்றும் ;

29. இன்னமும் பலவாறு சொன்னுள் எய்திற்று அந்தச் சாபம்
மன்னவ னந்தி யத்தி லறுமுகன் தொண்டு பூண்டு
தென்திசை கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
இந்நில முதிப்பா னுகும் எய்திடு மேழை சாபம்.

29. இன்னும் பலவிதமாகச் சொன்னுள். அந்தச் சாபம் வந்தடைந்தது. ஜாதகன் தன் கடைசிக்காலத்தில் முருகப்பிரானுக்குத் தொண்டுகள் பல செய்து மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு இக் குலத்தில் பிறப்பானென்ருேம். ஏழையின் சாபம் தொடர்ந்தது.

30. துணைவியா லவமா னங்கள் சேர்ந்திடு மிதுவல் லாமல்
துணைஆண்பால் நஷ்ட மெய்தும் சொந்தவூர் அடையா னுகும்
அணையவே இவனின் யோகம் அறிவிப்போம் தரித்ர மில்லான்
பணையோர்கள் விருத்தி மேன்மைப் பலரையும் வசியஞ் செய்வன்.

30. சகோதரியால் அவமானங்கள் அடைவான். இதுவில்லாமல் சகோதர னுக்குத் தோஷமுண்டு. சொந்த ஊரை அடையாதவன். இவனுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். வறுமை யில்லாதவன். பண்ணை ஏர் முதலியன விருத்தியடையும். பல பேரை வசீகரிக்கும் இயல்பினன்.

31. தந்தைமேல் வாழ்வா னாகும் சல்லியப் பாதை ஏற்கான்
பந்துவுக் கிணக்கஞ் சொல்லான் பாரபட் சங்கள் பேசான்
வந்தவர்க் கன்ன மீவன் வள்ளல்மேல் பக்தி உண்டு
கந்தனை ஈன்ற மாதே கழறின மொழி குன்றுவே.

31. தன் தந்தைக்கு மேன்மையாக வாழ்ந்து வருவான். கடன் உபத்ர வம் அடையாதவன். தன் சுற்றத்தாருக்கு இணங்காதவன். ஒருதலை யாகப் பேசாதவன். தன்னை யண்டிவந்தவர்கட்கு அன்னமளிப்பான். தெய்வபக்தி யுடையவன். முருகப்பிரானைப் பெற்ற தாயே! கூறியவார்த்தை கள் தவறு.

32. மாதுரு நற்கு ணத்தாள் மாஞ்சிவப் புடைய ளாகும்
பாதக மனமில் லாதாள் பதர்குண மில்லா ளாகும்
சூதிலாள் யோக சாலி தோழன்தன் மனதுக் கேத்தோள்
மாதவர்க் கன்ன மீவள் வருவோரை ஆத ரிப்பள்.

32. ஜாதகனுடைய தாய் நற்குணமுடையவள். மாநிற முள்ளவள். தீய மன மில்லாதவள். அற்பகுணங் களில்லாதவள். கபடமற்றவள். யோக சாலி. தன் கணவன் மனத்துக் கேற்றவள். தவம் செய்யும் துறவிகட்கு அன்னமளிப்பாள். தன்னிடம் வருபவரை ஆதரிப்பாள்.

33. சொல்லது சுருக்க மாகும் துன்பங்க ளெவர்க்கு மெண்ணாள்
அல்லல்க ளடையா ளாகும் அவள்துணை ஆண்பால் ரண்டு
சொல்லுவோந் தீர்க்க மாகத் தோகைக்கு அன்னை ரண்டு
புல்கிடு மென்று சொல்வோம் பூவையின் பூர்வங் கேளாய்.

33. அடக்கமாகப் பேசுபவள். ஒருவருக்கும் தீங்கு செய்ய நினையாதவள். துன்பங்கள் அடையாதவள். உடன்பிறந்த சகோதரர் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். அவளுக்கு இரு தாய்மார்கள் உள்ளனர் என்று சொல்லுவோம். தாயின் முற்பிறவியைக் கேளுங்கள்.

34. சேரநா டதனி லேதான் சேணியர் குலமு தித்துப்
பாரிய குடும்பி யாகிப் பண்போர்க்கு அன்ன மீந்து
நாரிக்கு வினைஇல் லாமல் நடந்தனள் கால னூடு
ஆரியன் வனரயப் பட்டு அனுகினு ளிந்த மாது.

34. சேரநாட்டில், சேணியர் குலத்தில் பிறந்து, பெரிய குடும்பத்தை யடைந்து, பண்பு உள்ளவர்கட்கு அன்னமளித்து, தீவினைகளில்லாமல் மரண மடைந்தாள். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள், ஜாதகனின் தாய்.

35. பின்ஜன்மம் திருவ லத்தில் பிறப்பளா மிக்கு லத்தில்
உன்னத குடும்பி யாகி உத்தமி வாழ்வா ளாகும்
கன்மகா லங்கள் தம்மைக் கழருவீர் முனியே நீர்தாம்
மன்னனுக் காரு ருண்டில் மடிவுண்டு அன்னைக் கேதான்.

35. இவள் மறுபிறவி திருவலத்தில் இதே குலத்தில் பிறப்பாள். உயர்ந்த குடும்பத்தையடைந்து வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய கரும காலத்தைச் சொல்லுங்கள், முனிவரே! தாங்கள். ஜாதகனுக்கு முப்பத் தாரும் வயதில் தாய் மரணமடைவாள்.

36. முப்பது நாலு ஆண்டில் விளம்புவோந் தந்தை கண்டம்
செப்புவோ மிவன்பின் ஜன்மம் திருப்புகழ் தன்னி லேதான்
ஒப்புவான் பிரம்ம சேயாய் உரைந்தது தப்பா தாகும்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

36. ஜாதகனுடைய முப்பத்துநான்காம் வயதில் தந்தை மரண மடைவான். அவனுடைய மறுபிறவி, திருப்புகழ் என்ற ஊரில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான். கூறியது தவருது. கங்கையைச் சடைமுடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியே! சொல்லிய வார்த்தைகள் தவரு.

37. ஆரல்தன் தசையில் கண்டம் அணுகிடுந் தந்தைக் கேதான்
தேரிடும் நமனைக் காணுன் செம்பொன்னின் தசையில் நேரில்
சூரியன் புத்தியில் சொல்வோம் குறித்தஇம் மொழிகுன் றுவே
பாரினில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

37. ஜாதகனுடைய தந்தைக்கு அங்காரகமகாதசையில் கண்டம் ஏற்படும். ஆனல் அப்போது இறக்கமாட்டான். குருமகாதசையில் புதபுக்தியில் மரணம் உண்டாகும் என்று சொல்லுகின்றேம். சொன்ன சொல் தவருது. உலகில் தவங்களை இயற்றும் பார்வதி தேவியே! கேளுங்கள்.

38. அறுபது மூன்று ஆண்டில் ஆவணி மாதந் தன்னில்
திருமுக னுடல மேகும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
நரிபரி யாக்கு நாட்டில் நல்குவான் வைச்யச் சேயாய்க்
கரிமத வானை பெற்ற காதலி கட்டி டாயே.

38. ஜாதகன் தனது அறுபத்துமூன்றும் வயதில் ஆவணி மாதத்தில் மரணமடைவான். இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். மதுரையம்பதியில் வைசிய குலத்தவனுகப் பிறப்பான். கரிய யானை முகத்தையுடைய விநாயகரைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

39. உதித்திடுங் காலந் தன்னில் ஓணத்தின் மூன்றும் பாதம்
மதிதசை ஆண்டு மூன்றும் மாதமு மூன்று மாகும்
அதனுடன் நாட்கள் பத்தும் அறிவித்தோம் பூர்வ பாகம்
இதுமுதல் பாகஞ் சொன்னேம் ஈச்வரி கேட்டி டாயே.

39. ஜாதகன். பிறக்கும் காலத்தில் திருவோணத்தில் மூன்றும் பாதம் நடைபெறும். சந்திரமகாதசையில் மூன்று வருடங்களும் மூன்று மாதங் களும் பத்து நாட்களும் மீதமாகும் என்று கூறினேம். இதை முதல் பாகமாக சொன்னேம். தாயே! கேளுங்கள்.

# ஜாதகம் 88

1. சந்திரன் சனியுந் தேளில் சிகிமானில் பொன்ஞேன் மேடம்
புந்தியும் நந்தி யாகப் புகர்பானு வீணை யாக
மந்தரக் கயிறு வண்டி மங்களன் சீய மாக
இந்தவாறு கோளு நின்று லக்கினம் மிதுன மாக ;

1. சந்திரன் சனி விருச்சிகத்திலும், கேது மகரத்திலும், குரு மேஷத்தி லும், புதன் விருஷபத்திலும், சுக்கிரன் சூரியன் மிதுனத்திர லும், ராகு கடகத்திலும், செவ்வாய் சிம்மத்திலுமாக நவக்கி கங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமானல் ;

| | | | |
|---|---|---|---|
| | குரு | புதன் | லக்கினம் சுக்கிரன் சூரியன் |
| | இராசி சக்கரம் | | ராகு |
| கேது | | | செவ்வாய் |
| | சந்திரன் சனி | | |

2. பலனதைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
நலமுள பராசர் சொல்வார் நாயகன் ஜனன மாகும்
தலமது கீழ்மேல் வீதி தென்வாடை மேல்பால் கன்னி
குலவிடுங் கீழ்ப்பால் தந்தி கூரையாம் சிறுவூ ராகும்.

2. ஏற்படும் பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதிதேவி கேட்கும் போது, நன்மை மிக்க பராசர முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு வரிசையில் உள்ளது. மேற்குப் பக்கத்தில் அம்மன் கோயிலும் கிழக்கில் விநயகர் ஆலய மும் உள்ள சிறு ஊரில் கூரை வீட்டில் பிறந்தான்.

3. இத்தகை யடையா ளத்துள் இப்பாலன் ஆருஞ் ஜன்மம்
வித்தக னுதிப்பா னுகும் விளம்புஞ்செங் குந்த சேயாய்ப்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்ர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இவ்வித அடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் ஆரும் பிறவியாக, செங்குந்த மரபில் தோன்றுவான். ஜாதகனுடைய தாய் தந்தையர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி ஆகிய இவற்றையும் இந்நூலில் சொல்லுகின்றேம்.

4. தந்தையின் துணைய னேகம் ஜனித்திடும் யாவுந் தீது
பிந்தியு மொன்று தீர்க்கம் பேசுவோ மாண்பா லாக
அந்தவன் வேருய்ச செல்வன் அவன்பலன் பின்பால் சொல்வேண்
இந்தவன் தந்தை சேதி இயம்புவோ மினிமே லாக.

4. ஜாதகனுடைய தந்தையுடன் பிறந்தவர்கள் அநேகர். அவர்கள் ஒருவரும் நிலையார். பின் பிறக்கும் சகோதரன் ஒருவனே நிலையாக உள்ளவன். அவனும் வேருகச் செல்வான். அவனுடைய செய்தியைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய தந்தையின் செய்தியை இனிக் கூறுகின்றோம்.

5. கல்வியு மற்ப மாகும் கருதிடான் கட்டு வார்த்தை
இல்லம்விட் டேகு வானும் இடரது ஒருவர்க் கெண்ணன்
நல்லவ னுகி வாழ்வன் நற்றந்தை ஆஸ்தி காணன்
சொல்லது சுருக்க மாகும் சுகதுக்கங் கலந்து வாழ்வன்.

5. கல்வியறிவு சிறிதேயுள்ளவன். பொய்பேசாதவன். தன் வீட்டை விட்டுச் சென்று விடுவான. ஒருவருக்கும் தீங்கெண்ணுதவன். நல்லவனுகவே வாழ்ந்து வருவான். தன் பிதுரார்ச்சிதமான பொருள் இல்லாதவன். அடக்கமாகப் பேசுபவன். சுகதுக்கம் கலந்து வாழ்ந்து வருவான்.

6. கடன்கொள்வன் தீர மில்லான் கடவுளர் பக்தி பூண்பன்
உடன்படான் பிழைக ளுக்கு உயர்விலாக் குடும்பி யாவன்
தடபுடல் செய்கை யுண்டு தரணிகள் அற்ப மாகும்
துடியிடை சொல்தட் டாதான் செப்புவோ மாமி ரண்டு.

6. கடன்படுவான். தைரியமில்லாதவன். தெய்வபக்தியுள்ளவன். தீங்கு செய்ய இஷ்டப்படாதவன். நடுத்தரமான குடும்பியாக இருப்பான். ஆடம்பரச் செய்கை யுள்ளவன். பூமிகள் குறைவாகவே உடையவன். தன் மனைவியின் சொல்லைத் தட்டாதவன். இரு மனைவியரை அடைவான்.

7. குலதொழில் புரிவா னுகும் குணமது நல்ல தாகும்
நிலைவிட்டு ஏகு வானும் நிமிஷத்தில் கோபி யாவன்
சொலுமொழி யிரண்டு முண்டு சிவந்தமெய் பித்தச் சூடு
குலவும்வெண் கார கங்கள் கோமளி கேட்டி டாயே.

7. தன் குலத் தொழிலையே செய்து வருவான். நல்ல குணமுள்ளவன். தன் ஊரை விட்டுச் சென்று வசிப்பான். விரைவினில் கோபம் கொள்வான். இருவிதமாகப் பேசும் இயல்பினன். சிவந்த உடலுள்ளவன். பித்தச் சூட்டு நோயுள்ளவன். காரக நோய் உள்ளவன். அழகியே! கேளுங்கள்.

8. இத்தகை உடையா னுக்கு இப்பாலன் ஆருஞ் ஜன்மம்
வித்தக னுதிப்பா னுகும் விளம்புவோ மிவன்கு ணத்தை
உத்தம னுகி வாழ்வன் உண்மையா மனத்த னுகும்
சுத்தம்போல் வெளிம யக்கன் சோம்பலுங் கொஞ்ச முண்டு.

8. இத்தகைய அடையாளங்கள் உள்ளவனுக்கு இந்த ஜாதகன் ஆரும் பிறவியாகப் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். உயர்ந்தவனுகி வாழ்ந்து வருவான. உண்மையான மனத்தினன். வெளியார் சுத்தமுள்ளவன் என்று நினைக்கும்படி நடப்பான். சிறிது சோம்பலுள்ளவன்.

9. பலசகா யங்கள் செய்வன் பத்தினிக் கடக்க மாகும்
நலமதை எவர்க்குஞ் செய்வன் நாயகன் சிவந்த மேனி
குலத்தொழில் புரிவா னாகும் குண்ணடகோ விருத்தி அற்பம்
தலஞ்சொந்த மில்லா வாழ்வன் தனமிலான் தரித்திர முள்ளான்.

9. பலருக்கு உபகாரங்கள் செய்து வருவான். தன் மனைவிக்கு அடங்கி நடப்பவன். எல்லோருக்கும் நல்லதையே செய்து வருவான். சிவந்த உடலுள்ளவன். தன்குலத் தொழிலைச் செய்து வருவான். பசு எருதுகள் விருத்தியுரு. சொந்தமில்லாத வீட்டில் வசித்து வருவான். செல்வமில்லாதவன். தரித்திர முள்ளவன்.

10. தன்துணை அறுவர் தோன்றும் தங்குமுன் ஆண்பால் ரண்டு
பின்னமா மற்ற வெல்லாம் பேசுவோ முன்னோன் சேதி
அன்னியருக் கிணக்கஞ் செய்வன் அடாவாடி கூறு னாகும்
பொன்பணி இல்லா னாகும் பந்துவின் மதிப்பில் லாதான்.

10. உடன்பிறந்தவர்கள் ஆறுவர் தோன்றுவார். அவர்களில் இருவர் ஆண் பிள்ளைகள். மற்றவரெல்லாம் நிலையார். முன்பிறந்த சகோதரனின் செய்தியைச் சொல்லுகின்றோம். பிறருக்கு அடங்கி நடப்பவன். அடாவடியாகப் பேசாதவன். பொன்னுபரணங்க ளில்லாதவன். தன் பந்து ஜனங்களால் மதிக்கப்படாதவன்.

11. சல்லிய முடைய னாகும் தன்பாரி வொன்றே தீர்க்கம்
வல்லிக்குச் சுதர னேக மருவிடும் யாவுந் தீது
வில்நுதல் பெண்பா லொன்று விளங்கிடுந் தீர்க்க மாக
அல்லலாய் வாழ்வா னாகும் அவனுக்கு வயது தீர்க்கம்.

11. கடன் உபத்ரவமுள்ளவன். மனைவி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். அவள் புத்திரபாக்கியம் மிகுதியாக உள்ளவள். பெற்ற பிள்ளைகள் யாவும் நிலையா. பெண் ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். அவன் துன்பப்பட்டுக்கொண்டு வாழ்ந்து தீர்க்கமாக இருப்பான்.

12. அதற்குப்பின் துணைவன் சேதி அறிவுளான் ஊக வானும்
பதர்குண மில்லா னாகும் மயக்கமில் லாமல் வாழ்வன்
நிதியிலான் மனைவி யாலே நிந்தைகள் பெறுவா னாகும்
அதிபனும் சிறையாய் வாழ்வன் மனைவியை விட்டு நீங்கி.

12. பின் பிறந்த சகோதரனின் செய்தியைச் சொல்லுகின்றோம். அறிவாளி. ஊகமுள்ளவன். அற்ப குணங்களில்லாதவன். சஞ்சலமில்லாமல் வாழ்ந்து வருவான். செல்வங்களில்லாதவன். தன் மனைவியால் அவமானங்களை அடைவான். தன் மனைவியை விட்டுத் தனியாகவே வாழ்ந்து வருவான்.

13. பக . . .மில் லாமல் வாழ்வன் பாக்கிய மில்லா னாகும்
இகபரன் பத்தி பூண்பன் இடர்செய்யான் யாவ ருக்கும்
சகமதில் பித்தன் போலச் செல்வனின் குணம தாகும்
உகமையாய்ப் பேசு வானும் உரைப்பனு நன்னூல் தன்னை.

13. ........இல்லாமல் வாழ்ந்து வருவான். பாக்கியமில்லாமல் வாழ்ந்து வருவான். தெய்வபக்தி உள்ளவன். ஒருவருக்கும் தீங்கு செய்யாதவன். உலகில் பைத்தியக்காரன் போல் வாழ்ந்து வருவான். செல்வவானைப் போல் குணவான். உவமானங்களுடன் பேசுவான். நல்ல நூல்களைக் கற்றுணர்வான்.

14. வயதுமே தீர்க்க மெய்யும் வஞ்சனை மனமில் லாதான்
அயலார்பொ னிச்சை யில்லான் அறிவிப்போம் பின்பால் சேதி
நயம்படக் கூறு வானு நாட்டின்மேல் சிலநாள் வாசம்
சிவன்தனைப் பூசை செய்யுஞ் செல்வதி கேட்டி டாயே.

14. நீண்ட வயதுள்ளவன். வஞ்சனை யில்லாதவன். பிறர் பொருளின் மீது ஆசை யில்லாதவன். பிற்பாகத்தில் விபரம் சொல்லுகின்றோம். நய மாகப் பேசுபவன். அயல்நாட்டில் சிலகாலம் வசித்து வருவான். சிவபெருமானைப் பூசை புரியும் செல்வியே! கேளுங்கள்.

15. தன்துணைக் கன்னி யில்லாச் சங்கையைச் சொல்லு மென்னப்
பொன்னவன் லாபந் தங்கப் பூமகன் மூன்றி லாக
அன்னவர் பலத்தி னாலே அக்கன்னி மார்கள் நட்டம்
இன்னவன் யோக மின்றி இருக்குங்கா ரணங்க ளென்ன.

15. உடன் பிறந்தவர்களில்லாமலிருப்பதற்குக் காரணம் கூறுங்கள், என்று வினவ, குரு லாபஸ்தானத்தில் இருப்பதாலும், அங்காரகன் மூன்று மிடத்தில் (சகோதர ஸ்தானத்தில்) இருப்பதாலும், உடன்பிறந்த சகோதரிகள் நிலையார். ஜாதகன் அதிர்ஷ்டமின்றி இருக்கும் காரணங்கள் என்ன?

16. தனத்துளோ னாறில் நீச்சஞ் சதுர்த்தநாள் விரய நின்று
கனமிலாக் குடும்பி யாவரெக் காலத்துமவ் வாறு வுண்டோ
கனபுகர் தசைவ ரைக்குங் கழறவே மாட்டோம் யோகம்
வினைபூர்வம் சேர்ந்த தென்றோம் விளம்புவோ மந்தந் தன்னில்.

16. தனஸ்தானாதிபதியாகிய சந்திரன் துலாத்தில் (ஆறும் வீட்டில்) நீச்சமாக இருப்பதாலும், நான்காம் வீட்டுக்குரிய புதன் (விருஷபத்தில்) விரய ஸ்தானத்தில் இருப்பதாலும், செழிப்பில்லாத குடும்பியாக இருப்பான். ஆயுள் மட்டும் அவ்வாறே இருக்குமோ? சுக்கிரமகாதசை வரைக்கும் யோகம் சொல்லவே மாட்டோம். அது முற்பிறவியில் செய்த தீவினையால் ஏற்பட்டது என்றோம். அதுவும் கடைசிக் காலத்தில் ஏற்பட்டது.

17. மங்களமிருபா னென்றில் மருவிடுந் தெங்பால் பாரி
அங்கவள் குணத்தைச் சொல்வேன் அரவுபால் கோபங் கொஞ்சம்
நங்கையு மிருநிறத்தாள் நடையது துருசு மாகும்
பங்கய முகத்தா ளாகும் பாட்டாளி யென்று சொல்வோம்.

17. ஜாதகனுக்கு இருபத்தோராம் வயதில் மணமேற்படும். மனைவி தெற்கு பக்கத்திலிருந்து வாய்ப்பாள். அவளுடைய குணத்தைக் கூறு கின்றோம். சர்ப்பம் போல் சிறிது கோபம் அடைவாள். இருநிற முடையவள். வேகமாக நடப்பவள். தாமரையைப் போன்ற முகமுள்ளவள். உழைப்பாளி என்று சொல்வோம்.

18. சுகமற்பம் துக்க மேன்மை தோகையு மடைவா ளாகும்
தகைமையாய்க் குடும்பங் காணாள் சத்தியும் வந்த பின்பு
அகமது பிரித லாகும் பரபட்ச மதிபோல் இல்லம்
உகமையாய்ப் பேசு வாளாம் உரகன்போல் தைர்ய சாலி.

18. அற்பமான சுகமே முள்ளவள். அவளுக்குத் துக்கம் அதிகம். தக்க குடும்பத்தை யடையாதவள். மனைவி வந்தபிறகு ஜாதகனுடைய குடும்பம் பிரிந்துவிடும். தேய் பிறைச் சந்திரன் போல் வீடு குறைந்துபோம். உபமானங்களுடன் பேசுபவள். சர்ப்பத்தைப் போல் தைரிய முள்ளவள்.

19. மாதுவுந் தீர்க்க சீவி மைந்தர்கள் பலத்தைச் சொல்வோம்
தீதாகு மாண்பா லுந்தான் செல்விமார் நால்வர் தீர்க்கம்
காதல னொருவன் தீர்க்கங் கலந்தபின் யோக மென்றோம்
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

19. நீண்ட ஆயுளுள்ளவள். புத்திர பாக்கியத்தைச் சொல்லுகின்றோம். புத்திரர்கள் நிலையில்லாதவர்கள். நான்கு புத்திரிகள் தோன்றித் தீர்க்காயு ளுள்ளவர்கள். ஒரு புத்திரனே நீண்ட ஆயுளுள்ளவன் என்றோம். புத்திரன் பிறந்த பிறகு ஜாதகனுக்கு யோகம் வளரும். உயர்ந்த கணவனை யடைந்த புண்ணியவதியே ! கேட்டிடுவாய்.

20. ஜாதகன் முன்ஜென் மத்தைச் சாற்றுவோம் பழனி நாட்டில்
போதன முடையா னுக்குப் பிறந்தனன் பாலனாகக்
காதலி மதலை யுண்டாய்க் கனத்தவர் பணைக ளுண்டாய்
மேதினில் வாழு நாளில் மேவின வினையைக் கேண்மோ.

20. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பழனி நாட்டில் பெரும் செல்வமுள்ளவனுக்குப் புத்திரனாகப் பிறந்தான். மனைவி மக்களை யடைந்து, பெரிய பண்ணை ஏர் முதலியன உள்ளவனாகி, உலகில் வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

21. அதர்வணங் கற்றுக் கொண்டு அநேகரைத் துன்பஞ் செய்தான்
முதற்குலக் கற்பின் மாதை வித்தகன் பாதை செய்ய
அதிபதி நோய்வ ருத்த மறைகிருள் சாபந் தானும்
சதிசெய்த பாவிக் கேதான் சாதமு மில்லா தாயும் ;

21. அதர்வவேதத்தைக் கற்றுக்கொண்டு பல பேர்களைத் துன்புறுத்தினான். அந்தண குலத்தில் பிறந்த பெண்ணொருத்தியை இவன் தீண்ட, அவளும் வருத்தமடைந்து (வியாதியால் பீடிக்கப்பட்டுச்) சாபமிடுகின்றாள். எனக்குத் தீங்கிழைத்த பாவியே ! உனக்கு உண்ண உணவில்லாமலும் ;

22. தனமது வில்லா தாயுந் தரித்திரங் குடியில் தங்கும்
இனிவருஞ் ஜன்மந் தன்னில் இடுக்கமாங் குடும்பி யாயும்
துணைப்பெண்ணு மில்லா தாயுஞ் சேத்திர மிரவ லாயும்
இனமதிப் பில்லா தாயும் ஏவலாள் போல வாழ்வாய்.

22. செல்வங்கள் அற்று, வறுமை உன்னிடம் குடியாக இருக்கும். இனி ஏற்படும் மறு பிறவியிலும், துன்பமுள்ள குடும்பத்தை யடைந்து, சகோதரியில்லாமல், குடியிருக்கச் சொந்த வீடில்லாமலும், தன் குலத்தவரால் மதிப்பில்லாமலும், வேலைக்காரன் போல வாழ்க்கை நடத்துவாய்.

23. இன்னமும் பலவாறு சொன்னாள் அதிதிகள் ததாஸ்து வென்ன
துன்பங்கள் நேர்ந்த வென்றேஞ் சுதனுக்கு வந்தி யத்தில்
தன்மனை சுதரு மற்றுத் மடமையா லடக்க மாகிப்
பொன்பொருள் குறைவுண் டாகிப் போஜன வறுமை நேர்ந்து ;

23. இன்னம் பலவிதமாகக் கூறினாள். தெய்வங்களும் "அப்படியே" என்று கூற, துன்பங்கள் நேர்ந்தன என்றும், ஜாதகனும் முற்பிறவியில் கடைசியில் தன் மனைவியும் புத்திரர்களும் இறந்து, கெட்ட புத்தியால் அடங்கி, செல்வங்கள் குறைந்து, சாப்பாட்டுக்கும் வறுமையடைந்து ;

24. அறுமுக னால யத்தில் அவன்தொண்டு புரிந்து மேதான்
வருவோர்பா லுணவு முண்டு மறலியின் பதிக்குப் புக்கிப்
பெருநர கமும டைந்து பிரமனால் வரையப் பட்டுத்
திருமக னுதிப்பா னுகுஞ் சேர்ந்திடுங் கற்பின் சாபம்.

24. சுப்பிரமணியக் கடவுளின் ஆலயத்தில் தொண்டுகள் பல செய்து, அங்குத் தரிசனம் செய்ய வருபவர்களிடம் யாசித்துப் புசித்து, மரணமடைந்து, நரகத்தை யடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தான். கற்புள்ள மங்கையின் சாபம் தொடர்ந்தது.

25. ஜனித்த நாள் முதலாமாகச் சுகமிலான் வறுமை ஏற்பன்
கனமிலான் நாற்பா னைந்தா மாண்டுக்கும் வறுமை ஏற்பன்
தனஞ்சேரா குறைவு முண்டு தடந்தட மாட்ட மாகும்
வினையிலாத் தவங்கள் செய்யும் வித்தகி கேட்டி டாயே.

25. ஜாதகன் பிறந்த நாள் முதல் சுகப்படாதவன். தரித்திரம் அடைவான். செழிப்பில்லாதவன். நாற்பத்தைந்தாம் வயதுவரை வறுமையுள்ளவன். செல்வம் சேராது. குறைந்து போம். இருக்கும் இடத்துக்கும் கஷ்டப்படுவான். தீங்குகளில்லாமல் தவங்களை இயற்றும் தேவியே ! கேளுங்கள்.

26. சொல்லிய வாண்டின் மேலாய்ச் சுகம்பெரு மில்லஞ் சொந்தம்
அல்லல்க ளடை யா தாகும் அனுகாவே சல்லி யங்கள்
எல்லேயும் கொஞ்சஞ் சேரும் எடுத்தகா ரியங்க ளோங்கல்
தல்லியு மாண்ட பின்பு சௌகர்ய முடைய னாகும்.

26. நாங்கள் கூறிய அவ்வயதுக்குமேல் சுகமேற்படும். சொந்தத்தில் வீடு கிடைக்கும். துனபங்கள் இல்லாதவனுவன். கடன் உபத்திரவங்கள் அடையாதவன். பூமிகள் சிறிது சேரும். எடுத்த காரியங்கள் கை கூடும். தாய் மரணமடைந்தபின் சௌக்கியம் ஏற்படும்.

27. அன்னையின் குண மெவ்வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்
கன்னென மொழியு முண்டு கார்க்கோடன் போலக் கோபம்
பன்னியே பேசு வாளாம் பதர்குண மில்லா ளாகும்
பொனபணி அதிக மில்லாள் பித்தவாயு வுடைய ளாகும்.

27 ஜாதகனுடைய தாயின் குணம் எப்படி யென்று கூறுங்கள், முனிவரே! தாங்கள். இனிய வார்த்தைகளையே பேசுபவள். சர்ப்பம் போலக் கோபங் கொள்வாள். பன்னிப் பன்னிப் பேசுபவள். அற்பகுணங்க ளில்லாதவள். பொன்னுபரணங்கள் அதிகம் இல்லாதவள். பித்தவாயு உள்ளவள்.

28. மாதுரு இரண்டே யாகும் மங்கையு முதல்ம னைக்குக்
காதலி உதிப்பா ளாகும் காணுரே துணைவ ரென்றோம்
ஓதுவீ ரந்தச் சங்கை ஒருநான்கோன் விரயம் புக்குச்
சீதள மதியுங் காரி அஷ்டம மிருப்ப தாலே ;

28. ஜாதகனுடைய தாய்க்குத் தாய்மார் இருவராகும். தாய் தன் முதல் தாய்க்குப் பிறந்தவள். உடன் பிறந்தவர் இல்லாதவள். அதற்குக் காரணம் கூறுங்கள். நான்காம் வீட்டுக்குரிய புதன் விரயஸ்தானத்தில் இருப்பதாலும், சந்திரன் நீச்சமாக சனியுடன் கூடி இருப்பதாலும் ;

29. தனியளாம் துணையுங் காணுள் சாற்றுவோ மிவள்முன் ஜன்மம்
வனிதைவாழ் காரைக் காலில் வைசிய குலமு தித்துக்
கனதனம் பெற்று வாழுங் காலத்தில் வினையைச் சொல்வேன்
இளவேழை மாது பேரில் இடரான வார்த்தை சொல்ல ;

29. தாய் தனித்தே வசிப்பாள். ஜாதகனுடைய தாயின முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அம்மையர் வாழ்ந்த காரைக்காலில் வைசிய குலத்தில் பிறந்து, மிகுந்த தனமடைந்து வாழ்ந்துவருங்காலத்தில் ஏற்பட்ட தீவினை யைச் சொல்லுகின்றோம். தன்னினத்தவரிலேயே உள்ள ஏழைப்பெண் ஒருத்தியின்மீது தீங்கான வார்த்தைகளைக் கூற ;

30. கன்னிகை வருத்த முற்றுக் கழறின சாபங் கேண்மோ
துன்மைகள் சொன்ன பாவி துலங்கும்பின் ஜன்மந் தன்னில்
அன்னையின் சுகமு மின்றி அண்ணன்தம் பிகளு மின்றி
என்னைப்போல் துணையு மின்றி எழிலான குடும்ப மின்றி ;

**30.** ஏழை மாதும் வருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். என்மீது பழி கூறிய பாவியே! இனி ஏற்படும் மறு பிறவியில், உனக்குத் தாயின் சுகமில்லாமல், சகோதரர்களும் இல்லாதவளாகி, என்னைப்போல சகோதரியும் இல்லாமல், செழிப்புள்ள குடும்பமுமில்லாமல்;

**31.** சுதர்கன்னி யின்றி வாழ்வாய் செப்பியே தூளைத் தூற்ற
அதுசாப நேர்ந்த தென்றேம் அந்திய காலந் தன்னில்
புதல்வர்கள் பகையு மாயும் போசன வறுமை யாயும்
விதிமாண்டு பிரமன் லக்கம் வித்தகி யுதித்தா ளென்றேம்.

**31.** புத்திரர் புத்திரிகளில்லாமல் வாழ்ந்து வருவாய், என்று கூறித் தெருமண்ணை வாரி இறைத்தாள். அந்தச் சாபம் ஏற்பட்டது. ஜாதகனின் தாயும் தன் கடைசிக்காலத்தில் புத்திரர்கள் மாண்டு, சாப்பாட்டுக்குத் தரித்திரமடைந்து, இறந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்றேம்.

**32.** ஆகையால் முன்னூழ்ச் சாபம் அணுகிடு மிச்சென் மத்தில்
தோகையுந் தனிய ளாவள் சுதர்கன்னி காணு ளாகும்
போகபாக் கியங்க ளில்லாள் செப்புவோ மிவள்பின் ஜன்மம்
தோகைமேல் சிறுவூர் தன்னில் ஜனிப்பளா மருகர் வம்சம்.

**32.** ஆகையால் முற்பிறவியின் சாபம் இப்பிறவியிலும் தொடரும். தாயும் தனியளாக வாழ்வாள். புத்திரர்கள் புத்திரிகளில்லாதவள். போக பாக்கியங்களில்லாதவள். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றேம். **தோகைமலையின்** மேல் உள்ள சிற்றூரில் சமண குலத்தில் பிறப்பாள்.

**33.** தந்தையின் பூர்வந் தன்னைச் செப்புவோம் பனங்காட் டூரில்
நிந்தைசெய்க் கர்ண சேயாய் நேர்ந்துமே மனைவி மைந்தர்
அந்நகர் கணக்கு வேலை அவன்செய்நாள் வினையைக் கேண்மோ
பொன்னேழைப் பக்கல் பெற்றுப் பூமியைத் தாரே னென்று;

**33.** ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். **பனங்காட்டூரில்,** பலரால் பழி சொல்லப்படும் கருணீகர் குலத்தில் பிறந்து, மனைவி மக்களை யடைந்து, அவ்வூரின் கணக்கன் வேலையைச் செய்து வரும் போது ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஏழைகளிடம் சென்று பூமி தருகிறேன் என்று கூறிப் பணத்தை வாங்கிக்கொண்டு;

**34.** ஆசைகள் சொல்லி யேதான் அடாவடி செய்தா னென்றேம்
பேசுவா ரேழை யோர்கள் பிழைசெய்த பாவிக் கேதான்
நாசமா மில்லந் தானு நல்குநாள் வறுமை யாயும்
போசனங் குறைவ தாயும் பின்ஜன்மந் தன்னி லேதான்;

**34.** ஆசை வார்த்தைகள் கூறி, அடாவடியாக எடுத்துக்கொண்டான். ஏழைகள் கூறுகின்றனர். எங்களுக்குத் தீங்கிழைத்த பாவிக்கு, வீடு நாச மாகும். மீதி நாட்கள் வறுமையுடன் கடத்தி, சாப்பாட்டுக்கும் வறுமை யடைந்து, மறு பிறவியில்;

35. பெருங்காற்றுப் பஞ்சு போலும் பலமிலாக் குடும்பி யாயும்
உறையாது தந்தை யாஸ்தி உரைத்தன ரேழை யோர்கள்
மருவிற்ற வந்தர் சாப மாானு மந்தி யத்தில்
குறையுளக் குடும்பி யாகிக் கூத்தன்தன் பதிக்குச் சென்று ;

35. பெருங் காற்றில் அகப்பட்ட பஞ்சுபோல் அலைச்சலுள்ள குடும்பத்தை யடைந்தும், தந்தையின் ஆஸ்தியைப் பெருமலும் வாழ்வாய் என்று ஏழைகள் சபித்தனர். அந்த ஏழைகளின் சாபம் ஏற்பட்டது. ஜாதகனும் தன் கடைசிக் காலத்தில் குடும்பத்தில் குறை யேற்பட்டு எமனுலக மடைந்து ;

36. வந்தவ னென்று சொல்வோ மருவிடு மேழை சாபம்
தந்தையி னில்ல மேகுந் தரித்திரங் குடியில் நேரும்
பின்ஜன்மந் தன்னைச் சொல்வோம் போரூரில் வைச்யச் சேயாய்
அந்தவ னுதிப்பா னுகும் அம்பிகை யாளே கேளாய்.

36. மீண்டும் பிறந்தான் என்று சொல்வோம். ஏழையின் சாபம் தொடரும். தன் தந்தையின் ஆஸ்திகள் குறைந்துபோம். இவன் வீட்டில் வறுமை குடிபுகும். தந்தையின் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். திருப்போரூரில் வைசிய குலத்தவனுகப் பிறப்பான் என்று சொல்கின்றோம். தாயே ! கேளுங்கள்.

37. இருபது ஏழா மாண்டில் இயம்புவோந் தந்தை கண்டம்
திருகிலா நாற்பா னுலில் செப்புவோ மன்னை கண்டம்
அறுபதொன் பாண்டுக் குள்ளே ஆனிமா தத்தி லேதான்
மறலியி னுடு சேர்வன் மைந்தனு மென்று சொல்வோம்.

37. ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் தந்தை மரணமடைவான். நாற்பதாம் வயதில் தாய் மரணமடைவாள். ஜாதகன் அறுபத்தொன்பதாம் வயதில் ஆனி மாதத்தில் இறந்து போவான் என்று கூறுகின்றோம்.

38. பின்ஜன்மம் தணிகை தன்னில் பிறப்பனுஞ் சைவச் சேயாய்
அன்னவன் ஜனன காலம் அனுடத்தின் மூன்றும் பாதம்
துன்சனி தசைநா லாண்டும் திங்களும் பதினென் றுகும்
முன்பாகம் விபரஞ் சொன்னேம் முதல்வியே கேட்டி டாயே.

38. ஜாதகன் மறு பிறவி திருத்தணியில் சைவ குலத்தனுகப் பிறப்பான் என்று சொல்வோம். ஜாதகனுடைய ஜனன காலத்தில் அனுஷத்தின் மூன்றும் பாதத்தில் சனிதசை பாக்கி நான்கு வருடங்களும் பதினேரு மாதங்களுமாம். இதுவரை முதல்பாகம் சொன்னேம், தேவியே ! கேளுங்கள்.

# ஜாதகம் 89

1. மதிநந்தி பொன்னேன் மேடம் மங்களன் கன்னி யாகப்
புதன்ராகு விரவி வண்டி புகர்சீயங் காரி தேளில்
சதிசெயு கேதுங் மானில் மிதுனமுஞ் ஜன்ம மாக
இதுவிதங் கோளு நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் ரிஷபத்திலும், குரு மேஷத்திலும், செவ்வாய் கன்னியிலும், புதன் ராகு சூரியன் கடகத்திலும், சுக்கிரன் சிம்மத்திலும், சனி விருச்சிகத்திலும், கேது மகரத்திலும் இருந்து, மிதுனம் லக்கினமாகவுமாக நவக்கிரகங்கள் இருப்பின், பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | சந்திரன் | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | புதன் ராகு சூரியன் |
| கேது | | | சுக்கிரன் |
| | சனி | | செவ்வாய் |

2. ஜயமுனி சொல்லு கின்றார் ஜனித்தது வாண்பால் ஜன்மம்
நயமுடன் ஜனித்த வில்ல நாட்டுவோம் வடதென் வீதி
பயமிலா மேற்கு வாசல் பருகாது இல்லந் தானும்
கயமுகன் மாரி வாயு காளியு முத்ர மாமே.

2. ஜயமுனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு வடக்குத் தெற்கான வீதியில் மேற்கு நோக்கியுள்ள வாயிலை உடையது. அவ்வீடு இவனுக்கு கிடைக்காது. விநாயகரின் ஆலயமும், மாரியம்மன் கோயிலும், அவ்வீட்டுக்கு வடமேற்குத் திக்கில் உள்ளன. காளிதேவியின் ஆலயமும் வடக்கிலுள்ளது.

3. ஈசனு மாலின் கோட்டம் இருந்திடு மவ்வூர் தன்னில்
நாசமாஞ் சீறுவூர் தன்னில் நல்கிளே மாது வில்லம்
வாசமா யில்லஞ் சொல்வேன் வடகீழ்ப்பால் கீழ்மேல் வீதி
பாசமாம் கயிரேன் வாசல் பரமனு முத்ர மாமே.

3. சிவபிரானின் ஆலயமும் திருமாலின் ஆலயமும் இருக்கும். பாழடைந்த அச்சிற்றூரில் தன் தாய் வீட்டில் பிறப்பான். இவன் வசிக்கும் வீடைப்பற்றிச் சொல்லுகின்றேன். கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வடக்கில் திருமாலின் ஆலயமுளது.

4. மாரியுந் தென்கீ ழாகும் மாகாளி தென்மே லாகும்
கூறிய சிற்றூர் தன்னில் குலவுவா னிந்தப் பாலன்
மாரனின் அன்னை தந்தை மைந்தர்கள் மனைவி யோகம்
தீரமாய் முன்பின் ஜன்மம் செப்புவோங் கேளுந் தாயே.

4. தென்கிழக்குத் திக்கில் மாரியம்மன் கோயிலும், காளிதேவி தென் மேற்குத் திக்கிலும் உள்ள சிற்றூரில் இந்த ஜாதகன் வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய தந்தை தாய் புத்திரர்கள் மனைவி இவர்களின் யோகங்களையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும் சொல்லுகின்றோம்! கேளுங்கள், தாயே!

5. ஈரஞ்சு துணைவ ராக இயம்புவோந் தந்தைக் கேதான்
கூறின துணைவர் தம்முள் குறையிலா மூவ ரண்பால்
நாரியும் நான்கு என்றோம் நாயகர் இருவர் தாமும்
பார்தந்தை இல்லம் நீங்கார் பகருவோ மொருவன் தானும்;

5. ஜாதகனுடைய தந்தைக்கு பத்து உடன் பிறந்தவர்கள் உண்டு எனக் கூறுகின்றோம். சொல்லப்பட்ட உடன் பிறந்தவர்களுள் மூவர் சகோதரர்கள் என்றும், நால்வர் சகோதரிகள் என்றும், சகோதரர்களில் இருவர் தன் தந்தையை விட்டகலாதவர்கள் என்றும் சொன்னோம். ஒரு சகோதரன்;

6. தென்கீழ்ப்பால் பாரி யூரில் சிறப்புற்று வாழ்வா னாகும்
தன்தந்தை யவ்வூர் செல்வன் சாற்றுவோ மவன்கு ணத்தைத்
தன்மனங் கவடு மில்லான தக்கதோர் கல்வி யில்லான்
பொன்பொரு ளதிக மில்லான் புகழில்லான் நிந்தை யேற்பன்.

6. தென்கிழக்குத் திசையில் உள்ள தன் மனைவியின் ஊரில் சிறப்புடன் வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய தந்தையும் அவ்வூருக்குச் செல்வான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். கபட மில்லாதவன். தக்கக் கல்வியறி வில்லாதவன். பொன் செல்வம் அதிக மில்லாதவன். கீர்த்தி யில்லாதவன். அவமான மடைவான்.

7. இருநிற முளைச்சல் தேகி ஈகைவான் பொறுமை சாலி
நெறியிலான் தந்தங் குற்ற நிமலியா லவமா னத்தன்
பெரும்பொருள் மனதி லிச்சை புண்ணிய கதைகள் கேட்பன்
சரியிலாக் குடும்பி யாவன் சீலமில் லாதா னென்றோம்.

7. இருநிற முடையவன். மெலிந்த சரீர முடையவன். கொடையாளி. பொறுமை யுள்ளவன். நெறியுடன் நடக்காதவன். பற்களில் குறைவுள்ளவன். தன் மனைவியால் அவமானம் அடைவான். மனத்தில் பெரும் பொருள் சேர்க்கும் ஆசையுள்ளவன். புண்ணிய கதைகளைக் கேட்க ஆவலுள்ளவன். சரியாக இல்லாத குடும்ப முள்ளவன். ஒழுக்க மில்லாதவன்.

8. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே உதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அவனியில் கிருஷி செய்வன்
முன்னமே கோபம் வந்து முதவிக ளற்ப மெய்தும்
பொன்னொடு பணிதி யற்பம் புகழிலாக் குடும்பி யாவன்.

8. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். உலகில் விவசாயம் செய்து வருவான். முன் கோபமுடையவன். உதவிக்கு ஒருவரும் வரும்படி நடந்துகொள்ளாதவன். பொன் ஆபரணம் செல்வம் முதலியன குறைவாகவே உடையவன். கீர்த்தி யில்லாத குடும்பத்தை யடைவான்.

9. வேசியர் மோகமில்லான் வித்தையு மற்ப முண்டு
காசுமேல் பிரிய முண்டு கைப்பொருள் பின்னால் சேர்ப்பன்
ஆசையு மிகவுண் டாகும் அணுகிடு மாமி ரண்டு
தூசுபோ லல்லா னாகுந் துறவோர்கள் பத்தி பூணன்.

9. விலைமாதருடன் நட்பில்லாதவன். கல்வியறிவு சிறிதேயுள்ளவன். காசுமேல் ஆசையுள்ளவன். பிற்காலத்தில் பொருள் சேர்ப்பான். அதிக ஆசை உடையவன். இரு மனைவியரை உடையவன். அற்பனல்லாதவன். துறவிகளின்மீது பக்தியில்லாதவன்.

10. வஞ்சக வஞ்ச னவன் வசனிப்பான் மூர்க்க வார்த்தை
நெஞ்சினி லிரக்க மில்லான் நேர்ந்திடும் பித்தச் சூடு
செஞ்சொலின் நுணுக்கமில்லான் சிநேகிதங் கொள்ளா னாகும்
அஞ்சுக மொழியா ளெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

10. வஞ்சக நெஞ்ச முள்ளவன். மூர்க்கனைப்போல் பேசுபவன். இரக்க மில்லாத மனமுள்ளவன். பித்தச்சூட்டுச் சரீர முடையவன். தமிழை நன்கு அறியாதவன். பிறருடன் நட்புக் கொள்ளாதவன். கிளிபோல் பேசு பவளே! எங்கள் உயிருக் குயிரானவளே! கேளுங்கள்.

11. தன்துணை யாண்பால் காணான் தையல ரொருவர் தீர்க்கம்
முன்துணை யாகச் சொல்வோ மொழிகிறோ மவள்கு ணத்தைக்
கன்னென மொழியே சொல்வள் கபடிலாள் வறுமை காணாள்
பன்னியே பேசு வாளாம் பலர்சகா யங்க ளுள்ளாள்.

11. தன்னுடன் பிறந்தவரில்லாதவன். சகோதரி ஒருத்தி நீண்ட ஆயு ளுள்ளவள். அவளும் ஜாதகனுக்கு முன் பிறந்தவள் என்றோம். அவளு டைய குணத்தைச் சொல்லுகின்றோம். இனிமையாகவே பேசுபவள். கபட மில்லாதவள். தரித்திர மில்லாதவள். பன்னிப் பன்னிப் பேசுபவள். பலர் சகாயங்கள் உள்ளவள்.

12. வரனுமே கீழ்ப்பா லாகும் மருவிப்பின் தாயின் ஊரில்
வரனின்றி வாழ்வா ளாகும் மருசுக மதிக முள்ளாள்
பிறவார்தாம் சுதர்கள் தாமும் போக்குவாள் கருவை யேதான்
தரையினில் செட்டு வாலே தனதான்ய முடைய ளாமே.

12. தென்கிழக்குத் திசையிலிருந்து கணவன் வாய்ப்பான். மணமான பிறகு சிலகாலம் சென்று கணவனில்லாமல் தன் தாயின் ஊரில் வாழ்ந்து வருவாள். சிற்றின்ப சுகம் அதிகம் உள்ளவள். புத்திரர்கள் தோன்றார். தனக்கு ஏற்படும் கருவைக் கலைத்துவிடுவாள். உலகில் வியாபாரம் செய்து வந்து தன தானியமுடையவளாக இருப்பாள்.

13. அத்திரி சொல்லு கின்றுறைந்தீரே துணைவி யொன்று
குத்தமா யென்று சொல்லுங் குறிகளை விபரஞ் சொல்வீர்
வித்தகன் மூன்றில் வெள்ளி மேவியே சனியும் பார்க்கப்
பத்தினிக் கவ்வா றுகப் பகருவோ முனியே கேளும்.

**13.** அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்குச் சகோதரி ஒருத்தி யுண்டு என்றீரே ! அவளுக்குக் குற்றம் ஏற்படும் காரணங்களைச் சொல்லுங்கள். மூன்றுமிடத்தில் சுக்கிரன் இருந்து அதைச் சனி பார்ப்பதால் சகோதரிக்கு அங்ஙனமாகக் கூறினோம். முனிவரே ! கேளுங்கள்.

14. இதுவன்றிப் பூர்வந் தன்னில் இவள்சில கொடுமை செய்தாள்
அதுதனைச் சொல்லு மென்ன அவளுமுன் ஜன்மந் தன்னில்
கதிதருந் தில்லை தன்னில் காதலி தீயின் வம்சம்
நிதிமிக வுடையா னுக்கு நேர்ந்தன ளென்று சொல்வோம்.

**14.** இதுவல்லாமல் ஜாதகனின் சகோதரி முற்பிறவியில் சில தீங்குகள் செய்தாள். அவற்றைச் சொல்லுங்கள் என்று கேட்க, அவள் முற்பிறவியில் முக்திதரும் தில்லையம்பதியில் வன்னிய குலத்தில் ஒரு செல்வவானுக்குப் பிறந்தாள் என்று சொன்னோம்.

15. வரனுண்டாய் மதலை யுண்டாய் வளமுள குடும்பி யாகித்
திருமகள் வாழு நாளில் செப்புவோ மூழி தானும்
வரன்தம்பி மனைவி பேரி லதிகமாய் நிந்தை சொல்லி
உறன்முறைத் தன்பால் தன்னை ஒதுக்கின ளந்த மாதை.

**15.** கணவனைப் பெற்று, புத்திரர்களையும் அடைந்து, செழிப்புள்ள குடும்பியாகி வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தன் கணவனுடைய சகோதரனின் மனைவிமீது அவமதிப்பான சில சொற்களைக்கூற, அவனும் அப்பெண்ணை விலக்கி, அவள் தன் சொந்தக்காரர்களிடம் அனுப்பிவிட்டான்.

16. மாதுவு மனங்க லங்கி வரைகுவாள் சாபந் தானும்
பாதகி தங்கை போலப் பாராமல் தூறு செய்தாய்
நீதியாய் மறுஜன் மத்தில் நிமலியா யுதித்து நீயும்
போதவே வரன்பா லின்றிப் பூமியில் தனியாய் வாழ்ந்து ;

**16.** அப்பெண்ணும் மனம் கலங்கிச் சாபமிட்டாள். பாவியே ! (உன் கணவனுடைய சகோதரனின் மனைவியாகிய என்னை) உன் சகோதரிபோல எண்ணுமல் பழிச் சொற்களைக் கூறினாய். அதனால் உனக்கு ஏற்படும் அடுத்த பிறவியில் நீயும் பெண்ணாகப் பிறந்து உன் கணவனிடம் சேர்ந்து வாழாமல் தனியாக வாழ்ந்து ;

17. பரர்சுக முடைய ளாகிப் பந்துவில் சேரா ளாகிக்
குறைமன தாக வாழ்வாய் குறித்திடு மன்னே யவ்வாறு
நெறிதப்பி வாழ்வா ளாகு நிமலியிவ் வாறு சொல்லித்
தரைத்தூளைத் தூற்றி விட்டுச் சென்றன ளவளே யென்றோம்.

17. பல பேர்களுடன் இன்பமனுபவித்து, தன் சுற்றத்தாருடைய வீட்டுக்குப்போகாமல், குறைவான மனமுள்ளவளாகி வாழ்ந்து வருவாய். உன்னுடைய தாயும் நெறி தப்பி வாழ்ந்துவருவாள் என்று சொல்லித் தெரு மணலை வாரி இறைத்துச் சென்றாள்.

18. சொல்லிய வாறு போலச் சூழ்ந்திடு மிச்சென் மத்தில்
தல்லியுந் தானுமவ் வாறு ஜனபகை நிந்தை யேற்பள்
வல்லியின் பின்ஜன் மத்தை வரைகிறோங் காஞ்சி தன்னில்
நல்லதோர் பிரம சேயாய் நாயகி யுதிப்பா ளாகும்.

18. அப்பெண் சொல்லியதுபோல் இப் பிறவியில் நேரும். ஜாதகனுடைய தாயும் அவ்வாறே ஜனங்களுடைய விரோதத்தை யடைவாள். அவமானங்களை ஏற்பாள். அவளுடைய மறுபிறவியைக் கூறுகின்றோம். காஞ்சிபுரத்தில் உயர்ந்த அந்தண குலத்தவளாகப் பிறப்பாள் என்றோம்.

19. குருமுனி புகலு கின்றார் கோதையு மிச்சென் மத்தில்
குலறவிலா நிந்தை ஏற்றும் கருவையு மழித்த தாலே
மறைக்குல மெவ்வி தத்தால் வருகுங்கார ணங்கள் சொல்வீர்
அரிவையு மிச்சென் மத்தில ஆபத்து க்குதவி செய்தும் ;

19. அகத்திய முனிவர் உரைக்கின்றார். ஜாதகனுடைய சகோதரி இப் பிறவியில் அதிகமான அவமானங்களை யடைந்தும், கருவை அழித்து வந்தும், எங்ஙனம் அந்தண குலத்தில் பிறப்பாள் என்று சொல்லுங்கள். அப் பெண்ணும் இப் பிறவியில் ஆபத்துக்கள் அடைந்தவர்கட்கு உதவி யளித்தும் ;

20. வஞ்சக மனமில் லாமல் அவள்குல தெய்வ பக்தி
மிஞ்சியே கொண்ட தாலும் அறமதி லிச்சை யாயும்
வஞ்சியும் வாழ்வ தாலே வரைகின்றோம் பிரம்ம சேயாய்த்
தஞ்சமா யிவள்தன் னுஸதி சார்ந்திடு மிவனுக் கேதான்.

20. கெட்ட மனமில்லாமல், தன் குல தெய்வத்தின்மீது அதிகமான பக்தியுடன் வாழ்ந்துவந்தும், தருமம் செய்வதில் விருப்பம் உள்ளவளாகவும் இருப்பதால், அந்தண குலத்தில் பிறப்பாள் என்று சொன்னோம். இவளுடைய ஆஸ்திகள் ஜாதனுக்கு வந்து சேரும்.

21. எந்தக்கா லத்தி லேதான் எகுவா ளெமப திக்கு
வந்தவள் நாற்பான் மூன்றில் வயிறுவதை உதிரத் தாலே
அந்தகன் பக்கல் சேர்வாள் அம்மொழி தப்பா தாகும்
இந்திர னிரைஞ்சு மாதே இயம்புவோந் தாய்கு ணத்தை.

21. சகோதரி எந்தக் காலத்தில் மரணமடைவாள் ? ஜாதகனுடைய நாற்பத்து மூன்றும் வயதில் சகோதரி வயிற்று வலியாலும் பெண்களுக்கு உரியதான விசேஷ நோயாலும் மரணமடைவாள். அது தவறாது. இந்திரனால் தோத்தரிக்கப்படும் தேவியே ! தாயின் குணத்தைக் கூறுகின்றோம்.

22. முகமது வசிய மில்லாள் மூலச்சூ டுடைய ளாகும்
பகைஎன்று மனத்தில் வையாள் பார்தனில் நிந்தை ஏற்பாள்
அகமதில் சிலது காலம் அடைந்துபின் நிந்தை யாலே
உகமையில் லாமல் வேறு ஒதுங்குவா ளென்று சொல்வோம்.

22. வசிகரமான முகமில்லாதவள். மூலச்சூட்டு நோயுள்ளவள். விரோதம் பாராட்டாதவள். உலகில் அவமானங்கள் அடைவாள். வீட்டில் சிலகாலம் வாழ்ந்து பிறகு பழிச்சொற்களால் புகலிடமில்லாமல் வேருகச் சென்று விடுவாள் என்று சொல்லுவோம்.

23. ஐந்துபேர் துணைவ ராவர் அறரைகிறேம் யாவுந் தீது
கன்னிகை ஒன்று தீர்க்கம கனததஇல் பாழ தாகும்
முன்ஜன்மம் சொல்லு கின்றேம் முக்கூடல் மேல்பா லாக
வந்தனள் கவுரை யாக வரன்சுத ருள்ளா ளாகி ;

23. சகோதரர்கள் ஐவர் என்று சொல்லுகின்றேம். ஆனல் ஐவரும் நிலையார். ஒரு சகோதரி நீண்ட ஆயுளுள்ளவள். பிறந்த வீடு பாழாகும். இவளுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றேம். முக்கூடலில் அந்தண குலத்தில் பிறந்து, கௌரவமுள்ளவளாகவும் கணவன் புத்திரர்கள் இவர்களை யடைந்தவளாகவுமிருந்தாள் ;

24. வரனுமே அயலான் மாதை வைத்துமே காண தாகிக்
குறியதை இவளுங் கண்டு குலத்தினில் தூற்றி நின்றுள்
மறுமாது திகில டைந்து வரைகிறுள் மறுஜன் மத்தில்
சரியிலாக் குடும்பி யாயும் ஜனநிந்தை அதிக மாயும் ;

24. கணவன் வேறேருவனுடைய மனைவியை வைத்திருந்தான். அதை இவளும் அறிந்து, தன் வீட்டில் மண்ணை வாரி இறைத்தாள். அப் பெண்ணும் பயந்து கூறுகின்றுள். மறு பிறவியில் நீ சரியில்லாத குடும் பத்தையடைந்து ஜனங்களால் பழிச்சொல்லை யடைந்து ;

25. வரனில்லம் வாழா ளாகி வாழ்குவா யென்று சொல்லித்
தெருத்துளைத் தூற்றிச் சென்றுள் சேர்ந்தது வந்தத் தோடம்
மறுவொரு வினையைச் சொல்வோம் வரன்மனை யிருவர் தம்மைத்
திருகாகக் கலைத்து விட்டாள் சேர்ந்தது வந்தத் தோடம்.

25. தன் கணவனுடைய வீட்டில் வாழாமல் இருந்து வருவாய் என்று சொல்லி, தெரு மண்ணை வாரி இறைத்தாள். அந்தத் தோஷம் ஏற்பட்டது. மற்றெரு தீவினையைச் சொல்லுகின்றேம். ஒருவனுக்கு ஏற்பட்ட இரு மனைவியரின் மனத்தைக் கலைத்து விட்டாள். அஃது ஒரு தோஷமாயிற்று.

26. காலன்தன் பதிக்குச் சென்றுக் கஞ்சனுல் வரையப் பட்டுச்
சாலவே ரெட்டி வம்சஞ் ஜனித்தவ ளிந்த மாது
நீலிக்கு வந்தி யத்தில் நிந்தைகள் மிகவே நேரும்
கோலமாய்ப் புத்திரி பக்கல் கோதையுஞ் சேர்வா ளென்றேம்.

26. மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, ரெட்டியார் மரபில் பிறந்தவள் இந்தப் பெண் என்று சொல்லுகின்றோம். இவளுக்குத் தன் கடைசிக் காலத்தில் அவமானங்கள் அதிகமாக ஏற்படும். பிறகு தன் பெண்ணின் பக்கம் சென்று வாழ்வாள் என்று சொன்னோம்.

27. தந்தையின் பூர்வஞ் சொல்வோந் தட்சிணம் பெண்ணை யோரம்
வந்தன னிக்க லத்தில் வளமிலாக் குடும்பி யாகித்
தன்தன மில்லா னுகிச் சந்ததி யதிக முண்டாய்
முந்துமால் பத்தி கொண்டு முனிவர்க ளிட்ட னுகி ;

27. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தெற்குத் திக்கிலுள்ள பெண்ணையாற்றங்கரையில் இக்குலத்தில் பிறந்து, செழிப்பில்லாக் குடும்பமுள்ளவனுகி, தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருளில்லாமல், புத்திரர்களை அதிகம் பெற்று, திருமாலினமீது பக்திகொண்டு, முனிவர்களுக்கிஷ்டமான ;

28. புண்ணிய கதைப டித்துப் புக்கினன் கால னுடு
அண்ணலும் வரையப் பட்டு அனுகினு னிக்கு லத்தில்
பின்ஜன்மம் பட்சி யுத்ரம் பிறப்பனுஞ் சைவச் சேயாய்க்
கண்ணிய மாக வாழ்வன் கோதையே கேட்டி டாயே.

28. பல புண்ணியக் கதைகளைப் படித்துப் பிறகு மரணமடைந்தான். மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் இக்குலத்தில் பிறந்தான் என்றோம். மறு பிறவியில் திருவண்ணுமலைக்கு வடக்கில் சைவ குலத்தில் பிறப்பான். கண்ணியத்துடன் வாழ்ந்து வருவான். தேவியே ! கேளுங்கள்.

29. நாற்பது வாண்டு மாசி நாயகன் தந்தை யைத்தான்
கூப்பிடு வானுங் காலன் குறித்துப்பின் னிரண்டு வாண்டில்
ஏற்கவே துலாமா தத்தில் ஏகுவா ளன்னை தானும்
மார்க்கமாய்ப் பின்ஜன் மத்தை யறைகிறோந் தாயே யாங்கள்.

29. ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் மாசி மாதத்தில் தந்தை மரணமடைவான். அதற்குப்பின் இரு வருஷங்களில் ஐப்பசி மாதத்தில் தாய் மரணமடைவாள். தாயின் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தாயே ! நாங்கள்.

30. சீர்பெறு காஞ்சி தன்னில் பிறப்பளாம் வன்யச் சேயாய்
ஏர்பெரு விருபான் ரண்டில் இவனுக்குப் பாரி வாய்க்கும்
நாரியின் குணத்தைச் சொல்வோ நற்குணஞ் சிவந்த மேனி
பாரினில் சொற்ப ரோகி பிதாதுணைப் புத்ரி கொள்வன்.

30. சீர்பெற்ற காஞ்சீபுரத்தில் வன்னிய குலத்தவளாகப் பிறப்பாள். ஜாதகனுடைய இருபத்திரண்டாம் வயதுக்குள் இவனுக்கு மனைவி வாய்ப்பாள். அப்பெண்ணின் குணத்தைச் சொல்லுகின்றோம். நற்குணமுள்ளவள். சிவந்த உடலுள்ளவள். சிறிது நோயுடையவள். தன் தந்தையின் சகோதரியின் புத்திரியை மணப்பான்.

31. சிலதுநாள் சென்ற பின்பு தேவியுங் கருவால் மாய்வள்
குலவுவாள் கீழ்ப்பா லில்தான் குறிக்கிறோ மவள்கு ணத்தை
நலமுள வார்த்தை சொல்வள் நற்புத்தி அடக்க முள்ளாள்
தலைவியு முன்கோ பத்தாள் அதிகமாய் வார்த்தை சொல்வள்.

31. சிலகாலம் சென்ற பிறகு அப் பெண் கருவேற்பட்டு மரணமடைவாள். கிழக்குப் பக்கத்திலிருந்து மறுமனைவி வாய்ப்பாள். அப் பெண்ணின் குணத்தைக் கூறுகின்றோம். நன்மையான வார்த்தைகளையே பேசுபவள். நற்புத்தியுள்ளவள். அடக்கமுள்ளவள். முன்கோபங் கொள்வாள். அதிகமாகப் பேசுபவள்.

32. புத்திரன் ஆண்பால் ரண்டு பெண்ணது அவ்வா றுரும்
சித்தமாய் நான்குந் தீர்க்கம் சேயர்கள் பிறந்த பின்பு
வித்தகன் தனக்கு யோகம் விளம்புவோந் தாயே கேளும்
பத்திய பூர்வஞ் சொல்வேன் பட்சி யினுத்த ரத்தில் ;

32. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறப்பார்கள். நால்வரும் தீர்க்கமாயுள்ளனர். புத்திரர்கள் தோன்றிய பின் ஜாதகனுக்கு யோகம் பெருகும். தாயே! கேளுங்கள். ஜாதகனுடைய முற்பிறப்பைப்பற்றிச் சொல்லுகின்றோம். திருக்கழுக்குன்றத்தில் ;

33. பிறந்தனன் செக்கா னுகப் புத்திரன் மனைவி யுண்டாய்
அறமதி லிச்சை யின்றி அந்தணர் பாரிக் காசை
உரைத்துபின் பொருளைப் பற்றி உத்தமிக் கியா தாகி
மறையவன் பாரி சொல்வாள் மறுஜன்ம மகவாய் தோன்றி ;

33. வாணியர் மரபில் தோன்றினன். புத்திரர்களையும், மனைவியையும் பெற்று, தருமத்தில் விருப்பமின்றி வாழ்ந்து வரும்போது, ஓர் அந்தணனுடைய மனைவியின் காசை வாங்கிக்கொண்டு, அப் பெண்ணுக்குத் திருப்பித் தராமல் இருந்ததால், அந்தணனின் மனைவி கூறுகின்றாள். மறுபிறவியில் ஆணுகப் பிறந்து ;

34. மனைவியு மிருவ ராக வனவாசம் சிலநாள் செய்து
பிணையாகுந் துணைவி யன்னை பிரிதலாய் வாழ்வா யென்று
சினமுடன் சொல்லிச் சென்றாள் சேர்ந்தது அந்தத் தோடம்
தனயனு மந்தி யத்தில் சஞ்சல மனத்த னுகி ;

34. இரு மனைவியரை அடைந்து, சிலகாலம் வனவாசம்போல் தனித்திருந்து, சகோதரி தாய் இவர்களால் அவமானம் அடைந்து, பிரிந்து, தனியாக வாழ்வாய் என்று கோபத்துடன் கூறிச் சென்றாள். அந்தத் தோஷம் இவனைச் சேர்ந்தது. ஜாதகனும் தன் கடைசிக் காலத்தில் சஞ்சலமுள்ள மனத்தனுகி ;

35. சென்றனன் காலன் பக்கல் சிரநான்கோன் வரையப் பட்டு
வந்தன னிவனே என்றோம் மனைவியு மிரண்டு மெய்தும்
இந்தவன் யோகச் சேதி இயம்புவோ மாண்டுக் குள்ளே
தந்தையின் தந்தை கண்டஞ் சங்கரி மேலுங் கேளே.

35. மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகன் என்றோம். ஜாதகனுக்கு இரு மனைவியர் ஏற்படுவர். இவனுடைய யோகச் செய்திகளைக் கூறுகின்றோம். பிறந்த ஒரு வருடத்துக்குள் தந்தையின் தந்தை மரணமடைவான். தாயே! மேலுங் கேள்.

36. மூவைந்து ஆண்டு தன்னில் மொழிகிறேந் தந்தை அன்னை
தாவிய நீரி னாலே சண்டன்தன் பதிக்குச் செல்வள்
மேவிய முப்பாண் டுள்ளே வருமனை கர்ப்ப நோயால்
போவாளா மென்று சொன்னோம் புண்ணிய வதியே கேளாய்.

36. ஜாதகனுடைய பதினைந்தாம் வயதில் தந்தையின் தாய் நீரில் வீழ்ந்து மரணமடைவாள். ஜாதகனது முப்பதாம் வயதுக்குள் மனைவி கர்ப்ப நோயால் இறந்து போவாள் என்று சொல்லுகின்றோம். புண்ணியவதியே! கேளாய்.

37. முப்பது வைந்து வாண்டில் மேவிடு மில்லந் தானும்
செப்புமுன் மனைவி யாலு ந் தந்தையில் இரண்டு செய்வன்
ஒப்புட னதன்மே லாக ஓங்கிடுங் குடும்பந் தானும்
தப்பிலா தான்ய மோங்குஞ் சதுஷ்பாதம் விருத்தி யாமே.

37. ஜாதகனுக்கு, முப்பத்தைந்தாம் வயதில் வீடு கிடைக்கும். கூறிய முதல் மனைவியால் ஒருவீட்டையும் தன் தந்தையினுடைய இரு வீடுகளையும் கட்டுவான். அதற்குமேல் குடும்பம் விருத்தியடையும். தானியம் விருத்தி யாகும். கால்நடையும் பெருகும்.

38. அறுபது மூன்று வாண்டில் ஆதிரை மாதந் தன்னில்
திருமகன் தனக்குக் கண்டஞ் செப்புவோம் பின்ஜன் மத்தைத்
திருவள்ளூ ரருகி லுத்ரஞ் சிறப்புள கர்ண வம்சம்
வருவனு மென்று சொல்வோ மங்கையே கேட்டி டாயே.

38. ஜாதகன் தனது அறுபத்துமூன்றும் வயதில் மார்கழி மாதத்தில் மரண மடைவான். ஜாதகனின் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். திருவள்ளூருக்கருகில் வடக்குத் திசையில் கருணீகர் குலத்தில் பிறப்பான் என்று சொல்லுவோம். தாயே! கேளுங்கள்.

39. உத்தமன் ஜனிக்குங் காலை உரோகிணி யிரண்டாம் பாதம்
சித்தமா யாண்டு வைந்துந் திங்களு மைந்தே யாகும்
வித்தகன் தனக்கு ரோக மேவிடுஞ் சூத கங்கள்
பத்தினி யன்னை நோயும் பறந்திடு மந்த வர்க்கம்.

39. ஜாதகன் பிறக்கும் காலம் ரோகிணி நட்சத்திரம் இரண்டாம் பாதம். ஐந்து வருடங்களும் ஐந்து மாதங்களும் மீதமாகும் (சந்திரமகாதசை). அக்காலத்தில் ரோகம் ஏற்படும். அசுபங்கள் நிகழும். தாய்க்கு வியாதி ஏற்படும். அவ்வர்க்கத்தில் ஒருவர் இறந்து போவர்.

## ஜாதகம் 90

1. கலைகலை பொன்னோன் கன்னி காரியும் வீணை யாக
நிலமகன் ராகு சீயம் நீள்புகர் கேது சாடி
புலவனு மிரவி மீனம் பேசுவோ மிதுனஞ் ஜன்மம்
பலனெவ்வாறு சொல்லு மென்று பார்வதி கேட்க லுற்றாள்.

1. சந்திரன் மகரத்திலும், குரு கன்னியிலும், சனி மிதுனத்திலும், செவ்வாய் ராகு சிம்மத்திலும், சுக்கிரன் கேது கும்பத்திலும், சூரியன் புதன் மீனத்திலும் இருந்து, மிதுனம் ஜன்ம லக்கினமாக இருந்தால், பலன் எப்படி, என்று கூறுங்கள், என்று பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| சூரியன் புதன் | | | லக்கினம் சனி |
| சுக்கிரன் கேது | இராசி சக்கரம் | | |
| சந்திரன் | | | செவ் வாய் ராகு |
| | | | குரு |

2. குறுமுனி சொல்லு கின்றார் குறித்தது வாண்பால் ஜன்மம்
வருந்தந்தை யில்லஞ் சொல்வோம் பலமிலாக் கூரை யாகும்
உரைக்கின்றோங் கீழ்மேல் வீதி உத்தரம் வாச லாகும்
நரிவாக னத்தாள் தென்மேல் நாயகி மாரி தென்கீழ் ;

2. அகத்திய முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். தந்தையின் வீட்டைச் சொல்லுகின்றோம். பல மில்லாத கூரை வேய்ந்த வீடாகும். கிழக்கு மேற்கான தெரு வடக்கு நோக்கியுள்ள வாசலுள்ளது என்றோம். காளிதேவி தென் மேற்கிலும் மாரியம்மன் தென் கிழக்கிலும் ;

3. தந்தியு மீச னுத்ரம் தடாகமு மருகில் தங்கும்
இந்தநல் லடையா ளத்துள் இயம்பினோந் தந்தை யில்லம்
வந்தவன் யோகச் சேதி வருந்துணை களத்ர புத்ரர்
தந்தைதாய் முன்பின் ஜன்மஞ் சாற்றுவோ மிந்நூல் தன்னில்.

3. வினாயகரின் ஆலயமும் சிவபெருமானின் கோயிலும் வடக்கில் உள்ளன. அருகில் ஒரு குளம் உண்டு. இவ்வித நல்ல அடையாளங்களுள்ளது தந்தையின் வீடு என்று கூறினோம். ஜாதகனுடைய யோகத்தையும், உடன் பிறந்தவர், மனைவி, மக்கள் தந்தை தாய் முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றையும் இந் நூலில் கூறுகின்றோம்.

4. தாதைக்குத் தாரம ரண்டில் தரித்திடு முதல்மா தீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் தந்தை
போதவே துணைவர் பத்தில் பொருந்திடு மாண்பா லொன்று
தீதாகப் பெண்பாலொன்று செப்புவோந் தீர்க்க மாக.

4. ஜாதகனுடைய பாட்டனருக்குள்ள இரு மனைவியில், மூத்த மனைவி, ஜாதகனுடைய தந்தையைப் பெற்றவள் என்றோம். அவனுடைய சகோதரர் பதின்மரில் ஒரு சகோதரனும் ஒரு சகோதரியம் நீண்ட ஆயுளுள்ளவர்கள்.

5. மற்றவை சேத மெய்து மங்கையுங் கேட்க லுற்றாள்
வித்தகி யிளைய தாய்க்கு விளம்புவீர் மதலை தானும்
பெற்றிடும் பெண்பா லொன்று பலமிலா மற்ற வெல்லாம்
வித்தகன் சிறிய தந்தை விளம்புவோ மவன்றன் சேதி.

5. மற்றவைகள் சேதமாகும். பார்வதி கேட்கலானார். ஜாதகனுடைய தந்தையின் இளைய தாய்க்குப் புத்திரர் ஏதாவது உண்டோ ! சொல்லுங்கள். ஒரு பெண்ணைப் பெற்றிடுவள். மற்றவர்கள் நிலையார். ஜாதகனுடைய சிறிய தந்தையின் விபரம் சொல்லுகின்றோம்.

6. மால்நிற முளைச்சல் நீட்சி மருமவா னீகை கொஞ்சம்
சீலவான் கிருஷி செய்வன் தீரவான் ஊக சாலி
வேலுடைக் கடவுள் பக்தி விளம்புவான் கட்டு வார்த்தை
சாலவே தனுசு பூரட் டாதியி லுதிப்பா னுமே.

6. கரிய நிறமுள்ளவன். மெல்லியதும் உயரமானதுமான சரீர முடையவன். சிறிது கொடுக்கும் குணமுள்ளவன். நல்லொழுக்க முள்ளவன். விவசாயம் செய்து வருவான். தைரியமுடையவன். ஊக்கமுள்ளவன். வேலை ஆயுதமாகக்கொண்ட முருகப்பிரானிடம் பக்தியுள்ளவன். பொய் பேசுபவன். பூரட்டாதி நட்சத்திரத்தில் தனுர்லக்கினத்தில் பிறந்தவனும்.

7. மாமிய ரிருவ ராகும் வடமேல்பால வேட்ட மெய்தும்
திமைக ளெண்ண னுகும் சேயர்க ளாண்பா லொன்று
நேமியில் பெண்பால் ரண்டு நிகழ்த்துவோந் தீர்க்க மாக
நாமினி வர்க்கம் நாஸ்தி நாயக னென்றுய் வாழ்வன்.

7. இரு மனைவியர் தோன்றுவர். வட மேற்குத் திக்கில் வேட்டகம் இருக்கும். தீங்குகள் எண்ணுதவன். இரு புத்திரர்களும் இரு புத்திரிளும் தோன்றுவர். அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். நாமினி வர்க்கத்தார்கள் நிலையார். இவன் தனியனுக வாழ்ந்து வருவான்.

8. தந்தையின் சேதி கேளாய் சாந்தவான் சரச வார்த்தை
சிந்தையில் கவடு கொஞ்சம் தீரமில் லாத நெஞ்சம்
கந்தன்மேல் பக்தி கொள்வன் காலாட்கள் விருத்தி யுள்ளான்
நொந்தவர் தம்மைக் காப்பன் நிருபர்க ளிட்டங் கொள்வன்.

8. ஜாதகனுடைய தந்தையின் செய்தியைக் கேளுங்கள். சாந்தமானவன். சல்லாபமாகப் பேசுபவன். மனத்தில் சிறிது கபடமுள்ளவன். தைரியமில்லாத மனத்தினன். முருகக்கடவுள்மீது பக்தியுள்ளவன். ஏவலாட்கள் உள்ளவன். கஷ்டமடைந்தவர்களை ஆதரிப்பான். அரசர்களின் பிரியத்தைச் சம்பாதிப்பான்.

9. ஆதியில் வறுமை யுள்ளான அதிகாரஞ் சிலநாள் செய்வன்
வேதனை யொருவர்க் கெண்ணான வித்தையுங் கொஞ்ச முள்ளான்
பாதிதன் வயதி லேதான் பாலகன் சுகமாய் வாழ்வன்
நீதியா யனுடங் கும்பம் நேருவான் தந்தை யென்றேம்.

9. ஆதிகாலத்தில் வறுமை யுள்ளவன். சில காலம் அதிகாரம் வகிப்பான். ஒருவருக்கும் தீங்குசெய்ய எண்ணாதவன். சிறிதே கல்வியறிவுள்ளவன். பாதி வயதுக்கு மேல் ஜாதகன் சுகமாய் வாழ்ந்து வருவான். அனுஷநட்சத்திரத்தில் கும்பலக்கினத்தில் பிறந்தவன், ஜாதகனுடைய தந்தை என்று சொல்லுவோம்.

10. சீலவா னிருசி வப்பன் சித்திர வில்லஞ் செய்வன்
காலத்தை யறிந்து ரைப்பன் காதலி மார்கள் நேயன்
ஞாலங்கள் சேர்ப்பா னுகும் நயம்படக் கூறு வானும்
கோலமாய் மாமி ரண்டு கூறுவோந் தாயே யாங்கள்.

10. நல்லொழுக்க முள்ளவன். இருசிகப்பன். அழகிய வீடு கட்டுவான். வருங்காலத்தை யறிந்து சொல்லும் வல்லமையுள்ளவன். பெண்கள்மீது மோகமுள்ளவன். பூமியைச் சேர்ப்பான். நயமாகப் பேசுபவன். இரு மனைவியரை அடைவான். தாயே! கேளுங்கள்.

11. ரோமங்கள் நிட்சி யில்லான் நுவனுப தேசங் கொள்வன்
தீமையை வெளிக்காட் டாதான் சிறப்புள குடும்பி யாவன்
காமனை யொத்த தேகன் கரமதி லட்ச ரேகை
கோவுகள் விருத்தி யுள்ளான் புன்சிரிப் புடைய னுகும்.

11. நீண்ட மயிர்க ளில்லாதவன். பெண்வார்த்தையைக் கேட்பவன். தீமையை வெளிக்காட்டாதவன். சிறப்புள்ள குடும்பத்தையுடையவன். மன்மதனையொத்த சரீரமுடையவன். கையில் அக்ஷரேகையுள்ளவன். பசுக்கள் விருத்தியுடையவன். புன்சிரிப்புள்ளவன்.

12. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே சேட்ட னுக
அன்னவ னுதிப்பா னுகும் அவன்குணங் கூறக் கேளாய்
பன்னியே பேச வல்லான் பலகலை கற்பா னுகும்
சொன்னசொல் காப்பா னுகும் துறவிகள் நேசஞ் செய்வன்.

12. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு ஜாதகன் மூத்த புதல்வனுகப் பிறப்பான். அவனுடைய குணத்தைக் கேளுங்கள். பன்னிப் பன்னிப் பேசுபவன். பலவிதமான கலைகளைக் கற்றுணர்வான். சொன்ன சொல்லைக் காப்பான். துறவிகளிடம் நட்புக் கொள்ளுவான்.

13. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தன்பந்து புகழ வாழ்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மருமமில் லாத நெஞ்சம்
முந்தின கடவுள் பத்தி மேதினில் வறுமை காணுன்
சந்ததம் ஊக சாவி சற்சன ருறவு கொள்வன்.

13. தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்வான். தன்னை யடைந்தவர்கட்கு அன்னமளிப்பான். இரகசிய மில்லாத மனத்தினன். திருமாலின்மீது பக்தியுள்ளவன். உலகில் தரித்திர மில்லாதவன். ஊக முள்ளவன். நல்லவருறவைக் கொள்வான்.

14. வருவோரை யாத ரிப்பன் மாநிலங் கூவல் செய்வன்
திருமகள் வாச முள்ளான் தனமது கொடுக்கல் வாங்கல்
சிறுமையோர் தம்மைக் காப்பன் ஜயஞ் செய்வ னெடுத்த வேலை
நெறியது தவறு ளுகு நிமலியே மேலுங் கேளே.

14. தன்னிடம் வருபவரை ஆதரிப்பான். விவசாயம் செய்து வருவான். கிணறு தோண்டுவிப்பான். இலக்குமி இவன் வீட்டில் வசித்து வருவாள். பணம் கொடுக்கல் வாங்கல் செய்வான். சிறுத்தவர்களை ஆதரிப்பான். எடுத்த காரியத்தை வெல்வான். நெறி தவருதவன். தாயே ! கேளுங்கள்.

15. துணைவர்க ளெழுவர் தோன்றுஞ் சோர்ந்திடும் யாவுந் தாமும்
வினையாகுந் துணைவர் சேதி விளம்புவீர் விபர மாகப்
பிணையாக மூன்றேன் பத்தில் புதநீச்ச னுடனே சேர்ந்து
கனமுடன் காரி பார்க்கக் கழறினே மந்தச் சங்கை.

15. ஏழு சகோதரர்கள் உளர். எல்லோரும் மரித்து விடுவர். சகோதர தோஷம் ஏற்படக் காரணம் கூறுங்கள். சகோதர ஸ்தானத்துக்குரிய சூரியன் நீச்சனுயிருக்கும் புதனுடன் பத்தாம் வீடாகிய மீனத்தில் இருக்க, அவர்களைச் சனி பார்ப்பதால் அங்ஙனம் சொன்னேம்.

16. மறுமாதா வொன்று தோன்று மூவைந்து வாண்டு தன்னி
லறைகின்றே மவட்குப் புத்ர ருறுதியாய்ப் பெண்பால் ரண்டு
விரயமா மென்று சொல்வோஞ் சித்தச னன்னை தானும
கருவுண்டாய் மூவைந் தாண்டில் காலன்றன் பதிக்குச் செல்வன்.

16. ஜாதகனுடைய பதினைந்தாம் வயதில் மறுமாதா ஒருத்தி வாய்ப்பாள். அவளுடைய புத்திரரைபபற்றிச் சொல்வோம். இரு புத்திரிகள் திண்ணமாகத் தோன்றுவர். மற்றவர்கள் பிறக்கினும் நிலையார் என்று சொல்வோம். ஜாதகனுடைய தாய் இவனுடைய பதினைந்தாம் வயதில் கருவினுல் மரணமடைவாள்.

17. அத்திரி சொல்லு கின்றார் அசுரர்மந் திரியுங் கேது
சுத்தமா யொன்பா னிற்கச் சொல்லுவீர் பலனை யென்ன
வித்தகன் தந்தை யோடு மேவின துணைவி தானும்
குற்றமாய் வெளியூர் செல்வள் குலமதில் குற்ற மாகும்.

17. அத்திரி முனிவர் புகலுகின்றார். சுக்கிரனும் கேதுவும் ஒன்பதாமிடத்தில் இருக்கும் பலன் என்ன என்று சொல்லுங்கள். ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்த சகோதரி பழிகள் ஏற்பட்டு வெளியூர் செல்வள். குலத்துக்கு அவமானம் நேரும்.

18. நங்கையா லவல முண்டாம் நாயகன் மணத்தின் காலம்
துங்கமா முனியே சொல்வேன் தோகையு மிருபான் ரண்டில்
பங்கய முகத்தாள் தென்கீழ் பரவுவா ளன்னை வர்க்கம்
அங்கவள் குணத்தைச் சொல்வோம் அழகுளா ளிருநி றத்தாள்.

18. அப்பெண்ணால் அவமானங்கள் ஏற்படும். ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். தூய்மையான முனிவரே ! சொல்லுகின்றோம். ஜாதகனின் இருபத்திரண்டாம் வயதில், தாமரையைப் போன்ற முகமுடைய மனைவி தெற்குப்பக்கத்திலிருந்து தன்னுடைய தாயின் வர்க்கத்திலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவர். இருநிற முடையவள்.

19. வருவோரை யாதை ரிப்பள் மாநிலம் நல்லோ ளாவள்
திருகான குணமில் லாதாள் திருமக ளொப்ப தாகும்
பெரும்புத்தி யடக்க முள்ளாள் புண்ணிய மனத்த ளாகும்
முருகர்தம் பக்தி பூண்பள் முன்கோபம் வெளிக்காட் டாதாள்.

19. தன்னிடம் வருபவர்களை ஆதரிப்பாள். உலகில் நல்லவளாவள். தீய குணமில்லாதவள். இலக்குமியை யொத்தவள். பெரும் புத்தி யுள்ளவள். அடக்க முள்ளவள். புண்ணியமான மனத்தினள். முருகப்பிரான்மீது பக்தி கொள்வள். முன்கோப முடையவள். ஆனால் வெளிவிடாதவள்.

20. குடும்பத்தை யாத ரிப்பள் குத்திரம் பேசா ளாகும்
மடையரை யுறவு கொள்ளாள் வாக்குகள் சுத்த முள்ளாள்
அடைவுடன் புத்ர பாவம் ஆண்ரண்டு பெண்பா லவ்வாறு
திடமுடன் தீர்க்க மென்றோம் சீரண மூன்று தாமே.

20. தன் குடும்பத்தை ஆதரிப்பாள். குதர்க்கம் பேசாதவள். கசடருடன் உறவாடாதவள். வாக்குச் சுத்தமுள்ளவள். புத்திரபாவத்தைக் கூறுகின்றோம். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் தீர்க்காயுளுள்ளவர்கள். மூவர் நிலையில்லாதவர்கள் ஆவார்கள்.

21. அன்னையு மிருநி றத்தாள் ஆளன்றன் மனம்போல் வாழ்வள்
கன்னென மொழியே சொல்வள் கவடிலாள் பொறுமை சாலி
தன்சொலு மடக்க முள்ளாள் தாயில்லந் தென்கீ ழாகும்
மன்னிய துணையாண் ரண்டு மங்கையு மொருத்தி தீர்க்கம்.

21. தாய் இருநிற முடையவள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். இனிய வார்த்தைகளையே பேசுபவள். கபடமில்லாதவள். பொறுமைசாலி. அடக்கமாகப் பேசுபவள். தாயின் வீடு தென் கிழக்கிலுள்ளது. அவளுக்கு இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் தீர்க்காயுளுள்ளவர்கள்.

22. அவளுடைப் பூர்வஞ் சொல்வோம் அச்சிறு பாக்கங் கீழ்ப்பால்
பவமுள பேரூர் தன்னில் பிறந்தனள் வைசயச் சேயாய்
நவனியில் நல்லோ ளாகி நாயகன் மதலை யுண்டாய்
இவளுமே வாழ்ந்து பின்பு ஏகினள் காலன் பக்கல்.

22. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அச்சிறுபாக்கத்துக்குக் கிழக்கில் செழிப்புள்ள பெரிய ஊரில் வைசிய குலத்தில் பிறந்தாள். உலகில் நல்லவளாகி வாழ்ந்து, கணவன் புத்திரர்களைப்பெற்று வாழ்ந்துவந்து பிறகு மரணமடைந்தாள்.

23. கஞ்சனால் வரையப் பட்டுக் கங்கையின் குலமு தித்தாள்
வஞ்சியும் வந்த பின்பு வரனுக்கு யோக மெய்தும்
தஞ்சமாய்ப் பதினைந் தாண்டில் துலாமாத மன்னே கண்டம்
மிஞ்சிய ஜன்மந் தன்னை விளம்புவோந் தாயே கேளும்.

23. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு வேளாள குலத்தில் பிறந்தாள். இவளை மணந்த பிறகு இவளது கணவனுக்கு யோகம் அதிகமாகும். திண்ணமாக ஜாதகனுடைய பதினைந்தாம் வயதில் ஐப்பசி மாதத்தில் தாய் மரணமடைவாள். அடுத்த பிறவியைக் கூறுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

24. அருணையில் பிரம்ம சேயாய் அவளுமே உதிப்பா ளாகும்
குறைவிலாச் செல்வம் பெற்றுக் கோதையும் வாழ்வா ளாகும்
பெறுந்தந்தை பூர்வஞ் சொல்வோம் பட்சியின் மலைக்கு மேற்கில்
சிறு பூரில் கர்ண சேயாய் ஜனித்தன னிவனே யென்றோம்.

24. திருவண்ணாமலையில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். நிறைந்த செல்வத்தை யடைந்து வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருக்கழுக்குன்ற மலைக்கு மேற்கில் உள்ள சிற்றூரில் கருணீகர் குலத்தில் பிறந்தவன் இவனே என்றோம்.

25. அந்நகர் கணக்கு வேலை அவனுமே பார்த்து வந்து
உன்னதக் குடும்பி யாகி உயர்வோர்கள் நேசங் கொண்டு
தன்னிலே வாழு நாளில் சாற்றுவோ மூழி தானும்
பொன்னொரு வன்பால் பெற்றுப் பூமியைத் தாரே னென்று ;

25. அவ்வூரின் கணக்கன்வேலையை அவன் பார்த்துவந்தான். உயர்ந்த குடும்பியாகி, பெரியோர்களின் நட்புக்கொண்டிருந்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். ஒரு பெண்ணிடமிருந்து 'பூமியைத் தருகிறேன்' என்று கூறிப் பணத்தைப் பெற்றுக்கொண்டு ;

26. ஆசையாய் வார்த்தை சொல்லி அடைக்காமல் வேறூர் பக்கல்
பாசமாய்ச் சென்று னென்றோம் பஞ்சையு மனவெ றுப்பால்
காசுக ளென்பால் பெற்றுக் கவடுகள் செய்த பாவி
மாசிய மறுஜன் மத்தில் மனைவிக ளிரண்டு மாகி ;

26. ஆசைவார்த்தைகள் காட்டி அவளுக்குத் தராமல் வேறூருக்குச் சென்றுவிட்டான். அந்த ஏழைப் பெண்ணும் மனம் வருந்திக் கூறுகின்றாள். என்னிடமிருந்து பணத்தைப் பெற்றுக்கொண்டு கபடமாகக் கொடுக்காமல் சென்ற பாவியே ! உனக்கேற்படும் கெட்டதான மறுபிறவியில் இரு மனைவியர்களை அடைந்து ;

27. அன்னையு மிரண்டு மாயும் அழகிய கன்னி யாலே
நிந்தையும் பெற்று நீயு நேமியில் வாழ்வா யென்று
இன்னவள் சொல்லி யேதான் இறைத்தனள் தெருத்தூள் வாரி
தன்னிலே வந்தத் தோடஞ் சார்ந்தது இவனுக் கேதான்.

27. இரு தாய்மார்களைப் பெற்று, அழகுள்ள பெண்ணால் அவமானங்களை யடைந்து, உலகில் வாழ்ந்து வருவாய் என்று சொல்லித் தெருமண்ணை வாரி இறைத்தாள். இவனுக்கு அந்தத் தோஷம் பற்றியது.

28. இதுவன்றி விதவை மாதை இவனுமே போகந் துய்த்துச்
சதியான கருவும் தங்கித் தக்கபண் டிதங்கள் செய்ய
அதிபதி கருவு நீங்க மங்கையு மரண மானாள்
அதுவொரு தோட மாச்சு அந்திய காலந் தன்னில் ;

28. இதுவல்லாமல், இவன் ஒரு கைம்பெண்ணுடன் இன்பமனுவித்து, அதனால் கருவேற்பட்டு, அதை நீக்கப் பலவித மருந்துகள் கொடுக்க, அதனால் அக்கைம் பெண் இறந்தாள். அஃது ஒரு தோஷமாயிற்று. அவனும் தன் கடைசிக் காலத்தில் ;

29. சுதர்களுங் காலன் பக்கல் சேர்ந்துமே சஞ்ச லத்தால்
நதிபல தீர்த்தந் தோய்ந்து நமன்பதிக் காளா யின்னோன்
விதியவன் வரையப் பட்டு விளங்கினான் கங்கைச் சேயாய்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

29. புத்திரர்களையும் இழந்து, மனத்தில் சஞ்சலமடைந்து, பல புண்ணிய நதி தீர்த்தங்களில் நீராடி, மரணமடைந்து, பிறகு மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இந்த வேளாள குலத்தில் பிறந்தான் என்றோம். அதிதிகளைக் காக்கும் தேவியே ! கேட்டிடுவாய்.

30. பஞ்சையின் சாபம் போலப் பாரிக ளிரண்டு மாகும்
நஞ்சுபோல் நிந்தை தானு நற்றுணை விகளால் நேரும்
தஞ்சமாய் ஜனன காலந் தரித்திர மிகவே யுண்டாம்
மிஞ்சிய ஜன்மந் தன்னை விளம்புவோந் தாயே கேளும்.

30. ஏழைகளின் சாபம்போல் இரு மனைவியரை அடைவான். மனைவிகளால் கொடிய விஷம்போல் அவமானம் ஏற்படும். ஜாதகன் ஜனன காலத்தில் தரித்திரம் அதிகமாக ஏற்படும். அடுத்த பிறவியைச் சொல்லுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

31. திருக்கடை யூரி லேதாஞ் ஜனிப்பனும் பிரமச் சேயாய்
அரன்பூசை செய்வா னாகும் ஆறாறு வாண்டு தன்னில்
மருவிய வானி மாதம் வரைகிறேந் தந்தை கண்டம்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

31. திருக்கடையூரிலேயே அந்தண குலத்தவனாகப் பிறப்பான். சிவபெருமானைப் பூசை புரிவான். ஜாதகனுடைய முப்பத்தாறாம் வயதில் ஆனி மாதத்தில் தந்தை மரணமடைவான். விநாயகக்கடவுளைப்பெற்ற புண்ணியவதியே ! கேளுங்கள்.

32. உதித்தவன் பூர்வஞ் சொல்வோம் ஓதூரு தலத்தி லேதான்
அதிபன்செங் குந்த வம்ச மரபினி லுதித்து மேலும்
நிதிமிக வுடைய னுகி நேமியில் தூசச் செட்டு
அதிபனுஞ் செய்து வந்து அவன்பெரு ந்தனமு முண்டாய் ;

32. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம் ஓதூர் என்னும் தலத்தில் செங்குந்த மரபினனுகப் பிறந்தான். மேலும் மிக்க செல்வம். உடையவனுகி வாழ்ந்து, உலகில் துணி வியாபாரம் செய்து வந்து பெரும் தனமுடையவனுகி ;

33. இருக்குங்கால் வினையைச் சொல்வோம் இவன்குல மாது பேரில்
கிறுக்கான வார்த்தை சொல்லக் கூடத்தி லவள்மேல் குற்றம்
உரைத்தன னிந்தப் பாலன் ஒதுங்கும்பெண் கூறு கின்றாள்
மறுஜன்மந் துணைகா ணுமல் வாழுவா யென்று சொல்லி ;

33. இருக்கும்போது ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். இவன் நற்குலப்பெண்மீது அபாண்டமான வார்த்தைகளையும் அவளமீது குற்றத்தையும் கூறினுன். அந்தப் பெண்ணும் சொல்லுகின்றாள். உனக்கு ஏற்படும் மறுபிறவியில் உடன் பிறந்தவர்கள் இல்லாமல் வாழ்ந்து வருவாய் என்று சொல்லி ;

34. மத்திய லன்னை வீழ்வள் மறுமாதா பக்கல் வாழ்வாய்க்
குத்தமாங் குலத்தி லேதான் கோதையுஞ் சொல்லிச் சென்றாள்
வித்தக னந்தி யத்தில் மேவினன் தலவா சங்கள்
பத்திமா னோர்க்கு வன்னம் படைத்துமே வந்தா னென்றோம்.

34. இடைக்காலத்திலேயே தாய் மரணமடைவாள். நீ இளைய தாயார் பக்கம் சென்று வாழ்வாய். உன் குலத்துக்கும் அவமானம் ஏற்படும் என்று சொல்லிவிட்டுச் சென்றாள். ஜாதகனும் தன் கடைசிக்காலத்தில் பல புண்ணிய தலங்களுக்குச்சென்று பக்தி செய்பவர்கட்கு அன்னமளித்து வந்தான் என்று கூறுகின்றோம்.

35. மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டுப்
பெருமையாய்க் கங்கை வம்சம் பிறந்தவ னிவனே யென்றோம்
திருமகன் முன்ஜன் மத்தில் செங்குந்தக் குலமு தித்து
அருமையாய்ச் சைவச் சேயாய் அடைந்தகா ரணங்க ளென்ன.

35. பிறகு மரணமடைந்து, பிரமதேவனுல் படைக்கப்பட்டு, பெருமையுடன் வேளாள குலத்தினனுகப் பிறந்தான், இவன் என்று சொல்லுகின்றோம். ஜாதகன் முற்பிறவியில் செங்குந்த மரபில் பிறந்து இப்பிறவியில் சைவகுலத்தவனுகப் பிறக்கும் காரணங்கள் என்ன ?

36. பலவிதத் தலங்கள் சென்றும் பரமருக் கன்ன மீந்தும்
தலைவனும் வாழ்ந்த தாலே ஜனித்தனன் சைவச் சேயாய்
நிலைமையா யிவனின் யோக நிகழ்த்துவோங் கேளுந் தாயே
பலபல பூமி சேர்ப்பன் பாரினில் வறுமை காணுன்.

36. பலவிதமான புண்ணிய தலங்களுக்குச் சென்று, ஏழைகட்கு அன்ன மளித்து வாழ்ந்து வந்ததால், சைவ குலத்தவதனாகப் பிறந்தான். இவ னுடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள். பறபல பூமியைச் சேர்ப்பான். உலகில் வறுமை யடையாதவன்.

37. சித்திர வில்லஞ் செய்வன் சயமுனி கேட்க லுற்றார்
வித்தக னெந்தக் கால மேவிடு மில்லந் தானும்
சுத்தமா யிருப தாண்டில் செய்வனுஞ் சித்ர வில்லம்
பத்திய விதற்கு முன்னே பதின்மூன்று வாண்டு மேலாய்;

37. அழகிய வீடுகட்டுவான். ஜயமுனிவர் கேட்கலானார். ஜாதகனுக்கு எந்தக் காலத்தில் வீடு கிடைக்கும்? திண்ணமாக இருபதாம் வயதில் அழகிய வீடுகட்டுவான். இதற்கு முன் பதின்மூன்று வருடங்களுக்கு மேலாகவே;

38. மேவிடு மில்லந் தானு மண்ணினில் வறுமை காணான்
தாவிய பேரைக் காப்பன் தனமது கொடுக்கல் வாங்கல்
ஓவிய முப்பாண் டின்மேல் உரைத்தனங் குடும்பம் வேறு
நாவது தவறு னுகு நாயகி மேலுங் கேளே.

38. வீடு கிடைத்திடும். உலகில் வறுமை யடையாதவன். தன்னை யடைந்த வர்களை ஆதரிப்பான். பணம் கொடுக்கல் வாங்கல் செய்வான். ஜாதக னுடைய முப்பதாம் வயதுக்கு மேல் குடும்பம் வேறாகும். சொல் தவறாத வன். தாயே! மேலுங் கேள்.

39. இருபது வாண்டு மேலாய் எய்திடுங் கிராமச் செட்டுத்
திருகது வில்லா முப்பா னுண்டுமட் டுலகில் செய்வன்
மருமமாய்ப் பூமி தன்னில் வந்திடு நிதிநிட் சேபம்
குருவுமே நாலில் நிற்கக் கூறினோ மந்தச் சங்கை.

39. இருபதாம் வயதிற்கு மேலாகக் கிராம வியாபாரம் செய்வான். அதை, தீங்குகளில்லாமல் முப்பதாம் வயது வரையில் செய்து வருவான். இது தவிர, பூமியிலிருந்து இரகசியமாக, புதையல் கிட்டும். குரு நான்கா மிடத்தில் இருப்பதால் அப்படிச் சொன்னோம்.

40. கடன்கொள்ளா னிடுக்க மில்லான் காவலர் நேசங் கொள்வன்
அடவுடன் சிறிய தாயை அன்புடன் காப்பா னுகும்
படையினில் செல்லா னுகும் பால்பாக்ய விருத்தி யுள்ளான்
தடவரை மகளே யாங்கள் சாற்றிய மொழிகுன் றுவே.

40. கடன் படாதவன். துன்பமில்லாதவன். அரசருடைய நட்புக் கொள்வான். அன்புடனும் பக்தியுடனும் சிறிய தாயை ஆதரித்து வருவான். சண்டைக்கு முன் செல்லாதவன். புத்திர பாக்கிய விருத்தி யாகும். மலையரசனின் புத்திரியே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறு.

**41.** அறுபது வாறு வாண்டில் ஆவணி மாதந் தன்னில்
நிறைபக்க மேகா தசி நீங்குமே யுடலந் தானும்
மறு ஜன்மங் காசி பக்கல் மன்னுமிக் குலத்தி லேதான்
உறைகுவா னென்று சொல்வோம் உத்தமி மேலுங் கேளே.

**41.** ஜாதகன், தனது அறுபத்தாறும் வயதில் ஆவணி மாதத்தில் சுக்கில பட்சம் ஏகாதசி திதியில் மரணம் அடைவான். மறுபிறவியில் காசியின் பக்கத்தில் இதே குலத்தில் பிறப்பான் என்று சொல்லுகின்றேம். உதமியே ! கேளுங்கள்.

**42.** பாலகன் ஜனிக்குங் காலம் பரிதியின் தசை பி ருப்புச்
சாலவே வாண்டு ரண்டுந் தங்கிடுந் திங்கள் மூன்றும்
ஏலவே பிணியு நேரும் இடர்வந்து நிவிர்த்தி யாகும்
சாலவே பின்பா கத்தில் சாற்றுவோம் விபர மாக.

**42.** ஜாதகன் பிறக்கும்போது சூரியமகாதசையில் இருப்பு இரண்டு வருடங்களும் மூன்று மாதங்களுமாகும். நோய் ஏற்படும். வந்து உடனே தீரும். பிற்பாகத்தில் விபரம் சொல்லுகின்றேம்.

## ஜாதகம் 91.

1. சந்திரன் தேள தாகச் சனிவண்டி குருவு மேரு
புந்தியு மிரவி கோலில் பூமகன் மான தாக
மந்திரி நந்தி யாக வரிகேது சாடி ராகு
இந்தவாறு கிரகம் நின்று இலக்கினம் வீணை யாக ;

1. சந்திரன் விருச்சிகத்திலும், சனி கடகத்திலும், சுக்கிரன் தனுசிலும், புதன் சூரியன் துலாத்திலும், செவ்வாய் மகரத்திலும், குரு விருஷபத்திலும், கேது சிம்மத்திலும், ராகு கும்பத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| | | குரு | லக்கினம் |
| ராகு | இராசி சக்கரம் | | சனி |
| செவ் வாய் | | | கேது |
| சுக்கிரன் | சந்திரன் | புதன் சூரியன் | |

2. சொல்லுவீர் பலனை யென்று சங்கரி கேட்கும் போது
வல்லவர் வதிட்டர் சொல்வா ராணது ஜனன மாகும்
இல்லமும் வடதென் வீதி இந்திரன் வாச லாகும்
எல்லையை யளந்தோ னீசன் இருப்பனே யுத்த ரத்தில்.

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும்போது, வசிஷ்ட முனிவர் கூறுகின்ருர். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு வடக்குத் தெற்கான வீதியில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வடக்குத் திக்கில் திருமாலின் ஆலயமும் சிவபெருமானின் கோயிலும் உள்ளன.

3. மாரிபாஞ் சாலி தென்பா லானைமா முகத்தோ னிற்பான்
கூறுவோ மருகர் கீழ்ப்பால் குறித்தனம் வடகீழ் காளி
நாரியே யவ்வூர் தன்னில் நற்றந்தை யில்ல மாகும்
கூரையா மந்த வீடு குதித்தனன் நான்காஞ் ஜன்மம்.

3. மாரியம்மன் கோவிலும் திரௌபதியம்மன் கோவிலும் தென் கிழக்கிலும் விநாயகர் ஆலயமும் இருக்கும். கிழக்குத் திசையில் அருகதேவனின் கோவிலும் வடகிழக்கில் காளிதேவியும் உள்ள அவ்வூரில் தந்தையின் வீடு இருக்கும். தாயே ! கூரை வேய்ந்த அவ் வீட்டில் தன் தந்தைக்கு நான்காமவனுகப் பிறந்தான்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெருந் தந்தை யோகம்
மன்னிய வன்னை யோகம் வரும்புத்ர களத்ர யோகம்
தன்னிலே இவர்கள் யோகஞ் சாற்றுவோ முன்பின் ஜன்மம்
உன்னத நவக்கோ ளாய்ந்து உரைக்கின்ருேந் தாயே கேளும்.

4. ஜாதகனுடைய ஜனன யோகம், பெற்ற தாய் தந்தையர் யோகம், பெறும்புத்திரர்கள் மனைவி இவர்களின் யோகம் ஆகிய இவற்றையும், முற் பிறவி மறு பிறவிகளையும் உயர்ந்த நவக்கிரகங்களை ஆராய்ந்து சொல்லு கின்ருேம். தாயே ! கேளுங்கள்.

5. தந்தையின் வர்க்கந் தன்னைச் சாற்றவே பலத்தைக் காணும்
எந்தையே பிதாகு ணத்தை இயம்புவோஞ் சிவந்த மெய்யன்
விந்தையாய்ப் பேச வல்லன் பித்ததே கத்த ஞகும்
சந்ததஞ் சுகபு சிப்பன் சகலர்க்கு நல்லோ ஞவன்.

5. தந்தையின் வர்க்கத்தினரைப்பற்றிச் சொல்லவே பலமில்லை. தாயே ! ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்ருேம். சிவந்த மேனியுள்ளவன். வேடிக்கையாகப் பேசுபவன். பித்த தேகமுள்ளவன். சுகமாகச் சாப்பிடுவதில் பிரியமுள்ளவன். எல்லோருக்கும் நல்லவனுவான்.

6. சித்திர வீடு செய்வன் சிறப்பான குடும்பி யாவன்
நத்திஞேர்க் குதவி செய்வன் நாற்காலி விருத்தி யுள்ளான்
பத்தினி நேய ஞவன் பரவுப காரி யாவன்
அத்திபோல் நடையு முள்ளான் அற்பபுத் திகளுங் கொஞ்சம்.

6. அழகிய வீடு கட்டுவான். சிறப்புள்ள குடும்பத்தை யடைவான். தன்னை யடைந்தவர்களுக்குதவி செய்வான். கால்நடைகள் விருத்தியுள்ள வன். மனைவிக்குப் பிரியனுவன். பிறருக்கு உபகாரி. யானையைப்போல் கம்பீரமான நடையுள்ளவன். சிறிது அற்ப புத்திகளும் உள்ளவன்.

7. சுயம்தொழில் செய்வா ஞகுந் தோகையர் மோக ஞவன்
அயலார்பொன் னிச்சை யுள்ளான் அணுகிடு மூலச் சூடு
பயமுள மனத்த ஞகும் பணிதிக ளதிகஞ் சேர்க்கான்
ஜயஞ்செய்வ னெடுத்த வேலை சகராசர் பேட்டி கொள்வன்.

7. தன் சொந்தத் தொழிலையே செய்துவருவான். பெண்கள்மீது மோகம் கொள்வான். பிறர் பொருளின்மீது ஆசைப்படுவான். மூலச் சூட்டு நோயுள்ளவன். பயந்த மனத்தன். ஆபரணங்களை அதிகம் சேர்க்காதவன். எடுத்த காரியத்தை வெற்றியுடன் முடிப்பான். அரசரைப் பேட்டி காண்பான்.

8. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே யுதிப்பா ஞகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அழகுளான் வாத தேகி
பன்னிய கல்வி யுள்ளான் பாருக ளதிகஞ் சேர்ப்பன்
சொன்னசொல் லிரண்டு முள்ளான் சுகபுசிப் புடைய ஞகும்.

8. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவன். வாத சரீரமுள்ளவன். கல்வியறிவுள்ளவன். பூமிகளைப் பெருக்குவான். இருவிதமாகப் பேசுவான். சுகமாகச் சாப்பிடுவதில் பிரியமுள்ளவன்.

9. பாலக னிருசி வப்பன் பற்றிய சமவ ளர்ச்சி
சீலவா னெவர்க்கு நேயன் தேவியால் பெருமை பூண்பன்
சாலவே கணக்கில் ஊகி தன்சொலே சாதிப் பானும்
ஆலம்போல் பகைவ ருக்கு இவனுமே கருட னுவன.

9. ஜாதகன் இரு சிவப்பன். சமமான உடல் வளர்ச்சியுள்ளவன். நல்லொழுக்கமுள்ளவன். எல்லோருக்கும் நண்பன். பெருமையடைவான். கணக்கில் ஊகமுள்ளவன். தன் வார்த்தையே மேன்மையானது என்று சாதிப்பான். சர்ப்பம் போல் கொடியவர்கட்குக் கருடன் போல் பகைவனுவன்.

10. உண்டிய வுணவின் மீது உறைப்பொடு புளிப்பி லிச்சை
அண்டினோர் தம்மைக் காப்பான் அரசர்பூ சிதமு மாவன்
கண்டித வார்த்தை யில்லான் கரமதில் விஷ்ணு ரேகை
வண்டிவா கனமு முள்ளா னிவனிள மனத்த னுகும்.

10. சாப்பாட்டில் உறைப்பிலும் புளிப்பிலும் பிரியமுள்ளவன். தன்னை யண்டி வந்தவர்களை ஆதரிப்பான். அரசரால் நன்கு மதிக்கப்படுவான். கண்டிப்பாகப் பேசாதவன். கையில் விஷ்ணுரேகை உள்ளவன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். இளகிய மனமுள்ளவன்.

11. கணக்கினுல் சீவிப் பானுங் கனத்தபூ மிகளுஞ் சேர்ப்பன்
பிணக்குகள் சிலர்க்குச் செய்வன் பேதைய ருறவு கொள்வன்
இணக்குமு முடைய னுகும் எதிரியை நாசஞ் செய்வன்
துணிவான மனத்த னுகுந் துணைவரைப் பிரிதல் செய்வன்.

11. கணக்கினுல் ஜீவனம் நடத்தி வருவான். பெரிய பூமிகளைச் சேர்ப்பான். சிலருக்குத் தீங்குகள் செய்வான். பெண்கள்மீது மையல் கொள்வான். (பிற பெண்களுடன் உறவாடுவான்.) அடக்கமாகப் பேசுபவன். விரோதியை ஒழிக்க வல்லவன். துணிவுள்ள மனத்தினன். சகோதரர்களிடமிருந்து பிரிந்துவிடுவான்.

12. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ நவம தாகும்
அவனியி லாண்பால் ரண்டு அம்பிகை நான்கு மாகும்
இவர்களுந் தீர்க்க மெய்தும் இவனுடன் சிலநா ளொன்ருய்ப்
பவளமுக் கூடி யேதான் பாலர்கள் வேருய்ச் செல்வர்.

12. ஜாதகனுடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுவோம். அவர்கள் ஒன்பதின்மர். இரு சகோதரர்களும், நான்கு சகோதரிகளும் தீர்க்காயுளுள்ளவர்கள். அவர்களுடன் சில காலம் ஒன்ருக வாழ்ந்துவருவான். பிறகு வேருகச் சென்றுவிடுவார்கள்.

13. எந்தக்கா லத்தி லேதான் இவர்வேருய்ச் செல்வார் சொல்வீர்
வந்தவா னிருபா ருறில் வேருகும் குடும்பம் தானே
அந்தபா கங்கள் நான்கு அணுகிடு மதிலோர் சங்கை
தந்தைக்குப் பாக மொன்று சார்ந்திடு மென்று சொல்வோம்.

13. எந்தக்காலத்தில் சகோதரர்கள் வேருகச் செல்லுவார்கள் என்று கூறுங்கள். ஜாதகனுடைய இருபத்தாரும் வயதில் குடும்பம் தனியாகும். அக்குடும்பம் நான்கு பாகமாகும். அதில் ஒரு சந்தேகம் ஏற்படும். தந்தைக்கும் ஒரு பங்கு சேரும் என்று கூறுவோம்.

14. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மிருபான் ரண்டில்
மேதினி லுத்த ரத்தில் மேவிடு மாத்ரு வர்க்கம்
காதலி குணத்தைச் சொல்வோங் கண்முக வசிய முள்ளாள்
பாதக மனமில் லாதாள் பரவுப காரி யாகும்.

14. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்ருேம். இருபத்தி ரண்டாம் வயதில் தன் தாயின் வர்க்கத்தைச் சார்ந்து வடக்குத் திக்கிலிருந்து வந்து மனைவி வாய்ப்பாள். அப் பெண்ணின் குணத்தைக் கூறுகின்ருேம். வசீகரமான முகமுள்ளவள். தீய எண்ணங்களில்லாத மனத்தினள். பிறருக்கு உபகாரம் செய்பவள்.

15. அன்னம்போல் நடையு முள்ளாள் ஆளனுக் கினிய ளாகும்
உன்னத வார்த்தை சொல்வாள் உள்மனங் கவடு மில்லாள்
தந்தநோ யுடைய ளாகுஞ் சாந்தமும் பொறுமை யுண்டு
வந்தவர்க் கன்ன மீவள் மாதுவும் பொறுமைசாலி.

15. அன்னத்தைப் போன்ற அழகுள்ளவள். தன் கணவன் மனத்துக் கேற்றவள். உயர்ந்த வார்த்தைகளையே பேசுபவள். மனத்தில் கபடமில்லா தவள். பல்நோய் உடையவள். சாந்தகுணமும் பொறுமைகுணமும் உள்ளவள். தன்னை யண்டிவந்தவர்கட்கு அன்னமளிப்பாள். அதிருஷ்ட முள்ளவள்.

16. பெருமைக ளில்லா ளாகும் வாததே கத்த ளாகும்
திருமக ளொப்ப தாகுந் தேவிநன் னடக்கை யுள்ளாள்
குறைவான மனத்த ளாகுங் குலத்துளோர் மெச்ச வாழ்வள்
அறமதி லிச்சை யுள்ளாள் அக்கினி வடிவ முள்ளாள்.

16. தரித்திர மில்லாதவள். வாததேக முடையவள். இலக்குமியைப் போன்றவள். நன்னடத்தை யுள்ளவள். குறைவுள்ள மனத்தினள். தன் குலத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்துவருவாள். தருமத்தில் விருப்ப முள்ளவள். தேஜஸ்பொருந்திய உருவமுள்ளவள்.

17. இடப்பக்க மச்ச முள்ளாள் பெரியோரை யாத ரிப்பள்
உடன்பிறந் தோர்கள் பட்சம் உத்தமி கொள்வா ளாகும்
விடவுரை பகரா ளாகும் வீண்வம்பில் செல்லா ளென்ருேம்
மடமயில் கோப முன்னல் வந்துபின் சாந்த முண்டு.

17. இடது பக்கத்தில் ஒரு மச்சமுள்ளவள். பெரியோரை ஆதரித்து வருவாள். உடன்பிறந்தவர்கள் பட்சம் பேசுபவள். (உடன்பிறந்தவருடன் சிலகாலம் வசித்துவருவாள்.) தீயவார்த்தைகளைப் பேசாதவள். வீண்வம்புக்குச் செல்லாதவள். முன்கோப முடையவள். பிறகு சாந்த மடைவாள்.

18. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மிருமூன் றாகும்
சுத்தமா யிரண்டு தீர்க்கஞ் செப்புவோ மாண்பா லொன்று
உத்தமி பெண்பா லொன்று உரைத்த இவ்விரண்டுந் தீர்க்கம்
குத்தமாம் நான்கு வென்றேங் குறுமுனி கேட்க லுற்றார்.

18. ஜாதகனுடைய புத்திரவிருத்தியைச் சொல்லுகின்றோம். அறுவர் தோன்றுவர். அவர்களில் திடமாக ஒரு ஆண் மகனும் ஒரு பெண்ணுமாகிய இருவர் நீண்ட ஆயுளுள்ளவர்கள். நான்கு குழந்தைகள் இறந்து விடும். அகத்திய முனிவர் கேட்கலானார்.

19. எப்படி யிருவர் தீர்க்கம் இயம்பினீர் வதிட்ட ரேநீர்
தப்பிதஞ் சொன்ன வார்த்தை தபனனு புதனு மைந்தில்
ஒப்புட னஞ்சோ னேழில் உறைந்திட விருப்ப தாலே
செப்புவோம் நான்கு தோன்றும் சீரணம் யாவுந் தாமே.

19. ஜாதகனுக்கு இரு குழந்தைகள் தீர்க்கம் என்று எப்படிக் கூறுவீர் கள்? வசிஷ்டமுனிவரே! நீர்தாம். நீங்கள் கூறியவை தவறு. புதன் ஐந்தாமிடத்திலும் ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரன் ஏழாம் வீட்டிலும் இருப்பதால் நான்கு புத்திரர்கள் தோன்றுவர். ஆனால் யாவும் நிலையா.

20. சீரண மென்று சொன்னீர் தசமத்தோ னதற்கு வஞ்சில்
காரியும் பார்த்து நிற்கக் கனத்ததோ ரட்ட வர்க்கில்
தீரமாய்ப் பால ரறு சேர்ந்துபின் தீர்க்கம் ரண்டு
மாறும லிருப்ப தாலே வரைந்தன மிரண்டு தீர்க்கம்.

20. மரித்துவிடும் என்று சொல்லுகின்றீரே! சிறந்த அஷ்டவர்க்கத்தில், பத்தாம் வீட்டுக்குரியவன் அதற்கு ஐந்தில் இருப்பதாலும், சனியும் பார்ப்ப தாலும் ஆறு புத்திரர்கள் தோன்றுவர். பின் பிறந்த இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். அது மாறுமலிருப்பதால் இருவர் தீர்க்கமென்று சொல்லுகின்றோம்.

21. அந்ததோர் சுதர்கள் தாமும் ஐந்தாறு ஜனன மாகும்
முந்திய ஜனனந் தோட மெய்திடு மென்று சொன்னோம்
இந்தவன் முன்ஜன் மத்தில் இலகிற்று விசேடத் தோடம்
எந்தவூழ் செய்தா னத்தை இயம்புவீர் விவர மாக.

21. அக் குழந்தைகள் ஐந்தாவதும் ஆறாவதுமாகும். முதலில் பிறந்த குழந்தைகள் தோஷமாகும் என்று சொன்னோம். ஜாதகன் முற்பிறவியில் செய்த தீச்செயலால் தோஷம் ஏற்பட்டது. என்ன தீவினை செய்தான்? அதைக் கூறுங்கள், முனிவரே! விவரமாக.

22. முன்னவ னிருந்த ஜன்ம மொழிகின்றே கேளு மையா
துன்னிய வருணை தென்பால் சிற்றூரில் கங்கை சேயாய்
முன்னவ னுதித்து மேலு மிணைந்ததோர் மனைவி யுண்டாய்
அந்நகர் கிராமச் செட்டு அவனுமே செய்யும் நாளில் ;

22. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கேளுங்கள், முனிவரே! புண்ணியதலமாகிய திருவண்ணாமலைக்குத் தெற்கில் உள்ள சிற்றூரில், வேளாள குலத்தில் பிறந்து, மேலும் இணக்கமான மனைவியைப் பெற்று, அவ்வூரில் கிராம வியாபாரம் செய்யும் காலத்தில் ;

23. வந்தவூழ் வினையைச் சொல்வோம் வரனின்றி மாது தானும்
தந்தையி னில்லந் தன்னில் தானவள் வீற்றி ருந்தாள்
விந்தையாய் வேறொ ருத்தன் வித்தகி தன்மேல் மோகம்
சிந்தையி லெண்ணி யேதான் சுகமுள வார்த்தை யாடி ;

23. ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தன்கணவனில்லாமல் ஒரு பெண் தன் தந்தையின் வீட்டில் வசித்து வந்தாள். வேறொருவன் அப்பெண்மீது மோகம் கொண்டு, அவளையடைய மனத்திலெண்ணி, சுகமாகப் பேசி ;

24. சிலவேநாள் சென்று பின்பு செல்வியுந் தனியாய்ச் செல்ல
நலமிலா மனத்த னான நாயக னவள்பின் சென்று
பலவந்த மவளைச் செய்து பாவையைப் போகந் துய்த்தான்
கலவர புத்தி யாகிக் குலவதி யில்லஞ் சென்று ;

24. சின்னாட்கள் சென்று, அப்பெண் தனியாகச் செல்லுங்கால், கெட்ட எண்ணங்கொண்ட அப்புருடன் அவளைப்பின் தொடர்ந்து, பலவந்தமாக அவளுடன் இன்பம் அனுபவித்தான். பெண்ணும் பயந்த புத்தியுடைய வளாகி, தன் கணவன் வீடு சென்று ;

**லஞ்சம் பெற்றுச் சரியான தீர்ப்பு அளிக்காதது**

25. தன்னுடைத் துணைவ ரோடு சாற்றினா ளந்த மாது
அந்தவர் கோப முற்று அதிகாரி யிடமே சொல்ல
நிந்தையைச் செய்தோன் றன்னை நிருபனு மழைத்துக் கேட்கப்
பிந்தியு மவன்பால் பொன்னைப் பெற்றுமே பெண்பால் பேரில் ;

25. தன் கணவருடன் அந்தக் குற்றத்தைச் சொன்னாள். அவன் கோபங் கொண்டு அதிகாரியிடம் சென்று முறையிட்டான். அவமானச் செயலைச் செய்தவனை ஜாதகன் அழைத்துக் கேட்கும்போது அவனிடமிருந்து பொருளைப் பெற்றுக் கொண்டு, பெண்மீது ;

26. குற்றமாய்ச் சொல்ல வந்தக் கோதையுந் திகில டைந்து
வித்தகி சொல்லு கின்றாள் மேதினில் பொருளும் பெற்றுக்
குற்றத்தை யென்மேல் சொன்ன கொடும்பாவி தனக்கு மேதான்
சுத்தமாய்ப் புதல்வர் காணக் தோன்றினுந் தீதே யாகும்.

26. பழியைச் சுமத்த, அப்பெண்ணும் பயமுற்றுக் கூறுகின்றாள். உலகில், லஞ்சம் வாங்கிக்கொண்டு என்மீதே குற்றத்தைக் கூறிய கொடும் பாவியே! உனக்குச் சுத்தமாகப் புத்திரர் தோன்றார். பிறந்தாலும் நிலையார்.

27. மறுஜன்மங் குழவி தோன்றி மறலிதன் திசைக்குச் சென்று
வருந்துணை பகையு மாகி யவன்குல நிந்தை யாயும்
உறைகுவா யென்று சொல்லி உத்தமி சலத்தில் மாண்டாள்
விரைவினி லந்தத் தோட மேவிற்று விவனுக் கேதான.

27. மறு பிறவியிலும் புத்திரர்கள் தோன்றி மரணமடைந்து, உடன் பிறந்தவர்கள் விரோதம் கொண்டும், குலத்தில் அவமானம் அடைந்தும், வாழ்வாய், என்று கூறி, அவ்வுத்தமி ஜலத்தில் விழுந்து மரணமடைந்தாள். சீக்கிரத்தில் அந்தத் தோஷம் இவனுக்கு ஏற்பட்டது.

28. இதுவன்றி யின்னு மொன்று இயம்புவோ மவ்வூர் தன்னில்
முதற்குல மிருவர் ஞாதி விரோதங்க ளதிகங் கொண்டு
சதியான பூமி யாலே சண்டைகள் மிகவே செய்து
பொதுவாக விவர்பின் செல்லப் பொன்னொரு வன்பால் பெற்று;

28. இது வல்லாமல் வேறு ஒன்று உரைக்கின்றோம். அவ்வூரில் இரு ஞாதியராகிய அந்தணர்கள் விரோதங்கள் அதிகமடைந்து, பூமியால் அதிகமான சண்டை செய்து, பொதுவான நீதிபதியாயிருக்கும் ஜாதகனிடம் சென்று (தன் குறையைச் சொல்ல) ஒருவரிடம் லஞ்சம் வாங்கிக் கொண்டு;

29. ஓரவஞ் சனையால் தீர்ப்பு உரைத்திட்டான் கிராமத் தானும்
கூறுவான் மறையோன் றானும் குணமுடன் விசாரி யாமல்
பாரிய புத்தி யின்றிப் பகையாகத் தீர்ப்புச் செய்து
வேறொரு ஜன்மந் தன்னில் விளங்காது வம்சந் தானே.

29. ஒரு பக்கமாகத் தீர்ப்புச் செய்தான். கிராமத்தோனாகிய அந்தணன் கூறுகின்றான். நற்குணத்துடன் நியாயமாக இரு கட்சிகளையும் தீர விசாரியாமலும் பெரும் புத்தியில்லாமலும் தவறான தீர்ப்புச்செய்தவனே! உனக்கு ஏற்படும் அடுத்த பிறவியில் வம்சம் விளங்காமல் வாழ்வாய்.

30. என்றுமே மறையோன் சொல்லி ஏகினு னில்லந் தன்னில்
அன்றவன் மறையோன் சாபம் அணிகிற்று விவனுக் கேதான்
தன்சுத ரந்தி யத்தில் சண்டன்றன் பதிக்குச் சென்று
பிந்திய காலன் வக்கல் புக்கவ னிவனே யென்றோம்.

30. என்று அந்தணன் கூறி, தன் வீட்டுக்குச் சென்றான். அந்த அந்தணன் சாபம் இவனைப் பற்றியது. தன் புத்திரர்களும் இடையிலேயே மாண்டு இவனும் மரணமடைந்தான்.

31. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்த னவனே என்றோம்
உரைக்கின்றோ முன்னூழ்ச் சாபம் உத்தமன் தன்னைச் சார்ந்து
குறைவுண்டு சுதர்கள் தாமும் குறிக்கின்றோ மின்னு மொன்று
வருமனை தன்னால் தோடம் வந்திடு மிவனுக் கேதான்.

**31.** மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன், இந்த ஜாதகன் என்று சொன்னோம். முற்பிறவியின் சாபம் இவனைத் தொடர்ந்தது. அதனால் புத்திரர்கட்குத் தோஷம் ஏற்படும். வேறு ஒன்று தன் மனைவியினால் ஏற்பட்டது என்று சொல்லுகின்றோம்.

32. பாரியை முன்ஜன் மத்தைப் பகருவோந் தவளே கீழ்ப்பால்
நாரியே சிற்றூர் தன்னில் நல்கினாள் கங்கை சேயாய்ப்
பாரிய குடும்பி யாகிப் பாலர்க ளுள்ளா களாகித்
தீரமாய் வாழு நாளில் செப்புவோ மூழி தானே.

**32.** ஜாதகனுடைய மனைவியின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தவளேச்வரத்துக்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில், வேளாள குலத்தவளாகப் பிறந்தாள். பெரும் குடும்பியாக, புத்திர பாக்கியம் பெற்று வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

33. பஞ்சையாய் ஸ்தீரியும் ஓர்நாள் பாலகன் தனக்கு வன்னம்
கெஞ்சியே இவள்பால் செல்லக் கர்வத்தால் கோப முற்று
மிஞ்சியே வார்த்தை சொல்லி விரட்டினாள் மாதைத் தானும்
வஞ்சியு மனவெ றுப்பால் வரைகிறாள் சாபந் தானே.

**33.** ஏழைப்பெண் ஒருத்தி ஒரு நாள் தன் குழந்தைக்கு அன்னம் கேட்க இவளிடம் சென்றாள். இவளும் கர்வத்தால் கோபங் கொண்டு அதிகமான அடாத வார்த்தைகள் கூறி, ஏழையை விரட்டி விட்டாள். ஏழைப்பெண்ணும் மனம் வருந்திச் சாபமிட்டாள்.

**அந்தணக் குழந்தைக்குப் பசுவின்பால் தர மறுத்தல்**

34. பாலர்சோ றீயாப் பாவி பருகாது சுதர்கள் தாமும்
சாலவே மறுஜன் மத்தில் சந்ததி யுதிக்கில் தீதாம்
ஏலவே யிவ்வாறு சொல்லி ஏகினாள் வேறு வில்லம்
வேல்விழி மாது சாப மேவிற்று கேட்டி டாயே.

**34.** குழந்தைக்குச்சோறு கொடுக்காத பாவியே! உனக்குக் குழந்தைகள் பிறக்கா. மறு பிறவியில் சந்ததி தோன்றினும் நிலையாது. இங்ஙனம் கூறி விட்டு வேறு வீட்டுக்குச் சென்று விட்டாள். ஏழைப்பெண்ணின் சாபம் ஏற்பட்டது. தாயே! கேளுங்கள்.

35. முதல்குல மறைமா துக்கு மெய்திற்றுச் சுதர்கள் தாமும்
அதற்குப்பால் குறைவு நேர்ந்து ஆவின்பா லிவளைக் கேட்க
அதிபதி வைத்துக் கொண்டு மகவுபர் லில்லை யென்றாள்
சதியான மனத்த ளாகிச் சாற்றுவாள் மறையோர் மாது.

35. ஓர் அந்தண குலப்பெண்ணுக்குக் குழந்தை பிறந்தது. அப்பெண் குழந்தைக்குப் பால் இல்லாமல் இவளிடம் பசுவின் பாலைக் கேட்க, இப் பெண்ணும் வைத்துக்கொண்டு குழந்தைக்குப் பாலில்லை யென்று சொன்னாள். துன்பமடைந்த மனத்தளாகி அந்தண குலப்பெண் கூறுகின்றாள்.

36. மறுஜன்மம் சுதர்கள் தோன்றி மரலிதன் பதிக்குச் சேரும்
கருமத்துக் குழவி யின்றிக் காதலி வாழ்வா ளாகும்
உரைத்துப் பின் சென்று ரென்றோம் உறைந்தது வந்தத் தோடம்
திருமக ளந்தி யத்தில் சாதங்கள் குறைவு நேர்ந்து ;

36. மறு பிறவியில் புத்திரர் தோன்றி நிலையாமல் இறந்து விடும். உனக்கு இறுதிக் கடன்கள் செய்யக் குழந்தையில்லாமல் வாழ்ந்து வருவாய் என்று கூறிவிட்டுச் சென்றுள், என்றோம். அஃது ஒரு தோஷமாயிற்று. ஜாதகனின் மனைவியும் தன் கடைசிக்காலத்தில் சாப்பாட்டுக்குக் குறைவேற்பட்டு ;

37. குன்மத்தால் மரண மாகிப் பிரமனால் வரையப் பட்டு
இன்னவள் கர்ண சேயாய் எய்தினு ளிவளே என்றோம்
முன்ஜன்ம மேழை சாபம் வந்ததால் சுதர்கள் தோடம்
கன்மங்கள் தீர வேண்டிக் கழறுவோஞ் சாந்தி தானே.

37. வயிற்று வலியால் மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, கருணீகர் குலத்தில் பிறந்தவள் என்று சொன்னோம். முற்பிறவியில் ஏழையின் சாபம் ஏற்பட்டதால் புத்திரர்கட்குத் தோஷமுண்டாகும். இக்கருமங்கள் தீரச் சாந்தியொன்று சொல்லுகின்றோம்.

சாந்தி

38. கருமசாந் திகளுந் செய்து காவலன் மனைவி யோடு
பெருநதி சேது சென்று புண்ணிய தீர்த்தந் தோய்ந்து
அரனுக்கு அர்ச்சித் தேத்தி அருமறை தமக்கு மேதான்
இரணியக் குழவி செய்து இயல்விடங் கந்தத் தோடு ;

38. கருமசாந்திகள் செய்து, ஜாதகன் தன் மனைவியோடு புண்ணிய தலமாகிய சேதுவுக்குச் சென்று, அங்குள்ள தீர்த்தத்தில் நீராடி, சிவபெருமானுக்கு அருச்சித்து, துதித்து, அந்தணர்கட்குத் தங்கத்தால் ஒரு குழந்தை உருவம் செய்து, சந்தணம் புஷ்பம் முதலியவைகளுடன் ;

39. ஆதியந் தன்னைச் சேர்த்து அருமறை யவர்க்கு வீந்து
நீதியாய் முன்னா ழோதி நேர்ந்தவூழ் பொறுத்தே னென்று
வேதிய ராசி பெற்று வித்தக ரடிப ணிந்து
மாதவர் போற்று கின்ற வரங்கமா நகரஞ் சென்று ;

39. தட்சிணையும் வைத்து, அந்தணர்களாகிய அவர்கட்குக்கொடுத்து, முற்பிறவியின் தோஷத்தைக் கூறி, அந்த வேதியர்கள் ‘பொறுத்தோம்’ என்று கூறும்வரை அவர்களின் அடிபணிந்து, பின் பெரியோர்கள் தோத்தரிக்கும் அரங்கமாநகரம் சென்று ;

**ஏகாதசிவிரதம்**

**40.** மாலுக்கு வர்ச்சித் தேத்தி மறுபடி யுள்ளூர் சென்று
சீலடா யேகா தசிச் சிறப்புடன் விரதங் கொள்ளச்
சாலவே முன்னூழ் நீங்கி ஜனித்தசேய் தீர்க்க மாகும்
ஏலவைந் தாறு ஜன்மம் எய்திடுந் தீர்க்க மாக.

**40.** திருமாலுக்கு அருச்சித்து, துதி செய்து, மறுபடி உள்ளூருக்குச் சென்று, நல்லொழுக்கத்துடன் ஏகாதசிதோறும் பக்தியுடன் விரதம் மேற்கொண்டால், முற்பிறவியின் தீவினை நீங்கிப் பிறக்கும் குழந்தை தீர்க்கமாகும். திண்ணமாக ஐந்தாவதாகவும் ஆறுவதாகவும் பிறக்கும் குழந்தைகள் நீண்ட ஆயுளுள்ளவைகளாகும்.

**41.** ஜயமுனி யதனைக் கேட்டுத் திடுக்கென வுரைக்க லுற்றார்
நயமுடன் கரும சாந்தி நல்கினீர் விபரஞ் சொல்வீர்
பயமிலாச் சொல்லு கின்றேம் பஞ்சம காண்டந் தன்னில்
தயையுடன் விபரஞ் சொல்வோஞ் சங்கரி கேட்டி டாயே.

**41.** ஜய முனிவர் அதனைக் கேட்டுத் திடீரென்று சொல்லுகின்றார். நயமாகக் கரும சாந்திகள் சொன்னீர்களே! அதற்கு விபரம் சொல்லுங்கள். பயமில்லாமல் சொல்லுகின்றேம். பஞ்சமகாண்டத்தில் கூறிய சாந்தியின் விபரம் கூறுகின்றேம். பார்வதியே! கேளுங்கள்.

**42.** சொற்படிச் செய்வா னாகில் சுதர்களும் விருத்தி தீர்க்கம்
சொற்படி செய்யா னாகில் சுதர்களும் விருத்தி யாகார்
ஒப்புடன் மாதுரு குண முரைக்கின்றே மிருநி றத்தாள்
தப்பித மில்லா ளாகுஞ் சமதேகம் பித்த தேகி.

**42.** நாங்கள் சொல்லியபடி செய்வானாகில் புத்திரர்கள் விருத்தியாகும். சொல்லியபடி செய்யானாகில் புத்திரர்கள் விருத்தியாகார். தாயின் குணத்தைச் சொல்லுகின்றேம். இரு நிற முடையவள். தவறுக வில்லாதவள். சமதேக முடையவள். பித்ததேக முள்ளவள்.

**43.** முன்கோபம் பின்பு சாந்த முயர்வான குடும்பி யாவள்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பா ளடக்க முள்ளாள்
அன்னவள் துணைவர் தம்மை வரைகின்றே மெழுவ ராகும்
பின்னமாஞ் சிலவே யென்றேம் பேசுவோ மிவள்முன் ஜன்மம்.

**43.** முன்கோப முடையவள். பிறகு சாந்தமடைவாள். உயர்வான குடும்பியாவள். தன் வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பாள். அடக்கமுள்ளவள். அவளுடைய சகோதர பாவத்தைச் சொல்லுகின்றேம். அவர் ஏழு பேராகும். சிலர் இறந்து விடுவார் என்றேம். ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம்.

**44.** பிருதிவிக்குக் கீழ்ப்பா லாகப் பேரூரில் செங்குந்த வம்சம்
உறைந்துபின் சுகமுண் டாகி உயர்வான குடும்பி யாகி
வருஞ்சுத ரதிக முண்டா யறுமுகன் தனைப்பூ சித்து
மறலியின் பதிகுச் சென்று மலரயன் வரையப் பட்டு ;

44. காஞ்சிபுரத்துக்குக் கிழக்குத் திக்கிலுள்ள பெரிய ஓர் ஊரில் செங்குந்த மரபில் பிறந்து, பிறகு சுகமுண்டாகி, உயர்வான குடும்பத்தை யடைந்து, புத்திர பாக்கியத்தை அதிகமாகப்பெற்று, அறுமுகக் கடவுளைப் பூசித்து, மரண மடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு ;

45. வந்தவ ளிவளே யென்றோம் வரைகின்றோ மிவள்பின் ஜன்மம்
தென்திசைத் தோகை கீழ்ப்பால் தண்டகா ரண்யந் தன்னில்
இந்ததோர்க் குலமு தித்து யாவர்க்கு நல்லோ ளாகிச்
செந்திருவி லாசம் பூண்டு செல்வியும் வாழ்வா ளாகும்.

45. இப் பிறவியில் பிறந்தாள் என்றோம். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தெற்குத் திசையிலுள்ள தோகைமலைக்குக் கிழக்கிலுள்ள தண்டகாரணிய க்ஷேத்திரத்தில் இதே குலத்தில் பிறந்து, எல்லோருக்கும் நல்லவளாகி, லட்சுமீகடாட்சம் பெற்று வாழ்ந்து வருவாள்.

46. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மருணை யுத்ரம்
முந்திய பேரூர் தன்னி லுதித்தனன் தீயின் வம்சம்
சந்ததி மனைவி யுண்டாய்த் தனம்பூமி யுள்ளா னாகி
எந்தையே வறத்தி லிச்சை இகபரன் பூசை செய்து ;

46. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணாமலைக்கு வடக்கில் உள்ள பெரிய ஓர் ஊரில் வன்னிய குலத்தில் பிறந்தான். மனைவி மக்களைப்பெற்று, தன்னால் சம்பாதிக்கப்பட்ட பூமிகள் உள்ளவனாகி வாழ்ந்து, தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, சிவபெருமானுக்குப் பூசை முதலியன செய்து ;

47. வினையது வில்லா னாகி மேவினன் காலன் பக்கல்
கன்முடன் பிரம னாலே காசினில் வரையப் பட்டு
அனையவே கர்ண சேயாய் அவனுமே யுதித்தா னென்றோம்
சினமிலாப் பின்ஜன் மத்தைச் செப்புவோங் கேளுந் தாயே.

47. தீவினைகளில்லாதவனாகி மரணமடைந்தான். மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு, கருணீகர் குலத்தில் பிறந்தான் என்று சொல்லுகின்றோம். தீவினையில்லாத மறு பிறவியைச் சொல்லுகின்றோம். கேளுங்கள், தாயே !

48. மறுஜன்மம் வேங்க டத்துள் வைசிய குலமு தித்துப்
பெருமையாய்ச் செட்டுச் செய்து புண்ணியன் வாழ்வா னாகும்
உரைக்கின்றோ நாற்பா னைந்தில் உயராடி மாதந் தன்னில்
பெறுந்தந்தை கண்ட மென்றோம் புண்ணிய வதியே கேளாய்.

48. மறு பிறவியில், திருப்பதியில், வைச்ய குலத்தில் பிறந்து, பெருமையாக வர்த்தகம் செய்து வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய நாற்பத்தைந்தாம் வயதில் ஆடி மாதத்தில் தந்தை மரணமடைவான், என்றோம். புண்ணியவதியே ! கேளுங்கள்.

49. அன்னைக்கு நாற்பா னென்பான் ஐப்பசி மாதந் தன்னில்
உன்னத கண்டம் நேரும் உரைக்கின்றேஞ் சாத கர்க்கு
மன்னிய வறுபா னுறில் விருச்சிக மாதந் தன்னில்
பின்பக்கந் தசமி தன்னில் புக்குவான் காலன் பக்கல்.

49. ஜாதகனுடைய நாற்பத்தொன்பதாம் வயதில் ஐப்பசி மாதத்தில் தாய் மரண மடைவாள். ஜாதகன் தனது அறுபத்தாறும் வயதில் கார்த்திகை மாதத்தில் கிருஷ்ணபட்சம் தசமிதிதியில் இறந்து போவான்.

50. மறுஜன்மம் வேங்க டத்துள் மறைக்குல முதிப்பா னகுர்
பெருமுனி யிவ்வாறு கூறப் பராசருங் கேட்க லுற்றார்
திருமக னிச்சென் மத்தில் சனப்பகை யதிக மாயும்
பொறுமையும் பொய்யுஞ் செய்தான் பேசினீர் மறையோ னுக்கு ;

50. மறுபிறவி திருவேங்கடத்தில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான். இங்ஙனம் முனிவர் கூற, பராசர முனிவர் கேட்கலானார். இப்பிறவியில் ஜனங்களிடம் அதிகம் விரோதம் கொண்டும், பொறுமையுடன் வாழ்ந்தும், பொய்பேசியும் வாழ்ந்து வந்த இந்த ஜாதகன், அந்தண குலத்தில் ;

51. எப்படி யுதித்தான் சொல்வீர் இயம்புவோங் கேளு மையா
தப்பித மதிகஞ் செய்துந் தேவதா பத்தி கொண்டும்
ஒப்புடன் சேது தீர்த்தம் உறைந்தனன் மறையோர் நேசம்
செப்பமாய் வாழ்வ தாலே பிறப்பனும் பிரம சேயாய்.

51. எப்படிப் பிறப்பான் என்று சொல்லுங்கள். கூறுகின்றோம். கேளுங்கள், முனிவரே ! அநேகத் தவறுகள் செய்தபோதிலும், தெய்வபக்தியுடன் இருந்துவந்ததாலும், சேதுவாகிய புண்ணிய தீர்த்தத்தில் நீராடியதாலும், அந்தணர்களிடம் நட்புக் கொண்டும் வாழ்ந்து வருவதாலும் அந்தண குலத்தில் பிறப்பான்.

52. இன்னவன் பொதுயோ கத்தை இயம்புவோம் விபர மாகத்
தன்னிலே விருபான் மேலே ஜாதகன் மரண மட்டும்
உன்னதப் பிறைபோல் யோகம் உயர்ந்திடும் வறுமை யில்லான்
தன்துணைப் பாகம் தானும் சார்ந்திடு மென்று சொல்வோம்.

52. ஜாதகனுடைய பொது யோகத்தை இனி விபரமாகக் கூறுகின்றோம். ஜாதகனுடைய இருபதாம் வயதுக்குமேல் ஜாதகன் மரண மடையுமட்டும் வளர்பிறைச் சந்திரன்போல் செல்வம் வளரும். தரித்திரம் இல்லாதவன். தன் சகோதரனின் பாகமும் இவனைச் சேரும் என்று சொன்னோம்.

53. நினைத்தகா ரியமு டிப்பன் நிருபர்க ளிட்டங் கொள்வன்
கனமுள குடும்பி யாவன் கனதனப் பூமி சேர்ப்பன்
அனையவே மறையோர் பூமி அணுகிடு மென்று சொன்னோம்
சினமிலாப் பாகம் ரண்டில் செப்புவோம் விபர மாக.

53. எண்ணிய காரியத்தை முடிப்பான். அரசர்களின் மதிப்புக்குரியவனு வான். பெரும் குடும்பத்தை அடைவான். அதிகமான செல்வம் பூமி இவைகளைச் சேர்ப்பான். இவனுக்கு அந்தணர்களின் பூமியும் சேரும் என்று சொல்லுகின்றோம். அந்த விபரத்தை இரண்டாம் பாகத்தில் கூறுகின்றோம்.

54. பிறந்தசேய் ஜனன காலம் பொன்தசை தனியி ருப்புச்
சிறந்திடு மாத மேழுந் தினமது மூவைந் தாகும்
உறைந்திடும் பிணியுந் தானும் உற்றதோர் சாத கர்க்குக்
குறைந்திடுந் தனமுந் தானுங் குவலய நிந்தை யுண்டு.

54. ஜாதகனுடைய ஜனனகாலத்தில் குருமகாதசையில் இருப்பு ஏழு மாதங்களும் பதினைந்துநாட்களுமாகும். அக்காலத்தில் நோயுண்டாகும். இந்த ஜாதகனுக்கு, தனம் குறையும். அதனால் உலகில் பழிகள் அடைவான்.

55. இன்னமும் விபர மாக இயம்புவோ மிரண்டி லேதான்
அன்னவன் பின்னு லேதான் அனுகிடு மனைவி கண்டம்
பினஜன்மங் காஞ்சி தன்னில் பிறப்பளாம் பிரம சேயாய்
அன்னையுங் கேட்க லுற்றாள் அவளிந்த ஜன்மந் தன்னில் ;

55. இன்னும் விபரமாக இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுக்குப் பிறகு அவனுடைய மனைவி மரணமடைவாள். மறு பிறவி காஞ்சீபுரத்தில் அந்தண குலத்தில் பிறப்பாள். பார்வதிதேவி கேட்க லானாள். ஜாதகனுடைய மனைவி இப்பிறவியில்;

56. என்னபுண் ணியங்கள் செய்தாள் இயம்புவீர் விபர மாக
அன்னவ ளிச்சென் மத்தில் அறமதி லிச்சை கொண்டும்
உன்னத தெய்வ பத்தி உயர்குல மறையோர் பத்தி
இன்னுமே ழையோ ருக்கு இடுக்கதை நிவிர்த்தி செய்தும் ;

56. என்ன நற்செயல்கள் செய்தாள்? அவற்றைக் கூறுங்கள், விபரமாக. அவள் இப்பிறவியில் தருமம் செய்வதில் விருப்பமுள்ளவளாயும், உயர்ந்த தெய்வபக்தியுடனும், உயர் குலத்தில் பிறந்த அந்தணர்களிடம் விசுவாச மாகவும், ஏழைகளின் துன்பங்களை அகற்றியும் வாழ்ந்து ;

57. வருவதால் மறைக்கு லத்தில் மாதவு முதிப்பா ளாகும்
உரைக்கின்றோ மிவள்மே லாக உதிக்குஞ்சேய் யோக முண்டு
கருமசாந் திகளுஞ் செய்தால் காளைகள் விருத்தி சொன்னோம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

57. வந்ததால், அந்தணர் குலத்தில் பிறப்பாள் என்று சொன்னோம். இவளுக்கு மேலாக இவளுக்குப் பிறக்கும் குழந்தைக்கு யோகம் விருத்தி யாகும். நாங்கள் கூறிய கரும சாந்திகள் செய்தால் புத்திர விருத்தியுண்டு. வேதங்களின் முடிவில் நடனமாடும் தேவியே! கேளுங்கள்.

## ஜாதகம் 92.

1. சந்திரன் கோல தாகச் சனிகுரு புகரு மேடம்
புந்தியுஞ் சாடி யாகப் பூமகன் மான தாக
மந்தரக் கயிறு மேரு மார்த்தண்டன் மீனம் புக்க
இந்தவாறு கிரக நின்று இலக்கினம் வீணை யாக ;

1. சந்திரன் துலாத்திலும், சனி குரு சுக்கிரன் மேடத்திலும், புதன் கும்பத்திலும், செவ்வாய் மகரத்திலும், ராகு தனுசிலும், சூரியன் மீனத்திலும், கேது மிதுனத்திலுமாக, நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருப்பின் ;

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | சனி குரு சுக்கிரன் | | இலக்கினம் கேது |
| புதன் | இராசி | சக்கரம் | |
| செவ்வாய் | | | |
| ராகு | | சந்திரன் | |

2. பலன்றனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
குலவிய வதிட்டர் சொல்வார் குறித்தது வாண்பால் ஜன்மம்
தலமது கீழ்மேல் வீதி தென்வாச லெதிரில் பாழாம்
நலமிலாக் கணேசன் தென்மேல் நதிக்கரை யருகில் தங்கும்.

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதிதேவிகேட்கும்போது, வதிஷ்ட முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலுள்ளது. எதிரில் வீடில்லை. பாழாகி, சீரில்லாத விநாயகரின் ஆலயம் தென்மேற்குத் திக்கிலும் அருகில் ஓர் ஆறும் உள்ளன.

3. உத்தரஞ் சாலை மார்க்கம் உறைந்திடு மருகில் தந்தி
பத்திர காளி கீழ்ப்பால் பலமிலாக் கடியு முண்டு
வெற்றிசெ யரசர் வாசம் விளம்புமிவ் வடையா ளத்துள்
சித்திர மில்ல மாகும் சிறப்புள கர்ண வம்சம் ;

3. வடக்கில் ஒரு பெரிய சாலையுண்டு. பக்கத்தில் விநாயகர் கோயில் ஒன்றுளது. கிழக்கில் காளி தேவியின் கோயிலும் பலமில்லாத கோட்டையொன்றும் உண்டாம். அது வெற்றியுள்ள அரசர் வாழும் ஊராகும். இவ்வித அடையாளங்களுள்ள அழகிய வீட்டில் கருணீகர் குலத்தில் ;

4. அன்னையுந் தந்தை யோகம் அவன்துணை களத்ர புத்ரர்
இன்னவன் ஜனன யோகம் இசைக்கின்றோ முன்பின் ஜன்மம்
உன்னத நவக்கோ ளாய்ந்து உரைக்கின்றோ மிந்நூல் தன்னில்
கன்னென மொழியி னாளே கழறுவோங் கேட்டி டாயே.

4. ஜாதகனுடைய தந்தை தாய் உடன் பிறந்தவர் மனைவி மக்கள் இவர்களுடைய யோகம் முதலியவற்றையும், இவர்களின் முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றையும், நவக்கிரகங்களின் நிலையை ஆராய்ந்து, இந்த நூலில் சொல்லுகின்றோம். இனிய வார்த்தைகளைப் பேசுபவளே! கூறுகின்றோம்; கேளுங்கள்.

5. தந்தையின் குணத்தைச் சொல்வோம் சமர்த்தான வார்த்தை [யுண்டு
சிந்தையில் தரும மில்லான் சிறப்பான குடும்பி யாவன்
வந்தவர்க் கன்ன மீவன் மாலின்மேல் பத்தி யுள்ளான்
நிந்தையு முடைய னாகும் நிருபர்கள் நேசங் கொள்வன்.

5. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். சாமர்த்தியமாகப் பேசுபவன். மனத்தில் இரகசிய மில்லாதவன். செழிப்புள்ள குடும்பத்தை யுடையவன். தன்னிடம் வந்தவர்கட்கு அன்ன மளிப்பான். திருமாலின்மீது பக்தி யுள்ளவன். அவமானங்கள் அடைவான். அரசர்களுக்குப் பிரியமானவன்.

6. கல்விமான் கணக்கில் ஊகி கரமதில் சங்கு சக்ரம்
நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னாவன்
புல்லிய புத்தி யில்லான் பூமியை விரயஞ் செய்வன்
வல்லியர் மோக வானா மங்கையே மேலுங் கேளே.

6. கல்வியறிவுள்ளவன். கணக்கில் ஊகமுள்ளவன். கையில் சங்க ரேகை ச்க்கர ரேகை களுள்ளவன். நல்லவருக்கு நல்லவனாவன். துஷ்டருக்குத் துஷ்டனாக இருப்பான். அற்பமான புத்தியில்லாதவன். பூமியைச் செலவு செய்வான். பெண்கள்மீது மையல் கொள்வான். தாயே! மேலும் கேள்.

7. சிவந்திடு மேனி யாவன் தேகமு மெலிச்ச லுள்ளான்
தவசிக ளன்பு பூண்பன் சங்கீத மிட்ட முள்ளான்
நவனியில் பித்த தேகி நளினமாய் வார்த்தை சொல்வன்
தவங்களுஞ் செய்வா னாகுங் காதலி மேலுங் கேளே.

7. சிவந்த உடலுடையவன். மெல்லிய சரீரமுள்ளவன். தவம் செய்பவரிடம் அன்புள்ளவன். சங்கீதத்தில் பிரியமுடையவன். பித்த சரீரி. அழகாகப் பேசுபவன். தவங்கள் செய்து வருவான். தாயே! மேலும் கேள்.

8. தன்துணை யெழுவர் தோன்றுஞ் சீரணுஞ் சிலவே யென்றோம்
மன்னிய துணைவ ராலே மாநிலம் விரய மெய்தும்
அன்னவர் வர்க்கம் நாஸ்தி அனுகூடு மென்று சொன்னோம்
உன்னதச் சீல னாவன் உறைந்திடு மாமி ரண்டு.

8. ஜாதகனுடைய தந்தைக்கு ஏழு உடன்பிறந்தவர்கள் உள்ளனர். அவர்களில் சிலர் நிலேயார். சகோதரரால் நிலம் விரயமாகும். அவருடைய வர்க்கம் இராது என்று கூறுகின்றோம். நல்லொழுக்க முள்ளவன். இரு மனேவியர் தோன்றிடுவர் என்று கூறுவோம்.

9. சொன்னவிக் குணத்தா.னுக்குச் சிம்ம....தேங்கா நாளில் (?)
அன்னவ னுதிப்பா னுகும் அழகிய மெய்ய னுவன்
முன்வய தனமும் பூமி மேவிடுங் குடும்ப மேன்மை
பின்வய....ம் நீங்கும் போஜன வறுமை யில்லான்.

9. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு சிம்ம லக்னத்தில் ......நட்சத்திரத்தில் பிறந்தவன். அவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான் என்றோம். அழகிய சரீர முள்ளவன். முன் வயதில் செல்வம் பூமி பொருள் முதலியன ஏற்படும். குடும்பம் மேன்மையடையும். பின் வயதில் அவை நீங்கிவிடும். சாப்பாட்டுக்கு வறுமையில்லாதவன்.

10. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே சேட்ட னுகத்
தன்னிலே வுதிப்பா னுகும் சாற்றுவோ மவன்கு ணத்தைப்
பின்னமில் லாத தேகன் புத்திமான் கல்வி மானும
அன்னியர் மெச்ச வாழ்வன் அவனு......த்த னுகும்.

10. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் மூத்தபுத்திரனுகத் தோன்றுவான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். ஊன மில்லாத தேக முள்ளவன். புத்திமான். கல்வியறிவுள்ளவன். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான்.

11. ஆனேயி னிறத்த னுகும் ஆசாரன் பலபேர் நேயன்
தானமுந் தருமஞ் செய்வன் தன்குலத் தொழிலால் மேன்மை
ஈனமாங் குணங்க ளில்லான் எதிரியை வசியங் கொள்வன்
மானனே யார்க்கு நேயன் மன்னர்க ளிட்டங் கொள்வன்.

11. கரிய நிறமுள்ளவன். ஆசாரமுடையவன். பலபேருக்குப் பிரியன். தானதருமங்கள் செய்வான். தன் குலத்தொழிலால் மேன்மை யடைவான். தாழ்ந்த குணங்க ளில்லாதவன். விரோதிகளே வசியம் செய்வான். பெண் களுக்குப் பிரியனுவன். அரசர்களுடைய மதிப்புள்ளவன்.

12. நடையது துருசு முள்ளான் நற்சுக போச னத்தன்
கடன்கொளான் சோம்பல் கொஞ்சங் காரிய சமர்த்த னுகும்
தடபுட லுடைய னுகுஞ் சாந்தவான் மனேவி பட்சன்
விடவுரை பகரா னுகும் வித்தையு மிரண்டு கற்பன்.

12. வேகமாக நடக்க வல்லவன். சுகமாகச் சாப்பிடுவதில் பிரியன். கடன் படாதவன். சோம்பல் சிறிதுள்ளவன். காரியங்களில் சமர்த்தன். ஆடம் பரத்தில் பிரியமுள்ளவன். சாந்தமுடையவன். மனேவிமீது பிரிய முடையவன். கெட்டவார்த்தைகளேப் பேசாதவன். இரு விதக் கல்வி கற்பான்.

13. கைமுதல் பின்னு ளுள்ளான் காவலர் நேசத் தாலே
செய்தொழில் மேன்மை யாவன் சேர்ந்தவர் தம்மைக் காப்பன்
உய்வனும் கணக்கி னாலே உறவினர் மெச்ச வாழ்வன்
ஐயமா மனததா னாகும் அரிபகதி பூண்பா னென்றோம்.

13. பிற்காலத்தில் கை முதல் உள்ளவன். அரசருடைய நட்பினால் செய்யும் தொழிலில் மேன்மையடைவான். தன்னை யடைந்தவர்களை ஆதரிப்பான். கணக்கினால் வாழ்ந்து வருவான். பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். சந்தேகமில்லாத மனத்தினன். திருமாலின்மீது பக்தியுள்ளவன் என்று சொல்லுகின்றோம்.

14. மறையவர் நேசங் கொள்வன் வண்டிவா கனமு முள்ளான்
தரைமிகத் தேடு வானும் தங்கிடுங் கமல ரேகை
குறியொன்று தொடையில் கானும் குஞ்சர நடையு மாவன்
நறைமலர்க் கந்த மிட்டன் நல்கிடு மூலச் சூடு.

14. அந்தணர்களின் நட்புக் கொள்வான். வண்டி முதலிய வாகன வசதிகளுள்ளவன். பூமியை அதிகமாக வாங்குவான். கமல ரேகையுள்ளவன். தொடையில் வடு ஒன்று உள்ளவன். யானையைப்போல் கம்பீரமான நடையுள்ளவன். வெண்மையான புஷ்பம் சந்தணம் இவைகளின்மீது பிரியமுள்ளவன். மூலச்சூட்டு நோயுள்ளவன்.

15. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோ மூத்தோர் காணன்
பின்துணை யொருவன் தோன்றும் பேசுவோ மவன்கு ணத்தைக்
கன்னென மொழியே சொல்வன் கல்மனங் கல்வி யுள்ளான்
தனசொலே மேன்மை யாகச் சாதிப்பா னுளைச்சல் தேகி.

15. ஜாதகனுடைய சகோதரரைப்பற்றிச் சொல்லுகின்றோம். மூத்தவரில்லை. பின் பிறக்கும் சகோதரன் ஒருவனுண்டு. அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். இனிய வார்த்தைகளையே பேசுபவன். திடமான மனமுள்ளவன். கல்வியறிவுடையவன். தன் வர்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பான். மெல்லிய சரீரமுள்ளவன்.

16. வஞ்சியர் பலபேர் மோகன் மால்நிற மெதிரி கஞ்சான்
தஞ்சமென் றோரைக் காப்பன் சார்ந்திடும் பித்தச் சூடு
அஞ்சின வார்த்தை கூறான் அடாநிந்தை சொல்வா னாகும்
வஞ்சனை மனத்த னாகு மருமத்தை வெளிக்காட் டாதான்.

16. பல பெண்கள்மீது மையல் கொள்வான். கரிய நிறமுள்ளவன். எதிரிகளுக்குப் பயப்படாதவன். தன்னை வந்தடைந்தவர்களை ஆதரிப்பான். பித்தச் சூடுள்ளவன். பயப்படும்படி பேசாதவன். அடாத நிந்தைச் சொற்களைக் கூறுவான். வஞ்சனையுள்ள மனத்தினன். இரகசியத்தை வெளியிடாதவன்.

17. குலத்தொழில் செய்வா னாகும் குறியது முகத்தில் தோன்றும்
தலமது தீர்த்தந் தோய்வன் சந்தோஷ மனத்த னாகும்
பலவித லாப முள்ளான் பாவையு மொருத்தி யாகும்
உலகினில் கீர்த்தி யேற்பன் உண்மைபோல் வார்த்தை சொல்வன்.

17. தன் குலத்தொழிலையே செய்து வருவான். முகத்தில் ஒரு வடு உள்ளவன். பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். சந்தோஷமன முள்ளவன். பலவிதமான லாபமுள்ளவன். மனைவி யொருத்தியேயாகும். உலகில் புகழ் அடைவான். உண்மையைப் பேசுவது போலவே பேசுவான்.

18. புத்திர ராண்பால் மூன்று பெண்ணது விரண்டு வென்றோம்
சுத்தமா யைந்துந் தீர்க்கஞ் சீரண மூன்று வென்றோம்
வித்தக னுடனே சின்னாள் விளங்கிப்பின் வேருய்ச் செல்வன்
வித்தகன் வறுமை காணன் மெல்லியே கேட்டி டாயே.

18. மூன்று புத்திரர்களும் இரு பெண்களும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றோம். இவ்வைவரும் தீர்க்காயுள் உடையவர்கள். மூவர் இறந்து விடுவார் என்று சொல்லுவோம். ஜாதகனுடனேயே சில நாள் இருந்து, பிறகு வேருகச் சென்றுவிடுவான். தரித்திரம் அடையாதவன். மெல்லிய வளே ! கேளுங்கள்.

19. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோம் பதினே ழாண்டில்
போதவே மேற்குத் திக்கில் பொருந்திடு மாதுர் வர்க்கம்
காதலி வருவா ளாகும் கழறுவோ மவள்கு ணத்தைச்
சூதுக ளில்லா நெஞ்சம் சொல்லுமுன் கோபங் கொஞ்சம்.

19. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். பதினேழாம் வயதில் மேற்குத் திக்கிலிருந்து தன்னுடைய தாயின் வர்க்கத்தி லிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். சூதுகள் இல்லாத மனத்தினள். சொல்வதற்குமுன் கோபம் கொள்வாள்.

20. அன்னம்போல் சாய லுள்ளாள் அதிட்டவாள் மாஞ்சி வப்பள்
நன்னயக் குணத்தா ளாகும் நன்னடை வாத தேகி
தன்பந்து புகழ வாழ்வள் தன்பணி யதிக முள்ளாள்
கன்னென மொழியு முள்ளாள் கணவனுக் கினிய ளாவள்.

20. அன்னத்தைப் போன்ற சாயலுள்ளவள். அதிர்ஷ்டமுடையவள். மாநிறமுடையவள். இனிய குணமுள்ளவள். நன்னடக்கையுள்ளவள். வாதசரீரமுடையவள். தன் பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். செல்வம் ஆபரணங்கள் அதிகமுடையவள். இனிய வார்த்தை களையே பேசுபவள். தன் கணவனுக்குப் பிரியமானவள்.

21. பத்திமான் பொறுமை சாலி புண்ணிய மனத்தா ளாகும்
பத்திமா னவர்க்கு நேயம் பால்தயிர் பிரிய மாவள்
சுத்தமு முடைய ளாகுந் துருசான நடையு மாவள்
அத்தியைப் பெற்ற மாதே அறைகின்றோம் புத்திர பாவம்.

21. பக்தியுள்ளவள். பொறுமையுடையவள். புண்ணியமான மனத்தி னள். பக்தியுள்ளவர்கட்கு நேசமுள்ளவள். பால் தயிர் இவைகளின்மீது பிரிய முள்ளவள். சுத்தமுடையவள். வேகமாக நடப்பவள். விநயகனைப் பெற்ற தாயே ! புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம்.

22. புத்திர ரெழுவர் தோன்றும் புகலுவோ மாண்பா லொன்று
சித்தமாய்ப் பெண்பால் மூன்று செப்புவோந் தீர்க்க மாகக்
குற்றமா மூன்று வென்றோம் குறுமுனி புகலு கின்றார்
வித்தகன் றனக்குப் பாரி மேவிடு மிரண்டே யாக.

22. ஜாதகனுக்குப் புத்திரர்கள் ஏழு பேர் தோன்றுவர். ஆண் மகன் ஒருவனும் பெண்கள் மூவரும் தீர்க்காயுளுள்ளவர்கள். மூவர் நிலையார் என்று சொல்லுகின்றோம். அகத்திய முனிவர் சொல்லுகின்றார். ஜாதக னுக்கு இரு மனைவியர் தோன்றிடுவர்.

### இருதாரமேற்படுதற்குரிய கிரகநிலை

23. எப்படிச் சொல்லு மென்ன ஏழினி லிராகு நிற்க
ஒப்புட னேழோன் லாபம் உறைந்திடுஞ் சரமே யாக
மெய்ப்புடன் புகருங் காரி மேவியே யிருப்ப தாலே
செப்பினோம் தாரம் ரண்டு சயமுனி மறுத்துச் சொல்வார்.

23. எப்படியென்று கூறுங்கள். ஏழாம் வீட்டில் ராகு இருப்பதாலும், ஏழாம் வீட்டுக்குரிய குரு லாபஸ்தானத்தில் இருப்பதாலும், அந்த இடம் சரஸ்தானமாக இருப்பதாலும், சுக்கிரனும் சனியும் சேர்ந்து இருப்பதாலும், இருமனைவிகள் ஏற்படுவர். சயமுனிவர் தடுத்துக் கூறுகின்றார்.

24. சுகதன மிருவர் கோணஞ் சூழ்ந்திடப் பொன்னேழ் பார்க்கப்
பகையுறுத் தார மொன்றே பகரலா மிவனுக் கேதான்
வகையுட னம்மா துக்கு மாங்கல்ய மிரண்டே யாகும்
சகமதில் முதல்மாங் கல்ய சிதறிடுங் கள்ள ராலே.

24. இருவர் கோணத்தில் இருப்பதாலும், ஏழாம் வீட்டுக்குரிய குரு ஏழைப் பார்ப்பதாலும் இரு தாரம் ஏற்படாது. மனைவி யொருத்தியே இவனுக்கு உண்டு என்று சொல்லலாம். மனைவிக்கு இரு மாங்கல்யம் ஏற்படும். முதல் திருமணநாண் கள்வர்களால் அபகரிக்கப்படும்.

25. எந்தக்கா லத்தி லேதான் இக்குற்றம் நடக்குஞ் சொல்வீர்
வந்தவன் முப்பா னெட்டில் விலகிடு மந்த முத்திரை
பிந்தியும் வேறு முத்திரை பேணுவா னென்று சொன்னோம்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

25. எந்தக் காலத்தில் திருடர்களால் அபகரிக்கப்படும்? சொல்லுங்கள். ஜாதகனுடைய முப்பத்தெட்டாம் வயதில் திருமண மங்கலநாண் அகற்றப் படும். வேறு திருமங்கலியம் அணிவிப்பான் என்று சொல்லுகின்றோம். கந்தபிரானைப் பெற்ற தேவியே! கூறிய வார்த்தைகள் தவறா.

26. அன்னையின் குணத்தைச் சொல்வோ மழகுளாள் பொறுமை [சாலி
வந்தவர்க் கன்ன மீவள் வரனுக்கு நல்ல ளாகும்
உன்னத வார்த்தை சொல்வள் உண்மையா மனத்த ளாகும்
முன்மாதா வொன்று வுண்டு முறிவுண்டு கொஞ்ச நாளில்.

26. ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றோம். அழகுள்ளவள். பொறுமை யுடையவள். தன்னையடைந்து யாசித்தவர்கட்கு அன்னமளிப்பாள். தன் கணவன்மீது பிரியமுள்ளவள். உயர்ந்த வார்த்தைகளையே பேசுவாள். உண்மையான மனத்தினள். ஜாதகனுக்கு மூத்த தாய் ஒருத்தியுண்டு. கொஞ்ச காலத்தில் அவள் பிரிவாள்.

27. இல்லமுங் குடகு திக்காம் இவள்துணை யிருநான் காகும்
அல்லல்க ளாண்பா லுக்கு அந்தகன் பக்கல் சேரும்
வல்லிமா ரிருவர் தீர்க்கம் மாதுவுஞ் சிவந்த மேனி
புல்லிய புத்தி யில்லாள் புண்ணிய மனத்த ளாகும்.

27. ஜாதகனுடைய தாயின் வீடு மேற்குத் திக்கிலுள்ளது. உடன் பிறந்தவர்கள் எண்மர் உண்டு என்று சொன்னோம். சகோதரர்கட்கு தோஷமுண்டு. அவர் நிலையார். இரு சகோதரிகள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். அப்பெண் சிவந்த உடலுள்ளவள். அற்ப புத்தி யில்லாதவள். புண்ணியமான மனத்தினள்.

28. அவளுடைப் பூர்வந் தன்னை வரைகின்றோ மருணை யுத்ரம்
அவனியில் சிற்றூர் தன்னில் அவளுமே சேடர் வம்சம்
இவளுமே வுதித்தா ளென்றோம் இகபர னன்புண் டாகித்
தவசிகட் கன்ன மீந்து தன்சுத ரதிக முண்டாய் ;

28. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணாமலைக்கு வடக்கில் உள்ள சிற்றூரில், சேடர் மரபில் பிறந்து, சிவபெருமானிடம் பக்திகொண்டு, துறவிகட்கன்ன மளித்து, அதிகமான புத்திரர்களை யடைந்து ;

29. பலபல தலங்கள் சென்று பஞ்சைமே லிரக்க முண்டாய்த்
தலைவியு முள்ளூர் சென்று தன்வரன் முன்னே மாண்டு
தலைநான்கோன் வரையப் பட்டு ஜனித்தன ளதற்கு வுத்ரம்
நிலையான விவள்பின் ஜன்மம் நிகழ்த்துவோந் தாயே கேளும்.

29. பற்பல புண்ணிய தலங்களுக்குச் சென்று, ஏழைகளின்மீது இரக்கமுள்ளவளாக வாழ்ந்து, உள்ளூருக்குத் திரும்பி, தன் கணவனுக்கு முன்பாகவே மாண்டு, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, அவ்வூருக்கு வடக்கில் பிறந்தாள். தாயின் மறுபிறவியைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

30. உத்தரம் பிருதிவி தன்னில் உதிப்பளாம் பிரம்ம சேயாய்ப்
புத்திரர் பணிக ளுண்டாய்ப் பூமியில் வறுமை யின்றி
இத்தகை வதிட்டர் சொல்ல இயம்புவார் பராசர் தாமும்
வித்தகி பூர்வ ஜன்மம் விளங்கினாள் கர்ண சேயாய்.

30. வடக்குத் திசையில் உள்ள காஞ்சீபுரத்தில், அந்தண குலத்தவளாகப் பிறந்து, புத்திரர்கள் ஆபரணங்கள் இவைகளைப் பெற்று, வறுமையில்லாமல் வாழ்வாள். இங்ஙனம் வசிஷ்ட முனிவர் சொல்லும்போது, பராசர முனிவர் கூறுகின்றார். ஜாதகி இப்பிறவியில் கருணீகர் குலத்தில் பிறந்தாள்.

31. செய்தபுண் ணியங்க ளென்ன செப்புவீர் முனியே நீர்தாம்
தையலு மிச்சென் மத்தில் தன்வரன் மனம்போல் வாழ்ந்து
ஐயமென் றோரைக் காத்து அரிபணி செய்வ தாலும்
வையமேல் மறுபி றப்பு மறைக்குல முதிப்பா ளென்றோம்.

31. இப்பிறவியில் என்ன புண்ணியச் செயல்களைச் செய்தாள்? கூறுங்கள், முனிவரே! நீர்தாம். தாயும் இப்பிறவியில் தன் கணவன் மனம்போல் வாழ்ந்து, நொந்தவர்களை ஆதரித்துவந்து, திருமாலுக்குத் திருப்பணிகள் செய்துவருவதால், உலகில் மறுபிறப்பில் அந்தண குலத்தில் பிறப்பாள் என்றோம்.

32. தந்தையின் பூர்வஞ் சொல்வோம் சிறுபாக்க மருகில் சிற்றூர்
வந்தனன் முந்திய வம்சம் வளமுள பூமி யுண்டாய்த்
தன்தன மதிக முண்டாய்ச் சகலர்க்கு நல்லோ னாகி
எந்தையே யறத்தி லிச்சை இவன்பல தலங்கள் சென்று;

32. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சிறுபாக்கத்துக்கருகில் உள்ள சிற்றூரில், அந்தண குலத்தில் பிறந்து, செழிப்புள்ள பூமியைப் பெற்று, தன்னால் சம்பாதிக்கபபட்ட பொருள் அதிகமாகி, எல்லோருக்கும் நல்லவனாகி, தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, பற்பல புண்ணிய தலங்களுக்குச்சென்று;

### மோட்சம்

33. மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டுப்
பெரிதான குடும்பந் தன்னில் பிறந்தனன் கர்ண சேயாய்
வருஞ்ஜன்ம மரங்கந் தன்னில் மறைக்குல முதித்து விண்ணோன்
அரிபத்தி மிகவே கொண்டு அடைவனும் தேவ ராக.

33. மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, பெரிய குடும்பத்தில் கருணீகர் குலத்தில் பிறந்தான். மறு பிறவி திருவரங்கத்தில் அந்தணர் குலத்தில் பிறந்து, திருமாலிடம் அதிகமாக பக்திகொண்டு, மோட்ச சாம்ராஜ்யம் பெறுவான்.

34. அத்திரி சொல்லு கின்றார் அவனுமிச் சென்மந் தன்னில்
வித்தகன்.................பொருள்மே லிச்சை
சுத்தமாய் வார்த்தை யின்றிச் சொல்லது தவறுத லாலும்
இத்தகை யுடைய பாலன் எப்படி மறைக்கு லத்தில்;

34. அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுடைய தந்தை இப் பிறவியில் சிலருக்குத் தீங்கிழைத்து வந்தும், பொருள்மீது இச்சையுடன் நல்ல வார்த்தைகளின்றியும், சொன்ன சொல்படி நடக்காமல் இருந்து வந்தும், இவ்வளவு குறைகளுள்ளவனுயுமிருந்து, எங்ஙனம் அந்தண குலத்தில்;

35. உதிக்குங்கா ரணங்க ளென்ன உரைப்பீர்கள் முனியே நீர்தாம்
அதிபனு மிச்சென் மத்தில் அநந்தகுற் றங்கள் செய்தும்
நதிபல தீர்த்தந் தோய்ந்து நாரணன் பக்தி கொண்டும்
துதிசெய்தும் வருவ தாலே தோன்றுவான் மறையோ னாக.

35. பிறக்கும் காரணங்கள் என்னவென்று சொல்லுங்கள், முனிவரே! நீர்தாம். ஜாதகனும் இப்பிறவியில் எண்ணிறந்த குற்றங்கள் புரிந்தும், பல பல புண்ணிய நதிகளில் நீராடிதிருமாலிடம் பக்தியுடன் தோத்திரம் செய்து வந்ததால் அந்தணனுனன்.

36. ஜாதகன் பூர்வஞ் சொல்வோம் சீகாழி தன்னி லேதான்
போதவே சூத்ர ஞகிப் பூமியும் பரிபா லித்து
மாதவர்க் கன்ன மீந்து மனேவிமைந் தருமுண் டாகித்
தீதான குணங்க ளின்றித் திருமகள் விலாசம் பெற்று ;

36. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். சீர்காழியில் நான்காம் வருணத்தவனகப் பிறந்து, பூமியால் ஜீவனம் நடத்திவந்து, தவசிகட்கு அன்னம் அளித்துவந்து, மனேவி மக்களேயடைந்து, தீயகுணங் களில்லாமல் லக்ஷ்மீ கடாட்சம் பெற்று ;

37. வினையது மில்லா தாகி மேவினன் காலன் பக்கல்
கனமுள பிரமன் லக்கம் காசினில் வரையப் பட்டுத்
தனயனு மிக்கு லத்தில் சார்ந்தன னென்று சொன்னேம்
சினமிலா முற்பா கத்தைச் செப்புவோங் கேட்டி டாயே.

37. தீவினைகளில்லாமல் மரணமடைந்தான. மீண்டும் பிரமதேவனல் படைக்கப்பட்டு இக்குலத்தில் பிறந்தான் என்று கூறுகின்றேம். அவனுடைய முதல்பாக யோகத்தைச் சொல்லுகின்றேம். கேளுங்கள்.

38. அரசரால் தொழிலும் பெற்று அநேககீர்த் திகளு முண்டாய்க்
பிறையது போல யோகம் பொருந்திடும் வறுமை காணன்
தரையது சேர்ப்பா ஞகும் தனம்பணி யதிக முள்ளான்
திருமகள் விலாசம் பெற்றுச் சிறப்பாக வாழ்வா ஞகும்.

38. அரசாங்க உத்தியோகம் பெற்று, பிரபல கீர்த்தியடைந்து வாழ்வான். வளர்பிறைச்சந்திரன்போல் யோகம் வளரும். தரித்திரம் அடையாதவன். பூமியைப் பெருக்குவான். செல்வங்கள் ஆபரணம் முதலியன அதிகம் அடைவான். இலக்குமியின் கடாட்சம் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்து வருவான்.

39. பிறந்தநாள் முதலே யாகப் பேசுவோம் பதினெட் டாண்டும்
குறைந்திடும் பூமி யாவும் குழப்பமா மனமே யாகும்
பெறுந்தந்தை துணேவ ராலே போய்விடும் பூமி யாவும்
அறந்தனே வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

39. ஜாதகன் பிறந்த நாள் முதற்கொண்டு பதினெட்டாம் வயது வரை பூமிகள் யாவும் குறைந்துபோம். குழப்பமுள்ள மன முண்டாகும். தன்னுடைய தந்தையின் சகோதரனல் எல்லா பூமியும் கைவிட்டுப்போம். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

40. இருபது வாண்டு மேலாய எய்திடும் விசேட யோகம்
அரசரால் பெருமை யுண்டு அவன்தந்தை தனக்கு மேலாய்
இருநிதி பெறுவா ஞகும் இம்மொழி வதிட்டர் சொல்லப்
பராசருஞ் சொல்லு கின்றர் பகர்ந்திட்டீர் யோகந் தானும்.

40. ஜாதகனுக்கு இருபது வயதுக்குமேல் விசேஷமான யோகம் கிட்டும். அரசரால் பெருமையடைவான். தன் தந்தைக்கு மேலாக வாழ்வான். இரு இடங்களிலிருந்து பொருள் பெறுவான். இங்ஙனம் வதிஷ்டர் சொல் லும்போது பராசரர் வினவுகின்ருர். ஜாதகனுக்கு யோகம் சொன்னீரே.

### யோகமேற்படுதற்குரிய கிரகநிலே

41. காரணம் யாது வென்ன கழறுவீர் விவர மாகத்
தீரமாய்த் தர்ம கர்மஞ் சேர்ந்துமே லாபம் புக்கக்
கூறினேம் யோகந் தன்னைக் கோதையும் வந்த பின்பு
மாரற்கு யோக மெய்து மங்கையின் பூர்வஞ் சொல்வோம்.

41. அதற்குரிய காரணத்தை விபரமாகச் சொல்லுங்கள். தரும கருமாதி பதிகள் (சனி குரு) சேர்ந்து லாப ஸ்தானத்தில் இருப்பதால் யோகம் சொன்னேம். ஜாதகனுக்கு மனைவி வந்தபிறகு யோகம் விருத்தியாகும். மனைவியின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம்.

42. ஓதுரு தலத்தி லேதான் உதித்தனள் வடுகர் வம்சம்
பாதக மனமில் லாமல் பரவுப காரி பாயும்
நீதியாய்க் கணேச னுக்கு நிமலியோர் தீபம் வைத்து
மாதவர்க் கன்பு பூண்டு மறலியின் பதிக்குச் சென்று ;

42. ஓதுர் என்னும் ஊரில், வடுகர் குலத்தில் பிறந்தாள். தீய எண்ணங்களில்லாத மனத்துடன் பிறருக்கு உதவி செய்துவந்து, விநாயக ரின் ஆலயத்தில் தீபம் ஒன்று ஏற்றிவைத்து, தவசிகளிடம் அன்பு கொண்டு, மரணமடைந்து ;

### மனைவியால் கணவனுக்கு யோகம்

43. வந்தவ ளிவளே யென்றே மணிவிளக் கிட்ட புண்யம்
தந்திடுஞ் சுதராண் மூன்று சாற்றினேந் தீர்க்க மாக
அந்தவள் சுகமாய் வாழ்வள் அவள்பலன் வரனுக் குண்டாய்ச்
சந்திரன் பிறைபோல் யோகஞ் சார்ந்திடு மென்று சொல்வோம்.

43. பிறந்தவள், ஜாதகனுடைய மனைவி என்றேம். ஆலயத்தில் தீபம் வைத்த புண்ணியத்தால் ஒரு புத்திரன் பிறந்து தீர்க்காயுளுடன் இருப்பான். அவளும் சுகத்துடன் வாழ்ந்து வருவாள். அவளுடைய யோகம் கணவ னுக்கு ஏற்பட்டு பிறைச்சந்திரன்போல் வளரும் என்று சொல்லுகின்றேம்.

44. முப்பது வாண்டு தன்னில் உயர்தனு மாதந் தன்னில்
செப்புவேன் காரி க்ரஞ் சொல்லிய புக்தி தன்னில்
அப்போது தந்தை கண்டம் அறைந்தது தப்பா தாகும்
ஒப்புடன் மாதுரு வுக்கு உரைக்கின்றேங் கேட்டி டாயே.

44. ஜாதகனுடைய முப்பதாம் வயதில் மார்கழி மாதத்தில் சனிமகா தசையில் சூரியபுத்தியில் தந்தை மரணமடைவான். கூறியது தவறாது. தாயின் மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

45. ஆறாறு வொன்று வாண்டில் ஆவணி மாதந் தன்னில்
காரியின் தசைக்கா லத்தில் கனக னின் புத்தி நாளில்
வீரிய தாய்க்குத் தோட மேவிடு மென்று சொன்னோம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

45. ஜாதகனுடைய முப்பத்தேழாம் வயதில் ஆவணி மாதத்தில் சனி மகாதசையில் குருபுக்தியில் தாய் மரணமடைவாள் என்று சொல்லுகின்றோம். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே! கேளுங்கள்.

46. அன்பது நான்கு வாண்டில் அழகிய மேட மாதம்
துன்பமா மனைவிக் கேதான் செப்புவோ மிவள்பின் ஜன்மம்
அந்நகர் தன்னி லேதான் அதிகமாய்ப் பொருள்ப டைத்து
உன்னத வைச்யச் சேயாய் உதிப்பளா மென்று சொல்வோம்.

46. ஜாதகனுடைய ஐம்பத்துநான்காம் வயதில் சித்திரை மாதத்தில் மனைவி மரணமடைவாள். அவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். அவ்வூரிலேயே அதிகப் பொருள் படைத்த உயர்ந்த வைச்ய குலத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

47. உதித்தவன் மரண காலம் உரைக்கின்றோ மறுபான் ரண்டில்
சதியிலா விடப மாதஞ் சதுர்த்தசி வளர்பக் கத்தில்
விதியது முடியு மென்றோ மேவிய விவன்பின் ஜன்மம்
கதிதருந் தில்லை தன்னில் கனமுள சைவச் சேயாய்;

47. ஜாதகனுடைய மரண காலத்தைச் சொல்லுகின்றோம். அறுபத்தி ரண்டாம் வயதில் வைகாசி மாதத்தில் சுக்கில பட்சம் சதுர்த்தசி திதியில் மரணமடைவான். இவன், மறு பிறவியில் முக்தியை யளிக்கும் தில்லையம் பதியில் சைவ குலத்தவனாக;

48. பிறப்பனு மிவனே யம்மா பிறந்தநாள் [1]சோதி நாளாம்
கருங்கோளின் தசையி ருப்புக் கழறுவோ மூன்று வாண்டு
வரும்பலன் குறைவே யாகு மாநிலம் விரய மெய்தும்
உறன்முறை சூத மெய்தும் உறும்பிணி சாத கர்க்கு.

48. பிறப்பான், இவன். தாயே! ஜாதகன் பிறந்த நாள் சுவாதி நட்சத்திரம். ராகுமகாதசையில் இருப்பு மூன்று வருடங்களாகும். அக் காலத்தில் கிட்டும் பலன்கள் குறைவே. நிலங்கள் விரயமாகும். உறன் முறையாளர்கட்கு அசுபம் நிகழும். ஜாதகனுக்கு நோய் உண்டாகும்.

49. மாதுலன் கண்ட மெய்து மாடுகள் சேத மாகும்
தீதுக ளதிக மெய்துஞ் செப்புவோம் விவரம் ரண்டில்
நீதியா யிருப்ப தாலே நேர்ந்திடும் நிதிநிட் சேபம்
[2]காதிக ளதிக முண்டு கழறின மொழிகுன் றுவே.

---

[1] சுவாதி நட்சத்திரம். [2] புகழ்.

49. ஜாதகனுடைய தாய் மாமன் மரணமடைவான். கால் நடைகள் சேதமடையும். அதிகமான தீங்குகள் ஏற்படும். அவ்விஷயங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகன் நேர்மையுடன் இருப்பதால் பூமியிலிருந்து புதையல் கிட்டும். புகழ் அதிகமாக உண்டாகும். கூறிய வார்த்தைகள் தவறா.

50. ஜயமுனி விதனைக் கேட்டுத் திடுக்கென வுரைக்க லுற்றார்
நயமுடன் தனமெவ் வாறு நல்கிடும் விவரஞ் சொல்வீர்
தயையுடன் கேளு மையா தன்னில்ல மதற்கு மேற்கில்
பயமிலா நேரு மென்றோம் பகருவோம் விவரம் ரண்டில்.

50. ஜய முனிவர் இதைக் கேட்டுத் திடீரென்று கேட்கலானார். புதையல் கிட்டும் விபரத்தைச் சொல்லுங்கள். சொல்லுகின்றேன். கேளுங்கள். முனிவரே ! தன்னுடைய வீட்டுக்கு மேற்கில் கிடைக்கும் என்று சொல்லுகின்றோம். இரண்டாம் பாகத்தில் அதை விவரமாகச் சொல்லுவோம்.

51. புந்திக்கு வைந்தில் கேது பொருந்திட வதற்கு வைந்தில்
சந்திர னிருப்ப தாலே சாற்றினோம் நிதிநிட் சேபம்
அந்திடங் காலி பூமி அடுத்ததோர் மனைய தாகும்
இந்திர னிறைஞ்சு மாதே இயம்பின மொழிகுன் றாவே.

51. புதனிருக்கும் இடத்துக்கு ஐந்தாமிடத்தில் கேது இருப்பதாலும், அதற்கு ஐந்தில் சந்திரன் இருப்பதாலும், புதையல் கிடைக்கும் என்று சொல்லுவோம். அந்த இடம் காலி பூமி என்றோம். அதுவும் இவனது வீட்டுக்கு அடுத்த மனையாகும். இந்திரனால் தோத்தரிக்கப்படும் தேவியே ! கூறிய வார்த்தைகள் தவறா.

## ஜாதகம் 93

1. கலைகுசன் வீணை யாகக் காரியு மேட மாக
மலைகயிறு புகரு நண்டு மால்குரு கன்னி யாக
நலமுள விரவி சீயம் நற்சிகி மான தாக
உலவிய ஜன்மம் வீணை உரைப்பீர்கள் பலனைத் தானே.

1. சந்திரன் செவ்வாய் மிதுனத்திலும், சனி மேஷத்திலும், ராகு சுக்கிரன் கடகத்திலும், புதன் குரு கன்னியிலும், சூரியன் சிம்மத்திலும், கேது மகரத்திலும், இலக்கினம் மிதுனமாகவும் இருப்பின், பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | லக்கினம் சந்திரன் செவ்வாய் |
| | இராசி சக்கரம் | | ராகு சுக்கிரன் |
| கேது | | | சூரியன் |
| | | | புதன் குரு |

2. அத்திரி சொல்லு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னுதித்த வில்லம் விளம்புவோங் கீழ்மேல் வீதி
உத்தர வாடை யாகும் ஓடையும் மேற்கில் தங்கும்
பத்திர காளி தென்மேல் பகருவோஞ் சிற்றூர் தன்னில் ;

2. அத்திரி முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் பிறப்பாகும். ஜாதகன் பிறந்த வீட்டைச் சொல்லுகின்றோம். அது கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு வரிசையில் உள்ளது. மேற்கில் கால்வாயும், தென்மேற்கில் காளி கோயிலும் உள்ள சிற்றூரில் ;

3. உதிப்பனுங் கூரை யில்லம் உரைக்கின்றேந் தந்தை யோகம்
மதிநுத லன்னை யோக மவன்துணை களத்ர புத்ரர்
சதியிலா முன்பின் ஜன்மஞ் சாற்றுவோ மிந்நூல் தன்னில்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

3. கூரை வீட்டில் பிறந்தான். ஜாதகனுடைய தந்தையின் யோகம், சந்திரனை யொத்த முகத்தையுடைய தாயின் யோகம், சகோதரர் மனைவி புத்திபர், தீங்கில்லாத முற்பிறப்பு மறு பிறப்பு இவைகளை இந்த ஜோதிட நூலில் கூறுகின்றோம். அதிதிகளை ஆதரிக்கும் அம்பிகையே! கேளாய்.

4. தந்தையின் துணைவர் பத்தில் ஆணைந்து பெண்ணுமவ் வாறு
நொந்திடுஞ் சிலவே யென்றோம் நுவலுவோம் பிதாகு ணத்தைச்
சந்தத மிருநி றத்தான் சன்மார்க்கன் வறுமை காணான்
விந்தையாய்க் கிருகஞ் செய்வன் வீணவம்பில் செல்லானென்றோம்.

4. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர் பத்துப் பேர்களில் ஆண்கள் ஐவர், பெண்கள் ஐவராகும். அவர்களில் சிலர் நிலையார் என்றோம். தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். இரு நிறமுடையவன். நல்வழிப்படி நடப்பவன். வறுமை யடையாதவன். அழகிய வீடு கட்டுவான். வீண் வம்புக்குச் செல்லாதவன் என்றோம்.

5. புத்திமான் பொறுமை சாலி புண்ணிய மனத்த னாகும்
எத்திசைப் புகழு மேற்பன் இளமன முடைய னாகும்
பத்தினி மூன்று மாகும் பரவுப கார னவன்
குற்றமா மாதா ரண்டு குலத்துளோர் மதிக்க வாழ்வன்.

5. புத்திசாலி. பொறுமையுள்ளவன். புண்ணிய மனத்தன். எல்லாத் திசையிலும் கீர்த்தியைப் பெறுவான். இளகிய மனமுள்ளவன். மூன்று மனைவியரை உடையவன். பிறருக்கு உபகாரி. இரு தாய்மார்கள் நிலையார். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான்.

6. * இந்நெறி யுடையா னுக்கு இருதார மிளையா ளுக்கு
அன்னவ னுதிப்பா னாகும் அவன்துணை யாண்பால் காணான்
கன்னிகை யொன்று வென்றோம் காலன்றன் பதிக்குச் செல்வள்
தன்னமே தனிய னவன் தந்தையில் சிலநாள் வாசம்
அன்னிய தேசந் தன்னில் அரசரால் சீவிப் பானும்.

6. இங்ஙனம் கூறப்பட்டவனது இளைய மனைவிக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுக்குச் சகோதரரில்லை. சகோதரி யொருத்தியுண்டு என்றோம். அவளும் இடையில் இறந்து விடுவாள். ஜாதகன் தனியனாக இருப்பான். தன் தந்தையின் வீட்டில் சில காலம் வசித்து வருவான். வேறு தேசத்தில் அரசாங்க உத்தியோகம் பெற்று ஜீவனம் நடத்துவான்.

7. வித்தையு மிரண்டு கற்பன் விவேகியாம் ஊகை சாலி
பத்தினி நேய னவன் பலபாவை மோக முள்ளான்
கத்திரி யோக முள்ளான் கட்டுவார்த் தைகளுஞ் சொல்லான்
குற்றமாந் தந்தை யாஸ்தி குறைமன மாக வாழ்வன்.

7. இரு விதமான கல்வி கற்றுணர்வான். விவேக முள்ளவன். ஊக முள்ளவன். மனைவிக்குப் பிரியனவன். பல பெண்கள்மீது மையல் கொள்வான். கத்தரியோகம் உடையவனவன். வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன். தன் தந்தையின் ஆஸ்தி யில்லாதவன். மனத்தில் குறைகளுடன் வாழ்ந்து வருவான்.

* இப்பாடலில் ஒரு வரி மிகுந்துளது.

8. அன்னிய தேசந் தன்னில் அவனுமே சிலநாள் வாசம்
மன்னர்பால் சிலநாள் வாசம் மடிவுண்டு தொழிலுக் கேதான்
அன்னையும் கேட்க லுற்றாள் அவன்செல்லுங் காலஞ் சொல்வீர்
தன்னிலே யிருபான் ரண்டு மேலேதான் வடகீழ் தன்னில் ;

8. அன்னிய தேசத்தில் ஜாதகன் சில காலம் வசித்து வருவான். அரசாங்க உத்தியோகம் ஏற்றுச் சில நாள் இருப்பான். கைத்தொழில் அழிந்துவிடும். பார்வதி கேட்கலானாள். ஜாதகன் வெளி தேசம் செல்லும் காலத்தைச் சொல்லுங்கள். இருபத்திரண்டாம் வயதிற்குமேல் வடகிழக்குத் திக்கிலுள்ள வெளிதேசத்தில் ;

9. செல்லுவா னரசு செய்வன் சிலவேநாள் செய்து நீங்கும்
வல்லியாய்பிமா னப்பெண் வந்திடுஞ் சிலவே காலம்
நல்லவ ளாகி வாழ்ந்து நல்குவாள் வேறி டத்தில்
புல்லிய புத்தி யாலே பூமியி லவமா னங்கள் ;

9. சில காலம் சென்று ஆதிக்கம் செய்வான். கொஞ்ச காலம் கழிந்த பிறகு அது விலகிவிடும். சில காலத்துக்கு ஓர் அபிமான மனைவி வந்து சேருவாள். அவள் நல்லவளாக வாழ்ந்து வந்து, வேறிடத்தில் சென்று, அற்ப புத்தியால் பூமியில் அவமானங்களை ;

10. நேரிடு மென்று சொல்வோம் நிமலியுங் கேட்க லுற்றாள்
நாரியு மபிமா னப்பெண் நல்குங்கா லங்கள் சொல்வீர்
தீரமா வாறு ரண்டின் மேலேதான் சேரு மென்றோம்
கூறுவோம் பின்பா கத்தில் குமரியின் சேதி யாவும்.

10. அடைந்து விடுவாள் என்று சொல்லுவோம். பார்வதியும் கேட்கலானாள். அபிமான மனைவி வருங் காலத்தைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதிற்கு மேல் அவள் வருவாள். பிற்பாகத்தில் அப்பெண் விஷயங்கள் யாவற்றையும் சொல்லுகின்றோம்.

11. துணைவர்கள் தோடஞ் சொன்னீர் செப்புவீர் விவர மாகக்
கனமுள மூன்றில் பானு கலந்ததால் துணைவர் தோடம்
அணையவே யிரண்டில் ராகு அடைந்ததா லாண்டுக் குள்ளே
வினையாக வன்னை கண்ட மேவிடும் வேறு மாதா.

11. ஜாதகனுக்குச் சகோதர தோஷம் உண்டு என்று சொன்னீர்களே. அந்த விபரத்தை விபரமாகச் சொல்லுங்கள். மூன்றுமிடத்தில் சூரியன் இருப்பதால் ஜாதகனுக்கு சகோதர தோஷம் ஏற்பட்டது. இரண்டாம் வீட்டில் ராகு இருப்பதால் ஒரு வருஷத்துக்குள்ளாகவே தாய் மரண மடைந்து, மறு தாய் வருவாள்.

12. பின்மாதா வொருத்தி யென்றீர் பேசுவீ ரவட்குப் புத்ரர்
தன்னிலே தோன்றித் தீதாஞ் செப்பின முதல்மா துக்கு
மன்னிய சுதர்க ளுண்டோ வரையவே மாட்டோ மம்மா
உன்னத வரனைப் பெற்ற உத்தமி மேலுங் கேளே.

12. மறு மாதா ஒருத்தி உண்டு எனச் சொன்னீர்களே ! அவளுக்குப் புத்திரர் உண்டோ ! சொல்லுங்கள். பிறந்து நிலையாமல் போம். ஜாதக னுடைய மூத்த தாய்க்குப் புத்திரர்கள் உண்டோ ! உண்டு என்று சொல்லவே மாட்டோம், தாயே ! உயர்ந்த கணவனை யடைந்த உத்தமியே ! கேளுங்கள்.

13. இன்னவன் மணத்தின் காலம் எழுமூன்று வாண்டு தன்னில்
கன்னிகை வடகீழ் தன்னில் கலப்பளாந் துணைவி புத்திரி
அன்னவள் குணத்தைச் சொல்வோ மவள்வரன் மனம்போல் [வாழ்வள்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பாள் மால்நி றத்தாள்.

13. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். இருபத் தோராம் வயதில் வட கிழக்குத் திக்கிலிருந்து சகோதரியின் புத்திரி மனைவி யாக வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். தன் கணவன் மனம்போல் வாழ்ந்து வருவாள். தன் வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பாள். கரிய நிறமுள்ளவள்.

14. புத்திமா னுளைச்சல் தேகி பித்ததே கத்தா ளாகும்
சித்தினி சாதி யாவாள் செப்புமுன் கோபி யாவாள்
நத்தினோர்க் குதவி செய்வள் நலமுட னுரைக்க வல்லாள்
வித்தகி துணைவர் தம்மை விளம்புவோ மிருநான் காகும்.

14. புத்திசாலி. மெல்லிய சரீரமுடையவள். பித்தசரீர முடையவள். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவள். கூறுவதற்கு முன் கோபம் கொள்வாள். தன்னை வந்தடைந்தவர்கட்கு உதவி செய்வாள். நன்மையுள்ள வார்த்தை களையே பேசுபவள். அவளுடைய உடன் பிறந்தவர்களைப்பற்றிச் சொல்லு வோம் அவர் எட்டு பேராகும்.

15. கன்னிகை யொன்று தீர்க்கங் காளையு மவ்வா ருகும்
பின்னமா மற்ற வெல்லாம் பேதையில் கடல்போ லென்றோம்
அன்னவள் வந்த பின்பு அலைச்சலாம் வரனுக் கேதான்
பொன்பணி பூமி யில்லம் போகிடு மென்று சொல்வோம்.

15. ஒரு சகோதரியும் ஒரு சகோதரனும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர் கள். மற்றவரெல்லாம் நிலையார். அவளுடைய வீடு கடல்போல் மிகப்பெரிய தாகும். ஜாதகனுக்கு அவள் வந்த பிறகு துன்பங்கள் அதிகமாகும். பொன் ஆபரணங்கள் பூமி வீடு இவைகள் போய்விடும் என்று சொல்லுவோம்.

16. மற்றவை சேதி யாவு மறைகின்றோம் பின்பா கத்தில்
புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் பெண்பால் நான்கு
சித்தச னொப்ப தாகச் சேயனு மொருவன் தீர்க்கம்
வெற்றியா யந்தி யத்தில் விளங்கிடு சுதராண் தானே.

16. மற்றச் செய்திகள் யாவற்றையும் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய புத்திர விருத்தியைச் சொல்லுகின்றோம். நான்கு பெண் களும் மன்மதனையொத்த புத்திரன் ஒருவனும் பிறந்து நீண்ட ஆயுளுள்ள வர்கள். கடைசியில் புத்திரன் ஒருவனே சிறப்புடன் விளங்குவான்.

17. நாலைந்து சேத மெய்தும் நவிலுவார் பராசர் தாமும்
பாலராண் முன்னால் காணன் பலன்றனைச் சொல்லு மென்னச்
சாலவே வைந்தோ னோடு சர்ப்பமுங் கூடி ரண்டில்
கோலமா விருப்ப தாலே குழவியாண் காணு தென்றோம்.

17. நான்கு ஐந்து சேதமடையும். பராச முனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்குப் புத்திரர் முதலில் தோன்றாத காரணங்கள் என்னவென்று சொல்லுங்கள். ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரனுடன் ராகு கூடி இரண்டாமிடத்தில் இருப்பதால் ஆண் குழந்தை பிறவாது என்று சொன்னோம்.

18. இதுவன்றிப் பூர்வந் தன்னில் இவன்சில கொடுமை செய்தான்
அதுதனைச் சொல்லு மென்ன அருணைக்கு மேற்பா லாகச்
சதியிலாப் பேரூர் தன்னில் ஜனித்தனன் ரெட்டி வம்சம்
நிதிமிக வுடையா னாகி நேமிக ளதிக முண்டாய் ;

18. இதுவுமல்லாமல் முற்பிறவியில் ஜாதகன் சில தீங்குகள் செய்தான். அவைகள் என்னவென்று சொல்லுங்கள். திருவண்ணாமலைக்கு மேற்கில் உள்ள பெரிய ஊரில், ரெட்டியார் மறபில் பிறந்து, செல்வங்கள் அதிகமுடையவனாகி, பூமிகளை அதிகம் பெற்று ;

19. புத்திரர் மனைவி யுண்டாய்ப் பெரிதான குடும்பி யாகி
வித்தகன் வாழு நாளில் விளம்புவோ மூழி தானும்
வித்தையை யோதி வைத்த வாத்தியின் மகள்மேல் மோகம்
குற்றமாய் மோகங் கொண்டு கோதைமேல் சிலேடை சொல்ல ;

19. புத்திரர்கள் மனைவி இவர்களையடைந்து, பெரிய குடும்பியாகி வாழ்ந்து வருங் காலத்தில், ஏற்பட்ட தீவினையைச்சொல்லுகின்றோம். தனக்கு வித்தையைக் கற்பித்த உபாத்தியாயரின் மகள்மீது மையல்கொண்டு அவளிடம் இரு பொருள்படும்படியாகப் பேச ;

20. அதற்கவ ளிசையா ளாகி அருளுவாள் வார்த்தை தானும்
விதவிதக் கல்வி சொன்ன வாத்தியின் மகளாந் தங்கை
சதியான மோகம் வேண்டாஞ் சார்ந்திடும் நரகந் தானும்
இதுவித மாது சொல்ல இதுசெவிக் கேறா தாகி ;

20. அப் பெண் அதற்கிணங்காமல் கூறுகின்றாள். விதவிதமானப் பாடங்கள் கற்பித்த உபாத்தியாயரின் மகளாகிய நான் உனக்குத் தங்கையாவேன். என்மீது மோகம் கொள்ளாதே. உனக்கு நரகம் கிட்டும் என்று பெண் கூறியதைச் செவி சாய்க்காமல் ;

### குருவின் பெண்ணைப் புணர்ந்த தோடம்

21. பலவந்த போகந் துய்த்தான் பகருவாள் மாது தானும்
குலவிய மறுஜன் மத்தில் குதித்தவில் விட்டு நீங்கும்
நலமிலா வபிமா னப்பெண் நல்கியவ மான முண்டாய்
உலகினில் தந்தை யாஸ்தி உதவாது போகு மேலும் ;

**21.** பலவந்தமாக இன்பம் அனுபவித்தான். அப்பெண்ணும் கூறு கின்றாள். உனக்கு ஏற்படும் அடுத்த பிறவியில், நீ, பிறந்த வீட்டை விட்டு வாய். உனக்கு அபிமானப் பெண் ஒருத்தி ஏற்பட்டு, அவளால் அவமான மடைந்து, உலகில் தந்தையின் ஆஸ்தி கிட்டாமல் போகும். மேலும் ;

**22.** துணைவர்க ளில்லா னாகிச் சுதராண்கள் தோட மெய்தி
வினைமன மாக வாழ்வாய் விளம்பியே சென்று ளென்றோம்
பிணையாக வந்தத் தோடம் புக்கிற்று விவனுக் கேதான்
தனயனு மந்தி யத்தில் சலமூல வியாதி யாலே ;

**22.** உடன் பிறந்தவர்களில்லாதவனாகி, புத்திர தோஷத்தைப் பெற்று, சங்கடப்படும் மனத்துடன் வாழ்வாய் என்று சொல்லிச் சென்றாள். அந்தத் தோஷம் தீவினையாக இவனை யடைந்தது. ஜாதகனும் முற்பிறவியின் இறுதியில் மூலவியாதியாலும் நீர் உபத்திரவத்தாலும் ;

**நரகம் புகல்**

**23.** அந்தகன் பக்கல் சென்று அருநர கதனில் புக்கு
முந்துமா லருளி னாலே முயன்றன னிந்தப் பாலன்
எந்தையே வாத்தி புத்ரி எய்தின சாபம் போலச்
சந்ததம் துன்பம் நேருந் தன்றுணை காணு னாகும்.

**23.** மரணமடைந்து, நரகத்தையடைந்து, திருமாலின் அருளால் இப் பிறவியில் பிறந்தான். தாயே ! உபாத்தியாயரின் புத்திரியின் சாபத்தைப் போல் துன்பம் நேரும். உடன் பிறந்தவர்களில்லாதவனாவான்.

**24.** ஆதியில் தாயில் லின்றி அன்னியர் புசிப்பு முண்டாய்
மேதினி லலைச்ச லாகி வீணப வாதம் பெற்று
நீதியாய் பந்து வேச நிமலியால் நிந்தை யுண்டாய்ச்
சூதினால் யாவுந் தோற்றுத் தோழிபா லணுகி வாழ்வான்.

**24.** முதலில், தாயின் வீட்டிலில்லாமல், பிறரால் வளர்க்கப்பட்டு, அலைச்சலையும் அபவாதங்களையும் பெற்று, பந்துக்களால் ஏசப்பட்டு, பழிகளையடைந்து, சூதாட்டத்தில் எல்லாவற்றையும் இழந்து, தன் மனைவி யினிடம் சென்று வாழ்ந்து வருவான்.

**25.** எந்தக்கா லத்தி லேதான் இவ்வினை நடக்குஞ் சொல்வீர்
வந்தவன் ஜனனந் தொட்டு வாறெட்டு வாண்டு மட்டும்
முந்திசொல் வினைபோல் நேரு மொழிந்தவாண் டதனின் மேலாய்
இந்திரன் போல வாண்பால் எய்திடுஞ் சுகமுண் டாகும்.

**25.** ஜாதகனுக்கு எந்தக் காலத்தில் இவ்வினை நடக்கும் என்று சொல் வீர். ஜாதகனுடைய பிறப்பு முதல் நாற்பத்தெட்டாம் வயது வரையில் முற்கூறிய வினைபோல் நடைபெறும். கூறிய வயதுக்குமேல் இந்திரன் போல் புத்திரன் தோன்றிச் சுகமுண்டாகும்.

**26.** பிறந்தபா லன்றனைப் போற்றிப் பேணுவான் வேட்ட கத்தில்
உறைந்திடும் வேறு வில்லம் உயர்வான பூமி சேரும்
நிறையவே குடும்பி யாவான் நிறைவண்டி பணைவர் விருத்தி
பிறந்திடு மதலை யாலே போகபாக் கியங்க ளெய்தும்.

**26.** ஜாதகன் தன் வேட்டகத்தில் பிறந்த குழந்தையை வளர்த்து வருவான். வேறு வீடு ஒன்று கிடைக்கும். உயர்வுள்ள பூமி சேரும். செழிப்புள்ள குடும்பமுள்ளவன். வண்டி பண்ணை ஏர் முதலியன விருத்தி யாகும். பிறந்த குழந்தையால் போக பாக்கியங்கள் கிட்டும்.

### வேறு

**27.** சுதர்களு மனைவி துணைவன்சேய் நாகத்
தெய்வத்தால் தன்சுதர் விருத்தி
பதியது சித்திர மில்லமுஞ் செய்வன்
பந்துக்கள் மெச்சவும் வாழ்வன்
நிதிகடன் கொள்ளான் தந்தையின் மேலாய்
நேமியில் வாழ்வா னென் றுரைப்போம்
விதவிதச் செட்டுச் செய்குவன் தெய்வ
மேல்பக்தி கொள்வானென் றுரைப்போம்.

**27.** புத்திரர்களும், மைத்துனன் செய்யும் ஸர்ப்பதெய்வத்தின் அருளால் விருத்தியாகும். அழகிய வீடு கட்டுவான். உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்வான். பணக் கடன் வாங்காதவன். தன் தந்தைக்குமேலாக உலகில் வாழ்ந்து வருவான் என்று சொல்வோம். பற்பல வியாபாரம் செய்வான். தெய்வ பக்தியுள்ளவன் என்று சொல்வோம்.

**28.** மாதுரு குணத்தைக் கூறுவோஞ் சுகமாய்
வார்த்தையு மாநிறந்தேகி
தீதுகள் ஒருவருக் கெண்ணுத வளாகும்
செல்வியி னில்லமீ சானியம்
போதவே துணைவர் பிறந்து சேதமுமாம்
பிறர்பழி சொல்லாதவ ளாகும்
மேதினில் தரும குணமுடை யவளாம்
விளம்புவோம் பூருவந் தன்னை.

**28.** ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றோம். சுகமாகப் பேசுபவள். மாநிறம் உள்ளவள். ஒருவருக்கும் தீங்கிழைக்க மனத்தில் நினையாதவள். அவளுடைய வீடு வட கிழக்கில் உள்ளது. உடன்பிறந்தவர் பிறந்து நிலையார். பிறர்மீது குற்றம் கூறுதவள். உலகில் தர்மகுண முடையவள். அவளுடைய முற்பிறவியைச் சொல்லுவோம்.

### வேறு

**29.** பெண்ணையாம் நதிக்குத் தெற்கில் பேரூரில் ரெட்டி வம்சம்
வண்ணமா யுதித்து மேலும் மைந்தர்க ளதிக முண்டாய்க்
கண்ணன்மேல் பக்தி கொண்டு காலன்தன் பதிக்குச் சென்று
திண்ணமா யிக்கு லத்தில் ஜனித்தவ ளென்று சொன்னோம்.

29. பெண்ணை யாற்றுக்குத் தெற்கில் உள்ள பெரிய ஊரில், ரெட்டியார் மரபில் பிறந்து, புத்திரர்களதிகமடைந்து, கண்ணபிரான்மீது பக்தியுடன் வாழ்ந்து, மரணமடைந்து, இக்குலத்தில் பிறந்தாள் என்று சொல்லு கின்றோம்.

30. பிறந்ததோ ராண்டு தன்னில் போகுவான் காலன் பக்கல்
மறுஜன்ம மருணை கீழ்ப்பால் வைசியக் குலமு தித்துப்
பொருள்பணி யதிக முண்டாய்ப் பூமியில் வாழ்வா ளாகும்
அறந்தனை வளர்க்கு மெங்க ளாத்துமத் தாயே கேளாய்.

30. ஜாதகன் பிறந்த வருடத்திலேயே அவள் மரணமடைவாள். மறு பிறவி திருவண்ணாமலைக்குக் கிழக்கில், வைசிய குலத்தில் பிறந்து, பொருள் ஆபரணங்கள் இவைகளையடைந்து, உலகில் வாழ்ந்து வருவாள். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

31. தந்தையின் பூர்வஞ் சொல்வோஞ் சேரநா டதனி லேதான்
வந்தனன் வைச்யச் சேயாய் மாநிலஞ் செட்டுச் செய்து
சிந்தையில் வறுமை யின்றிச் சிறப்பான குடும்பி யாகிச்
சந்ததம் வாழு நாளில் சாற்றுவோ மூழி தானே.

31. ஜாதகனுடைய தந்தையின் முற் பிறவியைச் சொல்லுகின்றோம். சேர நாட்டில் வைசிய குலத்தவனாகப் பிறந்து, உலகில் விவசாயம் செய்து வந்து, வறுமைகளடையாமல், சிறப்புள்ள குடும்பத்தையடைந்து, வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

32. மறையவன் மணத்துக் காக மணமது முடிக்க வேண்டித்
தருகுவாய்ப் பொருளை யென்னத் தான்முறி தீட்டிக் கொண்டு
மருமமாய்ப் பொருளை யீந்து மறுவாண்டில் கேட்கும் போது
தரசக்தி யில்லை யென்னச் சாற்றினு னரசர் பக்கல்.

32. ஓர் அந்தணன் திருமணம் செய்ய எண்ணி, ஒரு பத்திரம் எழுதிக் கொண்டு, ஜாதகனிடம் சென்று பொருளைக் கடனாகக் கொடு என்று கேட்டான். ஜாதகன் அம்மாதிரியே பணத்தைக்கொடுத்து ஒரு வருடம் கழித்து, பணத்தைக் கேட்கும்போது, அந்தணன், தருவதற்குச் சக்தியில்லை என்று கூறினன். ஜாதகன் அதிகாரியிடம் சென்று முறையிட்டான்.

### கடனைக்கொடுத்து அந்தணன் சொத்தைக் கொள்ளல்

33. அதிகாரி முறியைப் பார்த்து அந்தணன் றனையழைத்து
நிதிதரச் சொல்லு மென்ன நேராது விந்தக் காலம்
சதியாகத் தீர்ப்புச் செய்தான் சதுர்மறை யில்லம் பூமி
இதுகளைப் பொருளுக் காக ஈடாகச் செய்து கொண்டான்.

33. அவ்வதிகாரியும், பத்திரத்தைப் பார்த்து, அந்தணனை யழைத்து பணத்தைக் கொடுத்துவிடச் சொல்லியும், அந்தணன் அக் காலத்தில் முடியாது என்றான். அதிகாரி, அந்தணனுக்கு எதிராகத் தீர்ப்பளித்தான். ஜாதகன் அந்தணனுடைய வீடு பூமி இவைகளைத் தன் பொருளுக்காக ஈடுசெய்து கொண்டான்.

34. வேதியன் மனவெ றுப்பால் விளம்புவான் சாபந் தானும்
கோதிலா மறுஜன் மத்தில் கொண்டிடு மனைகள் மாண்டும்
திதாகுங் குடும்பந் தானுஞ் செப்பினர் மறையோர் தாமும்
மேதினி லந்தத் தோட மேவிற்று மிவனுக் கேதான்.

34. அந்தணனும், மனத்தில் துயரமுற்றுச் சாபமிடுகின்றான். மறு பிறவியில் கட்டிய மனைவியும் இறந்து குடும்பம் கெட்டுவிடும். அந்தணருடைய தோஷம் இவனுக்கு ஏற்பட்டது.

35. காலன்தன் பதிக்குப் புக்கிக் கஞ்சனல் வரையப் பட்டு
ஞாலமே லிக்கு லத்தில் நல்கின னிந்தப் பாலன்
சீலமா மறைசா பம்போல் தேவிகள் மூன்று மாகும்
சாலவே விருபா றறில் சண்டன்தன் பதிக்குச் செல்வன்.

35. மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, உலகில் இக் குலத்தில் பிறந்தான், இந்த ஜாதகன். நல்லொழுக்கமுள்ள அந்தணர் சாபம்போல மூன்று மனைவியர் ஏற்படுவர். அவர், ஜாதகனுடைய இருபத்தாறும் வயதில் மரணமடைவர்.

36. மறுஜன்மங் காஞ்சி தன்னில் வைசிய குலமு திப்பான்
பெருமையாய்ச் செட்டுச் செய்து புகழுண்டாய் வாழ்வா னுகும்
திருமனை பூர்வஞ் சொல்வோஞ் சீகாழி தன்னி லேதான்
மருமமில் லாத வன்ய மரபினி லுதித்தா ளென்றோம்.

36. மறு பிறவியில் காஞ்சிபுரத்தில் வைசிய குலத்தில் பிறப்பான். பெருமையாக வர்த்தகம் செய்துவந்து கீர்த்தியடைந்து வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய மனைவியின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சீகாழியில் இரகசியமில்லாத வன்னிய குலத்தில் பிறந்து வந்தாள் என்றோம்.

37. சுதர்களு மதிக முண்டாய்த் தொல்புவி வறுமை யின்றி
அதிபதி யந்தி யத்தில் ஆனையின் கோட்டத் துக்கு
நிதமுமே தீப மிட்டு நிமலியும் வாழ்ந்தா ளென்றோம்
சதிசெய்யுங் காலன் பக்கல் சார்ந்தனள் வரனமுன் னேதான்.

37. புத்திரர்களை அதிகமாக அடைந்து, உலகில் வறுமையின்றி, தன் கடைசிக் காலத்தில் விநாயகர் ஆலயத்துக்குத் தினந்தோறும் தீப கைங்கரியம் செய்து வாழ்ந்து வந்தாள் என்று சொல்லுவோம். தன் கணவனுக்கு முன்பாகவே மரணமடைந்தாள்.

38. வேதனல் வரையப் பட்டு விளங்கின ளிந்த மாது
போதக வரனைக் கோட்டம் பொருந்தின தீப புண்யம்
நீதியா யந்தி யத்தில் நேர்ந்திடுஞ் சுதரா னென்று
மேதினில் தீர்க்க மெய்தும் விளம்புவோ மிவள்பின் ஜன்மம்.

38. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தாள், இப் பெண். விநாயகரின் ஆலயத்தில் தீபம் வைத்த புண்ணியத்தால் தன் கடைசிக் காலத்தில் ஒரு புத்திரனை யடைவாள். அப்புத்திரன் நீண்ட ஆயுளுள்ளவன். அவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

## இரு மனைவியர் ஏற்படுதற்குரிய கிரக நிலை

39. உத்தரம் வள்ளூர் தன்னில் உதிப்பளாம் வைச்யச் சேயாய்ச
சித்திர பணிக ளுண்டாய்த் தேவியும் வாழ்வா ளாகும்
அத்திரி சொல்லு கின்றார் அரவுடன் புகருங் கூட
பத்தினி யிரண்டு வென்றேம் பராசருங் கூறு கின்றார்.

39. வடக்குத் திக்கில் உள்ள திருவள்ளூரில் வைசிய குலத்தவளாகப் பிறந்து, அழகிய ஆபரணங்களையடைந்து வாழ்ந்து வருவாள் என்றேம். அத்திரி முனிவர் கூறுகின்றார். சுக்கிரன் ராகுவுடன் கூடி இருப்பதால் இரு மனைவியர்களை என்றேம். பராசர முனிவர் சொல்லுகின்றார்.

40. குருவேழா மிடத்தோ னாகி வீரியன் தனனோ டுற்றுப்
பெருமையாய் நான்கில் நிற்கப் பேசொணா வந்தச் சங்கை
வருமனை யொன்றே தீர்க்க மாரன்பின் மரண மெய்தும்
தவறுத லில்லை யென்றேஞ் ஜனித்தவன் யோகங் கேளாய்.

40. குரு ஏழாமிடத்துக்குரியவனாகிப் புதனுடன் சேர்ந்து நான்காமிடத்தில் இருப்பதால் அந்தத் தோஷம் சொல்லுவதற்கில்லை. மனைவி யொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். அவள் ஜாதகனுக்குப்பின் மரணமடைவாள். தவறு இல்லை என்று சொல்லுவோம். ஜாதகனுடைய யோகத்தைக் கேளுங்கள்.

41. அன்பது வாண்டு மட்டும் ஆலையில் கரும்பு போலத்
துன்பமாங் கத்ரி யோகஞ் சுற்றத்தார் பழிப்பு முண்டு
பின்புமே மரண மட்டும் பேசுவோந் தந்தை போல
இன்பமும் பூமி யாலு மியல்பலச் செட்டி னாலும் ;

41. ஜாதகன், ஐம்பது வயதுவரையில், ஆலையிலுள்ள இரும்புபோல் துன்பமடைவான். கத்ரியோகம் உண்டு. உறவினர்களால் அவமானம் ஏற்படும். பிறகு மரணகாலம் வரையில் தன்னுடைய தந்தையைப்போல் இன்பமும், பூமியினால் பற்பல வர்த்தகங்களும் ஓங்கி ;

42. வரும்லாபம் வறுமை காணன் மனைவியி னகரஞ் சேர்ந்து
பெரிதான குடும்பி யாவன் பிதுராஸ்தி விருத்தி யில்லான்
கரியவன் தசையி நான்காம் பாதமுதல் சுகமே யுண்டாம்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

42. லாபம் ஏற்படும். வறுமையடையான். தன் மனைவியின் நகரம் சேர்ந்து (வேட்டகத்தில்) பெரும் குடும்பத்தை யடைந்து, தந்தையின் ஆஸ்தி யில்லாதவனாக வாழ்ந்து, சனிமகாதசையின் நான்காம் பாதம் முதல் சௌக்கியத்தையடைந்து வாழ்வான். விநாயகனைப் பெற்ற புண்ணிய வதியே! கேளுங்கள்.

43. அறுபது வெட்டு வாண்டில் ஆனிமா தத்தி லேதான்
திருமகன் தனக்குக் கண்டஞ் ஜயமுனி கூறு கின்றார்
கரியவ னெட்டோ னாகிக் கனலாப நீச்ச மாக
மறைதனில் நான்காஞ் சக்ரம் வருவதால் கண்ட மென்றேம்.

**43.** அறுபத்தெட்டாம் வயதில் ஆனி மாதத்தில் ஜாதகனுக்குக் கண்டம் உண்டு. ஜயமுனிவர் கூறுகின்றார். சனி எட்டாம் வீட்டுக்குரியவனாகி லாபஸ்தானத்தில் நீச்சமாக இருப்பதால் நான்காம் தசையாக வருவதால் கண்டம் உண்டு என்றோம்.

**வேறு**

**44.** புந்தியின் தசையில் பொன்னவன் புத்தி
பொருந்திடு காலங்கள் தன்னில்
அன்னவன் தனக்குக் கண்டமென் றுரைத்தோம்
அதற்குமுன் மாரகங் காணன்
பின்ஜன்ம முத்தரம் வேங்கடந் தன்னில்
பிறப்பனும் ரெட்டியின் குலத்தில்
பொன்பணி யுண்டாய் வறுமைக ளின்றிப்
பூமியில் வாழ்வானென் றுரைப்போம்.

**44.** புதமகாதசையில் குருபுக்தியில் ஜாதகனுக்கு மரணம் ஏற்படும் என்று சொன்னோம். அதற்குமுன் மரணமடையமாட்டான். மறு பிறவில் திருப்பதியில் ரெட்டியார் குலத்தில் பிறப்பான். பொன் ஆபரணங்கள் உண்டாகி, வறுமைகளில்லாமல் வாழ்ந்து வருவான் என்று சொல்வோம்.

**வேறு**

**45.** ஜனித்திடு காலந் தன்னில் சேய்தசை தனிலி ருப்பு
குனித்திடு வாண்டு ரண்டுங் கூறுவோந் திங்களவ் வாறு
வினையுண்டு சாதகர்க்கு மிக்கதாய்க் கண்ட நேரும்
கனமுடன் பின்பா கத்தில் கழறுவோந் தாயே யாங்கள்.

**45.** ஜாதகன் பிறக்கும் காலத்தில் செவ்வாய்மகாதசையில் இருப்பு இரு வருடங்களும் இரு மாதங்களுமாகும். ஜாதகனுக்குத் தீங்குண்டாகும். கண்டம் நேரும். பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம். தாயே! நாங்கள்.

# ஜாதகம் 94

1. சந்திரன் மகரஞ் சனியுமே மேடஞ்
சல்லியன் குசனுமே சீயம்
புந்தியு மிரவி கடகமா ஞானி
பொருந்திட நந்தியே யாக
மன்னனும் வீணை ராகுவுந் தேளில்
மிதுனமுஞ் ஜன்மமே யாக
இவ்வாறு கோள்க ளிருக்கில் பலன்கள்
இயம்புவீர் முனிவரே யென்முள்.

1. சந்திரன் மகரத்திலும், சனி மேஷத்திலும், சுக்கிரன் செவ்வாய் சிம்மத்திலும், புதன் சூரியன் கடகத்திலும், கேது விருஷபத்திலும், குரு மிதுனத்திலும், ராகு விருச்சிகத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருப்பின், பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | கேது | குரு இலக்கினம் |
| | இராசி சக்கரம் | | புதன் சூரியன் |
| சந்திரன் | | | சுக்கிரன் செவ்வாய் |
| | ராகு | | |

2. அத்திரி சொல்வா ராணது ஜன்மம்
அறையுமில் கிழக்குமேல் வீதி
பத்திய தெற்கு வாசலாஞ் சந்து
பகருவோ மருகினில் தங்கும்
சத்திமா காளி தங்கிடுங் கீழ்ப்பால்
தந்தியுங் கோட்டமுந் தென்மேல்
வித்தகி மாரி யருகினில் தெற்கில்
விளங்கிடுஞ் சத்திமத் தியத்தில்.

2. அத்திரி முனிவர் கூறுகின்முர். இஃது ஆண் குழந்தையின் ஜாதகம். பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது. அருகில் சந்து ஒன்று உண்டு. கிழக்குத் திக்கில் காளிகோயில் இருக்கும். தென் மேற்குத் திக்கில் விநாயகரின் ஆலயமும் தெற்குப் பக்கத்தில் அருகில் மாரியம்மன் கோயிலும் இருக்கும். அம்மன் கோயில் மத்தியில் இருக்கும்.

3. சொன்னவிவ் வடையா ளத்துள் சுதனுமே
தோன்றுவா திருதிய ஜன்மம்
சின்னவூ ரென்றேந் தந்தைதாய் துணைவர்
சுதர்தோகை முன்பின் ஜன்மம்
இன்னவன் யோக மியம்புவோந் தாயே
இவன்தந்தை துணையா ணென்று
பின்னவ னென்று பேசுவோம் யாமே
பேசுவோ மவன்குணந் தன்னே.

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள இடத்தில் ஜாதகன் தன் தந்தைக்கு மூன்றும் பிறவியாகப் பிறப்பான் என்று சொல்லுகின்றேம். அஃது ஓர் சிறிய ஊர். ஜாதகனுடைய தாய் தந்தையர் புத்திரர் மனைவி முற்பிறவி மறுபிறவி இவர்களுடைய யோகம் முதலியவற்றைக் கூறுகின்றேம். ஜாதகனுக்குப் பின் பிறந்த சகோதரன் ஒருவன் உண்டு என்று சொல்லுகின்றேம். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம்.

வேறு

4. மாநிறஞ் சமதே கத்தான் மருமவான் மூர்க்கங் கொஞ்சம்
வானவர் பத்தி கொஞ்ச மடைந்தோரை யாத ரிப்பன்
ஆனவர் நேசங் கொள்ளான் அவனியை விருத்தி செய்வன்
தானமுந் தருமங் கொஞ்சந் தன்மனை யிரண்டே யாகும்.

4. மாநிற முடையவன். சமமான உடலமைப்புள்ளவன். இரகசிய முள்ளவன். சிறிது மூர்க்க குணமுடையவன். தெய்வ பக்தியுள்ளவன். தன்னை யண்டிவந்தவர்களைக் காப்பாற்றுவான். பெரியோர்கள் நட்புக் கொள்ளாதவன். பூமியைப் பெருக்குவான். சிறிது தானதருமம் செய்யும் இயல்பினன். இரு மனைவியராவர்.

5. உண்டியுஞ் சுகமாய்க் கொள்வன் உறைப்பொடு புளிப்பி லிச்சை
குண்டைகோ விருத்தி யுள்ளான் குணமது விரண்டு முண்டு
தண்டமிழ் நுணுக்கந் தேரான் தன்மனை யிரண்டே யாகும்
கண்டித முடைய னகுங் கவடிலான் வெகுளி யாவன்.

5. சௌக்கியமாகச் சாப்பிடுவான். சாப்பாட்டில் புளிப்பிலும், உறைப்பி லும் பிரியமுள்ளவன். பசு எருதுகள் விருத்தியடையும். இருவிதமான குணமுள்ளவன். தெள்ளிய தமிழின் இலக்கிய ரகசியங்களை அறியாதவன். இரு மனைவிகளை அடைவான். கண்டிப்புள்ளவன். கபடமில்லாதவன். வெகுளியாயிருப்பான்.

6. சுதர்களு மாண்பால் மூன்று தோகையு மிரண்டு வென்றேம்
முதல்மாது தனக்கு வாண்பால் மேவிடு மூன்றே தீர்க்கம்
அதிபதி யினையா ளுக்கு ஆணொன்று பெண்பால் ரண்டு
சதியிலா தீர்க்க மெய்துஞ் சாற்றுவோம் பின்பால் சேதி.

6. மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் உள்ளனர். மூத்த மனைவிக்கு மூன்று புத்திரர்கள் தோன்றித் தீர்க்கமாவார்கள். இரண்டாம் மனைவிக்கு ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் பிறந்துத் தீர்க்காயுள்ள வர்கள். அவர்களுடைய செய்தியைப் பின் பாகத்தில் கூறுகின்றேம்.

7. தந்தையின் குணத்தைச் சொல்வோம் சாந்தவான் பொறுமை [சாலி
வந்தவர்க் கன்ன மீவன் மருமமில் லாதா னாகும்
நொந்தவர் தம்மைக் காப்பன் நிதானமாய் வார்த்தை சொல்வன்
தன்தன முடையா னாகுந் தானிய விருத்தி செய்வன்.

7. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். சாந்தமுள்ளவன். பொறுமை யுடையவன். தன்னையண்டி வந்தவர்களுக்கு அன்னமளிப்பவன். இரகசியமில்லாதவன். கஷ்டமடைந்தவர்களை ஆதரிப்பான். மெதுவாகப் பேசுவான். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள்களை உடையவன். தானியங்களைப் பெருக்குவான்.

8. ஊகவான் பலபேர் நேயன் உறுதியில் லாத நெஞ்சம்
தோகையர் மோக னவன் சொல்லது சுகமே யாகும்
நாகரி கங்க ளுள்ளான் நாற்காலி விருத்தி யுள்ளான்
ஆகம நுணுக்கந் தேரான் அன்புட னன்ன மீவன்.

8. ஊகமுள்ளவன். பலபேர்களுக்கு நண்பன். திடமில்லாத மனமுடையவன். பெண்கள்மீது மையல் கொள்வான். சுகமாகவே பேசுபவன். நாகரிகமாக இருப்பான். கால்நடைகளைப் பெருக்குவான். வேதாந்த ரகசியங்களை யறியாதவன். அன்புடன் அன்னமளிப்பான்.

9. தந்தைநாள் பூமி மேலாய்த் தானவன் விருத்தி செய்வன்
முந்துமால் பத்தி கொஞ்ச முயர்வான குடும்பி யாவன்
எந்நிடம் பெருமை பூண்பன் எழில்கரம் பத்ம ரேகை
தந்தமுந் தேய்வு முள்ளான் தாக்ஷிண்யன் பணையேர் விருத்தி.

9. தன் தந்தையின் பூமியை அதிகமாக விருத்தி செய்வான். திருமாலிடம் பக்தியுள்ளவன். உயர்ந்த குடும்பியாயிருப்பான். எல்லாவிடங்களிலும் பெருமையடைவான். கையில் பத்மரேகை யுள்ளவன். பற்களில் தேய்வுள்ளவன். தாட்சிண்ய முள்ளவன். பண்ணை ஏர் முதலியன விருத்தி யுள்ளவன்.

10. இல்லமும் புதிதாய்ச் செய்வன் எளியோரை யாத ரிப்பன்
அல்லல்க ளணுகா னாகும் ஆளடி யார்க ளுள்ளான்
சொல்லதைக் காப்பா னாகுந் தேவதா பணியுஞ் செய்வன்
மல்லினில் செல்லா னாகு மாடாடு விருத்தி யுள்ளான்.

10. புதிய வீடு கட்டுவான். ஏழைகளை ஆதரித்து வருவான். துன்பங்களை அடையாதவன். ஏவலாட்கள் உள்ளவன். தன்னுடைய வார்த்தைகளின்படி நடப்பவன். கோயில் திருப்பணியும் செய்வான். சண்டைக்குச் செல்லாதவன். கால்நடைகள் அதிக முடையவன்.

11. பொய்யுரை பகரான் மிஞ்சி புத்திநல் லறிவு முள்ளான்
ஐயமே லிச்சை யுள்ளான் அணுகிய குணத்தா னுக்கு
வையமே லிந்தப் பாலன் வருவனு மென்று சொல்வோம்
மெய்யது முளைச்சல் நீட்சி மாந்தளிர் போலு மேனி.

11. பொய் பேசாதவன். முதிர்ந்த அறிவாளி. நல்லறிவுமுள்ளவன். தருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுடையவனுக்கு ஜாதகன் தோன்றுவான் என்று சொல்வோம். மெல்லிய சரீரமும் உயரமும் உள்ளவன். மாந்தளிர் போல் மென்மையான சரீரமுடையவன்.

12. இருவிதக் கல்வி கற்பன் இடர்செய்யான் யாவ ருக்கும்
திருமகள் வாச முள்ளான் தொடுத்ததை வெல்வா னுகும்
பெருமவ ரிட்டங் கொள்வான் புண்ணிய மனத்த னுகும்
திருக்கரஞ் சங்கு சக்ரந் தெரிஞோர்க் கன்ன மீவன்.

12. இருவிதமான கல்விகள் கற்பான். ஒருவருக்கும் துன்பஞ்செய்யாதவன். இலக்குமி விலாச முள்ளவன். எடுத்த காரியத்தைச் செய்து முடிப்பான். பெரியோர்களுக்குப் பிரியமானவன். புண்ணியமான மனத்தினன். கையில் சங்கரேகை யுடையவன். துறவிகட்கன்னமளிப்பவன்.

13. கன்னியர் மோக னுவன் கடியவே நடக்க வல்லான்
பின்னமில் லாத தேகி பிறர்பொரு ளிச்சை யில்லான்
அன்னியர் மதிக்க வாழ்வன் அரசர்பூ சிதமு முள்ளான்
நன்னிலம் விருத்தி செய்வன் நங்கையர் குணத்த னுமே.

13. பெண்கள்மீது மோகமுள்ளவன். வேகமாக நடப்பவன். ஊனமில்லாத சரீரமுள்ளவன். அன்னியர் பொருளில் விருப்பமில்லாதவன். பிறர் மதிக்கும்படி வாழ்ந்து வருவான். அரசரால் மதிக்கப்படுவான். நல்ல நிலங்களை விருத்தி செய்வான். பெண்களதுபோன்ற குணமுள்ளவன்.

14. தன்துணை யாண்பால் காணுன் தையல ரிருவர் தீர்க்கம்
முன்துணை யாகச் சொல்வோ மூத்தவள் சேதி கேளாய்
கன்னென மொழியே சொல்வள் கவடிலா ளடக்க முள்ளாள்
சொன்னசொல் காப்பட ளாகுந் தோகைபோல் சாய லுள்ளாள்.

14. உடன்பிறந்தவர் இல்லாதவன். இரு சகோதரிகள் உள்ளவன். அவர்கள் இவனுக்கு மூத்தவர்கள் என்றேம். பெரிய சகோதரியின் செய்தியைக் கேளுங்கள். இனிய மொழிகளையே பேசுபவள். கபடில்லாதவள். அடக்கமுள்ளவள். சொன்ன சொற்களைக் காப்பாள். மயிலைப்போன்ற அழகுள்ளவள்.

15. மாமிக ளிரண்டே யாகு மாநிறம் புத்தி சாலி
சேமமாங் குடும்பி யாவன் செப்புநன் னடக்கை யுள்ளான்
தீமையை யொருவர்க் கெண்ணுன் சுதர்களுந் தோட மெய்தும்
மாமிக்குச் சுதர்கள் தோடஞ் சாற்றுவீ ரந்தச் சங்கை.

15. ஜாதகனுக்கு இருமனைவியர் உண்டு. மாநிறமுள்ளவன். புத்திசாலி. சௌக்கியமான குடும்பமுள்ளவன். நன்னடத்தையுள்ளவன். பிறருக்குத் தீங்கு செய்ய எண்ணுதவன். புத்திர தோஷமுண்டு. இவனுடைய மனைவிக்குப் புத்திரதோஷம் ஏற்படக் காரணம் கூறுங்கள்.

16. முன்ஜன்மந் தில்லை தன்னில் முதுமறை குலமு தித்துப்
பொன்பொரு ளதிக முண்டாய்ப் புண்ணிய வதியும் வாழ்ந்தாள்
தன்குல மாதொ ருத்தி ஜனித்தசேய் தனக்குப் பாலும்
இன்னவள் தன்னைக் கேட்க இடரான வார்த்தைச் சொன்னாள்.

16. முற்பிறவியில் தில்லையம்பதியில் முதிர்ந்த அந்தணர் குலத்தில் தோன்றி, செல்வங்கள் அதிகம் பெற்று, புண்ணியவதியாக வாழ்ந்துவந்தாள். தன்னைப்போல் அந்தணப்பெண் ஒருத்தி, தன் பிள்ளைக்குப்பால் வேண்டுமென்று இவளைக் கேட்கும்போது, இவள் இல்லையென்று சொல்லி அனுப்பிவிட்டாள்.

17. அதுவொரு தோட மாச்சு அதுவன்றி வேறு சொல்வோம்
கதியிலா வேழை மாது பிள்ளைக்கு வன்னங் கேட்க
அதிபதி கோப முற்று மருவாமல் நின்ரு ளென்றேம்
சதியான வேழை மாது சாற்றுவாள் சாபந் தானும்.

17. அஃது ஒரு தோஷமாயிற்று. அது தவிர, வேறு ஒன்று சொல்லுகின்றோம். கதியற்ற ஏழைப்பெண் தன் குழந்தைக்கு அன்னம் கேட்டாள். இவள் கோபம்கொண்டு கொடுக்காமலிருந்தாள். ஏழைப்பெண் சாபமிட்டாள்.

18. மறுஜன்மந் தோன்றி யேதான் மதலைகள் காணு ளாகி
உறைகுவா யென்று சொல்லி ஒதுங்கினு ளேழை மாது
இருவித தோடத் தாலே இவளுக்குப் புத்ர தோடம்
வருகினுந் தீதே யாகும் வரைகிறே மிதற்குச் சாந்தி.

18. நீ மறுபிறவியை யடைந்து, குழந்தைகளில்லாமல் வாழ்வாய் என்று கூறிச் சென்றாள், ஏழைப்பெண். இந்த இருவிதத் தோஷங்களால் இவளுக்குப் புத்திர தோஷம் ஏற்பட்டது. புத்திரர் தோன்றினும் நிலையா. அது தீரச் சாந்தி யொன்று கூறுகின்றேம்.

19. கருமசாந் திகளுஞ் செய்யக் காளைகள் விருத்தி யாகும்
வருஞ்சுத ராண்பா லொன்று மங்கையு மவ்வா ருகும்
திருகென்று செய்யா ராகில் சேயர்கள் தோட மெய்தும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

19. கரும சாந்திகள் செய்தால் புத்திர விருத்தி ஏற்படும். ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் தோன்றுவார்கள். அலட்சியமாகச் செய்யாமலிருப்பின் புத்திரர்கட்குத் தோஷமுண்டு. அரிய வேதங்களின் முடிவில் நடனமாடும் தேவியே! கேளுங்கள்.

20. அதற்குப்பின் பெண்பால் சேதி அறிவிப்போந் தாயே யரங்கள்
பதியைவிட் டகலா ளாகும் பரிந்துப சாரஞ் செய்வள்
சதியிலா மனத்த ளாகுந் சாற்றுமுன் கோபி யாவள்
சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மவ்வா ருமே.

20. இரண்டாம் மனைவியின் செய்தியைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள். தன் வீட்டை விட்டகலாதவள். அன்புடன் உபசாரம் செய்வாள். தீங்குகளில்லாத மனத்தினள். சொல்லுவதற்கு முன் கோபம் கொள்வாள். இரு ஆண் குழந்தைகளும் இரு பெண் குழந்தைகளும் தோன்றுவர்.

21. பெருமையும் புகழு மேற்பள் புத்திமா னுனேச்சல் தேகி
திருமக ளொப்ப தாகுந் தீரமா நெஞ்சு முள்ளாள்
நறுமலர் கந்த மிட்ட நாயகன் மனம்போல் வாழ்வள்
துதிசெய்தோர்க் கன்ன மீவள் சுதனுடன் கூடி வாழ்வள்.

21. பெருமையுள்ளவள். கீர்த்தியடைவாள். பக்தியுள்ளவள். மெல்லிய சரீரமுடையவள். இலக்குமியைப் போன்றவள். தைரிய முள்ள மனத்தினள். மணமிக்க புஷ்பம் சந்தணம் இவைகளில் பிரியமுடையவள். தன் கணவன் மனம்போல் வாழ்ந்து வருவாள். தோத்திரம் செய்தவர்கட்கு அன்ன மளிப்பாள். தன் புத்திரனுடன் சேர்ந்து வாழ்வாள்.

22. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மூவே ழாண்டுள்
காதலி யன்னை வர்க்கங் கலப்பளாங் குணத்தைச் சொல்வோம்
மேதினில் சிவந்த மேனி வித்தையும் புத்தி மானும்
பாதக மனமில் லாதாள் பரிந்துப சாரஞ் செய்வள்.

22. ஜாதகனுடைய திருமணக்காலத்தைக் கூறுகின்றேம். அவனுடைய இருபத்தோராம் வயதுக்குள் தன் தாயின் வர்க்கத்திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுவேன். சிவந்த உடலுள்ளவள். கல்வி யறிவுள்ளவள். புத்திசாலி. தீய எண்ணங்களில்லாத மனத்தினள். அன்புடன் உபசரிப்பாள்.

23. அன்னையு மிரண்டு மாகும் அன்புள மனத்த ளாகும்
தன்னமே தனிய ளாவள் சாற்பாத்ரி யோக சாலி
பொன்பணி யடையா ளாகும் புருடன்தன் மனம்போல் வாழ்வள்
மன்மதன் மனையை யொப்பாள் மதலைகள் சேதி சொல்வோம்.

23. இரு தாய்மார்கள் உள்ளவள். அன்புள்ள மனத்தினள். தன்னந் தனியாக இருப்பாள். சத்பாத்திரியோக முடையவள். பொன் ஆபரணங்களுள்ளவள். தன் கணவன் மனம்போல் வாழ்ந்து வருவாள். இரதியைப் போன்ற அழகுடையவள். ஜாதகனுடைய புத்திர விருத்தியைச் சொல்லுகின்றேம்.

24. சுதர்களு மறுவர் தோன்றுந் தீர்க்கமா மாண்பால் ரண்டு
மதிநுதல் பெண்பா லவ்வாறு வரைகிறேந் தீர்க்க மாக
மதலைக ளிவன்தன் மேலாய் வாழ்வரா மென்று சொல்வோம்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

24. ஆறு குழந்தைகள் தோன்றுவர். இரு புத்திரர்களும் இரு பெண்களும் தீர்க்கமாக இருக்கும். புத்திரர்கள் ஜாதகனுக்கு மேன்மையாகவே வாழ்ந்துவருவர் என்று சொல்லுகின்றோம். அதிதிகளை யாதரிக்கும் எங்கள் தாயே! கேளுங்கள்.

25. அன்னைமா நிறத்த ளாகும் அன்புட னன்ன மீவள்
பொன்பணி யுடைய ளாகும் பெருதனம் பின்னால் நேரும்
சொன்னசொல் சுகமே யெய்துந் தோழன்தன் மனம்போல்
[வாழ்வள்
பின்னமில் லாத தேகி பிறர்குற்றஞ் சொல்லா ளாகும்.

25. ஜாதகனுடைய தாய் மாநிற முள்ளவள். அன்போடு அன்ன மளிப்பவள். பொன்னாபரணங்களுள்ளவள். பிற்காலத்தில் பொருள் அதிகம் சேரும். சுகமாகவே பேசுபவள். தன் கணவன் மனத்துக்கேற்ப வாழ்ந்துவருவாள். ஊனமில்லாத சரீரமுடையவள். பிறர்மீது குற்றங் கூறாதவள்.

26. அன்னையு மிரண்டு மாகும் அன்புடன் துணைமுன் னொன்று
மன்னவன் தனக்குத் தாரம் வரைகிறோ மிரண்டு மாகக்
கன்னிமா ரிருவர் தீர்க்கங் காளைக்குச் சுதரா ஐந்து
தன்னிலே பெண்பால் ரண்டு சாற்றுவோந் தீர்க்க மாக.

26. இரு தாய்மார்கள் உள்ளவள். முன் பிறந்த சகோதரி யொருத்தி உள்ளவள். ஜாதகனுக்கு இரு மனைவியர் உண்டு என்று சொல்லுகின்றோம். இருவரும் தீர்க்காயுளுள்ளவர்கள். ஐந்து புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்கள் ஆவார்கள்.

27. இல்லமுந் தென்மே லாக இயம்புவோம் பின்பால் சேதி
தல்லியு மரண மாகிச் சார்ந்திடு மிரண்டா மாது
வல்லிக்குத் துணைகள் காணாள் வரைகிறோஞ் சுதராண் மூன்று
நல்லதோர் கன்னி ரண்டு நாட்டுவோந் தீர்க்க மாக.

27. வீடு தென்மேற்குத் திக்கிலுள்ளது. விவரங்களைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய தாய் மரண மடைந்தபிறகு இரண்டாம் தாய் வருவாள். அவளுக்குச் சகோதரர் இல்லை. அவளுக்கு மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து தீர்க்கமாக உள்ளனர்.

28. பின்மாதா வில்லந் தன்னில் புக்குவா ளிந்த மாது
முன்ஜன்மம் புகலக் கேண்மோ மூலமாங் குடியி லேதான்
இன்னவன் சூத்ர வம்சம் எய்தியே சுகமாய் வாழ்ந்து
கன்னிக்கு மதலை யுண்டாய்க் கனமிலார்க் கன்ன மீந்து ;

28. ஜாதகனுடைய இளையதாயின் பக்கத்தில் சென்று வாழ்வாள், இந்தப் பெண். முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மூலமாங்குடியில் சூத்திரன் வமிசத்தில் பிறந்து, சுகமாக வாழ்ந்துவந்து, புத்திரர்களையடைந்து, ஏழைகட்கு அன்னமளித்துவந்து ;

29. மறையவர் நேசங் கொண்டு மால்பத்தி மிகவே பூண்டு
மறலியின் பதிக்குப் புக்கு மறையவன் வரையப் பட்டுத்
திருமகள் ரெட்டி வம்சஞ் ஜனித்தன ளிவளே யம்மா
வருஞ்ஜன்மம் புகலக் கேண்மோ வள்ளூரு தன்னி லேதான் ;

29. அந்தணர்களின் நட்புக்கொண்டு, திருமாலின்மீது பக்திகொண்டு வாழ்ந்து மரண மடைந்து, மீண்டும் பிரம்மதேவரால் படைக்கப்பட்டு ரெட்டியார் மரபில் பிறந்தவள் இவள், என்று சொல்லுவோம். அடுத்த பிறவியைச் சொல்லுகின்றேம். கேளுங்கள் திருவள்ளூரில் ;

30. உதிப்பளாம் பிரம்ம சேயாய் உரைக்கின்றூர் பிருகு தாமும்
அதிபதி யிச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்னக்
கதியென்றேர்க் குதவி செய்துங் கிஞ்சித்துத் தெய்வ பத்தி
துதிசெய்தோர்க் கன்ன மீந்துந் தோழன்தன் மனம்போல்
[வாழ்ந்தும் ;

30. அந்தணர் குலத்தில் பிறப்பாள். பிருகு முனிவர் கூறுகின்றூர். அவள் இப்பிறவியில் செய்த நற்செயல்கள் என்னவென்று கேட்க, தன்னை அடைக்கலம் புகுந்தவரைக் காத்தும், சிறிது தெய்வபக்தி செய்தும், தோத்திரம் செய்தவர்கட் கன்னமளித்து வந்தும், தன் கணவன் மனம்போல் வாழ்ந்து வந்ததாலும் ;

31. வருவதால் மறுபி றப்பு வள்ளூரில் மறைக் குலத்தில்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்ந்து மேதான்
உறைவளாம் தேவ ராக உரைத்தது தப்பா தாமே
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

31. இப்படி இருப்பதால் மறுபிறவியில் திருவள்ளூரில் அந்தணர் குலத்தில் பிறந்து, லட்சுமீகடாட்சம்பெற்று, செல்வியாக வாழ்ந்துவந்து, முக்தி பெறுவாள். கூறியவை தவறு. விநாயகக் கடவுளைப்பெற்ற புண்ணிய வதியே! கேளுங்கள்.

32. தந்தையின் பூர்வந் தன்னைத் தானெடுத் தியம்பக் கேண்மோ
சந்ததம் பாண்டி நாட்டில் ஜனித்தனன் சேடர் வம்சம்
வந்தவர்க் கன்ன மீந்து மார்க்கத்தில் தாகப் பந்தல்
விந்தைபூஞ் சோலை வைத்தும் வேலுடைக் கடவுள் பத்தி ;

32. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். கேளுங்கள். பாண்டிய நாட்டில், சேடர் மரபில் பிறந்து, தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்னமளித்து, சாலையோரங்களில் தண்ணீர்ப்பந்தல்களை அமைத்து, அழகிய பூஞ்சோலை வைத்து, முருகக் கடவுளின்மீது பக்தியுடன் ;

33. பவமது வில்லா தாகிப் பறந்தனன் கால னூடு
தவஞ்செய்வோன் வரையப் பட்டு ஜனித்தவ னிவனே யென்றேம்
நவமதில் வறுமை காணு நவிலுவோ மிவன்பின் ஜன்மம்
அவனியில் துவாரை தன்னில் அந்தணர் குலமு திப்பான்.

33. தீவினைகளில்லாமல் மரண மடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன், ஜாதகனுடைய தந்தையென்று சொல்லு கின்றோம். உலகில் வறுமை யடையாமல் வாழ்வான். தந்தையின் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். உலகில், **துவாரகையில்,** அந்தணர் குலத்தில் பிறப்பான்.

34. உதித்தவன் பூர்வஞ் சொல்வோம் உயர்காஞ்சி தன்னி லேதான்
நதிகுலந் தனிலு தித்து நயப்புறு செட்டுச் செய்து
அதிதிகட் கன்ன மீந்து ஆலய பத்தி மானாய்
நிதிமிக வுடைய னாகி நிமலனும் பவமில் லாமல் ;

34. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். உயர்ந்த **காஞ்சி புர**த்தில் வேளாள குலத்தவனாகப் பிறந்து, நயமான வர்த்தகம் செய்து வந்து, விருந்தினர்கட்கன்னமளித்துவந்து, தெய்வபக்தியுடன் செல்வங்கள் அதிகமுள்ளவனாகி, பாவச்செயல்களில்லாமல் ;

35. காலந்தன் பதிக்குப் புக்குக் கஞ்சனால் வரையப் பட்டுச்
சாலவே யிக்கு லத்தில் ஜனிப்பனு மிந்தச் சேயும்
ஏலவே யோகச் சேதி இயம்புவோஞ் ஜனனந் தொட்டுப்
பாலன்தன் மரண மட்டும் பாரினில் வறுமை காணான்.

35. மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இக்குலத் தில் பிறப்பான், இந்த ஜாதகன் என்று சொல்லுகின்றோம். ஜாதகனுடைய யோகச்செய்தியைச் சொல்லுவோம். பிறப்பு முதல் இறப்பு வரையில் வறுமையடையாதவன்.

36. தந்தைமேல் புகழு மேற்பன் சகராசர் பேட்டி கொள்வன்
எந்திடம் பெருமை பூண்பன் இராசபூ சிதமு மாவன்
சந்தத மரசர் மூலஞ் செட்டுக்கள் செய்வா னாகும்
நொந்தபேர் தம்மைக் காப்பன் நினைத்தது முடிப்பா னாகும்.

36. தந்தைக்குமேல் கீர்த்தியடைவான். அரசனைப் பேட்டிகாண்பான். எல்லா விடங்களிலும் பெருமை யடைவான். அரசரால் மதிக்கப்படுவான். அரசாங்க உதவியால் வியாபாரம் செய்துவருவான். கஷ்டப்பட்டவர்களை ஆதரிப்பான். எண்ணிய காரியங்களை முடிப்பான்.

37. பரிவண்டி யுடைய னாகும் பந்துவை யாத ரிப்பன்
திருமகள் வாச முள்ளான் செய்நிலம் பலவூர் சேர்ப்பன்
நெறியதைத் தவறா னவன் நீத்தோருக் கன்ன மீவன்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

37. குதிரைவண்டி உடையவன். தன் சுற்றத்தார்களை ஆதரித்து வரு வான். லட்சுமீ இவன் வீட்டில் வாசம் செய்வாள். பல ஊர்களில் விளை நிலங்களைச் சேர்ப்பான். நன்னெறியுடன் நடப்பவன். துறவிகட்கன்னம் அளிப்பவன். விநாயகனைப்பெற்ற புண்ணியவதியே ! கேளுங்கள்.

38. முப்பது வாறு வாண்டில் மேடமா தத்தி லேதான்
செப்புவோந் தந்தை கண்டஞ் சேடன்தன் தசையி லேதான்
ஒப்புடன் புந்தி புத்தி உதித்திடு மந்தக் காலம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

38. ஜாதகனது முப்பத்தாறும் வயதில் சித்திரை மாதத்தில் அவனுடைய தந்தை மரண மடைவான். அக்காலத்தில் ராகுமகாதசையில் புதபுக்தி நடைபறும். கங்கையைச் சடைமுடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறு.

39. அதற்குமே லிரண்டு வாண்டில் ஆவணி மாதந் தன்னில்
மதிமுக வன்னே கண்ட[1] மானுகந் தசையி லேதான்
கதிதருங் கேது புத்தி கலந்திடு மந்தக் காலம்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யானே கேளாய்.

39. அதற்குமேல் இருவருடங்களில் ஆவணி மாதத்தில் தாய் மரணம் அடைவாள். அக்காலத்தில் ராகுமகாதசையில் கேதுபுத்தி நடைபெறும். கதியற்றவர்களைக் காக்கும் அம்பிகையே! கேளுங்கள்.

40. இன்னவன் மரண காலம் இயம்புவோ மெழுபான் ரண்டில்
உன்னத மகர மாதம் உரைத்தனஞ் சூலை யாலே
பின்ஜன்மம் புகலக் கேண்மோ பிருதிவி தலத்தி லேதான்
முன்குலந் தனிலு திப்பான் உத்தமி கேட்டி டாயே.

40. ஜாதகனது மரணக்காலத்தைச் சொல்லுகின்றோம். இவன், எழுபத்திரண்டாம் வயதில் தை மாதத்தில் வயிற்று வலியால் மரண மடைவான். மறு பிறவியைச் சொல்லுகின்றோம் கேளுங்கள். காஞ்சிபுரத்தில் அந்தணர் குலத்தில் பிறப்பான். உத்தமியே! கேளுங்கள்.

**நீண்ட ஆயுள் ஏற்படுதற்குரிய கிரக நிலே**

41. எப்படி வயது தீர்க்கம் இயம்பினீ ரெட்டாண் டுக்குள்
தப்பிதஞ் சகடை தோடஞ் சாதக னரிட்ட மாவன்
அப்படி நடவா தாகும் அந்தணன் ஜன்மந் தங்க
மெப்புடன் வயது தீர்க்கம் விளம்பின மொழிகுன் றுயே.

41. ஜாதகனுக்கு எப்படி நீண்ட வயது என்று கூறினீர்கள்? அவனுடைய எட்டாம் வயதுக்குள் சகடைதோஷம் உண்டு. அதனுல் கண்டம் ஏற்படும். அப்படி நடக்காது. குருலக்கினத்தில் இருப்பதால் நீண்ட வயது உண்டு என்று சொல்லுவோம். கூறியவை தவறு.

42. ஜனித்திடு காலந் தன்னில் சந்திரன் தசையி ருப்புக்
குனித்திடு வாண்டு ரண்டுங் கூறிடுந் திங்க ளைந்தும்
வினைவருஞ் சாத கற்கு மேவிப்பின் நிவிர்த்தி யாகும்
கனமுடன் பின்பா கத்தில் கழறுவோம் விபர மாக.

42. ஜாதகன் பிறக்கும் காலத்தில் சந்திரமகாதசையில் இருப்பு இரு வருடங்களும் ஐந்து மாதங்களுமாம். ஜாதகனுக்கு நோய் உண்டாகும். பிறகு நிவிர்த்தியாகும். பின்பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம்.

---

[1] ராகு.

## ஜாதகம் 95

1. சந்திரன் புந்தி நண்டு சல்லியன் குசனும் வீணை
மந்திரி ராகு தேளில் மார்த்தாண்ட னுங்கோ லாக
மந்தனு மேரு புக்கச் சிகிநந்தி மிதுனஞ் ஜன்மம்
இந்தவாறு கிரக நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் புதன் கடகத்திலும், சுக்கிரன் செவ்வாய் மிதுனத்திலும், ராகு குரு விருச்சிகத்திலும், சூரியன் துலாத்திலும், சனி தனுசிலும், கேது விருஷபத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமானால் பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | | கேது | இலக்கினம் சுக்கிரன் செவ்வாய் |
| | இராசி சக்கரம் | | சந்திரன் புதன் |
| | | | |
| சனி | ராகு குரு | சூரியன் | |

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது வாண்பால் ஜன்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலு மிந்த்ர நோக்கம்
பெருவயி றப்பன் தெற்கில் புலிவாக னத்தா னுத்ரம்
சிறுவூரி லடையா ளத்துள் ஜனிப்பனு மிந்தப் பாலன்.

2. அகத்திய முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறக்கும் வீடு தெற்கு வடக்கான தெருவில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது. தெற்குத் திக்கில் விநாயகர் ஆலயமும் வடக்கில் காளி தேவியின் கோவிலும் இவ்வித அடையாளங்களுள்ள ஒரு சிற்றூரில் இந்த ஜாதகன் பிறப்பான்.

3. இன்னவன் ஜனன யோகம் எழில்பெருந் தந்தை யோகம்
மன்னிய வன்னை யோகம் வருந்துணை களத்ர புத்ரர்
தன்னிலே முன்பின் ஜன்மஞ் சாற்றுவோ மிந்நூல் தன்னில்
உன்னத நவக்கோ ளாய்ந்து உரைக்கின்றோம் விபர மாக.

3. ஜாதகனுடைய பிறப்பு யோகம் பெற்ற தந்தையாரின் யோகம் தாயின் யோகம் உடன் பிறந்தவர் மனைவி மக்கள் இவர்களின் யோகம் முற்பிறவி மறுபிறவி ஆகிய இவற்றை யெல்லாம் இந்த நூலில், உயர்ந்த நவக்கிர கங்களின் நிலையை ஆராய்ந்து கூறுகின்றோம், விபரமாக.

4. தந்தையின் துணைவ ரைந்தில் தங்காவே யாவுந் தானும்
விந்தையாய்க் கன்னி யொன்று விருத்தியா மென்று சொல்வோம்
எந்தையே தந்தை சேதி இயம்புவோங் கன்னி ராசி
சந்ததங் கடைநாள் தன்னில் ஜனிப்பனு மென்று சொல்வோம்.

4. ஜாதானுடைய தந்தையின் உடன் பிறந்தவர்கள் ஐவரில் ஒருவரும் நிலையார். சகோதரி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். தாயே! ந்தையின் செய்தியைக் கூறுவோம். அவன் கன்னியாலக்கினத்தில் ரேவதித நட்சத்திரத்தில் பிறந்தவன் என்று சொல்லுகின்றோம்.

5. வித்தையுங் கொஞ்ச முண்டு வீண்வம்பில் செல்லா னாகும்
பத்தினி நேய னாகும் பாருகள் விருத்தி செய்வன்
சித்தினி சாதி யாவன் தீரமில் லாத நெஞ்சம்
நத்தினோர்க் குதவி செய்வ நங்கையர் குணத்த னாமே.

5. கல்வியறிவும் சிறிதுள்ளவன். வீண்சண்டைக்குச் செல்லாதவன். மனைவிக்குப் பிரியமானவன். பூமியைப் பெருக்குவான். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன். தைரியமில்லாத மனத்தினன். தன்னையடைந்தவர்கட்கு உதவி செய்வான். பெண்களின் குணம் போன்ற குணமுள்ளவன்.

6. இல்லமுந் தந்தை யாலே எய்திடும் பூமி தானும்
அல்லல்க ளணுகா னாகும் ஆவுகள் பணையேர் விருத்தி
நல்லவ னாகி வாழ்வ நாயக னிருநி றத்தான்
தொல்லைக ளில்லா வாழ்வன் தொல்புவி கிருஷி செய்வான்.

6. தன் தந்தையால் வீடும் பூமியும் கிடைக்கும். துன்பங்கள் அடையாதவன். பசுக்கள் பண்ணை ஏர் முதலியன விருத்தியடையும். நல்லவனாக வாழ்ந்து வருவான். இரு நிற முள்ளவன். துன்பங்களில்லாமல் வாழ்ந்து வருவான். விவசாயம்செய்து வருவான்.

7. சொன்னவிக் குணத்தா னுக்குச் சுதனுமே யுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோ மழகுளான் சிவந்த மேனி
மன்னர்கள் பேட்டி கொள்வன் மருவிடுங் கன்னி ரண்டு
பின்னமில் லாத தேகன் பூமிக ளதிகஞ் சேர்ப்பன்.

7. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவன். சிவந்த உடலுடையவன். அரசரைப் பேட்டி காண்பவன். இருமனைவியரை அடைவான். ஊனமில்லாத சரீரமுடையவன். பூமிகளை அதிகமாகச் சேர்ப்பான்.

8. ஊகவான் கிராமச் செட்டு வுத்தமன் செய்வா னாகும்
பாகமாய்ப் பேச வல்லான் பரவுப காரி யாவன்
நாகரி கங்க ளுள்ளான் நல்லோர்க்கு நல்லவ னவன்
ஆகம நுணுக்கந் தேர்வன் அடைந்தோரை யாத ரிப்பன்.

8. ஊகமுள்ளவன். கிராம வியாபாரம் செய்து வருவான். அழகாகப் பேசுபவன். பிறருக்கு உபகாரி. நாகரிகமாக இருப்பவன். நல்லவருக்கு நல்லவன். வேதாந்த ரகசியங்களை அறிந்தவன். தன்னை யண்டினவரை ஆதரிப்பான்.

9. பந்துவும் புகழ வாழ்வன் பலபாவை மோகங் கொள்வன்
தன்தனங் கொடுக்கல் வாங்கல் ஜயஞ்செய்வ னெடுத்த வேலை
முந்துமால் பத்தி கொள்வன் ஊயர்வோர்கள் நேசங் கொள்வன்
விந்ததையாய்ப் பேச வல்லன் மேவுவான் சேது தீர்த்தம்.

9. உறவினர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். பல பெண்கள் மீது மோகம் கொள்வான். தன் பொருளைக் கொடுக்கல் வாங்கல் செய்து வருவான். எடுத்த காரியத்தை வெல்வான். திருமாலின்மீது பக்தி யுள்ளவன். பெரியோர்களுடைய நட்புக்கொள்ளுவான். வேடிக்கையாகப் பேசுபவன். சேதுவென்ற புண்ணிய தீர்த்தத்துக்குச் சென்று நீராடுவான்.

10. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மறுவர் தோன்றும்
அவனியி லாண்பா லொன்று அழகிய கன்னி ரண்டு
நவனியில் தீர்க்க மெய்து நவின்றதில் முன்பெண் ணென்று
தவசியே யவள்கு ணத்தைச் சாற்றுவோ மாஞ்சி வப்பள்.

10. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைப்பற்றிக் கூறுவோம். அறுவர் தோன்றுவர். அழகிய பெண்களிருவரும் ஒரு புத்திரனும் தீர்க்காயுள் உள்ளவர்கள். அவர்களில் மூத்தவள் பெண்ணுவள். தவசியே! அவ ளுடைய குணத்தைக் கூறுகின்றோம். அவள் மாநிற முள்ளவள்.

11. முன்கோபம் பின்பு சாந்த முயர்வான குடும்பி யாவள்
அன்னவள் வந்த பின்பு அவள்வரன் தனக்கு யோகம்
கன்னென மொழியே சொல்வள் கவடிலாள் யோக சாலி
தன்வரன் மேல்பா லாகுஞ் சரசமாய் வார்த்தை சொல்வள்.

11. முன் கோபமுடையவள். பிறகு சாந்தமடைவாள். உயர்ந்த குடும்பத் தையடைவாள். இவளை மணந்த பிறகு இவளுடைய கணவனுக்கு அதிர்ஷ்டம் பெருகும். இனிய வார்த்தைகளையே பேசுபவள். கபட மில்லாதவள். அதிருஷ்டமுள்ளவள். அவளுக்கு மேற்குத் திசையிலிருந்து கணவன் வாய்ப்பான். சல்லாபமாகப் பேசுபவள்.

12. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மூன்று வென்றோம்
சதமுடன் தீர்க்க மெய்துந் தன்வரன் மத்தி யத்தில்
விதியது முடியு மென்றோம் விளம்புவோம் பின்பால் சேதி
அதிபன்பின் துணைவன் சேதி வரைகிறோந் தாயே யாங்கள்.

12. இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் தோன்றுவர் என்று சொல்லுவோம். அவர்கள் தீர்க்கசீவிகள். கணவன் இடைக் காலத்தில் மரண மடைவான். அது விபரத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய இளைய சகோதரனின் செய்தியைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

13. மாந்தளிர் போல மேனி மருமவான் ஊக சாலி
ஏந்திழை மார்கள் மோகன் எதிரியை நாசஞ் செய்வன்
கூர்ந்துமே வார்த்தை சொல்வன் குலத்துளோர் மதிக்க வாழ்வன்
காய்ந்திடு குணத்தா ளுகுங் கல்விக ளதிகங் கற்பன்.

13. மாந்தளிர் போன்ற மென்மையான சரீரமுள்ளவன். இரகசியமுள்ளவன். ஊகமுடையவன். பெண்கள்மீது மோகம் கொள்வான். விரோதிகளை நாசம் செய்வான். நன்றாக ஆராய்ந்து பேசுபவன். தன் பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்வான். நல்ல குணமுடையவன். அதிகமான கல்விகளைக் கற்பான்.

14. அரசர்பூ சிதமு முள்ளான் அதிகாரஞ் செய்வா ளுகும்
நறுமலர்க் கந்த மிட்ட னராசாங்கத் தொழிலு முள்ளான்
மறுதேச வாச முள்ளான் மறுத்துரை யதிகஞ் சொல்வன்
பெரும்பொருள் சேர்ப்பா ளுகும் புகழது எற்பா ளுகும்.

14. அரசரால் நன்கு மதிக்கப்படுவான். அதிகாரம் செய்யும் வேலை செய்பவன். நல்ல மணமுள்ள புஷ்பம் சந்தணம் முதலியவற்றில் விருப்பமுள்ளவன். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்வான். வேறூரில் வசித்து வருவான். எதிர்த்துப் பேசும் இயல்பினன். பெரும் பொருள் சேர்ப்பான். கீர்த்தியடைவான்.

15. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பா லொன்று
காரிழை மாரு மொன்று கழறுவோந் தீர்க்க மாக
வீரியன் வயது தீர்க்கம் விபரங்க ளிரண்டில் சொல்வோம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

15. மனைவியும் ஒருத்தியே. ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் உண்டு என்று சொல்லுவோம். நீண்ட வயதுள்ளவன். அந்த விபரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

16. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோம் பதினாறு ண்டில்
காதலி மேற்குத் திக்கில் கலப்பளா மன்னை வர்க்கம்
ஓதுவோ மவள் குணத்தை உளைச்சலாம் பித்த தேகி
சூதிலா ளடக்க முண்டு தோகைபோல் சாய லுள்ளாள்.

16. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். பதினாறும் வயதில் மேற்குத் திக்கிலிருந்து தன் தாயின் வர்க்கத்திலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைச் சொல்கின்றோம். மெல்லிய சரீரமுடையவள். பித்த சரீரி. கபடமில்லாதவள். அடக்கமுள்ளவள். மயிலின் அழகுபோன்ற அழகுள்ளவள்.

17. மனமதுக்கு ஏற்ற மாது மாஞ்சிவப் புடைய ளாகும்
கனமான புத்தி யுண்டு கருதிடாள் கட்டு வார்த்தை
சினமுண்டு வெளிக்காட் டாதாள் தேவியும் யோக சாலி
வினையது வெண்ணு ளாகும் விளம்புவோம் புத்ர பாவம்.

**17.** தன் கணவன் மனத்துக் கேற்றவள். மாநிற முடையவள். தாராள புத்தியுள்ளவள். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவள். கோபமுடையவள். ஆனால் அதை வெளியிடாதவள். யோகமுள்ளவள். தீங்கிழைக்க நினை யாதவள். புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம்.

**18.** அத்திரி சொல்லு கின்றார் அவனுக்குத் தாரம் ரண்டு
பத்திடு மென்று சொல்வோம் படருங்கா ரணங்கள் சொல்வீர்
சத்தமத் தோனு மாறில் தங்கிட ராகு கூட
குத்தமாய்க் காரி யேழில் குலவியே விருப்ப தாலே;

**18.** அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் என்றோம். ஏற்படும் காரணங்களைக் கூறுங்கள். ஏழாம் வீட்டுக்குரிய குரு ஆறும் வீட்டில் ராகுவுடன் கூடியிருப்பதாலும், தீவினையாகச் சனி ஏழில் இருப்பதாலும்;

### அபிமானப்பெண் ஏற்படுதற்குரிய கிரகநிலை

**19.** பாரியு மிரண்டே யாகும் பராசருங் கூறு கின்றார்
சூரியன் மதியும் ரண்டில் குலவியே யிருப்ப தாலே
காரிமை யொன்றே தீர்க்கங் கலந்திடு மபிமா னப்பெண்
நாரியு மெந்தக் காலம் நாலொன்ப தாண்டில் நேரும்.

**19.** மனைவிகள் இருவரே யாகும். பராசர முனிவர் சொல்லுகின்றார். சுக்கிரனும் சந்திரனும் இரண்டில் இருப்பதால், மனைவி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். அபிமானப் பெண்ணொருத்தி வருவாள். அப்பெண் எந்தக்காலத்தில் வருவாள் ? முப்பத்தாறும் வயதில் வருவாள்.

**20.** அதுவின்றிக் காணு ணுகும் அறைகிறோம் புத்திர பாவம்
சதமுட னெழுவர் தோன்றுஞ் சாற்றுவோ மாண்பால் ரண்டு
மதிமுகப் பெண்பா லொன்று வரைகிறேந் தீர்க்க மாக
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

**20.** அதுவல்லாமல் வேறில்லை. புத்திரபாவத்தைக் கூறுகின்றோம். ஏழு பேர் தோன்றுவர். இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் தீர்க்காயுளுள்ள வர்கள். கதியற்றவர்களைக் காக்கும் தாயே ! கேளுங்கள்.

**21.** எந்தமா துக்குப் புத்ரர் இயம்பினீர் விபரஞ் சொல்வீர்
சொந்தநன் மாதுக் கேதாஞ் செப்பினேஞ் சுதர்கள் விருத்தி
பிந்திய மாதுக் கேதான் பெண்ணது வொன்றே யாகும்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுவே.

**21.** ஜாதகனுடைய எந்த மனைவிக்குப் புத்திரர் தோன்றுவர் என்று கூறுங்கள். அவனுடைய சொந்த மனைவிக்குத்தான் புத்திரவிருத்தியுண்டு என்று கூறுகின்றோம். அபிமானப் பெண்ணுக்கு பெண் ஒருத்தி தோன்று வாள். முருகப்பெருமானைப் பெற்ற தேவியே! கூறிய வார்த்தைகள் தவறா.

22. அன்னைமாஞ் சிவப்ப ளாகும் அன்புள மனத்த ளாகும்
தன்சொலு மடக்க முண்டு சாற்றுமுன் கோபங் கொஞ்சம்
கன்னிகை யோக சாலி காதலன் மனம்போல் வாழ்வள்
அன்னியர்க் குதவி செய்வள் அற்பபுத் திகளு மில்லாள்.

22. தாய் மாநிறமுடையவள். அன்புடைய மனத்தினள். அடக்கமாகப் பேசுபவள். கூறுவதற்குமுன் கோபம் கொள்வாள். அதிருஷ்ட முள்ளவள். தன் கணவன் மனத்துக்கேற்ப நடப்பாள். பிறருக்கு உபகாரம் செய்பவள். அற்பபுத்திகள் இல்லாதவள்.

23. இல்லமுங் குடகு வென்றேம் இவன்துணை யாண்பால் ரண்டு
வல்லிமா ரவ்வாறு தீர்க்கம் வரைகிறேம் பின்பால் சேதி
தல்லியின் பூர்வஞ் சொல்வோந் தக்கோல மருகில் கீழ்ப்பால்
வல்லியுந் தீயின் வம்சம் வந்தன ளென்று சொல்வோம்.

23. ஜாதகனுடைய தாயின் வீடு மேற்குத்திக்கில் உள்ளது. இருசகோதரர்களும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுளுள்ளனர். அவர்களின் செய்தியைப் பிற்பாகத்தில் கூறுகின்றேம். ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். தக்கோலத்துக் கருகில் கிழக்குத்திக்கில் வன்னிய குலத்தில் பிறந்தாள் என்று சொல்லுவோம்.

24. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரி பவமில் லாமல்
பகையான கால னுடு பறந்தன ளென்று சொல்வோம்
சகபதி வரையப் பட்டு ஜனித்தவ ளிவளே யம்மா
தகைமயாய் நாற்ப தாண்டில் தனுர்மாதங் கண்ட மென்றேம்.

24. சுகமுள்ள குடும்பத்தை யடைந்து, தீச்செயலில்லாமல் மரண மடைந்தாள் என்று கூறுவோம். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தாள். தாயே ! ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் தாய் மார்கழி மாதத்தில் கெண்டம் நேரும்.

25. மறுஜன்மம் விரிஞ்சி தன்னில் மாதுவும் ரெட்டி வம்சம்
உறைகுவாள் சுகமுண் டாகி உத்தமி வாழ்வா ளாகும்
திருமகன் தந்தை பூர்வஞ் செப்புவோ மினிமே லாக
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

25. தாய் மறு பிறவி விரிஞ்சி நாட்டில் ரெட்டியார் மரபில் பிறந்து சுக மடைந்து வாழ்வாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லு கின்றேம், இனிமேல். அரிய வேதங்களின் முடிவில் நடனமாடும் தாயே ! கேளுங்கள்.

26. ஆலங்காட் டதற்கு மேற்கில் அணுகிய பேரூர் தன்னில்
ஏலவே தீயின் வம்சம் எய்தியே கிருஷி செய்து
நீலியு மதலை யுண்டாய் நீத்தோருக் கன்ன மீந்து
மால்பத்தி மிகவே கொண்டு வருநாளில் வினையைச் சொல்வோம்.

26. திருவாலங்காட்டுக்கு மேற்கில் உள்ள பெரிய ஊரில், வன்னிய குலத்தில் பிறந்து, விவசாயம் செய்துவந்து, மனைவி மக்களைப் பெற்று, துறவிகட்கன்னமளித்து வந்து, திருமாலிடம் பக்தி கொண்டு வாழ்ந்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

27. மறையவ ரிருவர் தாமும் விரோதமாய் மன்னர் பக்கல்
உறைந்துமே சேதி சொல்ல ஒருவன்பால் கட்டு வார்த்தை
குறைவற வின்னே சொல்லக் கூறுவான் மாயோன் தானும்
பொறையான வார்த்தை சொன்னாய்ப் பின்ஜன்மந் துணையா
[ணின்றி ;

27. இரு அந்தணர்கள் சண்டையிட்டுக் கொண்டு அரசனிடம் பிராது கொடுத்தனர். அவர்களில் ஒருவன் பக்கமாக இவன் தீர்ப்பளிக்க, அந்தணன் கூறுகின்றான். தீங்கான வார்த்தைகளை என்மீது கூறினாய். இனி ஏற்படும் மறு பிறவியில் உடன் பிறந்த சகோதரரின்றி;

28. தனியாக வாழ்வா யென்று சாற்றினான் வேதத் தோனும்
வினையது சேர்ந்த தென்றோம் வித்தக னந்தி யத்தில்
கனமுள தலங்கள் சென்று காலன்றன் பதிக்குப் புக்கு
இனிமையா யிக்கு லத்தில் எய்தினா னென்று சொன்னோம்.

28. தனியனாக வாழ்ந்து வருவாய் என்றுசாப மிட்டான், அந்தணன். அதனால் தோஷம் ஏற்பட்டது. ஜாதகனுடைய தந்தையும் தன் கடைசிக் காலத்தில் பல புண்ணிய தலங்களுக்குச் சென்று மரண மடைந்தான். மீண்டும் இப் பிறவியில் பிறந்தான் என்று சொல்லுகின்றோம்.

29. வேதியன் சாபம் போல வித்தகன் தனியாய் வாழ்வன்
ஓதுவோ முப்பான் மூன்றில் உயர் [1] மீன மாதந் தன்னில்
தீதான சுரத்தி னாலே தேகமே வாடு மென்றோம்
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

29. அந்தணனுடைய சாபம் போல் ஜாதகனுடைய தந்தை தனியாக வாழ்வான். ஜாதகன் தனது முப்பத்து மூன்றும் வயதில் பங்குனி மாதத்தில் மரணமடைவான் என்றோம். உயர்ந்த கணவனைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

30. மறுஜன்மங் கொச்சி தன்னில் வைசிய குலமு தித்துப்
பெருமையாய்ச் செட்டுச் செய்து பிரபலக் கீர்த்தி யாகித்
திருமகன் வாழ்வா னாகும் செப்பின மொழிகுன் றுவே
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

30. மறு பிறவி, கொச்சியில், வைசிய குலத்தில் பிறந்து, பெருமையுடன் வர்த்தகம் செய்துவந்து, பிரபலமான கீர்த்தியடைந்து வாழ்ந்து வருவான் கூறிய வார்த்தைகள் தவறா. அரிய வேதங்களின் முடிவில் நடனமாடும் தேவியே! கேளுங்கள்.

---

[1] பங்குனி

31. ஜாதகன் பூர்வஞ் சொல்வோந் தாமிர வருணி தன்னில்
ஓதுவார் குலமு தித்து உயர்வோர்கள் பக்தி கொண்டு
மாதுவு மதலே யுண்டாய் அறமதி லிச்சை யாகி
மேதினில் பவமில் லாமல் வித்தகன் மரண மாகி;

31. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். **தாமிர பரணியில், ஓதுவார் குலத்தில்** பிறந்து, தெய்வபக்தி கொண்டு, மனைவியை யும் புத்திரர்களையும் அடைந்து, தருமம் செய்வதில் விருப்பமுள்ளவனாகி, தீவினைகள் இல்லாமல் மரணமடைந்து ;

32. சிரநான்கோன் வரையப் பட்டுஜனிப்பனு மிந்தப் பாலன்
உரைக்கின்றோ மிவனின் யோகம் உதித்தநாள் முதலே யாகப்
பிறைபோலச் செல்வ மோங்கும் பூமியுஞ் சேரு மென்றோம்
அரசர்பூ சிதமு மாகும் அவனியில் புகழு மேற்பன்.

32. பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தவன் என்று சொல்லுவோம். இவனுடைய யோகத்தைக் கூறுகின்றோம். பிறந்தநாள் முதல் வளர்பிறை போலச் செல்வம் பெருகும். பூமியும் சேரும் என்று சொன்னோம். அரசரால் மதிக்கப்படுவான். உலகில் கீர்த்தி யடைவான்.

33. அரசரால் சீவ னங்கள் அணுகிடுங் கல்வி ரண்டு
பெருகிடு மிவனுக் கேதான் பிரபலக் கீர்த்தி யேற்பன்
குறையென்றோர்க் குதவி செய்வன் குவலயம் நல்லோ னவன்
உறன்முறை மெச்ச வாழ்வன் உத்தமி கேட்டி டாயே.

33. அரசாங்க உத்தியோகம் ஏற்பட்டு ஜீவித்து வருவான். இருவிதமான கல்வி கற்பான். பிரபலமான புகழடைவான். குறைப்பட்டவர்கட்கு உபகாரம் செய்வான். உலகில் நல்லவன் என்ற பெயரெடுப்பான். பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். தாயே ! கேளுங்கள்.

34. பரிவண்டி யுடைய னாகும் பகைவரை நசிக்கச் செய்வன்
அரிபக்தி பூண்பா னாகும் அநேகபாக் கியமுஞ் சேர்ப்பன்
திருப்பணி செய்வா னாகும் சேதுவின் பதிக்குச் செல்வன்
பறைபள்ளு முடைய னாகும் பார்வதி கேட்டி டாயே.

34. குதிரை வண்டி உடையவன். விரோதிகளை ஒழிக்க வல்லவன். திருமாலிடம் பக்தி யுள்ளவன். பலவிதமான பாக்கியங்களை அடைவான். ஆலயத் திருப்பணி செய்வான். சேதுவுக்குச் சென்று நீராடுவான். பள்ளுப் பறைகள் உள்ளவனுவன். பார்வதி தேவியே ! கேளுங்கள்.

35. தந்தைக்குப் புகழு மெய்துஞ் ஜாதகன் தன்னா லேதான்
பிந்திய பாகந் தன்னில் பேசுவோம் விவர மாக
எந்தையே வறுபா னேழில் ஆடிமா தத்தி லேதான்
இந்தவ னுடல மேகும் இயம்பின மொழிகுன் றுவே.

35. ஜாதகனைப் பெற்ற தந்தை, இந்த ஜாதகனுல் கீர்த்தியடைவான். அதைப் பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றேம். தாயே! ஜாதகன் தனது அறுபத்தேழாம் வயதில் ஆடிமாதத்தில் மரணமடைவான். கூறிய வார்த்தைகள் தவரு.

36. ஜயமுனி யிதனைக் கேட்டுத் திடுக்கென வுரைக்க லுற்ருர்
நயமுடன் வயது தீர்க்கம் நாட்டினீ ரெட்டோன் ஏழில்
வியமுட னிருப்ப தாலே வித்தகன் நாலாண் டுக்குள்
பயமுண்டு கண்ட நேரும் பராசருந் தடுத்துச் சொல்வார்.

36. ஜயமுனிவர் இதைக் கேட்டுத் திடீரென்று சொல்லுகின்ருர். ஜாதகனுக்கு வயது தீர்க்கம் என்று எப்படிக் கூறுகின்றீர்? எட்டாம் வீட்டுக்குரிய சனி ஏழாம் வீட்டில் (அவ் வீட்டிலிருந்து விரயஸ்தானத்தில்) இருப்பதால் ஜாதகன் பிறந்த நான்கு வருஷத்துக்குள்ளாகவே கண்டம் ஏற்பட்டு மரணம் அடைவான். பராசரமுனிவர் மறுத்துச் சொல்லுகின்ருர்.

37. மதிபுத னிரண்டில் நிற்க மழைக்கோளுஞ் ஜன்மந் தங்க
மதிதசை ஜாத கற்கு மாரகம் நேரு மென்றேம்
இதுமத்தில் சாத கற்கு எய்தாது மார கங்கள்
அதிகமாய்ப் பிணிநா லாண்டில் அணுகிடும் நிவிர்த்தி யாகும்.

37. சந்திரன் புதன் இவர்கள் இரண்டில் இருப்பதாலும், சுக்கிரன் ஜன்மத்தில் இருப்பதாலும், சந்திரமகாதசையில்தான் ஜாதகனுக்கு மரணம் ஏற்படும் என்றேம். இதற்கிடையில் மரணம் ஏற்படாது. நான்காம் வயதில் அதிகமான நோய் ஏற்பட்டு நிவிர்த்தியாகும்.

38. பலவிதப் பிணிபத் தாண்டில் பெருகிடும் நிவிர்த்தி யாகும்
நிலைமையாய்ப் பொன்னேன் பத்தை நேராகப் பார்ப்ப தாலே
உலகினில் தாய்தந் தைக்கே உத்தமன் கருமஞ் செய்வான்
மலையிறை மகளே யாங்கள் வழுத்திய மொழிகுன் ருவே.

38. ஜாதகனுக்குப் பத்தாம் வயதில் பற்பல நோய்கள் ஏற்பட்டு நீங்கும். குரு பத்தாமிடத்தைப் பார்ப்பதால் தன் தந்தையருக்கு இந்த ஜாதகனே இறுதிக் கடன்கள் செய்வான். மலையரசனின் புதல்வியே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவரு.

39. அன்னிய தேசந் தன்னில் அவன்சில நாட்கள் வாசம்
மன்னரா லதிகா ரங்கள் மருவிடுஞ் சொல்வீர் காலம்
தன்னிலே மூவே ழாண்டு மேலேதான் ராஜ யோகம்
சொன்னனே வன்பா ணுண்டுஞ் சுகமுடன் சீவிப் பானும்.

39. ஜாதகன் அன்னிய நாட்டில் சில காலம் வசித்து வருவான். அரசாங்க உத்தியோகங்கள் ஏற்று அதிகாரம் செலுத்தும் காலம் எப்போது? கூறுங்கள். ஜாதகனுடைய இருபத்தோராம் வயதுக்குமேல் ராஜயோகம் ஏற்படும் என்று சொன்னேம். ஐம்பதாம் வயது வரையில் சௌக்கியமாக வாழ்ந்து வருவான்.

40. ஜனித்திடுங் காலந் தன்னில் சனிதசை யீரஞ் சாண்டும்
குனித்திடு திங்க ளொன்றுங் கூறுவோம் பலனை யாங்கள்
வினைவருஞ் ஜாத கற்கு விருத்தியாந் துணைவர் தாமும்
கனமுள விராச யோகங் கிட்டிடு மென்று சொல்வோம்.

40. ஜாதகனது ஜனன காலத்தில் சனிமகாதசையில் பத்து வருடங்களும் ஒரு மாதமும் மீதமாகும். அக்காலத்திய பலனைச் சொல்லுவோம். தீவினைகள் நேரும். ஜாதகனுக்குச் சகோதர விருத்தியுண்டு. ராஜயோகம் கிட்டும் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகம் 96

1. பொன்புதன்சேய் வெள்ளிதனு பிறைதேளில் சனிகோலில
கன்னிபணி கேதுகெண்டை கனல்மானில்—மன்னு ஜன்மம்
மிதுனமே யாக விளம் புவீர் பலனெவ்வா
றிதுவாண்பால் ஜனனமுறு மாம்.

1. குரு புதன் செவ்வாய் சுக்கிரன் தனுசிலும், சந்திரன் விருச்சிகத்திலும், சனி துலாத்திலும், ராகு கன்னியிலும், கேது மீனத்திலும், சூரியன் மகரத்திலும் இருந்து, இலக்கினம் மிதுனமானல், பலனெப்படி, என்று கூறுங்கள். இஃது ஆண் மகனின் ஜாதகம்.

| | | | |
|---|---|---|---|
| கேது | | | லக்கினம் |
| | இராசி சக்கரம் | | |
| சூரியன் | | | |
| குரு புதன் செவ்வாய் சுக்கிரன் | சந்திரன் | சனி | ராகு |

2. இல்லங்கீழ் மேலாக எமன்வாசல் மேற்கில்தந்தி
வல்வினையைத் தீர்க்கு [1]மருகுமே—புகல்கின்றோம்
கன்னிதென் பால்வருங் கல்மலைக ளோங்கும்
துன்னுசின வர்க்கமென் றோம்.

2. ஜாதகன் பிறந்த வீடுகிழக்கு மேற்கான தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது. மேற்கில் விநயகர் ஆலயமும் பெரும் தீவினைகளைத் தீர்க்கும் அருக தேவனும், தெற்குத் திக்கில் அம்மன் கோயிலும் கல் மலைகளும் உள்ள இடம் அது. இவன் தூய சமண குலத்தில் தோன்றிய என்றோம்.

3. தோன்றுசுத ரன்னைதந்தை துணைவர்கள் களத்திரமு
மீன்றசுதர் யோகம் இயம்புவோம்—தோன்றுமட்டும்
தந்தைதுணை யாஞென்று சாற்றுகின்றோம் பின்துணையா
யந்தவன்வே றுவனென் றோம்.

3. ஜாதகனுடைய தாய் தந்தையர் உடன்பிறந்தவர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தைக் கூறுகின்றோம். தந்தைக்குச் சகோதரன் ஒருவன் பிறப்பான். அவன் பின் பிறந்தவன் என்றும் தனியாகச் சென்று விடுவான் என்றும் சொல்லுவோம்.

---

[1] அருக தேவன்.

4. மாநிறமாம் வாய்வுமுளன் மாநிலத்தால் சீவிப்பன்
தேன்மொழியாள் பாரிரண்டு தீர்க்கமுளன்—ஊனதந்தம்
சுதர்தோன்றித் தீதாந் தோகைசொல்லைத் தான்கடவான்
நிதஞ்சீலன் வறுமையிலா னே.

4. மாநிற முடையவன். வாயுசரீர முடையவன். விவசாயத்தால் சீவனம் நடத்துவான். இனிய வார்த்தையுள்ள மனைவியர் இருவர் நீண்ட ஆயுளுள் ளவர்கள். பற்கள் ஊனமடைந்துள்ளன. புத்திரர் தோன்றி நிலையார். தன் மனைவியின் வார்த்தையை மீருதவன். நல்லொழுக்க முள்ளவன். தரித்திர மில்லாதவன்.

5. சுதர்காணு வண்ணஞ் செப்புந் தவமுனியே
அதிபன் பூர்வவினை யால்மரிக்கும்—அதுயெவ்வாறு
பின்பாகஞ் சொல்வோம் பேசுவோந் தந்தைகுணம்
அன்னைநான் கென்றுரைப்போம் யாம்.

5. புத்திரர் தோன்ருத காரணம் கூறுங்கள் முனிவரே! ஜாதகனுடைய தந்தையின் முற்பிறப்பு வினையால் குழந்தைகள் இறந்துபோம். அஃது எங்ஙனம் என்று பிற்பாகத்தில் சொல்லுகின்ரேம். தந்தையின் குணத் தைச் சொல்லுகின்ரேம். அவனுக்கு நான்கு தாய்மார்கள் உண்டு என்று சொல்லுவோம்.

வேறு

6. கடைமாது தனக்குப் புத்ரன் கலப்பனு மாநி றத்தன்
தடைசொலான் பெரியோ ருக்குச் சாந்தவான் கிருஷி செய்வன்
உடன்பழி யேற்கா னுகும் ஒண்டொடி நேய னுவன்
விடவுரை பகரா னுகும் வீண்வம்பு புகலா னுமே.

6. இவன் தனது கடைசித் தாய்க்குப் பிறந்தவன். மாநிற முள்ளவன். பெரியோர் வார்த்தைகட்கு மறு வார்த்தை சொல்லாதவன். சாந்தமுள்ள வன். விவசாயம் செய்து வருவான். பழி அடையாதவன். மனைவியிடம் நட்பு கொண்டுள்ளவன். தீய வார்த்தைகள் பேசாதவன். வீண் வம்பு பேசாதவன்.

7. மூலச்சூடுடைய னுகு முனிவதை வெளிக்காட் டாதான்
பால்பாக்ய விருத்தி யுள்ளான் பகையென்று மனத்தில் வையான்
ஞாலங்கள் விருத்தி செய்வன் நன்மனங் கவடு மில்லான்
காலத்தை யறிந்து ரைப்பான் கஞ்சமாம் ரேகை யுள்ளான்.

7. மூலச்சூட்டு நோயுள்ளவன். கோபத்தை வெளியிடாதவன். புத்திர பாக்கியமுடையவன். விரோதம் பாராட்டாதவன். பூமிகளைப்பெருக்குவான். மனத்தில் கபடமில்லாதவன். வருங்காலத்தை அறிந்து கூறுவான். பத்மரேகை யுள்ளவன்.

8. நீலிமார் மோகங் கொள்வன் நேமியில் சல்யங் கொள்ளான்
சாலவே துணைசொல் தட்டான் சதுஷ்பாதம் விருத்தி செய்வன்
ஏலவே பணையேர் விருத்தி இடருகள் சிலர்க்குத் தீர்ப்பன்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தஇம் மொழிகுன் றுவே.

8. பெண்களிமீது மோகம் கொள்வான். உலகில் கடன் படாதவன். தன் மனைவி வார்த்தையைத் தட்டாதவன். கால் நடைகள் விருத்தியுடையவன். பண்ணை ஏர் முதலியன விருத்தியுள்ளவன். சிலருக்குற்ற துன்பங்களைத் தீர்த்து வைப்பான். விஷத்தையுண்ட நீலகண்டனின் தேவியே! கூறியவை தவரு.

9. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே யுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அழகுளா னுயர மில்லான்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பான் வாத தேகி
முன்கோபம் வெகுளி யாவன் மூலச்சூ டுடைய னாமே.

9. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுவேன். அழகுள்ளவன். உயரமில்லாதவன். தன் வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று சாதிப்பான். வாத சரீரமுடையவன். முன்கோப முடையவன். வெகுளி. மூலச்சூடுடையவன்.

10. சிரமுக வடுவு முள்ளான் செய்ந்நன்றி மறவா னாகும்
கரிபோல நடையு மாவன் கடவுளர் பக்தி பூண்பன்
தடைசொலான் துணைவ னுக்குச் சாந்தமு முடைய னாகும்
கடன்கொள்வன் நிவிர்த்தி செய்வன் கரமதில் விஷ்ணு ரேகை.

10. தலை முகம் இவைகளில் வடு உள்ளவன். செய்த உபகாரத்தை மறவாதவன். யானையைப்போல் கம்பீரமாக நடப்பவன். தெய்வ பக்தியுள்ளவன். தன் சகோதரனது வார்த்தைக்கு எதிர்வார்த்தை கூறுதவன். சாந்தமுள்ளவன். கடன் படுவான். அதைத் தீர்த்து விடுவான். கையில் விஷ்ணுரேகை யுள்ளவன்.

11. தந்தைதாய்க் கருமஞ் செய்வன் தாழ்விள மனத்த னாகும்
வந்தவர்க் கன்ன மீவன் மருமமுங் கொஞ்ச முண்டு
முந்திநாள் வறுமை காணான் மேவிடுந் துணைவர்........
வந்ததி லாண்பா லொன்று மங்கையவ் வாறு தீர்க்கம்.

11. தன் தாய் தந்தையருக்குக் கருமம் செய்வன். இளகிய மனத்தினன். தன்னிடம் வந்தவர்கட் கன்னமளிப்பவன். சிறிது ரகசியமு முள்ளவன். ஆதி காலத்தில் வறுமையில்லாதவன். ஏற்பட்ட சகோதரர்............ அவர்களில் ஒரு சகோதரியும் ஒரு சகோதரனும் தீர்க்காயுசுள்ளவர்கள்.

12. பின்துணை யாண்பா லாகப் பேசுவோ மவன்தன் சேதி
சொன்னசொல் காப்பா னாகுஞ் சகராசர் பேட்டி கொள்வன்
.................அறுமுகர் பக்தி கொஞ்சம்
பன்னியே பேச வல்லன் பாவையர் மோகங் கொள்வன்.

12. ஜாதகனுடைய இளைய சகோதரன் ஒருவன் உண்டென்றோம். அவனுடைய சேதியைப் பின் பாகத்தில் கூறுவோம். சொன்ன சொல்லைக் காப்பவன். அரசரைப் பேட்டிக் காண்பவன்.............ஆறுமுகக் கடவுளிடம் பக்தியுள்ளவன். பன்னிப் பன்னிப் பேசுபவன். பெண்கள்மீது மோகம் கொள்ளுவான்.

13. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பால் ரண்டு
நாரி...............................ன்
சீரிய குணமில் லாதான் சிறுத்தோரை யாத ரிப்பன்
காரிய சமர்த்த னாகுங் காலாட்க ளுடைய னாமே.

13. மனைவி யொருத்தியேயாகும். இரு புத்திரர்கள் தோன்றுவர்.... ..................................கோபங்கொள்ளும் குணமில்லாதவன். கஷ்டமடைந்தவரை ஆதரித்து வருவான். காரியம் செய்வதில் சாமார்த்திய முள்ளவன். ஏவலாட்கள் உடையவன்.

14. வயதுமே தீர்க்க மெய்து மா நிலம் விருத்தி செய்வன்
........................கேளாய்..........
தயையுள மனத்த ளாகுந் தன்வரன் மேல்பால் நேரும்
வியமுள மனத்த ளாகும் விளங்காது சுதரா னுந்தான்.

14. நீண்ட வயதுள்ளவன். விளை நிலங்களைப் பெருக்குவான். தயை நிரம்பிய மனத்தினள் ..................... ...... மேற்குப்பக்கத்திலிருந்து கணவன் வாய்ப்பான். தீய மனத்தினள். புத்திரர் விளங்கார்.

15. கன்னிகை யிரண்டு நேருங் கனக்காது மூத்தோன் தானும்
பின்துணை விருத்தி யாகும் பேசுவோம் பின்பால் சேதி
உன்னதக் குடும்பஞ் சேர்வன் உரைக்கின்றோம் விவரம் ரண்டில்
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோ மிருபான் ரண்டில்;

15. இரு புத்திரிகள் தோன்றுவர். முதலில் தோன்றும் குழந்தை நிலையாது. பின் பிறந்த சகோதரன் விருத்தியாகும். பிற்பாகத்தில் விபரம் கூறுகின்றோம். உயர்ந்த குடும்பத்தை யடைவான். இரண்டாம் பாகத்தில் விபரமாகச் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அஃது இருபத்தோராம் வயதில் ;

16. மாதுவுங் குடகில் நேரு மவன்துணை புத்ரி நேரும்
ஓதுவோ மவள்கு ணத்தை உள்மனங் கவடு மில்லாள்
பாதக மனமில் லாதாள் பணிகளு மதிக முள்ளாள்
காதலி யோக சாலி கழறுவோம் வயது தீர்க்கம்.

16. மனைவியும் மேற்குத் திக்கிலிருந்து வாய்ப்பாள். அவனுடைய சகோதரியின் புத்திரியே மனைவியாக வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். மனத்தில் கபடமில்லாதவள். தீயமனமில்லாதவள். அதிக ஆபரணங்களுள்ளவள். அதிருஷ்ட முள்ளவள். நீண்ட வயதுள்ளவள்.

### மனைவியின் ஆயுளுக்குரிய கிரகநிலை

17. எப்படி வயது தீர்க்கம் இயம்பின காரணஞ் சொல்வீர்
ஒப்புட னேழோ ராட்சி உறைந்ததால் தீர்க்கஞ் சொன்னோம்
அப்படி நடவா தாகும் அம்புலி வாறில் நீசம்
மெய்ப்புட னாலில் ராகு மேவியே விருப்ப தாலே ;

17. ஜாதகனுடைய மனைவிக்கு வயது தீர்க்கம் என்று எப்படிச் சொல்லுகிறீர்கள்? ஏழாம் வீட்டுக்குரிய குரு ஆட்சியாக தனுசில் இருப்பதால் சொன்னோம். அப்படி நடவாது. ஆறாம் வீட்டில் சந்திரன் நீசமாக இருப்பதாலும், நாலில் குரு இருப்பதாலும்;

18. பாரியு மிரண்டே யாகும் பகருவீர் சங்கை தன்னைக்
கூறுவோ முதல்ம னைதான் குறைதலை மாரி யாலே
சேருவாள் கால னோடு சேர்ந்திடு மறு மனைதான
தீரமாய்ச் சுதர்கள் தோடஞ் செப்புவோ மிவனுக் கேதான்.

18. இரு மனைவியர் உண்டு என்றோம். அதற்குக் காரணம் சொல்லுங்கள். ஜாதகனுடைய முதல் மனைவி அம்மை நோயால் மரணமடைவாள். இரண்டாம் மனைவி வாய்ப்பாள். திண்ணமாகப் புத்திர தோஷம் உண்டு என்று சொல்லுவோம்.

### புத்ரபாவத்திற்குரிய கிரகநிலை

19. காரணம் யாது வென்னக் காரியு மஞ்சில் தங்க
ஈரஞ்சில் கேது தங்க இயம்பினோ மந்தச் சங்கை
காரியு முச்ச மாகக் கனகனு மேழில் தங்கத்
தீரமாய்ச் சுதர்கள் தோன்றுஞ் ஜனிக்கினுந் தீதே யாமே.

19. காரணம் என்ன வென்று கூறுங்கள். சனி ஐந்தாம் வீட்டில் (புத்திரஸ்தானத்தில்) இருப்பதாலும், கேது பத்தாம் வீட்டில் இருப்பதாலும், அங்ஙனம் சொன்னோம். சனி உச்சனாக இருப்பதாலும், குரு ஏழாம் வீட்டில் இருப்பதாலும், திண்ணமாகப் புத்திரர்கள் தோன்றும். ஆனால் நிலையா.

20. விதங்களைச் சொல்லு மென்ன வித்தகன் பூர்வந் தன்னில்
அதனமாய் வினைகள் செய்தான் அடைந்தது வந்தத் தோடம்
அதிபன்தன் வினைக ளெவ்வாறு அறிவிப்பீர் விவர மாக
முதல்தலம் பிருதிவி தன்னி லுதித்தனன் சௌராட்ர வம்சம்.

20. அதற்குரிய காரணங்களைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அதிகமான தீவினைகளைச் செய்தான். அந்தத் தோஷம் ஏற்பட்டது. தீவினைகளை விபரமாகக் கூறுங்கள். புண்ணிய தலமாகிய காஞ்சிபுரத்தில் சௌராஷ்டிர வமிசத்தில் தோன்றினான்.

### கோவில் மரத்தை எடுத்துக்கொண்டது

21. பிறந்துமே நெசவு செய்து புத்திரர் மனைவி யுண்டாய்க்
குறைவிலா வாழு நாளில் கூறுவோ மூழி தானும்
அரவணிக் கன்னி கோட்டம் ஆனுகிய விருட்சந் தன்னைத்
தறிபடச் செய்து வின்னேன் தன்வேலைக் குரித்தாக் கொண்டான்.

21. பிறந்து, நெசவுத் தொழில் செய்து வந்து, மனைவிமக்களை யடைந்து, குறைவில்லாமல் வாழ்ந்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். பாம்பை மாலையாகக் கொண்டமாரியம்மன் கோயிலிலுள்ள ஒரு மரத்தை இவன் வெட்டித் தன் வேலைக்கு வைத்துக்கொண்டான்.

22. மாரியின் தோடந் தானு மருவிற்று விவனுக் கேதான்
வேறொரு வினையைச் சொல்வோம் வேதியர் மதலைக் காகத்
தீரமாய்ப் பணங்கள் வேண்டச் செம்பொன்னுந் தந்து வின்னோன்
பாரினில் முறியும் வாங்கிப் பாரினில் சிலநாள் சென்று;

22. மாரியம்மனுடைய தோஷம் ஏற்பட்டது. இந்த ஜாதகனுக்கு வேறு ஒன்றும் சொல்லுகின்றோம். ஓர் அந்தணன் தன் குழந்தைக்கு மணம் செய்யவேண்டி, பொருளைக் கேட்க, இவன் பொருளைக் கொடுத்துவிட்டு பத்திரத்தை எழுதி வாங்கிக்கொண்டான். சிலகாலம் சென்றபிறகு;

23. தனமதைக் கேட்கும் போது தருகிறேன் பொருள்க ளென்னச்
சினங்கொண்டு அரசர் தம்பால் செப்பியே முறியைக் காட்டத்
தனக்கு ஈ டதுவாய்த் தானே சதுர்மறை யில்லங் கொண்டான்
கனமுள மறையோன் றானுங் கழறுவான் சாபந் தானும்.

23. பணத்தைக் கேட்கும்போது, அந்தணன் தருகிறேன் என்று சொல்லும்போதே, கோபங்கொண்டு அரசரிடம் சென்று, பத்திரத்தைக் காட்டி, தனக்குப் பணம் கொடுக்காத அந்தணனுடைய வீட்டைக் கைக் கொண்டான். கோபமுற்ற அந்தணன் சாபமிட்டான்.

24. இல்லமுங் கொண்ட பாவி இனிவருஞ் ஜன்மந் தன்னில்
வல்லியு மிருவ ராயு மைந்தர்கள் தோட மெய்தும்
சொல்லியே சென்று றென்றேந் தொடர்ந்தது வந்தத் தோடம்
வல்லவ னந்தி யத்தில் மனைவியு மரண மாகி ;

24. என்னுடைய வீட்டை அபகரித்த பாவியே! உனக்கு இனி ஏற்படும் மறுபிறவியில் இரு மனைவியரையும் புத்திர தோஷத்தையுமடைந்து வாழ்வாய் என்று கூறிச்சென்றான். அந்தத் தோஷம் தொடர்ந்தது. ஜாதகனும் தன் கடைசிக்காலத்தில் மனைவியும் இழந்து;

25. மாலவன் பசனை செய்து மறலியின் பதிக்குப் புக்குச்
சீலமா மருகர் வர்க்கஞ் ஜனித்தவ னிவனே யென்றோம்
சாலவே மாரி தோடஞ் சதுர்மறை சாபந் தானும்
கோலமாய் நேரு மென்றேங் கோதையு மிருவ ராகும்.

25. திருமாலின் நாமாவளியைப் பஜனை செய்து, மரணமடைந்து, நல்லொழுக்கமுள்ள சமண குலத்தில் பிறந்தான் இவன், என்று சொல்லுகின்றோம். மாரியம்மன் தோஷமும் அந்தணனுடைய சாபமும் சேர்ந்து தீங்காக நேரும். இரு மனைவியர் ஏற்படுவர்.

26. சுதர்களுங் தோட மெய்துஞ் செப்புவீ ரந்தச் சங்கை
சதுர்மறை சாபத் துக்குச் சாந்தியுங் கூறேம் யாங்கள்
மதலைகள் விருத்திக் கேதா னறிவிப்பீர் கிரியை யொன்று
அதற்கொரு கிரியை சொல்வோம் அந்நக ரருக ருக்கு ;

26. புத்திரர்கட்குத் தோஷமுண்டாகும். அது நீங்கச் சாந்தி யொன்று கூறுங்கள். அந்தணனுடைய சாபத்துக்கு நாங்கள் சாந்தி கூறவேமாட்டோம். புத்திர விருத்திக்கு ஒரு சாந்தி சொல்லுங்கள். அதற்கு ஒரு சாந்தி சொல்லுகின்றேம். அவ்வூரில் உள்ள அருக தேவருக்கு ;

27. தினமிரு தீபம் வைத்துத் திங்களோர் சதுர்த்தசி நோன்பு
கனமுடன் விரதங் கொள்ளக் காளைகள் விருத்தி தீர்க்கம்
சினமென்று செய்யா ளுகில் ஜனித்தசேய் நசிக்கு மென்றேம்
தனயனும் விரதங் கொள்ளச் சந்ததி யாண்பா லொன்றும் ;

27. தினந்தோறும் இரு தீபங்கள் வைத்து, மாதாமாதம் ஒரு சதுர்தசி திதியன்று நோன்புகள் இருந்து விரதம் மேற்கொண்டால், புத்திரர்கள் விருத்தியாகும். கோபங்கொண்டு செய்யாவிட்டால் பிறக்கும் குழந்தைகள் மரித்துவிடுவர். இவன் விரதம் ஏற்றல் புத்திரன் ஒருவனும் ;

28. மதிமுகப் பெண்பால் ரண்டு வளர்கின்றேந் தீர்க்க மாக
அதுவுமே நான்கு வைந்து ஆண்டுமே ஜனனந் தீர்க்கம்
எதுகாலம் விரதம் பூண இயம்புவீர் விபர மாக
அதிபந்த னேழஞ் சின்மேல் அறைகின்றேம் விரதந் தன்னே.

28. அழகிய பெண்கள் இருவரும் பிறந்து நீண்ட ஆயுளுடன் இருப்பர். அவைகளுள் நான்காவது ஐந்தாவது ஆறுவது தீர்க்கமாகும். எந்தக் காலத்தில் நோன்புகள் இருக்கவேண்டும் ? விபரமாகச் சொல்லுங்கள். ஜாதகனுடைய முப்பத்தைந்தாம் வயதுக்குமேல் விரதம் இருக்கவேண்டும்.

29. அன்னைமாஞ் சிவப்ப ளாகும் ஆளன்தன் மனம்போல் வாழ்வள்
சொன்னசொல் சுகமே யெய்துந் தேவதா விரதம் பூண்பள்
தன்துணை காணு ளாகுந் தாயது விரண்டு வென்றேம்
முன்தாய்க்குத் தோன்று மாது வுதித்தக்கால் தென்கீ ழாமே.

29. ஜாதகனுடைய தாய் மாநிற முடையவள். தன் கணவன் மனத்திற்கு ஏற்ப வாழ்வாள். பேசும் வார்த்தைகள் சுகமாகவே யுள்ளன. தெய்வபக்தி யுள்ளவள் உடன் பிறந்தவர்கள் இல்லாதவள். இரு தாய் மார்கள் உள்ளவள். முதல் தாய்க்குப் பிறந்தவள் இவள். இவள் பிறந்த வீடு தென்கிழக்கில் உள்ளது.

30. பந்துவுக் கினிய ளாகும் பரவுப் காரஞ் செய்வள்
முன்ஜன்ம மலைநா டதனில் வுதித்தனள் கௌரி வம்சம்
தன்சுதர் வரனு முண்டாய்த் தரணியில் வறுமை யின்றி
அன்னவள் வாழு நாளில் அறைகின்றே மூழி தானே.

30. தன் சுற்றத்தாருக்கு இனியவள். பிறருக்கு உதவி செய்பவள். முதல் பிறவி மலைநாட்டில் கௌரிகர் வம்சத்தில் பிறந்தாள். புத்திரன் கணவனையடைந்து, உலகில் வறுமையன்னியின்றி வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

31. அடியவர் மாலைக் காலம் அன்னமு மிவளைக் கேட்கக்
கடிந்துமே வார்த்தை சொல்லிக் காணாது வன்ன மென்ன
இடிபோல வார்த்தை சொன்னாய் இனிவருஞ் ஜன்மந் தன்னில்
உடன்துணை காணா தாகி உதித்திடுஞ் சுதர்கள் பாதி.

31. ஒரு சிவனடியார் அந்தி வேளையில் இவளை அன்னம் கேட்கும்போது, இவள் கடிந்து வார்த்தை சொல்லி, அன்னமில்லை என்று கூறி, இடிபோல் நடுங்கும்படி பேச, சிவனடியார் சொல்லுகின்றார். உனக்கு இனி ஏற்படும் பிறவியில் சகோதரர்கள் இரார் பாதி குழந்தைகள் நிலையா.

32. ஏகிடு மந்தி யத்தில் எய்திடும் வினைய னேகம்
தோகையுஞ் சிறையாய் வாழ்ந்து செல்லுவாய் கால னூடு
கோபமாய்ச் சொல்லிச் சென்றாள் தோகையு மந்தி யத்தில்
பாகமா யுணவு மின்றிப் பறந்தனள் கால னூடு.

32. இடைக் காலத்தில் மரித்துவிடும். அநேகம் தீவினைகள் ஏற்படும். நீயும் சிறையில் வாழ்வதுபோல் வசித்து வந்து மரணமடைவாய், என்று கோபத்துடன் கூறிச் சென்றார். தாயும் தன் கடைசிக்காலத்தில் சாப் பாட்டுக்கு வகையில்லாமல் இறந்தாள்.

33. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தன ளருகர் வம்சம்
உறைந்திடு மதிதி சாபம் உதித்தசே யாதி தீதாம்
மருவிடு மன்னை ரண்டு மத்தியில் விதவை யாவள்
வருந்துணை காணா ளாகு ம்றைகின்றோ மிவள்பின் ஜன்மம்.

33. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு ஜைன குலத்தில் பிறந்தாள். அந்தணனின் சாபமும் ஏற்பட்டு அதனால் முதலில் தோன்றும் குழந்தைகள் நிலையா. இரு தாய்மார்கள் ஏற்படுவர். இவளும் இடைக் காலத்தில் கைம்பெண் ஆவாள். உடன் பிறந்தவர்கள் இல்லாதவள். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம்.

34. பிருதிவிக் கருகில் மேற்கில் பிறப்பளா மறைக்கு லத்தில்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்
உரைக்கின்றோந் தந்தை பூர்வங் கம்பர்வா ழரங்கந் தன்னில்
நிறைகுல . . . . . . . . . . .

34. காஞ்சீபுரத்துக்கருகில்,மேற்குத் திக்கில் அந்தண குலத்தில்தோன்றி, இலக்குமி விலாசம் அடைந்து, செல்வியாக வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவரங்கத்தில் . . . . .

35. அறபதி விச்சை யுண்டாய் அதிதிகட் கன்ன மீந்து
திருமகன் பவமில் லாமல் சென்றனன் காலனூடு
பிரமனு லிக்கு லத்தில் பிறந்தன னிந்தப் பாலன்
குறைவிலாக் குடும்பி யாகி . . . . . .

35. தருமம் செய்வதில் விருப்பமுள்ளவனுகி, விருந்தினர்கட்கு அன்ன மளித்து வந்து, தீசெயல்களில்லாமல் வாழ்ந்து மரணமடைந்தான். மீண்டும் பிரம தேவனுல் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்து, குறைக ளில்லாத குடும்பத்தவனுகி . . . .

36. இருபது மண்டு வாண்டில் எழிலானி மாதந் தன்னில்
வருங்கண்டந் தந்தைக் கென்றே மறுஜன்மந் தணிகை தன்னில்
அருமறைக் குலமு திப்பான் அரசர்பூ சிதமு மாவன்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

36. ஜாதகனுடைய இருபத்திரண்டாம் வயதில் ஆனி மாதத்தில் தந்தை மரணமடைவான். அவன அடுத்த பிறவியில் அந்தண குலத்தில் பிறந்து, அரசரால் மதிப்படைந்து வாழ்வான். விஞயகரைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

37. ஆறுறு வாண்டு தன்னில் அழகிய தேளின் மாதம்
தீரமா யன்னை கண்டஞ் செப்பின மொழிகுன் றுது
கூறுவோ மறுபா னைந்தில் [1]கூனிமா தத்தி லேதான்
மாரன்தன் னுடல மேகு மறைகின்றேம் பின்ஜன் மத்தை.

37. ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் கார்த்திகை மாதத்தில் தாய் மரணமடைவாள். கூறியது தவறுது. ஜாதகன் தனது அறுபத்தைந்தாம் வயதில் பங்குனி மாதத்தில் மரணமடைவான் என்று சொல்வோம். மறு பிறவியைக் கூறுகின்றேம்.

38. கோங்குநா டதனி லேதா னுதிப்பனு மிக்கு லத்தில்
தீங்கிலாக் குடும்பி யாகித் திகம்பரன் தனைப்பூ சிப்பன்
ஆங்கவ னிச்சென் மத்தில் அருளுவோம் யோகச் சேதி
வாங்கிடான் தந்தைக் கேதான் மாநிலம் விருத்தி செய்வன்.

38. கொங்கு நாட்டில் இதே குலத்தில் பிறந்து, தீமைகளில்லாத குடும் பத்தை யடைந்து, சிவபெருமானைப் பூசித்து வருவான். அவனுக்கு இப் பிறவியில் ஏற்படும் யோகத்தைச் சொல்லுகின்றேம். தந்தையின் அந்தஸ் துக்குக் குறையாதவன். விளைநிலங்களைப் பெருக்குவான்.

39. அன்பது வாண்டு மட்டும் அவன்துணை யொன்றுய் வாழ்வன்
துன்பங்க ளுடைய னுகுந் துணைவர்க்கு முப்பா னேழில்
மன்னரால் செட்டுச் செய்வன் மருவிடுந் தனங்கள் தாமும்
சந்திரன் பிறைபோல் யோகந் தங்கிடு மீரா றுண்டும்.

---

[1] பங்குனி.

39. ஜாதகன், ஐன்பதாம் வயது வரையில் தன் சகோதரனுடன் ஒன்று கூடி வாழ்ந்து வருவான். துன்பங்களை அடைவான். சகோதரனுக்கு முப்பத்தேழாம் வயதில் அரசாங்க உதவியால் வர்த்தகம் செய்து வருவான். செல்வங்கள் பெருகும். பிறைச்சந்திரனைப்போல் யோகம் வளரும். ஜாதகனுடைய பன்னிரண்டாம் வயது வரை ;

40. வறுமையெப் போதுங் காணன் மாநிலம் விருத்தி செய்வன்
பெருமையும் புகழு மேற்பன் புத்திரர் தம்மால் யோகம்
குறையின்றி வாழ்வா னுகுங் குறித்தன முப்பா னெட்டில்
வருஞ்சுத ராண்பா லாக வரைகின்றேம் விசேட யோகம்.

40. ஒரு காலத்திலும் வறுமை அடையாதவன். விளை நிலங்களைப் பெருக்குவான். பெருமையையும் கீர்த்தியையும் பெற்று, தன் புத்திரர்களால் அதிருஷ்டத்தையும் அடைவான். குறைகளில்லாமல் வாழ்ந்து வருவான். கூறிய முப்பத்தெட்டாம் வயதில் பிறக்கும் ஆண் குழந்தையால் விசேஷ யோகம் ஏற்படும் என்றேம்.

41. ஜயமுனி யெழுந்தி ருந்து திடுக்கென வுரைக்க லுற்றூர்
நயமுடன் சிறிய தந்தை நல்காது சுதரை யென்றீர்
தயையுட னவர்க ளாஸ்தி சாருங்கா ரணங்க ளென்ன
அயலவ னனுப விப்பான் அச்சங்கை சொல்லு மென்றூர்.

41. ஜய முனி எழுந்து திடீரென்று சொல்லலானூர். ஜாதகனுடைய சிறிய தந்தைக்குப் புத்திரர்கள் தோன்றூர் எனக் கூறினீர்களே! அவர்களுடைய ஆஸ்தி யாரைச் சாரும் என்று சொல்லுங்கள். வேறு ஒருவன் அனுபவிப்பான். அதற்குக் காரணம் சொல்லுங்கள்.

42. மறுபாரி துணைவன் றுனும் வருவனு மாஸ்திக் கேதான்
வறுமையா யிவன்பால் சென்று மாநில மதிகஞ் சேர்ப்பன்
திருகிலா வொன்றுய் வாழ்ந்து செய்வனுங் கருமந் தானும்
உரைக்கின்றேஞ் சங்கை யொன்று உறுதியாய்ப் பின்பா கத்தில்.

42. இரண்டாம் மனைவியின் சகோதரனின் தம்பி ஆஸ்தியை அனுபவிக்க வந்து சேருவான். அவன் வறுமையுடன் இவளிடம் வந்த பிறகு, விளை நிலங்களை அதிகம் பெருக்கி, தீமைகளில்லாமல் ஒன்றுகவே வாழ்ந்து வந்து, அவனுக்கு இறுதிக்கடன்களைச் செய்து வருவான். பிற்பாகத்தில் நேரும் ஒருதீங்கைப் பற்றிச் சொல்லுகின்றேம்.

43. ஜாதகன் ஜனிக்குங் காலே சனிதசை யீரைந் தாண்டும்
மேதினில் திங்கள் நாலும் விளம்புவோம் பலனை யாங்கள்
தீதுண்டு சாத கர்க்கு ஜனித்திடுந் துணைபின் விருத்தி
ஓதுவோங் குடும்ப லேச்சல் உரைக்கின்றேம் விவரம் ரண்டில்.

**43.** ஜாதகன் பிறக்கும்போது சனி மகா தசையில் பத்து வருடங்களும் நான்கு மாதங்களும் பாக்கியாகும். அக்காலத்திய பலனை நாங்கள் சொல்லு கின்றோம். ஜாதகனுக்கு நோயுண்டாகும். சகோதர விருத்தி ஏற்படும். குடும்பத்தில் சிறிது சஞ்சலம் ஏற்படும். மற்ற விபரங்களை இரண்டாம் பாகத்தில் கூறுகின்றோம்.

**வேறு**

44. முப்பது வொன்பான் மேவிடு மில்லம்
செப்புமில் கீழ்ப்பால் சிறிதாய் நேரும்
கொப்பன பூமி கூவல்கள் நேரும்
தப்பித மில்லை சத்தியே கேளாய்.

**44.** ஜாதகனுடைய முப்பதொன்பதாம் வயதில் வீடு கிடைக்கும். அவ வீடு கிழக்குத் திசையிலிருந்து சிறியதாகக் கிட்டும். பூமி கிணறுகள் கிடைக்கும். கூறியவை தவரு. பார்வதி தேவியே! கேளுங்கள்.

## ஜாதகம் 97

1. மதியு மேடம் புகர்மானில்
   மால்சே யிரவி தேளினுற
விதியுங் குருவு மீனமுற
   விடமுந் தனுசில் சிகிவீணை
பதியு மிதுனம் பலனெவ்வாறு
   பகர்வீர் முனியே விவரமதாய்
இதுவே யாண்பால் ஜனனமுறும்
   இல்லம் வடதென் வீதியதே.

1. சந்திரன் மேஷத்திலும், சுக்கிரன் மகரத்திலும், புதன் செவ்வாய் சூரியன் விருச்சிகத்திலும், குரு சனி மீனத்திலும், ராகு தனுசிலும், கேது மிதுனத்திலும் இருந்து, இலக்கினம் மிதுனமானல் ஏற்படும் பலனென்ன வென்று கூறுங்கள், முனிவரே! விபரமாக. இஃது ஆண் மகனின் ஜாதகம். இவன் பிறந்த வீடு தெற்கு வடக்கான தெருவில் உள்ளது.

| | | | |
|---|---|---|---|
| குரு சனி | சந்திரன் | | லக்கினம் கேது |
| | இராசி சக்கரம் | | |
| சுக்கிரன் | | | |
| ராகு | புதன் செவ்வாய் சூரியன் | | |

2. அதுவும் கீழ்ப்பால் வாசலது
   அருகர் வாயு மாரியுத்ரம்
மதியை யணிந்தோன் வடகீழ்ப்பால்
   மடிந்த கெடியுந் தெற்கிலுறும்
சதிராய்க் காளி கீழ்ப்பாலில்
   தந்தி முகத்தோ னதன்மேற்கில்
ததிநெய் யுண்டோன் குடியருகில்
   தணல்கா ளியுமே வதன்மேற்கில்.

2. அதுவும் கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. அருக தேவன் கோயில் வாயு திக்கிலும், மாரியம்மன் கோயில் வடக்குத் திக்கிலும் சிவ பெருமான் ஆலயம் வடகிழக்கிலும், தெற்கில் ஓர் இடிந்த கோட்டையும் உள்ளன. காளி கோயில் கிழக்குத் திசையில் உள்ளது. விநாயகரின் ஆலயம் அதற்கு மேற்கிலும், கண்ணனின் கோயில் கோட்டைக்கருகிலும், அதற்கு மேற்கில் காளிதேவியும் உள்ளனர்.

3. இன்னும் பலதே வாசமுறும்
 இயம்பும் பேரூர் இருமனையாம்
அன்னை யில்லந் தானுரைத்தோம்
 அருளுந் தந்தை தாயோகம்
மன்னன் துணைவர் மனைமைந்தர்
 வகுத்தே யுரைப்போ மிந்நூலில்
கன்னென மொழியே தந்தைதுணை
 கழறு மாண்பா லொன்றேயாம்.

3. அங்கு, இன்னும் பல தெய்வங்கள் வசித்துவரும். இங்ஙனம் கூறப்பட்ட பெரிய ஊரில் இரண்டு மனையாக உள்ள தன் தாயின் வீட்டில் பிறந்தான் என்று சொல்லுவோம். ஜாதகனுடைய தந்தை தாய் உடன்பிறந்தவர்கள் மனைவி புத்திரர் இவர்களைப்பற்றி இந்நூலில் கூறுகின்றோம். இனிய வார்த்தைகளைப் பேசும் தேவியே! ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரன் ஒருவனேயாகும்.

4. ஒன்றே தீர்க்கம் விருத்தியதாய்
 ஒதுங்கு மறலி தன்பக்கல்
அன்றே வாசந் தந்தையுமே
 அற்ப புத்தி நெறியில்லான்
பன்றிக் குணமாம் ஊகமிலான்
 பகரான் கல்வி பாட்டாளி
கன்று காலி விருத்தியிலான்
 காளை பக்கல் தாணுகான்.

4. ஒரு சகோதரனே நீண்ட ஆயுளுள்ளவன். மற்றவர் நிலையார். ஜாதகனுடைய தந்தை அற்ப புத்தியுள்ளவன். நல்லொழுக்கமில்லாதவன். அற்ப குணமுள்ளவன். ஊகமில்லாதவன். கல்வி கற்கான். உழைப்பாளி. மாடு கன்றுகள் விருத்தியில்லாதவன். தன் புத்திரன் பக்கம் வராதவன்.

5. அணுகான் மனைவி மனம்போல
 அற்ப உண்டி ருசியில்லான்
பிணையாய் வாழான் பிறந்தகத்தில்
 பூமி விரயந் தான்செய்வன்
துணிவே யில்லான் சபைசெல்லான்
 தோற்பா யிவனைப் பலர் சொல்வார்,
பணிவான் துணைவர் பலருக்குப்
 பகவான் பக்தி கொள்ளாதான்.

5. தன் மனைவியின் மனம்போல் வாழாதவன். சிறிதே உணவு உட்கொள்வான். உணவில் சுகமில்லாதவன். ஒற்றுமையாக வாழாதவன். தன் பிதுரார்ச்சிதமான பூமிகளை விரயம் செய்துவிடுவான். தைரியமில்லாதவன். சபைக்குச் செல்லாதவன். பலர் இவனை இழிவாகப் பேசுவார்கள். சகோதரனுடைய குழந்தைகட்கும் கீழ்ப்படிந்து நடப்பவன். தெய்வபக்தியில்லாதவன்.

**வேறு**

6. சொன்னதொரு குணத்தானுக் கிந்தப் பாலன்
துணையாணு மொன்ருகு மென்று சொல்வோம்
கன்னிகையு மவ்வாருய்க் கழறு வோம்யாம்
காளையுமே முன்னேனுய்க் கருத லாகும்
அன்னவன்றன் குணங்களாய் கல்வி மானும்
அறிவுளான் பலசெட்டு அவனே செய்வன்
பின்னமிலான் தந்தையின்ற ஆஸ்தி காணுன்
பெரியோர்க ளுறவு கொள்வன் புகழுமேற்பன்.

6. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு ஜாதகன் தோன்று வான். உடன்பிறந்த சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியுமுளர். சகோதரன், ஜாதகனுக்கு மூத்தவன் என்று சொல்லுவோம். அவனுடைய குணத்தைக் கேளுங்கள். கல்வியறிவுள்ளவன். அறிவுடையவன். பல வியா பாரம் செய்து வருவான். ஊனமில்லாத சரீரமுள்ளவன். தந்தையின் ஆஸ்தியில்லாதவன். பெரியோர்களுடைய நட்பைக்கொள்ளுவான். கீர்த்தி அடைவான்.

7. மால்பக்தி கொண்டிடுவன் வணிபஞ் செய்வன்
மனைவியொன்று கீழ்ப்பாலில் மருவு வாளாம்
சாலவே சுதராண்பா லொன்றே யாகும்
சத்திமா ரிருவரெனச் சாற்ற லாகும்
சீலமுளன் பலர்நேய னிடபஞ் ஜன்மஞ்
சிறந்தவுத்தி ரட்டாதி நாளே யாகும்
காலத்தை யறிந்துரைப்பன் முன்கோ பத்தான்
கன்னியர்கள் மோகமுளான் காம னென்பான்.

7. திருமாலிடம் பக்தி கொள்வான். வர்த்தகம் செய்து வருவான். மனைவி ஒருத்தியே. அவளும் கிழக்குத் திக்கிலிருந்து வருவாள். ஒரு புத்தி ரனே பிறப்பான். இரு புத்திரிகள் தோன்றுவார்கள் என்று சொல்லு கின்ருேம். நல்லொழுக்கமுள்ளவன். பல பேருக்குப் பிரியனுவன். இரிடப லக்னத்தில் உத்திரட்டாதி நட்சத்திரத்தில் பிறப்பான். வருங்காலத்தை யறிநது சொல்லும் சக்தியுள்ளவன். முன் கோபமுடையவன். பெண்கள் மீது மோகங்கொள்வான். மன்மதனையொத்த அழகன்.

8. பூமிவிருத்தி பின்பாகஞ் சேர்ப்பா னுகும்
பெரிதான தவஞ்செல்வன் புகழு மேற்பன்
நேமிதனில் நல்லவனுய் நிகழ்த்து வோம்யாம்
நிகர்துணைவன் சொல்கடவான் ......நேயன்
மோட்சமா மன்னையிறல் துணைவி சேதி
செப்புகின்ருே மணமுள்ளாள் மதலை காணுள்
தீமையுண்டு மத்திபத்தில் செல்வா ளாகும்
செப்புவோம் பின்பாகஞ் சேதி தன்னை.

8. பூமி விருத்தியாகும். பிற்பாகத்தில் சேர்ப்பான். பெரிய வீடு கட்டுவான். செல்வவானுகக் கீர்த்தியடைவான். உலகில் நல்லவனுக இருப்பான் என்று சொல்லுகின்றேம், நாம். தன்னுடைய சகோதரன் வார்த்தையை மீறுதவன்.................. தண்டன். தாயால் சௌக்கியமடைவான். அவனுடைய சகோதரியின் செய்தியைச் சொல்லுகின்றேம். மணமுடிந்தும் புத்திரர்களில்லாதவள். இடைக் காலத்தில் இறந்துவிடுவாள். பிற்பாகத்தில் விபரம் எல்லாவற்றையும் கூறுகின்றேம்.

9. ஜனித்தவன்றன் குணங்கேளா யிருநிறத்தான்
தேகசமந் கல்வியுளான் செட்டுச் செய்வன்
வனிதைவநத பின்யோக மறைந்தோம் யாங்கள்
வாக்குப்புத்தி நெறிதவருன் மறுத்துக் கூருன்
தினஞ்சீலன் மால்பத்தி சிறப்புள் ளோனும்
தாய்தந்தை கருமமிலான் தேவி நேயன்
மனவர்மன் மால்மனேக்குக் கணேசன் போல
மருவுவான் மலர்க்கரத்தில் பத்ம ரேகை.

9. ஜாதகனுடைய குணத்தைக் கேளுங்கள். இருநிற முள்ளவன். சமமான உடலமைப்புள்ளவன். கல்வியறிவுள்ளவன். வர்த்தகம் செய்துவருவான். மனேவி வந்தபிறகு யோகம் ஏற்படும். புத்தியிலும் பேசுவதிலும் தவருன வழியில் செல்லாதவன். மறுத்துப் பேசாதவன். நல்லொழுக்கமுள்ளவன். திருமாலிடம் பக்தியுள்ளவன். சிறப்புள்ளவன். தாய் தந்தையருக்கு இறுதிக்கடன்கள் செய்யாதவன். மனேவிக்குப் பிரியன். மனத்தில் வர்மமுள்ளவன். இலக்குமிக்குக் கணேசன் போலிருப்பான். அவன் கையில் பத்மரேகை யுள்ளவன்.

10. ஆதியினில் வறுமையுள்ளா னொருவர் பக்கல்
அணுகியே சீவிப்பன் அடக்க முள்ளான்
வேதனேகள் விரும்பாதான் மூவே ழின்மேல்
விளம்புவோம் பொருளுமுளான் வறுமை காணுன்
தீதென்றேர்க் குதவிடுவன் தெய்வ பத்தி
தேவியொன்று தீர்க்கமுறுந் தீர நெஞ்சன்
மாதவர்க்கு அன்னமீவன் மரும முள்ளான்
மா நிலங்கள் சேர்த்திடுவன் மாதா நேயன்.

10. ஆதியில் வறுமையுள்ளவன். ஒருவரிடம் அண்டி ஜீவித்து வருவான். அடக்கமுள்ளவன். தீங்குகளிழைக்க எண்ணுதவன். ஜாதகன் இருபத்தோராம் வயதுக்குமேல் செல்வம் உள்ளவன். தரித்திரம் அடையாதவன். தீங்குகள் அடைந்தவர்கட்கு உதவி செய்வான். தெய்வபக்தியுள்ளவன். மனேவியொருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். தைரியமுள்ள மனத்தினன். தவசிகட்கு அன்னமளிப்பவன். இரகசிய முடையவன். நிலங்களே அதிகம் சேர்ப்பான். தாய்க்குப் பிரியமானவன்.

11. பலவணிபஞ் செய்திடுவன் மூவெட் டின்மேல்
பத்தினியின் வர்க்கதார் ருதவி யாலே
தலந்தோய்வன் சல்லியங்கள் கொள்ளா னாகும்
சகலசம் பத்துமிகத் தாமே நேரும்
நிலஞ்சேர்ப்பன் வறுமையிலான் தந்தை யாஸ்தி
நீக்கிடுவா னன்னைதந்தை பின்னோன் பக்கல்
குலவிடுவான் சுதரின்றிக் கருமஞ் செய்யக்
கூறுவோ மிப்பாலன் குழவி போல.

11. பலவித வியாபாரம் செய்வான். ஜாதகனுடைய இருபத்து நான்காம் வயதுக்குமேல் தன் மனைவியின் வர்க்கத்தாரின் உதவியால் பல புண்ணிய தலங்களுக்குச் சென்று நீராடுவான். கடன்படாதவன். சகல சம்பத்துக்களும் தானாகவே கிடைக்கும். நிலங்களை விருத்தி செய்வான். வறுமையடையாதவன். தன் தந்தையின் ஆஸ்திகளை விலக்கிவிடுவான். தாயினுடைய இளைய தந்தையின் பக்கம் சேருவான். அவருக்குப் புத்திரர் இல்லாமையால் இறுதிக்கடன்கள் செய்ய அபிமான புத்திரனாவான்.

12. பாரியுமே இருபத்து விரண்டு வாண்டில்
பகரன்னை வர்க்கத்தில் பகரு வோம்யாம்
நாரிகுண முரைச்சலுள்ளாள் சிவந்த மேனி
நளினமொழி நாயகன்றன் மனம்போல் வாழ்வாள்
சீறிடாள் நற்றனத்தாள் யோக சாலி
சிறப்பான குடும்பமுளாள் தெய்வ பக்தி
தூறுசொலாள் முன்கோப மவள்தாய் போலச்
சிறப்புற்று வாழ்வளெனச் செப்ப லாகும்.

12. மனைவியும் இவனுடைய இருபத்திரண்டாம் வயதில் தன் தாயின் வர்க்கத்திலிருந்து வருவாள். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மெல்லிய சரீர முடையவள். சிவந்த உடலுள்ளவள். அழகாகப் பேசுபவள். தன் கணவன் மனம்போல வாழ்ந்து வருவாள். கோபங் கொள்ளாதவள். நற்குணமுடையவள். அதிருஷ்டமுள்ளவள். சிறப்புள்ள குடும்பமுடையவள். தெய்வபக்தி யுள்ளவள். பிறர்மீது அவதூறுகள் சொல்லாதவள். முன்கோப முடையவள். தன் தாயைப்போல் சிறப்புடன் வாழ்ந்து வருவாள் என்று கூறுகின்றோம்.

## வேறு

13. அத்திரி சொல்லு கின்றார் அரவுமே யேழில் நிற்கப்
பத்தினி யிரண்டே யாகும் பராசரு மறுத்துச் சொல்வார்
சுத்தமா யேழோ னாட்சி சுகத்துளோன் தன்னைப் பார்க்க
வித்தகன் தனக்குத் தார மேவிடு மொன்றே யாக.

13. அத்திரி முனிவர் கூறுகின்றார். ராகு ஏழில் இருப்பதால் மனைவிகள் இருவரேயாவர். பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். ஏழாம் வீட்டுக்குரிய குரு ஆட்சியாக இருந்து, நான்காம் வீட்டுக்குரிய புதனைப் பார்ப்பதால், ஜாதகனுக்கு மனைவி ஒருத்தியேயாகும்.

வேறு.

14. இதற்குநே ரிடையாய்ச் சாதகச் சுருதி
இதிலேழாம் பாவத்தல் பாரும்
அதில்சொலு மொழியே ஏழிட மிரண்டோன்
அவர்கேந்திர கோபம திருக்கச்
சதியிலா மனைவி யொன்றென வுரைத்தோம்
ஜயமுனி தடுத்துமே புகல்வார்
[1]பதியினுக் கைந்தோ னட்டம மிருக்கப்
பாவைக்குத தோடமே யாகும்.

14. இதற்கு நேராக ஜோதிட சாஸ்திரத்தில் ஏழாம் பாகத்தில் பாருங்கள். அதில் கூறியபடி ஏழாம் வீட்டுக்குரியவனும இரண்டாம் வீட்டுக்குரியவனும கேந்திர ஸ்தானத்திலோ கோண தானத்திலோ இருக்க, தீங்கில்லாமல் மனைவி யொருத்தியையாகும் என்று சொல்லுகின்றோம். ஜய முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். ஐந்தாம் வீட்டுக்குரிய சுக்கிரன் எட்டாமிடத்தில் இருப்பதால் ஜாதகனுடைய மனைவிக்குத் தோஷமுண்டு.

15. தோடமென் றுரைத்த சயமுனி கேளாய்ச்
சுக்கிர னிருந்தஅவ் வீட்டோன
பாசமாய்த் தரும கருமாதி யாகிப்
பரிவுடன் தசமத்தி லிருக்கப்
பேசின மனைவி யொன்றுமே தீர்க்கம்
பிழையது நேரிடா தென்றோம்
வாசவன் மெய்ப்படி மறுமணங் காணன்
மைந்தர்கள் பலத்தையே கேளாய்.

15. (தோஷமுண்டு) என்று கூறிய ஜயமுனிவரே ! கேளுங்கள். சுக்கிரனிருக்குமிடத்துக்குரிய சனி, தருமகருமாதிபதியாகி, பத்தாம்வீட்டில் இருப்பதால், மனைவியொருததியேயாகும். அவளும தீர்க்காயுளுள்ளவள். தீங்கு நேராது என்று சொல்லுகின்றோம். ஜாதகன் இரண்டாம் மணம் செய்து கொள்ளமாட்டான். ஜாதகனுடைய புத்திர பலததைக் கேளுங்கள்.

16. மைந்தர்கள் ஏழு மருவிடு மதிலே
மங்கைய ரிருவர்கள் தீர்க்கம்
கந்தன்போ லிருவர் கழறுவோம் யாங்கள்
கனமிலார் மூவர்க ளென்றோம்
நொந்திடு முதலில் நான்குஆ றுகளும்
நிலையிலாச் சுதர்களு மென்றோம்
சந்ததி யிவள்மேல் யோகமாய் வாழ்வர்
சங்கரி கேட்டிடு வாயே.

16. ஜாதகனுக்கு ஏழு குழந்தைகள் தோன்றுவார்கள். அவர்களில் இரு பெண்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். முருகக் கடவுளைப்போல் இரு புத்திரர்கள் தீர்க்காயுளுள்ளவர்கள். மூன்று குழநதைகள் நிலையா

[1] இலக்கினம்.

என்றேம். முதலில் தோன்றும் குழந்தையும், நான்காவதும், ஆறுவதும் மரித்துவிடும். இவனுடைய புத்திரர்கள் இவனுக்கு மேலாக யாகத்துடன் வாழ்ந்து வருவார்கள். பார்வதியே! கேளுங்கள்.

### வேறு

17. அன்னைகுணங் கூறுகின்றே மாஞ்சி வப்பள்
ஆளன்சுக மதிகமிலாள் துணைகள் காணுள்
கன்னல்மொழி முன்கோபங் கணவ னில்லம்
காணுதாள் சிலவேநாள் சிறையாய் வாழ்வள்
தன்னில்லந் தான்வாழ்வள் சமயோ கத்தாள்
தனம்பணிக ளதிகமிலாள் சாற்றுள் பொய்யும்
பின்புத்தி யுடையவளாம் வரனுல் நிந்தை
பெற்றிடுவள் பித்தவாயு புக்கு மென்றேம்.

**17.** ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றேம். மாநிற முடையவள். அவள், தன் கணவன் சுகம் அதிகமில்லாதவள். உடன்பிறந் தவர்கள் இல்லாதவள். இனிய வார்த்தைகளையே பேசுபவள் முன்கோபம் கொள்வாள். தன் கணவனுடைய வீட்டில் வசிக்காதவள். சிலகாலம் சிறையில் வாழ்வதுபோல் தனித்து வாழ்வாள். தன் வீட்டிலேயே வசிப்பவள். சமமான யோக முள்ளவள். செல்வம், ஆபரணங்கள் அதிகமில்லாதவள். பொய் பேசாதவள். பின்புத்தி யுடையவள். தன் கணவனுல் அவமானம் அடைவாள். பித்தவாயு ஏற்படுமென்றும் சொல்லுகின்றேம்.

18. துணைகாணு விதஞ்சொல்வீர் மதிக்கு மூன்றில்
சிகிநிற்கத் தோடமென்றேஞ் சொல்வோம் பூர்வம்
கனமுடைய பாண்டிதனில் சேடர் வம்சம்
காதலியுந் தானுதித்து மதலை யுண்டாய்
அனையவரன் பகையாகித் தூறு செய்தாள்
ஆளன்மனம் வருத்தமுற்றுப் புகலு கின்றுன்
பிணையாக மறுஜன்மம் பெணுய்த் தோன்றிப்
புருடனில்லம் வாழாமல் பிறந்த கத்தில்;

**18.** ஜாதகனுடைய தாய்க்குச் சகோதரரில்லாத விதம் சொல்லுங்கள். சந்திரனிருக்குமிடத்துக்கு மூன்றுமிடத்தில் கேது இருப்பதால் தோஷ முண்டு என்றேம். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். பாண்டிய நாட்டில், சேடர் மரபில் தோன்றி, புத்திரர்களைப் பெற்று, தன் கணவனுடன் சண்டையிட்டுக்கொண்டு அவனைப் பழித்தாள். தன் கணவனும் வருத்த மடைந்து சொல்லுகின்றுன். நீ, மறு பிறவியில் பெண்ணுய்ப் பிறந்து, புருடனுடன் வாழ்ந்துவராமல், பிறந்த வீட்டில்;

19. பிறந்திடத்தில் வாழ்ந்திடுவாய் துணைகாணுமல்
புருடன்சுக மதிகமின்றிச் சிறையாய் வாழ்வாய்
பறைபள்ளு அதிகமின்றி வாழ்வா யாகும்
பகர்ந்தவர னுத்தரம் பிறந்தா னென்றேம்

உறைந்ததுவே யச்சாப மிவளுக் கேதான்
உத்தமியு மந்தியத்தில் பெரும்பாட் டாலே
மறலிபதி தானடைந்து நரகம் புக்கு
மலரோனும் வரையவந்தாள் மாது தானே.

19. பிறந்த வீட்டில் வாழ்ந்து வருவாய். உடன் பிறந்தவன் இல்லாமலும், புருடனால் சுகம் அதிகமடையாமலும், சிறையில் வாழ்வதுபோல் வாழ்வாய். ஏவலாட்கள் அதிகமின்றி வாழ்வாய் என்றான். கூறிய கணவன் வடக்குத் திசையில் பிறந்தவன் என்றோம். இப்பிறவியில் ஜாதகனுடைய தாய்க்குச் சாபம் ஏற்பட்டது. அவளும் தன் கடைசிக் காலத்தில், உழைப்பின் அதிகத்தால் மரண மடைந்து, நரகம் சென்று, மீண்டும் பிரமனால் படைக்கப் பட்டுப் பிறந்தனள், ஜாதகனுடைய தாய், என்றோம்.

20. முன்பிறப்பில் வரன்சாப முயன்ற தாலே
மேவாளாம் வரனில்லந் துணையுங் காணாள்
தன்மனம்போல் வரன்நேரான் சலிப்பாய் வாழ்வள்
தங்கிடுமே யற்பபிணி சத்திக் கேதான்
பின்ஜன்ம மரங்கத்தின் கீழ்ப்பா லாகப்
பெருநீல வைச்யகுலம் பிறப்பா ளென்றோம்
பொன்பணிக ளதிகமுண்டாய் வறுமை யின்றிப்
புகழுண்டாய் வாழ்வளென போற்றி னோமே.

20. முற்பிறவியில் கணவனிட்ட சாபம் தொடர்ந்ததால், கணவனில்லத்தில் வாழாதவள். உடன் பிறந்தவரில்லாதவள். தன்னுடைய மனம்போல் கணவன் கிடைக்கமாட்டான். சலிப்புடன் வாழ்ந்துவருவாள். சிறிது நோயும் ஏற்படும் அவளுக்கு, என்றோம். மறுபிறவி திருவரங்கத்துக்குக் கிழக்கில், பெரிய ஊரில், வைசிய குலத்தில் பிறப்பாள் என்றோம். பொன் ஆபரணங்களை அதிகம் பெற்று, வறுமையில்லாமல், கீர்த்தியுடன் வாழ்ந்து வருவாள் என்று சொல்லுகின்றோம்.

21. உதித்தவன்றன் பூர்வமதை யுரைப்பக் கேண்மோ
உறையூருக் கருகினிலே பேரூர் தன்னில்
நதிகுலத்தில் தானுதித்து விவசா யத்தால்
நாயகனுஞ் சீவித்து மனைவி மைந்தர்
அதிதிகளுக் கன்னமீந்து அறத்தி லிச்சை
அருமறையோர் தொண்டுகொண்டு அந்த கன்றன்
பதிசேர்ந்து பிரமனுமே வரைய வந்தான்
பாலகன்றன் யோகமதைப் பகரு வோமே.

21. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லக் கேளுங்கள். உரையூருக் கருகிலுள்ள பெரிய ஓர் ஊரில், வேளாள குலத்தில் பிறந்து, விவசாயம் செய்து ஜீவித்து, மனைவி மக்களை யடைந்து, துறவிகட்கு அன்னமளித்துவந்து, தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, அந்தணர்கட்குத் தொண்டுகள் பல செய்து, மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தான். ஜாதகனுடைய பொதுயோகத்தைச் சொல்லுகின்றோம்.

22. பகருவோம் மணவந்த பின்னல் யோகம்
பெருகிடும் பலசெட்டுப் பாருஞ் சேர்ப்பான்
சுகமுடையான் பிறைபோலச் செல்வ மோங்கும்
தருமகரும யோகமொன்று செப்ப லாகும்
சகமதனில் புகழேற்பன் காலா ளுள்ளான்
சிறுத்தவருக் குதவிடுவன் தீர்த்தந் தோய்வான்
இகபரன்றன் பணிசெய்வன் ஈகை யாளன்
எய்துமூ வாயிரம்பொன் இவனுஞ் சேர்ப்பன்.

22. மனைவி வந்த பிறகு யோகம் பெருகும். பலவிதமான வியாபாரம் பெருகும். பூமியைச் சேர்ப்பான். சௌக்கியமுடையவன். வளர்பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தியாகும் என்று சொல்லுகின்றோம். உலகில் கீர்த்தியடைவான். ஏவலாட்கள் உள்ளவன். ஏழ்மையடைந்தவர்கட்கு உபகாரம் செய்வான். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். சிவபெருமானுக்குத் தொண்டுகள் செய்வான். கொடையாளி. மூவாயிரம் பொன் இவன் சேர்ப்பான்.

23. ஜனனமுதல் மூவேழு வாண்டுக் குள்ளே
சிறப்பிலாக் குடும்பமதாய்ச் செப்ப லாகும்
கனமுடையோர் தம்பக்க லணுகி யேதான்
காவலனும் சீவிப்பான் கலக்க மாகப்
பிணையாகும் பூமியது துணைவி யாலே
பேசினதோ ராண்டின்மேல் பலத்த யோகம்
தனதான்யந் தூசுச்செட்டுச் சாரு மென்றோம்
சத்தியே விம்மொழியுந் தவறு வாமே.

23. ஜாதகனது குடும்பம், பிறப்பு முதல் இருபத்தோராம வயதுவரை பெருமையில்லாத குடும்பமாகும் என்று சொல்லுவோம். அவன் பெரியோர் ஒருவரிடம் அண்டி வாழ்ந்து வருவான். மனச்சஞ்சலத்துடன், தன் சகோதரியால் பூமிகள் இவன் கைவிட்டுப் போய்விடும். நாங்கள் கூறிய வயதுக்கு மேல் யோகம் விருத்தியாகும். தனம், தான்யம், துணிவியாபாரம் முதலியன ஏற்படும். தாயே ! இந்த வார்த்தைகள் தவறு.

**வேறு**

24. தந்தையின் பூர்வஞ் சொல்வோம் சேரநா டதனி லேதான்
வந்தனன் வேடர் வம்சம் மாநிலங் கிருஷி செய்து
நிந்தையு மில்லா னாகி நேர்ந்தனன் மறலி நாடு
விந்தையாய்ப் பிரமன் லக்க மேதினில் வரைப்பட்டு ;

24. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சேரநாட்டில், வேடர் மரபில் தோன்றி, உலகில் விவசாயம் செய்துவந்து, பழிகள் அடையாதவனாகி, மரண மடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு ;

25. வந்தவ னிவனே யென்றே மறுஜன்மங் கலிங்க நாட்டில்
இந்ததோர் குலமு தித்து இடரிலா வாழ்வா னாகும்
சந்தத மிருபா னென்றில் தந்தைக்குக் கண்டம் நேரும்
பிந்தியு முப்பா னாலில் பேசுவோ மன்னே கண்டம்.

25. இப் பிறவியில் பிறந்தவன் என்று சொல்லுகிறோரும். மறு பிறவியில் கலிங்கதேசத்தில், ஒரே குலத்தில் பிறந்து, தீங்குகளில்லாமல் வாழ்ந்துவருவான். ஜாதகனுடைய இருபத்தோராம் வயதில் தந்தை மரண மடைவான். பிறகு ஜாதகனின் முப்பத்துநான்காம் வயதில் தாய் இறப்பாள்.

26. அறுபது வேழ வாண்டில் அவிட்டமா தத்தி லேதான்
திருமகன் தனக்குக் கண்டம் செப்புவோம் பின்ஜன் மத்தைப்
பெருகிய காஞ்சி தனனில் பிறப்பனும் சௌராஷ்டிர வம்சம்
பெருமைக ளில்லா ரூகி வாழ்வ ரு'மென்று சொல்வோம்.

26. அறுபத்தேழாம் வயதில் ஆவணி மாதத்தில் ஜாதகன் மரண மடைவான். அவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். பெருமை யுள்ள காஞ்சிபுரத்தில், சௌராஷ்டிர மரபில் பிறப்பான். வறுமைகள் அடையாதவனாகி வாழ்ந்து வருவான் என்று சொல்லுகின்றோம்.

27. இவன்பின்னால் மனைவி கண்டம் இயம்புவோ முன்னோ னுக்கு
நடனியி லன்பா னுறில் நாட்டுவோங் கண்டந் தானே
பவமுள முப்பா னைந்தில் பாலகன் வேறுயச் செல்வன்
தவமுடை யோரைக் காக்கும் தயாபரி மேலுங் கேளே.

27. ஜாதகனுக்குப் பிறகு அவனுடைய மனைவி மரண மடைவாள். அவனுடைய மூத்த சகோதரனுக்கு, இவனுடைய ஐம்பத்தாறும் வயதில் கண்டம் நேரும். இவன், தனது முப்பத்தைந்தாம் வயதில் தனியாகச் செல்வான். தவம் செய்பவரை ஆதரிக்கும் தயையுடையவளே! கேளுங்கள்.

28. அத்திரி சொல்லு கின்றார் அவன்தனைத் தத்துக் கொண்டோன்
வித்தகர் மரண காலம் விளம்புவீர் முனியே நீர்தாம்
சுத்தமா யிரண்டி லேதான் செப்புவோ மந்தச் சங்கை
எத்திசைப் புகழு மெங்கள் ஈசுவரி கேட்டி டாயே.

28. அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனைத் தத்து எடுத்துக்கொண்ட வனுடைய மரண காலத்தைக் கூறுங்கள், தாங்கள். (ஜாதகனுடைய இரண்டாம் வயதில்) அதை இரண்டாம் பாகத்தில் திட்டமாகக் கூறுகின் றோம். எல்லாத்திக்குகளிலுள்ளவரும் புகழும் ஈசுவரியே! கேளுங்கள்.

29. ஜனித்திடுங் காலந் தன்னில் சிகிதசை யாண்டு ரண்டும்
குனித்திடு திங்க ளாறுங் குழவிக்குப் பிணியு நேரும்
தனமது செலவு பூண்டு சஞ்சல மனங்க ளெய்தும்
வினையுண்டு வன்னைக் கேதான் விளம்புவோம் விவரம் ரண்டில்.

29. ஜாதகன் பிறக்கும் காலத்தில் கேதுமகாதசையில் இரு வருடங் களும் இரு (ஆறு) மாதங்களுமாம். அக்காலத்தில் நோய் ஏற்படும். பொருள் செலவாகும். மனக்கலக்க முண்டாகும். தாய்க்குத் தீங்கு கள் ஏற்படும். விவரத்தை இரண்டாம் பாகத்தில் கூறுவோம்.

## ஜாதகம் 98

1. மதிகேது மீன மாக மங்கலன கடகம் புக்க
விதிதுலாம் ராகு கன்னி வெய்யவன் புதனுந தேளில்
நதிபுகர் தனுசு வாக நற்குரு மான தாக
இதுவிதக் கோளு நின்று இலக்கின மிதுன மாக ;

1. சந்திரன் கேது மீனத்திலும், செவ்வாய் கடகத்திலும், சனி துலாத்திலும், ராகு கன்னியிலும், சூரியன் புதன் விருச்சிகத்திலும், சுக்கிரன் தனுசிலும், குரு மகரத்திலும் இவ்விதம் நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருந்தால் ;

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் கேது | | | இலக்கினம் |
| | இராசி சக்கரம் | | செவ்வாய் |
| குரு | | | |
| சுக்கிரன் | சூரியன் புதன் | சனி | ராகு |

2. சொல்லுவீர் பலனே யென்று சுந்தரி கேட்கும் போது
புல்குவார் பராசர் தாமும் பிறந்தது வாண்பால் ஜன்மம்
இல்லமுங் கீழ்மேல் வீதி எமன்வாசல் கீழ்ப்பால் காளி
நல்லுதோர் தந்தி மாரி நற்றுர்க்கை தென்மே லாகும்.

2. பலனைக் கூறுங்கள், என்று பார்வதி கேட்கும்போது, பராசர முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் குழந்தையினுடையது. பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. விநாயகர் ஆலயம், மாரியம்மன், கோயில் துர்க்கையம்மன் கோயில் இவை தென் மேற்குத்திசையிலுள்ளன.

3. இந்ததோ ரடையா ளததுள் இலகிய சிறுவூர் தன்னில்
விந்தையா யிந்தப் பாலன் மேவுவான் ரெட்டி வர்க்கம்
தந்தைதாய் துணைவர் யோகந் தன்மனை புத்ர யோகம்
வந்தவன் முன்னூழ் சாந்தி வரைகின்றே மிந்நூல் தன்னில்.

3. இவ்விதத அடையாளங்களுள்ள சிற்றூரில், ரெட்டியார் மரபில் இந்த ஜாதகன் தோன்றுவான். இவனுடைய தந்தை, தாய், உடன்பிறந்தவர், மனைவி, புத்திரர் இவர்களின் யோகத்தையும், ஜாதகனுடைய தீவினைகள் சாந்தி ஆகியவற்றையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வோம் சமர்த்தாக வார்த்தை
[சொல்வன்
விந்தையாய்த் தானயச் செட்டு விவசாயத் தொழிலுஞ் செய்வன்
சிந்தையில் கவடு முண்டு சிறப்பான குடும்பி யாவன்
தன்தன மீகை கொஞ்சஞ் சாந்தவான் சீல மில்லான்.

4. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். சாமர்த்தியமாகப் பேசுபவன். தானிய வியாபாரமும், விவசாயமும் செய்து வருவான். மனத்தில் கபடமுள்ளவன். சிறப்புள்ள குடும்பத்தை யுடையவன். சிறிது கொடுக்கும் குணமும் உள்ளவன். சாந்தமுடையவன். நல்லொழுக்கமில்லாதவன்.

5. கல்விமான் ஊக சாலி காலாட்க ளுடைய னாகும்
சொல்லி லே கவடு முண்டு தந்தையார்ச் சிதத்தில் வாழான்
நல்லவன் போலக் காட்டும் நாயகி தன்னால் யோகம்
புல்லிய புத்தி கொஞ்சம் போசன குறுமை காணன்.

5. கல்வியறியுள்ளவன். ஊகமுடையவன். ஏவலாட்களுள்ளவன். பேசுவதில் வஞ்சனை யிருக்கும். தன் தந்தையால் சம்பாதிக்கப்பட்ட பொருளால் வாழாதவன். நல்லவன்போல் நடந்துகொள்ளுவான். தன் மனைவியால் யோகம் அடைவான். சிறிது அற்ப புத்தியுமுள்ளவன். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவன்.

6. கரமதில் ருத்ர ரேகை காசினுல் புகழு மேற்பன்
திருமகள் விலாச முள்ளான் தேவியால் வாழ்வா னாகும்
நெறியதைத் தவரு னாகும் நீத்தோர்க ளுறவு கொள்ளான்
பறைபள்ளு வுடைய னாகும் பத்தினி கேட்டி டாயே.

6. கையில் உருத்திரரேகை யுள்ளவன். காசால் கீர்த்தி யடைவான். இலக்குமி விலாசமுள்ளவன். தன் மனைவியின் உதவியால் வாழ்ந்து வருவான். நெறி தவறுதவன். துறவிகளிடத்தில் பிரியமில்லாதவன். பள்ளு பறை முதலிய ஏவலாட்களுள்ளவன். தேவியே! கேளுங்கள்.

7. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோகைய ரிருவர் தம்மில்
பின்மனை யாட்கு வின்னேன் பிறப்பன மிந்தப் பாலன்
தன்துணை முன்ஆண் காணன் தையல ரொன்றே தீர்க்கம்
பின்துணை யாண்பால் ரண்டு பேதையு மொன்றே தீர்க்கம்.

7. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுடையவனுடைய இரு மனைவியரில், இளையவளுக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். முன்பிறந்த சகோதரனில்லாதவன். சகோதரி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள். பின்பிறக்கும் சகோதரர் இருவரும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுளுள்ளவள்.

8. அத்திரி சொல்லு கின்றார் அறைந்திட்டீர் முன்தா யொன்று
புத்திர ருண்டோ சொல்வீர் புகலுவோம் பராச ரேகேள்
பத்தினிக் காண்பா லொன்று பாவையு மவ்வா றாகும்
சுத்தமா யிரண்டு தீர்க்கஞ் சோர்வளே வந்த மாதா.

8. அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்கு மூத்த தாய் ஒருத்தியுண்டு என்று சொன்னீர்களே! அவளுக்குப் புத்திரர் உண்டோ! சொல்லுங்கள், பராசர முனிவரே! தாங்கள் கேளுங்கள். அப்பெண்ணுக்குப் புத்திரன் ஒருவனும், புத்திரி ஒருத்தியும் தோன்றி, இருவரும் தீர்க்காயு ளுள்ளவர்கள். அந்தத் தாய் இறந்து போவாள்.

9. பின்மாதா விவனி னன்னை பேசுவோ மிவன்கு ணத்தைப்
பொன்நிறம் வாத தேகி புண்ணிய மனத்த னாகும்
கன்னென மொழியே சொல்வன் கல்விமா னூக வானும்
பின்னமில் லாத தேசி பிறர்பொரு ளிச்சை யில்லான்.

9. இளைய மாதா இவனுடைய தாயாவாள். இவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். பொன்னிறமுடையவன். வாத சரீரமுள்ளவன். புண்ணிய மனத்தன். இனிய வார்த்தைகளையே பேசுவான. கல்வியறி வுள்ளவன். ஊகமுள்ளவன். ஊனமில்லாதவன். பிறர் பொருளின்மீது விருப்பமில்லாதவன்.

10. அண்டினோர் தம்மைக் காப்பன் அழகிய வார்த்தை யுண்டு
பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்
குண்டுணி கலகங் கூறான் புன்சிரிப் புடைய னாகும்
வண்டிவா கனமு முள்ளான் மந்தனுங் குணத்தா னாமே.

10. தன்னையண்டி வந்தவர்களைக் காப்பான். அழகிய வார்த்தைகளைப் பேசுபவன். பழைய காலத்திய பூமியை ஜாதகன் பெருக்குவான். கோள் சொல்லாதவன். கலகம் செய்யாதவன். புன்சிரிப்புடையவன். வண்டி முதலிய வாகனங்களுள்ளவன். மந்த குணமுடையவன.

11. சீலவா னன்ன மீவன் சனவுப காரி யாவன்
ஞாலமேல் நல்லோ னவன் நற்கல்வி ஈகை வானும்
பால்தயிர் பிரிய னவன் பாவையர் மோக முள்ளான்
காலத்தை யறிந்து ரைப்பன் காலாட்க ளுடைய னாமே.

11. நல்லொழுக்க முள்ளவன். அன்புடன் அன்னமளிப்பான். இவன் ஜனங்களுக்கு உபகாரி. உலகில் நல்லவனாக இருப்பான். கல்வி யறிவுடையவன். கொடையாளி. பால், தயிர்மீது விருப்பமுள்ளவன். பெண்கள்மீது மையல் கொள்வான். வருங்காலத்தை யறிந்து கூறும் சக்தியுள்ளவன். ஏவலாட்கள் உள்ளவன்.

12. துணைவனோ டொத்து வாழ்வன் துர்வார்த்தை பேசா னாகும்
வினையதை யொருவர்க் கெண்ணான் விசேடபூ மிகளுஞ் சேர்ப்பன்
கனமுளோர் நேசங் கொள்வன் கரமதில் தனரேகை யுண்டு
மனமது தளர்ச்சி யுண்டு மங்கையே மேலுங் கேளே.

12. தன் துணைவனோடு ஒற்றுமையாக வாழ்வான். கெட்ட வார்த்தைகளைப் பேசாதவன். ஒருவருக்கும் தீங்குகள் செய்ய எண்ணாதவன். அதிகமான பூமிகளைச் சேர்ப்பான். பெரியோர்களிடம் நட்புக் கொள்வான். கையில் தனரேகையுடையவன். மனத்தில் தளர்ச்சி யுள்ளவன். தாயே! கேளுங்கள்.

13. பின்துணை சேதி கேளாய் போசன வறுமை காணான்
பொன்பணி சேர்ப்பா னாகும் பூமியால் சீவிப் பானும்
தன்திரு மால்நி றத்தான் சம்பத்து வுடைய னாகும்
பன்னியே பேச வல்லான் பாரியு மிரண்டே யாகும்.

13. ஜாதகனுடைய தம்பியின் செய்திகளைக் கேளுங்கள். சாப்பாட்டுக்கு வறுமை யில்லாதவன். பொன் ஆபரணங்களைச் சேர்ப்பான். பூமியினால் ஜீவித்து வருவான். திருமாலைப் போன்ற கரியநிற முள்ளவன். சம்பத்து உடையவன். பன்னிப் பன்னிப் பேசவல்லவன். இரு மனைவியரை அடைவான்.

14. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மிரண்டே யென்றோம்
அதிபதி யெம்மா துக்கு வந்திடுஞ் சுதராண் சொல்வீர்
முதல்மனை பெண்பா லொன்று மேவிடும் பின்மா துக்கு
மதலையாண் தீர்க்க மெய்து மங்கையே மேலுங் கேளே.

14. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் உண்டு என்று சொல்லுவோம். ஜாதகனுடைய தம்பியின் மனைவிகளுள் எந்த மனைவிக்குப் புத்திரர்கள் தோன்றும் ? சொல்லுங்கள். முதல் மனைவிக்குப் பெண் ஒருத்தியும் இளைய மனைவிக்குப் புத்திரர்களும் தோன்றித் தீர்க்காயுளுள்ளவர்கள். தாயே ! கேளுங்கள்.

15. கடையவன் சேதி கேளாய்க் கட்டுவார்த் தைகளுஞ் சொல்வன்
தடபுடல் செய்கை யுண்டு தனத்தின்மேல் பிரிய னாவன்
கடன்கொளான் கல்வி மானும் கனதனஞ் சேர்ப்பா னாகும்
படையினில் செல்லா னாகும் பரிந்துப சாரஞ் செய்வன்.

15. ஜாதகனுடைய கடைசித் தம்பியின் செய்தியைக் கேளுங்கள். வார்த்தைகளைப் புனைந்து பேசுபவன். ஆடம்பரச் செய்கைகள் உள்ளவன். செல்வத்தின்மீது பிரியமுள்ளவன். கடன்படாதவன். கல்வியறிவுள்ளவன். பெரும் பொருளைச் சேர்ப்பான். சண்டைக்கு முன் செல்லாதவன். அன்புடன் உபசாரம் செய்வான்.

16. மாந்தளிர் போல மேனி மனமது வழுத்த மில்லான்
கூர்ந்துமே வார்த்தை சொல்வன் குறியுண்டு பக்கம் நெற்றி
சேர்ந்தோருக் கன்ன மீவன் சயஞ்செய்வ னெடுத்த வேலை
ஏந்திழை மார்கள் மோகன் இடர்செய்யான் யாவ ருக்கும்.

16. மாந்தளிர் போல் மென்மையான சரீரமுடையவன். திடமில்லாத மனத்தினன். கூர்ந்து யோசித்துப் பேசுபவன். நெற்றியின் பக்கத்தில் வடுவுள்ளவன். தன்னையண்டிவந்தவர்கட்கு அன்னமளிப்பவன். எடுத்த காரியத்தை வெற்றியுடன் முடிப்பான். பெண்கள்மீது மையல் கொள்வான். ஒருவருக்கும் தீங்குகள் செய்யாதவன்.

17. மனைவியு மொன்றே யாகு மைந்தரா ணிரண்டே யாகும்
பிணையிலாப் பெண்பா லவ்வாறு பேசுவோந் தீர்க்க மாகக்
கணமுட னென்றுய் வாழ்வர் கழறுவோம் பின்பால் சேதி
அனையவே துணைவி சேதி அறிவிப்போம் விவரம் ரண்டில்.

17. மனைவியும் ஒருத்தியேயாகும். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து தீர்க்காயுள் உள்ளவர்கள். அவர்கள், திடமாக ஒன்றுய் வாழ்ந்து வருவார்கள். பிற்பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றேம். இரண்டாம் பாகத்தில் ஜாதகனுடைய சகோதரியின் செய்திகளைக் கூறுகின்றேம்.

18. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோம் பத்தொன் பாண்டுள்
காதலி யன்னை வர்க்கங் கலப்பளா மந்த மாது
மாதுவின் குணத்தைக் கேளாய் மாநிறஞ் சமதே கத்தோள்
தீதான குணமி லாதாள் தேவதாப் பக்தி பூண்பள்.

18. ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றேம். பத்தொன்பதாம் வயதுக்குள் தன் தாயின் வர்க்கத்திலிருந்து மனைவிவருவாள். அப்பெண்ணின் குணத்தைக் கேளுங்கள். மாநிறமுடையவள். சமமான உடலமைப்புள்ளவள். தீய குணங்க ளில்லாதவள். தெய்வபக்தியுடையவள்.

19. தாமதக் குணத்தா ளாகுஞ் சரசமாய் வார்த்தை சொல்வள்
தீமையை யொருவர்க் கெண்ணுள் சிறப்புள குடும்பி யாவள்
சேமமாங் குடும்பி யாவள் தீர்க்கமாம் வயது முள்ளாள்
காமனை யெரித்தோன் தேவி கழறின மொழிகுன் றுவே.

19. தாமத குணங்களுடையவள். சல்லாபமாகப் பேசுபவள். ஒருவருக்கும் தீங்கு செய்ய எண்ணுதவள். சிறப்புள்ள குடும்பியாவாள். சௌக்கியமான குடும்பத்தையுடையவள். நீண்ட ஆயுளுள்ளவள். மன்மதனை யெரித்த சிவபெருமானின் தேவியே ! கூறிய வார்த்தைகள் தவறு.

20. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணும்
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொல்வோம்
இத்தகைப் பராசர் சொல்ல இயம்புவா ரத்திரி தாமும்
புத்திர தோட மெவ்வாறு புகலுவீர் முனியே நீர்தாம்.

20. ஜாதகனுடைய புத்திர விருத்தியைச் சொல்லப் பலமில்லை. திண்ணமாகப் பிறந்தாலும் நிலையா என்று சொல்லுகின்றேம். இங்ஙனம் பராசா முனிவர் கூறும் போது, அத்திரி முனிவர் புகலுகின்றர். ஜாதகனுக்குப் புத்திர தோஷம் எற்படக் காரணம் என்ன ? முனிவரே ! சொல்லுங்கள்.

21. காரியு மஞ்சில் நிற்கக் கனகனும் நீச்ச மாகப்
பாரினில் சுதர்கள் தோடம் பகருவோ மிவனுக் கேதான்
தீரனு முன்ஜன் மத்தில் செய்ததீ வினைய நேகம்
கூறுவீ ரந்தச் சங்கை கொங்குநா டதனி லேதான் ;

21. சனி ஐந்தாம் வீட்டில் இருப்பதாலும், குரு நீச்சமாக இருப்பதாலும், ஜாதகனுக்கு புத்திர தோஷம் உண்டு என்று சொன்னோம். ஜாதகனுக்கு முற்பிறவியில் செய்த தீவினைகள் அநேகம் உண்டு என்று சொல்லு கின்றோம். அந்தத் தீவினையைக் கூறுங்கள். கொங்கு நாட்டில்;

22. உதித்தனன் பிரம்ம சேயாய் உலகினில் கிருஷி செய்து
மதிமுக மனைவி மைந்தர் வளமுள குடும்பி யாகிச்
சதியாக வந்த வூழைச் சாற்றுவோந் தாயே யாங்கள்
அதிதியும பசிநோ யாலே அந்தியி லன்னங் கேட்க;

22. அந்தண குலத்தில் பிறந்து, உலகில் விவசாயம் செய்துவந்து, அழகிய மனைவி மக்களைப் பெற்று, செழிப்புள்ள குடும்பியாகி வாழ்ந்து வந்தபோது ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தாயே! விருந்தாளி ஒருவன் பசியால் வாடி அந்தி வேளையில் அன்னம் கேட்க;

23. முகவெறி கொண்டு விண்ணேன் முடுக்கின னதிதி தன்னை
இகபர னடியார் தாமும் இயம்புவார் மனவெ றுப்பால்
மிகுபசி யாலே வந்தேன் வீண்வார்த்தை சொன்ன பாவி
தகைமையாய்ப் பின்ஜன் மத்தில் சந்ததி நாச மாமே.

23. அதிகக் கோபம் கொண்டு விருந்தாளியை விரட்டிவிட்டான். சிவனடியார் மனத்தில் துன்பங்கொண்டு சொல்லுகின்றார். மிகுந்த பசியால் களைத்து வந்தேன். என்னைப்பார்த்து வீண் வார்த்தைகள் சொன்ன பாவிக்கு மறுபிறவியில் சந்ததி யற்றுப் போகும்.

24. இப்படிச் சொல்லிச் சென்றார் எய்திற்று வந்தத் தோடம்
தப்பிதம் வேறு வொன்று சார்ந்தது புகலக் கேண்மோ
ஒப்புடன் வெகுநா ளாக உரகனு மில்லம் வாசம்
கப்பிய மகுடத் தாலே கவிந்தது வெளியி லோர்நாள்.

24. என்று கூறிச் சென்றார். அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. வேறு ஒன்றும் சேர்ந்தது. சொல்லுகின்றோம் கேளுங்கள். வெகு காலமாக இவனுடைய வீட்டில் சர்ப்பம் ஒன்று வாழ்ந்து வந்தது. அதுவும் ஒரு நாள் படயெடுத்து வீட்டுக்கு வெளியில் ஆடியது.

25. மைந்தனு மதனைக் கண்டு அரங்கமே செய்யும் போது
வந்திடு நாகந் தானும் மயக்கமாய் நிற்கும் போது
இந்தவன் கழியி னாலே எமபுரஞ் சேர்த்தா னென்றோம்
அந்ததோர் தோட மொன்று மணுகிற்று விவனுக் கேதான்.

25. ஜாதகனும் அதைப் பார்த்து நிற்கும் சமயத்தில், சர்ப்பம் மயக்க முற்று நின்றது. ஜாதகனும் தடியினால் அந்தப் பாம்பை அடித்துக் கொன்றான். அந்தத் தோஷம் ஒன்றும் இவனுக்கு ஏற்பட்டது.

**26.** மங்கையர் சாப மொன்று மருவிற்று விவனுக் கேதான்
சங்கையாய்க் காலன் பக்கல் சார்ந்தன னிவனே யென்றோம்
துங்கமா மறையோன் லக்கஞ் ஜனித்தவ னிந்தப் பாலன்
தங்கிடு முன்னூழ்த் தோடஞ் சந்ததி தோட மாமே.

**26.** ஒரு பெண்ணின் சாபமும் ஏற்பட்டது, இவனுக்கு என்றோம். இந்தத் தீச் செயல்களுடன் மரண மடைந்து, மீண்டும் பிரம தேவனால் படைக்கப் பட்டுப் பிறந்தவன், இந்த ஜாதகன் என்றோம். முற்பிறவியின் தோஷம் ஏற்பட்டு, சந்ததி விருத்தியாகாது.

**27.** இதுவன்றி மனைவி யாலே எய்திற்றுச் சிலவே தோடம்
அதுவினை சொல்லு மென்ன அவளுமே முன்ஜன் மத்தில்
கதிதருந் தில்லை தன்னில் கலந்தனள் பிரம்ம சேயாய்
அதிபதி வினையைச் சொல்வோ மகவுபால் தராத தோடம்.

**27.** இதுவல்லாமல் இவனுடைய மனைவியால் சில தோஷங்கள் ஏற்பட்டன. அவைகள் என்னவென்று கூறுங்கள். இவன் மனைவி முற்பிறவியில் முத்தியைத் தரும் தில்லையம்பதியில் அந்தண குலத்தவ ளாகப் பிறந்தாள். அவளுக்கு ஏற்பட்ட தோஷத்தைச் சொல்லுகின்றோம். குழந்தைக்குப் பால் தராத தோஷமுமொன்றும்.

**28.** ஏழையின் மதலைக் கன்ன மீயாத தோட மொன்று
சூழ்ந்தது விவளுக் கேதான் சுதர்களுந் தோட மெய்தும்
ஊழ்வினை தீர வேண்டி உரைக்கின்றேஞ் சாந்தி தானும்
ஆழியில் கரும சாந்தி அறைந்திட வினைகள் போக்கி;

**28.** ஏழையின் குழந்தைக்கு அன்னமளிக்காத தோஷம் ஒன்றும் இவளுக்கு ஏற்பட்டது. அதனால் புத்திரதோஷம் உண்டாயிற்று. செய்த தீவினைகள் நீங்கச் சாந்தியொன்று கூறுகின்றோம். கரும சாந்திகள் செய்தால் தீவினைகள் நீங்கி;

**29.** சுதர்களும் விருத்தி யென்றேஞ் ஜயமுனி சொல்லு கின்றார்
அதுகர்ம சாந்தி யெவ்வாறு அறிவிப்பீர் விவர மாகக்
கதிதருஞ் சாந்தி தன்னைக் கழறுவோம் விவர மாக
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

**29.** புத்திர விருத்தி ஏற்படும். ஜயமுனிவர் கூறுகின்றார். அக்கர்ம சாந்திகள் செய்யும் விதம் எப்படி என்று விபரமாகக் கூறுங்கள். நற் கதியை யளிக்கும் கர்ம சாந்தி செய்யும் விதத்தைக் கூறுகின்றோம். கதியற்றவரைக் காக்கும் தாயே! கேளாய்.

வேறு

**30.** [1]தானியம் சமித்துக் கலசமு மொன்பான்
சதிபதி பிம்பமு மிரண்டாம்
ஆனவஸ் திரமு மதற்குமே சாத்தி
அவளுக்குக் கோடிபரி சளித்து
வானவர் பூசை மங்கைமுன் வைத்து
வறைகின்றே மூலத்தைக் கேளாய்.

---

[1] இப் பாடலில் ஒருவரி யில்லை.

30. நவதான்யங்கள் ஒன்பது சமித்துக்கள் ஒன்பது கலசங்கள் வைத்து, ஸ்திரீ புருட உருக்கள் இரண்டு செய்து, கோடி வஸ்திரங்களைச் சாத்தி, பெண் பிம்பத்துக்கு ஒரு கயிறும் சாத்தி, தேவர்கள் பூசை செய்யும் அம்மன் முன் வைத்து. . . மூலத்தைச் சொல்லுகிறோம், கேளுங்கள்.

31. உரைத்திடக் கேளாய் ஓம்அய்யுங் கிலியும்
உரைசவ்வு மவ்வுமா தேவி
பரிகின்ற தேவி பகவதி பாலர்
பட்சண....மும் போக்கி
நெறியுடன் சகத்திர முரைத்திட மேலும்
நிர்மித்த வோமமும் வளர்த்து
இரணியத் தகட்டி லறுகோண மிட்டு
ஈச்வரி பீசத்தை வரைந்து ;

31. சொல்லுகின்றோம், கேளுங்கள். ஓம், ஐம், கிலி, சவ், மவ், மாதேவி பரியும் தேவி, பகவதி..............................என்று ஆயிரம் தடவை சொல்லி, மேலும் சொல்லிய ஓமம் வளர்த்து, தங்கத் தகட்டில் ஆறு கோணங்கள் போட்டு, அம்பிகையின் பீஜாட்சரத்தை எழுதி ;

32. வருவியே சகத்திரஞ் ஜபித்துமே பின்பு
மால்தேவி பூசையை வைத்து
நெறியுடன் கலச நீரபி டேகம்
நிமலிக்குச் செய்துமே பின்பு
அரிவையி னுடுத்த வாடையைச் செய்வோர்க்கு
அருளுவாய்க் கோடிதா சதுவும்
நெறியுட னீரேழு நாளது விரதம்
நிமலியுங் கொள்ளவும் போமே.

32. எழுதி, ஆயிரம் தரம் ஜபம் செய்து, பின்பு இலக்குமி பூசை செய்து, நெறியுடன் கலச தீர்த்தத்தை ஜாதகனுடைய மனைவிக்கு ஸ்நானம் செய்வித்து, அம்மனுக்குச் சாத்தியிருந்த வஸ்திரத்தை ஜபம் செய்பவர்கட்குக் கொடுத்து, பிறகு நெறியுடன் பதினான்கு நாட்கள் விரதம் இருந்து, கயிற்றைக் கட்டிக் கொண்டால், பாபம் தீரும்.

33. [1] கொள்ளவு முன்னூழ்த் தோடமே நீங்கிக்
குலவிடுஞ் சுதர்களு மென்றோம்
கள்ளமில் லாம லாணது வொன்று
கன்னிகை யவ்வகைப் புகல்வோம்
சள்ளையென் றிவர்கள் நிவிர்த்திசெய் யாரேல்
தரிக்காரர்கள் சுதர்களு மென்றோம்.

33. அப்படிச் செய்தால் முப்பிறவியின் தோஷம் நீங்கி, புத்திரர்கள் தோன்றுவர். சந்தேக மன்னியில் ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் பிறப்பார்கள். வீண் உபத்திரவம் என்று இவர்கள் சாந்தி செய்யாவிடில், புத்திரர்கள் தோன்றார் என்றோம்.

[1] இப் பாடலில் ஒருவரி யில்லை,

**34.** சத்தியின் பூசை யெவ்விதஞ் செய்யச்
சாற்றுவீர் முனிவரே யென்றார்
சத்தியஞ் சுண்டல் வடைபருப் பதுவும்
சாவலும் நாரியின் பலியும்
சத்திய முலஞ் சகத்திரஞ் ஜபித்துத்
தங்கரேக் குள்ளிதை யணிந்து
சத்தியின் கையால் செய்பவர்க் காடை
தானளித் தவர்பதம் போற்றி ;

34. சக்தியின் பூசை செய்யும் விதத்தைச் சொல்லுங்கள், முனிவரே! என்றார். ஜாதகனுடைய மனைவி சுண்டல் வடைப்பருப்பு முதலியன படைத்து, சேவல் முதலிய பலி கொடுத்து, அம்மனுடைய பீசாட்சரத்தை ஆயிரம்தரம் ஜபித்து, தங்கத் தகட்டை மனைவிக்கு அணிவித்து, அப் பெண்ணின் கையால் அதைச் செய்விப்பவர்கட்கு வஸ்திரதானம் கொடுத்து, அவருடைய பாதங்களில் வணங்கித் துதிசெய்து ;

**35.** போற்றியே சுக்கிர வாரமும் நோன்பு
பொருந்திட முன்வினை போக்கி
ஏற்றதோர் சுதர்கள் தோன்றிடு மென்றோம்
இவள்வரன் பவத்துக்கு வினைகேள்
மாற்றிட வரசி னடியினில் நாகம்
அமைத்திட முன்பவம் நீங்கி
நாற்றிசை புகழு மைந்தருந் தோன்றும்
நவின்றது குன்றாது சொன்னோம்.

35. தோத்தரித்து, வெள்ளிக்கிழமைகள்தோறும் விரதம் இருந்தால், தீவினைகள் நீங்கி, பெற்றக் குழந்தைகள் தங்கும். ஜாதகனுடைய தீச் செயல் களின் பாவம் நீங்கச் சாந்திகள் கேள். அரச மரத்தின் கீழ் கல்லால் ஒரு நாகம் அமைத்து அபிஷேகம் செய்தால், முற்பிறப்புத் தீவினை நீங்கி, நான்கு திக்குகளிலும் கீர்த்தி பெறும் புத்திரர் தோன்றுவர். கூறியது தவறாது.

வேறு

**36.** அன்னையின் குணத்தைக் கேளாய் அழகுளாள் பொறுமை சாலி
தன்சொலு மடக்க முண்டு தன்துணை காணு ளாகும்
தந்தையி னில்லந் தன்னில் தானவள் வாழ்வா ளாகும்
தன்சுதர் தம்மால் யோகம் சாற்றுமுன் கோபி யாவள்.

36. ஜாதகனுடைய தாயின் குணத்தை கேளுங்கள். அழகுள்ளவள். பொறுமையுடைவள். அடக்கமாகப் பேசுபவள். உடன் பிறந்தவரில்லாதவள். தன் தந்தையின் வீட்டில் வசித்து வருவாள். புத்திரரால் யோகம் ஏற்படும். கூறுவதற்கு முன் கோபங்கொள்வாள்

**37.** அவளுடைப் பூர்வஞ் சொல்வோம் ஆலங்காடதற்கு மேற்கில்
நவனியில் சிறுவூர் தன்னில் நல்கிணு ளிந்த மாது
பவமுள தீயின் வம்சம் பிறந்துமே சுகமாய் வாழ்ந்தாள்
அவனியில் வந்த ஊழை அறைகின்றேந் தாயே யாங்கள்-

37. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவாலங்காட்டிற்கு மேற்கில் உள்ள சிற்றூரில், வன்னிய குலத்தில் பிறந்து, சுகத்துடன் வாழ்ந்துவந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

38. வானுடைத் தங்கை பேரில் விசேடமாய் வார்த்தை சொல்லி
உறன்முறை தம்பா லோதி ஒதுக்கினு ளந்த மாதைப்
பறந்திடுங் கன்னி சொல்வாள் பதர்வார்த்தை சொன்ன பாவி
மறுஜன்மந் துணைக ளின்றி மறுமனை யாகத் தோன்றி ;

38. தன் கணவனுடைய தங்கையின்மீது அடாத வார்த்தைகளைக் கூறி, அவளுடைய பந்துக்களிடம் சொல்லி அப்பெண்ணை (கணவனிட மிருந்து) விலக்கி விட்டாள். விலக்கப்பட்ட பெண் சொல்லுகின்றாள். என்மீது அற்ப வார்த்தைகளைக் கூறிய பாவியே! நீ, மறு பிறவியில், உடன் பிறந்தவர்களின்றி, இரண்டாம் மனைவியாக வாழ்க்கைப்பட்டு ;

39. உலகினில் வாழ்வா யென்று ஒதுங்கின மாது சொன்னாள்
குலவிற்று வந்தத் தோடங் குமரியு மந்தி யத்தில்
நலமிலா வாய்ப்புண் கண்டு நமன்பதிக் காளா யின்னேள்
தலைநான்கோன் வரையப் பட்டு ஜனித்தன ளிவளே யென்றோம்.

39. உலகில் வாழ்ந்து வருவாய் என்று அவள் கூறினாள். அந்தத் தோஷம் இவளுக்கு ஏற்பட்டது. தன் கடைசிக் காலத்தில் வாயில் புண் ஏற்பட்டு மரணமடைந்து மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள், இப் பெண்ணாகிய ஜாதகனுடைய தாய், என்றோம்.

40. நாத்தியின் சாபம் போல நல்கிடுந் துணைகா ணாளாம்
சேர்த்திடு மிரண்டாம் பாரி செப்புவோம் வறுமை காணாள்
பாத்திர மறிவா ளாகும் பகருவோம் நாற்பான் மூன்றில்
சூத்திர [1]மகர மாதம் செப்புவோ மன்னை கண்டம்.

40. நாத்தியின் சாபத்தைப் போல் உடன் பிறந்தவர்கள் இல்லாதவளாவள். இவள் இரண்டாம் மனைவியாக வாழ்க்கைப்படுவாள். வறுமையடையாதவள். நல்லவர்களை அறிந்து கொள்ளுவாள். நாற்பத்து மூன்றும் வயதில் தை மாதத்தில் தாய் மரணமடைவாள்.

41. மறுஜன்மந் தவளை மேற்கி லருகர்தங் குலமே தோன்றித்
திருமகள் வாழ்வா ளாகுஞ் செப்புவோந் தந்தை பூர்வம்
உறையூரில் கங்கை சேயாய் உதித்துமே வறுமை யின்றிக்
குறையிலாக் குடும்பி யாகிக் குமானும் வாழு நாளில் ;

41. மறு பிறவி தவளேச்வரத்துக்கு மேற்கில், வடுகர் குலத்தில் பிறந்து வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். உறையூரில், வேளாள குலத்தில் பிறந்து, வறுமையில்லாமல் நிறைந்த குடும்பியாகி வாழ்ந்துவரும் நாளில்,

---

[1] தை மாதம்.

42. வந்தவூழ் தன்னைச் சொல்வோம் வாத்தியின் மகள்மேல் மோகம்
தன்தன மவளுக் கீந்து சத்தியைப் போகம் வேண்ட
அந்தவ ளிசையா ளாகி அவன்பல வந்தஞ் செய்து
விந்தையாய்ப் போகந் துய்த்தான் விளம்புவாள் சாபந் தானே.

42. ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தன்னுடைய வாத்தியாரின் மகளின்மீது மோகங்கொண்டு, அவளுக்குப் பொருள் கொடுத்து, இன்ப மனுபவிக்க அழைக்கும்போது, அப்பெண் அதற்கு இசையாமல் இருந்தாள். இவனும் அவளைப் பலவந்தம் செய்து அவளுடன் இன்ப மனுபவித்தான். அப் பெண் சாபமிடுகின்றாள்.

43. தங்கையென் றெண்ணா நீயுந் தான்போகஞ் செய்த பாவி
சங்கையாய்ப் பின்ஜன் மத்தில் தந்தையாஸ் திகளை நீங்கி
நங்கைய ரிரண்டு மாகி நங்கையால் வாழ்வாய் நீயும்
பங்கமே படுவா யென்று பகர்ந்தனள் வாத்தி புத்ரி.

43. என்னைத் தங்கையென்று எண்ணாமல், போகம் செய்யத் துணிந்தாய். பாவியே! நீ மறுபிறவியில் உன் தந்தையின் ஆஸ்திகளை இழந்து, இரு மனைவியரையடைந்து, உன் மனைவியின் தயையால் வாழ்ந்து வருவாய்; அவமானமும் படுவாய்; என்று வாத்தியின் மகள் கூறினாள்.

44. அந்தவோர் தோடந் தானும் அணுகிற்று விவனுக் கேதான்
அந்தியக் காலந் தன்னில் அணுகிற்று மேக ரோகம்
அந்தகன் பக்கல் சென்று அயனுமே வரையப் பட்டு
விந்தையா யிக்கு லத்தில் விளங்கினா னிவனே யென்றோம்.

44. அந்தத் தோஷம் இவனுக்கு ஏற்பட்டது. இவனும் தன் கடைசிக் காலத்தில் மேகரோகத்தையடைந்து மரணமடைந்தான். மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறப்பில் பிறந்தவன் இவனே என்றோம்.

45. மாதுவின் சாபம் போல மனைவியு மிரண்டு மாகும்
போதவே தந்தை யில்லம் பொருந்தாமல் மனைவி யில்லம்
நீதியாய் வாழ்வா னாகும் நிகழ்நாற்பத் தொன்று மாண்டில்
சூதான வானி மாதஞ் செப்புவோங் கண்டந் தானே.

45. பெண்ணின் சாபம்போல் இரு மனைவியரை அடைவான். தன் தந்தையின் வீடு கிடைக்காமல் மனைவியின் வீட்டை அடைந்து வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய நாற்பத்தோராம் வயதில் ஆனிமாதத்தில் தந்தை மரணமடைவான்.

46. மறுஜன்மங் காஞ்சி தன்னில் வைசியக் குலமு திப்பான்
அறுபது வொன்பா னாண்டில் ஐப்பசி மாதந் தன்னில்
திருமகன் தனக்குக் கண்டஞ் செப்புவோம் பின்ஜன் மத்தை
உறைகுவா னரங்கந் தன்னில் உயர்மறைக் குலத்தி லேதான்.

**46.** மறு பிறவி, காஞ்சிபுரத்தில் வைசிய குலத்தில் பிறப்பான். அறுபத்தொன்பதாம் வயதில் ஐப்பசி மாதத்தில் ஜாதகனுக்கு மரணம் நேரிடும். ஜாதகனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். திருவரங்கத தில் அந்தண குலத்தில் பிறப்பான்.

**47.** அன்பது வாறு வாண்டில் அவன்பாரி மரண மெய்தும்
பின்ஜன்மந் தன்னூர் தன்னில் பிறப்பளாம் பௌத்ரி யாக
இன்னவன் யோகச் சேதி இயம்புவோஞ் ஜனனந் தொட்டு
மன்னவன் மரண மட்டும் வறுமைக ளில்லா வாழ்வன்.

**47.** ஜாதகனுடைய ஐம்பத்தாறும் வயதில் மனைவி மரணமடைவாள். அவள், மறுபிறவி, அதே ஊரில் புத்திரனுக்குப் புத்திரியாகப் பிறப்பாள். ஜாதகனுடைய யோகச் செய்தியைச் சொல்லுகின்றோம். பிறப்பு முதல மரணம் வரையில் வறுமைகளில்லாதவன்.

**48.** கைமுதல் கொடுக்கல் வாங்கல் கனத்திடும் பண்ணையேர் விருத்தி
ஐயமுஞ் செய்வா னுகும் அவன்திருப் பணியுஞ் செய்வன்
நய்யவே கூறு னுகும் நற்குளங் கூவல் செய்வன்
செய்வனுந் தான தர்மம் தந்தைக்கு மேலாய் வாழ்வன்.

**48.** பணம் கொடுக்கல் வாங்கல் செய்வான். பண்ணை ஏர் முதலியன விருத்தியடையும். தருமமும் செய்து வருவான். ஆலயத் திருப்பணியும் செய்துவருவான். பிறர் துன்புறும்படி பேசாதவன். குளம் கிணறு முதலியன செய்விப்பான். தானதருமங்கள் செய்து தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான்.

**49.** மனைவியால் பெருமை பூண்பன் மாதவஞ் சேது செல்வன்
கனமுள குடும்பி யாவன் கனத்தபுத் திகளு முள்ளான்
துணைவரோ டொத்து வாழ்வன் சுந்தரத் தேக முள்ளான்
வினைசெய்யா னொருவ ருக்கும் வீண்வம்பில் செல்லா னுமே.

**49.** தன்னுடைய மனைவியால் பெருமையடைவான். புண்ணிய தலமாகிய சேதுவுக்குச் செல்வான். பெரிய குடும்பியாவன். தாராள புத்தி யுள்ளவன். தன் பந்துக்களுடன் ஒத்து வாழ்வன். அழகுள்ள சரீரமுடையவன். ஒருவருக்கும் தீங்கிழைக்காதவன். வீண் வம்பில் செல்லாதவன்.

**50.** ஜனித்திடு காலந் தன்னில் சனிதசை யாண்டு மூன்றும்
குனித்திடு திங்க ளேழுங் கூறுவோம் பலனை யாங்கள்
வினைவருஞ் சாத கர்க்கு மேவிப்பின் நிவிர்த்தி யாகும்
கனமுடன் விபரம் ரண்டில் கழறுவோந் தாயே யாங்கள்.

**50.** ஜாதகன் பிறக்கும் காலத்தில் சனிமகாதசையில் மூன்று வருடங் களும் ஏழு மாதங்களும் மீதமாகும். அக்காலத்திய பலனைச் சொல்லு கின்றோம். ஜாதகனுக்கு நோய் ஏற்பட்டு நிவிர்த்தியாகும். மற்ற விபரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். தாயே! நாங்கள்.

## ஜாதகம் 99

1. மதிபுகர் கன்னி பரிதியுங் கோலாம்
மால்தேளில் ராகுவு மேரு
நிதிகுரு சாடி கேதுவும் வீணை
நீலனுங் கெண்டையில் தங்க
இதுவிதக் கிரக மிதுனமுஞ் ஜன்மம்
இயம்புவீர் பலன்தனை யென்றாள்
வதிட்டரு முரைப்பா ராணது ஜன்மம்
வந்தஇல் வடக்குவா சலாமே.

1. சந்திரன் சுக்கிரன் கன்னியிலும், சூரியன் துலாத்திலும், புதன் விருச்சிகத்திலும், ராகு தனுசிலும், குரு கும்பத்திலும், கேது மிதுனத்திலும், சனி மீனத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து இலக்கினம் மிதுனமானால், பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கலானாள். வசிஷ்ட முனிவர் கூறுகின்றார். இஃது ஆண்மகனின் ஜாதகம். பிறந்த வீடு வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது.

| | | | |
|---|---|---|---|
| சனி | *செவ்வாய் | | லக்கினம் கேது |
| குரு | இராசி சக்கரம் | | |
| | | | |
| ராகு | புதன் | சூரியன் | சந்திரன் சுக்கிரன் |

2. வாசமாங் கீழ்மேல் வீதியாங் குணக்கில்
மால்தந்தி காளியுந் தங்கும்
பாசமா மீசன் மீனத்தில் தங்கும்
பஞ்சவர் காளியுந் தெற்கில்
நேசமா யருக ருத்தர மாகும்
நிணமுண்ணுங் காளியுந் தெற்கில்
பேசுமிவ் வடையா ளத்துள பேரூர்
பூவைச்ய குலமதி லின்னேன் ;

2. வசிக்கும் வீடு கிழக்கு மேற்கான தெருவாகும். மேற்கில் திருமாலின் ஆலயமும் விநயகர் கோயிலும் காளி கோயிலும் உள்ளன. சிவபெருமான் ஆலயம் மீனதிக்கில் இருக்கும். திரௌபதியம்மன் கோயில் தெற்குத் திக்கிலும் அருக தேவர் கோயில் வடக்குத் திக்கிலும் மேற்குத் திக்கில் மற்றொரு காளி கோயிலும் இருக்கும். இவ்வித அடையாளங்களுள்ள பெரிய ஓர் ஊரில், பூவைசிய குலத்தில், இந்த ஜாதகன் ;

* 11-11-1879 அங்காரகன்—மேஷம்.

(செவ்வாயின் நிலை குறிக்கப்படவில்லை).

3. இன்னவன் உதிப்பான் சட்டியாம் ஜனனம்
இசைக்கின்றேந் தந்தைதாய் யோகம்
தன்துணை களத்ர புத்திர யோகம்
சதிநள்ள முன்பின்ஜன் மங்கள்
என்னுடை மனத்தி லிசைந்தமட் டுரைப்பேன்
இவன்தந்தை துணைவராண் மூன்று
கன்னிகை யவ்வாறு கழறுவோ மற்றோர்
கனமிலா வேறதாய்ச் செல்வார்.

3. (ஜாதகன்) தன் தந்தைக்கு ஆறும்பிறவியாகத் தோன்றுவான். இவனுடைய தந்தை தாய் உடன்பிறந்தவர்கள் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், இவர்களின் முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றையும், எனக்குத் தெரிந்தவரையில் சொல்லுகின்றேன். ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரர் மூவரும் சகோதரிகள் மூவரும் உண்டு என்று சொல்லுகின்றோம். மற்றவர் வேறாகச் சென்றுவிடுவர்.

4. வேல்விழி மாதே தந்தையின் குணத்தைச்
செப்புவோம் ஊகவான் பொறுமை
மால்பக்தி யுடையான் வாணிபஞ் செய்வான்
மருமத்தை வெளிவிடா தவனும்
நீலிபோல் கோபம் நேரும்பின் சாந்தம்
நேமியில் தூசியால் பெருமை
சீலவான் நாபிச் சூடுமே யுடையான்
சீக்கிர நடையுமே யாவான்.

4. அழகிய விழிகளையுடையவளே ! ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். ஊகமுள்ளவன். பொறுமையுடையவன். திருமாலின்மீது பக்தியுள்ளவன். வர்த்தகம் செய்துவருவான். இரகசியத்தை வெளிவிடாதவன். மிகுந்த கோபங்கொள்வான். பிறகு சாந்தமடைவான். உலகில் துணியினால் பெருமையடைவான். நல்லொழுக்கமுள்ளவன். நாபிச்சூட்டு நோயுள்ளவன். வேகமாக நடப்பவன்.

5. நடையது நன்மை நளினமாய் மொழியும்
நசித்தவர்க் குதவிகள் செய்வன்
தடபுடல் செய்கை சான்றோர்கள் பக்தி
தன்கர மன்னரே கையுமே
இடமது சித்திர மெய்துவா னிவனே
இளைஞர்புத் திகளுமே வுண்டு
கடனது கொள்வன் நிவிர்த்தியுஞ் செய்வன்
கதிர்வடி மெலிந்திடு காமன்.

5. நன்னடத்தை யுள்ளவன். இனிமையாகப் பேசுபவன். ஏழைகட்கு உபகாரம் செய்பவன். ஆடம்பரச் செய்கைகள் உள்ளவன். பெரியவர்களிடம் பக்தியுள்ளவன். கையில் அன்னரேகை யுள்ளவன். அழகிய வீடு

கட்டுவான். சிறுவர்களைப் போல் விளையாட்டுப் புத்தியுள்ளவன். கடன் வாங்குவான். தீர்த்துவிடுவான். சூரியனைப் போன்ற காந்தியுள்ள சரீர முள்ளவன். மெலிந்த உடலுடையவன்.

6. காமனை யதிக விருப்பமே கொள்வன்
கனத்ததே வாலயஞ் செல்வன்
மாமிய ரிருவர் மேவுவ ரந்த
வர்க்கமும் நாஸ்தியே செய்வன்
நேமியி லாதியில் வறுமையுங் கொஞ்சம்
நிமிலியும் வந்தபின் யோகம்
பாமர மனத்தன் கல்விமா னுண்டி
பகரமாம் இசையது கேட்பன்.

6. சிற்றின்பத்தில் பிரியமுடையவன். பல புண்ணிய ஆலயங்களுக்கும் செல்வான். இரு மனைவியரை அடைவான். அந்த வர்க்கத்தாரை ஒழித்து விடுவான். உலகில் ஆதிகாலத்தில் சிறிது வறுமை யுள்ளவன். மனைவி வந்த பிறகு யோகம் பெருகும். சாதாரண மனமுள்ளவன். கல்வி யறிவுள்ளவன். சாப்பாட்டில் பிரியன். சங்கீதம் கேட்பதில் ஆர்வ முள்ளவன்.

7. இசைந்த விக்குணத் தானுமே விவனும்
இறங்குவான் பலன்தனைக் கேளாய்
வசையினை யுடையான் கல்விமா னீகை
நறுமலர்ப் பிரியனுஞ் சாந்தம்
அசைவிலா மனத்த னறிவுளன் கோபம்
அடக்குவான் தூசுவா ணிபமும்
பசளையாங் குணத்தான் மாஞ்சிவப் புடையான்
பருவத ரேகையு முள்ளான்.

7. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு ஜாதகன் தோன்று வான். ஜாதகனுடைய பலனைக் கேளுங்கள். பிறரால் இகழப்படுவான். கல்வியறிவுள்ளவன். கொடையாளி. புஷ்பங்களின்மீது பிரியமுள்ளவன். சாந்தமுள்ளவன். சலனமில்லாத மனமுடையவன். அறிவாளி. கோபத் தை அடக்குபவன். துணி வியாபாரம் செய்து வருவான். வெகுளியான மனத்தினன். சிவந்த நிறமுடையவன். பர்வதரேகை யுடையவன்.

8. ரேகைபோல் பின்னல் நேரிடுந் தேகம்
நீங்காத செல்வனு மென்ன
தோகையர் மோகன் பூவது விருத்தி
தேவதா வரத்தினல் வருவான்
ஊகையாய்ச் சொல்வான் கடவுளர் பக்தி
உறுதியில் லாதநெஞ் சமுமே
ஆகம நுணுக்க மறிவனு னிவனே
அற்பரை யுறவுமே கொள்ளான்,

8. ரேகையில் இருப்பது போல் நீங்காத செல்வவானுக இருப்பான். பெண்கள்மீது மோகங் கொள்வான். புஷ்பங்களை விருத்தி செய்வான். தெய்வ வரத்தால் ஊகத்துடன் சொல்லுவான். தெய்வபக்தியுள்ளவன். திடமில்லாத மனமுள்ளவன். இவன் வேதாந்த இரகசியங்களை அறிந்தவன். அற்பர் சகவாச மில்லாதவன்.

9. கொள்ளவும் விற்கவும் வல்லவன் நல்லோர்
கூறுவார் யோக்ய னென்று
கள்ளமில் லாதான் முன்துணை காணுன்
காதலி மார்களு மிருவர்
தன்னோடு ஆண்பால் அவ்வித முரைப்போம்
சாற்றிய நான்குமே தீர்க்கம்
விள்ளுவோம் துணைஆண் நலமது ஜனனம்
வெற்றியே செய்திடு மனத்தான்.

9. வாங்கவும் விற்கவும் கூடியவன். நல்லவர்கள் இவனை யோக்கியனென்று கூறுவார்கள். திருட்டு எண்ணமில்லாதவன். முன் பிறந்த சகோதரனில்லாதவன். இரு சகோதரிகள். இரு சகோதரர்களும் உண்டு எனச் சொல்லவேண்டும். நாங்கள் கூறிய நால்வரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். சகோதரன் ஒன்பதாமவனுகப் பிறப்பவன். எடுத்த காரியத்தை ஜயத்துடன் முடிக்கும் மனமுள்ளவன்.

10. மனுதுலாம் கடைநாள் உதித்திடு......
......த்திரனும் சுகியன்
இனமதற் கினியன கல்வியு முடையன்
ஈகைவான் சுயதொழில் செய்வன்
கனமுளோர் நேசம் காதலி யிரண்டு
கழறுவோம் சுகதுக்க முடையான்
வினையதை எண்ணுன் வணிபமும் செய் . . . . .
. . . . . . நேசமே கொள்வன்.

10. துலாலக்கினத்தில் ரேவதி நட்சத்திரத்தில் பிறந்தவன். சுகமுள்ளவன். தன்னுடைய சுற்றத்தாருக்கு இனியவன். கல்வியறியுள்ளவன். கொடையாளி. தன் குலத் தொழிலையே செய்து வருவான். பெரியோர்களுடைய நேசம் உள்ளவன். இரு மனைவியர் உண்டு. சுகதுக்கம் கலந்துள்ளவன். ஒருவருக்கும் தீங்கிழைக்க எண்ணுதவன். வியாபாரம் செய்து வருவான். நட்புக் கொள்வான்.

11. அன்னவன் வறுமை கண்டிடான் இவனே
அவனியில் சமரஸ யோகம்
தன்சுதர் எட்டில் கன்னியு மிரண்டு
தனயர்கள் மூன்றுமே தீர்க்கம்
சொன்னதை மறுத்து ஜயமுனி புகலுவார்
எம்மனை புத்திர விருத்தி
முன்மனை யாட்குக் கன்னிகை ஒன்று
மேவிடும் பின்கர்ப்ப மரணம்.

11. அவன் வறுமையடையாதவன். (உலகில் மிதமான யோகமுள்ளவன்.) **சமரஸயோக**முடையவன். பிறக்கும் எட்டுக் குழந்தைகளில் இரு புத்திரிகளும் மூன்று புத்திரர்களும் நிலையாயிருப்பர். இங்ஙனம் கூறியதை மறுத்து ஐய முனிவர் சொல்லுகின்றார். எந்த மனைவிக்குப் புத்திர விருத்தி உண்டாகும். முதல் மனைவிக்குப் பெண் ஒருத்தி தோன்றுவாள். பிறகு அவள் கர்ப்பத்தால் மரணமடைவாள்.

12. மரணமே யாகி மறுமனை நேர்ந்து
வரைந்தவேழ் புத்திர விருத்தி
நெறியுட னிரண்டில் விபரமாய்ச் சொல்வேன்
நிகழ்த்துவோ மவன்பின்னோன் தசமமாம்
அரிவைநேத் திரத்தின் ராசியாம் மூலம்
அணுகிய நாளதி லுதிப்பான்
மருமவான் முரடன் உணவுக ளதிகம்
அன்னைதாய்ப் பிரியனு மென்ன.

12. மரணமடைந்த பின், இரண்டாம் மனைவியை மணந்து, ஏழு புத்திரர்களைப் பெறுவான். அதை இரண்டாம் பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம். அவனுக்கு அடுத்தவன் பத்தாமவனாகப் பிறந்தவன் என்றோம். மூல நட்சத்திரத்தில், கன்னியா லக்கினத்தில் பிறந்தவன். இரகசியமுடையவன். முரடன். அதிகமாக உண்பான். தாய் தந்தையர்க்குப் பிரியமானவன்.

13. அன்னவன் கலகம் கூறிடு மனத்தன்
ஆச்சர்ய கதைகளைச் சொல்வன்
பின்னமில் லாதான் சமரசக் கல்வி
பேச்சது அதிகமாம் கோபி
பொன்பணி இச்சை மறுமனை யோகன்
பூமிகள் சேர்த்திடு வானே
அன்னியர் வாழப் பொறுமையே கூறுவான்
அண்டினர் தமக்கு உதவியாம்
இன்னவன் தனக்குப் பாரியும் ஒன்று
எய்திடும் குடகுதிக் கென்றோம்.

13. ஜாதகனுடைய சகோதரன் கலகம் செய்யும் இயல்பினன். வியக்கத்தக்க கதைகளைக் கூறுபவன். ஊனமில்லாத சரீரமுடையவன். சமமான கல்வியறிவுள்ளவன். அதிகமாகப் பேசுபவன். முன் கோபி. பொன் ஆபரணங்களின்மீது பிரியமுள்ளவன். வேற்றுப் பெண்களின்மீது மோகமுடையவன். பூமிகளைப் பெருக்குவான். பிறர் வாழ்ந்திருப்பதைப் பார்த்து பொறாமை கொள்வான். தன்னை அண்டி வந்தவர்கட்கு உதவி புரிவான். இவனுக்குத் மேற்குத் திக்கிலிருந்து மனைவி ஒருத்தியே வாய்ப்பாள்.

14. குடமது தனத்தாட் குழவிகள் நவமாம்
கூறுவோ மாணது மூன்று
அடவுடன் கன்னி அவ்வித முரைப்போம்
அறைந்தவ ரிருவரும் தீர்க்கம்

திடமதாய் ஒன்றுய்ச் சேர்ந்துபின் வாழ்ந்து
செல்லியால் விரோதமே உண்டாய்
விடமன மாக வேறது செல்வார்
விளம்புவோம் பின்பலன் யாங்கள்.

14. அவளுக்கு குழந்தைகள் ஒன்பது பேராகும். அவர்களில் புத்திரர்கள் மூவரும் பெண்கள் மூவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். இவர்கள் ஒன்ருகச் சேர்ந்து வாழ்ந்து வருவார்கள். பெண் பிள்ளையால் விரோதம் ஏற்பட்டு, மனத்தாங்கலுடன் வேருகச் செல்வார்கள். மற்ற பலன்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்ருேம்.

15. கள்ளமில் லாத ஜாதகன் மணத்தைக்
கழறுவோ மீரொன்ப தாண்டுகள்
கொள்ளுவான் குடகில் அருகினில் சமவூர்
குறித்தனம் மாநிற முடையாள்
விள்ளவே உரைப்பாள் மனதினுக் கிசையாள்
மேவிடும் பித்தமே சூடு
கிள்ளைபோல் மொழியும் அறமதி லிச்சை
கௌரவக் குடும்பியு மாவாள்.

15. தீங்குகளில்லாத ஜாதகனுடைய திருமணக் காலத்தைக் கூறுகின்ருேம். மனைவி, பதினெட்டாம் வயதிற்குள் மேற்குத் திக்கிலுள்ள பக்கத்து சிற்றூரிலிருந்து வாய்ப்பாள். மாநிற முள்ளவள். கண்டித்துப் பேசுபவள். தன் கணவன் மனத்துக்குத் தக்கவாறு நடக்காதவள். பித்தச் சூட்டு நோயுள்ளவள். கிளியைப் போல் அழகாகப் பேசுபவள். தருமம் செய்வதில் பிரியமுடையவள். கௌரவமான குடும்பத்தை உடையவள்.

16. அவள்துணை ஆண்பால் இரண்டென மொழிவோம்
அம்பிகை மூன்றுமே யாகும்
நவனியில் துணைவர் முன்னவன் தன்னூர்
நல்குவான் மாதுலன் பக்கல்
சிவகளை உடையோன் யோகவான் செட்டுச்
செய்குவான் விசேஷமாய்த் தனங்கள்
தவறிலாச் சேர்ப்பன் தம்பியு முள்ளூர்
சாருவான் என்றனம் யாங்கள்.

16. அவளுக்கு உடன் பிறந்தவர்களில் சகோதரர் இருவர் என்று கூறுகின்ருேம். மூன்று சகோதரிகள் உள்ளனர். சகோதரர்களில் மூத்தவன் தன் மாமனூருக்குச் சென்றுவிடுவான். சிவபக்தியுள்ளவன். அதிருஷ்டமுடையவன். வர்த்தகம் செய்து வருவான். விசேஷமாக தனங்களைச் சேர்ப்பான். அவனுடைய தம்பியும் உள்ளூரிலேயே இருப்பான், என்று நாங்கள் கூறுகின்ருேம்.

**வேறு**

17. அனமே யவர்கள் சேதி பின்பால்
அறிவிப் போமே விவரமதாய்க்
கனமாம் சுதர்கள் சேதி சொல்வோம்
காளை யிரண்டு பெண்மூன்று
சொன......ம் தீர்க்கம் சதுர் சேதம்
ஐயமா முனியே தடுத்துரைப்பார்
விளையாம் சுதர்கள் முதலி ரண்டும்
வீரு வென்றீர் காரணஞ்சொல்.

**17.** தாயே! அவர்களுடைய செய்திகள் யாவற்றையும் பிற்பாகத்தில் விபரமாகச் சொல்லுகின்றேம். ஜாதகனுடைய புத்திரபாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் தோன்றுவர். சொன்னவர்கள் தீர்க்காயுளுள்ளவர்கள். நால்வர் சேதமாகும். ஐயமுனி மறுத்துச் சொல்லுகின்றுர். முதலில் தோனறும் புத்திரர்கள் இருவரும் நிலையார் என்று கூனீர். அதற்குக் காரணம் சொல்லுங்கள்.

**வேறு**

18. காரணம் ஐந்தோன் நீசம் கதிரவன் ஐந்தில் நிற்கத்
தேராது முதலி ரண்டும் தீர்கமாம் அதன் பின்னுக
மாரன்தன் அன்னை சேதி வரைகிறேம் மாஞ்சி வப்பள்
கூறுவாள் சுகமாய் வார்த்தை குலத்துளோர் மதிக்க வாழ்வள்.

**18.** காரணம், ஐந்துக்குரிய சுக்கிரன் நீச்சமாக கன்னியிலும், சூரியன் புத்திர ஸ்தானத்திலும் இருப்பதால், முதலில் தோன்றும் புத்திரர்கள் நிலையார். அதற்குப்பின் பிறப்பவர்கள் தீர்க்காயுள் உள்ளவராவார். ஜாதகனுடைய தாயின் செய்தியைக் கூறுகின்றேம். மாநிற முள்ளவள். சுகமாகப் பேசுபவள். தன் பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள்.

19. இளமன துடைய ளாகும் இல்லமும் உள்ளூ ராகும்
நளபாகம் செய்வா ளாகும் நாயகி யோக சாலி
வளமுள துணைஆண் ஒன்று மங்கையும் மூன்று என்றேம்
களங்கமாம் துணைஆண் பாலும் காலன்தன் பதிக்குப் புக்கும்.

**19.** இளகிய மன முள்ளவள். பிறந்தவீடு உள்ளூரிலேயே இருக்கும். நளனைப்போல் ருசியாகச் சமைப்பவள். அதிருஷ்ட முடையவள். செழிப்புள்ள சகோதரன் ஒருவனும், சகோதரி மூவரும் உண்டு என்றும் சொல்லுவோம். சகோதரனுக்குத் தோஷமுண்டு. அவன் இடையில் மரணமடைவான் என்றேம்.

**வேறு**

20. புக்குகிப் பிறந்து பின்னுகப் பூவை பூர்வம் புகலக் கேள்
நக்கன் வாழும் தொண்டை எனும் நாட்டில் மேற்கில் வன்னி [குலம்
மிக்க உதித்து வரனுண்டாய் மெல்லி வாழ்நாள் விளைசொல் [வேன்
துக்கப் பட்டு ஏழையுமே சுதருக் கன்னம் தான் கேட்க;

**20.** இவ்விதம் இறந்து மீண்டும் பிறந்த ஜாதகனுடைய தாயின முற பிறவியைக் கேளுங்கள். சிவபெருமான் வாழும் தொண்டைநாட்டுக்கு மேற்கில், வன்னிய குலத்தில் பிறந்து, கணவனையடைந்து வாழ்ந்து வரும் போது ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். துக்கப்பட்ட ஏழையொருத்தி தன் குழந்தைக்கு அன்னம் வேண்டி இவளைக்கேட்கும்போது;

**ஏழையின் குழந்தைக்கு அன்னம் தர மறுத்தது**

21. தானு மவள்மேல் வெறிகொண்டு சாராதில்லம் தான் செல்வாய்
ஈன மாகத் தானுரைக்க ஏழை மனது தான்கலங்கித்
தோன்றும் பின்ஜன் மங்களிலே தோகை யாகத் தானுதித்து
ஆணும் பெண்ணும் அடுக்காக ஐந்து அளவாய் மாண்டிடுமே.

**21.** அவள்மீது கோபமுற்று, வீட்டிற்குள் வராதே. போ ! என்று கூறி, கீழ்த்தரமாகச் சொல்லும்போது, ஏழைப் பெண் மனம் வருந்திக் கூறுகின் றாள். உனக்கு ஏற்படும் மறுபிறவிகளில் பெண்ணாகவே பிறந்து ஆணும் பெண்ணும் அடுக்கடுக்காக ஐந்து குழந்தைகள் இறக்கும்.

22. இடுமே துணையாண் காணுளாய் எய்தில் நசிக்கு மென்றுரைத்து
உடனே வேறு இல்லம்சென் றுரைத்தாள் ஏழை இவள்சேதி
விடம்போல் அந்தத் தோஷமது மேவிற் றன்றே மாதுக்கு
அடவாய் அந்தம் சுதர்நீங்கி அடைந்தாள் காலன் பக்கலிலே.

**22.** இவள் சகோதரனில்லாதவளாகி (அப்படியிருந்தாலும்) மரித்துவிடும் என்று கூறி வேறு வீட்டுக்குச் சென்றாள். ஏழையிட்ட சாபம் விஷம்போல் இவளுக்கு ஏற்பட்டது. அப்போது தன் குழந்தையையும் இழந்து மரண மடைந்தாள்.

23. காலன் பதிக்குத் தான்சென்று கஞ்சன் தன்னால் இக்குலத்தில்
சீலி வந்தாள் ஏழைதுயர் ஜனிக்கும் சுதர்கள் முதல்பீடை
சாலத் துணைஆண் தோஷமுறும் சாரும் ஜன்மம் தான்கேளாய்
வேலங் காட்டில் சைவகங்கை மேவி வாழ்வள் வித்தகியே.

**23.** மரண மடைந்து, பிறகு மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இக் குலத்தில் ஜாதகனுடைய தாயாகப் பிறந்தாள். ஏழையின் சாபத்தால் முதலில் தோன்றும் குழந்தைகள் நிலையா. சகோதர தோஷமும் உண்டா கும். இனி ஏற்படும் பிறவியைக் கேளுங்கள். திருவாலங்காட்டில் சைவ வேளாள குலத்தவளாகப் பிறந்து வாழ்வாள்.

24. தகவாய் தந்தை பூர்வமதைச் சாற்றக் கேண்மோ சிங்களனாய்
மிகவே உதித்து அறமிச்சை வேலோன் பக்தி மீகக்கொண்டு
பகையில் லாமல் காலன்பதி பிறந்தான் பிரமன் தான்வரைய
ஜகமே உய்யும் மேகத்தைச் சிறையை மீட்ட குலமதனில்.

**24.** ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். சிங்களனாகப் பிறந்து, தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, சுப்பிரமணியக் கடவுளிடம் பக்தி கொண்டு, தீவினைகளில்லாமல் வாழ்ந்து, மரண மடைந்தான். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு சத்திரியகுலத்தில் பிறந்தான்.

25. தனிலே உதித்துத் தாயிரண்டு சாரும் பின்தாய்க் குதித்தவனும்
இனமே மதிக்கத் தானுய்வான் எய்தும் ஜன்மம் இசையக்கேள்
வினையை விலக்கும் சேதுவினில் மேவு, வானு மிக்குலத்தில்
தனயன் பூர்வம் தான்சொல்வேன் சான்ருேர் வாழும்
[அருணையிலே;

25. அக்குலத்தில் பிறந்து, தன் தந்தைக்குற்ற இரு தாய்மார்களில் இளைய வளுக்குப் பிறந்தவன். தன் பந்துசனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். இனி ஏற்படும் பிறவியைக் கேளுங்கள். தீவினைகளைப் போக்கும் சேதுவில் இதே குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்ருேம். பெரியோர்கள் வாழும் திருவண்ணுமலையில்;

### வேறு

26. பெருந்தன முடை யோனுக்குப் பிறந்தனன் வைச்யச் சேயாய்
அறந்தனி லிச்சை [illegible]ண்டாய் அவனியில் நல்லோ ளுகித்
திருவருள் சுரந்து வின்னேன் ஜன உபகாரி யாயும்
உறைந்தனன் காலன் பக்கல் ஊழது இல்லா தானுன்.

26. வைசிய குலத்தில் ஒரு பெரிய தனவானுக்குப் புத்திரனுகப் பிறந்து, தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, உலகில் நல்லவனுக வாழ்ந்து, அன்புடன் எல்லோருக்கும் உதவிசெய்து வந்து, மரண மடைந் தான். தீவினைகள் இல்லாதவனுனன்.

27. வந்தவ னிந்தப் பாலன் வரைகிருேம் யோகச் சேதி
விந்தையாய்த் தூசுச் செட்டு விவசாயச் செட்டும் செய்வன்
எந்திடம் பெருமை பூண்பன் இளம்பிறை போல யோகம்
தன்தன மதிக முண்டு தலவாசம் செல்வா னுகும்.

27. மீண்டும் இப் பிறவியில் பிறந்தவன், இந்த ஜாதகன். அவனுடைய யோகச் செய்தியைக் கூறுகின்ருேம். துணி வியாபாரமும் விவசாயமும் செய்துவருவான். எல்லாவிடங்களிலும் பெருமையடைவான். வளர் பிறைச் சந்திரன்போல் யோகம் வளரும். தன்னுல் சம்பாதிக்கப்பட்ட பொருள் அதிக முள்ளவன். புண்ணிய க்ஷேத்திரங்கட்குச் சென்று வருவான்.

28. பருவத யோகம் ஒன்று பகருவோம் வேசி யோகம்
மருமமாய்ச் சகட யோகம் பகருவோம் பலனை யாங்கள்
திருமகள் வாச முள்ளான் ஜனஉப காரி யாகும்
உரைக்கிருேம் மூவெட் டின்மேல் ஓங்கிடும் விரைவாய்ச் செட்டு.

28. ஜாதகனுக்குப் **பர்வதயோகம்** ஒன்றும் **வேசியோகம்** ஒன்றும் **சகடையோகம்** ஒன்றும் உண்டு என்று சொல்லுகின்ருேம். அதன் பலனைக் கூறுவோம். லட்சுமீ விலாசம் உள்ளவன். ஜனங்களுக்கு உபகாரி. ஜாதக னுக்கு, இருபத்துநான்காம் வயதிற்கு மேல் வர்த்தகம் பெருகும்.

29. தனமது கொடுக்கல் வாங்கல் தானியச் செட்டும் செய்வான்
இனமது மெச்ச வாழ்வான் இரண்டாயி ரம்பொன் சேர்ப்பான்
கனமுள குடும்பி யாகிக் கழறுவோம் நாற்பா னண்டில்
சினமுண்டாய்ப் பாக மூன்றுய்ச் சிதறிடும் துணைவர் தாமே.

29. பணம் கொடுக்கல், வாங்கல் செய்வான். தானிய வியாபாரமும் செய்து வருவான். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். இரண்டாயிரம் பொன் சேர்ப்பான். செழிப்புள்ள குடும்பத்தை யடைந்த இந்த ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் கோபத்தினால் சொத்துக்கள் மூன்று பிரிவினையாகி, சகோதரர்கள் பிரிந்து போவார்கள்.

30. முப்பது ஆறு ஆண்டில் உயர்துலா மாதந் தன்னில்
செப்புவோம் தந்தை கண்டம் சென்றுபின் இரண்டா மாண்டில்
ஒப்புடன் தனுசு மாதம் உரைக்கிறே மன்னைக் கண்டம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

30. ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் ஐப்பசி மாதத்தில் தந்தை மரணம் அடைவான். பிறகு இரு வருடங்களில் மார்கழி மாதத்தில் தாய் இறந்து விடுவாள். கங்கையைச் சடைமுடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியே! கூறிய வார்த்தைகள் தவறு.

31. உதித்தவ னன்பா நாலில் உயர்கன்னி மாதம் தன்னில்
விதியது முடியு மென்றேம் விளம்புவோம் பின்ஜன் மத்தைக்
கதிதரும் கோகர் ணத்தில் கலப்பனும் சௌராஷ்டர வம்சம்
நிதிகமிக உடைய னுகி நேமியில் வாழ்வா னுமே.

31. ஜாதகன், தனது ஐம்பத்துநான்காம் வயதில் புரட்டாசி மாதத்தில் மரண மடைவான். மறுபிறவியைச் சொல்லுகின்றேம். முக்தியளிக்கும் திருக்கோகர்ணத்தில் சௌராஷ்டிர மரபினனுகப் பிறப்பான். செல்வம் அதிகமாகப் பெற்று உலகில் வாழ்ந்து வருரான்.

32. பாரியு மன்பான் மூன்றில் பகருவோம் கண்டம் தானும்
நாரிபின் காணு னுகும் நாயகன் ஜனன காலம்
வீருசித் திரை முதல்கால் மேவுசே யாறு மாண்டும்
கூறிய திங்கள் ரண்டும் கூறுவோம் பலனை யாங்கள்.

32. ஜாதகனுடைய மனைவி, அவனது ஐம்பத்து மூன்றும் வயதில் மரண மடைவாள். வேறு மணம் செய்து கொள்ளான். ஜாதகனுடைய ஜனன காலத்தில் சித்திரா நட்சத்திரம் முதல் பாதம் செவ்வாய் தசையில் ஆறு வருடங்களும் இரு மாதங்கள் மீதியிருக்கும். (பிற்பாகத்தில்) மற்ற பலன்களைக் கூறுகின்றேம்.

33. பின்துணை விருத்தி யாகும் பிறந்தவன் பிணியு மெய்தும்
அன்னையின் துணைவன் சேதம் அடாநிந்தை தந்தைக் கெய்தும்
மன்னிய பிணியு மெய்தும் வரைகிறேம் விபரம் ரண்டில்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

33. பின் சகோதர விருத்தியுண்டு. ஜாதகனுக்கு நோயுண்டாகும். தாயின் சகோதரன் மரண மடைவான். தன் தந்தைக்கு அடாத பழி ஏற்படும். பிணியும் ஏற்படும். மற்ற விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றேம். உயர்ந்த கணவனையடைந்த தேவியே! கேளுங்கள்.

## ஜாதகம் 100

1. மிதுனமே ஜன்ம மாக மெய்ஞ்ஞானி மதியும் தங்கப்
புதன்ரவி குசனும் நாலில் புகரஞ்சில் ராகு ஏழில்
விதியவன் குருவும் பத்தில் மேவிடில் பலன்கள் எவ்வாறு
அதிபதி கேட்கும் போது மாமுனி புகலு கின்றார்.

1. மிதுனம் ஜன்மமாகவும், கேது சந்திரன் மிதுனத்திலும், சூரியன் புதன் செவ்வாய் நான்காமிடமாகிய கன்னியிலும், சுக்கிரன் ஐந்தாமிடத்திலும், ராகு ஏழாமிடத்திலும், குரு சனி பத்தாமிடமாகிய மீனத்திலும் இருந்தால், பலன் எவ்வாறு என்று பார்வதி கேட்கும்போது முனிவர் சொல்லுகின்றார்.

| | | | |
|---|---|---|---|
| குரு சனி | | | லக்னம் கேது சந்திரன் |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| ராகு | | சுக்கிரன் | சூரியன் புதன் செவ்வாய் |

2. இந்தசேய் ஆணும் ஜன்மம் இல்லமும் வடதென் வீதி
அந்தஇல் கீழ்ப்பால் நோக்கம் அருகினில் சந்து முண்டு
தென்திசை அருகர் கோட்டம் தேவிமா காளி மீனம்
தந்தியும் மேல்பால் தங்கும் ஜீரண மந்த கோஷ்டம்.

2. இஃது ஆண் ஜன்மம். பிறந்த வீடு தெற்கு வடக்கான வீதியில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது. அருகினில் சந்து இருக்கும். தெற்குத் திசையில் அருகதேவன் ஆலயமும், காளிதேவி வடக்கு திக்கிலும், மேற்குத் திக்கில் இடிந்த விநயகர் கோயிலும் உள்ளன.

3. இத்தகை மாடி சூழ்ந்த இலகிய சமவூர் தன்னில்
வித்தக னன்னை இல்லம் மேவுவான் ஜேஷ்ட னுகச்
சுத்தமாய்த் தந்தை இல்லம் செப்பிவோ மவ்வூர் உத்ரம்
சத்தியே குடும்பச் சேதி சாற்றுவோம் தாயே யாங்கள்.

3. இங்ஙன முள்ள மாடி வீடுகள் சூழ்ந்த சமநிலையுள்ள ஊரில் ஜாதகன் தன் தாயின் வீட்டில், தன் தந்தைக்கு மூத்த புத்திரனுகப் பிறப்பான். தந்தையின் வீடு அவ்வூருக்கு வடக்கில் உள்ளது. அக் குடும்பத்தின் செய்தியைக் கூறுகின்றோம், நாங்கள், தாயே !

4. தந்தையின் துணையாண் ஒன்று சத்திமார் மூவ ரென்றோம்
முந்தின துணைவ னாக மொழிகிறோ மவன் குணத்தை
விந்தையாய்ப் பேச வல்லன் விசித்திர வீடு செய்வன்
சந்ததம் கிராமச் செட்டுச் செய்குவான் கிருஷி செய்வான்.

4. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூவரும் உண்டு என்றோம். சகோதரன் ஜாதகனுடைய தந்தைக்கு மூத்தவன் என்றோம். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். வேடிக்கையாகப் பேசுபவன். அழகிய வீடு கட்டுவான். எப்பொழுதும் கிராம வியாபாரம் செய்து வருவான். விவசாயம் செய்து வருவான்.

5. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் ஆண்பால் ரண்டு
தீரமாய்ப் பெண்பால் நான்கு தீர்க்கமா மிவனுக் கேதான்
கூறின ஆண்பா லுந்தான் கூற்றன் தன் பதிக்குச் செல்லும்
வீரியன் வேறுய்ச் செல்வன் வயதுமத் தியமா மென்றோம்.

5. மனைவியும் ஒருத்தியே யாகும். இரு புத்திரர்கள் தோன்றுவர். நான்கு பெண்கள் பிறந்து தீர்க்காயுளுள்ளவர்களாவார்கள். கூறிய புத்திரன் மரண மடையான். ஜாதகனுடைய தந்தையும் தனியாகச் சென்றுவிடுவான். அஃது இடைக் காலத்தில் நடைபெறும்.

6. பின்பாகம் விவர மாகப் பேசுவோம் தாயே யாங்கள்
தந்தையின் சேதி சொல்வேன் தனூராசி அஸ்த நாளில்
வந்தவன் குணத்தைச் சொல்வேன் மால்நிறம் பித்த தேகி
சிந்தையும் நல்ல தாகும் ஜனசகா யங்கள் செய்வான்.

6. அதைப் பிற்பாகத்தில் விபரமாகச் சொல்லுகின்றோம். தாயே! ஜாதகனுடைய தந்தையின் செய்தியைச் சொல்லுகின்றோம். தனுர்லக்கினத்தில் ஹஸ்த நட்சத்திரத்தில் பிறந்தவன். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். கரிய நிறமுள்ளவன். பித்தச் சூடுடையவன். நல்ல மனமுள்ளவன். ஜனங்களுக்கு உபகாரம் செய்பவன்.

7. அருகர்தன் பக்தி பூண்பன் அண்டினோர்க் குதவி செய்வன்
திருகான வார்த்தை இல்லான் தீரமில் லாத நெஞ்சம்
விரைவினில் நடக்க வல்லான் விவசாயத் தொழிலே செய்வன்
உறன்முறைக் கினிய னாகு மொண்டொடி தனக்கு நேயன்.

7. அருகப் பெருமானிடம் பக்தியுடையவன். தன்னையண்டி வந்தவர்கட்கு உபகாரம் செய்பவன். தீயவார்த்தைகள் இல்லாதவன். தைரியமில்லாத மனத்தினன். வேகமாக நடப்பவன். விவசாயத்தொழில் செய்து வருவான் தன் பந்துஜனங்களுக்குப் பிரியனுவன். தன் மனைவிக்குப் பிரியனுவன்.

8. இந்நெறி உடையா னுக்கு இவனுமே உதிப்பா னாகும்
அன்னவன் துணைஆ ணென்று அனுகிடு மிவனுக் கேதான்
கன்னிகைக் காணு தாகும் காதலன் குணத்தைச் சொல்வேன்
மன்னிய மகர ராசி விசாகநாள் தோன்று வானும்.

8. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். அவனுக்குச் சகோதரன் ஒருவனும் உண்டு. சகோதரியில்லாதவன். ஜாதகனுடைய சகோதரனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். மகர லக்கினத்தில் விசாகா நட்சத்திரத்தில் பிறப்பான்.

9. மால்நிறம் உளைச்சல் நிட்சி மருமத்தை வெளிகாட்டாதான்
சீலவான் தந்த்ர வாதி செய்நிலம் கிருஷி செய்வன்
நீலிமார் மோகம் கொள்வன் நீத்தோர்க ளுறவு கொள்வான்
பால்பாக்கிய முடைய னாகும் பரிந்துப சாரம் செய்வான்.

9. கரிய நிற முள்ளவன். மெல்லியதும் உயர்ந்ததுமான சரீரம் உடையவன். நல்லொழுக்க முள்ளவன். தந்திரமுள்ளவன். விளைநிலங்களை விருத்தி செய்வான். பெண்கள்மீது மோகமுள்ளவன். பெரியோர்கள் உறவு கொள்வன். புத்திர பாக்கிய முள்ளவன். அன்புடன் உபசாரம் செய்வான்.

10. தந்தைக்குத் தாழ்வு றுதான் சாற்றுமுன் கோபி யாவன்
வந்திடு மனைவி யொன்று மருவிடும் தென்மேல் திக்கில்
அந்தவன் தனக்குப் புத்திரர் ஆணது ஒன்றே யாகும்
சந்ததம் பெண்பால் ரண்டு தங்கிடும் தீர்க்க மாக.

10. தன் தந்தைக்கு குறைவில்லாதவன். கூறுவதற்குமுன் கோபம் கொள்வான். மனைவி யொருத்தியே. அவள் தென்மேற்குத் திக்கிலிருந்து வருவாள். அவனுக்குப் புத்திரன் ஒருவனே. இரு பெண்கள் பிறந்து தீர்க்கமாயிருப்பர்.

11. சிலகாலம் ஒன்றாய் வாழ்ந்து செல்லுவான் வேற தாக
நலன்களைப் பின்பால் சொல்வேன் நாயகன் குணத்தைக் கேளாய்ப்
பலருக்கும் பந்தி னர்க்கும் பரிந்துப சாரம் செய்வன்
கலகத்தைக் கூறு னாகும் கார்நிறம் சமதே கத்தான்.

11. சிலகாலம் ஒன்றாக வாழ்ந்து பிறகு வேறாகச் சென்று விடுவான். பலன்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய குணத்தைக் கேளுங்கள். தன் பந்து ஜனங்களுக்கும் மற்றும் பலபேருக்கும் அன்புடன் உபசாரம் செய்வான். கலகம் கூறாதவன். கரிய நிறமுள்ளவன். சமமான தேகமுடையவன்.

12. கல்வியும் சமம தாகும் கருதிடான் கட்டு வார்த்தை
தல்லியின் வார்த்தை தட்டான் தரணியில் ஜீவிப் பானும்
சொல்வதைக் காப்பா னாகும் தேவதா பக்தி பூண்பன்
இல்லையென் றுரைக்க மாட்டான் இடரான புத்தி யில்லான்.

12. கல்விமான். சமமான தேகமுள்ளவன். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவன். தன் தாயின் வார்த்தையைத் தட்டாதவன். தெய்வபக்தியுள்ளவன். யாசித்தவர்கட்கு இல்லையென்று கூறாதவன். தீங்கான புத்தியில்லாதவன்.

13. சமயோகம் வறுமை காணன் சல்லியம் காணு ளுகும்
நியமங்க ளேளேற்கா ளுகும் நிலையிலார்க் கன்ன மீவன்
சுமைதாங்கி போல வாழ்வான் செய்ந்நன்றி மறவா ளுகும்
அமைந்திடும் வேறு இல்லம் அதிகார முடைய ளுமே.

13. சமமான யோகம் உள்ளவன். வறுமை யடையாதவன். கடன் படாதவன். நியமங்களை ஏற்காதவன். ஏழைகட்கு அன்ன மளிப்பவன். சுமைதாங்கிபோல் எல்லாவற்றையும் தாங்கி வாழ்ந்து வருவான். செய்த உபகாரத்தை மறவாதவன். வேறு வீடு கிடைக்கும். அதிகாரங்கள் உடையவன்.

14. மூவைந்து ஆண்டு தன்னில் மேவிடும் தென்மேல் பாரி
பாவையின் குணத்தைச் சொல்வேன் பகையென்று மனத்தில் [வையாள்
நாவது சுத்த முண்டு நாயகி மாநி றத்தாள்
சேவையும் செய்வா ளாகும் அதிபரன் தமக்கு மேதான்.

14. ஜாதகனுடைய பதினைந்தாம் வயதில் தென்மேற்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அப்பெண்ணின் குணத்தைக் கூறுகின்றேம். மனத்தில் விரோதம் பராட்டாதவள். வாக்குச் சுத்தமுடையவள். மாநிற முள்ளவள். சிவபெருமானுக்குத் தொண்டு செய்பவள்.

15. வரனுக்கு ஏற்ற மாது வரையுமுன் கோபி யாவள்
பொரைசொலாள் யோக சாலி புண்ணிய மனத்தா ளாகும்
திருகான குணமில் லாதாள் தேவிக்கு வயது தீர்க்கம்
பராசரும் மறுத்துச் சொல்வார் பணியுமே ஏழில் நின்று;

15. தன் கணவனுக்கு ஏற்றவள். கூறுவதற்குமுன் கோபம்கொள் வாள். கோள் சொல்லாதவள். அதிருஷ்ட முள்ளவள். புண்ணியமான மனத்தினள். தீய குணங்களில்லாதவள். நீண்ட ஆயுளுள்ளவள். பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். ராகுவும் ஏழாம் வீட்டில் இருந்து;

16. எட்டினுக் குடையோன் காரி ஏழிடம் தன்னைப் பார்க்கத்
தட்டிடும் முதல்ம னைதான் சார்ந்திடு மிரண்டாம் மாது
திட்டமா யேழா ளுட்சி சுகத்துளோ னுச்ச மாக
ஒட்டாது வேறு மாது ஒருத்தியே தீர்க்க மெய்தும்.

16. எட்டாம் வீட்டுக்குரிய சனி ஏழாம் வீட்டைப் பார்ப்பதால் முதல் மனைவி இறந்துபோவாள். இரண்டாம் மனைவி வாய்ப்பாள். ஏழாம் வீட்டுக்குரிய குரு ஆட்சியாகவும், நான்காம் வீட்டுக்குரிய புதன் உச்சமாக வும் இருப்பதால் இரண்டாம் மனைவி வாய்க்கமாட்டாள். ஒரு மனைவியே தீர்க்காயுளுடையவள்.

17. சுதர்களும் காணு ளுகும் தோன்றினும் தீதே யாகும்
விதங்களைச் சொல்லு மென்ன வெள்ளியு மஞ்சில் நிற்க
மதலைகள் தோஷ மெய்தும் அதுவன்றிப் புகரோ னுட்சி
விதியவன் குருவும் சேர்ந்து வீற்றிடம் தசம மாக ;

17. புத்திரர்கள் தோன்றார். தோன்றினும் நிலையார். அதற்குக்காரணம் கூறுங்கள் என்று கேட்க, சுக்கிரன் ஐந்தாம் வீட்டில் இருப்பதால் புத்திரதோஷம் உண்டு. அதுவுமல்லாமல், சுக்கிரன் ஆட்சியாக இருப்பதாலும், சனியும் குருவும் சேர்ந்து பத்தாம் வீட்டில் இருப்பதாலும்;

18. புதல்வர்கள் தோன்று மென்றோம் புகலுவோம் ஆண்பால் ரண்டு
மதிமுகப் பெண்பா லொன்று மருவிடும் தீர்க்க மாக
அதிபந்தன் பூர்வம் சொல்வேன் மாயூரம் தன்னி லேதான்
சதிசெய்யும் வைச்யச் சேயாய் ஜனித்தன னென்று சொல்வோம்.

18. புத்திரர்கள் தோன்றுவார்கள். இரு ஆண் குழந்தைகளும் அழகிய பெண் ஒருத்தியும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்கள் ஆவார்கள். ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மாயூரத்தில், வைச்ய குலத்தவனாகப் பிறந்தான் என்று சொல்லுகின்றோம்.

19. பலவித வாணிபம் செய்து பத்தினி மதலை உண்டாய்த்
தலைவனும் வாழு நாளில் சதுர்மறைக் குலத் தானுக்குச்
சிலசில பொருளுந் தந்து செய்தனன் கணக்கில் மோசம்
நலமுள மறையோன் பார்த்து நாட்டினான் கணக்கில் மோசம்.

19. பலவிதமான வியாபாரம் செய்துவந்து, மனைவி மக்களைப் பெற்று வாழ்ந்து வருங்காலத்தில், ஓர் அந்தணனுக்குச் சில பொருள்கள் கொடுத்து, கணக்கில் மோசம் செய்தான். நன்மையுள்ள அந்தணன் அதைப் பார்த்து, ஐயோ! கணக்கில் மோசம் செய்தானே!

20. என்றுமே திகில டைந்து இயம்புவான் சாபம் தானும்
பின்ஜன்ம மனையின் தோஷம் புதல்வர்கள் தோஷ மெய்தும்
அன்னவர் சொல்லிச் சென்றார் அணுகிற்று அந்தத் தோஷம்
குன்றின மனத்த னாகிக் குலவினன் கால னோடு.

20. என்று பயந்து இவ்விதம் சாபமிடுகின்றான். மறு பிறவியில் உன் மனைவி புத்திரர்கட்குத் தோஷம் ஏற்படும் என்று கூறிவிட்டுச் சென்றார். அந்தத் தோஷம் ஜாதகனுக்கு ஏற்பட்டது. குறைப்பட்ட மனமுடையவனாகி மரணமடைந்தான்.

21. பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனும் அருகர் வர்க்கம்
மறையவர் சாபம் தானும் மருவிடு மிவனுக் கேதான்
குறையவே சாந்தி சொல்வேன் குமரனும் சதுர்த சியின்
....................................நோன்பு.

21. மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு, சமண குலத்தில் பிறப்பான். வேதியர் கூறியதுபோல் சாபம் இவனுக்கு ஏற்படும். அது தீரச் சாந்தி யொன்று கூறுவோம். ஜாதகன் சதுர்த்தசியன்று விரதம் . . . . .

22. பூணவே வினைகள் போக்கிப் பிறந்திடும் சுதர்கள் தாமும்
காணவே மனைவி தீர்க்கம் கழறின வினைசெய் யானேல்
தோணாது தோன்றில் தீதாம் செப்புவோம் பின்பால் சேதி
வேணுகோ பாலன் தங்காய் விளம்புவோ மன்னே சேதி.

22. இருந்தால், தீவினைகள் நீங்கிப் புத்திரர்கள் தோன்றுவர். மனைவியும் தீர்க்காயுள் உள்ளவளாவள். கூறிய சாந்தியைச் செய்யாவிடில் புத்திரர்கள் பிறவார். பிறக்கினும் நிலையார். மற்ற விபரங்களைப் பின் பாகத்தில் சொல்லுகின்றோம். கண்ணபிரானின் தங்கையே! தாயின் செய்தியைக் கூறுகின்றோம்.

23. அன்னைமா நிறத்த ளாகும் ஆளனுக் கினிய ளாகும்
முன்கோபம் பின்பு சாந்தம் உதித்திடும் வாயு பீடை
தன்துணை யாண்பா லொன்று சாற்றுவோம் தீர்க்க மாக
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அரசர்பூ சிதமு மாவான்.

23. தாய் மாநிறமுடையவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். முன்கோபி. பிறகு சாந்தமடைவாள். வாயு நோய் ஏற்படும். சகோதரன் ஒருவன் தீர்க்காயுளுடன் இருப்பான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அரசரால் மதிக்கப்படுவான்.

24. ஒருவன்பால் அதிகா ரத்தை உத்தமன் செய்வா னாகும்
பெரும்புத்தி சிவந்த மேனி புண்ணிய மனத்த னாகும்
அரிவையர் தன்னால் யோகம் அணுகிடு மிவனுக் கேதான்
வரும்பாரி உள்ளூர் ஒன்றே மைந்தர்க ளாண்பால் ரண்டு.

24. ஒருவனிடம் சென்று அதிகாரம் வகிப்பான். பெரும்புத்தியுள்ளவன். சிவந்த உடலுள்ளவன். புண்ணியமான மனத்தினன். மனைவியால் யோகம் கிட்டும் இவனுக்கு, என்றோம். அவனுக்கு மனைவி ஒருத்தியே. அவளும் உள்ளூரிலிருந்தே வாய்ப்பாள். இரு புத்திரர்கள் உண்டு என்றோம்.

25. கன்னிமா ரவ்வாறு தீர்க்கம் காதலன் வறுமை காணாள்
அன்னையின் பூர்வம் சொல்வேன் அருணைக்குத் தென்பா லாகத்
சின்னவூர் தன்னி லேதான் ஜனித்தனள் சைவச் சேயாய்ப்
பொன்பணி உடையா ளாகி புகழான குடும்பியாகி;

25. பெண்ணும் அவ்வாறே ஒருத்தி அவள் தீர்க்கமுள்ளவள். வறுமையடையாதவள். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேன். திருவண்ணாமலைக்குத் தெற்கில் உள்ள சிற்றூரில் சைவகுலத்தவளாகத் தோன்றுவாள். பொன் ஆபரணங்கள் உள்ளவளாகி, கீர்த்தியுடைய குடும்பத்தை யடைந்து;

26. பஞ்சைமே லிரக்க முண்டாய்ப் பறந்தனள் கால னோடு
மிஞ்சிய அருகர் வர்க்கம் மேவினா ளிவளே என்றோம்
வஞ்சியும் வறுமை காணாள் வரைகிறோம் பின்ஜன் மத்தைத்
தஞ்சமாம் காஞ்சி தன்னில் ஜனிப்பளா மிவளே என்றோம்.

26. ஏழைகளின்மீது இரக்கமுண்டாகி மரணமடைந்தாள். மீண்டும் சமணகுலத்தில் பிறந்தாள், இவள் என்றோம். வறுமையடையாதவள். மறுபிறவியைச் சொல்லுகின்றோம். எல்லோருக்கும் தஞ்சமளிக்கும் காஞ்சியில் பிறப்பாள் என்றோம்.

27. தந்தைமுன் ஜன்மம் சொல்வேன் தில்லையின் மேல் பாலாகப்
பிந்திய ஊரி லேதான் பிறந்தனன் செக்கா னாக
முந்துமால் பக்தி கொண்டு உயர்வோருக் கன்ன மீந்து
தன்தன மதிக முண்டாய்ச் சேதுவின் பதிக்குப் புக்கி;

27. தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தில்லையம்பதிக்கு மேற்கில் உள்ள சிற்றூரில், வாணியர் குலத்தில் பிறந்து, திருமாலின்மீது பக்தியுடன் பெரியோர்கட்கு அன்னமளித்து, தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் பெற்று, சேதுவுக்குச் சென்று ;

28. பவமது இல்லா னாகி பறந்தனன் காலனோடு
தவசியும் வரையப் பட்டு ஜனித்தனன் இவனே யென்றோம்
அவனுமே முன் ஜன் மத்தில் அணுகினன் செக்கா னென்றீர்
நவனியில் அருகர் வர்க்கம் நல்கும்கா ரணங்க ளென்ன.

28. தீச் செயல்கள் இல்லாமல் மரணமடைந்தான். மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இப் பிறவியில் பிறந்தான் என்றோம். ஜாதக னுடைய தந்தை முற்பிறவியில் வாணியர் வமிசத்தில் பிறந்தவன் என்று கூறினீர். இப் பிறவியில் சமணகுலத்தில் பிறக்கும் காரணங்கள் என்ன ?

29. முன்ஜன்மம் தேவ பக்தி உயர்வோருக் கன்ன மீந்தும்
உன்னத சேது சென்றும் உள்மனம் கபடில் லாமல்
அன்னவன் வாழ்ந்த தாலே அருகர்தன் குலமு தித்தான்
பின்ஜன்ம மவ்வூர் தன்னில் பிறப்பனு மிக்குலத்தில்.

29. முற் பிறவியில் தெய்வபக்தியுடனும், பெரியோருக்கு அன்னமளித் தும் வந்து, உயர்ந்ததலமாகிய சேதுவுக்குச் சென்றும், மனத்தில் கபடமில்லா மலும் வாழ்ந்து வருவதால் அருகர் குலத்தில் பிறந்தான். மறு பிறவியில் அவ்வூரில் இதே குலத்தில் பிறப்பான்.

30. முப்பது ஒன்று ஆண்டில் உயர்கன்னி மாதந் தன்னில்
செப்புவோம் தந்தை கண்டம் சனிதசை புகர்பொ சிப்பு
ஒப்புடன் நடக்கு மென்றோம் உரைத்தது தப்பா தாகும்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

30. ஜாதகனுடைய முப்பத்தோராம் வயதில் புரட்டாசி மாதத்தில் தந்தை மரணமடைவான். அக்காலத்தில் சனிமகாதசை சுக்கிரபுக்தி நடை பெறும். நாங்கள் கூறியவை தவறா. கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவ பெருமானின் தேவியே ! கூறிய வார்த்தைகள் தவறா.

31. அதற்குமே லாறு வாண்டில் ஐப்பசி மாதந் தன்னில்
மதிமுக வன்னை கண்ட மறைந்தது தப்பா தாகும்
இதுவன்றிச் சாத கர்க்கு இயம்புவோ மறுபா னெட்டில்
கதிதரு மகர மாதங் கழருவோங் கண்டந் தானே.

31. அதற்குமேல் ஆறும் வருடத்தில் ஐப்பசி மாதத்தில் அழகிய அன்னை மரணமடைவாள். கூறியது தவறாது. இதுவுமல்லாமல், ஜாதகனுக்கு அறு பத்தெட்டாம் வயதில் தைமாதத்தில் மரணம் நேரிடும்.

32. மறு ஜன்மங் காஞ்சி மேற்கில் வளமுள ஊரிலே தான்
திருமக னிக்கு லத்தில் ஜனிப்பனு மென்று சொல்வோம்
அரசரால் தொழிலும் பெற்று அதிகார முடைய னவன்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

32. ஜாதகன், மறு பிறபியில், காஞ்சிபுரத்துக்கு மேற்கில், செழிப்புள்ள ஊரில், இதே குலத்தில் தோன்றுவான் என்று சொல்லுகின்றோம். அரசாங்க உத்தியோகம் ஏற்று அதிகாரம் வகிப்பான். விநாயகனைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

33. வந்தவன் பொதுயோ கத்தை வரைகின்றேந் தாயே யாங்கள்
தந்தைமேல் யோகம் வாய்க்கும் தனமது கையி ருப்புச்
சந்ததங் கிருஷி யாலே தானவன் சீவிப் பானும்
முன்திருப் பணியுஞ் செய்வன் உயர்வோர்கள் பகதி பூண்பன்.

33. ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். தாயே! தன் தந்தைக்கு மேன்மையாக யோகம் ஏற்படும். கையில் பொருள் சேர்த்துவைத்திருப்பான். விவசாயம் செய்து ஜீவித்து வருவான். கோயில் திருப்பணியும்செய்து வருவான். பெரியோர்களிடம் பக்தி கொள்வான்.

34. கடன் கொளான் இடுக்க ணில்லான் கனத்திடும் பணேயேர் விருத்தி
உடன்படான் பிழைக ளுக்கு உலகினில் வறுமை காணன்
தடைசொலான் தாய்தந் தைக்கே சகடுவா கனமு முள்ளான்
திடமான குடும்பி யாவன் சிறுத்தோருக் குதவி செய்வன்.

34. கடன்படாதவன். துன்பங்களில்லாதவன். பண்ணை, ஏர் முதலியன விருத்தியாகும். தீச்செயல்கள் செய்ய மனமில்லாதவன். வறுமையடையாதவன். தன் தாய்தந்தையர் வார்த்தைக்கு மறுமொழி கூறான். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். பெரிய குடும்பியாவான். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி.

35. எண்ணஞ்சு வாண்டு தன்னில் இவன்துணை வேறுயச் செல்வன்
புண்ணியத் தலங்கள் செல்வன் புகழது ஏற்பா னுகும்
திண்ணமா யிவன்பின் னாலே துணைவனு மேகு வானும்
அண்ணலைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

35. ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் சகோதரன் தனியாகச் சென்று விடுவான். புண்ணிய தலங்களுக்குச் செல்வான். கீர்த்தியடைவான். திண்ணமாக ஜாதகனுக்குப் பிறகு சகோதரன் மரணமடைவான். சிவபெருமானைப் பூசைபுரியும் புண்ணியவதியே! கேளுங்கள்.

36. அத்திரி சொல்லு கின்றார் அவன்தந்தை மூத்தோ னுக்குப்
புத்திர தோட மென்றீர் பூஸ்திதி யெவ்வாறு சொல்வீர்
வித்தகன் தனக்குப் பெண்பால் விளம்பினேம் நான்கு மாகச்
சுத்தமாய் மத்திலோர் மாது சேருவா ளில்லந் தன்னில்.

36. அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுடைய மூத்த தந்தைக்குப் புத்திர தோஷம் உண்டு என்று சொன்னீரே! அவனுடைய சொத்துக்கள் யாரைச் சேரும் என்று சொல்லுங்கள். அவனுக்கு நான்கு புத்திரிகள் உண்டு என்றேம். அவர்களில் ஒரு பெண்ணிடம் இவன் சேர்ந்து வாழ்ந்து வருவான்.

37. பின்பாகம் விவர மாகப் பேசுவோம் முனியே யாங்கள்
அன்னவன் ஜனன காலம் ஆதிரை மூன்றும் பாதம்
உன்னதப் பணியி ருப்பு உரைக்கின்றே மாண்டு மாறும்
தன்னுடன் திங்க ளொன்பான் சாற்றுவோம் பலனை யாங்கள்.

37. பிற்பாகத்தில் விபரமாகச் சொல்லுகின்றோம். முனிவரே ! நாங்கள். ஜாதகனுடைய ஜனன காலத்தில் திருவாதிரை மூன்றும் பாதம் ராகு மகா தசையில் ஆறுவருடங்களும் ஒன்பது மாதங்களும் மீதமாகும். அக்காலத்திய பலனைச் சொல்லுகின்றோம், நாங்கள்.

38. ஜாதகன் பிணியால் வாடும் தந்தையின் வர்க்கஞ் சூதம்
பேசுவோங் குடும்ப லேச்சல் பொன்னது செலவு மாகும்
தீதுண்டு காலி கட்கு ஜனசூதம் துணைவி ருத்தி
ஓதுவோம் பின்பால் சேதி உத்தமி கேட்டி டாயே.

38. ஜாதகன் நோயால் வருந்துவான். தந்தையின் வர்க்கத்தினருக்கு அசுபம் நேரிடும். குடும்பத்தில் அலேச்சல் எற்படும். பொருள் செலவாகும். கால் நடைகட்குச் சேதமுண்டு. பந்துக்களில் அசுபம் நிகழும். சகோதர விருத்தி எற்படும். மற்ற விபரங்களைப பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். உயர்ந்தவளே ! கேளுங்கள்.

# ஜாதகம் 101

1. மதிபுகர் ராகு கோலில் மறை தேளில் கேது மேடம்
புதன் சனி இரவி கன்னி பூமகன் நந்தி யாக
இதுவிதக் கோளு நின்று லக்கினம் வீணை யாக
அதுபலன் புகலு மென்று அம்பிகை கேட்க லுற்றாள்.

1. சந்திரன் சுக்கிரன் ராகு துலாத்திலும், குரு விருச்சிகத்திலும், கேது மேஷத்திலும், புதன் சனி சூரியன் கன்னியிலும், செவ்வாய் விருஷபத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமானல், ஏற்படக் கூடிய பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | செவ்வாய் | இலக்கனம் |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| | குரு | சந்திரன் சுக்கிரன் ராகு | புதன் சனி சூரியன் |

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது ஆண்பால் ஜன்மம்
வருமில்லம் கீழ்மேல் வீதி வாசலு முத்ர நோக்கம்
பெருவயி றப்பன் மேற்கில் பலமிலா ஈசன் கீழ்ப்பால்
நரிவாக னத்தோள் மாரி நாட்டுவோம் வடமேல் திக்கில்.

2. அகத்திய முனிவர் கூறுகின்றார். இஃது ஆண்மகனின் ஜாதகம் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. மேற்கில் விநாயகர் ஆலயமும் கிழக்கில் பாழடைந்த சிவன் கோயிலும் வடமேற்கில் காளி கோயிலும் மாரியம்மன் கோயிலும் உள்ளன.

3. இத்தகை யடையா ளத்துள் இலகிய சிறுவூர் தன்னில்
வித்தகன் கங்கை சேயாய் மேவுவா னென்று சொல்வோம்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்ர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இவ்வித அடையாளங்களுள்ள ஒரு சிற்றூரில் ஜாதகன் வேளாள குலத்தவனாகப் பிறப்பான் என்று சொல்லுகின்றோம். இவனைப் பெற்ற தாய் தந்தை மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றையும் இந்நூலில் கூறுவோம்.

4. தாதைக்குத் தாரம் ரண்டில் தரித்திடும் முதல்மா தீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் தந்தை
போதவே துணைவர் தம்மைப் போற்றவே பலத்தைக் காணேம்
மேதினில் தனியாய் வாழ்வன் வித்தகி மறுமா துக்கு ;

4. ஜாதகனுடைய பாட்டனுக்குற்ற இரு மனைவியரில் மூத்த மனைவி பெற்ற மகன் ஜாதகனுடைய தந்தை என்று சொல்லுகின்றேம். அவனுடைய சகோதரர்களைப் பற்றிக் கூற பலமில்லை. ஜாதகனுடைய தந்தை தனியனுக வாழ்ந்து வருவான். தந்தையின் இளைய தாய்க்கு ;

5. கன்னிகை இரண்டு என்றேம் கழறுவோம் பிதாகு ணத்தைத்
துன்னுமால் நிறத்தா னுகும் சுகமுள வார்த்தை சொல்வன்
பொன்பணி உடையா னுகும் பூமியும் விருத்தி செய்வான்
அன்னவன் வறுமை காணுன் ஆனையை யொத்த தேகன்.

5. இரு பெண்கள் தோன்றுவார்கள். ஜாதகனின் தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றேம். திருமாலின் நிறமுடையவன். சுகமாகப் பேசுபவன். பொன்னுபரணங்களை யுடையவன். விளைநிலங்களைப் பெருக்குவான். வறுமை யடையாதவன். யானையைப் போல் பருத்த தேகமுடையவன்.

6. ரோமங்கள் நிட்சி இல்லான் நுவலுப தேசம் கொள்வான்
க்ஷேமமாம் குடும்பி யாவன் தீரமில் லாத நெஞ்சன்
காமனை விருப்பம் கொள்வன் கபடிலான் காலி விருத்தி
தாமத குணத்த னுகும் தன்பந்து புகழ வாழ்வன்.

6. குட்டையான ரோமங்களுள்ளவன். உபதேச வார்த்தையைக் கேட்பவன். சுகமான குடும்பத்தைப் பெற்றவன். தைரியமில்லாத மனத்தினன். சிற்றின்பத்தில் விருப்பமுள்ளவன். கபடமில்லாதவன். கால்நடைகள் விருத்தியாகும். தாமதமான குணத்தினன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்வான்.

7. தேவதா பக்தி கொள்வன் செய்ந் நன்றி மறவா னுவன்
தீமையை ஒருவர்க் கெண்ணுன் தேவிமேல் பிரிய னுவன்
நாவது தவறு னுவன் நாட்டினில் சல்யம் கொள்ளான்
சேவலன் கொடியோன் பக்தி செய்குவா னென்று சொல்வோம்.

7. தெய்வபக்தி யுள்ளவன். செய்த நன்றியை மறவாதவன். பிறருக்குத் தீங்குசெய்ய நினையாதவன். மனைவியின்மீது பிரியமுள்ளவன். சொல் தவருதவன். கடன் படாதவன். சேவலைக் கொடியாகக் கொண்ட முருகக் கடவுள்மீது பக்தியுள்ளவன்.

8. சொன்னஇக் குணத்தா னுக்குச் சுதனுமே உதிப்பா னுகும்
அன்னவன் துணைந வத்துள் ஆண்துணை காணு னுகும்
கன்னிகை எழுவர் தீர்க்கம் காதலி மார்கள் தம்முள்
பின்னங்கள் சிலவே துன்பம் பேசுவோம் பின்பால் சேதி.

8. இக் குணங்களையுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான. அவனு டன் பிறந்தவர்கள் ஒன்பது பேரில் சகோதரன் ஒருவனும் இல்லை. சகோதரி ஏழு பேர் நீண்ட ஆயுளுள்ளவர்கள். சிலர் நிலையார் என்று சொல்லு வோம். பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம்.

9. உதித்தவன் குணத்தைச் சொல்வேன் உறுதிவான் மாநி றத்தான்
சதியிலா மனத்த னாகும் தரணியை விருத்தி செய்வான்
பதியது புதிதாய்ச் செய்வன் பலபாவை மோகம் கொள்வன்
துதிசெய் தோர்க் கன்ன மீவன் துணைவியா லவமா னத்தான்.

9. ஜாதகனுடைய குணத்தைக் கூறுகின்றோம். திடமுள்ளவன். மாநிற முள்ளவன். தீய மனமில்லாதவன். பூமியைப் பெருக்குவான். புதிய வீடு கட்டுவான். பல பெண்கள்மீது விருப்பம் கொள்வான். தோத்திரம் செய்பவர்கட்கு அன்ன மளிப்பவன். தன் மனைவியால் அவமானம் அடை வான்.

10. தானியச் செட்டுச் செய்வன் சகலர்க்கு நல்லோ னவன்
மானமாய்ச் சீவிப் பானும் மாற்றலர் தமை ஜயிப்பன்
ஈனமாம் குணங்க ளில்லான் இருவிதக் குணத்தா னாகும்
பான்மையாய்ப் பேச வல்லன் பஞ்சைமே லிரக்க மாவன்.

10. தானிய வியாபரம் செய்துவருவான். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். கண்ணியமாக ஜீவித்து வருவான். விரோதிகளை வெல் வான். அற்ப குணங்களில்லாதவன். இரு விதமான குணங்களுமுள்ளவன். பொருத்தமாகப் பேசுபவன். ஏழைகளின்மீது இரக்கமுடையவன்.

11. தந்தை நாள் பூமி மேலாய்த் தானவன் விருத்தி செய்வன்
கந்தன்மேல் பக்தி கொள்வன் கல்வியு முடைய னாகும்
தன்தனம் கொடுக்கல் வாங்கல் தலவாசம் செய்வா னாகும்
விந்தையாய்ப் பேச வல்லன் மேவுவான் தலவா சங்கள்.

11. தன் தந்தையின் பூமியைப் பெருக்குவான். முருகக் கடவுள்மீது பக்தி யுடையவன். கல்வியறிவுள்ளவன். பொருள் கொடுக்கல் வாங்கல் செய்பவன். புண்ணிய தலங்களுக்குச் செல்வான். வேடிக்கையாகப் பேசு பவன். புண்ணிய தலங்களுக்குச் செல்வான்.

12. வண்டிவா கனமு முள்ளான் வணிபங்கள் செய்வா னாகும்
குண்டைகோ விருத்தி யுண்டு குலத்துளோர் மதிக்க வாழ்வன்
எண்டிசைப் புகழு மேற்பன் இவன்திருப் பணியும் செயவான்
தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் சாதிப்பான் சிலவே சங்கை.

12. வண்டி முதலிய வாகனவசதிகள் உள்ளவன். வர்த்தகங்கள் புரிந்து வருவான். பசு எருதுகளது விருத்தியுண்டு. தன் பந்துஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். எல்லாத் திக்குகளிலும் கீர்த்தி அடைவான். ஆலயத்திருப்பணி செய்வான். தமிழ் இலக்கிய நுட்பங்களை அறிவான். சில சந்தேகங்களைத் தீர்ப்பான்.

13. போஜன சுகிய னாகும் புகழான குடும்பி யாவன்
காசுமே லாசை உள்ளான் கரமதில் கோதுமை ரேகை
நேசர்கள் அதிகம் கொள்வன் நேர்ந்திடும் மாமி ரண்டு
கூசிடான் வார்த்தைக் கேதான் கோதையே கேட்டி டாயே.

13. சுகமாகச் சாப்பிடுவதில் பிரியமுள்ளவன். கீர்த்தியுள்ள குடும்பத்தை யடைவான். காசின்மேல் பிரியமுள்ளவன். கையில் கோதுமை ரேகை யுள்ளவன். பல பேர்களுடன் நட்புக்கொள்வான். இரு மனைவியரை அடைவான். வார்த்தைகளைப் பேச அஞ்சாதவன். தாயே ! கேளுங்கள்.

14. இருபது இரண்டு ஆண்டில் எய்திடும் பார்யை தானும்
வருங்கன்னி கீழ்ப்பா லாகும் வரைகிறோ மவள்கு ணத்தை
நெறியுளாள் வலிவு முண்டு நிதம்சீலி யோக சாலி
பொரைசொலாள் இளம னத்தாள் புண்ணிய மனத்த ளாமே.

14. ஜாதகனுடைய இருபத்திரண்டாம் வயதில் மனைவி வாய்ப்பாள். அவள் கிழக்குத் திக்கிலிருந்து வாய்ப்பாள். அவளுடைய குணத்தைக் கூறு கின்றோம். நெறியுடையவள். திடமான சரீரமுள்ளவள். நல்லொழுக்கமுள்ள வள், அதிர்ஷ்டமுள்ளவள். கோள் சொல்லாதவள். இளகிய மனமுடைய வள். புண்ணியமான மனத்தினள்.

15. சுதர்களு மிரண்டு தோன்றும் சோர்ந்திடு மனைவி தானும்
அதிபதி மரண மாகி மறுபாரி நேரு மென்றோம்
அதுவுமே தென்பால் நேரும் அவள்குணம் சிவந்த மேனி
சதியிலாத் குணத்த ளாகும் சான்றோர்கள் பக்தி பூண்பள்.

15. இரு புத்திரர்கள் தோன்றுவர். பிறகு மனைவி மரணமடைவாள். பிறகு மறு மனைவி வாய்ப்பாள். அவள் தெற்குத் திக்கிலிருந்து வருவாள். சிவந்த உடலுடையவள். தீங்கில்லாத மனத்தினள். பெரியோர்களிடம் பக்தி யுள்ளவள்.

16. அன்னம்போல் சாய லுண்டு ஆளனுக் கினிய ளாகும்
தன்சொலு மடக்க முண்டு சாந்தமும் கோப முண்டு
பின்னமில் லாத தேகி பெரிதான புத்தி உண்டு
கன்னென மொழியு முண்டு கல்வியு முடைய ளாமே.

16. அன்னத்தைப்போன்ற அழகுள்ளவள். தன் கணவனுக்குப் பிரிய மானவள். அடக்கமாகப் பேசுபவள். சாந்தம் கோபம் இரண்டும் உள்ள வள். ஊனமில்லாத தேகமுடையவள். தாராள புத்தி யுடையவள். இனிய வார்த்தைகளையே பேசுபவள். கல்வி யறிவுள்ளவள்.

17. சுகமுள வார்த்தை கூறுவள் துறவோருக் கன்ன மீவள்
பகையென்று மனத்தில் வையாள் பரிந்துப சாரம் செய்வள்
அகம் கொண்டோர் தம்மைச் சேராள் அழகுளாள் பலவீ னத்தாள்
இகபரன் பக்தி பூண்பள் இடரான புத்தி இல்லாள்.

17. சுகமாகப் பேசுபவள். துறவிகட்கு அன்னமளிப்பவள். விரோதம் பாராட்டாதவள். அன்புடன் உபசரிப்பவள். அகங்காரம் கொண்டவர்களுடன் நட்பில்லாதவள். அழகுள்ளவள். பலஹீனமுள்ளவள். சிவ பெருமானிடம் பக்தியுள்ளவள். தீய புத்திகளில்லாதவள்.

18. சுதர்களும் இருநான் காகத் தோன்றிடும் அதிலாண் ஒன்று
மதிநுதல் பெண்பால் நான்கு வரைகிறோம் தீர்க்க மாக
முதலது தோஷ மெய்தும் மேவிடு மாறுஞ் ஜன்மம்
அதுஆண்பால் தீர்க்க மெய்தும் அச்சுதர் தவத்தால் தோன்றும்.

18. எட்டுக் குழந்தை பிறக்கும். அவர்களில் ஒரு புத்திரனும் நான்கு புத்திரிகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். முதல் குழந்தைக்குத் தோஷமுண்டு. ஆறுமவன் நிலையாயிருப்பான். அந்த ஆண்குழந்தை தீர்க்காயுளுள்ளது. அது திருமாலைத் துதித்ததால் தோன்றும்.

19. குறுமுனி இவ்வாறு சொல்லக் கூறுவார் பாராசர் தாமும்
இருபாரி அணுகும் சேதி இவன்சுதர் தோஷம் யாவும்
விதங்களைச் சொல்லு மென்ன வேதியன் ஏழோ னுகித்
திருகான ஆறில் நிற்கச் சனியுமே பார்த்த தாலே ;

19. அகத்திய முனிவர் இங்ஙனம் கூற, பராசரமுனிவர் சொல்லுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் தோன்றும் காரணங்களைப்பற்றிய சேதியையும், புத்திர தோஷம் ஏற்படக் காரணத்தையும் சொல்லுங்கள். குரு ஏழாம் வீட்டுக் குரியவனாகி ஆறாம் வீட்டில் (மறைவு ஸ்தானம்) இருப்பதாலும், சனி பார்ப்பதாலும் ;

20. பாரியு மிரண்டே என்றோம் பணிபுகர் அஞ்சில் நிற்கக்
கூறினோம் புத்ர தோஷம் குஜனுமே விரயம் புக்க
வீரியன் துணைவர் தோஷம் வதிட்டரும் கூறு கின்றார்
காரிய ஸ்தானம் தன்னைக் கனகனும் பார்த்த தாலே ;

20. இரு மனைவியர் தோன்றுவார் என்றோம். ராகு சுக்கிரன் புத்திர ஸ்தானமாகிய ஐந்தில் இருப்பதால் புத்திர தோஷம் உண்டு. செவ்வாய் பன்னிரண்டில் இருப்பதால் சகோதர தோஷம் ஏற்பட்டது. வசிஷ்ட முனிவர் சொல்லுகின்றார். கருமஸ்தானத்தை குரு பார்த்ததால் ;

21. புத்திரன் தன்னால் கர்மம் பொருந்திடு மிவனுக் கேதான்
குத்தமாம் எட்டோன் காரி கூறின கருமம் பார்க்க
வித்தகன் முன்ஜன் மத்தில் மேவிற்று வினைய நேகம்
பத்திய தோஷம் தன்னைப் பகருவீர் முனியே நீர்தாம்.

21. ஜாதகனுக்குத் தன் புத்திரனால் கர்மம் ஏற்படும். எட்டாம் வீட்டுக் குரிய சனி பத்தைப் பார்ப்பதால் ஜாதகனுக்கு முற்பிறவியில் பல தீவினைகள் ஏற்பட்டன. என்ன என்ன தோஷங்கள் ஏற்பட்டன என்று சொல்லுங்கள்.

22. முன்ஜன்ம வினையைக் கேண்மோ முக்கூடல் அருகி லேதான்
தென்பாலில் சிறுவூர் தன்னில் ஜனித்தனன் கர்ண சேயாய்
அந்நகர் கணக்கு வேலை அரசரால் செய்து இன்னோன்
தன்மனை மதலை உண்டாய்ச் சாற்றுவோம் ஊழி தானே.

22. ஜாதகனுடைய முற்பிறப்புத் தீவினையைக் கேளுங்கள். முக்கூடலுக் கருகில் தெற்குப் பக்கத்தில் உள்ள சிற்றூரில் கருணீகர் குலத்தவனுகப் பிறந்தான். அவ்வூர்க் கணக்கன் வேலையை இவன்பெற்று வாழ்ந்து வந்தான். மனைவி மக்களைப்பெற்று வாழும்போது ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

23. ஏழையால் பூமிக் காக இரணியம் பெற்றுக் கொண்டு
தாழ்விலா தனவான் பக்கல் சரிசெய்தான் இவனே யென்றோம்
ஏழையும் மனவெ றுப்பால் இயம்புவான் சாபம் தானும்
தோழியும் மரண மாகிச் சுதர்களும் தோஷ மெய்தும்.

23. ஏழையினிடமிருந்து பூமிக்காகப் பொருள் பெற்று, குறைகளில்லா ஒரு தனவானிடம் சேர்த்துவிட்டான், இவன். ஏழையும மனவருத்த மடைந்து சாபமிட்டான். மனைவியும் மாண்டு, புத்திரர்களும் இறந்து, குலமும் நாசமாகும் என்று ஏழைகள் கூறினர்.

24. குலமது நாச மாகும் கூறினர் ஏழை யோர்கள்
உலவிற்று அந்த தோடம் உரைக்கிறோம் வேறு ஒன்று
தலைவனு மில்லா மாதைச் சம்மந்தம் செய்து வந்து
நலமுடன் கருவு தங்க நாயகன் மனது வெட்கி;

24. அந்தத் தோஷம் ஏற்பட்டது. வேறு ஒன்று கூறுகின்றோம். ஜாதகன் ஒரு கைம்பெண்ணுடன் இன்ப மனுபவித்துவந்து, அதனுல் கருவேற்பட்டு, பயந்து;

25. பலவித பண்டி தத்தால் பற்றின கருவு நீங்கித்
தலைவியும் மாண்டா ளென்றோம் சார்ந்தது அந்தத் தோடம்
நிலையிலார் சாப மொன்று நேர்ந்தது இவனுக் கேதான்
தலமதில் நாகம் தன்னைச் சண்டன்தன் பதிக்குச் சேர்த்தான்.

25. பல விதமான மருந்துகளால் ஏற்பட்ட கருவை நீக்கினுன். ஆனுல் அப் பெண் இறந்துவிட்டாள். அந்த தோஷம் பற்றியது. ஏழைகளின் சாபம் ஒன்றும் ஏற்பட்டது. வீட்டில் ஒரு நல்லபாம்பு இருந்தது. அதை அடித்துக் கொன்றுவிட்டான்.

26. இப்படி பலவா றுக எய்திற்று இவனுக் கேதான்
ஒப்புடன் அந்தி யத்தில் உறைந்தனன் சேதுக் கேதான்
செப்புவேன் மரண காலம் சுதர்பகை யாகி யேதான்
தப்பித கால னுடு சென்றன னிவனே யென்றோம்.

26. இப்படிப் பல விதமாக ஜாதகனுக்குத் தோஷம் ஏற்பட்டன. இறுதியில் இவன் சேதுவுக்குச் சென்று, தன் புத்திரர்களிடம் விரோதம் ஏற்பட்டு, மரணமடைந்தான்.

27. தலைநான்கோன் வரையப் பட்டு ஜனிப்பனும் கங்கை சேயாய்
உலவிடும் ஏழை சாபம் உரகன்தன் தோடத் தானும்
நலமிலாக் கருவால் மாண்ட நாயகி தோடம் தானும்
குலவிடும் கருவின் குற்றம் கோதையும் மரண மாகும்.

27. மீண்டும் பிரம்ம தேவனுல் படைக்கப்பட்டு, வேளாள குலத்தவனுகப் பிறப்பான் என்று சொல்லுவோம். ஏழைகளின் சாபத்தாலும் பாம்பைக் கொன்ற தோஷத்தாலும் கைம்பெண்ணின் கருவழித்து அவள் இறந்த தோஷத்தாலும் ஜாதகனுடைய மனைவி கருவேற்பட்டு மரணமடைவாள்.

28. நாகத்தின் தோடத் தாலே நற்சுதர் ஆண்பால் தோடம்
பாகமாய் ஏழை சாபம் பருகாது துணைஆ ஞந்தான்
போகவே கிரியை ஒன்று புகலுவீர் முனியே நீர்தாம்
தோகையும் கருவால் மாண்ட தோடத்தின் சாந்தி சொல்வோம்.

28. நல்லபாம்பைக் கொன்ற தோஷத்தால் புத்திரனுக்கும், ஏழையின் சாபத்தால் சகோதரனுக்கும் ஏற்பட்ட தோஷத்தை நீக்கச் சாந்தி யொன்று கூறுங்கள், முனிவரே! தாங்கள். கைம்பெண்ணின் கருவையழித்ததால் அவள் இறந்த தோஷத்துக்குச் சாந்திவொன்று கூறுகின்றோம்.

29. பணிதோஷம் ஏழை சாபம் பகருவோம் கிரியை ஒன்று
மனைவியும் தானு மாக மாலவன் நகரம் சென்று
கனமுள தீர்த்தம் தோய்ந்து கடவுளர்க் கர்ச்சித் தேத்தி
அனையவே ரசிதம் தன்னுல் அரவுமே செய்து இன்னேன்;

29. சர்ப்பத்தைக் கொன்ற தோஷம் ஏழையின் சாபம் இவற்றை நீக்கச் சாந்தியும் சொல்லுகின்றோம். ஜாதகன், தன் மனைவியுடன் ஸ்ரீரங்க நகரம் சென்று, புண்ணிய நீராடி, தெய்வத்துக்கு அருச்சனை முதலியன செய்து, துதித்து வெள்ளியால் பாம்பின் ஓர் உருச்செய்து;

30. ஆதிபம் தன்னைக் கூட்டி அருமறை யோருக் கீந்து
நீதியாய்ப் பாதம் போற்றி நிமலனும் அருச்சித் தேத்திப்
போத..கும் போரூர் பதிசென்று முருகர் பாதம்
போதவே அர்ச்சித் தேத்திப் பிறந்தன ணடியார் ஆண்;

30. தட்சிணையைத் தாம்பூலத்துடன் அந்தணருக்குக் கொடுத்து, அவருடைய பாதங்களில் வணங்கி, அவரால் ஆசீர் வதிக்கப்பட்டு .......... ......திருப்போரூருக்குச் சென்று, முருகக் கடவுளுக்கு அருச்சனை முதலியன செய்து, அங்குள்ள சிவனடியார்;

31. சங்கமர் மூவேழ் பேர்க்குச் சாதமு மளித்து இன்னேன்
தங்களூர் சென்று மேதான் சக்திமா ரியின்கோட் டத்தில்
நங்கைபோல் சிலையில் செய்து நற்றீப மேந்தும் போல
இங்கிவன் செய்வா னுகில் எய்திய வினைகள் போமே.

31. இருபத்தோர் ஆண் அடியார்களுக்கு அன்னமளித்து, தங்களுடைய சொந்த ஊருக்குத் திரும்பி, மாரியம்மன் கோயிலில் தீபத்தைக் கையில் தாங்குவதுபோல் பெண் சிலை ஒன்று செய்து வைத்து (விளக்கேற்றி வைத்தால்), செய்த தீவினைகள் போம்.

32. மதனன்போ லாண்பால் நேர்ந்து வயதுமே தீர்க்க மெய்தும்
விதிபோலச் செய்யா ஞகில் விளங்கினும் தீதே யாகும்
சதமுடன் செய்வா ஞகில் புத்திர ரறுவர் தோன்றும்
அதற்குமுன் மூன்று சேதம் அத்திரி தடுத்து சொல்வார்.

32. மன்மதனைப் போல் அழகிய ஆண் குழந்தை பிறந்து நீண்ட ஆயு ளுடனிருக்கும். அலட்சியமாகச் செய்யாமலிருப்பாளுகில் புத்திர பாக்கியம் இல்லை. தோன்றினுலும் நிலையாது. பக்தியுடன் செய்து வந்தால் ஆறு புத்திரர்கள் பிறப்பர். அதற்கு முன் மூவர் இறந்து விடுவார். அத்திரி முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார்.

33. எந்தக்கா லத்தில் செய்ய இயம்புவீர் முனியே நீர்தாம்
வந்தவன் முப்பா னெட்டில் வரைந்திட்ட வினைகள் செய்யில்
முந்திய வினைகள் போக்கி மேவிடும் சுதராண் தானும்
கந்தனை ஈன்ற மாதே கழறுவோம் அன்னை சேதி.

33. எந்தக்காலத்தில் சாந்தி செய்யவேண்டும்? முனிவரே? நீர் கூறும். ஜாதகனுடைய முப்பத்தெட்டாம் வயதில் நாங்கள் கூறிய சாந்திகள் செய்து, முற்பிறப்பின் தீவினைகளை விலக்கி, புத்திரனைப் பெற்றுக்கொள்வான். கந்தபிரானைப்பெற்ற தேவியே! தாயின் செய்தியைக் கூறுவோம்.

34. அன்னைமா நிறத்த ளாகும் அன்புள மனத்த ளாகும்
தன்சொலு மடக்க முண்டு தரணியில் வறுமை காணுள்
தன்துணை ஆண்பால் நான்கு சத்திமார் மூன்று தீர்க்கம்
பின்னமாம் மற்ற வெல்லாம் பேதைஇல் உள்ளூர் உத்ரம்.

34. ஜாதகனுடைய தாய் மாநிறமுடையவள். அன்புள்ள மனத்தினள். அடக்கமாகப் பேசுபவள். உலகில் வறுமை யடையாதவள். உடன் பிறந்தவர் களில் சகோதரர் நால்வரும் சகோதரிகள் மூவரும் நீண்ட ஆயுளுள்ளவர் கள். மற்றவர்களெல்லாம் நிலையார். அவளுடைய வீடு உள்ளூரில் வடக்குப் பக்கத்தில் இருக்கும்.

35. எப்போதும் சொற்ப பாதை எய்திடு மிவளுக் கேதான்
செப்புவோம் பூர்வம் தன்னைத் தில்லையில் வன்ய வர்க்கம்
தப்பித மின்றி வாழ்ந்து தயையுள மனத்த ளாகி
ஒப்புடன் காலன் பக்கல் உறைந்தன ளிவளே யென்றோம்.

35. ஜாதகனுடைய தாய்க்கு எப்போதும் சிறிது ரோகம் இருந்து கொண்டே இருக்கும். அவளுடைய முன்பிறவியைச் சொல்லுகின்றோம். தில்லையம்பதியில், வன்னிய குலத்தில் பிறந்து, தீவினைகளின்றி வாழ்ந்து, தயையுள்ள மனத்தினளாகி, மரணமடைந்தாள். (மீண்டும்);

36. வேதனுல் வரையப் பட்டு விளங்கினு ளிவளே யென்றோம்
போதவே பின்ஜன் மத்தைப் போற்றுவோம் காணு தென்னில்
நீதியாய்ச் சைவச் சேயாய் நேருவா ளென்று சொல்வோம்
மேதினில் தந்தை பூர்வம் விளம்புவோம் தாயே கேளும்.

36. பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவளே என்றோம். மறு பிறவியைச் சொல்லு கின்றோம். சைவ குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுவோம். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைக் கூறு கின்றோம். தாயே! கேளுங்கள்.

37. அருணைக்கு வடபா லாக அருகினில் வைச்யர் சேயாய்த்
திருமகள் விலாசம் பெற்றுச் செட்டுக்கள் செய்து வின்னேன்
உறைநாளில் வினையைச் சொல்வேன் உத்தமர் மறையோர்க் காக
அரசர்பால் கட்டு வார்த்தை அறைந்தன னிவனே என்றோம்.

37. திருவண்ணாமலைக்கு வடக்கில், சமீபத்தில், வைச்ய குலத்தவனாகப் பிறந்து, லட்சுமீ கடாட்சம் பெற்று, வர்த்தகங்கள் புரிந்து, இவன் வாழ்ந்து வரும்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தப்பில்லாத அந்தணர் ஒருவருக்காக இவன் நீதிபதியிடம் பொய்ச்சாட்சி கூறினான்.

38. மறையவன் மனவெ றுப்பால் வரைந்தனன் சாபம் தானும்
வரும்ஜன்மம் துணைக ளின்றி மாதுரு மரண மாகிப்
பெறுந்தாயின் சுகமே யின்றி புத்திரி வர்க்கத் தாரால்
குறைவரும் நிந்தை தானும் கூறினான் வேதத் தோனும்.

38. அந்தணனும் மனம் வருந்திக் கூறிய காலத்தைக் கேளுங்கள். வரும் பிறவியில், நீ உடன் பிறந்தவர்களின்றி, தாயும் மரணமடைந்து, தாயினால் ஏற்படும் சுகமில்லாமல், பெண் வர்க்த்தாரால் குறை ஏற்பட்டு, அவமானம் நேரும் என்று கூறிச் சென்றான், அந்தணன்.

39. அந்ததோர் தோடம் தானும் அணுகிற்று இச்சென் மத்தில்
தன்துணை காணா னாகிச் சுகமின்றி நீயும் வாழ்வாய்
அந்தவன் வாழ்வா னாகும் அறைகின்றோம் பின்ஜன் மத்தை
முந்திய தில்லை தன்னில் உதிப்பானும் பிரம்ம சேயாய்.

39. அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. இப்பிறவியில் உடன் பிறந்தவர்களின்றியும் சௌக்கியங்களின்றியும் வாழ்ந்து வருவான். அவனுடைய மறு பிறவியைக் கூறுகின்றோம். உயர்வான தில்லையில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான்.

40. அத்திரி சொல்லு கின்றார் அவனுமிச் சென்மந் தன்னில்
பெற்றபுண் ணியங்க ளென்னப் பேசுவீர் முநியே நீர்தாம்
வித்தக னிச்சென் மத்தில் வினைமன மில்லா னாயும்
சத்திபா கத்தோன் பத்தி ஜனஉப காரி யாயும்;

40. அத்திரி முனிவர் கூறுகின்றார். ஜாதகனுடைய தந்தை இப் பிறவியில் செய்த புண்ணியங்கள் என்னவென்று கூறுங்கள், முனிவரே! நீர்தாம். அவன் இப்பிறவியில் தீய மன மில்லாமல், சிவ பெருமானிடம் பக்தியுடன் ஜனங்களுக்கு உபகாரம் செய்து வந்ததாலும்;

41. புண்ணிய மனத்த னுயும் பொய்யது வழுத்தா தாலும்
திண்ணமாய்த் தில்லை தன்னில் ஜனிப்பனும் மறையோ ளுக
வண்ணமாய் நாற்பா னென்றில் வைகாசி மாதம் தன்னில்
அண்ணலின் அடியைச் சேர்வான் அறைந்தது தப்பா தாகும்.

41. புண்ணிய மனத்தினனுயும், பொய் கூறுமல் இருந்து வந்ததாலும், திண்ணமாகச் சிதம்பரத்தில் அந்தணனுகப் பிறப்பான். ஜாதகன், தனது நாற்பத்தோராம் வயதில் வைகாசி மாதத்தில் மரணமடைவான். கூறியது தவருது.

42. நாற்பது மூன்று ஆண்டில் நற்சிம்ம மாதம் தன்னில்
கூப்பிடு வானும் காலன் குறித்ததோ ரன்னை தன்னை
ஏற்கவே எழுபான் மூன்றில் எழில்துலா மாதந் தன்னில்
தீர்ப்பாக வளர்பக் கத்தில் துவாதசி திதியி லேதான்;

42. ஜாதகனுடைய நாற்பத்து மூன்றும் வயதில் ஆவணி மாதத்தில் தாய் மரணமடைவாள். எழுபத்து மூன்றும் வயதில் ஐப்பசிமாதம் சுக்கில பட்சம் துவாதசி திதியில் ;

43. ஏகுவான் ஜாத கன்தான் இயம்புவோம் மறுஜன் மத்தைப்
பாகமாய்க் காளத்தி தன்னில் பிறப்பனும் க்ஷத்ரியச் சேயாய்ப்
போகபாக் கியங்கள் பெற்றுப் புகழ்ச்சியாய் வாழ்வா னுகும்
தோகைவா கனனைப் பெற்ற சுந்தரி கேட்டி டாயே.

43. ஜாதகன் மரணமடைவான். மறுபிறவியைச் சொல்லுகின்றேம். திருக்காளாத்தியில், க்ஷத்திரிய குலத்தவனுகப் பிறந்து, போக பாக்கியங்களை யடைந்து, கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். மயிலை வாகனமாய்க் கொண்ட சுப்பிரமணியனைப் பெற்ற தேவியே ! கேளுங்கள்.

44. மனைவியும் பின்னுல் கண்டம் அத்திரி சொல்லு கின்றுர்
வினையாகும் முதல்ம னைதான் பேசுவீர் காலம் சொல்வாய்க்
கனமுட னிருபா னுறில் காதலி மரண மாகி
வினையிலா இருபா னேழில் மேவிடு மென்று சொல்வோம்.

44. ஜாதகனுடைய மனைவி இவனுக்குப் பிறகு மரணமடைவாள். அத்திரி முனிவர் சொல்லுகின்றுர். முதல் மனைவி இறக்கும் காலத்தைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய இருபத்தாராம் வயதில் மனைவி மரண மடைவாள். இருபத்தேழாம் வயதில் மறு மனைவி வாய்ப்பாள் என்று சொல்லுகின்றேம்.

45. மறுமனை இவன்பின் னுலே வரைகிறேம் மூன்று மாண்டில்
திருமகள் பூர்வம் சொல்வேன் சீகாழி தன்னி லேதான்
அரன்மதம் வீர சைவம் அணுகியே சுதர்களு ண்டாய்
வறுமை களில்லா ளாகி வாழ்ந்துமே மரண மாகி,

45. ஜாதகனுடைய மறு மனைவி, இவன் இறந்து மூன்று வருடங்களில் இறப்பாள். அவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம் சீகாழியில், சிவமதத்தில் வீரசைவகுலத்தினளாகப் பிறந்து, புத்திரர்களை யடைந்து, தரித்திரமில்லாமல் வாழ்ந்து, மரணமடைந்து ;

46. வந்தவ ளிவளே என்றேம் வரைகிறேம் பின்ஜன் மத்தை
முந்திய காஞ்சி தன்னில் உதிப்பளாம் பிரம்ம சேயாய்
வந்தவ ளிச்ஜன் மத்தில் அடைந்தபுண் ணியங்க ளென்ன
கந்தன்மேல் பக்தி கொண்டும் கணவன்தன் மனம்போல்
[வாழ்ந்தும் ;

46. பிறந்தவள் இவளே என்று சொல்லுகின்றேம். இவளுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றேம். உயர்வான காஞ்சீபுரத்தில் அந்தண குலத்தவளாகப்பிறந்து வாழ்வாள் அவள். இப்பிறவியில் செய்தபுண்ணியங் களென்ன ? முருகக்கடவுள்மீது பக்தியுடன் இருந்து தன் கணவன் மன மறிந்து வாழ்ந்து வந்ததாலும் ;

47. பிறர்குற்றம் சொல்லா ளாகிப் பூமியில் வாழ்வ தாலே
உறைகுவாள் பிரம்ம சேயாய் உரைக்கிறேம் இவனின் யோகம்
தரையது விருத்தி செய்வன் தனதான்யச் செட்டுச் செய்வன்
நிறையவே குடும்பி யாவன் நிகரிலா இல்லம் செய்வன்.

47. பிறர்மீது குற்றம் கூருமல் வாழ்ந்து வருவதாலும் அந்தண குலத்தில் பிறப்பாள். ஜாதகனுடைய யோகத்தைக் கூறுகின்றேம். பூமியைப் பெருக்குவான். தனதானிய வியாயாரம் செய்து வருவான். பெரிய குடும்பியாவான். இணையில்லாத வீடு கட்டுவான்.

48. எந்தக்கா லத்தில் இல்லம் எய்துவான் சொல்லு மென்ன
வந்தவன் முப்பா னென்பான் ஆண்டினில் நேரு மென்றேம்
தன்தனம் பூமிவீடு சாற்றுமெண் ணுயிரம் பொன்
இந்தவன் சேர்ப்பா னென்றேம் ஈச்வரி கேட்டி டாயே.

48. எந்தக்காலத்தில் வீடு கட்டுவான் ? சொல்லுங்கள், என, ஜாதகன் தனது முப்பத்தொன்பதாம் வயதில் வீடு கட்டுவான். தன்னுல் சம்பாதிக் கப்பட்ட பொருள் பூமி வீடு இவை எண்ணுயிரம் பொன் மதிப்புள்ளன வாகச் சேர்ப்பான் என்றேம். தேவியே ! கேளுங்கள்.

49. பாலகன் ஜனிக்குங் காலேப் பணிதசை பதிறு ருண்டும்
சாலவே பலனேச் சொல்வோம் தனக்குமே ரோகம் வாய்க்கும்
ஏலவே துணேவர் விருத்தி இவன்றந்தை தாயார் நோயாம்
கோலமாய்ப் பின்பா கத்தில் கூறுவோம் விவர மாக.

49. ஜாதகன் ஜனிக்கும்போது ராகுமகாதசையில் பாக்கி பதினுறு வருடங்களாகும். அக்காலத்திய பலனேச் சொல்லுகின்றேம். ஜாதகனுக்கு ரோகம் நேரிடும். சகோதர விருத்தியாகும். தாய் தந்தையருக்குப் பிணிகள் நேரும். மற்றவற்றைப் பின் பாகத்தில் விபரமாகக் கூறுகின்றேம்.

## ஜாதகம் 102

1. சந்திரன் பானு கோலில் சலக்கோளு கன்னி யாகப்
புந்திதேள் ராகு மேரு பொன்சாடி காரி மீனம்
நந்தியில் சேயும் தங்க லக்கினம் மிதுன மாக
இந்தவாறு கோளு நின்றால் இயம்புவீர் பலனை யென்று ;

1. சந்திரன் சூரியன் துலாத்திலும், சுக்கிரன் கன்னியிலும், புதன் விருச்சிகத்திலும், ராகு தனுசிலும், குரு கும்பத்திலும், சனி மீனத்திலும், செவ்வாய் ரிஷபத்லும், கேது மிதுனத்திலு மாக நவக்கிரகங்கள் இருப்பின், பலனைக் கூறுங்கள், என்று ;

| | | | |
|---|---|---|---|
| சனி | | செவ் வாய் | லக்கினம் கேது |
| குரு | இராசி சக்கிரம் | | |
| | | | |
| ராகு | புதன் | சந்திரன் சூரியன் | சுக்கிரன் |

2. சங்கரி கேட்கும் போது சடைமுனி புகலு கின்றார்
இங்கிவை ஆண்பால் ஜன்மம் இல்லமும் மேல்பால் நோக்கம்
சங்கரன் காளி உத்ரம் தணல்காளி மாயோன் வாயு
நங்கையா மாரி தென்மேல் நல்கிடும் சமவூ ராகும்.

2. பார்வதி தேவி கேட்கும்போது, ஜடாமுனிவர் கூறுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு மேற்கு நோக்கி இருக்கும். சிவபெருமான் ஆலயமும் காளி கோயிலும் வடக்கிலும் மாரியம்மன் கோயிலும் திருமாலின் ஆலயமும் (வாயுதிக்கிலும்) மாரியம்மன் கோவில் தென் மேற்குத்திக்கிலும் உள்ள சமநிலையுள்ள ஊராகும்.

3. குறித்த இவ் அடையா ளத்துள் குலவும்பெண் மூன்றும் ஜன்மம்
தரைபாலன் குலமே யாகும் தாய்தந்தை துணைவர் யோகம்
திருமகள் மனைவி புத்ரர் செப்புவோம் முன்பின் ஜன்மம்
மருமமாய்த் தவங்கள் செய்யும் மங்கையே கேட்டி டாயே.

3. இவ்வித அடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் தன் தந்தைக்கு மூன்றும் பிறவியாக, க்ஷத்திரிய குலத்தில் தோன்றுவான். தாய் தந்தை உடன்பிறந்தவர்கள் மனைவி புத்திரர் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றையும் கூறுகின்றோம். தவங்கள் புரியும் தேவியே ! கேளுங்கள்.

4. தந்தையின் துணைஆண் ஒன்று சத்தியு மிருவ ராகும்
பிந்தியாண் சேத மாகும் பேசுவோம் பிதாகு ணத்தை
நொந்தவர்க் குதவி செய்வன் நேமிக ளதிகம் சேர்ப்பன்
விந்தையாய் வார்த்தை சொல்வன் மேதினில் வறுமை காணான்.

4. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவருமாவர். பிறகு தோன்றும் சகோதரர்கள் நிலையார். ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். கஷ்டமடைந்தவர்கட்கு உபகாரம் செய்பவன். பூமிகளைப் பெருக்குவான். வேடிக்கையாகப் பேசுபவன். வறுமை யடையாதவன்.

5. இல்லமும் வேறு செய்வன் ஏவலா ளுடைய னாகும்
வெல்லுவான் எதிரி தன்னை வீணவழக் கதனில் செல்லான்
சொல்லது சுருக்க மாகும் துறவிகள் நேசம் கொள்ளான்
நல்லவன் நல்ல வர்க்கு நாபிச்சூ டுடைய னாகும்.

5. வேறு வீடு கட்டுவான். பணியாட்கள் உள்ளவன். விரோதிகளை வெல்வான். வீண் சண்டைக்குச் செல்லாதவன். அடக்கமாகப் பேசுபவன். துறவிகளிடம் நட்புக் கொள்ளாதவன். நல்லவருக்கு நல்லவன். நாபிச் சூடுடையவனாய் இருப்பான்.

6. தனத்தின்மே லாசை உள்ளான் சாதமும் குறைவு றாதான்
இனமதிப் புடனே வாழ்வன் எதிரிக்கு இணக்கம் செய்யான்
சினமுண்டு உடனே தாழ்வு சிந்தையு மிரண்டு மாகும்
வினைகாசம் அந்தி நேரும் வீண்பழி ஏற்பா னாகும்.

6. பணத்தின்மீது ஆசை யுடையவன். அன்னத்துக்குக் குறைவில்லாதவன். தன் பந்து ஜனங்களால் மதிக்கப்படுவான். விரோதிகளுக்கு அஞ்சாதவன். கோபமுண்டு. உடனே தணிந்துவிடும். இருவிதமான மனமுள்ளவன். கடைசிக்காலத்தில் தீவினையால் காசநோய் அடைவான். வீண் அபவாதம் அடைவான்.

7. வண்டிவா கனமு மேற்பன் மனைவிக்கு இஷ்ட னவன்
குண்டைகோ விருத்தி உண்டு குலமதிப் புடனே வாழ்வன்
தண்டமிழ் நுணுக்கம் தேரான் தன்னுடல் மெலிவு நீட்சி
அண்டர்கள் பூசை பூணான் அம்பிகை யாளே கேளாய்.

7. வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். தன்மனைவிக்குப் பிரியமானவன். பசு எருதுகளின் விருத்தி யுள்ளவன். தன் குலத்தவரால் நன்கு மதிக்கப்படுவான். தமிழ் இலக்கிய நுணுக்கங்களை நன்கறியான். மெல்லிய உடலும் உயர்ந்த சரீரமும் உள்ளவன். தெய்வபூசை செய்யாதவன். தாயே ! கேளாய்.

8. இந்நெறி உடையா னுக்கு இப்பாலன் தோன்று வானும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் மால்நி றத்தன்
தன்சொலு மடக்க முண்டு தருமமாம் குணத்த னாகும்
சொன்னசொல் காப்பா னாகும் துறவோருக் கன்ன மீவன்.

8. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவன். கரிய நிற முடையவன். அடக்கமாகப் பேசுபவன். தரும குணமுள்ளவன். சொன்ன வார்த்தைகளைக் காப்பான். துறவிகட்கன்னமளிப்பவன்.

9. தந்தையி னூர்ஜி தத்தைத் தானவன் விருத்தி செய்வன்
வந்திடு மாமி ரண்டு மாநிலம் புகழு மேற்பன்
சிந்தையும் நல்ல தாகும் சிலசில தலங்கள் செல்வன்
நந்தியா விருத்தி யுண்டு நசித்திடும் எதிரி தானே.

9. ஜாதகன், தன் தந்தையின் ஆஸ்தியைப் பெருக்குவான். இரு மனை வியரை அடைவான். உலகில் கீர்த்தி பெறுவான். நல்ல மனமுள்ளவன், சிற்சில புண்ணிய தலங்களுக்குச் செல்வான். பசு எருதுகள் அதிகமாகும். விரோதிகள் நசித்துவிடுவார்.

10. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உண்மையா மனத்த னாகும்
தண்டமிழ் அதிகம் காணன் சகலருக் கிவன்சொல் மேன்மை
துண்டமாய்க் கூறு னாகும் தொடுத்ததை வெல்வா னாகும்
வண்டணி மார்கள் மோகன் வயதுமே தீர்க்க மென்றோம்.

10. சுகமாய்ச் சாப்பிடுவதில் பிரியமுள்ளவன். உண்மையுள்ள மனத் தினன். தமிழ் இலக்கியங்களை அறியாதவன். எல்லோருக்கும் இவன் வார்த்தைகள் மேன்மையுள்ளன. கண்டித்துப் பேசாதவன். எடுத்த காரியத்தை ஜயிப்பான். பெண்கள்மீது மோகம் கொள்வான். நீண்ட ஆயுள் உள்ளவன் என்று சொல்வோம்.

11. தன்துணை ஆண்பால் காணன் சத்திமார் இருவர் தீர்க்கம்
அந்தவர் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே யாங்கள்
என்னகா ரணத்தி னாலே இவன்துணை ஆண்பால் தோடம்
செந்தீயும் விரயம் புக்கச் சூரியன் நீச்ச மாக;

11. உடன்பிறந்தவர்களில் சகோதரர் இல்லை; சகோதரிகள் இருவர் தீர்க்காயுள் உடையவர். அவர்களின் செய்தியைப் பின்பாகத்தில் சொல் கின்றோம். தாயே! ஜாதகனுக்குச் சகோதர தோஷம் ஏற்படக் காரணம் என்ன? செவ்வாய் விரயஸ்தானத்திலும் சூரியன் நீச்சமாகவும் இருப்பதால்;

12. ஆகையால் துணைஆண் காணன் அம்பிகை மார்கள் விருத்தி
தோகையும் வருகும் காலம் செப்புவோ மிருப தாண்டில்
பாகமாய் உள்ளூர் உத்ரம் பகருவோ மவள்கு ணத்தை
நாகம்போல் கோப மேற்பள் நடைநன்மை யென்று சொல்வோம்.

12. சகோதரர்களில்லை. சகோதரிகள் விருத்தியாகும். ஜாதகனுக்கு இருபதாம் வயதில் மனைவி வாய்ப்பாள். அவள் உள்ளூரிலிருந்தே வரு வாள். அவள் குணத்தைக் கூறுகின்றோம். சர்ப்பம்போல் கோபம் கொள் வாள். நன்னடக்கையுள்ளவள் என்று சொல்லுகின்றோம்.

13. மாரன்தன் மனம்போல் வாழாள் மாமிக்குப் பகையு மாவள்
தீரமா மனத்த ளாகும் சிறுகான புத்தி எற்பள்
காரிழை வயது தீர்க்கம் கழறுவார் பிருகு தாமும்
நாரிய ிருவ ரென்று நவிலுவோம் பால னுக்கு.

13. தன் கணவன் மனமறிந்து வாழாதவள். தன் மாமியாருக்குப் பகையாவள். தைரியமுள்ள மனத்தினள். தீயபுத்தி யுடையவள். நீண்ட வயதுள்ளவள். பிருகுமுனிவர் கூறுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் உண்டு என்று சொல்லுகின்றோம்.

14. காரணம் யாது என்னக் கரும்பாம்பு எழில் தங்கப்
பாருளோன் காரி பார்க்கப் பாவைய ிருவ ரென்றோம்
நாரிய ிரண்டும் தீர்க்கம் நாசமாம் விபரம் சொல்வாய்
தீரமா யிரண்டும் தீர்க்கம் செல்விமுன் னிருக்க வேறு ;

14. காரணம் என்னவென்று வினவ, ராகு எழாமிடத்திலிருந்து செவ்வாயும் சனியும் பார்ப்பதால் இருமனைவியர் உண்டு என்று கூறு கின்றோம். இரு மனைவியரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். இருவர் களில் யார் இறப்பார் ? கூறுங்கள். திண்ணமாக இருவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். முதல் மனைவி இருக்கும்போது வேறு ;

15. மனைவரும் காரணம் சொல் மாரன்முன் வினையாம் தாயே
சினமிலா இரண்டாம் பாரி சேரும்கா லங்கள் சொல்வாய்
வினையிலா அதன்மேல் பத்தில் மேவிடும் துணைவி புத்ரி
வனிதையின் குணம் எவ்வாறு மாஞ்சிவப் புடைய ளாமே.

15. மனைவி வாய்க்கும் காரணங்கள் சொல்லுவீர். ஜாதகனுடைய முற் பிறப்புத் தீவினையால் ஏற்பட்டது. தாயே! இரண்டாம் மனைவி வருங்காலத் தைக் கூறுங்கள். அதற்குமேல் பத்து வருடங்களில் சகோதரியின் புத்திரி மறுமனைவியாக வருவாள். அப்பெண்ணின் குணம் எப்படி? மாநிற முடையவள்.

16. அன்னம்போல் வடிவு மொக்கும் அரிமனை யொப்ப தாகும்
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனத்துக் கேத்தோள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அடக்கமாம் வார்த்தை உண்டு
அன்னவள் யோக சாலி அற்புத வார்த்தை யுண்டு.

16. அன்னத்தைப்போன்ற அழகுள்ளவள். இலக்குமியைப் போன்ற வள். அன்புடன் அன்னமளிப்பவள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். பிறர்மீது குற்றங்கூறாதவள். அடக்கமாகப் பேசுபவள். அதிருஷ்டமுள்ள வள். அதிசயமாகப் பேசுபவள்.

17. சுதர்களும் ஆண்பால் நான்கு தோகையு மூவ ராகும்
எதுவித மாதுக் கேதான் இயம்பினீர் அந்தச் சங்கை
முதல்மனை தனக்கு ஆண் மெல்லியு மொருத்தி தீர்க்கம்
அதிபதி இளையா ளுக்கு ஆண்ரண்டு கன்னி ரண்டு.

17. நான்கு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் தோன்றுவர். எந்தப் பெண்ணுக்குப் புத்திரபாக்கியம் உண்டு என்று கூறுங்கள். ஜாதகனுடைய மூத்த மனைவிக்கு இரு புத்திரர்களும் ஒரு பெண்ணும் பிறந்து தீர்க்காயுள் உள்ளவர்கள். இளைய மனைவிக்குப் புத்திரர் இருவரும் புத்திரிகள் இருவருமாவர்.

18. இன்னவன் முன்ஜன் மத்தை எடுத்துநா முரைக்கக் கேளாய்த்
தென்திசை தோகை தன்னில் ஜனித்தனன் ரெட்டி வம்சம்
முன்னமே குடும்பி யாகி தைல்வனும் வாழு நாளில்
தன்னுடை நேசன் பெண்டு மையல்மேல் மோகம் கொண்டு ;

18. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம்; கேளுங்கள் தெற்குத்திசையில் உள்ள தோகை நாட்டில், ரெட்டியார் மரபில் தோன்றி, உயர்ந்த குடும்பியாக வாழ்ந்துவரும் காலத்தில் தன்னுடைய நண்பனின் மனைவியின்மீது மையல் கொண்டு;

19. மாரனும் தன்னால் செய்து வருநாளில் நேசன் கண்டு
பார்யையை விலக்க லுற்றான் பாவையும் திகல டைந்து
கூறுவாள் வார்த்தை யொன்று கொழுநனும் நீக்கி விட்டான்
வேறொரு குற்றம் காணேன் வீண்பழி உன்னால் நேர்ந்தேன்.

19. ஜாதகன் அவளுடன் இன்பம் அனுபவித்துவந்தான். அதை நண்பனும் அறிந்துகொண்டு மனைவியை விலக்கிவிட்டான். அப்பெண்ணும் பயந்து கூறுகின்றாள். என் கணவனும் என்னை நீக்கிவிட்டான். நான் உன்னால் அவமானம் அடைந்தேன். வேறு குற்றம் செய்யவில்லை.

20. உன்னுடை மதியால் கெட்டேன் உலகினில் வசையு மானேன்
என்னைநீ காப்பா யென்ன என்பாரி பொல்லாள் மாதே
பின்னையும் வேறு சாகை போவென மானது வாடி
அந்நிய விடங்கள் செல்லேன் அடாதவார்த் தைகளைச் சொன்னாய்.

20. உன்னுடைய கெட்டபுத்தியால் நான் அழிந்ததுமல்லாமல் உலகில் அவமானமும் அடைந்தேன். என்னை நீ ஆதரித்து வருவாய் என்று கூற, அவனும் என்மனைவி பொல்லாதவள், நீ வேறுவீட்டுக்குச் செல், என்று கூற, அப்பெண்ணும் மனம்வருந்தி வேறு மனிதனிடம் போகமாட்டேன், என்னிடம் அடாதவார்த்தைகளைச் சொன்னவனே !

21. மற்றொரு ஜன்மம் தன்னில் மண்ணினில் பிறந்து பெண்ணாய்ப்
பத்தினி யாக நேர்ந்து பங்கமே எடுத்து மேநான்
குற்றமாய்ச் சொல்லி யேதான் கிணற்றினில் மாண்டா ளென்றோம்
வித்தகன் அந்தி யத்தில் வேலவன் தொண்டு பூண்டு ;

21. நீ எடுக்கும் மறுபிறவியில் நானும் உன்வர்க்கத்தில் பெண்ணாய்ப் பிறந்து, உன்னையே கணவனாக அடைந்து, உனக்கு அவமானங்கள் செய்வேன் என்று கூறி, கிணற்றில் வீழ்ந்து மரணமடைந்தாள். ஜாதகனும் தன் கடைசீக் காலத்தில் முருகப்பிரானுக்குத் தொண்டுகள் பல செய்து ;

**22.** அறமதி லிச்சை யுண்டாய்க் கந்தனின் கோட்டம் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனும் இந்தப் பாலன்
அரிவையர் நேசன் மாது அடைகுவான் மறும னேதான்
திருகிலா வாழ்வா னாகும் செப்புவோ மிவனின் யோகம்.

**22.** தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, முருகக்கடவுளின் கோயிலுக்குச் சென்று, பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன், இந்த ஜாதகன். நண்பனின் மனைவி இரண்டாம் பாரியையாக வந்து, தீங்குகளில்லாமல் வாழ்ந்து வருவாள். இவனுடைய யோகத்தைக் கூறுகின்றோம்.

**23.** நினைத்தகா ரியமு டிப்பான் நிருபர்க ளிஷ்டம் கொள்வன்
இனத்துக்கு மேலாய் வாழ்வன் எதிரியை நாசம் செய்வன்
வினையதை ஒருவர்க் கெண்ணான் விளைபுலம் விருத்தி யுண்டு
கனமான புகழு மேற்பன் கடவுளர்த் தொண்டு பூண்பன்.

**23.** எண்ணிய காரியங்களை முடிப்பான். அரசர்களால் போற்றப்படுவான். தன் பந்துஜனங்களுக்கு மேலாக வாழ்ந்துவருவான். விரோதிகளை ஒழித்து விடுவான். ஒருவருக்கும் தீங்குகள் செய்ய எண்ணாதவன். விளைநிலங்கள் விருத்தியாகும். பெரிய கீர்த்தியடைவான். தெய்வபக்தி கொள்வான்.

**24.** பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வாய்
நீலனும் குருவும் மாறி நின்றதால் தரும கர்மம்
சாலவே யோக மொன்று சாற்றுவோம் வேசி யோகம்
ஏலவே இந்த்ர யோகம் எய்திடும் மூன்று யோகம்.

**24.** ஜாதகனுக்கு யோகம் கூறிய காரணங்கள் சொல்லுங்கள். சனியும் குருவும் பரிவர்த்தனையாக இருப்பதால் **தருமகருமாதியோகம்** ஒன்றும் **வேசியோகம்** ஒன்றும் **இந்திரயோகம்** ஒன்றும் ஆக மூன்று யோகங்கள் ஏற்படும்.

**25.** வடதிசை யரசன் போல வாழ்குவா னிந்தப் பாலன்
திடமுள குடும்ப மேற்பன் சிலசில தருமம் செய்வன்
படைபுகான் பெரியோர்க் கிஷ்டன் பலசகா யங்கள் செய்வன்
தடவரை மகளே யாங்கள் சாற்றின மொழிகுன் றுவே.

**25.** குபேரனைப்போல் வாழ்ந்து வருவான், இந்த ஜாதகன். திடமான குடும்பத்தை யடைவான். சிற்சில தருமங்கள் செய்வான். சண்டைக்குச் செல்லாதவன். பெரியோருக்குப் பிரியன். பல சௌகரியங்களை செய்வான். மலையரசனின் புதல்வியே ! நாங்கள் கூறியவை தவறா.

**26.** அன்னையின் குணத்தைச் சொல்வேன் அரிமனை ஒப்ப தாகும்
பன்னியே பேசு வாளாம் பஞ்சைமே லிரக்க மாகும்
முன்கோபம் கொஞ்ச முண்டு மேதினில் நல்லோ ளாவள்
அந்நியர் குற்றம் சொல்லாள் அடைந்தோரை ஆத ரிப்பள்.

**26.** ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றோம். இலக்குமியை ஒத்தவள். பன்னிப் பன்னிப் பேசுபவள். ஏழைகளின்மீது இரக்கமுள்ளவள். சிறிது முன்கோப முடையவள். உலகில் நல்லவளாயிருப்பாள். பிறர்மீது குற்றங் கூறாதவள். தன்னையண்டியவர்களைக் காப்பாள்.

27. பித்தவா யுடைய ளாகும் பேதைக்குத் துணைய நேகம்
குற்றமாம் தனியா யந்தம் கோதையும் வாழ்வா ளாகும்
சுத்தமும் சிவந்த மேனி தொல்புவி வறுமை காணாள்
சித்தமே கறப்பு மில்லாள் தீங்கதை எவர்க்கு மெண்ணாள்.

27. பித்தவாயு உள்ளவள். அவளுக்குச் சகோதரர் அநேகம். தன் கடைசிக் காலத்தில் தனியாகவாழ்ந்து வருவாள். சிவந்த உடல் உள்ளவள். சுத்தமுடையவள். உலகில் வறுமை யடையாதவள். மனத்தில் வஞ்சனை யில்லாதவள். பிறருக்குத் தீங்கு செய்ய எண்ணாதவள்.

28. மாதுரு முன்ஜன் மம்தான் மாயூரம் தன்னி லேதான்
தீதுசெய் வைச்யச் சேயாய் ஜனித்துமே வாழு நாளில்
பாதக வார்த்தை ஒன்று பகர்ந்துஓ ரகத்தின் பேரில்
காதலி வருத்த முற்றுக் கழறின சாபம் கேண்மோ.

28. தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மாயவரத்தில், வைசிய குலத்தவளாகப் பிறந்து வாழுங்காலத்தில், தன் ஓரகத்தியின்மீது அடாத வார்த்தைகளைக் கூறினாள். அப்பெண் வருத்த மடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

29. தங்கையென் றெண்ணும் பாவி சாற்றினாய் நிந்தை வார்த்தை
மங்கைபின் ஜன்மந் தன்னில் மருவாது துணைவர் தாமும்
நங்கையும் சொல்ல லுற்றாள் நல்கிற்று அந்தச் சாபம்
ஐங்கரன் தனைவ ளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

29. என்னை, தங்கையென்று எண்ணாமல், அடாத வார்த்தைகளை என் மீது கூறினாய். மறு பிறவியில் உனக்கு உடன் பிறந்தவர்கள் இல்லாமல் வாழ்வாய் என்று கூறினாள். அந்தச்சாபம் பற்றியது. விநாயகனை வளர்த்த தாயே! கேளுங்கள்.

30. அந்திய காலந் தன்னில் அவளுக்கு வாயு கண்டு
அந்தக நகரம் சென்று அயனுமே வறையப் பட்டு
வந்த வளென்று சொல்வோம் மருவிடும் மாது சாபம்
நொந்திடும் துணைவர் யாவும் நிமலியும் தனியாய் வாழ்வள்.

30. அவளும் தன் கடைசிக் காலத்தில் வாயுநோய் ஏற்பட்டு மரண மடைந்து நரகத்துக்குச் சென்று மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவள், என்று சொல்லுகின்றோம். ஓரகத்தியின் சாபம் ஏற் பட்டது. சகோதரர்கள் இறந்து விடுவர். இவளும் தனியாக வாழ்ந்து வருவாள்.

31. மறுஜன்மம் விரிஞ்சி தன்னில் மாதுவும் பிரம்ம சேயாய்
உறைகுவாள் சுகமுள் ளோளாய் உத்தமி வாழ்வா ளாகும்
பெருந்தந்தை பூர்வம் சொல்வோம் பெருமுக்கல் தன்னி லேதான்
திருகிலா வைச்யச் சேயாய் ஜனித்துமே செட்டுச் செய்து;

31. மறுபிறவியில், விரிஞ்சிநாட்டின் அந்தணகுலத்தவளாகப்பிறப்பாள். சுகமுள்ளவளாக வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பெருமுக்கல் என்னும் ஊரில், வைசிய குலத்தவனாகப் பிறந்து வர்த்தகம் செய்துவந்து;

32. பாரியும் மதலை உண்டாய்ப் பகரமா குடும்பி யாகி
வீரியன் வினையில் லாமல் மேவினன் கால னோடு
ஆரியன் வறையப் பட்டு அணுகினு னென்று சொல்வோம்
தீரமாய்த் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

32. மனைவி மக்களைப் பெற்று, பெரிய குடும்பியாகி, தீவினையில்லாமல் மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தான் என்று சொல்லுகின்றோம். தவங்கள் பல செய்யும் செல்வியே! கேளுங்கள்.

33. பின்ஜன்மம் போரூர் தன்னில் பிறப்பனு மிக்கு லத்தில்
கன்மகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
மன்னிய முப்பா னென்றில் மாரகம் போலக் காணும்
தென்திசை செல்லா னுகும் செப்புவோ முப்பா னைந்தில்;

33. மறு பிறவியில், திருப்போரூரில் இதே குலத்தில் பிறப்பான். அவனுடைய இறுதிக்காலங்களைக் கூறுங்கள். முனிவரே! நீர்தாம். ஜாதகனுடைய முப்பத்தோராம் வயதில் மரணம் ஏற்படுவதுபோல் கண்டம் ஏற்படும். ஆனால் இறக்க மாட்டான். முப்பத்தைந்தாம் வயதில் ;

34. உடலமும் வகு மென்றோம் உரைக்கின்றோம் நாற்ப தாண்டில்
திடமுள அன்னை கண்டம் செப்புவோம் பால னுக்கு
அடவுடன் எழுப தாண்டில் ஐப்பசி மாதந் தன்னில்
விடமணி கடவுள் பாதம் மேவுவா னென்று சொல்வோம்.

34. மரணம் அடைவான் என்று சொல்லுகின்றோம். ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் தாய் மரணமடைவாள். ஜாதகன் தனது எழுபதாம் வயதில் ஐப்பசி மாதத்தில் சிவபதம் அடைவான் என்று சொல்லுகின்றோம்.

35. மறுஜன்மம் கலிங்க நாட்டில் மறைக்குல முதிப்பா னுகும்
திருமகன் ஜனன காலம் சுவாதியின் முதல்பா தத்தில்
அரவுதன் தசையி ருப்பு அடைவுடன் நாலு ஆண்டு
மருவிடும் திங்க ளாறும் அறைந்தனம் பூர்வ பாகம்.

35. மறு பிறவியில் கலிங்க தேசத்தில் அந்தண குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய ஜனன காலத்தில் சுவாதி நட்சத்திரம் முதல்பாதம். ராகு மகாதசையில் இருப்பு நான்கு வருடங்களும் ஆறு மாதங்களும் மீதமாகும். இது வரை முதல் பாகம் சொன்னோம்.

# ஜாதகம் 103

1. சந்திரன் சனியும் ராகு தனுசினில் புகரும் மானில்
மந்திரி கோல தாக மங்களன் கேது வீணை
புந்தியும் மீன மாகப் பரிதியும் சாடி யாக
இந்தவாறு கிரகமும் நின்று இடமது மிதுன மாக;

**1.** சந்திரன் சனி ராகு தனுசிலும், சுக்கிரன் மகரத்திலும், குரு துலாத்திலும், செய்வாய் கேது மிதுனத்திலும், புதன் மீனத்திலும், சூரியன் கும்பத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமானால்;

| | | | |
|---|---|---|---|
| புதன் | | | இலக்னம் செவ்வாய் கேது |
| சூரியன் | இராசி சக்கரம் | | |
| சுக்கிரன் | | | |
| சந்திரன் சனி ராகு | | குரு | |

2. சொல்லுவீர் பலனை யென்று சுந்தரி கேட்கும் போது
வல்லவர் வதிஷ்டர் சொல்வார் ஆணது ஜனன மாகும்
இல்லமும் கீழ்மேல் வீதி எமன்வாசல் தென்மேல் மாரி
எல்லையைக் காக்கும் காளி இருப்பளே கிழ்ப்பால் கன்னி.

**2.** பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதி கேட்கும்போது, வஸிஷ்ட முனிவர் கூறுகின்றார். இஃது ஆண் பிறப்பாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. தென் மேற்கில் மாரியம்மன் கோயிலும் கிழக்குத் திக்கில் எல்லையம்மன் கோயிலும் உள்ளன.

3. தந்தியும் மேற்கே நிற்கும் சக்தியு மருகில் தங்கும்
இந்தநல் லடையா ளத்துள் இணங்கிய சிறுவூர் தன்னில்
வந்த............வரைகிறோம் அன்னை தந்தை
பிந்திய துணைவர் புத்ரர் பேசுவோம் முன்பின் ஜன்மம்.

**3.** வினாயகர் ஆலயம் மேற்குத் திக்கிலும், அருகில் அம்மன் கோயிலும் உள்ள இவ்வித சூழ்நிலையையுடைய சிறு ஊரில் பிறந்த.............. தாய் தந்தையர் சகோதரர் புத்திரர் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றையும் கூறுகின்றோம்.

4. தாதைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு மிளேயா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் தந்தை
போதவே துணைவ ரைந்தில் பொருந்திடு மாண்பால் ரண்டு
கோதையே பெண்பா லொன்று செப்புவோம் தீர்க்க மாக.

4. ஜாதகனுடைய பாட்டனருக் குற்ற இரு மனைவியரில் இளைய மனைவி பெற்ற பிள்ளை, ஜாதகனுடைய தந்தையென்றோம். அவர் பெற்ற ஐந்து குழந்தைகளில் இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் தீர்க்காயுள் உள்ள வர்களென்று சொல்லுகின்றோம். தாயே!

5. முன்மாதா ஒன்று என்றீர் மொழிகுவீ ரவட்குப் புத்ரர்
மன்னிய ஆண்பா லொன்று மருவிடும் பெண்பா லொன்று
திண்ணமாய்த் தீர்க்க மெய்தும் சேயனும் வேறாய்ச் செல்வன்
தென்மேல்பால் வாச மெய்தும் மற்றவை யிரண்டில் சொல்வேன்.

5. ஜாதகனுடைய தந்தைக்கு மூத்த தாய் ஒருத்தியுண்டு என்று சொன்னீர்களே. அவளுக்குப் புத்திர பாக்கியம் உண்டோ? திண்ணமாக ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் தோன்றித் தீர்க்காயுள் உள்ளவர்கள். ஜாதகனுடைய தந்தையும் வேறாகச் சென்று விடுவான். தென் மேற்குத் திக்கில் வாழ்ந்து வருவான். இரண்டாம் பாகத்தில் சொல்லுவோம்.

6. தந்தையின் குணத்தைச் சொல்வோம் தேள்ராசி பூச நாளில்
வந்தவன் சிவந்த மேனி வாக்கது சுத்த முள்ளான்
சிந்தையும் மரும மில்லான் தேவதா பக்தி கொள்வான்
வந்தவர்க் கன்ன மீவன் வடுவுளன் பக்கம் நெற்றி.

6. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். புஷ்ய நட்சத்திரத்தில் விருச்சிகலக்கினத்தில பிறப்பான். சிவந்த உடலுள்ளவன். ஒழுங்காகப் பேசுபவன். இரகசிய மில்லாத மனத்தினன். தெய்வபக்தி யுடையவன். தன்னை யண்டிவந்தவர்க்கு அன்ன மளிப்பான். நெற்றியின் பக்கத்தில் ஒரு வடு உள்ளவன்.

7. கரமதில் கமல ரேகை..............யுள்ளான்
நறைமலர்க் கந்த மிஷ்டன் நாக்கது தவறு துகும்
பெருமையாய்க் குடும்பி யாவன் பிதுராஸ்தி காணு துகும்
தரையது அதிகம் சேர்ப்பன் தனமது கொடுக்கல் வாங்கல்.

7. கையில் கமலரேகை யுடையவன்............உள்ளவன். புஷ்பம் சந்தனம் இவைகளில் விருப்பமுடையவன். சொல் தவறுதவன். பெருமையுள்ள குடும்ப மடைவான். தன் தந்தையின் ஆஸ்தியில்லாதவன். பூமிகளை அதிகம் சேர்ப்பான். பணம் கொடுக்கல் வாங்கல் செய்து வருவான்.

8. ஊகவான் பலபேர் நேயன் உறுதிமான் பொறுமை காரணன்
நாகரி கங்க ளுள்ளான் நல்லவன் நல்ல வர்க்கு
ஆகம நுணுக்கம் தேர்வன் அண்டினோர்க் குதவி செய்வன
வேகமாய் நடக்க வல்லன் வெற்றியாம் தொடுவழக்கில்.

8. ஊகமுள்ளவன். பல பேர்கட்கு நண்பன். திடமனமுள்ளவன். தரித்திரம் அடையாதவன். நாகரிகமாக நடப்பவன். நல்லவருக்கு நல்ல வனுக இருப்பான். வேதாந்த ரகசியங்களை அறிந்தவன். தன்னையண்டி வந்தவர்கட்கு உபகாரி. வேகமாக நடப்பவன். எடுத்த காரியத்தை ஜயத்துடன் முடிப்பவன்.

9. நாபிச்சூ டுடைய னுவன் நாட்டில் சல்யம் கொள்ளான்
பாவத்தில் மனம்வை யாதான் பணிதிபாத் திரங்கள் சேர்ப்பன்
மேவுவான் ....................பல செல்வா னுகும்
ஆவலாய்ப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

9. நாபிச் சூடுடையவன். உலகில் கடன் படாதவன். தீச்செயல்களைச் செய்ய மன மில்லாதவன். ஆபரணங்கள் பாத்திரங்கள் இவைகளைச் சேர்ப்பான்.......................................... ..அன்புடன் பூசை புரிந்து வரும் அம்பிகையே ! கேளுங்கள்.

10. சொன்னஇக் குணத்தா னுக்குச் சுந்தரனு திப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வே னழகுளான் சிவந்த மெய்யன்
உன்னத கலைகள் கற்பன் உறுதி இல்லாத நெஞ்சன்
பன்னியே பேச வல்லன்....................யனுவன்.

10. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன் தோன்றுவான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றேம். அழகுள்ளவன். சிவந்த மேனியுடையவன். உயர்ந்த கலைகளைக் கற்றுணர்வான். திடமில்லாத மனமுள்ளவன். பன்னிப் பன்னிப்பேசுபவன்.............

11. வண்டிவா கனமு முள்ளான் மாநிலம் நல்லோ னுவன்
குண்டைகோ விருத்தி உள்ளான் குலத்துக்கு மேலாய் வாழ்வன்
பண்டிபண் டார முள்ளான் பாவையர் மோக னுவன்
எண்டிசைப் புகழு மேற்பன் இவன்சித்ர வீடும் செய்வன்.

11. வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். உலகத்தில் நல்லவனுவன். பசு எருதுகளின் விருத்தியுடையவன். தன் குலத்தவருக்கு மேன்மையாக வாழ்ந்து வருவான். கிடங்குகள் ஏவலாட்கள் உள்ளவன். பெண்கள்மீது மோகம் கொள்வான். எல்லாத் திக்குகளிலும் கீர்த்தியடைவான். இவன் அழகிய வீடு கட்டுவான்.

12. நேமியில் நிட்சி யுள்ளான் நுண்ணிய புத்தி யுள்ளான்
சேமமாம் குடும்பி யாவன் திருப்பணி செய்வா னுகும்
தீமையை ஒருவர்க் கெண்ணுன் செய்ந்நன்றி மறவா னுகும்
காமனை யொத்த தேகன் காலாள்க ளுடைய னுமே.

12. உயரமான சரீரமுள்ளவன். நுட்பமான புத்தியுள்ளவன். சுகமான குடும்பியாவன். ஆலயத் திருப்பணிகள் செய்து வருவான். ஒருவருக்கும் தீங்குசெய்ய எண்ணுதவன். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவன். மன்மதனை யொத்த சரீர அழகுள்ளவன். ஏவலாட்கள் உடையவன்.

13. தந்தைநாள் பூமி மேலாய்த் தானவன் விருத்தி செய்வான்
விந்தையாய்ப் பேச வல்லன் வீண்பழி ஏற்கா னாகும்
முந்துமால் பக்தி கொள்வன் மூலச்சூ டுடைய னாகும்
எந்திடம் பெருமை ஏற்பன் எய்துவான் கூவல் சோலை.

13. ஜாதகன் தன் பிதுரார்ஜித பூமியைப் பெருக்குவான். வேடிக்கை யாகப் பேசுபவன். வீண் அபவாதம் அடையாதவன். திருமாலின்மீது பக்தியுள்ளவன். மூலச்சூட்டு நோய் உடையவன். எல்லாவிடங்களிலும் பெருமை யடைவான் கிணறுகள் தோட்டங்கள் நிறுவுவான்.

14. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோம் ஐவர் தோன்றும்
அவனியில் ஆணு மொன்று அம்பிகை மார்கள் ரண்டு
நவனியில் தீர்க்க மெய்தும் நசித்திடு மிரண்டு வென்றேம்
கவனமா யிளையோன் சேதி கழறுவோம் தாயே யாங்கள்.

14. ஜாதகனுடைய சகோதரரைப்பற்றிக் கூறுகின்றேம். ஐவர் தோன்றுவர். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். இரு குழந்தைகள் இறந்து விடும். ஜாதகனுக்குப் பின் பிறந்த சகோதரனைப்பற்றிச் சொல்லுகின்றேம். தாயே !

15. கல்விமான் கடவுள் பக்தி கஞ்சம்போல் மேனி யாவன்
இல்லைஎன் றுரைக்க மாட்டான் எதிரியை வசியம் செய்வன்
அல்லலென் றேரைக் காப்பன் அதிகமாய் வார்த்தை சொல்வன்
வல்லியர் மோக வானும் மாடுகள் பணைஎர் விருத்தி.

15. கல்வியறிவுள்ளவன். தெய்வபக்தியுடையவன். தாமரையைப் போன்ற நிற முடையவன். யாசித்தவருக்கு இல்லை யென்று கூறுதவன். விரோதிகளை வசப்படுத்துவான். துன்ப மடைந்தவர்களைக் காப்பான். அதிகமாகப் பேசுபவன். பெண்கள்மீது மோகமுடையவன். கால்நடைகள் பண்ணை ஏர் முதலியன விருத்தியாகும்.

16. துணைவனோ டொத்து வாழ்வன் தோகையு மொருத்தி யாகும்
கனமுடன் சுதராண் ஒன்று கன்னிகை இரண்டு மாகும்
தனமது ............த்த னென்றேம்
பிணையிலா நெஞ்ச முள்ளான் மேதினில் சீல னுவன்.

16. புதன் சகோதரனோடு ஒத்து வாழ்ந்து வருவான். மனைவி ஒருத்தியே யாகும். ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் பிறக்கும் .............. ....................கெட்ட எண்ணங்களில்லாத மனமுள்ளவன். நல்லொழுக்க முள்ளவன்.

17. பெண்துணை சேதி தன்னைப் பேசுவோம் பின்பா கத்தில்
அன்னவன் மணத்தின் காலம் அறைகிறே மீரெட் டாண்டில்
கன்னிகை வருவா ளாகும் கழறுவோ மன்னை வர்க்கம்
உன்னத சீல முள்ளான் உள்மனங் கவடு மில்லான்.

**17.** சகோதரியின் செய்தியைப் பிற்பாகத்தில் கூறுகின்றோம். ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். பதினாறும் வயதில் தன் தாயின் வர்க்கத்திலிருந்து மனைவி வாய்ப்பாள். நல்லொழுக்கமுடையவள். மனத்துள் கபடமில்லாதவள்.

**18.** அன்னம்போல் சாய லுள்ளாள் ஆளனுக் கினிய ளாகும்
தன்சொலு மடக்க முள்ளாள் பந்துக்கள் புகழ வாழ்வள்
கன்னென மொழியே சொல்வள் காதலி நடக்கை நன்மை
முன்கோபம் வெளிகாட் டாதாள் உயர்வான குடும்பி என்றோம்.

**18.** அன்னத்தைப் போல் அழகுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். அடக்கமுள்ளவள். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்வாள். இனிய வார்த்தைகளையே பேசுபவள். நன்னடத்தை யுள்ளவள். முன்கோப முடையவள். அதை வெளிவிடாதவள். உயர்ந்த குடும்பியாவள் என்றோம்.

**19.** வயதுமே தீர்க்க மென்றோம் ............ளாகும்
ஐயமுனி இதனைக் கேட்டுத் திடுக்கென உரைக்க லுற்றார்
வியமாகும் முதல்ம னைதான் மேவிடும் இரண்டாம் மாது
பயமிலா யெவ்வி தத்தால் பகர்ந்தினீர் விபரம் சொல்வீர்.

**19.** நீண்ட வயதுள்ளவள் என்றோம். .................. ஐய முனிவர் இதைக் கேட்டுத் திடீரென்று சொல்லலானார். முதல் மனைவி மரண மடைவாள், இரண்டாம் மனைவி வாய்ப்பாள், என்று இவ்விதம் பயமில்லாமல் கூறினீர்களே ! எவ்விதம் என்று விபரம் சொல்லுங்கள்.

**20.** சனிராகு எழில் நிற்கத் தசமத்தோன் சரத்தில் தங்க
இனிஇ மயா யிருப்ப தாலே இயம்பி............
கனமுள இரண்டோ னேழில் கலந்ததால் தாரம் ஒன்றே
சினமுடன் இருவர் பேசத் தேவியும் கூறு கின்றாள்.

**20.** சனி ராகு எழாம், வீட்டில் இருப்பதாலும், பத்தாம் வீட்டுக்குரிய குரு சரத்தில் இருப்பதாலும், .................................... இரண்டாம் வீட்டுக்குரிய சந்திரன் எழாம் வீட்டில் இருப்பதாலும் மனைவியும் ஒருத்தியே என்றோம். கோபத்துடன் இருவர் பேசுவதைக் கேட்டு, பார்வதி கூறுகின்றார்.

**21.** மனைவியு மொன்றே யாகும் மங்கல்ய மிரண்டே நேரும்
வினையெவ் வாறு சொல்வீர் ..................
....................................
அணைகுவான் வேறு முத்ரை அம்மாது ஒன்றே தீர்க்கம்.

**21.** ஜாதகனுக்கு மனைவி யொருத்தியே யாகும். அவளுக்கு இருமங்கல நாண்கள் ஏற்படும். அஃது எப்படி யென்று சொல்லுங்கள்............. ................ வேறு மாங்கல்யம் அணிவான். மனைவி யொருத்தியே.

22. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மெழுவர் தேன்றும்
சித்ரமா யாண்பால் ரண்டு செல்வதி மூன்று மாகும்
.....................................
.......................வாழ்வா ருமே.

22. ஜாதகனுடைய புத்திர விருத்தியைச் சொல்லுகின்றேம் ஏழு குழந்தைகள் தோன்றும். இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் தோன்றுவர் .............................................. வாழ்ந்து வருவான்.

23. ஆகிலும் முதலில் ரண்டு பலமாகும் சுதர்கள் என்றேம்
ஏகிடும்.........................
..........மேனி அழகுளாள் முன்கோ பத்தாள்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பாள்........

23. இருந்த போதிலும் முதல் குழந்தைகள் இரண்டும் தீர்க்கமா இருக்கும் என்று சொன்னேம்.................................. அழகுள்ளவள். முன் கோபமுடையவள். தன் வார்த்தைகளே மேன்மையுள்ளன என்று நிலே நாட்டுவாள்................ குடும்பியாவாள்.

24. ...........................குடும்பி யாவள்
பிழையிலா மனத்த ளாகும் உரைக்கின்றேம் துணே......
......... இவள் புத்ர தோஷ முள்ளாள்
வரும்சுதர் தோஷ மெவ்வாறு அறிவிப்..........

24. ....குடும்ப முள்ளவள். தீங்குகளில்லாத மனத்தினள். சகோதர பாபவத்தைச் சொல்லுகின்றேம் ..........புத்திர தோஷ முள்ளவள். புத்திர தோஷம் அடைந்த விதத்தைக் கூறுங்கள். கூறுவோம்........

25. ..................பஞ்சையாய் ஸ்திரீயும் ஓர்நாள்
பாலகர் தமக்கு அன்னம் கெஞ்சியே இவள் பால் கேட்க
..................முன் மதலேகள் காணு ளாகும்
..........................................
நல்லதோர் குழவி காண நற்கர்மம்..........

25. ............................................................
ஏழைப் பெண் ஒருத்தி ஒருநாள் தன் குழந்தைக்குச் சாதம் வேண்டி இவளிடம் கெஞ்சிக் கேட்கும்போது முதல் புத்திரர்கள் நிலேயாதவராவர். நல்ல குழங்தைகளேப் பெறக் கருமங்கள் செய்ய...................

26. செய்ய........திடும் சுதர்களே..........கற்பன்
அரசர்பூ சிதமும் கொள்வன்............விசித்ரம்
செய்வன் கண்ணிய குடும்பி யாவன்..........
மறிய வல்லன் சற்சன................

26. புத்திரர்கள்..........கற்பான். அரசரால் நன்கு மதிக்கப்படுவான். ....................வேடிக்கை செய்பவன்............கண்ணியமான குடும்பியாவான்......அறிய வல்லவன். நல்ல ஜனங்கள்............ ........அதிகம் சேர்ப்பான்.

27. ........................அதிகம் சேர்ப்பன்
விந்தையாய்க் கிருகம் செய்வன் விப்பிரர் பக்தி மானும்
நொந்தவர்க் கன்ன மீவன் நீங்காத செல்வ னுவன்
வந்திடும் மனைவி ஒன்று மங்கையே மேலும் கேளே.

27. அழகிய வீடு கட்டுவான். அந்தணர்களிடம் பக்தி யுள்ளவன். கஷ்ட மடைந்தவர்கட்கு அன்ன மளிப்பவன். நீங்காத செல்வ முடையவன். ஒரு மனைவியே வாய்ப்பாள். தாயே ! கேளுங்கள்.

28. புத்திரர் ஆண்பால்..................அவ்வா றுகும்
வித்தகன் ஒன்றாய் வாழ்ந்து வேறுவன் சிலநாள்........
............மாய் விபரமாகச் செப்புவோ மிரண்டி லேதான்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோ மன்னை பூர்வம்.

28. ஆண் குழந்தைகள்....................அவ்வறேயாகும். சில காலம் ஒன்றாக வாழ்ந்துவந்து வேறாகச் செல்வான்................. விபரமாக இரண்டாம் பாகத்தில் சொல்லுவோம். விநாயகனைப் பெற்ற தேவியே ! தாயின் முற்பிறவியைக் கூறுவோம்.

29. ஆலங் காட்ட தற்கு மேற்கில் அணுகிய பேரூர் தன்னில்
சீலமாம் கங்கை சேயாய் ஜனித்துமே பெருமை பூண்டு
பாலர்கள் அதிக முண்டாய்ப் பஞ்சைமே லிரக்க மாகச்
சாலவே தலங்கள் சென்று மாரற்கு முன்னே மாண்டு ;

29. திருவாலங் காட்டிற்கு மேற்கில் உள்ள பெரிய ஓர் ஊரில் நல்லொ ழுக்கமுள்ள வேளாளர் குலத்தவளாகப் பிறந்து, பெருமையுடன் வாழ்ந்து, புத்திரர்களைப் பெற்று, ஏழைகளின்மீது இரக்கங்கொண்டிருந்து, பல புண் ணிய தலங்களுக்குச் சென்று, வாழ்ந்து, கணவனுக்கு முன்பாகவே மரண மடைந்து ;

30. வந்தவ ளிவளே என்றோ மறைகிறோம் பின்ஜன்மத்தை
முந்துமால் வேங்க டத்தில் உதிப்பளாம் கர்ண சேயாய்த்
தந்தையின் பூர்வம் சொல்வேன் சீகாழி தன்னி லேதான்
வந்தனன் மறைக்கு லத்தில் வளமுள பூமி உண்டாய் ;

30. பிறந்தவள் இவளே என்றோம். இவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். திருமால் வாழும் திருப்பதியில் கருணீகர் குலத்தவ ளாகப் பிறப்பாள். ஜாதகனுடைய தந்தையின் முற் பிறவியைக் கூறுகின் றோம். சீகாழியில் அந்தணர் குலத்தில் பிறந்து செழிப்பான பூமிகளைப் பெற்று ;

31. சுகமுடன் வாழ்ந்து இன்னேன் சென்றனன் காலன் பக்கல்
தகமையாய்ப் பிரமன் லக்கம் தாணியில் வரையப் பட்டுப்
பகையிலா ரெட்டி வம்சம் பிறந்தன னென்று சொன்னேம்
வகையுடன் முனிவர் கூற மங்கையும் மறுத்துச் சொல்வாள்.

31. சுகமாக வாழ்ந்து வந்து மரணமடைந்தான். மீண்டும் பிரம தேவனல் படைக்கப்பட்டு இப் பூமியில் தீங்குகளில்லாத ரெட்டியார் மாபில் பிறந்தான் என்று சொல்லுவோம், என்று திடமாக முனிவர் கூறும்போது, பார்வதி தடுத்துச் சொல்லுகின்ருள்.

32. முன்ஜன்மம் மறைக்குலத்தில் உதித்தவ னிச்சென் மத்தில்
தன்குலம் தாழ்வ தாக ஜனித்தகா ரணங்க ளென்ன
..............வேதம் தன்னே மொழியாமல் நின்றதாலே
அன்னவ னிக்கு லத்தில் அணுகின னென்று சொல்வோம்.

32. முற்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்த ஜாதகனுடைய தந்தை இப்பிறவியில் தாழ்வான குலத்தில் பிறக்கும் காரணங்கள் என்ன? ..................வேதம் ஓதாமல் இருந்து வந்ததால் அவன் இப்பிறவியில் பிறந்தான் என்று கூறுகின்ரேம்.

33. மறுஜன்ம மரங்கந் தன்னில் மறைக்குல முதிப்பா னுகும்
திருமக னிச்சென் மத்தில் செய்தபுண்ணியங்க ளென்ன
வருவோரை யாத ரித்தும் வாக்கது பிசகா தாலும்
பெரும் பொருளி..............புண்ணிய மனத்த னுயும்;

33. ஜாதகனுடைய தந்தை மறுபிறவியில் திருவரங்கத்தில் அந்தண குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை இப்பிறவியில் செய்த நற் செயல்கள் என்ன? தன்னே யடைந்தவர்களே ஆதரித்து வந்ததாலும், வாக்குத் தவருமல் வாழ்ந்து வந்ததாலும், பெரிய பொருளே.................புண்ணிய மனத்தினனுயும்;

34. வருவதால் மறுபி றப்பு மறைக்குல முதிப்பா னுகும்
பெருமையாய்க் குடும்பி யாகி அம்மானேப் பூசை செய்து
உறைகுவான் தேவ னுக உரைத்தது தப்பா தாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை புகன்றிட் டோமே.

34. இருந்து வருவதால் அந்தண குலத்தில் பிறப்பான். பெருமையான குடும்பத்தையடைந்து, சிவபெருமானேப் பூசைசெய்து, முக்தி யடைவான். கூறியது தவருது. வேதங்களின் முடிவில் நடனமாடும் தாயே! கூறுகின்ரேம்.

35. ஜாதகன் பூர்வம் சொல்வே..............ஈசர் வாழும்
மேதினில் கோகு லத்தில் விளங்கியே மனேவி மைந்தர்
பாதக மனமில் லாமல் பரஉப காரி யாயும்
போதவே தலங்கள் சென்று பவமிலா மரண மாகித்

**35.** ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். சிவபெருமான் வாழும் உலகில், இடையர் மரபில் தோன்றி, மனைவி மக்களைப்பெற்று, தீய மனமில்லாமல், பிறருக்கு உபகாரியாயும் வாழ்ந்து, பல புண்ணிய தலங்களுக்குச் சென்று, தீவினைகளில்லாமல் மரணமடைந்து ;

**36.** பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தன னிந்தப் பாலன்
உரைக்கிறேம் முப்பா னேழில் உயராடி மாதம் தன்னில்
........யாய் தந்தை கண்டம் புகன்றது தப்பா தாகும்
மறுமமாய் நாற்பான் மாசி அன்னைக்குக் கண்ட மென்றேம்.

36. மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தான் இந்த ஜாதகன். இவனுடைய முப்பத்தேழாம் வயதில் ஆடி மாதத்தில்............ தந்தை மரண மடைவான். கூறியது தவருது. ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் மாசி மாதத்தில் தாய்க்கு மரணம் நேரிடும் என்றேம்.

**37.** உதித்தவன் மரண காலம் உரைக்கிறே மறுபான் மூன்றில்
சதியிலா தனுசு மாதம் சப்தமி குறைபக் கத்தில்
அதிபன்தன் னுடலம் எகும் மறுஜன்மம் கலிங்க நாட்டில்
நிதிமிக உடையா னுக்கு நேருவான் வைச்யச் சேயாய்.

37. ஜாதகனுடைய மரணக்காலத்தைச் சொல்லுகின்றேம். அறுபத்து மூன்றும் வயதில் மார்கழி மாதத்தில் தேய்பிறைச் சப்தமி திதியில் ஜாதகன் மரணமடைவான். மறுபிறவியில், கலிங்க நாட்டில் வைசிய குலத்தில் ஒரு செல்வவானுக்கு பிறப்பான்.

**38.** இதுமத்தில் ஜாத கற்கு இலகாதோ மார கங்கள்
எதுவிதப் பிணிகள் கண்டும் இரணியன் அஞ்சில் நிற்க
உதயன்முன் பனிபோல் நீங்கும் உதித்தவன் யோகம் சொல்வேன்
அதிபன்தன் ஜனனம் தொட்டு மரண மட்டுலகில் தானே ;

38. இதற்கிடையில் ஜாதகனுக்கு மரணம் நேரிடதோ ? ஜாதகனுக்கு எவ்வித நோய்கள வந்தாலும் குரு ஐந்தாம் இடத்தில் இருப்பதால் சூரியனின் முன் வந்த பனி போல விலகிவிடும். ஜாதகனுடைய யோகத்தைச் சொல்லு கின்றேம். அதிபனுடைய பிறப்பு முதல் மரணம் வரையில் ;

**39.** பிறையது போலச் செல்வம் பேசுவோம் வறுமை காணுன்
குறைவிலான் யோக முள்ளான் குறுமுனி புகலு கின்ருர்
உதித்தவன் மூன்று ஆண்டில் பெருந்தந்தை தனக்குக் கண்டம்
..........பேசுவோம் முனியே நாங்கள்.

39. வளர்பிறைச் சந்திரன்போல யோகம் பெருகும். வறுமையடையாதவன். குறைவில்லாதவன். அதிருஷ்டமுள்ளவன். அகத்திய முனிவர் கூறுகின்ருர். ஜாதகனுடைய மூன்றும்வயதில் அவனது பெரிய தந்தைக்குக் கண்டம் நேரும்..............என்று கூறுகின்றேம்.

40. என்னகா ரணத்தி ஞலே இயம்பினீ ரந்தச் சங்கை
ஒன்பதி லிரவி நிற்க..........அந்த க்காலம்
அன்னவன் கண்டம் காணுன் அணுகிடும் காசம் போல
பன்னிய பவழ பஸ்பம் பாலக னருந்தத் தீரும்.

40. என்ன காரணத்தால் அவ்விதம் சொன்னீர்கள் ? ஒன்பதாம் இடத்தில் ராகு இருப்பதால்..........அந்தக் காலத்தில் அவனுக்கு கண்டம் ஏற்படாது. காசநோயைப் போல் ஒரு நோய் ஏற்படும். ஆனுல் பவழ பஸ்மம் சாப்பிட்டால் அவ்வியாதி நீங்கும்.

41. அந்ததோ ராண்டு தன்னில் ஆதிமால் மலைக்குச் செல்ல
வந்திடும் வினையும் தீரும் ஐந்தாவ தாண்டு தன்னில்
விந்தையாய் வாயு பீடை மேவிடும் நிவிர்த்தி யாகும்
இந்த............இயம்பின மொழி குன்ருது.

41. அந்த வருடத்தில் ஆதித் திருமால் மலையாகிய திருப்பதிக்குச் சென்ருல் செய்த தீவினைகள் விலகும். ஜாதகனுடைய ஐந்தாம் வயதில் வாயு பீடை ஏற்படும். பிறகு நீங்கிவிடும்........................ கூறியது தவருது.

42. பிறந்திடு காலம் தன்னில் புகர்தசை இருப்புச் சொல்வேன்
சிறந்திடு ஆண்டு ரண்டும் திங்களு மவ்வா ருகும்
விரைவினில் பிணியு மெய்தும் விலகிடும் சுகமே யாகும்
வரும்சேதி விபரம் ரண்டில் வரைகிருேம் தாயே யாங்கள்.

42. ஜாதகன் பிறக்கும் காலத்தில் சுக்கிரமகாதசையில் இருப்பு இரு வருடங்களும் இரு மாதங்களுமாம். சீக்கிரத்தில் நோய் ஏற்படும். பிறகு நீங்கிச் சுகம் அடைவான். மற்ற சேதிகளை இரண்டாம் பாகத்தில் சொல்லு கின்ருேம். தாயே ! நாங்கள்.

43. நாலாண்டி....................மதின் மேலாகச்
சாலவே குடும்பம் வேறு தாய்வழிக் குடும்பம் வாய்க்கும்
எலவே பாகம் மூன்ருய் எய்திப்பின் பாகம் அவ்வாறு
ஞாலமேல் பிரியு மென்ருேம் நாயகி மேலும் கேளே.

43. நாலாம் வயதுக்கு ..............................மேலாகக் குடும்பம் வேருகும். தாய் வழியால் பூமி கிடைக்கும். சொத்துக்கள் மூன்று பாகமாகப் பிரிந்துவிடும். தாயே ! மேலுங் கேள்.

44. தந்தையின் துணைவிக் கேதான் சந்ததி அற்ப மெய்தும்
முந்துசேய் மனையி ஞலே மெய்................
......யாய் புத்ர சாந்தி செய்திட நிவிர்த்தி யாகி
இந்திரன் போல மைந்தர் எய்திடும் ஒன்றே யாக.

44. ஜாதகனுடைய தந்தையின் சகோதரிக்குப் புத்திரர் அல்பமாகும். மூத்த தாயின்............................புத்திர சாந்தி செய்ய, நிவிர்த்தியாகி, இந்திரனைப்போல புத்திரன் ஒருவன் பிறப்பான்.

45. என்னஊழ் செய்தா னத்தை இயம்புவீர் விபர மாகத்
துன்னுமார்ச் சாலன் செய்த தூடுக்குக் கொன்றுனெ ன்றோம்
அந்ததோர் தோடம் தானும் அடைந்திட்டு . . . . .
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபர மாக.

45. என்ன தீச் செயல் செய்தான்? அதைக் கூறுங்கள், விபரமாக. தூய்மையுள்ள ஒரு பூனை செய்த விஷமத்துக்காக அதைக் கொன்று விட்டான் என்றோம். அந்தத் தோஷம் நீங்க.................. பிற்பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம்.

## ஜாதகம் 104

1. மதிகுரு மேட மாக மங்கலன் ரவிசெம் பாம்பு
பதியது மான தாகப் பங்குமே தேள தாகப்
புதன்புகர் சாடி தன்னில புக்கிட ராகு வண்டி
இதுவிதக் கோளும் நின்று இலக்கினம் வீணை யாக;

1. சந்திரன் குரு மேஷத்திலும், செவ்வாய் சூரியன் கேது மகரத்திலும், சனி விருச்சிகத்திலும், புதன் சுக்கிரன் கும்பத்திலும், ராகு கடகத்திலுமாக நவக்கிரங்கள் இருந்து, இலக்கினம் மிதுன மானால்;

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் குரு | | லக்கினம் |
| புதன் சுக்கிரன் | இராசி சக்கரம் | | ராகு |
| செவ்வாய் சூரியன் கேது | | | |
| | சனி | | |

2. பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
நலமுள வசிட்டர் சொல்வார் நாயகன் ஜனன மாகும்
குலவிய இல்லந் தன்னைக் கூறுவோம் கீழ்மேல வீதி
நிலமையாய்க் கீழ்மேல் வீதி நிகழ்த்துவோம் உத்ர வாசல்.

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி கேட்கும் போது, நன்மையுள்ள வதிஷ்டமுனிவர் கூறுகின்றார். இஃது ஆண்பிறப்பு. பிறந்த வீட்டைக் கூறுகின்றோம். கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கி யுள்ள வாயிலை யுடையது.

3. அரனுமை வடகீழ் தங்கும் அருகினில மாரி நிற்பள்
மருமமாய் உத்ரம் காளி வரைகிறோம் தெற்கில் ஓடை
திரமுடன் சிற்றூ ராகும் சிலசில சோலை யுண்டு
பரவமி வடையா ளத்துள் பிறந்தனன் கங்கை வம்சம்.

3. சிவபெருமானும் பார்வதிதேவியும் வடகிழக்கிலும், அருகில் மாரி யம்மன் கோவிலும், வடக்கில் காளி கோயிலும், தெற்கில ஒரு நீரோடையும் உள்ள சிற்றூராகும், அவ்வூர். அதில் சிற்சில தோட்டங்கள் உள்ளன. இவ்வித அடையாளங்களுள்ள வீட்டில் வேளாள குலத்தவனுகப் பிறப்பான்.

4. வாசமா மென்று சொன்னோம் மாதுரு தந்தை யோகம்
பாசமாய்த் துணைவர் யோகம் பாலகன் மனைவி யோகம்
ஆசையாய் முன்பின் யோகம் அவனுடை யோகச் சேதி
வாசமாய்ச் சொல்லு கின்றேன் மங்கையே கேட்டி டாயே.

4. வசித்து வருவான் என்று சொன்னோம். ஜாதகனுடைய தாய் தந்தை சகோதரர் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும் முற்பிறவி மறுபிறவி ஜாதகனுடையயோகச்செய்தி இவைகளையும் சொல்லுகின்றோம். தாயே ! கேட்டிடுவாய்.

5. தந்தையின் வம்சம் தன்னைச் சாற்றவே பலமி ராது
எந்தையே யவன்கு ணத்தை இயம்புவோ மெலிச்ச லுள்ளான்
சந்ததம் நீட்சி யுள்ளான் தேகமு மிருநி றத்தான்
நொந்திடும் பேரைக் காப்பன் நிகழ்த்துவோம் மாமி ரண்டு.

5. ஜாதகனுடைய தந்யைின் வர்க்கத்தினரைப் பற்றிக் கூற பலமில்லை. தாயே ! ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். மெல்லிய தேகமுள்ளவன். உயரமுள்ளவன். இருநிறமுடைய சரீரத்தன். கஷ்டமடைந்தவர்களைக் காப்பான். இரு மனைவியரை அடைவான் என்று சொல்லுகின்றோம்.

6. அவன்பிதா ஆஸ்தி காணான் யாவர்க்கும் நல்லோ னவன்
இவனுமே வறுமை இல்லான் இடதுகை ஊன மாகும்
நவனி யோர்க் குதவி செய்வன் நாட்டினில் கிருஷி செய்வன்
தவமுடை யோர்க்கு நேயன் தாக்ஷிண்யன் குணவா னமே.

6. தன்னுடைய தந்தையின் ஆஸ்தியை யடையாதவன். எல்லோருக்கும் நல்லவனவன். வறுமையடையாதவன். இடது கை ஊனமுடையவன். உலகத்தவர்கட்கு உதவி செய்வான். உலகில் விவசாயம் செய்து வருவான். தவம் செய்பவருக்கு நண்பன். தாட்சிணிய குணமுடையவன்.

7. கல்விமா னாக வானும் கனத்தவர் நேசம் கொள்வன்
நல்லவர் பலர்க ளாலே நாட்டினில் பெருமை யுள்ளான்
தொல்லையு மாதி யில்தான் செறிந்திடும் பித்தச் சூடு
புல்லிய புத்தி யுள்ளான் புராதன மில்லா னென்றோம்.

7. கல்வியறிவுடையவன். ஊகமுள்ளவன். பெரியோர்களது நட்பைக் கொள்வான். நன்மையுள்ள பல பெரியோர்களால் உலகில் பெருமையுடைவன். ஆதிகாலத்தில பித்தச் சூட்டு நோயால் துன்பம் அதிகரித்திருக்கும். அற்பபுத்தி யுள்ளவன். பிதுரார்ச்சித சொத்தில்லாதவன்.

8. இக்குண முடையோ னுக்கு இவனுமே உதிப்பா னாகும்
மிக்கவே விவன்கு ணத்தை விளம்புவோ மிருநி றத்தான்
தக்கவே கல்வி கற்பான் சகலர்க்கு நல்லோ னவன்
பக்குவ மான வார்த்தை பகருவா னிவனே னம்மா.

8. இக் குணங்களுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். ஜாதகனுடைய குணத்தைக் கூறுகின்றோம். இருநிற முடையவன். தக்க கல்வியறிவுள்ளவன். எல்லோருக்கும் நல்லவனுவன். தக்கபடி வார்த்தை சொல்வான், இந்த ஜாதகன்.

9. பால்பாக்ய முடைய னுவன் பந்துவும் புகழ வாழ்வன்
ஞாலமேல் பொறுமை யுள்ளான் நற்புத்தி கிருஷி செய்வன்
சாலவே பூமி சேர்ப்பன் செட்டுக்கள் செய்வா னுகும்
வேல்விழி மனைவி பட்சன் வீணப வாத முள்ளான்.

9. புத்திரபாக்கிய முடையவன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். உலகில் பொறுமையுடையவன். நற் புத்தியுள்ளவன். விவசாயம் செய்து வருவான். அதிகமான பூமியைச் சேர்ப்பான். வர்த்தகங்கள் புரிவான். மனைவியின்மீது பிரியமுள்ளவன். வீண் அபவாதத்தையடைவான்.

10. பூமியும் பரிபா லிப்பன் புதிதான கிருகஞ் செய்வன்
மாமிய ரிருவ ராவர் வாக்குகள் தவரு னுகும்
தீமையை யொருவர்க் கெண்ணுன் ஜனவுப கார னுவன்
தாமதக் குணத்தா னுகும் தைரிய னடக்க முள்ளான்.

10. பூமியைப் பரிபாலிப்பான். புதிய வீடு கட்டுவான். இரு மனைவியரை அடைவான். சொன்னசொல் தவருதவன். ஒருவருக்கும் தீங்குகள் செய்ய எண்ணுதவன். ஜனங்களுக்கு உபகாரி. தாமதமான குணத்தினன். தைரியசாலி. அடக்கமுள்ளவன்.

11. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மெழுவ ராகும்
அவனியி லாண்பால் காணு னறைகின்றோம் பெண்பால் விருத்தி
இவர்களில் சிலரே சேதம் இம்மொழி வதிட்டர் சொல்ல
ஜயமுனி யதனைக் கேட்டுச் செப்புவார் முனிவ ருக்கு.

11. ஜாதகனுடைய உடன் பிறந்தவர்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். ஏழுபேர்கள் உண்டு. ஆனால் சகோதரரில்லை. சகோதரிகள் விருத்தியாகும். அவர்களில் சிலர் நிலையார் என்று வசிஷ்ட முனிவர் சொல்லும்போது, ஜயமுனிவர் அதனைக் கேட்டுக் கூறுகின்றார்.

12. எதுகா ரணத்தி னுலே இவனுக்குத் துணையாண் தோடம்
ஓதுவீர் முனியே நீர்தாம் நாயக னெட்டில் கூட
மேதினில் குஜனுஞ் சேர விளம்பினேந் துணையாண் தோடம்
பூதல மளந்தோன் தங்காய் புகன்றன தப்பா தென்றோம்.

12. எந்தக் காரணத்தால் ஜாதகனுக்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது? கூறுங்கள், முனிவரே! நீர்தாம். சகோதரஸ்தானத்துக்குரிய சூரியன் எட்டாமிடத்தில் செவ்வாயுடன் கூடி இருப்பதால் சகோதரருக்குத் தோஷம் உண்டு. பூமியை அளந்த திருமாலின் சகோதரியே! கூறியது தவருது.

13. இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோ மிருபான் ரண்டில்
கன்னிகை மேற்குத் திக்கில் கலந்திடு மென்று சொன்னோம்
அன்னவள் குணத்தைச் சொல்வேன் அவளுமே இருநி றத்தாள்
உன்னத வார்த்தை சொல்வள் உரைக்கிறோம் வயது தீர்க்கம்.

13. ஜாதகனுடைய திருமணக் காலத்தைக் கூறுகின்றோம். இருபத்தி ரண்டாம் வயதுக்குள் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள் என்று சொல்லுகின்றோம். அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். இருநிற முடையவள். உயர்ந்த வார்த்தைகளைக் கூறுவாள். நீண்ட ஆயுளுள்ளவள்.

14. எப்படி வயது தீர்க்கம் இயம்புவீர் முனியே நீர்தாம்
செப்புவேன் கேளு மையா செம்பொன்னோன் லாப மேற
மெய்ப்புடன் மதியும் கூட விளம்பினோம் தாரம் தீர்க்கம்
இப்படி வதிட்டர் கூற இயல்ஜய முனிவர் சொல்வார்.

14. ஜாதகனுடைய மனைவிக்கு வயது தீர்க்கம் என்று எப்படிச் சொன்னீர்கள் ? முனிவரே ! தாங்கள். சொல்லுகின்றோம். கேளுங்கள். குரு லாப ஸ்தானத்தில் இருக்க, சந்திரனும் கூட இருப்பதால், மனைவிக்கு ஆயுள் தீர்க்கம் என்று சொல்லுகின்றோம். இங்ஙனம் வதிஷ்டர் கூற, ஜய முனி கூறுகின்றார்.

15. சத்தமத் தோன்ச ரத்தில் சார்ந்திடப் பிறையும் கூட
சுத்தமா யிரண்டில் ராகு தோன்றியே யிருப்ப தாலே
வித்தகன் தனக்குத் தாரம் மேவிடு மிரண்டு வென்றோம்
அத்தியைப் பெற்ற மாதே அறைந்தன மொழிகுன் றுவே.

15. ஏழாம் வீட்டுக்குரிய குரு சரத்தில் இருந்து சந்திரனுடன் கூடி யிருப்பதாலும், இரண்டாம் வீட்டில் ராகு இருப்பதாலும், ஜாதகனுக்கு இரு மனைவியர் என்று சொன்னோம். விநாயகனைப் பெற்ற தேவியே ! கூறிய வார்த்தைகள் தவறா.

16. முதல்மனை சேதி எவ்வாறு முடிந்திடும் சொல்லு மென்ன
மதிநுதல் மனைவி மாண்டு வந்திடு மிரண்டாந் தாரம்
எது கால மணுகு மென்ன இருபத்தாறு ண்டி லேதான்
சதமுடன் தெற்கி லேதான் சார்ந்திடு மந்த மாது.

16. ஜாதகனுடைய முதல் மனைவியின் சேதி எவ்வாறு முடியும் என்று சொல்லுங்கள். அழகிய மனைவி இறந்து, இரண்டாம் மனைவி வாய்க்கும் காலத்தைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய இருபத்தாறும் வயதில் தெற்குத் திக்கிலிருந்து அவள் வந்து சேருவாள்.

17. என்னகா ரணத்தி னாலே இருமனை என்று சொல்லும்
அன்னவன் முன்ஜன் மத்தில் அநேகதுன் பங்கள் செய்தான்
தன்னுடைத் தோடத் தாலே சார்ந்தது அந்தத் தோடம்
பின்னமாய் வந்த ஊழைப் பேசுவீர் முனியே நீர்தாம்

17. ஜாதகனுக்கு என்ன காரணத்தால் இரு மனைவிகள் என்று சொல்லுங்கள். ஜாதகன் முற்பிறவியில் அநேக தீவினைகள் செய்தான். ஜாதகனது குற்றத்தால் நேர்ந்த அந்த தோஷம் இவனை யடைந்துத் தீமையாக வந்த தோஷத்தைக் கூறுங்கள். முனிவரே! நீர்தாம்.

18. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் காஞ்சி மேல்பால்
மேதினில் சிற்றூர் தன்னில் விளங்கினான் தீயின் வம்சம்
போதவே தனங்க ளுண்டாய்ப் பூமியு முடைய னுகித்
நீதிமை வாழு நாளில் செப்புவோ மூழி தானே.

18. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்துக்கு மேற்கில் உள்ள சிற்றூரில் வன்னிய குலத்தில் பிறந்தான். மிகுந்த செல்வங்களைப் பெற்று, பூமிகளையும் அடைந்து, தீங்குகளில்லாமல் வாழ்ந்து வந்தபோது ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

19. அவ்வூரில் மறையோன் தானும் அவனுடன் நேசம் செய்து
பவ்வமாய்ச் செட்டுச் செய்து பாரினில் வாழு நாளில்
ஒவ்விய வந்த ஊழை உரைக்கிறோம் விபர மாகத்
திவ்விய மறையோன் பெண்டை சேரவே கருத்தி லெண்ணி;

19. அவ்வூரில் வாழ்ந்து வந்த ஓர் அந்தணனுடன் நேசம் பூண்டு, வியாபாரம் செய்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். அழகிய அவ்வந்தணனுடைய மனைவியுடன் சேர மனத்தில் ஆசை கொண்டு;

20. வரனில்லா வேளை யில்தான் மறையவ னில்லம் சென்று
அரிவை யுனுடனே பேசி அர்த்தமு மவளிக் கீந்து
மருவவே வார்த்தை பேச மங்கைகற் புடையாள் தானும்
விரைவினில் திகில டைந்து விளம்புவாள் மாது தானும்.

20. அவளது கணவனில்லாத சமயத்தில், அந்தணனுடைய வீட்டுக்குச் சென்று, அப் பெண்ணுடன் பேசியிருந்து, அவளுக்குப் பொருளும் கொடுத்து, அவளுடன் இன்பமனுபவிக்க, தகாத வார்த்தைகளைப் பேசும்போது, கற்புடைய பெண் திடீரென்று மனத்தில் கலவரமடைந்து சொல்லுகின்றாள்,

21. வேதத்தோர் மாது இச்சை வைத்திடத் தோட மாகும்
நீதியாய் உரையக் கேளாய் நேசன்தன் மனைவி போகம்
மேதினில் செய்தா யாகில் மேவிடு மநேக துன்பம்
பாதக புத்தி வேண்டாம் பாவையும் சொல்லும் போது;

21. வேதமறிந்த அந்தணனுடைய மனைவியை அடைய ஆசைவைப்பது பாவமாகும். நேர்மையைக் கூறுகின்றோம். கேளுங்கள். நண்பனின் மனைவியுடன் இன்பம் அனுபவித்தால் உலகில் அநேகத் துன்பங்கள் ஏற்படும். கெட்ட புத்திகள் வேண்டாம் என்று பெண் கூறும் போது;

22. பாவத்தை எண்ண ணுகிப் பலாத்கார போகம் செய்தான்
மேவிற்று அந்தத் தோடம் விளம்புவோ மின்ன மொன்று
கோவின்தன் பால தன்னைக் குட்டிக்குத் தராமல் கொண்டான
ஆவலாய் அந்தத் தோடம் அணுகிற்று இவனுக் கேதான்.

22. பாபத்தை மனத்தில் எண்ணுதவனுகி, பலவந்தமாகப் புணர்ந்தான். அந்தத் தோஷம் ஏற்பட்டது. இன்னுமொன்றும் சொல்லுகின்றோம். கன்றுக்குப் பால் விடாமல் பசுவைக் கறந்தான். அந்தத்தோஷம் ஒன்றும் இவனைச் சார்ந்தது.

23. அந்திய காலம் தன்னில் அவனுக்கு வறுமை யுண்டாய்
வந்திடு மார்க்கம் தன்னில் அவன்தண்ணீர் பந்தல் வைத்துக்
கந்தன்மேல் அன்பு பூண்டு காஞ்சியில் குமர கோட்டம்
சந்ததம் தீபம் வைத்துத் தானவன் மரண மாகி;

23. தன் கடைசிக்காலத்தில் வறுமையடைந்து, சாலையோரங்களில் மரங்கள் தண்ணீர்ப் பந்தல்கள் இவைகளை அமைத்து, முருகப்பிரானிடம் பக்திகொண்டு காஞ்சிபுரத்தில் உள்ள குமரகோட்டத்துக்கு தீபம் ஏற்றி வைத்து, பிறகு மரணமடைந்து;

24. பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தனன் கங்கை சேயாய்
வரைகிறோ மிச்சன் மத்தில் அருமறை மாது தோடம்
விரைவினில் கோவு தோடம் மேவிடும் மனைவி தோடம்
பெருமுனி இவ்வாறு கூறப் பார்வதி கூறு கின்ருள்.

24. பிரமனுல் படைக்கப்பட்டு, வேளாள குலத்தில் பிறந்தான். இப் பிறவியில் அந்தணப் பெண்ணின் தோஷத்தாலும், பசுவின் பாலை அறக்கரந்த தோஷத்தாலும் மனைவிக்குத் தீங்கு நேரிடும். இங்ஙனம் முனிவர் சொல்லும்போது, பார்வதி தேவி கூறுகின்ருள்.

25. மறுமனை தீர்க்க முண்டோ வரைகுவீ ரந்தச் சேதி
உரைக்கிறோ மவள்கு ணத்தை உத்தமி சிவந்த மேனி
திருமக ளொப்ப தாகு சாயல்நேத் திரமு முள்ளாள்
பெருமையும் புகழு முள்ளாள் புத்திமான் அடக்க முள்ளாள்.

25. ஜாதகனுக்கு வரும் இரண்டாம் மனைவி தீர்க்காயுள் உள்ளவளா என்று சொல்லுங்கள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். சிவந்த உடலுள்ளவள். இலக்குமியைப் போன்றவள். சாய்ந்த பார்வையை யுடையவள். பெருமையும் கீர்த்தியுமுடையவள். புத்திசாலி. அடக்கமுள்ளவள்.

26. அன்னங்கள் போட வல்லாள் ஆளனுக் கினிய ளாகும்
தன்மனம் கவடு மில்லாள் சம்பத்துக் குடும்பம் தன்னில்
இன்னவ ளுதிப்பா ளாகும் இவளுமே வறுமை யில்லாள்
தன்னிலே வயது தீர்க்கம் மங்கையே கேட்டி டாயே.

26. அன்னங்கள் அளிக்கும் இயல்பினள். தன் கணவனுக்குப் பிரிய மானவள். கபடமில்லாத மனத்தினள். குடும்பத்தில் செல்வம் பெருகும். இவள் வறுமையடையாத குலத்தில் பிறப்பாள். நீண்ட வயதுள்ளவள். பார்வதிதேவியே ! கேளுங்கள்.

27. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பால் ரண்டு
சித்தமாய்ப் பெண் பால் மூன்று செப்புவோ மிவளுக் கேதான்
சுத்தமாய் ஐந்தும் தீர்க்கம் செப்பின மொழி குன்றுவே
அத்தியைப் பெற்ற மாதே அறைந்தனம் மேலும் கேளே.

27. புத்திர விருத்தியைப்பற்றிச் சொல்லுகின்றோம். இரு புதல்வர்களும் மூன்று புதல்விகளும் தோன்றுவர் என்று திண்ணமாகக் கூறுகின்றோம். இவர்கள் ஐவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். கூறிய வார்த்தைகள் தவறு. விநாயகனைப் பெற்ற தேவியே ! கூறுகின்றோம். கேளுங்கள்.

28. அன்னையும் சிவந்த மேனி அவளுமே உயர மில்லாள்
இன்னவ ளடக்க முள்ளாள் இனிமையாய்ப் பேச வல்லள்
தன்வரன் மனம்போல் வாழ்வள் சம்பத்து முடைய ளாகும்
தன்துணை ஆண்பால் ரண்டு சாற்றினோ மிவளுக் கேதான்.

28. ஜாதகனுடைய தாய் சிவந்த உடலுள்ளவள். உயரமில்லாதவள். அடக்கமுள்ளவள். இனிமையாகப் பேசுபவள். தன்னுடைய கணவன் மனத்துக்கேற்றவள். செல்வம் மிகுந்தவளாவள். உடன் பிறந்த சகோதரர் இருவர் என்று சொல்லுகின்றோம்[1].

---

[1] இதற்கு மேல் காணப்படவில்லை.

## ஜாதகம் 105

1. கலைகலை ராகு சாடி கதிர்குரு புந்தி வீணை
நிலமகன் வீணை யாக நீர்புகர் கேது சீயம்
நலமுள காரி கோளம் நற்றண்டு ஜன்ம மாகப்
பலனதைச் சொல்லு மென்று பார்வதி கேட்க லுற்றாள்.

1. சந்திரன் மகரத்திலும், ராகு கும்பத்திலும், சூரியன் குரு புதன் செவ்வாய் மிதுனத்திலும், சுக்கிரன் கேது சிம்மத்திலும், சனி துலாத்திலும் இருந்து, மிதுனம் ஜன்மமாக இருப்பின், பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதி கேட்கலானாள்.

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் சூரியன் குரு புதன் செவ்வாய் |
| ராகு | இராசி சக்கரம் | | |
| சந்திரன் | | | சுக்கிரன் கேது |
| | | சனி | |

2. அத்திரி சொல்லு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தகன் தந்தை யில்லம் விளம்புவோம் வடதென் வீதி
சித்தமாய் மேற்கு வாசல் தந்தியின் கோட்டம் தென்பால்
சத்திமா காளி வாயு சலக்கரை யருகி லுண்டே.

2. அத்திரி முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் பிறப்பு ஜாதகனுடைய தந்தையின் வீட்டைச் சொல்லுகின்றோம். அது, தெற்கு வடக்கான வீதியில் மேற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. தெற்கில் விநாயகர் ஆலயமும், வாயு திக்கில் காளி கோயிலும், அருகில் ஒரு நீர் நிலையும் உண்டு.

3. இத்தகைய மாடி சூழ்ந்த இலகிய சிறுவூர் தன்னில்
பத்திய.....................கன் அன்னை தந்தை
சித்தமாய்த் துணைவர் புத்ரர் சேயிழை யிவர்கள் யோகம்
வித்தகன் முன்பின் ஜன்மம் விளம்புவோம் கேளும் தாயே.

3. இவ்வடையாளங்களுள்ள மாடி வீடுகள் சூழ்ந்த ஒரு சிற்றூரில் பிறந்த ஜாதகனுடைய தாய் தந்தையர் உடன்பிறந்தவர் புத்திரர்கள் மனைவி இவர்களுடைய யோகம், ஜாதகனுடைய முற்பிறவி மறுபிறவி ஆகிய வற்றை இந்த நூலில் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

வேறு

1. தந்தைதுணை எழதிலே ஆண்பா லொன்று
சத்திமார் மூவரென்று சாருந் தீர்க்கம்
....... ஆணுக மொழிய லாகும்
உரைகின்றே மவன்குணத்தை மால்நி றத்தான்
வந்தவருக் கன்னமீவன் ஈகை வானும்
மாநமமிலான் பலருக்குஞ் சகாயஞ் செய்வன்
நொந்தவரை யாதரிப்பன் நெசவு செய்வன்
நேமியினில் வறுமை யில்லான ........க்கன்பன்.

4. ஜாதகனுடைய தந்தைக்கு உடன் பிறந்தவர்கள் எழுவரில் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூவருமாவர் என்றும், அவர்கள் தீர்க்கமாயுள்ளவர்கள் என்றும், சொல்வோம். ............................ ஆணுகக் கூறுவோம். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். கரிய நிறமுடையவன். தன்னை வந்தடைந்தவர்கட்கு அன்னமளிப்பான். கொடையாளி. இரகசியமில்லாதவன். எல்லோருக்கும் உபகாரம் செய்து வருவான். கஷ்டப்படுபவரை ஆதரிப்பான். உலகில் நெசவுத் தொழில் செய்து வருவான். தரித்திரமில்லாதவன். ..............அன்பன்

5. அவனிமேல் செட்டுச்செய்வன் பூமி சேர்ப்பன்
அறுமுகன் பக்திதிருப் பணியுஞ் செய்வன்
தவமுடையயோர்க் கன்னமீவன் பாரி யொன்று
தன்சுதர்க ளாண்மூன்று கன்னி யொன்று
இவர்களுமே தீர்க்க மெய்தும்........றுய் வாழ்வன்
இனபந்து மேலாய் வாழ்வ னுகும்
பவமணங்க ளில்லாதான் புதிதா யில்லம்
பண்ணுவான் பின்பாகம் பகரு வோம்யாம்.

5. உலகில் வர்த்தகம் செய்து வருவான். பூமியைப் பெருக்குவான். சுப்பிரமணியக் கடவுளுக்குத் திருப்பணியும் செய்வன். பக்தியுடையவன். துறவிகட்கு அன்னமளிப்பவன். மனைவி யொன்று என்றும் கூறுவோம். மூன்று புத்திரர்களும் ஒரு புத்திரியும் பிறந்து, தீர்க்காயுளுடன் ஒன்றுக வாழ்ந்து வருவார்கள். அவன் தன் சுற்றத்தாருக்கு மேலாக வாழ்ந்து வருவான். தீய மணங்களில்லாதவன். புதிய வீடு கட்டுவான். பிற்பாகத்தில் விவரம் சொல்லுகின்றோம்.

6. தந்தைகுணங் கூறுகின்றேந் துர்க்கை நாளாம்
சலராசி கடகமேநாம் சாற்ற லாகும்
தந்தைக்கு இடருரையான் சமதே கத்தான்
தரித்தொழிலுந் தூசுச்செட்டும் தரணி சேர்ப்பன்
தன்தனமு முடையவனு முன்னோன் சொல்லேத்
தட்டாதா னிருநிறத்தான் சாறுன் பொய்யும்
தன்னினத்தோர் தாமதிக்க வாழ்வா னுகும்
சங்கையா மனத்தனெனக் கூற லாகும்.

6. தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். கடக லக்கினத்தில் (துர்க்கை நாள் ?) ...... நட்சத்திரத்தில் பிறந்தவன் என்று சொல்லுவோம். தன் தந்தைக்கு மறு வார்த்தை பேசாதவன். சமமான சரீர முடையவன். நெசவுத்தொழில் செய்து வருவான். துணி வியாபாரம் செய்து பூமியைப் பெருக்குவான். தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருளை உடையவன். மூத்த சகோதரன் பேச்சைத் தட்டாதவன். இருநிற முடையவன். பொய் பேசாதவன். தன் பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்வான். சந்தேகமுடைய மனத்தினன் என்று சொல்வோம்.

7. ஆறுமுகன் பக்தியுளன் அடைந்தோர்க் கன்பன்
ஆதரிப்ப னடுத்தோரை யீகை யாளன்
பெரும்புத்தி நிலம்விருத்தி பொருந்து ரைப்பன்
பூமியினில் வறுமையிலான் புகழு மேற்பன்
மருமமுண்டு முன்கோபம் வெளிக்காட் டாதான்
மாற்றலர்கள் தமைஜயிப்பன் மாதர் நேயன்
கரிமுகவ னடிமையுளன் கரத்தி லேதான்
காலகண்ட சூலமச்ச ரேகை காணும்.

7. ஆறுமுகக் கடவுள்மீது பக்தி யுடையவன். தன்னை அடைந்தவர்கட்கு அன்பன். தன்னை யண்டியவர்களைக் காப்பான். கொடையாளி. தாராள புத்தியுள்ளவன். பூமியைப் பெருக்குவான். பொருத்தமாகப் பேசுபவன். தரித்திரமில்லாதவன். கீர்த்தி யடைவான். இரகசிய முள்ளவன். முன்கோபி. கோபத்தை வெளியிடாதவன். தன் விரோதிகளை வெல்வான். பெண்கள்மீது விருப்பமுடையவன். கரிய முகமுடையவன். ஏவலாட்கள் உடையவன். கையில் உருத்திரசூலம், மச்சரேகைகளுள்ளவன்.

8. சொன்னதொரு குணத்தானுக் கிந்தப் பாலன்
ஜனித்திடுவா னிவன்குணத்தைச் செப்பக் கேண்மோ
கன்னல்மொழி ஈகையுளன் மாநி றத்தன்
கல்வியுளன் கனகமுளன் கந்தர் பக்தி
பின்னமிலான் பெரியோர்கள் உறவு கொள்வான்
பேதையர்கள் மோகமுளன் பிரித்துப் பேசான்
அன்னைதந்தை தாய்க்கினியன் அறிவோர் நேயன்
அன்புடைய மனத்தனென வறிவித் தோமே.

8. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். ஜாதகனுடைய குணத்தைக் கூறுகின்றோம். இனியவார்த்தைகளைப் பேசுபவன். கொடையாளி. மாநிறமுடையவன். கல்வியறிவுள்ளவன். பொன்களை யுடையவன். முருகக் கடவுளின்மேல் பக்தி யுள்ளவன். குறைவற்ற சரீர முடையவன். பெரியோர்களுடைய நட்பைக் கொள்வான். பெண்கள்மீது மோகமுடையவன். பிரித்துப்பேசாதவன். தாய் தந்தையருக்கும் அறிவாளிகளுக்கும் பிரியமானவன். அன்புடைய மனத்தினன் என்று கூறுகின்றோம்.

9. அரன்பூசை செய்திடுவான் உபதேசம் கேட்பன்
அவனிகளைச் சேர்த்திடுவன் னதிக கோபி
திருமகளும் வாசமுளான் திரமில் லாதான்
செய்ந்நன்றி மறவாதான் தந்தை மேலாய்ப்

பெருமையுடன் குடும்பியாய் வாழ்வா னாகும்
பிறருக்கு வுபகாரி பொருந்து ரைப்பன்
மருமமுண்டு சோவுரு தான் பித்தச் சூடு
மருவிடுமே மால்ரேகை யறைந்தேன் பாரே.

9. சிவபெருமானுக்குப் பூசை செய்வான். நல்லுபதேசம் கேட்பான். பூமிகளைச் சேர்ப்பான். அதிகம் கோபம் கொள்வான். இலக்குமி விலாசமுடையவன். தைரியமில்லாதவன். பிறர் செய்த உதவியை மறவாதவன். தன் தந்தைக்கு மேலாக வாழ்வான். பெருமையுடைய குடும்பியாய் வாழ்ந்து வருவான். பிறருக்கு உபகாரம் செய்பவன். பொருத்தமாகப் பேசுபவன். இரகசிய முள்ளவன். சோர்வு அடையாதவன். பித்தச் சூட்டு நோயுள்ளவன். திருமாலின் ரேகை யுடையவன். என்று கூறுகின்றோம்.

10. பார்தனிலே துணைநான்கு தோன்று மென்றோம்
பகருவோம் ஆண் ........ கன்னி ரண்டு
கூறுவோந் தீர்க்கமதா யாண்பால் சேதி
கும்பமாத மாதிரைநாள் குலவு வானும்
தீரன்மனங் கவடுடையான் தீர நெஞ்சன்
சிறுதீனி விருப்பமுளான் மால்நி றத்தான்
காரிகையர் மோகமுளன் பொறுமை சொ........
நாற்காலி விருத்தியுளன் நவில்வான் பொய்யும்.

10. உலகில் நான்கு உடன் பிறந்தவர்கள் தோன்றுவர் என்றோம். சகோதரர்கள்................சகோதரிகள் இருவரும் தீர்க்காயுள் உள்ளவர்கள். சகோதரனின் செய்தியைக் கூறுவோம். மாசிமாதத்தில் திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவன். தைரியமுள்ள மனத்தினன். கபடமுடையவன். சிற்றுண்டியில் விருப்பமுள்ளவன். கரிய நிறமுடையவன். பெண்கள்மீது விருப்பமுடையவன். பொறுமை.................... கால்நடைகள் விருத்தியுள்ளவன். பொய் பேசுபவன்.

11. பொய்யுரையன் மிஞ்சினசொல் புகழ்ந்தோர்க் கன்பன்
பாரிலொன்று புத்திரராண் காணு னாகும்
ஐயமதி லிச்சைகொஞ்சம் பெண்பால் மூன்று
அறைகின்றோம் தீர்க்கமதாய் ஒன்றாய் வாழ்வன்
தையல்மார் இருவர்குணம் பின்பால் சொல்வோம்
ஜனித்தவனின் மணக்காலம் சாற்றக் கேண்மோ
வையமே லீரெட்டாண்டு வடதி சைபால்
.....................வர்க்கம் வருமென் றோமே.

11. அதிகமாகப் பொய் பேசுவான். தன்னைப் புகழ்ந்தவர்களிடம் பிரியமுள்ளவன். மனைவி யொருத்தியே. புத்திரர்கள் இல்லாதவன். தருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். பெண்கள் மூவர் பிறந்து தீர்க்க முள்ள

வர்கள். ஒன்ருக வாழ்ந்து வருவார்கள். பெண் குழந்தைகள் இருவரின் குணத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின்ருேம். ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்ருேம். கேளுங்கள். ஜாதகனுடைய பதினாரும் வயதில் வடக்குத் திசையில்........................வரும் என்று சொல்லுவோம்.

12. வருங்கன்னி குணங்கேளாய் மாநி றத்தாள்
வரன்மனம்போல் நடந்திடுவள் வழுத்தாள் பொய்யும்
பெரும்புத்தி ஊகமுண்டு அன்ன மீவள்
பிறர்குற்றம் புகலாளாம் புண்ணி யத்தள்
அறநெறியோர் பணிசெய்வள் வறுமை காணுள்
அடக்கமுளாள் குடும்பத்தை யாத ரிப்பாள்
நரைமலர்க விட்டமுள்ளாள் நாய கிக்கு
வயதுதீர்க்கம் நவின்றிடுவோம் யாமுந் தாமே.

12. மனைவியின் குணத்தைக் கேளுங்கள். மாநிற முடையவள். தன் கணவன் மனம்போல் நடப்பவள். பொய் பேசாதவள். தாராள புத்தி யுடையவள். ஊக முள்ளவள். அன்னமளிப்பவள். பிறர்மீது குற்றம் கூருதவள். புண்ணிய மனத்தினள். தரும நெறியுடன் நடப்பவர்கட்குத் தொண்டு செய்வாள். வறுமை யடையாதவள். அடக்க முள்ளவள். குடும்பத்தை ஆதரிப்பவள். நல்ல புஷ்பங்கள்மீது இஷ்டமுள்ளவள். நீண்ட ஆயுள் உள்ளவள் என்று நாங்கள் கூறுகின்ருேம்.

### வேறு

13. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணேம்
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொல்வோம்
அத்திரி யிவ்வாறு சொல்ல அறைகுவார் பராசர் சொல்லக்
குத்தங்கள் புத்ர தோடங் கூறுவீர் முனியே நீர்தாம்.

13. ஜாதகனுக்குப் புத்திர விருத்தியைக் கூற பலமில்லை. பிறந்தாலும் நிலையா என்று சொல்வோம். இங்ஙனம் அத்திரி முனிவர் சொல்லும் போது பராசர முனிவர் கூறுகின்ருர். புத்திர தோஷம் ஏற்பட என்ன குற்றங்கள் ஏற்பட்டன என்று சொல்லுங்கள்.

14. அஞ்சினில் காரி தங்க அஞ்சவன் மூன்றில் சேர்ந்து
தஞ்சமாய்க் கேது கூட செப்பினேம் புத்ர தோடம்
மிஞ்சிய ஜன்மம் தன்னில் மேவிற்று வினைய நேகம்.
வஞ்சனை என்ன செய்தான் அறிவிப்பீர் முனியே நீர்தாம்.

14. ஐந்தாம் வீட்டில் சனி இருந்து, அவ் வீட்டிற்குரிய சுக்கிரன் மூன்று மிடத்தில் கேதுவுடன் கூடியிருப்பதால், புத்திர தோஷம் ஏற்பட்டது என்ருேம். அது, பூர்வ ஜன்மத்தில் பல தீவினைகள் செய்ததால் விளைந்தது. என்ன தீங்குகள் செய்தான் ? கூறுங்கள். முனிவரே ! நீர் தாம்.

15. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் சோழ நாட்டில்
மன்னவர் குலமு தித்து மனைவிமைந் தருமண் டாகி
அந்நகர் கிராமச் செட்டு அனுபவி யே வாழு நாளில்
கன்னிகை விதவை போகம் காவலன் செய்து வந்தான்.

15. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். சோழ நாட்டில் க்ஷத்திரிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களை யடைந்து, அவவூரின் கிராம வியாபாரம் செய்து வரும் காலத்தில், ஒரு கைம்பெண்ணுடன் இன்பம் அனுபவித்து வந்தான்.

16. கருவுண்டாய் அழித்தா னென்றேம் கலந்தது அதுவோர் தோடம்
உரைக்கிறேம் வேறு ஒன்று உயர்மறை யோனுக் காக
வருவித்தான் கட்டு வார்த்தை வசனத்தால் மறையோ னுக்குக்
குறையான வார்த்தை நேர்ந்து கூறுவான் சாபம் தானும்.

16. அதனல் ஏற்பட்ட கருவை இவன் அழித்துவிட்டான் என்றேம். அஃது ஒரு தோஷமாயிற்று. வேறு ஒன்றும் சொல்லுகின்றேம். உயர்ந்த அந்தணன்மேல் இல்லாத வார்த்தைகளைக் கட்டிக் கூறினன். அதனல் அந்தணனுக்குக் குறை ஏற்பட்டது. அவ் வந்தணனும் சாபமிடுகின்றன்.

17. வீண்பழி சொன்ன பாவி விளங்காது சுதர்கள் தாமும்
பூணுவோம் மறுஜன் மத்தில் புத்ர தோட மாயும்
காணவே உலகோர் நிந்தை கழறுவா ரென்று சொல்லி
நாணமாய்ச் சென்ற ரென்றேம் நல்கிற்று இவனுக் கேதான்.

17. என்மீது அடாதபழி கூறிய பாவியே! உனக்குப் புத்திரர்கள் தோன்றுர். மறு பிறவியில புத்திர தோஷத்தையடைந்து, உலகத்தவ ரால் அவமானமடைந்து வாழ்வாய் என்று மனம் வருந்தி சொல்லிச் சென்றுர். அத்தோஷம் ஏற்பட்டது, இவனுக்கு.

18. இதுவன்றி இல்லம் தன்னில் எய்திற்று நாக மொன்று
அதுமகு டங்கள் கொண்டு அணுகிற்று வெளியில் ஓர்நாள்
அதிபனும் அரங்கம் செய்து மரலியின் பதிக்குச் சேர்த்தான்
சதியாக அந்தத் தோட்டம் சார்ந்தது இவனுக் கேதான்.

18. இதுவுமல்லாமல் இவன் வீட்டில் வெகு காலமாக நலலபாம்பு ஒன்று வசித்து வந்தது அது படமெடுத்து வெளியில் ஆடும்போது அதை இந்த ஜாதகன் தடியால் அடித்துவிட்டான். பாம்பு மரணமடைந்தது. அந்தத் தோஷம் இவனைச் சார்ந்தது.

19. அந்திய காலம் தன்னில் அவன்சுதர் ஆண்பால் மாண்டு
அந்தகன் பக்கல் சென்று அயனுமே வரையப் பட்டுச்
சந்ததம் செங்குந்த வர்க்கம் தன்னிலே பிறப்பா னுகும்
இந்ததோர் ஜன்மம் தன்னில் எய்திற்று முன்னூழ்த் தோடம்,

19. ஜாதகனும், தனது கடைசிக்காலத்தில், தன்னுடைய புத்திரர்களை இழந்து, மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, செங்குந்த மரபில் பிறந்தான். இந்தப் பிறவியில் முற்பிறவியின் தோஷம் தொடர்ந்தது.

20. சுதர்களும் தோட மெய்தும் தோன்றினும் தீதே யாகும்
அதுவினை தீர வேண்டி அறைகிறோம் கிரியை தானும்
அதிபன்தன் மனைவி யோடு அருணைமா நகரம் சென்று
கதிதரும் இந்த்ர குண்டம் காவலன் தீர்த்தம் தோய்ந்து ;

20. புத்திரர்கட்குத் தோஷமுண்டாகும். பிறந்தாலும் நிலையார். அத் தோஷம் நீங்கச் சாந்தி கூறுகின்றோம். ஜாதகன் தன் மனைவியுடன் திருவண்ணாமலைக்குச் சென்று அங்குள்ள இந்திர குண்டத்தில் நீராடி ;

21. கிரிவலம் வந்து மேதான் கங்கையை யணிந்தோ னுக்கு
நிறையபி டேகம் செய்து நிமலன்றன் பாதத் திற்குக்
குறைவறக் கூவிளத்தால் சகஸ்ர மர்ச்சித் தேத்தி
அரனடி மூவேழ் பேர்க்கு அன்னமு மன்பா யீந்து ;

21. மலையை வலம் வந்து, சிவபெருமானுக்கு பெரிய அபிஷேகம்செய்து, குறையின்றிக் கூவிளமலரால் அப்பெருமானின் பாதங்களுக்கு ஆயிரம்தரம் அருச்சனைகள் செய்து, சிவனடியார் இருபத்தொரு பேருக்கு அன்புடன் அன்னமளித்து வந்து ;

22. மறுபடி உள்ளூர் மீண்டு வடமேல்பால் அரசு......
பெரியோரால் செய்து நின்ற பீடத்தை மண்ட லந்தான்
திருமகள் வலங்கள் செய்யத் தீவினை விலகி யேதான்
வருஞ்சுதர் தீர்க்க மெய்தும் மங்கையே கேட்டி டாயே.

22. மறுபடி உள்ளூருக்குத் திரும்பி வடமேற்குத் திக்கில்............ பெரியோரால் செய்து நிற்கும் பீடத்தை, நாற்பத்தைந்து நாட்கள் ஜாதக னுடைய மனைவி வலம் வந்தால், தீவினைகள் விலகிப் பிறக்கும் குழந்தை தீர்க்காயுள் பெறும். தாயே ! கேளுங்கள்.

# ஜாதகம் 106

1. பொன்தனுர் புதனும் நந்தி புக்ரவி மேட மாக
மந்தனும் ராகு சாடி மங்கலன் மான தாகச்
சந்திரன் மீன மாகச் செம்பாம்பு சீய மாக
இந்தவாறு கிரகம் நின்று இலக்கினம் வீணை யாக ;

1. குரு தனுசிலும், புதன் ரிஷபத்திலும், சூரியன் மேஷத்திலும், சனி ராகு கும்பத்திலும், செவ்வாய் மகரத்திலும், சந்திரன் மீனத்திலும், கேது சிம்மத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கனம் மிதுனமானுல் ;

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | சூரியன் *சுக்கிரன் | புதன் | லக்கினம் |
| சனி ராகு | இராசி சக்கரம். | | |
| செவ்வாய் | | | கேது |
| குரு | | | |

2. பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
குலவிய ஆண்பால் ஜன்மம் கூறுவோ மில்லந் தன்னை
நலமுடன் கீழ்மேல் வீதி பேசுவோம் வடக்கு மாரி
தலமுடன் தீயு முத்ரம் நாட்டுவோம் வயல்கள் தெற்கில் ;

2. பலனைக் கூறுங்கள் என்று பார்வதி தேவி கேட்கும்போது, இஃது ஆண் மகனின் ஜாதகம். இவனுடைய வீட்டைச் சொல்லுகின்ரும். அது, கிழக்கு மேற்கான தெருவில் வடக்குத் திக்கில் மாரியம்மனும் தெற்குத் திக்கில் வயல்களும் ;

3. இந்திரன் திசையில் ஓடை............னுண்டு
தந்தியும் மாரி காளி தங்கிடு மென்று சொன்னேம்
எந்தையே மேற்கில் சோலே இலகிய சமவூர் தன்னில்
முந்திய வேளா னுக்கு உதிப்பபனு மிந்தப் பாலன்.

3. கிழக்குத் திசையில் நீரோடையும்............விநாயகரின் ஆலயம் மாரியம்மன் கோயிலும் காளி கோயிலும் உள்ளன தென்று சொல்லுகின்ரும். மேற்கில் ஒரு தோட்டம் உண்டு. இவ்விதமுள்ள ஒரு சம நிலையையுடைய ஊரில் உயர்ந்த வேளாளனுக்கு ஜாதகன் தோன்றுவான்.

---

* சுக்கிரனது நிலை காணப்படவில்லை.

4. அன்னையின் தந்தை யோகம் அவனுடைத் துணைவன் யோகம்
உன்னத மனைவி யோகம் உதித்திடும் புத்ர யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மம் ஜாதகன் முன்பின் ஜன்மம்
பின்னமில் லாமல் சொல்வோம் புண்ணிய வதியே கேளாய்.

4. ஜாதகனுடைய தாய் தந்தை உடன்பிறந்தவர்கள் மனைவி மக்கள் பிறக்கும்குழந்தைகள் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி இவைகளையும் குறைவில்லாமல் சொல்லுகின்றோம். புண்ணியவதியே ! கேளுங்கள்.

5. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சற்சனன் பொறுமை
[யுள்ளான்
சிந்தையும் கபடு மில்லான்................ரீவன
பந்தமால் நிறத்த னாகும் பலகலை படிக்க வல்லன்
எந்தையே கிருஷி செய்வன் ஊகவா னுளைச்சல் தேகி.

5. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். நல்லவன். பொறுமையுடையவன். கபடமில்லாத மனத்தினன்............ கொடுப்பான். திருமாலைப் போல் கரிய நிறமுடையவன். பல கலைப் படிக்க வல்லவன். விவசாயம் செய்து வருவான். ஊகமுடையவன். மெல்லிய சரீரமுடையவன்.

6. இனமது புகழ வாழ்வன் எதிரியை நசிக்கச் செய்வன்
கனமுள வீடு செய்வன் காலாள்க ளுடைய னுவன்
சினமது கொஞ்ச முள்ளான் சீக்கிர நடையு மாவன்
தனமது செலவு செய்வன் தாக்ஷியண்யன் மேலும் கேளே.

6. தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். விரோதிகளை ஒழித்து விடுவான். பெரிய வீட்டைக் கட்டுவான். ஏவலாட்கள் உள்ளவன். சிறிது கோபங் கொள்வான். வேகமாக நடப்பவன். பணத்தைச் செலவுசெய்பவன். தாட்சிணியமுடையவன். மேலுங் கேளுங்கள்.

7. பூமியும் சேர்ப்பா னாகும் புகழுளான் தெய்வ பக்தித்
தீமையை யொருவர்க் கெண்ணுன் ஜனவுப காரி யாவன்
நேமியோர் மெச்ச வாழ்வன் நிதமுமே சுகிபு சிப்பன்
சாமிமேல் பக்தி பூண்பன் தோல்புவி....மீவன்.

7. பூமியைப் பெருக்குவான். கீர்த்தியுடையவன். தெய்வபக்தியுள்ளவன். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவன். ஜனங்களுக்கு உபகாரி. உலகத்தவர் கொண்டாடும்படி வாழ்வான். தினந்தோறும் நன்ருக உண்பதில் பிரியன். தெய்வபக்தியுள்ளவன். உலகில்............கொடுப்பவன்.

8. குருவுப தேசம் கொள்வன் கூறுவான் சிலேடை வார்த்தை
திருமாளி செய்வா னாகும் சேயர்மே லாசை யுள்ளான்
இருமாமி உடைய னாகும் இடுக்கணு மெவர்க்குஞ் செய்யான்
பெருமையாய்க் கிருகம் செய்வன் பலருக்கு முதவி செய்வன்.

8, குருவிடம் உபதேசம் பெறுவான். இருபொருள்படும்படி பேசுவான். அழகிய வீடு கட்டுவான். பெண்கள்மீது மோகம் கொள்வான். இரு மனைவியரை உடையவன். துன்பங்களை ஒருவருக்கும் செய்யாதவன். பெருமை யான வீடு ஒன்று கட்டுவான் பலபேருக்கு உபகாரம் செய்பவன்.

9. இன்னவன் துணைவர் தம்மை இயம்பவே பலமு றாது
தன்னிலே யுதித்தா லுந்தான சடுதியில் நட்ட மென்றோம்
சொன்னஇக் குணத்தா னுக்குப் புத்திர னுதிப்பா னென்றோம்
பின்னையும் துணைவா சேதி பேசுவோம் கேட்டி டாயே.

9. இவனுக்குச் சகோதரபலத்தைக் கூற பலமில்லை. பிறந்தாலும் விரைவில் சேதமடையும். இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான் என்றோம். அவனுடைய சகோதரர் செய்தியைக் கூறுகின்றோம். கேளுங்கள்.

10. துணைவர்க்குப் புத்திர பாவம் சொல்லுவோம் ஆண்பா லொன்று
களமுள பெண்பா லவ்வாறு கழறுவோம் தீர்க்க மாகப்
பிணையாகும் மற்ற வெல்லாம் பேசுவோம் துணையின் சேதி
அனையவே இளையோ ளென்றே மவளுமே மால்நி றத்தாள்.

10. சகோதரனுடைய புத்ர பாவத்தைச் சொல்லுகின்றோம். ஆண் மகன் ஒருவனும் பெண் குழந்தையொன்றும் தீர்க்காயுள் உள்ளவர்கள் என்று சொல்வோம். மற்றவர்கள் நிலையார். சகோதரியின் சேதியைக் கூறு வோம். இவனுக்கு இளையவள். கரிய நிறமுடையவள்.

11. கல்வியு முடைய ளாகும் கபடுளாள் மந்த்ர வாதி
நல்லவள் போலச் சொல்வள் நாற்காலி விருத்தி யுள்ளாள்
சொல்லது இரண்டு முள்ளாள் சுகபுசிப் புடைய ளாகும்
புல்லிய புத்தி கொஞ்சம் புண்ணிய சாலி கேளாய்.

11. கல்வியறிவுடையவள். கபடமுள்ளவள். மந்திரங்கள் அறிந்தவள். நல்லவளைப் போல பேசுபவள். கால் நடைகள் விருத்தியுடையவள். இருவித மாகப் பேசுபவள். சௌ கியமாகச் சாப்பிடுவாள். சிறிது அற்ப புத்தி உள்ளவள். புண்ணியவதியே ! கேளுங்கள்.

12. பூமியைக் குறைவு செய்யாள் புகலுவாள் கட்டு வார்த்தை
தீமையைச் செய்யா ளாகும் சிறுத்தவர் தம்மைக் காப்பள்
தாமத முள்ளாள் நேயள் செல்வியைக் காப்பா ளாகும்
காமத்தில் விருப்ப முள்ளாள் பொரி........நேயனுக்கு.

12. பூமியைக் குறைக்காதவள். வார்த்தைகளைப் புனைந்து பேசுபவள். ஒருவருக்கும் தீங்கு செய்யாதவள். துன்பமடைந்தவர்களை ஆதரிப்பாள். தாமத குணமுடையவள். நண்பர்களின் குழந்தைகளை ஆதரிப்பாள். சிற்றின்பத்தில் விருப்பமுடையவள். பார்வதியே ! கேளுங்கள்.......... கணவனுக்கு.

13. ஜனித்தநாள் முதலா மாகச் செப்புவோம் ........ளும்
கனமுள தரித்ர முள்ளாள் காலிகள் சேத முள்ளாள்
வினையுண்டு அதற்கு மேலாய் விளம்புவோம் பிறைபோல் யோகம்
தனமது உடைய ளாகும் சங்கரி கேட்டி டாயே.

13. பிறந்தநாள் முதலாகக் கூறுகின்றோம் .......... தரித்திர முடையவள். கால் நடைகள் சேதமடையும். அதற்கு மேல் தீவினைகள் உண்டு. அதற்கு மேல் பிறைச் சந்திரனைப் போல் யோகம் வளரும். செல்வங்கள் உடையவள். பார்வதியே ! கேட்டிடுவாய்.

14. பாரியை யொன்றே யாகும் பாலர்க ளாண்பால் ரண்டு
தீரமாய்ப் பெண்பா லவ்வாறு செப்புவோ மதிக மாகக்
கூறிய மதலை தானும் மருவினசெய் தவத்தி னாலே
ஆறுமுகத் தருளால் தானே அவைகளும் தீர்க்க மென்றோம்.

14. மனைவி யொருத்தியே. இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் உடையவள். கூறிய குழந்தைகள், இவர்கள் செய்த தவத்தாலும் ஆறுமுகக் கடவுளின் அருளாலும் தீர்க்காயுள் உள்ளவர்கள் என்றோம்.

15. இவனுடை.... மென்றோம் இவனுமே வாழ்வா னாகும்
இவனது பெண்பால் சேதி அறைகிறோம் விவர மாகப்
பவமுள சிவந்த மேனி ........ மூத்தா ளுக்கும்
தவசிகளும் அருகாவள் தன்வரன் மனம்போல் வாழ்வள்.

15. இவனுடைய ............ இவன் நீண்ட ஆயு ளுள்ளவன். இவனுடைய பெண்ணின் செய்தியை விபரமாகக் கூறுகின்றோம். சிவந்த உடல் உடையவள். மூத்த மனைவிக்கும் தவசிகள் ............ தன் கணவன் மனம்போல் வாழ்ந்து வருவாள்.

16. வருமக ளில்லா ளாகும் மைத்துன னதிக முள்ளாள்
திருமக ளொப்ப தாகும் செல்வினன் நடக்கை யுள்ளாள்
பெருதன முடைய ளாகும் பிழைகளும் சொல்லக் கேண்மோ
உரைக்கிறோம் புத்ர பாவம் உத்தமி கேட்டி டாயே.

16. பெண்கள் இல்லாதவள். மைத்துனன்மார்கள் அதிக முடையவள். இலக்குமியை யொத்தவள். நன்னடத்தை யுடையவள். பெரிய தன முள்ளவள். இவளுக்குற்ற தீங்குகளைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். புத்திரபாவத்தைச் சொல்லுகின்றோம். உத்தமியே ! கேளுங்கள்.

17. ஆணது இரண்டே யாகும் அதுவன்றிப் பெண்பால் மூன்று
பூணுவோ மைந்து தீர்க்கம் புருடனும் கீழ்ப்பால் நிற்பன்
தோணவே ஜாத கர்க்குச் சொல்லுவோம் பலசு பங்கள்
வேணுகோ பாலன் தங்காய் தேவியே கேட்டி டாயே.

17. இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் ஆக ஐவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். கணவனும் கிழக்குத் திசையிலிருந்து வருவான். ஜாதகனுக்குப் பல சுபங்கள் நேரும். வேணு கோபாலன் தங்கையே ! கேளுங்கள்.

18. ஆண் மகன் தீரனவன் அவன்சம மாக வாழ்வன்
தேன்மொழி உரைகு வானும் சீலமு முடையா னாகும்
ஞாலமேல் நல்லோ னவன் நன்மனம் ஊக சாலி
பாலன் யாவர்க்கு நேயன் மறுமொழி அதிகம் கூறுன்.

18. இந்த ஆண்மகன் தைரிய முடையவன். அவன் சமமாகவே இருப்பான். இனிய வார்த்தைகளையே பேசுபவன். நல்லொழுக்க முள்ளவன். உலகில் நல்லவனு யிருப்பான். நல்லமன முள்ளவன். ஊகமுடையவன். எல்லோருக்கும் நல்லவன். எதிர்த்துப் பேசாதவன்.

19. மா நிலம் நாட்டு நாளாய் மன்னனும் விரக்தி செய்வன்
ஈனமாம் குணங்க ளில்லான் இவன்தெய்வ பக்தி பூண்பன்
தேநிலம் கிருஷி செய்வன் நிதானமாய்ச் சொல்லு முள்ளான்
தானமும் தரும மிச்சை சகடுவா கனமு முள்ளான்.

19. நிலத்தின்மீது விருப்பமில்லாதவன். அற்பகுணங்க ளில்லாதவன். தெய்வபக்தி யுடையவன். விளைநிலங்களில் விவசாயம் செய்து வருவான். மெதுவாகப் பேசுபவன். தான தருமம் செய்ய விருப்பமுள்ளவன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன்.

20. கடன்கொளான் இடுக்கம் வந்து காரியம் நின்று செய்வன்
உடன்படான் பிழைக ளுக்குக் கபடாகக் கூறு வானும்
திடமான குடும்பி யாவன் துணைவரை......பந்தறியன்
விடவுரைப் பகரா னுகும் வித்தகி மேலும் கேளாய்.

20. கடன் படாதவன். துன்பம் வந்தாலும் காரியங்களை முன் நின்று செய்து முடிப்பான். தீங்குகள் செய்ய உடன்படாதவன். கபடமாகப் பேசுவன். பெரிய குடும்பியாவான். உடன் பிறந்தவர்களிடம் . . . . . கடுமையாகப் பேசாதவன். தாயே! மேலுங் கேள்.

21. பூ........ பலம் பாழாம் புதுமனை வாய்க்கும் என்றேம்
கூறுவோம் பூமி யாலே பலபேரால் தனமும் நேரும்
வீரிய புயண்டர்ச் சொல்ல விதுரரும் கேட்க லுற்ரு
தீரமாய் எந்தி டத்தில் செம்பொன்னு ....க்கு மென்றீர்.

21. ............பாழாகும். புது வீடு கிடைக்கும் என்று சொன்னேம். பூமியில் புதையல் கிடைக்கும். பல பேரால் தனம் கிடைக்கும். இங்ஙனம் புயண்ட முனிவர் சொல்லும்போது விதுரர் கேட்கலானர். எந்த விடத்திலிருந்து பொன் கிடைக்கும் என்று கூறுகின்றீர்?

22. அதுதனை விவர மாக அறிவிப்பீர் முநியே நீர்தாம்
மதியுமே தசம தாக மைந்தனும் நவத்தி லாட்சி
சதியிலா லாபம் உச்சம் சத்தமத் தோனு மாட்சி
இதுவித கிரகம் நின்றல் இயம்பினேம் நிதிநி க்ஷேபம்.

22. அந்த விபரங்களை விரிவாகக் கூறுங்கள். முனிவரே! நீர்தாம். சந்திரன் பத்தாம் இடத்தில் இருப்பதாலும், சனி ஒன்பதாமிடத்தில் ஆட்சியாக இருப்பதாலும், சூரியன் லாப ஸ்தானத்தில் உச்சமாக இருப்பதாலும், ஏழாம் வீட்டுக்குரிய குரு ஆட்சியாக இருப்பதாலும், இவ்வித கிரகநிலை இருந்தால், இவனுக்குப் புதையல் கிடைக்கும் என்றோம்.

23. எந்விடம் எந்தக் காலம் இலகிடும் பொருளுந் தானும்
வந்தவ னில்லந் தன்னில் வரைகிறோம் இருபா னறில்
சொந்தமாய் நேரு மென்றோம் சொல்லது தவரு னுகும்
அந்திய காலந் தன்னில் அறைகிறோம் விவர மாக.

23. எந்த விடத்தில் எந்தக் காலத்தில் நிதி கிடைக்கும்? ஜாதகனுடைய இருபத்தாறும் வயதில் இவனுடைய வீட்டிலிருந்து புதையல் கிடைக்கும். வீடு சொந்தமாகக் கட்டுவான. நாங்கள் கூறுவது தவறுது. கடைசிக் காலத்தில் விபரமாகக் கூறுகின்றோம்.

24. உதித்தவன் மணத்தின் காலம் உரைக்கிறோம் ஒருபா னொன்பான்
சதியிலாக் கீழ்பக்ஷி தன்னில் சாற்றினேம் உள்ளு ராகும்
மதிநுதல் மனைவி சேரும் வரைகிறோம் இருசி கப்பாள்
சதியிலா மனத்த ளாகும் தன்மனம் கபடு மில்லாள்.

24. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய பத்தொன்பதாம் வயதில் கிழக்கிலுள்ள திருக்கழுக்குன்றத்தில் உள்ளூரிலிருந்தே மனைவி வருவாள். அவள் இரு சிவப்பான நிறமுடையவள். தீங்கு களில்லாத மனத்தினள். கபடமில்லாத மனத்தினள்.

25. அவசர மனத்த ளாகும் அவள்நடை துரசு முள்ளாள்
நவனியில் புத்தியீன மாய்ப்பேச................
................ அன்ன மீவள் இடரில்லா ளாகும்
தவசியே வரன் மனம்போலத் தானவள் வாழ்வா ளாகும்

25. அவசரமான மனமுடையவள். வேகமாக நடப்பவள். அற்பபுத்திகள் உள்ளவள் . . . . . . . . . அன்னமளிப்பவள். துன்பங்களில்லாதவள். தவம் செய்பவளே! தன் கணவன் மனம்போல் வாழ்ந்து வருவாள்.

26. ஜாதகன் தனக்குப் புத்திரர் சாற்றுவோ மாண்பால் ரண்டு
மேதினில் கன்னி ஒன்று விளங்கிடும் தீர்க்க மாகத்
தீதாகு மிரண்டு வென்றோம் செப்புவோ மிவனுக் கேதான்
போதக வரனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

26. ஜாதகனுக்குப் புத்திரர்கள் இருவரும் புத்திரி ஒருத்தியும் பிறந்து தீர்க்காயுள் உள்ளவர்கள் என்றோம். இரு குழந்தைகள் பிறந்து நிலையா என்று கூறுகின்றோம். உயர்ந்த கணவனைப் பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

27. அன்னையும் சிவந்த மேனி அழகுளாள் பொறுமை சாலி
கன்மொன மொழியே சொல்வள் காரிகை அதிருட்ட சாலி
இன்னவ ளுயரமில்லாள் இடான புத்தி இல்லாள்
பின்னமில் லாத தேகி பன்னிய மனத்த ளாகும்.

27. ஜாதகனுடைய தாய் சிவந்த நிறமுடையவள். அழகுள்ளவள். பொறுமைசாலி. இனிய வார்த்தைகளையே பேசுபவள். அதிருஷ்டமுடையவள். அதிக உயரமில்லாதவள். தீய புத்தியில்லாதவள். ஊனமில்லாத சரீர முடையவள். பன்னிபன்னி பேசும் மனத்தினள்.

28. துணைவர்க ளாண்பால் ரண்டு சொல்கன்னி ஒன்றே யாகும்
கனமுடன் மூன்றும் தீர்க்கம் கௌசிகர் கூறு கின்றார்
வினையாக ஆறோ னெட்டில் மேவியே இருந்த தானும்
சினமிலாத் துணைவி வேறாய்ச் செப்புவோ மிவளுக் கேதான்.

28. ஜாதகனுடைய தாய்க்கு உடன்பிறந்தவர்களில் சகோதரர் இருவரும் சகோதரி ஒருத்தியும் ஆக மூவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். கௌசிக முனிவர் சொல்லுகின்றார். தீதாக ஆறும் வீட்டுக்குரிய செவ்வாய் எட்டாமிடத்தில் இருப்பதால் சகோதரிகள் வேறாகிவிடுவர் என்று சொல்லுகின்றோம்.

29. மற்றொரு மாதாவுக்கு வரைகின்றோ மந்தப் பெண்பால்
சித்தமா யாறோ னெட்டில் சேர்ந்துமே யிருப் பதாலே
பத்துமா துலருக் கேதான் பாரியும் மூன்ற தாகும்
சித்தாய்ப் பராசர் சொல்ல ஜயமுநி கூறு கின்றார்.

29. மற்றொரு தாய்க்கு அந்தப்பெண் தோன்றுவாள். ஆறும்வீட்டுக்குரிய செவ்வாய் எட்டாம் வீட்டில் இருப்பதால் ஏற்பட்ட ஜாதகனுடைய மாமனுக்கு மூன்று மனைவியராவர். திண்ணமாகப் பராசர முனிவர் கூற, ஜயமுனிவர் சொல்லுகின்றார்.

30. இருவரில் எவருக் கேதான் இயம்பினீர் அந்தச் சங்கை
சிறியவன் தனக்கு மேதான் செப்புவோம் மனைவி மூன்று
பெரியவன் தனக்குத் தாரம் பேசுவோ மொன்றே யாகும்
இருவரும் வறுமை இல்லார் இவரொன்றாய் வாழ்வா ராமே.

30. இவர்களில் யாருக்கு அந்தக் குற்றம் கூறினீர்கள் ? சிறியமாமனுக்கு மூன்று மனைவியர் தோன்றுவர். பெரியவனுக்குத் தாரம் ஒருத்தியே என்று சொல்லுகின்றோம். இருவரும் வறுமையில்லாதவர்கள். இவர்கள் ஒன்றாக வாழ்ந்து வருவார்கள்.

31. இன்னமும் சிலது நாளில் இவர்களும் வேறாய்ச் செல்வர்
அன்னவள் விவரம் கேளாய் அறைகிறோம் விவரம் ரண்டில்
பின்னிய மாதுர் பூர்வம் வரைகிறோம் காஞ்சி தன்னில்
இன்னவள் சௌராஷ்ட்ர வம்சம் எய்தின ளிவளே என்றோம்.

31. இன்னும் சில காலத்தில் வேருகச் சென்று விடுவாள். அவளுடைய விபரத்தைக் கேளுங்கள். இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகியினுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிர மரபினளாகப் பிறந்தவள் இவள் என்றோம்.

32. பாக்கிய முடையா ளாகிப் பாலர்க ளுள்ளா ளாகி
வாக்குச்சொல் மேன்மை யாக வாழ்ந்துமே வறுமை யின்றித்
தீக்குண மில்லா ளாகி ஜகத்துக்கு நல்லோ ளாகி
ஆக்கிய காலன் பக்கல் அவளுமே சென்றா ளென்றோம்.

32. பாக்கியமுள்ள குடும்பத்தவளாகி, புத்திரர்களைப் பெற்று, தன் வார்த்தைகளுக்கு மதிப்பு உள்ளவளாகி வாழ்ந்து வந்து, வறுமை யடையாமல், தீய குணங்களில்லாமல், உலகத்துக்கு நல்லவளாகி மரண மடைந்தாள் என்றோம்.

33. மறையவன் வறையப் பட்டு மங்கையு மிக்கு லத்தில்
திருமகள் விலாசம் கொண்டு செல்வியும் வாழ்வா ளாகும்
உறையில்லம் வறுமை இல்லாள் உதித்தஇல் வறுமை யின்றாம்
அறுமுகன் றன்னைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

33. மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு ஜாதகனுடைய தாய் இக் குலத்தில் பிறந்து, லட்சுமீ விலாசம் பெற்று, செல்வியாக வாழ்ந்து வருவாள். அடைந்த வீட்டில் தரித்திரமடையாதவள். பிறந்த வீட்டிலும் தரித்திரம் அடையாது. ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே ! கேளுங்கள்.

34. ஜாதகன் பூர்வம் தன்னைச் சாற்றுவோ மாழி தன்னில்
போதவே தீயின் வம்சம் பிறந்துமே பூமி உண்டாய்த்
தீதான செய்கை யின்றி ஜனித்திடு மதலை உண்டாய்ப்
பாதக மில்லா தாகிப் பலஊரில் தீர்த்தம் தோய்ந்து ;

34. ஜாதகனுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றோம். திருவாழியில், வன்னிய குலத்தவனுகத் தோன்றி, பூமிகளையடைந்து, தீய செய்கைகள் இல்லாமல், புத்திரர் களைப்பெற்று, தீய மனமில்லாதவனுகி பல ஊர் களிலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடி ;

35. சட்டநா தருக்கே வின்னேன் சந்திக்க மத்தி லேதான்
மட்டிலாத் தீபம் வைத்தும் மலர்வனம் சோலை செய்தும்
கட்டவா ளதிகம் நேர்ந்து காலன்தன் பதிக்குச் சென்று
மட்டிலா பிரம ஞலே மன்னவன் வரையப் பட்டு ;

35. இந்த ஜாதகன், சட்டநாதேரவச்சருக்கு இடைக்காலத்தில் குறை வில்லாத தீபம் வைத்து, புஷ்பச் சோலை ஏற்படுத்தி, மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு ;

36. பிறந்தவ னிவளே யென்றோம் பேதையும் கேட்க லுற்றாள்
சிறந்திடு முன்ஜன் மத்தில் தீயின்தன் வம்சம் தன்னில்
உரைந்தன னென்று சொன்னீர் உத்தம னிச்சென் மத்தில்
பெருங்கங்கை குலத்தி லேதான் பிறந்தகா ரணங்க ளென்ன.

36. பிறந்தவன் இந்த ஜாதகன் என்றோம். பார்வதியும் கேட்கலானாள். சிறந்த முற்பிறவியில் வன்னிய குலத்தில் பிறந்தவன் என்று சொன்னீர்களே! இவன் இப் பிறவியில் வேளாள குலத்தில் பிறக்கும் காரணங்களென்னவென்று சொல்லுங்கள்.

37. பலவாறு தீர்த்தம் தோய்ந்தும் பரமர்க்குத் தீபம் வைத்தும்
மலருக்குச் சோலைகள் செய்தும் வந்தவருக் கன்ன மீந்தும்
குலவியே வந்த தாலே குறித்தனம் கங்கை வம்சம்
மலரயன் மகளே யாங்கள் வரைகிறோம் தந்தை பூர்வம்.

37. பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடியதாலும், சிவபெருமானுக்குத் தீபம் ஏற்றி வைத்த புண்ணியத்தாலும், புஷ்பங்களுக்காகத் தோட்டம் முதலியன ஏற்படுத்தியதாலும், தன்னையண்டி வந்தவர்கட்கு அன்ன மளித்து வந்ததாலும் வேளாள குலத்தில் பிறந்தான். மலையரசனின் புத்திரியே! ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம்.

38. இவன்பிதா பூர்வம் தன்னை இயம்புவோ மவ்வூர் மேற்கில்
அவனியில் காஞ்சி கீழ்ப்பால் அருகினில பேரூர் தன்னில்
நவனியில் செங்குந்த வம்சம் நாயக னுதிப்பா னுகும்
பவமுள நெசவு செய்து பலருக்கு முதவி செய்து;

38. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அவ்வூருக்கு மேற்கில் காஞ்சிபுரத்துக்குக் கிழக்கில் உள்ள பெரிய ஓர் ஊரில், செங்குந்த மரபினனாகப் பிறந்து, நெசவுத் தொழில் செய்துவந்து, பல பேருக்கு உபகாரம் செய்து;

39. அறுமுக னன்பு பூண்டு அவனுமே வாழு நாளில்
வரும்வினை தன்னைச் சொல்வேன் வறுமையா யொருவன் வந்து
குறைவிலா மனத்த னாகிக் குணமுடன் பொருளும் பெற்று
உறைந்தன னிவன்பால் என்றோம் உரிதொழில் யாவும் செய்து;

39. ஆறுமுகக் கடவுளிடம் பக்தி கொண்டு வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தரித்திரமடைந்த ஓர் ஏழை, துன்பமடைந்த மனத்தினனாகி இவனிடமிருந்து பொருளைப் பெற்றுக் கொண்டு சென்றான். நெசவுத் தொழில் செய்து;

40. சிலதுநா ளங்கி ருந்து சொல்லாமல் செல்ல லுற்றான்
நலமுடன் அவனைத் தேடி நாடியே சென்று பின்பு
தலைவனு மிருக்கக் கண்டு தானதி காரி பக்கல்
பலவந்தம் செய்யும் போது பகருவான் ஏழை தானும்.

40. சில நாட்கள் அங்கிருந்துவிட்டுச் சொல்லாமல் போய்விட்டான். இவன் அவனைத் தேடி சென்று பார்த்து, அவனைக் கண்டதும் நியாயாதிபதியிடம் பலவந்தமாக முறையிட்டபோது ஏழை கூறுகின்றான்.

41. மறுஜன்மம் தனியாய்த் தோன்றி மத்திம வயதி லேதான்
குறையான மனத்த னாகிப் பவ்வமா யுலகில் வாழ்வாய்
உறைந்தது அஞ்ச் சாபம் உத்தம னந்தி யத்தில்
வருமனை யாள் தன் னோடு வரும்தில்லை தனக்கு ஏகி ;

41. மறு பிறவியில் தனியனாகத் தோன்றி, இடைக்காலத்திலேயே குறை யுள்ள மனத்தனாகி, உலகில் வாழ்ந்து வருவாய் (என்றான்). அந்தச் சாபம் ஏற்பட்டது. ஜாதகனும் தன் கடைசிக்காலத்தில் தன் மனைவியுடன் சிதம்பரத்துக்குச்சென்று ;

42. இன்னமும் சிலவே தீர்த்தம் எய்திப்பின் உள்ளூர் சென்று
அந்தகன் பக்கல் தானும் அநாயாச மரண மெய்திப்
பிந்தியும் வேத னாலே வந்தவன் இவனே என்றோம்
..........................மங்கையும் கேட்க லுற்றாள்.

42. இன்னும் பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, பிறகு உள்ளூருக்குத் திரும்பி, அனாயாச மரணமடைந்து, பிறகு பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன், இந்த ஜாதகன் என்றோம். ....................பார்வதி கேட்கலானாள்.

43. செங்குந்த வம்சம் தன்னில் ஜனித்தவ னிச்சென் மத்தில்
பொங்கமாய்க் கங்கை வம்சம் புக்கா ரணங்க ளென்ன
மங்கையும் தானு மாக வளமுள தீர்த்தம் தோய்ந்தும்
இங்கிவன் தில்லைக் கேகி ஈசனைத் துதித்த தாலும் ;

43. செங்குந்த மரபில் பிறந்தவன், இப் பிறவியில் வேளாள குலத்தில் பிறக்கும் காரணங்கள் என்ன ? மனைவியும் தானும் சேர்ந்து பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடி வந்ததாலும், சிதம்பரத்துக்குச் சென்று நடனமாடும் ஈசனைத் துதி செய்து வந்ததாலும் ;

44. பிறந்தவ னிவனே என்றோம் பேசுவோ மிச்சென் மத்தில்
உறைகுவான் தனிய னாக உரைக்கிறோம் இவன்பின் ஜன்மம்
பெரியகா ளத்தி தன்னில் மறைக்குல முதித்து இன்னோன்
குறைவிலா வாழ் வானும் குலமன்னர் பக்கம் சார்வான்.

44. உயர்ந்த குலத்தில் பிறந்தான் என்றோம். ஜாதகனும் இப் பிறவியில் தனியனாகப் பிறப்பான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லு கின்றோம். பெரிய புண்ணியத்தலமாகிய காளத்தியில், நல்லொழுக்க முள்ள அந்தணகுலத்தில் பிறந்து, குறைவில்லாத வாழ்க்கை நடத்துவான். குலத்துமன்னர் பக்கம் சேர்வான்.

45. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் முப்பா னாறில்
முந்திய மேட மாதம் மொழிகிறோம் கருமம் தானே
பிந்தியும் அன்னைக் கேதான் பேசுவோம் நாற்பா னேழில்
சந்ததம் தனுசு மாதம் சாற்றினோம் கண்டம் தானே.

45. ஜாதகனுடைய தந்தையின் மரண காலத்தைச் சொல்லுகின்றோம். முப்பத்தாறும் வயதில் சித்திரை மாதத்தில் மரணமடைவான். நாற்பத்தேழாம் வயதில் தாய் மரணமடைவாள். அது மார்கழி மாதத்தில் ஏற்படும் என்று சொல்லுகின்றோம்.

46. ஜாதகன் மரண காலம் தானறு பத்தைந் தாண்டில்
சூதிலா துலாமா தத்தில் துவாதசி குறைபக் கத்தில்
மேதினில் உடலம் வாடும் விளம்புவோ மிவன்பின் ஜன்மம்
கோதிலாத் துவாரை தன்னில் உதிப்பனும் வைச்யச் சேயாய்.

46. ஜாதகன், தனது அறுபத்தைந்தாம் வயதில் ஐப்பசி மாதம் கிருஷ்ணபட்சம் துவாதசி திதியில் மரணமடைவான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். துவாரகையில் வைச்ய குலத்தவனுகப் பிறப்பான்.

47. இன்னவன் பொதுயோ கத்தை யியம்புவோம் ஜனனம் தொட்டுத்
தன்னிலே யீரே ழாண்டும் சாற்றுவோம் பிரபல யோகம்
பின்னேயு மதற்கு மேலே பேசுவோ மிரு பானேந்தும்
பின்னங்க ளநேக முண்டு பூமியில் கடன்க ளுண்டு.

47. ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். பிறப்பு முதல் பதினன்கு வருடங்கள் வரையில் பிரபலமான யோகம் ஏற்படும். அதற்குமேல் இருபத்தைந்து வயது வரையில் அநேக துன்பங்கள் உண்டாகும். அநேக கடன்கள் ஏற்படும்.

48. எவ்விதக் கடன்கள் சேரும் இயம்புவீர் முனியே நீர்தாம்
ஒவ்விய பூமி யாலும் உறையில்லம் சுபத்தி னுலும்
பவ்வமாய்க் கடன்கள் நேரும் பாரினில் நிவிர்த்தி யாகும்
நவ்விய நவக்கோ ளாய்ந்து நவின்றவை தப்பா வம்மா.

48. எவ்விதமான கடன்கள் ஏற்படும் என்று கூறுங்கள், முனிவரே! நீர் தாம். பூமியினுலும் இருக்கும் வீட்டினுலும் சுபக்காரியங்களாலும் பல விதமான கடன்கள் ஏற்படும். பிறகு (அது தன் மனேவியினல்) நீங்கும். நவக்கிரகங்களின் நிலேயை ஆராய்ந்து கூறியவை தவரு.

49. இருபத்தா றுண்டு மேலாய் இளம்பிறை போல யோகம்
திருமகள் வாச முண்டு சல்லிய நிவிர்த்தி யாகும்
கிருஷியு மேன்மே லோங்கும் சிறந்திடும் பூமி தானும்
பெருவயி றேனப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

49. ஜாதகனுடைய இருபத்தாறும் வயதுக்கு மேல், வளர்பிறைச் சந்திரன்போல் யோகம் வளரும். இலக்குமி விலாசம் உள்ளவன். கடன் உபத்திரவம் நீங்கும். விவசாயமும் மேன் மேலும் விருத்தியாகும். பூமி பெருகும். விநயகனேப்பெற்ற புண்ணியவதியே! கேளுங்கள்.

50. ஜனித்திடு காலந் தன்னில் சனிதசை யிருப்புத் தானும்
குனித்திடு ஆறு ஆண்டு கூறுவோம் திங்க ளெட்டும்
தினமது இருபா னைந்தும் செப்புவோம் பலனை யாங்கள்
தனம்பூமி சேரு மென்றேம் சகோதர விருத்தி யாகும்.

50. ஜாதகன் பிறக்கும் காலத்தில் சனிமகாதசையில் இருப்பு ஆறு வருடங்களும் எட்டு மாதங்களும் இருபத்தைந்து நாட்களுமாம். அக் காலத்திய பலனைச் சொல்லுகின்றேம். செல்வம் பூமி சேரும். சகோதர விருத்தி ஏற்படும்.

## ஜாதகம் 107

1. பொன்சிகி அரியில் தங்கப் புதன்புக ரிரவி பெண்ணில்
மந்தனு முச்ச மாக மங்கலன் விடையி லேற
இந்துவு மான தாக இராகுவும் சாடி யாகச்
சந்ததம் வீணை ஜன்மம் சாற்றுவீர் பலனைத் தானே.

1. குரு கேது சிம்மத்திலும், புதன் சுக்கிரன் சூரியன் கன்னியிலும், சனி உச்சஸ்தான மாகிய துலாத்திலும், செவ்வாய் விருச்சிகத்திலும், சந்திரன் மகரத்திலும், இராகு கும்பத்திலும், மிதுனம் இலக்கினமுமாகவும் இருந்தால், பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | | செவ்வாய் | லக்கினம் |
| ராகு | இராசி சக்கரம் | | |
| சந்திரன் | | | குரு கேது |
| | | சனி | புதன் சுக்கிரன் சூரியன் |

2. குறுமுனி சொல்லு கின்றுர் கோதையே ஆண்பால் ஜன்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலு மிந்த்ர நோக்கம்
பெருவயி றப்பன் காளி பேசுவோம் தென்கீழ் தன்னில்
திருமாலு மாரி கீழ்ப்பால் சிவன்கோட்ட மருகில் தங்கும்.

2. அகத்திய முனிவர் சொல்லுகின்றுர். தாயே இஃது ஆண் மகனின் ஜாதகம். பிறந்த வீடு தெற்கு வடக்கான வீதியில் கிழக்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. தென் கிழக்கில் விநாயகர் ஆலயமும், காளிதேவியின் கோயிலும், கிழக்கில் திருமாலின் ஆலயமும் உள்ளன. சிவபெருமான் ஆலயம் அருகில் இருக்கும்.

3. பரமனைப் பூசை செய்யும் பச்சையும் தெற்கில் நிற்பள்
குறைதலே மாரி தங்கும் குணமிலா ஈச னுண்டு
வரநதி சூழி யுண்டு வளமுள சோலை காணும்
நிறையவே கங்கை சேயாய் நேமியில் ஜனிப்பா னுமே.

3. சிவபெருமானைப் பூசைப் புரியும் அம்மன் கோயில் தெற்கில் இருக்கும். மாரியம்மன் கோயிலும் பாழடைந்த ஈசன் கோவிலும் இருக்கும். ஒரு புண்ணிய நதியும் சூழ்ந்திருக்கும். செழிப்புள்ள சோலையொன்றுண்டு. இவ்விதமுள்ள இடத்தில் வேளாள குலத்தவனுகப் பிறப்பான் என்று சொல்லுவோம்.

4. ஜனித்திடு மில்லம் தன்னில் செப்புவோம் பாகம் ரண்டு
குனித்திடு தந்தை யில்லம் குலாவுவா னிவனே யென்றோம்
வனிதையா மாதுர் தந்தை வரும்துணை மனைவி யோகம்
கனிவுள முன்பின் ஜன்மம் கழறுவோ மிந்நூல் தன்னில்.

4. ஜாதகன் பிறந்த வீட்டில் இரு பாகம் உண்டு. ஜாதகன் தன் தந்தையின் வீட்டில் வாழ்ந்து வருவான். தாய் தந்தையர் உடன்பிறந்தவர்கள் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றையும் இந்த நூலில் சொல்லுகின்றோம்.

5. இவன்பிதா துணைவர் தம்மை இயம்புவோ மீரு ருகும்
அவனியில் ஆண்பால ரண்டு அறைகிறோம் தீர்க்க மாக
நவனியில் பெண்பா லவ்வாறு நாட்டுவோம் மற்ற வெல்லாம்
எமபதம் சேரு மென்றோம் ஈசுவரி மேலும் கேளே.

5. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர்களைக் கூறுகின்றோம். அவர் பன்னிருவர் ஆகும். அவர்களில் இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்றும், மற்றவர்களெல்லாம் மரண மடைந்து விடுவார்கள் என்று சொல்லுவோம். பார்வதியே! கேளுங்கள்.

6. துணைவர்கள் ஆண்பால் ரண்டும் செப்பினோம் மூத்தோ னுகக்
கனமுட னவர்கள் சேதி கழறுவோ மிருநி றத்தான்
மனைவிக ளிரண்டே யாகும் மன்னுமூத் தவட்கு விருத்தி
பிணையாகும் மறும னைக்கு நேர்ந்திடும் சுதர்கள் தாமே.

6. உடன் பிறந்தவர்கள் இருவரும் மூத்த சகோதரர்கள் ஆவார்கள். அவர்களுடைய செய்தியைக் கூறுகின்றோம். இரு நிறமுள்ளவன். இரு மனைவிமார்கள் உடையவன். மூத்த மனைவிக்குப் புத்திர விருத்தி யில்லை. இரண்டாம் மனைவிக்குப் புத்திர பாக்கியம் உண்டு.

7. பெண்ணது மிரண்டே யாகும் பேசுவோ மாண்பா லொன்று
திண்ணமாய்த் தீர்க்க மாகும் செய்நிலம் கிருஷி செய்வர்
வண்ணமாய் வேறே செல்வம் வருத்தமில் லாமல் வாழ்வர்
அண்ணலைப் பூசை செய்வார் அம்பிகை யாளே கேளாய்.

7. இரு பெண்கள் தோன்றுவார்கள். ஒரு புத்திரனே பிறந்து தீர்க்கமா யிருப்பான். விளைநிலங்களில் விவசாயம் செய்து வருவான். திண்ணமாக வேறுகச் சென்று விடுவர். வருத்த மில்லாமல் வாழ்ந்து வருவர். சிவபெருமானைப் பூசை செய்து வருவார். தாயே! கேளுங்கள்.

8. இன்னமும் விபரம் ரண்டில் இயம்புவோ மவர்கள் சேதி
தந்தையின் சேதி கேளாய்த் தான்கறு நிறத்த னுகும்
பன்னியே பேச வல்லன் பகருவான் கல்வி ரண்டு
உன்னத முகத்தில் மாரி உறைந்திடும் வடுக்கள் தாமே.

8. இன்னும் அவர்களைப்பற்றிய மற்ற விபரத்தை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகனுடைய தந்தையின் செய்தியைக் கேளுங்கள். கருநிற முடையவன். பன்னிப் பன்னிப் பேசுபவன். இருவிதக் கல்வி கற்பான். முகத்தில் அம்மை வடுக்கள் உள்ளன.

9. மனமதில் கவடு கொஞ்சம் மருமமு முடைய னுவன்
தனமதி லிச்சை யுள்ளான் தைரிய மில்லா னுகும்
இனமதற் கினிய னுகும் இவன்தேகம் பித்தச் சூடு
சினமது சீக்ர முண்டு தேவிமேல் பிரிய மில்லான்.

9. மனத்தில் சிறிது கபட முடையவன். இரகசிய முள்ளவன். பொருள் மீது பிரியம் உடையவன். தைரிய மில்லாதவன். தன் பந்து ஜனங்களுக்குப் பிரியனுவன். பித்தச்சூட்டுச் சரீரமுடையவன். சீக்கிரத்தில் கோபங்கொள்வான். மனைவியின்மீது பிரிய மில்லாதவன்.

10. அவசர மனத்த னுகும் அரசர்பால் சீவிப் பானும்
நவனியில் கிருஷி செய்வன் நாயக னுெடிச்சல் தேகி
தவமுடை யோரைச் சாரான் சந்தேக மனத்த னுகும்
இவன்நடை துருசு முள்ளான் எப்போதும் சஞ்ச லத்தன்.

10. அவசரமுள்ள மனத்தினன். அரசாங்க உத்தியோகம் பெற்று ஜீவித்து வருவான். உலகில் விவசாயம் செய்து வருவான். மெல்லிய தேக முள்ளவன். தவஞ்செய்பவருடன் சேராதவன். சந்தேக முள்ள மனத்தினன். வேகமாக நடப்பவன். எப்போதும் நிலையில்லாத மனத்தன்.

11. பெண்துணை யாலே நிந்தை பேசுவோ மிவனுக் கேதான்
பண்டுநாள் பூமி கொஞ்சம் யணுகிடும் பின்னு லேதான்
துண்டமாய் வார்த்தை சொல்வன் துணைவருக் கிட்ட மாவன்
உண்டியுஞ் சுகமாய்க் கொள்வன் உத்தமி மேலுங் கேளே.

11. சகோதரியால் அவமானம் அடைவான். பிற்காலத்தில் இவனுக்குப் பழைய காலத்திய பூமி கொஞ்சம் கிடைக்கும். கண்டிப்பாய்ப் பேசுபவன். தன் சகோதரர்மீது பிரிய முள்ளவன். சுகமாக உணவு அருந்துவான். தாயே! மேலும் கேள்.

12. இக்குண முடையா னுக்கு இவனுமே சேட்ட னுக
மிக்கவே உதிப்பா னுகும் விளம்புவோ மிவன்கு ணத்தைச்
சிக்கன முடையா னுகும் தீரமா நெஞ்ச முள்ளான்
தக்கவர் நேசம் கொள்வன் சங்கரி மேலும் கேளே.

12. இங்ஙனம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு இந்த ஜாதகன் மூத்த புதல்வனுகப் பிறப்பான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். சிக்கனமுடையவன். தைரிய முள்ள மனத்தினன். தக்கவர்களுடனே நட்புக் கொள்வான். பார்வதியே! கேளுங்கள்.

13. வித்தையு மிரண்டு முள்ளான் விசித்திர வேலை செய்வன்
பத்தினி மார்கள் நேயன் பாரினில் உளைச்சல் தேகி
அத்திபோல் நிறத்த னாகும் அகசியம் செய்வா னென்றோம்
சுற்றத்தார் மெச்ச வாழ்வன் சொல்லது இரண்டு முள்ளான்.

13. இருவிதமான கல்விகளைக் கற்பான். விசித்திரமான வேலைகளைச் செய்வான். மனைவியருக்குப் பிரியமானவன். மெல்லிய தேகமுடையவன். கரிய நிறமுள்ளவன். விநோதங்கள் செய்வான் என்றோம். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். இருவிதமாகப் பேசுப வன்.

14. அரசர்பா லணுகியே தான் அவனுமே சீவிப் பானும்
பெருமையாய்ப் புகழு முள்ளான் புரவலர் தமக்கு நேயன்
வறுமைக ளில்லா னாகும் வஞ்சியர் மோக வானும்
திருகுக ளனந்தம் செய்வன் தீர்த்தயாத் திரையும் செய்வன்.

14. அவன் அரசாங்க உத்தியோகம் ஏற்று ஜீவனம் நடத்துவான். பெருமையுடனும் கீர்த்தியுடனும் வாழ்வான். அரசருக்குப் பிரியமான வன். தரித்திரம் இல்லாதவன். பெண்கள்மீது மோகமுள்ளவன். எண்ணற்ற சூதுகள் செய்வான். தீர்த்தயாத்திரை செல்வான்.

15. சல்லிய மில்லா னாகும் சகலபாக் கியமும் சேர்ப்பன்
நல்லதோர் கல்வி யாலே நாட்டினில் கீர்த்தி யேற்பன்
சொல்லது தவறா னாகும் சோம்பிடான் காரி யத்தில்
புல்லிய புத்தி யுள்ளான் புண்ணிய வதியே கேளாய்.

15. கடன் உபத்திரவம் இல்லாதவன். சகலவிதமான பாக்கியங்களைச் சேர்ப்பான். நல்ல கல்வியறிவால் நாட்டில் கீர்த்தி யடைவான். சொல் தவறாதவன். காரியங்களைச் செய்யச் சோம்பல் படாதவன். அற்ப புத்திகளில்லாதவன். புண்ணியவதியே! கேளுங்கள்.

16. இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோ மாண்பா லொன்று
நவனியில் பெண்பா லவ்வாறு நாட்டுவோம் தீர்க்க மாகப்
பவமுள இரண்டு நஷ்டம் பகருவோ மிவனுக் கேதான்
அவனியி லிளையோன் சேதி அறைகிறோம் கேளும் தாயே.

16. ஜாதகனுடைய சகோதரர்களைக் கூறுகின்றோம். சகோதரன் ஒருவனும் சகோதரி யொருத்தியும் பிறந்து நீண்ட ஆயுளுடனிருப்பர். இரு குழந்தைகள் தவறிவிடும. உலகில் இளைய சகோதரனின் செய்தியைக் கூறுகின்றோம். தாயே! கேளும்.

17. பொய்யுரை வழுத்து நெஞ்சம் பொய்சொல்வான் புத்தி மானும்
செய்திடும் தொழிலில் வல்லன் சிங்கார வசனம் கூறுவன்
ஐயமும் செய்வா னாகும் அவனுமே சிலேடை வார்த்தை
தையலர் நேசம் கொள்வன் சங்கீத இட்ட னாமே.

**17.** பொய் வார்த்தைகளைப் பேசுபவன். கல்வி அறிவுள்ளவன். செய்யும் தொழிலில் வல்லவன். அழகாகப் பேசுபவன். தருமம் செய்பவன். இரு பொருள்படும்படி பேசுபவன். பெண்கள்மீது மோகம் கொள்வான். சங்கீதத்தில் பிரியமுடையவன்.

**18.** இங்கிவன் பிதுரு பட்ச மெய்துவான் கிருஷி தானும்
பங்கய ரேகை யுள்ளன் பதார்த்தங்க ளதிகம் கொள்வன்
சங்கையென் றடையா ளுகும் சத்தான வேலை செய்வன்
பொங்கிய குடும்பி யாவன் புகலுவோம் கல்வி மானும்.

**18.** இவன் தன் தந்தையின் பக்கமாக இருந்து விவசாயம் செய்வான். பத்மரேகையுள்ளவன். பதார்த்தங்களை அதிகம் வாங்குபவன். சந்தேகப் படக்கூடியவர்களிடம் சேராதவன். பயனுள்ள வேலைகளையே செய்வன். அற்பமான குடும்பமுடையவன். கல்வியறிவுள்ளவன் என்று கூறுவோம்.

**19.** ஜன்மநாள் சதய மாகும் சிம்மராசி தன்னில் தோன்றும்
அன்புடன் மனையி ரண்டு அறைகிறேம் புத்ர பாவம்
இன்பமாய் ஆண்பால் மூன்று எய்திடும் பெண்பால் ரண்டு
துன்பமில் லாம லொன்ருய்ச் சுகமுடன் வாழ்வா னுமே.

**19.** சதய நட்சத்திரத்தில் சிம்ம லக்கினத்தில் பிறப்பான். இரு மனைவியரை அடைவான். புத்திர பாவத்தைக் கூறுகின்றேம். மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் தோன்றி, துன்பமடையாமல், ஒன்ருக வாழ்ந்து வருவார்கள்.

**20.** ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மிருபா னென்றில்
மேதினில் தட்சி ணத்தில் வித்தகி மாதுரு வர்க்கம்
காதலி வருகுவா ளாகுங் கழறுவோ மவள்கு ணத்தைச்
சூதுக ளில்லா ளாகுஞ் சுந்தரி யோக சாலி.

**20.** ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றேம். இருபத்தோராம் வயதில் தெற்குத் திக்கிலிருந்து தன் தாயின் வர்க்கத்திலிருந்து மனைவி வாய்ப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றேம். கபடமில்லாதவள். அதிருஷ்டமுள்ளவள்.

**21.** மாநிறஞ் சமதே கத்தாள் மங்கையு மூர்க்கங் கொஞ்சம்
தேன்மொழி கூறு வாளாந் திருகது சொல்லா ளாகும்
ஆனவா சார முள்ளாள் அரனடி யார்க்கு நேயள்
ஊனமில் லாதா ளாகும் உத்தமி கேட்டி டாயே.

**21.** மாநிற முடையவள். சமமான உடலமைப்புள்ளவள். சிறிது மூர்க்க குணமுடையவள். இனிய வார்த்தைகளையே பேசுபவள். சூதுகள் செய்யாதவள். ஆசாரம் உள்ளவள். சிவனடியாரிடம் பக்தியுள்ளவள், ஊனமில்லாத சரீரமுடையவள். உத்தமியே! கேளுங்கள்.

22. இதுவன்றி வேறு மாது மேவிடு மிவனுக் கேதான்
அஃதெவ்வாறு சொல்லு மென்ன அந்தண னுடனே கேது
கதியுட னிருப்ப தாலும் தனத்துளோ னெட்டில் நிற்க
அதிபருக் கபிமா னத்தாள் வந்திடு மென்று சொன்னோம்.

22. இதுவுமல்லாமல், ஜாதகனுக்கு வேறு பெண் ஒருத்தி நேருவாள். அஃது எப்படி யென்று சொல்லுங்கள்? குருவுடன்கூட கேது இருப்பதாலும், இரண்டாம் வீட்டுக்குரிய சந்திரன் எட்டில் இருப்பதாலும், ஜாதகனுக்கு அபிமான மனைவியொருத்தி வருவாள் என்று சொல்லுகின்றோம்.

23. எந்தக் காலத்தி லேதான் எய்திடு மந்த மாது
வந்தவ னிருபா றுறில் வடுகப்பெண் தெற்குத் திக்கில்
தொந்தமாய் நேரு மென்றோம் சொர்ணபூ ஷணமு முள்ளாள்
வந்திடுமென்று சொன்னோம் மங்கையே கேட்டி டாயே.

23. எந்தக்காலத்தில் அபிமான மனைவி வருவாள் ? ஜாதகனுடைய இருபத்தாறும் வயதில் தெற்குத் திக்கிலிருந்து வடுகப் பெண் ஒருத்தி வாய்ப்பாள். அவள் தங்க ஆபரணங்கள் உள்ளவளாக வருவாள் என்றோம். தாயே ! கேளுங்கள்.

24. மதலைகள் விருத்தி தன்னை வரையவே பலத்தைக் காணோம்
நதிசடை முனிவர் சொல்ல நாயகி கேட்க லுற்றாள்
சுதர்களின் தோஷம் தன்னைச் சொல்லுவாய் விவர மாக
அதிபதி நவக்கோ ளாய்ந்து அறைகிறோம் கேளும் தாயே.

24. புத்திர விருத்தியைக் கூற பலமில்லை. அகத்திய முனிவர் கூறும் போது, பார்வதி கேட்கலானாள். புத்திர தோஷத்தை விபரமாகக் கூறுங் கள். ஜாதகனுடைய நவக்கிரக நிலையை ஆராய்ந்து சொல்லுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

25. அஞ்சினில் காரி யாக அஞ்சவன் நீச்ச மாக
மிஞ்சிய பத்தோன் மூன்றில் மிக்கசெம் பாம்பு கூடத்
தஞ்சமாய் நவத்தில் ராகு சார்ந்துமே இருப்ப தாலே
துஞ்சிடும் மதலை யென்றோம் சுந்தரி மேலும் கேளே.

25. ஐந்தாம் வீட்டில் சனியும், அவ்வீட்டுக்குரிய சுக்கிரன் நீச்சமாகவும், பத்தாம் வீட்டுக்குரிய குரு மூன்றுமிடத்தில் கேதுவுடன் கூடியிருப்ப தாலும், ஒன்பதாமிடத்தில் ராகு இருப்பதாலும், புத்திரர்கள் இறந்து போம் என்று சொன்னோம். தாயே ! மேலுங் கேளுங்கள்.

26. இதுவலால் பூர்வ தோடம் இலகிற்று இவனுக் கேதான்
அதுகுற்றம் சொல்லு மென்ன அவனும்முன் ஜன்மம் தன்னில்
கதியிலாக் காஞ்சி மேல்பால் சார்ந்திடும் சிற்றூர் தன்னில்
நிதிமிக வுடையோ னுக்கு நேர்ந்தனன் சுதனே யாக,

26. இதுவல்லாமல் ஜாதகனுக்கு முற்பிறப்புத் தோஷமும் ஏற்பட்டது. அந்தக் குற்றத்தைச் சொல்லுங்கள், என்று வினவ, ஜாதகன முற்பிறவியில் தீங்குகளை விலக்கும் காஞ்சீபுரத்துக்கு மேற்கில் உள்ள சிற்றூரில், ஒரு செல்வவானுக்குப் புத்திரனுகப் பிறந்தான்.

27. குலமது வைசிய மென்றும் குறைவிலாச் செட்டுச் செய்து
நிலமது பெருக்க மாக நிமலியும் மதலை யுண்டாய்ப்
பலருக்கு முதவி செய்து பாவையர் மோக வானுய்
நலம்பட வார்த்தை கூறி நாயகன் வாழு நாளில் ;

27. வைசிய குலத்தில் தோன்றினுன். குறைவுகளில்லாத வர்த்தகம் செய்து, விளை நிலங்களைப் பெருக்கம் செய்து, மனைவி மக்களைப் பெற்று, பலருக்கு உபகாரம் செய்து, பெண்கள்மீது மோகம் கொண்டு, நல்லவித மாகப் பேசி, வாழ்ந்து வருங்காலத்தில் ;

28. கன்னிகை விதலை மாது கௌரியின் குலத்துப் பெண்ணை
பொன்பணி யவளுக் கீந்து போகங்க ளனுப வித்தான்
பின்னையும் சிலநாள் சென்று பெண்தந்தை தாயார் கேட்டுப்
பின்னமா யவளை நீக்கப் புகலு வாளக் காலத்தில்.

28. கௌரிகர் குலத்துக் கைம்பெண்ணுக்குப் பொருளும் ஆபரணங் களும் கொடுத்து, அவளுடன் இன்பம் அனுபவித்து வந்தான். சில காலம் சென்றபின் இவனுடைய மனைவியின் தாய் தந்தையர் சொல்லைக் கேட்டு, கைம்பெண்ணை விலக்கி விட்டான். அவள் பின் வருமாறு சொன்னுள்.

29. மனைவிசொற் கேட்டு மேதான் வைசியன் பதமாய் நீக்க
வினையான வடுக மாது மேவியே யிவன்பால் செல்லப்
பிணையான வார்த்தை கூறிப் பேதையை நீக்க லுற்றுன்
அணைந்திடும் மாது தானும் அறைகுவாள் மனவெ றுப்பால்.

29. மனைவியின் வார்த்தைகளைக் கேட்டு வைசியன் அக்கைம்பெண்ணை நீக்கிவிட்டான். வன்னிய குலத்துப் பெண் இவனிடம் சென்றுள். அவன் அடாத வார்த்தைகளைக்கூறிப் பெண்ணை விலக்கினுன். அப்பெண் மன வருத்த மடைந்து சொல்லுகின்றுள்.

30. மறுஜன்மம் மதலை ஈனம் வம்சமும் குற்ற மாயும்
பெருஞ்செல்வம் குறைவு நேர்ந்தும் பூமியில் வாழ்வா யென்று
.................வளவினில் செல்லா ளாகி
உறைந்தனள் வேறு தேசம் உத்தமி கேட்டி டாயே.

30. மறுபிறவியில் வம்சத்தில் அவமானம் அடைந்தும், புத்திரர்களுக் குத் தோஷம் ஏற்பட்டும், அதிகமான பொருளுக்குக் குறை ஏற்பட்டும், பூமியில் வாழ்ந்து வருவாய் ..............வீட்டுக்குச் செல்லாமல் வேற்றூருக்குச் சென்றுவிட்டாள். தாயே ! கேளுங்கள்.

31. அவளுடைச் சாபம் தானும் அணுகிற்று அச்சென் மத்தில்
பவமது ஈதே வன்றிப் பாவங்கள் வேறு இல்லை
தவசிகட் கன்ன மீந்து சாலைமார்க் கத்தில் பந்தல்
இவனுமே தாக மீந்து பரபதம் சேர்ந்தா னென்றோம்.

31. அவளுடைய சாபம் அப்பிறவியிலேயே ஏற்பட்டது. வேறு தீச்செயல்களில்லாமல், துறவிகட்கு அன்னமளித்து, சாலையோரங்களில் பந்தல் முதலியன இட்டு, தாகத்துக்குத் தண்ணீர் கொடுத்து, இறுதியில் மரணமடைந்தான், இவன் என்றோம்.

32. வேதனால் வரையப் பட்டு விளங்கின னிந்தப் பாலன்
தீதுண்டு சுதர்க ளுக்கு ஜனிக்கினும் தீதே யாகும்
ஓதுவே னதற்குச் சாந்தி உத்தமன் மனைவி யோடு
நீதியாய்ப் பட்சிக் கேகி நேர்ந்ததோர் வாரம் தானும் ;

32. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகன். புத்திரர்கட்குத் தோஷமுண்டு. பிறந்தாலும் நிலையா. அதற்குச் சாந்தியைக் கூறுகின்றோம். ஜாதகன், தன் மனைவியோடு திருக்கழுகுன்றத்துக்குச் சென்று, ஒரு வாரம் ;

33. கிரிதனைச் சுற்றி வந்து கிரமமா யண்ண லுக்கு
அருச்சனை செய்து பின்பு ஆறஞ்சு பரத்துக் கன்னம்
பரிவுட னீந்து பின்பு பாவையர் தானு முள்ளூர்
குருதியின் வார நோன்பு கொள்ளவும் வினைகள் போக்கி ;

33. கிரிப்பிரதட்சிணம் செய்து, கிரமப்படி சிவபெருமானுக்கு அருச்சனை முதலியன செய்து, பிறகு முப்பது பரதேசிகட்கு அன்னம் அன்புடன் அளித்து, பிறகு தன் மனைவியுடன் உள்ளூருக்குச் சென்று, செவ்வாய்க் கிழமைகள் தோறும் விரதம் இருந்தால், அடைந்த தீவினைகள் விலகி ;

34. சுதர்களு முதிக்கில் தீர்க்கம் சொல்லுவோ மாண்பா லொன்று
மதிநுதல் பெண்பா லொன்று வரைகிறோ மிவனுக் கேதான்
விதம்போலச் செய்யா னாகில் விளங்காரே புதல்வர் தாமும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை புகன்றிட் டோமே.

34. புத்திரர்கள் பிறந்தால் தீர்க்காயுள் உள்ளவராவர். ஒரு புதல்வனும் ஒரு புதல்வியும் பிறந்து தீர்க்கமாய் இருக்கும். நாங்கள் கூறியது போல் செய்யாவிடில் புத்திரர்கள் விளங்கார். கதியற்றவர்களைக் காக்கும் அம்பிகையே ! கூறுகின்றோம்.

35. மாதுரு நிறம்சி வப்பாம் வாததே கத்தா ளென்றோம்
மேதினில் நீட்சி யாவள் வித்தகி ஊகம் கொஞ்சம்
பாதக மில்லா ளாகும் பாலர்மேல் பிரிய மாவள்
தீதிலாள் சமயோ கத்தாள் தேவியு மூர்க்க முள்ளாள்.

35. தாய் சிவந்த நிறமுடையவள். வாத தேகமுடையவள். உயரமுள்ளவள். ஊக முடையவள். தீயமன மில்லாதவள். புத்திரர்கள் (குழந்தைகள்)மீது பிரிய முள்ளவள். கெட்ட எண்ணமில்லாதவள், சமமான யோக முடையவள். மூர்க்ககுண முடையவள்,

36. துணைவர்கள் ஆண்பால் நான்கு சோதரி இருவர் தீர்க்கம்
கனமுள ஒருவன் தானும் காதலி இல்லம் செல்வான்
அணையவே மூவர் ஒன்றாய் அணுகியே வாழ்வா ராகும்
இணையாக ஒருவன் தானும் இதரதே சங்கள் செல்வான்.

36. தாய்க்கு நான்கு சகோதரர்களும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். அவர்களில் ஒருவன் தன் மனைவியின் வீட்டுக்குச் செல்வான். மற்ற மூவர்கள் ஒன்றாக வாழ்ந்து வருவார்கள். ஒருவன் பிற தேசங்களுக்குச் செல்வான்.

37. அக்கரை செல்வா னாகும் அதிகபாக் கியமும் பெற்று
மிக்கவே சிலநாள் சென்று மேவுவான் சொந்த இல்லம்
தக்கவே குடும்ப மாகித் வானவர் வாழ்வா னென்றோம்
முக்கிய மாதுரு பூர்வம் மொழிகிறோம் கேளும் தாயே.

37. அக்கரைக்குச் செல்வான். அதிகமான பாக்கியத்தை யடைந்து, சில காலம் சென்றபின் சொந்த வீட்டுக்குச் செல்லுவான். பெரிய குடும்பத்தை யடைந்து, தேவதையைப்போல் வாழ்ந்து வருவான் என்றோம். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

38. வாழைமா நகர்க்குக் கீழ்ப்பால் அருகினில் சிற்றூர் தன்னில்
ஏழையோன் வணிக னுக்கு இவளுமே மகவாய் தோன்றித்
தாழ்விலாச் செல்வ முண்டாய்ச் சத்தியு .......... ர் தன்னில்
ஏழையோன் தனக்குப் பாரி எய்திப்பின் பாக்யம் பெற்று;

38. வாழைமா நகருக்கு அருகில், கிழக்கிலுள்ள சிற்றூரில், ஏழையான ஒரு வணிகனுக்கு மகளாகப் பிறந்து, குறைவில்லாத செல்வத்தை யடைந்து, ......................... ஓர் ஏழைக்கு வாழ்க்கைத் துணைவியாகி, பிறகு பாக்கியத்தை யடைந்து;

39. அறமதி லிச்சை யுண்டாய் யாவர்க்கும் நல்லோ ளாகி
வரும்பு தல் வர்க ளுண்டாய் வரன்முன்னே மரண மாகிப்
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன ளிவளே யென்றோம்
வரும்ஜன்மம் சொல்லு கின்றோம் மங்கையே கேட்டி டாயே.

39. தருமம் செய்வதில் விருப்பங்கொண்டு, எல்லோருக்கும் நல்லவளாகி, புத்திர பாக்கியம் பெற்று, தன் கணவனுக்கு முன் மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவளே என்றோம். மறு பிறவியைச் சொல்லுகின்றோம். பார்வதியே! கேளுங்கள்.

40. தணிகைக்குக் கீழ்ப்பா லாகச் சார்ந்திடும் சமவூர் தன்னில்
அணையவே ரெட்டி வம்சம் அவளுமே உதித்து மேலும்
கனமுள குடும்பி யாகிக் கன்னியும் வாழ்வா ளாகும்
இணையிலாத் தந்தை சேதி யியம்புவோம் கேளும் தாயே.

40. திருத்தணிக்குக் கிழக்கில் உள்ள சமநிலையையுடைய ஓர் ஊரில், ரெட்டியார் மரபில் தோன்றி, பெரிய குடும்பத்தை யடைந்து, வாழ்ந்து வருவாள். ஈடில்லாத தந்தையின் செய்தியை இனிக் கூறுகின்றோம் தாயே ! கேளுங்கள்.

41. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் தோகை தன்னில்
மன்னிய வேளா ளுக்கு மகவென வந்து தோன்றிப்
பொன்னொடு பூமி யுண்டாய்ப் புரவிமேன் மாடி இல்லம்
தன்னினத் தவர்மே லாகத் தானவன் வாழ்வா னென்றோம்.

41. தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம். தோகை நாட்டில் உள்ள ஒரு வேளாளனுக்குப் புத்திரனாகத் தோன்றி, செல்வங்கள் பூமி இவைகளைப் பெற்று, குதிரை மச்சுவீடு முதலியவைகளைப் பெற்று, தன் சுற்றத்தாருக்கு மேலாக வாழ்ந்து வந்தான் என்றோம்.

42. அறமதி லிச்சை இன்றி அந்தகன் பக்கல் சென்று
வரநதி குலத்தி லேதான் வந்தன னிவனே என்றோம்
வரும்ஜன்மம் வேங்க டத்துள் வைசிய குல முதித்துப்
பெருமையாய்ச் செட்டுச் செய்து புகழுண்டாய் வாழ்வா னுமே.

42. தருமம் செய்வதில் விருப்பமில்லாமல் மரணம் அடைந்து, வேளாள குலத்தில் பிறந்தான் இவன் என்றோம். அடுத்த பிறவியில், திருவேங்கடத் தில் வைசிய குலத்தில் பிறந்து, பெருமையுடன் வியாபாரம் செய்து வந்து, கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான்.

43. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மிருபா னொன்பான்
முந்திய மேட மாதம் மொழிகிறோம் கண்டம் தானே
அந்ததோர் காலம் தன்னில் அரவுதன் தசையி லேதான்
பிந்திசேய்ப் புத்தி தன்னில் பேசுவோம் கண்டம் தானே.

43. ஜாதகனுடைய தந்தையின் மரணக்காலத்தைச் சொல்லுகின்றோம். இருபத்தொன்பதாம் வயதில் சித்திரை மாதத்தில் மரண மேற்படும். அந்தக் காலத்தில் ராகுமகாதசையில் செவ்வாய் புக்தி நடை பெறும். அப்போது கண்டம் நேரும்.

44. அன்னைக்கு முப்பா னாலில் ஆவணி மாதம் தன்னில்
இன்னவன் கண்ட மென்றோம் இரணியன் தசையி லேதான்
உன்னத காரி புத்தி உடனேயே ஆகு மென்றோம்
இந்திர னிறைஞ்சு மாதே இம்மொழி தப்பா வாமே.

44. ஜாதகனது முப்பத்துநான்காம் வயதில் ஆவணி மாதத்தில் குரு மகாதசையில் சனிபுக்தியில் தாய் மரணமடைவாள் என்று சொல்லு கின்றோம். இந்திரனால் தோத்தரிக்கப்படும் தாயே ! கூறிய இம்மொழிகள் தவறா.

45. ஜாதகன் மரண காலம் சாற்றுவோ மன்பா றுறில்
போதவே சிம்ம மாதம் பூ ............ கள் தன்னில்
மேதினில் மரண மெய்தும் வித்தகன் பின்ஜன் மத்தைத்
தீதில்கா ளாத்தி தன்னில் ஜனிப்பனு மிக்கு லத்தில்.

45. ஜாதகனுடைய மரணக்காலத்தைச் சொல்லுகின்றோம். ஐம்பத்தாறும் வயதில் ஆவணி மாதத்தில் ................ மரணமடைவான் என்றோம். அவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தீங்குகளை விலக்கும் திருக்காளத்தியில் இதே குலத்தில் தோன்றுவான்.

46. உதித்தவன் யோகச் சேதி உரைக்கிறோம் வறுமை இல்லான்
பதியது சித்ரம் செய்வன் பகைவரை ஜயிக்க வல்லன்
நிதிமிகத் தேடு வானும் நேமியில் சீல னுவான்
ததிநெய்பால் குறைவி லாதான் சற்சனர் உறவு கொள்வான்.

46. ஜாதகனுடைய யோகச் செய்தியைச் சொல்லுகின்றோம். வறுமையில்லாதவன். அழகிய வீடு கட்டுவான். விரோதிகளை வெல்வான். அதிகமான பொருளைத் தேடுவான். உலகில் நல்லொழுக்க முள்ளவன். பால் தயிர் நெய் இவை குறைவில்லாதவன். நல்லவர்கள் உறவு கொள்வான்.

47. மன்னர்பால் அரசு செய்வன் மங்கையும் கேட்க லுற்றுள்
எந்தக்கா லத்தி லேதான் அவனுமே அரசு செய்வான்
இன்னவன் இருபான் ...... ஆண்டின்மேல் யோகம் வாய்க்கும்
சந்திரன் பிறைபோல் யோகம் தங்கிடு மன்பா ணுண்டும்.

47. அரசாங்க உத்தியோகம் ஏற்று அதிகாரம் வகிப்பான். பார்வதி கேட்கலானுள். எந்தக் காலத்தில் ஜாதகன் அரசு செலுத்துவான்? ஜாதகனுடைய இருபத்து ............ வயதுக்கு மேல் யோகம் பெருகும். பிறைச் சந்திரனைப்போல் யோகம் வளரும். ஐம்பதாம் வயது வரையில் யோகம் இருக்கும்.

48. தந்தைக்குப் பனிரண் டாண்டுள் கூறுவோ மரசு தானும்
பிந்தியு நீங்கு மென்றோம் பிழையில்லை இவனுக் கேதான்
தன்பந்து கலகத் தாலே தன்தொழில் விலகு மென்றோம்
அந்தநாள் ராகு சக்ரம் அவர்சுய புத்தி யாமே.

48. இவனுடைய பன்னிரண்டாம் வயதில் தந்தைக்குள்ள உத்தியோகம் விலகிவிடும். அதனுல் இவனுக்குத் தீங்கு நேரிடாது. தன் உறவினர்கள் செய்த கலகத்தால் உத்தியோகம் நீங்கும். அக்காலத்தில் ராகு மகாதசையில் ராகுபுக்தி நடைபெறும் என்றோம்.

49. இன்னவன் குடும்பச் சேதி இசைந்தனம் நவக்கோ ளாலே
நன்னிய தசாப லத்தை நயந்துமே உரைக்கக் கேளாய்ச்
சந்திரன் தசைநா லாண்டும் சாற்றிய திங்க ளொன்பான்
தன்னிலே நாட்கள் பத்தும் சாற்றுவோம் பலனைத் தானே.

49. இவனுடைய குடும்பச்செய்தி தசைப்பலன் இவற்றை, நவக்கிரகங்களை ஆராய்ந்து கூறுகின்றோம். கேளுங்கள். சந்திரமகாதசையில் நான்கு வருடங்களும் ஒன்பது மாதங்களும் பத்து நாட்களும் ஜனன காலத்தில் பாக்கியுள என்று சொல்லுவோம். அக்காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

50. தந்தையின் மூத்த வர்க்குத் தன்மனை வாய்க்கு மென்றோம்
பிந்தியும் குடும்ப விருத்தி புத்திரர் உதய மாகும்
வந்தவன் தனக்கு ரோகம் வாய்த்துப்பின் நிவிர்த்தி யாகும்
அந்தியில் தந்தை பாட்டி அந்தகன் பக்கல் சேர்வள்.

50. ஜாதகனுடைய தந்தையின் மூத்த சகோதரருக்கு மணமேற்படும். குடும்ப விருத்தி யேற்படும். ஜாதகனுக்கு வியாதி ஏற்படும். பிறகு நீங்கும். இறுதிக் காலத்தில் தந்தையின் தாய் மரணமடைவாள்.

51. செலவுக ளதிக முண்டு ஜனித்திடும் துணைவி தானும்
கலகங்கள் வந்து நீங்கும் காரியின் வர்க்கம் சூதம்
நிலமது பலிதம் கொஞ்சம் நீங்கிடும் காலி சேதம்
நலமாக இரண்டி லேதான் நவிலுவோம் விவர மாக.

51. அதிகமான செலவுகள் ஏற்படும். சகோதரி பிறப்பாள். கலகங்கள் ஏற்பட்டு விலகும். தாய் வர்க்கத்தில் அசுபம் நிகழும். விளை நிலங்களில் பலன் அற்பமாம். கால்நடைகள் சேதமாகும். மற்றவற்றை இரண்டாம் பாகத்தில் விபரமாகக் கூறுகின்றோம்.

———

## ஜாதகம் 108

1. சந்திரன் புந்தி ராகு தபனனும் மான தாக
மைந்தனும் வீணை புக்க மறைசீயம் கேது வண்டி
செந்தியும் தேள தாகச் சல்லியன் சாடி யாக
முந்திய வீணை ஜன்ம மொழிகுவீர் பலனைத் தானே.

1. சந்திரன் புதன் ராகு சூரியன் மகரத்திலும், சனி மிதுனத்திலும், குரு சிம்மத்திலும், கேது கடகத்திலும், செவ்வாய் விருச்சிகத்திலும், சுக்கிரன் கும்பத்திலுமிருந்து, இலக்கினம் மிதுனமானல், பலனைச் சொல்லுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | | | லக்கினம் சனி |
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | கேது |
| சந்திரன் புதன் ராகு சூரியன் | | | குரு |
| | செவ் வாய் | | |

2. மங்கையும் கேட்கும் போது மாமுனி புகலு கின்றார்
இங்கிவை ஆண்பால் ஜன்மம் இல்லமும் வடதென் வீதி
தங்கிடும் மேற்கு வாசல் சத்தியாம் வீரன் தங்கும்
துங்கமாம் காளி கீழ்ப்பால் தோன்றிடும் வடக்கில் கன்னி.

2. பார்வதி கேட்கும்போது முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். வடக்குத் தெற்கான வீதியில அவ் வீடுள்ளது. அவ் வீடு மேற்கு நோக்கியுள்ள வாயிலுடையது. அம்மன் கோயிலும், வீரன் கோயிலும் மேற்கில் உள்ளன. காளி கோயில் கிழக்கில் இருக்கும். வடக்கில் அம்மன் கோயில் உள்ளது.

3. இத்தகை யடையா ளத்துள் இறங்குவான் ஏழாம் ஜன்மம்
வித்தகன் தந்தை யன்னை விளங்கிய துணைவர் புத்ரர்
பத்தினி யோகம் தானும் பகருவோம் முன்பின் ஜன்மம்
சுத்தமாய் நவக்கோ ளாய்ந்து சொல்லுவோ மிந்நூல் தன்னில்.

3. இவ்வித அடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் தன் தந்தைக்கு ஏழாம் பிறவியாகத் தோன்றுவான். ஜாதகனுடைய தந்தை தாய் உடன் பிறந்தவர் புத்திரர் மனைவி இவர்களின் யோகத்தையும், முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றையும், திட்டமாக, நவக்கிரக நிலையை யறிந்து, இந்த நாலில் கூறுகின்றோம்.

4. தந்தையின் துணைஆண் ஒன்று சத்திமா ரவ்வா றென்றோம்
எந்தையே தந்தை சேதி இயம்புவோம் மாநி றத்தான்
சொந்தஇல் காணு ருகும் தோகைஇல் அணுகி வாழ்வான்
முந்துமால் பக்தி கொள்வன் முநிவதைக் காட்டா ருகும்.

4. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் உண்டு. ஜாதகனின் தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம். மாநிறமுடையவன். சொந்தத்தில் வீடு இல்லாதவன். தன் மனைவியின் வீட்டில் வாழ்ந்து வருவான். திருமாலின்மீது பக்தியுடையவன். கோபத்தை வெளியிடாதவன்.

5. கல்வியு மதிக மில்லான் காலிகள் விருத்தி உண்டு
இல்லையென் றுரைக்க மாட்டான் யாவர்க்கும் நல்லோ னுவன்
சந்ததம் கிருஷி செய்வன் தன்பந்து பகையு மாவன்
மல்லுக்குச் செல்லா ருகும் மறுத்துரை அதிகம் கூறான்.

5. அதிகமான கல்வியறிவில்லாதவன். கால்நடைகளின் பெருக்கம் உள்ளவன். யாசித்தவருக்கு இல்லையென்று கூறாதவன். எல்லோருக்கும் நல்லவன். விவசாயம் செய்து வருவான். சுற்றத்தாருக்கு விரோதியாவான். வீண் சண்டைக்குச் செல்லாதவன். எதிர்த்துப் பேசாதவன்.

6. இந்நெறி உடையா னுக்கு இவனுமே ஜனிப்பா ருகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் ஆனையின் நிறத்த ருகும்
முந்தின ஊக சாலி மொழியதைக் காப்பா ருகும்
வந்தஇல் தன்னை விட்டு வேறுதேச வாசம் செய்வான்.

6. இங்ஙனம் கூறப்பட்டவனுக்கு ஜாதகன் பிறப்பான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். கரிய நிறமுடையவன். ஊகமுள்ளவன். சொன்ன வார்த்தைகளைக் காப்பான். பிறந்த ஊரைவிட்டு வேறூரில் சென்று வாழ்ந்து வருவான்.

7. வித்தையு மில்லா ருகும் விவேகியாம் எவர்க்கும் நண்பன்
சுத்தவான் சோங்கின் மேலே செல்லுவான் அரசர் மூலம்
உத்தமன் சீவிப் பானும் ஓராறு முகத்தோன் பக்தி
நத்தினோருக் குதவி செய்வன் நாயகன் எதிரிக் கஞ்சான்.

7. கல்வியறிவில்லாதவன். விவேகமுள்ளவன். எல்லோருக்கும் நண்பனுவான். சுத்தமுள்ளவன். கப்பலேறி வேறுதேசம் செல்வான். அரசரால் உத்தியோகம் ஏற்று ஜீவித்து வருவான். ஆறுமுகக் கடவுளிடம் பக்தியுள்ளவன். தன்னை வேண்டியவர்கட்கு உதவி செய்வான். விரோதிகட்குப் பயப்படாதவன்.

8. ஆதியில் வறுமை உள்ளான் அரசர்பூ சிதமு மாவன்
காதியு மதிக மேற்பன் கட்டுரை பகரா ருகும்
வேதனை ஒருவர்க் கெண்ணுன் விசேஷபூ மிகளும் சேர்ப்பன்
பாதக மனமில் லாதான் பரிந்துப சாரம் செய்வன்.

8. ஆதிகாலத்தில் வறுமையுடையவன். அரசரால் கொண்டாடப்படு பவன். மிக்க புகழை எற்பான். பொய் பேசாதவன். ஒருவருக்கும் தீங்குகள் செய்யாதவன். விசேஷமான விளைநிலங்களைச் சேர்ப்பான். தீயபழக்கங்க ளில்லாதவன். அன்புடன் உபசாரம் செய்பவன்.

9. தானமும் தரும மிச்சை சந்தேக மனத்த னாகும்
ஈனமில் லாதா னாகும் இவன்முகம் வடுவு முண்டு
மான்விழி மார்கள் நேயன் மாடுகள் விருத்தி யுள்ளான்
ஊனமா மூலச் சூடு உறைந்திடும் வாயு பாதை.

9. தானதருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். சந்தேக மனமுடை யவன். அற்பகுணங்களில்லாதவன். முகத்தில் வடு உள்ளவன். பெண் கள்மீது மோகம் உள்ளவன். கால்நடைகள் பெருக்கம் உடையவன். மூலச்சூட்டு நோய் உள்ளவன். வாயுரோகம் உடையவன்.

10. பதினேழு ஆண்டு மேலாய்ப் பறப்பனும் வேறு நாடு
நிதிமிகப் பெருகு மென்றேம் நீர்நிலம் வறுமை காணு
நதிபல நீர்த்தம் தோய்வன் நல்லோர்க்கு நல்ல னுவன்
ததிநெய்பால் பிரிய முள்ளான் ஜனவசி யங்கள் கொள்வன்.

10. ஜாதகன் தனது பதினேழாம் வயதுக்குமேல் அயல் நாட்டுக்குச் செல்வான். செல்வங்கள் பெருகும். விளைநிலங்கள் குறைவில்லாதவன். பற்பல புண்ணிய நதிகளில் நீராடுவான். நல்லவர்கட்கு நல்லவனுக இருப்பான். தயிர் பால் நெய் இவைகளில் விருப்பமுடையவன். ஜனங்க ளிடம் பிரியமுள்ளவன்.

11. தன்துணை யாண்பா லொன்று தையலரவ் வாறு தீர்க்கம்
பின்துணை காணு னாகும் கூறுவோ மாண்பால் சேதி
பன்னியே பேச வல்லன் பாரினில் சமயோ கத்தான்
முன்கோப முடைய னாகும் மேவிடும் நாபிச் சூடு.

11. ஜாதகனுக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். ஜாதகனுக்குப் பின் பிறந்தவர்கள் இல்லை. சகோ தரனின் செய்தியைக் கூறுகின்றேம். பன்னிப் பன்னிப் பேசுபவன். சமமான அதிருஷ்டமுள்ளவன். முன்கோபி. நாபிச் சூட்டு நோயுள் ளவன்.

12. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் எழுவர் தோன்றும்
சேருவர் கால டுனு தீர்க்கமாம் ஆண்பா லொன்று
மாரனும் கடையோ னாகும் வரைகிறே மவன்கு ணத்தைப்
போரினில் செல்லா னாகும் புகலுவான் கல்வி ரண்டு.

12. மனைவி யொருத்தியேயாகும். எழு குழந்தைகள் உள்ளனர். புத்திரன் ஒருவனே நீண்ட ஆயுள் உள்ளவன். மற்றவர்கள் நிலையார். அவனும் கடைசிப் புத்திரனுவான். அவனுடைய குணத்தைக் கூறுகின் றேம். சண்டைக்கு முன் செல்லாதவன். இருவிதமான கல்வி கற்பான்.

13. [1] தந்தையில் லணுகி வாழான் தன்னுடன் கூடி வாழ்வன்
இந்திர யோக மேற்பன் இதரநா டதனில் செல்வன்
மைந்தனு மரசர் [2] கூலம் மருவியே ஜீவிப் பானும்
சிந்தையும் நல்ல தாகும் ஜனஉப காரி யாவன்
வந்தவர்க் கன்ன மீவன் மனமது கபடு மில்லான்.

13. தன் தந்தையுடன் கூடி வாழ்ந்திருக்காதவன். ஜாதகனுடன் சேர்ந்து வசிப்பான். இந்திர யோகமுள்ளவன். வேறு நாட்டிற்குச் செல்வான். அவனும் அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்ந்திருப்பான். நல்ல மனமுடையவன். ஜனங்களுக்கு உபகாரம் செய்பவன். தன்னை யண்டி வந்தவர்கட்கு அன்னமளிப்பான். மனத்தில் கபடமில்லாதவன்.

14. வித்தையில் பெருமை ஏற்பன் விவேகியாம் மாஞ்சி வப்பன்
சுத்தவான் சீல னுவன் சோர்வோருக் கன்ன மீவன்
எத்திசைப் புகழு மேற்பன் ராசபூ சிதமு மாவன்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் மணத்தின் காலம்.

14. கல்வியால் பெருமை அடைவான். விவேக முள்ளவன். மாநிற முள்ளவன். சுத்த முடையவன். நல்லொழுக்க முள்ளவன். தன்னை அண்டினவர்கட்கு அன்னமளிப்பவன். எவ்விடத்திலும் கீர்த்தியடைவான். அரசரால் நன்கு மதிக்கப் பெற்றவன். விநாயகனைப் பெற்ற தேவியே! ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுவோம்.

15. பாரியு நாற்பா னுலில் பகருவோ மவள்கு ணத்தைத்
தீரமில் லாத நெஞ்சம் ஜனஉப காரி யாகும்
கூறுவாள் சுகமாய் வார்த்தை கோபமு முடைய ளாகும்
நாரியி மிருநி றத்தாள் நாயகன் மனம்போல் வாழ்வாள்.

15. ஜாதகன் நாற்பத்துநான்காம் வயதில் மனைவியை மணந்து கொள்வான். மனைவியின் குணத்தைச் சொல்லுவோம். தைரியமில்லாத மனத்தினள். ஜனங்களுக்கு உபகாரி. சுகமாகப் பேசுபவள். கோபங்கொள்ளும் இயல்பினள். இருநிற முடையவள். தன் கணவன் மனமபோல் வாழ்ந்து வருவாள்.

16. அத்திரி சொல்லு கின்றார் அருணனும் புதனு மெட்டில்
குத்தமாய் மதியும் ராகு கூடியே யிருப்ப தாலே
வித்தகன் தனக்குத் தாரம் விளம்புவோ மிரண்டு மாகப்
பத்தினி கேட்க லுற்றாள் பாவைய ரிருவ ரென்றீர்.

16. அத்திரி முனிவர் கூறுகின்றார். சூரியனும் புதனும் எட்டாம் இடத்தில் சந்திரனுடனும் ராகுவுடனும் சேர்ந்து இருப்பதால் ஜாதகனுக்கு இரு மனைவியர்கள் உண்டு என்று சொல்லுகின்றோம். பார்வதி தேவி கேட்கலானாள். மனைவியர் இருவர் என்று கூறினீர்களே.

---

1. இப்பாட்டில் ஒரு வரி மிகுந்துளது.
2. 'குலம்' என்பது 'கூலம்' என விருத்தம் நோக்கி நீண்டது.

17. இருவரும் தீர்க்க மோசொல் இயம்புவார் பராசர் தாமும்
வருமனை யிரண்டும் தீர்க்கம் மாதுமுன் அபிமா னப்பெண்
உறைந்திடு மவள்கு ணத்தை உரைக்கிறோ மாஞ்சி வப்பள்
அறிவுளாள் நற்கு ணத்தாள் ஆளனுக் கினிய ளாகும்.

17. இரு மனைவியரும் தீர்க்காயுள் உள்ளவர்களோ ! சொல்லுங்கள். பராசர முனிவர் சொல்லுகின்றார். உள்ள இரு மனைவியரும் தீர்க்காயுள் உள்ளவர்கள் என்றோம். முதலில் வருபவள் அபிமான மனைவியாகும். அவளுடைய குணத்தைச் சொல்லுங்கள். மாநிற முடையவள். அறிவுடையவள். நற்குணமுடையவள். தன் கணவனுக்குப் பிரியமானவள்.

18. அன்னம்போல் சாய லொக்கும் அடைந்தோரை யாத ரிப்பள்
நன்னடை மிருது வார்த்தை நவிலுமுன் கோபி யாகும்
முன்னமே யாகச் சொல்வோம் மூவொன்பதாஆண்டில் நேரும்
தன்சுதர் ஆண்பா லொன்று தையலர் அவ்வாறு தீர்க்கம்.

18. அன்னத்தைப்போன்ற அழகுள்ளவள். தன்னை யண்டிவந்தவர்களை ஆதரிப்பாள். நன்னடத்தை யுள்ளவள். மெதுவாகப் பேசுவாள். சொல்லுமுன் முன்கோபியாவாள் எனக்கூறுகின்றோம். ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் அவள் வருவாள். அவளுக்குப் புத்திரன் ஒருவனும் புத்திரி ஒருத்தியும் பிறந்து தீர்க்கமாவார்கள்.

19. அதுவுமே தவத்தால் தோன்றும் அவள் வந்தபின்பு யோகம்
மதிபிறை போல ஓங்கும் வயதுமே தீர்க்க மென்றோம்
சதியிலா மனத்த ளாகும் தரணியில் வறுமை காணாள்
மதிபிறை யணிந்தோன் தேவி மங்கையே கேட்டி டாயே.

19. அதுவும் முற்பிறவியில் செய்த நற்செயல்களால் ஏற்படும். அவள் வந்த பிறகு யோகம் வளர்பிறைச் சந்திரன் போல் விருத்தியாகும். நீண்ட வயதுள்ளவள் என்றோம். தீயமனங்கள் இல்லாதவள். உலகில் வறுமை யடையாதவள். சந்திரனை முடியில் தரித்த சிவ பெருமானின் தேவியே ! கேளுங்கள்.

20. புத்திர விருத்தி தன்னைப் புகலவே ஆண்பா லொன்று
வித்தகி பெண்பால் ரண்டு விளம்புவோம் தீர்க்க மாகப்
புத்திரர் இவன்மே லாக ஏற்றுவோம் யோகந் தானும்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் அன்னை சேதி.

20. ஜாதகனுடைய புத்திர விருத்தியைச் சொல்லுகின்றோம், ஆண் குழந்தை யொன்றும் இரு பெண் குழந்தைகளும் பிறந்து தீர்க்கமாகும். இவனுக்கு மேலாக இவனுடைய புத்திரர்கட்கு யோகம் விருத்தியடையும். விநாயகனைப் பெற்ற தேவியே ! ஜாதகனுடைய தாயின் செய்தியைக் கூறுகின்றோம்.

21. அன்னேமா நிறத்த ளாகும் அன்புள மனத்த ளாகும்
தன்வரன் மனத்துக் கேற்றேள் தன்துணே யாண்பால் காணுள்
கன்னிகை ஒன்று என்றேம் காதலி கேட்க லுற்றுள்
மன்னிய ஆண்பால் தோடம் அறிவிப்பீர் முனியே நீர்தாம்.

21. தாய் மாநிற முடையவள். அன்புள்ள மனத்தினள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். உடன் பிறந்த சகோதரனில்லாதவள். சகோதரி ஒருத்தி உண்டு என்றேம். பார்வதி கேட்கலானுள். தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்படக்காரணங்களேக் கூறுங்கள், முனிவரே ! நீர்தாம்

22. மதிபுகர் எட்டில் நிற்க வரைந்தனம் துணேயாண் தோடம்
அதிபதி பூர்வம் தன்னில் மருவிற்று அந்தத் தோடம்
விதங்களேச் சொல்லு மென்ன மெல்லியும் பாண்டி நாட்டில்
இதுகுலம் தனிலு தித்து இடரின்றி வாழு நாளில் ;

22. சந்திரனும் புதனும் எட்டாமிடத்தில் இருப்பதால் ஜாதகனது தாய்மாமனுக்குத் தோஷம் உண்டு என்றேம். தாய்க்கு முற்பிறவியில் அந்தத் தோஷம் ஏற்பட்டது. அத்தோஷம் ஏற்பட்ட விதத்தைச் சொல்லுங்கள் என, ஜாதகனின் தாய் பாண்டிய நாட்டில் இதே குலத்தில் தோன்றித் துன்பங்களில்லாமல் வாழ்ந்து வரும்போது ;

23. பூனேயைக் கொன்று ளென்றேம் பூசைக்கு மேதி பாலே
ஊனமாய்த் தந்தா ளென்றேம் உலவிற்று அந்தத் தோடம்
ஈனமாம் கால னுடு எய்தியே பிரமன் லக்கம்
தேன்மொழி கோகு லத்தில் ஜனித்தவ ளென்று சொலவோம்.

23. ஒரு பூனேயைக் கொன்றுவிட்டாள் என்றேம். தெய்வத்தின் அபிஷேகத்துக்கு எருமைப் பாலேக் கொடுத்தாள். அந்தத் தோஷம் ஏற்பட்டது. மரணமடைந்த பின் மீண்டும் பிரம்மதேவனுல் படைக்கப்பட்டு, இனிய வார்த்தைகளேயுடைய இடையர் குலத்தில் பிறந்தவள் என்று சொல்லுகின்றேம்.

24. முன்விணே தனேகள் காண்பாள் உதித்தசேய் ஆதி யேகும்
அன்னவள் மத்தி யத்தில் அவள்கயிறில்லா வாழ்வள்
பின்ஜன்மம் பழனி நாட்டில் பிறப்பளா மிக்கு லத்தில்
பொன்பணி உடையா ளாகிப் பூவையும் வாழ்வா ளாமே .

24. முற்பிறப்புத் தீவிணேகள் ஏற்படும். முதலில் தோன்றிய குழந்தைகள் இறந்துபோம். தன் இடைக் காலத்திலேயே மாங்கல்யத்தை இழப்பாள். மறுபிறவியில் பழனி நாட்டில் இக் குலத்தில் பிறப்பாள். பொன் ஆபரணங்களே உடையவளாக வாழ்ந்து வருவாள்.

25. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் ஆழி தன்னில்
வந்தவன் தீயின் வம்சம் மணவிமைந் தருமுண்டாகி
இந்தவன் வாழு நாளில் இயம்புவோம் ஊழி தானே
நொந்திடும் ஏழை யோர்க்கு நிமலனும் இடைஞ்சல் செய்தான்.

25. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். **திருவாழியில்,** வன்னிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களைப்பெற்று வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். கஷ்ட மடைந்த ஏழைகட்கு ஜாதகனுடைய தந்தை பல துன்பங்களைச் செய்தான்.

26. அவருடைச் சாபத் தாலே அவன்தந்தை ஆஸ்தி காணன்
நவனியில் சமயோ கத்தான் நாயகன் மூன்று மாண்டில்
பவமுள கால னோடு பாவுவன் பின்ஜன் மத்தில்
தவசிவாழ் அருணை தன்னில் ஜனிப்பனும் வைசயச் சேயாய்.

26. ஏழைகளின் சாபத்தால் தன் தந்தையின் ஆஸ்தியை அடையா தவன். சமமான யோகமுள்ளவன். ஜாதகனுடைய மூன்றும் வயதில் மரணமடைந்தான். மீண்டும் மறுபிறவியில் தவசிகள் வாழும் **திருவண்ணா மலையில்** வைசிய குலத்தவனாகப் பிறப்பான்.

27. ஜாதகன் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் காஞ்சி தன்னில்
வந்தனன் சேடர் வம்சம் வளமுள குடும்பி யாகி
இந்தவன் வாழு நாளில் இயம்புவோம் ஊழி தானும்
பிந்திய ஏழை மாது போசன வறுமை யாகி ;

27. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். **காஞ்சீபுரத் தில்,** சேடர் குலத்தில் பிறந்து, செழிப்புள்ள குடும்பத்தையடைந்து வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தாழ்ந்த குலத்து ஏழைப்பெண் ஒருத்தி, சாப்பாட்டிற்கில்லாமல், வறுமையடைந்து ;

28. முத்ததில் பணிகள் செய்வே னெனமொழிந் தவளைக் காத்தான்
உத்தம குணத்தைப் போல ஒண்டொடி வாழ்ந்து பின்பு
ரத்தின பணிக ளெல்லாம் நாயகி எடுத்துக் கொண்டு
சத்துசெய் யாமல் சென்றாள் செங்குந்தன் ஓடிச் சென்று ;

28. தன் வீட்டில் வேலைகள் செய்வேன் என்று கூறினாள். அவளை ஜாதகன் ஆதரித்து வந்தான். உயர்ந்த குணமுள்ளவள் போல் அவள் வாழ்ந்து வந்த பிறகு, ரத்தினம் ஆபரணங்கள் முதலியவற்றை எடுத்துக் கொண்டு சத்தம் செய்யாமல் ஓடிவிட்டாள். ஜாதகனும் ஓடிப்போய் ;

**வேறு.**

29. முன்கடனோ பின்கடனோ அறியேன் யானும்
மூலபொருள் நீயறிவாய் என்று சொல்லித்
தன்கரத்தால் தெருத்தூளைச் தூற்றிச் சென்றான்
ஜாதகனு மந்தியத்தில் முருகன் பக்தி
வந்தவருக் கன்னமீந்து சேதுச் சென்று
மார்க்கத்தில் தாகப்பந்தல் வைத்து இன்னோன்
துன்னிய காலனுட்டைச் சேர்ந்து இன்னோன்
சிரநான்கோன் வரையவுமே வந்தா னம்மா.

29. முன்பிறப்புக் கடனே! இப்பிறப்புக் கடனே! தெரியவில்லை. பரம் பொருளே! நீயே அறிவாய், என்று கூறி, தன் கையால் தெரு மண்ணை வாரி இறைத்துவிட்டுச் சென்றான். ஜாதகன் தன் கடைசிக் காலத்தில் முருகக் கடவுளிடம் பக்திக் கொண்டு வாழ்ந்து, தன்னையண்டி வந்தவர் களுக்கு அன்னமளித்து வந்து, சேதுவுக்குச் சென்று, சாலை யோரங்களில் தண்ணீர்ப் பந்தல்கள் அமைத்து, தூய்மையான எமபட்டணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்றோம். தாயே!

வேறு.

30. முன்ஜன்மம் பணிகள் கொண்டோள் மேவுவா ளிச்ஜன் மத்தில்
தன்மனை அபிமா னப்பெண் சாருவாள் ஒன்பான் மேல்பால்
தன்மர ணங்கள் மட்டும் தன்னுடன் கூடி வாழ்வாள்
உனனத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

30. முற்பிறவியில் ஆபரணத்தை எடுத்துக் கொண்டவள். இப்பிற வியில் ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதுக்கு மேல் அபிமான மனைவி யாக வாய்ப்பாள். தன் மரணகாலம் வரையில் ஜாதகனுடன் கூடி வாழ்ந்து வருவாள். உயர்ந்த கணவனைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

31. வந்தவன் பொதுயோ கத்தை வரைகிறோம் மூவே ழின்மேல்
அந்நிய நகரந் தன்னில் அரசரால் தோழிலு மேற்பன்
பொன்பணி பூமி சேர்ப்பன் போற்றுவோம் அன்பான் யாண்டும்
மன்னர்பால் அரசு செய்வன் மாறிடும் அதன் மேலாக.

31. ஜாதகனுடைய பொதுயோகத்தைச் சொல்லுகின்றோம். இருபத் தோராம் வயதிற்கு மேல் வேறூரில் அரசாங்க உத்தியோகத்தை யடைந்து பொன் ஆபரணங்களைச் சேர்ப்பான். தனது ஐம்பதாம் வயது வரை அரசாங்க உத்தியோகம் வகிப்பான். அதற்கு மேல் மாறிவிடும்.

32. பலவித வணபம் செய்வன் பாரினில் வறுமை காணன்
தலதீர்த்தம் தோய்வா னுகும் க்ஷேத்திரம் செய்த லுண்டு
குலவிய ஈரொன் பாண்டில் கோதையாம் அன்னை கண்டம்
மருமமாய் அன்பா றுறில் மாரன்முன் துணையும் கண்டம்.

32. பலவிதமான வர்த்தகம் செய்து வருவான். உலகில் வறுமை யடையாதவன். புண்ணிய நீரில் ஸ்நானம் செய்வான். ஆலயத் திருப் பணிகள் செய்வான். ஜாதகனுடைய பதினெட்டாம் வயதில் தாய் மரண மடைவாள். ஐம்பத்தாறும் வயதில் மூத்த சகோதரன் இறப்பான்.

33. எழுபது நாலு ஆண்டில் இடபமா தத்தி லேதான்
அழிவுண்டு ஜாத கர்க்கு அறைகிறோம் இவன்பின் ஜன்மம்
பழிவிலாக் காளாத்தி தன்னில் பிறப்பனும் க்ஷத்திரிய னுகத்
தழுவுண்டு வறுமை காணன் ஜயமுனி தடுத்துச் சொல்வார்.

## ஜாதகம் 109

1. மதிகுடம் சேயு மானில் மறைராகு மேட மாகப்
புதன்புக ரலவன் புக்கப் புரவியோன் வீணை யாக
அதிதியுங் கோல தாக அலரியின் மகனுங் கன்னி
இதுவிதக் கோளு நின்று இலக்கின மிதுன மாக ;

1. சந்திரன் கும்பத்திலும், செவ்வாய் மகரத்திலும், குரு ராகு மேஷத்திலும், புதன் சுக்கிரன் கடகத்திலும், சூரியன் மிதுனத்திலும், கேது துலாத்திலும், சனி கன்னியிலுமாக நவக்கிரகங்கள் இருந்து, இலக்கினம் மிதுனமாக இருப்பின் ;

| | | | |
|---|---|---|---|
| | குரு ராகு | | இலக்கினம் சூரியன் |
| சந்திரன் | இராசி சக்கரம் | | புதன் சுக்கிரன் |
| செவ்வாய் | | | |
| | | கேது | சனி |

2. பலன்தனைப் புகலு மென்று பார்வதி கேட்கும் போது
குலகுரு வதிட்டர் சொல்வார் குறித்திடு மாண்பால் ஜன்மம்
தலமது கீழ்மேல் வீதி சண்டன்தன் வாச லாகும்
அலைகடல் துயின்றோன் மேற்கில் அழிந்திடு மந்தக் கோட்டம்.

2. பலனைச் சொல்லுங்கள், என்று பார்வதிதேவி கேட்கும்போது, வசிஷ்ட முனிவர் சொல்லுகின்றார். இஃது ஆண் மகனின் ஜாதகம். கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது, இவன் வீடு, என்றோம். மேற்கில் திருமாலின் ஆலயம், இடிந்து போயிருக்கும்.

3. தந்தியும் கீழ்ப்பா லாகும் சங்கரன் வடகீ ழாகும்
நொந்திடு மந்தக் கோட்டம் நிமலிமா காளி யுத்ரம்
தென்திசை மாரி தங்கும் செப்பிய சமவூ ராகும்
இந்தநல் லடையா ளத்துள் இறங்குவான் சேட்ட னுகை.

3. விநயகர் ஆலயம் கிழக்குத் திக்கில் உள்ளது. வட கிழக்கில் சிவபெருமான் கோவில் பாழடைந்ததாகவும், வடக்கில் காளி கோயிலும், தெற்கில் மாரியம்மன் கோயிலும் உள்ள சமநிலையான ஊரில், இவ்வித அடையாளங்களுள்ள இடத்தில் ஜாதகன் தன் தந்தைக்கு முதல் புத்திரனுகத் தோன்றுவான்.

33. ஜாதகன் தனது எழுபத்துநான்காம் வயதில் வைகாசி மாதத்தில் மரணமடைவான். அவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். தீமைகளை விலக்கும் காளத்தியில் க்ஷத்திரிய குலத்தவனாகப் பிறப்பான். வறுமை யடையாதவன். ஜயமுனி மறுத்துச் சொல்லுகின்றார்.

34. இந்ததோர் ஜன்மந் தன்னில் இவன்செய்த புண்ய மென்ன
வந்தவர்க் கன்ன மீந்தும் மனமது தளர்ச்சி யாயும்
கந்தனு மாரி பத்தி கனத்ததோர் தலங்கள் சென்றும்
முந்தினோர் பக்தி யாயும் முதல்வனும் வாழ்வ தாலே ;

34. ஜாதகன் இப்பிறவியில் என்னநற் செயல்கள் செய்தான் ? தன்னை யண்டி வந்தவர்கட்குத் அன்னமளித்து வந்ததாலும், இளகிய மனமுடையவனாய் இருந்ததாலும், முருகக்கடவுள் மாரியம்மன் இவர்களிடம் பக்தியுள்ளவனாயும் இருந்து பல புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று பெரியோர்களிடம் பக்தியுடன் வாழ்வதாலும் ;

35. பிறப்பனுஞ் சத்திரியச் சேயாய்ப் பிறந்திடு காலந் தன்னில்
பரிதியின் தசையி லிருப்புப் பகருவோ மாண்டு மூன்றும்
நெறியுடன் திங்கள் பத்தும் நிகழ்த்துவோந் தநதை கண்டம்
குறுகியே குடும்பந் தானுங் கூறினோம் பூர்வ பாகம்.

35. சத்திரிய குலத்தில் தோன்றுவான். ஜாதகன் பிறக்கும் போது சூரியமகாதசையில் இருப்பு மூன்று வருடங்களும் பத்து மாதங்களுமாம். அத்தசையில் தந்தை மரணமடைவான். குடும்பம் குறுகும். இது முதல் பாகம் என்று சொன்னோம்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெறுந் தந்தை யோகம்
அன்னையின் யோகந் தானும் அவன்துணை களத்ர புத்திரர்
முன்பின்ஜன் மங்கள் யாவு முரைக்கின்றே மிந்நூல் தன்னில்
உன்னத வரனைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

4. ஜாதகனுடைய யோகத்தையும், பெற்ற தாய் தந்தை உடன் பிறந்தவர்கள் மனைவி மக்கள் இவர்களின் யோகத்தையும், முற்பிறப்பு மறுபிறப்பு ஆகியவற்றையும், இந்தச் சோதிடநூலில் சொல்லுகின்றோம். உயர்ந்த கணவனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

5. தந்தையின் துணைவ ரெட்டில் ஆண்ரண்டு கன்னி ஐந்து
இந்தவர் விருத்தி யென்றோம் இயம்பின ஆண்பா லுந்தான்
முன்பின்னாய் மொழிய லாகு முன்னவன் சேதி கேளாய்ச்
சிந்தைபா தகமில் லாதான் சிலேடையாய் வார்த்தை சொல்வன்.

5. ஜாதகனுடைய தந்தையின் உடன்பிறந்தவர்கள் எட்டுபேர்களில் ஐந்து சகோதரிகளும் இரு சகோதரர்களும் விருத்தியுள்ளனர். சகோதரர் முன் பின்னாகத் தோன்றுவர். மூத்த சகோதரனின் செய்தியைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். கெட்ட மனமில்லாதவன். இருபொருள் படும்படி பேசுபவன்.

6. வறுமைக ளடையா னாகும் மா நிலம் விருத்தி செய்வன்
பெருமையாய்க் குடும்ப மேற்பன் பேதைய ரிருவ ராகும்
திருமனை யிரண்டு என்று செப்பின கார ணஞ்சொல்
அரிவையும் விதியால் நீரில் அந்தகன் பக்கல் சேர்வள்.

6. வறுமைகள் அடையாதவன். விளைநிலங்களைப் பெருக்குவான். பெருமையுள்ள குடும்பத்தை யடைவான். இரு மனைவியரை மணப்பான். இரு மனைவிகள் உண்டு என்று சொல்லக் காரணம் என்ன? சொல்லுங்கள். மனைவியும் விதியால் ஜலத்தில் வீழ்ந்து மரண மடைவாள்.

7. சுதர்களு மாண்பால் காணுள் தோகையு மொன்று தீர்க்கம்
அதிபதி யிரண்டா மாது வருகுவாள் சுதர்கள் தோடம்
சதியான பூர்வந் தன்னில் சார்ந்தது வினைய நேகம்
அதுபலன் பின்பால் சொல்வோம் அவனுக்கு வயது தீர்க்கம்.

7. அவள் ஆண்சந்ததி யில்லாதவள். ஒரு புத்திரி பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவள். அவனுக்கு இரண்டாம் மனைவி வருவாள். அவளுக்கும் புத்திர தோஷம் உண்டு. முற்பிறப்பில் செய்த தீவினைகள் பல தொடர்ந்தன. அந்த விபரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். அவன் நீண்ட வயதுள்ளவன்.

8. பின்வந்தோன் சேதி சொல்வோம் பலமுள குடும்ப மேற்பன்
தன்னுடல் கார கங்கள் சார்ந்திடும் ஈகை கொஞ்சம்
அன்னவன் தனக்குப் பாரி அணுகிடு மிரண்டே யாக
முன்மனை நீரி னாலே மொழியினால் ஏகு வாளாம்.

8. பின் பிறந்த சகோதரனின் சேதியைக் கூறுகின்றேம். சௌக்கிய மில்லாத குடும்பத்தை யடைவான். உடலில் காரகநோய் (மேக வியாதி) ஏற்படும். சிறிது கொடுக்கும் குணமுள்ளவன். அவனுக்கும் இரு மனைவி மார்கள் ஏற்படுவார். முதல் மனைவி நீரில் வீழ்ந்து மரண மடைவாள்.

9. அதற்குப்பின் பாரி வாய்க்கும் அனுகாரே சுதர்கள் தாமும்
புதல்வர்க ளிரும னைக்கும் பொருந்தாத கார ணஞ்சொல்
அதிபதி மார்கள் பூர்வம் அநேகதுன் பங்கள் செய்தார்
அதுபலன் சுதர்கள் தோடம் அறிவிப்பீர் வினையை நீங்கள்.

9. அதற்குப் பிறகு மறுமணம் செய்து கொள்ளுவான் ஆனல் புத்திரர் தோன்றுர். இரு மனைவியருக்கும் குழந்தைகள் தோன்றுத காரணம் சொல்லுங்கள். இவ்விருவரும் முற்பிறவியில் பல துன்பங்கள் செய்திருந் தனர். அதனுல் புத்திரர்கட்குத் தோஷம் ஏற்பட்டது. அந்தத் தீவினையைச் சொல்லுங்கள்.

10. முன்துணை இளையா ளுக்கு மொழிகின்றேம் பூர்வந் தன்னைத்
தென்திசைக் குற்று லத்தில் ஜனித்தனள் வன்ய சேயாய்த்
தன்னுடைக் கொல்லை தன்னில் தங்கிற்றுக் கருப்பன் சாமி
என்னநோய் வந்த போதும் இடருகள் நிவிர்த்தி செய்யும்.

10. முதலில் மணந்த இளைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின் றேம். குற்றுலத்தில் வன்னிய குலத்தவளாகப் பிறந்து வாழ்ந்தாள். தன்வீட்டுக் கொல்லையில் ஒரு முனி வாழ்ந்து வந்தது. அந்தக் கருப்பன் என்ன நோய் ஏற்பட்டபோதிலும், தீங்குகளை விலக்கி வந்தது.

11. பெரியோர்கள் பூசிப பார்கள் பேதையும் வணங்கா நின்றுள்
கருமுனி கோப முற்றுக் கழறின சாபம் சொல்வோம்
இருமாப்புக கொண்டு என்னை வணங்காத பாவி யேநீ
வரும்சுதர் யாவுங் கொல்வேன் மறுஜன்ம முன்பா லண்டி.

11. அதை அவன் முன்னேர்கள் பூசித்து வந்தார்கள். ஆனல் இப் பெண் அந்தத் தெய்வத்தை வழிபடாமல் இருந்தாள். அந்தக் கருப்பன் சாமியும் கோபங்கொண்டு சாபமிட்டதைச் சொல்லுகின்றேம். இறுமாப் படைந்து என்னை வணங்காமல் இருந்தவளே! மறுபிறவியில் உன்பக்கம் வந்து, உனக்குத் தோன்றும் குழந்தைகளைக் கொல்வேன்.

12. சுதர்களு முதிக்கா வண்ணம் செய்குவேன் தோன்றில் தீதாம்
இதுவிதம் சொல்லி யேதான் ஏகிற்று வேறி டத்தில்
அதுதோட மிச்சென் மத்தில் அணுகிற்றுப் பாவைக் கேதான்
மதலைகள் காணு ளாகும் மாமுனி குற்றத் தாலே.

12. புத்திரர்களும் தோன்றுவண்ணம் செய்வேன். அப்படித் தோன்றி னும் நிலையார். இங்ஙனம் கூறி விட்டு வேறு இடத்துக்குச் சென்று விட்டது. அந்தத் தோஷம் இப்பிறவியில் இப்பெண்ணுக்கு ஏற்பட்டது. முனியிட்ட சாபத்தால் புத்திர பாக்கியம் இல்லை.

**13.** பின்துணை யிளையோ னுக்கு மறுபாரி பூர்வந் தன்னைக்
கன்னியா குமரி தன்னில் கலந்தன ளிக்கு லத்தில்
பொன்னோடு பணிதி யுண்டாய்ப் புகழான குடும்பி யாகி
அன்னவள் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ.

**13.** ஜாதகனுடைய சிறிய தந்தையின் இளைய மனைவியின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கன்னியாகுமரியில் இதே குலத்தில பிறந்தாள். பொன்னுடன் ஆபரணங்களைப் பெற்று, கீர்த்தியுள்ள குடும்பத்தையடைந்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

**14.** பஞ்சையா யேழை மாது பாலர்க்கு வன்னம் வேண்டிக்
கெஞ்சியே இவள்பால் கேட்கக் கிளிமொழி வார்த்தை யின்றி
மிஞ்சியே வார்த்தை சொல்லி விரட்டினாள் ஏழை தன்னை
வஞ்சியும் வருத்த முற்று வரைகின்றாள் சாபம் தானும்.

**14.** ஏழைப் பெண் ஒருத்தி குழந்தைக்கு அன்னம் வேண்டி இவளிடம் சென்று கெஞ்சிக் கேட்கும்போது, நயமான வார்த்தைகளில்லாமல், கொடுமையாகப் பேசி, ஏழையை விரட்டி விட்டாள். ஏழைப் பெண்ணும் வருத்த மடைந்து சபிகின்றாள்.

**15.** பாலர்சோ றீயாப் பாவி பருகாவே சுதர்கள் தாமும்
சாலவே வின்னோள் மத்தி யில்சுதர் காணா ளாகி
மாலம்தன் பிணியு மாகி வாழ்குவா யென்று சொல்லி
ஏலவே வேறு இல்லம் ஏகினாள் அவளு மம்மா.

**15.** குழந்தைக்கு அன்னம் கொடுக்க மறுத்த பாவியே ! உனக்கு குழந் தைகள் தோன்றா. இப்பிறவியிலும் குழந்தைகள் இல்லாதவளாகி,நோயுற்ற கணவனை யடைந்து வாழ்வாய் என்று சொல்லி வேறு வீட்டுக்குச் சென்றாள், அவள், தாயே !

**16.** மாதுவின் சாபந் தானு மருவிற்று விச்சென் மத்தில்
தீதாகுஞ் சுதர்க ளென்றோம் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
ஓதுவீர் சுதர்க்குச் சாந்தி உரைக்கின்றோம் பின்பா கத்தில்
போதக வரனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

**16.** அந்த ஏழைப் பெண்ணின் சாபம் இப்பிறவியில் ஏற்பட்டது. புத்தி ரர்கட்குத் தோஷ மேற்படும். ஜயமுனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். அது நீங்கச் சாந்தி ஒன்று சொல்லுங்கள். பிற்பாகத்தில் சாந்தி சொல்லு கின்றோம். உயர்ந்த கணவனைபெற்றுப் புண்ணியவதியே ! கேள்.

**17.** பாலகன் தந்தை சேதி பகருவோ மால்நி றத்தான்
சீலம்போல் வெளிம யக்கன் சிறப்பான குடும்ப மேற்பன்
காலத்தை யறிந்து வாழ்வன் கால்கரம் பிணியுங் கொஞ்சம்
மால்மனை வாச மெய்தும் மேவுவான் குடகில் வேறூர்.

17. இனி ஜாதகனுடைய தந்தையின் செய்தியைக் கூறுகின்றோம். கரிய நிறமுடையவன். நல்லொழுக்க முள்ளவன்போல் பிறர்நினைக்கும்படி நடப்பான். சிறப்புள்ள குடும்பத்தை யடைவான். வருங்காலத்தை அறிந்து அதற்குத் தக்கபடி வாழ்வான். கை கால்களில் சிறிது நோய் இருக்கும். இவன் வீட்டில் லட்மீ விலாச முண்டு. மேற்குத் திக்கில் சென்று வாழ்வான்.

18. அக்கினி நாளே தோன்றும் அழிவின்றி மிதுன ராசி
தொக்குவான் வறுமை காணன் சுகமிலார்க் குதவி செய்வான்
சிக்கன மில்லா னாகும் தேறின புத்தி யேற்பன்
பக்குவ மாக வார்த்தை பகருவான் பலபேர் நேயன்.

18. கார்த்திகை நட்சத்திரத்தில் மிதுனலக்கினத்தில் பிறந்தவன். வறுமை யடையாதவன். கஷ்டமடைந்தவருக்கு உதவி செய்வான். சிக்கனமாக இல்லாதவன். முதிர்ந்த அறிவாளி. தக்கபடி பேசுபவன். பல பேர்கட்கு நண்பன்.

19. உண்டியுஞ் சுகமாய்க் கொள்வன் உண்மையென் றோரைச் சார்வன்
வண்டிவா கனமு மேற்பன் மாநில மதிகஞ் சேர்ப்பன்
பண்டுநாள் பூமி மேலாய்ப் பாலகன் சேர்ப்பா னாகும்
துன்பமாய்க் கூற மாட்டான் சொல்லதைக் காப்பா னாகும்.

19. சாப்பாட்டில் பிரிய முள்ளவன். உண்மையானவர்களிடம் நட்புக் கொள்வான். வண்டிமுதலிய வாகனவசதிகள் உள்ளவன். விளைநிலங்களைப் பெருக்குவான். பிதுரார்ச்சித சொத்துக்களுக்கு மேல் நிலங்களைச் சேர்ப்பான். பிறர் மனம் வருந்தும்படி பேசாதவன். கூறிய வார்த்தைகளின்படி நடப்பவன்.

20. தானமுந் தரும மிச்சை சதுஷ்பாதம் பணையோர் விருத்தி
ஊனமில் லாத தேகி உயர்கரி யொப்ப தாகும்
ஆனஇல் மூன்று செய்வன் அறைகின்றே மிவன்முன் ஜன்மம்
தேன்வளர் மலைநாடன்னில் ஜனித்தனன் சிகாரி வன்யன்.

20. தான தருமங்கள் செய்வதில் விருப்ப முடையவன். கால் நடைகள் பண்ணை ஏர் முதலியன விருத்தியாகும். ஊனமில்லாத சரீர முடையவன். கம்பீரமான யானையைப் போன்றவன். மூன்று வீடுகளைக் கட்டுவான். முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தேன் பெருகும் மலை நாட்டில் வன்னியனகப் பிறந்தான்.

21. பாரியு மதலை யுண்டாய்ப் பரமனின் பூசைக் காக
மாரனு மதுவைத் தந்து மாதுவின் பக்தி யாகித்
தீரனும் பவமில் லாமல் சென்றனன் கால னூடு
ஆரியன் வரையப் பட்டு அனுகிஞ னிக்கு லத்தில்.

21. மனைவி மக்களைப் பெற்று, சிவபெருமானுக்குப் பூசைக்காக இவன் தேன் வைத்திருந்து கொடுத்து, தேவி மேல் பக்தியுடன், தீச் செயல்கள் இல்லாமல், மரண மடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப் பிறவியில் பிறந்தான் என்றோம்.

22. அரனபி டேகத் துக்கு அவன்மது நந்த புண்யம்
உறைந்தன னிக்கு லத்தில் உயர்வான குடும்ப மேற்பன்
வருவித்த குணத்தா னுக்கு மைந்தனு முதிப்பா னுகும்
திருமகன் குணத்தை யாங்கள் செப்புவோ மினிமே லாக.

22. சிவபெருமானின் அபிடேகத்துக்குத் தேன் கொடுத்த புண்ணியத்தால் இக்குலத்தில் பிறந்து, உயர்வான குடும்பத்தை அடைவான். இங்ஙனம் கூறப்பட்ட குணங்கள் உடையவனுக்கு ஜாதகன் தோன்றுவான். இனி ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றேம்.

23. வித்தையும் சம்ம தாகும் விவேகியாம் எவர்க்கு நேயன்
புத்தியில் பெரியோ னுவன் பொய்யது வழுத்தா நெஞ்சம்
உத்தம குணத்தா னுகும் உயர்வான குடும்ப மேற்பன்
நத்திஞேர்க் குதவி செய்வன் நற்றந்தை சமமாய் வாழ்வன்.

23. சமமான கல்வியறிவுள்ளவன். விவேகமுடையவன். எல்லோருக்கும் நண்பனுக இருப்பான். புத்தியில் பெரியவனுக இருப்பான். பொய் கூருதவன். உயர்ந்தகுணமுடையவன். உத்தமமான குடும்பத்தை அடைவான். தன்னை அண்டி வந்தவர்கட்கு உபகாரம் செய்பவன். தன் தந்தைக்குச் சமமாக வாழ்ந்து வருவான்.

24. திருப்பணி வேலை செய்வன் சோலைகள் கூவல் உண்டு
அரன் பக்தி பூண்பா னுகும் அதிகமாய்ப் புகழு மேற்பன்
வரும்துணை கன்னி யொன்று ஆணது வதன்பின் விருத்தி
இருவருந் தீர்க்க சீவி எய்தாது மற்ற வெல்லாம்.

24. ஆலயத்திருப்பணிகள் செய்வான். தோட்டம் துறவுகள் நிருமிப்பான். சிவபெருமானிடம் பக்தியுள்ளவன். அதிகமான கீர்த்தியடைவான். சகோதரி ஒருத்தியும், இவனுக்குப் பின் சகோதரன் ஒருவனும் தோன்றுவார்கள். இருவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். மற்றவர்கள் நிலையார்.

25. கன்னியின் சேதி சொல்வோம் கனதனம் பெருக்க முண்டு
தென்திசை தந்தை வர்க்கஞ் சீமானும் வருவா னுகும்
முன்னமே குடும்பி யாவன் எய்தாது வரன்முன் பின்னேர்
அன்னவள் வயது தீர்க்க மாகவே வாழவா ளாகும்.

25. ஜாதகனுடைய சகோதரியின் செய்தியைச் சொல்லுகின்றேம். செல்வம்பெருகி இருக்கும். தன் தந்தையின் வர்க்கத்தில் தெற்குப்பக்கத்திலிருந்து கணவன் வாய்ப்பான். முந்திய குடும்பமடைவான். தன் கணவனுக்குச்சகோதரர் இல்லை. அவள் நீண்ட ஆயுள் உள்ளவள்.

26. மதிதுணை யாண்பால் ரண்டு மங்கையு மவ்வாறு தீர்க்கம்
இதுநிற்க வாண்பால் சேதி இனிமையாய் வார்த்தை யுண்டு
அதிகமாய்ப் புகழு மேற்பன் அவசிய வார்த்தை கூறுவன்
துதிசெய்தோர் தம்மைக் காப்பன் தந்தைக்கு மேலாய் வாழ்வன்.

**26.** இவளுக்கு உடன் பிறந்தவர்களில் இரு ஆண்களும் இரு பெண்களும் பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவர்கள். இது நிற்க. ஆணின் செய்தியைக் கூறுகின்றோம். இனிமையாகப் பேசுபவன். அதிகமான கீர்த்தியடைவான். அவசியமான வார்த்தைகளையே பேசுபவன். தன்னைத் தோத்திரம் செய்பவரைக் காப்பான். தன் தந்தைக்கு மேலாக வாழ்ந்து வருவான்.

27. போஜன சுகிய ளாகும் பெரிதான கருமஞ் செய்வன்
காசுகள் எதிக மேற்பன் கரமதில் விஷ்ணு ரேகை
பேச்சினில் சோரா ளாகும் பிதுராஸ்தி விருத்தி செய்வன்
தாசிதா சாளு முண்டு தரியலர் வெற்றி கொள்வன்.

**27.** சாப்பாட்டில பிரியமுள்ளவன். பெரிய வேலைகளையே செய்வான். பொருளை அதிகமாகச் சேர்ப்பான். கையில் விஷ்ணு ரேகையுடையவன். பேசுவதில் சோர்வு அடையாதவன். தன் தந்தையின் ஆஸ்திகளைப் பெருக்குவான். ஏவலாட்கள் உள்ளவன். பெண்களின்மேல் வெறி கொள்வான்.

28. மாதுவு மொன்றே யாகும் மதலைக ளாண்பா லொன்று
காதலி மார்கள் மூன்று கழறுவோந் தீர்க்க மாகச்
சாதிப்பான் சிலவே சங்கை தன்துணை சொல்தட் டாதான்
ஆதவன் போல கீர்த்தி அணுகிடு மென்று சொல்வோம்.

**28.** மனைவி ஒருத்தியேயாகும். குழந்தைகளில் புத்திரன் ஒருவனும் புத்திரிகள் மூவருமாக நீண்ட ஆயுளுள்ளர்கள் என்று சொல்லுகின்றோம். சில சந்தேகங்களை விலக்குவான். தன் உடன்பிறந்தவனது சொல்லை மீறுதவன். சூரியனைப்போல கீர்த்தியடைவான் என்று சொல்லுவோம்.

29. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோம் நாலஞ் சாண்டுள்
காதலி தந்தை வர்க்கங் கலப்பாளாங் குணத்தைச் சொல்வோம்
சூதிலாள் மாஞ்சி வப்பள் துறவோருக் கன்ன மீவள்
வேதனை யெண்ணு நெஞ்சம் மலிந்தமெய் யோக சாலி.

**29.** ஜாதகனுடைய திருமணக்காலத்தைச் சொல்லுகின்றோம். இருபதாம் வயதுக்குள் தன் தந்தைவர்க்கத்திலிருந்து மனைவி வருவாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். சூதில்லாதவள். மாநிறமுடையவள். துறவிகட்கு அன்னமளிப்பவள். பிறருக்குத் துன்பம் செய்ய எண்ணாத மனத்தினள். மெலிந்த சரீர முடையவள். யோகமுள்ளவள்.

30. பால்பாக்கியம் பெருக்கஞ் செய்வள் பண்போருக் கன்ன மீவள்
நீலிக்கு வயது தீர்க்கம் நீள்சடை முனிவர் சொல்வார்
ஆலமும் ஏழோன் கூடி அடைந்திடம் சரமே யாகப்
பாலிகை வயது தீர்க்கம் பகர்ந்தகா ரணங்க ளென்ன.

**30.** அதிகமான புத்திரபாக்கிய முடையவள். நல்லவர்கட்கு அன்னமளிப்பவள். நீண்ட ஆயுள் உள்ளவள். நீண்ட சடையையுடைய முனிவர் கூறுகின்றார். ஏழாம்விட்டுக் குரிய குருவும் ராகுவும் கூடி மேஷத்தில்—சரத்தில்—இருப்பதால், ஜாதகனுடைய மனைவிக்கு நீண்ட ஆயுள் ஏற்படக் காரணம் என்ன ?

31. புதன்புக ரிரண்டில் தங்கப் பிறையது வொன்பா னிற்க
அதிபதி வொன்றே தீர்க்க மைந்தர்கள் பலமு றுவே
அதுபலன் புகலு மென்ன ஐந்தினில் கேது தங்கச்
சுதர்தோட மென்று சொல்வோம் சுந்தரி கேட்டி டாயே.

31. புதன் சுக்கிரன் இரண்டாமிடத்தில் இருக்கவும், சந்திரன் ஒன்பதாமிடத்திலும் இருப்பதால், மனைவி யொருத்தியே. புத்திரபாக்கியம் இல்லை. அதற்குக் காரணம் சொல்லுங்கள். ஐந்தாம் வீட்டில் கேது இருப்பதால் புத்திரர்கட்குத் தோஷம் என்று சொல்வோம். பார்வதியே! கேளுங்கள்.

32. மைந்தன்தன் பூர்வந் தன்னை வரைகின்றே மினிமே லாகக்
கந்தன்வாழ் பழனி நாட்டில் கலந்தனன் மறையோ னாக
வந்திடு மனைவி மைந்தர் மாநிலங் கிருஷி செய்து
இந்தவன் வாழு நாளில் எய்தின வினையைக் கேண்மோ.

32. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். முருகக்கடவுள் வாழ்ந்துவரும் பழனியில், அந்தணகுலத்தில் பிறந்தான். மனைவிமக்களைப் பெற்று, உலகில் விவசாயம் செய்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

33. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய வரசின் கீழே
தந்தியு நாகம் நிற்கும் தானவர் வாசம் செய்வார்
மந்திரம் ஓதும் வேத மறையவர் பூசை பூண்பார்
இந்தவா றிடத்தி லேதான் இரவினில் ஏது செய்தான்.

33. இப்படி வாழுங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். அவ்வூரிலுள்ள நதியின் பக்கமாக உள்ள அரசமரத்தின்கீழ் விநாயகனும் நாகமும் இருக்கும். மற்ற தெய்வங்களும் வசித்து வருவார். மந்திரங்களை ஓதும் அந்தணர்கள் பூசைகள் புரிந்து வருவார். இவ்வாறுள்ள இடத்தில ஜாதகன் இரவில் என்ன செய்தான் ?

34. விதவையைப் போகந் துய்த்தான் மேவிற்றுக் கருவு தானும்
சதிசெய்தான் பண்டி தத்தால் சார்ந்தது வந்தத் தோடம்
அதுவின்றி யில்லந் தன்னில் ஆதிசே டனுமே வாசம்
சதியான மகுடத் தாலே தங்கிற்று வெளியில் ஓர்நாள்.

34. விதவையுடன் இன்பம் அனுபவித்து வந்தான். அதனால் கருவு ஏற்பட்டது. மருந்துகளைக் கொடுத்து அக்கருவைக் கலைத்தான். அஃது ஒரு தோஷமாயிற்று. அதுவல்லாமல் இவனுடைய வீட்டில் நல்ல பாம்பு ஒன்று வசித்து வந்தது. அது வெளியில வந்து ஒரு நாள் படமெடுத்து ஆடியது.

35. அரங்கமே செய்தும் போகா அடித்தனன் கழியி னாலே
மறலியின் பதிக்குச் செல்ல மருவிற்று அதுஓர் தோடம்
திருமக ணந்தி யத்தில் திருமாலின் பக்தி பூண்டு
பெரியோருக் கன்ன மீந்து புக்கனன் கால னூரே.

35. அதை விரட்டியும் போகாததால் அதைத் தடியினல் அடித்தான். அப்பாம்பு இறந்தது. அதுவுமொரு தோஷமாயிற்று. ஜாதகனும் தனது கடைசிக்காலத்தில் திருமாலிடம் பக்தி கொண்டு, பெரியோருக்கு அன்ன மளித்து மரணமடைந்தான்.

36. கஞ்சனல் வரையப் பட்டுக் காவல னுதிப்பா னுகும்
நஞ்சதைக் கொன்ற தோடம் நற்கரு வழித்த தோடம்
கொஞ்சிடு மிச்சென் மத்தில் குழவிகள் தோட மாகும்
வஞ்சனை தீர வேண்டி வரைகின்ருேங் கிரியை யொன்று.

36. மீண்டும் பிரமதேவனல் படைக்கப்பட்டு இந்த ஜாதகன் பிறப்பான். சர்ப்பத்தைக் கொன்ற தோஷத்தாலும், கருவை அழித்த தோஷத்தாலும், இப்பிறவியில் கொஞ்சும் குழந்தைகட்குத் தோஷமாகும். இத்தீங்குகள் தீரச் சாந்திகள் கூறுகின்ருேம்.

37. அரவுமே சிலையால் செய்து அரசின்கீழ் வைப்பா னுகில்
வருமனை தீர்க்க மெய்தும் மைந்தரும் பத்தி தீர்க்கம்
குறையென்று செய்யா னுகில் கோதையுங் குழவி தோடம்
திருகிலாச் செய்வா னுகில் சேயர்க ளாண்பர் லொன்று;

37. கல்லால் நாகப்பாம்பின் உருச் செய்து, அரசமரத்தின்கீழ் வைப்பானு னல், வரும் மனைவி தீர்க்காயுள் உள்ளவளாவாள். புத்திர பாக்கியம் உண்டு. அலட்சியமாகச் செய்யாவிடில் மனைவிக்கும் புத்திரருக்கும் தோஷ முண்டாகும். செய்வானுனல் குழந்தைகளில் ஆண் மகன் ஒருவனும்;

38. கன்னிகை யிருவர் தீர்க்கங் கழறின மொழிகுன் றுவே
அன்னையின் குணத்தைச் சொல்வோம் அவளிரு நிறத்த ளாகும்
தன்னுடல் வாயு முண்டு சற்பத்திரி யோக சாலி
பன்னியே பேசு வாளாம் பர்த்தாவின் மனத்துக் கேற்ருேள்.

38. இரு புத்திரிகள் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். கூறிய வார்த்தைகள் தவரு. தாயின் குணத்தைக் கூறுகின்ருேம். இருநிறமுடையவள். வாயு ரோகமுள்ளவள். சற்பாத்திரி யோக முள்ளவள். பன்னிப் பன்னிப் பேசுபவள். தன் கணவன் மனத்துக்கேற்ப நடப்பாள்.

39. இல்லமு மேற்பால் நேரும் இவள்துணை கன்னி யொன்று
சொல்லுவோந் தீர்க்க மாகத் துணையானுங் காணு வண்ணம்
புகலுவீர் முனியே நீர்தாம் பிறைக்குமே மூன்றில் ராகு
அல்லலா யிருப்ப தாலே அறைந்தனந் துணையான் தோடம்.

39. இவளுடைய வீடு மேற்குப் பக்கத்தில் உள்ளது. சகோதரி ஒருத்தி தீர்க்காயுள் உள்ளவள். இவளுக்குச் சகோதரரில்லை. அண்ணைச் சகோதரர் இல்லாத காரணம் கூறுங்கள். சந்திரனிருக்கும் இடத்துக்கு மூன்ருமிடத்தில் ராகு இருப்பதால் தாய்க்குச் சகோதர தோஷம் சொன்னேம்.

40. மாதுரு பூர்வஞ் சொல்வோம் வடமலைக் கீழ்ப்பா லாக
மேதினில் சிறுவூர் தன்னில் விளங்கினுள் வன்யச் சேயாய்க்
காதலி சுகமாய் வாழுங் காலத்தில் வினையைக் கேண்மோ
சூதான வார்த்தை தானும் செப்பினுள் வரன்பின் ளேண்மேல்.

40. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். திருவேங்கட மலைக்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில், வன்னிய குலத்தவளாகப் பிறந்து, சுகமாக வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன் கணவனின் இளைய சகோதரனின்மீது அடாத வார்த்தைகளைக் கூறினுள்.

41. மாரனும் வருத்த முற்று வரைகின்றன் சாபந் தானும்
நாரிக்குப் பின்ஜன் மத்தில் நற்றுணை யாண்க ளின்றிப்
பாரிய குடும்பம் வாய்த்து வாழ்குவாய் வேறூர் தன்னில்
கூறியே தெருத்தூள் விட்டான் குலவிற்று வந்தத் தோடம்.

41. அவனும் வருத்த மடைந்து சாபமிட்டான். உனக்கு ஏற்படும் மறு பிறவியில், சகோதரனில்லாமல், பெரிய குடும்பத்தை யடைந்து, வேறூரில் சென்று வாழ்வாய், என்று கூறித் தெரு மண்ணை வாறி இறைத்தான். அந்தத் தோஷம் பற்றியது.

42. மங்கைக்கு வந்தி யத்தில் வாய்ப்புண்ணுல் மரணம் நேர்ந்து
சங்கையாய்க் கால னுடு சென்றுமே வந்தா ளென்றேம்
நங்கைக்கு முன்னூழ்ச் சாபம் நல்கிடுந் துணையாண் தோடம்
பங்கமாய் வேறூர் தன்னில் பரவுவா ளென்று சொல்வோம்.

42. அவளும் தன் கடைசிக் காலத்தில், வாயில் புண் ஏற்பட்டு, மரண மடைந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தாள் என்றேம். முற்பிறவியின் தோஷம் ஜாதகனுடைய தாய்க்கு ஏற்பட்டு, சகோதர தோஷம் உண்டாகும். தன் ஊர் கிட்டாமல் வேறூரில் சென்று வாழ்வாள் என்றேம்.

43. பின்ஜன்மந் காஞ்சி தன்னில் பிறப்பளாஞ் சௌராட்ர வம்சம்
கன்மகா லங்கள் சொல்வோம் காவலன் முப்பா னெட்டில்
தன்தந்தை மார கங்கள் சார்ந்திடு மென்று சொல்வோம்
அன்னைக்கு நான்பா னலில் அணுகிடுங் கண்டந் தானே.

43. மறுபிறவியில் காஞ்சிபுரத்தில் சௌராஷ்டிர வம்சத்தில் பிறப்பாள். ஜாதகனுடைய கருமகாலத்தைச் சொல்லுகின்றேம். ஜாதகனுடைய முப்பத்தெட்டாம் வயதில் தந்தை மரண மடைவான் என்று சொல்கின்றேம். தாய், ஜாதகனின் நாற்பத்துநான்காம் வயதில் மரண மடைவாள்.

44. அறுபது வெட்டு வாண்டில் அக்கன்னி மாதந் தன்னில்
திருமக னுடல மேகும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
பிருதிவித் தலத்தி லேதான் பிறப்பனுஞ் சைவச் சேயாய்க்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

44. ஜாதகன், தனது அறுபத்தெட்டாம் வயதில் புரட்டாசி மாதத்தில் மரண மடைவான். இவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றேம். காஞ்சீபுரத்தில் சைவகுலத்தவனுகப் பிறப்பான். கரிய யானை முகத்தையுடைய விநாயகனைப்பெற்ற தேவியே ! கேளுங்கள்.

45. தந்தையின் ஜன்மஞ் சொல்வோந் தணிகையில் வைச்யச் சேயாய்
முந்திய தனவா னுக்கு உதிப்பனு மென்று சொல்வோம்
வந்தவன் யோகச் சேதி வரைகின்றேம் வாசி யோகம்
விந்தையாயக் கிரியின் யோகம் விளம்புவோங் கியாதி யுண்டு.

45. ஜாதகனின் தந்தையின் மறு பிறவியைச் சொல்லுகின்றேம். திருத்தணிகையில் செங்குலத்தவனுக உயர்ந்த ஒரு தனவானுக்குப் புத்திரனுகப் பிறப்பான் என்று சொல்லுகின்றேம். ஜாதகனுடைய யோகச் செய்திகளைக் கூறுவோம். வாசியோகம் பருவதயோகம் என இரண்டு யோகங்கள் ஏற்படும். கீர்த்தியைப் பெறுவான்.

46. அன்னையின் தந்தை ஞாதி ஆஸ்திகள் யாவும் நேரும்
மன்னர்கள் நேச மெய்தும் வடதிசை யரசன் போல
இன்னவன் வாழ்வா னுகும் இணங்குநாள் [1] பணியின் தன்னில்
ஒன்றுண்டுந் திங்க ளைந்தும் உரைத்தனம் பூர்வ பாகம்.

46. ஜாதகனுடைய தநதையின் ஆஸ்தியும் சுற்றத்தாரின் ஆஸ்திகளும் இவனுக்குக் கிடைக்கும். அரசர்களுடன் நட்புக் கொள்வான். குபேரன் போல் வாழ்ந்து வருவான். ஜாதகன் பிறப்புக் காலத்தில் ராகுமகா தசையில் ஒரு வருடமும் ஐந்து மாதங்களும் மீதமாகும். இதுவரை முதல் பாகம் சொன்னேம்.

[1] இராகு தசை.

# APPENDIX

23. ..........................................
..........................................
கூறுவோ மிவன்முன் ஜன்மங் குற்றுலந் தன்னி லேதான்
தீரமாய் வன்யச் சேயாய் ஜனித்துமே கிருஷி செய்து ;

23. ..............................................................
இவன், முற்பிறவியில் குற்றுலத்தில் வன்னிய குலத்தில் பிறந்து, விவசாயம் செய்து வந்தான் என்று சொல்லுவோம்.

### பெண்பழி

24. மாரனும் வாழு நாளில் மருவிய வினையைக் கேண்மோ
கூறினு னொருபெண் பேரில் குறையான வார்த்தை தானும்
நாரியும் வருத்த முற்று நவிலுவாள் சாபந் தானும்
பகராத வார்த்தை யென்மேல் பகர்ந்திட்ட பாவி யேநீ ;

24. ஜாதகன் வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஒரு பெண்ணின்மீது பழிச்சொல்லைக் கூறினுன். அப்பெண்ணும் வருத்தமடைந்து சாபமிடுகின்றுள். நேரில் பார்க்காத வார்த்தையை என் மீது சொல்லிய பாவியே ! நீ ;

25. மற்றெரு ஜன்மந் தன்னில் அண்ணனுந் துணைவ ரின்றிச்
சித்திர வில்லம் நீங்கிச் சிலநாட்க ளிருக்க வில்லம்
இத்தகை சொல்ல லுற்றுள் எய்திற்று வந்தச் சாபம்
அத்தியை வளர்த்த வெங்க ளாத்துமத் தாயே கேளாய்.

25. மறு பிறவியில், சகோதரர்களில்லாமல், அழகிய வீட்டையும் இழந்து, சிலநாட்கள் இருக்க இடமின்றி, துன்பமடைந்து வாழ்வாய் என்று கூறினுள். அந்தச் சாபம் இவனைப் பற்றியது. விநாயகக் கடவுளை யீன்ற எங்கள் உயிருக்குயிரான தாயே ! கேளுங்கள்.

26. ஆகையா லிச்சென் மத்தில் அவன்துணை யாண்பால் கரணுன்
ஏகுவா னில்லம் விட்டு எய்திடுஞ் சல்லிய பாதை
தோகையின் வர்க்கத் தாரால் சுகமிகப் பெருகு மென்றேம்
பாகமா யிவன்பின் ஜன்மம் பட்சியின் மலையி லேதான் ;

26. ஆகையினுல், இப்பிறவியில் உடன் பிறந்த சகோதரனில்லாதவனுவன். தன் வீட்டை விட்டு விலகுவான். கடன் உபத்திரவம் அடைவான். தன் மனைவி வர்க்கத்தினரால் நன்மை பெருகும். இவன் மறு பிறவியில் திருக்கழுக்குன்றத்தில் ;

---

* இந்த ஜாதகத்தின் முற்பகுதி ஏட்டில் காணப்பெற்றிலது. இடைத்தவரையில் வெளியிடப் பெறுகின்றது.

27. உதிப்பனும் வைச்யச் சேயாய் உயர்வான வணிபஞ் செய்வன்
மதிமுக மாதுர் பூர்வ மறைகின்றேஞ் சேர நாட்டில்
ததிநெய்பால் குலமு தித்துச் சான்றேருக் குதவி செய்து
அதிதியே கடவு ளுக்கு அபிடேகப் பாலு மீந்து ;

27. வைசிய குலத்தவனுகப் பிறப்பான். உயர்ந்த வர்த்தகம் செய்து வருவான். ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். சேர நாட்டில், தயிர் பால் நெய் இவைகளைப் பெருக்கும் இடையர் குலத்தில் பிறந்து, பெரியோர்களுக்கு உதவி செய்து, தேவியே ! கடவுளுக்கு அபிஷேகத்துக்குப் பால் தந்து ;

28. அறமதி லிச்சை யுண்டாய் அந்தகன் நகரஞ் சென்று
பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று சொன்னேம்
வருஞ்ஜன்மங் காளத்தி தன்னில் வருகுவா னிக்கு லத்தில்
பெருமையாய் வாழ்வா னாகும் பேதையே கேட்டி டாயே.

28. தருமம் செய்வதில் விருப்பம் உள்ளவனுகி, இறந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவன் என்று சொல்லுவோம். மறு பிறவி திருக்காளத்தியில் இக்குலத்தில் பிறந்து பெருமையுடன் வாழ்ந்து வருவான். தேவியே ! கேளுங்கள்.

29. இவன்பிதா பூர்வந் தன்னை இயம்புவோந் தக்கோ லத்தில்
அவனுமே நட்டுவ னுக அணுகியே பரதங் கற்று
நவனியில் மாத ருக்கு நடனங்கள் செய்து வைத்து
இவனுமே வாழு நாளில் எய்தின வினையைக் கேண்மோ.

29. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். தக்கோலத்தில், நட்டுவனர் குலத்தில் பிறந்து, பரத நாட்டியம் கற்று, உலகில் பெண்களுக்கு நாட்டியம் கற்பித்து, வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

30. கல்விகள் சொல்லி வந்த காதலி மார்கள் மோகம்
சில்லறைப் புத்தி யாகிச் செய்தனன் போகந் தானும்
புல்கிற்று வந்தத் தோடம் பிராமணர் தமக்குப் பொய்யை
வல்லவன் சொல்ல லூற்றுன் மருவிற்று வதுவோர் தோடம்.

30. நாட்டியம் பயில வந்த பெண்மீது மோகம் கொண்டு, தீய எண்ணங்கள் கொண்டு ஒரு பெண்ணுடன் இன்பம் அனுபவித்தான். அந்தத் தோஷம் ஏற்பட்டது. ஓர் அந்தணனுக்குப் பொய் கூறினன். அதுவும் ஒரு தோஷமாயிற்று.

31. அந்திய காலந் தன்னில் அவன்வாயில் ரணமுங் கண்டு
அந்தகன் பக்கல் சென்று அருநர கதனில் புக்கு
வந்தவ னென்று சொல்வோம் மாதர்கள் போக தோடம்
தந்தையி னில்லம் பூமி சாராமல் வேறூர் செல்வன்.

31. அவன், தன் கடைசிக் காலத்தில், வாயில் புண் ஏற்பட்டு, இறந்து, நரகத்தை யடைந்து, மீண்டும் பிறந்தவன் என்று சொல்லுகின்றேம். பெண்ணேடு போகம் செய்த தோஷம் ஏற்பட்டதால், தன் தந்தையினுடைய ஆஸ்திகள் நீங்கி, வீடும் கிடைக்காமல், வேறூருக்குச் செல்வான்.

32. முன்குலத் தோர்க்குப் பொய்யை மொழிந்திட்ட தோடத் தாலே
தன்மனை யில்லம் வாசம் தன்துணை கன்னி காணன்
முன்வய தனில்த ரித்ரம் மேவிடும் பால னுக்குப்
பின்ஜன்மம் வள்ளூர் தன்னில் பிறப்பனுஞ் சைவச் சேயாய்.

32. அந்தண குலத்தவருக்குப் பொய் சொன்ன தோஷத்தால் தன் மனைவியின் வீட்டுக்குச் சென்று வாழ்வான். உடன் பிறந்த சகோதரி யில்லாதவன். ஆதி காலத்தில் வறுமை ஏற்படும். மறு பிறவி திருவள்ளூரில் சைவகுலத்தவனாகப் பிறப்பான்.

33. இருபது ஆறு வாண்டில் இயம்புவோந் தந்தை கண்டம்
திருகிலா முப்பா னேழில் செப்புவோ மன்னை கண்டம்
மருமமாய் நாற்பா ெனான்றில் மாதுலன் கண்ட மெய்துந்
திருதிய வாண்டுக் குள்ளே செப்புவோ மன்னை யன்னை.

33. ஜாதகனுடைய இருபத்தாறும் வயதில் தந்தை மரணமடைவான். முப்பத்தேழாம் வயதில் தாய் மரணமடைவாள். நாற்பத்தோராம் வயதில் தாய் மாமன் இறந்து விடுவான். மூன்றும் வயதுக்குள்ளே பாட்டி (அன்னை யின் தாய்) மரணமடைவாள்.

34. மைந்தனின் மணத்தின் கால மறைகின்றோ மிருப தாண்டில்
பந்தணி மாது தானும் பரவுவாள் துணைவி புத்ரி
அந்தவள் குணத்தைச் சொல்வோம் அரிமனை யொப்ப தாகும்
விந்தையாய்ப் பேசு வாளாம் விருந்தோரை யாத ரிப்பள்.

34. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். இருப தாம் வயதில் சகோதரியின் புத்திரியை மணப்பான். அவளுடைய குணத் தைச் சொல்லுகின்றோம். இலக்குமியை யொத்த அழகுள்ளவள். வேடிக்கையாகப் பேசுபவள். விருந்தினரை ஆதரிப்பவள்.

35. பால்பாக்ய முடைய ளாகும் பந்துவுக் கினிய ளாகும்
சீலமு மறத்தி லிச்சை சிந்தையும் நல்ல தாகும்
காலத்தை யறிந்து ரைப்பள் கனமான பணிகள் சேர்ப்பள்
நீலியுந் தீர்க்க சீவி நிமலியே கேட்டி டாயே.

35. புத்திர பாக்கிய முடையவள். தன் உறவினர்களுக்குப் பிரிய மானவள். நல்லொழுக்கமுள்ளவள். தருமம் செய்வதில் பிரியமுள் ளவள். நல்ல மனமுடையவள். வருங் காலத்தைத் தெரிந்து சொல்லு பவள். அதிகமான ஆபரணங்களைப் பெருக்குவாள். நீண்ட ஆயுளுள்ளவள். தேவியே ! கேளுங்கள்.

### 5-ஆம் பாவம்.

36. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலமு ரறுது
சித்தமா யுதித்தா னுந்தான் தீங்காகு மென்று சொல்வோம்
குத்தத்தைச் சொல்லு மென்ன கொடுவிட மஞ்சில் தங்க
இத்தகைப் பலத்தி னாலே இயம்பினோம் முனியே யாமும்.

36. புத்திர விருத்தியைக் கூறப் பலமில்லை. சித்தமாகப் பிறந்தாளு நிலையா என்று கூறுகின்றோம். என்ன குற்றம் செய்தாள் ? என்று வின ராகு ஐந்தாமிடத்தில் இருக்கின்ற பலத்தால் கூறினோம். முனிவரே ! நாங்கள்.

37. முன்ஜன்ம வினையுங் கொஞ்சம் மேவிற்றுப் பால னுக்கு
என்னவூழ் சொல்லு மென்ன இவன்பூர்வம் புகலக் கேண்மோ
கன்னியா குமரி தன்னில் கலந்தனன் மறைக்கு லத்தில்
மன்னர்பா லரசு செய்து வாழ்நாளில் வினையைக் கேண்மோ.

37. ஜாதகனுக்கு முற்பிறப்புத் தீவினையும் ஏற்பட்டது. என்ன தீங்குகள செய்தான் ? சொல்லுங்கள், என, இவனுடைய முற்பிறவியைச் சொல்லு கின்றோம். கேளுங்கள். அரசாங்க உத்தியோகம் ஏற்று வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள்.

### ஸர்ப்பத்தைக் கொன்ற தோஷம்

38. இல்லத்தில் வெகுநா ளாக இருந்தது நாக மொன்று
அல்லலாய் மகுடங் கொண்டு அதுமுற்றத் தியங்கும் போது
வல்லவன் கழியால் வாட்ட மரித்தது நாகந் தானும்
புல்கிற்று வந்தத் தோடம் பூவையே கேட்டி டாயே.

38. ஜாதகனுடைய வீட்டில் சர்ப்பம் ஒன்று வெகுநாட்களாக வாழ்ந்து வந்தது. அஃது, ஒருநாள், வீட்டு முற்றத்தில் படம் எடுத்து ஆடும்போது, ஜாதகன் கழியால் அடிக்க, சர்ப்பம் இறந்தது. அந்தத் தோஷம் இவனை யடைந்தது. தாயே ! கேட்டிடுவாய்.

39. மைந்தனு மந்தி யத்தில் மைந்தர்கள் யாவும் போக்கித்
தென்திசைக் கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
வந்தவ னென்று சொல்வோம் மாமுனி தடுத்துச் சொல்வார்
முன்ஜன்ம மறைக்கு லத்தி லுதித்தவ னிச்சென் மத்தில் ;

39. ஜாதகன் தன் கடைசிக் காலத்தில் புத்திரர்களை யிழந்து, மரண மடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டுப் பிறந்தவனென்று சொல்லு கின்றோம். முனிவர் மறுத்துக் கூறுகின்றார். முற்பிறவியில் அந்தணர் குலத்தில் பிறந்த இந்த ஜாதகன், இப்பிறவியில் ;

### தாழ்குலப் பிறவி ஏற்படுதற்குரிய காரணம்

40. குலந்தாழ்வாய் வந்த சங்கை கூறுவீர் முனியே நீர்தாம்
தலைவனு முன்ஜன் மத்தில் ஜபதபங் குறைவு செய்தான்
பலன்குலம் தாழ்வ தாச்சு பணிதனைக் கொன்ற பாவம்
குலன்விளங் காது வென்றோம் குழவிகள் நட்ட மெய்தும்.

40. தாழ்வான குலத்தில் பிறந்த காரணங்களென்ன ? சொல்லுங்கள். முனிவரே ! நீர்தாம். ஜாதகன் முற்பிறவியில் ஜபதபங்கள் செய்யாமலிருந் ததால், குலத்தாழ்வடைந்தான். சர்ப்பத்தைக் கொன்ற பாபத்தினால் குலம் விளங்காது என்றோம். குழந்தைகள் இறந்துபோம்.

### நாக சாந்தி

41. வந்ததோர் வினைகள் நீங்க வறைகின்றோம் கிரியை யொன்று
விந்தையாய்ச் சிலையால் நாக மமைத்துமே வரசின் கீழே
இந்தவன் பிரதிட்டை செய்யின் எய்தின வினைகள் நீங்கித்
தன்சுதர் தோன்று மென்றேஞ் சங்கரி கேட்டி டாயே.

41. ஏற்பட்ட பாபங்கள் விலகச் சாந்தியொன்று கூறுகின்றோம். நாகம் போல் கல்லினால் ஓர் உருச்செய்து, அரசமரத்தின் கீழே வைத்துப் பிரதிட்டை செய்து பூசித்து வருவானாகில், தீவினைகள் நீங்கும். புத்திரர்கள் தோன்றுவர் என்றோம். பார்வதியே ! கேளுங்கள்.

42. சொற்படி செய்யா ளுகில் சுதர்தோன்றார் தோன்றில் தீதாம்
சொற்படி செய்வா ளுகில் தோன்றிடு மாண்பா லொன்று
மெய்ப்படி பெண்பால் ரண்டு வறைகின்றேந் தீர்க்க மாக
அப்பணி சடையோன் தேவி அருளின மொழிகுன் றுவே.

42. நாங்கள் கூறியபடி செய்து வராவிட்டால் புத்திரர் பிறந்தாலும் இறப்பர். சொல்லியபடி செய்து வந்தால், ஆண் குழந்தையொன்றும், பெண் குழந்தைகள் இருவரும் தோன்றி, தீர்க்காயுளுள்ளவர்களாவார்கள். கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமானின் தேவியே ! கூறிய வார்த்தைகள் தவறு.

### புதையல் கிடைத்தற்குரிய கிரகநிலை

43 பாலகன் யோகச் சேதி பகருவோ மினிமே லாகச்
சாலவே நாலாண் டின்மேல் சந்திரன் பிறைபோல் யோகம்
ஞாலங்கள் விருத்தி யுண்டு நவதான்யம் பலித மேன்மை
ஏலவே வில்லஞ் செய்தல் எய்திடும் நிதிநிட் சேபம்.

43. ஜாதகனுடைய யோகச் செய்திகளை இனிக் கூறுகின்றோம். நான்கு வயதுக்குமேல் பிறைச்சந்திரன்போல் யோகம் வளரும். விளை நிலங்கள் பெருகும். நவதானியம் விருத்தியாகும். வீடு கட்டுவான். புதையல் கிடைக்கும்.

44 ஒன்பது வாண்டு தன்னில் உறைந்ததோர் பொருளும் நேரும்
துன்பங்க ளணுகா வாகுந் துரவுகள் சகடு மேன்மை
தன்பந்து மதிக்க வாழ்வன் சல்லிய மில்லா ளுகும்
அன்னவ னிரண்டு வில்லம் அருளுவா னென்று சொல்வோம்.

44. ஜாதகனுடைய ஒன்பதாம் வயதில் மேற்கூறிய புதையல் கிடைக்கும். துன்பங்கள் அணுகா. கிணறுகள் வண்டி முதலியன இருக்கும். தன் சுற்றத்தார் மதிக்க வாழ்வான். கடன் உபத்ரவமில்லாதவன். ஜாதகன் இரு வீடுகளைக் கட்டுவான், என்று சொல்லுவோம்.

**சகடை யோகம்**

45. அன்பது ஏழு ஆண்டில் ஆவணி மாதந் தன்னில்
இன்னவ னுடல மேகும் இயம்புவார் அத்திரி தாமும்
பொன்னுக்கு எட்டில் திங்கள் பொருந்தினல் சகடை யொன்று
துன்மையா மூன்றுண் டுக்குள் சாதக னரிட்டஞ் சொல்வோம்.

45. ஐம்பத்தேழாம் வயதில் ஆவணி மாதத்தில் ஜாதகன் இறப்பான். அத்திரி முனிவர் கூறுகின்றார். குருவுக்கு எட்டாமிடத்தில் சந்திரன் இருப்பதால் சகடையோகம் உண்டு. அதனல் தீங்கேற்பட்டு, மூன்றும் வயதுக்குள்ளாகவே ஜாதகனுக்கு அரிட்டமுண்டு.

**பௌத்திரனகப் பிறவியெடுத்தல்**

46. மந்திரி நாலில் தங்க மருவாது சகடை தானும்
எந்தநோய் வந்த போதும் இரவிமுன் பனிபோல் நீங்கும்
மந்தன்தன் தசையந் தத்தில் மாரகம் நேரு மென்றும்
பின்ஜன்ம மவ்வூர் தன்னில் பிறப்பனும் பௌத்ர னக.

46. குரு நாலாமிடத்தில் இருப்பதால் சகடை யோகம் ஏற்படாது. எந்த நோய் வந்தாலும் சூரியன் முன் பனிபோல் விலகிவிடும். சனிமகாதசையின் முடிவில் மாரணமேற்படும் என்றும். மறு பிறவி அவ்வூரிலேயே தன் பிள்ளைக்குப் பிள்ளையாகப் பிறப்பான்.

47. அன்னவன் ஜனன காலம் அவிட்டநாள் முதல்பா தத்தில்
துன்சேயின் தசையா றுண்டுஞ் செப்பினும் பலனைச் சொல்வோம்
மன்னவன் பிணிய நேகம் மாரகம் போல நேரும்
அன்னையி னன்னை கண்டம் அறிவித்தோம் பூர்வ பாகம்.

47. ஜாதகனது ஜனனகாலத்தில் அவிட்ட நட்சத்திரம் முதல் பாதமாம். அதுபொழுது, அங்காரகமகாதசையில் ஆறு வருடங்கள் என்று கூறினும். ஜாதகனது அக்கால பலனைச் சொல்லுவோம். நோய்கள் பல மாரணத்தைக் கொடுக்குமோ எனறு பயப்படு மளவுக்கு ஏற்படும். தாயின் தாய்க்கு (பாட்டிக்கு) மரணம் உண்டாகும். இச்செய்திகளை முதற் பாகத்தில் தெரிவித்தோம்.

ஸப்தரிஷி நாடி—மிதுன லக்னம்
முற்றும்.




---